ஸ்ரீமத்

# கம்பராமாயணம்

## பாலகாண்டம்

PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE FROM
MINISTRY OF EDUCATION, GOVERNMENT OF INDIA

மகாமகோபாத்யாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்

திருவான்மியூர் :: சென்னை-41

மகாமகோபாத்யாய டாக்டர். உ. வே. சாமிநாதையர்
நூல்நிலைய வெளியீடு-39



ஸ்ரீ

# கம்பராமாயணம்

# பாலகாண்டம்

(பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன்)

பிலவங்கஹூ ஐப்பசிமீ"

மகாமகோபாத்யாய டாக்டர். உ. வே. சாமிநாதையர்
நூல்நிலையம்

திருவான்மியூர் :: சென்னை-41

# உள்ளுறை

உ

ஸ்ரீராமஜயம்

# பதிப்புரை

உயர்வற வுயர்நல முடையவன் யவனவன்
மயர்வற மதிநல மருளினன் யவனவன்
அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்
துயரறு சுடரடி தொழுதெழென் மனனே. (நம்மாழ்வார்)

கம்ப ராமாயணத்தின் பெருமை உலகமறிந்தது. மகா மகோபாத்தியாய டாக்டர் ஐயரவர்கள் கம்பராமாயண முழுதும் தம் ஆசிரியர் பால் முறையாகப் பாடங் கேட்டிருந்தமையின் அதனில் தாம் அறிந்த பல அருமையான செய்திகளையுடையதாய்த் திருத்தமான பதிப்பொன்று தாம் வெளியிட வேண்டுமென்பது அவர்கள் விருப்பமாயிருந்தது. அதனால் நெடுங்காலமாகக் கம்பராமாயண ஏட்டுச் சுவடிகள் பலவற்றை ஆராய்ந்தும், பிற வகையிலும் பல வகையான குறிப்புக்கள் அதற்கென அவர்கள் சித்தஞ் செய்து வைத்திருந்தார்கள். அத்தகைய பதிப்பு அவர்கள் வாயிலாகவே வெளிவராமற் போனது வருந்தத் தக்கதே.

1942-ஏப்ரல் மாதத்தில் ஸ்ரீ ஐயரவர்கள் காலமான பின், அவர்களுடைய அருமைக் குமாரர் ஸ்ரீ. S. கலியாண சுந்தரையரவர்களின் முயற்சியால், ஐயரவர்களின் பேர் தாங்கும் இந்நூல் நிலையம் 1943-ஜூலையில் நிறுவப்பெற்றது. அப்போது ஸ்ரீ கலியாண சுந்தரையரவர்களே இதன் அதிகாரியாக (curator) இருந்து கவனித்து வருகையில், கம்பராமாயண விஷயமாகத் தம் தந்தையாரவர்களின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்னும் கருத்து அவர்களுக்குத் தோற்றவே, அதற்குரிய முயற்சிகளைத் தொடங்கி, ஸ்ரீ ஐயரவர்களின் பலவகைக் குறிப்புக்களையும் பிற சாதனங்களையும் நன்கு ஆராய்ந்து, பால காண்டத்தைக் குறிப்புரை முதலியவற்றுடன் அச்சிற் பதிப்பித்து 1949-ஆம் ஆண்டில் இந்நிலைய வாயிலாக வெளியிட்டார்கள். பின்னர் 1951-இல் அயோத்தியா காண்டமும் அம்முறையில் வெளி

வந்தது. இவற்றின் தன்மைகளை அப்பதிப்புக்களின் முக வுரைகளிற் காணலாம்.

பின்னர், இந்நூல் நிலையத்தார், கம்பராமாயணத்தைப் பதவுரை, விசேடவுரை, இலக்கணக் குறிப்பு, ஒப்புமைப் பகுதி, மேற்கோள், பாடபேதங்கள் முதலியவற்றுடன் விரிவான முறையில் வெளியிடும் நோக்கங் கொண்டு, முதலாவதாகச் சுந்தரகாண்டத்தை அம்முறையிற் பதிப்பித்து 1957-இல் வெளியிட்டார்கள் அதன் பின் ஆரணிய, கிட்கிந்தா, யுத்த காண்டங்களும் நாளடைவிலே அம்முறையில் வெளியிடப் பெற்றன. பின்பு, எஞ்சிய, பால, அயோத்தியா காண்டங்களையும் அம்முறையில் வெளியிட எடுத்துக் கொண்டு, முதற்கண் இப் பாலகாண்டத்தை இப்போது வெளியிடுகின்றனர். அயோத்தியா காண்டப் பதிப்புக்குரிய பணிகளும் நடைபெற்று வருகின்றன.

இந்தப் பதிப்பு :

பாலகாண்டத்தின் முந்தின இந் நூல் நிலையப் பதிப்பும், அதற்குமுன்னும் பின்னும் வெளிவந்துள்ள, உரை உள்ளனவும், அஃதில்லாதனவுமான பல அச்சுப் பதிப்புக்களும் சில ஏட்டுப் பிரதிகளும், கம்பராமாயண விஷயமாக அவ்வப்போது வெளியாகியுள்ள பல அரிய கட்டுரைகள் முதலியனவும் இப்பதிப்பில் நன்கு ஆராய்ந்து பயன்படுத்தப் பெற்றன.

மூலபாடங்கள், பெரும்பாலும் முந்தின பதிப்பைத் தழுவியும், அவற்றினும் சிறந்தனவாகக் காணப்பட்ட வேறு பாடங்களை உரிய விடங்களிற் கொண்டும் அமைக்கப் பெற்றுள்ளன. அவற்றின் பின், பதவுரை, விசேடவுரை, இலக்கணக் குறிப்பு, ஒப்புமைப்பகுதி, மேற்கோள், பிரதிபேதங்கள் ஆகியவை முறையே வைக்கப் பெற்றுள்ளன. பாட்டின் ஒவ்வோரடியிலும் உள்ள பிரதிபேதங்களைக் காட்டுதற்கு, அந்த அடியின் எண்ணை முதலிற் கொடுத்து, அவ்வடியின் ஒவ்வொரு சீரிலுமுள்ளவை சீர்வரிசைப்படி அமைக்கப் பெற்றுள்ளன. அடிமுழுதும் வேறுபட்ட இடங்களில் மு.

என்ற குறிப்பு முன்னே கொடுக்கப் பெற்றுள்ளது. அடி மாறுதல் முதலியனவும் அங்கங்கே காட்டப் பெற்றுள்ளன. இவற்றின் பின், மிகையெனத் தோற்றிய பாடல்கள் அவ் வவ்விடத்தே கொடுக்கப் பெற்றுள்ளன.

பாட்டுக்களுக்கு, நூலின் தொடக்க முதல் இறுதிவரை, தொடர் எண்கள் முன்னும், அந்தஅந்தப் படலத்தின் பாடற்றொகையை அறிதற்குக் கருவியாகவுள்ள எண்கள், ஒவ்வொரு பாட்டிற்கும் உரை முதலியன முடிவுற்றபின் இறுதியில் ( ) இவ்வாறு இருதலைப் பிறைக் குறிக்குள்ளும் கொடுக்கப் பெற்றுள்ளன. விசேடவுரைப் பகுதியில் வான்மீகத்திற்கும் இதற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளும், ஆனந்த ராமாயண முதலியவற்றின் கருத்துக்களும் ஆங்காங்கே உரியவிடங்களிற் காட்டப்பெற்றுள்ளன. நிலையத்தில் உள்ள, கம்பராமாயணக் கருப்பொருள் பொழிப்புரை என்பவற்றைக் கொண்ட ஏட்டுச்சுவடிகளிற் கண்ட சில உரைப்பகுதிகள் பொருத்தமான விடங்களில் 'ஒரு பழைய வுரை' என்று காட்டப் பெற்றுள்ளன. இச்சுவடிகள், பல விடங்களில் நல்ல பாடங்களைத் தேர்ந்து கொள்ளுதற்குத் துணைபுரிந்தன. ஒப்புமைப்பகுதி, மேற்கோள், முதலியவற்றிற்குரிய நூற்பெயர் முதலியன அங்கங்கே தடித்த எழுத்திற் குறிக்கப் பெற்றுள்ளன. கம்பராமாயணத்திலிருந்தே காட்டப் பெறுமவற்றுள், பாலகாண்டத்திலுள்ளவற்றிற்கு இப்பதிப்பின் தொடர் எண்கள் மாத்திரமும், ஏனைக் காண்டங்களில் உள்ளவற்றிற்கு, அவ்வக்காண்டப் பெயரோடு இந்நிலையப் பதிப்பிற்காணும் தொடரெண்களும் கொடுக்கப் பெற்றுள்ளன.

படலங்களின் பெயரும் தொகையும் முந்தின பதிப்பின் படியே உள்ளன. துதிப்பாடல்களும் தனியன்களுமான 39 பாடல்கள் நூலின் தொடக்கத்துக்கு முன்னே தனியாக வைக்கப் பெற்றுள்ளன. பாட்டு முதற்குறிப்பகராதி, அரும்பத முதலியவற்றின் அகராதி ஆகியவை நூலின் பின்னே சேர்க்கப் பெற்றுள்ளன.

இப்பதிப்பில், நூலின் 1—1200 பக்கங்கள் திருமயிலை யில் உள்ள 'சாதனா' அச்சகத்திலும், ஏனையவை, ஸ்ரீநிவாஸ காந்தி நிலையத்தாரின் 'ஸ்ரீகாம்' அச்சகத்திலும் பதிப்பிக்கப் பெற்றன. இவற்றைச் செவ்விய முறையில் அச்சிட்டுதவிய இவ்விரண்டு அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இப்பதிப்பு அச்சாகி வருங்கால் எதிர்பாராது நேர்ந்த சில இடையூறுகளாலும், பணி செய்வோரின் மறதி முதலிய வற்றாலும் இதிற் சிற்சில குறைகள் காணப்படும் அவற்றைக் கண்ணுறும் அறிஞர்கள் அன்பு கூர்ந்து பொறுத்தருள் வாராக.

குற்றங் களைந்து குறைபெய்து வாசித்தல்
கற்றறிந்த மாந்தர் கடன்.

திருவான்மியூர், சென்னை-41
அக்டோபர், 1967

இங்ஙனம்
நூல் நிலையத்தார்

ஸ்ரீராமஜயம்

# முகவுரை

கற்பா ரிராம பிரானையல்லால் மற்றுங் கற்பரோ
புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றி ன்றியே
நற்பா லயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முகனர் பெற்ற நாட்டுளே.

(நம்மாழ்வார்)

இராமாவதாரம் பலவகையில் ஏற்றமுடையது. அவ்வவதார வரலாற்றைக் கூறும் தமிழ் நூல்களுள், மக்களின் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்து, அவர்களின் உள்ளொளியைப் பெருக்கி, அவர்கள் உயர்ந்த நெறியில் நடத்தற்கு உதவும் சிறப்பு மிகவும் வாய்ந்தது கம்பநாடர் இயற்றிய இராமகாதையாகும்.

தன்னலம் சிறிதுமின்றி, அறநெறியிலே நிலைத்து, உலகத்துக்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்த சான்றோர் பலர்க்கும், அவ்வறநெறியை இகழ்ந்து ஆணவமேலீட்டால் உலகை நலியச்செய்து வந்த தீயோர் பலர்க்குமிடையே நிகழ்ந்த பிணக்கின் செய்திகளைக் காவிய முறையில் அழகுபட விரித்து, அறம் வெல்லும் பாவந்தோற்கு மென்ற உண்மையை நிலைநாட்டத் தோன்றியது இராமாயணமென்னும் இதிகாசம்.

திரேதாயுகத்தில், அறஞ்செய் காவலுக்கு அயோத்தியுள் சூரியகுலத்தரசர் மரபிலே தோன்றிய இராமபிரான், அக்காலத்தே இலங்கையில் அரக்கர் குலத்துள் தோன்றி, இணையற்ற ஆணவ வலிமை கொண்டிருந்த இராவணனால் உலகம் அடைந்த நலிவை யகற்றி, அறத்தை நிலைநிறுத்தி என்றும் அழியாத புகழைப் பெற்ற வரலாற்றைக் கூறுமுகத்தால் முற்கூறிய உண்மையை நிலைநாட்டுவது இது. இதனை வடமொழியில் முதலில் இயற்றி உலகுக்கு அளித்தவர் வான்மீகி முனிவராவர். அவரும் இராமபிரானும் ஒரே காலத்தவர் என்பர்.

வான்மீகிமுனிவ ரியற்றிய இராமாயணம், நாட்டிலே பிற்காலத்தில் தோன்றிய நூல்கள் பலவற்றிற்கும் ஆதியாய் நின்று வழிகாட்டினமையின் 'ஆதிகாவியம்' என ஆன்ருேரால் போற்றப்பெற்று, அன்றுமுதல் இன்றளவும் தன்னுெளி குன்ருமல் விளங்கி வருகின்றது. இதனையடுத்து வடமொழியில் தோன்றியன, அத்யாத்ம ராமாயணம், ஆனந்த ராமாயணம் என்பன.

வான்மீகத்தின் பலவகைச் சிறப்புக்களைக் கண்ட, பல்வேறு மொழியினரான நம் பாரதநாட்டுக் கவிஞர் பலரும், அதனைத் தத்தம் மொழியிற் பெயர்த்தல், அதன் உயர்ந்த கருத்துக்களைப் பலவேறு வகையில் அமைத்துத் தாம் தனி நூலயாத்தல், இராமசரித்திரக் கதாப்பிரசங்கம் செய்தல் போன்ற முறைகளால், அக்காவியத்தின் உண்மைப் பொருள் நாட்டில் வேரூன்றி நிலைக்க வகைசெய்தனர். இம்முறையில் நம் தமிழ்நாட்டிலும் இராமகதையின் ஏற்றம் மிகப் பழங்காலந் தொட்டே சிறந்து விளங்கலுற்றது. தமிழில் காவியமாகத் தோன்றிய கம்பராமாயணம் ஈடும் எடுப்புமின்றி உலகப் பெருநூல்களுள் ஒன்ருகக் கருதப் பெறும் பெருமையுடன் விளங்கி வருகின்றது.

கருவிலே திருவுடையராய்க் கலைமகளருளும் பெற்றுத் தமிழிலும் வடமொழியிலும் சிறந்த புலமையோடு கவித்துவமும் பெற்றிருந்த கம்பநாடர், இராமசரித்திரத்தில் ஈடுபட்டு, அதனைக் காப்பியமாகப் புனையுங்கருத்தும் ஊக்கமுங் கொண்டு இயற்றத் தொடங்கி, சங்க நூல்களிலும் சீவக சிந்தாமணியிலும் தாம் கண்ட அரிய கருத்துக்களையும், சொற்ருெடர்களையும், பொருளமைதியையும், பொன்னே போற்போற்றித் தம் நூலுள் ஆங்காங்கே அமைத்துள்ளார். சீவகசிந்தாமணி, விருத்தநடையமைப்பிலும் கருத்துவளச் செறிவிலும் மிகச் சிறந்ததாகலின், அதுவே இவருக்கு முன்மாதிரியாக இருந்தமையை இவர் நூலுட் காணலாம். வடமொழி அத்யாத்மராமாயணக் கருத்துக்களும் இவரால் தம் நூலுட் பலடவிங்களில் தழுவிக் கொள்ளப் பெற்றுள்ளன. நன்றியறிதலும் நாட்டுப்பற்றும் மிகவுடைய

ராதலின் இவர் தம்மை ஆதரித்த சடையப்ப வள்ளலையும், தாம் பிறந்த தமிழ் நாட்டையும் தம் நூலுள்ளே தக்கவிடங்களில் வைத்துப் பாராட்டுகின்றார்.

கம்பநாடர், தாமியற்றிய காவியத்துக்கு 'இராமாவதாரம்' என்று பெயர் சூட்டினர் ; ஆயினும் கம்பராமாயணம் என்பதே பெருவழக்காகவுள்ளது. இராமாயணத்தின் காண்டங்கள் ஏழனுள், முதல் ஆறு காண்டங்களே கம்பநாடர் இயற்றியவை. ஏழாவதாகிய உத்தர காண்டத்தை வாணியன் தாதன் என்ற புலவர் இயற்றினரென்பர்.

இவற்றுள் முதலாவதாகிய பாலகாண்டம், சற்றேறக்குறைய 1400 பாடல்களைக் கொண்ட 22 படலங்களாகப் பகுக்கப்பெற்றுள்ளது. இப்படலப் பெயர்களும், தொகையும் பாடல்களின் தொகையும், முன்னுள்ள அச்சுப் பதிப்புக்களிலும், பல ஏட்டுப் பிரதிகளிலும், பல வேறுபாடுடையனவாகவுள்ளன. பலவற்றையும் ஆராய்ந்து, சிறந்ததெனத் தோற்றிய முறையே இங்குக் கைக்கொள்ளப் பெற்றது. இப்பதிப்பைப் பற்றிய பல விவரங்களைப் பதிப்புரையிற் காணலாம். பாலகாண்டத்துள், இராமபிரான் முதலிய குமரர் நால்வருடைய பிறப்பு, வளர்ப்பு, கல்வித்திறன், வீரம், திருமணம், பரசுராம கருவபங்கம் ஆகியவை பேசப் படுகின்றன.

கம்பநாடர், முதனூலாகிய வான்மீகத்தைக் கதைப் போக்கில் பெரும்பாலும் தழுவித் தம் காவியத்தை அமைத்திருப்பினும், தாம் வாழ்ந்த தமிழ் நாட்டின் பண்பாடுகளுக்கும், தம்முடைய கவியாற்றல், கற்பனைத் திறன் முதலியவற்றிற்கும் ஏற்பப் பலவிடங்களில் சில வேறுபாடுகளையும் கைக்கொண்டுள்ளார், அவற்றுட் சில வருமாறு:—

முதற்கண், தமிழ்க்காப்பிய மரபின்படி காப்பியத் தலைவனுடைய நாடு நகரங்களைச் சிறப்பிக்கத் தொடங்கி, அதற்கென, ஆற்றுப்படலம் நாட்டுப்படலம், நகரப்படலம் என்ற மூன்று படலங்களை அமைத்திருக்கின்றார். நாட்டுப் படலத்துள், நானில வளங்களையும், அவற்றுள்ளே திணை மயக்கத்தையும் சிறப்பாக விரித்துக் கூறுகின்றார். நகரப்

படலத்திற் கூறும் அயோத்தி நகர வருணனைகள், மிக்க சிறப்பும் அழகும் வாய்ந்தன. இடையே காப்பியச் சுவையை மிகுத்தற் பொருட்டு வரைக்காட்சி, நீர் விளையாட்டு, பூக் கொய்தல், உண்டாட்டு என்பவற்றைப் புகுத்தி, இவற்றுக் கெனத் தனித்தனிப் படலங்களை அமைத்துக் கொண்டு அழகுற விரித்துரைக்கின்றார். இவற்றிற்கிடமாக தசரத சக்கரவர்த்தி தன் குமரர் திருமணங் குறித்து அயோத்தியி னின்றும் பரிவாரங்களுடன் புறப்பட்டு மிதிலை போய்ச் சேரும் பகுதியைத் தேர்ந்து கொண்டார். முதனூலில் மிக வும் சுருக்கமாகக் கூறப் பெற்றுள்ள இப்பயணச் செய்தியை இவர் மிகவும் விரித்துக்கொள்கின்றார். பின்பு இராமபிரான், தேரேறி மிதிலை நகர வீதிகளிலே உலாப் போந்தமை யுரைக்கும் 'உலாவியற்படலம்' என்றவொன்றை வகுத்துக் கொண்டு, அதனுள் உலாப்பிரபந்தத்தின் செய்திகளைச் சுருங்க அழகுற அமைத்துக் காட்டுகின்றார். கதைப் போக்கில் இவர் கையாளும் செய்திகள் பலவற்றிற்கு அத்யாத்ம ராமாயணம் ஆதாரமானதென்பது புலனாகின்றது. அத் தகைய விடங்கள், ஆங்காங்கே விசேடவுரையில் காட்டப் பெற்றுள்ளன.

இவர் வாக்கில், இடத்துக்கேற்றவாறு பாடல்களின் ஓசையமைப்பும், சொற் பொருள் நயமும், அணிகள் பலவும் ஆங்காங்கே சிறந்து மிளிர்கின்றன. "செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல், வவ்விய கவிஞர்" என இவர் கூறுங் கவிஞரிலக்கணத்துக்கு எடுத்துக் காட்டாக இவர் தாமே அமைந்துள்ளார். 'கவிச் சக்கரவர்த்தி' என ஆன்றோர் புகழ்தற் கேதுவான கவிக ளல்லவா அவை! பொருளணிகளுள்ளே தலையாய உவமை யணியின் வகைகளும், தற்குறிப்பேற்றமும், வேற்றுப் பொருள்வைப்பும் இவர் வாக்கிற் பயின்று வருவன. சிலேடையும் பலவிடங்களில் சிறக்க அமைந்துள்ளது. சொல்லணிகளாகிய யமகம், திரிபு, மடக்கு முதலியனவும் பலவிடங்களில் வருகின்றன. வரைக்காட்சிப் படலத்துள் தொடர்ச்சியாக ஒன்பது பாடல்கள் (944-52) மடக்கணி கொண்டவை.

இவருடைய கடவுள் (திருமால்) பக்தி ஈடற்றது 'இராமபிரான் பரம்பொருளாகிய திருமாலே; அதற்கேற்பச் சீதைப் பிராட்டியும் அப் பெருமானை அகலாதுறையும் திரு மகளே' என்ற உண்மையை அங்கங்கே நினைவுறுத்திக் கொண்டே செல்லுதல் இவரியல்பு. இதனையும் அவ்வவ் விடத்தின் விசேடவுரையில் எடுத்துக் காட்டியுள்ளோம். இராமபிரான் திருமாலே யென்றமைக்கு இரண்டோரிடம் காண்போம்:

" ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை " (282)

" கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச் சிலை
தடக்கைக் கொண்ட கொண்டல் " (708).

பிராட்டி திருமக ளென்றமைக்கு:

" மையறு மலரி னீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவ ளிருந்தாள் " (556)

" போதினை வெறுத்தரசர் பொன்மனை
புகுந்தாள் " (1226)

என்பன காண்க.

இன்னும் இவ்விருவரையும் இணைத்து,

" கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ " (593)

என மிதிலைக் காட்சியுள்ளும்,

" எங்கள்செய் தவத்தினி லிராமனென்ன வந்தோன்
சங்கினொடு சக்கர முடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லும்
மங்கையிவ ளாமென வசிட்டன் மகிழ்வுற்றான் " (1227)

என வசிட்ட முனிவர் உட்கோளாகக் கோலங்காண் படலத் துள்ளும் கூறியுள்ள அழகு நோக்கி இன்புறத்தக்கதாகும்.

## பிற சிறப்புக்கள்

மிதிலைக் காட்சிப் படலத்தில், தமிழ் மரபின்படி 'காட்சி' என்னும் அகப்பொருட்டுறையை அமைத்து, பிரானும் பிராட்டியும் முதற்கண் ஒருவரையொருவர் கண்டு, கண் ணொடு கண்ணிணை நோக்கொத்து, ஒருவர் இதயத்துள்

ஒருவர் மாறிப் புக்கனர் என்றுகூறி, அதற்கேற்பப் பின்னே கைக்கிளையாக இருவரும் விரக வேதனை கொண்டு இரங்கு தலையும் விரித்துக் கூறுகின்றார். இவ்விடத்துச் சந்திரனை யும், மன்மதனையும், தென்றலையும், அன்றிலையும் பழித்தல் போன்றன பலவற்றை அமைக்கின்றார்.

ஓரிடத்தில் ஒன்றைக் கூறின் அதனை நினைவில் இருத்திக்கொண்டு, அதனோடு தொடர்பு படுத்திப் பிறிதோ ரிடத்தில் ஒரு செய்தியைப் பொருத்திக் கூறுவார். உதாரண மாக, தசரதனால் விசுவாமித்திர முனிவரிடம் ஒப்படைக்கப் பெற்ற இராமலக்குமணர், முனிவரைத் தொடர்ந்து சென் றமை கூறுமிடத்து, 'ஐயனும், மன்ன னின்னுயிர் வழிக் கொண்டாலெனச், சொன்ன மாதவற் றொடர்ந்து' சென்ற னர் என்று, இராமபிரான் தசரதனுக்கு உயிர் என்பதைக் குறிப்பித்தவர், பின்னே மிதிலையில் தந்தையும் தநயரும் சந்திக்குமிடத்தில், "தேவருந் தொழுகழற் சிறுவன், முன் பிரிவதோர் ஆவி வந்தென்ன வந்தரசன் மாடணுகினான்" என்கிறார். மிதிலைக் காட்சிப் படலத்துள், ஐயனும் அவளும் ஒருவரையொருவர் நோக்கி மனக்கலப்புற்றனர் என்ற விடத்து, இருவரும் முறுவல் பூத்தமையைக் குறிப்பாகப் பெறவைத்து, பிரானது முறுவலில் மனம் பறிகொடுத்த பிராட்டியின் கூற்றாக, "முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே' (624) என்று கூறிவைத்து, அவ்வாறே பிராட்டி யின் முறுவலை நுகர்ந்தின்புற்ற பிரான், அதனை நினைந்து வருந்துவதாக, "வாணிலா முறுவற் கனி வாய்மதி, காண லாவதொர் காலமுண்டாங் கொலோ" (697) எனப் பின்னே எடுத்துக் கூறுகின்றார். கதையில் பின்னே வரும் நிகழ்ச்சி யொன்றை முன்னேயே ஓரிடத்தில் உவமையாக வைத்துக் கூறுவதும் இவரியல்பு.

காவிய முறைப்படி சந்திர சூரியர் உதய அஸ்தமனங் களைத் தக்கவிடங்களில் அவ்வவ்விடத்துக்கேற்ற அணி யுடன் அழகாக வருணிக்கின்றார். தற்குறிப்பேற்றவணி பல விடங்களில் மிக அருமையாக அமைந்துள்ளது. வேற்றுப் பொருள் வைப்பணி வருமிடங்களில், உயர்ந்த கருத்துக்

களையும் நீதிகளையும் சிறப்புற அமைப்பர். மாதிரிக்கு இரண்டொன்று காண்போம் :—

"ஆன தூயவ ரோடுட னுடினர்
ஞான நீரவ ராகுவர் நன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ" (1025)

திருமணத்தின் பொருட்டுப் பிராட்டியை அலங்கரித்த பெண்களே அப்போது அவளழகைக் கண்டு மயங்கினர் என்ற சிறப்புப் பொருளைக் கூறி 'சிறந்த அழகை நுகர்ந் தின்புறுதலில் ஆடவராயினும் மகளிராயினும் மனம் ஒரு தன்மைப் பட்டவரே' என்ற பொதுக் கருத்தை நுட்பமாக அமைத்து, "மஞ்சர்க்கும் மாதரார்க்கு மனமென்பதொன்றே யன்றோ" என்கின்றார். இவர் கூறும் உவமைகளின் அழகும் அருமையும் எவ்வளவு எடுத்துக்காட்டினும் அமையா. பல விடங்களில், சிறப்புப் பற்றி எதிர்நிலையுவமையைக் கையாள்வர்.

"தீயவரொ டொன்றிய திறத்தரு நலதோர்
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துடனெழுந்தே
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே" (909)

என்றதில் உள்ள நயம் ஓர்க.

இராமாயணத்தில் வரும் கதாபாத்திரங்களின் இயல்பு களையும், மன நிலைகளையும் இவர் கண்ணாடிபோலக் காட்டு வர். இதனால் இவருடைய நூலுக்குக் கம்ப நாடகம் என்ற வொரு பெயரும் நாட்டில் வழங்குகின்றது. நூலுள்ளே வரும் மிக நுட்பமான விடங்களைக் 'கம்பசூத்திரம்' என்பர் பெரி யோர் பரசுராமப்படலத்துள், பரசுராமன் முதலில் இராம பிரானைக் குறித்து வந்த நிலையையும், அதுகண்ட சக்கர வர்த்தியின் மன நிலையையும், பரசுராமன் இராமபிரானைச் சந்தித்தபின் நிகழ்ந்தவற்றையும் இவர் கூறும் அழகு, படிப்பவர்மனத்தைப் பரவசப்படுத்தும். நாடகம் என்பதற்கு மிகவும் பொருத்தமானது இவ்விடம்.

பாலகாண்டத்துள் இடைப்பிறவரலாக வரும் கௌசிகி யாற்றின் வரலாறு, அங்கதேச வரலாறு, பகீரதன் கங்கை கொணர்ந்தமை, கீழ்கடல் சகரரால் தோண்டப்பட்டமை, துருவாசரால் இந்திரன் சாபம் பெற்றமை முதலியவற்றை யும் இவர் விரிவாகக் கூறிச் செல்கின்றார். அக்காண்டப் பகுதியில், கௌசிக முனிவர் பங்கு சிறப்புடையதாகலின், அவரியல்புகளையும் பெருமையையும் ஆங்காங்கு நன்கு விளக்கிச் செல்வதோடு, சதாநந்தர் வாயிலாக அம்முனி வரின் வாழ்க்கை வரலாற்றினையும் விரித்துக் கூறுகின்றார். பண்டைக்கால வழக்கப்படி இராமாயண கதாப்பிரசங்கம் செய்வோருக்கு இவையெல்லாம் நன்கு பயன்படத் தக்கன. இவ்வாறாக, இவர் நூல் பலவகைச் சிறப்புக்கு ஆகரமாக விளங்குகின்றது.

வெல்லப் பிள்ளையாரைக் கிள்ளிச் சுவைப்பின், இன் சுவையில்லாத இடமும் உண்டோ? அதுபோலக் கம்ப ராமாயணத்தை எங்கே எடுத்துப் படிப்பினும், படிப்பவர் மனங்கவர்தலில்லாதவிடமே யில்லை யெனலாம். இத னாலேயே, சாதி, மத வேறுபாடின்றி, அனைவரும் இதனை விரும்பிப் படிப்பர். தத்தமக்கேற்றவாறு இதனை உரை நடையாகவும், உரையும் பாட்டும் விரவியதாகவும் அமைத் துக்கொண்டு கதாப்பிரசங்கம் செய்வர். இராம சரித்திரம் கூறுவனவாகச் சங்க காலத்தும், கம்ப நாடருக்குப் பின் னும் தோன்றியவை பலவும் வழக்காறொழிந்துபோக, இவர் காவியம் எத்தனையோ அச்சுப் பதிப்புக்கள் மூலமாகவும், வாய் வழக்காகவும் வளமை குன்றாமல் இன்றளவும் வழங்கி வருகின்றது. இனியும், காலங்கடந்து இவ்வாறே விளங்கு மென்பதற்கையமில்லை.

இந்நூல்நிலைய வெளியீடான, கம்பராமாயணத்தின் ஏனைக் காண்டங்கள் போலவே இப் பாலகாண்டமும் வெளி வரும் பணியில் முழுப் பொறுப்பேற்று உழைத்தவர், இப் போது இந்நிலையத்துத் தமிழ்ப் பண்டிதராகவுள்ள பண்டித கோ. சேஷாத்திரி ஐயராவர். இவர், திருமயிலை இராம கிருஷ்ண குருகுலக் கலாசாலையில் 38 ஆண்டுகள் தமிழா

சிரியராகப் பணியாற்றியவர்; ஸ்ரீ ஐயரவர்களுடன் நெருங்கிய தொடர்புடையவராய், அவர்கள் நூற்பதிப்புக்குதவியாயிருந்தவர்; தம் தந்தையாரான, பண்டித அ. கோபாலையருடன், அவர் பதிப்பான நூல்களை ஆராய்ந்து பதிப்பிப்பதிலும் பங்கு கொண்டிருந்தவர். இவற்ருல், நூலாராய்ச்சியிலும், நூற்பதிப்பு முறைகளிலும் நல்ல அநுபவமுடையவர். இப்பதிப்பில் இவருடைய பணி மிகவும் பாராட்டுதற்குரியது. இந்நிலையத்தின் ஏனைத் தொண்டர்களும் இதில் தத்தமக்கேற்றவாறு உழைப்பினை நல்கியுள்ளனர். அவரனைவர்க்கும் இந்நிலையத்தார் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையர்.

பரம்பொருளாகிய இராமபிரான், அளவிறந்த பெருமையுடைய தம் சரிதங் கூறுவதும், அவ்வாறே பெருமையுடையதுமான இக்கம்பராமாயணப் பதிப்புப் பணியில், ஆற்றல் குன்றிய எம்மைப் புகுத்தித் தோன்ருத் துணையாயிருந்து நிறைவேற்றிக்கொள்ளும் திருவருட்டிறத்தை நெஞ்சாரப் போற்றி வாழ்த்துகின்ருேம்.

திருவான்மியூர்
20—10—1967

டாக்டர். உ. வே. சாமிநாதையர்
நூல்நிலையம்

# இப்பதிப்பில் மேற்கோளாக எடுத்தாண்ட நூல்கள் முதலியவற்றின் குறிப்பகராதி

அகநா-அகநானூறு
அசதிக் கோவை
அத்யாத்மராமாயணம்
அயோத்-அயோத்தியாகாண்டம்
அரிச்சந்-அரிச்சந்திர புராணம்
ஆசாரக்-ஆசாரக்கோவை
ஆதியுலா
ஆரணிய-ஆரணியகாண்டம்
ஆனைக்காப்-திருவானைக்காப் புராணம்
இரத்தினச் சுருக்கம்
இராசராச சோழனுலா
இராமாநுச. அந்தாதி-இராமாநுச நூற்றந்தாதி
இறை-இறையனரகப் பொருள்
ஈங்கோய் மலையெழுபது
உத்தர-உத்தரகாண்டம்
உத்தரபுராணம்
உபதேசகா-உபதேசகாண்டம்
ஐங்குறு-ஐங்குறுநூறு
கந்த-கந்தபுராணம்
கந்தரலங்-கந்தரலங்காரம்
கல்-கல்லாடம்
கலி-கலித்தொகை
கலிங்கத்-கலிங்கத்துப் பரணி
காஞ்சிப்-காஞ்சிப்புராணம்
கார்நாற்-கார்நாற்பது
கிட்கிந்தா—கிட்கிந்தா காண்டம்
குமாரஸம்பவம்
குலோத். கோவை - குலோத்துங்க சோழன் கோவை.
குலோத்துங்க உலா-குலோத்துங்க சோழனுலா
குறள்-திருக்குறள்
குறிஞ்சிப்-குறிஞ்சிப்பாட்டு
குறுந்-குறுந்தொகை
கூர்ம-கூர்மபுராணம்
சடகோபரந்தாதி
சிதம்பரச் செய்யுட் கோவை
சிலப்-சிலப்பதிகாரம்
சிறுபாண்-சிறுபாணாற்றுப்படை
சீகாழிக்கோவை
சீவக-சீவகசிந்தாமணி
சுந்தர-சுந்தரகாண்டம்
சுந்தரர் தேவாரம்
சூடா-சூடாமணி நிகண்டு
சூரிய சகஸ்ரநாமம்
சூளா-சூளாமணி
சேதுபு-சேதுபுராணம்
தக்க-தக்கயாகப் பரணி
தஞ்சை-தஞ்சைவாணன் கோவை
தண்டி-தண்டியலங்காரம்
தணிகைப்-தணிகைப்புராணம்
தமிழ்நா-தமிழ்நாவலர் சரிதை
தனிப்-தனிப்பாடல்
திணைமாலை-திணைமாலை நூற்றைம்பது
திணைமொழி-திணைமொழி யைம்பது
திரிகடுகம்
திருக்கருவைக் கலித்துறையந்தாதி
திருக்குற்றாலத்.தலபுராணம்
திருக்கோவையார்
திருச்சிற்-திருச்சிற்றம்பலக் கோவையார்
திருப்பாவை
திருப்புகழ்
திருமந்திரம்
திருமாலை
திருவடி-திருவடிதொழுத படலம்
திருவரங்கக்-திருவரங்கக் கலம்பகம்
திருவரங்கக் கோவை
திருவரங்கத்து மாலை
திருவள்ளுவமாலை
திருவாசகம்
திருவாய்மொழி
திருவாரூருலா
திருவால-திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்

திருவிளை—திருவிளையாடற் புரா
    ணம்
திருவெம்பாவை
திவ்—திவ்யப்பிரபந்தம்
திவா—திவாகரம்
தே—தேவாரம்
தொல்—தொல்காப்பியம்
நம்மாழ்வார் திருவிருத்தம்
நல்வழி
நள—நளவெண்பா
நற்—நற்றிணை
நன்—நன்னூல்
நன்னெறி
நாச்சியார்—நாச்சியார் திருமொழி
நாலடி—நாலடியார்
நாவுக்—திருநாவுக்கரசர்
நான்மணி—நான்மணிக்கடிகை
நான்முகன்—நான் முகன்றிருவந்
    தாதி
நீதிநெறி—நீதிநெறி விளக்கம்
நீதிவெண்பா
நெடுநல்—நெடுநல்வாடை
நைடத—நைடதம்
பட்டினப்—பட்டினப்பாலை
பதிற் பதிற்றுப்பத்து
பரி—பரிபாடல்
பழ—பழமொழி நானூறு
பாசவதைப்—பாசவதைப் பரணி
பா—வெ—பாரதவெண்பா
பிங்கல—பிங்கல நிகண்டு
பிரபுலிங்க பிரபுலிங்கலீலை
பு—வெ—புறப்பொருள் வெண்பா
    மாலை
புறநா—புறநானூறு
பூதத்தார் அந்தாதி
பெரிய திருமொழி
பெரியபு—பெரியபுராணம்
பெரியாழ். திரு — பெரியாழ்வார்
    திருமொழி
பெருங்—பெருங்கதை
பெருந்தொகை
பெரும்பாண்—பெரும்பாணாற்றுப்
    படை
பெருமாள் பெருமாள் திருமொழி
பொருந—பொருநராற்றுப்படை
பொன்வண்ணத் — பொன்வண்
    ணத் தந்தாதி
மணி—மணிமேகலை
மதுரை—மதுரைக் காஞ்சி
மதுரைக் கலம்பகம்
மலைபடு—மலைபடு கடாம்
மார்க்கண்டேயனார் காஞ்சி
முத்துக்குமார—முத்துக்குமார
    சுவாமி பிள்ளைத்தமிழ்
முத்தொள்—முத்தொள்ளாயிரம்
முதற்றிருவந்தாதி
முருகு—திருமுருகாற்றுப்படை
முல்லை—முல்லைப்பாட்டு
மூதுரை
மேருமந்தர—மேருமந்தர புரா
    ணம்
யசோதர—யசோதர காவியம்
யாப்—காரிகை—யாப்பருங்கலக்
    காரிகை
யா—வி—யாப்பருங்கல விருத்தி
யுத்த—யுத்தகாண்டம்
ரகுவம்சம்
வான்மீகம்
விக்கிரம உலா—விக்கிரம
    சோழனுலா
விசாகப். அணி—விசாகப்பெருமா
    ளையர் அணியிலக்கணம்
விநாயகபுராணம்
வி—பா—வில்லிபுத்தூரார் பாரதம்
விவேக சிந்தாமணி
க்ஷேமேந்திர பாரதஸங்கிரகம்.

உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்



## துதிப் பாடல்கள்

### பொது

1. ஒன்று யிரண்டு சுடராயொரு மூன்று மாகிப்
பொன்றுத வேத மொருநான்கொடைம் பூத மாகி
அன்றுகி யண்டத் தகத்தாகியப் புறத்து மாகி
நின்று ஞெருவ னவனீள்கழ னெஞ்சில் வைப்பாம்.

2. ஒன்றுய்ப் பலவா யுளனுயில னுயு ரைப்போர்க்
கன்றுய்ப் பரமா யருவாயுரு வாகி மேன்மை
குன்றுத ஞானக் கொழுந்தாய்க்குண மூன்றுந் தந்து
நின்று னியர்வ னவனீள்கழல் சென்னி வைப்பாம்.

### திருமால்

3. நீல மாங்கடல் நேமியந் தடக்கை
மாலை மால்கெட வணங்குது மகிழ்ந்தே.

4. காயும்வெண் பிறைநிகர் கடுவொ டுங்கெயிற்
றுயிரம் பணுமுடி யனந்தன் மீமிசை
மேயநான் மறைதொழ விழித்து றங்கிய
மாயன்மா,மலரடி வணங்கி யேத்துவாம்.

### இலக்குமி

5. மாதுளங் கனியைச் சோதி வயங்கிரு நிதியை வாசத்
தாதுகு நறுமென் செய்ய தாமரைத் துணைமென் போதை
மோதுபாற் கடலின் முன்னுண் முளைத்துநாற் கரத்தி லேந்தும்
போதுதா யாகத் தோன்றும் பொன்னடி போற்றி செய்வாம்.

### இராமபிரான்

6. பராவரு மறைபயில் பரமன் பங்கயக்
கராதல நிறைபயில் கருணைக் கண்ணினன்
அராவணைத் துயிறுறந் தயோத்தி மேவிய
இராகவன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

7. கலங்கா மதியுங் கதிரோன் புரவிப்
பொலன்கான் மணித்தேரும் போகா — இலங்கா
புரத்தானை வானோர் புரத்தேற விட்ட
சரத்தானை நெஞ்சே தரி.

8. நாராய ணாய நமவென்னு நன்னெஞ்சர்
பாராளும் பாதம் பணிந்தேத்து மாறறியேன்
காராரு மேனிக் கருணா கரமூர்த்திக்
காரா தனையென் னறியாமை யொன்றுமே.

### நம்மாழ்வார்

9 தருகை நீண்ட தயரதன் றூன்றரும்
இருகை வேழத் திராகவன் றன்கதை
திருகை வேலைத் தரைமிசைச் செப்பிடக்
குருகை நாதன் குரைகழல் காப்பதே.

### ஆஞ்சநேயர்

10. அஞ்சிலே யொன்று பெற்றா னஞ்சிலே யொன்றைத் தாவி
அஞ்சிலே யொன்றா றாக வாரியற் காக வேகி
அஞ்சிலே யொன்று பெற்ற வணங்கைக்கண் டயலா ரூரில்
அஞ்சிலே யொன்று வைத்தா னவனெம்மை யளித்துக்
[காப்பான்.

11. எவ்வி டத்து மிராமன் சரிதையாம்
அவ்வி டத்தினு மஞ்சலி யத்தனைப்
பவ்வ மிக்க புகழ்த்திருப் பாற்கடல்
தெய்வ தாசனைச் சிந்தைசெய் வாமரோ.

### கலைமகள்

12. பொத்தகம் படிக மாலை குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகந் தரித்த செங்கை விமலையை யமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார முகிழ்முலைத் தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வா யணங்கினை வணங்கல் செய்வாம்.

### விநாயகர்

13. தழைசெவிச் சிறுகட் டாழ்கைத் தந்தசிந் துரமுந் தாரை
மழைமதத் தறுகட் சித்ர வாரண முகத்து வாழ்வை
இழையிடைக் கலசக் கொங்கை யிமகிரி மடந்தை யீன்ற
குழவியைத் தொழுவ னன்பாற் குறைவற நிறைக வென்றே.

14. எக்க ணக்கு மிறந்த பெருமையன்
பொக்க ணத்தன் புலியத ளாடையன்
முக்க ணத்தன் வரம்பெற்ற மூப்பனை
அக்க ணத்தி னவனடி தாழ்ந்தனம்.

### வாழ்த்து

15. வான்வளஞ் சுரக்க நீதி மனுநெறி முறையெந் நாளும்
தான்வளர்ந் திடுக நல்லோர் தங்கிளை தழைத்து வாழ்க
தேன்வளர்ந் தருத மாலைத் தெசரத ராமன் செய்கை
யானளந் தறிந்த பாட லிடையரு தொளிர்க வெங்கும்.

### ஏக விருத்த ராமாயணம்

16. பராவரு மிராமன் மாதோ டிளவல்பின் படரக் கான்போய்
விராதனைக் கரனை மானைக் கவந்தனை வென்றி கொண்டு
மராமரம் வாலி மார்பு துளைத்தணை வகுத்துப் பின்னர்
இராவணன் குலமும் பொன்ற வெய்துட னயோத்தி வந்தான்.

## தனியன்கள்

### கம்பநாடர் பெருமை

17. நாரணன் விளையாட் டெல்லா நாரத முனிவன் கூற
ஆரணக் கவிதை செய்தா னறிந்தவான் மீகி யென்பான்
சீரணி சோழ நாட்டுத் திருவழுந் தூருள் வாழ்வோன்
காரணி கொடையான் கம்பன் றமிழினுற் கவிதை செய்தான்.

18. அம்பிலே சிலையை நாட்டி யமரர்க்கன் றமுத மீந்த
தம்பிரா னென்னத் தானுந் தமிழிலே தாலை நாட்டிக்
கம்பநா டுடைய வள்ளல் கவிச்சக்ர வர்த்தி பார்மேல்
நம்புபா மாலை யாலே நரர்க்குமின் னமுத மீந்தான்.

19. ஆதவன் புதல்வன் முத்தி யறிவினை யளிக்கு மையன்
போதவ னிராம காதை புகன்றருள் புனிதன் மண்மேல்
கோதவஞ் சற்று மில்லான் கொண்டன்மா றன்னை யொப்பான்
மாதவன் கம்பன் செம்பொன் மலரடி தொழுது வாழ்வாம்.

20. அம்பரா வணிசடை யரன யன்முதல்
உம்பரான் முனிவரால் யோக ராலுயர்
இம்பராற் பிணிக்கரு மிராம வேழஞ்சேர்
கம்பராம் புலவரைக் கருத்தி ருத்துவாம்.

21. சம்ப நாட னுமைசெவி சாற்றுபூங்
கொம்ப னுடன் கொழுநனி ராமப்பேர்
பம்ப நாடழைக் குங்கதை பாச்செய்த
கம்ப நாடன் கழறலை யிற்கொள்வாம்.

22. இம்பரு மும்பர் தாமு மேத்திய விராம காதை
தம்பமா முத்தி சேர்தல் சத்தியஞ் சத்தியம்மே
அம்பரந் தன்னின் மேவு மாதித்தன் புதல்வன் ஞானக்
கம்பன்செங் கமல பாதங் கருத்துற விருத்து வாமே.

23. வாழ்வார் தருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பன் வாழ்த்துப்
தாழ்வா ருயரப் புலவோ ரகவிரு டானகலப் [பெறத்
போழ்வார் கதிரி னுதித்ததெய் வப்புல மைக்கம்பநாட்
டாழ்வார் பதத்தைச்சிந் திப்பவர்க் கியாது மரியதன்றே.

## நூல் பாடிய காலம்

24. எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழின்மேற் சடையன் வாழ்வு
நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்ப நாடன்
பண்ணிய விராம காதை பங்குனி யத்த நாளிற்
கண்ணிய வரங்கர் முன்னே கவியரங் கேற்றி-னுனே.

## கவி வளம்

25. கமுந்த ராயுன கழல்பணி யாதவர் கதிர்மணி முடிமீதே
அழுந்த வாளிக டொடுசிலை ராகவ வபிநவ கவிநாதன்
விழுந்த ஞாயிற தெழுவதன் முன்மறை வேதிய ருடனுராய்ந்
தெழுந்த ஞாயிறு விழுவதன் முன்கவி பாடிய தெழுநூறே.

## காவியப் பெருமை

26. தராதலத்தி லுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம்
அராவு மரமாயிற் றன்றே — இராவணன்மேல்
அம்புநாட் டாழ்வா னடிபணியு மாதித்தன்
கம்பநாட் டாழ்வான் கவி.

27. இம்பர் நாட்டிற் செல்வமெலா மெய்தி யரசாண் டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா வோங்கு நீழ லிருந்தாலும் [யில்
செம்பொன் மேரு வனைய புயத் திறல்சே ரிராமன் றிருக்கதை
கம்ப நாடன் கவிதையிற்போற் கற்ரூேர்க் கிதயங் களியாதே.

28. நாரதன் கருப்பஞ் சாருய் நல்லவான் மீகன் பாகாய்ச்
சீரணி போதன் வட்டாய்ச் செய்தனன் காளி தாசன்
பாரமு தருந்தப் பஞ்ச தாரையாய்ச் செய்தான் கம்பன்
வாரமா மிராம காதை வளமுறை திருத்தி ஞனே.

## இராம நாமத்தின் பெருமை

29. நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித் தீருமே
இம்மையே யிராமவென் றிரண்டெ ழுத்திஞல்.

30. ஒராயிர மகம்புரி பயனை யுய்க்குமே
நராதிபர் செல்வமும் புகழு நல்குமே
விராயெணும் பவங்களை வேர றுக்குமே
இராமவென் ருெருமொழி யியம்புங் காலேயே.

31. இறுவ ரம்பி லிராமவென் ருரும்பர்
நிறுவ ரென்பது நிச்சய மாதலால்
மறுவின் மாக்கதை கேட்பவர் வைகுந்தம்
பெறுவ ரென்பது பேசவும் வேண்டுமோ.

## இராமகதையின் பெருமையும் பயனும்

32. வடகலே தென்கலே வடுகு கன்னடம்
இடமுள பாடையா தொன்றி ஞயினும்
திடமுள ரகுகுலத் திராமன் றன்கதை
அடைவுடன் கேட்பவ ரமர ராவரே.

33. இத்த லத்தி லிராமாவ தாரமே
பத்தி செய்து பரிவுடன் கேட்பரேல்
புத்தி ரர்த்தரும் புண்ணிய முந்தரும்
அத்த லத்தி லவன்பத மெய்துமே.

34. அன்ன தான மகிலநற் ருனங்கள்
கன்னி தானங் கபிலேயின் ருனமே
சொன்ன தானப் பலனெனச் சொல்லுவார்
மன்னி ராம கதைமற வார்க்கரோ.

35. மற்ருெரு தவமும் வேண்டா மணிமதி லிலங்கை மூதூர்
செற்றவன் விசயப் பாடல் தெளிந்ததி லொன்று தன்னேக்
கற்றவர் கேட்போர் நெஞ்சிற் கருதுவோ ரிவர்கள் பார்மேல்
உற்றர சாள்வர் பின்னு மும்பராய் வீட்டிற் சேர்வார்.

36. வென்றிசே ரிலங்கை யானே வென்றமால் வீர மோத
நின்றரா மாய ணத்தி னிகழ்ந்திடு கதைக டம்மில்
ஒன்றினேப் படித்தோர்தாமு முரைத்திடக் கேட்டோர்தாமும்
நன்றிது வென்ருேர்தாமு நரகம தெய்தி டாரே.

37. ஆதியரி யோநம நராயணர் திருக்கதை
யறிந்தனுதி னம்ப ரவுவோர்
நீதியனு போகநெறி நின்றுநெடு நாளதி
னிறந்துசெக தண்ட முழுதுக்
காதிபர்க ளாயரசு செய்துள நினேத்தது
கிடைத்தருள் பொறுத்து முடிவில்
சோதிவடி வாயழிவில் முத்திபெறு வாரென
உரைத்தசுரு தித்தொ கைகளே.

38. இராகவன் கதையி லொருகவி தன்னி
லேகபா தத்தினே யுரைப்போர்
பராவரு மலரோ னுலகினி லவனும்
பன்முறை வழுத்தவீற் றிருந்து
புராதன மறையு மண்டர்பொற் பதமும்
பொன்றுநா ளதனினும் பொன்ருு
அராவணே யமல னுலகெனும் பரம
பதத்தினே யடைகுவ ரன்றே.

39. இனேயநற் காதை முற்று மெழுதினுேர் வியந்தோர் கற்ருேர்
அனேயது தன்னேச் சொல்வோர்க் கரும்பொருள் கொடுத்துக்
கனேகடற் புடவி மீது காவலர்க் கரசாய் வாழ்ந்து [கேட்போர்
வினேயம தறுத்து மேலாம் விண்ணவர் பதத்திற் சேர்வார்.



# கம்பராமாயணம்



## தற்சிறப்புப் பாயிரம்

### பரம்பொருள் வணக்கம்

1. உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே.

(பதவுரை). உலகம் யாவையும்-உலகங்கள் யாவற்றையும், தாம்-தாம் (ஒருவராகவே), உள ஆக்கலும்-படைத்தலும், நிலை பெறுத்தலும்-(அவ்வாறுபடைத்த அவற்றைக்) காத்தலும், நீக்கலும் (அவற்றை உரிய காலத்தே) அழித்தலும் (ஆகிய முத் தொழில்களையும்), நீங்கு அலா-(என்றும் தம்மை விட்டு) நீங்குதல் இல்லாத, அலகு இலா விளையாட்டு உடையார் அவர்-எல்லையில்லாத விளையாட்டாக உடையவர் (எவரோ) அவர், தலைவர்-முழுமுதற் கடவுளாவார்; அன்னவர்க்கே-அத்தகைய அவருக்கே, நாங்கள் சரண்-நாங்கள் அடைக்கலம். ஏ-ஈற்றசை.

எடுத்துக் கொண்ட நூல் இனிது முடிதற் பொருட்டு, முதலில் கடவுள் வணக்கம் கூறுதல் மரபாகலின், அவ்வாறே இவ்வாசிரியரும் முதல் மூன்று செய்யுட்களால் அதனைக் கூறலானார். 'உலகம்' என்பது மங்கல மொழியாகலின் அதனை முதலாகக் கொண்டு தொடங்கினர் என்க. ஒப்பு; முருகு. *1*; பெரியபு. *1*.

மூன்றுருவமாயிருந்து முத்தொழில்களையும் செய்யும் முழுமுதற் பொருள் (பரம்பொருள்) ஒன்றே என்ற கருத்தை இச்செய்யுளால் புலப்படுத்தியுள்ளார் ஆசிரியர். விளையாட்டு: விளையாட்டைப் போல எளிதில் செய்தல்; 'இறப்பதே பிறப்பதே யெனும் விளையாட் டுவந்தனையே' (ஆரணிய. *51*); 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி' (திருவெம்.*12*). சரணம்-அடைக்கலம், புகலிடம்; 'சரணமாகுந்தன தாளடைந்தார்க்கெலாம்' (திருவாய். *9.10:5*). இராமாயணம் 'சரணாகதி சாஸ்திரம்' எனப்படுவதனால், அதனைக் குறித்ததுபோல இச்செய்யுள் அமைந்துள்ளமை காண்க.

(பிரதிபேதம்.) 1. தம்முளவாக்கலும்.
2. நிலை பொறுத்தலும்; நித்தலும்; நீங்கிலா; நிங்கிடா; நீக்கலா; நீக்கிலா; நீப்பிலா. 3. எவர்.
4. ஆனவர்க்கே; ஆயவர்க்கே; சரணங்களே.

2\. சிற்கு ணத்தர் தெரிவரு நன்னிலை
எற்கு ணர்த்தரி தெண்ணிய மூன்றனுள்
முற்கு ணத்தவ ரேமுத லோரவர்
நற்கு ணக்கட லாடுத னன்றரோ.

எண்ணிய மூன்றனுள்-(பெரியோர்களால்) சத்துவம் முதலாக எண்ணப்பட்ட மூன்று குணங்களுள், முன் குணத்தவரே-முதலதாகிய சத்துவ குண வடிவமானவரே, முதலோர்-முதன்மையுடைய பரம் பொருள் ஆவார்; சிற்குணத்தர் - சிறந்த ஞானிகளும், தெரிவு அரு நல் நிலை-அறிதற்கு அரிய (அப்பரம்பொருளின்) சிறந்த இயல்புகளை யெல்லாம், உணர்த்த எற்கு அரிது—உணர்ந்து சொல்ல என்னால் இயலாது; (ஆயினும்), அவர் நல் குணம் கடல் ஆடுதல்—அப் பரம் பொருளின் அநந்த கல்யாண குணங்களாகிற கடலிலே மூழ்கித் திளைத்தல், நன்று-(யாவர்க்கும்) நல்லதாகும்.

அரோ-அசை. சிற்குணத்தர் என்றதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. உணர்த்தரிது-அகரம் தொகுத்தல்.

இறைவன் சத்துவகுண சம்பந்நன் என்பது திண்ணம்; அவனே முதல்வன்; அவனுடைய கல்யாண குணங்கள் எல்லாவற்றையும் அறிந்து கூறுதல் யாவர்க்கும் இயலாதாயினும், அவற்றில் இயன்றவளவு ஈடுபடுதல் யாவர்க்கும் நன்மையாம் என்றது கருத்து.

முக்குணங்கள்: ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பன. குணங்களைக் கடலாக உருவகித்ததற்கு ஏற்ப, ஆடுதல் என்றார். 'அலகிலாவானந்த குணக்கடல்' (யசோதர. காப்பு.)

"சிற்குணம்-ஆன்ம ஞானம்; முக்குணங்களுள் முதற்குணமான சுத்த சாத்துவிகமான ஞானத்தை யுடையவரே யாவர்க்கும் முதலாகிய பரப்பிரமம். அவர்-அவருடைய; நற்குணக்கடல் - கிருபாசமுத்திரத்திலே; ஆடுதும்-முழுகுவோம்" (ஒரு பழைய உரை).

பி - ம்.) 1. சிற்குணத்தின்; சிற்குணத்தில்: தெரிதரும்; திரிதரும்: அந்நிலை; நின்னிலை; மன்னிலை.
2\. எற்குணத்தரிது: எய்திய: மூன்றினுள்; மூன்றினும்; மூன்றினின்.
3\. குணத்தவனே முதலோனவன்.
4\. ஆடுது நன்கரோ; ஆடுகை நன்றரோ. (2)

3\. ஆதி யந்த மரியென யாவையும்
ஓதி னலர கில்லன வுள்ளன
வேத மென்பன மெய்ந்நெறி நோன்மையன்
பாத மல்லது பற்றிலர் பற்றிலார்.

ஆதி அந்தம்- தொடக்கத்திலும் முடிவிலும், அரி என-ஹரி: ஓம் என்று சொல்லிக்கொண்டு, அலகு இல்லன—அளவற்றனவும், உள்

ளன-என்றும் உளளனவும் ஆன, வேதம் என்பன யாவையும்-வேதம் என்று சொல்லப்படுவன எல்லாவற்றையும், ஓதினுர்-ஓதி உணர்ந்தவர் களாகிய, பற்று இலார்-அகப்பற்றும் புறப்பற்றும் அற்ற பெரியோர் கள், மெய் நெறி நோன்மையன்-(உலகுக்கெல்லாம்) உண்மை வழியை உணர்த்தும் பெருமையுடையவனுகிய அவ்விறைவனது, பாதம் அல்லது-திருவடியிலே அன்றிப் பிறவற்றில், பற்று இலர்-பற்று உடை யவராகார்.

உலகப் பற்றுக்கள் அற்ற ஞானிகள், தம்மைப் பற்றினுர்க்கு எல்லா நன்மைகளும் தரும் இறைவன் திருவடிகளைத் தமக்குப் பற்றுக் கோடாகப் பற்றுவர் என்றதனுல், அவ்வாறே நாமும் அத்திருவடி களைப் பற்றி நன்மையடைவோம் என்பது இசையெச்சம். 'பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' (குறள். 350) என்பதன் பொருள் இச் செய்யுளில் விளங்குவது காண்க. வேத முதல்வனுன நாராயணனே பரம்பொருள்' என்ற தம் கருத்தை இங்கே ஆசிரியர் குறிக்கின்றனர். மெய்ந்நெறி: 'பொறிவாயிலைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க நெறி' (குறள். 6). வேதம் அலகில்லன: அநந் தாவை வேதா:' (தக்க. 40-உரை). 'மெய்ந்நெறி நோன்மையன்: 'மெய்ந்நெறி நாயகன்றனை' (கிட்கிந்தா. 903).

''மெய்ந்நெறி நோன்மையனுடைய பாதங்கள் ஆதிஅந்தம் அரி யன. (அரியன-இல்லாதவை). யாவையும் ஓதினுர் அலகில்லன-சகல கலைகளையும் அறிந்தவர்களாலும் அளவிடக் கூடாதவை. 'வேதமென் பன உள்ளன-வேதங்களானவை சிரசின் மேலே உண்மையாக வைத் திருக்கப் பெற்றன. பற்றிலார் அல்லன பற்றிலர் - எப்பற்றுக்களையும் துறந்த ஞானிகள் இப் பாதங்களையல்லாமல் பிறவற்றைப் பற்றமாட் டார்கள்'' (என்பன ஓர் உரை).

''ஆதியந்தம் அரியனவும், அலகில்லன வேதங்கள் உள்ளன என் பனவுமாகிய பாதம் எனக் கூட்டுக. 'வேதம் உள்ளன என்பன' என்று அந்வயம். மெய்ந்நெறி நோன்மையன்-உண்மை வழியான பெருமை யுடையவன். பற்றிலர் பற்றிலார்-பற்ருர்கள் விருப்பும் வெறுப்புமற்ற பெரியோர்கள். இவ்வாறன்றி, 'ஆதியந்தமும் அரியென யாவையும் ஓதியும், அலகில்லென உளவென வேதமென்பன' எனப் பாடங் கொண்டு, 'ஆதியிலும் அந்தத்திலும் அரியென்று சொல்லியும் வேதங் கள் பரத்துவ நிலையறியாமல் மயங்கும்'எனஉரைப்பாருமுளர். உலகம் யாவையும் என்னுந் திருவிருத்த முதல் மூன்று பாட்டாலும் பொது மையாற் பிரமத்தை வணங்கினுன் கம்பன். இது மகா காவியமாகை யால் இம்மூன்று பாட்டுக்கும் தனித்தனியே பொருள்விரிக்கிற் பெருகு மென வறிக'' (பழைய உரை).

(பி - ம்.) 1. அரியன: அரியென.
2. ஓதினுன்: அலகில்லென; உலகில்லென; அலதில்லன; அஃதில்லன; இலதில்லென; அலதில்லென: அலகுள்ளன வில்லென.
3. வேதமோதென; வேத நான்கினும்: மெய்ந்நெறி நன்மையன்; மென்னெறி நன்மையன்; மெய்ந்நெறியாலவன்; மென்னெறியாவன; மெய்தெரியாமையின்; மெய்ந்நெறியாமவன்; மேனெறி நோன்மையன்; மெய்ந்நெறி நோன்மையின்; மெய்ந்நெறி மேன்மையன்; மெய்ந்நெறியானவன்.
4. பற்றலர்; மற்ருெரு; பத்திலார்; பற்றரோ. (3)

## அவையடக்கம்

4. ஓசை பெற்றுயர் பாற்கட லுற்ருெரு
பூசை முற்றவு நக்குபு புக்கென
ஆசை பற்றி யறையலுற் றேன்மற்றிக்
காசில் கொற்றத் திராமன் கதையரோ.

ஒரு பூசை-ஒரு பூனையானது, ஓசை பெற்று உயர் பால்கடல் உற்று-மிக்க ஓசையுடையதாய் அலைகள் உயர்ந்து விழுகின்ற பாற்கடலினை அணுகி, (தன் ஆசையால்), முற்றவும் நக்குபு புக்கது என-அக்கடல் முழுவதையும் நக்கிப் பருகிவிடத் தொடங்கியது போல, (நானும்), காசு இல் கொற்றத்து இராமன் - குற்றமற்ற வெற்றியை உடைய இராமபிரானது, இ கதை-(பெருமை மிக்க)இந்தக் கதையை, ஆசை பற்றி-(என்னுள்ளே எழுந்த) ஆசையால், அறையல் உற்றேன்-(என் சிறுமையையும் இராம கதையின் பெருமையையும் பாராமல்) சொல்லத் தொடங்கினேன். மற்று, அரோ-அசைகள்.

இது முதல் ஆறு கவிகள் அவையடக்கம் கூறுவன. அவையடக்கமாவது, நூல் செய்யும் புலவன், பெரியோர்முன் தன்னைத் தாழ்த்திச் சொல்லிக் கொள்ளுதல். அவையடக்கம்-கற்ருேர் அவைக்கு அடங்குதல்; இது கவிமரபு. இச்செய்யுளில் ஆசிரியர் தாம் எடுத்துக்கொண்ட நூலின் பெருமையையும் தம் ஆற்றலின் சிறுமையையும் காட்டி அவையடக்கம் கூறுகின்ருர்.

பூனை, தனது ஆற்றலை உணராமல் ஆசை மிகுதியால் பாற்கடலைக் குடித்துவிடப் புகுந்தால் அது இயலாதவாறுபோல, ஆற்றலில் சிறிய வனுகிய யானும் இராம கதையைப் பாடி முடித்தல் இயலாததாயினும், ஆசை மிகுதியால் என் ஆற்றல் உணராது இவ்வருஞ் செயலில் ஈடுபட்டேன் எனத் தம்மைத் தாழ்த்திக் கூறிக்கொள்கின்ருர். இராம கதையைப் பாற்கடலாகவும் தம்மைப் பூனையாகவும் உருவகித்தார், பெருமை-சிறுமை தெரிதற்கு. நக்குபு, செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; 'நக்க' என்ற செயவென்னெச்சப் பொருளில் வந்தது. புக்கென: தொகுத்தல்.

பூசை..........புக்கென: ஒப்பு: 'முற்றப், பெருகு தெண்கட லுற்றுண் பெருநசை, யொரு சுணங்கனை யொக்குந் தகைமையே' (பெரிய. பாயிரம், 6). ஆசை பற்றி அறையலுற்றேன்: ஒப்பு: 'காதல் கிளரத் தமிழ் நூற்கலுற்றேன்' (சூளா. பாயிரம். 2)

(பி - ம்.) 2. முற்றவுள்: நக்குவ; நக்கமுன்: புக்கெனும்; புக்கிட.
3. மற்றக்; மற்றை; மற்றிவ்; மற்றவ்; மற்றத்: அறையலுற்றேனெரு; அறையலுற்றேன் றகு. 4. ஏசில். (4)

5. நொய்தி னெய்யசொ னூற்கலுற் றேனெனை
வைத வைவின் மராமர மேழ்தொளை
எய்த வெய்தவற் கெய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொன்னின்ற தேயத்தே.

வைத வைவின்-(வேடனை) வைத வசவினால், (சாபத்தால்), மராமரம் ஏழ் தொளை எய்த எய்தவற்கு-மராமரங்கள் ஏழும் (ஒரே அம்பினால்) தொளை பெறும்படி எய்தவனான இராமபிரானுக்கு, எய்திய-பொருந்தியதான, மா கதை-சிறந்த கதையை (இராமாயண காவியமாக),செய்த-இயற்றிய, செய்தவன்-செய்து முடித்த(முற்றின) தவத்தையுடைய வான்மீகி முனிவருடைய, சொல் நின்ற தேயத்து-வாக்காகிய ஆதிகாவியம் நிலைத்து வழங்குகின்ற இந்நாட்டிலே, நொய்தின் நொய்ய சொல்-மிகவும் எளியனவான என் புன் சொல்லைக் கொண்டு,நூற்கலுற்றேன்-(துணிந்து) நூல்செய்யத் தொடங்கினேன்; எனை!-என் அறியாமை இருந்தவாறு என்னே!

இச்செய்யுளில் வான்மீகி முனிவர் பெருமையும் அவர் இயற்றிய காவியத்தின் பெருமையும், தம் சிறுமையும் தம் சொல்லின் சிறுமையும் பாராமல் (ஆசையால் துணிந்து) தாம் நூல் செய்யத் தொடங்கியதைக் கூறி, அவையடக்கம் கூறுகின்றார். இத்தகைய தம்முடைய முயற்சியால் முதனூலாசிரியரின் பெருமை நன்கு விளங்கும் என்ற குறிப்பும் காண்க.

எய்தவற்கு எய்திய மாகதை-இராமபிரானுடைய பெருமைக் கேற்றவாறு அமைந்த சிறந்த கதை. செய் தவன்-நினைத்தது செய்யத் தக்க தவத்தையுடையவன் என்றும் ஆம்; 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவம், ஈண்டு முயலப்படும்'. (குறள். 265).

வைத வைவின் எய்திய மாக்கதை என்று கொண்டும் பொருள் கூறுவர்; வான்மீகி முனிவர் ஒருநாள் நீராடத் தமசா நதிக்குச் சென்றார். அப்போது அங்கே ஆணும் பெண்ணுமாகிய இரண்டு கிரவுஞ்சப் பறவைகள் கூடிச் சுகித்திருக்கையில் அங்கு வந்த வேடனொருவன் அவற்றில் ஆண் பறவையை அம்பெய்து கொன்று வீழ்த்தி விட்டான். தன் துணையை யிழந்த பெண் பறவை பட்ட துன்பத்தைக்

காணப் பொருத முனிவர், வேடன் மேல் கோபங்கொண்டு, அவனைச் சபித்தார். அச்சாபம், பிரமன் அருளால் ஒரு சுலோக வடிவமாக அவர் வாயினின்று வெளிப்பட்டது. பின்பு நான்முகன் நேரில் அவரிடம் வந்து, 'நம்முடைய விருப்பப்படி கலைமகள் உம்முடைய நாவிலிருந்து இச் சுலோகத்தை வருவித்தாள்; ஆகவே, இதனை முதலாகக் கொண்டு தொடங்கி நீர் இராம சரித்திரத்தைக் காவியமாகப்பாடும்' எனக் கட்டளையிட்டு அருள்செய்து மறைய,முனிவர் ஆனந்தமடைந்து, அவ்வாறே தொடங்கி இராமாயண காவியத்தைச் செய்துமுடித்தார் என்பது வரலாறு. வேடனைச் சபித்த சாப வாக்கியங்களே வேறொரு வகையில் இராமாயணத்துக்கு முதலில் மங்கள சுலோகம் போல் பொருளமைதியுடையனவாய் அமைந்தன என்பது குறிக்கப்பெற்றது.

வைத வைவின்-முனிவர்கள் சாபம் தப்பாதது போல, மராமரம் ஏழ் தொளை எய்த-ஏழு மராமரங்களும் ஒரே அம்பினால் தப்பாமல் தொளைபடும்படி எய்தவன் என்றும் கூறலாம். மாக்கதை; 'பொய்யில் கேள்விப் புலமையினோன்புகல் தெய்வ மாக்கதை' என அடுத்த கவியிலும், 'தோமறு மாக்கதை' என 11-ஆம் கவியிலும் கூறுதல் காண்க.

(பி - ம்.) 1. நூற்கடலுற்றெனை; நுவலலுற்றேனெனை.
2. வைத வைவிது; வைத வைவினர்; வைதல் வைவில்: மாமரம்: ஏழ்புழை; ஏழ்துளைத்து; மேற்றொளை.
3. எய்தது; எய்தவர்க்கு.
4. செய்தவர்: சென்னியில்: தேசத்தே. (5)

6. வைய மென்னை யிகழவு மாசெனக்
கெய்த வும்மி தியம்புவ தியாதெனில்
பொய்யில் கேள்விப் புலமையி னோன்புகல்
தெய்வ மாக்கதை மாட்சி தெரிக்கவே.

வையம் என்னை இகழவும்-இவ்வுலகத்தார் என்னைப் பரிகசிக்கவும், மாசு எனக்கு எய்தவும் - (இவ்வருஞ் செயலை அஞ்சாது மேற்கொண்ட) குற்றம் எனக்கு உண்டாகவும், (அவற்றைப் பொருட்படுத்தாமல்), இது இயம்புவது யாது எனில் - இதனை நான் சொல்லத் தொடங்கியது ஏன் என்றால், பொய் இல் கேள்வி புலமையினோன் புகல்-குற்றமற்ற கேள்வியையும் புலமையையும் உடைய வான்மீகி முனிவர் சொல்லிய, தெய்வம் மா கதை மாட்சி-தெய்வத் தன்மை பொருந்திய சிறந்த (இராம) கதையின் பெருமையை, தெரிக்கவே-(உலகுக்குத்) தெரிவிப்பதற்கே யாகும்.

ஏகாரம்-பிரிநிலை. தெரிக்க-தெரிய. என்பதன் பிறவினை வையம் - ஆகுபெயர்.

ஆசிரியர், இராமகாதையைக் கேட்டு அதில் ஈடுபட்டதனால் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற கருத்துடன் தமிழ்

நாட்டுக்குப் பயன்படும் வண்ணம் இதனைத் தமிழிற் பாடலானார். தமக்கு ஆற்றலின்றியும் இதனைச் செய்யத் தொடங்கியது இதன் பெருமையை உலகம் அறிய வேண்டுமென்ற அவாவினாலேயே என்கின்றார். பொய்யில் கேள்வி: 'பொய்யற்ற கேள்வியால்' (கலி. பாலை.14).

(பி - ம்) 1. இகழ்வதும். 2. இதியம்பியது; ஈதியம்புவது. 3. புலமையினோர் புகழ். 4. மாக்கவி. (6)

7. துறைய டுத்த விருத்தத் தொகைக்கவிக்
குறைய டுத்த செவிகளுக் கோதில்யாழ்
நறைய டுத்த வசுண நன் மாச்செவிப்
பறைய டுத்தது போலுமென் பாவரோ.

ஓதில் - சொல்லுமிடத்து, துறை அடுத்த-பல விகற்பங்களும் பொருட் கூறுபாடுகளும் பொருந்திய, விருத்தம் தொகை கவிக்கு-பாடல்களின் தொகுதியாகிய (சிறந்த) நூல்களுக்கு, உறை அடுத்த-உறைவிடமாகப் பொருந்திய, செவிகளுக்கு - (புலவர்களின்) காதுகளுக்கு, என்பா-என்னுடைய பாடல்கள்,யாழ் நறை அடுத்த-யாழிசையாகிய தேனைப் பருகி இன்புற்ற, அசுணம் நல் மா செவி-அசுணம் என்னும் நல்ல விலங்கின் காதுகளிலே, பறை அடுத்தது போலும்-(வெறுக்கத்தக்க) பறை ஓசை சென்று இசைத்தது போலாகும். அரோ-அசை.

விருத்தம்-'வ்ருத்தம்' என்னும் வடசொல்; பாடல் என்ற பொதுப் பொருளுடையது. உறை - உறைவிடம்.

அசுணம்: நல்லிசை கேட்டு இன்புறுதலும், கடிய ஓசை கேட்பின் மூர்ச்சையுறுதலோடு ஒரோவழி உயிர்விடுதலும் உடையதொரு விலங்கு; இதனைப் பற்றுதல் அரிதாகலின், பற்ற விரும்புவோர், முதலில் யாழ், குழல் முதலியவற்றின் இன்னிசையை அது கேட்கும்படி செய்து, அவ்விசையின்பத்தால் அது தன்னை மறந்திருக்கும்போது, திடீரென்று கடிய பறையை முழக்குவர்; அதுகேட்ட அசுணம் மூர்ச்சையுற்று விழுந்துவிடும். அப்போது அதனை எளிதில் பற்றிக்கொள்வர். 'அசுணங்கொள்பவர் கைபோனன்று, மின்பமுந்துன்பமு முடைத்தே.... விறலோன் மார்பே'(நற்.304);'இசைகொள் சீறியாழின்னிசை கேட்ட, வசுணநன்மா வந்நிலைக் கண்ணே, பறையொலி கேட்டுத்தன் படி மறந்ததுபோல்' (பெருங். 1.47:241-43) என்பன இக்கருத்தை வலியுறுத்தும். 'இன்னளிக் குரல் கேட்ட வசுணமா, வன்னளாய் மகிழ்வெய்துவித்தாளரோ' (சீவக.1402); இதனுரையில் நச்சினார்க்கினியர்,'அசுணமா இசையறிவதொரு விலங்கு'என்பர். 'கோவலர் கொன்றைத் தீங்குழல், உலவுநீளசுணமா வுறங்குமென்பவே' (சூளா. 34); 'கழைகளின் துளைதொறுங் கால்பரந்திசைக்கின்ற, வேழிசைக்குள முருகிமெய் புளகெழ விசைகொளுமசுணங்கள்' (வி-பா. காண்டவ. 20); 'இசைகேட்ட

வசுணமாத், தாழ்ச்சிபோல் வையகந்தானிறைஞ்சுமே' (மேரு மந்தர. வைசயந்த. 44); 'பறைபட வாழா வசுணமா' (நான்மணி. 4); என்பனவும் காண்க. இதனைப் பறவையென்றுங் கூறுவர் சிலர்: 'முர சொலி கேட்ட வசுணமென் புள்ளின் மூச்சவிந்து' (கூர்ம. இராமன் வனம்புகு சருக்கம். 6.)

முனிவருடைய கவிகளை யாழொலியாகவும், தம்முடைய பாக் களைப் பறையொலியாகவும் கொண்டு ஆசிரியர் இங்கு அவையடக்கங் கூறியுள்ளார்.

(பி - ம்.) 1. துறையெடுத்த: தொகைக் கதைக்கு; கவித்தொகைக்கு; தொகைக்கவி.
2. உறையெடுத்த: செவிகளுக்கோதல்; ஓதின்; ஓதை; செவிகளிற் கோதில்.
3. நறையெடுத்த; மடுத்த: அசுணநன் மாச்செவி; அசுணன்றன் மாச்செவி.
4. பறையடித்தது; பறை மடுத்தது. (7)

8. முத்த மிழ்த்துறை யின்முறை போகிய
உத்த மக்கவி ஞர்க்கொன் றுணர்த்துவென்
பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ.

முத்தமிழ் துறையில்-(இயல், இசை, நாடகம் என்னும்) மூன்று தமிழின் பலதுறைகளிலும், முறை போகிய - முறையாகக் கற்றுத் தேர்ந்த, உத்தமம் கவிஞர்க்கு - மேலான கவிஞர்களுக்கு, ஒன்று உணர்த்துவென் - ஒரு விண்ணப்பம் செய்துகொள்வேன்; (அஃது யாதெனில்), பித்தர் சொன்னவும் - பைத்தியக்காரர் சொன்ன வார்த்தைகளும், பேதையர் சொன்னவும் - அறிவிலிகள் சொல்லிய சொற்களும், பத்தர் சொன்னவும் - பக்திமான்கள் (பரவசத்தால்) சொல்லும் சொற்களும், பன்னப்பெறுபவோ - (அறிஞர்களால்) ஆராயப்படுவனவோ? (அல்ல).

பித்தர்-மனத் தெளிவில்லாதவர்; பேதையர் - பகுத்தறி வில்லாதவர்; பத்திமான்கள் (தம்மை மறந்த) பரவச நிலையில் இருப் போர். ஆதலால் இவர்களுடைய சொற்களை ஆராய்ந்து குற்றங் குறை காணமாட்டார் அறிஞர். (அதுபோல), இராம கதையைப் பாடவேண்டுமென்ற பித்தும், இயற்கைப் பேதைமையும், இராம பிரான் திறத்து முதிர்ந்த பக்தியுமாக, மூன்றையும் ஒருங்கே கொண்ட தம் சொற்களையும் அறிஞர் ஆராய்ந்து குற்றங் காணுதல் தகாது என்று கூறியவாறு. பெறுபவோ: ஓகாரம், எதிர்மறை.

அவையடக்கத்தில் முதல் நான்கு செய்யுட்களால் தமக்கும் முத னூலாசிரியர்க்கும் உள்ள வேற்றுமையைப் புலப்படுத்தி, இச் செய்யு ளாலும் அடுத்து வரும் செய்யுட்களாலும் பொதுவாக நூலுணர்ந்

தோர், துணிவு கொண்ட தமது எளிமையைக் கருதாமல், நூலை ஏற்றுக் கொள்ளுமாறு வேண்டிக் கொள்கின்றார்.

(பி - ம்.) 1. போக்கிய; நோக்கிய: ஓதிய.
2. கவிகட்கு: உணர்த்துவன்; உணர்த்துகேன்.
4. பன்னப் பெறுவவோ; பன்னப்படுமதோ; பன்னப்படுபவோ; பன்னப் படுவதே. (8)

9. அறையு மாடரங் கும்படப் பிள்ளைகள்
தறையிற் கீறிடிற் றச்சருங் காய்வரோ
இறையுங் கேள்வி யிலாதவென் புன்கவி
முறையி னூலுணர்ந் தாரு முனிவரோ.

அறையும்-(வீட்டின் உறுப்பாகிய) அறைகளும், ஆடு அரங்கும் - நடனம் ஆடுதற்கு உரிய அரங்கும், பட-தோன்றும்படி, பிள்ளைகள்-சிறுபிள்ளைகள், தறையில் கீறிடில்-தரையில் கோடுகளாகக் கீறினால், (அதைக்கண்டு), தச்சரும்-(சிற்பநூலில் வல்ல) சிற்பிகளும், காய்வரோ-(இவை சிற்பநூல் முறைப்படி இல்லை என்று) கோபிப்பார்களோ? (கோபிக்கமாட்டார்கள்; குழந்தைகளின் விளையாட்டுச் செயல் என்று இருப்பர்); (அதுபோல), இறையும் கேள்வி இலாத என்–சிறிதும் கேள்வியறிவில்லாத என்னுடைய, புன்கவி-இழிவான கவிகளை, முறையின் நூல் உணர்ந்தாரும்- நூல்களை முறையாகக் கற்று வல்ல பெரியோர்களும், முனிவரோ-(இக்கவிகள் இலக்கணத்துக்குப் பொருந்தியவையல்ல என்று என்னைக்) கோபிப்பார்களோ? (கோபிக்கமாட்டார்கள்.)

தறை-விகாரம். தச்சரும், நூலுணர்ந்தாரும்; இவற்றில் 'உம்மை' உயர்வு சிறப்பு. ஓகாரம் இரண்டும் எதிர்மறை. கீறிடின்-கீறின்; இடு-துணை வினைப்பகுதி.

சிறுபிள்ளைகளின் (தீமையில்லாத) செயலைக் கண்டு பெரியோர் கோபங்கொள்ளமாட்டார்கள்; சிலசமயம் அவற்றைப் பாராட்டுதலும் செய்வர்; (அதுபோல), எனது இச்செயலையும், அறிஞர் இகழமாட்டார்கள்; ஆசையால் நேர்ந்த என் துணிவைக்கண்டு சிறிது உவகையும் கொள்வர் என்றபடி. இப்பாடலில் உள்ளது எடுத்துக்காட்டுவமையணி.

(பி - ம்.) 1. மடப் பிள்ளைகள்; மடப்பள்ளியும். 2. கிறிட; கிறினல்.
3. பொறையு ஞானமில்லாத; பொறையிற் கேள்வியிலாத; ஞானமுணராத; நூலுணராத; நூலறியாத.
4. உணர்ந்தோரும்; அறிவாரும்; அறிந்தாரும்; முறையுநூலறிவாரும்; முறைமை நூலுணர்ந்தாரும். (9)

அவையடக்கப் பகுதியைச்சேர்ந்தனவாக, அடியிற்காணும் இரண்டு பாடல்கள் சில சுவடிகளில் உள்ளன:-

1. எறிகட லுலகந் தன்னு ளின்றமிழ்ப் புலவோர்க் கெல்லாம்
முறுவலுக் குரிய தாக மொழிந்தனன் மொழிந்த வென்சொற்
சிறுமையுஞ் சிலையி ராமன் கதைவழிச் செறித றன்னு
லறிவுடை மாந்தர்க் கெல்லா மமிழ்தமொத் திருக்கு மன்றே.

2. புன்சொற்க ளேனும் புதல்வன்குத லைச்சொ றந்தை
யின்சொற்க ளாகக் கொளலான்முனி யீங்கு ரைத்த
தென்சொற் றமிழும் வடசொற்றுறை யுந்தெ ரிந்தோர்
என்சொற்கள் பொல்லா தெனினும்மிக ழார்க ளன்றே.

## நூல் வழி

10. தேவ பாடையி னிக்கதை செய்தவர்
மூவ ரானவர் தம்முளு முந்திய
நாவி னுருரை யின்படி நான்றமிழ்ப்
பாவி னுலி துணர்த்திய பண்பரோ.

இக்கதை-இவ்விராம சரித்திரத்தை, தேவபாடையின் செய்தவர்-(தேவபாஷையாகிய) வடமொழியினுலே இயற்றியவர்கள், மூவர் ஆனவர் தம்முளும்-மூன்றுபேருக் குள்ளேயும், முந்திய நாவினுர்-முற்பட்ட நாவீறு உடையவராகிய வான்மீகி முனிவருடைய, உரையின் படி-சொற்களின்படியே, நான்-, தமிழ்ப் பாவினுல் இது உணர்த்திய பண்பு-தமிழ்ப்பாட்டுக்களாலே இக்கதையைச் சொல்லிய முறை யாகும். அரோ-அசை.

வடமொழியில் இராமாயணம் இயற்றிய முனிவர் மூவராவர்; அவருள்ளே முதன்மையுடையவர் வான்மீகி முனிவர்; அவரைத் தழுவியே நான் தமிழில் இதனை யியற்றினேன் என்றவாறு. நாரதர், பிரமதேவன், கலைமகள் ஆகியவர்களின் அருளால் இராமகதையைச் சிறிதும் விடாது நன்கு அறிந்து தெய்விகமாக இயற்றியவர் வான்மீகி யாதலால் அவரை 'முந்திய நாவினுர்' என்றுர். மூவர்: வான்மீகி வசிட்டர், போதாயனர் என்போர். வசிட்டர் செய்தது 'வாசிட்ட ராமாயணம்' எனவும், போதாயனர் செய்தது 'போதாயன ராமாயணம்' எனவும் வழங்கும். இவருள் வசிட்டரை விட்டு, வியாசரைச் சேர்த்து, அவரியற்றியது 'அத்யாத்ம ராமாயணம்' எனவும் மற்றும் பலவாறுங கூறுவதுண்டு.

(பி - ம்.) 1. தேவர் பாடையினிற்கதை; பாடையி லிக்கதை; பாடலி னிக்கதை: செய்தவன்; செப்பிய.
2. மூவரன்னவர்; மூவராலவர்; மூவராமவர்; தம்முளமுந்திய; தம்முளு முன்னிய.
3. நாவினுன்; நாவினுல். 4. இயற்றிய பண்பரோ. (10

## நூல் செய்த இடம்

11. நடையி னின்றுயர் நாயகன் றோற்றத்தின்
இடைநி கழ்ந்த விராமாவ தாரப்பேர்த்
தொடைநி ரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய்நல் லூர்வயிற் றந்ததே.

நாயகன்-உலகத்தலைவனுன திருமாலின், தோற்றத்தின் இடை நிகழ்ந்த-அவதாரங்களினிடையே உண்டான, நடையில் நின்று உயர்-நல்லநெறியிலே (வழுவாது) நின்று மேன்மையுற்ற, இராமாவதாரம் இராமாவதாரத்தைப் பற்றிய, பேர்-பெருமைபெற்ற, தொடை நிரம்பிய-பலவகைச் செய்யுளின்பம் மிக்க, தோம் அறு மா கதை-குற்றம் அற்ற சிறந்த கதையாகிய இந்நூல், சடையன் வெண்ணெய் நல்லூர் வயின்-சடையப்ப வள்ளலாரின் திருவெண்ணெய் நல்லூரிலே, தந்தது-செய்யப்பட்டதாகும்.

இச்செய்யுளால், கம்பநாடர் தம் நூலை இயற்றித் தந்த இடம் குறிக்கப்பெற்றது. ஆசிரியர், தம் நூலுக்கு இராமாவதாரம் என்றே பெயர் கொடுத்திருந்தாரென்பது பல பெரியோர்களின் கருத்து. புறத்திரட்டிலும் இப்பெயருடைய தலைப்பின் கீழேயே இந்நூற் பாடல்கள் காணப்படுகின்றன. இராமாவதாரம், நல்லொழுக்கங்களுக்கு முன்மாதிரியாக நடந்து காட்டிய பெருமையுடையது; 'இராமன் நடையையும் கிருஷ்ணன் மொழியையும் கொள்க' என்பது பெரியோர் வழக்கு. 'இடை நிகழ்ந்த இராமாவதாரம்-பரசுராமன் பலராமன் இவர்களுக்கிடையே அவதாரம் செய்த தசரத ராமன்; (பழைய உரை).

(பி - ம்.) 1. நடைபயின்றுயர்: தோற்றத்தில்; தோற்றத்தவ்; தோற்றத்திவ்; தோற்றத்த
2. இராமாவதாரப் போர்த்.
3. தொல்லைநன்மாக்கதை; தொன்மறு மாக்கதை.
4. தந்தவே.

(11)

## நூற் பயன்

12. நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கும்
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டொழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே.

நீடிய - தொலைவில்லாத, அரக்கர் சேனை - இராக்கத சைனியங்கள் முழுதும், நீறுபட்டு ஒழிய-சாம்பலாகி நசித்துப்போக, (இவ்வருஞ்செயல் காரணமாக), வாகை சூடிய-வெற்றிமாலை சூடிய, சிலை இராமன்-(கோதண்டமென்னும்) வில்லை ஏந்திய இராமபிரானது, தோள்வலி கூறுவோர்க்கு-புஜபலத்தைப் பாராட்டிப் புகழ்பவ

ருக்கு, நாடிய பொருள் கைகூடும் - அவர்கள் விரும்பிய பொருள் களெல்லாம் கைகூடும்; ஞானமும்-(மறுமைப் பயனுக்கு உரிய) நல்ல ஞானமும், புகழும்-(இம்மைப் பயனுகிய) கீர்த்தியும், உண்டாம்-உண்டாகும்; வீடு இயல் வழி அது ஆக்கும்-வீட்டின்பம் எய்துதற்கு உரிய வழியையும் அது செய்விக்கும்; வேரி அம் கமலை நோக்கும் (ஆக்கும்)-தேன் பொருந்திய அழகிய தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமி தேவியின் கடைக்கண் பார்வையையும் பெறுவிக்கும்.

கமலை நோக்கும் - இலக்குமிதேவி கடைக்கணிப்பாள் எனவுங் கூறலாம்.

நாடிய பொருள்: இம்மையில் யாவரும் அடைய விரும்பும் அறம், பொருள், இன்பமும், இவற்றுல் ஆகும் புகழுமாம். ஞானம் இம்மை மறுமை இரண்டிலும் நற்பயன் எய்துதற்குக் காரண மானது. அசேதனராகிய மானிடர் செய்யுங் குற்றங்களைத் தாய்மை யால் தான் பொறுத்து, எம்பெருமானும் மன்னிக்கும்படி செய்து, அதனுல் அவர்கள் வீட்டின்பம் அடைதற்குரிய வழியைச் செய்விக் கின்றவள் பிராட்டி; அவளுடைய கண்ணேக்கம் உண்டாயின், இம்மையில் அறம், பொருள், இன்பம், புகழ் ஆகியவைகளும், மறுமை யாகிய வீடும் ஆக நால்வகைப் பேறும் (புருஷார்த்தங்களும்) அடைதல் கூடும். இராமாயணத்தில் இராமபிரானது தோள்வலியின் சிறப்பு, பிராட்டியின் ஏற்றத்தோடு தொடர்புடையதாகப் பேசப்படுதலால், அதனைக் கற்போர், கூறுவோர் அனைவரும் நால்வகைப் பேறும் இனிதின் எய்துவர் என நூற்பயன் கூறியவாறு.

(பி - ம்.) 2. வீடுயர்; வீடுறு; வீடுறும்: வழியதாகும்; வழியுமாக்கும்; வழியுமாகும். 3. நீறுபட்டழிய. 4. கூறுவோற்கே. (12)



உ

ஸ்ரீராமஜயம்

# க. பாலகாண்டம்

## 1. ஆற்றுப்படலம்

ஆற்றுப்படலம் : ஆற்றினது பெருமையைக் கூறும் படலம் என விரியும். காப்பியத் தலைவனது நாடாகிய உத்தரகோசலத்தை வளப்படுத்தும் சரயு நதியின் சிறப்பைக் கூறுவது இப்படலம்.

13. ஆச லம்புரி யைம்பொறி வாளியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பு நெறியின் புறஞ்செலாக்
கோச லம்புனை யாற்றணி கூறுவாம்.

ஆசு அலம் புரி-குற்றங்களை மிகுதியாகச் செய்கின்ற, ஐந்து பொறி வாளியும்-(ஆடவருடைய) ஐந்து இந்திரியங்களாகிய அம்பு களும், காசு அலம்பு முலையவர்-(அணிந்துள்ள காசுமாலையின்) பொற் காசுகள் அலைகின்ற தனங்களையுடைய பெண்களின், கண் எனும் பூசல் அம்பும்-கண்களாகிய போர் செய்யும் அம்புகளும், நெறியின் புறம் செல்லா-நல்ல நெறி தவறிச் செல்லாமைக்குக் காரணமான, கோசலம் புனை ஆறு அணி-உத்தர கோசலநாட்டை அழகு செய் கின்ற சரயு என்னும் நதியின் பெருமைகளை, கூறுவாம்-சொல்லு வோம்.

ஆசு அலம்-'குற்றத்தின் பூர்த்தி' என்பது ஸ்ரீ ஐயரவர்களின் கைக் குறிப்பு. 'ஆசலம்-இடும்பை; அற்பமாகிய குற்றமுமாம்' (பழைய உரை.) பெண்களின் கண்களாகிய அம்பு எனப் பின்னர்க் கூறிய அதனால், முதலிற் கூறிய ஐம்பொறிவாளிகள், ஆடவருடையன எனப்பட்டன. ஆடவர் பெண்களை விரும்பித் தம் ஐம்பொறிகளாலும் தவறான வழிகளில் செல்லுதல் இயல்பு; பெண்கள், தம் கண்களா லேயே ஆடவர் மனத்தைக் கவர்வர் என்பது விளக்கப் பெற்றது. இத்தகைய தீங்குகள் நேராதவாறு கோசல நாட்டில் இருபாலாரும் நேர்மையுடையர் என்பதனை இவ்வாறு கூறினர். மக்களின் ஒழுக்கச் சிறப்புக்கும் நாடு காரணமாகின்றது.

'ஸர்வே நராஶ்ச நார்யஶ்ச த⁴ர்மஶீலா: ஸுஸம்யதா:' என்பது வான்மீகம். 'எல்லாப் புருஷர்களும், ஸ்திரீகளும் தர்மஸ்வபாவமுடையவர்கள்; இந்திரிய ஜயமுடையவர்கள்' என்பது இதன் பொருள்.

ஒரு நாடு வளம்பெறுவதற்கும், உயிர்கள் நல்வாழ்வுறுதற்கும் காரணமான நீரைத் தந்து, நாட்டுக்கு அழகும் செய்வது ஆறேயாகலின், அத்தகைய ஆற்றின் சிறப்புக்களை முதலில் கூறலானார். வான்மீகத்திலும் சரயுவின் பெருமை முதலில் புகழப் பெற்றுள்ளமை காண்க. 'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' அன்றோ? கோசலம் புனை ஆறு-கோசலநாடு (மாலையாக) அணிந்து அழகுறுதற்கு இடமான ஆறு எனவுங் கூறலாம்.

கோசல நாட்டு ஆடவரும் மகளிரும் காம விகாரங்களுக்கு ஆளாகித் தவறு செய்யாத நேர்மையுடையவர் எனக் கூறுமுகத்தால் இக்காவியத் தலைவனாகிய இராமபிரானும், தலைவியாகிய சீதாபிராட்டியும் முறையே ஏகபத்னி விரதமும், கொண்டானையல்லால் வேறு அறியாத (குலமகட்குரிய) பெருஞ்சிறப்பும் உடையவர் என இக்காவியத்தின் உறுபொருளைக் குறிப்பிக்கின்றமை காண்க.

நூலின் தொடக்கத்தில், பாட்டுடைத் தலைவனது நாடு, நகரம், ஆறு ஆகியவற்றை வருணித்தல் தமிழ்க் காவிய மரபு; பெரும்பாலும் நாட்டு வருணனையிலடங்குமாறு ஆற்றை வருணிப்பர் பிறர்; கம்பநாடர் இதனைத் தனியே ஒருபடலமாக அமைத்துக்கொண்டார்.

(பி - ம்.) 1. ஐம்பொறி வாளியம்; அம்பொறி வாளியும்.
4. புனையாறது; புனலாறது; புனலாற்றணி. (1)

இப்பாட்டு, 'கோசலம் புன ஞட்டணி கூறுவாம்' என்ற பாடத்துடன் நாட்டுப் படலத்தின் முதற் செய்யுளாகச் சில பிரதிகளில் உள்ளது.

### மேகங்களின் செயல்

14. நீற ணிந்த கடவு ணிறத்தவான்
ஆற ணிந்துசென் றார்கலி மேய்ந்தகில்
சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே.

நீறு அணிந்த கடவுள் நிறத்த வான்-திருநீற்றை அணிந்த சிவபெருமானது (வெண்மை) நிறத்தையுடைய மேகங்கள்,ஆறு அணிந்து சென்று-(வான) வழியை அழகு செய்துகொண்டு போய், ஆர்கலி மேய்ந்து- கடல் நீரைப் பருகி, அகில் சேறு அணிந்த முலை திருமங்கை-அகில் சாந்து பூசப்பெற்ற தனங்களை உடைய இலக்குமி தேவியை, தன் வீறு அணிந்தவன் மேனியின்-தனக்குப் பெருமையாகத் திருமார்பிலே அணிந்த திருமாலின் (கரிய) திருமேனிபோல, மீண்ட -(கரு நிறத்துடன்) திரும்பி வந்தன.

மேனியின்-இன் ஐந்தனுருபு; ஒப்புப் பொருள். மீண்டவே: ஏ, ஈற்றசை.

மேய்தல்-பருகுதல்; 'கலங்கு தெண்டிரை மேய்ந்து கணமழை' (சீவக. 32); 'எம்மகோததியு மாய மேய் மேகம்' (தக்க. 421); 'மால் கடல் குடிக்கு மழை' (பரி. 8: 32). மேகம் கடல் நீரைப் பருகுவதாகக் கூறுவது கவி மரபு; 'நீருண்ட மேகம்' என்ற வழக்கும் காண்க. மேகம் நீருண்ணுமுன் வெண்ணிறமும், நீருண்டபின் கருநிறமும் உடைய தாகலின், இவ்வாறு கூறினர். சிவபெருமான் திருமேனி செந்தீ வண்ணம் உடையது; அதன் திருநீறணிந்த தோற்றம் வெண் மேகத் துக்கு ஒப்பு.

'வீறு' என்பது, 'வேறொன்றிற்குஇல்லாத அழகு', (சீவக. 489-ந உரை), 'தனிச் சிறப்பு' முதலிய பல பொருள் உடையது. இங்கே, பிராட்டியைத் திருமார்பிலே அணிதல், வேறொருவர்க்கு இல்லாத அழகையும் தனிச் சிறப்பையும் திருமாலுக்குத் தருவது எனக் கொண்டு பொருள் கூறப்பட்டது. திருமங்கைதன் வீறு (வீற்றை) அணிந்தவன் எனலும் ஆம்.

இச்செய்யுட் கருத்துக்கு ஒப்பு: சீவக. 32; திருக்குற்றாலத் தலபுராணம். திருநதிச் சருக்கம் 1.

(பி - ம்.) 1. நிறத்தவாய். 2. மேய்ந்ததில். 4. மீண்டதே; நீண்டதே. (2)

15. பம்பு மேகம் பரந்தது பானுவால்
நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்
அம்பி னாற்றுது மென்றகன் குன்றின்மேல்
இம்பர் வாரி யெழுந்தது போன்றதே.

பம்பு மேகம் பரந்தது-(நீருண்டு) செறிந்த மேகங்கள் (ஆகாயத் திலே) பரவிச் சென்ற தன்மையானது, நம்பன் மாதுலன்-நம் சிவ பெருமானுக்கு மாமனாகிய இமவான், பானுவால் வெம்மையை நண் ணினான்-சூரியனால் (மிக்க) வெப்பத்தையடைந்துள்ளான்; (ஆதலால்), அம்பின் ஆற்றுதும் என்று-(அவ்வெப்பத்தை) நம் நீரால் தணிவிப் போம் என்று கருதி, இம்பர் வாரி-இவ்விடத்து (கீழே) உள்ள கட லானது, குன்றின்மேல் எழுந்தது போன்றது-குன்றை நோக்கி மேலெழுந்து சென்றது போலிருந்தது. ஏ-அசை.

மேகம் பரந்தது, வாரி குன்றின்மேல் எழுந்தது போன்றது என முடிபு கொள்க. மேகங்கள் மிகுதியாகப் பரந்து சென்றமை, கடலே எழுந்து சென்றது போலிருந்தது என்றார்; நிறம், நீர் உடைமை, பரப்பு இவற்றால், மேகத்திரளுக்குக் கடற் பரப்பு உவமை. 'சூனிற முகிற்குலந் துவன்றிச் சூழ்தர, மானிற நெடுங்கடல் வாரி மூரி வான், மேனிரைத் துளதென' (கிட்கிந்தா. 437) என்பதை ஒப்பிடுக.

பம்புதல்-செறிதல், நெருங்குதல். ஒலித்தல் எனவும் ஆம். நம்பன்-சிவபெருமான் (சூடா). தேவாரத்துள் இப்பெயர் பலவிடங்களில் வழங்கும். அம்பு-நீர்: வடசொல். நம்பன் மாதுலன்-நம்பனுகிய மாதுலன்: இமவான் எனவும் உரைப்பர். இமயமலையிற் பிறந்து வரும் ஆறுகளை மணத்தலால், கடலரசன் இமவானுக்கு மருகனுவான்.

(பி - ம்.) 1. பம்பி மேகம்: பரந்தன; படிந்துவெம்; படிந்துள: பானுவின்.
3. ஆட்டுது மெனக்கன குன்றின்மேல்.
4. இன்பமாக எழுந்தன போன்றதே; எழுந்தன போன்றவே; எழுவன போன்றவே; எழுவது போன்றதே; எழுவது போலவே; எழுவது போலுமே. (3)

16. புள்ளி மால்வரை பொன்னென நோக்கிவான்
வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள்
உள்ளி யுள்ளவெல் லாமுவந் தீயுமவ்
வள்ளி யோரின் வழங்கின மேகமே.

மேகம்-மேகங்கள், புள்ளி மால் வரை-(தாம் பெய்வதற்கு) இலக்காகிய பெருமை பொருந்திய இமயமலை, பொன் எனல் நோக்கி-(பிற மலைகளைப்போல் அல்லாமல்) பொன்மயமாக இருப்பதைப் பார்த்து, வான் வெள்ளி வீழ்-சிறந்த வெள்ளிக் கம்பிகளை, இடை வீழ்த்த என - அம்மலையினிடத்தே இட்டன என்னும்படி, உள்ளி-(கொடையின் சிறப்பை நினைத்து), உள்ள எல்லாம்-தம்மிடம் உள்ள பொருள்கள் எல்லாவற்றையும், உவந்து ஈயும்-(வேண்டுவோர்க்கு) மனமுவந்து கொடுக்கின்ற, அவ்வள்ளியோரின்-அத்தகைய வள்ளல்களைப்போல, தாரைகள்-(வெள்ளிக் கம்பிகள் போன்ற) நீர்த்தாரைகளை, வழங்கின-பொழிந்தன. ஏ-அசை. வீழ்த்தென-தொகுத்தல் விகாரம்.

இமயம் பொன்னுக இருத்தலின், அதனைப் பாதுகாக்கும் கவசம் போலவும், அழகு செய்யவும் வெள்ளிக்கம்பிகளைக் குறுக்கு நெடுக்காகப் பின்னும்படி இட்டன மேகங்கள் என்றவாறு. இப்பாடலின் முதல் இரண்டடிகளுக்கும் பலவாறு உரை கூறுவர்.

*1-2.* 'புள்ளி-இலக்கு; பல நிறமும் ஆம்; இது பொன்மலையானதால் இதனிடத்திலே வருஷிக்கிறது நமக்கு யோக்கியமென்று, ஆகாசமானது வெள்ளி விழுதுகளை நெடுக இறக்கினதுபோல் மேகங்கள் தாரைகளைச் சொரிந்தன' (பழைய உரை). 'வெள்ளி வெண், கோனிரைத்தன போற் கொழுந்தாரைகள்' (சீவக. 33).

இமயம் பொன்னிறமுடையதென்றும், இதனையே மேரு என்றும் கூறுதல் கவி மரபு. 'பொற்கோட்டிமயம்' பொன்னுடை நெடுங்கோட்டிமயம். (புறநா. 2,369). 'பனிமாலிமயப், பொருப்பகஞ்

சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும் பொன்னிறமாயிருக்கும்' (யாப். காரிகை. அவையடக்கம்).

உள்ளி - (தம்மிடம், கொடுக்கத் தக்கவை யாவை உள்ளன என) நினைத்துப் பார்த்து எனவும் கூறுவர். உள்ளவெல்லாம் உவந்தீயும் வள்ளியோர்; ஒப்பு: 'வள்ளியோரீகை வரையாதுபோல' (கல். 27). வள்ளியோரின் வழங்கின மேகம்: ஒப்பு. 'அவன் வண்மைபோல் வானம் பொழிந்த நீர்' (பரி. 22); 'அவன் கொடை போன்மெனப் பொழிந்த' (நைடத. நாடு. 2).

(பி - ம்.) 1. புள்ளின் : மாமேரு : பொன்னென நோக்கி; பொம்மென நோக்கி; பொள்ளென நோக்கி; பொம்மெனப் பொங்கி.

2. வீழ்த்திடை; வீழிட; வீழென; வீழ்த்தன; வீழ்ந்தன; வீழ்த்திய; வீழ்வன: தாரைய.

3. உள்ளில்; உள்ளின்: உள்ளதெல்லாம்; உள்ளதெலாம்; உள்ளவெலாம்:

4. வழங்கிய வானமே. (4)

### சரயுவின் வெள்ளப் பெருக்கு

17. மான நேர்ந்தற நோக்கி மனுநெறி
போன தண்குடை வேந்தன் புகழென
ஞான முன்னிய நான்மறை யாளர்கைத்
தான மென்னத் தழைத்தது நீத்தமே.

மானம் நேர்ந்து-மானம் பொருந்தி, அறம் நோக்கி - தருமத்தைக் குறிக்கொண்டு, மனுநெறி போன-மனுநீதி வழுவாது நடந்த, தண்குடை வேந்தன் - குளிர்ந்த வெண்கொற்றக் குடையை உடைய அரசனது, புகழ் என-புகழைப் போலவும், ஞானம் முன்னிய-ஞான நெறியிலே முற்பட்ட, நான்கு மறை ஆளர்கை-நான்கு வேதங்களையும் ஓதியுணர்ந்த பெரியோரின் கையிலே (கொடுத்த), தானம் என்ன-தானத்தின் பயன் போலவும், நீத்தம் தழைத்தது-(அம்மழையாலாகிய) வெள்ளம் பெருகியது. ஏ-ஈற்றசை.

மானம்: 'எஞ்ஞான்றும் தன்னிலையிற்றாழாமையும்; தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆம்' (குறள். பரிமேலழகர் உரை.)அபிமானம் என்றலும்ஆம். வேந்தன்-தசரதன்; கதாபாத்திரங்களுக்குத் தொடர்புடையவற்றை உவமையாகக் கூறுதல் கவி மரபு; பரி. 1. சீவக. 32. நைடத. நாடு. 2-பார்க்க. தண்குடை வேந்தன்: ஒப்பு. 'குடை, வெயின் மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடி மறைப்பதுவே கூர்வேல் வளவ' (புறநா. 35); 'மானநேர்ந்தற... வேந்தன்': 53. ஞான முன்னிய நான் மறையாளர்: 'ஞான நன்னெறி நல்வரம் பாயோன்' (சிலப். 15: 42). ஞானமுன்னிய...தழைத்தது: 446; 'அறப்பயன், தான் சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான் சிறிதாப் போர்த்துவிடும்' (நாலடி. 38)

என்ற கருத்து இங்கே சுட்டப்பட்டது காண்க. 'இங்கே தான மென்றது, தசரதசக்கரவர்த்தி செய்த தானத்தை' (பழைய உரை).

(பி - ம்.) 1. மானந்தேர்ந்து; மானந்தேர்ந்தனனுகி; மானநந்தலனுக; நந்தலனுகி; நந்திலனுகி; நேர்ந்தறனேக்கி; நேர்ந்தற நோக்கும்; நேர்ந்தவனுக; மானமுந்துறநோக்கி.
2. தண்கொடை; தன்குடை; வெண்குடை; வேந்தர் பொருளென.
3. முந்துற; முந்திய; நானம் முன்னிய;
4. தழைத்தன தோயமே. (5)

18. தலையு மாகமுந் தாளுந் தழீஇயதில்
நிலைநி லாதிறை நின்றது போலவே
மலையி னுள்ளவெ லாங்கொண்டு மண்டலால்
விலையின் மாதரை யொத்ததவ் வெள்ளமே.

தலையும்-(மலையின்) உச்சியையும், ஆகமும்-நடுவிடங்களையும், தாளும்-அடிவாரத்தையும், தழீஇ-பொருந்தி, அதில் நிலை நிலாது-அதில் (ஓரிடத்திலும்) நிலையாக நில்லாமல், இறை நின்றதுபோல-சிறிது நின்றதுபோலத் தோற்றி, மலையின் உள்ள எலாம் கொண்டு-மலையினிடத்து உள்ள எல்லாப் பொருள்களையும் வாரிக்கொண்டு, மண்டலால்-விரைந்து போய்விடுவதனுல், அ வெள்ளம்-அந்த வெள்ள மானது, விலையின் மாதரை ஒத்தது-விலைமாதராகிய வேசையரைப் போன்றதாயிற்று.

அவ்வெள்ளம், விலையின் மாதரை ஒத்தது என முடிபு கொள்க. விலையின் மாதர்: இன்-சாரியை.

இப்பாட்டு, **சிலேடை தழுவிய உவமையணி** கொண்டது. எனவே, விலைமாதருக்கேற்பப் பொருள் கொள்ளும்போது, அவர்கள், தம்மைக் காதலிப்பவருடைய தலை, உடம்பு, பாதம் முதலிய உறுப்புக் களைத் தம் உடம்பால் பலவகையாகத் தழுவினும், அத்தழுவலில் மனம் பொருந்தாமல் (வெளிக்கு அன்போடு தழுவுவது போலக் காட்டி) அவ்வாடவரிடம் உள்ள பொருள்களை யெல்லாம் கைப்பற்றிக் கொண்டு விரைவில் அவர்களைவிட்டு நீங்கிவிடுதல்போல எனக்கூறுக. விலைமாதர் இயல்பு: 107, 354, 571; அயோத்: 404, 698; ஆரணிய. 768. குறள்: 911.

மேல் வரும் நான்கு பாடல்களும் சிலேடை தழுவிய உவமை யணி கொண்டன; இவற்றில் உள்ள நயம் ஓர்ந்து இன்புறற்பாலது. மலையில் உள்ள பொருள்கள் இன்னவென்பதை அடுத்த கவியில் காண்க.

(பி - ம்.) 1. தழீஇயதன்; தழீஇயதின்; தழீஇயற.
2. நிலைநிலா நிறை; நிலையிலா திறை; நிலையிலா நிறை; நிலைநிலா நெறி; நிலையிலா நெறி: நின்றன; நின்றவா: போலவம்; போலவும்.
3. மலையிலுள்ள வெல்லாம்; உள்ளதெல்லாம்; உள்ளதெலாம்:
4. விலைகொண் மாதரும்: ஒத்தது; ஒத்தன. (6)

19. மணியும் பொன்னு மயிற்றழைப் பீலியும்
அணியு மானைவெண் கோடு மகிலுந்தண்
இணையி லாரமு மின்னகொண் டேகலான்
வணிக மாக்களை யொத்ததவ் வாரியே.

மணியும்-இரத்தினங்களையும், பொன்னும்-பொன்னையும், மயில் தழை பீலியும்-மயிலின் தோகையாகிய பீலியையும், அணியும் ஆனை வெண்கோடும்-அழகிய வெண்மையான யானைத் தந்தங்களையும், அகிலும்-அகிற்கட்டைகளையும், தண் இணை இல் ஆரமும்-குளிர்ந்த தமக்கு ஒப்பு இல்லாத சந்தனக் கட்டைகளையும், இன்ன-இவை போன்ற (வேறு) பலவற்றையும், கொண்டு ஏகலான்-தாங்கிக் கொண்டு செல்வதனல், அவ்வாரி-அவ்வெள்ளம், வணிகமாக்களை ஒத்தது-வாணிகம் செய்வோரைப் போன்றது.

இப்பாட்டிலும், வணிகருக்கு ஏற்பப் பொருள் உரைத்துக் கொள்க. தம் வாணிகத்துக்கு, எங்கே, எப்பொருள்கள் மலிவாகக் கிடைக்கின்றனவோ அங்கே அவற்றை வாங்கி, பலவிடங்களிலும் கொண்டுபோய் விற்றல் வணிகர் இயல்பு. தழைப் பீலி-இருபெயரொட்டு.

(பி - ம்.) 2. யானை வெண்கோடும்; மாலை வெண்கோடும்: அகிலுந்தன்; அகிலு நல்; அகில நல்.
3. அணியுமாலையும்: இன்னங்கொண்டு; யாவுங்கொண்டு: ஏகலால்.
4. வணிகர் மாக்களை: ஒத்தது; ஒத்தன. (7)

20. பூநி ரைத்துமென் றாது பொருந்தியும்
தேன ளாவியுஞ் செம்பொன் விராவியும்
ஆனை மாமத வாற்றொ டளாவியும்
வான வில்லை நிகர்த்ததவ் வாரியே.

பூ நிரைத்தும்-(தன் மேற்பரப்பிலே) பலநிறப் பூக்களை வரிசையாக ஏந்தியும், மென்தாது பொருந்தியும்-மென்மையான மகரந்தம் படியப் பெற்றும், தேன் அளாவியும்-தேன் கலந்தும், செம் பொன் விராவியும்-பசுமையான பொன்தாதுகள் கலந்தும், ஆனை மா மத ஆற்றொடு அளாவியும்-யானையினது ஆறுபோலப் பெருகும் மிக்க மத நீரோடு கலந்தும், அ வாரி-அவ்வெள்ளம், வானவில்லை நிகர்த்தது-வான வில்லைப் போன்று இருந்தது.

பல நிறங்கள் பொருந்தியிருத்தலும், வளைந்து செல்லுதலும் உடைமையின், ஆற்றுக்கு வானவில் உவமையாயிற்று. யானையின் மதநீர் கருநிறமுடையது: 'கருங்கட மூன்றுகு நால் வாய்க் கரி' (திருச்சிற். 55).

(பி - ம்.) 1. பூநிரைந்தும்; பூநிரந்தும்; பூநிரைத்த வெண்.
2. தேன்வளாவியும்: செம்பொனளாவியும்.
3. மான; ஏனை; மாமத மாற்ருெடு; மாமத வாற்றின்; மாமணியும் வரன்று; கொண்டு; கொணர்ந்து; கொழித்து; வகிர்ந்து; மானமணி வரன்று: ஏகலால்; ஏகலான்; மண்டலால்.
4. நிகர்த்தது; நிகர்த்தன; நிரைத்தது. (8)

21. மலையெ டுத்து மரங்கள் பறித்துமா
டிலைமு தற்பொருள் யாவையு மேந்தலால்
அலைக டற்றலை யன்றணை வேண்டிய
நிலையு டைக்கவி நீத்தமந் நீத்தமே.

மலை எடுத்து-மலைகளைப் பெயர்த்தெடுத்தும், மரங்கள்பறித்து-மரங்களை வேருடன் பறித்தும், மாடு இலை முதல் பொருள் யாவையும் ஏந்தலால் - இருபக்கங்களிலும் (மரங்களின்) இலை முதலாகிய பல பொருள்களையும் தாங்கிக்கொண்டு செல்வதனுல், அ நீத்தம்-அவ்வெள்ளமானது, அலை கடல்தலை-(அலைகள்) அலைகின்ற கடலினிடத்தே, அன்று-(இலங்கை செல்ல நேர்ந்த) அந்நாளில், அணை வேண்டிய-அணை கட்டுதலை மேற்கொண்ட, நிலை உடை-நிலைமையை உடையதாயிருந்த, கவி நீத்தமே-வானரசேனை வெள்ளமே (போல இருந்தது).

அணை கட்டுதற்கு, இரண்டு கைகளிலும் தனித்தனியே பல பொருள்களை எடுத்துவந்த குரங்குகளை, கரையோரமான இரு பக்கங்களிலும் பல பொருள்களை யேந்திச் சென்ற வெள்ளத்துக்கு உவமை கூறியுள்ள நயம் காண்க. மலையைப் பெயர்த்தலும், மரங்களைப் பறித்தலும், வெள்ளத்துக்கும் குரங்குகளுக்கும் பொதுவாகிய செயல்கள். கடல்தலை: தலை-ஏழன் உருபு.

கதையில் பின்வரும் நிகழ்ச்சியொன்றை இங்கு உவமையாகக் கொண்டமை காண்க. ஒப்பு: 420; அயோத். 271; சுந்தர. 20.

குரங்குகள் மரங்களை வேருடன் பறித்தமை: யுத்த. 670, 671ஆம் கவிகளை நோக்குக.

(பி - ம்.) 1. மலையொடித்து மரங்கள் முறித்து; பரித்து; தரித்து.
2. ஏந்தலான். 3. அன்றணி.
4. கலையுடைக்கவின்: ஒத்தது: ஒத்தன. (9)

22. ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்க மேமிகுந் துட்டெளி வின்றியே
தேக்கெ றிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே.

தீம் புனல்-இனிய நீரையுடைய அவ்வெள்ளம், ஈக்கள் வண்டொடு மொய்ப்ப-(தன்னிடத்தில்) ஈக்களும் வண்டுகளும் மொய்க்க, வரம்பு இகந்து-கரைகடந்து, ஊக்கமே மிகுந்து-வலிமை மிகப்பெற்று, உள் தெளிவு இன்றி-அடி நீரும் தெளிவில்லாமல் கலங்கி, தேக்கு எறிந்து-(தான் அடித்துவந்த) தேக்கு மரங்களை (கரையிலே) ஒதுக்கித் தள்ளிக்கொண்டு, வருதலின்-ஓடிவருவதனால், வாக்கு தேன் நுகர் மாக்களை-வார்க்கின்ற கள்ளை யுண்ட குடியர்களை, மானும்-ஒத்திருந்தது. ஏ-அசை.

கட்குடியர்க்கும் வெள்ளத்துக்கும் சிலேடை. கட்குடியர் மேல் கூறும்போது: (அவர்களிடம் உள்ள கள் நாற்றத்தால்) ஈக்களும் வண்டுகளும் வந்து மொய்க்க, அவர்கள் முறை கடந்து, கள்ளுண்ட களிப்பு மேலிடுதலால் மனம் தெளிவில்லாமல் ஏப்பமிட்டுக்கொண்டு வருவர் என்க. ஆற்றில் ஈக்களும் வண்டுகளும் மொய்த்தல், அந்நீரில் தேனும் யானை மதமும் கலந்திருத்தலால் அவற்றை நுகர்தற் பொருட்டு ஆகும்.

வரம்பு இகத்தல்: குடியர்க்கு-முறை தவறுதல்; ஆற்றுக்கு-கரை கடத்தல். ஊக்கம்; கள்ளுண்டதனாலாகிய களி மயக்கம், வேகம். தேக்கு எறிதல்: ஏப்பமிடுதல், தேக்க மரங்களை ஒதுக்குதல். எறிதல்-முறித்தலும் ஆம். வண்டொடு: ஒடு-உம்மைப் பொருளில் வந்தது.

(பி - ம்.) 1. மொய்க்க; மோப்ப: வரம்பிகழ்; வரம்பிகழ்ந்து.
2. ஊக்கமே மிக; ஊக்கமே மிகுத்து.
4. வாக்குந்தேன்: மக்களை மானுமால். (10)

23. பணைமு கக்களி யானைபன் மாக்களோ
டணிவ குத்தென வீர்த்திரைத் தார்த்தலின்
மணியு டைக்கொடி தோன்றவந் தூன்றலால்
புணரி மேற்பொரப் போவதும் போன்றதே.

(அன்றியும் அவ்வாற்று வெள்ளம்), பணை முகம் களி யானை-பருத்த முகத்தையும் மதச் செருக்கையும் உடைய யானைகளையும், பல் மாக்களோடு-பல விலங்குகளையும், அணி வகுத்து என-(போர் மேல் செல்பவர் தம் படைகளை) அணிவகுத்தாற்போல, ஈர்த்து இரைத்து ஆர்த்தலின்-இழுத்துக்கொண்டு வந்து பேராரவாரம் செய்வதனாலும், மணி உடை கொடி தோன்ற-அழகையுடைய பூங்கொடிகள் முன்னே தோன்றும்படி, வந்து ஊன்றலால்-(விரைந்து) வந்து

கரைகளைக் குத்துதலாலும், புணரிமேல் பொர போவதும் போன்றது-கடலின் மேல் போர் செய்யப் போவது போன்றும் இருந்தது.

வெள்ளம் என்னும் எழுவாய் அதிகாரத்தால் வருவித்து உரைக்கப்பட்டது. போர்ப்படைகளுக்கும் வெள்ளத்துக்கும் சிலேடை: படையின்மேல் கூறும்போது, மாக்கள்-குதிரைகள்; ஆற்றுக்கு-விலங்குகள். போர்மேல் செல்வோர், யானை குதிரை முதலிய நால் வகைப் படைகளோடு, தமக்கு உரிய அடையாளமான கொடிகள் முன்னிட, வீர முழக்கம் செய்துகொண்டு செல்லுதல்போல, வெள்ளமும், யானைகள் விலங்குகள் ஆகியவற்றையும் பலவகைக் கொடிகளை யும் இழுத்து ஆரவாரத்தோடு செல்கின்றது. ஊன்றுதல்-படைகளுக்காயின், தங்குதல்; அகலிரு விசும்பினூன்றும்' (புறநா. 228). வெள்ளத் துக்காயின் (கரைகளைக்) குத்துதல். பணை-கொம்பும் ஆம். இரைத்து ஆர்த்தல் - ஒரு பொருட் பன்மொழி.

(பி - ம்.) 1. கரியானை.

2. வகுத்தன; இரைந்தார்த்தலின்; இரைத்தார்த்தள்ளி; இரைத்தார்த் தொளி; இரைத்தார்த்தணி; இரைத்தார்தலின், இரைத்தர்த் தெழீஇ; இரைத்தார்த்து வெண்.

3. மணி நிரைக்கொடி; மணி நுரைக்கொடி; துணையுடைக்கொடி: தோன்ற வந்தூன்றலின்; தோன்ற வயங்கலால்; முந்தவந்தூன்றலால்; வந்து முந்தூன்றலால்; வந்து முன் தோன்றலால்.

4. புணரியைப் பொரப்: போவது; போவன; போதுவ; போன்றவே; போலுமே; தோன்றவே. (11)

## சரயுவின் பெருமை

24. இரவி தன்குலத் தெண்ணில்பல் வேந்தர்தம்
புரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
உரவு நீர்நிலத் தோங்கு முயிர்க்கெலாம்.

சரயு என்பது-(முற்கூறிய வெள்ளப்பெருக்கினை உடைய) சரயு என்னும் நதியானது, இரவிதன் குலத்து—சூரிய குலத்திலே உதித்த, எண் இல் பல் வேந்தர்தம்-எண்ணிறந்த பல அரசர்களுடைய, புரவு நல் ஒழுக்கின் படி பூண்டது - (வழி வழியாக இடைவிடாது) பாது காத்துவந்த நல்லொழுக்கத்தின் தன்மையைக் கொண்டது; இ உரவு நீர் நிலத்து-கடல் சூழ்ந்த இந்நிலவுலகத்திலே, ஓங்கும் உயிர்க்கு எலாம்-(தோன்றி) வளர்கின்ற உயிர்களுக்கெல்லாம், தாய்முலை அன்னது-(பால்சுரந்து ஊட்டும்) தாயின் முலையைப் போன்றது.

சரயு என்பது சரசினின்றும் வருவது எனப் பொருள்படும். இது மானச சரசினின்றும் வருவது; (416). வைவஸ்வத மனு, ஓர் அம்பினால் மானசசரசின் கரையை உடைத்து, இந்நதியை வருவித்

தார் என்பது வரலாறு. ஆற்றொழுக்கத்திற்கும், சூரிய குலத்தரசர் ஒழுக்கத்திற்கும் பொதுத்தன்மை, தூய்மையும், இடையறுமையுமாம். சூரிய குலத்தரசரும், அவர்கள் கிளையினரும்கூட, இடையறுத நல் லொழுக்கம் உடையவராவர். அதுபோல, சரயுவும் அதன் கிளைக் கால்வாய்களும் இடையறுத நீரொழுக்கு உடையவை. இங்கே சூரிய குலத்தரசர்களுடைய ஒழுக்கச் சிறப்பை உவமையாக்கிக் கூறியுள்ள அழகு காண்க.

புரவு-பாதுகாத்தல். உரவுநீர்-கடல்; 'ஊரங்கணநீர் உரவுநீர்ச் சேர்ந்தக்கால்' (**நாலடி.** *175*). தாய் முலையன்னது: **கிட்கிந்தா.** *465;* 'புனிறுதீர் குழவிக் கிலிற்று முலைபோலச், சுரந்த காவிரி' (**புறநா.** *68);* 'சரையெனும் பெயருடைத் தடங்கொள் வெம்முலைக், குரைபுனற் கன்னி' (**சீவக.***36);* 'முலைபோற்சுரத்தலின் முலையாய்' (**ஷை.நச்.உரை**); 'பிள்ளை தைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய்போல், மள்ளர் வேனிலின் மணற்றிடர் பிசைந்துகை வருட, வெள்ள நீரிரு மருங்கு கால் வழிமிதந் தேறிப், பள்ள நீள்வயற் பருமடை யுடைப்பது பாலி' (**பெரிய. திருக்குறிப்புத்.** *52).* ஆற்றைத் தாயாகக் கூறுதல்: 'மன்னுயி ரேமுற மலர்ஞாலம் புரவீன்ற, பன்னீராற் பாய்புனல் பரந்தூட்டி... அகல்யாறு' (**கலித்.** *34);* 'அவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி, ஊழி யுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி' (**சிலப்.** *9: 27*); 'சரயு வளர்ப்புத்தாய்'(**ரகுவம்ச:** *13.62*); 'நீறணிந்த கடவுள்' என்ற செய்யுள் முதல் இச்செய்யுள் ஈறுகவுள்ள பகுதியோடு **சீவக.** செய். *32—39* பகுதியை ஒப்பிடுக.

(பி - ம்.) 1. இரவியின் குலத்து; இரவி நற்குலத்து; வேந்தரும்.
2. பரவு; புரவினல்லொழுக். 3. அன்னது.
4. உரவுநீணிலத்து; உரவுநல் நிலத்து; ஓங்கு முயிர்க்கெல்லாம்; ஒல்கு முயிர்க்கெலாம். (12)

**திணை வளம்**

**குறிஞ்சி**

*[வேறு]*

25. கொடிச்சிய ரிடித்த சுண்ணங்
குங்குமங் கோட்ட மேலம்
நடுக்குறு சாந்தஞ் சிந்தூ
ரத்தொடு நரந்த நாகம்
கடுக்கையார் வேங்கை கோங்கு
பச்சிலை கண்டில் வெண்ணெய்
அடுக்கலி னடுத்த தீந்தே
னகிலொடு நாறு மன்றே.

*(சரயுவின் நீர்),* கொடிச்சியர் இடித்த சுண்ணம்-குறிஞ்சி நில மகளிர் இடித்த வாசனைப் பொடியும், குங்குமம் – குங்குமப்பூவும்,

கோட்டம்-கோட்டம் என்னும் வாசனைப் பொருளும், ஏலம்-ஏலவல்லியும், நடுக்குஉறு சாந்தம்-(குளிர்ச்சியால், பூசினோர் உடலை) நடுங்கச் செய்யும் சந்தனமும், சிந்தூரத்தொடு-சிந்தூரமும், நரந்தம்-நரந்தம் புல்லும், நாகம்-சுரபுன்னையும், கடுக்கை-கொன்றைப்பூவும், ஆர்-ஆத்திப்பூவும், வேங்கை-வேங்கைப்பூவும், கோங்கு-கோங்கம்பூவும், பச்சிலை-பச்சிலையும், கண்டில் வெண்ணெய்-இப்பெயருடைய மலைபடு பொருளும், அடுக்கலின் அடுத்த-பக்கமலைகளிலே பொருந்திய, தீம் தேன்-இனிய தேனும், அகிலொடு-அகிற்கட்டையும் (ஆகியவற்றின் பலவகை மணமும்) நாறும்-கமழ்வதாயிருக்கும். அன்று, ஏ-அசை.

ஆற்று வெள்ளம், மலைபடு பொருள்கள் பலவற்றையும் அடித்துக்கொண்டு வருவதனால், அவற்றின் மணம் அதனில் கமழ்கின்றது என்றார். கோட்டம்-மணமும் காரமும் உள்ள ஒருவகைப் பூடு; 'கடலிடைக் கோட்டந் தேய்த்துக் கழிவது கருமமன்றால்' (யுத்த. 1350). சிந்தூரம் - செந்நிறமும் மணமும் உடையதொரு பொருள்; இது 'சிந்துரம்' எனவும் வழங்கும். நரந்தம், நாரத்தை என்பாரும் உளர். 'கடுக்கை நாள் வேங்கை' எனவும் பாடம்; இப்பாடத்திற்கு, மலைவாணர்க்குத் திருமணநாளை அறிவிக்கும் வேங்கை, என்பது பொருள். (திணைமாலை: 18, 20, 31). பச்சிலை-தமாலம் எனப்படுவது. கண்டில் வெண்ணெய்-'ஓமாலி கைத்திரவியங்கள் முப்பத்திரண்டனுள் ஒன்று' (சீவக. 623-நச். உரை); யானைக் கன்று பிறந்தவுடன் பால் அருந்து முன் கழித்த மலம் என்பர் ஒருசாரார். 'கரி கூதம்' என்பது இதன் வடமொழிப் பெயர்; ஒருவகைப் பூடு என்பாரும் உளர்.

(பி - ம்.) 1. கொட்டம்.
2. நடுக்குறு சந்தம்: நடுக்குறுஞ் சந்தம்: நரந்தை.
3. நாள் வேங்கை; காழ் வேங்கை; நன் வேங்கை; கண்டல் வெண்ணெய்; கண்டில்லெண்ணெய்.
4. அடுக்கலில்: அழிந்த தீந்தேன்; அளிந்த தீந்தேன்; அளிந்த செந்தேன்; அடுத்த செந்தேன்; இசைந்த தீந்தேன்; இழிந்த தீந்தேன்: (13)

## பாலை

26\. எயினர்வாழ் சீறூ ரப்பு
மாரியி னிரியல் போக்கி
வயின்வயி னெயிற்றி மாதர்
வயிறலைத் தோட வோட்டி
அயின்முகக் கணையும் வில்லும்
வாரிக்கொண் டலைக்கு நீரால்
செயிர்தருங் கொற்ற மன்னர்
சேனையை மானு மன்றே.

எயினர் வாழ் சீறூர் - வேடர்கள் வாழும் (பாலை நிலத்துச்) சிற்றூர் மக்களை, அப்பு மாரியின்-மிக்க நீர்ப்பெருக்கால், இரியல்

போக்கி-அஞ்சியோடச் செய்து, வயின் வயின்-(தான்செல்லும்) இடங்களிலெல்லாம், எயிற்றி மாதர்-வேடர் குலப் பெண்கள், வயிறு அலேத்து ஓட-(அச்சத்தால்) தம் வயிற்றில் அடித்துக்கொண்டு ஓடும்படி, ஓட்டி-துரத்தி, அயில் முகம் கணேயும்-கூரிய வாயையுடைய அம்புகளேயும், வில்லும்-பலவிற்களேயும், வாரிக்கொண்டு-அள்ளிக்கொண்டு, அலேக்கும் நீரால்-(மக்களேத்) துன்புறுத்தும் தன்மையால், (அவ்வெள்ளம்), செயிர் தரும் கொற்றம் மன்னர்-போர் செய்யும் வெற்றியையுடைய அரசர்களின், சேனேயை மானும்-போர்ப்படையை ஒத்திருக்கும். அன்று, ஏ-அசை.

அப்புமாரி-அம்பு மழை; நீரின்மிகுதி. துன்பம் நேர்ந்த காலத்து வயிற்றில் அடித்துக்கொள்ளுதல் பெண்கள் இயல்பு. செயிர்–போர். போர்ப் படையினர் செல்லும்போது (பகைவர் நாட்டில்) அங்கங்கே அம்புகளே மழைபோலப் பொழிந்துகொண்டும், அங்கங்கே கிடைக்கும் பொருள்களேச் சூறையாடிக் கொண்டும், காண்போர் அஞ்சியோடும் வகையில் ஆரவாரத்துடன் செல்வர்; வெள்ளமும் தன் வேகத்தால் அங்கங்கே கிடைக்கும் பொருள்களே அடித்துக்கொண்டும், ஊர்களேப் பாழாக்கியும் காண்போர் அஞ்சியோடும் வகையில் செல்லும். இவ்வகையால் உவமைப் பொருத்தங் காண்க. 'முல்லேயும் குறிஞ்சியும் திரிந்து பாலேயாகும்' என்ற கருத்துக்கிணங்க, இச்செய்யுள் குறிஞ்சிக்கும் முல்லேக்கும் இடையே அமைந்திருக்கும் அழகு நோக்கததக்கது.

வயின் வயின்-அடுக்குத்தொடர். எயினர்-பாலே நிலத்து ஆடவர்; எயிற்றியர்-பெண்பாலார்; எயிற்றி மாதர்-இருபெயரொட்டு.

(பி - ம்.) 1. எயினர்தம்: போக்க; போகப்போகி.
2. எயிற்றிமார்கள்; எயிற்றிமார்தம்; ஏறிமாதர்: ஓடவோடி; ஓடவேண்டி.
3. வாரிகொண்டு.
4. செயலரும்; செயறரும்; செயம் வரும்; செயமிகும்; செயிரறும்: சேனேயும். (14)

## முல்லே

27. செறிநறுந் தயிரும் பாலும் வெண்ணெயுஞ்சேந்த நெய்யும்
உறியொடு வாரி யுண்டு குருந்தொடு மருத முந்தி
மறிவிழி யாயர் மாதர் வளேதுகில் கவரு நீரால்
பொறிவரி யரவி னுடும் புனிதனும் போன்ற தன்றே.

செறி நறு தயிரும் பாலும் வெண்ணெயும்-இறுகத் தோய்ந்த நல்ல தயிரையும், பாலேயும், வெண்ணெயையும், சேந்த நெய்யும்-சிவக்கக் காய்ச்சிய நெய்யையும், உறியொடு வாரி உண்டு-(அவை வைக்கப்பட்டுள்ள) உறிகளோடு எடுத்து அள்ளிப் பருகி, குருந்தொடு

மருதம் உந்தி-குருந்த மரத்தையும், மருத மரங்களையும் முறித்துத் தள்ளி, மறி விழி ஆயர் மாதர்-இளமான் போலும் (மருண்ட) பார்வையுடைய இடைக்குலப் பெண்களின், வளை துகில் கவரும் நீரால்-கைவளைகளையும் ஆடைகளையும் கவர்ந்து செல்லும் தன்மையினால், பொறி வரி அரவின் ஆடும்-படப்புள்ளிகளையும் கோடுகளையும் உடைய (காளியன் என்னும்) பாம்பின்மேல் நின்று கூத்தாடிய, புனிதனும் போன்றது - தூயவனான கண்ணபிரானையும் ஒத்திருந்தது (அவ் வெள்ளம்).

எழுவாய் வருவிக்கப்பட்டது. அரவின் மீது ஆடுதல் ஒழிந்த ஏனையவை வெள்ளத்துக்கும் கண்ணபிரானுக்கும் பொதுவானவை. அரவின் மீது ஆடியது கண்ணனுக்குச் சிறப்பான அடைமொழி.

செறி நறுந்தயிர்: 'பாறைபடு தயிர்' (சீவக. 429); 'பாறைபடு வெண்டயிர்' (கூர்ம. கண்ணனவ. 11). கண்ணன் குருந்த மரத்தை முறித்த செய்தி சிலப்பதிகாரத்துள்ளும் சீவக சிந்தாமணியிலும் கூறப்பட்டுள்ளது: (சிலப். ஆய்ச்சியர் குரவை; சீவக. 209). நாரதருடைய சாபத்தால் மருத மரங்களாகியிருந்த நளகூபரன், மணிக்கிரீவன் என்ற குபேர புத்திரர்கள் இருவரும் கண்ணனால் அச்சாபம் நீங்கப் பெற்றனர் என்பது வரலாறு. இராமாவதாரத்திற்குப் பிந்தியதாகிய கிருஷ்ணவதாரச் செய்திகளையும் இங்கே காட்டுகிறார் ஆசிரியர்.

(பி - ம்.) 1. செறுநறும்: சேர்ந்த; சேர்த்து; தெளிந்த.
2. உறியொடும்; மருதொடு குருந்தம்.
3. மறியுடை; மறியிடை: ஆயமாதர்: வளைதுகில்: வாருநீரால்.
4. பொறியுடை; புனிதனைப்போலு மன்றே; பொருவு மன்றே; மானு மன்றே. (15)

### மருதம்

28. கதவினை முட்டி மள்ளர் கையெடுத் தார்ப்ப வோடி
நுதலணி யோடை பொங்க நுகர்வரி வண்டு கிண்டத்
ததைமணி சிந்த வுந்தித் தறியிறத் தடக்கை சாய்த்து
மதமழை யானை யென்ன மருதஞ்சென் றடைந்ததன்றே.

(ஆற்று வெள்ளமானது), கதவினை முட்டி-மதகுகளில் நீர் அடைக்கும் கதவுகளைத் தாக்கி, மள்ளர் கை எடுத்து ஆர்ப்ப-உழவர்கள் கைகளை மேலே தூக்கி (உவகையால்) ஆரவாரம் செய்யவும், நுதல் அணி ஓடை பொங்க-முன்னேயுள்ள ஓடைகள் நீர் நிரம்பி வழியவும், நுகர்வரி வண்டு கிண்ட-தேனையும் மகரந்தத்தையும் உண்ணும் வண்டுகள் (பூக்களைக்) கிளறவும், ததை மணி சிந்த உந்தி-நெருங்கிய இரத்தினங்கள் சிதறும்படி வீசியும், தறி இற தட கை சாய்த்து-(கரையின் பாதுகாப்புக்காக ஊன்றிய) முளைகள் இற்று விழும்படி பெரிய (அலையாகிய) கைகளால் வீழ்த்தியும், மதம்மழை யானை என்ன-மத

நீரை மழைபோலப் பொழியும் யானையை ஒப்ப, ஓடி சென்று-(விசையுடன்)ஓடிப்போய், மருதம் அடைந்தது–மருத நிலத்தை அடைந்தது.

இப்பாட்டு, யானைக்கும் ஆற்றுக்கும் சிலேடை. யானைகள், தாம் அடைபட்டிருக்கும் கொட்டத்தின் கதவையும், கோட்டை வாயில் கதவுகளையும் முட்டித் தள்ளும்; மதங்கொண்ட யானை வெளியே செல்லும்போது, முன்னே சிலர் பறையறைந்து செல்ல, பரிக்கோற்காரர் முதலியோர் கைகளை ஓங்கி அதட்டிக்கொண்டு செல்வர்; யானையின் நெற்றியில் அணியப்பட்ட பட்டம் ஒளியோடு விளங்கும்; அதன் மதநீரை உண்ணவரும் வண்டுகள், மதநீர் சுரக்கும் இடங்களைக் கிளறும்; அது தனக்கு அலங்காரமாகஅணிவித்த மணிகள் சிதறும்படி துதிக்கையால் எடுத்து வீசும்; கட்டுத்தறியை முறித்துச் சாய்க்கும்; இவற்றை ஆற்றுக்கும் ஏற்றவாறு பொருத்தி ஒப்புமை காண்க. மதயானை, கட்டுக்கடங்காது தன் விருப்பப்படி செல்லும், ஆறும் தடைகளை உடைத்துக்கொண்டு தன் வழியே செல்லும்.

நுதல் அணி ஓடை: யானைக்காயின், நெற்றியில் அணியப்பட்ட பட்டம்; ஆற்றுக்காயின், முன்னே உள்ள அழகிய ஓடை. ததை மணி: யானைக்காயின், நெருக்கமாக அலங்கரிக்கப்பட்ட மணிகள்; ஆற்றுக்காயின், மலையிலிருந்து அடித்துக்கொண்டுவந்த மிகுதியான இரத்தினங்கள். தறி: யானை கட்டும் தறி; கரைப் பாதுகாப்புக்காக அடித்த முளை.

ஆறு, மதயானைபோல ஓடி, மருத நிலத்தை அடைந்தது என முடிபு கொள்க.

யானைகள் கோட்டை வாயிற் கதவை முட்டுதல்: 'களிறுங் கதவிறப் பாய்ந்த' (பு-வெ. 107). மள்ளர்-உழவர்; யானைக்காவலாட்கள்: அவராவார், குத்துக்கோற்காரரும், பரிக்கோற்காரரும். ததை மணி-ஒலிக்கும் மணி என்றும் ஆம்; யானையின் வருகையை அறிவித்தற்கு அதன்மேல் (இருபக்கங்களிலும் தொங்கும்படி) மணி இடுதல் மரபு. வெள்ளத்திற்கு யானையை உவமித்தல்: 'மதில் கொல் யானையிற் கதழ்பு நெறி வந்த, சிறையழி புதுப்புனல்' (ஐங்குறு. 78;) சீவக. 41-ம் பார்க்க.

(பி - ம்.) 1. ஆர்ப்ப வெய்தி; ஆர்ப்ப வேகி.

2. புகர்முக வண்டு; கிண்டித்; தீண்டத்; மிண்டத்; பாடத்.

3. தகைமணி; சிந்தி; சிதறி; நீட்டி; ஓச்சி.

4. மதமலை யானை; மதமளை யானை; போலந் நீத்தம்; அடைந்த மாதோ.

(16)

### திணைமயக்கம்

29. முல்லையைக் குறிஞ்சி யாக்கி மருதத்தை முல்லை யாக்கிப்
புல்லிய நெய்த றன்னைப் பொருவரு மருத மாக்கி
எல்லையில் பொருள்க ளெல்லா மிடைதடு மாறு நீரால்
செல்லுறு கதியிற் செல்லும் வினையெனச் சென்றதன்றே.

(அவ்வெள்ளமானது), முல்லையை குறிஞ்சி ஆக்கி-முல்லை நிலத்தைக் குறிஞ்சி நிலம்போலச் செய்தும், மருதத்தை முல்லை ஆக்கி-மருத நிலத்தை முல்லை நிலம்போலச் செய்தும், புல்லிய நெய்தல் தன்னை-(வளமையில்) தாழ்வான நெய்தல் நிலத்தை, பொரு அருமருதம் ஆக்கி-(தனக்கு) ஒப்பில்லாத மருத நிலமாகச் செய்தும், எல்லை இல் பொருள்கள் எல்லாம்-அளவற்ற பலவகைப் பொருள்கள் யாவும், இடை தடுமாறும் நீரால்-வெவ்வேறிடங்களில் சென்று கலத்தற்குரிய தன்மையோடு, செல் உறு கதியில் செல்லும்-(உயிர்கள்) சென்று பிறக்கின்ற (நால்வகைக்) கதிகளிலும் (அவற்றை விடாது) தொடர்ந்து செல்கின்ற, வினை என-இருவினைகளைப்போல, சென்றது-போயிற்று. அன்று, ஏ அசை.

நால்வகை நிலங்களுள், மருதம் வளப்பத்தால் மிக உயர்ந்ததாகலின் அதனைப் 'பொருவரு மருதம்' எனவும், நெய்தல் குறைந்தபயனுடையதாகலின் அதனைப் 'புல்லிய நெய்தல்' எனவும் விசேடித்தார். குறிஞ்சியில் (மலையில்) தோன்றும் ஆறு, முறையே முல்லை, மருதம், நெய்தல் நிலங்களினூடு சென்று, கடலில் கலக்கும். அவ்வாறு செல்லும்போது, முந்திய நிலத்துப் பொருள்களை அடுத்த நிலத்திலே கொண்டு சேர்த்தல் இயல்பு. இதனால் பலவகைப் பொருள்களும் தத்தமக்கு உரிய இடம் விட்டுப் பெயர்ந்து வேறிடங்களில் சென்று தடுமாறலாகும். இருவினைகளும், தம்மைச் செய்த உயிர்கள் வெவ்வேறு கதிகளிற் சென்று பிறக்குமாறு அவைகளை ஒன்றிலிருந்து ஒன்றுக்கு மாற்றி, அங்கங்கே தொடர்ந்து சென்று பயனைத் துய்ப்பிக்கும்; ஆதலால் இருவினைகள் ஆற்றுக்கு உவமை கூறப்பட்டன.

வினைகள் உயிர்களை விடாது தொடர்தல்: *413*; **கிட்கிந்தா.** *223*: **சீவக.** *2752*; **நாலடி.** *101*: 'ஒரு செனனத்திலே பண்ணின வினை மற்றொரு செனனத்திலேவந்து, செனனங்களெல்லாம் தொடர்ந்து வருகிறதுபோல் இருந்தது' **(பழைய உரை).**

வினைகள் உயிர்களை வெவ்வேறு கதியிற்செலுத்துதல்: 'நாவாய், அங்கொடிங் கிழித்தி யேற்றும் அமைதியின் அமரர் வையத்,திங் கொடங்கிழித்தி யேற்றும் இருவினை யென்னலான' **(அயோத். 1049).** 'வினையானது தேவரை மனிதராக்கியும், அவரை இழிகுலமாக்கியும், இழி குலத்தை மிருகமாக்கியும் செல்வதுபோல, ஒரு நிலத்துப் பொருளை மற்றொரு நிலத்துப் பொருளாக்கிற்று வெள்ளம்' **(பழைய**

உரை). உயிர்கள் தம் வினைக்கேற்ப வெவ்வேறு கதியிற் சென்று பிறத்தல்: 87.

நால்வகைக் கதிகளாவன:—தேவகதி, மக்கட்கதி, விலங்குகதி, தாவரகதி என்பன. வேறுவகையாகவும் கூறுவர்,

(பி - ம்.) 3. எல்லையிற்.
4. செல்லுமக்; செல்லிய: கதியுட்: கதியாற்: செல்லுமன்றே. (17)

### பல கால்கள் பிரிதல்

30. காத்தகான் மள்ளர் வெள்ளக்
கலிப்பறை கறங்கக் கைபோய்ச்
சேத்தநீர்த் திவலை பொன்னு
முத்தமுந் திரையின் வீசி
நீத்தமான் றலைய வாகி
நிமிர்ந்துபார் கிழிய நீண்டு
கோத்தகா லொன்றி னொன்று
குலமெனப் பிரிந்த மாதோ.

கோத்த கால் - (சரயுவில்) இணைந்த வாய்க்கால்கள், நீத்தம் ஆன்று-நீர்ப்பெருக்கு மிக்கு, அலைய ஆகி-அலைகளை யுடையனவாய், பார் கிழிய நிமிர்ந்து நீண்டு-பாரின் அடி சிதையும்படி (நீர்) பரந்து நீண்டு, கால்காத்த மள்ளர்-அக்கால்வாய்களைக் காத்து நின்ற உழவர்களின், வெள்ளம் கலி பறை கறங்க-வெள்ளம் வருதலைத் தெரிவிக்கும் மிக்க ஓசையுடைய கிணை என்னும் பறை ஒலிக்க, கை போய்-(மதகுகளைக்) கடந்து சென்று, சேத்த நீர்திவலை பொன்னும் முத்தமும்-சிவந்த நீர்த்துளிகளோடு பொன்னையும் முத்துக்களையும், திரையின் வீசி-அலைகளால் (கரைகளில்) வீசிக்கொண்டு, குலம் என-மக்கட்குலம் போல, ஒன்றின் ஒன்று பிரிந்த-ஒன்றினின்று மற்றொன்றாய்ப் (பலவாகப்) பிரிந்தன. மாது, ஓ-அசை.

மக்கட்குலம் மூல முதல்வர் ஒருவரிடமிருந்து பல கிளைகளாகப் பிரிந்து விரிவடைவது போல, சரயு நதியிலிருந்து, அதன் தொடர்புடைய சிற்றாறு, வாய்க்கால், கிளைவாய்க்கால் முதலிய பலவும் பிரிந்து பரந்தன என்க. 'ஆதியிலே ஒரு நதியாய்ப் பின்பு வேறுவேறானது எப்படியிருந்ததென்றால், ஆதிகாலத்திலே பிரம்மாவினிடத்திலே பிறந்த பிரம வங்கிசமானது பின் அனந்தங் குலங்களாகப் பிரிந்தது போலும் இருந்தது. குலம் ஒன்றில் அநேகம் பெயர் உற்பவித்தாற் போல ஆற்றில் கால்கள் பல பிரிந்தன'. (பழைய உரை).

ஆற்றில் புதுவெள்ளம் வருதலைத் தெரிவித்தற்குப் பறையறைதல் மரபு: 'கவ்வையுங் கடும்புன லொலியுங் காப்பவர், செவ்வனாருயிரஞ்சிலைக்கும் பம்பையும்' (சீவக.42). கைபோதல்-கடந்து செல்லுதல்; 'நிறையெனுஞ் சிறையைக் கைபோய்' (சீவக. 710). சேத்த-செம்மை என்னும் பண்பின் அடியாக வந்த பெயரெச்சம்; இது

'சேந்த' எனவும் வரும்; 'சேந்த நெய்யும்' (27) என முன்னே வந்தது காண்க. 'அவன் வேலிற் சேந்து'. (கலித். 57).

(பி - ம்.) 1. கார்த்தகால்; வாத்தகார்: வெள்ளம்.
2. சேர்த்த; துவலை; முத்தொடு; முத்தொடும்; திரையில் வீச.
3. நீத்தம்வான் றலையவாகி; வான்றலையதாகி; ஆன்றலையதாகி; ஆந்தலையதாகு: நிமிர்ந்தபார்; நிமிர்ந்தகார்: கிழித்து நீண்டு; நிரம்பி மீண்டு; நிரம்ப மீண்டு.
4. கோத்ததால்; கோத்தலால்: ஒன்றிலொன்று, ஒன்றொடொன்றின்; ஒன்றொடொன்று: பிரிந்ததன்றே: பிரிந்த வன்றே; பிறிந்தமாதோ; பரிந்த வன்றே. (18)

31. கல்லிடைப் பிறந்து போந்து
கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லையின் மறைக ளாலு
மியம்பரும் பொருளி தென்னத்
தொல்லையி னொன்றே யாகித்
துறைதொறும் பரந்த சூழ்ச்சிப்
பல்பெருஞ் சமயஞ் சொல்லும்
பொருளும்போற் பரந்த தன்றே.

கல்இடை பிறந்து போந்து-(இமய)மலையிலே தோன்றி (நதியாக) ஓடிவந்து, கடல் இடை கலந்த நீத்தம்-கடலிலே சங்கமமான சரயுவின்நீர், எல்லை இல் மறைகளாலும் இயம்ப அருபொருள் இது என்ன-அளவற்ற வேதங்களாலும் (அறுதியிட்டுச்) சொல்லுதற்கு அரிய பொருள் இது எனத்தக்கதாய், தொல்லையின் ஒன்றே ஆகி-முதலில் ஒன்றாக இருந்து, துறை தொறும்-பல துறைகளிலும், பரந்த சூழ்ச்சி-விரிந்த ஆராய்ச்சியுடைய, பல் பெரு சமயம்-பல பெரிய சமயத்தவர்கள், சொல்லும்-(பலவேறு உருவமாகவும், பெயருடனும்) சொல்லுகின்ற, பொருள்போல் உம்-பரம் பொருளைப் போலவும், பரந்தது-(சிற்றாறு, கால்வாய், ஏரி, குளம் முதலிய பல வடிவங்களாகப்) பரவியது. அன்று, ஏ-அசை.

'பொருளும்போல்' என்பதிலுள்ள உம்மையைப் பிரித்து, 'பொருள் போலும்' எனப் பின்னே கூட்டி உரைக்க; இங்கே உம்மை இறந்தது தழுவியது.

பரம்பொருள் ஒன்றே யாயினும், அது பல சமயத்தவர்களால் பலவேறு பெயரும் உருவமும் பெற்று விளங்குவதுபோல, முதலில் ஒன்றாயிருந்த சரயு வெள்ளம், பின்பு பலவாகப் பிரிந்து, சிற்றாறு, வாய்க்கால், ஏரி, குளம் முதலியனவாகி விளங்குகின்றது என்க. நீத்தம் பரந்தது என முடிக்க.

கல்-மலை; இங்கே இமயமலையைக் குறிக்கின்றது. கல்லிடைப் பிறந்து போந்து கடலிடைக் கலந்த நீத்தம்: 'மலைத் தலைய கடற்

காவிரி: (பட்டினப். 6). பரம்பொருளின் தன்மை: 'ஒன்ருகி மூலத் துருவம் பலவாகி' (ஆரணிய.. 103).

(பி - ம்.) 1. கிடந்து போந்து: கடலிடைப் புகுந்த.
2. மறைகளானும்; மறைகளுனும்; மறைகளெல்லாம்: இயம்பிய பொருளீதென்ன.
3. தொல்லேயில்; தொல்லேயன்: ஒன்றேயாக: பிரிந்த; விரிந்த.
4. பொருளெனப் பரந்த வன்றே. (19)

32: தாதுகு சோலே தோறுஞ் சண்பகக் காடு தோறும்
போதவிழ் பொய்கை தோறும் புதுமணற் றடங்க டோறும்
மாதவி வேலிப் பூக வனந்தொறும் வயல்க டோறும்
ஓதிய வுடம்பு தோறு முயிரென வுலாய தன்றே.

(சரயுவின் நீரானது), ஓதிய-(நால்வகைக் கதிகளாகச்) சொல்லப்பட்ட, உடம்பு தோறும் உயிர் என-பல உடம்புகளினுள்ளும் புகும் உயிர்போல, தாது உகு சோலே தோறும்-பூந்தாதுகள் சிந்துகின்ற பல பூஞ்சோலேகளிலும், சண்பகம் காடுதோறும் - சண்பக மரக்காடுகளிலும், போது அவிழ் பொய்கை தோறும்-பூக்கள் விரிகின்ற பல நீர் நிலேகளிலும், புது மணல் தடங்கள் தோறும்-புதிய மணல் பரப்பிய தடாகங்களிலும், மாதவி வேலி பூகம் வனம்தொறும்-குருக்கத்தியை வேலியாகவுடைய கமுகந் தோப்புக்களிலும், வயல்கள் தோறும்-பல வயல்களிலும், உலாயது-பரவியது. அன்று, ஏ-அசை.

பொய்கை-'மானிட ராக்காத நீர்நிலே' (சீவக.337-ந. உரை.) கமுகந் தோப்புக்கள் குருக்கத்தியை வேலியாக உடையன என்றது நாட்டு வள மிகுதியைக் குறிக்கும்.

ஆன்மா (பரம் பொருள்போல) ஒன்றே யாயினும், வெவ்வேறு வகையான உடம்புகளில் புகுந்து அவற்றை இயக்குவதுபோல, ஒன்ருகிய சரயு நீரும் வெவ்வேறு இடங்களில் பாய்ந்து அவற்றைச் சிறப்பிக்கின்றது என்றபடி. 'ஓதியவுடம்பு தோறு முயிரென: எந்தச் சென்ன மெடுப்பினும் அந்த அந்த உடம்புகளிலே போய் நுழையப்பட்ட ஆத்மாவைப்போல' (பழைய உரை).

(பி -ம்.) 1. தாதுகும்; சம்பகக் காவு; சந்தனக்காடு; சந்தனக்காவு.
2. போதலர்: புதுமணத் தடங்கள்.
3. மாதவிப் பூகவேலி.
4. உலாயிற்றன்றே; உலாவிற்றன்றே. (20)

(ஆற்றுப் படலம் முற்றும்)



# 2. நாட்டுப் படலம்

நாட்டுப் படலம்: நாட்டைப் பற்றிக் கூறும் படலம் என விரியும். காப்பியத் தலைவனது கோசல நாட்டின் பல சிறப்புக்கள் இப்படலத்துள் விரித்துக் கூறப்படும்.

33. வாங்கரும் பாத நான்கும் வகுத்தவான் மீகி யென்பான்
தீங்கவி செவிக ளாரத் தேவரும் பருகச் செய்தான்
ஆங்கவன் புகழ்ந்த நாட்டை யன்பெனு நறவ மாந்தி
மூங்கையான் பேச லுற்று னென்னயான் மொழியலுற்றேன்

வாங்கு அரு பாதம் நான்கும் வகுத்த -(பிரமன் அருளால் தாம்) பெற்ற அரிய நான்கு பாதங்களால் ஆன விருத்த வகைகள் பலவற்றை யும் (தம் காவியத்திலே) அமைத்த, வான்மீகி என்பான் - வான்மீகி என்று பெயர் சொல்லப்படும் முனிவர், தேவரும் செவிகள் ஆரபருக- தேவர்களும் தங்கள் காதாரக்கேட்டு அநுபவிக்கும் வண்ணம், தீம்கவி செய்தான்-இனிய கவிகளால் (இராம சரித்திரத்தைச்) செய்துள்ளார்; ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை-அக்காவியத்திலே அவர் வாக்கால் புகழ்ந்துள்ள (பெருமையுடைய) கோசல நாட்டைப்பற்றி, யான், அன்பு எனும் நறவம் மாந்தி-(இராம கதையினிடத்துள்ள)அன்பு என்ற மதுவைப்பருகி,மூங்கையான் பேசல் உற்றுன் என்ன-ஊமையன் பேசத் தொடங்கினுற்போல, மொழியல் உற்றேன்-சொல்லத் தொடங்கி யுள்ளேன்.

வடமொழியில், நான்கு பாதங்களையுடைய சுலோகங்கள் வேதத்தில் அன்றிப் பிறவிடங்களில் வழக்கில்லாதிருந்தன; வான்மீகி முனிவர் தெய்வாநுக்கிரகத்தாற் பாடிய தமது காவியத்தில் அவற்றை அமைக்கலானுர்; இதனுல் இவர், 'ஆதிகவி' எனப்பட்டார். இஃதொரு தனிச் சிறப்பாதலால், 'வாங்கரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி' என்றுர். இனி, 'வாங்க அரு' எனப் பிரித்து, வான்மீகி முனிவருடைய சுலோகங்கள் எவற்றிலும், 'எந்த ஓர் அடியையாவது எடுத்துவிட்டு அவ்விடத்து வேறு அடியைப் புகுத்துதல் அருமையான' எனவும் பொருள் கூறலாம்.

'தெய்வாநுக்கிரகம் பெற்ற ஆதிகவியாகிய வான்மீகி தம் வாக்கால் புகழ்ந்த நாட்டைப் பற்றி நான் பேசத் தொடங்குவது, ஊமையன் பேசத் தொடங்குவது போலாகும்' என்றுர். ஊமைக்கு மனத்தில் கருத்துக்கள் நிறைந்திருக்கும்; அவற்றைப் பிறருக்குக் கூற வேண்டுமென்ற ஆவலும் இருக்கலாம்; ஆனுல் பேசமுடியாது; ஒரு

வாறு பேசினும் சொல்லாக வெளிவராது; தெளிவிராது. அதுபோல, 'எனக்கும் ஒருவாறு கருத்துக்கள் தோன்றினுலும் அவற்றை எடுத்துச் சொல்லும் ஆற்றல் (வாக்கு வளம்) இல்லே. அவ்வாருயின், இதனைச் செய்யத் தொடங்கியது ஏன்? எனில், இராம கதையினிடத்துள்ள அன்பே காரணமாகும். அவ்வன்பு, மதுவைப்போல் என்னை மயக்க, அதனுல் நான் இது செய்யலானேன்' என்கிருர். அன்பை மதுவாக உருவகித்ததனுல், 'மதுவுண்டோர் தெளிவின்றி எதையேனும் பேசுதல்போல, இயற்கை யாற்றலும் அறிவுத்தெளிவும் இல்லாத நானும் அன்பால் தூண்டப்பட்டு ஒருவாறு சொல்லலானேன்' என்பதாம். அவையடக்கத் துள்ளும், 'ஆசை பற்றி அறையலுற்றேன்' என்ருர். வான்மீகி, தேவ பாஷையாகிய வடமொழியில் செய்ததனுல், தேவரும் பருகுதற்கு உரிய தாயிற்று. தேவருலகத்தில் வான்மீகி ராமாயணம் வழக்கத்திலுண்டு என்பர். தேவரும் - உம்மை, உயர்வு சிறப்பு. தேவரும் பருகத் தீங்கவி செய்தான்: 'ஒப்பு: வானேர் கேள்விச் செல்வந் துய்க்க வயிற்ருேர் கிளை தந்தாள்' (அயோத். 603). 'இன்றிவ் வுலகங்க ளிராமன், பரக்குந் தொல்புக ழமுதினைப் பருகுகின்றது' (அயோத். 177). 'இராமாயணத்தைத் தேவருங் கேட்டு மகிழ்ந்தனர்' என்று வான்மீகி ராமாயணத்தின் பலச்ருதியில் கூறப்பட்டுள்ளது: வான்மீகி - வட மொழித் தத்திதாந்தப் பெயர்; வன்மீகம் - புற்று; வான்மீகி-புற்றிலிருந்து வெளிப்பட்டவர்.

(பி - ம்.) 1. நான்கு; வகுத்து: வான்மீகன் என்போன்.
2. தீங்கறச்: பகரச். 3. அளப்பெனும்: நறவை.
4. மூங்கையார் பேசலுற்ருர்; பேசலுற்ருன்; பேசலுற்ருேன்: மொழியலுற்ருன்: என்னையான்; என்னென. (1)

### நாட்டின் வளம்

34. வரம்பெலா முத்தந் தத்து
மடையெலாம் பணில மாநீர்க்
குரம்பெலாஞ் செம்பொன் மேதிக்
குழியெலாங் கழுநீர்க் கொள்ளை
பரம்பெலாம் பவளஞ் சாலிப்
பரப்பெலா மன்னம் பாங்கர்க்
கரம்பெலாஞ் செந்தேன் சந்தக்
காவெலாங் களிவண் டிட்டம்.

(கோசல நாட்டில்), தத்தும் மடை எல்லாம் பணிலம்-(நீர்) தாவி வருகின்ற மடைகளிலெல்லாம் சங்குகள் (திரியும்); (அதனுல்), வரம்பு எல்லாம் முத்தம் - வயற்கரைகளி லெல்லாம் முத்துக்கள் (சிந்திக் கிடக்கும்); மாநீர் குரம்பு எல்லாம் செம்பொன்-மிக்க நீரைத் தேக்கும் அணைகளி லெல்லாம் நல்ல பொன் தாதுகள் (படிந் திருக்கும்); மேதி குழி எல்லாம் கழுநீர் கொள்ளை-எருமைகள் விழுந்து உழக்கும் பள்ளங்களி லெல்லாம் அளவற்ற செங்கழுநீர் மலர்கள்

(நிறைந்திருக்கும்); பரம்பு எல்லாம் பவளம்-(வயலில்) பரம்படித்த இடங்களி லெல்லாம் பவளங்கள் (பதிந்து கிடக்கும்); சாலி பரப்பு எல்லாம் அன்னம்-நெற் பயிர்ப் பரப்பின் இடைவெளிகளி லெல்லாம் அன்னப் பறவைகள் (தங்கி யிருக்கும்); பாங்கர் கரம்பு எல்லாம் செந்தேன் - வயல்களின் பக்கத்தில் உள்ள வெற்றிடங்களி லெல்லாம் நல்ல தேன் (பரவி யிருக்கும்); சந்தம் கா எல்லாம் களி வண்டு ஈட்டம் - அழகிய சோலைகளி லெல்லாம் (தேனுண்டு) களிக்கும் வண்டுகளின் கூட்டம் (நிறைந்திருக்கும்).

இந்நாட்டின் மருத நில வளம் முற்றிலும் வருணித்துக் கூறுதல் முடியாது என்ற கருத்துப்பட, இப்பாடலில் முடிக்குஞ் சொற்கள் இன்றி அவாய் நிலையாற் கூறினர். கொள்ளை-மிகுதி. நீருள்ள வயல் களில் சிறு மீன்கள் இருக்குமாதலால் அவற்றைத் தின்ன அன்னப் பறவைகள் வரும்.

ஒப்பு: ‘பணிலங்களுயிர்த்த முத்தும், இடறிய பரம்பிற் காந்து மினமணித் தொகையும்’ (39); ‘குழியெலாங் கழுநீராகி’ (969). ‘கழுநீர் மேய்ந்த கயவா யெருமை’ (சிறுபாண்‘ 42). சாலி-உயர்ந்த சாதி நெல்: ‘சாலி நெல்லின் சிறைகொள் வேலி’ (பொருந. 246).

(பி - ம்.) 1. மானீர்க். 2. கழுநீர் கொள்ளை.
3. பவளச் சாலி; பவழஞ் சாலி; பழனஞ் சாலி: பாங்கர்.
4. கரும்பெலாம்: சிந்தக். (2)

35. ஆறுபா யரவ மள்ள ராலைபா யமலை யாலைச்
சாறுபா யோசை வேலைச் சங்கின்வாய்ப் பொங்கு மோதை
ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன
மாறுமா றுகித் தம்மின் மயங்குமா மருத வேலி.

மா மருதம் வேலி- (கோசல நாட்டில் உள்ள) பரந்த மருத நில எல்லையில், ஆறு பாய் அரவம் - ஆறு விரைந்து பாய்வதனால் உண் டாகும் ஓசையும். மள்ளர் - உழவர்கள், ஆலை பாய் அமலை - கரும் பாலைகளை யாட்டுவதனால் வரும் ஓசையும், ஆலை சாறு பாய் ஓசை - கரும்பாலைகளினின்றும் கருப்பஞ்சாறு (ஆறுபோல்) பாய் வதனாலான ஓசையும், வேலை-கரைகளில் (திரிகிற), சங்கின் வாய் பொங்கும் ஓதை - சங்குகளிடமிருந்து மிக்குவரும் ஓசையும், ஏறு பாய் தமரம்-காளைகள் பாய்ந்து ஒன்றோடொன்று பொருவதனாலான ஓசை யும், நீரில் எருமை பாய் துழனி - நீர் நிலைகளில் எருமைகள் விழுவ தனாலான ஓசையும்; இன்ன - இவை போன்ற பிறவும், மாறு மாறு ஆகி - ஒன்றுக்கொன்று மாறுபட்டனவாய், தம்மில் மயங்கும் - தமக் குள் கலந்து ஒலிக்கும்.

இப்பாடலில் வந்துள்ள அரவம், அமலை, ஓசை, ஓதை, தமரம், துழனி என்பன ஒரு பொருட் சொற்கள். இவ்வாறு ஒரே பொருளில்

வெவ்வேறு சொற்களை ஒன்றன்பின் ஒன்றாக அமைத்தல், **பொருட் பின் வருநிலையணி** ஆகும்.

(பி - ம்.) 1. பாய்மாலை; வாயமலை.
2. பாயோதை: மாலைச்: சங்கின் வாய்; சங்கு வாய்; சங்கு பாய்: பொங்கு மோசை: பம்பு மோதை.
3. நீரின்; நீருள்: துழனி யன்ன.
4. மாறு மாறுடித்தம்மின்; தம்முள்: மாறு மாறுடிப் பாடி: மயங்குமால்; மயங்குமம்; வயங்குமா. (3)

36. தண்டலை மயில்க ளாடத்
தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கண் முழவி னேங்கக்
குவளைகண் விழித்து நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத்
தேம்பிழி மகர யாழின்
வண்டுக ளினிது பாட
மருதம்வீற் றிருக்கு மாதோ.

தண்டலை - சோலைகளில், மயில்கள் ஆட, தாமரை விளக்கம் தாங்க-தாமரையானது (தன்பூவாகிய)விளக்குக்களைத் தாங்கியிருக்க, கொண்டல்கள்-மேகங்கள், முழவின் ஏங்க-மத்தளம்போல ஒலிக்க, குவளை கண் விழித்து நோக்க - கருங்குவளைப் பூக்கள் இமையாது காணும் கண்களைபோல மலர்ந்திருக்க, தெண் திரை எழினி காட்ட-தெளிந்த நீரின் அலைகள் திரைச் சீலைகளின் தோற்றத்தைக் காட்ட, வண்டுகள் தேம் பிழி மகர யாழின் இனிது பாட - வண்டுகள் இனிய தேன் போன்ற மகர யாழின் இசையையொப்ப இனிமையாகப் பாட, மருதம் வீற்றிருக்கும் - மருதம் என்ற அரசன் கொலுவீற்றிருப்பான். மாது. ஓ-அசை. வீற்றிருக்கும் செய்யுமென் முற்று. யாழ்: ஆகு பெயர்.

ஓர் அரசன், தனது அவையில் நிகழும் ஆடல் பாடல்களைக் கண்டுகளித்தவாறு வீற்றிருத்தல்போல, மருதமாகிய அரசன், சோலையாகிய ஆடரங்கிலே, மயில்களாகிய நாட்டியப் பெண்கள் ஆடவும், அவ்வாடலுக்கு உரிய அங்கங்களான யாழும் மத்தளமும்போல வண்டின் ரீங்காரமும் மேக முழக்கமும் அமையவும், அரங்கில்உள்ள சித்திர விளக்குகளாகத் தாமரைப் பூக்களும், திரைச் சீலையாகச் சிற்றலைகளுடன் கூடிய தெளிந்த நீர்ப்பரப்பும் தோற்றமளிக்கவும், குவளைப் பூக்களாகிய கண்களை மலரவிழித்துப் பார்த்துக் களித்தவாறு கொலு வீற்றிருக்கின்றான் என உருவக வகையால் கூறியுள்ள அழகு உற்று நோக்கி யின்புறத்தக்கது. நீர்ப் பரப்பில், கரையிலுள்ள மரம் செடி கொடிகளின் நிழல் பிரதிபலிக்குமாதலால், அத்தோற்றம் இனிய இயற்கைக் காட்சிகள் எழுதப்பட்ட திரைச் சீலையை ஒத்திருக்கும்.

அரசன் இனிய காட்சியைக் கண்டு நுகர்தற்கு இரு கண்கள் போதா வென்று கருதி, பல கண்களைப் பெற்று அவற்றால் இமையாது விழித்த வாறே கண்டு களிக்கின்றான் போலும். தாமரை விளக்கு: இக்காலத் துச் சித்திர வேலைப் பாடமைந்த மின் விளக்குக்களை நினைப்பூட்டு கின்றது.

தாமரை விளக்கம்; 'செந்தாமரை பூத் தெனத் தீப மெடுத்த வன்றே' (961); 'விளக்கி னன்ன சுடர்விடு தாமரை' (நற்: 315). முழவொலிக்கு மேக முழக்கம் ஒப்பாதல்: மலைபடு. 1-3; நற். 139; குறுந். 323; அகநா. 428. 'குவளை கண் விழித்து நோக்கல்: 'முழு நீர் விழிபோல், மைத்தலர் நீல மலர் வயல்' (தஞ்சை. 425). நீரலை திரைச் சீலை போலிருத்தல். ஒப்பு: 903. மகர யாழ்: பத்தொன்பது நரம்பு கட்டின வீணை (சீவக. 608-ந.). யாழொலிக்கு வண்டின் ஓசை: 'மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய' (மணி: 4: 4).

(பி - ம்.) 1. ஆலத்; விளக்க மேந்த; விளக்கதாகக்.
2. கொண்டலை: ஓங்கக்: குவளைகள்.
3. எழுனி: தேம்பொழி; தேன் பொழி: மதுர யாழின்.
4. வண்டுகள் கீதம்: வீற்றிருந்த; வீற்றிருப்ப: மன்னோ. (4)

37. தாமரைப் படுவ வண்டுந் தகைவரு திருவுந் தண்டார்க்
காமுகர்ப் படுவ மாதர் கண்களுங் காம னம்பும்
மாமுகிற் படுவ வாரிப் பவளமும் வயங்கு முத்தும்
நாமுதற் படுவ மெய்யு நாமநூற் பொருளு மன்னோ.

(அந்நாட்டில் எங்கும்), தாமரை படுவ - தாமரைப் பூக்களிலே தங்குவன, வண்டும் - வண்டுகளும், தகை வரு திருவும் - அழகு வளர் கின்ற இலக்குமியும் (ஆம்); தண்தார்-குளிர்ந்த பூமாலையை யணிந்த, காமுகர் படுவ - காமுகரிடத்திலே போய்த் தைப்பன, மாதர் கண் களும் காமன் அம்பும் - (பரத்தை) மாதருடைய கண்களும், மன்மத னுடைய பாணங்களும் (ஆம்); மா முகில் படுவ - மிக்க மழையால் உண்டாவன, வாரி பவளமும் வயங்கும் முத்தும்-கடல்படு பொரு ளாகிய பவளமும் விளங்குகின்ற முத்தும் (ஆம்); நா முதல் படுவ- மக்கள் நாவிலே பொருந்துவன, மெய்யும்-உண்மையும், நாமம் நூல் பொருளும்-பெயர் பெற்ற (சிறந்த) நூற் பொருள்களும் (ஆம்). மன், ஓ- அசை.

தாமரைப் பூக்களின் மிகுதியால் எங்கும் இலக்குமீகரமாக இருக்கும்; ஆடவரும் மகளிரும் கவலையின்றி இன்பம் அனுபவித்து இருப்பர்; கடல் படு பொருள்களிற் சிறந்த முத்தும் பவளமும் நிறைந் திருக்கும்; மக்கள் எல்லோரும் உண்மையும் நூற் கல்வியும் உடைய வர்களாய்ச் சிறந்திருப்பர் என்பது கருத்து. முத்தும் பவளமும் நல்ல மழையினால் உண்டாகும் என்பர்; அல்லது, அந்நாட்டில் மழையே

முத்தும் பவளமுமாகப் பொழியும் எனக் கூறுவாரும் உளர். 'படுவ' என்ற சொல் பலமுறை வந்தது, **சொற்பின் வருநிலை அணி.** நாமுதல்: முதல்-ஏழாம் வேற்றுமையுருபு.

(பி - ம்.) 1. தாமரைப் படுவ; தாமரை படுவ; வண்டு: தகை வரும்; தகைபெரும்; தகை யரும்; ததை வரு; ததை வரும்; தகவரும்: தண்டார்.
2. படுப. 3. மாமுதற்; மாமுகப்: படுப; பவழமும்: வயங்கும்.
4. படுப: பொருளு மன்றே. (5)

38. நீரிடை யுறங்குஞ் சங்க
நிழலிடை யுறங்கு மேதி
தாரிடை யுறங்கும் வண்டு
தாமரை யுறங்குஞ் செய்யாள்
தூரிடை யுறங்கு மாமை
துறையிடை யுறங்கு மிப்பி
போரிடை யுறங்கு மன்னம்
பொழிலிடை யுறங்குந் தோகை.

சங்கம்-சங்குகள், நீர் இடை உறங்கும்-நீர்நிலைகளில் இனிது தங்கியிருக்கும் ; மேதி நிழல் இடை உறங்கும் - எருமைகள் மர நிழலிலே தூங்கும் ; வண்டு தார் இடை உறங்கும் - வண்டுகள் பூங் கொத்துக்களில் (இனிது) தங்கியிருக்கும்; செய்யாள் தாமரை உறங்கும் - இலக்குமி தாமரைப் பூக்களிலே தங்கியிருப்பாள்; ஆமை தூர் இடை உறங்கும்-ஆமைகள் (நீரினடியில்உள்ள) சேற்றிலே தங்கியிருக்கும்; இப்பி துறை இடை உறங்கும்-முத்துச்சிப்பிகள் நீர்த்துறைகளிலே தங்கிக் கிடக்கும்; அன்னம் போர் இடை உறங்கும்-அன்னப் பறவைகள் நெற் போரிலே தங்கி உறங்கும் ; தோகை பொழில் இடை உறங்கும்-மயில்கள் சோலைகளிலே (அழகாகத்) தங்கி யிருக்கும்.

இப்பாட்டில் உறங்கும் என்னும் சொல் பலமுறை ஒரே பொருளில் வருதல் **சொற்பொருட் பின்வரு நிலையணி** யாம். இதனுலும் நாட்டின் வள மிகுதி குறிக்கப்பட்டது, இடை - ஏழன் உருபு. தோகை-ஆகுபெயர். தார் பூமாலையும் ஆம். தூர்-புதர் எனவும் கூறலாம். 'தூர்-ஆழமான பள்ளங்களிலே இருக்கிற சேற்ருேடே கூடிய மரத்தினது வேர்ச் சந்துகள்' (பழைய உரை).

எருமை நிழலிடை உறங்குதல் : **ஒப்பு: சிறுபாண்.** *42-46.* 'தடமருப் பெருமை, முடமுதிர் பலவின் கொழு நிழல் வதியும்' **(அகநா.** ***15*****).**

(பி - ம்.) 1. சங்கு. 2. நாரிடை : உறங்கு.
4. போரிடை யுறங்கு மேகம் பொழிலிடை யுறங்கு மன்னம்; பொழிலிடை யுறங்கு மேகம்; பொழிலிடை யுறங்கு மஞ்ஞை. (6)

39. படையுழ வெழுந்த பொன்னும்
பணிலங்க ளுயிர்த்த முத்தும்
இடறிய பரம்பிற் காந்து
மினமணித் தொகையு நெல்லின்
மிடைபசுங் கதிரு மீனு
மென்றழைக் கரும்பும் வண்டும்
கடைசியர் முகமும் போதுங்
கண்மலர்ந் தொளிரு மாதோ.

படை உழ எழுந்த பொன்னும் - (கலப்பையின்) கொழு உழுவதனல் மேலெழுந்த பொன்னும், பணிலங்கள் உயிர்த்த முத்தும் - சங்குகள் ஈன்ற முத்துக்களும், பரம்பின் இடறிய காந்தும் இனம் மணி தொகையும் - பரம்புப் பலகையால் இடறுண்டு சிதறிய ஒளி மிக்க பலவகை இரத்தினங்களின் கூட்டமும் (ஆகிய இவைகள்), (கண் மலர்ந்து ஒளிரும் - அங்கங்கே ஒளி வீசி விளங்கும்); நெல்லின் மிடை பசுமை கதிரும்-நெல் மணிகள் செறிந்த பசுமையான கதிர்களும், மெல் தழை கரும்பும் - மென்மையான தோகையையுடைய கரும்புப் பயிரும், (கண் மலர்ந்து ஒளிரும்) - கண்ணுக்கு விருந்தாய்ப் பரந்து தோன்றும் ; மீனும்-மீன்களும், வண்டும்-வண்டுகளும்; போதும்-(சிலவகைப்) பூக்களும், (கண் மலர்ந்து ஒளிரும்) - கண்களை யொத்து ஒளியோடு தோன்றும்; கடைசியர் முகமும்-பள்ளத்திகளின் முகங்களிலும், கண் மலர்ந்து ஒளிரும்-கண்கள் (மகிழ்ச்சியால்) விரிந்து பிரகாசிக்கும். மாது, ஓ-அசை.

போதும் கள் மலர்ந்து ஒளிரும் எனப் பிரித்து, பூக்களும் தேனோடு மலர்ந்து பிரகாசிக்கும் எனவும் கூறலாம். பள்ளத்திகள், தாங்கள் நட்ட பயிர்கள் செழிப்புற வளர்ந்து கண்ணுக்கினிய காட்சியுடன் பயன் தருதலை நோக்கி மகிழ்கின்றனர்; ஆதலால் அவர்களுடைய கண்கள் மலர்ந்து ஒளிர்கின்றன; 'கண் மலர்ந்து ஒளிரும்' என்பதனைக் கடை நிலைத் தீவகமாக வைத்து முன்னே இடந்தோறும் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது.

(பி - ம்.) 1. படையன: உதிர்த்த; உகுத்த:
2. இடையிடை: பரப்பிற்; வரம்பிற்: தொகையில்: நெல்லு; எல்லும்;
3. கதிருமீன்ற; கதிர்களீன்ற: மென்கழைக் கரும்பு வண்டு;
4. போலும்: கண்வளர்ந்; கண்டலர்ந்; கண்ணரந்; மன்னே. (7)

40. தெள்விளிச் சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவ மாந்தி
வள்விசி கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கட் டோகை யின்றுயி லெழுப்பு மன்றே.

தெள் விளி - தெளிவான இசை பொருந்திய, சிறி(ய) யாழ் பாணர் - சிறிய யாழையுடைய பாணர்கள், தேம் பிழி நறவம் மாந்தி - தேனுல் சமைத்த கள்ளைப் பருகிவிட்டு, வள் விசி கருவி பம்ப - வார்க்கட்டு அமைந்த மத்தளம் உடன் ஒலிக்க, வயின் வயின்—பல இடங்களில், வழங்கு பாடல்-(யாழில்) வாசிக்கும் இசைப் பாட்டுக்கள், வெள்ளி வெண் மாடத்து உம்பர் - வெள்ளியின் வெண் மையை உடைய மாளிகைகளின் மேலிடங்களில், வெயில் விரி-மிக்க ஒளி வீசுகின்ற, பசும் பொன் பள்ளி - பசிய பொன்னுலாகிய கட்டி லிலே (உறங்குகின்ற), எள் அரு கருமை கண் - இகழ்தலரிய கருமை யான கண்களையுடைய, தோகை - மயில் போலும் சாயலுடைய மகளிரை, இன் துயில் எழுப்பும்—இனிய உறக்கத்தினின்றும் எழுப்பும். அன்று, ஏ-அசை.

சிறுயாழ்ப் பாணர் வழங்கு பாடல் தோகை இன் துயில் எழுப் பும் எனக் கூட்டி முடிக்க.

பெரும் பாணர் எனவும் சிறு பாணர் எனவும் பாணர் இரு வகையினர் ; இங்கே கூறப்படுபவர் சிறு பாணர். இவர்கள், பெருஞ் செல்வர் வீட்டு மக்களைத் துயிலெழுப்பவும், அவ்வப்போது துதியாக வும் பாடுவர். சிறிய யாழ் என்பது தொகுத்தல் விகாரம் பெற்றது. தோகை-ஆகுபெயர்.

தெள் விளி : ஒப்பு. 'தீந்தொடை மகர வீணைத் தெள் விளி' (சீவக 608). 'தெள்விளி-தெளிந்த மிடற்றோசை' (பழைய உரை). சிறியாழ்ப் பாணர்; 'இன்குரற் சீறியா ழிடவயிற்றழீஇ' (சிறுபாண். 35). 'தேம்பிழி தேறல் - தேனுற் சமைத்த கள்'; (குறிஞ்சி.155 - ந. உரை). (ஒப்பு : அகநா-78; பெருங். 2.2 : 177).வள் விசி கருவி: 141.

(பி - ம்.) 1. தெள்விளி செறியாழ்ப்; தெள்ளிய: தேம் பொழி நறவை:
2. வள்விசிக்: வழங்கும்: வயங்கும்; வயங்கு:
3. மாடத்துச்சி; முத்துமோங்க: (8)

41. ஆலைவாய்க் கரும்பின் றேனு
மரிதலைப் பாளைத் தேனும்
சோலைவாய்க் கனியின் றேனுந்
தொடையிழி யிருலின் றேனும்
மாலைவா யுகுத்த தேனும்
வரம்பிகந் தோடி வங்க
வேலைவாய் மடுப்ப வுண்டு
மீனெலாங் களிக்கு மாதோ.

ஆலைவாய்-கரும்பாலைகளில் உள்ள, கரும்பின் தேனும் - கருப் பஞ்சாறுகிய தேனும், அரி தலை பாளை தேனும் - (தெங்கு, பனை, ஈந்து

ஆகியவற்றின்) தலை அரியப்பட்ட பாளையினின்று வெளிப்படும் கள்ளாகிய தேனும், சோலை வாய் - சோலைகளில் (உள்ள), கனியின் தேனும் -(பலவகையான) பழங்களின் சாறுகிய தேனும், தொடை இழி இருலின் தேனும்—தாரையாக ஒழுகுகின்ற தேனடையின் தேனும், மாலை வாய் உகுத்த தேனும் - (மாந்தர் அணிந்த) பூமாலைகளினின்றும் சிந்திய தேனும், வரம்பு இகந்து ஓடி-அளவு கடந்து ஓடி, வங்கம் வேலை வாய் மடுப்ப - கப்பல்கள் வழங்கும் கடலினுள்ளே போய்ச் சேர, மீன் எல்லாம் உண்டு களிக்கும் - (அங்குள்ள) மீன்களெல்லாம் (அத்தேன் பெருக்கை) உண்டு களிப்படையும். மாது, ஓ-அசை.

அரிதலைப் பாளை தேன் : ஒப்பு. 'பாளைத் தந்த மது' (56); 'பழன வாளை பாளை யுண்டென' (பரி. 7 : 34).

இருல் - தேனடை ; மிக்க உயரத்திலுள்ள தேனடையினின்றும் தேனை எடுப்பதற்காக, வேடர், அடியிலே நூல் தொடுத்துக் கட்டப்பட்ட அம்பொன்றைத் தேனடையிலே எய்வர் ; அம்பாற் சிதைவுண்ட தேனடையினின்றும் நூலின் வழியே தேன் கீழிறங்கும் ; ஆதலால் 'தொடை இழி இருலின் தேன்' என்றுர்.

பலவகைத் தேனும் நீர்ப் பெருக்கைப்போல் ஏரி, குளம் முதலியவற்றிலும் பாய்ந்து, அங்கும் அடங்காமல் கரைகடந்து ஓடிக் கடலிற் சேரும் என்று உயர்த்துக் கூறியது வீறுகோள் அணி.

(பி - ம்.) 1. ஆலை பாய்.
2. சோலை வாய்; சோலை வீழ் கனியிற்; கரும்பின்; மலரின்: தொடையழி; தொடையளி: இறலின்.
3. வரம்பிகழ்ந் தோட; வரம்பிகழ்ந்தோடி: ஏங்க.
4. மடுப்ப வேலை; மடுப்ப நுங்கி: மீனினம்: களிக்கு மன்றே; களிப்ப மாதோ; கவர்ந்த மாதோ. (9)

42. பண்கள்வாய் மிழற்று மின்சொற்
கடைசியர் பரந்து நீண்ட
கண்கைகால் முகம்வா யொக்குங்
களையலாற் களையி லாமை
உண்கள்வார் கடைவாய் மள்ளர்
களைகலா துலோவி நிற்பார்
பெண்கள்பால் வைத்த நேயம்
பிழைப்பரோ சிறியோர் பெற்றல்.

வாய்-வாயினலே, பண்கள் மிழற்றும் இன்சொல்—பண்களைப் போலப் பேசுகின்ற இனிய சொற்களையுடைய, கடைசியர்-பள்ளத்தியரின், பரந்து நீண்ட கண் - விரிந்து நீண்டுள்ள கண்களையும், கைகால் முகம் வாய் - கைகளையும் கால்களையும் முகத்தையும் வாயை

யும், ஒக்கும்-ஒத்திருக்கின்ற, களை அல்லால்-(பூக்களாகிய) களைகளை யன்றி, களை இலாமை - (வேறு) களைகள் இல்லாமையால், உண் கள் வார் கடைவாய் மள்ளர் - (தாம்) குடித்த கள் வடிகின்ற கடைவாயை யுடையவர்களான (களை பறிக்கும்) உழவர்கள், களை கலாது - (அக்களைகளைப்) பறிக்காமல், உலோவி நிற்பார்-(அவைகளி டத்துப்) பெரும் பற்றுள்ளத்தோடு (வறிதே) நிற்பார்கள்; சிறியோர்-கீழ்மக்கள், பெண்கள் பால் வைத்த நேயம் - பெண்களிடத்துக் கொண்ட ஆசையை, பெற்ருல் - (வேறெதனுலேனும்) நினைவூட்டப் பெற்ருல், பிழைப்பரோ-அதினின்றும் தப்புவார்களோ ? (தப்பமாட் டார்). ஒகாரம்; எதிர் மறை.

பெண்களிடம் மிக்க பற்று வைத்து, அதனைக் கைவிட மாட் டாத கீழ் மக்களுக்கு, கட்குடியும் சேர்ந்தால் அவர்கள் நிலை சொல்ல வொண்ணுத தாகும்; அதனை யிங்கே அழகுற அமைக்கின் ருர் ஆசிரியர்.

அற்ப அறிவுடையவர்கள் பெண்கள் மேலே ஆசை வைத்தால் பிழைக்க மாட்டார்கள். (பழைய உரை)

'கீழ்மக்கள், பெண்களிடம் வைத்த ஆசையினின்று மீள்வதரிது' என்ற பொதுப் பொருளை, களையைக் களையாமல் வறிது நிற்றலாகிய சிறப்புப் பொருளால் பெறவைத்தது 'வேற்றுப் பொருள் வைப்பணி'. பெண்களின் அவயவங்களுள் கண்ணுக்கு-கருங்குவளை; கை, கால், முகம்-தாமரை: வாய்-செவ்வல்லி; இவைகளே வயல்களில் களையாக வுள்ளன என்றதனுல் நீர்வள மிகுதி பெறப்பட்டது. ஒப்பு : 534 ; சீவக. 51.

(பி - ம்.) 1. மிழற்று மின்கட்; மிழற்ற வின் சொற்.
2. கண்கள் கால்: களையல்லாற்; களையிலாற்: களையில்லாமல்: களையில் லாமை: களைகிலாமை: களையிலாமல்: களையிலாமை:
3. கள்வாய்: களைகிலாது: களையிலாது: களைகிலார்: உலாவி: உலோவு; உலோபி; நிற்பர்.
4. நேசம்: மறப்பரோ: சிறியர்: பேற்ருல். (10)

மங்கையரின் மிகுதி

43. புதுப்புனல் குடையு மாதர்
பூவொடு நாவி பூத்த
கதுப்புறு வெறியே நாறுங்
கருங்கடற் றரங்க மென்ருல்
மதுப்பொதி மழலைச் செவ்வாய்
வாட்கடைக் கண்ணின் மைந்தர்
விதுப்புற நோக்கு மின்ஞர்
மிகுதியை விளம்ப லாமோ.

கரு கடல் திரங்கம் - கருமையான கடலின் அலைகள், புது புனல் குடையும் மாதர் - புது வெள்ளத்தில் நீராடுகின்ற பெண்களின், பூவொடு நாவி பூத்த கதுப்பு உறு வெறியே நாறும் என்றால்- பூக்களும் கத்தூரிச் சாந்தும் பொருந்திய கூந்தலில் உள்ள மிக்க மணமே வீசிக்கொண்டிருக்கும் என்றால், வாள் கடை கண்ணின்- வாள் போல் கூரிய கடைக்கண்ணால்,மைந்தர் விதுப்பு உற நோக்கும்- காளையர் காமவேட்கை கொள்ளும் வண்ணம் பார்க்கின்ற, மது பொதி மழலை செவ்வாய் மின்னார் - தேனின் இனிமை பொருந்திய மழலைச் சொற்களைப் பேசும் சிவந்த வாயை உடைய மின்னற் கொடி போன்ற பெண்களின், மிகுதியை விளம்பல் ஆமோ-மிகுதியை (அளவிட்டு)ச் சொல்லுதல் (என்றால்) ஆகுமோ! (ஆகாது).

பெண்கள் ஆற்றில் நீராடும்போது, அவர்கள் தலையில் சூடியுள்ள பூ, பூசியுள்ள கத்தூரிக் குழப்பு, இவற்றின் மணம் நீரோடு கலந்து சென்று கடலில் சேர, அந்த மணத்தின் மிகுதியால், இயற்கையாகப் புலால் நாற்றமுடைய கடல்நீர் அதுமாறி நறுமணம் கமழும் என மிகுத்துக் கூறினர்; **வீறுகோளணி.** ஆமோ: ஓகாரம் எதிர்மறை.

**ஒப்பு :** 'குரும்பை வெம் முலையா ராடக் கூந்தலி னறவந் தோய்ந்த, இரும்புன லாறு பாய வெறிதிரை சுருட்டுந் தெண்ணீர்க், கருங்கடல் புலவு நீங்கி நறுமணங் கமழு மென்றால், முருந்துறழ் மூர லார்த மிகுதியை மொழிய லாமோ' (**நைடத.** நாடு. *11*). கடல் நீர் செயற்கை மணம் கமழ்தல்: **சுந்தர.** *112*. அகழிநீர் மணங் கமழ்தல்: **சுந்தர.** *245*.

(பி - ம்.) 1. போதொரு. 2. கதுப்புற: கதுப் பொடு.
3. மதுப் பொழி: மதுப் பொலி: வாட்படைக் கண்ணால்:
4. விதுப் புறல்: விதிர்ப்புற: விதிப்புற: வெதுப்புற: நோக்கு மன்னர்! நோக்க மன்னர்: மிகுதியே; விளம்பலாமே, *(11)*

## மைந்தர் நீராட்டு

44. வெண்டளக் கலவைச் சேறுங்
குங்கும விரைமென் சாந்தும்
குண்டலக் கோல மைந்தர்
குடைந்தநீர்க் கொள்ளை சாற்றில்
தண்டலைப் பரப்புஞ் சாலி
வேலியுந் தழீஇய வைப்பும்
வண்டலிட் டோட மண்ணு
மதுகர மொய்க்கு மாதோ.

சாற்றில் - சொல்லுமிடத்து, குண்டலம் கோலம் மைந்தர் குடைந்த - மகரகுண்டலங்களை அணிந்த அழகிய காளையர் நீராடிய,

நீர் கொள்ளை-நீர்ப் பெருக்கானது, வெண்மை தளம் கலவை சேறும்-(அம்மைந்தர் பூசியிருந்த) வெண் சந்தனக் கலவைப் பூச்சையும், குங்குமம் விரை மெல் சாந்தும்-குங்குமப்பூவின் மணம் கலந்த மெல்லிய செஞ்சந்தனத்தையும் (கரைத்துக்கொண்டு), தண்டலை பரப்பும்-(பக்கங்களில் உள்ள) சோலைகளிலும், சாலி வேலியும்-நெற் பயிர் விளையும் நிலங்களிலும், தழீஇய வைப்பும்-அந்நிலங்களை யடுத்த பிறவிடங்களிலும், வண்டல் இட்டு ஓட-வண்டல் படியும்படி ஓடுவதனுல், மண்ணும்-(அவ்வண்டல் படிந்த) மண்ணிலும், மதுகரம் மொய்க்கும்-(வாசனை மிகுதியால்) வண்டுகள் போய் மொய்க்கும். மாது, ஓ-அசை.

'நீர்க் கொள்ளைச் சாற்றில்' என்று பாடங் கொண்டு, நீராட்டு விழாவில் எனப் பொருள் கூறலும் உண்டு. தளம்-பச்சைக் கருப்பூரம் எனவுங் கூறுவர்.

முன் கவியில் மகளிர் மிகுதியையும் அவர்கள் நீராடற் சிறப்பையும் கூறிய ஆசிரியர், இக்கவியில் ஆடவரைப் பற்றி அவ்வாறு கூறலானுர். இதுவும் **வீறுகோளணி** கொண்டது.

வெண்டளச் சேறு: **கிட்கிந்தா. 16.** வண்டலிட்டோடுதல்: **அயோத். 477.**

(பி - ம்.) 2. கோதை மாதர்; குடைந்த நீர்; அடைந்த நீர்க்; கொள்ளைச்; கொள்; ளச்; கொள்ளைச் சேற்றில்; சாற்றின்; சாறும்.
3. தண்டலை பாயும்; வேலியுந் தரளக் கொத்தும்; தரளக் கொத்தின்; வேலியின்றழிய; வேலையுந் தழீஇய; வேழமுந் தழீஇய; வைப்பின்.
4. வண்டலிட்டாட; வண்டலிட்டாடும்; மண்டலிட்டோடும்; மன்னே.

**(12.)**

45. சேலுண்ட வொண்க ணாரிற்
திரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி
கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரைதா லாட்டும் பண்ணை.

பண்ணை-வயல்களில், சேல் உண்ட-சேல் என்னும் மீனை ஒத்த, ஒள் கண்ணாரின்-ஒளி பொருந்திய கண்களையுடைய பெண்களைப்போல, திரிகின்ற-(மெல்லிய நடையுடன்) சஞ்சரிக்கின்ற, செங்கால் அன்னம்-சிவந்த கால்களையுடைய அன்னப் பறவைகள், மால் உண்ட-பெருமை பொருந்திய, நளினம் பள்ளி-தாமரை மலராகிய படுக்கையிலே, வளர்த்திய-தூங்கச் செய்த, மழலை பிள்ளை-இளங் குஞ்சுகள், கால்உண்ட சேறு மேதி-கால்களில் படிந்த சேற்றையுடைய எருமையானது,

கன்று உள்ளி கனைப்ப-(வீட்டில் தான் விட்டு வந்த) கன்றை நினைத்துக் கத்த, சோர்ந்த - (அப்போது அதன் மடியினின்றும்) வடிந்த, பால் உண்டு துயில-பாலைக் குடித்துவிட்டுத் தூங்க, (அவைகள் நன்கு உறங்கும் வண்ணம்), பச்சை தேரை - பச்சை நிறமுடைய தவளைகள், தாலாட்டும்-தாலாட்டுப் பாடுவதுபோலக் கத்தும்.

பண்ணைகளிலே நளினப் பள்ளியில் அன்னம் வளர்த்திய பிள்ளை, பால் உண்டு துயில, பச்சைத் தேரை தாலாட்டும் எனக் கூட்டி முடிவு கொள்க.

சேல் உண்ட: உண்ட-உவம உருபு. கண்ணாரின்; இன்-ஐந்தனுருபு; ஒப்புப் பொருளது. 'கண்ணாரின் திரிகின்ற' என்பதற்கு, பெண்களிடத்தில் (நடை கற்கும்பொருட்டு) திரிகின்ற எனவும் பொருள் கூறுவர். மால்-பெருமை. மாலுண்ட மழலைப் பிள்ளை எனக் கூட்டி, அன்னம் அன்புகொண்ட இளங் குஞ்சு என்பாரும் உளர். மழலை-இங்கே இளமையை உணர்த்தும்.

குஞ்சுகளை வளர்த்திய அன்னங்கள் பெண்டிரின் நடையைக் கற்றுக்கொள்ள வேண்டித் தம் குஞ்சுகளையும் மறந்து அவர்களின் பின்னே திரிந்துகொண்டிருக்க, அக்குஞ்சுகள். மேதி சோரவிட்ட பாலை உண்டு, தேரையால் தாலாட்டப் பெற்று உறங்கும் என்ற ஒரு பொருள் நயமும் காண்க.

கண்ணுக்குச் சேல் மீன் உவமை: சீவக. 167. அன்னம் தாமரையில் துயிலுதல்: ஆரணிய. 675. எருமை தன் கன்றை நினைத்துப் பால் சுரத்தல்: 57; 'கனைத்திளங் கற்றெருமை கன்றுக்கிரங்கி, நினைத்து முலைவழியே நின்று பால் சோர' (திருப்பாவை. 12); 'மோட்டெருமை வாவிபுக முட்டு வரால் கன்றென்று, வீட்டளவும் பால் சொரியும் வெண்ணெயே! (தனிப் பாடல்). தேரை தாலாட்டுதல்: 'தேரை புகழ்வன போலும்:' கிட்கிந்தா. 22.

(பி - ம்.) 1. ஒண்கண்ணாரிற்; உண்கணாரிற்.
2. வாழ்த்திய; பிள்ளைக்.
3. சேற்றுள்; சேற்றின்; மேதிக்; கன்றுன்னிக்.
4. துயிலும்; தாராட்டும்; பாராட்டும். (1?)

46. குயிலினம் வதுவை செய்யக்
கொம்பிடைக் குனிக்கு மஞ்ஞை
அயில்விழி மகளி ராடு
மரங்கினுக் கழகு செய்யப்
பயில்சிறை யரச வன்னம்
பன்மலர்ப் பள்ளி நின்றும்
துயிலெழத் தும்பி காலைச்
செவ்வழி முரல்வ சோலை.

சோலை - சோலைகளில், குயில் இனம் வதுவை செய்ய - குயில்களில் சேவலும் பெடையும் கூடி மணம் செய்துகொள்ள, (அப்போது), கொம்பு இடை குனிக்கும் மஞ்ஞை-மரக் கிளைகளில் இருந்து ஆடுகின்ற மயில்கள், அயில் விழி மகளிர்-கூரிய வேல்போன்ற கண்களையுடைய நாட்டியப் பெண்கள், ஆடும் அரங்கினுக்கு அழகு செய்ய-நாட்டியம் ஆடும் அரங்கினும் மிக்க அழகு தர, (மற்ருெருபுறத்தில்), பயில் சிறை அரச அன்னம்-அடர்ந்த சிறகுகளையுடைய ஓர் அரச அன்னப் பறவை, பன் மலர்ப்பள்ளி துயில் நின்று எழ-(சிறப்பித்துச்) சொல்லப்படும் தாமரை மலராகிய படுக்கையிலே உறக்கத்தினின்றும் விழித்து எழும்படி, தும்பி-தும்பி எனப்படும் வண்டுகள், காலை செவ்வழி முரல்வ-காலை நேரத்தில் (துயிலெழப்பாடும்) செவ்வழிப் பண்ணைப் பாடுவனவாம்.

திருமணம் நிகழும் இடங்களில், பெண்களின் நாட்டிய அரங்கு நிகழ்தல் போல, குயில்களின் திருமணத்திலே மயில்களின் நாட்டிய அரங்கு நடைபெற்றது. அரசர்களைத் துயில் எழுப்புதற்கு, சூதர், மாகதர் என்போர் பள்ளியெழுச்சி பாடுவர்; அதுபோல, அரச அன்னம் துயில் எழுவதற்கு வண்டுகள் பள்ளியெழுச்சி பாடின.

செவ்வழிப் பண், மாலையில் பாடுதற்குரியது என்பர்; (புறநா. 149-அடிக் குறிப்புப் பார்க்க). வண்டுகள் மதுவுண்ட மயக்கமுடையவை; மரபறிந்து பாடுதல் இயலாதவை; எனவே, 'காலைச் செவ்வழி' என்ருர். தும்பி, நறுமணம் நாடிச் செல்லும் இயல்புடையது.

(பி - ம்.) 1. குயிலின: செய்ய; செய்யும்: கொம்பிடை குதிக்கு.
2. மகளீராடும்.
3, பயிலிறை: பனிமலர்ப்; பைம்மலர்ப்: நின்று.
4. காலச்; காலை; தும்பி யீட்டம்.

(14)

இதன்பின், அடியிற்காணும் பாட்டுஒன்று சில சுவடிகளில் உள்ளது:—

காளையர் சேறு தன்னைக் கலந்துடன் மிதித்து நட்ட
தாள்களுங் கழுநீர் நாறுந் தடக்கையு மதுவே நாறும்
ஆளையுஞ் சீறிப் பீறி யணிமலர்க் கமுகிற் பாய்ந்த
வாளையும் பாளை நாறும் வயல்களு மதுவே நாறும்.

47. பொருந்திய மகளி ரோடு
வதுவையிற் பொருந்து வாரும்
பருந்தொடு நிழல்சென் றன்ன
வியலிசைப் பயன்றுய்ப் பாரும்
மருந்தினு மினிய கேள்வி
செவியுற மாந்து வாரும்
விருந்தினர் முகங்கண் டன்ன
விழாவணி விரும்பு வாரும்,

(அந்நாட்டு மக்கள்), பொருந்திய மகளிரோடு - (குலம், நலம், குணம், கல்வி முதலியவற்ருல்) தமக்கு ஏற்ற பெண்களுடன், வதுவையில் பொருந்துவாரும்-திருமணச் சடங்கோடு கூடுபவர்களும், பருந்தொடு நிழல் சென்ற அன்ன-பருந்து பறக்கும் போது, அதன் நிழலும் அதன் போக்கோடு ஒத்துப் போவது போன்ற, இயல் இசை பயன் துய்ப்பாரும்-பாட்டு அதன் பண் ஆகியவற்றின் பயனுகிய இன்பத்தை அனுபவிப்பவர்களும், மருந்தினும் இனிய கேள்வி - தேவாமிர்தத்தினும் சிறந்த நூற் கேள்விகளை, செவி உற மாந்துவாரும் - காதுகளால் மிகப் பருகுவோரும், விருந்தினர் முகம் கண்டு-விருந்தினரின் இனிய முகத்தைப் பார்த்து, (அவர்களுக்கு), அன்னம் விழா அணி விரும்புவாரும் - அன்னம் அளித்தலர்கிய சிறப்பை விரும்பிச் செய்பவர்களும்,

இதன்பின் வரும் மூன்று பாடல்களும் இதுவும் குளகம் ஆதலால் அதற்கேற்பப் பொருள் முடிபு பெறும். இந்நான்கு பாடல்களும் அந்நாட்டு மக்களின் செயல்களைக் கூறுவன.

வதுவை-சடங்குடன் செய்யும் திருமணம். பொருந்திய - விவாகத்துக்கு உரிய பொருத்தங்கள் எல்லாம் உடைய என்றும், தம் மனத்துக்குப் பொருந்திய என்றும் உரைத்தலும் ஆம். பருந்தொடு... இயலிசை: பருந்து நிழலும்போற் பாட்டு மெழாலும் (சீவக. 730); 'பருந்து பறக்குமிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின்கண் நின்று ஆய்ந்து, பின்னும் அம்முறையே மேன்மேலுயர்கின்ருற் போலப் பாடவேண்டுதலின் அஃது உவமை யாயிற்று'(ஷி ந. உரை); 'பருந்து நிழலுமெனப் பாவு முரையும்' (சிலப். அடியார்க்கு. உரைப்.) 'பாற்றியக்கமு நீழலு மாமெனப் பாட' (கந்த. திருக்கல். 1).

'வீணையினது தந்தியைப்போல் கண்டத் தொனியுங் கூட்டிப் பாடுகின்ற பேரும்' (பழைய உரை)

மருந்தினும் இனிய கேள்வி : 'செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின், ஆன்ருரோ டொப்பர் நிலத்து' (குறள். 413). 'விருந்தினர் முகம் கண்ட அன்ன விழாவணி' எனப் பிரித்து, விருந்தினரின் முகத்தைக் கண்டாற்போல மகிழ்ந்து காணும் விழாச்சிறப்பு எனவுங் கூறுவர்.

விருந்துபசரித்தல் : 68 ; கிட்கிந்தா. 468; சுந்தர. 344; சிலப். 16: 72-3. பார்க்க.

(பி - ம்.) 1. மகளிரோடும்; மகளீரோடும்; மகளீரோடு; மகளிராடும்; மகளிராடு: வதுவையுட்.
2. சென்றென்ன; இயலிசை பயின்றுய்ப்பாரும்.
3. மருந்தென உதவு; உதவும்; சொல்லால்.
4. விருந்தின; கண்டென்ன,

48. கறுப்புறு மனமுங் கண்ணிற்
சிவப்புறு சூட்டுங் காட்டி
உறுப்புறு படையிற் றூக்கி
யுறுபகை யின்றிச் சீறி
வெறுப்பில களிப்பின் வெம்போர்
மதுகைய வீர வாழ்க்கை
மறுப்பட வாவி பேணு
வாரணம் பொருத்து வாரும்,

உறு பகை இன்றி சீறி-முன்பு உள்ள பகை ஒன்றும் இல்லாமலே கோபங்கொண்டு, கறுப்பு உறு மனமும்-(அவ்வாறு) கோபங் கொண்ட மனத்தையும், கண்ணின் சிவப்பு உறு சூட்டும் காட்டி-(கோபத்தால் சிவந்துள்ள) கண்ணினும் மிகச் சிவந்துள்ள உச்சிக் கொண்டையையும் காட்டிக்கொண்டு, உறுப்பு உறு படையின் - காலிலே பொருத்தப்பட்ட (கத்தியாகிய) படையினாலே, தாக்கி - (எதிர்த்த சேவலைத்) தாக்கி, வெறுப்பு இல - (சண்டையிடுவதில் சிறிதும்) வெறுப்பில்லாதனவும், களிப்பின் - செருக்கோடு, வெம் போர் மதுகைய-கொடிய போர் செய்யும் மனவலியுடையனவும், வீர வாழ்க்கை மறு பட-(தம்முடைய) வீரத்தோடுகூடிய வாழ்க்கைக்கு (வீரத்துக்கு) இழுக்கு உண்டானால், ஆவி பேணு-உயிரையும் பொருட் படுத்தாது விடத்தக்க, வாரணம் - கோழிச் சேவல்களை, பொருத்துவாரும் - ஒன்றோடொன்று சண்டையிடத் தூண்டுபவர் களும்;

சேவற் கோழிகளைச் சண்டையிடச் செய்து அதனைக் கண்டு மகிழ்தல் சிலருடைய பொழுதுபோக்காகும் என்பது இப்பாடலிற் கூறப்பட்டது. இதில் அச்சேவல்களின் இயல்பை மிக அழகுபடக் கூறியுள்ளமை காண்க. இது **தன்மை நவிற்சி யணி**. சண்டைக் கோழி களுக்குக் காலில் கத்தியைக் கட்டி விடுதல் வழக்கம். இவ்வாறு கத்தி யில்லாமலே இவை காலாலும் மூக்காலும் தாக்கும் தன்மையுடையன வாதலால், 'உறுப்பு உறு படையின்' என்பதற்கு, உறுப்புக்களாகிய (கால்களாகிய) பொருந்திய ஆயுதத்தால் எனவும் பொருள் கூற லாம். கோழிக்குச் 'சரணாயுதம்' என்ற பெயருமுண்டு. ஒரு தனிப் பாடலில் 'காலாயுதக் கொடியோன்' என முருகனைக் குறித்தலும் காணத்தக்கது. கறுப்பு, சிவப்பு இரண்டும் சினத்தைக் குறிக்கும். 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள' (**தொல்**). வெளிப்படத் தோன்றாத அகவுறுப்பாகிய மனத்துக்குக் கறுப்பையும், வெளிப் படத் தோன்றும் புறவுறுப்பாகிய கண்ணுக்குச் சிவப்பையும் சார வைத்தார். 'கறுத்த மாமுனி'(328). கறுத்த மாசுணம் (**சுந்தர.1041**). கறுப்புறு × சிவப்புறு: **முரண் தொடை.**

வீரவாழ்க்கை மறுப்பட ஆவி பேணு: கருத்து ஒப்புமை: 'மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னர், உயிர் நீப்பர் மானம் வரின்' (குறள். 969). வீரவாழ்க்கை மறுப்பட என்பதற்கு, 'வீரத்துக்கு இழுக்கு உண்டாகும் வகையில்' என்றும் கூறலாம். பகையின்றிச் சீறல்: 'கறுவொடு மொன்றே டொன்று காரண மின்றிச் சீறி' (நைடத. நாடு: 3). கோழிப்போர்: சீவக. 73, 120. புறத்திணைக் குரிய துறைகளுள், 'கோழி வென்றி' என்பதும் ஒன்று; பு-வெ. 348. கோழிச் சேவலையன்றி வேறு சில (குறும்பூழ் சிவல் முதலியவற்றின்) சேவல்களையும் சண்டைக்கு விடுதலுண்டு; சீவக. 73 - உரையும் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. கறுப்புடை; செவப்புறு; சிவப்பொடு.
2. உறுப்புடைப் படையிற்றுகி; படையிற்றுக்கி; கடையிற்றுக்கி: பகையன்றிச்.
3. வெறிப்பில; வெறுப்பின; வெறுப்புடைக்; களிப்பில்; களிக்கும்; மதுகையர்; மதுகையவ்; மதுகையால்; மதுகையின் ; வீரவாக்கை.
4. மறுப்படாவாவி, மறுப்பாடா யாவி; பேணி; பேண: பொருதுவாரும்; பொருந்துவாரும். (10)

49. எருமைநா கீன்ற செங்க
ணேற்றையோ டேற்றை சீற்றத்
துருமிவை யென்னத் தாக்கி
யூழுற நெருக்கி யொன்ருய்
விரியிரு ளிரண்டு கூருய்
வெகுண்டன வனைய நோக்கி
அரியினங் குஞ்சி யார்ப்ப
மஞ்சுற வார்க்கின் ருரும்,

எருமை நாகு ஈன்ற - பெண் எருமை ஈன்ற, செம் கண்-சிவந்த கண்களையுடைய ஏற்றையோடு ஏற்றை - ஒரு கிடாயுடன் மற்றொரு கிடாய், இவை சீற்றத்து உரும் என்ன - இவைகள் கோபங்கொண்ட இடிகள் என்று சொல்லும்படி, தாக்கி - முட்டி, ஊழ் உற நெருக்கி - முறையாக (மாறி மாறி) நெருக்கி, ஒன்ருய் விரி இருள் - ஒரு தொகுதியாய் (எங்கும்) பரவியுள்ள இருட்டானது, இரண்டு கூறு ஆய் வெகுண்டன அனைய-இரண்டு பகுதிகளாகப் பிரிந்து (ஒன்றையொன்று) கோபித்துத் தாக்கினுற்போல இருந்தவற்றை, நோக்கி - பார்த்து, குஞ்சி அரி இனம் ஆர்ப்ப-(தம்) தலைமயிரில் (மொய்த்த) வண்டுகள் ஆரவாரித்து எழும்படியும், மஞ்சு உற - (தங்கள் குரல்) மேக மண்டலத்தை எட்டும் படியும், ஆர்க்கின்ருரும்-(மகிழ்ச்சி மிகுதியால்) ஆரவாரிக்கின்றவர்களும்;

முன்பாட்டில் கோழிச் சண்டை கூறியது போல, கிடாய்ச் சண்டையை மூட்டி அதைக் கண்டு மகிழ்தல் சிலருடைய பொழுது

போக்காகும் என்பது இப்பாட்டிலே கூறப்பட்டது. எருமைக் கிடாய், ஆட்டுக் கிடாய், இவற்றைச் சண்டைக்கு விட்டுக் கண்டு மகிழ்தல் இன்றும் நடைபெறுவதாகும்.

எருமை நாகு-எருமைக் கிடாரி; 'எருமையும் மரையும் பெற்ற மும் நாகே' என்பது **தொல்காப்பியம்**. ஏற்றை-ஐ-சாரியை. 'ஒன்றாய் விரி இருள், இரண்டு கூறாய் வெகுண்டன அனைய' என்பது இல் பொருள் உவமை. குஞ்சி - ஆண்களின் தலைமயிர். 'குஞ்சி அழகும்' (நாலடி. *131*). 'அஞ்சுற' என்று பாடமோதி, 'கேட்போர் அச்சங் கொள்ளும்படி' என்பாரும் உளர். மஞ்சு உற-மேகத்தை ஒப்ப எனவும் வலிமை (மைந்து) உற எனவும் உரைத்தலுமாம்.

இவ்விரண்டு பாடல்களிலும் கூறப்பட்ட பறவைச் சண்டை, கிடாய்ச் சண்டைகளைக் குறித்து, இதற்கென்றே அவற்றை நன்கு வளர்த்துப் பழக்கி வைப்பார் உளர் என்பதை **அயோத்**. *816*-ஆம் பாடலில் காண்க. இவ்விரண்டு பாடல்களிலும் செல்வரும் கவலை யில்லாதவருமான மக்களின் பொழுது போக்குக் கூறப்பட்டது. அடுத்த கவியில் உழவர் உழைத்துப் பொழுது போக்குதலைக் கூறு கின்றார்.

(பி - ம்.) 1. ஏற்றையொடு; எற்றினோடு; ஏற்றையோர்; ஏற்றினோர்; ஏறெடோர்: ஏற்றைச்; ஏற்ற; ஏற்றச்; ஏறு.
2. உருவிலை; ஊடுற: ஊழற; நோக்கி; ஒன்றும்.
3. கூறு; வெகுண்டென வனைய; வெகுண்டென வதனை; வெகுண்டன வதனை; இனைய.
4. ஆர்க்க: மஞ்சிற; மைந்துற; அஞ்சுற. **(17)**

50 முள்ளரை முளரி வெள்ளி
முளைபிற முத்தும் பொன்னும்
தள்ளுற மணிகள் சிந்தச்
சலஞ்சலம் புலம்பச் சாலில்
துள்ளிமீன் றுடிப்ப வாமை
தலைபுடை சுரிப்பத் தூம்பின்
உள்வரா லொளிப்ப மள்ள
ருழுபக டுரப்பு வாரும்,

முள் அரை முளரி-முள் தன்மை பொருந்திய தண்டுகளையுடைய தாமரையின், வெள்ளி முளை இற-வெண்ணிறமான முளைகள் முறிய வும், முத்தும் பொன்னும்-, தள்ளுற-ஒதுக்கப்படவும், மணிகள் சிந்த-இரத்தினங்கள் சிதறவும், சலஞ்சலம் புலம்ப-'சலஞ்சலம்' என்னும் உயர்ந்த சாதிச் சங்குகள் வாய்விட்டுக் கதறவும், சாலில் மீன் துள்ளி துடிப்ப-உழுபடைச் சாலில் (கொழு தாக்குதலால்) மீன்கள் துள்ளித் துடிக்கவும், ஆமை தலை புடை சுரிப்ப - ஆமைகள் (அச்சத்தால்)

தலையையும் பக்கங்களில் நீளும் கால்களையும் (ஓட்டினுள்ளே) சுருக்கி அடக்கிக்கொள்ளவும், வரால் தூம்பின் உள் ஒளிப்ப - வரால் மீன்கள் தூம்புக் குழாய்க்குள் ஒளிந்துகொள்ளவும், மள்ளர்-உழவர்கள், உழு பகடு உரப்புவாரும்-(வயல்களை) உழுகின்ற கடாக்களை அதட்டி ஓட்டுபவர்களும்;

*47-50. (47)* கோசல நாட்டு மக்கள், வதுவையில் பொருந்துவாரும், இயல் இசைப் பயன் துய்ப்பாரும், கேள்வி மாந்துவாரும், விழாவணி விரும்புவாருமான பலவகையினரும், *(48)* வாரணம் பொருத்துவாரும், **(49)** ஏற்றையோடேற்றை வெகுண்டன நோக்கி ஆர்க்கின்றருமான ஒரு சிலரும், உழுபகடு உரப்புவாராகிய மள்ளரும் என, இவ்வாறு, கவலையின்றி நாள் கழிப்போரும் தம் கடமையைச் செய்வோருமாக இருந்தனர் என முடிக்க. இவற்றால் நாட்டு வளம் நன்கு புலப்படுதல் காண்க.

உழவர் பகடுகளை உரப்பி ஓட்டி உழுதலால், தாமரை முளைகள் முறிதல், முத்தும் பொன்னும் தள்ளுறல், மணிகள் சிந்துதல், சலஞ்சலம் புலம்புதல், மீன்கள் துள்ளித் துடித்தல், ஆமைகள் தலை புடை சுரித்தல், வரால்கள் தூம்பில் ஒளித்தல் ஆகிய பலவும் நிகழ்கின்றன. சலஞ்சலம்-ஆயிரம் வலம்புரிச் சங்குகள் தன்னைச் சூழப் பெருமையோடிருக்கும் ஒருவகைச் சங்கு என்பர். மணிகள் 'சிந்தி' எனப் பாடங்கொண்டு, சலஞ்சலம், (முத்துக்களாகிய) மணிகளைச் சிந்திப் புலம்ப எனவும் கூறுவர். புடை-ஆகுபெயர்; உழுபகடு வினைத்தொகை. 'சங்கணங்கிய சலஞ்சலம்' *(ஆரணிய. 16)*. 'வலம்புரி சலஞ்சலம் வளை இயதொத்தனள்' 'வரிவளை சூழும் வலம்புரியினத்துட், சலஞ்சல மேய்வன; *(சீவக 184, 210)*.

முளரி வெள்ளி முளையிற - 'தாமரைக் கிழங்கின் வெள்ளிய வேர்கள் அறுந்துபோக' **(பழைய உரை).**

(பி - ம்.) 1. *முள்ளரி: வெள்ளை: முளையற; முளையின; முளையினில்:*
2. *தள்ளுறு; சிந்த; சிந்திச்; முந்தச்; சாலித்.*
3. *துள்ளுமீன்; துடிக்கவாமை; துடிப்பவாளை; தலையிடை; தலையுடற்; தலையுறை; சுரிக்கத்.*
4. *ஒளிக்க; உரைபகடு; உரப்புவாரால்.* **(18)**

51. எறிதரு மரியின் சும்மை
யெடுத்துவா னிட்ட போர்கள்
குறிகொளும் போத்திற் கொல்வார்
கொன்றநெற் குவைகள் செய்வார்
வறியவர்க் குதவி மிக்க
விருந்துண மனையி னுய்ப்பான்
நெறிகளும் புதையப் பண்டி
நிறைத்துமண் ணெளிய வூர்வார்.

(மள்ளர்), எறிதரும்-அடிக்கப்பட்ட, அரியின் சும்மை எடுத்து-அரிக்கற்றைகளை எடுத்து, வான் இட்ட போர்கள்-வானளாவ இடப்பட்ட போர்களை, (கலைத்து), குறி கொளும் போத்தின்- செலுத்துவோர் குறிப்பின்படி செல்லும் தன்மையுள்ள கடாக்களால், கொல்வார்-மிதிப்பிப்பார்கள்; கொன்ற நெல்- (அவ்வாறு) மிதிப்பித்தலால் கிடைத்த நெல்லை, குவைகள் செய்வார் - (அங்கங்கே) குவியலாகக் குவிப்பார்கள்; (அதன்பின்), வறியவர்க்கு உதவி-(களப்பிச்சைக்காரர் முதலிய) ஏழைகளுக்குக் கொடுத்து, மிக்க-மிகுந்தவற்றை, விருந்து உண-விருந்தினர் உண்ணுமாறு, மனையின் உய்ப்பான் - வீட்டிற் கொண்டுபோய்ச் சேர்க்கும் பொருட்டு, நெறிகளும் புதைய-(செல்லும்)வழிகளும் (நன்கு தெரியாதபடி) மறையும் வண்ணம், பண்டி நிறைத்து-வண்டிகளிலே (நிறைய) ஏற்றி, மண் நெளிய-(பாரம் தாங்காமல்) தரை நெளிந்துகொடுக்கும்படி, ஊர்வார் - (வண்டிகளைச்) செலுத்துவார்கள்.

மள்ளர் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. சும்மை-சுமை; விரித்தல் விகாரம், உண-உண்ண: தொகுத்தல் விகாரம்.

வயல்களிலிருந்து அறுவடை செய்யப்பட்ட நெற் கதிர்க் கட்டுக்களைக் களங்களிலே சேர்த்து, அங்கே அவற்றை முதலில் ஆட்கள் அடித்து நெல்லைப் பிரித்தபின், அடிக்கப்பட்ட அரிகளைப் போராகக் குவிப்பர்; அவற்றில் சிறிது நெல் தங்கி நிற்குமாதலால் அவற்றையும் பிரிக்க அப்போர்களைக் கலைத்துப் பரப்பிக் கடாக்களைக் கொண்டு மிதிப்பிப்பர். (இதனைக் 'கடாவடி' என்பர்). இதனை இங்கே முதலில் கூறினர். இவ்வாறு பெற்ற நெல்லைச் சேர்த்து, அதில் வறியவர்க்குதவுதல் முதலியன போக, மிகுந்த நெல்லை வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பர், களப்பிச்சைக்காரர், கிராமத்தில் உள்ள சில தொழிலாளர் முதலியோர்க்குக் களத்திலேயே நெல் கொடுத்தல் வழக்கம். இவற்றை இங்கே சோழ நாட்டு முறைப்படி கூறியுள்ளார். எறி தருதல்-சூட்டடித்தல்.

'குழுமுநிலைப் போரின் முழுமுதல் தொலைச்சிப், பகடூர் பிழிந்த பின்றைத் துகடப, வையுந்துரும்பு நீக்கிப் பைதறக், குடகாற்றெறிந்த குப்பை வடபால், செம்பொன் மலையிற் சிறப்பத் தோன்றும், தண் பணை தழீஇய தளரா விருக்கை' (**பெரும்பாண். 237-42**); 'ஈடுசால் போர் பழித் தெருமைப் போத்தினல், மாடுறத் தெழித்துவை களைந்து காலுறீஇச், சேடுறக் கூப்பிய செந்நெற் குப்பைகள், கோடுயர் கொழும்பொனின் குன்ற மொத்தவே' (**சீவக. 59**); 'கூனிரும் பினிற் குறைத்தரி சும்மையிற் கொடுபோய், மேனி வந்துயர் வரையெனப் போர்பல வேய்ந்து, நீனிறக் கரும் பகட்டினுற் றெழித்துவை நீத்த. தூநிறத்தநெற் பண்டியிற் பற்பலர் தொகுப்பார்' (**நைடத. நாடு. 10**).

விருந்துண-விருந்தோடுண்ண என்றும் ஆம்; 'தமக்கென்றுலே யேற்றார்' (ஆசாரக்); 'விருந்தில்லாச் சோறு மருந்து' (சோழ நாட்டு வழக்கு).

குறிகொளும் என்பதற்கு, 'சூடு முதலிய அடையாளங்களைக் கொண்ட' என்று கூறுவாரு முளர்.

(பி - ம்.) 1. எடுத்தவானிட்ட; எடுத்தவாரிட்ட; எடுத்துளாரிட்ட; எடுத்தவரிட்ட; எடுத்துவாரிட்ட: போரிற்.
2. குறிகளும்; குறிதரும்; கொள்வார்; கொண்டநெற்; குன்றினெற்; குன்றினேர்; குவையிற்.
3. மிக்கதவரவர்; மனையினுய்ப்பார்; மனையிலுய்ப்பான்; மனையிலுய்ப் பார்.
4. நிறைகளும்; புதைப்பப்; நிரைத்து மண்ணெரிய; நிரைத்துமே நெரிய; நெரித்து மண்ணெளிய. (19)

52. கதிர்படு வயலி னுள்ள
கடிகமழ் பொழிலி னுள்ள
முதிர்பயன் மரத்தி னுள்ள
முதிரைகள் புறவி னுள்ள
பதிபடு கொடியி னுள்ள
படிவளர் குழியி னுள்ள
மதுவள மலரிற் கொள்ளும்
வண்டென மள்ளர் கொள்வார்.

(இன்னும்), மள்ளர் - உழவர்கள், கதிர்படு வயலின் உள்ள- பலவகைத் தானியக் கதிர்கள் நிறைந்த வயல்களில் உள்ளவையும், கடி கமழ் பொழிலின் உள்ள - மணம் வீசுகின்ற சோலைகளில் உள்ள வையும், முதிர் பயன் மரத்தின் உள்ள - முதிர்ந்த பயன் தரும் மரங் களில் உள்ளவையும், முதிரைகள் புறவின் உள்ள-புன்செய்த் தானியங் களாகக் கொல்லைகளில் உள்ளனவும், பதி படு கொடியின் உள்ள- பதியன் இட்டு வளர்க்கப்படும் கொடிகளில் உள்ளனவும், படிவ ளர் குழியின் உள்ள-தரையிலே படர்ந்து பூமிக்கடியில் காய்க்கின்றவை களும் ஆன பலவகைப் பொருள்களையும், (அவ்வவ்விடத்திலிருந்து), வளம் மலரில் மது கொள்ளும் வண்டு என-வளமான பூக்களிலிருந்து தேனை எடுத்துக்கொள்ளும் வண்டுகளைப்போல, கொள்வார்-(நய மாகக்) கொண்டு வருவார்கள்.

பொழிலின் உள்ள : தேன், பாக்கு முதலியன. படிவளர் குழியி னுள்ள-தோண்டி எடுக்கப்படும் கிழங்கு வகைகள்.

வண்டுகள் தேனெடுத்தலை உவமித்தபடியால், அவைகள் மலருக்கு ஊறு நேராதபடி மென்மையாக எடுத்துக்கொள்வதுபோல, உழவர்களும் தாம் கொள்ளும் இடங்களுக்குப் பழுது நேராதபடி இலகுவாக அவற்றைக் கொண்டு வருவார்கள் என அவர்களுடைய

நேர்மை கூறியவாறும். மேலும் அவ்வப்பொருளின் இடமும் காலமும் அறிந்து அவற்றைக் கொள்ளும் திறமையும் குறிக்கப்பட்டதாகும். இச் செய்யுளின் கருத்துக்கு ஒப்பு: திருவிளை: தருமிக்குப். 19.

இவ்விரண்டு பாட்டாலும், நாட்டு மக்களின் வளமான வாழ்க்கைக்குரிய பலவகைப் பொருள்களும் தொகுக்கப்படுதல் கூறப்பட்டது.

(பி - ம்.) 1. கதிர் படும் வயலின்; கதிர்படு வயலின்; கதிர்கடு வயலின்: கடிசெறி: புனத்தினுள்ள; புலனிலுள்ள; புனலினுள்ள.

2. முதிர் பல மரத்தின்; முதிர் பய மரத்தின்; முது பய மரத்தின்; முது பயன் மரத்தின்: முதிரைகள் பிறவினுள்ள; புரவினுள்ள பிறவுமுள்ள; முதுரைகள்: முதுரை கொள்:

சில சுவடிகளில் 'முதிரைகள் புறவினுள்ள முதிர்பல மரத்தினுள்ள; என மாறியும் எழுதப்பட்டுள்ளது.

4. மதுவளர் மலரிற்: மதுமலரதனிற்: மதுவனமலரிற்; மதுவன மதனிற்: கொள்ளு வண்டென. (20)

53. முந்துமுக் கனியி னுறு
முதிரையின் முழுத்த நெய்யில்
செந்தயிர்க் கண்டங் கண்ட
மிடையிடை செறிந்த சோற்றில்
தந்தமி லிருந்து தாமும்
விருந்தொடுந் தமரி னேடும்
அந்தணர் முதலோ ருண்டி
யயில்வுறு மமலைத் தெங்கும்.

(அந்த நாடு), எங்கும் - எல்லா விடங்களிலும், அந்தணர் முதலோர்-அந்தணர் முதலிய எல்லா வருணத்தவரும், தம் தம் இல் இருந்து-தத்தமக்குரிய வீடுகளில் (நன்கு) இருந்துகொண்டு, முந்தும் முக்கனியின்-(பழங்களில்) முதன்மையுடைய பலா, மா, வாழை ஆகிய முப்பழங்களுடனும், நானு முதிரையின்-பல பருப்பு வகைகளுடனும், முழுத்த நெய்யின்-(சோற்றை) முழுகச் செய்யும் மிக்க நெய்யுடனும், செம்தயிர் கண்டம்-சிவந்த கட்டித்தயிர், கண்டம்-கண்ட சருக்கரை ஆகியவை, இடை இடை செறிந்த சோற்றின்-இடையிடையே கலக்கப் பெற்ற சோற்றுடனும், விருந்தொடும் தமரினேடும்-விருந்தினரோடும் சுற்றத்தாரோடும், தாமும் இருந்து-தாங்களும் கூட அமர்ந்து, உண்டி அயில்வுறும் அமலைத்து-உணவு உண்ணும் ஆரவாரத்தை உடையது. 'நாடு' என்ற எழுவாய் வருவித்து, அமலைத்து என்பது கொண்டு முடிக்க.

மள்ளருடைய உழைப்பால் வீடு வந்து சேர்ந்த பலவகை உணவுப் பொருள்களைக் கொண்டு, சிறந்த உணவு வகைகளைச்

சமைத்து, நாள்தோறும் தென்புலத்தார், தெய்வம் முதலிய ஐம்புலத்தாறு ஓம்பி, எல்லோரும் இனிதிருந்தமை இதனுல் கூறப்பட்டது. 'விருந்தோடும் தமரோடும் தாமும் இருந்து அயில்வுறும், என, நேரே காணத்தக்க மூவரைக் குறிக்கவே, நேரே காண முடியாத தென்புலத்தார்க்கும் தெய்வத்துக்கும் உரியவற்றைச் செய்தல், உபலட்சணத்தால் பெறப்படும். எனவே, மக்கள் நல்லற மெனப்படும் இல்லறத்திலே யிருந்து வாழ்வாங்கு வாழ்ந்தனர் என்பது கூறியவாருயிற்று.

நாஞு-பல; வட சொல்; 'நாஞு விதமா' (*163*). முழுத்த - முழுகச் செய்த; பாற்சோறு மூட நெய் பெய்து முழங்கை வழி வாரக், கூடியிருந்து குளிர்ந்தேலோ ரெம்பாவாய்' (திருப்பாவை. *27*). தந்தமிலிருந்து ....அயில்வுறும்: 'தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்ருல், (குறள் *1107*). அயில்வுறும் அமலே: 'ஊஞெலி யரவம்' (புறநா. *173*).

இதுவரை நாட்டின் வளத்துக்கு முக்கிய காரணமான மருதத்தைப் பற்றி நேராகவும், குறிப்பாகவும் கூறிய ஆசிரியர், அடுத்த கவியில் நெய்தலின் சிறப்பைக் கூறுகின்ருர்.

முதிரை-அவரை, துவரை, கடலே, சிறுபயறு. தயிர்க் கண்டம்-கட்டித் தயிர், கண்டம் - கண்ட சருக்கரை. செறிந்த சோறு-சன்னச் சம்பாவரிசிச் சோறு. (பழைய குறிப்புரை).

(பி ம்.) 1. கனியுநாஞு; கனியுமாஞு: முதிரையு; முதுரையின்; முதுரையு முகிழ்த்த: முகித்த; நெய்யின்; நெய்யும்.

2. செந்தயிர் கண்டம்; செந்தயிரொடு தேன்: இடையிடைச்: இடைப் படச்; இடைபடச்; உடைபடச்; செந்தேன் முதலிய செறிந்த.

3. விருந்தொடு தமரிஞேடும்: விருந்தொடுந் தமதுண்டிடன்ன; விருந் தொடு தமதுண் டென்ன; விருந்தொடுந் தமருண் டென்ன; விருந் தொடுமமுதுண் டென்ன; விருந்துட னமிழ்துண் டென்ன; விருந்து நல்லமுதுண் டென்ன.

4. அந்தண ரமுத ருண்டி: அந்தண ரமுத வுண்டி; அந்தண ரமுதருத்தி: அயிலுறு மமலேத்து; அயர்வுறு மமலேத்து; அயில்வுறு மமலே. (21)

54. முறையறிந் தவாவை நீக்கி
முனிவுழி முனிந்து வெஃகும்
இறையறிந் துயிர்க்கு நல்கு
மிசைகெழு வேந்தன் காக்கப்
பொறைதவிர்ந் துயிர்க்குந் தெய்வப்
பூதல மதனிற் பொன்னின்
நிறைபரஞ் சொரிந்து வங்க
நெடுமுது காற்று நெய்தல்.

முறை அறிந்து - மனு நெறியை நன்கு ஆராய்ந்தறிந்து, அவாவை நீக்கி-(தகாத) ஆசைகளே நீக்கி, முனிஉழி முனிந்து-கோபங் கொள்ள வேண்டிய விடத்திலே கொண்டு (குற்றம் கடிந்து), வெஃகும்

இறை அறிந்து-(குடிகள்) விரும்பிக் கொடுக்கத் தக்க வரிப் பொருளை முறை அறிந்து (பெற்று), உயிர்க்கு நல்கும்-தன் ஆட்சியின் கீழ் உள்ள உயிர்களுக்கெல்லாம் அருள் செய்கிற, இசை கெழு வேந்தன்-புகழ் மிக்க அரசன் (தசரதன்),காக்க-பாதுகாப்பதனால், பொறை தவிர்ந்து-பாரம் நீங்கி, உயிர்க்கும்-பெருமூச் செறிந்து இளைப்பாறுகின்ற, தெய்வம் பூதலம் அதனில்-தெய்வத்தன்மை வாய்ந்த அக்கோசல நாட்டில் உள்ள, நெய்தல்-கடற்கரையிலே, வங்கம்-கப்பல்கள், நிறை பரம் சொரிந்து - நிறைந்த (தம்முடைய) பாரத்தை இறக்கி, நெடு முதுகு ஆற்றும்-(அவற்றைச் சுமந்துவந்த தம்முடைய) மிக்க முதுகு நோவை ஆற்றிக்கொள்ளும்.

இப்பாட்டில், கோசல நாட்டு நெய்தற் சிறப்புக் கூறப்பட்டது. 'தரும நெறி தவறாத அரசனுடைய ஆளுகையிலே பூமிதேவி பாரம் குறையப்பெற்றுச் சிறிது இளைப்பாறுகிறாள்' எனப் பொதுப்படவும், சிறப்பாகத் தசரத மன்னனுக்குப் பொருந்தவும் அமைத்திருக்கின்றார். தசரதன் சக்கரவர்த்தியாதலால் பூதல முழுதும் அவனுளுகைக் குட்பட்டதென உபசாரமாகக் கூறினார். பாவம் குறைதலால் பாரம் குறைந்து சற்று இளைப்பாறுகின்ற பூமிதேவிக்கு, வேறு வகையில் பாரம் மிகுவதாக் நயம்படக் கூறியுள்ளமை நோக்கத் தக்கது. கப்பல்கள் அந்நாட்டினின்றும் பொருள்களை ஏற்றிக்கொண்டு வெளியே சென்று விற்று, அவற்றின் விலையாகிய பொன்னோடு மீண்டு அப்பொன்னை இறக்குதலால் தம் சுமை குறையப்பெறுகின்றன. மூட்டையை முதுகிலே சுமக்கும் வழக்கம் பற்றி 'வங்கம் நெடுமுதுகாற்றும்' என்றார். கப்பலில் சுமை குறைய, அச்சுமை பூமியிலே ஏறிற்று. முதுகு ஆற்றுதல்: 'நெடுநிலமகள் முதுகாற்ற' (746). 'மண் முது காற்றவும்' (அயோத். 1109).

'இறை அறிந்து உயிர்க்கு நல்கும்-'ஓர் ஆன்மாவுக்குப் பிராண ஆனி வருமிடத்து விரைந்துபோய் அந்தவுபத்திரவத்தை நீக்கி ரட்சிக்கும்' (பழைய உரை). இவ்வுரையின்படி, இறை என்பதற்கு 'இறந்து படுதல்' என்பது பொருள்: 'பிரிந்திறை சூழாதி யைய' (கலித். 18-ந. உரை காண்க).

(பி - ம்.) 1. அவாவினீங்கி; அவாவு நீங்கி: அறிந்தயாவை நீக்கி; முனிவிழி; வேட்கும்; வைகும்.

2. இறையழிந்து; நிறையறிந்து; நிறைவறிந்து; நல்குமிசையெழு; நல்கு மிருநில; நல்கு நிலமிசை; காக்கும்; என்னப்.

3. பொறையறிந்து; பொறை இரந்து; பூதலந் தன்னிற்; பொன்னி;

4. சொரிந்த; ஆற்றுமன்றே. (22)

[வேறு]

55. பருவ மங்கையர் பங்கய வாண்முகத்
துருவ வுண்கணே யொண்பெடை யாமெனக்
கருதி யன்பொடு காமுற்று வைகலும்
மருத வேலியின் வைகின வண்டரோ.

இது முதல், நானில வளங்களுங் கலந்து மீண்டும் கூறப்படுகின்றன.

மருதம் வேலியின்-மருதநில இடங்களிலே, வண்டு-ஆண்வண்டுகள், பருவ மங்கையர்-மங்கைப் பருவமடைந்த பெண்களின், பங்கயம் வாள் முகத்து - தாமரை போன்ற ஒளி பொருந்திய முகத்திலே (உள்ள), உருவம் உண் கண்ணே - அழகிய மையுண்ட கண்களே, ஒண் பெடை ஆம் என கருதி - கவர்ச்சியுடைய பெண் வண்டுகள் என்று நினைத்து, அன்பொடு காமுற்று - அன்போடு (அவற்றினிடம்) ஆசை கொண்டு, வைகலும் வைகின-எப்போதும் அங்கேயே தங்கியிருந்தன. அரோ - அசை.

மங்கையரின் கண்களேத் தம் பெடை இனமெனக் கருதின என்றதனுல், 'வண்டு' என்பதற்கு 'ஆண் வண்டுகள்' எனப் பொருள் கொள்ளப்படடது. கண்களேத் தம் இனமாகக் கருதின' என்பது மயக்கவணி.

பங்கயம்-பங்கஜ: வட சொல்திரிபு. கணே: கண்ணே என்பதன் தொகுத்தல். காமுற்று: காமம் உறு என்ற தொடர்மொழி 'காமுறு' என மருவ, அதனடியாக வந்த வினையெச்சம்.

வண்டுகள், மங்கையர் கண்களேத் தம் இனமெனக் கருதுதல்: ஒப்பு: 'வேட்கையால், வண்டு வழிபடரும் வாட்கண்ணுய்' (பழ).

(பி - ம்.) 1. வான் முகத்; 2. ஒண்கணே; வெண்கணே; வேற்கணே.
3. காமுற; காமுகர்; வைகிய. 4. வைகில; வண்டெலாம். (23)

56. வேளே வென்ற விழிச்சியர் வெம்முலே
ஆளே நின்று முனிந்திடு மங்கொர்பால்
பாளே தந்த மதுப்பரு கிப்பரு
வாளே நின்று மதர்க்கு மருங்கெலாம்.

அங்கு ஓர் பால்-அம் மருதநிலத்தின் ஒரு பக்கத்திலே, வேளே வென்ற விழிச்சியர்-மன்மதனேயும் வெற்றிகொண்ட கண்களேயுடைய பெண்களின், வெம் முலே - (காண்போர்க்கு) விருப்பத்தை யுண்டாக்கும் முலேகள், நின்று —(தாம் இருந்த இடம்விட்டுப் பெயராமலே) நிமிர்ந்து நின்று, ஆளே முனிந்திடும் - (வேலே செய்யும்) ஆட்களேக் கோபித்துத் தம் வசப் படுத்தும்; மருங்கு எல்லாம் - பல பக்கங்களிலும், பரு வாளே - பருத்த வாளே மீன்கள், பாளே தந்த மது பருகி -

(சீவிவிடப்பட்ட) தென்னம் பாளையினின்றும் வடிந்த கள்ளைக் குடித்துவிட்டு, நின்று மதர்க்கும் - நிமிர்ந்து செருக்கித் திரியும்.

ஆள், வாளை: சாதி யொருமை; முனிந்திடும்-முனியும்; இடு - துணைப் பகுதி.

வேளை வென்ற விழிச்சியர்: மன்மதன் தன்னுடைய பாணங்களாலே ஆடவரையும் மகளிரையும் காமவேட்கையில் தூண்டுவான்; அவனுலும் அவ்வாறு செய்ய இயலாத சில ஆடவரை, மகளிர் தம் விழிகளாகிய பாணங்களாலே வசப்படுத்துவதனுல் 'வேளை வென்ற விழிச்சியர்' என்ருர். இங்கே மகளிர் - உழத்தியரையும், ஆள்-உழவரையும் குறிக்கும். பாளை தந்த மது: 41-விசேடக் குறிப்புப் பார்க்க.

(யி - ம்.) 1. உழத்தியர்; முகத்தியர்; விழுத்தியர்.

2. வென்று; ஆங்கொர்பால். (24)

57. ஈர நீர்படிந் திந்நிலத் தேசில
கார்க ளென்ன வருங்கரு மேதிகள்
ஊரி னின்றகன் றுள்ளிட வுண்முலை
தாரை கொள்ளத் தழைப்பன சாலியே.

ஈரம் நீர் படிந்து - குளிர்ச்சியான நீரிலே முழுகிக் கிடந்து, (பின்பு கரையேறி), இந்நிலத்தே சில கார்கள் என்ன வரும்-(வானத்திலன்றி) இப்பூமியில் சஞ்சரிக்கும் சில மேகங்கள் என்னும்படி வருகிற, கரு மேதிகள்-கரிய எருமைகள், ஊரில் நின்ற கன்று உள்ளிட-ஊரிலேயே (வீட்டில்) தங்கிவிட்ட கன்றுகளை நினைத்தலால், உண் முலை தாரை கொள்ள - அக்கன்றுகள் பாலுண்ணுதற்குரிய முலைக் காம்புகள் சுரந்து பாலைப்பொழிய, (அப்பால் நீர்போல ஓடிப் பாய்வதனுல்), சாலி தழைப்பன - நெற்பயிர்கள் தழைக்கும். ஏ-ஈற்றசை.

நீரிலே நெடுநேரம் மூழ்கிக் கிடத்தல் எருமைகளின் இயல்பு. ஊருக்கு வெளியே மேய்ச்சலிடங்களில் உள்ள நீர்நிலைகளில் படிந்து கிடப்பன எருமைகள். எருமைகளுக்கு மேகங்களை நிறத்தினுல் உவமித்து, மேகம் மழைத் தாரை பொழிவதுபோல எருமை பாலைத் தாரையாகப் பொழிதலும், மழையால் நெற்பயிர் தழைப்பதுபோல எருமைகளின் பாலால் பயிர்கள் தழைத்தலும் ஆகிய செயல்களும் பொருந்தக் கூறியுள்ள நயம் அறிதற்பாலது. 'இந்நிலத்தே வரும் சில காரென' என்றது இல்பொருளுவமை. உள்ளிட-உள்ள; இடு - துணை வினைப்பகுதி.

எருமைகள் தம் கன்றை நினைத்துப் பால் சொரிதல்: 45-விசேடக் குறிப்புக் காண்க. எருமைகளுக்கு மேகம் உவமை : ஒப்பு. 'முந்நீர் படிந்தணை மேகமு, நலங்கொள் மேதி நன்னுகும் தெரிக்கொணு' (பெரிய. வாயிலார். 3)

(பி - ம்.) I. ஈர நீர்ப்படிந்து; இந்நிலத்தே சில; இந்நிலத்தே செலக்; வன்னிலத் தேசில.
2. வருகரு மேதிகள்.
3. கன்றுன்னிட; உண்முலைத்; ஒண்முலை; ஒண்முலைத்; மென்முலை; மென் முலைத். (25)

58. முட்டி லட்டின் முழங்குற வாக்கிய
நெட்டு லைக்கழு நீர்நெடு நீத்தந்தான்
பட்ட மென்கமு கோங்கு படப்பைபோய்
நட்ட செந்நெலி னாறு வளர்க்குமே.

முட்டு இல் அட்டில் - (வேண்டும் பொருள்களுக்குத் தட்டு ஏதும் இல்லாத சமையலிடங்களில், முழங்குற-முழங்கும்படி, ஆக்கிய-(சோறு) சமைத்த, நெடு உலை கழுநீர் நெடு நீத்தம் - பெரிய உலைகளுக்கு உரிய அரிசி கழுவிய கழுநீரின் பெரு வெள்ளம், பட்டம் மெல் கமுகு ஓங்கு படப்பை போய்-பருவத்திலே வளர்க்கப்பட்ட மெல்லிய கமுக மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள தோட்டங்களின் வழியே போய், நட்ட-(பக்கத்தே வயல்களில்) நடப்பட்ட, செந்நெலின் நாறு-செந்நெற்பயிரின் நாற்றுக்களை, வளர்க்கும். ஏ-அசை.

பட்டம்: நாற்றங்கால் எனவும், நீர்நிலை எனவும் கூறுவர். இப்பொருளுக்கு, கழுநீர், பட்டத்திலும் படப்பையிலும் போய் எனக் கூறுக. பட்டம்-நீரோடை எனவும் ஆம், இதற்குக் கழுநீரானது நீரோடையாக ஓடி என்க. நீத்தந்தான்: தான்-அசை.

முட்டு இல் அட்டில் - உண்ண வருவோருக்கு (எந்நேரமும்) உணவுத் தட்டுப்பாடு இல்லாத அறச்சாலைகளின் சமையற் கட்டு ; திருவிதாங்கூரில் இருந்த 'ஊட்டுப்புரை' போல்வன. முழங்குற வாக்கிய - (அரிசி களைந்து) ஒலியுண்டாகும்படி ஊற்றிய என்றும் ஆம். உலை நெடிது எனவே, அதற்கேற்பக் கழுநீர் நீத்தமும் நெடிது ஆயிற்று. நாறு-நாற்று. கழுநீர் பயிரை வளர்த்தல்; ஒப்பு. 'புரந்தர தாரு புதுவைச் சடையன், இருந்த வியலூர் தெற்கு மேற்குப்-பரந்த பொன்னி, யாற்றுநீ ரால்விளையு மப்பாற் கிழக்கரிசி, மாற்றுநீரால் விளையுமாம்' (பெருந்தொகை. 1131.)

(பி - ம்.) 1. முழக் குறவாகிய: வாங்கிய.
2. நெட்டுலைக் கழி; நெட்டிலைக்களை; நெட்டிலைக் கழு: நீர்நிறை; நீரொடு: நீத்தம் போய்ப்; நீத்தம் போற்.
3; மேனகு; ஓங்கும். 4. நாற்று. (26)

59. சூட்டு டைத்தலைத் தூநிற வாரணம்
தாட்டு ணைக்குடை யத்தகை சான்மணி
மேட்டி மைப்பன மின்மினி யாமெனக்
கூட்டி லுய்க்குங் குருவிக் குழாமரோ.

சூட்டு உடை தலை தூ நிறம் வாரணம் - உச்சிக் கொண்டை பொருந்திய தலையை உடைய, தூய வெண்ணிறமான சேவற் கோழிகள், தாள் துணை குடை அ தகை சால் மணி—இரண்டு கால்களாலும் (குப்பையைக்) கிளறித் தள்ளிய அந்தச் சிறப்பு மிக்க இரத்தினங்கள், மேடு இமைப்பன - குப்பை மேட்டிலே கிடந்து விட்டு விட்டு ஒளிவீசியவற்றை, மின்மினி ஆம் என - மின்மினிப் பூச்சி யென்று கருதி, குருவி குழாம் - குருவிக் கூட்டங்கள், கூட்டில் உய்க்கும்-தங்கள் கூட்டிலே கொண்டுபோய்ச் சேர்க்கும். அரோ-அசை.

வாரணம் என்பது கோழிக்குப் பொதுவான பெயராயினும், 'சூட்டுடைய' என்ற அடைமொழியால் இங்கே சேவல் எனக் கூறப் பட்டது. குப்பைகளைக் காலால் சீத்தல் கோழியின் இயல்பு. குப்பை மேட்டில் மணிகள் கிடந்து ஒளி விடுதல் செல்வ மிகுதியைக் காட்டும். வீறுகோளணி, மின்மினிப் பூச்சியை வெளிச்சத்துக்காக வும் குஞ்சுகளின் உணவாகவும் கூட்டிற்குள் கொண்டுவந்து வைத் தல் தூக்கணங்குருவியின் இயல்பு.

கோழியின் இயல்பு: கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப் பெயினுங், குப்பை கிளைப்போவாக் கோழிபோல்' (நாலடி. *341*); 'குப்பை கிளைப்பறுக் கோழி' (பெருங் *3. 14; 112*). குருவிகள் மின் மினியைக் கூட்டில் வைத்தல்: 'எரியுமின் மினிமணி விளக்கி னின்று ணைக், குரீஇயினம் பெடையொடுந் துயில்வ கூட்டினுள்' (கிட்கிந்தா. *518*).

பி - ம்.) 1. தலைச் செந்நிற; துணைத் தூநிற; துணைத் தூய்நிற; துணித்தூநிற; வாரணத்.
2. தாட்டுடைக்; தாட்டனிற்; குடையுந்தகை; குழையுந்ததை; கடையுந்தகை; சார்மணி.
3. ஆமெனுக்; 4. கூட்டின், கூட்டி. வைக்கும், குரீஇக், குரீஇயின்; குருகுக்குழாமெலாம்.
(27)

இதன்பின், கீழ்க்காணும் பாட்டுக்கள் ஒரு சுவடியில் காணப்படுகின்றன:—

(1) மையரி நெடுங்கண் மாதர் வண்புன லாட மைந்தர்
துய்வழி யணியுஞ் சாந்துஞ் சுண்ணமு மொழுகி யோடிச்
செய்களி னடுவே நின்று தொழில்செயுங் கடைசிமார்கள்
கைகளுஞ் சாந்த நாறுங் கால்களு மதுவே நாறும்.

(2) காளையர் சேறு தன்னைக் கலந்துடன் மிதித்து நட்ட
தாள்களுங் கழுநீர் நாறுந் தடக்கையு மதுவே நாறும்
ஆளையுஞ் சீறிப் பீறி யணிவளை கமுகிற் பாய்ந்த
வாளையும் பாளை நாறும் வயல்களு மதுவே நாறும்.

(3) விளையுஞ் செறுவில் வளையுகுத்த வெண்முத் துறைப்பக் கருஞ்சேற்றில்
உளையு மலரு மரவிந்த முழைக்கு மலரு மரவிந்தம்
வளையுங் கலையு மிடையணங்க வணங்கு குழலுந் தான்பிணங்கக்
களையுங் களையுங் கருநீலங் கடையர் கண்ணுங் கருநீலம்,

60. தோயும் வெண்டயிர் மத்தொலி துள்ளல்போய்
மாய வெள்வளை வாய்விட் டரற்றவும்
தேயு நுண்ணிடை சென்று வணங்கவும்
ஆயர் மங்கைய ரங்கை வருந்துவார்.

தோயும் வெண்தயிர் - (பாறைபோலத்) தோய்ந்த வெண்மையான தயிரைக் கடையும், மத்து ஒலி துள்ளல் போய் மாய - மத்தினுலுண்டாகும் ஓசை விட்டுவிட்டு ஒலிப்பது (தன் ஓசைக்குள்) அடங்கிப் போகும்படி, வெள் வளை-(பெண்கள் கையில் அணிந்துள்ள) வெண்மையான சங்கு வளைகள், வாய்விட்டு அரற்றவும் - வாய் விட்டுக் கதறவும், தேயும் நுண் இடை (நாளுக்கு நாள்) தேய்ந்து போவது போன்ற நுண்ணிய இடை, சென்று வணங்கவும் - மிகுதியாகத் துவளவும், ஆயர் மங்கையர்-(அந்நாட்டு) இடைப் பெண்கள், அம் கை வருந்துவார் - தம் அழகிய கைகளால் (மிக) வருந்தித் தயிர் கடைவார்கள்.

இடைப் பெண்கள் தயிர் கடையும்போது உண்டாகும் தயிரின் ஓசையினும் அவர்கள் கையில் அணிந்த வளைகளின் ஓசை மிகும் என்றதனுல், அவர்கள் அணிந்த வளையல்களின் மிகுதியும் கடையும் வேகமும் பெறப்படும்; வளைகள் வாய்விட்டு அரற்றுதல், அப் பெண்களின் மென்மைக்கு இது ஒவ்வாது என அவர்களிடம் இரக்கங் கொண்டு புலம்புதல் போலும் என்ற நயம் காண்க. இயற்கையாக வளைகள் ஒலித்தலை, வருத்த மிகுதிக்கு இரங்கி வாய் விட்டு அரற்றுவதாகக் கூறியது, **தற்குறிப் பேற்றம்**. தேயும் நுண் இடை. இயற்கையாகவே மெல்லியதாகிய இடை, இவ்வருத்த மிகுதியால் மேலும் தேய்ந்து போமென்றவாறு. ஒப்பு 'முல்லையங் கோதை நல்லார் முகமதி வெயர்வு தோன்ற, வல்லிநுண் மருங்கு லேவ வால்வளை வாய்விட் டார்ப்ப, மெல் விரற் காந்தள் சேப்ப வெண்டயிர் கடையு மோதை, கொல்புலி முழக்க மென்ன வயின்றெறுங் குளிறு மாதோ' (நைடத. நாடு. 15.)

(பி - ம்.) 1: மத்தொலித் துள்ளல்போய்; மத்தொலி துள்ளவும்; மத்தொலி துள்ளலை; மத்தொலித் துன்னவும்;
2. ஆய; ஒள்வளை; அழைப்பவும்.
3. நுண்ணிடைச்; வருந்தவும்.
4. ஆய மங்கையர்; வருத்துவார். (28)

61. குற்ற பாகு கொழிப்பன கோணெறி
கற்றி லாத கருங்க ணுளைச்சியர்
முற்றி லார முகந்துத முன்றிலில்
சிற்றில் கோலிச் சிதறிய முத்தமே.

கோள் நெறி-குற்றமுள்ள வழியை (காமக் குறிப்போடு பார்த்தலை), கற்றிலாத-அறியாத, கரு கண்-கரிய கண்களையுடைய, நுளைச்சியர்-பரதவப் பெண்கள் (சிறுமியர்), முற்றில் ஆர முகந்து - (தம்முடைய) சிறு சுளகு நிறைய அள்ளி, தம் முன்றிலில்-தம் குடிலின் முன்புறத்திலே, சிற்றில் கோலி - சிறு வீடு கட்டி (விளையாடி), சிதறிய முத்தமே-சிந்தின முத்துக்களே, குற்ற பாகு கொழிப்பன - (மருத நிலத்தவர்) குற்றிய பாக்கினின்றும் கொழித்தெடுப்பனவாம்.

கோள் நெறி கற்றிலாத கண் என்றும் சிற்றில் கோலுதல் என்றும் விசேடித்ததனால், நுளைச்சியர் பேதைப் பருவத்தினர் எனக் கொள்ளல் வேண்டும்.

மருத நிலத்துப் பொருளாகிய பாக்கைக் குற்றித் துரிசுபோக்குவோர், அதனுடன் கலந்து கிடக்கும் (நெய்தல் நிலத்துப் பொருளாகிய) விலையுயர்ந்த முத்துக்களையும் பொருட்படுத்தாமல் கொழித்துத் தள்ளிவிடுகின்றனர் என்றவாறு. எனவே, இதனால், மருதமும் நெய்தலும் மயங்கிய திணை மயக்கமும், அந்நிலங்கள் ஒன்றுக்கொன்று மிக அணிமையில் உள்ள தன்மையும், முத்தைப் பொருட்படுத்தாது கொழித்துநீக்கிவிடுதலின் அங்குள்ள செல்வச் சிறப்பும் கூறியவாறும். பாகு கொழிப்பவர் கோள் எனப் பாடங்கொண்டு பாக்கைக் கொழித்தெடுப்பவர் (அநாயாசமாக) அதனோடு கைக்கொள்வன முத்தமே என்பாரும் உளர்.

பாகு-பாக்கு; அதனைக் குற்றுதல் தோல் பிரிவதற்காக. 'குற்ற பாகு-அரி பிளவு; கோள் நெறி கற்றிலாத கருங்கணுளைச்சியர்-விகாரப் படாத பார்வையையுடைய பரதவச் சிறு பெண்கள் (பழைய உரை )

முற்றில்-சிறு சுளகு: சீவக. 1099-ந. உரை.

(பி - ம்.) 1. குற்றப் பாகு; குற்ற பாத; குற்றமாகக்; குற்றமாகும்; கொழிப்பவர்; கொழிப்பனர்; கொழிப்பது; கொழிப்பெனக்; கோ நெறி; கொண்ணெறி.
2. கற்றில்லாத; கற்றிலாரக்; கருங்கணுழத்தியர்.
3. தம் முன்றிலிற்; தன் முன்றினில்; தம் முற்றிலிற்.
4. கோலச்; சிதறின; சிதைப்பன.

(29)

62. துருவை மென்பிணை யீன்ற துளக்கிலா
வரிம ருப்பிணை வன்றலை யேற்றைவான்
உருமி டித்தெனத் தாக்குறு மொல்லொலி
வெருவி மால்வரைச் சூன்மழை மின்னுமே.

மென் துருவை பிணை ஈன்ற-மென்மைத் தன்மையுடைய பெண் செம்மறியாடுகள் ஈன்ற, துளக்கு இலர்-அச்சம் இல்லாத, வரி மருப்பு இணை-வரைகளைக்கொண்ட இரண்டு கொம்புகளையுடைய, வல்தலை-வலிய தலையை உடைய, ஏற்றை-கிடாய்கள், வான் உரும் இடித்தது என-மேகத்திலுண்டாகும் இடி இடித்தாற்போல, தாக்கு உறும் ஒல் ஒலி-(ஒன்றேடொன்று) தாக்குவதனல் உண்டாகும் பேரொலிக்கு' வெருவி-அஞ்சி, மால் வரை சூல் மழை - பெரிய மலையிலே தங்கிய நீருண்ட மேகங்கள், மின்னும்—.

துருவை-செம்மறியாடு: பிணை-பெண். ஆடு, மான் இவற்றின் பெண்பால் பிணை எனப்படும். ஏற்றை; ஏறு என்பது ஐகாரச்சாரியை பெற்றது. இடித்தென-தொகுத்தல் விகாரம்.

இணை ஏற்றை எனக்கூட்டி, ஒன்றேடொன்று ஒத்த கிடாய்கள் எனப் பொருள் கூறலும் ஒன்று. தம்மிடம் உண்டாகும் இடிமுழக்கம் போன்ற ஓசை வேறிடத்திலிருந்து கேட்டதனல் மேகங்கள் அச்சங் கொண்டு வாய் திறக்க அதனல் மின்னல் உண்டாயிற்று. 'கருங் கொண்மூ வாய் திறந்த மின்னுப் போல்' (நாலடி. 8).

முல்லைநிலத்திலுள்ள ஆட்டுக் கிடாய்ச் சண்டையிலுண்டான ஒலியை, குறிஞ்சியில் (மலைமேல்) தங்கிய மேகங்கள் கேட்டு வெருவின என, இவ்விரு திணைகளுக்கும் மயக்கங் கூறியவாறு.

துருவை மென்பிணை ஈன்ற ஏற்றை: 'தலை யீற்று ஆடு ஈன்ற கிடாய்' (பழைய உரை). ஆட்டுக் கிடாய் தாக்குதல்: ஊக்கமுடையா னொடுக்கம் பொருதகர். தாக்கற்குப் பேருந் தகைத்து' (குறள். 486). 'எறி பகட்டின மாடுகள்' (அயோத். 816).

(பி - ம்.) 2. வரி மருப்பின; வரி மருப்புயல்; வரு மருப்பின; வரி மருப்பி னகன் றலை; ஏறுவான்; ஏற்றுவான்.
3. தாக்குறு மெல்லொலி; தாக்குறு மோதையின்.
4. மாமலைச் சூழ்மழை; சூன் முகில்; மின்னுமால்; துன்னுமால்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை. (30)

63. திணைச்சி லம்புவ தீஞ்சொ லிளங்கிளி
நணைச்சி லம்புவ நாகிள வண்டுபூம்
புணைச்சி லம்புவ புள்ளினம் வள்ளியோர்
மணைச்சி லம்புவ மங்கல வள்ளையே.

திணை சிலம்புவ - திணைப்புனங்களிலே ஒலிப்பன, தீம் சொல் இளம் கிளி—இனிய சொற்களைப் பேசும் இளங்கிளிகள்; நணை சிலம்புவ நாகு இள வண்டு - பூவரும்புகளில் ஒலிப்பன மிக இளமையான வண்டுகள்; பூ புணை சிலம்புவ புள் இனம்-பூக்களையுடைய நீர்நிலைகளில் ஒலிப்பன பறவையினங்கள்; வள்ளியோர் மணை சிலம்புவ -

நல்ல வண்மையுடைய செல்வர் மனைகளிலே ஒலிப்பன, மங்கலம் வள்ளை - மங்களகரமான வள்ளைப் பாட்டுக்கள். ஏ- அசை.

தினை - ஆகுபெயர். நாகு இள - மீமிசைச் சொல்; மிகவும் இளமையான, வண்டு. சாதி யொருமை. புனை-புனல்; நீர். அது ஆகு பெயராய் நீர்நிலையைக் குறித்தது. புனற் சிலம்புவ என்றும் பாடம்.

புனை என்பது இப்பொருளதாதலை, 'அமுதளாவிய புனைவர உயிர்வரு முலவை' (ஆரணிய. *121*) என்னு மிடத்தும், 'புனைகொல் கரையி னினைவனள் விம்மி' (பெருங். *4. 7:75*) என்பதிலும் காண்க. 'வள்ளை' என்பது மகளிர் நெல் முதலிய தானியங்களைக் குற்றும் போது மகிழ்ச்சியோடு, தலைவனைப் புகழ்ந்து பாடும் ஒருவகைப் பாட்டு. இதனை 'உலக்கைப் பாட்டு' என்பர்; 'மாட நீத்தன மங்கல வள்ளையே' (அயோத். *827*); 'தினை குறு மகளி ரிசைபடு வள்ளையும்' (மலைபடு *342.*); 'பாவடியுரல பகுவாய் வள்ளை' (குறுந். *89.*); 'வெதிர் நெற் குறுவா நாம், வள்ளையகவுவம் வா' (கலி. *42*). (சூளா. *1660*) பெருங். *1. 40: 85; 2. 14: 51-2;* திருவள்ளுவ மாலை 5- காண்க. வள்ளியோர் மனைகளில் விருந்துபசரித்தல் மிகுதியாக நடைபெறு மாதலால், அதற்கேற்பச் செலவாகும் அரிசியின் பொருட்டு நெற் குற்றுதல் எப்போதும் நிகழும். 'மங்கல வள்ளை-நித்திய மங்கலமும் சோபனப் பாட்டும்' (பழைய உரை).

(பி - ம்.) 1. சிலம்புறு; செஞ்சொல்; உளங்கிளி.
2. சிலம்புறு; வண்டுகள். 3. புனற் சிலம்புறு. (31)
4. சிலம்புறு.

64. கன்று டைப்பிடி நீக்கிக் களிற்றினம்
வன்றொ டர்ப்படுக் கும்வன வாரிசூழ்
குன்று டைக்குல மள்ளர் குழூஉக்குரல்
இன்று ணைக்களி யன்ன மிரிக்குமே.

கன்று உடை பிடி நீக்கி-கன்றுகளோடு கூடிய பெண் யானைகளி னின்றும் பிரித்து, களிறு இனம்-ஆண் யானைகளை, வல் தொடர் படுக்கும் வனம்-வலிய சங்கிலிப் பிணிப்புக்குட்படுத்தும் காடுகளில் உள்ள, வாரி சூழ்-யானைப் படுகுழிகள் சூழ்ந்த, குன்று உடை-மலைகளைத் தாம் வாழும் இடமாக உடைய, குலம் மள்ளர் குழு குரல்-வேடர் குல வீரர் கூட்டத்தின் ஆரவாரம், இன் துணை களி அன்னம்-(அயலில் உள்ள மருத நிலத்து நீர் நிலைகளில்) இனிய பெடையோடு கூடிக் களித்திருக்கும் (ஆண்) அன்னங்களை, இரிக்கும்-பிரிந்து ஓடச் செய்யும். ஏ-அசை.

இரிக்கும்-இரியும் என்பதன் பிறவினை. மள்ளர் குழூஉக் குரல் அன்னங்களை இரிக்கும் எனக் கூட்டி முடிபு காண்க.

அணிவகுத்துச் செல்லும் யானைக் கூடத்தில், கன்றுடன் கூடிய பெண் யானைகளைப் பிரித்துவிட்டு, ஆண் யானைகளைப் படுகுழியில் அகப்படுத்துவர். அவ்வாறு அகப்படுத்துங்கால் பேராரவாரம் செய்வர். அவ்வாரவாரத்தால் அண்மையில் மருத நிலத்து நீர்நிலைகளில் இணை இணையாகத் தங்கியுள்ள அன்னங்கள் இணைபிரிந்து அஞ்சியோடுகின்றன என்றவாறு. யானைகளை இனம் பிரித்து அகப்படுத்துவோர் குரல், அன்னங்களையும் இனம் பிரியச் செய்கின்றன என ஒரு நயம் தோன்றுதல் காணத்தக்கது.

இச்செய்யுள், குறிஞ்சியும் மருதமும் கலந்த திணை மயக்கம்.

வாரி-யானை படுகின்ற இடம்: (**மலைபடு. 572-ந. உரை**). கன்றுடைப் பிடி நீக்கிக் களிற்றினம், வன்றொடர்ப் படுக்கும்: ஒப்பு. 'கறையடி மடப்பிடி கானத் தலறக், களிற்றுக்கன் றொழித்த வுவகையர்' (**அகநா.** *83*). 'வனவாரி-வனப் பரப்பு' (**பழைய உரை**).

(பி - ம்.) 1. கன்றொடைப் பிடி; நீங்கக்.
2. தொடர் படுக்கும்; வளவாரி; மணிவாவி.
3. இன்றிடைக் குல; குன்றிடைக் குழு; குன்றுடைக் குரன்; குழுக் குரல்; குழுக் குரல்.
4. இன்றுயிற் களி; இன்றொடர்க் களி; இன்றொடைக் களி; இரிக்குமால்; இரங்குமே; இருக்குமே; இரைக்குமே. (32)

**65. வள்ளி கொள்பவர் கொள்வன மாமணி**
**துள்ளி கொள்வன தூங்கிய மாங்கனி**
**புள்ளி கொள்வன பொன்விரி புன்னைகள்**
**பள்ளி கொள்வன பங்கயத் தன்னமே.**

வள்ளி கொள்பவர் - வள்ளிக்கிழங்குகளைத் தோண்டி யெடுப்பவர்கள், கொள்வன-அதனோடு கைக்கொள்வன, மாமணி-சிறந்த இரத்தினங்கள்; துள்ளி கொள்வன-ஆமைகள் கவர்ந்துகொள்வன, தூங்கிய மாங்கனி - தாழத் தொங்குகின்ற மாம்பழங்கள்; புள்ளி கொள்வன - சுழி போன்ற வட்ட வடிவமுள்ளனவாய், பொன் விரி-பொன்னிறமான மகரந்தத்துடன் மலர்கின்ற (பூக்களையுடைய), புன்னைகள் - புன்னை மரங்களில், பள்ளி கொள்வன-படுத்து உறங்குவன, பங்கயத்து அன்னம்-தாமரையில் தங்கும் இயல்புள்ள அன்னங்கள். ஏ-அசை.

'புன்னை மரங்களானவை, வெள்ளித் தகட்டிலே பொன்னையும் மாணிக்கத்தையும் பதித்தது போலப் புஷ்பங்களை நிறையப் புஷ்பிக்கும்; தாமரைப் பூவை மெத்தையாக்கிக்கொண்டு அன்னங்கள் நித்திரை பண்ணும்' (**பழைய உரை**).

இப்பாடல், குறிஞ்சி, மருதம், நெய்தல் ஆகிய மூன்று திணைகளின் மயக்கம் கூறுகின்றது.

வள்ளி முதலிய கிழங்கு அகழ்தல் குறிஞ்சிக்கு உரியது. மணி களும் மலேச்சாரல்களில் அகப்படுவன. கிழங்கு எடுக்கும்பொருட்டு நிலத்தைத் தோண்டுவோர், அவற்றுடன் மணிகளேயும் பெறுகின்ற னர் என்றதனுல் குறிஞ்சியின் வளம் பெறப்படும். துள்ளி-ஆமை. (பிங்கல). ஆமைகள் மாங்கனிகளேக் கவர்ந்து உண்ணும் என்றதனுல் மாமரங்களின் செழிப்புப் பெறப்படும். மருத நிலத்துக்கு உரிய தாமரையில் தங்கும் இயல்புடைய அன்னப் பறவைகள், நெய்தலுக் குரிய அடர்ந்து தழைத்த புன்னே மரங்களேப் படுக்கையிடமாகக் கொண்டன என்றதனுல், மருதமும் நெய்தலும் மிக அண்மையில் நெருங்கியுள்ளன என்பது பெறப்படும்.

நீர்நிலே யோரமாகவுள்ள மாமரங்களில் பழுத்த கனிகளே ஆமைகள் கவர்ந்து உண்ணும் என்பது, 'நெடுங்கால் மாஅத் தூழுறு வெம்பழம், கொடுந்தாள் யாமை பார்ப்பொடு கவரும், பொய்கை சூழ்ந்த' (அகநா. 117: 15-17) என்பதனுலும் அறியப்படும். துள்ளி கொள்வன-இனிய சாறுகிய தேன் துளிகளேக் கொண்டிருப்பன என்றும் கூறலாம்.

பங்கயம்-பங்கஜ என்ற வடசொல்லின் திரிபு.

(பி - ம்.) 1. மாமணித்: 2. தூங்கிள; தூங்கின.
3. வெள்ளி; மென்மலர்ப் புன்னேகள்; புன்னேயிற். (33)

66. கொன்றை யங்குழற் கோவலர் முன்றிலில்
கன்று ரப்புங் குரவை கடைசியர்
புன்ற லேப்புனங் காப்பிடை போதரச்
சென்றி சைக்கு நுளேச்சியர் செவ்வழி.

கடைசியர் குரவை- (மருத நிலத்து) உழத்தியரின் குரவைக் கூத்துப் பாடல்கள், கொன்றை அம் குழல் - (முல்லே நிலத்திலே) கொன்றைப்பழத்தால் ஆகிய குழல்களே ஊதுகின்ற, கோவலர் முன்றிலில் கன்று - இடையர் வீட்டு வாசலிலே கட்டப்பட்டுள்ள கன்றுகளே, உரப்பும் - அஞ்சச் செய்யும்; நுளேச்சியர் செவ்வழி - (நெய்தலில்) பரதவப் பெண்கள் பாடும் செவ்வழிப் பண்ணிசை, புன் தலே புனம்காப்பு இடைபோதர-(குறிஞ்சியிலே) புல்லிய (பசுமைநிரம் பாத) இடங்களேயுடைய தினேப்புனங்களின் காவல் தடைப்படு மாறு, சென்று இசைக்கும்-அங்கே போய் ஒலிக்கும்.

இக்கவி, நானில மயக்கமும் கூறுகின்றது. மருத நிலத்துப் பெண்களின் பாடலே முல்லே நிலத்து ஆயர் வீட்டு முன்றிலில் உள்ள கன்றுகள் கேட்டு உறங்கும் என்றதனுல், மருதமும் முல்லேயும் மயங்கியது கூறப்பட்டது. நெய்தல் நிலத்துப் பெண்களின் பாட லோசையைக் குறிஞ்சி நிலத்திலே புனம் காவல் புரியும் பெண்கள் கேட்டு அதில் ஈடுபட்டுத் தம் காவல் தொழிலே மறத்தலால் அது

தடைப்படுகின்றது என்றதனுல் நெய்தலும் குறிஞ்சியும் மயங்கியது கூறப்பட்டது.

இடையர், கொன்றைப் பழத்தாலும் (நெற்று) குழல் செய்து ஊதுவரென்பது,'கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ!' (சிலப். ஆய்ச்சியர் குரவை) என்ற விடத்தும் காண்க. மருத நிலத்துக் கொல்லைகள் போலப் பசுமை நிறைந்தனவல்லவாதலால், குறிஞ்சி நிலத்துப் புனங்கள், 'புன்றலைப் புனம்' எனப்பட்டன. காப்பு இடை போதரல்-காவல் கெடுதல். காப்புடை போதர என்று பாடங் கொண்டு, காப்பு உடைபோதர-காவல் உடைந்து போக; எனவும் பொருள்கூறுவர். நுளைச்சியரது இன்னிசையைப் புனத்திலே கேட்டுப் பறவைகள் மிகக் கூட்டமாக வந்து புனத்தை யழிக்கின்றன எனக் கருத்துக் கூறி, அதற்கு மேற்கோளாக, 'ஆயோ வெனுங்குர லந்தோ புனத்தை யழிக்கின்றதே' **(திருவரங்கக் கோவை)** என்பதனையும் காட்டுவர் ஒருசாரார்.

'மருதநிலத்தில் பள்ளத்திகள் கைகோத்தாடுகின்ற குரவைக் கூத்தின் சத்தத்தைச் சரக் கொன்றைக் காயைப் புல்லாங் குழலாக்கி யூதுகின்ற இடையருடைய வாசலிலே கட்டியிருக்கிற பசுவின் கன்று கேட்டுப் பயந்து கூப்பிடும்' **(பழைய உரை).**

'குரவையாவது எழுவரேனும், ஒன்பதின்மரேனும் கைகோத்து ஆடும் கூத்து' **(சிலப்.** ஆய்ச்சியர் குரவை, அடியார்க்குநல்லாருரை.)

(பி - ம்.) 1. வேய்ங் குழற்; முன்றினிற்; முன்னின்ற.
2. உறங்கும்; உறக்கும்; உவக்கும்; வைகும்; குரவைக்.
3. காப்புடைப்; காப்புறப்; காப்பவர்; காப்பிடம்; காப்பிசை; போதரார்; போர்தரச்; பொங்கரில்; பொங்கலில்.
4. சென்றிழைக்கும்; உழைக்கும்; கடைசியர். (34)

**67. சேம்பு காலிறச் செங்கழு நீர்க்குளத்**
**தூம்பு காலச் சுரிவளை மேய்வன**
**காம்பு கால்பொரக் கண்ணகன் மால்வரைப்**
**பாம்பு நான்றெனப் பாய்பசுந் தேறலே.**

கண் அகல் மால் வரை - இடம்அகன்ற கரிய மலையினிடத்தே, காம்பு கால் பொர - மூங்கில்கள் காற்றினு லலைந்து (தேன் கூட்டை) மோதுவதனுல், (அடை கீறி), பாம்பு நான்றது என பாய் பசுமை தேறல் - பாம்பு தொங்குவதுபோல வடிந்த செந்தேன் பெருக்கை, செங்கழுநீர் குளம் தூம்பு - (மருத நிலத்திலுள்ள) செங்கழுநீர்க் குளத்தின் மதகுவாயானது, சேம்பு கால் இற-(அங்கே முளைத்துள்ள) நீர்ச்சேம்பின் தண்டுகள் முறியும்படி, கால - (விசையுடன்) வெளிப் படுத்த, (அவ்வாறு வந்த தேனை), சுரி வளை மேய்வன - (அங்கே திரிகின்ற) சுழித்த வரிகளையுடைய சங்குகள் பருகுவனவாயின.

நான்றென - தொகுத்தல் விகாரம்.

மலையிலிருந்து இழிந்த தேன், பெருகிக் கால்வாய் போல ஓடி வந்து மருத நிலத்திலுள்ள செங்கழுநீர்க் கொடி பரந்த குளத்தின் மதகு வழியே விசையுடன் பாய, அங்குள்ள சங்குகள் அத்தேனைப் பருகின என்றதனால், இது, குறிஞ்சியும் மருதமும் மயங்குதல் கூறிய தாம். தூம்பு - மதகு. மேய்தல்-பருகுதல் : 'ஆர்கலி மேய்ந்து' (14) என்பதன் குறிப்பு நோக்குக. சுரிவளை-துளைபட்ட (மூக்கை யுடைய) சங்குகள் எனவும் ஆம். காம்பு-மூங்கில். தேன் ஒழுகுதலுக்குப் பாம்பு தொங்குதல் உவமை: பெருங். 1. 50: 35-7. குறிப்புப் பார்க்க.

'பாம்பு நான்றெனப் பாய் பசுந்தேறலால் செங்கழுநீர்க் குளம் பெருகி மடைவழியோடின தேனைச் சங்கின முண்டு முழங்கும்' (பழைய உரை).

(பி - ம்.) 1. கால் பொரச்; கால் பெறச்; கால் பொரு; செழுங்கழுநீர்க்குளத்; செங்கழுநீர்க் குளம்.
2. மெய்யன. 3 கால் பொரு.
4. நான்றன; ஞான்றெனப். (35)

மக்கள் இயல்பு

68. பெருந்த டங்கட் பிறைநுத லார்க்கெலாம்
பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால்
வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும்
விருந்து மன்றி விழைவன யாவையே.

பெரு தட கண் பிறை நுதலார்க்கு எல்லாம் - நீண்டு பரந்த கண்களையும் பிறைச்சந்திரன் போன்ற அழகிய நெற்றியையும் உடைய (அந்நாட்டு) மகளிர்க்கெல்லாம், பொருந்து செல்வமும்-நிலைபெற்ற செல்வமும், கல்வியும் - (சிறந்த) கல்வியும், பூத்தலால்-மிக்கிருத்தலால், வைகலும் - நாள்தோறும், வருந்தி வந்தவர்க்கு - (பிற நாட்டினின்று, துன்பத்தாலும் வறுமையாலும்) வருந்தித் தம் மிடம் வந்தவர்களுக்கு, ஈதலும்- (அவர்கள் வேண்டுவனவற்றைக்) கொடுத்தலும், விருந்தும் - விருந்தினரை உபசரித்தலும், அன்றி - அல்லாமல், விழைவன-அவர்கள் விரும்புவன, யாவை-வேறு எவை? (வேறொன்றுமில்லை). ஏ-அசை.

அந்நாட்டு மகளிரே சிறந்த கல்வியறிவுடையவர்களாயிருந் ததனால் அவர்கள் செல்வமுடையவராயினும் இத்தகைய அறச் செயல்களை யன்றி வேறு தாழ்வான இன்பங்களை விரும்பாதவரா யினர் என்றவாறு. 'மாதரார், அற்பி னின்றன அறங்கள்' (91) என் பது காண்க. 'விளைவன யாவை' எனவும் பாடம்; இதற்கு, 'அவர் களிடம் நிகழ்வன யாவை' எனக் கூறுக. பூத்தல் - விரிந்து பரிமளித்

தல். வைகலும் என்பதற்கு, தாம் இனிதாகத் தங்குதலும் எனவும் கூறலாம்.

விருந்து - ஆகுபெயராய் விருந்து உபசரித்தலைக் குறித்தது. பெண்களின் இசைவின்றி ஆடவர் அறம் செய்தல் இயலாது என்பது குறிக்கப்படுதல் காண்க.

(பி - ம்.) 2. பொருந்துஞ்; கல்வியிற்; கல்வியுஞ் செல்வமும்; பூத்ததால்; பூத்தலும்.
3. ஈதலும் வைத்தலும். 4. இன்றி; யாவையோ. (36)

69. பிறைமு கத்தலைப் பெட்பி னிரும்புபோழ்
குறைக றித்திரள் குப்பைப் பருப்பொடு
நிறைவெண் முத்தி னிறத்தரி சிக்குவை
உறைவ கொட்டின வூட்டிடந் தோறுமே.

ஊட்டு இடம் தோறும் - (வருவோர்க்கு இனிய உணவை) உண்பிக்கும் இடங்களாகிய அறச்சாலைகள் தோறும், பிறை முகம் தலை-பிறைச்சந்திரன் போன்ற (வளைவான) வாயையுடைய, பெட்பின் இரும்பு-விரும்பத்தக்க அரிவாள் மணையிலே, போழ் குறை - பிளந்து நறுக்கப்பட்ட, கறி திரள்-(பலவகையான) கறிக் குவியல்களும், குப்பை பருப்பொடு-குவியலானபருப்புடனே, நிறை வெண் முத்தின் நிறத்து-நிறைந்த வெண்மையான முத்துப் போன்ற நிறத்தையுடைய, அரிசி குவை-அரிசிக் குவியல்களும், கொட்டின உறைவ-கொட்டிக் கிடப்பனவாகும். ஏ-அசை.

நற்செயல்களுக்கு உதவுதலின் அரிவாள்மணை 'பெட்பின் இரும்பு' எனப்பட்டது. குப்பை-குவியல். ஊட்டுதல்-உண்பித்தல்; பிறவினை. அன்னச் சத்திரங்களை 'ஊட்டுப் புரை' எனல் மலைநாட்டு வழக்கு. அங்கே வருவோர்க்கு எந்நேரமும் குறைவின்றி ஊண் அளிப்பதற்கேற்றவாறு உணவுப் பண்டங்கள் நிறைத்து வைக்கப்பட்டிருக்கும். பிறைமுகத்தலை இரும்பு: 'தேய் பிறை இரும்பு' (சீவக. 55).

(பி - ம்.) 1. முகத்திலைப்: இரும்புபோய்.
2. குறை நறைக் கறிக்; குறை நிறைக் கறிக்: குப்பை பருப்பொடும்; பரப்பொடு; பொருப்பொடு.
3. முத்தினிகர்த்து; முத்த நிறத்து; முத்த நிகர்; முத்தினிகர்; முத்த நிறைத்து; முத்தி னிறத்த வரிக்குவை.
4. உறைவது; உறுவ; கோட்டமில்; கொட்பின; கொட்டினது; கொட்டிட; கொட்பினின்; கோட்டின; கோடியின்; ஒப்பன; உற்றிடம்; தோறெலாம். (37)

70. கலஞ்சு ரக்கு நிதியங் கணக்கிலா
நிலஞ்சு ரக்கு நிறைவள நன்மணி
பிலஞ்சு ரக்கும் பெறுதற் கரியதம்
குலஞ்சு ரக்கு மொழுக்கங் குடிக்கெலாம்.

குடிக்கு எல்லாம்-(அந்நாட்டுக்) குடிமக்களுக்கெல்லாம், கலம்-(வாணிகஞ்செய்யும்),மரக்கலங்கள், கணக்கு இலா நிதியம் சுரக்கும்-அளவற்ற திரவியங்களைத் தரும்; நிலம்-விளைநிலங்கள், நிறை வளம் சுரக்கும்-நிறைந்த (தானிய) வளத்தைத் தரும்; பிலம்-கனிகள், (சுரங்கங்கள்), நல் மணி சுரக்கும்-நல்ல இரத்தினங்களைத் தரும்; தம் குலம்-அவரவர் பிறந்த குலமானது, பெறுதற்கு அரிய ஒழுக்கம் சுரக்கும்-(யாவரும்) அடைவதற்கு அரிய நல்லொழுக்கங்களைத் தரும்.

கலம் கணக்கிலா நிதியம் சுரக்கும் என்றதனுல், கப்பல் வாணிகம் சிறப்பாக நடைபெறும் என்பதும், பிலம் நல்மணி சுரக்கும் என்றதனுல் அந்நாட்டின் கனிவள மிகுதியும், குலம், பெறுதற்கரிய ஒழுக்கம் சுரக்கும் என்றதனுல், குடிகள், நல்லொழுக்கம் மிகுந்த பரம்பரையில் வந்தவர்களென்பதும் பெறப்படும். 'ஒழுக்க முடைமை குடிமை' என்ற திருக்குறட் கருத்து இங்கே சிந்திக்கத் தக்கது. கணக்கிலா என்பதனை நிலத்துக்கு அடைமொழியாக்கலும் ஆம். சுரத்தல்-இடையீடில்லாமை.

கலம் கணக்கிலா நிதியம் சுரக்கும். ஒப்பு: 'பொன்னின் நிறை பரஞ் சொரிந்து வங்க நெடுமுது காற்றும் நெய்தல்'(54).நிலஞ்சுரக்கு நிறை வளம்: 'நெல்லெலாஞ் சுரந்துதவு நீர்நாட' (ஆரணிய. 356).

(பி - ம்.) 1. சுரக்க; கணக்கில.
2. சுரக்க; நிறைவளர் நிலவளம்; நிறைவளனன்மணி; நிறையன நன்மணி; நிரை வளம் நன்மணி; மாமணி; நீண் மணி
3. பெலம்; அரிய வண். (38)

71. கூற்ற மில்லையோர் குற்றமி லாமையால்
சீற்ற மில்லைதஞ் சிந்தையின் செம்மையால்
ஆற்ற னல்லற மல்லதி லாமையால்
ஏற்ற மல்ல திழிதக வில்லையே.

(அந்நாட்டு மக்களிடம்), ஓர் குற்றம் இலாமையால்-ஒரு குற்றமும் (தீய செயல்) இல்லாததனுல், கூற்றம் இல்லை-(அகால) மிருத்யு பயம் (அந்நாட்டில்) இல்லை; தம் சிந்தையின் செம்மையால்-அவரவர் மனத்தின் நேர்மைப் பண்பினுல், சீற்றம் இல்லை-(அவர்களிடம்) கோபம் என்பது இல்லை; ஆற்றல்-அவர்கள் செய்வது, நல் அறம் அல்லது இலாமையால்-நல்ல தருமமல்லது (அதருமம்) இல்லாமையால், ஏற்றம் அல்லது-(வாழ்க்கையில்) மேன்மேலும் உயர்வையன்றி, இழிதகவு இல்லை-தாழ்வடைதல் இல்லை. ஏ-ஈற்றசை.

சீற்றம், பல தீச்செயல்களுக்குக் காரணமாவது; மக்களிடம் அஃது இன்மையால் தீச்செயல்கள் இல்லை; அதனுல் யமபயமும் இல்லை. 'ஏற்ற மல்லது இழிதகவு இல்லை' என்பதற்கு,(மறு பிறப்பில்) உயர்ந்தகதியையன்றித் தாழ்ந்தகதி(நரகம்) இல்லை என்பாருமுண்டு.

முதலடியோடு ஒப்பிடுக: 'யாக்கை நிலையாதென் றறிந்து, மறுமைக்கு வேண்டுவன செய்துகொண்டமையின், கூற்றத்தின் கொலைக்கு அஞ்சாமற் காவலுண்டாயிருக்கின்ற மதுரை' (மதுரைக். காஞ்சி. 632-3-ந. உரை).

(பி - ம்.) 1. இல்லை யொர்; இல்லாமையாற்.
2. இல்லைத்தஞ்; இல்லைத் தன்; சிந்தையிற்; சிந்தைநற்; செவ்வியால். செய்கையால்.
3. ஆற்ற நல்லறம்; இல்லாமையால்.
4. அன்றி; இழித்தகவு; இழிதக்க; இல்லையாம்இ; ல்லரோ.

(39)

72. நெறிக டந்து பரந்தன நீத்தமே
குறிய ழிந்தன குங்குமத் தோள்களே
சிறிய மங்கையர் தேயு மருங்குலே
வெறிய வும்மவர் மென்மலர்க் கூந்தலே.

(அந்நாட்டில்) நெறி கடந்து பரந்தன-வழி மீறிப் பரவிச்சென்றவை, நீத்தமே-வெள்ளமே; (மக்களுள் நேர் வழி தவறிச் செல்வார் இல்லை என்றபடி). குறி அழிந்தன - எழுதப்பட்ட தொய்யில்கள் அழிந்துபோனவை, குங்குமம் தோள்களே - மகளிரின் குங்குமச் சாந்து படிந்த தோள்களே யாகும்; (பிறபொருள்கள் அல்ல); சிறிய-சிறுதன்மையுடையவை, மங்கையர்-பெண்களின், தேயும் மருங்குலே- (நாளுக்கு நாள் தேய்ந்து போவது போன்ற) நுணுகிய இடைகளே; (மக்களிடம் சிறுமைத் தன்மை இல்லை); வெறியவும்-வெறி (மணம்) உடையனவும், அவர் மலர் மென் கூந்தலே-அவர்களுடைய, மலர் சூடிய மெல்லிய கூந்தலே. (வேறு வெறிகொண்ட உயிரினம் இல்லை.)

நெறி கடத்தல்-தடம் மீறிச் செல்லுதல், நேர்வழி தவறுதல். குறி-அடையாளங்கள், குறிக்கோள். சிறிய-சிறியவை, சிறுமைத்தன்மையுடையவை. வெறிய-மணமுடையவை, வெறிகொண்டவை என ஒவ்வொன்றும் இரு பொருள்படும். குறி அழிதல்-பெண்களின் தோள்களில் குங்குமக் குழம்பால் எழுதப்படும் அழகுச் சின்னங்கள் (தொய்யில்)அழிதல்; இது ஆடவர் தழுவுதலால் நேர்வது. தானியக் குவியல் முதலியவற்றில், களவு போகாதிருக்கும்பொருட்டு முத்திரை யிடுதல் உண்டு; களவுசெய்வார் இல்லாமையால் அம் முத்திரைகள் (குறிகள்) அழிதல் இல்லை; மக்களும் நல்ல குறிக்கோளினின்றும் தவறமாட்டார்கள்.

'யவ்வனமான புருஷர் மார்பிலே யணிந்த சந்தணக் குழம்பு மாத்திரமே இட்ட குறி பிசகிப்போம்; வேறேயொன்றும் குறி பிசகிப் போகாது. ஸ்திரீகளுடைய அளக பாரமாத்திரமே கள் வாசனை மணக்கும்; வேறே யொருவருங் கள்ளைக் குடியார்கள்" (பழைய உரை).

இப்பாட்டு, சிலேடை தழுவிய ஒழிப்பணி. ஏகாரம் நான்கும் பிரிநிலை.

ஒப்பு: 'ஆசலம்புரி ஐம்பொறி வாளியும், காசலம்பு முலையவர் கண்ணெனும், பூசலம்பும் நெறியின் புறஞ்செலாக், கோசலம்' (13).

(பி - ம்.) 1. பரந்து நடந்தன; இறந்து நடந்தன; பரந்து கடந்தன; கடந்து பரந்தது; கடந்து படர்ந்தது; கடந்து படர்ந்தன.
2. அழிந்தது; குங்குமத் தோயமே; குங்குமக் கொங்கையே
3. சிறியர்; செறிய: நங்கையர்.
4. வெறியவுமவர்: வெறிமிகும்மவர்: வெறிய மேயவர்; வெறியு மேயவர்; மென்மலர் கூந்தலே. (40)

**73. அகிலி டும்புகை யட்டிலி டும்புகை**
**நகலி னாலை நறும்புகை நான்மறை**
**புகலும் வேள்வியிற் பூம்புகை யோடளாய்**
**முகிலின் விம்மி முயங்கின வெங்கணும்.**

இடும் அகில் புகை-(தெய்வங்களுக்கும், மகளிர் கூந்தலுக்குமாக) இடப்படும் அகிலின் புகையும், அட்டில் இடும் புகை-சமையலிடங்களில் உண்டாகும் புகையும், நகல் இன் ஆலை நறு புகை-விளங்குதலுடைய இனிய கரும்பாலைகளிலுண்டாகும் மணமுள்ள புகையும், நான்கு மறை புகலும்-நான்கு வேதங்களிலும் சொல்லப்படுகிற, வேள்வியில் பூ புகையோடு-யாகங்களில் உண்டாகும் சிறந்த புகையோடு, அளாய்-கலந்து, முகிலின் எங்கணும் விம்மி-மேகம் போல எங்கும் பரந்து, முயங்கின-வியாபித்திருந்தன.

'முழங்கின' என்றும் பாடம்; இதற்கு, அந்நாட்டின் பெருமையை எங்கும் அறிவித்தன எனக் கொள்க.

வீடுகளில்,தெய்வ பூசைக்காகவும் மகளிர் கூந்தலில் ஈரம் புலர்வதற்காகவும் அகிற்புகை யிடுவர்; சமையலிடங்களிலே அடுப்பின் புகையோடு தாளிப்புப் புகையும் கமழும். கரும்பாலைகளில் வெல்லங் காய்ச்சுவதற்காகத் தீ மூட்டுவராதலால், அத் தீயின் புகையும், பாகு காயும்போது ஆவியாக வரும் இனிய புகையும் அங்கே உண்டாவன. வேள்வியின் சிறப்புக்கருதி, அங்குண்டாகும் புகையை 'பூம்புகை' என விசேடித்தார். இதனால், அந்நாட்டின் அறம், பொருள், இன்பச் சிறப்புப் புலப்படும். நகலில் ஆலை என்ற பாடத்துக்கு இகழ்ச்சியில்லாத ஆலை என்க.

ஒப்பு: 'அட்டிற் புகையு மகலங்காடி, முட்டாக் கூவியர் மோதகப் புகையும், மைந்தரு மகளிரு மாடத் தெடுத்த, அந்தீம் புகையு மாகுதிப் புகையும், பல்வேறு பூம்புகை யளைஇ' (சிலப். 13: 122-27).

(பி - ம்.) 1. அகலிடும்; அகனெடும்; அட்டிலடும்.
2. நகலிலாலே; நகையினுர; நகையினுலே; நகிலிடும் புகையாலே; நாவலர்; நாவலார்; நாறு பேர்.
3. வேள்வயிற்.
4 விம்ம; மின்னி: முழங்கிய; முழங்கின: முழங்குவ; முழங்குவது; எங்குமே. (41)

[ வேறு ]

74. இயல்புடை பெயர்வன மயின்மணி யிழையின்
வெயில்புடை பெயர்வன மிளிர்முலே குழலின்
புயல்புடை பெயர்வன பொழிலவர் விழியின்
கயல்புடை பெயர்வன கடிகமழ் கழனி.

(அவர்)-அந்நாட்டு மகளிரின், இயல்-சாயலுக்கு, புடை பெயர்வன - தோற்றுப் போவன, மயில்-மயில்கள் ஆகும் ; மிளிர் முலே - (அவர்களுடைய) விளங்குகின்ற தனங்களில் (படிந்துள்ள),மணி இழையின்-இரத்திஞபரணங்களின் ஒளியால், வெயில் புடைபெயர்வன- வெயிலும் (அதன் முன் நிற்கமுடியாமல்) தோற்றுப்போம்; குழலின்- (அவர்களுடைய) கூந்தலழகினுல், (அதற்குத் தோற்று),புயல்-மேகங்கள், பொழில் புடைபெயர்வன - சோலேகளிலே போய் ஒளிப்பனவாகும்; அவர் விழியின் - அவர்களுடைய கண்ணழகினுல், (அதற்குத் தோற்று), கயல் - கயல்மீன்கள், கடி கமழ் கழனி புடைபெயர்வன - (மலர்களின்) மணம் வீசுகின்ற வயல்களிலுள்ள நீரிலே மறைவனவாகும்.

பொருளமைதி நோக்கி, 'அவர்' (மூன்ரும் அடியில் உள்ளது) என்பது மகளிரைக் குறிப்பதாயிற்று. அவர் என்பதனே முன்னே இயல், முலே, குழல் என்பவற்ருேடும் கூட்டுக. இயல், குழல், விழி ஆகிய உபமேயப் பொருள்களே உபமானமாக்கிக் கூறியது **எதிர் நிலேயணி.** இப்பாடலுக்குப் பிறவாறும் பொருள் கூறுவர்.

(பி -ம்.) 1. எயில்புடை மயிலணி; மயிலினம்; வனமணி; வயின்மணி; மழையின்.
2. அயல்புடை; அயில்புடை; குயில்புடை; முலேயவர்; முலேவிரி; இளமுலே! வெறியலர் குழலிற்; குழல்போற்; விழிபோற்.
3. கயல்புடை; பொருமிரு; கழனிகள்; விழிபோற்; குழல்போற்.
4. புயல்புடை; கடிகமழ் பொழில்கள். (42)

75. இடையிற மகளிர்க ளெறிபுனன் மறுகக்
குடைபவர் துவரித ழலர்வன குமுதம்
மடைபெய ரனமவர் மடநடை பயிலும்
கடைசியர் முகமென மலர்வன கமலம்.

இடை இற - (தங்கள்) இடை ஒடிவதுபோலத் துவளவும், எறி புனல் மறுக - அலே மோதுகின்ற நீர் கலங்கவும், குடைபவர் கடைசியர் மகளிர்கள்-நீராடும் உழத்தியராகிய மகளிருடைய, துவர் இதழ்

அலர்வன குமுதம் - சிவந்த உதடுகள் போல மலர்வன செவ்வல்லிப் பூக்கள்; மடை பெயர் அனம் - (நீர் பாயும்) மடைகளிலே சஞ்சரிக்கின்ற அன்னங்கள், அவர் மட நடை பயிலும் - அவர்களுடைய மென்மையான நடையைப் பழகும்; முகம் என மலர்வன கமலம் - (அவர்களுடைய) முகம் போல மலர்வன தாமரைப் பூக்கள்.

எறிபுனல் - வினைத்தொகை. இதழ் அலர்வன - இதழ் போல் அலர்வன: உவமவுருபு தொக்கது. அனம்: அன்னம் என்பதன் இடைக்குறை.

மகளிர் குனிந்து நீராடும்போது. இடை ஒடிவது போலத் துவள்கின்றது; நீர் அலைபடுதலால், நீரில் உள்ள செவ்வல்லி மொட்டுக்களும் அலைப்புண்டு மலர்கின்றன. நீர் பாயும் மடைகளில் மீன்கள் துள்ளி ஓடுமாதலால் அவற்றைப் பிடிக்க அன்னங்கள் அங்கே சஞ்சரிக்கும். நடைபோல எனவும் மகளிர் உதடுகள் போல எனவும், முகம்போல எனவும் உவமேயப் பொருள்களை உவமித்தலால் இதுவும் எதிர்நிலையணி யாம்,

(பி - ம்.) 1. இடையற; இடையிள. 2. மலர்வன; மிளிர்வன.
3. மடமுறு மனமென; புடைபெய ரனமென; மடைபெயரனமென; மடைசெறியனமென; மடநடையனமென; மடநடை யளகக்; இளகக்; மயிலக்; நடைபயிலளகக்; நடை பயில்வனவக். (43)

76. விதியினை நகுவன வயில்விழி பிடியின்
கதியினை நகுவன வவர்நடை கமலப்
பொதியினை நகுவன புணர்முலை கலைவான்
மதியினை நகுவன வனிதையர் வதனம்.

வனிதையர்-(அந்நாட்டு) மகளிரின், அயில் விழி-கூரிய கண்கள், விதியினை நகுவன-பிரமனைப் பழிப்பனவாகும்; அவர் நடை-அவர்களுடைய நடை, பிடியின் கதியினை நகுவன-(சிறந்த நடைக்கு எடுத்துக்காட்டான) பெண் யானையின் நடையைப் பழிப்பன வாகும்; (அவர்) புணர்முலை-அவர்களுடைய இடைவெளியின்றி நெருங்கிய தனங்கள், கமலம் பொதியினை நகுவன-(தமக்கு உவமையாகக் கூறப்படும்) தாமரை மொட்டுக்களைப் பழிக்கும்; வதனம்-அப்பெண்களின் முகம், கலை வான்மதியினை நகுவன-கலைகள் நிரம்பிய முழு மதியைப் பழிப்பன வாகும்.

அந்நாட்டு மங்கையரின் முகம், முலை, நடை ஆகியவை, தமக்கு உவமை கூறப்படும் பொருள்கள் தமக்கு ஈடாகா எனப் பழிக்கும் என்றதனுல்,அவர்களுடைய அவயவங்களின் சிறப்புமிக மேம்பட்டது என மிகுத்துக் கூறியவாரும். கண்கள், அவற்றைப் படைத்த பிரம னும் அவற்றின் வீச்சுக்கு உட்பட்டுவிடுவான் என்று பிரமனையே

பழிப்பன; மேலும் அவனுல் படைக்கப்பட்ட யோகியரும், ஞானியரும் கூட இவர்கள் கண் பார்வையின்முன் தம் மனவுறுதியை இழப்பர் எனவும் நகுவனவாம். தாமரை மொட்டுக்கள், மலர்தலும் பின்பு சில நாளில் வாடிக் கெடுதலுமுடையனவாதலால், அக் குறைபாடுகள் இல்லாத தனங்களுக்கு ஒப்பாகா; பூர்ண சந்திரனும் தன்னிடத்தே களங்கம் உடைமையும் தேய்தலுமாகிய குறைகளை யுடையது; அதனுல், அவையில்லாத முகங்களுக்கு அது ஒப்பாகாது.

'அவர்களுடைய கண்கள் பிரம்மாவைப் பார்த்து எங்களைப் போலக் கண்டவுடனே புருஷர் மயங்கும்படி நீயுண்டாக்க மாட்டாயென்று இகழ்ச்சி பண்ணும், (**பழைய உரை**). 'ஞானிகளை ஞானங்கெட மயக்கியும், தீர்க்காயுள் படைத்தபேரை மன விகாரம் பண்ணி வாட்டியும் செய்கையால் விதியினை நகுவன' (**மற்ருெரு பழைய உரை**).

கதி-நடை; வடசொல். பொதி-குவிந்து மூடியுள்ளது; அரும்பு. 'பொதியவிழ் வைகறை' (**கலித்**. 52: 22). மதியினை நகுதல்: ஒப்பு. 'திங்களுங்கள் முருந்தொன்று கோல முகங்கண்டு நாணி முயல்மறுத்தீர், மருந்தொன்று நாடியன் ரேவட மேரு வலங்கொள்வதே' (**தஞ்சை**.9).மதியினை நகுவன என்பதற்கு, அறிஞரின் புத்தியை இகழ்வன எனவும், விதியினை என்பதற்கு உபமானமாக நூலோரால் விதிக்கப்பட்ட பொருள்களை எனவும் கூறுவாருளர்.

(பி - ம்.) 1. விதிதனை; விழியிணை. 2. கதியின.
3. கலைவாண்; கலைவாய்; கலையின். (44)

**77. பகலினொ டிகலுவ படர்மணி மடவார்**
**நகிலினொ டிகலுவ நளிவள ரிளநீர்**
**துகிலினொ டிகலுவ சுதைபுரை நுரைகார்**
**முகலினொ டிகலுவ கடிமண முரசம்.**

படர்மணி (மாதர் அணிகலங்களில் உள்ள) பலவாகிய இரத்தினங்கள், பகலினொடு இகலுவ-(ஒளியால்) சூரியனுடன் மாறுபடுவன (போட்டியிடுவன); நளி வளர் இளநீர்-பெருமைமிக்க செவ்விளநீர்கள், மடவார் நகிலினொடு இகலுவ-பெண்களின் தனங்களோடு மாறுபடுவன; சுதை புரைநுரை-அமுதத்தை யொத்த நீர் நுரைகள், துகிலினொடு இகலுவ-(மகளிரின்) ஆடைகளோடு (மென்மையால்) மாறுபடுவன; கடி மண முரசம்-சிறந்த மண முரசங்கள், கார் முகிலினொடு இகலுவ-மழை மேகத்தோடு (ஒலியால்) மாறுபடுவன.

இகலுதல்-ஒன்றின் ஒன்று மிக்கு விளங்குதல். மணிகள் ஒளியாலும், இளநீர்கள் வடிவத்தாலும், நுரை மென்மையாலும், முரசங்கள் ஒலியாலும் மிக்கு விளங்குகின்றன என்றவாறு.

ஆடைக்கு நுரை உவமை; ஒப்பு: 'நனைந்து நிறங்கரந்த நார் நூல் வெண்டுகில், அரையதாகவும் ஆடைகாணுது,.......நுரைகை யரிக்குமோர் நுடங்கிடை' (பெருங். 1: 40. 148-51).

(பி - ம்.) 2. நகலினெடு: நனி வளர்; நளிர் வளர்; நளிரிள.
3. சுதை பொழி மனைகார்; நுரைகார்; நிரைகார்; சுதை பொழிறுயில் கார்; சுதை பொரு நுரைகார்; நுரைகள்; சுதை பொழில்களின் வாய்; சுதைவரு நுரைகார்; சுரை புரை நுரைகார்.
4. மண முரசும்; மணி முரசம்; கமழ் முரசம். (45)

78. காரொடு நிகர்வன கடிபொழில் கழனிப்
போரொடு நிகர்வன பொலன்வரை யணைசூழ்
நீரொடு நிகர்வன நிறைகட னிதிசால்
ஊரொடு நிகர்வன விமையவ ருலகம்.

கார்-மேகங்கள், கடி பொழிலொடு நிகர்வன-(அந் நாட்டில் உள்ள) வளம் மிக்க சோலைகளோடு ஒப்பன; பொலன் வரை-பொன் மயமான மலைச் சிகரங்கள்,கழனி போரொடு நிகர்வன-(அந்நாட்டுக்) கழனிப் பக்கங்களில் குவிக்கப்பட்ட நெற்போருக்கு ஒப்பாவன; நிறை கடல்-நீர் நிறைந்த கடல்கள், அணை சூழ் நீரொடு நிகர்வன-அணை யால் சூழப்பட்டுத் தேக்கம் கொண்ட நீர்நிலைகளோடு (ஏரிகள்) ஒப்பன; இமையவர் உலகம்-(இன்பம் மிகுந்த) தேவருலகங்கள், நிதி சால் ஊரொடு நிகர்வன-செல்வம் மிக்க (அந்நாட்டு) ஊர்களோடு ஒப்பனவாகும்.

முன் கவியில் ஒன்றையொன்று விஞ்சுவனவாகச் சிலவற்றைக் கூறினர்; இக் கவியில் ஒன்றேடொன்று ஒப்பனவாகச் சிலவற்றைக் கூறுகின்றார். இப்பாட்டும் எதிர்நிலையணி கொண்டது. முதலடி யல் லாத மற்ற அடிகளில் உவமை மாற்றிக் கூறப்பட்டிருத்தலால் அதற் கேற்ப முதலடியிலும் மாற்றிக்கொள்ளப்பட்டது. 'ஒடு' உருபு பிரித் துக் கூட்டப்பட்டது.

கடி, சால் என்பன உரிச் சொற்கள்.

பொழிலுக்கு மேகம்: 'தடங்கார் தரு பெரு வான் பொழில்' (திருச்சிற். 31). நெற் போருக்கு மலை: 'சூடு கோடாகப் பிறக்கி நாடொறும், குன்றெனக் குவைஇய குன்ருக் குப்பை' (பொருந. 243-4); 'குடகாற்றெறிந்த குப்பை வடபாற், செம்பொன் வரையிற் சிறப்பத் தோன்றும்' (பெரும்பாண். 240-41); 'விலங்க லன்ன போர் முதற் றெலைஇ' (மலைபடு. 461); 'தெரிந்திடும்போர்கள் மேருவா யவே' (கந்த. நாடு. 22); 'நெடுங்களத் தம் பொற் குன்ற நிரை யெனப் பெரும் போர் செய்தார்' (திருவிளை. நாடு. 27). ஊர்கள் இமையவருலகொத்தல் - 'பூமி மாநகர் பொன்னுல கொத்ததே' (சீவக. 135).

(பி - ம்.) 1. கமழ் பொழில். 2. புணர் மலை. (46)

79. நென்மலை யல்லன நிரைவரு தரளம்
சொன்மலை யல்லன தொடுகட லமிர்தம்
நன்மலை யல்லன நதிதரு நிதியம்
பொன்மலை யல்லன மணிபடு புளினம்.

(அந்நாட்டில் எங்கும் காணப்படுவன), நெல்மலை அல்லன-மலை போல் குவிக்கப்பட்ட நெல் குவியல்கள் அல்லாதவை, நிரை வரு தரளம்-வரிசையாக (மலைபோல்) குவிக்கப்பட்ட முத்துக் குவியல் களாம்; சொல்மலை அல்லன-மகளிரின் சொற் கூட்ட மல்லாதவை, தொடு கடல் அமிர்தம்-ஆழமான பாற் கடலினின்றும் பெற்ற தேவாமிர்தமாம்; நல் மலை அல்லன-நல்ல மலைகள் அல்லாதவை, நதி தரு நிதியம்-நதிகளால் கொணர்ந்து தரப்பட்ட (பொன், மணி முதலிய) செல்வங்களாம்; பொன் மலை அல்லன - (மேற் சொல்லிய) செல்வக் குவியலான மலைகளல்லாதவை, மணி படு புளினம்-(முத்து, பவளம் முதலிய) கடல் படு மணிகள் பரந்த மணற் குன்றுகளாம்.

மலைபடு பொருள், கடல் படு பொருள், மருத நிலத்துப் பொருள் ஆகிய பலவும் அளவின்றி நிறைந்துள்ளன என நாட்டின் செல்வ மிகுதி கூறியவாறு. மலை என்பது மிகுதியை உணர்த்தியது.

(பி - ம்.) 1. நிரை தரு; நிரை தகு; நிறை வரு; நிறமுறு: தரளச்; தரளத்.
2. தொன்மலை; அமுத: அமுதின்.
3. நளிதரு; நனிதரு: நறைவிரி: நிதியப்; புறவம். (47)

80. பந்தினை யிளையவர் பயிலிட மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்
சந்தன வனமல சண்பக வனமாம்
நந்தன வனமல நறைவிரி புறவம்.

இளையவர்-இள மங்கையர், பந்தினை பயில் இடம்-பலவகை யான பந்துகளைக் கொண்டு விளையாடும் இடங்கள், (சந்தன மரச் சோலைகளாயினும்),சந்தன வனம்அல-சந்தனச் சோலையாகக் காணப் படா; சண்பக வனம் ஆம்-சண்பகச் சோலைகள் போல் ஆகும். மயில் ஊர்-மயிலை வாகனமாகக் கொண்டு செலுத்துகின்ற, கந்தனை அனை யவர்-முருகனைப் போன்ற (இளமையும் அழகும் நிறைந்த) காளையர், கலை தெரி கழகம்-(வில்,வாள் முதலிய) கலைப் பயிற்சி செய்யும் இடம், (நந்தவனங்களாயினும்), நந்தன வனம் அல-பூஞ்சோலைகள் அல்ல; நறை விரி புறவம்-மணம் மிகுந்த முல்லைக் காடுகள் போல் ஆகும்.

இளையவர் பந்தினைப் பயில் இடம் சந்தன வனம் அல்ல, சண்பகவனம் என்றும், கந்தனை அனையவர் கலை தெரி கழகம் நந்தன வனம் அல்ல, புறவம் எனவும் நிரல் நிரையாகக் கூட்டுக. பந்தாடு தல் கூறப்படுவதாலும், பின்னே 'கந்தனை யனையவர்'என ஆடவரைக்

கூறுதலாலும் இளையவர் என்பதற்கு இள மங்கையர் எனப் பொருள் கூறப்பட்டது.

பெண்கள் ஊரையடுத்த சந்தனச்சோலைகளிலே சென்று பந்து விளையாடும்போது, அவர்கள் மேனி சண்பகப் பூமணம் கமழ்தலின், சந்தனச் சோலை சண்பகச் சோலைபோல் ஆயின; காளையர் தனுர் வேதம் முதலியவற்றை ஆராய்ந்து பயிலும் இடம் நந்தன வனங்களாயினும், அவர்கள் மேனியின் மணத்தால் அவை முல்லைக்காடுகள் போலாயின. உத்தமசாதிப் பெண்களின் மேனி சண்பகப்பூ மணம் கமழும் என்பர். ஆடவர் மேனி முல்லை மணம் கமழும் என்பது, 'தொல்லைத் திங்கள் நெடுவெண் ணிலவின், மணந்தனன் மன்னெடுந் தோளே, இன்றும் முல்லை முகைநாறும்மே' (குறுந். 193) என்பதனாலும், அவ்விடத்தில் ஸ்ரீஐயரவர்களுடைய குறிப்புக்களாலும் அறியலாம்: 'உன் திருமேனி மலர் முல்லைப் புறவமே' (**சிதம்பரச் செய்யுட் கோவை. 57**).

இளையவர் என்பது பெண்களைக் குறித்தல், அடுத்த கவியிலும் வந்துள்ளது. 'குஞ்சர மனையார் சிந்தைகொ ளிளையார்' (**அயோத்.** 251) என்றவிடத்துங் காண்க. மகளிர் பந்தாடல்: 'பந்துகள் மடந்தையர் பயிற்றுவாரிடை' (138); மகளிர் பந்தாடுதல்பற்றிப் பலநூல்களிலும் காணப்படும். பெருங்கதையில் **பந்தடிகண்டது** என்றே ஒரு பகுதி உள்ளது. 'பந்தார் விரலி', 'கந்துகக்கிரீடாம்பிகை' என அம்பிகையின் திருநாமங்கள் உள்ளன.

(பி - ம்.) 1. பந்தணை விரலியர்: பயிலிடை; பயில்விடம்; பயினடம்.
3. வன மலர்; வனமாம்; வனமால்.
4. வன மலர்: நறவிரி.

(48)

81. **கோகில நவில்வன விளையவர் குதலைப்**
**பாகியல் கிளவிக ளவர்பயி னடமே**
**கேகய நவில்வன கிளரிள வளையின்**
**நாகுக ளுமிழ்வன நகைபுரை தரளம்.**

கோகிலம் நவில்வன-குயில்கள் பழகுவன, இளையவர்-அந்நாட்டு மங்கையரின், குதலை பாகு இயல் கிளவிகள்-குதலைத் தன்மையோடு பாகு போன்ற இனிமையும் உடைய சொற்களாகும்; கேகயம் நவில்வன-மயில்கள் பழகுவன, அவர் பயில் நடமே-அம்மங்கையர் ஆடும் நடன வகைகளே யாகும்; கிளர்இள வளையின் நாகுகள்-(ஒளியோடு) விளங்குகின்ற இளமையான பெண் சங்குகள், உமிழ்வன-வெளிப்படுத்துவன, நகை புரை தரளம்-(அம்மங்கையரின்) பற்களையொத்த முத்துக்களாகும்.

இப்பாட்டும் **எதிர்நிலையணி** கொண்டது. குதலை என்பது (குழந்தைகளின்) எழுத்து உருப் பெருத சொல்; அது கேட்

போர்க்கு இன்பம் பயத்தலின், அத்தன்மையை மகளிர் சொற்களுக்கு ஏற்றிக் கூறுதல் மரபு. நாகு-பெண்பால்; புரை-உவமவுருபு.

சொல்லுக்குப் பாகு உவமை: 'பாகொக்குஞ் சொற் பைங்கிளி' (576). 'பாகொக்குஞ்சொனுண்கலையாள்' (996); 'பாகியல் கிளவியோர் பவழக் கொம்பர்போல்' (ஆரணிய. 831.)

(பி - ம்.) 1. கோகுலம்: நலிவன; நகுவன.
2. அவர் பயில் நடமென்; நடைமென்; நடனே; அவர்வயினடமே; அவர் பயிலியமென்; பயில்வன நடனம்; பயில்வன நடமே; பயிலிய னடமே.
3. நலிவன; நகுவன: கிளரொளி; கிளரின: முதுசூல்.
4. நகுவன; நவில்வன: நகைபுரி; நகை பொரு: நகை நகு; நடை பொரு.
(49)

82. பழையர்த மனையன பழநறை நுகரும்
உழவர்த மனையன வுழுதொழில் புரியும்
மழவர்த மனையன மணவொலி யிசையின்
கிழவர்த மனையன கிளைபயில் வளையாழ்.

பழையர் தம் மனையன-கள் விற்போர் வீட்டில் உள்ளவை, நுகரும் பழ நறை-விரும்பிப் பருகுதற்குரிய பழைய கள் வகை; உழவர் தம் மனையன-உழவர் வீடுகளில் உள்ளவை,உழுதொழில்-உழு தொழிலுக்குரிய பொருள்கள்; புரியும்-(மண வினையை) விரும்புகின்ற,மழவர் தம் மனையன-இளங்காளையர்கள் வீட்டில் உள்ளவை, மண ஒலி-திருமணத்திற்குரிய மங்கலவொலி; இசையின் கிழவர் தம் மனையன-இசைக்கு உரியவர்களாகிய பாணர்கள் வீட்டில் உள்ளவை, கிளை பயில் - இசை விகற்பங்களை வாசித்தற்குரிய, வளை யாழ்-வளைந்த தண்டையுடைய யாழ்களாம்.

பழையர்-கள் விற்போர்; 'பழையர் தம் சேரி' (136). நுகரும் உழவர் எனக் கூட்டி, கள்ளைப் பருகும் உழவர் என்றும், நுகரும், உழு தொழில் புரியும் உழவர் எனக் கூட்டியும் உரைப்பாருமுளர். மழ-இளமை எனப் பொருள்படும் உரிச்சொல்; மழவர்-இளமையுடையோர். கிளை பயில் யாழ் என்பதற்கு, 'குரல், இளி, துத்தம், விளரி, கைக்கிளை என்னும் ஐந்து சுரங்களுக்குரிய ஐந்து நரம்புகள் பொருந்திய வீணை என்றலும் ஆம்; 'கிளை-ஐந்து நரம்பு; என்னை ? கிளையெனப்படுவ கிளக்குங் காலைக், குரலே யிளியே துத்தம் விளரி, கைக்கிளை யெனவைந் தாகு மென்ப' (சிலப். 8: 33-4. அடியார்க்கு நல்லார் உரை). நான்கடிகளிலும் 'தம்' என்பன சாரியை.

(பி - ம்.) 1. பழையவர்: மனையின; மனையென: பழநற; பனி நறை; பகர்நறை; படுநறை: பயிலும்.
2. தம்மனையள; தமனையென: புரையும்: உரிய.
3. வன வொலி.
4. தம் மனையவ; தமனையென.
(50)

83. கோதைகள் சொரிவன குளிரிள நறவம்
பாதைகள் சொரிவன பருமணி கனகம்
ஊதைகள் சொரிவன வுயிருறு மமுதம்
காதைகள் சொரிவன செவிநுகர் கனிகள்.

கோதைகள் சொரிவன-(மைந்தரும் மகளிரும் அணிந்துள்ள) மாலைகள் சிந்துவன, குளிர் இள நறவம்-குளிர்ச்சி பொருந்திய இளந் தேன்; பாதைகள் சொரிவன-(தரையும், கடலும் ஆகிய) இருவகை வழிகளும் கொணர்ந்து கொட்டுவன, பருமணி கனகம்-பெரிய இரத் தினங்களும் பொன்னும் ஆகும்; ஊதைகள் சொரிவன-குளிர்ந்த காற் றுக்கள் சிந்துவன, உயிர் உறும் அமுதம்-உயிர் உடலிலே பொருந்தி யிருத்தற்கு ஆதாரமான நீர்த்துளிகள்; காதைகள் சொரிவன-பழைய வரலாற்றுப் பாடல்கள் வழங்குவன, செவி நுகர் கனிகள்-காதால் நுகரப்படும் இனிய இசைச் சுவைகளாம்.

கோதை-மகளிரின் கூந்தல் என்றும் ஆம்; தேனடையினின்றும் பெறப்படும் தேன் ஈக்கள் பல நாட்களாகச் சேர்த்தலால் முதிர்ந்த தாகும்; இங்கே அப்பொழுதே புதிதாகச் சிந்துதலால் 'இள நறவம்' என்றார். ஒரு நாட்டுக்கு வருவாய், தரை வழி, கடல் வழி ஆகிய இரண்டினாலும் (காலினும் கலத்தினும்) வருதலால் 'பாதைகள் சொரி வன' என்றார். வழிச் செல்வோர் விட்டுப்போன பொன்னும் மணியும் எடுப்பாரில்லாமல் அங்கங்கே கிடத்தலால், பாதைகள் மணியும் பொன்னும் சொரிவனவாகக் கூறினர் எனவுமாம். அமுதம்-நீர்: 'வானின் றுலகம் வழங்கி வருதலால், தானமிழ்த மென்றுணரற் பாற்று'(குறள். 11). ஊதைகள் அமுதத் துளிகளையே சிந்தும் என்பாரு முளர். கனி-சுவை; சாரம்; (சீவக. 1985. ந. உரை).

(பி - ம்.) 1. குளிரியல். 3. உறையுறும்; உறைவுறும்; உறையறு; உடையுறும்: இரதம். 4. செவியுறு கவிகள்; களிகள். (51

[வேறு]

84. இடங்கொள் சாயல்கண் டிளைஞர் சிந்தைபோல்
தடங்கொள் சோலைவாய் மலர்கொய் தாழ்குழல்
வடங்கொள் பூண்முலை மடந்தை மாரொடும்
தொடர்ந்து போவன தோகை மஞ்ஞையே.

இடம் கொள்-(மங்கையரை) இடமாகக் கொண்ட, சாயல் கண்டு - அழகைக் கண்டு, இளைஞர் சிந்தைபோல்-இளங் காளையர் மனம் (அவர்களைப் பின்தொடர்வது)போல, தடம் கொள் சோலை வாய்-பரப்பைக் கொண்ட சோலையிலே, மலர் கொய்-பூப்பறிக்கின்ற, தாழ்குழல்-நீண்டுதொங்கும் கூந்தலையும், வடம்கொள் பூண்முலை-பல வடங்களான அணிகளைக் கொண்ட தனங்களையும் உடைய, மடந்தை மாரொடும்-பெண்களோடு, தோகை மஞ்ஞை-தோகையை உடைய

ஆண் மயில்கள், தொடர்ந்து போவன-(அவர்களைப் பெண் மயில் களாகக் கருதிப்) பின் தொடர்ந்து செல்லும். ஏ-அசை.

இடம்கொள்-மிகுதியான என்றும், இடம்-பெருமை என்றும் கூறலாம். தடம்-உரிச்சொல். இதனால், அந்நாட்டு மங்கையரின் அழகுச் சிறப்புக் கூறப்பட்டது. மங்கையரைத் தம் இனமென மயில் கள் நினைத்து மயங்கின என்றதனால் இது மயக்கவணியாம்.

(பி - ம்.) 1. இடங்கள்: நெஞ்சுபோல்.

2 தடங்கள்; தடம்பெய்: சோலையின்; வேலைவாய்: மலர்பெய்; மழை பெய். மலர்செய்; தார்பெய்; தார்குழல்.

3. வடங்கள்: நுடங்கொள்: பூ முலை.

4. போயின; செல்வன: மஞ்ஞைகள். (52)

85. வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுந ரின்மையால்
உண்மை யில்லைபொய் யுரையி லாமையால்
ஒண்மை யில்லைபல் கேள்வி யோங்கலால்.

(அந்நாட்டில் எங்கும்), ஓர் வறுமை இன்மையால்-வறுமை ஒரு சிறிதும் இல்லாமையால், வண்மை இல்லை-கொடைச் சிறப்பு வெளிப்படத் தெரிவதில்லை; நேர் செறுநர் இன்மையால்-பகைத்து எதிர் நின்று போர் செய்வார் இல்லாமையால், திண்மை இல்லை-வலிமையின் சிறப்பு வெளிப்படுவதில்லை; பொய் உரை இலாமையால்-பொய் பேசுதல் இல்லாமையால், உண்மை இல்லை - உண்மையின் உயர்வு தெரிவதில்லை; பல் கேள்வி ஓங்கலால்-(எல்லோர்க்கும்) பல உயர்ந்த கேள்வி யறிவு மேம்பட்டிருத்தலால், ஒண்மை இல்லை-அறிவு மேம்பாடு தனியே விளங்குதலில்லை.

கல்வி கேள்விகளில் மேம்பட்ட அறிவு, உண்மை, செல்வம், வலிமை ஆகிய பண்பாடுகளில் எல்லோரும் உயர்ந்திருத்தலால், குறிப் பிட்டுப் பெருமையாகக் கூறுதற்கு உரியார் இல்லை என்றவாறு. ஈற் றடியில்'வெண்மையில்லை பல் கேள்வி மேவலால்' என்ற பாடமும் இக் கருத்துடையதே.

வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்: 'யாதுங், கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை' (166).

(பி - ம்.) 1. இல்லை நேர்; இன்மையோர்; இல்லதோர்: வறிஞரின்மையால்; வறிஞரில்லையால்; வறுமையில்லையால்.

2. இல்லையோர்; இல்லை போர்; இன்மையோர்: சிறுநர்: இல்லையால்.

3. இல்லைப் பொய்: இல்லாமையால்.

3. வெண்மை இன்மை பல்: மேவலால். (53)

86. எள்ளு மேனலு மிறுங்குஞ் சாமையும்
கொள்ளுங் கொள்ளையிற் கொணரும் பண்டியும்
அள்ள லோங்களத் தமுதின் பண்டியும்
தள்ளு நீர்மையிற் றலைம யங்குமே.

எள்ளும்-எள்ளையும், ஏனலும்-செந்தினையையும், இறுங்கும்-சோளத்தையும், சாமையும்-சாமையையும், கொள்ளும்-கொள்ளையும், கொள்ளையில் கொணரும்-மிகுதியாக ஏற்றிவருகிற, பண்டியும்-வண்டிகளும், அள்ளல் ஓங்கு அளத்து-(தொகுத்து) அள்ளுதல் மிகுந்த உப்பளங்களிலே உள்ள, அமுதின் பண்டியும்-உப்பு ஏற்றிய வண்டிகளும், தள்ளும் நீர்மையின்-(அவ்வப்போது) இடம்விட்டுப் பெயர்க்க வேண்டிய தன்மை யுடையனவாய், தலை மயங்கும்-இடந்தோறும் கலந்து நெருங்கும். ஏ-அசை.

எள் முதலிய ஐந்தும் புன்செய்ப் பொருள்கள். கொள்ளை-மிகுதி. அளத்து அமுது என்றதனால் உப்பாயிற்று. பொருள்களின் மிகுதியால் அவற்றை ஏற்றிச் செல்லும் வண்டிகளும் மிகப்பலவாதலின், இட நெருக்கத்தால் வண்டிகள் எங்கும் நில்லாது செலுத்தப்பட வேண்டுவது குறித்து, 'தள்ளும் நீர்மையின்' என்றார்.

தலை மயங்குதல்: 'கலுழி சென்று தலை மயக்குறுவ தம்மில்' (கிட்கிந்தா. *462*); 'வரம்பறு சும்மையர் தலை மயங்கினார்' (சுந்தர. *1058*); 'பெருஞ் செருத், தன்னில் வந்து தலைமயக் குற்றனர்' (யுத்த. *1001*).

(பி - ம்.) 1. இறுங்கு; இறுக்கும். 2. கொள்பவர்: பண்டியுற்று.
3. அள்ளலங் களத்து; ஆங் களத்து; ஒண் களத்து: அருத்தும் பண்டியும்.
4. தள்ளு நீர்மையாற்; தள்ளும் வேரியிற்; தள்ளு வேரியிற்; தள்ள நீர்; வயிற்: தரை மயங்குமே. (54)

87. உயருஞ் சார்விலா வுயிர்கள் செய்வினைப்
பெயரும் பல்கதிப் பிறக்கு மாறுபோல்
அயிருந் தேனுமின் பாகு மாயரூர்த்
தயிரும் வேரியுந் தலைம யங்குமே.

உயரும் சார்வு இலா உயிர்கள்-(ஒரு கதியில் பிறந்து) மேலே உயர்வு அடைவதற்கு உரிய பற்றுக்கோடு இல்லாத ஆன்மாக்கள், செய் வினை-தாம் செய்யும் வினைகளுக்கேற்ப, பெயரும் பல்கதி-மாறி மாறி வருகின்ற பல கதிகளில், பிறக்கும் ஆறுபோல்-பிறக்கும் வகையைப்போல, அயிரும்-கண்டசருக்கரையும், தேனும்-, இன் பாகும்-இனிய பாகும், ஆயர் ஊர் தயிரும்-இடையர்களின் ஊர்களில் பெறும் தயிரும், வேரியும்-கள்ளும், தலை மயங்கும்-தம்முள் இடம் மாறிச் செல்லும். ஏ-அசை.

உயரும் சார்வு-உயர்தற்குரிய பற்றுக்கோடு; பற்றற்றான் பற்று. கதி-நால்வகைக் கதிகள். இன் பாகு-கருப்பஞ் சாற்றை

இளம் பதத்தில் (கட்டியாகாமல் இருக்குமாறு) காய்ச்சி எடுக்கப்படுவது; இது தேன்பாகு எனவும் கூறப்படும். அயிரும் இன் பாகும் மருதத்துக்குரியவை; தேன்-குறிஞ்சிக் குரியது; தயிர்-முல்லைக் குரியது; கள் நெய்தலுக்குரியது; எனவே நானிலப் பொருள்களும் தமக்குள் இடம் மாறிச் சென்று விற்கப்படுகின்றன என்பதாம். அயிர்-புகைப்பதற்கு உரிய ஒருவகை வாசனைப் பொருள் எனவும் ஆம். இது யவன தேசத்தது என்பர் அடியார்க்கு நல்லார். (சிலப். 4: 35-6. உரை). இச் செய்யுளில் வரும் உவமையின் பொருத்தம் ஆராய்தற்குரியது.

(பி - ம்) 1. சாய்விலா; சோர்விலா; சோர்விலார்: உயிர்கொள்; உயிரின்: செய்வினை.
2. பல்கதி; செல்கதிப்.
3. அயரும்: தேரும்: மென்பாகும்; இன்னமுதுமாயர் தம்; இன்பாகு மாயரிற்; இன்பாகு மாயிடைத்.
4. தரை மயங்குமே: தலை மயக்குமே.

இப்பாட்டு ஒரு பிரதியில் இல்லை. (55)

88. கூறு பாடலுங் குழலின் பாடலும்
வேறு வேறுநின் றிசைக்கும் வீதிவாய்
ஆறு மாறும்வந் ததிர்ந்த தாமெனச்
சாறும் வேள்வியுந் தலைம யங்குமே.

கூறு பாடலும்-(வாயால்) பாடப்படும் மிடற்றுப் பாடலும், குழல் இன் பாடலும்-குழலில் இசைக்கப்படும் இனிய பாடலும், வேறு வேறு நின்று இசைக்கும்-வெவ்வேறு இடங்களிலே நிலைபெற்று ஒலிக்கின்ற, வீதிவாய்-(அகன்ற) வீதிகளிலே, ஆறும் ஆறும் வந்து எதிர்ந்தது ஆம் என-ஓர் ஆறும் மற்றோர் ஆறும் ஒன்றுக்கொன்று எதிரெதிராக வந்து கூடியது என்னும்படி, சாறும்-கடவுளர் திருவிழாக் காணும் மக்கள் திரளும், வேள்வியும்-திருமணங்களின் பொருட்டுக் கூடிய மக்கள் திரளும், தலை மயங்கும்-தம்முள் கலக்கும். ஏ-அசை.

சாறு, வேள்வி என்பன ஆகுபெயராய், அவற்றைக் காணும் மக்கள் திரளைக் குறிப்பன. மக்கள் திரள் வெள்ளம் போல் மிக்கிருத்தலின், 'ஆறு' என உவமித்தார். வீதிகளில் மங்கல நிகழ்ச்சிகள் எப்போதும் நிகழ்ந்த வண்ணம் இருத்தலின், அவற்றின் பொருட்டு இசை நிகழ்ச்சிகளும், இடையறுது நிகழும் என அந்நாட்டு ஊர்களின் இன்பச் சிறப்புக் கூறியவாறும். கூறு - இசைக்கின்ற எனப் பொதுப்படக் கூறலும் ஆம்; 'மொழிந்தன பல்லியம்' (249); 'புகன்ற தீங் குழல்' (சீவக. 1940).

வேள்வி-திருமணம்: 'நாமுன்பு தொண்டு கொண்ட வேள்வியில்' (பெரியபு. தடுத்தாட். 127.)சாறும் வேள்வியும்: ஒப்பு: 'வேள்வி

யும் விழாவும் நாடொறும் வகுத்து' (சிலப். 28: 232); 'விழவொலியும் வேள்வொலியுமானுன் கண்டாய்'(தே.நாவுக். மழபாடி).வேள்வி-யாகமும் ஆம்.

(பி - ம்.) 1. கூறும்: குழலும் வீணையும்.
2. நின்றசைக்கும்; சென்றிசைக்கும்: வேதிவாய்.
3. எதிர்ந்த வாமென; எதிர்த்த வாமென; எதிர்த்ததாமென; அடுத்த தாமென; ஒத்ததாமெனச்.
4. மயக்குமே. (56)

89. மூக்கிற் ருக்குறு மூரி நந்துநேர்
தாக்கிற் ருக்குறு பறையுந் தண்ணுமை
வீக்கிற் ருக்குறும் விளியு மள்ளர்தம்
வாக்கிற் ருக்குறு மொலியின் மாயுமே.

மூக்கில் தாக்கு உறும்-மூக்குப் போன்ற இடத்திலே வாய் வைத்து ஊதப்பெறுகின்ற, மூரி நந்தும்-வலிய சங்குகளின் முழக்கமும், நேர் தாக்கில் தாக்கு உறு பறையும்-நேரான குறுந்தடியால் அடிக்கப்படுகின்ற முரசின் ஒலியும், தண்ணுமை-மத்தளத்தினது, வீக்கில் தாக்கு உறும் விளியும்-வார்க்கட்டின் அதிர்ச்சியால் ஆன் ஒலியும், மள்ளர் தம்-வீரர்களுடைய, வாக்கில் தா்க்கு உறும் ஒலியின்-வாயினுல் எழுப்பப்படும் வீர முழக்கத்தில், மாயும்-அடங்கிப்போகும். ஏ-அசை.

சங்கு, பேரிகை, மத்தளம் முதலியன நாள்தோறும் நடைபெறும் விழா முதலியவற்றில் ஒலிப்பன; அவ்வொலி யெல்லாம் போர் வீரர் அவ்வப்போது செய்யும் வீர ஆரவாரத்தில் அடங்கிவிடும் என்கிருர். மள்ளர்-உழவர் எனக்கொண்டு, உழவர்கள் பகடுகளை உரப்பும் ஓசையில் மற்றவை அடங்கும் எனவும் கூறுவர்.

தாக்கு என்னும் முதல்நிலைத் தொழிற்பெயர், ஆகுபெயராய், தாக்குதலுக்குரிய கருவியைக் குறித்தது. நந்து, பறை என்பனவும் அவற்றின் ஓசைக்கு ஆயின.

(பி - ம்.) 1. தாக்குற; மூரிகோதை நேர்; மூரிதோதைநேர்; முரிந்து தோகைநேர்: முரிந்த கோதைநேர்; முறிந்த கோதைநேர்; முதிர்ந்த கோதை நேர்.
2. தாக்கித்; தாக்குறு; தாக்கறும்: பறையின்; தழங்கும்.
3. வீக்கித்: விரியும்: மள்ளர்கை; மன்னர் தம்.
4. ஆக்கித் தாக்குறும்: ஒலியின் மானுமே; ஒலியுமானுமே; ஒலியை மானுமே; ஒலியின் மானுமே. (57)

90. தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகு மக்களைப்
பாலி னூட்டுவார் செங்கை பங்கயம்
வானி லாவுறக் குவிதன் மானுமே.

ஐம்படை தாலி தழுவும் மார்பிடை-ஐம்படைத் தாலி பூண்ட மார்பிலே, மாலை வாய் அமுது ஒழுகும் மக்களை-மாலை மாலையாக வாயின் சொள்ளுநீர் வடியும் குழந்தைகளுக்கு, பாலின் ஊட்டுவார் செங்கை-(சங்கினால்) பால் புகட்டும் தாய்மாரின் சிவந்த கைகள், வால் நிலா உற-வெள்ளிய நிலாப் படுதலினால், பங்கயம் குவிதல் மானும்—தாமரைப் பூக்கள் குவிவதை ஒத்திருக்கும். ஏ-அசை.

பாலின்: இன் அல்வழிச் சாரியை.மக்களை: உருபு மயக்கம்.

ஐம்படைத்தாலி - இளங் குழந்தைகளுக்கு அனுக்கம் (பாலாரிஷ்டம்) நேராதபடி, காப்பாக, திருமாலின் பஞ்சாயுதங்களின் வடிவில் பொன்னால் செய்து கழுத்தில் அணிவிக்கும் ஓர் அணி; இதனை இருபால் குழந்தைகளுக்கும் ஐந்தா மாதத்தில் அணிவிப்பது முற்கால வழக்கம் என்பர். வால்-வெண்மை; உரிச்சொல். தாய்மார், சங்கினாலே குழந்தைகளுக்குப் பாலூட்டும் போது, அவர்களுடைய கை குவிந்திருத்தலால், கையைத் தாமரை மலராகவும் சங்கை நிலவாகவும் உருவகித்து, அந்நிலவு படுதலால் தாமரை குவிந்தது எனக் கூறுகின்றார். நிலாவுக் கேற்பச் சங்கு என்பது வருவிக்கப்பட்டது. பால் - பாற்சோறு என்பாரும் உளர். திருமாலின் பஞ்ச ஆயுதங்கள் : சங்கு, சக்கரம், வில், வாள், தண்டு என்பன.

ஐம்படைத்தாலி: அகநா. *54* ; புறநா. *77* ; மணி. *3* : *138*; *7*: *56*;கலிங்கத். அவதார. *9*; பெரியாழ். திரு. *1. 4*: *5*; திருவிளை. *39*; *25*.

(பி - ம்.) 1. தாலியம் படை: தழுவுமார்புடை; தவழு மார்பிடை.
2. ஆலைவாயமுது: ஒழுக்கும்; ஊறும்.
3. பா்லில்; செங்கைப். 4, குவிவ. (58)

91. பொற்பி னின்றன பொலிவு பொய்யிலா
நிற்பி னின்றன நீதி மாதரார்
அற்பி னின்றன வறங்க ளன்னவர்
கற்பி னின்றன கால மாரியே.

பொற்பின்-(அந்நாட்டு மக்களிடம்) அகத்தழகாகிய நற்குணங்களைப் போலவே, பொலிவு-புறத்தழகாகிய தோற்றமும் நல்லொழுக்கமும், நின்றன-எப்போதும் நிலைத்திருந்தன; பொய் இலா நிற்பின் - (அவர்களுடைய) பொய் இல்லாத (உண்மை) நிலையால், நீதி நின்றன- நீதி நெறிகள் (எங்கும்) நிலைத்திருந்தன; அறங்கள்-எல்லாத் தருமங்களும், மாதரார் அற்பின் நின்றன-பெண்களுடைய அன்பினால் நிலை பெற்றிருந்தன; அன்னவர் - அவர்களுடைய, கற்பின் - கற்பினால், காலம் மாரி - பருவ மழைகள், நின்றன - நிலை தவறாதிருந்தன. ஏ-அசை.

மக்கள் (ஆடவர்) எல்லோரும் நற்குணமும் நல்லொழுக்கமும் உடையவராய், பொய், வஞ்சனை முதலிய தீயகுணங்களில்லாதிருந்தத ஞல்,எங்கும் நீதிநெறி தழைத்திருந்தது; 'நெஞ்சத்து, நல்லம்யாமென் னும் நடுவு நிலைமையால், கல்வியழகே யழகு' (நாலடி. 131). பெண் கள் அறத்திற்குச் சார்வான அன்புடைமையும், கற்பின் உறுதியும் பெற்றிருந்ததனுல் எங்கும் தருமகாரியங்கள் குறைவின்றி நடந்த தோடு, அதற்குக் காரணமான பருவ மழையும் தவருமல் பெய்ய, நாடு செழிப்புற்றிருந்தது.

பெண்களின் இசைவு இன்றி ஆடவர் அறஞ்செய்தல் இயலாதா தலின், 'மாதரார் அற்பின் நின்றன அறங்கள்' என்ருர்: இறைவன் அளித்த இரு நாழி நெல்லைக் கொண்டே எண்ணுன்கு அறமும் குறை வின்றி நடத்திக் காட்டியவர் காமாட்சி தேவியார். பெண்களின் கற்பு, மழைக்குக் காரணமாகுமென்பதை, 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றெழுதெழுவாள், பெய்யெனப் பெய்யு மழை' (குறள்.55); 'வறனேடின் வையத்து வான்றருங் கற்பினுள்' (கலி.1 6); 'வானம் பொய்யாது வளம் பிழைப்பறியாது, நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது, பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு' (சிலப். 15: 145-7); 'வான்றரு கற்பின் மனையுறை மகளிர்'(மணி. 15: 77); 'பொழி மழை தருஉம், அரும்பெறன் மரபிற் பத்தினிப் பெண்டிரும்' (மணி. 16: 49-50) என்பவற்ருலும் அறிக. அற்பு-வலித்தல் விகாரம்.

(பி - ம்) 1. பொற்பு: பொய்யிலார்; பொய்யலா; பொய்யில.
2. நீத மாதரார்.
3. நின்றவன் றவங்கள்; அன்னவர்க்.
4. நின்றவண். (59)

92. சோலை மாநிலந் துருவி யாவரே
வேலை கண்டுதா மீள வல்லவர்
சாலும் வார்புனற் சரயு வும்பல
காலி னேடியுங் கண்ட தில்லையே.

சோலை மா நிலம் - பல சோலைகள் நிறைந்த மிகப் பெரிய அக் கோசல நாட்டை, துருவி-(முழுதும்) தேடிச் சென்று, வேலை கண்டு மீள வல்லவர்-(அதன்) எல்லையைக் கண்டு திரும்பி வந்து சொல்லத் தக்கவர், யாவர் - யார்? (ஒருவருமில்லை); சாலும் வார் புனல் சரயுவும் - மிக்க நீரொழுக்குடைய சரயு நதியும், பல காலின் ஓடி யும் - பல வாய்க்கால்களாகப் பரந்து (அந்நாடெங்கும்) பாய்ந்துங் கூட, கண்டது இல்லை-(அதன் எல்லையை முற்றும்) கண்டதில்லை. ஏ-அசை: தாம்-சாரியை.

நாட்டின் பரப்பு மிகுதியால், அதன் எல்லையைக் காண்பது அரிது என உயர்த்துக் கூறுகின்றவர், சரயு நதி பல கால்களால்

ஓடிச் சென்று தேடியும் காணமுடியாத அந்நாட்டெல்லையை இரு கால்களையுடைய மானிடர் எவ்வாறு சென்று காணமுடியும் என நயம்படக் கூறுகின்றார். கால்-வாய்க்கால், பாதம் என இரு பொருள் பட நின்றது. வேலை-எல்லை. சரயுவும், ஓடியும்:உம்மை உயர்வு சிறப்பு.

(பி - ம்.) 1. துருவும்: துன்னி; துன்னும்: யாவரோ.
2. கண்டு தான்: வல்லரே; வல்லரோ; வல்ல பேர்.
4. இல்லையால்.

இப்பாடல் ஒரு சுவடியில் இல்லை. (60)

93. வீடு சேருநீர் வேலை கான்மடுத்
தூடு பேரினு முலைவி லாநலம்
கூடு கோசல மென்னுங் கோதிலா
நாடு கூறினு நகரங் கூறுவாம்.

கால் மடுத்து-(ஊழிக்) காற்றால் மோதப்பட்டு, வீடு சேரும் நீர் வேலை - (வரம்பினின்றும்) விடுதல் பெற்ற நீரையுடைய கடலானது, ஊடு பேரினும் - (வரம்பு கடந்து) நிலத்தினூடே புரண்டு வந்தாலும், உலைவு இலா நலம் கூடு - (தான்) அழிதலில்லாத சிறப்பைக் கொண்ட, கோசலம் என்னும் - கோசலம் என்று சொல்லப்படுகிற, கோது இலா - குற்றமில்லாத, நாடு கூறினும் - நாட்டின் சிறப்பை (இதுவரை) கூறினோம்; (இனி), நகரம் கூறுவாம் - அந்நாட்டின் தலைநகரமாகிய அயோத்திமாநகரைப் பற்றிக் கூறுவோம்.

ஊழி பேரினும் தான் பேரா உயர்வுடையது எனக் கோசல நாட்டின் பெருமையை மிகுத்துக் கூறுகின்றார்.

ஊழிக் காலத்தில், ஐம்பெரும் பூதங்களும் தத்தம் வரம்பு கடத்தலால் ஒன்றின் ஒன்று ஒடுங்கி உலகம் அழிவுற்று, மீண்டும் முறையாகப் படைக்கப்படும் என்பர்; அத்தகைய ஊழிக் காலத்தும் அழிவுறாதது கோசலம் என்றார்.

வீடு: முதனிலை திரிந்த தொழிற்பெயர்: கூடு கோசலம்; வினைத்தொகை. மடுத்து - மடுத்தலால்.

(பி - ம்.) 1. வீடு சேர; வீடு சோரி; வேலைதான்; வேலைவாய்.
2. உலைவிலா நிலம். 3. கோசலை: கோதிலார்.
4. கூறி நாம்; கூறிப் பின்; கூறினோம்; கூறினம். (61)

இச் செய்யுள் சில பிரதிகளில் நகரப்படலத்தின் முதற் பாட்டாக உள்ளது.

நாட்டுப் படலம் முற்றும்.



## 3. நகரப் படலம்

நகரப் படலம்: (கோசல நாட்டின் தலைநகராகிய) அயோத்தி மாநகரத்தின் சிறப்புக்களை விரித்துக் கூறும் படலம் என விரியும்.

### நகரத்தின் பெருமை

(பொது)

94. செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற்
சீரிய கூரிய தீஞ்சொல்
வவ்விய கவிஞ ரனைவரும் வடநூன்
முனிவரும் புகழ்ந்தது வரம்பில்
எவ்வுல கத்தோ ரியாவருந் தவஞ்செய்
தேறுவா னுதரிக் கின்ற
அவ்வுல கத்தோ ரிழிவதற் கருத்தி
புரிகின்ற தயோத்திமா நகரம்.

அயோத்தி மா நகரம் - (இராமபிரான் அவதரிப்பதற்கு இடமான) அயோத்தி என்னும் பெருமை மிக்க நகரமானது, செவ்விய - செம்மையுடையனவும், மதுரம் சேர்ந்த - சுவை பொருந்தியனவும், நல் பொருளில் சீரிய - சிறந்த பொருள்களைத் தரும் மேம்பாடு உடையனவும், கூரிய-நுட்பமுடையனவும் (ஆன), தீம் சொல்-இனிய சொற்களை, வவ்விய - தமதாக்கிக் கொண்ட, கவிஞர் அனைவரும் - (எல்லா மொழிகளிலும் உள்ள) கவிவாணர்கள் எல்லோரும், வடநூல் முனிவரும்-இராமாயணத்தை வடமொழியிலே செய்த முனிபுங்கவர்களும், புகழ்ந்தது - பாராட்டப் பெற்றது; வரம்பு இல் - அளவற்ற, எவ் உலகத்தோர் யாவரும்-எந்த உலகத்திலும் உள்ள (பெரியோர்) அனைவரும், தவம் செய்து - மிக்க தவத்தைச் செய்து, ஏறுவான் ஆதரிக்கின்ற - உயர்வாக அடைய விரும்புகின்ற, அவ் உலகத்தோர்-அந்த (மீளாவுலகமான) வைகுந்தத்தில் உள்ளவர்களும், இழிவதற்கு அருத்தி புரிகின்றது - இறங்கி வந்து பிறப்பதற்கு ஆசைப்படும் சிறப்புடையது.

'செவ்விய' என்பது முதல் 'வவ்விய' என்பது வரை கூறப்பட்ட எல்லாவற்றையும் வடநூல் முனிவர்க்கும் விசேடணமாக்குக. செம்மை-பொருளை நேராகக் குறிக்கும் தன்மை. மதுரம் - ஒன்பான்

சுவைகளும் பொருந்தியிருத்தல். பொருள் மேம்பாடு உடைமை - சொல்லணி பொருளணிகள் பலவும் பொருந்தி, நவின்றோர்க்கு இனிமை பயத்தல். நுட்பம் - பொருளாழமும் உள்ளுறை பொருளும் உடையனவாதல். செவ்விய-அழகுடையன எனக் கொண்டு, இடத்துக் கேற்ற நடையமைப்பும், சந்தமும், மிடுக்கும், மென்மையும் பொருந்தி யன எனவும் பொருள் கூறுவர். இராம சரிதம் உலகத்திலுள்ள எல்லா மொழிகளிலும், அவ்வவற்றில் வல்ல புலவர்களால் இயற்றப் பெற்று வழங்குவதனால், 'கவிஞர் அனைவரும்' என்றார். வடநூல் முனிவர் எனத் தனியே குறித்தது, அவர்கள், இராம சரிதம் தோன் றக் காரணமாயிருந்தமையும், அவர்களியற்றிய நூல் தேவரும் பருகும் சிறப்புடையனவாதலும் பற்றி என்க; அம் முனிவராவார், சிறப்புப் பாயிரத்துள்ள 'தேவபாடையின்' என்ற பாடலுள் கூறப்பெற்றோர். [ஆசிரியர் பிற கவிஞரனைவர்க்கும் கூறிய விசேடணங்கள் எல்லாம் அவருக்கும் உரியனவாகும்]

அளவற்ற எல்லாவுலகத்தோரும் என்றது, புவர் லோகம் முத லிய மேலேழுலகங்களும், அதலம் முதலிய கீழேழுலகங்களும் இவற் றின் அங்கமான பல அண்டங்களும் அடங்க. இவ்வாறுள்ள எல்லா வுலகத்தவரும் தவம் செய்து அடைய விரும்புவது வைகுந்தம் போன்ற மோட்ச வுலகம்; அங்குள்ளவர்களும் மீண்டு வந்து பிறக்க விரும்புதற்கு இடமானது அயோத்தி எனின், அதன் பெருமைகளை அளவிட முடியாது என்றவாறும். திருமால் தமது முழு அம்சத்துட னும் தோன்றப் பெற்றது இராமாவதாரமாதலால், அதற்கிடமான அயோத்தியில் தாங்களும் பிறந்து இராமபிரானோடிருத்தற்கு விரும் பினர் என்றல் பொருந்தும். அயோத்தி 'பொருதற்குரிய பகைவர் இல்லாதது' எனப் பொருள்படும் வடசொல். அயோத்தி என்ற பெயர் வைகுந்தத்திற்கும் உரியது. 'இராமனிருக்குமிடம் அயோத்தி' என்ற உலக வழக்கும் நோக்கத்தக்கது. 98, 99-ஆம் பாடல்களும் பார்க்க.

அவ்வுலகத்தோர் என்றதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது அருத்தி புரிதல் - ஆசை கொள்ளுதல். புரிதற்கு இடமானது என்ப தனை, புரிவது என இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேலேற்றிக் கூறப்பட்டது. புரிகின்றது என நிகழ் காலத்தாற் கூறி னார், அத்தகைய சிறப்பினை எப்போதும் உடையது என்றற்கு. 'துறக்கமா மென்னலாய தூமதி லயோத்தி' (அயோத். 672).

(பி - ம்.) 1. திவ்விய: சேர்ந்தன: சூரியல்; கூறிய; இன்சொல்.
2. எனைவரும்: புகழ்ந்தன; புகழ்ந்துள; புகன்றது; வசம்பின்.
3. ஆதரிக்கின்றது.
4. அருத்திப் புரிகின்ற வயோத்தி மானகரம். (1)

95. நிலமகண் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ
இலகுபூண் முலைமே லாரமோ வுயிரி
னிருக்கையோ திருமகட் கினிய
மலர்கொலோ மாயோன் மார்பினன் மணிகள்
வைத்தபொற் பெட்டியோ வானோர்
உலகின்மே லுலகோ வூழியி னிறுதி
யுறையுளோ யாதென வுரைப்பாம்.

(அயோத்தி நகரமானது), நிலமகள் முகமோ-(திருமாலின் தேவியாகிய) பூமிப் பிராட்டியின் முகமோ! திலகமோ - அம்முகத்திற்கு அழகு மிகச் செய்யும் நெற்றித் திலகமோ! கண்ணோ-சிறந்த உறுப்பாகிய கண்ணோ! பூண் இலகும் முலைமேல் ஆரமோ - பல ஆபரணங்களுடன் விளங்கும் தனங்களின் மேலே சிறப்பாக அணிந்த முத்தாரமோ! நிறை - (எல்லா அணிகளிலும்) மேம்பட்ட, நெடு - பெருமை பொருந்திய, மங்கல நாணோ - மாங்கலிய சூத்திரமோ! உயிரின் இருக்கையோ - (அந் நிலமகளின்) உயிர் இருக்குமிடமோ! திருமகட்கு இனிய மலர் கொல் ஓ - இலக்குமிதேவி மகிழ்ந்து வீற்றிருத்தற்கு உரிய தாமரை மலரோ! மாயோன் மார்பில் நல் மணிகள் வைத்த பொன் பெட்டியோ - திருமாலின் மார்பில் அணியப்பெற்ற கௌத்துபம் போன்ற சிறந்த மணிகள் வைத்துள்ள பொன்னாலாகிய பெட்டியோ! வானோர் உலகின்மேல் உலகோ - தேவருலகமாகிய சுவர்க்கத்தினும் மேம்பட்டதாகிய வைகுந்தமோ! ஊழியின் இறுதி உறையுளோ - ஊழியின் முடிவுக் காலத்திலே உயிர்கள் அடங்குமிடமாகிய திருமாலின் திருவயிறோ! யாது என உரைப்பாம் - எது என்று அதனை எடுத்துக் கூறுவோம்! (இவற்றுள் ஒன்றும் அந்நகருக்கு ஈடாகாது என்றபடி).

திருமாலின் தேவியர் இருவரையும் குறிக்கும்போது, 'சீதேவி, பூதேவி' என்று திருமகளையே முதலில் வைத்துக் கூறுவது மரபாயினும், அத்திருமால் இராமபிரானாக அவதரிக்கத் திருவுளம் பற்றிய சிறப்புப் பற்றி, பூதேவியை முதலில் வைத்து, அவளுடைய முகமோ என்று முதலிற் கூறினார். முகத்திற்கு அழகை மிகுத்துக் காட்டுவது நெற்றித் திலகம் ஆதலின், திலகமோ! என்றார். திலகம் செயற்கையானதால், இயற்கையழகுடையதாய், 'கண்ணிற் சிறந்தவுறுப்பில்லை' யென்றபடி சிறப்புடையதாகிய கண்ணோ!என்றார். பலவகைச் சிறப்புக்களும் அழகும் உடையதாதல் பற்றி. 'இலகுபூண் முலைமேல் ஆரமோ' என்றார். அழகு செய்யும் அணிகளுக்கெல்லாம் ஆதாரமானது மங்கல நாணாதலின் அதனை, 'நிறை, நெடு', என்ற விசேடணங்களோடு கூறினார். பூமிப் பிராட்டியின் உயிருக்குயிரான திருமால் அவதரித்துத் தங்கிய இடமாதலின், 'உயிரின் இருக்கையோ' என்றார்.

இனி, சீதேவியின் தொடர்பு கூறத் தொடங்கி, அவள் மகிழ்ந்து வீற்றிருத்தற்குரிய ஆயிரவிதழ்த் தாமரையோ! என்ருர். மேலே, தலைவனைத் தொடர்புபடுத்திக் கூறுகின்றவர், அவன் திரு மார்பில் அழகு செய்யும் கவுத்துவம் போன்ற சிறந்த மணிகளுக்கிட மானபொற்பெட்டியோ என்ருர். மணிகளின் பெருமைக்கேற்ப அவை வைத்தற்குரிய பெட்டியும் பொன்னுலான தென்ருர். திருமகட்கு இனிய மலர்-திருமகளின் அவதாரமான சீதா பிராட்டிக்கு உகந்த இருப்பிடம் என்ற நயமும் காண்க.

மேலே தேவருலகமோ, அதனினும் மேம்பட்ட வைகுந்தமோ எதுவும் இந்த ஒரு நகரத்துக்கீடாகாதென்று கூறி, இறுதியில், சிகர மாக, 'ஊழியின் இறுதி உறையுளோ' என்ருர். யுக முடிவிலே உலக மெல்லாம் அழியும்போது உயிர்களைத் தன்னகத் தடக்கிக்காப்பது திரு மாலின் திருவயிறு. அதுபோல, எங்கும் பஞ்சமிகுந்து உயிர்கள் துன்பு றும்போது அவை தன்னிடம் வந்து ஆதரவு பெற்று இனிது இருத்தற் குரிய வளம் நிறைந்ததென்பார் இவ்வாறு உவமித்தார். இன்ன தென்று வரையறுத்துக் கூறவியலாமையின் 'யாதென வுரைப்பாம்' என்று முடித்தார்.

இனி, 'நிறைநெடு மங்கல நாண்' என்பதில் நிறை என்பதற்கு, மற்ற அணிகலன்களை நிறைக்கின்ற என்றும், பெண்மைக்குச் சிறப்பை மிகுக்கின்ற என்றும் பொருள் கொள்ளலாம்.

அயோத்திக்குக் கவுத்துவ மணி உவமை: அயோத். 127. 'உயி ரின் இருக்கையோ-ஆன்மாக்கள் எல்லாம் கூடியிருக்கின்ற சத்திய லோகமோ! உலகின்மேலுலகு-வைகுண்டம். ஊழியின் இறுதி உறை யுள்-பரமபதம், (பழையவுரை). 'ஊழியினிறுதியுறையுள் - சங்கார காலத்திலே எல்லாரும் போய்ச் சேர்ந்திருக்கிற சிவலோகம்' (வேருேர் உரை) 'ஊழி வாழ் திருநகர்' (அயோத். 840).

ஒரு பொருளைப் பலவாறு கூறி வருணித்தல் பலபடப்புனைவணி யாகும். மலர்கொலோ என்பதில் 'கொல்' அசை.

(பி - ம்,) 1. திலதமோ: மங்கலந்தானே.

2. விலைகொள் பூண்: திருமகட்குரிய.

3. நெடியோன்: மார்பின் பன் மணிகள்; மாபினின் மணிகள்; மார்பத் தின் மாலை; மார்பத்து மாலை; மார்பத்து மணித்தார்; மார்பத்து மழுத்தி; மார்பினன் மணிக்கலம்; மார்பினன் மாலை; மார்பகத் தாரம்; தருண மார்பகத்து: பெட்டியோ மலரோன்

4. இறுதிக் குறையுளோ; இறுதிக் குறைவுளோ. (12)

96. உமைக்கொரு பாகத் தொருவனு மிருவர்க்
கொருதனிக் கொழுநனு மலர்மேல்
கமைப்பெருஞ் செல்வக் கடவுளு முவமை
கண்டில ரங்கது காண்பான்
அமைப்பருங் காத லதுபிடித் துந்த
வந்தரஞ் சந்திரா தித்தர்
இமைப்பிலர் திரிவ ரதுவலா லிதனுக்
கியம்பலா மேதுமற் றியாதோ!

உமைக்கு ஒரு பாகத்து ஒருவனும் - உமாதேவிக்குத் திருமேனியின் ஒரு பாகத்தை ஈந்த ஒப்பற்ற சிவபெருமானும், இருவர்க்கு ஒரு தனி கொழுநனும்-சீதேவி, பூதேவி ஆகிய தேவியர் இருவர்க்கும் ஏக நாயகனான திருமாலும், அலர்மேல்-(திருமாலின்) திருவுந்தித் தாமரையில் வந்த, கமை பெரு செல்வம் கடவுளும்-பொறுமையைப் பெருஞ் செல்வமாகவுடைய பிரமதேவனும், உவமை கண்டிலர்-(அவ்வயோத்திநகருக்கு),உவமையாக வேறொரு நகரத்தைக் கண்டறியார்; அது காண்பான்-அவர்களுங் காணாத அதை (உவமையான வேறு நகரத்தைக்) காணும் பொருட்டு, அமைப்பு அரு-அடக்குதற்கு அரிய, காதல் அது பிடித்து உந்த-ஆசையானது தங்களைப் பிடித்துத் தள்ள, சந்திர ஆதித்தர்-சந்திர சூரியர்கள், அந்தரம்-ஆகாயத்திலே, இமைப்பு இலர் திரிவர் - கண் இமைக்காதவர்களாய் (விழிப்புடன்) சுற்றித் திரிகின்றனர்; இதனுக்கு இயம்பல் ஆம் ஏது-இவ்வாறு திரிவதற்குச் சொல்லக் கூடிய காரணம், அது அல்லால்-அதை யன்றி, மற்று யாதோ-வேறு யாது உளது? ஓ-எதிர்மறை.

மும்மூர்த்திகளும் கண்டறியாத ஒன்றைத் தாங்கள் காண முயலுவது பேதைமை என்றவாறு. சந்திர சூரியர்களின் இயற்கையான சஞ்சாரத்துக்குத் தம் கருத்தாக ஒரு காரணங் கற்பித்துக் கூறினமையின், இது ஏதுத் தற்குறிப்பேற்ற அணியாம். கமை: 'க்ஷமா' என்ற வடசொல்லின் திரிபு. இமைப்பிலர் திரிவர்-மிகவும் விழிப்புடன் அலைகின்றனர்.

(பி - ம்.) 1. இறைவனும்; இருவர்.
2. கமனப்பரும்; கடவுளு முதலோர்; கடவுளோர் முதலோர்; கடவுளர் பிறரும்; கடவுளே முதலோர்; கடவுளு முலகம்; கடவுளு முலகர்; கண்டிலர்; நகரிது; நகரது; கண்டான்.
3. அமைப் பெருங்; காதலிது பிடித்து; காதன் முன் பிடித்து; காதன் மேப்பிடித்து; அந்திரம்.
4. இமைப்பிலார்; திரிவார்; தெரிவர்; இது வல்லால்; இதுவலால்; இவரலாது; ஈதலாது; ஈதலால்; அதனுக்கு; ஓதலாம்; ஏது வேறுளதோ; ஏது வேறியாதோ; உவமை மற்றியாதோ; உவமை வேறியாதோர்.
(3)

97. அயின்முகக் குலிசத் தமரர்கோ னகரு
மளகையு மென்றிவை யயனூர்
பயிலுற வுற்ற படிபெரும் பான்மை
பகர்திரு நகரிது படைப்பான்
மயன்முதற் றெய்வத் தச்சருந் தத்த
மனத்தொழி னாணினர் மறந்தார்
புயறொடு குடுமி நெடுநிலை மாடத்
திந்நகர் புகலுமா றெவனோ!

அயில் முகம் குலிசத்து—கூரிய வாயினையுடைய வச்சிராயுதத்தை யேந்திய, அமரர்கோன் நகரும்-தேவேந்திரனது இராசதானியாகிய அமராவதியும், அளகையும்-(குபேரனது) அளகாபுரியும், என்று இவை-என்று (சிறப்பாகச்) சொல்லப்படும் இந்நகரங்கள், (படைக்கப்பட்டமை), அயனூர்-பிரமதேவன், பெரும்பான்மை பகர்-பெருஞ் சிறப்போடு (யாவராலும்) பாராட்டப்படுகிற, திருநகர்இது-செல்வமிக்க நகரமாகிய இவ்வயோத்தியை, படைப்பான்-(மிகவும் மேன்மையாக) படைக்கும் பொருட்டு, பயிலுறவு உற்றபடி - பழக்கப்படுத்திக் கொண்டபடியாகும்; (ஆதலால் இந்நகரின் பெருஞ் சிறப்புக்களைக் கண்டு), மயன் முதல் தெய்வத் தச்சரும்-மயன் முதலான தெய்வத் தன்மை பொருந்திய சிற்பிகளும், நாணினர்-(நம்மால் இத்தகையது ஒன்றை நிருமிக்க முடியாதென்று கருதி) நாண முற்றவர்களாய், தம் தம் மனம் தொழில் மறந்தார்-அவரவர் தம் மனத்தாலேயே நினைத்து நிருமிக்கும் திறனை மறந்துவிட்டனர் (என்றால்), புயல் தொடு குடுமி-மேகமண்டலத்தை அளாவிய சிகரங்களோடு கூடிய, நெடுநிலை மாடத்து-உயர்ந்த உபரிகைகள் அமைந்த மாளிகைகளை யுடைய, இ நகர்-இவ்வயோத்தி நகரின் பெருமைகளை, புகலும் ஆறு எவன்—(என் போன்றோர்) விரித்துச் சொல்வது எவ்வாறு இயலும்? ஓ-அசை நிலை.

அயோத்தி நகரத்தைத் தனிப் பெருஞ் சிறப்புக்களுடன் படைக்கக் கருதிய பிரமதேவன், அதற்கு முன்மாதிரியாகப் பழகிக் கொள்ளும் பொருட்டு, இன்பத்துக்கும் செல்வத்துக்கும் எடுத்துக் காட்டாக உலகோர் புகழும் இரு நகரங்களையும் முதலில் படைத்து, பின்பு அவற்றினும் மேம்பட அயோத்தியைப் படைத்தானாதலால், அதன் சிறப்புக்கள் அளவிட முடியாதவை. எனவே, சங்கற்பத்தாலேயே மிகச் சிறந்த பலவற்றையும் நிருமிக்கும் ஆற்றலுடைய மயன் முதலியவர்களும், இதனைக்கண்டு, தம் ஆற்றலை இகழ்ந்து, நாணங்கொண்டு தம்முடைய படைப்புத் திறனையும் மறந்தனர் என்றால், மானிடராகிய என்போல்வார் இந்நகரத்தின் சிறப்புக்களை எடுத்துரைத்தல் எவ்வாறு இயலும்? (இயலாது) என்று முதலில் உயர்த்துக் கூறி, இயலாதாயினும் ஒருவாறு சிறிதளவேனும் கூறுவேன் என்ற கருத்துப்படக் கூறிக்கொள்கின்றார் ஆசிரியர்.

மயன், தெய்வத்தச்சன் என்று சிலரும் அசுரத்தச்சன் என்று வேறு சிலரும் கூறுவர். மயனைப் போலவே மனத்தால் நிருமிக்கும் ஆற்றலுடைய 'விசுவ கர்மா' என்பவன் தெய்வத்தச்சன் என்பர் சிலர். இவ்விருவரையும் போன்றவர் இன்னும் உளராயின் அவர்களும் அடங்க, 'மயன் முதல் தெய்வத்தச்சரும்' என்றார்.

தச்சரும்; உம்மை, உயர்வு சிறப்பு. என்றிவை-அகரம் தொகுத்தல். பயிலுறவு-பயிலுதல்; தொழிற் பெயர். பெரும்பான்மை பகர்தல்-மிகப்பாராட்டிப் பேசுதல்.

மயன் செய்தி: சிலப். 2:12-அடியார்க்கு நல்லார் உரையிலும், வி. பா. இராசசூயம் 5-8 பாடல்களிலும் காண்க,

(பி - ம்.) 1. கோ நகரும்; என்னிலவ்வயனூர்; என்றிவையயனூற்; எனிலவை யென்னும்; எண்ணிய வயனூற்; எண்ணில வயனூர்.

2. பயிலுறலுற்ற; பயில்வுறலுற்ற; பயில்வுறலுறற்பொருட்; பயில்வுறவுற்ற; பயனுறலுற்ற; பெரும்பாலும்; பெரும்பான்மைப்; பெரும்பகலும்; பெரும்பாரிற்; பெரும்பாரின்; பயிலுறலுற்ற; படைப்பரும் பான்மைப்; அப் பெருந்திருநகர்; பெருந் திருநகரது; பல பெருந் திருநகர்; பகர் திருநகரது; படைப்பார்.

3. நாணினர்; நாணினல்; நாணினன்.

4. புயரெடுங்; நெடுநிலைமாடப்; நெடுநிலாமாடத்; நெடுநிலம் மாடத்; நெடுநில மாடத்; நீணிலை மாடத்: திருநகர்; பொன்னகர்; அந்நகர்; புகழுமாறு. (4)

98. புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க
மென்னுமீ தருமறைப் பொருளே
மண்ணிடை யாவ ரிராகவ னன்றி
மாதவ மறத்தொடு வளர்த்தார்
எண்ணருங் குணத்தி னவனினி திருந்திவ்
வேழுல காளிட மென்றால்
ஒண்ணுமோ வதனின் வேறொரு போக
வுறைவிட முண்டென வுரைத்தல்.

'புண்ணியம் புரிந்தோர்-(இம்மையில்) நல்ல புண்ணியங்களைச் செய்தவர்கள், புகுவது-(மறுமையில்) போய்ச் சேர்வது, துறக்கம்-சுவர்க்கமாகும்,' என்னும் ஈது-என்று சொல்லப்படுகிற இது, அரு மறை பொருளே - அருமையான வேதத்தில் சொல்லப்பட்ட உண்மையே; மண்ணிடை-இவ்வுலகத்திலே, இராகவன் அன்றி-இராமபிரானையல்லாமல், யாவர்-வேறு எவர்தாம், அறத்தொடு மாதவம் வளர்த்தார்-தருமத்துடனே சிறந்த தவத்தையும், (நன்கு) வளரச் செய்தவர்கள்? எண்ண அரு குணத்தின் அவன்-அளவிடுதற்கரிய கல்யாண குணங்களையுடைய அவ்விராமபிரானே, இனிது இருந்து-இனிதாக வீற்றிருந்து, இவ் ஏழ் உலகு-ஏழு தீவுகளாகவுள்ள இப்பூவுலக

முழுவதையும், ஆள் இடம் என்றால்-ஆண்ட இடம் அவ்வயோத்தியென்றால், அதனின்-அதனினும் மேலாக, போகம் உறைவுவேறு ஒரு இடம்-எல்லாப் போகங்களும் தங்கியிருத்தற்குரிய வேறோர் இடம், உண்டு என உரைத்தல்-உண்டு என்று (திடமாகச்) சொல்லுதல், ஒண்ணுமோ—இயலுமோ? (இயலாது).

இம்மையில் புண்ணியம் செய்தவர்கள் மறுமையில் சுவர்க்கம் அடைந்து இன்புறுவார்கள் என்பது வேதவாக்கு; சுவர்க்கத்தினும் பன்மடங்கு மேற்பட்டதும் அடைய அரியதுமானது வைகுந்தம். அவ் வைகுந்தபதியே இராமபிரானாக வந்திருந்து அரசாண்டவிடம் அயோத்தியென்றால், அதன் இன்ப முதலிய சிறப்புக்களை அளவிட யாரால் இயலும்? எனவே, கண்ணிற்காணாத சுவர்க்கத்தினும், (நேரே காணத்தக்க) அயோத்தியில் இராமபிரானது ஆளுகையின் கீழ் இருத்தல் எவ்வகையிலும் ஏற்றமுடையதாகும் என்பது கருத்து.

மேலும், கருமம் செய்தல் ஓரிடத்திலும் அதன் பயனை நுகர்தல் வேறு ஓரிடத்திலுமாக இல்லாமல், கரும பூமியும் போக பூமியும் தானேயாய் அமைந்த பெருமையும் உடையது அயோத்தி என்ற நயமும் காண்க.

மண்ணிடை..........வளர்த்தார் என்பதற்குப் பிறவாறும் பொருள் கூறுவர்:

புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்கம்: ஒப்பு: 'அறம் பெரிதாற்றி யதன்பயன் கொண்மார், சிறந்தோருலகம் படருநர் போல' (பரி. *19:10-11*); 'ஈண்டுச்செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர், உயர்ந்தோ ருலகத்துப் பெயர்ந்தனன்' (புறநா. *174*); 'ஈண்டுச் செய்வினை யாண்டு நுகர்ந்திருத்தல்' (மணி. *14:38*). இராமபிரான் எண்ணருங்குணத்தினன்: **அயோத். *1040, 1206*; யுத்த. *155, 1588*.** இராமபிரான்தரும மூர்த்தி: **ஆரணிய. *31, 50, 136, 139, 860*; கிட்கிந்தா. *257, 348, 360*; சுந்தர: *363, 639, 1123*.**

இராமபிரான் ஆளுதற் சிறப்புப் பெற்றது அயோத்தியென்பதை அடுத்த பாட்டிலும் கூறுகின்றார்.

(பி - ம்.) 1. புரிந்தார்; துறக்க மென்னு மிது; துறக்கமெண்ணு மீது; சுவர்க்க மென்னுமீது; பொருளேல்; பொருளோ.
2. மண்மிசை; மண்ணின் மேல்; மண்ணினில்; யாரே; அல்லான்; அறத்தொடும்; வளர்த்தோர்.
3. குணத்தன்; குணத்த: அவனினி திருந்திங்கேழுலகு; அவனினி திருந்தவ்வேழுலகு; இவனினி திருந்திங் கேழுலகு; இவனினி திருந்திவ்வேழுலகு; அவரினி திருந்தீரேழுலகு; அவ்னி சேர்ந்திருந்திவ்வேழுலகு; ஆள்விடம்.
4. ஒண்ணுமே; எண்ணுமே: இதனின்; அதனில்; இதனில்; மேலொரு போகத்; போகம்; உறையிடம்; உரைத்தால்; உணர்தல், (5)

99. தங்குபே ரருளுந் தருமமுந் துணையாத்
தம்பகைப் புலன்களைந் தவிக்கும்
பொங்குமா தவமு ஞானமும் புணர்ந்தோர்
யாவர்க்கும் புகலிட மான
செங்கண்மால் பிறந்தாண் டளப்பருங் காலந்
திருவின்வீற் றிருந்தன னென்றால்
அங்கண்மா ஞாலத் தந்நக ரொக்கும்
பொன்னக ரமரர்நாட் டியாதோ.

தங்கு-தம்மிடத்தேயுள்ள, பேர் அருளும்-மிக்க அருளும், தருமமும்-—,துணை ஆக-சாதனமாகக் கொண்டு,தம் பகை புலன்கள் ஐந்து அவிக்கும்-தமக்குப் பகையான ஐம்புலன்களையும் அடக்கிச் செய்யப் படுகிற, பொங்கும் மாதவமும்-மேன்மேலும் வளர்கின்ற பெருந்தவமும், ஞானமும்-(அவ்வாறு வளர்கின்ற) தத்துவ ஞானமும், புணர்ந்தோர் யாவர்க்கும்-கைவரப் பெற்றவர்களாகிய (இல்லறத்தார், துறவறத்தார்) எல்லோருக்கும், புகலிடம் ஆன-சரணமாக அடைதற்குரியவிடமான, செம்மை கண் மால்-செவ்விய திருநயனங்களையுடைய திருமால், பிறந்து - அவதரித்து, ஆண்டு-அதனை ஆண்டு கொண்டு, அளப்பு அரு காலம்-அளவிடற்கு அரிய நெடுங்காலம், திருவின்-திருமகளமிசமான சீதாப் பிராட்டியாரோடும், வீற்றிருந்தனன் என்றால்-சிறப்பாக எழுந்தருளியிருந்தான் என்றால், அம் கண் மா ஞாலத்து-அழகிய இடமகன்ற இப்பூமியிலுள்ள, இ நகர் ஒக்கும் பொன் நகர்- இந்த நகரத்துக்கொப்பான மேன்மையுள்ளதொரு நகரம், அமரர் நாட்டு யாது-தேவருலகத்திலே யாது உள்ளது? ஓ-எதிர் மறை.

முன் பாட்டில் அமைந்த கருத்தையே இதில் வேறொரு வகையாகக் கூறுகின்றார் ஆசிரியர். அங்கே, அநந்த கல்யாண குணசீலனை இராமபிரான் இருந்து உலகையாண்டவிடம் என்று பெருமை கூறியவர், இதில், திருமால், தான் இராமபிரானாக அவதரித்தற்கு ஏற்ற இடம் இதுவேயென்று இதனைத் தேர்ந்தெடுத்துக் கொண்டதோடு அவ்வாறு அவதரித்து மிக நெடுங்காலம் பிராட்டியுடன் இனிது வீற்றிருந்ததும் இவ்விடமாதலால், இதற்கிணை யெங்குமில்லையென்று, மேலும் சிறப்புத் தோன்ற விரித்துக் கூறியுள்ளார். தேவலோகத்திலேயே இதற்கிணையானதொரு நகரம் இல்லையென்றால், இவ்வுலகத்தில் இல்லாமை, கூற வேண்டுவதில்லை.

மேனிலை அடைதற்குத் தடையாக, மனத்தைத் தம்வழி செலுத்துவனவாதலால், புலன்களைப் பகையென்றார். ஐந்து அவிக்கும் மாதவம் என்றும், பொங்கும் மாதவம் என்றும் தனித்தனி கூட்டுக. அவிக்கும் என்பதனைப் 'புணர்ந்தோர்' என்பதனோடு கூட்டி உரைத்த

லும் ஆம். புலன் களைந்து அவிக்கும் எனப் பிரித்து, புலன்களின் ஆற்றலைத் தொலைத்து அடக்கும் என உரை கொள்ளலும் ஆம்.

அருளால் தருமமும், தரும சிந்தையால் புலனடக்கமும், அவ்வடக்கத்தால் தவமும், தவத்தால் ஞானமும், ஞானத்தால் கடவுள் நிலையும் முறையே கைகூடும். இவ்வாறு கைவரப் பெற்றோர் யாவராயினும் அவர்க்கெல்லாம் சரண்யன் திருமால். அவனேதான் அவதரித்தற்குரிய இனிய இடமாகக்கொண்ட சிறப்புடையது அயோத்தி. முன் கவியிலும், இக்கவியிலும், 'ஆளிடமென்றால்', 'வீற்றிருந்தனனென்றால்' என முறையே வந்துள்ளவற்றுள், 'என்றால்' என்பது ஒரு வார்த்தைப்பாடு; 'அனையதே பட்டதென்றால்' (சீவக. 1053-நச். உரை.) என்றது போல.

அருளால் அறம்: ஒப்பு. *183;* அயோத்தி. *1175;* 'அருளொடு புணர்ந்த அகற்சி' (தொல். புறத். 21-நச். உரை.)

(பி - ம்.) 1. தங்குமா பொருளும்; தங்கு நற்பொருளும்; தங்கிய பொருளும்; துணையாய்த்; துணையும்; தன் பகைப்; தரும்பகைப்; புலன்களைத் தவிர்க்கும்; புலன்களைந் தவர்க்கும்; புலன்களைத் தவிர்த்துப்; புலன் கடிந்தவர்க்கும்.

2. தவமு ஞானமு முணர்ந்தோர்; தவமு ஞானமும் புரிந்தோர்; தவமும் புணர்ந்ததோர் முனிவோர்; பொருளு ஞானமும் புணர்ந்தோர்.

3. உறைந்தாண்டு; இருந்தாண்டு; திருவில்; வீற்றிருந்தமை தெரிந்தால்; தெளிந்தால்; தெரியில்.

4. அங்கண் மால்; இந்நகர்; இன்னகர்; நன்னகர்; அந்நகரமரர்; நன்னகரமரர்; நன்னகரமர. (6)

100. அரசெலா மவண வணியெலா மவண
வரும்பெறன் மணியெலா மவண
புரசைமால் களிறும் புரவியுந் தேரும்
பூதலத் தியாவையு மவண
விரசுவார் முனிவர் விண்ணவ ரியக்கர்
விஞ்சையர் முதலினோ ரெவரும்
உரைசெய்வா ராறு ரானபோ திதனுக்
குவமைதா னறிதர வுளதோ?

அரசு எலாம் அவண-பல தேசத்து அரசர்களும் அங்கு (அந்நகரத்தில்) உள்ளனர்; அணி எலாம் அவண-(ஆடவர், மகளிர் முதலிய யாவர்க்கும் உரிய) ஆபரண வகைகள் எல்லாம் அங்குள்ளன; பெறல் அரு மணி எலாம் அவண-(அவ்வாபரணங்களை அமைப்பதற்குரிய) பெறுதற்கு அரிய மணிகள் எல்லாம் அங்குள்ளன: புரசை மால் களிறும்-கழுத்திடு கயிற்றையுடைய பெரிய யானைகளும், புரவியும்-(உயர்ந்த) குதிரைகளும், தேரும்-பல தேர்களும், பூதலத்து யாவையும்-மற்றும் பூமியிலே உள்ள பிற எல்லாப் பொருள்களும்,

அவண-அங்குள்ளன; விரசுவார்-(அங்கு வந்து) கலந்து தங்கியிருப்பவர்களான, முனிவர்-தவமுனிவர்களும், விண்ணவர்-தேவர்களும், இயக்கர்-இயக்கர்களும், விஞ்சையர்-வித்தியாதரர்களும், முதலினோர் எவரும்-இவர்கள் முதலான தேவ கணத்தோர் எல்லோரும், உரை செய்வாரானார்-அதன் சிறப்புக்களைப் புகழ்வாராயினர்; ஆனபோது-அவ்வாறான போது, இதனுக்கு உவமை அறிதர உளதோ - இதற்கு ஒப்பான வேறொரு நகரம் (நம் போன்ற மானிடரால்) அறியக் கிடக்கின்றதோ ? (இல்லை என்றவாறு). உவமை தான் - தான் : அசை.

அரசு என்பது சொல்லால் அஃறிணையாதலால், அதற்கேற்ப 'அவண' என்னும் பலவின்பால் வினை முடிபு கொண்டது. எலாம் - எல்லாம் என்பதன் இடைக்குறை. புரசை - யானையின் கழுத்தில் பல வடங்களால் பட்டையாகக் கட்டப்படும் கயிறு.

தசரத சக்கரவர்த்தியின் ஆளுகைக் குட்பட்ட பல நாட்டு அரசர்களும் அயோத்தியில் வந்து தங்குகின்றனர்; அதனால், அவர்களுடைய தேர், யானை, குதிரை முதலியனவும் அங்கு வரவே, அவற்றின் தொகை மிகுகின்றது. நகரத்தில் உள்ளவர்களும் செல்வ மிகுதியுடையவர்கள்; பல நாட்டு அரசர்களும் தம் பரிவாரங்களுடன் வந்து தங்குகின்றனர்; எனவே, அணி வகைகள் எல்லாம் அங்குள்ளன. பல விடங்களையும் அநாயாசமாகச் சுற்றிப் பார்த்துவரும் ஆற்றலுள்ள தேவர், விஞ்சையர், இயக்கர் முதலியவர்களும் இதன் சிறப்பைக் கருதி, இங்கேயே தங்கி இதனைப் புகழ்வாராயினர். இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட இந்நகருக்கு உவமையாக வேறொரு நகரத்தை அறிந்து கூறுதல் நம்மால் ஆவதொன்றன்று என்கிறார்.

மால்களிறு-மத மயக்கங்கொண்ட யானை என்வும் ஆம். புரசை : சுந்தர. 642; பெருங். 3. 20 : 64.

(பி-ம்.) 1. அரைசெலாமவண; அரும்பொலம்.
2. புரை செய்மால்; புரசை மா; புரைசை மா; புரை செய்மாக்; புரை செய்மா; கரியும்; புரவியம்; அவணம்.
3. விரசுவர்; விரை செய்தார்; விரவுவார்; விரசுதார்; விரைசுவார்; விரைசெயா; விண்ணவர் நாகர்; விண்ணவரசுரர்; முதலின ரென்றால்; முதலின ரல்லால்; முதலினர் வியந்தும்; முதலினர் வீய்ந்தார்; முதலின ரெனவும்; முதலினரென்றால்; முதலினோரென்றால்.
4. உரைசெய்வேன் யானே; உரைசெய்வேனியானே; உரை செய்வேனால்; உரைசெய்வன் யானே; உரைசெய்வேனானே; உரைசெய்வாரானால்; உரைசெய்வாரதனால்; ஆனபோததனுக்கு; அது வலாததனுக்கு; அதுவலாலதனுக்கு; அதுவலாதிதனுக்கு; அதுவலாவிதனுக்கு; யான் பெரிதிதனுக்கு; உவமைதானுளதரோ; உவமை மற்றரிதரோ; உவமை தானறைதர; உவமைதானுளதெனற்கு; உவமைதானுளதென்றல்; உவமை தாமுண்டென; உவமைவேறரிதரோ; உவமைவேறியாதென; உளதே; உளவே; அரிதே; உரிதே; உரைத்தல். (7)

இப்பாடல் சில சுவடிகளில் இல்லை.

## மதில் வருணனை

101. நால்வகைச் சதுரம் விதிமுறை நாட்டி
நனிதவ வுயர்ந்தன பனிதோய்
மால்வரைக் குலத்தில் யாவையு மில்லை
யாதலா லுவமைமற் றில்லை
நூல்வரைத் தொடர்ந்து பயத்தொடு பழகி
நுணங்கிய நூலவ ருணர்வே
போல்வகைத் தல்லா லுயர்வினே டுயர்ந்த
தென்னலாம் பொன்மதி னிலையே.

பனிதோய் மால் வரை குலத்தில் - பனி படிந்த பெரிய மலைக் கூட்டத்தில், நால் சதுரம் வகை-நாற் சதுரமாக, விதிமுறை நாட்டி-சிற்பசாத்திர விதிகளின்படி (கட்டி) நிறுத்தப்பெற்று, நனிதவ உயர்ந்தன-மிகமிக உயரமானவை, யாவையும் இல்லை ஆதலால் - எவையும் இல்லாததனால், பொன் மதில் நிலை-(அயோத்தியின்) பொன் மயமான மதில்களின் தோற்றத்துக்கு, உவமை மற்று இல்லை - உவமையாகத் தக்கன வேறு எவையும் இல்லை; (அதன்உயர்ச்சியைச் சொல்வதானுல் அம்மதில்கள்), நூல் வரை தொடர்ந்து-பல நூல் களின் எல்லை கண்டு, பயத்தொடு பழகி அந்நூல்களின் பயனுகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பேறுகளுக்கும் உரியவராய் அமைந்து, நுணங்கிய நூலவர்-நுட்பமான நூற்கேள்வி யுடையபெரியோர்களின், உணர்வே போல் வகைத்து-ஞானத்தையே போன்ற (உயர்ந்த) தன்மையுடையன; அல்லால் - அதுவன்றியும், உயர்வினேடு உயர்ந்தது-உயர்வு என்று சொல்லத் தக்கவை எவற்றினும் உயர்ந்தது, என்னலாம்-என்று சொல்லலாம். ஈற்றசை.

நிலையே: ஏகாரம்,

நனி தவ-ஒரு பொருட் பன்மொழி. உயர்வினேடு யர்ந்தது-ஒடு உருபு மயக்கம்.

'நூல் வரைத் தொடர்ந்து பயத்தொடு பழகி நுணங்கிய' என்பது: நூல்வரை தொர்டர்ந்து-(சிற்பிகளுடைய) எற்று நூல் வரம்பு களையுடையதாய், பயத்தோடு பழகி-(அடியிலும் அகழியிலுமுள்ள) நீருடன் தொடர்பு கொண்டு, நுணங்கிய - நுட்பமான வேலைப் பாடுகளையுடைய' என்று பொருள்பட்டு, மதிலுக்கும் சிலேடை வகை யால் பொருந்துவதாகும். பயம்-நீர்.

பொதுவாக யாவரும் மதில்களுக்கு மலைகளையே உவமை கூறுவர்; ஆனுல், மலைகள் சிற்பசாஸ்திர விதிப்படி அமைக்கப்பட்டன வல்ல வாதலால், இம்மதில்கள்போல அழகும் தோற்றமும் உடை யனவாகா; எனவே, அவற்றை உவமை கூறுதல் பொருந்தாது. நுணங்கிய நூலவர் உணர்வு, பரம் பொருளையே, எட்ட வல்லதாக லின், அதன் உயர்வுக்கு ஓர் எல்லையில்லை; அதனுல் அதனைக் கூறு

லாம் என நயம்படக் கூறுகின்றார். 'உயர்வினோடுயர்ந்தது'-(வேறொன்றுக்கு இல்லாது) தனக்கே உரிய உயரத்தோடு நிமிர்ந்து நிற்பது எனவும் ஆம்.

(பி - ம்.) 1. சதுர; சதிரம்; சிகரம்; விதமுறை; நாட; நனிதக; முயன்றன.
2. குலத்தின் யாவையும்; குலங்க ளனைத்தினும்; ஆதலான்.
3. நூல்வகைத்; நூல்வகை; பயத்தொடும்; மயத்தொடும்; நுவல்வரும் உணர்வினோர்.
4. போல்வரைத்து; உணர்வினோடு; மதிணிலையே. (8)

102. மேவரு முணர்வு முடிவிலா மையினால்
வேதமு மொக்கும்விண் புகலால்
தேவரு மொக்கு முனிவரு மொக்குந்
திண்பொறி யடக்கிய செயலால்
காவலிற் கலையூர் கன்னியை யொக்குஞ்
சூலத்தாற் காளியை யொக்கும்
யாவருந் தன்னை யெய்துதற் கரிய
தன்மையா லீசனை யொக்கும்.

(மேலும் அம் மதிலானது), மேவு அரும் உணர்வும்-(எதிலும் கூர்ந்து) செல்லுகின்ற அரிய மதிவன்மையாலும், முடிவு இலாமையினால்-(அதன் உயரம், நுட்பம் முதலியவற்றை) முடியக்காண இயலாததனால், வேதமும் ஒக்கும்-வேதத்தையும் ஒத்திருக்கும்; விண் புகலால்-(அதன் உச்சி) விண்ணுலகத்தை அடைதலால், தேவரும் ஒக்கும்-தேவர்களையும் ஒத்திருக்கும்; திண் பொறி அடக்கிய செயலால்-வலிய போர்ப் பொறிகளைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் தன்மையினால், முனிவரும் ஒக்கும்-சிறந்த முனிவர்களையும் ஒத்திருக்கும்; (முனிவர்கள் வன்மைமிக்க இந்திரியங்களை அடக்கியாளும் தன்மையுடையவர்கள்); காவலில்-நகரத்தைக் காத்தலில், கலை ஊர் கன்னியை ஒக்கும்-கலைமானை வாகனமாகக் கொண்டு செலுத்துகிற துர்க்கையையும் ஒத்திருக்கும்; சூலத்தால்-(உச்சியில்) இடி தாங்கிச் சூலத்தைப் பெற்றிருத்தலால், காளியை ஒக்கும்-காளியையும் ஒத்திருக்கும்: யாவரும்-எவராயினும், தன்னை எய்துதற்கு அரிய தன்மையால்-தன்னை (எளிதில்) அணுக முடியாத தன்மையினால், ஈசனை ஒக்கும்-ஸர்வேசுவரனையும் ஒத்திருக்கும்.

கன்னியை, காளியை, ஈசனை என்ற விடங்களில் எண்ணும்மை தொக்கது.

வேதம், பரப்பு மிகுதியும் நுணுக்கமும் உடையதாய், யாவர்க்கும்முடிய அறிய வியலாதது. மதிலும் அவ்வாறே அமைந்து யாவராலும் முடியக் கண்டறிய வியலாதது. விண்ணவர் விண்ணுலகத்தில் குடி புகுந்திருப்பவர்; மதிலும் விண்ணுலகத்துள் நுழைந்திருக்

கின்றது. முனிவர், புலன்களைத் தம் வழிச் செலுத்தும் வலிமை யுடைய பொறிகளை (இந்திரியங்களை) அடக்குபவர்; மதிலும் பல அரிய போர்ப்பொறிகளைத்(இயந்திரங்களை) தன்னுள் அடக்கியுள்ளது. நகரைத் தீதின்றிப் பாதுகாக்கும் தெய்வம் துர்க்கை; மதிலும் நக ருக்குப் பகைவரால் தீங்கின்றிப் பாதுகாக்கின்றது. கையில் முத் தலைச் சூலம் ஏந்தியவள் காளி; மதிலும் உச்சியில் பலவிடங்களில் எஃகுச் சூலத்தைத் தாங்கியுள்ளது. (இடிக்கும், பகைவர்க்கும் பாது காப்பானது சூலம்). ஈசன், பத்துடை அடியவர்க்கு எளியன்; பிறர் களுக்கு அரியன்; மதிலும், நட்புடையராய்ப் பழகியவர்க்கு நுட்பங் களும் பரப்பும் அறியத் தக்கது; பகைவர்க்கு அறிய முடியாமையால் கடந்து உட்புக அரியது-என இவ்வாறு ஒப்புமை காண்க.

திண்மை, அகலம், ஆழம், உட்கிடக்கை. உயர்வு-ஆகியவற் றைக் காண வியலாதது, மதில். மதிற் பொறிகளாவன: (சதக்நி) நூற்றுவரைக் கொல்லி, சென்றெறி சிரல், நின்றெறி கவண், கல் விடு கூடை, உருக்குமிடா முதலியனவும், உள்ளிருந்து வெளியே அம் பெய்யவும், வெளியில் உள்ளவர்களைக் காணவும் ஏற்றனவாகி, வெளி யில் உள்ளவர் உள்ளிருப்பவரைக் காணாதபடியும் அமைந்த புழைகள் முதலிய பல நுட்ப வேலைப்பாடுகள் ஆகியனவும் ஆம். இவற்றின் விரிவை, சிலப். *15: 207–218*, பெருங். *3. 3: 17-38*, சீவக. *105*, பு-வெ. *112*, திருவிளை. நகரம்: *24-29* ஆகிய விடங்களில் காண்க.

மே வரும் உணர்வு எனப் பிரித்து, மேன்மைமிக்க அறிவு என் றும், பொருள் கூறலாம்.

ஈசன்-காலாக்கினி ருத்திரன் (பழைய குறிப்புரை).

(பி - ம்.) 1. மேவரு முணர்வின்; மேவர வுணர்வு; மேவர வுணர; மேவுற வுணர்வு; வேதமே; வேதங்கள்.

3. காவலின் மயிலூர் கந்தனே.

4. யாவரு மொக்கும்; இறைவனே; யாவையு மொக்கும் பெருமையா லெய்தற் கருமையால்.

இப் பாடல் சில பிரதிகளில் 'கோலிடை' (104) என்பதன் பின் உள்ளது. (9)

103. பஞ்சிவான் மதியை யூட்டிய வனைய
படருகிர்ப் பங்கயச் செங்கால்
வஞ்சிபோன் மருங்குற் குரும்பைபோற் கொங்கை
வயங்குவேய் வைத்தமென் பணைத்தோள்
அஞ்சொலார் பயிலு மயோத்திமா நகரி
னழகுடைத் தோவென வறிவான்
இஞ்சிவா னோங்கி யிமையவ ருலகங்
காணிய வெழுந்ததொத் துளதே.

இஞ்சி-(அயோத்தி நகரத்தின்) மதிலானது, வான் மதியை-ஆகாயத்தில்உள்ள சந்திரர் பலரை, பஞ்சி ஊட்டிய அனைய-செம்பஞ்சுக்குழம்பு ஊட்டிச் சிவப்புறச் செய்தாற் போன்ற, படர் உகிர்-ஒளி வீசுகின்ற வரிசையான நகங்களை யுடைய, பங்கயம் செம்கால்-தாமரை போன்ற சிவந்த பாதங்களையும், வஞ்சிபோல் மருங்குல்-கொடி போன்ற மெல்லிய இடையையும், குரும்பைபோல் கொங்கை-செவ்விளநீர் போன்ற தனங்களையும், வயங்கு வேய் வைத்த-(அழகாக) விளங்குகின்ற இள மூங்கிலை யொத்த, மென் பணை தோள்-மென்மையோடு (அளவாகப்) பருத்த தோள்களையும், அம் சொல்லார்-அழகிய சொற்களையுமுடைய பெண்கள், பயிலும்-மிகுந்துள்ள, அயோத்தி மா நகரின்-அயோத்தி மா நகரத்தைப்போல, இமையவர் உலகம்-தேவர்கள் வசிக்கும் உலகம், அழகு உடைத்தோ என அறிவான்-அழகுடையதாகுமோ என்று அறியும் பொருட்டு, வான் ஓங்கி காணிய-ஆகாயத்திலே மிக வுயர்ந்து சென்று (தேவருலகத்தைக் காண்பதற்காக) எழுந்தது ஒத்து உளது-மேல் நோக்கி எழுந்து போவதுபோல் உள்ளது. ஏ-ஈற்றசை.

இஞ்சி, அயோத்தி மா நகரின் அழகு இமையவர் உலகம் உடைத்தோ என அறிவான், அவ் இமையவர் உலகம் காணிய, வான் ஓங்கி எழுந்தது ஒத்து உளது என முடிபு கொள்க.

நகரின்: இன்-ஐந்தனுருபு; ஒப்புப் பொருள்; உறழ் பொருள் எனினும் ஒக்கும். ஊட்டிய-ஊட்டப் பெற்றவை. அஃறிணைப் பன்மைப் பெயர். நகங்கள் வடிவத்தாலும் நிறத்தாலும் செம்பஞ்சு ஊட்டப்பெற்ற பல சந்திரரைப் போன்றவை: இல் பொருள் உவமை. குரும்பை யென்பது செவ்விளநீருக்கே பெயராக இன்றும் கேரள நாட்டில் வழங்குகின்றது என்பர். வேய்-முள்ளில்லாத மூங்கில். ‘அமையொடு வேய்கலாம் வெற்ப’ என்ற பழமொழிச் செய்யுட் பகுதியின் பழையவுரையிற் காண்க. வேய் வைத்த என்பதில் ‘வைத்த’-உவமவுருபு.

(பி - ம்.) 1. பஞ்சின் வான்; பஞ்சி வாண்; மதியைச் சூட்டியவனைய; ஊட்டிவைத்தனைய; ஊட்டிய தனைய; ஊட்டிய வன்ன; படருகிர் பங்கய.

2. மருங்கில்; வாங்குவேய் வைத்த; வயங்குவேய் வாய்த்த; வயங்குவேய் வைத்தன; வாங்குவே யமைத்த மென்.

3. நகரில்; நகரம்; அழகுடைத் தன்றென; அழகுடைத் தன்றெனல்; அழகுடைத் தன்றெனில்; அழகுடைத் தாமென.

4. எழுவ தொத்துளதே; எழுவ தொத்துளதால்; எழுவ தொத்தனவே; எழுந்த தொத்தன்றே. (10)

104\. கோலிடை யுலக மளத்தலிற் பகைஞர்
முடித்தலை கோடலின் மனுவின்
நூலிடை நடக்குஞ் செவ்வையின் யார்க்கு
நோக்கருங் காவலின் வலியின்
வேலொடு வாள்விற் பயிற்றலின் வெய்ய
சூழ்ச்சியின் வெலற்கரு நலத்தின்
சாலுடை யுயர்விற் சக்கர நடத்துந்
தன்மையிற் றலைவரொத் துளதே.

இப் பாட்டு, சூரிய குலத்தரசர்க்கும், மதிலுக்கும் சிலேடையாக அமைந்தது.

அரசர்க்குச் சொல்லும்போது :—

உலகம்-(தம்மால் ஆளப்படும்) நாட்டை,கோல் இடை அளத்தலின்-(தம்முடைய) செங்கோலால் நெறியறிந்து ஆளுதலினாலும், பகைஞர்-பகைவருடைய, முடி தலை-கிரீட மணிந்த தலைகளை, கோடலின்-(போரில்) கைக்கொள்வதனாலும், மனுவின் நூல் இடை நடக்கும் செவ்வையின்-மனு தர்ம சாத்திரத்தின்படி நடக்கும் நேர்மையினாலும், யார்க்கும் நோக்க அரு காவலின்-எவருக்கும் (பிற இடங்களில் ஒப்புக் காணுதற்கு அரிய காப்பு முறையாலும், வலியின்-சிறந்த வலிமையுடைமையாலும்,வேலொடு வாள், வில் பயிற்றலின்-வேல்,வாள், வில் முதலிய படைகளில் பழகுதலாலும், வெய்ய சூழ்ச்சியின்-(பகைவரது) கடுமையான இராச தந்திரங்களாலும், வெலற்கு அரு நலத்தின்-வெல்லுதற்கு அரிய பெருமை யுடைமையாலும், சால் உடை உயர்வின்-(அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை ஆகிய ஐந்தினாலும்) நிறைவு உடைய சிறப்பினாலும், சக்கரம் நடத்தும் தன்மையின்-ஆணைச் சக்கரத்தைச் செலுத்தும் தன்மையினாலும், தலைவர் ஒத்து உளது-சூரிய குலத்து அரசர்களை ஒத்திருக்கின்றது.

இனி, மதிலுக்கு :—

உலகம்-பிற நாட்டார், கோலிடை அளத்தலின்-(இதுபோலத் தம் நாட்டில் அமைக்கும் பொருட்டு) அளவு கோலால் இதனை அளத்தலினாலும், பகைஞர் முடிதலை கோடலின்-பகைவருடைய கிரீட மணிந்ததலைகளை(த்)தன்னிடத்துள்ள படைகளால்) வாங்குதலாலும், மனுவின் நூல் இடை நடக்கும் செவ்வையின்-'மனு' என்னும் தெய்வத் தச்சனின் சிற்ப நூல் முறைப்படி அமைக்கப்படும் அமைப்பினாலும், யார்க்கும்-(புறத்தேஉள்ள) எவருக்கும், நோக்க அரு காவலின்-உள்ளே பார்த்தற்கரிய பாதுகாப்பு உடைமையாலும், வலியின்-(இணையற்ற) உறுதியினாலும், வேலொடு வாள், வில், பயிற்றலின்-வேல், வாள், வில் முதலிய கருவிகளை (பொறிகளால்) இயக்குதலாலும், வெய்ய சூழ்ச்சியின்-(தன்னுள் அமைக்கப்பட்டுள்ள) கடுமை

யான உபாயங்களாலும், வெலற்கு அரு நலத்தின் பகைவர் கடத்தற்கு அரிய சிறப்பினுலும், சால் உடை உயர்வின்-மதில் உறுப்புக்களும், பொறிகளும், சுருங்கை, நூழை முதலிய இரகசிய வழிகளும் போன்றவை நிறைந்திருக்கும் மேன்மையினுலும், சக்கரம் நடத்தும் தன்மையின்-சக்கரப் படையைச் செலுத்தும் தன்மையினுலும், (தலைவர் ஒத்து உளது).

மனுவின் நூல்-(சிற்ப முறை அறிந்த) மனிதனின் எற்று நூல் எனவும், சூழ்ச்சி-நாற்புறமும் சூழ்ந்திருந்தல் எனவும் பொருள்கோடலும் உண்டு. மதிலினுள் அமையும் உபாயங்கள்: வழிபோலத் தோற்றி, புகுவாரைச் சிறைப்படுத்தும் தன்மை முதலிய பல வாகும்.

(பி - ம்.) 1. கோலுடை; பகைவர்; முடித்தலைக்; கொள்கையின்; மனுமன்.
2. நூல் நெறி; கிடக்கும்; செவ்வியின்; செவ்வியில்; செவ்வையில் செய்கையின்; தன்மையின்; காவலில்; வலியில்; வலியே.
3. வில்வாள்; பயிற்றலில்; பயிறலின்; சூழ்ச்சியில்; சூழ்ச்சி; வெலற்கரும்; விலக்கரு; வலத்திற்; வலத்தின்; பிலத்திற்; பெலத்திற்; புடைசூழ்;
4. சால்புடையுயர்வின்; மரபிற்; உறையிற்; மாலிற்; நடாத்தும்; தலைமையின்; தலைவன் ; ஒத்துளவே. (11)

105. சினத்தயில் கொலைவாள் சிலைமழுத் தண்டு
சக்கரந் தோமர முலக்கை
கனத்திடை யுருமின் வெருவருங் கவண்க
லென்றிவை கணிப்பில கொதுகின்
இனத்தையு முவணத் திறையையு மியங்கு
காலையு மிதமல நினைவார்
மனத்தையு மெறியும் பொறியுள வென்ருன்
மற்றினி யுணர்த்துவ தெவனே.

(அம்மதிலில்), கொதுகின் இனத்தையும்-(மிகச் சிறியனவான) கொசுக் கூட்டங்களையும், உவணத்து இறையையும்-பறவைகளுக்கு அரசஞன கருடனையும்,இயங்கு காலையும்-சஞ்சரிக்கின்ற காற்றையும், இதம் அல நினைவார் மனத்தையும்-நன்மையல்லாதவற்றை (தீங்குகளை) நினைப்பவர் மனத்தையுங்கூட, எறியும்-தாக்கி ஊறு செய்யத் தக்க, சினத்து அயில்-கோபமுடைய வேலும், கொலைவாள்-கொலைத் தொழிலுக்குரிய வாளும், சிலை-விற்களும், மழு-மழுவாயுதமும், தண்டு-தண்டாயுதமும், சக்கரம்-சக்கராயுதமும், தோமரம்-கைவேலும், உலக்கை-இருப்புலக்கைகளும், கனத்து இடை உருமின்-மேகத்தினிடம் உண்டாகும் இடிபோல (ஓசையுடன்), வெருவரும் கவண்கல்-அச்சந்தரும் கவண் கல்லும், என்ற இவை-என்று சொல்லப்பட்ட இவை போன்ற, கணிப்பு இல பொறி-அளவற்ற ஆயுதங்கள், உள என்ருல்-உள்ளன என்ருல், (அம் மதிற் பொறிகளின் சிறப்புப்பற்றி) மற்று இனி உணர்த்துவது எவன்-வேறு இனிச் சொல்லத் தக்கது யாது ?

ஓ-எதிர்மறைப் பொருளது. சினத்து அயில்-உடையவனது பண்பு (கோபம்) உடைமையாகிய வேலுக்கு ஏற்றிக் கூறப்பட்டது. தோமரம்: தண்டாயுதம், இருப்புலக்கை, கைவேல் ஆகியவற்றிற்குப் பெயர். பறப்பனவற்றுள் மிகச் சிறியது கொசு; பெரியதும் மிக உயரப் பறக்க வல்லதும் ஆனது கருடன்; காற்று, பரிசமாத்திரத் தால் உணரத் தக்கது; மனம், உருவ மற்றது; பரிசத்தாலும் உணர முடியாதது. காற்றையும் மனத்தையுங்கூடத் தாக்க வல்லவை எனப் பொறிகளின் ஆற்றலை மிகுத்துக் கூறியவாறு. இதம் அலமதிலைத் தாக்குதல், மதிலினுள் பிறர் அறியாமல் புகுதல் முதலியன.

(பி - ம்.) 1. வாள் சக்கரந் தண்டு; சிலைமழுத் தோமர முலக்கை; சிலைமழுத் தோமரம் வலயம்; சிலைமழுக் கப்பண முலக்கை; சக்கரந் தோமரம் வலயம்; செப்புருக் கரக்கெணை சிவணிக்; செம்புருக்கரக்கெண்ணெய் சிவணிக்; செம்புருக்கராச் சிலை சிவணிக்; செஞ்சரங் கற்பணந் திகிரி; செஞ்சரங் கப்பணந் திகிரி.

2. கனத்தடை யுருமில்; உருமும்; வெருவிடும்; கவண்களென்றிவை; கவண்கனெறியவை; கணிப்பில தொடுமின்; உலங்கின்; ஒலுங்கின்; கணிப்பில் தெகினத்து; கணிப்பில கொசுகின்; கணிப்பில வோங்க.

3. உவணர்க்கு; உவணற்கு; இறையையுமியங்குங்; இறையையு முயங்கும்; இதமலாநினையும்; இதமலாநினைவார்; இதமிலாநினைவார்; இதமலார் நினைவார்; இதமலாநினையின்; இதமிலநினைவார் இதமலநினையும்.

4. பொறியுள தென்றல்; பொறியுள வென்னில்; பொறியள வென்றல்; உணர்த்து மாறெவனோ; உணர்த்துவ தென்னோ; உரைக்குவ தென்னோ. (12)

106. பூணினும் புகழே யமையுமென் றினைய
பொற்பினின் றுயிர்நனி புரக்கும்
யாணரெண் டிசைக்கு மிருளற விமைக்கு
மிரவிதன் குலமுத னிருபர்
சேணையுங் கடந்து திசையையுங் கடந்த
திகிரியுஞ் செந்தனிக் கோலும்
ஆணையுங் காக்கு மாயினு நகருக்
கணியென வியற்றிய தன்றே.

'பூணினும்-(உடம்புக்கு வெளியழகைச் செய்யும்) ஆபரணங் களைவிட, புகழே அமையும்-(சிறந்த) புகழே நமக்குப் போதுமானது' என்ற இனைய பொற்பில் நின்று-என்ற இத்தகைய அழகிலே (கொள் கையிலே) ஊன்றி நின்று, உயிர் நனிபுரக்கும்-(தம்மால் ஆளப்படும்) உயிர்களை மிக நன்றாகப் பாதுகாக்கின்ற, யாணர் எண்திசைக்கும் இருள் அற இமைக்கும் இரவி தன் குலம் முதல் நிருபர்-அழகிய எட்டுத் திக்குக்களிலும் இருள் நீங்கும்படி ஒளி வீசுகின்ற சூரிய குலத்து முதன்மையான அரசர்களுடைய, சேணையும் கடந்த-(இவ்வு லகையன்றி) விண்ணுலகத்தையும் கடந்து திசையையும் கடந்த-எட்

டுத்திக்குக்களையும் கடந்து செல்லத் தக்கது. திகிரியும்-ஆஞ்ஞாசக்கரமும், தனி செங்கோலும்-ஒப்பற்ற செங்கோலும், ஆணையும்-கட்டளையும், காக்கும் ஆயினும்-(நகரத்தை) நன்குபாதுகாக்குமானாலும், நகருக்கு அணி என இயற்றியது-அரசிருக்கையான நகரத்துககு (அங்கமாய்) அழகு செய்வது என்று கருதிக் கட்டப்பட்டது மதில்; (பாதுகாவலுக்காக அன்று) என்றவாறு. அன்று, ஏ-அசை.

சூரிய குலத்து அரசர்கள் உண்மைப் புகழையே சிறப்பாக மதிப்பவர்களாதலால், அதற்கேற்ற முறையில் நாடாட்சியைநடத்துபவர்; அத்தகைய சிறந்த முறையால் நாடும் நகரமும் நன்கு பாதுகாக்கப்படுதலின், காவலின் பொருட்டு மதில் வேண்டுவதன்று; ஆயினும், நகருக்கு ஓர் அங்கமாய் அழகு தருவதாகலின் அதன் பொருட்டு மதில் அமைக்கப்பெற்றது என்றதனால், சூரிய குலத்து மன்னரது ஆட்சிச் சிறப்புக் கூறப்பட்டது.

யாணர்-அழகு, புது வருவாய். எண்திசைக்கும்-உருபு மயக்கம். சேண்-ஆகாயம்; ஆகுபெயராய் விண்ணுலகத்தைக் குறித்தது. இயற்றியது-இயற்றப்பட்டது.

சேண்-தேவருலகம்: முருகு. *12*-உரை. மதில் நகருக்கு அழகு செய்வது; 'அகழும் மதிலும் அலங்கார நீர்மைய' என்பது போதர, 'அணிதில்லை' என்றார்; திருச்சிற். *181*-பேர். உரை.

(பி - ம்.) 1. பூணையும்; என்றனைய; என்றன்ன; என்றறனின்; பொற்பு நின்று;: உயிர் தனிபுரக்கும்; உயர் தனிபுரக்கும்.
2. என்றிசைக்கும்; குலமுதல் வேந்தர்.
3 சேனையுங்; கடந்து; திசையையுங் கடந்து; மேலுறவோங்கி; திகிரியாற்; திகிரியார்; செகந்தனிக்.
4. ஆணையின்; காக்கு மாகிலும்; கடக்குமாயினும்; நடாத்துமாயினும்; ஆயினன்; ஆயினிந்; அரணினும்; ஆகிலந்; நடாத்து மாயிலு நகரும்; கரக்கு மாயினின்; நடக்குமாயினன்; நடக்குமாயினும்; கடக்குமாயினன்; கிடக்குமாயினு; கிடக்குமாயின; கிடக்குமாயினன்; காக்குமாயினந் நகர்க்கு; காக்குமாயினு நகரத்து. (13)

### அகழிவருணனை

107. அன்னமா மதிலுக் காழிமால் வரையை
யலைகடல் சூழ்ந்தன வகழி
பொன்விலை மகளிர் மனமெனக் கீழ்போய்ப்
புன்கவி யெனத்தெளி வின்றிக்
கன்னிய ரல்குற் றடமென யார்க்கும்
படிவருங் காப்பின தாகி
நன்னெறி விலக்கும் பொறியென வெறியுங்
கராத்தது நவிலலுற் றதுநாம்.

இதுவரை அயோத்தியின் மதிலைப் பற்றிக் கூறியவர், இனி அம்மதிலைச் சூழ்ந்துள்ள அகழியைப் பற்றிக் கூறுகின்றார்.

ஆழி மால் வரையை-மிகப் பெரிதாகிய சக்கரவாளகிரியை, அலை கடல் சூழ்ந்த அன்ன-அலைகள் மோதுகின்ற பெரும்புறக் கடல் சூழ்ந்தது போன்ற (தன்மையுடையதாய்), அன்ன மாமதிலுக்கு அகழி-(மேற் சொல்லிய) அத்தகைய சிறப்புக்களையுடைய பெரிய மதிலைச் சூழ்ந்துள்ள அகழியானது, பொன் விலை மகளிர் மனம் என-தமது இன்பத்திற்குப் பொன்னை விலையாகக்கொள்ளும் பரத்தையரது மனம்போல, கீழ்போய்-(ஆழம் அறிய முடியாதபடி) கீழேபோய், புன் கவி என-(கல்வியறிவில்லாதவருடைய) தாழ்ந்த கவிகளைப்போல, தெளிவு இன்றி-தெளிவு இல்லாததாய், கன்னியர்-(மணம் ஆகாத) கன்னிப் பெண்களின், அல்குல் தடம் என-—, யார்க்கும் படிவு அரு காப்பினது ஆகி-எவருக்கும் (சென்று) தோய்தற்கு அரிய பாதுகாவலை உடையதாய், நல்நெறி விலக்கும் பொறி என-நல்ல வழிகளினின்றும், விலக்கித் தீ நெறியில் செலுத்தும் ஐம்பொறிகளைப்போல, எறியும்-தாக்கித் தீமை செய்கின்ற, கராத்தது-முதலைகளை உடையது; (அது) நாம் நவிலல் உற்றது-அதனைப் பற்றி நாம் சொல்லலானோம்.

ஏழு கடல்களால் சூழப்பட்டு ஏழு தீவுகளாக உள்ள உலகம் முழுவதையும் சூழ்ந்துள்ளது சக்கர வாளகிரி என்பதும், அதனை அகழி போல் சூழ்ந்துள்ளது பெரும்புறக்கடல் என்பதும் புராணங்களின் கொள்கை. இங்கே, அயோத்தி நகரின் மதில் சக்கரவாளகிரி போன்றது; அதனைச் சூழ்ந்துள்ள அகழி பெரும்புறக் கடல் போன்றது என உவமிக்கின்றார்.

அகழியின் ஆழம் அறிய முடியாதது; அதற்குப் பரத்தையர் மனம் உவமை. தெளிந்த கல்வியறிவு இல்லாதவருடைய கவி, பொருள் தெளிவு இல்லாததாகும்; (முதலை முதலியன திரிதலால்) கலங்கிய அகழி நீரை அக்கவிக்கு உவமித்தார். நல் வழிகளிலே செல்லும் மனத்தைக் கெடுத்துத் தீ நெறியில் செலுத்துபவை ஐம்பொறிகள்; நல்ல நிலையில் உள்ளவர்களுடைய உடலைத் தாக்கி உயிர் கொள்ளும் தன்மையது முதலை; அதற்குப் பொறிகளை உவமித்தார்.

மதிலுக்கும் அகழிக்கும் முறையே சக்கரவாளகிரியும் பெரும் புறக் கடலும் உவமை: ‘நேமி மால்வரை மதிலாக நீள்புறம், பாமமா கடல் கிடங்காக’ (*175*). பரத்தையர் மனம்: *18, 353, 570*; அயோத். *404*. குறள். *92*-ஆம் அதி. புன் கவியெனத் தெளிவின்றி: ‘கல்லார் கவிபோற் கலங்கி’ (திருவிளை. *8: 22*). கன்னியர் காப்பு: ‘கட்டுடைக் காவற் காமர் பன்னியே’ (சீவக. *98*). அகழியில் முதலைகளிருத்தல்: ‘கோள்வாய் முதலைய குண்டகழி’ (பு-வெ. *110*).

(பி - ம்.) 1. சூழ்ந்தன்ன; அகழின்.
2. பொன்மலே; மகளிர்; கிழ்ப்போய்ப்; கவிபோல்.
3. ஆர்க்கும் படிவரும்; யாரும் படிவரும்; யாருங் கடிவரும்; யார்க்குங் கடிவரும்; யார்க்குங் கடப்பரும்: காப்பினவாகி; கற்பினதாகி; படியினவாகி.
4. பொறியினே: கரத்தது; கரரமது; நாரமது: அறையலுற்றது நாம்; அறையலுற்றது வாம்; நவிலலுற்றது வாம்; நவிலலுற்றன நாம்.

(14)

[வேறு]

108. ஏகு கின்ற தங்க ணங்க
ளோடு மெல்லே காண்கிலா
நாக மொன்ற கன்கி டங்கை
நாம வேலே யாமெனு
மேக மொண்டு கொண்டெ ழுந்து
விண்டொ டர்ந்த குன்றமென்
ருக நொந்து நின்று தாரை
யம்ம திற்கண் வீசுமே.

மேகம்-மேகங்கள், எல்லே காண்கிலா-(பரப்பின்) எல்லேயை அறிய முடியாததாய், நாகம் ஒன்று-(கீழே) பாதாளம் வரையில் போயுள்ள, அகன் கிடங்கை-அகன்ற அவ்வகழியை, நாமம் வேலேஆம் எனு-அச்சந்தரும் கடல் என்று கருதி, ஏகுகின்ற தம் கணங்களோடும்-அவ்வகழியிடத்தே செல்லுகின்ற தம் கூட்டத்தோடும் (சென்று), மொண்டு கொண்டு எழுந்து-(அகழியில் நீரை) மொண்டு கொண்டு (பருகி) மேலே எழுந்து, அ மதில் கண்-அந்த மதிலின்மேல், ஆகம் நொந்து நின்று-(அதனேக் கடந்து செல்ல இயலாமையால்) உடல் வருந்தி நின்று, விண் தொடர்ந்த குன்றம் என்று-(அது) ஆகாயமளாவிய மலே யென்று கருதி, தாரை வீசும்-(அங்கேயே) மழைத் தாரைகளே மிகுதியாகப் பொழியும். ஏ-அசை.

மேகம் கிடங்கை வேலேயாம் எனு, தம் கணங்களோடும், மொண்டு கொண்டு எழுந்து, ஆகம் நொந்து அம்மதிற்கண் நின்று, விண் தொடர்ந்த குன்றம் என்று தாரை வீசும் எனக் கூட்டி முடிபு கொள்க.

அகழியைக் கடலாகவும், மதிலே மலேயாகவும் மேகங்கள் கருதின என்று அவற்றின் பெருமையை மிகைப்படுத்திக் கூறுகின்ருர். நாமம்-அச்சம்: உரிச்சொல்.

எல்லே காண்கிலா என்பதனே நாம வேலே என்பதனேடு கூட்டியும் உரைக்கலாம்.

மதிலுக்கு மலே: 'கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி' (பதிற். 16: 1). 'வரையுறழ் நீண் மதில்' (கலி. 62: 12).

(பி - ம்,) 1. தன் கணங்களோடும்; காண்கலர்; காணலா; காணலார்.
2. நாகமென்றகன்; நாகமென்றதன்; நாகமென்றிதன்; நாகமன்னுதண்; நாகமொல்றுதண்; ஆமென.
. கொண்டெழுந்த; எழுந்துகொண்டு; விண்டொடர்ந்து; விண்டடர்ந்த; குன்றமொன்று.
4. நின்ற; மதிட்கண். (15)

109. அந்த மாம திற்பு றத்த கத்தெ ழுந்த லர்ந்துநீள்
கந்த நாறு பங்க யத்த கான மான மாதரார்
முந்து வாண்மு கங்க ளுக்கு டைந்து போன மொய்ம்பெலாம்
வந்து போர்வி ளைக்க மாம தில்வ ளைந்த தொக்குமே.

அந்த மாமதில் புறத்து-அந்தப் பெருமை பொருந்திய மதிலின் புறத்தே, அகத்து எழுந்து அலர்ந்து-அகழியினுள்ளிருந்து மேலெழுந்து மலர்ந்து, நீள் கந்தம் நாறு-மிக்க மணம் வீசுகின்ற, பங்கயத்த கானம்-தாமரையின் காடு (சூழ்ந்திருப்பது), மானம் மாதரார் வாள் முகங்களுக்கு-பெருமை மிக்க (அந்நகர) மாதர்களின் ஒளி பொருந்திய முகங்களுக்கு, உடைந்து-தோற்று, முந்து போன மொய்ம்பு எல்லாம்-முன்னே (தாம்) இழந்த வலிமை யெல்லாம், வந்து (இப்போது) கிடைக்கப்பெற்று, போர் விளைக்க- அம்மாதர்களுடன் போர் செய்யக் கருதி, மா மதில் வளைந்தது ஒக்கும்-அப்பெரிய மதிலை (அவை) முற்றுகை யிட்டதை ஒத்திருக்கும். ஏ-அசை.

தாமரைக் காடு என்றது பூக்களின் மிகுதியைக் குறிக்கும். தாமரைப் பூக்கள் சிலவாக இருந்த போது, அந் நகரத்து மகளிரின் முகங்களுக்குத் தோற்றுப்போய்ச் செயலற்று இருந்தவை, இப்போது மிகத் திரண்டு, வலிமை பெற்று வந்து, மகளிரோடு பொருதற்கு அறைகூவி மதிலை வளைத்துக்கொண்டது போலும் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார்.

பங்கயத்த: அ-ஆறன் உருபு; பன்மை குறித்தது. கானம்-தொகுதி யொருமை.

(பி - ம்) 1. மதிட் புறத்து: அகத்தலர்ந்து; அலர்ந்த நீள்; அலர்ந்து சூழ்; எழுந்த நீள்; அலர்ந்த பூங்! அலர்ந்த செவ்; அலர்ந்துமிழ்.
2. கந்த மான.
3. முந்துபோர்; முந்தவாண்; முந்தவான்; முந்திவாண்; முந்துவான்; முந்தைவான்: முகத்தினுக்கு: மொய்த்தெலாம்; மொய்ம்பினுல்.
4. மலைக்கமர்; மிலைக்க வான்; விளைக்க வான்; மலைக்கவான்; மலைத்து வான்; மலைக்கலான்; மலைத்து மாறு; வளைத்துமானுமே; வளைத்த தொக்குமே; வளைந்த தொத்தவே; வளைந்த போன்றவே; வளைந்த போலுமே; வளைந்த மானுமே; வளைந்த தொக்குமால்; வளைத்தன் மானுமே; வளைத்த தொத்ததே (16)

110. சூழ்ந்த நாஞ்சில் சூழ்ந்த வாரை சுற்று முற்று பாரெலாம்
போழ்ந்த மாகி டங்கி டைக்கி டந்து பொங்கி டங்கர்மாத்
தாழ்ந்த வங்க வாரி யிற்ற டுக்கொ ணும தத்தின் வீழ்ந்
தாழ்ந்த யானை மீதெ ழுந்த ழுந்து கின்ற போலுமே.

சூழ்ந்த நாஞ்சில்-(நன்கு) ஆலோசித்து அமைக்கப்பட்ட நாஞ்சில் என்னும் உறுப்புக்களோடு, சூழ்ந்த—நகரத்தைச் சூழ்ந்துள்ள, ஆரை சுற்றும் முற்று பார் எலாம்-மதிலைச் சுற்றிலும் நிறைந்துள்ள பூமி எல்லாம், போழ்ந்த-(வலிய நிலமுழுதும்) தோண்டிச் செய்யப் பட்ட, மா கிடங்கிடை கிடந்து-பெரிய அகழியிலே கிடந்து,பொங்கு-(அவ்வப்போது) மேலெழுந்து காணப்படுவதும் முழுகுவதுமாகவுள்ள, இடங்கர் மா-முதலைகள், தாழ்ந்த வங்க வாரியில்-கப்பல்கள் தங்கப் பெற்ற கடலிலே, தடுக்க ஒணு மதத்தின் வீழ்ந்து ஆழ்ந்த யானை-தடுக்க முடியாத மத மயக்கத்தோடு விழுந்து முழுகின யானைகள், மீது எழுந்து அழுந்துகின்ற போலும்-(அலைகளால் தாக்குண்டு) மேல் எழுந்து மீண்டும் நீரில் முழுகுவனவற்றைப்போன்றிருக்கும். ஏ-அசை.

நாஞ்சில்-ஏப்புழை யென்னும் மதிலுறுப்பு. போழ்ந்த கிடங்கு-போழ்ந்து செய்யப்பட்ட கிடங்கு. முதலை, நீர்வாழும் விலங்கினத்தைச் சேர்ந்த தென்பராகலின், 'இடங்கர்மா' என்றூர். 'மா' என்பது 'திர்யக்' என்னும் வடசொல்லைப் போன்றது; குறுக்காக உடல் அமைப்பு உள்ள பலவற்றையும் குறிக்கும். மரக்கலங்கள் தங்கிய கடலில் விழுந்த யானைகள் என்றது, மரக் கலங்களைத் தமக்குப் பகை யான யானைகள் என்று நினைத்து அவற்றைத் தாக்கச் சென்று மத மயக்கத்தால் கடலில் முழுகின யானைகள் என்ற குறிப்பை உடையது.

நாஞ்சில்: 'கனக நாஞ்சிற் கடிமதில்' (சுந்தர. *90.*). பாரெலாம் போழ்ந்த கிடங்கு: மதுரைக். *730*; மலைபடு. *81*; அகநா. *79*; புறநா. *14*. இடங்கர்மா: 'முண்டகத்துறை மேய்ந்த முதலைமா' (சூளா. நாட்டு. *22*); முதலையை யானையாகக் கூறுதல்: 'அருங்கரா ... யானையாத்' (*113*).

பி-ம்.) 1. சூழ்ந்து; சூழ்ந்த பாரை: சூழ்ந்த வீரை; சுற்ற; முற்ற; முற்றும்: பாரெல்லாம்.

2. போழ்ந்து: கிடங்கிடைத்; கிடங்கினிற்; கிடந்து போரிடங்கர்மா; கிடந்து பேரிடங்கர்மாத்; கிடந்த பொங்கிடங்கர்மாத்; கிடைந்த போரிடங்கர்மாத்; துடர்ந்து பொங்கிடங்கர்மாத்; துசந்து பொங் கிடங்கர்மாத்.

3. தாழ்ந்து: வங்குவாரியிற்: தடுப்புணு; தடுப்பொணு; தடுப்புரு: மதத் தினுய்; மனத்தினுல்; மதத்தில் வீழ்ந்து.

4. ஆழ்ந்த வானை: மீள்கலாது; மீள்கிலா; மீள்கிலாது; மீதெழாது: அழுந்து கின்ற; அழுந்தி நின்ற: போன்றதே; போன்றவே. (17)

111. ஈரும் வாளின் வால்வி திர்த்தெ யிற்றி ளம்பி றைக்குலம்
பேர மின்ன வாய்வி ரித்தெ ரிந்த கட்பி றங்குதீச்
சோர வொன்றை யொன்று முன்றொ டர்ந்து சீறி டங்கர்மா
போரு கந்து சீறு கின்ற போர ரக்கர் போலுமே.

ஈரும் வாளின்-அறுக்கும் வாள் (ரம்பம்) போன்ற, வால் விதிர்த்து-வாலை அசைத்துக் கொண்டும், எயிறு இளம் பிறை குலம்-கோரப் பற்களாகிய இளம் பிறைச்சந்திரனின் கூட்டங்கள், பேர மின்ன-விட்டு விட்டுப் பிரகாசிக்க, வாய் விரித்து-வாயைத் திறந்து கொண்டும், எரிந்த கண் பிறங்கு தீ சோர-(நெருப்பைப்போல்) எரியும் கண்களினின்றும் விளங்குகின்ற சினத்தீ வெளிப்பட, ஒன்றை ஒன்றுமுன் தொடர்ந்து-ஒன்றுக்கொன்று எதிரெதிராக இருக்கும்படி தொடர்ந்து போய், சீறு-கோபிக்கின்ற. இடங்கர்மா-முதலைகள், போர் உகந்து-போரை விரும்பி, சீறுகின்ற-ஒருவரை யொருவர் (எதிர்த்துக்) கோபிக்கின்ற, போர் அரக்கர் போலும்-போர்த்தன்மை வாய்ந்த அரக்கரை ஒத்திருக்கும். ஏ-அசை.

முதலையின் வாலுக்கு ரம்பமும், கோரப் பற்களுக்குப் பிறையும் உவமை. 'மூர்க்கனும் முதலையும் கொண்டதுவிடா' என்றபடி, விடாப் பிடியும், முருட்டுத் தன்மையும் உள்ள முதலைகளுக்கு அக்குணங்களை யுடைய அரக்கர் உவமை.

(பி - ம்.) 1. வாளில்; வாளி; வானின்: வாலின்; வால்விரித்து; வாள்விதிர்த்து: எயிற்றினம்; எயிற்றுவன்.
2. பேரமின்னி; பேரல்மின்னி; போகமின்னி; நாநிமிர்ந்து; நாநிமிர்த்து; நாவிதிர்த்து; வாய்விதிர்த்து; வாய்விரிந்து: எரித்த; எதிர்ந்த: எதிர்ந்து, பிறங்குதீ.
3. சேரவொன்றேடொன்றை: முன்றொடர்ந்த; பின்றொடர்ந்து: சென்றிடங்கர்மா; சென்றிடங்கர்மாப்; சீறிடங்கர்மாப்.
4. போரில்வந்து; போரின் வந்து; போருவந்து; போரெதிர்ந்து: போன்றதே. (18)

112. ஆளு மன்னம் வெண்கு டைக்கு லங்க ளாவ ருங்கராக்
கோளெ லாமு லாவு கின்ற குன்ற மன்ன யானையாத்
தாளு லாவு பங்க யத்த ரங்க மேது ரங்கமா
வாளும் வேலு மீன மாக மன்னர் சேனை மானுமே.

(அவ்வகழி), ஆளும் அன்னம்-(அகழியைத் தமக்கு இடமாகக் கொண்டு) ஆளுகின்ற அன்னப் பறவைகள், வெண் குடை குலங்கள் ஆ(க)-வெள்ளைக் குடைக் கூட்டங்களாகவும். அரு கரா-(பிற இடங்களில்) கிடைப்பதற்கு அரிய முதலைகள், கோள் எலாம் உலாவுகின்ற-கிரகங்கள் எல்லாம் சுற்றி வருகின்ற, குன்றம் அன்ன-மேருமலையைப் போன்ற, யானை ஆ(க)-யானையாகவும், தாள் உலாவு-தண்டுகளின் மீது அசைகின்ற, பங்கயம் தரங்கமே-தாமரை மலர்களை யெற்

றிக்கொண்டு வருகின்ற அலைகளே, துரங்கம் ஆ(க)-குதிரைகளாகவும், மீனம் வாளும் வேலும் ஆக-(அங்குள்ள) மீன்கள் வாளாயுதமும் வேலாயுதமும் ஆகவும் (கொண்டு), மன்னர் சேனை மானும்-அரசர்களின் போர்ப் படையை ஒத்திருக்கும் - (எழுவாய் வருவிக்கப் பெற்றது.)

வெண்குடை, யானை, குதிரை, வாள், வேல் முதலியவற்றைக் கொண்டு திரண்ட அரசர் படையின் தோற்றத்தை உடையது அகழி என்க.

கரா-க்ராஹம் என்ற வடசொல்லின் திரிபு என்பர். அகப்பட்டதை இழுத்துக் கொள்வது என்பது பொருள்.

முதலைக்கு யானை: 110 குறிப்புப் பார்க்க. குதிரைக்கு அலை: (சுந்தர. 938); மீன்களில், வாளை-வாளுக்கும், கெண்டை அல்லது கயல்-வேலுக்கும் உவமை. 'வாளை பிறழுங் கயங் கடுப்ப...வெள்வாள் விதிர்த்து' (பு-வெ. 147). 'வயற் கெண்டையின் வேல் பிறழினும்' (புறநா. 287); 'வேலன்ன வொண்கயல்' (புறநா. 249).

(பி - ம்.) 1. ஆளுமன்னர்: குலங்களாய் வருங்கராக்; குலங்களாயருங்கராக்; குலங்களாவருங்கராம்.
2. யானையா;யானையாய்;யானையாய்த்: 3. வெங்கதத்துரங்க முந்தரங்கமா; தரங்கமுந்துரங்கமா; தரங்கமுந்தரங்கமாய்; தரங்கமேதுரங்கமாய்.
4. மீனுமாக; மீனதாக: வேலும் வில்லுமின்ன; வில்லுமன்னு; வில்லுமன்று; வில்லுமின்னு. (19)

### அகழியின் கரை

113. விளிம்பு சுற்று முற்று வித்து வெள்ளி கட்டி யுள்ளுறப்
பளிங்கு பொற்ற க்ட்டி ஞேட டுத்து றப்ப டுத்தலின்
தளிந்த கற்ற லத்தொ டச்ச லத்தி னைத்த னித்துறத்
தெளிந்து ணர்த்து கிற்று மென்ற றேவ ராலு மாவதே.

சுற்றும்-சுற்றிலும், விளிம்பு-அகழியின் கரை யோரத்தை, வெள்ளி கட்டி முற்றுவித்து-வெள்ளியால் கட்டி (அழகை) நிறைவித்து, உள்ளுற-(கரையின்) உட்புறமாக, பளிங்கு பொன் தகட்டிஞேடு அடுத்து உற படுத்தலின்-பளிங்குக் கற்களை (இடையிடையே) பொன் தகடுகளோடு அடுத்தடுத்து நெருங்கியிருக்கும்படி பதித்திருத்தலினல், தளிந்த கல் தலத்தொடு அ சலத்தினை-பளிங்குக் கல்லால் தளவரிசை யிடப்பெற்ற அவ்விடத்தையும் அகழியின் நீரையும், தனித்து உற-தனித்தனியாக, தெளிந்து உணர்த்துகிற்றும் என்றல்-வேறுபாடு அறிந்து பிறருக்கும் தெரிவிப்போம் என்பது, தேவராலும் ஆவதே-(மானிடரினும் மிக்க அறிவுடைய) தேவர்களாலும் ஆகத் தக்கதா? (அன்று என்றவாறு). ஏகாரம், எதிர்மறைப் பொருளது.

தேவராலும்: உம்மை, உயர்வு சிறப்பு. உணர்த்துகிற்றும்: கில்-ஆற்றல் உணர்த்தும் இடைச் சொல்.

விளிம்பு...படுத்தலின்: 'வெள்ளியை யுருக்கித் திண்ணையாக இருபுறமும் சுற்றிவரக் கட்டி, நடுவே சந்து சந்துக்கும் பொன் தகட்டாலே குந்தள மிழைத்துப் பளிங்குக் கற்களைத் தளவரிசையாய்ப் பதிப்பித்திருக்கிறபடியினாலே' (பழைய வுரை).

தளிந்த-குளிர்ந்த: 'தளியார் சலதி' (சேதுபு-சேதுவந். *30*); தெளிந்த: 'ஆதிப் பிரானைத் தளிந்தவர்க்கல்லது' (திருமந்திரம்.*527*); பளிங்கும் புனலும் வேறுபாடறிய வியலாமை: *938; 1044*; யுத்த. *790*. 'பளிங்கு செற்றிக் குயிற்றிய பாயொளி, விளிம்பும் வெள்ளமுமெய் தெரியாது' (சுந்தர. *249*).

(பி - ம்.) 1 விளிம்புசுற்ற; சுற்றி; செற்றி; தெற்றி; முற்று; சுற்றுவித்து.
2. தகட்டினேடகத்துறப்; தகட்டகட்டடுத்துறப்; தகட்டிடத்தடுத்துறப்; தகட்டகத்தடுத்துறப்; தலத்தகட்டடுத்துறப், பொற்றலைத்தகட்டடுத்துறப்; படுக்கலிற்.
3. தளிர்ந்த கற்றலந்தொடச்; தளிர்ந்த கற்றலத்தொடச்; எளிந்த கற்றலத்தொடச்; தெளிந்தகற்றலத்தொடச்; தளிர்த்த கற்றலத்தொடச்; தளிந்த கற்றலத்தொடிச்; தளிந்து கற்றலத்தொடச்; தெளிந்துறத்; தணிந்துறத்; தெரிந்துறத்; துணிந்துறத்; கணித்துறத்.
4. உரைத்தகிற்றும்; உரைத்தல் கிற்றும்; உரைத்து நிற்றும்; உணர்த்து நிற்றும்; உறைத்த கிற்றில்; உணர்த்தகிற்றும்; என்று; ஆவதோ.

(20)

## அகழியை அடுத்த சோலைக்காடுகள்

114. அன்ன நீர கன்கி டங்கு சூழ்கி டந்த வாழியைத்
துன்னி வேறு சூழ்கி டந்த தூங்கு வீங்கி ருட்பிழம்
பென்ன லாமி றும்பு சூழ்கி டந்த சோலை யெண்ணிலப்
பொன்னின் மாம திட்கு டுத்த நீல வாடை போலுமே.

அன்ன நீர் - மேற்சொல்லிய அத்தன்மைகளை உடைய, அகன் கிடங்கு-பரந்த அகழியின் வடிவமாக, சூழ் கிடந்த ஆழியை துன்னி-(மதிலாகிய சக்கரவாள கிரியைச்) சுற்றியமைந்திருந்த பெரும்புறக் கடலை அடுத்து, வேறு சூழ் கிடந்த - வேறு வேறாகத் திரண்டிருந்த, தூங்கு வீங்கு இருள் பிழம்பு என்னல் ஆம் - இடம் பெயராத மிக்க இருட் பிழம்பு என்று சொல்லத்தக்க, இறும்பு சூழ் கிடந்த-குறுங்காடுகள் நிறைந்த, சோலை எண்ணில்-பெருஞ் சோலைகளைப் பற்றி நினைத்தால், அ் பொன்னின் மா மதிட்கு உடுத்த-அந்தப் பொன் மயமான பெரிய மதிலுக்கு, (கண்ணெச்சில் படாதவாறு) கட்டப்பெற்ற, நீல ஆடை போலும் - கருநிற ஆடையைப் போன்றிருக்கும்.

'வேறு சூழ் கிடந்த தூங்கு வீங்கு இருட் பிழம்பு என்னலாம் இறும்பு' எனவும் (அத்தகைய) 'இறும்பு சூழ்கிடந்த சோலை' எனவும்

இயைக்க. இறும்பு-குறுங்காடு; 'செய்காடு' என்பர் : திருச்சிற். 148-உரை. 'அன்னநீரகன் கிடங்கு......என்னலாம்' என்ற இப்பகுதிக்குப் பிறவாறும் பொருள் உரைப்பர்.

'அன்ன மா மதிலுக் காழிமால் வரையை யலே கடல் சூழ்ந்தன வகழி' (109) என்பதும், 'நேமிமால் வரைமதி லாக நீள்புறப் பாமமா கடல் கிடங்காக' (175) என்பதும் இங்கே ஒப்பு நோக்கற்கு உரியன.

(பி - ம்.) 1. நீளகன்: கிடந்ததாழியைத்; கிடந்த வாழியே.
2. துன்னவேறு; துன்னுவேறு: சூழ்துடர்ந்த: தூங்கும்; தூங்கி.
3. என்னலா யிறும்பு; என்னலாமிரும்புள்; என்னவாயிறும்பு: என்னிலப்; எண்ணினப்; எண்ணிலாப்: எண்ணிலம்.
4. மதிற்குடுத்த; நகர்க்கணிந்த, நகர்க்குடுத்த, நகர்கொடுத்த; வாண கர்க்குடுத்த; மானகர்க்கணிந்த; மாமதிட்கணிந்த; மாமதிட்கமைந்த, மா மதிற்கமைந்த; மா மதிட்கிடந்த; மால்வரைக்குடுத்த: போலு மால். (21)

நகர வாயில்கள்

115. எல்லே நின்ற வென்றி யானே
யென்ன நின்ற முன்னேமால்
ஒல்லே யும்பர் நாட ளந்த
தாளின் மீது யர்ந்துபோய்
மல்லன் ஞாலம் யாவு நீதி
மாறு ருவ ழக்கினுல்
நல்ல வாறு சொல்லும் வேத
நான்கு மன்ன வாயிலே.

மல்லல் ஞாலம் யாவும்-வளம் பொருந்திய உலகத்து உயிர்கள் எல்லாம், நீதி மாறு உரு வழக்கினுல் - நீதியினின்றும் மாறுபடாத ஒழுக்கத்தோடு இருக்கும் வண்ணம், நல்ல ஆறு சொல்லும் - நல்ல வழிகளே யெடுத்துச் சொல்லுகின்ற, வேதம் நான்கும் அன்ன-நான்கு வேதங்களேயும் போன்ற, வாயில்-(அந்த நகரத்தின்) கோபுர வாயில்கள் நான்கும், முன்னே-முன்னெரு காலத்தில், மால்-திருமால், உம்பர் நாடு ஒல்லே அளந்த-(திரி விக்கிரமமூர்த்தியாகி) தேவருலகத்தையும் விரைவில் (எளிதாக) அளந்த, தாளின்-திருவடியினும், மீது உயர்ந்து போய்-மேலாக உயர்ந்து (வானளாவிச்) சென்று, எல்லே நின்ற - (நகரத்தின்) எல்லேயிலே (நாற்புறமும்) நிறுத்தப்பட்ட, வென்றி யானே என்ன - வெற்றிக்கு அறிகுறியான அரச யானேகள் போல, நின்ற-(கம்பீரமாக) நின்றன. வாயிலே; ஏ-ஈற்றசை.

வேதம் நான்கும் அன்ன வாயில், வென்றி யானேயென்ன நின்ற எனக் கூட்டி முடிவு கொள்க.

நிலத்தின் தன்மையாலும், ஆளும் மன்னரின் நேர்மையாலும், அயோத்தியில் புகுவோர் யாவரும் நெறி தவறுதவர்களாயிருப்பர்; ஆதலால், 'வேதம் நான்கும் அன்ன வாயில்' என்ருர். அவற்றின் உயரத்தைக் குறித்தற்கு, திரிவிக்கிரம மூர்த்தியின் விண்ணளந்த திருவடியை உவமையாக்கினுர். அரசர்கள், தம் வெற்றிச் சிறப்பைக் குறித்தற்குத் தம்முடைய பட்டத்து யானைகளை நாட்டெல்லையிலே நிறுத்தி வைத்தல் உண்டு; அவ்வாறு நிறுத்தப்பட்ட யானைகள் போன்று, கோட்டையின் கோபுர வாயில்கள் கம்பீரமாக நின்றன என்ருர். எட்டுத்திக்கு யானைகளுள் நேர்திசை நான்குக்கும் உரிய நான்கு யானைகளைத் தம் வசமாக்கித் தம் எல்லையிலே நிறுத்திவைத்த தாகக் கூறலும் ஆம். 'தன் மத வாரணம், திசை தொறும் நிறுவிய திறலுறு தொல்சீர்........சீய கங்கன்' (நன். சிறப்புப் பாயிரம்) என்றலும் காண்க. 'யானைகளைத் தமக்குச் சுவாதீனமான எல்லையில் நிறுத்துவது க்ஷத்திரியர்க்கு இயல்பு' (க்ஷேமேந்திர பாரத ஸங்கிரகம்). மக்களின் ஒழுக்கச் சிறப்புக்கு அவர்கள் வாழும் இடமும் காரணமாகு மென்பதை, 'ஆசலம்புரி' (13) என்ற பாடலின் உரையிலும் காண்க. கோட்டையின் வாயில்கள் கோபுர முடையனவாயிருத்தல்: 'தீயழற் செல்வன் செலவு மிசை தவிர்க்கும், வாயில் மாடத்து' (பெருங். 3.3: 30-31); 'வாயின் மாடமொடு வாயி லுள்வழி' (ஷி.ஷி. 25: 14.)

(பி - ம்.) 1. வெற்றி யானை: நின்று முன்னமால்; நின்ற முன்னமா; நின்று முன்னை மால்; நின்று முன்னர்மால்.

2. காலின்மீது: உயர்ந்தவால்; உயர்ந்தவான்; உயர்ந்துவான்; உயர்ந்து வாழ்; உயர்ந்ததான்.

3. ஞாலமேழு நீதி.

4. சொல்லுவேதம்; செல்லும் வேதம்: நாலுமன்ன; நாலுமன்னர். (22)

116. தாவில் பொற்ற லத்தி னற்ற வத்தி னோர்க டங்குதாள்
பூவு யிர்த்த கற்ப கப்பொ தும்பர் புக்கொ துங்குமால்
ஆவி யொத்த சேவல் கூவ வன்பின் வந்த ணைந்திடா
தோவி யப்பு ருவின் மாடி ருக்க வூடு பேடையே.

ஆவி ஒத்த சேவல்-தன் உயிர்போன்ற சேவலை, கூவ - தான் அழைக்க, அன்பின் வந்து அணைந்திடாது-(அது) அன்போடு வந்து தன்னைத் தழுவாமல், ஓவியம் புருவின் மாடு இருக்க-(கோபுரத்திலே) சித்திரத்தில் அமைக்கப்பெற்ற புரு உருவத்தின் பக்கத்திலேயே தங்கியிருக்க, ஊடு பேடை-(அதனைக் கண்டு) ஊடல்கொண்ட பெண் புருவானது, தா இல் பொன் தலத்தில்-குற்றமில்லாத தேவருலகத் திலே, நல் தவத்தினோர்கள் தங்கு தாள்-நல்ல தவஞ் செய்தவர்கள் போய்த் தங்கியிருக்கத்தக்க அடியை உடையதாய், பூ உயிர்த்த- பூக்களைச் சிந்திய, கற்பகம் பொதும்பர் புக்கு - கற்பகச் சோலையி

னுள்ளே புகுந்து, ஒதுங்கும்-அச்சேவலின் கண்ணிற் படாமல் மறையும். ஆல்-அசை.

(தான்) கூவ, (சேவல்) வந்து அணைந்திடாது ஓவியப் புறுவின் மாடு இருக்க, (அதனுல்) ஊடிய பேடை, பொதும்பர் புக்கு ஒதுங்கும் என இயைத்து முடிபு கொள்க.

ஓவியத்தில் அமைக்கப்பெற்ற புறு உருவின் பக்கத்திலே தங்கியிருந்த ஆண் புறுவைக் கண்டு, அது தன்னைவிட்டு வேறொரு பெடையோடு கூடியிருப்பதாகக் கருதி ஊடல் கொண்ட பெண் புறு, அச்சேவலின் கண்களிற் படாமல் கற்பகச் சோலையினுள்ளே புகுந்து மறைந்தது என்றதனுல், கோபுரத்தின் உயர்ச்சியும், அதில் அமைந்துள்ள சித்திர வேலைப்பாட்டின் சிறப்பும் கூறியவாறும்.

தவம் செய்தவர் வாழ்தற்குரிய இடம் பொன்னுலகம்; 'வரங்கள் மாசறத் தவஞ்செய்தோர்கள் வாழ், புரங்கள் நேரிலா நகரம்' (336).

(பி - ம்) 1. தாவு: பொற்றலத்தினில்; பொற்றலத்தினர்; தங்குநாட்; தங்குமற்.
2. பூவுயர்த்த: கற்பகம்: பொதும்பு புக்கு: ஒதுங்கலால்.
3. சேவல்கூவ வருகுவந்து; அன்புசேவல் கூவவந்து; அன்பு சேவல் கூவி வந்து: அடைந்திடா; அடைந்திடாது; அணைத்திடாது; இணைந்திடாது.
4. ஓவியம்புறு: இருக்கவூடும்; இருப்பவூடு. (23)

### வாயிற் கோபுரங்கள்

117. கல்ல டித்த டுக்கி வாய்ப ளிங்க ரிந்து கட்டிமீ
தெல்லி டப்ப சும்பொன் வைத்தி லங்கு பன்ம ணிக்குலம்
வில்லி டக்கு யிற்றி வாள்வி ரிக்கும் வெள்ளி மாமரம்
புல்லி டக்கி டத்தி வச்சி ரத்த கால்பொ ருத்தியே.

பளிங்கு கல் அடித்து அடுக்கி - பளிங்குக் கற்களை அளவாகச் செதுக்கி அடுக்கி, வாய் மீது எல் இட பசும்பொன் அரிந்து வைத்து-சந்து வாய்களிலே ஒளி வீசும்படி பசுமையான பொன்னுலாகிய இழைப்புத் தகடுகளை அரிந்து பொதிந்து, கட்டி-சுவரை எழுப்பி, இலங்கு-(அழகாக) விளங்குகின்ற, பல் மணி குலம்-பல வகையான இரத்தினங்களை, வில் இட குயிற்றி-மின்னும்படி பதித்து, வச்சிரத்த கால் பொருத்தி-வைரக் கற்களாலாகிய தூண்களை (உரிய இடங்களில்) நிறுத்தி, வாள் விரிக்கும்-ஒளியைப் பரப்புகின்ற, வெள்ளி மாமரம்-வெள்ளியால் ஆன விட்டம், தாங்கு பலகை ஆகியவற்றை, புல்லிட கிடத்தி-(தூண்களின் மேலே) பொருந்தப் படுத்தி.

இதுமுதல் மூன்று கவிகள் ஒரு தொடர்; கோபுரங்களின் அமைப்புப் பற்றிய வருணனை. வாயிலின் மேல் தளத்துக்கு மேலே எழுநிலைக் கோபுரம் அமைப்பதற்குரிய எல்லாவற்றையும் விரித்துக்

கூறி, இறுதியில் மேலே கலசங்களுடன் கூடி முற்றுப்பெற்ற கோபுரம் நிலமகளுக்குக் கிரீடம் வைத்ததுபோன்று உள்ளது என முடிவுகட்டு கின்றூர்.

'கல் அடித்தடுக்கி வாய் பளிங்கு அரிந்து கட்டி-கற்களையிட்டுக் கெட்டணை பண்ணித் தளவரிசை போட்டு, அடிப்படையில் பளிங் குக் கல்லைப் பிளந்து கட்டி; பசும்பொன் வைத்து-பசும்பொன்னை உருக்கிச் சந்துக்குச் சந்து வார்த்து; வெள்ளி மாமரம் புல்லிடக் கிடத்தி - வெள்ளித் தகட்டை ஆதாரச் சிலையாகக் கீழே பரப்பி' (ஒரு பழைய உரை). எல்லிட-ஒளி வீச.

(பி - ம்.) 1. கல்லடுத்து; கல்லிடித்து; கல்லெடுத்து: அடுக்கிவாய்ப்; அடுக்கிநற்; அடக்கிவாய்; பளிக்கரிந்து; கட்டியின்; கட்டிமீ; கூட்டிமேல்.
2. எல்லுடைப்; எல்லிடைப்; எல்லுறப்; பொன்மணி.
3. வில்லிடக்.
4. புல்லிடைக்; கிடத்த; குயிற்றி. (24)

118. மரக தத்தி லங்கு போதி கைத்த லத்து வச்சிரம்
புரைத புத்த டுக்கி மீது பொன்கு யிற்றி மின்குலாம்
நிரைம ணிக்கு லத்தி னாளி நீள்வ குத்த வோளிமேல்
விரவு கைக்த லத்தி னுய்த்த மேத கத்தின் மீதரோ.

மரகதத்து இலங்கு போதிகை தலத்து-பச்சை மணியாலியன்று விளங்குகின்ற போதிகைக் கட்டைகளின் மேல், வச்சிரம் புரைதபுத்து அடுக்கி-வைரக் கற்களைக் குற்றந் தீர்த்து (செம்மைப் படுத்தி) அடுக்கி, மீது பொன் குயிற்றி-அவற்றின் மேல் பொன்னைப் பதித்து, மின் குலாம்-மின்னல்போல் ஒளி செய்கின்ற, நிரை மணி குலத்தின் வகுத்த-வரிசையான பல மணிகளால் ஆகிய, ஆளி-சிங்க உருவங்கள் அமைக்கப்பட்ட, நீள் ஒளி மேல் விரவு-நீண்ட வரிசையின் மேலே பொருந்திய, கைதலத்தின் உய்த்த-கை மரங்களாகக் கிடத்தப்பட்ட, மேதகத்தின் மீது-கோமேதகக் கட்டைகளின்மேல்; அரோ-அசை. மேதகம்-கோமேதகம்; முதற் குறை.

'மரகதப் போதிகை வைத்துச் சுமை தாங்கும்படி அதன்மேலே வச்சிரத்தாலே உத்தரங்களும் பாவு சிலையும் பாய்ச்சிச் சந்துகளுக் கெல்லாம் சுண்ணும்புபோல் பொன்னைக் காய்ச்சிவிட்டுச் செங்கற் பொடிபோல் மாணிக்கங்களைப் பருக்கை தட்டிக் கோமேதகத்தாலே கொடுங்கையை ஒழுங்காய் வைத்து' (ஒரு பழையவுரை). ஆளி-யாளி; ஒரு சிங்க விசேடம். ஒளி-ஒழுங்கு. கை-கைம்மரம்.

(பி - ம்.) 1. மரதகத்து: போதிகைக் குலத்து; போதிகைக்குலத்த: வச்சிரப்.
2. புரைதவிர்த்து; புரைதகர்த்து: அடக்கி; அடுத்து: மீக்குலாம்; மீன் குலாம்; இன்குலா.
3. மணித்தலத்தினுளி; மணிக்குயிற்றினுளி; மணிக்குலத்தினேளி: நீர் வருத்த; நீள்வகுத்து; நிரைத்துவைத்த; நீணிலத்த; தூணின்மேல்.

வெள்ளிமேல்; ஒளியின்மேல்; ஆளிமேல்; ஒளியின்; ஓதிமேல்; வாளமேல்.

4. தலத்திலுய்த்த; தலத்திறைத்த; தலத்திலுற்ற: மேதகத்த மேலரோ. (25)

119. ஏழ்பொ ழிற்கு மேழ்நி லைத்த லஞ்ச மைத்த தென்னநூல்
ஊழு றக்கு றித்த மைத்த வும்பர் செம்பொன் வேய்ந்துமீச்
சூழ்சு டர்ச்சி ரத்து நன்ம ணித்த சும்பு தோன்றலால்
வாழ்நி லக்கு லக்கொ ழுந்தை மௌலி சூட்டி யன்னவே.

ஏழ் பொழிற்கும்-(மேல்) ஏழு உலகங்களில் உள்ளவர் யாவருக்கும், ஏழ் நிலை தலம் சமைத்தது என்ன-ஏழு நிலைகளாகிய இடங்களை அமைத்து வைத்தாற்போல, நூல் ஊழ் உற-சிற்ப நூலின் முறைப்படி, குறித்து அமைத்த-(நன்கு) சிந்தித்து அமைக்கப்பட்ட அக்கோபுரங்கள், உம்பர் செம்பொன் வேய்ந்து-மேலே நல்ல பொன் தகடுகள் பதிக்கப்பெற்று, மீ-எல்லாவற்றிற்கும் மேலே, சூழ் சுடர் சிரத்து-பரந்த ஒளி பொருந்திய உச்சியிலே, நல்மணி தசும்பு தோன்றலால்-நல்லஇரத்தின கலசங்களுடன் காணப்படுவதனல், வாழ் நிலம் குலம் கொழுந்தை-(என்றும்) வாழும் பூமிதேவியின் குலக் கொழுந்தாகிய அயோத்தி நகரத்துக்கு, மௌலி சூட்டிய அன்ன-மகுடம் சூட்டினற் போன்றவை யாகும். ஏ-அசை.

கொழுந்தை, உருபு மயக்கம்.

நான்கு வாயிலுக்கும் தனித் தனியே கோபுரம் அமைந்திருத்தலால் பன்மையாகக் கூறினர். 'கோபுரத்தின் ஏழுநிலைகளும், மேல்ஏழு உலகத்தவர்கள் முறையே வந்து தங்குதற்கு ஏற்றவாறு அமைந்துள்ளன' என்று அவற்றின் அழகையும் உயரத்தையும் சிறப்பித்துக் கூறுகின்றர். மேலேழுலகமாவன: பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகாலோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகம் என்பன.

ஏழ்பொழிற்கும்...சமைத்த தென்ன; 'ஒன்றுமேலொன்று யிருக்கிற ஏழு நிலையும் மேலே யிருக்கிற ஏழுலோகத்தைப்போல' (பழைய வுரை). தசும்பு - குடம்: கலசம். 'ஆடகத் தசும்புறு சயந்தனம்' (ஆரணிய. *414*); 'தசும்புடைக்கனக நாஞ்சிற் கடிமதில்' (சுந்தர. *90*); 'தசும்புடைக் கொடுந்தேர்' (யுத்த. *1894*).

(பி - ம்.) 1. ஏழ்புவிக்கும்; ஏழ்நிலத்தலம்; ஏழ்நிலாத்தலம்; ஏணிலத்தலம்; மேனிலைத்தலம்; மேனிலத்தலம்: சமைத்தல்; சமைந்தது; சமைந்த; சமைத்த: என்னுநூல்; எண்ணுநூல்; எண்ணுறும்; என்னலாம்; என்னலால்; என்னலாய்; என்னவே;என்று நூல்.

2. குவித்தமைத்த; குறித்தமைத்தது; குவித்தமைந்த; குவிந்தமைத்த; வேய்ந்தயல்; வேய்ந்துயர்; மேய்ந்தயல்; வேய்ந்துவிற்; வேய்ந்தயிற்; மேய்ந்துமீச்.

3. சுடர்ச்சிரத்தினன்மணித்; சுடர்ச்சிரத்தினின் மணித்; சுடர்க்குலத்து நன்மணித்; சுடர்ச்சிரத்தின் மாமணித்: தோன்றுமால்.
4. வாழ்நகர்க்; வாழநற்; வாணகர்க்; வாணிலக்: சூட்டியென்னவே; சூட்டியன்னதே; சூடியன்னவே. (26)

### நகரத்து மாளிகைகள்

(வேறு)

120. திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய
சங்கவெண் சுதையுடைத் தவள மாளிகை
வெங்கடுங் கால்பொர மேக்கு நோக்கிய
பொங்கிரும் பாற்கடற் றரங்கம் போலுமே.

திங்களும் கரிது என-சந்திர மண்டலமும் கருமையானது என்று சொல்லும்படி, வெண் சங்கம் சுதை உடை(ய) வெண்மை தீற்றிய-வெள்ளிய சங்குச் சுண்ணும்புச் சாந்தினுல் வெண்மை யூட்டப்பெற்ற, தவளம் மாளிகை-தூய வெள்ளை நிற மாளிகைகள், வெம் கடு கால்பொர-கடுமையான விசையையுடைய பெருங்காற்றுத் தாக்கியதனுல், மேக்கு நோக்கிய பொங்கு-மேல் நோக்கியவாறு பொங்கி எழுந்த, இருபால் கடல் தரங்கம் போலும்-பெரிய பாற்கடலின் அலைகளைப் போன்றிருக்கும். ஏ-அசை.

திங்களும்: உம்-உயர்வு சிறப்பு. இது முதல் 12 பாடல்கள் அயோத்தி நகரத்து மாளிகைகளின் சிறப்புக் கூறும். வெண்மை மிகுதிக்குப் பாற்கடல் அலைகளை உவமித்தார். மேல்நோக்கி எழுந்து நின்ற அலைகள் என்றது இல் பொருள் உவமை என்னலாம்.

சுதை தீற்றிய மாடம்: 'புதுப் பிறை யன்ன சுதை செய் மாடத்து' (புறநா. 378.); 'வெள்ளி வெண் சுதை யிழுகிய மாடத்து' (மணி. 6: 43). 'வெண் சுதை தீற்றிய மாடம்' (நைடத. நகர. 5) 'வெண் சுதைக்குத் திங்கள்: 629.

(பி - ம்.) 1. தீற்றியச்.
2. சங்கை வெண்: குடையுடைத்; சுதை புரை; சுதைபுரி: தரள.
3. வெங்கரும்: கால்பொர வெகுளி நோக்கியப்.
4. பொங்கரும்: போன்றதே. (27)

121. புள்ளியம் புறவிறை பொருந்து மாளிகை
தள்ளருந் தமனியத் தகடு வேய்ந்தன
எள்ளருங் கதிரவ னிளவெ யிற்குழாம்
வெள்ளிவெண் கிரியிடை விரிந்த போலுமே.

தள்ள அரு-நீக்குதற்கு அரிய, தமனியம் தகடு வேய்ந்தன - பொன் தகடுகள் மேலே மூடப் பெற்றனவாகி, புள்ளி அம் புறவு இறை பொருந்தும் - (உடலில்) புள்ளிகளையுடைய அழகிய புருக்கள்

தங்குதற்குரிய இடங்கள் அமைந்த, மாளிகை-மாளிகைகள், எள்ள அரு கதிரவன் இளவெயில் குழாம் - இகழ்தற்கு அரிய சூரியனது இளங்கதிர்த் தொகுதிகள், வெள்ளி வெண் கிரியிடை - வெண்மை யான வெள்ளி மலையினிடத்தே, விரிந்த போலும்-பரவியிருத்தலைப் போன்று இருக்கும். ஏ-அசை.

தமனியத் தகடு வேய்ந்தனவாகிப் புறவிறை பொருந்தும் மாளிகை என்க.

மாளிகைகளில் புறக்கள் வந்து தங்குவதற்குரிய இடங்கள் அமைத்தல் சிற்ப நூல் மரபு என்பர். இவ்விடங்கள் 'கபோதகம்' எனப்படும். மாளிகைகள் வெள்ளிமலை போன்ற தோற்றத்துடன் இருக்க, அவற்றின்மீது பதித்த தங்கத் தகடுகளின் ஒளி வெள்ளிமலை மீது இளவெயில் படிந்தது போலும் என்கிறார்; **தற்குறிப்பேற்ற அணி.**

இறை=இறுத்தல்-தங்குதல்; இது ஆகு பெயராய்த் தங்கும் இடத்தைக் குறித்தது. புறவிறை பொருந்தும் மாளிகை: 'மாடத், திறை யுறை புறவின் செங்காற் சேவல்' (பெரும்பாண். 438-9) 'மனையுறை புறவின் செங்காற் சேவல்' (நெடுநல். 45).

(பி - ம்,) 1. புள்ளியும்: புறவிடைப்; புறவுறை; புறவிடை; புறவினிற்; புறவிரைப்: மாளிகைத்.
2. வேய்ந்தென.
3. கதிர்வளர்; வெயிலியற்.
4. வெள்ளியங் கிரிமிசை.

(28)

122. வயிரநற் கான்மிசை மரக தத்துலாம்
செயிரறு போதிகை கிடத்திச் சித்திரம்
உயிர்பெறக் குயிற்றிய வும்பர் நாட்டவர்
அயிர்வுற விமைப்பன வளவில் கோடியே.

வயிரம் நல் கால் மிசை - வயிரத்தாலாகிய அழகிய தூண் களின்மேல், மரகதம் துலாம்-மரகதத் தாலியன்ற உத்தரக் கட்டை களையும், செயிர் அறு போதிகை-குற்றமில்லாத போதிகைக் கட்டை களையும், கிடத்தி-பரப்பி அமைத்து, சித்திரம் உயிர்பெற குயிற்றிய- சித்திரங்கள் உயிருள்ளவைபோல அமைக்கப் பெற்றனவாய், உம்பர் நாட்டவர் - தேவருலகத்தவரும், அயிர்வு உற (தங்கள் விமானங் களோ என்று) ஐயங்கொள்ளும்படி, இமைப்பன-பிரகாசிப்பனவாகிய மாளிகைகள், அளவு இல் கோடி - பல கோடிக்கணக்கானவை (அங்கே உள்ளன).

ஏ-ஈற்றசை. குயிற்றிய, இமைப்பன; வினையாலணையும் பெயர் கள். அளவில் கோடி என்றது மிகப்பல என்பதைக் குறிக்கும். உம்பர் நாட்டவர் என்ற விடத்தில் உயர்வு சிறப்பு உம்மை விகாரத்தால்

தொக்கது. 'இமைப்பன' என்பதைச் சித்திரத்தோடு கூட்டலும் ஆம்.

துலாம்-உத்தரக் கட்டை, கைம்மரம். போதிகை-தூண்களின் தலையில் பாரந்தாங்கும்படி வைக்கப்படும் கட்டை. போதிகையும் துலாமும்: அடுத்த கவியிலும் காண்க.

'மரகதத் திலங்கு போதிகைத் தலத்து': (118). 'துகிர்த்துலா மண்டபத்து' (பெருங். 1. 37 : 102.)

(பி - ம்') 1. மரதகத்.
2. செயிரறப்: போதிகைக் கிடத்திச்; கடந்த; கடத்த.
3, உயிர்பெறக் குறித்தன; குறித்தென; குயிற்றின; குயிற்றியது: நாட்டினும்.
4. அயிருற; அயர்வுற; அயர்புற; மயர்வுற: அளவில் காட்சியே; இனிய காட்சியே; அளவிலாதன. (29)

123. சந்திர காந்தத்தின் றலத்த சந்தனப்
பந்திசெய் தூணின்மேற் பவளப் போதிகைச்
செந்தம னியத்துலாஞ் செறித்த திண்சுவர்
இந்திர நீலத்த வெண்ணில் கோடியே.

சந்திரகாந்தத்தின் தலத்த-சந்திரகாந்தக்கற்களாலாகிய தள வரிசையுடையனவும், பந்தி செய் சந்தனத் தூணின்மேல்-வரிசையாக நிறுத்தப்பட்ட சந்தன மரத் தூண்களின் மேல் (பொருத்திய), பவளம் போதிகை-பவளத்தால் ஆகிய பொதிகையிலே, செம்தமனியம் துலாம் செறித்த-செம்பொன்னுற் செய்த துலாம் பொருத்தப் பெற்றனவும், திண் சுவர் இந்திர நீலத்த-உறுதியான சுவர்கள் இந்திர நீலக் கற்களால் கட்டப்பெற்றனவும் (ஆகிய மாளிகைகள்), எண் இல் கோடி-அளவற்ற கோடிக் கணக்கானவை. ஏ-ஈற்றசை.

தளவரிசை சந்திரகாந்தக்கல்; தூண்கள் சந்தன மரம்; போதிகை பவளம்; துலாம் செம்பொன்; சுவர்கள் இந்திர நீலம்; இத்தகைய அமைப்புக்களைக் கொண்ட மாளிகைகள் எண்ணில் கோடி என்க. எண்ணில் கோடி என்பது முன் கவியில் அளவில் கோடி என்றதைப் போன்றது. இப்பாடலுள் துலாம் என்றது, போதிகையின் இருபுறத்தும் கீழ் நோக்கியவாறு வாழைப் பூவின் வடிவமாகப் பொருத்தப்படும் உறுப்பு.

தலத்த, செறித்த, நீலத்த என்பன குறிப்பு வினையாலணையும் பெயர்கள்.

சந்திரகாந்தத்தின் தலத்த: 'கறந்தாலென நீர்தரு சந்திரகாந் தத்தாலோர், சிறந்தார் மணிமண்டபஞ் செய்க' (ஆரணிய. 708,)

(பி - ம்.) 1. காந்தத்தில்: தலத்திற் சந்தனப்; நிலத்த சந்தனப்; நலத்த சந்தனப்; தலத்ததைச் சந்தனப்: தரளம் வேய்ந்தன; தரணம் வேய்ந்தன; அலத் தஞ் சேர்ந்தன.

2. போதிகை.
3. செந்தனி மணித்துலாம்; செந்தழன் மணித்துலாம்: செறிந்த.
4, நீலத்தின்: எண்ணிலாதன; இமைப்பில் கோடியே, (30)

124. பாடகக் காலடி பதுமத் தேய்ப்பன
சேடரைத் தழீஇயின செய்ய வாயின
நாடகத் தொழிலின நடுவு துய்யன
ஆடகத் தோற்றத்த வளவி லாதன.

இப்பாடல், மாளிகைகளில் அமைந்துள்ள ஓவியங்களின் சிறப்பைக் கூறுகின்றது.

பாடகம் கால் அடி-பாடகம் அணிந்த கால்களின் அடிப்பாகங்கள் (பாதங்கள்), பதுமம் ஏய்ப்பன-தாமரைப் பூவை யொத்திருப்பனவும், செய்ய வாயின-சிவந்த வாயை உடையனவும், நடுவு துய்யன-இடை பஞ்சின் நுனிபோல நுட்பமானவையும், ஆடகம் தோற்றத்த-பொன் மயமான தோற்றத்தை உடையவையும் (ஆன ஓவியங்கள்), அளவு இலாதன-எண்ணிறந்தவை; (அவற்றுள்சில), சேடரை தழீஇயின-தம் கணவன்மாரைத் தழுவிக் கொண்டுள்ள அமைப்புடையன; (மற்றும் சில), நாடகம் தொழிலின - பரத நாட்டியம் ஆடும் தோற்றத்தையுடையன.

பதுமத்து: அத்துச் சாரியை நிற்க, உருபு தொக்கது.

பாடகம்-பாதசரம் எனப்படும் காலணி. சேடர்-இளைஞரான ஆடவர்; துய்-பஞ்சின் நுனி. 'துய்யைச் சுடுவெங்கனலின்' (அயோத் 422). ஆடகம்-பொன்னின் வகை நான்கினுள் ஒன்று; இது மிகச் சிறந்தது என்பர். நான்காவன: சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்பன.

இப்பாட்டு, மகளிருக்கும் மாளிகைகளுக்கும் சிலேடையாக அமைந்துள்ளது. மாளிகைகளின் அழகைக் கூறுவதெனக் கொண்டு அதற்கேற்பப் பொருள் உரைப்பாரும் உளர்; அவர்கள் கொள்ளும் பாடமும் சிறிதுவேறுபடும்.

'மண்டபத்திலே எழுதியிருக்கிற சில பெண்பதுமைகள் புருஷரை அணைந்திருக்கிறதாகவும், சில நாட்டியம் பண்ணுகிறதாகவும், சிவந்த வாயும், பாடகஞ் சிலம்பு சதங்கையணிந்த செந்தாமரை போன்ற காலும், உண்டோ இல்லையோவென்று சொல்லத்தக்க இடையும், பொன்னுருவமு முடைத்தாய்ப் பின்னும் அநேக விதங்களாயிருக்கும்' (பழையவுரை).

(பி - ம்) 1. காலடிப்; காலன: பதுமத்தொப்பன; பதுமைக் கொப்பன.
2. சேடரைதழீஇயின; சேடைத்தழீஇயன; தழீயன; தழீயென; உறழ்வன: வாயன; செய்வன.

3. தொழிலன; தொழிலென; நடுவு தூயன; நனியுந் தூயன.
4. மாடகத்; மகளிரல்லன; மகளிரல்லவே; மகளிர் போன்றன; மகிபனில் லன: அளவில் கோடியே. (31)

125. புக்கவர் கண்ணிமை பொருந்து ருதொளி
தொக்குடன் றயங்கவிண் ணவரிற் ரேன்றலால்
திக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வவீ
டொக்கநின் றிமைப்பன வும்பர் நாட்டினும்.

புக்கவர்-அம்மாளிகைகளினுள்ளே புகுந்தவர்கள், கண் இமை பொருந்துருது-(அவற்றில் காணும் அதிசயத்தால்) கண்களை இமைக்காமல், ஒளி தொக்கு உடன் தயங்க-அவற்றின் பேரொளி திரண்டு தம்மோடு கலந்து விளங்கப்பெற்று, விண்ணவரின் தோன்றலால்-தேவர்களைப்போலக் காணப்படுவதனுல்,நினைப்பினில்-நினைத்தமாத்திரத்தில், திக்கு உற செல்லும்-எல்லாத் திசைகளிலும் செல்லவல்ல, தெய்வ வீடு ஒக்க நின்று-தெய்வ விமானங்களுக்கொப்பாக உயர்ந்து நின்று, உம்பர் நாட்டினும்-தேவருலகத்திலும், இமைப்பன-தம் ஒளியைப் பரப்புவனவாயின (பல மாளிகைகள்).

மாளிகையினுள்ளே அதன் சிறப்பைக் காணப் புகுந்தவர்கள், வியப்பினுல் கண் இமையாமல் நின்று பார்க்கும்போது, மாளிகையின் பேரொளி தம்மேல் படுவதனுல் தேவர்களுக்கு ஒப்பான காந்தியும் உடையவர்களாகின்றனர். அவ்வாருகவே, மாளிகை ஒவ்வொன்றும் ஒவ்வொரு தேவ விமானம்போலத் தோற்றமளிக்கின்றது என்றவாறு. நினைப்பினில் செல்லும் தெய்வ வீடு என்றதனுல் தேவவிமானம் என்பதாயிற்று.

தொக்கு=த்வக்-தோல்; இது ஆகுபெயராய் உடம்பைக் குறித்தது என்று கொண்டு, ஒளி, தம்முடம்போடு கலந்து விளங்க எனப் பொருள் கூறுவாரும் உளர். 'உம்பர் நாட்டினும்' என்பதற்கு தேவருலகத்தினும் மேலாக என்றலும் ஆம்.

(பி-ம்.) 1. கண்ணினை; கண்ணிணைப்; கண்ணின: பொருந்துருதொளிர்: பொருந்துருமையால்.
2. தொக்கிடைத் தயங்கி; தொக்கிடைத் தயங்கு; தொக்கிடை தயங்கி; தொக்குற வயங்கு; தொக்குடன் றயங்கி; தொக்குடறயங்கி; தோன்றலில்.
3. திக்குறு நினைப்பினிற்; திக்குற நினைப்பினும்; திக்குற விமைப்பினும்; திக்குற நிறுப்பினும்; திக்குற நினைப்பினுற்; தேவர் வீடு.
4. ஒக்குநின்று: நாட்டின; நாட்டினே. (32)

126. அணியிழை மகளிரு மலங்கல் வீரரும்
தணிவன வறநெறி தணிவி லாதன
மணியினும் பொன்னினும் வனைந்த வல்லது
பணிபிறி தியன்றில பகலை வென்றன.

அணி இழை மகளிரும்-அழகிய ஆபரணங்களை அணிந்த இள மங்கையரும், அலங்கல் வீரரும்-மாலையை அணிந்த வீரராகிய காளையரும், தணிவன- தங்கப்பெறுவன; அறநெறி தணிவு இலாதன-தரும வழியிலே குறைவு இல்லாதன; மணியினும் பொன்னினும் வனைந்த அல்லது-மணிகளாலும் பொன்னாலும் அலங்கரிக்கப்படுதலையன்றி, பிறிது பணி இயன்றில-வேறு (சாதாரணமான) பொருள்களால் வேலைப்பாடு அமைந்தன அல்ல; பகலை வென்றன-(தம் ஒளியால்) சூரியனையும் வென்றுவிட்டன; (பல மாளிகைகள்).

மாளிகைகளிலே, வயதில் இளையவர்களான ஆடவரும் மகளிரும் தங்கியிருப்பினும், அவர்களும் அறநெறி வழுவாதவர்கள்; ஆதலால், அவர்கள் செயலை மாளிகைகளுக்கு ஏற்றி, 'அறநெறி தணிவிலாதன' என்றார்; ஈண்டு. அடுத்த செய்யுளையும் நோக்குக. தணிதல்-தங்குதல், குறைதல். தணிவன-தணிவு இலாதன: **முரண்தொடை.** பின் இரண்டடிகளுக்கு, மாளிகைகளின் உள்ளிடங்களை அலங்கரித்தற்கும், மணியும் பொன்னுமாகிய உயர்ந்த பொருள்களையன்றி வேறு தாழ்ந்த பொருள்கள் அங்கே பயின்றில என்பது கருத்து. எனவே, செல்வ மிகுதி கூறியவாறு.

மணிகளாலும் பொன்னாலும் அலங்கரித்தல்: 'பழுக்குலைக் கமுகுந் தெங்கும் வாழையும் பசும்பொன்னாலும், எழிற்பொலி மணியினாலுங் கடைதொறு மியற்றினரே': (சீவக. 115).

(பி - ம்.) 1. மணி யிழை.
2. தணிவற நெறிகளும்: தணிக்கிலாதன.
3. வனைந்ததல்லது; வளைந்தவல்லது.
4. பிறிதியன்றன; பிறதிமைப்பன; பிறிதியற்றின; பாங்குமில்லையே. (33)

127. வானுற நிவந்தன வரம்பில் செல்வத்த
தானுயர் புகழெனத் தயங்கு சோதிய
ஊனமி லறநெறி யுற்ற வெண்ணிலாக்
கோனிகர் குடிகடங் கொள்கை சான்றன.

வான் உற நிவந்தன-ஆகாயத்தை அளாவ உயர்ந்தவையும், வரம்பு இல்செல்வத்த-(வாழும் மக்களின் மேம்பாட்டால்) அளவற்ற செல்வம் உடையனவும், உயர் புகழ் என - மிகுகின்ற புகழைப் போல, தயங்கு சோதிய - விளங்குகின்ற வெள்ளொளியை உடையனவும், ஊனம் இல் அறம் நெறி உற்ற - குற்றமில்லாத தரும வழிகளிலே பொருந்திய, கோன் நிகர் - அரசனுக்கு ஒப்பான, எண் இலா குடிகள் - அளவற்ற குடி மக்களை, தம் கொள்கை சான்றன - தம்மிடத்துக் கொள்ளுதலால் மேம்பட்டனவும், (ஆயின மாளிகைகள் மிகப்பல.)

வரம்பில் செல்வத்த என்பதற்கு விலைமதிக்க வொண்ணாத சிறப்புடையவை என உரைத்தலும் ஆம். புகழின் நிறம் வெண்மை யென்பர். அறநெறி உற்றனவும், கோனை நிகர்த்தனவும் ஆகிய எண்ணிலாக் குடிகள் என்க. 'உற்ற' என்பதனை முற்றாக்கி மாளிகை கட்கு ஏற்றி உரைப்பினும் ஆம். குடிகள் தம் கொள்கை - குடிகளைக் கொண்டிருத்தல். தம் சாரியை; தான்: அசை.

கோன் நிகர் குடிகள்: 'பெருநில முழுதாளும் பெருமகன்றலை வைத்த, ஒரு தனிக் குடிகள்' (சிலப். மங்கல. 31-32); 'வீறுசான் மன்னர் விழையுங் குடியுள' (நான்மணி. 54).

(பி - ம்.) 1. நிமிர்ந்தன; செல்வத்தோர்; செல்வமும்.
2. புகழன; தயங்கும்.
3. ஈனமி லறநெறி; எண்ணிலாதன; வெண்ணிலா வெனக்; உற்ற தெண் ணிலாக்; உற்ற வெண்ணிலா; உற்ற வெண்ணில; உற்ற விண்ணவர்;
4. கோனகர்; கோனிவர்; குடி பல; கொள்ளை சான்றன; குறைகட ரவே. (34)

128. அருவியிற் றாழ்ந்துமுத் தலங்கு தாமத்த
விரிமுகிற் குலமெனக் கொடிவி ராவின
பருமணிக் குவையின பசும்பொன் கோடிய
வருமயிற் கணத்தன மலையும் போன்றன.

அருவியின் தாழ்ந்து அலங்கு முத்து தாமத்த - அருவிபோலத் தொங்கி அசைகின்ற முத்து மாலைகளை உடையன; விரி முகில் குலம் என கொடி விராவின-பரந்த வெண் மேகக் கூட்டம் போலக் கொடி கள் கலந்து விளங்குவன; பரு மணி குவையின-பருத்த இரத்தினக் குவியல்களை உடையன; பசும்பொன் கோடிய-மிக்க பொன் திரளைக் கொண்டன; வரும் மயில் கணத்தன-வளரும் பல மயில்களை உடை யன; மலையும் போன்றன-(இவற்றால்) மலைகளையும் ஒத்திருப்பன (பல மாளிகைகள்).

அருவி, மேகம், மணி, பொன், மயில் ஆகியவை மலையில்உள்ளன; அவை இம்மாளிகைகளிலும் உள்ளனவாதலால், 'மலையும் போன்றன' என்றார். மலைக்கு உரிய பொருள்களைப் பெற்றிருத்தலோடு தோற் றத்திலும் மலை போன்றவை மாளிகைகள். (நெடுநல். 97-100. பார்க்க.) கோடி-ஒரு பேரெண்; இங்கே மிகுதியைக் குறிக்கும். மாளிகைகளில் மயில்களை வளர்ப்பராதலின், 'வரு மயிற் கணத்தன' என்றார்; மயிலுருவில் அமைந்த ஓவியங்கள் என்றும் ஆம். இனி, வரும் அயில் கணத்தன எனப் பிரித்து, இடி தாங்கியை உடையன எனக் கூறலும் ஆம்.

முன்னே மாளிகைகளுக்குப் பல உவமைகளையுங் கூறியிருத் தலின், இங்கே மலையும் போன்றன என்றார்; உம்-இறந்தது தழுவிய எச்சவும்மை.

மாளிகைகளில் கொடிகள்: *129, 131*; அயோத். *286*.

(பி - ம்.) 1. தாழ்ந்த முத்; தாழ்ந்தன; அலங்கும்; அலைக்கும்; இலங்கு சோதிய.
2. விராயின; விராயன.
3. குவையன; குவையென; குவையவன்; பசும்பொற்.
4. பொருமயிற்; மருமயிற்; கணத்தின; கனத்தன; குணத்தின; போல்வன; அல்லன. (35)

129. அகிலிடு கொழும்புகை யளாய்ம யங்கின
முகிலொடு வேற்றுமை தெரிக லாமுழுத்
துகிலுடை நெடுங்கொடிச் சூல மின்னுவ
பகலிடு மின்னணிப் பரப்புப் போன்றவே.

அகில் இடு கொழு புகை அளாய் மயங்கின-அகிற் கட்டையால் உண்டாகும் வளம் மிக்க புகை சூழ்ந்து படிந்தனவாகி, முகிலொடு வேற்றுமை தெரிகலா-மேகத்தோடு (அவற்றிடை) வேறுபாடு காண முடியாத, முழு துகில் உடை நெடு கொடி-மிக மெல்லிய சீலையாலாகிய நீண்ட கொடிகளினிடையே, சூலம் மின்னுவ-(இடி தாங்கிச்) சூலங்கள் மின்னுவன, பகல் இடு மின் அணி பரப்பு போன்ற-ஒளிவிடுகின்ற மின்னல் வரிசையின் பரப்பை ஒத்திருந்தன. ஏ-அசை.

முழுத் துகில்-மிக மெல்லிய துகிற்சீலை. வெண் மேகம் போன்ற இவற்றிலே மிக்க புகை சூழ்தலால் எல்லாம் கலந்து கருமேகக் கூட்டம்போல் ஆக, அவற்றினிடையே (மேகத்தினின்றும் உண்டாகும்) மின்னல் போலச் சூலங்கள் தோற்றமளித்தன; மாளிகைகளில் இடி தாங்கும் பொருட்டும் அழகுக்காகவும் சூலங்களைப் பொருத்துவர்: ‘பிறையணி மாளிகை சூலத்தவாய்’ (திருச்சிற். 222.)

ஈற்றடி, ‘பகலிடு வின்மணிப் பரப்புத் தோன்றுமே’ எனவும் பாடம். இப்பாடத்திற்கு, சூலங்கள் மின்னல் போன்றுள்ளன என்றும், பகலிலே உண்டாகும் வானவில்லைப்போலப் பலநிற மணிகளின் ஒளிப் பரப்புத் தோன்றும் எனவும் பொருள் கொள்ளுக. பகல்-ஒளி.

(பி - ம்.) 1. அகிலிடும்; அகிலொடு; கொடும் புகை; ஆய்; முயங்கின.
2. முகிலொடும்; தெரிக்கலா; தெரிக்கிலா; தெரிகிலா; தெரிக்கொ
3. துகிலொடு; துகிலிடை; துகிலிடு; நெடுங்கொடி சூலம்; சூழல்; சூ மின்னிடப்; மின்னிடை; மின்னிடைப்; மின்னென.
4. பகலிடும்; பகலிட; பகலிடை; பகலொடு; பகலடு; மின்மணி; மின் மணிப்; பன்மணிப்; மின்மினி; மின்னணி; மின்னினம்; வின்மணிப்; வின்மணி; விண்மணி; இனமணிப்; மின்னலின்; பரப்ப; பரப்பத்; பரப்பல்; பரப்புத்; பரப்பும்; பரப்பது; பரப்பில்; பறப்ப; பறப்பத்; போன்றதே; போன்றன; ஒன்றுமே; தோன்றின; தோன்றுமே; தோன்றுவ. (36)

130. துடியிடைப் பணைமுலைத் தோகை யன்னவர்
அடியிணைச் சிலம்புபூண் டரற்று மாளிகைக்
கொடியிடைத் தரளவெண் கோவை சூழ்வன
கடியுடைக் கற்பகக் காவைப் போன்றவே.

துடி இடை-உடுக்கையின் நடுப்போலச் சிறுத்த இடையையும், பணை முலை-பருத்த தனங்களையுமுடைய, தோகை அன்னவர்-மயில் போலும் சாயலுள்ள இள மங்கையரின், அடி இணை-இரண்டு கால்களையும், சிலம்பு பூண்டு அரற்றும் மாளிகை-சிலம்பென்னும் ஆபரணங்கள் பற்றிக்கொண்டு (அவர்கள் அடிசிவப்ப நடப்பதற்கு வருந்தி) முறையிடுதற்கிடமான மாளிகைகளிலே (உள்ள), கொடி இடை-பலவகைக் கொடிகளுக்கு இடையிடையே, தரளம் வெண் கோவை சூழ்வன-வெள்ளிய முத்து மாலைகள் (அழகு செய்துகொண்டு) தொங்கும் தோற்றம், கடி உடை-சிறப்புடைய, கற்பகம் காவை போன்ற-கற்பகச் சோலையை ஒத்திருந்தன. ஏ-அசை.

மாளிகைகள் பலவாதலால் பன்மையில் கூறினர்.

பல நிறக் கொடிகளும் முத்துமாலைகளும் கலந்து காணப்படுங் காட்சி, கற்பகச் சோலை போலிருந்தது எனச் சிறப்பிக்கின்றார். அடுத்த கவியில் 'நெடுவரைக் கதலிக் கானம்போல்' என்பர்.

அரற்றும் மாளிகை - அரற்றுதற்கு இடமாகிய மாளிகை. கடி-நறுமணமும்ஆம். பின் இரண்டடிகளுக்கும் பலவாறுபொருள் கூறுவர்.

(பி - ம்.) 2. அடியிணைச்; அடியிடைச்; அரற்ற.
3. கொடியுடைத்; கொடியுடை; கொடியுடன்.
4. கற்பகங் கான்ற மாலையே. (37)

131. காண்வரு நெடுவரைக் கதலிக் கானம்போல்
தாணிமிர் பதாகையின் குழாந்த ழைத்தன
வாணனி மழுங்கிட மடங்கி வைகலும்
சேண்மதி தேய்வதக் கொடிக டேய்க்கவே.

காண்வரு-நல்ல தோற்றத்தையுடைய, நெடு வரை-பெரிய மலைகளிலே உள்ள, கதலி கானம்போல்-வாழை மரக் காடுகளைப் போல, தாள் நிமிர்—தண்டுகளோடு உயர்ந்து நிற்கின்ற, பதாகையின் குழாம்-பெருங் கொடிக் கூட்டங்கள், தழைத்தன-(மாளிகைகளின் மேலே) மிகுதியாக இருந்தன; சேண்மதி-ஆகாயத்திலே செல்லும் சந்திரன், மடங்கி-தன் செலவு தடைப்பட்டு, வாள் நனி மழுங்கிட-ஒளி மிகவும் மழுங்கிப்போகும்படி, வைகலும் தேய்வது-நாளுக்கு நாள் தேய்ந்து போவது, அக் கொடிகள் தேய்க்கவே-அக்கொடிகள் உராய்வதனாலேயே ஆம்.

மாளிகைகளுக்கு மலையும், மாளிகையின் மேல் உயர்ந்துநிற்கும் பெருங் கொடிகளுக்கு வாழை க்காடும் உவமை. தேய்பிறையில் நாள்தோறும் சந்திரன் தேய்வதற்கு, ஒரு காரணம் கற்பித்துக் கூறுத லின் இது ஏதுத் தற்குறிப்பேற்ற அணியாகும்.

முதலடியில், 'நெடுவரைக் காண்வரு கதலிக்கானம்போல்' என மாறியும்,இரண்டாமடிமுதலில் 'கோணிமிர்' எனப் பாடங்கொண்டு நவக்கிரக மண்டலம் வரை உயர்ந்துள்ள என்றும், வலிமையோடு உயர்ந்துள்ள என்றும் பொருள் கூறுவார் சிலர்.

மாளிகைகளில் கொடிகள்: 128-ஆம் பாட்டின் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. காண்வரும்; காணரும்; காணியர்; கானிமிர்; காண்டரு; காண்மரு.
2. கோணிமிர்; தானிமிர்; பாகையின்; தகைத்தன; தழைந்தன.
3. வாணிலா; வாணில; மாணணி; மாணொளி; மயங்கிட; வயங்கிட; வயங்குற; மழுங்கி; மயங்கி; வழங்கி; வழங்கல்; அடங்கி.
4. தேய்ந்ததக்; தேய்கவே. (38)

132. பொன்றிணி மண்டப மல்ல பூத்தொடர்
மன்றுக ளல்லன மாட மாளிகை
குன்றுக ளல்லன மணிசெய் குட்டிமம்
முன்றில்க ளல்லன முத்தின் பந்தரே.

அயோத்தி நகரில் எங்கும் காணப்படுவன :—

பொன் திணி மண்டபம்-பொன் வேலைப்பாடு மிக்க மண்டபங் கள்; அல்ல-அவையல்லாதன; பூ தொடர்-பூங்கொடிகள் வேய்ந்த கொடி வீடுகள்; மன்றுகள்-பலர் கூடும் பொதுவிடங்கள்; அல்லன - அவையல்லாதவை, மாடம் மாளிகை-பல மாடங்களையுடைய மாளி கைகள்; (சிலவிடங்களில்) குன்றுகள் அல்லன மணி செய் குட்டிமம்- இயற்கைக் குன்றுகளல்லாதன, மணிகள் இழைத்துச் செய்யப்பட்ட செய்குன்றுகள்; முன்றில்கள்-வெளியிடங்கள், அல்லன-வெறும் வெளி யிடங்கள் அல்ல; முத்தின் பந்தரே-முத்துப் பந்தல் அமைந்தவைகளே யாகும்.பூத்தொடர்: அன்மொழித்தொகை.

பொன் மண்டபங்களும், கொடி வீடுகளும், மன்றுகளும், மாட மாளிகைகளும், செய் குன்றுகளும், முத்துப் பந்தல் அமைந்த இடங் களுமாய், நகரம் முழுதும் வெற்றிடம் சிறிதுமின்றி நிறைந்திருந்தன என்பது கருத்து. இதற்குப் பலர் பலவாறு பொருள் கூறுவர். இப் பாடலின் அமைப்பு, முன்னே 79-ஆம் பாடலைப் போன்றது.

(பொன் மண்டபங்களும் பூமாலை கட்டியிருக்கிற சாவடிகளும் மெத்தை வீடுகளும் தனி வீடுகளும், ரத்தின மேடைகளும், தெரு வீதிகளும் முத்தின் பந்தராய் இருக்கும்) (பழைய உரை.)

(பி - ம்.) 1. பொன்ரொடர்; பூந்தொடர்; பூந்தொடை.
3. மணிசெய் கோபுரம்; மணிசெய் கோடரம்; மணிகள் கூட்டிய; மணிகள் கூட்டின; மணிகள் கூடிய; மணிகள் சூட்டிய.
4. முத்தின் பத்தியே; பத்தின் பந்தரே. (39)

133. மின்னென விளக்கென வெயிற்பி ழம்பெனத்
துன்னிய தமனியத் தொழிற ழைத்தவக்
கன்னிநன் னகர்நிழல் கதுவ லாலரோ
பொன்னுல காயது புலவர் வானமே.

மின் என-மின்னலைப் போலவும், விளக்கு என - விளக்கைப் போலவும், வெயில் பிழம்பு என - சூரிய கிரணத்தின் தொகுதி போலவும் (பிரகாசிக்கும்படி), துன்னிய - ஒளிமிக்க, தமனியம் தொழில் தழைத்த - பொன் வேலைப்பாடுகள் மிகுந்த, அ கன்னி நல்நகர் நிழல் - அந்த அழிவில்லாத அயோத்தி மாநகரின் பேரொளி, கதுவலால்-சென்று சூழ்வதனுல், புலவர் வானம்-தேவர் வாழும் சுவர்க்கலோகம், பொன் உலகு ஆயது-பொன்னுலகம் என்று சொல்லத்தக்கதாயிற்று. அரோ-அசை.

மின்னல்-விட்டுவிட்டுப் பிரகாசித்தலும், விளக்கு தொடர்ந்து சுடர்விட்டுப் பிரகாசித்தலும், சூரிய கிரணம் பேரளவில் நிறைந்த ஒளி தருதலுமாகிய வேறுபட்ட தன்மையுள்ள ஒளிவகைகள் பொன் வேலைப்பாட்டுத் திறத்தால் உண்டாவன. தேவலோகத்திற்கு அமைந்த பொன்னுலகு என்னும் பெயர், இந்நகரின் ஒளி சென்று அதனைச் சூழ்தலால் உண்டானது எனக் காரணம் கற்பித்தது ஏதுத் தற்குறிப்பேற்ற வணியாம்.

கன்னி-அழிவில்லாமை; என்றும் அழகு குன்ருது ஒரு தன்மைத் தாயிருத்தல். கன்னி, பிறர் அணுகுதற் கரிய காப்புடையவளாயிருத்தல் போல, இந்நகரும் மாற்ருர் அணுகுதற்கரியது என்றலும் ஆம்.

(பி - ம்.) 2. தொழி லமைத்தன; தொழில் தழைத்தவில்; தொகை தழைத்தவக்;
3. நிழற் கதுவலா லன்ரோ.
4. பொன்னுல காயதப்; பொன்னுலகானது; பொன்னகரானது; பொன்னகரானவப்; பொன்னகராயதப்; பொன்னுல கானதப்; பொன்னுல கானவர்; புலவர் தானமே. (40)

134. எழுமிடத் தகன்றிடை யொன்றி யெற்படு
பொழுதிடைப் போதலிற் புரிசைப் பொன்னகர்
அழன்மணி திருத்திய வயோத்தி யாளுடை
நிழலெனப் பொலியுமா னேமி வான்சுடர்.

நேமி வான்சுடர்-வட்டமான சூரிய மண்டலத்தின் கிரணங்கள், எழும் இடத்து-உதய காலத்தில், அகன்று-விரிந்தும் (நீண்டும்), இடை ஒன்றி - நடுப்பகலில் தன்னளவில் குன்றியும், எல்படு பொழு

திடை-அஸ்தமன காலத்தில், போதலின்-மறைந்தும் போதலால், (அம்மண்டலம்), அழல் மணி திருத்திய-தீப்போல் ஒளிமிக்க மணிகள் பதித்து அலங்கரிக்கப் பெற்ற, புரிசை-மதில் சூழ்ந்த, பொன்நகர் - பொன்மயமான நகரமாகிய, அயோத்தியாள் உடை நிழல் என - அயோத்தி யென்னும் பெண்ணின் சாயை என்று சொல்லும்படி, பொலியும்-விளங்கும்; ஆல்-அசை. சூரிய பிம்பம் அயோத்தியின் சாயையே என்றவாறு.

வடமொழியில் 'அயோத்தி' என்பது பெண்பாற் சொல்லாத லின். 'அயோத்தியாள்' எனப் பெண்பாலாகக் கூறினர் போலும். இப்பாடலுக்கும் பொருள் பலவாறு கூறுவர்,

(பி - ம்.) 1. எழுமிடத் தகன்றிடத்; எழுமிடைத் தன்னிடை; எழுமிடை கூட் டிடை; ஏறி; ஏற்றி; எற்றி; பொன்றி; எற்படும்.

2. பொழுதிடை; போகலிற்; பேர்தலாற்; பொலிதலிற்; புரிசை பொன் னணி; பொன்னலம்; பொன்னிழல்; பொன் மதில்; மானகர் மாநகர்.

3. அழன் மணித்; எழின் மணித்; திருநகை; திருநகர்; திருவுறை; அயோத்தி மாநகர்; அயோத்தி தன்னுடை; அயோத்தி தானுடை; அயோத்தி மானுடை; அயோத்தி மாடங்கள்.

4. பொலியுமா; நேமியான் சுடர்; நேமியோன் சுடர்; நேமி வானமே, (41)

135. ஆய்ந்தமே கலையவ ரம்பொன் மாளிகை
வேய்ந்தகா ரகிற்புகை யுண்ட மேகம்போய்த்
தோய்ந்தமா கடனறுந் தூப நாறுமேல்
பாய்ந்ததா ரையினிலை பகர வேண்டுமோ.

ஆய்ந்த மேகலையவர்-ஆராய்ந்து செய்யப்பட்ட மேகலை யென் னும் இடையணி யணிந்த மகளிரால், (எழுப்பப்பட்டு), அம்பொன் மாளிகை வேய்ந்த-அழகிய பொன்மயமான மாளிகைகளிலே சூழ்ந்த, கார் அகில் புகை உண்ட மேகம்-கரிய அகிற்புகையேறப் பெற்ற மேகங்கள், போய் தோய்ந்த மா கடல்-(நீருண்ணும்பொருட்டுப்) போய்ப் படிந்த பெரிய கடலும், நறு தூபம் நாறுமேல்-நல்ல அகிற் புகை மணம் கமழுமென்றால், பாய்ந்த தாரையின் நிலை-அம் மேகங் களினின்றும் பொழிந்த நீர்த்தாரைகளின் தன்மையை, பகர வேண் டுமோ-சொல்லவும் வேண்டுமோ (வேண்டா என்றபடி).

அகில் புகை ஏறப்பெற்ற மேகங்கள் போய்ப் படிந்ததனால், புலால் நாற்றமுடைய கடலே அத்தன்மை மாறி நறுமணம் கமழு மென்றால், அம்மேகங்கள் பொழிந்த நீர்த்தாரைகளின் மண மிகுதி சொல்லாமலே அமையும் என்றவாறு.

வேய்தல்-சூழ்தல்: (சீவக. 1769).

ஒப்பு: 'நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்று மகில்கமழு மென்பரால்-தென்றல்
அலர்த்துங் கொடிமாடத் தாயிழையா ரைம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து' (நள. 16:)

(பி - ம்.) 2. போந்த கார்; வேய்ந்த காழ்; வேய்ந்த வார்; உண்டு; உடைய.
3. மாடமு நறுந்; தூப நாறுமால்; தூப மாறுமேல்; தூம நாறுமால்; தூம நாறுமேல்; தோய நாறுமேல்.
4. பகரற்பாலதோ; பகர்தல் வெண்டுமே. (42)

## பலவகை இசைகள்

136. குழலிசை மடந்தையர் குதலை கோதையர்
மழலையங் குழலிசை மகர யாழிசை
எழிலிசை மடந்தைய ரின்சொ லின்னிசை
பழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசை.

குழல் இசை மடந்தையர் குதலை-மயிர்முடி கூடிவரும் பேதைப் பருவத்துப் பெண்களின் குதலைச் சொற்களாகிய இசையும், கோதையர்-கூந்தற் சிறப்புடைய பருவ மங்கையரின், அம் குழல் இசை மழலை-அழகிய புல்லாங்குழலின் இசை போன்ற மழலைச் சொல்லிசையும், மகர யாழ் இசை-மகர வீணையின் இனிய கீதமும், எழில் இசை-அழகு மிக்க, மடந்தையர் இன் சொல் இன் இசை-மடந்தைப் பருவத்துப் பெண்களின் இனிய பேச்சாகிய பண்ணிசையும், பழையர்தம் சேரியில்-கள் விற்பார் தெருவிலே, பொருநர் பாட்டு இசை-கூத்தர் முதலிய பாணர்களின் பாடலோசையும்; (ஆக, நகரெங்கும் இசைமயமாக உள்ளது.)

முதலடியில், மடந்தையர் என்பது பொதுவாகப் பெண்கள் என்பது குறித்து நின்றது; குதலை என்றதனுல் பேதைப் பருவத்தினர் என்பதாயிற்று; அவர்கள் மயிர் முடிகூடியதும் கூடாததுமாக நிற்கும். கோதையர்-கூந்தற் சிறப்புடையவர்; எனவே பருவ மங்கையர் எனப் பட்டது. மகர யாழ் என்பது பத்தொன்பது நரம்புகளை உடையதும், சுறு மீனின் வாய் போன்று தண்டின் நுனி அமைப்பு உடையதுமாகிய யாழ்; (36. குறிப்புப் பார்க்க.) குதலை-எழுத்துருவும் பொருளும் நிரம்பப் பெருத சொல்; மழலை-எழுத்துருவம் நிரம்பிப் பொருள் நிரம்பாத சொல்; இங்கே இனிமை குறித்து நின்றது. குழலையும் யாழையும் சேர்த்துக் கூறுவது மரபு. பழையர்: (82). பொருநர்: 'பொருநரும், போர்க் களம் பாடுநரும், ஏர்க்களம் பாடுநரும், பரணி பாடுநரும் எனப் பலராம்' (தொல். புறத். 36-ந. உரை). 'உள்ளன' என முடிபு வருவித்து உரைக்கப்பட்டது. 'இசை' என்ற சொல் மீண்டும் மீண்டும் ஒரே பொருளில் வந்தது **சொற்பொருட்பின்வருநிலையணி.**

இப்பாடலுக்கும் வேறு வகையாகப் பொருள் கூறுவார் உளர்.

(பி - ம்.) 1. குழலிடை; குதலைக்; கோதை யாழ்.

2. மழலை செய்; மழலைய; மழவிசை; குரலிசை; குழலிசை; குழலியர்; மழலையங் கிண்கிணி; மழலையங் கிளவியான்; மழலையம் மகர யாழ்; மகர யாழிடை; மகர யாழினில்; மதுர யாழிசை; வயங்கு யாழிசை; மயங்கி யெங்கணும்; மயங்கு மெங்கணும்; வயங்கி யெங்கணும்; வயங்கு யாழிசை.

3. எழிலுடை; எழுமிசை; எழுமிடை; இழை யிசை; ஏழையர்; இன் சொலவ்விசை.

4. பழையர் தன்; பாடிசை; மாட்டிசை. (43)

## பலவேறு சிறப்புக்கள்

137. கண்ணிடைக் கனல்சொரி களிறு கால்கொடு
மண்ணிடை வெட்டுவ வாட்கை மைந்தர்தம்
பண்ணைகள் பயிலிடம் குழிப டைப்பன
சுண்ணமக் குழிகளைத் தொடர்ந்து தூர்ப்பன.

வாள் கை மைந்தர் தம் பண்ணைகள் - வாளைக் கையில் ஏந்திய காளையர் கூட்டம், பயில் இடம்-(யானைகளின் முன்னே) வாட் பயிற்சி செய்யும் இடங்களிலே, கண் இடை கனல் சொரி களிறு-(கோபத்தினால்) கண்களிலே தீயைக் கக்குகின்ற ஆண் யானைகள், கால் கொடு மண் இடை வெட்டுவ-தம் கால்களால் தரையிலே வெட்டுவனவாய், குழி படைப்பன - குழிகளை உண்டாக்குவனவாம்; அக்குழிகளை-அவ்வாறு உண்டாகிய குழிகளை, சுண்ணம்-(காளையர் மார்பில் உள்ள) சுண்ணப் பொடிகள், தொடர்ந்து-இடையறுது விழுந்து, தூர்ப்பன-தூர்த்துவிடுவனவாம்.

வீர மைந்தர்கள், கையில் வாள் ஏந்தி யானைகளோடு போர் செய்யப் பழகும் இடங்களிலே, யானைகள் கோபத்தால் தரையிலே குழியுண்டாகும்படி காலால் வெட்ட, அவ்வாறு உண்டான குழிகளை வீரர்களின் மார்பினின்று உதிரும் நறுமணச் சுண்ணப் பொடிகள் (மண் போல) தூர்த்துவிடும் என்றதனால், செல்வச் சிறப்பும் வீரமும் கூறியவாறும். சுண்ணம்-'சூர்ணம்' என்னும் வடசொல்லின் திரிபு. தரையிலே காலால் வெட்டுதல் யானைக்கு இயல்பு. இவ்வாறன்றி, யானை தன் நிழலைப் பிறிதொரு யானையாகக் கருதிக் கோபங்கொண்டு அதனைத் தாக்குவதற்குக் காலால் வெட்டும் எனவும் கூறுவர். 'வேட்கு மைந்தர் தம்' எனப் பாடங்கொண்டு, விரும்பத்தக்க (அழகுடைய) அரச குடும்பத்துச் சிறுவர்கள் யானைகள் நிற்குமிடங்களிலே விளையாட, யானைகள் கோபங் கொண்டு காலால் தரையை வெட்டுவன எனப் பொருள் கூறுவாரும் உளர். இப் பொருளுக்கு, பண்ணைகள்-விளையாட்டுக்கள் என்க. 'தடவரல் பண்ணையா யிரண்டும் விளையாட்டு' (தொல்.)

(பி - ம்.) 1. காய் கொடு.
2. மண்ணிடை யெற்றுவ; மண்ணிட மேற்றெறி; வேட்கும்; வேட்டு; வேட்ட; வெட்ட; வேடர்; மைந்தர்கள்; மைந்தர் தாம்; மாந்தர் தம்; அந்தணர்.
3. பயில்விடம்; பயில் மடம்; பயில் கெட; குழி யடைப்பன.
4. சுண்ணகக்; குழியினைத்; தொடரத்; தூர்க்குமே. (44)

138. பந்துகண் மடந்தையர் பயிற்று வாரிடைச்
சிந்தின முத்தின மவைதி ரட்டுவார்
அந்தமில் சிலதிய ராற்று குப்பைகள்
சந்திர ரொளிகெடத் தழைப்ப தண்ணிலா.

பந்துகள் பயிற்றுவார்-பந்துகளைக் கொண்டு விளையாடுபவர் களாகிய, மடந்தையர் இடை-பெண்களினிடையே, சிந்தின முத்து இனம் அவை-(ஆபரணங்களினின்றும்) சிதறிய முத்துக் கூட்டமாகிய அவற்றை, திரட்டுவார்-திரட்டிச் சேர்ப்பவர்களாகிய, அந்தம் இல் சிலதியர்-அளவற்ற ஏவற் பெண்டிர், ஆற்று குப்பைகள்-(அங்கங்கே) செய்யும் குவியல்கள், சந்திரன் ஒளி கெட-சந்திரனது வெள்ளொளி யும் தோற்கும்படி, தண் நிலா தழைப்ப-குளிர்ந்த நிலவொளியை மிகுதியாகச் செய்வனவாகும்.

இந்தப் பாட்டும் செல்வ மிகுதியைக் குறிப்பதாகும்.

பயிற்றுவார்-தன்வினைப் பொருளில் வந்த பிறவினைச்சொல்.

செல்வம் மிக்க மாளிகைகளிலே உள்ள மகளிர் பந்தாடும் போது, அவர்கள் அணிந்துள்ள முத்து வடம், மேகலை முதலியவற்றி னின்றும் முத்துக்கள் சிதறுகின்றன; அவற்றைப் பல சிலதியர் அவ் வப்போது திரட்டிக் குவிக்க, அக்குவியல்கள் நிலவுபோல் ஒளி வீசு கின்றன; எனவே, அம்முத்துக்களின் மேன்மையும் மிகுதியும் பெறப் படும். வீறு கோளணி. மகளிர் பந்தாடுதல்: 80-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. பந்தினை யினையவர்.
2. சிந்திய; சிந்துவ; முத்தவை; திரட்டுவார் சிலர்.
3 சிலதியார்; ஆற்ற; அற்ற; அகற்று; ஆர்த்த; அயர்த்த.
4. ஒளி பெற; நிலாத் தழைக்குமே; நிலாத் தழைப்பன; நிலாத் தழைப்பவே; நிலாத் தழைக்கவே; தகைப்ப தண்ணிலா. ஒரு பிரதியில் இப்பாடல் இல்லை. (45)

139. அரங்கிடை மடந்தைய ராடு வாரவர்
கருங்கடைக் கண்ணயில் காமர் நெஞ்சினை
உருங்குவ மற்றவ ருயிர்க ளன்னவர்
மருங்குல்போற் றேய்வன வளர்வ தாசையே.

அரங்கு இடை-நாடக மேடைகளிலே, மடந்தையர் - நடன மாதர், ஆடுவார்-நாட்டியம் ஆடுவார்கள்; அவர் - அவர்களுடைய,

கரு கடை கண் அயில்-கருமையான கடைக்கண்ணுகிய வேல்கள் காமர் நெஞ்சினே-(அரங்கிலே உள்ள) காமவேட்கையுடைய இளைஞர் மனத்தை, உருங்குவ - உண்ணுவனவாகும்; மற்று-அதனுல், அவர் உயிர்கள்-அவ்விளைஞரின் உயிர்கள், அன்னவர் மருங்குல் போல்-அம்மகளிரின் இடைபோல, தேய்வன-மெலிந்து போவனவாகும்; வளர்வது-(இளைஞரின் மனத்திலே) வளர்ச்சியடைவது, ஆசையே - (அம்மகளிர்பால் கொண்ட), ஆசையே யாகும்.

கண்களை வேல் என்றதற்கு ஏற்ப, மனத்தினை உண்ணும் எனத் தொழிற் படுத்தினர். ஒன்று தேய, மற்றென்று வளர்கின்றது என ஒருநயம் தோன்றுதல் காண்க. தேய்வன-வளர்வது: முரண்தொடை.

உருங்குதல்-உண்ணுதல்: 'அரவினுடலுயி ருருங்குவணம்' (பரி: 4: 42.) 'உருக்குவ' என்பதன் மெலித்தல் விகாரம் எனக் கொண்டு, மனத்தினை உருக்குவன எனப் பொருள் கூறலும் ஆம்.

(பி - ம்.) 1. அரங்கிட; அரங்கிசை; ஆடுவாரிசை.
2. கண்ணிணை; கண் மலர்; கண்ணினிற்; காம நஞ்சினை.
3. உருங்குவர்; உருங்குறு; உருக்குவ; ஒருங்குவ.
4. மருங்குபோற் றேய்வன; மருங்குபோற் றேய்வது; மருங்குல்போற் றேய்வது; மருங்குல்போற் றேய்ந்தது; மருங்குலிற் றேய்வன. (46)

140. பொழிவன சோலைகள் புதிய தேன்சில
விழைவன தென்றலு மிஞிறு மெல்லென
நுழைவன வன்னவை நுழைய நோவொடு
குழைவன தணந்தவர் கொதிக்குங் கொங்கையே.

(அயோத்தி நகரிலே), சோலைகள் புதிய தேன் பொழிவன-(பசுமையான) சோலைகள் புதிய பூக்களினின்றும் தேனைப் பொழியும்; விழைவன சில-அத்தேனையும் மணத்தையும் விரும்புகின்றவற்றுள் சிலவாகிய, தென்றலும் மிஞிறும்-தென்றற் காற்றும், மிஞிறு என்னும் ஒரு வகை வண்டுகளும், மெல்லென நுழைவன-மெல்ல அச்சோலைகளினுள்ளே நுழையும்; அன்னவை நுழைய - அவைகள் நுழையவே, தணந்தவர்-கணவரைப் பிரிந்த மகளிருடைய, கொதிக்கும் கொங்கை-(விரக தாபத்தால்) வெப்பங் கொண்ட தனங்கள், நோவொடு-மிக்க துன்பத்தோடு, குழைவன - மெலிவனவாகும். ஏ-ஈற்றசை.

மிஞிறு, நறுமணத்தை நாடிச் செல்லும் ஒருவகை வண்டு. தென்றலும் சோலையிலுள்ள பூக்களின் நறுமணத்தோடு அளாவுதலாகிய பயனைப் பெறுவதாகும். தென்றலும், வண்டின் இசையும் காமத்தை வளர்ப்பன. சோலைகள் புதிய தேன் சில பொழிவன எனக் கூட்டி, தேனைச் சிறிய அளவிலே பொழியும் என்று உரைப்பாரும் உளர்.

(பி - ம்.) 1. தேஞ்சில.
2. வளைவன; தேன்களும்; தேறலும்; மிஞிறு வில்லென; ஞிமிறு மெல்லென; ஞிமிறு மேலன; ஞிமிறு மில்லென; வண்டுமெல் லென.
3. நுழைவ; நுழையும்; நோவொடும்; நோயொடு; நொவ்வொடும்; பிரிந்தவர்; கன்னியர்; மாதர்தம்; கோதில்; கொள்கையே. (47)

141. இறங்குவ மகரயா ழெடுத்த வின்னிசை
நிறங்கிளர் பாடலா னிமிர்வ வவ்வழிக்
கறங்குவ வள்விசி கருவி கண்முகிழ்த்
துறங்குவ மகளிரோ டோதுங் கிள்ளையே.

இறங்குவ-(ஓசை) தாழ்ந்த நிலையிலே (மந்தரஸ்தாயியிலே) உள்ள மகர யாழ் எடுத்த இன் இசை-மகர வீணையினின்றும் எழுப்பப்பட்ட இனிய சுரங்கள், நிறம் கிளர் பாடலால்-இசை மேம்பட்டு விளங்கும் கண்டப் பாடலால், நிமிர்வ-(மேலும்) சிறப்படைவனவாம்; அவ்வழி-அவ்விடத்தே, வள்விசி கருவி கறங்குவ-வாரால் கட்டப்பட்ட மத்தளமும் ஒத்து ஒலிப்பன; (இவற்றைக்கேட்டு), மகளிரோடு ஓதும் கிள்ளை-பெண்களோடு பேசிப் பழகும் கிளிகள், கண் முகிழ்த்து உறங்குவ-(இசை யின்பத்தில் ஈடுபட்டுக்) கண்களை மூடிக்கொண்டு உறங்குவன வாகும். ஏ-அசை.

மகளிர் வாயாற் பாடிக்கொண்டே வீணையை வாசிக்கும்போது அவ்விரண்டும் ஒன்றற்கொன்று பொருந்திச் சிறப்புப் பெறும்; இவற்றோடு, மத்தளமும் தாளத்திற்கிசைய ஒலிக்க, எல்லாம் கலந்து மனத்திற்கு இன்பந்தரும். நல்ல இசை யின்பத்தால் உறக்கம் உண்டாவது இயல்பு; ஆகவே கிளிகள் அவ்வாறு உறங்குவனவாயின. குழந்தைகளும் தாலாட்டிசை கேட்டுத் தூங்குதலை நேரிற் காண்கின்றோமன்றோ? இதனால், அந்நகரத்து மகளிர் பலர் மிக்க இசையறிவு பெற்றிருந்தன ரென்பது பெறப்படும். இறங்குவ மகர யாழ்-(தண்டின் நுனி) வளைந்தனவான மகர யாழ் என்றலும் ஆம். நிறம்—இசை.

வள்விசி கருவி: (40).

(பி - ம்.) 1. இரங்குவ; இரங்குறு; எடுத்து.
2. பாடலின்; பாடல் போய்; பாடலார்; நிமிரவவ்வழி; நிமிர்வதவ் வழி; நிமிர்வ வவ்வழி; நிமிர்ந்ததவ்வழி: நிமிர்ந்த வவ்வழி.
3. வள் விசிக்; வள் விசைக்; வளை விசி; வளை விசிக்; கருவிக்; கண்ணி மிழ்த்; கண்ணுமிழ்த்.
4. ஓதுங்கு; ஓதுங்கும். (48)

142. குதைவரிச் சிலைநுதற் கொவ்வை வாய்ச்சியர்
பதவுகைத் தொழில்கொடு பழிப்பி லாதன
ததைமலர்த் தாமரை யன்ன தாளினால்
உதைபடச் சிவப்பன வுரவுத் தோள்களே.

குதை வரி சிலை நுதல்-குதை உடையதாய்க் கட்டு அமைந்த வில்லைப் போன்ற நெற்றியோடு, கொவ்வை வாய்ச்சியர்-கொவ்வைப் பழம்போலச்சிவந்தவாயையுமுடைய பெண்களின்,பதவு கைதொழில் கொடு-மென்மையான (செம்பஞ்சூட்டுதலாகிய) வேலைப்பாட்டைப் பெற்று, பழிப்பு இலாதன-குற்றமற்றனவாகிய, ததை மலர் தாமரை அன்ன-இதழ்கள் நெருங்கிய தாமரை மலர்களைப் போன்ற, தாளி ஞல்-பாதங்களாலே, உதைபட-உதைபடுவதனுல், உரவு தோள்கள்-(ஆடவருடைய) வலிமை பொருந்திய தோள்கள், சிவப்பன-சிவந்து போவனவாம். பதவு-பதம்; மென்மை.

மகளிர்க்கு ஊடல் உண்டானபோது அதனைத் தீர்த்தற் பொருட்டு ஆடவர் மகளிரை வணங்குதலும்,ஊடல் தீராத நிலையிலே மகளிர் தம் காலால் ஆடவரை உதைத்தலும் இயல்பு; அஃது ஆட வர்க்கு இன்பத்தையே தரும். 'ஊடுக மன்னோ வொளியிழை யாமி ரப்ப, நீடுக மன்னோ விரா' (குறள். 1329) என்பது காண்க.

குதை, வரி என்பன வில்லுக்கு அடைமொழி. குதை-வில் நாணிலே அம்பு வைத்து எய்யுமிடத்தில் அமைந்த முடிச்சு. மலர்த் தாமரை = தாமரை மலர்.

(பி - ம்.) 1. வரி சிலை.
2. பதயுகத் தொழில் கொடு; பதயுகத் தொழில் கெட; பதையகத்தெழில் கொடு; பதவுகைத் தொழில் கெட; பதயுகத் தளிரொடு; பதயுகத் தெழில் கெடப்; பழிப்பல்லாதன; பழியிலாதன.
3. சிவந்தன. (49)

143. பொழுதுணர் வரியவப் பொருவின் மாநகர்த்
தொழுதகை மடந்தையர் சுடர்வி ளக்கெனப்
பழுதறு மேனியைப் பார்க்கு மாசைகொல்
எழுதுசித் திரங்களு மிமைப்பி லாதவே.

பொழுது உணர்வு அரிய-(பகல் இது; இரவிது என்று) பொழு தின் வேறுபாடு அறிய முடியாத, அ பொரு இல் மாநகர்-அந்த ஒப்பில் லாத பெரிய அயோத்தி நகரில் உள்ள, தொழு தகை மடந்தையர்-(கற்பு மேம்பாட்டினுல் அனைவரும்) வணங்குந் தகுதியுடைய பெண் களின், சுடர் விளக்கு என-சோதி பொருந்திய விளக்குப்போல பழுது அறு மேனியை - குற்றமற்று விளங்கும் உடம்பினழகை, பார்க்கும் ஆசை கொல்-இடைவிடாது பார்க்கும் ஆசையால்தானே, எழுது சித்திரங்களும்-எழுதப்பட்ட ஓவியங்களும், இமைப்பு இலாத-கண் இமைத்தல் இல்லாதனவாயின!

பொன்னுலும் மணியாலும் அலங்கரிக்கப் பெற்று ஒளி வீசும் மாளிகைகளையும் மதிலையும் பெற்றிருத்தலால், பகல் இரவு வேறு பாடு அறிய வியலாதது அந்நகரம். மகளிர் மேனி, ஒளியாலும் தூய்

மையாலும் விளக்குப் போன்றது. மகளிர் மனைக்கு விளக்கானவர் கள்; அடுத்த கவியும் நோக்குக. 'மனைக்கு விளக்கம் மடவார்' (நான் மணி.) அந்நகரத்து மாதர் அழகைக் காண்போர், வியப்பால் கண் இமையாது பார்ப்பர்; இயற்கையிலேயே கண் இமைத்தல் இல்லாத சித்திரங்களுக்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறுதலின் ஏதுத் தற்குறிப் பேற்றவணியாம்.

கொல்-தற்குறிப்பேற்றப் பொருள் தரும் இடைச்சொல். சித்திரங்களும்: உம், இறந்தது தழுவியது.

முதலடி. ஒப்பு: 'வில்லுமிழ் கலன்கள் யாவு மிளிர்சுடரெறிக்கு மாற்று, லெல்லியும் பகலுந் தோன்று திமையவருலக மேய்க்கும்' (நைடத. நாடு. 27). மாதரின் வனப்பு நோக்கிக் கண் இமையாமை: 'மாதர்தன் வனப்பு நோக்கி மகிழ்ந்துகண் ணிமைத்தல் செல்லான்' (சீவக. 2506.)

(பி - ம்.) 1. உணர் வரியன; உணர்வரியதோர்; உணர் விரியிலா; பொருவில்; மானகர்த்; மாணகர்த்; வாணகர்த்; வானகர்த்.
2. தொழுதகைம் மடந்தையர்.
3. பழுதற; ஆசையால்; ஆசையோ; ஆசைபோல்; ஆறுபோல்.
4. எழுதிய சித்திரம்; எழுது சித்திரங்கள் போல்; இமைப்பி லாதன; இமைக்க லாதன; இமைக்கி லாதன; இமைக்கி லாதவே; இமைக்கி லாததே. (50)

144. தணிமலர்த் திருமக டயங்கு மாளிகை
இணரொளி பரப்பிநின் றிருடு ரப்பன
திணிசுடர் நெய்யுடைத் தீவி ளக்கமோ
மணிவிளக் கல்லன மகளிர் மேனியே.

தணி மலர் திருமகள் தயங்கும் - குளிர்ந்த தாமரை மலரிலே வீற்றிருக்கும் இலக்குமி தேவி விளங்குகின்ற (நித்திய வாசம் பண்ணுகிற), மாளிகை-மாளிகைகளிலே, இணர் ஒளி பரப்பி நின்று-ஒளிக் கற்றையைப் பரப்பிக் கொண்டு நின்று, இருள் துரப்பன-(அங்குள்ள) இருட்டை ஓட்டுவன, நெய் உடை-நெய் பொருந்திய, திணி சுடர் - செறிந்த ஒளியையுடைய, தீ விளக்கமோ-தீயினால் எரியும் விளக்குக் களோ; மணி விளக்கு (ஓ) மணிகளின் ஒளியோ; அல்லன-அல்லாத வைகளான, மகளிர் மேனியே-(மாளிகைகளில் வாழும்) பெண்களின் திருமேனியே ஆகும்.

தணி-குளிர்ந்த; தணி மலர் - வினைத்தொகை. தயங்கும் மாளிகை-தயங்குவதற்கு இடமாகிய மாளிகை.

மாளிகைகளில் இருள் துரப்பன, தீ விளக்கமோ? அல்லன, மணி விளக்கு, மகளிர் மேனி ஆகியவையே எனக் கூட்டி உரைப் பினும் ஆம். பிறவாறும் உரைப்பர்.

தீயினல் எரியும் விளக்குக்களுக்கு, நெய்யும் திரியும் அவ்வப் போது இடவேண்டுவதும், காற்றினல் அணைதலுமாகிய குறை உண்டு; மணிகளும் பிற ஒளியின் உதவியின்றிப் பிரகாசிப்பதில்லை; மகளிர் மேனி இக்குறைகளில்லாதது : 'வீயா விளக்கென விளங்கு மணி மெய்யுறு விளக்கம்' (சுந்தர. 259.)

(பி - ம்.) 1. தங்கு மாளிகை.
2. இணையொளி; பரப்ப நின்று.
3. திரி விளக்கமோ; திரு விளக்கமோ; திரி விளக்குமோ; திரியினேங் கிய; தீ விளக்குமோ; தீ விளக்கமே.
4. மணிவிளக் காமென. (51)

145. பதங்களிற் றண்ணுமை பாணி பண்ணுற
விதங்களின் விதிமுறை சதிமி திப்பவர்
மதங்கிய ரச்சதி வகுத்துக் காட்டுவ
சதங்கைக ளல்லன புரவித் தாள்களே.

தண்ணுமை-மத்தளமும், பாணி-தாளமும், பண்-பாடலும், உற-ஒத்துப் பொருந்த, சதி விதங்களின் விதி முறை-(நாட்டியத்துக்கு உரிய) ஜதி வகைகளின் நூல் முறைப்படி, பதங்களின் மிதிப்பவர் - பாதங்களால் மிதித்து நடிப்பவர்கள், மதங்கியர் - நாடக மகளிர்; அ சதி வகுத்து காட்டுவ-அந்தச் சதி வகைகளை (காண்போருக்கு) விளக்கிக் காட்டுவன, சதங்கைகள்-அம்மகளிர் காலில் அணிந்துள்ள சதங்கைகளாகும்; அல்லன - அவை அல்லாதன, புரவி தாள்கள் - நாட்டியக் குதிரைகளின் கால்களாம்.

மத்தளமும், தாளமும், குழல், யாழ், மிடறு ஆகியவற்ருல் வரும் பாடல்களும் நாட்டியத்துக்கு அங்கமாவன. ஜதி - வட சொல். தாள வொத்து. மகளிர். ஆடும்போது, ஆட்டத்தின் விரை வினல், அவர்கள் கால்வைத்தலைத் தெளிவுறக் காண்டல் அரிதாகும், அவர்கள் காலில் கட்டியுள்ள சதங்கை யொலியே ஜதி வகைகளை விளக்கும்.

அந்நகரத்தில் எங்கும் மகளிர் ஆடலும், பழக்கப்பட்ட நாட் டியக் குதிரைகள் ஆடலுமாக இன்பப் பொழுதுபோக்கு நிகழும் எனச் சிறப்பித்தவாறு.

சதி: 'தாளிணை பெயர்த்து முன்னஞ் சதி முறை பிறழாதாட' (கூர்ம. திருக்கல். 56) 'மெத்துந் தகவும் விதமும் படவே, தித்தொந் தொந்தொந் தித்தீ யென்றென், ருெத்துந் தாளத் தொக்கத் தத்தித், தத்தும் பரிதன் தாள்வைத் ததுவே' (திருவால. 28: 53.)

(பி - ம்) 1. தண்ணுமைப் பாணிப்; பண்ணுடை, பண்ணுறு.
2. சதிவிதிப்பவர்; சதிமிதிப்பன.
3. மதங்கிய ரக்கதி; மதங்கியர்க்கச் சதி; மதங்கி யாழ்ச் சதி: வருந்தக்; காட்டுவர்; காட்டுவார்; காட்டிய. 4. தார்களே. (52)

146\. முளைப்பன முறுவலம் முறுவல் வெந்துயர்
விளைப்பன வென்றியே மெலிந்து நாடொறும்
இளைப்பன நுண்ணிடை யிளைப்ப மென்முலை
திளைப்பன முத்தொடு செம்பொ னாரமே.

(முன் பாடலில் கூறிய மதங்கியரிடத்து), முறுவல் முளைப்பன-(அவ்வப்போது) புன் சிரிப்புத் தோன்றும்; அ முறுவல் - அப்புன் சிரிப்பு, வெம் துயர் விளைப்பன-(காமுகர்க்குக்) கொடிய துன்பத்தை உண்டாக்கும்; வென்றியே - (இது அம்முறுவலுக்கு) வெற்றியே யாகும்; நுண் இடை-(அம்மகளிரின்) சிறிய இடைகள், நாள்தொறும் மெலிந்து இளைப்பன-நாளுக்கு நாள் தேய்ந்து இளைத்துப் போகும்; இளைப்ப-அவ்வாறு (இடைகள்) இளைத்துப் போக, மெல் முலை - (அவர்களுடைய) மென்மையான தனங்கள், முத்தொடு செம்பொன் ஆரம்-முத்து வடங்களையும் பொன் மாலையையும்(பூண்டு),திளைப்பன-மகிழ்ச்சியால் பூரிப்பன வாகும். (இது தனங்களுக்கு வெற்றி). ஏ-ஈற்றசை.

மதங்கியர் தம் முறுவலால் பிறரை வருத்த, அவர்களுடைய தனங்கள் அவர்கள் இடையையே வருத்தி மகிழ்கின்றன; ஒரு சிலர் வருந்த, அதுகண்டு ஒரு சிலர் மகிழ்தல் உலக இயற்கை என்ற கருத்துப்படக் கூறப்பட்டுள்ளமை காண்க.

முறுவல், மங்கையர் பலரிடத்துத் தோன்றுதலால் 'விளைப்பன' எனப் பன்மையாற் கூறினர்.

(பி - ம்.) 1. முளைப்பிறை நெற்றியர்.
2\. விளைப்பன வன்றியும்; விளைப்பன வின்றியும்; மேவிநாடொறும்; மேனி நாடொறும்; விளைந்து நாடொறும்.
3\. இளைக்க; இளைக்கும்; மென்முலைத்; வெம்முலை.
4\. முத்தெர்டுஞ்; முத்தெனச், (53)

147\. இடையிடை யெங்கணுங் களிய ருதன
நடையிள வன்னங்க ணளின நீர்க்கயல்
பெடையின வண்டுகள் பிரச மாந்திடும்
கடகரி யல்லன மகளிர் கண்களே.

இடை இடை-அவ்வவற்றிற்கு உரிய இடங்களிலே, எங்கணும்-எப்போதும், களி அருதன-களி நீங்காதவை, நடை இள அன்னங்கள்-நடையழகையுடைய இளமையான அன்னப் பறவைகளும், நளினம் - தாமரைப் பூக்களும், நீர்கயல்-நீரில் வாழும் கயல் மீன்களும், பெடையின வண்டுகள்-(தம்) பெடையோடு கூடியனவான ஆண் வண்டுகளும், பிரசம் மாந்திடும் கடம் கரி-கள்ளைப் பருகும் மதயானை

களும், அல்லன-இவை அல்லாதனவாகிய, மகளிர் கண்களே-இளம் பெண்களின் கண்களுமே யாகும்.

எண்ணும்மைகள் தொக்கன.

இச் செய்யுளில், 'களி' என்பது (1) களிப்பு, (2) தேன், (3) களி மண், (4) கள், (5) யானை மதம், (6) அஞ்சனக் குழம்பு ஆகிய பொருள்களில் வந்துள்ளது; அன்னங்கள் களிப்பு அருதன; தாமரைப் பூக்கள் தேன் அருதன; கயல் களிமண் அருதன; வண்டுகள் கள் அருதன, யானைகள் மதம் அருதன; மகளிர் கண்கள் அஞ்சனம் அருதன எனத் தனித் தனியே கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும்.

மீன்கள் குளங்களில் நீர்க்கடியிலே தரைமட்டத்தில் இருக்கும் போது அவற்றின்மேல் களிமண் படிந்து ஒட்டிக்கொள்ளும்; வண்டு கள், கள்ளிலே மொய்த்தலால் அவற்றின்மீது கள் ஒட்டிக்கொள்ளும்; மற்றவை வெளிப்படை.

யானைகள் பிரசம் அருந்தல்: 'மாரியங் கள்ளின் போர்வல் யானை' (பதிற். 21: 17).

(பி - ம்.) 1. களிப்பருதென; இடையருதென; மகளிரேய்ந்தன.
2. நடையின; நடையிடை; நீர்த்தயல்; நீர்த்தபேர்; நீத்தன; நற்கயல்.
3. பெடையிள; அடையிள; பெடையுள; ஆர்த்திடும்; ஆர்ந்திடும்; ஆர்த்தெழும்: மாக்கடம்: மாந்திடம்; மாத்தடம்; மாந்திடர்: மாலைகள். (54)

148. தழல்விழி யாளியுந் துணையுந் தாள்வரை
முழைவிழை கிரிநிகர் களிற்றின் மும்மதம்
மழைவிழும் விழுந்தொறு மண்ணுங் கீழுறக்
குழைவிழு மதில்விழுங் கொடித்திண் டேர்களே.

தழல் விழி யாளியும்-நெருப்புப்போலச் சிவந்த கண்களையுடைய யாளியும், துணையும்-அதன் துணையாகிய பேடும், தாள்வரை முழை விழை-அடிமலையில் உள்ள குகையை விரும்பித் தங்குவதற்கு இடமான, கிரி நிகர்களிற்றின் - மலையை யொத்த ஆண் யானைகளின், மூன்று மதம் மழை விழும்-மூன்று மதமும் மழைபோலப் பொழியும்; விழும் தொறும்-அவ்வாறு பொழியும் இடமெல்லாம், மண்ணும் கீழ் உற-தரையும் குழிபட, குழை விழும்-சேறுபடும்; அதில்-அவ்வாறு உண்டான சேற்றில், கொடி திண் தேர்கள் விழும்-கொடிகள் கட்டப்பெற்ற வலிய தேர்கள் வழுக்கி விழும். ஏ ஈற்றசை.

யாளி, சிங்கம் என்றும், சிங்கம் போன்றதாய்த் துதிக்கையும் உடையதொரு விலங்கென்றும் கூறுவர்.

அயோத்தி நகரத்திலே அரசர் படைகளிலும் பிறவிடங்களிலுமாக உள்ள யானைகளின் மிகுதி இப்பாடலாற் புலப்படும்.

துணை: ஆணும் பெண்ணும் ஒன்றுக்கொன்று துணையாம். தாள்வரை-பாதசைலம். யாளிகள் தங்குவதற்கிடமான என்றது மலைக்கு விசேடணம். கிரிநிகர் என்றது யானைகளுக்கு விசேடணமாய் அவற்றின் பெருமையை உணர்த்திற்று. மும்மதம்: இரண்டு கன்னமும் கோசமுமாகிய இடங்களிலே ஊறுவது. மதமழை-மதநீர் மிகுதியைக் குறிக்கும். குழை-சேறு.

'விழும்' என்ற சொல் மீண்டும் மீண்டும் வந்தது **சொற்பின் வரு நிலையணி.**

(பி - ம்.) 1. சுழல் விழி யாளியின்; துணையின்; தாழ்வன; தாழ்வரை; தாழ்ந்தவம்:
2. முழையிமகிரிநிகர்; முழை விழக்கிரிநிகர்; முழை வரை கிரிநிகர்.
3. மழை விழ; மழை விழுந்தொறும் விழும்; விழுதொறும்; வீழ்தொறும்; தொறுந் தொறும்; கீளுறக்; கீளுறு.
4. குழையுறும்; குழைவுறும்: குழிவிழும்: அவல்விழும். (55)

149. ஆடுவார் புரவியின் குரத்தை யாப்பன
சூடுவா ரிகழ்ந்தவத் தொங்கன் மாலைகள்
ஓடுவா ரிழுக்குவ வூட லூடுறக்
கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே.

ஆடு-(தெருவிலே) சஞ்சரிக்கின்ற, வார் புரவியின் குரத்தை-உயரமான குதிரைகளின் குளம்பை, யாப்பன-(போகவொட்டாது) கட்டுவன, சூடுவார்-(மாலைகளைச்) சூடும் ஆடவரும் மகளிரும், இகழ்ந்த-எடுத்தெறிந்த, அ தொங்கல் மாலைகள்-அந்தத் தொடை மாலைகளும் கட்டு மாலைகளும் ஆம்; ஓடுவார் இழுக்குவ-(தெருவிலே) ஓடுகிறவர்கள் வழுக்கி விழுதற்குக் காரணமானவை, ஊடல் ஊடு உற-தாம் கொண்ட ஊடல் தணிதலால், கூடுவார்-ஆடவரைக்கூடும் மகளிர், வனம் முலை கொழித்த சாந்தம்-அழகிய தனங்களினின்றும் வழித்தெறிந்த சந்தனக் குழம்பு. ஏ-அசை.

ஆடு - வெற்றியும், வார்-நீட்சியும் ஆம். ஊடுறல்-இடையீடுபடுதல். வீதிகளிலே போக்கு வரத்துக்கு இடையூறானவை பூமாலைகளும் சந்தனக் குழம்பும் எனவே, செல்வ மிகுதி குறித்தவாறும். தொங்கல் - இருபுறமும் தலைப்புக்கள் தொங்கும்படி கட்டப்படுவது; மாலை-கட்டு மாலை. இடங்களின் பன்மை பற்றி 'இழுக்குவ' எனப் பன்மையாற் கூறினர்; இழுக்குவது என்றும் பாடம்.

(பி - ம்) 1. ஆடுவாம்; புரவி நூபுரங்கள்; புரவியின் குரங்கள்; புரவிய குரத்து; பொருவி னூபுரங்கள்; பொருவி னூபுரத்தை; ஆர்ப்பன; அசைப்பன.
2. இகந்தவத்.
3. ஊடுவார்; இழுக்கு வந்து; இழுக்குவார்; ஊடறக்; ஊட்டுறக்; நட்புறக்.
4. வன முலைக்; மென் முலை; கொதித்த; கொதிக்குஞ்; கோத்த. (56)

150. இளைப்பருங் குரங்களா லிவுளி பாரினைக்
கிளைப்பன வவ்வழிக் கிளர்ந்த தூளியின்
ஒளிப்பன மணியவை யொளிர மீதுதேன்
துளிப்பன குமரர்தந் தோளின் மாலையே.

இவுளி-குதிரைகள், இளைப்பு அரு குரங்களால்-(நடைக்குச்) சலிப்பு இல்லாத குளம்புகளால், பாரினை கிளைப்பன-தரையைக் கிளறும்; அவ்வழிகிளர்ந்த தூளியின்-அப்போது எழுந்த புழுதியினால்,மணி ஒளிப்பன-(குதிரைகளின் மேல் உள்ள வீர மைந்தர் அணிந்த) ஆபரணங்களின் இரத்தினங்கள் மறைக்கப்படுவனவாகும்; அவை ஒளிர-அவை மீண்டும் பிரகாசிக்கும்படி, குமரர் தம் தோளின் மாலை-அம் மைந்தர் தோள்களில் அணிந்துள்ள புதிய மலர் மாலைகள், மீது தேன் துளிப்பன-அம்மணிகளின் மேல் (நீர்போலத்) தேனைச் சிந்திக் கழுவும். ஏ-ஈற்றசை.

குமரர் தம் மாலை எனப் பின்னே வருதலின், முன்னும் 'வீர மைந்தர்' என்பது வருவித்துக்கொள்ளப்பட்டது. இவ்வாறன்றி,தெருவிலே போகும் குமரரின் மணியும் மாலையும் எனக் கூறினும் ஆம்.

இதனால் குதிரைகளின் மிகுதி கூறப்பட்டது.

(பி - ம்.) 1. பாரிடைக்; தாதினைக்; தாரணிக்; தாரணித்; தாரணி.
2. திளைப்பன; அவ்வுழி; கிளைத்த தூளியில்; கிளர வந்த தூண்; கிளரத் தூணியின்; இளர்த்த தூளியின்.
3. மணியிவை; வீர்ந்ததேன்.
4. தொய்யின் மாலையே; தொய்யன் மாலையே. (57)

151. விலக்கருங் கரிமதம் வேங்கை நாறுவ
குலக்கொடி மாதர்வாய் குமுத நாறுவ
கலக்கடைக் கணிப்பருங் கதிர்க ணாறுவ
மலர்க்கடி நாறுவ மகளிர் கூந்தலே.

விலக்க அரு கரி மதம்-தடுத்தற்கு அரிய யானைகளின் மத நீர், வேங்கை நாறுவ-வேங்கைப் பூவைப்போல மணக்கும்; குலம் கொடி மாதர் வாய்-நற்குலத்தில் பிறந்த பூங்கொடி போன்ற பெண்களின் வாய்கள், குமுதம் நாறுவ-செவ்வல்லிப் பூவினைப்போல் (அழகுடன்) விளங்குவன; கலம் கடை-(அவர்கள் அணிந்துள்ள) ஆபரணங்களினிடத்தே, கணிப்பு அரு கதிர்கள் நாறுவ-அளவிடுதற்கரிய கிரணங்கள் தோன்றும்; மகளிர் கூந்தல்-பெண்களின் கூந்தலிலே, மலர் கடி நாறுவ-(அவர்கள் சூடியுள்ள) பூக்களின் மணம் வீசிக் கொண்டிருக்கும். ஏ-ஈற்றசை.

கூந்தல் மணம் இயற்கை யென்றலுமாம்.

யானையின் மதநீர், வேங்கைப் பூவைப் போன்ற மணமுடையது என்பர். இவ்வாறன்றி, மத யானைகள் வேங்கை யரத்தைத்

தாக்கி முறித்தலால், மதநீர் வேங்கைப் பூக்களிலே படிய, அவை யானையின் மத நாற்றம் வீசும் எனவும், வேறுவகையாகவும் இதற்குப் பொருள் உரைப்பார் உளர். யானையின் மதநீர் நறு நாற்றமுடைய தாதல்: தக்க. 3-உரை.

கலக்கடை: கடை, ஏழன் உருபு, நாறுதல்-கமழ்தல், தோன்று தல். நாறுவ என்னுஞ் சொல் சொற்பின் வருநிலையணியாக வந்துள் ளது. கடி-உரிச்சொல்.

கலக்கடை....கதிர்கள் நாறுவ என்று, ககரவொற்று மிகாமல் பாடங்கொண்டு, ஆபரணங்கள் விற்கும் கடைகள் என்றும், ஆபரணங் களின் கடைப் பாகங்கள் எனவும் பொருள் கூறுவாரும் உளர்.

(பி - ம்.) 1. வெலற்கருங்; கரிமத. 2. மகளிர் வாய்; மடந்தை வாய்.
3. கலக்கடை; களிப்பருங்; மணப்பருங்; தணிப்பருங்; தனில்வருங்; நனி வருங். 4. மலர்க்கடை.

இச்செய்யுளின் 2, 3-ஆம் அடிகள் சில பிரதிகளில் முறையே 3, 2-ஆம் அடி களாக மாறிக் காணப்படுகின்றன. (58)

152. கோவையி னிதனொடெண் குறிக்கி லாதவத்
தேவர்தந் நகரியைச் செப்பு கின்றதென்
யாவையும் விளங்கிடத் திகலி யிந்நகர்
ஆவணங் கண்டபி னளகை தோற்றதே.

அளகை-அளகாபுரியானது, யாவையும் விளங்கு இடத்து-செல் வச் சிறப்பெல்லாம் விளங்கும் வகையில், இகலி-(தேவர் நகரமான அமராவதியோடு) மாறுபட்டு, (அதனினும்தான் சிறந்தது என்னும் பெருமையுடையதாய்), இ நகர் ஆவணம் கண்டபின்-இவ்வயோத்தி நகரத்தின் கடைத் தெருவை (வந்து) பார்த்தபின், தோற்றது-(அவ் வொன்றிற்கே தான் ஈடாக மாட்டாமல்) தோற்றுப் போய்விட்டது; (அவ்வாறாயின்), கோவையின்-(சிறந்த நகரங்களின்) வரிசையிலே, இதனொடு எண் குறிக்க இலாத-இவ்வயோத்தி நகரத்தோடு வைத்து எண்ணும் தகுதியில்லாததாகிய, அ தேவர்தம் நகரியை-தேவர்களு டைய நகரமாகிய அந்த அமராவதியைப் பற்றி, செப்புகின்றது என்-சொல்வதற்கு என்ன விருக்கின்றது ? (ஒன்றுமில்லை.) ஏ-அசை.

அமராவதி, இன்பச் சிறப்பும் பெருமையும் உடையதாயினும் செல்வத்தில் அதனினும் மேம்பட்டது அளகாபுரி; அதுவே அயோத் திக்குத் தோற்றுவிட்டதென்றால், அமராவதியைப் பற்றிச் சொல் வதற்கு என்ன விருக்கின்றது என்று அயோத்தியின் பெருமையை மிகுத்துக் காட்டியவாறு காண்க. நகரப்படலத்தின் முதல் ஆறு செய்யுட்களையும் நோக்குக.

குறிக்க இல்லாத என்பது விகாரத்தால் தொக்கு, 'குறிக்கிலாத' என நின்றது. 'அ தேவர் தம் நகரி' என்பதில் 'அ' பண்டறி சுட்டு. 'செப்பு' திசைச் சொல்.

ஒப்பிடுக: 'மறக்கடுங் களிற்றுக் குபேரன்வா ழளகை வடக்கிருந்தது நெடுவானில், துறக்கமு மொளித்த திலங்கையும் வெருவித் தொடுகடற் சுழிப்புகுந் ததுவே' (வி-பா. இந்திரப். 25).

(பி - ம்.) 1. கோவையி லிதனொடெண்; கோவையி னதனொடெடன்; கோவை யிந் நகரொடெண்; கோவையினகரொடெண்; கோவையினிகரெனக்; கோவையிந்நகரொடே; குறிக்கலாதவத்; குறிக் கலாதன; குணிக் கிலாதவத் 2. தேவர்தனகரியைச்; தேவர்நன்னகரினேச்.
3. வழங்கிடத்து; வழுக்கிடத்து; வெள்கிட; வெட்கிட; வெட்கிடத்; வழங்கிடம்; இகலி யின்னகர்; திகழுமின்னகர்; இகலி நீணகர்.
4. கண்டபோது. (59)

153. அதிர்கழ லொலிப்பன வயிலி மைப்பன
கதிர்மணி யணிவெயில் கால்வ மான்மதம்
முதிர்வுறக் கமழ்வன முத்த மின்னுவ
மதுகர மிசைப்பன மைந்த ரீட்டமே.

(அந்நகரிலே),மைந்தர் ஈட்டம்-ஆடவர் கூடியுள்ளவிடங்களில், அதிர் கழல் ஒலிப்பன-(பிறரை) அதிர்ச்சியடையச் செய்யும் வீரக் கழல்கள் ஒலிக்கும்; அயில் இமைப்பன-வேல்கள் மின்னும்; கதிர்மணி-(இளைஞர் அணிந்துள்ள ஆபரணங்களின்) ஒளி பொருந்திய இரத்தினங்கள், அணி வெயில் கால்வ-இளவெயில் போன்ற அழகிய ஒளியை வீசும்; மான்மதம்-கஸ்தூரிப்பூச்சு, முதிர்வு உற கமழ்வன-மிகுதியாக மணக்கும்; முத்தம் மின்னுவ-முத்துக்கள் மின்னல் போல் ஒளி செய்யும்; மதுகரம் இசைப்பன - (அவர்கள் அணிந்த மாலைகளிலுள்ள) வண்டுகள் ரீங்காரம் செய்யும்; ஏ-அசை.

வீர இளைஞரும் நல்ல செல்வ முடையவர்களாதலால், இரத்தினுபரணங்களையும் முத்துவடங்களையும் பூமாலைகளையும் அணிந்து கையில் வேலேந்திச் சுழற்றிக்கொண்டு காலில் வீரக் கழலொலிக்க நடந்தும், ஆடியும் மகிழ்ச்சிமிக்கிருப்பர் என்றவாறு.

அதிர்கழல், வினைத்தொகை; பிறவினைப் பொருளில் வந்தது. கஸ்தூரி, ஒருவகை மானிடமிருந்து பெறப்படுதலால் 'மான்மதம்' எனப்படும். மதுகரம் - தேனைச் சேகரிப்பது; வடசொல்.

(பி - ம்.) 1. அயல்.
2. இளவெயில்; வெயிற் குழாம்; கால; மாமதம்.
3. முதிர்புறக்; முதிர்புரை; முத்து; முன்னுவ.
4. இமைப்பன; மொய்ப்பன; இரைப்பன. (60)

154. வளையொலி, வயிரொலி மகர வீணையின்
கிளையொலி முழவொலி கின்ன ரத்தொலி
துளையொலி பல்லியந் துவைக்குஞ் சும்மையின்
விளையொலி கடலொலி மெலிய விம்முமே.

வளை ஒலி-சங்குகளின் முழக்கமும், வயிர் ஒலி-ஊது கொம்பு களின் ஓசையும், மகர வீணையின் கிளை ஒலி-மகர யாழின் (இனிமை) நிறைந்த நாதமும், முழவு ஒலி-மத்தள வோசையும், கின்னரத்து ஒலி-கின்னரமென்னும் வாத்திய ஓசையும். துளை ஒலி-(பல) துளைக் கருவிகளின் இசையும், சும்மையின் துவைக்கும்-கூட்டமாக முழக்கப் படுகிற, பல இயம் விளை ஒலி-(தோற் கருவி, கஞ்சக் கருவி ஆகிய) பல வகை வாத்தியங்கள் உண்டாக்கும் ஓசையும் (கூடி), கடல் ஒலி மெலிய-கடலோசையும் தாழ்வுபடும்படி, விம்மும்-(நகரில்) எங்கும் நிறைந்திருக்கும். ஏ-அசை.

சங்குகள், வெற்றி, கொடை, மங்கலம் எனும் மூன்றிடங்களில் முழக்கப்படும். கின்னரம்-வீணைபோல்வதொரு நரம்புக் கருவி; கின்னரப் பறவை யெனவும் ஆம். துளை என்பது ஆகு பெயராய்த் துளைக் கருவிகளைக் குறித்தது. கடலொலி என்ற விடத்தில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. விளை ஒலி-விளைக்கின்ற ஒலி.

இப்பாடலால், அயோத்தி நகரத்தில் விழா முதலிய பலவகை மங்கல நிகழ்ச்சிகள் அங்கங்கே நிகழ, மக்கள் மகிழ்ச்சி மிக்கவராயுள் ளனர் என்பது பெறப்படும்.

வளையும் வயிரும் இணைத்துச் சொல்லப்படுதல்: 'வயிரெழுந் திசைப்ப வால்வளை ஞரல'( முருகு. 120); 'வயிரும் வளையு மார்ப்ப' (முல்லை. 92); 'வளைநரல வயிரார்ப்ப' (மதுரை. 185); 'பயிர்வளை யரவமொடு வயிரெடுத்தூதி' (பெருங். 1. 38: 4); 'வளைகள் வயிரி யம்பும் வாட்டானை வேந்தே' (பு-வெ. 207).

(பி - ம்) 1. கொம்பொலி.
2. கிளையொலி குழலொலி; கிளையொலி யாழொலி.
3. துளைபொலி; தொளையொலி; துவைப்ப வெங்கணும்; துவைக்கு மொல்லொலி; துவைக்குந் தோலிடை.
4. விளையொலி வழையொலி விளைப்ப. (61)

### பலவகை மண்டபங்கள்

155. மன்னவர் தருதிறை யளக்கு மண்டபம்
அன்னமென் னடையவ ராடு மண்டபம்
உன்னரு மருமறை யோது மண்டபம்
பன்னருங் கலைதெரி பட்டி மண்டபம்.

மன்னவர் தரு திறை-பிற அரசர்கள் கொண்டுவந்து தருகிற கப்பப் பொருள்களை, அளக்கும் மண்டபம்-அளந்து கொள்ளுதற்

குரிய மண்டபங்களும், அன்னம் மெல் நடையவர்-அன்னம் போலும் மென்மையான நடையையுடைய ஆடல் மகளிர், ஆடும் மண்டபம்-நாட்டியம் ஆடும் மண்டபங்களும், உன்ன அரு-(பெருமைகள்) எண்ணுதற்கு அரிய, மருமறை-(பயிலுதற்குப்) பொருந்திய வேதங்களை, ஓதும் மண்டபம்-ஓதுவதற்குரிய மண்டபங்களும், பண்அரு கலை-(சிறப்பாகச்) சொல்லப்படுகின்ற பல அரிய கலைகளை, தெரி-ஆராய்வதற்குரிய, பட்டி மண்டபம்-பட்டி மண்டபங்களும், (பலவாக அந்நகரில் உள்ளன).

கலை: வேதத்தின் அங்கங்களாகிய ஆறும் என்றும், அறுபத்து நான்கு கலைகள் என்றும் கூறுவர். இங்கே குறிக்கப்பட்டனவும், வேறு பலவுமாக, மண்டபங்கள் எண்ணுதற்கரியன என்பது தோன்ற, முடிக்கும் வினையின்றி அவாய் நிலையாகக் கூறினர். முடிவு வருவித்து உரைக்கப்பட்டது, மருவு மறை-மருமறை யென்றாயிற்று.

பட்டி மண்டபம்: 'பட்டி மண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்' (மணி. 1: 61); 'மகத நன்னாட்டு வாள்வாய் வேந்தன், பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்' (சிலப். 5: 101–102). இதனுரையில் அடியார்க்கு நல்லார் 'பட்டி மண்டபம்-வித்தியா மண்டபம்; ஓலக்க மண்டபமு மென்ப' எனக் கூறியுள்ளார். 'பட்டி மண்டப மேற்றினை யேற்றினை' (திருவா. சதகம். 49).

இப்பாடலின் 3, 4-ஆம் அடிகள் சில பிரதிகளில் முன் பின்னாக மாறியுள்ளன.

(பி - ம்,) 1. தருந்திறை; அருந்திறை; இடுதிறை; வருதிறை; இடுந்திறை; வருந்திறை; திறைகொணர்ந்தளக்கு.
2. நடையினர்; ஆடன்.
3. முன்னரும்; மறைமுறை; அமரரும்; முழக்க மண்டபம்.
4. பாடல் மண்டபம். (62)

156. இரவியிற் சுடர்மணி யிமைக்குந் தோரணத்
தெருவினிற் சிறியன திசைகள் சேண்விளங்
கருவியிற் பெரியன வானைத் தானங்கள்
பரவையிற் பெரியன புரவிப் பந்தியே.

இரவியின் சுடர்மணி-சூரியனைப்போல் ஒளி தரும் இரத்தினங்கள், இமைக்கும் தோரணம்-பிரகாசிக்கின்ற தோரண வாயில்களை உடைய, தெருவினில்-(அயோத்தி நகரத்துத்) தெருக்களைவிட, திசைகள் சிறியன-திக்குக்கள் சிறியவை யாகும்; ஆனை தானங்கள்-யானைகளின் மதநீர்ப் பெருக்கங்கள், சேண் விளங்கு அருவியில் பெரியன-நெடுந்தொலை விளங்கும் மலை யருவிகளினும் பெரியனவாகும்; புரவி பந்தி-குதிரைகளின் வரிசைகள், பரவையில் பெரியன-கடலைவிடப் பெரியனவாகும். ஏ-அசை.

நகரத்தில் தெருக்கள் பெரியனவாக இருத்தலும், யானை, குதிரைகளின் மிகுதியும் இதில் கூறப்பட்டன. தெருவினிற் சிறியன திசைகள் என்றூரேனும், பின் இரண்டடிகளின் அமைதிக்கேற்ப, 'திசைகளிற் பெரியன தெருக்கள்' என்று கொள்க. தோரணம்-நகரின் பிரதான வாயில்களிலும் பிறவிடங்களிலும் மேல் வளைவுடையதாய் அலங்கரித்து அமைக்கப்படுவது. 'வன்றோரணங்கள் புணர் வாயிலும்' (*164*); 'தோரணம் நடுவாரும்' (*1259*); தோரண வீதியும்' (மணி. *1. 43*).

(பி - ம்') 1. இரவியின் சுடர்; இழைக்குந்; தோரணம்.
2. செறிவன; பெரியன. 3. யானைத்.
4. குதிரைப் பத்தியே. (63)

157. சூளிகை மழைமுகி றுடைக்குந் தோரணம்
மாளிகை மலர்வன மகளிர் வாண்முகம்
வாளிக ளன்னவை மலர்வ மற்றவை
ஆளிக ளன்னவர் நிறத்தி லாழ்பவே.

சூளிகை-(உச்சியில் உள்ள) நிலா முற்றங்கள், மழை முகில் தொடக்கும்-மழை பெய்யத்தக்க கருமேகங்களைக் கட்டுப்படுத்தும் உயரத்தோடு, தோரணம்-மணித் தோரணங்களால் அலங்கரிக்கப் பட்ட, மாளிகை-(செல்வமிக்க) மாளிகைகளிலே, மகளிர் வாள் முகம் மலர்வன-பெண்களுடைய ஒளி பொருந்திய முகமாகிய தாமரைகள் மலர்கின்றன; அன்னவை-அவற்றினிடத்தே, வாளிகள் மலர்வ-அம்புகள் போன்ற கண்கள் மலர்கின்றன; அவை-அக்கண்களாகிய அம்புகள், ஆளிகள் அன்னவர் நிறத்தில் - சிங்கம் போன்ற (வீர முடைய) ஆடவர் மார்பிலே, ஆழ்ப-(பாய்ந்து) ஆழப் பதிகின்றன. ஏ-ஈற்றசை. மற்றவை: மற்று-அசை.

ஒப்பு: 'முண்டகத்தின் மீது முழு நீலம் பூத்ததனைக், கண்ட துண்டு கேட்டதில்லை காண்' (தனிப் பாடல்). சூளிகை: அயோத் **827.**

(பி - ம்) 1. மழைமுகிற்றொடக்கும். மழைமுகிறுடைக்கும்; மணிமுகிறுடைக்கும்; மழைமுகிறுவக்கும்.
2. அலர்வன; மாதர்; வான்முகம்.
3. எனவரை; எனவவை; எனவிழி; மலர்வ; மற்றிவை.
4. ஆளியை யன்னவர்; ஆளிக ளெனவவர்; ஆளிக ளன்னவை; ஆளிக ளெனவவை; புயத்தினுழ்பவே. (64)

158. மன்னவர் கழலொடு மாறு கொள்வன
பொன்னணி தேரொலி புரவித் தாரொலி
இன்னகை யவர்சிலம் பேங்க வேங்குவ
கன்னியர் குடைதுறைக் கமல வன்னமே.

மன்னவர் கழலொடு-அரசர்கள் (காலில் அணிந்த) வீரக் கழல் களின் ஒலியோடு, மாறு கொள்வன-மாறுபட்டு எதிராக ஒலிப்பன, பொன் அணி தேர் ஒலி-பொன்னால் அலங்கரிக்கப்பட்ட தேர்களின் மணியோசைகளும், புரவி தார் ஒலி-குதிரைகளின் கழுத்திலுள்ள கிங்கிணி மாலை யொலியும் ஆம்; கன்னியர் குடை துறை-பெண்கள் நீராடும் நீர்த்துறைகளிலே, இன் நகையவர் சிலம்பு ஏங்க-இனிய புன் முறுவலையுடைய அப்பெண்களின் (காலில் உள்ள) சிலம்புகள் ஒலிக்க, (அவ்வொலிக்கு எதிராக), கமலம் அன்னம் ஏங்குவ-தாமரைப் பூக் களில் தங்கும் அன்னங்கள் தம் குரலால் ஒலிக்கும். ஏ-ஈற்றசை,

தார்-கிங்கிணி மாலை. ஏங்குதல்-ஒலித்தல்; 'ஏங்குவ' என்பதற்கு, சிலம்பொலியைக் கேட்டு, 'இத்தகைய் இனிமை நம் குரலுக்கு இல்லையே' யென்று அன்னங்கள் ஏக்கங்கொள்வன என்றுரைப்பினும் ஆம்.

சிலம்பொலிக்கு அன்னத்தின் குரல்: *336, 971;* கிட்கிந்.*15;* 'மின்னார் சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்' *(சீவக. 2890).*

(பி - ம்.) 1. கழலொலி. 2. பொன்னணித்.
3. இன்னகையினர் சிலம்பு; இன்னொலியவர் சிலம்பு; இன்னவர் சிலம் பொலி; சிலம்பேங்க; சிலம் பெய்த; ஏங்குறும்; ஏங்குமக்; வைகுவ; எங்கணும்.
4. கன்னியர்க் குடைந்துறை; குடைதுறை; துறைகுடைக்; கனக வன் னமே; களக வன்னமே. (65)

## பொழுது போக்கு

159. ஊடவுங் கூடவு முயிரி னின்னிசை
பாடவும் விறலியர் பாடல் கேட்கவும்
ஆடவு மகன்புன லாடி யாய்மலர்
சூடவும் பொழுதுபோஞ் சிலர்க்கத் தொன்னகர்.

அ தொல் நகர்-அந்தப் பழமையான நகரத்திலே, சிலர்க்கு-சில மகளிருக்கு, ஊடவும்-(உயிரொத்த கணவன்மாரிடத்து) ஊடுவ திலும், கூடவும்-(அவ்வூடல் தீர்ந்து) கூடுவதிலும், உயிரின்-உயிர் போன்ற (அருமையான), இன் இசை பாடவும்-இனிய பண்களைத் தாம் பாடுவதிலும், விறலியர் பாடல் கேட்கவும்-பாண் மகளிரின் பாடல்களைக் கேட்பதிலும், அகன் புனல் ஆடவும்-பரந்த நீரிலே விளையாடுவதிலும், ஆடி-நீராடி, ஆய் மலர் சூடவும்-அழகிய மலர் களைச் சூடி அலங்கரிப்பதிலும், பொழுது போம்-காலம் கழியும் 'சிலர்க்கு' என்பது, கூறிய செயல்களால் மகளிரைக் குறிப்பதாயிற்று. அடுத்த இரண்டு பாடல்களும் அவ்வாறே ஆடவரைக் குறிக்கும்.

அந்நகரில் மகளிர் கவலையின்றி இன்பமாகப் பொழுது போக்கு கின்றன ரென்பது இங்கே கூறப்பட்டது. 'ஆடவும்' என்பதற்கு நர்த்தனஞ் செய்யவும் எனக் கூறுவாருமுளர்.

விறலியர்-மெய்ப்பாடு தோன்றப் பாடல் ஆடல் நிகழ்த்துவோர்; (விறல்-மெய்ப்பாடு). இசையின் சிறப்புக் கருதி, உயிரின் இனியது என்றார். மகளிர் பூக்கொய்தலும் நீராடலும் மேலே 162-ஆம் கவியிலும் காண்க.

(பி - ம்.) 1. உயிரினின்றவும்; உயிரின்னிசை.
2. பாடற் கேட்கவும்; பாடல் கேட்பவும்.
3 அப்புனல்; தண்புனல்; ஆடித்தேமலர்; அம்மலர்.
4. போழ்து போம்; சிலர்க்குத் தொன்னகர். (66)

160. முழங்குதிண் கடகரி மொய்ம்பி னூரவும்
எழுங்குரத் திவுளியோ டிரத மேறவும்
பழங்கணோ டிரந்தவர் பரிவு தீர்தர
வழங்கவும் பொழுதுபோஞ் சிலர்க்கம் மாணகர்.

அ மாண் நகர்-பெருமை மிக்க அவ்வயோத்தி நகரத்திலே, சிலர்க்கு-சில ஆடவர்க்கு, முழங்கு திண்கடம் கரி-(மதத்தால் (பிளிறு கின்ற வலிய மத யானைகளை,மொய்ம்பின் ஊரவும்-(தம் வலிமையால் அடக்கி) ஏறிச் செலுத்தவும், எழும் குரத்து இவுளியோடு இரதம் ஏறவும்-மேலெழும்பிய குளம்புகளையுடைய குதிரையின்மீதும் இரதத்திலும் ஏறிச் செல்லவும், பழங்கணோடு இரந்தவர்-(வறுமைத்) துன்பத்தால் வருந்தி வந்து யாசிப்பவர்களுடைய, பரிவு தீர்தர வழங்கவும்-வருத்தந் தீரும்படி மிகுதியாகக் கொடுக்கவுமாக, பொழுது போம்-காலம் கழியும்.

சிலர்க்குக் கரி ஊரவும், சிலர்க்கு இவுளியோடு இரதம் ஏறவும், சிலர்க்கு வழங்கவும் பொழுது போம் எனத் தனித்தனியே கூட்டுக.

(துதிக்கையாகிய) கரத்தை உடையது-கரி; வடசொல். தீர்தர-தீர; தரு: துணை வினைப் பகுதி. மாண்: உரிச் சொல்.

வழங்கல்-தன்பயன் கருதாது கொடுத்தல். (திருச்சிற். 127-பேர்). வழங்குதலிலேயே பொழுதுபோம் என்றது கொடை மிகுதியைக் குறிக்கும். 'ஈய்ந்தே கடந்தா னிரப்போர் கடல்' 173.

(பி - ம்.) 1. வெங்கடகரி; முன்பினூரவும்; முன்பின்னூரவும்; மொய்யினூரவும்
2. இவுளியொடிரதம்: இவுளியோட்டிரதம்; ஏற்பவும்.
3. பழங்கணொடு; இரந்தவப்.
4. சிலர்க்கம் மாநகர்; சிலர்க்கண் மாணகர்; சிலர்க்கு மாணகர்; சிலர்க் கண்மானகர்; சிலர்க்கம் மானகர்.
இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. (67)

161. கரியொடு கரியெதிர் பொருத்திக் கைப்படை
வரிசிலை முதலிய வழங்கி வாளைப்
புரவியிற் பொருவில்சென் டாடிப் போர்க்கலை
தெரிதலிற் பொழுதுபோஞ் சிலர்க்கச் சேணகர்.

அ சேண் நகர்-அப் பரந்த நகரத்திலே, சிலர்க்கு-சில ஆடவர் களுக்கு, கரியொடு கரி எதிர் பொருத்தி-ஒரு யானையோடு மற்றொரு யானையை எதிரெதிராக மோதவிட்டும், (சிலர்க்கு) கைபடை-கையிலே பிடிக்கும் விடாப்படைகளும் வரி, சிலை முதலிய-கட்டமைந்த வில்லில் வைத்து எய்யும் அம்பு முதலான விடுபடைகளும் (ஆகியபலவற்றை), வழங்கி-செலுத்தியும், (சிலர்க்கு) வால் உளை புரவியில்-வெண்மை யான தலையாட்டத்தை யணிந்த குதிரைகளின் மேல் இருந்து, பொரு இல் செண்டு ஆடி-ஒப்பற்ற வையாளி நடத்தியும், (சிலர்க்கு) போர் கலை தெரிதலில் - போருக்குரிய பல கலைகளையும் ஆராய்வதிலும், பொழுது போம்-பொழுது போகும்.

விடாப் படை-வாள், கையீட்டி, சிறு சவளம் முதலியன. வழங்குதல்: விடு படை, விடாப் படை யிரண்டுக்கும் பொதுவினை. சிலை, ஆகுபெயர். உளை - பிடரிமயிரு மாம். செண்டாடுதல் - வையாளி நடத்துதல்: அதாவது குதிரைகளைப் பலவகைக் கதிகளில் நடத்துதல்; இதற்கென்றமைந்தவிடம் 'வையாளிவீதி' எனப்படும்; 'செண்டியங்கு பரியுஞ் செறிந்தவே' (அயோத். 813). செண்டாடுதல், குதிரையின்மேல் இருந்துகொண்டு ஆடும் ஒருவகைப் பந்தாட்ட மெனவுங் கூறுவர்: 'பரிச்செண்டு வீசி' (பெரியபு. கழறிற். 126).

யானைப் போர்: குறள். 758; பு-வெ. 350.

பி - ம்.) 1. கரியொரு; பொருத்தக்; பொருதக்.
2. வரிசிலை நுதலியர்; வழங்க; வழங்கு; வானுளைப்.
3. பொருவு செண்டு; பொற்கலை.
4. தெரியவும்; சிலர்க்கண் சேணகர்; சிலர்க்குச் சேணகர்; சிலர்க்கச் செந் நகர்; சிலர்க்கத் தொன்னகர்; சிலர்க்கம் மாநகர்; சிலர்க்க வொண்ணகர். (68)

162. நந்தன வனத்தலர் கொய்து நவ்விபோல்
வந்திளை யவரொடு வாவி யாடிவாய்ச்
செந்துவ ரழிதரத் தேறன் மாந்திச்சூ
துந்தலிற் பொழுதுபோஞ் சிலர்க்கவ் வொண்ணகர்.

அ ஒள் நகர்-சோதியாய் விளங்குகின்ற அவ்வயோத்தி நகரத்திலே, சிலர்க்கு-சில பெண்களுக்கு, நவ்விபோல் வந்து-பெண்மான் போலத் துள்ளு நடையோடு வந்து, நந்தன வனத்து அலர் கொய்து-அழகிய பூஞ்சோலையிலே மலர்களைப் பறித்தும், இளையவரொடு வாவி ஆடி-காளைப் பருவமுடைய தம் கணவன்மாருடனே கூடி நீர் விளையாடியும், வாய் செம்மை துவர் அழிதர-வாயின் மிக்க செம்மை நிறம் கெடும்படி, தேறல்மாந்தி-கள்ளைப் பருகி, சூது உந்தலில்-சூதாடுதலிலும், பொழுதுபோம்—.

சில பெண்கள் இவ்வாறு முழுதும் இன்பப் பொழுது போக்குவர் என்றபடி.

நந்தனம்-'மகிழ்ச்சி யுண்டாக்குவது' என்னும் பொருளுடைய வடமொழிச் சொல். நந்தனவனம்-சிங்காரப் பூஞ்சோலே. மருண்ட பார்வையும் ஓட்டமும் உடைமையால் பெண்மான் ஒப்பு. கள்ளருந் துதலால் வாயின் செந்நிறம் மாறி விளர்க்கும்; நீர் விளேயாட்டா லும் அது நேருமாதலால், 'வாய்ச் செந்துவ ரழிதர' என்பதனே மத்திம தீபமாக வைத்து, 'வாவியாடி' என்பதனேடும் கூட்டி யுரைத் தலுமாம். செந்துவர்: மீமிசைச் சொல். தேறல்-தெளிவு: தெளிந்த கள்ளுக்கு ஆயிற்று. சூது உந்துதல்=சூதாட்டக் காய்களே யுருட்டு தல்; சூதாடுதல்.

அலர் கொய்து, வாவியாடி, தேறல் மாந்தி என்பன முறையே மேல்வரும் பூக்கொய்தல், நீர் விளேயாட்டு, உண்டாட்டு ஆகிய பட லங்களே நினேவூட்டுகின்றன.

(பி - ம்.) 1. நந்தவனத்து. 2. இளேயவரொடும்; ஆடிப்போய்ச்.
3. இழிதரத்; வழிதரத்; மாந்தித்தாது.
4. உந்துறல்; உந்தவும்; போதுபோம்; சிலர்க்கத் தொன்னகர். (69)

(வேறு)

163. நானு விதமா நளிமாதிர வீதி யோடி
மீனுறு வேலேப் புனல்வெண்முகி லுண்ணு மாபோல்
ஆனுத மாடத் திடையாடு கொடிகண் மீப்போய்
வானுறு நண்ணிப் புனல்வற்றிட நக்கு மன்றே.

நானுவிதம் ஆம் வெண்முகில்-பல வடிவங்களேயுடைய வெண் மேகங்கள், நளி மாதிரம் வீதி ஓடி-பெரிதாகிய ஆகாய வீதியிலே விரைந்து போய், மீன் நாறு வேலே புனல் உண்ணுமாறுபோல்-மீன் நாற்றத்தையுடைய கடல் நீரைப் பருகுதல்போல, ஆனுத மாடத்து இடை ஆடு (நானுவிதம் ஆம்) கொடிகள்-அழிவில்லாத மாளிகை களின் மேன் மாடத்திலே ஆடி அசைகின்ற (பலவகையான) கொடி கள், மீ போய்-மேலே உயர்ந்து சென்று, வான் ஆறு நண்ணி-ஆகாய கங்கையை அடைந்து, புனல் வற்றிட-(அதன்) நீர் வற்றிப்போகும் படி, நக்கும்-(நாக்கைப் போன்ற நுனிகளால்) நக்கிக் குடிக்கும். அன்று, ஏ-அசை.

'நானுவிதமாம் என்பதனே வெண்முகிலோடும், கொடிகளோ டும் இயைக்க. நளி: உரிச்சொல்; குளிர்ச்சி, பெருமை முதலிய பல பொருளுடையது. மீன் நாறு என்பதனே மாதிரத்தோடும் இயைத்து நட்சத்திரங்கள் தோன்றுதற்கிடமான ஆகாயம் எனவும் கூறலாம். 'மாதிர வீதியிலே நானுவிதமாக ஓடி' என்று இயைப்பினும் ஆம்; இப்பொருளுக்கு, ஆக என்பதன் ஈறு விகாரத்தால் தொக்கது எனக் கொள்க. 'உண்ணுமாபோல்' என்பதிலும் 'ஆறு' என்பதன் ஈறு தொக்கது. மாடத்திடை: இடை-ஏழன் உருபு. வற்றிட-வற்ற;

'இடு' துணைப் பகுதி. கொடிகள் இயற்கையாகவே மிக வுயர்ந்து மேலே போயிருப்பதை, வானுறு நண்ணிப் புனல் நக்குவதாகக் கூறியது தற்குறிப்பேற்றம். நானு-பல; வடசொல்: 'நானு முதிரையின்' 53: 'நானுவித விருபோகமும்' 1340.

(பி-ம்.) 1. விதமாய்; நளிர் மாதிர; நணி மாதிர; நனி.மாதிர.
2. விண் முகில்; உண்ணுமாப்போல்.
3. மாடத்திடையோடு: கொடிக்கள்; 4. கண்ணிப்; மன்றே. (70)

164. வன்றோ ரணங்கள் புணர்வாயிலும் வானி னூடு
சென்றோங்கு மேலோ ரிடமின்றெனச் செம்பொ னிஞ்சி
குன்றோங்கு தோளார் குணங்கூட்டிசைக் குப்பை யென்ன
ஒன்றோ டிரண்டு முயர்ந்தோங்கிய வும்பர் நாண.

வல் தோரணங்கள் புணர் வாயிலும்-வலிய தோரணங்கள் பொருத்தப்பட்ட கோபுரவாயில்களும், செம்பொன் இஞ்சி ஒன்றோடு இரண்டும்-சிறந்த பொன் வேலைப்பாடு உடைய மதில்கள் மூன்றும், குன்று ஓங்குதோளார்-மலைபோல் உயர்ந்த தோள்களையுடைய (சூரிய வமிசத்து) அரசர்கள், குணம் கூட்டு-தங்கள் உயர்ந்த குணங்களால் தேடிக்குவித்த, இசை குப்பை என்ன-புகழின் குவியல்போல, வானின் ஊடு சென்று-ஆகாயத்திலே போய், மேல் ஓங்கு ஓர் இடம் இன்றுஎன-அதற்கு மேல் உயர்வதற்குரிய இடம் ஒரு சிறிதும் இல்லை யென்னும் படி, உம்பர் நாண-தேவர்களும் நாணும்படி, உயர்ந்து ஓங்கிய-மிகவும் உயர்ந்து போயின.

வாயிலும், இஞ்சி ஒன்றோடு இரண்டும், இசைக் குப்பை யென்ன, வானின் ஊடுசென்று, மேல் ஓங்கும் ஓர் இடம் இன்று என உயர்ந்து ஓங்கிய எனக் கூட்டி முடிக்க.

ஒன்றோடு இரண்டு=மூன்று. நகரின் பகுதிகளாகிய புறநகர், அகநகர், இடை நகர் என்னும் மூன்றுக்கும் முறையே அமைந்த மதில்கள் மூன்று. அம்மூன்று மதில்களும், ஒவ்வொரு மதிலுக்கும் முறையே நான்கு திக்குக்களிலும் அமைந்த வாயிற் கோபுரங்களு மாகிய எல்லாம் வானளாவ உயர்ந்திருந்தன என்பதை உயர்வு நவிற்சியாகக் கூறுகின்றார்.

உயர்ந்து ஓங்கிய-ஒரு பொருட் பன்மொழி, உம்பர் நாண என்னுமிடத்தில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. உம்பர்-மேலிடம்; ஆகுபெயராய், தேவர்களைக் குறிக்கும்.

தேவர்களும் நாணுதல், இவ்வளவு உயர்ந்த பொருள்கள் தம் முலகத்தில் இல்லை யென்பதனாலாகும்

மதிலின் உயர்வுக்குப் புகழ்மிகுதியை உவமை கூறல்: 'கோடுறழ்ந்தெடுத்த' (பதிற். 16) என்னும் பாடலை நோக்குக. தோரணம்: 156, 1259. இச்செய்யுளுக்கு உரை பலர் பலவாறு கூறுவர்.

(பி - ம்.) 1. வன்றோரணம் புணர்ந்த மணி வாயிலும்; வன்றோரணம்புணர் வாயிலும்: வன்றோரணந்தான் புணர் வாயிலும்; வன்ருள் புணர்ந்த மணி வாயிலும்; வன்றேல் புனைந்த; வன்றேல் புணர்த்த; வன்றேல் புனைந்த மணி வாயில்; வானினும்பர்; வானினும்பர்ச்: வானினும் போய்ச்; வாயிலும்பர்ச்; வானினேங்கிச்.
2. சென்றேங்கி; சென்ருங்கு; இடமில்லெனச்; இடையில்லெனச்; செம் பொனிஞ்சிக்; செய்பொனிஞ்சி; செம்பொனுஞ்சிற்.
3. தோளான்; கோமான்; குணக்கூட்டிசை.
4. ஒன்றே ரிரண்டும்; உயர்ந்தோங்கின: ஓங்கனுண. (71)

165. காடும் புனமுங் கடலன்ன கிடங்கு மாதர்
ஆடுங் குளமு மருவிச்சுனைக் குன்று மும்பர்
வீடும் விரவு மணிப்பந்தரும் வீணை வண்டு
பாடும் பொழிலு மலர்ப்பல்லவப் பள்ளி மன்னே.

காடும்-(நகரைச் சுற்றியுள்ள) காவற் காடுகளிலும், புனமும்-அக்காடுகளைச் சார்ந்த கொல்லைகளிலும், கடல் அன்ன கிடங்கும்-கடல்போலப் பெரிதான அகழியின் கரைகளிலும், மாதர் ஆடும் குளமும்-பெண்கள் நீராடுதற்குரிய (காவல் அமைந்த) குளக்கரைகளிலும், அருவி சுனை குன்றும்-அருவிகளையும் சுனைகளையும் உடைய குன்றுகளிலும், உம்பர் வீடும்-மேல் நிலை மாடங்களிலும், மணி விரவு பந்தரும் - முத்தும் மணிகளும் கலந்து அலங்கரிக்கப்பெற்ற பந்தல்களிலும், வண்டு வீணை பாடும் பொழிலும்-வண்டுகள் வீணை போல் இசைக்கின்ற சோலைகளிலும், மலர் பல்லவம் பள்ளி மன்-பூக்களாலும் தளிர்களாலும் அமைக்கப்பட்ட படுக்கைகள் மிகுதியாகவுள்ளன. ஓ-அசை.

பாடும் பொழில்-பாடுதற்கு இடமாகிய பொழில்.

காடு முதல் பொழில் ஈருகச் சொல்லப்பட்ட இடங்களிலெல்லாம், மாந்தர், மலராலும் தளிராலும் மென்மையான பள்ளிகள் அமைத்து இன்பம் நுகர்ந்திருந்தனர் என்பது கருத்து. காடு முதல் உம்பர் வீடு ஈருக உள்ளவற்றில் மணிப்பந்தரும், பொழிலில் மலர்ப் பல்லவப் பள்ளியும் அமைக்கப்பட்டிருந்தன எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஆம். உம்பர் வீடு-தேவர்கள் வாழுமிடமாகிய சுவர்க்க லோகம் எனக்கொண்டு, உம்பர் வீடும் விரவு மணிப்பந்தர்-சுவர்க்க லோகத்திலும் போய் அளாவியுள்ள மணிப் பந்தல்கள் என்றுரைப்பினும் ஆம்.

(பி - ம்.) 1. புனலும். 2. குளனும்.
3. விராவும்; விரியும்; மருவு; மணப் பந்தரும்; மலர் பந்தரும்; தேனும் வண்டும்.
4. அல நல்லறப்; பல நல்லறப்; மலர்ப்பல்லறைப்; மலர்ப் புள்ளுறைப்; பல பன்மலர்ப்; நறும் பன்மலர்ப்; பல நன்மலர்ப்; உள நன்மலர்ப்; உள நல்லறப். (72)

166. தெள்வார் மழையுந் திரையாழியு முட்க நாளும்
வள்வார் முரசம் மதிர்மாநகர் வாழு மாக்கள்
கள்வா ரிலாமைப் பொருள்காவலு மில்லை யாதும்
கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களு மில்லை மாதோ.

தெள் வார் மழையும்-தெளிந்த நீரைப் பொழியும் மேகங்களும், திரை ஆழியும்-அலைகளையுடைய கடலும், உட்க-அஞ்சும்படி, நாளும்-தினந்தோறும், வள் வார் முரசம் அதிர் மா நகர்-தோல்வாரினால் கட்டப்பட்ட பேரிகைகள் மிக்கு ஒலிக்கின்ற அப்பெரிய நகரத்திலே, வாழும் மாக்கள்-வசிக்கும் மாந்தர்களுள், கள்வார் இலாமை-களவு செய்வார் ஒருவரும் இல்லாமையால், பொருள் காவலும் இல்லை-(யாவரும்) தம் பொருள்களைப் பூட்டிவைத்துப்பாதுகாப்பதும் இல்லை; யாதும் கொள்வார் இலாமை-எதையும் இரந்து பெற்றுக் கொள்பவர் இல்லாமையால், கொடுப்பார்களும் இல்லை—.

மாது ஓ-அசை.

இதனால், நகரத்தின் பாதுகாப்பும் செல்வப் பெருக்கும் எடுத்துக்கூறியவாறும்.

முரசம், வெற்றி முரசு, கொடை முரசு, மங்கல முரசு என மூவகைப்படும். இவற்றுள் ஏதேனும் ஒன்று எப்போதும் ஒலித்துக் கொண்டிருக்கும். அவ்வொலி, மேகத்தின் இடியோசையும், கடலின் பேரோசையும் தன்னுள் அடங்கும்படி மிக்கொலிக்கும் என மிகுத்துக் கூறினர். மாக்கள்-மக்களில் தாழ்ந்தவர்கள்; அவர்களுள்ளும் களவு செய்வாரில்லை என்றால், பண்பாடுடைய மக்களைப் பற்றிச் சொல்ல வேண்டுவதில்லை. அவ்வாறே, வறியவர் இருப்பினும் அவர்களும் இரக்கத் துணிவதில்லை; உள்ளதுகொண்டு உவப்ப வாழ்பவர்களாவர்.

முரசம் மதிர்: விரித்தல் விகாரம்.

முரசொலிக்குக் கடலொலி: (பு-வெ. 37); கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களுமில்லை: ஒப்பு: 'வண்மையில்லையோர் வறுமையின்மையால்' (85). 'ஈவாரு மேற்பாரு மில்லாத வானம்' (பழம் பாடல்).

(பி - ம்.) 1. தெள்வான்; முகிலும்; திரை வாரியும்; திசை யாழியும்.
2. அதிர் மாணகர்; அதிர் வாணகர்; அதிர் வானகர்; புரிமாநகர்; வாழு மக்கள்.
3. இல்லாமைப்; இலாமல்; பொருட் காவலும்; பொருள் காவல் செய் வாருமில்லை; யாரும்; நாளும்.
4. இலாமல்; இல்லாமைக்; மன்னோ. (73)

167. கல்லாது நிற்பார் பிறரின்மையிற் கல்வி முற்ற
வல்லாரு மில்லை யவைவல்லரல் லாரு மில்லை
எல்லாரு மெல்லாப் பெருஞ்செல்வமு மெய்த லாலே
இல்லாரு மில்லை யுடையார்களு மில்லை மாதோ.

(அந்நகரில்), கல்லாது நிற்பார் பிறர்-கல்விகளைக் கற்காமல் வீணாக இருப்பவர்கள் என்று பிரித்துச் சொல்லத் தக்கவர்கள், இன்மையின்-இல்லாமையால், கல்வி முற்ற வல்லாரும் இல்லை-கல்விகளிலே முழுதும் தேர்ந்தவர்கள் என்று சொல்லத்தக்கவர்களும் இல்லை; அவை வல்லர் அல்லாரும் இல்லை-அவற்றில் தேர்ச்சி இல்லாதவர்களும் இல்லை; எல்லாரும்-மக்கள் எல்லோரும், பெருஞ் செல்வம் எல்லாமும்-சிறந்த செல்வமென்று சொல்லப்படும் எல்லாவற்றையும், எய்தலால்-பெற்றிருத்தலினால், இல்லாரும் இல்லை-வறியவர்களும் இல்லை; உடையார்களும் இல்லை-பெருஞ் செல்வர் என்று குறிப்பிடத் தக்கவர்களும் இல்லை. ஏ, மாது, ஓ-அசைகள்.

கற்பன பலவாதலால் கல்வியையும், செல்வம், 'அஷ்டைசுவரியம்' என்றும் பிறவகையாகவும் சொல்லப்படுதலால் அதனையும் பன்மையால் கூறினார். இதனால், அயோத்தி நகரில் கல்வி, செல்வம் ஆகிய இருவகைப் பொருளும் நிரம்பி யிருந்தன வென்பது பெறப்பட்டது. 'அவை' என்பதற்குச் சபை என்று பொருள்கொண்டு அதற்கேற்பக் கூறுவாரும் உளர்.

(பி - ம்.) 1. கல்வி முற்றும்; கல்வி முற்றி.
2. அவை வல்லவராரும்; அவை வெல்பவராரும்.
3. எல்லாரு மெல்லாம்; பெருஞ் செல்வம். (74)

168. ஏகம்முதற் கல்வி முளைத்தெழுந் தெண்ணில் கேள்வி
ஆகம்முதற் றிண்பணை போக்கி யருந்த வத்தின்
சாகந்தழைத் தன்பரும் பித்தரு மம்ம லர்ந்து
போகங்கனி யொன்று பழுத்தது போலு மன்றே.

(அயோத்திநகரம்), கல்வி ஏகம் முதல் முளைத்து எழுந்து-கல்வியாகிய ஒரு விதையானது முளைத்து வளர்ந்து, அ முதல்-அவ்வாறு வளர்ந்த அடி மரத்தி னின்றும், எண் இல் கேள்வி ஆகு திண்பணை போக்கி-அளவற்ற கேள்வி ஞானமாகிய வலிய கிளைகளை வளரவிட்டு, அரு தவத்தின் சாகம் தழைத்து-அருமையாகிய தவமென்னும் இலைகள் தழையச் செய்து, அன்பு அரும்பி-அன்பாகிய அரும்புகள் தோன்ற, தருமம் மலர்ந்து-(அவ்வரும்புகள்) தரும மென்னும் பூக்களாக மலரப் பெற்று, போகம் கனி ஒன்று பழுத்தது-நல்லின்பமாகிய ஒரு கனியைப் பழுக்கச் செய்தற்கு இடமாக இருந்தது. போலும்-ஒப்பில்போலி. அன்று, ஏ-அசை.

கல்வி முதல் போகம் ஈறாக உள்ளவை ஒன்றற்கொன்று காரண காரியமானவை. போகம் எட்டு என்பர்; அவை: பெண், ஆடை, அணிகலன், போசனம், தாம்பூலம், நறுமணப் பொருள், பாட்டு, பூம்படுக்கை என்பன. இவ்வாறன்றி, போகம் என்பது பேரின்பத்தைக் குறிக்கு மெனவுங் கூறுவர்.

ஏகம், சாகம், தருமம், போகம்-வட சொற்கள். போகங்கனி- மெலித்தல் விகாரம். தவத்தின்: அத்து, இன்-சாரியைகள்.

இப்படலத்துள், அயோத்தி நகரத்தை, கல்வி, கேள்வி, தருமம், தவம் முதலியவற்றிற் சிறப்புடையதாய், சுவர்க்கத்தினும் மேம்பட்டது என அங்கங்கே கூறிவந்த ஆசிரியர், இறுதியில் அவற்றையெல்லாம் தொகுத்துக் கூறி முடித்தது போன்றது இச்செய்யுள்.

(பி - ம்.) 1. ஏக முதல்.
2, ஆக; ஆகும்: முதற்றண்; முதற்பல்; முரட்டிண்; முறட் பல்: மதர்த் திண்; பணையோக்கி.
3. தரும மலர்ந்து; தருமலர்ந்து செய்; தருமலர்ந்துலர்ந்து; தருங்கால் மலர்ந்து.
4. பழுத்தன; படுத்தது; போன்ற தன்றே. (75)

இதன்பின், கீழ்க்காணும் இரண்டு செய்யுள்கள் சில பிரதிகளில் உள்ளன:

(அ) எங்கும் பொலியும் பரஞ்சுட ராகி யெவ்வுயிரு
மங்கும் பிறவித் துயரற மாற்று நேசம்
தங்குந் தருமத் துருவாகித் தரணி மீது
பொங்குங் கருணைப் புத்தேள் கருத்தியா மெவன்பு கல்வோம்.

(ஆ) வேத மதனுள் விளைபொருள் விகற்பத்து ளடங்காச்
சோதி மயமாய்த் துலங்கித் தொல்லுயிர்த் தொகைபலவாய்
ஓது புவன முதரத்து ளொடுக்கியே பூக்கும்
ஆதி முதல்வ னமரிட மயோத்திமா நகரம்.

நகரப்படலம் முற்றும்.



# * 4. அரசியற் படலம்

அரசியற் படலம்: அரசியலைப்பற்றிக் கூறும் படலம் என விரியும். தசரத சக்ரவர்த்தியின் அரசியற் சிறப்புக்களை விரித்துக் கூறுவது இது.

169. அம்மா ணகருக் கரசன்னர சர்க்க ரைசன்
செம்மாண் டனிக்கோ லுலகேழினுஞ் செல்ல நின்றான்
இம்மாண் கதைக்கோ ரிறையாய விராம னென்னும்
மொய்ம்மாண் கழலோற் றருநல்லற மூர்த்தி யன்னான்.

அ மாண் நகருக்கு அரசன்-மாட்சிமைப்பட்ட அவ்வயோத்தி நகரத்துக்கு அரசனானவன், (எத்தகையவன் என்றால்), அரசர்க்கு அரைசன்-மற்ற நாட்டு அரசர்களெல்லோருக்கும் அரசன்; (சக்கர வர்த்தி); உலகு ஏழினும்-ஏழு தீவுகளாகவுள்ள உலக முழுவதிலும், செம்மை மாண் தனி கோல் செல்ல நின்றான்-நேர்மையும் பெருமையும் பொருந்திய (தனது) ஒப்பற்ற செங்கோல் செல்லும்படி விளங்கியவன்; இ மாண் கதைக்கு-சிறப்புமிக்க இவ்விராமாயணக்கதைக்கு, ஓர் இறை ஆய-ஒப்பற்ற தலைவனாகிய, இராமன் என்னும்-இராமன் என்று பெயர் சொல்லப்படுகிற, மொய் மாண் கழலோன்-செறிந்த மேன்மையுடைய வீரக்கழலை யணிந்த பெருமானை, தரு-(பெற்றெடுத்து) உலகுக்கு அளித்த, நல் அறம் மூர்த்தி அன்னான்-நல்ல தருமமே உருக்கொண்டது போன்றவன்.

தசரத சக்கரவர்த்தியை 'அரசர்க்கரசன்','மன்னர் மன்னவன்' என ஆங்காங்குக் கூறுவர் ஆசிரியர்; 210; ஆரணிய. 436, 538. ஏழு தீவுகளாவன: நாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்கு, கமுகு என்பன. இக்கதாநாயகனுதலும் பிற சிறப்புக்களும் பற்றி இராமபிரானை முன்னேகூறி,அவ்விராமபிரானைத் தந்தபெருமையுடையவனென்று தசரதனைச் சுட்டினார். இராம சரித்திரத்தை

---

* சில பிரதிகளில் இப்படலம் தனியே யின்றி, இதிலுள்ள பாடல்கள் பன்னிரண்டும, முன்னே நகரப்படலத்துள்ளும, சிலவற்றில் அடுத்ததாகிய திருவவதாரப் படலத்துள்ளும் சேர்த்தெழுதப்பட்டுள்ளன. மற்றும் சில பிரதிகளில் 'தாயொக்கு மன்பில்' (172) என்பதுடன் நகரப்படலம் முடிய, அடுத்துவரும், 'ஈந்தே கடந்தான்' என்பது முதல் திருவவதாரப் படலம் தொடங்குகின்றது. அரசியற் படலம் தனியேயுள்ள பிரதிகள் பலவாதலின் அவ்வாறே இங்குக் கொள்ளப்பட்டது.

அதன் பல பெருமை பற்றித் 'தெய்வ மாக்கதை' 'மாக்கதை' எனப் பாயிரத்துள்ளும் பிறவிடங்களிலும் கூறுகின்றவர், ஈண்டும் 'இம் மாண் கதை' என்றார்.

தனிக்கோல் உலகேழினுஞ் செல்ல நின்றான்: 'தயரத னெனும் பெயர்த் தனிச்செ னேமியான்' (800); 'உலகுசூழ்வந் தொன்றுபுரி கோலொடு தனித் திகிரியுய்ப்பான், என்றுமுல கேழுமர செய்தியுள னேனும்' (1227), 'முழுவதேழுலகுடையான்', 'தரையளித்த தனி நேமித் தயரதன்' (ஆரணிய. 200, 354). தசரதன் நல்லற மூர்த்தி: 'பன்னு தொல்லறப் படிவம்' (அயோத். 923).

(பி - ம்.) 1. அம்மா நகருக்கு; அம்மானகருக்கு; அரசனரசர்க்; அரசர்க்கரசாகி; இறைவனரசர்க்; அரசர்க்கிராசன், அரசர்க் கரசன்.
2. செம்மான் றனிக்; சென்று நின்றோன்.
3. இம்மா கதைக்கோர்; இம்மா நகர்க்கோர் : இராம னெனும்.
4. மொய்மாண்; கழலாற்றரு; மூர்த்தியானுன். (1)

170. ஆதிம் மதியும் மருளும்மற னும்ம மைவும்
ஏதின் மிடல்வீ ரமுமீகையு மெண்ணில் யாவும்
நீதிந் நிலேயு மிவைநேமியி னோர்க்கு நின்ற
பாதிம் முழுது மிவற்கேபணி கேட்ப மன்னே.

ஆதி-முதன்மையான, மதியும்-உண்மை யறிவும், அருளும்-அவ் வறிவின் பயனாகிய கருணேயும், அறனும்-அக்கருணேயாலாகிய தரும மும், அமைவும்-தருமசிந்தையாலாகிய மன நிறைவும், ஏது இல் மிடல் வீரமும்-குற்றமில்லாத வலிமையோடு கூடிய வீரமும், ஈகை யும்-கொடையும், நீதி நிலேயும்-நீதியிலே வழுவாது நிற்றலும்(ஆகிய), இவை யாவும் - இவைகளெல்லாம், எண்ணில்-ஆலோசிக்குமிடத்து, நேமியினோர்க்கு-(தசரதனுக்கு முன்னும் அக்காலத்தும் இருந்த) மற்ற அரசர்களுக்கெல்லாம், பாதி நின்ற-பாதியளவாகவே இருந் தன; முழுதும்-முழுமையாக, இவற்கே பணி கேட்ப-இத்தசரத னுக்கே ஏவல் செய்வனவாகும். மன், ஓ-அசை.

ஒற்றுக்கள் விரித்தல் விகாரம். ஏது—ஏதம்; கடைக்குறை.

நல்லறிவும் நற்குணங்களுமாகியவை மற்ற அரசர்களிடமெல் லாம் அரைகுறையாகவே இருந்தன; தசரதனிடத்து அவை நிரம்பி ஏவல் கேட்டு நின்றன என்றதன் நயம் கருதத்தக்கது. ஈகை எனப் பின்னே கூறுதலால், 'அறன்' என்றது கடமையானவற்றைக் குறிக் கும். மதி முதல் நீதி நிலே யீறாகக் கூறப்பட்டவை, மற்ற எல்லா அரசர்களிடமும் இருந்தவை யெல்லாம் கூடினும், தசரதனிடமிருந்த வற்றிற் பாதியளவே யாகும் எனவும் பொருளுரைப்பர்.

அருளும் அறமும் சேர்த்துக் கூறப்படுதல்: 'தங்குபே ரருளுந் தருமமுந் துணேயா' (99.)

(பி - ம்.) 1. ஆதி மதியும்; ஆதிம் மறையும்; ஆதியு மறனும்; அறனும் மருளும்; அமையும்,

2. ஏதின் மடல்; ஏதில் லடல்; ஏதில் விறல்; ஏதமின் மிடல்; ஏதம்மில; வீரமு மியாவையும்; எண்ணி; எண்ணும்; யாப்பும்; ஆய்வும்.

3. நீதி நிலையும்; நீதி நெறியும்; நேமியினர்க்கு; நேமியினேற்கு; நேமியினேற்கு; நேமியன்னேர்க்கு; நேமியனுக்குகின்ற.

4. பாதி முழுதும்; இவர்க்கே பணி; கேட்கு மன்னே. (2)

171. மொய்யார் கலிசூழ் முதுபாரின் முகந்த தானக்
கையார் புனலா னனையாதன கையு மில்லை
மெய்யாய வேதத் துறைவேந்தருக் கேய்ந்த யாரும்
செய்யாத யாக மிவன்செய்து முடித்த மாதோ.

மொய் ஆர்கலி சூழ்-வலிமை பொருந்திய கடல் சூழ்ந்த, முது பாரில் - பழமையான இவ்வுலகத்திலே, முகந்ததானம் கை ஆர் புனலால்-(தசரதனது) அள்ளிக் கொடுக்கின்ற தானத்துக்குரிய கையிலே பொருந்திய தாரை நீரினல், நனையாதன கையும் இல்லை-ஈரமாகாத (அந்தணர்) கைகளும் இல்லை; மெய் ஆய - உண்மையான, வேதம் துறை வேந்தருக்கு ஏய்ந்த-வேத நெறிகளையுடைய அரசர்களுக்கு உரியனவாய், யாரும் செய்யாத யாகம்-மற்ற அரசரில் எவரும் (அவற்றின் அருமையினல்) செய்திராத யாகங்கள், இவன் செய்து முடித்த-இத் தசரதமன்னனல் (இனிச் செய்வதற்கு ஒன்றும் இல்லை என்னும்படி) செய்து முடிக்கப்பட்டனவாகும். மாது, ஓ-அசை.

தானம்-மந்திரத்துடன் தாரைநீர் வார்த்துக் கொடுக்கப்படுவது. அதனைப் பெறுதற்குரியோர் அந்தணராதலால், நனையாதன கை-அந்தணர் கை எனப்பட்டது. அரசர்க்கு உரியனவாய், செய்தற்கு அரிய யாகங்கள், இராசசூயம், அசுவமேதம் முதலியன. தசரத மன்னனது ஆளுகையில் உள்ள அந்தணரில், அவன் கையால் தானம் பெறுதவர் ஒருவரும் இல்லை; அவன் செய்யாது விட்ட யாகங்களுமில்லை என்றவாறு.

ஆர்கலி-மிக்க ஓசையுடையது எனக் காரணப் பொருள் கொண்ட தொடர்மொழி. வேந்தருக் கேய்ந்த யாகம், யாரும் செய்யாத யாகம் எனக் கூட்டுக. ஏய்ந்த, பெயர்.

தசரதன், யாகங்கள் பல செய்தமை: அயோத். 38; கிட்கிந். 69.

(பி - ம்.) 1. மொய்யார் கலியின் முகந்து; தானம்.

3. மெய்யாக; மெய்யாகும்; மொய்பாய; எய்யாத; வேத முறை; வேதம் முறை; எய்த யாவும்; ஏய்ந்த யாவும்; ஏய்ந்தநியாவும்.

4. செய்யாதன; அவன்: மகிழ்ந்த; மறந்த; சிறந்த: மன்னே. (3)

172. தாயொக்கு மன்பிற் றவமொக்கு நலம்ப யப்பில்
சேயொக்கு முன்னின் ஹெருசெல்கதி யுய்க்கு நீரால்
நோயுற்ற தென்னின் மருந்தொக்கு நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கா லறிவொக்கு மெவர்க்கு மன்னன்.

அன்னன்-அத்தசரத சக்கரவர்த்தி, எவர்க்கும்-மக்கள் எல்லோருக்கும், அன்பில்-அன்பு செலுத்துவதில், தாய் ஒக்கும்-தாயைப் போல்வான்; நலம் பயப்பில் - எல்லா நன்மைகளையும் அளித்தலில், தவம் ஒக்கும்-தவத்தை ஒத்திருப்பான்; முன் நின்று-தான் முன்னே (வழிகாட்டியாக) இருந்து, ஒரு செல் கதி உய்க்கும் நீரால்-(அனைவரையும்) செல்லுதற்கு உரிய ஒரு நல்ல நெறியிலே செலுத்தும் தன்மையால், சேய் ஒக்கும்-புதல்வனை ஒப்பான்; நோய் உற்றது என்னில்-(நாட்டுக்கு ஏதேனும்) துன்பம் நேர்ந்தால், மருந்து ஒக்கும்-(அதனைத் தீர்க்கும்) மருந்தைப் போல்வான்; ஆய புகுங்கால்-(இன்னும் அவனியல்புகளை) ஆராயுமிடத்து, நுணங்கு கேள்வி-நுட்பமான நூற்கேள்வியையும், அறிவு-நல்லறிவையும், ஒக்கும்-ஒத்திருப்பான்.

தாயினது அன்பினும் மேலானது ஒன்று இல்லை; ஆதலால் அன்பில் 'தாய் ஒக்கும்' என்றார்; தவம், வேண்டிய நன்மைகளை யெல்லாம் தருவது; ஆனால், அது, முயன்று செய்தவர்க்கே நன்மை தரும்; தசரதனோ எல்லார்க்கும் நன்மை செய்பவன்; ஆதலால், தவத்தினும் சிறந்தவன் எனலாம். புதல்வன், தன் பெற்றோர் 'புத்' என்னும் நரகத்தை அடையாதபடி தன் செயல்களால் காத்து, நல்லகதி அடையச் செய்வான்; அரசனும், மக்கள் தீ நெறிச் செல்லாதபடி காத்து அவர்கள் நன்னெறியிலே செல்லக் காரணமாயிருப்பான்; தான் செய்யும் வேள்வி முதலியவற்றால் நாட்டு மக்கள் நற்கதி அடைய உதவுதலும் செய்வான். (கதி-நல்வழி, நல்லிடம்.) நற்கேள்வியும் நன் ஞானமும் எவர்க்கும் நன்மை பயப்பன; அவற்றைப் போலிருந்து அரசனும் அனைவர்க்கும் நன்மை செய்வான்.

தாயன்பு: 'உயிர்கடாம், ஈன்ற நற்றாயெனக் கருது பேரருளினன்' (*1135*); 'அன்னையே யனைய வன்பி னறவோர்கள்' (ஆரணிய. *40*.); 'தாயென வுயிர்க்கு நல்கி' (கிட்கிங். *348*); 'தாயே யனைய கருணையான்' (சுந்தர. *1169*); 'தாயின் மன்னுயிர்க் கன்பினன்' (யுத்த. *148, 211*). தவத்தின் பெருமை: 'வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ, மீண்டு முயலப்படும்' (குறள். *266*). நோய்க்கு மருந்து: 'பிணி நோய்க்கு மருந்துமாவான்' (தேவாரம். திருஞான. *116: 1; 242: 3*).

(பி - ம்.) 1. தருவொக்கும்; நயம் பயப்பின்; நயம் பரப்பில்.
2. முன்னின்றுயர்; முன்னின்றருஞ்; நீரான்.
3. நோயொக்கு மென்னின்.
4. புகுங்காலத் தறிவொக்கும்; அன்னோன்; மன்னே; அம்மா.

173. ஈந்தே கடந்தா னிரப்போர்கட லெண்ணி னன்னூல்
ஆய்ந்தே கடந்தா னறிவென்னு மளக்கர் வாளால்
காய்ந்தே கடந்தான் பகைவேலை கருத்து முற்றத்
தோய்ந்தே கடந்தான் றிருவிற்றொடர் போக பௌவம்.

(சக்கரவர்த்தி), இரப்போர் கடல்-யாசகர்களாகிய கடலை, ஈந்தே கடந்தான்-நிறையக் கொடுத்தே தாண்டினான்; அறிவு என்னும் அளக்கர்-அறிவு என்ற கடலை, எண் இல் நல் நூல் ஆய்ந்தே கடந்தான்-அளவற்ற நல்ல நூல்களை ஆராய்ந்தே தாண்டினான்; பகை வேலை-பகைவராகிய கடலை, வாளால் காய்ந்தே கடந்தான்-வாளாயுதத்தால் ஒறுத்தே தாண்டினான்; திருவில் தொடர் போக பௌவம்-செல்வத்தோடு தொடர்புடைய இன்பக் கடலை, கருத்து முற்ற-மனம் நிரம்ப, தோய்ந்தே கடந்தான் - அனுபவித்தே தாண்டினான்.

இரப்போர் கடலைக் கடத்தலாவது, அவர்கள் வேறிடம் சென்றும் தன்னிடமே திரும்ப வந்தும் யாசிக்காதபடி மிகவும் கொடுத்தல்; நாட்டில் 'இல்லாருமில்லை' என்னுமாறு கொடுத்து வறுமையை அழித்தல். அறிவுக் கடலைக் கடத்தலாவது, பல நூலாராய்ச்சியால் தன் அறிவு விசாலத்தின் எல்லையைக் காணுதல்; தான் இனி அறிய வேண்டியது எதுவுமில்லை என்றவாறு அறிவினைப் பெறுதல். பகைக் கடலைக் கடத்தல்-பகைவரே இல்லையாகும்படி செய்தல். போக பௌவம் கடத்தல்-பலவகை இன்ப நுகர்ச்சியை இனி வேண்டாவென்று வெறுக்குமளவு நுகர்ந்து தீர்த்தல். இவ்வாற்றால், தசரதன் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றும் கடந்தவன் என்பதும், எல்லா வகையிலும் மேம்பட்டிருந்தான் என்பதும் கூறப்பட்டன.

கடல், அளக்கர், வேலை, பௌவம் என்பன ஒருபொருட் சொற்கள்; இவ்வாறு வந்தது **பொருட்பின் வருநிலையணி.** கடந்தான் என்பது ஒரே பொருளில் பலமுறை வந்தது, **சொற்பொருட் பின்வருநிலையணி.**

இரப்போர்க்கு மிகுதியாகக் கொடுத்தல்: 'வறியோர்தனமே'; 'இரவலாளர்மற், றிவ்வழி யுலகினி லினிய நண்பினோர்' (அயோத். *328, 853*); 'இரவலரு நல்லறமும் யானுமினி யென்படநீத் தேகினாயே' (ஆரணிய. *197*); அறிவுக் கடல் கடத்தல்: 'ஏற்ற சொற்றுறையறி பெருமையான்' (அயோத். *14*). அளக்கர்: அயோத்.*151.* கிட்கிந். *218.*

(பி - ம்.) 1. எண்ணினுண்ணூல்; எண்ணி நன்னூல்; எண்ணி நுண்ணூல்.
2. அறிவெனு மளக்கர்; கலையென்னு மளக்கர்.
3. முற்றித் திருவின்றொடர், திருவின்னுயர்; தொலைவின்றுயர்; திருவின் முலைப்; திருவிண்டொடர்; திருவின் மடவார்; போக வெள்ளம்; மோகபௌவம்; தொகைப் போகம். (5)

இதன் பின் ஒரு பிரதியிற் காணப்படும் அதிகப் பாடல் :—

விரிகதிர் பரப்பிமெய்ப் புவன மீதிருள்
பருகுறும் பரிதியங் குலத்திற் பார்த்திபன்
இரகுமற் றவன்மக னயனென் பானவன்
பெருகுமா தவத்தினிற் பிறந்த தோன்றலே.

(வேறு)

174. வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமு மொருவழி யோட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தயர தப்பெயர்
வள்ளல்வள் ளுறையயின் மன்னர் மன்னனே.

வள் உறை அயில் மன்னர் மன்னன்-தோல் உறையிடப்பட்ட கூரிய வாளேந்திய அரசர்க் கரசனுன, தள்ள அருபெரு புகழ்-நீக்குதற்கரிய பெரும் புகழையுடைய, தயரதன் பெயர் வள்ளல்-தசரதன் என்னும் பெயரையுடைய அப்பெருங் கொடையாளன், வெள்ளமும்-ஆற்று நீர்ப் பெருக்கும், பறவையும்-பறவைகளும், விலங்கும்-விலங்குகளும், வேசையர் உள்ளமும்-பரத்தையருடைய மனமும், ஒருவழி ஓட நின்றவன்-(தன் ஆட்சிச் சிறப்பினுல்) என்றும் ஒரே வழியிலே செல்லும்படி விளங்கியவனுவான்.

இதனுல் அவன் செங்கோலின் சிறப்புக் கூறப்பட்டது. தயரதன்= தசரதன்.

வெள்ளம் ஒரு வழியோடுதலாவது, எக்காலத்தும் மிகுதலும் வற்றுதலுமின்றி, உரிய அளவிலே தீங்கு விளையாமற் செல்வது. இதற்குக் காரணம் மழை வளம் பிழையாமை; அது மன்னவன் செங்கோலால் ஆவது; 'இயல்புளிக் கோலோச்சு மன்னவன் நாட்ட, பெயலும் விளையுளுந் தொக்கு' (குறள். 545). பறவையும் விலங்குகளும் ஒரு வழியோடுதலாவது, அவை தம்முள் இனப்பகை யின்மையும், மாந்தருக்குத் தீங்கு செய்யாமையுமாம். வேசையர் உள்ளம் ஒரு வழியோடுதல், ஒருவரிடமே பெறும் மிக்க பொருளால் அமைந்து, பலரைக் கூடி மிகப் பெரும் பொருளீட்டும் பேராசையின்றி யிருத்தல். 'ஆசலம்புரி' என்று தொடங்கும் ஆற்றுப்படல முதற் செய்யுள் இங்கே நினைவுகூரத்தக்கது. இவ்வாறு கூறியது அரசனின் ஆணைச் சிறப்புக் கூறியவாறென்க. 'பாழியாருலகெலா மொருவழிப் படர வாழ்,'ஆழியான்' (கிட்கிங். 81.)

வள்ளுறை அயில் என்றதனுல், வாளை உறையி னின்றும் எடுக்கும் அவசியம் இல்லாமலேயிருந்தவன் என்பதாயிற்று. 'உறை நிறுத்திய வாளினுற் பகையிரு ளொதுக்கி' (திருவிளை, நாடு. 1): அயில்-வேலும் ஆம். 'உறைசேர் வேலினுய்', 'உறையோடு நெடுவேலாய்'

717, 736. விலங்கினம் பகையின்றி யிருத்தல்: 'புலிப் போத்தும் புல்வாயும், ஒரு துறையில் நீருண்ண உலகாண்டோன்' 717.

(பி - ம்.) 1. வேசியர்.
2. ஒருவழி யொப்ப; நின்றனன்; நின்றன; நின்றவால்.
3. புகழ்த்தசரதப்; புகட்டசரதப்; புகட்டயரதப்; குணத்தசரதப். (6)

175. நேமிமால் வரைமதி லாக நீள்புறப்
பாமமா கடல்கிடங் காகப் பன்மணி
வாமமா ளிகைமலை யாக மன்னற்குப்
பூமியு மயோத்திமா நகரம் போன்றதே.

மன்னற்கு-தசரத மன்னனுக்கு, நேமிமால்வரை-மிகப் பெரிய சக்கரவாளகிரியே, மதில் ஆக-(தன் நகரத்து) மதில் போலவும், நீள் பாமம் மா புறம் கடல்-நீண்டு பரந்த பெரும்புறக் கடலே, கிடங்கு ஆக-அகழி போலவும், மலை-மற்றக் குலமலைகள், பல் மணி வாமம் மாளிகை ஆக-பல மணிகளால் அலங்கரிக்கப்பெற்ற அழகிய (நகரத்தில் உள்ள) மாளிகைகள் போலவும் (தோற்றமளிக்க), பூமியும்-பூமி முழுவதும், அயோத்தி மா நகரம் போன்றது - (தான் ஆளும்) அயோத்தி மா நகரத்தைப் போலிருந்தது. ஏ-ஆசை.

தசரத சக்கரவர்த்தி, உலக முழுதும் தன் ஒரு குடைக்கீழ் வைத்து ஆண்டமையின், 'பூமியும் அயோத்தி மா நகரம் போன்றது' என்றார். அன்றி, அரசனின் தலைநகரம் போலவே நாட்டின் எல்லாப் பகுதிகளும் வளமையுற்றிருந்தன என்பதும் கூறியவாறும்.

அயோத்தி நகரின் மதிலும் அகழியும்: 'அன்னமா மதிலுக் காழிமால் வரையை அலைகடல் சூழ்ந்தன வகழி' (107-ம் அதன் குறிப்பும் பார்க்க.); 'பாமமா கடல்களெல்லாம்' (778); பூமியும் அயோத்தி மா நகரம் போன்றது: 'நாடெலாமொரு நன்னகராயது' (1193); 'வைய நின்னகரி' (அரிச்சந். சூழ்வினை. 20).

(பி - ம்.) 1. வரைமதிளாக; வரை யெயிலாக; நீள்புறம்; நீள்புனற்.
2. பாமமார்; கடலிடமாகப்.
3. மன்னர்க்குப்.
4. அயோத்தியும்; போலுமே; போலுமால். (7)

176. யாவரும் வன்மைநே ரெறிந்து தீட்டலால்
மேவருங் கையடை வேலுந் தேயுமால்
கோவுடை நெடுமணி மகுட கோடியால்
சேவடி யடைந்தபொற் கழலுந் தேயுமால்.

யாவர் வன்மையும்-(தன்னைப் பகைத்த) எவருடைய வலிமையையும், நேர் எறிந்து-எதிர் நின்று (வேலினால் பொருது) அழித்து, தீட்டலால்-(அவ்வப்போது மழுங்குகின்ற வேலை) அடிக்கடி தீட்டு

தலால், மேவரும் கை அடை வேலும் தேயும்-சிறப்பு மிக்க கையிலே சேர்ந்துள்ள வேலும் தேயாநிற்கும்; கோ உடை-(பணிந்து அடங்கிய) பல அரசர்களுடைய, நெடுமணி மகுடம் கோடியால் - சிறந்த மணிகள் பதிக்கப்பெற்ற அளவிறந்த மகுடங்கள் படுவதனுல், சேவடி அடைந்த பொன் கழலும் தேயும்-சிவந்த பாதங்களிலே அணிந்துள்ள பொன்னுலாகிய வீரக் கழலும் தேயாநிற்கும். 'ஆல்' என்பது இரண்டிடங்களிலும் அசை நிலே.

'பகைவரைத் தாக்குதலால் முனே மழுங்குகின்ற வேற்படையை அவ்வப்போது கூராக்குதற் பொருட்டுத் தீட்டுவதனுல் அது தேய்வடைகின்றது; பகைவர் யாவரும் அடங்கி வந்து பணிவதனுல் அவர்களுடைய மகுடம் பலமுறை பட்டுப் பட்டுக் கழல் தேய்வடைகின்றது' எனக் கூறிய இதனுல் மன்னனது வெற்றிச் சிறப்பு மிகுத்துச் சொல்லப்பட்டது. கையிலடைந்த வொன்றும் காலிலடைந்த வொன்றும் தேய்கின்றது என்பதிலுள்ள நயம் கருதத் தக்கது.

மன்னர்கள் வந்து பாதங்களிலே பணிதல்: 'சூழிமால் யானேயார் தொழுகழற் றயரதன்' (கிட்கிந். 81). ஒப்பு. 'எந்தை கழலிணேயி லெம்மருங்குங் காணலாம்......பார்வேந்தர் தங்கள், மணிமுடியிற் றேய்ந்த வடு' (நள. கலிநீங்கு. 58).

(பி - ம்.) 1. ஆவரும்; யாவதும்; யாவையும்; ஏவரும்; தேவரும்; வன்மை நேரறிந்து; வன்மநேரறிந்து; வன்மைநேரதிர்ந்து; தீட்டமால்; தீண்டலால்.
2. மேவரு கையடை; மேவருகையிடை; மேவரு கரத்திடை.
3. நெடுமுடி; மகரக் கோடியால்.
4. சேவடியணிந்த; சேவடியடைந்து; தேயுமே, (8)

177. மண்ணிடை யுயிர்தொறும் வளர்ந்து தேய்வின்றித்
தண்ணிழல் பரப்பவு மிருளேத் தள்ளவும்
அண்ணறன் குடைமதி யமையு மாதலால்
விண்ணிடை மதியினே மிகையி தென்பவே.

மண் இடை-இவ்வுலகத்திலே, தேய்வு இன்றி வளர்ந்து-(சந்திரனேப்போல) தேய்தல் இல்லாமல் வளர்ச்சி பெற்று, உயிர் தொறும்-ஜீவராசிகளுக் கெல்லாம், தண் நிழல் பரப்பவும்-குளிர்ந்த நிழலேத் தரவும், இருளே தள்ளவும்-(துன்பமாகிய) இருட்டை நீக்கவும், அண்ணல் தன்-பெருமை மிக்க தசரத சக்கரவர்த்தியின், குடை மதி அமையும் ஆதலால்-குடையாகிய சந்திரன் இருத்தலால், இடை விண் மதியினே-இதற்குத் தோற்றுப்போய் ஆகாயத்தில் உள்ள சந்திரனே, இது மிகை என்ப-இதுஇங்கே தேவையில்லாதது என்று (அறிந்தோர்) கூறுவர். ஏ-ஈற்றசை.

குடை நிழல் பரப்புதலாவது-இன்பந் தருதல். இருளே நீக்குதலாவது-துன்பத்தைப் போக்குதல். 'உலகனேத்தும் ஒரு குடைக்

கீழ் ஆண்டான்' என ஆட்சியையே குடையாகக் கூறுதல் மரபு; குடையின் வளர்ச்சி, ஆட்சிச் சிறப்பு. சந்திரன் வளர்ச்சியும் தேய்வு முடையதாய் ஆகாயத்தில் உள்ளது; குடையோ, இப்பூமியிலேயே உள்ளது; என்றும் தேய்தல் இல்லாதது; மேலும், சந்திரன் புற விருளைப் போக்க வல்லதே யன்றி, குடைபோல உயிர்களின் துன்பத்தைப் போக்க வல்லதன்று; எனவே, குடை மதியினும் மேலானது.

குடையின் சிறப்பு; ஆரணிய. 80; கிட்கிந். 69 - பார்க்க.

(பி - ம்.) 1. மண்ணுடை; வளர்த்துத்.
3. அண்ணறண்; தனிக்குடை; மதிக்குடை; குடையதன்; அமைவும்; ஆதலான்.
4. மதியினும்; என்னவே. (9)

178. வயிரவான் பூணணி மடங்கன் மொய்ம்பினன்
உயிரெலாந் தன்னுயி ரொப்ப வோம்பலால்
செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
உயிரெலா முறைவதோ ருடம்பு மாயினன்.

வயிரம் வான் பூண் அணி-வைரம் இழைத்துச் செய்யப்பட்ட சிறந்த அணிகலன்களைப் பூண்ட, மடங்கல் மொய்பினன் - சிங்கம் போன்ற வலிமையையுடையவனான தசரதன், உயிர் எலாம்-(தன்ஆளுகையில் உள்ள) ஜீவராசிகளை யெல்லாம், தன் உயிர் ஒப்ப-தன்னுயிரைப்போல, ஓம்பலால்-பாதுகாப்பதனால், செயிர் இலா உலகினில்-குற்றங்களுக்கு இடமில்லாத தன் இராச்சியத்திலே, சென்று நின்று வாழ் உயிர் எலாம் - நடமாடியும், நிலையாயிருந்தும் வாழ்கின்ற (சராசரங்களான) உயிர்கள் எல்லாம், உறைவது-தங்கியிருக்கத்தக்க, ஓர் உடம்பும் ஆயினன்-ஒரே உடம்பு போலவும் ஆனான்.

உயிரைப் பாதுகாப்பது உடம்பாதலின், அரசனை இவ்வாறு கூறினார்; ஆனால், ஒருயிருக்கு ஒருடம்பே உலக இயற்கை; இங்கே 'எல்லாவுயிர்களும் வாழும் உடம்பு' என உயர்வு நவிற்சியாகக் கூறினார். இவ்வாறே பின்னும், 'வைய மன்னுயி ராகவம் மன்னுயி, ருய்யத் தாங்கு முடலன்ன மன்னருக்கு' (அயோத். 116) எனக் கூறுதல் காண்க. அரசன் குடிகளைத் தன்னுயிர்போலக் கருதுதல்: 'வையத் துயிர்க்குயிராய தோன்றல்'(675); 'மன்னுயி ரெல்லா மண்ணாள் வேந்தன், றன்னுயிர்' (மணி. 7:11-12). 'நெல்லுமுயிரன்றே' (186) என்னும் புறநானூற்றுப் பாடல், அரசன் உலகத்துக்கு உயிர் என்கின்றது.

சென்று வாழ் உயிர் = இயங்குதிணை = சரம்; நின்று வாழ் உயிர் = நிலைத்திணை = அசரம்.

(பி - ம்.) 1. வயிரவாட்; வயிர வாள்; பூணினன்; மொய்ம்பினுல்.
2. தனதுயி ரொப்ப; தன்னுயி ரொக்க.
4. உறுவதோர்; உடலும். (10)

179. குன்றென வுயரிய குவவுத் தோளினுன்
வென்றியந் திகிரிவெம் பருதி யாமென
ஒன்றென வுலகிடை யுலாவி மீமிசை
நின்றுநின் றுயிர்தொறு நெடிது காக்குமே.

குன்று என உயரிய-மலைபோல் உயர்ந்த, குவவு-திரட்சியுடைய, தோளினுன்-புயங்களையுடைய சக்கரவர்த்தியினது, வென்றி அம்திகிரி-வெற்றி பொருந்திய அழகிய (ஆஞ்ஞா) சக்கரமானது, வெம் பருதி ஆம் என-வெப்பமான கிரணங்களையுடைய சூரியன் என்று சொல்லும் படி, மீமிசை நின்று நின்று-(மற்றையரசர்களுடைய ஆஞ்ஞா சக்கரங் களுக்கெல்லாம்) மிகவும் மேலாக நிலைபெற்று, உலகுஇடை-இவ்வுல கத்திலே, ஒன்று என உலாவி-இணையில்லாததாய் எங்கும் சென்று, உயிர்தொறும் - ஒவ்வோ ருயிரிடத்தும், நெடிது காக்கும்-மிக்க பாது காப்பைச் செய்யா நிற்கும்.

சூரிய மண்டலம் ஒன்றேயாக, அதன் ஒளி உலக முழுதும் பரவு தல் போல, தசரதனது ஒரே ஆஞ்ஞா சக்கரத்தின் ஆற்றல் எங்கும் செல்வதாகும். சூரிய மண்டலம் மிகவுயர்ந்த விடத்தி லுள்ளது; திகிரியும், மற்றெல்லாருடைய திகிரியினும் மேம்பட்டுள்ளது; சூரியன் கிரணங்கள் உலகுக்கு நன்மை செய்து காக்கும்; திகிரியின் ஆற்றலும் அவ்வாறே காக்கின்றது என இவ்வாறு ஒற்றுமை காண்க.

மீமிசை-மிகவுயர்ந்த நிலை. நின்று நின்று என்ற அடுக்கு (அவ் வுயர் நிலையில்) இடையீடின்றி நிற்றலைக் குறிக்கும்.

திகிரி-ஆஞ்ஞாசக்கரம்: 'கறங்கடற்றிகிரிப் படிகாத்தவர்' *(397)*; 'இலங்கு மணி மிடைந்த பொலங்கலத் திகிரிக், கடலகவரைப் பினிப் பொழின்முழு தாண்ட' (பதிற். *14: 18-19*). திகிரிக்குச் சூரியன் உவமை: தக்க. *1*.

(பி - ம்.) 1. குன்றிலு முயரிய; குலவுத்.
2. வென்றிவெந் திகிரியம்; பரிதி; ஆமெனு.
3. ஒன்றிய; உலகிடையுலாவும்; உலகிசையுலாவி; உணரினு முலாவி.
4. நின்றுபல் லுயிர்தொறும்; நின்று நின்றுயிர் முறை; காக்குமால்; காக்கவே. (11)

180. எய்யென வெழுபகை யெங்கு மின்மையால்
மொய்பெருத் தினவுறு முழவுத் தோளினுன்
வையக முழுவதும் வறிஞ ஞேம்புமோர்
செய்யெனக் காத்தினி தரசு செய்கின்றுன்.

எய் என-அம்புபோல, எழு பகை-(விரைந்து) தன் மேல் வருகிற பகைவர், எங்கும் இன்மையால்-எவ்விடத்தும் இல்லாமையால், மொய் பெரு தினவு உறு-போர் செய்யப் பெருததினவு மிக்க, முழவு தோளினுன்-மத்தளம் போன்ற (திரண்ட) தோள்களையுடைய சக்கரவர்த்தி, வையகம் முழுவதும்-இவ்வுலக முழுவதையும், வறிஞன் ஓம்பும் ஓர் செய் என - வறியவனொருவன் (மிக்க கருத்துடன்) பாதுகாக்கின்ற ஒரு (சிறு) வயலைப்போல, இனிது காத்து-நன்கு பாதுகாத்து, அரசு செய்கின்ருன்-ஆட்சி செலுத்துகின்ருன்.

அம்பு ஒரு பொருளை யிலக்காகக் கொண்டு விரைந்து பாய்தல் போல, தன்னைப் பகையாகக் குறிக்கொண்டு போர் செய்ய வருபவர் எவரும் இலர் என்க. அச்சத்தாலும் அன்பாலும் தசரதனைப் பகைப்பவர் எவருமில்லை என்றபடி. வறிஞன் ஒருவன் தனக்குரிய ஒரு சிறு வயலை மிக்க கருத்தோடும், விருப்பத்தோடும் பழுது சிறிதும் நேராதவாறு பாதுகாப்பான்; அதுபோலச் சக்கரவர்த்தியும் தன் நாட்டைப் பாதுகாக்கின்ருன்; நாடு முழுதும் ஒரு சிறு வயல்போல இலகுவாகப் பாதுகாக்கப்படுகின்றது; இதனல், மன்னனது ஆட்சித் திறமை புலப்படுத்திய வாரும். 'அரசு செய்கின்ருன்' எனக் கண்ணெதிரே பார்ப்பதுபோல நிகழ்காலத்தாற் கூறியுள்ளதன் நயம் கருதத்தக்கது.

தோள் தினவுறுதல்: 'திரடோளூறு தினவுஞ் சிறிது டையேன்' (1357). 'செருப்பெருத் தினவுறு சிகரத் தோளினர்' (ஆரணிய, 405); வறிஞன் ஓம்பும் ஓர் செய்: 'மிடிய ஞெருசெய்யாள னச்செய் விளையக் காக்குஞ் செயல்போல' (பிரபுலிங்க. மாயையுற்பத்தி. 49).

(பி - ம்.) 1. எழும்பகை; எழுவகை.
2. மொய்பொரு; மொய்பெரு; மொய்பெறு; மொய்பெருது; மொய்பொருது; எனவுறு.
3. முழுதுமோர்; முழுதுமே; முழுதுமோ; வறியன்.
4. காத்தினியரசு; காத்துநின்றரசு; காத்தளித்தரசு; செய்யுமால்; செல்கின்ருன். (12)

அரசியற் படலம் முற்றும்.



# 5. * திருவவதாரப் படலம்

திருவவதாரப்படலம்: இராமபிரான் முதலிய நான்கு புதல்வர்கள் அவதரித்த வரலாற்றைக் கூறும் படலம் என விரியும்.

181, ஆயவ னொருபக லயனை யேநிகர்
தூயமா முனிவரற் றொழுது தொல்குலத்
தாயருந் தந்தையுந் தவமு மன்பினால்
மேயவான் கடவுளும் பிறவும் வேறுநீ.

ஆயவன்-(முற்கூறியவாறு சிறப்புக்களையுடைய) அத்தசரத மன்னன், ஒரு பகல்-ஒருநாள், அயனையே நிகர்-பிரமனையே ஒத்த, தூய மாமுனிவரன் தொழுது-பரிசுத்தமும் பெருமையும்மிக்க வசிட்ட முனிவனை வணங்கி, 'தொல் குலம்-(எங்கள்) பழமையான குலத்தில் உதித்த, தாயரும்-தாய்மாரும், தந்தையும்-என் தந்தையும், தவமும்-(முன்னோரும் நானும் செய்த) தவப் பயனும், அன்பினால் மேய வான் கடவுளும்-பக்தியினால் அடையத்தக்க பெருங்கடவுளும், பிறவும்-(இம்மை மறுமைப் பயன்களைத் தருவதற்குரிய) மற்றெலாமும், வேறு நீ-(எல்லோரினும்) வேறுபட்ட சிறப்புடைய நீயே யாவாய்' (எனக்கு).

இதுமுதல் நான்கு கவிகள் ஒருதொடர். இதிலுள்ள 'தொழுது' என்னும் வினையெச்சம், 184-ஆம் கவியின் ஈற்றிலுள்ள 'என்றனன்' என்னும் முற்றோடு முடிவுறும்.

வசிட்ட முனிவர், பிரமன் புதல்வராய் மிக்க சிறப்புடையவராதலால்,'அயனையே நிகர் தூய மாமுனிவரன்' எனப்பட்டார். முனிவரன்-முனிச் சிரேட்டன். முனிவரற்றொழுது-முனிவரனைத் தொழுது; தாயர் ஐவகைப்படுவராதலால் பன்மையால்கூறினார்; தசரதனுடைய தந்தையான அஜமகாராஜனுக்கு மனைவிமார் பலராதலின், அவ்வாறு கூறினாரெனலும் ஆம். பிரமனைக் குறிக்கும் 'அயன்' (அஜன்) என்னும் பெயர், இம் மன்னனுக்கும் அமைந்திருத்தல் ஒரு நயம். 'எனக்கு, எல்லாம் நீயே' என்று வசிட்ட முனிவரைப் புகழ்ந்து முகமன் கூறி, பின்பு தான் சொல்லக் கருதியதைச் சொல்லலுற்றான். 'வேறு நீ'

---

* இப்படலத்துள்ள பாடல்கள் ஒரு பிரதியில் கீழ்க்காணுமாறு மூன்று பகுதிகளாகக் காணப்படுகின்றன: 181-210, திருவாக்குரைத்த படலம். 211-260 கலைக்கோட்டு முனிப்படலம். 231-314, திருவவதாரப்படலம்.

என்றது, பிறரினின்றும் பலவகையிலும் வேறுபட்ட சிறப்புக்களை யுடைய நீ என மேம்படுத்தியவாறும். இங்கு வேறும் நீ எனப் பிரித்து வேறுவகையாகவும் பொருள் கூறுவர்,

'தாயரும்...வேறு நீ' ஒப்பு. எந்தைநீ யாயுநீ யெம்முனீ தவ, வந்தனைத் தெய்வநீ மற்று முற்றுநீ' (யுத்த. 84). வசிட்டரைக் கடவுள் எனல்: அயோத். 7.

(பி - ம்.) 2. முனிவனைத் தொழுது; முனிதனைத் தொழுது; முனிவரத் தொழுது; முனிவரர்த் தொழுது; தொல் குணத்.
3. தாயுநற்றந்தையுந் தமரும்.
4. மேயவன். (1

182. எங்குலத் தலைவர்க ளிரவி தன்னினும்
தங்குலம் விளங்கிடத் தரணி தாங்கினுர்
மங்குந ரிலரென வரம்பில் வையகம்
இங்குநின் னருளினு லினிதி னேம்பினேன்.

(நின் அருளினுல்)-தங்கள் கிருபையினல், எம் குலம் தலைவர் கள்-எங்கள் குலத்து முன்னேரான பல அரசர்கள், தம் குலம்-தமது வமிசமானது, இரவி தன்னினும் விளங்கிட (குல முதல்வனுன) சூரி யனைவிடப் (புகழால்) பிரகாசிக்கும்படி, தரணி தாங்கினுர்-பூமியை (நன்கு) ஆண்டனர்: இங்கும்-இப்போதும், நின் அருளினுல்-தங்கள் கிருபையால், மங்குநர் இலர் என-(இக்குலத்திலே, ஆட்சித் திறமை யில்) தாழ்பவர் எவருமில்லை யென்னும்படி, வரம்பு இல் வையகம்-எல்லையில்லாத இவ்வுலகத்தை, இனிதின் ஓம்பினேன்-(யானும்), இனிதாகப் பாதுகாத்து வந்திருக்கின்றேன்.

வசிட்ட முனிவர் இக்ஷ்வாகு வமிசத்தில் பரம்பரையாக வந்த குருவாதலால், அவரருளாலே முன்னேர் பலரும் திறம்பட ஆண்டன ரென்பதுபட, 'நின்னருளினுல்' என்பதை முன்னும் கூட்டி உரைக்கப்பட்டது. 'எம் குலத் தலைவர்கள், மங்குநர் இலரென இரவிதன்னினும்....... தரணி தாங்கினுர்' எனக் கூட்டி யுரைத்தனர் முன்பு சிலர்.

வசிட்ட முனிவரின் பெருமை: 259; அயோத், 45, 46.

(பி - ம்.) 1. இறைவர்கள்; இறையவர்; இரவிதன்னிலும்.
2. விளங்குற; விளக்குற.
3 இல்லென: வரம்பின்: வைகவும்.
4. இங்குன தருளினுல்; எங்குநின் னருளினுல்; ஓம்பினன். (2)

183. அறுபதி னுயிர மாண்டு மாண்டுற
உறுபகை யொடுக்கியிவ் வுலக மோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறு மென்பதோர் மறுக்க முண்டரோ.

அறுபதினுயிரம் ஆண்டு மாண்டு உற - (என் ஆட்சியில்) அறுபதினுயிரம் ஆண்டுகள் கழிய, (இதுவரை), உறுபகை ஒடுக்கி-(நாட்டிற்கு) நேரும் எல்லாப் பகைகளேயும் போக்கி, இஉலகம் ஓம்பினேன்-இவ்வுலகத்தைச் செவ்வையாகப் பாதுகாத்தேன்; பிறிது ஒரு குறை இலே-வேறு ஒரு குறையும் (எனக்கு) இல்லே; என்பின்-எனக்குப் பின்னே, வையகம் மறுகுறும் என்பது-இவ்வுலகம் (ஆள்வார் இன்றி) கலக்க மடையுமே என்பதாகிய, ஓர் மறுக்கம் உண்டு-ஒரு மன வருத்தம் மட்டும் உண்டாகி யிருக்கிறது. அரோ-அசை.

மகாசக்கரவர்த்திகளுக்கு ஆட்சிக்காலம் (அந்த யுகத்தில்) அறுபதினுயிரம் ஆண்டு என்பர்; அக்கால முழுதும் தசரத சக்கரவர்த்தி ஆட்சி செய்தமை கூறப்பட்டது. மன்னன், தனக்குப்பின் நாட்டை ஆளத்தக்க சந்ததி தனக்கு இல்லேயே என்ற குறையைக் குறிப்பாகக் கூறுகின்ருன்; மேலே, புத்திரர் பிறப்பது உறுதி என்பதை அறிந்தபின், கலேக்கோட்டு முனிவரிடம் 'என் ஆன்றதொல் குலமினி யரசின் வைகுமால்' (*258*) எனக் கூறுவதுங் காண்க.

தசரத சக்கரவர்த்தி ஆண்ட காலம் அறுபதினுயிரம் ஆண்டுகள்; அவனுக்கு மந்திரச் சுற்றத்தார் அறுபதினுயிரவர். 'வையம்யாணுண்டவாண் டுங்கள் மாட்சியால். ஐயமி லறுபதி ஞயிரம்மரோ'; 'வையம் யாவையும், அறுபதினுயிரமாண்டு மாண்டவன் (அயோத். *16, 1147*); 'அறுபதினுயிர ரெனினு மாண்டகைக், குறுதியினெ்ன்றிவற் குணர்வென்றுன்னலாம், பெறலருஞ் சூழ்ச்சியர்' (அயோத். *13*).

(பி - ம்.) 1. அறுபதினுயிரமியாண்டு; அறுபதினுயிரத்தாண்டு.
2. அடக்கியிவ்; அடக்கியே; இன்றியிவ்: உலகை: காத்துளேன்; காத்தனன்.
3. இறையொரு; குறையில்லே; என்பின்
4. மறுகுவ தென்பதோர்; மறுகும தென்பதோர்; மறுகு மென்பதோர்; மறுகுவ துண்டெனும்: மயக்கம். (3)

184. அருந்தவ முனிவரு மந்த ணுளரும்
வருந்துத லின்றியே வாழ்வின் வைகிஞர்
இருந்துய ருழக்குவ ரெற்பி னென்பதோர்
அருந்துயர் வருத்துமென் னகத்தை யென்றனன்,

'வருந்துதல் இன்றியே-(இதுவரை), வருத்தம் என்பது இல்லாமலே, வாழ்வின் வைகினர்-நல் வாழ்க்கையில் இருந்தவர்களாகிய, அரு தவ முனிவரும்-அரிய தவத்தைச் செய்யும் முனிவர்களும், அந்தணுளரும்-அந்தணரும், என்பின்-எனக்குப் பின்னே,இரு துயர் உழக்குவர் என்பது ஓர் அரு துயர்-பெருந்துயரத்தால் கலக்கமடைவார்கள் என்றவொரு நீக்குதற்கு அரிய துயரம், என் அகத்தை வருத்தும்-என் மனத்தை வருத்துகின்றது;' என்றனன்-என்று கூறி முடித்தான்.

வைகினர் முனிவரும் அந்தணாளரும் எற்பின் துயருழக்குவ ரென்பதோர் அருந்துயர் என்னகத்தை வருத்தும் எனக் கூட்டுக. வைகினர்-வினையாலணையும் பெயர். இரு-பெரிய; உரிச் சொல்.

முன் கவியில் குறிப்பாகக் கூறிய, புத்திரன் இல்லாத குறையை வற்புறுத்தி இங்கும் கூறுகின்றான் அரசன். 'புத்திரப்பேறு நல்லோர் நல்வாழ்வு பெறும்படி ஆளுதற்கே யன்றித் தனக்காக அன்று' என்று, தன்னலங் கருதாத கூற்று,

(பி - ம்.) 1. இருந்தவ முனிவரும் ஏனையோர்களும்
2. வருந்துற லின்றியே; வருந்துத லன்றியே; வருந்துய ரின்றியே.
3. பெருந்துயர்; உழக்குநர்; உழப்பதோ, எற்பின் வையகம். (4)

இதன் பின் காணப்படும் ஓர் அதிகப் பாடல் :—

பொறையிலா வறிவு போகப் புணர்ப்பிலா விளமை மேவத்
துறையிலா வனச வாவி தூசிலா போலத் தூய்மை
நறையிலா மலரும் கல்வி நலமிலாப் புலமை நன்னீர்ச்
சிறையிலா நகரும் போலச் சேயிலாச் செல்வ மென்றான்.

185. முரசெறி செழுங்கடை முத்த மாமுடி
அரசர்தங் கோமக னனைய கூறலும்
விரைசெறி கமலமென் பொகுட்டு மேவிய
வரசரோ ருகன்மகன் மனத்தி னெண்ணினான்.

முரசு எறி-முரசம் முழங்குகின்ற, செழு கடை-வளம் மிக்க தலைவாயிலையுடைய, முத்தம் மாமுடி-முத்துக்களால் அலங்கரிக்கப் பெற்ற சிறந்த கிரீடத்தை யணிந்த, அரசர் தம் கோமகன்-அரசர்க் கரசனான தசரதன், அனைய கூறலும்-முன் சொன்னவற்றைச் சொல்லுதலும், விரை செறி-மணம் மிக்க, மெல் கமலம் பொகுட்டு மேவிய-மெல்லிய தாமரைப் பூங்கொட்டையில் தங்கியுள்ள, வரம் சரோருகன் மகன்-மேலான பிரமதேவன் மகனான வசிட்ட முனிவன், மனத்தின்-தன் மனத்திலே, எண்ணினான்-(முன் நிகழ்ந்த தொன்றை) நினைத்தான்.

இதுவும் அடுத்த கவியும் ஒருதொடர். நினைத்தது இன்ன தென்பதை அடுத்த கவியில் காணலாம். சரோருகம்-தாமரை; நீரில் வளர்வதென்ற காரணப் பொருளுடையது. சரோருகன்-தாமரையி லிருப்பவன். கமல மென் பொகுட்டு மேவிய என முன்னர்க் கூறியத னால், இங்கே 'சரோருகன்' என்பது பிரமன் என்ற பெயரளவாய் நின் றது. வசிட்டன் பிரமனின் புதல்வன்; தெரிந்த நான்மறைத் திசை முகன் திருமகன்', 'தேன்றரு மலருளான் சிறுவன்' (அயோத். 36, 1:01).

(பி - ம்.) 1. முரசறை; முரசதற்: முற்ற: வெண்குடை.
2. அரசர்கோமகனினைந்து.
3 உரை செறி: பொகுட்டின் மேவிய.
4. வரசரோருகன்றன மனத்து ளெண்ணினான். (5)

186. அலைகட னடுவணோ ரனந்தன் மீமிசை
மலையென வறிதுயில் வளரு மாமுகில்
கொலைதொழி லரக்கர்தங் கொடுமை தீர்ப்பெனென்
றுலைவுறு மமரருக் குரைத்த வாய்மையை.

(வசிட்ட முனிவன்), அலைகடல் நடுவண்-அலை மோதும் பாற்கடலின் நடுவிலே, ஓர் அனந்தன் மீமிசை-ஒப்பற்ற ஆதிசேடனாகிய அமளியின் மேல், மலை என-ஒரு நீல மலைபோல, அறிதுயில் வளரும்-யோகநித்திரை செய்தருளுகின்ற, மாமுகில்-கருமேகவண்ணனாகிய திருமால், 'கொலை தொழில் அரக்கர் தம் கொடுமை-(நல்லவரைக்) கொல்லுந் தொழிலையுடைய அரக்கர்களின் கொடுமையை, தீர்ப்பென் என்று-(நான்) தீர்த்து வைக்கின்றேன்' என்று, உலைவு உறும் அமரருக்கு- (அவ்வரக்கரால்) மிக்க துன்பமடைகிற தேவர்களுக்கு, உரைத்த வாய்மையை - (முன்னொரு காலத்தில்) சொல்லியருளிய வாக்குறுதியை, (எண்ணினான்.)

வரசரோருகன் மகன் (185) முகில் அமரருக்கு உரைத்த வாய்மையை (186), மனத்தின் எண்ணினான் (185) என முடிக்க.

சக்கரவர்த்தியின் மொழி கேட்ட வசிட்ட முனிவர் அதைக் குறித்துச் சிந்தித்தபோது, அரக்கரின் கொடுமைகளுக்கு ஆளாகி வந்து முறையிட்ட தேவர்களுக்குத் திருமால், தான் தசரத புத்திரனாகப் பூமியில் அவதரித்து அரக்கரின் கொடுமையைத் தீர்த்து வைப்பதாகக் கூறிய வாக்குறுதி அவர் நினைவுக்கு வந்தது. அவர் முக்காலமும் உணர்பவராதலால், இச்செய்தி முன்பே அவருக்குத் தெரிந்திருந்தது; இப்போது நினைவுக்கு வந்ததென்க.

கொலைத் தொழில் என்பது, எதுகை நோக்கி, கொலை தொழில் என இயல்பாயிற்று, மீமிசை யென்பது 'மேலே' என்ற அளவில் நின்றது. முகில்-ஆகுபெயர்.

அலை கடல் நடுவண்...மலையென வறிதுயில் வளரும்: 'திரை தவழ் பாற்கடற் துயிலுந் தேவனை, மரகத மலையினை' (191).

(பி - ம்.) 1. நடுவதோர்: அமளி மீக்கரு.
2. விழிதுயில்:
3. கொலை செயும். தீர்ப்பனென்று: தீர்ப்பவென்று.
4. உரைத்த வுண்மையை; உரைத்த வாய்மையே. (6)

187. சுடுதொழி லரக்கராற் றொலைந்து வானுளோர்
கடுவமர் களனடி கலந்து கூறலும்
படுபொரு ளுணர்ந்தவப் பரமன் யாமினி
அடுகில மெனமறுத் தவரொ டேகினான்.

இது முதல், இருபத்திரண்டு கவிகள் வசிட்ட முனிவர் தம் மனத்துள் முன்பு நிகழ்ந்தவற்றை நினைவு கூர்ந்தமை கூறும்.

வான் உளோர்-விண்ணுலகத்துள்ள இந்திரன் முதலிய தேவர்கள், சுடு தொழில் அரக்கரால் தொலைந்து-கொடுந் தொழிலையுடைய (இராவணன் முதலான) அரக்கர்களால் மிகவும் துன்பமடைந்து, கடு அமர் களன் அடிகலந்து-(ஆலால மென்னும்) விடம் தங்கிய கண்டத்தையுடைய உருத்திர மூர்த்தியின் திருவடிகளை அடைந்து, கூறலும்-தங்கள் துன்பத்தை யெடுத்துச் சொல்லவும், படு பொருள் உணர்ந்த-மேல் வரக்கடவனவற்றை அறிந்த, அ பரமன்-அவ்வுருத்திரமூர்த்தி, 'யாம் இனி அடுகிலம் என மறுத்து-(நாம் முன்பே இராவணனுக்கு வரம் கொடுத்திருப்பதனால்) அவனை இப்போது நாம் அழிப்பதற்கில்லை, என்று மறுத்துக் கூறி, அவரொடு ஏகினன்-அவர்களுடன் போனான்.

படுபொருள் - வினைத்தொகை. பரமன் ஏகின இடம் அடுத்த செய்யுளால் விளங்கும்.

(பி- ம்.) 1. தொலைந்த. 2. களனடிக்.
3. உணர்த்தவப்: யானினி.
4. அடுவதில்லென; அடுகிலே னென; அடுகில இனன: அவரொ டேகினர். (7)

இதன் பின் சில பிரதிகளில்; உள்ள ஒரு பாடல் வருமாறு:—

கறைமிடற் றிறைவனும் கடவு ளோர்களும்
மறைமுதற் கிழவனை வந்து நண்ணலும்
முறைமையிற் கடன்முறை முற்றி முண்டகத்
திறைவனு மவரொடு மினிதி னேகினன்.

188. வடவரைக் குடுமியி னடுவண் மாசறு
சுடர்மணி மண்டபந் துன்னி நான்முகக்
கடவுளை யடிதொழு தமரர் கண்டகர்
இடிநிகர் கொடுமைய தியம்பி னரரோ.

அமரர்-(முன் கவியில் கூறியபடி வந்த) தேவர்கள் எல்லோரும், வடவரை குடுமியின் நடுவண்-வடக்கே உள்ளதாகிய மேருமலையின் ஒரு சிகரத்தின் நடுவில் உள்ள, மாசு அறு சுடர்மணி மண்டபம் துன்னி-குற்றமற்ற ஒளி பொருந்திய இரத்தின கசிதமான (பிரமன் எழுந்தருளியுள்ள) மண்டபத்தை அடைந்து, நான்முகம் கடவுளை அடி தொழுது-நான்கு முகங்களையுடைய கடவுளாகிய பிரமதேவன் திருவடிகளை வணங்கி, கண்டகர்-கொடிய அரக்கர்களின், இடி நிகர் கொடுமை அது - கேட்போர் அஞ்சத்தக்க பேரிடி போன்ற கொடுமையை, இயம்பினர்-(அவனிடம்) சொன்னார்கள். அரோ-அசை.

கண்டகம்-முள்; கண்டகர்-முட்போலும் கொடுமையுடையவர்; ஆரணிய. *485, 734, 972, 1079*; கிட்கிந். *371*; சுந்தர. *318, 659, 1075*.

வடவரை-மேருமலை. மேருமலையில் பிரமன் இருத்தல்: 'மல ரோன் வைகும், விண்ணுக்கு மளவையாய மேருவின் மீது' (யுத்த. 2684).

(பி - ம்.) 1. குடுமியினடுவுள்.
3. அமர கண்டகர்.
4. இடனிகழ்; இடர் நிகழ்; மிடலுடை வினையமது; உரைத்திட்டா ரரோ; இயம்பினனரோ. (8)

189. பாகசா தனன்றனைப் பாசத் தார்த்தடல்
மேகநா தன்புகுந் திலங்கை மேயநாள்
போகமா மலருறை புனிதன் மீட்டமை
தோகைபா கற்குறச் சொல்லி னனரோ.

அடல் மேகநாதன்-வலிமை மிக்க மேகநாதன் எனப்படும் இந்திரசித்து, பாகசாதனன்தனை - இந்திரனை, பாசத்து ஆர்த்து, பாசம் என்னும் படையால் கட்டிக்கொண்டு போனதனால், இலங்கை புகுந்து மேய நாள்-இலங்கையிலே போய் (இந்திரன்) தங்கி யிருந்த காலத்தில், மீட்டமை-(தான் சென்று அவனை) மீட்டு வந்த செய்தியை, போகம் மா மலர் உறை புனிதன்-இனிய சிறந்த தாமரை மலரிலே வீற்றிருக்கும் பிரமதேவன், தோகை பாகற்கு உற சொல் லினன் - மயில் போலும் சாயலையுடைய உமாதேவியை இடப்பாகத் திலே கொண்டவனாகிய உருத்திர மூர்த்திக்குத் திருவுளம் ஏற்கும்படி எடுத்துச் சொன்னான். அரோ-அசை.

இராவணன் திக்கு விசயம் செய்து வருங்கால், இந்திரலோகம் சென்று தேவேந்திரனோடு பொருகையில், இராவணன் மகனான மேகநாதன் இந்திரனைப் பாசப் படையால் பிணித்து இலங்கையில் கொண்டுபோய்ச் சிறை வைத்துவிட, அதனையறிந்த பிரமதேவன், இலங்கைக்குப் போய், இராவணனிடம் நயமாகப் பேசி இந்திரனை மீட்டு வந்தனன் என்பது வரலாறு. இதனைப் பிரமதேவன் உருத்திர மூர்த்தியிடம் கூறியதன் நோக்கம், இப்போது தன்னால் ஆவது ஒன்றும் இல்லை யென்பதைக் குறிப்பித்தலாகும்.

இந்திரசித்து, பிறந்த போதே அழுத குரல் மேக கர்ச்சனை போலிருந்ததனால் 'மேகநாதன்' எனப்பட்டான்; பின்பு இந்திரனை ஜயித்த காரணத்தால் 'இந்திர ஜித்' என்ற பெயர் அவனுக்கு உண்டாயிற்று.

பாகசாஸனன் - பாகன் என்னும் அசுரனைத் தொலைத்தவன் என்ற காரணக் குறி.

ஆபோகம் என்னும் வடசொல், பரப்பு என்னும் பொரு ளுடையது. 'போகம்' என்பது ஆபோகம் என்பதன் முதற்குறை எனக் கொண்டு, இடமகன்ற தாமரை மலர் என்றும் கூறலாம்.

(பி - ம்.) 1. பாசத்தாற் கட்டி; பாசத்தாலடர்; பாசத்தார்த்துடன்.
2. மேவுநாள்; ஏகுநாள்; மேவினன்.
3. சேகற; போகமார்: புனித: மீண்டமை.
4. தோகை பாகர்க்குறச் சொல்லினரரோ. (9)

சில பிரதிகளில், இப்பாட்டின் பின்னிரண்டடிகள் 'போகமா மலருறை புனித வொல்லையின், ஏகிநீ மீட்டமை யியம்ப வேண்டுமோ' என்றும், இதன் பின்,

என்றுதம் மிடர்முழு தியம்பி யெங்கணும்
கன்றிய நிருதரை யழித்துக் காத்தியேல்
ஒன்றிய வுலகமு முயிர்கள் யாவையும்
இன்றுநீ படைத்தலென் றியம்பி னரரோ.

ாடலும் காணப்படுகின்றன.

190. இருபது கரந்தலை யீரைந் தென்னுமத்
திருவிலி தனைத்தெறுஞ் செயலின் றெங்களால்
கருமுகி லெனவளர் கருணை யங்கடல்
பொருதிடர் தணிக்கிலுண் டெனும்பு ணர்ப்பினர்.

கரம் இருபது, தலை ஈரைந்து என்னும்-கைகள் இருபது, தலை பத்து என்னும் பெருமையையுடைய, அ திரு இலிதனை தெறும் செயல்-அந்த அருட் செல்வமில்லாதவனை அழித்தலாகிய காரியம், எங்களால் இன்று-நம்மிருவராலும் ஆவதன்று; கருமுகில் என-நீல மேகம்போல, வளர்-(திருப்பாற் கடலிலே) அறிதுயிலமர்ந்தருளும், கருணை கடல்-கிருபா சமுத்திரமாகிய விட்டுணுமூர்த்தி, பொருது-அவனோடு போர்செய்து, இடர் தணிக்கில் உண்டு-(தேவர்முதலியோரின்) துன்பத்தைப் போக்கினால் உண்டு; (வேறு வழியில்லை); எனும்-என்கிற, புணர்ப்பினர்-ஒன்றுபட்ட கருத்துடையவர்களாய்,

இதுவும் அடுத்த பாடலும் குளகம். புணர்ப்பினர் என்பது அடுத்த பாடலில் உள்ள 'இருந்த வெல்லையில்' என்பதனோடு முடியும் கருணையங்கடல்: அம், சாரியை.

இருபது...திருவிலி: யுத்த. 342 பார்க்க.

(பி - ம்.) 2. திருவிலி வலிக்கொரு; திருவிலி வலிக்குநாம் செய்தவத்திலென்.
3. கருவரை.
4. தணிக்கின்; தணிப்பின்; தணிக்குவன்; புணர்ப்பினல்; தணிக்கிலுண் டெனப்புகன்றனன்; பொருதுநுந்துயர்களைப் போக்குமென்றனன். (10)

இதன்பின் மூன்று அதிகப்பாடல்கள்:—

(1) ஆயவ ரயன்முத லமர ரீறிலா
நாயக னிருபத நயந்து சிந்தைமி
தோய்விலா தவனரு மறைக ளோதியே
நேயமோ டிருந்தவை நிகழ்த்தன் மேயினர்.

(2) காத்தி நீயெமைக் காக்கிலர் தம்மையாம்
ஏத்தி யேயிளைத் தோமிறை வாவிடர்
பாத்தி யேதிருப் பாற்கடற் பள்ளியின்
மூர்த்தி யேமுதல் வாமுகின் மேனியாய்.

(3) அந்த காரத் தரக்கர்செய் தீமையால்
நொந்து ளோமிறை வாநொடிப் போதினில்
வந்து மாற்றிடும் வண்ண மெமக்கருள்
எந்தை யேகரு ணாகர னேயென.

191. திரைதவழ் பாற்கடற் றுயிலுந் தேவனை
மரகத மலையினை வழுத்தி நெஞ்சினல்
கரகம லங்குவித் திருந்த காலையில்
பரகதி யுணர்ந்தவர்க் குதவும் பண்ணவன்.

திரை தவழ் - அலைகள் தவழுகின்ற, பால்கடல் துயிலும் தேவனை-திருப்பாற் கடலிலே யோக நித்திரை செய்தருளும் தேவனும், மரகத மலையினை-மரகத மணியாலான மலைபோன்றவனுமாகிய திருமாலை, நெஞ்சினல் வழுத்தி-மனத்திலே தியானித்து, கரகமலம் குவித்து-செந்தாமரை போலும் கைகளைக் கூப்பிக்கொண்டு, இருந்த காலையில் (தேவர்கள் அம்மணி மண்டபத்திலே) இருந்தபோது, உணர்ந்தவர்க்கு-(தன்னுடைய சொரூபத்தை) உணர்ந்த தத்துவ ஞானிகளுக்கு, பரகதி உதவும் பண்ணவன்-மேலான முத்தி நிலையை அளித்தருளும் கடவுளாகிய திருமால்,

இதுவும் அடுத்த பாடலோடு தொடரும். பண்ணவன் என்னும் எழுவாய், அடுத்த கவியில் 'வந்து தோன்றினன்' என்பதனோடு முடியும்.

பிரமனும் உருத்திரமூர்த்தியும் மேருவின் உச்சியில் உள்ள மணி மண்டபத்திலே தேவர்களுடன் திருமாலைத் தியானித்துத் துதித்துக்கொண்டிருந்தனராக, அவர்கள் முன்னே திருமால் எழுந்தருளிவந்து காட்சியளித்தா னென்பது இக்கவியாலும் அடுத்த கவியாலும் கூறப்படுகின்றது. தேவர்கள் பாற்கடல் சென்று வழுத்தினர் எனக் கொள்ளலும் ஆம்.

(பி - ம்.) 1. திரைகெழு பயோததித் துயிலுந் தெய்வவான்.
2. வழுத்தி நெஞ்சுற; வழுத்து நெஞ்சினர்.
3. இருக்குங் காலையில்.
4. உதவு; உணரும்; அருளும். (11)

இதன் பின் ஒரு பாடல் வருமாறு:—

அறிதுயி லெழுந்தன னமரர் கூப்பிடு
மறைமொழித் துதியொலி வந்தி சைக்கவே
நிறைகுணத் தமரர்க ணினைத்த தைப்பதை
யிறைவனுந் திருவுளத் தறிந்தங் கெய்தவே.

192. கருமுகி ருமரைக் காடு பூத்துநீ
டிருசுட ரிருபுறத் தேந்தி யேந்தலர்த்
திருவொடும் பொலியவோர் செம்பொற் குன்றின்மேல்
வருவபோற் கலுழன்மேல் வந்து தோன்றினன்.

கருமுகில்-நீலமேகமானது, தாமரைகாடு பூத்து - தாமரை மலர்களை மிகுதியாகப் பூத்து, நீடு இருசுடர்-நெடுந்தூரம் விளங்குகின்ற (சூரிய, சந்திரராகிய) இரண்டு சோதிகளையும், இருபுறத்து ஏந்தி-(தன்) இரண்டு பக்கங்களிலும் தாங்கிக்கொண்டு, அலர் ஏந்து திருவொடும் பொலிய-தாமரை மலரால் தாங்கப்படும் இலக்குமி தேவியுடனே விளங்க, ஓர் செம்பொன் குன்றின் மேல்-பசும்பொன்னுலாகிய ஒரு மலையின் மீது ஏறி, வருவ(து) போல்—, கலுழன் மேல் வந்து-கருடாழ்வான் மீது ஆரோகணித்து வந்து, தோன்றினன்-அவர்கள் முன்னே காட்சியளித்தான்.

வருவ: இறுதி தொக்கது; வருவது: தொழிற் பெயர்.

மேகம், தாமரை மலர்களைப் பூத்தலும், இருசுடரை ஏந்துதலும், திருவோடு பொலிதலும், மலை மேல் ஏறி வருதலும் இல்லாமையால், இப்பாட்டு இல் பொருளுவமையணி கொண்டது. முகில் திருமாலின் திருமேனிக்கும், தாமரைக்காடு கண், வாய், கை, பாதம், உந்தி ஆகிய உறுப்புக்களுக்கும், சந்திர சூரியர் முறையே சங்கு சக்கரங்களுக்கும், பொற்குன்று கருடாழ்வானுக்கும் உவமை. கருடாழ்வான், பொன்னிறமும் மலை போன்ற தோற்றமும் உடையவனாதலால் 'செம்பொற்குன்று' என்றார். இஃது உருவகம். காடு-திரள்; சீவக. 2336-ந.

'கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ், செய்ய கரிய திருமாலே' (விக்கிரம சோழனுலா); 'பொன்மலை மேலெழுந்த மாமுகில் போன்றுளர் வந்து காணீர்' (பெரிய திருமொழி). தாமரைக்காடு: 'தாமரையுடைக் கானம்' (1113). 'புண்டரீகத்தடங் காடு பூத்தொரு, கொண்டல்வந் திழிந்தன்ன கோலத்தான்றனை' (ஆரணிய. 953); 'புண்டரீகங்கள் பூத்துப் புயறழீஇப் பொலிந்த திங்கள், மண்டல முதயஞ் செய்த மரகதக் கிரியன்னனை' (கிட்கிந். 94); 'நீலக் கார்முகில் கமலம் பூத்து...வருவதே போலு மாலை' (கிட்கிந். 304; பாகவத. 859). சந்திர சூரியர் சங்கு சக்கரங்களுக்கு: 'இருவேறு மண்டிலத் திலக்கம்போல, நேமியும் வளையு மேந்திய கையால்' (பரி. 13: 8—9); 'சங்கு திகிரி சந்த்ர சூரியர்' (தக்க. 700). இரு சுடரேந்திய மேகம் திருமாலுக்கு: (சிலப். 11: 41—51). 'கருமுகில் செம்பொற்குன்றின் மேல் வருவதுபோல்' என்று இங்கே கூறியதற்கேற்ப, 'பொன்வரை யிழிவதோர் புயலின்' (195) எனப் பின்னர்க் கூறுவர்.

(பி - ம்.) 1. கருமுகிற்றாமரைக்; பூத்தநீடு; பூத்து நீர்.
2. ஏந்திஏடவிழ்; ஏடலர்; ஏடலர்த்; ஏந்திய.
3. பொலிவுறச் : பொலிதரச்; குன்றின்மீ; குன்றிலே.
4. கருடன்மேல். (12)

193. எழுந்தனர் கடவுளர்க் கிறையுந் தாமரைச்
செழுந்தவி சுகந்தவத் தேவுஞ் சென்றெதிர்
விழுந்தன ரடிமிசை விண்ணு ளோரொடும்
தொழுந்தொறுந் தொழுந்தொறுங் களிது ளங்குவார்.

(எதிரே காட்சியளித்த திருமாலைக் கண்டவுடன்), கடவுளர்க்கு இறையும் - தேவேந்திரனும், செழு தாமரை தவிசு உகந்த அ தேவும் - வளமான தாமரையாகிய பீடத்தில் வீற்றிருக்கும் அந்தப் பிரமதேவனும், எழுந்தனர்-(தமது ஆசனத்தினின்று)எழுந்து, விண் உளோரொடும் - தேவர்களுடனே, எதிர்சென்று-எதிர் கொண்டுபோய், அடிமிசை விழுந்தனர் - திருவடிகளிலே (பல முறை) சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர்; தொழுந்தொறும் தொழுந்தொறும்-(அவ்வாறு) வணங்கும்போதெல்லாம், களி துளங்குவார்-(ஒருமுறைக் கொருமுறை) மகிழ்ச்சி மேம்படுவா ராயினர்.

'தொழுந்தொறுந் தொழுந்தொறும்' எனப் பன்மையாற் கூறியதனால், 'அடிமிசை விழுந்தனர்' என்ற விடத்தும் பன்முறை யெனக் கூறப்பட்டது. தொழுந் தொறும் தொழுந்தொறும்: ஒப்பு. 'தொழுந்தொறுந் தொழுந்தொறு மாசி சொல்லுவார்' (ஆரணிய. 126). திருமாலைக் கண்ட மாத்திரத்திலேயே தேவர்கள் தம் குறை தீர்ந்ததுபோல எண்ணி மகிழ்ச்சி மிக்கனர்; இது அடுத்த கவியில் கூறப்படும்.

(பி - ம்.) 1. எழுந்தனன்; எழுந்திலன்: விண்ணவர்க்கிறையும்; கறைமிடற்றிறையும்; கறைமிடற்றிறைவன்; கடகளிற்றிறையும்: தாமரை; ஏடவிழ்.
2. உவந்தவத்; உகந்தநற்; இருந்தவத்.
3. விழுந்தன னவனடி: விண்ணுளாரொடும்; விண்ணுளோர்களும்; விண்ணுளோர்கடாம்; விண்ணுளோரெலாம்.
4. துளங்குவான்; துளங்கினர்; துலங்குவார்; துளங்கவே. (13)

194. ஆடினர் பாடின ரங்கு மிங்குமாய்
ஓடின ருவகைமா நறவுண் டோர்கிலார்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
சூடினர் முறைமுறை துளவத் தாண்மலர்.

(தேவர்களில் பலர்), உவகை மா நறவு உண்டு-மகிழ்ச்சியாகிய மிக்க மதுவை உட்கொண்டு, ஓர்கிலார்-(இன்னது செய்வதென்று) அறியாதவர்களாய், ஆடினர்-கூத்தாடினர்கள்; பாடினர்-பாடினர்கள்; அங்கும் இங்குமாய் ஓடினர்-குறுக்கும் நெடுக்குமாக ஓடினர்கள்;

(மற்றும் பலர்), அரக்கர் வீடினர் என்று-அரக்கர் (அப்போதே) அழிந்துவிட்டனரென்று (எண்ணி), உவக்கும் விம்மலால்-மகிழ்வதனு லுண்டாகிய பூரிப்பினோடு, துளவம் தாள்-திருத்துழாய் மணக்கும் திருவடிகளிலே, முறை முறை-முறைப்படி, மலர் சூடினர்-கற்பகப் பூக் களால் அருச்சித்தனர்.

திருமால் திருவுளம் பற்றின், அரக்கர் அழிவது உறுதி என்ற நிச்சயத்தால், 'வீடினர் அரக்கர்' என இறந்த காலத்தால் கூறினர். தேவர்கள் அனைவரும் தம்தம் மகிழ்ச்சியைப் பலவாறு வெளிப்படுத் தின ரென்பது இவ்விரண்டு பாட்டாலும் கூறப்பட்டது.

ஒப்பு: *299*. மகிழ்ச்சியால் ஆடுதல் பாடுதல்: ஆரணிய. *140*; கிட்கிந். *178*; சுந்தர. *1248*.

(பி - ம்.) 1. இங்குமா; இங்குநின்று.
2. உவகையால்; உவகையாம்: நறையுண்டோர்கிலர்.
3. விம்மலார்.
4. சூடினர் வானவர்; துளபத்; துளவந்: தார்மலர். (14)

195. பொன்வரை யிழிவதோர் புயலிற் பொற்புற
என்னையா ளுடையவன் றோளின் றெம்பிரான்
சென்னிவான் தடவுமண் டபத்திற் சேர்ந்தரி
துன்னுபொற் பீடமேற் பொலிந்து தோன்றினன்.

எம்பிரான் - எம்பெருமானாகிய நாராயண மூர்த்தி, பொன் வரை இழிவது ஓர் புயலின் - பொன் மலைமேனின்றும் இறங்குகின்ற ஒரு மேகம் போல, பொற்பு உற - அழகாக, என்னை ஆளுடையவன் தோள் நின்று - என்னை யாட்கொண்ட கருடாழ்வானுடைய தோளினின்றும் (கீழே இறங்கி), சென்னி வான் தடவு மண்டபத் தில் சேர்ந்து-ஆகாயமளாவிய உச்சியையுடைய மண்டபத்தினுள்ளே போய், அரி துன்னு பொன் பீடம்மேல்-சிங்கங்கள் தாங்கும் பொன் னாதனத்தின்மேல் (அமர்ந்து), பொலிந்து தோன்றினன் - (சோதி) விளங்க வீற்றிருந்தான்.

கருடாழ்வானுக்குப் பொன் மலையும், திருமாலுக்குப் புயலும் உவமைகள். 'பகவானிலும் மேம்பட்டவர் பாகவதர்' என்னும் கொள்கைப்படி கருடாழ்வானை 'என்னை யாளுடையவன்' என்றார்: பொலிந்து=பொலிய; எச்சத்திரிபு. தோள்நின்று என்பதன் பின் 'இறங்கி'என்பது வருவிக்கப்பட்டது. அரிதுன்னுபொற்பீடம்: பொன் னாலாகிய சிங்காதனம். 'கருமுகில்......ஓர் செம்பொன் குன்றின்மேல் வருவ போல்' என முன்னே (192) கூறியதற் கேற்ப இங்கே 'பொன்வரையிழிவதோர் புயல்' என்றார்.

(பி - ம்.) 1. பொன்மலே; புயலின் பொற்பென; புயற்புள்ளின்புறம்.
2. என்னையாள்பவன்புயத் திழிந்தன் றெம்பிரான்; என்னையாளுடையவன் தொழநின் றெம்பிரான்.
3. கடவுண் மண்டபத்துச்; துடருமண்டபத்திற். (15)

196. விதியொடு முனிவரும் விண்ணு ளோர்களும்
மதிவளர் சடைமுடி மழுவ லாளனும்
அதிசய முடனுவந் தயலி ருந்துழிக்
கொதிகொள்வே லரக்கர்தங் கொடுமை கூறுவார்.

விதியொடு முனிவரும்-பிரமதேவனும் முனிவர்களும், விண் உளோர்களும்-இந்திரன் முதலிய தேவர்களும், மதி வளர் சடைமுடி மழு வல் ஆளனும்-வளர்பிறைச் சந்திரன் தங்கிய சடை முடியை உடைய, மழுவாயுதந் தாங்கிய, உருத்திர மூர்த்தியும், அதிசயமுடன் உவந்து-ஆச்சரியத்தோடு மகிழ்ச்சியுடையவர்களாய், அயல் இருந்துழி-எம்பெருமான் அருகில் இருந்தபோது, கொதிகொள் வேல் அரக்கர் தம் கொடுமை-(கோபத்தால்) கொதிக்கும் வேலையுடைய அரக்கரின் கொடுமைகளே, கூறுவார்-(பின்வருமாறு) கூறலானுர்கள்.

விதி-பிறப்பையும் ஆயுளையும் விதிக்கும்(ஏற்படுத்தும்) கடவுள். கொதிகொள்வேல்: அரக்கரின் கொதிப்பை வேலின்மேல் ஏற்றிக் கூறப்பட்டது. கொடுமை கூறினர்: 'கூறினவர் சிவபெருமானும் பிரமனும்' என்பது ஒரு பழையவுரை. தேவர்களுக்கெல்லாம் பிரதிநிதிகளாக, இந்திரனும் உடன் இருக்க, இவ்விருவரும் எடுத்துக் கூறினர் என்பதாம். முன்னே இவ்விருவரும் அரக்கருக்கு வரங் கொடுத்துள்ள காரணத்தால் தாம் நேரில் அவர்களை அழித்தற்கு இயலாமை பற்றி, 'திருமாலையன்றி இவ்விடர் போக்குவார் இல்லை' (190) என முடிவு கொண்டனர்; 'எங்கள் நீள் வரங்களால்........ புடைத்தழித்தனர்' (198) எனப் பின்னுங் கூறுகின்றனர்; ஆதலால் இவ்வுரை பொருந்தும் என்க.

(பி - ம்.) 2. மதிவரு; மதிதரு; மதிதவழ்; மதிபுனை; மதிதெரி குலிசியு மற்றுளோர் களும்; பதியெனுங் கோட்டயி ராபதத்தனும்.
3. அயலிருந்துழிஇக்; அயலிருந்தனர்.
4. கூறினர். (16)

197. ஐயிரு தலையினே னனுச னாதியாம்
மெய்வலி யரக்கரால் விண்ணு மண்ணுமே
செய்தவ மிழந்தன திருவி னாயக
உய்திற மில்லையென் றுயிர்ப்பு வீங்கினர்.

'திருவின் நாயக - இலக்குமியின் கேள்வனான பெருமானே! ஐயிரு தலையினேன், அனுசன் ஆதியாம் - பத்துத் தலைகளுடைய இராவணனும், அவன் தம்பி கும்பகர்ணனும் முதலான, மெய் வலி

அரக்கரால்-உடல் வலிமை மிகக் கொண்ட இராக்கதர்களால், விண்ணும் - தேவலோகத்தவர்களும், மண்ணுமே - இவ்வுலகத்தவர்களுங் கூட, செய் தவம் இழந்தன - செய்யத்தக்க தவம் முதலிய நற்கருமங்களை யெல்லாம்(செய்யவியலாமல்)விட்டுவிட்டனர்; உய்திறம் இல்லை-(இவர்கள்) பிழைப்பதற்கே வழியில்லை' என்று-என்று சொல்லி, உயிர்ப்பு வீங்கினர்-(வருத்த மிகுதியால்) பெருமூச் செறிந்தனர்.

'திருவின் நாயக' என்றது, உலகமாதாவுடன் கூடியவனுதலால் தவருது கருணை புரிய வேண்டுமென்னும் குறிப்பால் என்க. மெய் வலியரக்கர்: வெறும் உடல் வலிமையன்றி, நற்குண நற்செயல் இல்லாதவர்கள். தவம் - நற்கருமங்கள். நீ அருள் புரியாயேல், தேவலோகமும் பூலோகமும் விரைவில் அழிந்துபடும் என்பார், 'உய்திறம் இல்லை' என்றனர்.

விண், மண் என்பன ஆகுபெயர்கள்; இவ்வஃறிணைச் சொற்கள் 'இழந்தன' என அஃறிணை முடிபுகொண்டன. அரக்கருக்கு இயல்பான பகைவர் தேவர்கள்; அவர்களை மட்டுமன்றி, ஆற்றலும், பகையுமில்லாத மண்ணுலகத்தவரையும் வீணே வருத்தி அழிக்கின்றனர் என்பது பட, 'மண்ணுமே' என்றனர். அரக்கர் பலரும் செய்யும் கொடுமைகளுக்கு முதற் காரணமானவர்கள் இராவண கும்பகர்ணர்களாதலால், அவர்களை முன்னே கூறி, அவர்கள் முதலான அரக்கர் என்றனர். மண்ணுலகம் செய்தவமிழந்தமை: ஆரணிய. 131 பார்க்க.

(பி - ம்.) 1. தலையினன்; அனுசராதியாம்; அனுசராதியோர்; அனுசனுதியர்.
2. மண்ணுமேற்; மண்ணுமோர்.
3. இழந்தனர்; இழந்தது; அழிந்தது; நாயகா.
4. உய்திறன்.

(17)

ஒரு பிரதியில் இதன்பின் உள்ளதொரு பாடல் :

வானவ ரம்முறை வழங்க மாமதி
தேனுறு மிதழியந் தெரியல் வேணியான்
ஆனவர் தமைக்கர மமைத்தங் கையனைத்
தான்முக நோக்கியே சாற்றன் மேயினன்.

198. எங்கணீள் வரங்களா லரக்க ரென்றுளார்
பொங்குமூ வுலகையும் புடைத்த ழித்தனர்
செங்கணு யகவினித் தீர்த்த லில்லையேல்
நுங்குவ ருலகையோர் நொடியி னென்றனர்.

'செம்கண் நாயக-சிவந்த அழகிய கண்களையுடைய தலைவனே! எங்கள் நீள் வரங்களால்-(இராவணன்) எங்களிடம் பெற்ற பெரிய வரங்களின் பலத்தினுல், அரக்கர் என்று உள்ளார்-(அவன் தலைமையின் கீழ்) இராக்கதர் என்று உள்ள அனைவரும், பொங்கும் மூ உலகையும்-வளர்கின்ற மூன்று உலகங்களையும், புடைத்து அழித்தனர்-அடித்து அழித்து வருகின்றனர்; இனி-இப்போது, தீர்த்தல் இல்லை

யேல் - (அவர்களை அழித்து, இக்கொடுமைகளைத்) தீர்க்காவிடின், உலகை-எல்லா வுலகங்களையும், ஓர் நொடியின்-ஒரு நொடிப் பொழுதிலே, நுங்குவர்-விழுங்கிவிடுவார்கள்;' என்றனர்-என்று கூறினார்கள்.

கரன், தூஷணன், தாடகை முதலிய பலராலும் அங்கங்கே பல தீமைகள் நிகழ்தலின், 'அரக்கர் என்று உளார்......புடைத் தழித்தனர்' என்றனர். 'நொடியின்' என்றது மிகவிரைவில் என்ற பொருள்பட நின்றது. விழுங்குதலாவது உருத் தெரியாதபடி அழித்துவிடுதல். அவர்களை அழிப்பதில் இனித் தாமதித்தல் ஆகாது என்றனர்.

(பி - ம்.) 1. எங்கணல்; எங்குநீள்; என்றுளோர்.
2. பொங்கி: அழித்துளார்.
3. செங்கணுயகவிது; செங்கணுவதுவினித் | தீர்த்தி யில்லையேல்; தீர்தி யில்லையேல்.
4. உலகெலாம்: நொடிதின்; நொடியில்; நொடிப்பின்; என்றனன். (18)

### திருமால் அபயமளித்துக் கூறுதல்

199. என்றன ரிடருழந் திறைஞ்சி யேத்தலும்
மன்றலந் துளவினன் வருந்தல் வஞ்சகன்
தன்றலை யறுத்திடர் தணிப்பென் றாரணிக்
கொன்றுநீர் கேண்மென வுரைத்தன் மேயினான்.

என்றனர்-என்று கூறியவர்களாய், இடர் உழந்து-துன்பத்தால் கலங்கி, இறைஞ்சி ஏத்தலும்-(மீண்டும்) வணங்கி (பலபடியாகத்) துதிக்கவும், மன்றல் அம்துளவினன்-மணம் பொருந்தியஅழகியதுழாய் மாலை யணிந்த பெருமான், (அவர்களை நோக்கி), 'வருந்தல்-நீங்கள் வருந்தாதீர்கள்; வஞ்சகன் தன் தலை அறுத்து-வஞ்சகனான இராவணனுடைய தலைகளை அறுத்து, தாரணிக்கு இடர்தணிப்பென்-பூமிக்கு உண்டான துன்பங்களைப் போக்குவேன்; நீர் ஒன்று கேண்ம் என-நீங்கள் நான் சொல்வதொன்றைக் கேளுங்கள்' என்று, உரைத்தல் மேயினான்-சொல்லலுற்றான்: ஒன்றும் நீர்-(இதற்குப்) பொருந்திய நீங்கள் எனலும் ஆம்.

வருந்தல்-அல் ஈற்று எதிர்மறை வியங்கோள். 'கேண்ம்': 'கேளும்' என்னும் முற்றின் ஈற்றயல் உயிர் கெட்டது.

தலை அறுத்து-தலைகளை அறுத்து; 'தலைமையை ஒழித்து' என்ற பொருளும் தொனிக்கின்றது; இராவணனது தலைமையை ஒழித்து, அதனை நல்லவனான வீடணனுக்கு அளித்தலின் மூலம் அரக்கர் வாதையே ஒழிக்கப்படும் என்ற நுட்பமும் கொள்ளலாம். இராவணனே அழியும்போது, மற்ற அரக்கரின் அழிவு கூறாமலே அமையும்.

திருமால் கூறியது மேலே மூன்று பாடல்களிற் கூறப்படும்.

(பி - ம்.) 1. என்றபி னமரர்கள்: 2. மன்றலர்: வஞ்சகர்.
3. தந்தலே: தவிர்ப்பன்;
4. கேண்மினென் றுணர்த்தன் மேயினன்; உரைப்பதாயினன். (19)

200. வானுளோ ரனைவரும் வான ரங்களாக்
கானினும் வரையினுங் கடிகொள் காவினும்
சேனையோ டவதரித் திடுமின் சென்றென
ஆனன மலர்ந்தன னருளி னாழியான்.

'வான் உளோர் அனைவரும்-தேவர்களாகிய நீவிர் எல்லீரும், வானரங்களா(க)-குரங்குகளாக, கானினும்-காடுகளிலும், வரையினும்-மலைகளிலும், கடிகொள் காவினும்-மணமுள்ள சோலைகளிலும், சேனையோடு சென்று அவதரித்திடுமின்-கூட்டமாகப் போய்ப் பிறந்திடுங்கள்' என-என்று கூறி, அருளின் ஆழியான்-கருணைக் கடலாகிய எம்பெருமான், ஆனனம் மலர்ந்தனன்-(மேலும்) திருவாய் மலர்ந்தருளினான்.

ஆழியான் என்பதற்கு, சக்கராயுதத்தையுடையவன் என்றும், திருப்பாற் கடலில் உள்ளவன் என்றும் பொருள் கூறலாம். சேனை என்றது இங்கே கூட்டம் என்ற பொருளில் வந்துள்ளது. பின்னே எனக்குச் சேனைகளாகும்படி என்றும் ஆம். அவதரித்தல்-மேல் நிலையில் உள்ளோர் கீழ் நிலையிற் சென்று பிறத்தல்; எனவே இது தேவர்களுக்கும் இங்கே பொருந்துவதாகும். ஆனனம்-முகம்; அதாவது வாய்.

(பி - ம்.) 1. வானரங்களாய்க்; 2. மலையினும்: கடிதடத்தினும்.
4. ஆனன மருளினான். (20)

201. மசரத மனையவர் வரமும் வாழ்வுமோர்
நிசரத கணைகளா னீறு செய்யயாம்
கசரத துரகவாட் கடல்கொள் காவலன்
தசரதன் மதலையாய் வருதுந் தாரணி.

அனையவர்-அவ்வரக்கர்கள், வரமும்-(பெற்றுள்ள)வரங்களையும், மசரதம் வாழ்வும்-பேய்த்தேர் போன்ற (மாய) வாழ்க்கையையும், ஓர்-ஒப்பற்ற, நிசம் ரதம் கணைகளால்-இலக்குத் தவறாதனவும், எதிர்த்தோர் உடலில் பாய்ந்து சுவை காண்பனவுமாகிய (நம்) அம்புகளால், நீறு செய்ய-நீறாக்கும் பொருட்டு, யாம்-நாம், கசம், ரதம், துரகம் ஆள் கடல் கொள்-யானை, தேர், குதிரை, காலாள் என்னும் நால் வகையான சேனைக் கடலையுடைய, காவலன் தசரதன் மதலையாய்-நாடு காவலிற் சிறந்த தசரத சக்கரவர்த்தியின் மகனாக, தாரணி வருதும்-பூமியிலே அவதரிப்போம்.

நீறு செய்ய, யாம், தசரதன் மதலையாய்த் தாரணி வருதும் எனக் கூட்டி முடிக்க. இதுவும் அடுத்த பாடலும் ஒரு தொடர்.

ரதம்-ரத்தம் என்பதன் இடைக் குறையாகக் கொண்டு, இரத்தம் தோய்ந்த அம்புகள் எனவும் கூறுவர். 'ரதகணை-பாவகாரிகள் ஊனுண்டு இனிமை கண்ட கணை' (பழைய அரும்பதவுரை). மூன்றும் அடி முற்றும், ஒப்பு: 800-பார்க்க.

(பி - ம்.) 1. மயரதம்: அனையவொர்: வாழும் வாழ்வுமோர்.
2. நியரத; செய்யவாம்.
3. கயரத: துரகமாக்; துரகமா; துரங்கமாக்.
4. தயரதன்: மதலையா: வருவன். (21)

202. வளையொடு திகிரியும் வடவை தீதர
விளைதரு கடுவுடை விரிகொள் பாயலும்
இளையவ ரெனவடி பரவ வேகிநாம்
வளைமதி லயோத்தியில் வருது மென்றனன்.

'வளையொடு திகிரியும்-(நம்முடைய) சங்கும் சக்கரமும், வடவை தீதர விளை தரு கடு உடை(ய)-வடவைத் தீயும் (தன் கடுமையால்) கருகிப் போகும்படி உண்டாகின்ற விடத்தையுடைய, விரிகொள் பாயலும்-அகன்ற படுக்கையாகிய ஆதிசேடனும், இளையவர் என அடி பரவ-நம் தம்பிமார்களாகி வந்து (நமக்குப்) பாத சேவை செய்யுமாறு, நாம் ஏகி-நாம் (பூமிக்குப்) போய், வளை மதில் அயோத்தியில் வருதும்-பெரிய மதில்கள் சூழ்ந்த அயோத்தி மா நகரத்திலே பிறப்போம்' என்றனன்—.

(201) 'அரக்கரை நீறு செய்ய நாம் பூமியிலே தசரத மன்னனுக்குப் புதல்வனுகப் பிறப்போம்; (202) நம்முடைய சங்கும், சக்கரமும், சயனமாகிய ஆதி சேடனும் நமக்குத் தம்பிமார்களாக வந்து உதவும் வண்ணம் அயோத்தியில் அவதரிப்போம்' என எம்பெருமான் திருவாய் மலர்ந்தருளினன்.

சக்கரம்-பரதன்; சங்கு-சத்துருக்கனன், ஆதிசேடன்-இலக்குமணன் என்பர். நாராயணனே தம்மை நான்கு கூருக்கிக்கொண்டு நான்கு புதல்வர்களாய் அவதரித்ததாக முதனூல் கூறும்.

வடவை = படபா; வடசொல்; பெண்குதிரை என்னும் பொருளுடையது. வடவைத்தீ-படபா முகாக்கினி; பெண் குதிரையின் முகம் போன்ற வடிவத்துடன் கடல் நடுவில் இருந்துகொண்டு, கடல் நீர் விஞ்சி உலகுக்குக் கேடு நேராதபடி காத்துவரும் தீ; மிகவும் கடுமையானது. அதனையும் கருகச்செய்யும் கடுமையுள்ளது ஆதி சேடனது விடம் என உயர்வு நவிற்சியாகக் கூறுகின்றார்.

வடவைத்தீ: அயோத். *93*; ஆரணிய. *26, 687, 1144*; கிட்கிந். *242*.

(பி - ம்.) 1. திகிரியின்: வடவை தீய்தர; வடவைத் தீயென; வடவைத் தீநிகர்; வடவை தீர்தர.
3. இளையர்கள்; இளைஞர்கள்: ஏகியாம்; எய்தியாம்; எய்திநாம்.
4. அயோத்தியின். (22)

## தேவர்களின் மகிழ்ச்சி

203. என்றவ னுரைத்தபோ தெழுந்து துள்ளினர்
நன்றிகொண் மங்கல நாதம் பாடினர் :
மன்றலஞ் செழுந்துள வணியு மாயனர்
இன்றெமை யளித்தன ரென்னு மேம்பலால்.

என்று அவன் உரைத்தபோது-இவ்வாருகத் திருமால் திருவாய் மலர்ந்தருளியபோது,(தேவர்களெல்லாரும்), 'மன்றல்அம்செழுதுளவு அணியும் மாயனர்-மணம் பொருந்திய அழகிய செழிப்பான துளசி மாலேயணிந்த திருமாலானவர்,இன்று எமை அளித்தனர் என்னும் ஏம் பலால்-இப்போது நமக்கு இவ்வாறு திருவருள் பாலித்தாரே! என்ற மகிழ்ச்சியினல், எழுந்து துள்ளினர்-துள்ளிக் குதித்தார்கள்; நன்றி கொள்-நற்பொருளேக்கொண்ட, மங்கல நாதம் பாடினர்-மங்களகர மான இசையைப் பாடினர்கள்.

எழுவாய் வருவிக்கப்பட்டது. மாயனர்: ஆர், சிறப்பு. எமை- எமக்கு; உருபு மயக்கம். அளித்தனர்-பாதுகாத்தார் என்றுமாம். நன்றிகொள் - தம்நன்றியறிவைத் தெரிவித்தலேக்கொண்ட எனலும் ஆம்.

தேவர்கள், அப்பொழுதே தங்கள் குறை தீர்ந்துவிட்டதாக எண்ணி மிக்க மகிழ்ச்சி கொண்டனர். மகிழ்ச்சி மிகுதியால் நேர்வன: **194**-பார்க்க.

(பி - ம்.) 1. உரைத்தலும். 2. நாமம்.
3. மன்றலர்; அணியுமாயவன்; மார்பினர்.
4. அளித்தனன்: என்றும். (23)

(வேறு)

204. போயதெம் பொரும லென்ன
விந்திர னுவகை பூத்தான்
தூயமா மலரு ளோனுஞ்
சுடர்மதி சூடி னனும்
சேயுயர் விசும்பு ளோருந்
தீர்ந்ததெஞ் சிறுமை யென்ருர்
மாயிரு ஞால முண்டோன்
கலுழன்மேற் சரணம் வைத்தான்.

(அப்பொழுது), இந்திரன் - தேவேந்திரன், எம் பொருமல் போயது என்னு-எங்கள் அச்சம் (இன்றோடு) தொலைந்தது என்று சொல்லி, உவகை பூத்தான்-மகிழ்ச்சியடைந்தான்; தூய மா மலர் உளோனும்-தூய்மையும் பெருமையுமுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், சுடர் மதி சூடினனும் - ஒளிபொருந்திய பிறையைச் சடைமுடியிலே சூடிய உருத்திர மூர்த்தியும், சேய் உயர் விசும்பு உளோரும்-மிகவுயர்ந்த சுவர்க்கலோகத்தவரான தேவர்களும், எம் சிறுமை தீர்ந்தது என்றார்-எங்கள் தாழ்வு (இன்றோடு) ஒழிந்தது என்றார்கள்; மா இரு ஞாலம் உண்டோன்-மிகப் பெரிய இப் பூவுலக முழுமையும் (ஒரு காலத்தில்) உண்டவனாகிய திருமால், (வைகுந்தம் செல்லக் கருதி), கலுழன் மேல்-கருடன் மேல், சரணம் வைத்தான்-திருவடி வைத்து ஏறியருளினான்.

இந்திரன் தேவர்களுக்குத் தலைவனாதலால், தனக்கும் தன்னைச் சார்ந்தவர்க்கும் இராவணனாதியோர்பால் இருந்த அச்சம் நீங்கியதென்பான், 'போயது எம் பொருமல்' என்றான். பிரமனும் உருத்திரனும்,'நம்மால் ஒன்றும் செய்வதற்கில்லையே' என்ற குறையுடையவராதலால் அக்குறை தீர்ந்ததென்று மகிழ்ந்தனர். மற்றத் தேவர்களும், அரக்கர்க்கு அஞ்சித் தாழ்ந்திருந்த தம் நிலைமை மாறிவிட்டது என்று மகிழ்ந்தனர்.

சேயுயர், மாயிரு: மீமிசைச் சொற்கள். போயது, தீர்ந்தது என முற்றுக்களை முன்னே வைத்து, இறந்த காலத்தாற் கூறியது துணிவு பற்றியாகும். சரணம் வைத்தான் என்பது இலக்கணையால் ஆரோகணித்தமையைக் குறிக்கும். நினைத்த மாத்திரத்தில் மறைந்துவிடக்கூடிய ஆற்றலுடைய பெருமான், அவ்வாறுசெய்யாமல், தேவர்கள் சொல்ல மறந்தது ஏதேனுமுண்டாயின் நினைந்து சொல்லட்டும் எனக் கருதி, மெல்லக் கருடன் மீது ஆரோகணித்தான் என்ற குறிப்புத் தோன்ற 'சரணம் வைத்தான்' என்றார் போலும்.

(பி - ம்.) 2. மலரின் மேவுந் தொன்மறை முகத்தினனும்; சுடர்மதி சூட்டினனும்; சூடியாரும்; சுற்றுள்ள பிறரும் யாரும்; முனிவர்தாமும்.
3. சேயிரு விசும்பினேரும்; விசும்புளாரும்: தீர்ந்ததே சிறுமை.
4. ஞால முண்டான்: கருடன்மேற். (24)

205. என்னையா ளுடைய வையன்
கலுழன்மே லெழுந்து போய
பின்னர்வா னவரை நோக்கிப்
பிதாமகன் பேசு கின்றான்
முன்னரே யெண்கின் வேந்தன்
யானென முடுகி னேன்மற்
றன்னவா றெவரு நீர்போ
யவதரித் திடுமி னென்றான்.

என்னை ஆளுடைய ஐயன்-என்னை ஆட்கொண்ட தலைவனாகிய எம்பெருமான், கலுழன் மேல் எழுந்து போய பின்னர்-கருடன் மேல் எழுந்தருளிப் போன பிறகு, வானவரை நோக்கி-(அங்கிருந்த) தேவர் களைப் பார்த்து, பேசுகின்றான் பிதாமகன்-பேசலுற்ற பிரமதேவன், 'முன்னரே-இதற்கு முன்பே, யான் எண்கின் வேந்தன் என முடுகி னேன்-நான் கரடிகளுக் கரசனான ஜாம்பவானாகப் பிறந்துவிட்டேன்; அன்னவாறு-அவ்வாறே, நீர் எவரும் போய் அவதரித்திடுமின்-நீவிர் ஒவ்வொருவரும் போய் (குரங்குகளாகப் பூமியில்) பிறப்பீராக' என் றான்-என்று கூறினான். மற்று-அசை.

திருமால் சென்ற பிறகு, அவர் கட்டளையின்படி தேவர்கள் பூமியில் போய்ப் பிறத்தல் குறித்துச் சொல்லலுற்ற பிரமதேவன், தன் அம்சமாக முன்னமே ஜாம்பவானைத் தான் பிறப்பித்து விட்ட தாகவும், மற்றவர்களும் அவ்வாறே பல பல வானரர்களைத் தோற்று விக்கும்படிக்கும் கூறினான். தன் செயல் முன்னமே நிகழ்ந்துவிட்டது பற்றி, 'முடுகினேன்' (நான் முந்திக்கொண்டேன்) என்றான். பிரமன் ஒருசமயம் கொட்டாவிவிடத் திறந்த வாயினின்றும் சாம்பவன் தோன்றினான் என்பர். பிதாமகன்: தந்தையாவார் யாவர்க்கும் தந்தையானவன்; படைப்புக் கடவுள்.

கம்பநாடர், கருடாழ்வானை, 'என்னையாளுடையவன்' என (195) முன்னே கூறினர்; இங்கே திருமாலை 'என்னையாளுடைய வையன்' என்றார். இதுபோலப் பின்னும் பலவிடங்களில் இராமபிரானைப் பற்றிக் கூறுங்கால், தலைமை தோன்றக் கூறுவார்; 'எனையாள் வரதன்' (308); 'எமையுடை யிறைவன்' (312);'என்னையாளுடைய கொண்டல்' (475); 'என் றனி நாயகன்', 'ஆளுநாயகன்' (ஆரணிய. 1103, 1169). சாம்பவான் பிரமன் புதல்வன் என்பது; 'நாலு முகத்தா னுதவுற்றான்' (கிட்கிந். 983); சாம்பவான், திருமா லின் திரிவிக்கிரமாவதார காலத்திலேயே இருந்தவன்; 'செங்கண்மால வன், ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள், சாம்புவன் திரிந் தென' (816); 'வேதமனைத்துந் தேர்தர வொட்டா வொருமெய்யன், பூதல முற்று மீரடி வைத்துப் பொலிபோழ்தியான், மாதிர மெட்டுஞ் சூழ்பறை வைத்தே வர' (கிட்கிந். 982). மற்றும் சாம்பவான் பெயர் வருமிடங்கள்: சுந்தர. 604, 1251.

(பி - ம்.) 1. மீதெழுந்து போன. 2. பின்னை: பேசலுற்றான்; கூறுகின்றான். 3. முன்னமே; மொழிகின்றான்மற்; மொழியலுற்றான்; மொழிந்தான் மற்றை; 4. அன்னவர் தேவரும் போய்; என்றார்.

206. தருவுடைக் கடவுள் வேந்தன் சாற்றுவா னெனது கூறு
மருவலர்க் கசனி யன்ன வாலியு மகனு மென்ன
இரவிமற் றெனது கூறங் கவற்கிளை யவனென் றோத
அரியுமற் றெனது கூறு நீலனென் றறைந்திட் டானால்.

தரு உடை(ய) கடவுள் வேந்தன்-கற்பக விருட்சங்களையுடைய தேவ ராசனான இந்திரன், சாற்றுவான்-சொல்லலுற்றவனாய், 'எனது கூறு-என்னுடைய அமிசம், மருவலர்க்கு அசனி அன்ன வாலியும், மகனும் என்ன-பகைவர்க்கு இடிபோல அச்சந்தரும் வாலியும், அவன் மகனான அங்கதனுமாவர்' என்று கூற, இரவி-சூரியன், 'எனது கூறு-'என்னுடைய அமிசம், அங்கு அவற்கு இளையவன் என்று ஓத-முன் கூறிய வாலிக்குத் தம்பியான சுக்கிரீவனாவன்' என்று சொல்ல, அரியும்-அக்கினி தேவனும், 'எனது கூறு நீலன் என்று அறைந்திட்டான்-எனதமிசம் நீலனாவான்' என்று சொன்னான்.

மற்று, ஆல்-அசைகள். அறைந்திட்டான்=அறைந்தான்; இடு, துணை வினைப்பகுதி.

பார்வதி தேவியின் சாபத்தாற் பெண் வடிவடைந்த ருக்ஷ ரஜஸ் என்னும் வானர அரசனைப் பெண்ணுருவத்தில் பார்த்த இந்திரனும் சூரியனும் காதல் கொள்ள, அவர்களால் அப்பெண் குரங்கினிடத்துத் தோன்றியவர் முறையே வாலியும் சுக்கிரீவனும் என்பர். அங்கதன் இந்திரனதமிசம் என்பது வான்மீகத்தில் இல்லை. 'நீலன்' என்பது நிறம் பற்றி வந்த பெயர். வாலி-வாலில் மிக்க வலிமையுடையவன்; இராவணனையே வாலிற் கட்டித் தூக்கிவந்தா னென்பதனால் இது விளங்கும்.

(பி - ம்.) 1. தருவளக்; திருவுடைக்: கடவுள் தானும்; கடவுளோனும்; கடல்கொள் வேந்தன்: செப்புவான்.
2. மருமலர்க்கு; அசனி யென்ன; அசனி யென்னும், அசனியான: மகனு மென்றான்.
3. எனது கூறும்: அவற்கிளையான்; அவற்கிளையோன்; ஆங்கவற்கிளைய வன்; இங்கிவற் கிளையவன்; இரவிசுக்கிரீவன்யானே யென்றெதிர் நின்றபோதே.
4. எரியுமற்; அறைந்திட்டானே. (26)

207. வாயுமற் றெனது கூறு
மாருதி யென்ன மற்றோர்
காயுமற் கடங்க ளாகிக்
காசினி யதனின் மீது
போயிடத் துணிந்தோ மென்றார்
புராரிமற் றியானுங் காற்றின்
சேயெனப் புகன்றான் மற்றைத்
திசையுளோர்க் கவதி யுண்டோ!

வாயு—,'எனது கூறு மாருதி என்ன-எனதமிசம் மாருதியாவான்' என்று கூற, மற்றோர்-மற்றைத் தேவர்கள், 'காயும் மற்கடங்கள் ஆகி காசினி அதனின் மீது போயிட துணிந்தோம்-(நாங்களெல்லோரும்) கோபமுள்ள குரங்குகளாய்ப் பூமியிலே போய்ப் பிறக்கத் துணிந்து விட்டோம்' என்றூர்-என்று கூறினார்கள்; புராரி-திரிபுரங்களை யழித்த உருத்திரன், 'யானும் காற்றின் சேய் - நானும் வாயு புத்திரனை மாருதியிடம் கலப்பேன்;' என புகன்றான் - என்று சொன்னான்; மற்றை - இவர்களல்லாத, திசை உள்ளோர்க்கு-நானுதிக்குக்களிலும் பரவியிருந்த தேவர்களின் பிறப்புக்கு, அவதி உண்டோ-ஓர் எல்லை யுண்டோ? (அதாவது, இன்னார் இப்படிப் பிறந்தார் என வகுத்துக் கூற முடியாதென்றபடி).

பூமியில் வந்து பிறத்தலில் உள்ள துன்பங்களைக் கருதித் தேவர்கள் அதனை விரும்பார்; இங்கு அவ்வாறு செய்ய அவசியம் நேர்ந்துள்ளதனால் 'துணிந்தோம்' என்றனர். உருத்திரன் தனதமிசம் மாருதியிடத்துண்டென்றமை வான்மீகத்தில் இல்லை. மாருதி: காற்றின் புதல்வன் என்ற காரணப் பொருளுடைய தத்திதாந்தப் பெயர். மாருதி உருத்திரனைப் போன்றவன்: **கிட்கிந்.** *46, 79, 986;* **சுந்தர.** *181. 1003:* **யுத்த.** *1822, 2674.*

(பி - ம்.) 1. எனலு மற்றோர்; என்று மற்றோர்.
2. மர்க்கடங்களாகி: அதனின் மீதே.
3. துணிந்தே மென்றூர்; துணிந்து மென்றூர்; துணிது மென்றூர்: புயல் வண்ண ஞதி வானோர்; புயல்வண்ண ஞதி யானோர்; புருகூதன் வாலி மற்றோன்; புராரி மற்றியானே வாத; புராரி மற்றியானே யார்க்கும்; புராரி மற்றியானும் யார்க்கும்; புராரி மற்றியானும்வாத, புரமெரித் தவன்றான் காற்றின்.
4. புகன்றான் மற்றத்; புகன்றார் மற்றைத்; திசையிலோர்; மேயின ரென்னி லிந்த மேதினிக்; தாயென வருள்வனென்றான் சார்ந்துளோர்க். **(27)**

208. அருடரு கமலக் கண்ண
னருண்முறை யலரு ளோனும்
இருடரு மிடற்றி னேனு
மமரரு மினைய ராகி
மருடரு வனத்தின் மண்ணில்
வானர ராகி வந்தார்
பொருடரு மிருவர் தந்த
முறைவிடஞ் சென்று புக்கார்.

அருள்தரு-(அன்பர்க்கு) அருளைச் செய்கின்ற,கமலம் கண்ணன் அருள் முறை - செந்தாமரை போன்ற கண்களையுடைய திருமால் நியமித்தபடியே, அலர் உளோனும்- தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், இருள் தரு மிடற்றினேனும்-(விடத்தால்) இருண்ட

கண்டத்தையுடைய உருத்திர மூர்த்தியும், அமரரும்-மற்ற எல்லாத் தேவர்களும், இனையர் ஆகி—இத்தன்மையுடையவர்களாய், (வானரர் களாகிப் பூமிக்கு வருதலில் மனக்குறையில்லாதவர்களாய்), மருள் தரு வனத்தில்-(காண்போர் அச்சத்தால்) மயங்கும்படியான காடு களிலும், மண்ணில் - பூமியில் பல் வேறிடங்களிலும், வானரர் ஆகி வந்தார்-குரங்குகளாய்ப் பிறக்கலானுர்கள்; பொருள் தரும் இருவர்-வேண்டுவார் வேண்டுவனவற்றைத் தரவல்ல இருவரும், (பிரமனும் உருத்திரனும்), தம் தம் உறைவிடம் சென்று புக்கார்-அவரவர் இருப் பிடம் போய்ச் சேர்ந்தனர்.

இருவர்: முற்றும்மை விகாரத்தால் தொக்கது.

தேவர்கள் தனித்தனியே வானரரானமை: யுத்த. 761.

(பி - ம்.) 1. அருடருங்; அருட்பெறு; அருளுடைக்: கமலத் தண்ணல்: அருண் மறை; அருமறை; அருள்வழி: மலருளோர்னும்; அரனுரை முறையி லாரும்.

2. இருட்டரு மிடற்றினனும்; இருடவிர் குலிசத்தானும்; இருடிக ளனைத் துளோரும்: யாவரும்: அனையராகி; எனையராகி.

3. மருட்டரும்: மனத்தின் மண்ணின்: வானவராகி; வானரமாகி.

4. பொருட்டரும்; பொருவரும்; எவரும்; யாரும்; இறைவர்; உருவர்: தத்தம். (28)

வசிட்டமுனிவர் கூற்று

209. ஈதுமுன் னிகழ்ந்த வண்ண
மெனமுனி யிதயத் தெண்ணி
மாதிரம் பொருத திண்டோண்
மன்னநீ வருந்த லேழேழ்
பூதல முழுதுந் தாங்கும்
புதல்வரை யளிக்கும் வேள்வி
தீதற முயலி னைய
சிந்தைநோய் தீரு மென்ருன்.

ஈது-இவ்வாறு தேவர் முதலியோர் அருளப்பெற்ற இது, முன் நிகழ்ந்த வண்ணம் என-முன்னே நடத்த செய்தியாகுமென்று, முனி-வசிட்ட முனிவன், இதயத்து எண்ணி-தன் மனத்திலே நினைத்து, (தசரதனைப் பார்த்து),'மாதிரம் பொருத-மலையை ஒத்த,திண்தோள் மன்ன-வலிய தோள்களை உடைய அரசனே! நீ வருந்தல் - நீ வருந் தாதே ; ஏழ் ஏழ் பூதலம் முழுதும் தாங்கும் புதல்வரை - கீழ் ஏழு, மேல் ஏழு என்று சொல்லப்படும் உலகங்கள் எல்லாவற்றையும் ஆளவல்ல புத்திரர்களை, அளிக்கும் வேள்வி-கொடுக்கத்தக்கதாகிய யாகத்தை, தீது அற முயலின் - குற்றங்கள் இன்றி (நீ) செய்து

முடித்தால், ஐய-பெருமையுடையவனே, சிந்தை நோய் தீரும் - உன் மனக்கவலே தீர்ந்து போகும்' என்ருன்-என்று கூறினன்.

புதல்வரை அளிக்கும் வேள்வி-புத்திரகாமேட்டி (புத்ர+காம +இஷ்டி); 'இந்த யாகத்தை முறையாகச் செய்து முடித்தால், பயன் தப்பாது கிட்டும்; நீ பல புதல்வர்களைப் பெறுவாய்; அவர்களுள் ஒவ்வொருவரும் மிகச் சிறந்த ஆற்றலுடையவராயிருப்பர்; உன் மனக் கவலேயை விடுக' என்று வசிட்ட முனிவர் கூறினர். 'அவனியை ஆள ஒரு மகனில்லேயே' என மறுகிய மன்னனுக்குப் 'புதல்வர் பலர் உதிப்பர்' என்பதையும் குறிப்பித்தார். தேவரகசியத்தை வசிட்டர் தம் மனத்தில் நினைத்தாரே யன்றி அதை மன்னனிடம் கூறவில்லே யென்பது இச் செய்யுளால் அறியப்பெறுகிறது.

பூதலம் என்பது பூமி என்ற பொருளுடைய தாயினும் இங்கே பொதுவாக 'உலகம்' என்ற பொருளில் வந்துள்ளது. ஏழ் ஏழ் பூதலம் முழுதும் - பதினன்கு என்று சொல்லப்படும் உலகங்கள் எல்லாம் அடங்கிய அண்டம் முழுதும். இவற்றை யெல்லாம் ஆள வல்லவர் எனப் புதல்வரின் சிறப்புக் கூறப்பட்டதனுல், அவர்கள் கடவுளமிச முடையவர்கள் என்பதும் குறிக்கப்பட்டது.

'மாதிரம் பொருத' என்பதற்கு, 'எல்லாத் திக்குக்களிலும் போய்ப் போர் செய்து வெற்றி பெற்ற' என்றும் பொருள் கூறலாம்; தசரதன் என்ற பெயர்க் காரணத்துக்கும் இது பொருந்தும். 'மாதிரம் பொருத தோண் மன்னர் மன்னன்' 248.

(பி - ம்.) 2. பொருது; பொருதும்; பொருந்து: மன்னனீ; மன்னவ: ஈரேழ்.
3. முழுதுங் காக்கும்; முழுதுமாளும்: அளிக்கும் வேள்வித்; அளிக்குமேனி.
4. தீதது முதலினேய; தீதற முயலினேயா; தீதற முயலிலேய; தீதற முயலி லுன்றன்; தீதற முயற்றினேய. (29)

மேலே செய்யவேண்டியவற்றை
மன்னவன் வேண்டல்

210. என்னமா முனிவன் கூற
வெழுந்துபே ருவகை பொங்க
மன்னவர் மன்ன னந்த
மாமுனி சரணஞ் சூடி
உன்னேயே புகல்புக் கேனுக்
குறுகண்வந் துறுவ துண்டோ
அன்னதற் கடியேன் செய்யும்
பணியினே யருளு கென்ருன்.

என்ன - என்று, (முன் கவியில் கூறியவாறு), மா முனிவன் கூற-பெருமை மிக்க வசிட்ட முனிவன் கூற, மன்னவர் மன்னன் -

சக்கரவர்த்தியாகிய தசரதன், பேர் உவகை பொங்க எழுந்து-பெரு மகிழ்ச்சிமேலிட்டவனாக (ஆதனத்தினின்றும்) எழுந்து, அந்த மாமுனி சரணம் சூடி - அந்த வசிட்ட மாமுனிவனுடைய திருவடிகளைத் தொழுது, 'உன்னையே புகல் புக்கேனுக்கு - (எல்லாவற்றிற்கும்) உம்மையே சரணமாக அடைந்துள்ள எனக்கு, உறுகண் வந்து உறுவது உண்டோ - துன்பம் வந்து சேருவதுண்டோ? (இல்லை); அன்னதற்கு- அவ் வேள்வியைச் செய்துமுடிப்பதன் பொருட்டு, அடியேன் செய்யும் பணியினை- நான் செய்யவேண்டிய காரியங்களை, அருளுக-கூறியருள் வீராக'; என்றான்—.

வசிட்ட முனிவர் சிறந்த ஞானியாகவும், தசரத சக்கர வர்த்திக்குக் குலகுருவாகவும், சிறந்த அமைச்சராகவும், புரோகித ராகவும் இருத்தலால், அவருடைய ஆலோசனையின்படி செய்தல் எப்போதும் நன்மை பயக்கும் என்ற நம்பிக்கையுடையவனாயிருந் தான் தசரதன்; ஆகவே, 'உன்னையே புகல்புக்கேனுக் குறுகண் வந்து றுவதுண்டோ' என்றான்.

அருளுகென்றான் : அகரம் தொகுத்தல்.

மன்னவர் மன்னன்: ஆரணிய. 436, 538.

(பி - ம்.) 1. என்று மாவசிட்டன்: எழுந்த பேருவகை; எழுபெருமுவகை: பொங்கி; எய்தி.
2. மன்றலர் தாரினானும்; மன்னன் மிக்க-
3. உன்றன தடியனேனுக்; உன்னையே தொழப்புக்கேனுக்; புகல்புக் கேற்குத் துயரமதுறுவதுண்டோ; புகல்புக்கேனுக் குறுதுயர் அடைந்த துண்டோ; உறுவதுண்டோ; புகலாப்புக்கே னிதின்வரு முறுதி யுண்டோ.
4. இன்னதற்கு; இன்றிதற்கு: பணியினை யளித்தி; பணி யென்கொ லளித்தி; பணியினி யளித்தி; பணியினியமைத்தி; பணியினையருடி; பணியினி யருளுகென்றான். (30)

வசிட்டமுனிவரின் மறுமொழி

211. மாசறு சுரர்க ளோடு
மற்றுளோர் தமையு மீன்ற
காசிப னருளு மைந்தன்
விபாண்டகன் கங்கை சூடும்
ஈசனும் புகழ்தற் கொத்தோ
னிருங்கலை பிறவு மெண்ணின்
தேசுடைத் தந்தை யொப்பான்
றிருவருள் புனைந்த மைந்தன்

(முனிவன் மன்னனை நோக்கி), மாசு அறு - குற்றமற்ற, சுரர்க ளோடு-தேவர்களையும், மற்று உளோர் தமையும்-மற்றுமுள்ள அசுரர்,

இயக்கர் முதலியவர்களேயும், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ் வன, தாவரம் முதலிய எல்லா உயிரினங்களேயும், ஈன்ற-பெற்ற, காசி பன் அருளும் மைந்தன்-காசிப முனிவன் (காச்யபப்ரஜாபதி) அரு ளால் தோன்றிய குமாரனும், கங்கை சூடும் ஈசனும் புகழ்தற்கு ஒத்தோன்-(ஞானத்திலே) கங்கையைச் சடையிலே தரித்த சிவபெரு மானும் புகழும் தகுதியுடையவனும், இரு கலே பிறவும்-மிக்க சாத் திரங்களின் அறிவிலும் பிற நற்குண நற்செயல்களிலும், எண்ணில்-ஆலோசிக்குமிடத்து, தேசு உடைய தந்தை ஒப்பான்-ஒளி பொருந் திய தந்தையாகிய காசிபனுக் கொப்பானவனும் ஆகிய, விபாண்ட கன்-விபாண்டக முனிவனுடைய, திரு அருள் புனைந்த மைந்தன்-சிறந்த அருளால் உதித்த குமாரனும், (அடுத்த கவியோடு தொட ரும்.)

இதுமுதல் மூன்று கவிகள் ஒரு தொடர்; கலேக்கோட்டு முனிவரைக் கொண்டு வேள்வியை முற்றுவித்தால், புத்திரர் பிறப்பர் என வசிட்ட முனிவர் கூறுதலேக் தெரிவிக்கும்.

(பி - ம்.) 1. சுரரிேனுடு; 2. தரும மைந்தன்: விபண்டகன்.
3. புகழற்கொத்தோன்; புகழ்தற்கொத்தான்; புகழ்தற்கொத்த; புகழத் தக்கோன்: பலவும்.
4. தாதை: பெற்ற மைந்தன். (31)

212. வருகலே யறிவு நீதி
மனுநெறி வரம்பு வாய்மை
தருகலே மறையு மெண்ணிற்
சதுமுகற் குவமை சான்றேன்
திருகலே யுடைய விந்தச்
செகத்துளோர் தன்மை தேரா
ஒருகலே முகச்சி ருங்க
வுயர்தவன் வருதல் வேண்டும்.

வரு கலே அறிவு - பலவர்கவுள்ள கலேஞானத்திலும், நீதி மனுநெறி வரம்பு-(யாவர்க்கும் உரிய) நீதிகளே விளக்கும் மனுதரும சாத்திர விதிகளிலும், வாய்மை தரு - உண்மைப் பொருள்களே யெடுத்துக் கூறுகின்ற, கலே மறையும் - பல பாகுபாடுகளேயுடைய வேதங்களிலும், எண்ணில்-ஆலோசிக்குமிடத்து, சதுமுகன்கு உவமை சான்றேன் - நான்கு முகங்களேயுடைய பிரமனுக்கு ஒப்பானவனும், திருகலே உடைய -(ஆண், பெண் என்ற) மாறுபாட்டை உடைய, இந்த செகத்து உளோர் தன்மை-இந்த உலகத்தில் உள்ள மக்களின் இயல்புகளே, தேரா - (சிறிதும்) அறியாதவனும், ஒரு கலே சிருங்கம் முகம் – ஒற்றை மான்கொம்பு பொருந்திய முகத்தை யுடையவனு மான, உயர் தவன் - மேலான தவம் நிறைந்த முனிவன், வருதல் வேண்டும் - இங்கே வரவேண்டும். திருகல்-மாறுபாடு.

(பி - ம்.) 1. கலைபிறவும்: வரம்பில் வாய்மை; வரம்பும் வாய்மை;வரவும் வாய்மை; யாவும் வாய்மை; மரபு வாய்மை.
2. உருகலை பிறவும்.
3. செகத்துள்ளோர்: தம்மைத்தேரா; தன்மைத் தோரா.
4. முகத்துச்சிங்கத்; முகத்துச்சிங்க; முகத்துச்சிருங்க; முகத்துச் சிரோங்கு: உயர்ந்தவன். (32)

213. பாந்தளின் மகுட கோடி
பரித்தபா ரிதனில் வைகும்
மாந்தரை விலங்கென் றுன்னு
மனத்தன்மா தவத்த னெண்ணிற்
பூந்தவி சுகந்து ளோனும்
புராரியும் புகழ்தற் கொத்த
சாந்தனல் வேள்வி முற்றிற்
றனையர்க ளுளரா மென்றான்.

பாந்தளின் - ஆதிசேடனுடைய, மகுடம் கோடி பரித்த-பல தலைகளாலும் தாங்கப்பெற்ற, பார் இதனில் வைகும்-இப்பூமியில் உள்ள, மாந்தரை - மனிதர்களையெல்லாம், விலங்கு என்று உன்னும் மனத்தன் - விலங்குகள் என்று நினைக்கும் தன்மையுடையவனும், மா தவத்தன் - மிக்க தவத்தையுடையவனும், எண்ணில் - ஆராயு மிடத்து, பூ தவிசு உகந்து உளோனும் - தாமரைப் பூவாகிய ஆசனத்தை விரும்பி வீற்றிருக்கும் பிரமதேவனும், புர அரியும் - திரி புரங்களை யழித்த சிவபெருமானும், புகழ்தற்கு ஒத்த - புகழ்வதற்கு உரியவனுமான, சாந்தனல் - சாந்த குணம் மிக்க அக் கலைக்கோட்டு முனிவனால், வேள்வி முற்றின் - யாகத்தை நன்கு முடிப்பித்தால், தனையர்கள் உளர் ஆம் - (உனக்குப்) 'புத்திரர் இருக்கின்றனர் என்னும் நிலை உண்டாகும்;' என்றான் - என்று (வசிட்ட முனிவன்) கூறினான்.

(211) காசிப முனிவர்: இவர் காசிபப் பிரஜாபதி எனவும் கூறப்படுவார்; தக்ஷப் பிரஜாபதியின் பெண்கள் பதின்மூவரை மணந்து, அவர்களிடமாக மிகவுயர்ந்த தேவர்கள் முதல் மிகத் தாழ்ந்த தாவர வருக்கம் ஈறான எல்லா உயிரினங்களையும் ஈன்றவர். இவரால் பூமிக்குக் காசினி என்ற பெயரும் உண்டாயிற்று. மேற் கண்ட பதின்மூவரை யன்றி மற்றும் சில பெண்களிடமாகச் சில இருடியரையும் இவர் பெற்றார்; அவர்களுள் ஒருவர் விபாண்டகர். இவ்விபாண்டக முனிவரின் குமாரர் இருசிய சிருங்கர்-கலைக்கோட்டு முனிவர்.

(212) ஒரு கலைச் சிருங்கமுகத்து உயர்தவன்-கலைக்கோட்டு முனிவர்: இவர், விபாண்டக ருஷியின் அருளால் ஒரு மான் வயிற் றில் பிறந்தவர்; பிறக்கும்போதே முகத்தில் (தலையில்) மான்

கொம்பு ஒன்று உடையவராய்ப் பிறந்ததனுல் 'கலைக்கோட்டு முனி' எனப்பட்டார்.

*(212, 213)* இக்கலைக்கோட்டு முனிவர், வனத்திலேயே தம் தந்தையுடன் தங்கி அவருக்குப் பணிவிடைகள் செய்துகொண்டு வெளியே நாடு நகரங்களில் உள்ளவர்களைப் பாராமலே இருந்து விட்டாராதலால், 'இந்தச் செகத்துளோர் தன்மை தேராதவர்' ஆனுர்; அதனுல், மனிதரையும் விலங்கினமாகக் கருதும் மனப்பான் மையுடையவரானுர். இவர் வேதமோதுதல், சாத்திர ஞானம், நிறைந்த தவம் முதலியவற்ருல் பிரம ருத்திராதிகளும் போற்றுதற் குரிய பெருமையுடையவர். பல குண நலன்களும் வாய்ந்து, சாந்தம் நிரம்பப் பெற்றவர். திறமை மிக்க ஒருவனை, 'அவன் கொம்பன்' என வழங்கும் உலகவழக்கு இங்கே நினைவுகூரத் தகும்.

இவரை வருவித்தல் அரிதாதலால், 'உயர்தவன் வருதல்வேண டும்' *(212)* என்றும், அப்படி அவர் வந்து, அவரால் வேள்வி இனிது நடத்தி முடிக்கப் பெற்ருல், ('சாந்தனுல் வேள்வி முற்றின்' *213*) புத்திரர் உண்டாவது உறுதி *(213)* என்றும் வசிட்ட முனிவர் கூறினுர்.

(பி - ம்.) 1. பாரதனில்; பார்தன்னில்.
2. மாந்தரை: எண்ணும்: மாதவத்தை யெண்ணிற்; மாதவத்தனுகி: மாதவத்தி னெண்ணில்.
3. உகந்துளானும்; உவந்துளோனும்; இருந்துளோனும்: புகழ்தற் கொத்தோன்.
4. சாந்தனுர்: முற்றத் தனயர்கள்: அன்றே. (33)

## தசரதன் வேண்டுகோள்

214. ஆங்குரை யினைய கூறு
மருந்தவர்க் கரசன் செய்ய
பூங்கழ றெழுது வாழ்த்திப்
பூதல மன்னர் மன்னன்
தீங்கறு குணத்தின் மிக்க
செழுந்தவன் யாண்டை யுள்ளான்
ஈங்கியான் கொணருந் தன்மை
யியம்புதி யிறைவ வென்ருன்.

ஆங்கு-அப்போது, பூதலம் மன்னர் மன்னன்-பூமியிலுள்ள அரசர்க்கெல்லாம் அரசனுகிய தசரத சக்கரவர்த்தி, இனைய உரை கூறும்-இந்த வார்த்தைகளைச் சொன்ன, அரு தவர்க்கு அரசன்-அரிய தவசிகளிற் சிறந்தவனுகிய வசிட்ட முனிவனுடைய, செய்ய பூ கழல்-சிவந்த தாமரை மலர் போன்ற திருவடிகளை, தொழுது-வணங்கி, வாழ்த்தி - துதித்து, 'இறைவ - ஐயனே! தீங்கு அறு - (காமம்

முதலிய) குற்றங்கள் அற்ற, குணத்தில் மிக்க-நற்குணங்களில் மேம் பட்ட, செழு தவன்-தவத்திற் சிறந்த அம்முனிவன், யாண்டு உள் ளான்-எங்கே யிருக்கின்றான்? ஈங்கு யான் கொணரும் தன்மை-இங்கே (அவனை) நான் அழைத்துவரும் வகையை, இயம்புதி-சொல்லி யருளுக' என்றான்-என்று வேண்டினான்.

யாண்டை: ஐ-சாரியை.

இவ்வாறு வினவிய தசரத சக்கரவர்த்திக்கு, வசிட்ட முனிவர் கூறியவை மேல் 21 கவிகளால் கூறப்படும்

(பி - ம்.) 1. ஆங்கவன்: அனைய கூற: அருந்தவத்தரசன்; அருந்தவ வசிட்டன்; அருந்தவன் றன்னைச்.
2. பூங்கழற். 3 மனத்தான்மிக்க:
4. ஈங்குநான்; ஈங்குயான்: புரியுந் தன்மை: அருளு நீ யிறைவன்; அருளுதி விரைவின். (34)

## கலைக்கோட்டு முனிவன் வரலாறு

(வேறு)

215. புத்தான கொடுவினையோ டருந்துயரம்
போயொளிப்பப் புவனந் தாங்கும்
சத்தான குணமுடையோன் றயையோடுந்
தண்ணளியின் சாலை போல்வான்
எத்தானும் வெலற்கரியான் மனுகுலத்தே
வந்துதித்தோ னிலங்கு மௌலி
உத்தான பாதனரு ளுரோமபத
னென்றுளனிவ் வுலகை யாள்வோன்.

'புத் ஆன கொடு வினையோடு - நரகம் அடைவதற்குக் காரண மான கொடிய பாவங்களும், அரு துயரம்-(இம்மையிலே வரும்) அரிய பல துன்பங்களும், போய் ஒளிப்ப - தன் நாட்டினின்றும் போய் விடும்படி, புவனம் தாங்கும்-பூமியை (முறையாக) ஆளுகின்ற, சத்து ஆன குணம் உடையோன் - நன்மைக் குணங்களை உடையவனும், தயையோடும் தண்ணளியின் சாலை போல்வான்-அன்புக்கும் குளிர்ந்த கருணைக்கும் இருப்பிடம் போன்றவனும், எத்தானும் - எவ்வகை உபாயத்தாலும், வெலற்கு அரியான் - (பகைவரால்) வெல்லுதற்கு அரியவனும், மனுகுலத்தே வந்து உதித்தோன்-சுவாயம்புவ மனுவின் வமிசத்திலே வந்து தோன்றியவனும், இலங்கு மௌலி-பிரகாசிக்கும் இரத்தின கிரீட மணிந்தவனுமான, உத்தானபாதன் அருள் - உத்தானபாதன் என்னும் அரசன் பெற்றெடுத்த, உரோமபதன் என்று – உரோம பதன் என்ற பெயருடையவனாய், இ உலகை ஆள் வோன்-நாட்டைச் சிறப்பாக ஆளும் அரசனொருவன், உளன் - இருக் கின்றான்.

கொடிய பாவச் செயல்களும் அவற்றால் வரும் துன்பங்களும் தன் நாட்டிலேயே இல்லாதபடி, நீதி முறையோடு, அன்பும் அருளும் உடையவனாய் நாடாள்பவன் உத்தானபாதன்; அவன் பெற்ற தவப் புதல்வன் உரோமபதனென்பவன் இப்போது சிறப்பாக ஆண்டு வருகின்றான் என்று வசிட்ட முனிவர் கூறினார்; தந்தைக்குரிய அருங் குணங்கள்யாவும் வாய்ந்தவன் தனயனென்பதுபட, தந்தையைமுதலில் சிறப்பித்துக் கூறினார். கலைக்கோட்டு முனிவர் உரோமபதன் மகளான சாந்தை யென்பவளை மணந்துகொண்டு, அவளுடன் உரோமபதனது அரண்மனையிலேயே தங்கியிருத்தலால், முதலில் உரோமபதனைப் பற்றிச் சொன்னார். உரோமபதன்=ரோமபாதன்: பாதத்தில் மயிருள்ளவன் என்ற காரணப் பெயர். இவன் ஆண்டது அங்க நாடு என்பர்.

'புத்' என்பது இங்கே பொதுவாக 'நரகம்' என்ற பொருளில் நின்றது. புத் ஆன கொடுவினை, காரணத்தைக் காரியமாகக் கூறப் பட்ட உபசார வழக்கு. சத்து-உண்மையும் ஆம்.

(பி - ம்.) 1. புத்தாய: இருந்துயரம் போயொழியப்.
2. சத்தாய: குணமுடையான்: தயாவோடு; தயாவினொடு; தயையினொடு.
3. எத்தாலும்: வெலற்கரியோன்; விலக்கரியோன்: வந்துதித்தான்; இலகு மோலி; இலங்கு மோலி; இலகு மௌலி.
4. ரோமபதன்; ஓமபதன்: என்றுளனவ்; எனுமவனிவ்; என்றுரைக்கும்: உலகை யாள்வான; உரவுத் தோளான். (35)

216. அன்னவன்றான் புரந்தளிக்குந் திருநாட்டு
ணெடுங்கால மளவ தாக
மின்னியெழு முகிலின்றி வெந்துயரம்
பெருகுதலும் வேத நன்னூல்
மன்னுமுனி வரையழைத்து மாதானங்
கொடுக்கவும்வான் வழங்கா தாகப்
பின்னுமறை யவர்க்கேட்பக் கலைக்கோட்டு
முனிவரின்வான் பிலிற்று மென்றார்.

'அன்னவன் புரந்து அளிக்கும் திருநாட்டுள்-அத்தகைய உரோமபதன் நன்கு பாதுகாக்கும் சிறப்புடைய அங்க நாட்டிலே, நெடுகாலம் அளவு அது ஆக - நெடுநாட்களாக, மின்னி எழும் முகில் இன்றி - மின்னிக்கொண்டு (திரண்டு) எழுகின்ற மேகத்தாலாகிய மழை இல்லாமல், வெம் துயரம் பெருகுதலும் - (நாடெங்கும்) கொடிய துன்பங்கள் மிகுந்தனவாக, (அரசன்), வேதம் நல் நூல் மன்னும் முனிவரை அழைத்து - நல்ல வேத மார்க்கத்திலே பொருந்திய அந்தணர்களை அழைப்பித்து, மா தானம் கொடுக்கவும்-மிக்கதானங்களை அவர்களுக்குக் கொடுத்த போதிலும், வான் வழங்கா(த)து ஆக-மழை பெய்யாமற் போகவே, பின்னும் - மீளவும், மறையவர்

கேட்ப-வேதம் ஓதிய பெரியோர்களை (இது குறித்து)க் கேட்க, (அவர்கள்), 'கலைக்கோட்டு முனி வரின் - கலைக்கோட்டு முனிவன் (இங்கே) வந்தால், வான் பிலிற்றும் - மழை பொழியும்' என்றார்—.

புரந்து அளிக்கும் : ஒரு பொருட் பன்மொழி. முகில்: ஆகு பெயர். வழங்காது - தொகுத்தல் விகாரம். மறையவர்க் கேட்ப: இரண்டன் உருபு தொக்கது.

உரோமபதன் ஆளுகையில், நாட்டில் மழையின்றிப் பஞ்சம் மிக, அது தீரும்பொருட்டுப் பல தானதருமங்கள் செய்தும் பயனில்லாமையால், வேதவித்துக்களாகிய பெரியோரை அழைத்துக்கேட்க, அவர்கள், 'கலைக்கோட்டு முனிவர் இங்கே வந்தால் மழை பெய்யும்' என்று கூறினார்கள்.

வான் வழங்குதல்: 'வானின் றுலகம் வழங்கி வருதலாற், றானமிழ்த மென்றுணரற் பாற்று' (குறள். 11).

(பி - ம்.) 1. புரிந்தளிக்கும்: திருநாட்டில்; திருநாட்டு: நெடுங்கால: அழலதாக; அளவதாகி.
2. புயலின்றி: வெந்துயரமேலிடலும்; மேவிடலும்; வேந்த னன்னூல்; வேத நீதி.
3. வரதானம்; கொடுக்கினும்வான்; கொடுத்தலும்வான்; கொடுத்தும் வான்: வழங்கலும் வான்; வழங்கினும் வான்: வழங்காதாகிப்.
4. முனிவரர்க்கேட்பக்; முனிவரைக் கேட்பக்; மறையவர்க் கேட்கக். (36)

அரசன் கலைக்கோட்டுமுனிவரை அழைத்துவர முயலுதல்

217. ஓதநெடுங் கடலாடை யுலகினில்வாழ்
மனிதர்விலங் கெனவே யுன்னும்
கோதில்குணத் தருந்தவனைக் கொணரும்வகை
யாவதெனக் குணிக்கும் வேலை
சோதிநுதற் கருநெடுங்கட் டுவரிதழ்வாய்த்
தரள நகைத் துணைமென் கொங்கை
மாதரெழுந் தியாமேகி யருந்தவனைக்
கொணர்துமென வணக்கஞ் செய்தார்.

(மறையவர் கூறியதைக் கேட்ட உரோமபதன்), ஓதம் நெடு கடல் ஆடை-அலைகளையுடைய பெரிய கடலை ஆடையாகவுடைய, (கடலால் சூழப்பட்ட), உலகினில் வாழ் மனிதர் – இவ்வுலகத்தில் வாழும் மனிதர்களை, விலங்கு எனவே உன்னும்-விலங்குகள் என்றே கருதும் தன்மையுள்ள, கோது இல் குணத்து அருதவனை-குற்றமற்ற நற்குணங்களையும் அரிய தவத்தையும் உடைய அம்முனிவனை, கொணரும் வகை யாவது என-இங்கே (அங்கதேசத்துக்கு) அழைத்து வரும் உபாயம் எது என்று, குணிக்கும் வேலை - ஆராயும் போது, சோதி நுதல்-ஒளி பொருந்திய நெற்றியையும், கரு நெடு கண்-கரிய

நீண்ட கண்களையும், துவர் இதழ் வாய்-பவளம் போன்ற (செந்நிறம் பொருந்திய) உதடுகளோடு கூடிய வாயையும், தரளம் நகை-முத்துப்போன்ற பற்களையும், மெல் துணை கொங்கை-மென்மையான இரண்டு தனங்களையும் உடைய, மாதர்-(சபையில் இருந்த) கணிகை மகளிர் சிலர், எழுந்து—, 'யாம் ஏகி அரு தவனை கொணர்தும் என - நாங்கள் போய் அரிய தவத்தையுடைய அம் முனிவனை இங்கே அழைத்து வருவோம்' என்று கூறி, வணக்கம் செய்தார் - (அரசனை) வணங்கினார்கள்.

கடலை நிலமகளுக்கு ஆடையாகக் கூறுதல் கவி மரபு. கலைக் கோட்டு முனிவன், மனிதரை விலங்கென நினைக்குந் தன்மை: *213*.

(பி - ம்.) 1. கடல் சூழ்ந்த; உலகினின் வாழ்; மனிதரையும் விலங்கென்றுன்னும்; எனவே யெண்ணும்;
2. கொணருநெறி யாதென்னக்; எங்ஙனெனக்; குணிக்கு மெல்லை; குறிக்கும் வேலை; கூறும்வேலைச்.
3. சோதி முகக் கருங்கயற்கண். 4. யாமெய்தி. (37)

218. ஆங்கவரம் மொழியுரைப்ப வரசன்மகிழ்ந்
தவர்க்கணிதூ சாதி யாய
பாங்குளமற் றவையருளிப் பனிப்பிறையைப்
பழித்தநுதற் பணைத்த வேய்த்தோள்
ஏங்குமிடை தடிக்குமுலை யிருண்டகுழன்
மருண்டவிழி யிலவச் செவ்வாய்ப்
பூங்கொடியீ ரேகுமெனத் தொழுதிறைஞ்சி
யிரதமிசைப் போயி னரே.

ஆங்கு அவர் அ மொழி உரைப்ப-அவ்விடத்து அக்கணிகையர் அந்த வார்த்தைகளைச் சொல்ல, (அதனைக் கேட்ட), அரசன்-உரோமபத மகாராசன், மகிழ்ந்து-மகிழ்ச்சியடைந்து, அவர்க்கு—, அணி தூசு ஆதி ஆய-ஆபரணங்கள் ஆடை முதலாயினவும், பாங்கு உள மற்றவை-(அவ்விடத்துக்குப்) பொருத்தமான மற்றும் பல பொருள்களும், அருளி-கொடுத்து, 'பனி பிறையை பழித்த நுதல் - குளிர்ந்த பிறைச் சந்திரனைப் பழிக்கும் (அழகுடைய) நெற்றியையும், பணைத்த வேய் தோள் - பருத்த பசுமூங்கில் போன்ற தோள்களையும், ஏங்கும் இடை-(நாளுக்கு நாள்) தேயும் இடையையும், தடிக்கும் முலை-(அவ்வாறே) பருக்கும் தனங்களையும், இருண்ட குழல் - இருள் போலும் கரிய கூந்தலையும், மருண்ட விழி-(மான்போல) மருட்சியுள்ள கண்களையும், இலவம் செம்மை வாய் - கோங்கிலவம் பூப்போலச் சிவந்த வாயையும் உடைய, பூ கொடியீர் - பூங்கொடி போன்றவர்களே! ஏகும் என - (சொல்லிய வண்ணம்) போவீர்களாக' என்று கட்டளையிட, (அவர்கள்), தொழுது இறைஞ்சி - அரசனை வணங்கி வாழ்த்தி,

(விடைபெற்றுக்கொண்டு), இரதம் மிசை-(இதற்கென்று சித்தமான) இரதங்களில் ஏறி, போயினர் - (கலைக்கோட்டு முனிவன் இருப்பிடம் நோக்கிச்) செல்லலாயினர். ஏ-ஈற்றசை.

பாங்குள மற்றவை: வழிச் செல்லுங்கால் உதவும் பொருள் களும், ஆட்களும், உணவுக்குரிய பொருள்களும் பிறவும் ஆம்.

(பி - ம்.) 1. ஆங்கவர்தம்: ஆதியாகப்.
2. பாங்குடன்மற்றவையளித்துப்; அவையருளப்; அளித்ததற்பின்; அவர்க்களித்துப்.
3. ஏங்கு முலை துடிக்குமிடை: தடித்த முலை.
4. ஏகுகெனத்: போயினர்கள்; போயினரால். (38)

## கணிகையர் செயல்

(வேறு)

219. ஓசனை பலகடந் தினியொ ரோசனை
ஏசறு தவனுறை யிடம தென்றுழிப்
பாசிழை மடந்தையர் பன்ன சாலைசெய்
தாசறு மருந்தவத் தவரின் வைகினர்.

பசுமை இழை மடந்தையர்-பசுமையான (பொன்னுலாகிய) ஆபரணங்களை யணிந்த அப்பெண்கள், ஓசனை பல கடந்து-பல யோசனை தூரங் கடந்துபோய், ஏசு அறு தவன் உறை இடம் அது-இகழ்தலில்லாத (சிறந்த) தவத்தையுடைய கலைக்கோட்டு முனிவன் வசிக்குமிடமாகிய ஆச்சிரமம், இனி ஓர் ஓசனை என்ற உழி-இன்னும் ஒருயோசனை தூரத்திலுள்ளது எனத்தக்க அவ்விடத்தில், பன்னசாலை செய்து-இலைக்குடில் அமைத்துக்கொண்டு, ஆசு அறும் அரு தவத்த வரின்-குற்றமற்ற அரிய தவசியரைப்போல, வைகினர்-(அவ்விடத் திலே) தங்கலானர்கள்.

ஓசனை=யோஜனை: நான்கு கூப்பீடு கொண்ட தூரம் எனவும் பிறவாறும் கூறுவர். பன்னசாலை=பர்ணசாலா: இலைகளால் வேயப் பட்ட குடில்; வடசொல் தொடர். ஏசு-முதனிலைத் தொழிற்பெயர்.

கலைக்கோட்டு முனிவரை உபாயத்தால் வசப்படுத்துவதன் பொருட்டுத் தவசிகள் போலக் கோலங்கொண்டனர் கணிகையர்.

(பி - ம்.) 1. யோசனை: ஓர் யோசனை.
2. மாசறு: தவனுடை; தவனுறும்; இடமிதென்றுழி; வனமதென்றுழிப்;
4. மாசறும்; அருந்தவத்தினரின். (39)

220. அருந்தவன் றந்தையை யற்ற நோக்கியே
கருந்தடங் கண்ணியர் கலைவ லாளனில்
பொருந்தினர் பொருந்துழி விலங்கெ னுப்புரிந்
திருந்தவ ரிவரென வினைய செய்தனன்.

கரு தட கண்ணியர் - கருமையான பெரிய கண்களையுடைய அம்மாதர், அரு தவன் தந்தையை அற்றம் நோக்கி-கடுந்தவமுடைய கலைக்கோட்டு முனியின் தந்தை (விபாண்டக முனிவர்அங்கு) இல்லாத சமயம் பார்த்து, கலை வல் ஆளனில் பொருந்தினர் - கலைகளில் வல்ல கலைக்கோட்டு முனிவனிடம் நெருங்கிச் சென்றூர்கள்; பொருந்துழி-(அவ்வாறு அவர்கள்) வந்தபோது, (முனிவன்), விலங்கு எனு-அவர்களை விலங்கென்று கருதாது, புரிந்த இரு தவர் இவர் என-செய்து முடித்த மிக்க தவமுடையவர்கள் இவர்கள் என்று எண்ணி, இனைய செய்தனன் - பின் வருவனவற்றைச் செய்யலாயினன்.

செய்தவை இன்னவென்பதை அடுத்த கவியில் காண்க. புரிந்திருந்தவர்: தொகுத்தல் விகாரம்.

அற்றம் - பிரிவு, சோர்வு, சமயம் முதலிய பல பொருள்களையுடையது; இங்கே, தந்தை பிரிந்திருந்த சமயம் எனக் கொண்டு உரைக்கப்பட்டது. தந்தையின் அற்றத்தை நோக்கி என உருபு பிரித்துக் கூட்டுக. கலைவலாளன் இல் எனப் பிரித்து, இல் - இருப்பிடம் என்றலும் ஆம்.

மனிதரை விலங்கெனக் கருதிவந்த கலைக்கோட்டு முனிவன், உரோமபத மன்னனது ஆகூழால், இப்போலித் தவசியரை (தவ வேடத்தால்) விலங்கென்னுது உண்மைத் தவசியரெனவே கருதி, அவரிடம் பரிவு கொண்டனன் என்க. மூன்றுமடியில், 'பொருந்துபு' விலங்கெனுப் புரிந்து'என்பது ஏனையோர் கொண்ட பாடம்; அதற்குப் பலவாறு உரை கூறினர்.

'அந்தப் பெண்களான ரிஷிகளை, அந்த மெய்யான ரிஷீசுரன் பார்த்து, மிருகமென்று நினையாமல், அவர்கள் வேஷத்தை மெய்யாயெண்ணிக்கொண்டு, ரிஷிகளுக்குச் செய்கிற மரியாதையாக, அர்க்கிய பாத்தியாசமனங்களைக் கொடுத்து ஆசனத்தி லிருக்கச் 'சொன்னூர்' என்ற பழையவுரை இங்கே நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. அருந்தவன்றந்தையி லற்றம்; அருந்தவனிருந்ததை யற்றம்; நோக்கிய.
2. கன்னியர்; கலைவல்லாளனிற்.
3. பொருந்தினர் பொருந்துபு; பொருந்தினர் பொருந்தவே; விலங் கெனுப் புகுந்து.
4. இருந்தன ரிருந்தபின் வினையம் செய்தனர். (40)

221. அருக்கிய முதலினே டாச னங்கொடுத்
திருக்கென விருந்தபி னினிய கூறலும்
முருக்கிதழ் மடந்தையர் முனிவ னைத்தொழாப்
பொருக்கென வெழுந்துபோய்ப் புரையுட் புக்கனர்.

(முனிவன், அம்மகளிருக்கு), அருக்கியம் முதலினேடு-அருக்கிய முதலியனவாக அதிதிகட்குச் செய்யும் உபசாரங்களுடன், ஆசனம்

கொடுத்து - அவர்கள் இருப்பதற்குரிய ஆசனங்களையும் கொடுத்து, இருக்க என - இதில் அமருங்கள் என்று வேண்ட, இருந்த பின்- (அவ்வாறே) அவர்கள்அமர்ந்தபின், இனிய கூறலும்-சில இனிய (உபசார) மொழிகளையும் சொல்லுதலும், முருக்கு இதழ் மடந்தையர் - பலாசம் பூப்போலச் சிவந்த உதடுகளையுடைய அம்மகளிர், முனிவனை தொழா-கலைக்கோட்டு முனிவனை நமஸ்கரித்து விட்டு, 'பொருக்கு' என எழுந்து போய் - விரைவாக அவ்விடம் விட்டு எழுந்து போய், புரைஉள் புக்கனர்-(தம்முடைய) குடிலுக்குள் புகுந்தனர்.

அருக்கியம் முதலியன: அருக்கியம், பாத்தியம், ஆசமனம் என்பன. அர்க்கியம் - தேவர்க்கும் அதிதிகளுக்கும் தீர்த்தத்தாற் செய்யும் ஒருவகை யுபசாரம்; பாத்யம் - காலலம்பக் கொடுக்கும் நீர்; ஆசமனம்-முக்குடி நீர்; ஆசனம்-இருத்தற்குரிய தவிசு. விருந்தினராகிய பெரியோர்க்கு முதலில் செய்ய வேண்டிய மரியாதைகள் இவை. 'பொருக்கு' விரைவுக் குறிப்புணர்த்து மிடைச்சொல். புரை-ஆச்சிரமம்.

'முனிவரின் தந்தை வந்துவிடக்கூடும்; இவரும் ஒரு வேளை தமது வஞ்சகச் செயலை உணர்ந்துவிடுதல் கூடும்' என்ற அச்சத்தால் அம்மகளிர் விரைந்தெழுந்து போயினரென்க. 'பொருக்கென' ஆரணிய. 580; சுந்தர. 391.

(பி - ம்.) 1- முதலிய வாசனம். 2. இருந்து பின்: இனைய; கூறிய, 3. தொழப். 4. எழுந்துதம்; புரியுள்புக்கனர்; உறையுட்புக்கனர். (41)

222. திருந்திழை யவர்சில தினங்க டீர்ந்துழி
மருந்தினு மினியன வருக்கை வாழைமாத்
தருங்கனி பலவொடு தாழை யின்கனி
அருந்தவ வருந்தென வருத்தி னரரோ.

சில தினங்கள் தீர்ந்துழி-சில நாட்கள் கழிந்தபின், (ஒருநாள்), திருந்துஇழையவர்-திருத்தமான(வேலைப்பாடமைந்த)ஆபரணங்களை யணிந்த அப்பெண்கள், மருந்தினும் இனியன-தேவாமிருதத்தினும் இனிய சுவையுள்ள சில பண்ணிகாரங்களையும், வருக்கை-பலாவும், வாழை-வாழையும். மா-மாமரமும், தரும்-கொடுக்கின்ற, கனி பலவொடு-பல பழங்களையும், தாழை இன் கனி-இனிய தேங்காயையும், (கொணர்ந்து), 'அரு தவ - அரிய தவத்தையுடைய முனிவரே! அருந்து என-(இவற்றை) உண்டருளுவீராக' என்று சொல்லி, அருத்தினர்-(அன்போடு அவரை) உண்பித்தனர். அரோ; அசை.

'மருந்தினுமினியன' என்பதைக் கனிகளுக்கு அடைமொழி யாக்கிக் கூறலும் ஆம். தெங்கின் முதிர்ந்த காய், 'தெங்கம் பழம்' என வழங்கும். பலம்=பழம்: வடசொல்.

மாதர்கள், தம்மிடம் முனிவருக்கு விசுவாசம் உண்டாகும் பொருட்டு இத்தகைய உபாயங்களைச் செய்தனர்; அவை பலனளிக்க லாயின.

(பி - ம்.) 1. திருந்திழை மடந்தையர்; தீர்ந்தபின்.
2. இனியதோர்; வான்முதல்.
3. தருந்தரும், அருந்தரும்; தரும்பெரும்; தருங்கனியதனொடு; இன்பலம்.
4 அருளினரரோ, அருந்தினனரோ. (42)

முனிவனை மகளிர் தம்நாட்டுக் கழைத்துச்செல்லல்

223. இன்னன பலபக லிறந்த பின்றிரு
நன்னுதன் மடந்தையர் நவையின் மாதவன்
தன்னையெம் மிடத்தினுஞ் சார்தல் வேண்டுமென்
றன்னவர் தொழுதலு மவரொ டேகினன்.

இன்னன பல பகல் இறந்தபின்-இவ்வாறுகிய பல நாட்கள் கடந்த பின்பு (ஒருநாள்), அன்னவர்-அத்தன்மையராகிய, திரு-இலக்குமிக்கு ஒப்பான, நல்நுதல் மடந்தையர்-அழகிய நெற்றியையுடைய அம்மகளிர், நவை இல் மாதவன் தன்னை-குற்றமில்லாத பெருந்தவத்தையுடைய அம்முனிவனை (நோக்கி), 'எம் இடத்தினும் சார்தல் வேண்டும் என்று-(நாங்கள் இங்கு வந்ததுபோல) தாங்கள் எங்கள் ஆச்சிரமத்திற்கும் வருதல் வேண்டும்' என்று கூறி, தொழுதலும்-(முனிவனை) வணங்கி வேண்டுதலும், அவரொடு ஏகினன்-(முனிவனும் மனமிசைந்து) அவர்களுடன் செல்லலானன்.

இன்னன பல பகல்-மகளிர் மிக்க சுவையுள்ள பல பொருள்களைக் கொணர்ந்து கொடுத்து முனிவனை உண்பித்து வந்த பலநாட்கள். மகளிர் கொணர்ந்து அளித்த இன்சுவைப் பண்டங்களாலும், அவர்களுடைய சாதுரிய மொழிகளாலும் முனிவன் அவர்கள் வசப்பட்டு, அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி உடன் செல்லலானன்.

மகளிர், முனிவனைத் தொட்டும் தழுவியும் இன்புறுத்தினர் என வான்மீகத்தில் கூறப்பட்டுள்ளது.

(பி - ம்) 1. பற்பகல்; இருந்தபின்றிரு; இறந்த பின்னரும்.
3. இடத்திலும்; சார.
4. அன்னவற் றொழுதலும்; அன்னவரடி தொழ; ஏகினர். (43)

224. விம்முறு முவகையர் வியந்த நெஞ்சினர்
அம்மவிவ் விதுவென வகலு நீணெறிச்
செம்மைசேர் முனிவரன் றொடரச் சென்றனர்
தம்மன மெனமருட் டைய லார்களே.

தம் மனம் என-(சஞ்சலமுள்ள) தங்கள் மனம்போல, மருள்-(புறத்தும்) மருட்சியுடையவர்களாகிய, தையலார்கள்-அம்மகளிர்,

(முனிவனது வருகைகுறித்து), விம்முறும் உவகையர்-(ஒருபுறம்) மிக்க மகிழ்ச்சியுடையவராகியும், வியந்த நெஞ்சினர்-(ஒருபுறம்) ஆச்சரியங் கொண்ட மனமுடையவராகியும், 'அம்ம-(முனிவரே) கேட்பீராக! இவ்விது-இதோ உள்ள இதுவே (எங்கள் ஆச்சிரமம்);' என-என்று (அண்மையில் உள்ளது போலச் சுட்டிக்காட்டிக்கொண்டு), அகலும் நீள்நெறி - (அங்க நாட்டுக்குச் செல்லும்) மிக நீண்ட வழியிலே, செம்மை சேர் முனிவரன்-நேர்மையுடைய (களங்கமில்லாத) முனிச் சிரேட்டனுகிய கலைக்கோட்டு முனிவன், தொடர-தம்மைப் பின் தொடர்ந்துவர, சென்றனர்-போனுர்கள். ஏ-ஈற்றசை.

மருட்டையலார்: இரண்டனுருபும் பயனுந் தொக்கதொகை.

மகளிர், தங்கள் சூழ்ச்சி பயனுடையதாகி, முனிவன் தம்மைத் தொடர்ந்து வருதலில் ஒருபுறம் மகிழ்ச்சியும், ஒருபுறம் வியப்பும் கொண்டனராயினும், ஒருவேளை தம் வஞ்சகச் செயலை முனிவன் உணர்ந்துவிடின் யாது நேருமோ என்ற அச்சமும் உடையவர்களா யிருந்தமையின் மருட்சியும் கொண்டனர் என்க. மருள் என்பது இங்கே பிறவினைப் பொருளில் வந்துள்ளதெனக் கொண்டு (தம் மனப் படி) ஆடவரை மருட்டும் தையலார் எனவும் கூறுவர்.

அம்ம: கேள் என்ற பொருளில் வரும் இடைச் சொல்; 'அம்ம கேட்பிக்கும்' என்பது தொல்காப்பியம்.

(பி - ம்.) 1. உவகையால்.
2. அம்ம வீதிதுவென; அம்மவீததுவென; அம்மாவிதுவென.
3. செம்மையின்; செம்மைய; முனிவரற்றொடர்ந்து; முனிவரர் தொடரச். (44)

## முனிவன் அங்கநாட்டெல்லை யடைதலும் மழை பொழிதலும்

225. வளநகர் முனிவரன் வருமுன் வானவன்
களனமர் கடுவெனக் கருகி வான்முகில்
சளசள வெனமழைத் தாரை கான்றன
குளனெடு நதிகடங் குறைக டரவே,

முனிவரன் - முனிவரிற் சிறந்த கலைக்கோட்டு முனிவன், வளம் நகர் வருமுன் - வளம்மிக்க தலைநகருக்கு வருமுன்னேயே, (நாட் டெல்லைக்குள் வந்தவுடனே),வான்முகில்-மழை மேகங்கள்,வானவன்-சிவபெருமானுடைய, களன் அமர் கடு என-கண்டத்திலே தங்கியுள்ள ஆலால விடம் போல, கருகி-கருநிறங் கொண்டு (பரவி), குளனெடு நதிகள் - (அந்நாட்டில் உள்ள) குளங்களும் ஆறுகளும், தம் குறைகள் தீர - (இதுவரை நீரின்றியிருந்த தம்முடைய) குறைகள் தீரும்படி, சளசள என-சளசளவென்றேசை யுண்டாக, மழை தாரை கான்றன-மழைத் தாரைகளைப் பொழிந்தன. ஏ-ஈற்றசை.

'வானவன்' என்பது பொதுப் பெயராயினும், 'களன் அமர் கடுவென' என்ற விசேடணத்தால் இங்கே சிவபெருமானைக் குறித்தது.

களன், குளன்: ஈறு மகர - னகரப் போலி. முகில் - சாதியொருமை; கான்றன எனப் பன்மை வினை கொண்டது. சளசள; ஒலிக் குறிப்புணர்த்தும் இரட்டைக் கிளவி.

(பி - ம்.) 2. வான்மிசைச். 3. எனமழை; எனுமழைத்.
4. நதிகளும்; நதிதடம்; குறைவு; தீர்தர; தீர்ந்தவே. (45)

226. பெரும்புன னதிகளுங் குளனும் பெட்புறக்
கரும்பொடு செந்நெலுங் கவின்கொண் டோங்கிட
இரும்புயல் ககனமீ திடைவி டாதெழுந்
தரும்புனல் சொரிந்தபோ தரசு ணர்ந்தனன்.

பெரு புனல் நதிகளும் குளனும் - மிக்க நீரைக் கொள்ளத்தக்க ஆறுகளும் குளங்களும், பெட்பு உற-(நீரைப் பெற்றுச்) சிறப்படையவும், கரும்பொடு-கரும்புப் பயிரும், செந்நெலும்-செந்நெற் பயிரும், கவின்கொண்டு ஓங்கிட - அழகுடையனவாய்ச் செழித்து வளரவும், (காரணமாய்), ககனம் மீது-ஆகாயத்திலே, இரு புயல்-கருமேகங்கள், இடைவிடாது எழுந்து - இடைவெளியின்றிப் பரவி, அருமை புனல் சொரிந்தபோது-(அந்நாட்டில்)அரிதாயிருந்த நீரைச்சொரிந்தபோது, அரசு-உரோமபத மன்னன், உணர்ந்தனன்-(முனிவன் வருகையை ஊகித்து) அறிந்தான்.

குளன்-சாதியொருமை ; இறுதிப் போலி. அரசு - பண்பாகு பெயர்.

நீரின்றி, ஏங்கித் தவித்துக்கொண்டிருந்த நாட்டில் திடீரென்று பெருமழை பொழியவே, அரசன், கலைக்கோட்டு முனிவன் தன் நாட்டினுள் வருகின்றான் போலும் என்று ஊகித்தான். 'நதிகளும் குளனும் பெரும் புனல் பெட்புற' என்று மாற்றிக் கூறலும் பொருந்தும். செந்நெல் - உயர்ந்த சாதி நெல். 'கரும்பொடு செந்நெலுங் கவின் கொண் டோங்கிட: 'நிலத்துக் கணியென்ப நெல்லுங் கரும்பும்' (நான்மணி. *11.*)

(பி - ம்.) 1. பெட்பறக்; 2. கவின்கொடோங்கிட.
3. இரும்புனல். 4. அரும்புயல் சொரிதர. (46)

உரோமபதமன்னன் நினைப்பும் செயலும்

227. காமமும் வெகுளியுங் களிப்புங் கைத்தெழு
கோமுனி யிவணடைந் தனன்கொல் கொவ்வைவாய்த்
தாமரை மலர்முகத் தரள வாணகைத்
தூமமென் குழலியர் புணர்த்த சூழ்ச்சியால்.

'கொவ்வைவாய்-கொவ்வைப்பழம்போலச் சிவந்த வாயையும், தாமரை மலர் முகம் - செந்தாமரை போன்ற மலர்ந்த முகத்தையும், தரளம் வாள் நகை-முத்துப்போல் ஒளி பொருந்திய பற்களையும், தூமம் மெல் குழலியர் - அகிற் புகை யூட்டப்பெற்ற மெல்லிய கூந்தலையும் உடைய (நம்) கணிகை மாதர், புணர்த்த சூழ்ச்சியால்- ஆலோசித்துச் செய்த உபாயத்தினுலே, காமமும், வெகுளியும், களிப்பும் - காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும், கைத்து எழு-கடிந்து உயர்ந்த, கோ முனி-சிறப்புடைய கலைக்கோட்டு முனிவன், இவண் அடைந்தனன் கொல்-இங்கே வந்துசேர்ந்தானே!'

இது, அடுத்த கவியோடு தொடரும்.

குழலியர் புணர்த்த சூழ்ச்சியால், முனி இவண் அடைந்தனன் கொல் எனக் கூட்டுக. களிப்பு-தன்னிலை யறியாது மயங்குதல். கைத்தல்-வெறுத்தல்=கடிதல்.

'காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற, ஞமங்கெடக்கெடுநோய்' (குறள். 360).

(பி - ம்.) 1. கைத்தெழும்; கைத்தவக்.
2. இவணடைந்தான் கொல்; அவணடைந்தனன் கொல்; அடைந்தனன் கொல்லக்.
4. புணர்ந்த; புனைந்த; கொணர்ந்த. (47)

228. என்றெழுந் தருமறை முனிவர் யாரொடும்
சென்றிரண் டோசனை சேனை சூழ்தர
மன்றலங் குழலியர் நடுவண் மாதவக்
குன்றினை யெதிர்ந்தனன் குவவுத் தோளினன்.

என்று - என்று இவ்வாறு எண்ணி, குவவு தோளினன்- திரண்ட தோள்களையுடைய உரோமபதமன்னன், அருமறை முனிவர் யாரொடும் எழுந்து-அரிய வேதங்களை ஓதியுணர்ந்த அந்தணர் அனைவருடனும் புறப்பட்டு, சேனை சூழ்தர-நால்வகைப் படைகளும் சூழ்ந்து வர, இரண்டு ஓசனை சென்று-இரண்டு யோசனை தூரம் (முன்னே)போய், மன்றல் அம் குழலியர் நடுவண்-மணம் பொருந்திய அழகிய கூந்தலையுடைய கணிகை மகளிரின் நடுவே, (காணப்பட்ட), மா தவம் குன்றினை-பெரிய தவமலை போலும் முனிவனை, எதிர்ந் தனன்-எதிர்கொண்டான்.

குவவுத் தோளினன் (228) முனி இவண் அடைந்தனன் கொல் (227) என்று எழுந்து, சேனை சூழ்தர, இரண்டு யோசனை சென்று, தவக்குன்றினை எதிர்ந்தனன் (228) எனக் கூட்டி முடிக்க.

தவத்தின் மிகுதியும் உறுதியும் பற்றி, முனிவன் தவக் குன்றாக உருவகம் செய்யப்பெற்றான்.

ஓசனை: 219-குறிப்புப் பார்க்க. மாதவக் குன்று: 'உயர்தவத் தோரரோங்கல்' (அயோத். 387).

(பி - ம்.) 1. என்றெழு தருமறை: முனிவரோடுமே.
2. இரண்டியோசனை. (48)

229. வீழ்ந்தன னடிமிசை விழிக ணீர்தர
வாழ்ந்தனெ னினியென மகிழுஞ் சிந்தையான்
தாழ்ந்தெழு மாதரார் தம்மை நோக்கிநீர்
போழ்ந்தனி ரெனதிடர் புணர்ப்பி னாலென்றான்.

(முனிவனைக் கண்ட மன்னன்), 'இனி வாழ்ந்தனென் என-இனி எல்லா நல்வாழ்வுகளையும் பெற்றவனானேன்' என்று, மகிழும் சிந்தையான்-மகிழ்ச்சி கொண்ட மனமுடையவனாய், விழிகள் நீர்தர-கண்கள் உவகை நீர் சொரிய, அடிமிசை வீழ்ந்தனன்-முனிவனுடைய திருவடிகளிலே விழுந்து வணங்கினான்; (பின்பு), தாழ்ந்து எழும் மாதரார் தம்மை நோக்கி-தன்னை வணங்கி யெழுந்த கணிகையரைப் பார்த்து, 'நீர் புணர்ப்பினால் எனது இடர் போழ்ந்தனிர் என்றான்-நீங்கள் உபாயத்தினால் என் துன்பங்களைப் போக்கிவிட்டீர்கள்' என்று (புகழ்ந்து) சொன்னான்.

போழ்தல்-பிளத்தல்; போக்குதல். நீர் தரல்-நீரை வெளிப்படுத்தல்.

(பி - ம்.) 1. விழிகணீருக; விழிகணீர்வர. 2. வாழ்ந்தனம்.
3. சூழ்ந்தெழு: நோக்கியே. 4. போழ்ந்ததிங்கு: எமதிடர். (49)

### உண்மையுணர்ந்த கலைக்கோட்டுமுனிவன் நிலை

230. அரசனு முனிவரு மடைந்த வாயிடை
வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்
வெருவினர் விண்ணவர் வேந்தன் வேண்டலால்
கரையெறி யாதலை கடலும் போன்றனன்.

அரசனும்-உரோமபத மன்னனும், முனிவரும்-அந்தணரும், அடைந்த ஆயிடை-(அவ்விடம்) வந்தபோது, வரம்முனி-சிரேட்டனான கலைக்கோட்டு முனிவன், வஞ்சம் என்று உணர்ந்த மாலைவாய்-(தன்னை அழைத்துவந்தது) சூது என்று கருதிய நிலையில், விண்ணவர்-தேவர்கள், வெருவினர்-(முனிவன் கோபித்தால் யாது நேருமோ என்று) அச்சங் கொண்டனர்; (ஆனால், சினங்கொண்ட முனிவன்), வேந்தன் வேண்டலால்-உரோமபத மன்னன் (மிகப் பணிந்து) வேண்டிக்கொண்டதனால், கரை எறியாது அலை கடல் போன்றனன்-கரையை மோதி அழிக்காமல் (உள்ளேயே) அலை பொங்குகின்ற கடல் போல் ஆனான்.

உம்மை-இசைநிறை; அன்றி, முதலிற் சினங்கொண்டான் என்பதை யிசையெச்சமாகக் கொண்டு, இறந்தது தழுவிய எச்ச வும்மை யெனலும் ஆம்.

முனிவன் வெகுண்ட நிலைக்குக் கடலை உவமை கூறியுள்ளதன் நயம் உணர்ந்து இன்புறத் தக்கது. மாலை-சமயம்; 'காலை' என்பது போல.

கரையெறியா தலை கடல் போன்றனன்: ஒப்பு: 'ஏற்றந் தொடங்காக் கடலிற்றணி வெய்தி நின்ருன்' (அயோத்.436); 'இறை வேலை கடவாத கடலொத்தான்' (சுந்தர. 317).

(பி - ம்.) 1. அரசரும்: அமைந்த. 2. வருமுனி; வேலைவாய். 4. கரைகடவாவலைக். (50)

### உரோமபதன் முனிவனைப் பணிந்து வேண்டல்

231. வள்ளுறு வயிரவாண் மன்னன் பன்முறை
எள்ளறு முனிவனை யிறைஞ்சி யாரினும்
தள்ளருந் துயரமுஞ் சமைவுஞ் சாற்றலும்
உள்ளுறு வெகுளிபோ யொளித்த தாமரோ.

வள் உறு-கூர்மை பொருந்திய, வயிரம் வாள்-வச்சிரம் போன்ற உறுதியுடைய வாளை யேந்திய, மன்னன்-உரோமபதன், எள் அறு முனிவனை-பழிப்பில்லாத கலைக்கோட்டு முனிவனை, பல முறை இறைஞ்சி-பல தடவை (திருவடிகளில் விழுந்து) வணங்கி, யாரினும் தள்ள அரு துயரமும்-(இதுவரை) எவராலும் நீக்க முடியா தபடி தன் நாட்டுக்கு நேர்ந்த துன்பத்தையும், சமைவும்-இப்போது (முனிவன் வரவால்) அது நீங்கினமையும், சாற்றலும்-எடுத்துச் சொல்லி வேண்டிக்கொண்டவளவில், உள் உறு வெகுளி-(முனிவ னுக்கு) உள்ளே யிருந்த மிக்க சினம், போய் ஒளித்தது-மறைந்து போய்விட்டது. ஆம், அரோ-அசை.

கலைக்கோட்டு முனியின் சினத்தைக் கண்ட மன்னன், அவனைப் பலமுறை சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, பஞ்சத்தால் தன் நாட் டுக்கு உண்டான துன்பங்களையும், அவை நீங்குமாறு மழை பொழிவ தற்குக் கலைக்கோட்டு முனிவன் அவ்விடம் வரவேண்டு மென்று பெரி யோர்கள் கூறியதனுல், தான் அக்கணிகை மாதரைக் கொண்டு, சூழ்ச்சியால் வருவித்ததையும், அது உடனே பயனளித்ததையும் விவரித்துச் சொல்லி, நாட்டின் நன்மைக்காகத் தான் செய்த குற்றத் தைப் பொறுத்தருளுமாறு மிகத் தாழ்ந்து வேண்ட, முனிவன் உள் ளெழுந்த சினமும் முற்றிலும் மாறியது என்க.

வள்-உரிச்சொல்; எள்-முதனிலைத் தொழிற் பெயர்; 'எள்ளுறு தூக்கருமம்' (அயோத். 404).

போய் ஒளித்தது-இருந்தவிடம் தெரியாது போயிற்று; 'விற் பிடித்து, நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே; சீரொழுகு சான் ரோர் சினம்' (மூதுரை). சமைவு-தணிவு, ஒழிவு. 'தானையு முலந்த தையா தலைவருஞ் சமைந்தார்' (சுந்தர. 930); 'எப்புடவியுஞ் சமைய வந்து தகரத்'; 'வசுக்களைத் தழுவிச் சமைத்தே' (தக்க. 398, 483).

(பி - ம்.) 1. வள்ளுறை; மன்ன னம்முறை; மன்னவன் முறை; மன் வரன்முறை.
2. எள்ளரு மொழிகளு மியம்பி.
3. சமையும்; சாற்றுற.
4. உள்ளுறை: ஒளித்தவாமரோ; ஒழிந்ததாமரோ. (51)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

### முனிவன் சினம் தணிந்து மன்னனுடன் செல்லுதல்

232. அருள்சுரந் தரசனுக் காசி யுங்கொடுத்
துருளுறு தேரின்மீ தொல்லை யேறிநல்
பொருடரு முனிவருந் தொடரப் போயினன்
மருளொழி யுணர்வுடை வரத மாதவன்.

மருள் ஒழி உணர்வு உடை(ய)-மயக்கம் நீங்கிய மெய்யறி வுடைய, வரதன் மாதவன்-வரங்களை யளிக்க வல்ல, மிக்க தவத்தை யுடைய கலைக்கோட்டு முனிவன், அருள் சுரந்து-கருணை மிகுந்து, அரசனுக்கு-உரோமபத மன்னனுக்கு, ஆசியும் கொடுத்து-ஆசீர்வாத மும் செய்து, உருள் உறு தேரின் மீது-(மன்னன் கொணர்ந்த) விரைந்து செல்லும் தேரின் மேல், ஒல்லை ஏறி-தாமதமின்றி ஏறி, நல் பொருள் தரும் முனிவரும் தொடர-உண்மைப் பொருள்களை உப தேசிக்க வல்ல அந்தணரும் பின் தொடர்ந்து வர, போயினன்-(நகரத்தை நோக்கிச்) சென்றான்.

வரதன்-வரங் கொடுப்பவன்; வரதம் மாதவன் எனவும் பிரித் துப் பொருளுரைக்கலாம். ஆசியும் கொடுத்து: உம்மை இறந்தது தழுவியது.

(பி - ம்.) 2. உருடரு; உருடரும்: தேரின்மேல்: ஏறினன்; ஏறியே.
3. பொருவரு; தெருட்டரு; தொடரச் சென்றனர்.
4. மாதவர். (52)

### முனிவனுடன் அரண்மனை யடைந்த மன்னன் செய்தவை

233. அடைந்தனன் வளநக ரலங்க ரித்தெதிர்
மிடைந்திட முனியொடும் வேந்தன் கோயில்புக்
கொடுங்கலில் பொற்குழாத் துறையு ளெய்தியோர்
மடங்கலா தனத்தின்மேல் முனியை வைத்தனன்.

வேந்தன்-உரோமபத மன்னன், வளம் நகர்-செழிப்பான அந் நகரத்திலுள்ளோர், அலங்கரித்து-(நகரத்தை எங்கும் தோரணம் முத லியவற்றுல்) அலங்காரம் செய்து, எதிர் மிடைந்திட-திரளாக எதிர் கொண்டு வர, முனியொடும் அடைந்தனன் - முனிவனுடன் (நக ரத்தை) அடைந்தவனாய், கோயில் புக்கு - அரண்மனையுள் புகுந்து, பொன் குழாத்து ஒடுங்கல் இல் உறையுள் எய்தி-திரண்ட பொன் வேலைப்பாடமைந்ததாய்ப் பரந்ததொரு மண்டபத்தை அடைந்து, முனியை-முனிவனை, ஓர் மடங்கல் ஆதனத்தின் மேல் வைத்தனன்-உயர்ந்ததொரு சிங்காதனத்தின் மேல் வீற்றிருக்கச் செய்தான்.

நகர்-ஆகுபெயர். ஒடுங்கல் இல்-பரந்த. பொன் குழாம்-பொன்னின் மிகுதி.

(பி - ம்.) 1. வளர் நகர்; 2. மிடைந்தனன்; மிடைந்திடு; முனியொடு.
3. உறையுள்ளேகியோர்; துறையினெய்தியோர்.
4. ஆசனத்திடை, ஆசனத்தினின்; (53)

இதன்பின் சில பிரதிகளில் உள்ள ஒரு செய்யுள்:

வைத்தபின் மாமறை மகிழ மாதவன்
சித்தம தோங்கிடத் தேவர் செய்தன
புத்தியின் சாந்தையைப் புகன்று நல்கினன்
வித்தக முனிவனும் விருப்ப மெய்தவே.

(பி -ம்.) 1. மகிழ்ந்து மாதவர். 2. சித்தமு மோங்கிடத்.

234. அருக்கிய முதலிய கடன்க ளாற்றிவே
றுரைக்குவ திலதென வுவந்து தானருள்
முருக்கிதழ்ச் சாந்தையா முகந லாடனை
இருக்கொடு விதிமுறை யினிதி னீந்தனன்.

(முனிவனைச் சிங்காதனத்தின் மீது அமர்த்திய அரசன்), வேறு உரைக்குவது இலது என-வேறே (குறை) சொல்வதற்கு ஒன்றும் இல்லையென்னும்படி, உவந்து-மகிழ்ச்சியோடு, அருக்கியம் முதலிய கடன்கள் ஆற்றி-அருக்கியம் முதலான (பெரியோர்க்குச் செய்யும்) உபசாரங்களையெல்லாம் செய்து, தான் அருள் - தான் பெற்ற, சாந்தை ஆம் - சாந்தை என்ற பெயருடைய, முருக்கு இதழ் முகம் நல்லாள் தனை-முருக்கம் பூப்போன்ற (சிவந்த) உதடுகளையும் அழகிய முகத்தையு முடைய பெண்ணை, (கன்னிகையை), விதிமுறை-விவாகத்துக்குரிய விதிகளின்படி, இருக்கொடு - மந்திரங்களுடனே, இனிதின் ஈந்தனன் - இன்பமாகத் தானம் செய்தான்.

சாந்தையைப் பெற்ற தந்தை தசரதன் என்றும், அவனால் உரோமபதனுக்கு சுவீகாரமாக அளிக்கப்பெற்றவள் அவள் என்றும் கூறுவர். அருக்கிய முதலிய கடன்கள்: 221-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 2. இல்லென: உகந்து.
3. முருக்கித ழிளமுலை; முழுமதி முகநல்லாடனை.
4. இருக்கொடும்; இருக்கினில்; ஈய்ந்தனன். (54)

235. வறுமைநோய் தணிதர வான்வ ழங்கவே
உறுதுயர் தவிர்ந்ததவ் வுலகம் வேந்தருள்
செறிகுழல் போற்றிடத் திருந்து மாதவத்
தறிஞனுண் டிருக்குந னரச வென்றனன்.

'வறுமை, நோய் தணிதர-(நாட்டில்) வறுமையும் பிணியும் நீங்கும்படி, வான் வழங்கவே-மழை நன்கு பொழிதலால், அவ்வுலகம்-அந்த நாடு, உறுதுயர் தவிர்ந்தது-மிக்க துன்பத்தின் நீங்கியதாயிற்று; வேந்து அருள் - உரோமபத மன்னன் பெற்ற, செறிகுழல்-அடர்ந்த கூந்தலையுடைய சாந்தை, போற்றிட - பணிவிடைகளைச் செய்ய, திருந்து மாதவத்து அறிஞன் - திருந்திய மிக்க தவமுடைய ஞானி யாகிய கலைக்கோட்டு முனிவன், ஆண்டு இருக்குநன்-அங்கே (உரோமபத மன்னனது அரண்மனையில்) இருக்கின்றான்; அரச-மன்னனே!' என்றனன்-என்று (வசிட்ட முனிவன்) கூறி முடித்தான்.

வறுமை நோய்-உம்மைத் தொகை; வறுமையாகிய நோய் எனவுமாம். தணிதல்: 'சமைதல்' போல; ஒழிதல் என்னும் பொருளில் வந்தது. உலகத்தின் கூறாகிய நாட்டையும், 'உலகம்' என்றல் கவி மரபு. செறி குழல்: வினைத்தொகை யன்மொழி. போற்றிட-போற்ற: இடு; துணைவினைப்பகுதி.

புத்திரரை அடையும் உபாயத்தையும், அதனைத் தொடர்ந்து கலைக்கோட்டுமுனிவனது வரலாற்றையும் வசிட்ட முனிவர் தசரத சக்கரவர்த்திக்குக் கூறி முடித்தார். மேலே, தசரத சக்கரவர்த்தி தானே நேரிற் போய்க் கலைக்கோட்டு முனிவனை யழைத்துவந்து வேள்வி முடித்தமையும் பிறவும் கூறப்படும்.

(பி - ம்.) 1. நவிதர; அழிதர.
2. தணித்ததவ் வுலகம்; தவிர்த்ததவ் வுலகம்.
4. அறிஞனுண்டிருந்தனன்; அரியனுண்டிருக்குநன், (55)

தசரத சக்கரவர்த்தி புத்திரப்பேறு குறித்துச் செய்தவைபற்றி வான்மீகத்துள் வேறுவகையாகக் கூறப்படுகின்றது; அது வருமாறு:-

சக்கரவர்த்தி எல்லா வைபவங்களும் நிறைந்தவனாக இருப்பினும், பிள்ளையில்லாக் குறையால் பெரிதும் வருந்தி, தானமும்தவமும் செய்து வந்தான்; அப்படியும் மகப்பேறில்லாததனால், அது குறித்து அவன் மிகவும் சிந்தனையோடு இருந்தபோது, ஒருநாள் அவனுக்கு, அசுவமேதத்தினால் அப்பயனைப் பெறலாம் என்ற எண்ணம் உண்டாயிற்று; உடனே அவன் தன் மந்திரிமார்களுடன் ஆலோசித்து, அவ் வேள்வியைச் செய்து முடிக்கத் தீர்மானித்து, அதனை வசிட்டர் முத

லான குருமார்க்கும் புரோகிதர்க்கும் அறிவிக்க, அவர்களும் அது நன்றென ஆமோதிக்கவே, அசுவமேதத்துக் குரிய பல ஏற்பாடுகளையும் செய்வித்தான்; அப்போது சுமந்திரன் தசரதனிடம், தனிமையில், அவன் புத்திரப் பேறு குறித்து முன்னமே சனற்குமார முனிவர் கூறியுள்ள செய்தி யொன்றைத் தான் அறிந்தவாறு கூறலானான்; அவன் கூறியதாவது:

"சக்கரவர்த்தீ! கேட்பீராக; 'அங்க தேசத்து அரசனான உரோமபாதன் என்பவன் ஆளுகையில், அத்தேசத்திலே கடும் பஞ்சம் உண்டாகும்; அதைப் போக்க அவன் பெரியோருடன் பலவாறு ஆலோசிக்கையில், விபண்டக முனிவன் புதல்வனான ருச்யசிருங்க (கலைக்கோட்டு) முனிவனால்தான் அது தீரும் என்பதை அறிவான். அக் கலைக்கோட்டு முனிவன், பிறந்தது முதல் வனத்திலேயே தன் தந்தையுடன் தங்கி, அவருக்குப் பணிவிடைகள் செய்துகொண்டு வெளியுலகத்தையே அறியாதவனாய், மானிடரும் ஒருவகை விலங்கெனக் கருதும் நிலையி லிருந்தவனாதலால், அவனை நாட்டுக்குத் தருவித்தல் அரிது என்பதை அறிந்து, மாதர்களைக் கொண்டு சூழ்ச்சியால் அம்முனிவனைத் தருவிப்பான்; அவ்வாறு அம்முனிவன் வந்ததும், நல்ல மழை பெய்து நாட்டில் பஞ்சம் நீங்க வகையுண்டாகும்; பின்பு உரோமபதன், தன் மகளான, 'சாந்தை' என்பவளை அம்முனிவனுக்கு விவாகம் செய்வித்து, அவர்களைத் தன்னுடனே இருக்கும்படி செய்து கொள்வான்; அவர்கள் அவ்வாறு இருக்கும்போது, தசரத சக்கரவர்த்தி தனக்குப் பிள்ளைப்பேறு குறித்து ஆலோசித்து, அசுவமேதத்தால் அப் பயனைப் பெறலாமென்று கருதி, அதனைக் கலைக்கோட்டு முனிவனால் செய்வித்தல் வேண்டும் என்றும் அறிந்து, அங்க நாடு சென்று முனிவனை அழைத்து வந்து வேள்வியை முற்றுவிப்பான்; பின்பு தசரதனுக்கு நான்கு புதல்வர் உண்டாவர்' என்று சனற்குமாரர் கூறியுள்ளார். அதற்கேற்ப இப்போது உமக்கு அசுவமேதத்தில் மனம் சென்றுள்ளது: ஆகவே நீர் நேரிலே சென்று கலைக்கோட்டு முனிவனை மரியாதையுடன் இங்கே அழைத்துவர வேண்டும்" என்பது.

பின்பு, தசரத சக்கரவர்த்தி, தானே நேரில் அங்கநாடு சென்று கலைக்கோட்டு முனிவனை அழைத்துவந்து அசுவமேதத்தைச் செய்வித்தான். முனிவன் அசுவமேதத்தை முதலில் செய்து முடித்து, அதன் இறுதியில் 'புத்திரகாமேஷ்டி'யைச் செய்ய, அதன்பின் சக்கரவர்த்திக்குப் புதல்வர் தோன்றினர். அசுவமேதத்தின் முடிவில், அவிர்ப்பாகம் பெறும் பொருட்டுத் தேவர்கள் அனைவரும் வந்து கூடிய கூட்டத்திலே, இராவணன் முதலிய அரக்கரால் தாம் அடையும் துன்பங்களைப் போக்கும் வகை பற்றி அவர்கள் ஆலோசிக்க, அப்போது விட்டுணுமூர்த்தி அவர்களெதிரே காட்சியளித்து, தமது

அமிசத்தை நான்கு கூருக்கிக் கொண்டு தசரதனுக்குப் புதல்வர்களாய்த் தோன்றி, தேவர்களின் குறையை முடிப்பதாக வரம் அருளி அவ்வாறே அதனை நிறைவேற்றினர்.

### கலைக்கோட்டு முனிவனை அழைத்துவரத் தசரதன் புறப்பட்டுச் செல்லுதல்

(வேறு)

236. என்றலுமே முனிவரன்ற னடியிறைஞ்சி
யீண்டேகிக் கொணர்வெ னென்னுத்
துன்றுகழன் முடிவேந்த ரடிபோற்றச்
சுமந்திரனே முதலா வுள்ள
வன்றிறல்சே ரமைச்சர்தொழ மாமணித்தே
ரேறுதலும் வானோர் வாழ்த்தி
இன்றெமது வினைமுடிந்த தெனச்சொரிந்தார்
மலர்மாரி யிடைவி டாமல்.

என்றலுமே-(வசிட்ட முனிவன்) மேற்கண்டவாறு கூறி முடித்தவுடனே, (தசரத சக்கரவர்த்தி), முனிவரன் தன் அடி இறைஞ்சி-முனிச் சிரேட்டனை அவன் பாதங்களை வணங்கி, 'ஈண்டு ஏகி கொணர்வென் என்னு-இப்போதே போய் முனிவனை அழைத்து வருவேன்' என்று கூறி, துன்று கழல் முடி வேந்தர்-காலிலே செறித்த வீரக் கழலையும் தலையிலே கிரீடத்தையும் உடைய அரசர் பலர், அடி போற்ற-தன் பாதங்களை வணங்கவும், சுமந்திரனே முதலா(க) உள்ள வல் திறல்சேர் அமைச்சர் தொழ-சுமந்திரன் முதலான மிக்க மதிவன்மையுடைய மந்திரிமார்கள் அஞ்சலி செய்யவும், மா மணி தேர் ஏறுதலும்-சிறந்த மணிகள் பதித்த இரதத்திலே ஏறியவுடன், வானோர்-தேவர்கள், 'இன்று எமது வினை முடிந்தது என-இன்றோடு எங்கள் குறை தீர்ந்தது' என்று கொண்டு, வாழ்த்தி-தசரதனை ஆசீர்வதித்து, மலர் மாரி-(கற்பகப்) பூமழையை, இடைவிடாமல் சொரிந்தார்—.

சுமந்திரனே: ஏ-இசை நிறை; முதலா-ஈறு தொகுத்தல். முடிந்தது: துணிவு பற்றி வந்த கால மயக்கம். திறல்-ஆற்றல், திறமை.

சக்கரவர்த்தி கலைக்கோட்டு முனிவனை அழைத்துவரப் புறப்பட்டதனால், முனிவன் வருகையும், அதனால் இராமன் முதலியோர் அவதரித்தலும், தம் குறை தீர்தலும் உறுதி என்றுட்கொண்டு தேவர்கள், 'இன்று எமது வினை முடிந்தது' எனக் கூறினர்; தசரதனுக்கு மங்களம் உண்டாக வாழ்த்தி மலர் மாரி பொழிந்தனர். எமது வினை-எங்கள் காரியம் எனவுமாம்.

(பி-ம்.) 1. அடிபோற்றி; கொணர்வன் என்னத்.
2. துன்று புகழ்; துன்றுமணி; சுமந்தரனே; முதல்வராய:
3. வன்றிறல்தேர் அமைச்சரொடு.
4. இன்றெம்வினை முடிந்ததெனச் சொரிந்தனர்கள்; குறை முடிந்ததெனச் சொரிந்தார். (56)

## தசரதன் அங்கநாட்டை அணுகுதலும் உரோமபதன் அவனை வரவேற்று உபசரித்தலும்

237. காகளமும் பல்லியமுங் கனைகடலின்
மிகமுழங்கக் கானம் பாட
மாகதர்க ளருமறைநூல் வேதியர்கள்
வாழ்த்தெடுப்ப மதுரச் செவ்வாய்த்
தோகையர்பல் லாண்டிசைப்பக் கடற்றானை
புடைசூழச் சுடரோ னென்ன
ஏகியரு நெறிநீங்கி யுரோமபதன்
றிருநாட்டை யெதிர்ந்தா னன்றே.

காகளமும்-எக்காளமும், பல் இயமும்-பலவ்கை வாத்தியங்களும், கனை கடலின்-ஓசை மிக்க கடலினும், மிக முழங்க-மிகவும் முழங்கவும், மாகதர்கள் கானம் பாட-மாகதர்கள் மங்கள்கீதங்களைப் பாடவும், அருமறை நூல் வேதியர்கள் வாழ்த்து எடுப்ப-அரிய வேதங்களை ஓதியுணர்ந்த மறையோர்கள் (மந்திரங்களால்) வாழ்த்துக் கூறவும், மதுரம் செவ்வாய் தோகையர்-சொல்லினிமையும் உதடுகளின் செம்மையும் பொருந்திய வாயையுடைய, மயில் போலும் சாயல் கொண்ட மகளிர், பல்லாண்டு இசைப்ப-பல்லாண்டு பாடவும், கடல் தானை புடை சூழ-கடல் போன்ற நால்வகைப் படைகள் நாற்புறமும் சூழ்ந்து வரவும், சுடரோன் என்ன-சூரியனைப் போல, ஏகி-(தேரிலே) போய், அருநெறி நீங்கி-அரிய வழிகளைக் கடந்து, உரோமபதன் திருநாட்டை எதிர்ந்தான்-உரோமபத மன்னனது செல்வமிக்க (அங்க) நாட்டை அடைந்தான். அன்று, ஏ-அசை.

அரசன் முன் எப்போதும் இருந்து அவன் புகழ்பாடுவோர், சூதர், மாகதர் என இருவகையினர்; இவருள், சூதர் 'நின்று ஏத்துவார்' எனவும், மாகதர் 'இருந்து ஏத்துவார்' எனவும் கூறப்படுவர். மாகதர் அடுத்த கவியிலும் வருகின்றனர். மகளிர் பல்லாண்டு இசைத்தல்: 241, 882, 1191, 1324-பார்க்க. பத்துத் திக்கிலும் தேர்செலுத்தவல்ல தசரதனுக்குச் சுடரோனை உவமை கூறியுள்ளமை ஏற்புடையதாகும்; அன்றியும் சூரிய குலத்தோன்றலான அவனைச் சூரியனாகவே கூறினா ரென்றலும் பொருந்தும்.

(பி-ம்.) 1. கனைகடலின்மேன் முழங்க; கருங்கடலின் மேன் முழங்க; கனைகடலா மெனமுழங்க. 3. சூழக்கதிரோனென்ன.

4. ஏகியுடன் நெறிநீங்கி; ஏகியருந்தவரொடும்போய்: ரோமபதன்; எதிர்ந்தா ரன்றே: அடைந்தானன்றே: உற்றுனன்றே: எதிர்ந்தான் மன்னே. (57)

238. கொழுந்தோடிப் படர்கீர்த்திக் கோவேந்த
னடைந்தமைசென் ஹெற்றர் கூறக்
கழுந்தோடும் வரிசிலைக்கைக் கடற்ருனை
புடைசூழக் கழற்கால் வேந்தன்
செழுந்தோடும் பல்கலனும் வெயில்வீச
மாகதர்கள் திரண்டு வாழ்த்த
எழுந்தோடு முவகையொடு மோசனைசென்
றனனரசை யெதிர்கோ ளெண்ணி.

கொழுந்து ஓடி படர் கீர்த்தி-கொழுந்துவிட்டுப் பரவுகின்ற புகழையுடைய, கோ வேந்தன்-அரசர்க்கரசனுன தசரதன், அடைந்தமை-நகரத்தை நெருங்கி வருகின்ற செய்தியை, ஒற்றர் சென்று கூற-ஒற்றர்கள் (அறிந்து) போய் உரோமபத மன்னனிடம் தெரிவிக்க, கழல் கால் வேந்தன்-வீரக்கழலை யணிந்த கால்களையுடைய அரசன், (உரோமபதன்), அரசை எதிர்கோள் எண்ணி-சக்கரவர்த்தியை எதிர்கொள்ள நினைந்து, கழுந்து ஓடும் வரி சிலை கை-உறுதி மிக்க கட்டமைந்த வில்லைத் தாங்கிய கையையுடைய, கடல் தானை-கடல் போன்ற (மிகப் பரந்த) படைகள், புடைசூழ-பக்கங்களிலே சூழ்ந்து வரவும், செழுமை தோடும்-ஒளிமிக்க காதணியும், பல கலனும்-மற்றும் ஆரம் முதலிய பல அணிகலன்களும்,வெயில் வீச-பிரகாசிக்கவும், மாகதர்கள் திரண்டு வாழ்த்த-மாகதர்கள் கூடிப் புகழ்பாடித் துதிக்கவும், எழுந்து ஓடும் உவகையொடும்-பொங்கி யெழுகின்ற பெருமகிழ்ச்சியுடனே, ஓசனை சென்றனன்-ஒரு யோசனை தூரம் முன்னே சென்ருன்.

கொழுந்துவிட்டுப் பரவுதல்-மேன் மேலும் பெருகிப் பரவுதல். ஒற்றர், நாட்டில் அங்கங்கே நிகழும் செய்திகளை அறிந்து அரசனுக்கு அறிவிப்போர். தோடு-காதணி என்ற பொருளுடையது; ஆடவர் காதணிக்கும் பொருந்தும். ஓசனை: 219-குறிப்புப் பார்க்க. கழுந்து-வில்லினது திரண்ட நுனிப் பகுதி யென்றும், தேய்வு என்றும் பொருளுரைப்பாரு முளர்.

'கொழுந்தோடிப் படர் கீர்த்தி': ஒப்பு: ஓங்கி யோங்கி வளர்ந்துயர் கீர்த்தியின், பூங்கொழுந்து' (1190); 'கழுந்துடை வரி சிலை' (அயோத். 1101).

(பி - ம்.) 1. நடந்தமை. 2. கழுந்தோடு நெடுஞ் சிலைக்கைக்:
3. வில்வீச; ஒளிவீச; நிலாவீச: திரண்டு பாட.
4. எழுந்தோங்கும் உவகையுடன் யோசனை; சென்ருனரசை; சென்றரசனையே. (58)

239. எதிர்கொள்வான் வருகின்ற வயவேந்தன்
றனைக்கண்ணுற் றெழிலி நாண
அதிர்கின்ற பொலந்தேர்நின் றரசர்பிரா
னிழிந்துழிச்சென் றடியின் வீழ
முதிர்கின்ற பெருங்காத றழைத்தோங்க
வெடுத்திறுக முயங்க லோடும்
கதிர்கொண்ட சுடர்வேலான் றனைநோக்கி
யிவையுரைத்தான் களிப்பின் மிக்கான்.

எதிர் கொள்வான் வருகின்ற - (தன்னை) எதிர் கொண்டழைக்கும் பொருட்டு வருகின்ற, வயம் வேந்தன் தனை-வெற்றியுடைய உரோமபத மன்னனை, அரசர் பிரான் கண்ணுற்று - சக்கரவர்த்தியாகிய தசரதன் பார்த்து, எழிலி நாண அதிர்கினற - மேகமும் வெட்கமடையும்படி (இடிபோல) அதிர்ச்சியுடைய, பொலம் தேர் நின்று இழிந்துழி-பொன்மயமான (தனது) இரதத்தினின்றும் இறங்கியபோது, சென்று அடியின் வீழ-(உரோமபதன்) அணுகிப் போய் அவன் பாதத்தில் விழுந்து வணங்க, (தசரதன்), முதிர்கின்ற பெரு காதல் தழைத்து ஓங்க - முதிர்ந்த பேரன்பு மேலிட்டுப் பொங்க, எடுத்து-(திருவடிகளில் விழுந்தவனைத் தன் கைகளால்) தூக்கி, இறுக முயங்கலோடும்-(அன்பின் அறிகுறியாக) இறுகத் தழுவிக் கொள்ளலும். களிப்பில் மிக்கான் -(சக்கரவர்த்தி செயலால்) மகிழ்ச்சி மிக்க உரோமபதன், கதிர் கொண்ட சுடர்வேலான்தனை நோக்கி-கிரணங்களையுடைய சூரியனைப் போன்ற (காந்தி மிக்க) வேலாயுதத்தையுடைய சக்கரவர்த்தியைப் பார்த்து, இவை உரைத்தான்-பின்வரும் உபசார மொழிகளைக் கூறினன்.

உபசார மொழிகளை அடுத்த பாடலில் காண்க.

'எழிலி' என்றவிடத்து உயர்வு சிறப்பும்மை தொக்கது. வேந்தன்றனை. வேலான்றனை: 'தன்' இரண்டிடத்தும் சாரியை.

சக்கரவர்த்தியாதலோடு வயதிலும் மூத்தவனாதலால், தசரதனை உரோமபதன் வணங்குதலும், தசரதன் அவனை எடுத்துத் தழுவுதலும் முறையாகும்; 1123-குறிப்புப் பார்க்க. தசரதன் உரோமபதனிடத்து முன்னமே மிக்க அன்புடையவனாதலால், 'முதிர்கின்ற பெருங் காதல்' என்றும், இப்போது நேரிற் கண்டவுடன் அது பின்னும் மேலிட்டதென்பார் 'தழைத்து ஓங்க' என்றும் கூறினர்.

(பி - ம்.) 1. எதிர்கொள்ள.
2. பொலன்றேர்: அரசர்பிரானின்றுழிச் சென்று; இழிந்துழி சென்றரசர் பிரான்: அடியில்வீழ.
4. கதிர்நின்ற; சுடர்வேலோன்; முகநோக்கி; களிப்பு மிக்கான்; களிப் பின் மிக்கோன். (59)

240\. யான்செய்த மாதவமோ விவ்வுலகஞ்
செய்தவமோ யாதோ விங்கண்
வான்செய்த சுடர்வேலோ யடைந்ததென
மிகமகிழா மணித்தே ரேற்றித்
தேன்செய்த தார்மௌலித் தேர்வேந்தைச்
செழுநகரிற் கொணர்ந்தான் றெவ்வர்
ஊன்செய்த சுடர்வடிவே லுரோமபத
னெனவுரைக்கு முரவுத் தோளான்.

தெவ்வர் ஊன் செய்த - பகைவருடம்பிலுள்ள ஊன்படியப் பெற்ற, சுடர் வடி வேல் - ஒளி பொருந்திய கூரிய வேலாயுதத்தை யுடைய, உரோமபதன் என உரைக்கும் - உரோமபதன் என்று சொல்லப்படுகிற, உரவு தோளான்-வலிமிக்க தோள்களையுடையவன், தேன் செய்த தார்மௌலி - தேன் பொருந்திய மலர் மாலை சூட்டிய கிரீடத்தையும், தேர்-தேரையும் உடைய, வேந்தை-தசரத மன்னனை (நோக்கி), 'வான் செய்த - தேவருலகத்தை (தேவர்களுக்கு) நிலை பெறச் செய்த, சுடர் வேலோய்-சூரியனுக்கொப்பான (காந்தியுள்ள) வேலையுடைய சக்கரவர்த்தியே! இங்கண் அடைந்தது - இங்கே நீர் எழுந்தருளியது, யான் செய்த மாதவமோ! - நான் செய்த பெருந் தவத்தினலோ!(அல்லது),இ உலகம் செய்தவமோ-இந்த நாடு செய்த தவத்தினலோ! யாதோ-எவ்வாறோ!' என-என்று முகமன் கூறி, மிக மகிழா - மிகவும் மகிழ்ச்சியோடு, மணி தேர் ஏற்றி-மணிகள் பதிக்கப் பெற்ற (தனது) தேரில் ஏற்றிக்கொண்டு, செழு நகரில் கொணர்ந் தான்-வளம்மிக்க (தனது) அரண்மனைக்கு அழைத்து வந்தான்.

உரவுத் தோளான், தேர்வேந்தை, 'சுடர் வேலோய்! இங்கண் அடைந்தது தவமோ! யாதோ!' என, மகிழா, தேரேற்றி, செழு நகரில் கொணர்ந்தான் என முடிக்க.

புதிதாக வருவோரை எதிர்கொள்வோர், வந்தவரைத் தமது தேரில் ஏற்றித் தாமும் உடன் அமர்ந்து வருதல் முறை; (254). புதி தாக வந்தோர்க்கு முகமன் கூறல் : (321; ஆரணிய. 146). சம்பரா சுரனை வென்று இந்திரனுக்குத் தேவருலகை மீட்டுத்தந்த பெருமை யுடைமையின், தசரதனை 'வான் செய்த சுடர் வேலோய்' என்றனன்; 323-பார்க்க. இனி, இதற்கு, 'தேவலோகத்திலும் சென்று பிரகாசிக் கும் (பெருமையுடைய)வேலோய்' என்றும் பொருள் கூறலாம். தேன் செய்த-வண்டுகள் ரீங்காரம் செய்கிற என்றலும் ஆம்.

'தெவ்வர் ஊன் செய்த' என்பதற்குப் 'பகைவரைக் குறைப் படுத்திய'(தோற்பித்த) எனவும், 'பகைவர் உடலை உயிரற்றதாக்கிய' எனவும் உரை கூறுவர்.

(பி - ம்.) 1. இங்஖ன்.

2. சுடர்வேலாய்; சுடர்வேலோன்; மனமகிழ; மனமகிழ்ந்து; மிக மகிழ்ந்து; முடிதாழா: இவணடைந்த தெனவுரைத்து; நீயிவண்வந் தடைந்ததென. 3. தார்மவுலித்; செழுந்தேரிற்.

4. சுடர்வேலான்; ரோமபதன்; என்றுரைக்கும்; உயர்பொற் றேளான். (60)

241. ஆடகப்பொற் சுடரிமைக்கு மணிமாடத்
திடையொருமண் டபத்தை யண்மிப்
பாடகச்செம் பதுமமலர்ப் பாவையர்பல்
லாண்டிசைப்பப் பைம்பொற் பீடத்
தேடுதுற்ற வடிவேலான் றனேயிருத்திக்
கடன்முறைகள் யாவுஞ் செய்து
தோடுதுற்ற மலர்த்தாரான் விருந்தளிப்ப
வினிதுகந்தான் சுரர்நா டீந்தான்.

தோடு துற்ற மலர் தாரான்-இதழ்கள் அடர்ந்த பூமாலை யணிந்த உரோமபதன், (சக்கரவர்த்தியுடன்), ஆடகம் பொன் சுடர் இமைக்கும் அணி மாடத்து இடை-ஆடகம் என்னும் பொன்னின் ஒளி வீசுகின்ற அழகிய மாளிகையிலே (உள்ள),ஒரு மண்டபத்தை அண்மி-ஒரு சிறந்த மண்டபத்தை அடைந்து, பாடகம்-பாதசர மென்னும் ஆபரண மணிந்த, செம்பதுமம் மலர்-செந்தாமரை மலர் போன்ற பாதங்களையுடைய, பாவையர்-மகளிர், பல்லாண்டு இசைப்ப-பல்லாண்டு பாட, ஏடு துற்ற வடிவேலான் தனை-பூமாலை சூட்டிய கூரிய வேலையுடைய தசரதனை, பசுமை பொன் பீடத்து இருத்தி-பசும் பொன்னாலாகிய ஆதனத்தின் மேல் அமரச் செய்து, கடன் முறைகள் யாவும் செய்து-(செய்ய வேண்டிய) முறையான உபசாரங்கள் எல் லாம் செய்து, (பின்பு), விருந்து அளிப்ப-நல்ல விருந்து செய்விக்க, சுரர் நாடு ஈந்தான்-தேவர் நாட்டை அவர்களுக்கு (மீட்டு)க் கொடுத் தவனாகிய தசரதன், இனிது உகந்தான்-(அவ்விருந்தை) இன்பமாக ஏற்று மகிழ்ந்தான்.

ஆடகம்: பொன்னின் வகை நான்கினுள் ஒன்று; மற்றை மூன்றுவன: சாதரூபம், கிளிச்சிறை, சாம்பூநதம் என்பன. பதும மலர் என்பது பாதங்களுக்கு ஆயிற்று. ஏடு-பூவிதழ்; அது மலருக்கு ஆகி, பின்பு மாலைக்கு ஆயிற்று. இதழ்களாலாகிய மாலை யென்றலு மாம்; 'தோட்டலங்கலினீர்' (ஆரணிய. *215*).

மகளிர் பல்லாண்டிசைத்தல்: *237*. தசரதன் சுரர் நாடீந் தமை: *(240, 244, 323)*.

(பி - ம்.) 1. சுடரிமைக்கும்; இடையோர்; அண்ணிப்.
2. பலாண்டிசைப்பப்; பைம்பொற்பீடக்.

3. கோடுதுற்ற; ஏடு துற்று; ஏடு துற்றும்; வடிவேலோன்றனை நோக்கி; யாவுமீந்து; யாவு நேர்ந்து.

4. தோடுதுற்று; தோடுகுற்ற; தோடுதித்த; மலர்த்தாரோன்; இனிது வந்தான். (61)

## உரோமபதன் கலைக்கோட்டுமுனிவனை அயோத்திக்குக் கொண்டுவந்து சேர்ப்பதாக வாக்களித்தல்

242. செவ்விநறுஞ் சாந்தளித்துத் தேர்வேந்தன்
றனைநோக்கி யிவணீ சேர்ந்த
கௌவையுரைத் தருளுகென நிகழ்ந்தவெலா
மரசர்பிரான் கழற லோடும்
அவ்வியநீத் துயர்ந்த மனத் தருந்தவனைக்
கொணர்ந்தாங்கண் விடுப்பெ னான்ற
செவ்விமுடி யோயெனலுந் தேரேறிச்
சேனையொடு மயோத்தி சேர்ந்தான்.

செவ்வி நறு சாந்து அளித்து-(விருந்துண்டு எழுந்த பின்), புதிய மணம் பொருந்திய சந்தனங்கொடுத்து, தேர் வேந்தன்தனை நோக்கி-(எங்கும் செல்லத்தக்க) தேரையுடைய சக்கரவர்த்தியைப் பார்த்து, 'நீ இவண் சேர்ந்த கௌவை உரைத்தருளுக என-நீர் இங்கு எழுந்தருளிய காரியம் இன்னதெனச் சொல்லியருளுக' என்று வேண்ட, அரசர் பிரான்-சக்கரவர்த்தி, நிகழ்ந்த எலாம் கழறலோடும்-நடந்த செய்திகளையெலாம் சொல்லுதலும், (உரோமபதன்), 'ஆன்ற செவ்வி முடியோய்-சிறந்த அழகுடைய கிரீடத்தை யணிந்த சக்கரவர்த்தியே! அவ்வியம் நீத்து உயர்ந்த மனத்து அருதவனை-பொறாமையை ஒழித்து மேம்பட்ட மனத்தையும் அரிய தவத்தையும்உடைய (கலைக்கோட்டு) முனிவனை, கொணர்ந்து ஆங்கண் விடுப்பென்-அழைத்துக்கொண்டு வந்து அங்கே (அயோத்தியில்) சேர்ப்பேன்' எனலும்-என்று கூறுதலும், (தசரதன்), தேர் ஏறி-இரதத்தில் ஏறி, சேனையொடும்-உடன் வந்தபடைகளுடன, (போய்), அயோத்தி சேர்ந்தான்-அயோத்தியை அடைந்தான்.

'உரைத்தருளுகென-தொகுத்தல்; ஆங்கண்-நீட்டல்.

உண்டபின் சந்தனமும் தாம்பூலமும் அளித்தல் மரபாதலின், 'செவ்வி நறுஞ்சாந்து-அத்தருணத்திற் கேற்ற நல்ல சந்தனம்' என்றலும் ஆம். 'உரைத்தருளுக' என்றது உரோமபதனது பணிவும் சக்கரவர்த்தியின் உயர்வும் தோன்றக் கூறியவாறு. 'அவ்வியம் நீத்து' எனப் பொறாமையை மட்டும் கூறினும், அவ்வினத்தைச் சார்ந்த பிற குற்றங்களும் கொள்ளப்படும்; அவை: அவா, வெகுளி, வஞ்சம் முதலியன.

(பி - ம்.) 2. அருள்கவென; அருடியென; நிகழ்ந்தபரிசு.

3. அவ்வியந்திாத்; வெவ்வுதுயர் நீத்தமனத்; உய்ந்தமனத்: கொணர்ந் தாங்கு; விடுவனுன்ற; விடுப்பனன்றே.

4. செவ்விமுடியோ னென்னச்; அவ்வியமிலாயெனலும்; சேனேயோடு; சேனேயுடன். (62)

## உரோமபதன் கலேக்கோட்டு முனிவனே உடன்படுத்தல்

243. மன்னர்பிரா னகன்றதற்பின் வயவேந்த
னருமறைநூல் வடிவு கொண்ட
தன்னமுனி வரனுறையு டனேயணுகி
யிணேயடித்தா மரைக ளம்பொன்
மன்னுமணி முடியணிந்து வரன்முறைசெய்
திடவிவ்ணீ வருதற் கேய்ந்த
தென்னேயென வடியேற்கோர் வரமருளு
மடிகளென யாவ தென்ருன்.

மன்னர் பிரான் - சக்கரவர்த்தியான தசரதன், அகன்றதன் பின்-(அயோத்தி நோக்கிப்)போன பின்பு,வயம் வேந்தன்-வெற்றியை யுடைய உரோமபத மன்னன், அரு மறை நூல் வடிவு கொண்டது அன்ன-அரிய வேதமே வடிவங்கொண்டதுபோன்ற, முனிவரன்உறை யுள்தனே அணுகி-கலேக்கோட்டு முனிவன் இருப்பிடத்தை அடைந்து, இணே அடி தாமரைகள் - (அவனுடைய) தாமரைமலர் போன்ற இரண்டு திருவடிகளேயும், அம் பொன் மன்னும் மணி முடி அணிந்து - அழகிய பொன்னுலாகிய, மணிகள் பதிக்கப்பெற்ற (தனது) முடியிலே சூடிக் கொண்டு (சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து), வரன் முறை செய்திட-உரிய உபசாரங்களேச் செய்ய, (முனிவன்), 'நீ இவண் வரு தற்கு ஏய்ந்தது என்னே என - நீ இங்கே வருதற்குரிய காரணம் என்ன ?' என்று கேட்க, (மன்னவன்), 'அடிகள் - சுவாமிகளே ! அடியேற்கு ஓர் வரம் அருளும் என - (தங்கள்) அடியவனுன எனக்கு ஒரு வரம் தந்தருளுவீராக' என்று வேண்ட, (முனிவன்) 'யாவது - (வரம்) யாது?' என்ருன் - என்று கேட்டான்.

தனது வேண்டுகோளே முனிவன் மறுக்காது இசைவதன் பொருட்டு, அவன் மனமகிழ உபசாரங்களேச் செய்து, 'வரம் அருள வேண்டும்' என வேண்டினன் மன்னன்.

(பி - ம்.) 1. அகன்ற பின்னர்; வடிவம்.

2. உறையுட்டனே; அடைந்து; அடியிணேத் தாமரைகள்.

3. முடிபணிந்து; முடிபுனேந்து; கடன்முறை; செய்திட வவனீ; வருதற் கொத்தது.

4. என்னவென: வரமருளெம். (63)

244. புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க
பெருந்தகைதன் புகழிற் பூத்த
அறனொன்றுந் திருமனத்தா னமரர்களுக்
கிடர்விளைக்கு மவுண ராயோர்
திறலுண்ட வடிவேலான் றசரதனென்
றுயர்கீர்த்திச் செங்கோல் வேந்தன்
விறல்கொண்ட மணிமாட வயோத்திநக
ரடைந்திவணீ மீட லென்றான்.

'புறவு ஒன்றின் பொருட்டாக-(தன்னைச் சரணமடைந்த) ஒரு புறுவைக் காக்கும் பொருட்டு, துலை புக்க-தராசுத் தட்டி (தானே) ஏறி அமர்ந்த, பெருதகை தன்-பெருமை மிக்க சிபிச் சக்கரவர்த்தியினது, புகழ் இல் பூத்த-புகழ்மிக்க குடியிலே தோன்றிய, அறன் ஒன்றும் திரு மனத்தான்-தருமம் நிலைபெற்ற மனத்தையுடையவனும், அமரர்களுக்கு இடர் விளைக்கும் - தேவர்களுக்குத் துன்பமுண்டாக்குகிற, அவுணர் ஆயோர் திறல் உண்ட வடி வேலான் - (சம்பரன் முதலிய) அசுரர்களின் வலிமையைத் தொலைத்த கூரிய வேலையுடையவனும் ஆன, தசரதன் என்ற உயர் கீர்த்தி செங்கோல் வேந்தன் - தசரதன் என்று சொல்லப்படுகிற, உயர்ந்த புகழையும் (தவறாத) செங்கோலையுமுடைய அரசனது, விறல் கொண்ட மணிமாடம் அயோத்தி நகர் நீ அடைந்து - பெருமை பொருந்திய இரத்தின மாளிகைகளையுடைய அயோத்தி நகரத்துக்குத் தேவரீர் எழுந்தருளி, இவண் மீள்தல் — இங்கே மீள வருதலே (அவ்வரம் ஆகும்);' என்றான் - என்று உரோமபதன் கூறினான்.

'வரம் யாது?' என்று கேட்ட முனிவனுக்கு, மன்னன் தசரதனுடைய பெருமை புலப்பட அதனை எடுத்துக் கூறி, 'தேவரீர் அவன் நகரத்துக்குச் சென்று மீளுதலே யான் வேண்டும் வரமாகும்' என எளிமை படக் கூறினான். சிபியின் பெருமையை எடுத்துக் கூறி, அவன் மரபிலே தோன்றியவனாதலால் தசரதனும், தன்னை அடைந்தாரைத் தப்பாது ஆதரிக்கும் தன்மையுடையவனென்றும், சம்பராசுரனைத் தொலைத்துத் தேவர்களுக்கே நாட்டை மீட்டுக் கொடுத்த பெரும் புகழும் ஆற்றலும் உடையவனென்றும், இவ்வாறு தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாதலால் அவன் பொருட்டுச் சென்றுவருதல் நன்மை பயக்கும் என முனிவன் மனங்கொள்ளும் வண்ணம் விநயமாகக் கூறினான். மேலும், அயோத்தியிற் சென்று செய்ய வேண்டுவது இன்னது என விரித்துக் கூறாது, 'சென்று வருதல்' எனச் சுருங்கக் கூறியதும் முனிவன் எளிதில் மனமியையும் பொருட்டேயாகும்.

இங்கே, தசரத சக்கரவர்த்தியும் கலைக்கோட்டு முனிவனைக் கண்டதாகவும், சாந்தையைப் பெற்ற தந்தை தசரதன் என உரோம

பதனுல் உணர்த்தப்பட்டு, முனிவனும் தசரதனுக்குத் தன் மாமனுர் என்ற முறையில் மரியாதை செய்ததாகவும் வான்மீகம் கூறும்.

சிபிச் சக்கரவர்த்தியின் பெருமை பல நூல்களிலும் கூறப்படுவ தாகும்: 719; யுத்த. 413; புறநா. 37: 5-6; சிலப். 20: 52; விக்கிரம. 11; குலாத். 17; இராசராச.6; 'மணி மாடவயோத்தி' 322.

பெருந்தகை-பண்புத்தொகை யன்மொழி,

(பி - ம்.) 1. அருளிற்பூத்த.
2. இடரிழைக்கும்; இடருழக்கும்; அவுணராஞேர்; அசுரராஞேர்; அசுர ராவோர்; அசுரர் தங்கள்; திறல்கொண்ட வடிவேலோன்.
4. மணிமாடத்து; அயோத்திதனில்; மீள்கவென்ருன்; மீள்தல் வேண்டும்; மீளல் வேண்டும்; வருதலென்ருன். (64)

245. அவ்வரந்தந் தனமினித்தேர் கொணர்தியென
வருந்தவத்தோ னருள லோடும்
வெவ்வரந்தின் றயில்படைக்குஞ் சுடர்வேலா
னடியிறைஞ்சி வேந்தர் வேந்தன்
கவ்வையொழிந் துயர்ந்தனனென் றதிர்குரற்றேர்
கொணர்ந்திதனிற் கலைவ லாளன்
செவ்விநுதற் றிருவிஞெடும் போந்தேறு
கெனவேறிச் சிறந்தான் மன்னே.

'அ வரம் தந்தனம்-(நீ கேட்ட) அந்த வரத்தைத் தந்தோம்; இனி தேர் கொணர்தி-இப்பொழுதே தேரைக் கொண்டு வா' என-என்று, அரு தவத்தோன் அருளலோடும்-அரிய தவத்தையுடைய கலைக்கோட்டு முனிவன் சொல்லியருளிய வளவிலே, வெவ் அரம் தின்று-கடிய அரத்தினுல் அராவப்பட்டு, அயில் படைக்கும்-கூர்மை பெற்றுள்ள, சுடர் வேலான் - ஒளி பொருந்திய வேலையுடைய உரோமபதன், அடி இறைஞ்சி-(முனிவனுடைய)பாதங்களை வணங்கி, 'வேந்தர் வேந்தன் கவ்வை ஒழிந்து உயர்ந்தனன் என்று-சக்கரவர்த்தி துன்பம் நீங்கி மேம்பாடுற்ருன்' என்று உட்கொண்டு, அதிர் குரல் தேர் கொணர்ந்து-அதிரும் ஒலி பொருந்திய இரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தி, 'கலைவல் ஆளன்-கலைகளில் வல்ல முனிவரே! செவ்வி நுதல் திருவிஞெடும் போந்து-அழகிய நெற்றியையுடைய, இலக்குமி போன்ற சாந்தையோடு வந்து, இதனில் ஏறுக என-இத்தேரில் ஏறு வீராக' என்று கூற, ஏறி-(முனிவன்) அவ்வாறே சாந்தையுடன் (தேரில்) ஏறி, சிறந்தான்-சிறப்பாக வீற்றிருந்தான். மன். ஓ-அசை கள். கலைவலாளன், விளி.

அரம் தின்னுதல்-அரத்தால் அராவப்படுதல். பகைவரைத் தாக்கி, அடிக்கடி மழுங்கிப் போவதனுல், அவ்வப்போது வேல் அரா வப்பெற வேண்டுவதாகிறது. தசரதன், முனிவனை அயோத்திக்கு

அழைத்தல், புத்திர காம யாகத்தின் பொருட்டே யாதலால், முனிவன் அயோத்திக்குச் செல்ல மனமியையவே, யாகம் இனிது முடிந்து சக்கரவர்த்தி புத்திரரைப் பெற்று மேன்மையடைதல் உறுதி என்ற நம்பிக்கையுடன், 'வேந்தர் வேந்தன் கவ்வையொழிந்து உயர்ந்தனன்' என இறந்த காலத்தாற் கூறினுன். 'சாந்தையை முகநலாள்' (234) என்று முன்னே கூறினுர்; இங்கே 'செவ்விநுதல் திரு' என்ருர்.

அரந்தின்றயில் படைக்கும் வேல்: ஒப்பு: 568; சீவக. 461.

(பி - ம்.) 1. மணித்தேர்; கொணர்கவென; கொணருதி யென்று: அறைதலோடும்.
2. வெவ்வரந் திண்டு; சுடர்வேலோன்: அடியிறைஞ்ச; அடியிறைஞ்சா.
3. ஒழிந்தனனென்ன; ஒழித்துயர்ந்தனனென்று; ஒளித்துயர்ந்தனனென்று: கொணர்ந்ததனிற்; கொணர்ந்தனனிக்: கலைவலாள; கலைவல்லாளன்.
4. போந்தனனே தேரேறிச்; தேரேறு கெனவேறிச்: சிவந்தான் மன்னே: போந்தேறு கெனவேறிப் போலிந்தானன்றே; பொலிந்தான் மன்னே; போந்தானன்றே.
(65)

(வேறு)

246. குனிசிலை வயவனுங் கரங்கள் கூப்பிடத்
துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர
வனிதையு மருமறை வடிவு போன்ருெளிர்
முனிவனும் பொறிமிசை நெறியை முன்னினுர்.

குனி சிலை வயவன் கரங்கள் கூப்பிட (உம்)-வளைத்த வில்லையுடைய வெற்றி வீரனுகிய உரோமபதன் கைகூப்பி வணங்கி வழியனுப்பவும், துனி அறு முனிவரர்-கோபமற்ற (சாந்தமுடைய) முனிச்சிரேட்டர்கள், தொடர்ந்து சூழ்வர-தேரைப் பின் தொடர்ந்து சூழ்ந்து வரவும், அரு மறை வடிவு போன்று ஒளிர் முனிவனும்-அரிய வேதமே உருவங்கொண்டது போன்று பிரகாசிக்கிற கலைக்கோட்டு முனிவனும், வனிதையும்-பத்தினியாகிய சாந்தையும், பொறிமிசை-இரதத்திலே (அமர்ந்து), நெறியை முன்னினுர்-(அயோத்திக்குச் செல்லும்) வழியை நோக்கிச் செல்லலானுர்கள்.

குனிசிலை-போருக்கு ஆயத்தமாக நாணேற்றி வளைக்கப்பட்ட வில். வயவனும் என்பதில் உள்ள உம்மை பிரித்துப் பின்னே கூட்டப்பட்டது. கூப்பிட: இடு, துணைவினைப் பகுதி. துனிஅறு-உலகத் துயரங்கள் அற்ற எனலும், எவரிடத்தும் வெறுப்பில்லாத எனலும் ஆம்: 'துனியில் காட்சி முனிவர்' (முருகு. 137-ந.). வனிதை-பெண்; இங்கே சாந்தையைக் குறித்தது. பொறி - இயந்திரம்; வடமொழியில் தேருக்கு உரிய பெயர்களுள் 'யந்த்ரம்' என்பதும் ஒன்று.

அருமறை வடிவுபோன் ருெளிர் முனிவன்; 243-குறிப்புக் காண்க.

(பி - ம்.) 1. அரசனும். 2. துனியிறு; முனிவர்கள்; தொழுது; சூழ்தர; பின்வர.
3. வடிவம்.
4. முனிவரும்; தேர்மிசை; முன்னிஞன்; (66)

### தேவர்களின் மகிழ்ச்சி

247. அந்தர துந்துமி முழக்கி யாய்மலர்
சிந்தினர் களித்தன ரறமுந் தேவரும்
வெந்தெழு கொடுவினை வீழ்க்கு மெய்ம்முதல்
வந்தெழ வருடரு வானென் றெண்ணியே.

(கலைக்கோட்டு முனிவன் அயோத்திக்குப் புறப்பட்டவுடன்), அறமும் தேவரும்-அறக் கடவுளும் மற்றைத் தேவர்களும், 'வெந்து எழு கொடு வினை வீழ்க்கும்-(நெருப்பைபோல்) எரிந்து மிகுகின்ற கொடிய தீவினைகளை ஒழிக்கத்தக்க, மெய் முதல் வந்து எழ-உண்மை யான பரம்பொருள் உலகத்திலே (இராமபிராஞக) வந்து அவ தரிக்க, அருள் தருவான்-(இம் முனிவன்) கருணை செய்வான்;' என்று எண்ணி - என்று நினைத்து, களித்தனர் - மகிழ்ச்சி மிக்கவர்களாய், அந்தர துந்துமி முழக்கி-தேவ துந்துபிகளை மிகவும் முழங்கச் செய்து, ஆய்மலர் சிந்தினர்-ஆய்ந்தெடுத்த கற்பகப் பூக்களையும் (மழைபோல்) தூவிஞர்கள். ஏ-ஈற்றசை.

சிறப்பிஞல், 'அறமும்' என்ற அஃறிணைச் சொல்லும் உயர் திணை முடிபு கொண்டது.

கொடு வினை-கொடிய பாவம்; அவ்வடிவு கொண்டது போன்ற அரக்கரையும் குறிக்கும். எனவே,பாவம் ஒழியுமென அறக் கடவுளும், பாவ வடிவினரான அரக்கர் ஒழிவரெனத் தேவரும் மகிழ்ந்தனர் என்க. கலைக்கோட்டு முனிவன் அயோத்தி சேர்ந்ததும், வேள்வி தப்பாது நடத்தலும், அதனுல் இராமபிரான் அவதாரம் நிகழ்தலும், அதனுல் தீவினையும் அரக்கரும் அழிதலும் உறுதி என்றெண்ணி அவர் கள் மகிழ்ந்தனர் என்க. 732-ஆம் பாடல் இங்கே ஒப்பு நோக்கற் பாலது.

(பி - ம்.) 1. துந்துபி; முழங்கி; முழங்க. 2. அறத்திற் றேவரும்.
3. வெந்தெழும்; வெந்தொழி; கொடும்பிணி; வீழ; வீட்டும்.
4. வந்தெழுந்து; அருட்டரு வானின்று; அருட்டரும் வரனென்று. (67)

### முனிவன் வரவறிந்து தசரதன் மகிழ்தல்

248. தூதுவ ரவ்வழி யயோத்தி துன்னிஞர்
மாதிரம் பொருததோண் மன்னர் மன்னன்முன்
ஓதினர் முனிவர வோத வேந்தனும்
காதலென் றளவறு கடலு ளாழ்ந்தனன்.

அவ்வழி-அப்போது, தூதுவர்-சில தூதர்கள், அயோத்தி துன்னினர்-அயோத்தியை அடைந்தவர்களாய், மாதிரம் பொருத தோள்-எல்லாத் திக்கிலும் சென்று பொருது வெற்றிகொண்ட தோள்களையுடைய, மன்னர் மன்னன் முன்-சக்கரவர்த்தியின் முன்னே சென்று, முனி வரவு ஓதினர்-கலைக்கோட்டு முனிவன் வருகையைச் சொன்னார்கள்; ஓத-(அவ்வாறு) சொன்ன வளவிலே, வேந்தனும்-சக்கரவர்த்தியும், காதல் என்ற-ஆசையாகிற, அளவு அறு கடலுள்-எல்லை யற்ற கடலிலே, ஆழ்ந்தனன்-மூழ்கினான்.

காதலென்றளவறு: தொகுத்தல்.

உரோமபத மன்னன் முன்னதாகவே அனுப்பிய சில தூதர்கள் விரைந்து சென்று, முனிவன் வருகையைத் தசரதனுக்குத் தெரிவித்தனர் என்க. தசரதன் உரோமபதனிடம் சென்றபோது, முன் அறிவிப்பு இன்மையால், ஒற்றர் மூலம் செய்தி அறிந்தான் உரோமபதன்; இங்கே, அவன், தன்னிலும் உயர்ந்த தசரதனுக்கு, அவன் எதிர்பார்த்திருந்த முனியின் வரவை, முறைமை பற்றித் தூதுவரால் முன்னதாக அறிவிக்கச் செய்தான். புத்திரரை அடைவதிலும், அதற்குக் காரணமான கலைக்கோட்டு முனிவன் வருகையிலும் தசரதனுக்கிருந்த ஆவல், இப்போது மீதூர்ந்ததனால் அதனைக் கடலாக உருவகித்து, அதற்கேற்ப அதனுள் 'ஆழ்ந்தனன்' என்றார்.

'மாதிரம் பொருத' என்பதற்கு, 'மலையை ஒத்த' என்றும், 'எமக்கு ஒப்பாகமாட்டாய் என்று மலையைத் தாக்கிய' என்றும் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். 'மாதிரம் பொருத திண்டோள் மன்ன' (209). காதலென்றளவறு கடல்: 'ஆயபே ரன்பெனு மளக்கர்' (அயோத். 151.)

(பி - ம்.) 2. பொருந்து தோள்; பொருவு தோள்; மன்னன் முன்பு.
3. முனிவர வுவந்து.
4. காதலொன்றளவறு; காதலென்றளவிலாக்; கடலுட் டாழ்ந்தனன்.
(68)

## தசரதன் முனிவனை எதிர்கொள்ளல்

249. எழுந்தனன் பொருக்கென விரத மேறினன்
பொழிந்தன மலர்மழை யாசி பூத்தன
மொழிந்தன பல்லிய முரச மார்த்தன
விழுந்தன தீவினை வேரி னோடுமே.

(முனிவன் வருகை கேட்ட தசரதன்), பொருக்கென எழுந்தனன்-விரைந்து எழுந்து, (முனிவனை எதிர்கொள்ளும் பொருட்டு), இரதம் ஏறினன் - தன் தேரில் ஏறினான்; (அப்போது), மலர் மழை பொழிந்தன-(தேவர்கள் சொரிந்த) கற்பகப் பூமாரி மிகப் பொழிந்

தது; ஆசி பூத்தன-(அந்தணர், முனிவர் முதலியோருடைய) ஆசி மொழிகள் மிக்கு எழுந்தன; பல் இயம் மொழிந்தன-பல வாத்தியங்கள் முழங்கின; முரசம் ஆர்த்தன-பேரிகைகள் ஆரவாரம் செய்தன; தீவினை வேரினோடும் விழுந்தன-பாவங்கள் அடியோடு தொலைந்தன. ஏ-ஈற்றசை.

முனிவன் வருகையில் தசரதனுக்கு இருந்த ஆர்வ மிகுதியால் உண்டான விரைவைக் குறிக்க, 'எழுந்தனன் பொருக்கென' என்று வினைமுற்றை முதலில் வைத்துக் கூறினார்; இது பேலவே பிறவற்றிலும் மகிழ்ச்சி மிகுதி முதலியவற்றைக் குறிக்க, வினைமுற்றை முன் வைத்தார். மலர் மழையின் மிகுதி பற்றிப் பன்மையாற் கூறினார்; மலர் மழை, உடன் இருந்தோர் மகிழ்ச்சி மிகுதியால் ஆயது என்றலும் ஆம். வாத்தியங்களின் ஓசையைப் பேச்சொலி போலவே 'இயம்புதல்', 'மொழிதல்' என்பன போன்ற சொற்களால் குறித்தல் மரபு; 'புகன்ற தீங்குழல்' (சீவக. 1940). நேரே காணத்தக்க நிகழ்ச்சிகளைக் கூறிய ஆசிரியர், தீவினை அழிதலையும் தேற்றம் பற்றி அவற்றுடன் வைத்து இறந்தகாலத்தாற் கூறியுள்ளார்.

எழுந்தனன்: முற்றெச்சம்.

(பி - ம்.) 2. பொழிந்தனர்; அலர்மழை. 3. மொழிந்தனர் முனிவர்கள். 4. விழுந்தது. (69)

250. பிதிர்ந்ததென் மனத்துயர்ப் பிறங்க லென்றுகொண்
டதிர்ந்தெழு முரசுடை யரசர் கோமகன்
முதிர்ந்தமா தவமுடை முனியை யன்பினோ
டெதிர்ந்தனன் யோசனை யிரண்டொ டொன்றினே.

அதிர்ந்து எழு முரசு உடை(ய) அரசர் கோமகன்-அதிர்ச்சியோடு முழங்குகின்ற பேரிகைகளையுடைய சக்கரவர்த்தியாகிய தசரதன், 'என் மனம் துயர் பிறங்கல்-எனது மனவருத்தமாகிய மலை, பிதிர்ந்தது என்று கொண்டு -(முனிவன் வருகையால்) பொடியாகி விட்டது' என்று மனத்தினுட்கொண்டு, முதிர்ந்த மா தவம்உடை(ய) முனியை-முற்றிய பெருந்தவத்தையுடைய கலைக்கோட்டு முனிவனை, அன்பினோடு-(மிக்க) அன்போடு, யோசனை இரண்டொடு ஒன்றின்-மூன்று யோசனை தூரத்திலே (சென்று), எதிர்ந்தனன்-எதிர்கொண்டான். ஏ-ஈற்றசை.

இது முதல் மூன்று கவிகள் ஒரு தொடர். அடுத்த இரண்டு கவிகளிலும் முனிவனுடைய சிறப்புக்கள் கூறப்படும்; அத்தகைய சிறப்புக்களையுடைய முனிவனை, 'எதிர்ந்தனன்' என இக்கவியில் முடிபு அமைந்துள்ளது; இவ்வாறு கூறுதல் வடமொழி வழக்கு; இவ்வமைப்பு முன்னே 185-6-ஆம் கவிகளிலும் காண்க.

தசரதனுடைய மனத்துயர் மிகப் பெரிதாதலால், 'பிறங்கல்' என உருவகித்தார்; மலை போன்ற அப்பெருந்துயரமும், கலைக் கோட்டு முனிவன் வந்து செய்யவிருக்கும் வேள்வியால் நீங்கிவிடும் என்ற நம்பிக்கையினுல், 'பிறங்கல் பிதிர்ந்தது' என்று மனத்துட் கொண்டான் தசரதன் என்முர்.

பெரியோரை நெடுந்தூரம் முன் சென்று எதிர்கொள்ளுதல் முறை; முன்னே உரோமபதன் கலைக்கோட்டுமுனிவனை எதிர்கொண்ட விடத்து இரண்டு யோசனை சென்முன் (228) எனவும், அவன் தசரதனை யெதிர்கொண்ட விடத்து ஒரு யோசனை சென்முன் (238) எனவும் கூறினமை காண்க.

(பி - ம்.) 1. பிரிந்ததெம்; மனத்துயர்; பிறங்க.
2. எதிர்ந்தெழு; களியுடை; களிப்புடை; கடலுடை: அரசகோமகன்.
3. முனியைக் கண்களால்.
4. இயோசனை; ஒசனை: இரண்டொன் றென்றினே. (70)

251. நற்றவ மனைத்துமோர் நவையி லாவுருப்
பெற்றிவ ணடைந்தெனப் பிறங்கு வான்றனைச்
சுற்றிய சீரையு முழையின் றேற்றமு
முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை,

'நல் தவம் அனைத்தும்-நல்ல தவம் எல்லாம், நவை இலா ஓர் உருபெற்று-குற்றமில்லாத ஒருவடிவம் பெற்று, இவண் அடைந்த(து) என-இங்கே வந்துள்ளது என்று சொல்லும்படி, பிறங்குவான் தனை-விளங்குபவனும், சுற்றிய சீரையும்-அரையிலே உடுத்த மரவுரியும், உழையின் தோற்றமும்- மானின் தோற்றமும், முற்றுற பொலிதரு-நன்ருக விளங்குகின்ற, மூர்த்தியான் தனை-வடிவமுடையவனும், (அடுத்த கவியோடு தொடரும்).

அடைந்தென: தொகுத்தல் பிறங்குவான்றனை, மூர்த்தியான் றனை: இரண்டிடத்தும் தன் சாரியை.

தவம் ஓர் உருக்கொண்டதெனல்: 639. கலைக்கோட்டு முனி வன் தலையிலே மானின் கொம்பு உடைமையாலும், உடலின்மேல் மான் தோல்(கிருஷ்ணஜினம்) உடைமையாலும், 'உழையின் தோற் றம் முற்றுறப் பொலிதல் உடையவன். மூர்த்தியான்: சுந்தர. 587.

(பி - ம்.) 2. இவண் வந்தெனப். 3. சீரமும்; முனியின்.
4. உறுதியர்ன்றனை. (71)

252. அண்டர்க டுயரமு மரக்க ராற்றலும்
விண்டிடப் பொலிதரு வினைவ லாளனைக்
குண்டிகை குடையொடுங் குலவு நூன்முறைத்
தண்டொடும் பொலிதரு தடக்கை யான்றனை,

அண்டர்கள் துயரமும்-தேவர்களுடைய வருத்தமும், அரக்கர் ஆற்றலும் - இராக்கதருடைய வலிமையும், விண்டிட-கெடும்படி, பொலிதரு வினை வல்லாளனை-விளங்குகின்ற (வேள்வியாகிய) செயலில் வல்லவனும், நூல் முறை குலவு-நூல்களில் விதித்தபடி அமைந்த, குண்டிகை, குடையொடும்-கமண்டலம் குடை ஆகியவற்றுடனும், தண்டொடும்-தண்டத்துடனும், பொலிதரு-விளங்குகின்ற, தட கையான் தனை-நீண்ட கைகளையுடையவனும் ஆன கலைக்கோட்டு முனிவனை; 'எதிர்ந்தனன்' (250) என்பதனோடு முடிக்க.

விள்ளுதல் - விண்டு போதல்: தன்மை கெட்டழிதல். கலைக் கோட்டுமுனிவன் செய்யும் வேள்வியால் இராமாவதாரம் நேர்தலும், அதனால் அரக்கர் ஆற்றல் தொலைதலும், அதுதொலையவே தேவர்கள் துயரமும் தீர்தலும் ஆகும் என்பது பட, 'அண்டர்கள் துயரமும்...... வினைவலாளனை' என்றார். தண்டம், கமண்டலம், குடை முதலியன அந்தணர்க்குரியவை; 'நூலே கரகம் முக்கோல் மணையே, ஆயுங் காலை அந்தணர்க்குரிய' (தொல். மரபு. 70); 'எறித்தரு கதிர்தாங்கி யேந்திய குடைநீழல், உறித்தாழ்ந்த கரகமு முரைசான்ற முக்கோலும், நெறிப்படச் சுவலசைஇ...அந்தணீர்'! (கலி. 9: 1—4).

(பி - ம்.) 2. பொலிதரும் வினைவல்லாளனைக்.
3. குண்டிகைக் குடையொடும்; குலாவு; நூன்முறை; நூன்மறைத்; நான்மறைத்.
4. தண்டொடு; தண்டமும்; பொலிதரும்; தடக்கையாளனை. (72)

எதிர்கொண்ட தசரதனை முனிவன் ஆசீர்வதித்தல்

253. இழிந்துபோ யிரதமாண் டிணைகொ டாண்மலர்
விழுந்தனன் வேந்தர்தம் வேந்தன் மேன்மையால்
மொழிந்தன னாசிகண் முதிய நான்மறைக்
கொழுந்துமேற் படர்தரக் கொழுகொம் பாயினான்.

வேந்தர்தம் வேந்தன்-சக்கரவர்த்தியாகிய தசரதன், ஆண்டு-(முனிவனைக் கண்ணுற்ற) அப்போது, இரதம் இழிந்து போய்-தேரினின்றுங் கீழே இறங்கி நடந்துபோய், இணைகொள் தாள் மலர் விழுந்தனன்-(முனிவனுடைய) இணைந்த திருவடித் தாமரைகளில் விழுந்து நமஸ்கரித்தான்;முதிய-பழமையான, நால்மறை கொழுந்து-நான்கு வேதங்களாகிய (கொடியின்) கொழுந்து, மேல் படர்தர-தன் மேலே படரும்படி, கொழுகொம்பு ஆயினான்-கொழுகொம்புபோல் அமைந்த முனிவன், மேன்மையால்-சிறப்பாக, ஆசிகள் மொழிந்தனன்-ஆசீர்வாதங்களைக் கூறினான்.

வேந்தர்தம் வேந்தன் தாள்மலர் விழுந்தனன்; (அவனுக்கு), கொழுகொம்பாயினான் ஆசிகள் மொழிந்தனன் என முடிபுகொள்க. 'நான்மறைக் கொழுந்து மேல்படர்தரக் கொழுகொம்பாயினான்

என்றது, 'வேதங்களில் வல்லவனாகி அவற்றைப்பாதுகாப்பவன்' என்ற வாரும்.

(பி - ம்.) 1. இரதமாடு: இணைக்கொடாள்.
2. வேந்தை: மெய்ம்மையால்; நீர்மையால்; நீதியான். 3. முதிர.
4. கொழுந்தினம்; படர்தரு; படர்தரும்; கொள்கொம்பு; கொளு கொம்பு. (73)

## தசரதன் முனிவனுடன் அயோத்தியுட் புகுதல்

254. அயல்வரு முனிவரு மாசி கூறிடப்
புயல்பொரு தடக்கையாற் றொழுது பொங்குநீர்க்
கயல்பொரு விழியொடுங் கலைவ லாளனை
இயல்பொடு கொணர்ந்தன னிரத மேற்றியே.

(சக்கரவர்த்தி), அயல் வரும் முனிவரும்-(கலைக்கோட்டு முனிவனைச் சூழ்ந்து) உடன் வருகின்ற முனிவர்களும், ஆசிகூறிட-(தன்னை) ஆசீர்வதிக்க, புயல் பொரு தட கையால்-மேகம் போன்ற கொடையுடைய தன நீண்ட கைகளால், தொழுது-(அவர்களை) அஞ்சலி செய்து, பொங்கும் நீர்-இன்பக் கண்ணீர் நிறைந்த, கயல் பொரு விழியொடும்-கயல் மீன் போன்ற கண்களையுடைய சாந்தாதேவியோடுங் கூட, கலைவலாளனை-கலைகளில் வல்ல முனிவனை, இரதம் ஏற்றி-தன் தேரில் ஏறி வீற்றிருக்கச்செய்து, இயல்பொடு-முறைப்படி (மரியாதையுடன்), கொணர்ந்தனன்-(தன் நகரத்துக்கு) அழைத்து வந்தான்.

எழுவாய் வருவித்துக்கொள்ளப்பட்டது. உடன் வந்த முனிவர்கள் எல்லோருடைய ஆசீர்வாதத்தையும் பெறும் வண்ணம், எல்லோரையுங் கைகூப்பி அஞ்சலி செய்தான் மன்னன். இக்காட்சிகளைக் கண்ட சாந்தை, ஆனந்த பாஷ்பம் நிறைந்த கண்களையுடையவளானாள். தசரதன் பெற்றெடுத்து, உரோமபதனுக்குச் சுவீகாரமாக அளிக்கப்பெற்ற தொடர்பாலும் அவள் இன்பக் கண்ணீர் பெருகப் பெற்றாள் எனலாம். 'பொங்கு நீர்க்கயல் பொருவிழி'-மிக்க நீரிலே வாழ்கின்ற (வளமான) கயல் மீன் போலும் கண்களையுடையாள் எனவும் பொருள் கூறலாம்.

சக்கரவர்த்தி, சாந்தையுடன் கூடிய முனிவனைத் தன் தேரிலேற்றிச் சென்றமை: 240-ஆம் பாடல் விசேடக் குறிப்புப் பார்க்க. 'புயல் பொரு தடக்கை' கிட்கிந். 678.

கயல் பொரு விழி, அன்மொழித் தொகை; பொரு, உவமவுருபு.

(பி - ம்.) 2. புயல்பொழி; தடக்கையான்; தராதிபன்; பெருகப் பொங்கி நீர்க்;
3. கயல்பொரும் விழியொடு; கயல் பொருமிருவிழிக் கற்பினாளொடும்.
4. இயல்பொடும்; இயலொடு; முனிவனை; இரதமேறியே. (74)

255. அடிகுரன் முரசதி ரயோத்தி மாநகர்
முடியுடை வேந்தனம் முனிவ னேடுமோர்
கடிகையி னடைந்தனன் கமல வாண்முக
வடிவுடை மடந்தையர் வாழ்த்தெ டுப்பவே.

முடி உடை (ய) வேந்தன் - கிரீடாதிபதியாகிய தசரதன், அ முனிவனேடும்-அந்தக் கலைக்கோட்டு முனிவனுடனே (போய்), கமலம் வாள் முகம் வடிவு உடை (ய)-தாமரை மலர் போன்ற, ஒளி பொருந் திய முகத்தையும் அழகையும் உடைய, மடந்தையர் - மாதர்கள், வாழ்த்து எடுப்ப - பல்லாண்டு பாட, அடி குரல் முரசு அதிர் அயோத்தி மாநகர் - அடிக்கப்படுகிற பேரோசையுடைய பேரிகை கள் முழங்குகின்ற அயோத்தியாகிய சிறந்த நகரத்தை, ஓர் கடிகை யின்-ஒருநாழிகைப் பொழுதிலே, அடைந்தனன்—. ஏ-ஈற்றசை.

வேந்தன், முனிவனேடும், மடந்தையர் வாழ்த்தெடுப்ப, அயோத்தி மாநகர் ஓர் கடிகையின் அடைந்தனன் எனக் கூட்டுக. ஓர் கடிகையின் அடைந்தனன் என்றது, விரைவு குறித்தது. மடந்தையர் பல்லாண்டு பாடி வாழ்த்தல்: 237-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. அடிகுரை; இடிகுரல்: அயோத்தி யொண்ணகர்; அயோத்தி யாளுடை.
3. கடிகையினடந்தனன்; வான்முக.
4. மங்கையர்; வாழ்த்தி யேத்தவே. (75)

தசரதன் கலைக்கோட்டு முனிவனை உபசரித்தல்

256. கசட்டுறு வினைத்தொழிற் கள்வ ராயுழல்
அசட்டர்க ளைவரை யறுவ ராக்கிய
வசிட்டனு மருமறை வழக்கு நீங்கலா
விசிட்டரும் வேத்தவை பொலிய மேவினர்.

கசடு உறு வினை தொழில்-குற்றம்மிக்க பாவச் செயல்களுக்குக் காரணமான, கள்வர் ஆய் உழல் - திருடர்களாகத் திரிகின்ற, அசட்டர்கள் ஐவரை - நல்ல திறமையில்லாத ஐந்து பேர்களை, (பஞ்சேந்திரியங்களை), அறுவர் ஆக்கிய-செயலற்றவர்களாக்கிய, (அடக்கிய), வசிட்டனும் - வசிட்ட முனிவனும், அருமறை வழக்கு நீங்கலா-அரிய வேதநெறிகளிலே வழுவாத, விசிட்டரும்-சிறந்த பல அந்தணர்களும், வேந்து அவை பொலிய-இராச சபை (மேன்மையாக) விளங்கும்படி, மேவினர் - வந்து அமர்ந்திருந்தனர்.

கசடு-குற்றம்; அசடு-திறமையின்மை. இவ்விரு சொற்களும் ஓசையின்பம் நோக்கி, கசட்டு, அசட்டு என விகாரப்பட்டன.

இந்திரியங்கள், பாவச்செயல்களுக்குக் காரணமாய், மனத்தை ஏமாற்றிப் பல தீய வழிகளிலே செலுத்தலால், 'கள்வர்' என்றார். அறுவர்=அறுபவர்; செயலற்றவர். இந்திரியங்களைச் செயலற்றன

வாக்குதல்=அடக்குதல். ஐவர் - தொகைக் குறிப்பு; இழிவு பற்றி அஃறிணையை உயர்திணையாகக் கூறினார். ஐவர், அறுவர்; ஒரு நயம்: விசிஷ்டர்=விசேஷ சிஷ்டர் - சிறந்த ஒழுக்கமுடையோர்.

கலைக் கோட்டு முனிவன் வருகையை அறிந்த அரசவைக்கு உரியோர் அனைவரும் அங்கு வந்து கூடினர்; அப்போது சக்கரவர்த்தி கலைக்கோட்டு முனிவனை அங்கு அழைத்து வந்து உயர்ந்த ஆசனத்தில் அமர்த்தி உபசரித்தான்; உபசரித்தமை மேல் இரண்டு கவிகளில் கூறப்படும்.

அசட்டர்: 'அசட்டுருக்கள்' (திருப்புகழ். 'குறித்த மணிப்'); 'சளத்திற் பிணிப்பட் டசட்டுக்ரியைக்குள்' (கந்தரலங். 7.); ஐவர்- பஞ்சேந்திரியங்கள்; 385.

கசட்டுறுவினை - தீயவினை; அசட்டர் - பொல்லாதவர்; விசிட்டர்-பெரியோர். (பழையவுரை).

(பி - ம்.) 1. கசட்டறு. 2. அறவ ராக்கிய; அகத் தடக்கிய; அகத்தடைத்துள. 3. அருந்தவ: வழக்க நீங்கலா; வழக்கை நீங்கலா; வடிவு போன்றொளிர். 4. விசிட்டனும்: வேத்தவைப்; வேந்தரும்; விதியின்: மேயினார்; மேவினான்.

(76)

257. மாமணி மண்டப மன்னி மாசறு
தூமணித் தவிசிடைச் சுருதி யேநிகர்
கோமுனிக் கரசனை யிருத்திக் கொள்கடன்
ஏமுறத் திருத்திவே றினைய செப்பினான்.

மா மணி மண்டபம் மன்னி - (சக்கரவர்த்தி கலைக்கோட்டு முனிவனுடன்) சிறந்த மணிகள் இழைத்த அத்தாணி மண்டபத்திலே வந்து, சுருதியே நிகர் - வேதத்தையே ஒத்த (வேதமே உருப்பெற்றது போன்ற), கோ முனிக்கு அரசனை-தலைமையுடைய முனிச்சிரேட்டனாகிய கலைக்கோட்டு முனிவனை, மாசு அறு தூ மணி தவிசு இடை இருத்தி - குற்றமற்ற தூய மணிகள் பதித்த ஆசனத்திலே வீற்றிருக்கச் செய்து, கொள்கடன் - முனிவன் ஏற்றுக் கொள்ளுதற்குரிய பல உபசாரங்களை, ஏம் உற திருத்தி - மனமகிழும்படி திருத்தமாகச் செய்து, வேறு-பின்பு, இனைய செப்பினான்-பின் வருபவற்றைச் சொன்னான். சொன்னவை-அடுத்த கவியிற் காண்க.

எழுவாய் வருவிக்கப்பெற்றது. மூன்றும் அடியில் உள்ள 'கோ' என்பதனை எழுவாயாக்கிக் கூறுவாரும் உளர். தவிசிடை: இடை, ஏழாம் வேற்றுமையுருபு. ஏம் - ஏமம் என்பதன் விகாரம்; ஏமம் - மகிழ்ச்சி. சுருதி=ச்ருதி: எழுதப் படாததாய், வழிவழிக் கேள்வியாலேயே வருவது என்ற காரணப் பொருளுடைய வடசொல்.

'சுருதியே நிகர் கோமுனிக்கரசன்' : 243-விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. மன்னு. 2. தவிசிடை. 3. கோமுனியரசனை.
4. ஏமுதற் றிருத்திமற் றினைய கூறினன். (77)

258. சான்றவர் சான்றவ தரும மாதவம்
போன்றொளிர் புனிதநின் னருளிற் பூத்தவென்
ஆன்றதொல் குலமினி யரசின் வைகுமால்
யான்றவ முடைமையு மிழப்பின் றுமரோ.

'சான்றவர் சான்றவ-(அறிவு ஒழுக்கங்களில் மேம்பட்ட) பெரியோர்க்கும் பெரியவரே! தருமம் மாதவம் போன்று ஒளிர் புனித - தருமத்தையும் மிக்க தவத்தையும் போலப் பிரகாசிக்கும் தூயவரே! நின் அருளின் பூத்த - உமது அருளால் (இப்போது புதிய) விளக்கம் பெற்றுள்ள, என் ஆன்ற தொல் குலம்-எனது மேலான பழைய குலம், இனி அரசின் வைகும்-இனி அரசுடையதாக இருக்கும்; யான் தவம் உடைமையும்-நான் (முன் செய்த) தவம் உடையவனாகும் தன்மையையும், இழப்பு இன்று ஆம்-இழத்தல் இல்லையாகும்'. ஆல், அரோ-அசைகள்.

'எனக்குப் பின் அரசாள்வதற்குரிய சந்ததி யில்லாமையால் இதுவரை மிகவும் வருந்தினேன்; அதன் பொருட்டு நான் செய்த தானமும் தவமும் இதுவரை பலனளிக்க வில்லை; நான் முன் செய்த தவப்பயனால் நீர் இங்கே எழுந்தருளப் பெற்றேன்; இனி உம்மால் நான் சந்ததி உடையவனாவேன்; அதனால் அரசும் தொடர்பு அறாது நிலைபெறும்' என்பது கூறியவாறும்.

மிகப் பழங்காலமாக என் குலத்தில் தொடர்ந்து வந்துள்ள அரசுரிமை எனக்குப் பின் தொடர்பற்றுப் போவதனால் குலத்திற்கு வரும் இழுக்கு, உம்மால் நீங்கப்பெறும் என்பான், 'நின் அருளின்...... அரசின் வைகும்' என்றும், 'இம்மையில் இதுவரை நான் செய்த தானமும் தவமும் பயனளிக்கவில்லை; முன் செய்த தவத்தினாலேயே தேவரீர் இங்கு எழுந்தருளப் பெற்றேன்; இனி உம்மால் என் குறை தீர்தலும் உறுதி' என்பதுபட, 'யான் தவமுடைமையும் இழப்பின்றும்' என்றும் கூறினான்.

'எற்பின் வையகம் மறுகுறு மென்பதோர் மறுக்கமுண்டு' என முன்னே, (183) கூறிய மன்னன், இப்போது அது நீங்கப்பெற்று, 'என் ஆன்ற தொல்குலம் இனி அரசின் வைகும்' என மகிழ்ச்சியோடு கூறினான்.

(பி - ம்.) 1. சான்றவத்; சான்றநல்.
2. புனிதனின்; புனிதனல். 3. குலமணி; குலமினிது.
4. இழப்பன்று; அழிப்பின்று; இழப்பின்றுமென்றான். (78)

## கலைக்கோட்டு முனிவன் கூறல்

259. என்னலு முனிவர னினிது நோக்குறு
மன்னவர் மன்னகேள் வசிட்ட னென்னுமோர்
நன்னெடுந் தவன்றுணை நவையில் செய்கைய
நின்னையிவ் வுலகினி னிருபர் நேர்வரே !

என்னலும்-என்று (மேற்கூறியவாறு) சக்கரவர்த்தி சொன்ன வளவில், முனிவரன்-கலைக்கோட்டு முனிவன், இனிது நோக்குறு-(மன்னனை) இனிதாக(மனங்குளிர)ப் பார்த்து, 'மன்னவர் மன்ன-அரசர்க்கரசனே! கேள்-கேட்பாயாக; வசிட்டன் என்னும்-வசிட்டன் என்று சொல்லப்படுகிற, ஓர் நல் நெடு தவன் துணை-ஒப்பற்ற நல்ல பெரிய தவத்தையுடயவனது துணையோடு, நவை இல் செய்கைய நின்னை-குற்றமற்ற செய்கைகளையுமுடைய உனக்கு, இஉலகில் நிருபர் நேர்வரே - இவ்வுலகத்திலுள்ள மற்ற அரசர் எவரும் ஒப்பாவாரோ!' (ஆகார்).

இதுவும் அடுத்த கவியும் ஒரு தொடர்.

'வசிட்ட முனிவரைக் குல குருவாகவும் புரோகிதராகவும் பெற்றுள்ளமையே மிகச் சிறப்புத் தருவது; நீயும் பிழைபடாத நற்செயல்களையுடையவன்; எனவே உனக்கொப்பான அரசர் எவரும் இவ்வுலகத்தில் இல்லை' என்று முனிவன் மன்னனைப் புகழ்ந்து கூறினான். இதனால் வசிட்டருடைய மேம்பாடும் கூறியதாயிற்று.

வசிட்டன் துணைச் சிறப்பு: 182-பார்க்க.

நோக்குறு-செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; நோக்கி என்பது பொருள். நோக்குறு: உறு-துணை வினைப்பகுதி.

(பி - ம்.) 1. என்றலும்: முனியவன்: இனிதினோக்குறு; இனிது நோக்குற; இனிதினோக்கியே; இனிது நோக்குறும்.
2. மன்னவர் மன்னவ: வசிட்ட னென்றெனும்; வசிட்டனென்றொரு; வசிட்டனேயெனும்; வசிட்டன்றானெனும்; வசிட்டனென்றநும்.
3. நவையில் செய்கையால்; செய்கையாய்; செய்கைநீ; செய்கையாம்.
4. உலகிடை; உலகுடை. (79)

260. என்றன பற்பல வினிய கூறிநல்
குன்றுறழ் வரிசிலைக் குவவுத் தோளினாய்
நன்றிகொ ளரிமக நடத்த வெண்ணியோ
இன்றெனை யழைத்ததிங் கியம்பு வாயென்றான்.

என்ற அன-என்ற அவை போன்ற, பற்பல இனிய கூறி-பலவாகிய இனிய சொற்களை (புகழுரைகளை)ச் சொல்லி, 'வரிசிலை-கட்டமைந்த வில்லை யேந்திய, நல் குன்று உறழ் குவவு தோளினாய்-நல்ல மலை போன்ற திரண்ட தோள்களையுடைய அரசே!, இன்று எனை இங்கு

அழைத்தது-(நீ) இன்று என்னை இங்கே வரவழைத்தது, நன்றிகொள்-நன்மையைக் கொண்ட, அரி மகம் நடத்த எண்ணியோ-அசுவமேதம் செய்ய நினைத்தோ? இயம்புவாய்-சொல்வாயாக;' என்றான்-என்று (முனிவன்) கூறினான்.

என்றன-விகாரம். இனிய-வினையாலணையும் பெயர்.

அரி-குதிரை; அரிமகம்-அசுவமேதம்.

தசரதன் அசுவமேதம் செய்யக் கருதியதை யறிந்த முனிவன் 'அதன் பொருட்டாகவே இங்கு என்னை அழைத்தாயோ? சொல்வாயாக' என்றான். தசரதன், கலைக்கோட்டு முனியைக்கொண்டு அசுவமேதம் செய்வித்து, அதன் இறுதியில் புத்திரகாமேட்டியும் செய்வித்தான் என்பது வான்மீகம்.

(பி-ம்.) 1. என்றனன்; என்றவன்; என்றிவை; என்றின; பலபல; பலப்பல இனிமை; இனிது; கூறினன்; கூறியே.
2. குன்றுள; குலவுத். 3. அருமகம்; அயமகம்; மாமகம்; நடக்க.
4. இன்றெமை; அன்றெனை, என்றனை. (80)

சில பிரதிகளில் இதன்பின் கீழ்க்காணும் ஒரு பாடலும், அதனிறுதியில் கோட்டு முனி படலம் முற்றும்' என்ற தொடரும் காணப்படுகின்றன.

எனக்கலை மாமுகச் சிருங்க னிவ்வுரை
தனைச்சொலத் தரணிபர்க் கரசன் முன்மகிழ்ந்
தனைத்துல குயிரொடு மறங்க ளுய்யத்தன்
மனத்துய ரகன்றிட வணங்கிக் கூறுவான்.

### தசரதன் கூற்று

261. உலப்பில்பல் லாண்டெலா முறுக ணின்றியே
தலப்பொறை யாற்றினேன் றனயர் வந்திலர்
அலப்புநீ ருடுத்தபா ரளிக்கு மைந்தரை
நலப்புகழ் பெறவினி நல்க வேண்டுமால்.

'உலப்பு இல் பல் ஆண்டு எலாம்-முடிவில்லாத மிகப்பல ஆண்டுகளாக, உறுகண் இன்றி-யாதொரு துன்பமும் நேராதபடி, தலம் பொறை ஆற்றினேன்-நாடாளும் பொறுப்பை (நன்கு) செய்து வந்தேன்; (ஆயினும்), தனயர் வந்திலர்-(எனக்குப்பின் அரசைத் தாங்குதற்குரிய)புத்திரர் (இதுவரை) உண்டாயினரில்லை; (ஆதலால்), நலம் புகழ் பெற-சிறந்த புகழைப் பெறும் வகையில், அலம்பு நீர் உடுத்த பார் அளிக்கும்-அலைகின்ற கடல் சூழ்ந்த இவ்வுலகைப் பாதுகாக்கத்தக்க, மைந்தரை-ஆற்றலுடைய புத்திரர்களை, (நான் அடையும் வண்ணம்), இனி நல்க வேண்டும்-இப்போது (தேவரீர்) அருள் செய்தல் வேண்டும். ஏ, ஆல்-அசை.

முன்னே வசிட்ட முனிவரிடம் தன் குறையைக் கூறியது போலவே இங்கும் கூறுகின்றான் தசரதன். 'என்னை அழைத்தது அசுவமேதம் செய்தற் பொருட்டோ?' என்று வினவிய கலைக்கோட்டு முனிவனுக்கு விடையாக, 'அசுவமேதம் செய்வதினும், புத்திரப்பேறே இப்போது எனக்கு முதன்மையாக வேண்டுவது' என்ற தன் கருத்தை வெளிப்படுத்தினான்.

அலப்பு - வலித்தல் விகாரம். அலப்புநீர்-வினைத்தொகை யன்மொழி. அலம்புதல்-ஆரவாரித்தலும் ஆம்.

(பி - ம்.) 1. உலப்பில யாண்டெலாம்: உலைப்பில்; ஒறுக்கலின்றியே.
2. தலைப்பொறை. 3. அலைப்புநீர்; வலப்புநீர்; மைந்தர்கள்.
4. பெறவினி; நல்கல். (81)

262. என்றலு மரசநீ யிரங்க லிவ்வுல
கொன்றுமோ வுலகமீ ரேழு மோம்பிடும்
வன்றிறன் மைந்தரை யளிக்கு மாமகம்
இன்றுநீ யியற்றுதற் கெழுக வீண்டென்றான்.

என்றலும்-என்று (சக்கரவர்த்தி) கூறியவுடன், (கலைக்கோட்டு முனிவன் அவனைப் பார்த்து), 'அரச-அரசனே! நீ இரங்கல்-நீ வருந்தாதே; இல்வுலகு ஒன்றுமோ-இந்தப் பூவுலகம் மட்டுமா? உலகம் ஈரேழும்-பதினான்கு உலகங்களையும், ஓம்பிடும்-பாதுகாக்க வல்ல, வல் திறல் மைந்தரை அளிக்கும்-மிக்க ஆற்றலையுடைய புதல் வரைக் கொடுக்கவல்ல, மா மகம்-அசுவமேதத்தை, இன்று நீஇயற்று தற்கு-இன்றே நீ செய்வதற்கு, ஈண்டு எழுக-(வேண்டுவனவற்றை) விரைந்து செய்யத் தொடங்குக; என்றான்—.

மா-குதிரை; மா மகம்-அசுவமேதம். மா மகம் என்பதற்கு, சிறந்த யாகம் எனப் பொதுப்படக் கூறுதலும் உண்டு; மேலே, அசுவ மேதம் நடத்தியதாக (272) வருதலின் இங்கே இவ்வாறு கூறப் பட்டது.

உலக மீரேழும் ஓம்பிடும் மைந்தரை யளிக்கும் மகம்: 209, 729.

(பி - ம்.) 1. அரசனி; 2. ஒன்றுமோர்: புவனமீரேழும்; ஓம்பிடு.
3. வன்றிறற் புதல்வரை; வழங்கு. 4. இன்றுநீர்; புரிவதற்கு. (82)

263. ஆயதற் குரியன கலப்பை யாவையும்
ஏயெனக் கொணர்ந்தனர் நிருபர்க் கேந்தலும்
தூயநற் புனல்படீஇச் சுருதி நூன்முறை
சாய்வறத் திருத்திய சாலை புக்கனன்.

ஆயதற்கு உரியன-அவ்வேள்விக்கு உரியனவான, கலப்பை யாவையும்-உபகரணங்கள் எல்லாவற்றையும், ஏயென கொணர்ந்

தனர்-(அரசன் கட்டளையால் ஏவலர்) விரைவாகக் கொண்டு வந்தனர்; நிருபர்க்கு ஏந்தலும்-அரசரிற் சிறந்த தசரத மன்னனும், தூய நல்புனல் படீஇ-தூய்மையான நல்ல (சரயூ நதியின்) நீரிலே முழுகி, சுருதி நூல் முறை-வேத விதிப்படி, சாய்வு அற திருத்திய-குற்றமின்றித் திருத்தமாக அமைக்கப்பெற்ற, சாலை-யாக சாலையினுள், புக்கனன்-போனான்.

கலைக்கோட்டு முனிவன், 'வேள்விக்கு இப்போதே முயலுக' என்று கூறியவுடன், முன்னமே முறைப்படி அமைக்கப் பெற்றிருந்த யாகசாலையில், வேள்விக்குரிய பொருள்களையெல்லாம் மன்னவன் கட்டளையால் ஏவலர் கொணர்ந்து நிரப்ப, மன்னவனும் முறைப்படி நீராடித் தூய்மையுடன் யாகசாலையுள் புகுந்தனன் என்க.

ஆய அதற்கு என்பது தொக்கது. உரியன-வினையாலணையும் பெயர். ஏயென-விரைவுக் குறிப்புணர்த்துவது. 'கொணர்ந்தனர்' என்றமையால், 'மன்னவன் கட்டளைப்படி, ஏவலர்' என்பன வருவித்து உரைக்கப்பட்டன. ஏந்தல்-ஆண்பாற் சிறப்புப் பெயர். படீஇ: சொல்லிசையளபெடை; படிந்து - முழுகி.

கலப்பை-உபகரணப் பொருள்கள்: கிட்கிந். 528.

(பி - ம்.) 2. கொணர்ந்தன; கொணர்ந்தனன்; நிருபர்க்கேந்தலத்; நிருபரேந்தலும்.
4. சாய்வற நிறுத்திய; திருத்தியே; திருத்தி நற்; திருத்து நற்; சாலை துன்னினன்; துன்னினர்; சார்ந்தனன். (63)

### வேள்வியின் முடிவில் விண்ணவர் கூடல்

264. முழங்கழன் மும்மையு முடுகி யாகுதி
வழங்கியே யீரறு திங்கள் வாய்த்தபின்
தழங்கின துந்துமி தாவில் வானகம்
விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே.

(மேற்கூறிய வேள்விச் சாலையிலே, கலைக்கோட்டு முனிவனும் வசிட்டன் முதலியோரும்), முழங்கு அழல் மும்மையும் முடுகி-இரைந்தெழுகின்ற மூவகைத் தீக்களையும் விரைவில் மூட்டி, ஆகுதி வழங்கி-(முறைப்படி மந்திரங்களுடன்) ஆகுதிகளைச் செய்துவர, ஈர் அறு திங்கள் வாய்த்த பின்-(இவ்வாறு) பன்னிரண்டு மாதங்கள் கழிந்த பின்பு, (ஒருநாள்), துந்துமி தழங்கின-தேவ துந்துபிகள் முழங்கின; விண்ணவர்-தேவர்கள், தா இல் வான்-களங்கமில்லாத (நிர்மலமான) ஆகாயத்தை, வெளி இன்று என்ன-வெற்றிடம் சிறிதும் இல்லை என்னும்படி, விழுங்கினர்-மறைத்துக்கொண்டு கூடினர்.

வழங்கியே: ஏ-இசை நிறை; என்னவே-ஏ-ஈற்றசை. வழங்கி-வழங்க; எச்சத்திரிபு. மும்மையும்-முற்றும்மை.

தீக்கள் மூன்றுவன: ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணுக்கினி என்பன. இப்பகுப்பு, குண்டத்தின் அமைப்பு வேறுபாடு, மந்திர பேதம், செயல் வேற்றுமை பற்றி ஆகியது. 'மும்மை' என்பது எண் குறித்து நின்றது. ஆஹுதி-வடசொல்; தமிழில் ஆவுதியென வும் வழங்கும்; மந்திரங்களுடன் ஓமத் தீயில் இடும் நெய் முதலியன. அசுவமேதம், பன்னிரண்டு மாதகாலம் செய்யப்படுவதென்பர். 'ஒரு வருடகாலம் பூமியை வலம் வரும்படி யாகக்குதிரையை அனுப்பினர்' என்பது வான்மீகம். வேள்வியின் முடிவிலே தேவர்கள் தத்தமக் குரிய அவிர்ப்பாகத்தைப் பெறும் பொருட்டுக் கூடினர் என்க.

விழுங்குதல்-மறைத்தல்; அவிர்ப்பாகத்தை விழுங்கினர் என்ற குறிப்பும் பெறப்படும்.

அழல் மும்மை: 'மூன்றுவகைக் குறித்த முத்தீ'; நாற்சதுரமும், முச்சதுரமும், வில் வடிவுமாகிய மூன்று வகையைக் கருதின ஆகவனீயம், தக்கிணுக்கினி, காருகபத்தியம் என்னும் மூன்று தீ' (முருகு. 181-ந). 'தீ மூன்றுவன, ஒன்று வேதத்தை வழங்கவும், ஒன்று தேவர் கட்குத் தட்சிணை கொடுக்கவும், ஒன்று பூலோகத்தை ரட்சை பண்ண வும் இவ்வாறுய முத்தீ' (ஷி. வேறுரை).

(பி - ம்.) 1. முழங்கனல். 2. வாய்ந்தபின்; மாய்ந்தபின்.
3. தழங்கிய; தழங்குறு; முழங்கத்தாவில் வான்; முழங்கித் தாவிவான்.
4. விழுங்கின; விளங்கின; ஒளியின் றென்னவே; ஒளிநின் றென்னவே. (84)

புத்திரகாம யாகம்

265. முகமல ரொளிர்தர மொய்த்து வானுளோர்
தொகைவிரை நறுமலர் தூவி யார்த்தெழத்
தகவுடை முனியுமத் தழலி னுப்பணே
மகவரு ளாகுதி வழங்கி னுனரோ.

வான் உளோர்-தேவர்கள், முகம் மலர் ஒளிர்தர-தங்கள் முக மாகிய தாமரை மலர்கள் (மகிழ்ச்சியால்) விளங்க, மொய்த்து-(ஆகா யத்திலே) நெருங்கி, தொகை விரை நறு மலர் தூவி-தொகுதியான நறுமணம் பொருந்திய (கற்பகப்) பூக்களைச் சொரிந்து, ஆர்த்து எழ-ஆரவாரித்துத் துள்ள, தகவு உடை முனியும்-எல்லாத் தகுதிகளையும் உடைய கலைக்கோட்டு முனிவனும், அ தழலின் நாப்பண்-அந்த வேள் வித் தீயின் நடுவிலே, மகவு அருள் ஆகுதி-புத்திரர்களைக் கொடுக்கத் தக்க ஆகுதியை, வழங்கினுன்-ஓமஞ் செய்தான். அரோ-அசை.

நாப்பணே-ஏகாரம் இசை நிறை.

(பி - ம்.) 1. ஒளிதர; மொய்த்த. 2. தொகைவிரி; அக்விரை.
3 நாப்பணுேர். (85)

### வேள்வித் தீயிலிருந்து பூதந் தோன்றித் தட்டில் ஏந்திய பிண்டத்தை அளித்தல்

266. ஆயிடைக் கனலினின் றம்பொற் றட்டமீத்
தூயநற் சுதைநிகர் பிண்ட மொன்றுசூழ்
தீயெரி பங்கியுஞ் சிவந்த கண்ணுமாய்
ஏயெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே.

அ இடை-(மகவு அருள் ஆகுதி வழங்கிய) அப்போது, கனலின் நின்று-அத்தீயினின்றும், சூழ் எரி தீ பங்கியும்-சூழ்ந்து எரிகிற தீப் போல விளங்குகிற தலைமயிரும், சிவந்த கண்ணும் ஆய்-(இரத்தம் போலச்) சிவந்த கண்களும் உடையதாய், பூதம் ஒன்று-ஒரு பூத மானது,அம்பொன் தட்டம் மீ-அழகிய பொன்னாலாகிய ஒருதட்டிலே, தூய நல் சுதை நிகர் பிண்டம் ஒன்று ஏந்தி-தூய்மையான, நல்ல தேவாமிர்தம் போன்ற (வெண்மையான) சோற்றுத் திரளை ஒன்றை ஏந்திக்கொண்டு, ஏய் என எழுந்தது-விரைவுடன் வெளிவந்தது. ஏந்தியே: ஏ-அசை. ஆயிடை: சுட்டு நீண்டது.

(பி - ம்.) 1. கனலிடை; தட்டமேல்; தட்டின் மீத்; தட்டினிற்.
2. தூய்நிறச். 3. தீயெரிப்; பாயெரிப்.
4. நாயகப் பூதமொன் றேந்தி நண்ணிற்றே. (36)

### பூதம் மீண்டும் தீப்புகுந்து மறைதல்

267. வைத்தது தரைமிசை மறித்து மவ்வழித்
தைத்தது பூதமத் தவனும் வேந்தனை
உய்த்தநல் லமிர்தினை யுரிய மாதர்கட்
கத்தகு மரபினி லளித்தி யாலென்றான்.

பூதம்-(தீயினின்றும் தோன்றிய) அப்பூதமானது, தரைமிசை வைத்து-(தன் கையிலிருந்த தட்டை) தரையின்மேல் வைத்தது; மறித்தும்-மீளவும், அ வழி தைத்தது-வந்தவழியே (தீயினுள்) புகுந்து மறைந்தது; அ தவனும்-தவம்மிக்க அக்கலைக்கோட்டு முனிவனும், வேந்தனை-அரசனை (நோக்கி), 'உய்த்த நல் அமிர்தினை-அப்பூதம் தந்த நல்ல அமிருதம் போன்ற அப்பிண்டத்தை, உரிய மாதர்கட்கு-உன் பட்டத்துத்தேவியர்க்கு,அ தகு மரபினில்-அந்தத் தகுதியான முறைப் படி, அளித்தி என்றான்-(பகிர்ந்து) கொடுப்பாயாக' என்று கட்டளை யிட்டான். ஆல்-அசை.

பூதம், பொன் மூடியிட்ட வெள்ளிப் பாத்திரத்திலே பாயசத்தை ஏந்தி வெளிவந்து மன்னனிடம் அதனைக் கொடுத்துச் சில வற்றைச் சொன்னதாக **வான்மீகமும்**, அக்கினி தேவனே ஒரு திவ்ய புருஷனாக வந்து அவ்வாறு செய்ததாக **அத்யாத்ம ராமாயணமும்** கூறும்.

தைத்தது-அம்பு பாய்தல்போல விரைந்து போயிற்று என்ப தாம். அத்தகு மரபு-மூத்தவளுக்கு முதலிலும், அம்முறையே மற்றிரு வருக்கும் என்பது.

(பி - ம்.) 1. வைத்தலும் முனிவன்முன்; மறுத்தும்; வைத்தும்; அவ்வழி.
2. தைத்ததப்; பூதமற்றவனும்; பூத மாதவனும்; வேந்தன்கை; மன்னனே.
3. உய்த்து நல்; மாதர்கள்.
4. அத்தமர்; தத்தக; மரபினால்; மரபினின்: அளித்தியேயென்றான்; அளித்தியென்றனன். (87)

### சக்கரவர்த்தி சுதையைப் பகிர்ந்தளித்தல்

268. மாமுனி யருள்வழி மன்னர் மன்னவன்
தூமமென் சுரிகுழற் றொண்டைத் தூயவாய்க்
காமரொண் கௌசலை கரத்தி னோர்பகிர்
தாமுற வளித்தனன் சங்க மார்த்தெழ.

மா முனி அருள் வழி-சிறந்த கலைக்கோட்டு முனிவன் அருளிச் செய்தபடியே, மன்னர் மன்னவன்-சக்கரவர்த்தியாகிய தசரதன், சங்கம் ஆர்த்து எழ-மங்கலச் சங்குகள் முழங்க, தூமம் மெல் சுரி குழல்-அகிற் புகை யூட்டப்பெற்ற, மெல்லிய, சுருண்ட கூந்தலையும், தொண்டை தூய வாய்-கொவ்வைக் கனி போன்ற தூய்மை பொருந் திய வாயையும், காமர்-விரும்பத் தக்க, ஒண்-ஒளியையும் உடைய, கௌசலை கரத்தின்-கௌசல்யா தேவியின் கைகளிலே, ஓர் பகிர்-ஒரு பகுதியை, தாமம் உற-(உலகம்) ஒளிபெறும்படி, அளித்தனன்-கொடுத்தான்.

காமர்-'காமம் வரு' என்பதன் விகாரம். தாம்-தாமம் என்ப தன் இடைக்குறை; தாமம்-ஒளி.

முனிவன், 'அத்தகு மரபினில்' அளித்தி என்றபடி, மூத்தவளா கிய கௌசல்யா தேவிக்கு முதலிற் கொடுத்தான். கௌசல்யா-தட்சிண கோசல தேசத் தரசன் மகள்; தசரதன் ஆள்வது உத்தர கோசலம். கோசல தேசம் இரு பகுப்பு உடையது. உத்தர கோசலம்: 13-பார்க்க.

பகிர்ந்தளித்த முறையைப் பல படியாகக் கூறுவர்: முதலில் கௌசலைக்குப் பாதியும், அடுத்ததாக, சுமித்திரைக்கு மீதியுள்ள பாதியிற் பாதியும், பின்பு கைகேயிக்கு, எஞ்சியுள்ளதிற் பாதியும், இறுதியில் எஞ்சியதை மீண்டும் சுமித்திரைக்கும் அளித்ததாக வான் மீகம் கூறும். கௌசலைக்குப் பாதியும், கைகேயிக்குப் பாதியுமாக முதலில் மன்னன் பகிர்ந்தளித்துவிட, பின்பு அவ்விருவரும் தத்தம் பங்கிலிருந்து ஒவ்வொரு பகுதி சுமித்திரைக்குப் பகிர்ந்தளித்தன ரென்பது அத்யாத்ம ராமாயணம். இவ்வாறன்றி, முதலில் மூவருக்கும்

சமமாகப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, பங்கிடுகையில் பிதிர்ந்ததைத் திரட்டி மீண்டும் சுமித்திரைக்களித்ததாகக் கூறுவர் ஒரு சாரார். இதுவே கம்பருக்கும் பொருந்துவது. எவ்வாருயினும், இரு முறை தனித்தனியே அளிக்கப் பெற்றதனுலே சுமித்திரை இரு புதல்வரைப் பெற்றனள் என்பது பொருந்தும்.

'தூமமென் சுரி குழல்': 'தூமமென் குழலியர்' : 227.

(பி - ம்.) 1. அருள்வழி; அருளலும்; உரைத்திட; பணித்திட.
2. தூமமெய்ச்: சுழிகுழற்; கருங்குழற்; செய்யவாய்க்.
3. காமவொண்; காமுறு; காமரு; கோசலே; கவுசலே.
4. தாமுறை: அளித்தனர்; வழங்கினன்: ஆர்ப்பவே; ஆர்க்கவே. (88)

269. கைகயன் றனயைதன் கரத்து மம்முறைச்
செய்கையி னளித்தனன் றேவ ரார்த்தெழப்
பொய்கையு நதிகளும் பொழிலு மோதிமம்
வைகுறு கோசல மன்னர் மன்னனே.

பொய்கையும்-குளங்களிலும், நதிகளும்-ஆறுகளிலும், பொழிலும்-சோலைகளிலும், ஓதிமம் வைகு உறு-அன்னப் பறவைகள் தங்கப் பெற்ற, கோசலம்-உத்தர கோசலத்தை யாளுகிற, மன்னர் மன்னன்-சக்கரவர்த்தி, தேவர் ஆர்த்து எழ-தேவர்கள் (மகிழ்ச்சியால்) ஆரவாரித்துத் துள்ளும்படி, கைகயன் தனயைதன் கரத்தும்-கேகய நாட்டரசன் மகளாகிய கைகேயியின் கைகளிலும், அ முறை செய்கையின்-(முன் கூறிய) அம் முறைப்படி, (ஒரு பகுதியை), அளித்தனன்-கொடுத்தான்.

மன்னனே: ஏகாரம்-ஈற்றசை.

பரதனுடைய சிறப்புக்களைக் குறித்துத் தேவர் ஆர்த்தெழுந்தனர் என்க. பின் இரண்டடிகளும் கோசல நாட்டு வளமிகுதியைக் குறிப்பன.

தேவர் ஆர்த்தெழ: 284.

(பி - ம்.) 1. கைகயப் பிராட்டிதன்; தனையைதன்; கரத்தினம் முறை: கரத்தினேர்பகிர்.
2. செய்கையில். 4. கோசலே; கௌசலே; கவுசலே. (89)

270. நமித்திரர் நடுக்குறு நலங்கொண் மொய்ம்புடை
நிமித்திரு மரபுளான் முன்னர் நீர்மையின்
சுமித்திரைக் களித்தனன் சுரர்க்கு வேந்தினிச்
சமித்ததென் பகையெனத் தமரொ டார்ப்பவே.

நமித்திரர்-பகைவர், நடுக்கு உறு-நடுக்கம் அடைதற்குக் காரணமான, நலம் கொள் மொய்ம்பு உடை(ய)-மேன்மையான வலிமை

யுடைய, நிமி திரு மரபு உள்ளான்-நிமியென்னும் அரசனின் சிறந்த மரபில் உதித்தவனான தசரதன், சுரர்க்கு வேந்து - தேவர்களுக்கு அரசனான இந்திரன், 'என்பகை இனி சமித்தது என-எனது பகை இனி அழிந்ததாயிற்று' என்று உட்கொண்டு, தமரொடு ஆர்ப்ப-தன் இனத்தவராகிய தேவர்களுடனே (மகிழ்ச்சி) ஆரவாரம் செய்யும்படி, முன்னர் நீர்மையின்-முந்திய முறைப்படியே, (சுதையை), சுமித்திரைக்கு அளித்தனன்—. ஏ-ஈற்றசை.

நமித்திரர்-நபண்பரல்லாதவர்=பகைவர்; நிமியின் பெயரைக் கேட்டவளவிலே பகைவர் அச்சத்தால் நடுக்கமடைவரெனச் சிறப்பித்தவாறு. தனக்குப் பகைவனான இந்திரசித்தைப் பின்னே வெல்லப்போகும் ஆற்றலமைந்த இலக்குமணன் பிறப்பைக் கருதி இந்திரன் சிறப்பாக மகிழ்ந்தனன் என்க.

(பி - ம்.) 1. நமித்தரர்; நடுக்குற; நறுக்குறு; மொய்ம்பிடை.
2. நிமித்தகு; நிமித்திர; மரபினான்; முன்னம்: நீர்மையான்; நீர்வரச்; நீரவாய்ச்.
3. சுரர்கள்; வேந்தனும்; வேந்தனர்.
4. சமித்ததெம்; சமித்தவெம்; சமித்தனன்; தமரொடார்க்கவே; தமரொடொப்பவே; அமரர் சாற்றினர். (90)

271. பின்னரப் பெருந்தகை பிதிர்ந்து வீழ்ந்தது
தன்னையுஞ் சுமித்திரை தனக்கு நல்கினான்
ஒன்னலர்க் கிடமும்வே றுலகி னோங்கிய
மன்னுயிர் தமக்குநீள் வலமுந் துள்ளவே.

பின்னர்-அதன்பின், அ பெருதகை-பெருந்தன்மையுடைய அத்தசரதன், ஒன்னலர்க்கு-பகைவராயுள்ளோர்க்கு, இடமும்-இடப்புறமும், வேறு-அவர்களல்லாத, உலகின்-உலகத்திலே, ஓங்கிய-நல்வாழ்வு பெற்ற, மன் உயிர் தமக்கு-மக்களுக்கெல்லாம், நீள் வலமும்-சிறந்த வலப்புறமும், துள்ள-துடிக்க, பிதிர்ந்து வீழ்ந்தது தன்னையும்-(பங்கிடுங்கால்) சிதறி விழுந்த சுதையையும், சுமித்திரை தனக்கு நல்கினான்-சுமித்திரைக்குக் கொடுத்தான். ஏ-ஈற்றசை.

புதல்வர்நால்வர் பிறப்பரென்பதற்கேற்ப,சுமித்திரைக்கு இரண்டாமுறை சுதையைக் கொடுக்கவேண்டுமென்ற எண்ணம் சக்கரவர்த்திக்கு உண்டாயிற்று. இலவணன் முதலிய தீயவர்களைப் பின்னே அழித்தவன் சத்துருக்கன்; அதனால் அந்தகைய கொடிய பகைவர்க்கு இடம் துடித்தது; மற்ற நல்லவர்களுக்கெல்லாம் வலம் துடித்தது. ஆடவர்க்கு இடம் (இடதுதோள், கண்) துடித்தல் தீமைக்கு அறிகுறி; வலம் துடித்தல் நன்மை தருவது. பெண்டிர்க்கு இம்முறை மாறுபடக் கொள்க; சுந்தர. 361-64-பார்க்க.

பெருந்தகை-பண்புத்தொகையன்மொழி. ஒன்னலர்=ஒன்றலர்: பொருந்தாதவர்-பகைவர்.

(பி - ம்.) 1. பின்னுமப்; பின்னரும்; வீழ்ந்தவை; வீழ்ந்தன.
2. தம்மையிம். 3. உலகிலோங்கிய; உலகிலுள்ளன; உலகமோங்கிய.
4. தனக்குநீள்; தமக்குமோர்; தனக்கெலாம்; தனக்குநல்; வலந்துடிக் கவே. (91)

272. வாம்பரி வேள்வியு மகாரை நல்குவ
தாம்புரை யாகுதி பிறவு மந்தணன்
ஓம்பிட முடிந்தபி னுலகு காவலன்
ஏம்பலொ டெழுந்தனன் யாரு மேத்தவே.

வாம் பரி வேள்வியும்-தாவும் குதிரையைக் கொண்டு செய்யப்படும் அசுவமேதமும், மகாரை நல்குவது ஆம்-புத்திரர்களைத் தருதற்குக் காரணமான, புரை ஆகுதி பிறவும்-பொருந்திய பிற ஓமங்களும், அந்தணன் ஓம்பிட-கலைக்கோட்டு முனிவன் பாதுகாப்புடன் செய்ய, முடிந்தபின்-(அவையெல்லாம்)முடிவுற்ற பிறகு, உலகு காவலன்-உலகைஆளும் சக்கரவர்த்தி, யாரும் ஏத்த-யாவரும் புகழ, ஏம்பலொடு எழுந்தனன்-மகிழ்ச்சியோடு (யாகசாலையினின்றும்) புறப்பட்டான். ஏ-அசை.

வாவும் என்பது 'வாம்' என்றாயிற்று. ஓம்பிட-ஓம்ப; இடு துணைப்பகுதி.

ஆகுதி: *265, 768, 1326.*

(பி - ம்.) 1. வேள்வியின்; மகவை; மகவு. 2. தாம்புரி; தாம்பரி; ஆவுதி.
3. முடித்தபின்; உலகங்காவலன். (92)

273. முருடரும் பல்லிய முழங்கி யார்த்தன
இருடரு முலகமு மிடரி னீங்கின
தெருடரு வேள்வியின் கடன்க டீர்ந்துழி
அருடரு மவையின்வந் தரச னெய்தினன்.

தெருள் தரு-(வேதத்திலே) விளக்கப்பெற்ற, வேள்வியின் கடன்கள் தீர்ந்துழி-வேள்விக்குரிய சடங்குகளெல்லாம் முடிந்தபோது, முருடு,அரு பல் இயம்-மத்தளமும் (வேறு) பல அரிய வாச்சியங்களும், முழங்கி ஆர்த்தன-மிகவும் ஆரவாரம் செய்தன; இருள் தரும் உலகமும்-துன்பத்துக் குள்ளாகிய எல்லா உலகங்களும், இடரின் நீங்கின-துன்பத்தினின்றும் விடுபட்டன வாயின; அரசன்-தசரத சக்கரவர்த்தியும், அருள் தரும் அவையின் வந்து எய்தினன்-(யாவர்க்கும்) அருள் செய்வதற்கு இடமான திருவோலக்க மண்டபத்தில் வந்து சேர்ந்தான்.

மங்கள காரியங்கள் நடக்கும் போதும், முடிவிலும் வாத்தியங்கள் முழங்குதல் மரபு. அரசன் தான் செய்யும் வேள்வி முதலிய நற்செயல்களால் தன்நாட்டுக்கு நன்மைபயப்பவனாவான்;மேலும் இங்கே,

இராமபிரான் முதலியோர் அவதரித்தலால் உலகத்துக்கே பெரு நன்மை விளேதல் திண்ணம்; ஆதலால், 'உலகமும் இடரின் நீங்கின' என்ருர். அரசன், காட்சிக் கெளியனுக இருந்து யாவர்க்கும் கருணை செய்தற்குரிய இடமாதலால், 'அருள் தரும் அவை' என்ருர்; இங்கே, வேள்வியின் பின் செய்தற்குரிய தேவபூசை முதலிய பல சிறப்புக்களேயும், தானங்களேயும், பெருங் கொடைகளேயும் அரசன் செய்யப் போவதைக் குறித்த தென்றலும் ஆம்.

அரசன் என்ற விடத்து உம்மை தொக்கது.

முருடு-மத்தளம்: சிலப். 1. 46.

(பி - ம்.) 1. முருடரு; முருடொரு; முருடொடு; முழக்கி ஆர்த்தெழ.
2. உலகங்கள்: இடரும்; இடர்கள்; இருளின்.
3. தெருடரும்; கடன்க டீர்ந்துழிஇ; தெருடருங்கடன்முறைச்சிறப் பிஞேரும் வந்து.
4. அவையில் வந்து; அவையினில்: அரசன் மேவிஞன்; அரசிருந்தனன்.

(93)

274. செய்ம்முறைக் கடனவை திறம்ப லின்றியே
மெய்ம்முறைக் கடவுளர்க் கீந்து விண்ணுளோர்க்
கம்முறை யளித்துநீ டந்த ணுளர்க்கும்
கைம்முறை பொழிந்தனன் கனக மாரியே.

(அரசன்), செய் முறை கடன் அவை-(வேள்வியின் பின்) செய்தற்குரிய முறையான கடமைகளாகிய அவற்றில், திறம்பல் இன்றி-(நூல்களின் விதிக்கு) மாறுபாடு இல்லாமல், மெய் முறை - உரிய முறைப்படி, கடவுளர்க்கு ஈந்து-தன் குல தெய்வமாகிய திருமாலுக்கும் பிற கடவுளர்க்கும் உரிய பூசை முதலியவற்றைச் செய்வித்து, விண் உளோர்க்கு-மற்றைத் தேவர்களுக்கும், அ முறை அளித்து-அவரவர்க்குரிய முறைப்படி, அவிர்ப்பாகங்களேக் கொடுத்து, நீடு அந்தணுளர்க்கும்-பெருமைமிக்க அந்தணர்களுக்கும், கனகம் மாரி-பொன் மழையை, கை முறை பொழிந்தனன்-தன் கைகளால் முறையாகச் சொரிந்தான்.

இன்றியே: ஏ-இசை நிறை. மாரியே: ஏ-அசை.

அந்தணுளர்க்கு முறையாவது, தகுதி பற்றிய வரிசை. கனக மாரி பொழிந்தனன் என்றது மிகுதி பற்றிக் கூறியது. அந்தணர்களுக்குத் தட்சிணை யளித்த பின்பே வேள்விச் சடங்கு முற்றுப்பெறு மென்பது விதி.

(பி - ம்.) 1. செய்முறை; செய்முறைக்; செயன் முறை; கடன் முறை; திறப்ப லின்றியே.
2. மெய்ம்முறை; மெய்முறை; இம்முறை; கடவுளுக்கு; கடவுளோர்க்கு.
3. கைம்முறை; அந்தணுளர்க்குக்.
4. கைமுறை; அளித்தனன்; வழங்கினன்; கனக ராசியே; கனகம்வாரியே.

(94)

### சக்கரவர்த்தி நீராடல்

275. வேந்தர்கட் கரசொடு வெறுக்கை தேர்பரி
வாய்ந்தநற் றுகிலொடு வரிசைக் கேற்பன
ஈந்தனன் பல்லியந் துவைப்ப வேகிநீர்
தோய்ந்தனன் சரயுநற் றுறைக்க ணெய்தியே.

(பின்னும் அச்சக்கரவர்த்தி), வேந்தர்கட்கு - (வேள்வியின் பொருட்டு வந்த) அரசர்களுக்கு, வரிசைக்கு ஏற்பன - அவரவர் தகுதிக்கு ஏற்றவையாக, அரசொடு - ஆட்சியிடமும், வெறுக்கை-பொருளும், தேர்-தேரும், பரி-குதிரைகளும், வாய்ந்த நல் துகிலொடு-பொருந்திய நல்ல ஆடைகளும் ஆகியவற்றை, ஈந்தனன்-கொடுத்தான்; (பின்பு), பல் இயம் துவைப்ப ஏகி-பல வாச்சியங்கள் முழங்கப் போய், சரயு நல் துறைக்கண் எய்தி-சரயூ நதியின் நல்ல துறையிலே சேர்ந்து, நீர் தோய்ந்தனன்-நீராடினான். ஏ-அசை.

முதலில் கடவுளர்க்கும், தேவர்க்கும், அந்தணர்க்கும் முறைப்படி உரியவற்றைச் செய்த பிறகு, வேள்வியின் பொருட்டுப் பல காணிக்கைகளுடன் வந்திருந்த அரசர்களுக்கெல்லாம் அவரவர் தகுதிக்கேற்றவாறு பலவற்றை வழங்கினான். வேள்வியின் பொருட்டுத் தீட்சையோடிருந்தவர்கள், வேள்வியின் முடிவில் நீராடுதல் மரபு; இது வடமொழியில் 'அவப்ருத ஸ்நானம்' எனப்படும். (திவ். 920).

எண்ணுப் பொருள் உடைய 'ஒடு' என்பதனை, வெறுக்கை, தேர், பரி என்ற விடங்களிலும் கூட்டுக.

(பி - ம்.) 1. வேந்தர்கட் கரசொடும்; வேந்தருக்கர சொடு.
2. துகிலொடவ்; துகிலினெடு; துகில் முதல்: தூசொடவ்; ஒப்பன.
3. ஏகினன்; எய்திநீர். 4. தோயநற்; சரயுவின்; ஏகியே. (95)

### சக்கரவர்த்தி வசிட்ட முனிவனை வணங்கி ஆசிபெறுதல்

276. முரசினங் கறங்கிட முத்த வெண்குடை
விரசிமே னிழற்றிட வேந்தர் சூழ்தர
அரசவை யடைந்துழி யயனு நாணுற
உரைசெறி முனிவன்றா ளிறைஞ்சி யோங்கினன்.

(நீராடிய பின், சக்கரவர்த்தி), முரசு இனம் கறங்கிட-பேரிகைக் கூட்டம் முழங்கவும், முத்தம் வெண்குடை-முத்துக்களால் அலங்கரிக்கப்பெற்ற வெள்ளைக் குடைகள், மேல் விரசி நிழற்றிட-மேலே நெருங்கி நிழலைச் செய்யவும், வேந்தர் சூழ்தர-பல அரசர்கள் சூழ்ந்து வரவும், அரசு அவை அடைந்துழி-(மீண்டும்) அத்தாணி மண்டபத்தை அடைந்தபோது, அயனும் நாண் உற-பிரமனும் நாணமடையும்படி, உரைசெறி-புகழ்மிக்க, முனிவன் தாள்-வசிட்ட முனிவ

னுடைய திருவடிகளை, இறைஞ்சி-வணங்கி, (ஆசியைப்பெற்று), ஓங்கினன்-மேன்மையுற்றான்.

எண்ணும்மைகள் தொக்கன.

வேள்விக்குரிய எல்லாம் முடிந்த பின். சக்கரவர்த்தி, முறைப் படி முதலில் தன் குல குருவும் புரோகிதருமாகிய வசிட்ட முனிவரை வணங்கி, அவர் ஆசியைப் பெற்றான்; பின்பு அவர் கட்டளையின்படி கலைக்கோட்டு முனியை வணங்கிப் பல உபசார மொழிகளைக் கூறினான்; இது அடுத்த கவியிற் கூறப்படும்.

(பி - ம்.) 1. முரசொலி.
2. விரசி மேனிழறர; விரசிமென்னிழற்றர; விரசிடு நிழறர; விரசிய நிழறர; விரசிமேனிழற்றவும். 3. அடைந்துழீஇ.
4. புரைசெறி; முனிவர்தாள்; வணங்கி. (96)

### சக்கரவர்த்தி கலைக்கோட்டு முனிவனை வணங்கி உபசரித்தல்

277. அரியநற் றவமுடை வசிட்ட னாணையால்
இரலைநற் சிருங்கமா முனிவன் றாடொழா
உரியநற் பலவுரை பயிற்றி யுய்ந்தனென்
பெரியநற் றவமினிப் பெறுவ தியாதென்றான்.

(பின்பு), அரிய நல் தவம் உடை(ய)-அருமையான நல்ல தவ வலிமை உடைய, வசிட்டன் ஆணையால்-வசிட்ட முனிவனது கட்ட ளைப்படி, இரலை நல் சிருங்கம் மா முனிவன்-மானினது அழகிய கொம்பை உடைய, சிறப்புமிக்க (கலைக்கோட்டு) முனிவனுடைய, தாள் தொழா-திருவடிகளை வணங்கி, உரிய பல நல் உரை பயிற்றி-பொருத்தமான பல உபசாரமொழிகளைக் கூறி, 'உய்ந்தனென்-(உமது அருளால்) நான் ஈடேறினேன்; பெரிய நல்தவம்-மிக்க நல்ல தவப் பயனாக, இனி பெறுவது யாது-இதனினும் மேலாக நான் பெறத் தக்கது யாது உளது?' என்றான்—.

உமது அருளால் வேள்விகள் யாதொரு குறையும் இன்றி இனிது நிறைவேறினமை நான் செய்த பெரிய தவப்பயனாகும் என்று முகமன் கூறினான் என்க.

(பி - ம்.) 1. முனிவனாணையால்.
2. இரலைநற்சிருங்கனை யிறைவன் றாடொழா; சிருங்கமா மிறைவன்; சிருங்கமா விறைவன்; தாடொழுது.
3. உரியபற்பல; அரியபற்பல; இயற்றி.
4. பெருமைநல்; தவவினிப்; தவனினிப்; பெறுவதியானென்றான்; பெறு தியாதென்றான். (97)

278. எந்தைநின் னருளினா லிடரி னீங்கியே
உய்ந்தனெ னடியனே னென்ன வொண்டவன்
சிந்தையுண் மகிழ்ச்சியால் வாழ்த்தித் தேர்மிசை
வந்தமா தவரொடும் வழிக்கொண் டேகினான்.

'எந்தை!-பெரியீர்!, நின் அருளினல் - உமது அருளால், அடியனேன்-அடியவனுகிய நான், இடரின் நீங்கி-(நெடுங்காலமாக என் மனத்தில் இருந்த) துயரத்தினின்றும் விடுபட்டு, உய்ந்தனென்-நல்வாழ்வு பெற்றேன்', என்ன-என்று (முடிவாகச் சக்கரவர்த்தி)கூற. ஒள் தவன்-சிறந்த தவத்தையுடைய கலேக்கோட்டு முனிவன், சிந்தை உள் மகிழ்ச்சியால்-மனம் நிறைந்த மகிழ்ச்சியோடு, வாழ்த்தி-(அரசனை) ஆசீர்வதித்து, (பின்பு), தேர்மிசை-தேரில் ஏறி, வந்த மா தவரொடும்-(முன்பு தன்னுடன்) வந்திருந்த பல முனிவருடனே, (புறப்பட்டு),வழிகொண்டு-தன்னூருக்குச் செல்லும் வழியிலே, ஏகினுன்—. நீங்கியே: ஏ-இசை நிறை.

முனிவனை வணங்கிப் பல முகமனுரை கூறி, இறுதியில் 'நெடு நாளாக என் மனத்தை வருத்திய கடுந்துயரம் உமதருளால் நீங்கப் பெற்று உயர்ந்தேன்' என்று சக்கரவர்த்தி கூறி முடிக்க, முனிவனும் மிக்க மகிழ்ச்சியடைந்து பல படியாக அவனை ஆசீர்வதித்து, இனிதாகப் புறப்பட்டுத் தனதூரை நோக்கிச் சென்றுன் என்க.

மா தவரொடும் என்றமையால், 'பத்தினியாகிய சாந்தையோடும்' என்பது கூருமலே அமையும்.

(பி - ம்.) 1. இடரை நீங்கியே; இடருணீங்கியே.
2. என்ன வோங்கிய; 3. சிந்தையில்.
4. வந்தமா தவரொடு; வந்திடு முனிவனும்; வந்தவனதரொடும்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை. (98)

### ஏனைய முனிவர்களும் விடைபெற்று மீளல்

279. வாங்கிய துயருடை மன்னன் பின்னரும்
பாங்குறு முனிவர்தாள் பரவி யேத்தலும்
ஓங்கிய வுவகைய ராசி யோடெழா
நீங்கின ரிருந்தன னேமி வேந்தனே.

வாங்கிய துயர்உடை மன்னன் -(தன் மனத்தை அலேத்த) வருத்தம் நீங்கப்பெற்ற சக்கரவர்த்தி, பின்னரும்-அதன் பின்னும், பாங்கு உறு முனிவர் தாள் பரவி ஏத்தலும்-தகுதியுடைய ஏனைய பல முனிவர்களின் திருவடிகளேயும் வணங்கித்துதிக்க, (அவர்கள்), ஓங்கிய உவகையர்-மகிழ்ச்சிமிக்கவர்களாய், ஆசியோடு-மன்னனை ஆசீர்வதித்தலுடன்,எழா-புறப்பட்டு, நீங்கினர்-வெளியேறினர்; நேமி வேந்தன்-சக்கரவர்த்தி, இருந்தனன்-(அமைதியுடன்) இருந்தான். ஏ-அசை.

வாங்கிய துயர் உடை-நீங்கப்பெற்ற வருத்தமுடைய=வருத்தம் நீங்கப்பெற்ற; இது வடமொழி நடையென்பர். முனிவர்தாளும் பரவி ஏத்த என உம்மையை மாறிக்கூட்டுக. 'பின் அரும் பாங்கு உறு' எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

(பி - ம்.) 1. துயரிடை; துயரினன்: மன்னர் மன்னரும்.
2. பாங்குடை; பாங்குறுவனவவை; பாங்குறு கடன் முறை; பாங்குறக் கடன் முறை; பலபயிற்றல்கொண்டு; பழிச்சியேற்றல்கொண்டு.
3. உவகையின்; உவகையன்; உவகையான்; ஓசையோடெழா.
4. நீங்கினன்; நீங்கினுன்; நிருபர் ஏந்தலே. (99)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

## தேவிமார் கருவுறல்

280. தெரிவையர் மூவருஞ் சிறிது நாட்செலீஇ
மருவிய வயாவொடு வருத்தந் துய்த்தவர்
பொருவருந் திருமுக மன்றிப் பொற்புநீ
டுருவமு மதியமோ டொப்பத் தோன்றினுர்.

தெரிவையர் மூவரும்-தேவிமார் மூவரும், சிறிதுநாள் செலீஇ-சிலநாள் சென்ற பிறகு, மருவிய வயாவொடு-(கருவுற்றவர்க்குப்) பொருந்திய மயற்கை (மசக்கை) நோயோடு, வருத்தம்-அதனுலாகிய துன்பங்களையும், துய்த்தவர்-அநுபவித்தவர்களாய், பொரு அரும்திரு முகம் அன்றி-(சாமுத்திரிகா லட்சணத்திலே மேம்பட்டு) இணையற்ற தம் முகங்கள் மட்டும் அல்லாமல், பொற்பு நீடு உருவமும்-அழகுமிக்க தம் வடிவங்களும், மதியமோடு ஒப்ப-சந்திரனுக்கு ஒப்பாக, தோன்றினுர்-(விளர்த்துக்) காணப்பட்டனர்.

செலீஇ: சொல்லிசை யளபெடை.

கருப்பமுற்ற மகளிர்க்கு, மூன்றும் மாதத்திலே உண்டாவது வயாநோய்; அப்போது அவர்களுக்கு, மண் முதலிய சில பொருள் களைத் தின்னும் ஆசை பிறக்கும். உடல் வெளுத்தல் முதலியன சில, கருப்பக் குறிகள்; வயாவுற்ற மகளிரின் உடல்நிலை: சீவக. 231. வயா வொடு வருத்தம்:'வயாவும் வருத்தமு மீன்றக்கால் நோவும்' (நாலடி. 201).

(பி - ம்.) 1. செலீ; செல; செல்ல.
2. வயவொடு; துயரொடு; வருத்தத்; துய்த்தலால்; துய்த்தலிற்; துய்த்தபின்.
3. பொருவரு; பொருமுகத்; திருமுகம்; தமனியம்: இன்றிப்; போன்றிப்: பொற்பினீடு. (100)

## இராமபிரான் அவதரித்தல்

281. ஆயிடைப் பருவம்வந் தடைந்த வெல்லையின்
மாயிரும் புவிமகண் மகிழ்வி னேங்கிட
வேய்புனர் பூசமும் விண்ணு ளோர்புகழ்
தூயகர்க் கடகமு மெழுந்து துள்ளவே,

அ இடை-அவ்வாறிருந்த காலத்து, பருவம் வந்து அடைந்த எல்லேயில்-(மகப்பெறுதற்குரிய) காலம் வந்தபோது, மா இரு புவி மகள்-மிகப்பெருமையுடைய பூமிதேவி, மகிழ்வின் ஓங்கிட-மகிழ்ச்சி மேம்படவும், வேய் புனர்பூசமும்-வேய் என்னும் பெயருடைய புனர் பூச நட்சத்திரமும், விண் உளோர் புகழ்-தேவர்கள் புகழத்தக்க, தூய கர்க்கடகமும்-தூய்மையான கடக ராசியும், எழுந்து துள்ள-(மகிழ்ச்சியினுல்) எழும்பித் துள்ளவும், ஏ-அசை.

ஆயிடை: சுட்டு நீண்டது.

மாயிரு-ஒருபொருட் பன்பொழி. வேய் புனர்பூசம்: இரு பெயரொட்டு.

இதுமுதல் மூன்று கவிகள் ஒரு தொடர்.

அதருமம் அழிந்து தருமம் வளரக் காரணமான இராமபிரான் அவதாரங் குறித்துப் பூமிதேவி மகிழ்ச்சி மிக்காள். புனர்பூச நட்சத் திரமும் அதற்குரிய கடக ராசியும் இராமபிரான் பிறத்தற்குத் தாம் இடமாயினமை குறித்து மகிழ்ந்தன. இராமபிரான் பிறந்த லக்கின மும் கடகமாகவே அமைந்தது. மூங்கிலைக் குறிக்கும் வேய், கழை என்ற சொற்கள் புனர்பூச நட்சத்திரத்துக்கும் பெயராக வழங்கும். 'விண் ணுளோர் புகழ்' என்பதனைப் புனர்பூசத்துடனும் கூட்டுதல் நன்று. தேவியர் கருவுற்றிருந்த காலம் பன்னிரண்டு மாதம் என வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. ஆயவப்; அடையும்; வேலையில்; ஆயிடையயிரு திங்கள்வாய்ந்த பின்: பருவம் வந்தடைய மேடமும். 2. மாயிரு; புவிகளுள்; புவிகளும்; மகிழ்வொ டோங்கிட; மகிழவோங் கிட; புவிமகண் மகிழமாமதி; புவிமடமாதுமாமதி. 3. வேய்புணர்; மேய்புணர்; மேயநற்; விண்ணுளோர்களும்; விண்ணி னோர்களும். 4. தூயநற்கடகமும்: துன்னவே. (101)

282. சித்தரு மியக்கருந் தெரிவை மார்களும்
வித்தக முனிவரும் விண்ணு ளோர்களும்
நித்தரு முறைமுறை நெருங்கி யார்ப்புறத்
தத்துற லொழிந்துநீ டரும மோங்கவே,

சித்தரும்-சித்தர்களும், இயக்கரும்-இயக்கர்களும், தெரிவை மார்களும்-இயக்க மகளிரும், வித்தகம் முனிவரும்-ஞானம்மிக்க முனி வர்களும், விண் உளோர்களும்-தேவர்களும், நித்தரும்-நித்திய சூரி களும், முறை முறை நெருங்கி-வரிசை வரிசையாகக் கூடி, ஆர்ப்புற-(மகிழ்ச்சியால்) ஆரவாரிக்கவும், நீள் தருமம்-பழமையான தரும மானது, தத்து உறல் ஒழிந்து-தடுமாற்றம் நீங்கி, ஓங்க-வளரவும், ஏ, ஈற்றசை.

சித்தர்-அட்ட மாசித்திகள் கைவரப்பெற்றோர். இயக்கர்-தேவ கணத்துள் ஒரு பிரிவினர்; இவர்கள் தலைவன் குபேரன். நித்திய சூரிகள்-திருவைகுந்தத்திலே எம்பெருமானருகில் எப்போது மிருப்பவர்.

தத்துறல்: 680; சுந்தர. 645.

(பி - ம்.) 2. வித்ரரு முனிவரும். 3. நெருக்கியாப்புறத்: ஆர்த்தெழத். (102)

283. ஒருபக லுலகெலா முதரத் துட்பொதிந்
தருமறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைத்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை.

திறம்கொள் கோசலை - நல்லியல்புகளையுடைய கௌசல்யா தேவி, ஒரு பகல்-பிரளய காலத்தில், உலகு எலாம்-எல்லா உலகத்து உயிர்களையும், உதரத்து உள் பொதிந்து-(தன்) திருவயிற்றினுள்ளே அடக்கிக்கொண்டவனாய், அருமறைக்கு உணர்வு அரும் அவனை-அரிய வேதங்களாலும் அறிதற்கு அரியவனாக இருப்பவனும், அஞ்சனம், கருமுகில் கொழுந்து எழில்-மையும், கருமேகச் சாயையும் ஆகியவற்றின் அழகை, காட்டும்-(தன் திருமேனியிலே) காட்டுகின்ற, சோதியை-ஒளி வடிவினனும் ஆகிய திருமாலை, திருஉற-(உலகமெல்லாம் இம்மை மறுமைக்கு உரிய) செல்வங்களை அடையும் வண்ணம், பயந்தனள்-(தனக்குப் புதல்வனாகப்) பெற்றனள்.

திறம்கொள்-திருமாலைத் தன் வயிற்றிலே தாங்கும் மேன்மையைக் கொண்ட எனலுமாம்.

*(281)* ஓங்கிட, துள்ள, *(282)* ஆர்ப்புற, ஓங்க, *(283)* கோசலை உணர்வருமவனை, சோதியை பயந்தனள் என முடிக்க.

இராமபிரான் பிறக்கும்போது திருமாலின் திவ்விய ரூபத்தோடே பிறக்க, தாய் கண்டு விம்மிதமுற்று வேண்டிக்கொண்டபின் மானிடக் குழந்தையானான் என அத்யாத்ம ராமாயணம் கூறும்.

(பி - ம்.) 2. அருமறை கொணர்வரும்.
4. திருகறப்: திறங்கொள் கவுசலை; சிறந்த கோசலை. (103)

## பரதன் அவதரித்தல்

284. ஆசையும் விசும்புநின் றமர ரார்த்தெழ
வாசவன் முதலினர் வணங்கி வாழ்த்துறப்
பூசமு மீனமும் பொலிய நல்கினாள்
மாசறு கேகயன் மாது மைந்தனை.

மாசுஅறு-குற்றமற்ற, கேகயன் மாது-கேகய தேசத்தரசன் மகளாகிய கைகேயி, அமரர்-தேவர்கள், ஆசையும் விசும்பும் நின்று-

(எட்டுத்)திக்குக்களிலும் ஆகாயத்திலும் (கூடி)நின்று, ஆர்த்துஎழ-மிக ஆரவாரம் செய்யவும், வாசவன் முதலினர்-இந்திரன் முதலிய தலைவர்கள், வணங்கி வாழ்த்துற-(மனத்தால்)வணங்கி வாழ்த்தவும், பூசமும் மீனமும் பொலிய-பூச நட்சத்திரமும் மீன லக்கினமும் விளக்க மடையவும், மைந்தனை நல்கினுள்-புதல்வனைப் பெற்றுள்.

இராமபிரானுக்கொப்பான தோற்றமும் பெருமையும் உடையவன் பரதனுதலால், தேவர்கள் மகிழ்ந்து வாழ்த்தினர்; அவன் பிறத்தலால் பூசமும் மீனமும் பெருமிதமடைந்தன.

(பி - ம்.) 1. விசும்பினர். 2. முதலினேர்.
3. மிதுனமும்; கடகமும்; பொலிந்து.
4. கைகயன்; கைகய; தனயள் மைந்தனை; மாசறுமைந்தனைக் கைகயன் மகள். (104)

## இலக்குமணன் அவதாரம்

285. தளையவிழ் தருவுடைச் சைல கோபனும்
கிளையுமந் தரமிசைக் கெழுமி யார்த்தெழ
அளைபுகு மரவினேே டலவன் வாழ்வுற
இளையவற் பயந்தன ளிளைய மென்கொடி.

தளை அவிழ்-அரும்புகள் கட்டவிழ்ந்து மலர்கின்ற, தரு உடை(ய)-கற்பக தருக்களையுடைய, சைல கோபனும்-மலைகளைக் கோபித்த தேவேந்திரனும், கிளையும்-அவன் சுற்றமான மற்றத் தேவர்களும், அந்தரம் மிசை கெழுமி-ஆகாயத்திலே நெருங்கி, ஆர்த்து எழ-ஆரவாரித்துக் குதிக்கவும், அளை புகும் அரவினேடு-புற்றிலே புகும் தன்மையுள்ள பாம்பின் வடிவமான ஆயிலிய நட்சத்திரமும், அலவன்-கடகராசியும், வாழ்வு உற-நல்வாழ்வு பெறவும், இளைய மென்கொடி-(தேவியரில்) இளையவளும் மெல்லிய பூங்கொடி போன்றவளுமான சுமித்திரை, இளையவன்-அநுசனுகிய இலக்குமணனை, பயந்தனள்-ஈன்றுள்.

ஆயிலிய நட்சத்திரமும் கடகராசியும் கூடிய நல்லோரையில் சுமித்திராதேவி இலக்குமணனைப் பெற்றுள். ஆயிலிய நட்சத்திரம் பாம்பின் வடிவமுடையதனுல், 'அளைபுகும் அரவு' என்றுர். ஆதிசேஷனது அமிசமான இலக்குமணன் பிறப்புக்கு ஆயிலியம் பொருத்தமானது. அளைபுகும் என்பதனை அலவனேடும் கூட்டுக.

ஆயிலியமும் கடகமும் இளையபெருமாளின் அவதாரத்தாலே சிறப்புற்றன என்க. வாழ்வு உற-'நன்னிலையிலே இருக்க' என்றலும் ஆம். மிகப்பழங் காலத்திலே மலைகள் சிறகுகளை உடையனவாய், அங்கங்கே பறந்து சென்று, கீழிறங்கி மிக்க சேதம் விளைவித்து வந்தன; அத்தீமையை ஒழித்தற் பொருட்டு, இந்திரன் தன் வச்சிராயுதத்தால் அவற்றின் சிறகுகளை வெட்டி அழித்தனன் என்பது வரலாறு; ஆத

லால் இந்திரன் 'சைல கோபன் எனப்பெற்றான். சிலை (கல்) மயமா என்ற பொருளில் மலைக்குக் காரணக்குறி-சைலம் என்பது.

(பி - ம்.) 1. திருவுடைச். 2. மிசைகெழுமி; ஆர்ப்புற.
4. இளையவள் பயந்தன ளிளைய வீரனை. (105)

## சத்துருக்கன் அவதாரம்

286. படங்கிளர் பஃறலைப் பாந்த ளேந்துபார்
நடங்கிளர் தரமறை நவில நாடகம்
மடங்கலு மகமுமே வாழ்வி னோங்கிட
விடங்கிளர் விழியினாண் மீட்டு மீன்றனள்.

படம் கிளர் பல் தலை பாந்தள் ஏந்து பார்-படம் விளங்குகின்ற பலதலைகளையுடைய பாம்பாகிய ஆதிசேடன் தாங்குகின்ற பூமியானது, நடம்கிளர் தர-(இன்பக்)கூத்தாடவும், நாடு அகம்-நாடெங்கும், மறை நவில-வேதங்கள் முழங்கவும், மடங்கலும்-சிங்கராசியும், மகமும்-மக நட்சத்திரமும், வாழ்வின் ஓங்கிட-வாழ்விலே மேம்படவும், விடம் கிளர் விழியினாள்-விடம்போலக் கருமை பொருந்திய கண்களையுடைய சுமித்திரை, மீட்டும்-மீளவும், ஈன்றனள்-(ஒரு புதல்வனைப்) பெற்றாள்.

சத்துருக்கன் எனப்படும் இவன், பாஞ்சஜந்ய மென்னும் சங்கினது அமிசம் என்பர்.

மகமுமே: ஏ-இசை நிறை. பல் + தலை = பஃறலை.

மக நட்சத்திரமும் சிங்கராசியும் பொருந்திய நற்பொழுதிலே சத்துருக்கன் பிறந்தான். சத்ருக்நன்-பகைவரை அழிப்போன்; இவனுக்குச் சிங்கராசி மிகப் பொருத்த மாதல் காண்க.

இலக்குமணனும் சத்துருக்கனும் ஒரே லக்கினத்தில் (ஆயிலியமும் கடகமுங்கூடிய காலம்) பிறந்தனர் என வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 2. நான்மறை; அருமறை; நவில்வ; நாவலர்; நனி மகிழ்ந்திட.
3. மகிழ்வின். 4. மீண்டும். (106)

## மகிழ்ச்சி மேம்பாடு

287. ஆடின ரரம்பைய ரமுத வேழிசை
பாடினர் கின்னரர் துவைத்த பல்லியம்
வீடின ரரக்கரென் றுவக்கும் விம்மலால்
ஓடின ருலாவின ரும்பர் முற்றுமே.

(இறுதியாக, சத்துருக்கன் பிறந்த அப்போது), அரக்கர் வீடினர் என்று-அரக்கர்கள் (நிச்சயமாக) அழிந்தனர் என்று கொண்டு, உவக்கும் விம்மலால்-மகிழ்ச்சி மிகுதியினால், அரம்பையர் ஆடினர்-தெய்வமாதர் நடன மாடினர்; கின்னரர்-கின்னரர்கள், அமுதம் ஏழ் இசை பாடினர்-அமுதம் போன்ற (இனிய) கீதங்களைப் பாடினர்; பல

இயம் துவைத்த-பலவகை வாச்சியங்கள் முழங்கின; உம்பர் முற்றும்-தேவர் அனைவரும், ஓடினர், உலாவினர்-(சிலர்) அங்குமிங்கும் ஓடினர்; மற்றும் சிலர் உல்லாசமாகத் திரிந்தனர். ஏ-ஈற்றசை.

ஏழிசை-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி. தாரம் என்னும் ஏழு சுரங்களின் வடிவான இசை. கின்னரர்-தேவகணங்களுள் ஒரு சாரார்; இசையில் வல்லவர்.

மகிழ்ச்சியால் நிகழும் செயல்கள்: ஒப்பு. திவ். பெரியாழ்வார் திருமொழி. *1: 2.*

(பி - ம்.) 1. ஆடினர். 2. துவைப்பப்.
3. அரக்கரோடு; அரக்கர்கள்: உவக்க; உவகை: என்னும்.
4. ஓடினர்: உலவினர். (107)

### மகப்பேற்றை மன்னன் அறிதலும்
### அந்தணர் கோள்நிலை யறிந்துரைத்தலும்

288. ஓடின ரரசன்மாட் டுவகை கூறிநின்
றாடினர் சிலதிய ரந்த ணாளர்கள்
கூடினர் நாளொடு கோளு நின்றமை
நாடின ருலகினி நவையின் றென்றனர்.

சிலதியர்-பணிப்பெண்கள், அரசன் மாட்டு ஓடினர்-அரசனிடம் ஓடி, உவகை கூறி நின்று ஆடினர்-வகிழ்ச்சிக்குரிய செய்தியைக் கூறியவாறே (தம்மையும் அறியாமல்) கூத்தாடினார்கள்; அந்தணாளர்கள் கூடினர்-புரோகிதர்கள் கூடி, நாளொடு கோளும் நின்றமை நாடினர்-(அப்போது) நட்சத்திரங்களும் கிரகங்களும் நின்ற நிலையை ஆராய்ந்து,'உலகு இனி நவை இன்று' என்றனர்-'உலகத்துக்கு இனித் துன்பம் இல்லை' என்று கூறினார்கள்.

புதல்வர்களுடைய சாதக பலன், உலகுக்குப் பெருநன்மை யளிப்பதாகவுள்ளதென்று சோதிட நூல்வல்லோர் கூறினர் என்க.

சிலதியர்: பெருங். *1. 33: 24*; சீவக. *197.*

(பி - ம்.) 1. அரசர் மாட்டு: கூறநின்று; கூடிநின்று.
3. நாளொடும்: நின்றதை.
4. உலகினில்; உலகிடை; உலகுளோர்: நவையின்றென்னவே: வாழ்வினண்ணினர். (108)

இதன் பின் உள்ள 'மேடமாமதி' என்ற பாடல், இராமபிரான் பிறந்த கால நலத்தைக் குறிப்பது; 'சித்திரை மாதத்துப் பூருவபட்ச நவமியும் புனர்பூச நட்சத்திரமும் கூடிய நன்னாளின் பிற்பகலில் கடக லக்கினத்தில் இராமபிரான் அவதரிக்க, அப்போது அவ்விலக்கினத்துக்குப் பதினோராமிடத்தில் நான்கு கோள்கள் உச்சமாயிருந்தன' என்பது அதில் கூறப்படுகின்றது. அதுவும் அதனையடுத்த பாடலும் பல பதிப்புகளில் அதிகப் பாடலாகவே கொள்ளப்பட்டன; அவை வருமாறு:—

(1) மேடமா மதிதிதி நவமி மீன்கழை
நீடுநாண் மாலேகற் கடக நீநிசேர்
ஓடைமா களிறனு ஹுதய ராசிகோள்
நாடினே காதசர் நால்வ ருச்சரே.

நால்வர்: செவ்வாய், குரு, சுக்கிரன், சனி என்போர்; சூரியனையும் சேர்த்து ஐவர் உச்சர் என்பர் வான்மீகி.

(பி - ம்.) 2. நீடுறு; 3. ஆடவர்திலகனுதய. 4. உச்சர் நால்வரே.

(2) என்றனர் சாதக மீசற் கேனையர்
தந்தமக் குந்தகு முறையிற் றூந்தெரிந்
தொன்றிய தமனியத் தெழுதி யோதினுர்
வன்றிறற் சுரர்குரு வாழ்த்தெ டுப்பவே.

ஈசன்-இராமன், தமனியத்து-பொன்னேலேயில்.

(பி - ம்.) 1. இறைவற்கு.

### தசரதன் தானங்கள் செய்து தநயரைக் காணல்

289. மாமுனி தன்னெடு மன்னர் மன்னவன்
ஏமுறு புனல்படீஇ வித்தொ டின்பொருள்
தாமுற வழங்கிவெண் சங்க மார்ப்புறக்
கோமகார் திருமுகங் குறுகி நோக்கினுன்.

மன்னர் மன்னவன்-சக்கரவர்த்தியாகிய தசரதன், (மகிழ்ச்சிச் செய்திகேட்டவுடன்), ஏம் உறு புனல்படீஇ-இன்பம் மிக்க (சரயூ நதியின்) நீரிலே முழுகி, வித்தொடு - விதைநெல்லேயும், இன் பொருள் தாம்-இனிய செல்வத்தையும், உற வழங்கி-மிகுதியாக (உரியவர்களுக்கு)க் கொடுத்து, வெண் சங்கம் ஆர்ப்புற-வெள்ளிய மங்கலச் சங்குகள் முழங்க, மா முனிதன்னெடு குறுகி-சிறந்த வசிட்ட முனிவனேடும் போய். கோ மகார் திருமுகம் நோக்கினுன்-அரசகுமரர்களின் அழகிய முகத்தைப் பார்த்தான்.

குழந்தை பிறந்தவுடன், தந்தை மகிழ்ச்சியுடன் நீராடி, பீஜ தானம் (விதை நெல் கொடுத்தல்) முதலிய தானங்களேச் செய்து, குழந்தையின் முகத்தைக் காணவேண்டும் என்பது நூல்களிற் கண்ட விதி. 'சிறப்பாவன, பிறந்த புதல்வன் முகங்காண்டலும்' (தொல். கற்பு.5-ந). செறுவர் நோக்கிய கண்டன், சிறுவனே நோக்கியுஞ் சிவப்பானுவே' (புறநா. 100: 10-11). மகார், பன்மைப் பெயர்; 'மகாஅரன்ன மந்தி' 'சிறுபாண். 56. அடிக்குறிப்புக் காண்க. 'மகாரொடு... போதரும் வண்ண மகளிர்' (சீவக. 2114); 'மகார் நோன்பு' என்ற வழக்கும் நோக்குக.

(பி - ம்.) 2. ஏழுறப்: புனல் படிந்து; புனல்பட; இயைந்தவொண் பொருள்; இதத்தொடொண் பொருள்; இதத்தொடெண் பொருள்; வித்தொ டெண்பொருள்.

3. ஆமுறை; வழங்கினன்; ஆர்த்தெழக்.

4. கோமகர்; கோமகன்; குறுக. (109)

இதன்பின் ஓர் அதிகப் பாடல்:—

நோக்கினன் களிப்பெழ நுணங்கு கேள்விநூல்
ஆக்கிய முனிவனே வணங்கி யையவென்
பாக்கியம் பலித்ததிப் பால ரென்றுபார்
காக்குறு மரசனுங் கழறன் மேயினன்.

## மன்னன் முரசறைவித்தல்

290. இறைதவிர்ந் திடுகபார் யாண்டொ ரேழ்நிதி
நிறைதரு சாலேதா ணீக்கி யாவையும்
முறைகெட வறியவர் முகந்து கொள்கென
அறைபறை யென்றன னரசர் கோமகன்.

அரசர் கோமகன்-சக்கரவர்த்தி, ‘ யாண்டு ஓர்ஏழ்-ஏழு வருட காலத்துக்கு, பார்-நாடு முழுதும், இறை தவிர்ந்திடுக-வரிகள் நீங்குவ தாக; நிதி நிறைதரு சாலே-செல்வம் நிறைந்த (நம்) கருவூலங்கள், தாள் நீக்கி-பூட்டு நீக்கப்பெற்று, வறியவர்-ஏழைகள், யாவையும்-பொருள்கள் எல்லாவற்றையும், முறை கெட-நியதியின்றி, முகந்து கொள்க-அள்ளிக் கொள்வாராக, என-என்று, பறை அறை-எங்கும் பறையறைவாயாக’ என்றனன்-என்று (வள்ளுவனுக்குக்) கட்டளே யிட்டான்.

இது முதல் மூன்று பாடல்கள் தசரதன் மகிழ்ச்சியால் இட்ட கட்டளேகளேக் கூறும்.

மக்கள் பிறந்த மகிழ்ச்சியை நாடு முழுதும், சிறப்பாக வறிய வர்களும் அநுபவிக்கும் பொருட்டு இவ்வாறு செய்வித்தான். ‘எழு பிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப், பண்புடை மக்கட் பெறின்’ என்பவாதலின், ‘எழு பிறப்பு’ என்றதனையொட்டி ஏழாண்டு இறைதவிர்க என்றான் என்னலாம்.

மக்கட்பேற்றின்போது அரசர்கள் இவ்வாறு இயற்றல்: பெருங். *6:39-63;* சீவக. *306-308*; திருவிளே. தடா. *28-31*.

(பி - ம்.) 1. தவிர்த்திடுக யாண்டொரேழொடேழ்; யாண்டொரேழினி; யாண் டேழொடேழென; யாண்டொரேழினும்.

2. நிறைநிதிச்; சாலேதாழ் நீக்கி; சாலேதாணீக்கி; சாலேகணீக்கி; யாவரும்.

3. கொள்கென. (110)

291. படையொழிந் திடுகதம் பதிக ளேயினி
விடைபெறு குகமுடி வேந்தர் வேதியர்
நடையுறு நியமமு நவையின் ருகுக
புடைகெழு விழாவொடு பொலிக வெங்கணும்.

'படை ஒழிந்திடுக-(போர் வீரர்) படைகள் தொடுதலைக் கைவிடுக; முடிவேந்தர்-(சிறைப்பட்டுள்ள) அரசர்கள், இனி, தம்பதி களேவிடைபெறுகுக-இனி(சிறைநீங்கி) தம்முடைய நாடுகளுக்கு விடை பெற்றுச் செல்க; வேதியர்-வேதமோதும் அந்தணருடைய, நடை உறு நியமமும்-ஒழுக்கத்துக்குரிய பல நியமங்களும், நவை இன்று ஆகுக-குற்றமற நடைபெறுக; புடை எங்கணும்-(நாட்டின்) எல்லாப் பக்கங்களிலும், கெழு விழாவொடு பொலிக-ஒளி பொருந்திய விழா வணிகளுடன் விளங்குவதாகுக.

பெறுகுக: கு, சாரியை.

படை ஒழிந்திடுக என்றதனல் 'போர்வீரர்' என்பது வருவித்து உரைக்கப்பட்டது; படை என்பதனை ஆகு பெயராக்கி, போர் ஒழிந் திடுக என்றலுமாம். சிறப்பு நாட்களில், சிறைப்பட்டோரை விடுவித் தல் மரபு. நாடெங்கும் மங்கல நிகழ்ச்சியும் மகிழ்ச்சியும் மிகுதல் வேண்டுமென்பது மன்னன் உட்கோள். வேதியர் நியமம்: வேத மோதல், ஓதுவித்தல், தீ வேட்டல், வேட்பித்தல் முதலியன.

(பி - ம்.) 1. படையொழிந்திடுக நம்; படைதவிர்ந்திடுக தம்; படையெழுந்திடுக தம்: பதியுளேயினி; பதிகட்கேகவும்.
3. நடைபெறு: நிதியமும்: நவையின் ருக்குக; நவையிற்ருகுக.
4. புடைகெழும்; கடவுளர்: விழவொடு; விழாவணி: பொலிய; களிக்க; களிப்ப. (111)

292. ஆலயம் புதுக்குக வந்த ணாளர்தம்
சாலையுஞ் சதுக்கமுஞ் சமைக்க சந்தியும்
காலையு மாலையுங் கடவு ளோர்க்கணி
மாலையுந் தூபமும் வழங்க வென்றனன்.

'ஆலயம்-(நாட்டில் உள்ள) கோயில்களை, புதுக்குக - புதுப்பிக் கக் கடவீராக; அந்தணாளர்தம் சாலையும்-அக்கிரகாரங்களிலும், சதுக்கமும் சந்தியும்-நாற்சந்திகளிலும் பிற சந்திகளிலும், சமைக்க-(அமைக்க வேண்டியவற்றை) அமைப்பீராக; காலையும், மாலையும்-காலை, மாலை என்ற இரு வேளைகளிலும், கடவுளோர்க்கு அணி-(கோயில்களில் உள்ள)தெய்வங்களுக்கு அணிவித்தற்குரிய, மாலையும்-பூமாலைகளையும், தூபமும்-புகைத்தற்குரிய நறுமணப் பொருள்களை யும், வழங்க-மிகுதியாகக் கொடுப்பீர்களாக' என்றனன்—.

அந்தணாளர்தம் சாலை-யாகசாலைகளுமாம் சதுக்கம்-நாற்சந்தி; சந்தி-முச்சந்தியும் ஐஞ்சந்தியும். சதுக்கமுஞ் சந்தியும்: (முருகு. 225).

மிக்க பழமையுற்ற கோயில்களைப் புதுப்பித்தும், கோயில்களில் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள கடவுளர்க்கு நித்திய பூசை முதலியன நன்கு நடைபெறச் செய்தும், அந்தணர்க்கு வேண்டிய நலன்களை அளித்தும் நாட்டைச் சிறப்பிக்க என்றவாறு.

*290-92*: ஒப்பு. சீவக. *306—308*; பெருங். *5·6:39—63*; திருவிளை. தடா. *28—31*.

(பி - ம்.) 1. அந்தணாளர்கள். 2. சமைக்கச்; சமைத்துச்.
3. காலையுமருள்புரி: கடவுளர்க்கணி; கடவுளார்க்கணி; கடவுளோரணி; கடவுளோர்க்கெலாம்.
4. தீபமும்; வழங்குகென்றனன். (112)

293. என்புழி வள்ளுவர் யானை மீமிசை
நன்பறை யறைதர நகர மைந்தரும்
மின்பிறழ் நுசுப்பினர் தாமும் விம்மலால்
இன்பமென் றளக்கரு மளக்க ரெய்தினர்.

என்புழி-இவ்வாறு சக்கரவர்த்தி கட்டளையிட்டபோது, வள்ளுவர்-பறையறைதற்குரியோர், யானை மீமிசை-யானையின் மேல் (முரசை ஏற்றி), நன் பறை அறைதர-இந்நற்செய்திகளை அறைந்து தெரிவிக்க, நகரம் மைந்தரும்-நகரத்தில் உள்ள ஆடவரும், மின் பிறழ் நுசுப்பினர் தாமும்-மின்னற்கொடிபோலும் இடையையுடைய மகளிரும், (தமக்குண்டான), விம்மலால்-மகிழ்ச்சியினால், இன்பம் என்ற அளக்க அரும் அளக்கர் எய்தினர்-இன்பம் என்று சொல்லப் படுகிற அளவிடற்கரிய கடலிலே மூழ்கியவரானார்கள்.

இன்பமென்ற, அளக்க அரும்: இரண்டிடங்களிலும் அகரம் தொகுத்தல். எய்தினர் என்பதற்கு, இடம் நோக்கி மூழ்கினர் என உரைக்கப்பட்டது.

(பி - ம்.) 1. வள்ளுவரியானை; வள்ளுவனியானை.
2. வன்பறை: அறைதர: நகர மாந்தரும்; நகரின் மாந்தரும்; மகிழ்ந்து மைந்தரும்; மைந்தரீட்டமும்.
3. மின்புரை; மின்புகழ்: நுசுப்பினர்; நுசுப்பிலார்.
4. அளப்பரும். (113)

294. ஆர்த்தனர் முறைமுறை யன்பி னுலுடல்
போர்த்தன புளகம்வேர் பொடித்த நீணிதி
தூர்த்தன ரெதிரெதிர் சொல்லி னூர்க்கெலாம்
தீர்த்தனென் றறிந்ததோ வவர்தஞ் சிந்தையே.

(இன்ப வெள்ளத்தில் மூழ்கிய நகர மக்கள்), முறை முறை-வரிசை வரிசையாக (கூடி),அன்பினால்-அன்பு மிகுதியால், ஆர்த்தனர்-மகிழ்ச்சியாரவாரம் செய்தனர்; உடல்-அவர்களுடம்பெல்லாம், புளகம் போர்த்தன-புளகங்கள் மூடின: வேர்வை பொடித்த-வேர்வைத்

துளிகள்அரும்பின; எதிர்எதிர் சொல்லினுர்க்கு எலாம்-(அவரவர்க்கு) எதிரே வந்து (இச்செய்தியைச்) சொன்னவர்களுக்கெல்லாம்; நீள் நிதி தூர்த்தனர்-மிக்க பொருளை வாரி வழங்கினர்; (இவற்றிற்கெல்லாம் காரணம்), அவர் தம் சிந்தத-அம்மக்களின் மனமும், தீர்த்தன் என்று அறிந்ததோ?—(இராம பிரான்) அத்திருமாலே என்று உணர்ந்ததோ! (யாதோ அறியேம்). ஏ-ஈற்றசை.

இறுதியடி, கவி வியந்து கூறியதாகும்.

மக்கள் ஓர் உள்ளுணர்ச்சியுடையவராய்த் திரி கரணங்களாலும் தம் மகிழ்ச்சியை வெளிப்படுத்தினர் என்பதாம்.

தீர்த்தன்-பரிசுத்தன்: திருமால். இராமபிரான்திருமாலேயென்பதைத் தேவர்கள் உணர்ந்தவர்களாதலால் அவர்களுடைய மகிழ்ச்சி பலவிடத்து முன்னர்க் கூறப்பட்டது; இங்கே,நகர மக்களின் மகிழ்ச்சியும் அளவு கடந்திருத்தலால், அவர்கள் மனமும் இராமபிரானது ஏற்றத்தையுணர்ந்ததுபோலும் எனக் கவி வியந்து கூறினுர், இச்செய்யுளில் அவதார உண்மை குறிக்கப்பெற்றது காண்க.

அறிந்ததோ: ஓகார வினு ஐயப்பொருளில் வந்தது.

(பி - ம்.) 1. அன்பினுன்.
2. போர்த்தனர்: புளகவேர்: பொடித்து; பொடிப்ப; பொழிந்த; பொழிந்து; பொழிய.
3. சொல்லினோர்க்கெலாம்; சொல்லுவார்க்கெலாம்.
4. அறிந்தவோ; அறிந்ததால்: சிந்தை தாம்; சிந்தைதான்; சிந்தைகள்.

(116)

295. பண்ணையு மாயமுந் திரளும் பாங்கரும்
கண்ணகன் றிருநகர் களிப்புக் கைமிகுந்
தெண்ணெயுங் களபமு மிழுது நானமும்
சுண்ணமுந் தூவினர் வீதி தோறுமே.

கண் அகல் திரு நகர்-இடமகன்ற, செல்வமிக்க அயோத்தி மாநகரத்திலே, களிப்பு கை மிகுந்து-(யாவர்க்கும்)மகிழ்ச்சி வரம்பு கடந்ததனுல், பண்ணையும்-தலை மகளிர் கூட்டமும், ஆயமும்-தோழிமார் கூட்டமும், திரளும்-ஆடவர் (தலைமக்கள்) கூட்டமும், பாங்கரும்-தோழர் கூட்டமும், (அங்கங்கே கூடி), எண்ணெயும்-வாசனைத் தைலத்தையும் களபமும்-கலவைச் சந்தனக் குழம்பையும், இழுதும்-(நறுமண மூட்டிய) நெய்யையும், நானமும்-கத்தூரிக் கலவையையும், சுண்ணமும்-பரிமளப் பொடியையும், வீதிதோறும்-தெருக்களிலெல்லாம், தூவினர்-அள்ளி வீசினுர்கள். ஏ-அசை.

நகரத்து மக்களெல்லாம், தத்தமக்குத் தவப்புதல்வர் தோன்றியதாகவே கொண்டு, அளவற்ற மகிழ்ச்சியால், பலவகையில் அதனை வெளிக்காட்டினர் என்க.

ஒப்பு: கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில், எண்ணெய் சுண்ண மெதிரெதிர் தூவிடக், கண்ணன் முற்றங் கலந்தள ருயிற்றே' (திவ். பெரியாழ்வார். 2: 1).

(பி - ம்.) 2. திருநகர்க்: களிப்பக்: மிகுத்து. 3. கலவையு மிழுது.
4. தூவினர்; தூவின. (115)

இதன் பின் சில பிரதிகளிற் காணப்படும் ஒரு பாடல்—

சுந்தரப் பொடிகளுஞ் செம்பொற் சுண்ணமுஞ்
சந்தன நீரொடுங் கலந்து தையலார்
பந்தியிற் சிவிறியாற் சிதறப் பார்மிசை
இந்திர வில்லெனக் கிடந்த தெங்குமே.

(வேறு)

## வசிட்ட முனிவர் புதல்வர்க்குப் பெயரிடல்

296. இத்தகை மாநக ரீரறு நாளும்
சித்தமு றுங்களி யோடுசி றந்தே
தத்தமை யொன்று முணர்ந்திலர் தாவின்
மெய்த்தவ னுமம் விதிப்ப மதித்தான்.

மா நகர்-பெரிய அவ்வயோத்தி நகரத்தார், இ தகை-இவ்வாறாக, ஈர்அறு நாளும்-பன்னிரண்டு நாட்களளவும், சித்தம் உறுகளியோடு சிறந்து-மனத்தில் மிக்க மகிழ்ச்சியோடு மேம்பட்டு, தம் தமை ஒன்றும் உணர்ந்திலர்-தம்மைத் தாமே சிறிதும் உணராதவராயினர்; (பரவசப்பட்டிருந்தனர்); (பின்பு பதின்மூன்றாம் நாளில்), தா இல் மெய்தவன்-குற்றமில்லாத உண்மையான தவத்தையுடைய வசிட்ட முனிவன், நாமம் விதிப்ப மதித்தான்-(திருக்குமரர்க்குப்) பேரிட நினைத்தாள். சிறந்தே: ஏ-இசைநிறை. நகர்-ஆகுபெயர்.

புதல்வர் பிறந்த மகிழ்ச்சிக்கொண்டாட்டம் நகரத்தில் பன்னிரண்டு நாட்கள் எங்கும் நிலவியிருந்தது. க்ஷத்திரியர்க்குப் பன்னிரண்டு நாள் சூதக ஆசௌசமென்பதும், அது கழிந்தபின் பதின்மூன்று நாளில் நாமகரணஞ் செய்ய வேண்டுமென்பதும் விதியென்ப.

(பி - ம்.) 1. இத்தக. 2. களியோடும்: சிறந்த.
3. தத்தமையென்றும்; தத்தமி லொன்றும்: தாவா: தாழ்வில்.
4. மெய்த்தவர்: வித்தகன்: விதிக்க: மதித்தார்; வகுத்தான்; விதிப்பார்.
(116)

297. கராமலை யத்தளர் கைக்கிரி யெய்த்தே
அராவணை யிற்றுயில் வோயென வந்நாள்
விராவி யளித்தருண் மெய்ப்பொரு ளுக்கே
இராம னெனப்பெய ரீந்தன னன்றே.

கரா மலைய-முதலையானது போராட, தளர்-(அதற்குஆற்றாது) தளர்ச்சியடைந்த, கை கிரி-துதிக்கையையுடைய மலைபோன்ற யானை, (கஜேந்திரன்), எய்த்து-(திருமாலின் அருளுந்தன்மையை) அறிந்து, 'அரா அணையில் துயில்வோய் என-சேஷசயனத்திலே அறிதுயில் அமரும் பெருமானே!' என்று கூப்பிட, அ நாள்-அப்போது, விராவி அளித்தருள்-(அங்கு) வந்தடைந்து அதனைக் காத்தருளின, மெய் பொருளுக்கு-உண்மைப் பொருளாகிய திருமாலுக்கு, ஏய்-பொருந்திய, இராமன் என் அ பெயர் ஈந்தனன்-இராமன் என்னும் அப்பெயரைச் சூட்டினான். அன்று, ஏ-அசை.

திருமால் பத்தி மிக்க இந்திரத்யும்நன் என்னும் அரசன், அகத்தியர் சாபத்தால் யானையுருப் பெற்றும், பழைய நினைவு மாறாமல் திருமாலைப் பூசித்துவரும் நாளில், ஒருநாள், சாபத்தால் முதலையுருவடைந்திருந்த ஹூஹூ என்னும் கந்தருவனிடம் அகப்பட்டுத் தளர்ந்து செயலற்று, திருமாலை நினைந்து 'ஆதிமூலமே' என்று கூவி அலற, உடனே திருமால் கருடாரூடனாய் அங்கெழுந்தருளி யானையைக் காத்தருளினான் என்பது வரலாறு. யானையாயினும் திருமாலை அறிந்தே அழைத்ததனால், 'எய்த்தே' என்றார். இச்சொல், இப்பொருளதாதலை, சீவக. 2481, 2683-ஆம் கவிகளிற் காண்க. 'எய்யாமையே யறியாமையே' என்பது தொல்காப்பியம். எய்த்தல்-தளர்தலுமாம். திருமாலே இங்கு அவதரித்துள்ள உண்மையை அறிந்தவராதலால், வசிட்ட முனிவர், 'இராமன்' (எல்லோரையும் மகிழ்விப்பவன்) என்ற பெயரைச் சூட்டினர். இராம நாமத்தின் பெருமை: கிட்கிந்தா. 300-பார்க்க. அவதார இரகசியம் இங்குச் சுட்டப்பெற்றது காண்க.

(பி - ம்.) 1. கராமலையத் திரள்; கராமலையப் பொரு; கைக்கரி; மொய்த்தே. 3. அழைத்தருள். 4. ஈந்தனர்; வேந்தன்; முனிவன். (117)

298. கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப
விரத மறைப்பொருண் மெய்ந்நெறி கண்ட
வரத னுதித்திடு மற்றைய வொளியைப்
பரத னெனப்பெயர் பன்னின னன்றே.

விரதம் மறை பொருள்-பல விரதங்களைக் கூறும் வேதங்களின் பொருளாகிய, மெய்நெறி-உண்மையான வழிகளை, கரதலம் உற்று ஒளிர் நெல்லி கடுப்ப-கையினிடத்துப் பொருந்தி விளங்குகின்ற நெல்லிக்கனி (உள்ளங்கை நெல்லிக்கனி) போல, கண்ட-தெளிவாக உணர்ந்த, வரதன்-(தவவலிமையால்) வரங்களைத் தரவல்ல வசிட்ட முனிவன், உதித்திடும் மற்றைய ஒளியை-(இராமபிரானுக்குப்பின்) அடுத்துத் தோன்றிய ஒளிமிக்க சேய்க்கு, பரதன் என பெயர் பன்னினன்-பரதன் என்று பெயரிட்டனன்; அன்று, ஏ-அசை.

கடுப்ப, உவமவுருபு.

இப்பாட்டிற்கு உரை வேறு வகையாகவும் கூறுவர்.

தந்தையும் தமையனும் இல்லாத காலத்தில் நாட்டைத் தாங்கும் ஆற்றலும், பிற பல சிறப்புக்களும் பெற்றவன் ஆதலால் **பரதன்** (எதனையும் தாங்குபவன்) என்ற பெயர் சூட்டினர் என்பர்.

கரதல முற்றொளிர் நெல்லி கடுப்ப: 'கையுறு நெல்லியின் கனியிற் காண்டியால்' (சுந்தர. *513*). 'கையுறு நெல்லியின் கனியிற் காட்டும்' (யுத்த. *3985*).

(பி - ம்.) 1. கரதல முற்றொரு; கரதல முற்றெழு. 2. மெய்ந்நெறிமேய.
3. வரதனுதித்திட; வரதனுனித்திட; வரதனுனித்திடு; வரதனுரைத்திட: மற்றையவ் வொளியைப்; மற்றைய வொளிக்கே.
4. பன்னினர்; பண்ணினன்; பரிவினளித்தான். *(118)*

299. உலக்குநர் வஞ்சக ரும்ப ருயர்ந்தார்
நிலக்கொடி யுந்துயர் நீத்தன ளிந்த
விலக்கரு மொய்ம்பின் விளங்கொளி நாமம்
இலக்குவ னென்ன விசைத்தன னன்றே.

வஞ்சகர் உலக்குநர்-வஞ்சனையுடையவர்களாகிய அரக்கர் அழிவாராயினர்; (அதனால்), உம்பர் உயர்ந்தார்-தேவர்கள் உயர்வு பெற்றார்கள்; நிலம் கொடியும் துயர் நீத்தனள்-பூமிதேவியும் வருத்த மொழிந்தாள்; (இவ்வளவுக்கும் காரணமான), விலக்க அரு மொய்ம்பின்-(எவராலும்) தடுத்தற்கு அரிய வலிமை பொருந்திய, இந்த விளங்கு ஒளி நாமம்-இந்தச் சோதி வடிவான குழந்தையின் பெயர், இலக்குவன் என்ன இசைத்தனன்-'இலக்குவன்' என்று (வசிட்ட முனிவன்) கூறினான். அன்று, ஏ-அசை.

அரக்கர் அழிவதும், இவ்வுலகமும் தேவருலகமும் துன்பம் நீங்கி இன்பம் பெறுவதும் தேற்ற மாதலால், உலக்குநர், உய்ந்தார், நீத்தனள் எனக் கால மயக்கமாகக் கூறினார் ஆசிரியர். இலக்குவன்= லக்ஷ்மணன்-எல்லா இலக்கணங்களும் பொருந்தியவன்; கைங்கரிய பரனாக இருக்கும் லட்சுமீகரம் உடையவன் எனப் பொருள்படும் என்பர். சக்கர ரேகையாகிய அடையாளம் உடைமையின் இப்பெயர் பெற்றானென்றலும் உண்டு; உத்தர புராணம். பருவம் 67, சுலோகம் *152*. 'இராமன் றம்பி, மறுவொடு பெயரிய மதலை' (பெருங். *3. 24: 90-91*).

(பி - ம்.) 1. உம்பருமுயர்ந்தார்; யாவரு முய்ந்தார்; உம்பருகந்தார்.
2. நிலக்கொடியின்றுயர்: நீத்தனளின்றே; நீத்தனளென்னா; நீங்கினளிந்த; நீத்தருளிந்த.
3. விளக்கொளியாலென்று; விளக்கொளி நாமம்.
4. இசைத்தனனென்றே; இசைத்தனன் முனிவன். *(119)*

300. முத்துருக் கொண்டுசெம் முளரி யலர்ந்தால்
ஒத்திருக் கும்மெழி லுடையவிவ் வொளியால்
எத்திருக் குங்கெடு மென்பதை யெண்ணுச்
சத்துருக் கன்னெனச் சாற்றின ஞமம்.

முத்து உருக்கொண்டு-ஒருமுத்தானது (குழந்தையின்) வடிவம் கொண்டு, செம்முளரி அலர்ந்தால் ஒத்து இருக்கும்-செந்தாமரை மலர்கள் தன்னிடத்து மலரப் பெற்ருற் போன்ற, எழில் உடைய-அழகையுடைய, இ ஒளியால்-இந்தச் சோதி மயமான குழந்தையினுல், எ திருக்கும் கெடும் என்பதை-எல்லாப் பகைகளும்அழியும் என்பதை, எண்ணு-மனத்தில் நினைத்து,சத்துருக்கன் என—, நாமம் சாற்றினன்-பெயர் கூறினுன்.

'முத்துருக்கொண்டு......ஒத்திருக்கும்': இல்பொருளுவமை. சத்துருக்கன்னென: னகரம் விரித்தல்.

சத்ருக்நன் என்னும் வடமொழிப் பெயர், 'சத்துருக்களை அழிப்பவன்' என்ற பொருளுடையது. உட்பகை, புறப்பகையாகிய எல்லாவற்றையும் வெல்லுந் திறமுடையவன் இவன். பரதனுக்குத் தொண்டு செய்திருத்தலை யன்றி வேறெதிலும் நாட்டமின்றி யிருந்த தனுல் அகப்பகை வென்றமையும், இலவணுசுரன் முதலிய அரக்கரை யழித்ததனுல் புறப்பகை வென்றமையும் பொருந்தும். வசிட்ட முனிவர் முக்காலமும் உணர்பவராதலால், குழந்தைகளின் பிற்கால நிலையை ஓர்ந்து அதற்கேற்பப் பெயரிட்டனர். புதல்வர் நால்வரையும் ஒளி என்றே கம்ப நாடர் கூறுகின்ருர்: 283, 298, 299, 300-முறையே காண்க. பாஞ்சசன்னியத்தின் அமிசமாகத் தோன்றியவ ஞதலால், சத்துருக்கன் வெண்ணிறமுடையவன்; அவன் மேனி நிறத்துக்கு முத்தும், கை கால் முதலிய அவயவங்களுக்குத் தாமரையும் உவமை. சத்துருக்கனுக்கு வெள்ளிப் பருப்பதம் உவமை: 734.

இங்குக் கூறியபடி தசரதன் மக்கட்கு வசிட்டர் பெயரிட்டனர் என்பது வான்மீகத்தில் இல்லை.

(பி - ம்.) 1. கொண்ட செம்; கொள்வெண்: மலர்ந்தால்; அலர்ந்தது; அவர்ந் ததை. 2. இவ்வொளியை: அவ்வொளியால்.
3. எண்ணிச்; உன்னுச்.
4. சத்துருக்கனெனச்: சாத்தினன்; சாத்தினர்: அன்றே (120)

## தசரதன் அளித்த தானச் சிறப்பு

301. பொய்வழி யின்முனி புகலரு மறையால்
இவ்வழி பெயர்க ளிசைத்துழி யிறைவன்
கைவழி நிதியெனு நதிகலை மறையோர்
மெய்வழி யுவரிநி றைத்தன மேன்மேல்.

பொய்வழி இல் முனி-தவறுன வழி (சிறிதும்) இல்லாத வசிட்ட முனிவன், புகல்தரு மறையால்-சிறப்பித்துச் சொல்லப்படும் வேத மந்திரங்களோடு, இ வழி பெயர்கள் இசைத்துழி-இவ்வாறு (புதல்வர்க்குப்) பெயர்கள் இட்ட பொழுது, இறைவன்-சக்கரவர்த்தியினுடைய, கை வழி நிதி எனும் நதி-கையினின்றும் பெருகிய பொருள்களாகிய ஆறுகள், கலை மறையோர்-சாத்திரங்களையுணர்ந்த வேதியர்களின், மெய் வழி உவரி-உண்மைப் பொருள் (நிரம்பி) வழிகின்ற (மனமாகிய) கடலை, மேல் மேல் நிறைத்தன-மிகுதியாக நிரப்பின.

மறையால் - வேதவிதிப்படி என்றலும் ஆம். கை வழி நிதி என்றது, தானநீருடன் கொடுக்கப்பட்டதைக் குறிக்கும். மெய்-'அறிவு' எனக் கொண்டு, அந்தணர்களின் அறிவாகிய கடல் என உரைத்தலும் ஆம். மெய்-அறிவு; புறநா. 25: 11. உரை. மறையோர் மெய் வழி உவரி : அந்தணர்களின் உடலால் நிரம்பிய கடல்=கடல் போல் திரண்ட அந்தணர் கூட்டம் என்றலும் ஒன்று. அந்தணர் மனம் மிக உவப்ப, அளவிறந்த தானங்களை அளித்தான் என்பது கருத்து. நதி,கடல்: உருவகம். இசைத்த+உழி: தொகுத்தல் விகாரம்.

'இறைவன்........மேன்மேல்' ஒப்பு: 'முதுபாரின் முகந்து தானக், கையார் புனலால் நனையாதன கையுமில்லை' 171.

(பி - ம்.) 1. புகலரு; புகறலும்; புகரறு: முறையால்; மொழியால்.
2. பேர்கள்: இசைத்தலும்; இசைத்தபின்: வேந்தன்.
3. நிதியங் கலைவல; நிதிபெறுவது கலை; நிதிபொழிநதிகலை; நிதிபல கலைதெரி மறையோர்; இந்நதி கலைவல மறையோர்; வருநிதிநதி கலைமறையோர்; இந்நதி நிதி கலைமறையோர்; நதியொடு கலைவல மறையின்; நிதிபெறுகலைமறையோராம்; நிதிபெறு கலைமறையோர் தம்.
4. நிறைத்தனன்; நிறைந்தன: மென்மேல். (121)

302. காவியு மொளிர்தரு கமலமு மெனவே
ஓவிய வெழிலுடை யொருவனை யலதோர்
ஆவியு முடலமு மிலதென வருளின்
மேவின னுலகுடை வேந்தர்தம் வேந்தன்.

உலகு உடை(ய)-உலகம் முழுதும் ஆளுதலையுடைய, வேந்தர் தம் வேந்தன்-சக்கரவர்த்தியாகிய தசரதன், காவியும்-குவளை மலர்த்திரளும், ஒளிர் தரு கமலமும் என-(அவற்றினிடையே) விளங்குகின்ற தாமரை மலர்களும் என்னும்படி (அமைந்த), ஓவியம் எழில் உடை(ய)-சித்திரத்தின் அழகையுடைய, ஒருவனை அலது-ஒப்பற்ற இராமபிரானை யன்றி, ஓர் ஆவியும் உடலமும் இலது என-(தனக்கு வேறு) ஓர் உயிரும் உடம்பும் இல்லை என்னும்படி, அருளின் மேவினன்-

(இராமபிரானிடத்துப்) பேரன்புடையவனாக இருந்தான்.

வேந்தன்மேவினன் என்க. அருள்-அன்பின் மிகுதி குறித்தது.

இராமபிரானது திருமேனிக்குக் காவியும், அவயவங்களுக்குக் கமலமும் உவமை: *1128*; சுந்தர. *631*-பார்க்க.

ஓவிய எழிலுடை யொருவன்: 'ஓவியஞ் சுவைகெடப் போவிவதோருருவொடே' *(1128)*: 'ஓவியத் தெழுதவொண்ணு வுருவத்தாய்' (கிட்கிந்தா. *307*); 'சித்திரத்தினலர்ந்த செந்தாமரை, யொத் திருக்கு முகம்' (சுந்தர.*349*); தசரதன்இராமபிரானைத் தன் உயிரென மதித்தல்: *335*, *1128*; அயோத். *219*. 'இராமன் தசரதனுக்கு வெளியில் உலாவும் பிராணன்' என்பர் வான்மீகி.

(பி - ம்.) 1. ஒளிதரு: ககனமும். 2. ஓவியமெழில்கெட.
3. உணர்வும திலதென; உணர்வும தில்லென.
4. உலகிடை; வேந்தர்கள் வேந்தன். (122)

303. அமிர்துகு குதலையொ டணிநடை பயிலாத்
திமிரம தறவரு தினகர னெனவும்
தமரம துடன்வளர் சதுமறை யெனவும்
குமரர்க ணிலமகள் குறைவற வளர்நாள்,

குமரர்கள்-புதல்வர்கள் நால்வரும், அமிர்து உகுகுதலையொடு-அமுதஞ் சிந்துகின்ற (மிக்க இனிமையுடைய) மழலைச்சொற்களோடு, அணி நடை பயிலா-அழகிய தளர் நடையும் பயின்று, திமிரம் அது அற வரு தினகரன் எனவும்-(உலகத்து) இருள் நீங்கும்படி வருகின்ற சூரியனைப் போலவும், தமரம் அது உடன் வளர்-(சுரங்களாகிய) ஒலியுடனே வளர்கின்ற, சதுமறை எனவும்-நான்கு வேதங்கள் போலவும், நிலமகள் குறைவு அற-பூமிதேவியின் குறைகளெல்லாம் நீங்கும்படி, வளர் நாள்-வளர்ந்து வரும் நாளில்,

தினகரன் புறவிருளைப் போக்குபவன்; இக்குமரர் அகவிருளைப் போக்கவல்ல ஞானசூரியர். வேதம் 'எழுதாக்கிளவி' ஆதலின் ஒலியாகவே வளர்வது. தமரம்-ஒலி. குமரர் நால்வர்க்கும் சதுமறைகள் ஒப்பாயின; இதுபோல் பின்னுங் கூறுவர்: 'மறை நான்கு மனையார்கள்' *(735)*; நால்வரும் பொருவினுன் மறையெனு நடையினர்' *(1134)*; 'புவிக்கெலாம் வேதமேயன, இராமன்' (அயோத். *146*); 'மறைவாய்மை யொருதாமே, ஆமரசன் மைந்தர்' (யுத்த. *696*). 'அரசர்க்குச் சூரியன் உவமை' புறநா. 4: 15—6.

(பி - ம்.) 1. பயிலத். 2. அறவரும்; அறவளர். 3. உடன்வரு.
4. குறையற, (123)

சில பிரதிகளில் இதன்பின் காணப்படும் பாடல்:—

அருமறை நெறிவழி யரசனு மன்னப்
பிரசன மதலையர் பெறுவழி யுதவிக்
கரையறு திருநகர் விழவொடு களியா
இருமையு முதவுறு தானமு மீந்தான்.

304. சவுளமொ டுபநய னமுமுறை தருகுற்
றிவளவ தெனவொரு கரைபிறி திலவாய்
உவளரு மறையினொ டொழிவறு கலையும்
தவண்மதி புனையர னிகர்முனி தரவே.

தவள் மதி புனை அரன் நிகர் முனி-வெண்மையான பிறைச் சந்திரனைச் சூடிய சிவபெருமானுக்கொப்பான வசிட்ட முனிவன், (குமாரர்களுக்கு), சவுளமொடு-சௌளமும், உபநயனமும்—, (ஆகிய சடங்குகளை), முறை தருகுற்று-முறையாகச் செய்வித்து, இ அளவது என-இவ்வளவினது என்று, ஒரு கரை பிறிது இல ஆய்-ஒருவரம்பு தனியே இல்லாததாய், உவள்-பரந்துள்ள, அருமறையினொடு-அரிய வேதத்துடனே, ஒழிவு அறு கலையும்-கெடுதலில்லாத மற்றைக் கலைகளையும், தர-கற்பிக்க, (அடுத்த கவியோடு தொடரும்).

சௌளம்: குடுமி வைத்தல்; இது குமரர்க்கு மூன்றும் ஆண்டில் செய்யப்படுவது. உபநயனம்-பூணூல் அணிவித்தல்; க்ஷத்திரியர்களுக்கு இது பத்தாம் ஆண்டில் செய்யப்படுவது. சௌளம்-சவுளம்: போலி.

தருகுற்று என்பதில் 'கு' சாரியை. இவளவது: தொகுத்தல் விகாரம். தவளம் என்பது தவள் எனக் கடை குறைந்தது. உவள் என்பதற்கு நடுக்கம் எனவும் விளங்குதல் எனவும் பொருள் கூறுவாருமுளர்.

வசிட்டர் குமரர்க்கு வித்தியாகுரு என்பது: *736*; அயோத். *1199*.

(பி - ம்.) 1. சவுளமும்: உபநயனமும் விதி: உபநயம் விதிமுறை; உபநய விதி முறை.
2. கரைபிறிதிலவா: குறைபிறிதிலவாய்; குறைபிரிதிலவா.
3. உவடரு; உவடறு: மறையினன்; ஒழிவரு: கலையின். (124)

305. யானையு மிரதமு மிவுளியு முதலா
ஏனைய பிறவுமவ் வியல்பினி னடைவுற்
றூனுறு படைபல சிலையொடு பயிலா
வானவர் தனிமுதல் கிளையொடு வளர,

யானையும்-யானை யேற்றமும், இரதமும்-தேரேறுதலும், இவுளியும்-குதிரை யேற்றமும், முதலா ஏனைய பிறவும்-இவை முதலான

(அரசர்க்குரிய) பிற கலைகளும், அ இயல்பினின் அடைவு உற்று-அத தற்குஉரிய முறைப்படி கைவரப்பெற்று, ஊன் உறு படை பல-(பகை வர்களின் உடல்) தசை பொருந்துதற்குரிய பல ஆயுதப் பயிற்சியும், சிலையொடு-விற்பயிற்சியுடனே, பயிலா-பயின்று, வானவர்தனிமுதல்-தேவர்களின் ஒப்பற்ற முதல்வனுன திருமாலின் அமிசமாகிய இராம பிரான், கிளையொடு வளர-தம்பிமார்களுடனே(நன்கு) வளர்ந்துவர.

யானை, இரதம், இவுளி என்பன அவற்றை ஏறி நடத்தும் தொழிலைக் குறிப்பன. வில், பிற படைகளினும் சிறப்புடையதாதலின் அதனைத் தனியே கூறினுர். முதல்-அடிமரம் என்ற குறிப்புப் பொருள் தருவது; அதற்கேற்பக் 'கிளையொடு வளர' என்பது அமைந்துள்ளது. வானவர் தனிமுதல்; அவதார இரகசியம் கூறியவாறு.

(பி - ம்.) 1. ஆனையும்: முறையே.
2. ஏனையர்: பிறவுமிவ்; பிறவுடன்; பிறவுமற்: இயல்பினினடையுற்று; இயல்பினினடைகுற்று; இயல்பினனடைவுற்று.
3. ஊனுறை; ஊனகு; ஊனமில்: கலையொடு.
4. கிளையொடும்: வளர்வ; வளர்வார்; வளர்நாள். (125)

306. அருமறை முனிவரு மமரரு மவனித்
திருவும நகருறை செனமுந மிடரோ
டிருவினை துணிதரு மிவர்களி னிவணின்
றொருபொழு தகல்கில முறையென வுறுவார்.

அரு மறை முனிவரும்-அரிய வேதங்களை ஓதியுணர்ந்த முனிவர்களும், அமரரும்-தேவர்களும், அவனி திருவும்-பூமிதேவியும், இ நகர் உறை செனமும்-இந்த நகரத்தில் வாழும் மக்களும், நம் இடரோடு-நம்முடைய துன்பங்களுடனே, இருவினை-இவற்றுக்குக் காரணமான இருவினைகளும், இவர்களின்-இக்குமரர்களால், துணிதரும்-நீங்கிப்போம்; (ஆதலால்), இவண் நின்று-இவ்விடத்தினின்றும், ஒரு பொழுது-ஒரு காலத்தும், உறை அகல்கிலம் என-உறைதலைக் கைவிட மாட்டோம் என்று, உறுவார்-அங்கேயே சேர்ந்திருப்பார்கள்.

திரு என்பது இங்கே தேவி என்ற மாத்திரையாய் நின்றது. இ நகர், நமிடர்-விகாரம். உறை: முதல் நிலைத் தொழிற் பெயர். சனம் என்பது மோனை நயங்கருதிச் செனம் என வந்தது.

குமரர்கள் தெய்வ அமிசம் உடைமையால், அவர்களிடம் யாவருக்கும் ஒரு பற்றுதல் இயற்கையாகவே உண்டாக, அதனுல், அவ்வயோத்தியில் வசித்தலே ஒரு பெரும் பேருக முனிவர் முதலானோர் கருதலாயினர்.

(பி - ம்.) 2. திருவுமி நகருறை; திருவுமன்னகருறை; திருவுமிந் நகருறை; திருவுமின்னகருறை: செனமென விடரோடு.

3. துணிவரும்: இவரினிது; இவரினில்; இவரினின்; அவரினின்; இனி யென்று; இவரென்று; இவரின்று; நிலைநின்று.
4. அகல்கலம்: உறைகென; உறுமென; உறுவர்; உறைவார். (126)

குமரர், இருவ ரிருவராக இணைந்திருத்தல்

307. ஐயனு மிளவலு மணிநில மகடன்
செய்தவ முடைமைக டெரிதர நதியும்
மைதவழ் பொழில்களும் வாவியு மருவி
நெய்குழ லுறுமிழை யெனநிலை திரிவார்.

ஐயனும்-தலைவனாகிய இராமபிரானும், இளவலும் - இளைய பெருமாள் எனப்படும் இலக்குமணனும், அணி நிலமகள் தன்-அழகிய பூமிதேவியின், செய் தவம் உடைமைகள்-செய்த தவம் உடைய தன்மைகள், (மிக்க தவம் செய்துள்ளமை), தெரிதர-யாவர்க்கும் தெரியும் படி, நதியும்-ஆற்றங்கரைகளிலும், மை தவழ் பொழில்களும்-மேகங்கள் தங்குகின்ற சோலைகளிலும், வாவியும்-குளங்களிலும், மருவி-(ஒருவரோடு ஒருவர் இணை பிரியாமல்) சேர்ந்து, நெய் குழல் உறும் இழை என - நெய்தற்குரிய குழலிலே பொருந்திய நூலிழைபோல, நிலை-பூமியிலே, திரிவார்-சுற்றி வருவாராயினர்.

நிலை, ஆகுபெயர்.

மனத்துக்கும் வாக்குக்கும் எட்டாத பெருமான், மானுடனாக அவதரித்துத் தன் திருவடிகள் தரையிலே படப் பலவிடங்களிலும் திரியப் பெறுதலால், நிலமகள் தவமுடைமை யாவர்க்கும் தெரியலாயிற்று என்க.

'சென்றால் குடையாம்; இருந்தாற்சிங் காதனமாம்;
நின்றால் மரவடியாம்; நீள்கடலுள்—என்றும்
புணையாம், மணிவிளக்காம் பூம்பட்டாம் புல்கும்
அணையாம் திருமாற்கு அரவு' (முதற்றிருவந்தாதி. 53).

என்றபடி,ஆதிசேடன் எப்போதும் எம்பெருமானது தொண்டிலேயே ஈடுபட்டவனாதலால், அவனமிசமான இலக்குமணன் இங்கும் அத் தொண்டிலேயே நாட்டமுடையவனானான். குழல் என்பது, நெய்யும் போது,பாவின் ஊடே குறுக்கு நூலிழையைச் செலுத்தும் கருவி; அக் கருவியிலே பொருத்தப்பட்ட இழை, கருவி செல்லும் வழியே செல்வதன்றி வேறு செல்ல வகையில்லாதது. ஒப்பு: துன்னூசி, போம் வழிப் போகு மிழை' (பழ. 354).

(பி - ம்.) 2. செய்தவ முறைமைகள்; வனமும்; நறவார்.
3. மைதரு: மருவா; வருவார்.
4. எனுநிலை: திரிவர்; தெரிவார். (127)

308. பரதனு மிளவலு மொருநொடி பகிரா
திரதமு மிவுளியு மிவரினு மறைநூல்
உரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள்
வரதனு மிளவலு மெனமரு வினரே.

பரதனும்—, இளவலும்-அவன் தம்பியாகிய சத்துருக்கனும், ஒருநொடி பகிராது-ஒரு நொடிப் பொழுதும் (ஒருவரை யொருவர்) இணைபிரியாமல், இரதமும் இவுளியும் இவரினும்-தேரிலும், குதிரை மீதும் ஏறிச் செலுத்தும்போதும், மறை நூல் உரை தரு பொழுதினும்-வேத சாத்திரங்களைக் கற்கும்போதும், ஒழிகிலர்-ஒருவரை யொருவர் விடாதவர்களான, எனை ஆள் வரதனும் இளவலும் என-என்னை ஆட்கொண்ட வள்ளலாகிய இராமபிரானும் இலக்குமணனும்போல, மருவினர்-பொருந்தியிருந்தார்கள். ஏ-அசை.

முன் கவியில் 'இளவல்' என்றது இலக்குமணனைக் குறித்தது இங்கே அது சத்துருக்கனைக் குறிக்கின்றது. சங்க, சக்கரங்கள் சேர்த்தே வழங்கப்படுவன. பரதன் சக்கரத்தின் அமிசமாய், இராமபிரானது ஆஞ்ஞா சக்கரத்தை நடப்பித்தவன்.

பரதனும் சத்துருக்கனும் பகிராமை: அயோத். மந்தரை. 57. எனையாள் வரதன்: 205-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 2. எவரினும். 3. ஒழிவிலர். 4. மருவினரால். (128)

309. வீரனு மிளைஞரும் வெறிபொழில் களின்வாய்
ஈரமொ டுறைதரு முனிவர ரிடைபோய்ச்
சோர்பொழு தணிநகர் துறுகுவ ரெதிர்வார்
கார்வர வலர்பயிர் பொருவுவர் களியால்.

வீரனும்-சிறந்த வீரனான இராமபிரானும், இளைஞரும்-தம்பிமார்களாகிய மூவரும், (காலைவேளையில்), வெறிபொழில்களின் வாய்-(ஊருக்குவெளியேஉள்ள) மணம்மிக்க சோலைகளில், ஈரமொடு உறைதரு-அருளோடு தங்குகின்ற,முனிவரர் இடை போய்-முனிவர்களிடம் சென்று, (அவர்களோடுபழகியிருந்து), சோர் பொழுது-சூரியன் அத்தமிக்கும் வேளையில், அணி நகர் துறுகுவர்-(மீண்டும்),அழகிய அயோத்திமா நகரத்தினுள்ளே வருவார்கள்; எதிர்வார்-(அப்போது அவர்களை) எதிரே காண்பவர்கள், களியால்-(மனம் நிறைந்த) மகிழ்ச்சியுடையவராய், கார் வர அலர் பயிர் பொருவுவர்-மழை வருதலால் தழைக்கின்ற பயிரை யொப்பர். (மழை முகங்கண்ட பயிர்போல் ஆவர்.) துறுகுவர்: 'கு' சாரியை.

இராமபிரான் 'மகாவீரன்', 'ரகு வீரன்' என வழங்கப்படுவான். அவனைக் கண்ட மாத்திரத்திலேயே அனைவரும் மகிழ்ச்சியடைவர். குமாரர்கள் நால்வரும், ஊருக்கு வெளியே சோலைகளில்

ஆச்சிரமம் அமைத்துக்கொண்டு தங்கிவரும் முனிவர்களிடம் போய்ப் பல நூற்பொருள்களைக் கேட்டறிந்து சிறப்படைவர் என்றவாறு.

(பி - ம்.) 1. வீரரும்: இளையரும்; இளவலும்: விரிபொழில்களின்.
2. முனிவர திடைபோய்ப்.
3. சேர்பொழுது; பேர்பொழுது: அணிதரு துறைநகர்; துன்னுவ உறைபவர்: உற்றவர்; அவர்நகர்; வரநகர்: எதிராக்: எதிரா: எதிர: தவிராக்.
4. கார்வளர் பயிர்பல; கார்வர வளர்பயிர். (129)

310. ஏழைய ரனைவரு மிவர்தட முலைதோய்
கேழ்கிளர் மதுகையர் கிளைகளு மிளையார்
வாழிய ரெனவவர் மனனுறு கடவுள்
தாழ்குவர் கவுசலை தயரத னெனவே.

ஏழையர் அனைவரும்-நகரத்திலுள்ள மாதர் எல்லாருடனே, இவர் தடமுலை தோய்-இவர்களுடைய பெரிய தனங்களைப் பொருந்துகின்ற, கேழ் கிளர் மதுகையர் கிளைகளும்-மிக்கு விள்ங்குகின்ற வலிமையுடைய ஆடவரினத்தாரும், கவுசலை, தயரதன் என-கௌசல்யாதேவியையும் தசரத சக்கரவர்த்தியையும் போலவே, 'இளையார் வாழியர்' என-'இக்குமரர்கள் நீடுவாழ்வாராக' என்று, அவர் மனன் உறு கடவுள்-அவரவர் மனத்துக்குப் பொருந்திய (வழிபடு) கடவுளரை, தாழ்குவர்-(நாள்தோறும்) வணங்கி வேண்டிக்கொள்வர், ஏ-அசை. மனன்: இறுதிப்போலி.

நகரத்து மக்கள் அனைவரும், இக்குமாரர்களைத் தம் தம் மக்களாகவே கருதி அன்பு கொண்டு, அவர்கள் நீடு வாழும் வண்ணம் கடவுளரை வேண்டிக்கொள்வர் என்க. பெண்டிர் அனைவரும் கௌசலை போலவும், ஆடவர் அனைவரும் தசரதன் போலவும் அன்பு கொண்டனர் என முறையே இயைக்க. பட்டத்துத் தேவியருள் மூத்தவளாய், இராமபிரானைப் பெற்றவளாயினும் மற்ற மூன்று குமரரிடத்தும் அன்பில் வேற்றுமையில்லாதவளுமா யிருத்தலின், கவுசலையை எடுத்துக் கூறினார். அன்பிற் சிறந்தது 'தாய் அன்பு' ஆகலின் கவுசலையையும், மற்ற மகளிரையும் முற் கூறினார். கௌசல்யாதேவி, 'நால்வர்க்கும், மறுவில் அன்பினில் வேற்றுமைமாற்றினள்' (அயோத். 302) என்றது காண்க. அயோத். 253 ஈண்டு ஒப்பிடத் தகும்.

(பி - ம்.) 1. கட முலை. 2. கிளைஞரும்; கிளர்தரும்; இனையார்; அனையார்.
3. வாழிய; எனவிவர்; மனனுறை; மனமுறு.
4. கோசலை; தசரதன். (130)

311. கடல்கரு முகிலொளிர் கமலம தலரா
வடவரை யுடன்வரு செயலென மறையும்
தடவுத லறிவரு தனிமுத லவனும்
புடைவரு மிளவலு மெனநிகர் புகல்வார்.

மறையும்-வேதங்களும், தடவுதல் அறிவு அரு-தேடி அறிய முடியாத, தனி முதல்வனும்-ஒப்பற்ற தலைவனான இராமபிரானும், புடை வரும் இளவலும்-அவன் பக்கத்தில் (எப்போதும் விடாது) வருகின்ற இலக்குமணனும், (இணைந்து வரும் காட்சி),கடல்-கடலும், கருமுகில்-நீருண்ட மேகமும், ஒளிர் கமலம் அது அலரா-பிரகாசிக்கின்ற தாமரை மலர்களைப் பூத்து, வடவரை உடன் வருசெயல் என-மேருமலையுடன் சேர்ந்து நடந்து வரும் தோற்றம்போல் ஆகும் என்று, நிகர் புகல்வார்-(கண்டோர்) ஒப்புமை கூறுவார்கள்.

இளவலும் என என்பதில், என: இசை நிறை. 'வருசெயல்' என்பது இங்கும் வருவித்துப் பொருள் உரைக்கப்பட்டது. முதல் இரண்டடிகளில் உள்ளது இல்பொருளுவமை.

கடல். கருமுகில் என்பன இராமபிரானுக்கும், வடவரை இலக்குமணனுக்கும் நிறத்தால் உவமை; இலக்குமணன் மேனி பொன்னிறமுடையது; 'வில்லேந்தி வருமேருப் பருவரையும்' (734); 'பொன்னொத்த மேனிப் புயலொத்த தடக்கையானை' (அயோத். 421); 'சுவண வண்ணனொடு' (ஆரணிய. 38). கமலம் பூத்த கருமுகில்: 192-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. கடறரு; முகிலொளி; முகிலொடு; அகலா. 3. அறிதரு. 4. எனநனி; புரிவார். (131)

312. எதிர்வரு மவர்களை யெமையுடை யிறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிர
எதுவினை யிடரிலை யினிதுநு மனையும்
மதிதரு குமரரும் வலியர்கொ லெனவே,

எமை உடை இறைவன்-எம்மை (ஆளாக) உடைய தலைவனான இராமபிரான், எதிர் வரும் அவர்களை-(வெளியே செல்லும்போது) தன்னெதிரே வருகின்ற அந்நகர மக்களை (நோக்கி),முதிர்தரு கருணையின்-மிக்க கருணையோடு, முகம் மலர் ஒளிர-செந்தாமரை மலர் போன்ற தன்முகம் பிரகாசிக்க, 'எதுவினை-உமக்கு ஆகவேண்டிய காரியம் யாது? இடர் இலை (கொல்), துன்பம் (ஒன்றும்) இல்லையே? நும் மனையும்-உம்முடைய மனைவிமாரும், மதிதரு குமரரும்-அறிவறிந்த புதல்வரும், இனிது வலியர் கொல்-நன்கு திடகாத்திரராக இருக்கின்றனரா?' என-என்று வினவ, ஏ-அசை.

இதுவும் அடுத்த கவியும் ஒரு தொடர்.

ஒருவரைச் சந்திக்குங்கால், அவர் பேசு முன்பே முதலில் பேசிக் குசலம் விசாரிப்போர் 'பூர்வ பாஷி' எனப்படுவர். இராம பிரானை இவ்வாறு குறிப்பர் வான்மீகி.

'எதுவினை' என்பதற்கு, உம்முடைய தொழில்யாது? என்றலும் ஆம். இடரிலை என்பதன் பின் 'கொல்' என்பதனைக் கூட்டுக. மனை, ஆகுபெயர். 'எமையுடை இறைவன்' 206-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. எனையுடை. 2. முதிர்வரு; ஒளிரா.
3. அதிர்வினை; இடரிலது; இனிது நும்மனையும்; இனிதினு மனையும்.
4. குமரர்கள்.

(132)

313. அஃதைய நினையெம தரசென வுடையேம்
இஃதொரு பொருளல வெமதுயி ருடனேழ்
மகிதல முழுதையு முறுகவி மலரோன்
உகுபக லளவென வுரைநனி புகல்வார்.

(அவ்வாறு வினவப்பெற்ற மக்கள், இராமபிரானை நோக்கி), ஐய-ஐயனே! அஃது-அப்படியே; நினை எமது அரசு என உடையேம்-உன்னை எங்கள் அரசனாகப் பெற்றுள்ளோம்; (அதனால், எங்களுக்கு), இஃது-இவ்வாறு ஒரு குறையுமின்றி யிருப்பது, ஒரு பொருள் அல-ஒரு பெரிய காரியமன்று; (நீ), எமது உயிருடன்-எங்கள் உயிரோடு, ஏழ் மகிதலம் முழுதையும்-ஏழாகவுள்ள இப்பூமண்டல முழுவதையும், இ மலரோன் உகு பகல் அளவு(உம்)-இப்பிரமன் அழியுங்காலம் வரையிலும், (ஒரு பிரம கற்பம்வரை), உறுக-ஆட்சி புரிவாயாக', என-என்று, நனி உரை புகல்வார்-நன்கு விடை கூறுவார்கள்.

'அப்படியே' என்பது ஒரு குறையுமின்றி யிருக்கின்றோம் என்பதைக் குறிக்கும்; 'உன்னை அரசனாகப்பெற்ற எங்களுக்குக் குறையின்றி யிருப்பது ஒரு பெரிய காரியமன்று' என அன்பின் மிகுதியால் கூறுகின்றனர். இராமபிரான் எத்தகைய அன்பினை மக்களிடம் கொண்டனனோ அத்தகைய அன்பினை அவர்களும் அவன்பால்கொண்டிருந்தனர் என்பது இங்குப் புலப்படுவதாம். ஒப்பு. (அயோத். 85). அஃது-'அவ்வினவுக்கு' என்றும், 'அகதி என்ற வடசொல்லின் திரிபாகிய' 'அஃதை' யென்பது ஐய என்பதனோடு சேரும்போது இறுதி தொக்கு, அஃதைய என்று ஆயிற்று எனவும் உரைப்பாரும் உளர். உகுதல்-அழிதல்.

இஃது பொருளல: ஒருமை பன்மை மயக்கம். பகலளவு என்றவிடத்து உம்மை தொக்கது.

அஃது-அப்படி: (சீவக. 1884).

(பி - ம்.) 1. அஃதையன்; அருளெமது; இதுநினை; அறிவென; உடையோம்.
2. பொருளலம்; பொருளில.
3. முழுவதும்; உறுகவிம்; உறுகவம்; உறுகென; உறுகுவை; வளர்தரு.
4. உகுதினம்; புரிவார்; பகர்வார்; புகழ்வார். (133)

(வேறு)

314. இப்பரி சணிநக ருறையும் யாவரும்
மெய்ப்புகழ் புனைதர விளைய வீரரும்
தப்பற வடிமலர் தழுவி யேத்துற
முப்பரம் பொருளினு முதல்வன் வைகுறும்.

மூன்று பரம் பொருளினும் முதல்வன்-திரிமூர்த்திகளுள்ளும் முன்னவனாகிய (பரம்பொருளின் அம்சமான) இராமபிரான், இபரிசு-இவ்வாறாக, அணி நகர் உறையும் யாவரும்-அழகிய நகரத்தில் வாழும் எல்லோரும், மெய் புகழ் புனைதர-உண்மையான தனது புகழை எடுத்துக் கூறவும், இளைய வீரரும்-வீரராகிய தம்பிமாரும், தப்புஅற-குற்றமின்றி, அடிமலர்-தன்னுடைய திருவடி மலர்களை, தழுவி ஏத்து உற-பொருந்தித் துதிக்கவும், வைகு உறும்-(இன்ப வாழ்விலே) தங்கு பவனானான்.

இராமபிரானைப் பற்றிய புகழுரை யெதுவும் பொய்படாத தாதலால் 'மெய்ப்புகழ்' என்றார்.

முப்பரம் பொருளினும் முதல்வன்: இக்கருத்துப்படப் பல விடத்தும் கூறுவர் கம்பர்: அவர் மதமும் இதனால் புலப்படும். 1305; அயோத். 39; கிட்கிந்தா. 209; சுந்தர. 1117; 1122-காண்க.

(பி - ம்.) 2. புனைதரும்; புனைதரு; இளைய வீரரும்; வீரர்கள்,
3. அடிநிழறமுவி; அடிநிழற்றழுவி.
4. முப்பரம் பொருளிற்கு; பொருளுக்கு; பொருளுக்குள்; பொருளெனும்; வைகுநாள். (134)

சில பிரதிகளில் அடுத்த கவியுடன் இப்படலம் முடிகின்றது.

திருவவதாரப் படலம் முற்றும்.

# 6. கையடைப் படலம்

கையடைப் படலம்: கையில் அடைவித்தலைக் கூறும் படலம் என விரியும். தசரத சக்கரவர்த்தி, இராம லக்குமணரை விசுவாமித்திர முனிவன் கையில் ஒப்புவித்தமையைக் கூறுவது இது.

315. அரசர்தம் பெருமக னகிலம் யாவையும்
விரசுறு தனிக்குடை விளங்க வென்றிசேர்
முரசொலி கறங்கிட முனிவ ரேத்துறக்
கரைசெய வரியதோர் களிப்பின் வைகுநாள்,

அரசர் தம் பெருமகன்-அரசர்க்கரசனுன தசரதன், அகிலம் யாவையும்-உலகம் முழுவதும், விரசு உறு தனி குடை விளங்க-பொருந்துதலுற்ற (தனது) ஒப்பற்ற வெண் குடை நிழலிலே விளங்கவும், வென்றி சேர் முரசு ஒலி கறங்கிட-வெற்றிக்குரிய பேரிகையின் ஒலி முழங்கவும், முனிவர் ஏத்து உற-முனிவர்கள் (தன் பெருமைகளைப்) புகழவும், கரை செய அரியது ஓர் களிப்பின்-சொல்லுதற்கரிய தான பெரு மகிழ்ச்சியுடன், வைகும் நாள்-வாழ்ந்துவரும் நாளில்,

இது அடுத்த கவியில் வரும் 'பொலிய வெய்தினுன்' என்பதனுடன் முடியும்.

ஏத்து; முதனிலைத் தொழிற்பெயர். கரைதல்-சொல்லுதல். கரை செய-சொல்ல; 'அறங்கரை நாவின்' (தொல். பாயிரம்). அளவிட, வரம்பு கோல என்றும் ஆம்; 'கரை செய்ய வரியதொரு பேருவகைக் கடல் பெருக' (324).

அகிலம் யாவையும் விரசுறு தனிக்குடை: ஒப்பு: 177.

(பி - ம்.) 1. அரைசர்தம்; அரசர்தன்: உலகம் யாவையும்.
4. கரைசெய லரியதோர்.

(1)

இதன் பின் சிலபிரதிகளில்,

'அப்பெருந் திருவொடு மகில நாதனென்
றெப்பெரும் புவனமு மிறைஞ்சி யேத்தவே
தப்பருந் தருமமுந் தயாவுந் தாங்கியே
ஒப்புர வுடனவ னுவந்து வாழுநாள்' என்ற பாடலும்,

மற்றும் சில பிரதிகளில்,

'அரியணை மிசைதனி லழகு மன்றினில்
புரிதவ மிகுபதப் பொற்பி னீடரு
ளரசர்கண் முடிபடி யணைய வம்பொனி
னுரைபொடி மலைகுவை யொப்ப குப்பையோ'

என்ற பாடலும் காணப்படுகின்றன.

## தசரதனது ஓலக்கச் சிறப்பு

316. நனைவரு கற்பக நாட்டு நன்னகர்
வினைதொழின் மதிமிகு மயற்குஞ் சிந்தையால்
நினையவு மரியது விசும்பி னீண்டதோர்
புனைமணி மண்டபம் பொலிய வெய்தினன்.

(சக்கரவர்த்தி ஒருநாள்), நனைவரு கற்பகம் நாடு நல்நகர்-அரும்புகள் மிகுகின்ற கற்பக தருக்களையுடைய பொன்னுட்டில் உள்ள அமராவதி நகரிலே, வினை தொழில் மதி மிகு-அமைக்குந் தொழிலில் அறிவு மேம்பட்ட, மயற்கும்-மயன் என்ற சிற்பிக்குங் கூட, சிந்தையால் நினையவும் அரியது-மனத்தால் (இத்தகையதென்று) நினைக்கவும் அரியதான வேலைப்பாடுடையதும், விசும்பின் நீண்டது-சுவர்க்கம் வரை உயர்ந்ததுமான, ஓர் மணி புனை மண்டபம்-இரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்றதோர் அத்தாணி மண்டபத்திலே, பொலிய எய்தினன்-(அது) விளக்கமடையும்படி வந்தடைந்தான்.

முன் கவியில் உள்ள 'அரசர் தம் பெருமகன்' என்பதே இங்கும் எழுவாயெனக் கொள்க; இது அடுத்த கவியில் வரும் பொலிந்து தோன்றினன் என்ற முடிபைக் கொள்ளும்.

மனத்தால் நினைத்தே அனைத்தையும் அமைக்கும் ஆற்றலுடைய மயனுக்கும் நினைப்பரியது என்பதும், விசும்பின் நீண்டது என்பதும் மண்டபத்துக்கு உயர்வுநவிற்சி. மண்டபம் தன்னால் மேலும் பொலிவு பெறும்படி வந்தான் என்பது மன்னனை மிகுத்துக் கூறியது. அமராவதியைக் கூறினமையின், அதிலுள்ள 'சுதன்மை' என்னும் இந்திரனது சபாமண்டபத்தையும் கொள்க; அதுவும் இம்மண்டபத்துக்கு ஈடாகாது என்றபடி. மேலே, தசரதனை, 'இந்திரனே' என ஐயுற்றனர்' என்பதும் காண்க.

மயற்கும்: உம்மை, உயர்வு சிறப்பு.

(பி - ம்.) 1. நனையருங்: நாட்டின்.
2. வினைவன வினைதரு; அனைவரு மணைதர; அனையவ ரணைதர: அயிர்க்கும்: சிந்தையின்.
4. புனைமதில்; புனைதரு: பொலிய வெய்தினன்; எய்தியே; மேவினன்; பொலிவினெய்தினன்: எய்தியே: மேவினன்; மேயினன். (2)

317. தூயமெல் லரியணைப் பொலிந்து தோன்றினன்
சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர்
நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோர்
ஆயிர மில்லையென் றைய நீங்கினர்.

(அத் தசரதன்), தூய மெல் அரி அணை-தூய்மையும் மென்மையும் உடைய சிங்காதனத்தில் (அமர்ந்து), பொலிந்து தோன்றினன்-விளங்கித் தோன்றினன்; (அப்போது), சேய் இரு விசும்பு இடை திரியும் சாரணர்-உயர்வும் பரப்பும் உடைய ஆகாயத்திலே சஞ்சரிக்கும் சாரணர் என்னும் தேவ சாதியார், 'இவன் நாயகன் கொல் என்று அயிர்த்து-இவன் (நம்முடைய) தலைவனான இந்திரனோ' என (முதலில்) ஐயங்கொண்டு, (பின்பு, நன்கு நோக்கி), 'நாட்டம் ஓர் ஆயிரம் இல்லை என்று-ஆயிரங் கண்கள் இல்லையே' என்று, ஐயம் நீங்கினர்-(முதலில் கொண்ட) ஐயம் நீங்கப்பெற்றனர்.

சாரணர்-தேவகணம் பதினெட்டனுள் ஒரு வகையினர்; ஆகாய மார்க்கமாகச் செல்லத்தக்கவர்; இவர்கள் இந்திரனுக்குத் துதி பாடுவோர் என்ப. வானவழியே சென்ற இவர்கள், இம்மண்டபத்தைக் கண்டு 'இது தேவசபையோ என்றும், உள்ளே வீற்றிருந்த தசரதன் இந்திரனோ என்றும் ஐயுற்றனர்; உயர்வுநவிற்சி. ஆயிரங் கண்கள் இல்லாமையைத் தவிர, வேறு எவ்வகையிலும் இந்திரனென்று மதிக்கத் தக்கவன் தசரதன்.

நாட்டம்-பார்த்தல்: தொழிற் பெயர்; கண்ணுக்கு ஆகுபெயர்.

**ஒப்பு:** இந்திர னென்னி னிரண்டேகண் ணேறூர்ந்த, அந்தரத்தா னென்னிற் பிறையில்லை-அந்தரத்துக், கோழியா னென்னின் முகமொன்றே கோதையை, ஆழியானென்றுணரற் பாற்று. (தொல். உவம. 32-பேர். மேற்.).

(பி - ம்.) 2. சேயிரும்; சேயுயர்: விசும்புடைத்; விசும்பிடை.
3. இவனென வயிர்த்து. 4. ஐயநீங்கவே. (3)

### கோசிகன் வருகை

318. மடங்கல்போன் மொய்ம்பினன் முன்னர் மன்னுயிர்
அடங்கலு முலகும்வே றமைத்துத் தேவரோ
டிடங்கொணான் முகனையும் படைப்பெ னீண்டெனாத்
தொடங்கிய துனியுறு முனிவன் றோன்றினன்.

(அப்பொழுது),மடங்கல்போல் மொய்ம்பினன் முன்னர்-சிங்கம் போன்ற வலிமையுடைய தசரதனெதிரே, மன் உயிர் அடங்கலும்-சீவ ராசிகள் அனைத்தையும், உலகும்-அவைகள் அடங்கிய எல்லா உலகங்களையும், வேறு அமைத்து-வேறே(தனியாகப்)படைத்து,'தேவரோடு-தேவர்களையும், இடம் கொள் நான் முகனையும்-(மிக்க பெருமைக்கு)

இடமான பிரமனையும், படைப்பென் ஈண்டு எனு-(வேருக)இப்போதே படைப்பேன்' என்று, தொடங்கிய - (ஒருகாலத்தில்) படைக்கத் தொடங்கிய, துனி உறு முனிவன்-சினம் மிக்க கோசிக முனிவன், தோன்றினன்-வந்து சேர்ந்தான்.

இந்திரன்போலச் சிறப்போடு வீற்றிருந்த தசரதன் முன், சபையிலே, சினத்திற் பெயர் பெற்ற விசுவாமித்திர முனிவன் வந்து தோன்றினன் என்க. 'துனியுறு முனிவன்' என்பது பின்பு விளையப் போவதைச் சூசிப்பித்தல். இடம்: பெருமையும் ஆம்; 84-குறிப்புப் பார்க்க. விசுவாமித்திரன் எல்லாவற்றையும் படைப்பேனென்று தொடங்கியது: 672; 'கோசிகப் பெயருடைக் குல முனித் தலைவனக் குளிர் மலர்ப்பே, ராசனத்தவனெடெவ் வுலகமுந் தருவனென் றமையலுற்றுன்' (யுத்த. 97.)

விசுவாமித்திர முனிவன் வந்தபோது, தசரதன், தன் குமாரர்களின் திருமணத்தைக் குறித்துச் சபையில் ஆலோசித்துக் கொண்டிருந்ததாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. முன்னமண்ணுயிர். 2. உலகும் வேறமைத்த; உலகம்வேறமைத்துத். 3. படைப்பனீண்டெனத். 4. துனியறு; துகளறு; நனியுறு; கோசிக. (4)

தசரதன் முனிவனை உபசரித்தல்

(வேறு)

319. வந்துமுனி யெய்துதலு மார்பிலணி யாரம்
அந்தரத லத்திரவி யஞ்சவொளி விஞ்சக்
கந்தமல ரிற்கடவு டன்வரவு காணும்
இந்திரனெ னக்கடிதெ ழுந்தடிப ணிந்தான்.

முனி வந்து எய்துதலும்-விசுவாமித்திர முனிவன் (தன்முன்) வந்தவுடனே, (தசரதன்), மார்பில் அணி ஆரம்-தன் மார்பில் அணிந்துள்ள இரத்தின ஆரங்கள், அந்தர தலத்து இரவி அஞ்ச ஒளி விஞ்ச-ஆகாயத்திலே செல்லும் சூரியனும் தோற்கும்படி பேரொளி வீச, கந்தம் மலரில் கடவுள் தன் வரவு காணும் இந்திரன் என-நறுமணமுள்ள தாமரை மலரிலே தோன்றிய பிரமதேவனது வருகையைக் கண்ட இந்திரனைப் போல, கடிது எழுந்து-(ஆதனத்தினின்றும்) விரைவாக எழுந்து, அடி பணிந்தான்-முனிவனது பாதங்களில் வணங்கினன்.

'மார்பிலணியாரம்......ஒளி விஞ்ச': மார்புக்கு (விரிவு பற்றி) ஆகாயமும், மணியாரத்துக்குச் சூரியனும் உவமை. விரைந்து எழும் போது உண்டாகும் அசைவினல், மணியாரம் ஒளிமிகுத்துக் காட்டும். முன்கவியில் 'அனைத்தையும் படைக்கத்தொடங்கிய முனிவன்' என்றதனல் பிரமனுக்கு ஒப்பானவன் கோசிகன்என்பதைக் குறிப்பித்தார்;

இங்கே 'பிரமதேவன் வருகை கண்ட இந்திரன்போல' என, தசரதனை இந்திரனாகக் கூறினமையையும் பொருத்திக் காட்டினார். இவ்விடத்து வான்மீகமும் இவ்வாறே கூறுகின்றது. தசரதனை இந்திரன் என்றல்; 317, 1186; 1279. விசுவாமித்திரனுக்குப் பிரமன் உவமை: 410.

அஞ்ச-தோற்க; (பிங்கலம்). எய்துதலும்: உம்மை உடனிகழ்ச்சிப் பொருளது.

(பி - ம்.) 1. மார்பினணி; மார்பின்மணி. 2. நிலத்திரவி; விசக்; மிஞ்சக்; மிஞ்சு. 3. கஞ்சமலரிற்; கடவுளின் வரவு. (5)

320. பணிந்துமணி செற்றுபு குயிற்றியவிர் பைம்பொன்
அணிந்ததவி சிட்டினி தருத்தியொ டிருத்தி
இணைந்தகம லச்சரண ருச்சனைசெய் தின்றே
துணிந்ததென் வினைத்தொட ரெனத்தொழுது சொல்லும்.

பணிந்து-(தசரதன் முற் கூறியபடி முனிவனை) வணங்கி, மணி செற்றுபு குயிற்றி அவிர் பைம்பொன் அணிந்த-இரத்தினங்கள் நெருக்கமாகப் பதித்துப் பசும்பொன்னால் அழகிய வேலைப்பாடு அமைந்த, தவிசு இட்டு-(சிறந்த), ஆசனத்தை யிட்டு, இனிது அருத்தியொடு இருத்தி-இனிதாக உள்ளன்போடு, (அவ்வாசனத்திலே)வீற்றிருக்கச் செய்து, இணைந்த-இரண்டாகிய, கமலம் சரண் அருச்சனை செய்து-தாமரை மலர் போன்ற திருவடிகளிலே (மலர்களால்) அருச்சித்து, 'என் வினை தொடர்-என்னுடைய கருமப் பிணிப்பு, இன்றே துணிந்தது என-இப்போதே நீங்கிற்று' என்றுகூறி, தொழுது-அஞ்சலி செய்து, சொல்லும்-மேலும் சொல்வான்:

தசரதன் விசுவாமித்திர முனிவனுக்கு, முறைப்படி உள்ள பல சிறப்புக்களையும் செய்து, பின் உபசார வார்த்தைகள் சொல்லலானான். பெரியோருக்குச் செய்ய வேண்டிய மரியாதைகள்: 221 குறிப்புப் பார்க்க.

கமலச் சரண்: உவமத் தொகை. செற்றுபு: செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

(பி - ம்.) 1. செற்றுறு; பயிற்றியவிர்; செம்பொன்.
2. அணிந்து; இட்டதிலருத்தியொடு; இட்டதினருத்தியொடு.
3. கமலப்பதம்; கமலச் சரணம் அர்ச்சனை.
4. துணிந்ததெம்; தொடர்பெனத்; துயரெனத்; சொன்னான்; சொல்வான். (6)

321. நிலஞ்செய்தவ மென்றுணரி னன்றுநெடி யோயென்
நலஞ்செய்வினை யுண்டெனினு மன்றுநகர் நீயான்
வலஞ்செய்து வணங்கவெளி வந்தவிது முந்தென்
குலஞ்செய்தவ மென்றினிது கூறமுனி கூறும்.

'நெடியோய்-பெரியீர்!, நீ-நீவிர், யான் வலம் செய்து வணங்க-நான் உம்மை வலம்வந்து வணங்கும்படி, நகர்-என தரண்மனைக்கு, எளிவந்த இது-(நான் வருந்தித் தேடி அழைத்து வராமலே) எளிதாக எழுந்தருளிய இப்பேறு, நிலம் செய் தவம் என்று உணரின்-எனது நாடு செய்த தவமாகும் என்று நினைக்கலாமெனின், அன்று-அஃதன்று; என் நலம் செய் வினை உண்டு எனினும்-என்னுடைய நல்வினை இருக்கின்றது எனினும், அன்று-அதுவும் அன்று; (பின்னை யாது எனின்), முந்து என் குலம் செய் தவம்-பழமையான என் குலத்துப் பெரியோர் செய்த தவப்பயன் ஆகும்; என்று-என்று,இனிது கூற-இனிதாக முகமன் சொல்ல, முனி கூறும்-முனிவன் சொல்லலானான்:

முனிவன் கூற்று மேல் இரண்டு பாடல்களிற் காணப்படும். கருத்தொப்புமை; 'யான் செய்த மாதவமோ விவ்வுலகஞ் செய் தவமோ யாதோ' 240.

(பி - ம்.) 2. உண்டெனிலும்: நீரான்.
3. வலஞ்செய: வணங்கவிவண்; வந்ததிது; வந்துதவ: முந்தெங்; முன்னெங்; முன்னங். 4. என்றுநனி. (7)

முனிவன் கூறிய புகழுரை

(வேறு)

322. என்னனைய முனிவர்களு மிமையவரு
மிடையூறென் றுடைய ரானல்
பன்னகமு நகுவெள்ளிப் பனிவரையும்
பாற்கடலும் பதும பீடத்
தன்னகருங் க்றபகநாட் டணிநகரு
மணிமாட வயோத்தி யென்னும்
பொன்னகரு மல்லாது புகலுண்டோ
விகல்கடந்த புலவு வேலோய்!

'இகல் கடந்த-பகையை முற்றும் ஒழித்த, புலவு வேலோய்-புலால் நாற்றமுடைய வேலை யேந்தியவனே!, என் அனைய முனிவர்களும்-என்னை யொத்த இருடிகளும், இமையவரும்-தேவர்களும், இடையூறு ஒன்று உடையர் ஆனல்-யாதேனுமொரு துன்பம் உடையவர்களானால், (அதை நீக்க), பல் நகமும் நகு-(தன் சிறப்பால்) பல மலைகளையும் தாழ்வுபடுத்துகின்ற, பனி வெள்ளி வரையும்-பனி மூடிய வெள்ளி மயமான கைலாய மலையும், பால் கடலும்-திருப்பாற் கடலும், பதுமம் பீடத்தன் நகரும்-தாமரையாசனமுடைய பிரமனது உலகமும், கற்பகம் நாடு அணி நகரும்-தேவருலகத்தின் தலைநகரான அழகிய அமராவதியும்,மணிமாடம்அயோத்திஎன்னும் பொன்நகரும்-மணிகள் பதித்த மாளிகைகளையுடைய, அயோத்தியென்று சொல்லப்

படுகிற செல்வம் மிக்க இந்நகரமும், அல்லாது-அல்லாமல், புகல் உண்டோ-அடைக்கலம் புகுதற்கு வேறு இடம் உண்டோ ?' (இல்லை யென்றபடி).

ஒருவரால் ஒருகாரியம் ஆகவேண்டின், அவரைப் புகழ்ந்துரைத் தல் உலக வியல்பு: அதற்கு விசுவாமித்திர முனிவனும் விலக்கல்லன். உலகத்தில் யாவரையும் இடர் நீக்கிப் பாதுகாக்க வல்லவர் முதற் கடவுளர் மூவர்; அடுத்தபடி இந்திரன். இந்திரனே, தசரதனுத வியால் நாடு பெற்று ஆள்பவனுதலின் அவனினும் மேம்பட்டவன் தசரதன்; (இதனை முனிவன் கூற்ருக அடுத்த கவியிற் கூறுவர்). எனவே, 'இலகுவில் வந்தடையத் தக்க உன்னிடம் வந்தேன்' என்ற கருத்துப்பட முனிவன் கூறினுன் என்க. அரக்கரைச் சாபத்தால் அழிக்கும் ஆற்றல் உடையவனுயினும், இப்போது அது செய்யின் வேள்வி செய்ய மேற்கொண்ட விரதம் கேடுறுமாதலால், அதற்குப் பிறர் உதவியை அவன் நாட வேண்டியவன் ஆயினன். இதை ஒரு காரணமாகக் கொண்டு, இராமபிரானுக்குப் பல சிறப்புக்களையும் எய்து விப்பது கோசிக முனிவன் உட்கோள். 'என்னனைய' என்றது யானும் ஓர் இடையூறு உடையவன் என்பதைக் குறிப்பிக்க.

(பி - ம்.) 1. முனிவரரும், உடையராகில். 2. நகும்: பருவரையும்; பருப்பதமும். 3. தன்னகரு மணிமாடக் கற்பக நாட்டணி நகரும். அணிகவரும்; மணி மாடத்தயோத்தி. 4. கடிந்த. (8)

323. இன்றளிர்க்கற் பகநறுந்தே னிடைதுளிக்கு
நிழலிருக்கை யிழந்து போந்து
நின்றளிக்குந் தனிக்குடையி னிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப நோக்கிக்
குன்றளிக்குங் குலமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடுந் தொலைத்து நீகொண்
டன்றளித்த வரசன்றே புரந்தரனின்
ருள்கின்ற தரச வென்ருன்.

'அரச-சக்கரவர்த்தியே!, புரந்தரன்-இந்திரன், இன் தளிர் கற்பகம்-இனிய தளிர்களையுடைய கற்பக விருட்சங்களின், நறு தேன்-மணமுள்ள தேன், இடை துளிக்கும் நிழல்-இடையிடையே சிந்துகின்ற குளிர்ந்த நிழலிலே, இருக்கை இழந்து-அரசு வீற்றிருத்தலைக் கைவிட்டு, போந்து-(உன்னிடம்) வந்து, நின்று அளிக்கும் தனி குடையின் நிழல் ஒதுங்கி-(என்றும் ஒருநிலையில்) இருந்து உலகத்தைப் பாது காக்கும் ஒப்பற்ற உனது வெண்கொற்றக் குடையின் நிழலிலே சேர்ந்து, குறை இரந்து நிற்ப-தன் குறையைச் சொல்லி வேண்டி நிற்க, நீ—, நோக்கி-(அவன் நிலையைக்) கண்டு (இரங்கி), குன்று

அளிக்கும்-மலைக்கு ஒப்பான,குலம் மணிதோள் சம்பரனை-சிறந்த இரத்தினாபரணங்களை யணிந்த புயங்களையுடைய சம்பராசுரனை, குலத்தோடும் தொலைத்து-வமிசத்துடன் (சார்ந்தார் ஒருவரும் இன்றி) அழித்து, கொண்டு-(இந்திரன் இழந்த அரசை) உன் வசமாக்கிக் கொண்டு, அன்று அளித்த அரசு அன்றோ-அப்போது (அவனிடம்) கொடுத்த ஆட்சியை யன்றோ, இன்று ஆள்கின்றது-இன்று (அவன்) ஆண்டுகொண்டிருப்பது!' என்றான் - என்று (முனிவன்) கூறி முடித்தான்.

'இந்திரன் இப்போது தன் பதவியில் இருப்பது உன்னாலேயே' என்று தசரதனை முனிவன் புகழ்ந்தான். திமித்துவச னென்னும் மறு பெயருடைய சம்பரன் என்னும் அசுரன் மிக்கவல்லமையுடையவனாய், பல அசுரர் கூட்டத்துடன் சென்று, இந்திரனுட்படத் தேவர்கள் பலரையும் பொருது வென்று, அமராவதியைக் கைப்பற்றி, இந்திரனைப் பதவியினின்றும் துரத்திவிட, இந்திரன் தசரதனிடம் சென்று தன் நிலையைக் கூறி உதவி வேண்டினனாக, தசரதன் இந்திரனுக்கு இரங்கி, கைகேயி தேரோட்டத் தான் தேரேறிச் சென்று சம்பரனோடு மிக்க கடும் போர் செய்து அவனையும் அவனைச் சார்ந்தவர் பலரையும் தொலைத்து, வானுல காட்சியை மீட்டு இந்திரனுக்கு அளித்தான் என்பது இதில் அடங்கிய வரலாறாகும்.

நின் தளிக்கும் குடை எனப்பிரித்து, உனது செழிப்புற்ற குடை என்றலும் ஆம். குலக்குன்று அளிக்கும் மணித்தோள் எனக் கூட்டிக் குலாசலங்களை யொத்த வயிரமணி போலும் திண்ணிய தோள் என்றும் உரைப்பர்.

முதலடி: ஒப்பு. 'கந்த மலர்த்தண் கற்பக நீழற் றலைவற்கும்' (ஆரணிய. 725). சம்பரன் செய்தி: (அயோத். 21, 180, 1138; ஆரணிய. 199; கிட்கிந். 215; யுத்த. 93, என்ற இடங்களிற் காண்க. குன்றளிக்கும் தோள்: 'சிலையளித்த தோள்' பு. வெ. 33.

(பி - ம்.) 1. இழிந்து போந்து; இருந்து பேர்ந்து; போந்துன்.
2. தனிக் குடைக்கீழ் நிழலொதுங்கிக்; தனிக்குடைக்கீழதினொதுங்கிக்.
3. குன்றளிக்குங்குருமணித்; குன்றளிக்குந்திரண்மணித்: குலத்தோடுங் கொன்று; குலத்தினொடுந்தொலைத்து; நீயே.
4. வென்றளித்தது வன்றோ; இன்றாள்கின்றவரசதென்றான்; இன்றளிக்கின்ற தரசவென்றான்; இன்றாள்கின்றா வரசவென்றான். (9)

## மன்னன் வினு

324\. உரைசெய்த வளவிலவன் முகநோக்கி
யுள்ளத்தி னொருவ ராலும்
கரைசெய்ய வரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி
அரசெய்தி யிருந்தபய னெய்தினென்மற்
றினிச்செய்வ தருளு கென்று
முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியு முனிவ னுங்கே.

உரைசெய்த அளவில் - (முனிவன் இவ்வாறு) கூறியவுடன், முரசு எய்து கடைத்தலையான் - மூன்று முரசங்களும் பொருந்தி முழங்கும் தலைவாயிலையுடைய சக்கரவர்த்தி, உள்ளத்தின் - தன் மனத்திலே, ஒருவராலும் கரை செய்ய அரியது ஒரு பேர் உவகை கடல் பெருக - ஒருவராலும் அளவிட்டுச் சொல்ல வியலாத ஒரு பெருமகிழ்ச்சியாகிய கடல் கொந்தளிக்க, அவன் முகம் நோக்கி - அம்முனிவனைப் பார்த்து, கரங்கள் கூப்பி - கைகளை அஞ்சலி செய்துகொண்டு, 'அரசு எய்தி யிருந்த பயன் - நான் அரசாட்சி பெற்றுள்ளதன் பயனை, எய்தினென் - (இன்றே) அடைந்தேன்; இனி செய்வது அருளுக - மேலே நான் செய்ய வேண்டுவதைப் பணித்தருளுக;' என்று முன் மொழிய - என்று முன்னே சொல்ல, ஆங்கு - அப்பொழுது, முனிவன் பின் மொழியும் - முனிவன் விடை கூறலுற்றான்.

மற்று - அசை. அருளுகென்று - தொகுத்தல். கடைத்தலை இலக்கணப் போலி.

'தங்கள் வருகையால் நான் பேறு பெற்றவனானேன்; நான் செய்யவேண்டிய காரியத்தைக் கட்டளையிட்டருளுக' என்று மகிழ்வோடும் பணிவோடும் மன்னன் கூற, முனிவன் தான் வந்த காரியத்தைக் கூறலானான். மும்முரசு; கொடை, மங்கலம், வெற்றி, ஆகியவற்றைக் குறிப்பன.

உரை - தோத்திரம்: (பழைய குறிப்புரை). முக நோக்கி மொழிதல்: அயோத் *1144*. கரைசெய்ய வரியதொரு பேருவகைக்கடல்: *315*- குறிப்புப் பார்க்க. முரசெய்து கடைத் தலையான்: ஒப்பு: 'முரசெறி செழுங்கடை.....அரசர் தங் கோமகன்' *185*.

(பி - ம்.) 1. உரைசெய்த வளவையிற்றான்; உரை செய்யுமளவினவன்: முகனோக்கி; உள்ளத்தில்; உள்ளத்துள்: உள்ளத்தொடு.
2. கரை செய்தலரியதொரு; கரை செய்தற்கரியதொரு; கரை செய்யலரியதொரு; பெருகிக்: பொங்கக்.
3. அரைசெய்தி; எய்தினன்மற்; எய்தினமற்; அருளுகென்னு; அருளுகென்ன.
4. முறைசெய்து; முரசதிருங்; பின் முனியும்; முனியுமாங்கே; மொழிவதானன். (10)

## முனிவன் இராமபிரானைத் தருமாறு வேண்டுதல்

325. தருவனத்துள் யானியற்றுந் தகைவேள்விக்
கிடையூருத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச்சென் றடைகாம வெகுளியென
நிருதரிடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தியென நின்சிறுவர்
நால்வரினுங் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதியென வுயிரிரக்குங்
கொடுங்கூற்றி னுளையச் சொன்னான்.

(மன்னனுக்குக் கூறலுற்ற முனிவன்), 'தரு வனத்துள்-(தன்னை அடைந்தார்க்கு) நல்ல பயன் தரும் இடமாகிய சித்தவனத்தில், யான் இயற்றும்-நான் செய்யப்போகிற, தகை வேள்விக்கு இடையூரு(க)-சிறந்த வேள்விக்குத் தடையாக, தவம் செய்வோர்கள் வெருவர சென்று அடை காமம் வெகுளி என-தவம் செய்பவர்கள் அஞ்சும்படி, (அவர்களிடம்) போய்ச்சேர்ந்து அவர்களைத் துன்புறுத்தும் ஆசையும் வெகுளியும் போல, நிருதர் இடை விலக்கா வண்ணம்-அரக்கர்கள் இடையே (வந்து வேள்வியைக்) கெடுக்காதபடி, செரு முகத்து காத்தி என-போர் முனையிலே (நின்று) காப்பாயாக என்று கட்டளையிட்டு, நின் சிறுவர் நால்வரினும்-உன் குமாரர்கள் நால்வருள்ளும், கரிய செம்மல் ஒருவனை - கரிய திருமேனியுடைய அண்ணலாகிய ஒருவனை (இராமனை) மட்டும், தந்திடுதி என-என்னுடன் அனுப்புவாயாக என்று, உயிர் இரக்கும் கொடும் கூற்றின்-உயிரை (தரும்படி) யாசிக்கின்ற கொடிய யமனைப்போல, உளைய-(தந்தை)மனம் தவிக்கும்படி, சொன்னான்—.

விசுவாமித்திர முனிவன் வேள்வி செய்யக் கருதியவிடம், சித்தவனம் அல்லது சித்தாச்சிரமம் எனப்படுவது; இது, தன்னிடம் வந்து தவம், வேள்வி முதலிய நற்கருமங்கள் செய்வார்க்கு அவர்கள் விரும்பிய பயனை அளிக்கவல்லதாதலின், 'தரு வனம்' எனப்பட்டது. தருவனம்-மரங்களடர்ந்த காடு என்றலுமாம், இமய மலையிலே நித்தியவாசம் பண்ணும் விசுவாமித்திர முனிவன், சித்தாச்சிரமத்தின் சிறப்புக் கருதி இங்கு வந்து வேள்வி யியற்றலானான் என்பர். அனைவர்க்கும் உட்பகையாகிய ஆறு தீயகுணங்களுள், காமமும் வெகுளியும் மிகக் கொடியன; இவற்றுடன் மயக்கமும் சேர்வது மேலுங் கேடு பயப்பதாகும்: 'காமம் வெகுளி மயக்க மிவை மூன்றன், நாமங் கெடக்கெடும் நோய்' (குறள். 360.) இங்கே, சுபாகு, மாரீசன் என்னும் அரக்கர் இருவரை உவமை முகத்தாற் குறித்தார் ஆசிரியர் எனலாம். 'இவ்விருவரும் இராவணனைச் சார்ந்தவர்கள்' என்று முனிவர் தசரதனிடம் கூறினர் என்பது வான்மீகம்.

இவர்கள் தாயாகிய தாடகை, மயக்கம் (அவிச்சை) போன்றவள். மயக்கமே ஏனைக் குற்றங்களுக்குக் காரணமாதலின், அவ்விருவரைப் பெற்ற தாயாகியவளுக்கு மயக்கம் உவமையாதல் பொருத்தமுடையது. இவளும் தன் வேள்விக்கு இடையூறுனவள் என்று முனிவன் குறிப்பிடுதலும் நோக்கத்தக்கது; (382). இம் மூவரும் இவர்களைச்சார்ந்த அரக்கர் குழுவுமே பின்பு இராமபிரானின் அம்புகளுக்கு இலக்காவோர். தசரதன், இராமனைத் தன் உயிராகக் கருதுதலின் 'உயிரிரக்குங் கொடுங் கூற்றின்' என உவமித்தார்; 'உயிரீர்க்கும்' என்றும் பாடம்; இதற்கு, 'உடம்பினின்றும் உயிரைப் பிரித்து இழுக்கும்' என்பது பொருள். இங்கே முனிவன் தசரதனது உயிரைப் பிரித்துக் கொண்டு போவதாகக் கூறியதற்கேற்பப் பின்னே, 'முன் பிரிவதோர் ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினுன்' (1129) என்பர். இராமலக்குமணர் விசுவாமித்திர முனிவனுடன் சென்றபோது, 'மன்னன் இன்னுயிர் வழிக் கொண்டாலென முனிவனைத் தொடர்ந்தனர்' என்பர்; 335. 302-குறிப்பும் பார்க்க. கரிய செம்மல்: 406,552, அயோத். 154.

இராமபிரானை அனுப்பும்படி கேட்கும்போது விசுவாமித்திர முனிவன் இராமபிரானுடைய பராக்கிரமங்களையும், தன்னுடன் அனுப்புவதால் மேலும் அவன் அடையத்தக்க மேன்மைகளையும் கூறிக் கேட்டதாக வான்மீகத்திற் கூறப்படுகின்றது.

(பி -ம்.) 1. தருவனத்து ளியானின்றும்; தருவனத்தில் யானியற்றும்; தருவனத்துள் யாமியற்றும்: தவவேள்விக்கு; தனிவேள்விக்கு; தழல்வேள்விக்கு: இடையூருய்த்; தவஞ் செய்வோரை.
2. வெருவுறச்: அடுகாம; அடர்காம: இடைகாம: விலங்கா.
3. செரு முகத்திற்; காத்திடுதற் குன்புதல்வர்; காக்கவுன்றன் சிறுவரொரு; நின்புதல்வர்; அனைவரினும்; அனைவரிலும்.
4. தந்தளித்தியென; தந்திதியென; உயிரீர்க்கும்: உயிரிழுக்கும்; கடுங் கூற்றின். (11)

326. எண்ணிலா வருந்தவத்தோ னியம்பியசொன்
மருமத்தி னெறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனனுழைந்தா
லெனச்செவியிற் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
வாருயிர்நின் றூச லாடக்
கண்ணிலான் பெற்றிழந்தா னெனவுழந்தான்
கடுந்துயரங் கால வேலான்.

எண் இலா அரு தவத்தோன் இயம்பிய சொல்-அளவற்ற அரிய தவத்தையுடைய விசுவாமித்திர முனிவன் கூறிய இச்சொற்

கள், மருமத்தின் எறி வேல் பாய்ந்த புண்ணில் ஆம் பெரு புழையில்-மார்பிலே (உயிர்நிலையில்) தாக்கிய வேல் உருவிப் பாய்ந்ததனுல் உண்டான புண்ணினுலாகிய பெரிய குழியிலே, கனல் நுழைந்தால் என-கொள்ளிக் கட்டை நுழைந்ததுபோல, செவியில் புகுதலோடும்-காதிலே நுழைந்தவுடன், காலன் வேலான்-(பகைவர்க்கு) யமனைப் போன்ற (கொடிய) வேலையுடைய தசரத மன்னன், உள் நிலாவிய துயரம் பிடித்து உந்த-உள்ளே மிக்கு எழுந்த வருத்தமானது பிடித்துத் தள்ளுதலால், ஆர்உயிர் நின்று ஊசல் ஆட-அரிய உயிர் ஊஞ்சலாடுவது போல வெளியும் உள்ளும் போய்வராநிற்க, கண் இலான் பெற்று இழந்தான் என-பிறவிக் குருடனெருவன் (ஒருகால்) கண் பார்வையைப் பெற்று, (மீண்டும்) அதனை யிழந்துவிட்டாற்போல, கடு துயரம் உழந்தான்-மிகக்கொடிய துன்பத்தால் வருந்தலானுன்.

எண் நிலா என்றும், எண் நிலாவு என்றும் பிரித்துப் பொருள் கூறலுமாம். 'தசரதன் மகப் பிரிவினுல் உயிரிழப்பான்' என முன்னமே உள்ள சாபம் ஒன்று அவன் மனத்தை உறுத்திக் கொண்டிருந்ததனுல், 'எச்சமயம் எது நேருமோ' என அச்சத்தோடு இருக்கும் நிலையில், தன் உயிரெனக் கருதும் இராமனை அரக்கரோடு பொருதற்கு அனுப்பும்படி முனிவன் கூறிய சொல் மிகவும்வருத்தியது வியப்பன்று. முனிவனது கோரிக்கையின்படி இராமனை அனுப்புவதனுல், இராமனுயிருக்குத் தீங்கு நேரும் எனவே மன்னன் உட்கொண்டான்; அதனுல் வருத்தம் அளவு கடந்ததாயிற்று; ஆகவே அவனுயிரும் ஊசலாடலுற்றது; அதாவது மூர்ச்சையடைதலும் சற்றுத் தெளிதலுமாகிய நிலை மாறிமாறி நிகழலாயிற்று. இங்கே கூறியுள்ள உவமையின் நயம் ஓர்தற்குரியது. மன்னன் மகப்பேறில்லாத நிலையில் பிறவிக் குருடன் போலிருந்தான்; புதல்வர் பிறந்தபோது குருடன் பார்வை பெற்றது போலானுன்; இப்போது முனிவன் வார்த்தையால் இராமனை யிழக்க நேரும் என அவன் துணிந்ததனுல், குருடன் தான் பெற்ற பார்வையை மீண்டும் இழந்ததுபோல் ஆனுன். என்றும் குருடாகவேயுள்ள பிறவிக்குருடனுக்குள்ள மனத்துயரினும், இடையிலே பார்வையைப் பெற்று உலகத்துப் பொருள்களைக்கண்டு இன்பம் நுகர்ந்தவன் மீண்டும் அப்பார்வையை யிழந்தால் அப்போதுஅடையும் துயரம்மிகப் பெரியதாகும். எனவே இவ்வாறு உவமை கூறினுர் ஆசிரியர். பின்னே சுந்தரகாண்டத்தில், 'ஒழிந்த விழிபெற்ற' உவகையை உவமை கூறுவர்; சுந்தர. 554. 'வேல் பாய்ந்த புண்ணில் கனல் நுழைந்தாலென' என்றது, முன்னமேயுள்ள முனிவன் சாபம் வேல்போலப் பாய்ந்து மனத்தைப் புண்படுத்தியுள்ளது; மன்னனது அச்சத்தால் அது ஆருத குழிப்புண்ணுயிற்று; இப்போது விசுவாமித்திர முனிவன் சொல் அக்குழிப்புண்ணில் கனலைப் புகுத்தியது போன்ற துன்பத்தை உண்டாக்கியது. செவியில் புகுதலோடும் என்றது, செவி வழியே பழைய குழிப் புண்ணிற் புகுந்ததென்றபடி; சொல் கேட்டற்கு வாயில் செவியே

யாகலின் இவ்வாறு கூறினர். வேல்-முந்திய முனிவன் சாபம்; கனல் விசுவாமித்திரன் சொல்; உருவகம்.

முனிவன் சாப வரலாறு: அயோத். 370-386. புண்ணில் கனல் நுழைந்தாலென: உத்தர. 14:18. தசரதன் இராமபிரானைக் கண்ணுகக் கருதுதல்: அயோத்: 219; கண்ணில்லான் பெற்றிழந்தானென: உத்தர. 14:18. புண்ணில் வேலும் கனலும் நுழைதல்: ஒப்பு. அயோத்; 207; 392; 1133; ஆரணிய: 926; கிட்கிந். 503; சுந்தர. 341, 342. கலி. 83: 30; 84: 30; 120: 17; பெருங். 4. 13: 130; தஞ்சை. 113.

(பி ·ம்.) 1. அருந்தவத்தான்; அருங்குணத்தான்; மருமத்துள்; பாய்ந்து.
2. புண்ணிலாழ்; புண்ணுலாம்: எரி நுழைந்தால்.
3. உண்ணிலா வருந்துயரம்.
4. உழன்ருன்; கடுந்துயரால்; நெடுந்துயரம்; காலவேலோன். (12)

327. தொடையூற்றிற் றேன்றுளிக்கு நறுந்தாரா
ஞெருவண்ணந் துயர நீங்கிப்
படையூற்ற மிலன்சிறிய னிவன்பெரியோய்
பணியிதுவேல் பனிநீர்க் கங்கை
புடையூற்றுஞ் சடையானு நான்முகனும்
புரந்தரனும் புகுந்து செய்யும்
இடையூற்றுக் கிடையூரு யான்காப்பென்
பெருவேள்விக் கெழுக வென்ருன்.

தொடையூற்றின்-கட்டப்படுதலால், தேன் துளிக்கும்-(அரும்புகள் வாய்விண்டு) தேன் சிந்துகின்ற, நறு தாரான்-மணமுள்ள மலர்மாலை யணிந்த சக்கரவர்த்தி, ஒருவண்ணம் துயரம் நீங்கி-ஒருவாறு வருத்தம் (சிறிது) நீங்கப்பெற்று, (முனிவனை நோக்கி), 'பெரியோய்-(தவத்தால்) பெருமையுடையீர்!, பணி இதுவேல்-இப்போது செய்ய வேண்டிய காரியம் இதுவேயானல், இவன் சிறியன்-இவ்விராமன் (வயதில்) மிகவும் இளையவன்; படை ஊற்றம் இலன்-(அரக்கரோடு பொருதற்கேற்ற) படைத் தேர்ச்சியும் இல்லாதவன்; (ஆதலால் அவன் வேண்டா) : பனி நீர் கங்கை-குளிர்ந்த நீரையுடைய கங்கையாற்றை, புடை ஊற்றும்-ஒரு பக்கமாக ஒழுகவிட்ட, சடையானும்-(பரந்த) சடையையுடைய சிவபெருமானும், நான்முகனும்-பிரமனும், புரந்தரனும்-இந்திரனும், புகுந்து-வந்து, பெரு வேள்விக்கு செய்யும் இடையூற்றுக்கு(ம்) இடையூறு ஆக-உமது பெரிய யாகத்திற்குச் செய்யத்தக்க இடையூறுகளுக்கும் தடையாக, யான் காப்பென்-நானே (வந்து) பாதுகாப்பேன்; எழுக-இப்போதே புறப்படுவீராக' என்ருன்—.

இடையூற்றுக்கு என்றவிடத்து உயர்வு சிறப்பும்மை தொக்கது. சிறியவன் × பெரியோய்: முரண் தொடை. இடையூரு: ஈறு தொக்கது.

இராமனைக் குறித்துத் தான் கூறும் சமாதானத்தை முனிவன் ஏற்றுக்கொள்ளக் கூடும் என்ற நம்பிக்கையால், தசரதன் ஒருவாறு துயரம் நீங்கினவனுகித் தன் கருத்தை முனிவனிடம் கூறினுன். முன்னமே சம்பராசுரனை வென்று அழித்து, இந்திரனுக்கு உதவியவனுதலால், இப்போதும் அரக்கர் போருக்கு எதிர்நிற்கும் ஆற்றலுடையவன் தானே யென்று குறிப்பித்தான்; 'தலைமைக் கடவுளரேவந்து தடுப்பினும், அதனையும் நீக்கிக் காக்கும் துணிவுடையேன்' என்றும் கூறினுன். இராமபிரான் பதினுறு பிராயங்கூட நிரம்பப் பெருதவனுதலால் 'இவன் சிறியன்' என்ருன்.

இங்கு வான்மீகம், பின்வருமாறு மன்னன் முனிவனிடம் கூறியதாக அமைக்கும்: 'தாமரை இதழ்போல் விளங்கும் அழகான கண்களையுடைய இராமனுக்குப் பதினுறு பிராயமும் நிரம்பவில்லை; இப்பொழுது பன்னிரண்டாவது நடக்கின்றது. இங்ஙனம் இளைஞனுகிய இவனுக்குப் போர் செய்யுந் தன்மை எங்ஙனம் நேருவது?...'

தொடையூறு=தொடையுறுதல்; கட்டப்படுதல்; தொடை ஊற்றின்-தேனடை யினின்றும் ஊற்றுதல்போல எனவும் ஆம்; பிறவாறும் இதற்குப் பொருள் கூறுவர். பணி இதுவேல்-நும் கட்டளையிதுவானுல் என்றும் கூறலாம்.

இடையூற்றுக் கிடையூறு: 'இடும்பைக் கிடும்பை படுப்பர்'; 'அழிவிலா னுற்ற, இடுக்கண் இடுக்கட்படும்' குறள். 623, 625.

(பி - ம்.) 1. தொடையூற்றுந்தேன்.
2. சிறியனவன்; அவர்பெரியோர்; பணிநீர்கங்கைப்.
3. புரந்தரனு நான்முகனும்; புரந்தரனும் வெகுண்டெழுந்து: புகுந்து: போர்செய்.
4. யான்காப்பன்: பெரும் வேள்விக்கு: ஓடியலென்ருன். (13)

328. என்றனனென் றலுமுனிவோ டெழுந்தனன்மண்
படைத்தமுனி யிறுதிக் காலம்
அன்றெனவா மெனவிமையோ ரயிர்த்தனர்மேல்
வெயில்கரந்த தங்கு மிங்கும்
நின்றனவுந் திரிந்தனமே னிவந்தகொழுங்
கடைப்புருவ நெற்றி முற்றச்
சென்றனவந் தனநகையுஞ் சிவந்தனகண்
ணிருண்டனபோய்த் திசைக ளெல்லாம்.

என்றனன்-என்று (மேற்கண்டவாறு) தசரதன் கூறினுன்; என்றலும்-கூறின வளவிலே, மண் படைத்த முனி-(ஒருகால்) பூமி முதலிய

வற்றைப் படைக்கத் தொடங்கிய விசுவாமித்திர முனிவன், முனிவோடு எழுந்தனன்-சினத்துடன் (இருக்கையைவிட்டு) எழுந்தான்; (அச்சினத்தின்அறிகுறியாக),மேல்நிவந்த-மேல்நோக்கி ஏறிய, கொழுகடை புருவம்-(முனிவனின்) கொழுவிய நுனியையுடைய புருவங்கள், நெற்றி முற்ற சென்றன-நெற்றி முழுதும் பரந்தன; நகையும் வந்தன-வெகுளிச் சிரிப்பும் மிக வுண்டாயிற்று; கண் சிவந்தன-கண்கள் (தீப் போலச்) சிவப்பேறின; (இச்சினத் தீயின் புகையால்), திசைகள் எல்லாம் போய் இருண்டன-எல்லாத் திசைகளும் மிக்க இருளடைந்தன; மேல் வெயில் கரந்தது-மேலேயுள்ள சூரியனும் மறைந்தான்; அங்கும் இங்கும் நின்றனவும் திரிந்தன-அவ்வுலகத்தும் இவ்வுலகத்தும் (உள்ள) நிலைத் திணைப் பொருள்களும் சுழன்றன; (இத்தகைய மாறுபாடுகளைக் கண்டு), இமையோர்-தேவர்கள், இறுதி காலம் அன்று ஆம் என-உலக முடிவுக் (பிரளய) காலம் அன்றே யாய்விடுமோ என்று, அயிர்த்தனர்-ஐயங்கொண்டனர்.

அன்றென; என: இசைநிறை. வெயில்: சூரியனுக்கு ஆகு பெயர். சிரிப்பின் மிகுதி குறித்து, 'வந்தன' எனப் பன்மையாற் கூறினர். இச் செய்யுள் **தொடை முரண்** அமைந்தது.

மாறுபாடுகளைக் கண்டும், அவற்றிற்குக் காரணமான விசுவாமித்திரனது சின மிகுதியை உணர்ந்தும், தேவர்கள் உலக முடிவு அன்றே நேர்ந்துவிடுமோ என்று ஐயுற்றனர் என்க. மண் படைத்த முனி யிறுதிக்காலம்-பிரமனது முடிவு காலம் (பிரம கல்பம்) எனக் கூறுவாரு முளர். இறுதிக் காலம் ஆம் என, அன்று என இமையோர் அயிர்த்தனர்' என்று இயைத்து, உற்பாதங்களால், உலக முடிவு காலமோ என்று முன்னும், அதற்குரிய காலவரையறை ஆகாமையின் வேறுயாதோ என்று பின்னும் இமையோர் ஐயுற்றனர் என்றலும் ஆம். மண் படைத்த முனி-பூமியை ஆளுதல் பெற்றிருந்த முனிவன் எனவுங் கூறலாம்.

விசுவாமித்திரன் மண் முதலியன படைக்கத் தொடங்கியது: *318*-குறிப்புப் பார்க்க. கண் சிவத்தலும், புருவம் நெற்றியிலேறுதலும் சினக்குறிகள்: *1060*. வெகுளி நகை: தொல். மெய்ப். சூ. 4-பேர். மு. ஒப்பு: *484-85*; ஆரணிய. *600*. சினத்தால் நிகழும் மெய்ப்பாடுகள்: அயோத். *411*; ஆரணிய. *868*.

(பி - ம்.) 1. முனிவோடெதிர்ந்தனன்; பண்டடைந்தமுனி; அயனேடெதிர்ந்து; புவி படைத்த முனி; முனிவிறுதிக்; வருமிறுதிக்; வருமிறுதி; காலன்.
2. அன்றெனலாமென; என்றெனவாமென; இன்றெனவாமென: வெயிற் கரந்த.
3. திரிந்தனமீ; திரிந்தனவும்; நிவந்த கொடுங்; இவர்ந்த கொழுங்; முற்றிச்; முற்றுஞ். 4. சென்றதுவந்தது: (14)

## வசிட்ட முனிவன் கூறுதல்

(வேறு)

329. கறுத்த மாமுனி கருத்தை யுன்னிநீ
பொறுத்தி யென்றவற் புகன்று நின்மகற்
குறுத்த லாகலா வுறுதி யெய்துநாள்
மறுத்தி யோவெனு வசிட்டன் கூறுவான்.

(விசுவாமித்திரமுனிவன் கடுஞ்சினத்தோடு எழுந்ததைக்கண்டு), வசிட்டன்-வசிட்ட முனிவன், கறுத்த மாமுனி கருத்தை உன்னி-வெகுண்டு எழுந்த பெரிய கோசிக முனிவனது உட்கருத்தை ஓர்ந்து, அவன்-அவனை நோக்கி, 'நீ பொறுத்தி என்று புகன்று-நீர் பொறுத்தருளுவீராக' என்று சமாதானங்கூறி, (மேலே, தசரதனைப்பார்த்து), 'நின் மகற்கு-உன் மகனான இராமனுக்கு, உறுத்தல் ஆக அல்லா உறுதி எய்தும் நாள்-(பிறர் ஒருவரால்) அடைவிக்க முடியாத நன்மைகள் (தாமே வந்து) சேருங் காலத்தில், மறுத்தியோ-(அவற்றைத்) தவிர்க்கலாமோ?' எனு-என்று (முதலில்கூறி), கூறுவான்-மேலுங்கூறலானான். கூறியதை அடுத்த பாடலில் காணலாம்.

கறுத்தல்-கோபித்தல்; 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' (தொல்.) உறுத்தல், உறுதல்: என்பதன் பிறவினை.

விசுவாமித்திர முனிவன் நோக்கம், தன் வேள்வி காத்தல் என்னும் வியாஜத்தால் இராமபிரானை அழைத்துப்போய், சீதா விவாகத்தையும்முடித்துவைக்க வேண்டுமென்பது. வசிட்டமுனிவர் வருங்காலமுணர்பவராதலால், விசுவாமித்திரனது இந்தக் கருத்தையும், அம்முனிவனால் இராமபிரானுக்கு எய்தவிருக்கும் பல மந்திர சித்திகளையும் உணர்ந்து, 'நின் மகற்கு உறுத்தலாகலா வுறுதி யெய்து நாள்' என்று தசரதனிடம் குறிப்பாகக் கூறினர்.

விசுவாமித்திரன் தசரதனிடம் அவன் மகனைத் தரும்படி வேண்டியபோது, 'நான் இவனுக்கு மூவுலகங்களிலும் புகழுண்டாகும்படியானபலவகை நன்மைகளைச் செய்வேன்' என்று ஓரிடத்திலும், 'இராமனை மகாத்மா வென்றும் உண்மையான பராக்ரமமுடையவனென்றும் நான் அறிவேன்; மகாநுபாவராகிய வசிட்டரும் அறிவர்' என்று அதனைத் தொடர்ந்தும் கூறியதாக வான்மீகம் கூறுவதும் இங்குக் கவனிக்கத்தக்கது.

(பி-ம்.) 1. உன்னியே. 2. என்றவற்புகழ்ந்து; என்றவர்ப்புகன்று; நீண்மகற்கு.
3. உறுத்தி யாகலா; உறுத்தலாதலால்; உறுத்தியாவதோர்; எய்தி; னுல்: ஏயநாள்.
4. மறுத்தியோவென; கூறினன். (15)

330. பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகு மாறுபோல்
ஐய நின்மகற் களவில் விஞ்சைவந்
தெய்து காலமின் றெதிர்ந்த தென்னவே.

(மேலும் கூறலுற்ற வசிட்ட முனிவன் தசரதனைப் பார்த்து), 'ஐய-அரசனே! பெய்யும் மாரியால் பெருகு வெள்ளம் போய்-(பல விடங்களில்) பெய்கிற மழையினுல் பெருகிவரும் வெள்ளமானது (ஒருங்கு திரண்டு) ஓடி, மொய் கொள் வேலை வாய்-வலிமைகொண்ட கடலினிடத்தே,முடுகும் ஆறுபோல்-விரைந்து அடையும் வகைபோல, நின் மகற்கு-உன் மகஞன இராமனுக்கு, அளவு இல் விஞ்சை வந்து எய்து காலம்-அளவற்ற (அஸ்திர சஸ்திர) வித்தைகள் வந்து சேருதற் குரிய காலம், இன்று எதிர்ந்தது-இன்று நேர்ந்துள்ளது' என்ன-என்று கூற. ஏ-அசை.

கூறுவான் *(329)* எதிர்ந்தது என்ன *(330)* என்று முடிபு கொள்க.

ஐய நின் மகற்கு-தலைமையுடைய உன்மகனுக்கு என உரைத்த லும் ஆம்.

வித்தைகளுக்கு வெள்ளமும், இராமபிரானுக்குக் கடலும் உவமை. மழைநீர் பலவிடங்களிலிருந்து வந்து ஒன்று சேர்ந்து பெரு வெள்ளமாவதுபோல, விசுவாமித்திரன் பலவகையில் பெற்ற அத்திர சத்திர வித்தைகளும் மந்திரவித்தைகளும் வெள்ளமாகப்பெருகிஅவன் பால் உள்ளன; அவை இராமபிரானுகிய கடலை அடையப் போகின் றன என்றவாரும். எவ்வளவு நீர்ப் பெருக்கு வந்து சேர்ந்தாலும் ஏற்றுத் தாங்கும் கடல்போல, எவ்வளவு வித்தைகள் வந்து சேர்ந்தா லும் ஏற்றுத் தாங்கும் ஆற்றலுடையவன் இராமபிரான் என்பதாம்.

இவ்விடத்தில் அத்யாத்ம ராமாயணம், தசரதன் கௌசிகரின் கோபத்தைக் கண்டு அஞ்சி வசிட்டரை நோக்க, அவர், இராமபிரான் முதலிய நால்வரின் அவதார ரகசியத்தைக்கூறி, 'விசுவாமித்திர முனி வர் இராமபிரானுக்கு விவாகம் நடத்தி வைக்கவே அழைத்துப் போகின்ருர்' என்றும் கூறினதாகக் கூறுகிறது.

(பி - ம்.) 1. பெய்யுமாரியாய்ப்: பெய்யுமாரியிற்; பெய்யம்மாரியாற்பெருகும்; பெரிய; வெள்ளமாய்; வெள்ளநீர்.
2. வேலைமேல்; வேலையை .
4. எய்துங் காலம்வந்து; எய்துகாலந்தான்; எய்துகாலமிங்கு; இயைந்தது; ஆமென்ருன்.

## தசரதன் இராமபிரானை அழைத்துவரச் செய்து விசுவாமித்திரனிடம் ஒப்புவித்தல்

331. குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருக வென்றன னென்ன லோடும்வந்
தருகு சார்ந்தன னறிவி னும்பரான்.

கொற்றவன்-வெற்றியையுடைய தசரத மன்னன், குருவின் வாசகம் கொண்டு-குலகுருவாகிய வசிட்ட முனிவனது சொல்லை மனங்கொண்டு,(ஏவலாளரை நோக்கி), 'சென்று திருவின் கேள்வனை கொணர்மின்' என-(நீங்கள்) 'போய், இலக்குமி நாயகனான இராமனை அழைத்து வாருங்கள்' என்று கட்டளையிட, (அவர்கள் இராமபிரானிடம் போய்), 'வருக என்றனன்' என்னலோடும்-(சக்கரவர்த்தி நும்மைத் தம்மிடம்) வருமாறு கூறினர் என்றவளவிலே, அறிவின் உம்பரான்-அறிவின் மேனிலையானான இராமபிரான், வந்து-அவர்களுடன் வந்து, அருகு சார்ந்தனன்-தந்தையின் பக்கத்தை அடைந்தான்.

எல்லாச் செல்வங்களுக்கு முரியவனாதலால் இராமபிரான் 'திருவின் கேள்வன்' எனப்பெற்றான். அயோத். *50*; ஆரணிய. *111*; திருவாகிய சீதையை அடைதலும் அண்மையிலிருத்தலால், இவ்வாறு தசரதன் வாக்கில் வந்ததாகக் கவி அமைத்தனர் போலும். 'என்னலோடும் வந்து அருகு சார்ந்தனன்' என்றது. தந்தையின் பணியைக் கேட்டலில் இராமபிரானது விரைவைக் குறித்தது. 'அறிவின் உம்பரான்' என்பது யாவர் அறிவிற்கும் அப்பாற்பட்டவன் என்றும் ஆம்; இத்தகைய (திருமாலின் அமிசமான) இராமபிரான், தான்கொண்ட கோலத்திற்கேற்ப, தந்தையிடம் மகன் நடந்துகொள்ள வேண்டிய முறையைத் தன் செயலாலே காட்டினான் என்க. 'இராமபிரான் தந்தை அழைத்த உடனே வருதல். அயோத்: *53*.

அறிவினும்பரான்: *427*; ஆரணிய. *1*.

(பி - ப்.) 1. கொண்ட. 2. சென்றென.
3. என்றனர்; என்றலோடும்; வருதலோடும்.
4. சேர்ந்தனன்; அறிவில்; எம்பிரான். (17)

332. வந்த நம்பியைத் தம்பி தன்னொடும்
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநல்
தந்தை நீதனித் தாயு நீயிவர்க்
கெந்தை தந்தனெ னியைந்த செய்கென்றான்.

தம்பி தன்னொடும்வந்த நம்பியை-(எப்போதும் இணைபிரியாத) தம்பியாகிய இலக்குமணனுடன் வந்த தலைவனான இராமபிரானை,

முந்தை நால் மறை முனிக்கு காட்டி-பழமையான நான்கு வேதங் களையுமுணர்ந்த விசுவாமித்திர முனிவனிடம் சுட்டிக் காண்பித்து, 'எந்தை-ஐயனே! இவர்க்கு-இச்சிறுவர்களுக்கு, நல் தந்தை நீ-நல்ல தகப்பனும் நீரே; தனி தாயும் நீ-ஒப்பற்ற தாயும் நீரே; தந்தனென்-(இவர்களை நும்மிடம் அடைக்கலமாகக்) கொடுத்துவிட்டேன்; இயைந்த செய்க-இவர்களுக்குத் தக்கன செய்தருளுக', என்றான்-என்று தசரதன் கூறினான்.

செய்கென்றான்: தொகுத்தல்.

இராமபிரானை விட்டு எப்போதும் பிரியாதவன் இலக்குமணன் ஆதலால், இராமபிரான் உள்ளவிடத்தில் தம்பியும் உளன் என்பது சொல்லாமலே அமையும்; எனவே, 'தம்பிதன்னொடும் வந்த நம்பியை' என இலக்குமணன் வருகை தவறாமையைக் குறிப்பித்தார்; 307-குறிப்புப் பார்க்க. நம்பி-புருஷோத்தமன், தலைவன்; இச்சொல் கோதையார் வாக்கில் பயின்றுவரும். இராமபிரான் ஒருவனையே முனிவனுடன் அனுப்பத் தயங்கிய சக்கரவர்த்தி, இப்போது அக்குற்றத்திற்கு அபராத காணிக்கையாக இலக்குமணனையும் சேர்த்து அனுப்பலானான் என்க. மகனின் அறிவு வளர்ச்சி நலத்தில் மிக்க கருத்துடையவன் தந்தையாதலின் விசுவாமித்திரனால் அந்நலம் மிக நேரப் போவது குறித்து, 'நல் தந்தை நீ' என்றான்; அன்பிலும், மக்களின் உடல் நலச் செயல்களிலும் இணையற்றவள் தாயாதலால், அத் தாய் போலும் நீர் இருப்பீராக என்ற கருத்தோடு 'தனித்தாயும் நீ' என்றான். 'தந்தனென்'-அடைக்கலயாகக் கொடுத்துவிட்டேன்; இனி அவர்களுடைய நலனெல்லாம் உம்முடையதே, என்பான், 'இயைந்த செய்க' என்றான்.

(பி - ம்.) 1. தம்பிதன்னொடைம்; தம்பியோடுமம்.
2 முந்து; முந்தி: முனிக்குங்; காட்டினான்.
3. ஈந்தனன்; இசைந்த. (18)

சில சுவடிகளில் இப்பாடலோடும், வேறு சில சுவடிகளில் அடுத்த பாடலோடும், மற்றும் சில பிரதிகளில் 'கரும்பு கால் பொர' (337) என்ற பாடலோடும் கையடைப் படலம் முடிவுறுகின்றது.

கோசிக முனிவன் குமரரை யேற்று வாழ்த்தி விடைகொள்ளல்

333. கொடுத்த மைந்தரைக் கொண்டு சிந்தைமுந்
தெடுத்த சீற்றம்விட் டினிது வாழ்த்திமேல்
அடுத்த வேள்விபோய் முடித்து நாமெனா
நடத்தன் மேயினா னவைக்க ணீங்கினான்.

(முனிவன்), சிந்தை முந்து எடுத்த சீற்றம் விட்டு-மனத்திலே முன்பு மேலிட்ட சினத்தை விட்டு, கொடுத்த மைந்தரை கொண்டு-(தசரதன் அடைக்கலமாகக்) கொடுத்த குமாரர்களை யேற்றுக்

கொண்டு, நவை கண் நீங்கினன்-(சினத்தால் நேரத்தக்க) குற்றத்தினின்றும் நீங்கியவனாய், இனிது வாழ்த்தி-(தசரதனை) நன்கு ஆசீர்வதித்து, மேல்-அதன்பின், (குமாரர்களை நோக்கி), 'நாம் போய் அடுத்த வேள்வி முடித்தும் என-'நாம் (உரியவிடத்திற்குப்) போய்ச் செய்தற்குரிய வேள்வியைச் செய்து முடிப்போம்' என்று சொல்லி, நடத்தல் மேயினன்-நடக்கலானான்.

நவைக்கண்: உருபு மயக்கம். நவைக்கண் நீங்கினன்-குற்றங்களினின்றும் நீங்கிய முனிவன்' என எழுவாயாக்கி யுரைப்பினும் ஆம்.

(பி - ம்.) 1. சிந்தைவந்து; சிந்தைமுன். 2. இனிதின்; வாழ்த்தியே.
3. முடித்ததாமென; முடித்ததாமென; முடித்தலாமென; முடிக்கலாமென; முடிப்ப நாமென.
4. நடத்த; மேவினன்: நவைகள்: நவையுள். (19)

334. வென்றி வாள்புடை விசித்து மெய்ம்மைபோல்
என்றுந் தேய்வுருத் தூணி யாத்திரு
குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கின னுலகந் தாங்கினன்.

உலகம் தாங்கினன்-உலகங்களை யெப்போதும் காத்தலுடைய திருமாலின் அமிசமான இராமபிரான், வென்றி வாள்புடை விசித்து-வெற்றிக்குரிய வாளை (இடப்) பக்கத்திலே கட்டி, இரு குன்றம் போன்று உயர் தோளில்-இரண்டு மலைகள் போல் உயர்ந்துள்ள இரண்டு தோள்களிலும், மெய்ம்மை போல்-சத்தியமான தருமத்தைப் போல, என்றும் தேய்வு உரு-என்றும் குறைவுபடாத, தூணி யாத்து-அம்பறாத் தூணிகளைக் கட்டி, கொற்றம் வில் ஒன்று தாங்கினன்-வெற்றியைத் தரும் வில் ஒன்றையும் (இடக்கையிலே) பிடித்தவனாகி, (இது அடுத்த கவியுடன் தொடரும்.)

தாங்கினன்: முன்னது, முற்றெச்சம்; பின்னது வினையாலணையும் பெயர்.

தேய்வுருத் தூணி-அம்புகள் எடுக்க எடுக்கக் குறைவு படாத அம்புப் புட்டில்; 'அக்ஷய தூணீரம்' என்பர். 'தொலைவில் தூணிகள்' (ஆரணிய.607). அம்பறாத் தூணிகளை இருபுறத்தும் கட்டிக்கொண்டதாக வான்மீகமும் கூறும். விற்பிடித்தது இடக்கை: 'சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்' (384). மெய்ம்மை, உண்மையுமாம்.

(பி - ம்.) 1. மேன்மை போல்; மெய்மை போல்.
2. ஒன்றும்: தேய்விலாத்; தேய்வுருப்; தெவ்வுருத்: தூணியார்த்திரு; தூணிபார்த்திருங்; பூணியாற்றிருக்; தூணியார்த்திருட்.
3. குன்று; போன்றுளான்; போன்றுள; ஒன்றுளான்; போலுயர்: பணியுங் கொற்றவில்; குனியுங் கொற்றவில்; தோளிற் கேற்றவில்; தோளிற் கொத்தவில்.
4. ஒன்றுந்: உலகந் தாங்குவான். (20)

அரசிளங் குமரர் முனிவனைத் தொடர்தல்

335. அன்ன தம்பியுந் தானு மையனும்
மன்ன னின்னுயிர் வழிக்கொண் டாலெனச்
சொன்ன மாதவற் றொடர்ந்து சாயைபோல்
பொன்னின் மாநகர்ப் புரிசை நீங்கினார்.

அன்ன தம்பியும் தானும் - அத் தன்மையனாகிய (தன்னைப் போலவே வாளும் அம்புப் புட்டிலும் வில்லுந் தாங்கிய கோலங் கொண்ட) இலக்குமணனும் தானுமாக, ஐயன் ஆம் மன்னன் இன் உயிர் வழி கொண்டால் என-தந்தையாகிய தசரத மன்னனது இனிய உயிர் வழி நடந்து செல்வது போல, சொன்ன மாதவன்-(நாம் போய் வேள்வி முடிப்போம் என்று)சொல்லிய பெருந்தவசியான விசுவாமித்திர முனிவனை, சாயை போல் தொடர்ந்து-(அவனது) நிழல்போல (விடாது) தொடர்ந்து சென்று, (மூவருமாக), மா நகர் பொன்னின் புரிசை நீங்கினார்-சிறப்பு மிக்க அயோத்தி நகரின் பொன் மயமான மதில் வாயிலைக் கடந்தனர்.

முதலில் முனிவனும், அடுத்து இராமபிரானும், பின்னே இலக்குமணனுமாக முறையே சென்றனர் என வான்மீகம் கூறும். பின்புபல வித்தைகளை யுபதேசிக்கப் போகிற குருவாதலின், நிழல்போல நீங்காது தொடர்ந்து சென்றனர் என்க. 'மன்னனின்னுயிர் வழிக் கொண்டாலென': *302, 325*-குறிப்புக்கள் பார்க்க. சாயைபோலத் தொடர்தல்: 'நிழல்கள்போல் புறஞ்செய் தம்பியர்' *(1184)*.

(பி - ம்.) 1. ஐயன்பின்; ஐயனும்; அன்பினின்; அன்பினால்.
2. எனச். 3. துன்னு மாதவற் றொடர்ந்த; மாதவர்த் தொடர்ந்து.
4. நீங்கினாள். (21)

மூவரும் சரயு நதியை அடைதல்

336. வரங்கண் மாசறத் தவஞ்செய் தோர்கள்வாழ்
புரங்க ணேரிலா நகர நீங்கிப்போய்
அரங்கி னாடுவார் சிலம்பி னன்னநின்
றிரங்கு வார்புனற் சரயு வெய்தினார்.

வரங்கள் மாசு அற தவம் செய்தோர்கள் வாழ்-(தாம் பெறும்) வரங்கள் குற்றமில்லாதன வாகும்படி (நல்ல) தவத்தைச் செய்தவர்கள் போய் (இனிது) வாழத்தக்க, புரங்கள்-அமராவதி முதலிய தேவ நகரங்களும், நேர் இலா-தனக்கு ஒப்பாகாத, நகரம்-அயோத்தி மா நகரத்தை, நீங்கி போய்-விட்டுச் சென்று, (மூவரும்), அரங்கின் ஆடுவார் சிலம்பின்-நாடக அரங்கிலே ஆடும் மகளிரின் சிலம்பைப்போல, அன்னம் நின்று இரங்கு-அன்னப் பறவைகள் தங்கி ஒலிக்கின்ற, வார்

புனல்-ஒழுகும் நீரிணையுடைய, சரயு எய்தினர்-சரயு நதிக் கரையை அடைந்தார்கள்.

வரங்கள் மாசு அறுதலாவது, இராவணன், கும்பகருணன் முதலிய தீயோரும் தவம் செய்து வரம் பெற்றனராயினும், பின்பு அவை பழுதுபட்டது போலன்றி, நற்பயனளித்தல். 'தவஞ்செய் தோர்கள் வாழ் புரங்கள் நேரிலா நகரம்': 94, 99-ஆம் பாடல்களும், அவற்றின் குறிப்புக்களும் பார்க்க. சிலம்புக்கு அன்னத்தின் குரல்: 158-குறிப்புக் காண்க.

(பி - ம்.) 1. வரங்கொள்; வரஞ்செய்; வானுறத்: தவஞ்செய்வோர்கள்வாழ்; தவங்கள் செய்ஞர் வாழ்.

2. புரங்கணேரலா: நகரின்; நகருள்: புரிசை; நீங்கப்போய்.

3. அரங்கிலாடுவார். 4. வார்திரைச்: எய்தினன். (22)

மூவரும் ஒரு சோலையில் தங்குதல்

337. கரும்பு கால்பொரக் கமுகின் வார்ந்ததேன்
வரம்பு மீதிடு மருத வேலிவாய்
அரும்பு கொங்கையா ரம்மெ லோதிபோல்
சுரும்பு சூழ்வதோர் சோலை வைகினர்.

கரும்பு கால் பொர-கரும்புகள் காற்றினால் (அசைந்து) மோதுதலால், கமுகின் வார்ந்த தேன்-பாக்கு மரங்களின் உச்சியிலே கட்டிய தேனடைகள் கிறி வடிந் தேனானது,வரம்பு மீதிடு-(பக்கங்களில் உள்ள வயல்களின்) வரப்பைக்கடந்து பாய்கின்ற (வளமுடைய), மருதவேலி வாய்-மருதநிலத்தினிடையே(உள்ள),அரும்பு கொங்கையார்-முகிழ்க்கின்ற தனங்களையுடைய பெண்களின், அம் மெல் ஓதி போல்-அழகிய மெல்லிய கூந்தலிலே (மொய்ப்பது) போல, சுரும்பு சூழ்வது ஓர் சோலை-வண்டுகள் சூழ்ந்து மொய்க்கப்பெற்றதொரு (இனிய) சோலையிலே, வைகினர்-(மூவரும் இராப் பொழுது) தங்கினர்கள்.

விசுவாமித்திரன் முதலிய மூவரும் சரயு நதிக்கரையை அடைந்தபோது, அத்தமன வேளையாகிவிட்டபடியால், அன்று இராப் பொழுதை அங்கிருந்ததோர் அழகிய சோலையிலே தங்கிக் கழித்தனர் என்க. இச் செய்யுள். சரயு நதிக்கரைப் பக்கத்துள்ள நிலவளத்தை நன்கு கூறுதல் காண்க.

சோலைக்குக் கூந்தல்: வி-பா. சூதுபோர். 116.

(பி - ம்.) 1. சழனி வாய்ந்ததேன்;
2. வரம்பை; வரம்பின்: மீதிடும்: மீதுறும்; மீறிடும்; மேவிடும்:வேலியார்.
3. கொங்கையர்; கோதையர்: அம்மெலோதிமேல்.
4. சோலை நண்ணினர்; எய்தினர்; மேயினர்: மேவினர்; நண்ணினன்.
சிலபிரதிகளில், இப்பாடலும் அடுத்ததும் முன்பின்னாக மாறியுள்ளன. (23)

## ஆற்றைக் கடத்தல்

338. தாழு மாமழை தழுவு நெற்றியால்
சூழி யானைபோற் றேன்று மால்வரைப்
பாழி மாமுகட் டுச்சிப் பச்சைமா
ஏழு மேறப்போ யாறு மேறினர்.

தாழும் மா மழை-தாழ்ந்து வருகின்ற மேகக் கூட்டங்கள், தழுவும் நெற்றியால்-படிந்துள்ள உச்சிப் பகுதியினல், சூழி யானை போல் தோன்றும்-முகபடாம் அணிந்த யானைபோலக் காணப்படுகிற, மால்வரை-பெருமை பொருந்திய உதயகிரியின், பாழி மா முகடு உச்சி-வலிமையுடைய உயர்ந்த சிகரங்களின் மேலே, பச்சை மா ஏழும் ஏற-(சூரியனது தேரின்) பச்சைக் குதிரைகள் ஏழும் காலடி வைக்க, (சூரியோதய காலத்தில்), போய் ஆறும் ஏறினர்-(மூவரும் படகிலே) சென்று ஆற்றையும் கடக்கலானர்கள்.

மலைக்கு யானையும், யானையின் முகத்தி லணியும் முகபடாத்துக்கு, மலையுச்சியிற் படிந்த மேகமும் உவமை. காயத்திரி முதலிய ஏழு சந்தசுகளும் ஏழு குதிரைகளாகச் சூரியனது ஒற்றைச்சக்கரத் தேரிலே பூட்டப்படுவன வென்றும், அக்குதிரைகளின் நிறம் பசுமை யென்றும் கூறுப. இங்கே, சிலர் சூரியாத்தமன காலத்தில் ஆற்றைக் கடந்த தாக உரை கூறுவர்; அது முதனூற் கருத்துக்குப் பொருந்துவ தாகாது. முனிவனும் குமரர்களும், சரயு நதியின் தென் கரை வழியே சென்று, சூரியாஸ்தமனமான பின் ஒரு சோலையிலே இராப் பொழுது தங்கி, மறுநாட் காலை, சரயு நதி கங்கையோடு கலக்குமிடத்துக்கு அருகில் கங்கையாற்றைக் கடந்து அதன் தென்கரை சேர்ந்து வழி நடந்து சென்று தாடகையிருந்த வனம் சேர்ந்ததாக முதனூல் கூறும். இவர்கள் கடந்தது சரயு நதியை யென்பதும் பொருந்தாது. சரயு நதிக்கரையிலே தங்கியபோது முனிவன், பலை, அதிபலை என்றஇரண்டு விச்சைகளைக் குமரர்க்கு உபதேசித்தானென்பதும் முதனூலிற் கண்ட செய்தியாகும். இவ்வுபதேசத்தைக் கம்பர் பின்னே கூறுவர்; 356-7: பார்க்க.

முகபடாத்துக்கு மேகம்: பெருங். *3. 27: 118.* பச்சைமா ஆரணிய. *414*; வி-பா. வசந்த. *1.*

(பி - ம்.) 1. தவழும்.
2. யானையிற்றேன்றும்; யானையாய்த் தோன்றும்; மால்வரை.
3. ஊழிமாமுகட்டுச்சி பச்சைமா. 4, ஏறிப்போய்; ஏறினன். (24)

## இராமபிரான் வினவுதல்

339. தேவு மாதவற் றெழுது தேவர்தம்
நாவு ளாவுதி நயக்கும் வேள்விவாய்த்
தாவு மாபுகை தழுவு சோலைகண்
டியாவ தீதென்று னெவர்க்கு மேனின்றுன்.

எவர்க்கும் மேல் நின்றான்-யாவர்க்கும் மேலாக நிற்கும் பெருமையுடைய இராமபிரான், தேவர்-தேவர்கள், தம் நா உள் ஆவுதி நயக்கும்-தம் நாவிலே (சுவையான) ஆகுதியைக்கொள்ள விரும்புதற்கிடமான, வேள்வி வாய் தாவும்-யாகத்தினின்றும் எழுகிற, மா புகை தழுவு சோலை கண்டு - மிக்க புகையானது சூழ்ந்துள்ளதொரு சோலையை (எதிரே) கண்டு, தேவு மா தவன் தொழுது-தெய்வத் தன்மை பொருந்திய மிக்க தவத்தையுடைய விசுவாமித்திரமுனிவனை வணங்கி, 'ஈது யாவது என்றான்-இது என்ன சோலை' என்று கேட்டான்.

தேவு-தெய்வம்: சீவக. 1. ந.

(பி - ம்.) 2. ஆகுதி: வேள்வியால்; வேள்வியில்.
3. தவமும். 4. மேலுளான். (25)

சில பிரதிகளில் பின்வரும் ஒன்பது பாடல்கள் இச்செய்யுளின் பின் காணப்படுகின்றன.

1. 'இனைய சோலைமற் றியாவ தென்றுமா
முனிவ கூறென முதல்வன் கூறலும்
பனுவல் வேதநூல் பகரு மாதவன்
தனுவ லாயிதன் றன்மை கேளெனு.

(பி - ம்.) 1. என்னமா. 4. தகைமை.

2. 'சம்ப ரப்பெயர்த் தான வன்னுடன்
உம்பர் கோமக னமரு டன்றநாள்
வெம்பி மற்றவன் வெற்றி கொண்டபோ
தம்ப ரம்மிழந் தவனி வந்தனன்.

(பி - ம்.) 1. தானவன்னெடும். 2. கோவுமாயமர்.
4. அம்பரத்திழிந்து; அவனியெய்தினன்.

3. 'அவனி வந்துமன் னவரி டந்தொறும்
தவன னென்னவே தானு ழன்றறிந்
திவனில் வேறுமற் றில்லை யெற்கெனு
உவன்வி ரும்பிவந் துந்தை நாடுரு.

(பி - ம்.) 1. அவனியெய்தி. 2. தானுழன்றபோது.
3. இவனின் மாறுவேறில்லை போர்க்கெனு. 4. மாடுரு; அன்புரு.

4. 'இந்த விவ்விடத் தெய்தி யிந்திரன்
சந்த வார்பொழிற் றருவொ ரைந்தையும்
வந்து நிற்கென மனனி னைக்கவே
முந்த வந்துமா முரல நின்றவால்.

(பி - ம்.) 2. தருவிடந்தனில். 3. நிற்கெனு மனநினைப்பினின்.
4. முந்து; நின்றதால்.

5. 'நின்ற சோலைவாய் நியம நித்தமும்
குன்ற லின்றியே செய்து கொண்டவன்
நன்றி யாவிருந் தரசை நண்ணியே
துன்று சோலைதா னுறைதல் சொல்லினன்.

(பி - ம்.) 1. நித்தலும். 3. அரசன்; அரசு; நண்ணிய.
4. சோலையின்: தொழிலுணர்த்தினன்.

6. 'உருவ மாறிவே றுருவ மாகியே
நிருப னன்குடை நிழலி னிற்றலும்
பரிவி னேக்கிநீ பகர்தி யாரெனத்
தருவி னுயகன் முன்வி ளம்பினன்.

(பி - ம்.) 1. மானுருவம். 2. நிருபனின் குடை.
3; பரிதனேக்கிநீ; பரிவினேக்கியே: பகர்தியாலெனத்.

7. 'சதம கன்னெனைச் சம்ப ரன்னெனும்
மதம கன்றுரந் தரசு வவ்வினன்
கதமி குந்திறற் சூவ லாளவென்
விதம கன்றுவந் துன்னை மேவினேன்.

(பி - ம்.) 2. மதுமகன். 3. கதமகன்றிடாக் கனகலெற்பவென்.

8. 'என்ற போதுதன் னிரத மேறியே
சென்று மற்றவன் சேனை யோடுகக்
கொன்று வாசவன் னரசு கொள்ளவே
அன்ற ளித்துமீண் டயோத்தி யெய்தினன்.

(பி - ம்.) 1. போதுதான். 2. சேனையோடுபுக், 4. மேவினன்.

9. 'அன்ன தாதலி னவனில் வந்தகா
வென்னு நாமமிச் சோலை யென்றலும்
மன்னர் மன்னவன் மதலை நன்றெனுப்
பின்னை நின்றுயிர்ப் பிரிய மாயினன்.'

(பி - ம்.) 1. அன்னகாவல னவனி வந்தகா; அன்னதர்தலாலவனியைந்துதார்.
2. என்ன நாமமிச்; இன்னநாமமிச். 3. நன்றெனப்.
4. நன்றுயிர்ப் பிரிய மெய்தினர்.

இவ்வொன்பது பாடல்களும் சில பிரதிகளில் தாழு மாமழை' என்ற பாடலின் பின் எழுதப்பட்டுள்ளன. இவற்றின் இறுதியில் 'கையடைப் படலம் முற்றும்' என்பதும் காணப்படுகின்றது.

கையடைப் படலம் முற்றும்.



# 7. தாடகை வதைப் படலம்

தாடகை வதைப் படலம்: தாடகை என்னும் கொடியவளை இராமபிரான் வதைத்தமையைக் கூறும் படலம் என விரியும்.

### விசுவாமித்திர முனிவன் கூறுதல்

340. திங்கண்மே வுஞ்சடைத் தேவன்மேன் மாரவேள்
இங்குநின் றெய்யவு மெரிதரு நுதல்விழிப்
பொங்குகோ பஞ்சுடப் பூளைவீ யன்னதன்
அங்கம்வெந் தன்றுதொட் டனங்கனே யாயினன்.

(விசுவாமித்திர முனிவன் இராமபிரானை நோக்கி), 'மார வேள்-மன்மதன், இங்கு நின்று - இவ்விடத்திலிருந்து, திங்கள் மேவும் சடை தேவன் மேல்-சந்திரன் தங்கிய சடையையுடைய சிவபெருமான் மேலே, எய்யவும்-மலரம்புகளைத் தொடுக்கவும், (மிக்க சினங்கொண்ட அப்பெருமானது), எரிதரு நுதல் விழி-நெருப்பை உமிழும் நெற்றிக் கண்ணினின்றும், பொங்கு கோபம் சுட-பொங்கி வந்த கோபாக்கினியானது எரித்துவிட்டதனல், பூளை வீ அன்ன தன் அங்கம் வெந்து-பூளைப் பூப்போன்ற (மென்மையான) தன் உடல் எரியப்பெற்று, அன்று தொட்டு-அன்று முதல், அனங்கனே ஆயினன்-(என்றும் அவன்) உடலில்லாதவனுகவே ஆய்விட்டான்.

சிவபெருமான், நல்லவர்க்கும், தம் குற்றமுணர்ந்து மன்னிப்பு வேண்டியவர்க்கும் அருள்செய்து, தம் குற்றமுணராத செருக்குடையவர்களை அழிக்குந்தன்மையுடையவன் என்பது தோன்ற 'திங்கள் மேவும் சடைத் தேவன்' என முதலிலும், 'நுதல் விழிப் பொங்கு கோபம் சுட' எனப் பின்னும் கூறினர்.

மாரன்-'மக்களுக்குக் காமத்தால் மரண வேதனையை உண்டாக்குபவன்' என்ற காரணக் குறியாகிய வடசொல். வேள்-விருப்பத்தை உண்டாக்குபவன்; விரும்பத்தக்கவன்: இச்சொல், குமரவேள் முருகவேள் என முருகன் பெயரோடு இயைந்தும் வழங்கும். பூளை வீ: வீ-பூ; பூளைப் பூவானது மிகவும் நொய்ம்மை யுடையதாய்ப் பஞ்சு போலக்காற்றிலே பறப்பதாகலின், 'பூளைப்பஞ்சு' எனவும் கூறப்படும். பூளைப்பூவின் நொய்ம்மை: யுத்த. 1210, 3483. அங்கம்-உடல்: ந+

அங்கன் = அநங்கன்-உடலில்லாதவன். மன்மதன், தேவர்கள் வேண்டுதலால், சிவபெருமான் உமையோடு கூடிக் குமரனைத் தருதற் பொருட்டு, யோக நிலையிலிருந்த அப்பெருமான் மனத்தில் இச்சையுண்டாக்கக் கருதி அவர்மீது மலரம்புகளைத் தொடுக்க, அதனாற் சினங்கொண்ட பெருமான் தம் நெற்றிக் கண் நெருப்பினால் மன்மதனை யெரித்து அநங்கனாகுமாறு செய்தனரென்பது வரலாறு.

எதிரே கண்ட சோலையைக் குறித்துவினவிய இராமபிரானுக்கு, அது சிவபெருமான் யோக நிலையில் இருந்து மன்மதனை யெரித்தவிடம் என்றும், காமனாச்சிரமம் என வழங்கப் படுவதென்றும், அதனைச் சார்ந்த நாடு அங்கநாடெனப்படும் என்றும் அதன் வரலாற்றை முனிவன் கூறலானான். மன்மதன், சிவபெருமானது நெற்றிக் கண்ணால் எரிந்தழிந்தது: ஆரணிய. 232.

(பி - ம்.) 1. தேவின்மேல்; தேவர் மேல். 2. எரிநுதல் விழியினால்.
4. அனங்கவேளாயினான். (1)

341. வாரணத் துரிவையான் மதனனைச் சினவுநாள்
ஈரமற் றங்கமிங் குகுதலா லிவணெலாம்
ஆரணத் துறையுளா யங்கநா டிதுவுமக்
காரணக் குறியுடைக் காமனாச் சிரமமே.

'ஆரணம் உறையுளாய்-வேதமாகிய இருப்பிடத்தையுடையவனே! வாரணம் உரிவையான்-யானைத் தோல் போர்த்த சிவபெருமான், மதனனை சினவும் நாள்-மன்மதனைக் கோபித்து எரித்த நாளில், அங்கம்-அம்மன்மதனுடல், ஈரம் அற்று இங்கு உகுதலால்-பசையற்று (நீறாகி) இங்கே சிதறிப்போன காரணத்தால், இவண் எலாம்-இவ்விடமெங்கும், அங்கநாடு-அங்கநாடு என்றாயிற்று; இதுவும்-இதோ அண்மையில் உள்ளதும், அ காரணம் குறி உடை(ய)-அந்தக் காரணத்தினால் ஆகிய பெயரையுடைய, காமன் ஆச்சிரமமே-காமாச்சிரமம் என்பதே.

வாரணத்து, ஆரணத்து என்பவற்றில் 'அத்து' சாரியை.

சிவபெருமானது சினத்துக்கு இலக்காகிய மன்மதனது அங்கம் சாம்பராகிப் பரவிய இடம், 'அங்கநாடு' எனப் பெயர்பெற்றதென்றும், மன்மதன் தங்கியிருந்தவிடம் 'காமாச்சிரமம்' எனப்பட்டது என்றும் முனிவன் கூறினான்.

வான்மீகத்தில், அந்த இடம் சிவபெருமான் தவம் புரிந்துவந்த இடமென்று கூறும். இங்கும் 342-ஆம் பாட்டில் அவ்வாறே கூறப் பெறுவது காண்க. இங்கு இது காமனாச்சிரமம் எனப்படுவது ஆராயத் தக்கது.

இராமபிரானது பரத்துவத்தை ஆங்காங்குக் குறிப்பிடுதல் கம்பநாடர் இயல்பாதலால், இங்கு 'ஆரணத்துறையுளாய்' என முனிவன் வாக்காற் கூறிவைத்தார். ஆரணம் துறை உளாய் எனப் பிரித்து, வேத மார்க்கத்தில் (பிறழாது) இருப்பவனே எனக் கூறலுமாம். அ காரணம் குறி உடை காமன் ஆச்சிரமம்-முற்கூறிய அந்தக் காரணக் குறியாகிய அநங்கன் என்னும் பெயருடைய காமனது ஆச்சிரமம் என்றலும் ஒன்று. மதனன்-மதத்தை (களிப்பை) உண்டாக்குபவன். அங்கம்-எலும்பும் ஆம்.

சிவபெருமான் யானைத்தோல் போர்த்த வரலாறு:- யானை வடிவமுடைய கஜாசுரன் என்பவன், வர பலத்தால் தேவரையும் முனிவர்களையும் துரத்தித் துன்புறுத்திவர, அவனால் நலிந்தவர்கள் சிவபெருமானிடம் சென்று முறையிட்டனர். அப்பெருமான் அவ்வசுரனைத் தண்டிக்கச் சென்றபோது, அசுரன் அவரையே எதிர்க்கவே அவர் கோபங்கொண்டு, அசுரனைக் காலால் உதைத்துத் தள்ளி வதைத்து, அவன் தோலை உரித்துப் போர்த்துக்கொண்டார் என்பது. தாருக வனத்திலே தங்கிக் கர்ம வாதிகளாயிருந்த முனிவர் சிலர், சிவபெருமானால் தமக்கு நேர்ந்த குறை காரணமாக அவர்மீது கோபங்கொண்டு, அவரை அழிக்கக் கருதி, ஆபிசார ஓமம் செய்து, கொடியதொரு யானையை உண்டாக்கி அவர்மீது ஏவ, பெருமான் அவ்வியானையைக் கொன்று, தோலையுரித்துப் போர்த்தார் எனவும் கூறுவர்.

(பி - ம்.) 1. மதன்றனை.
2 அங்கம்வெந்துகுதலால்; அங்குநின்றுகுதலால்: அங்குமிங்குகுதலால்; அவணெலாம்.
3. அநங்கநாடிதுவும்; அங்கநாடதுவும்.
4. குறியினால்; குறியினில்; காமனாசிரமமே. (2)

342. பற்றவா வேரொடும் பசையறப் பிறவிபோய்
முற்றவா லுணர்வுமேன் முடுகினா ரறிவுசென்
றுற்றவா னவனிருந் தியோகுசெய் தனனெனில்
சொற்றவா மளவதோ மற்றிதன் றூய்மையே.

'பற்று அவா-அகப்பற்று புறப்பற்று ஆகியவையும், ஆசைகளும், வேரொடும் பசை அற-அடியோடு முழுதும் அழியவும், பிறவி போய் முற்ற-பிறப்பு முடிவடையவும் (வேண்டி), வால் உணர்வு மேல் முடுகினார் அறிவு-தூய தத்துவ ஞானத்தில் மேம்பாடடைந்த பேரியோர்களின் உணர்வு, சென்று உற்ற வானவன்-போய் அடைதற்கிடமான சிவபெருமான், இருந்து யோகு செய்தனன் எனில்-(இவ்விடத்திலே) வீற்றிருந்து யோகம் செய்தனனென்றால், இதன் தூய்மை-இவ்விடத்தின் பரிசுத்தத் தன்மை, சொற்ற ஆம் அளவதோ-(நம்மால்) சொல்லக்கூடிய அளவுடையதோ?' (இல்லை என்றபடி.)

அகப்பற்று: யான் என்னும் அகங்காரம்; புறப்பற்று: எனது என்னும் மமகாரம்; இது,உள்ளபொருள்களிடத்துச் செல்வது. அவா, 'எனக்கு இன்னது வேண்டும்' என்று,உள்ளன,இல்லன ஆகிய எல்லாப் பொருள்களிடத்தும் செல்லும் விருப்பம். 'பற்று-பெற்றதன்மேல் நிகழும்ஆசை; ஆர்வம்-பெருததன்மேல் நிகழும் ஆசை' (சீவக.946;3039-ந.) இவை, மீண்டும் மீண்டும் பிறப்பதற்குக் காரணமான வினைகளைச் செய்யத் தூண்டுவனவாதலால், இவை முழுதும் அற்ருலன்றிப் பிறவி நீங்கி வீடுபேறு எய்துதல் இயலாது. 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பது ஆன்ரோர் வாக்கு. 'பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற் றைப், பற்றுக பற்று விடற்கு' (குறள். 350). பற்றவா...முடுகினுர்: **ஒப்பு:** 354. யோகு-யோகம். சொற்ற: சொல்ல என்னும் பொருள் கொண்ட செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். மற்று,ஏ-அசை.

(பி - ம்.) 1. பற்றவா வொடுமனம்; பற்றவா வொடுமனப்; பற்றவாடும்மனம்: பசையிறப்; பசையுறு; பரிவுபோய்.
2. முற்றும்வால்; முற்றுவால்; முற்றுவான்; உணர்வுபோய்; முறுகினுர்.
3. செய்தவனெனிற், 4. அளவிதோமற்றதன்; அன்றிதன் (3)

மூவரும் காமனுச்சிரமத்தில் ஒருநாள் தங்கி மேற்செல்லல்

343. என்றவந் தணனியம் பலும்வியந் தவ்வயின்
சென்றுவந் ததிர்கொளுஞ் செந்நெறிச் செல்வரோ
டன்றுறைந் தலர்கதிர்ப் பருதிமண் டிலமகன்
குன்றின்வந் திவரவோர் சுடுசுரங் குறுகினுர்.

என்று-மேற்கண்டவாறு, அ அந்தணன் இயம்பலும் - அவ்விசுவாமித்திர முனிவன் கூறியவுடன், வியந்து-(கேட்ட) இராம லக்குமணர் வியப்படைய, அவ்வயின் சென்று-(மூவரும்) அவ்விடத்துக்குப் போய், உவந்து எதிர்கொளும் செம்மை நெறி செல்வரோடு-மகிழ்ந்து (தம்மை) எதிர்கொண்டழைத்த தவவொழுக்கமே செல்வமாக வுடைய முனிவர்களுடன், அன்று உறைந்து-அன்று முழுதும் அங்கே தங்கி, (மறுநாள்), அலர் கதிர் பருதி மண்டிலம்-பரந்த கிரணங்களை யுடைய சூரியன், அகல் குன்றின் வந்து இவர-விசாலமான உதயகிரியின் மேல் வந்து ஏறும்போது, (சூரியோதய காலத்தில் அங்கு நின்றும் புறப்பட்டுச் சென்று), ஓர் சுடு சுரம் குறுகினுர்-மிக்க வெப்பமுடைய ஒரு பாலைவனத்தை அடைந்தனர்.

சுடு சுரம், வினைத்தொகை; ஓர்-சிந்தித்தற்குரிய என்றும் ஆம்.

மூவரும், காமனுச்சிரமத்தில் வாழும் முனிவர்கள் எதிர்கொண்டழைக்க, அங்கே சென்று ஒருநாள் தங்கி, மறுநாள் காலையில் அங்கிருந்து புறப்பட்டுச் சென்று, கொடியதொரு பாலைவனத்தை அடைந்தனர். செந்நெறிச் செல்வர்-முனிவர்.

(பி - ம்.) 1. என்றுவந்தனன்: வியந்தவளவிற்; வியந்தளவினிற்; வியந்தளவையிற்.
2. எதிரெழும்; எதிர்தொழும்: சென்னெறிச் செய்வரோடு.
3. அன்றுவந்து; ஒன்றுறைந்து: அழல்கதிர்ப்; உறைதரப்; பரிதிமண்டல மகன்; மண்டலமதன்.
4. குன்றுநின்று; குன்றுவந்து; குன்றிவர்ந்து; குன்றில் வந்து: இவர்வ தோர்; அணையவோர்; அணைவதோர்; அனையதோர். (4)

## பாலை நில வருணனை

344. பருதிவா னவனிலம் பசையறப் பருகுவான்
விருதுமேற் கொண்டுலாம் வேனிலே யல்லதோர்
இருதுவே றின்மையா லெரிசுடர்க் கடவுளும்
கருதின்வே முள்ளமுங் காணின்வே நயனமும்.

பருதி வானவன்-சூரிய தேவன், நிலம் பசை அற பருகுவான்-தரையில் ஈரம் சிறிதுமின்றிக் குடித்து விடுவதற்கு, விருது மேற் கொண்டு உலாம்-(அச்செய்கையில் தனக்குரிய) வெற்றிச் சின்னத்தை உயர்த்திக்கொண்டு திரிகின்ற, வேனிலே அல்லது-முதுவேனிற் பருவத்தையல்லாமல், வேறு ஓர் இருது இன்மையால்-வேறொரு பருவமும் (அப்பாலைவனத்தில்) இல்லாமையால், எரிசுடர் கடவுளும்–(எல்லா வற்றையும்) எரிக்கும் அக்கினி தேவனும், கருதின்-அவ்விடத்தைப் பற்றி நினைத்தால், உள்ளமும் வேம்-(நினைக்கும் அவன்) நெஞ்சும் வெந்துபோம்; காணின்-(கண் திறந்து) பார்த்தால், நயனமும் வேம்-பார்க்கும் (அவனுடைய) கண்களும் வெந்துபோம்.

முதலிரண்டடிகளில் முதுவேனிற் காலத்தின் வெம்மைக்குக் காரணம் தற்குறிப்பேற்றமாகக் கூறப்படுகின்றது. சூரியன் நிலத்தைப் பசையறச் செய்தற்குக் கங்கணங் கட்டிக்கொண்டு திரியும் காலம் முதுவேனில். உலகத்தில் எங்கும் உள்ளவை, இளவேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி, பின்பனி என்னும் ஆறு பருவங்கள் (ருதுக்கள்). இவற்றுள், முதுவேனில் ஒன்று மட்டுமே அப்பாலை வனத்தில் உள்ளது என்றதனுல், எப்போதும் வெப்பத்தை யன்றி மாறுதலே அங்கில்லை யென்றவாறு. அவ்வெப்ப மிகுதியை உயர்வு நவிற்சியாகப் பின்னிரண்டடிகளில் கூறுகின்ருர். வெம்மைக்கு எடுத்துக் காட்டாகவுள்ள அக்கினியே, அந்நிலத்தை நினைத்தாலும் பார்த்தாலும் வெந்துபோவான் என்ருல், இதனினும் மேலாகக் கூறுதற்கு வேறு இல்லையன்ருே!

உலாம்: செய்யுமென்னெச்சம் ஈற்றுயிர்மெய் கெட்டது. வேம்: செய்யுமென் முற்று அவ்வாருகியது. வேனிலே-ஏகாரம் பிரிநிலை. வேறு ஓர் இருது என மாறுக; ஓர் இருது-நினைத்தற்குரிய இருதுக்கள் என்றுமாம். உம்மைகள் உயர்வு சிறப்பு. நயனம்: சாதி யொருமை.

ஒப்பு: 'நினையு நெஞ்சமுஞ் சுடுவதோர் வெஞ்சுரம்' (அயோத். 735); 'நானிலம் வாய்க்கொண்டு நன்னீரறமென்று கோதுகொண்ட,

வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை' (திவ். திருவிருத்தம். 26); விருது: யுத்த. 3777; திருவிளை. விறகு. 2.

(பி - ம்.) 1. பரிதி: பருகிவானவனிலம்; பருகலானவனிலம்.
2. அன்றியோர்; அன்னதோர்; அன்றி வேறு.
3. இருதுவென்று; இருதுவொன்று: இன்மையின் : எரிமுதற்.
4. கருதில்; காணில்; நயனமுன்; நயனமே. (5)

345. படியின்மேல் வெம்மையைப் பகரினும் பகருநா
முடியவே முடியமூ டிருளும்வான் முகடும்வேம்
விடியுமேல் வெயிலும்வே மழையும்வே மின்னிேேனா
டிடியும்வே மென்னில்வே றியாவைவே வாதவே.

படியின்மேல் வெம்மையை-அப்பாலை நிலத்திலுள்ள வெப்பத்தைக் குறித்து, பகரினும்-சொன்னாலும், பகரும் நா முடிய வேம்-சொல்லுகின்ற நாக்கு முழுதும் வெந்துபோகும்; முடியமூடு இருளும்-உலகம் முழுவதும் மூடிப் பரவியுள்ள இருட்டும், வான் முகடும்-அண்டத்தின் உச்சியும், வேம்-வெந்துபோகும்; விடியுமேல்-பொழுது புலர்ந்தால், வெயிலும் வேம்-(புலர்தற்குக்காரணமான) சூரியனும் வெந்துபோவான்; மழையும் வேம்-(அந்நிலப்பகுதிக்கு நேரேவரும்) மேகங்களும் வெந்துபோகும்; மின்னினோடு இடியும் வேம்-(மேகங்களுடன் தொடர்புடைய) மின்னலும் இடியுங்கூட வெந்துபோகும்; என்னில்-அவ்வாறானால். வேவாத வேறு யாவை-(அந்நிலத்தின் வெப்பத்தால்) வேகாதன வேறு யாவை? (ஒன்றுமில்லை யென்றபடி). ஏ-அசை.

இப்பாடலும் அந்நிலத்தின் வெம்மையை மிகுத்துக்கூறியதே. குளிர்ந்த பொருள்களும், வெப்பமுள்ளவையும், நுண்பொருளும், பருப்பொருளும், காட்சிப்பொருளும், கருத்துப் பொருளும் ஆகிய எல்லாம் அவ்வனத்தின் வெம்மையால் வேகும் எனவே, வேகாதன இல்லை என்பதாயிற்று. இருள் வேதலாவது குளிர்ச்சியுடையதாகிய இராப்பொழுதும் வெப்பம் மிகுந்திருத்தல்; இரவு இவ்வாறாக, பகலில் சூரியனது இயல்பான வெப்பத்தோடு, இந்நில வெப்பத்தால் சூரியமண்டலம் பழுக்கக் காய்ந்து மேலும் வெப்பமுடையதாய்த் தானும் உலகத்தவரும் வருந்தக் காரணமாகும். மழை மேகத்தின் நீர் கொதிப்பேறவே, மேகமும், அதன் தொடர்புடைய மின்னல், இடி ஆகியவையும் கொதிப்பேறி வேகின்றன. இவ்வாறு ஒன்றுக்கொன்று தொடர்புபடக்கூறுதலால் **தொடர்புயர்வுநவிற்சியணியாம்**. வெயில் × மழை: **தொடை முரண்**.

'படியின்மேல்......பகருநா முடியவேம்'; ஒப்பு: 'வதிகொண்டதொர் வெவ்வழல் வாய்சொலின்வேம்' (சீவக. 1186).

(பி - ம்.) 1. படியும்வேம்; உலகம்வேம்; உலகுவேம்; உலகும்வேம்; பகரிலும் பக ரொணு; பகருநாள்; பகருநர்; பகிரெண.
2. முடியுமேல்: முடியவேழ்; முடியவேம்: முடியீன்மூடு; இரவின்மூடு; முடியமுடு; உலகைமூடு; முகடுவேம்; இருளும் வானகமும் வேம்.
3. வெடியுமேல்: வெடியும்வேம்.
4. அடியும்வேம்; என்னின்: வேவாததே; வேகாதவே. (6)

346. விஞ்சுவான் மழையின்மே லம்பும்வே லும்படச்
செஞ்செவே செருமுகத் தன்றியே திறனிலா
வஞ்சர்தீ வினைகளான் மானமா மணியிழந்
தெஞ்சினுர் நெஞ்சுபோ லென்றுமா ருதரோ.

விஞ்சு வான் மழையின்-மிக்க மேகத்தினின்றும் பொழியும் மழைத்தாரைபோல, அம்பும் வேலும் மேல்பட-(பகைவருடைய) அம்பு, வேல் முதலிய ஆயுதங்கள் தம்மேல் தாக்க, செருமுகத்து-போர்முனையிலே. செஞ்செவே-மிகச் செவ்வையாக, அன்றி-(கோபித்து) எதிர்த்து நின்று, திறன் இலா-(அத்தகைய) திறமையில்லாத, வஞ்சர் தீவினைகளால்-வஞ்சகர்களுடைய (சூழ்ச்சியாலான) கொடிய செயல்களால், மானம் ஆம் அணி இழந்து-மானமாகிய அணிகலத்தை யிழந்து, எஞ்சினுர்-(உயிர்விடாது) பிழைத்து நின்றவர்களுடைய, நெஞ்சுபோல்-மனத்தின் தாபத்தைப் போல, என்றும் ஆருது-எக்காலத்தும் (வெம்மை) தணியாததாகும். அரோ - அசை.

மானமாவது, நிலையில் தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வு வரின் உயிர் வாழாமையும் ஆம். சிறந்த வீரராயுள்ளோர், தம் மானத்திற்குத் தாழ்வுவரின் உயிர்தரியார்; ஒருவேளை ஊழ்வலியால் அவ்வாறு உயிர்தரித்திருக்க நேர்ந்தால், அவர்கள் மனத்தின் தவிப்பு அளவிடற்கரியது; ஆகவே, அதனை யிங்கே பாலையின் வெப்பத்துக்கு உவமை கூறினுர். இதற்கு எடுத்துக்காட்டாகச் சேரமான் கணைக்காலிரும்பொறையைக் கூறலாம்; புறநா. 74-அடிக்குறிப்புக்கள் காண்க. மானமாமணி: மானம் மா மணி எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம். வேறு வகையிலும் இப்பாடலுக்குப் பொருள் கூறுவர்; பாடபேதமும் அதற்குத் தக உண்டு.

செஞ்செவே: 1209.

(பி - ம்.) 1. விஞ்சும் வான்; விஞ்சவான்; விஞ்சைவான்; மழையுமேல்; மழையெனு; அம்பு வேலும்படச்; அம்பும் வேலும்புடைச்; அம்பு மேலும்படச்.
2. செஞ்சவே; செருமுகத்தமர்செயுந்.
3. தீவினையினுன்; தீவினைகளாம்: மணி விழுந்து.
4. அஞ்சினுர்: மாருதகே. (7)

347. பேய்பிளந் தொக்கநின் றுலர்பெருங் கள்ளியின்
தாய்பிளந் துக்ககா ரகில்களுந் தழையிலா
வேய்பிளந் துக்கவெண் டரளமும் விடவரா
வாய்பிளந் துக்கசெம் மணியுமே வனமெலாம்.

வனம் எலாம்-அப்பாலைவனப் பரப்பெங்கும், பேய் பிளந்தது ஒக்க-பேயின் உடலைப் பிளந்தது போல, நின்று உலர் - பிளவு பட்டு நின்று உலர்ந்துபோன, பெரு கள்ளியின் தாய் பிளந்து-பெரிய கள்ளியின் அடிப்பாகம் வெடித்தலால், உக்க-அதினின்றும் சிதறிய, கார் அகில்களும்-கரிய அகிற் கட்டைகளும். தழை இலா வேய் பிளந்து-இலைகளேயில்லாமல் காய்ந்த, முற்றின மூங்கில்கள் வெடித்த லால், உக்க வெண் தரளமும்-(அவற்றினின்றும்) சிந்திய வெண்மை யான முத்துக்களும், விடம் அரா-விடமுள்ள பெரும் பாம்புகள், வாய் பிளந்து-(வெப்பம் தாங்காமல்) வாய் திறத்தலால், உக்க-சிந்திய, செம்மை மணியுமே-சிவந்த மாணிக்கங்களுமே, (பரந்து கிடக்கும்).

பிளந்தொக்க: தொகுத்தல் விகாரம். பிளந்து என வந்துள்ள செய்தெனெச்சம் மூன்றும் காரணப் பொருளில் வந்தன. காரகில், வெண்டரளம் × செம்மணி-முரண். பிளந்து, உக்க: **சொற்பொருட் பின்வருநிலை.**

வெப்பம் பொறுமல் கள்ளி, மூங்கில் முதலியன உலர்ந்தும், பிளந்தும், வெடித்தும் போகின்றன. பாம்புகளும் அவ்வாறே வாய் அங்காந்து தவிக்கின்றன.

பாலையின் வெம்மையால் மரங்கள் கரிந்து நிற்றலுக்கு, பேய் கள் தவித்து நிற்றலை உவமையாக்குவர் சயங்கொண்டார்; கலிங்கத். 88. முதிர்ந்த கள்ளியின் வைரம் பாய்ந்த நடுப்பாகம் அகிற்கட்டை யாகும்; 'கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும்' (நான்மணி.4). முத்துப் பிறக்குமிடங்களுள் மூங்கிலும் ஒன்று; 'வேய்பொழியும் முத்தம்', 'வெடித்தகழை விசைத்தெறிப்பத் தரைமேல் முத்தம் வீழ்ந்தன' (கலிங்கத். 92, 93); 'அரா வாய்பிளந்துக்க செம்மணி' 349.

(பி - ம்) 1. காய் பிளந்தொக்க; ஒக்கும்; உக்க.
2. அகிலுமே; அகிலுமேர்; அகிலுமோர்: தளர்விலா; தழைவிலா.
4. உக்கமாமணியுமே. (௭)

348. பாருமோ டாதுநீ டாதெனும் பாலதே
சூருமோ டாதுகூ டாதரோ சூரியன்
தேருமோ டாதுமா மாகமீ தேறினேர்
காருமோ டாதுநீள் காலுமோ டாதரோ.

பாரும் ஓடாது-பிற நிலத்துப் பொருள் ஒன்றும் அங்கே போகாது; (ஏனெனில்), நீடாது எனும் பாலதே-(அப்படிப்போகும்

பொருள்) அங்கே நிலைத்திராதென்னுங் காரணத்தாலேயேயாம்; சூரும் ஓடாது கூடாது-அந்நிலத் தெய்வமாகிய காளியும் (அங்கு நின்றும்) ஓடாதிருக்க முடியாது; சூரியன் தேரும்—, மாமாகம்மீது ஏறின்-பெரிய ஆகாயத்தின் உச்சியில் ஏறினாலும், நேர் ஓடாது-அந்நிலத்துக்கு நேராக (மேலே) ஓடமுடியாது; காரும் (நேர்)ஓடாது--மேகமும் அவ்வாறே (அந்நிலத்துக்கு நேர் மேலே) ஓடமுடியாது; நீள் காலும் ஓடாது-ஓடித்திரியும் காற்றும் (அந்நிலத்தின் வழியே, வெம்மைக்கு அஞ்சி) ஓடாது.

அரோ: இரண்டிடத்தும் அசை நிலை. பார்: ஆகுபெயர். சூர்-கொடுந்தெய்வம்; இங்கே காளியைக் குறித்தது. சூரியன் தேரும் அவ் விடத்துக்கு நேர் மேலே செல்லும்போது குதிரைகளின் தவிப்பால் ஓடமுடியாதாகும்; தேரும் சேதமடையும்; எனவே அதற்கு நேர் மேலே செல்லாமல் தப்ப வழிதேடுவான் சூரியன். மேகங்களும் வறண்டு வெந்துபோம் என்ற அச்சத்தால் அவ்விடத்துக்கு நேர் மேலே செல்லா. வெயிலும் வேம்; மழையும் வேம் என்றார் முன்னும்: [illegible]. காற்றும் வெம்மைக்கு அஞ்சி அந்நிலப்பரப்பில் வீசாது: இனி, ‘[illegible]ாது’ என்பதற்கு, ‘இயலாது’ எனப் பொருள்கொண்டு. சூரும், ஓடநினைத்தாலும், வெப்பத்தால் வாடி எய்த்திருத்தலின் ஓடவியலாது எனக் கூறினும் அமையும். ‘பாரும்......பாலதே’: ‘அந்த நிலமானது அக்கினியிலே வெந்து வரவரச் சுருங்கிப்போம்: மேடாய் வளரமாட்டாது’ பழையவுரை.

(பி - ம்.) 1. ஓடாமை; பாலதோ.
2. ஓடாமை; கூடாததோ; கூடாததோர்; கூடாததே.
3. மாகமிதேறி நேர்; மெய்தேரினேர்மூரிவெங்; மாதேருமே தேரினேர்; மாவானமே தேரினேர்; மாமாகமீ தேறினோர்; நேர்தேரில்வானூர் பெறும்.
4. காருமோடாது வெங்கன்னும்; வெங்கனலும். (9)

349. கண்கிழித் துமிழ்விடக் கனலரா வரசுகால்
விண்கிழித் தொளிருமின் னனையபன் மணிவெயில்
மண்கிழித் திடவெழுஞ் சுடர்கண்மண் மகளுடற்
புண்கிழித் திடவெழுங் குருதியே போலுமே.

கண் கிழித்து உமிழ் விடம் கனல்-(பார்ப்பவர்) கண்கள் கூசும் படி கக்குகின்ற விடமாகிய நெருப்பையுடைய, அரா அரசு-நாகர் தலைவர்கள், கால்-(பாதாளத்திலே) வெளிப்படுத்திய, விண் கிழித்து ஒளிரும் மின் அனைய-மேகத்தைப் பிளந்துகொண்டு ஒளி வீசுகின்ற மின்னல் போன்ற (காந்தியுள்ள),பல் மணி-பல நாகரத்தினங்களினின் றும்,வெயில் மண் கிழித்திட எழும் சுடர்கள்-வெயிலானது தரையைப் பிளந்திட, அப்பிளவுகளின் வழியே வெளிப்படும் செவ்வொளிகள், மண்மகள் உடல் புண் கிழித்திட-பூமி தேவியின் உடம்பிலுண்டான

புண்கள் திறந்ததனுல், எழும்-(அவற்றினின்றும்) வெளிப்படுகிற, குருதியே போலும்-இரத்தம் போலேயிருக்கும். ஏ-ஈற்றசை.

கண் கிழித்து=கண்கிழிய; எச்சத்திரிபு. விண்: ஆகுபெயர். இனி, அரவரசுகள், தம் கண்கள் பிதுங்கும்படி உமிழ்கின்ற என்றும், கண் என்பதற்கு, 'விடப்பல்லின் தொளை' என்றும் கூறலும் ஆம். அராவரசு கால் பன்மணி என்றும், விண் கிழித்து ஒளிரும் மின் அனைய பன்மணி என்றும் இயைக்க.

அந்நிலப் பரப்பில், தரையெங்கும் வெப்பத்தால் உண்டான வெடிப்புக்கள் பாதாளம் வரையில் நீண்டிருத்தலால், அவற்றின் வழியே நாகரத்தினங்களின் செவ்வொளி வெளிப்படுதல், பூமிதேவி யின் உடற் புண்களினின்றும் வெளிப்படும் குருதி போலும் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார். ஒப்பு: கலிங்கத். 93.

பாலைநிலம் ஆழ்ந்த வெடிப்புக்கள் உடையதாதல்: 355; கலிங்கத். 79.

(பி - ம்.) 1. கண்கிழிந்து; கண்களித்து: அரசுகார்; அரசர்கார்.
2. விண்கிழிந்து: உமிழுமின்: மணியெலாம்.
3. கிழிந்திட வெழும்; கிழித்திடவிடும்.
4. கிழிந்திட: போலுமால்; போன்றதே. (10)

இதன்பின் ஒரு பாடல் சில பிரதிகளில் காணப்படுவது:—

திருகிக் காய்சுரஞ் சிந்திக்கச் சிந்தைவெந்
துருகிப் போமென் னுரைசெய வேண்டுமோ
கருகிக் கண்சிவந் துண்டபின் கான்றுமண்
பருகி வெண்ணெயும் பாற்கடல் துஞ்சுமால்.

(வேறு)

350. புழுங்குவெம் பசியொடும் புரளும் பேரரா
விழுங்கவந் தெழுந்தெதிர் விரித்த வாயின்வாய்
முழங்குதிண் கரிபுகு முடுகி மீமிசை
வழங்குவெங் கதிர்சுட மறைவு தேடியே.

முழங்கு திண் கரி-(அந்நிலத்தில் வந்த) பிளிறுகின்ற வலிய யானையானது, மீமிசை வழங்கு வெம் கதிர் சுட-ஆகாயத்திலிருந்து எறிக்கின்ற கொடிய வெயில் சுடுதலால், மறைவு தேடி-மறைவான நிழலிடத்தைத் தேடி (அலைந்து), புழுங்கு வெம் பசியொடும் புரளும் பேர் அரா-வெம்புதற்குக் காரணமான கொடிய பசியோடு புரளு கின்ற பெரியமலைப்பாம்பு ஒன்று,விழுங்க-(அகப்பட்டவற்றை) விழுங் கும் பொருட்டு, வந்து-(உயிர்கள் நடமாடும் இடத்துக்கு) வந்து, எழுந்து-தலை தூக்கி, எதிர் விரித்த வாயின் வாய்-எதிரே அகலத் திறந்த வாயினுள், முடுகி புகும்-விரைந்து (அதனை மறைவிடமென்று கருதி) நுழையும். ஏ-ஈற்றசை; மீமிசை: ஒரு பொருட் பன்மொழி.

வழி தப்பி அப்பாலையிலேவந்த யானை, வெயிலின் வெம்மைக்கு ஆற்றாது நிழலிடந் தேடி அலைந்து, அத்தவிப்பினால், உண்மையறியாமல், பெரிய மலைப் பாம்பின் திறந்த வாய்க்குள் நுழையும் என்க.

மலைப் பாம்பு யானையை விழுங்குதல்: 'மதமா வடங்கு பேழ் வயிற்றரவு', 'இடிகொள் வேழத்தை யெடுத்துட னெயிற்றொடு விழுங்குங், கடிய மாசுணம்' (அயோத். 748. 780); 'பெரிய பாந்தள், மறங்கிளர் மானயானை வயிற்றனவாக வாய்சோர்ந், துறங்கின' (யுத்த. 635); 'மைந்துமலி சினத்த களிறுமதனழிக்கும்......மாசுணம்' (மலைபடு. 260-61); 'களிறு பாந்தட் பட்டென', 'களிறகப்படுத்த பெருஞ்சின மாசுணம்' (நற். 14: 8; 26: 6); 'பரிய களிற்றை யரவு விழுங்கி மழுங்க' (திருஞா. தே.); 'வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால், மோட்டு வயிற்றரவு' (நள. 284); இன்னும், தக்க. 543; (பெரியதிரு. 1, 3, 10) - பார்க்க. பாம்புக்கு 'அஜஹரம்' என்றொரு பெயருண்டு.

(பி - ம்.) 1. புழுங்கும்; புழுங்கி: பசியொடு; பரியொடு; பசியொடு வாழும்: போரரா
2. வந்தெதிரெதிர்; வென்றெதிர்பொர: விரிந்த.
3. முழங்கு இவெம்; முழங்கி வெம்; கரிபுக; கடகரி; கிரிபுக; முடுகு; முகடு.
4. வழங்கும் வெம்; வழங்கவெம்; வழங்கு வெண்; வழங்குதிண்; நேடியே. (11)

351. ஏகவெங் கனலர சிருந்த காட்டிடைக்
காகமுங் கரிகளுங் கரிந்து சாம்பின
மாகவெங் கதிரெனும் வடவைத் தீச்சுட
மேகமுங் கரிந்திடை விழுந்த போலுமே.

ஏகம் வெம் கனல்-ஒப்பற்ற வெம்மையுடைய அக்கினி தேவன், அரசு இருந்த காட்டிடை-அரசு வீற்றிருத்தற்கு இடமான அப்பாலை வனத்திலே, கரிந்து சாம்பின காகமும் கரிகளும்-(வெப்பந் தாங்காது வெந்து) உடல் கருகிக் கிடந்த காக்கைகளும் யானைகளும், மாகம் வெம் கதிர் எனும் வடவை தீ சுட-ஆகாயத்திலுள்ள சூரியன் என்னும் வடவாமுகாக்கினி கொளுத்துதலால், மேகமும்-(அங்குள்ள) மேகங்களும், கரிந்து இடை விழுந்த போலும்-கருகி அப்பாலையிலே விழுந்து கிடப்பன போன்றிருக்கும். ஏ-ஈற்றசை.

வெம் கனல் ஏக அரசு இருந்த என மாறிக் கூட்டினும் அமையும்.

கரிந்து விழுந்து கிடந்த காக்கைகளுக்குச் சிறு மேகங்களும், யானைகளுக்குப் பெரிய மேகங்களும் அளவாலும் நிறத்தாலும் உவமை. அந்நிலப் பரப்பின் வெம்மையால் சிற்றுயிர்களும் பேருயிர்களும் வெந்து அழிகின்றன. இயற்கையில் வெப்ப மிக்க சூரியன் அந்

நிலத்துக்கு நேரே வரும்போது மேலும் வெப்பமுறுதலால் வடவைத் தீப் போலாகின்றான்; அதனால் மேகங்களும் வெந்து கருகுகின்றன.

மேகமும்: உம்மை, உயர்வு சிறப்பு.

(பி - ம்.) 1. காட்டினில்; காட்டினக். 2. சாய்ந்தன,
3. கனலெனும்: வடவைத் தீசுட.
4. கரிந்திட: வீழ்ந்த; விழுவ; வீழ்வ: போன்றவே: விழ்ந்ததென்னவே.
(12)

352. கானகத் தியங்கிய கழுதின் றேர்க்குலம்
தானகங் கரிதலிற் றலைக்கொண் டோடிப்போய்
மேனிமிர்ந் தெழுந்திடின் விசும்பும் வேமெனா
வானவர்க் கிரங்கிநீர் வளைத்த தொத்ததே.

கானகத்து இயங்கிய-அக்காட்டிலே (அங்குமிங்கும்) அசைவது போலக் காணப்பட்ட, கழுதின் தேர் குலம்-பேய்த் தேர் எனப்படும் கானல் நீர்க் கூட்டம், தான் அகம் கரிதலின்-(வெப்பத்தால்) அக் காட்டின் உள்ளிட மெல்லாம் கரிந்து போவதனால், மேல் நிமிர்ந்து எழுந்திடின்-(அவ்வெப்பம்) இன்னும் மேலோங்கி எழுமானால், விசும்பும் வேம் எனா-தேவலோகமும் (அதனால்) வெந்து அழிந்து போகு மென்று கருதி, வானவர்க்கு இரங்கி-தேவர்களிடத்து இரக்கங் கொண்டு, நீர்-நீர்க்கடவுளாகிய வருணன், ஓடிபோய் தலை கொண்டு-ஓடிப்போய் அக்காட்டை வியாபித்துக்கொண்டு, வளைத்தது ஒத்தது-(வெப்பம் மேல் எழவொட்டாது) வளைத்துக்கொண்டது போன்றிருந்தது. ஏ-ஈற்றசை.

கழுது-பேய்; பேய்த்தேர் அல்லது கானல் என்பது, பாலை வெளியில், நீர்ப் பரப்பும் அதில் அசையும் அலைகளும் போன்ற தோற்றமுடையது. கழுதின் தேர்க்குலம், நீர் வளைத்த தொத்தது எனக் கூட்டி முடிவு கொள்க. அகம் கரிதல் என்பதனால், வெப்ப மென்பது வருவித்து உரைக்கப்பட்டது. அடுத்த கவியிலும் கானற் றேரைப் பற்றிக் கூறுவர்; இவ்விரண்டு கவிகளும் தற்குறிப்பேற்றவணி கொண்டவை. நீர்-தண்ணீரும் ஆம்.

(பி - ம்.) 1. இயங்கின: கழுதின்றேர்ப்புனல்; கழுகின்றேர்க்குலம்; கழுகின் வேர்ப் புனற்.
2. தானகத்து; தானகக்; தானலக்: எழுதலாற்; எழுதலிற்: கிரிதனிற்; கிரிகளின்; கரிகளிற்: தலைகொண்டு: ஆடிப்போய்.
3. மேனிமிர்த்து; எழுந்திடில்: அணைந்திடில்: விசும்புவேமென; வேவன.
4. வானகர்க்கு; வளைந்த தொத்ததே; வளைத்த தொத்தவே; வளைத்த மாலுமே.
(13)

353. ஏய்ந்தவக் கனலிடை யெழுந்த கானற்றேர்
காய்ந்தவக் கடுவனங் காக்கும் வேனிலின்
வேந்தனுக் கரசுவீற் றிருக்கச் செய்ததோர்
பாய்ந்தபொற் காலுடைப் பளிக்குப் பீடமே.

(மேலும்), ஏய்ந்த அ கனல் இடை எழுந்த-(அந்நிலத்திலே எப்போதும்) பொருந்திய அந்தத் தீப்போன்ற வெப்பத்தினின்றும் தோன்றிய, கானல் தேர்—,காய்ந்த அ கடு வனம் காக்கும்-சூடேறிய அந்தக் கொடிய காட்டை ஆளுகின்ற, வேனிலின் வேந்தனுக்கு-முதுவேனிலாகிய அரசனுக்கு, அரசு வீற்றிருக்க-அவன் கொலு விருத்தற் பொருட்டு,செய்தது-செய்து அமைக்கப்பட்டதாகிய,பாய்ந்த பொன் கால் உடை(ய)ஓர் பளிங்கு பீடமே-ஓடவிட்ட பொன்னாலாகிய கால்களையுடையதொரு பளிங்குக்கல் பீடமேயாகும்.

முன் பாட்டில், 'நீர்க்கடவுள் அக்காட்டை வளைத்துக் கொண்டது போலும்' எனவும்,இங்கே 'வேனிலரசன் வீற்றிருத்தற்குச்செய்த பளிக்குக் கற்பீடம் எனவும்' கானலை, தற்குறிப்பேற்ற உருவகமாகக் கூறுகின்றார்.

பாய்ந்த பொன்-ஓடவிட்ட பொன்; குற்றம் நீங்க உருக்கி ஓடச்செய்த பொன், மாற்றுயர்ந்து ஒளியுடையதாகும். தரையிலிருந்து மேல் நோக்கியெழும் அனற் பிழம்புகள் பொன் கால்களாகவும், மேலே பரந்து காணப்படும் வெள்ளிய நீர்த்தோற்றம் பளிக்குக் கற்பீடமாகவும் உருவகிக்கப்பட்டன.

(பி - ம்.) 1. ஏய்ந்ததக்; ஏய்ந்தவெங்: கானற்றேர்க்; கானத்தோர்.
2. கற்கனிவனம்; நற்கடுவனம்; அக்கரிவனம் : கடுக்கும் வேனலின்.
3. சேயொளி. 4. பொற்காலிடைப்; நற்காலிடைப். (14)

354. தாவரு மிருவினை செற்றுத் தள்ளரு
மூவகைப் பகையரண் கடந்து முத்தியில்
போவது புரிபவர் மனமும் பொன்விலைப்
பாவையர் மனமும்போற் பசையு மற்றதே.

தா வரும் இரு வினை செற்று-கேடுகள் வருவதற்குக் காரணமான (நல்வினை தீவினை யாகிய) இரண்டு வினைகளையும் கெடுத்து, தள்ள அரு-விலக்க முடியாத, மூவகை பகை அரண் கடந்து-(காமம், வெகுளி, மயக்கம் என்னும்) மூன்று உட்பகையாகிய மதில்களைத் தாண்டி, முத்தியில் போவது புரிபவர்-மோட்சத்திலே சேர்தலை விரும்பும் ஞானிகளுடைய, மனமும்-உள்ளமும், பொன் விலை பாவையர் மனமும் போல்-பொன்னை(தம்முடைய இன்பத்துக்கு)விலையாகப் பெறும் வேசியர் மனமும் போல, பசையும் அற்றது-ஈரம் சிறிதும் இல்லாதது (அந்நிலம்).

தள்ளரு: தொகுத்தல் விகாரம். ஏ:ஈற்றசை.

நல்வினையும், பிறவிக் காரணமாவதனுல், பிறவி நீங்கி முத்தி யடைய விரும்புவோர்க்குக்கேடாகவே கருதப்படும்; 'இருள்சேர் இரு வினை' என்ருர் வள்ளுவரும். முத்தியிற்போவது புரிபவர்-முமுட்சுக் கள்; அவர்கள் மனம், பற்றற்ருன் பற்றையன்றி வேறு எதிலும் பற்றற்றதாகும். வேசியர் மனம் பசையறுதல், தம்மைச் சேர்வாரி டத்து உண்மையான காதற் பற்றில்லாமை. முமுட்சுக்கள் இறைவ னிடத்தும், வேசியர் பொருளினிடத்தும் பற்றுடையவர்; பாலையும் வெம்மையில் பற்றுடையது. தாவு அரும்-ஒழிதற்கரிய என்றலும் ஆம்.

ஒப்பு: *342;* பெருங். *5. 8: 51-54.* குறிப்பு. வேசியரியல்பு: *31-* குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. தேவரில்; தேவரின்; ஓவரும்; அருவினை; துறந்து; தள்ளித்; அற்றுத்; இருவினைத் தொடர்பு; தேறிய; தேறியம்; தள்ளவும்.
2. மூவகைப் படையரண்; மூவகை யரணமும்; கடிந்து.
3. புரிந்தவர்; பொய்விலைப். 4. பற்று மற்றதே. (15)

355. பொரிபரற் படர்நிலம் பொடிந்து கீழுற
விரிதலிற் பெருவழி விளங்கித் தோன்றலால்
அரிமணிப் பணத்தரா வரசர் நாட்டினும்
எரிகதிர்க் கினிதுபுக் கியங்க லாயதே.

பொரி பரல் படர் நிலம்-(வெப்பத்தால்) பொரிந்த பருக்கைக் கற்கள் பரவிய அந்நிலமானது, பொடிந்து-(மேற்பரப்புப்) பொடி யாகி, கீழ் உற விரிதலின்-கீழே(பாதாளம் வரை) மிகவும் வெடித் திருத்தலால், (அவ்வெடிப்புக்கள்). பெரு வழி விளங்கி தோன்றலால்-(கதிர்கள் நுழையப்) பெரிய வழியாகத் தெளிவுறக் காணப்படுகின் றமையின், எரி கதிர்க்கு-காய்கின்ற சூரிய கிரணங்களுக்கு, அரி மணி பணத்து அரா அரசர் நாட்டினும்-சிவந்த மாணிக்கங்கள் தங்கிய படத்தையுடைய நாகராசர்களுடைய (பாதாள) நாட்டிலுங்கூட, இனிது புக்கு இயங்கல் ஆயது-நன்ருகச் சென்று உலாவுதல் கூடுவதா யிற்று. ஏ-ஈற்றசை.

நாட்டினும்: உம்மை இறந்தது தழுவியது.

தரையில் வெடிப்புக்கள் பெரியனவாய்க் கீழே பாதாளம்வரை நீண்டிருத்தலின், அவற்றின் வழியே சூரிய கிரணங்கள் நுழைந்து நாகலோகத்திலும் பரவுதற்கிடமாயிற்று என்பதாம்.

பாலை நில வெடிப்புக்கள்: *349*-குறிப்பு.

(பி - ம்.) 1. படுநிலம்; படிநிலம்; பொரிந்து; புழுங்கிக்.
2. பெருவெளி: விளங்கத்; வீழத்; தோன்றலான்.
3. அருமணிப்; பரிமணிப்; பணத்தரவரசன்; பணத்தவ்வரசன்; பணத்தர வரசு; பணத்தரவரசர்; பணிமுடியரசர்.
4. எரிகநிர்: இயங்கலானதே; இரங்கலானதே; உயங்கலாயதே. (16)

## முனிவன் பாலையின் கொடுமையைக் கருதிக் குமரர்க்கு இரு மந்திரங்களை யுபதேசித்தல்

356. எரிந்தெழு கொடுஞ்சுர மினைய தெய்தலும்
அருந்தவ னிவர்பெரி தளவி லாற்றலைப்
பொருந்தின ராயினும் பூவின் மெல்லியர்
வருந்துவர் சிறிதென மனத்தி னோக்கினான்.

இனையது-இத்தன்மையதான, எரிந்து எழு கொடு சுரம் எய்தலும்-தீப்பற்றி யெரிகின்ற கொடிய பாலை நிலத்தை (மூவரும்) அடைந்த வளவிலே, அரு தவன்-அரிய தவத்தையுடைய விசுவாமித்திர முனிவன், 'இவர் அளவு இல் ஆற்றலை பெரிது பொருந்தினர் ஆயினும்-இவர்கள், எல்லையற்ற திறமையை மிகவும் பெற்றுள்ளவராயினும், பூவின் மெல்லியர்-பூப்போலும் மென்மைத் தன்மை உடையவர்கள்; (ஆதலால்), சிறிது வருந்துவர் என-(வெப்பத்தால்) சிறிது துன்பமடைவார்கள்' என்று, மனத்தின் நோக்கினான்-(தன்) மனத்திலே கருதினான்.

இராம லக்குமணர், பேராற்றலுடையவராயினும், உடலின் மென்மைத் தன்மையால், இவ்வெப்பம் பொறாமல் சிறிது துன்பமடையக்கூடுமென விசுவாமித்திரன் கருதினான்; அதனால், எதனையும் தாங்கவல்ல ஆற்றலை யளிக்கும் பலை, அதிபலை யென்ற இரண்டு மந்திரங்களை அவர்களுக்கு அவன் உபதேசிக்கலானான். உபதேசித்தமை அடுத்த கவியாற் கூறப்படும்.

இங்கே, 338-ஆம் பாடலின் குறிப்பை நோக்குக.

(பி - ம்.) 1. அனையது. 2. அளவின்: ஆற்றலாற்.
3. மெல்லியார்.
4. வருந்துவர் பெரிதென; இவரென: மனத்து நோக்கினான்; மனத்தி னெண்ணினான். (17)

357. நோக்கின னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்கும ரருமடி குறுக நான்முகன்
ஆக்கின விஞ்சைக ளிரண்டு மவ்வயின்
ஊக்கின னவையவ ருள்ளத் துள்ளினார்.

நோக்கினன்-(முனிவன் முன் சொன்ன) கருத்துடையவனாய், அவர் முகம் நோக்க-குமரர்களின் முகத்தைக் (குறிப்பாகப்) பார்க்க;

(உடனே),நோக்கு உடை(ய)-குறிப்பறியுந் தன்மையுடைய, கோ குமரரும்-சக்கரவர்த்தி குமாரர்களும்,அடிகுறுக-(வந்துமுனிவன்)திருவடிகளை வணங்க, அவ்வயின்-அப்போது, நான்முகன் ஆக்கின விஞ்சைகள் இரண்டும்-பிரமன் படைத்த வித்தைகள் (மந்திரங்கள்) இரண்டையும், ஊக்கினன்-அவர்களுக்கு உபதேசித்தான்; அவை—அவ்வித்தைகளை, அவர்-அக்குமாரர்கள், உள்ளத்து உள்ளினர்-மனத்திலே (கொண்டு) மனனம் செய்தார்கள்.

குருவின் குறிப்பறிந்து அவரை வழிபட்டு, உபதேசம் பெறுதல் முறையாகலின், அதனை நன்குணர்ந்த குமாரர்கள் அவ்வாறே செய்தனர். இவ்விஞ்சைகளைப் பற்றி விசுவாமித்திர முனிவன் இராம லக்குமணரிடம் கூறியனவாக வான்மீகம் கூறுவது பின்வருமாறு: 'பலமந்திரங்கள் நிறைந்த **பலை**யென்றும் **அதிபலை**யென்றும் கூறப்பெறும். இவ்விரண்டு வித்தைகளையும் பெற்றுக்கொள்ளுங்கள்.இவற்றைத்தெரிந்து கொள்வதால் உங்கட்கு யாதொரு உடல் தொல்லையாவது நோயாவது நேராது; உருவம் மாறுதிருக்கும்; தூங்கும் போதும், மறந்து நிற்கும் போதுங்கூட அரக்கர்களால் உங்களை எதிர்க்க முடியாது. இவ்விரு வித்தைகளையும் நீவிர் ஜபித்துக் கொண்டிருப்பீராயின் புயவலியில் உம்மை ஒப்பானெவனும் இந்நிலவுலகில் இருக்கமாட்டான். குணத்திலும் நுமக்கு நிகரானவன் மூவுலகிலும் இரான்...இவற்றை ஜபித்துக் கொண்டு வழிநடந்தீர்களானுல் நுமக்குப் பசிதாகங்கள் உண்டாகா'.

ஊக்குதல் - மனங்கொளச் செய்தல்: உள்ளுதல் - மனனம் செய்தல்.

நோக்குடை-அழகுடைய எனலும், முனிவனது நோக்கத்தைப் பெற்ற எனலும் ஆம். அரச குமரர் இருவரும் மந்திரோபதேசம் பெற்றமை: அயோத். *320*.

(பி - ம்.) 1. நோக்கினுன்; தம்முக நோக்கி; தம்முக நோக்க; வாண்முக நோக்க; அம்முக நோக்க; நோக்கிடைக். 2. கோக்குல குமரருங்.
3. ஆக்கின பெலையதிபெலையென்று: அவ்வழி; ஆய்மறை; ஆனவை.
4. ஆக்கினன்; ஒக்கினன்; நோக்கினன்; அதையவர்; அவரவை; உள்ளத்துன்னினர்; உள்ளத்துநோக்கினர். (18)

### இராமபிரான் முனிவனை வினவுதல்

358. உள்ளிய காலையி லூழித் தீயினை
எள்ளுறு கொழுங்கன லெஞ்சும் வெஞ்சுரம்
தெள்ளுதண் புனலிடைச் சேற லொத்தது
வள்ளலு முனிவனை வணங்கிச் சொல்லுவான்.

உள்ளிய காலையில்-(அம்மந்திரங்களைக் குமரர்) மனனம் செய்தவளவில், ஊழி தீயினை எள்ளுறு கொழு கனல் எஞ்சும் வெம் சுரம்-யுகமுடிவில் உண்டாகும் (கொடிய) தீயினையும் இகழத்தக்க கொடுந்தீ

மிகுந்த அந்தக் கொடிய பாலையானது, தெள்ளு தண் புனல் இடை சேறல் ஒத்தது-தெளிந்து குளிர்ந்த நீரில் நடப்பது போன்றுயிற்று; (அப்போது), வள்ளலும்-கருணை வள்ளலான இராமபிரானும், முனிவனை வணங்கி—, சொல்லுவான்-பின் வருமாறு வினவினன்.

சேறல்; முதனிலை திரிந்த தொழிற் பெயர்.

பலை அதிபலை என்ற மந்திரங்களின் வலிமையால், அக்கொடிய பாலைவனம் குளிர்ந்து, நடந்து கடத்தற்கு வருத்தமில்லாததாயிற்று என்பதாம். இச் செய்தி வான்மீகத்தில் கூறப்பெறவில்லை. இராமபிரானை வள்ளல் என்று பலவிடங்களில் கூறுவர் கம்பர்.

(பி - ம்.) 1, காலையின்; தீயையும்.
2. எள்ளுறும்; எள்ளரும்: கொழுங்கதிர்; கொடுங்கனல்: எரியும்; எஞ்ச. எஞ்சி.
3. தண்புனலெனச்; தெண்புனலிடைச்: செல்வது; ஒத்தன; ஒத்ததவ்;
4. வள்ளலம்: மகிழ்ந்து: நோக்கியே; வாழ்த்தியே; வேண்டுவான். (19)

நில அழிவின் காரணத்தை இராமபிரான் வினவுதல்

359. சுழிபடு கங்கையந் தொங்கன் மோலியான்
விழிபட வெந்ததோ வேறு தானுண்டோ
பழிபடர் மன்னவன் பரித்த நாட்டினீ
தழிவதென் காரண மறிஞ கூறென்றான்.

(இராமபிரான் முனிவனை நோக்கி), 'அறிஞ-முற்றறிவுடைய பெருமானே! ஈது-இவ்விடம், சுழிபடு கங்கை-சுழிகள் உண்டாகும் கங்கையையும்,அம்தொங்கல்-அழகிய மாலைகளையும் தரித்த,மோலியான்-சடை முடியுடைய சிவபெருமானது, விழிபட-நெற்றிக் கண் பார்வை பட்டதனல், வெந்ததோ-வெந்து இவ்வாறு ஆகியதோ? (அன்றி), வேறுதான் உண்டோ-வேறு காரணம் ஏதேனும் உண்டோ? பழிபடர் மன்னவன் பரித்த நாட்டின்-பழிகள் மிக்க கொடுங்கோலரசன் ஆளும் (ஒரு) நாட்டைப்போல, அழிவது என் காரணம்-(இவ்வாறு) அழிந்துபோவதற்கு என்ன காரணம்? கூறு-கூறி யருள்க', என்றான்—.

பழி படர் மன்னவன்-பழியான வழியிலே செல்லும் அரசன் என்றலும் ஆம். பழிபடா மன்னவன் பரித்த நாட்டின் ஈது அழிவது என்று பாடங்கொண்டு, 'பழியில்லாத தசரத மன்னனல் ஆளப் பெற்ற நாட்டிலே, இவ்விடம் இவ்வாறு அழிவது' எனக் கூறலும் உண்டு. சிவபெருமான் நெற்றிக் கண் வெம்மையிலும் மிக்க தொன்று இல்லையாதலால், அதனை முதலிற் கூறியும், பழி படர் மன்னன் நாட்டைப்போல எனப் பின்னும் கூறுதலால், அத்தகைய நாட்டின் கேடு மிகுதி புலப்படுவதாம். ஒப்பு: 'ஆள்பவர் கலக்குற வலை பெற்ற நாடுபோற், பாழ்பட்ட முகத்தோடு'; 'அலவுற்றுக் குடிகூவ

வாறின்றிப் பொருள்வெஃகிக், கொலையஞ்சா வினைவராற் கோல் கோடி யவனிழல், உலகுபோலு லறிய வுயர்மர வெஞ்சுரம்' (கலி. 5: 12-13; 10: 5-7); 'கோத்தொழிலாளரொடு கொற்றவன் கோடி....பாலை யென்பதோர் படிவங்கொள்ளும்' (சிலப். 11: 60-66).

(பி - ம்.) 1. சுழிப்படு; கங்கையின்; கங்கையத்; மௌலியான்.
2; விழிப்பட.
3. பழிப்படா; படைத்த; நாட்டினுங்கு; நாட்டினூஉங்கு; நாட்டினில்.
4. அழிவதன்; அழிவிதன்; அழிவதெக்; அழிவதோர். (20)

## முனிவன் கூறுதல்

360. என்றலு மிராமனை நோக்கி யின்னுயிர்
கொன்றுழல் வாழ்க்கையள் கூற்றின் றோற்றத்தள்
அன்றியு மையிரு நூறு மையன்மா
ஒன்றிய வலியினா ளுறுதி கேளெனா.

என்றலும்-இவ்வாறு இராமபிரான் வினவுதலும், (முனிவன்), இராமனை நோக்கி—, இன் உயிர்கொன்று உழல் வாழ்க்கையள்-இனிய பல உயிர்களைக் கொன்று திரியும் தொழிலை வாழ்க்கையாக வுடையவளும், கூற்றின் தோற்றத்தள்-யமன் போன்ற (கொடிய) தோற்ற முடையவளும், அன்றியும்-அவையல்லாமலும், ஐ இருநூறு மையல் மா ஒன்றிய வலியினாள்-ஆயிரம் மதயானைகள் சேர்ந்தாலொத்த வலிமையுடையவளும் (ஆகிய ஒருத்தியின்), உறுதி கேள்-வரலாற்றைக் கேட்பாயாக'; எனா-என்று, ('கூறலானான்' என வருவித்து முடிக்க.)

தின்னுதற் பொருட்டு உயிர்களைக் கொல்வார் சிலர்; இவள் அஃதின்றியும் வீணே உயிர்களைக் கொன்று திரிபவள் என்பது பட 'கொன்று உழல் வாழ்க்கையள்' என்றார். ஐ இருநூறு (5×200)= ஆயிரம். மையல்-மதமயக்கம். 'மா' என்னும் விலங்கின் பொதுப் பெயர், 'மையல்' என்னும் அடை மொழியால் யானையைக் குறித்தது. இங்குக் குறிக்கப்பட்டவள் தாடகை. இவள் வரலாறுமேலே 383-ஆம் கவி முடியவுள்ள 23 பாடல்களிற் கூறப்படும். தாடகையைக் 'கூற்றனையாள்' எனப் பின்னுங் கூறுவர்: 402, 403-பார்க்க.

(பி - ம்.) 2. தோற்றத்தாள்.
4. வலியினள்: ஊழித்தியன்னாள்; ஊழித்தீயினாள்; உறுதிகேளென்றான்; ஊறுகேளெனா. (21)

இதன்பின் சில பிரதிகளில்:—

'கன்னவி றோளினாய் கமலத் தோனருள்
மன்னுயி ரனைத்தையும் வாரி வாய்மடுத்
தின்னுயிர் வளர்க்குமோ ரெரிகொள் கூற்றநேர்
அன்னவள் யாவளென் றறையக் கேட்டியால்'

என்ற பாடலும், வேறு சில பிரதிகளில்,

ஓங்கிய தவத்தி னாலே யுயர்ந்தமா முனிவர் தம்மைத்
தீங்கது செய்து கொன்று தேவர்தம் பதங்க ளெங்கும்
ஏங்கிடத் திரியுங் கானி லியங்குறு போதி லிந்த
வீங்கிடை யரக்கி வந்த வாறெலாம் விளம்பக் கேணீ.

என்ற பாடலும் காணப்படுகின்றன.

## தாடகையின் வரலாறு

361. இயக்கர்தங் குலத்துளா னுலக மெங்கணும்
வியக்குறு மொய்ம்பின னெரியின் வெம்மையான்
மயக்கில்சற் சரனெனும் வலத்தி னனருள்
துயக்கிலன் சுகேதுவென் றுளனோர் தூய்மையான்.

'இயக்கர் தம்குலத்து உளான்-யட்சர் குலத்தில் உதித்தவனும், உலகம் எங்கணும்-எல்லாவுலகங்களிலும் உள்ளோர், வியக்குறும் மொய்ம்பினன்-வியந்து பாராட்டத்தக்க வலிமை படைத்தவனும், எரியின் வெம்மையான்-தீப்போலும் கடுமை (பகைவரிடத்து) உடையவனுமாகி, மயக்கு இல்-கலக்கமில்லாத (தெளிந்த அறிவுடைய), சற்சரன் என்னும் வலத்தினன்-சற்சரனென்று பெயர் சொல்லப் படும் வெற்றியாளன், அருள்-பெற்ற, துயக்கு இலன்—தளர்ச்சியற்ற வனான, சுகேது என்று ஓர் தூய்மையான்-சுகேது என்று சொல்லப் படும் ஒரு பரிசுத்தன், உளன்-உளனானான். (இருந்தான்).

இயக்கர் தம்: தம்: சாரியை.

'மயக்கிலன் சரனெனும்' என்று பாடங்கொண்டு, 'சரன்' என் பதை இயக்கன் பெயராக்கி, அது குஞ்சரன் என்பதன் விகாரம் என் பர் ஒரு சாரார். 'வெம்மையான்'-கோபமுடையவன் எனவும் ஆம். சுகேது-அழகிய கொடியை யுடைவன்.

(பி - ம்.) 1. இயக்கர்தன். 2. எரியும் வெம்மையான்.
3. மயக்கிலன் சரனெனும்; மயக்கில் சர்ச்சரனெனும்; சர்க்கரரெனும்; சச்சரனெனும்; மயக்கிலச்சரனெனும்.
4. துயக்கில சுகந்தனென்று; துயக்இலன்கேதுவென்று; துயக்கவில் சுகேதுவென்று. (22)

362. அன்னவன் மகவிலா தயருஞ் சிந்தையான்
மன்னெடுந் தாமரை மலரின் வைகுறும்
நன்னெடு முதல்வனை வழுத்தி நற்றவம்
பன்னெடும் பகலெலாம் பயின்ற பான்மையான்.

அன்னவன்-அத்தன்மையனான சுகேது, மக இலாது அயரும் சிந்தையான்-(தனக்குப்) பிள்ளையில்லாமையால் தளரும் மனமுடையனாய், மன் நெடுதாமரை மலரின் வைகு உறும்-நிலைபெற்ற பெருமையுடைய (திருவுந்தித்) தாமரை மலரிலே தங்குதலுற்ற, நல் நெடு

முதல்வனை வழுத்தி-நல்ல புகழால் மிக்க முதன்மையுடைய பிரம தேவனைத் துதித்து, பல் நெடு பகல் எலாம்-மிகப்பல நாட்களாக, நல் தவம் பயின்ற பான்மையான்-நல்ல தவத்தைச் செய்த தன்மை யுடைவன்.

சுகேது, தனக்குப் பிள்ளையில்லாக் குறையால் மனம் வருந்தி, அது தீரப் பிரமதேவனைக் குறித்து நெடுநாள் பெருந்தவம் செய்தான் என்பதாம்.

(பி - ம்.) 1. மகரிலாது: தன்மையான். 2. மலருள் வைகிய.
3. நன்னெடு முதறனை; நன்னெடும் பகவனை.
4. பகலெல்லாம்: பகலொடும்: பயந்த; அயர்ந்த: பான்மையால்; பண்பினால். (23)

363. முந்தின னருமறைக் கிழவன் முற்றுநின்
சிந்தனை யென்னெனச் சிறுவ ரின்மையால்
நொந்தனெ னருள்கென நுணங்கு கேள்வியாய்
மைந்தர்க ளிலையொரு மகளுண் டாமென்றான்.

(சுகேது கடுந்தவம் செய்தபோது), அரு மறை கிழவன்-அரிய வேதங்களுக்குரிய பிரமதேவன், முந்தினன்-அவன் முன் தோன்றி, 'முற்றும் நின் சிந்தனை என் என-நிறைவேற வேண்டிய உனது எண்ணம் யாது' என்று கேட்க, (சுகேது), 'சிறுவர் இன்மையால் நொந்தனென்—பிள்ளைகள் இல்லாமையால் மனம் நொந்தேன்; அருள்க என—(புதல்வர்கள்தோன்ற) அருள்வீராக' என்று வேண்ட, (பிரமன் அவனைநோக்கி), 'நுணங்கு கேள்வியாய்-நுணுகிய கேள்வியறிவுடைய வனே! மைந்தர்கள் இலை-(இப்பிறப்பில் உனக்குப்) புதல்வர்கள் இல்லை; ஒரு மகள் உண்டாம்-ஒரு மகள் பிறப்பாள்'; என்றான்—.

சுகேதுவின் தவத்தை மெச்சிய பிரமதேவன் அவன் முன் தோன்றி, 'உனக்கு யாது வரம் வேண்டும்?' என்று கேட்க, அவன் 'ஐயனே, புதல்வரில்லாக் குறையால் வருந்தித் தவம் செய்தேன்; அக் குறை தீர அருள்க' என வேண்ட, பிரமன், 'உனக்குப் புதல்வர் உண்டாக மாட்டார்கள்; ஒரு பெண் மட்டும் பிறப்பாள்' என்று அருளினன் என்க.

அருள்கென: தொகுத்தல்.

'நுணங்கு கேள்வியாய்' என்றது இராமபிரானை நோக்கி விசுவாமித்திரமுனிவன் விளித்ததாகக்கூறலும் ஆம். 'நுணங்கிய கேள்வியர்' (குறள். 419). முற்றும் நின்-(தவம்) செய்யும் உனது என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. நான்மறைக்: முற்றிநின். 3. அருளென; தருகென: கேள்வியான்.
4. இல்லையோர்; உண்டாகுமால்; உண்டென்றனன். (24)

364. பூமட மயிலினைப் பொருவும் பொற்பொடும்
ஏமுறு மதமலை யீரைஞ் ஞூறுடைத்
தாமுறு வலியொடுந் தனயை தோன்றுநீ
போமதி யெனவயன் புகன்று போயினான்.

'பூ மடம் மயிலினை பொருவும்-தாமரைப்பூவில் வாழும் குன்று இளமையும் மயில்போலும் சாயலுமுடைய இலக்குமியைப் போன்ற, பொற்பொடும்-அழகுடனும், ஏம் உறு மதம் மலை ஈர் ஐஞ்ஞூறு உடை(ய)-களிப்பு மிக்க மதயானைகள் ஆயிரத்துக்கு உரிய, உறு வலியொடும்-மிக்க வலிமையோடும், தனயை தோன்றும்-மகள் பிறப்பாள்; நீ போமதி என-நீ போவாயாக' என்று, அயன் புகன்று போயினான்-பிரமதேவன் (சுகேதுவிடம்) சொல்லி மறைந்து போனான்.

தாம்: அசை. மதி: முன்னிலை யசை. மதமலை: அடையடுத்த உவமவாகுபெயர். ஐஞ்ஞூறு: எழுத்துப்போலி. உடை; தொகுத்தல்.

'இலக்குமியைப்போன்ற அழகும், ஆயிரம் யானைகளின் வலிமையும் உடைய ஒரு பெண் பிறப்பாள்; நீ கவலையின்றி உன்னிருப்பிடம் செல்' எனப் பிரமன் வரமருளி மறைந்தான் என்க.

(பி-ம்.) 1. பொருவு. 2. ஐஞ்ஞூறிடைத்.
3. தாமிகு; தாமிகும்; தாமிரு: வலிகொடோர்; வலியினள்: தனயள்; தோன்றுநீர், தோன்றுவள்.
4. போமென; போவென; மலரயன்; மலரவன். (25)

365. ஆயவ னருள்வழிப் பிறந்த வாயிழை
சேயவ ளெனவளர் செவ்வி கண்டிவட்
காயவன் யார்கொலென் றுய்ந்து தன்கிளை
நாயகன் சுந்தனென் பவற்கு நல்கினான்.

ஆயவன் அருள்வழி பிறந்த-அப்பிரமதேவன் அருளிச்செய்தபடியே பிறந்த, ஆய் இழை-தேர்ந்த அணிகலன்களையுடைய பெண்ணானவள், சேயவள் என-இலக்குமிதேவிபோல, வளர் செவ்வி கண்டு-வளர்ந்த பருவச் சிறப்பை நோக்கி,(சுகேது), 'இவட்கு ஆயவன் யார் கொல் என்று ஆய்ந்து-இவளுக்குக் கணவனாகத் தக்கவன் யாரோ' என்று ஆராய்ந்து, தன்கிளை நாயகன்-தன் இனத்தார்க்குத் தலைவனான, சுந்தன் என்பவற்கு-சுந்தன் என்னும் பெயருடையவனுக்கு, நல்கினான்-(மகளைத் திருமணம் செய்து) கொடுத்தான்.

சேயவள்-செம்மை நிறமுடையவள். செவ்வி-பருவத்தால் ஆகிய அழகு.

சுகேது, பிரமதேவனருளாலே பிறந்த தன் மகள் வளர்ந்து மணப்பருவமடைந்த போது, அவள் அழகிற்கும் வலிமைக்கும் ஏற்ற கணவனாவான் யாரோவென்று நன்கு ஆராய்ந்து, இயக்கர் தலை

வனுன சுந்தன் என்பவனுக்கு அவளை மணம் செய்து கொடுத்தான் என்றவாறு. சுந்தன் என்பவன் ஜர்ஜன் என்னும் இயக்கன் மகன் என்று வான்மீகம் கூறும். தாடகை, அகத்திய முனிவரின் சாபத்தைப் பெறுமுன் மிக்க அழகும் உடையவளாயிருந்தாளென்பர்.

(பி - ம்.) 1. அருள்வழி யலர்ந்த தாமரைச்.
2. சேயவளெனவரு; சேயவளாமெனச்: கண்டவட்கு.
3. ஆயவர் யாவரென்று: தன்குல.
4. சுந்தனென்றவற்கு; சுனந்தனென்பவற்கு; வசுந்தனென்பவற்கு; சுவேதனென்பவற்கு; சுகந்தனென்பவற்கு. (20)

366. காமனு மிரதியுங் கலந்த காட்சியீ
தாமென வியக்கனு மணங்க ளுளும்வே
றியாமமும் பகலுமோ ரீறின் றென்னலாய்த்
தாமுறு பெருங்களிச் சலதி மூழ்கினுர்.

இயக்கனும் அணங்கு அன்னுளும்-இயக்கனுகிய சுந்தனும் தெய்வப்பெண் போன்றவளாகிய தாடகையும், ஈது-(இந்த) இவர்களுடைய சேர்க்கை, காமனும் இரதியும் கலந்த காட்சி ஆம் என-மன்மதனும் இரதியும் கூடிய சேர்க்கைபோல் ஆகும் என்று கண்டோர் வியந்து கூறும்படி, வேறு யாமமும் பகலும்-வேறுபட்ட தன்மையுடைய இராப்பொழுதிலும் பகலிலும், ஓர் ஈறு இன்று என்னல் ஆய்-(இவர்களுடைய இன்பநுகர்ச்சிக்கு) ஒரு முடிவு இல்லை என்னும்படி, உறு பெரு களி சலதி மூழ்கினுர்-மிகப் பெரிய இன்பக் களிப்பாகிய கடலிலே முழுகித் திளைத்தனர்.

சுந்தனும் தாடகையும், காமனும் இரதியும்போல மனங் கலந்த அன்புடையவராய், இரவு பகல் என்னும் வேறுபாடின்றி இன்பந் துய்த்து வாழ்ந்தனர் என்றவாறு. தாடகை, தெய்வ மாதர் போன்ற அழகுச் சிறப்பு உடையவளாதலின், 'அணங்கனுளும்' என்று சிறப்பித்தும், கணவனுகிய சுந்தனை 'இயக்கன்' என விசேடண மின்றியும் கூறினுர்.

தாம், அசை. உறு பெரு: மீமிசைச் சொல்.

காம வின்பத்திற்குப் பொழுது வேறுபாடின்மை: குறுந். 32: 1-3 ம், அதன் ஒப்புமைப் பகுதியும் காண்க.

(பி - ம்.) 1. காட்சியிது; காட்சியது.
2. அணங்கினுளும் வேறு; அணங்கனுளுமே.
3. ஈறின்றென்னலாத்; ஈறின்றென்னலாம்; ஈறுகாண்கிலார்.
4. தாமிகு. (21)

367. பற்பல நாட்செலீஇப் பதுமை போன்றொளிர்
பொற்பினாள் வயிற்றிடைப் புவன மேங்கிட
வெற்பணி புயத்துமா ரீச னும்விறல்
மற்பொரு சுவாகுவும் வந்து தோன்றினர்.

பல் பல நாள் செலீஇ-(இவ்வாறு) மிகப்பல நாட்கள் சென்றபின், பதுமை போன்று ஒளிர் பொற்பினாள் வயிறு இடை-திருமகள் போல விளங்குகின்ற அழகுடையவளான தாடகையின் வயிற்றில், புவனம் ஏங்கிட-இவ்வுலகத்துள்ளார் மிக வருந்தும்படி, வெற்பு அணி புயத்து மாரீசனும்-மலைபோலும் (வலிய)தோள்களையுடைய மாரீசன் என்பவனும்,விறல் மல் பொரு சுவாகுவும்-வலிமையோடு மற்போர்த் திறமையுமுடைய சுவாகு என்பவனும், வந்து தோன்றினர்-வந்து பிறந்தார்கள்.

செலீஇ=சென்று; செல்ல என்னும் செயவெனெச்சம் திரிந்து நின்றது. வயிற்றிடை: இடை; ஏழனுருபு.

சுவாகு=ஸுபாஹு-அழகிய தோள்களையுடையவன்.

தாடகையானவள்,மாரீசன், சுபாகு என்னும் இருபுதல்வரைப் பெற்றெடுத்தாள்.இவர்களால் உலகத்துக்கு நேரலாகும் இன்னல்கள் மிகப் பலவாதலின், 'புவனம் ஏங்கிட' என்றார். மாரீசனொருவனையே தாடகை பெற்றதாகவும், சுபாகு உபசுந்தன் மகனெனவும் **வான்மீகம்** கூறும்.

(பி - ம்.) 1. நாட்செலப்: பதுமை போலொளிர்; பதுமையாளொளிர்; பதுமை போலுயர்; பதுமை போலிய.
2. வயிற்றிடை புவனம்.
3. வெற்பன; வெற்படு; வெற்புறழ்; மாரீசனும் வென்றிசேர்; மாரீசன் வென்றிசேர். 4. மற்பெரும். (28)

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

368. மாயமும் வஞ்சமும் வரம்பி லாற்றலும்
தாயினும் பழகினர் தமக்குந் தேர்வொணா
தாயவர் வளர்வுழி யவரை யீன்றவக்
காய்சின வியக்கனுங் களிப்பின் மேன்மையான்.

ஆயவர்-அப்புதல்வர் இருவரும், மாயமும்-மாயையிலும், வஞ்சமும்-வஞ்சனையிலும், வரம்பு இல் ஆற்றலும்-எல்லையில்லாத வலிமையிலும், தாயினும் பழகினர் தமக்கும்-தாயைவிட நெருங்கிப் பழகினவர்களுக்கும், தேர்வு ஒண்ணாது-தெளிந்தறிய வியலாதபடி, வளர்வுழி-நன்கு வளர்ச்சியடைந்து வரும்போது, அவரை ஈன்ற-அவர்களைப் பெற்ற, காய் சினம் அ இயக்கனும்-எரிக்கும் கோபமுடைய அந்த இயக்கனாகிய சுந்தனும், களிப்பின் மேன்மையான்-செருக்கு மேம்பட்டவனாகி,

இது, அடுத்த கவியோடு தொடரும்.

மாயம்-மந்திரவலியாற் செய்யப்படுவது; வஞ்சம்-மதிவலிமையாற் செய்யும் சூது முதலியன. தாடகையின் புதல்வர், மாயை வஞ்சனை, வலிமை ஆகியவை உடன்வளர வளர்ந்தனர்; அவற்றில் அவர்கள் யாவராலும் அளவிட்டறிய முடியாதவாறு மிக்கிருந்தனர் என்க. ஒப்பு: 'தாயினும் பழகினுர்க்குந் தன்னிலை தெரிக்கலாகா, மாயவல்லுருவத்தான்' (யுத்த. 887).

(பி - ம்.) 1. மாயையும்: வரம்பில்லாற்றலும்.
2. பழகினேர்; தேர்கிலாது: தேரொணுது: 3. வளர்வுழீஇ.
4. காய்சினத்தியக்கனும், களியின்; மேன்மையால்; களிப்பின் வைகினன்; வைகுவான். (29)

369. தீதுறு மவுணர்கள் தீமை தீர்தர
மோதுறு கடலெலா மொருகை மொண்டுணும்
மாதவ னுறைவிட மதனில் வந்துநீள்
பாதவ மனைத்தையும் பறித்து வீசினன்.

(அச்சுந்தன் ஒருகால்), தீது உறும்-தீங்குமிக்க, அவுணர்கள் தீமை தீர்தர-அசுரர்களால் ஆகிய கேடுகள் நீங்கும் பொருட்டு, மோதுறு கடல் எலாம்-(கரையை) மோதுகின்ற கடல்நீர் முழுவதும், ஒருகை மொண்டு உணும்-ஒரு கையால் அள்ளிக் குடித்துவிட்ட, மாதவன் உறைவு இடம் அதனில் வந்து-பெரிய தவமுடைய அகத்திய முனிவன் தங்கும் ஆச்சிரமத்துக்கு வந்து, நீள் பாதவம் அனைத்தையும்-(அங்குள்ள)உயர்ந்த மரங்களையெல்லாம், பறித்து வீசினன்-வேரோடு பறித்து எறிந்தான்.

(368) இயக்கன், களிப்பின் மேன்மையான், (369) மாதவனுறைவிட மதனில் வந்து பாதவ மனைத்தையும் பறித்து வீசினன் எனக் கூட்டி முடிக்க.

பாதவம்=பாதபம்; அடியால் (நீரைப்) பருகுவது என்ற காரணப் பொருளுடையது.

சுந்தன், மதத்தினல் தன்னை மறந்து, செய்வதின்னதென அறியாமல், அகத்தியராச்சிரமத்திலே போய் அங்குள்ள மரங்களையெல்லாம் வேரோடு பிடுங்கி யெறிந்து குறும்புகள் செய்தான் என்க.

அகத்தியர் கடல் நீரைப் பருகிய வரலாறு: இந்திரனல் துரத்தப்பட்ட விருத்திராசுரன், பல அசுரருடன் கடலிலே புகுந்து ஒளிந்துகொள்ள, இந்திரன் அவர்களை வதைக்க முடியாமல் வருந்திய போது, அகத்திய முனிவர் தம் தவவலிமையால் கடல் நீர் முழுவதும் தம் ஒரு கையில் அடங்கும்படி செய்து, ஆசமனம்போல அதனைப் பருகி அசுரரை வெளிப்படுத்தினர்; பின்பு இந்திரன் அவர்களை

வதைத்து அவர்களால் நேரும் தீமைகள் இல்லாதபடி செய்தான். முனிவர் கடல் மீண்டும் முன்போலிருக்கச் செய்தார் என்பது.

(பி - ம்.) 1. திமை திதுற. 2. ஓதுறு: மொண்டிடும்: கொண்டுறும்.
3. உறையிடம்; அதனின்: அதனை நண்ணினீள்.
4. பற்றி; பாரில்: விசினுள்; விசினர். (30)

370. விழைவுறு மாதவம் வெஃகி னோர்விரும்
புழைகலை யிரலையை யுயிருண் டோங்கிய
வழைமுதன் மரனெலா மடிப்ப மாதவன்
தழலெழ விழித்தனன் சாம்ப ராயினான்.

(சுந்தன் பின்னும்), விழைவு உறு-விரும்பியன கைவருதற்குக் காரணமான, மா தவம் வெஃகினோர்-பெருமை மிக்க தவத்தை விரும் பிச்செய்யும் முனிவர்களும், விரும்பு-விரும்புவதற்கிடமான, உழை-உழை மான்களையும், கலை-கலைமான்களையும், இரலையை-இரலையென் னும்மான்களையும், உயிர் உண்டு-கொன்று, ஓங்கிய வழை முதல் மரன் எல்லாம் மடிப்ப-ஓங்கி வளர்ந்த சுரபுன்னை முதலான பல மரங்களை யும் அழிக்க, (அது கண்டு சினங்கொண்ட) மா தவன்-மிக்க தவத்தை யுடைய அகத்திய முனிவன், தழல் எழ விழித்தனன்-கண்களில் தீயெழ விழித்துப் பார்த்தான்; (உடனே), சாம்பர் ஆயினான்-(சுந்தன்) நீறுகி நிலத்தில் வீழ்ந்தான்.

விழைவுறு-'வீடுபேற்றை விரும்பிய' எனவும், 'யாவரும் விரும் பத்தக்க' எனவும் உரைக்கலாம். உழை-பெண்மான், கலை-ஆண்மான் எனவும் கூறுவர். தீங்கில்லாத, சாதுவான, அழகுடைய பிராணிக ளாதலால் மான்களை முனிவர்கள் விரும்பி வளர்க்கச் செய்வர்; அவர்களிருப்பிடம் தீங்கில்லாத சூழலுடைமையாலும், அவர்கள் வளர்க்கும் தீயினால், கொடிய விலங்குகள் அங்கு வருதலில்லை யாத லாலும், மான்கள் தாமேயும் அங்குவந்து பயிலும்; (புறநா. 2:21-23).

(பி - ம்.) 1. விழைவறு: வெஃகினர்; வெஃகினேன்.
2. உழைகளை; உழைகின; உழைதனை: உயிருண்டேகியவ்; உயிர்கொண் டோங்கிய; உயிர்கொண்டேகிய.
3. வழையொடு: மரமெலாம்: பறிப்ப.
4. விழித்தலும்: சாம்பல். (31)

371. மற்றவன் விளிந்தமை மைந்தர் தம்மொடும்
பொற்றொடி கேட்டுவெங் கனலிற் பொங்குரு
முற்றுற முடிக்குவென் முனியை யென்றெழா
நற்றவ னுறைவிட மதனை நண்ணினாள்.

மற்று-அவ்வாறான பின்பு, அவன் விளிந்தமை-அச்சுந்தன் அழிந் ததை, பொன் தொடி கேட்டு-பொன் வளையலையணிந்த தாடகை கேள்விப்பட்டு, வெம்கனலின் பொங்குரு-கொடு நெருப்பைப்போலப்

பொங்கி, 'முனியை-(என் கணவனை அழித்த) அந்த முனிவனை, முற்றுற முடிக்குவென் என்று-(அவனுயுள்) முடியும் வண்ணம் கொன்றொழிப்பேன்' என்று சொல்லிக்கொண்டு,மைந்தர் தம்மொடும் எழா-தன் மைந்தர் இருவருடனும் புறப்பட்டு, நல் தவன் உறைவிடம் அதனை-நல்ல தவமுடைய அவ்வகத்திய முனிவன் வாழும் ஆச்சிரமத்தை, நண்ணினுள்-அடைந்தாள்.

மற்று: வினை மாற்று; தம்: சாரியை; பொற்றொடி: வேற்றுமைத் தொகையன்மொழி.

தாடகை, தன் கணவன் அழிந்தமை கேட்டுக் கடுங்கோபங் கொண்டு, அம்முனிவனை இப்பொழுதே கொன்றொழிப்பேன் என்று தன் புதல்வரும் உடன்வரப் போய், அகத்திய முனிவரின் ஆச்சிரமத்தை யடைந்தாள் என்க.

(பி - ம்.) 1. விளிந்தனன். 2. கேட்டுவந்தனலிற்: பொங்கியே: பொங்குற.
3. முடிக்குவம்: என்றுமா.
4. உறையிட மதனை; உறைந்திடு மிடத்தை: நண்ணினர். (32)

372. இடியொடு மடங்கலும் வளியு மேங்கிடக்
கடிகெட வமரர்கள் கதிரு முட்கிடத்
தடியுடை முகிற்குலஞ் சலிப்ப வண்டமும்
வெடிபட வதிர்த்தெதிர் விளித்து மண்டவே,

இடியொடு-பேரிடியும், மடங்கலும்-வடவைத் தீயும், வளியும் (ஊழிக்) காற்றும், ஏங்கிட-அச்சங்கொள்ளவும், அமரர்கள் கடிகெட-தேவர்கள் (அச்சத்தால்) தம் ஒளி மங்கவும், கதிரும் உட்கிட-(இரு கதிர்களாகிய) சூரிய சந்திரரும் அஞ்சவும், தடி உடை(ய) முகில் குலம் சலிப்ப-மின்னலையுடைய மேகக்கூட்டங்கள் நடுங்கவும், அண்டமும் வெடிபட-அண்டகோளமும் (அதிர்ச்சியால்) பிளவு படவும், அதிர்த்து-(அம் மூவருமாக) ஆரவாரம் செய்து, எதிர் விளித்து-முனிவரை எதிரிட்டுக் கூவியவாறு, மண்டவே-(ஆச்சிரமத்தை) நெருங்கி விரைந்து வரவே,

இதுவும் அடுத்த பாடலும் ஒரு தொடர்.

மடங்கல்-ஊழித் தீ யென்றும், அமரர்கள் கடி கெட-திசைக் காவலராகிய தேவர்கள் தம் காவல் கெட ஓட என்றும் உரைப்பினும் அமையும். அம் மூவருடைய செயலை மிகுத்துக் கூறியது, உருத்திரச் சுவையொடுங் கூடிய உயர்வு நவிற்சி. தடி-மின்னல்; தடித்து எனவும் வழங்கும்: தடித்; வடசொல். மடங்கல்: பதிற். 62: 8; 72: 15.

(பி -ம்.) 1, வளியு மெஞ்சிடச்; எரியு மேங்கிடக்.
2. அமரருள்: கதிரு முட்குற; கதிருமட்குறத்; கதிருமட்கிடத்.
3. தடையுறு.
4. ஆர்த்தெதிர்; அதிர்ந்தெதிர்; விழித்து. (33)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

373\. தமிழெனு மளப்பருஞ் சலதி தந்தவன்
உமிழ்கனல் விழிவழி யொழுக வுங்கரித்
தழிவன செய்தலா லரக்க ராகியே
இழிகென வுரைத்தன னசனி யெஞ்சவே.

தமிழ் எனும்-தமிழ் என்று சொல்லப்படுகிற, அளப்பு அரு சலதி தந்தவன்-அளவிடற்கரிய கடலை (தென்னாட்டவர்க்கு) அளித்த அகத்திய முனிவன், (அம் மூவர் செயலால் கடுஞ் சினங்கொண்டு), உமிழ் கனல்-(தான்) வெளிப்படுத்திய கோபத்தீ, விழி வழி ஒழுக-கண்கள் வழியே வெளிப்பட, அசனி எஞ்ச உங்கரித்து-இடியும் குறைபட ஹூங்காரம்செய்து, (அவர்களை நோக்கி), 'அழிவன செய்தலால்-உயிர்கள் அழிவதற்கான செயல்களைச் செய்தலால், அரக்கர் ஆகி இழிக என உரைத்தனன்-(நீங்கள்) அரக்கர்களாகித் தாழ்வடைவீர்களாக' என்று (சாப மொழி) கூறினன்.

'அசனி' என்றவிடத்து உயர்வு சிறப்பும்மை தொக்கது. மண்டவே (372) சலதிதந்தவன், இழிகென வுரைத்தனன் (373) என முடிக்க.

தமிழ், அநாதியாய் மிக விரிந்ததொன்றாகலின், 'அளப்பருஞ் சலதி' என்றார். அகத்திய முனிவன் அதனைத் தந்ததாகக் கூறியது உபசாரவழக்கு. வடமொழியும் தமிழும் அநாதியாய், ஒத்த பெருமையுடையவை; அவற்றை முறையே பாணினி முனிவருக்கும் அகத்திய முனிவருக்கும் சிவபெருமான் உபதேசித்து அவர்களால் உலகிற் பரவச்செய்தார் என்ப. 'வடமொழியைப் பாணினிக்கு வகுத்தருளியதற்கிணையாத், தொடர்புடைய தென்மொழியை யுலகமெலாந் தொழுதேத்துங், குடமுனிக்கு வலியுறுத்தார் கொல்லேற்றுப் பாகர்' காஞ்சிப். தழுவக். 248. என்பதும் காண்க.

உங்கரித்தல் = ஹூங்காரஞ் செய்தல்; கோபத்தால் உரப்புதல்.

(பி - ம்.) 1. அளக்கரும்; அளக்கராம்.
2\. ஓங்க வுங்கரித்து; ஒழுங்க வாங்கரித்து; உமிழ வுங்கரித்து; ஒழுகலுங்கரித்து.
3\. அமிழ்வன: அரக்க ராதிரென்று; அரக்கியாகியே.
4\. இமிழ்கென; இமிழென; அசனி யெஞ்சிட; அசனியேங்கவே; எவருமெஞ்சிட. (34)

ஒரு பிரதியில், இதனையடுத்து ஒரு பாடலும், அப்பாடலின் கீழ், 'சுரம்புகு படலம் முற்றும்' என்ற குறிப்பும், அதன்பின் தாடகைவதைப் படலம் தொடங்குதலும் காணப்படுகின்றன: அப்பாடல் வருமாறு:—

ஆங்கவர் போன பின்னவ் வரக்கியிவ் வனத்தி லெய்தி
ஓங்கிய முனிவரோடு முற்றதோர் பகையை யுன்னித்
தீங்கரு குணத்தான் மிக்க சிறப்புடை யவர்க டம்மோ
டேங்கிமற் றுயிர்க ளெல்லா மிறந்திடத் திரிய லுற்றாள்.

இப்பாடல், சில பாட பேதங்களுடன், 'அவனொடும் பாதலத்து' (76) என்ற பாடலின் பின் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

374. வெருக்கொள வுலகையும் விண்ணு ளோரையும்
முருக்கியெவ் வுயிருமுண் டுழலு மூர்க்கராம்
அரக்கர்க ளாயின ரக்க ணத்தினில்
உருக்கிய செம்பென வுமிழ்கட் டீயினர்.

அ கணத்தினில் - (முனிவன் சபித்த) அப்பொழுதே, (அம் மூவரும்), உருக்கிய செம்பு என-செம்பை உருக்கிய நீர்போல, கண் உமிழ் தீயினர்-கண்ணினின்றும் வெளிப்படுத்தும் சினத்தீயை உடைய வராய், உலகையும்-இவ்வுலகத்துள்ள உயிர்களையும், விண் உளோ ரையும்-தேவருலகத்தில் உள்ளவர்களையும், வெரு கொள முருக்கி- (கண்டபோதே) அச்சங் கொள்ளும்படி (போய்) அழித்து, எ உயிரும் உண்டு உழலும்-எத்தகைய உயிர்ப் பொருள்களையும் (கொன்று) தின்று திரிகின்ற, மூர்க்கர் ஆம்-மூர்க்க குணம் உள்ளவர்களான, அரக்கர்கள் ஆயினர்—.

'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங்காத்த லரிது' ஆகலான், அம்மூவரும் அக்கணத்தினில் அரக்கராயினர். கண் டோர் அஞ்சுமாறு அரக்கர் எப்போதும் சிவந்த கண்ணுடையவரா யிருப்பர். அச்சிவப்புக்கு, செம்புருக்கிய நீர் உவமை. ஒப்பு: ஆரணிய. 506; சுந்தர 999; யுத்த. 874.

(பி - ம்.) 2. முருக்கி யெவ்வுலகும்; முருக்கியேவுயிரும்: உமிழும்; உமிழ: மூர்க்க ராய்.
3. அரக்கரே: ஆயினர்: அக்கணத்திலே; அரைக்கணத்தினில்.
4. உழல் கட்டீயினர்; உமிழ்கட்டீயினர்: ஓதியாயினர்; ஓதியோங்கவே. (35)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

375. ஆங்கவன் வெகுளியு மறைந்த சாபமும்
தாங்கின ரெதிர்செயுந் தருக்கி லாமையின்
நீங்கினர் சுமாலியை நேர்ந்து நிற்கியாம்
ஓங்கிய புதல்வரென் றுறவு கூர்ந்தனர்.

ஆங்கு-அவ்வாறாக, அவன் வெகுளியும்-அவ்வகத்தியமுனிவனது கோபத்தையும், அறைந்த சாபமும்-(அக்கோபத்தால் அவன்) கூறிய சாபத்தையும், தாங்கினர்-ஏற்ற அவர்கள், எதிர் செயும் தருக்கு இலாமையின்-அதற்கு எதிராக (எதுவும்) செய்யும் வலிமை இல்லா மையால், நீங்கினர்-அவ்விடம் விட்டு அகன்று, சுமாலியை நேர்ந்து- (பாதலத்தில் உள்ள) சுமாலி யென்னும் அரக்கனை யடைந்து, 'நிற்கு யாம் ஓங்கிய புதல்வர் என்று-உனக்கு நாங்கள் சிறந்த புதல்வரா வோம்' என்று கூறி, உறவு கூர்ந்தனர்-உறவு கொண்டாடினார்கள்-

'புதல்வர் என்று உறவு கூர்ந்தனர்' என்றதனால், மாரீசனும் சுவாகுவுமே அவ்வாறு செய்தவராவர். அரக்கராகிய மாரீசனும் சுவாகுவும், பாதலத்திலிருந்த சுமாலி யென்பவனிடம்போய், தங்களை அபிமானபுத்திரர்களாக ஏற்றுக்கொள்ளுமாறு அவனை வேண்டி, அவன் இசைவு பெற்று அங்கே தங்கினர். சுமாலி யென்பவன் இராவணனுடைய தாயாகிய கேகசிக்குத் தந்தை; இவன் தன் உடன் பிறந்தோரான மாலி, மாலியவான் என்பவர்களுடனும் மற்றும் பல அரக்கரோடும் இலங்கையில் குடிபுகுந்து தங்கி, இவ்வுலகத்தோர்க்கும் தேவர்களுக்கும் பல திங்குகள் செய்தும் உயிர்களை அழித்தும் வந்தபோது, தேவர்களின் வேண்டுகோளால் திருமால் வந்து இவர்களோடு போர் செய்து வலியழித்து, மாலியைக் கொன்றாராக, அவனொழிந்த ஏனையோர் அஞ்சியோடிப் பாதலத்திற் குடிபுகுந்தனர். பின்பு, இலங்கையில் குபேரன் குடிபுகுந்து ஆண்டுவரும்போது, இராவணன் பிறந்து வளர்ந்து, வரம் பெற்று வந்து, குபேரனோடு பொருது இலங்கையைத் தனதாக்கிக்கொண்டனன். அதனால், சுமாலி முதலியோர் மீண்டும் இலங்கை சேர்ந்திருந்தனர். அவர்கள் பாதலத்தில் இருந்த காலத்திலேயே மாரீசனும் சுவாகுவும் சுமாலியை அடைந்தனராதல் வேண்டும்.

(பி - ம்.) 1. அமைந்த சாபமும்.
2. தாங்கிநின்று: எதிர்செலும்: இலாமையால்.
3. நீங்கினர்; நீங்கியே: சுமாலியை நெருக்கி; நெருக்க, நெருங்க; நெருங்கி: நிற்குநாம்; நிற்குளம்; நிற்குநேர்.
4. மகாரென; மகரென: உவகை: கூறியே; கூறினர்; பூண்டனர். (30)

சில பிரதிகளில் இப்பாடல் 'தமிழெனும்' (373) என்பதன்பின் உள்ளது.

376. அவனொடும் பாதலத் தநேக நாட்செலீஇத்
தவனுறு தசமுகன் றனக்கு மாதுலர்
இவரெனப் புடைத்தழித் துலக மெங்கணும்
பவனனிற் றிரிகுவர் பதகி மைந்தர்கள்.

பதகி மைந்தர்கள் - பாதகியான அத்தாடகையின் புதல்வர்களாகிய அச்சுவாகு மாரீசர்கள், பாதலத்து-பாதாளலோகத்திலே, அவனொடும்-அச்சுமாலியுடனே, அநேகம் நாள் செலீஇ-பற்பல நாட்கள் கழித்து, (பின்பு), தவன் உறு தசமுகன்-தவத்தில் மிக்க இராவணன்,இவர் தனக்கு மாதுலர்என-இவர்கள் தனக்குமாமன்மார்என்று பாராட்ட, (இவர்கள்இலங்கையை அடைந்து இராவணன் துணைவலியாலும் தூண்டுதலாலும்), புடைத்து அழித்து-(அங்கங்கே உயிர்களை) அடித்துக் கொன்று, பவனனில்-(ஊழிப்) பெருங்காற்றைப் போல, உலகம் எங்கணும் திரிகுவர்-உலக முழுதும் சுற்றித் திரியலானார்கள்.

தவன்: இறுதிப் போலி. செலீஇ=செலுத்தி—கழித்து; பிறவினைப் பொருளில் வந்த சொல்லிசையளபெடை. பதகி=பாதகி.

சுமாலியிடம் உறவு கொண்டாடிச் சேர்ந்த சுவாகு மாரீசர்கள், அச்சுமாலியுடனே பாதாள லோகத்தில் பலகாலங் கழித்து, முன்கூறியவாறு இராவணன் இலங்கையாட்சியைப் பெற்றபின் அங்கே போய்த் தங்கி, இராவணனுக்கு மாமன்மார் என்ற சலுகையோடு அவன் தூண்டுதலும் சேர்தலால், பலவிடங்களிலும் சென்று உயிர்களைக் கொன்றும் நல்லோர்க்கு இடுக்கண் விளைத்தும் தம் அரக்கத் தன்மையைக் காட்டித் திரிகின்றனர் என்பதாம்.

'தசமுகன்றனக்கு மாதுலர் இவரென என்றதற்கு, 'அவன் தம்பி அங்கதன்' என்றாற்போல, 'இராவணனுக்கு மாமன்மார் இவர்கள் என்பதற் கேற்றவாறு' எனவும் பொருள் கொள்ளலாம்,

பவனனிற்றிரிகுவர்: 'பவனனின் முடுகி நடந்தார்' (சுந்தர 772).

(பி - ம்.) 1. அவனொடு: செலித்; செலத். 2. தவமுறு; தவமிகு; தவலரு.
3. இவரெனத் தெழித்தழித்து.
4. பவனனிற்றிரிபவர்; திரிகுநர்; பவனவின் விசையினால்: பதசி மைந்தரே; திரிவர் பாதகர். (37)

377. மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குறத்
தகுந்தொழின் முனிவரன் சலத்தை யுன்னியே
வகுந்துற வசுவரி வதிந்த திவ்வனம்
புகுந்தன ளழலெனப் புழுங்கு நெஞ்சினாள்.

தகும் தொழில் முனிவரன் சலத்தை - தகுதியாகிய தவத் தொழிலையுடைய முனிச்சிரேட்டனான அகத்தியனது கோபத்தை, (கோபத்தால் தமக்கு நேர்ந்த கதியை), உன்னியே-எப்போதும் நினைத்தே, அழல் என புழுங்கும் நெஞ்சினாள்-நெருப்பைப் போல வெம்புகின்ற மனத்தையுடைய தாடகை, திறல்மிகு மைந்தரை வேறு நீங்குற-வலிமைமிக்க (தன்) மைந்தர்களையும்விட்டு வேறாகப் பிரிந்து, வகுந்து உற-(தனியே திரியவேண்டிய) வழி நேர்ந்ததனால், வசு அரி வதிந்தது இ வனம்-கொழுந்துவிட்டெரியும் நெருப்புத் தங்கிய இக் காட்டிற்குள், புகுந்தனள்-வந்து சேர்ந்தாள்

சலம், வசு, அரி என்பன வட சொற்கள். சலம்-கோபம்; வசு-ஜ்வாலை; அரி-அக்கினி. 'வடவெரி' என்ற பாடத்துக்கு, வடவைத் தீப்போன்ற கொடு நெருப்பு எனவுரைக்க.

அகத்தியர் சாபத்தால் தானும் தன் மக்களும் அடைந்த நிலையை எண்ணியெண்ணி மனம் புழுங்கிய தாடகை, மக்களையும் பிரிய நேர்ந்ததனால், தனியே அலைந்து இவ்விடம் வந்து சேர்ந்தாள் என்க.

வகுந்து-வழி: மலைபடு. 242.

(பி-ம்.) 1. மிகுந்தகை: மைந்தர்கள்; வெறிது; வெறிதின்: நீங்குறத்; நீங்குநாள்.
2. தகுந்திறன்: முனிவரர்: உள்ளியே.
3. வகுந்துவுண்: விசுவரி; வடவெரி; வதிந்த விவ்வனம்; வதிந்த திவனம்; வசித்த திவ்வனம்; வகுத்த திவ்வனம்.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை. (38)

378. மண்ணுருத் தெடுப்பினும் கடலை வாரினும்
விண்ணுருத் திடிப்பினும் வேண்டிற் செய்கிற்பாள்
எண்ணுருத் தெரிவரும் பாவ மீண்டியோர்
பெண்ணுருக் கொண்டெனத் திரியும் பெற்றியாள்.

எண் உரு தெரிவு அரு பாவம் ஈண்டி-அளவும் உருவமும் அறிய முடியாத பாவங்களெல்லாம் திரண்டு, ஓர் பெண் உரு கொண்டென-ஒரு பெண் வடிவங்கொண்டு வந்தாற்போல, திரியும் பெற்றியாள்-(தோற்றத்தில் பெண்ணாக) அலையும் தன்மையுடைய அவள், மண் உருத்து எடுப்பினும்-பூமியையே கோபித்துப் பெயர்த்தெடுக்க வேண்டுமானாலும், கடலை வாரினும்-கடலை முழுதும் அள்ளிப் பருக வேண்டுமானாலும், விண் உருத்து இடிப்பினும் - வானத்தைக் கோபித்து இடித்துத்தள்ள வேண்டுமானாலும், வேண்டின்-(தான்) விரும்பினால், செய்கிற்பாள்-செய்யும் ஆற்றலுடையவள்.

கில்: ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல். கொண்டென= கொண்டாலென: தொகுத்தல். எண், உரு: உம்மைத்தொகை.

முன் இரண்டடிகளில் தாடகையின் ஆற்றல் சிறப்பிக்கப் பட்டது. பின் இரண்டடிகளில் அவள் செய்யும் பாவங்களுக்கு அளவில்லை; பாவத்துக்கு ஓர் உருவம் உண்டு எனில், அஃது இவளே என அவள் கொடுமைகள் கூறப்பட்டன.

(பி-ம்.) 1. மண்ணுறுத்து: எடுக்கினும்; இடிப்பினும்.
2. எடுப்பினும்; எரியினும்.
3. பண்ணுருத்: தெரிவரு: பாவமீண்டொரு.
4. தெரியும் பெற்றியாள். (39)

சில சுவடிகளில் இச்செய்யுள் இல்லை.

379. பெருவரை யிரண்டொடும் பிறந்த நஞ்சொடும்
உருமுறழ் முழக்கொடு மூழித் தீயொடும்
இருபிறை செறிந்தெழு கடலுண் டாமெனின்
வெருவரு தோற்றத்தண் மேனி மானுமே.

பெரு வரை இரண்டொடும் - இரண்டு பெரிய மலைகளுடனும், பிறந்த நஞ்சொடும்-(தன்னிடத்தே) தோன்றிய நஞ்சுடனும், உரும் உறழ் முழக்கொடும்-இடியை யொத்த பேரோசையுடனும், ஊழி தீயொடும்-யுகாந்த காலத்து நெருப்புடனும், இரு பிறை செறிந்து-இரண்டு பிறைச்சந்திரனும்தன்னிடம் சேரப்பெற்று,

எழு-எழுந்து நடந்து வருகின்ற, கடல் உண்டு ஆம் எனின்-கடல் ஒன்று இருக்குமானுல், வெருவரு தோற்றத்தள்-அச்சந்தரும் தோற்றத்தையுடைய அவ்வரக்கியின், மேனி மானும்-உடம்புக்கு ஒப்பாகும். ஏ-அசை.

வரை இரண்டு அவள் தனங்களுக்கும், நஞ்சு கண்களுக்கும், இடிமுழக்கு அவள் ஆரவாரத்துக்கும், ஊழித் தீ செம்பட்ட மயிருக்கும், இருபிறை கோரப்பற்களுக்கும், கடல் அவளுடலுக்கும், கடல் நடந்து வருதல் அவள் வருகைக்கும் உவமை; இத்தன்மையுடையதொரு கடலும் அது எழுந்து நடந்து வருதலும் இல்லையாதலின் இஃது இல்பொருளுவமை யணி. 'கடலுண்டாமெனின்' என்றதும் நோக்கத் தக்கது.

இவள் தலைமயிருக்கு நெருப்பு உவமை: *385*; ஒப்பு. *387*.

(பி - ம்.) 1. பிறங்கு நெஞ்சொடும். 2. ஊழிக்காற்ருெடும்.
3. செறிந்தெழும்; செறித்தெழு; செறித்திடு; செறித்ததோர்; கடலுண்டாயிடின்; கடலுண்டாமெனில்; கடலுண்டாகிலவ்; மிடலுண்டாமெனின்.
4. வெருவரும்: தோற்றத்தாள்: மன்னுமே. (40)

380. சூடக வரவுறழ் சூலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்
தாடகை யென்பதச் சழக்கி நாமமே.

கண்ணின் காண்பரேல்-கண்ணால் (நேரே) காண்பாராயின், ஆடவர்-ஆண் மக்களுங்கூட, பெண்மையை அவாவும் தோளினாய்-பெண் தன்மையை(அடைய)விரும்புவதற்குக் காரணமான தோளழகையுடைய இராமா! (அவ்வரக்கி), சூடகம் அரவு சூலம் உறழ் கையினள்-கங்கணமாகப் பொருந்திய பாம்பையும் சூலப் படையையும் கொண்ட கையையுடையவள்; காடு உறை வாழ்க்கையள்-காட்டிலே தங்கும் வாழ்க்கையையுடையவள்; அ சழக்கி நாமம்-அக்கொடியவள் பெயர், தாடகை யென்பது—. ஏ-அசை.

முதலடிக்கு, 'கைவளையாக அவள் அணிந்த அரவைப் போன்ற சூலமேந்திய கையுடையவள்' எனவும் பொருள் கூறுவர். இராமபிரானைக் காணும் ஆடவரும், தாம் பெண்ணாகி அப்பிரானால் தழுவப் பெறும் பேற்றை விரும்புவர் என இராமபிரானதழகின் சிறப்புக் கூறியவாறு. 'பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்' (ஆடவரின் கண் மனம் ஆகியவற்றைக் கவர்பவன்) என்பர் வான்மீகரும். சழக்கு-மாறுபாடுமாம்.

ஒப்பு. அயோத். *632*; சீவக. *1528*.

(பி - ம்.) 1. சூடகவரவுமுல்; சூடகமரவுறம்; சூடகவரவினள்: கையினுள்.
2. காடுறு: வாழ்க்கையர்: காண்பளேல்.
3. நன்னலம அவாவும்; திண்மையை அவாவும்; அராவும்; அடக்கும்; ஆற்றும்: தோளினுன்; தோளினள்; தோளினுள்; ஆண்மையாள்.
4. தாடகையென்னுமச; தாடகியென்பதச். (41)

381. உளப்பெரும் பிணிப்பரு வுலோப மொன்றுமே
அளப்பருங் குணங்களை யழிக்கு மாறுபோல்
கிளப்பருங் கொடுமைய வரக்கி கேடிலா
வளப்பெரு மருதவைப் பழித்து மாற்றினுள்.

உளம் பெரும் பிணிப்பு அரு-உள்ளத்தில் மிக்க பற்றுதலை நீங்காத, உலோபம் ஒன்றுமே-உலோபம் என்ற தீக்குணம் ஒன்று மட்டுமே, அளப்ப அரு குணங்களை-அளவிடுதற்கு அரிய பல நற்குணங்களை, அழிக்கும் ஆறுபோல்-கெடுத்துவிடும் தன்மைபோல, கிளப்பு அரு கொடுமைய அரக்கி-(அளவிட்டுச்) சொல்லுதல் அருமையான கொடுமையையுடைய அவ்வரக்கி, கேடு இலா வளம் பெரு மருதம் வைப்பு அழித்து-(என்றும்) மாருத வளம்மிக்க மருத நிலமாக இருந்த இந்நாட்டை அழித்து, மாற்றினுள்-(இத்தகைய பாலையாக) மாற்றிவிட்டாள்.

உலோபம்-கடும்பற்றுள்ளம்; ஆகலின், 'உளப்பெரும் பிணிப் பருவுலோபம்' என்றுர். அவ்வொரு தீக்குணமே பல நற்குணங்களைக் கெடுத்தல் போல, இவ்வரக்கி யொருத்தியே வளம்மிக்க, பரந்த நாடாக விருந்த இதனை இக்கொடுஞ் சுரமாக்கிவிட்டாள்' என உவமையாற் கூறினுர்.

விருத்திராசுரனைக் கொன்றதனுல், பிரமகத்தியும் பசியும் வந்து பற்றப்பெற்ற இந்திரன், இவ்விடத்து அவை தீரப்பெற்றதனுல், மன மகிழ்ந்து, 'இப்பிரதேசம் மிக்க வளமுடைய மலதம் (பாவத்தைப் போக்கியது) கருசம் (பசியைப் போக்கியது) என்னும் பெயருடைய இரண்டு நாடுகளாகி விளங்குக எனக் கூறிய வரத்தினுல் வளம்மிக்குச் சிறந்திருந்த அவ்விடம், தாடகை வந்து ஒன்றரை யோசனை பரப்பளவும் தகைந்துகொண்டு செய்த பல கொடுமைகளால் அழிந்து இவ்வாருகியது என வான்மீகத்திற் கூறப்பட்டுள்ளது.

உலோபத்தின் தீமை: 443; திருவிளை. மூர்த்தி. 14.

(பி - ம்.) 1. உளப்பரும்; உளர்ப்பரும்: பிணிப்புறு: பிணிப்புறும்; பிணிப்புற; லோபம்; என்றுமே: தோன்றியே; தோன்றுமேல்.
3. கிளைப்பெரும்; கொடுமையவ் வரக்கி.
4. அளப்பரும்: மருதவைப்பதனை; தவங்களை யழித்து; தவத்தையே யழித்து; அருந்தவமழித்து; அருந்தவங்களைந்து: மாறினுள். (42)

(வேறு)

382. இலங்கையர சன்பணிய மைந்தொரிடை யூருய்
விலங்கல்வலி கொண்டெனது வேள்விநலி கின்ருள்
அலங்கன்முகி லேயவளிவ் வங்கநில மெங்கும்
குலங்களொ டடங்கநனி கொன்றுதிரி கின்ருள்.

அலங்கல் முகிலே-மாலையையணிந்த மேகம் போன்ற ராமா! அவள்-அவ்வரக்கி, விலங்கல் வலி கொண்டு-மலைபோன்ற வலிமையுடையவளாய், இலங்கை அரசன் பணி அமைந்து-இலங்கையரசனுன இராவணனது ஏவலுக்கு அடங்கி, ஓர் இடையூறு ஆய்-பெரிய இடையூருகி, எனது வேள்வி நலிகின்ருள்-எனது யாகத்தைக் கெடுக்கின்ருள்; (அன்றியும்), இவ் அங்கம் நிலம் எங்கும்-இந்த அங்கநாடு முழுதும், (உள்ள உயிர்களை), குலங்களொடு அடங்க-வமிசத்தோடு அழியும் வண்ணம், நனி கொன்று திரிகின்ருள்-மிகவும் கொலை செய்து கொண்டு திரிகின்ருள்.

முகில்: உவம வாகுபெயர்; அடையடுத்து வந்தது. விலங்கல்-மலை; உவமவாகுபெயராய் யானையைக் குறித்ததெனக் கொண்டு, (முற் கூறியவாறு) ஆயிரம் யானை பலமுடையவளாய் எனவும் கூறலாம். பணி அமைந்து-ஏவலில் பொருந்தி எனவுமாம்.

தாடகை, அங்கநாடெங்கு முள்ள உயிர்களை யழித்தலோடு, இராவணனது ஏவலால் என் வேள்வியையுங் கெடுக்கின்ருள் என்று முனிவன் கூறினன்.

சுபாகு மாரீசர்கள் இராவணனின் ஏவலர் என்றும், அவனே அவர்களை ஏவித் தன் வேள்வியை அழிக்கச் செய்கின்றனன் என்றும் விசுவாமித்திர முனிவன் தசரதனிடம் இராமபிரானை யாசித்த போதே கூறினன் என்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. அரசன் பெயரியைந்த; அரசன் பெயரமைந்தொர்; அரசன் பெயரொடமைந்தொர்; அரசன் பெயரின்மைந்தர்; அரசன் பணியின்மைந்தர்: இடையூரு.
2. விலங்கின்வலி; விலங்கல்நனி; கொன்றெனது; கொண்டுநனி: நலி இன்ருர்.
3. முகிலேயிவள்; முகிலங்கவள்: இவ்வங்கணிலம்; இவ்வனங்க நிலம்.
4. கொன்று திரிகின்ருர்; கொன்றுதவுகின்ருள். (43)

383. முன்னுல களித்தமுனி தந்தவுயி ரெல்லாம்
தன்னுண வெனக்கருது தன்மையினண் மைந்த
என்னினி யுணர்த்துவ தினிச்சிறிது நாளில்
மன்னுயி ரனைத்தையும் வயிற்றிலிடு மென்ருன்.

மைந்த-சக்கரவர்த்தி குமாரனே! (அவள்), முன் உலகு அளித்த முனி தந்த உயிர் எல்லாம்-பழமையான உலகங்களைப்

படைத்த பிரமனது படைப்பினுட்பட்ட உயிர்களெல்லாம், தன், உணவு என கருது தன்மையினள்-தன் உணவுக்காகவே உள்ளன வென்று நினைக்கும் தன்மையுடையவள்; (ஆதலால், அவளை யிப் போதே அழிக்கா விட்டால்), இனி சிறிது நாளில்-இன்னும் சில காலத்தில், மன் உயிர் அனைத்தையும்-(உலகத்தில்) நிலைபெற்ற உயிர் களையெல்லாம், வயிற்றில் இடும்-தன் வயிற்றினுள் இட்டுஅடக்கி விடு வாள்; இனி என் உணர்த்துவது-(அவள் கொடுமையைப்பற்றி), இன் னும் சொல்வதற்கு என்ன விருக்கின்றது?' என்றான்-என்று கூறிமுடித் தான்.

முன் இரண்டடிகளில், 'முன்னுலகளித்து முறை நின்றவுயி ரெல்லாந், தன்னுயிரெனக்கருது தன்மையினன் மைந்த' என்ற பாடத்துக்கு, 'பழமையான வுலகத்தை முறைப்படி பாதுகாத்து, உலகிலுள்ள உயிர்களெல்லாம் தன்னுயிர் போலக் கருதும் தன்மை யுடையவனான தசரதன் குமாரனே' என்பது பொருள்.

இராமா! 'அவ்வரக்கியை இப்பொழுதே நீ அழிக்காவிடில் இன்னும் சில காலத்தில் இவ்வுலகையே பாழாக்கி விடுவாள் அவள்' என்று தாடகையின் கொடுமையைப்பற்றிக் கூறி முடித்தான் விசுவா மித்திர முனிவன்.

(பி - ம்.) 1. முன்னயன்: அளித்தநளும்; அளித்தமுறை; முற்று முயிரெல்லாம்; வந்தவுயிரெல்லாம்: நின்றவுலகெல்லாம்.
2. தன்னுயிரெனக்; தன்னுணர்வெனக்; தன்மையவன்; தன்மையவள்; தன்மையினன்: மைந்தா.
3. சிறிது நாளின்; சிலபல் நாளில்.
4. வயிற்றினிடும்; வயிற்றடையும்; வயத்தடையும்; என்ஞ. (44)

384. இங்குறுவ னிப்பரி சுரைப்பவது கேளாக்
கொங்குறை நறைக்குல மலர்ச்செனி துளக்கா
எங்குறைவ தித்தொழி லியற்றுபவ ளென்றான்
சங்குறை கரத்தொரு தனிச்சிலை தரித்தான்.

சங்கு உறை கரத்து-(திருமாலாக நிற்கும்போது) பாஞ்ச சன்னிய மென்னும் சங்கு தங்கப்பெற்ற இடக்கையிலே, ஒரு தனிசிலை தரித்தான்-(இப்போது) ஒப்பற்ற (கோதண்ட மென்னும்) வில்லையேந் திய இராமபிரான், இங்கு-இவ்விடத்து, உறுவன் இ பரிசு உரைப்ப-மிக்கோனாகிய விசுவாமித்திர முனிவன் இவ்வாறு கூற, அது கேளா-அதைக் கேட்டு, கொங்கு உறை-நறுமணம் தங்கிய, நறை குலம் மலர்-தேன் பொருந்திய சிறந்த மலர்களைச் சூடுதற்கு உரிய, செ(ன்)னி துளக்கா-(தன்) திருமுடியை அசைத்து. (முனிவனை நோக்கி), 'இ தொழில் இயற்றுபவள்-இத்தகைய கொடுந்தொழிலைச் செய்யும் அவ்வரக்கி, உறைவது எங்கு-வசிப்பது எங்கே?' என்றான்-என்று கேட்டான்.

செனி-சென்னி என்பதன் விகாரம். ஒரு தனி-மீமிசைச்சொல்.

இராமபிரான் தலையசைத்தது, தாடகையின் வரலாறு கேட்டதனால் உண்டான வியப்பும், அவளைக் காணவேண்டுமென்று எழுந்த ஆவலும் புலப்படவாகும். முன்பு பஞ்சாயுதங்களுக்கு இடையே, அவற்றுள் ஒன்றாகிய சங்கைத் தரித்திருந்த இடக் கையிலே, இப்போது அவை யெல்லாம் நீங்க, வில்லொன்றை மட்டும் தாங்கி வந்தவன் இராமபிரான்; 'வில் ஒன்று தாங்கினனுலகந்தாங்கினன்' (334) என்றார் முன்னும். இவ்வாறு வில்லேந்திய திருக்கரத்தோடும் சுருண்டு அழகுற விளங்கிய கேசம் பொருந்திய தன் திருமுடியைச் சிறிது அசைத்து நின்ற இராமபிரான் திருவுருத் தோற்றத்தை நம் கண்முன்னே நிறுத்தும் நயம் கண்டு இன்புறுதற்குரியது. சொற் சுருங்க, அளவோடு வினவிய தன்மையைக் கூறிய வகையும் அழகுடையது. இராமபிரான் திருமாலென்பதை அங்கங்கே குறிப்பித்தலும் கம்பநாடர் இயல்பு; 404-பார்க்க.

(பி - ம்.) 1. அங்கிறைவன்; அங்கறிஞன்: அப்பரிசு: அப்பொழுது: உரைத்தபடி; உரைக்கவது.
2. கொங்குகமழுங்குல; கொங்கலற: நறைக்குழல்; நறைக்குலி; நலக்குல: மலர்க்குழல்: குலுக்கா.
3. எங்குறைவள்: இயற்றுமவள். 4. கரத்திலோர்: தரித்தோள். (45)

### தாடகை வருகை

385. கைவரை யெனத்தகைய காளையுரை கேளா
ஐவரை யகத்திடை யடைத்தமுனி யைய
இவ்வரை யிருப்பதவ ளென்பதனின் முன்போர்
மைவரை நெருப்பெரிய வந்ததென வந்தாள்.

கைவரை என தகைய காளை உரை கேளா-யானை போன்ற(சம் வீரமான தோற்றமுடைய) காளைப் பருவத்தினனாகிய இராமபிரானுடைய சொற்களைக் கேட்டு, ஐவரை அகத்திடை அடைத்த முனி-பஞ்சேந்திரியங்களை உள்ளடக்கிய விசுவாமித்திர முனிவன், (இராமபிரானை நோக்கி), 'ஐய-ஐயனே! அவள் இருப்பது இ வரை-அவள் தங்கியிருப்பது இந்த மலையாகும்;' என்பதனின் முன்பு-என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே, (அவள்), ஓர் மை வரை நெருப்பு எரிய வந்தது என-ஒரு கரியமலை (மேலே) நெருப்பு எரிந்துகொண்டிருக்க, நடந்து வந்ததுபோல, வந்தாள்-(இவர்கள் இருக்குமிடம் நோக்கி) வரலானாள்.

கை வரை-துதிக்கையையுடைய மலை போன்ற யானை; வரை, அடையடுத்து வந்தது. காளை: (பருவத்தாலாகிய) உவம ஆகுபெயர்.

இராமபிரான் வினவியதற்கு விடையாக, முனிவன் அருகில்

உள்ள மலையைச் சுட்டி, 'இம் மலையிலேதான் அவள் இருக்கின்றாள்' என்று கூறும்போதே, தாடகையும் அவர்களை நோக்கி வரலானாள் என்க.

'காளை மைந்தர்': (ஆரணிய.21); 'இக்காளை': (சுந்தர. 1005). ஐவர்-பஞ்சேந்திரியங்கள்: 256. தாடகையின் உடலுக்குக் கரிய மலையும், தலை மயிருக்கு எரியும் நெருப்பும் உவமை; 379-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 2. அகத்தினில்: அமைத்தமுனி; ஐயா. 3. வெவ்வரை: முன்னம். 4. வைவரை. (46)

386. சிலம்புகொள் சிலம்பிடை செறித்தகழ லோடும்
நிலம்புக மிதித்திட நெளித்தகுழி வேலைச்
சலம்புக வனற்றறுக ணந்தகனு மஞ்சிப்
பிலம்புக நிலைக்கிரிகள் பின்றொடர வந்தாள்.

(தாடகைவரும்போது), இடைசெறித்த-அணிதற்குரிய இடத்திலே (கால்களிலே) அணிந்த, சிலம்பு கொள் சிலம்பு (ஒடு உம்)-மலைகளைப் பரலாகக் கொண்ட சிலம்புகளோடும், (சிலம்பு கொள்) கழலோடும்-மலைகளாலாகிய வீரக் கழலோடும், நிலம்புக மிதித்திட-(பாதங்கள்) பூமியில் பதியும்படி மிதிப்பதனால், நெளித்த குழி-(அப்பாதங்கள்) உண்டாக்கிய குழிகளிலே, வேலை சலம்புக-கடல்நீர் வந்து பாயவும், அனல்-கோபாக்கினி வீசப்பெற்ற, தறுகண்-அஞ்சாமையையுடைய, அந்தகனும்-யமனும், அஞ்சி-(இவளைக் கண்டு) பயந்து, பிலம் புக-பாதாளத்திலே போய் மறையவும், நிலை கிரிகள்-நிலையான (இடம் பெயராத) மலைகளும், பின் தொடர-(இவள் வரும் விசையால் அடி பறிக்கப்பட்டு) பின்னே தொடர்ந்து வரவும், வந்தாள்-(விசையோடு) வந்தாள்.

சிலம்பு கொள் என்பதனைக் கழலோடும், ஒடு, உம் என்பவற்றைச் சிலம்போடும் கூட்டுக. மிதித்திட: செயவெனெச்சம், காரணப் பொருளில் வந்தது. முதலடிக்குப் பொருள் வேறு வகையாகவும் கூறுவர். பிலம்-மலைக் குகையுமாம். அந்தகன்-(உயிர்களை) முடிப்பவன் என்ற காரணப் பொருளுடையது.

ஒப்பு: 'நவையில் புவித்திரு நால நடப்பாள்':(ஆரணிய.1076); 'கைக்காற்றுந் தொடைக்காற்று மூச்சுக் காற்றுங் கனகமணி வரைபோலக் கவின்கொள் சோதி, மெய்க்காற்றும் பரந்தெழுந்து வனத்திலுள்ள வெற்புநெடுந் தருவனைத்து மொடிந்து வீழ, வெக்காற்றுமுடன்றெழுந்த வுகாந்த கால மெனச்சென்றான். (வி-பா. புட்ப: 16)

(பி - ம்.) 1. சிலம்புகள் சிலம்பிடைச்; சிலம்பவிடை: செறிந்த; சேர்த்த: கழலோடு-
2. நிலம்பக: மிதித்தனள்; மிதித்திடை: நெரித்த: குழிதோறும்:

3. சலம்புகுவனத்தறுகண்; அலம்புகவனற்றறுகண்: அந்தகனுளஞ்சிப்; அந்தகனுமஞ்சப்; அந்தகனுமிஞ்சி; சண்டனுமுளஞ்சிப்.
4. நிலக்கிரிகள்; நெடுங்கிரிகள்; நிரைக்கிரிகள். (47)

## தாடகையின் தோற்றமும் செயலும்

387. இறைக்கடை துடித்தபுரு வத்தளெயி றென்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
கறைக்கடை யரக்கிவட வைக்கனலி ரண்டாய்
நிறைக்கடன் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்.

கறை கடை அரக்கி-(உலகத்துக்கு ஒரு) மாசாகிக் கீழ்ப்பட்ட அரக்கியாகிய அவள், கடை இறைதுடித்த புருவத்தள்-(கோபத்தால்) கடைப்பாகம் சிறிதளவு துடிக்கப்பெற்ற புருவங்களையுடையவளாயும், எயிறு என்னும்-கோரப் பற்களாகிற, பிறை கடை பிறக்கிட மடித்த-(இரண்டு) பிறைகள் கடைவாயிலே (வெளிப்பட்டு) விளங்கும்படி மடித்த, பிலம் வாயள்-குகைபோன்ற வாயையுடையவளாயும், வடவை கனல்-வடவாமுகாக்கினியானது, இரண்டாய்-இரு கூறுகி, நிறை கடல் முளைத்தது என-நிறையை (கரை கடவாமை) உடைய கடலிலே வெளித் தோற்றியது போல, நெருப்பு எழ-(கண்களினின்றும்) தீப்பொறி பிறக்க, விழித்தாள்-(அவர்களை) உறுத்துப் பார்த்தாள்.

பிறக்கிட: வலித்தல் விகாரம். நிறைக்கடல்: நிறைகடல் என்பது விகாரப்பட்டதெனலும் ஆம். முளைத்தென: தொகுத்தல்.

அவள் உடலுக்குக் கருங்கடலும், கண்களுக்கு, அக்கடலிலே இருகூருய் எழுந்த வடவைத் தீயும் உவமை. வடவைத் தீ இரு கூறுகித் தோற்றுதல், இல்பொருளுவமை.

(பி - ம்.) 1. இறைக்கடி.
2. பிறைச்சடி; பிறைக்கிடை: பெலவாயாள்.
3. மறுக்கடை; மறக்கடை; இரண்டே.
4. முளைத்தன: நெருப்பென விழிப்பாள். (48)

388. கடங்கலுழ் தடங்களிறு கையொடுகை தெற்ரு
வடங்கொள நுடங்குமுலை யாண்மறுகி வானேர்
இடங்களு நெடுந்திசையு மேழுலகு மெங்கும்
அடங்கலு நடுங்கவுரு மஞ்சநனி யார்த்தாள்.

கடம் கலுழ் தட களிறு-மதநீர் சொரியும் பெரிய யானைகளை, கையொடு கை தெற்ரு-துதிக்கையோடு துதிக்கை பின்னி, வடம் கொள-மாலையாக அணிந்ததனுல், நுடங்கும் முலையாள்-அசையும் தனங்களையுடையவளாகிய அவள், வானேர் இடங்களும்-தேவருலகத்திலும், நெடு திசையும்-பெரிய(எட்டுத்) திக்குக்களிலும், ஏழ்

உலகும்-பூமிமுதலாகிய ஏழு உலகங்களிலும், எங்கும்-மற்றும் உள்ள எல்லாவிடங்களிலும், அடங்கலும்-(உள்ள)எல்லா உயிர்களும், மறுகி நடுங்க-கலங்கி நடுங்கவும், உரும் அஞ்ச-இடியும் அஞ்சும்படியும், நனி ஆர்த்தாள்-மிகவும் ஆரவாரித்தாள்.

தட: உரிச்சொல்: 'உருமஞ்ச' என்றவிடத்து உயர்வு சிறப் பும்மை தொக்கது. யானைகளை ஒன்றோடொன்று துதிக்கையால் பிணைத்து மணிவடம் போலணிந்தவள் என்றதனால் அவளுருவத்தின் நெடுமையும் பருமையும் வலிமையும் விளங்கும். அவள் கோபத்தால் ஆர்ப்பரித்த ஓசை கேட்டு எவ்வுலகங்களும் நடுங்கின வென்றதனால் அவள் குரலின் கடுமை புலனாகும்.

(பி - ம்.) 1. கடங்கலிழ்: கடுங்களிறு; கருங்களிறு: தடக்களிறு; தருங்களிறு: கைகொடு: கைக்கொடு: தெற்றி: தெற்றும்: தெற்று.
2. வடங்களின்: இடையாள்: மறுகும்.
3. நெடுங்கடலும்: யாவும்; ஏழு; மேரும்: அஞ்சிப். (49)

369. ஆர்த்தவரை நோக்கிநகை செய்தெவரு மஞ்சக்
கூர்த்தநுதி முத்தலை யயிற்கொடிய கூற்றைப்
பார்த்தெயிறு தின்றுபகு வாய்முழை திறந்தோர்
வார்த்தையுரை செய்தன ளிடிக்குமழை யன்னாள்.

இடிக்கும் மழை அன்னாள்-பேரிடியிடிக்கும் மேகம் போன்றவ ளாகிய அத்தாடகை, ஆர்த்து-(முன்கூறியவாறு) பேராரவாரஞ் செய்து, அவரை நோக்கி-அம்மூவரையும் பார்த்து, நகை செய்து-ஏளனச் சிரிப்புச் சிரித்து, எவரும் அஞ்ச-யாவரும் அஞ்சும்படி, கூர்த்த நுதி-கூரிய நுனியையுடைய, முத்தலை அயில்-(தன்கையி லுள்ள) முத்தலைச் சூலாயுதமாகிய, கொடிய கூற்றை பார்த்து-கொடிய யமனைப் பார்த்து, எயிறு தின்று-பற்களைக் கடித்து. பகு வாய் முழை திறந்து-பிளந்த வாயாகிய குகையைத் திறந்து, ஓர் வார்த்தை உரைசெய்தனள்-ஒரு வார்த்தை சொன்னாள்

அவள் உரைத்தவை, அடுத்த செய்யுளில் காணப்பெறும்.

தாடகையின் கையிலிருந்த சூலாயுதம், மிகப்பலவுயிர்களைக் கொன்றதாகலின், 'கொடிய கூற்று' என உருவகித்தார். அவர்களை நோக்கி நகைத்துத் தன் கையிலுள்ள சூலத்தையும் பார்த்ததன் நோக்கம், 'நீங்கள் இச்சூலத்திற்கு எம்மாத்திரம்' என இகழ்தற் குறிப்பாகும். மலைபோன்ற அவளுடலுக்கேற்றவாறு, வாயைக் குகையென்றார். 'இடிக்கும் மழை' என்றதில், அவளுடலுக்கு மேக மும், வாயிலிருந்து வரும் சொற்களுக்கு இடியும் உவமை.

முத்தலை அயில்-திரிசூலம்: 380; ஆரணிய. 6, 410.

வீரர்கள் கோபங் கொண்டபோது அழித்தற் குறிப்போடு தம்மைப் படையை நோக்கிப் பேசுதல்: 459; சுந்தர. 479; கலி. 39: 22; சீவக. 266; சூளா. 1105.

(பி - ம்.) 1. நகை செய்தவரும். 2. கூர்த்தநனி; கூர்த்தநுனி; கூர்த்து நுதி.
3. படுவாய்; பருவாய்.
4. செய்தவள் மலைக்குவமை; செய்தனளிடிக்குவமை; ஆடினள் மலைக் குவமை. (50)

தாடகை கூற்று

390. கடக்கரும் வலத்தெனது காவலிதில் யாவும்
கெடக்கரு வறுத்தனெ னினிச்சுவை கிடக்கும்
விடக்கரிதெ னக்கருதி யோவிதிகொ டுந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்தபரி சென்றாள்.

(தாடகை சொல்லலுற்றவள்), 'கடக்க அரு வலத்து எனது காவல் இதில்-(யாவராலும்) வெல்லுதற்கரிய வலிமையுடைய எனது காவலுக்குட்பட்ட இவ்விடத்தில், யாவும் கெட-(முன்பு உள்ள) எவையும் அழியும்படி, கரு அறுத்தனென்-அடியோடு தொலைத்திட்டேன்; இனி-இப்பொழுது, (நீவிர்), வந்த பரிசு-(இங்கே) வந்த வகை, சுவை கிடக்கும் விடக்கு அரிது என கருதியோ-சுவை யுள்ள ஊன் (எனக்குக் கிடைத்தல்) அரிது என்று நினைத்தோ? (அல்லது), விதி கொடு உந்த-உங்கள் விதி (இங்கே) கொண்டுவந்து தள்ள, பட கருதியோ-(என்கையால்) அழியக்கருதியோ? பகர்மின்-சொல்லுங்கள்' என்றாள்—.

ஏகாரம், ஈற்றசை. கடக்கரு: தொகுத்தல்.

'இந்தக் காட்டுப் பகுதியில் உள்ள உயிர்களில் ஒன்றும் மிச்சமில்லாமல் நான் தீர்த்துவிட்டதனால், நல்ல ஊனுணவின்றி யிருக்கும் என் நிலை தெரிந்து, எனக்கு உணவாகும்படி நீங்களாகவே இங்கு வந்துள்ளீர்கள் போலும்; அல்லது உங்கள் தீயூழ் உங்களை இங்கே கொண்டுவந்து சேர்த்திருக்க வேண்டும்; இவ்விரண்டில் உங்கள் வருகைக்குக் காரணம் எதுவென்பதைக் கூறுங்கள்' என்று இகழ்ச்சிக் குறிப்போடு கூறினாள் தாடகை.

இவள் இங்குக் கூறியது, சுரசை அனுமனிடம் 'எனக் காமிட மாய்வரு வாய் கொல்' (சுந்தர. 67) என்று கூறுவதை நினைப்பூட்டுகிறது.

(பி - ம்.) 1. வனத்தெனது; வலித்தெனது: காவலதியாவும்; காவலிதுயாதும்; யாவும்; காவலிதில் யாரும்; காவலிதினியாவும்.
2. கெடக்கரிசறுத்தனன்; கெடக்கருசறுத்தனன்; சுவை கிடைக்கும்.
3. விதியினலோ; விதியினலே. 4. உரைமின்: என்றே. (51)

391. மேகமவை யிற்றுக விழித்தனள் புழுங்கா
மாகவரை யிற்றுக வுதைத்தனண் மதித்திண்
பாகமெனு முற்றெயி றதுக்கியயில் பற்று
ஆகமுற வுய்த்தெறிவெ னென்றெதி ரழன்றாள்.

(தாடகை, மேற்கண்டவாறு கூறி), மேகம் அவை இற்று உக-மேகங்கள் பொடியாகிச்சிதறும்படி, விழித்தனள்-உறுத்துப் பார்த்து, புழுங்கா-மனம் புழுங்கி, மாகம் வரை இற்று உக-(எதிரில் உள்ள) ஆகாயமளாவிய மலை சிதறிப் பொடியாகும்படி, உதைத்தனள்-காலால் உதைத்து, மதி திண் பாகம் எனும்-சந்திரனது உறுதியான இரு கூறுகள் எனத்தக்க, முற்று எயிறு அதுக்கி-முழு வளர்ச்சியுற்ற கோரப் பற்களைக் கடித்து, அயில் பற்று-சூலத்தை (எறிதற்கேற்ற வாறு) கையிற் பிடித்துக்கொண்டு, ஆகம் உற உய்த்து எறிவென் என்று-(இவர்கள்) மார்பில் பொருந்தும்படி குறியாக (இச்சூலத்தை) எறிவேன் என்று சொல்லி, எதிர் அழன்றாள் - அவர்களெதிரே சீறினாள்.

மேகமவை - மேகமாகிய அவை-மேகங்கள். விழித்தனள், உதைத்தனள் என்பன முற்றெச்சம். முற்றெயிறு-வைர மேறிய பல் எனவுமாம்.

பார்வையினால் மேகங்கள் சிதறின; கால் உதையினால் மலை சிதறிற்று என அவள் கொடுமையும் வலிமையும் கூறியவாறு. எயிற துக்கல், கோபக் குறிப்பு.

விழித்தனள், உதைத்தனள், அதுக்கி, பற்று, அழன்றாள் எனக் கூட்டுக.

(பி - ம்.) 1. அற்றுக; உற்றுக; பற்றுபு: விளித்தனள்; பிழிந்தனள்; புழுங்க; புழுங்கி; விழுங்கா.
2. அற்றுக; உற்றுக; இற்றுற: மணித்திண்; பதத்தின்.
3. பாகமென; முத்தெயிறதுக்கி.
4. உற்றெறிவன்; முற்றெறிவன். (52)

392. அண்ணன்முனி வற்கது கருத்தெனினு மாவி
உண்ணென வடிக்கணை தொடுக்கில னுயிர்க்கே
துண்ணெனும் வினைத்தொழி றொடங்கியுள ளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினைந்தான்.

முனிவற்கு அது கருத்து எனினும்-விசுவாமித்திர முனிவனுக்குத் தாடகையை வதைக்க வேண்டுமென்பது நோக்கமாயினும், உயிர்க்கே துண் எனும் வினை தொழில் தொடங்கியுளளேனும்-தங்களுயிருக்கே (யாவரும்) நடுங்கத்தக்க கொலைத் தொழிலை (அவள்) செய்யத் தொடங்கியுள்ளா ளாயினும், அண்ணல்-பெரியோனாகிய இராமபிரான், 'ஆவி உண் என-அவளுயிரைப் பருகுவாய்' என்று,

வடி கணை தொடுக்கிலன்-கூரிய (தன்) அம்பைத் தொடுக்கவில்லை; (ஏனென்றால்),பெண் என-(அவள்) பெண்ணாயிற்றே யென்று, பெருந் தகை மனத்து இறை நினைந்தான்-பெருந்தன்மை பொருந்திய தன் மனத்திலே சிறிது நினைத்தான்.

'முன்னுலகளித்த' (383) என்னும் கவியால் தாடகையை அப் போதே வதைக்க வேண்டுமென்பது விசுவாமித்திர முனிவன் கருத் தெனல் புலனாயிற்று; எனவே, 'முனிவற்கு அது கருத்தெனினும்' என்றார். 'அண்ணல்' என்பதனை முனிவனுக்கு விசேடணமாக்கி, பெருந்தகை யென்பதை எழுவாயாக உரைத்தலும் ஆம்.

இராமபிரானுக்குத் தாடகையின் உயிரை மாய்த்தல் கருத் தன்று என்பது வான்மீகத்திலும் புலப்படும். அவன் அப்பொழுது இலக்குமணனை நோக்கி, 'இவளை இப்பொழுது காதையும் நுனி மூக் கையும் அறுத்துத் துரத்திவிடுகிறேன்; இவள் ஸ்திரீயானது பற்றி இவளைக் கொல்ல என் மனம் துணியவில்லை; ஆகையால், கைகளையும் கால்களையும் முறித்து வலிமையையும் நடமாடும் இயல்பையும் ஒழித்துவிடலாமென்று எனக்குத் தோன்றுகிறது' என்று கூறி, அவ் வாறே முதலில் செய்ததாகவும் அங்கே கூறப்படுகிறது.

'ஆவி உண்' என்றது, இராமபிரான் தன் அம்புக்குக் கட்டளை யிடுதல் போலக் கூறப்பட்டது. உயிர்க்கே-எல்லா வுயிர்களுக்குமே என்றுமாம். 'பெண்ணென நினைந்தான்' ஒப்பு. ஆரணிய. 311; 871.

(பி - ம்.) 1. முனிவர்க்கது; முனிவற்கிது. 2. தொடுத்திலன்: உயிர்த்தே. 3. துண்ணென: விளைத்தொழில்; தொடக்கியுளளேனும்; தொடங்கியுள மின்னும். 4. மனத்திடை. (53)

### முனிவன் கூற்று

(வேறு)

393. வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற் றாளயில்
எறிந்து கொல்வெனென் றேற்கவும் பார்க்கிலாச்
செறிந்த தாரவன் சிந்தைக் கருத்தெலாம்
அறிந்த நான்மறை யந்தணன் கூறுவான்.

வெறிந்த செம்மயிர்-வெறுமையான (அழகு செய்யப்படாத) செம்பட்ட மயிரையும், வெள் எயிற்றாள்-வெண்மையான (கோரப்) பற்களையுமுடைய அவள், 'அயில் எறிந்து கொல்வென் என்று- சூலத்தை யேவி உங்களைக் கொன்றுவிடுவேன்' என்று, ஏற்கவும்- எதிர்த்து வரவும், பார்க்கிலா-(அதனைப்) பொருட்படுத்தாத, செறிந்த தாரவன்-அடர்ந்த பூமாலை யணிந்த இராமபிரானது, சிந்தை கருத்து எலாம்-மனக் கருத்து முழுதும், அறிந்த-கண்டு

கொண்ட, நால் மறை அந்தணன்-நான்கு வேதங்களையுமுணர்ந்த விசுவாமித்திர முனிவன், கூறுவான்-(பின் வருமாறு)கூறலானான்.

முனிவன் கூறியவற்றைப் பின்வரும் ஏழு பாடல்களில் காண்க.

'தாடகை பெண்ணாயிற்றே' என்று அவளைக் கொல்லச் சற்றுத் தயங்கிய இராமபிரானது கருத்தை முனிவன் அறிந்து, 'அவள் உருவத்தால் பெண்ணாயினும் செயல்களால் ஆண்களையும் விஞ்சியவள்; அவளைக் கொல்லுதல் நீதிக்குப் பொருந்தியதே யன்றிக் குற்றமாகாது' எனக் காரணங்களுடன் வற்புறுத்திக் கூறலானான்; வேத விதிக்குப் புறம்பான குற்றங்களைச் செய்ய அவன் ஒருப்படான் என்பது புலனாக, 'நான்மறை யந்தணன்' என்றார்.

வெறிந்த-செறிந்த என்பாரும் உளர். செம்மயிர் × வெள்ளெயிறு: முரண்தொடை. ஏற்றல்-எதிர்த்தல்; யுத்த. 1890.
'வெறிந்த செம்மயிர் வெள்ளெயிற்றுடவர்' யுத்த. 1034.

(பி - ம்.) 1. எயிற்றுடனை.
2. கொல்வனென்று; கொல்வளென்று: எண்ணவும்; எய்தவும்; எவ்வமும்; ஏதமும்; ஏற்றதும்: பார்க்கிலான்; பார்க்கிலன்.
3. ராகவன்; கருத்தெல்லாம். 4. அறிந்து: கூறினான். (51)

394. தீதென் றுள்ளவை யாவையுஞ் செய்தெமைக்
கோதென் றுண்டில ளித்தனை யேகுறை
யாதென் றெண்ணுவ திக்கொடி யாளையும்
மாதென் றெண்ணுதி யோமணிப் பூணினாய்.

(முனிவன் இராமபிரானை நோக்கி), 'மணி பூணினாய்-இரத்தினாபரணங்களையணிந்த இராமா! எமை-எமக்கு, (முனிவர்க்கு),(இவள்), தீது என்று உள்ளவை யாவையும் செய்து-கேடாகவுள்ள செயல்களை முற்றிலும் செய்துகொண்டு, (நாங்கள்), கோது என்று-சக்கை என்று கருதி, உண்டிலள் - (இதுவரை) உண்ணாமல் விட்டிருக்கின்றாள்; இத்தனையே குறை-(உண்ணாமல் விட்ட) இவ்வளவுதான் குறை; யாது என்று எண்ணுவது-(இவளை) என்னவென்று நினைப்பது? இ கொடியாளையும்-இத்தகைய கொடுமையுள்ள இவளையும், மாது என்று எண்ணுதியோ-பெண்ணாயிற்றேயென்று நினைக்கின்றாயோ? (கூடாது என்றவாறு).

எமை-எமக்கு; உருபுமயக்கம்.

'இராமா! இவள், எங்களைக் கொன்று தின்னக் குறையாக, எங்களுக்கு அளவற்ற தீமைகளைச் செய்து வருகிறாள்; தவத்தால் வாடிய எங்கள் உடம்பு பசையற்றதென்று கருதியே, எங்களைக் கொன்று தின்னாமல் விட்டிருக்கிறாள்; ஆதலால், இக்கொடியவளைப் 'பெண் என்று எண்ணுவது தகாது' என்று தொடங்கி முனிவன் கூறலானான்.

தீது - பாவமும் ஆம்; குறள். 282; கோதென்றுண்டிலன்: 'கோரதென்று கொள்ளாதாங் கூற்று' (நாலடி. 116).

(பி - ம்.) 1. தீதெனவுள்ளவை: செய்தெனைக். 2. அத்தனையே.
3. ஏதென்று: எண்ணுதி; உன்னுவது.
4. எண்ணுவதோ; உன்னுவதோ. (55)

395. நாண்மை யேயுடை யார்ப்பிழைத் தானகை
வாண்மை யேயுடை வன்றிற லாடவர்
தோண்மை யேயிவள் பேர்சொலத் தோற்குமேல்
ஆண்மை யென்னும தாரிடை வைகுமே.

'(இராமா!) நாண்மையே உடையார் பிழைத்தால்-(பெண் களுக்குச் சிறந்ததாகிய) நாணமென்பதையே சிறப்பாகக் கொண்ட பெண்களைக் கொன்றால், நகை-(அது) இகழ்ச்சிக்கு இடமாகும்; வாண்மையே உடைய-வாள் தொழிலையே மேற்கொண்ட, வன் திறல் ஆடவர்-மிக்க வலிமை பொருந்திய ஆண்மக்களின், தோண் மையே-புயவலியே, இவள் பேர் சொல-இவள் பேரைச் சொன்ன மாத்திரத்தில், தோற்குமேல்-அழிந்து விடுமாயின், (அதன்மேல்), ஆண்மை என்னும் அது-'ஆண்மை'யென்று (சிறப்பித்துச்) சொல்லப் படும் அக்குணம், ஆர் இடை வைகும்-யாரிடத்தில் இருக்கும்? (நீயே சொல்வாயாக). ஏ-அசை

பிழைத்தல்-குற்றஞ் செய்தல்; இங்கே இலக்கணையாகக் கொல்லுதலைக் குறிக்கும். பெண்மைக்குச் சிறந்ததாகிய நாணமென் னும் பண்புடைய 'பெண்களாயின் அவர்களைக் கொல்லுதல் ஆட வர்க்கு இகழத்தக்க செயலாகும்; இவளோ அக்குணம் சிறிதும்இல்லா தவள்; மேலும் இவள் பேரைக் கேட்டமாத்திரத்தில் எத்தகைய வீர முள்ளஆடவரும் தம் தோள்வலி யிழந்து நடுங்குவர்; அவ்வாறாயின் ஆண்மையென்பது எங்குள்ளது என நீயே சிந்தித்துப் பார்ப்பாயாக' என்று கூறு முகத்தால், 'தாடகையைப் பெண் எனக் கொள்ளல் தகாது' என்பதனை முனிவன் வலியுறுத்தினன் என்க.

நாண்மை=நாணம்; மை: பகுதிப்பொருள் விகுதி. வாண்மை- வாள்திறமை; தோண்மை=தோளின் தன்மை=புயவலிமை.

ஈற்றடி, ஒப்பு: 'வன்மையென்னுமிதாரிடை வைகுமே' 700.

(பி - ம்.) 1. உடையார்: பிழைத்தார்நகு; பிழைத்தார்நல; பிழைத்தார்நகை; பிழைத்தானகும்.
2. ஆண்மையே; வாய்மையே; பெற்றவன்றிறல்; புடைவன்றிறல்; கற்ற வன்றிறல்.
3. தோற்குமால்; தோற்பரால்; தோற்பரேல்.
4. என்னுமிது; ஆர்வசத்து; ஆர்வயத்து; ஆர்கண்ணது; வைகுமோ; ஆகுமோ; ஆகுமே. (56)

396. இந்தி ரன்னிடைந் தானுடைந் தோடினர்
தந்தி ரம்படத் தானவர் வானவர்
மந்த ரம்மிவ டோளெனின் மைந்தரோ
டந்த ரம்மினி யாதுகொ லாண்மையே.

'இந்திரன் இடைந்தான்-இந்திரன் (இவள் முன் நிற்கமாட்டாமல்) தோற்றுப் போனன்; தானவர்-பல அசுரர்களும், வானவர்-தேவர்களும், தந்திரம் பட-(தம்முடன் வந்த) சேனைகளும் அழிய, உடைந்து ஓடினர்-(இவளுக்குத்) தோற்று ஓடினர்கள்; இவள் தோள்-இவள் கைகள், மந்தரம்-மந்தர மலை போன்ற உறுதியுடையவை; எனின்-அவ்வாருனல், இனி-இன்னும், ஆண்மை-ஆண்மையில், மைந்தரோடு அந்தரம் யாது-வலிமையுள்ள ஆடவரோடு (இவளுக்குள்ள) வேறுபாடு என்ன விருக்கின்றது? ஏ-ஈற்றசை. சொல்-அசை

இவள் கைகள் மந்தரம் என்றதனுல், மந்தர மலை பாற்கடலைக் கலக்கியது போல, இவள் கைகள் எத்தகைய படைக்கடலையும் கலக்கி அழித்துவிடும் என்பதாம். தானவர்களே இவள் முன் எதிர்த்து நிற்க வியலாதெனின், மானிடர் எம்மாத்திரம்? என்பதும் பெறப்பட்டது.

1, 3, 4-ஆம் அடிகளில் இரண்டாம் சீர் விரித்தல் விகாரம் பெற்றது.

(பி - ம்.) 1. இந்திரனிடைந்தான்; இந்திரனுடைந்தான்; இந்திரன்னடைந்தான்; இடைந்தோடினர்; உடைந்தோடினன்.
2. தந்திரப்படைத்; தந்திரம்படை: தானவர் மானவர்.
3. மந்திரமிவள்: மைந்தர்தோள்.
4. அந்தரமினி: யாதுகொலாமையா; யாதுகொலாண்மையாய்; யாதுகொலாண்மையால்; யாதுகொலாமரோ. (57)

397. கறங்க டற்றிகி ரிப்படி காத்தவர்
பிறங்க டைப்பெரி யோய்பெரி யோரொடும்
மறங்கொ டித்தரை மன்னுயிர் மாய்த்துநல்
அறங்கெ டுத்தவட் காண்மையும் வேண்டுமோ?

'கறங்கு அடல் திகிரி-(எங்கும்) சுற்றுகின்ற வலிய ஆஞ்ஞா சக்கரத்தினலே, படி காத்தவர் பிறங்கடை - பூமி முழுதும் ஆண்ட சூரிய குலத்தரசர்களின் வழித்தோன்றலாகிய, பெரியோய்-பெருமையுடையவனே! பெரியோரொடும் மறம்கொடு-பெரியோர்களோடு பகைகொண்டு, (மாறுபட்டு), இ தரை மன் உயிர் மாய்த்து-இவ்வுலகத்தில் நிலைபெற்ற பலவுயிர்களையும் கொன்றொழித்து, நல் அறம் கெடுத்தவட்கு-நல்ல தருமத்தை அழித்துவரும் இவளுக்கு, ஆண்மையும் வேண்டுமோ-ஆண்வடிவமும் வேண்டப்படுவதோ? (அன்று).

ஆண்மை: ஆகுபெயர்; 'வன்றிறலாடவர் தோண்மையே இவள் பேர்சொலத் தோற்குமேல், ஆண்மையென்னும தாரிடை வைகும்' (395) என முன்னே இவள் ஆண்மையைப் பற்றிக் கூறியிருத்தலால், இங்கே 'ஆண்வடிவம்' எனப்பட்டது. அவள் வடிவத்தைக்கண்டு இராமபிரான் அவளைக் கொல்லத் தயங்க வேண்டாமென்பதை வற்புறுத்த, 'இவளுக்கு ஆண்வடிவமும் வேண்டுமோ' என்றான்.

பிறங்கடை-வழித்தோன்றல்: 'கரும்பிவட்டந்தோன் பெரும் பிறங்கடையே' (புறநா. 392: 21).

(பி - ம்.) 1. கறங்கிடத் திகிரி; கறங்கிடற் றிகிரி: படிகாத்தவப்; படைக்காத்தவர்.
2. பிறங்கிடப்: பிறங்கடற்: பெரியாரொடும்; பெரியோர்கடம்: பெரியாருடன்.
3. மறங்கொடித்தனை; மறங்கொடின்னன. மாய்த்துநின்று; மாய்த்துள; மாய்த்தற; மாய்த்துநன்று; மாய்த்தெனது.
4. கெடுத்தவட்காரருள்; கெடுத்தவடன்மையு மாயுமோ; வேண்டுமே. (58)

398. சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த்
தேற்றும் விண்ணென்ப தல்ல திவளைப்போல்
நாற்றங் காண்டலுந் தின்ன நயப்பதோர்
கூற்று முண்டுகொல் கூற்றுறழ் வேலினாய்.

'கூற்று உறழ் வேலினாய்-(தீயோர்க்கு) யமனைப் போன்ற வேலையுடையவனே! (கூற்றுவனும்), சாற்றும் நாள் அற்றது எண்ணி-(ஒவ்வோருயிருக்கும்) விதிக்கப்பட்ட வாழ்நாள் தீர்ந்ததைக் கணக்கிட்டு, தருமம் பார்த்து-(உயிர்கள் செய்துள்ள) தருமா தருமங்களையும் ஊன்றி நோக்கி, விண் ஏற்றும் என்பது அல்லது-சுவர்க்கத்துக்கு ஏற்றுவான் என்பதையன்றி, இவளைப்போல்—, நாற்றம்காண்டலும்-(உயிர்களின்) வாடையை (மோப்பத்தால்) உணர்ந்ததும், தின்ன நயப்பது ஓர் கூற்றும் - அதனைக் கொன்று தின்ன விரும்பும் ஓர் யமனும், உண்டுகொல்-(எங்கேனும்) உண்டோ?

'புதிய கூற்றனையாள்' (403) என்பதும் ஈண்டு நோக்கத்தகும்.

இது, தாடகையின் கொடுமையை மற்றொரு வகையால் கூறியது. தருமம் பார்த்து எனின், அதருமமும் பார்த்தலும் 'விண் ஏற்றும்' என்றால் நரகத்தில் வீழ்த்தலும் இனத்தால் கொள்ளத் தகும். நாற்றங் காண்டலும் தின்ன நயத்தல்: நெடுந்தூரத்திலுள்ளதையும் மோப்பத்தாலறிந்து சென்று தீங்கிழைப்பாள் என்பதாம். கூற்றும்: உம்மை உயர்வு சிறப்பு.

கூற்றுவன் செயல்: புறநா. 41: 1-3. அடிக்குறிப்புப் பார்க்க.
கூற்றுறழ் வேலினாய்: 'கால வேலான்' 326.

(பி - ம்.) 1. அற்றதென்று; அற்றமெண்ணி: தருமன் பார்த்து; தருமனர்.
2. விண்ணென்பர்: அன்றியிவனைப் போல்.
3. கேட்பினும்; கேட்டலும்; தின்னனயப்பதோர்.
4. கூற்றுண்டோ சொல்லாய்; கூற்றுண்டோ சொல்; கூற்றுண்டோ சொலக்: கூற்றுழல் வேலினய்; கூற்றுமிழ் வேலினேய்; கூற்றுவ வேலினய். (59)

இச்செய்யுளின்பின், அடியிற்காணும் நான்கு பாடல்கள் சில பிரதிகளிற் காணப்படுகின்றன. இவை, சில அச்சுப்பதிப்புக்களில், 'இந்திரன் னிடைந்தான்' (390) என்பதன் பின் மூலத்திலேயே சேர்க்கப்பட்டுள்ளன; இவற்றின் முறைவைப்பின் மற்றும் சில வேறுபாடுகளும் காணப்படுகின்றன. பாடல்கள் வருமாறு:—

(1) மன்னர் மன்னவன் காதல மற்றுமொன்
றின்னம் யானுரைக் கின்றதி யாதெனில்
முன்னோர் கால நிகழ்ந்த முறைமையீ
தென்ன வோதலுற் றான்றவத் தீறிலான்.

(பி - ம்.) 1. மாறுமொன்று. 2. உரைக்கின்றனன்.
3. முறைமையிஃது; முறையதே. 4. அறத்தீறிலான்.

(2) வான கத்தினின் மண்ணினின் மன்னுயிர்
போன கத்தெனக் கொன்றுணும் புந்தியாள்
தான வள்சும திப்பெய ராடனை
ஊனொ ழித்தனன் வச்சிரத் தும்பர்கோன்.

(பி - ம்.) 1. மண்ணினின் மாந்தரைப்.
2. போனகந்தனக் கென்றெணும் புந்திய; புந்தியள்.
3. தானவள் குமதிப்பெய ராடனை; மானம் வெஃகு மதிப்பெயராடனை; ஆனவொண் சுமதிப் பெயராடனை. 4. இந்திரனொள்ளியோய்

(3) பிருகு வெனும்பெரு குந்தவன் றன்மனை
வருக யற்கட் கியாதிவல் லாசுரர்க்
குருகு காத லுறவுற வாதலே
கருதி யாவி களைந்தன னேமியான்.

(பி - ம்.) 1. பிருகு வென்னும் பெருந்தவன். 2. கெயாதி.
3. உறவாதலால்; உலகாள்வதால்; உலகோதலால்: உலகோர்தலால்.
4. நேமிமால்.

(4) ஆத லாலரிக் காகண்ட லன்றனக்
கோது கிர்த்தியுண் டாயதல் லாலிடை
ஏத மென்பன வெய்திய வோசொலாய்
தாத டர்ந்து தயங்கிய தாரினய்.

(பி - ம்.) 1. ஆதலாலவர்க் காகண்டலன்னவற்கு. 2. அல்லாதிடை.
3. எய்தியதோ. 4. தோளினய்.

இப்பாடல்களில் அடங்கிய செய்தி வான்மீகத்திற் கூறப்படுகின்றது.

399. மன்னும் பல்லுயிர் வாரித்தன் வாய்ப்பெய்து
தின்னும் புன்மையிற் றீமைய தேதைய
பின்னுந் தாழ்குழற் பேதைமைப் பெண்ணிவள்
என்னுந் தன்மை யெளிமையின் பாலதே.

மன்னும் பல் உயிர்-(உலகத்தில்) நிலைபெற்ற பல வுயிர்களை, வாரி தன் வாய் பெய்து-அள்ளித் தன் வாயில் இட்டு, தின்னும் புன்மையின்-(மென்று) தின்கின்ற கீழ்மையினும், தீமையது ஏது-கொடுமையானது வேறென்ன விருக்கின்றது? ஐய-ஐயனே, இவள்-இக் கொடியவள், பின்னும் தாழ் குழல் பேதைமை பெண் என்னும் தன்மை - பின்னப்பட்ட நீண்ட கூந்தலையும் பேதைமையையும் உடைய 'பெண்' என்று சொல்லுந் தன்மை, எளிமையின் பாலதே-அறியாமையின் பாற் பட்டதேயாகும்.

ஏகாரம்: பிரிநிலை. எளிமை-கோழைத்தன்மை யெனலும் ஆம்.

உயிர் என்றது, உயிருள்ள உடம்புகளை; எத்தகைய பேருடல்களையும் வாயிலிட்டுத் தின்பண்டங்கள் போல மென்று தின்பாள் என்றதனால் அவள் கொடுமையின் உச்சநிலை கூறியவாறும்.

'பின்னுந் தாழ்குழற் பேதைமைப் பெண்' என்றது, பெண்ணினத்துக்கு இயல்பான விசேடணம்; தாடகையின் தலைமயிர், 'வெறிந்த செம்மயிர்' (393) என முன்னே கூறப்பட்டது காண்க.

பெண்ணிவள் என்னுந் தன்மை: 'பெண்ணெனப் பெயர் கொடு திரியும் பெற்றியார்' (சுந்தர. 389).

(பி - ம்.) 1. தன்பாற்பெய்து; தன்வாய்ப்பெயாத்.
2. புன்மையெத்தீமையதோ; தன்மையிற்றீமையெதோ; ஐயா; வையாய்.
3. தார்குழற்; பெண்ணவள்.
4. எளிமையிற்பாலதோ; இருமையின் பாலதே. (60)

400. ஈறி னல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறி நின்றிது செப்புகின் றேனலேன்
ஆறி நின்ற தறனன் றரக்கியைக்
கோறி யென்றெதி ரந்தணன் கூறினான்.

'ஈறு இல் நல் அறம் பார்த்து இசைத்தேன்-(நான் இதுவரை கூறியதெல்லாம்) முடிவற்ற நல்ல தருமத்தை ஆராய்ந்து கூறினேன்; இவள் சீறிநின்று இது செப்புகின்றேன் அலேன்-(எனக்குத் தீங்கிழைத்தலால்) இவளிடம் கோபங்கொண்டு (இவளைக் கொல்ல வேண்டும் என்னும்) இதனைச் சொல்கின்றேனில்லை; ஆறி நின்றது அறன் அன்று-(இவள் விஷயத்தில்) கோபம் தணிந்து இருப்பது தருமமாகாது; அரக்கியை கோறி என்று-இந்த இராக்கசியை இப்போதே கொல்வாயாக' என்று, எதிர் அந்தணன் கூறினான்-இராமபிரான் முன்னே விசுவாமித்திர முனிவன் கூறினான்.

'இராமா! நான் இவ்வளவும் தருமத்தை நன்கு ஆராய்ந்து கூறினேனே யன்றி, இவளிடம் கோபத்தால் தருமமல்லாததைச் சொல்லவில்லை; எனவே, இனியும் தாமதியாமல் இவளைக் கொல்வதே நீசெய்ய வேண்டுவது' என்று முனிவன் கூறி முடித்தான். 'ஆறி நின்றது அறனன்று' என்றது, இவளைக் கொல்ல முயலாது அடங்கியிருப்பது, க்ஷத்திரியனுகிய உனக்குரிய தருமமாகாது; தீயோரை அழித்து நல்லோரைக் காத்தலே அரச தருமமாகும்' என்றவாறு. எதிர்-(இராமபிரானது கருத்துக்கு) மாருக என்றலும் பொருந்தும்.

கோறி: இகரவீற்று வியங்கோள்.

ஈறில் நல்லறம்: 'அறத்துக் கீறுண்டோ' (சுந்தர. 397); 'சீறி நின்றிது செப்புகின்றேனலேன்': 'தீரக் காய்ந்துழி நல்லவுந் தீயவாம்' (சீவக. 888); ஆறி நின்ற தறனன்று: 'கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட்டதனெடு நேர்' (குறள். 550).

(பி - ம்.) 2. நின்றது; அன்னது; அல்லேன்.
3. அருளன்று; அருளென்று; அருணன்று; அருளுற்று.
4. என்றன னன்னெறி; என்றெதிர்ந்தந்தணன்: கூறுவான். (61)

இராமபிரான் பணிவுரை

401. ஐய னங்கவை கேட்டற னல்லதும்
எய்தி னுலது செய்கவென் றேவினல்
மெய்ய நின்னுரை வேத மெனக்கொடு
செய்கை யன்ருே வறஞ்செயு மாறென்ருன்.

ஐயன்-இராமபிரான், அங்கு அப்பொழுது, அவை கேட்டு-(முனிவன் கூறிய) அவற்றைச் செவியுற்று, 'மெய்ய-உண்மை வடிவமானவரே! அறன் அல்லதும்-தருமமல்லாத காரியமும், எய்தினல்-(செய்யும்படி) நேர்ந்தால், அது செய்க என்று ஏவினல்-'அதைச்செய்' என்று தேவரீர் கட்டளையிட்டால், நின் உரை-உமது வார்த்தையை, வேதம் என கொடு-வேத வாக்கியமாகக் கொண்டு, செய்கை அன்ருே-(அதனைச்) செய்து முடிப்ப தன்ருே, அறம் செய்யும் ஆறு-(அடியேன்) கடமையைச் செய்யும் முறைமை' என்ருன்-என்று (பணிவுடன்) கூறினன்.

'குருவாகிய நீர் நியமிப்பது எதுவாயினும் அதனைத் தட்டின்றிச் செய்து முடிப்பதே என் கடமை' என்று பணிவும் இணக்கமும்தோன்ற இராமபிரான் கூறினன் என்பது கருத்து. ஒப்பு. அயோத். 72.

(பி - ம்.) 1. அங்கது; அன்னது; அல்லவும்; அல்லவாய்; அல்லவாம்.
2. எய்தினலிது; எய்திலைவை; எய்தினும்மது; செய்யவென் றேவினல்; செய்கவென்றேயினல்.
3. மெய்யினின்னுரை; மெய்யனின்னுரை; எனக்கொளாச்,

4. செய்வதன்றே; செப்புமாறென்றான்; (அடிமுழுதும்) : செய்யுமாறதீ தெற்கெனச் செப்பினன்; செய்கையாலறஞ்செய்யுஞ் செயலென்றான். (62)

தாடகை இராமபிரான் மீது சூலத்தை ஏவுதல்

402. கங்கைத் தீம்புன னாடன் கருத்தையம்
மங்கைத் தீயனை யாளு மனக்கொளாச்
செங்கைச் சூலவெந் தீயினைத் தீயதன்
வெங்கட் டீயொடு மேற்செல வீசினள்.

கங்கை தீம் புனல் நாடன் கருத்தை-கங்கை யாற்றின் இனிய நீர்வளம் பொருந்திய (கோசல) நாட்டையுடைய இராமபிரானது மனக்கருத்தை, அ மங்கை தீ அனையாளும்-பெண் வடிவங்கொண்ட தீயைப் போன்ற அத்தாடகையும், மனம் கொளா-தன் மனத்தில் அறிந்துகொண்டு, செம்மை கை-(தன்) சிவந்த கையில் உள்ள, சூலம் வெம் தீயினை-முத்தலைச் சூலமாகிய கொடிய நெருப்பை, தீய தன் வெம் கண் தீயொடு-(அதனினும்) கொடியதான தன் கொடுங் கண்ணின் நெருப்புடனே, மேல் செல-இராமபிரான் மேல் செல்லுமாறு வீசினள்-விட்டெறிந்தாள்.

தாடகையின் பெண் வடிவத்தை நோக்கி, முதலில் போர் தொடுக்கச் சற்றுத் தயங்கிய இராமபிரான், பின்பு முனிவன் சொற்களால் துணிவுகொள்ள, அவற்றை யுணர்ந்த தாடகை, தானே முந்திக்கொண்டாள்; அதனால் இராமபிரான் மேல் குற்றம் சிறிதும் இல்லாததாயிற்று. இவ்வாறே வான்மீகமும கூறுவது காண்க.

இக்கவியில் தீ மூன்று கூறிய ஆசிரியர், இராமபிரானைக் 'கங்கைத் தீம்புனல் நாடன்' என விசேடித்ததனால், தீ எவ்வளவாயினும் நீர் அதனை அவித்துவிடும் என்ற நயம் தோன்றக் கூறியிருத்தல் காண்க.

(பி - ம்.) 1. தண்புனல்: கருத்தெலாம்; கருத்தையும்.
2. திவினையான்மனதிற்கொளாச்; தியவடானுமனக்கொளாச்; கூற்றனை யாளுமனக்கொளாச்; தியனையாளுமனங்கொளாச்.
3. தியைத் தியவள்; தியவெவ்; தித்தன. 4. தியுடன்; தியொரு. (63)

403. புதிய கூற்றனை யாள்புகைந் தேவிய
கதிர்கொண் மூவிலைக் காலவெந் தீமுனி
விதியை மேற்கொண்டு நின்றவன் மேலுவா
மதியின் மேல்வருங் கோளென வந்ததே.

புதிய கூற்று அனையாள்-புதுமையான யமனைப் போன்ற அத்தாடகை, புகைந்து ஏவிய-மனம் புழுங்கி ஏவின, கதிர்கொள்-ஒளியைக் கொண்ட, மூவிலை-மூவிலைச் சூலமாகிய, காலம் வெம் தீ-ஊழிக்

காலத்துக் கொடிய தீயானது, முனி விதியை மேல்கொண்டு நின்ற வன் மேல்-முனிவன் கட்டளையை ஏற்றுக்கொண்டு (தாடகையை அழிக்க கருதி) நின்ற இராமபிரானிடத்து, உவாமதியின் மேல் வரும் கோள் என-நிறை மதியின் மேல் (அதனைப் பிடிக்க) வரும் இராகு வென்னும் கிரகத்தைப்போல, வந்தது—.

பெண் வடிவும், காலம் முதலியன கருதாமையும் உடையதாக லின் 'புதிய கூற்று' என்றார்; 398-ஆம் பாடலும் அதன் குறிப்பும் நோக்குக.

இராமபிரானுக்கு உவாமதியும் தாடகை யேவிய சூலத்துக்குக் கோளும் உவமை. அத்யாத்ம ராமாயணத்திலும் 'சந்திரனை விழுங்க வோடும் இராகுவைப்போலத் தாடகை இராமசந்திரனை நோக்கி ஓடி வந்தாள்' என்று கூறப்பெற்றுள்ளது.

(பி - ம்.) 2. கதிகொள்: முத்தலைக்; வேலெனும்: காலவல்லெந்தீ.
3. மேற்கொடு: மேலுயர்; மேலுவாப்; மேலுற.
4. பதியின்: பாய்ந்ததே. (64)

ஐயன் சூலத்தைப் பொடியாக்கல்

404. மாலு மக்கணம் வாளியைத் தொட்டதும்
கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்
கால னைப்பறித் தக்கடி யாள்விட்ட
சூல மிற்றதன் துண்டங்கள் கண்டனர்.

மாலும்-திருமாலாகிய இராமபிரானும், அ கணம்-அந்தக் கணத்தில், கோலம் வில் கால் குனித்ததும்-(தனது) அழகிய வில்லின் தண்டினைக் காலால் ஊன்றி வளைத்ததையும், வாளியை தொட்ட தும் - அம்பை விடுத்ததையும், கண்டிலர்-ஒருவரும் காணவில்லை; (ஆனால்), அ கடியாள் - கொடியவளாகிய அத்தாடகை, காலனை பறித்து விட்ட சூலம்-யமனிடமிருந்து பறித்து (இராமபிரான் மேல்) ஏவின சூலாயுதம், இற்றதன் துண்டங்கள் - முறிபட்டதனுலாகிய துண்டங்களை, கண்டனர்-(தரையிலே) பார்த்தார்கள்.

இராமபிரான், வில்லை யெடுத்து வளைத்து நாண்பூட்டி அம்பு தொடுத்தமை மிக விரைவில் நிகழ்ந்த தென்பதும், அவ்வம்பின் பயன் தப்பா தென்பதும் அழகுறக் கூறப்பட்டன; மேலே இதன் விளக்கம்போல 776-ஆம் பாடல் அமைந்திருத்தல் காண்க.

இராமபிரான் கைவில், அழகோடு வெற்றியும் உடையதாக வின், 'கோலவில்' என்றார். வில் கால் குனித்தல்-வில் தண்டின் ஒரு முனையைக் கீழூன்றிக் காலால் அழுத்திக்கொண்டு, வளைத்து, நாணை மறு முனையில் இழுத்துக் கட்டுதல். விரைவின் மிகுதியைப் புலப் படுத்தற்கு, அம்பு தொடுத்தலை முன்னும், வில் வளைத்தலைப் பின்னு மாக மாற்றிக் கூறினர். காலனைப் பறித்து: உருபு மயக்கம்; அன்றி,

காலனை அவனிருப்பிடத்தினின்றும் இழுத்து என்றலுமாம்; இதற்கு அவ்வாறிழுத்த காலனையே சூல வடிவாக்கி யேவினள் என்க. சூலத்தால் இராமபிரான் மாய்வது திண்ணமென்று கருதி அவள் ஏவ, அது பல துண்டங்களாகி விழுந்த தென்றதனால், இராமபிரானது நிகரிலா ஆற்றலைப் புலப்படுத்தியவாறும்.

(பி - ம்.) 2. கோலக்கால்வில்; கோலிவிற்கால்.
3. காலனைப்பிரித்து; காலனிற்செறுத்து: கொடியாள்: கொண்ட.
4. சூலமற்றது; சூலமற்றன; சூலமற்றவத்; சூலமற்றதன்: சூலமிற்றவத்; சூலமிற்றதின்; சூலமிற்றது; சூலமிற்றன; சூலமிற்றுகு; கண்டதே. (65)

405. அல்லின் மாரி யனைய நிறத்தவள்
சொல்லு மாத்திரை யிற்கட றூர்ப்பதோர்
கல்லின் மாரியைக் கைவகுத் தாளது
வில்லின் மாரியின் வீரன் விலக்கினான்.

(சூலம் இற்று வீழ்ந்த பின்னர்), அல்லில் மாரி அனைய நிறத்தவள்-இராக்காலத்து மேகம் போன்ற கரு நிறமுடைய அத்தாடகை, சொல்லும் மாத்திரையில்-ஒரு சொல் சொல்லி வாய் மூடுமளவில், கடல் தூர்ப்பது ஓர் கல்லின் மாரியை-கடலையும் தூர்த்துவிடத்தக்க ஒரு கல் மழையை, கை வகுத்தாள்-தன் கைகளால் வாரி வீசினாள்; அது-அக்கல் மழையையும், வீரன்-இரகு வீரனாகிய இராமபிரான், வில்லின் மாரியின்-தன் கை வில்லினின்றும் வரும் (அம்பு) மழையால், விலக்கினான்-(தங்கள் மேல் படாதவாறு) தடுத்துக்கொண்டான்.

அல்லின் மாரியனைய நிறம்: தாடகையின் கருமைமிகுதி கூறியவாறு. சொல்லும் மாத்திரையில்: விரைவுக் குறிப்பு. கடல் தூர்ப்பது ஓர் கல்மாரி; அவள் வீசிய கற்களின் மிகுதியைக் கூறியபடி. தாடகை வீசிய கற்கள் அனைத்தையும் இராமபிரான் தன் பாணங்களால் பயனறச் செய்தான். 'கல்லின் மாரி' என்றதற் கேற்றவாறு 'வில்லின் மாரி' எனவும் உருவகமாக்கினார். கல் மாரி-கல்லாகிய மழை; இன்சாரியை. இராமபிரானைப் பலவிடத்தும் 'வீரன்' என்பர் ஆசிரியர்.

தாடகையை 'அல்லொக்கும் நிறத்தினாள்' என அடுத்த கவியிலும், 'அல்லிறுத்தன தாடகை' (214) என ஆரணிய காண்டத்திலும் கூறுதல் காண்க.

(பி - ம்.) 1. அல்லினையதனைய: நிறத்தவன்.
2. கடற்றூர்ப்பதோர்; கடலார்ப்பதோர்; கடறூர்ப்பன.
3. வகுத்தாள்கையின்; கைவகுத்தாளதை. 4. மாரியால். (66)

இதன் பின் சில பிரதிகளில் உள்ள ஓர் அதிகப் பாடல் வருமாறு:—

ஏக்க மோட விமையவ ரெங்கனும்
வாக்கின் முந்துற மாயை வளர்ப்பவள்
மூக்கும் வார்செவி யும்முறை போயிடத்
தாக்கும் வள்ள லிளவலுந் தாக்கினன்.

இங்கே சில பிரதிகளில் மற்றும் ஒருபாடல்:—

விலக்கி நின்றபின் வெங்கணை விரைவினின் வாங்கிக்
கலக்கும் வானவர் தவிர்ந்திடக் காலனுங் களிப்ப
இலக்கில் வையகத் திடுக்கணு மிமையவர் துயரும்
உலக்க வூழித்தீ யொப்பதோர் சுடுசர முய்த்தான்.

## தாடகை வதம்

(வேறு)

406. சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரங் கரிய செம்மல்
அல்லொக்கு நிறத்தி னாண்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கு நெஞ்சிற் றங்கா தப்புறங் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர்சொன்ன பொருளெனப்போயதன்றே.

கரிய செம்மல்-கரிய திருமேனியையுடைய இராமபிரான், சொல் ஒக்கும்-(முனிவர்களின் சாபமாகிய) சொல்லைப் போன்ற, கடிய வேகம்-மிக்க வேகத்தையும், சுடு-(தப்பாது) அழிக்குந் தன்மையையும் உடைய, சரம்-ஒரு பாணத்தை, அல் ஒக்கும் நிறத்தினாள் மேல் விடுதலும்-இருளைப் போன்ற கருநிறமுடைய அத்தாடகை மேலே ஏவுதலும், (அது), வயிரம் குன்றம் கல் ஒக்கும் நெஞ்சில் தங்காது-வைரமலையாகிய கல்லைப் போன்ற அவள் மார்பினுள் (பாய்ந்து அங்கே) தங்காமல், அ புறம் கழன்று-பின்புறமாக உருவிக்கொண்டு, கல்லா புல்லர்க்கு-கல்வியறிவில்லாத அற்பர்களுக்கு, நல்லோர் சொன்ன-நல்லியல்புடைய பெரியோர் எடுத்துச் சொன்ன, பொருள் என-பொருள்மொழி (உபதேசம்) போல, போயது-போய்விட்டது. அன்று, ஏ-அசை.

அற்பர்களுக்கு நல்லோர் எவ்வளவு நன்மொழிகள் எடுத்துக் கூறினாலும் அக்கீழோர் அவற்றைச் சிறிதும் மனத்திற் கொள்ளாது விட்டிடுவர்; ஆதலின், தாடகையின் உடலில் பாய்ந்து அப்பால் நீங்கிய இராம பாணத்தின் செயலுக்கு இதனை உவமை கூறினர்.

'சொல்' என்றது முனிவர்கள் சாப மொழி; அது, விரைவிலும், தவறாமலும் பயனைத் தருவது; எனவே, இராமபிரானது அம்புக்கு அதனை உவமையாக்கி, 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' என்றார். கடிய வேகமும், சுடுந்தன்மையும் பொதுத் தன்மை. கடிய வேகம்: ஒருபொருட் பன்மொழி.

கரியசெம்மல்: 'கரியசெம்மல் ஒருவனைத் தந்திடுதி'(325). 'அல் லொக்கு நிறத்தினள்': முன் பாட்டின் குறிப்புப் பார்க்க. சாபமொழி: சுந்தர. 1192. சுடுசரம்; 547; ஆரணிய. 441, 511; கிட்கிந்தா. 292. தாடகை மார்பிற் பாய்ந்த சரம்: ஆரணிய. 292. தாடகை மாய்ந்தது இராமபிரானுடைய ஒரே அம்பினால் என்பது 738: வி. பா. பன்னிரண்டாம் போர்—1.

(பி - ம்.) 2. மல்லொக்கும்; வடிவினள்; படிவத்தாள்; விடவது: விடுத்தலும்; ஆழ்தலும்: அருவிக்குன்றக்; ஆழ்ந்தவம்பு. 3. கடந்நு: தங்காப். 4. புல்லற்கு: சொல்லும்: மறையென; உரையென: போயிற்றன்றே. (67)

### தாடகை வீழ்ந்தமை

407. பொன்னெடுங் குன்ற மன்னான் புகர்முகப் பகழி யென்னும்
மன்னெடுங் கால வன்காற் றடித்தலு மிடித்து வானில்
கன்னெடு மாரி பெய்யக் கடையுகத் தெழுந்த மேகம்
மின்னொடு மசனி யோடும் வீழ்வதே போல வீழ்ந்தாள்.

பொன் நெடு குன்றம் அன்னான்-பொன் மயமான பெரிய மேரு மலை போன்ற (கம்பீரத் தோற்றமுடையவனான) இராமபிரானது, புகர் முகம் பகழி என்னும்-கூரிய வாயையுடைய அம்பாகிய, மன் நெடு காலம் வல் காற்று-மிகப்பெரிதாகிய ஊழிக் காலத்து வலிய காற்று, (சண்ட மாருதம்), அடித்தலும்-தாக்கியவுடனே, கடை யுகத்து-யுக முடிவுக் காலத்திலே, வானில்—ஆகாயத்தில், இடித்து—பேரிடியிடித்து, கல் நெடு மாரி பெய்ய-பெரிய கல் மழையைப் பொழி யும் பொருட்டு, எழுந்த—மேலெழுந்த, மேகம்-மேகமானது, மின் னொடும் அசனியோடும் - மின்னலோடும் இடியோடும், வீழ்வதே போல-(கீழே) விழுவதையொப்ப, வீழ்ந்தாள்—(உயிரற்று) விழுந் தாள்.

யுகாந்த காலத்தில் அளவு கடந்த வலிமையோடு வீசும் சண்ட மாருதத்தின் தாக்குதலைப் பொறுது சிதைந்து விழுந்த மேகம் போல இராமபிரானுடைய பாணத்தால் தாடகை நிலை குலைந்து, உயிரிழந்து விழுந்தாள். இராம பாணத்துக்குச் சண்டமாரு தமும், தாடகை வீழ்ந்தமைக்கு அம்மாருதத்தால் மோதுண்டமேகம் சிதைந்து விழுதலும் உருவகத்தை அங்கமாகவுடைய உவமை. மேகம், மின்னொடும் அசனியோடும் வீழ்தல்: தாடகையின் கோரப் பற்களுக்கு மின்னலும். அவள் அலறிய குரலுக்கு இடியும், அவளுட லுக்கு மேகமும் உவமை. தாடகைக்கு மேகம்; 405.

கரிய திருமேனியுடைய இராமபிரானை, அழகும் கம்பீரமும் பற்றிப் 'பொன்னெடுங் குன்றமன்னான்' என்றார். புகர் முகப் பகழி- 'ஒருவகை அம்பு' எனக்கூறி, 'புண்டரீகத்தின் முகையன்ன புகர் முகம்

விட்டான்' (யுத்த. 3748) என்பதனை ஒப்புக் காட்டுவாருமுளர்; புகர்-ஒளியும் ஆம்.

தாடகை உயிரிழந்தபின் அவளுக்கு அரக்கி வடிவு நீங்கி முன்னைய இயக்கிவடிவம் கிடைத்ததென்றும். அவ்வடிவத்துடன் அவள் இராமபிரானை வணங்கி அவனருளால் நல்லுலகம் அடைந்தாள் என்றும் அத்யாத்ம ராமாயணம் கூறும்

(பி - ம்.) 1. பொன்னிறக்; பகழிதன்னால்; பகழியொன்றால்.
2. தன்னெடும்; அந்நெடுங்; வெங்காற்று; வெங்கால்: அடுத்தலும்; இடித்தலும்; இடித்த.
4. இடியினேடும்: போலும்; என்ன. (68)

408\. பொடியுடைக் கான மெங்குங் குருதிநீர் பொங்க வீழ்ந்த
தடியுடை யெயிற்றுப் பேழ்வாய்த் தாடகை தலைக டோறும்
முடியுடை யரக்கற் கந்நாள் முந்தியுற் பாத மாகப்
படியிடை யற்று வீழ்ந்த வெற்றியம் பதாகை யொத்தாள்.

பொடி உடை(ய)-புழுதி மிகுந்த, கானம் எங்கும்-அப்பாலை வனம் முழுதும், குருதி நீர் பொங்க-இரத்த வெள்ளம் பெருகும்படி, வீழ்ந்த -(தரையிலே) விழுந்த, தடி உடை(ய) எயிறு-(பல பிராணிகளின்) தசைகள் பொருந்திய கோரப்பற்களையும், பேழ்வாய்-பிளந்த வாயையும் உடைய, தாடகை-தாடகையானவள், தலைகள் தோறும்-பத்துத் தலைகளிலும், முடி உடை(ய) அரக்கற்கு-கிரீடம் அணிந்த அரக்கனாகிய இராவணனுக்கு, முந்தி-(அவன் அழிவதற்கு) முன்னே, உற்பாதம் ஆக-(அவ்வழிவை அறிவிக்கும்) தீ நிமித்தமாக, அ நாள்-அந்த நாளில், அற்று படிஇடை வீழ்ந்த-அறுந்து தரையிலே விழுந்த, வெற்றி பதாகை ஒத்தாள்-(அவனுடைய) வெற்றிக் கொடிபோல் இருந்தாள். அம்: சாரியை.

இராவண சங்காரத்துக்காகவே அவதரித்த ஸ்ரீராமபிரானால் முதன் முதலில் சங்கரிக்கப்பட்டவள் தாடகை; இராவணனுக்குத் தொடர்புடைய அவள் அழிந்து விழுந்தமை, இராவணனுடைய வெற்றிக்கொடி அறுந்து விழுந்தது போலும் எனத் தற்குறிப்பேற்றமாகச் சூசிப்பிக்கின்றார் ஆசிரியர். வெற்றிக்கொடி யற்று வீழ்தல், கொடிய தீநிமித்தமாகும். உற்பாதம்-பின்வரும் தீமைக் கறிகுறியாக முன்னிகழும் தீநிமித்தம். இவ்வண்ணமே சூர்ப்பணகைக்கு இழிவு உண்டாக்கியதை, 'இராவணன் மணியுடை மகுடத், தலைதுமித்தற்கு நாட்கொண்ட தொத்ததோர் தன்மை' (ஆரணிய. 314) எனப் பின்னுங் கூறுதல் காண்க.

தடி-'தடித்' என்னும் வடசொல்லின் விகாரமெனக் கொண்டு 'மின்னொளி' எனப் பொருள் கொள்ளலும் ஆம்; 'தடியுடை முகிற் குலம்' (372).

(பி - ம்.) 1. பொங்கி; போர்ப்ப; வீழத்; வீழ.
2. தாடகைத் தடங்கணாளும்; தாடகைக்கொடிதான் வீழ்தல்; தாடகைக் கொடியாள் வீழ்தல்.
3. அரக்கர்க்கெல்லாம்; அரசற்கந்நாள்; அரக்கர்க்கந்நாள்; அரக்கரந் நாள்; ஆகிப்.
4. படிமிசை; இற்று; இட்டு; வீழும்; வென்றியம்பதாகை; வெற்றி வெம்பதாகை. (69)

409. கான்றிரிந் தாழி யாகத் தாடகை கடின மார்பத்
தூன்றிய பகழி வாயூ டொழுகிய குருதி வெள்ளம்
ஆன்றவக் கான மெல்லா மாயின தந்தி மாலைத்
தோன்றிய செக்கர் வானந் தொடக்கற்று வீழ்ந்த தொத்தே.

தாடகை-தாடகையினது, கடினம் மார்பத்து ஊன்றிய-வலிய மார்பிலே தைத்த, பகழி வாய் ஊடு ஒழுகிய-அம்பு (திறந்த) வாயினின்றும் ஊற்றிய, குருதி வெள்ளம்-இரத்தப் பெருக்கானது, அந்தி மாலை தோன்றிய-மாலைக் காலத்திலே உண்டான, செக்கர் வானம்-செவ்வானப் பரப்பு, தொடக்கு அற்று-(தனக்கு ஆகாயத்திலே) பிடிப்பு நீங்கியதனால், வீழ்ந்தது ஒத்து-(தரையில்) வீழ்ந்துள்ளது போன்ற தோற்றத்தோடு, கான் திரிந்து ஆழி ஆக-அவ்வனம் (தன்) தன்மை மாறிக் கடலாகும்படி, ஆன்ற-விசாலமான, அ கானம் எல்லாம்-அவ்வனத்தின் பரப்பு முழுதும், ஆயினது-பரவியது.

ஆன்ற: அகன்ற என்பதன் திரிபு. குருதி வெள்ளம் ஆயினது என்க.

தாடகையின் மார்பிலிருந்து வெளிப்பட்ட குருதி வெள்ளத்தால், அக்காடு இரத்தக் கடலாயிற்று; அக்குருதிநீர்ப்பரப்பின் தோற்றம், ஆகாயத்திலே உண்டான செவ்வானப் பரப்பு ஒன்று, அங்கே தன் பற்றுக்கோடற்றுத் தரையில் வீழ்ந்திருந்தது போன்றது என்றவாறு. இதனால் தாடகையின் பேருடல் தோற்றம் புலப்படும்.

'செவ்வானம் தொடக்கற்று வீழ்ந்தது போலும்' என்றது இல் பொருளுவமை.

செக்கர் வானத்துக்குக் குருதி: 956; 'பருதிசெவ்வானம் பரந்துருகி யன்ன, குருதியா றுவதுகொல் குன்று': (பு: வெ. 70). தாடகை வீழ்ந்தது சூரியாஸ்தமனத்துக்குச் சற்று முன் என்பர் வான்மீகி.

(பி - ம்.) 1. கான்றிருந்தாழியாகத்; தான்றிருந்தாழியாகத்; தான்றிரிந்தாழி யாகத்; கான்றெரிதலையளாய.

2. வாயோடு: நீத்தம். 3. அன்றபே ருலகமெங்கும்; ஆயின; மாலை.

4. வானின்றெடக்கற்று; வானந்தொடக்கற; வானத்தொடக்கற்று; வீழ்ந்ததொத்த; வீழந்ததொத்தாள்; வீழ்வதொத்தே; வீழ்வவொத்த. (70)

### தாடகை யமனுக்கு முதல் விருந்தாயினமை

410. வாசநாண் மலரோ னன்ன மாமுனி பணிம ருத
காசுலாங் கனகப் பைம்பூண் காகுத்தன் கன்னிப் போரில்
கூசுவா ளரக்கர் தங்கள் குலத்துயிர் குடிக்க வஞ்சி
ஆசையா லுழலுங் கூற்றுஞ் சுவைசிறி தறிந்த தன்றே.

வாசம் நாள் மலரோன் அன்ன மா முனி பணிமருத-நறுமணம் பொருந்திய புதிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனுக்கொப்பான பெருமையுடைய விசுவாமித்திர முனிவனது கட்டளையை மறுக்காத, (அதன்வழி நின்ற), காசு உலாம் கனகம் பசுமை பூண் காகுத்தன்-இரத்தினங்களோடு விளங்கும் பசும்பொன்னுலாகியஆபரணங்களை யணிந்த இராமபிரானுடைய, கன்னி போரில்-முதல் போரிலேயே, கூசு வாள் அரக்கர் தங்கள் குலத்து-(தான் கிட்ட நெருங்குதற்குக்) கூசக் காரணமான, வாள் முதலிய படைகளையுடைய இராக்கதரின் குலத்தில் உள்ள, உயிர் குடிக்க அஞ்சி-உயிர்களைக் கொள்வதற்குப் பயந்து, ஆசையால்-(அது எப்போது வாய்க்கும் என்ற) ஆசையோடு, உழலும்-(தருணம் பார்த்துத்) திரிகின்ற. கூற்றும்-யமனும், சுவை சிறிது அறிந்தது-(அரக்கர் குலத்து உயிரின்) சுவையைச் சிறிது அறியலாயிற்று. அன்று, ஏ-அசை.

கூற்று : அஃறிணைச் சொல்; 'அறிந்தது' என அஃறிணை முடிபு கொண்டது.

இராவணனுடைய ஆட்சியில், அரக்கர் ஒருவரையும் அணுக முடியாமல் அஞ்சித் தருணம் பார்த்துத்திரிந்த யமனும், இராமபிரான் செய்த முதல் போரிலேயே பின்பு மிகப்பல அரக்கர்களின் உயிரைச் சுவைப்பதற்குத் தொடக்கமாகத் தாடகையின் உயிரைச் சுவைத்தான் எனச் சமத்காரமாகக் கூறுகின்றார். கன்னிப் போர்-முதற்போர்; இங்கே பெண்ணோடு செய்த போர் என்ற குறிப்பும் பெறப்படும். காகுத்தன் - காகுத்ஸ்தன்=இராமன்; 'ககுத்ஸ்தன்' என்ற காரணப் பெயர்கொண்ட அரசன் வமிசத்தில் வந்தவன்; தத்தித நாமம். காசு-இரத்தினம். கூசு வாள்-'காண்போர் கண் கூசுதற்குக் காரணமான வாள்' என்றலுமாம்.

விசுவாமித்திர முனிவன், மிகக் கடுந்தவத்தால் 'பிருமவிருடி' என்ற சிறப்பைப் பெற்றதனுலும், உலகத்தையே வேருகப் படைப் பேன் என்று துணிந்து படைக்கத் தொடங்கியதனுலும் 'மலரோ னன்ன மாமுனி' எனப்பட்டான்; 318-விசேடக் குறிப்புப் பார்க்க.

உலாம்; 'உலாவும்' என்ற செய்யுமென்னெச்சத் திரிபு.

கன்னிப் போர்-முதற் போர்: சீவக. 448, 806; சூளா. அரசி யல். 76; பெரிய. கண்ணப்ப. 47.

(பி - ம்.) 1. மாமலரோன்; மறைமுனி பணிமருத; மாமுனிபணிமாருத; மாமுனி வருண்மருத.
2. கனகமைம்பூண்: கன்னிபோரில்.
3. கூசிவாள்; ஆருயிர்; குடிப்ப; கொள்ள.
4. உழன்று; கூற்றம்; அறிந்தவன்றே. (71)

411. யாமுமெம் மிருக்கை பெற்றே முனக்கிடை யூறு மில்லைக்
கோமகற் கினிய தெய்வப் படைக்கலங் கொடுத்தி யென்ன
மாமுனிக் குரைத்துப் பின்னர் விற்கொண்ட மழையன் னன்மேற்
பூமழை பொழிந்து வாழ்த்தி விண்ணவர் போயி னரே.

விண்ணவர்-தேவர்கள், 'யாமும் எம் இருக்கை பெற்றேம்-நாங்களும் எங்கள் இருப்பிடங்களை (மீண்டும்) பெற்றவர்களானேம்; உனக்கும் இடையூறு இல்லை-(இனி) உமக்கும் (வேள்வி முதலிய நற் காரியங்களுக்கு) யாதோர் இடையூறும் இராது; கோமகற்கு-சக்கர வர்த்தி குமாரனுகிய இராமனுக்கு, இனிய தெய்வம் படைக்கலம் கொடுத்தி-நல்ல, தெய்வத்தன்மையுள்ள அஸ்திரங்களைக் கொடுப் பீராக' என்ன-என்று, மா முனிக்கு உரைத்து - பெருமைமிக்க விசு வாமித்திர முனிவனிடம் கூறி, பின்னர்-பின்பு, வில் கொண்ட மழை அன்னன் மேல்-இந்திர வில்லைத் தன்னிடத்தே கொண்ட மேகம் போன்ற இராமபிரான் மேல், பூ மழை பொழிந்து-கற்பகப் பூமாரி பெய்து, வாழ்த்தி-ஆசீர்வதித்து, போயினர்-தம்மிருப்பிடஞ் சென்ற னர். ஏ: ஈற்றசை.

ஆகாயத்திலே கூடி, இராமபிரானது கன்னிப்போரைக் கண் ணுற்ற தேவர்கள், தாடகை வதம் நிகழ்ந்தவுடன் மகிழ்ந்து, முனிவ னிடம் வந்து, 'இராவண வதத்துக் கறிகுறியாக இது இப்போது நிகழ்ந்தது; இனி இராவணனும், அவனைச் சார்ந்த கொடியவர்களும்

அழிவது திண்ணம்; அதனால் எல்லோர்க்கும் நன்மையே விளையப் போகின்றது' என்றும், 'இனி இராமனுக்கு நீர் தெய்வப்படைகளை அவற்றிற்குரிய மந்திரோபதேசங்களுடன் அளிப்பீராக' என்றும் கூறி, இராமபிரான் மீது கற்பகப்பூமாரி பெய்து வாழ்த்தி, தம் இருப்பிடம் சென்றனர் என்க. தெளிவு பற்றி 'எம் இருக்கை பெற்றேம்' என எதிர்காலம் இறந்த காலத்தாற் கூறப்பெற்றது; கால வழுவமைதி.

கையில் வில்லேந்தி நின்ற இராமபிரானுக்கு, இந்திர வில்லுடன் கூடிய மேகம் உவமை. தெய்வப் படைக்கலம்-தெய்வங்களை அதிதேவதையாகக் கொண்ட அஸ்திரங்கள்; விசுவாமித்திர முனிவனிடமிருந்து இவற்றை இராமபிரான் பெறுதல் மேல் வேள்விப் படலத்துட் கூறப்படும்.

விற்கொண்ட மழையன்னான்: 'நீலக்கார்முகில்....வரிவி லேந்தி வருவதே போலும் மால்' கிட்கிந்தா. *(304)*.

(பி - ம்) 1. யாமுமே; பெற்றோம்; பெற்றும்; எமக்கிடையூறுமில்லை; இனியிடையூறொன்றில்லை; உமக்கிடையூறுமில்லை; முனிக்கிடையூறுமில்லை; பணிக்கிடையூறுமில்லை. 2. இனிநீ; என்று.

3. உரைத்தபின்னர்; பின்னை; பின்னும்; மழையனான்; மழையினார்; மழையினான். (72)

தாடகை வதைப் படலம் முற்றும்.



# 8. வேள்விப் படலம்

வேள்விப் படலம் : வேள்வியின் நிகழ்ச்சிகளைக் கூறும் படலம் என விரியும். இப்படலம், முதற் பதினைந்து பாடல்கள் **'கவுசிகை யாற்றுப் படலம்'** என்றும், அடுத்து வரும் 23 பாடல்கள் **'மாவலி யரணப் படலம்'** என்றும் எஞ்சிய 21 பாடல்கள் **வேள்விப் படலம்** என்றும் மூன்று பகுதிகளாகவும், இப்பெயர்களும் சிற்சில வேறு பாட்டுடனும் பலவாருகச் சுவடிகளில் காணப்படுகின்றது.

**கோசிகமுனிவன் இராமபிரானுக்குப் படைக்கலங்கள் அளித்தல்**

412. **விண்ணவர் போய பின்றை விரிந்தபூ மழையி ஞலே**
**தண்ணெனுங் கானநீங்கித் தாங்கருந் தவத்தின் மிக்கோன்**
**மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்**
**அண்ணறன் சொல்லே யன்ன படைக்கல மருளினனே.**

விண்ணவர் - தேவர்கள், விரிந்த பூ மழையினுலே - (தாம் பொழிந்த) மிக்க பூ மழையினுல், தண் எனும்-குளிர்ச்சியுற்ற, கானம் நீங்கி-அக்காட்டைவிட்டு, போய பின்றை-போனபிறகு, தாங்கு அரு தவத்தின் மிக்கோன்-(எதனையும்) தாங்கவல்ல அரிய தவத்தினுல் மேம்பட்ட விசுவாமித்திர முனிவன், மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்து அ(ன்)ன-பூமியிலுள்ள மக்களின் வறுமையாகிய நோய்க்கு (அதனைத் தீர்க்கும்) மருந்து போன்றவனும், வெண்ணெய் அண்ணல்-வெண்ணெய்நல்லூரில் வாழ்ந்த பெருமைமிக்கவனுமான, சடையன் தன்-சடையப்ப வள்ளலது, சொல்லே அன்ன-சொல்லையே ஒத்த, படைக்கலம்-பல அத்திரங்களையும், அருளினுன்-(இராமபிரானுக்கு) (மந்திரங்களுடன்) கொடுத்தருளினுன். ஏ: அசை.

தாடகை வதம் நிகழ்ந்தது, மாலை வேளையில் சூரியாஸ்தமனத் திற்கு முன் என்றும், அதன்பின் அவ்விராப் பொழுது அங்கேயே தங்கி, மறுநாட்காலையில் முனிவன் இராமபிரானுக்கு அஸ்திரங்களை முறைப்படி கொடுத்தருளினுனென்றும், அந்த அஸ்திரங்களின் பெயர் ஆற்றல் முதலியவற்றை விரிவாகவும் **வான்மீகம்** கூறுகின்றது.

பூ மழையினுல் குளிர்ந்த கானம் என்றமையின், முன்னே வெப்பமிக்கது என்பது பெறப்படும். சடையப்ப வள்ளல், தாம் வாழ்ந்த காலத்தில், வறுமையுற்ருேர்க்குப் பேராதரவாயிருந்து அவர்களை வாழ்வித்த பெருமையுடையவராதலின், 'மண்ணவர்

வறுமை நோய்க்குமருந்தன சடையன்' என்றார். கம்பநாடர், தம்மைப் பெரிதும் பாதுகாத்த இவ்வள்ளலிடத்துத் தமக்குள்ள நன்றியறிதலைப் புலப்படுத்தும் வகையில், தம் காவியத்திலே பலவிடங்களிலும் இவ் வள்ளலைப் பாராட்டிக் கூறுகின்றார்: 628; யுத்த. 624; 2199; 4281 காண்க. இது புலவர்களுக்கு இயல்பு; புகழேந்தியார் **நளவெண்பா விலே** சந்திரன்சுவர்க்கி என்னும் சிற்றரசனை இவ்வாறு பாராட்டுதல் காண்க.

சடையன் சொல், என்றும் தவறாத உறுதியுடையது; அது போலப் பயனளித்தலில் தவறாத படைக்கலம் என உவமித்தார். அவ்வுறுதியை யறிவித்தற்குச் 'சொல்லே யன்ன' எனத் தேற்றே காரத்துடன் கூறியுள்ளார். வறுமை நோய்: உருவகம்.

மூன்றாம் அடி, 'கண்ணொடு முகமுங் கையுங் கால்களுங் கமலம் பூத்த' என்று ஒரு பிரதியில் உள்ளது; இப்பாடத்தின்படி 'அண்ணல்' என்பது இராமபிரானைக் குறிக்கும்.

(பி - ம்.) 1. போனபின்னை; பின்னர்; விரிந்த பூ மழையிலே தான்; விளிந்தவள் குருதி நீரால்.
2. தண்ணொடும்; தண்ணறும்: நீங்கத்; நீந்தித்: தாக்கரும்: மிக்கான்: மேலான்.
3. மண்ணுளோர்: மருந்தன்ன சடையன்; மருந்தெனுஞ் சடையன்: கண்ணொடு முகமுங் காலுங் கைகளுங் கமலம் பூத்த; கண்ணொடு முக மும் வாயும்; கண்ணொடு மூக்கும் வாயும்; கண்ணொடு முகமுங் கையும் கால்களுங் கமலமான; காலுந்தாமரையிற் கொண்ட.
4. சொல்லே யொத்த; அருளினனுல். (1)

413. ஆறிய வறிவன் கூறி யளித்தலு மண்ண றன்பால்
ஊறிய வுவகை யோடு மும்பர்தம் படைக ளெல்லாம்
தேறிய மனத்தான் செய்த நல்வினைப் பயன்க ளெல்லாம்
மாறிய பிறப்பிற் றேடி வருவபோல் வந்த வன்றே.

ஆறிய அறிவன் - பொறிகளடங்கிய, மெய்யுணர்வினனாகிய விசுவாமித்திர முனிவன், உம்பர்தம் படைகள் எல்லாம்-தேவர்களின் படைக்கலன்களை யெல்லாம், கூறி-(அவற்றிற்குரிய தேவர், மந்திரம், செலுத்துதல், மீட்டல், அவற்றின் ஆற்றல் முதலிய எல்லாவற்றை யும்) எடுத்துச் சொல்லி, அளித்தலும்-(இராமபிரானுக்குக்) கொடுத் தருளியவுடன், (அப்படைகள்), தேறிய மனத்தான்-தெளிந்த மன முடைய ஒருவன். செய்த நல்வினை பயன்கள் எல்லாம்-(ஒரு பிறப் பிலே) செய்த புண்ணியப் பயன் முழுதும், மாறிய பிறப்பில்-(அவனு டைய) மறுபிறப்பிலே, தேடிவருவபோல்-(அவனைத்)தேடிக்கொண்டு வந்தடைவன போல, அண்ணல் தன்பால்-இராமபிரானிடத்து, ஊறிய உவகையோடும்-(மேன் மேலும்) சுரந்த மகிழ்ச்சியுடன், வந்த-வந்தடைந்தன. அன்று, ஏ-அசை.

ஆறுதல்-அடங்குதல்: 'ஆறுமைம்பொறி நின்னையுமாணெனக் கூறும்' (சுந்தர. 625). தெய்வப் படை ஒவ்வொன்றும் இந்திரன், பிரமன் முதலிய ஒவ்வொரு தெய்வத்தைத் தனக்கு அதிதேவதையாகக் கொண்டு, அதனைச் செலுத்துதற்கும். மீட்டற்கும் உரிய மந்திரங்களுடன், வெவ்வேறு வகையான ஆற்றல் படைத்ததாகும்; ஆதலால், அப்படைகளைக் கொண்டு, எத்தகையோரையும் எளிதில் வெல்லலாம். இப்படைகளை யெல்லாம் பிருசாசுவன் என்னும் முனிவன் தன் மக்களாகப் பெற்றெடுத்தான்; விசுவாமித்திர முனிவன் அரசனாக இருந்தபோது இப்படைகளை அப்பிருசாசுவ முனிவனிடமிருந்து பெற்றனன்: பின்பு, இப்படைகளையும் தநுர்வேதத்திற் கண்ட எல்லா அஸ்திர சஸ்திரங்களையும் பற்றிய எல்லாம் தனக்கு நன்கு விளங்கவும், அவற்றைப் பயன்படுத்தவும் சிவபெருமானிடத்து வரம் பெற்றனன். இவையெல்லாம், முனிவனாகிய இவனிடத்து, வறிதே சோம்பியிருந்தன; ஆதலால் இப்போது தம்மைப் பயன்படுத்தத் தகுந்த பாத்திரமாகிய இராமபிரானை அடைவதில் மிக்க மகிழ்ச்சியுற்றன. இவற்றால், பின்னே இராவண வதம் முதலியன எளிதின் நிகழ்ந்தன. விசுவாமித்திர முனிவனுக்கும் இவற்றை இராமபிரானிடம் சேர்ப்பித்தலே கருத்து; தேவர்களும் அதனைச் செய்யுமாறு கட்டளையிடவே முனிவன், அன்போடும் அருளோடும் அவற்றை யிராமபிரானிடம் சேர்ப்பித்தனன் என்று வான்மீகம் கூறும். இவற்றையெல்லாம் முன்னுணர்ந்தே வசிட்ட முனிவர், 'நின்மகற்குறுத்தலா கலா வுறுதி யெய்துநாள், மறுத்தியோ' என்றும் 'நின்மகற்கு அளவில் விஞ்சை வந்து, எய்துகாலம் இன்று எதிர்ந்தது' என்றும் (329, 330) கூறினர் போலும். இராமபிரானை யடைந்த அப்படைகளின் செயல் அடுத்த பாடலிற் கூறப்படும்.

இருவினைப் பயனும், செய்தவனைத் தொடர்ந்து சென்று அடைதல் உண்டாயினும், இங்கே நல்வினைப் பயனே மிகப் பொருத்தமுடையதாகலின் அதனை உவமித்தார். வினைப்பயன் செய்தவனைத் தொடர்ந்து சென்றடைதல்: 29-குறிப்பு; 'பல்லாவு ளுய்த்து விடினும் குழக்கன்று, வல்லதாந்தாய்நாடிக்கோடலைத்-தொல்லைப், பழவினையு மன்ன தகைத்தேதற் செய்த, கிழவனை நாடிக் கொளற்கு (நாலடி. 101). தெளிவில்லாத மனமுடையவன், நல்வினை தீவினைகளைப் பகுத்துணர்ந்து திறம்படச் செய்யமாட்டாதவனவன்; ஆதலால், 'தேறிய மனத்தான் செய்த நல்வினை' என்றார்.

(பி - ம்.) 2. உம்பர்தம் உபசங்காரம்.
3. தேறின மனத்தால்; செய்த நல்வினையுதவி; நல்வினைக் குதவி; முன்செய் நல்வினைக்குதவி; நல்வினையுதவி: செய்வான்.
4. மாறிய பிறப்புத்; மாறியொர் பிறப்பிற்; வந்ததன்றே. (2)

## இராமபிரானை யடைந்த படைகளின் செயல்

414. மேவினெம் பிரித லாற்றேம் வீரநீ விதியி னெம்மை
யேவின செய்து நிற்று மிளையவன் போல வென்று
தேவர்தம் படைகள் செப்பச் செவ்விதென் றவனு நேரப்
பூவைபோ னிறத்தினுற்குப் புறத்தொழில் புரிந்த வன்றே.

தேவர்தம் படைகள் - திவ்வியாஸ்திரங்களெல்லாம், (இராம பிரானை நோக்கி), மேவினெம்-(நாங்கள் உன்னை) அடைந்திட்டோம்; பிரிதல் ஆற்றேம்-(இனி ஒருபோதும் உன்னைவிட்டு) நீங்ககில்லோம்; வீர-இரகுவீரனே! நீ விதியின் எம்மை ஏவின-நீ முறைப்படி எங்களை ஏவும் பணிகளை, இளையவன் போல செய்து நிற்றும்-உன் தம்பியைப் போலவே (நாங்களும் எப்போதும்) செய்துகொண்டிருப்போம்; என்று செப்ப-என்று சொல்ல, அவனும்-இராமபிரானும், 'செவ்விது' என்று நேர-'நல்லது' என்று உடம்பட, (அப்படைகளெல்லாம்), பூவைபோல் நிறத்தினுன் கு-காயாம்பூப்போலும் நிறமுடைய இராம பிரானுக்கு, அன்றே-அப்போதே, புறம் தொழில் புரிந்த-வெளியிற் செய்ய வேண்டிய தொண்டுகளை (குற்றேவல்களை)ச் செய்யலாயின.

இராமபிரானை யடைந்த படைகள் இவ்வாறு கூற, அவனும் 'நல்லது' என்று அதற்கு உடம்பட்டு, 'நான் நினைக்கும்போது வந்து எனக்கு உதவுங்கள்' என்று கூறியனுப்ப, அவைகளும் விடைகொண்டு போயின என வான்மீகத்திற் கூறப்படுகின்றது.

'தம்பியுடையான் படைக்கஞ்சான்' என்ற பழமொழிப்படி இலக்குமணனைப் போல் ஒற்றுமையுள்ள தம்பிமாரைப் பெற்றவர் களுக்கு அரியதொன்றில்லை; எனவே, அப்படைகளும் 'இளையவன் போல ஏவின செய்து நிற்றும்' என்றன. படைகள் இராமபிரானுக்கு ஏவின செய்தல்: 740; ஆரணிய. 748. தம்பிமார் புறத்தொழில் செய் தல்: 1184. முனிவன் கொடுத்த படைகளின் பெருமை: யுத்த. 97.

(பி - ம்.) 1. மேயினம்; மேவிய; பிரிதலாற்ருேம்; பிரிகலாற்ருேம்; பிறிதலாற்றும்: வீரனீ; விதியினீ; வேந்தனீ: விதியிலெம்மை; விரைவினெம்மை.
2. ஏயின; ஏவிய: நிற்கும்; நிற்ப: அன்று. 3. படைகளெல்லாம்: செய்வ தன்று; செய்வதென்று; செய்கவென்று: செய்மினென்று: அவருநேரப்; அவருணேரப்; அவனுந்தேரப்.
4. பூவை பொன்: புரிந்ததன்றே. (3)

## இராமபிரான் வினவும் முனிவன் விடையும்

415. இனையன நிகழ்ந்த பின்னர்க் காவத மிரண்டு சென்றார்
அனையவர் கேட்க வாண்டோ ரரவம்வந் தணுகித் தோன்ற
முனைவவீ தியாவ தென்று முன்னவன் வினவப் பின்னர்
வினையற நோற்று நின்ற மேலவன் விளம்ப லுற்றான்.

இனையன நிகழ்ந்த பின்னர்-இக்காரியங்கள் நடந்தேறிய பின்பு, காவதம் இரண்டு சென்றார்-(மூவருமாக) இரண்டு காத தூரம் சென்றனர்; (அப்போது), அனையவர் கேட்க-அவர்கள் (காதில்) கேட்கும்படி, ஆண்டு-அங்கே, ஓர் அரவம் அணுகி வந்து தோன்ற-ஒரு பேரொலி நெருங்கி வந்து சேர, முன்னவன்-(யாவர்க்கும்) முற்பட்டவனான இராமபிரான், (முனிவனை நோக்கி), முனைவ-பெரியீர்! ஈது யாவது என்று வினவ-இவ்வொலி எதனாலாயது என்று கேட்க, பின்னர்-அதன்மேல், வினை அற நோற்று நின்ற மேலவன்-கருமத் தொடர்புகள் நீங்கும் வண்ணம் தவம்செய்து நிலைத்த மேன்மையுடைய விசுவாமித்திர முனிவன், விளம்பல் உற்றான்-சொல்லலானான்:

காவதம், யாவது என்பன விரித்தல் விகாரம்.

இராமபிரான் படைகள் பெற்ற நிகழ்ச்சிக்குப் பின், மூவரும் புறப்பட்டு வழிநடந்து, இரண்டு காத தூரம் சென்றபோது, அணிமையில் உண்டான பேரோசையொன்று அவர்கள் செவிப்பட, அஃதென்னவென்று இராமபிரான் முனிவனைக் கேட்டலும், முனிவன் அதன் காரணத்தைக் கூறலானான் என்க.

(பி - ம்.) 1. நிகழ்ந்த பின்றைக்; பின்னைக்: இரண்டும்.
2. காண: ஆங்கோர்; அரவமது; அகனதி; அகல்வனம்; ஆறு வந்து; எழுந்த தாங்கே; எழுந்த தாங்கண்.
3. முனையவீது; முனியிது; முனிவவீது; வினவிப்; மொழியப்; பின்னை.
4. நோற்று வென்ற. (4)

416. மானச மடுவிற் றோன்றி வருதலாற் சரயு வென்றே
மேன்முறை யமரர் போற்றும் விழுநதி யதனி னோடும்
ஆனகோ மதிவந் தெய்து மரவம தென்ன வப்பால்
போனபின் பவங்க டீர்க்கும் புனிதநீர் நதியை யுற்றார்,

மானச மடுவில் தோன்றி வருதலால்-மானச சரசினின்றும் உற்பத்தியாகி வருவதனால், சரயு என்று-'சரயு' என்று பேர் சொல்லப்பட்டு, மேல் முறை-சிறந்த முறையிலே, அமரர் போற்றும்-தேவர்களும் கொண்டாடுகின்ற, விழு நதி அதனினோடும்-மேன்மையுடைய அந்நதியோடு, ஆன-கலப்பதான, கோமதி வந்து எய்தும் அரவம் அது என்ன-கோமதி என்னும் ஆறு வந்து சேர்வதனாலுண்டாகும் பேரொலி அது என்று (முனிவன்) கூற, அப்பால் போனபின்-மேலே (சில தூரம் மூவரும்) சென்றபின்பு, பவங்கள் தீர்க்கும்-(தன்னில் மூழ்குபவருடைய) பிறப்புக்களைப் போக்கவல்ல, புனிதம் நீர் நதியை-பரிசுத்தமான தன்மையுடையதொரு நதியை, உற்றார்-(மூவரும்) அடைந்தனர்.

மானசமடு-மானஸஸரஸ்;ஸரஸ்-பொய்கை; ஸரயு-ஸரஸினின்றும் வருவது. பிரமதேவன் மனத்தால் நிருமிக்கப்பட்டதாகலின் 'மானஸ

ஸரஸ்' என்ற பெயருடையதாயிற்று; அதினின்றும் தோன்றிவருத லால், சரயுநதி மிக்க சிறப்புடையது. சரயுவின் பெருமை: 24. சரயு நதியில் கோமதி என்னும் ஆறு வந்து கலத்தலால் உண்டாகும் ஓசை அது என்று விசுவாமித்திர முனிவன்கூறி, அவர்களுடன் மேலே செல்ல, அங்கே மற்றொரு புனிதமான நதியைக் கண்ணுற்றனர். இந்நதி, 'கௌசிகி' என்பர்; இது 'கோசிகை' என்றும் 'கவுசிகை' என் றும் கூறப்படும். பவங்கள்: மேல் வரும் பிறப்புக்கள்.

இவ்விடத்துக் கதைப்போக்கு, வான்மீகத்தினின்றும் வேறு படுகின்றது. தாடகாவனத்தினின்றும் புறப்பட்ட மூவரும் சித்தாச் சிரமத்தையடைந்தன ரென்றும், அதனருகில் வந்தபோது, இராம பிரான் அதைக் குறித்து வினவ, முனிவன் அதன் வரலாற்றைக் கூறி, தான் இருப்பதும் வேள்வி செய்யக் கருதியதும் அவ்விடமேயெனவும் கூறினன். பின்பு அங்கே சென்று வேள்வியைத் தொடங்கி முற்றுவித் தான்; அதன்பின் மூவரும் மிதிலைக்குச் செல்லும்போது **கௌசிகி** நதியை யடைந்தனரென்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. மானத; சரசு: என்ற.
2. ஈனமிலமரர்: இருநதி: இதனினேடும்
3. ஆனகோசிகை; அரவமதென்று: அரவமிதென்ன; தம்பால்: செப்பி.
4. நீக்கும்: புனிதமாநதியைக் கண்டார். (5)

## கௌசிகியாற்றின் வரலாறு

**417. சுரர்தொழு திறைஞ்சற் கொத்த தூநதி யாவ தென்று**
**வரமுனி தன்னை யண்ணல் வினவுற மலருள் வைகும்**
**பிரமனன் றளித்தவென்றிப் பெருந்தகை குசனென்றோதும்**
**அரசர்கோ னளித்த மைந்த ரருமறை யனைய நால்வர்.**

அண்ணல்-இராமபிரான், சுரர்தொழுது இறைஞ்சற்கு ஒத்த-தேவர்களும் வணங்கித் துதிக்கத்தக்க, தூநதி-(இந்தத்) தூயநதி, யாவது-எத்தன்மையது? என்று, வர முனி தன்னை வினவுற-மேன்மை பொருந்திய விசுவாமித்திர முனிவனைக் கேட்க, (அவன், கூறத் தொடங்கி), மலர் உள் வைகும்-தாமரையிலே வீற்றிருக்கும், பிரமன் அன்று அளித்த-பிரமதேவன் முன்னொரு காலத்தில் தோற்றுவித்த, வென்றி-வெற்றியையும், பெரு தகை-பெருந்தன்மையையுமுடைய, குசன் என்று ஓதும் அரசர்கோன்-குசன் என்று பெயர் சொல்லப்படும் அரசர்க்கரசனானவன், அளித்த மைந்தர்-பெற்றெடுத்த குமாரர்கள்; அரு மறை அனைய-அரிய (நான்கு) வேதங்களைப் போன்ற, நால்வர்-நான்கு பேராவர்.

**விசுவாமித்திரமுனிவன், தன்னுடன் பிறந்தவளாகிய கௌசிகி என்பவளே இந்நதியாயினள் என்ற வரலாறு கூறத் தொடங்கித்**

தன் வமிச பரம்பரையை முதலிற் சொன்னான். இது முதல் பத்துப் பாடல்கள் ஒரு தொடர்; இப்பாடலில் வரும் 'அண்ணல் வினவுற' என்றது, மேல் 426-ஆம் பாடலில் வரும் 'அம்முனி புகல' என்பத னோடு இயையும். இங்குக் கூறிய 'குசன்' மனைவி 'வைதர்ப்பி' யென் பவள். அவளிடமாக நால்வர் புதல்வர் தோன்றினர் என்பர்.

அரு மறை யனைய நால்வர் : 303.

(பி - ம்.) 1. இறைஞ்சத் தக்க; தூய்நதி.
2 வருமுனி வரநதி; மலரில்; மலரின்: வைகு.
3. பரமனற்களித்த; பிரமனன் றளிக்கும்; வேள்விப்; பெருந்தகைக்; குசனன்று.
4. மனைவியன்பாய்; மனைவி தன்பால்; மனையாடன்பால்; மனையோடன் பால்: அளித்தவர் நால்வராவார்; அருமறை யனையர் நால்வர். (6)

418. குசன்குச நாபன் கோதில் குணத்தினா தூர்த்தன் கொற்றத்
திசைகெழு வசுவென் றோது மிவர்பெய ரிவர்க டம்முள்
குசன்கவு சாம்பி நாபன் குளிர்மகோ தயமா தூர்த்தன்
வசையிறன் மவன மற்றை வசுகிரி விரசம் வாழ்ந்தார்.

இவர் பெயர்-இந்த நான்கு புதல்வருடைய பெயர்கள், (முறையே), குசன், குசநாபன், கோது இல் குணத்தின் ஆதூர்த்தன்-குற்றமற்ற குணங்களையுடைய ஆதூர்த்தன், கொற்றத்து-(தன்) வெற்றியினால், இசை கெழு-புகழ்மிக்க, வசு என்று ஓதும்-வசு என்று சொல்லப்படும்; இவர்கள் தம்முள்-இவர்களுக்குள், குசன்-(முதல்வ னான)குசன் என்பவன், கவுசாம்பி-கௌசாம்பியென்னும்நகரத்திலும், நாபன்-குசநாபன், குளிர் மகோதயம்-குளிர்ச்சியுடைய மகோதயம் என்னும் நகரத்திலும், ஆதூர்த்தன் - (மூன்றாமவனான) ஆதூர்த்த னென்பவன், வசை இல் தன்மவனம்-இகழ்ச்சியற்ற தருமவன மென் னும் நகரத்திலும், மற்றை வசு-மற்றையவனான வசுவென்பவன், கிரி விரசம்-கிரிவிரச நகரத்திலும், வாழ்ந்தார்-(அரசிருக்கை கொண்டு) வாழ்ந்து வந்தனர்.

முதற் புதல்வன் பெயர் 'குசாம்பன்' என்றும், இரண்டாம வன் 'குசநாப'னென்றும், மூன்றாமவன் 'ஆதூர்த்தரஜஸ்' என்றும் வான்மீகத்திற் கூறப்பட்டுள்ளன. இங்கே 'குசன்' என்றது குசாம்பன் என்பதன் திரிபு போலும். நாபன்=குசநாபன்; முதல் குறைந்து நின்றது; ஆதூர்த்தரஜஸ் என்பது இறுதி குறைந்தது.

கவுசாம்பி=கௌசாம்பி; குசனால் நிருமித்து ஆளப்பட்டது என்ற காரணத்தால் வந்தது. தன்மவனம்=தர்மவநம்=தர்மாரண் யம். கிரிவிரசம்=கிரிவ்ரஜம்: மலைகள் நிறைந்தது என்ற பொருளுடை யது; இது ஐந்து மலைகளுக்கிடையில் உள்ளதென்பர்.

(பி -ம்.) 1. குசநாபன்; குசன்னுபன்: குணத்தினதூர்த்தன்; குணத்தவதார்த்தன்; குணத்த பூரணத்தன்; குண த்தவ மூர்த்தன்.
2. இசைந்தெழு; திசைதொழும் : இவர்கள் பேர்; அவர் பெயர்: தம்மில்.
3. குசன் கிரிவிரச நாபன்; குசன் கிரிவிரசனவன்பன்; குசன் கிரிவிரசன்றன் பின்; குசன்கிரிவிரசை நாபன்; குளிர் மகோதய மதூர்த்தன்; கொள் கவுசாம்பிமன்னன்; கொள்கவு சாம்பி பின்னேன்; கொள் மகோதய மாதூர்த்தன்.
4. வசையிறன் மண்ணியின்பின்; வசையிறன் மாண்பின் வந்த; வசந்தன் மாரணிய மற்றை; வசந்தன்மாரணியந்தூர்த்தன்; இசைந்தன ரைணம்பின்; இசைந்தனன் மாண்பி மண்ணி; இசைந்ததன்மாரணம் பின்: வசுகிரி வசுவிற் கேய்ந்த; வசுபதி, வசுவதி; வசுவுக்கேய்ந்த; வசுமதி வசுவுக்கேயாம்; வசுமதி வசுவுக் கேய்ந்தாள்; வாழ்வார். (7)

இப்பாடல் சில ஏடுகளில் இல்லே.

**419.** அவர்களிற் குசநா பற்கே யையிரு பதின்ம ரஞ்சொல்
துவரிதழ்த் தெரிவை நல்லார் தோன்றினர் வளரு நாளில்
இவர்பொழிற் றலேக்க ணுயத் தெய்துழி வாயு வெய்திக்
கவர்மனத் தினனு யந்தக் கன்னியர் தம்மை நோக்கி,

அவர்களில்—அந்நால்வரில், குசநாபற்கே-குசநாபன் என்பவனுக்கே, அம் சொல்-அழகிய சொற்களேயும், துவர் இதழ்-பவளம் போன்ற (சிவந்த) உதடுகளேயுமுடைய, தெரிவை நல்லார்-அழகிய பெண்கள், ஐ இரு பதின்மர்-நூறுபேர், தோன்றினர் வளரும் நாளில்-பிறந்து (நன்கு) வளர்ந்துவருங் காலத்து, (ஒருநாள்),'இவர்-இவர்கள் நூற்றுவரும், ஆயத்து-தோழிமார்களுடன், பொழில் தலே கண்-(ஒரு) சோலேயிடத்தில், (பூக்கொய்தல், நீர்விளேயாடல் முதலியனகுறித்து), எய்துழி - சென்றிருந்தபொழுது, வாயு எய்தி-வாயுதேவன் (அவ்விடத்தை) அடைந்து, அந்த கன்னியர் தம்மை நோக்கி-அந்தக் கன்னிப் பெண்களேப் பார்த்து, கவர் மனத்தினன் ஆய்-(அவர்கள் கட்டழகினுல்) கவரப்பட்ட மனமுடையவனுகி,

இதுவும் அடுத்த பாடலும் குளகம்; 'ஆகி' என்னும் எச்சம், அடுத்த பாடலில் வரும் 'உரைப்ப' என்பதனேடு முடியும்.

ஐ இரு பதின்மர் ($5 \times 2 \times 10$) எனினும், ஐ இருபதின்மர் ($5 \times 20$) எனினும் நூற்றுவர் என்பது பெறப்படும். தோன்றினர்: முற்றெச்சம். 'இவர்' என்பதனே வினேத்தொகையாகக் கொண்டு, பொழிலுக்கு அடையாக்கி 'ஓங்கிய', 'செறிந்த', 'விரும்பத்தக்க' என ஏற்றவாறு பொருள் கூறலும் ஆம்.

அப்பெண்கள் மிக்க கட்டழகும், பருவச் சிறப்பும் பெற்று, தேவரும் கண்டு காமுறத் தக்கவராயிருந்தமையின், அவர்களேச்

கண்ட வாயுதேவன் 'கவர்மனத்தினன்' ஆனான். கவர்தல்: விரும்புதல், முயங்குதல், சஞ்சலப்படுதல் முதலிய பல பொருள்களுடையது.

(பி - ம்.) 1. அவர்களுள்; பதின்மரின் சொல்; பத்தி னஞ்சொல்.
2. துவரிதட் டெரிவை; நாளின்; நாளுள்.
3. இவர்மலர்ப் பொழிற்கணயைத்து; அவர் பொழில் தலைக்கணயத்து; தலைக்கணயது: எய்துபு; ஏற்றுழி: வாயு நண்ணிக்.
4. மனத்தனனாய். (8)

420. கொடித்தலை மகரங் கொண்டோன்
குனிசிலைச் சரத்தா னொந்தேன்
வடித்தடங் கண்ணீ ரென்னை
மணத்திரென் றுரைப்ப வெந்தை
அடித்தலத் துரைத்து நீரோ
டளித்திடி னணைது மென்ன
ஒடித்தனன் வெரிநை வீழ்ந்தா
ரொளிவளை மகளி ரெல்லாம்.

(வாயு, அம்மகளிரையணுகி), 'வடி தட கண்ணீர்-கூரிய பெரிய கண்களையுடையவர்களே! கொடிதலைமகரம் கொண்டோன்-கொடியில் சுறுமீனைக் கொண்டவனாகிய மன்மதனுடைய, குனி சிலை சரத்தால்-வளைத்த (கரும்பு) வில்லினின்று வரும் மலரம்புகளால், நொந்தேன்-வருந்துபவனானேன்; (ஆதலால்), என்னை மணத்திர்-(நீங்கள்) என்னை மணம் புரிந்துகொள்வீர்களாக', என்று உரைப்ப-என்று சொல்ல, ஒளி வளை-ஒளி மிக்க (பொன்) வளையல்களை யணிந்த, மகளிர் எல்லாம்-அப்பெண்கள் எல்லோரும் (ஒன்றுபட்டு), 'எந்தை அடிதலத்து உரைத்தும்-எம் தந்தையாருடைய திருவடிகளிலே (இச்செய்தியை) விண்ணப்பிப்போம்; (அவர் இணங்கி), நீரோடு அளித்திடின்-தாரை வார்த்து எம்மை உமக்குக் கொடுத்திட்டால், அணைதும்-(அதன்பின்) உம்மைச் சேர்வோம்', என்ன-என்று கூற, (வாயு கோபங்கொண்டு), வெரிநை ஒடித்தனன்-(அவர்களுடைய) முதுகெலும்பை முறித்து விட்டனன்; (ஆதலால்), வீழ்ந்தார்-அவர்கள் (ஊறுபட்டுக்) கீழே விழுந்தார்கள்.

வாயுதேவன், அப்பெண்களிடத்து விருப்பங்கொண்டு, அவர்களை யணுகித் தன்னை மணந்துகொள்ளும்படி வேண்ட, அப்பெண்கள், முறை தவறாத உறுதியுடையவர்களாதலின், 'எங்கள் தந்தையிருக்கும்போது, உம்மை மணப்பதற்கு நாங்களே இசைவது தவறு; நும் கருத்தை எங்கள் தந்தையிடம் தெரிவித்து, அவர் மனமிசைந்து முறைப்படி தாரை வார்த்து, எங்களைக் கன்னிகாதானமாக உமக்குக் கொடுத்தாலல்லாமல், நாங்களாக உம்மை மணப்பதற்கு இசையோம்' எனக் கூறி மறுக்கவே, வாயு மிக்க கோபங்கொண்டு அவர்

கள் அழகு கெட்டுக் கூனிக் குறுகிய வடிவமுடையவர்களாகும்படி செய்துவிட்டான்.

தலை: ஏழன் உருபு. வடி, தட: உரிச்சொற்கள். வடி-மாவடுவின் பிளப்பு எனலும் ஆம். 'மகளிரெல்லாம் வீழ்ந்தார்' என வீழ்தல் தொழிலுக்கு எழுவாயாக்கி உரைத்தலுமாம்.

'அடித்தலத்து உரைத்தும், என்றது, பணிவைப் புலப்படுத்தியவாறு.

(பி - ம்.) 1. கொடித்தனி; கொண்டான்; சிலைக்கணையால்.
2. வடித்தபூங்குழலீர்; கண்ணிர்: இன்னே; இன்றே.
3. உய்த்து நீரோடு; அளித்திடில்: அணைவம்; மணத்தும்; என்றார்.
4. வெரிநை; வெருநை; வெருனையெல்லாம்; ஒளிர்; வளையவர்கள்: வளையார்கள்; அம்மா; வீழ்ந்தார். (9)

421. சமிரண னகன்ற தற்பின் றையலார் தவழ்ந்து சென்றே
அமிர்துகு குதலை மாழ்கி யரசன்மாட் டுரைப்ப வன்னோன்
நிமிர்குழன் மாதர்த் தேற்றி நிறைதவன் சூளி நல்கும்
திமிரறு பிரம தத்தற் களித்தனன் றிருவ னோரை.

சமிரணன்-வாயுதேவன், அகன்றதன் பின்-(கோபத்தோடு) அம்மகளிரை விட்டு நீங்கியபின், தையலார்-அப்பெண்கள், மாழ்கி-மனம் மறுகி, தவழ்ந்து சென்று-(நடக்கமாட்டாமையால்) நகர்ந்து சென்று, அரசன் மாட்டு-தந்தையாகிய குசநாபனிடத்து, அமிர்து உகு குதலை-அமுதினும் இனிய (தங்கள்) நிரம்பாத சொற்களால், உரைப்ப-(நடந்த செய்தியைச்) சொல்ல, அன்னோன்-அவன், நிமிர் குழல் மாதர்-நீண்ட கூந்தலையுடையஅப்பெண்களை, தேற்றி-ஆறுதல் செய்து, திரு அன்னோரை-இலக்குமி போன்றவர்களாகிய அவர்கள் நூற்றுவரையும், நிறை தவன் சூளி நல்கும்-மிக்க தவத்தையுடைய சூளி என்னும் முனிவன் பெற்ற, திமிர் அறு-அஞ்ஞான விருள் அற்ற, பிரமதத்தற்கு-பிரமதத்தன் என்பவனுக்கு, அளித்தனன்-திருமணம் செய்து கொடுத்தான். சென்றே: ஏ: அசை.

வாயு கோபத்தோடு சென்றபின், அப்பெண்கள் நடக்கமாட்டாமல் நகர்ந்து சென்று நிகழ்ந்த செய்தியைத் தந்தையிடம் கூற, அப்பெண்களே சபிக்கும் ஆற்றல் உடையவர்களாயிருந்தும் அதனைச் செய்யாமலும், வாயு விரும்பிய தகாத செயலுக்கு ஒருவரும் இணங்காமல், தம் நிறை காத்துக்கொண்டும் வந்த அவர்களுடைய பொறுமையையும் திறமையையும் அவன் பாராட்டி, அவர்களைத் தேற்றி, பின்பு மந்திரிகள் முதலானவருடன் ஆலோசித்து, அவர்களைப் பிரமதத்தன் என்பவனுக்கு மணம் செய்து கொடுத்தான். இப்பிரமதத்தன், சூளியென்னும் மாமுனிவனுக்கு, ஸோமதை யென்னும் கந்தருவப் பெண்ணினிடமாகத் தோன்றிய மாநஸ புத்திரன் என்பர்.

ஸோமதை யென்பவள், அம்முனிவன் மனமகிழ வழிபாடு செய்து, அவனது இன்னருளால் சிறந்த வொரு புதல்வனைத் தனக்கு அளிக்கும்படி வேண்டி, அவ்வாறே பெற்றனள். இவன் க்ஷத்திரிய அம்சமுடையவனாதலால், காம்பிலிய நகரத்தில் இருந்து அரசாண்டு வந்தான்; தெளிந்த மெய்யுணர்வும் ஒழுக்கமும் உடையவன்;அதனால் குசநாபன் தன் புதல்வியரை இவனுக்கு மணம் செய்வித்தான்; இச்செய்தி வான்மீகத்திற் கண்டது.

அமிர்து உகு குதலை-அமுதம்போல வெளிப்படுகின்ற அழகிய சொல். சமிரணன்: சமீரணன் என்பதன் விகாரம். திமிர்: திமிரம் என்பதன் கடைக்குறை. திமிரம்=இருள்: அஞ்ஞானம்.

(பி - ம்.) 1. சமீரணன்: அகன்ற பின்னர்த்; அகன்ற பின்னைத்: தையலர்: சென்று.
2. அமுதுகு.
3. மடவார்த்: நிறைந்தவன்: சூளினல்கு; சூழலெய்தி: சூழனல்கும்; அருளினல்கும். 4. திருவன்னரை; திருவினுரை. (10)

422. அவன்மலர்க் கரங்க டீண்டக் கூனிமிர்ந் தழகு வாய்த்தார்
புவனமுற் றுடைய கோவும் புதல்வரில் லாமை வேள்வி
தவனனிற் புரித லோடுந் தகவுறத் தழலி னுப்பண்
கவனவே கத்து ரங்கக் காதிவந் துதயஞ் செய்தான்.

அவன்-அப்பிரமதத்தன், மலர் கரங்கள் தீண்ட-(அப்பெண்களின்) செந்தாமரைமலர் போன்ற கைகளைத் தொட்டமாத்திரத்தில், (பாணிக் கிரகணம் செய்தவுடன்), கூன் நிமிர்ந்து-(அவர்கள்) கூனல் தன்மைபோய் நேராகி, அழகு வாய்த்தார்-(முன்போல்) மிக்க அழகும் பெற்றார்கள்; (இஃது இவ்வாறாக), புவனம் முற்று உடைய கோவும்-உலகம் முழுதும் ஆளுதலுடைய குசநாபனும், புதல்வர் இல்லாமை-தனக்குப் புதல்வர் இல்லாமையால், தவனனில்-(முறையான) ஓமாக்கினியிலே, வேள்வி புரிதலோடும்-புத்திர காம யாகத்தைச் செய்தவுடன், தழலின் நாப்பண்-அவ்வக்கினியின் நடுவிலே, தகவு உற-(உலகை ஆளும்) தகுதியுடையவனாக, கவனம் வேகம் துரங்கம்-விரைந்த நடையையுடைய குதிரைப் படைகளைக் கொண்ட, காதி-காதி என்னும் புதல்வன், வந்து உதயம் செய்தான்-(சூரியன் போல)வந்து உதித்தான்.

கூனலும் விகாரவடிவமுங்கொண்ட பெண்களைப் பிரமதத்தன் பாணிக்கிரகணம் செய்துகொண்டவுடன், அவனுடைய தவ விசேடத்தால் அப்பெண்கள் கூனல் நீங்கி முன்போலப் பேரழகும் பெற்றார்களாக, குசநாபன் மிக்க மகிழ்ச்சியுற்று, அவர்களைக் கணவனுடன் சிறப்போடும் அனுப்பிவைத்து, அவர்களைப்பற்றிய கவலை நீங்கியவனானான். பின்பு தனக்குப்பின் தரணியை யாள்வதற்குரிய புதல்வன் இல்லாமை குறித்து ஆலோசித்து, பெரியோர்களைக் கொண்டு அவன்

புத்திரகாமயாகஞ்செய்ய,அந்தயாகாக்கினியினின்றும்‘காதி’என்னும் புதல்வன் தோன்றினன். அவன் தேசுமிக்கவனுதலின், ‘உதயஞ் செய் தான்’ என்றார். உலகாளும் ஏற்றமுடையவனுமாவான் என்பதுபட ‘கவனவேகத் துரங்கக்காதி’ என விசேடித்துக் கூறினர்.

குசநாபன் யாகஞ் செய்கையில், அவன் தந்தையாகிய குசன் அங்கே வந்து, ‘உனக்குக் காதி என்னும் புதல்வன் தோன்றிக் குலத்தை விளங்கச் செய்வான்’ என்று கூறி, ஆகாய மார்க்கமாய்ப் பிரம லோகஞ் சென்றானாக, பின்பு குசநாபன் மனைவியாகிய கிருதாசி யிடம் காதி பிறந்தான் என வான்மீகத்தில் உள்ளது.

‘புவனமுற்றுடையகோ’ எனக் குசநாபனைக் கூறியது, அவன் தனக்குப் பின் அப்புவனமாள்வதற்குரிய புதல்வனைப் பெறக் கருதி னன் என்பதைக் குறிப்பிக்கும். தவனனில்-‘சூரியனைப் போலே தேசு டையவனாக இருந்து’ என்றும் ஆம். ‘தகைவற’ என்ற பாடம் (குசநாபனது) மனத் தளர்ச்சி நீங்க என்று பொருள்படும்.

‘புவன முற்றும்’ என உம்மை விரிக்க; முற்றும்மை விகாரத் தால் தொக்கது.

(பி - ம்.) 1. அழகின்வாய்ந்தார்.
2. புதல்வரில்லாமல்; புதல்வரிலாமை; புத்திரரிலாமை.
3. தவர்களிற்; தகையுறத்; தகைவரத்; தகைவறத்; தகைவரு; தழைவுறு.
4. கவனவேகத்தின் மிக்க; வேகத்து மிக்க. (11)

423. அன்னவன் றனக்கு வேந்த னரசொடு முடியு மீந்து
பொன்னக ரடைந்த பின்னர்ப் புகழ்மகோ தயத்தில் வாழும்
மன்னவன் காதிக் கியானுங் கௌசிகி யென்னு மாதும்
முன்னர்வந் துதிப்ப வந்த முடியுடை வேந்தர் வேந்தன்,

அன்னவன் தனக்கு-அவ்வாறு தோன்றிய காதிக்கு, வேந்தன்-(தந்தையாகிய) குசநாபன், அரசொடு முடியும் ஈந்து-(உரியகாலத் தில்) தனதரசாட்சியைத் தந்து முடியையும் சூட்டி, பொன் நகர் அடைந்த பின்னர்-சுவர்க்க மடைந்த பின்பு, புகழ் மகோதயத்தில் வாழும்-(யாவரும்) புகழ்தற்குரிய மகோதய நகரில் (அரசாண்டு) வாழ்ந்து வந்த, மன்னவன் காதிக்கு-அரசனாகிய காதிக்கு, யானும், முன்னர் கௌசிகி என்னும் மாதும்-நானும் (எனக்கு) முன்னே (மூத்தவளாக) கௌசிகி என்ற பெண்ணும், வந்து உதிப்ப-(மக்க ளாக) வந்துபிறக்க, அந்த முடி உடை(ய) வேந்தர் வேந்தன்-கிரீடாதி பதிகளான அரசருக்கு அரசனாகிய அந்தக் காதி,

இதுவும் அடுத்த பாடலும் குளகம்.

குசநாபன் இருந்து ஆண்ட விடம் மகோதயமாதலின், காதி யும் முறைப்படி அங்கே யிருந்து ஆண்டு வந்தான். கௌசிகி, கௌசிக

னுக்கு மூத்தவளாதலின் முன்னர் என்பது கௌசிகியுடன் கூட்டப் பெற்றது. குசனது வமிசத்தில் தோன்றியவன் என்றகாரணப்பொருள் உடையது 'கௌசிகன்' என்பது; அதன் பெண்பால் கௌசிகி. இது கௌசிகை எனவும் வழங்கும்.

அரசொடு முடியும் ஈதல்: ஒப்பு: 'முடியுமாலையு முத்தவெண் கவிகையு முரசும், படியும் யாவையும் வழங்கி': (வி-பா. குருகுலச். 25)

(பி-ம்.) 1. ஈய்ந்து; நல்கி.
2. பின்றைப்; பின்னைப்: புகழ்கவுசாம்பி; புகழ்க்கௌசாம்பிமன்னர்.
3. கியாதிக்கு; தனக்கு; கவுசிகை; கௌசிகை; கவுசிகி.
4. முடியுடை வேந்தன் மற்றும். (12)

424. பிருகுவின் மதலை யாய பெருந்தகை பிதாவு மொவ்வா
இருசிக னென்ப வற்கவ் வேந்திழை யாளை யீந்தான்
அருமறை யவனுஞ் சின்னா ளறம்பொரு ளின்ப முற்றி
விரிமலர்த்தவிசோன் றன்பால்விழுத்தவம்புரிந்து மீண்டான்.

(வேந்தர் வேந்தனான காதி), பிருகுவின் மதலை ஆய- பிருகு என்னும் இருடியின் மகனான, பெரு தகை - சிறப்புமிக்கவனும், பிதாவும் ஒவ்வா-(தவவொழுக்கத்தில்) தன் தந்தையாகிய பிருகு முனிவனும் ஒப்பாகாத தன்மையுடையவனுமான, இருசிகன் என்ப வற்கு-இருசிகன் என்ற முனிவனுக்கு, அ ஏந்து இழையாளை-ஆப ரணங்களையணிந்த அக்கௌசிகியை, ஈந்தான்-மணம்செய்து கொடுத் தான்; அரு மறை அவனும்-அரிய வேதங்களை நன்குணர்ந்த அவ்வி ருசிகனும், சிலநாள்-சிலகாலம், அறம் பொருள் இன்பம் முற்றி- (மனைவியோடிருந்து) அறம், பொருள், இன்பம் ஆகிய பேறுகளைப் பெற்று, (பின்பு), விழு தவம் புரிந்து-மேலான தவத்தைச் செய்து, விரி மலர் தவிசோன் தன் பால்-விரிந்த செந்தாமரை மலராசனத்தை யுடைய பிரமதேவனிடத்து, (பிரம லோகத்துக்கு), மீண்டான்- சென்று சேர்ந்தான்.

முன்கவியின் ஈற்றிலுள்ள 'வேந்தர் வேந்தன்' என்னும் எழு வாய், இக்கவியிலுள்ள 'ஈந்தான்' என்னும் பயனிலை கொண்டு முடியும்.

காதி, தன் மகள் கௌசிகியை இருசிகன் என்னும் முனிவ னுக்கு மணஞ் செய்விக்க, அம் முனிவன் அவளோடு சிலகாலம் இல்லறத்திலிருந்து அதனைச் செவ்வனே நடத்தி, பின்பு கடுந்தவஞ் செய்து பிரமலோகத்தை அடைந்தான் என்க. இருசிகன் தன் விருப் பத்தால் வான வழியாகப் பிரமலோகம் சென்றான் என்பது அடுத்த செய்யுளால் விளங்கும்.

இருசிகன்: இப்பெயர் இரிசிகன் எனவும் விருசிகன் எனவும் வழங்கும். 'ரிசீக' என்பது வான்மீகத்திற் காண்பது.

மீண்டான் என்பது 'சென்றான்' என்ற பொருளில் வந்துள்ளது.

(பி - ம்.) 1. பிருதுவின்; பெருந்தகைப்.
2. ரிசிகனென்பவற்கு மாதை; இரிசிகன்றனக்கு மாதை; இரிசிகனென்பவற்கே; இருசிகன்றனக்கு மாதை; ஈந்தன னவளு மந்த; இவளு மந்த. இரிசிகனென்பவற்கு மெல்லியலாளையீந்தான்.
4. தவிசோன் பாதம்மேவிய; செய்து; புரியப்; வேண்டிப்: போனான்: விளங்க லுற்றான். (18)

425. காதலன் சேணி னீங்கக் கௌசிகி தரிக்க லாற்றாள்
மீதுறப் படர்த லுற்றாள் விழுநதி வடிவ மாகி
மாதவர்க் கரச னோக்கி மாநிலத் துறுக ணீக்கப்
போதுக நதியா யென்னாப் பூமக னுலகம் புக்கான்.

காதலன்-தன் கணவன், சேணில் நீங்க-ஆகாய மார்க்கமாகச் செல்ல, கௌசிகி—, (அதனைக் கண்டு), தரிக்கல் ஆற்றாள்-(கணவனது பிரிவைத் தாங்கமாட்டாதவளாய் (தானும்), விழு நதி வடிவம் ஆகி-பெரியதோர் ஆற்றின் வடிவங்கொண்டவளாய், மீது உற-ஆகாயத்தை அளாவ, படர்தல் உற்றாள்-(கணவனைப் பின்தொடர்ந்து) செல்லலானாள்; மா தவர்க்கு அரசன்-பெரிய தவத்தினர்க்குத் தலைவனாகிய இருசிகன், நோக்கி-(அவள் நதியாகித் தன்னைத் தொடர்ந்து வருதலைப்) பார்த்து, (அவளை நோக்கி), 'மா நிலத்து உறுகண் நீக்க-பெரிய நிலவுலகத்திலுள்ளாருடைய துன்பங்களைப் போக்கும் வண்ணம், நதி ஆய்-இந்நதி வடிவமாகவே, போதுக-(பூமியிலே) போவாயாக', என்னா-என்று கூறி, பூமகன் உலகம் புக்கான்-தாமரையில் வந்த பிரமனது உலகத்தைத் தான் அடைந்தான்.

தன் கணவனது பிரிவையாற்றாத கௌசிகி, தன் ஒழுக்க விசேடத்தால் ஒரு நதி வடிவமாகிக் கணவனைப் பின்தொடர்ந்து செல்ல, அது கண்ட இருசிகன் அவளை நோக்கி, 'நீ இந்நதி வடிவமாகவே நிலவுலகத்திற் சென்று மக்களுடைய துன்பங்களையும், வறுமையையும் போக்குமாறு என்றும் இருப்பாயாக' எனக் கட்டளையிட்டுத் தான் பிரமலோகம் சென்றடைந்தான்; கணவன் கட்டளைப்படி அவள் பூமியில் ஓர் ஆறாயினாள் என்க.

புண்ணிய நதியாய், தன்னில் மூழ்குவாருடைய பாவங்களைப் போக்கி நற்கதியளித்தலும், தான் பாயும் இடங்களை வளமுறச் செய்தலும் மாநிலத் துறுகண் நீக்கலாம். இந்நதியைப் 'பவங்கள் தீர்க்கும் புனித நீர் நதி' (416) என்றார் முன்னும்.

படர்தல்-செல்லுதல்; அயோத்.344; ஆரணிய. 375.

(பி - ம்.) 1. சேணினீங்கக்; சேணினேகக்; கவுசிகை: தவத்திலாற்றாள்; தவத்தினோக்கி; கருத்தினீங்கி.
2. படரலுற்றாள்; படர்வதானாள்; வடிவமாக.
3. மாதவர்க்கரசு நோக்கி; மாதவத்தவளை நோக்கி; மாதினை ரிசிகன் நோக்கி: நீக்கிப்; நீங்கப்.
4. போதுக நதிநீ; போதுக பதிநீ; போது கோமதியாய்; போது கோமதியாறு; மோதுதி நதியாய்: என்னப்; என்று: உலகு. (14)

சில பிரதிகளில் இப்பாடலோடும், மற்றும் சிலவற்றில் அடுத்த பாடலோடும் கவுசிகையாற்றுப்படலம் முடிவுற, மேலே 'மாவலிப் படலம்' தொடங்குகின்றது. இப்பெயர் 'மாவலியரணப்படலம்', 'மாவலியரண்புகு படலம்' எனவும் காணப்படு கின்றது.

426. எம்முனு ணங்கை யிந்த விருநதி யாயி னுளென்
றம்முனி புகலக் கேளா வதிசய மிகவுந் தோன்றச்
செம்மலு மிளைய கோவுஞ் சிறிதிடந் தீர்ந்த பின்னர்
மைம்மலி பொழில்யா தென்ன மாதவன் கூறலுற்றான்.

'எம் முன்னுள் நங்கை-எமக்கு முன்னவளாகிய உத்தமி, இந்த இரு நதி ஆயினுள் என்று-(முற்கூறியவாறு) இந்தப் பெரிய நதியாக ஆனுள்' என்று, அ முனி புகல-அந்த விசுவாமித்திர முனிவன் சொல்ல, கேளா-அதனைக் கேட்டு, செம்மலும், இளையகோவும்-புருஷோத்தம னை இராமபிரானும் இளைய பெருமாளும், அதிசயம் மிகவும் தோன்ற-மிக்க ஆச்சரிய மடைந்தவர்களாக, சிறிது இடம் தீர்ந்த பின்னர்-(மேலே மூவரும்) சிறிது தூரம் சென்ற பின்பு, (எதிரே காணப்பட்டதொரு சோலையைக் குறித்து), 'மை மலி பொழில் யாது என்ன-இருளடர்ந்த இச்சோலை யாது' என்று (இராமபிரான்)கேட்க, மா தவன் கூறல் உற்றான்-பெருந்தவமுடைய விசுவாமித்திர முனி வன் சொல்லலானுன்.

கௌசிகி நதியின் வரலாற்றைக் கேட்ட இராம லக்குமணர் மிக்க அதிசயமடைந்தவர்களாக, பின்பு மூவரும் மேலே சிறிது தூரம் சென்றபோது, எதிரில் வளம் மிக்க சோலை யொன்று காணப்பட, 'அது யாது ?' என்று இராமபிரான் வினவ, முனிவன் விடை கூறலா னுன். அச்சோலையுள்ள விடம் 'சித்தாச்சிரமம்' என்று கூறி அதன் வரலாற்றை மேலே 23 கவிகளாற் கூறுகின்றான்.

மைமலி-(உயரமிகுதியினுல்) மேகங்கள் படிந்துள்ள எனவுங் கூறலாம்.

முன்னே 417-ஆம் பாடலில் உள்ள, 'அண்ணல் வினவுற' என் பது, இப்பாடலில் 'முனி புகல' என்பதனோடு இயைந்து முடிவுறும்.

(பி - ம்.) 1. எம்முனு நங்கை; எம்முனணங்கை; விழுநதி.
2. புகழக்: தோன்றாச்.
3. தீர்ந்து; திரிந்த; சென்ற.
4. மைமலர்ப்; மைமலி; கொய்ம்மலர்ப்: பொழிலியாதென்ன: விளம்ப லுற்றான்.

## சித்தாச்சிரம வரலாறு

427. தங்கணு யகரிற் றெய்வந்
தான்பிறி தின்றென் றெண்ணும்
மங்கைமார் சிந்தை போலத்
தூயது மற்றுங் கேளாய்
எங்கணுன் மறைக்குந் தேவ
ரறிவிற்கும் பிறர்க்கு மெட்டாச்
செங்கண்மா லிருந்து மேனுட்
செய்தவஞ் செய்த தன்றே.

'(இவ்விடம்), தங்கள் நாயகரின்-தங்கள் கணவன்மாரைவிட, தெய்வம்தான்-தெய்வ மென்பதொன்று, பிறிது இன்று என்று எண்ணும்-வேறு இல்லை என்று நினைக்கிற, மங்கைமார் சிந்தைபோல-(கற்புடைய) மங்கையரின் மனம்போல, தூயது-மிகத் தூய்மையானது: மற்றும்-இன்னமும், கேளாய்-(இதன் பெருமையைக்) கேட்பாயாக; எங்கள் நால் மறைக்கும்-எங்களுக்குச் சிறந்ததாகிய நான்கு வேதங்களுக்கும், தேவர் அறிவிற்கும்-தேவர்களுடைய (சிறந்த)அறிவுக்கும், பிறர்க்கும்-மற்ற யாவர்க்கும், எட்டா-அறியவொண்ணுத, செம்கண் மால்-செந்தாமரை மலர் போன்ற கண்களையுடைய திருமால், மேல் நாள்-முன்னெரு காலத்தில், இருந்து-(இங்கே) தங்கி, செய் தவம்-(உலகின் நன்மைக்காகச்) செய்தற்குரிய தவத்தை,செய்தது-செய்யப் பெற்ற சிறப்புடையதுமாகும். அன்று, ஏ: அசை.

முனிவன், சித்தாச்சிரமத்தின் பெருமைகளைக் கூறத் தொடங்கி, முதலில் அதனேடு தொடர்புடைய வாமனுவதாரச் செய்தியைக் கூறலானுன்.

அவ்விடத்தின் தூய்மைக்குக் கற்புடைய மங்கையரின் மனத்தை உவமித்தார்; 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றெழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை' (குறள். 55); 'குலமகட்குத் தெய்வங் கொழுநனே' (நீதிநெறி விளக்கம். 27) என்பன ஈண்டு நினைதற் குரியன.

நான்மறைக்கும் தேவரறிவிற்கும் பிறர்க்கு மெட்டாச் செங் கண்மால்: ஒப்பு: 'சூடுகின்ற துழாய்முடியோன் சுரருடனே முனிவர் களுஞ் சுருதி நான்குந், தேடுகின்ற பதஞ்சிவப்ப......தூதுசெல்ல வேண்டா' (வி-பா. கிருட்டினன்றூதுச். 19). 'படர்ந்தாரண முழங் கப் பஞ்சவர்க்குத் தூது நடந்தான்' (சிலப். ஆய்ச்சியர். 37).

சித்தாச்சிரமமுள்ள விடம் 'சித்தவனம்' என்றும், 'தாருவனம்' என்றும் வழங்கு மென்பர். 'தருவனத்துள்' (325) என்றது இங்கே நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. நாயகனில்: தான் பிறிதில்லென்றெண்ணும்; தான்பிறிதில்லை யென்னும்; தானலாதில்லையென்னும்; தவம்பிறிதில்லை யென்னும்; தவம் பிறிதிலவென்றெண்ணும்; பிறிதிலதென்றெண்ணும்; தாம்பிறிதில்லை யென்னும்.
2. மங்கைமாச்; நெஞ்சம்; மனமே; மனனே: போலும் : கேண்மோ.
3. அங்கணுன்மறைக்கும்; அங்கநான்மறைக்கும்; அறிவுக்குமெவர்க்கும்.
4. செங்கணுன்திருவினேடும் சேர்ந்துவாழிடமதாமே; சேர்ந்துவாழிடமீதாமே; சிறந்துவீற்றிருந்தான்மேனள்: செய்ததென்ருன். (10)

428. பாரின்பால் விசும்பின் பாலும்
பற்றறப் படிப்ப தன்னுன்
பேரென்பா னவன்செய் மாயப்
பெரும்பிணக் கொருங்கு தேர்வார்
ஆரென்பா னமல மூர்த்தி
கருதிய தறித தேற்ரும்
ஈரைம்பா னூழிக் கால
மிருந்தவ மியற்றி யிட்டான்.

பாரின் பால்-நிலவுலகத்திலும், விசும்பின் பாலும்-சுவர்க்க லோகத்திலும், பற்று அற-(அவரவர் தம்முடைய) உலகப் பற்றுக்கள் நீங்கும் பொருட்டு, படிப்பது-உச்சரிப்பது, அன்னுன் பேர் என்பான்-அவனுடைய திருநாமமே என்று சொல்லப்படுபவனும், அவன் செய்-அவன் எங்கும் செய்கின்ற, மாயம் பெரு பிணக்கு-மாயையாலாகிய பெரிய மாறுபாடுகளை, ஒருங்கு-முற்றிலும், தேர்வார் ஆர்-அறியக் கூடியவர்கள் யார் இருக்கிருர்கள் ? (ஒருவருமில்லை), என்பான்-என்று சொல்லப்படுமவனும் ஆன, அமலம் மூர்த்தி-குற்றமற்ற திருவுருவுடைய திருமால், கருதியது-தன் திருவுளத்திலே சங்கற்பித்ததை, அறிதல் தேற்ரும்-அறிந்து தெளிய வல்லோ மல்லோம்; (யாது கருதியோ), ஈர் ஐம்பான் ஊழி காலம்-நூறு ஊழிக் காலமளவும், (இங்கே யிருந்து), இரு தவம் இயற்றியிட்டான்-பெரிய தவத்தை அவன் செய்திட்டான்.

'பாரின்பால்' என்றவிடத்தில் எண்ணும்மை தொக்கது. ஐம்பான்: இறுதி கெட்டு 'ஆன்' சாரியை பெற்றது.

உலகப் பற்றை ஒழிக்கவிரும்பும் ஞானிகள் தன் திருநாமத்தை எப்போதும் சொல்லி மனனம் செய்தற்குரிய பெருமை வாய்ந்தவனும், தன் மாயா காரியத்தால் யாவராலும் அறிய முடியாத பல மாறுபாடுகளை உலகிலே தோற்றுவித்தும், தான் எத்தகைய மாறுபாடும் எய்தாமலும், எத்தகைய குற்றங்களும் தன்னை யணுகாமல் நிர்மலனுகியுமுள்ள எம்பெருமான் தவம் செய்தது, தவ நெறியை உலகிற்குக் காட்டும் பொருட்டுப் போலும்! அதனை இன்னதென அறுதியிட்டுக்கூறுதல் இயலாதாகலின், 'கருதியது அறிதல் தேற்ரும்' என்ருர்.

'இவ்விடம், முன்னுளிலே திருமாலிருந்து தவஞ்செய்யப் பெற்றது' என முன் கவியிற் கூறிய முனிவன், இங்கே அதனை விரித்துரைத்தான். 'ஈரைம்பானூழிக் காலம்' என்றது தவத்தின் காலநீட்சி கருதியதாகும். அன்றி, மானிடர்க்கு மிகப் பெரிதாகத் தோற்றும் அக்காலவளவு, ஸர்வேச்வரனுக்கு மிக எளிதுதானே; அதனுற் கூறியதென்றலும் ஆம்.

(பி - ம்.) 1. பற்றற்ற; பரிவுறு; பரிவுறும்; படிவந்தன்னுற்; படிவத்தன்னுன்; படிமத்தன்னுன்.
2. பேரென்பார்; பேரன்பால்; பேரென்பது; பெரும்பிணக்கொருங்கும்; பிணக்கினையறுக்கும்; பிணக்கினையோரும்; பெரும்பிணக்கோரும்; பெரும்பிணக்காரது; ஓர்வார்; ஓரார்; தேவர்; தேவன்; மாயன்.
3. ஆரென்பார்; ஆரென்ப; கருதியதரிதிறேற்றும்; கருதியதறிதறேற்றேம்; கருதியகருதற்றேரும்: அருணெறியமைவினேடும்; அருணெறியமைவிறேற்றும்.
4. ஈரைம்பதூழி; இருந்தவ முயற்றிவிட்டான்; அருந்தவமியற்றிவிட்டான்; இருந்தவ முளுற்றியிட்டான்; இருந்தனனினிதினிங்கே; இருந்தனன் யோகத்திப்பால். (17)

## மாவலியின் செயல்

(வேறு)

429. ஆனவ னிங்குறை கின்றவந் நாள்வாய்
ஊனமின் ஞால மொடுங்கு மெயிற்றோர்
ஏனமெ னுந்திறன் மாவலி யென்பான்
வானமும் வையமும் வெளவுதல் செய்தான்.

'ஆனவன்-அத்திருமால், இங்கு உறைகின்ற அ நாள்வாய்-இங்கே (தவத்தில்) தங்கியிருந்த அந்த நாளிலே, ஊனம் இல்-குறைவில்லாத, (அகண்டமான), ஞாலம் ஒடுங்கும் எயிறு-இப்பூமி முழுதும் அடங்கி நின்ற (வளைந்த) பற்களையுடைய, ஓர் ஏனம் எனும் திறல்-ஒப்பற்ற வராகமூர்த்தி யெனத்தக்க வலிமை படைத்த, மாவலி என்பான்-'மாவலி' என்று சொல்லப்படும் அசுர சக்கரவர்த்தியானவன், வையமும்-இவ்வுலகத்தையும், வானமும்-சுவர்க்கலோகத்தையும், வெளவுதல் செய்தான்-கைப்பற்றித் தனதாக்கிக்கொண்டான்.

வராகமூர்த்தி, பூமண்டலம் முழுவதையும் தன் கொம்பிலே மிகஎளிதாகத் தாங்கி நின்றதுபோல,மாவலியும், இவ்வுலகம் மேலுலகம் ஆகிய எல்லாவற்றையும் தனது ஆற்றலால் கைப்பற்றி எளிதாக ஆண்டான் என்ற கருத்துப்பட உவமை அமைந்துள்ளது. வெளவுதல் செய்தான்; கைப்பற்றுதலின் எளிமை தோன்ற நின்றது.

'மாவலி'-மகாபலி என்பதன் திரிபு. இவன் விரோசனன் என்ற அசுரனின் மகன் என்று வான்மீகம் கூறும்.

இரணியாக்கன் என்பவன், தனதாற்றலால் பூமியைப் பாய் போலச் சுருட்டிக்கொண்டு கடலிலே புகுந்து ஒளிந்தானாக. தேவர், முனிவர் முதலியோரின் வேண்டுகோளால், திருமால் வராக ரூபத்துடன் தோன்றிக் கடலிலே புகுந்து, இரணியாக்கனைப் பொருது அழித்து, பூமியை மீட்டுக் கொம்பிலே தாங்கிவந்து முன்போலிருக்கச் செய்தன ரென்பது வரலாறு. அவ்வராக மூர்த்தியின் பெருமை தோன்ற, 'ஞாலம் ஒடுங்கும் எயிற்றோர் ஏனம்' என்றார். ஒரு பிரளய காலத்தில் கடல் நீரிலே முழுகிப்போன பூமியைத் திருமால், வராக வுருவங் கொண்டு எடுத்துக் கொம்பிலே தாங்கி நின்றதாகவும், ஆதி வராகமூர்த்தியாகிய திருமால் பூமியின் கீழிருந்து அதனைத்தாங்கி நிற்பதாகவும் புராண வரலாறு உண்டென்பர்.

'கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின், மிடல்பெரி தெய்தின மாதோ-தொடலைக், கரந்தை மறவர் கருதார் குழாஅந், துரந்து நிரைமீட்ட தோள்' (தொல். பொருள்: 58-ந. மேற்.) என்பது ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

(பி - ம்.) 1. இங்குறைகின்றவ நன்னாள்; இங்குறைகின்றனவந்நாள்; இங்குறைகின்றவந்நாளான்.
2. ஒடுக்கும்; ஒருங்கும்; எயிற்றாண்; எயிற்றால்; எயிற்றின்; எயிற்றோர்.
3. மாவிலி.
4. வவ்வுதல்; வாவுதல்; செய்வான்; வழங்கவரித்தான். (18)

430. செய்தவன் வானவ ருஞ்செய லாற்றா
நெய்தவழ் வேள்வியை முற்றிட நின்றான்
ஐயமில் சிந்தைய னந்தணர் தம்பால்
வையமும் யாவும் வழங்க வலித்தான்.

செய்தவன்-(வானமும் வையமும் வெளவுதல்) செய்தவனான அந்த மாவலி, ஐயம் இல் சிந்தையன்-(தன்னுடைய ஆற்றலில்) ஐயமில்லாத (துணிந்த) மனமுடையவனாய், வானவரும் செயல் ஆற்றா-தேவர்களும் செய்து முடிக்க வொண்ணாத, நெய் தவழ் வேள்வியை-நெய் மிகவும் சொரியப்படுகின்றதொரு (பெரிய)யாகத்தை, முற்றிட நின்றான்-செய்து முடிக்க (முனைந்து) நின்று, (அதன் முடிவில்), வையமும்-பூமியையும், யாவும்-(மற்றும் தானமாகக் கொடுக்கத் தக்க) எல்லாப் பொருள்களையும், அந்தணர் தம்பால்-அந்தணர்களுக்கு, வழங்க-தானஞ் செய்ய, வலித்தான்-உறுதி கொண்டான்.

அந்தணர் தம்பால்: உருபு மயக்கம். நின்றான், முற்றெச்சம்.

'செய்தவன்' என்பது முன் பாட்டின் அநுவாதம். மாவலி அசுரனாதலால், தான் வேள்வி செய்தல் தகுமோ வென்றாவது, அவ் வேள்வியினிறுதியில் செய்யப்படும் அளவு கடந்த தானங்களும்,

வேள்விப்பயனும் இடையூறின்றி நிகழுமோ வென்ருவது ஐயங்கொள்ளாது துணிந்து நின்றமையின், 'ஐயமில் சிந்தையன்' என்ருர். அத்துணிவினுலேயே, எல்லாவற்றையும் தானஞ்செய்ய உறுதிகொண்டான். செய்தவன்-முன் செய்த தவத்தையுடையவன் என்றும் ஆம்.

(பி - ம்.) 1. செய்தபின்: செய்தவர்; செயலாற்ருர்; செயலற்ருர்.
2. நெய்யமர்: வேள்வியும்: முற்றினன்; முற்றுற.
4. வய்யமும்; வானும்: வாழ்வும்: வரித்தான். (19)

431. ஆய தறிந்தனர் வானவ ரந்நாள்
மாய்ஞே வந்து வணங்கி யிரந்தார்
தீயவன் வெந்தொழி றீரென நின்ருர்
நாயக னும்மது செய்ய நயந்தான்.

'வானவர் - தேவர்கள், ஆயது - (மாவலி வரையறை யின்றி எல்லாவற்றையும் தானமாக வழங்கத் துணிந்த) அச்செயலே, அறிந்தனர்-அறிந்தவர்களாய், அந்நாள்-அப்போது, வந்து-இவ்விடத்துக்கு வந்து, மாயனே வணங்கி-(தவ யோகத்தில் இருந்த) மாயையில் வல்ல எம்பெருமானே வணங்கி, தீயவன்-கொடியவனுன மாவலியின், வெம் தொழில்-கொடுஞ் செயலே, தீர் என-தீர்த்து (எங்கட்கு) அருள் செய்ய வேணுமென்று, இரந்தார் நின்ருர்-யாசித்து நின்ருர்கள்; (அவர்கள் வேண்டுகோளேக் கேட்ட), நாயகனும்-யாவர்க்கும் தலேவனுன எம்பெருமானும், அது செய்ய நயந்தான்-அவர்கள் வேண்டிய அதனேச் செய்தற்கு விரும்பினுன். (திருவுளங் கொண்டான்).

இந்திரனே வென்று அவனுடைய திரிலோகாதிபத்தியத்தையும் கைப்பற்றி, தேவர்களேச் சிறிதும் பொருட்படுத்தாத மாவலி, இப்போது பெரிய யாகமும், வரையறையில்லாத தானமும் செய்யத் துணிவதனுல், மேலும் தேவர்களுக்குத் தீமையே என்பது கருதி, அதனேத் தீர்த்தருளும் வண்ணம் எம்பெருமானே அவர்கள் வேண்டி நின்றனர்; அவன் தேவர்களுக்குத் தீமையே செய்வதனுல் 'தீயவன்' என்றும் அவன் செய்வது வெந்தொழி லென்றும் கூறினர்.

நாயகன்=ஸர்வ லோகைக நாயகன். நாயகனும் மது: விரித்தல் விகாரம்.

(பி - ம்.) 1. அறிந்தவ்: அன்னுர். 2. இருந்தார்' 3. தீர்கென.
4. நயந்தார். (20)

### வாமனுவதாரம்

432. கால நுனித்துணர் காசிப னென்னும்
வாலறி வற்கதி திக்கொரு மகவாய்
நீல நிறத்து நெடுந்தகை வந்தோர்
ஆலமர் வித்தி னருங்குற ளானுன்.

நீலம் நிறத்து நெடு தகை-கரிய திருமேனி நிறத்தையும், பெருமைக் குணங்களையுமுடைய திருமால், (தேவர்களின் வேண்டுகோளை முற்றுவிக்கும் பொருட்டு), காலம் நுனித்து உணர்-முக்கால நிகழ்ச்சிகளையும் கூர்ந்தறியவல்ல, காசிபன் என்னும்-காசிபன் என்று சொல்லப்படுகிற, வால் அறிவற்கு(ம்)-மெய்யுணர்வுடைய முனிவனுக்கும், அதிதிக்கு(ம்)-(அம்முனிவன் பத்தினியான) அதிதி தேவிக்கும், ஒரு மகவு ஆய் வந்து-ஒரு குழந்தையாக அவதரித்து, ஓர் ஆல் அமர் வித்தின்-(பெரியதோர்) ஆலமரம் முழுவதும் (தன்னுள்) அடங்கிய சிறு விதையைப் போல, அரு குறள் ஆனன்-மிகவும் குறிய வடிவமுடைய வனானன்.

காசியப முனிவன், தன் பத்தினியாகிய அதிதிதேவியோடு கூடி, தேவமானத்தால் ஆயிரம் ஆண்டுகள் திருமாலைக் குறித்து விரதமியற்ற, அதற்குவந்து வரமருளவந்து முன்னின்றதிருமாலிடத்து 'தேவரீர், எனக்குப்புதல்வனாக அதிதியிடம்தோன்றி, உபேந்திரனாகி, அசுரர்களை யடக்கி, அவர்களால் வருந்துகின்ற தேவர்களின் துன்பம் தீர்க்க வேணும்' என்று அவன் வேண்ட, திருமாலும் அவ்வரந்தந்து, அதற்கியைய அவர்களுக்குப் புதல்வனாய்ப் பிறந்து வாமனன் ஆனான் என்பது வரலாறு. தேவர்கள் குறையிரந்ததும் காசியப முனிவன் வரம்பெற்றதும் காலம் ஒத்தலின், தேவர்கள், வாமனனாகியே தங்கள் குறை தீர்க்க வேண்டினர் என்று வான்மீகத்திற் கூறப்படுகிறது.

காசியப முனிவன் விரதத்தை மேற்கொண்டு முடித்துச் சித்தி பெற்ற இடம் ஆதலின், அது திருமாலின் அருளால் சித்தாச்சிரமம் என வழங்கலாயிற்று.

வாலறிவன்: 342-பார்க்க. ஆலமர் வித்தி னருங்குறள்: 'ஆலமருமெய்யுடையன்' (ஆரணிய. 155); 'ஆலமும் வித்துமொத் தடங்கு மாண்மையான்' (யுத்த. 203); வாமனன் செய்தி: 446-பார்க்க. நெடுந்தகை குறளானான் என்பது ஒரு நயம்.

(பி - ம்.) 1. நுணித்துணர்; நுதித்துணர்; காசிபனுக்கும். 2. வாலதிதிக்குமோர் மாமகவாகி. 3. நீலநிறத்தின். 4. ஆலமை; வித்தினரங்குரமானான்; வித்தனருங்குறளானன். (21)

433. முப்புரி நூலினன் முஞ்சியன் விஞ்சை
கற்பதோர் நாவினன் புற்படு கையன்
அற்புத னற்புத ரேயறி யுந்தன்
சிற்பத மொப்பதோர் மெய்க்கொடு சென்றான்.

'அற்புதன்-ஞான சொரூபியாகிய பெருமான், முப்புரி நூலினன்-மூன்று வடமாகிய பூணூலை யணிந்தவனும், முஞ்சியன்-முஞ்சிப் புல்லாலாகிய அரைஞாணுடையவனும், விஞ்சை கற்பது ஓர் நாவி

னன்-வேத மந்திரங்களை ஓதும் ஒப்பற்ற நாவையுடையவனும், புல் படு கையன்-தருப்பைப் புல்லாலாகிய பவித்திரம் அணிந்த கையை யுடையவனுமாகி, அற்புதரே அறியும் தன்-வியக்கத்தக்க மெய்யுணர் வுடையவரே அறியத்தக்க தன்னுடைய, சித் பதம் ஒப்பது-ஞான வடிவத்தை ஒப்பதாகிய, ஓர் மெய் கொடு-ஒரு சிறிய திருமேனியைக் கொண்டு, சென்றான்-(மாவலி வேள்வி செய்யுமிடத்துக்குச்) சென்றான்.

பெருமான், மிகக்குறுகிய வடிவுடைய பிரமசரியக் கோலத் துடன் மாவலியிடத்துச் சென்றதை விரித்துரைப்பது இச்செய்யுள்.

முப்புரி நூல்: ஒவ்வொன்றும் மூன்றிழைகளால் முறுக்கப்பட்ட மூன்று வடங்கொண்ட பூணூல்; 'ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண் ஞாண்' (முருகு. 183). முஞ்சி=மௌஞ்சி: இடையிற் கட்டுவது; முஞ்சிப் புற்களால் முறுக்கப்பட்டது. புல்: கையில் அணியும் பவித் திரத்துக்கு ஆகுபெயர். அற்புதரே அறியும் என்றது, மெய்யுணர் வினர் தம் அறிவாலேயே நுனித்துணரத்தக்க என்றவாறும்; எனவே, ஏனையோர் அறியவொண்ணாத என்பது பெறப்படும். ஏகாரம்: பிரி நிலை. 'அனற்படு கையன்' என்பது பெரும்பான்மையான பாடம்; இதற்கு, 'தீப் பொருந்திய கையுடையான்' என்றேனும், சமிதாதான முதலியன செய்தற்குரிய தீயொடு பயிலுங் கையுடையவன் என்றே னும் கூறலாம்.

பார்ப்பாரின் வலக் கையில் தீயுள்ள தென்பது நூற்றுணிபு. அற்புதன்: அயோத். 260.

(பி - ம்.) 1. முஞ்சையன்; விஞ்சக்.
2. நாவினனற்பொதி; நாவினனற்படு; நாவனனற்படு:கையான்; கையின்.
3. அற்புதமற்புதரே: அறியுந்தம்.
4. சிற்பரமொப்பதொர்; சிற்பதமொய்ப்பதொர்; மெய்கொடு. (22)

434. அன்றவன் வந்த தறிந்துல கெல்லாம்
வென்றவன் முந்தி வியந்தெதிர் கொண்டான்
நின்றுணை யந்தண ரில்லை நிறைந்தோய்
என்றனி னுய்ந்தவர் யாருள ரென்றான்.

'உலகு எல்லாம் வென்றவன்-எல்லாவுலகங்களையும் வென்றவ னாகியமாவலி, அன்று அவன் வந்தது அறிந்து-அப்போது அவ்வாமனன் வந்ததை அறிந்து, முந்தி-அவன் முன் சென்று, வியந்து-(அவனது தோற்றத்தைக் கண்டு) வியப்புற்று, எதிர்கொண்டான்-அவனை யெதிர்கொண்டழைப்பவனாய், 'நிறைந்தோய்-எல்லா நற்குணங் களும் நிறைந்தவனே! நின் துணை அந்தணர் இல்லை-உனக்கொப்பான அந்தணர் பிறர் (இவ்வுலகத்தில்) இல்லை; (ஆதலால்), என்தனின்-(நீ வலிய எழுந்தருளப்பெற்ற பேறுடைய) என்னைக் காட்டிலும்,

உய்ந்தவர்-ஈடேறியவர், யார் உளர்-வேறு யார் இருக்கின்றனர்' என்றான்-என்று முகமனுரை கூறினான்.

வாமன மூர்த்தியைக் கண்டமாத்திரத்தில், அம் மூர்த்தியின் அற்புதத் தோற்றம் மாவலியைக் கவர, அவன் எழுந்து வந்து எதிர் கொண்டு முகமன் கூறி அழைத்துச் சென்றனன் என்க. எல்லா வுலகங்களையும் வென்று, எவரையும் பொருட்படுத்தாத வீறுடைய மாவலியையும் மனங்கவர்ந்தது வாமனன் தோற்றம். 'எங்கும் நிறைந்த பரம்பொருளே' என்ற பொருளும் தோன்ற 'நிறைந்தோய்' என்ற சொல் இங்கே அமைந்துள்ளது. 'அந்தணரில் உனக்கொப்பான வரில்லை; அத்தகைய பெருமையுடைய உன்னைத் தரிசிக்கப்பெற்ற என்னினும் சிறந்தார் ஒருவரும் இல்லை' எனத் தான் பெற்ற பேற்றை யும் வியந்து கூறினான் மாவலி.

என்றனின்: தன், சாரியை; இன், ஐந்தனுருபு; உறழ்பொரு.

நின்றுணையந்தணரில்லை: 439-பார்க்க, 3, 4-ஆம் அடிகள்: ஒப்பு: 'முயறவ முற்றினார், உன்னின் யாருள ருன்னரு ளெய்திய, என்னின் யாருள ரிற்பிறந்தா ரென்றான்' (ஆரணிய. 147).

(பி-ம்.) 2. விரைந்தெதிர் சென்றான்.
3. நின்றனில்; நின்றனின்: நிறைந்தோர்.
4. என்றனில்; என்னினுயர்ந்தவர்: யாரினி; ஆரினி; யாவர்கொல். (23)

435. ஆண்டகை யவ்வுரை கூற வறிந்தோன்
வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி
நீண்டகை யாயினி நின்னுழை வந்தோர்
மாண்டவ ரல்லவர் மாண்பில ரென்றான்.

'ஆண் தகை-ஆடவரில் சிறந்த அம் மாவலி, அ உரை கூற-அவ்வுபசார மொழிகளைச் சொல்ல, (அதைக் கேட்ட), அறிந்தோன்-எல்லா மறிந்தவனான வாமன மூர்த்தி, 'வேண்டினர்-(உன்னிடம் வந்து) வேண்டினவர்களுடைய, வேட்கையின் மேல் பட-விருப்பத் திற்கு மேலாகவே, வீசி-வரையாது கொடுத்து, நீண்ட கையாய்-(கொடையிலே)மேம்பட்ட கைகளை யுடையவனே! இனி-இப்போது, (உன் காலத்தில்), நின் உழை வந்தோர்-உன்னிடம் (ஒன்றை வேண்டி) வந்தவர்களே, மாண்டவர்-பெருமையுடையவராவர்; அல்லவர்-அவ்வாறு வராதவர், மாண்பு இலர்-பெருமையில்லாதவர் களே!' என்றான்-என்றிவ்வாறு மாவலியைப் புகழ்ந்துரைத்தான்.

இரப்போர் ஈவோரைப் புகழ்ந்துரைத்தல் இயல்பு; ஆதலால், வாமனன் தான் யாசிக்க வந்திருத்தலை இவ்வாறு குறிப்பித்தனன் என்க. வீசுதல்-வரையாது வழங்குதல்: 1312; வீசி நீண்ட கை. 'தருகை நீண்ட தயரதன்' காப்பு. 9.

'கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின், றிரப்புமோர் ஏஎருடைத்து' ; 'இரத்தலு மீதலே போலுங் கரத்தல், கனவிலுந் தேற்ருதார் மாட்டு' (குறள். 1053, 1054) என்பன ஈண்டு நோக்கு தற்குரியன.

ஆண்டகை: பண்புத் தொகையன்மொழி. நின்னுழை: உழை, ஏழன் உருபு.

(பி - ம்.) 1. அவ்வகை; அறிந்தான்; கூறிட வந்தோன்.
2. வேண்டவர்: வேண்டகைமேற்பட; வேண்டுவமேற்பட; வீச.
3. நீண்டகையாமென; நீண்டகையாவென; நீண்டகையாயென; நீண்ட கையாய்மதி.
4. அல்லர்கள்: மாண்பினர். (24)

436. சிந்தை யுவந்தெதி ரென்செய வென்ருன்
அந்தணன் மூவடி மண்ணரு ளுண்டேல்
வெந்திற லோய்தர வேண்டு மெனுமுன்
தந்தனெ னென்றனன் வெள்ளி தடுத்தான்.

'(வாமனனது புகழ்ச்சியுரை கேட்ட மாவலி), சிந்தை உவந்து-மன மகிழ்ந்து, எதிர்-(வாமனனுக்கு) மறுமொழியாக, 'என் செய-(இப்போது நான்) என்ன செய்ய வேண்டும்?' என்ருன்—, அந்தணன்-வாமனமூர்த்தி, (மாவலியை நோக்கி), 'வெம்திறலோய்-(பகைவர்க்குக்) கொடிய வலிமையுடையவனே! அருள் உண்டேல்-(என்னிடம் உனக்கு) தயை உண்டாகில், மூ அடி மண் தரவேண்டும்-(என் காலால்) மூன்றடியளவுள்ள பூமியை எனக்குத் தானமாகக் கொடுக்க வேண்டும்; (இவ்வளவே நான் வேண்டுவது); எனு முன்-என்று கூறி முடிக்கு முன்னமே, (மாவலி), 'தந்தனென்-(அவ்வாறே) 'கொடுத்தேன்'என்றனன்—;(இதைக்கேட்டு),வெள்ளி-(அருகிலிருந்த குருவாகிய) சுக்கிரன், தடுத்தான்-மாவலியின் தானத்தைத் (தகாது என்று) தடுத்தான்.

எதையும் தானமாகத் தரத் துணிந்துள்ள மாவலிக்கு, வாமனன் கேட்டது ஒரு பொருட்டன்ருதலால், உடனே 'தந்தனென்' என்ருன்; ஆனுல், மேல் நிகழப் போவதை யறிந்த சுக்கிரன், இது தகாது என்று தடுத்தான். மாவலிக்குச் சுக்கிரன் குருவும் மந்திரியு மாதலால், அவ்வாறு செய்தனன். சுக்கிரன் மந்திரியெனல்: 445.

வெள்ளி: வெண்ணிறமுடையவ ஞதலால் சுக்கிரனுக்குக் காரணப் பெயர். தந்தனென்: துணிவுபற்றி வந்த கால வழுவமைதி. 'திறலோய்தர வேண்டும்' என்றவிடத்து, 'திறல் ஒய்தர வேண்டும்' என்ற தொனியும் உன்னற்பாலது.

(பி - ம்.) 1. உவந்தது: என்செயல்; என்செய்க.
3. வெந்திறலாயிது; வெந்திறலாயது; வெத்திறலோயது; வெந்திறலாய் தர. ௪. என்றலும். (25)

437. கண்ட திறத்திது கைதவ மைய
கொண்ட னிறக்குற ளென்பது கொள்ளேல்
அண்டமு மற்றை யகண்டமு மேனுள்
உண்டவ னுமிது ணர்ந்துகொ ளென்றான்.

(மாவலியைத் தடுத்த சுக்கிரன், மாவலியை நோக்கி), 'ஐய-தலைவனே! கண்டதிறத்து இது-நம்மால் காணப்படும் தோற்றத்தை யுடைய இவ்வடிவம், கைதவம்-மாய வடிவமாகும்; கொண்டல் நிறம் குறள் என்பது-(இவ்வடிவம்) கருமேகம் போன்ற நிறமுள்ள குறுவடி வாயிருப்பதை, கொள்ளேல்-(உண்மையென்று) கொள்ளாதே; அண்டமும்-இவ்வண்டத்தையும், மற்றை அகண்டமும்-மற்றும் உள்ள எல்லாவற்றையும், மேல் நாள்-முன்னொரு காலத்தில், உண்டவன் ஆம்-தன் வயிற்றினுள் அடக்கிக்கொண்ட இறைவனே ஆவான் இவன்; இது உணர்ந்துகொள்-இவ்வுண்மையை அறிந்துகொள்வா யாக;' என்றான்—.

'பிரளய காலத்தில் அண்ட சராசரங்களையெல்லாம் தன்வயிற் றுள் அடக்கிக்கொண்டு சிறு குழந்தைபோல் ஆலிலையில் அறிதுயி லமரும் ஆதிமூர்த்தியே தேவர்கள் பொருட்டு இப்போது இவ்வடிவங் கொண்டு வந்துள்ளானாதலால், இது வஞ்சகச் செயலாகும்; இதனை நீ உண்மையென்று கருதி அவன் கேட்டபடி தானத்தைச் செய்வா யாயின் பின்னே உனக்குத் தீமை நேர்வது திண்ணம்' என்று சுக்கிரன் கூறித் தடுத்தான் என்க.

(பி - ம்.) 1. திறத்தது: ஐயா.
3. முற்ற: மற்ற: முற்றும்: எல்லாம்.
4. உண்டவனேயது; உண்டவனுயது; உண்டலனீயது. (26)

சுக்கிரனுக்கு மாவலி கூறல்

438. நினைக்கிலை யென்கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாவில்
கனக்கரி யானது கைத்தல மென்னின்
எனக்கிதன் மேனல மியாதுகொ லென்றான்.

(மாவலி,சுக்கிரனுக்கு விடையாக),'தனக்கு இயலா வகை-தன் தகுதிக்குப் பொருந்தாத வகையில், வந்து-என்னிடம் வந்து, என் கை நிமிர்ந்திட-(கொடுப்பதனால்) எனது கை மேல்நிற்க, தாழ்வது-அதன் கீழே (கொள்ளும் பொருட்டு) நீட்டப்படுவது, தா இல்-கெடுதலில் லாத, கனம் கரியானது கை தலம் என்னின்-மேகம் போன்ற கருநிற முடைய நாராயணனது கையென்றால், எனக்கு இதன்மேல் நலம் யாது-எனக்கு இதனினும் மேலான நன்மை யென்ன விருக்கின்றது ? நினைக்கிலை-(நீர் இதனை) நினைக்காமற் போனீர் !' என்றான்—.

கொல்: அசைநிலை.

'நாராயணனே இவ்வாறு வந்து, என் கை மேற்படவும் தன் கை கீழ்ப்படவும் என்னிடம் தானம் ஏற்பதானல் எனக்கு இதனினும் சிறந்த பேறு வேறொன்றில்லை; ஆதலால் என் வாக்குப்படி கொடுத் தலைத் தடைசெய்ய வேண்டாம்' என்று மாவலி தன் புரோகிதனுக்கு மறுமொழி கூறினன் என்க. 'தேவேந்திரன் வந்து தேகியெனக் கையேற்றால் யாவேனும் யான் கொடுக்க மாட்டேனே!' (பா-வெ.) என்பது ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

(பி - ம்.) 1. நினக்கில்லை; நினக்கியல்.
2. தாழ்வது தாழ்வில்; தாழ்வகை தாழ்வில்.
3. கனக்கிரியானது; கனக்கரியானிரு: என்னில்.
4 எனக்கிதின்: என்ன. (27)

439. துன்னினர் துன்னல ரென்பது சொல்லார்
முன்னிய நன்னெறி நூலவர் முன்வந்
துன்னிய தான முயர்ந்தவர் கொள்க
என்னி லிவன்றுணை யாவ ருயர்ந்தார்.

(பின்னும்அவன்),முன்னிய-(யாவரும்)மதித்தற்குரிய,நல்நெறி நூலவர்-சன்மார்க்கங்களைச் சொல்லும் தருமசாத்திரமறிந்த பெரியோர்கள், முன்வந்து-(தானம் செய்ய) முற்பட்டு, உன்னிய தானம்-(தாங்கள்) கருதிய தானத்தை, உயர்ந்தவர்-தகுதியுடைய உயர்ந்தவர்கள், (யாவராயினும்), கொள்க-பெற்றுக் கொள்ளக் கடவர், என்னில்-என்று கூறிச் செய்வார்களானல், துன்னினர்-(தானம் பெறுவோர் தமக்கு) வேண்டியவர்கள்; துன்னலர்-(தமக்கு) வேண்டாதவர்கள்;' என்பது-என்பதைப்பற்றி, சொல்லார்-பேசமாட்டார்கள்: (எனவே, அத்தகைய என்னுடைய தானத்தைப்பெறவந்தவர்களுள்) இவன் துணை உயர்ந்தார் யாவர்-இவ்வாமனனைப் போல் உயர்ந்தவர் வேறு யார் உளர்? (ஒருவருமில்லை).

துன்னினர்-வந்தவர், துன்னலர்-(நமக்கு) வேண்டாதவர், என்பது சொல்லார் என உரைத்தலுமாம்.

'உயர்ந்த காரியங்களை மேற்கொண்டு தானங்கள் செய்ய முன் வந்தவர்கள், அவற்றைப் பெறுதற்குரிய சற்பாத்திரரை அறிந்து செய்யவேண்டுமேயன்றி, அவ்விஷயத்தில் வேண்டியவர்-வேண்டாதவர் என்ற வேறுபாடு கருதுதல் கூடாது; அத்தகைய கொள்கையுடைய என்னிடம் தானம் பெற வந்தவர்களுள் இவ்வாமனனிலும் உயர்ந்த தகுதியுடையார் ஒருவருமில்லை' என்றனன் மாவலி. அசுர இனத்தவராகிய நாம் நம் பகைவராகிய தேவரினத்தவர்க்குத் தானஞ் செய்தல் கூடாதென்று நீர் கருதுவீராயின், அது தகாததாம் என்றவாறு.

மாவலி, அசுரனாதலால், யாகம் செய்யும் மற்றவர்களைப்போல இந்திரன் முதலிய தேவர்களைத் திருப்தி செய்வித்து அவர்களுக்கு அவிர்ப்பாகங் கொடுக்கும் முறையிலன்றி, பக்தியோடு ஸ்ரீமந் நாராயணனைக் கருதியே யாகஞ் செய்தானென்பர்; எனவே, அந்நாராயணனே நேரில் வந்துள்ளதனால் அவன் மிக்க பேறு பெற்றவனானான். அவனால் தேவர் முதலியோர்க்கு நேரும் தீமைகளைப் போக்குவது எம்பெருமான் திருவுள்ளக் கருத்தேயன்றி, அவனை அழிப்பது கருத்தன்று.

(பி - ம்.) 2. நூலவர் முனிவன்.
3. உவந்தவர்; உவந்தெதிர்: கொள்ள; கொள்வார்; கொள்ளில்: கொள்வோர்; கொள்வான்.
4. என்னினிவன்; என்னிலவன்; என்னிலுயர்த்தவர் யாரினி யென்றான். (28)

440. வெள்ளியை யாதல் விளம்பினை மேலோர்
வள்ளிய ராக வழங்குவ தல்லால்
எள்ளுவ வென்சில வின்னுயி ரேனும்
கொள்ளுதல் தீது கொடுப்பது நன்றால்.

'வெள்ளியை ஆதல் விளம்பினை-(நீர் இவ்விஷயத்தில்) அற்பத் தன்மையால் இவ்வாறு கூறினீர்; மேலோர்-உயர்ந்தவர்கள், வள்ளியர் ஆக-வரையாத கொடையுடையவர்களாய், வழங்குவது அல்லால்-(இரப்பவர் கேட்பது எதுவாயினும்) கொடுப்பதையன்றி, எள்ளுவ சில என்-(கொடாது) விலக்கத்தக்க சில என்னவுண்டு? (ஒன்றுமில்லை); இன் உயிரேனும்-(தத்தமக்கு) இனிய உயிரேயாயினும், கொள்ளுதல் தீது-(இரந்து) பெற்றுக் கொள்வது தீயதே; கொடுப்பது-(அதனையும்) கொடுப்பது, நன்று-நல்லது. ஆல்-அசை.

வெள்ளியை ஆதல்-'வெள்ளி' யென்னும் பெயருடைமையால் எனவும் கூறலாம்; இதற்கு, இப்பெயருக்கேற்ப ஆழ்ந்த அறிவின்றிக் கூறினீர் எனக் கூறுக. வெள்ளியோர்-சிற்றறிவினர்; சுந்தர. 539; குறள். 714. கா. உரை.

'உயர்ந்தோர், தாம் கொடுப்பது என்று தொடங்கிவிடின், இடையே கொடாது சில பொருள்களை நிறுத்திக் கொள்வதென்பது இல்லை; யாசகர் கேட்பது எதுவாயினும் கொடுத்தே தீருவர்; இதுவே உண்மைக் கொடையாகும். மானத்தையோ வீரத்தையோ விட்டு உயிரைக் காத்துக்கொள்ளும் நிலை நேரினும், அவ்வாறு செய்தல் தவறேயாகும்: சொல் தவறாமையின் பொருட்டும், கொண்ட விரதத்தைக் காத்தற் பொருட்டும் உயிரையே கொடுக்க நேர்ந்தாலும் கொடுத்துவிடுதலே சிறந்ததாகும்' என எடுத்துக் கூறினன் மாவலி.

'நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம், இல்லெனினு மீதலே நன்று' (குறள். 222); 'ஈயென விரத்த லிழிந்தன்று...கொள் ளெனக் கொடுத்தலுயர்ந்தன்று' புறநா. 204; 1-3 ம், அவற்றின் அடிக் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. வெள்ளியே யாதல்; வெள்ளியை யாது; விளம்பினர்; மேலோய்.
2. வள்ளியராகி; வள்ளியராகில்; வள்ளியராயின்; அல்லாது.
3. எள்ளுவது: இன்னுயிரென்னும்.
4. நன்ருய்; நன்மை. (29)

441. மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரன்றி யிருந்தவர் யாரே.

'எந்தாய்-எம் தந்தை போன்றவரே! மாய்ந்தவர்-(உலகத்தில்) இறந்துபட்டவரெல்லோரும், மாய்ந்தவர் அல்லர்கள்-இறந்தவராக மாட்டார்கள்; மாயாது-(இரக்கநேரின்) உயிரைவிடாமல், ஏந்திய கை கொடு-பிறரிடம் ஒன்றைப் பெறுதற்கு ஏந்திய கையுடன், இரந்தவர்-யாசித்தவர்களே, வீந்தவர் என்பவர்-இறந்தவரென்று சொல் லப்படுவர்; வீந்தவரேனும்-(கொடுத்தவர்கள்) இறந்துபட்டாரெனி னும், ஈந்தவர் அன்றி-(பிறர்க்கு அவர் விரும்பியதொன்றைக்) கொடுத்தவரையன்றி, இருந்தவர் யார்-(என்றும்) அழியாதிருப்பவர் வேறு யார்?

இரப்பவர் உயிரோடிருப்பினும் நடைப்பிணமாவர்; கொடுத்துப் புகழ் பெற்றவர், ஊனுடம்பு அழியினும் புகழுடம் பால் என்றும் உள்ளவராவர் என்பது கருத்து.

ஒப்பு: 'இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து, கெடுகவுலகி யற்றியான்' (குறள். 1062); 'ஈந்தவரன்றியிருந்தவர் யார்': 'உரைப் பாருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன், றீவார்மே னிற்கும் புகழ்' (குறள். 232); புறநா. 165: 1-2ம் காண்க.

(பி - ம்.) 1. மாயா. 2. கைக்கொடு; கையொடு; இரந்தவரென்பார்.
3. வீய்ந்தவர்; வீய்ந்தனர்; வீய்ந்தனரேனும்; வீய்ந்தவரென்னும்.
4. ஈய்ந்தவர்; அல்லது; அல்லர்: இருப்பவர். (30)

442. அடுப்ப வரும்பழி செய்ஞ்ஞரு மல்லர்
கொடுப்பவர் முன்பு கொடேலென நின்று
தடுப்பவ ரேபகை தம்மையு மன்னுர்
கெடுப்பவ ரன்னதொர் கேடிலை யென்ருன்.

அரு பழி அடுப்ப செய்ஞ்ஞரும்-(ஒருவருக்கு) அழியாத பழி வந்து பொருந்தும்படி (தீமையைச்) செய்பவருங்கூட,(பகை) அல்லர்-

அவருக்குப் பகையாகமாட்டார்; (மற்று, பகையாவார் யாவர் எனின்), கொடுப்பவர் முன்பு நின்று-பிறருக்குத் தானங்கொடுப்பவர் முன்னே நின்றுகொண்டு, கொடேல் என தடுப்பவரே-கொடுக் காதே என்று சொல்லித் தடுப்பவர்களே, பகை-(அவருக்குப்) பகை யாவர்; அன்னூர்-அவ்வாறு தடுப்பவர், தம்மையும் கெடுப்பவர்-(கொடுப்பவரையன்றி), தம்மையும் கெடுத்துக்கொள்பவராவர்; அன்னது ஓர் கேடு இலே-அதைப் போன்றதொரு தீமை (வேறு) இல்லை' என்ருன்—.

ஒருவருக்கு, வெளிப்படையாகத் தீமை செய்பவரால் வரும் கேட்டைத் தடுத்துக் காத்துக்கொள்ளலாம்; அதனுல்அக்கேடு செய் தோர் அத்துணைப் பகைவராகார்; ஆனுல் உடனிருந்தே அடுத்துக் கெடுப்பவர் மிகக் கொடியர்; அவர் தம் செயலால் பிறரைக் கெடுத் துத் தாமும் கெடுவர் என்பது கருத்து.

ஈவது விலக்குவோர், விலக்கப்பட்டோருக்குப் பாவத்தைத் தேடித்தந்து, தாமும் பாவத்துக்காளாகி, இனத்தோடு அழிவர்; 'கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ, முண்பதூஉ மின்றிக் கெடும்: (குறள். 166). இவ்வாறு அவர்கள் தமக்கும் பிறர்க்குங் கேடு செய்தலால், 'அன்னதோர் கேடு இல்லை' எனப்பட்டது.

(பி - ம்.) 1. அரும்பகை; செய்ஞரும்; செய்குனர்: அல்லால்; அல்லார்; அல்லாற்.
2. கொடேலெனினின்று.
3. தடுப்பவரும்: அன்னர்: ஒன்னுர்.
4. கெடுப்பதில்; இன்னதொர்; அல்லரோ; வேருெரு: கேட்டிலே. (31)

443. கட்டுரை யுத்தமர் கைத்துள போழ்தே
இட்டிசை கொண்டற னெய்த முயன்ருேர்க்
குட்டெறு வெம்பகை யாவ துலோபம்
விட்டிட லென்று விலக்கினர் மாதோ.

'கட்டுரை உத்தமர்-உறுதிப் பொருளைக் கூறும் மேலோர்கள், கைத்து உள போழ்தே-தம் கைப்பொருள் உள்ள காலத்திலேயே, இட்டு-(பிறருக்குக்) கொடுத்து, இசை கொண்டு-(இம்மையில்) புகழையடைந்து, அறன் எய்த-(மறுமையில்) தருமப் பயனுகிய புண்ணியத்தையும் அடையும்படி, முயன்ருேர்க்கு - அவ்வழியிலே முயற்சி செய்பவருக்கு, உள் தெறு வெம் பகை ஆவது-உள்ளேயிருந்து கெடுக்கும் கொடிய பகையாயிருப்பது, உலோபம்-உலோப குண மாகும்; (ஆதலால்), விட்டிடல் என்று-அதனை விட்டுவிடுக என்றுகூறி, விலக்கினர்-விலக்கியுள்ளனர்.

'கட்டுரை யுத்தம' என்ற பாடத்துக்கு, 'எனக்குக் கட்டுரை கூறும் உத்தமனே' என விளித்ததாகப் பொருள் கொள்க; இதில் உத்தமன் என்றது இகழ்ச்சிக் குறிப்பு.

'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது, ஊதியமில்லையுயிர்க்கு' என்றவாறு வாழ நினைப்பவர்களுக்கு, அதனைக் கெடுப்பது, உட்பகை ஆறினுள் ஒன்றாகிய உலோபகுணமாகும்; எனவே அதனை விட்டொழித்தல் வேண்டும் என்று பெரியோர் கூறுவர்; அங்ஙனமாக, நீர் உலோப குணத்தைக் கைக்கொள்ளும்படி கூறுதல் அழகன்று என்று கூறி மறுத்தான் என்க. இவ்வாறு வாழ்தல் எல்லோர்க்கும் எளிதன்று என்பான், 'முயன்றோர்க்கு' என்றான். உலோபம்-கடும் பற்றுள்ளம்.

கைத்துளபோழ்தே ...... முயன்றோர்க்கு: 'என்னானுமொன்று தங் கையுறப் பெற்றக்கால், பின்னாவதென்று பிடித்திரார்-முன்னே, கொடுத்தா ருயப்போவர்'; 'கைத்துண்டாம் போழ்தே கரவாதறஞ் செய்ம்மின்' (நாலடி. 5, 19.) உலோபத்தின் கொடுமை: 381.

விட்டிடல்: அல்லீற்று வியங்கோள்; இடு: பகுதிப் பொருள் விகுதி. மாது, ஓ: அசை நிலை.

(பி - ம்.) 1. கட்டுரை யிற்றம; கட்டுரை யுத்தம; கட்டுரை யுந்தம; கைக்குள; அகத்துள: போதே.
2. அறமெய்த; முயன்றோர்; முயன்றார்.
3. உட்டெறும்: ஆவதும் லோபம்.
4. விட்டிட; விட்டிடிர்; விலக்கினன்; விரித்தனர்; தாமே; மேலோர். (32)

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை. சில பிரதிகளில் இப்பாடல், 'அடுப்பவரும்' (442) என்பதன் முன் உள்ளது.

(வேறு)

444. எடுத்தொருவ ருக்கொருவ ரீவதனின் முன்னம்
தடுப்பது நினக்கழகி தோதகவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோர்தமது சுற்றம்
உடுப்பதுவு முண்பதுவு மின்றியொழி யுங்காண்.

'ஒருவருக்கு ஒருவர் எடுத்து ஈவதனின் முன்னம்-(இரந்த) ஒருவருக்கு, (கொடுக்கும்) ஒருவர் (இரந்தவர் விரும்பிய பொருளை)எடுத்துக் கொடுப்பதற்கு முன்னே, தடுப்பது-அக்கொடையைத் தடுப்பது, நினக்கு அழகிதோ-உமக்கு அழகாகுமோ? தகவு இல் வெள்ளி-பெருந் தன்மையில்லாத சுக்கிராசாரிய! கொடுப்பது விலக்கு கொடியோர் தமது சுற்றம்-(ஒருவர்) கொடுப்பதைத் தடுக்கும் கொடியவர்களின் சுற்றமும்,உடுப்பதுவும் உண்பதுவும் இன்றி-உண்ண உணவும் உடுக்க உடையும் இல்லாமல், ஒழியும்-கெட்டொழியும் (என்பதனை), காண்-எண்ணுவீராக.

இதுவரை, பொதுப்படக் கூறிவந்த மாவலி, இறுதியாக, சுக்கிரன் செயலில் தனக்குள்ள வெறுப்பு முழுதும் தோற்றும் வகையில் கடிந்து கூறினான். 'எனக்குப் புரோகிதரும், மந்திரியுமாக வுள்ள

நீர், இவ்விஷயத்தில் என்னை மேலும் ஊக்குவதைவிட்டு, இதனைத் தடுப்பது சற்றும் தகுதியற்ற செயலாகும்; எனவே உம்முடைய சொற்களை நான் ஏற்க மாட்டேன்' என்பதுபட மொழிந்தான்.

3—4-ஆம் அடிகள், 'கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்ப தூஉ, முண்பதூஉ மின்றிக் கெடும்' (குறள்: 166) என்பதனை அடியொற்றி யிருத்தல் காண்க; 442-குறிப்பும் பார்க்க.

(பி -ம்.) 1. ஒருவற்கொருவர்: ஈய்வதனின்; ஈவதனை; ஈவதன்: முன்னே.
2. தடுப்பதென்; தடுப்பதிது; தடுப்பதும்; உனக்கழகிதோ;நு உக்கழகிதோ; நினக்கழககதோ: தகைவில்; தகையில்; வெள்ளி.
3. கொடுப்பதுவு நன்று: கொடியோன்றனது; கொடியோயுனது.
4. இன்றியொழி தென்றான்; இன்றியொழிகின்றாய்: இன்றிவிடுகின்றாய்.

(33)

இப் பாடல் சில சுவடிகளில் இல்லை.

(வேறு)

445. முடியவிம் மொழியெலா மொழிந்து மந்திரி
கொடியனென் றுரைத்தசொ லொன்றுங் கொண்டிலன்
அடியொரு மூன்றுநீ யளந்து கொள்கென
நெடியவன் குறியகை நீரை நீட்டினான்.

(மாவலி),இ மொழி எலாம்-இத்தகைய சொற்களையெல்லாம், முடிய-முற்றிலும் (தன்மனங்கொண்ட மட்டும்),மொழிந்து-சொல்லி, மந்திரி-தன் மந்திரியாகிய சுக்கிரன், கொடியன் என்று உரைத்த சொல்-வந்திருப்பவன் நமக்குக் கொடுமை செய்பவன் (வஞ்சகன்) என்று சொன்ன வார்த்தையை, ஒன்றும் கொண்டிலன்-ஒரு சிறிதும் பொருட்படுத்தாதவனாய், (வாமனனை நோக்கி), 'அடி ஒரு மூன்றும் நீ அளந்து கொள்க என-(நீர் கேட்ட) ஒரு மூன்றடி நிலத்தையும் நீரே (உம் காலால்) அளந்து கொள்வீராக' என்று சொல்லி, நெடியவன்-நெடுமாலாகிய வாமனனது, குறிய கை-சிறு கையிலே, நீரை-(தானத்திற்குரிய) நீரை, நீட்டினான்-வார்த்தான்.

தானம் பெறுதற்கு வந்தவர்கள் விரும்பியவற்றை யெல்லாம் தட்டாது கொடுக்கும் உறுதி பூண்டதனாலும், வாமனனுக்கு, 'தந்தேன்' என்று சொல்லிய வார்த்தையினின்றும் பிறழ விருப்பமில்லாததனாலும், சுக்கிரன் வரர்த்தையைச் சற்றும் பொருட்படுத்தாமல் தானஞ் செய்யலானான் மாவலி. தானம் என்பது மந்திரத்துடனும் நீருடனும் தரப்படுவது. கொள்வோர் வேண்டியதை அவர்களே எடுத்துக்கொள்ளச் செய்தல் மிக்கஉதாரகுணத்தைப் புலப்படுத்தும்; கொள்வோர்க்கும் அது மிகவும் உகப்பாயிருக்கும். ஆதலால் 'நீயே அளந்து கொள்க' என்றான்.

நெடியவன்-திருமால்; இங்கே, பின்னே திரிவிக்கிரம வடிவங் கொள்வோனென்ற குறிப்பும் உடையது. நெடியவன் × குறியகை: முரண்தொடை. அடி: நீட்டலளவையாகு பெயர்; மூன்றும்: உம்மை முற்றுப் பொருளது.

(பி - ம்.) 1. மொழிந்த; மொழிய; மந்திரிக்.
2. கொடியனேன்று: கொள்கிலன்.
3. அடியொடு: மூன்றையும்; கொள்கென; கொள்ளென; கொள்ளென.
4. நீரின்: நிமிர. (34)

இதன் பின் சில சுவடிகளில்,

குறியவன் கையினீர் விழாமற் குண்டிகை
மறிபட வாமனன் மலர்க்கைத் தருப்பையாற்
செறிவது நீக்கிடச் சிதைந்து கண்ணுடைந்
துறுதுயர் வெள்ளியு மொதுங்கிப் போயினன்.

என்றொரு பாடல் உளது; வேறு சில சுவடிகளில்,

நீட்டிய வேலையி னீரை மாற்றினன்
நாட்டம தகத்துளான் சிலம்பி னுமத்தா
னோட்டினன் றருப்பையை யுடைக ணீர்விழ
வாட்டமி லந்தணன் மலர்க்கை நீட்டினன்.

என்ற செய்யுள் உளது.

இவற்றிற் கண்ட செய்தி வான்மீகத்திலும் இல்லை. 'மிக்க பெரும் புகழ் மாவலி வேள்வியில், தக்கதி தன்றென்று தானம் விலக்கிய, சுக்கிரன் கண்ணைத் துரும்பாற் கிளறிய, சக்கரக் கையன்' என்று பெரியாழ்வார் பாடியுள்ளார்.

446. கயந்தரு நறும்புனல் கையிற் றீண்டலும்
பயந்தவர் களுமிகழ் குறளன் பார்த்தெதிர்
வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினன்
உயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே.

கயம் தரு-குளத்தினின்றும் பெற்ற, நறு புனல்-நல்ல (தான) நீர், கையில் தீண்டலும்-(தன்) கையில் பட்டமாத்திரத்தில், பயந்த வர்களும் இகழ்-பெற்ற தாய் தந்தையரும் இகழ்தற்குரிய, குறளன்-குறுகிய வடிவமுடையவனா யிருந்தவன், எதிர்-எதிரிலே, பார்த்து-(ஓங்கி நிமிரும் வடிவத்தைப்) பார்த்து, வியந்தவர்-(முதலில்) ஆச்ச ரியமடைந்தவர்கள், வெரு கொள-(பின்பு) அச்சமும் கொள்ளும் வண்ணம், உயர்ந்தவர்க்கு உதவிய-(அறிவு ஒழுக்கங்களால்) மேம் பட்டவர்க்குச் செய்த, உதவி ஒப்ப-உதவியின் பயனைப்போல, விசும் பின் ஓங்கினன்-ஆகாயமளாவ உயர்ந்த வடிவமுடையவனானான்.

குறளன் ஓங்கினன்; உதவி யொப்ப ஓங்கினன் என இயையும். பெற்றோர், தம் மக்கள் எத்தகைய விகார வடிவமுடையவராயினும் இகழமாட்டார்கள்; ஆனால், இவ்வாமனனது வடிவம் மிகமிகக் குறுகியதாகலின் பெற்றோரும் கண்டு (ஒரொருகால்) இகழத்தக்கதா

யிருந்தது என்பதுபட, 'பயந்தவர்களுமிகழ் குறளன்' என்ருர். மிகக் குறுகிய வடிவம் கண நேரத்தில் மிக நீண்ட மாயங் கண்டு முதலில் வியந்தவர்கள், அது எங்கும் வியாபித்து அளவுகடந்து பெருகிய தனுல் அச்சமுங் கொள்ள ஏதுவாயிற்று.

இகழ் குறளன்: 'கொண்டதோருருவமாயோன் குறளினுங் குறுகி நின்ருன்' (சுந்தர. 313). உயர்ந்தவர்க்குதவிய உதவி: 'உதவி வரைத்தன் றுதவியுதவி, செயப்பட்டார் சால்பின் வரைத்து' (குறள். 105) என்பது இங்கே ஒப்பு நோக்கத்தக்கது. 17-ஆம் பாடல் விசேடக் குறிப்பும், யுத்த. 3692-ம் காண்க. வாமனன் திரிவிக்கிரமனுனமை: 'நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை, நீர் செல நிமிர்ந்த மாஅல் போல' (முல்லைப். 1—3); 'நீர்விரி கமலச் செங்கை நீர்செல நிவந்த மாயோன்' (பாகவத. 8: வாமனுவதார. 64).

(பி - ம்.) 1. திண்டுமுன். 2. பயந்தவருமிகழ்; குறளென்பார்க்கெதிர்.
3. விண்ணின். 4. போலவே. (35)

447. நின்றகான் மண்ணெலா நிரம்பி யப்புறம்
சென்றுபா வியதிலை சிறிது பாரெனு
ஒன்றவா னுலகெலா மொடுக்கி யும்பரை
வென்றகான் மீண்டது வெளிபெ ருமையே.

நின்ற கால்-(கீழே) ஊன்றிய திருவடி, மண் எலாம் நிரம்பி-பூமண்டல முழுதும் பரவி, (அதன் மேல்), பார் சிறிது எனு-இப்பூமி இவ்வடி யளவுக்குச் சிறியதாகுமென்று, அப்புறம் சென்று பாவியது இலை-(பூமியினெல்லைக்கு) அப்பால் போய்ப் பரவவில்லை; வானுலகு எலாம்-மேலுலகங்கள் எல்லாவற்றையும், ஒன்ற ஒடுக்கி-தனக்குட் படும்படி அடக்கி, உம்பரை வென்ற கால்-அம் மேலுலகங்களை வென்றுவிட்ட திருவடி, வெளி பெருமை-(அதன்மேல் அளக்க) இடம் பெருமல், மீண்டது-திரும்பிவிட்டது.

வெளி-திருவடி பரவாத வெற்றிடம். அருவமாகியே யெங்கும் நிறைந்த பரம்பொருள், தனது சங்கற்பத்தால் கொண்ட உருவத்துக்கு, எவ்வுலகமும் இடம் பற்ருதாயிற்று. பூமி யென்றதில், அதன் கீழுள்ள வுலகங்களும் அடங்கும்.

திரிவிக்கிரமமூர்த்தியின் செய்தி: (கிட்கிந்தா. 74, 265; 863; சிலப். ஆய்ச்சியர். 35). 'படிக்களவாக நிமிர்ந்த நின் பாதபங்கயம்' (திருவாய்மொழி. 9, 2: 2).

(பி - ம்.) 1. நின்றதாள்; உலகெலாம்; நிரப்பி.
2. பாவிற்றிலை; பாவிற்றில; பாவித்தில; பாவியதிலைச்; பாவியதினிச்; பாயிற்றிலை; சிறிய: பாரென.
3. ஒன்றுவானகமெலாம்; ஒன்றிவானுலகெலாம்.
4. வென்றதாள்; வெளி பெருமையால்: வெளிப் பொருமையே. (36)

448. உலகெலா முள்ளடி யடக்கி யோரடிக்
கலகிலா தவ்வடிக் கன்பன் மெய்யதேல்
இலேகுலாந் துழாய்முடி யேக நாயகன்
சிலேகுலாந் தோளிஞய் சிறியன் சாலவே.

உலகு எலாம்-எல்லா வுலகங்களேயும், உள் அடி அடக்கி-தனக்குள்ள இரண்டடிகளில் அடக்கி, ஓர் அடிக்கு-(மேலும் அளக்க வேண்டிய) ஓரடி பூமிக்கு, அலகு இலாது-அளக்குமிடம் இல்லேயாக, அ அடிக்கு-அந்த அடிக்கு (இலக்கு), அன்பன் மெய் அது ஏல்-பக்தனுகிய மாவலியின் தலேயானுல், சிலே குலா(வு)ம் தோளிஞய்-வில்லோடு விளங்கும் தோளேயுடைய இராமா! இலே குலா(வு)ம் துழாய் முடி-இலேகளாக விளங்கும் திருத்துழாய் மாலே யணிந்த திருமுடியையுடைய, ஏக நாயகன்-(உலகங்களுக் கெல்லாம்) தனித் தலேவனுன எம்பெருமான், சால சிறியன்-மிகவும் சிறியவனே!

'இராமா! எம்பெருமான் திரிவிக்கிரமனுகி எல்லா வுலகங்களேயும் ஈரடியால் அளந்துவிட்டு, தானம்பெற்ற மூன்ருமடி அளப்பதற் கிடமில்லாமையால் மாவலியின் தலேயையே அதற்கு இலக்சாக்கி,அதன்மேல் திருவடியை ஊன்றி அவனேப் பாதலத்தில் அழுத்தி அவனுல் நேர்ந்த தீமைகளேப் போக்கினுன் என்ருல், அவன் மகிமையை என்னவென்று சொல்வது! என்று முனிவன் வியந்து கூறினுன்.

'மெய்' என்பது ஆகுபெயராய்த் தலேயைக் குறித்தது.

'சாலச் சிறியன்' என்றது, குறிப்பு மொழி; பெருமான்கொண்டிருந்த வாமன வடிவத்தை வியந்து கூறியதாம். 'சிறியனென் றென்னிளஞ் சிங்கத்தை யிகழேல் கண்டாய், சிறுமையின் பெருமையை மாவலி யிடைச் சென்றுகேள்' (திவ். பெரியாழ். 1. 5: 8).

முதலடி ஒப்பு: 'ஒருவனிப் புவன மூன்று மோரடி யொடுக்கிக் கொண்டோன்' (யுத்த. 1246.)

(பா - ம்.) 1. அடக்கியோரடி; அடக்கிற்ருேரடி.
2. அலகிலாவவ்வடிக்கு; அலகிலாவவ்வடி; அலகிலாவமரர்நாடு; அமைந்த மெய்யதே; அமைந்தமெய்யனே; அமைந்தமெய்யனேல்; அமைந்த மெய்யென; அமைந்தமெய்யெனில்; அன்பன்மெய்யதாம்.
3. நாயகா; 4. தோளினேய். (37)

449. உரியதிந் திரற்கிதென் றுலக மீந்துபோய்
விரிதிரைப் பாற்கடற் பள்ளி மேவினுன்
கரியவ னுலகெலாங் கடந்த தாளிணே
திருமகள் கரந்தொடச் சிவந்து காட்டவே.

கரியவன்-கரிய திருமேனியுடைய திரிவிக்கிரமமூர்த்தி, இது இந்திரற்கு உரியது என்று-மூவுலகாட்சியாகிய இது, இந்திரனுக்கு

உரியதாகும் என்று சொல்லி, உலகம்-(தான் அளந்துகொண்ட) உலகங்களை, ஈந்து-(அவனிடம்) கொடுத்துவிட்டு, விரி திரை பால் கடல் போய்-பரந்த அலைகளையுடைய திருப்பாற் கடலுக்குப்போய், உலகு எலாம் கடந்த தாள் இணை-உலகங்களை யெல்லாம் தாவி அளந்த திருவடிகள், திருமகள் கரம் தொட-இலக்குமிப்பிராட்டியின் கைகள் வருடுதலால், சிவந்து காட்ட-சிவந்து தோன்றும்படி, பள்ளி மேவினுன்-(ஆதிசேடனாகிய) படுக்கையிலே அறிதுயி லமர்வானானான்.

முன்னமே இந்திரனுக்கு உரிய திரிலோகாதிபத்தியத்தை மாவலி கவர்ந்துகொண்டு, தேவர்களுக்குத் தீங்கிழைத்து வந்தமையின், அவனிடமிருந்து உபாயத்தால் அவ்வாதிபத்தியத்தைப் பறித்து உரியவனிடம் சேர்ப்பித்தது குற்றமாகா தென்பர்.

'பெரியபிராட்டியின் திருக்கரங்கள் தீண்டும்போதே சிவந்து காட்டும்' என்றது திருவடிகளின் மென்மை கூறியவாறு; அத்தகைய திருவடிகள் உலகங்களை யெல்லாம் தாவி அளந்தன வெனில், அதனால் அவற்றிற்கு உண்டாகும் சிரமம் எவ்வளவு! என்ற கருத்துப் படத் திருமழிசைப் பிரான், 'தாளால் உலகம் அளந்த அசைவே கொல், வாளா கிடந்தருளும் வாய் திறவான்-நீளோதம், வந்தலைக்கு மாமயிலை மாவல்லிக் கேணியான், ஐந்தலைவாய் நாகத்தணை' திவ். நான்முகன், 35) என்றார்.

கரியவன்-கண்ணன்; இது இங்கே திரிவிக்கிரம மூர்த்தியைச் சுட்டியது.

(பி-ம்) 1. உரிய; உரிமைய்; இந்திரற்கென; இந்திரற்கென்று; இந்திரற்கு.
2. விரியும் பாற்கடல்: மேயினன்.
3. கடந்து மீண்டுபோய்த். 4. கைபடச்; காட்டிற்றே. (38)

இதனுடன் 'மாவலிப் படலம்' முடிவுற, மேலே 'வேள்விப் படலம்' என்று சில பிரதிகளில் தொடங்குவது முன்னரே காட்டப்பெற்றுள்ளது.

### இதுவே தன் வேள்விக்குரிய விடமென முனிவன் கூறுதல்

450. ஆதலா லருவினை யறுக்கு மாரிய
காதலாற் கண்டவர் பிறவி காண்குறார்
வேதநூன் முறைமையால் வேள்வி முற்றுவேற்
கீதலா தில்லைவே றிருக்கற் பாலதே.

'ஆதலால்-மேற்கூறிய சிறப்புக்களையுடையதாதலால், காதலால் கண்டவர்-(இவ்விடத்தை) அன்போடு தரிசிப்பவர்களுடைய, அருவினை அறுக்கும்-(போக்குதற்கு) அரிய வினைத் தொடர்புகளை இது போக்கும்; (அதனால் அவர்கள்), பிறவி காண்குறார்-(மீண்டும்) பிறத்தலை அறியமாட்டார்கள்; (பிறப்பையும் ஒழிக்கும்); ஆரிய-

பூசித்தற்கு உரிய ஸ்ரீராமா! வேதம் நூல் முறைமையால்-வேத சாஸ்திரங்களில் கூறியுள்ள முறைப்படி, வேள்வி முற்றுவேற்கு-யாகம் செய்யவிருக்கும் எனக்கு, இருக்கல் பாலது-(அதன் பொருட்டுத்) தங்கி யிருக்கத்தக்க விடம், ஈது அலாது வேறு இல்லை-இதை யன்றி வேறொன்று இல்லை.

இது அடுத்த கவியுடன் தொடரும்.

இவ்விடம், திருமாலிருந்து தவம் செய்யப்பெற்றதும், காசிப முனிவர் அதிதியுட னிருந்து விரதமியற்றிச் சித்தி பெற்றதுமாகிய சிறப்புக்களால் **சித்தாச்சிரமம்** எனப்பட்டது; எனவே, நான் தங்கி யிருந்து யாகம் செய்து சித்தி பெறுவதற்கும் ஏற்றவிடம் இதுவே யாகும்' என்று கூறிய முனிவன் அவ்வாறே அவ்வனத்துட் சென்று, யாகத்திற்குரியவற்றைச் சித்தஞ் செய்துகொண்டு அதனைச் செய்யத் தொடங்கினன் என அடுத்த கவியிற் கூறுகின்றார்.

சித்தாச்சிரமத்தின் பெருமை கூறத்தொடங்கிய விடத்து முதலில் (427-ம் பாடல்) அது தொகுத்துச் சுட்டப்பட்டது: பின்பு இதுவரை விரித்துக் கூறப்பட்டது. அறுக்கும் என்பதனை யெச்சமாகக் கொண்டு, முனிவன் இராமபிரானது பரத்துவத்தை யறிந்தவனாதலால், 'அருவினையறுக்கும் ஆரிய' என விளித்ததாகக் கூறலுமாம்.

(பி - ம்.) 1. இருவினை; அருக்குமாரிய; அறுக்குமாயனைக்.
2. காண்குறு; காண்கிலார்.
3. முறைமையான்; முறைமையின்; முறையினால்; முற்றுவோற்கு; முற்றுமெற்கு; முற்றுதற்கு; வேண்டுவேற்கு.
4. ஈதலால்: இல்லைமற்று: இருக்கவேறு; இருக்கைவேறு; இருக்கப் பாலதே; இருக்கப்பாலதோ: இருக்கற்பாலதோ; இருக்கையாவதே. (39)

### முனிவன் வேள்வி இயற்றத் தொடங்குதல்

451. ஈண்டிருந் தியற்றுவென் யாகம் யானெனா
நீண்டபூம் பழுவத்தை நெறியி னெய்திப்பின்
வேண்டுவ கொண்டுதன் வேள்வி மேவினான்
காண்டகு குமரரைக் காவ லேவியே.

ஈண்டு இருந்து-இங்கே இருந்து, யான் யாகம் இயற்றுவென் எனா-நான் (செய்யக்கருதிய) யாகத்தைச் செய்வேன்'என்று சொல்லி, நீண்ட பூ பழுவத்தை-பெரிய பூஞ்சோலையாகவுள்ள ஓர் இடத்தை, நெறியின் எய்தி-வழியே சென்று அடைந்து, பின்வேண்டுவ கொண்டு-மேலே யாகத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேகரித்துக் கொண்டு, காண் தகு குமரரை-(யாவரும்) கண்டு மகிழத்தக்க(தோற்றமுடைய) சக்கரவர்த்தி குமாரர்களை, காவல் ஏவி-(அரக்கரால் வருந் தீங்குகளைப் போக்கிக்) காக்க நியமித்து, தன் வேள்வி மேவினான்-தனது

யாக காரியத்தில் முற்பட்டான். (முனிவன் என்ற எழுவாய் வருவிக்க.)

சித்தவனத்தின் வரலாற்றையெடுத்துச் சொல்லி, அதுவே,தான் வேள்வி செய்தற்கும் தகுந்தவிடமாதலால், 'ஈண்டிருந்து யாகம் இயற்றுவென்' என்று முடித்த முனிவன் குமரருடன் அவ்வனத்தினுள்ளே போய்த் தன் வேள்விக்குத் தக்கதோரிடத்தையடைந்து, வேள்விக்குரிய உபகரணங்களைச் சேகரித்துக்கொண்டு, குமாரர்களைக் காவலுக்கு நியமித்துவிட்டு, யாகத்தைத் தொடங்கினான் என்க.

(பி - ம்.) 1. யானென. 2. பழுவத்துள்; நெறியில்: எய்தினன்.
3. கொண்டுதான்: மேவினன்; மேயினான்.
4. காண்வரு: காக்கவேவியே; காக்கலேவியே; காவன்மேவியே. (40)

இராம லட்சுமணர் வேள்வியைக் காத்தல்

452. எண்ணுதற் காக்கரி திரண்டு மூன்றுநாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற விமையிற் காத்தனர்.

எண்ணுதற்கு ஆக்க அரிது-(பிறர்) நினைத்தற்கும் செய்தற்கும் அரியதாக, இரண்டு மூன்று நாள்-ஆறுநாட்கள், முனிவன்-விசுவாமித்திர முனிவன், விண்ணவர்க்கு ஆக்கிய வேள்வியை-தேவர்கள் பொருட்டுச் செய்த (அந்த) யாகத்தை, மண்ணினை காக்கின்ற மன்னன் மைந்தர்கள்-பூமண்டல முழுதும் பரிபாலிக்கும் சக்கரவர்த்தியின் குமாரர்களான, இராம லக்குமணர், கண்ணினை காக்கின்ற இமையின்-கண்களைப் பாதுகாக்கும் இமைகளைப் போல, காத்தனர்-(மிகவும் கருத்துடன்) பாதுகாத்தனர்.

யாகம் ஆறு தினங்கள் நடைபெற்றதாக வான்மீகமும் கூறும். 'கண்ணினைக் காக்கின்ற இமையின்' என்ற உபமானத்தின் நயம் ஓர்ந்து இன்புறற்பாலது. இதற்குப் பலவாறு விசேடப் பொருள்கள் கூறுவார் பலர்.

(பி - ம்.) 1. ஆர்க்கெளிது; அரியன. 2. விண்ணவர்க்கோக்கிய.
3. அரசன். 4: காத்திடும். (41)

இராமபிரான் முனிவனிடத்து அரக்கரைப்பற்றி வினவுதல்

453. காத்தனர் திரிகின்ற காளை வீரரில்
மூத்தவன் முழுதுணர் முனியை முன்னிநீ
தீத்தொழி லியற்றுவ ரென்ற தீயவர்
ஏத்தருங் குணத்தினாய் வருவ தென்றென்றான்.

காத்தனர் திரிகின்ற-(முனிவன் கட்டளைப்படி வேள்வியைக்) காப்பவர்களாய் உலாவி வருகின்ற, காளை வீரரில்-காளைப் பருவ

முடைய வீரர் இருவரில், மூத்தவன்-மூத்தவனுன இராமபிரான், முழுது உணர் முனியை முன்னி-எல்லாமறிந்த விசுவாமித்திர முனிவனையணுகி, 'ஏத்து அரு குணத்தினுய்-(யாவரும்) புகழ்தற்குரிய அரிய குணங்களையுடைய பெரியீர்! நீ, தீ தொழில் இயற்றுவர் என்ற தீயவர்-தேவரீர் கொடுந்தொழில் செய்பவர் என்று குறிப்பிட்ட கொடியவர்கள், வருவது என்று-(இங்கே) வருவது எப்போது?' என்ருன்-என்று வினவினுன்.

காவல் தொடங்கியது முதல் அரக்கர் வருகையைக் காணுத இராமபிரான், முனிவனை நோக்கி, 'நீர் குறிப்பிட்ட கொடியவர்கள், இங்கே எத்தருணத்தில் வருவார்கள்' என்று கேட்டான். முதல் ஐந்து நாட்கள் அரக்கர்கள் வேள்வி நடந்த விடத்தை நாடவில்லையென்றும் ஆருவது நாளே அவர்கள் தோன்றினர் என்றும் வான்மீகம் கூறும்.

காத்தனர்: முற்றெச்சம். காளை: பருவங் குறித்தது.

(பி - ம்.) 1. காத்தெதிர்: வீரருள்.
2. முன்னியத்; முன்னிய. 3 இயற்றுவது.
4. ஏத்தரு: குணத்தினேய்; குணத்தினுன். (42)

அரக்கர் வருகை

454. வார்த்தைமா றுரைத்திலன் முனிவன் மௌனியாய்ப்
போர்த்தொழிற் குமரனுந் தொழுது போந்தபின்
பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்
ஆர்த்தன ரிடித்தன ரசனி யஞ்சவே.

முனிவன்-(இராமபிரானுல் வினவப்பட்ட) விசுவாமித்திரமுனிவன், மௌனி ஆய்-மோனமுள்ளவனுகி, வார்த்தை மாறு உரைத்திலன் -(இராமபிரானுக்கு) மறுமொழி யாதுங் கூறினுனில்லை; (அதனுல்), போர் தொழில் குமரனும்-போரில்வல்ல இராமபிரானும், தொழுது-(முனிவனை) வணங்கி, போந்தபின்-(வெளியே) வந்தபிறகு, விசும்பினை பார்த்தனன்-ஆகாயத்தை (அண்ணுந்து) பார்த்தான்; (அப்போது அங்கே அரக்கர்கள்), அசனி அஞ்ச-இடியும் அஞ்சும்படி, ஆர்த்தனர் இடித்தனர்-ஆரவாரித்து முழக்கினுர்கள்.

யாக தீக்ஷிதனுக இருந்ததனுல் முனிவன் உரையாடாது மௌனியாயிருக்க, இராமபிரான் வெளியே வந்து மேலே பார்த்த போது, ஆகாயத்திலே அரக்கர் பலர்கூடி ஆரவாரித்தலைக் கண்டான்.

அசனி அஞ்ச ஆர்த்தல்: முன்னே தாடகை வந்தது கூறுமிடத்தும், உருமஞ்ச நனி யார்த்தாள்' என்ருர்; (388).

(பி - ம்.) 1. வார்த்தைமற்று; வார்த்தைவேறு: உரைக்கிலன்; மௌனியாப்; மௌனியான்; மவுனியாய்ப்; மோனியாய்ப்.
2. குமரரும்; போந்துபின்.

3. பார்த்தனர்: விசும்பிடைப்: மேகம்போன்று; மாரிபோல்.
4. ஆர்த்தனரடர்த்தனர்; ஆர்த்தனர்தெழித்தனர்; எஞ்சவே; என்னவே. (43)

## அரக்கர் செயல்

455. எய்தன ரெறிந்தன ரெரியு நீருமாப்
பெய்தனர் பெருவரை பிடுங்கி வீசினர்
வைதனர் தெழித்தனர் மழுக்க ளோச்சினர்
செய்தன ரொன்றல தீய மாயமே.

(ஆகாயத்திலேகூடி ஆரவாரித்த அரக்கர்கள்), எய்தனர்-அம்புகளை எய்தார்கள்; எறிந்தனர்-(ஈட்டி முதலிய எறி படைகளை) எறிந்தார்கள்; எரியும் நீரும் ஆக பெய்தனர்-(எங்கும்) நெருப்பும் நீருமாகச் சொரிந்தார்கள்; பெருவரை பிடுங்கி வீசினர்-பெரிய மலைகளை வேரோடு பிடுங்கி எறிந்தார்கள்; வைதனர்-(பல) வசைச் சொற்களைக் கூறினர்; தெழித்தனர்-அதட்டினார்கள்; மழுக்கள் ஓச்சினர்-மழுவாயுதங்களை எறிந்தார்கள்; ஒன்று அல தீய மாயம் செய்தனர்-(இவ்வாறு) மிகப் பலவான கொடிய மாயச் செயல்களைச் செய்தார்கள்.

(பி - ம்.) 1. நீருமாய்ப். 2 நெடுவரை; அருவரை.
3. தெறித்தனர்: மழுக்கொண்டோச்சினர்.
4. ஒன்றலாத்; ஒன்றலா; மாயையே. (44)

456. ஊனகு படைக்கல முருத்து வீசின
கானக மறைத்தன கால மாரிபோல்
மீனகு திரைக்கடல் விசும்பு போர்த்தென
வானக மறைத்தன வளைந்த சேனையே.

(அவ்வரக்கர்கள்), காலம் மாரிபோல்-பருவகாலத்துப்பெருமழை போல, உருத்து வீசின-(கோபங்கொண்டு) எறிந்தனவாகிய, ஊன் நகு படை கலம்-ஊன் படிந்து விளங்கும் (பலவகை) ஆயுதங்கள்,கானகம் மறைத்தன-அவ்வனம் முழுவதும் மூடிக்கொண்டன; வளைந்த சேனை-(அவ்வனத்தை) வளைத்துக்கொண்ட (அரக்கர்) சேனைகள், மீன் நகு திரை கடல்-மீன்கள் விளங்கும் அலைகளுடன் கூடிய பெருங்கடல், விசும்பு போர்த்தது என-ஆகாயத்தை மூடிக்கொண்டாற்போல, வான் அகம் மறைத்தன—வானமண்டலத்தை மறைத்துவிட்டன.

அரக்கர், கடல் போன்ற சேனைகளுடனும் அளவிறந்த பலஆயுதங்களுடனும் ஆகாயத்திலிருந்தவண்ணம் போர் தொடுக்கலானார்கள் என்றபடி. அவர்கள் மேலிருந்து பிரயோகித்த பலவகைப் படைகள் அவ்வனமெங்கும் தரையை மூடிக்கொண்டன. அவர்களுடைய

பெருஞ்சேனைத்திறள் ஆகாயத்தை மறைத்துக் கொண்டது; அதனை, கடல் மேலெழுந்துபோய் ஆகாயத்தை மறைத்ததுபோல எனக் கூறி யது இல்பொரு ளுவமை.

யாகசாலையில் உச்சரிக்கப்படும் மந்திரங்கள் அரக்கரைக் கிழே அருகில் வரவொட்டாதபடி செய்ததனுல் அவர்கள் வானிலேயே நின்று போர்தொடுத்தனரென்பது வான்மீகம்.

வீசின: வினையாலணையும் பெயர்; போர்த்தென: தொகுத்தல் விகாரம்.

(பி - ம்.) 1. ஊனுகு: உகுத்து: உருமி: வீசினர். 2. மறைத்தனர்; மறைத்தது.
3. மீனுகு; மீனுறு: போர்த்தன.
4. மறைத்தது; மறைத்தென; வளைத்த; மறங்கொள். (456)

457. வில்லொடு மின்னுவாண் மிடைந்து லாவிடப்
பல்லியங் கடிப்பினி லிடிக்கும் பல்படை
ஒல்லென வுரறிய வூழிப் பேர்ச்சியின்
வல்லைவந் தெழுந்ததோர் மழையும் போன்றவே.

வில்லொடு மின்னு வாள்-(மிக்க) ஒளியோடு மின்னுகின்ற வாளாயுதங்கள், மிடைந்து உலாவிட-நெருங்கி (எங்கும்) திரிய, பல் இயம் கடிப்பினுல் இடிக்கும்-பலவகை வாத்தியங்களைக் குறுந்தடியால் (அடித்து) முழக்குகின்ற, பல்படை-மிக்க படைத்திரள்கள், ஊழி பேர்ச்சியின் - பிரளய காலத்தில், ஒல் என உரறிய - ஒல்லென்ற பேரொலியுடையனவாய், வல்லை வந்து எழுந்தது-மிக்க விரைவில் வந்து கூடிய, ஓர் மழையும் போன்ற-ஒப்பற்ற மேகக் கூட்டத்தையும் போன்றவாயின.

வில்லொடு-விற்களும் என்றலுமாம்.

அரக்கருடைய பெரும் படைத் தொகுதி மேகக் கூட்டத்துக் கும், அங்கே வீசும் வாளாயுதங்களின் ஒளி மின்னலுக்கும், படைகளின் ஆரவாரமும் வாத்தியகோஷமும் இடிக்கும் உவமை.

மழையும் போன்றது; உம்மை இறந்தது தழுவிய எச்சம்; முன்னே, 'கடல் விசும்பு போர்த்தென' என்றதைத் தழுவியது.

(பி - ம்.) 1. வில்லொடும்மின்னும்வாள்; பகழிவாள்: மிடைந்துமீதுலாய்ப்; மீதுயர்; வீசினர்.
2. பல்லியக்; பல்லியத்திடிப்பினில்; கடுப்பினில்; கடிப்பிடை; இடிப்பி னின்; இடிப்பின; அடிக்கும்; இடிக்கப்: பற்படை; போர்ப்படை.
3. ஒல்லொலி: உரற்றிய; உரப்பிய; ஆற்றிய: பேர்ச்சியுள்; பேர்ச்சியில்.
4. போன்றதே; ஆயதே. (457)

## இராமபிரான் அரக்கர் குழுவை இலக்குமணனுக்குக் காட்டுதல்

458. கவருடை யெயிற்றினர் கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர் சுழல்கட் டீயினர்
பவர்சடை யந்தணன் பணித்த தீயவர்
இவரென விலக்குவற் கிராமன் காட்டினான்.

கவர் உடை எயிற்றினர்-(இரண்டாகப்) பிளத்தலுடைய கோரப்பற்களையுடையவர்களும், கடித்த வாயினர் (கோபத்தால் கீழு தட்டைக்) கடித்த வாயை உடையவர்களும், துவர் நிறம் பங்கியர்-செந்நிறமுடைய தலைமயிருடையவர்களும், சுழல் கண் தீயினர்-(கண்டோர் அஞ்ச) உருளுகின்ற கண்களிலே தீப்பொறியுடையவர்களுமான, இவர்-(மேலே கூடியுள்ள) இவர்களே, பவர் சடை அந்தணன் பணித்த தீயவர்என-அடர்ந்த சடையையுடைய முனிவன் (நமக்குச்) சொன்ன கொடியவர்கள்' என்று கூறி, இலக்குவற்கு-இலக்குமணனுக்கு, இராமன்-இராமபிரான், காட்டினான்-(மேலே) சுட்டிக் காட்டினான்.

எயிற்றினரும், வாயினரும், பங்கியரும், தீயினருமான இவர் என இயையும். துவர்-பவளமும் ஆம். பங்கி-ஆண்களின் தலைமயிர். பவர்-கொடி போன்ற (பின்னிய) என்றுமாம்.

(பி - ம்.) 1. கவருடையெஃகினர். 2. துவருடைப் பங்கியும் சுழற்கண்டீயவர். 3. பணித்ததீயினர். (47)

### இலக்குமணன் செயல்

459. கண்டவக் குமரனுங் கடைக்கண் டீயுக
விண்டனை நோக்கித்தன் வில்லை நோக்குறு
அண்டர்நா யகவினிக் காண்டி யீண்டிவர்
துண்டம்வீழ் வனவெனத் தொழுது சொல்லினான்.

கண்ட அ குமரனும்-(இராமபிரான் காட்டிய அரக்கர்திரளைக்) கண்ட அவ்விளைய பெருமாளும், கடை கண் தீ உக-கடைக்கண்ணினின்றும் தீப்பொறி சிந்த, விண்தனை நோக்கி-ஆகாயத்தைப் (பரவலாகப்) பார்த்து, தன் வில்லை நோக்குறு-தன்(கையிலுள்ள) வில்லையும் பார்த்து, (இராமபிரானிடம்), 'அண்டர் நாயக-தேவ தேவனே, இனி ஈண்டு இவர் துண்டம் வீழ்வன காண்டி என-இப்போது, (மேலே)கூடியுள்ள இவர்களுடைய (உடல் துண்டிக்கப்பட்ட) துண்டங்கள் (தரையில்) விழுவனவற்றைக் காண்பாயாக' என்று, தொழுது சொல்லினான்-(இராமபிரானை) வணங்கிச் சொன்னான்.

அரக்கர் திரளைக் கண்டு கடுங்கோபங் கொண்ட இளைய பெருமாள், அவர்களைக் கொன்று வீழ்த்த இராமபிரானது கட்டளையை எதிர்பார்க்குங் குறிப்போடு, தன் கை வில்லையும்

பார்த்து, 'இப்போது இவர்களுடைய உடலெல்லாம் துண்டிக்கப் பட்டு விழுதலைக் காண்பீராக' என்று இராமபிரானிடம் பணிவோடு கூறினன் என்க.

கண் தீ உக என்றதனால், இலக்குமணனது கடுங்கோபம் புலப் படும். வீரர்கள் தம் கைப் படையைப் பார்க்கும் குறிப்பு: 389 விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. கண்கள். 2. வில்லைநோக்கினன்.
3. அண்டநாயக; ஈண்டவர்; ஆண்டிவர்.
4. வீழ்வதையினித். (48)

## இராமபிரான் சரக்கூடம் அமைத்தல்

460. தூமவே லரக்கர்த நிணமுஞ் சோரியும்
ஓமவெங் கனலிடை யுகுமென் றுன்னியத்
தாமரைக் கண்ணனுஞ் சரங்க ளேகொடு
கோமுனி யிருக்கையோர் கூட மாக்கினன்.

அ தாமரை கண்ணனும்-செந்தாமரை மலர்போலும் கண்களை யுடைய அவ்விராமபிரானும், தூமம் வேல் அரக்கர் தம்-புகையுமிழும் வேலாயுதத்தையுடைய இராக்கதர்களின், நிணமும் சோரியும்-உடல் தசையும் இரத்தமும், ஓமம் வெம் கனல் இடை உகும்-ஓமம் செய்தற் குரிய விரும்பத்தக்க வேள்வித் தீயிலே சிந்தக்கூடும், என்று உன்னி-என்று நினைத்து, கோமுனி இருக்கை-முனிவர் தலைவனான கௌசிகன் இருக்குமிடத்தின் மேலே, சரங்களே கொடு-அம்புகளையே கொண்டு, ஓர் கூடம் ஆக்கினன்—ஒரு மேற்கூரையை அமைத்தான்.

அரக்கர்களின் கோபத்தை அவர்கள் கைப்படைமேல் ஏற்றித் 'தூமவேல்' என்றார். மேலே, அரக்கர்களைக் கொல்லும்போது, அவர் களுடலினின்றும் வெளிப்படும் குருதியும், உடல்தசையும், சீழுள்ளயாக சாலையிலும் யாகத்தீயிலும் விழுந்து தூய்மைகெடநேருமே யெனக் கருதி, அதற்குத் தடையாக முதலில் அம்புகளாலேயே மேற்கூரை யொன்றை அமைத்தனன் இராமபிரான். இராக்கதருடைய உடல் தசையும் குருதியுமன்றி, அவர்கள் கொணர்ந்து சொரியும் அத்தகைய பொருள்களாலும் பிறவற்றாலும் வேள்விக்கிடையூறு நேராதவாறு முதலில் காப்பமைத்துக் கொண்டனன். இந்திரன் ஏவிய பெருமழை காண்டவ வனத்துட் பெய்து, தீயை வித்துவிடாதபடி அருச்சுனன் அவ்வன முழுதும் சரக்கூடம் அமைத்தமையும் பாரதத்துட் காண்க.

'தூமம்' என்பதனை அரக்கருக்கடையாக்கி, புகைபோலுங் கருநிறமுடைய அரக்கர் என்றலுமாம். கோமுனி-முனிச்சிரேட்டன்; அன்றி, முன்பு அரசனாயிருந்து முனிவனான 'ராஜரிஷி' என்றும் ஆம்.

(பி - ம்.) 1. தாமவேல்: அரக்கர்கள்: பிணமும்.
2. உன்னிய; உன்னியே: எண்ணியத்: எண்ணியே.
3. சரங்கள்கொண்டுயர்.
4. இருக்கையே; இருக்கவோர். (49)

முனிவர் பலரும் இராமபிரானைச் சரணடைதல்

461. நஞ்சட வெழுதலு நடுங்கி நாண்மதிச்
செஞ்சடைக் கடவுளை யடையுந் தேவர்போல்
வஞ்சனை யரக்கரை வெருவி மாதவர்
அஞ்சன வண்ணநின் னபயம் யாமென்றார்.

(பாற்கடலைக் கடைந்தபோது), நஞ்சு அட எழுதலும்-(அப் பாற்கடலினின்றும்) ஆலாலவிடம்(தம்மைக்)கொல்லும்படி யெழுந்த வுடன், நடுங்கி-நடுக்கமடைந்து, நாள்மதி-ஒருநாளுக்குரிய ஒற்றைக் கலைப் பிறையைச் சூடிய, செம் சடை கடவுளை அடையும்-சிவந்த சடையையுடைய சிவபெருமானைச் சரணமடைந்த, தேவர்போல்-தேவர்களைப்போல, மாதவர்-(அச்சித்தாச்சிரமத்தில் உள்ள) பெரிய தவசிகள் பலரும், வஞ்சனை அரக்கரை வெருவி-வஞ்சனை மிக்க இராக்கதருக்கு அஞ்சி, (இராமபிரானிடம் வந்து), 'அஞ்சன வண்ண-மை போலும் அழகு வண்ணமுடைய ஸ்ரீராமா! யாம் நின் அபயம்-நாங்கள் நினதடைக்கலம்' என்றார்-என்று கூறிச் சரண் புகுந்தனர்.

அரக்கரை வெருவி: வேற்றுமை மயக்கம்.

அஞ்சன வண்ணன்: 'அஞ்சன வண்ணனெ னாருயிர் நாயகன்'' அயோத். 1017.

(பி - ம்.) 1. நஞ்சடர்ந்தெழுதலும்: கலங்கி. 2. அடைந்த: தேவரின்.
3. வெஞ்சினவரக்கரால்; அரக்கருக்கஞ்சி; அரக்கரையொருவி. (50)
இதுவும் அடுத்த பாடலும் சில பிரதிகளில் இல்லை.

இராமபிரான் முனிவர்க்கு அபயமளித்து
அரக்கரொடு பொருதல்

462. கவித்தனன் கைத்தலங் கலங்க லீரெனச்
செவித்தல நிறுத்தினன் சிலையின் றெய்வநாண்
புவித்தலங் குருதியின் புணரி யாக்கினன்
குவித்தன னரக்கர்தஞ் சிரத்தின் குன்றமே.

(இராமபிரான், தன்னைச் சரணடைந்த முனிவர்களை நோக்கி), 'கலங்கலீர்' என-நீங்கள் கலங்காதீர்கள் என்று கூறி, கைதலம் கவித்தனன்-தன் கையைக் கவித்து அபயமளித்தவனாகி, (பின்பு), சிலையின் தெய்வம் நாண்-தன் வில்லின் தெய்வத் தன்மை பொருந்திய நாணை, செவிதலம் நிறுத்தினன்-காதளவும் இழுத்து நிறுத்தி, (அம்புகளைத் தொடுத்து), புவிதலம்-(அங்கே) தரையிடத்தை, குருதியின் புணரி ஆக்கினன்-(அரக்கர் உடலினின்று சொரிந்த) இரத்த வெள்ளமாக

ஆக்கினுன்; அரக்கர் தம் சிரத்தின் குன்றம் குவித்தனன்-அரக்க ருடைய தலைகளை மலையாகக் குவித்தான்.

இராமபிரான், முனிவர்களுக்கு அபயமளித்ததும், உடனே போர் தொடுத்ததுமாகிய நிகழ்ச்சிகளின் விரைவு புலப்படக் கூறு கின்ருர். இராமபிரான் கையிலுள்ள வில்லும் அம்புகளும் தெய்வத் தன்மை வாய்ந்தனவே; அம்பு தொடுத்தலுக்கு வில்லின் நாண் இன்றியமையாததாகலின் இங்கே அதனைத் 'தெய்வ நாண்' எனச் சிறப்பித்தார்; அடுத்த பாடலில், 'தெய்வவாளி' என்பர். குருதி வெள்ளம் தலைமலை என்றதனுல் அரக்கரின் அழிவு மிகுதி பெறப்படும்.

சிரத்தின் குன்றம்: 'செக்கர்நிறத் தெரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன, வுக்கனவோ முடிவில்லை' (739) எனக் கௌசிக முனிவன் கூற்ருகப் பின்னுங் கூறுவர்.

(பி - ம்.) 1. கரதலம்: கலங்கனிரெனச். 2. சிலையில்.
3. குருதியிற்புணரி; சோரியின்புணரி; ஆக்கினுன். (51)

சுபாகு, மாரீசர் செய்தி

463. திருமக ளுயகன் றெய்வ வாளிதான்
வெருவரு தாடகை பயந்த வீரர்கள்
இருவரி லொருவனைக் கடலி லிட்டதவ்
ஒருவனை யந்தகன் புரத்தி லுய்த்ததே.

திருமகள் நாயகன் - இலக்குமிதேவியின் நாயகனுன (திருமாலின் அமிசமான) இராமபிரானுடைய, தெய்வ வாளி-தெய்வத் தன்மையுள்ள அம்பு, வெருவரு தாடகை பயந்த வீரர்கள் இருவரில்-(கண்டவர்) அஞ்சத்தக்க தாடகை பெற்ற வீரர்களான (சுபாகு, மாரீசன் என்ற) இருவரில், ஒருவனை கடலில் இட்டது-மாரீசன் என்ற ஒருவனைக் கடலிலே கொண்டு போகட்டது; அ ஒருவனை-அந்த மற்ருெருவனை,(சுபாகுவை),அந்தகன் புரத்தில் உய்த்தது-யமபுரத்துக் கனுப்பிவிட்டது. (உயிரை வாங்கிற்று). தான்: அசை.

இராமபிரான் விட்ட ஒரே அம்பு இவ்விரு செயலும் செய்தது என்பர் கம்பநாடர்: (739). மாரீசன் மேல் மானவாஸ்திரமும், சுபாகுவின்மேல் ஆக்கினேயாஸ்திரமும் பிரயோகித்ததாக வான்மீகம் கூறுகின்றது.

(பி - ம்.) 2. வெருவரும்; பருவரைத்.
3. இருவரின்; கடலிலிட்டதங்கு; கடலினிட்டதங்கு.
4. அந்தகபுரத்தின்: உய்த்தவே; இட்டதே. (52)

## அரக்கர் அஞ்சியோடுதல்

464. துணர்த்தபூந் தொடையினுன் பகழி தூவினுன்
கணத்திடை விசும்பினைக் கவித்துத் தூர்த்தலால்
பிணத்திடை நடந்திவர் பிடிப்ப ரீண்டெனு
உணர்த்தின ரொருவர்முன் னொருவ ரோடினுர்.

துணர்த்த பூ தொடையினுன் - கொத்தான பூக்களாலாகிய மாலையணிந்த இராமபிரான், பகழி தூவினுன்-(எஞ்சிய அரக்கரையும் கொல்லுதற் பொருட்டு) அம்புகளை மிகச் செலுத்தி, (அவ்வம்பு களால்), கணத்திடை-ஒரு கணப்பொழுதில், விசும்பினை கவித்து தூர்த்தலால்-ஆகாய முழுதும் வளைத்து நிரப்பியதனுல், (அந்நிலையில் உயிர்தப்பிய சில அரக்கர்கள்), 'இவர்-இம்மானுட வீரர்கள், ஈண்டு-இப்போது, பிணத்திடை நடந்து பிடிப்பர் எனு-(மலைபோல் நிறைந் துள்ள) நம் பிணக்குவியல்களின் மேல் நடந்து வந்து, (நம்மை உயி ரோடு) பிடித்துக் கொள்வார்கள்' என்று, உணர்த்தினர்-(ஒருவருக் கொருவர்) சொல்லிக்கொண்டு, ஒருவர் முன் ஒருவர் ஓடினுர்-(உயி ரைக் காத்துக் கொள்ளும் பொருட்டு) ஒருவருக்கு முன் ஒருவராக ஓடி மறைந்தார்கள்.

இரகு வீரர்களின் திறத்தைக்கண்டு, இறவாது எஞ்சிய சில அரக்கர் தம் உயிரைக் காத்துக் கொள்ளும்படி ஓடலானுர்கள். அவர் கள்ஆகாயத்திலேயே சஞ்சரிப்பவர்கள்; மானுடர் அவ்வாறு செய்தல் இயலாது; ஆயினும், 'வானளாவக் குவிந்துள்ள பிணக்குவியல்களின் மேல் ஏறி நடந்து வந்து நம்மை உயிரோடு பிடித்துக்கொண்டால் நம் கதி என்னுவது!, என்று அஞ்சி உயிர்தப்ப ஓடினுர்கள் என நயம் படக் கூறுகின்றுர். இதனுலும் அரக்கரின் அழிவு மிகுதி புலப்படும்.

முன்னே தாடகை கொல்லப்பட்டவுடன், அதுவரை அரக்க ருயிரைக் கவரமாட்டாது அஞ்சி, அதற்குக் காலம் பார்த்துக் கொண்டு திரிந்த கூற்றுவனும், அவளுயிரையுண்டு சிறிது சுவையறிந் தான் என்றுர்; இப்போது அக்கூற்றுவன் அரக்கர் மிகப் பலருடைய உயிரையுண்டு சுவைத்திருப்பான்; பின்னும் இராம லக்குமணர் களால் தனக்குக் கிடைக்கவிருக்கும் அரக்கருயிர் விருந்தை யெண்ணி மகிழ்ந்து மிருப்பான்.

தூவினுன், உணர்த்தினர் என்பவை முற்றெச்சம்.

போர்க்களத்தில் அஞ்சியோடுவோர் செயல்: **ஒப்பு. கலிங்கத்.** போர் பாடியது. 49.

(பி - ம்.) 1. தொடையலான்; தெரியலான்: தூவினன்.

2. குணத்தொடை; குணத்தினுர்: குவித்துத்; கதுவித்; கடிது: தூர்த்தது; தூர்த்தபின்; தூர்த்தலும்: தூர்த்துநம்; தூர்த்தலின்.

3. பிணத்தினில்; நடந்தவர்; வந்தவர்; பிடிப்பார்; ஈண்டென; வந்தென; வந்தெனு.
4. ஒருவர்முனெருவர்; ஒருவர்முன்பொருவர். (53)

## போர்க்களக் காட்சி

465. ஓடின வரக்கரை யுருமின் வெங்கணை
கூடின குறைத்தலை மிறைத்துக் கூத்துநின்
ருடின வலகையு மையன் கீர்த்தியைப்
பாடின பரந்தன பறவைப் பந்தரே.

ஓடின அரக்கரை-(உயிரைக் காத்துக் கொள்வதற்கு) ஓடின இராக்கதரை, உருமின் வெம் கணை-இடிபோன்ற (அச்சந்தரும்) கொடிய அம்புகள், கூடின-(விடாது) தொடர்ந்து சென்றன; (அவ்வளவிலே), குறை தலை-(அரக்கருடைய) தலை குறைந்த கவந்தங்கள், மிறைத்து நின்று கூத்து ஆடின-விறைப்பாக நின்று கூத்தாடின; அலகையும்-(அங்கே பிணந்தின்ன வந்த) பல பேய்களும், ஐயன் கீர்த்தியை பாடின - (தமக்கு நல்ல விருந்தளித்த) இராமபிரானது புகழைப் பாராட்டிப் பாடின; பறவை பந்தர் பரந்தன - பறவைக் கூட்டங்களாலாகிய பந்தல்கள் (எங்கும்) பரவலாக அமைந்தன.

இராமபிரான் ஏவிய திரளான அம்புகள், பயனின்றி மீளாவாதலால், அரக்கரில் வதையுண்டோர்போக,எஞ்சி, உயிர்தப்பி ஓடியவர்களையும் விடாது தொடர்ந்து சென்று வதைத்தன. ஆதலால், அரக்கரில் எவரும் தப்பாமல் வதையுண்டனர் என்றவாறு. அவ்வாருகவே, அங்கங்கே தலையற்ற கவந்தங்கள் (முண்டங்கள்) கூத்தாடலாயின. போர்க்களத்தில் பிணந்தின்னிப் பேய்களும், கழுகு முதலிய கொடிய பறவைகளும் கூடுதல் இயல்பு. அவ்வாறு கூடிய பறவைகளின் மிகுதி பற்றிப் 'பந்தர் பரந்தன' என்ருர். பேய்கள் தமக்கு நல்ல விருந்து கிடைக்கக் காரணமான இராமபிரானைப் புகழ்ந்து பாடின. 'வெங்கணை கூடின; குறைத்தலை கூத்தாடின;' என்றது அம்புகளின் திறனை யுணர்த்தியது.

குறைத்தலை - குறைதலையுடைய தலையை உடையது = தலையற்ற கவந்தம். வேற்றுமைத் தொகையன்மொழி.

போர்க்களத்தில் பேய்கள்: ஆரணிய. 387. குறையுடல்கள் கூத்தாடல்: அயோத். 1110; ஆரணிய. 442, 480, 482; சுந்தர. 876-7; கலிங்கத். போர் பாடியது: 29.

(பி - ம்.) 1. ஓடினர்; ஓடிய: உருமில் வெங்கணை; உருமின்வெஞ்சரம்.
2. இறைத்துக்; நிறைத்துக்; இரைத்துக்; குதித்துக்; களித்துக்; மிடைந்து. கூற்றினின்று. 3. சீர்த்தியைப்.
4. பாடினர்; பரந்தனர்; பறந்தன. (54)

## தேவர்கள் செயல்

466. பந்தரைக் கிழித்தன பரந்த பூமழை
அந்தரத் துந்துபி முகிலி ஞர்த்தன
இந்திரன் முதலிய வமர ரீண்டினர்
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

பரந்த பூமழை- (தேவர்கள் மகிழ்ச்சியால் பொழிந்த) மிக்க பூமாரி, பந்தரை கிழித்தன-(முன் சொன்ன) பறவைப் பந்தலை ஊடறுத்துக் கொண்டு சொரிந்தன; அந்தர துந்துபி-தேவ துந்துபி வாத்தியங்கள், முகிலின் ஆர்த்தன-மேக கர்ச்சனைபோல முழங்கின; இந்திரன் முதலிய அமரர்—,ஈண்டினர்-(அங்கு வந்து) கூடியவர்களாய், சுந்தரவில்லியை-அழகிய வில்லை யேந்திய இராமபிரானை, தொழுது-வணங்கி, வாழ்த்தினர்—.

ஈண்டினர்: முற்றெச்சம்.

போரில் எத்தனை வெம்மையுடையதாயினும், பார்த்தற்கினிய அழகுடையதாதல்பற்றி இராமபிரானது வில்,'சுந்தரவில்' எனப்பட்டது; சுந்தரத் தனி வில்லி: (ஆரணிய. 542) என்பர். பின்னும்,

தேவர்கள் தொழுதது இராமபிரானது பரத்துவங் குறித்தும், வாழ்த்தியது கண்ணெச்சிற் படாமைக்குமாம். பூமழையின் மிகுதி பற்றிப் பன்மையாற் கூறினர்.

(பி - ம்.) 1. கிழித்தது: பகர்ந்த.
2. அந்தரத்துந்துமி; அந்தாதுந்துமி; மழைவின்; அலையின்; முழங்கி.
3. இந்திரர்: ஈண்டினர்.
4. வாழ்த்தினர்: வாழ்த்தியே; சொல்லினர். (55)

### மாதவர் மகிழ்ச்சியும், முனிவன் வேள்வி முற்றுதலும்

(வேறு)

467. புனித மாதவ ராசியம் பூமழை பொழிந்தார்
அனைய கானத்து மரங்களு மலர்மழை சொரிந்த
முனியு மவ்வழி வேள்வியை முறைமையின் முற்றி
இனிய சிந்தைய னிராமனுக் கினையன விசைத்தான்.

(தேவர்கள் வாழ்த்திச் சென்றபின்), புனிதம் மா தவர்-தூய பெரிய தவமுடைய முனிவர்கள், ஆசி அம் பூ மழை பொழிந்தார்-தங்கள் ஆசீர்வாதமான அழகிய பூ மழையை (இராமபிரான் மேல்) பொழிந்தார்கள்; அனைய கானத்து-அந்த வனத்திலுள்ள, மரங்களும்—, அலர் மழை சொரிந்த-பூமாரியைப் பொழிந்தன; அவ்வழி-அப்போது, முனியும்-விசுவாமித்திர முனிவனும், வேள்வியை-(தான் செய்யும்) யாகத்தை, முறைமையின் முற்றி-முறையாக்ச் செய்து முடித்து, இனிய சிந்தையன்-(அதனாலான)மகிழ்ச்சி மிக்க மனமுடை

யவனாய், இராமனுக்கு-இராமபிரானுக்கு, இனையன இசைத்தான்- மேல்வரும் உபசார மொழிகளைக் கூறினான்.

அவ்வுபசார மொழிகளை அடுத்த கவியிற் காண்க.

மாதவர், ஆசியும் பூ மழையும் பொழிந்தார் என்றலுமாம்; மரங்களும்: உம்மை இழிவு சிறப்பு; அந்தச் சித்த வனத்தில், அசரப் பொருளாகிய மரங்களும் ஐயன் பெருமையை உணர்ந்து மகிழ்ந்தன என அவ்விடத்தின் பெருமை கூறியவாறும்,

(பி - ம்.) 1. ஆசியின்: பொழிந்த.
2. காலத்து; காலத்தின்: பொழிந்த.
3. அவ்வயின்; முறைமையின் வேள்வியை; வேள்வியின் முறைநெறி; வேள்வியின் முறைமையை; விதிமுறை வேள்வியை: வேள்வியை முற்றுவித்தெழுந்தான்.
4. சிந்தையின்: இராமனுக்கின்னன வுரைத்தான்; இனையனவுரைத்தான்; இன்னன விசைத்தான்; இன்னனமுரைத்தான்; இவையிவை யுரைத்தான்; இன்னவாறிசைத்தான்; இன்னனவிராமனுக்கிசைத்தான். (50)

முனிவன் கூறிய உபசார மொழிகள்

468. பாக்கி யம்மெனக் குளதென நினைவுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென வுணர்கிலென் புவனம்
ஆக்கி மற்றவை யனைத்தையு மணிவயிற் றடக்கிக்
காக்கு நீயொரு வேள்விகாத் தனையெனுங் கருத்தே.

(கோசிகன் இராமபிரானை நோக்கி), 'புவனம் ஆக்கி-எல்லா வுலகங்களையும் (பிரமனாயிருந்து) படைத்து, மற்று-பின்பு, (பிரளய காலத்தில்), அவை அனைத்தையும்-அவ்வுலகங்களிலுள்ள சராசரப் பொருள்களையெல்லாம், அணி வயிறு அடக்கி காக்கும் நீ-உனது திரு வயிற்றிலே அடக்கிக்கொண்டு (அவை அழிவுறாமல், திருமாலாக விருந்து) காப்பாற்றும் பெருமையுடைய நீ, ஒரு வேள்வி காத்தனை- (நான் செய்யும்) ஒரு யாகத்தைப் பாதுகாத்தாய், எனும் கருத்து- என்று (உலகத்தார்) எண்ணும் எண்ணத்தினால், பாக்கியம் எனக்கு உளது என-இத்தகையதொரு பெரும் பேறு எனக்குள்ளது என்று, நினைவு உறும் பான்மை போக்கி-நினைப்பதேயல்லாமல், நினக்கு இது பொருள் என உணர்கிலென்-உனக்கு இது ஒரு பொருளாகுமென்று (நான்) எண்ணவில்லை.' ஏ-அசை.

முனிவன்,இராமபிரானது பரத்துவ நிலையை மனத்திற்கொண்டு, 'ஸ்ரீ ராமா! நீ பரம்பொருள்; பிரமனாயிருந்து உலகைப் படைத்து, படைத்தவையெல்லாம் அழிவுறாமல், திருமாலாயிருந்து பிரளய காலத்தில் அவைகளை உன் திருவயிற்றில் அடக்கிக்கொண்டு சிறு பாலனாகி, பிரளயவெள்ளத்தில் ஓர் ஆலிலையின்மேல் அறிதுயிலமரும் பெருமையுடையவன்; அத்தகைய நீ, என் யாகத்தைக் காத்தாய்

என்பது உலகத்தாருக்கு ஒரு தோற்றமேயன்றி உனக்கு அது ஒரு பொருளன்று; ஆனால் இஃது எனக்கு ஒரு பெரும் பாக்கியமாகும் எனக் கருதி மகிழ்கின்றேன்' என்று உபசார வார்த்தைகள் கூறினான் என்க. முனிவன் மொழியால் ஆசிரியர் அவதார இரகசியத்தைக் கூறுவதை இங்குங் காண்க.

மணி வயிறு என்றும் பிரிக்கலாம்; 'உய்யவுலகு படைத்துண்ட மணி வயிறு'! (பெரியாழ். 1.5: 1.) வயிற்றிலிட்ட பொருள் சீரணமாகி விடுவது பொதுவான இயற்கை; ஆனால், திருமால் சிறு பாலனாகி உலகமனைத்தையும் அவற்றிலுள்ள எல்லாப் பொருள்களோடும் தன் திருவயிற்றில் அடக்கிக்கொண்டாலும், அவை காக்கப்படுகின்றனவே யன்றி அழிவதில்லையாதலால், 'வயிற்றடக்கிக் காக்கும் நீ' என்றார்.

'உலகம் யாவையும் படைத்தளித் துண்டுமி ழொருவன்'(477)' 'ஆக்கு மாறய னுமுத லாக்கிய வுலகங், காக்குமாறுசெங் கண்ணிறை கருணையங் கடலாம், வீக்குமாறர னுமவை வீந்தநாண் மீளப், பூக்கு மாமுத லெவனவன் பொன்னடி போற்றி' (வி. பா. தற்சிறப்புப். 3.) என்பன ஈண்டு ஒப்பு நோக்கற்குரியன.

(பி - ம்.) 1. நினைவுறு; நினையுறும்.
2. போக்கு: உணர்கிலேன்; உணர்கிலன்; நினைகிலன்.
3. மற்றவையகிலமும்; மற்றையவகிலமும்; மற்றையெணகிலமும்; வயிற் றெடுக்கிக். (57)
4. என்னும்; எனல்: கருத்தோ.

## இராமபிரான் வினவுதல்

469. என்று கூறிய பின்னரவ் வெழின்மலர்க் கானத்
தன்று தானுவந் தருந்தவ முனிவரோ டிருந்த
குன்று போற்குணத் தானெதிர் கோசலை குருசில்
இன்று யான்செயும் பணியென்கொல் பணியென
விசைத்தான்.

என்று கூறிய பின்னர்-என்று இவ்வாறு (இராமபிரானுக்கு முகமன்) கூறிய பிறகு, எழில் மலர் அ கானத்து-அழகிய மலர்கள் நிறைந்த அவ்வனத்திலே, அன்று-அந்நாள் முழுதும், அருதவ முனிவரோடு உவந்து இருந்த-(அங்குள்ள) அரிய தவத்தைச் செய்த முனிவர் பலரோடும் மகிழ்ந்து (அளவளாவித்) தங்கியிருந்த, குன்று போல் குணத்தான் எதிர்-மலைபோன்ற (சலியாத) நற்குணங்களை யுடைய விசுவாமித்திர முனிவன் முன்னிலையில், (மறு நாட்காலை), கோசலை குருசில்-கௌசல்யாதேவியின் திருமகனான இராமபிரான் (வந்து நின்று), 'இன்று யான் செயும் பணி என்கொல்-இன்றைக்கு நான் செய்யவேண்டிய காரியம் யாதோ? பணி-கட்டளையிட்டருளுக' என-என்று வேண்ட, இசைத்தான்-(முனிவன்) சொல்லலானான்.

தான், கொல் : அசைநிலை.

வேள்வி முற்றியபின், கோசிகன் அன்று அவ்வனத்திலுள்ள முனிவர்களோடளவளாவித் தங்கினமை கூறப்பட்டதனால், இராம பிரான் கோசிகனை வினவியது மறுநாட் காலையென்பதாயிற்று. அவ் வாறு வினவிய இராமபிரானுக்கு, மேலே நடக்க வேண்டுவதைத் தெரிவித்து, கோசிகன் அக் குமரர்களோடும் பிரயாணத்தைத் தொடங்கினான். இவ்விடத்தில், சித்தாச்சிரமத்து முனிவர் பலரும் இவர்களுடன் சென்றதாக வான்மீகம் கூறும்.

தவத்தினர்க்குரிய மெய்யுணர்வு, அவாவின்மை முதலிய நற் குணங்களினின்று வழுவாமை குறித்து, 'குன்றுபோற் குணத்தான்' என்றார்; 'குணமென்னுங் குன்றேறி நின்றார்', 'குன்றன்னார்' (குறள். 29, 898); ஆன்றோர் போலத், துளக்கமில்லாத் திருத்தகு நிலைமைய' (பெருங். 1. 50: 4-5); 'மல்லன் மலையனைய மாதவர்' (சீவக. 2789.); 'மலையனைய நிலையுடைய மாதவர்கள்' (மேரு: சமவ. 50).

(பி - ம்.) 1. பின்னையவ்; பின்றையவ்; முனிவனவ்.
2. தானுறைந்து; தாமுறைந்து; அருமறை முனிவரொடு; இருந்து; இருந் தான்; இருந்தார்.
3. கோசலைக்குரிசில்: கோசலக்குரிசில்.
4. நான்செயும்; நான்செய்யும்; இசையென விசைத்தான்; உரைத்தான். (58)

### கோசிகன் கூறுதலும் மூவரும் பயணமாதலும்

470 அரிய யான்சொலி னையநிற் கரியதொன் றில்லை
பெரிய காரிய முளவவை முடிப்பது பின்னர்
விரியும் வார்புனன் மருதஞ்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியுங் காண்டுநா மெழுகெனப் போனார்.

'அரிய யான் சொலின்-(செய்தற்கு)அரியன என்று சிலவற்றை நான் சொல்வேனாயின், ஐய-ஐயனே! நிற்கு அரியது ஒன்று இல்லை— உனக்கு அரியது என்பது ஒன்றும் இல்லை; (ஆனாலும்), பெரிய காரியம் உள-(சில) பெரிய காரியங்கள் இருக்கின்றன; அவை முடிப்பது பின் னர்-அவற்றைச் செய்து முடிப்பது பின்னே ஆகக் கடவது; விரியும் வார்புனல்-மிகப் பரந்த நீர்வளமுடைய, மருதம் சூழ்-மருத நிலங்கள் சூழ்ந்த, மிதிலையர் கோமான்-மிதிலா நகரத்தவர்க்கு அரசனான சனக மகாராசன், புரியும்-செய்கின்ற, வேள்வியும்-யாகத்தையும், காண் டும் நாம்-(இப்போது முதலில் சென்று) பார்ப்போம் நாம்; எழுக என-புறப்படுக' என்று (கோசிகன்) கூற, போனார்-(மூவரும் புறப் பட்டுச் சென்றார்கள்

'ஸ்ரீராமா!நீசெய்தற்கு அரியது என்பது ஒன்றும்இல்லை; ஆயினும் உன்னாலேயே முடியவேண்டிய சில பெரிய காரியங்கள் உண்டு; அவற்

றைப் பின்னே காண்போம். இப்போது முதலில் மிதிலைக்குச் சென்று சனகமகாராசன் செய்யும் யாகத்தைக் காண்போம்' எனக் கோசிகன் கூற, பின்பு மூவரும் புறப்பட்டனர். 'பெரிய காரியம்' என்றது இராவண வதம் முதலியவற்றை.

'வேள்வியும் காண்டும்' என்றவிடத்து, வேள்வியும் என்பதில் உள்ள உம்மை, 'இப்போது என் வேள்வி கண்டதோடன்றி' என இறந்தது தழுவிய எச்சமாகவும், 'மிதிலையில் வேள்வி காண்பதோடன்றி வில்லுங் காணலாம்; அதன் மேல் திருமணமுங் காணலாம்' என எதிரது தழுவிய எச்சமாகவும் அமையும். பின், 'நின்னுடைய வேள்வி காணிய வந்தார், வில்லுங் காண்பார்' (712) என்பதை நோக்குக. எழுகென; தொகுத்தல்.

(பி - ம்.) 1. அரிய நான்சொல்ல; அரிய நாஞ்சொல்ல; அரிய யான்சொல; ஐயனுக்கு: இல்லைப்.
2. உளதது; முடிப்பதும் பின்னை.
3. மருதஞ்சேர்; மிதிலையர் வேந்தன்.
4. கண்டு நாம்; காணநாம்; எழுகென்று: போனான். (59)

வேள்விப் படலம் முற்றும்.



# 9. அகலிகைப் படலம்

அகலிகைப்படலம்:கௌதம முனிவரின் மனைவியான அகலிகை யைப் பற்றிய செய்திகளைக் கூறும்படலம் என விரியும். இப்பெயர் வடமொழியில் குற்றமில்லாதவள் என்னும் பொருள்படும்,'அகல்யா' என்தன் திரிபாகும். இது தமிழில் அகலியை என்று சிறுபான்மையா கவும், அகலிகை என்று பெரும்பான்மையாகவும் வழங்கிவருகிறது.

பல பிரதிகளில், இப்படலப் பாடல்கள் தனித்தனி மூன்று பகு திகளாகக் காணப்படுகின்றன; பாடல்கள் 471-501 துருவாசர் சாபப் படலம், மாலை வரலாற்றுப் படலம், சமுத்திர மதனப் படலம் என்ற பெயர்களோடும், 502-532 கங்கையாற்றுப் படலம் என்ற பெயரோடும், 533-555 அகலிகைப் படலம், அகலிகை சாபந்தீர் பட லம் என்ற பெயர்களோடும் உள்ளன. ஒரு சுவடியில் 471-501 பாடல்கள் இல்லை.

### மூவரும் சோணை நதிக்கரையை அடைதல்

471. அலம்பு மாமணி யாரத்தோ டகிலணி புளினம்
நலம்பெய் பூண்முலை நாகிள வஞ்சியா மருங்குல்
புலம்பு மேகலைப் புதுமலர்ப் புனையறற் கூந்தல்
சிலம்பு சூழுங்காற் சோணையாந் தெரிவையைச் சேர்ந்தார்.

அலம்பு-(நீரினால்) கழுவப்பெற்ற, மாமணி-சிறந்த இரத்தினங் களும், ஆரத்தோடு-சந்தனமும், அகில்-அகிலும், அணி-பொருந்தி யுள்ள, புளினம்-மணற் குன்றுகளாகிய, நலம்பெய்-இன்பந்தருகின்ற, பூண் முலை-ஆபரணங்களையணிந்த தனங்களையும், நாகு இள வஞ்சி ஆம்-மிக்க இளமை பொருந்திய (நீர்வள்ளிக்) கொடியாகிய, மருங் குல்-இடையினையும், புலம்பு-ஒலிக்கின்ற, புதுமலர் மேகலை-புதிய பூக் களின் வரிசையாகிய மேகலாபரணத்தையும், (புதுமலர்) புனை அறல் கூந்தல்-(புதிய பூக்களால்) அலங்கரிக்கப்பெற்ற கரு மணலாகிய கூந் தலையும், சிலம்பு சூழும் கால்-சிலம்பென்னும் ஆபரணமணிந்த கால் களையும் (மலையைச்சுற்றி ஓடும் வாய்க்கால்களையும்) உடைய, சோணை ஆம்-சோணையாறாகிய, தெரிவையை-பெண்ணை,சேர்ந்தார்-(மூவரும்) அடைந்தனர்.

சித்தாச்சிரமத்தினின்றும் புறப்பட்ட மூவரும், 'சோணை' என் னும் ஆற்றை அடைந்தனர்; இது கிழக்கிலிருந்து மேற்கு நோக்கி

ஓடும் நதம் ஆகும். ஆறுகளைப் பெண்பாலாகக் கூறுதல் மரபாகலின், சோணையாந்தெரிவை என உருவகமாகக் கூறி, அதற்கேற்ப வருணித்துள்ளார். 'சிலம்பு சூழும் கால்' என்பது சிலேடையாக, ஆற்றுக்குக் கூறும்போது மலையைச் சுற்றி ஓடும் வாய்க்கால் எனவும், பெண்ணுக்குக் கூறும்போது சிலம்பென்னும் ஆபரணமணிந்த கால் எனவும் பொருள்படும். புளினம் - மணற்குன்றுகள்; இவற்றில் ஆற்றினால் ஒதுக்கப்பட்ட மணிகளும் சந்தனக் கட்டையும் அகிலும் தங்கியிருக்கும்; இத்தகைய குன்றுகளைத் தனங்களாகக் கூறினார். அலையால் ஒதுக்கப்படும் பலநிறப் பூக்களின் வரிசையை, 'மேகலை' என்றார்; மேகலை-எண் கோவையுடையதாய் மகளிர் இடையில் அணியப்படுவது. ஆற்றில் உண்டாகும் கருமண லொழுக்கைப் பெண்களின் கூந்தலுக்குவமித்தல் மரபு; ஆகலின், 'அறற்கூந்தல்' என்றார். கால்களுக்கு வேறு பொருள்களை உவமிக்கக் கூடாமையின், சிலேடை வகையால் கூறி உருவகமின்றி விடுத்தார். நாகிள-மீமிசைச் சொல்.

இங்கு ஆற்றைத் தெரிவையாக வருணித்திருப்பதை, **சிலப்பதிகாரம்** புறஞ்சேரியிறுத்த காதை *151-173* அடிகளில் இளங்கோவடிகள் வையையை வருணித்துள்ளதோடு ஒப்பிட்டுக் காண்க.

இச் செய்யுள் முதல் சித்தாச்சிரமத்திலிருந்து மிதிலைக்குச்செல்லும் வழி குறிக்கப்பெறுகின்றது.

(பி - ம்.) 1. ஆரமொடு; அகிலனை; அகிலணை; அகில்புனை; அகிலுறு.
2. மருங்கிற்.
3. புலம்பல்: மேகலை புதுமலர்; அணியறல் கூந்தல்.
4. அலம்புகால்; சோணமாம். (1)

சூரியாஸ்தமனம்

472. நதிக்கு வந்தவ ரெய்தலு மருணன்ற னயனக்
கதிக்கு முந்துறு கலினமான் றேரொடுங் கதிரோன்
உதிக்குங் காலையிற் றண்மைசெய் வான்றன துருவில்
கொதிக்கும் வெம்மையை யாற்றுவான் போற்கடற்
குளித்தான்.

அவர்-அம்மூவரும், நதிக்கு வந்து எய்தலும்-சோணை நதிக்கரைக்கு வந்து சேர்ந்தவுடன், கதிரோன்-சூரியன், உதிக்குங் காலையில்-(மறுநாள்) உதயமாகும்போது, தண்மை செய்வான்-(அவர்களுக்குக்) குளிர்ச்சியைத் தரும் பொருட்டு, தனது உருவில்-தன் வடிவத்தில், கொதிக்கும் வெம்மையை - (இயல்பாக எப்போதும் உள்ள) மிக்க வெப்பத்தை, ஆற்றுவான்போல்-ஆற்றிக் கொள்பவனைப்போல, அருணன்தன்-(தன்னுடைய சாரதியான) அருணனது, நயனம் கதிக்கும் முந்துஉறு-கண்பார்வையின் வேகத்துக்கும் முந்திச் செல்லத்தக்க விரைவுடைய, கலினம் மான் தேரோடும்-குதிரைகள் பூட்டப்பட்ட

(ஒற்றையாழித்) தேருடனே, கடல் குளித்தான்-மேற்குக் கடலில் மூழ்கினான்.

இயற்கையில் நிகழும் சூரியாஸ்தமனத்திற்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறியது தற்குறிப்பேற்ற அணி. சூரிய உதய அஸ்தமனங் களை முறையே கதிரவன் கீழ் கடலினின்று எழுவதும், மேல் கடலில் விழுவதுமாகக் கூறுதல் கவி மரபு; உதயகிரியினின்று எழுந்து அஸ்த மனகிரியில் மறைவதாகக் கூறுவதும் அது. இங்கே, சூரியன் தன் குலத்துதித்த குமரர்க்குக் குளிர்ச்சி தரும் பொருட்டு, முதலில் இயல் பான தனது வெம்மையை மேல்கடலிற் குளித்து ஆற்றிக் கொண்டு, மறுநாள் வந்து உதயமாகக் கருதிக் கடலில் மூழ்கினான் எனப்புனைந்து கூறுகின்றார். கலினம்-கடிவாளம்; மான் என்னும் விலங்குப் பொதுப் பெயர், இவ்வடைமொழியால் குதிரையைக் குறிப்பதாயிற்று. அரு ணன் கூரிய கண்பார்வையுடையவன் என்பர்; அவன் பார்வை செல் லும் தூரத்துக்குமேல் அப்பார்வையினும் விரைந்து செல்வன எனக் குதிரைகளின் விரைவைச் சிறப்பிக்கின்றார்.

அருணன். காசிபப் பிரஜாபதிக்கு, வினதையினிடமாக, கருட னுக்கு முன் பிறந்தவன்; கால்கள் இல்லாதவன்; அருணன் என்றது இவன் செந்நிறமுடைமையால் வந்த காரணப்பெயர்.

சூரிய உதய அஸ்தமனங்கள் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு கவிகளால் புனைந்து கூறப்படும்; 616-பார்க்க.'அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும், வெந்தழலை யாற்றுவான் மேல்கடற்கே-எந்தை. குளிப்பான்போற் சென்றடைந்தான் ...... பொற்றேருடன்' (நள. 255). என்பதனை ஈண்டு ஒப்பிடுக.

(பி - ம்.) 1. நதிக்கண் வந்தவர்; நதிக்குள் வந்தவர்; நதிக்கு வந்திவர்; அருணனை யனக்.
2. முந்துறும்; கலினமாத்தேரொடும்; கவனமான்றேரொடும்.
4. மாற்றுவான். (2)

## மூவரும் ஒரு சோலையில் தங்குதல்

473. கறங்கு தண்புனற் கடிநெடுந் தாளுடைக் கமலத்
தறங்கொ ளுண்மலர்க் கோயில்க ளிதழ்க்கத வடைப்பப்
பிறங்கு தாமரை வனம்விட்டுப் பெடையொடுங் களிவண்
டுறங்கு கின்றதோர் நறுமலர்ச் சோலைபுக் குறைந்தார்.

கறங்கு-ஒலிக்கின்ற, தண்புனல் - குளிர்ந்த நீரிலேயுள்ள, நெடு தாள் உடை(ய) கமலத்து-நீண்ட தண்டுகளையுடைய தாமரை யின், நாள் கடி மலர்-அன்றலர்ந்த நறுமணமுடைய பூக்களாகிய, அறம் கொள் கோயில்கள்-(வண்டுகளுக்குத் தேன் முதலியவற்றை அளித்தலாகிய) தருமத்தை மேற்கொண்ட மாளிகைகளின், இதழ் கதவு அடைப்ப-இதழ்களாகிய கதவுகள் மூடப்பட்டதனால், பெடை

யொடும் களிவண்டு-தம் பெட்டைகளுடன் (தேனுண்டு)களித்திருந்த (ஆண்)வண்டுகள், பிறங்கு தாமரை வனம் விட்டு-(அழகாக) விளங்குகின்ற அந்தத் தாமரைக் காட்டைவிட்டு நீங்கிச்சென்று, உறங்குகின்றது-(இரவிலே தங்கி) உறங்குதற்குஇடமான, ஓர் நறு மலர் சோலை-நன் மணம் பொருந்திய (பலவகைப்) பூக்களையுடையதாகிய ஒரு சோலையிலே, புக்கு-(மூவரும்) புகுந்து, உறைந்தார்-(இராப்பொழுது அங்கே) தங்கினர்கள்.

மூவரும்,சோணை நதிக்கரையிலுள்ளதொரு சோலையிலே தங்கி, அன்று இராப்பொழுதைக் கழிந்தனர் என்க.

தாமரைப் பூக்கள் தம்மிடம்உள்ள தேன், மகரந்தம், கேசரம், பொகுட்டு ஆகியவற்றால் வண்டு முதலிய உயிரினங்களை உண்பித்தலின், அவற்றை 'அறங்கொள் கோயில்கள்' என்றார்; அப்பூக்கள் இரவிலே குவிதல் உடைமையால் இதழ்க் கதவு அடைப்ப என்றார்; தருமசாலைகள் இரவிலே மூடப்படுதலைக் குறித்தவாறும். அத்தரும சாலைகளிலே பகற்பொழுதில் உண்டு களித்த வண்டுகள், இரவிலே தங்கி உறங்குவதற்கு ஏற்ற விடமாகச் சோலையை நாடிச்சென்றன வெனத்தொடர்புபடக் கூறினர். சத்திரங்களிலே உண்டு காலங்கழிப்போர், இரவிலே அவை மூடப்பட்டபின், தாம் தங்கி உறங்குவதற்கேற்ற வேறிடந் தேடிச் செல்லுதல் உலகவியற்கை.

பூக்களின் மிகுதி பற்றித் 'தாமரை வனம்' என்றார்; வனம் என்பது, 'நீர்' என்றும் பொருள்படுமாதலின், அது ஆகுபெயராய்ப் பொய்கையைக் குறித்ததெனக் கொண்டு, 'தாமரைப் பொய்கை' என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. கறங்கு தெண்டிரைக்; கடிநெடுந்திரளுடைக்.
2. திறங்கொள்; இறங்கு; கோயிலின்; இதட்கதவு.
3. வனம் விட்டுக் களிவண்டு பெடையோடு.
4. நறுமலர்ச் சோலை சென்றுறைந்தார். (8)

## அச்சோலை யாதென இராமபிரான் வினவுதலும் முனிவன் உரைத்தலும்

474. இனைய சோலைமற் றியாதென விராகவன் வினவ
வினையெ லாமற நோற்றவன் விளம்புவான் மேலாள்
தனைய ரானவர்க் கிரங்கியே காசிபன் றனது
மனையு ளாடவம் புரிந்தன ளிவணென வலித்தான்.

'இனைய சோலை யாது என-இச்சோலை எத்தன்மையது' என்று, இராகவன் வினவ-இரகுகுல திலகனான இராமபிரான் கேட்க, வினை எலாம் அற நோற்றவன்-கருமத் தொடர்புகளெல்லாம் நீங்கும்படி தவம் செய்த கௌசிக முனிவன், விளம்புவான்-கூறுவானாகி, 'மேல்

நாள்-முன்னொரு காலத்தில், காசிபன் தனது மனை உளாள்-காசிபன் மனைவியாகிய திதி என்பவள், தனையர் ஆனவர்க்கு இரங்கி-(தேவர்களால் அழிவுற்ற) தன்புதல்வர்களான அசுரர்களுக் காகத் துயரமுற்று, இவண் தவம் புரிந்தனள் என-இங்கே (இருந்து) தவம் செய்தாள்' என்று, வலித்தான்-தெளியக் கூறினான். மற்று, ஏ: அசைகள்.

இராகவன்-இரகு வமிசத்தவன்; சூரிய குலத்தில் இரகுவென்னும் அரசன் மிகச் சிறந்து விளங்கினமையால், அவ்வமிசம் அவன் பெயரால், 'இரகு வம்சம்' என்று வழங்கும்; இரகு வம்சத்தில், பின்வந்தோர்களுட் சிறந்த இராமபிரானை இங்கே இராகவன் என்ற பெயரால் குறித்தார்; இது இராமபிரானுக்குரிய சிறப்புப் பெயர்களுள் ஒன்றாக வழங்குவது. வடமொழித் தத்திதாந்த நாமம்.

காசிபன் மனைவி, திதி; திதியின் மக்கள் தைத்தியர் எனப்படும் அசுரர்கள். அவர்கள் தேவர்களால் அழிவுற்றமையின், அவர்கள் பொருட்டுத் துயரமுற்ற திதி, இந்திரனையும் தேவர்களையும் வென்று அழிக்கத் தக்க புதல்வனொருவனைப் பெறவேண்டித் தன் கணவனுடம் பாடுபெற்றுக் கடுந்தவமியற்றினள் என்ற வரலாறு மேலே 24பாடல்களில் விரிவாகக் கூறப்படுகின்றது.

தநயர் என்பது எதுகைபற்றி இங்கே 'தனையர்' என வந்தது.

(பி - ம்.) 1. இராகவனியம்ப. 4. புரிந்திடம். (4)

475. அண்ட கோளகைக் கப்புறத் தென்னையா ளுடைய
கொண்ட னீள்பதத் தெய்தியோர் விஞ்சையர் கோதை
புண்ட ரீகமென் பதத்தியைப் புகழ்ந்தனள் புகழ
வண்ட ருமது மாலிகை கொடுத்தனண் மகிழ்ந்து.

அண்ட கோளகைக்கு அ புறத்து-இவ்வண்ட கோளத்துக்கு அப்பால் உள்ளதான, என்னை ஆள்உடைய கொண்டல் நீள் பதத்து-என்னை ஆளாகவுடைய, மேகவண்ணனான திருமாலின் சிறப்புமிக்க இடமாகிய வைகுந்தத்தை, ஓர் விஞ்சையர் கோதை எய்தி-ஒரு வித்தியாதர மங்கை அடைந்து, புண்டரீகம் மெல் பதத்தியை-தாமரையாகிய மென்மையான தானத்தில் அமர்ந்துள்ள இலக்குமி தேவியை, புகழ்ந்தனள்-துதித்துப் பாடினள்; புகழ-அவ்வாறு பாட, மகிழ்ந்து-(தேவி) மகிழ்வுற்று, வண்டு அரு-வண்டுகள் (எப்போதும்) நீங்கப்பெறாத, மது மாலிகை-தேன் பொருந்திய (தனது) பூமாலையை, கொடுத்தனள்-(அவ்வித்தியாதர மங்கைக்குக்) கொடுத்தாள்.

திருப்பாற்கடலினின்றுந் தோன்றிய அமுதங் காரணமாகத் தேவர்க்கும் அசுரர்க்கும் போர் மூள, அதில் அசுரர்கள் தோற்று

அழிவுற்றமையின், அவ்வரலாற்றை முனிவன் முதலிற்கூறத்தொடங் கினன்.

நீள்பதம்-சிறப்பு மிக்க இடம்; அந்தமிலின்பத்து வீடும் ஆம். கோதை: ஆகுபெயர்.

அண்ட கோளகை : 530.

(பி - ம்.) 1. என்னையாளுடையான்; என்னையாளமலன்.
2. கொண்டல் தன் பதத்து.
3. புண்டரீகைமென் பதத்திசை: புணர்த்தனள்; பதத்தியையெய்தினள்; புகழா.
4. வண்டுறுமது; மாலைகைக்; மாலையைக்; கொடுத்தனன். (5)

476. அன்ன மாலையை யாழிடைப் பிணித்தய னுலகம்
கன்னி மீடலுங் கசட்டுடை முனியெதிர் காணு
என்னை யாளுடை நாயகிக் கிசையெடுப் பவளென்
றன்ன டாளிணை வணங்கிநின் றேத்துற வனையாள்,

கன்னி-அவ்வித்தியாதர மங்கை, அன்ன மாலையை - (பெரிய பிராட்டி அளித்த) அப்பூமாலையை, யாழ் இடை பிணித்து-(தன்) வீணையிலே கட்டிக்கொண்டு, அயன் உலகம் மீடலும்-பிரமலோகத் துக்கு மீண்டு வரும்போது, கசடு உடை முனி-அழுக்குடை யணிந்த துருவாச முனிவன், எதிர் காணு-(அவளை) எதிரே கண்டு, என்னை ஆள் உடை(ய) நாயகிக்கு-என்னை ஆளாக உடைய இலக்குமிப்பிராட் டிக்கு, இசை எடுப்பவள் என்று-இசைபாடி மகிழ்விப்பவள் (இவள்) என்று நினைத்து, அன்னள் தாள் இணை-அவளுடைய பாதங்களை, வணங்கி நின்று ஏத்துற-வணங்கித் துதித்து நிற்க, அனையாள்-அவள்,

இதுவும் அடுத்த பாடலும் ஒருதொடர்.

துர்வாஸ=தூய்மையற்ற ஆடை; இலக்கணையால் அதனை அணிபவருக்காயிற்று; குசேல: என்பதுபோல. துருவாச முனிவன் அழுக்காடை யுடையவனென்பர்; அதனால், 'கசட்டுடை முனி' எனப் பட்டான். இதற்குக் கோபமாகிய குற்றமுடைய முனிவன் எனவும் பொருள் கூறுவர்; இஃது உறுப்புப் பொருளுக்கு அத்துணைப் பொருத்தமின்மை காண்க. யாழ் தெய்வத் தன்மையுடையதாகலின் அதற்கு மாலை சூட்டி வழிபடுதல் மரபு. பெரியபிராட்டியாரளித்த தெய்வத்தன்மை பொருந்திய பூமாலையைத் தான் அணிவதினும் யாழுக்குச் சூட்டுதல் சிறப்பெனக் கருதி அவ்வித்தியாதர மங்கை அவ்வாறு செய்தனள். அம்மங்கையைப் பிரமலோகத்தினின்று மீண்ட துருவாசமுனிவன் கண்டு, இலக்குமிப்பிராட்டியை இசையால் ஏத்தும் பெருமையுடையவள் இவள் எனக் கருதி அவளை வணங்கினன் என்க. இதனல் அம்முனிவனது விஷ்ணு பக்தி புலப்படுவதாம். வைணவர்

ஒருவரை யொருவர் சந்திக்குங்கால், மூத்தோர்-இளையோர்; ஆடவர் பெண்டிர் என்ற வேறுபாடின்றி வணங்குதல் மரபு.

யாழுக்கு மாலைசூட்டுதல்: 'நரந்தப்பல்காழ்க் கோதை சுற்றிய, ஐதமை பாணி வணர்கோட்டுச் சீறியாழ்' புறநா. 302: 4-5.

கம்பநாடர், திருமாலையும், இராமபிரானையும் குறிக்குமிடங்களில் 'என்னை யாளுடைய ஐயன்' என்பது போன்ற தொடர்களாற் குறிப்பர்; அதுபோலவே இங்கும் இலக்குமிப்பிராட்டியாரை 'என்னை யாளுடைய நாயகி' என்றார்; இதுவும் அவர் சமயத்தைச் சுட்டும்.

(பி - ம்.) 1. உலகிற்.
2. கன்னிமீளலும்; கசட்டுரை; கசட்டுறு; கசட்டுறை; கட்டுரை; கசடறு; எதிர்காண.
3. இசைபுணர்ப்பவள்; இசை யுரைப்பவள்; இசை யெழுப்பவள்.
4. அன்னை தாளிணை; அன்னை தாளுற; அன்னதாளிணை; அன்னள்தாளினை; ஏத்தலும். (6)

477. உலகம் யாவையும் படைத்தளித் துண்டுமி ழொருவன்
இலகு மார்பகத் திருந்துயிர் யாவையு மீன்ற
திலக வாணுதல் சென்னியிற் சூடிய தெரியல்
அலகின் மாமுனி பெறுகென வளித்தன ளளியால்.

உலகம் யாவையும்-எல்லாவுலகங்களையும், படைத்து-(பிரமனாக இருந்து) படைத்தும், அளித்து-(திருமாலாக இருந்து) காத்தும், உண்டு-(பிரளய காலத்தில்) எல்லாவற்றையும் உட்கொண்டு தன்திரு வயிற்றிலே அடக்கியும், உமிழ்-(பிரளயம் முடிந்தபின், உட்கொண்டவற்றை மீண்டும்) வெளிப்படுத்துகின்ற, ஒருவன்-ஒப்பற்ற தலைவனான திருமாலின், இலகும் மார்பகத்து இருந்து - விளங்குகின்ற திருமார்பிலே வீற்றிருந்து, உயிர் யாவையும் ஈன்ற-(எவ்வுலகத்தும் உள்ள) உயிர்களெல்லாவற்றையும் பெற்றருளிய, திலகம் வாள் நுதல்-திலக மணிந்த ஒளி பொருந்திய நெற்றியையுடைய திருமகளின், சென்னியில் சூடிய தெரியல்-திருமுடியிலே சூட்டப்பெற்ற அப்பூமாலையை, அலகு இல் மாமுனி பெறுக என-(தவத்தில்) அளவில்லாத பெருமையுடைய முனியே! நீ பெற்றுக்கொள்க' என்று சொல்லி, அளியால்-அன்போடு, அளித்தனள்-கொடுத்தாள்.

முன் கவியில் உள்ள 'அனையாள்' என்னும் எழுவாய், அளித்தனள்' என்னும் இம்முற்றைக் கொண்டு முடிந்தது.

ஸ்ரீமந்நாராயணனது சக்தியாகி, உலகுக்கு அன்னையாதலின், 'உயிர் யாவையு மீன்ற' என விசேடிக்கப்பட்டது. வாள் நுதல்,அடையடுத்த ஆகுபெயர். பெறுகென: தொகுத்தல். முதலடி-ஒப்பு: 468; திருவாய்மொழி. 4. 5: 10.

(பி - ம்.) 1. உலகியாவையும்; படைத்திடந்து; படைத்தளந்து; உண்டுமிழ்ந் தொருவன்.
2. இலக: இருந்துலகியாவையும்; ஈன்றாள்.
3. திலத வாணுதற் சூட்டிய சென்னியிற்றெரியல்.
4. அலகிலாமுனி; அலகின் மாதவ. (7)

478. தெய்வ நாயகி சென்னியிற் சூடிய தெரியல்
ஐய யான்பெறப் புரிந்ததெத் தவமென வாடி
வெய்ய மாமுனி சென்னியிற் சூடியே வினைபோய்
உய்யு மாறிதென் றுவந்துவந் தும்பர்நா டுற்றான்.

வெய்ய மா முனி-(அம்மாலையைப் பெறுதலில்) விருப்பங் கொண்ட, (தவத்தில்) பெரிய அம்முனிவன், (அதனைப் பெற்று), தெய்வநாயகி சென்னியில் சூடிய தெரியல்-தெய்வங்களுக்கெல்லாம் தலைவியாகிய இலக்குமிப்பிராட்டி தனது திருமுடியிலே சூடிய இம் மாலையை, பெற-பெறுவதற்கு, யான் புரிந்தது ஐய எ தவம்-நான் செய்திருப்பது வியத்தற்குரிய எத்தகைய தவம்! என-என்று சொல்லி, ஆடி-(மகிழ்ச்சியால்) கூத்தாடி, சென்னியில் சூடி-(அதனைத்) தன்தலை மேல் சூட்டிக்கொண்டு, 'வினை போய்-கருமத் தொடர்பற்று, உய்யும் ஆறு இது என்று-ஈடேறுதற்குரிய வழியாகும் இது' என்று நினைத்து, உவந்து உவந்து-மிக்க மகிழ்ச்சி யடைந்து, உம்பர்நாடு உற்றான்-(அம் மாலையுடன் அங்கிருந்து போய்த்) தேவருலகத்தை அடைந்தான்.

சூடியே: ஏகாரம் அசைநிலை. ஐய: வியப்புப் பொருள் தரும் 'ஐ' என்ற இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சம். உவந்து வந்து: அடுக்கு; மிகுதி பற்றி வந்தது. வெய்ய-கொடிய என்றும்ஆம்.

திருமால் 'தெய்வநாயகன்' என்பதற்கேற்பப் பிராட்டி 'தெய்வ நாயகி' எனப்பட்டாள். பெரியபிராட்டி தன் திருமுடியிலே சூடிய மாலை எனக்கு வலிய வந்து கிடைத்தது பெறுதற்கரிய பேறுகும் என வியப்பும் உவப்பும் கொண்டனன் முனிவன் என்க.

(பி - ம்.) 1. சூட்டிய.
2. யான்பெற வெத்தவ மென்றவனுடி; நான்பெறப் புரிந்ததெத் தவ மென்றென்றுடி; தவமென வழியா.
3. சென்னியிற் சூட்டியே.
4. உவந்துதன்; உவந்துபின்: உம்பர்நாடடைந்தான்; உய்யுமாறரி தென்றுபோய். (8)

### இந்திரன் பவனி

479. பெய்யு மாமுகில் வெள்ளியம் பிறங்கன்மீப் பிறழும்
செய்ய தாமரை யாயிர மலர்ந்துசெங் கதிரின் [றெளிரும்
மொய்கொள் சோதியை மிலைச்சிய முறைமைபோன்
மெய்யி னேடையி ராவதக் களிற்றின்மேல் விளங்க,

பெய்யும் மாமுகில்-மழையைப் பெய்தற்குரிய கருமேகமானது, வெள்ளி பிறங்கல் மீ-(ஒரு) வெள்ளி மலையின்மேல், பிறழும்-(அழகுடன்) விளங்குகின்ற, செய்ய தாமரை ஆயிரம் மலர்ந்து-செந்தாமரைப்பூக்கள் ஒராயிரம் (தன்னிடத்தே) மலரப்பெற்று, மொய்கொள்-செறிதலைக் கொண்ட, செம்மை கதிரின் சோதியை-சிவந்த சூரிய கிரணங்களின் ஒளியை, மிலைச்சிய முறைமை போன்று-தரித்துள்ள தன்மையை யொத்து, ஒளிரும்-பிரகாசிக்கிற, மெய்யினோடு-மேனியோடு. அயிராவதம் களிற்றின்மேல்-அயிராவதம் என்னும் வெள்ளை யானையின்மேல், விளங்க-விளங்கித் தோன்றவும்,

இது முதல் நான்கு பாடல்கள் ஒரு தொடர்; குளகம்; இந்திரனது பவனிச் சிறப்பை விளக்கும்.

அம்: சாரியை, அயிராவதம்: முதற்போலி.

'கருமேக மொன்று தன்னிடத்தே ஆயிரந் தாமரைப் பூக்கள் மலரவும், சூரிய கிரணங்கள் போன்ற பேரொளி தன்னிடமிருந்து பிரகாசிக்கவும், ஒரு வெள்ளி மலையின் மேலேறி வருவது போன்று' என்றது இல்பொருளுவமை. இந்திரன் கருநிறமுடைமையின், அவனுடம்பிற்குக் கரு மேகமும், அவ்வுடம்பிலுள்ள ஆயிரங் கண்களுக்கு ஆயிரந் தாமரைப் பூக்களும், அவனணிந்துள்ள இரத்தினாபரணங்களின் பேரொளிக்குச் சூரிய கிரணங்களின் ஒளியும், அவன் வாகனமாகிய ஐராவத மென்னும் வெள்ளை யானைக்கு வெள்ளி மலையும் முறையே உவமையாம்; இவற்றை உருவகமாக்கிக் கூறினார்; எனவே, இப்பாடல் உருவகத்தை அங்கமாகவுடைய இல்பொருளுவமையணி கொண்டது.

பிறழும்-பிறழ்கின்ற=சஞ்சலமுடைய என்றும் ஆம்.

(பி - ம்.) 1. வெய்யமாமுகில்: பிறங்கன்மேற்; கிரியின்மேற்.
2. மலர்ந்த: செங்கதிரோன்.
3. மெய்ய சோதியை: மெய் கொள்சோதியை: முறைமையி னொளிரும்; முறைமை போன்றணிசேர். 4. அயிராபதக். (9)

480. அரம்பை மேனகை திலோத்தமை யுருப்பசி யனங்கன்
சரம்பெய் தூணியிற் றளிரடி நூபுரந் தழைப்பக்
கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர் விளரி
நிரம்பு பாடலோ டாடினர் வீதிக ணெருங்க.

கரும்பையும்-(இனிப்பு மிக்க) கரும்பைக்கூட, கைப்பித்த-கசப்பென்று சொல்லும்படி செய்த, சுவை சொல்லியர்-இனிமை பொருந்திய சொற்களையுடையவர்களான, அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி-இந்நான்கு நடனமாதர்களும், அனங்கன் சரம் பெய் தூணியின் தளிர் அடி-மன்மதனுடைய மலரம்புகள் வைக்கப்பெற்ற அம்பறாத் தூணி போன்றனவும், தளிர்போல் மென்மையுடை

யனவுமாகிய (தங்கள்) கால்களிலே, நூபுரம் தழைப்ப-சிலம்பின் ஒலி மிக, விளரி நிரம்பு பாடலோடு-விளரி என்னும் பண் நிரம்பிய பாடல்களுடன், (பாடல்களுக்கு இசைய), ஆடினர்-நாட்டியமாடிக் கொண்டு, வீதிகள்-(அழகிய) வீதிகளிலே, நெருங்க-அணுகி வரவும்,

ஆடினர்:முற்றெச்சம்.

இந்திரனது பவனியிலே அரம்பை முதலிய நான்கு தேவதாசி களின் நாட்டியம் சிறப்பாக இடம் பெற்றிருந்த தென்பது கருத்து. நாட்டியத்துக்கு ஏற்ற தாளம் போலச் சிலம்பொலி அமைந்ததென் பதுபட 'நூபுரந் தழைப்ப' என்றார்.

மாதர்களின் கணைக்காலுக்கு அம்பறுத் தூணியை உவமை கூறுதல் மரபு. கிட்கிந்தா. 754; சீவக. 176. மு. ஒப்பு. சுந்தர. 292.

(பி - ம்.) 1. உருப்பசி திலோத்தமை. 2. தூணிபோற்.
3. கரும்பினுஞ் சுவை; கரும்பையின் சுவை: கற்பித்த: குதலையசால்; குதலையாழ். 4. பாடலொ டாடினர். (10)

சில பிரதிகளில் இதுவும் அடுத்த பாடலும் முன்பின்னாக மாறியுள்ளன.

481. நீல மால்வரைத் தவழ்தரு நிறைமதிக் கற்றை
போல வேயிரு புடையினுஞ் சாமரை புரளக்
கோல மாமதி குறைவற நிறைந்தொளி குலாவி
மேலு யர்ந்தென வெள்ளியந் தனிக்குடை விளங்க.

நீலம் மால் வரை தவழ்தரு-நீலநிறமான பெரிய மலையினி டத்தே தவழ்கின்ற, நிறைமதி கற்றை போல-பூர்ணசந்திரனது ஒளிக்கற்றைபோல (தோன்றுகிற),சாமரை-வெண்சாமரம், ஏய் இரு புடையினும் புரள-பொருந்திய இரண்டு பக்கங்களிலும் புரளவும், கோலம்ஆம்மதி-அழகு பொருந்திய சந்திரன்,குறைவு அற நிறைந்து-(சிறிதும்) குறைபடலின்றி நிரம்பி, ஒளி குலாவி-மிக்க ஒளியோடு விளங்கி, மேல் உயர்ந்தது என-(அவன்தலைக்கு) மேலே உயர்ந்து நின்று விளங்குவது போல, வெள்ளி தனி குடை-வெள்ளியா லாகிய ஒப்பற்ற குடை, விளங்க-சிறப்பாக விளங்கவும்,

இந்திரனது மேனிக்கு நீல மால் வரையும், இருபுறங் களிலும் வீசப்படும் சாமரத்திற்கு, நிறைமதியின் ஒளிக்கற்றையும், வெள்ளிக் குடைக்குச் சந்திர மண்டலமும் உவமைகள்.

(பி - ம்.) 1. மால்வரைத்தவடரு; மால்வரைதவழ்தரு; மால்வரையிற்றவழ்; கதிர் நிலாக் கற்றை; நிறைநிலாக் கற்றை; நெடுநிலாக் கற்றை.
2. போலவேறிரு.
3. குறைவுற; நிறைந்தொளிர்; நிறைத்தொளிர். குலாவ; குலவ; குலவி.
4. மேலிவர்ந்தென; மேலிவர்ந்தன; மேலுயர்ந்தன; மேனிவந்தென: மேனிமிர்ந்தன: கொற்றவெண்டனிக்குடை. (11)

482. தழங்கு பேரியுங் குறட்டொடு பாண்டிலுஞ் சங்கும்
வழங்கு கம்பலே மங்கல கீதத்தை மறைப்ப
முழங்கு நான்மறை மூரிநீர் முழக்கென வுலகை
விழுங்க மால்வரும் விழாவணி கண்டுளம் வியந்தான்.

தழங்கு-ஒலிக்கின்ற, பேரியும்-பேரிகையும், குறட்டொடு-குறடு என்னும் வாத்தியமும், பாண்டிலும்-கைத்தாளமும், சங்கும்-சங்குகளும், வழங்கு கம்பலே-தருகின்ற பேரொலி, மங்கலம் கீதத்தை மறைப்ப-(பெண்கள் பாடுகின்ற) மங்கல வாழ்த்திசையை அடக்கிவிடவும், முழங்கு-(முனிவர் முதலியோர்) முழங்குகின்ற, நால் மறை-நான்கு வேதங்களின் கோஷம்,மூரி நீர் முழக்கு என-வலிய கடலின் பேரொலி போல, உலகை விழுங்க-உலகமெங்கும் பரவவும், மால் வரும் விழா அணி கண்டு-இந்திரன் வருகின்ற பவனியின் சிறப்பைக் (த்துருவாச முனிவன்) கண்டு, உளம் வியந்தான்-தன் மனத்தினுளே வியப்படைந்தான்.

*(479)* களிற்றின்மேல் விளங்க, *(480)* ஆடினர் நெருங்க, *(481)* சாமரை புரள, குடை விளங்க, *(482)* கம்பலே கீதத்தை மறைப்ப, மறை உலகை விழுங்க, மால் வரும் விழாவணி எனக் கூட்டுக. மால்-இந்திரன்,

*(482)* வாத்தியங்களின் பேரொலி மங்கல கீதத்தை மறைப்ப என்றவிடத்து, இந்திரனுக்கு மேலே வரவிருக்கும் கேடு குறிப்பிக்கப் படுவதாம். மூரி என்பது வலிமை, பழமை, பெருமை முதலிய பல பொருளுடையதாகலின், அவரவர் கருத்துக்கியையப் பொருள் கொள்ளலாம். நீர்,கடலுக்கு ஆகுபெயர். துருவாச முனிக்கு எத்தனே வியப்பாயினும் வெளிப்படக் காட்டும் இயல்பிலாமையின், 'உளம் வியந்தான்' என்ருர்.

பேரி=பேரிகை-முரசு; பேரியும் பாண்டிலும்: 'இடிக்குரன் முரசமிழுமென் பாண்டில்' *(சிலப். 26: 194)*.

(பி - ம்.) 1. பேரியின் கடலொடும் பாண்டிலின் சதியும்; சதியின்; சதியில்.
3. மூரிநீர் முழக்கினி லுலகை; முழக்கிஞ லுலகை.
4. விழுங்க மால்வரு: விழுங்க மேல்வரும்; விழுங்கு மாவரும்; விளங்கு மாவரும்: மகிழ்ந்தான்: வியந்தார். (12)

## இந்திரன் செருக்கு

483. தனேயொவ் வாதவன் மகிழ்ச்சியால் வாசவன்றன்கை
வனேயு மாலேயை நீட்டலுந் தோட்டியால் வாங்கித்
துனேவ லத்தயி ராவதத் தெருத்திடைத் தொடுத்தான்
பனேசெய் கையினுற் பறித்தடிப் படுத்ததப் பகடு.

தனே ஒவ்வாதவன்-தனக்கு நிகர் பிறர் ஒருவர் இல்லாத (சிறப்புடைய) துருவாச முனிவன், மகிழ்ச்சியால்-(தான் அடைந்த) மகிழ்ச்

சியினுல், வனேயும் மாலேயை-(தன்னிடமிருந்த) அழகு செய்யும் மாலேயை, வாசவன் கை நீட்டலுப்-இந்திரன் கையிலே (கொடுக்க) நீட்டுதலும், (அவன்), தோட்டியால் வாங்கி-(அதனேக் கையால் வாங்காமல்) அங்குசத்தை நீட்டி வாங்கி, துனே வலத்து-விரைவும் வலிமையுமுடைய, அயிராவதத்து எருத்திடை-அயிராவதத்தின் பிடரியிலே, தொடுத்தான் - (அலங்காரமாகச்) சேர்த்தான்; அ பகடு-அவ்வியானே, பனே செய் கையினுல்-பனேமரம் போன்ற தன் துதிக்கையால், பறித்து-(அம்மாலேயை) இழுத்து, அடி படுத்தது-தன் காலின் கீழிட்டுத் தேய்த்தது.

இந்திரன், முனிவன் தனக்குக் கொடுத்த மாலேயைப் பணிவுடன் கையில் பெற்றுக்கொள்ளாமல், அலட்சியமாக யானேத்தோட்டியால் வாங்கி, யானேயின் பிடரியில் மாலேயாகச் சூட்டினுன். யானே தன் இயற்கைப்படி அதனே இழுத்துக் காலின்கீழ்ப் போட்டுத் தேய்த்துவிட்டது. இதனுல் இந்திரன் பின்னர்ப் பெருந்தீங்குக்கு ஆளாக நேர்ந்தது.

வனேதல்-அலங்கரித்தல்; சூடுதலும் ஆம். யானேயின் துதிக்கைக்குப் பனே, திரட்சியாலும் நீட்சியாலும் உவமை. பனேசெய் கை. செய்: உவமவுருபு; (சீவக. 2490). 'பனேக்கை மும்மத வேழம்' தே. திருநா.) 'தூம்புடைப் பனேக்கை வேழம்' (பெரிய திருமொழி 4. 6: 1) பகடு-யானே.

(பி - ம்.) 1. தனேயொவாதவன்; தனேயொர்வாதன.
2. வனேய மாலேயை; வனச மாலேயை: அளித்தலும்.
3. துனேமதத்து; துணேவலத்து: அயிராபதத்து: எருத்தினில்; எருத்தின் மேல்; எருத்தமேல்.
4. பணேசெய்: பதத்தடி படுத்ததுபகடு. (13)

முனிவன் சினங்கொளல்

484. கண்ட மாமுனி விழிவழி யொழுகுவெங் கனலால்
அண்ட கூடமுஞ் சாம்பரா யொழியுமென் றஞ்சி
விண்டு நீங்கினர் விண்ணவ ரிருசுடர் விளங்கா
தெண்டி சாமுக மிருண்டன சுழன்றதெவ் வுலகும்.

கண்ட மா முனி-(இந்திரனது செய்கையைக்) கண்ட அப் பெரிய முனிவனுடைய, விழி வழி ஒழுகு-(கோபத்தால்), கண்களின் வழியே வெளிப்பட்ட, வெம் கனலால்-கொடுந்தீயினுல், அண்ட கூடமும் சாம்பர் ஆய் ஒழியும் என்று-(தம் முலகின்மேல் உள்ள) அண்டமும் (எரிந்து) சாம்பலாகிவிடுமென்று கருதி, அஞ்சி-(மிக்க) அச்சங் கொண்டு, விண்ணவர்-(பவனியில் திரண்டு கூடியிருந்த) தேவர்களெல்லாம், விண்டு நீங்கினர்-(அவ்விடத்தை) விட்டு நீங்கிப் போயினர்; இரு சுடர்-சூரிய சந்திரர்களும், விளங்காது-பிரகாசிக்

காமையால், எண் திசா முகம் இருண்டன-எட்டுத் திக்குக்களும் இருள் சூழ்ந்தனவாயின; எ உலகும்-எல்லா வுலகங்களும், சுழன்றது-சுற்றத்தொடங்கின.

சுழன்றது பன்மை ஒருமை மயக்கம்.

(பி-ம்.) 1. வெங்கனல் போய்.
2. சாம்பலாய்; சாம்பலா; ஒழியுமென்றழியா; வீழுமென்றயரா; அவியுமென்றயிரா; அவியுமென்றயரா; எரியுமென்றயிரா; ஒழியுமென்றயர; ஒழியுமென்றயரா; ஒழியுமென்றயிரா.
3. இருஞ்சுடர். 4. இருண்டது. (14)

485. புகையெ ழுந்தன வுயிர்த்தொறு மெயில்பொடித் தவனின்
நகையெ ழுந்தன நிவந்தன புருவநன் னுதலில்
சிகையெ ழுஞ்சுடர் விழியின னசனியுந் திகைப்ப
மிகையெ ழுந்திடு சதமக கேளென வெகுண்டான்.

உயிர்த்தொறும்-(முனிவன்) மூச்சு விடுந்தோறும், புகை எழுந்தன-(மூச்சுக்கள்) புகையாக வெளிப்பட்டன; எயில்பொடித்தவனின்-திரிபுரங்களைச் சாம்பலாக்கிய உருத்திரன் போல, நகை எழுந்தன-கோபச் சிரிப்பு மிக்கெழுந்தது; புருவம் நல் நுதலில் நிவந்தன-புருவங்கள் நல்ல நெற்றியின்மேல் ஏறின; சிகை எழும் சுடர் விழியினன்-கொழுந்துவிட்டெரியும்தீப்போன்ற கண்களோடு(இந்திரனை நோக்கி), மிகை எழுந்திடு சதமக-(செருக்கினால்) குற்றம்மிக்க இந்திர! கேள் என-(நான் கூறுவகைக்) கேள் என்று, அசனியும் திகைப்ப-இடியும் (அச்சத்தால்) திகைக்கும்படி, வெகுண்டான் - கோபித்துக் கூறலானான்.

நல் நுதல்—தவத்தால் ஒளிமிக்க நெற்றி.

'உயிர்க்குந்தொறும்' என்பது உயிர்த்தொறும் எனத்தொக்கது. 'எழுந்தன' என்ற பன்மைகள் மிகுதி பற்றி வந்தன.

மிகை — மிகுதி-தகாத செயல்; 'மிகுதிக்கண் மேற்சென் றிடித்தற் பொருட்டு (குறள். 784) சதமகன்-நூறு அசுவமேதங்களால் பதவி பெறுபவன் என இந்திரனுக்குக் காரணப் பெயர். சதம்-நூறு; மகம்-யாகம்; சதமக: விளி.

விசுவாமித்திர முனிவன் கோபத்தாலும், துருவாச முனிவன் சாபம், கோபம் என்ற இரண்டினாலும் பேர்பெற்றவராவர்; 'சாபத்தாலுஞ் சாபமொழி தன்னால் வளருந் தவத்தாலுங், கோபத்தாலும் பேர்படைத்தகொடியமுனிவன் துருவாசன்' என்பர் வில்லிபுத்தூரார்; (வி-பா. துருவாச முனிச். 1.) இவ்விரண்டு பாடல்களில் துருவாச முனிவனது கோபத்தைப்பற்றிக் கூறியவற்றோடு,முன்புவிசுவாமித்திர முனிவனது கோபத்தைப்பற்றிக் கூறியிருந்தலை (௰28) ஒப்பு நோக்குக.

அசனியுந்திகைப்ப வெகுண்டான். ஒப்பு. 'உருமஞ்ச நனியார்த்தான்' (388); 'இடியுருமேற்றிற் சீறி' (சீவக. 1087); இடியு மாறுகொள் நெடுமொழி யயாதி (வி-பா. குருகுலச். 25.)

(பி - ம்.) 1. புகையெழுந்தன: மயிர்தொறும்; உயிர்தெறும்; வெங்கணும்: பொடித்தவனில்.
2. சிவந்தன; முரிந்தன; புருவம்வாணுதலில்.
3. விழியினன் யாவரும்; விழித்தன னசனியும்.
4. மிகையெழுந்தழற்: கேளென விளம்பும். (15)

முனிவனது சாபமொழி

486. பூத நாயகன் புவிமக ணுயகன் பொருவில்
வேத நாயகன் மார்பகத் தினிதுவீற் றிருக்கும்
ஆதி நாயகி விருப்புறு தொடையல்கொண் டணைந்த
மாத ராள்வயிற் பெற்றனென் முயன்றமா தவத்தால்.

பூதம் நாயகன்-எல்லாவுயிர்களுக்கும் தலைவனும், புவி மகள் நாயகன்-பூமிதேவியின் தலைவனும், பொரு இல்-ஒப்பில்லாத, வேதம் நாயகன்-வேதங்களுக்கெல்லாம் தலைவனும் ஆன திருமாலின், மார் பகத்து-திருமார்பிலே, இனிது வீற்றிருக்கும்-இன்பமாக எழுந்தருளி யுள்ள, ஆதிநாயகி-முதன்மை பொருந்திய தலைவியாகிய இலக்குமிப் பிராட்டியின், விருப்பு உறு-விருப்பத்திற்கு உரிய, தொடையல்-மாலையை, கொண்டு அணைந்த-(பிராட்டியிடமிருந்து) பெற்றுக் கொண்டு வந்த, மாதராள் வயின்-வித்தியாதர மகளிடமிருந்து, முயன்ற மா தவத்தால்-(நான்) முன் செய்த பெருந் தவப்பயனுக, பெற்றனென்-பெற்றேன். இது அடுத்த கவியுடன் தொடரும்.

(பி - ம்.) 1. நாயகன்புணர்ந்த. 2. வீற்றிருந்த.
3. விரும்புறு: கொண்டணிந்த.
4. மாதரார்வயிற்: பெற்றனன் முன்செய்மா தவத்தால். (16)

487. இன்று நின்பெருஞ் செவ்விகண் டுவகையி னீந்த
மன்ற லந்தொடை யிகழ்ந்தனை யுனதுமா நிதியும்
ஒன்ற லாதபல் வளங்களு முவரிபுக் கொளிப்பக்
குன்றி நீதுய ருறுகென வுரைத்தனன் கொதித்தே.

இன்று-இப்போது, நின் பெரு செவ்வி கண்டு-உனது பெரிய வைபவத்தைப் பார்த்து, உவகையின்-மகிழ்ச்சியினுல், ஈந்த-(அஃது உனக்கே தக்கதென்று கருதி நான்)கொடுத்த,மன்றல் அம் தொடை-நறுமணம் பொருந்திய அழகிய அம்மாலையை, இகழ்ந்தனை-(நீ) அலட்சியம் செய்தாய்; (ஆதலால்), உனது மாநிதியும்-உன்னுடைய பெரிய நவநிதிகளும், ஒன்று அலாத பல் வளங்களும்-(பிறர் ஒருவருக்குப்) பொருந்துதல் அல்லாத, (உனக்கே உரிய), பலவகைச் செல்வங்களும், உவரி புக்கு ஒளிப்ப-கடலிலே போய் மறைந்துவிட, நீ குன்றி-(அத

னுல்) நீ சிறுமையுற்று, துயர் உறுக என-மிக்க துன்பமடைவாயாக என்று, கொதித்து உரைத்தனன்-மனங்கொதித்து (சாபமொழி) கூறினன்.

(486-87) எல்லாச் செல்வங்களுக்கும் உரிய தலைவியாகிய இலக்குமி தேவி யணிந்த மாலையை, நான் முன் செய்த தவப் பயனுக ஒரு வித்தியாதர மகளிடமிருந்து பெற்றுக்கொண்டு இங்கே வந்த போது,உன்னுடைய பெரிய வைபவத்தைக்கண்டு மகிழ்ந்து,அம்மாலை உனக்கே தக்கதென்று கருதி அன்போடு அதனைக் கொடுக்க, நீ அதன் பெருமையறியாது செருக்கால் அதனை அலட்சியம்செய்து, யானையால் சிதையும்படி செய்ததனுல், உன்னுடைய பலவகைச் செல்வங்களும் கடலிலேபோய் மறையப்பெற்று, நீ சிறுமையுடன் மிக்க துன்பமுறுக' என்று முனிவன் மனங்கொதித்துச் சாபங் கூறினன் என்க.

487.செவ்வி-வைபவம்;நிதி-நவநிதிகள். பல் வளங்கள்-பிற பல வகைச் செல்வங்கள். ஒன்று=ஒன்றல்: முதனிலைத் தொழிற்பெயர். ஒன்று அலாத பல்-மிகப்பலவான என்றும் கூறலாம்.

இச் சாபச் செய்தி, 'பூவாலிடையூறு புகுந்து பொருது நெஞ்சில், கோவா முனி சீறிட வேலை குளித்த வெல்லாம்' (சுந்தர. 44) எனப் பின்னர் வருதல் காண்க.

(பி - ம்.) 1. இன்று நும்பெருஞ்; இன்று நீவரும்: உவகையானீந்த.
2. நினது மாநிதியும்; உனது மாநிதியம்.
3. ஒன்றலாது பல்; ஒன்றலாதன.
4. குன்று நீதுயர்; குன்றின் மீதுயர்: குறுகென; பெறுகென: உரைத்தனன் கொடியோன். (17)

### முனிவனது சாபத்தின் விளைவு

488. அரம டந்தையர் கற்பக நவநிதி யமிர்தச்
சுரபி வாம்பரி மதமலை முதலிய தொடக்கற்
றொருபெ ரும்பொரு ளின்றியே யுவரிபுக் கொளிப்ப
வெருவி யோடின வெண்ணெய்வாழ் கண்ணன்மே வாரின்.

அர மடந்தையர்-அரம்பை முதலிய தேவ மாதரும், கற்பகம்-கற்பகத்தரு முதலிய ஐந்து தேவ தருக்களும், நவநிதி-நவநிதிகளும், அமிர்தம் சுரபி-அமுதம் போன்ற பாலைத்தரும் காமதேனுவும், வாம் பரி-தாவுகின்ற உச்சைச்சிரவம் என்னும் குதிரையும், மதம் மலை முதலிய-மதத்தையுடைய மலைபோன்ற ஐராவதம் என்னும் யானையும் முதலான எல்லாம், தொடக்கு அற்று-(இந்திரனுடைய)தொடர்பை விட்டு, ஒரு பெருபொருள் இன்றி - (வைபவத்துக்குரிய) சிறந்த பொருள் ஒன்றேனும் எஞ்சி நில்லாமல், உவரி புக்கு ஒளிப்ப-(முனிவன் சாபத்தின்படி) கடலிலேபோய் மறையும் பொருட்டு, வெண்ணெய் வாழ்-திருவெண்ணெய் நல்லூரிலே வாழ்கின்ற, கண்ணன்

மேவாரின்-கண்ணன் என்னும் சிறப்புப் பெயருடைய சடையப்ப வள்ளலின் பகைவர் (நிற்க இடமின்றி அஞ்சி) ஓடுவது போல, வெருவி ஓடின-(இந்திரனிடம் தங்குவதற்கு) அஞ்சி ஓடிப் போயின.

பொருள்கள் புக்கு மறைந்தமை பாற்கடலில் என்பர்.

'குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங்காத்த லரிது' என்றபடி, துருவாச முனிவனது சாபம் உடனே பலித்ததனால், இந்திரனது வைபவத்துக்குரிய சிறந்த பொருள்களுள் ஒன்றேனும் மிச்சமின்றி, எல்லாம் கடலிற்போய் மறையும் வண்ணம், அவை இருந்தவிடம் தெரியாதபடி போய்விட்டன.

கற்பகம் என்ற ஒன்று குறிக்கப்பெறினும், உப லக்ஷணத்தால், அதனைச் சார்ந்த பிறதருக்களும் கொள்ளப்படும்; ஐந்தருக்களாவன: சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்பன. நவநிதிகளாவன: சங்கம், பதுமம், மகாபதுமம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பன. சுரபி=வெண்பசு-காம தேனு. மதமலை: வேற்றுமைத்தொகையன்மொழி.

கம்பநாடர், தம்மையாதரித்த சடையப்ப வள்ளலிடத்துத் தமக்குள்ள நன்றியறிதல் புலப்படும் வண்ணம் அங்கங்கே கூறும் தமது கொள்கையின்படி, இங்கே உவமை முகத்தாற் கூறினார். இந் திரனுடைய பொருள்களெல்லாம் கடலிற் புகுந்தமை: 'சங்கும் பொலன் கற்பகக் காவு மாவுஞ், சதுர்த்தந்தியுஞ் சர்வமுந் தேரும் வாரிப், பொங்குங் கடற்கே புகப்போக' (தக்க. 552). பேரரசர்களின் பகைவர் அஞ்சியோடி ஒளிக்குமிடமாகக் கடல் கூறப்படுவது மரபு: கலிங்கத். *451*; பெருந்தொகை. *1159*. இந்திரன் செல்வங்கள் மறைந்த இச்செய்தியை வேறொன்றுக்கு உவமையாக்கி ஆசிரியர் பின் னர்க் கூறுதல் காண்க: *1008*.

(பி - ம்.) 1. கற்பக மிருநிதி: அமுதச்; அமுதம்.
2. சுரவி: வெம்பரி; வெண்பரி: தொடக்கத்து.
3. பொருளன்றியே; உள்ளனவெல்லாம்.
4. விண்ணவர் கண்ணன்மே வாரின்; ஓடினர் கண்ணன் வாழ் வெண் ணெய்மேவாரின்: ஓடின கண்ணன் வாழ் வெண்ணெய்மேவாரின்; ஓடிப்புக் கொளித்தன விரிதிரைக் கடல்வாய்; விரிதிரைக் கடலின்; ஓடினர் விண்ணவர் விரிதிரைக் கடல்வாய். (18)

இங்கே சில பிரதிகளிற் காணப்படும் அதிகப்பாடல் :

அந்த வேலையி லிந்திரன் சிந்தைநொந் தழிந்து
வந்து வானவர் முனிவனை வழிபட்டு வழுத்த
நந்து நின்பெருஞ் செல்வமா லருளினா னயக்க
முந்து மென்றுசா பத்தினின் மோக்கமு மொழிந்தான்.

(பி - ம்.) 1. சிந்தை நொந்தயர்ந்தான்.
3. அருளினனயந்து.

489. வெய்ய மாமுனி வெகுளியால் விண்ணக முதலாம்
வையம் யாவையும் வறுமைநோய் நலியவா னோரும்
சைய மீர்ந்திடுங் குலிசனுஞ் சதுமுகத் தவனும்
செய்ய தாமரைத் திருமறு மார்பனைச் சேர்ந்தார்.

வெய்ய மா முனி வெகுளியால்-கோபக் கொடுமையும் தவப் பெருமையும் உடைய துருவாச முனிவனது கோபத்தால், விண்ணகம் முதல் ஆம் வையம் யாவையும்-சுவர்க்கம் முதலான உலகங்களில் எல்லாம், வறுமை நோய் நலிய-வறுமைத் துன்பம் வந்து வருத்த, வானோரும்-தேவர்களும், சையம் ஈர்ந்திடும் குலிசனும்-மலைகளைச் சிறகரிந்த வச்சிராயுதமுடைய இந்திரனும், சதுமுகத்தவனும்-நான்கு முகங்களையுடைய பிரமதேவனும் (கூடி), செய்ய தாமரை திரு-செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமிதேவியும், மறு-சிவற்ச மென்னும் மச்சமும் பொருந்தப்பெற்ற, மார்பனை-திருமார்பையுடைய திருமாலை, சேர்ந்தார்-அடைந்தார்கள்.

துருவாச முனிவனது கோபத்தால், இந்திரச் செல்வமெல்லாம் கடலிற்போய் மறைந்துவிடவே, சுவர்க்க முதலான உலகங்கள் வறுமையால் வருந்தலாயின: அதனைத் தீர்த்தற் பொருட்டு, தேவர்களும், இந்திரனும். பிரமன் முதலியோரும் ஒன்றுகூடி, இடர் திர்த்துக் காக்கவல்ல திருமாலைச் சரணமாக அடைந்தனர். இந்திரன் திரிலோகாதிபதியாதலால், அவனுக்கு நேர்ந்த சாபக்கேடு எல்லா உலகங்களுக்கும் துன்பந் தருவதாயிற்று.

துருவாச முனிவனைப் பெரும்பாலும் 'வெய்ய', 'வெஞ்சொல்', 'கொடிய' என்பன போன்ற அடைமொழி கொடுத்துக் கூறுவர்.

(பி - ம்.) 1. விண்ணவர் முதல்வர்; விண்ணவர் முதலோர்; விண்ணகமுதலா.
2. நலிதரவானோர்.
3. தையல்பாகனுஞ் சதுமறைக்கடவுளுங்கூடி; ஐயநுண்ணிடைச் சசிபதி யயன்முதலானோர். 4. திருவுறு. (19)

## தேவர்களுக்குத் திருமால் அபயங் கொடுத்து உபாயங் கூறுதல்

490. வெஞ்சொன் மாமுனி வெகுளியால் விளைந்தமை விளம்பிக்
கஞ்ச நாண்மலர்க் கிழவனுங் கடவுளர் பிறரும்
தஞ்ச மில்லைநின் சரணமே சரணெனச் சலியா
தஞ்ச லஞ்சலென் றுரைத்தன னுலகெலா மளந்தோன்.

(திருமாலிடம் சேர்ந்த), கஞ்சம் நாள் மலர் கிழவனும்-புதிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், கடவுளர் பிறரும்-மற்றத் தேவர்களும், வெம் சொல் மாமுனி வெகுளியால்-கொடுஞ் சொற்களையுடைய பெருமை பொருந்திய துருவாச முனிவனது கோபத்தால், விளைந்தமை விளம்பி-நேர்ந்த தீங்குகளை எடுத்துச்

சொல்லி, 'தஞ்சம் இல்லை -(எங்களுக்கு வேறு) புகலிடம் இல்லை; நின் சரணமே சரண் என-நும் திருவடிகளே சரணம்' என்று முறையிட, உலகு எலாம் அளந்தோன்-எல்லா வுலகங்களையும் (தன் திருவடிகளால்) அளந்த திருமால், சலியாது-(அவர்கள் கூறியதைக் கேட்டு) மனம் சலிக்காமல், 'அஞ்சல் அஞ்சல் என்று - (நீங்கள்) அஞ்ச வேண்டாம், அஞ்ச வேண்டாம்' என்று (அவர்களுக்கு) அபயங் கொடுத்து, உரைத்தனன்-மேலும் சொல்லலானான்.

எம்பெருமான், தன்னைச் சரணடைந்து முறையிட்ட தேவர்களுக்கு அபயங் கொடுத்து, இழந்த செல்வங்களை மீண்டும் பெறுதற்குரிய உபாயம் கூறலானான். அது, மேல் இரண்டு கவிகளிற் கூறப் பெறும்.

தஞ்சமில்லை நின் சரணமே சரண்: ஒப்பு: 'தருதுயரந் தடாயேலுன் சரணல்லால் சரணில்லை' குலசேகராழ்வார்.

(பி - ம்.) 1. விளைந்தன; விளிந்தமை. 2. கஞ்ச மாமலர்க் கடவுளும்.
3. சரணமே அரணெனச்; சலிப்ப; செப்ப.
4. அளந்தான்; அளித்தோன். (20)

491. மத்து மந்தரம் வாசுகி கடைகயி றடைதூண்
மெத்து சந்திரன் சுராசுரர் வேறுவே றுள்ள
கொத்தி ரண்டுபால் வலிப்பவ ரோடதி கொடுத்துக்
கத்து வாரிதி மறுகுற வமிழ்தெழக் கடைமின்.

(திருமால் தேவர்களை நோக்கி), மந்தரம் மத்து-மந்தரமலை மத்தாகவும், வாசுகி கடைகயிறு-வாசுகியென்னும் மாநாகம் (மத்தில் சுற்றப்படும்) கடைகயிறாகவும், மெத்து சந்திரன்-(கலைகள்) நிரம்பிய சந்திரன், அடை தூண்-(மத்துச்) சார்தற்குரிய தூணாகவும், வேறு வேறு உள்ள-தனித்தனியே உள்ள, சுர அசுரர் கொத்து-தேவர் அசுரர்களின் கூட்டம், இரண்டு பால்-(கடைகயிறாகிய வாசுகியின் தலை, வால் ஆகிய) இரண்டு பக்கங்களிலும், வலிப்பவர்-(பற்றி) இழுத்துக் கடைபவர்களாகவும் (கொண்டு), ஓடதி கொடுத்து-(அமிருதவல்லி என்னும்) ஒஷதியை யிட்டு, கத்து வாரிதி-ஒலிக்கின்ற (பாற்) கடல், மறுகுஉற-கலங்கவும், அமிழ்து எழ-அமிர்தம் வெளிப்படவும், கடைமின்-(அப்பாற் கடலைக்) கடையுங்கள்.

இதுவும் அடுத்த கவியும் ஒருதொடர்.

(பி - ம்.) 1. அடுதூண்; இடுதூண்.
2. மெத்துச்சந்திரன்; மெய்த்தசந்திரன்.
3. வலித்திடவோடதி; வலிப்புறவோட்டி; வலிப்பவரோடெதிர்.
2-3. வேறிடுவெள்ள, மொத்திரண்டுபா லிரத்தொடும் பிடித்தெதிர் வலித்தே.
4. கத்தும் வாருதி; தத்து வாருதி; அமிர்தெழக். (21)

492. யாமு மவ்வயின் வருதுநீர் கதுமென வெழுந்து
போமி னென்றருள் புரிதலு மிறைஞ்சினர் புகழ்ந்து
நாம மின்றெனக் குனித்தனர் நல்குர வொழிந்த
தாமெ னும்பெருங் களிதுளக் குறுத்தலா லமரர்.

'அவ்வயின்-நீங்கள் (பாற்கடலைக் கடையும்) அவ்விடத்துக்கு, யாமும் வருதும்-நாமும் வருவோம்; நீர் கதுமென எழுந்து போமின் என்று-நீங்கள் விரைவாக (இப்பொழுதே) புறப்பட்டுச் செல்லுங்கள்' என்று, அருள் புரிதலும்-திருவாய் மலர்ந்தருளியவளவில், அமரர்-தேவர்கள். இறைஞ்சினர் புகழ்ந்து-(பெருமானை)வணங்கித் துதித்து, நாமம் இன்று என-(இனி நமக்கு) அச்சம் இல்லையென்று (தெளிந்து), நல்குரவு ஒழிந்தது ஆம் எனும்-நம் வறுமை தீர்ந்ததாகும் (தீர்ந்து விடும்) என்கிற, பெரு களி துளக்கு உறுத்தலால்-பெருமகிழ்ச்சி (தம்மை) ஆட்டுவித்தலால், குனித்தனர்-(ஆனந்தக்) கூத்தாடினர்கள்.

நாமம்-அச்சம்; நாம் என்னும் உரிச்சொல் நாமம் எனத் திரிந்து நின்றது; 'நாமவேற் காளை நளனென்பான்' (நள. 13.) 'ஈம் நாம் உரும் என வருஉங் கிளவி, ஆவயின் மூன்றும் அச்சப்பொருள' (தொல்.)

491-92 திருமால், தேவர்கள் இழந்த செல்வங்களைத் திரும்பப் பெறுதற்குரிய உபாயங்கூறலுற்று, மந்தர மலையை மத்தாகவும், வாசுகியென்னும் நாகத்தைக் கடைகயிருகவும், சந்திரனை அடைதூணுகவும் கொண்டு, அமிர்தவல்லியென்னும் மூலிகையை இட்டு, தேவர்களும் அசுரர்களும் தனித்தனியே கூடி வாசுகியின் தலையும் வாலுமாகிய இருபுறத்திலும் பற்றியிழுத்துப் பாற்கடலைக் கடையுங்கள்: அவ்வாறு கடையும்போது அங்கே நாமும் வருவோம்; வந்து மேல் நிகழவேண்டுவன செய்வோம்' என்று அருளிச் செய்ய, தேவர்கள் அச்சந் தீர்ந்து மகிழ்ச்சியடைந்து ஆனந்தக் கூத்தாடினர்கள் என்றவாறு.

(பி - ம்.) 1. அவ்வழி வருதும்.
2. போமி னென்றலு மிறைஞ்சின ரெழுந்தனர் புகழ்ந்து; புகழ்ந்தார்; புரிந்தார்; போனர்.
3. நாம மின்றென நல்குர வொழிந்தது குறித்தார்.
4. துளங்குறுதலால்; துளக்குறுதலால். (22)

திருமாலின் கட்டளை நிறைவேற்றப்படுதல்

493. மலைபி டுங்கினர் வாசுகி பிணித்தனர் மதியம்
நிலைபெ றும்படி நட்டன ரோடதி நிறைத்தார்
அலைபெ றும்படி பயோததி கடைந்தன ரவனி
நிலைத ளர்ந்திட வனந்தனுங் கீழுற நெளிந்தான்.

(தேவரும் அசுரரும் கூடி), மலை பிடுங்கினர்-மந்தர மலையை (வேருடன்) பிடுங்கி, (பாற்கடலில் மத்தாக நிறுத்தி), வாசுகி பிணித்தனர்-வாசுகியைச் (கடை கயிறாகச்) சுற்றி, மதியம்-சந்திரனை, நிலை பெறும்படி-(அடை தூணாக) நிற்கும்படி, நட்டனர்-நட்டு, ஓடதி நிறைத்தார் - (அமிர்தவல்லி யென்னும்) மூலிகையை நிரப்பி, பயோததி-பாற்கடலை, அலை பெறும்படி-மிகவும் குலையும் வண்ணம், கடைந்தனர்-(இருபுறமும் மாறி மாறி இழுத்துக்) கடைந்தார்கள்; (கடைந்த விசையினால்), அவனி நிலை தளர்ந்திட-பூமண்டலம் நிலை குலைய, அனந்தனும்-(பூமியைத் தாங்கும்) ஆதிசேடனும், கீழ்உற-பூமியின் கீழ் அகப்பட்டு, நெளிந்தான்-(தாங்கமாட்டாமல்) நெளியலானான்.

பிடுங்கினர், பிணித்தனர், நட்டனர், நிறைத்தார் என்பன முற்றெச்சம்; அன்றி, முற்றாகவே கொண்டு கூறுதலும் ஆம்.

பயோததி: வடசொற்றொடர். ஓடதி-ஒஷதி: வடசொற்றிரிபு. அவனி நிலைதளர்தல்: சுந்தர. 42-பார்க்க.

(பி - ம்.) 1. மதியை.
2. நாட்டினர்; நிரைத்தார்; நட்டன ரொட்டிநின் றிழுத்தே; நின்றீர்த்தார்.
4. நிலைதளர்ந்திடை யயர்ந்தனள்; நிலைதளர்ந்திட வயர்ந்தனள். தளர்ந்தனள்முதுகுற நெளித்தாள்; கீழுற நெளித்தாள்; பூமகள் நெளித்தாள். (23)

திருமால் வந்து அருளினமை

494. திறல்கொ ளாமையாய் முதுகினின் மந்தரந் திரிய
விறல்கொ ளாயிரந் தடக்கைகள் பரப்பிமீ வலிப்ப
மறமு லாமுனி வெகுளியான் மறைந்தன வரவே
அறனி லார்மனத் தடைகலா நெடுந்தகை யமைந்தான்.

அறன் இலார் மனத்து அடைகலா நெடுதகை-தரும சிந்தனையில்லாதவர் மனங்களிலே சென்று சேராத மிக்க பெருமை பொருந்திய திருமால், திறல் கொள் ஆமையாய்-மிக்க திறமை கொண்டதோர் ஆமையாகி, மந்தரம் முதுகினில் திரிய-மந்தரமலை தன் முதுகில் (நின்று) சுழலவும், விறல்கொள்-(மிக்க) வலிமை கொண்ட, ஆயிரம் தட கைகள்-தன்னுடைய பெரிய ஆயிரங்கைகளை, மீ:பரப்பி-மேலே (விரிவாகப்) பரப்பிக்கொண்டு, வலிப்ப-(கடைகயிறாகிய வாசுகியை) இழுத்துக் கடையவும் (ஆகி), மறம் உலாம் முனி வெகுளியால் மறைந்தன-(சாபமாகிய) கொடுந்தன்மையுடைய துருவாச முனிவனது கோபத்தால் மறைந்துபோன பொருள்களெல்லாம், வர அமைந்தான்-மீண்டுவரத் திருவுளங் கொண்டான்.

வரவே: ஏகாரம் அசை.

மலையின்பாரமும் அதுசுழலும் விசையும் தாங்காமல் பூமிதேவி தளர்தல் கண்டு, திருமால் பெரியதோர் ஆமையுருக்கொண்டு மந்தரமலையைத் தன்முதுகிலே தாங்கிக்கொண்டு, தன்னுடைய ஆயிரங் கைகளாலும் வாசுகியை இழுத்துக் கடைய உதவி, துருவாசமுனிவன் சாபத்தால் மறைந்த (இந்திரனுடைய) செல்வமெல்லாம் மீண்டு வரத் திருவுளங்கொண்டான்; அதனல் அப்பொருள்கள் கடலினின் றும் மேலெழுந்து வரலாயின. இதனை அடுத்த கவியிற் காண்க.

அறன் நிலார் மனத்து என்றும் பிரிக்கலாம். அடைகலா: அடை+கு+அல்+ஆ. கு: சாரியை.

எம்பெருமானுடைய விசுவரூபத்தை ஆயிரந் தலைகள், ஆயிரங் கண்கள், ஆயிரங் கைகள், ஆயிரம் பாதங்கள் கொண்ட பரமபுருஷன் என்று வேதம் கூறும். எம்பெருமான் அன்பும் அறமும் உடையவர் களிடத்திலேயே பொருந்துவான்; பிறரிடத்துச் சேரான்; 'பத்துடை யடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய, வித்தகன்' திவ். திருவாய் மொழி. 1. 3: 1.

(பி - ம்) 2. நிரப்பமீ வலிப்ப.
3. மறைநிலா முனி; மறநிலா முனி; மறைவலான் முனி; வெளியின்; மடிந்தன; மாய்ந்தன; முடிந்தன.
4. அறனிலா மனத்து; அறநிலா மனத்து: அடையலா; அடைகிலா; அறனுலாமனத் தரவணைச் செல்வன்வந் தமைந்தான்; நெடுந்தகை யமைத்தான். (24)

### அமரர் அமிர்தம் துய்த்தல்

495. இறந்து நீங்கின யாவையு மெம்பிரா னருளால்
பிறந்த வவ்வயிற் சுராசுரர் தங்களிற் பிணங்கச்
சிறந்த மோகினி மடந்தையா லவுணர்தஞ் செய்கை
துறந்து மாண்டன ராரமிர் தமரர்க டுய்த்தார்.

இறந்து நீங்கின யாவையும்-(இந்திரனை) விட்டு நீங்கிப்போன எல்லாப் பொருள்களும், எம்பிரான் அருளால்-எம்பெருமானுடைய திருவருளாலே, பிறந்த அவ்வயின் (பாற்கடலினின்றும்) மீண்டும் தோன்றின அப்போது, சுர அசுரர்-தேவர்களும், அசுரர்களும், தங்களில் பிணங்க-தங்களுக்குள்ளே (அமிர்தத்தை அடையும் பொருட்டு) மாறுபட்டுப் போர் செய்ய, சிறந்த மோகினிமடந்தை யால்-(எம்பெருமான் கொண்ட) சிறப்புடைய மோகினிப் பெண்ணு ருவத்தால், அவுணர்-அசுரர்கள், தம் செய்கை துறந்து-தம்முடைய போர்ச் செயலைக் கைவிட்டு, (மோகினியின் அழகிலே மயங்கி), மாண் டனர்-(வேதர்களால் தாக்குண்டு) மடிந்தனர்; ஆர் அமிர்து-(இறுதி யில் தோன்றிய) அரிய அமிர்த்தை, அமரர்கள் துய்த்தார்-தேவர் கள் (மகிழ்ச்சியோடு) உண்டனர்.

முனிவன் சாபத்தால் இந்திரனைவிட்டு நீங்கின எல்லாப் பொருள்களும், அமிர்தமும் பாற்கடலினின்றும் வெளிப்பட்டபோது, பிணி, மூப்பு, சாக்காடுகளைத் தவிர்க்கும் அமிர்தத்தைத் தத்தமக்கே உரியதாகப் பெறும்பொருட்டுத் தேவர்களும் அசுரர்களும் மாறுபட்டுப் போர் செய்யலாயினர். அப்போது எம்பெருமான் மிக்க அழகுடைய மோகினி வடிவங் கொண்டு, அசுரர் தனதழகிலே மயங்கும்படி செய்யவே, அவர்களைத் தேவர்கள் எளிதில் வென்று அழித்து, அமிர்தத்தைத் தமக்கே உரியதாக்கிக்கொண்டு உண்டனர் என்க.

(பி - ம்.) 1. நீங்கிய யாவையும். 2. பிறந்த தவ்வயிற்: பிணங்கிச்.
3. மோகினி நங்கையால்; மோகினி யாயுற.
4. துறந்து மீண்டனர்: அமிர்துகொண் டமரர்கள் துய்த்தார்; ஆரமுதமரர்களுய்த்தார். (25)

இதனையடுத்து, முந்திய அச்சுப்பிரதிகள் பலவற்றில் காணப்படும் 'வெருவு மாலமும்' என்ற பாடல் இவ்விடத்துக்கு இன்றியமையாத தொடர்புடையதன்றாதலாலும், சில சுவடிகளில் அப்பாடல் இல்லாமையாலும் அது இங்கே மிகைப்பாடலாகக் காட்டப்படுகிறது.

வெருவு மாலமும் பிறையும்வெள் விடையவற் கீந்து
தருவும் வேறுள தகைமையுஞ் சதமகற் களித்து
மருவு தொல்பெரு வளங்களும் வேறுற வழங்கித்
திருவு டன்மணி யணிந்தனன் சீதர மூர்த்தி.

இங்கே சில சுவடிகளில் காணப்படும் மற்றொரு பாடல் :—

உய்ந்த காலையி லரக்கனு மிராகுவென் போனைச்
சித்த நீங்கிய மாயனோர் தெறுவியாற் சிதைத்தான்
பித்த னுன்முகன் கடவுளர் முதலியர் பேச
மெய்த்த போதனன் கோட்களி லிரண்டென விடுத்தான்.

### திதியின் வேண்டுகோள்

496. அந்த வேலையிற் றிதிபெருந் துயருழந் தழிவாள்
வந்து காசிபன் மலரடி வணங்கியென் மைந்தர்
இந்தி ராதியர் புணர்ப்பினு லிறந்தன ரெனக்கோர்
மைந்த னீயரு ளவர்தமை மடித்தலுக் கென்றுள்.

அந்த வேலையில்-(மேற்கூறியவாறு அசுரர்கள் அழிந்த) அந்தச் சமயத்தில், திதி-அசுரர்களின் தாயாகிய திதி என்பவள், பெருதுயர் உழந்து-(மக்களை இழந்த)மிக்க துயரத்தால் வருந்தி,அழிவாள்-மனம் மறுகியவளாய், வந்து—, காசிபன் மலர் அடி வணங்கி-தன் கணவனாகிய காசிபமுனிவனுடைய மலர் போன்ற திருவடிகளை வணங்கி, 'என் மைந்தர்-என் புதல்வர்கள், இந்திரன் ஆதியர் புணர்ப்பினால்-இந்திரன் முதலிய தேவர்களின் சூழ்ச்சியினால், இறந்தனர்—; (ஆதலால்), அவர்தமை மடித்தலுக்கு - அத்தேவர்களை அழிப்பதன்

பொருட்டு, எனக்கு ஓர் மைந்தன் நீ அருள்-(அவர்களை அழிக்கும் ஆற்றலுடைய) ஒரு புதல்வனை எனக்குத் தேவரீர் அருள்வீராக' என்றாள்-என்று வேண்டினாள்.

வேலை=வேளை-சமயம். அழிவாள்: முற்றெச்சம்.

காசிப முனிவன், அதிதி என்பவளிடமாக, தேவர்களைப்பெற்ற தந்தையாதலின், திதி, தான் பெற்ற புதல்வர்களாகிய அசுரரை 'என் மைந்தர்' என்றாள். புணர்ப்பு-சூழ்ச்சி. 229.

(பி - ம்.) 1. துயருழந்தயர்வாள்; துயருழந்தழுவாள்; துயருளமழிவாள்; துயருழன் றழிவாள்.
2. வணங்கியே மைந்தர்.
3. இந்திராதிபர் புணர்ப்பினல் மடிந்தனர்; புணர்ப்பினாலுடைந்தனர். (26)

காசிபமுனிவன் கட்டளையின்படி திதி தவஞ்செய்தல்

497. என்று கூறலு மகவுனக் களித்தன மினிநீ
சென்று பாரிடைப் பருவமோ ராயிரந் தீர
நின்று மாதவம் புரிதியே னினைவுமுற் றுதியென்
றன்று கூறிடப் புரிந்தன ளருந்தவ மனையாள்.

என்று கூறலும்-(எனக்கு ஒரு மைந்தனை அருள்) என்று திதி வேண்டலும், அன்று-அப்போது, (காசிப முனிவன்), 'மகவு உனக்கு அளித்தனம்-(நீ விரும்பியவாறே),புதல்வனை உனக்குக்கொடுத்தோம்; இனி-இப்போது, நீ பார் இடை சென்று-நீ பூமியிலே போய், பருவம் ஓர் ஆயிரம் தீர-ஓராயிரம் ஆண்டுகள் கழியுமளவும், நின்று-நிலையாக இருந்து, மா தவம் புரிதியேல்-சிறந்த தவத்தைச் செய்வாயானால், நினைவு முற்றுதி என்று கூறிட-உன் எண்ணம் நிறைவேறப் பெறுவாய் என்று சொல்ல, அனையாள்-அவள், அரு தவம் புரிந்தனள்-(கணவன் கட்டளைப்படியே) அரிய தவத்தைச் செய்வாளாயினள்.

'என்று கூறலும்' என்றது அநுவாதம்.

பயன் தரும் செயல்களை (கருமங்களை) இயற்றுதற்குரிய இடம் பூமியே யாகலின், காசிபன் தன் மனைவியைப் பூமியிலே சென்று தவம் புரியுமாறு கட்டளையிட்டான். பருவம், இங்கே வருடத்தைக் குறிக்கும். ஆயிர வருட காலம் சலிப்பின்றி யிருந்து தவம் செய்தல் அருமை யாதலின், 'நின்று மாதவம் புரிதியேல்' என்றான்.

(பி - ம்.) 1. என்று சாற்றலும்: அளித்தனன்.
3. நன்று மாதவம்: நினைவு முற்றுறுமென்று; நினைவுமுற்றுதிநீ.
4. என்று கூறிடப்; மாதவ மனையாள்; மாதவ மினையாள். (27)

## இந்திரன் செயல்

498. கேட்ட வாசவ னன்னவட் கடிமையிற் கிடைத்து
வாட்ட மாதவத் துணர்ந்தவள் வயிற்றுறு மகவை
வீட்டி யேயெழு கூறுசெய் திடுதலும் விம்மி
நாட்ட நீர்தர மருத்தெனு நாமமு நவின்ருன்,

கேட்ட வாசவன்-(திதி, தேவர்களை யழிக்கத்தக்க புதல்வனைப் பெறக் கருதித் தவம் செய்வதைக்) கேட்டு அறிந்த இந்திரன், அன்னவட்கு அடிமையின் கிடைத்து-(அவளுக்குத் தொண்டு செய்யும்) சீடன் போல அவளிடம் சென்று தங்கி, மா தவத்து-(அவளுடைய) பெருந் தவத்தின் இடையே, (ஒரு சமயம்), வாட்டம் உணர்ந்து-சிறிது சோர்வுற்ற தருணம் அறிந்து-(கருவுற்றிருந்த அவள் வயிற்றினுள்ளே சூக்கும உருவுடன் புகுந்து), அவள் வயிறு உறு மகவை-அவள் வயிற்றிலிருந்த குழந்தையை, வீட்டி-சிதைத்து, எழு கூறு செய்திடுதலும்-ஏழு துண்டங்களாக்கிவிட, (அதனை உணர்ந்த அவள்), விம்மி-பொருமலுற்று, நாட்டம் நீர் தர-(துயரத்தால்) கண்ணீர் பெருக்க, (அது கண்ட இந்திரன்), மருத் எனும் நாமமும் நவின்ருன்-(அக்கூறுகளை உயிர்ப்பித்து அவற்றிற்கு) 'ஏழு மருத்துக்கள்' என்ற பெயரையும் அளித்தான்.

கிடைத்தல்=கிட்டுதல்-சேர்தல். வாட்டம்=சோர்வு; குற்றம்.

கணவன் கட்டளையின்படி திதி கடுந்தவஞ் செய்து வருங்கால் அதனையறிந்த இந்திரன், பின்னே தேவர்களுக்கு வரும் தீங்கைத் தவிர்க்கும் பொருட்டு, அவளிடம் ஒரு சீடன்போலச் சென்று தங்கி, அவள் மனமுவக்கும்படி பல தொண்டுகளைச் செய்து வந்தான். அவளுடைய தவம் முடிதற்குரிய காலமாகிய ஆயிரம் வருடத்திற்குப் பத்து வருடம் குறையாகவிருந்த போது, ஒருநாள் அவள் தவத்துக்குத் தகாத முறையில் பகலிலே படுத்து உறங்க, அது கண்ட இந்திரன், தருணம் வாய்த்ததென்று உவந்து, சிற்றுருவுடன், கரு நிரம்பப்பெற்ற அவள் வயிற்றினுள்ளே புகுந்து, தன் வச்சிராயுதத்தால் அக்கருவை ஏழு கூறுகளாகச் சிதைத்துவிட்டான். அதனை உணர்ந்த திதி மிகவும் வருந்தவே, அவளுக்கிரங்கி அக்கூறுகள் 'சப்த மருத்துக்கள்' என்ற பெயரோடு எங்கும் உலவிவர அருள் செய்தான் என்பது வரலாறு. மருத்-காற்று.

(பி - ம்.) 1. அடிமையிற் கிடைப்ப.
2. வாட்டு மாதவத்திருந்தவள்; மாதவத்துணர்ந்தனன்; மாதவமுணர்ந்தவள்: வயிற்றுளம் மகவை.
3. வீட்டியேமுறு; வீட்டியேழெழு; விம்மல்.
4. நாட்ட நீர்வர: மருத்தென: நவின்ருர்.

499. ஆய திவ்விட மவ்விட மவிர்மதி யணிந்த
தூய வன்றனக் குமைவயிற் றோன்றிய தொல்லை
வாயு வும்புனற் கங்கையும் பொறுக்கலா வலத்த
சேய்வ ளர்ந்தருள் சரவண மென்பதுந் தெரித்தான்.

ஆயது இ இடம்-இவ்வாறாகியது இந்த இடம்; (என்று கூறி), ‘அ இடம்-அதோ (எதிரில்) தோன்றுமிடம், அவிர் மதி அணிந்த தூய வன் தனக்கு-ஒளி பரந்த பிறைச்சந்திரனை அணிந்த தூய்மையான சிவபெருமானுக்கு, உமை வயின் தோன்றிய-உமாதேவியினிடமாகத் தோன்றின, தொல்லை வாயுவும்-பழமையான வாயுதேவனும், புனல் கங்கையும்-நீர் வடிவான கங்காதேவியும், பொறுக்க அலா வலத்த-தாங்கமுடியாத வலிமையுடைய, சேய்-குமரக்கடவுள், வளர்ந்தருள்-வளர்ந்த, சாவணம்-நாணற் காடமைந்த விடமாகும்;’ என்பதும்-என்ற செய்தியையும், தெரித்தான்-(முனிவன் குமரருக்குத்) தெரிவித்தான்.

உமை வயின் தோன்றிய சேய், பொறுக்கலா வலத்த சேய் என இயைக்க. குமரன் உமையிடம் தோன்றினமை: பரி. 5.

சோணைநதிக் கரையிலுள்ள சோலை, திதி தவஞ் செய்தவிடமாகும் என்று அதன் வரலாற்றை விரிவாகக் கூறிய விசுவாமித்திர முனிவன், எதிரே சேய்மையில் காணப்பட்டதோரிடம் சரவணமாகும் என்பதனையும் கூறி முடித்தான்.

சர வனம்-நாணற்காடு; வடமொழி விதிப்படி ‘சரவணம்’ என்றாயிற்று. தேவர்கள் தமக்கு ஒரு சேனாபதி வேண்டுமென்று வேண்டிய காலத்தே, சிவபெருமானது திருமேனியினின்று வெளிப்பட்ட வீரியத்தை வாயுதேவனும் அக்கினியும் தாங்கிக் கங்கையில் விட, கங்கை அதனைத் தாங்கலாற்றாது கயிலாயத்தருகே யிருந்த நாணற் காட்டில் விட்டனள்; அங்கே குமரக் கடவுள் தோன்றிக் கார்த்திகைப் பெண்கள் அறுவரால் பாலூட்டி வளர்க்கப் பெற்றார் என்பது வரலாறு. திருமுருகாற்றுப்படை, 58-ம் அடிக்கு நச்சினார்க்கினியர் கூறும் உரையையும் காண்க. நாணற் காடிருந்தவிடம் ஒரு பொய்கையாதலின் அதனைச் சரவணப் பொய்கை என்பர்.

இராம லக்குமணர் முனிவனோடு கங்கைக் கரையை அடைந்த போது, கங்கையின் வரலாற்றைக் கூறும்படி இராமன் வேண்ட, கங்கை, பார்வதி ஆகிய இருவரும் இமவானுடைய புத்திரிகள் என்பதும், சிவபெருமான் பார்வதியை மணந்து குமரனைப் பெற்றதும், கங்கையின் வரலாறும் முனிவனால் விரிவாகக் கூறப்பட்டனவென வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. ஆயதிவ்விடை: ஆயதிப்புற மப்புற மவிர்மதி; அப்புறத்தவிர்மதி; ஆயதிவ்விடம் பிறைமதி கூவிளமணிந்த.

2. தனக்கரிவையிற் ருேன்றிய; உவமையிற்ருேன்றியே.
3. வாயுவும் மனற்; வாயு நற்கங்கை யும்பரும்.
4. என்பது: தெரிந்தான்; தெரிந்தார். (29)

'இனைய சோலை' (474) என்பது முதல் இதுவரை உள்ள 27 பாடல்களும், இடையே 488-க்குப்பின் உள்ள 'அந்த வேலையில்' என்ற ஒன்றும் ஆக 28ம் அதிகப் பாடல்களாகவே சிலரால் சொள்ளப்பெறுகின்றன. எமக்குக் கிடைத்த சுவடிகளி லெல்லாம் இச்செய்யுட்கள் பற்பல பாட பேதங்களுடன் காணப்பெறுகின்றமை யாலும், பாலகாண்டம் முழுதும் பல வரலாறுகளுடன் அமைந்துள்ளமையாலும் இவற்றை 'மிகை' என்று நீக்கவில்லை.

ஒரு சுவடியில் இச்செய்யுளுடன், 'கடல் கடைந்த படலம்' முற்றுப்பெற, மற்ருெரு சுவடியில், 'சரவணப் படலம்' முற்றுப்பெறுகின்றது.

### சூரியோதயம்

500. காலன் மேனியிற் கருகிருள் கடிந்துல களிப்பான்
நீல வார்கலித் தேரொடு நிறைகதிர்க் கடவுள்
மாலின் மாமணி யுந்தியின் வளனெடு வந்த
மூல தாமரை முழுமுதன் முளைத்தென முளைத்தான்.

காலன் மேனியின்-யமனது உடலின் நிறத்தைப் போல, கருகு இருள்-கரு நிறங்கொண்ட இருளை, கடிந்து-போக்கி, உலகு அளிப்பான்-உலகத்தைக் காப்பவனுன, நிறை கதிர் கடவுள்-நிறைந்த கிரணங்களையுடைய சூரியன், மாலின் மா மணி உந்தியின்-திருமாலினது சிறந்த அழகிய உந்தியினிடத்தே, வளனெடு வந்த-மிக்க வளமுடையதாய்த் தோன்றிய, மூல தாமரை-(உலகத் தோற்றத்துக்குக்) காரணமான தாமரைப் பூவில், முழுமுதல் முளைத்தது என-(படைப்புக்கு) முதற் காரணமாகிய பிரமன் தோன்றியது போல, நீலம் ஆர் கலி - நீலநிறமான கடலினின்றும், தேரொடு முளைத்தான்-(தன் ஒற்றையாழித்) தேருடன் தோன்றினுன்.

இருள் கடிந்து அளிப்பான் கதிர்க்கடவுள் என இயைக்க. அளிப்பான்: வினையாலணையும் பெயர்.

முன்னே 472-ஆம் பாடலில் சூரியன் அத்தமித்ததைக் கூறினுர். இங்கே அவன் மறுநாள் உதித்ததைக் கூறுகின்ருர். இதன் மேல், முனிவன் முதலிய மூவரும் சென்று கங்கையை அடைந்தனர் எனக் கதை தொடரும்.

நீலக்கடலில் தன் தேரோடு சூரியன் தோன்றினமைக்கு, திருமாலின் திருவுந்தித் தாமரையிலே பிரமன் தோன்றினமையை உவமையாக்கிக் கூறுகின்ருர். திருமாலின் திருமேனி, நீலக்கடல்; அதில் உந்தியினின்றுந் தோன்றிய தாமரை மலர், தேர்; அம்மலரிலே தோன்றிய பிரமன், சூரியன். பிரமன் செந்நிறமுடைமையால் சூரியனுக்கு உவமித்தார்.

ஆர்கலி: வினைத்தொகை யன்மொழி. முழு முதல்: பண்புத் தொகை யன்மொழி.

மூல தாமரை முழு முதல்: ஒப்பு: 517; ஆரணிய. 1056.

(பி - ம்.) 2. நீலவார்பரித்.
3. உந்தியி லயனொடு மலர்ந்த; உந்தியின் வளனொடும் வந்த; அயனொடும் வந்து. 4. தாமரை முழு மலராமென. (30)

சில பிரதிகளில், துருவாசப் படலம், துருவாசர் சாபப்படலம், சமுத்திர மதனப் படலம் என்ற பெயர்களைக் கொண்டதொரு பகுதி இதனுடன் முடிய, மற்றும் சில பிரதிகளில் இப்பகுதி அடுத்த செய்யுளுடன் முடிகின்றது. மேலே கங்கை வரலாற்றுப் படலம் தொடங்குகின்றது.

### மூவரும் சென்று கங்கையைக் காணல்

501. அங்கு நின்றெழுந் தயன்முதன் மூவரு மனையார்
செங்க ணேற்றவன் செறிசடைப் பழுவத்து நிறைதேன்
பொங்கு கொன்றையீர்த் தொழுகலாற் பொன்னியைப் பொருவும்
கங்கை யென்னுமக் கரைபொரு திருநதி கண்டார்.

அயன் முதல் மூவரும் அனையார்-பிரமன் முதலான (முதற்கடவுளர்)மூவரையும் ஒத்தஅவர்கள், அங்கு நின்று எழுந்து-(முதல் நாள் இரவு தங்கியிருந்த) அச்சோலையினின்றும் புறப்பட்டுச் சென்று, செம் கண் ஏறு அவன்-சிவந்த கண்களையுடைய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது, செறி சடை பழுவத்து-அடர்ந்த சடையாகிய காட்டினின்றும், நிறை தேன் பொங்கு கொன்றை ஈர்த்து ஒழுகலால்-நிறைந்த தேனைக் கொழிக்கும் கொன்றை மலர்களை இழுத்துக் கொண்டு வருதலால், பொன்னியை பொருவும்-காவேரியை ஒத்திருக்கின்ற, கங்கை என்னும்-கங்கை என்று பெயர் சொல்லப்படுகின்ற, அ கரை பொரு திருநதி-கரையை (அலைகளால்) மோதுகின்ற அந்தச் சிறந்த நதியை, கண்டார்-பார்த்தனர்.

முதல் நாள் இரவு, சோணைநதிக் கரையில் இருந்த ஒரு சோலையிலே தங்கிய மூவரும்,மறுநாள் சூரியன் உதயமானவுடன்,அங்கிருந்து புறப்பட்டு நடந்துசென்று, கங்கைக் கரையை அடைந்தனர் என்க. அயன் முதல் மூவர்: கௌசிக முனிவனுக்குப் பிரமனும், இராமபிரானுக்குத் திருமாலும், இலக்குமணனுக்கு உருத்திரனும் முறையே உவமை. முனிவன் பிரமவிருடியாகி, உலகத்தையே வேருகப் படைக்கத் தொடங்கியவனுதலால் பிரமன் உவமை. இராமபிரான் திருமாலின் அமிசமாதலால் திருமால்; இலக்குமணன் சீற்றம் மிக்கவனுதலால் உருத்திரன் என உவமைகளின் பொருத்தம் காணலாம்.

காவிரி (மலைக்) காட்டினின்றும் கொன்றை மலர்களைத் தன் நீரொழுக்கில் கொண்டுவருகின்றது; கங்கையும் (சடைக்) காட்டி

னின்றும் கொன்றை மலர்களை அவ்வாறு கொண்டுவருகின்றது எனச் செயலால் ஒற்றுமை காட்டிப் 'பொன்னியைப் பொருவும்' என உவமித்தார். காவிரியை இவ்வாறு எடுத்துக் கூறியது, கம்பநாடரது நாட்டுப் பற்றைப் புலப்படுத்தும்; 'தெய்வப் பொன்னியென லாயபுன லாறுமுள' எனப் பின்னும் கூறுவர். 'கங்கையிற் புனிதமாய காவிரி' எனப் பிற பெரியாரும் காவிரியைச் சிறப்பித்துள்ளமையும், 'காசியிலும் வீசம் அதிகம்' என்ற உலக வழக்கும் ஈண்டுக் கருதற்பாலன. திருமாலின் பரமபதத்துக்கருகிலுள்ள 'விரஜை' என்னும் தூய நதியின் அமிசமாய் நிலவுலகத்தில் வந்து, திருமாலின் தலங்களுட் சிறந்த திருவரங்கத்தின் இருபாலும் மாலை போலச் சூழ்ந்தொழுகும் பெருமையுடையதாகலின் காவேரியைக் கங்கைக்கு ஒப்புக் கூறுதல் தக்கதேயாகும்.

நீரில் பொன்தாது விரவப்பெற்றதாகலின், 'பொன்னி' என்பது காவேரிக்குக் காரணப் பெயர். பொன்னி: 564; காவிரி: அயோத் 1004.

(பி - ம்.) 2. செங்கணேற்றுவன்; பழுவத்து ணிறைதேன்; பருவத்தினிறைதேன்; பழுவத்துச் செறிதேன்.
3. ஈர்த்தெழுதலாற்: பொன்னியல்; பொன்னியிற். (31)

இது முதல் 530 முடிய உள்ள பாடல்கள் ஒரு சுவடியில் காணப்படவில்லை.

முனிவன் கங்கையின் வரலாறு மொழிதல்

502. இந்த மாநதிக் குற்றுள தகைமைய யாவும்
எந்தை கூறுகென் றிராகவன் வினவுற வனையான்
மைந்த நின்றிரு மரபுளா னயோத்திமா நகர்வாழ்
விந்தை சேர்புயன் சகரனிம் மேதினி புரந்தான்.

'எந்தை-எம் தந்தை போன்றவரே! இந்த மாநதிக்கு-பெருமை பொருந்திய இக்கங்கா நதிக்கு, உற்று உள தகைமைய யாவும்-அமைந்துள்ள சிறப்பானவற்றை யெல்லாம், கூறுக என்று-சொல்லியருள்வீராக' என்று, இராகவன் வினவுற-இராமபிரான் கேட்டருள, அனையான்-அக்கோசிக முனிவன் (இராமபிரானை நோக்கி), மைந்த-வீர! நின் திரு மரபு உளான் - உனது சிறப்புடைய மரபிலே தோன்றியவனும், அயோத்தி மாநகர் வாழ்-அயோத்தியாபுரியிலே வாழ்ந்த, விந்தை சேர் புயன்-வீர லக்குமி தங்கிய புயங்களையுடையவனும் ஆன, சகரன்-சகரன் என்ற பேரரசன், இ மேதினி புரந்தான்-இவ்வுலகத்தை ஆண்டு வந்தான்.

இது முதல் 29 பாடல்கள் ஒருதொடர்; கங்கையின் வரலாறு கூறுவன.

விந்தை-வீரலட்சுமி; 'விந்தை கேள்வனும் விரிஞ்சனும்' (உப தேசகா. சிவவிரதை. 300).

(பி -ம்.) 1. தகைமையதியாவும்; தகைமையுள் யாவும்; தன்மையதியாவும்.
2. எந்தை கூறென: வினவுறவனையோன்; வினவலு மெனையாள்.
3. மைந்தனின்றிருமரபுளோன்.
4. சேர்புயச்சகரனிம்; சேர்புயன் சகரனும்; புரந்தோன். (32)

503. விறல்கொள் வேந்தனுக் குரியவ ரிருவரில் விதர்ப்பை
பொறையி னல்கிய வசமஞ்சற் கஞ்சுமான் புதல்வன்
பறவை வேந்தனுக் கிளையமென் சுமதிமுன் பயந்த
அறனின் மைந்தர்க ளறுபதி னுயிரர் வலத்தார்.

'விறல் கொள் வேந்தனுக்கு-வெற்றியைக்கொண்ட அவ்வரசனுக்கு, (சகரனுக்கு), உரியவர் இருவரில்-உரிய மனைவிமார் இருவருக்குள், விதர்ப்பை-விதர்ப்ப நாட்டரசன் மகளாகிய மூத்தவள், பொறையின் நல்கிய-(கருவில்) சுமந்துபெற்ற, அசமஞ்சற்கு-அசமஞ்சன் என்பவனுக்கு, அஞ்சுமான் புதல்வன்-அம்சுமான் என்பவன் மகனாவான்; பறவை வேந்தனுக்கு இளைய-பறவைகளின் அரசனான கருடனுக்கு இளையவளாகிய, மென் சுமதி-மென்மைக் குணமுடைய சுமதி என்பவள், (சகரனுடைய இளைய மனைவி), முன் பயந்த-முன்னே பெற்ற, அறன் நில் மைந்தர்கள்-தரும நெறியிலே நிற்கும் புதல்வர்கள், அறுபதினுயிரர்-அறுபதினாயிரம் பேர்கள், வலத்தார்-மிக்க வலிமையுடையவர்கள்.

சகரனுக்கு மனைவிமார் இருவர்; இவருள் மூத்தவள் விதர்ப்ப தேசத்தரசன் மகளாதலின் 'விதர்ப்பை' எனப்பட்டாள்; இவளது இயற்பெயர் 'கேசினி' என்பது. இளையவளாகிய சுமதி யென்பவள், காசிப முனிவருக்கு விநதையிடம் (கருடனுக்குப் பின்) பிறந்தவள்; சகரன் இவ்விருவருடனும் இமயமலைச் சாரலிலே பிருகு முனிவனாச்சிரமத்தினருகே சென்று தங்கித் தவமியற்றியபோது பிருகு முனிவன் சகரன் முன் தோன்றி, 'உனக்கு மூத்த மனைவியிடம் வமிச வளர்ச்சிக்குரிய ஒரு புதல்வனும், இளையவளிடமாக வலிமை மிக்க அறுபதினாயிரம் புதல்வர்களும் பிறப்பார்கள்' என்று அருள் செய்தான்; அவ்வாறே கேசினி அசமஞ்சனைப் பெற்றாள்; சுமதியின் கருவினின்று சுரைக்காய் வடிவிலே பெரியதொரு பிண்டம் தோன்றி வெடிக்க, அதினின்றும் அறுபதினாயிரம் புதல்வர் தோன்றினர் என்பது முதனூலிற் கண்ட வரலாறு. அசமஞ்சன் என்பவன் சிறு குழந்தைகளை எடுத்து ஆற்று நீரிலேயிட்டு, அவை துடித்து மரிப்பதைக்கண்டு மகிழ்தலாகிய கொடுஞ்செய லுடையவனாயிருந்ததனால், தந்தை அவனைக் காட்டிற்குத் துரத்திவிட, அவன் காட்டிலே யிருந்து தவஞ்செய்து தன் யோக மகிமையால், முன்பு இறந்த குழந்தைகளை மீட்டும் உயிர்ப்பித்தான்

என்பர். இவன் மகன் அம்சுமான், அம்சுமான்-ஒளியுடையவன்: அம்சு-கிரணம்.

(பி - ம்.) 1. இருவருள்.
2. நல்கிய போசன னென்றொரு; போசணனென்றொரு; போசனேயென் றொரு; அபோசன னென்றொரு; அசமஞ்சனென்றொரு.
3 இளைய மின்சுமதி; இளையவள் சுமதி: முற்பயந்த; மின்பயந்த.
4. அறனன் மைந்தர்கள்: அறனுலாமைந்த ரறுபதினாயிரரரசே; அறனின் மைந்தராறயுதர்மற்றஞ்சுமானவன்சேய்; அறுபதினாயிரரமைந்தார். (33)

504. திண்டி றற்புனை சகரனுந் தனயர்சே வகங்கள்
கண்டு முற்றிய வயமகம் புரிதலுங் கனன்று
வண்டு துற்றுதார் வாசவற் குணர்த்தினர் வானோர்
ஒண்டி றற்பரி கபிலன திடையினி லொளித்தான்.

திண் திறல் புனை சகரனும்-மிக்க வலிமை பொருந்திய சகர மன்னனும், தனயர் சேவகங்கள் கண்டு-தன் புதல்வர்களின் வீரச் செயல்களைக் கண்டு, முற்றிய அயம் மகம் புரிதலும் - விதிப்படி அமைந்த அசுவமேதம் செய்யவிரும்பி முயலுதலும், (அதுகண்டு), வானோர்-தேவர்கள், கனன்று-கோபங் கொண்டு, வண்டு துற்று தார் வாசவற்கு உரைத்தனர்-வண்டுகள் தேனை உண்ணுதற்கிடமான கற்பகப் பூமாலையையணிந்த இந்திரனுக்கு (அதனைத்) தெரிவித்தார் கள்; (அதுகேட்ட இந்திரன்), ஒண் திறல் பரி-ஒளியும் வலிமையு முடைய வேள்விக் குதிரையை, கபிலனது இடையினில்-(பாதாள லோகத்திலே தவம் புரியும்) கபிலமுனிவரின் இருப்பிடத்திலே, ஒளித் தான்-(தனது மாயையால் கொண்டுபோய்) ஒளித்துவிட்டான்.

அசுவமேதம் நூறு செய்து முடித்தவர் இந்திர பதவியைப் பெறுவராதலின், அசுவமேதம் செய்பவர் எவர்க்கும் இடையூறு விளைத்தல் இந்திரனது இயல்பு. தேவர்கள் தம் தலைவனுக்குண் டாகும் தாழ்வு கருதி, சகரன் அசுவமேதம் செய்வதைப் பொறாது அச்செய்தியை இந்திரனுக்கு அறிவிக்க, அவன் இந்த யாகக் குதிரை யைப் பாதாளத்திலே கொண்டுபோய் மறைத்துவைத்தான். அசுவ மேதம் செய்வோர், நல்ல இலக்கணங்கள் அமைந்து சிறந்ததொரு குதிரையை அலங்கரித்து, உரிய பாதுகாப்புடன் அது உலக முழுதும் சுற்றி வருமாறு விடுத்து, இடையில் நேரும் இடையூறுகளைக் கடந்து அது செவ்விதாகத் திரும்பி வந்தபின்பே வேள்வியைத் தொடங்கிச் செய்தல் வேண்டும் என்பது விதியாதலின், இந்திரன் அவ்வாறு விடப்படும் குதிரைக்கு இடையூறு விளைத்தல் இயல்பு. சகரன், தன் புதல்வர் பெருங் குழுவினராகவும் பேராற்றலுடையவராகவு மிருத்தல் கண்டு அவர்கள் துணையால் அசுவமேதத்தை இடையூ

றின்றிச் செய்து முடிக்கலாமென்ற துணிவுகொண்டு செய்யத் தொடங்கினன்.

கபிலமுனிவர் தமது யோகம் கலைந்து கண்விழித்து நோக்கு வாராயின் அம்முதற் பார்வையிற் பட்ட பொருள்கள் வெந்து சாம்ப லாகும்; அதனால் இந்திரன் அக்குதிரையை அம்முனிவரின் பின் புறத்தே மறைத்துவைத்தான். இவ்வாறு அவர் பார்வைக்கு இலக் காகிச் சகரபுத்திரர்கள் அழிந்தமை பின்பு காணப்படும்.

அயமகம்-அசுவமேதம்; அயம்-குதிரை.

(பி - ம்.) 1. தனையர் சேவகந்தான்; தனையர் செய்திறங்கள்.
2. முத்தியி னயமகம்; புரிதலுங்கண்டு.
3. துற்றதார்; துய்த்ததார்; உரைத்தனர்.
4. கபிலன்ற னிடையினின். (34)

505. வாவு வாசிபின் சென்றன னஞ்சுமான் மறுகிப்
பூவி லோரிட மின்றியே நாடினன் புகுந்து
தேவர் கோமகன் கரந்தமை யறிந்திலன் றிகைத்து
மேவு தாதைதன் றாதைபா லுரைத்தனன் மீண்டு.

வாவு-தாவிச் செல்லுகின்ற, வாசி பின் சென்றனன் அஞ்சு மான்-யாகக் குதிரையின் பின்னே (காவலாகச்) சென்ற அஞ்சுமான், மறுகி-(குதிரையைக் காணாமையால்), மனங்கலங்கி, தேவர் கோன் கரந்தமை அறிந்திலன்-இந்திரன் (குதிரையை) மறைத்ததை யறி யாதவனாய், பூவில்-பூமியிலே, ஓர்இடம் இன்றி-ஓரிடமும் விடாதபடி, புகுந்து நாடினன்-போய்த்தேடி, திகைத்து-(குதிரை அகப்படாமை யால் செய்வதறியாமல்) திகைத்து, மீண்டு-திரும்பி வந்து, மேவு தாதை தன் தாதை பால் உரைத்தனன்-(யாகத்திலே)மனம் பொருந் திய (தன்) பாட்டனான சகரனிடம் (நிகழ்ந்ததைச்) சொன்னான்.

பூ-பூமி; வடசொல். மேவுதல்-விரும்புதல், பொருந்துதல். மேவு-தன்பால் அன்பு பொருந்திய என்றும் ஆம்.

சகரன், அஞ்சுமானை வேள்விக் குதிரையின் பின்னே காவலாக அனுப்ப, அவன் அதனுடன் போதுங்கால் இடையிலே குதிரை மாய மாக மறைந்துபோக, அஞ்சுமான் காரணம் அறியாமல் கலங்கித் திகைத்து எங்கும் தேடி, காணாமையால் தன் பிதாமகனான சகர னிடம் வந்து நிகழ்ந்ததைக் கூறினான் என்றவாறு.

(பி - ம்.) 1. வாவும் வாசிபின்; சென்றனரஞ்சுவார்; சென்றனர் குமரர்கள்.
2. பூவினேரிடம்: நாடினர்.
3. தேவர்கோன்பரி; அறிகிலன்; அறிகிலர்.
4. மேவு தாதை பால் சென்றன ருரைத்தனர்; மேவிதாதை தன்; மேவு யாவரும் உரைத்தனர்; உணர்த்தினன். (35)

506. கேட்ட வேந்தனு மதலையர்க் கம்மொழி கிளத்தி
வாட்ட மீக்கொளச் சகரர்கள் வடவையின் மறுகி
நாட்டம் வெங்கனல் பொழிதர நானிலந் தடவித்
தோட்டு நுங்கினர் புவியினைப் பாதலந் தோன்ற.

கேட்ட வேந்தனும்-(அஞ்சுமான் சொல்லியதைக்) கேட்ட சகர மன்னனும், அ மொழி மதலையர்க்கு கிளத்தி-அச்செய்தியைத் தன் குமரர் அறுபதினாயிரவரிடம் சொல்லி, வாட்டம் மீ கொள-மனச்சோர்வு மிகவும் அடைய, சகரர்கள்-சகர புத்திரர்கள், (தந்தை கூறியதைக் கேட்டு), வடவையின் மறுகி-வடவைத் தீப்போலக் கனன்று,நாட்டம் வெம் கனல் பொழிதர-கண்கள் கொடிய கோபாக் கினியைச் சொரிய, நால் நிலம் தடவி-பூவுலகம் முழுதும் தேடிப் பார்த்து, (குதிரையைக் காணாமையால்), புவியினை-பூமியை, பாதலம் தோன்ற-பாதாளமளவும், தோட்டு நுங்கினர்-(வழியுண்டாகும்படி) தோண்டியெடுத்தார்கள்.

நானிலம்: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு பகுப்புடைய பூமி. சகர புத்திரர்கள் பெருந் தொகையினராதலின், இவ்வுலகத்திலே பரவலாகச் சென்று எங்கும் தேடியும் குதிரையைக் காணாமையால், பாதாளத்திலும் சென்று பார்க்கக் கருதி, பூமியைத் தோண்டி வழியுண்டாக்கி அதனுள் புகுந்தனர் என்க.

தொட்டு என்பது ஓசை கருதித் 'தோட்டு' என நீண்டது. நுங்குதல்-கைக்கொள்ளுதல்; இங்கே தோண்டி எடுத்தலைக் குறிக்கும். நுங்குதல்-விழுங்கல் என்ற பொருள் கொண்டு, எடுத்த மண்ணைப் பூமி மேலே போட இடமில்லாமையால் சகரர்கள் அதனைத் தாங் களே விழுங்கினர் எனக் கூறுவாரும் உளர்.

சகர புத்திரர்களைச் சகரர் என்பர்: 512, 528, 530. சகரர் பூமியைத் தோண்டினமை: அயோத். 322; கிட்கிந்தா, 837.

(பி - ம்.) 1. கேட்ட மன்னனுந் தனையர்க டம்மொழி; கேட்ட மன்னன்பாதலத்தி லாய்ந்திடுமெனக்: கிளத்த. 2 வாட்டமிக்குள.
3. நானிலந்துருவித். 4. நுங்கினர்: பூமியைப். (36)

507. நூறி யோசனை யகலமு மாழமு நுடங்கக்
கூறு செய்தன ரென்பரால் வடகுண திசையின்
ஏறு மாதவக் கபிலன்பி னிவுளிகண் டெரியின்
சீறி வைதனர் செருக்கினர் நெருக்கினர் செறுத்தார்.

(சகரபுத்திரர்கள்), வட குண திசையின்-வடகிழக்குத் திக்கிலே, நூறு யோசனை அகலமும் ஆழமும் நுடங்க-(தரை) நூறு யோசனை அகலமும் (அவ்வளவு) ஆழமும் குழியும்படி, கூறு செய்தனர் என்பர் - தோண்டினார்கள் என்று கூறுவர் (முதனூலாசிரியர்);

(அவ்வாறு தோண்டிப் பாதாளத்தே சென்றவர்கள், அங்கே தேடிய போது), ஏறு மாதவம்-மேன்மேல் வளரும் பெருந்தவமுடைய, கபிலன் பின்-கபிலமுனிவரின் பின்னே, இவுளி கண்டு-(தம்) குதிரையைக் கண்டு, (அவரே குதிரையைக் கவர்ந்தவரெனத் தவருகக் கருதி), எரியின் சீறி-நெருப்பைப் போலக் கோபித்து, செருக்கினர்-செருக்குடையவர்களாய், வைதனர்-வசைச் சொற்கள் கூறி, நெருக்கினர்-முனிவரையணுகிச் சூழ்ந்து, செறுத்தார்-(அவரை) வருத்தலானுர்கள்.

வைதனர், செருக்கினர், நெருக்கினர்: முற்றெச்சம்; அன்றி முற்ருகவே கொண்டு கூறினும் ஆம்.

கபிலமுனிவரை, 'தழைத்த மாதவக் கபிலன் (509) என்பர் பின்னும்:

(பி - ம்.) 1. நூறுயோசனே: அகலமாமகவிடம்; அகலமாவகிலமும்; அகலமாய் மகிதலம்; ஆழமுமகலமும்; ஆழமாயகலமும்: நுணங்கக்; நுழைந்து.
2. கூறுசெய்தர நவமதாய்; செய்தனரென்பதாம்; செய்தன ரெண்ணதாம்: திசையில்.
3. கபிலன் பால்; கபிலனில்; எரியச்.
4. சீறியெய்தினர்: தருக்கினர்; தருக்கினின்: நெருக்கின; நெருங்கினர். (37)

508. மூளும் வெஞ்சினத் தருந்தவன் முனிந்தெரி விழிப்பப்
பூளை சூடித னகையினி லெயில்பொடிந் தனபோல்
ஆளு மைந்தரா றயுதருஞ் சாம்பரா யவிந்தார்
வேள்வி கொண்டநல் வேந்தனுக் குரைத்தனர் வேய்கள்.

மூளும் வெம் சினத்து-(சகரர் செயலால்) பொங்கி யெழுந்த கடுங்கோபமுற்ற, அரு தவன்-அரிய தவத்தினனுகிய கபில முனிவன், முனிந்து-(அவர்களை) வெறுத்து, எரி விழிப்ப-நெருப்புப் பறக்கும்படி கண்களைத் திறந்து பார்த்தவளவிலே, பூளை சூடி தன் நகையினில்-சிறு பூளைப்பூவைச் சூடும் சிவபெருமானுடைய புன் சிரிப்பினுலே, எயில் பொடிந்தனபோல்-திரிபுரங்கள் சாம்பலானது போல, ஆளும் மைந்தர் ஆறு அயுதரும்-(ஆட்சிக்கு உரிய) குமரர் அறுபதினுயிரவரும், சாம்பர் ஆய் அவிந்தார்-சாம்பலாகி ஒழிந்தார்கள்; வேய்கள்-(இதையறிந்த) ஒற்றர்கள், வேள்வி கொண்ட நல் வேந்தனுக்கு-வேள்வி செய்தலை மேற்கொண்ட நல்ல சகர மன்னனுக்கு, உரைத்தனர்-(அதனைச்) சொன்னுர்கள்.

சிவபெருமானது வெகுளிச் சிரிப்பினல் முப்புரங்கள் வெந்து சாம்பலானதுபோல, கபில முனிவனது வெகுளிப் பார்வையினுல் சகரர் அறுபதினுயிரவரும் வெந்து சாம்பலானுர்கள் ஒற்றர் இதனைச் சகரனுக்கு உரைத்தனர் என்றதனுல், அவர்கள், சகர புத்திரரால்

புதிதாக உண்டாக்கப்பட்ட வழியைப் பற்றிச் சென்று நிகழ்ந்ததை யறிந்து வந்து கூறினர்கள் என்பது பெறப்படும்.

அயுதம்-பதினுயிரம்; ஆறு அயுதர்=அறுபதினுயிரவர். அயுதரும்: முற்றும்மை. சாம்பர்: இறுதிப் போலி.

(பி - ம்.) 1 மீளும் வெஞ்சினத்து; முனிந்தெதிர்; எரியெழ.

2. சூடின னகையினில்; கொண்டவ னகையினில்: எயில் பொடிந்தென்ன; எயில் பொடித்தனபோல்; பொரிந்தனபோல்.

3. மைந்தர்க ளறுபதினுயிரர்; மைந்தர்க ளறுபதினுயிரம்; மைந்தர்களனைவருஞ் சாம்பராய்; மன்னவ ரறுபதி னுயிரம்; மாய்ந்தார்; விழுந்தார்.

4. வேள்வி கண்டநல்; வேள்வி கொண்டனர்: வேந்தருக்கு; உரைத்திடக் கேட்டு; உரைத்தனச் வேயர்; வேகர்: வெய்தின். (38)

509. உழைத்து வெந்துயர்க் கீறுகாண் கிலனுணர் வழியா
அழைத்து மைந்தன்றன் மைந்தனை யவர்கழிந் தனரேல்
இழைத்த வேள்வியின் றிழப்பதோ வெனவவ னெழுந்து
தழைத்த மாதவக் கபிலன்வாழ் பாதலஞ் சார்ந்தான்.

(ஒற்றர்கள் சொல்லியதைக் கேட்ட சகரன்), உழைத்து-(புத்திர சோகத்தால்) மிக வருந்தி, வெம் துயர்க்கு-(அப்போது உண்டான) கொடிய துயரத்துக்கு, ஈறு காண்கிலன்-ஒரு முடிவு காணுதவனுய், உணர்வு அழியா-உணர்ச்சி யற்று, மைந்தன் தன் மைந்தனை அழைத்து-தன் மகனுக்கு மகனுன அஞ்சுமானை அழைப்பித்து, (அவனிடம்), 'அவர் கழிந்தனரேல்—புத்திரர்கள் (இவ்வாறு) அழிந்தனராயின், (அதனுல்), இழைத்த வேள்வி இன்று இழப்பதோ-செய்யத் தொடங்கிய வேள்வியை இப்போது விட்டிடுவதோ!' என-என்று கூற, அவன் எழுந்து-அந்த அஞ்சுமான் (உடனே) புறப்பட்டு, தழைத்த மா தவம் கபிலன் வாழ்-வளர்ந்த பெருந் தவத்தையுடைய கபில முனிவன் தங்கியுள்ள, பாதலம் சார்ந்தான்-பாதாளலோகத்தை அடைந்தான்.

உழைத்தல்-வருந்துதல்: 'வலையிற்பட்டுழைக்கின்றேற்கு' (திவ். திருமாலை. 36).

(பி - ம்.) 1. உழைத்த: துயர்க்கூறு; துயர்க்கிறுதி; துயர்க்குறுதி: உணர்வொழியா; உணர்வொழிய; உணர்வொழியாது; உணர்வழியாது.

2. அழைத்த; மைந்தனன் மைந்தனை; மைந்தர் தம் மைந்தனை; மைந்தர்களிறந்திடி லசமஞ்ச வினிநாம்; மைந்தரு மந்தர மதுகலந்தாரே: அவர்கழிந்தனரே; அவர்கழிந்தாரேல்; அவர் மடிந்தனரேல்; அவரிறந்தனரேல்.

3. வேள்வியை யிழப்பதோ: என்றனன். (39

510. விண்டு நீங்கின ருடலுகு பிறங்கல்வெண் ணீற்றைக்
கண்டு துண்ணெனு மனத்தினன் கபிலமா முனிதன்
புண்ட ரீகநற் ருடொழு தெழுந்தனன் புகழக்
கொண்டு போகநின் னிவுளியென் றுற்றதுங் குறித்தான்.

(கபில முனிவன் இருப்பிடத்தை அடைந்த அஞ்சுமான்) விண்டு நீங்கினர் உடல் உகு பிறங்கல் வெண் நீற்றை கண்டு-உயிர் பிரிந்து அழிந்துபோன சகரபுத்திரர்களின் உடம்புகள் நீருன தஞல் ஆகிய மலை போன்ற வெள்ளிய சாம்பற் குவியலைப் பார்த்து, துண் எனும் மனத்தினன்-திடுக்கிட்ட மனமுடையவனாய், கபில மாமுனி தன்-கபில மகா முனிவனுடைய, புண்டரீகம் நல் தாள்-தாமரை போன்ற நல்ல திருவடிகளை, தொழுது எழுந்தனன்-வணங்கி எழுந்து நின்று, புகழ-(அவனைப் பலவாறு) துதிக்க, (முனிவன் மன மிரங்கி), 'நின் இவுளி கொண்டுபோக என்று-உன் குதிரையைக் கொண்டு போவாயாக' என்று சொல்லி, உற்றதும் குறித்தான்-நிகழ்ந்த செய்தியையும் கூறினான்.

கபில முனிவரது ஆச்சிரமத்தை அடைந்த அஞ்சுமான், சகர புத்திரர்கள் அழிந்ததனாலாகிய சாம்பல் மலைபோலக் குவிந்திருப் பதைக் கண்டு திடுக்கிட்டு, பணிவோடு முனிவர் அருகில்போய், அவ ரைச் சாஷ்டாங்கமாக வணங்கித் துதித்துத் தான்வந்த காரியத்தைக் கூற, முனிவர் அருள் கூர்ந்து, இந்திரன் குதிரையைக் கொண்டுவந்து அங்கே கட்டியதையும், பின்பு வந்த சகரபுத்திரர் நடந்துகொண்ட வகையையும், அதனால் அவர்கள் அழிய நேர்ந்ததையும் சொல்லி, அவன் குதிரையை மீட்டுக் கொண்டு போகும்படியும் கட்டளை யிட்டார் என்க.

(பி - ம்.) 1. நீங்கினுர்; உடலுறு; வெண்ணீறும்; வெண்ணிறு.
2. துண்ணென்ற.
3. மென்ருள்தொழு தெழுந்தவற் புகழக்: எழுந்தவன்; இறைஞ்சினன்; ஏத்தினன்; புகழ்ந்து; புகலக்.
4. கொண்டு போதிநின்; போகுநின்: உற்றது. (40)

511. பழுதி லாதவ னுரைத்தசொற் கேட்டலும் பரிவால்
தொழுது வாம்பரி கொணர்ந்தவி சுரர்களுக் கீயா
முழுதும் வேள்வியை முற்றுவித் தரசனு முடிந்தான்
எழுது கீர்த்தியாய் மைந்தனுக் கரசிய லீந்து.

'எழுது கீர்த்தியாய்-(கவிஞர்) எழுதி வைக்கத்தக்க (சிறந்த) புகழுடைய ஸ்ரீராமா! பழுது இலாதவன் உரைத்த சொல் கேட்ட லும்-குற்றமற்ற கபில முனிவன் கூறிய சொற்களைக் கேட்டதும், (அஞ்சுமான்), பரிவால் தொழுது-அன்போடு அவரை வணங்கி, வாம் பரி கொணர்ந்து-தாவுகின்ற குதிரையைக் கொண்டுவந்து சேர்க்க,

(பின்பு), அரசனும்-சகர மன்னனும், அவி சுரர்களுக்கு ஈயா-அவிர்ப் பாகத்தை (உரிய முறைப்படி) தேவர்களுக்குக் கொடுத்து, வேள் வியை முழுதும் முற்றுவித்து-(தொடங்கிய) யாகத்தை முழுதும் நிறைவேறச் செய்து,(அதன்பின்),மைந்தனுக்கு அரசியல் ஈந்து-அஞ்சு மானுக்கு அரசாட்சியைக் கொடுத்துவிட்டு, முடிந்தான்-(தான்)பரம பதமடைந்தான்.

கபில முனிவரது இசைவின்மேல் அஞ்சுமான் யாகக்குதிரையை மீட்டுக் கொணர்ந்து சகரனிடம் ஒப்புவிக்க, அவன் மகிழ்ந்து வேள் வியை முறைப்படி நடத்தி முடித்து, தேவர்களுக்கு உரியவாறு அவிர்ப்பாகம் கொடுத்து நிறைவேறியபின், அஞ்சுமானிடத்தில் தன் அரசாட்சியைக் கொடுத்துவிட்டுத் தான் பரமபதம் அடைந்தான் என்க.

பழுது: தவத்துக்கு இடையூறுகிய காமம், வெகுளி, மயக்கம் முதலிய குற்றங்கள். எழுது கீர்த்தி: கல்லிற் பொறித்து வைக்கத் தக்க கீர்த்தி என்றலும் ஆம். எழுது கீர்த்தியாய்: விளி; கௌசிக முனிவன் இராமபிரானை விளித்தது.

கொணர்ந்து-கொணர: எச்சத்திரிபு. 'கொணு' பகுதி. மைந் தன் என்பது இங்கே புதல்வன் என்னும் பொருளிலன்றி, வழித் தோன்றல் என்ற பொருளில் வந்துளது; 'விசும்பிற்'கங்கை மண்மிசை யிழித்தோன் மைந்த' (484) என்புழிப்போல.

(பி - ம்.) 2. தொழுது வெம்பரி: கொணர்ந்தது சுரபதிக்கீயா; கொணர்ந்துமச் சுரர்பதிக்கதியா: கொணர்ந்தவி சுரர்பதிக்கியா: கொணர்ந்தது சுரர் பதிக் கதிபர். 3. முழுது வேள்வியை; முழுதும் வேள்விகள். 4. எழுது கீர்த்தியால்; எழுது சீர்த்தியாய்: ஈய்ந்து. (41)

512. சகரர் தொட்டலாற் சாகர மெனப்பெயர் தழைப்ப
மகர வாரிதி சிறந்தது மகிதல முழுதும்
நிகரின் மைந்தனே புரந்தன னவனெடு மரபில்
பகிர தன்னெனும் பார்த்திபன் பருதியொத் துதித்தான்.

சகரர் தொட்டலால்-சகரர்கள் தோண்டியதனுல், சாகரம் என பெயர் தழைப்ப-சாகரம் என்று பெயர் விளங்க, மகரம் வாரிதி-சுறுமீன்களையுடைய கடலானது,சிறந்தது-சிறப்படைந்தது; மகிதலம் முழுதும்-உலகம் முழுவதையும், நிகர் இல் மைந்தனே புரந்தனன்-தனக்கு நிகரில்லாத அஞ்சுமானே ஆண்டு வந்தான்; அவன் நெடு மரபில்-அவனுடைய பெரிய வமிசத்திலே, பகிரதன் எனும் பார்த்தி பன்-பகீரதன் என்ற அரசன், பருதி ஒத்து உதித்தான்-சூரியன்போல் (சிறப்போடு) தோன்றினுன்.

அஞ்சுமான் மகன் திலீபனும் அவன் மகன் பகீரதனும் என முறையே தோன்றினர் என்ப. பகீரதன், தன் குல முன்னேராகிய

சகரரை நற்கதியடைவிக்கும் பொருட்டு, மிக முயன்று அருந்தவ மியற்றி, பல இடையூறுகளையும் வென்று தேவகங்கையைப் பூமிக்குக் கொணர்ந்து மிக்க புகழ்பெற்றவனாதலின், 'பருதி யொத்து உதித் தான்' என்றார். சகரரால் வந்தது சாகரம்; வடமொழித் தத்திதாந் தப் பெயர். சகரர் பாதலத்துக்குச் செல்லும் பொருட்டு நூறு யோசனை பரப்பளவுக்குத் தோண்டியவிடம் நீர் சூழ்ந்து கடலாயின மையின் அது சாகரம் எனக் காரணப் பெயர் பெற்றது. தமிழ் வழக் கிலும் அது 'தொடுகடல்' (தோண்டப்பட்ட கடல்) எனப்படும்; 'குணாஅது, கரைபொரு தொடுகடற் குணக்கும்' (புறநா. 6: 3).

தொட்டல்: தோள்; பகுதி; பகீரதன் என்பது எதுகை நோக் கிக் குறுகியது. பகிரதன்னெனும்: விரித்தல் பெற்றது.

சகரர் கடல் தோண்டினமை: *720*; கிட்கிந்தா. *216*

(பி - ம்.) 1. தொட்டதால்; தோண்டலால்: சாகரமெனும்பெயர்: தழைத்து:
2. வாருதி சிறந்தது; வாரிதி சிறந்தன: வகையினாலசமஞ்சன்பால்.
3. நிகரில் வேந்தனே; நீகரின் மைந்தரெண்; புரிந்தவனிவனொடு; புரந் தனனின்னெடு; இகலி லாதுயர் திலீபனையீன்றன னவன்பால்.
4. பகிரத னெனும்: பார்த்திவன்: வந்தவ தரித்தான்; வந்தனன் பரிவால். (42)

513. உலகம் யாவையும் பொதுவறத் திகிரியை யுருட்டி
இலகு மன்னவ னிருந்துழி யிறந்தவர் சரிதம்
அலகி றொன்முனி யாங்கவற் குரைத்திட வரசன்
திலக மண்ணுற வணங்கிநின் றொருமொழி செப்பும்.

இலகும் அன்னவன்-(மிக்க புகழோடு) விளங்கிய அப்பகீரதன், உலகம் யாவையும்-பூவுலகம் முழுதும், பொது அற-(பிறருக்கும்) பொது என்ற தன்மை நீங்க, திகிரியை உருட்டி-(தன்) ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தி, இருந்துழி-(ஏகசக்ராதிபதியாக) அரசாண் டிருந்த பொழுது, (ஒருநாள்), ஆங்கு அவற்கு-அத்தகைய அவனுக்கு, இறந்தவர் சரிதம்-(அவன் மரபிலே முன்னோராய்க் கபில முனிவன் சாபத்தால்) அழிந்த சகரர்களுடைய வரலாற்றை, அலகுஇல் தொல் முனி-(தவப்பெருமையில்)அளவில்லாத பழமையான(குலகுருவாகிய) வசிட்ட முனிவன், உரைத்திட-சொல்ல, அரசன்-(அதைக் கேட்ட) பகிரத மன்னன், திலகம் மண் உற வணங்கி நின்று-தன் நெற்றி தரையிலே படும் வண்ணம் (முனிவனைச்-சாஷ்டாங்கமாக) வணங்கி (எழுந்து) நின்று, ஒரு மொழி செப்பும்-ஒருவார்த்தை சொல்ல லானான்.

அவன் சொன்னமை அடுத்த கவியிற் பெறப்படும்.

திலகம், ஆகுபெயராய் நெற்றியைக் குறிக்கும். நெற்றி நிலத்திற் பட வணங்கினுன் என்றது சாஷ்டாங்க நமஸ்காரத்தைக் குறிக்கும்.

பகீரதன் அரசாண்டு வருங்கால், தன்குலத்து முன்னோர் வரலாறுகளை வசிட்ட முனிவர் அவ்வப்போது கூறக் கேட்டுவந்து, பெருந் தொகையினரான சகரர் அழிந்த செய்தி கேட்டவுடன், முனிவர் சாபத்தால் அழிந்த அவர்களுக்கு நற்கதி கிடையாதாகலின், அவர்கள்பால் இரக்கங்கொண்டு, அவர்களை யெவ்வாறேனும் நற்கதி யடைவிக்கக் கருதி அதற்குரிய உபாயங் கூறும் வண்ணம் வசிட்ட முனிவரை வேண்டினுன்.

(பி - ம்.) 1. பொதுவுறத் திகிரியொன்றுருட்டி.
2. இலகுமன்னவனிகழ்ந்தநாள்; இருந்துழியிறந்தமை வினவ; இற தன வினவ.
3. அலகு தொன்முனி; அலகில் கோமுனி; இறந்தமை;இறந்தன; நிகழ்ந்தன; அருந்தவன்; உரைத்தனன்; அரசர்; அலகிறென் முனியுரைத் திடக் கேட்டன னரசன்.
4. திலதம்; திலகன். (43)

514\. கொடிய மாமுனி வெகுளியின் மடிந்தவெங் குரவர்
முடிய நீணிர யத்தினி லழுந்துறு முறைமை
கடியு மாறெனக் கருந்தவ மமைகுறு கருமம்
அடிகள் சாற்றுக வென்றலு மந்தண னறைவான்.

'மாமுனி கொடியவெகுளியின் மடிந்த-சிறந்த கபிலமுனிவனது கொடுஞ் சினத்தினுல் அழிந்த, எம் குரவர்-எங்கள் முன்னோராகிய சகரர்கள், நீள் நிரயத்தினில்-பெருநரகத்திலே, முடிய அழுந்துறும் முறைமை-முற்றிலும் அழுந்திக் கிடக்கும் தன்மையை, கடியும் ஆறு-நீக்கும் வண்ணம், அரு தவம் அமைகுறு கருமம்-அரிய தவம் பொருந்து தற்குரிய செயலை, எனக்கு அடிகள் சாற்றுக-எனக்குத் தேவரீர் சொல்லியருளுக;' என்றலும்-என்று (பகீரதன்) வேண்டலும், அந் தணன் அறைவான்-வசிட்ட முனிவன் கூறலானுன்.

கொடிய என்பதனை முனிவனுக்கு அடைமொழியாக்கி உரைத்தலும் ஒன்று.

(பி - ம்.) 1. வெகுளியால்; முடிந்தவெம்; இறந்தவெம்.
2. நீணிரயத்தினுள்; அழுந்திடு; அழிந்திடு; அழுந்திடா; அதற்குறு; முந்துறு.
3. கடியு மாறிவண் கருதிட வதற்குறு; கடியுமாறெனக் கருந்தவ மதற்குறு; அமைக்குறு; செயற்குறும்; இயற்றுறு.
4. சாற்றுக வென்றனன். (44)

515. வைய மாளுடை மன்னவர் மன்னவ மடிந்தோர்
உய்ய நீடவ மொழிவறு பகலெலா மொருங்கே
செய்ய நாண்மலர்க் கிழவனை நோக்கிநீ செய்தி
நைய லென்றினி துரைத்தன னவையறு முனிவன்.

'வையம் ஆள் உடை-உலகத்தை ஆளுதலுடைய, மன்னவர் மன்னவ-அரசர்க்கரசனே! மடிந்தோர் உய்ய-(முற்றிலும்)அழிந்தவர்களான சகரர் ஈடேறும் வண்ணம், ஒழிவு அறு பகல் எலாம் ஒருங்கே-இடையீடில்லாத மிகப்பல காலம் முழுதும், செய்ய நாள் மலர் கிழவனை நோக்கி-செம்மையான புதிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனை நோக்கி, நீள் தவம் நீ செய்தி-பெருந் தவத்தை நீ செய்வாயாக; நையல்-(மனம்) வருந்தாதே' என்று—, நவை அறு முனிவன்-குற்றமற்ற வசிட்ட முனிவன், இனிது உரைத்தனன் - இனிதாகச் சொன்னான்.

சகரர்களை நரகத்தினின்றும் மீட்டு உய்விக்கும் வகையைக் கூறியருளும்படி கேட்ட பகீரதனுக்கு, வசிட்ட முனிவர், 'அரசே நீ நெடுங்காலம் பிரமனை நோக்கித் தவம் செய்தால் உன் எண்ணம் கைகூடும்; இதன் பொருட்டு வருந்தாதே' என்று கூறியருளினார் என்க.

(பி - ம்.) 1. வய்யம்; மன்னர் மன்னவ; மன்னவர் மன்னமுன்; முன்னவமுன்னமே.
2. உய்யு நீடவம்; உய்ய மாதவம்; மொழிவுறு; உய்ய நீதவமொழிவகு; உய்ய மாதவ மொழிதரு.
3. நான்மறைக் கிழவனை; தாமரைக் கிழவனை; நோக்கியே தவஞ்செய்.
4. நய்யல் இன்றெ௳. (45)

516. ஞாலம் யாவையுஞ் சுமந்திரன் றன்வயி னல்கிக்
கோலு மாதவத் திமகிரி மருங்கினிற் குறுகிக்
கால மோர்பதி னுயிர மருந்தவங் கழிப்ப
மூல தாமரை முழுமுதற் கிழவன்முந் தினனே.

(வசிட்டன் கூறியதைக் கேட்ட பகீரதன்), ஞாலம் யாவையும்-(தான் ஆளும்) நாடாட்சி முழுவதையும், சுமந்திரன் தன் வயின் நல்கி - சுமந்திரனிடத்தில் கொடுத்துவிட்டு, கோலும் மாதவத்து-சிறந்த தவச் சூழ்நிலையுடையதாகிய, இமகிரி மருங்கினில் குறுகி-இமயமலைச்சாரலை யடைந்து, ஓர் பதினுயிரம் காலம்-ஒருபதினுயிரம் ஆண்டுகள், அரு தவம் கழிப்ப-அரிய தவத்தைச் செய்துவர, (இறுதியில்), மூலம் தாமரை-(உலகத் தோற்றத்துக்குக்) காரணமான (திருமாலின் திருவுந்தித்) தாமரையிலே வந்த, முழு முதல் கிழவன்-எல்லா வுயிர்களுக்கும் முதல்வனுன பிரமதேவன், முந்தினன்-பகீரதன் முன்னே தோன்றினுன்.

சுமந்திரன் என்பது, 'நல்ல ஆலோசனை யுடையவன்' என்ற உறுப்புப் பொருள் உடையது; எனவே, அமைச்சருள் முதல்வனைக் குறித்து வழங்கிய பெயராகும். அரசர், பிறகாரியங்களில் ஈடுபடுங் கால், நாடாட்சிப் பொறுப்பைச் சுமந்திரனிடம் ஒப்பித்துச் செல்லு தல் வழக்கு. ஞாலம் என்பது ஆகுபெயராய் நாடாட்சியைக் குறித் தது. காலம்: இங்கே ஆண்டு என்பது குறித்து நின்றது.

கோலுதல்-சூழ்தல்; கோலும் மா தவத்து-சூழ்ந்த பெரிய தவத்தையுடைய; என்றது, தவச் சூழ்நிலையையுடைய என்றபடி. இம கிரி அத்தகைய தென்பது யாவரும் அறிந்ததே. முந்துதல்-எதிர்ப்படு தல்; 'முந்தினன் அருமறைக் கிழவன்' (367).

'பந்திக் கமலத் தடஞ்சூ ழரங்கர் படைப்பழிப்புச் சிந்தித் திடு வது மில்லைகண் டீரத் திசைமுகனே, டுந்திக் கமலம் விரிந்தால் விரியு முகக்கடையில், மூந்திக் குவியி னுடனே குவியுமிம் மூதண்டமே' (திரு வரங்கத்துமாலை 19.) என்பராதலின் 'மூலதாமரை' எனப்பட்டது.

(பி - ம்.) 2. கோல மாதவத் திமகிரி மருங்குறக், 4. முந்தினனுல். (46)

517. நின்பெ ருந்தவ மகிழ்ந்தன நினதுநீள் குரவர்
முன்பி றந்தன ரருந்தவன் முனிவினு தலினுல்
மன்பெ ரும்புவி யதனில்வா னதிகடி தணுகி
என்பு தோயுமே லிருங்கதி பெறுவரென் றிசைத்தான்.

(பிரமன் பகீரதனைப் பார்த்து),'நின் பெரு தவம் மகிழ்ந்தனம்-உன்னுடைய பெருந்தவத்தைக்கண்டு (நாம்) மகிழ்ச்சியடைந்தோம்; நினது நீள் குரவர்-பெருந்தொகையினரான உன்னுடைய முன்னோர் கள், முன்பு-முன்னே, அரு தவன் முனிவின் இறந்தனர் ஆதலினுல்-அரிய தவத்தையுடைய கபில முனிவனது கோபத்தால் இறந்தார்க ளாதலால், வான் நதி-ஆகாய கங்கை நதியானது, மன் பெரு புவி அதனில்-மிகப் பெரிய இப்பூவுலகத்தில், கடிது அணுகி-விரைந்து (பெருகி) வந்து, என்பு தோயுமேல்-(அவர்களுடைய) எலும்புகளின் மீது படியுமானுல், இரு கதி பெறுவர் என்று-(அவர்கள்) பெரிய (நல்ல) கதியை அடைவார்கள்' என்று, இசைத்தான்-கூறினுன்.

பகீரதனது கடுந் தவத்தை மெச்சி அவன் முன் தோன்றின பிரமன், தகாத முறையில் நடந்து முனிவனது கோபத்துக்காளான சகரர்கள் நற்கதி பெறவேண்டுமாயின்,ஆகாயகங்கை பூமியில் பெருகி வந்து, அவர்களுடைய எலும்புக் குவியலில் படிதல் வேண்டும் என்று கூறினுன். மேலும், ஆகாய கங்கை பூமிக்கு வருதற்குரிய உபாயத் தையும் கூறினுன்; அதனை அடுத்த கவியிலே காண்க.

(பி - ம்.) 1. தவம் வியந்தனம்; வியந்தனன்; மகிழ்ந்தனன்; இனிது நீள் குரவர்.
2. இறந்ததவ் வருந்தவன்; இறந்தவரருந்தவன்; முனிவிவிலதனுல்; முனி விலதற்கே; முனிவிலழிந்தோர்.
3. நதி கடந்தனுகி; நதி நடந்தனுகி.
4. அருங்கதி: இசைந்தான். (47)

518. மாக மாநதி புவியிடை நடக்கின்மற் றவடன்
வேக மாற்றுதல் விடையவற் கன்றிவே றரிதால்
தோகை பாகனை நோக்கிநீ யருந்தவந் தொடங்கென்
றேகி ஞனுல கனைத்துமெவ் வுயிர்களு மீன்றான்.

உலகு அனைத்தும்-எல்லா உலகங்களையும், எவ் உயிர்களும்-(அவ்வுலகங்களில் உள்ள) எவ்வகையான உயிர்ப் பொருள்களையும், ஈன்றான்-படைத்தவனான பிரமன், (பகீரதனுக்கு மேலுங் கூறுவானாகி), 'மாகம் மா நதி-ஆகாயத்திலுள்ள பெருமைமிக்க கங்கை நதி, புவி இடை நடக்கின்-பூமியில் வந்தால், அவள்தன் வேகம் ஆற்றுதல்-அவளுடைய வேகத்தை ஏற்றுத் தாங்குதல், விடையவற்கு அன்றி-இடப வாகனத்தையுடைய சிவபெருமானுக்கு (எளியதே) அல்லாமல், வேறு அரிது ஆல்-பிறர் எவர்க்கும் அருமையாகுமாதலால், நீ—, தோகை பாகனை நோக்கி-மயில் போலும் சாயலையுடைய உமாதேவியைப் பங்கில் உடைய அப்பெருமானைக் குறித்து, அரு தவம் தொடங்கு என்று-அரிய தவத்தைச் செய்யத்தொடங்குக' என்று சொல்லியருளி, ஏகினான்-மறைந்து போனான்.

'ஆகாய கங்கை நதி நேரே பூமியில் விழுந்தால் அதன் வேகத்தைத் தாங்குதல் பூமிக்கே இயலாது; அதனைத் தாங்கும் ஆற்றல் சிவபெருமானுக்கே உண்டு; ஆதலால் அப்பெருமானைக் குறித்து நீ தவம் செய்க' என்று உபாயம் கூறிப் பிரமதேவன் மறைந்தான். நதியைப் பெண்பாலாகக் கூறுதல் மரபாதலின், 'அவள்' என்றார். மற்று: அசை; தன்: சாரியை. 'வேகம் மாற்றுதல்' என்று பிரித்துக் கூறுதலும் ஆம். 'வேறு' என்றது வேற்றோரைக் குறிக்கும். தோகை: ஆகுபெயர்.

(பி - ம்.) 1. மாக நன்னதி; புவியிடை வருகின்.
2. கண்ணுதற் கன்றி: அரிதாம். 3. தோகை பாகரை நோக்கியே.
4. ஒதினன்: உலகனைத்து ளெவ்வுயிர்களும்; உலகனைத்தையுமுயிர்களும்: ஈன்றோன்; ஈந்தான். (48)

519. மங்கை பாகனை நோக்கிமுன் மொழிந்தன வருடம்
தங்கு மாதவம் புரிதலுந் தழனிறக் கடவுள்
அங்கு வந்துநின் கருத்தினை முடித்துமென் றகன்றான்
கங்கை யைத்தொழக் காலமை யாயிரங் கழித்தான்.

(பிரமன் அருளிச் செய்தவண்ணமே, பகீரதன்), மங்கை பாகனை நோக்கி-உமாதேவியைப் பங்கில் உடைய பெருமானைக் குறித்து, முன்மொழிந்தன வருடம்-முன்னே (பிரமனுக்காகக்)கூறிய பதினுயிர வருடகாலம், தங்கும் மாதவம் புரிதலும்-நிலையான பெருந்தவத்தைச் செய்தபோது, தழல் நிறம் கடவுள்-தீவண்ணக் கடவுளாகிய சிவ பெருமான், அங்கு வந்து-அங்கே (பகீரதனெதிரில்) வந்து, 'நின் கருத்தினை முடித்தும் என்று-உன் கருத்தை முற்றுவிப்போம்' என்று கூறி, அகன்ருன்-மறைந்தான்; (அதன் பின் பகீரதன்), கங்கையை தொழ-கங்காதேவியை நேரே தரிசிக்கும் பொருட்டு, காலம் ஐயாயிம் கழித்தான்-(தவத்தில்) ஐயாயிரம் ஆண்டுகளைச் செலுத்தினுன்.

பிரமன் அருள் செய்து மறைந்தபின், பகீரதன், சிவபெருமானைக் குறித்துப் பதினுயிரம் வருடகாலம் தவஞ்செய்ய, சிவபெருமான் அவன் முன் தோன்றி, 'உன் கருத்தை நிறைவேற்றுவோம்' என்று அருள் செய்தான். உன் கருத்து என்றது, கங்கையைத் தாங்குதலை; கங்கை ஆகாயத்தினின்று வந்தபின் அவளைத் தாங்குதலே சிவபெருமான் ஏற்றுக்கொண்ட தாகலின், கங்கையை வருவித்தற் பொருட்டு மீண்டும் ஐயாயிர வருடகாலம் தவம் செய்தான் பகீரதன். கங்கையை நேரே காணும்பொருட்டு என்பதனை, 'கங்கையைத் தொழ' என்ருர். கங்கையைத் 'தொழா' என்றும் பாடம் உளது. இங்கும் 'காலம்' என்றது வருடத்தைக் குறித்தல் காண்க.

(பி - ம்.) 1. மொழிந்தவவ் வருடம்.
2. தங்குநற்றவம்; தங்கிமாதவம்: சரித்தலும்: தழனிறத்தவனும்; தழலணி கடவுள். 3. நின்சிந்தனை முடிப்பனென்று; முடிக்குமென்று.
4. தொழாக். (49)

520. ஒரும டக்கொடி யாகிவந் துனதுமா தவமென்
பொருபு னற்கொடி வரினவள் வேகமார் பொறுப்பார்
அரனு ரைத்தசொல் விநோதமற் றின்றுநீ யறிந்து
பெருகு நற்றவம் புரிகென வரநதி பெயர்ந்தாள்

வரம் நதி-மேன்மையுடைய கங்கா நதியாகிய தேவி, ஒரு மடகொடி ஆகி வந்து-இளங்கொடி போன்ற ஒரு பெண் வடிவுடையவளாகி (பகீரதன் முன்னே) வந்து, (அவனை நோக்கி), 'உனது மாதவம் என்-உன்னுடைய பெருந்தவம் எதைக் கருதியது? பொரு புனல் கொடி வரின்-(ஆகாய கங்கையின்) அலைமோதுகின்ற நீரொழுக்கு (பூமியில் இறங்கி) வந்தால், அவள் வேகம் பொறுப்பார் ஆர்-அவளுடைய விசையைத் தாங்க வல்லார் யார் உளர்? அரன் உரைத்த சொல் விநோதம்-சிவன் சொன்ன வார்த்தை விளையாட்டானது; (தாங்குதல் அவனுலும் ஆகாது); இன்று நீ அறிந்து - இப்போது (அதனை) நீ (என் சொல்லால்) அறிந்து, பெருகு நல்தவம் புரிக-

(மீண்டும்) மிக்க நல்ல தவத்தைச் செய்க, என-என்று கூறி, பெயர்ந் தாள்-மறைந்து போனாள்.

கங்காதேவி ஒருபெண் வடிவுடன் பகீரதன் முன்னே வந்து, அவனை நோக்கி, 'நீ தவம் செய்வது ஆகாய கங்கை பூமிக்கு வர வேண்டுமென்பது குறித்தேயன்றோ? அவ்வாறாயின், அவள் வரும் வேகத்தைத் தாங்க எவராலும் இயலாது; சிவனும் ஏதோ விளை யாட்டாகச் சொன்ன வார்த்தையே யன்றி, உண்மை யன்று; உன் தவத்தில் ஏதோ குறைபாடுளதென்று தோற்றுகின்றது; எனவே மீண்டும் நீ நல்ல தவத்தைச் செய்க' என்று செருக்கோடு கூறிச் சென்றாள். அவள் தன்னை வேறுபடுத்திக்கொண்டு படர்க்கை யாக வைத்துக் கூறினாளென்க.

வரநதி, மடக்கொடியாகி வந்து, தவம்புரிக எனப் பெயர்ந் தாள் என்று இயைக்க. மற்று: அசை.

(பி - ம்.) 1. ஆகவந்து; தவத்தென். 2. வரினதன்; வரிலவள்.
3. விளைதமற்றின்னுநீ; விளைதமற்றென்னினி: இதனைமற்றின்னுநீ; ஈதெனவின்னநீ: அவன்பால்.
4. பெரிது நற்றவ;ம் புரியென: வானதி. (50)

521. கரந்தை மத்தமோ டெருக்கலர் கூவிளங் கடுக்கை
நிரந்த பொற்சடை நின்மலக் கொழுந்தினை நினையா
அரந்தை யுற்றவ னிரண்டரை யாயிர மாண்டு
புரிந்து நற்றவம் பொலிதர வரைமகள் புனிதன்,

அரந்தை உற்றவன்-(கங்கை கூறியது கேட்டு) வருத்தமுற்ற பகீரதன், கரந்தை-சிவகரந்தைப் பத்திரமும், மத்தமோடு-ஊமத்தம் பூவும், எருக்கு அலர்-எருக்கம் பூவும், கூவிளம்-வில்வ பத்திரமும், கடுக்கை - கொன்றைப் பூவும், நிரந்த - கலந்து நிறைந்த, பொன் சடை-பொன்னிறமான சடையையுடைய, நின்மலம்-குற்றமற்ற, கொழுந்தினை-தீப்பிழம்பு போன்ற சிவபெருமானை, நினையா-நினைந்து, இரண்டரை ஆயிரம் ஆண்டு-இரண்டாயிரத்தைந்நூறு வருடங்கள், நல் தவம் புரிந்து பொலிதர-நல்ல தவம் செய்து (ஒளியோடு)விளங்க, வரை மகள் புனிதன்-பார்வதி தேவியின் கொழுநனான பரிசுத்த மூர்த்தி,

இதுவும் அடுத்த பாடலும் குளகம்; புனிதன் என்னும் எழுவாய், அடுத்த கவியின் முதலில் உள்ள 'எதிர்ந்து' என்பதனோடு தொடரும்.

'அரனாலும் என் வேகத்தைத் தாங்குதல் ஆகாது; அவன் தாங்குவதாகச் சொன்னதும் உண்மை யன்று; மீண்டும் தவம் செய்' என்று கங்கை கூறியதனால் மிக்க மனச் சோர்வடைந்த பகீரதன்,

மீண்டும் சிவபெருமானைக் குறித்துத் தவம் செய்யலானுன்; அப்போது சிவபெருமான் மீண்டும் பிரத்தியட்சமானுன்.

கரந்தை, மத்தம், கூவிளம், கடுக்கை என்பன முதலாகுபெயர்கள்; இலையையும் பூவையும் குறிப்பன; கூவிளம் என்பது கூவிளை எனவும் வழங்கும்; மத்தம்: முதற்குறை: கொழுந்து என்பது உவமவாகுபெயர்.

ஒப்பு: 'கரந்தையும் வன்னியு மத்தமுங் கூவிளம்...அம்மானை' சுந்தரர்தேவாரம்.

(பி - ம்.) 1. மத்தமொடு: கூவிளை. 2. நிரைந்த: நிருமலக் கொழுந்தனை.
3. அரந்தை யற்றவன்: ஐயிரண்டாயிரம்; ஆயிரம் பருவம்; ஆயிர வருடம்; ஆயிரம் வருடம்.
4. புரிந்த; பொருந்து; பொருந்த; நற்றவம் புரிதர; புரிதலும்: வரையுறை புனிதன்; மலையுறை புனிதன்; மலைமகள் புனிதன். (51)

522. எதிர்ந்து நின்னினை வென்னென விறைஞ்சியெம் பெரும
அதிர்ந்து கங்கையீ தறைந்தன ளென்றலு மஞ்சல்
பிதிர்ந்தி டாவகை காத்துமென் றேகிய பின்னை
முதிர்ந்த மாதவ மிரண்டரை யாயிர முடித்தான்.

எதிர்ந்து-(சிவபெருமான்) பகீரத னெதிரே வந்து, நின் நினைவு என் என-(இப்போது) உன் கருத்து யாது என்று வினவ, இறைஞ்சி-(அவன், சிவபெருமானை) வணங்கி, எம்பெரும-எம்பெருமானே! கங்கை-கங்காதேவி, அதிர்ந்து-(என் மனம்) அதிரும்படி, ஈது அறைந்தனள்-(அரனுரைத்த சொல் விநோதம் என்ற) இதனைச் சொன்னுள்; என்றலும்-என்று கூறிய அளவில்,(சிவபெருமான்), அஞ்சல்-நீ அஞ்சாதே; பிதிர்ந்திடா வகை காத்தும்-(கங்கை நீர் சிறிதும் புறத்தே) சிந்தாதபடி அடக்குவோம்' என்று—, ஏகிய பின்னை-மறைந்துபோன பின்பு, முதிர்ந்த மா தவம்-முற்றிய பெரிய தவத்தை, இரண்டரை ஆயிரம்-இரண்டாயிரத்தைந்நூறு வருடம், (கங்கையைக் குறித்து), முடித்தான்-செய்து முடித்தான்.

(521) புனிதன் (522) எதிர்ந்து, அஞ்சல்; காத்தும் என்று ஏகிய பின்னை எனக் கூட்டி முடிபு கொள்க.

அதிர்ந்து=அதிர; எச்சத்திரிபு. கங்கை அதிர்ந்து ஈது அறைந்தனள் எனக் கூட்டி உரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 2. ஈதுரைத்தனள்: அஞ்சேல்.
3. காத்தும்; ஏகிய பின்றை; எகிய பின்னர்; ஏகிய பின்னும்.
4. முதிர்ந்து மாதவ முப்பதினாயிரம். (52)

528. பெருகு நீரொடு பூதியும் வாயுவும் பிறங்கு
சருகும் வெங்கதி ரொளியையுந் துய்த்தது தனையும்
பருக லின்றியு முப்பதி னுயிரம் பருவம்
முருகு காதலின் மன்னவ னருந்தவ முயன்றான்.

மன்னவன்-பகீரத மன்னன், பிறங்கு சருகும்-(பசுமை) மாறி உலர்ந்த சருகையும், பூதியும்-புழுதியையும், பெருகும் நீரொடு-பெருகிவரும் தன்மையுள்ள நீரையும், வாயுவும்-காற்றையும், வெம் கதிர் ஒளியையும்-வெப்பமான சூரிய கிரணத்தையும், துய்த்து-(முறையே) உட்கொண்டும், அதுதனையும் பருகல் இன்றியும்-(இறுதியில்) அக்கதிரொளியையும் உட்கொள்ளாமலும், முப்பதினுயிரம் பருவம்-முப்பதினுயிரம் ஆண்டுகள், முருகு காதலின்-முதிர்ந்த அன்புடனே, அரு தவம் முயன்றான்-(பிறர் செய்தற்கு) அரிய தவத்தைச் செய்து முடித்தான்.

பாடல் அமைப்பில் சருகு முதலிய பொருள்கள் முறை மாறியுள்ளனவேனும், பொருட் சிறப்புக்கேற்றவாறு அவை மாற்றியுரைக்கப்பட்டன.

பகீரதன் தவமியற்றிய ஆண்டுகள்: பிரமனைக் குறித்துப் பதினுயிரம்; சிவபெருமானைக் குறித்துப் பதினுயிரம்; கங்கையைக் குறித்து ஐயாயிரம்; மீட்டும் சிவபெருமானைக் குறித்து இரண்டரை யாயிரம்; கங்கையைக் குறித்து இரண்டரையாயிரம்ஆக முப்பதினுயிரம் என்க. இவை ஐந்து நிலைகளாகவுள்ளமை புலப்படும்; இவ்வைந்து நிலைகளுள் முதல் நான்கில் சருகு முதலியவற்றை முறையே துய்த்தும், ஐந்தாவதில் எதுவுந்துய்த்தலின்றியும் கடுந்தவமியற்றினன் எனக் கொள்ளலாகும்.

பகீரதன் தவமுறை ; ஒப்பு. வி-பா. அருச்சுனன்றவநிலை. 77.

வான்மீகத்துள், பகீரதன் இயற்றிய தவத்துக்கு ஆண்டுவரையறை கூறப்படவில்லை. அஞ்சுமான் வேள்விக் குதிரையை மீட்டு வருங்கால், கருடன் அவனெதிர்ப்பட்டு, இமவானுடைய மூத்த புதல்வியாகிய கங்கையை முயன்று கொணர்ந்து அந்நீரினுல் சகரர்களுக்குத் தர்ப்பணம் செய்தலும், அந்நீர் அவர்களுடைய சாம்பலிற் படியச் செய்தலும் அவர்கள் நற்கதி பெறக் காரணமாகுமென்று கூறிச் செல்ல, அவ்வாறு செய்தல் அஞ்சுமான், திலீபன் ஆகியோரால் இயலாதாக, பகீரதன் தலைப்பட்டு மிக்க உறுதியுடன் நெடுங்காலந்தவமியற்றி அதனை நிறைவேற்றினன் எனக் கூறப்பட்டுள்ளது. பகீரதன் கங்கையைக் குறித்தே தவமியற்றும்போது, பிரமன் மனமுவந்து முன்தோன்றி, அவன் கருத்து நிறைவேறுமென்றும், கங்கையைத் தாங்குதற்கு உருத்திர மூர்த்தியை வேண்டித் தவமியற்றும்படியும் கூறிச் செல்ல, பகீரதன் அவ்வாறே செய்து காரியசித்தி பெற்

றனன் எனவும் அங்கே கூறப்பட்டுள்ளது. பாற்கடல் கடைந்த வரலாறு இதன்பின் கூறப்படுகின்றது.

(பி - ம்.) 1. நீரொடும் பூழ்தியும் வாயுவும்; வாயுவும் பூதியும்; பிறங்கும்.
2. சருகு வெங்கதிர் ஒளியையுந் துய்த்துமற்றதையும்; ஒளியுந்துய்த் தன்னவைதமையும்; ஒளியுமேதுய்த்தவைதனேயும்; ஒளியையுமன்னவை தமையும்; ஒளியையுந்துய்த்து மற்றெதையும். 3. பருகலின்றியே.
4. நெடுந்தவம்; நற்றவம்: உழந்தான்; உழன்றுன்; முடித்தான். (53)

524. உந்தி யம்புயத் துதித்தவ னுறைதரு முலகும்
இந்தி ராதிய ருலகமும் வெருவுற விரைத்து
வந்து தோன்றினள் வரநதி மலேமகள் கொழுநன்
சிந்தி டாதொரு சடையினிற் கரந்தனன் சேர.

வர நதி-மேலான நதி வடிவாகிய காங்காதேவி, உந்தி அம்புயத்து உதித்தவன் உறைதரும் உலகும்-(திருமாலின்) திருவுந்தித் தாமரையிலே தோன்றிய பிரமன் எழுந்தருளியுள்ள பிரமலோகமும், இந்திர ஆதியர் உலகமும்-இந்திரன் முதலிய தேவர்களின் உலகமும், வெருவு உற-அஞ்சும்படி, இரைத்து-ஆரவாரம் செய்துகொண்டு, வந்து தோன்றினள்-(மேலேயிருந்து கீழ்நோக்கி) வரலானுள்; (அப்போது), மலேமகள் கொழுநன்-பார்வதிதேவியின் நாயகனுகிய சிவபெருமான், சேர-(அந்நதியின் நீர்) முழுதும், சிந்திடாது-(ஒருசிறிதும் கீழே) சிந்தாதபடி, ஒரு சடையினில் கரந்தனன்-தன் ஒரு சடையிலேயே (அடக்கி) மறைத்துவிட்டான்.

தேவ கங்கை, மிக்க செருக்குக்கொண்டு ஆரவாரித்துக் கீழ் நோக்கி விசையுடன் விழுந்து வர, சிவபெருமான் அக்கங்கை நீர் ஒரு சிறிதும் கீழே சிந்தாதவண்ணம், அஃதுள்ள விடமே வெளிப் புலப்படாமல் தனது ஒரு சடைக்குள்ளே அடக்கி அவள் செருக்கையும் அடக்கிவிட்டார் என்க. தேவலோகமும் பிரமலோகமும் அஞ்சும்படி என்றது உயர்வு நவிற்சி.

'கங்கையை ஒரு சடையினிற் கரந்தனன்: ஒப்பு:'கதமாக்கங்கை பாயவொர் வார்சடையை, நீட்டிநின் றுன்றிரு நின்றநெய்த் தானத் திருந்தவனே' (தேவாரம். திருநா. திருநெய்த்தானம்); 'மாக வெள்ள நதிகொண்ட தோர்சடை' (தக்க. 652).

(பி - ம்.) 1. உந்தியம்புய முதித்தவனுலகுமெவ் வுலகும்.
2. இந்திராபதியர்: நடுங்குற; வெருவர: விரைந்து.
3. வந்து தோன்றினன்: வானதி: மலேமகள் புனிதன். (54)

525. புன்னு னித்தரு பனியென வானதி புனிதன்
சென்னி யிற்கரந் தொளித்தலும் வணங்கினன் றிகைத்து
மன்ன னிற்றலும் வருந்தனஞ் சடையள்வா னதியின்
றென்ன விட்டன ஞெருசிறி தவனிபோந் திழிந்தாள்.

'வான் நதி-தேவ கங்கையானவள், புல்நுனி தரு பனியென-புல்லின் நுனியில் படிந்த பனித்துளிபோல (மிகச் சிறிய அளவிலே), புனிதன் சென்னியில்-பரிசுத்த மூர்த்தியாகிய சிவபெருமான் திருச்சடை முடியிலே, கரந்து ஒளித்தலும்-அடங்கி மறைந்த அளவிலே, மன்னன்-பகிரதன், வணங்கினன் திகைத்து நிற்றலும்-(சிவபெருமானை) வணங்கித் திகைத்து நின்றுணுக, (சிவபெருமான் அவனை நோக்கி), 'வருந்தல்-நீ வருந்தாதே; வான் நதி இன்று நம் சடையள் என்ன-தேவகங்கா நதி இப்போது நம் சடையில் அடங்கியுள்ளாள் என்று கூறி, ஒரு சிறிது விட்டனன்—; (அதன்பின் அவள்), அவனி இழிந்து போந்தாள்-தரையில் இறங்கி வரலானுள்.

சென்னி யென்பது ஆகுபெயராய்ச் சடையைக் குறித்து நின்றது. வணங்கினன்: முற்றெச்சம்.

(பி - ம்.) 1. புன்னுனைத்தரு: வரநதி.
2. கரந்தொளித்திட; ஒளித்தலால்; ஒளிதர; ஒளிர்தர.
3. வருந்தலஞ்: வந்தவஞ்; சடையின்; சடையில்; வானதியென்று.
4. விட்டனனொருசிறை: போந்தழிந்தாள்; போயிழந்தாள். (55)

526. இழிந்த கங்கைமுன் மன்னவன் விரைவொடு மேகக்
கழிந்த மன்னவர் கதிபெற முடுகிய கதியால்
அழுந்து மாதவச் சன்னுவின் வேள்வியை யழிப்பக்
கொழுந்துவிட் டெரி வெகுளியன் குடங்கையிற் கொள்ளா.

இழிந்த கங்கை முன்-கீழிறங்கி வந்த கங்கை நதிக்கு முன்னுக, மன்னவன்-பகீரத மன்னன், விரைவொடும் ஏக-விரைவாக காட்டி வழிச்செல்ல, (அக்கங்கையானவள்), கழிந்த மன்னவர் கதி பெற-(சாம்பலாகி) ஒழிந்த சகரர்கள் நல்லகதி அடையுமாறு, முடுகிய கதியால்-மிக விரைந்துவந்த தன் வேகத்தினுல், (இடையிலே), அழுந்தும் மா தவம்-(மனம்) பதிந்த மிக்க தவத்தையுடைய, சன்னுவின் வேள்வியை-சன்னு முனிவனது யாகத்தை, அழிப்ப-கெடுத்திட, (அம் முனிவன்),கொழுந்துவிட்டு எரி வெகுளியன்-கொழுந்துவிட்டெரியும் (தீப்போன்ற) சினமுடையவனுகி, குடங்கையில் கொள்ளா-தனது உள்ளங்கையில் (கங்கை நீர் முழுவதையும்) அடக்கிக்கொண்டு,

இதுவும் அடுத்தகவியும் குளகம்; 'கொள்ளா' என்னும் எச்சம், அடுத்த கவியின் முதலில் உள்ள 'உண்டு உவந்தனன்' என்பதனுடன் முடியும். 'இழிந்த கங்கை' என்றவிடத்து, செருக்கடங்கித்தாழ்வடைந்த என்ற பொருளும் தொனியாற் கொள்ளத்தகும்.

சன்னு-ஜன்ஹு என்ற வடசொல்லின் திரிபு; இவர் குசிகவமிசத்தார்க்குப் பூர்விகர் என்றும், அச்வினீ தேவதைகளுக்குப் பிரியமானவரென்றும் ரிக்வேதம் (1. 116; 111: 58) கூறும் என்பர்.

(பி - ம்.) 1. இழிந்து; இழந்த; விரைவுடன். 2. கழிந்து: கதியாள்.
3. அழிந்து: சானுவின்.
4. வெகுளியான்; வெகுளியின்: குடங்கையிற் கொள்ள; கொண்டான். (56)

527. உண்டு வந்தனன் மறைமுனிக் கணங்கள்கண் டுவப்பக்
கண்டு வேந்தனும் வணங்கிமுன் னிகழ்ந்தன கழறக்
கொண்டு போகெனச் செவிவழிக் கொடுத்தனன் குதித்து
விண்டு நீங்கின ருடலுகு பொடியின்மே வினளே.

(கங்கையை உள்ளங்கையி லடங்கும்படி எடுத்துக்கொண்ட சன்னு முனிவன்), மறை முனி கணங்கள் கண்டு உவப்ப-(உடன் இருந்த) வேதமோதிய முனிவர் கூட்டம் பார்த்து மகிழும்படி, உண்டு உவந்தனன்-(அக்கங்கையை) உண்டுமகிழ்ச்சியடைந்தான்; வேந்தனும் கண்டு-பகீரத மன்னனும் (இந்நிகழ்ச்சியை)நோக்கி, வணங்கி-(சன்னு முனிவனை) வணங்கி, முன் நிகழ்ந்தன கழற-முன்னே நடந்தவற்றை எடுத்துச் சொல்ல, (முனிவன் மனமிரங்கி), 'கொண்டு போக என-நீ கொண்டு போவாயாக' என்று சொல்லி, செவி வழி-(தன் ஒரு) காதின் வழியாக, கொடுத்தனன்-(கங்கையை) வெளிவிட்டான்; (உடனே, கங்கை), குதித்து-கீழே தாவி, விண்டு நீங்கினர்-உயிர் பிரிந்து அழிந்துபோன சகரர்களின், உடல்உகு பொடியில்-உடம்புகள் வெந்து நீருன சாம்பலில், மேவினள்-படிந்து பெருகலானுள்.

கங்கை மிக்க விசைகொண்டு வருங்கால், வழியில் இருந்த சன்னு முனிவனது ஆச்சிரமத்திலே புகுந்து அங்கே நிகழ்ந்த வேள்வி யைச்சிதைத்தமையால்,முனிவன் பெருஞ்சினங்கொண்டு,தன் தவவலி மையால் கங்கையைத் தன் ஒருகையில் அடக்கிப் பருகிவிட, பகீரதன் தான்பட்ட பாடுகள் வீணுயினமை கண்டு வருந்தி, முனிவனை வணங் கித் தன் குறையை விரித்துக்கூறி இரந்துநிற்க, முனிவன் மனமிரங்கிக் கங்கையை மீண்டும் தன் காதின் வழியே வெளிவரச் செய்தான்; சன்னு முனிவனது ஆற்றலால் நிகழ்ந்த அருஞ் செயல் கண்டு உடன் இருந்த முனிவர்கள் யாவரும் வியப்பும் உவப்பும் எய்தினர் என்க.

சன்னு முனிவன் தொடர்பால் கங்கைக்குச் 'சானவி'என்ற ஒரு பெயர் உண்டாயிற்று; 530-ஆம் செய்யுள் காண்க.

கொடுத்தனன் என்றது, பெருக விட்டான் என்றபடி.

(பி - ம்.) 2. கண்ட மன்னவன்: வணங்கி முனிகழ்ந்தன; வணங்கி முன்னிகழ்ந்தது; முன்னிகழ்ந்தவை.
3. செவிவழி கொடுத்தவன் குறித்து: கொடுத்தனன் செவிவழி குறித்து; செவிவழிக் கொடுத்தனன் கொதித்து.
4. உடலுறு: மேயினளே; மேவினனால். (57)

528. நிரைய முற்றுழல் சகரர்க ணெடுங்கதி செல்ல
விரைம லர்பொழிந் தார்த்தன விண்ணவர் குழாங்கள்
முரச முற்றிய பல்லிய முறைமுறை துவைப்ப
அரச னப்பொழு தணிமதி லயோத்திமீண் டடைந்தான்.

(கங்கைநீர் பரந்து பாய்ந்தவுடன்), நிரையம் உற்றுஉழல் சகரர்கள்-நரகத்திலே சேர்ந்துவருந்திய சகரபுத்திரர்கள், நெடு கதி செல்ல-அழியாத நல்ல கதியிலே சென்று சேர, (அதுகண்ட), விண்ணவர் குழாங்கள்-தேவர் கூட்டங்கள், விரை மலர் பொழிந்து-நறுமண முள்ள கற்பகப் பூக்களைச் சொரிந்து, ஆர்த்தன-(உவகையால்) ஆரவாரித்தன; அப்பொழுது—, அரசன்-பகிரத மன்னன், முரசம்-பேரிகைகளும், முற்றிய பல் இயம்-நிறைந்த பலவகை வாத்தியங்களும், முறை முறை துவைப்ப-வரிசை வரிசையாக முழங்க, மீண்டு-திரும்பி வந்து, அணி மதில் அயோத்தி அடைந்தான்-அழகிய மதில்கள் சூழ்ந்த அயோத்தி நகரத்தை அடைந்தான்.

(பி - ம்.) 1. நிரய முற்றிய; நெடுங்கதிச் செல்ல; நெடுங்கதி நெருங்க.
2. மலர்ப்பொழிந்து; மலர்சொரிந்து: ஆர்த்தனர் விண்ணவர் வியந்தார்.
3. முரைசமுற்றிய; முறைமுறை முழங்க.
4. அரைசன்: அணிமதிளயோத்தி; அணிநகரயோத்தி; அயோத்தி மாநகரி சென்றடைந்தான்: வந்தடைந்தான். (58)

529. அண்ட கோளகைக் கப்புறத் தாதியன் றளந்த
புண்ட ரீகமென் மலரிடைப் பிறந்துபூ மகனூர்
கொண்ட தீர்த்தமாய்ப் பகிரதன் றவத்தினுற் கொணர
மண்ட லத்தின்வந் தடைந்ததிம் மாநதி மைந்த.

'மைந்த-சக்கரவர்த்தி திருமகனே!, இ மா நதி-இச்சிறந்த நதியானது, அண்டம் கோளகைக்கு அப்புறத்து-இவ்வண்ட கோளத்துக்கு அப்பால், ஆதி-மூலமாகிய திருமால், அன்று அளந்த-அக்காலத்தே (திரிவிக்கிரமனுகி) அளந்து கொண்ட, மெல் புண்டரீகம் மலரிடை பிறந்து-மென்மையான திருவடித் தாமரையிலே (சீபாத தீர்த்தமாகித்) தோன்றி, பூ மகனூர்-(திருவுந்தித்) தாமரையிலே தோன்றிய பிரமதேவன், கொண்ட-தனது கமண்டலத்திலே ஏற்றுக் கொண்ட, தீர்த்தம் ஆய்-(புண்ணிய) தீர்த்தமாகி, பகிரதன் தவத்தினுல் கொணர-பகிரத மன்னவன் தனது தவத்தினுலே கொண்டுவர, மண் தலத்தின் வந்து அடைந்தது - இம்மண்ணுலகத்தில் வந்து சேர்ந்தது.

திரிவிக்கிரமமூர்த்தியின் திருவடி, சத்தியலோகம்வரை சென்றபோது, பிரமதேவன் தன் கைக் கமண்டலநீரால் அத்திருவடியைத் திருமஞ்சன மாட்டுவிக்க, அந்நீரே கங்கையாகப் பெருகியதென்றும்,

அவ்வாறு தோன்றிய புண்ணிய தீர்த்தத்தைப் பிரமதேவன் மீட்டும் தன் கைக் கமண்டத்தில் ஏற்றுக்கொண்டனனென்றும் கூறுவர்.

இவ்வாருகிய கங்கையின் வரலாற்றைக் கௌசிக முனிவன் இராமபிரானுக்குக் கூறினன். பகிரதன்: குறுக்கல் விகாரம்.

கங்கையின் பிறப்பு : அயோத். 69, 637.

(பி - ம்.) 1. கோளகைபுறத்ததாஅகிலமன்று; கோளகைப் புறத்ததாயகிலமன்று; கோளகைக்கப்புறத்தகிலமன்று; கோளகைக்குப்புறத் தாகிமண்.
2. மென்பதத்திடைப்; மென் மலரடி பிப்றந்த.
3. தீர்த்தமா யரன்கொளப் பகிரதன் கொணர; தவத்தினிற் கொணர.
4. மண்டலத்தில் வந்து; மண்டலத்து வந்து; மண்டலத்தினில் வந்ததிவ் வானதி; வந்தடைந்தது வானதி; மாநதி: மைந்தா. (59)

530. சகரர் தம்பொருட் டருந்தவ நெடும்பக றள்ளிப்
பகிர தன்கொணர்ந் திடுதலாற் பகிரதி யாகி
மகித லத்திடைச் சன்னுவின் செவிவழி வரலால்
நிகரில் சானவி யெனப்பெயர் படைத்ததிந் நீத்தம்.

பகிரதன்-பகீரத மன்னவன், சகரர் தம் பொருட்டு-சகரபுத்திரர்களுக்காக, நெடு பகல்-மிக நீண்ட காலம், அரு தவம் தள்ளி-செய்தற்கரிய தவத்திலே கழித்து, மகிதலத்திடை கொணர்ந்திடுதலால்-இப்பூமிக்குக் கொண்டுவந்ததனல், இ நீத்தம்-இவ்வாருனது, பகிரதி ஆகி-(முதலில்) பாகீரதியென்னும் பெயருடையதாகி,(பின்பு), சன்னுவின் செவி வழி வரலால்-சன்னு முனிவனது காதின் வழியே (வெளிப்பட்டு)வந்ததனல், நிகர் இல் சானவி என பெயர் படைத்தது-ஒப்பில்லாத சானவி எனவும் பெயர் பெற்றதாயிற்று.

கங்கா நதி, பகீரதனது கடுந்தவத்தினுல் பூமிக்குக் கொண்டு வரப்பட்டதனுல் முதலில் 'பாகீரதி' எனவும், பின்பு சன்னு முனிவனுல் உட்கொள்ளப்பட்டு அவன் காதின் வழியே வெளிவந்ததனுல் 'சானவி' எனவும் காரணப் பெயர்கள் பெற்றது எனக் கௌசிக முனிவன் கூறினுன் என்க.

பாகீரதி, சானவி என்பன வடமொழித் தத்திதாந்த நாமங்களின் திரிபு. ஜன்ஹுவின் தொடர்பு பெற்றது ஜான்ஹவி; சானவி என்ருயிற்று. பகீரதன், பாகீரதி என்பன குறுக்கல் விகாரம் பெற்றன. கொணர்ந்திடு: இடு-துணை வினைப்பகுதி.

(பி - ம்.) 1. நெடும்பகற்றள்ளி; நெடும்பகற்றழைத்து; பெரும்பகற்றள்ளி; பெரும் பகறள்ளி.
2. கொணர்ந்திதலால்: பகிரதி. 3. மகிதலத்திடை சானுவின்.
4. சான்னவி; சானுவி; சன்னுவி: எனும் பெயர்: படைத்ததந் நீத்தம்; படைத்தன நீத்தம்; படைத்தவிந் நீத்தம். (60)

531. என்று கூறலும் வியப்பினெ டுவந்தன ரிறைஞ்சிச்
சென்று தீர்ந்தனர் கங்கையை விசாலைவாழ் சிகரக்
குன்று போற்புயத் தரசன்வந் திணையடி குறுக
நின்று நல்லுரை விளம்பிமற் றவ்வயி னீங்கா,

என்று கூறலும்-என்றிவ்வாறு (கங்கையின் வரலாற்றை) முனிவன் கூறி முடித்தவளவில், (இராமலக்குமணர்), வியப்பினெடு-ஆச்சரியத்துடனே, உவந்தனர் - மகிழ்ந்தவர்களாய், கங்கையை இறைஞ்சி-கங்கையாற்றை வணங்க, (பின்பு மூவரும்), சென்று தீர்ந்தனர்-(ஆற்றைக்)கடந்து அக்கரை சேர்ந்தனர்; (அப்போது),விசாலை வாழ்-விசாலை யென்னும் நகரத்தில் வாழ்ந்த, சிகரம் குன்று போல் புயத்து அரசன் வந்து-சிகரங்களையுடைய மலைபோன்ற தோள்களை யுடைய அரசன் (இவர்கள் இருக்குமிடத்திற்கு) வந்து, இணை அடி குறுக-(கௌசிக முனிவனது) திருவடிகளிலே வணங்க, நின்று-அங்கே சிறிது தங்கி, நல்உரை விளம்பி-(அவ்வரசனுடன்)இன்சொற்கள் கூறி அளவளாவி, மற்று-பின்பு, அவயின் நீங்கா-அவ்விடத்தினின்றும் நீங்கிச் சென்று,

இதுவும் அடுத்த கவியும் குளகம்; நீங்கா என்பது, அடுத்த கவியின் இறுதியில் உள்ள 'விதேக நாடு அணைந்தார்' என்பதனோடு முடியும். என்று கூறலும் என்றது முன்பாட்டின் அநுவாதம்.

கங்கையின் வரலாற்றைக் கேட்ட இராம லக்குமணர், மிக்க வியப்பும் மகிழ்ச்சியும் அடைந்து, அதனைத் தொழுதனர். பின்பு மூவரும் கங்கையாற்றைக் கடந்து அக்கரை சேர, அங்கே அண்மையில் இருந்த விசாலை யென்னும் நகரத்தரசன் இவர்கள் வருகையைக் கேள்வியுற்று வந்து முனிவரை வணங்கி, இராம லக்குமணர்களைப் பற்றி விசாரித்து அறிந்து அவர்களை உபசரித்து அனுப்ப, அப்பால் அவர்கள் சென்று விதேக நாட்டின் எல்லையைச் சார்ந்தனர்.

விசாலா நகரம், இக்ஷ்வாகு மன்னனுக்கு அலம்புசை யென்பவளிடம் பிறந்த 'விசாலன்' என்னும் அரசனல் நிருமிக்கப்பட்டதாகலின் அப்பெயர் பெற்றது. அவனுக்குப் பின் அவன் பரம்பரையினர் அங்கேயிருந்து ஆண்டுவந்தனர். அப்பரம்பரையில் வந்த சுமதி என்பவனுல் இப்போது கௌசிக முனிவனும் இராமலக்குமணரும் உபசரிக்கப்பெற்றனர் என்பர். இந்நகரம் இக்காலத்தில் உஜ்ஜயினி என்று வழங்கும் நகரமாகலாம் என்பது சிலர் கருத்து.

கௌசிக முனிவன் முதலிய மூவரும் அயோத்தியினின்றும் புறப்பட்டுத் தெற்கு நோக்கி வந்து சித்தாச்சிரமம் சேருமுன், இடையே கங்கையைக் கடந்தமை முன்பு (கைய்டைப். 24.) கூறப்பட்டது; வேள்வி முற்றியபின் அவர்கள் மிதிலையைச் சேரும் பொருட்டு வடக்கு நோக்கிச் செல்லுகையில்; மீண்டும் கங்கையைக்

கடந்தமை இங்கே கூறப்படுகின்றது. இவ்வாறு இருமுறை கங்கையைக் கடந்தமை வான்மீகத்தும் கூறப்படுகின்றது; கங்கையின் போக்கு அவ்வாறமைந்துள்ளதுபோலும். முன்னே கடக்கப்பட்டது கங்கை யென்றும் சரயுவென்றும் கருத்து வேறுபாடுள்ளது; ஆராயத் தக்கது.

இவ்விடத்துச் சில பிரதிகளில் கங்கைப் படலம் என்பதும் வேறு சிலவற்றில் கங்கை வரலாற்றுப் படலம் என்பதும் முடிவுற, மேலே அகலிகைப் படலம் என்றும் அகலிகை சாபந்தீர் படலம் எனவும் தொடங்கும்.

(பி - ம்.) 1. வியப்பினோடு; வியப்பொடும்: உவந்தனன்;உவந்தவர்; அருந்தவன்; எழுந்தனன்: இறைஞ்சச்.
2. தீர்ந்தனன்; விசாலவாழ்; விசாலவான்.
3. குன்றுபோற்குணத் தரசன் வந்து; குணத்தானெதிர்; அடியிணை; எதிரடி: குறுகி.
4. விளம்ப: இவ்வயின்; இவைவயின்; நீங்கார். (61)

### விதேக நாட்டின் சிறப்பு

532. பள்ளி நீங்கிய பங்கயப் பழனநன் னுரை
வெள்ள வான்களை களைவுறு கடைசியர் மிளிர்ந்த
கள்ள வாணெடுங் கண்ணிழல் க்யலெனக் கருதா
அள்ளி நாணுறு மகன்பணை விதேகநா டணைந்தார்.

பழனம்-வயல்களிலே, பங்கயம் பள்ளி நீங்கிய-தாமரையாகிய படுக்கையினின்றும் (அப்போதுதான் விழித்து) எழுந்த, நல் நாரை-நல்ல நாரையானது, வெள்ளம் - (அங்குள்ள) நீர்ப்பெருக்கிலே, (தோன்றிய),வான்களை களைவு உறு கடைசியர்-வலியகளைகளை யெடுக்கலுற்ற உழத்தியர்களின், மிளிர்ந்த-பிறழ்தலுடைய, கள்ளம் வாள் நெடு கண் நிழல்-வஞ்சனையுடையனவாய் வாள்போல் நீண்ட கண்களின் சாயையை, கயல் என கருதா-கயல் மீன்கள் என்று நினைத்து, அள்ளி-(தன் அலகினாலே கொத்தி)எடுக்க முயன்று, (நிழல் அலகுக்கு அகப்படாமையினால்), நாண் உறும்-வெட்கமடைதற்கு இடமான, (வள மிக்க), விதேகநாடு அணைந்தார் - விதேகநாட்டு எல்லையை (மூவரும்) அணுகினர்.

மிதிலை நகரத்தைக் குறிக்கொண்டு சென்ற மூவரும் அதனைத் தன்னுட் கொண்ட விதேக நாட்டெல்லையை அணுகினர் என்க.

இதுமுதல் ஏழு கவிகளால் சீதாபிரர்ட்டி அவதரித்தற்கிடமான விதேக நாட்டின் சிறப்புக்களை ஆசிரியர் அழகுறக் கூறுகின்றார். இவை அறிந்து இன்புறுதற்குரியன. வெள்ளம், மிகுதியுமாம்.

(பி - ம்) 2. வெள்ளி வான்களை: மெள்ள வான்களை; களைவுறும்; கடவுறும்; தடவிய; கடைச்சியர்: மிளிர்ந்து; மிளிர்வேல்.
3. வாளெடுங்; கண்ணிணை; கண்ணுழல்: கருதி: கவரா; கதுவா.
4. அள்ள; உள்ள: நாணுமவ்: மிதுலை நாடு: அடைந்தார்; உற்றார். (62)

## சோலைகள்

533. வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க
அரும்பு நாண்மல ரசோகுக ளலர்விளக் கெடுப்ப
நரம்பி னுன்றதேன் றுரைகொ ணறுமலர் யாழின்
சுரும்பு பாண்செயத் தோகைநின் றுடுவ சோலை.

சோலை-(அவ்விதேக நாட்டுச்) சோலைகளில், வரம்பு இல்-அளவற்ற, வான் சிறை மதகுகள்-பெரிய நீர்நிலைகளின் மதகுகள், முழவு ஒலி வழங்க-மத்தள ஓசையைத் தரவும், அரும்பு நாள் மலர்-(அவ்வப் போது)தோன்றுகின்ற புதியபூக்களை உடைய, அசோகுகள்-அசோக மரங்கள், அலர் விளக்கு எடுப்ப-விளங்குகின்ற (அப்பூக்களாகிய) விளக்குக்களை ஏந்தவும், நரம்பின்நான்ற-(யாழ்) நரம்புபோல(நீண்டு) ஒழுகுகின்ற, தேன் தாரை கொள்-தேனொழுக்கைக் கொண்ட, நறுமலர் யாழின்-மணமுள்ள பூக்களாகிய யாழினிடத்தே, சுரும்பு பாண் செய - வண்டுகள் இசை பசடவும், தோகை நின்று ஆடுவ-மயில்கள் (தோகையை விரித்து) நின்று ஆடுவனவாகும்.

சோலையை நடனஅரங்காகவும், மயில்களை அவ்வரங்கில் ஆடும் மகளிராகவும், ஆடலுக்கு அங்கமாக, மதகுகளில் நீர் பாய்வதனாலுண்டாகும் ஒலியை முழவொலியாகவும், பூக்களில் வண்டுகள் செய்யும் ரீங்கார வொலியை யாழொலியாகவும் உருவகித்துக் கூறுகின்றார். பூங்கொத்தை யாழ்ப் பத்தராகவும், அக்கொத்தினின்றும் ஒழுகும் தேனொழுக்கை யாழ் நரம்பாகவும், வண்டுகள் அவ்வியாழை இசைப்பனவாகவும் உருவகித்துள்ள நுண்மை மிக்க இன்பம் பயப்பதாகும். அடர்ந்து இருண்ட சோலையாதலின், பகலிலும் விளக்கொளி வேண்டப்படும்; எனவே, அசோக மலர்களை விளக்கொளியாக்கினர்; அதற்கேற்ப, அவ்விளக்குக்களை யேந்தி நிற்கும் மகளிராக அசோக மரங்களைக் கொள்ளலாம். வண்டுகள் யாழிசைத்தல்போல, மதகுகள் முழவொலி செய்வன.

இருண்ட சோலையாகிய அரங்கிலே, அசோக மரங்களாகிய பெண்கள், பூக்களாகிய விளக்கை யேந்தி நிற்க, மதகுகளில் நீர்பாய்வதனலாகிய ஓசை மத்தள முழக்கமாகவும், தேனொழுகும் பூங்கொத்தாகிய யாழினிடத்தே வண்டுகள் பாடும் ஒலி யாழொலியாகவும் நிகழ, மயில்கள் நடன மாதர்போல ஆடுகின்றன என்க.

சிறை: ஆகுபெயர்; சிறை செய்யப்பெற்ற நீரைக் குறிக்கும். அரும்பு, அலர்: வினைத்தொகைகள்.

அசோக மலர் விளக்கு: ஒப்பு: 'பூந்தளம் பிண்டியெரிபோல் விரியும் பொழிலிடமே' (இறை. மேற்.). யாழ் நரம்புக்குத் தேனெ மூக்கு: ஒப்பு. 'தீந்தேன், அணிபெற வொழுகி யன்ன வமிழ்துறழ் நரம்பி னல்யாழ்' (சீவக. 722); சிறுபாண். 226-7; புறநா. 70: 1-ம் காண்க. மயில்களின் ஆடல்: 36. மு. ஒப்பு: அகநா. 82; 1-10. இச் செய்யுளுடன் இக்காண்டம் நாட்டுப் படலம் 4-ஆம் செய்யுளையும் மிதிலைக் காட்சிப் படலம் 11-ஆம் செய்யுளையும் ஒப்பிடுக.

(பி - ம்.) 1. வரம்பின்: முழவென: வயங்க; முழங்க. 2. விரும்புநாண் மலர்: அசோகங்கள்; அவிர்விளக்கு: அனல்விளக்கு; நிலை விளக்கு. 3. தாரைகள்; தாரையின்: நறுமலரியாழிற். 4. பாண்செய்த; பண்செயத்: ஆடின. (63)

இங்கே ஒரு பாடல் சில பிரதிகளிற் காண்பது:

மதும லைந்தவெண் டரளமும் (வயிரமு) மணியுங்
கதிர்வ ளஞ்செயும் பவளமுங் கழுத்திடைக் காட்டி
யெதிர்ம லைந்தபைங் கூந்தலை யினவண்டு (நணுகப்)
புதும ணஞ்செயு மடந்தையர் போன்றன பூகம்.

கழனிகள்

534. பட்ட வாணுதன் மடந்தையர் பார்ப்பெனுந் தூதால்
எட்ட வாதரித் துழல்பவ ரிதயங்கள் வெறுப்ப
வட்ட நாண்மரை மலரின்மேல் வயலிடை மள்ளர்
கட்ட காவியங் கட்கிடை காட்டுவ கழனி.

பட்டம்-பட்டத்தை யணிந்த, வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றியையுடைய, மடந்தையர்-பெண்களின், பார்ப்பு எனும் தூதால்-(கண்) பார்வை என்ற தூதினால், (உந்தப்பட்டு), எட்ட ஆதரித்து உழல்பவர்-அவர்களைக் கிட்டவிரும்பித்திரிகின்ற(காமுகராகிய) ஆடவர்களின், இதயங்கள் வெறுப்ப-மனம் வெறுப்படையும் வண்ணம், கழனி-(அந்நாட்டு) மருத நிலப்பரப்பில், வயல் இடை மள்ளர்-வயலில் வேலை செய்யும் உழவர்கள், கட்ட காவி-(களையாகப்) பறித்தெறிந்த நீலோற்பலப் பூக்கள், (அயலிடத்து நீர் நிலையில் உள்ள), வட்டம் நாள் மரை மலரின்மேல்-(பெண்களின் முகம்போல) வட்ட வடிவமான புதிய தாமரை மலர்களின் மேல் (படிந்து), அம் கண் கிடை காட்டுவ-(பெண்களின்) அழகிய கண்கள் போலக் காணப்படுவனவாகும்.

பட்டம்-மகளிர் நெற்றியில் அணியும் அணி வகை. பார்ப்பு-பார்வை. கிடை-ஒப்பு; சீவக. 731. 2263.

வயல்களில் களை யெடுக்கும் உழவர்கள், களையாகப் பறித்தெறிந்த நீலோற்பலப் பூக்கள் போய்ப் பக்கத்து நீர்நிலையில் உள்ள புதிய தாமரைப் பூக்களின்மேல் படிதலால், கழுத்தளவும் நீரிலே தம் உடல் மறைய, முகம் வெளியே புலப்படும்படி நீரில் நின்ற பெண்கள்

தம் கண் பார்வையைச் செலுத்தும் தன்மையைத் தோற்றுவித்தன; பெண்களை நெருங்கி அணையக் கருதி அவர்கள் கடைக்கண் பார்வைக்குக் காத்திருக்கும் ஆடவர்கள், அத்தோற்றத்தைக் கண்டு மயங்கி, ஆவலுடன் கிட்டவந்தபோது, உண்மை தெரிந்து, தம்ஆசை வீணானமை குறித்து மனம் வெறுப்படையும்படி செய்தன என்க. இதற்கு வேறு வகையாகவும் பொருள் கூறுவர். இப்பாடல் மயக்க வணி கொண்டது,

(பி - ம்.) 1. பார்ப்படும்; பார்ப்பிடும்; பார்வையே: தூதா.
2. ஆதரத் துழல்பவர்; ஆதரிக்கின்றவர்: இதயமும்; இதயமே: கொதிப்ப.
3. மலரின்மேன் மள்ளர்கள் மருவிக்.
4. காவிகள்; கண்கடை; கண்படை; கட்கடை; களிப்பன; கவிப்பன: விளிப்பன. (64)

## பொய்கைகள்

535. தூவி யன்னந்த மினமென்று நடைகண்டு தொடரக்
கூவு மென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடுற வொன்றொடொன் றூடிப்
பூவு றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை.

கூவும் மென் குயில்-(இனிமையாகக்) கூவுகின்றமென்மையான குயில்களின் குரல் போன்ற, குதலையர்-இனிய சொற்களையுடைய மகளிர், நடை கண்டு-(தம்முடைய) நடையழகைக் கண்டு, தூவி அன்னம்-(அழகிய) சிறகுகளையுடைய அன்னப்பறவைகள், தம் இனம் என்று தொடர-தம்மினமான அன்னங்கள் என்று (கருதிப்) பின் தொடர்ந்துவர, (சென்று),குடைந்த-மூழ்கி விளையாடின,புனல்வாய்-நீரிலே (தங்குகின்ற), புள்-(பலவாகிய) நீர்ப் பறவைகள், ஓவு இல் குங்குமம் சுவடு உற-நீங்குதலில்லாத குங்குமக் குழம்பின் அடையாளங்கள் (தம்மேல்) பொருந்துதலால், ஒன்றொடு ஒன்று ஊடி-ஒன்றுக்கொன்று பிணங்கி, பூ உறங்கினும்-(அவை தங்குதற்கு இடமான) பூக்கள் உறங்கினாலும், (குவிந்தாலும்), உறங்காதன-தாம் (பூசலிட்டுக்) கண்ணுறங்காதிருக்கப்பெற்றன, பொய்கை-(அந்நாட்டிலுள்ள) நீர்நிலைகள்.

தம் நடையழகைக்கண்டு அன்னங்கள் பின்தொடர என்றது பெண்களுக்குச்சிறப்புக்கூறியவாறு. அப்பெண்கள் நீர்விளையாட்டிலே அவர்கள் மேனியி லணிந்த குங்குமச் சேறு நீரில் கரைந்து கலந்து அங்குள்ள பறவைகளின் மேலே படிதலால், அவை செந்நிறமும் மணமும் பொருந்த, பறவை ஒவ்வொன்றும் தன் வேறுபாடு அறியாமல் பிறவற்றினிடத்துள்ள வேறுபாடு கண்டு,அவை வேறுசாதிப் பறவையெனக் கருதிப் பிணங்குதலுற்றனவென்க. பிற சாதிப்பறவைகள் தம்மிடையே வந்து கலக்கப்பெற்றால் அவற்றோடு பிணங்கிக் கூவிக்

கலகமிடுதல் பறவைகளின் இயல்பு. இவ்வாறன்றி, ஆண் பறவைகளும் பெண் பறவைகளும் தமக்குள் ஊடின என்றலும் ஆம். இப்பாட்டு மயக்கவணி கொண்டது.

பூஉறங்குதல்-தாமரை முதலியன(இரவிலே)குவிதல்.இரவிலே அடங்கி உறங்கும் இயல்புடைய பறவைகள், இப்பிணக்கினுல் தாம் தங்கும் பூக்கள் குவிதலையும் உணராமல் கூவிக் கலகமிட்டு உறங்காவாயின எனப் புனைந்து கூறுகின்முர்.

பின்னே, செயற்கையால் உண்டாகும் குளங்களின் வருணனை வேறு கூறுதலால், இங்கே 'பொய்கை' என்றது, இயற்கையில் உண்டான நீர்நிலைகளை என்க.

(பி - ம்.) 1. தம்மின மென்று; தமினமென; தனினமென்று; தொடரும்.
2. கூவுமென்குரல். 3. ஒன்ருேடொன்று. (65)

'செய்ய வாய்' (1025) என்ற செய்யுள் இதனையடுத்துச் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

536. முறையி னின்முது மேதியின் முலைவழி பாலும்
துறையி னின்றுயர் மாங்கனி தூங்கிய சாறும்
அறையு மென்கரும் பாட்டிய வமுதமு மழிதேம்
நறையு மல்லது நளிர்புனல் பெருகல நதிகள்.

நதிகள்-அந்நாட்டு யாறுகளில், முது மேதியின் முலை வழி பாலும்-முதிர்ந்த எருமைகளின்முலைகளினின்றும் சோர்கின்றபாலும், துறையில்-நீர்த்துறைகளிலே,நின்று உயர்-ஓங்கி(வளர்ந்து) நிற்கின்ற, மா கனி தூங்கிய சாறும்-மாமரங்களின் (கனிந்த) பழங்களினின்றும் வடிகின்ற (இனிய) சாறும், அறையும்-(துண்டங்களாக) வெட்டப்படுகிற, மென் கரும்பு ஆட்டிய அமுதமும்-மென்மையான கரும்புகளை (ஆலையிலிட்டு) ஆட்டுவதனுல் வரும் அமுதம் போன்ற சாறும், அழி தேம் நறையும்-(தேன்அடைகள்) சிதைவதனுல் ஒடும் இனிய தேனும், முறையினில்-ஒன்றன்பின் ஒன்ருக, (பெருகல்) அல்லது-பெருகி வருதலை யன்றி, நளிர் புனல் பெருகல-குளிர்ந்த நீர் பெருகி வருதல் இல்லை;

ஆறுகளில் வெள்ள நீர்போல எருமைப் பாலும், மாம்பழச் சாறும், கருப்பஞ் சாறும், தேனும் முறையே பெருகிவரும் என்றது வளமிகுதியைப் புலப்படுத்த உயர்வு நவிற்சியாகக் கூறியவாரும். மாலைக் காலத்தில் எருமைகளுக்குத் தம் கன்றுகளின் நினைவு வரும்போது பால் சுரந்து முலைவழியே சோர்தல் இயல்பு; 45-ஆம் பாடலின் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. முறையினன்முது; முறையினன்முலை; முறையின் மேதியின் முலைவழி; முலையழி: முழால்வழி; வழிதரு; இழிதரு; சுரந்தெழு: இழிபால்; இழிவும்; பிழியும்; அமிர்தும்.

2. மரங்கனி; தூங்குயர்.
3. அறையி னன்கரும்பு; ஆடிய: இழிதேம்; அலதேம்.
4. நறவு மல்லன: நளிபுனல்; பெருகல நளிர்புனல்; நளிர்புனல் பெருகலா; பெருகில; பெருக்கெலாம் திகழ. (66)

நீரோடைகள்

537. இழைக்கு நுண்ணிடை யிடைதர முகடுயர் கொங்கை
மழைக்கண் மங்கைய ரரங்கினில் வயிரியர் முழவம்
முழக்கு மின்னிசை வெருவிய மோட்டிள மேதி
உழக்க வாளைகள் பாளையிற் குதிப்பன வோடை.

ஓடை-(அந்நாட்டு) நீரோடைகளிலே, இழைக்கும் நுண் இடை இடைதர-நூலிழையினும் மெல்லிய(தம்)இடையானது வருந்தும்படி, முகடு உயர் கொங்கை-மலைபோல் நிமிர்ந்த தனங்களையும், மழை கண்-குளிர்ந்த கண்களையுமுடைய, மங்கையர் அரங்கினில்-பெண்கள் (நாட்டிய மாடும்) அரங்கிலே, வயிரியர் முழவம் முழக்கும் இன் இசை வெருவிய-கூத்தர்கள் மத்தளத்தை முழக்கும் இனிய ஓசைக்கு வெருண்ட, மோடு இள மேதி-பெரிய இளமையான எருமைகள், உழக்க-(போய்விழுந்து) உழக்குவதனால், வாளைகள்-(அங்குள்ள)வாளை மீன்கள்,(அஞ்சி), பாளையில் குதிப்பன-தென்னை, பாக்கு ஆகியவற்றின் பாளையில் (போய்த் தங்கும்படி) தாவிக் குதிப்பனவாகும்.

மங்கையர் ஆடல் நிகழ்ச்சியைக் எடுத்துக்கூறியது,மக்கள் கவலையின்றி இன்பமாகப் பொழுது கழித்தல் கூறியவாறும். வாளைகள் பாளையிற் குதிப்பன என்றதனால் நீர்வளச் சிறப்புக் கூறப்பட்டது. ஆடலுக்கு மத்தளம் இன்றிமையாத அங்கமாகும்.

வயிரியர்-கூத்தர், வாத்தியகாரர்; 'மண்ணமைமுழவின் வயிரியர்' (புறநா. 164: 12); இசை வெருவிய - இசைக்கு வெருவிய. இழைக்கும்-இழையினும்: உருபு மயக்கம்.வாளைகள் பாளைகளிலுள்ள மதுவைப் பருகி மதர்க்கும்; (56); மழைக்கண்: சுந்தர.. 335.

(பி - ம்.) 1. இழையணி: நுண்ணிழை: இடர்தர: இழையணி முகடுயர் கொங்கை.
2. வயிரயாழரவம்; வயிரியாழ் முழவம்; மகரயாழ்முழவம்.
3. உழக்கியின்னிசை: மோட்டிள மூரி; மோட்டிள வெருமை.
4. பாளையிற்பாய்வன. (67)

குளங்கள்

538. படைநெ டுங்கண்வா ளுறைபுகப் படர்புனன் மூழ்கிக்
கடைய முன்கடற் செழுந்திரு வெழும்படி காட்டி
மிடையும் வெள்வளை புள்ளொடு மொலிப்பமெல் லியலார்
குடைய வண்டினங் கடிமலர் குடைவன குளங்கள்.

குளங்கள்-(அந்நாட்டிலுள்ள) குளங்களில், மெல் இயலார்-மென்மையான சாயலையுடைய பெண்கள், மிடையும் வெள்வளை-(தம் கைகளில்) செறிந்த வெண்மையான வளையல்கள், புள்ளொடும் ஒலிப்ப-நீர்ப்பறவைகளின் குரலுக்கொப்பாக ஒலிக்கவும், நெடு கண் வாள் படை-(தம்முடைய) நீண்ட கண்களாகிய வாளாயுதங்கள், உறை புக-(இமைகளாகிய) உறைக்குள்ளே புகுந்து மறையவும், படர் புனல் மூழ்கி-பரந்த நீரிலே முழுகி, (எழும்போது),முன் கடல் கடைய செழு திரு எழும்படி காட்டி-முன்னே திருப்பாற் கடலைக் கடைந்த போது (அதினின்றும்) அழகு மிக்க இலக்குமிதேவி மேலெழுந்த தன்மையைத் தோற்றுவித்துக்கொண்டு, குடைய-நீராட, வண்டு இனம்-தேன் வண்டுக் கூட்டங்கள், கடி மலர் குடைவன-மணமுள்ள பூக்களை (மதுவுண்ணும் பொருட்டு)க் கிண்டுவனவாகும்.

விதேக நாட்டுக் குளங்களைப் பாற்கடலுக்கொப்பாகவும், அந் நாட்டுப்பெண்களை இலக்குமிக் கொப்பாகவும் வைத்து,அப்பெண்கள் குளங்களிலே நீரில் மூழ்கி எழும்போது, திருப்பாற் கடலினின்றும் இலக்குமிதேவி மேலெழுந்த தோற்றத்தை நினைப்பூட்டுவதாகக் கூறு கின்றார். பெண்களின் கண்களை வாளாக உருவகித்து, உறைக்கு உருவகம் கூறாமையின், இஃது ஏகதேச வுருவகம். நீராடும்போது கண் களை மூடிக்கொள்ளுதல் இயல்பாகலின், வாள் உறைபுக என்றார். நீரா டும்போது, வாட்படைக்குரிய தொழில் நிகழ்ச்சி இன்மையின், அது உறை புகுகின்றது.இனி, வாளில் உறை (நீர்த்துளிகள்) புக என்றலும் ஒன்று. நீராடுதல்,கிண்டுதல் ஆகிய இரு தொழில்களையும் குறிக்கு மாறு 'குடைதல்' என்ற சொல் அமைந்திருத்தல் ஓர் அழகு தருகின் றது. வெள் வளை-சங்கு வளையல்கள்; புள்-ஒருவகை வளையல் எனக் கோடலும் ஆம்; 'புட்கை போகிய புன்றலை மகார்' (மலைபடு. 253).

(பி - ம்.) 1. படைநெடுங் கண்கள்; படர்நெடுங்கண்கள்: மூழ்கக்.
2. கடையுமுன் கடல்; கடையுநன்கடல்; கடைய நன்கடல்; கடையு மொண்கடல்; கடைபுனற்கடல்: செந்திரு: காட்ட.
3. இடையும்: ஒள்வளை.
4. குடையும்: வண்டுகள்; மடிமலர் குடைவன ருழாங்கள். (68)

மூவரும் அகலிகையின் கல்லுருவைக் காணல்

539. இனைய நாட்டிடை யினிதுசென் றிஞ்சிசூழ் மிதிலைப்
புனையு நீள்கொடிப் புரிசையின் புறத்துவந் திருத்தார்
மனையின் மாட்சியை யழித்துயர் மாதவன் பன்னி
கனையு மோட்டுயர் கருங்கலோர் வெள்ளிடைக் கண்டார்.

இனைய நாடு இடை இனிது சென்று-இத்தகைய (வளமுடைய) விதேக நாட்டினூடே (மூவரும்) இன்பமாகப் போய், இஞ்சி சூழ் மிதிலை-மதில்கள் சூழ்ந்த மிதிலை நகரத்தினது, புனையும் நீள் கொடி-

அலங்கரிக்கப்பட்ட உயர்ந்த கொடிகளையுடைய, புரிசையின் புறத்து-வெளி மதிலின் புறத்தே, வந்து இறுத்தார்-வந்து தங்கினர்; (அங்கே), ஓர் வெள் இடை-ஒரு வெளியிடத்திலே, மனையின் மாட்சியை அழித்து - இல்லறத்திற்குரிய மாண்பாகிய கற்பினைக் கெடுத்துக் கொண்டதனால், உயர் மாதவன் பன்னி-சிறந்த பெருந் தவமுடைய கௌதம முனிவனது மனைவியாகிய அகலிகை (அடைந்த), கனையும் மோடு உயர் கருங்கல்-செறிவுடையதாய் மிக உயர்ந்து தோன்றிய கருங்கல்லுருவை, கண்டார்-(மூவரும்) பார்த்தார்கள்.

இஞ்சி, புரிசை என்பன ஒருபொருட்சொற்களாதலின், 'இஞ்சி' என்பதற்கு அகமதில், இடைமதில், புறமதில் என்றவை அடங்கப் பன்மையாகவும், புரிசை என்பதற்குப் புறமதில் எனவும் பொருளுரைக்கப்பட்டது. அழித்து: செயவெனெச்சத்திரிபு. பன்னி: பத்நி என்ற வடசொல்லின் திரிபு. மோட்டுயர்: ஒரு பொருட் பன்மொழி.

கௌசிக முனிவன் முதலிய மூவரும் மிதிலையின் புறமதிற் புறத்தையடைந்தபோது, அங்கே ஓரிடத்தில், சாபத்தால் அகலிகை கல்லுருவாகிக் கிடந்த தோற்றத்தைக் கண்டனர் என்க.

வெள்ளிடை: ஆரணிய. 1123.

(பி - ம்.) 1. நாட்டினை; நாட்டினில்: மிதுலை.
2. புனையும் வார்கொடிப்: புரிசையிற்: வந்துற்றார்.
3. மாட்சிமை: அழித்திழி; அழிந்திழி: மாட்சியைப் பழித்துயர்: மாதவப் பன்னி; பன்னிக்.
4. கனைய: மேட்டுயர்: வெள்ளிடை கண்டார். (69)

## அகலிகை கல்லுருவம் மாறி எழுதல்

540. கண்ட கன்மிசைக் காகுத்தன் கழற்றுகள் கதுவ
உண்ட பேதைமை மயக்கற வேறுபட் டுருவம்
கொண்டு மெய்யுணர் பவன்கழல் கூடிய தொப்பப்
பண்டை வண்ணமாய் நின்றனண் மாமுனி பணிப்பான்.

கண்ட கல் மிசை-அவர்கள்கண்ட கல்லுருவத்தின்மீது, காகுத்தன் கழல் துகள் கதுவ-இராமபிரானது திருவடித் துகள் (சென்று) படிந்தவுடனே, மெய் உணர்பவன்-உண்மைப் பொருளை அறிய முயலும் ஆன்மா, (அம்மெய்யுணர்வினால்), உண்ட பேதைமை மயக்கு அற-முன்பு தான் கொண்டிருந்த அஞ்ஞான மயக்கம் தீரப்பெற்று, வேறுபட்ட உருவம்கொண்டு-மாயையினின்றும் விடுபட்ட தன் உண்மையுருவை அடைந்து, கழல் கூடியது ஒப்ப-இறைவன் திருவடிகளிலே ஒன்றும் தன்மைபோல, பண்டை வண்ணம் ஆய் நின்றனள்-(அகலிகையும்) தன் முன்னைய உருவைப் பெற்று (எழுந்து) நின்றாள்; (அப்போது), மாமுனி-பெருமை மிக்க கௌசிக முனிவன், பணிப்பான்-சொல்லலானான்:

வேறுபட்டுருவம்: தொகுத்தல் விகாரம்.

இயற்கையில் தூய்மையுடைய ஆன்மா, மாயையாலாகிய அஞ்ஞான வசப்பட்டு, கன்ம சரீரத்தில் நின்று உழலும்போது, அதி னின்றும் விடுபட முயன்று அஞ்ஞானம் நீங்கி மெய்யுணர்வு பெற்ற பின், இறைவன் திருவடிகளிலே கலக்கும் பேறு பெறும். அதுபோல, தூய்மையுடைய அகலிகை, இடையே நேர்ந்த குற்றத்தால் சாப மெய்திக் கல்லுருவாகிக் கிடக்க, இப்போது இராமபிரான் திருவடித் துகளாலே சாபந் தீர்ந்து பண்டை இயற்கையுருப் பெற்றுத் தன் பதியை மீண்டும் கூடுதற்குரிய தன்மையுடையவளானுள் என்க. இவ்வொப்புமையின் நுட்பமும் அழகும் ஓர்ந்தின்புறுதற்குரியன.

'அவள் பெண்ணுருவாய் நின்றது எப்படியிருந்ததென்றுல், சித்துருபமாய் இருந்த ஆத்மாவானது மாயையினுலே சனன மரணங் களுக்குள்ளாகிப் பின்பு பழைய வினைகள் நீங்கிப் பூர்வமான கர்த் தாவினுடைய திருவடியைச் சேர்ந்து பரிசுத்த ஆத்மாவாக நின்றது போலிருந்தது' (ஒரு பழைய உரை.)

இராமபிரான் திருவடிப் பெருமை: 551: 741; கிட்கிந். 83.

(பி - ம்.) 2. விண்டபேதைமை: மயக்கிட; அடக்கிட; மயக்கினுல்; மயக்குற! அகற்றிட.
3. கொண்ட; கொண்டல்; மெய்யுணர் புனைகழல்; மெய்யுண ரவன்கழல்; மெய்யுணர் வவன்கழல்; கூட்டிய தொப்ப.
4. வண்ணத்தள்; வண்ணத்தின்: ஆயினள்: பணித்தான்; பணிப்பால்; பணியால். (70)

## கோசிக முனிவன் அகலிகையை இராமபிரானுக்கு அறிவித்தல்

(வேறு)

541. மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை யிழித்தோன் மைந்த
மேயின வுவகை யோடு மின்னென வொடுங்கி நின்ருள்
தீவினை நயந்து செய்த தேவர்கோ மாற்குச் செங்கண்
ஆயிர மளித்தோன் பன்னி யகலிகை யாகு மென்ருன்.

(முனிவன் இராமபிரானை நோக்கி),'மா இரு விசும்பில் கங்கை- மிகப்பெரிய ஆகாயத்திலே (தேவருலகத்திலே) இருந்த கங்கையை, மண் மிசை இழித்தோன்-பூமியிலே இறங்கச் செய்தவனுன பகீரத னுடைய, மைந்த-வழித்தோன்றலே! மேயின உவகையோடும்-(இப் போது) உண்டான மகிழ்ச்சியுடனே, மின் என-மின்னற் கொடி போல, ஒடுங்கி நின்ருள்-பணிவுடன் நிற்பவளாகிய இவள், தீவினை நயந்து செய்த-(முன்னே) தீச்செயலை விரும்பிச் செய்த, தேவர் கோமாற்கு-தேவராசனுன இந்திரனுக்கு, ஆயிரம் செம் கண் அளித் தோன் பன்னி-(தன் தவப்பெருமையால் அவனுடம்பெங்கும்) அழகிய ஆயிரம் கண்கள் அமையச் செய்த கௌதம முனிவன் மனைவியான,

அகலிகை ஆகும்-அகலிகையாவள்' என்ருன்-என்று கூறினுன்.

மாயிரு: மீமிசைச் சொல்.

பிறர் செய்தற்கரிய செயலைச் சோர்வின்றி மிகமுயன்று செய்து முடித்த சிறப்புடையவன் பகீரதன்; 'அவன் வழித்தோன்றியவனே' என இராமபிரானை விளித்தது, அப்பகீரதனினும் மேம்பட்ட திறலுடைமையைக் குறிக்கும். தீவினை செய்த என்னுது, 'நயந்து செய்த' என்றது, இது தீவினை என்று அறிந்தும் அதனை விரும்பிச் செய்தமையைக் குறிக்கும்.

மிதிலைக்குச்செல்லும் வழியில் பாழடைந்த ஓர் ஆச்சிரமத்தைக் கண்ட இராமபிரான், அதைக் குறித்து முனிவனைக் கேட்க, முனிவன், அது கௌதம முனிவனது பழைய ஆச்சிரமமென்று கூறிக் குமரரை அங்கு அழைத்துச் சென்று, அங்கே கல்லுருவாய்க் கிடந்த அகலிகையின் வரலாற்றை அறிவித்து, அவள் சாபத்தை இராமபிராஞல் தீர்க்கச் செய்ததாக வான்மீகம் கூறும். இந்திரனுக்குக் கௌதம முனிவன் கொடுத்த சாபம் அங்கே வேறுவகையாகக் கூறப்படும். விசும்பிற் கங்கை மண்மிசை யிழித்தோன்: ஒப்பு. அயோத். 279. பகீரதன் கங்கையைக்கொணர்ந்த வரலாறு முன்னே 514-528 கவிகளில் விரிவாகக் கூறப்பட்டமை காண்க.

(பா - ம.) 1. மாயிரும்: விசும்பின்: மண்மிசைக் கொணர்ந்தோன்; மண்மிசைத் தந்தோன்; மண்மிசைப் புணர்த்தோன்: மைந்தா.
2. மேவின: ஒதுங்கிநின்ருள்; ஒதுங்குகின்ருள்.
3. தீயினைநயத்தல் செய்த; தீயன வினைப்பயத்தால்: தேவர்கோன் றனக்குச்; தேவர்கோமகற்குச்.
4. அளித்தான் பன்னி: அகலியை. (71)

### இராமபிரான் அகலிகையைப்பற்றி வினவுதல்

542. பொன்னையேய் சடையான்கூறக் கேட்டலும் பூமிகேள்வன்
என்னையே யென்னை யேயிவ் வுலகிய லிருந்த வண்ணம்
முன்னையூழ் வினையினுலோ நடுவொன்று முடிந்த துண்டோ
அன்னையே யனையாட் கிவ்வா றடுத்தவா றருளுகென்ருன்

பொன்னை ஏய் சடையான் கூற-பொன்னை யொத்த (செந்நிறம்பொருந்திய) சடையையுடைய கௌசிக முனிவன் இவ்வாறுகூற, கேட்டலும்-அதனைக் கேட்டவுடன், பூமி கேள்வன்-பூமிக்கு நாயகனுன இராமபிரான், (வியப்புற்று), இஉலகு இயல் இருந்த வண்ணம்-இவ்வுலக இயற்கை இருந்த வகை, என்னை என்னை-எத்தகையது! எத்தகையது !!, அன்னையே அனையாட்கு-(தோற்றப் பொலிவால், அனைவர்க்கும்) தாயே போலும் சிறப்புடைய இவளுக்கு, இவ்வாறு அடுத்த ஆறு-இவ்வாறு (கல்லாகும் நிலை) நேர்ந்தவகை, முன்னை ஊழ் வினையினுலோ-(அவள்) முன்செய்த வினைப்பயன் காரணமாகவோ ?

(அல்லது), நடு ஒன்று முடிந்தது உண்டோ-நடுவிலே (இப்பிறப்பில் இதற்குக் காரணமாக) நிகழ்ந்தது ஏதேனும் உண்டோ? அருளுக என்றான்-உரைத்தருள்வீராக' என்று (முனிவனை) வினவினான்.

ஏய்-உவமவுருபு. என்னை என்னை: வியப்புப் பற்றி வந்த அடுக்கு. ஏகாரம் இரண்டும் இசைநிறை. அன்னையே என்றதில் ஏகாரம் பிரிநிலை. அருளுகென்றான்: தொகுத்தல்.

அகலிகை, அனைவரும் தாயெனப் போற்றும் தகைமை உடையவளாக இராமபிரானுக்குத் தோற்றவே, இத்தகையவளுக்கும் இவ்வாறு கல்லாகும் நிலை நேர்ந்தது யாது காரணம் பற்றியோ! என வியந்து, அதுபற்றிக் கௌசிக முனிவனை வினவினான் என்க.

(பி - ம்.) 1. பொன்னை நேர்; பொன்னையேர்; பொன்னைவேய்: சடையோன்: பொன்னையே யனையாள்: சொல்லக்: பூமின் கேள்வன்.
2. இருந்தவாறென்; இருந்தவாறே; இருந்தவாறு.
3. ஊழ்விதியினாலோ: விளைந்த துண்டோ.
4. அனையார்க்கு: இவ்வாறடுத்ததை; இவ்வாறுற்றதை; இவ்வாறளித்தவாறு; இங்ஙனடுத்தவாறு: அருளுமென்றான். (72)

### அகலிகைக்கு நேர்ந்த சாப வரலாறு

543. அவ்வுரை யிராமன் கூற வறிஞனு மவனை நோக்கிச்
செவ்வியோய் கேட்டிமேனாட் செறிசுடர்க் குலிசத்தண்ணல்
அவ்விய மவித்த சிந்தை முனிவனை யற்ற நோக்கி
நவ்விபோல் விழியி னுடன் வனமுலை நயத்த லுற்றான்.

இராமன் அ உரை கூற—இராமபிரான் அந்த வார்த்தையைச் சொல்ல, அறிஞனும்-(அதைக்கேட்ட) கௌசிக முனிவனும், அவனை நோக்கி-அவ்விராமபிரானைப் பார்த்து, 'செவ்வியோய்-நற்குணங்கள் நிறைந்தவனே! கேட்டி-(இதனைக்) கேட்பாயாக; மேல் நாள்-முன்னாளில், செறி சுடர் குலிசத்து அண்ணல்-மிக்க ஒளி பொருந்திய வச்சிராயுதத்தையுடைய இந்திரன், அவ்வியம் அவித்த சிந்தை முனிவன்-பொறாமை முதலிய தீக்குணங்களைக் கெடுத்த மனமுடைய கௌதம முனிவன், அற்றம் நோக்கி-இல்லாத சமயம் பார்த்து, நவ்வி போல் விழியினாள் தன்-(அவன் பத்தினியாகிய) மானின் பார்வை போன்ற பார்வையையுடைய இவ்வகலிகையின், வனம் முலை நயத்தல் உற்றான்-அழகிய தனங்களை விரும்பிச் சேர்தலைக் கருதினான்.

முனிவனை: ஐ, சாரியை.

அறிஞன்-முக்காலமும் உணர்பவன். பொறாமை, மற்றும் பல தீயகுணங்களுக்குக் காரணமாதலின் அதனை முன் வைத்துக் கூறினார்.

அற்றம் நோக்கல்: 220. நவ்விபோல் விழியினாள்: ஒப்பு. 'மானணி நோக்கினார்' 1201.

(பி - ம்.) 1. அறிவனும்: இவனைநோக்கி. 3. அற்றைநோக்கி.
4. நணுகலுற்றான்; நயக்கலுற்றான்; நச்சலுற்றான். (73)

544. தையலா ணயன வேலுந் தனிமதன் சரமும் பாய
உய்யலா முறுதி நாடி யுழல்பவ னொருநா ளுற்ற
மையலா லறிவு நீங்கி மாமுனிக் கற்றஞ் செய்து
பொய்யிலா வுள்ளத் தான்ற னுருவமே கொண்டு புக்கான்.

(இந்திரன்), தையலாள்-அகலிகையின், நயனம் வேலும்-கண் பார்வையாகிய வேலாயுதமும், தனி மதன்சரமும்-ஒப்பற்ற மன்மத னுடைய பாணங்களும், பாய-(தன்மேல்) பாய்ந்து வருத்தியதனால், உய்யல் ஆம் உறுதி நாடி உழல்பவன்-(அத்துன்பத்தினின்றும்) விடு படுதற்குரியவழியைத்தேடி அலைபவனாய்,ஒருநாள்–,உற்ற மையலால்-மிக்க காமமயக்கத்தினால், அறிவு நீங்கி-நல்லறிவு கெட்டு, மா முனிக்கு அற்றம் செய்து-சிறந்த கௌதம முனிவனுக்கு(ஆச்சிரமத்தினின்றும்) விலகும் தன்மையை உண்டாக்கி, (வெளியே செல்லச்செய்து), பொய் இலா உள்ளத்தான் தன் உருவமே கொண்டு-கள்ளமற்ற (தூய) மன முடைய அம்முனிவனுடைய வடிவத்தையே (தான்) கொண்டு, புக்கான்-(ஆச்சிரமத்தினுள்ளே) புகுந்தான்.

இந்திரன், அகலிகைபால் கொண்ட இச்சையை மாற்ற இயலா தவனாகி, எப்படியும் அவளைச் சேரக்கருதி, ஒருநாள் இரவில் கௌதம முனிவன் தன் ஆச்சிரமத்தினின்றும் வெளியேறுதற்குரிய உபாயம் செய்து, அச்சமயத்தில் அம்முனிவன் வடிவத்தோடேயே ஆச்சிரமத்தி னுட்புக்கு, அகலிகையை நெருங்கினான். முனிவனை வெளியேற்றுதற்கு இந்திரன்,அகாலத்தில் கோழிபோலக் கூவினானாக, வைகறைப் பொழு தாயிற்றென்று கருதி முனிவ னெழுந்து நீராடச் செல்லவே, அச்சம யம் பார்த்து ஆச்சிரமத்தினுட் புகுந்தான் என்பர்.

'தையலாள் நயனவேல் பாய' என்றது, இந்திரன் அகலிகையின் கண்ணழகில் ஈடுபட்டு, அவளை அடையக் கருதினா னென்றவாறு.

தனி-மக்கள் மனத்திலே காம இச்சை யுண்டாக்குதலில் தனக்கு நிகரில்லாத தன்மை. அற்றம்: இங்கே பிரிவு என்னும் பொரு ளுடையது. இந்திரன் காம ரூபி (நினைத்த வடிவங் கொள்ளும் ஆற்றலுடையவன்); ஆதலின், கௌதம முனிவன் போலவே வடிவங் கொண்டு சென்றான். உருவமே கொண்டு: ஏகாரம் தேற்றம். உற்ற: 'உறு' என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். 'காமத்திற்குக் கண்ணில்லை' என்பவாதலின், மையலால் அறிவு நீங்கி னவனானான்.

'கௌதம முனிவன் இயற்றிய மிகக் கடுந்தவத்தால் தேவரிற் பலர் தம்முடைய பதவியை யிழக்க நேருமென்று கருதி, அம்முனி

வனுக்குச் சினம் மிகுவித்து,அதனாலே அவன் தவ ஆற்றலுக்குக் குறை வுண்டாக்கக் கருதி இத்தகாத செயலை நான் செய்தேன், என இந் திரன் கூறியதாக வான்மீகத்துள் (49-ம் சர்க்கம்) கூறப்படுகின்றது.

(பி - ம்.) 1. மன்மதன் சரமும்; தாமரைச் சரமும்.
2. நாடித்திரிபவன்; நாடித்தீயவன்.
3. மாமுனி யிலாமை நோக்கிப்.
4. பொய்யிலா வுருவந்தான்றன். (74)

545. புக்கவ ளோடுங் காமப் புதுமண மதுவின் றேறல்
ஒக்கவுண் டிருத்த லோடு முணர்ந்தன ளுணர்ந்த பின்னும்
தக்கதன் றென்னத் தேரு டாழ்ந்தன ளிருப்பத் தாழா
முக்கண னனைய வாற்றன் முனிவனு முடுகி வந்தான்.

புக்கு-உள்ளே போய், அவளோடும் - அவ்வகலிகையுடனே, காமம் புது மணம்-புதிய காமக் கலப்பாகிய, மது இன் தேறல்-மிக இனிய கள் தெளிவை, ஒக்கஉண்டு இருத்தலோடும்-சமமாக நுகர்ந்து இருக்கும்போது, உணர்ந்தனள்-(அகலிகை) தன் நிலையை உணர்ந் தாள்; உணர்ந்த பின்னும்-(அவ்வாறு) உணர்ந்த பிறகும், தக்கது அன்று என்ன-(தன் செயல்) தகுதியல்லாதது என்று, தேருள்-தெளி வடையாதவளாய், தாழ்ந்தனள் இருப்ப-(அவ்வின்ப நுகர்ச்சியி லேயே) ஆழ்ந்திருக்க, (அவ்வேளையில்), முக்கணன் அனைய ஆற்றல் முனிவனும்-மூன்று கண்களையுடைய உருத்திர மூர்த்திக் கொப்பான ஆற்றலையுடைய கௌதம முனிவனும், தாழா-தாமதிக்காமல், முடுகி வந்தான்-விரைந்து (ஆச்சிரமத்தினுள்ளே) வந்தான்.

கள்ளுங் காமமும் நல்லுணர்வை அழிப்பனவாதலின், 'காமப் புதுமண மதுவின் தேறல்' என்றார். கௌதம முனிவன், தான் வெளியே சென்றது அகாலமென வுணர்ந்தபோது, அவ்வாறு செய் வித்தவன் இந்திரன் என்பதைத் தன் அறிவுக் கண்ணால் அறிந்து, அவன் மீது கொண்ட கடுஞ்சினத்துடன் விரைந்து ஆச்சிரமத்துக்குத் திரும்பி வந்தான்; அச்சின மிகுதி தோன்ற, முக்கணனை உவமித்தார்.

இவ்விடத்தில், அகலிகை தன்னோடு ரமிப்பவன் இந்திர னென்று அறிந்தும் அவன் செயலுக்கிணங்கி மகிழ்ந்திருந்தன ளென்று வான்மீகம் கூறுகின்றது.

முக்கணன் அனைய முனிவன்: ஒப்பு: 'அழற்றரு கடவு ளன்னாய்' 549.

(பி - ம்.) 1. புக்கிவளோடும்: புதுநலம்: மதுவிற்றேறல்.
2. ஒக்கவுண் டிருந்தகாலத்து: உணர்ந்து பின்னும்; உணர்ந்த பின்னைத்.
3. தக்கதன் றென்று; தக்கதன்றென்றல்; தக்கதன் றென்னவோராள்; தக்கதன்றென்றுதேருத்; தேற்றாள்; தேராள்; போக்காள்.
4. முக்கணனனைய: முடுக. (7

546. சரந்தரு சாப மல்லாற் றடுப்பருஞ் சாபம் வல்ல
வரந்தரு முனிவ னெய்த வருதலும் வெருவி மாயா
நிரந்தர முலகி னிற்கு நெடும்பழி பூண்டா ணின்றாள்
புரந்தர னடுங்கி யாங்கோர் பூசையாய்ப் போக லுற்றான்.

'சரம் தரு சாபம் அல்லால்-(பிறர் தடுக்கக்கூடிய) அம்புகளை விடுவிக்கும் வில் இன்றி, தடுப்பு அரு சாபம் வல்ல-(எவராலும்) தடுத்தல் அரிய சாபத்தைக் கொடுக்க வல்ல, வரம் தரு-நல்ல வரங்களையும் தரவல்ல, முனிவன்-(பேராற்றலுடைய) கௌதம முனிவன், எய்த வருதலும்-அணுகி வந்த அளவிலே, மாயா-அழியாமல், நிரந்தரம்-நிலையாக, உலகில் நிற்கும்-உலகத்திலே நிலைத்தற்குரிய, நெடு பழி பூண்டாள்-பெரும் பழியைக் கொண்டவளாகிய அகலிகை, வெருவி நின்றாள்-(மிக்க) அச்சங் கொண்டு (தம்பம்போல) நின்றாள்; புரந்தரன்-(பெருந்தவறுசெய்த)இந்திரன், நடுங்கி-(முனிவனது சினத்தைக்கண்டு) நடுக்க மடைந்து, ஆங்கு-அப்போது, ஓர் பூசை ஆய்-ஒரு பூனை வடிவங் கொண்டவனாகி, போகல் உற்றான்-அங்கு நின்றும் போகலானான்.

சாபம் வல்ல முனிவன்; வரந்தரு முனிவன் எனத் தனித் தனி இயைக்க. இதனால், சாபம், அநுக்கிரகம் ஆகிய இரண்டும் வல்ல முனிவன் என்பது பெறப்பட்டது. வில்லினின்றும் எய்யும் அம்பைப் பிறர் தடுத்தல் கூடும்; வில்லின்றியே வரும் சொல்லாகிய சாபத்தை எவரும் தடுத்தல் இயலாது. சாபம்-வில், சுடு சொல். இங்கே 'சாபம்' என்பதில் உள்ள நயம், ஓர்ந்தின்புறற்பாலது. எய்த-கிட்ட, நெருங்க. உலகில் நிரந்தரம் மாயா நிற்கும் நெடும்பழி எனக் கூட்டுக. மாயா-ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம்.

அகலிகை அச்சத்தாலும் நாணமேலீட்டாலும் செய்வ தறியாது திகைத்துத் தம்பம் போல நின்றாள். இந்திரன் நல்லுணர் வழிந்திருந்தமையின், எவ்வாறாயினும் முனிவனது சாபத்தினின்றும் தப்புதல் இயலாதென்பதனை ஓராமல் மயங்கிப் பூனையுருக் கொண்டு சென்றான். இவ்விடத்து, இந்திரன் தன் இயற்கை வடிவோடேயே சென்றதாக வான்மீகம் கூறும்.

பூசை-பூனை: பாயிரம். 4; அயோத். 395; ஆரணிய. 25.

திருப்பரங்குன்றத்துக் குமரவேள் கோயிலில் எழுதப்பட்ட சித்திரங்களில் அகலிகை சாப வரலாறு குறிக்கும் சித்திரமும் இருந்ததாகப் பரிபாடலால் அறியப்படும்: பரி. 19; 50-52.

(பி - ம்.) 1. சரந்தருஞ்: சாபம்வல்லன்; சாபமல்லாத். 2. எய்தி வருதலும்.
3. உலகுக்கெல்லா நெடும்பழி; பூண்பாணின்றாள்; நீண்டாணின்றாள்.
4. புரந்தரன் வெருவி: ஆங்கோர்; ஆண்டோர்; பூனையாய்ப்.

547. தீவிழி சிந்த நோக்கிச் செய்ததை யுணர்ந்து செய்ய
தூயவ னவனை நின்கைச் சுடுசர மனைய சொல்லால்
ஆயிர மாதர்க் குள்ள வறிகுறி யுனக்குண் டாகென்
றேயின னவையெ லாம்வந் நியைந்தன விமைப்பின் முன்னர்.

'செய்ய-நடுநிலைமையுடைய, தூயவன்-பரிசுத்தனான கௌதம முனிவன், செய்ததை உணர்ந்து-(இந்திரன்) செய்த குற்றத்தை அறிந்து, அவனை-அவ்விந்திரனை, விழி தீ சிந்தநோக்கி-கண்கள் நெருப்பைக் கக்கும்படி (கடுஞ்சினத்துடன்) பார்த்து, நின் கை சுடு சரம் அனைய சொல்லால்-உன் கையால் செலுத்தப்படும் (இலக்கைத் தப்பாது) அழிக்கவல்ல அம்பு போன்ற (தன்) சொற்களால், 'மாதர்க்கு உள்ள அறிகுறி ஆயிரம் உனக்கு உண்டாக' என்று-பெண்களுக்குரிய அடையாளமான பெண் குறிகள் ஓர் ஆயிரம் உனக்கு (உடம் பெங்கும்) உண்டாகட்டும்' என்று, ஏயினன்-ஆணையிட்டான்; (சபித்தான்); இமைப்பின் முன்னர்-கண்ணிமைக்கும் பொழுதிற்குள், (மிக விரைவில்), அவை எலாம்-அவ்வாயிரம் பெண் குறிகள், வந்து இயைந்தன-(இந்திரனுடைய உடம்பெங்கும்) வந்து பொருந்தின.

இந்திரனைச் சபித்ததோ டல்லாமல், அகலிகைக்குங் கடுஞ்சாபங் கொடுத்ததனால், கௌதம முனிவனை, 'செய்ய தூயவன்' என்று விசேடித்தார். அகலிகைக்கு அளித்த சாபத்தை அடுத்த கவியுட் காண்க. இராம பாணம் இலக்கைத் தப்பாது சென்று விரைவில் அழிக்கும் தன்மையுடையதாதலால், அதனை அவ்வாறு தப்பாது பயனளிக்கும் சாபமொழிக்கு உவமையாக்கினார். முன்னே தாடகை வதம் கூறியவிடத்து, 'சொல்லொக்கும் கடியவேகச் சுடுசரம்' (406) என இதற்கு எதிர்நிலையாகக் கூறினார்.

'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங்காத்தலரிது' (குறள். 29.) என்பது ஈண்டு நோக்குதற்குரியது.

(பி - ம்.) 1. தீயெழச்; தீயெழு: சிந்தை; சிவந்து: சினந்து: உணர்ந்து வெய்ய.
2. அனைய சொல்லான்.
3. ஆயிர மைந்தர்க்கு: ஆயிர நிதற்பற்கு: உண்டாமறிகுறி: இவற்குண்டா கென்று, அவற்குண்டாகென்று.
4. ஏயென: எல்லாம்வந்து; இசைந்தன; எய்தின; இமைக்கு முன்னர்; இமைக்கு முன்னே; இமைப்பி னுள்ளே; இமைப்பினில் இயைந்த வன்றே. (77)

548. எல்லையி னாண மெய்தி யாவர்க்கு நகைவந் தெய்தப்
புல்லிய பழியி னேடும் புரந்தரன் போய பின்னை
மெல்லிய லாளை நோக்கி விலைமக ளனைய நீயும்
கல்லிய லாதி யென்றான் கருங்கலாய் மருங்கு வீழ்வாள்.

'புரந்தரன்-(சாபம் பெற்ற) இந்திரன், எல்லை இல் நாணம் எய்தி-அளவில்லாத வெட்கம் அடைந்து, யாவர்க்கும்-(காண்பவர்)

எவர்க்கும்,நகை வந்து எய்த-நகைப்பு வரும்படி,புல்லியபழியினேடும்-(தான்) அடைந்த பழியுடனே, போய பின்னை-(அவ்விடத்தினின்றும்) போன பிறகு, (கௌதம முனிவன்), மெல் இயலாளை நோக்கி-மெல்லியசாயலையுடைய அகலிகையைப் பார்த்து, விலைமகள் அனைய நீயும்-வேசி போன்ற நீயும், கல் இயல் ஆதி-கல்லின் தன்மையை அடைவாயாக; (கல்லுருவமாகுக), என்ருன்-என்று சபித்தான்; (அச்சாப மொழிப்படியே அவள்), கருங்கல் ஆய்-கருங்கல் வடிவமாகி, மருங்கு வீழ்வாள்-கீழே விழுகின்றவள்,

வீழ்வாள் என்னும் எழுவாய், அடுத்த கவியில் 'அருளுகென்ன' என்பதனேடு இயையும்.

குலமகளிர்க்கு ஒவ்வாத செயலுக்கு உடம்பட்டமையின், 'விலைமகளனைய' என்ருன் முனிவன்.

இந்திரன் அகலிகை ஆகிய இருவருக்கும் முனிவன் கொடுத்த சாபச் செய்தி வான்மீகத்துள் வேறுபடுகின்றது. இந்திரனை ஆண்மையிழக்குமாறு சபிக்கவே, அவன் அவ்வாருகித் துன்புற, தேவர்களின் முயற்சியால் அது நீக்கப்பெற்றது எனவும், அகலிகையை, 'ஊண் உறக்கம் இன்றி எவர்கண்ணுக்கும் புலனுகாதவாறு மிக நெடுங் காலம் வருந்துக' எனச் சபித்ததாகவும் அங்கே கூறப்படுகின்றது.

(பி - ம்.) 2. பழியுந்தானும்; பழியிற்ருனும்; பழியினேடு: புலம்பினன்; போய பின்றை; போயபின்னர்; போனபின்றை; போகலோடும்.
4. ஆகவென்ருன்: கருங்கல்லாய்: மருங்கில் வீழ்வாள்; மருங்கு வீழ்ந்தாள். (78)

### அகலிகை வேண்டலும் முனிவன் சாபவிடை அளித்தலும்

549. பிழைத்தது பொறுத்த லென்றும் பெரியவர்கடனே யென்பர்
அழற்றரு கடவு ளன்னய் முடிவெனக் கருளு கென்னத்
தழைத்துவண் டிமிருந் தண்டார்த் தயரத ராம னென்பான்
கழற்றுகள் கதுவ விந்தக் கல்லுருத் தவிரு மென்ருன்.

'(அகலிகை தன் பதியை நோக்கி), 'அழல் தரு கடவுள் அன்னய்-(நெற்றிக் கண்ணிலே) நெருப்பை வெளிப்படுத்தும் உருத்திர மூர்த்திக்கு ஒப்பானவரே! பிழைத்தது பொறுத்தல்-பிறர் பிழை செய்ததைப் பொறுத்துக் கொள்ளுதல், என்றும் பெரியவர் கடனே-எக்காலத்தும் பெரியோரது கடமையே யாகும், என்பர்-என்று (உலகோர்) கூறுவர்; (ஆதலால்), எனக்கு முடிவு அருளுக என்ன-எனக்கு (இச்சாபத்தின்) முடிவை அருள் செய்வீராக' என்று வேண்ட, (முனிவன்சினம் சிறிது மாறப்பெற்று),வண்டு தழைத்து இமிரும் தண் தார்-வண்டுகள் மிக்கு ஒலிக்கின்ற குளிர்ந்த மாலையை அணிந்த, தயரத ராமன் என்பான்-தசரத சக்கரவர்த்தியின் மகனுன இராமன் என்பவ

னது, கழல் துகள் கதுவ-பாத தூளி படுதலால், (படும்போது); இந்த கல் உரு தவிரும்-(உனக்குரிய)இந்தக் கருங்கல்லுருவம் நீங்கும்; (உண்மை யுருவம் பெறுவாய்); என்றான்-என்றிவ்வாறு சாப விடை கூறினான்.

பிழைத்தது பொறுத்தல்......கடனே; ஒப்பு. 'சிறியவர் செய்த தீமை, புலம்பலர் பொறுப்ப ரன்றே பெரியவர்' (சீவக. 2088); 'பொறுப்பரன்றே பெரியோர் சிறு நாய்கடம் பொய்யினையே' (திருவா. நீத்தல். 6); 'பேதையர் பிழைத்தது பொறுக்கல் வேண்டுமால்' (சூளா. அரசியல். 80).கௌதம முனிவனுக்கு உருத்திரமூர்த்தி உவமை: 546-பார்க்க.

(பி - ம்.) 1. பிழைத்தன; பிழைத்தனன்: பொறுக்கையென்ப: கடமை; தகைமை: என்பார்; என்றால்; அன்பால்.
2. அழற்றரும்; அழற்பெருங்: முடிவதற் கருளுகென்ன; முடிவிதற்கருளு மென்ன: முடிவிதற்கென்னை யென்ன: என்னாத்.
3. தழைத்த: வண்டயிரும்; வண்டிவரும்: தசரத ராமன்; தசரதவிராமன்.
4. கதுவியிந்தக்; கதுவவுன்றன்: தவிர்தியென்றான்; தவிர்க வென்றான்.
(79)

### இந்திரன் நிலை

550. அந்தவிந் திரனைக் கண்ட வமரர்கள் பிரமன் முன்னா
வந்துகோ தமனை வேண்ட மற்றவை தவிர்த்து மாறாச்
சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்தவா யிரங்க ணாக்கத்
தந்தம துலகு புக்கார் தையலுங் கிடந்தாள் கல்லாய்.

(இங்கே இவ்வாறு இருக்க), அந்த இந்திரனை கண்ட அமரர்கள்-(சாபத்தால் உடலின் தோற்றம் வேறுபட்ட) அந்த இந்திரனைக் கண்ணுற்ற தேவர்கள் எல்லோரும், பிரமன் முன் ஆக வந்து-பிரமனை முன்னிட்டுக் கொண்டு வந்து, கோதமனை வேண்ட-கௌதம முனிவனை வேண்டிக்கொள்ள, (முனிவன்), சிந்தையில் முனிவு தீர்ந்து-தன் மனத்திலுள்ள சினம் தீரப்பெற்று, அவை தவிர்த்து-(இந்திரனுடம் பிலுள்ள) அக்குறிகளை நீக்கி, மாறு ஆக-அவற்றிற்கு மாறாக, சிறந்த ஆயிரம் கண் ஆக்க-அழகிய ஆயிரம் கண்களாகும்படி செய்ய, தம் தமது உலகு புக்கார்-(வந்த தேவர்கள் மீண்டு) தம் தம் உலகத்தை அடைந்தார்கள்; தையலும் கல்லாய் கிடந்தாள்-அகலிகையும் கருங் கல்லாகி (இங்கே) கிடந்தாள்.

சான்றோர் சினம், நீர் கிழிய எய்த வடுப்போல உடனே மாறு மாதலால், தேவர்கள் வந்து வேண்டியவுடன், முனிவன் சினம் மாறிச் சாபக்கேட்டை மாற்றினான்.

அகலிகையின் தோற்றம் முதலிய வரலாறுகள் பற்றிப் பலபடி யாகப் புராணங்களுட் பேசப்படுகின்றன. 'மிகச் சிறந்த அழகும், நற்

குணங்களும் திரண்டு ஒருரு வாகும் வண்ணம் பிரமன் தன் மனத்திற் கருதி இவளைப் படைத்தானாக, இவளுடைய மேம்பாட்டை அறிந்த இந்திரன் முதலிய தேவர்களும் பிறரும் தனித்தனியே இவளை அடையக் கருதி முயன்றனர். இவ்வாறிருக்கையில் நாரத முனிவனது உபாயத்தால் இவள் கௌதம முனிவனிடம் சேர்ப்பிக்கப் பெற்றாள்' என்பதுஅவற்றின் சாரமான செய்தியாகும்.

(பி - ம்.) 1. காணு வமரர்கள்; கொண்டேயமரர்கள்: பிரமன் முன்னாய்.
2. வந்து கௌதமனை; வந்து கவுதமனை; வேண்டி; மற்றது தவிர்த்து; மற்றவை தவிர்ந்து; வணங்க மற்றவை தவிர்த்துச்.
3. சிந்தையுள்: முனிவு தீர்த்துச்: ஆயிரங் கண்ணாக்கித்; ஆயிரங் கண்ணாகத்.
4. தந்தம்முலகம்; தந்தமதுவசம்: தையலாள்.

சில பிரதிகளில் இப்பாடல் இல்லை; மற்றும் சில பிரதிகளில் இப்பாடலுள்ள விடத்து இதற்குப் பிரதியாகக் கீழ்வரும் பாடல் காணப்படுகின்றது :—

வண்ணவார் குழலி னாட்கு மாதவர்தமக்கு மாகேன்
எண்ணிநான் செய்த குற்ற முனிவநீ பொறுப்பா யென்னப்
பண்ணிய வுறுப்பிற் கொண்ட பத்துநூ றவையும் போக்கி
யெண்ணில்வின் னுலகை யாளிக் காயிர நயன மென்றான்.

(பி - ம்.) 1. குழலினாட்கும் வானவர் தமக்கு மாகென்று,
2. செய்த குற்ற நன்முனி.
3. உறுப்பிற்கோசம் போக.
4. எண்ணவின்னயனமாக வாயிர மமைகவென்றான். (80)

## கோசிகமுனிவன் இராமபிரானைப் பாராட்டுதல்

551. இவ்வண்ண நிகழ்ந்த வண்ண
மினியிந்த வுலகுக் கெல்லாம்
உய்வண்ண மன்றி மற்றோர்
துயர்வண்ண முறுவ துண்டோ
மைவண்ணத் தரக்கி போரின்
மழைவண்ணத் தண்ண லேயுன்
கைவண்ண மங்குக் கண்டேன்
கால்வண்ண மிங்குக் கண்டேன்.

'நிகழ்ந்த வண்ணம்-(அகலிகை விஷயத்தில் முன்னே) நடந்த செய்தி,இ வண்ணம்-இவ்வாறாகும்; மழைவண்ணத்துஅண்ணலே-மேக நிறத்திருமேனியுடைய பெரியோனே;மைவண்ணத்து அரக்கிபோரில்-மைபோலும் கருநிறமுடைய அரக்கியாகிய தாடகையுடன் (முன்பு)நீ செய்த போரில்,அங்கு-அவ்விடத்திலே, உன் கைவண்ணம் கண்டேன்-உன் கையின் திறத்தைக் கண்டேன்; இங்கு-இவ்விடத்து (இப்போது), கால் வண்ணம் கண்டேன்-(உன்)பாதத்தின் திறத்தையும் கண்டேன்; இனி—, இந்த உலகுக்கு எல்லாம்-இந்த எல்லா உலகங்களுக்கும், உய்

வண்ணம் அன்றி-(மேன்மேலும்) நன்மையுண்டாகும் தன்மையன்றி துயர் வண்ணம் உறுவது உண்டோ-துயரந்தரும் தீமையெதுவும் நேர்தல் உண்டாகுமோ ? (ஆகாது).

'இராமா! நீ தீயோரை அழிக்கவும் நல்லோரை ஆக்கவும் தோன்றியவன்; அதற்கு அறிகுறியாக, முன்னே தாடகையை அழித்ததும், இப்போது இவ்வகலிகையை உயர்த்தியதும் முதலில் நிகழ்ந்துள்ளன. உன் வீரத்தோடு பொருந்திய கைத்திறமை ஒருபுறம் இருக்க, உன் பாத தூளியே இத்தகைய அருஞ்செயலை ஆற்றியதனுல் உன் பெருமை அளவிடற்கரியது' என்று முனிவன் வியந்து கூறினுன் என்க. மேலே குலமுறை கிளத்து படலத்துள்ளும் இராமபிரானது கைத் திறமையையும் திருவடிப் பெருமையையும் இம்முனிவன் வாக்கால் சிறப்பித்துக் கூறுதல் காண்க; (738-41). இராமபிரானது திருவடித்துகளே இத்தகைய சிறப்புடையதாயின், அத்திருவடிகளையே பற்றுகப் பற்றிய நல்லோர் எய்தும் சிறப்பு அளவிடற்பாலதாமோ!

(பா - ம்.) 1. இவ்வணம்.
2. உய்வண்ண மின்றி வேருேர்; உய்வண்ணமன்ருே: உயர்வண்ணம்; உறுதியுண்டோ; உள்ளதுண்டோ; வருவதுண்டோ.
3. மைவண்ண முள்ளதுண்டோ: அண்ணலேநின்.
4. அங்குகண்டேன்: இங்குகண்டேன். (81)

552. தீதிலா வுதவி செய்த
சேவடிக் கரிய செம்மல்
கோதிலாக் குணத்தான் சொன்ன
பொருளெலா மனத்துட் கொண்டு
மாதவ னருளுண் டாக
வழிபடு படரு ருதே
போதுநீ யன்னை யென்னப்
பொன்னடி வணங்கப் போனுள்.

தீது இலா உதவி செய்த-(ஒருவர்க்கும்) தீங்கில்லாத நல்லுதவியை (அகலிகை திறத்திலே)ச் செய்த, செம்மை அடி கரிய செம்மல்-செவ்விய திருவடிகளையும், கரிய திருமேனியையுமுடைய உத்தமனுகிய இராமபிரான், கோது இலா குணத்தான் சொன்ன பொருள் எல்லாம்-குற்றமற்ற நற்குணமுடைய கௌசிகமுனிவன் கூறிய செய்திகளை யெல்லாம், மனத்துள் கொண்டு-தன் திருவுள்ளத்திலேற்றுக் கொண்டு, (அகலிகையை நோக்கி), 'அன்னை-தாயே! மா தவன் அருள் உண்டாக வழிபடு-தவச்சிரேட்டரான கௌதமரது நல்லருள் (மீண்டும் உன்பால்) உண்டாகும் வண்ணம் (அவருக்கு) வழிபாடுகள் செய்வாயாக; படர் உருதே-(முன்னைய நிகழ்ச்சிகளை யெண்ணித்)

துயரப் படாமல், நீ போது-(இப்போது) நீ எம்முடன் (முனிவரிருப்பிடம்) வருவாயாக; என்ன-என்று கூறி, பொன் அடி வணங்க-(அவளுடைய) பொன்போன்ற பாதங்களை வணங்க, போனுள்-(அவளும் அவ்வாறே) செல்லலானாள்.

அகலிகையின் சிறப்புக் கருதி இராமபிரான் அவளை 'அன்னை' யென்று விளித்து வணங்கினான்; அவளும் இராமபிரானைப் பலவாறு உபசரித்து, அவன் கூறியவாறே அவர்களுடன் சென்றாள். சில வேளைகளில் ஒருவருக்கு ஒருவர் செய்யும் உதவியால் வேறொருவருக்குத் தீமை நேர்தலும் உண்டு; அவ்வாறின்றி, இராமபிரான் இப்போது அகலிகைக்குச் செய்த சிறந்த உதவியால் ஒருவருக்கும் தீமையில்லை என்பதுபட, 'தீதிலா வுதவி' என்றார். சேவடிக் கரிய செம்மல்; முரண் தொடை; 'திருவடியுங் கையுங் கனிவாயுஞ் செய்ய, கரியவனை' (சிலப். ஆய்ச்சியர் குரவை); கரிய செம்மல்: 325-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. கரிய சிங்கம்.
2. பொருளெல்லாம்; பொருளென: மனத்திற்கொண்டு.
3. அருளுண்டாகி; அருளுண்டாகில்; வழிபடப்; வழிபடர்; வழிபடாய்: வழிப்படாய்: அவ்வழி; இடருருதே: பழிபருதே.
4. போதி நீயென்று போற்றிப் புகழ்ந்துடன் கொண்டு; போதுநீ அன்னையென்று: அன்னையென்னுப்; பொன்னடி வணங்கிப்; போனன்; போனர். (82)

### மூவரும் அகலிகையுடன் கௌதமமுனிவனுச்சிரமம் சேர்தல்

553. அருந்தவ னுறையு டன்னை யனைவர ணுக லோடும்
விருந்தினர் தம்மைக் காணு விம்மலால் வியத்த நெஞ்சன்
பரிந்தெதிர் கொண்டு புக்குக் கடன்முறை பழுது ருமல்
புரிந்தபின் காதி செம்மல் புனிதமா தவனை நோக்கி,

அனையவர்-இராபிரான் முதலியவர்கள், அரு தவன் உறையுள் தன்னை அணுகலோடும்-அரிய தவமுடைய கௌதமமுனிவனிருப்பிடத்தை யடைந்தவுடன், விருந்தினர் தம்மை காணு-விருந்தினர்களைக் கண்டு, (கௌதம முனிவன்), விம்மலால் விய்ந்த நெஞ்சன்-வியப்பும் பூரிப்பும் கொண்ட மனமுடையவனுகி, பரிந்து எதிர் கொண்டுபுக்கு-அன்போடு (அவர்களை) எதிர்கொண்டு அழைத்துச் சென்றுஆச்சிரமத்தினுள்ளே போய், கடன்முறை பழுது உருமல்புரிந்தபின்-(விருந்தினருக்குச் செய்யவேண்டிய) உபசாரங்களை முறை பிறழாது செய்தபின்பு, காதி செம்மல்-காதியின்புதல்வனுன கௌசிக முனிவன், புனிதம் மா தவனை நோக்கி-தூய பெரிய தவமுடைய கௌதம முனிவனைப் பார்த்து,

இதுவும் அடுத்த கவியும் ஒருதொடர்; இங்குள்ள 'நோக்கி' என்பது அடுத்த கவி மூன்ருமடியில் உள்ள 'அளித்திடுதி யென்ன' என்பதனேடு முடியும்.

கௌசிக முனிவனையும் இராம லக்குமணரையும் கண்ட கௌதம முனிவன் அவர்களை அன்புடன் வரவேற்று விருந்தினருக் குரிய அர்க்கியம், பாத்தியம் முதலிய உபசாரங்களை முறைப்படி செய்து முகமனுரை கூற, அவற்றைப் பெற்ற பின்பு, கௌசிக முனி வன், நிகழ்ந்ததைக் கூறி, அகலிகையை ஏற்றுக்கொள்ளுமாறு கௌத மனுக்குச் சொன்னன்; அது அடுத்த கவியால் பெறப்படும்.

(பி - ம்.) 1. உறையுட்டனை: அனையவானுதலியோடும்; இனையவனனுகலோடும்; இனையவரனுகலோடும.
2. விரும்பினர் தம்மைக்காணு; மெய்ம்முனி; நெஞ்சம்.
3. பரிந்துறை: பழுதிலாமல், யாவும் பண்ணிப். 4. புரிந்தனன். (83)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

## கௌசிகன் கூற்று

554. அஞ்சன வண்ணத் தான்ற னடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோ லிடையாள் பண்டை வண்ணத்தளாகிநின்ருள்
நெஞ்சினுற் பிழைப்பி லாளை நீயளித் திடுதி யென்னக்
கஞ்சமா மலரோனன்னமுனிவனுங் கருத்துட்கொண்டான்.

அஞ்சன வண்ணத்தான் தன்-மைவண்ணனுகிய இராம னுடைய, அடி துகள் கதுவா முன்னம்-பாததூளி (கல்லுருவத்தின் மீது) பட்டமாத்திரத்திலே, வஞ்சிபோல் இடையாள் - கொடி போலும் (நுடங்கிய) இடையையுடைய இவள், பண்டை வண்ணத் தள் ஆகி நின்ருள்-(கல்லுருவம் நீத்துத் தன்) பழைய வடிவமுடைய வளாய் எழுந்து நின்ருள்; நெஞ்சினுல் பிழைப்பு இலாளை-மனமறிந்த குற்றம் இல்லாத இவளை, நீ அளித்திடுதி என்ன-நீர் அருளுடன் ஏற்பீ ராக என்று கூற, கஞ்சம் மா மலரோன் அன்ன முனிவனும்-தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனுக் கொப்பான கௌதம முனிவனும், கருத்து உள்கொண்டான்-(கௌசிகன் சொல்லைத் தன்) மனத்தினுள் வாங்கிக்கொண்டான். (ஏற்றுக்கொண்டான்).

(553) காதி செம்மல், புனித மாதவனை நோக்கி (554) அளித் திடுதி யென்ன, மலரோனன்ன முனிவனும் கருத்துட் கொண்டான் எனக் கூட்டி முடிக்க.

இப்பாடலின் முதலிரண்டடிகளால் இராமபிரானது திருவடிப் பெருமையைச் சுட்டி, அதனுல் தூயளாகிப் பண்டை யுருவம் பெற்ற இவ்வகலிகை, முன்பும் நெஞ்சாரக்குற்றம் புரிந்தவளல்லள் என்பதை

யும், அத்தகையவளை ஏற்று முன்போல அவளுடன் கூடியிருத்தல் வேண்டும் என்பதையும் மூன்று மடியில் கௌசிகன் கூற்ருகக் கூறி முடித்தார். கௌசிகன் கூறிய கருத்துடைய மொழிகளைக் கௌதமன் ஏற்றமை நான்காமடியில் கூறப்பெற்றது.

முன்னே 'தயரத ராமனென்பான் கழற்றுகள் கதுவ விந்தக் கல்லுருத் தவிரும்' (549) எனத் தான் சாபவிடை கூறியதற்கேற்ப இப்போது நிகழ்ந்தமை யறிந்து கௌதமன் மனத்துள் உவகை கொண்டான் என்க.

(பி - ம்.) 2. முன்னை வண்ணத்தள்; முன்னர் வண்ணத்தார்; ஆகநின்ருள்.
3. நெஞ்சினிற் பிழையிலாளை; பழுதிலாளை: நீயழைத்திடுக: என்ருக்; என்ருன்.
4. கஞ்ச நான்மலரோனன்ன; கஞ்ச மாமுனிவனன்ன: மாமுனி கருத்திற். (8½)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

## இராமபிரான் அகலிகையைக் கௌதம முனிவனிடம் ஒப்புவித்தபின்பு மூவரும் போய் மிதிலையைக் காணல்

555. குணங்களா லுயர்ந்த வள்ளல் கோதமன் கமல பாதம்
வணங்கினன் வலங்கொண் டேத்தி மாசறு கற்பின் மிக்க
அணங்கினை அவன்கை யீந்தாண் டருந்தவ னோடுந் தூய
மணங்கிளர் சோலை நீங்கி மணிமதின் மிதிலை கண்டார்.

குணங்களால் உயர்ந்த வள்ளல்-எல்லா நற்குணங்களாலும் மேம்பட்ட வள்ளலாகிய இராமபிரான், கோதமன் கமலம் பாதம்-கௌதம முனிவனுடைய திருவடித் தாமரைகளிலே, வணங்கினன் வலம் கொண்டு ஏத்தி-வணங்கி எழுந்து அவனை வலம் வந்து துதித்து, மாசு அறு கற்பில் மிக்க அணங்கினை-குற்றமற்ற கற்பினுல் உயர்ந்த, தெய்வத் தன்மையுடைய அவ்வகலிகையை, அவன் கை ஈந்து-அக் கௌதம முனிவனிடம் ஒப்புவித்து, ஆண்டு-அதன்பின், அரு தவனோடும்-அரிய தவமுடைய கௌசிக மாமுனியுடனே, (புறப்பட), தூய-பரிசுத்தமான, மணம் கிளர் சோலை நீங்கி-நறுமணம் மிக்க அச்சோலையை (மூவரும்) கடந்து சென்று, மணி மதில் மிதிலை கண்டார்-அழகிய மதில்கள் சூழந்த மிதிலை நகரத்தைக் கண்டார்கள். வணங்கினன்: முற்றெச்சம்.

அகலிகையின் கல்லுருவையிவர்கள் கண்டவிடம், மிதிலை நகரின் புறமதிலை யடுத்ததொரு சோலையாகும்; அச்சோலையிலே அக்கல்லுருவங்கிடந்தவிடம் மட்டும் வெள்ளிடையாயிருந்ததெனலாம்; (539). இப்போது இவர்கள் அச்சோலையைக் கடந்து சென்று புறமதிலையணுகினர். அங்கிருந்து நகருக்குட் புகுந்தமை அடுத்த படலத்துட் கூறப்படும்.

கல்லாயிருந்தவளைப் பெண்ணாக்கியதால், இராமபிரான் இப்போது அகலிகைக்குத் தந்தையாம் தகுதி பெற்றவனாவன்; எனவே அவளைப் பதியினிடம் சேர்ப்பித்ததை 'அவன் கை யீந்து' என்று நயம் படக் கூறினர்.

இம்மை மறுமைப் பயன்கள் எல்லாமும், முத்தியும் அளிக்க வல்ல இராமபிரானுக்கு 'வள்ளல்' என்ற பெயர் மிகப் பொருந்துவதாம்; இதனைப் பலவிடத்தும் வழங்குவர் ஆசிரியர்.

இராமபிரான் குணங்களால் உயர்ந்தவன்: *98*; அயோத். *860*, *1040*, *1152*, *1206*; சுந்தர. *155*; யுத்த. *1588*.

(பி - ம்.) 1. அண்ணல்: கமலத்தாள்கள்.

2. வணங்கினன்; வணங்கியே: வலங்கொண்டேற்றி; வலங்கொடேத்தி.

3. ஈந்தானருந்தவனோடும்: வாச.

4. மணங்கமழ்; வணங்கமழ்: சோலைதங்கி: மணிமதிற் கிடக்கை: மணிமதிட் கிடங்கைக்; மறுகு கண்டார்: கண்டான். (85)

அகலிகைப் படலம் முற்றும்.



# 10. மிதிலைக் காட்சிப் படலம்

மிதிலைக் காட்சிப் படலம்: மிதிலை நகரத்தின் காட்சிகளைக் கண்டமை கூறும் படலம் என விரியும். விசுவாமித்திரன் முதலிய மூவரும், மிதிலையில் இனிய பல காட்சிகளைக் கண்டு மகிழ்தலும், இராமபிரானும் சீதாபிராட்டியும் ஒருவரையொருவர் கண்ணுற்றுக் காமுறுதலும், அதன்பின் விளைவுகளும் விரிவாக இப்படலத்துட் பேசப்படும்.

[இப்படலப் பகுதிகள், வேறுபட்ட தலைப்புக்களுடன் பலவாறுகச் சுவடிகளில் காணப்படுகின்றன. இப்படத்திலுள்ள பாடல்கள் 155. அவற்றுள், முதல் 23 பாடல்கள் **மிதிலைகாண் படலம்**; அடுத்த 16 பாடல்கள் **சானகி திருக்காட்சிப் படலம்**; அதன்பின் 43 பாடல்கள் **கைக்கிளைப் படலம்**; எஞ்சிய 73 பாடல்கள் **கோசிகப் படலம்** எனச் சில சுவடிகளிலும், மற்றும் சில சுவடிகளில், முதல் 39 பாடல்கள் **மிதிலைகாண்படலம்**; அடுத்து 43 பாடல்கள் **கைக்கிளைப் படலம**; மேல் 56 பாடல்கள் **விசுவாமித்திரப் படலம்** அல்லது **கோசிகப்படலம்** என்றும் காணப்படுகின்றன. இதன்மேல் **குலமுறை கிளத்து படலம்** தொடங்குகிறது. குலமுறை கிளத்து படலத்தின் பெயர் **வரலாற்றுப் படலம்** எனவும் சில பிரதிகளிற் காணப்படுகின்றது. சில பிரதிகளில் 24-ஆம் பாடல் முதலே கைக்கிளைப் படலம் தொடக்கம். வேறு சில பிரதிகளில் மிதிலைக் காட்சி, கைக்கிளை, கோசிகப் படலங்களின்பின் **இராகவன் விரக வேதனைப் படலம்** என்றவொன்று தொடங்குகின்றது ]

### மிதிலை நகரத்துக் கொடிகளின் வருணனை

**556.** **மையறு மலரி னீங்கி யான்செய்மா தவத்தின் வந்து**
**செய்யவ ளிருந்தாளென்று செழுமணிக் கொடிக ளென்னும்**
**கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண்**
**ஐயனை யொல்லை வாவென் றழைப்பது போன்ற தன்றே.**

அந்த கடி நகர்-(மிதிலை யெனப்படும்) அந்தச் சிறந்த நகரமானது, 'யான் செய் மா தவத்தின்-நான் செய்த பெரிய தவத்தினாலே, செய்யவள்-இலக்குமிப்பிராட்டி, மை அறு மலரின் நீங்கி-குற்றமற்ற (தனதிருப்பிடமாகிய) தாமரை மலரினின்றும் பிரிந்து, வந்து இருந்தாள் என்று-(இங்கே) வந்து தங்கியிருக்கின்ருள்' என்று கூறி, (அவள் பொருட்டாக), கமலம் செம்கண் ஐயனை-செந்தாமரை

மலர் போன்ற அழகிய கண்களையுடைய இராமபிரானை, செழு மணி-வளமுடைய மணிகள் கட்டப்பட்ட, கொடிகள் என்னும் கைகளை நீட்டி-கொடிகள் என்று சொல்லப்படுகிற தன் கைகளை (முன்னே) நீட்டி, ஒல்லை வா என்று-விரைவில் (இங்கே) வருக என்று சொல்லி, அழைப்பது போன்றது-அழைத்தலைப் போன்றிருந்தது. அன்று, ஏ-அசை.

கடி-காவல், திருமணம் என்றலுமாம்.

நகரத்தின் கோட்டை மதிலை யடுத்து வந்து தங்கிய இவர்கள் கண்ணிலே, உள்ளே மாளிகைகளின் மீது உயரத்திலே கட்டப்பட்டுள்ளகொடிகளின் தோற்றம் முதலிற் படக்கூடுமாதலால், அத்தோற்றத்தை மூன்று கவிகளால் வருணிக்கிறார். முதற்கண் இக்கவியில்; அந்நகரம், கொடிகளாகிய தன் கைகளை நீட்டி மகிழ்வுடன் இராமபிரானை, பிராட்டி தன்னிடத்தே வந்து தங்கி யிருத்தலால் விரைவில் அவளை யடையும் பொருட்டு வருக என்று கூறி வரவேற்பது போலத் தோன்றுவதாகக் கூறுகின்றார். கொடிகள் காற்றினால் அசைவதை இவ்வாறு தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார்.

சீதாபிராட்டி திருமகளே யென்பதை மேல் 583-ஆம் கவியிற் காண்க. அதற்கேற்ப, இராமபிரான் புண்டரீகாட்சனாகிய திருமாலே யென்பதுபட, 'கமலச் செங்கண் ஐயன்' என்றார். கொடிகள் வருவோரை அழைத்தல்: சீவக. 143; வி-பா. திரௌபதிமாலையிட்ட.20. கொடிகளைக் கைகளாகக் கூறுதல்: சிலப். 13: 189-90; வி-பா. வாசுதேவனைப். 6. பிராட்டி இங்குவந்து பிரானின் வருகையை எதிர் நோக்கி யிருத்தலின் அவள் பொருட்டு விரைவில் வருக என ஐயனுக்கு எடுத்துரைப்பதாகக் காட்டும் அழகு உணர்ந்தின்புறற்குரியது.

செய்யவள்: கிட்கிந்தா. 734; மையறு மலரினீங்கி...செய்யவளிருந்தாள்: 585; ஆரணிய. 280.

(பி - ம்.) 1. மலருணீங்கி; மலரை நீங்கி: யான் செய்த தவத்தின்.
2. கொடிகளெல்லாம்.
3. கடிநகர்க்; கடிமகன்; அந்தக்கன்னிமாநகரஞ் செங்கண்.
4. அழைப்பன: போன்றதம்மா; போன்றவன்றே; போன்ற மாதோ.
(1)

557. நிரம்பிய மாடத் தும்பர் நிரைமணிக் கொடிக ளெல்லாம்
தரம்பிற ரின்மை யுன்னித் தருமமே தூது செல்ல
வரம்பில்பே ரழகினானை மணஞ்செய்வான் வருகின் றானென்
றரம்பையர் விசும்பி னூடு மாடலி னாடக் கண்டார்.

நிரம்பிய மாடத்து உம்பர்-(அழகாலும் வளத்தாலும்) நிறைந்த மாளிகைகளின் மேலே, நிரை மணி கொடிகள் எல்லாம்-வரிசையாக (ஆடுகின்ற) அழகிய துகிற் கொடிகள் எல்லாம், தரம்

பிறர் இன்மை உன்னி-(சீதாபிராட்டியைமணக்கும்) தகுதியுடையார் வேறெவரும் இல்லாமையை எண்ணி, தருமமே தூது செல்ல-தருமம் தானே (அப்பெருமானிடம்) தூதாகச் சென்று (பிராட்டியின் நிலையை) உரைத்ததனால், வரம்பு இல் பேர் அழகினளை மணம் செய்வான்-எல்லையற்ற பேரழகுடைய சீதாபிராட்டியைத் திருமணம் செய்துகொள்ளும் பொருட்டு, வருகின்றான் என்று-(அப்பெருமான் இங்கே) வருகின்றானென்று (மகிழ்ந்து), அரம்பையர்-தேவ மாதர் கள், விசும்பின் ஆடும் ஆடலின்-ஆகாயத்திலே (கூடி) ஆடுகின்ற நாட்டியம்போல, ஆட-அசைந்து ஆட, கண்டார்-(அதனை மூவரும்) கண்டார்கள்.

கொடிகளெல்லாம் ஆட, கண்டார் எனக் கூட்டுக. தரம்: ஆகு பெயர்.

சீதாபிராட்டியும் இராமபிரானும் ஒரு காரணத்தால் 'கருங் கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர்' ஆதலின், அவர்கள் மீண்டும் கூடும் தெய்வக்கூட்டத்திற்கு இடையே தூதொன்று வேண் டுவதில்லை யெனினும், இப்போதுள்ள அவர்கள் நிலை கருதி, உலகிய லாகத் தூதொன்று வேண்டற்பாலதாம்; எனவே, இவர்கள் கூட்டத் திற்குக் காரணமாகிய அறமே (பிறர் கட்புலனாகாதவாறு) பிரா னிடம் தூதுசென்று பிராட்டியின் நிலையைத் தெரிவிக்க,அப்பிரானும் வெளிக்கு வேறொரு காரணங் காட்டி, உள்ளுறத் தனது தெய்வக் கூட்டத்தைக் கருத்திற்கொண்டு மிதிலைக்கு வருகிறானென்று தெய்வ மாதர் உணர்ந்து, அக்கூட்டத்தால் தேவர்கள் துன்பம் நீங்கி நல் வாழ்வு பெறுவரென்ற மகிழ்ச்சியால் ஆகாயத்திலேயே நின்று நடனமாடுவதாகப் புனைந்து, அதனைக் கொடிகளின் மேலேற்றிக் கூறுகின்றார்; இதுவும் தற்குறிப்பேற்றமே.

முன் கவியில், நகரை யணுகிவந்த பிரானுக்கு, பிராட்டியைத் தன்னுட் கொண்ட அந்நகரம் வரவேற்பளித்ததாகக் கூறி, அவ்வரு கைக்குக் காரணம் தருமத்தின் தூது என இக்கவியிற் கூறினார்.

பிராட்டியின் அழகுச் சிறப்பு: 'அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்' (760).

(பி - ம்.) 1. நீண்மணிக்.
2. தரம்பிறிதின்மை: தரம்பிறளின்மை: தரம் பெரிதின்மை; தரம்படா ரின்மை: எண்ணித்: தூது செப்ப: செய்ய.
3. பேரழகை நானே: மணஞ்செய; மணஞ்செய்ய.
4. விசும்பிலோடும்: விசும்பினாட்டும்: ஆடலினாடல்; விசும்பிற்கூடியாடல் போலாடக் கண்டார். (2)

558, பகற்கதிர் மறைய வானம் பாற்கடல் கடுப்ப நீண்ட
துகிற்கொடி மிதிலை மாடத் தும்பரிற் றுவன்றி நின்ற
முகிற்குலந் தடவுந் தோறு நனைவன முகிலிற் சூழ்ந்த
அகிற்புகை கதுவுந் தோறு முலர்வன வாகக் கண்டார்.

பகல் கதிர் மறைய-பகலுக்குக் காரணமான சூரியகிரணங்கள் மறையவும், வானம் பால் கடல் கடுப்ப-வானவெளி பாற்கடலைப் போலத் தோற்றமளிக்கவும், மிதிலை மாடத்து உம்பரில்-மிதிலா நகரத்து மாளிகைகளின் உச்சியிலே, துவன்றி நின்ற-நெருங்கி நின்றனவாகிய, நீண்ட துகில் கொடி-நீண்ட வெண்மையான சீலைக் கொடிகள், முகில் குலம் தடவும் தோறும்-(தம் மேல்) மேகக் கூட்டங்கள் வருடிச் செல்லும்போதெல்லாம், நனைவன (ஆக)-(மேகங்களின் நீரால்) ஈரமுடையனவாகவும், முகிலின் சூழ்ந்த-அம்மேகக் கூட்டங்கள்போல (மேலே) சூழ்கின்ற, அகில் புகை கதுவும் தோறும்-அகிற் கட்டையின் புகை படியும்போதெல்லாம், உலர்வன ஆக-(நனைந்தவை மீண்டும்) உலர்ந்தவையாகவும், கண்டார்-(மாறி மாறி நிகழ்தலை மூவரும்) கண்டனர்.

'வானவெளியைப் பாற்கடல்போலத் தோற்றுவித்தன' என்றதனால், கொடிகளின் நெருக்கமும் அவற்றின் வெண்ணிறமும் பெறப்பட்டன. அவை மேகமண்டலத்தை யளாவின என்றதனால், மாளிகைகளின் உயர்ச்சி பெறப்பட்டது. கூந்தலும் ஆடையும் ஈரம் புலர்ந்து நறுமணம்பெற மகளிர் அகில்புகையூட்டுவர்; அப்புகை மேகம்போலச் சூழ்ந்ததென்றதனால் அதன் மிகுதி கூறியவாறு.

அகிற் புகைக்கு முகில்: (சூளா. நகரச். 6); துகில் நனைதலும் புலர்தலும்: 'கண்க ளுகுத்த, அப்பினானனைந் தருந்துய ருயிர்ப்புடை யாக்கை, வெப்பி னாற்புலர்ந் தொருநிலை யுறுதமென் றுகிலாள்' (சுந்தர. 337).

(பி - ம்.) 1. கதிர் மறைப்ப. 2. துவன்றி நின்று; துவன்றித் தோன்ற. 3. நடவுந்தோறும். 4. புலாவனவாடக்; புலர்வனவாடல்; உலர்வன்வாடக்; உலாவினவாகக்; உலர்வன வவர்கள். 3)

இப்பாடல் உள்ளவிடத்துத் 'தயிருறுமத்தின்' (567) என்ற பாடலும், அதனையடுத்து இப்பாடலுமாகச் சில பிரதிகளில் உள்ளன.

## மூவரும் மிதிலையுட் புகுதல்

559. ஆதரித் தமுதிற் கோரேய்த் தவயவ மமைக்குந் தன்மை
யாதெனத் திகைப்ப தல்லான் மதனற்கு மெழுத லாகாச்
சீதையைத் தருத லாலே திருமக ளிருந்த செய்ய
போதெனப் பொலிந்து தோன்றும்பொன்மதின் மிதிலைபுக்கார்.

மதனற்கும் - மன்மதனுக்குங்கூட ஆதரித்து-(பிராட்டியின் திருமேனி யொத்த அழகுடையதொரு சித்திர வுருவை எழுத) விரும்பி, கோல் அமுதில் தோய்த்து-எழுதுகோலே அமுதத்தில் தோய்த்துக் கொண்டு, (எழுதத் தொடங்குகையில்), அவயவம் அமைக்கும் தன்மை யாது என-(ஒவ்வொரு) அவயவத்தையும் (உள்ள படி) அமைத்து எழுதுவது எவ்வாறு என்று, திகைப்பது அல்லால்-மயங்குவதை யன்றி, எழுதல் ஆகா-(திருந்த) எழுதுதல் இயலாத, சீதையை-(பேரழகுடைய) பிராட்டியை, தருதலாலே-பெற்றதனுல், திருமகள் இருந்த செய்ய போது என-இலக்குமி வீற்றிருக்கும் செந் தாமரை மலர்போல, பொலிந்து தோன்றும்-விளங்கித் தோன்றுகிற, பொன் மதில் மிதிலே-பொன்னுல் அமைந்த மதில்களேயுடைய மிதிலே நகரத்தினுள்ளே, புக்கார்-(மூவரும்) புகுந்தார்கள்.

மதனற்கும்: உம்மை, உயர்வு சிறப்பு.

உலகத்தில் உள்ள, அழகிற் சிறந்த ஆடவரையும் மகளிரையும் வரையறுத்துக்கொண்டு, அவரவர் மனத்திலே இச்சையைத்தோற்று விக்கும் ஆற்றலுடைய மன்மதனே வியக்கத்தக்கது பிராட்டியின் பேரழகு. அவன், அத்தகைய திருவுருவை ஓவியத்தில் அமைக்க விரும்பி எழுதத் தொடங்கின், அவ்வடிவிலே ஓர் அவயவத்தைக் கூடத் தன்னுலே திருந்த எழுத முடியாமல் திகைப்பான் என்று பிராட்டியின் திருமேனி யமைப்பைச் சிறப்பித்தார். அத்தகைய சிறப்புடைய பிராட்டியைத் தன்னிடத்தே பெற்றிருத்தல் மிதிலே நகருக்கொரு பெருஞ் சிறப்பாகும். எனவே, இலக்குமி விரும்பி வீற்றிருக்கும் வாடாத தெய்வத் தாமரை மலர் போன்றது என அந் நகருக்கு மேன்மை கூறினுர்.

556-ஆம் செய்யுளில் சீதாபிராட்டி செய்யவளே என்று கூறிய யதை இங்கும் வற்புறுத்தியது காண்க.

அமுதில் கோல் தோய்த்து மதனன் அவயவம் அமைத்தல்: ஒப்பு: 'தேவு தெண்கட லமுதுகொண் டனங்கவேள் செய்த, ஓவியம் புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள்' (சுந்தர. 340); எழுத வொண்ணு உருவம்: 732, 1165; கிட்கிந்தா. 307, 771; சீவக.709. நகர்க்குத் தாமரைப்பூ உவமை:பெரும்பாண். 403-4;பரி. திரட்டு. 7; பெருங். 3. 3: 51-116. ஆதரித்தல்-விரும்புதல்: ,கிட்கிந்தா. 64.

(பி -ம்.) 1. அமுது கோரேய்ந்து: அவயவமதிக்கும்.
2. மாதெனத்: திகைக்குமல்லான்; திகைக்கினல்லான்; திகைப்பினல் லால்; சமைப்பினல்லான்: மதனுக்கும்: எழுதவொண்ணுச்.
3. தருதலாலத்; தருவதல்லால்.
4. பொன்மதிள்; பொன்வணி; பொன்னகர். (4)

### தெருக்களின் வருணனை

560. சொற்கலை முனிவ னுண்ட சுடர்மணிக் கடலுந் துன்னி
அற்கலந் திலங்கு பன்மீ னரும்பிய வானும் போல
விற்கலை நுதலி னாரு மைந்தரும் வெறுத்து நீத்த
பொற்கலன் கிடந்த மாட நெடுந்தெரு வரிதிற் போனார்.

சொல் கலை முனிவன் உண்ட-(தமிழுக்கு) இலக்கண நூலைச் செய்த அகத்திய முனிவன் (நீரை) உண்டதனால்(நீர் வற்றிப்போன), சுடர் மணி கடலும்-(உள்ளிருந்த பலவகையான) ஒளிவீசும் மணிகள் பரந்து தோன்றும் கடலையும், அல் துன்னி கலந்து இலங்கு பல் மீன் அரும்பிய-இரவிலே நெருங்கிக் கலந்து விளங்கும் பல விண்மீன்கள் உதிக்கப்பெற்ற, வானும் போல-ஆகாயத்தையும் போல, கிடந்த-(பரந்து) கிடந்தனவும், வில் கலை நுதலினாரும்-வில்லையும் சந்திர கலையையும் ஒத்த நெற்றியையுடைய மகளிரும், மைந்தரும்-இளைஞரும், வெறுத்து நீத்த-(கலவிக் காலத்து ஊடலால்) கழற்றி யெறிந்த, பொன்கலன் கிடந்த-பொன்னாபரணங்கள் சிதறிக் கிடந்தனவுயான, மாடம் நெடு தெரு-(உயர்ந்த) மாளிகைகள் அமைந்த பெரிய (இராச) வீதியிலே, அரிதின்-(நடக்க) அரிதாக, போனார்-(மூவரும் நடந்து) போனார்கள்.

இலக்கண நூலை வடநூலார் 'சப்த சாஸ்த்ரம்' என்பர்; சப்தம் என்பது 'சொல்' என்ற பொருளில் வழங்குவது; அதனால், 'சொற்கலை' என்றார். கடல் இரத்தினாகரம் (இரத்தினங்களின் இருப்பிடம்) எனப் படுவது. நீர் நிறைந்துள்ளபோது கட்புலனாகாத அவ்விரத்தினங்கள், அகத்திய முனிவன் நீர் முழுதும் உண்டபின் தரையிலே பரந்து கிடத்தலால் கட்புலனாகும்; (ஒப்பு: யுத்த. 558.) எனவே, முனிவன் உண்டபின் காணப்படும் கடலின் நிலையையும், பல நட்சத்திரங்கள் பூத்து விளங்கும் வானத்தையும், முற்கூறியவாறு மணிகள் சிதறிக் கிடந்த வீதிக்கு உவமையாக்கினார். கடலும் வானும் போலக்கிடந்த நெடுந்தெரு எனவும், பொற்கலன் கிடந்த நெடுந்தெரு எனவும் கிடந்த என்பதனைத் தனித்தனியே ஈரிடத்தும் கூட்டுக. கலை என்பது ஆகுபெயராய்ப் பிறைச்சந்திரனைக் குறித்தது. வில் கலை-'ஒளி பொருந்திய பிறை' என்றலும் ஆம்.

செல்வமிகுதியால், பொற்கலன்கள் புதியனவாக அவ்வப் போது பலதிறப்படச் செய்விக்கப் பெறுதலின், பழைய கலன்களை அலட்சியமாக மக்கள் கழற்றி யெறிந்துவிட, அவற்றை யெடுப்பா ரின்மையின் அவை தெருவிலே சிதறிக் கிடந்தன என்றலும் பொருந் தும். 'கிடந்த' என்ற சொற்கிடக்கை 'அவை எடுப்பாரின்றிக் கிடந்தன' என்பதைக் குறிப்பதாம். அக்கலன்கள் காலில் உறுத்தாத வாறு பார்த்து மெல்லக் கடந்து செல்ல வேண்டுதலின் 'அரிதிற்

போனர்' என்றார். செல்வ மிகுதியை இவ்வாறு குறித்தலின் இது விறுகோளணி யாகும்.

'வில்லுக்கும் எட்டாம் பிறைச்சந்திரனுக்கும் ஒப்பாகியநெற்றியையுடைய பெண்கள்' (ஒரு பழைய வுரை).

மகளிர் கலன்களை நீத்தல்: ஒப்பு. 'கொல்லுலை வேற்கணல்லார் கொழுநரோ டுடி நீத்த, வில்லுமிழ் கலன்கள்' (நைடத. நாடு. 27).

(பி - ம்.) 1. மணிக்கலனும்; மணிக்கலமும்; துன்றி. 2. அற்கலவிலங்கு; அற்கலாதிலங்கு: அரும்பிய வானம்; அரும்பிய வாறும். 3. விற்குல; விற்குலா. 4. தெருவதனிற். (5)

561. தாறுமாய் தறுகட் குன்றந் தடமத வருவி தாழ்ப்ப
ஆறுமாய்க் கலின மாவி லாழியு மிழிந்தோ ராருய்ச்
சேறுமாய்த் தேர்க ளோடத் துகளுமா யொன்றே டொன்று
மாறுமா ருகி வாளா கிடக்கிலா மறுகிற் சென்றார்.

தாறு மாய்-(மதக் களிப்பால்) தாற்றுக்கோலை முறிக்கின்ற, தறுகண் குன்றம்-அஞ்சாமையுடைய மலைபோன்ற யானைகள், தட மத அருவி தாழ்ப்ப-மிக்க மத நீரை அருவிபோலச் சொரிதலால், ஆறும் ஆய்-(கரு நிறமுடைய) ஓர் ஆருகியும், கலினம் மா விலாழி இழிந்து ஓர் ஆறு ஆய் உம்-கடிவாளம் பூண்ட குதிரைகளின் வாய் நுரை சிந்துதலால் (மற்றொரு வகையான, வெண்ணிறமுடைய) ஓர் ஆருகியும், தேர்கள் ஓட-தேர்கள் (மிகுதியாக) ஓடுதலால், சேறும் ஆய்-(அவ்வாறுகளில் புழுதி படிந்து) சேருகியும், துகளும் ஆய்-(பின்பு சேறு காய்ந்து) புழுதியாகியும், ஒன்றேடு ஒன்று மாறு மாறு ஆகி-(நிலைமை அடிக்கடி) ஒன்றுக்கொன்று மாறுபட்டதாகி, வாளாகிடக்க இலா-(சிறிது நேரமும்) வறிதே (ஒரு நிலையில்) கிடத்தல் இல்லாத, மறுகில் சென்றார்-பெருந் தெருக்களில் (மூவரும்) சென்றார்கள்.

வீதிகளில் யானையும், குதிரையும், தேர்களும் இயங்குதலும், அவ்வியக்கங்களால் மேற்கூறியவாறு மாறுபாடுகள் தோன்றுதலும் இடைவிடாது நிகழ்தலின், வீதிகள் வறிதே ஒருநிலையில் இருத்தல் ஒருபோதும் இல்லை என்றதனால், இதுவும் வீறுகோளணியாம். தாறு-தாற்றுக்கோல்; இருப்பு முள் நுனியிலே பொருத்தப்பெற்ற மூங்கிற் கோல்; இதனைக் குத்துக்கோல் என்பர். குன்றம்: உவம ஆகுபெயர்; யானையைக் 'குன்றம்' என்றதற்கேற்ப, மத அருவி என்றார்.

மதங்கொண்ட யானை தன்னை அடக்குங் கருவிகளைச்சிதைத்துக் கொண்டு அடங்காது செல்லுதல்: 'காழோர் கையற மேலோரின்றி' (மணி. 4: 35) 'குதிரைகளை வையாளி விடுகிறபோது வாயிலிருந்து விழுகிற நுரைகளாற் சேருகியும், தேர்களோட அவை புதைந்து புழுதியாகியும்' (ஒரு பழைய வுரை); 'சேறுமாய்த் தேர்களோடத்

துகளுமாய்: ஒப்பு: 'சோறுவாக்கிய கொழுங்கஞ்சி, யாறு போலப் பரந்தொழுகி, ஏறுபொரச் சேறாகித், தேரோடத் துகள்கெழுமி' (பட்டினப். 44-7).

(பி - ம்.) 1. தாறுபாய்: தறுகட்குன்றத்; தறுகல்யானை; ஓடைக்குன்றத்; ஓடைக் குன்றம்: அருவிதாழ.
2. ஆறுபாய்: விலாழியாலழிந்தோராறுய்ச்; விலாழியாமிழிந்தோரா றுய்ச்: விலாழியுமிழிந் தோராறுச்.
3. தேர்களோடே: ஒன்றொடொன்றி.
4. மாறுமாறுக: வாளாக்கிடக்கிலா; கிடக்கலா; கிடக்குமா. (6)

562. தண்டுத லின்றி யொன்றித்
தலைத்தலை சிறந்த காதல்
உண்டபின் கலவிப் போரி
லொசிந்தமென் மகளி ரேபோல்
பண்டரு கிளவி யார்தம்
புலவியிற் பரிந்த கோதை
வண்டொடு கிடந்து தேன்சோர்
மணிநெடுந் தெருவிற் சென்றார்.

தலை தலை சிறந்த காதல்-(ஆடவர் மகளிர் ஆகிய) இருதிறத் தாரிடத்தும் மேம்பட்ட அன்பிலே, தண்டுதல் இன்றி ஒன்றி-தடை ஏதும் இல்லாதபடி (இருவரும்) கலந்து, உண்டபின்-(அதனாலாகிய) காம இன்பத்தை (இருவரும்) நுகர்ந்தபின், கலவி போரில் ஒசிந்த-(அவ்வின்பத்துக்குக் காரணமான) புணர்ச்சிப் போரிலே துவண்ட, மெல் மகளிரே போல்-மெல்லிய தன்மையுடைய பெண்களைப் போலவே, பண் தரும் கிளவியார்-இசையைப் போன்ற(இனிய)சொற் களையுடைய அப்பெண்கள், தம் புலவியில்-தம்முடைய ஊடலிலே, பரிந்த கோதை-கழற்றி யெறிந்த பூமாலைகள், வண்டொடு கிடந்து-(தம்மீது மொய்த்த) வண்டுகளுடனே(துவண்டு)கிடந்து, தேன்சோர்-தேனைச் சிந்துதற்கு இடமான, மணி நெடு தெருவில்-அழகிய நீண்ட வீதிகளிலே, சென்றார்-(மூவரும்) நடந்து சென்றார்கள்.

முனிவன் முதலிய மூவரும் மிதிலை நகரத்துப் பல தெருக்களைக் கடந்து சென்றமையைக் கூறும் ஆசிரியர், அத்தெருக்களின் தன் மையை வேறு வேறு வகையாக மூன்று கவிகளாற் சிறப்பித்தார். மகளிர் 'மெலிலியலார்' ஆதலின் கலவியால் மிக்க துவட்சியடைவர்; அத்தன்மையை அவர்கள் கழற்றியெறிந்த பூமாலைகளுக்கு உவமித் தார்; எனவே அவர்கள் பூப்போலும் மென்மையுடையர் என்பதா யிற்று. காமம் ஒருதலையாகின் சிறப்புறாது; எனவே இருவரும் ஒத்த காதலுடைமையை அறிவித்தற்கு 'தலைத்தலை சிறந்த காதல்' என் றார். 'தலை தலை' என்ற அடுக்கு இருபாலாரிடத்தும் தனித்தனியே

காதல் சிறந்து நின்றதைக் குறிப்பதாம். பண் தரு: தரு-உவமவுருபு. பரிந்த-அற்ற என்றலும் ஆம்.

மாலைகள் வண்டொடு கிடந்து தேன் சோர்தலாகிய தன்மை மகளிர்க்குப் பொருந்துமாறு: கலவியால் ஒசிந்த அவர்கள் செவ்வியை நுகரும் ஆடவர்களின் கண்கள் வண்டுகளாகவும், அம்மகளிருடம்பில் வேர்வையரும்புதல் தேன் சோர்தலாகவும் கொள்க.

மகளிர் கலவியால் துவளல்: 'சுரதந்தனி லிளைத்த கோதை' (தனிப்) ஒசிந்த மகளிர்க்குத் துவண்ட பூமாலை: ஒப்பு: (குறுந். 30 : 2-5.)

(பி - ம்.) 1. தனித்தனி சிறந்த.
2. உண்டமென்; போரினொசிந்த; போரினுவந்த.
3 பண்டருங்: புலவியாற்: பிரிந்தகோதை
4. வண்டொடுங கிடந்த. (7)

மிதிலை நகரத்துப் பலவகைக் காட்சிகள்:
நாடகசாலை

563. நெய்திர ணரம்பிற் றந்த மழலையி னியன்ற பாடல்
தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் ணிடையா ராடு மாடக வரங்கு கண்டார்.

நெய் திரள் நரம்பின் தந்த-நெய் மிகப் பூசப்பெற்ற நரம்புகளினின்றும் பிறந்த, மழலையின் இயன்ற பாடல் தைவரும்-மழலைச்சொற் போலும் இனிய தன்மையுடைய பாடல்களை வாசித்தற்குரிய, மகர வீணை-மகரயாழும், தண்ணுமை-மத்தளமும், தழுவி தூங்க-(ஒன்றோடொன்று) இணைந்து ஒலிக்கவும், கை வழி நயனம் செல்ல-(அபிநயம் காட்டும்) கைச் செயல்களின் வழியே (தம்) கண்பார்வை செல்லவும், கண் வழி மனமும் செல்ல-அப்பார்வைக் குறிப்பின் வழியே (தம்) மனமும் செல்லவும், ஐயம் நுண் இடையார் ஆடும் - (உண்டோ இல்லையோவென்று) ஐயமுறுதற்கிடமான நுண்ணிய இடையையுடைய நடனமாதர் ஆடுகின்ற, ஆடகம் அரங்கு-பொன்மயமான நாடகசாலைகளை, கண்டார்-(மூவரும்) பார்த்தனர்.

ஆடலுக்குச் சிறந்த அங்கமாவன யாழும் தண்ணுமையும் ஆதலின், அவை நன்கு இணைந்து ஒலித்தலை எடுத்துக் கூறினர். குழலினிதுயாழினிதென்ப தம் மக்கள், மழலைச் சொற் கேளாதவர்' என்பராதலின், 'மழலையினியன்ற பாடல்' என்றார். தைவருதல்-தடவுதல்; வீணை நரம்புகளைக் கையால் தடவி ஒலியெழுப்பலால் 'தைவரும் மகரவீணை' என்றார். மகரவீணை-யாழ்வகையுள் ஒன்று; சுறுமீனின் திறந்த வாய்போலத் தண்டின் இறுதிப்பாகம் அமைக்கப் பெறுதலின்

இப்பெயர் பெற்றதுபோலும்; இது பத்தொன்பது நரம்புடையதென் பர். தூங்குதல்-ஒலித்தல்.

ஆடலுக்குச் சிறந்தது அபிநயம்; அதாவது கைகாட்டல். அபிநயங்கள் மனோபாவங்களைப் புலப்படுத்துவன; கண்களுக்கும் அதிற் பங்குண்டு; மனம் பற்றாவழி எச்செயலும் நிகழாவாதலின், 'கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமுஞ் செல்ல' என்றார். 'ஐய நுண்' எனப்பிரித்து, வியத்தற்குரிய நுண்ணிய என்றேனும், அழகிய நுண்ணிய என்றேனும் பொருள் கொள்ளலும் ஆம். ஐய நுண்ணிடை யார் என்றது ஆடலுக்கேற்ற உடலமைப்புடைமையைக் குறிக்கும். ஆடக அரங்கு என்றது ஆடல் நிகழுமிடத்தின் சிறப்பைக் குறித்தவாறு.

(பி - ம்.) 1. நெய்திணர்: நரம்பிறந்த: மழலையாழ் நின்றபாடல்; நிறைந்த பாடல்,
2. தழுவித்தோன்றக்; தழுவியெங்கக்; தழுவியோங்கக்;
4. ஆடகவரங்குங்; நாடகவரங்கு. (8)

ஏட்டுப் பிரதிகளிலும் அச்சுப்பிரதிகளிலும் பாடல் வைப்புமுறை இதன்பின் பலவாறு வேறுபட்டுள்ளன.

ஊசலாடல்

564. பூசலி னெழுந்த வண்டு மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசுறு பிறவி போல வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகிற் பூண்ட
ஊசலின் மகளிர் மைந்தர் சிந்தையோ டுலவக் கண்டார்.

மாசு உறு பிறவிபோல-குற்றம் மிக்க பிறப்புக்களைப் போல, வருவது போவது ஆகி-(மேலும் கீழுமாகப்)போவதும் வருவதுமாகிய தன்மையுடையதாய், காசு அறு-குற்றமற்ற, பவளம் செம் காய்-பவ ளம் போன்ற செந்நிறம் பொருந்திய காய்களோடு, மரகதம்-மரகத மணியின் பச்சை நிறத்தையுமுடைய, கமுகில் பூண்ட-பாக்கு மரங் களிலே பூட்டப்பெற்ற, ஊசலின்-ஊஞ்சலில் (அமர்ந்து), மகளிர்- இளம்பெண்கள், பூசலின் எழுந்த வண்டு-(தம்மைச் சுற்றிலும்) ஆர வாரத்துடன் எழுந்து கூடிய வண்டுகள், மருங்கினுக்கு இரங்கி-தங் கள் இடையின் மென்மைக்காக மனம் வருந்தி, பொங்க-பேரொலி செய்ய, மைந்தர் சிந்தையோடு-(தம்மிடம் பதிந்த) இளைஞர் மனத் துடனே கூட, உலவ-ஆட, கண்டார்-(அதனை அவர்கள்) கண்டனர்.

வருவது போவது ஆகி, கமுகில் பூண்ட ஊசலிலே, மகளிர், வண்டு பொங்க (இருந்து) மைந்தர் சிந்தையோடு உலவ (அதனைக்) கண்டார் எனக் கூட்டுக.

பிறப்புக்கள் மேல்நிலையும் கீழ்நிலையுமாய் மாறிமாறி வருதலின் ஊஞ்சலின் இயக்கத்துக்கு உவமையாக்கினார். பவளச்செங்காய்

மரகதக் கமுகு என்பதற்கு, பவளத்தாலாகிய சிவந்தகாயினையுடையதாக, மரகத மணிகளால் செய்து அமைக்கப்பட்ட பாக்குமரம் என்றலும் ஆம். பருவ மகளிர் ஊசலாடும் அழகினை நுகர்ந்து அவர்களிடத்தே மனஞ்செலுத்தல் ஆடவர்க்கியல்பாகலின், மகளிரிடத்தே சென்று பதிந்த ஆடவர்களின் மனமும் அம்மகளிரோடு ஊசலாடுகின்றது என்று சமத்காரமாகக் கூறுகின்றார். ஊசலாட்டம் முன்னும் பின்னுமாகப் போய் வருதலின், அதனை 'உலாவல்' என்றார். பொங்குதல்-ஒலித்தல்: 1102.

இளைஞர் சிந்தை மகளிர்பாற் செல்லல் : 84; கமுகிற் பூட்டிய ஊசல்; 1176; ஆரணிய. 592; சீவக. 922. உருமாறிப் பலபிறப்பும் பிறந்துஞ் செத்தும், ஊசலாடுவது' திருவரங்கக்கலம்பகம். 58.

(பி - ம்) 1. பூசலில்: எழுந்து: இரங்கப் பொங்கி,
2. மாசறு: போவதாகக்; போவதாகும்.
3. பவளச் செங்கை: கமுகுபூண்ட; கமுகம் பூண்ட.
4. மகளின்: சிந்தைபோலுலாவக்; சிந்தைபோலோவக்; ஆடக். (9)

கடைத்தெரு

565. வரப்பறு மணியும் பொன்னு மாரமுங் கவரி வாலும்
சுரப்புடை யகிலு மஞ்ஞைத் தோகையுந் தும்பிக் கொம்பும்
குரப்பணை நிரப்பு மள்ளர் குவிப்புறக் கரைக டோறும்
பரப்பிய பொன்னி யன்ன வாவணம் பலவுங் கண்டார்.

வரம்பு அறு-அளவற்ற, மணியும்-இரத்தினங்களையும், பொன்னும்-பொன்னையும், ஆரமும்-சந்தனக் கட்டைகளையும், கவரிவாலும்-கவரி மானின் வாலாகிய சாமரக்கற்றைகளையும், சுரம்புடைஅகிலும்-காடுகளில் கிடைக்கும் அகிற்கட்டைகளையும், மஞ்ஞை தோகையும்-மயில் தோகைகளையும், தும்பி கொம்பும்-யானைத் தந்தங்களையும், (இவை போன்ற பல உயர்ந்த பொருள்களையும்), குரம்பு அணை நிரப்பும் மள்ளர்-கழனிகளின் வரப்புக்களை யெழுப்பி அமைக்கும் உழவர், குவிப்பு உற-(அங்கங்கே) குவிக்கும்படி செய்தலுடன், கரைகள் தோறும் பரப்பிய-(தன்) இருகரைப் பகுதிகளிலும் பலவிடத்தே (அவற்றைப்) பரப்பிக் கொண்டு ஓடுகின்ற, பொன்னி அன்ன-காவிரியாற்றைப் போன்ற, ஆவணம் பலவும்-கடை வீதிகள் பலவற்றையும், கண்டார்—.

நீண்டு கிடக்கும் கடைத்தெருவை ஆறாகவும், அதன் இரு புறத்தும் உள்ள பலவகையான கடை வரிசையைக் கரையாகவும் உருவகித்தார். 'யாறு கிடந்தன்ன அகல் நெடுந்தெரு' எனத் தெருக்களுக்கு ஆற்றை உவமித்தல் கவிஞர் மரபு. காவேரி, குறிஞ்சியிலும் முல்லையிலும் கிடைக்கும் பல சிறந்த பொருள்களைத் தன் வெள்ளத்திலே கொணர்ந்து, அலையாகிய கைகளால் கரையிலே ஒதுக்கியது

போக, எஞ்சிய அப்பொருள்கள் நீரொழுக்குடன் சென்று வயல்களிலே நீர்பாயும்போது பரவிப் படிந்து கிடத்தலால், வயல்களின் வரப்பைச் சீர்செய்யும் உழவர், பரந்து கிடக்கும் பொருள்களை அங்கங்கே குவிக்க நேர்கின்றது என வளமிகுதியைப் புலப்படுத்தினர். 'ஆறு' எனப் பொதுப்படக் கூறாது, 'பொன்னி' என்றதனால், ஆசிரியரது நாட்டுப் பற்றுப் புலனாகும். ஏனைப் பல ஆறுகளினும் பொன்னி வளம்மிக்க தாதலின், அவ்வகையிலும் பொருந்துவதாகும்.

ஆரம்-முத்துக்களும் ஆம். பாலைக் கருப்பொருளாகிய கள்ளியி னிடத்தே அகில் தோன்றுவதாகலின், 'சுரப்புடை அகில்' என்றார். வரம்பறு, குரம்பணை என்பன வலித்தல் பெற்றன.

தெருவுக்கு ஆறு உவமை: மதுரைக். *359*; நெடுநல். *30*; மலைபடு. *481*; நற். *200: 3*; பெருங். *2. 7: 7*; *5. 7: 23*. பொன்னி: *501*-குறிப்.

(பி - ம்.) 1. வரப்புறு; வரப்பெறு; வரம்பறு: சவரிவாலும்.
2. சுரத்திடை; சுரந்திடும்; சுரும்புடை; சுரும்படை; சுரம்படை: தும்பிக் கோடும்.
3. குரம்பணை; குரப்பிணை: நிரப்ப; நிரம்ப; நிரம்பி; நிரம்பு: இடங்க டோறும். 4. பரம்பிய: பொன்னியென்ன. (10)

## குதிரைச்சாரி

566. கொட்புறு கலினப் பாய்மாக் குயமகன் முடுக்கி விட்ட
மட்கலத் திகிரி போல வாளியின் வருவ மேலோர்
நட்பினி லிடைய றாத ஞானிக ளுணர்வி னொன்றாய்க்
கட்புலத் தினைய வென்று தெரிவில திரியக் கண்டார்.

கொட்பு உறு-(தம் தொழிலிலே) கருத்தூன்றிய, கலினம் பாய்மா-கடிவாளம் பூண்டு பாய்ந்து செல்லும் குதிரைகள், குயமகன் முடுக்கிவிட்ட-குயவன் (விசையாகச்) சுழற்றிவிட்ட, மண்கலம் திகிரி போல-மண் பாத்திரங்கள் வனைதற்குக் கருவியான சக்கரத்தைப் போல, வாளியின் வருவ-வட்டமாகச் சுழன்று வருவன, மேலோர் நட்பினில்-உயர்ந்தோருடைய நட்பைப்போலவும், ஞானிகள் இடை அறாத உணர்வின்-தத்துவ ஞானிகளின் இடையீடில்லாத (ஒன்று பட்ட) மன உணர்ச்சியைப் போலவும், ஒன்று ஆய்-ஒரே தன்மை யுடையனவாகி, கண் புலத்து-கண் பார்வைக்கு, இனைய என்று தெரிவு இல-இத்தன்மையன என்று தெரிய இயலாதனவாய், திரிய-சுற்றிவர, கண்டார்—.

வட்டமாகச் சுற்றிவரும் குதிரைகள், பலவாயினும், அவை அனைத்தும் தம் தொழிலில் சிறிதும் இடையீடு இன்றியும், தோற்றம் செலவு முதலியவற்றில் ஒன்றுபட்ட தன்மையுடையனவாகவும் இருத் தலின், ஒன்றோ பலவோ என்று பார்வையால் அறியக்கூடாத நிலை

யில் இருந்தன எனவும், சுழற்சியின் விரைவால் அவை ஓரிடத்து நிற்பனபோலத் தோற்றின வென்றும் அவற்றின் திறமையைச் சிறப்பித்தார். வட்டமாகச் சுழன்று செல்லுதலுக்குக் குயவன் திகிரியும், ஒன்றுபட்ட (மாறுத) தன்மைக்கு மேலோர் நட்பு, ஞானிகளின் உணர்வு ஆகிய இரண்டும் உவமையாம். மேலோர் நட்பு, இடையறுமலும் என்றும் ஒரு தன்மையாகவும் இருக்கும்; ஞானிகளுடைய உணர்வும் ஒன்றினிடத்தே ஊன்றின், அதில் இடையற வில்லாமலும் வேறொன்றினிடத்துப் பற்றுமலும் என்றும் ஒருதன்மைத்தா யிருக்கும்; இவைபோல, குதிரைகளின் செலவிலும் இடையே (ஒன்றேனும்) சிறிது நிற்றலோ அல்லது செல்லும் நெறியினின்று பிறழுதலோ இன்றி யிருந்தன எனப் பொருத்தம் காண்க. இதற்கு வேறுவகையாகவும் பொருள் கூறுவர். கொட்பு-கருத்து; சுழற்சியும் ஆம்.

சுழற்சிக்குக் குயவன் திகிரி: ஒப்பு: கிட்கிந்தா. 272; சீவக. 786. 'இருவகைச் சாரியு மெதிர்ந்து வட்டமாய், வருவழி ஞெகிழி போன் மறுகெலா மொரு, துரகத மேநில நின்ற தோற்றமொத், தொருவற நடத்தினு ரொருக ணத்தினே' (திருவிளை. நரிபரி. 99) என்பதும் இங்கே ஒப்பிடத்தக்கது.

(பி - ம்.) 1. கொட்புறக்; கொட்புறழ்; கொட்புள: குலான் மகன்: முறுக்கிவிட்ட முடுகவிட்ட முடுகிவிட்ட.
2. திகிரி போல்வ; திரிகைபோல்வ; திகிரியென்ன; திரிகையென்ன; வயின் வயின்வருவ; ஆசைகள் திரிவ: மேலார்; மேலாள்.
3. நட்பினின்: இடையறுவாய்; இடையறுது; இடையறுதே; ஞானியர் உணர்வின்; ஞானிதன் உணர்வின்; ஞானியர் அறிவின்: ஈறுய்க்.
4. அனைய: என்றும்: தெரிகில; தேவரில்: தெரியக். (11

## யானைப்போர்

567. தயிருறு மத்திற் காம சரம்படத் தலைப்பட் டூடும்
உயிருறு காத லாரி னொன்றையொன் றொருவ கில்லா
செயிருறு மனத்த வாகித் தீத்திரள் செங்கண் சிந்த
வயிரவான் மருப்பி யானை மலையென மலைவ கண்டார்.

தயிர் உறு மத்தின்-தயிரிலே (கடைதற்குப்) பொருந்திய மத்தைப்போல, காம சரம்-மன்மதன் அம்புகள், பட-(தம் மீது) பட்டுக் கலக்குதலால், தலைப்பட்டு-(கலவிப் போரிலே) எதிர்ப்பட்டு, ஊடும்-(கலவியின்ப மிகுதிப் பொருட்டுத் தமக்குள்) ஊடல் கொள்கின்ற, உயிர் உறு காதலாரின்-உயிரை யொத்த (அன்புடைய) கணவனும் மனைவியுமாகிய இருவரைப்போல, வயிரம் வால் மருப்பு யானை-வயிரம் பாய்ந்து வெண்மையான கொம்புகளையுடைய (இரண்டு) யானைகள், (தம்முள் எதிர்ப்பட்டு), ஒன்றை ஒன்று ஒருவ கில்லா-ஒன்றைவிட்டொன்று நீங்கமாட்டாமல், செயிர் உறு மனத்த

ஆகி-சினம் மிக்க மனமுடையனவாய், செம் கண் தீ திரள் சிந்த-சிவந்த கண்களினின்றும் மிக்கசினத்தீ வெளிப்பட, மலை என-இரண்டு மலைகள் (ஒன்றை யொன்று எதிர்த்து நிற்றல்) போல, மலைவ-போர் செய்வனவற்றை, கண்டார்—.

இங்குக் குறிக்கப்பட்ட யானைகள், இயல்பாகத் தமக்குள்ளே பகை யின்றி, போருக்கென இரண்டிரண்டாகப் பழக்கப்பட்டவை; எனவே, அவ்வாறு போர் செய்ய நேருங்கால், கோபங்கொண்டு போர் செய்கின்றன. ஆதலால், காதலரை உவமித்தார். இயல்பாக ஒன்றுபட்ட காதலர் இருவர், கலவிக் காலத்துப் பொய்யாக ஊடல் கொண்டு செயலாற்றுகின்றனர்; இவ்வகையில் உவமை பொருந்துவ தாகும்.

மத்து, தயிரைக்கலக்குவதுபோல மன்மதனம்பு காதலர் மனத்தைக் கலக்குகின்றது; அதனால் அவர்கள் கலவிப் போரில் தலைப்படுகின்றனர். யானைகளும் போர்ப் பழக்கமாகிய அம்பால் கலக்குண்டு தம்முள்ளே மாறுபட்டுப் போர் செய்கின்றன.

வயிரம்-யானைத் தந்தத்திற்கிடும் பூணும் ஆம். 'கிம்புரி' 'கோளகை' என்பனவும் இது. சீவக. *83, 645, 2275.* வான் மருப்பு எனப் பிரித்தும் பொருள் கூறலாம்; வான்-பெருமை, வலிமை, அழகு முதலிய பல பொருளுடையது.

பொழுது போக்குக்காக யானை, ஆட்டுக்கிடாய் முதலியவற்றையும், சில பறவைகளையும் பழக்கித் தம்முட் போர் செய்யவிட்டுக் காணுதல் மரபு. யானைப் போர்: *161*-பார்க்க. காதலரை யானைக்கு உவமங் கூறுதல்: ஒப்பு: பெருங். *1, 32: 34-8.*

(பி - ம்.) 1. காமச்சரம்: தலைப்பட்டோடும்.
2. ஒருவுகில்லா; ஒருவநில்லா; உலவகில்லா; ஓர்வதில்லா.
3. தீத்திரள் சிந்தச் செங்கண்,
4. வாண்மருப்புயானை; வான்கணையத்தியானை; வான்கணயத்தானை; மலையக் கண்டார். *(12)*

## பெண்களின் செயல்கள்

568. வாளரம் பொருத வேலு மன்மதன் சிலையும் வண்டின்
கேளொடு கிளைத்த நீலச் சுருளுஞ்செங் கிடையுங் கொன்டு
நீளிருங் களங்க நீக்கி நிரைமணி மாட நெற்றிச்
சாளரந் தோறுந் தோன்றுஞ் சந்திர வுதயங் கண்டார்.

வாள் அரம் பொருத வேலும்-கூரிய அரத்தால் அராவப்பட்ட (இரண்டு) வேல்களையும், மன்மதன் சிலையும்-மன்மதனுடைய வில்லையும், வண்டின் கேளொடு-வண்டினங்களையும், கிளைத்த நீலம் சுருளும்-மேலெழுந்து தோன்றும் நீலமணிச் சுருளையும், செம் கிடையும்-சிவந்த கிடேச்சையும், கொண்டு-(தன்னிடத்திலே) பெற்று, நீள் இரு

களங்கம் நீக்கி-நெடுங்காலமாக வுள்ள பெரிய களங்கத்தை நீக்கிக் கொண்டு, நிரை மணிமாடம் நெற்றி-வரிசையான மணிகள் பதிக்கப் பட்ட மாளிகைகளின் உச்சியிலே (உள்ள), சாளரம் தோற்றும் தோன் றும்-சாளரம் ஒவ்வொன்றினிடத்தும் காணப்படுகின்ற, சந்திர உத யம் பூர்ண சந்திரனின் தோற்றத்தை, கண்டார்—.

மூவரும் பல தெருக்களின் வழியே செல்லும்போது, அவர்கள் கண்டும் கேட்டும் நுகர்ந்தவற்றைக் கூறுபவர், பெண்களைப் பற்றிய பல செய்திகளை இதுமுதல் ஆறு கவிகளாற் கூறுகின்றார்.

வேல்-கண்களையும், சிலை-நெற்றியையும், நீலச்சுருள்-கடை சுருண்ட கூந்தலையும், கிடேச்சு-உதட்டையும் குறிக்கும். அரம் பொரு தல்-வேலுக்குரிய விசேடணம். கிடை, கிடேச்சு, நெட்டி என்பன ஒரு பொருள் குறித்தவை. சிவந்த நெட்டித் துண்டம் உதட்டுக்கு உவமை. இவற்றை யெல்லாம் கொண்டதும், களங்கத்தை விட்டதுமாகிய சந்திரன் என மகளிரின் அழகிய முகங்களைச் சிறப்பிக்கின்றார். மேன் மாடத்திலுள்ள சாளரங்களின் அருகே மகளிர் தெருக் காட்சிகளை நோக்கிய வண்ணம் நிற்கையில், அவர்களுடைய முகம் தெருவிலே போவார்க்குப் புலப்படுதலை இவ்வாறு அழகுபடப் புனைந்துள்ளார்.

சந்திர வுதயம்: தமிழ் முறைப்படி புணர்ந்தது.

வாளரம் பொருத வேலும்: 'அரஞ் சுடர்வேல்' (சுந்தர. 932); 'வாளரந் துடைத்த வைவேல்' (சீவக. 461); உதட்டுக்குக் கிடை: கிட்கிந்தா. 30, 545, 768. ஒப்புநோக்குக: 'வாள ரத்தவேல் வண் டொடு கெண்டைகள் மயங்கச், சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்'(அயோத்.56); பட்டினப்பாலை. 145--60 அடிகளும் இங்கே ஒப்பு நோக்கத்தக்கன. சாளரம், சாலேகம் என்றும், காலதர் என்றும் நூல்களில் வழங்கும்.

(பி - ம்.) 1. பொருதவேற்கண்; பொருதும் வேலும்: சிலையின்வண்டும்; சிலையின் அம்பும்.
2. கேளொடுங்கிளைத்த; கோளொடு; கோளொடும்; கிடந்த; கிடக் கும்; கிடைத்த; சுருளொடுங் கிடையும்: காட்டி.
3. நீளிரு; நீளரும்: கபாடநீக்கி; கரங்கள்நீக்கி; கருங்கணிங்கி: மாடத் தும்பர்.
4. தோறுந்தோறும்; தோன்றுந்தோறும்; சந்திரனுதயம். (13)

569. பளிக்குவள் ளத்து வாக்கும் பசுநறுந் தேறன் மாந்தி
வெளிப்படு நகைய வாகி வெறியன மிழற்று கின்ற
ஒளிப்பினு மொளிக்க வொட்டா வூடலை யுணர்த்து மாபோல்
களிப்பினை யுணர்த்துஞ் செவ்விக்கமலங்கள்பலவுங்கண்டார்,

பளிங்கு வள்ளத்து வாக்கும்-பளிங்குக் கிண்ணத்திலே ஊற்றப் பட்ட, பசு நறு தேறல் மாந்தி-புதிய மணமுள்ள மதுவைப் பருகிய

தனால், வெளிப்படு நகைய ஆகி-வெளிப்படையான சிரிப்பை உடைய னவாகியும், வெறியன மிழற்றுகின்ற-பிதற்றலான சொற்களை (இனிமையாகப்) பேசுகின்றனவாகியும், ஊடலை-(தமக்குள் உண்டான) ஊடற் செய்திகளை, ஒளிப்பினும்-மறைக்க முயன்றாலும், ஒளிக்க ஒட்டா-மறைக்கமாட்டாமல், உணர்த்தும் ஆ(று)போல்-வெளிப்படுத்துவதுபோலவே, களிப்பினை உணர்த்தும்-(கள்ளுண்டதனாலான) மகிழ்ச்சியையும் வெளிப்படுத்துகின்ற, செவ்வி கமலங்கள் பலவும்-அழகிய(முகங்களாகிய) தாமரை மலர்கள் பலவற்றையும், கண்டார்-அவர்கள் கண்டனர்.

கமலங்கள் என்றது மகளிரின் முகங்களை; உருவகம். மதுவுண்ட மகளிர், அம்மதுவினாலாகிய வெறிக் களிப்பால் பலவாறு பிதற்றலுடன், தம் கணவரோடு கூடலும் ஊடலும் நிகழ்ந்தபோது தமக்குள்ளேதோன்றி,வெளிப்படுத்தலாகாத செய்திகளையும் வாய்விட்டுச் சொல்லியும், வெளிப்படச் சிரித்தும் களியாட்டயர, அப்போது அவர்கள் முகங்களும் ஒரு தனி அழகுபெற்று விளங்கின. அக்காட்சியை இவர்கள் கண்டார்கள் என்றார். மகளிரும் மதுவருந்தும் வழக்கம் பண்டைக் காலத்து உண்டென்பதைத் தமிழ் நூல்களில் காணலாம்; வடநூலாரும் இதனைக் கூறுவர். வெளிப்படையாக வாய்விட்டுச் சிரித்தல் மகளிர்க்கு இயற்கையாக ஏற்புடையதன்று; ஆதலால், 'தேறல் மாந்தி வெளிப்படு நகையவாகி' என்றார். 'சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்' (அயோத். 56) என்பது ஈண்டும் ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்,) 1. பளிங்கு வள்ளத்துள்: வார்க்கும்; வார்த்த.
2. வெளிப்படுந்தகைய; வெளிப்படுதகைய; வெளிப்புறு நகைய; வெறியின; வெறியினை; வெறியென: நிகழ்த்துகின்ற: உமிழுகின்ற.
3. ஒளிக்கினும்: ஒளிக்கவோடா; ஒளிக்கவொண்ணு; உணர்த்துமாப் போல், (14)

570. வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளென நரம்பு வீக்கிக் கையொடு மனமுங் கூட்டி
வெள்ளிய முறுவ லேன்ற விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார்.

மகளிர்-(சில) பெண்கள், வள் உகிர் தளிர் கை நோவ-கூர்மையான நகங்களையுடையனவும் தளிர்போல் மென்மையுடையனவுமான கைவிரல்கள் நோம்படி, மாடகம் பற்றி-முறுக்காணிகளைப் பிடித்து, வார்ந்த கள் என-வடிகின்ற தேனொழுக்குப்போல, நரம்பு வீக்கி-(சுருதிக் கருவியின்) நரம்புகளை இறுக்கி, கையொடு மனமும் கூட்டி-(நரம்புகளை வருடும்) கைவிரல்களுடன் மனத்தையும் ஒன்றுபடுத்தி, வெள்ளிய முறுவல் தோன்ற-வெள்ளொளி தரும் புன்னகை வெளிப்பட, விருந்து என-(கேட்போர் செவிகளுக்கு) விருந்தாக, ஈந்த-

அளித்த, தெள் விளி பாணி தீம்தேன்-தெளிவான வாய்ப்பாட்டாகிய இனிய தேனை, செவி மடுத்து-காதார நுகர்ந்து, இனிது சென்றார்-(நடை வருத்தம் தோன்றாதபடி) இனிமையாகச் சென்றார்கள்.

விளிப் பாணி-வாய்ப்பாட்டு; அதற்குச் சுருதி இன்றியமையாதது. சுருதியில்லாத வாய்ப்பாட்டைத் தாயில்லாக் குழந்தை என்பர் இசை வல்லோர். சுருதியொடு பொருந்திய (லயித்த) பாட்டே யாவர்க்கும் இன்பம் பயப்பதாகும். எனவே, முதலில் சுருதியை நன்கு அமைத்துக்கொண்டு, அக்கருவியின் நரம்புகளை மீட்டியவாறே அதனில் மனமொன்றிப் பாடினர் மகளிர் என்க. அவ்வாறு பாடும் இசையே கேட்போர் மனத்தைக் கவரவல்லதாகும்; அதனைச் செவிக்கு விருந்து என்றார். இவ்விடத்து, வீணையை வாசித்துக்கொண்டே பாடினர் என்றலும் பொருந்தும். மாடகம்-நரம்புகளை இறுக்கவும் தளர்த்தவும் உதவும் கருவி; முறுக்காணி: 'இடக்கை நால்விரல் மாடகந் தழீஇ' (சிலப். 8: 28). இக்காலத்து இதனை, 'பிருடை' என்பர். சுருதிக்கருவி 'தம்புரா', 'தம்பூர்' என இக்காலத்து வழங்குவது; 'தும்புரு வீணை' என்பது இவ்வாறு சிதைந்து வழங்குகின்றதென்பர். தளிர்க்கை நோவ மாடகம் பற்றி என்றது மகளிரின் மென்மை கூறியவாறு. முறுவல், இசையின்ப நுகர்ச்சியால் தோன்றுவது.

விளித்தல் - பாடுதல்; 'விளியாக் கொண்டு' (சீவக. 2691); 'விளியாதான் கூத்தாட்டுக் காண்டலும்' (திரிகடுகம்).

(பி - ம்.) 1. தடக்கை நோக: மாடகம் பயிற்ற: வார்த்த.
2. கள்ளெனும்; கள்ளூற: வீங்கக்: கண்ணொடு மனமுங் கூடி.
3. முறுவரோன்று: முறுவற்றோன்ற: மகளீரீய்ந்த.
4. தெள்விளிப் பாணத்தீந்தேன்; தெள்விளிப் பண்ணிற்றீந்தேன்; தெள்விளித் தீந்தேன் பாடல்; தெள்விளிப் பண்ணியாழ்த் தீந்தேன்; தெள்ளியவிளரித் தீந்தேன்: தெள்ளியபாணித் தீந்தேன்; தெள்ளியபண் செய்தீந்தேன்; இனிதினுண்டார். (15)

571. மெய்வரும் போக மொக்க வுடனுண்டு விலையுங் கொள்ளும்
பையர வல்கு லார்த முள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்க ணோக்கம் படுதலுங் கருகி வந்து
கைபுகச் சிவந்து காட்டுங் கந்துகம் பலவுங் கண்டார்.

மெய் வரும் போகம் - உடலால் பெறும் இன்பத்தை, ஒக்க உடன் உண்டு-(தம்மைக் கூடும் ஆடவருக்கு) நிகராகத் தாமும் ஒருங்கே நுகர்ந்து,விலையும் கொள்ளும்-(பின்பு) அவ்வின்பத்துக்கு விலையாகப் பொருளையும் பெற்றுக்கொள்ளுகிற, பை அரவு அல்குலார் உள்ளமும் பளிங்கும் போல-பாம்பின் படம்போலும் அல்குலையுடைய வேசையரின் மனத்தையும், பளிங்கையும்போல, மை அரி நெடு கண் நோக்கம் படுதலும்-மை தீட்டப்பெற்றுச் செவ்வரி படர்ந்த

(மகளிரின்) கண்பார்வையிற் பட்டவுடன், கருகி-கருநிறங்கொண்டும், கை வந்து புக-(அவர்களுடைய) கையிலே வந்து அகப்பட்டபோது, சிவந்து-செந்நிறங்கொண்டும், காட்டும்-தோற்றமளிக்கின்ற, கந்துகம் பலவும்-பல பந்துகளையும், கண்டார்—.

மகளிர் பந்தாடுதலை இவர்கள் பார்த்ததாகக் கூறுவது இப் பாடல். பந்தின் இயற்கை நிறம் வெண்மை; அப்பந்து, அவ்வப் போது தான் சாரும் பொருளின் நிறத்தைத் தோற்றுவிக்கின்றது. அதாவது, அது பெண்களின் கையில் உள்ளபோது அக்கையின் செந் நிறத்தையும், கையினின்றும் விடுபட்டுச் செல்லும்போது, அவர்கள் பார்வை அதன்மீது படுதலால், கண்ணின் கருநிறத்தையும் பிரதிபலிக் கின்றது; இவ்வாறாக, அடுத்தது காட்டும் பளிங்கின் தன்மையைப் பெறுதலா[illegible] [illegible] உவமித்தார். வேசையரும், தம்மைச் சேரும் ஆடவரி[illegible] [illegible]த்தைத் தம்மிடம் பிரதிபலித்துக் காட்டுவர்; எனவே, அவர்கள் உள்ளத்தையும் உவமித்தார். உவமை கூறிய இரு பொருள்களிடத்தும், உண்மையாகவன்றிச் சார்ந்ததன் தன்மை யைத் தோற்றுவிக்கும் இயல்பு பொதுவாகும். வேசையரின் மனத் தைக் கவிஞர் பொதுவாக உவமித்துக் கூறும் வகையினின்றும் இவ் விடம் வேறுபட்ட தன்மையுடைமை கருதற்குரியது.

'விலையும்': உம்மை இறந்தது தழுவிய எச்சம்.

போகம் ஒக்கவுண்ணுதல்; ஒப்பு: 'காமப் புதுமண மதுவின்றே றல், ஒக்கவுண்டு' 545. மெய்வரும்...அல்குலார்: 'அலைவிழிக் கணி கை மாதராடவர் தமக்கு நல்கும், இலைநிகரெனுமின் பத்திற் கின்ப முஞ் சமமாக் கொண்டு, விலையென நிதியுங் கோடல் வியப்பிற்றே யேற்றமாக, மலைநிகர் தனங்களீந்தோர் மலைநிகர் தனமுங் கொள் வார்' என்பதனை ஒப்பிடுக.

(பி - ம்.) 1. மெய்வரு: விலையுங்கொண்டுண்.
2. பய்யர வல்குலார்: பளிங்குமேபோல்; பளிங்குபோல; பளிங்கேபோல.
3. மய்யரி: கடுகிவந்து. 4. கய்புகிற் செவந்து. (10)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

572. பங்கயங் குவளை யாம்பல் படர்கொடி வள்ளை நீலம்
செங்கிடை தரங்கங் கெண்டை சினைவரா லினைய தேம்பத்
தங்களோ டுவமை யில்லா வவயவத் தகைமை சாலும்
மங்கையர் விரும்பி யாடும் வாவிகள் பலவுங் கண்டார்.

பங்கயம்-தாமரை மலர்களும், குவளை-கருநெய்தற் பூக்களும், ஆம்பல்-செவ்வல்லிப் பூக்களும், படர்கொடி வள்ளை-பரவிப் படரும் கொடியாகிய வள்ளையின் இலையும், நீலம்-நீலோற்பலமும், செம் கிடை-சிவந்த நெட்டியும், தரங்கம்-நீர் அலைகளும், கெண்டை- கெண்டை மீன்களும், சினை வரால்-கருக்கொண்ட வரால் மீனும்,

இனைய-இவை போன்ற பிறவும், தேம்ப-வருந்தும்படி, தங்களோடு உவமை இல்லா-தங்களுக்கு உவமை (தாமேயன்றி) வேறு இல்லாத, அவயவம் தகைமை சாலும்-உறுப்புக்களின் சிறப்பு மிக்க, மங்கையர்-மகளிர் பலர், விரும்பி ஆடும்-மனங்கொண்டு நீராடுகின்ற, வாவிகள் பலவும்-பல குளங்களையும், கண்டார்—.

பங்கயம் முதல் சினைவரால் இறுதியாக உள்ள நீர்ப்பொருள்கள் மகளிரின் அவயவங்களுக்கு உவமையாகப் புலவர்களாற் கூறப்படுவன. இவைகளும், இவை போன்ற (இங்கே கூறப்படாத) பிற சிலவும், மாதர் அவயவங்களுக்கு நேரே தாம் உவமையாகாமை குறித்து வருந்தத்தக்க வகையில் உறுப்பு நலனுடைய மங்கையர் என அவர்களைச் சிறப்பித்து, அத்தகைய மேம்பாடுடைய மகளிர் நீராடும் குளங்களையும் இவர்கள் போகும் வழியில் பார்த்தார்கள் என்று கூறுகின்றார்.

பங்கயம்-மாதர்களின்முகத்துக்கும், குவளை,கெண்டை-கண்ணுக்கும்,ஆம்பல்-வாய்க்கும், வள்ளை-காதுக்கும், நீலம்-கூந்தலுக்கும், செங்கிடை-அதரங்களுக்கும், தரங்கம்-வயிற்று மடிப்புக்களுக்கும், சினைவரால்-கணைக்காலுக்கும் உவமை கூறப்படுவன. இனைய என்றதனால் பற்களுக்கும், முழங்காலுக்கும் பிறசிலவுறுப்புக்களுக்கும் உவமை கூறப்படும் முத்து, நண்டு முதலிய நீர்ப்பொருள்கள் கொள்ளலாகும். குவளையும் நீலமும் ஒன்றென்பர் சிலர்; ஆயினும், இங்கே தனித்தனியாகக் கூறியதுபோலவே பின்னும் 'படர்பூங்குவளை நாண்மலரோ நீலோற்பலமோ பானலோ' (620) எனக் கம்பநாடரே கூறுதலால், இவை வேறுவேறெனவே கொள்ளல் தகும்.

(பி - ம்.) 2. தரங்கக்கெண்டை: தரங்கண்ஞெண்டு; தரங்கஞ்செண்டு; தரங்க நாகம்; தரங்கக் கொண்டை; தரங்க ஞெண்டும்: சினைவிரால்; சிலை வரால்: சிறுவரால்; அனையதேம்பத்; ஆமை தேய்ப்பத்.
3. தங்கள் வேறுவமையில்லா; தங்கவேறுவமையில்லா; தங்களோடுவமையான; தங்களையுவமையில்லா; தங்கள்வேறு வமையான; அவயவந் தழுவிச்; அவயவத்துவமை: அவயவந் தகைமை; அவையவைதழுவிச் சான்ற; சார்ந்த. (17)

573. கடகமுங் குழையும் பூணு
மாரமுங் கலிங்க நுண்ணூல்
வடகமு மகர யாழும்
வட்டினி கொடுத்து வாசத்
தொடையலங் கோதை சோரப்
பளிக்குநாய் சிவப்பத் தொட்டுப்
படைநெடுங் கண்ணார் வட்டாட்
டாடிடம் பலவுங் கண்டார்.

பெண்கள் வட்டு (சூதாட்டம்) ஆடுதலைக் கூறுவது இப்பாட்டு.

கடகமும் - கை வளைகளையும், குழையும் - காதணிகளையும், பூணும்-(பிற) பல அணிகளையும், ஆரமும்-இரத்தின மாலைகளையும், (நுண் நூல்) கலிங்கம்-நுண்ணிய நூலிழைகளா லாகிய (உயர்ந்த) ஆடைகளையும், நுண் நூல் வடகமும்-நுண்ணிய நூலாலாகிய மேலாடைகளையும், மகர யாழும்-மகர வீணைகளையும், வட்டினி கொடுத்து-பந்தயப் பொருளாக வைத்து, வாசம் தொடையல் அம் கோதை சோர-மணம்மிக்க பூமாலைசூடிய அழகிய கூந்தல் அவிழ்ந்து தொங்க, பளிங்கு நாய் சிவப்ப தொட்டு-பளிங்குக் கல்லாலாகிய சூதாடு கருவி (தம் கையொளியால்) சிவந்து காட்டும்படி கைப்பற்றி, படை நெடு கண்ணார்-வேலும் வாளும் போன்ற (நீண்டு ஒளி படைத்த) கண்களையுடைய பெண்கள், வட்டு ஆட்டு ஆடு இடம் பலவும்-சூதாட்டம் ஆடுகின்ற இடங்கள் பலவற்றையும், கண்டார்—.

பெண்கள், தமக்குரிமையான பல பொருள்களைப் பணயமாக வைத்துச் சூதாடுகையில், ஆட்டத்தில் உள்ள ஊக்கத்தால், தம் கூந்தல் அவிழ்ந்து சோர்தலையும் அறியாமல் ஆடுகின்றனர் என்க. அவர்கள் கைக்கொண்ட பளிங்குக் கல்லாலான சூதாடு கருவி, கையின் செந்நிறத்தை (முன்னே கூறிய பந்துகள்போல)ப் பிரதிபலித்துக் காட்டுகின்றன என்று புனைந்து கூறுகின்றார்.

நுண்ணூல் என்பதனை முன்னும் பின்னும் கூட்டுக. கலிங்கம் அரையில் உடுத்தும் ஆடை; 'விலைவரம் பறியலாகா, இன்னுரைக் கலிங்கம்' (சீவக. 697). வடகம்-உத்தரீயம்-மேலாடை; 'சுடர்மதி முகத்தினார்தம், வடகத்தோ டுடுத்த தூசு' (938). கலிங்கமும் என்ற்பால உம்மை தொக்கது; இவ்வா றன்றி, கலிங்க நாட்டிலே நெய்த நுண்ணிய நூலிழையாலான மேலாடை' என, ஒன்றாகவும் கூறுவர். 'வடகம்-அத்தவாளம்; உடை விசேடம்' என்பர் **நச்சினார்க்கினியர்.** (சீவக. 462-உரை). நாய்-சூதாடு கருவி; 'நரைமூதாளர் நாயிடக் குழிந்த, வல்லி னல்லக நிறைய' (புறநா. 52.) வட்டாட்டு: இதனைச் சொக்கட்டான் எனவுங் கூறுவர்.

(பி - ம்.) 1. கலிங்க நன்னூல்; கனகநூலும்; கவரிவாலும்.
2. வட்டினிகொடுத்த; வட்டிதற்கொடுத்து; வட்டிநர்கொடுத்து; வட்டிகற்கொடுத்து; வடிவினிற்கொடுத்து; வட்டித்தற்கொடுத்து; வட்டிரைக்கொடுத்து; வட்டிதங் கொடுத்து; வட்டிதாக்கொடுத்து; வடிதரக்கொடுத்து.
3. பளிங்குநாய்: பளிக்கினாற்: கோதை சோரத் தோகைசேர் மயிலின் சாயற்.
4. கன்னராடும் பண்ணைகள்; கன்னவோடும் பண்ணைகள். (18)

## ஆடவர் செய்திகள்

574. இயங்குறு புலன்க ளங்கு மிங்குங்கொண் டேக வேகி
மயங்குபு திரிந்து நின்று மறுகுறு முணர்வி தென்னப்
புயங்களிற் கலவைச் சாந்தும் புணர்முலைச் சுவடு நீங்கா
வயங்கெழிற் குமரர் வாளாட் டாடிடம் பலவுங் கண்டார்.

இயங்கு உறு புலன்கள்-(எப்போதும்) பலவழிகளிலே செல்லுதலுற்ற ஐம்புலன்களும்,அங்கும் இங்கும்கொண்டுஏக-(மனத்தை)அங்குமிங்குமாகப் பலவிடங்களிலே இழுத்துக்கொண்டு போதலால், ஏகி- அவ்வாறு சென்று, மயங்குபு-(நன்மை தீமைகளை அறியாது) மயங்கி, திரிந்தும் நின்றும்-(பலவிடங்களிலே) அலைந்தும், (சிலவிடங்களில்) ஊன்றி நின்றும், மறுகு உறும் உணர்வு இது என்ன-கலங்குகின்ற அறிவின் தன்மை இது என்னும்படி, வயங்கு எழில் குமரர்-விளங்கும் அழகையுடைய காளையர், புயங்களில்-(தங்கள்) தோள்களிலே, கலவை சாந்தும்-நறுமணப் பொருள்கள் கலந்த சந்தனக் குழம்பும், புணர் முலை சுவடும்-(தமக்கு உற்ற மகளிரின்) நெருங்கிய தனங்களின் (இறுகத் தழுவுதலாலுண்டாகிய) குறியும், நீங்கா-நீங்காமல், வாள் ஆட்டு ஆடு இடம் பலவும்-வாள் விளையாட்டைச் செய்யுமிடங்கள் பலவற்றையும், கண்டார்—.

கட்டிளங் காளையரின் வாள்விளையாட்டு நிகழுமிடங்களை இவர்கள் கண்டமை இதிற் கூறப்படுகின்றது.

காளையர், வாள் கைக்கொண்டு இடசாரி வலசாரியாகச் சுழற்றியும்,தாமும் சுழன்றும் விளையாடும் தன்மைக்கு,புலன்களின் வழியே சென்று தடுமாறும் அறிவின் தன்மையை உவமை கூறினர். மூன்ருமடியில், அவர்கள் பருவத்துக்கேற்ற இன்ப நுகர்ச்சி கூறப்பட்டது.

மயங்குபு: செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

(பி - ம்.) 1. இயங்குறும்; இயங்குபு: இங்குமங்கும்: ஏகவைகி.
2. திரியநின்று: மறுக்குறும்: மயக்குறும்: உணர்விற்றென்னப்; உணர்வி தென்னுப்: நினைவைமானப்.
3. கலவைச்சேறும்; சுவடுநீங்கப்; சுவடுநீங்காப்; சுவடுநீங்கிப்; சுவடுந் தங்கப்.
4. பயங்கெழு; பயங்கிளர்; கயங்களிற்; வயங்கெழு: வட்டாட்டாடிடம்; பந்தாட்டாடிடம்; வந்தாடாட்டிடம். (19)

575. வெஞ்சுட ருருவுற் றன்ன மேனியர் வேண்டிற் றீயும்
நெஞ்சின ரீசன் கண்ணி னெருப்புரு வனங்க னன்னுர்
செஞ்சிலைக் கரத்தர் மாதர் புலவிக டிருத்திச் சேந்த
குஞ்சியர் சுழலாநின்ற மைந்தர்தங் குழாங்கள் கண்டார்.

வெம் சுடர் உரு உற்றது அன்ன மேனியர்-வெப்பமுள்ள சூரியன்(ஒரு) வடிவெடுத்து வந்தாற் போன்ற (ஒளி பொருந்திய) உடல்

அமைப்புடையவர்களும், வேண்டிற்று ஈயும் நெஞ்சினர்-(இரவலர்) வேண்டியதொன்றை (த்தட்டாது) அளிக்கும் ஈரமனமுடையவரும், ஈசன் கண்ணின் நெருப்பு உறு அனங்கன் அன்னர்-சிவபெருமானது நெற்றிக்கண்ணின் நெருப்புப் பட்டு அழியாத மன்மதனைப் போன்ற அழகுடையவரும், செம் சிலை கரத்தர்-செம்மையான வில்லேந்திய கையுடையவர்களும், மாதர் புலவிகள் திருத்தி சேந்த குஞ்சியர்-(தம் உரிமை) மகளிரின் ஊடலை (அவரடிகளில் வணங்கி) உணர்த்துதலால் செந்நிறமடைந்த தலைமயிர் உடையவர்களுமாகி, சுழலா நின்ற-திரிந்துகொண்டிருந்த, மைந்தர் தம் குழாங்கள்-காளையரின் கூட்டங்களை, கண்டார்—.

விற்பயிற்சியுடைய வீரமைந்தர், தம் திறமையைக் காட்டுதற்குக் கூடியுள்ள விடங்களை இவர்கள் கண்டமை கூறுவது இப்பாடல். வில்வீரர், பகைவரை அழிக்கும்போது வன்னெஞ்சுடையராயும், இயற்கையில் வறியவர்க்கு இரங்கும் இளகிய மனமுடையராயும் இருப்பர் என்க. ஆடவர், மகளிரின் ஊடலைத் தீர்த்தற் பொருட்டு அவர்களை அடிவணங்குதல் குற்றமாகாதென்பது நூல்களிற் கூறப்படுவதாகும்; 'கொடுமையொழுக்கங் கோடல் வேண்டி, அடிமேல் வீழ்ந்த கிழவன்' (தொல். பொருள். கற்பு. 6) என்பது காண்க. இவ்வாறு மாதர்களை வணங்குங்காலத்து, அம்மாதர்களின் பாதத்தில் ஊட்டப்பெற்ற செம்பஞ்சுக் குழம்பு ஆடவர்களின் முடியிற் படுதலால், தலைமயிர் செந்நிறமடைகின்றது. ஒப்பு. கிட்கிந்தா. 476. மன்மதன் அநங்கன்; சிவபிரான் நெற்றிக்கண் நெருப்பால் அங்கமில்லாமல் செய்யப்பட்டவன். இம்மைந்தர் உடலோடு கூடிய மன்மதனைப் போன்றவர் என அவர்களின் அழகுச் சிறப்புக் கூறியவாறு. சுடருருவுற்றன்ன என்றது அவர் மேனியின் ஒளிச்சிறப்பைக் கூறியது.

(பி - ம்.) 1. வெஞ்சின வுருவிற்றென்னு; வெஞ்சின முருவிற்றென்னு; உருவிதென்னு; உருமிற்றென்னு; வெஞ்சுடருருக்கொண்டன்ன: மேன்மையர்; வீரத்தர். 2. நெருப்பரு: அனங்கனன்னர்.
3. கரத்தார்; கரத்த: புருவ: திருத்திச் சேர்ந்த; திருத்தித் தேய்ந்த.
4. குஞ்சியர் சூழநின்ற; குஞ்சியர் சுழலநின்ற; குஞ்சியரிளமைச் செல்வ குஞ்சியர் குணத்தான்மிக்க குமரர்தம்; மைந்தர்கள்; குழாமும். (20)

இதன் பின் உள்ளதோர் அதிகப் பாடல்:

இன்னபல் வளங்க ளெல்லா மினிதுற நோக்கி யார்க்கு
முன்னவ னுய தேவு முனிவனு மிளைய கோவும்
பொன்னக ரிறைபு மற்றுப் பூதலத் தரசு மொவ்வா
மன்னவன் சனகன் கோயின் மணிமதிற் புறத்தைச் சேர்ந்தார்.

'மிதிலைகாண் படலம் முற்றும்' என்று இவ்விடத்து ஒரு பிரதியிற் காணப்படுகின்றது.

## அரண்மனையை அடுத்துள்ள பொழில்

(வேறு)

576. பாகொக் குஞ்சொற் பைங்கிளி யோடும் பலபேசி
மாகத் தும்பர் மங்கையர் நாண மலர்கொய்யும்
தோகைக் கொம்பின் னன்னவர்க் கன்ன நடைதோற்றுப்
போகக் கண்டே வண்டின மார்க்கும் பொழில்கண்டார்.

பசுமை கிளியோடும் - (சோலையில் உள்ள) பச்சைக் கிளி களுடனே, பாகு ஒக்கும் சொல் பல பேசி-சர்க்கரைப் பாகு போன்ற (இனிய) பல சொற்களைப் பேசிக்கொண்டு, மாகத்து உம்பர் மங்கையர் நாண-சுவர்க்கத்திலுள்ள தேவ மாதரும் (இவர்க ளழகைக் கண்டு) வெள்கும்படி, மலர் கொய்யும்-பூக்களைப் பறிக்கின்ற, தோகை, கொம்புஅன்னவர்க்கு-மயிலையும் பூங்கொம்பையும் போன்ற மங்கையர்க்கு, அன்னம் நடை தோற்று போக கண்டு-அன்ன மானது நடையிலே தோற்று (அவர் பின்னே) போவதைக் கண்டு, வண்டு இனம்-வண்டுக் கூட்டங்கள், ஆர்க்கும்-ஆரவாரம் செய்வ தற்கு இடமான, பொழில்-(அழகியதொரு) சோலையை, கண்டார்—.

பாகு ஒக்கும் சொல் என்பதனைக் கிளிக்கு அடையாக்கினுமாம். ‘தோகைக் கொம்பு’ என்றவிடத்துக் ககர வொற்று ஓசைக்கேற்ப மிக்கது. கொம்பின் னன்னவர்க்கு: இன்-சாரியை; னகரவொற்று விரித்தல். கண்டே: ஏகாரம் இசைநிறை.

மிதிலை நகரத்து மகளிர் தேவமாதரினும் மிக்க அழகுடையர் எனச் சிறப்பிக்கின்றார். ஓரிடத்து நிகழும் வெற்றி தோல்விகளைக் குறித்து ஆரவாரித்தல் காண்போர்க்கு இயல்பாகலின், ‘வண்டினம் அன்னங்களின் நிலையைக் கண்டு ஆர்க்கும்’ என்றார்.

(பி - ம்) 3. அன்னவரன்னம்; அன்னமவர்க்கந் நடைதோற்றும்.
4. கண்டும்: கண்டு; கண்ட: வண்டினமாடும். (21)

## அகழி

577. உம்பர்க் கேயும் மாளிகை யோளி நிழல்பாய
இம்பர்த் தோன்றுந் நாகர்த நாட்டின் னெழில்காட்டிப்
பம்பிப் பொங்குங் கங்கையி னாழ்ந்து படைமன்னன்
அம்பொற் கோயிற் பொன்மதில் சுற்றும் மகழ்கண்டார்.

உம்பர்க்கு ஏயும்-தேவர்களும் (வந்து) தங்குதற்குத் தகுதி யான, மாளிகை ஒளி-(அரண்மனையைச் சார்ந்த பெரிய) மாளிகை வரிசையின், நிழல் பாய-சாயை (தன்னிடத்தே) படிதலால், இம்பர் தோன்றும்-இவ்வுலகத்தே (வந்து) காணப்படுகிற, நாகர் தம் நாட்டு இன் எழில் காட்டி-தேவருலகத்து இனிய அழகைத் தன்னிடத்தே காட்டிக்கொண்டு, பம்பி பொங்கும் கங்கையின் ஆழ்ந்து-(அலைகள்)

மிக்கு நீர் பொங்கி வருகின்ற கங்கையைப்போல ஆழமுடையதாய், படை மன்னன்-சேனைகள் மிக்க சனக மகாராசனது, அம் பொன் கோயில் பொன் மதில் சுற்றும்-அழகிய பொன் மயமான அரண்மனை யின் பொன்னாலாகிய மதிலைச் சூழ்ந்துள்ள, அகழ் கண்டார்-அகழி யைப் பார்த்தார்கள்.

ஏயும் மாளிகை, தோன்றுந் நாகர், சுற்றும் மகழ்-விரித்தல் விகாரம்.

சனக மகாராசனது அரண்மனையைச் சார்ந்த மாளிகை வரிசை கள் மிகவுயர்ந்து பேரொளியும் அழகும் மிக்கிருத்தலால், தேவர்களும் விரும்பி எளிதில் வந்து தங்குதற்குரியனவாயுள்ளன; அவற்றின் சாயை அகழி நீரிலே படியும்போது, தேவலோகத்துப் பொன் மாளிகைகளின் அழகைத் தோற்றுவிக்கின்றன என்க. அகழி, மிக்க ஆழமும் தெளிவும் உடையதாகலின் மாளிகைகளின் நிழலை நன்கு காட்டுகின்றது. இனி, நாகர்தம் நாடு என்பதனை நாகலோகம் என்று கொண்டு உரைப் பினும் ஆம்.

ஒப்பு நோக்குக: 'மடுவில் வானக ருருவுகாட்டியதுபோன்ம் மதில்சூழ், குடிகொண் மாநக ரந்நிழல் கதுவிடா தகன்ற, புடைகொ ணீர் நக ருடுத்தலை பொங்குபே ரகழி' (நைடத. நகரப். 1). இங்குக் கூறும் மிதிலை நகரமைப்பு, அதன் மாளிகைகள் முதலியவற்றின் வருணனைகளை, முன்பு கூறப்பெற்ற அயோத்திநகர வருணனையோடும், பின்பு சுந்தர காண்டத்தில் கூறப்படும் இலங்கை நகர வருணனை யோடும் ஒப்பிட்டுக் காண்பதும் பயன் தருவதாகும்.

(பி - ம்.) 1. ஒளியினிழல்பாய; ஒளிநிழல்பாயும்: ஓங்குநிழல்பாய; ஓங்குநிழல் பொங்க; நீழலொளிபாயும்.
2. இமபர்க்கேயும்; நாகர்நன்னாட்டின்; நாகர்நன்னாட்டில்; நன்னகர்நாட் டின்; எழில்காட்டப்; எழில்நாட்டிப்.
4. மதிற்சுற்றும்; மதிள்சுற்றும்; மதிள்சூழும். (22)

மூவரும் கன்னிமாடத்தருகே நிற்றல்

578. பொன்னின் சோதி போதினி னாற்றம் பொலிவேபோல்
தென்னுண் டேனிற் றீஞ்சுவை செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே களிபேடோ
டன்னம் மாடும் முன்றுறை கண்டங் கயனின்றார்

பொன்னின் சோதி-செம்பொன்னின் பேரொளியும், போதின் இன் நாற்றம்-பூவின் இனிய மணமும், தென் உண்தேனில் தீம் சுவை-தேன் வண்டுகள் உண்ணும் தேனிலுள்ள இனிய சுவை பொருந்திய, செம் சொல் கவியின்பம்-செவ்விய சொற்களாலாகிய கவிகளின் இன்ப மும் (ஆகியவற்றின்), பொலிவே போல்-விளக்கமே உருவெடுத்தது போன்ற, கன்னி-கன்னியாகிய சீதாபிராட்டி தங்குகிற, மாடத்து

உம்பரின் மாடு-கன்னியாமாடத்து மேனிலையின் ஒருபால், அன்னம்-ஆணன்னங்கள், களி பேடோடு ஆடும்-மகிழ்ச்சிக்குரிய(தம்)பெட்டைகளுடனே குலாவுகின்ற, முன் துறை கண்டு-நீர்த்துறையமைந்த முன்னிடத்தைக் கண்டு, அங்கு-அவ்விடத்தே, அயல்-அம்மாளிகையின் பக்கலில், நின்றார்-(மூவரும்) நின்றார்கள்.

தென் : தேன் என்பதன் குறுக்கல்; தேன் வண்டுகளைக் குறிக்கும். சுவைச் செஞ்சொல் எனற்பாலது ஓசையின்பங் கருதி மிகாது இயல்பாயிற்று. 'கன்னிம் மாடத்து,' 'அன்னம் மாடும் முன்றுறை' என்றவிடங்களில் மகரம் விரித்தல்.

மேலே பிராட்டியின் சிறப்புக்களைப் பலபட விரித்துரைத்தலின், இங்கே 'கன்னி' என்றது பிராட்டியைக் குறிப்பதாயிற்று. அன்னம், மயில், கிளி முதலியவற்றை வளர்த்து அவற்றோடு விளையாடியும் பேசியும் மகிழ்தல் அரசகுலத்து மங்கையரியல்பாதலின், அன்னங்கள் தங்கி மகிழ்ந்திருத்தற்கேற்றவாறு செயற்கை நீர்நிலைகளை மாளிகைகளில் அமைத்து வைப்பர்.

பிராட்டியின் திருமேனியொளிக்குப் பொன்னின் சோதியும், மேனியின் நறுமணத்திற்குப் பூவின் மணமும், சொற்களுக்குத் தேன் போன்ற சொற்களாலாகிய கவியின்பமும் உவமையாயின. உத்தம சாதிப் பெண்களின் மேனி சண்பகப்பூமணங் கமழுமென்பர்;80-குறிப்புப் பார்க்க. இதுவரை, 'சென்றார்', 'கண்டார்' எனறே கூறிவந்த ஆசிரியர், இவ்விடத்து, 'நின்றார்' என்று கூறி, பிராட்டியும் பிரானும் ஒருவரையொருவர் கண்டு காதலுற்றமை தெரிவித்தற்கு இடமாக்கிக் கொண்டார் போலும். மேலும், பொழிலையும் அகழியையும் சார்ந்து மிகவும் குளிர்ச்சியுடையதாகிய அவ்விடம், இவர்கள் சற்றுத் தங்கி யிளைப்பாறுதற்கும் ஏற்றதாகலின், முனிவனும் அவ்விடத்தே சிறிது நிற்றலைக் கருதியிருத்தல் கூடும்.

'கண்டுகேட்டுண்டுயிர்த் துற்றறியுமைம்புலனு, மொண்டொடி கண்ணேயுள' என்றவாறு, பிரானது ஐம்புல நுகர்ச்சிக்கும் உரியவற்றுள் மூன்று கூறி, மெய்யுறுதலாற் பெறத்தக்க ஏனையிரண்டையும் உபலட்சணத்தாற் பெறவைத்தார். இவ்விடத்து, இப்பாடலின் பொருளமைதிச் சிறப்பும், 'பொன்' என்று தொடங்குதலும் ஓர்ந்து இன்புறற்பாலன. வான்மீகத்துள், மிதிலை நகர வருணனையும், பிரானும் பிராட்டியும் ஒருவரையொருவர் கண்டு காதலுறுதலாகிய காட்சியும் கூறப்படவில்லை. கம்பநாடர் தம் காவியச் சுவைக்கும் தமிழ் மரபுக்கும் ஏற்றவாறு இவற்றை அமைத்துக்கொண்டாராதல் வேண்டும். வான்மீகத்துள், முனிவனும் குமரரும் நேரே யாகசாலை சென்றடைந்தனர் என்றே கூறப்பட்டுள்ளது.

திருமேனிக்குப் பொன்னொளியும் பூவின் மணமும்: ஒப்பு: 'பொன்னினொளி பூவின் வெறி......அன்னவடன் மேனியது மான'

(1222); தீஞ்சுவைச் செஞ்சொற்கவி': ஒப்பு: செவ்விய மதுரஞ் சேர்ந்தநற் பொருளிற் சீரிய கூரிய தீஞ்சொல், வவ்விய கவிஞர்'(94).

(பி - ம்.) 1. சோதிப்போதினினூற்றப்: போதிளநாற்றப்; பூவினிறைற்றப்: பொலிவின்று; பொலிவின்பூ; பொலிபூவின்; பொலிவெய்திற்.
2. தென்னுண்டேறற்: இன்னுண்டென்னிற்; இன்னுண்டேனிற்; இன்னுண்டேறற்; தென்னுண்டென்னல்: திண்சுவையின்சொல்: இன்சொற் செவிசாரக்; கவியின்பக்; கனியின்பக்; கனியின்பம்.
3. கன்னிநன்மாடத்து; கன்னியர்மாடத்து: உம்பரின்மாடோர்; கழிபேடொடு; கழிபேடாடு; மாடேபேடோடும்; மாடேபெடையோடும்.
4. ஆடு முன்றுறை; ஆடுஞ்செய்கைகள்: கண்டாங் கயனின்ருர்; கண்டாரயனின்ருர்; கண்டங்கயனின்ருள். (23)

சில பிரதிகளில் இவ்விடத்து 'மிதிலைகாண்படலம்' முடிவுற, மேலே 'காட்சிப் படலம்' என்று தொடங்குகின்றது.

### பிராட்டியின் சிறப்புக்கள்

579. செப்புங் காலைச் செங்கம லத்தோன் முதல்யாரும்
ஒப்பெண் பாலுங் கொண்டுவ மிப்போ ருவமிக்கும்
அப்பெண் டானே யாயின போதிங் கயன்மற்ருேர்
ஒப்பெங் கேகொண் டெவ்வகை நாடி யுரைசெய்கேன்.

செம்மை கமலத்தோன் முதல் யாரும்-செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவன் முதலாக யாவரும், செப்பும் காலை-(பெண்களைச் சிறப்பித்துச்) சொல்லும்போது, உவமிப்போர் - (அங்கு) உவமை கூறுவாராகி, ஒப்பு எண்பாலும் கொண்டு-உவமையை எட்டுத் திக்குக்களிலும் நாடி எடுத்துக்கொண்டு, உவமிக்கும்-(முடிவாக) உவமை கூறுதற்குரிய, அ பெண் தானே-அந்தத் திருமகளே, இங்கு ஆயினபோது-இங்கே (சீதையாக) வந்திருக்கும்போது, (வந்திருத்தலால்), அயல்-வேருக, ஓர் ஒப்பு-ஓர் உவமைப் பொருளை, எங்கே எவ்வகை நாடி கொண்டு உரைசெய்கேன்-எவ்விடத்து, எவ்வாறு தேடி எடுத்துக் கொண்டு (நான்) கூறுவேன்! (இயலாது என்றவாறு.)

இதுமுதல் பதினைந்து கவிகளால் பிராட்டியின் சிறப்புக்களையும், பிராட்டியும் இராமபிரானும் ஒருவரையொருவர் நோக்கி உணர்வு ஒன்றுபட்டமையையும் கூறுவாராய், இம்முதற் கவியில் பிராட்டி திருமகளே என்பதை யுணர்த்துகின்ருர்.

உலகத்தில் யாரும் பெண்களுக்குச் சிறந்த உவமை கூறவேண்டின், திருமகளையே கூறுவர்; அத்திருமகளே இங்குச் சீதாபிராட்டியாக வந்திருத்தலால், அப்பிராட்டிக்கு உவமை நாடிக் கூறுதல் இயலாது என்கிருர். எனவே, அவள் தனக்குத் தானே உவமையாயினமை பெறப்பட்டது.

எண்பாலும்-எண்ணத்தக்க எவ்வகையிலும் எனவும் பொருள் கொள்ளலாம். 'மற்றோர்' என்பதில் 'மற்று' அசைநிலை. உவமிப்போர் உவமிக்கும் அப்பெண் என்றதனால், செப்புங்காலை என்பதற்குப் பெண்களைச் சிறப்பித்துச் சொல்லும்போது என்றுரைக்கப்பட்டது.

(பி - ம்.) 1. முதலாரும்; 2. எப்பெண்பாலும்.
3. அயல்வேறோர்; அயல்மாறோர்.
4. ஒப்பங்கே: ஏவரைநாடி; எவ்வனநாடி; உரை செய்கேம்; உரை செய்வேன்; உரை செய்வோம்; உவமிக்கேன். (24)

580. பொன்சேர் மென்காற் கிண்கிணி மார்பம் புனையாரம்
கொன்சே ரல்குன் மேகலை தாங்குங் கொடியன்னார்
தன்சேர் கோலத் தின்னெழில் காணச் சதகோடி
மின்சே விக்க மின்னர செனனும் படி நின்றாள்.

பொன்சேர்-அழகு பொருந்திய, மென் கால்-மென்மையான கால்களிலே, கிண்கிணி-சதங்கைகளையும், மார்பம் புனை ஆரம்-மார்பினை அலங்கரிக்கத்தக்க மணிமாலை, பூமாலை முதலியவற்றையும், கொன் சேர் அல்குல்-பெருமை பொருந்திய இடையிலே, மேகலை-மேகலாபரணத்தையும், தாங்கும்-தரித்துள்ள, கொடி அன்னார்-பூங்கொடி போன்ற (பல) தோழிமார், (சூழ்ந்துகொண்டு), தன் சேர் கோலத்து இன் எழில் காண-தன்வடிவிலுள்ள இயற்கையான இனிய அழகை (வியந்து) நோக்கவும், சதம் கோடி மின் சேவிக்க-அளவற்ற மின்னற் கொடிகள் (தன் மேனி யொளிக்கு ஆற்றாதனவாய்) வணங்கவும், மின் அரசு என்னும்படி-மின்னல்களுக்கு அரசு என்று (யாவரும் வியந்து) கூறும்படி, நின்றாள்-(மாடத்து மேனிலையில் அன்னமாடும் துறைக்கருகே) நின்றாள்.

நின்றவள் பிராட்டி; அவ்வெழுவாய் வருவிக்க. பிராட்டிக்கு உவமை கூறுதல் இயலாதாயினும்,இயன்றவரை அவள் சிறப்புக்களைக் கூறத் தொடங்கி, யாவருங் கண்டு வியத்தற்குரிய இயற்கை யழகும் பேரொளியும் பொருந்தியவள் என இக்கவியிற் கூறுகின்றார். இராமபிரானை, 'ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினான்' என்றதற்கேற்ப, பிராட்டியும், 'பெண்களே கண்டு வியக்கத்தக்க பேரெழிலுடையவள்' என்கின்றார். பல அணிகலன்கள் அணிந்துள்ளமையைத் தோழிமாருக்கு விசேடித்து, அவர்கள், 'தன் சேர் கோலத்து இன்னெழில் காண' என்றதனால், பிராட்டியின் இயற்கை யழகே பெரிது; காணுந்தோறும் புதியதாய்த் தெவிட்டாதது என்பதாயிற்று. இனி, 'தன் சேர் கோலத்தின்னெழில் காண' என்பதற்கு, (தோழிமார்) 'தன்னை அலங்கரித்துக் காண' என்றலும் பொருந்தும்.

'சதகோடி' என்றது மிகுதி குறித்தது; வச்சிராயுதமும் ஆம்.

பிராட்டி நின்றவிடம், அன்னமாடும் முன்றுறைக்கு அயலது என்பது, பின்னே இராமபிரான் கூற்முக, 'அன்னமாடுந் துறைக் கருகுநின்முடனைக், கன்னிமாடத்திடைக் கண்டதுங் கழறுவாய்' (கிட்கிந்தா. 784) என்பதனுல் அறியலாம். பெண்களும் கண்டு வியக்கும் பேரழகு: 588-குறிப்புப் பார்க்க. மின்னரசென்னும்படி: ஒப்பு; ஆரணிய. 277.

(பி - ம்.) 1. பொன்சே ரங்கால்; பொன்சேருங்கால்; பொன்சேர் காலில்: பொன்சே ரல்குல் கிண்கிணி: ஆரம் புனையாரம்.

2. தாங்கிக்: கொடியன்னுள்.

3. தன்சேர்மேவத் தன்னெழில்; தன்சேர் மேவத் திண்ணெழில்; தன் சேர் வொக்கத்தன்னெழில்; தன்சேர் வொக்கத்தின்னெழில்: தன்சேர் மேவித்தன்னெழில்; தன்சேர் கோலத்தன்னெழில்; தன்சேர் கோலத் திண்ணெழில்.

4. மின்சேவிப்ப; மின்சேவிக்கும்: மின்னரசென்னவே நின்முள். (25)

பல பிரதிகளில் இப்பாட்டு, மேலே, 'தந்நேரில்லா' (586) என்ற பாடலின் பின் உள்ளது.

581. உமையா ளொக்கும் மங்கைய ருச்சிக் கரம்வைக்கும்
கமையாண் மேனி கண்டவர் காட்சிக் கரைகாணுர்
இமையா நாட்டம் பெற்றில மென்ரு ரிருகண்ணுல்
அமையா தென்ரு ரந்தர வானத் தவரெல்லாம்.

உமையாள் ஒக்கும் மங்கையர்-உமாதேவி போலும் சிறப்புடைய மாதருங்கூட, கரம் உச்சி வைக்கும்-கைகளைச் சிரசின்மேல் குவித்துப் போற்றத்தக்க, கமையாள்-பொறுமை முதலிய சிறந்த குணங்களையுடைய அப்பிராட்டியின், மேனி கண்டவர்-திருமேனியழகைப் பார்த்த மண்ணுலகத்தவர், காட்சி கரை காணுர்-அவ்வழகின் எல்லையைக் காணமாட்டாதவராய்,இமையா நாட்டம் பெற்றிலம் என்ருர்-(இவ்வழகை முற்றும் பருகுதற்குத் தேவர்களைப் போல) மூடுதலில்லாத கண்களை (நாம்) பெறவில்லையே என்று குறையுற்ருர்; அந்தரம் வானத்தவர் எல்லாம்-(இமையாநாட்டம் பெற்ற) மேலுலகத்துத் தேவர்களெல்லாம், 'இருகண்ணுல் அமையாது என்ருர்-(இவ்வழகை முற்றிலும் கண்டு நுகர்தற்கு) நமக்குள்ள இரண்டு கண்களால் ஆகாது' என்று குறையுற்றனர்.

இமைக்குங் கண்ணுடையவர்கள் இமையாத கண்களில்லையே யெனக் குறையுறுதலும், 'இமையாத கண் பெற்றவர்கள் அத்தகைய இருகண்கள் போதாவென்று குறையுறுதலுமாக, நிறைவு பெற்ருர் எவருமில்லையென்று பிராட்டியினது அழகின் சிறப்பை உயர்த்துக் கூறினர். நற்குணங்களுட் சிறந்த பொறுமையைக்கூறி, ஏனையவற்றையுங்கொள்ளவைத்தார். பிராட்டி பொறையே உருவானவளென்பது, பின்புஅவள்அசோகவனத்திலே தன்னைத்துன்புறுத்திய அரக்கியரைத்

தன் சொல்லாலே அழிக்கும் ஆற்றல் பெற்றிருந்தும், அவர்களுக்குத் தீங்கெண்ணுது பொறுத்திருந்தமையால் விளங்கும். 'இரும் பொறை யென்பதொன்றும்........களி நடம் புரியக் கண்டேன்' (சுந்தர. 1273) என அநுமன் வாக்காகப் பின்னர்க் கூறுதலும் காண்க.

பிராட்டியினதழகின் மேன்மை: 785, 1213, 1223; ஆரணிய. 278, 835. பிராட்டி, 'மங்கையர் உச்சிக் கரம் வைக்கும்' தன்மையள்: ஒப்பு: 'மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக், காத லாள்' (சிலப். 1. 28-29).

(பி - ம்.) 1. உமையாளோடும்: கரம்வைக்கக்; கரம்வைப்பக்; கரம்வைத்தே: கரம்வைகும்.
2. கமையாமேவிக்; காட்சி கரைகாணு; கரைகாண.
3. பெற்றிலரென்ருர்; பெற்றனமென்ருர்; பெற்றனமென்ருல்.
4. அமையாநின்ருர்: வானத்தமரரெலாம். (26)

582. வென்றம் மானைக் காயயில் வேலுங் கொலைவாளும்
பின்றம் மானப் பேர்கய லஞ்சப் பிறழ்கண்ணுள்
குன்றம் மாடக் கோவி னளிக்குங் கடலன்றி
அன்றம் மாடத் தும்ப ரளிக்கும் மமுதன்னுள்.

அ மானை வென்று-(பெண்களுக்கு உவமை கூறப்படும்) அந்த மானை (த்தன் பார்வையால்) வென்று, காய் அயில் வேலும்-(பகைவரை) அழிக்கும் கூரிய வேலும், கொலை வாளும்-கொலைத் தொழிலை யுடைய வாளாயுதமும், பின்ற-தனக்குப் பின்னிடவும், மானம் பேர் கயல் அஞ்ச-பெருமையோடு சஞ்சலத்தையுடைய கயல் மீன்களும் (தோற்று) அஞ்சவும், பிறழ் கண்ணுள்-பிறழ்ச்சியுற்று விளங்கும் கண்களையுடையவள், குன்றம் ஆட-மந்தரமலை (மத்தாகச்) சுழல, கோவின் அளிக்கும்-திருமாலால் (அமுதத்தை முன்னே) அளித்த, கடல் அன்றி-பாற்கடலையன்றி, அ மாடத்து உம்பர்-அக்கன்னி மாடத்தின் மேலிடம், அன்று அளிக்கும்-அப்போதே (புதிதாகத்) தருகின்ற, அமுது அன்னுள்-அமுதம் போன்றவள். பிராட்டி என்னும் எழுவாய் வருவிக்க.

அ: உலகறி சுட்டு. அம் மான் எனப் பிரித்து, அழகிய மான் என்றலுமாம். வேல், வாள், கயல் முதலியனவாகப் புலவர் கூறும் உவமைகள் இவள் கண்களுக்குப் பொருந்தா வென்றபடி. பின்றம் மான, குன்றம்மாட, அளிக்கும்மமுது: விரித்தல் விகாரம்.

திருப்பாற்கடல், பலரும் மிக வருந்தி முயன்றதாலும், திருமாலருளாலும், வேறு பல பொருள்களோடு இதுவும் ஒன்ருகத் தேவர்க்களித்த அமுதத்தினும், இக்கன்னிமாடம், எவரும் வருந்தி யுழைக்காமலே தனியாக அப்போதளித்த அமுதம் சிறப்புடைய தன்றோ? அத்தகைய அமுதம் போன்றவள் பிராட்டி; இல்பொருளுவமை.

அமுதன்னாள்: ஒப்பு: 'பெண்ணி னின்னமு தன்னவள்'(அயோத். 52); நிலந் தந்த திருமகள் பிராட்டி: ஆரணிய. 631.

(பி - ம்.) 1. வென்றம்மானத்: தாரயில்; தாரையில்: தாமில: வென்றம்மானைக் காரயில்: வாளுங்கொலைவேலும்.
2. பின்றம்மானிற்; பின்றப்பின்றப்; பின்றம்மாநீர்ப்.
3. குன்றமாடக்; குன்றமானக்; அன்றம்மாடக்: கோயிலளிக்கும்; கோவிலளிக்கும்: கடலின்றி.
4. இன்றிம்மாடத்திம்பர்: அமுதொத்தாள். (27)

583. பெருந்தே னின்சொற் பெண்ணிவ
ளொப்பா ளொருபெண்ணைத்
தருந்தா னென்ரு ஞன்முக
னின்னுந் தரலாமோ
அருந்தா வந்தத் தேவ
ரிரந்தா லமுதென்னும்
மருந்தே யல்லா தென்னினி
நல்கும் மணியாழி.

மணி ஆழி-இரத்திஞகரமான திருப்பாற்கடல், அருந்தா அந்த தேவர்-(அமிழ்தையன்றி வேறெதனையும் முன்னே) நுகரப் பெருத அந்தத் தேவர்கள், பெருதேன் இன்சொல் பெண்-பெருமை மிக்க தேன் போலும் இனிய சொற்களையுடைய பெண்ணுகிய, இவள் ஒப்பாள் ஒரு பெண்ணை-இவளை யொத்த சிறப்புடைய மற்ரெரு பெண்ணை, (அடைய விரும்பித் தன்னிடம் வந்து), இரந்தால்-யாசித்தால், (தரல் ஆமோ)-(இப்போது) தரவியலுமோ? அமுது என்னும் மருந்தே அல்லாது-அமிர்தம் என்னும் சாவா மருந்தை யன்றி, இனி என் நல்கும்-வேறு எதனை (அது) கொடுக்கும்? இன்னும்-மேலும், நான்முகன்தான் தரும் என்ருல்-(படைத்தலில் வல்ல) பிரமனே படைத்துத் தருவதென்ருலும், தரல் ஆமோ-(அவனுலும் அவ்வாறு) தருதல் கூடுமோ? (கூடாது). தரலாமோ என்பதனை முன்னுங் கூட்டுக.

'முன்னே இலக்குமியைப் பெற்றளித்த பாற்கடலானது, அவ்விலக்குமியையோ, அல்லது அவளே போன்ற (சிறிதும் வேறுபாடில்லாத) மற்ரெரு பெண்ணையோ மீட்டும் தருதல் அதனுல் ஆவதன்று; அதுவன்றிப் பிரமனுலும் அவ்வாறு படைத்தளித்தல் ஆவதன்று' என்று பிராட்டியின துயர்வைப் புனைந்துரைக்கின்ருர். திருமகளார் பிரமனது படைப்புக் குட்பட்டவரல்லர்; அவரே இங்கும் அயோநிஜையான சானகியாகி வந்திருக்கின்ருர்; இவ்வாறு தனக்குத்தானே அமைத்துக்கொண்டதன்றிப் பிறிதொருவரால் ஆவதன்று என்றபடி.

(பி - ம்.) 1. பெருந்தே ரல்குல்; பெண்ணிவளென்பாள்; பெண்ணிவள் போல்வாள்.
2. தருந்தாள்; இன்ன நான்முக னென்றால்; இன்று நான்முக னென்றால்; இன்று நான்முக னின்னந்தரலாமே; என்றூற்றரலாமே; என்றூற்றர லாமோ.
3. வருந்தாவந்தத்; அருந்தாவுய்ந்தத்; அருந்தாதந்தோ; அருந்தாவந்தே.
4. மருந்தா மல்லால். (28)

584. அனையாண் மேனி கண்டபி னண்டத் தரசாளும்
வினையோர் மேவும் மேனகை யாதிம் மிளிர்வேற்கண்
இனையோ ருள்ளத் தின்னலி னோர்தம் முகமென்னும்
பனிதோய் வானின் வெண்மதிக் கென்றும் பகலென்றே.

அண்டத்து அரசு ஆளும் வினையோர் மேவும்-தேவலோகத்திலே அரசாளும் நல்வினையுடைய இந்திரன் முதலானோர் விரும்புகின்ற, மிளிர் வேல் கண்-பிரகாசிக்கும் வேல்போலுங் கண்களையுடைய, மேனகை ஆதி இனையோர்-மேனகை முதலான இத்தகைய மங்கையர், அனையாள் மேனி கண்டபின்-அப்பிராட்டியின் திருமேனியழகைக் கண்ட பின்பு, தம் முகம் என்னும்-தங்கள் முகமென்று சொல்லப்படுகிற, பனி தோய்-குளிர்ச்சியுடைய, வான் இன் வெண் மதிக்கு-அழகிய இனிய பூர்ணசந்திரனுக்கு, என்றும் பகலே என்று-எப்போதும் (தன் ஒளி புலப்படுதலில்லாத) பகற்காலமே யென்று கருதி, இன்னலினோர்-துன்பமுடையோராயினர்.

மேவும், ஆதிம்: விரித்தல் விகாரம். பகலென்றே என்பதில் ஏகாரம் பிரித்து முன்னே கூட்டப்பட்டது.

அழகிற் சிறந்த மேனகை முதலியோர், சந்திரனொளி பகற்காலத்துப் புலப்படாததுபோலத் தம் முகங்களும் பிராட்டியின் திருமேனி யொளியாகிய கதிரவன் முன் பொலிவிழந்து போமென்று கருதி வருந்துவாராயின ரென்றபடி.

(பி - ம்.) 2. வினையோன்; மேவிம்; ஆரும்; ஆமே மேனகையாதி; மேன்மையராதி.
3. இனையோ முன்னத்து; இன்னலினர்தம்; இன்னியலாடன்; முகமெய்தும். (29)

585. மலர்மே னின்றிம் மங்கையி வையத் திடைவைகப்
பலகா லுந்தம் மெய்ந்நனி வாடும் படிநோற்றார்
அலகோ வில்லா வந்தண ரோநல் லறமேயோ
உலகோ வானோ வும்பர்கொ லோவீ துணரேமால்.

இ மங்கை - இப்பிராட்டி, மலர்மேல் நின்று - (தனக்குரிய) செந்தாமரை மலரினின்றும்(இறங்கிவந்து),இ வையத்துஇடை வைக-இந்நிலவுலகத்திலே தங்கியிருத்தற்கு, தம் மெய் நனி வாடும்படி பல காலும் நோற்றார்-தங்கள் உடல் (விரத முதலியவற்றால்) மிகவும்

வாட்டமடையுமாறு நெடுங்காலம் தவமியற்றினோர், அலகு ஒவு இல்லா அந்தணரோ-எண்ணிக்கை முடிவில்லாத அந்தணர்களோ!; நல் அறமேயோ-நல்ல தருமதேவதைதானோ! உலகோ-இவ்வுலக முழுதுமோ! வானோ-தேவலோகமோ! உம்பரோ-(பிரமன் முதலான) பெருந் தேவர்களோ! ஈது உணரேம்-இதனுண்மையை அறியவல்லே மல்லேம்.

கொல், ஆல்: அசைநிலைகள். உலகு, வான்: ஆகுபெயர்கள். ஈது: சுட்டு நீண்டது.

அந்தணர் தேவர் முதலியோர்க்கும், அறத்துக்கும் பேரிடர் இழைத்துவந்த அரக்கரின் அழிவுக்குக் காரணமாய்த் தான் சிறை யிருந்து, இடர் நீக்கி, அறங்காக்க அவதரித்தவர் பிராட்டியார்: ஆதலால், அவ்வவதாரத்துக்குக் காரணமாக அருந்தவஞ் செய்தோர் இங்குக் கூறிய பலருமாவர் என்பது கருத்து. வானோ, உம்பரோ என்றது, பொதுவாகத் தேவர்களையும், அவருட் சிறப்பாகப் பிரமன் முதலியோரையும் முறையே குறிக்கும். அலகு ஒவு இல்லா=எண்ணி றந்த என்றபடி. அலகு இல்லா எனப் பிரித்து, 'ஓ' அசைநிலை யெனக் கோடலும் ஆம்.

அறமேயோ: ஏகாரம் பிரிநிலை; அறம் ஒன்று மட்டுமே நோற்றா லும், அதன் பயனாக அது காக்கப்படின், மற்றெல்லாம் தானே அமை யும் என்பதுபட நின்றது.

(பி - ம்.) 1. நின்றும்; நின்று; நின்ற. 2. பலகாலுந்தன்: படிதோற்றார். 4. உம்பர்களோ: உணரோமால். (30)

586. தந்நே ரில்லா மங்கையர் செங்கைத் தளிர்மானே
அன்னே தேனே யாரமு தேயென் றடிபோற்ற
முன்னே முன்னே மொய்ம்மலர் தூவி முறைசாரப்
பொன்னே சூழும் பூவி னொதுங்கிப் பொலிகின்றாள்.

தம் நேர் இல்லா மங்கையர்-(அழகில்) தமக்கொப்புமை யில்லாத தோழிமார் பலர், (பிராட்டியை நோக்கி), செம் கை தளிர் மானே-செம்மையான தளிர்போன்ற கைகளையுடைய மான்போன்ற வளே!, அன்னே-தாயே!, தேனே-தேன் போன்றவளே!, ஆர் அமுதே-அரிய தேவாமிர்தம் போன்றவளே!' என்று-என்றிவ்வாறு அழைத்து, அடி போற்ற - பாதங்களை (நோவாமல்)ப் பாதுகாக்க, முன்னே முன்னே-(பிராட்டி அடிபெயர்த்து வைக்குமிடந் தோறும்) முன்னாக, மொய் மலர் தூவி-நெருங்கிய மலர்களைச் சொரிந்து, முறை சார-முறையாக அணுகிவர, பொன் சூழும் பூவின்-பொன்னிறமான மகரந்தம் நிரம்பிய அப்பூக்களின் மீதே, ஒதுங்கி-நடந்து, பொலி கின்றாள்-விளங்குகின்றவளானாள். (எழுவாய் வருவிக்க.)

அன்னே: விளி. பொன்னே: ஏகாரம் இசைநிறை.

பின்னிரண்டடிகளுக்கு: 'முன்னே நடப்பதற்குப்பட்டாடையை விரித்து அனிச்சப் பூவைப் பரப்பிக் கையை யிரண்டு பக்கமும் தாங்கிக் கொண்டுவர' (ஓர் உரை). 'அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதரடிக்கு நெருஞ்சிப் பழம்' (குறள். *1120*).

அடிபோற்ற-துதிக்க என்றும் ஆம்; இஃது 'அடியீடேத்தல்' எனப்படும். மு. ஒப்பு: சீவக. *2453-54*; சூளா. *1800*; 'பங்கய முகத்தவர் பலாண்டுபல கூறி, நங்கையடி போற்றியென நங்கை நடைகற்றாள்' (சூளா. *861*). ஒதுங்குதல்-நடந்தல்; 'கோல்காலாகக் குறும்பல வொதுங்கி' (புறநா. *159: 3.*)

(பி - ம்.) 1. தன்னேர்; அல்லா; அங்கைத்தளிர்; தனிமானே.
2. அடிபோற்றி.
3. மொய்மலர்; மென்மலர்: வைப்ப முரல்கின்ற; முறைசாலப்; முறை சாற்றப்.
4. பொன்னே சூழம்; பொன்னேயென்னப்; பூவிலொதுங்கிப்; பூவின் விளங்கிப், பூவினெருங்கிப். (31)

587. கொல்லும் வேலுங் கூற்றமு மென்னும் மிவையெல்லாம்
வெல்லும் வெல்லும் மென்ன மதர்க்கும் விழிகொண்டாள்
சொல்லுந் தன்மைத் தன்றது குன்றுஞ் சுவருந்திண்
கல்லும் புல்லுங் கண்டுரு கப்பெண் கனிநின்றாள்.

கொல்லும்-கொலைத் தொழிலுடைய, வேலும் கூற்றமும் என்னும் இவை எல்லாம்-வேலாயுதமும் யமனும் என்று சொல்லப்படும் இவற்றை யெல்லாம், வெல்லும் வெல்லும் என்ன-வென்றே தீரும் என்னும்படி, மதர்க்கும் விழி கொண்டாள்-செருக்கிய கண்களை யுடையவளும், பெண் கனி-பெண்மை நலனெல்லாம் கனிந்தவளுமான அப்பிராட்டி, குன்றும்-(தொலைவிலுள்ள) மலையும், சுவரும்-(அண்மையிலுள்ளதாகிய மாளிகையின்) சுவரும், திண் கல்லும்-வலிய கருங்கல்லும், புல்லும்-(மென்மையான) புல்லும், கண்டு உருக-(அவளழகையும் நிற்கும் நிலையின் ஏற்றத்தையும்) கண்டு நெகிழும்படி, நின்றாள்-(ஓரிடத்தில் வந்து) நின்றாள்; அது-அவள் நின்ற நிலையின் அழகு, சொல்லும் தன்மைத்து அன்று-(என் போன்றாரால்) எடுத்துச் சொல்லுதற்குட்பட்டதன்று.

என்னும் மிவை, வெல்லும் மென்ன: விரித்தல் விகாரம்.

வேல், கூற்றம் முதலாயின இருப்பிடம் விட்டுச் சென்று தாக்கி வருத்துவன; விழிகளோ, இடம்விட்டுப் பெயராமலே ஆடவரை மருட்டி வருத்துவன; ஆதலால் விழிகளே வெல்வன. வெல்லும் வெல்லும் என்ற அடுக்குத் துணிவுப் பொருளது. குன்று

முதலிய அசேதனப் பொருள்களையும் உருக்க வல்லது பிராட்டியின் எழில் என்றவாறு.

(பி - ம்.) 1. என்னும்மவை.
2. வெல்லும்வேலும்: என்பதனுக்கே; என்னுமதற்கே.
3. தனிமைத் தன்றிது.
4. பெண்களிவின்றுள்; பெண்டனி நின்றுள். (32)

(வேறு)

588. வெங்களி விழிக்கொரு விழவு மாயவர்
கண்களிற் காணவே களிப்பு நல்கலான்
மங்கையர்க் கினியதோர் மருந்து மாயவள்
எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ.

மங்கையர்க்கு-பெண்களுக்கு, அவர் கண்களின் காணவே களிப்பு நல்கலான்-தம் கண்களாற் கண்டமாத்திரத்திலே மகிழ்ச்சியைத் தருதலால், வெம் களி விழிக்கு-(யாவரும்) விரும்பத்தக்க மதர்ப்புடைய (அவர்கள்) கண்களுக்கு, ஒரு விழவும் ஆய்-ஒரு திருவிழாக் காட்சி போலவும் ஆகி, இனியது ஓர் மருந்தும் ஆயவள்-(ஆழ்ந்து நோக்குந்தோறும் தெவிட்டாத) இனிமை பொருந்திய ஒப்பற்ற தேவாமிர்தம் போலவும் ஆன அப்பிராட்டி, இனி-மேலே, எங்கள் நாயகற்கு-எங்கள் தலைவனான இராமபிரானுக்கு, யாவது ஆமோ–எத்தகைய பொருளாவாளோ! (சொல்லுதற்கரிது என்றவாறு). கொல்: அசை.

விழாக் காட்சி, யாவர்க்கும் கண்டமாத்திரத்தே மகிழ்ச்சி தருவது. ஆடவர் கண்டவுடனே அவாவும் கண்ணழகுடைய மங்கையர்க்கே பிராட்டியின் திருமேனி யழகு முதற்கண் நோக்கும் பொது நோக்கில் விழாக் காட்சியும், பின்பு ஆழ்ந்து நோக்கும் சிறப்பு நோக்கில் தேவாமிர்தமும் ஆகிப் பேரின்பம் தருவது. அங்ஙனமாயின், அப்பிராட்டியைக் கூடுதற்கே தோன்றிய எம்பிரானுக்கு அவள் எவ்வாறுவளோ! இது நம் போன்றாரால் கூறுதற்கரிதாம் என்றவாறு.

மேலே, பிரானும் பிராட்டியும் ஒருவரை யொருவர் கண்டு காதலித்தமை கூறுதற்குத் தோற்றுவாயாக இதனை இங்கே அமைத்துக் கொண்டார். பெண்களும் கண்டு விரும்பத்தக்க பிராட்டியின் பேரழகு முன்னமே (580)கூறப்பட்டதனை இங்கே அநுவாதம் செய்து கொண்டார். அப்பாடலின் குறிப்பும் பார்க்க.

விழிக்கு விழவு: ஒப்பு: 'விழவு மேம்பட்ட வென்னலம்' (குறுந். 125); 'கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனி னஃதே கண்ட பெண்பிறந் தேனுக் கென்று லென்படும் பிறருக் கென்றுள்'(ஆரணிய. 278); 'பெண் மகிழ்வுற்ற பிணை நோக்கு மகளிர்' (மதுரைக். 555);

'பெண்டிரு மாண்மை வெஃகிப் பேதுறு முலையினுள்', 'ஆண்விருப் புற்று நின்று ரவ்வளைத் தோளி ணுரே' (சீவக. 587, 2447); 'இவ ளழகு எமக்குங்கூட வியப்பாயிற்று; இனி இவருக்குச் சொல்ல வேண்டுமே' (பரி. 20: 22, பரிமேல்).

(பி - ம்.) 1. வெண்களி விழிக்கொரு; வெங்களியினுக்கொரு; விழவுமாயவள்; விழாவுமாயவர்; விழாவுமாயவள்; விளைவுமாயவள்; விழவுமாயிரு.
2. தங்களிற் காணவே தளிர்ப்பு: நல்கலால்; நுங்கலால்.
3. அலையதோர்.
4. நாயகற்குமே யினிய தாங்கொலோ. (33)

இச்செய்யுள் ஒரு பிரதியில்,

'நங்கையர் விழிக்குநல் விழவு மாயவர்
இங்கிதத் தொடுதொழு திறைஞ்சுந் தேவுமாய்
அங்கவர்க் கமுதுமாய் வந்த சானகி
எங்கணு யகற்கினி யாவ தாங்கொலோ' என்று காணப்படுகின்றது.

589. இழைகளுங் குழைகளு மின்ன முன்னமே
மழைபொரு கண்ணிணை மடந்தை மாரொடும்
பழகிய வெனினுமிப் பாவை தோன்றலால்
அழகெனு மவையுமோ ரழகு பெற்றவே.

குழைகளும்-காதணி முதலிய சிற்றணிகலன்களும், இழைகளும்-கழுத்தணி முதலிய பேரணிகலன்களும் (ஆகிய), இன்ன-இவை போன்றன வெல்லாம், மழை பொரு கண் இணை மடந்தை மாரொடும்-மேகம் போன்ற (குளிர்ச்சியுடைய) இரு கண்களையுடைய பெண்களோடு, முன்னமே பழகிய எனினும்-(இப்பிராட்டி தோன்று தற்கு) முன்பே (அவர்களால் அழகின் பொருட்டு அணியப்பட்டுப்) பழகியனவா யிருந்தாலும், இ பாவை தோன்றலால்-சித்திரப்பாவை போலும் இப்பிராட்டி அவதரித்து அவற்றை அணிதலால், அழகு எனும் அவையும்-(பிற மாதர்க்கெல்லாம்) அழகு செய்வன என்று சொல்லப்படும் அவ்வணிகலன்களும், ஓர் அழகு பெற்ற-தமக்கு ஒரு தனி அழகைப் பெற்றனவாயின! ஏ-அசை.

காதணி, மூக்கணி போன்றன சிற்றணிகளென்றும், கழுத்து, மார்பு, இடை முதலியவற்றை அழகு செய்வன பேரணிகளென்றும் கூறப்படுவன. 'எல்லா வணிகளும் பொதுவாக, அணிபவர்க்கு அழகு செய்வன; பிராட்டியின் திறத்து, அவளணிதலால் அவை ஒரு தனி அழகு பெறுகின்றன' என எதிர்நிலையாக்கிக் கூறுகின்றார். பின்னும் இவர், 'உமிழ்சுடர்க் கலன்க ணங்கை யுருவினை மறைப்ப தோரார்... அழகினுக் கழகு செய்தார்' (1197) என்றலுங் காண்க.

'பூணுக்கழகளிக்கும் பொற்றொடி' எனத் தமயந்தியைச் சிறப் பிப்பர் புகழேந்தியார். பிராட்டியின் இயற்கை யழகுச் சிறப்பு:

'அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்' (760); 'அணிபறித்தழகு செய்யு மணங்கு' (யுத்த. 930).

(பி - ம்.) 1. இழைகளுங் குணங்களும்; என்ன முன்னமே; குழைகளுமிலங்கலின்புறு
2. மழை தரு கண்ணிணை.
3. பழகியதேனுமிப்; பழகியவேனுமப்; பழகியதென்னினும்.
4. அழகெனு மதுவும்; அழகெனுமமுதும்; அழகெனுமணியும்; பெற்றதே.
(34)

அண்ணலும் அவளும் நோக்கல்

590. எண்ணரு நலத்தினா ளினைய ணின்றுழி
கண்ணொடு கண்ணிணை கதுவி யொன்றையொன்
றுண்ணவு நிலைபெறு துணர்வு மொன்றிட
அண்ணலு நோக்கினா னவளு நோக்கினாள்.

எண் அரு நலத்தினாள்-நினைத்தற்கும் அரிய (அழகும் குணமுமாகிய) நலங்களையுடைய பிராட்டி, இனையள்-இத்தன்மையளாய், நின்றுழி-(மாடத்தின் மேனிலையில்) நின்ற பொழுது, கண்ணொடு கண் இணை-(பிரானும் பிராட்டியுமாகிய இருவருடைய) இணையான கண்களும், ஒன்றை ஒன்று கதுவி-ஓரிணையை மற்றோரிணை (சென்று) பற்றி, உண்ண-நுகரவும், உணர்வும்-இருவரது மனவுணர்ச்சியும், நிலை பெறுது-(அவரவரிடத்தே) நில்லாமல், ஒன்றிட-(நிலை பெயர்ந்து சென்று) ஒன்றுபடவும், அண்ணலும்-இராமபிரானும், நோக்கினான்-(பிராட்டியைப்) பார்த்தான்; (அப்பொழுதே), அவளும் நோக்கினாள்-பிராட்டியும் (இராமபிரானைப்) பார்த்தாள். எண் அரு-கணக்கற்ற, மதித்தற்குரிய அரிய என்றலும் ஆம்.

'நிறை' எனப்படும் மனவடக்கம், இருபாலாருக்கும் உரியது. தன்னிகரில்லாத் தலைவனும் தலைவியுமாகியோர் திறத்து, மனம் அந் நிறை கடந்து செல்வது ஊழ்வயத்தாலன்றி நிகழாது; அதுவும் தக்க விடத்தேயே செல்லும். இங்கே நிகழ்ந்தது, 'கருங்கடற் பள்ளியின் நீங்கிப் பிரிந்த' இருவருடைய தெய்விகக் கூட்டமாதலின், முறை பிறழாததே யென்பது கூறுமலே அமையும். இவ்விடத்து நிகழ்ந்த காட்சியுள்ளும்,'அண்ணலும் நோக்கினான்' எனத் தலைவனையே முதற் கண் வைத்துக் கூறினார். இவை யெல்லாம் கம்பநாடரின் கற்பனையே. வில்லிறுத்தபின் முறையாக விவாகம் நடந்தபோதன்றி, அதற்கு முன் இவ்விருவருடைய சந்திப்பு முதனூலில் இல்லை. 'மஹாநாடகம்' என்னும் வடமொழி நூலுள், பிராட்டி இராமபிரானைக் கண்டதாகக் கூறப்பட்டுள்ள தென்பர்.

இச்செய்யுளில் 'தானே அவளே தமியர் காணக், காமப் புணர்ச்சி இருவயின் ஒத்தல்' என்ற இறையனார் களவியற் சூத்திரத்தின் கருத்து அமைந்துள்ளமை காண்க.

'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள், என்ன பயனுமில' (குறள். 1100) என்பதும், இதனை ஆசிரியர் இங்குக் கையாண்டுள்ள முறையும் நோக்கத்தக்கன.

(பி - ம்.) 1. எண்ணருங் கலத்தினுள்: இனைய நின்றுழி.
2. கண்ணொடுங் கண்ணிணைக்; கண்ணினைக்: கவ்வி; கௌவி: ஒன்றொடொன்று.
3. உண்ணவுண்ணிறையொடும்; உயிரும்; உரவும். (35)

591. நோக்கிய நோக்கெனு நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் றோளி லாழ்ந்தன
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணுந்
தாக்கணங் கனையவ டனத்திற் றைத்தவே.

நோக்கிய நோக்கு எனும்-(பிராட்டி இராமபிரானைப்) பார்த்த கண்களாகிய, நுதி கொள் வேல் இணை-கூர்மையுடைய இரண்டு வேல்கள், ஆக்கிய மதுகையான் தோளில்-பெருக்கிய வலிமைபொருந்திய இராமபிரானுடைய புயங்களிலே, ஆழ்ந்தன-ஆழப்பாய்த்தன; வீக்கிய கனை கழல் வீரன்-(காலில்) கட்டிய, ஒலிக்கும் வீரக்கழலையுடைய இரகு வீரனுடைய, செம் கண்ணும்-செந்தாமரை போன்ற கண்களும், தாக்கு அணங்கு அனையவள் தனத்தில்-திருமகளாகிய அப்பிராட்டியின் தனங்களிலே, தைத்த - (சென்று) பதிந்தன. ஏ-அசை.

தோள், தனம் என்பன சாதியொருமை.

பிராட்டியின் கண்கள், 'அயில்வேலுங் கொலைவாளும் பின்றப் பிறழ் கண்' எனவும், 'கொல்லும் வேலும் கூற்றமு மென்னும் இவையெல்லாம், வெல்லும் வெல்லும் என்ன மதர்க்கும் விழி' எனவும் சிறப்பிக்கப்பட்டனவாதலின், பிரானுடைய புயங்கள் திண்மை மிக்கனவாயினும் அவற்றிலே எளிதின் ஆழப் பாய்ந்தன என்றும், இரகு வீரன் கண்கள் தனங்களிலே தைத்தன என இலேசாகவும் கூறினர். பெண்களுக்குத் தனங்கள்போல ஆடவருக்குப் புயங்கள் காம வேட்கையைத் தூண்டுவன என்பர்.

தாக்கணங்கு-'எல்லாரிடத்தினும் சென்று சேரும் திரு' என்பர் நச்சினார்க்கினியர்; (சீவக. 871-உரை); சீவக. 1473-ஆம் செய்யுளுரையிலும், 'தாக்கணங்கு-திரு' என்றே கூறியுள்ளார். 'தாக்கணங்கனையவள்' என்பதற்குத் 'தீண்டி வருத்தும் மோகினித் தெய்வம் போன்றவள்' எனப் பிராட்டிக்கு உவமை கூறுவதாகப் பொருளுரைத்தலினும், 'திரு' என்றலே சிறப்புடைத்தாதலின் அவ்வாறு கொண்டு உரைக்கப்பட்டது.

ஒப்பு நோக்குக: ஆரணிய. 223; நைடத. நளன்றூதுப். 102.

(பி - ம்.) 2. தோளினுழ்ந்தன. 3. கருங்கழல்; கழலிணை.
4. முலையில் தைத்ததே. (36)

592. பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்
தொருவரை யொருவர்த முள்ள மீர்த்தலால்
வரிசிலை யண்ணலும் வாட்க ணங்கையும்
இருவரு மாறிப்புக் கிதய மெய்தினர்.

பருகிய நோக்கு எனும் பாசத்தால் பிணித்து-(ஒருவரையொருவர்) விழுங்குவதுபோலப் பார்த்த பார்வை என்னும் கயிற்றினால் கட்டி, ஒருவர் தம் உள்ளம்-(அவ்விருவருள்) ஒருவருடைய மனம், ஒருவரை - மற்றொருவரை, ஈர்த்தலால்-இழுத்தலினால், வரி சிலை அண்ணலும்-கட்டமைந்த வில்லை யேந்திய இராமபிரானும், வாள் கண் நங்கையும்-வாள் போலுங் கண்களையுடைய பிராட்டியும் (ஆகிய), இருவரும்—, இதயம் மாறி புக்கு-ஒருவர் மனத்திலே மற்றொருவர் மாறிப் புகுந்து, எய்தினர்-தங்குவாராயினர்.

உள்ளம், பாசத்தால் பிணித்து ஈர்த்தலால் என இயையும். இராமபிரானுக்குச் சிலை கூறியதற்கேற்பப் பிராட்டிக்கு வாள் கூறினர். சிலை-செயற்கையும், வாள்-இயற்கையுமாகிய நயம் காண்க. அவ்விருவரும் தம்வசமிழந்து, ஒருவர் மற்றொருவரின் நினைவாகவே யிருந்தன ரென்பது கருத்து. மேலே கைக்கிளையாகக் கூறப்படும் செய்திகட்கு இது பொருத்தமுடையதாகும். 'அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்!' எனக் காட்சியைச் சிறப்புவகையாற் கூறினர். காட்சியின் பின் ஐயம் நிகழ்தல் தலைவன்பால் கூறப்படும்; இங்கே அது வேண்டாததாயிற்று.

இதயம் மாறிப் புகுதல்: ஒப்பு: கிட்கிந்தா. *391*; 'வெஞ்சின விடலையொடு நெஞ்சுமாறுபு' (பெருங். *3. 6: 76*); மு. ஒப்பு: பெருங். *3. 8: 92-98*); காதல் நோக்கின் தன்மைக்கு, சீவக. *1485*-செய்யுளையும் காண்க.

(பி - ம்.) 1. பாசத்தாற் பிணைத்து.
2. ஒருவர்தாமுள்ளம்; ஒருவர்தமுள்ளத்துள்ளுரு.
3. வாட்கண் மங்கையும். 4. இதயமேயினர். (37)

593. மருங்கிலா நங்கையும் வசையி லையனும்
ஒருங்கிய விரண்டுடற் குயிரொன் றாயினர்
கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ.

மருங்கு இலா நங்கையும்-இடை இல்லாத (மிக நுண்ணிய இடையையுடைய) பிராட்டியும், வசை இல் ஐயனும்-இகழ்ச்சியென்பதில்லாத இராமபிரானும், இரண்டு உடற்கு ஒருங்கிய-இரண்டு உடம்புகளுக்கு ஒன்றாகப் பொருந்திய, உயிர் ஒன்று ஆயினர்-ஒரே உயிர்போல ஆனார்கள்; கரு கடல் பள்ளியில் கலவி நீங்கிபோய்-பெரிய திருப்பாற் கடலில் (அமைந்த) பள்ளியிலே (இணைந்திருந்த) கூட்டம்

நீங்கப்பெற்று, பிரிந்தவர்-முன்னே பிரிந்தவர்களான அவ்விருவரும், கூடினுல்-(மீண்டும்) கூட நேர்ந்தால், பேசல் வேண்டுமோ-(அவர்கள் நிலைபற்றிச்) சொல்லவும் வேண்டுமோ.

கருமை இங்கே பெருமைப் பொருளில் வந்தது. நீலக்கடல் எனவுங் கூறுவர். பாற்கடல் வெண்ணிறமாயினும், அதிற் பள்ளி கொள்ளும் எம்பெருமான் திருமேனியொளி படர்தலால் நீலக்கட லாயிற்று என்பர். 'நீலக் கடலுள் நெடுங்காலங் கண் வளர்ந்தான்' (திவ்).

'மருங்கு இலா நங்கை', 'வசை இல் ஐயன்' என இருவருக்கும் ஒவ்வோர் இன்மை (குறை) கூறுவதுபோலக் கூறி, அதனுற் சிறப்புப் பெற வைத்துள்ள நயம் ஓர்தற்குரியது. ஈருடற்கு ஓருயிர்: ஒற்றுமை மிகுதி புலப்படுத்ததாம். இவ்விருவரும், ஒருவரை யொருவர் புதி தாகக் கண்டு மனமொன்றினுரல்லர்; பழைய தொடர்புடையவரே என்பார், கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர் கூடினுல், என்றும், அவர்கள் கூட்டம் பற்றி நாம் எடுத்துரைத்தல் சாலாது என்பார், 'பேசல் வேண்டுமோ' என்றும் கூறினுர்.

இரண்டுடற் குயிரொன்றுயினுர்: ஒப்பு: காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர், ஆகத்து ளோருயிர் கண்டனம் யாம்' (திருச்சிற். 71); 'ஆவியொன்றிரண்டு டம்பு' (சீவக. 1017); 'காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும், ஆவிபோ லாடையு மொன் றுனதே' (நள. 212). மருங்கிலா நங்கை: ஒப்பு: அயோத். 622-3; ஆரணிய. 359.

(பி - ம்.) 1. மருங்கிலா மங்கையும்: வரிவிலேயனும்.
2. ஒருங்குற: ஈருடற்கு: ஆயினர்; ஆகினுர். 3. பள்ளியுட்.
4. கூடினுர்: பேசவேண்டுமோ. (38)

## முனிவன் முதலிய மூவரும் அவ்விடம் விட்டுச் செல்லல்

594. அந்தமி னேக்கிமை யணேகி லாமையால்
பைந்தொடி யோவியப் பாவை போன்றனள்
சிந்தையு நிறையுமெய்ந் நலனும் பின்செல
மைந்தனு முனியொடு மறையப் போயினுன்.

பைந்தொடி-பசிய (பொன்) வளேயல்களே யணிந்த பிராட்டி, அந்தம் இல் நோக்கு-முடிவில்லாத பார்வையுடைய (தன்) கண்கள், இமை அணேகிலாமையால்-இமையோடு இமை பொருந்தாமையால், ஓவியம் பாவை போன்றனள்-சித்திரப்பாவை போல் (அசைவற்று) நின்றனள்; சிந்தையும்-(அவளுடைய) மனமும், நிறையும்-மன அடக்கமும், மெய் நலனும்-உடலழகும், பின் செல-தன் பின்னே வரும்படி, மைந்தனும்-இராமபிரானும், முனியொடு-விசுவாமித்திர

முனிவனுடன், மறைய-(தன் வடிவத் தோற்றம் பிராட்டியின் கண்களுக்கு) மறைந்து போகும்படி, போயினன்-மேலே நடப்பானானன்.

பிராட்டி இராமபிரானது வடிவழகைக் கண்ணிமையாமல் பார்த்து அசைவற்று நின்றாளாதலால், 'அந்தமில் நோக்கு இமை அணைகிலாமையால்' என்றும், 'ஓவியப் பாவை போன்றனள்' எனவுங் கூறினர்.

இருவர்மனமும் ஒன்றுபட்டபின், இராமபிரான் முனிவனுடன் மேலே நடந்து செல்வானானன்; அதனால் அவன் தோற்றம் பிராட்டியின் கண்களினின்றும் மறைந்து போகவே, பிராட்டி தன் மனத்தைப் பறிகொடுத்தவளாயினள்; அவள் மன நிறையும் விடுபட்டதாயிற்று; எனவே 'சிந்தையும் நிறையும் பின்செல' என்றார். 'மனமெனும் மத்த யானையின், நிறையெனு மங்குசம் நிமிர்ந்து போயதே' என்பர் அடுத்த கவியில். மெய் நலன் பின் செல்லலாவது, காதல் நோய் கைமிகுதலால் முகமும் கண்ணும் பொலிவிழத்தல். பிராட்டி மன நிறை மிகவுடையளாயினும், இராமபிரானுடைய பேரெழில் அந் நிறையையும் உறுதி கெடச் செய்ததனால், அவள் தன் வசமிழத்து, தன் காதல் நோய் பிறர்க்குப் புலனாகும் நிலையெய்தினளென்பது கருத்து. 609-11 பார்க்க.

தலைவனைப் பற்றிய நினைவால் தலைவி மேனி நலனழிதல்: குறுந். 54, 97, 125; ஐங். 278; அகநா. 103. ஓவியப் பாவை போன்றனள்: ஒப்பு: 'வான்றனில் வரைந்ததோர் மாத ரோவியம், போன்றனணின்றனள்' (ஆரணிய. 246).

(பி - ம்.) 1. அந்தமி னேக்கனே; அந்தமி லழகனே: அணுகலாமையால்; அணுகிலாமையால்: அணைகலாமையால்.
3. சிந்தையுணிறையுமெய் நலனும்; நிறைவுமென்னலனும்; நிறைவுமெய் நலமும்; நினைவுமெய் நலனும்; நிறையுமே நலனும்.
4. மறைந்து போயினன். (39)

சில பிரதிகளில், இதனுடன் 'காட்சிப் படலம்' முடிவுற, அடுத்த கவி முதல் 'கைக்கிளைப் படலம்' தொடங்குகின்றது.

### பிராட்டியின் நிலை

595. பிறையெனு நுதலவள் பெண்மை யென்படும்
நறைகம ழலங்கலா னயன கோசரம்
மறைதலு மனமெனு மத்த யானையின்
நிறையெனு மங்குச நிமிர்ந்து போயதே.

நறை கமழ் அலங்கலான்-நன்மணம் வீசும் பூமாலையணிந்த இராமபிரான், நயன கோசரம் மறைதலும்-கண்பார்வைக் கெட்டாது மறைந்தவுடன், மனம் எனும் மத்தம் யானையின்-(பிராட்டியின்)மனமாகிய மதயானையின், நிறை எனும் அங்குசம்-(அதனை அடக்

குதற்குரிய)நிறை என்று சொல்லப்படுகிற தோட்டியானது, நிமிர்ந்து போயது-வளைவு நிமிர்ந்து பயனற்றதாயிற்று; (ஆதலால்), பிறை எனும் நுதலவள்-பிறை போலும் நெற்றியையுடைய பிராட்டியின், பெண்மை-நாணம் முதலிய பெண்மைக் குணங்கள், என்படும்-என்ன வாகும்? (அவற்றால் ஆவதொன்றில்லை என்றபடி).

நயன கோசரம்-கண்ணுக்குப் புலனுதல்.

மகளிர் மெல்லியலார் ஆதலின், ஆடவரைப்போல மனவுறுதி படைத்திரார்; மேலும் இராமபிரானது இணையற்ற பேரெழில் எத் தகையவரையும் நிலைகெடச் செய்யவல்லது. எனவே, பிராட்டி, தன் நிறையால் மனத்தைக் காக்க எவ்வளவுமுயன்றும் பயனற்றதாயிற்று. மனம் கட்டுக் கடங்காததாயினமையின் 'மத்தயானை'யாக உருவகித் தார். அதற்கேற்ப, நிறை அங்குசமென்றார். மதங்கொள்ளாத நிலை யில் யானையைக் குத்தியும் இழுத்தும் அடக்கவல்லது அங்குசம்; மதங் கொண்ட யானை அங்குசத்தைப் பயனற்றதாக்கிவிடும்; அதனையே 'அங்குசம் நிமிர்ந்து போயது' என்று குறித்தார்.

நிறை-கடிய வேண்டுவனவற்றைக் கடிந்து நன்மையில் ஊன்றி நிற்கும் உறுதி; மனக்காப்பு; 'மகளிர் நிறைகாக்கும் காப்பே தலை' (குறள். 57). காமம் பெருக நிறையழியும் என்பது: **கல்லாடம். 89; சூளா. கல்யாண. 155. சீவக. 710.**

மதயானை அங்குசத்தை நிமிரச் செய்தல்: 869, 895; **பெருங். 1.32:37-8**; இது, மனம் நிறைகடந்து செல்லற்கு உவமை: 'எழின் மருப் பெழில் வேழ மிகுதரு கடாஅத்தாற், றொழின்மாறித் தலை வைத்த தோட்டி கை நிமிர்ந்தாங், கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு, வறிதாக............என்நெஞ்ச மென்னொடு நில்லாமை நனி வெளவி' (கலி. 138).

காமத்தால் மனநிலை மாறுபடும்போது, புறத்தில் உண்டாகும் முதல் மாறுபாடு நெற்றியில் தோன்றுமென்பதைப் புலப்படுத்த, 'பிறையெனு நுதலவள்' என விசேடித்தார். 'பீரலர் அணிகொண்ட பிறைநுதல்' (கலி. 124); 'நுதல், பீரல ரணிகொண்டு பிறைவனப் பிழவாக்கால்' (கலி. 53); - இவற்றின் உரைகளைக் காண்க. **நள வெண்பா. 55** ஆம் செய்யுளையும் காண்க.

(பி - ம்.) 1. பிறையன; பிறைநிகர்; நுதலிவள்.
3. மத்த யானையும்; மற்றை யானையும். (40)

596. மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
நூலுறு மருங்குல்போ னுடங்கு வாணெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காமநோய்
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே.

மால்உற வருதலும்-(காமத்தால்) மயக்கம் மிகுதியானபோது, மனமும்-(தன்) உள்ளமும், மெய்யும்-உடம்பும், தன்-தன்னுடைய, நூல் உறு மருங்குல்போல்-நூலிழை போன்ற (நுண்ணிய) இடையைப்போல, நுடங்குவாள்-தளர்கின்ற பிராட்டியின்; கால் உறு நெடு கண் வழி புகுந்த காமம் நோய்-(செல்லுதற்கு) வழியாக அமைந்த பெரிய கண்களின் வழியே உள்ளே நுழைந்த காமமாகிய நோயானது, பால் உறு பிரை என-பாலில் ஊற்றிய பிரை (விரைவில் பரவிப் பாலைத் திரித்தல்) போல, எங்கும் பரந்தது-உடம்பு முழுவதும் பரவலாயிற்று. ஏ-அசை.

இச்செய்யுள், 'காம உணர்ச்சி உடம்பின் தன்மையை மாற்றி விடும் ஆற்றலுடையது' என்பதைக் கூறுகின்றது.

உறவருதல்-மிகுதல். இடை இயற்கையாகவே எப்போதும் தளர்வது; அதுபோல மனமும் மெய்யும் இப்போது காமநோயால் தளர்ந்தன. தளர்வித்தல் நோயின் தன்மை. இராமபிரானைக் கண்களாலே கண்டு காதலுற்று வருந்துதலின், 'கண்வழிப் புகுந்த காமநோய்' என்றார். நீர், சிறு வாய்க்காலின் வழியே சென்று பெரிய நிலத்திற் பரவுதல் போல, காமமாகிய நீர், கண்களாகிய சிறிய வாய்க்கால் வழியே ஓடி, உடம்பாகிய நிலத்திலே பரவியது எனலாம். பிரை பாலின் இயற்கைத் தன்மையை மாற்றுதல் போல், காமமாகிய பிரை, பிராட்டியின் மனமாகிய பாலைத் திரித்தது என்க.

மருங்குல்போல் நுடங்கல் : ஒப்பு. 'மின்னி னன்ன, மருங்குல் போல் நுடங்கி நின்றாள்' (1148); 'மென்ம ருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்' (சுந்தர: 332). கண்வழிப் புகுந்த காமநோய்: ஒப்பு. 'கண்டர வந்த காம வொள்ளெரி' (குறுந். 305.) பிரையின் தன்மை: பிரையுறு பாலென நிலையிற்பின்றிய, வுரையினர்'(ஆரணிய. 588.) 'சீரிய பாலின் வேலைச் சிறுபிரை தெளித்த தன்னான்' (சுந்தர. 191.) 'குடப்பாற்சில்லுறை போலப், படைக்குநோ யெல்லாந் தானு யினனே' (புறநா. 276.)

(பி - ம்.) 2. மருங்குபோல் உடங்குவாள்.
3. புகுந்து: காமனோய்; காதனோய்.
4. திரையெனப்; புரையெனப். (41)

597. நோமுறு நோய்நிலை நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடை யுன்னி விம்முவாள்
காமனு மொருசரங் கருத்தி னெய்தனன்
வேமெரி யதனிடை விறகிட் டென்னவே.

(பிராட்டி), நோம்-மனம் நோவாள்; உறு நோய் நிலை-மிகுகின்ற (காம) நோயின் நிலையை, நுவலகிற்றிலள்-(வாய்விட்டுச்) சொல்லமாட்டாதவளாய், ஊமரின்-ஊமைகள் போல, மனத்து

இடை உன்னி-மனத்திலேயே நினைத்து, விம்முவாள்-ஏங்குவாள்,(இந்நிலையில்), காமனும்-மன்மதனும், வேம் எரி அதன் இடை விறகு இட்டது என்ன-எரியும் நெருப்பிலே விறகை யிடுதல் போல, ஒரு சரம்-(அத்தருணத்திற்கு ஏற்ற) ஒரு (தாமரை மலர்) அம்பை, கருத்தின்-அவள் நெஞ்சிலே, எய்தனன்-ஏவினன். ஏ: ஈற்றசை.

இட்டென்ன: தொகுத்தல் விகாரம்.

இராமபிரானைப்பற்றிய நினைவால், பிராட்டிக்கு விரகவேதனை மேன்மேலும் மிகுவதாயிற்று; அதனை நாணத்தால் வெளியிட்டுச் சொல்லமாட்டாதவளாய் மனத்திலேயே வைத்துக்கொண்டு ஏங்கித் தவித்தாள். அப்போது மன்மதனும் அந்நினைவைப் பின்னும் மிகுவிக்கும் வகையில், தாமரை மலரம்பை யெய்தான். மன்மதனுடைய ஐந்து பாணங்களில், தாமரை முதன்மையானதும், காம நினைவை மிகுவிப்பதும் ஆம் என்பர். அதனாலேயே 'ஒரு சரம்' என்பதற்குத் 'தாமரை மலரம்பு' என்று உரை கூறலாயிற்று. 'நினைக்கும் அரவிந்தம்' (இரத்தினச் சுருக்கம்).

கருத்தின்-(நினைவை மிகுக்கும்) நோக்கத்தோடு என்றலுமாம்.

'ஊமரின்......விம்முவாள்': ஒப்பு: உயர்திணை யூமன் போலத், துயர்பொறுக் கல்லேன் றோழி நோய்க்கே' (குறுந். 224); 'கையினாற் சொலக் கண்களிற் கேட்டிடு, மொய்கொள் சிந்தையின் மூங்கையுமாயினேன்' (சீவக. 997). 'வேமெரி யதனிடை விறகிட் டென்ன': ஒப்பு: 'எரிகிற கொள்ளியை ஏறத் தள்ளினாற்போல' (பழமொழி).

(பி - ம்.) 1. நோவுறு; தோமுறு: நோய்சில: நுவலகிற்றலர்; நுவலகிற்கில; நுவலகிற்கிலள்; நுவலுகிற்றிலள். 2. ஊமனின்: விம்மினள்.
3. கருத்தில்; கருத்துள்; எய்த்தனன்.
4. வேமெரியதனினெய் மிகுந்ததென்னவே. (42)

598. நிழலிடு குண்டல மதனி னெய்திடா
அழலிடா மிளிர்ந்திடு மயில்கொள் கண்ணினாள்
சுழலிடு கூந்தலுந் துகிலுஞ் சோர்தரத்
தழலிடு வல்லியே போலச் சாம்பினாள்.

நிழல் இடு-ஒளிவிடுகின்ற, குண்டலம் அதனின் எய்திடா-(காதணியாகிய) குண்டலத்தினிடத்தே சென்று,(காதுவரை நீண்டு), அழல் இடா(து) மிளிர்ந்திடும்-நெருப்பிலிட்டுக் காய்ச்சாமலே ஒளி வீசுகின்ற, அயில் கொள்-வேல் போன்ற, கண்ணினாள்-கண்களையுடைய பிராட்டி, சுழல் இடு கூந்தலும்-கடை குழன்ற (தனது) கூந்தலும்; துகிலும்-ஆடையும், சோர்தர-நெகிழ்ந்து தொங்க, தழல் இடு - நெருப்பில் இடப்பட்ட, வல்லியே போல - பூங்கொடியைப் போல, சாம்பினாள்-வாடினாள்.

இது முதல் பிராட்டியின் விரக வேதனையைக் கூறுகின்றார்.

எய்திடா: 'செய்யா' என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; இடு: துணை வினைப்பகுதி. இடா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். அழலிடா மிளிர்ந்திடும் அயில்: இல்பொருளுவமை. கொள்: உவமவுருபு; வேலின் தன்மையைக் கொண்ட என்றலும் ஆம். சுழல் இடு கூந்தல் - சுருட்டி முடிக்கப்பட்ட தலைமயிர் என்றலும் ஆம். வல்லியே: ஏகாரம் பிரிநிலை.

துகிலுங் கூந்தலும் சோர்தல், தன்வசமிழந்த நிலையைக் குறிக்கும்.

தழலிடு வல்லி: ஒப்பு: *603*; 'தீயுறு தளிரினடுங்கி' (குறுந்.*383*).

(பி - ம்.) 1. குண்டலமதனி னெய்விடா; குண்டலமதியி னெய்தொடர்; குண்டல மதியி னெய்திடா; குண்டலபதியி னெய்திட.
2. அழலிட; அழலிடை; தழலிடா; தழலிடை; அழலிடை வயங்குறும்: அயில்கொள் வேற்கணாள்.
3. சுழலளிக்கூந்தலும்: சோர்வுறத்.
4. தழலிடும்; தழலிடை: வெள்ளியே யென்னச். (43)

599. தழங்கிய கலைகளு நிறையுஞ் சங்கமும்
மழுங்கிய வுள்ளமு மறிவு மாமையும்
இழந்தவ ளிமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினாள்.

தழங்கிய கலைகளும்-ஒலிக்கும் மேகலாபரணக் கோவைகளையும், சங்கமும்-வளையல்களையும், நிறையும்-மனவுறுதியையும், மழுங்கிய உள்ளமும்-தெளிவற்ற மனத்தையும், அறிவும்-இயற்கையறிவையும், மாமையும்-மேனி ஒளியையும், இழந்தவள்-இழந்தவளாய், இமையவர் கடைய - தேவர்கள் கடைதலால், யாவையும் வழங்கிய – (தன்னிடமிருந்த) எல்லாப் பொருள்களையும் (தேவர்களுக்குக்) கொடுத்து விட்ட, கடல் என-பாற்கடலைப் போல, வறியள் ஆயினாள்-(சிறந்த பொருள்கள் ஏதும் இல்லாத) வறுமை நிலை யுடையவ ளானாள். 'பிராட்டி' என எழுவாய் வருவிக்க.

சங்கம் என்பது ஆகுபெயராய் வளையல்களைக் குறித்தது.

கலைகளும் சங்கமும் என அணியும் பொருள்களையும், மாமை என உடம்பின் தோற்றப் பொலிவையும், உள்ளமும் அறிவும் என அந்தக் கரணங்களையும் ஆக, எல்லாவற்றையும் இழந்தாள் எனவே, தன் வசமிழந்தமை கூறியவாறாயிற்று. காம விகாரத்தால் நேர்ந்தன இவை. தலைவனைப் பிரிந்தபோது உண்டாகும் விரகத்தால் உடலிளைத்தலும், அதனால் ஆபரணங்கள் கழலுதலும், ஆடை நெகிழ்தலும் மகளிர்க்கு இயல்பு.

கலைகள் எனப் பொதுப்படக் கூறியதனுல், மேகலை, காஞ்சி முதலிய இடையணிகலன்களோடு, அவை அணிதற்கிடமாகிய ஆடைகளையும் கொள்ளலாம். உள்ளாடையும், மேலாடையும், உத்தரீயமும் என ஆடைகள் பல.

பிராட்டி நிறையிழந்தமை முன்னமே கூறப்பட்டது. நிறை யிழத்தலால், மனம், தெளிவும் அறிவுக் கூர்மையும் அற்றதாகின்றது; எனவே 'மழுங்கிய வுள்ளம்' என்ருர். அழுங்கிய எனவும் பிரித்துக் கூறலாம். மாமை-மேனியின் பொன்ஒளி. பிறர்க்கு வழங்கி வறுமையடையும் வள்ளியர் நிலையைப் பாற்கடல் அடைந்தது அதனைப் பிராட்டிக்கு உவமித்து நயம்படக் கூறுகின்ருர்.

மாமை கெடுதல்: ஒப்பு. 'கானநாடன் பிரிந்தெனத், தானும் பிரிந்தன்றென் மாமைக் கவினே' (தொல். களவு. 21-ந. மேற்.) 'தற் கண்டு மாமைத் தகையிழந்த-வெற்காண' (பு-வெ. 307.)

(பி - ம்.) 1. சழன்றனகலை யொடு நிறையும்.
2. அழுந்தின; அழுங்கிய: அறிவுமானமும்; அறிவும் பெண்மையும்; அறிவும் யானவயும்.
3. இழந்தவர்; இழந்தனள்; இமையவர்க்கடைய; இமையவரடைய; இமையவர்க்குடைய. (44)

600. கலங்குழைந் துகநெடு நாணுங் கண்ணற
நலங்குழை தரநகின் முகத்தி லேவுண்டு
மலங்குழை யெனவுயிர் வருந்திச் சோர்தரும்
பொலங்குழை மயிலைக்கொண் டரிதிற் போயினுர்.

கலம் குழைந்து உக-ஆபரணங்கள் கழன்று விழவும், நெடு நாணும் கண் அற-பெரிதாகிய நாணமும் (இருந்த) இடம்விட்டு நீங்கவும், நலம் குழைதர-திருமேனி யழகு சிதையவும், நகில் முகத்தில் ஏ உண்டு-தனங்களிலே (காமன்) அம்பு பாயப்பெற்று, (ஏ உண்டு) மலங்கு உழை என வருந்தி-(வேடனது) அம்பினுலே தாக்குண்டு வருந்துகிற மான்பிணை போலத் துயருற்று, உயிர் சோர்தரும்-உயிர் நீங்குதல் போன்ற நிலையை அடைந்த, பொலம் குழை மயிலை-பொற் குண்டலங்களையணிந்த, மயில்போலும் சாயலையுடைய பிராட்டியை, அரிதின் கொண்டு போயினுர்-(தோழிமார் ஏற்றவிடத்திற்கு) அரிதாகக் கொண்டுபோய்ச் சேர்த்தனர்.

தோழிமார் என்ற எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது.

ஏவுண்டு என்பதனை இடைநிலைத் தீவகமாக வைத்து, முன்னும் பின்னும் கூட்டுக. மயில்: உவமவாகு பெயர்.

பிராட்டியின் நிலைகண்ட தோழிமார், ஏற்ற பரிகாரம் செய்வதற்குத் தக்க இடத்தில் அவளைக் கொண்டுபோய்ச் சேர்த்தனர் என்க.

விரகத்தால் உடல்மெலிதலின், ஆபரணங்களெல்லாம் கழன்று சிந்தின. பெண்மைக் குணங்களுட் சிறந்த நாணம் நீங்கவே, பிறவும் நீங்கினமை பெறப்படும். முந்திய பாடல் காண்க நகில் முகத்தில் தாக்கும் காமனம்பு மாவின் மலர் என்பர்; அதன் செயல், மேனி பசலை பூத்து அழகு கெடச் செய்தல். 'நீள் சூதங் கொங்கை', 'நீள் பசலை மாம்பூ' (இரத்தினச் சுருக்கம்.)

நெடுநாண் என்றதில், நெடுமை-பெருமையும், நெடுங்காலமாக உளதாகும் தன்மையும் ஆம்; 'சேணு மெம்மொடு வந்த, நாணும் விட்டேன்' (நற். 15). நகின் முகத்தில் ஏவுண்ணல்; ஒப்பு: செப்புநேர் முலைக்கண் வேனில் வேடொடுத்த தேமலர், அப்பு மாரி காம வெம்மை செய்ய வாற்ற லாமையால்' (நைடத. கைக்கிளைப். 2); ஏவுண்டு மலங்கு உழை: 'ஏப்பெற்ற மான்பிணைபோ லேங்குவார்' (சீவக. 2965.)

(பி - ம்.) 1. கலங்குழை வுற நெடு நாணங்கையற: கலன்குழைந்துக; கலங்கழிந்துக; நலங்குழைந்துக; நெறிநாணும்: கண்ணுற; கண்ணுக.
2. நலங்குழைந்தண ங்க ள்; நலங்குழைந்தாணகில்; நலங்குழைந்தாண் மதி; விலங்குழைந் நாள்முலை; விலங்குழை சுரந்தின; நலங்குழை சுரந்தின: முகத்தினேவுண்டு.
3. மலங்குழைழ யென்னுயிர்; மலங்குழை தாங்கிய: வருந்தச்; சோர்தர; சோர்வுறும்.
4. பொலன்குழை; கண்டரிதின். (45)

601. காதொடுங் குழைபொரு கடைக்க ணங்கைதன்
பாதமுங் கரங்களு மனைய பல்லவம்
தாதொடுங் குழையொடு மடுத்த தண்பனிச்
சீதநுண் டுளிமல ரமளிச் சேர்த்தினர்.

குழை-குண்டலங்களை, காதொடும்பொரு-(அவற்றை அணிந்த) காதுகளுடனே (சென்று) தாக்குகின்ற, கடை கண்-கடைக்கண் பார்வையுடைய, நங்கை தன்-பிராட்டியின், பாதமும் கரங்களும் அனைய-பாதங்களையும் கைகளையும் ஒத்த, பல்லவம்-தளிர்கள், தாதொடும் குழையொடும் அடுத்த - பூந்தாதுகளுடனும், பூவிதழ்களுடனும் பொருந்திய, (பரப்பப்பெற்ற), தண் சீதம்-மிக்க குளிர்ச்சியுடைய, நுண்பனி துளி-நுட்பமான பனிநீர்த்துளி சிந்தப்பெற்ற, மலர் அமளி-பூம்படுக்கையிலே, சேர்த்தினர்-(பிராட்டியைக்) கிடத்தினர்கள். கிடத்தியவர் தோழிமார்.

மிகவும் சோர்வுற்று வருந்திய பிராட்டியைத் தோழிமார், அச்சோர்வு நீங்குமாறு சைத்யோபசாரம் செய்தற்பொருட்டு, மிக்க குளிர்ச்சி பொருந்திய பூம்படுக்கையிலே படுக்கவிட்டன ரென்க. மலரமளி மிக்க குளிர்ச்சியும் மென்மையுமுடைய தென்பதனை, 'தளிர்

களும் பூக்களும் பரப்பிப் பனிநீரும் தெளிக்கப்பெற்றது' என்றதனை விளக்கினர்.

தண்சீதம், நுண்பனித்துளி என மாற்றிக் கூட்டுக.

தண்சீதம்: ஒருபொருட் பன்மொழி; குழை-குழைந்த (மென்மையான) பூவிதழ்கள்.

(பி - ம்.) 1. காதொடு குழைபொரும்: கடைபொரு; குமிழ்பொரு; காதொடு பொருகயற் கடைக்கண்: மங்கைதன். 2. பல்லவத். 3. தாரொடும் குழையொடும்; தாதொடுந்தளிரொடும்; தாதொடும் இலையொடுப; தாதொடுந் தாதயர் பரப்பித்தண்பனிச். 4. துளிர்மலர்; தளிர்மலர்; தளிமலர்: அமளி சேர்த்தினர். (40)

602. நாளரு நறுமல ரமளி நண்ணினள்
பூளைவீ புரைபனிப் புயற்குத் தேம்பிய
தாளதா மரைமலர் ததைந்த பொய்கையும்
வாளரா நுங்கிய மதியும் போலவே.

நாள் அரு-புதுமை மாருத, நறுமலர் அமளி-நன்மணம் பொருந்திய பூக்கள் பரப்பிய அப்படுக்கையானது, பூளை வீ புரை-பூளைப் பூவையொத்த, பனிபுயல் கு தேம்பிய-பனி மழையால் வாடிய, தாள தாமரை மலர் ததைந்த-(நீண்ட) தண்டுகளையுடைய தாமரைப் பூக்கள் நெருங்கிய, பொய்கையும்-குளத்தையும், வாள் அரா நுங்கிய-கொடிய பாம்பினுல் விழுங்கப்பட்ட, மதியும் போல-சந்திரனையும் போன்று ஆகும்படி, நண்ணினள்-(அப்படுக்கையிலே) சேர்ந்தாள்.

ஏ-ஈற்றசை. புயற்கு: வேற்றுமை மயக்கம்.

'மதியும் போன்றனள்' என்ற பாடத்துக்குப் பிராட்டி அவற்றைப்போலப் பொலிவிழந்தனள் என்க.

தோழிமார், பிராட்டியைப் பூம்படுக்கையிலே கிடத்த, அவள் உடம்பின் வெப்பத்தால், அப்படுக்கையிற் பரப்பிய பூக்களெல்லாம் நிறம் மாறித் தீய்ந்தன என்பது கருத்து.

பூளைப்பூ காற்றிலே பறந்து பரவும் தோற்றம் பனிமழைக்கு உவமை. பனி மிகுதியால் தாமரைப் பூக்கள் நிறங்கெட்டு வாடுதல்: 'நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர் மேற்பனி சோர,அல்லியுந் தாதும் உதிர்ந்திட் டழகழிந்தா லொத்தது' (பெரியாழ். திரு. 3-9-1.) 'தாமரை முகங்கள் வாட்டுந் தண்பனிக் காலம் (நைடத. அன்னத்தைக் கண். 9) 'தாள தாமரை': 'தாளுடை மலருளோன்' (ஆரணிய. 851) அரா நுங்கிய மதி: ஆரணிய. 296; 1041; அகநா. 114, 313; சீவக. 1540.

(பி - ம்.) 1. நாளுலா; நாளுறு; நாளெலா; நண்ணினர்.
2. பூனைவிப்புரை; பூளைவிய்புரை; பூளைவிப்புன்பனிப்; புயற்குந்.
3. தகைந்த; தவழ்ந்த; தந்த.
4. வாளரா வனுகிய; வாளரா மயங்கிய; வாளரா மயக்கிய; வாளரா விழுங்கிய; வாளரா வுணங்கிய: மதியுமென்னவே; மதியும்போன்றவள்; மதியம் போன்றன. (47)

சில பிரதிகளில் இதனையடுத்து, 'கம்பமில்' என்ற பாடலும, அதன்பின் 'மலைமுகட் டிடத்து' என்ற பாடலுமாகவுள்ளன.

603. மலைமுகட் டிடத்துகு மழைக்க ணாலிபோல்
முலைமுகட் டுதிர்ந்தன நெடுங்கண் முத்தினம்
சிலைநுதற் கடையுறச் செறிந்த வேர்வுதன்
உலைமுகப் புகைநிக ருயிர்ப்பின் மாய்ந்ததே.

மலை முகடு இடத்து உகு-மலைச் சிகரத்திலே வீழ்கின்ற, மழைகண் ஆலிபோல்-மேகத்தினின்று வரும் நீர்த்துளிபோல, முலை முகடு-தனங்களின் மேல், நெடு கண் முத்து இனம்-நீண்ட கண்களினின்று சிந்துகின்ற முத்துப்போன்ற நீர்த்துளிகள், உதிர்ந்தன-சிந்தின, சிலை நுதல் கடை-வில்லைப்போன்ற நெற்றியிலே, உற செறிந்த வேர்வு-மிகவும் திரண்ட வேர்வை, உலை முகம் புகை நிகர்-கொல்லனுலையிலே உண்டாகும் புகைபோன்ற, தன் உயிர்ப்பின்-தனது பெருமூச்சினாலே, மாய்ந்தது-உலர்ந்து போயிற்று. ஏ-ஈற்றசை.

நுதற்கடை: கடை: ஏழனுருபு.

பிராட்டி, மன வருத்தம் தாங்காமல் கண்ணீர்விட்டு அழுது பெருமூச்செறிந்தனள்; பெருமூச்சுக் காற்றின் வெப்பத்தால், வேர்வைப் பெருக்கும் வறண்டு உலர்ந்து போயிற்று என்க. கண்ணீர்ப் பெருக்கு × வேர்வை நீர் உலர்தல் என ஒன்றுக்கொன்று முரண்படக் கூறும் அழகு நோக்குக.

உலைமுகப் புகை நிகர் உயிர்ப்பு: அயோத். *199, 429*; ஆரணிய. *317, 644*; மணி. *2:43*.

(பி - ம்.) 1. மலைமிசைத்தடத்துகு; மலைமிசைத்ரழைத்துகு; மலைமிசைக்கடந்துகு.
2. முலைமுக டுதிர்ந்தன; முலைமுகத் துதிர்ந்தன: முலைமுகட் டுதிர்ந்திடும்: நெடுந்தண் முத்தமும்.
3. சிலைநுதற் கடைக்கயற்; சிலைநுதற் கடைவயிற்; செறித்த வேலென; செறிந்த வேரன; வேரென; வேர்வெழ; வேர்வுந்தன்: சிலைநுதற் கடையுறை செறிந்த வேற்கணாள்.
4. உலைமுகம்; புகைநிமிர்; புகைதரும்; புகையென: மாய்ந்தவே; வாய்ந்தவே. (48)

604. கம்பமில் கொடுமனக் கான வேடன்கை
அம்பொடு சோர்வதோர் மயிலு மன்னவள்
வெம்புறு மனத்தனல் வெதுப்ப மென்மலர்க்
கொம்பென வமளியிற் குழைந்து சாய்ந்தனள்.

கம்பம் இல் கொடுமனம்-கலங்குதல் இல்லாத கொடிய மனமுடைய, கானம் வேடன் கை அம்பொடு- காட்டு வேடன் கை அம்பினுலே (தாக்குண்டு), சோர்வது ஓர் மயிலும் அன்னவள்-வருந்துகின்ற ஒரு மயிலையும் போன்றவளாகிய பிராட்டி, வெம்பு உறு மனத்து அனல் வெதுப்ப-(தனது) வெதும்புதல் மிக்க மனத்திலுள்ள காமாக்கினி (உடலைச்) சுடுதலால்,மெல் மலர் கொம்பு என-(தீயால் சுடப்பட்ட) மென்மையான பூங்கொம்பு போல, குழைந்து-துவண்டு, அமளியில் சாய்ந்தனள்-அம்மலர்ப் படுக்கையிலே விழுந்து கிடந்தாள்.

கம்பம் இல்-(கொடுமையிலே) சலித்தல் இல்லாத;இரக்கமற்ற. மன்மத பாணத்தால் துடிக்கும் பிராட்டிக்கு, வேடன் கை அம்பினுல் துடிக்கும் மயில் உவமை; 'காம வேடன் கை' எனவும் பாடம்; அதற்கு, காமவேள் தன் கை எனப் பிரிக்க; காமனுகிய வேடன் என்றலுமாம். அம்பொடு: ஒடு வுருபு கருவிப் பொருளில் வந்தது. மயிலும் என்பதில் உம்மை இறந்தது தழுவியது; 'மென் மலர்க் கொம்பெனக் குழைந்து சாய்ந்தனள்', 'தழலிடு வல்லியே போலச் சாம்பினுள்' (598) என முன்னே வந்தவற்றைத் தழுவும்.

அம்பொடு சோர்வதோர் மயில்: ஒப்பு 'ஏவுறு மஞ்ஞையினடுங்கி' (முல்லைப். 84.)

(பி - ம்.) 1. கொடுஞ்சிலைக்: காமவேடன்கை; காமன்வேடன்கை.
2 மயிலினன்னவள்: மயிலையன்னவள்.
3. வனத்தனல் வெதுப்பு மென்மலர்க்; வெதுபம்மென்மலர்க்.
4. குழைந்து சார்ந்தனள்; சாம்பினுள். (49)

605. சொரிந்தன நறுமலர் சுறுக்கொண் டேறின
பொரிந்தன கலவைகள் பொரியிற் சிந்தின
எரிந்தவெங் கனல்சுட விழையிற் கோத்தநூல்
பரிந்தன கரிந்தன பல்ல வங்களே.

(பிராட்டி, மலர்ப் படுக்கையிலே சோர்ந்து கிடந்தபோது) எரிந்த வெம் கனல் சுட-(அவளுடம்பிலே பற்றி) எரிந்த கொடிய காமத்தீச் சுடுதலால், சொரிந்தன நறுமலர்-(படுக்கையிலே) பரப்பிய மணமுள்ள பூக்கள், சுறு கொண்டு ஏறின-கருகி (அவளுடம்பில்) குத்தின; பல்லவங்கள்-(படுக்கையில் பரப்பிய) தளிர்களும், கரிந்தன-கருகிப் போயின; கலவைகள்-(அவள் உடம்பிலே பூசிய) சந்தனம் முதலிய பூச்சுக்கள், பொரிந்தன-பொரிபட்டனவாகி, பொரியின்-(சட்டியிலிட்டுப் பொரித்த) பொரிபோல, சிந்தின-உதிர்ந்தன; இழையில் கோத்த நூல்-ஆபரணங்களிலே கோக்கப்பட்ட நூலிழைகள், பரிந்தன-அற்றுப்போயின. ஏ. ஈற்றசை.

பிராட்டி காமாக்கினியால் துன்புற்றமையைப் புனைந்து கூறுகின்ருர். 'பொறியிற் சிந்தின' எனவும் பாடம்; அதற்குத் தீப்பொறி போலச் சிதறின என்க. முன்னே 599-ஆம் பாடலில், நெகிழ்ந்து கழன்றனவாகக் கூறியன போக, எஞ்சிய ஆபரணங்களும் இழைகளற்றுச் சிதறிப் போயின என்க.

சுறுக்கொள்ளுதல்; தீய்ந்து போதல்; ஆரணிய; 602; சுந்தர; 378. 929. 931.

பல்லவங்கள் கரிதல்: ஒப்பு: தம்பி திருத்திய தண்டளிர், தீயும்' ஆரணிய. 1046.

(பி - ம்.) 1. சொரிந்தனர்: சுருக்கொண்டு; சுருட்கொண்டு; சுறுக்குண்டு; ஏடிடப்.
2. பொரிந்திடக்: பொறியிற்.
3. கனல்சுட வினையிற்; கனல்சுட வெரியிற்: சேர்ந்தநூல். (50)

606. தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுய ருழந்துழந் தழுங்கி மாழ்கினர்
யாதுகொ லிதுவென வெண்ண றேற்றலர்
போதினோ டயினிநீர் சுழற்றிப் போக்கினர்.

தாதியர்-(பிராட்டியின்) ஏவற் பெண்களும், செவிலியர்-செவிலித் தாய்மாரும், தாயர்-ஏனைய தாய்மாரும், தவ்வையர்-தமக்கை முறையுடைய மூத்த பெண்களும், மாதுயர் உழந்து உழந்து -(பிராட்டிக்கு உற்ற) பெருந்துயரத்தால் (தாமும்) மிக வருந்தி, அழுங்கி-அச்சங்கொண்டு, மாழ்கினர்-கலங்கியவர்களாகி, 'இது யாது கொல் என-இது நேர்ந்ததன் காரணமின்னது' என்று, எண்ணல் தேற்றலர்-ஆலோசித்து அறியமாட்டாமல், போதினொடு-பல வகைப் பூக்களுடனே, அயினி நீர் சுழற்றி-ஆலத்தி நீரைச் சுற்றி, போக்கினர்-கண்ணேறு கழித்தனர்.

கொல்: அசை நிலை. உழந்துழந்து, அடுக்கு மிகுதிப் பொருட்டு.

பிராட்டியின் பரிசனங்களாகிய பல மகளிரும், பிராட்டிக்கு நேர்ந்துள்ளது இன்னது என்று அறியாதவர்களாய், கண்ணெச்சில், அச்சம் முதலியவற்றைப் போக்குதற்குரிய பரிகாரமாகிய ஆலத்தி சுற்றித் திருஷ்டி கழித்தல் செய்தனர் என்க. 'அயினி' என்பது மஞ்சளும் சுண்ணமும் கலந்து செந்நிறங் கொண்ட சோறு. அதனை நீரிற் கரைத்து ஆலத்தி சுற்றுதலின் 'அயினி நீர் சுழற்றி' என்ருர்.

தாய்மார் ஐவகையினர் என்பர்; அவராவார் :—ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒலுறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் என்பவர். கைத்தாய்-செவிலித்தாய். தவ்வையர்-ஐவகைத் தாய்மாரின் மக்களாய்த் தலைவியினும் மூத்த மகளிர்.

தாயர் தவ்வையர் : சீவக. 184: பெருங்; 1·33 : 187, 34: 119; 4·10: 47. அயினி நீர் சுழற்றல்: 'ஆயிரங்கோடி மாதர் அயினி நீர் சுழற்றிப் போனுர்' (நைடத. மணம்புரி. 27.)

(பி - ம்,) 1. தாதை தௌவையர்.
2. உழந்நுளத்து; உழந்தனர்; உழன்றனர்; ஆழ்ந்தனர்; விழுந்து மாழ்கினர்; வீழ்ந்து மாழ்கினர்' மாதுயரொடுமவர்மறுகி மாழ்கியே.
3. இநுவெனு: தேற்றலார்; தேற்றலாப்; தேற்றிலர்: எண்ணந் தேற்றிலர்: வேண்டுற்றுரலாற்.
4. போதுடனயினிநீர்; போதிறுேடயனிநீர்: சுற்றிப்: போற்றினர்; போக்கினர்; போயினுர். (51)

607. அருகுநின் றசைக்கின்ற வால வட்டக்கால்
எரியினை மிகுத்திட விழையு மாலையும்
கரிகுவ தீகுவ கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையு மொத்துத் தோன்றினுள்.

அருகு நின்று அசைக்கின்ற-(தோழிமார்) பக்கத்திலே நின்று மெல்ல வீசுகிற, ஆலவட்டம் கால்-விசிறிக் காற்றுனது, எரியினை மிகுத்திட-(பிராட்டியிடத்தே உள்ள) காமத்தீயை வளர்த்துவிட, இழையும்-(அவளணிந்துள்ள சில) ஆபரணங்களும், மாலையும்-பூமாலையும், கரிகுவ-(சில) கரிந்தும், தீகுவ-(சில) தீய்ந்தும், கனல்வ-(சில) பழுக்கக் காய்ந்தும், காட்டலால்-தோற்றமளித்தலால், (பிராட்டி), உருகு-நெருப்பிலே உருக்கப்படுகிற, பொன் பாவை ஒத்தும்-பொன்னுலாகிய பிரதிமையைப் போலவும், தோன்றினுள்-காணப்பட்டாள்.

பாவையும் ஒத்து என்ற விடத்து உம்மையைப் பிரித்துக் கூட்டுக. உம்மை: இறந்தது தழுவியது.

காற்று நெருப்பை வளர்ப்பது போல, இங்கே விசிறிக் காற்றுக் காமத்தீயை வளர்த்தது; சோர்வு நீங்குதற்பொருட்டுச் செய்யப் படும் சிதோபசாரம், மாறுன பயனேயே தந்தது என்க. ஆலவட்டம் -பெரு விசிறி. கரிதல்-நிறம் கருகுதல்; தீதல்-வெந்து தீய்ந்து போதல்; கனலுதல்-காய்ந்து அழலுதல்.

(பி - ம்.) 1. அருகினின்று; அசைதரும்; அசைகின்ற; இசைக்கின்ற: ஆலவட்டத்தால்; ஆலவட்டங்கள். 2. எரியினம்; எரியனல்: உகுத்திட.
3. கருகுவ; கரிவன: தீவன: கனன்று காட்டுவ; கனல காட்டுவ; கதுவக் காட்டலால். 4. ஒப்பத் தோன்றினுள். (52)

இதன்பின் ஓர் அதிகப்பாடல் சிலபிரதிகளில் :

'தீங்குசெய் யரக்கர்தம் வருக்கந் தியவும்
ஓங்கிய தவங்களு முலகும் வேதமும்
தாங்கிமேல் வளரவுந் தழைத்த சானகி
ஆங்கவன் வடிவினை யகத்தி லுன்னுவாள்.

வேதனை மிக்க பிராட்டி வாய்விட்டுப் பிதற்றுதல்

608. அல்லினை வகுத்ததோ ரலங்கற் காடெனும்
வல்லெழு வல்லவேன் மரக தப்பெருங்
கல்லெனு மிருபுயங் கமலங் கண்ணெனும்
வில்லொடு மிழிந்ததோர் மேக மென்னுமால்.

அல்லினை வகுத்தது-இருட்டினால் அமைக்கப்பட்டதும், அலங்கல்-பூமாலையுடையதுமான, ஓர் காடு எனும்-ஒரு காடு என்பாள்; (இது இராமபிரானது மயிர்முடியைக் குறித்தது); இரு புயம்-இரண்டு தோள்களும், வல் எழு-வலிய இருப்புத்தூண்கள்; அல்லவேல்-(அவை) அல்லாவிடின், மரகதம் பெரு கல்-மரகதத்தினாலான பெரிய மலை, எனும்-என்பாள்; கண்-இரண்டு கண்களும், கமலம்-தாமரை மலர்கள்; எனும்-என்பாள்; வில்லொடும் இழிந்தது ஓர் மேகம்-இந்திர வில்லுடன் கீழிறங்கியதொரு மேகமாகும்; என்னும்-என்பாள். (இது இராமபிரானுடைய திருவுருவத் தோற்றத்தைக் குறித்தது.)

ஆல் : அசை.

இராமபிரானைப் பற்றிய நினைவால், அத்திருவுருத் தோற்றத்தைக் குறித்துப் பலபட (தன் நினைவின்றியே) வாய் பிதற்றலானாள் பிராட்டி. இவ்வாறு வந்தவற்றை இது முதல் எட்டுக் கவிகளாற் கூறுகின்றார்.

எழு-இரும்புத்தூண்; கணைய மரமும் ஆம். திருமேனியின் நிறங் கருதி 'மரகத மலை' என்றாள். கையிலே கோதண்டத்துடன் நின்ற தோற்றத்தை 'வில்லொடும் இழிந்த தோர் மேகம்' என்றாள்.

மரகதப் பெருங்கல் : ஒப்பு : ஆரணிய. 332; சுந்தர. 535.

(பி - ம்.) 2. வல்லெழும்; வல்லெனும்: அல்லவோ; அல்லவோர்; அல்லதோ; அல்லவன்; அல்லவே: பரதகப் பெருங்.
3. கமலக் கண்ணெனும்.
4. வில்லொடு மிளிர்ந்ததோர்: என்னுமே. (53)

609. நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும்
உருக்கியென் னுயிரொடு முண்டு போயினான்
பொருப்புறழ் தோள்புணர் புண்ணி யத்தது
கருப்புவில் லன்றவன் காம னல்லனே.

உள் நெருக்கி புகுந்து-என் மனத்துள்ளே வலிந்து புகுந்து, அரு நிறையும்-(கெடுத்தற்கு) அரிய எனது நிறையையும், பெண்மையும்-(நாணம் முதலிய) பெண்மைக் குணங்களையும், உருக்கி-நெகிழச் செய்து, (அவற்றையெல்லாம்), என் உயிரொடும் உண்டு போயினான்-என் உயிருடனே சேர்த்துக் கவர்ந்து கொண்டுபோன அவ்வொருவனது, பொருப்பு உறழ் தோள் புணர் புண்ணியத்தது-மலையோடு

மாறுபடும் புயத்திலே பொருந்தும் புண்ணியத்தைப் பெற்றது, கருப்பு வில் அன்று-கரும்பாகிய வில் அன்று; (யாவரும் கைக் கொள்ளும் மூங் கில் வில்லே; ஆதலால்,) அவன் காமன் அல்லன்-அவன் மன்மத னல்லன். ஏ-ஈற்றசை.

என் கண்ணிற்பட்ட அப்புருஷோத்தமன், என் இசைவின்றியே என் மனத்துள் வலியப் புகுந்து, என் மன நிறை, பெண்மைக் குணங் கள் ஆகிய எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டான்; அவன் மன் மதனோ வெனின், அல்லன்; அவன் கையில் இருந்தது கரும்பு வில் லன்று; எனவே அவன் வேறு யாவனோ! என வியந்து கூறினள் பிராட்டி.

'நிறையெனப்படுவது மறை பிறர் அறியாமை' (கலி. 133) என்றபடி, பிறர் அறியத்தகாதவற்றை வெளியிடாது அடக்கும் அம் மனவுறுதியை மாற்றி, அதனை நெகிழச் செய்துவிட்டான்; அது போலவே உறுதியுடைய பெண்மைக் குணங்களையும் நெகழ்த்திவிட் டான் என்றதனால், இராமபிரானுடைய பேரழகும் வீரமும் சிறப்பிக் கப்பெற்றன. உயிருண்டல்; 612, 613; ஆரணிய. 438.

(பி - ம்.) 1. புகுந்திரு: புகுந்துநன்: நெருக்கினனுட்புக்கு ;நிறைவும்.
2. உயிருடன்: உண்டுபோனவன்.
3. பொருப்புணர்: புண்ணியத்தனுக்; புண்ணியத்துருக்; பொருப்புறழ் புயத்தவன் கையிற் போற்றுபவில்.
4. அன்றது; அல்லதேல்: அன்னவன்; இன்னவன்: காமனல்லவே; காம னல்லனால். (54)

★610. உரைசெயிற் றேவர்த மூலகு ளானலன்
விரைசெறி தாமரை யிமைக்கும் மெய்ம்மையால்
வரிசிலைத் தடக்கையன் மார்பி னூலினன்
அரசிளங் குமரனே யாதல் வேண்டுமால்.

உரை செயின்-(அவ்வீர குமரனைப்பற்றி மேலும்) சொல்லோவ மாயின், விரை செறி தாமரை-மணம் மிக்க தாமரை மலர் போன்ற (அவனுடைய) கண்கள், இமைக்கும் மெய்ம்மையால்-இமைத்தலு டைய தன்மையால், தேவர்தம் உலகு உளான் அலன்-சுவர்க்க லோகத்திலுள்ள (தேவர்களுள்) ஒருவனு மல்லன்; வரி சிலை தட கை யன்-கட்டமைந்த வில்லையேந்திய நீண்ட கையுடையவனாகவும், மார் பில் நூலினன்-மார்பிலே முப்புரிநூ லணிந்தவனாகவும் உள்ளான்; (ஆதலால் அவன்), அரச இளங்குமரனே ஆதல் வேண்டும்-யௌவன முள்ள அரசகுமாரனாகவே இருத்தல் வேண்டும்.

★ இப்பாடல் இவ்விடத்தில் இருக்கவேண்டுமென்பது ஸ்ரீஐயரவர்கள் குறிப் பிற் கண்டது.

முன் கவியிற் கூறியவாறு, தன் மனங்கவர்ந்த காளை மன்மதனல்லன் என்று கருதிய பிராட்டி, 'அவன் கண்கள் இமைத்தலால் தேவர்களுள் ஒருவனல்லன்; (மானிடனேயாக வேண்டும்); கையில் வீரத்துக்குரிய வில்லை யேந்தி, மார்பில் முப்புரி நூலும் உடைமையால், (மானிடருள்ளும்) அரச குலத்திற் பிறந்த குமரனேயாவான்' என முடிவு கொண்டனள். 'அடி வருந்த மண் வழி நடந்து போனவன்' என அடுத்த பாடலுள் வருதலுங் காண்க. இங்கே பிராட்டி, 'அரசிளங் குமரனே ஆதல் வேண்டும்' என்று கூறியதை, பின்னே 'இராமபிரான், 'பைந்தொடி கன்னியே ஆகும் வேறிதற் கையுற வில்லையே' (702) என்றதனோடு ஒப்பிட்டு, இருவர் பாலும் நிகழ்ந்த அறவுணர்ச்சியை ஓர்க.

தாமரை: ஆகுபெயர்; 'விரை செறி' என்றது தாமரைக்கு இயற்கையாகிய அடைமொழி.

(பி - ம்) 1. உலகுள்ளானலன்.
2. மெய்ம்மையான்; மேன்மையால்; மேன்மையான்; மேன்மையின்; பெருவிழித் தாமரை யிமைக்கும் பெற்றியால்.
3. தடக்கையான்: மார்புநூலினன்.
4. ஆகவேண்டுமால்; ஆகல் வேண்டுமால்; குமரனென்றயிர்க்க வேண்டுமால். (55)

611. பெண்வழி நலனொடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநா னெங்குங் காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வ னேகொலாம்.

பெண் வழி நலனொடும்-(என்னிட மிருந்த) பெண்களுக்குரிய அழகையும், பிறந்த நாணொடும்-உடன் பிறந்த நாணத்தையும், எண் வழி உணர்வும்-(எவற்றையும்) ஆய்ந்தறிவதற்குரிய பகுத்தறிவையும், எங்கும் நான் காண்கிலேன்-(அவ்விளங்குமரனைக் கண்டபின் அவை என்னை விட்டுப் போனமையின்) எங்கே தேடியும் நான் காண முடியவில்லை: அடி வருந்த-தன் திருவடிகள் நோவ, மண் வழி நடந்து போனவன்-தரையிலே நடந்து சென்ற அக்குமரன், கண் வழி நுழையும்-(தன்னைக் கண்டவர்) கண்களின் வழியே அவர் மனத்துட் புக வல்ல, ஓர் கள்வன் ஆம் கொல்-ஒப்பற்ற கள்வனாவனோ! (அறியேன்).

ஏகாரம் இசை நிறை.

பெண்களுக்குரிய நலன்களாக என்னிட மிருந்த எல்லாவற்றையும், தன்னைக் கண்ட மாத்திரத்திலே கவர்ந்து கொண்டு, தன் அடி வருந்த நடந்து போய்த் தன் மேனியை மறைத்துக் கொண்டானாயினும், என் கண்களின் வழியே மனத்தினுட் புகுந்து அதனையும் தனக்கு இடமாக்கிக் கொண்டுவிட்டான்; ஆதலால், அவ்விளங் குமரன் ஒரு

விசித்திரமான கள்வன் போலும்! என்கிறாள் பிராட்டி. நாணம் பெண்களுக்குரிய நலன்களுட் சிறந்ததாகலின் 'உடன் பிறந்த' என்று சிறப்பிக்கப்பட்டது.

எண் வழி உணர்வு - மனத்தின் வழியே செல்லும் அறிவு என்றலும் ஆம். பெண்களுக்கு நாணம் உடன் பிறப்பு என்பது: 'நாணொடுடன் பிறந்த நாண்' (முத்தொள்.) தலைவனைக் 'கள்வன்' என்றல். 1232; 'யாருமில்லைத் தானே கள்வன்' (குறுந். 25); 'என்னுள்ளங் கவர் கள்வன்' (தே. திருஞான.); 'கள்வன் கொல் யானறியேன் கரியானொரு காளை' (பெரியதிரு. 3·7 : 1.); 'கள்வன் கொண்ட வுள்ளம்', 'காட்சிக் கொத்த கள்வனாதலின்' (பெருங். 1·33; 151; 34: 241.). இன்னும் இச்செய்யுளோடு, 'பெண்பாலவர்கட் கணியாய்ப் பிரியாத நாணும், திண்பால் நிறையும் திருமாமையும் சேர்ந்த சாயல், கண்பாற் கவினும் வளையும் கவர்ந்திட்ட கள்வன், மண்பாலிழிந்த—மலரைங்கணை மைந்தனென்றாள் (சீவக. 1961) என்ற பாடலையும் ஒப்பிடுக:

(பி - ம்.) 1. நலனொடு பிறந்த நாணமும்.
2. உணர்வுதான்; உணர்வுநாண்; உணர்வுந்தான்.
3. வருந்தப் போயவன்; போமவன்.
4. நுழையுமோ; நுழைவனே; நுழைவதோர்; நுழையுமென். (56)

612. இந்திர நீலமொத் திருண்ட குஞ்சியும்
சந்திர வதனமுந் தாழ்ந்த கைகளும்
சுந்தர மணிவரைத் தோளு மேயல
முந்தியென் னுயிரையம் முறுவ லுண்டதே!

இந்திர நீலம் ஒத்து-இந்திரநீல மணியைப் போல, இருண்ட குஞ்சியும்-கருநிறங் கொண்ட தலை மயிரும், சந்திர வதனமும்-சந்திரனைப் போன்ற முகமும், தாழ்ந்த கைகளும்-(முழங்கால் வரை) நீண்ட கைகளும், சுந்தரம்-அழகான, மணி வரை-நீல மணி மலை போன்ற, தோளுமே அல்ல-புயங்களுமாகிய இவை மட்டுமல்ல; என் உயிரை-எனது பிராணனை, முந்தி-எல்லாவற்றிற்கும் முன்னே, அ முறுவல் உண்டது-(அவனிடத்து அப்போது உண்டான) அந்தப் புன்முறுவல் பருகிவிட்டது.

இராமபிரானுடைய அங்கசௌந்தரியத்தில் ஈடுபட்ட பிராட்டி, அவனுடைய ஒவ்வோரங்கமும் தன்னைக் கவர்த்ததாயினும், அவற்றிற்கெல்லாம் மேலாக, அவனிடம் தோன்றிய புன்முறுவல் தன் உயிரையே கவர்ந்துவிட்டது என்கின்றாள். பிராட்டியைக் குறித்து, 'வாணிலா முறுவற் கனி வாய் மதி, காண லாவதோர் காலமுண்டாங் கொலோ' (698) என இராமபிரான் வாக்காகப் பின்னர்க் கூறுவர். இராமபிரான் குஞ்சியழகில் பிராட்டி ஈடுபட்ட செய்தி 608-ஆம் செய்யுளிலும் கூறப்பெற்றமை காண்க. பிரானும் பிராட்டி

யும் ஒருவரையொருவர் முதன் முதலிற் கண்டமை கூறிய ஆசிரியர், இராமபிரான் கொண்ட முறுவலைப் பற்றி அங்குக் கூருமல், பிராட்டி வாயால் இங்குக் கூறவைத்ததன் அருமை நோக்கற்பாலது.

குஞ்சிக்கு நீலமணி: 'மணி நிறங் கொண்ட மாயிருங் குஞ்சி' (குறிஞ்சிப். *112.*); நீலமாமணி நிமிர்ந்தியன் றன்ன, கோலங் கொண்ட குறுநெறிக் கூழை' (பெருங். *2, 15 : 90-91*) 'சுந்தர மணி வரைத் தோள்' ஒப்பு. *1291*; சுந்தர. *644*.

(பி - ம்.) 3. மந்தர மணிவரைத்.
4. முந்தியெம் முயிரினம்; உயிரையும்; உயிரினை; அறிவினை; இறை யையம். (57)

613. படர்ந்தொளி பரந்துயிர் பருகு மாகமும்
தடந்தரு தாமரைத் தாளு மேயல
கடந்தரு மாமதக் களிநல் யானைபோல்
நடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே.

படர்ந்து-அகன்று, ஒளி பரந்து-தேசுமிகுந்து, உயிர் பருகும்-(காண்பவர்) உயிரைக் கவருந் தன்மையுடைய, ஆகமும்-மார்பும், தடம்தரு-பெருமை பொருந்திய, தாமரை தாளுமே-தாமரை மலர் போன்ற திருவடிகளுமே, அல-(என் மனத்திலே பதிந்துள்ளன) அல்ல; கடம் தரு மாமதம்-கன்னம் சுரக்கின்ற மிக்க மதநீரையும், களி-(அம் மதத்தாலாகிய) களிப்பையுமுடைய, நல் யானை போல்-நல்லிலக் கணங்களமைந்த ஆண் யானையைப் போல, (கம்பீரமாக), நடந்தது-(அக்குமரன்) நடந்து சென்ற அழகு, என் உள்ளம் நண்ணி கிடந்தது-என் மனத்திலே பதிந்து (நீங்காமல்) தங்கியுள்ளது.

பெருமானுடைய பரந்த மார்பழகும், திருவடிகளினழகும் தன் மனத்திலே பதிந்துள்ளனவாயினும், அவற்றினும் மேம்பட அப்பெரு மானது கம்பீரமான நடையழகு ஆழப் பதிந்துள்ளது என்கிருள். தடம் தரு-தடாகங்களிலேயுள்ள என்றும் உரைப்பர்.

இராமபிரான் நடைக்கு யானை நடை; *794;* ஆரணிய. *224;* சுந்தர: *546,*

(பி - ம்.) 1. படர்ந்தொளிர்: பாய்ந்துயிர்: பகிருமாகமும்; பருகு மாமுகம்.
2. தடந்தரும்.
3. கடந்தரு மாணிறக்; மாநிறக்; மதங்கலுழ்; மதங்கவிழ்; களிநல்வி யானையின். 4. தொடர்ந்ததென். (58)

614. பிறந்துடை நலநிறை பிணித்த வெந்திரம்
கறங்குபு திரியுமென் கன்னி மாமதில்
எறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண்
டறிந்துயி ரிழக்கவு மாகு மேகொலாம்.

'பிறந்து உடை(ய)-(என்னோடு உடன்) பிறந்து (உரிமையாக நான்) பெற்றுள்ள, நலம் பிணித்த-பெண்மைக் குணங்களைப் பாது காக்கின்ற, நிறை எந்திரம்-நிறை என்னும் மதிற் பொறியானது, கறங்குபு திரியும்-(பிறர் அணுக வொட்டாது) சுழன்றுகொண்டே யிருத்தற்கிடமான, என் கன்னி மா மதில்-எனது கன்னித் தன்மை யான பெரிய மதிலை, எறிந்த-(எளிதிலே) தகர்த்த, அ குமரனை-அவ் விளங்காளையை, இன்னும்- மற்றொரு முறை, கண்ணின் கண்டு என் கண்களாரப் பார்த்து, அறிந்து-(அவனுடைய குணாதிசயங்களை யெல் லாம்) அனுபவித்த பின், உயிர் இழக்க ஆகுமே-(நான்) உயிர்விட லாகுமோ!' உம் : இசைநிறை; கொல், ஆம்: அசைகள்.

கன்னித் தன்மையை மதிலாகவும், நிறையை மதிற் பொறி யாகவும் உருவகித்தாள். சிறந்த பொறிகளால் காப்புடைய மதிலைத் தகர்த்தல் அரிதாவது போல, நிறையென்னும் பொறியாற் காப் புடைய கன்னி மதிலையும் அழித்தல் அரிதாயினும், அக்குமரன் அதனை எளிதிற் செய்து உட் புகுந்திட்டான்; புகுந்தும் உரிய பொருளை நுக ராது விட்டுச் சென்றான்; அதனால் இனி நான் உயிரோடிருத்தல் அரிது. அவனைக் கூடி அணைதல் கைகூடாவிடினும், உயிர் போகுமுன் மற்றொரு முறை அவனைக் கண்ணாரக் கண்டு அனுபவித்தலாவது எனக்கு நேருமோ! என ஆராமை மீதூரக் கூறுகின்றாள் பிராட்டி. 'அறிந்து' என்பதற்கு, 'அவனை இன்னானென்று அறிந்துகொண்டு' எனவும் உரை கூறுவர்.

பிறந்துடை...எறிந்த: 'காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென் னும், நாணித்தாழ் வீழ்த்த கதவு' (குறள் 1251.); 'நிறைக் கதவ நீக்கிக், காவ லென்னெஞ்ச மென்னுங் கன்னி மாடம் புகுந்து, நோவ வென் னுள்ளம் யாத்தாய்' (சீவக, 1714); 'நிறைத்தாழ் வீழ்த்தெ னெஞ்சகம் புகுந்து' (பெருங். 1. 33: 150) என்பவற்றை இங்கே ஒப் பிடுக. கன்னிமாமதில்: ஒப்பு: 'கன்னி மாமதில் சூழ் கருவூர்' (திவ். பெரிய. 2. 9: 7.) 'கன்னி நன் மாமதில் புடை சூழ் கணபுரம்' (திவ் பெருமாள். 8: 1, 11.) கன்னி=அழியாமை.

(பி - ம்.) 1. பிறந்துடை நலனிறை; பிறந்துட லலனிறை; பிறந்துடை நலனுடை: எந்திரக்.
2. திரியுமோர்: மாமதிள். 3. எறிந்தவிக்.
4. உயிரிழக்கலும்: ஆகவேண்டுமால்: ஆகல்வேண்டுமால். (59)

615. என்றிவை யனையன வியம்பும் வந்தெதிர்
நின்றன னிவனெனும் நீங்கி னானெனும்
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந் துணங்கு காலையே,

என்ற இவை அனையன-மேற் சொல்லப்பட்ட இவை போன்ற பலவற்றையும், இயம்பும்-கூறுவாள்; (மேலும்) 'இவண் வந்து எதிர் நின்றனன் எனும்-(பெருமானது உருவெளித் தோற்றத்தைக் கண்டு) இங்கு வந்து (இதோ) என்னெதிரில் நிற்கின்றான்' என்பாள்; 'நீங்கினான் எனும்-(அத்தோற்றம் மறைந்தவுடன்) 'அவன் போய்விட்டான்' என்பாள்; (இவ்வாறாக), கன்றிய மனத்து-(இராமபிரானைப் பற்றிய நினைவு) முதிர்ந்த (தன்) மனத்திலே, உறு காமம் வேட்கையால்-மிகுகின்ற காம வேட்கையினால், ஒன்று அல பல நினைந்து-ஒன்றல்லாத மிகப்பலவற்றை யெண்ணி யெண்ணி, உணங்கு காலை-வாடும் போது, 'உருகுங் காலையே' என்ற பாடம் பெரும் பான்மை.

இது, அடுத்த பாடலில் 'கடலில் மூழ்கினான்' என்பதனோடு முடிவுறும்.

பிராட்டி, பலவற்றை மனத்திலே நினைத்தும், நினைவு மிகுதியால் சிலவற்றை வாய் விட்டுக் கூறியும் மிகவும் வருந்தினாள் என்பது இதுவரை கூறப்பட்டது. ஒன்றல பல என்பதற்கு, 'ஒன்றோடொன்றொவ்வாத பல' எனவும் உரைக்கலாம்.

(பி - ம்.) 1. இனையன; இன்னன: விளம்பும்; எண்ணு மேல்வையில்; என்வயின் எல்லையில்.
2. நின்றன னவனெனும்; இவனெனும்: நீலமேனியான்.
3. மனத்துறக்; மனத்தொடு; மனத்தொடும்: வேட்கையாய்: வேட்கையள்,
4. ஒன்றெனப் பலநினைத்து: உருகுங்காலையே; உணங்குங் காலையே. (60)

சூரியாஸ்தமன வருணனை

616. அன்னமென் னடையவட் கமைந்த காமத்தீ
தன்னையுஞ் சுடுவது தரிக்கி லானென
நன்னெடுங் கரங்களை நடுக்கி யோடிப்போய்
முன்னைவெங் கதிரவன் கடலின் மூழ்கினான்.

முன்னை வெம் கதிரவன்-பழமையாக வெப்பமுள்ள கிரணங்களையுடைய சூரியன், அன்னம் மெல் நடையவட்கு அமைந்த-அன்னம் போன்ற மென்மையான நடையையுடைய பிராட்டிக்கு உண்டாயிருக்கிற, காமம் தீ-காமமாகிய (கொடிய) தீயானது, தன்னையும்-(முன்னமே வெப்பமுடைய) தன்னையுங்கூட, சுடுவது தரிக்கிலான் என-(மேலெழுந்து வந்து) எரிப்பதைப் பொறுக்கமாட்டாதவன் போல, நல் நெடு கரங்களை நடுக்கி-நல்ல நீண்ட (தன்) கிரணங்களாகிய கைகளை, நடுக்கிக்கொண்டு, ஓடி போய்-விரைவாகப் போய், கடலில் மூழ்கினான்-மேற்குக் கடலிலே குளித்தான்.

(615) பிராட்டி பலவாறு வருந்துகையில், (616) கதிரவன் கடலில் மூழ்கினான் என்க. இதனால், முனிவன் முதலியோர் மிதிலை நகருட்

புகுந்ததும், இராமபிரான் பிராட்டியைக் கண்டதும் அந்தி மாலை வேளையாகும் என்பது புலப்படும்.

இயற்கையில் நிகழும் சூரியாஸ்தமனத்தை, 'பிராட்டிக்குண்டானகாமத் தீயானது தன்னையும் வந்து சுடுமென்று கருதிச் சூரியன் அஞ்சி விரைந்து சென்று கடலில் மூழ்கினான்' என்றது தற்குறிப்பேற்ற வணி. அச்சமுற்றோர்க்குக் கை கால்கள் நடுங்குவது இயல்பாதலின், பிராட்டியின் காமத்தீ தன்னையும் சுடுமென்று அச்சங் கொண்ட சூரியன், அவ்வச்சத்தினாலே கைகள் நடுங்க விரைந்தோடினான் என்றார்.

'தன்னையும்' உம்மை உயர்வு சிறப்பு. முன்னமே இயற்கையில் மிக்க வெப்பமுடைய தன்னையும் அத்தீயானது சுடுமென்றதால், தன் வெப்பத்தினும் மேம்பட்டது அது என்று கதிரவன் கருதியதாகக் கூறியது, காமத்தீயின் கொடுமையை மிகுத்துக் கூறியதாகும்.

(பி - ம்.) 1. நடையவள் அமைத்த; காமத்தீத்.
2. சுடவது; சுடுமது; சுடுமெனத்; சுடுமெனல்; தரிக்கிலாமையால்; தரிக்கிலேனென. 3. ஓடிப்போம்.
4. முன்னவெம்; முன்னம்வெம். (61)

### அந்தி மாலை வருணனை

617. விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரு மிருளுங் காட்டலால்
அரியவட் கனறரு மந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் றோன்றினான்.

விரி மலர் தென்றல் ஆம்-மலர்ந்த பூக்களின் மணத்துடன் வரும் தென்றற் காற்றாகிய, வீசு பாசமும்-(உயிர்களின் மேல்)வீசிப் பிணிக்கும் பாசக்கயிற்றையும், எரி நிறம்-நெருப்பின் நிறத்தையுடைய, செக்கரும்-செவ்வானமாகிய செம்பட்ட மயிரையும், இருளும்-இருட்டாகிய (கருநிற) மேனியையும், காட்டலால்-(தன்னிடத்தே) தோற்றுவித்தலோடு, அரியவட்கு-தன்னை யொப்பாரில்லாத பிராட்டிக்கு, அனல் தரும்-காமத்தீயை மிகுவிக்கின்ற, அந்தி மாலை ஆம்-மாலைக் காலமாகிய, கரு நிறம், செம்மயிர் காலன்-கரிய மேனியையும் செம்பட்ட மயிரையும் உடைய யமன்,தோன்றினான்—.

காட்டலால்=காட்டலோடு; காட்டிக்கொண்டு.

இங்கு அந்தி மாலை யமனாக வருணிக்கப்பெற்றது.

செக்கர்-செந்நிறம்; இது ஆகுபெயராய்ச் செவ்வானத்தைக் குறித்தது. பாசம் என்பது, உயிர்களைக் கட்டி யிழுத்துச் செல்லும் பொருட்டு யமன் கையில் உள்ள கயிற்று வடிவானதொரு கருவி, இதனைக் 'காலபாசம்', 'யம பாசம்' என்பர். காமநோயுடையவர்க்கு' அந்நோயையும் அதனாலாகிய துன்பங்களையும் மிகுவிப்பது மாலைக்

காலம்; ஆதலால், 'அனல் தரும் அந்தி மாலையாம் காலன்' என்றார். இக்காலன், உயிரைக் கொள்ளாமல் கொல்லும் (வருத்துகின்ற) தன்மையுடையவன். கரு நிறமும் செம்பட்ட மயிரும், கையில் பாசக் கயிறும் உடையவன் காலனாதலால், அந்தி மாலையைக் காலனாக உருவகித்ததற்கு ஏற்ப, இருள், செவ்வானம், தென்றல் ஆகியவற்றையும் உருவகித்தார். முதலிற் கூறிய செக்கர், இருள், என்பவற்றைப் பின்னர்க் கூறிய கரு நிறம், செம்மயிர், என்பவற்றிற்கு ஏற்ப எதிர் நிரல்நிரையாக்கிக் கொள்க. தென்றல், யமனுடைய திசையாகிய தெற்கிலிருந்து நீண்டு நெடுந்தூரம் வருதலும், விரகதாப முடையோரை வருத்துதலும் உடைமையின் 'காலபாசம்' என்றார்.

அரியவள் கனல் தரும் என்று பிரித்து, 'அரியவளாகிய பிராட்டியைச் சுடுகின்ற' எனப் பொருள் கூறுதலும் பொருந்தும்.

அந்தி மாலையாம்....காலன்: 619-பார்க்க.

(பி - ம்.) 1. விரைமலர்த் தென்றலால்.
2. எரிகதிர்ச் செக்கரும்: காட்டலான்.
4. கருநிறச் சேக்கையில். (62)

618. மீதறை பறவையாம் பறையுங் கீழ்விளி
ஓதமென் சிலம்பொடு முதிரச் செக்கரும்
பாதக விருள்செய்கஞ் சுகமும் பற்றலாற்
சாதக மென்னவுந் தகைத்தம் மாலையே.

மீது அறை-மேலே (ஆகாயத்தில்) ஒலிக்கின்ற, பறவை ஆம் பறையும்-பறவைகளின் குரலாகிய பறையையும், கீழ் விளி-கீழே (தரையில்) ஒலிக்கின்ற, ஓதம் என் சிலம்பொடும்-கடலாகிய பாதச் சிலம்பையும், உதிரம் செக்கரும்-இரத்தம் போலச் சிவந்த செவ்வானமாகிய தலைமயிரையும், பாதகம்-(காமநோயுற்றார்க்குத்) துன்பத்தைத் தரும், இருள் செய் கஞ்சுகமும்-இருட்டாகிய கருஞ் சட்டையையும், பற்றலால்-கொண்டிருத்தலால், அ மாலை-அந்த மாலைக் காலமானது, சாதகம் என்னவும் தகைத்து-ஒரு பூதம் என்று சொல்வதற்கும் தக்கதாயிருந்தது.

காண்போரை அச்சுறுத்தும் தோற்றமுடையதொரு பூதமாகவும் அம்மாலைக் காலம் காணப்பட்டது என்கிறார். முன்னே காலன் என்றதனால், சாதக மென்னவும் தகைத்து என்பதில் உம்மை இறந்தது தழுவியது. பூதம், கையிற் பறையோடும், காலிற் சிலம்போடும், சிவந்த தலைமயிரோடும் கரிய சட்டையோடும் அச்சந்தரும் தோற்றமுடையதாயிருந்தது என்க. 'சாதகரென்னவும்' என்று பாடங்கொண்டு, காளிக்குத் தம்மையே பலியிடுதலும், கடிய நோன்பும், கொடிய தோற்றமும் உடைய 'சாதகர்' என்னும் ஒரு வகையினர் என்று பொருளுரைப்பாரும் உளர். அப்பொருளுக்கு, உதிரச் செக்க

ரும் என்ற விடத்து 'சிவந்த இரத்தக் குறிகளும்' எனப் பொருள் கொள்க.

மாலைக்காலத் தோற்றத்தின் கொடுமை: சீவக. 1660-காண்க.

(பி - ம்.) 1. மீதுறை; மீதுறு: மீதெழு பறவையின்; பறவையம்; பறவைய; பறவையப்; பறவையிற்; பறவையாம் பறவை; கீழ்விரி; கீழ்வெளி.
2. ஓதவொண்; ஓதவெண்; ஓதமுண்; சிலம்பரும்; சிலம்புமுத்தரிகச் செக்கரும்.
3. இருள்செயுஞ் சுகமும்; இருளகஞ்சுகமும்; இருளிற்கஞ்சுகமும்; இருள் செயுஞ் சகமும்.
4. சாதகர்: தகைத்திம்மாலையே; தகைத்தமாலையே; தகைத்து மாலையே; தகைந்த மாலையே; தழைத்த மாலையே; தழைத்தம் மாலையே. (63)

## பிராட்டி மேலும் புலம்புதல்

(வேறு)

619. கயங்க ளென்னுங் கனறோய்ந்து
கடிநாண் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றன் மன்மதவே
ளெய்த புண்ணி னிடைநுழைய
உயங்கு முணர்வு நன்னலமு
முருகிச் சோர்வா ளுயிருண்ண
மயங்கு மாலை வரனோக்கி
யிதுவோ கூற்றின் வடிவென்றாள்.

கயங்கள் என்னும் கனல் தோய்ந்து-குளங்கள் என்று சொல்லப்படும் நெருப்பிலே காய்ந்து, நாள் மலரின் கடி விடம் பூசி-புதிய பூக்களின் மணமாகிய விடத்தைப் பூசிக்கொண்டு, இயங்கு தென்றல்-உலாவிவரும் தென்றற் காற்றானது, மன்மதவேள் எய்த புண்ணிடை-மன்மதன் (தன் மலரம்புகளை) எய்ததனாலான புண்ணிலே, நுழைய-(வேல்போல) நுழைந்திட, உயங்கும் உணர்வும்-(முன்னமே) மெலிகின்ற(தன்)அறிவும், நல் நலமும்-நல்ல பெண்மைக் குணங்களும், உருகி சோர்வாள்-நெகிழப்பெற்றுத் தளர்கின்ற பிராட்டி, உயிர் உண்ண-(தன்) உயிரைப் பருகும்படி, மயங்கும் மாலை வரல் நோக்கி-(பகலும் இரவும்) கலப்பதாகிய மாலைக் காலம் வருவதைக் கண்டு, கூற்றின் வடிவு இதுவோ என்றாள்-யமனுடைய வடிவம் இதுதானோ! என்று கூறி நடுங்கினாள்.

பொதுவாக எல்லோர்க்கும் இன்பமளிக்கும் தென்றற் காற்றும், மாலைக்காலமும், விரகதாப முள்ளவர்களுக்குத் துன்பம் அளிக்குமாதலின், பிராட்டி, மாலையின் தோற்றத்தைக் கண்டு இது 'யமனுடைய வடிவமோ' என்று நடுங்கினாள். தென்றல், தீயிற் காய்ந்து

விடமும் பூசிக்கொண்டு வந்தது என்றதனால் அதனை வேல் எனலாம். ‘வெந்த புண்ணில் வேல் நுழைந்தது போல்’ என்னும் முதுமொழியின் படி, முன்னமே மன்மத பாணத்தால் புண் பட்டு நொந்துருகும் பிராட்டியின் உடம்பிலே தென்றல் பட்டது, அப்புண்ணிலே வேல் பாய்ந்தது போலிருந்தது. தென்றலைக் கால பாசமாக முன்னே (617) கூறினர்.

நலம் - அழகுமாம். நன்னலம்: ‘பிறந்துடை நலம்’ (614.); மாலைக் காலம் யமன்: ‘அந்தி மாலையாம்...காலன்’ : (617.)

(பி - ம்.) 1. கனற்றேய்ந்து.
2. இடை நுழையும்; இடை நுழைந்தாங்கு; இடைநுழைந்து; உழை நுழைந்து.
3. நன்னலனும்; நலனலமும்: தன்னலமும்: உருகச்; சோர்வார்; உயிருண்ணும்.
4. வயங்கு மாலை; மயங்கி மாலை: வரநோக்கி: இதுவே. (64)

620. கடலோ மழையோ முழுநீலக்
கல்லோ காயா நறும்போதோ
படர்பூங் குவளை நாண்மலரோ
நீலோற் பலமோ பானலோ
இடர்சேர் மடவா ருயிருண்ப
தேதோ வென்று தளர்வாண்முன்
மடல்சேர் தாரா னிறம்போலு
மந்தி மாலை வந்ததுவே.

இடர் சேர் மடவார் உயிர் உண்பது-(காமத்தால்) துயருறும் பெண்களின் உயிரைக் கவர்வது, கடலோ-நீலநிறக் கடலோ, மழையோ-கருமேகமோ,முழு நீலம் கல்லோ-நல்ல நீலமணிமலையோ, நறுகாயாபோதோ-நன்மணமுள்ள காயாம்பூவோ, படர்பூ குவளை நாள் மலரோ-பரந்த அழகிய கருங்குவளையின் புதிய பூக்களோ, நீலோற்பலமோ—, பானலோ-கருநெய்தற்பூவோ, ஏதோ என்று-(இவற்றுள்) எதுவோ! என்று நினைத்து, தளர்வாள் முன்-(மனமும் உடலும்) சோர்கின்ற பிராட்டியின் முன்னே, மடல் சேர் தாரான் நிறம் போலும் அந்தி மாலை-பூவிதழ்கள் நெருங்கக் கட்டிய மாலை யணிந்த இராமபிரானது திருமேனி நிறம் போன்ற (இருள் சூழ்ந்த) அந்தி மாலைக்காலம், வந்தது-வந்து சேர்ந்தது.

இதுவரை, மனம் மிகக் கலங்கி வெளியே நோக்காது துன்புற்ற பிராட்டி, சிறிது மனம் தெளிந்து வெளியே நோக்க,மாலையின் தோற்றங்கள் அவளுக்குப் புலனாயின; இராமபிரானுடைய திருமேனி நிறத்துக் கொப்பான பொருள்களும் அவள் நினைவுக்கு வரலாயின. அதனால், அவற்றை யெண்ணியும் கண்டும் மீளவும் சோர்வு மிக்கவளானாள். அந்தி மாலை வந்ததை முன்னமே கூறினும், பார்வையும் எண்

ணமும் வேறுபட்ட பிராட்டிக்கு அது புலனாகியது இப்போதேயாக லின், மாலை வரல் நோக்கி 'இது கூற்றோ' என அஞ்சினாள்;பலவற்றை நினைத்தாள்; அவள் முன் அது வந்தே விட்டது என மீண்டும் கூறு வாராயினர்.

இக்கவியிற் கூறப்பட்டகடல் முதலிய ஏழுபொருள்களும் இராம பிரானது திருமேனியை நினைவூட்டுவன; அந் நினைவு மிக்கவள், அப்பெருமானை அடைய வியலாமையின், அப்பொருள்களை வெறுக்க லானாள். தன்னைப் போன்ற நிலையில் உள்ள பெண்கள் யாவர்க்கும் அப்பொருள்கள் தீங்கிழைப்பனவாகக் கருதி, 'இடர் சேர் மடவார் உயிருண்பது எதுவோ' என்று கூறி வருந்தினாள். அவ்வாறு வருந்து வதை மிகுக்கும் வகையில், இருள் சூழ்ந்த மாலை அவளை நெருங்கி வருவது போலிருந்தது; அதுவும் பெருமானுடைய நிறத்தை நினை வூட்டியது.

குவளையும் நீலோற்பலமும் வேறுவேறென்பது முன்னமே (572) பெறப்பட்டது. இராமபிரான் திருமேனிக் கொப்பான பொருள்கள் 645; அயோத் 622. ஒரு பொருளுக்குப் பலவற்றை உவமை கூறு தல் இவ்விடங்களிலும், சுந்தர. 554 ம் காண்க.

இது முதல் 4 செய்யுட்கள் பிராட்டி தன் காமமயக்க நிலையிற் கூறியவை.

(பி - ம்.) 1. கடலோ மலையோ; முழுநீலக்காலோ: நறும்பூவோ.
2. படரங்குவளை நறுமலரோ பசிய நீலோற் பலந்தானோ.
3. உயிர்குடிப்பது.
4. அடல்சே ரசுரர்; அடல்சேர் நிருதர்; மடலேர்தாரான்; மடலேய் தாரான்; மடல்சேரசுரர்; அடல்சே ரதிரார்; அடலேர்காரா; அடலே ரரக்கர்; நிறம்போல: வந்ததால்: பரந்ததுவே; அடைந்ததுவே. (65)

621. மைவா னிறத்து மீனெயிற்று
வாடை யுயிர்ப்பின் வளர்செக்கர்ப்
பைவா யந்திப் படவரவே
யென்னை வளைத்துப் பகைத்தியால்
எய்வா னொருவன் கையோயா
னுயிரு மொன்றே யினியில்லை
உய்வாள் வழியிற் பழிபூண
வென்னோ டுனக்குப் பகையுண்டோ.

'வான் மை நிறத்து-ஆகாயத்தே பரவிய கரிய நிறத்தையும், மீன் எயிறு-விண்மீன்களாகிய பற்களையும், வாடை உயிர்ப்பின்-காற்றாகிய மூச்சையும், வளர் செக்கர்-மிக்க செம்மை பொருந்திய, (செவ்வானமாகிய), பை வாய்-விடப்பை கொண்ட வாயையும் உடைய, அந்தி-அந்தி மாலையாகிய, படம் அரவே-படப்பாம்பே! எய்

வான் ஒருவன்-(முன்னமே என்மேல்) அம்பெய்யும் மன்மதனாகிய ஒருவன், கை ஓயான்-கை ஓயாமல் எய்கின்றான்; (என்னைக் கொன்றே தீர்ப்பதென்று உறுதி கொண்டான்); உயிரும் ஒன்றே-எனக்குள்ள உயிரும் ஒன்றுதான்; (இரண்டில்லை); இனி இல்லை-(அவ்வோருயிரும் மன்மதனுடைய பாணத்தால்)இனி நில்லாது; (இந்நிலையில்). என்னை வளைத்து-என்னை (நீயும்) வளைத்துக்கொண்டு, பகைத்தி - பகை பாராட்டுகின்றாய்; உய்வாள் வழியில்-(மன்மதனிடமிருந்து) தப்ப முயல்பவளாகிய என் வழியிலே (நின்று), பழிபூண-(வீண்) பழியை ஏற்பதற்கு, என்னோடு-என்னிடம், உனக்கு பகை உண்டோ-உனக்கு (முன்னமே ஏதேனும்) பகை உண்டோ? (இல்லையே!)

இருள் சூழ்ந்து வரும் முன்னந்தியைப் படமுள்ள கொடிய கரும் பாம்பாக உருவகித்து, அதற்கேற்ப, இருளைக் கருநிறமாகவும், நட்சத்திரங்களைப் பற்களாகவும், காற்றை மூச்சாகவும், செவ்வானத்தை வாயாகவும் வைத்துக் கூறினர். 'முன்னமே மன்மத பாணத்தால் நொந்து,'உயிர் இனி நில்லாது' என்னும் நிலையில்உள்ள நான், ஒருவாறு அதினின்றுந் தப்ப முயலுகையில், நீ வந்து என்னை வளைத்துக்கொண்டு குறுக்கே நிற்கின்றாய்; என் முயற்சி பயனற்றதாகி மன்மதன் வென்றுவிடின், உன் நோக்கமும் வீணாகும்; அவ்வாறன்றி, உன்னால் என்னுயிர் போவதாயின், பெண் கொலையாகிய வீண்பழி உன்னைச் சாரும்; ஆதலால் நீ மேற்கொண்ட செயல் தக்கதன்று; அபலையாகிய என்னை நீ பகைப்பதற்கு யாதொரு காரணமும் இல்லை' என்று பிராட்டி கூறுவதாகக் கூறுகின்றார். படம் விரிக்கும் தன்மையுள்ள பாம்புகள் கொடியவை யென்பர்.

பகைத்தியால்: ஆல்-அசை; உய்வாள்: தன்னைப் படர்க்கையாகக் கூறிய வழுவமைதி. பகையுண்டோ: ஓ-எதிர்மறைப் பொருளது. 'வாடை' என்றது 'காற்று' என்ற மாத்திரையாய் நின்றது; வாடைக் காற்று எனின், முன்னே தென்றல் என்றதனோடு மாறுபடும்.

(பி - ம்.) 1. மைவாணிறத்து; மைவார்நிறத்து; மையார்நிறத்து; மைவாய்நிறத்து; மின்னெயிற்று; வருசெக்கர்ப்.

2. படவரவ: இன்னு விளைத்துப்; என்னு வளைத்துப்; எனைநா வளைத்துப்; மின்னு வளைத்துப்; மின்னு வந்து; பருக வந்தாய்.

3. கையோவான்; ஒன்றே பிறிதில்லை; ஒன்றே வேறில்லை.

4. உய்வானுறவிப்; உய்வானுறவிற்; உய்வான் வழியிற்; பழிபூண்ட; பழிபூண்டாய்; உன்னோடெனக்குப்; உன்னோடென்ன; பகையுண்டே; பழியுண்டோ; உறவுண்டோ; உறவினியே; உய்யேன் வழியிற் பகை பூண்டா யுனக்கென்னோடென் பழியம்மா. (66)

## இருளை நோதல்

622. ஆல முலகிற் பரந்ததுவோ
ஆழி கிளர்ந்த தோவவர்தம்
நீல நிறத்தை யெல்லாரும்
நினைக்க வதுவாய் நிரம்பியதோ
கால னிறத்தை யஞ்சனத்திற்
கலந்து குழைத்தா காயத்தின்
மேலு நிலத்து மெழுகியதோ
வெய்ய விருளாய் விளைந்ததுவே.

வெய்ய இருளாய் விளைந்தது-(எங்கும் இக்) கொடிய இருள் மயமாகியுள்ள இது, ஆலம் உலகில் பரந்ததுவோ-ஆலகாலவிடம் உலக முழுதும் பரவியதோ! (அல்லது), ஆழி கிளர்ந்ததோ-கடல் பொங்கியெழுந்ததோ! (அவ்லது), அவர்தம் நீலம் நிறத்தை-அப்புருஷோத்தமனுடைய (கரு) நீல நிறத்தை, எல்லாரும் நினைக்க-(என் போன்ருர்) அனைவரும் நினைத்தலால், அது ஆய் நிரம்பியதோ-அந்நீல நிறமே எங்குமாகி நிரம்பிவிட்டதோ! (அல்லது), காலன் நிறத்தை -யமனுடைய கரு நிறத்தை, அஞ்சனத்தில் கலந்து குழைத்து-(கரிய) மையிலே கலந்து (நன்ருகக்) குழைத்து, ஆகாயத்தின் மேலும்-ஆகாயத்திலும், நிலத்தும்-இப்பூமியிலும், மெழுகியதோ- பூசியதுதானோ! (இவற்றுள் இன்னதென்று துணிய முடியவில்லையே!).

எல்லாரும் நினைக்க- உலகினர் அனைவரும் (கண்டு) நினைவுகூரும்படி என்றலும் ஆம்.

இங்கே கூறப்பட்டவற்றுள், ஆலமும், ஆழியும் காலன் நிறமும் அஞ்சத்தக்க பொருள்கள்; இராமபிரான் நிறம் பொதுவாக யாவராலும் விரும்பப்படுவதாய் இன்பம் விளைவிப்பதாயினும்,பிராட்டியைப் போன்ருர்க்குத் துன்பந்தருவது; இவையெல்லாவற்றையும் நினைப்பிப்பதாக இருள்பரவியுள்ளது; ஆதலால் இது மிக்க துன்பத்தைத் தருவதாகும் என்று கூறி வருந்துகின்ருள்.

இராமபிரான் திருமேனி யழகு, காண்போர் கண்ணையுங் கருத்தையுங் கவர்ந்து இன்புறுத்தவல்லது. ஒருகால் நேரிற் கண்டோர் அதனை மறக்க வியலாதது; ஆதலால் ‘அவர்தம் நீல நிறத்தை யெல்லாரும் நினைக்க’ என்ருள். ஒரு பொருளிடத்து மிக்க பற்றுக்கொண்டவர்க்கு, அதன் நினைவால், எங்கும் அதுவாகத் தோற்றுதல் இயல்பு.

பரந்ததுவோ, விளைந்ததுவே; குற்றுகரங்கள் முற்றுகரங்களைப் போல விதிபெற்று வந்தன.

(பி - ம்.) 1. பரந்ததோ: பரந்தனவோ: ஆழிகிடந்ததோ; அவர்தேர்: ஆழிகிளர்ந்த தோவ்வாத; ஆழிப் பெருக்கோ வாங்கவன்றன். 2. எல்லோரும்

3. கால நிறத்தை: அஞ்சனத்துக்: குழைத்துக் காயத்தின்; குழைத்தா காசத்தின்; குழைத்தாகாயத்து; குழைத்துக்காயத்து; குழைத்தாகாச மென்னும்.
4. மேலு நிலத்தில்; மேலை நிலத்தின்; மேலை நிலத்தும்; மேலு நிலத்தின்: எழுதியதோ: விளங்கும்; விளக்கும்; விளந்ததுவோ; விளந்ததோ; விளங்கியதே. (07)

### அன்றிலை நோதல்

623. வெளிநின் றவரோ போய்மறைந்தார்
விலக்க வொருவர் தமைக்காணேன்
எளியள் பெண்ணென் றிரங்காதே
யெல்லி யாமத் திருளூடே
ஒளியம் பெய்யு மன்மதனு
ருனக்கிம் மாய முரைத்தாரோ
அளியென் செய்த தீவினையே
யன்றி லாகி வந்தாயோ.

வெளி நின்றவரோ-(என் கண்முன்னே) வெளிப்பட நின்ற தலைமகனுரோ, போய் மறைந்தார்-(பார்வையினின்றும்) நீங்கி மறைந்து போனுர்; விலக்க-(அவ்வாறு அவர் போவதைத்) தடுக்க, ஒருவர் தமை காணேன்-ஒருவரையும் கண்டிலேன்; எளியள், பெண், என்று இரங்காதே-(இவள்) எளிமையானவள், பெண்ணுயிற்றே என்று(என் மீது) இரக்கங் கொள்ளாமல், எல்லியாமத்து இருள் ஊடே-இரவின் நள்ளிருளிலே. ஒளி அம்பு எய்யும்-மறைந்து நின்று (என்மீது) அம்புகளை எய்கின்ற, மன்மதனுர்-காமதேவர், உனக்கு இ மாயம் உரைத் தாரோ-உனக்கும் இந்த வஞ்சனையை உபதேசித்தாரோ! (இது அன்றிலைக் குறித்துக் கூறியது); அளியென் செய்த தீவினையே-இரங்கத் தக்கவளாகிய நான் (முன் பிறப்பில்) செய்த பாவமே! அன்றில் ஆகி வந்தாயோ-(நீ இப்போது என்னை வருத்தும் பொருட்டு) அன்றில் உருவங்கொண்டு இங்கே வந்து சேர்ந்தாயோ!

அன்றில் என்பது, எப்போதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாமையும், சற்றுப் பிரியினும் ஆற்ருது கூவியிரங்குந் தன்மையுமுடையதொரு பறவையினம்; வடநூலார் இதனைக் ‘கிரவுஞ்ச மிதுனம்’ என்பர். இதன் குரல் விரகதாப முற்றவர்க்கு மேலும் துன்ப[illegible] விளைக்குமென்றல் கவிமரபு,

வெளி நின்றவர்-உருவெளியாகத் தோன்றி என் கண்முன் நின்றவர் என்றலும், விலக்க-எனக்குண்டாகிய துன்பத்தைத் தீர்க்க என்றலும் ஆம். இருள் இங்கே, முன்னிருளை யடுத்துச் சூழும் காரிருள்; துன்ப மிகுதியால் அதனை யாமத்து நள்ளிருளாகக் கூறுகின்ரு[illegible] ஒளி, ஒளிந்து என்ற எச்சப் பொருளில் வந்தது. ஒளி பொருந்திய எனவுங்

கூறுவர். மன்மதனுர்: இகழ்ச்சிக் குறிப்பு. 'மன்மதன், தான் வருத்துவ தோடன்றி, இவ்வாறு கூவி என்னை வருத்தும் வஞ்சனையை உனக்கும் கற்பித்தானோ' என்று வெறுத்துரைத்தாள். 'உனக்கு' என்றவிடத்து உம்மை தொக்கது,

பக்கத்திலே துணையாகப் பலர் இருந்தும், தன் கருத்தை யறிந்து உற்றது செய்வார் ஒருவருமின்மையால், 'விலக்க ஒருவர் தமைக்காணேன்' என்றும், துன்ப மிகுதியால் பலபடியாகக் கூறியும் அரற்றலானுள் பிராட்டி யென்க.

அன்றிலின் தன்மை: 'அன்றி லொருகண் துயின்றொருக ணுர் வத்தா, லின்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ் சொல் - இன்று, தவிர்ந்ததே போலரற்றிச் சாம்புகின்ற போதே, அவிழ்ந்ததே கண் ணிரவட்கு' (நள. 115) என்ற விடத்துக் காண்க.

(பி - ம்.) 2. எளியன்; அளியள்: இரங்காதிவ்: அல்லியாமத் திருளூண்டே; யாமத் திடையூடே; மாயத்திருளூடே.

3. ஒளியம் பெய்து; ஒளியும் பொய்யும்: உனக்கு மாயம்; உனக்கு மாற் றம்; உனக்கு முற்றது; உளமே மாற்றம்.

4. அளியன்: செய்யும்: தீவினையாலன்றிலாரும் வந்தாரோ; அன்றிலீரும் வந்தீரோ. (68)

## தோழிமார் செயல்

624. ஆண்டங் கனையா ளினைய நினைந்
தழுங்கும் வேலை யகல்வானைத்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற்
சீத மணியின் வேதிகைவாய்
நீண்ட சோதி நெய்விளக்கம்
வெய்ய வென்றங் கவைநீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின்
சுடரா லிரவைப் பகல்செய்தார்.

ஆண்டு-அவ்விடத்து, அங்கனையாள்-பெண்களிற் சிறந்த பிராட்டி, இனைய நினைந்து-இவைபோல்வன பலவற்றை யெண்ணி, அழுங்கும் வேலை-வருந்தும்போது, அகல் - நெடுந்தொலைவிலுள்ள, வானை தீண்ட நிமிர்ந்த-ஆகாயத்தை அளாவும்படி உயர்ந்த, பெரு கோயில்-பெரியகன்னிமாடத்திலுள்ள, சீதம் மணியின் வேதிகைவாய்-குளிர்ச்சி தரும் சந்திரகாந்தக்கற்களாலாகிய மேடையிலே, (எரிந்து கொண்டிருந்த), நீண்ட சோதி நெய்விளக்கம்-மிக்க ஒளியைத்தரும் நெய்யினாலேற்றப்படும் விளக்குக்கள், வெய்ய என்று-வெப்பம்தருவன என்று கருதி, அவை நீக்கி-அவற்றை அப்புறப்படுத்தி, தூண்டல் செய்யா-தூண்டப்படாத, மணி விளக்கின் சுடரால்-இரத்தினங்களாகிய விளக்கின் பேரொளியால், இரவை-அவ்விராப்பொழுதை, பகல் செய்தார்-பகற்பொழுதுபோல் ஒளியுடையதாகச் செய்தார்கள்.

செய்தவர்கள் தோழிமார். எழுவாய் வருவிக்க.

நெய்விளக்கின் சுடரால் உண்டாகும் வெப்பமும் பிராட்டிக்கு மிகையாகுமென்று கருதித்தோழிமார், வெப்பமில்லாமலே நல்லொளியைத்தரும் மணிகளைக் கொணர்ந்து பரப்பி, ஒளியுண்டாக்கினரென்க.

அங்கனையாள்: 'அங்கநா' என்னும் வடசொல்லின் திரிபாகிய 'அங்கனை' யென்பது 'ஆள்' என்னும் பெண்பால் விகுதியும் பெற்று, அங்கனையாள் என்றாயிற்று. இனைய: வினையாலணையும் பெயர்.

அகல் வான்-பரந்த வானம் எனவும் ஆம்; 'தன்னை யொழிந்த நான்கு பூதமுந் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமாகிய ஆகாயம்' என்பர் நச்சினார்க்கினியர்; (பெரும்பாண் 1; மதுரைக் 266-7-உரை). மணி விளக்கின் சுடர்: பாம்பு இரவிலே தன்னிடமுள்ள இரத்தினத்தை ஓரிடத்தில் உமிழ்ந்து வைத்து, அதன் ஒளியால் தனக்குரிய இரையைத்தேடிக்கொள்ளும் என்பர்: குறிஞ்சிப். 221-உரை; நாமநல்லராக்கதிர்படவுமிழ்ந்த, மேய்மணி விளக்கின் (அகநா. 72: 14-5).

(பி - ம்.) 1. அனையள்; அன்னாள்; இனைய நினைத்து; அனைய நினைந்து; அமுங்கு மேல்னவ; அமுங்குங்காலை; அகல்வானம்.
2. திண்டி நிமிர்ந்த தது கோயிற்: திகழ்ந்த மணியின் வேதிகையாய்; மணியாம் வேதிகைவாய்; மணிவே திகைவாயின்; மணியார் வேதிகை வாய்; அணையின் வேதிகை வாய்.
3. நெய்விளக்கும் நெருப்பதென்றங்கு.
4. தூண்டல் செல்லா; தூண்டலில்லா: சுடராயிரவைப்: சுடராலிருளைப்: பகல் செய்தான். (6?)

சந்திரோதயம்

625. பெருந்தி ணெடுமால் வரைநிறுவிப்
பிணித்த பாம்பின் மணித்தாம்பால்
விரிந்த திவலை பொதிந்தமணி
விசும்பின் மீனின் மேல்விளங்க
அருந்த வமரர் கலக்கியநா
ளமுத நிறைந்த பொற்கலசம்
இருந்த திடைவந் தெழுந்ததென
வெழுந்த தாழி வெண்டிங்கள்.

பெருதிண் நெடுமால்-பெருமைமிக்க வலிய திரிவிக்கிரம மூர்த்தியாகிய திருமால், வரை நிறுவி-மந்தரமலையை (மத்தாக) நிறுத்தி, பிணித்த-அதிற்சுற்றிய, பாம்பின் மணி தாம்பால்-(வாசுகி என்னும்) பாம்பாகிய அழகிய கயிற்றினாலே, விரிந்த திவலை-(மேலே தெறித்துப்) பரந்த நீர்த்துளிகளும், பொதிந்தமணி-(அவற்றில்) அடங்கியிருந்த இரத்தினங்களும், விசும்பில் மீனின்-ஆகாயத்திலேயுள்ள நட்சத்திரங்களைப்போல, மேல்விளங்க-மேலாக விளங்கித் தோன்றும்படி, அமரர்

அருந்த-தேவர்கள் (அமுதத்தை) உண்ணும்பொருட்டு, கலக்கிய நாள்-(பாற்கடலைக்) கடைந்தகாலத்தில், இடை இருந்தது-அக்கடலி னுள்ளிருந்ததாகிய, அமுதம் நிறைந்த பொன் கலசம்-அமிர்தம் நிரம் பின பொற்குடமானது, எழுந்து வந்தது என-மேலெழுந்துவந்தாற் போல, ஆழி வெண் திங்கள்-வட்ட வடிவமுள்ள வெண்மையான (பூர்ண) சந்திரன், எழுந்தது-உதயமாயிற்று. அரவின்: இன், சாரியை.

சந்திரன் உதயமானது, அமுதம் நிறைந்த பொற்குடம் பாற் கடலினின்று மேலே எழுந்து வந்ததுபோலிருந்தது எனத் தற்குறிப் பேற்றமாகக் கூறுகின்றார். வெண் திங்கள்: வெண்மை சந்திரனுக்கு இயற்கையான நிறம் பற்றிய அடை; சந்திரன் நிறம் வெண்மையாயி னும், உதிக்கும்போது சிவந்து, பொன்னிறங்காட்டுதலின், அமுதம் நிறைந்த 'பொற்கலசம்' என்றார். 'பெருந்திண்ணெடுமால்' என்றது வரையை விசேடித்ததாகக்கோடலும் ஆம். இடை இருந்தது எனவும், எழுந்து வந்தது எனவும் மாறிக் கூட்டுக. ஆழி எழுந்தது என இயைத்துக் கடலினின்றும் எழுந்தது என்றலுமாம். சந்திரன்'அமிர்த கிரணன்' எனப்படுதலால், அமுதம் நிறைந்த குடமென்றல் பொருந்தும்.

சந்திரனுக்குப் பொற்குடம்: 'திங்கள், விதியின் மாலையாந் துணை வியை வீங்கிருட்டலைவன், வதுவை யாற்றுவான் வைத்தபொற் குட மென வயங்கும்' (நைடத. நிலாத். 3.)

(பி - ம்.) 1. பெருந்தண்: வரைநிறுவப்: பிணித்தவரவின்: மணித்தாம்பின்.
2. துவலை; பொதிர்ந்த; உதிர்ந்த: மின்னின்.
3. அமுது மிகுந்த. 4. எழுந்தவாழி. (70)

626. வண்டா யயனுன் மறைபாட
மலர்ந்த செந்தா மரைப்போது
பண்டா லிலையின் மிசைக்கிடந்து
பாரு நீரும் பசித்தான்போல்
உண்டா னுந்திக் கடல்பூத்த
தோதக் கடலுந் தான்வேறோர்
வெண்டா மரையின் மலர்பூத்த
தொத்த தாழி வெண்டிங்கள்.

பண்டு-முன்னே (பிரளய காலத்தில்), ஆல் இலையின் மிசை கிடந்து-ஓர் ஆலிலையின்மேல் அறிதுயிலமர்ந்து, பசித்தான்போல்-பசி கொண்டவன்போல, பாரும் நீரும் உண்டான்—உலகங்களையும் கடல் களையும் (ஒருங்கே) உண்டவனாகிய திருமாலின், உந்தி கடல்-திருவுந்தி யாகிய கடலானது, அயன் வண்டு ஆய் நால் மறை பாட-பிரமன் வண்டுபோலிருந்து நான்கு வேதங்களையும் இசைக்க, மலர்ந்த செந் தாமரை போது - விரிந்ததொரு செந்தாமரைப்பூவை, பூத்தது-

தோற்றுவித்தது; (அதைக்கண்டு), ஓதம் கடலும்-அலைகளையுடைய கருங்கடலும், தான்-,வேறு-அதனின் வேறாக, ஓர் வெண்தாமரையின் மலர்-ஒரு வெண்தாமரைப்பூவை, பூத்தது ஒத்தது-தோற்றுவித்தது போலிருந்தது, ஆழி வெண்திங்கள்-கடலினின்றும் உதித்த வெண்ணிறமுடைய சந்திரன்.

திருமாலின் உந்தியைக் கடலாக உருவகித்து, அக்கடல் ஒரு செந்தாமரைப்பூவைப் பூத்தது கண்ட உவர்நீர்க்கடல், அச்செந்தாமரையின் வேறாக ஒரு வெண்டாமரை மலரைத் தானும் பூத்ததுபோலக் காணப்பட்டது சந்திரோதயம் என்கிறார். ஒருவர் ஒன்று செய்தால், போட்டியாக மற்றொருவரும் அதுபோலச் செய்தலும், அதிற்சிறிது வேறுபாடு காட்டுதலும் உலக இயற்கை; அதனையொட்டி, உந்திக் கடல் போலக் கருங்கடலும் தாமரைப்பூவைத் தோற்றுவித்தது என ஒற்றுமையையும், அதில் வெண்டாமரை யென்ற வேற்றுமையையும் அமைத்துக் கூறினார். தாமரை பூப்பது நீரிலாதலாலும், உந்தியின் பெருமையைக் கருதியும் அதனைக் கடலாக உருவகித்தார். இறைவனுக்குப் பசியும், பசிதீர உண்டலும் இன்மையின், 'பசித்தான்போல் உண்டான்' என்றார். 'உறுபசியொன் றின்றியே யுலகடைய வுண்டனையே'(சிலப். ஆய்ச்சியர்குரவை) என்றதுங் காண்க. உண்ணப்பட்ட பொருள்களும், 'பாரும் நீரும்' என்றதனால், இறைவன் பெருமை விளங்கும். சோறாகப் பாரையும் நீராகக் கடலையும் உண்டான் என்க. உந்திக்கடல் பூத்த தாமரையிலே பிரமன் வண்டானது போல, சந்திரனாகிய தாமரையிலே களங்கத்தை வண்டெனக் கொள்ளலாம்.

(பி - ம்.) 1. அயனார் மறைபாட; அயனார் மறைபாடல்.
2. மிசை கிடந்து; இடை கிடந்து; இடைக் கிடந்து; இடை துயின்று; இடைத்துயின்று; பானநீரும்; பசித்தவன்போல்.
3. ஒத்த கடலும்; ஒப்பக் கடலும்; கடலுதித்தான் வேறோர் பரிசாயுதித்ததென. 4. பூத்தவொத்தது. (71)

## நிலவொளி

627. புள்ளிக் குறியிட் டெனப்பன்மீன் பூத்த வானம் பொதிகங்குல்
நள்ளிற் செறிந்த விருட்பிழம்பை நக்கி நிமிரு நிலாக்கற்றை
கிள்ளைக் கிளவிக் கென்னுங்கொல் கீழ்பாற் றிசையின் மேல்வைத்த
வெள்ளிக்கும்பத் திளங்கமுகின் பாளை போன்று விரிந்துளதால்.

புள்ளி குறி இட்டது என-புள்ளிகளாகிய அடையாளம் இட்டு வைத்தாற்போல,பல மீன் பூத்த வானம் பொதி-பல நட்சத்திரங்கள் தோன்றும் வானத்தையும் மூடிய, கங்குல் நள்ளில்-நடுராத்திரியிலே, இருள் பிழம்பை நக்கி நிமிரும்-மிக்கிருந்த இருட்கூட்டத்தைத் துடைத்து மேம்படுகின்ற, நிலா கற்றை-நிலவொளியின் தொகுதியானது, கீழ்பால் திசையின்-கிழக்குத்திக்கிலே, மேல்வைத்த-மேலாக

வைக்கப்பட்ட, வெள்ளி கும்பத்து-வெள்ளிக்குடத்திலே (இட்ட), கமுகின் இளம் பாளை போன்று-பாக்குமரத்தின் இளம் பாளை போல (வெண்மையாக), விரிந்து உளது-தலை விரிந்து காணப்படுகின்றது; (அது), கிள்ளை கிளவிக்கு-கிளியின் மொழிபோலும் சொற்களையுடைய பிராட்டிக்கு, என் ஆம் கொல்-என்ன வாகுமோ!

ஆல்: அசை. கிள்ளைக்கிளவி-அன்மொழித்தொகை.

சந்திரன் வெள்ளிக்குடம் போலவும், அதனிடமிருந்து பரவும் நிலாக்கதிர் அக்குடத்தில் இட்டுவைத்த, தலைவிரிந்த இளங்கமுகம் பாளைபோலவும் தோன்றின என்க. வெள்ளியாலாகிய குடத்தில் (பூர்ண கும்பத்தில்) கமுகம் பாளையை யிட்டு வைத்தல் மங்கலத்துக் குரியது. இத்தகைய நிலாத்தோற்றம் பிராட்டிக்குத் துன்பத்தை மிகுவிப்பதே யாகும் என்றபடி.

கீழும் மேலும் எங்கும் எதுவும் தெரியாதவாறு மூடிய இருளில், ஆகாயம் தெரிவதற்கு அடையாளமாக இடப்பட்ட வெள்ளொளி யுடைய புள்ளிகள் போல விண்மீன்கள் பூத்து விளங்கின என்பதிலும், நிலாக்கதிரின் தோற்றத்தைக் கூறியுள்ள வகையிலும் அமைந்த அழகு ஓர்ந்து இன்புறற்பாலது.

நீர் நிறைந்த குடத்திற் பாளையிட்டு வைத்தல்: ஒப்பு. 'தேசொளி விளங்கு பாளை செறிநிறை கரகம் வைத்து' (திருவால. 4:18.)

(பி - ம்.) 1. புள்ளிற்றறி: இட்டென வொண்மீன்; இட்டென வெண்மீன்; இட்டன விண்மீன்; இட்டன பன்மீன்; இட்டன வெண்மீன்; இட்டன வொண் மீன்; பூத்தவான; பொலிகங்குல்.
2. சிறந்த: நக்கிநிமிர்ந்த.
3. கிள்ளைக் குதலைக்கு: திசையின் மிசைவைத்த; திசையின் முளைத் தெழுந்த.
4. பாளைபோன்றும்; பாளைபோல; பாளையொன்று. (72)

சில பிரதிகளில் இச்செய்யுளின்பின் 'விரைசெய்' (630) என்ற பாடல் காணப் படுகின்றது. வேறு சில பிரதிகளில் அது அடுத்த பாடலின்பின் உள்ளது.

### நிலவொளி பரத்தல்

628. வண்ண மாலைக் கைபரப்பி
யுலகை வளைத்த விருளெல்லாம்
உண்ண வெண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணு மண்ணுந் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளதால்.

வண்ணம் - (நல்ல) நிறங்கொண்ட, மாலை கை பரப்பி-மாலைப் பொழுதாகிய சேனையை (முன்னே எங்கும்) பரப்பி, உலகைவளைத்த-

உலக முழுமையும் வளைத்துக்கொண்ட, இருள் எல்லாம்-இருட்டு முழுவதையும், உண்ண எண்ணி - பருக நினைத்து, தண்மதியத்து உதயத்து எழுந்த-குளிர்ந்த சந்திரனது உதயத்தால் வெளிப்பட்ட, நிலா கற்றை- ஒளித் தொகுதியானது, விரி நல் நீர் பண்ணை-பரந்த நல்ல நீர்வளம் பொருந்திய வயல்கள் சூழ்ந்த, வெண்ணெய்-வெண்ணெய்நல்லூரில் வாழ்ந்த, சடையன்தன் - சடையப்ப வள்ளலது, விண்ணும்-தேவலோகத்தையும், மண்ணும்-இப்பூவுலகத்தையும், திசை அனைத்தும்-எல்லாத் திக்குக்களையும், விழுங்கி கொண்ட-உட்படுத்தித் தனதாக்கிக்கொண்ட, புகழ்போல்-(உயர்ந்த) புகழைப் போல, எங்கும் பரந்து உளது-உலக முழுதும் பரவியதாயிற்று.

ஆல்: அசை.

சடையன்றன் புகழ், விழுங்கிக்கொண்ட புகழ் என இயைக்க. இருளாகிய அரக்கக் கூட்டம், மாலையாகிய சேனையை முதலில் கொணர்ந்து எங்கும் பரப்பி, பின்னர்த் தானும் வந்து வளைத்துக் கொண்டது. அவ்வாறு வளைத்த கூட்டத்தை, நிலவொளி பரவி எதிர்த்து அழித்தது என்க. அந்நிலவொளிக்குச் சடையன் புகழை உவமை கூறினர்; எதிர்நிலையுவமம். புகழ் வெண்ணிறமுடையதென்றல் கவி மரபு. சடையன் புகழை உவமையாக்கிக் கூறுவதன் மூலம் தம்முடைய நன்றியறிதலைப் புலப்படுத்திக்கொண்டார்; 412-விசேடக் குறிப்புப் பார்க்க.

கை-சேனை; 'கைவகுத்து' (தணிகைப். சீபரி. 467.) நிலவுக்குப் புகழ் உவமை: ஆரணிய. 663. சுந்தர. 155.

(பி - ம்.) 1. மாலைகைபரப்பி: வளைந்த; வளைந்தது.
2. தண்மதியம்; தண்மதியின்; உதையினெழுந்த; உதயமெழுந்த; உதையத்தெழுந்த; மதியமதனுள்ளெழுந்த; மதியமதனுள் நிமிர்ந்த; நெடுநிலா.
3. விழுங்கிக்கொண்டு; விழிநன்னீர்ப்.
4. வெண்ணைச் சடையன்றன்; வெல்ணெய்நூற் சடையன்:சடையான்றன்; புகழே போலப்: பரந்துளவால்; பரந்துளதே; பரந்ததால். (73)

629. நீத்த மதனின் முளைத்தெழுந்த
நெடுவெண் டிங்க ளெனுந்தச்சன்
மீத்தன் கரங்க ளவைபரப்பி
விரிந்த நிலவின் வெண்சுதையால்
காத்த கண்ணன் மணியுந்திக்
கமல நாளத் திடைப்பண்டு
பூத்த வண்டம் பழையதெனப்
புதுக்கு வானும் போன்றுளதால்.

நீத்தம் அதனில் முளைத்து எழுந்த-கடல் நீர்ப் பெருக்கிலே தோன்றி மேல் வந்த, வெண் திங்கள் எனும்-வெண்ணிற முடைய

சந்திரனென்று சொல்லப்படுகிற, நெடு தச்சன்-பெரிய சிற்பியான வன், காத்த கண்ணன்-காத்தல் தொழிலையுடைய திருமாலின், மணி உந்தி கமலம் நாளத்து இடை-அழகிய உந்தித்தாமரையின் தண்டி லிடமாக, பண்டு பூத்த அண்டம்-முன்னே தோன்றிய அண்ட கோளம்,பழைய என-மிக பழையதாகி விட்டதென்று கருதி, தன் கரங்கள் அவை மீ பரப்பி-தன் கிரணங்களாகிய கைகளை மேலே பரப்பி, விரிந்த-ஒளிமிக்க, நிலவின் வெண் சுதையால்-நிலாவாகிய வெள்ளிய சுண்ணச் சாந்தினால், புதுக்குவான் போன்றும்-புதுப்பித் தல் போலவும், உளது-(அந்நிலாப்பரப்பு) உள்ளது.

நீத்தம் அது; கரங்கள் அவை என்பவற்றிலே, சுட்டுப் பெயர்கள், முந்திய இயற்பெயர்ப் பொருளையே தந்து நின்றன. நிலவின்: இன்-சாரியை. 'புதுக்குவான்' தொழிற்பெயராய் நின்றது. புதுக்குவான் போன்றும் என உம்மையைப் பிரித்துக் கூட்டுக; உம்மை இறந்தது தழுவியது. ஆல்: அசை. 'உளது' என்பதற்கு எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது.

தச்சன் என்பது 'தொழில் செய்வோன்' என்ற பொதுப் பொரு ளில் வந்தது. கண்ணன் என்பதும், ஓர் அவதாரப் பெயராயினும் 'திருமால்' என்ற பொருளில் வந்தது. கரங்கள்-கிரணங்கள், கைகள் என இருபொருள்பட நின்றது.

நெடுங்காலமாகிப் பழுதுபட்டும் அழுக்கடைந்தும் போன வீடு களைப் புதுப்பித்தல் போல, அண்டகோளமே பழையதாயிற்றெனப் புதுப்பித்தலைத் தொடங்கினன் திங்களாகிய தச்சன் என்றார். அத்த கைய அருந்தொழிலைச் செய்வதனால் 'நெடு' என்று விசேடித்தார். 'கடலிலே தோன்றிய தச்சன்' என்றதனால் அவனுடைய தெய்வத் தன்மையும் குறிக்கப்பெற்றது. நிலவு வெண்சுதை: ஒப்பு: 'திங்களுங் கரிதென வெண்மை தீற்றிய, சங்கவெண் சுதை' 120.

(பா-ம்.) 2. மீத்தன்; மீத்த: மிகுவெண்ணிலவாம்; மிகுவெண்ணிலவின்; நெடு வெண்ணிலவாய: விரிந்த நிலவாம் வெண்சுதையா; விரிந்த நிலா வின் வெண்சுதையால்.
3 திருவுந்திக்; கடியுந்திக்: நாளத் திடைபண்டு.
4 பழையதென்று; பழதென்று: புதுக்குவானம்; புதுக்குவோனும்: போனறுளதே; போன்றுளனுர்; போன்றனனால். (74)

680 விரைசெய் கமலப் பெரும்போது
விரும்பிப் புகுந்த திருவினெடும்
குரைசெய் வண்டின் குழாமிரியக்
கூம்பிச் சாம்பிக் குவிந்துளதால்
உரைசெய் திகிரி தனையுருட்டி
யொருகோ லோச்சி யுலகாண்ட
அரைச னெதுங்கத் தலையெடுத்த
குறும்பர் போன்ற வரக்காம்பல்.

(நிலவொளி மிகுதியால்), விரைசெய்-நறுமணமுள்ள, கமலம் பெரு போது - தாமரையாகிய பெருமை பொருந்திய பூவானது, விரும்பி புகுந்த திருவினொடும்-விரும்பித் தன்னிடம் வந்து வீற்றிருக்கின்ற இலக்குமியுடனே, குரை செய் வண்டின் குழாம்-ஒலிக்கின்ற வண்டுக் கூட்டமும், இரிய-தன்னைவிட்டு நீங்கும்படி, கூம்பி-(இதழ்கள்) குவிந்து, சாம்பி-வாடி, குவிந்து உளது-மூடிக்கொண்டுள்ளது; அரக்கு ஆம்பல் - செவ்வல்லிப் பூக்கள், உரை செய்- புகழ்மிக்க, திகிரிதனை உருட்டி-(ஆஞ்ஞா) சக்கரத்தை எங்கும் செலுத்தி, ஒரு கோல் ஓச்சி-தனிச் செங்கோல் கொண்டு, உலகு ஆண்ட அரைசன் ஒதுங்க-உலக முழுதும் ஆட்சி செய்த பேரரசன் (ஆட்சியை விட்டு) நீங்குதலால், தலையெடுத்த-(முன்னே ஒடுங்கியிருந்து இப்போது) பெருமிதத்தோடு நிமிர்ந்து நின்ற, குறும்பர் போன்ற-சிற்றரசரைப் போன்றிருந்தன.

இரவில் தாமரைமலர்கள் குவிதலும், அல்லிப் பூக்கள் மலர்தலும் இயற்கை. அதனை, உலக வியற்கையான மற்றொரு செயலோடு பொருத்திக் கூறுகின்றார். தாமரை தன் சிறப்பினாலேயே பேரரசன் போன்றது; அது வாடிக் குவியவே, முன்பு ஒடுங்கியிருந்த ஆம்பலாகிய குறும்பர் தலையெடுத்தனர் என அழகுபடக் கூறுகின்றார். குறும்பு-சிற்றூர்; அதனை ஆள்வோர் குறும்பர். குறும்பர் என்பது நல்ல தகுதியில்லாதோர் என்ற பொருள் படுதலும், அத்தகையோர் பலராய் ஆட்சியைக் கைக்கொள்ளுதற்கு முன் வருவர் என்பது காண்க.

பின் இரண்டடிகளுக்கு ஒப்பு: 'பொருவி லாழியோன் றுருவெப் புவனமும் விளக்கும், இரவி மன்னவ னிறத்தலு மெதிர்ந்தபுன்மாலை, பரவை மாநில முழுவதும் பரிப்பவ னிறப்ப, விரவு வெந்தொழிற் குறுநில வேந்துபோன் றுளதே' (நைடத. மாலை. 5.)

(பி - ம்,) 1. கமல நறும் பொகுட்டின்: கமலப் பெருமபோதின்; கமலப் பெரும் போதில்; கமலப் பைம்போதின்; புகுந்த திருவோடும்.
2. சாம்பிக் குவிதலால். 3. திகிரி தனியுருட்டி; ஓச்சி யரசாண்ட.
4. அரசன்; அரசர்; குறும்பு போன்றது. (75)

நிலவைப் பழித்தல்

631, நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்கா நின்ற வெறிகடற்கு
மெனக்கு மிகலா யெய்தினையோ!
ஓங்கா நின்ற விருளாய்வந்
துலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பி
னிடையே யெழுந்த வெண்ணெருப்பே.

''ஓங்காநின்ற-(கருநிறம்) மிகுகின்ற, இருள் ஆய் வந்து-இருட்டு என்ற பெயருடையதாகி வந்து, உலகை விழுங்கி-உலக முழுதும் மூடிக் கொண்டு, மேன்மேலும் வீங்காநின்ற - மேன்மேலும் வளர்கின்ற, கருநெருப்பின் இடையே எழுந்த-கருநிறமுள்ளதொரு நெருப்பின் நடுவே தோன்றி வந்துள்ள, வெள் நெருப்பே-வெண்மை நிறமுடைய நெருப்பே! (நீ), நீங்கா மாயை அவர் தமக்கு-விலக்க முடியாத மாயையில் வல்ல அந்த நம்பிக்கு, நிறமே தோற்று-(திருமேனி) நிறத்தினாலே தோல்வியுற்று, புறமே போய்-(உலகத்துக்கு) வெளியே சென்று, ஏங்காநின்ற-ஏங்கிக்கிடக்கின்ற, எறி கடற்கும்-(அலை)மோதுகின்ற கடலுக்கும், எனக்கும்—, இகல் ஆய் எய்தினையோ-பகையாகி வந்திருக்கின்றாயோ!

விரகநோயுற்றோர்க்கு நிலவு வெப்பமுடையதாகத் தோற்றுதலின், அதனை அவர்கள் பலவாறு பழிப்பதாகக் கூறுதல் கவி மரபு. நிலவும், அது தோன்றும் இராக்காலமும் பிராட்டிக்கு இப்போது மிக்க துன்பந் தருவன; ஆதலால், இருளையும் 'கரு நெருப்பு' என்றாள்; நிலவை அதனிடையே தோன்றிய 'வெண்ணெருப்பு' என்றாள். தன் கண்ணிற்பட்ட அப்பரம புருஷன் தனக்கு இத்தகைய நிலையைத் தந்து மறைந்தமையின், 'நீங்கா மாயையவர்' என்றாள். இத்தொடர் மொழி, இராமபிரானது அவதாரப் பெருமையைக் குறித்தலுங் ண்க. இயற்கையில் உலகத்துக்கு வெளியே சூழ்ந்துள்ள கடலை, ாமபிரானது திருமேனி நிறத்துக்குத் தோற்று முன்னிற்க மாட் து வெளியே போய் ஏங்கிக் கிடப்பதாகக் கூறியது 'ஏதுத் தற் ுறிப்பேற்றம். ஏங்குதல்-ஒலித்தல் என்ற பொருளுமுடையதாதலின், 'வாய்விட்டு அரற்றுகின்ற' என்றலும் பொருந்தும். நிலவைக் கடலுக்கும் பகையானாய் என்றது, நிலாக்காலத்தில், கடல் வாய்விட்டு அரற்றுதல் போலப் பேரொலி செய்தலால் என்க.

நிலவை வெண்ணெருப்பென்றல்: மதுரைக். 502; பிரபு. பிரபுதேவர் வந்த. 60. 'ஊரைச் சுடுமோ உலகந் தனைச்சுடுமோ, ஆரைச் சுடுமோ அறியேனே-நேரே,பொருப்பு வட்ட மானமுலைப் பூவையரே! இந்த, நெருப்புவட்ட மான நிலா' என்ற தனிப்பாடலையும் காண்க.

(பி - ம்.) 1. நீங்கா மாமை; நீங்கா; மயலே; எமக்களித்தோர்; நிறமேயுள்ளப்; நிறமொவ்வாமற்; புறம்போமோ.

2. ஏங்காக் கிடந்த; ஏங்காக் கிடக்கும்: எனக்குங் கொடியை யானாயே; எனக்கே யனையை யானாயோ; இனைய யானாயோ.

3. விங்காநின்ற; உலகை விழுங்க; உலகை வளைத்து.

4. நீங்காநின்ற; கருநெருப்புக்கு; இடை வந்தெழுந்த; வெண்ணிலவே.

(76)

இதனையடுத்துப் பின்வரும் பாடல் சில பிரதிகளில் காணப்படுகின்றது :—

அப்புறத் தலைகட லயர்ந்த தாமரை
ஒப்புற விந்துவென் றுதித்த வொள்ளழல்
வெப்புறு வெங்கதிர் பரப்ப விண்ணெலாங்
கொப்புளங் கொண்டென வுடுக்கள் சூர்ந்தவே.

(வேறு)

632. கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
வடுவி லின்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றாலெனைச்
சுடுதி யோகடற் றோன்றிய திங்களே!

கடல் தொன்றிய திங்களே-(முன்னும் பாற்கடலில் தோன்றி, இப்போதும்) கீழ்கடலில் உதித்தெழும் சந்திரனே! நீ கொடியை அல்லை-நீ (இயல்பாகக்)கொடியவனில்லை; யாரையும் கொல்கிலாய்-எவரையும் கொல்லும் ஆற்றல் உடையவனுமில்லை; (நீ பிறக்கும் போது), வடு இல் இன் அமுதத்தொடும்-குற்றமில்லாத இனிய அமுதத்துடனும், பிடியின் மெல் நடை பெண்ணொடும் - பெண்யானை போலும் மென்மையான நடையையுடைய பெண்ணாகிய இலக்குமியுடனும், வந்தனை- (உடன் பிறப்பாய்) வந்தாய்; என்றால்-அவ்வாறாயின், எனை-(அபலையாகிய) என்னை, சுடுதியோ-இவ்வாறு வருத்துதல் தக்கதாமோ?

சந்திரனே நீ பிறந்தது பார்கடலில்; அப்படிப் பிறக்கும்போது இறப்பைத் தவிர்க்கவல்ல அமுதமும், பெண்களுட் சிறந்த பெருந் திருவும் உடன் தோன்றப் பிறந்தாய்; ஆதலால் இயல்பாகத் தண்மையும், யாவரிடத்தும் இன்னருளும், பெண்களிடத்துப் பேரளியும் உடையவனாதல் வேண்டும்; அவ்வாறாகவும், அபலையாகிய என்னை யிவ்வாறு வருத்துதல் உனக்குத் தகாது; வருத்துவது ஏனோ! என்றாள்.

(பி - ம்.) 1. கொடியன்; அல்லநீ: கொல்கிலா.
2. வடுவினல்லமுதத்தொடு; மடிவில் இன்னமுதத்தொடு; வல்லமிர்தத்தொடும்.
3. நன்னடைப்: பெண்ணொளி தென்றெனைச்; பெண்ணொளி தென்றனைச்: பேதைமைப் பெண்ணெனைச்: பேதைமைப் பெண்டனைச்.
4. சுடுதியா. (77)

சில பிரதிகளில் இதனையடுத்து, 'தாயரிற்பரி' (636) என்ற பாட்டுக் காணப் படுகின்றது.

விரகவேதனை

633. மீது மொய்த்தெழு வெண்ணில வின்கதிர்
மோது மத்திகை மென்முலை மேற்பட
ஓதி மப்பெடை வெங்கன லுற்றெனப்
போது மொய்த்தம ளிப்புரண் டாளரோ.

(பிராட்டி), மீது-ஆகாயத்தினிடமாக, மொய்த்து எழு-செறிந்து எழுந்த, வெள் நிலவின் கதிர்-வெண்மையான சந்திரகிரணங்களா கிய, மோதும் மத்திகை-அடிக்குஞ் சம்மட்டி, மெல் முலை மேல் பட-(தன்) மென்மையான தனங்களின்மேலே படுதலால், ஓதிமம் பெடை வெம் கனல் உற்றது என-பெண்ணன்னமொன்று கொடிய நெருப்பி லகப்பட்டதுபோல, போது மொய்த்த அமளி-செந்தாமரைப்பூக்கள் அடரப் பரப்பிய படுக்கையின்மேல், புரண்டாள்-(தரிக்காது)புரளலா ளுள். அரோ: அசை.

'கனல்' என்றதனுல் செந்தாமரையைக் கூறினும்; 'சேக்கையாகி மலர்ந்த செந்தாமரைப் பூக்கள்' என அடுத்த பாடலுட் கூறலுங் காண்க.

தாமரையிதழ்கள் பரப்பிச் செந்நிறமுடையதான படுக்கை, தீயின் பரப்புப் போலிருக்க, அதன்மேல் ஓர் அன்னம் இருத்தல் போலப் பிராட்டி கிடந்தனள். குளிர்ந்த படுக்கையும் கொடிய வெப் பந் தந்தது. மேலிருந்து வந்து தனங்களிற் படிந்த சந்திரகிரணம், சம்மட்டியால் அடித்தல் போன்ற துன்பந் தந்தது. கீழே தீயும், மேலே சம்மட்டித் தாக்குதலுமாக இவற்றினிடை அகப்பட்டு அல்லலுற்ருள் பிராட்டி யென்க.

உற்றென, மொய்த்தமளி: தொகுத்தல் விகாரம். நிலவு இன் கதிர் எனப் பிரித்துக் கூறலும் ஆம்.

(பி - ம்.) 1. மொய்த்தெழும்: விண்ணிலவின் கதிர்; வெண்ணிலவின் சுதை.
2. வெம்முலை மேற்பட: பொன்முலையிற்பட. 3. வெந்தழலுற்றென.
4. போது மெத்தமளிப். (78)

634. நீக்க மின்றி நிரந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்
சேக்கை யாகி மலர்ந்தசெந் தாமரைப்
பூக்கள் பட்டன பூவையும் பட்டனள்.

நீக்கம் இன்றி-(எங்கும்) இடைவெளி யின்றி, நிரந்த-பரவிய, நிலாகதிர்-சந்திர கிரணங்கள், தாக்க-(இடைவிடாமல்) தாக்குதலால், வெந்து-(உடல்) வெதும்பி, தளர்ந்து-(மனம்) தளர்ச்சியடைந்து, சரிந்தனள்-(கீழே) விழுந்தாள்; சேக்கை ஆகி-(முன்பு அப்பிராட்டிக்கு) இருப்பிடமாய், மலர்ந்த-(அழகாக) மலர்ந்திருந்த, செந்தாமரைப் பூக்கள்-, பட்டன-(நிலவின் வருகையால்) அடைந்த நிலையை, (மலர்ந்த செந்தாமரைப்பூக்கள், இப்போது பிராட்டிக்குரிய படுக்கை யாகி அடைந்த நிலையை), பூவையும் பட்டனள்-பிராட்டியும் அடைந் தனள்.

பூவை- நாகணவாய்ப்புள்; கிளிபோலப் பெண்களின் பேச்சுக்கு உவமை கூறப்படுவது; அதனுல், இங்கே பூவை உவமையாகுபெயர்.

பகற்காலத்தில் மலர்ந்து அழகாக விளங்கும் தாமரைப் பூக்கள், இரவில் நீரில் இருப்பினும் சந்திரகிரணங்களால் குவிந்து வாடிப் பொலிவிழந்து தோன்றும்; இப்போது அவைகள் பிராட்டிக் குப் படுக்கையாகி, அவள் உடம்பின் வெப்பத்தால் தீய்ந்து போகின் றன; அந்நிலையைப் பிராட்டியும் அடைந்தனள் என்க. 'சேக்கைஆகி' என்பது, முன்பு பிராட்டிக்கு (இலக்குமிதேவிக்கு) இருப்பிடமாகி என்றும், இப்போது படுக்கையாகி என்றும் ஈரிடத்தும் பொருந்த நின்றது. அந்திமாலையும், முன்னிருளும் சிறிது நேரமே யிருந்து நீங்கி விட, நிலவானது இரவு முழுதும் நீங்காதிருத்தலின் 'நீக்கமின்றி நிரந்த நிலா' என்றார்.

(பி - ம்) 1. நீக்கமன்றி; நிமிர்ந்த.
2. தாக்கவந்து; சரிந்து தளர்ந்தன; சரிந்து தளர்ந்தனள்; கரிந்து சரிந் தன; சரிந்ததண்; சரிந்துதன்.
3. சேக்கையாக; சேக்கையாக்கி; அலர்ந்த.
4. பட்டது; பட்டதப்; பட்டவப். (79)

635. வாச மென்கல வைக்களி வாரிமேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினாள்
வீச வீச வெதும்பின மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ!

வாசம் - நறுமணமுள்ள, மென்-மென்மையான, கலவை களி- கலவைச்சந்தனக்குழம்பை, வாரி மேல் பூச பூச-அள்ளிப்(பிராட்டி யின்) உடம்பின் மேலே (குளிர்ச்சியின் பொருட்டுத் தாதியர்) மேலும் மேலும் பூசவும், புலர்ந்து-அப்பூச்சு உலரப்பெற்று, புழுங்கி னாள் - வெதும்பினாள்; வீச வீச - (தாதியர் விசிறிகொண்டு) வீசிக் கொண்டேயிருக்கவும், மெல் முலை வெதும்பின-மென்மையான தனங் கள் வெதும்பலுற்றன; ஆசை நோய்க்கு-காதலால் வந்தநோய்க்கு, மருந்தும் உண்டோ-(அதைத்தீர்க்கும்) மருந்தும் உண்டோ?

ஆம், கொல்: அசைநிலை; ஓ-எதிர்மறை. பூசப்பூச, வீசவீச என்ற அடுக்குக்கள் மிகுதிபற்றி வந்தன.

ஆசைநோய்க்கு மருந்து முண்டாங்கொல்: 'மருந்துமுண்டுகொல் யான்கொண்ட நோய்க்கு' (சுந்தர. 344.). 'மருந்து பிறிதில்லையா னுற்ற நோய்க்கே' (நற். 80). 'காம நோய்க்கோர் அருமருந்தில்லை யன்றே' (சூளா. கலியாணச். 165).

(பி - ம்.) 1. வாரிப்போய்ப்: 2. புழுங்கினள்; புழுங்கின.
3. வெதும்பினள் வெம்முலை: வெதும்பினள் மேலுமேல்; மெலிந்து தளர்ந்தனள்.
4. மருந்து முண்டாகுமோ. (80)

### சேடியர் செயல்

636. தாய ரிற்பரி சேடியர் தாதுகு
வீய ரித்தளிர் மெல்லணை மேனியில்
காயெ ரிக்கரி யக்கரி யக்கொணர்ந்
தாயி ரத்தி னிரட்டிய டுக்கினர்.

தாது உகு வீ-மகரந்தம் சிந்துகிறபூக்களாலும்,அரிதளிர்-மெல்லிய தளிர்களாலும் ஆன, மெல் அணை-மெத்தென்ற படுக்கை, மேனியில் காய் எரி-(பிராட்டியின்) திருமேனியிலே காய்கிற காமாக்கினியாலே, கரியகரிய-தீய்ந்து போகப்போக, தாயரின் பரி சேடியர்-பெற்ற தாய் மாரினும் அன்புடைய தோழிமார், ஆயிரத்தின் இரட்டிகொணர்ந்து-மிகப்பலவானவற்றை (அவ்வப்போது) கொண்டுவந்து, அடுக்கினர்-(மேன்மேலும்) அடுக்கிப் புதியனவாக்கினர்கள்.

கரியக்கரிய-கரியுந்தோறும். ஆயிரத்தின் இரட்டி என்பது மிகப் பல என்ற பொருள் குறித்து நின்றது. பிராட்டியின் உடம்பிற் காய்ந்த காமத்தியால் மலர்ப்படுக்கை எத்தனை கேடுறினும், தோழி மார் அவ்வப்போது அவற்றை மாற்றி வேறு புதியவற்றைக் கொணர்ந்து விரித்தவண்ண மிருந்தனரென மிகுதி குறித்தவாறு.

தாயரின்-தாய்மார்போல எனலுமாம். அரித்தளிர் என்றதற்கு மற்றும் பலவாறு பொருள் கூறலாம்.

(பி - ம்.) 1. தாயரிற்படி; தாயரிப்படி: தாதுகும்: தைவர.
2. வீயளித் தளிர்; மேயளித் தளிர்; மேயலர்த் தளிர்; மேயரித்தளிர்; மீயெரித்தளிர்: மெல்லிணை; மெல்லியர்; மேனியின்.
3. கரியக்கொணர்ந்தாரவர்; காயெரிகதுவக்கொணர்ந்தாரவர்; காயெரிக் கதுவக்கரியக் கொணர்ந்து. (81)

### கவிக்கூற்று

637. கன்னி நன்மனை யிற்கமழ் சேக்கையுள்
அன்ன மின்னண மாயின ளன்னவள்
மின்னின் மின்னிய மேனிகண் டானெனச்
சொன்ன வண்ணலுக் குற்றது சொல்லுவாம்.

நல் கன்னி மனையில்-நல்லகன்னிமாடத்திலே (அமைந்த), கமழ் சேக்கையுள்-மணம் வீசுகின்ற பூம்பள்ளியிலே, அன்னம்-அன்னப் பெடை போன்ற பிராட்டி, இன்னணம் ஆயினள்-இவ்வாறு விரக நோயுற்று நொந்தாள்; அன்னவள்-அத்தகைய அவளுடைய, மின் னின் மின்னிய மேனி-மின்னலைப்போல விளங்கிய திருமேனியை, கண் டான் என சொன்ன-நோக்கினன் என்று முன்னே சொல்லப்பெற்ற, அண்ணலுக்கு உற்றது-புருஷோத்தமனன இராமபிரானுக்கு நேர்ந்த நிலையை, சொல்லுவாம்-(இனிச்) சொல்லுவோம்.

அன்னம்: ஆகுபெயர்.

'மின்னார சென்னும்படி நின்றாள்' என்றும் பிறவாறும் பிராட்டியைச் சிறப்பித்து, அவளுடைய திருமேனியொளியே அவளை அண்ணல் நோக்குமாறு செய்தது என்பதுபடக் கூறி, 'அண்ணலும் நோக்கினான்' என்றார் முன்னே; அதனை அநுவதித்தல்போல இங்கே, 'அன்னவள் மின்னின் மின்னிய மேனி கண்டான் எனச்சொன்ன அண்ணல்' என்றார். இதுகாறும் பிராட்டியின் நிலையைக் கூறியவர், இனி, இராமபிரானிடத்துப் பிராட்டியின் நினைவால் நிகழ்வனவற்றைக் கூறலானார்.

பிராட்டியை 'அன்னம்' என்று பலவிடத்துங் கூறுவர் ஆசிரியர்; *1237; 1322;* கிட்கிந்தா. *307*- காண்க.

(பி - ம்.) 1. கன்னி நன்னகரிற்கமழ்; கன்னி நன்னகருட்கமழ்; கன்னி நன்மனையிற் கடி. 2. ஆயினளாயவள்; ஆயினளன்றவள்; ஆயினளான்றவள்.
3. மின்னன் மின்னிய; மின்னிமின்னிய: கண்டாலெனச்; கண்டாசையால்.
4. சொன்ன வள்ளலுக்கு: உன்னுமண்ணலுக் குற்றதைப் பின்சொல்வாம்.
(82)

638. ஏகி மன்னனைக் கண்டெதிர் கொண்டவன்
ஓகை யோடு மினிதுகொண் டுய்த்திடப்
போக பூமியிற் பொன்னக ரன்னதோர்
மாக மாடத் தனையவர் வைகினார்.

அனையவர்-விசுவாமித்திரன் முதலிய அம் மூவரும், ஏகி-(கன்னி மாடத் தருகினின்றும்) போய், மன்னனை கண்டு-சனகமன்னனைக் காண, அவன் ஓகையோடும் எதிர் கொண்டு- அவன் மகிழ்ச்சியோடு (அவர்களை) எதிர்கொண்டு வரவேற்று, போக பூமியில் பொன் நகர் அன்னது-(இன்ப நுகர்ச்சிக்குரிய) சுவர்க்க லோகத்திலுள்ள பொன்மயமான ஆடகமாடமென்னும் மாளிகையைப் போன்றதான, ஓர் மாகம் மாடத்து-வானளாவியதொரு மாளிகையிலே, இனிது கொண்டு உய்த்திட-இனிமையாக அழைத்துப்போய் விடுக்க, வைகினார்-(அதிலே) தங்கியிருந்தனர்.

கண்டு=காண; செயவெனெச்சத்திரிபு.

கன்னி மாடத்தின் பக்கலில் நின்றும் போன மூவரும், அரண்மனை சென்று சனக மகாராசனைக் காண, அவன் மகிழ்வோடும் விருப்போடும் அவர்களை யெதிர்கொண்டு முறைப்படி உபசரித்து, பின்பு அவர்களுக்கென்றமைத்த விடுதியான மிகச் சிறந்ததொரு மாளிகைக்கு அழைத்துச் செல்ல, அவர்கள் அங்கே தங்கினார்கள் என்க. 'மைந்தனு முனியோடு மறையப் போயினான்' (594) என்றதன் தொடர்பாக இங்கே 'ஏகி மன்னனைக் கண்டு' எனத் தொடங்குகின்றார்.

பொன்னகர் - அமராவதியும் ஆம்; 'பொன்னகர் தழீஇய புதுக்கோப் போல' (பெருங். 2. 9: 197.)

சனகன், அம்மூவரையும் எதிர்கொண்டு உபசரித்து, இராம லக்குமணரைப் பற்றி விசுவாமித்திரரை வினவ, அவர், 'இவர்கள் தசரதன் புதல்வர்; நின் வேள்வி காண வந்தவர்; வில்லையும் வளைத் தல் கூடும்' எனக் கூறியதாக முதனூல் கூறும்.

(பி - ம்.) 1. எதிர்கொண்டபின்; கொண்டுபின்.
2. இனிதுகண்டு; இனிதுவந்து; இனிதினுவந்திடப்.
3. பொன்னகரொத்ததோர். 4. மாகமாடம்: அனைவரும். (83

சிலபிரதிகளில் இதுமுதல் 'கோசிகப் படலம்' என்று தொடங்குகின்றது.

### சதானந்தர் வருகை

689. வைகு மவ்வழி மாதவம் யாவுமோர்
செய்கை கொண்டு நடந்தெனத் தீதறு
மொய்கொள் வீரன் முளரியந் தாளினல்
மெய்கொண் மங்கை யருண்முனி மேவினான்.

வைகும் அ வழி-(அவர்கள்) தங்கியிருந்த அவ்விடத்தில், மா தவம் யாவும்-(உலகத்தில் உள்ள) சிறந்த தவமெல்லாம், ஓர் செய்கை கொண்டு நடந்தது என-ஒரு வடிவங் கொண்டு நடந்து வந்தது போல, தீது அறு மொய் கொள் வீரன்-குற்றமற்ற வலிமையைக் கொண்ட வீரனாகிய இராமபிரானுடைய, முளரி அம் தாளினல்-தாமரை மலர் போன்ற அழகிய திருவடி (த்தூளி) யாலே, மெய் கொள் மங்கை அருள்-(தனது பழைய) உண்மை வடிவு கொண்ட அகலிகை பெற்ற, முனி-சதானந்த முனிவன், மேவினான்-வந்தான்.

செய்கை: உடம்புக்கு ஆகு பெயர்; 'யாக்கை' போல. நடந் தென: தொகுத்தல் விகாரம். மெய்-உண்மை; இங்கே உண்மை வடி வத்துக்கு ஆகுபெயர்; மனிதவுடம் பென்றலும் ஆம், கல்லுரு நீங்கித் தொல்லுருப் பெற்றமையின்.

கௌதம முனிவருக்கு அகலிகையிடம் தோன்றிய சதானந்த முனிவர், சனக குலத்துப் புரோகிதராவார்.

மாதவம் யாவுமோர் செய்கை கொண்டு நடந்தென: ஒப்பு: 'நற்றவ மனைத்துமோர் நவையிலாவுருப், பெற்றிவ ணடைந்தென' 251.

(பி - ம்.) 1. அவ்வுழி: யாதுமோர்.
2. நடந்தவ: நடந்தெனச் செம்மலர்.
3. முளரியத்தாளினல்; முளரியந்தாள்வயின்: கைகொளிராகவன் காற்று கள் தைவர.
4. நங்கையருண்முனி; மங்கைதன் சேயவன்: மேயினான். (84)

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை.

குமரர் சதானந்தரை வணங்கி ஆசிபெறல்

640. வந்தெ திர்ந்த முனிவனை மைந்தரும்
சிந்தை யார வணங்கலுஞ் சென்றெதிர்
அந்த மில்குணத் தானெடுத் தாசிகள்
தந்து கோசிகன் றன்மருங் கெய்தினான்.

வந்து எதிர்ந்த முனிவனை-(அங்கே) வந்து தோன்றிய சதானந்த முனிவனை, மைந்தரும்-குமரர் இருவரும், எதிர் சென்று-எதிரே போய், சிந்தை ஆர வணங்கலும்-மனமார அடிபணிந்த வளவிலே, அந்தம் இல் குணத்தான்-அளவற்ற நற்குணங்களையுடைய அம்முனிவன், எடுத்து-அவர்களைத் தூக்கி விட்டு, ஆசிகள் தந்து-(மிக்க) ஆசிமொழிகளைக் கூறி, (பின்னர்), கோசிகன் தன் மருங்கு எய்தினான்-(அங்கிருந்த) கௌசிக முனிவன் பக்கலில் சேர்ந்தான்.

அடி பணிந்தவர்கள் அரச குமரராதலின், முனிவன் அவர்களைக் கையாலெடுத்து ஆசீர்வதித்தான் என்க.

(பி - ம்.) 1. வந்த வச்சதானந்தனை: வள்ளலும். 2. சென்றெதிர்ந்து.
3. நெடிதாசிகள்; அடுத்தாசிகள்.
4. தந்து கௌசிகன்; தந்து மாமுனி; தன்மருங்கெய்தலும்; தன்மருங் கெய்தவே; தந்து கோசிகற் சார்வுறச் சாற்றுவான்: சார்வுறச் சாற்றினான்; மாடுறச் சார்ந்தனன். (85)

சதானந்தர் கௌசிகனுக்கு முகமன் கூறல்

641. கோத மன்றரு கோமுனி கோசிக
மாத வன்றனை வாண்முக நோக்கியிப்
போது நீயிவண் போதவிப் பூதலம்
ஏது செய்த தவமென் றியம்பினான்.

கோதமன் தரு கோ முனி-கௌதம முனிவன் பெற்றெடுத்த முனிச் சிரேட்டனாகிய சதானந்தன், கோசிக மாதவன் தனை வாள் முகம் நோக்கி-கௌசிக முனிவனது தேசுமிக்க திருமுகத்தைப் பார்த்து, இ போது நீ இவண் போத-இப்போது நீர் இவ்விடம் எழுந்தருளுதற்கு, இ பூதலம் செய்த தவம் ஏது-இந்நாடு செய்த தவம் யாதோ! என்று இயம்பினான்-என்று முகமன் கூறினன்.

பூதலம் என்றது இங்கே நாட்டைக் குறித்தது. பெரியோர் வரின் இவ்வாறு முகமன் கூறுதல் முறையாகும். தசரதன் உரோமபதனை யணுகியபோது அவன் கூறியதும் (240), விசுவாமித்திர முனிவர் தசரதன் சபையை அடைந்தபோது தசரதன் கூறியதும் (321) காண்க. ஒப்பு: 'கருதி நீ யெய்தற் கென்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடிலென்றான்' (வி. பா. கிருட்டினன்றூது: 80.)

(பி - ம்.) 2. மாமுக நோக்கியிப். 3. நீயிவட் போந்ததிப்.
4. யாதுசெய்த. (86)

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை.

### கௌசிகன் கூற்று

642. பூந்தண் சேக்கைப் புனிதனை யேபொரு
ஏய்ந்த கேண்மைச் சதான ந்த னென்றுரை
வாய்ந்த மாதவன் மாமுக நோக்கிநூல்
தோய்ந்த சிந்தைக் கவுசிகன் சொல்லுவான்.

பூ தண் சேக்கை-தாமரைப் பூவாகிய குளிர்ந்த ஆதனத்தை யுடைய, புனிதனையே பொரு-தூய பிரமனையே ஒத்த, ஏய்ந்த கேண்மை-(யாவரிடத்தும்) பொருந்திய நட்பையும் உடைய, சதானந்தன் என்று உரை வாய்ந்த-சதானந்தன் என்று புகழ் மிக்க, மாதவன் -பெருந்தவமுடையவனது, மாமுகம் நோக்கி-திருமுகத்தைப் பார்த்து, நூல் தோய்ந்த சிந்தை கவுசிகன்-நீதி நூல்களிலே ஆழ்ந்த மன முடைய கௌசிக முனிவன், சொல்லுவான்-சொல்லலானான்.

அஃது அடுத்த கவியிற் கூறப்படும்.

பிரமனையே ஒத்தவன்: வேதமோதுதலாலும், ஒழுக்கத்தாலும், நற்குணங்களாலும், அந்தணர் மரபிற் பிறத்தலாலும் என்க. பொரு ஏய்ந்த என்று இயைத்து, ஒப்பாகப் பொருந்திய என உரைத்தலு மாம். தோய்தல்-நீரில் முழுகுதல்; எனவே நூல்களைக் கடலாகக் கொள்க.

(பி - ம்.) 1. புனிதனையே பொரும்; புனிதனையேர் பொரு; புனிதனை நேர்புகழ்; புனிதனை நோக்கியே.
2. வேந்த கேளிச்; என்றெனும்; என்றெனும்; என்னுமவ்: (மு) ஆய்ந்த கேள்விச் சதானந்தனென்றபேர். 3. தன்முகம்; வாண்முகம்.
4. சிந்தனைக்: சொல்லினன்; ஓதுவான். (87)

இப்பாடலும் சிலபிரதிகளில் இல்லை.

643. வடித்த மாதவ கேட்டியிவ் வள்ளருன்
இடித்த வெங்குரற் றடகை யாக்கையும்
அடுத்த வேள்வியு நின்னனை சாபமும்
முடித்தெ னெஞ்சத் திடர்முடித் தானென்றான்.

வடித்த மாதவ-திருந்திய பெருந்தவமுடைய சதாநந்த! கேட்டி-கேட்பாயாக; இ வள்ளல்தான்-இதோ வீற்றிருக்கும் வள்ளலாகிய இவனே, இடித்த வெம் குரல் தாடகை யாக்கையும் (முடித்து)—இடி

போலுங் கடுங்குரலுடைய தாடகையின் உடலையும் அழித்து, அடுத்த வேள்வியும் (முடித்து) - (நான் செய்தற்குப்) பொருந்திய வேள்வியையும் முற்றுவித்து, நின் அன்னை சாபமும் முடித்து-நின் அன்னையான அகலிகையின் சாபத்தையும் தீர்த்து, என் நெஞ்சத்து இடர் முடித்தான்-என் மனத்திலிருந்த துன்பங்களையும் போக்கினவன்; என்றான். அனை: இடைக்குறை.

இதனால் இராமபிரான் பெருமை சுருங்கக் கூறப்பெற்றது.

வள்ளல் தான்: தான் என்றது இவனொருவனே என்பது குறித்து நின்றது. முடித்து என்பது மூன்றிடத்தும் பொருந்தி அவ்வவ் விடத்துக்கேற்ற பொருள் தந்தது. வள்ளல் என்றது கல்லுக்கும் உயிரளித்த பெருங் கொடையையுடையவன்; வேள்வியை முற்று வித்த பெருங்கருணையுடையவன்; தாடகையைத் தொலைத்தலால் உலகத்துக்குப் பெரு நன்மை செய்தவன் என்பன பட நின்றது. தாடகை யாக்கையை முடித்து என்றது அதன் தோற்றமும் அழித்த லருமையும் குறித்தது. கோசிகன் இவ்வாறு இராமபிரானை அறிமுகம் செய்வித்த அருமை கருதற்பாலது.

(பி - ம்.) 2. தாடகை யாக்கையை.
3. அடுத்தென்; அடர்த்தென்; மடித்தென்; வேள்விமற் றுன்னன்னை; வேள்வியு நின்னன்னை.
4. முடித்த நெஞ்சத்து: இடர்முடித்தோன். (88)

சதானந்தர் கூற்று

644. என்று கோசிகன் கூறிட வீறிலா
வன்ற போதனன் மாதவ நின்னருள்
இன்று நன்குள தேலரி தியாதிந்த
வென்றி வீரர்க் கெனவும் விளம்பிமேல்,

என்று-முன் குறித்தவாறு, கோசிகன் கூறிட-கௌசிக முனிவன் சொல்ல, ஈறு இலா வல் தபோதனன்-எல்லையில்லாத கடுந்தவச் செல்வமுடைய சதானந்தன், (கௌசிகனை நோக்கி), 'மாதவ-பெருந் தவ முடையீர்! நின் அருள் நன்கு உளதேல்-நுமதருள் நன்கு பொருந்தியிருந்தால், இந்த வென்றி வீரர்க்கு-வெற்றியையுடைய இவ்வீரக் குமரருக்கு, இன்று அரிது யாது-இப்போது செய்தற்கரியது யாது உளது? எனவும் விளம்பி-என்றும் சொல்லி, மேல்-அதன் மேல்,

இஃது அடுத்த கவியுடன் தொடரும். அது முதல் சதானந்தன் இராமபிரானுக்குக் கௌசிகன் வரலாறு கூறுதல்.

இராமபிரானுடைய திறமையைக் கௌசிகன் எடுத்துக் கூறக் கேட்ட சதானந்தன், கௌசிகனை நோக்கி 'உமதருளுக்குப் பாத்திர ரான இவர்களுக்குச் செயற்கரிய தொன்று மில்லை' யென்று பாராட் டிச் சொல்லி, மேலே இராமபிரானை நோக்கிக் கௌசிகன் பெருமை

கனைக் கூறலானான். இங்குக் கௌசிகனைச் சிறப்பித்தது போலவே பின்னும், 'நீதி வித்தக நீ யிவற் சேர்ந்தனை, யாதுனக் கரிது' என்று கூறி முடிப்பது (692) காண்க. இங்கே ஈறிலா வன்றபோதனன் என்றது போலப் பின்னும் 'ஈறிலான்' (692) என்பர் சதானந்த முனிவனை.

(பி - ம்.) 1. கூறலும் ஈறிலான். 2. வன்றபோதன.
3. இன்றுதானுள தேலரிது; இன்று தானும் விலக்கரிது; ஒன்றுதானுள தேலரிது; என்ற நன்குளதேலரிது. ஏதிந்த; யாவையிவ்; யாவதிவ்.
4. வென்றிவீரற்கு: விளம்பினான். (89)

இதன்பின் ஓர் அதிகப்பாடல்.

எள்ளில் பூவையு மிந்திர நீலமும்
அள்ளல் வேலையு மம்புத சாலமும்
விள்ளும் வீயுடைப் பானலு மேவுமெய்
வள்ள றன்னை மதிமுக நோக்கியே.

## கௌசிகன் வரலாறு

645. நறும லர்த்தொடை நாயக நானுனக்
கறிவு றுத்துவென் கேளிவ் வருந்தவன்
இறையெ னப்புவிக் கீறில்பல் யாண்டெலாம்
முறையி னிற்புரந் தேயருண் முற்றினான்.

நறு மலர் தொடை-மணமுள்ள பூ மாலையணிந்த, நாயக-(யாவர்க்கும்) தலைவனும் தன்மையுடையவனே! நான் உனக்கு அறிவுறுத்துவென்-நான் உனக்கு (ஒன்றை)த் தெரிவிப்பேன்; கேள்-கேட்பாயாக; இ அரு தவன்-(பிறர் செய்தற்கு) அரிய தவத்தையுடைய இக் கௌசிக முனிவன், புவிக்கு இறை என-இவ்வுலகுக் கெல்லாம் ஏக நாயகனாக, ஈறு இல் பல் யாண்டு எலாம்-அளவற்ற மிகப்பல ஆண்டுகள், முறையினில் புரந்து-அரச நீதியின்படி (நாட்டைப்) பாதுகாத்து, ஏய் அருள் முற்றினான் - (உயிர்களிடத்துப்) பொருந்திய கருணையில் முதிர்ந்திருந்தான்.

இது முதல் 47 கவிகளால் கோசிகன் வரலாறு கூறப்படும்.

ஆசிரியனுடைய பெருமைகளையெல்லாம் சீடர் அறிந்திருத்தல் வேண்டும் என்ற முறையின் படி, அஸ்திர சஸ்திர வித்தைகள் பலவற்றை இராம லக்குமணர்க்கு அளித்த ஆசிரியனான கோசிகன் பெருமைகளைக் குமரர்க்குச் சதானந்தன் கூறலானான். கோசிகன் அரசனாகி, அரச நீதிகளிலும் படைப்பயிற்சியிலும் மிக வல்லவனாயிருந்து, பின்பு பெருந்தவஞ் செய்து அதனாலாகிய பெருமையும் நிறைந்தவனாதலால், ஏனை முனிவரினும் சிறப்பு மிக்குடையவன்; எனவே, அவன் ஆசானாகும் பேறு குமரர்க்கு வாய்த்தது மிக்க மேன்மை தருவதாம்;

அரசர்க்கு அருளும் இன்றியமையாதது என்பதனை, 'அருளும் அன்பும் நீக்கி நீங்கா, நிரயங் கொள்பவரோ டொன்றாது காவல், குழவி கொள்பவரி னோம்புமதி' (புறநா. 5) என்பதனாலறிக.

(பி - ம்.) 1. நறைமலர்த்: நாயகா நாதனை நோக்கியொன்று; நோக்கி நிற்கு; நிற்கிவை: நாயகற் பார்த்து நிற்கு.
2. அறிவுணர்த்துவன்; நிற்கிவ் வருந்தவன்; நற்கிவ் வருந்தவன்.
3. இறையெனப் புரிந்: பல்லாண்டெலாம். 4. புரிந்தேயருள். (90)

646. அரசின் வைகி யறனி னமைந்துழி
விரசு கானிடைச் சென்றனன் வேட்டைமேல்
உரைசெய் மாதவத் தோங்கு வசிட்டனும்
பரசு வானவன் பாலணைந் தானரோ.

'அரசின் வைகி - அரசாட்சியிலே கருத்தூன்றி, அறனின் அமைந்த உழி-தரும நெறியிலே பொருந்தி யிருந்துவரும்போது, (ஒரு சமயம்), வேட்டை மேல்-வேட்டையாடுதல் குறித்து, விரசு கான் இடை சென்றனன்-அடர்ந்த காட்டினிடத்தே சென்றவனாகி, உரை செய் மாதவத்து ஓங்கு-புகழ் பொருந்திய மிக்க தவத்தினால் மேம்பட்ட, வசிட்டன் ஆம்-வசிட்டனென்று சொல்லப்படுகிற, பரசுவான் அவன் பால்-(யாவரும்) புகழ்தற்குரிய அம்முனிவனிடத்து, அணைந் தான்-சென்று சேர்ந்தான். அரோ:அசை.

அரசர்க்குரிய முறைப்படி, கௌசிகன் ஒருகால் வேட்டைக் காகக் காட்டிற்குச் சென்றபோது, அங்கே வசிட்டமுனிவ னாச்சிர மத்தை யடைந்தான் என்க. கௌசிகன் உலக முழுவதும் சுற்றி வரக் கருதிச் சென்றபோது வசிட்டனாச்சிரமம் அடைந்ததாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. அரைசின்: அறிவி னமர்ந்துழி; அமைந்துழீஇ.
2. விரைசெய்: கானிடை சென்றனன் வேட்டமேல்.
3. உரைசெய் நான்மறை; ஓங்கு வசிட்டனைப்; மாதவத் தோனருள்; மாதவத் தோங்கருன்; மாதவத் தோங்கருள்; மாதவத் தோங்கலாம்.
4. பாடணைந்தானரோ. (91)

(வேறு)

647. அருந்ததி கணவன் வேந்தற்
கருங்கடன் முறையி னாற்றி
இருந்தரு டருதி யென்ன
விருந்துழி யினிது நிற்கு
விருந்தினி யமைப்பெ னென்னாச்
சுரபியை விளித்து நீயே
சுரந்தரு ளமிர்த மென்ன
வருண்முறை சுரந்த தன்றே.

அருந்ததி கணவன்-அருந்ததியின் நாயகனான வசிட்ட முனிவன், வேந்தற்கு-(தன்பால் வந்த) கௌசிக மன்னனுக்கு, அருகடன்-அரிய உபசாரங்களை, முறையின் ஆற்றி-உரிய முறைப்படி செய்து, இருந்து அருள் தருதி என்ன-(இங்கே சிறிது) தங்கியருள வேண்டும் என்று கேட்டுக்கொள்ள, இருந்துழி-(அவ்வாறே கௌசிகன்) இருந்தபோது, இனி நிற்கு இனிது விருந்து அமைப்பேன் என்னு-இப்போது உமக்கு இனிதாக விருந்து செய்விப்பேன் என்று சொல்லி, சுரபியை விளித்து-காமதேனுவை அழைத்து, நீயே அமிர்தம் சுரந்து அருள் என்ன-நீயே (இவர்களுக்கெல்லாம்) இனிய உணவைச் சுரந்து அளிப்பாயாக என்று நியமிக்க, (அக்காமதேனு), அருள் முறை-முனிவன் நியமித்தபடி, அன்றே சுரந்தது-அப்போதே (உணவு வகைகளையெல்லாம்) தன்னிடமிருந்து வெளிப்படுத்தியது.

கௌசிகன் அரசனாதலால், அவனை உபசரித்து விருந்துண்பித்தல் முறையாகுமென்று கருதி, வசிட்ட முனிவன், தன்னிடமிருந்த காமதேனுவின் உதவியால் அங்ஙனம் செய்விக்கலானான். தெய்வத் தன்மையுடைய காமதேனு, வேண்டுவார்க்கு வேண்டுவனவற்றையெல்லாம் தானே படைத்து அளிக்கும் ஆற்றலுடையதாதலால், 'நீயே இவர்களுக்கு விருந்து செய்வி' என முனிவன் பணித்தான். திருப்பாற் கடலைக் கடைந்த காலத்து அதினின்றும் தோன்றிய பொருள்களுள் ஒன்றாகிய இப்பசு, தானே வசிட்ட முனிவனை வந்தடைந்ததென்பர்.

(பி - ம்.) 1. அருந்துதி: வேந்தர்க்கு.
2. இருந்திட விவணீ; இருந்திடிங் கிவணீ: இருத்தலும்; இருத்திமற் றிறைவ நிற்கே; இனிதினிற்கே.
3. விருந்தினிதமைப்பன்: என்னச் சுரபியை.
4. அமிர்தமென்னு; தருதியென்ன; சுரந்தவன்றே. (92)

648. அறுசுவைத் தாய வுண்டி
யரசநின் னனிகத் தோடும்
பெறுகென வளிப்ப வேந்தோ
டியாவருந் துய்த்த பின்றை
நறுமலர்த் தாரும் வாசக்
கலவையு நல்க லோடும்
உறுதுயர் தணிந்து மன்ன
னுய்த்துணர்ந் துரைக்க லுற்றான்.

(வசிட்ட முனிவன் கௌசிகனை நோக்கி), அரச-அரசே! நின் அனிகத்தோடும்-உமது படைகளுடனே, (எல்லீரும்), அறுசுவைத்து ஆய உண்டி பெறுக என-ஆறு சுவைகளையுமுடைய இவ்வுணவைக் கொள்வீர்களாக என்று சொல்லி, அளிப்ப-உபசரித்து உண்பிக்க, வேந்தோடு யாவரும் துய்த்த பின்றை-கௌசிக மன்னனும் மற்றவர்

களும் உண்ட பிறகு, நறு மலர் தாரும்-மணமுள்ள பூ மாலைகளும், வாசம் கலவையும்-(நல்ல) வாசனை கலந்த சந்தனமும், நல்கலோடும்-கொடுத்திடலும், மன்னன் உறு துயர் தணிந்து-கௌசிக மன்னன் (தான்) அடைந்திருந்த மெய்வருத்தந் தீரப்பெற்று, உய்த்து உணர்ந்து-(காமதேனுவின் திறமையைக்) கண்டறிந்து, உரைக்கல் உற்றான்-(வசிட்ட முனிவனிடம்) சொல்லலானான்.

அனிகம்: அநீகம் என்னும் வடசொல்லின் திரிபு.

விருந்துண்டபின், சந்தனமும், தாம்பூலமும் (சில சமயம் இவற்றுடன் பூவும்) அளித்தல் மரபு; இங்கும் இனம் சுட்டலால் தாம்பூலமும் கொள்க.

(பி - ம்.) 1. அனீகத்தோடு.
2. பெறுகென வளித்து; பெறுகவென்றளித்து: துய்த்தபின்னர்.
3. நறைகமழ் மலரும்; நறைகம மலரும்.
4. உறைதுயர்: வேந்தன்: உற்றுணர்ந்து; மனத்துணர்ந்து; உளத் துகந்து. (93)

### கௌசிகன் கூற்று

649. மாதவ வெழுந்தி லாய்நீ
வந்தவெம் படைகட் கெல்லாம்
கோதற வமுத மிக்கோ
வுதவிய கொள்கை தன்னால்
தீதறு குணத்தான் மிக்க
செழுமறை தெரிந்த நூலோர்
மேதகு பொருள்கள் யாவும்
வேந்தருக் கென்கை தன்னால்,

(கௌசிகன் வசிட்ட முனிவனை நோக்கி), 'மாதவ-பெருந்தவமுடையீர்! நீ எழுந்திலாய்-நீர் (இருந்த விடம் விட்டு) எழுந்திருக்கவுமில்லை; (அவ்வாறாகவும்), வந்த எம் படைகட்கு எல்லாம்-(உடன்) வந்த எம்முடைய படைகளெல்லாவற்றிற்கும், இ கோ-இந்தப்பசுவே, கோது அற-குறை சிறிதும் இல்லாதபடி, அமுதம் உதவிய கொள்கை தன்னால்-நல்லுணவு கொடுத்த தன்மையினாலும், தீது அறு-குற்ற மற்ற, குணத்தால் மிக்க-நற்குணங்களால் மேம்பட்ட, செழுமறை-வளமுடைய வேதங்களையும், நூல்-சாத்திரங்களையும், தெரிந்தோர்-ஆராய்ந்தறிந்த பெரியோர்கள், மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக்கு-சிறப்பு மிக்க பொருள்கள் எல்லாம் அரசருக்குரியன, என்கை தன்னால்-என்று கூறுவதனாலும்,

இது குளகச் செய்யுள்; அடுத்த கவியோடு தொடரும். தெரிந்த நூலோர் என்பதனை நூல் தெரிந்தோர் என விகுதி பிரித்துக் கூட்டுக.

காமதேனுவின் பெருமையையுணர்ந்த கௌசிக மன்னன், அதனைத் தான் அடையக் கருதி, 'சிறந்த பொருள்கள் அரசருக்கே உரியன; இப்பசுவோ மிகச் சிறந்தது; இஃது, அந்தணரும் தவசியுமாகிய உம்மிடம் இருக்கத் தக்கதன்று' என்று நியாயங்காட்டிக் கூறலானான்.

நூலோர், 'மேதகு பொருள்கள் யாவும் வேந்தருக்கு' என்கை: 'ரத்நஹாரீ ச பார்த்திவ:' என்ற நியாயம்; 'அரசருக்குரித்தருங்கலம்' என்ற முதுமொழியும் இங்கு நோக்கத்தகும். கோ-வடசொல். என்கை தன்னால்: தன், சாரியை.

(பி - ம்.) 1. எழுந்திராய்நீ: வயப்பெரும் படைகட்கு; வயப்புடைப் படைகட்கு; வலமுடைப் படைகட்கு; வயமுடைச் சேனைக்கு.
2. கோதருமமிர்தமிக்கோ; கோதற வமுதவுண்டி: உதவுறு கொள்கை.
3. நிதறுங் குணத்தால்; குணத்தார்; குணத்தாய்; குணத்தின் மிக்கோர்: தெளிந்த: நூலோய்; தூயோர்; மேலோர்.
4. வேந்தருள் கொள்கை; வேந்தர்க்கே யென்கை. (94)

650. நிற்கிது தகுவ தன்று
நீடருஞ் சுரபி தன்னை
எற்கரு ளென்ற லோடு
மியம்பலன் யாதும் பின்னர்
வற்கலை யுடையென் யானே
வழங்கலென் வருவ தாகில்
கொற்கொள்வே லுழவ நீயே
கொண்டகல் கென்று கூற,

'நிற்கு இது தகுவது அன்று-உமக்கு இப்பசு (இருக்கத்) தகுதியுடையதன்று; (ஆதலால்), நீடு அரு சுரபி தன்னை-மிக்க அருமையுடைய இப்பசுவை, எற்கு அருள்-எனக்குக் கொடுப்பீராக,' என்றலோடும்-என்று கூறியவளவில், யாதும் இயம்பலன்-(உடனே) ஏதும் கூறாது, (பின்னர்), 'யானே வற்கலை உடையென்-நானே மரவுரியுடுத்த தவசி; வழங்கலென்-(ஒன்றைப் பிறருக்குக்) கொடுக்குந் தகுதியுடையேனல்லேன்; (அதனால்), கொல் கொள் வேல் உழவ-கொல்லுதல் தொழிலையுடைய வேலை யேந்திய அரசே! வருவது ஆகில்-(அப்பசு) உன்னோடு வர இயைந்தால், நீயே கொண்டு அகல்க-நீயே அதனைப் பிடித்துக்கொண்டு போவாயாக' என்று கூற—,

இதுவும் அடுத்த கவியுடன் தொடரும். கொல்: முதனிலைத் தொழிற் பெயர். கொன் கொள் எனப் பிரித்து 'அச்சந் தருதலுடைய' எனப் பொருள் கூறலுமாம். கொன்: உரிச்சொல். வேலுழவன்-வேற்படையாகிய ஏரைக் கொண்டு பகைவர் திரளாகிய நிலத்தை உழுது கலக்குபவன் என்பது பொருள். 'வில்லேருழவர்' 'சொல்லேருழவர்' (குறள். 872) போல.

கௌசிக மன்னன், மிக்க விலை மதிப்புள்ள பல பொருள்களைத் தருவதாகவும், அவற்றிற் கீடாகக் காமதேனுவைத் தரும்படியும் முனிவனை வேண்ட, முனிவன், 'யாம் எவருக்குங் கொடுப்பதில்லை' என மறுத்துவிட்டதாக வான்மீகம் கூறும். 'வருவதாகில் நீயே கொண்டகல்' எனக் கூறியதாக அங்கில்லை.

(பி - ம்.) 1. அன்றுனீடருள்; நீடிரும்; நீண்டருள்; நீடரு; நீளரும். சுரவி தன்னை.
2. இயம்பிலன்: யாது மன்னு; யாது மன்னே.
3. வற்கலை யுடையோன்: வழங்கிலன்: வருமதாகிற்.
4. உழவனீயே: கொண்டகலென்று கூறு; கொண்டகலென்று சொன்னான். (95)

651. பணித்தது புரிவெ னென்னாப்
பார்த்திப னெழுந்து பொங்கிப்
பிணித்தனன் சுரபி தன்னைப்
பெயர்வுழிப் பிணியை வீட்டி
மணித்தடந் தோளி னாற்குக்
கொடுத்தியோ மறைகள் யாவுங்
கணித்தவெம் பெரும வென்னக்
கலைமறை முனிவன் சொல்வான்.

பார்த்திபன்-கௌசிக மன்னன், பணித்தது புரிவென் என்னா-(முனிவன்) கட்டளையிட்டதைச் செய்வேன் என்று சொல்லிக் கொண்டு, பொங்கி எழுந்து-ஆவல் மிக்கு எழுந்து போய், சுரபி தன்னை-காமதேனுவை, பிணித்தனன் பெயர்வுழி-கட்டிப் பிடித்துக் கொண்டு, (அவ்விடம் விட்டு) அகலும் போது, (காமதேனு), பிணியை வீட்டி-கட்டை விடுவித்துக்கொண்டு, (முனிவனையணுகி), மறைகள் யாவும் கணித்த எம் பெரும-வேதம் அனைத்தும் நன் குணர்ந்த எம் தலைவரே! மணி தட தோளினாற்கு-அழகிய பெரிய தோள்களையுடைய இவ்வரசனுக்கு, கொடுத்தியோ-(என்னைக்) கொடுக்கின்றீரோ? என்ன—என்று கேட்க, கலை மறை முனிவன்-கலைகளையும் வேதங்களையும் நன்குணர்ந்த வசிட்டமுனிவன், சொல்வான்-சொல்லலுற்றான்:

கலை மறை - கலையாகிய மறை யெனவும், கலைகளுக்காதார மாகிய மறை யெனவுங் கூறலாம். 'கலைமறையவர்கட்கு' 659.

(பி - ம்.) 1. புரிவனென்னப்; புரிவலென்னப்; எழுந்துபோகிப்; எழுந்து போந்து.
2. பேர்வுழிப்; பிணிப்பை வீட்டி.
குணித்த வெம்பெரும வென்னாக் குலமறை; சொன்னான். (96)

## காமதேனுவின் செய்கை

652. கொடுத்திலென் யானே மற்றக்
குரைகழல் வேந்தன் ருனே
பிடித்தகல் வுற்ரு னென்னப்
பெருஞ்சினஞ் கதுவு நெஞ்சோ
டிடித்தெழு முரச வேந்தன்
சேனையை யானே யின்று
முடிக்குவென் காண்டி யென்னு
மொய்ம்மயிர் சிலிர்த்த தன்றே.

(வசிட்ட முனிவன் காமதேனுவை நோக்கி), 'யானே கொடுத்திலென்-நாஞக (உன்னைக்) கொடுத்தேனில்லை; அ குரை கழல் வேந்தன்-ஒலிக்கின்ற வீரக் கழலையுடைய அவ்வரசன், தானே பிடித்து அகல்வுற்ருன்-தாஞகவே (உன்னைப்) பிடித்துக்கொண்டு போகலுற்ருன்:' என்ன-என்று கூற, (காமதேனு), பெரு சினம் கதுவும் நெஞ்சோடு-பெருங் கோபங் கொண்ட மனத்துடன், (முனிவனை நோக்கி), 'இடித்து எழு முரசம் வேந்தன் சேனையை-இடிபோல முழங்கும் முரசினையுடைய இவ்வரசன் சேனையை, யானே இன்று முடிக்குவென்-நானே இப்போது அழித்துவிடுவேன்; காண்டி-காண்பீராக' என்னு-என்று கூறி, மொய் மயிர் சிலிர்த்தது-அடர்ந்த (தன் மேனியின்) மயிரைச் சிலிர்த்தது; அன்றே-அப்போதே,—

இதுவும் அடுத்த கவியுடன் தொடரும் மற்று: வினை மாற்று.

காமதேனுவினுடம்பினின்றும் பல படை வீரர்கள் படைகளுடன் தோன்றிக் கௌசிகன் சேனையை அழித்த செய்தி அடுத்த பாடலுட் கூறப்படும். 'கௌசிகன் சேனையை நான் அழித்து வருகிறேன்' என்று காமதேனு முனிவனிடம் விண்ணப்பஞ் செய்ய, 'நீ பல படைகளைப் படைத்து அவ்வாறே செய்க' என முனிவன் பணித்ததாக முதனூல் கூறும்.

(பி - ம்.) 1. கொடுக்கிலன்: யாஞ; யானே: மற்றிக்: குடைகெழு: கொடை நெடு.
2. அகல்வுற்றதென்னப்; அகலுற்ருனென்னப் கதுவ
3. அடிதடுெழுமுரச; இடித்தரு முரசிவ: மாளவின்றே.
4. காண்டியென்ன; காண்டியென்று: முனிந்துமெய்; முனிந்துபோய்ச்.

(97)

653. பப்பரர் யவனர் சீனர் சோனகர் முதல பல்லோர்
கைப்படை யதனி னேடுங் கபிலைமாட் டுதித்து வேந்தன்
துப்புடைச் சேனை யாவுந் துணித்தனர் துணித்த லோடும்
வெப்புடைக் கொடிய மன்னன் றனையர்கள் வெகுண்டு மிக்கார்.

பப்பரர், யவனர், சீனர், சோனகர் முதல பல்லோர்- பப்பரர் முதல் சோனகர் ஈருகச் சொல்லப்பட்டவரும், இவர்கள் போன்ற வேறு பலரும் ஆகிய வீரர்கள் மிகப் பலர், கை படை அதனிஞேடும்- தத்தம் கையில் ஏந்திய படைகளுடனே, கபிலை மாட்டு உதித்து- (மயிர் சிலிர்த்து நின்ற) அப்பசுவினிடத்தே தோன்றி, வேந்தன்- கோசிக மன்னனுடைய, துப்பு உடைய சேனை யாவும்-மிக்க வலிமை யுடைய படைகளெல்லாவற்றையும், துணித்தனர்-வெட்டிக் குவித்த னர்; துணித்தலோடும்-(அவ்வாறு) வெட்டிக் குவித்தவளவிலே, மன் னன்-கோசிக மன்னனுடைய,வெப்பு உடை(ய) கொடிய தனையர்கள்- தாபங் கொண்ட கொடியவர்களான புதல்வர்கள், வெகுண்டு மிக் கார்-கோபித்து முனிவன் மேற்செல்லலாயினர்.

பப்பரர், யவனர், சீனர், சோனகர் என்போர் வேற்று மொழி பேசும் வேற்று நாட்டவர்; மிலேச்சர் எனப்படுவர். இவர்களை நம் நாட்டு அரசர் பலர், தம் படை வீரராகவும், வாயில் காப்போராக வும், ஏவலாளராகவும் அமைத்துக்கொண்டிருந்தனர். மிகுதல்-நெருங் குதலுமாம்; 'தலைத்தலை மிகூஉம்' (பரி. 16; 14). பப்பரர்: 846; அரிச் சந்திர. சூழ்வினை. 39.

(பி - ம்.) 1. பப்பரர் எயினர்; பப்பரர் அவுணர்: சீனர் அவந்திகர்: முதலமல்லோர்; முதல்வ பல்லோர்; முதற்பல்லோர்கள்.
2. அரனி ஞடு: கபிலைமாடுதித்து; கபிலன் மாட்டுதித்து! உதித்த வன்ஞன்
3. துப்புடைப் படைகள்; துப்படை சேனை: எல்லாம்; தொலைவுறத்; துணிவுற ட: துவைத்தனர்; துணித்தன; துணித்தனர்; துணிதலோடும்; துவைத்தலோடும்.
4. வெப்படை: வெகுண்டு சென்ருர்; வெகுளி மிக்கார். (98)

654. சுரபியின் வலியி தன்ருற்
சுருதிநூ லுணர வல்ல
வரமுனி வஞ்ச மென்ஞ
மற்றிவன் சிரத்தை யின்னே
அரிகுது மென்னப் பொங்கி
யடர்ந்தன ரடர வன்ஞன்
எரியெழ விழித்த லோடு
மெரிந்தனர் குமர ரெல்லாம்.

குமரர் எல்லாம்-(கோபங் கொண்டு முனிவன் மேல் வந்த) கௌசிக குமரர் நூற்றுவரும், 'இது சுரபியின் வலி அன்று-(நம் படை முழுதும் அழிந்த) இச்செயல் பசுவின் வலிமையாலன்று; சுருதி நூல் உணரவல்ல-வேத சாத்திரங்களெல்லாம் நுணுகியறியவல்ல, வரன் முனி வஞ்சம்-மேன்மையுடைய வசிட்ட முனிவனது வஞ்சனை யாலேயே யாம்;' என்ஞ-என்றெண்ணி,'இன்னே இவன் சிரத்தை அரி

குதும் என்ன-இப்போதே இவன் தலையை அறுத்திடுவோ' மென்று, பொங்கி-ஆவேசங் கொண்டு, அடர்ந்தனர்-(முனிவனை) நெருங்கினுர் கள்; அடர-(அவ்வாறு) நெருங்க, அன்னுன்-அவ்வசிட்ட முனிவன், எரி எழ விழித்தலோடும்-(கண்களில் கோபத்தாலான) தீப் பொறி பறக்க உறுத்துப் பார்த்த வளவிலே, எரிந்தனர்-எரிந்தொழிந்தனர்.

ஆல் ,மற்று: அசைகள்.

கௌசிகன் புதல்வர் நூற்றுவர். அவர்கள், காமதேனுவின் பெருமையை உணராமல், வசிட்ட முனிவன் தன்னுலாவதொன்று மில்லையென வெளிக்குக்காட்டி, தன் தவ வலிமையால் அப்பசுவைக் கொண்டு படைகளை அழிப்பித்திருத்தல் கூடுமென்று தவருகக்கருதிச் சினம் மிக்கு முனிவனை அழித்துவிடுவோமென்று நெருங்கினர்; நெருங்கின அவர்கள், முனிவனுடைய உங்காரத்தால் எரிந்தொழிந் தனர். அவர்கள் நூறு பேர் என்பதை, 'ஐயிருபதின்மர் மைந்தர் அவிந்தமை அரசன் காணு' என அடுத்த கவியில் வருதலால் அறிய லாம்.

(பி - ம்.) 1. சுரபிதன்: வலியது; வலியீது; சுருதிநூலுணர்ந்துவல்ல; சுருதியிலுணர வல்ல.
2. வஞ்சமென்ன: மற்றவன்; மறையவன்: சிரத்தையின்றே.
3. அரிகுவமென்ன: அடர்த்தனர்; அடர்க்க; அடர்ப்ப.
4. இறந்தனர் குமரர். (99)

### கௌசிகமன்னன் செயல்

655. ஐயிரு பதின்மர் மைந்த
ரவிந்தமை யரசன் காணு
நெய்சொரி கனலிற் காந்தி
நெடுங்கொடித் தேர்க டாவிக்
கைதொடர் கணையி ஞேடுங்
கார்முகம் வளைய வாங்கி
எய்தனன் முனியுந் தன்கைத்
தண்டினை யெதிர்க வென்ருன்.

மன்னன்-கௌசிக மன்னன்,மைந்தர் ஐ இருபதின்மர் அவிந்தமை காணு-தன் புதல்வர் நூற்றுவர் (வசிட்ட முனிவனது கோபத் தீ யால்) எரிந்தொழிந்தமை கண்டு, நெய் சொரி கனலின் காந்தி-நெய் ஊற்றப்பட்ட தீப்போல அழன்று, கொடி நெடு தேர் கடாவி-கொடி கள் கட்டிய (தனது) பெரிய தேரைச் செலுத்திப்போய், கைதொடர் கணையிஞேடும் - கையால் தொடுக்கப்படும் அம்பினளவுக்கு, கார் முகம் வளைய வாங்கி-(தன்) வில் வளையுமாறு (நாணை இழுத்து) வளைத்து, எய்தனன்-(பல அம்புகளை முனிவன் மேல்) எய்தான்; முனி யும்-(அதைக் கண்ட) வசிட்ட முனிவனும், தன் கை தண்டினை-தன்

கையிலுள்ள பிரம தண்டத்தை, 'எதிர்க என்றான்-(மன்னன் விடும் படைகளை) எதிர்ப்பாயாக' என்று கட்டளையிட்டான்.

கௌசிகன் செயல் கண்ட வசிட்ட முனிவன், தன் கைப் பிரம தண்டத்தை எதிரே நாட்டி வைக்க, அது, மன்னன் விடும் படையெதுவும் முனிவன்மேற் படாதபடி தடுத்து விழுங்கி விட்டது என்பர். இதனை அடுத்த கவியுட் காண்க.

நெய் சொரி கனலிற் காந்தி: ஒப்பு: *768;* ஆரணிய. *619;* குறுந். *106;*

(பி - ம்.) 1. ஐயிரு பதின்ம ராங்கு: ஐயிரு பத்தின் மைந்தர்: அவிந்தனர்: அமைத்தமை; மடிந்ததை: அரசன்காண.
2. நெய்பொழி; அனலிற்; தழலிற்: பொங்கி.
3. கையடர்; கைபுணர்; கை தரு; கடிதின் வாங்கி.
4. எய்யத் தன்கைத்: எதிர்க்க; எதிர்நீ. (100)

656. கடவுளர் படைக ளீருக்
கற்றன படைகள் யாவும்
விடவிட முனிவன் றண்டம்
விழுங்கிமேல் விளங்கல் காணு
வடவரை வில்லி தன்னை
வணங்கியே வழுத்த வீசன்
அடலுறு படையொன் றீய
வன்னவ னாற்ற லோடும்,

கடவுளர் படைகள் ஈறு(க)-தேவாஸ்திரங்கள் ஈறாக, கற்றன படைகள் யாவும்-தான் அறிந்து பழகிய அத்திரங்கள் எல்லாவற்றையும், விட விட-(கௌசிகன் ஒன்றன் பின் ஒன்றாக) எய்து கொண்டே வர, முனிவன் தண்டம்-முனிவனுடைய பிரமதண்டம், விழுங்கி-(அவையனைத்தையும்) விழுங்கி, மேல் விளங்கல் காணு-மேலும் (தேசுடன்) விளங்குவதைக் கண்டு, (கௌசிகன்), வடவரை வில்லி தன்னை-மேருமலையாகிய வில்லையுடைய சிவபெருமானை, வணங்கி வழுத்த-(மனத்தால்) வழிபட்டுத் துதிக்க, ஈசன்-, அடல் உறு படை ஒன்று ஈய-வலிமை மிக்க அத்திர மொன்றை(ப் பிறர் அறியாதவாறு) அளித்தருள, அன்னவன் ஆற்றலோடும்-அப்பெருமானருளாலாகிய வலிமையுடனே,

இது 'விட்டனன்' என அடுத்த பாடலுள் வருவதனோடு முடியும். ஈறுக்கற்றன: தொகுத்தல் விகாரம். வணங்கியே; ஏகாரம் இசை நிறை.

கடவுளர் படைகள் ஈறாக என்றது, கௌசிகன் முதலில் சாதாரணமான அத்திரங்கள் பலவற்றைப் பிரயோகித்து, அவை பயனற்

றுப் போகவே, பின்பு பல திவ்வியாத்திரங்களைச் செலுத்தலானுன் என்பதறிவித்தற்கு. அவையும் வீணுகவே, இறுதியில் சிவபெருமானைத் தியானித்துத் துதித்துப் பெருவலியுடைய அத்திரமொன்றைப் பெற்றுனென்க. தனுர் வேதத்தின் முழு அறிவும், பல திவ்வியாஸ்திரங்களைச் செலுத்தும் முறைகளும் சிவபெருமான் அருளால் முன்பே கௌசிகன் கைவரப் பெற்றிருந்தான் என முதனூல் கூறுகின்றது. இறுதியிற் சிவபெருமானருளாற் பெற்ற படையை, அதனைச் செலுத்தற்குரிய மந்திரத்தோடும், பெருமானது அருள் வலியோடும் செலுத்தினுன் என்க.

(பி - ம்.) 1. படைகளிருய்க்; படையிருகக்: கற்றவெம்: கடுப்படை யாவும் வேந்தர்.

2. வேயின் றண்டம்; வேந்தன் றண்டு; வேதத் தண்டம்; விழுங்கிமெய்; விளங்கக்காணு: விழுங்கின விழுங்கல்காணு; விழுங்கக்காணுன்.

3. வில்லிபாதம் வணங்க மாதவந்நின் மலவர்க்கு; வில்லிதன்னை வணங்கிய வழுத்தலாடு, வழுத்தினன் வணங்க வந்திட்டு.

4. ஈயா; ஈய்ந்தான், அன்னவனகன்று னனறே; அன்னவன் கழறலோடும்; அன்னவன் மூன்று பொங்கி; அன்னவனகறுலேடுய: அன்னனைத் துரத்தலோடும்; அன்னனை நயடர்த்தலோடுய; அன்னதுனைக் கொண்டன்றி; அன்னதுனைக் கொண்டண்ணி. (601)

657. விட்டனன் படையை வேந்தன்
விண்ணுளோ ருலகை யெல்லாம்
சுட்டன னென்ன வஞ்சித்
துளங்கினர் முனியுந் தோன்றிக்
கிட்டிய படையை யுண்டு
விளங்கினன் கிளரு மேனி
முட்டிவெம் பொறிகள் சிந்தப்
பொருபடை முரணுந் தீர.

வேந்தன் படையை விட்டனன்-கௌசிக மன்னன், (சிவபெருமானளித்த) அத்திரத்தை (முனிவன் மேல்) விட்டான்; (அப்போது), விண் உளோர்-தேவர்கள், உலகை எல்லாம் சுட்டனன் என்ன-எல்லாவுலகங்களையும் (இவ்வத்திரத்தால் இவன்) எரித்துவிடுவானென்று, அஞ்சி துளங்கினர்-பயந்து நடுங்கினுர்கள்; முனியும்-வசிட்ட முனிவனும், தோன்றி-(தானே) எதிர் வந்து, கிட்டிய படையை உண்டு-(தன்னைத் தாக்க) அணுகி வந்த அவ்வுருத்திரன்படையை விழுங்கி, கிளரும் மேனி-தேசு மேலிடும் தன் உடம்பிலே, பொரு படை முட்டி - போருக்குரிய அவ்வத்திரம் படுதலால், வெம் பொறிகள் சிந்த-சுடுமையான தீப் பொறிகள் சிதறவும், முரணும் தீர-அதன் வலிமையும் அற்றுப் போகவும், விளங்கினன்-(ஒளியுடன்) விளங்கினுன். சுட்டனன்: காலவழுவமைதி.

கௌசிகன் விட்ட படைகளையெல்லாம் தனது பிரம தண்டத்தாலேயே சிதைப்பித்து வந்த வசிட்ட முனிவன், இறுதியில் வந்த உருத்திரன் படையைத் தானே ஏற்று விழுங்கி, அதன் வலிமையைக் கெடுத்து, அதினின்றும் தோன்றிய அனற் பொறிகள் தன்னுடம்பினின்றும் தோன்றிய அனலுடனே கூடி வெளிப்படத் தான் ஊறின்றி ஒளிபெற்று விளங்கினன் என்க.

உருத்திரன் படையின் வெம்மையும் வலிமையுங் கருதி, விண்ணோர்கள் அஞ்சினர். ஆயினும் வசிட்ட முனிவனது தவவலிமையின் முன் அதுவும் வலியற்றதாயிற்று.

கௌசிக மன்னன், தன் படைகளும் பயனற்றுப் புதல்வர்களும் அழிந்தமையால் மிகவும் மனத் தளர்ச்சியுற்று, ஊக்கங் குன்றி, தன் புதல்வர்களுள்ளே தப்பிப் பிழைத்த ஒருவனுக்குத் தன் அரசுரிமையைக் கொடுத்து நன்கு ஆளும்படி நியமித்து விட்டுத் தான் இமயமலைச் சாரலையடைந்து சிவபெருமானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தான். நெடுங்காலங் கடந்தபின் சிவபெருமான் எதிர்வந்து, உனக்கு வேண்டுவதைக் கேள் என்று கூற, 'மகாதேவா! தனுர் வேதத்தில் உள்ள எல்லா இரகசியங்களும் எனக்குத் தெளிவாக மனத்துள் விளங்க வேண்டும். தேவர்களும், தேவ கணத்தைச் சேர்ந்தவரனைவரும், அசுரர், இயக்கர் முதலிய யாவரும் கைக்கொண்டுள்ள எல்லா வகையான படைகளையும் செலுத்தும் வகை அவற்றுக் குரிய மந்திரங்களுடனே எனக்கு விளங்க வேண்டும்; மற்றும் என் மனோரதங்களெல்லாம் வழுவின்றி நிறைவேற வேண்டும்; இவ்வாறு எனக்கருள்புரிக' என்று வேண்டி அவ்வாறே இறைவன் அளிக்கப் பெற்று, மிக்க மன வலியுடனும் செருக்குடனும் 'வசிட்டன் இனித் தொலைந்தான்' என்று நிச்சயித்துக்கொண்டு மீண்டு வசிட்டன் ஆச்சிரமத்தையடைந்து, அளவிட வியலாத பல படைகளால் அவ்வாச்சிரமத்தை அழித்தான். அது கண்டு அஞ்சி அங்கிருந்த முனிவர் பலரும் ஓட்டங் கொண்டனர். உயிரினங்கள் பலவும் அழிந்தன. வசிட்டனுங் கடுஞ் சினங் கொண்டு கௌசிகன் முன் வந்து, 'வரம்பு மீறிய செயல் புரியும் உனது வலிமையை இதோபார்' என்று கையிற் பிடித்த பிரமதண்டத்துடன் எதிரே நிற்க, கௌசிகன் கோபாவேசத்துடன் பல வகையான தெய்வப் படைகளையும் விட, அவ்வளவையும் பிரமதண்டம் தன்னுள் அடக்கிக்கொண்டுவிட்டது. இறுதியில் கௌசிகன் பிரமமாத்திரத்தை யேவ, அது கண்டு தேவர்களும் பிறரும் அஞ்சி நடுங்கினார்கள். வசிட்டன் சிறிதும் துளக்கமின்றி, உள்ளே பொங்கியெழுந்த சினத்தீயால் உடம்பு முன்னிலும் பொலிவெய்த நின்றான். பிரம்மாத்திரமும் அப்பிரமதண்டத்தினால் வலியிழந்து பயனற்றதாயிற்று. அதன் பின் கௌசிகன், 'க்ஷத்திரிய பலத்தினும் பிரம்ம பலமே

சிறந்தது' என்பதனை யுணர்ந்து நாணமுற்றான் என்பது வான்மீகத்திற் காண்பது.

(பி - ம்.) 1. உலகமெல்லாம்; படையையெல்லாம்.
2. சுட்டன னிவனென்றஞ்சி; முனியும் வந்து.
3. உண்டுகிளர்ந்தனன; உன்னி விழுங்கினன்; களபமேனி.
4. முட்டவெம்: முட்டலும்: பொறிகள் சிந்திப்: பொரும்படை; பெரும் படை; முரணதிற்ற; முரணுந்தீர்ந்த; முரணகன்ற. (102)

## கௌசிகன் தவம்புரியச் செல்லல்

658. கண்டன னரசன் கண்ணாற்
கலைமறை யவர்கட் கல்லால்
திண்டிறல் வலியுந் தேசு
முளவெனல் சீரி தன்றால்
மண்டல முழுதுங் காக்கும்
மொய்ம்பொரு வலனன் றென்னா
ஒண்டவம் புரிய வுன்னி
யும்பர்கோன் றிசையை யுற்றான்.

அரசன்-கௌசிக மன்னன், கண்ணால் கண்டனன்-(வசிட்ட முனிவனது ஆற்றலைத் தன்) கண்களால் நேரே கண்டு, 'கலை மறையவர்கட்கு அல்லால்-வேதமுழுதுணர்ந்த அந்தணர்க்சன்றி (மற்றவர்க்கு), திண் திறல் வலியும் தேசும் உள எனல்-மனத்திட்பமும், மிக்க வலிமையும், ஒளியும் உள்ளன வென்பது, சீரிது அன்று—சிறந்ததாகாது; மண்டலம் முழுதும் காக்கும் மொய்ம்பு-பூ மண்டலம் முழுவதையும் ஆளும் வலிமை, ஒரு வலன் அன்று-ஒரு (சிறந்த) வலிமையாகாது;' என்னா-என்று கருதி, ஒண் தவம் புரிய உன்னி-(அவற்றைப் பெறும் வகையில்) மேலான தவஞ் செய்ய நினைத்து, உம்பர்கோன் திசையை உற்றான்-தேவேந்திரனது திசையாகிய கிழக்குத் திசையை அடைந்தான். அன்றால்: ஆல்-அசை.

வசிட்டனது தவ ஆற்றலை நேரே கண்டுணர்ந்த கௌசிகன், நாணமுற்று, 'அரசர்கள் பெற்றுள்ள உடல் வலியும், தோள் வலியும், படை வலியும் மற்றுள்ளனவும் பயனற்றன; பிரம்மதேசே பெரிது' என்றுட்கொண்டு, தானும் பிரம விருடியாகும் வண்ணந் தவம் செய்யச் சென்றான் என்க. சென்றது தென்றிசையென வான்மீகம் கூறும்.

கண்ணால் கண்டான் என்றது தெளிவு பற்றியது; 'காண்டியையநின் மெய்யுணர் கண்களால்'; 'கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்' (சுந்தர. 630; 1269.). பெரியாரைப் பிழைத்தலின் தீமை: 'ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து, வேந்தனும் வேந்து கெடும்' (குறள். 899).

(பி - ம்.) 1. அரசன் காணுக்; அரசன் கண்ணிற்; அரசனுங்குக்; மறை முனிவர்க் கல்லால்; மறையோர்கட்கெல்லாம்.

2. வலியுஞ் சீரும்; வலியதேசும்; உளதெனல்; உளதென்கை; உள வெனில்; உளவெனில்; எவற்குளவென்று தேறி; சீரிதம்மா; சீரிதம்ம; சீரிதாமோ; சீரிதல்ல.

3. முழுதுமோய்பு மென்பெரு வலிநன்றென்னு; மொய்ம்பரும் வலியன் றென்னு; பெருவலி மன்னர்க்கென்லை; வலியது வலியன்றென்னு; மொய்ம்பொரு வளனன்றென்னு; வலிமையோர் வலனன்றென்னு; வலனின்றென்னு; வலனன் றென்ன; வலியின்றென்னு.

4. புரியவெண்ணி; புரியவேண்டி; புரிவெனெனென்னு; புரிவெனென்ன; புரிவ னென்றே; புரிவலென்னு. (103)

இந்திரன் செயல்

659. மாண்டமா தவத்தோன் செய்த
வலனையே மனத்தி னுன்னிப்
பூண்டமா தவத்த னாகி
யரசர்கோன் பொலியு நீர்மை
காண்டலு மமரர் வேந்தன்
றுணுக்குறு கருத்தி னேடும்
தூண்டினன ரம்பை மாருட்
டிலோத்தமை யெனுஞ்சொன் மானை.

மாண்ட மாதவத்தோன் செய்த வலனையே-மாட்சி பெற்ற பெருந்தவமுடைய வசிட்ட முனிவன் செய்த வெற்றிச் செயலையே, மனத்தின் உன்னி-மனத்தால் (இடைவிடாது) சிந்தித்துக்கொண்டு, பூண்ட மா தவத்தன் ஆகி-(தன் வெற்றி கருதி) மேற்கொண்ட பெருந்தவமுடையவனாய், அரசர்கோன்-பேரரசனான கௌசிகன், பொலியும் நீர்மை-விளங்குந்தன்மையை, அமரர் வேந்தன் காண்டலும்-தேவராசனான இந்திரன் கண்டவளவிலே, துணுக்கு உறு கருத்தினேடும்-அச்சம்மிக்க மனத்தோடு, அரம்பைமாருள்-அரம்பை முதலிய தெய்வப்பெண்களுள்ளே, திலோத்தமை எனும்-திலோத்தமை யென்ற, சொல் மானை - புகழையுடைய, மான்போலும் மருண்ட பார்வையுள்ளவளை, தூண்டினன்-(கௌசிகனது தவத்தைக் கெடுக்கு மாறு) ஏவிவிட்டான்.

இந்திரன் அச்சங்கொள்ளக் காரணம், கடுந்தவம்புரிவோர் கபாலத்தினின்றுங் கடுந்தீ யெழுந்து விண்ணுலகத்தையும் எரிக்கும் என்பதாம்.

மாண்ட-மாட்சி பெற்ற; 'மாண்டவென் மனைவியொடு' (புறநா. 191). சொல்-புகழ்: சீவக. 3.

(பி - ம்.) 1. மாண்டரு வசிட்டன் மாறா; வலத்தையே; வலத்தினை; வலிதனை; வலியினை; மனத்திலுன்னிப்.

3. அமரவேந்தன்: துனுக்குறும்; வணக்குறு: ஐயுறும்; கருத்திறேடு; கருத்தனுகி. 4. அரம்பை மாரில்; சொன்மானே. (104)

660. அன்னவண் மேனி காணு
வனங்கவேள் சரங்கள் பாயத்
தன்னுணர் வழிந்து காதற்
சலதியி னழுந்தி வேந்தன்
பன்னரும் பகறீர் வுற்றுப்
பருணிதர் தெரிந்த நூலின்
நன்னய முணர்ந்தோ னுகி
நஞ்செனக் கனன்று நக்கான்.

வேந்தன்-கௌசிகமன்னன், அன்னவள் மேனிகாணு-அத்திலோத்தமையின் அழகைக் கண்டு, அனங்கவேள் சரங்கள்பாய-(நிலைதளர்ந்த மனத்திலே) மன்மதனம்புகள் பாய்தலால், தன் உணர்வு அழிந்து-தனது நல்லறிவையிழந்து, காதல் சலதியின் அழுந்தி-காமக்கடலிலே முழுகி, பன் அரும் பகல் தீர்வுற்று-(அவளோடின்பந் துய்த்தலில்) சொல்லுதற்கரிய பல நாட்களைக் கழித்து, (பின்னர்), பருணிதர் தெரிந்த நூலின் நல் நயம் தெரிந்தோன் ஆகி-அறிவில் முதிர்ந்தோர் ஆராய்ந்து செய்த நீதி நூல்களின் நல்ல முறைகளை (மனத்தில்) உணர்ந்தவனுகி, நஞ்சுஎன-(தான் இடையிலே கைக்கொண்டசெயல்) நஞ்சு போன்றது எனக் கொண்டு, கனன்று-(அதனை) வெறுத்து, நக்கான்-(தானே) நகைத்தல் செய்தான்.

கௌசிகன் திலோத்தமையின் அழகைக் கண்டதும் மனந் தடுமாறிக் காமம் மிக்கு அவளோடு மிகப்பல நாட்களைக் கழித்தபின், தன்செயல் தவருன தென்ற உணர்வு வரப்பெற்று, மனம் புழுங்கித் தன்னைத் தானே இகழ்ந்து நகைத்துக்கொண்டான் என்க. நகை, தன்செயல் குறித்து இகழ்ச்சியும், வெகுளியுங் கலந்து வந்தது.

பருணிதர்; இது பரிணதர் எனவும் வழங்கும்; 1175. கிட்கிந்தா. 781; சுந்தர. 293; யுத்த. 2246.

(பி - ம்.) 1. அன்னவல்; மேனிகாண: அனங்கன்வெம்.

2. துன்னுணர்வு; சலதிபிலழுந்தி; சலதியிலழுந்து; சலதியானழுந்தி; சலதியினிழிந்து; சலதியின் மூழ்கி.

3. பரிணதர்; பருணதர்; பரணிதர்; பணிதரத்: தெரிந்து; தெரித்த; நுண்ணூல்.

4. நன்னவம்; உணர்ந்தோனுக: உணர்ந்துநாக; உணர்ந்து நோக்கி; உணர்ந்தானுகி. (105)

661. விண்முழு தாளி செய்த
வினையென வெகுண்டு நீபோய்
மண்மக ளாதி யென்று
மடவர றன்னைச் சீறிக்
கண்மலர் சேப்ப வுள்ளங்
கறுப்புறக் கடிதி னேகி
எண்மரின் வலிய னாய
யமன்றிசை யதனை யுற்றான்.

(கௌசிகன், பின்பு), விண் முழுதும் ஆளி செய்த வினை என-தேவலோகமெல்லாம் ஆளும் இந்திரன் செய்த காரியமாகும் (இது) என்று, வெகுண்டு-கோபங்கொண்டு, மடவரல் தன்னை-அத்திலோத்தமையை, 'நீ போய் மண்மகள் ஆதியென்று சீறி-நீ (பூமியிலே)போய் மானிட மங்கையாகுக' என்று சபித்து,கண்மலர் சேப்ப-தன்னுடைய மலர் போன்ற கண்கள் சிவக்கவும், உள்ளம் கறுப்பு உற-மனத்தே சினம் மிகவும், கடிதின் ஏகி-விரைவில் (அவ்விடம் விட்டுப்) போய், எண்மரின்-அட்டதிக்குப் பாலகருள்ளே, வலியன் ஆய-மிக்க வலிமையுடையவனான, யமன் திசை அதனை- யமனுக்குரிய தென்றிசையை, உற்றான்-அடைந்தான்.

முழுதும் என்றதில் உம்மை தொக்கது. சேப்ப கறுப்புற:முரண் தொடை.

கௌசிகன் கிழக்குத் திசையிலே, தன் தவம் வீணானமையின், அங்குநின்றும் போய்த் தெற்குத் திசையை அடைந்தான்.

யமன் மிக்க வலிமையுடையவன் என்பது; 'மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி' (பொருந. 140); 'கால முன்ப' (புறநா. 23:17); 'ஆற்றல் காலனே டொக்கும்' (பெருங். 1.36: 100-101).

(பி - ம்.) 1. விண்முதலாளி. 2. ஆதி யென்ன: மடவரற்றன்னை யேவிக்.
3. சிவப்ப: உள்ளங் கடிப்புறக்; கடிப்பறக்; கடிதினெய்தி.
4. எண்மரில்; எண்வரின்: வலிதென்றெண்ணும்; வலிதென் றெண்ணி; வலியனென்னும்; எமன்றிசை; யமதிசை. (106)

திரிசங்குவின் செய்தி

662. தென்றிசை யிருந்து மன்னன்
செய்தவஞ் செய்யு நாளில்
வன்றிற லயோத்தி வாழு
மன்றிரி சங்கு வென்பான்
தன்றுணைக் குருவை நண்ணித்
தனுவொடு துறக்க மெய்த
இன்றெனக் கருளு கென்ன
யானறிந் திலென தென்றான்.

மன்னன்-கௌசிகன், தென்திசை இருந்து-தெற்குத் திக்கிலே அமர்ந்து, செய் தவம் செய்யும் நாளில்-செய்தற் குரிய தவத்தைச் செய்துவரும் நாளில், அயோத்தி வாழும்-அயோத்திநகரிலே வாழ்ந்த, வன் திறல் மன்-மிக்க வலிமையுடைய அரசனான, திரிசங்கு என்பான்-, தன் துணை குருவை நண்ணி-தனக்கு (எல்லாக் காரியங்களிலும்) துணையாகும் குருவாகிய வசிட்ட முனிவனை யடைந்து, 'தனு வொடு துறக்கம் எய்த-(நான்) இவ்வுடம்புடனே சுவர்க்க மடையு மாறு, இன்று எனக்கு அருளுக என்ன-இப்போது எனக்கு அருள் செய் வீராக' என்று வேண்ட, (முனிவன்), 'அது யான் அறிந்திலென்' என் ருன்-'அதனை (இவ்வுடம்புடன் சுவர்க்கம் சேர்க்கும் வகையை) நான் அறிந்திலேன்' என்று (மறுத்துக்) கூறினான்,

தன்துணை-தனக்குத்தானே ஒப்பாகிய என்றுமாம்.

திரிசங்கு என்பவன், சூரியவமிசத்தில், இராமபிரானுக்கு நெடுங் காலம் முன்னே இருந்து அரசாண்டவன்; 'சத்திய விரதன்' என்ற இயற்பெயருடைய இவன், தான் செய்த மூன்று பெருங் குற்றங் களாலே 'திரிசங்கு' என்ற காரணப் பெயர் பெற்ருன். இவன் மகன் அரிச்சந்திரன். திரிசங்கு, இவ்வுடம்புடனே சுவர்க்கமடையச்செய்ய வேண்டுமென்று தன் குருவை வேண்ட, அவர், 'இது தகுதியற்றது; என்ருல் இது செய்ய இயலாது' என்று மறுத்துக் கூறினர்.

(பி - ம்.) 1. தென்றிசை யதனை நண்ணிச்: தென்றிசை யதனிற் சேர்ந்து: செல்லும் வைகல்; செய்யுஞ்செவ்வி: செய்யும் வேலை; செய்யுமெல்லை.
2. மன்றிற லயோத்தி வந்த; வன்றிறல் போற்றி வாழும்: மன்னவன் றிரிசங் கென்பான்; மன்னவன் றிரிசங்கு வென்பான்: திரிசங்கு வென் போன்; திசங்கு வென்பான்.
3. நன்றுணைக்: தனுவொடுந் துறக்க மெய்தல்; துறக்சஞ்சார.
4. அருடி யென்ன: யானறிந்திலனஃதென்ருன்; அஃதெமக்கியலாதென் ருன்; ஆண்டிறந் தெய்து கென்ருன்: ஆண்டிறந்தேகவென்ருன்; ஈண்டிறந்தேகுகென்ருன். (107)

663. நினக்கொலா தாகி னைய
நீணிலத் தியாவ ரேனும்
மனக்கினி யாரை நாடி
வகுப்பல்யான் வேள்வி யென்னச்
சினக்கொடுந் திறலோய் முன்னைத்
தேசிகற் பிழைத்து வேருேர்
நினக்கித னுடி நின்ருய்
நீசனுய் விடுதி யென்ருன்,

(மறுத்துக் கூறிய குருவை நோக்கித் திரிசங்கு), 'ஐய-ஐயனே!, நினக்கு ஒல்லாது ஆகின்-(என்னை இவ்வுடம்புடன் சுவர்க்கம் சேர்ப் பித்தல்) நுமக்கு இயலாத தாகின், நீள் நிலத்து-பெரிய இவ்வுலகத்

திலே, யாவரேனும் மனக்கு இனியாரை நாடி-வேறு யாவரா யினும் என் மனத்துக் கியைந்த ஒருவரைத் தேடி; யான் வேள்வி வகுப்பல் என்ன-நான் (என் கருத்து முற்றும் பொருட்டு) யாகம் செய்வேன்!' என்று கூற, (வசிட்டன் சினங் கொண்டு), 'சினம் கொடு திறலோய்-கோபமும் (பகைவர்க்குக்) கொடுமையான வலி மையு முடையவனே! முன்னை தேசிகன் பிழைத்து-பழமையான (உங் கள்) குல குருவினிடத்துப் பிழைபட்டு, வேறு ஓர் நினக்கு இதன்-உனக்கு இயைபவனான வேறொருவனை, நாடி நின்றாய்-விரும்பியடைய நிற்கின்றாய்; (ஆதலால்), நீசன் ஆய்விடுதி-(நீ) தாழ்ந்தவன் (சண் டாளன்) ஆகிவிடக் கடவாய்' என்றான்-என்று சாபங் கூறினான்.

இதன் = ஹிதன்-இஷ்டமானவன்.

குலகுரு மறுத்துக் கூறவும், திரிசங்கு பிடிவாதமாக,'நான்வேறொ ருவரைக் கொண்டு வேள்வி செய்து என் கருத்து முற்றப்பெறுவேன்' என்றதனால், வசிட்ட முனிவன் சினங்கொண்டு, 'நீ நீசனாகுக' எனச் சபித்தான் என்க.

முன்னர்த் தேசிகன்- பழமையாக வந்த குரு; அவனைப் பிழைத் தல்: அவன் சொல்லை அவமதித்துத் தனது தவறான விருப்பத்தை நிறைவேற்ற வேறொருவரை நாடுதல்.

குருவினால் நிராகரிக்கப் பெற்ற திரிசங்கு, குருவின் புதல்வர் களை யடைந்து, தன் கருத்தையும், தந்தை கூறியதையும் அவர்களி டம் கூற, அவர்களும் அது தகாததென்று மறுக்கவே, 'என் குல குரு வும், அவர் புதல்வர்களாகிய நீங்களும் என் கருத்தை நிராகரித்த தனால், அதனை முற்றுவிக்கத் தக்க வேறொருவரை நாடியடைவேன்' என்று கூற, அவர்கள் கோபங்கொண்டு திரிசங்குவைச் சண்டாளனாகு மாறு சபித்தனரென்று முதனூல் கூறும்.

(பி - ம்.) 1. ஒல்லாது; ஒணாது; ஏலாது; ஆகிலையா; யாவரென்னும்.
2. மனக்கினியோரை; எனக்கினியாரை; நாட்டி; வகுப்பன்; வேள்வி யென்னாச்.
3. சினத்தொடுந் திறலோன்; முன்னர்த்தேசிகர்த் திறம்பி; முன்னர்த் தேசிகற்றப்பி; முன்னற்றேசிகற் றப்பி; வேறாய்; வென்றோர்.
4. நினக்கித னாடில்; நினக்கித நாடி; நினக்கித நாடில்; நின்மேற நீசனாய் இன்றே நீசனாய்; நன்றே நீசனாய். (108)

664. மலருளோன் மைந்தன் சீறி வழங்கிய சாபந் தன்னால்
அலரியோன் றானு நாணு மொளியிழந் தரசர் கோமான்
புலரியங் கமலம் போலு முகத்தினிற் பொலிவு நீங்கிப்
பலருமாங் கிகழ்தற் கொத்த படிவம்வந் துற்ற தன்றே.

மலர் உளோன் மைந்தன்-தாமரைப் பூவில் விற்றிருக்கும் பிரம தேவனுடைய (மானத) புத்திரனான வசிட்ட முனிவன், சீறி-

கோபித்து, வழங்கிய சாபம் தன்னால்-கொடுத்த சாபத்தினாலே, அரசர் கோமான்-அரசர்க்கரசனான திரிசங்கு, அலரியோன் தானும் நாணும் ஒளி இழந்து-கதிரவனும் கண்டு நாணத்தக்க தன் மேனி ஒளி கெட்டு, புலரி அம் கமலம் போலும்-சூரியோதயத்தில் மலர்ந்த அழகிய தாமரை போன்ற, முகத்தினில் பொலிவும் நீங்கி-முகத்தினழகும் கெட, பலரும் இகழ்தற்கு ஒத்த படிவம்-கண்டோர் பலரும் இகழ்தற்குரிய (விகாரமான, சண்டாள) வடிவம், அன்றே வந்து உற்றது-அப்பொழுதே (அவனை) வந்தடைந்தது. ஆங்கு, அசை.

'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்தலரிது' (குறள். 29) ஆகலின், முனிவன் வெகுண்டுரைத்த சாபமொழி உடனே தப்பாது தன் பயனை யளித்தது. விகார வடிவத்தைப்பெற மன்னன் விரும்பானாயினும், அது தானே வந்தடைந்துவிட்டது.

அலரியோனும் நாணும் ஒளி: ஒப்பு: 'செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ' (புறநா. 4: 16.)

(பி - ம்.) 1. மலருளோன் மைந்தன் மைந்த; மலருளோன் மைந்த னன்று; மலருளோன் றனது மைந்தன்; மலருளோனருளு மைந்தன்; மலருளோன் மைந்தன் முந்த; மலரிலோன் மைந்தன் மைந்தர்; மலரிலான் மைந்தன் சிறி; மலரிலான மைந்தன் முனனம்; மலரினோன் மைந்தன் மைந்தின்; மலருளோன் மைந்தன் முனனம்.
2. நாணும் வடிவிழந்து; வடிவழிந்து; அழகிழந்து.
3. புலரிய கமலம்போல; கமலமபோலப் பொலிவொரீஇ வதனம் பூவில்.
4. பலருமங்கு; பலரும் வந்து: உற்றதன்றால். (109)

665. காசொடு முடியும் பூணுங்
கரியதாங் கனகம் போன்று
தூசொடு முந்நூன் மாலை
தோறருந் தோற்ற மாக
மாசொடு கருகி மேனி
வனப்பழிந் திடவூர் வந்தான்
சீசியென் றாரு மெள்ளத்
திகைப்பொடு பழுவஞ் சேர்ந்தான்.

காசொடு-மணி மாலைகளுடனே, முடியும்-கிரீடமும், பூணும்-(பிற பல) ஆபரணங்களும், கரியது ஆம் கனகம் போன்று-கரும்பொன் (இரும்பு) போல் ஆகவும், தூசொடு-ஆடைகளும், முந்நூல்-முப்புரி நூலும், மாலை-பூ மாலை முதலியனவும், தோல் தரும் தோற்றம் ஆக-தோல் போன்ற தோற்றம்(உடையன) ஆகவும், மேனி-உடம்பு, மாசொடு கருகி-அழுக்குடனே கருநிறமுடையதாகி, வனப்பு அழிந்திட-அழகெல்லாம் கெட, ஊர் வந்தான்-தன் ஊருக்குள் வந்தான்; (அப்போது), ஆரும்-(கண்டவர்) எவரும், சீ சி என்று

எள்ள-சீ சீ என்று இகழ்ந்ததனால், திகைப்பொடு-திகைப்புடைய வனாய், பழுவம் சேர்ந்தான்-காட்டிற் போய்ச் சேர்ந்தான்.

கரியது ஆம் கனகம் = கரும்பொன்-இரும்பு. காசு: ஆகுபெயர்.

முந்தின பாடலில் 'பலரும் இகழ்தற்கொத்த படிவம்' என்றதனை இங்கே விரித்துரைத்தார். திரிசங்கு, ஊரில் தன்னைக் கண்டார் எவரும் இன்னானென்றறியாமல் சீச்சீ என்று இகழ்ந்து கடியவே, வெட்கி மனம் மிகவும் திகைப்புற்றுக் காட்டிற் போய்ச் சேர்ந்தான் என்க.

(பி - ம்.) 1. காசொடு மணியும்: கரியவாம்: போன்றும்,
2. தூசொடுமணியு முந்நூல்; அணிமுந்நூலும்; அணியுநூலும்; மார்பின் முந்நூல்: தோற்றந; தோற்றெரு; தோற்மத்; தே வின; தோவினப: தோற்றம் போன்றும்; தோற்றம் போலும; தோலே போன்றும்; தோலே போலும்.
3. மேனி வழியழிந்திட ஊர்வந்து.
4. சீசிபென்றியாநம்; சீசியுற்றியாரும்: ஏசத்; திகைப்பொடும்; திகைப் பொரு; திகையொடு. (110)

666. கானிடைச் சிறிது வைகல்
கழிந்தோர்நாட் கௌசி கப்பேர்க்
கோனிருந் தவஞ்செய் சோலை
குறுகினன் குறுக வன்னான்
ஈனனீ யாவ னென்னை
நேர்ந்ததிவ் விடையி னென்ன
மேனிகழ் பொருள்கள் யாவும்
விளம்பினன் வணங்கி வேந்தன்.

(நீசனான திரிசங்கு), கான் இடை-காட்டிலே, சிறிது வைகல் கழித்து-சில நாட்களைக் கழித்தபின், ஓர் நாள்-, கௌசிகன் பேர் கோன்-கௌசிகனென்று பேருடைய இவ்வரசன், இரு தவம் செய் சோலை-பெரிய தவஞ் செய்துகொண்டிருந்த சோலையை, குறுகினன்-அடைந்தவனாய், குறுக-(கௌசிகனை) அணுக, அன்னான்-அக்கௌசிகன், (இவனை நோக்கி), 'ஈனன் நீ யாவன்-சண்டாளனாகிய நீ யார்?; இ இடையில் நேர்ந்தது என்னை-இவ்விடத்திற்கு நீ வந்தது யாது கருதி?' என்ன-என்று கேட்க, வேந்தன்-திரிசங்கு மன்னன், வணங்கி-கௌசிகனை வணங்கி, மேல் நிகழ் பொருள்கள் யாவும் விளம்பினன்-முன்னே நடந்த செய்திகளனைத்தையும் சொன்னான்.

நீச வடிவத்துடன் காட்டையடைந்த திரிசங்கு, அங்கே சில நாட்கள் கழித்து வருகையில், வசிட்ட முனிவனிடம் பகை கொண்ட கௌசிகன் அக்காட்டில் தவஞ் செய்தலைக் கேள்வியுற்று, ஒரு நாள் அவ்விடஞ் சென்று அவனை யணுகி, தன்னை யாரென்று வினவிய கௌசிகனிடத்து முன் நிகழ்ந்தவற்றையெல்லாம் கூறினான் என்க.

(பி - ம்.) 1. கானிடை சிலது வைகல்: கழித்தநாட்; கழிந்தநாட்; கழிந்ததோர்; கழிந்தோர்நாட்; கழிந்த பின்; கவுசிகப் பேர்க்.
2. கோனினி துறையுஞ் சோலை; உறையுஞ்சாலை; தவஞ்செய்கானிற்; குருகலோடும்.
3. ஈஃதீ: நீநில நீயாவன்; நீரனியாவன்; யாவனென்ன; யாவனென்னைச்; யாவனென்னைப்: யாவ பொந்தது; நேர்ந்ததிவ் விடையென்; போந்த திவ்விடையின்; சேர்ந்த திவ்விடையின்: இவ்விட மதனின்; இவ்விட மென்முன்: என்னை; ஏவம்.
4. மேனனி: பொருள்களெல்லாம்; பொருள்களியாவும்; விளம்பினன் தொழுது வேந்தன். (111)

667. இற்றிதோ வென்ன நக்கிங்
கியானிரு வேள்வி முற்றித்
துற்றிய தனுவி னோடு
மேற்றுவென் சுவர்க்க மென்னா
மற்றுமா தவரைக் கூவ
வந்தனர் வசிட்டன் மைந்தர்
கற்றில மரசன் வேள்வி
கனற்றுறை புலையற் கீவான்.

(திரிசங்கு கூறியவற்றைக் கேட்ட கௌசிகன்) 'இற்றிதோ' என்ன-'இவ்வளவு தானே' என்று, நக்கு-(இகழ்ச்சியாகச்) சிரித்து, 'இங்கு யான் இரு வேள்வி முற்றி-இப்போது நான் பெரியதொரு யாகத்தை (உனக்காகச்) செய்து, துற்றிய தனுவினோடும்-(நீ) பெற்றுள்ள இவ்வுடம்புடனே, சுவர்க்கம் ஏற்றுவென்-(உன்னைச்) சுவர்க்கம் ஏறப்பண்ணுவேன்;' என்னா-என்று சொல்லி, மற்றும் மாதவரைகூவ-மற்றும் அங்குள்ள பெருந்தவசிகள் பலரை அழைக்க, வந்தனர்-பலரும் வந்தார்கள்; வசிட்டன் மைந்தர்-(அவ்வாறு வந்தவர்களான) வசிட்ட முனிவன் புதல்வர்கள், 'அரசன்-அரசனொருவன், கனல் துறை வேள்வி-தீயினிடத்துச் செய்யப்படும் யாகத்தின் பயனை, புலையற்கு ஈவான்-சண்டாளனொருவனுக்கு அடைவிப்பதை, கற்றிலம்-(நாங்கள் இது வரை எங்கும்) கற்றறிந்திலோம்.'

இஃது அடுத்த பாட்டுடன் தொடரும்.

ஈவான்: ஈதல் என்னும் தொழிற்பெயர் போல நின்றது; ஈதற்கு என்றுமாம்.

திரிசங்குவின் வார்த்தைகளைக் கேட்ட கௌசிகன், வசிட்டனிடத்துள்ள பகையால், 'இஃதொரு பெரிய காரியமன்று; நான் இப்போதே உனக்காக யாகஞ் செய்து, உன்னை இவ்வுடம்புடன் சுவர்க்க மேற்றுவேன்' என்று கூறி, அதற்குரிய முயற்சிகளைச் செய்யலானான் என்க.

இற்றிதோ-இவ்வளவேயோ: 'இற்றிதுவோ இவர் சேவகம்' (யுத்த. படைத்தலைவர் வதை. 4).

(பி - ம்.) 1. இற்றதோ எனநக் கன்னுன்; எனநக்காங்கு; எனநக் கீங்கு; என்னநக் கீங்கு. என்னநக்கங்கியான்; என்னநக் காங்கியான்; யானிரும்; யான் பெரு; யாமிரு.
2. ஏற்றுவன்றுறக்கமென்னு: மற்றுலகளிப்பென்; மற்றுலகளிப்பல்; மற் றுலகளிப்பன்: என்னு மாதவர் தம்மைக் கூவச்; கூவிச்.
3. சுற்றுறு முனிவர்யாருந் தொக்கனர்; தொக்கென: வசிட்டர்மைந்தர்.
4. கற்றிலர்; கற்றிலாம்; கற்றிலேம்; கற்றிலோம்; அரச; அரசர்: அவிசாம்: வேள்விக்கனற்றுறை. (112)

668. என்றுரைத் தியாங்க ளொல்லோ
மென்றன ரென்னப் பொங்கிப்
புன்றொழிற் கிராத ராகிப்
போகெனப் புகல லோடும்
அன்றவ ரெயின ராகி
யடவிக டோறுஞ் சென்றார்
நின்றுவேள் வியையு முற்றி
நிராசனர் வருக வென்றான்.

என்று உரைத்து-என்று (வசிட்ட குமாரர்கள் முன்குறித்த வாறு) சொல்லி, 'யாங்கள் ஒல்லோம் என்றனர்-நாங்கள் (இதற்கு) ஒப்ப மாட்டோம்' என்றார்கள்; என்ன-அவ்வாறு (அவர்கள்) கூறவே, பொங்கி-(கௌசிகன்) சினங்கொண்டு, 'புன் தொழில் கிராதர் ஆகி போக'-(நீங்கள்) இழிதொழிலையுடைய வேடர்களாகிப் போங்கள், என புகலலோடும்-என்று (சாபமொழி) சொல்லலும், அன்று-அப் போதே, அவர்-அவ்வசிட்ட குமாரர்கள், எயினர் ஆகி-வேடர் களாகி, அடவிகள் தோறும் சென்றார்-காடுகளில் சென்று திரிய லானார்கள்; (பின்பு கௌசிகன்), நின்று-(தன் கொள்கையிலேயே) ஊன்றியிருந்து, வேள்வியையும் முற்றி-(தான் சொல்லியவாறு) யாகத் தையும் செய்து, 'நிராசனர்-(அவிசு பெறுதற்குரிய) தேவர்களே! வருக-வருவீர்களாக!' என்றான்-என்று (மந்திரத்தால் அவர்களை) அழைத்தான்.

கௌசிகன் தன் சீடர்களைக் கொண்டு யாகத்தின்பொருட்டு முனிவர்களை அழைப்பிக்க, பலரும் வந்து கூடினர். அவ்வாறு வந்த வசிட்ட குமாரர்களோடு, மகோதயர் என்ற முனிவரும் இது தகாத செயல் என்று இகழ்ந்து,'இதற்கு நாங்கள் ஒருப்படோம்' என்று மறுக் கவே, அதனைச் சீடர்கள் மூலம் அறிந்த கௌசிகன் கோபங்கொண்டு, வசிட்ட குமாரர்களை நீசர்களாகி நெடுங்காலம் உழலுமாறும், மகோதயர் வேடனாகித் திரியுமாறும் சபித்தனன் என்று வான்மீகம் கூறுகின்றது.

நிராசனர்=நிரசனர் - உணவை வேண்டாதவர்; இங்கே இது விளி.

(பி - ம்.) 1. என்றுனக்கியாங்கள்; என்று நக்கியாங்கள்; ஏலாம்; ஏலோம்; ஒவ்வோம்; எழுந்து பொங்கி; இகழப் பொங்கி.

2. புகருலோடும். 3. அடவிகடோறுஞ் சென்று.

4. நின்றுவேள்வியைத்தான் முற்றி; நின்று யாதவத்தை யாற்றி; நின்று யாமகுத்தை முற்றி; நின்றநீர் வேள்வி முற்றி; நிச்சரர்; நிற்சரர்; நித்தரை; நித்தராய்; வருகவென்றூர். (113)

669. அரசனிப் புலையற் கென்னே
யனற்றுறை முற்றி யெம்மை
விரசுக வல்லை யென்றல்
விழுமிதென் றிகழ்ந்து நக்கார்
புரசைமா களிற்றின் வேந்தைப்
போகநீ துறக்கம் யானே
உரைசெய் தன் றவத்தி னென்ன
வோங்கினன் விமானத் தும்பர்.

(கௌசிகனுல் அழைக்கப்பட்ட தேவர்கள்) 'என்னே-இஃதென்ன விபரீதம்! அரசன்-அரசனொருவன், இ புலையற்கு-இந்தப் புலையனுக்காக, அனல் துறை முற்றி-தீயிலே செய்யப்படும் யாக காரியத்தில் முனைந்து', எம்மை வல்லை விரசுக என்றல்-நம்மை விரைவில் (அவிசு பெற) வருக என்றழைத்தல், விழுமிது என்று-மிக நன்றாயிருக்கின்றது!' என்று, இகழ்ந்து-பரிகசித்து, நக்கார்-சிரித்தார்கள்; (தேவர்கள் வராதது கண்ட கௌசிகன்), புரசை மா களிற்றின் வேந்தை-கழுத்திடு கயிற்றையுடைய சிறந்த யானைகளையுடைய திரிசங்குவை (நோக்கி), 'நீ துறக்கம் போக-நீ (இப்போதே) சுவர்க்கம் செல்வாயாக; தவத்தின்-(என்) தவ வலிமையால், யானே உரைசெய்தேன்-நானேசொல்லுகின்றேன்;' என்ன-என்று கட்டளையிட, (திரிசங்கு), விமானத்து-கௌசிகன் தவ வலியால் வந்ததொரு விமானத்தில் (ஏறி), உம்பர் ஓங்கினுன். (சுவர்க்கஞ் செல்லுதற்கு) மேலெழுந்தான்.

கௌசிகன் யாகத்தைத் தொடங்கிச்செய்து, அவிசு பெறும் பொருட்டு உரிய மந்திரங்களால் தேவர்களை அழைக்க, நெடுநேரமாகியும் அவர்கள் வராதது கண்டு, 'வேறெவர் துணையும் வேண்டா; நானே என் தவத்தின் ஆற்றலால் இப்போது உன்னைச் சுவர்ககம் சேர அனுப்புகின்றேன்; போவாயாக' என்று கூறி, தேவ விமான மொன்றையும் அங்கே தருவிக்க, திரிசங்கு அவ்விமானத்தில் ஏறி மேலேழுந்து சென்றனன் என்றவாறு.

(பி - ம்.) 1. அரைசனிப்; அரசனுப்; புலையற் கின்னே: அழற்றுறை; முற்ற வெம்மை; வேள்விமுற்ற: புலைய குகிநெய்யழன் முற்ற வெய்மை.
2. விரைசுக வல்லை யென்பான்; வல்லை யென்றான்; விழுமி தென் றுரைத்து நின்றார்; விழுமிதன் றென்ன நின்றார்.
3. புரைசை மா; புரைசை மால்; புரை மாக்; களிற்று வேந்தைப்; களிற்று வேர்தன்; களிற்று வேந்த: போகெனத் துறக்கந் தானே; போகநீ துறக்க நானே.
4. உரைசெய்கேன்: தவத்தினென்றான்; தவத்தினென்னு; ஓங்கின மானத்தும்பர். (114)

670. ஆங்கவன் றுறக்க மெய்த வமரர்கள் வெகுண்டு நீசன்
ஈங்குவந் தடைவ தென்னை யிருநிலத் திழிக வென்னத்
தாங்குத லின்றி வீழ்வான் றாபத சரண மென்ன
ஓங்கிநீ நில்லு நில்லென் றுரைத்துரு மொக்க நக்கான்.

ஆங்கு அவன் துறக்கம் எய்த-அவ்வாறு அத்திரிசங்கு சுவர்க்கம் சென்று சேர, அமரர்கள்-(அதைக் கண்ட) தேவர்கள், வெகுண்டு-கோபித்து, 'நீசன் ஈங்கு வந்து அடைவது என்னை-நீசனாகிய நீ (அவ்வுடம்புடனே) இங்கு வந்து சேர்வது என்ன (அநீதி!), இரு நிலத்து இழிக-பெரிய பூமியில் தானே (மீண்டும்) விழுக;' என்ன-என்று சொல்ல, தாங்குதல் இன்றி-தன்னைத் தாங்கும் ஆதாரம் ஒன்றும் இல்லாமல், வீழ்வான்-(தலை கீழாக) விழுகின்ற திரிசங்கு, (இடையிலேயே), 'தாபத சரணம்' என்ன-'முனிவ! நீயே எனக்குப் புகலிடம்' என்று (கௌசிகனைக் குறித்து) ஓலமிட, (அது கேட்ட கௌசிகன்), ஓங்கி-(தன் கையை) உயர்த்தி, 'நீ நில் நில் என்று-நீ (அவ்விடத்திற்றானே) நிற்பாயாக'வென்று, உரும் ஒக்க உரைத்து-இடி முழக்கம் போலச் சொல்லி, நக்கான்-சிரித்தான்.

திரிசங்குவைக் கண்ட தேவேந்திரன், தேவர்களுடனே கூடி அவனை நோக்கி, 'குரு சாபத்தினால் நீசனாகிய நீ இங்கிருக்கத் தக்கவனல்லை; மீண்டும் பூமியிலேயே விழுக' என்றதனால், தலை கீழாக விழுகின்ற திரிசங்கு, கௌசிகனைக் குறித்து, 'நீயே சரண'மென்று ஓலமிட, அதுகேட்ட கௌசிகன், 'நீ அங்கேயே நில்' என்று கூறித் தன் தவ வலிமையால் அவனை வானத்தில் தான் கண்ட விடத்திலேயே நிற்கும்படி செய்தான் என்றவாறு.

கோபத்தாலும், வெகு தொலைவில் உள்ளவனுக்குக் கேட்குமாறும் இடி முழக்கம்போலச் சொன்னான்; நகையும் சினத்தால் வந்தது. நில் நில்: அடுக்கு விரைவு பற்றியது. நில்லு: உகரம் சாரியை. தாபத-தாபஸ என்பதன் திரிபு; 'தவஞ் செய்பவனே' என்பது பொருள்.

(பி - ம்.) 1. துறக்க மேவ: வெகுண்டு நீச.
2. ஈங்குவந் திடுவ தென்னே; ஈங்குவந் தடைந்த தென்னே; ஈங்குவந் துறுவ தென்னே: இழிதியென்னத்; இழிகவென்பார்; அடைகவென்னத்; உறுகவென்னத்.
3. தாங்கலிலாது வீழ்வான்; தாங்கலின் ருகிவீழ்வான்; தாங்கிலன் வீழ்வான்; தாங்கலில் கவிழ்வான்; மற்றுத்தாபத: மற்றைத்தாபத; வீழத் தாபதா:
4. ஓங்கின னின்னிலென்ன; ஓங்கின னின்னீயென்ன: ஓங்கின னின்னிலென்றே: உரைத்துரு முட்க; உருத்துருமொக்க; இடியுறுமென்ன. (115)

671. பேணல ரிகழ்ந்த விண்ணோர்
பெரும்பத முதலா மற்றைச்
சேண்முழு தமைப்ப லென்னச்
செழுங்கதிர் கோண டிங்கள்
மாணொளி கெடாது தெற்கு
வடக்கதாய் வருக மற்றைத்
தாணுவொ டூர்வ யாவுஞ்
சமைக்குவெ னென்னும் வேலை,

(கௌசிகன்), 'பேணலர்-(என் திறனை) மதியாதவர்களாய், இகழ்ந்த-(என்னால் அனுப்பப்பெற்றவனையும்) இகழ்ந்த, விண்ணோர்-தேவர்களுடைய, பெரு பதம் முதலா(க)-பெரிய பதவிகள் முதலாக, மற்றை சேண் முழுது(ம்)-பிற விண்ணுலகங்கள் அனைத்தையும், அமைப்பல்-(நான் வேறாகப்) படைப்பேன்;' என்ன-என்று உட்கொண்டு, 'செழு கதிர்-(அவ்வாறு நான் படைக்கும்) மிக்க கிரணங்களுடைய சூரியனும், திங்கள்-சந்திரனும், கோள்-(பிற) கிரகங்களும், நாள்-நட்சத்திரங்களும், மாண் ஒளி கெடாது-(அவற்றிற்கு உரிய) சிறந்த ஒளி கெடாமல், தெற்கு வடக்கு அது ஆய்-தெற்கு வடக்காக, வருக-சஞ்சரித்து வரட்டும்; மற்றை-இவையல்லாத, தாணுவொடு-நிலையியற் பொருள்களும், ஊர்வ-இயங்கியற் பொருள்களுமாகிய, யாவும்-எல்லாவற்றையும், சமைக்குவென்-(இப்போதே) படைப்பேன்,' என்னும் வேலை-என்று தொடங்கும் போது,

இஃது அடுத்த பாடலுடன் தொடரும்.

தேவர்கள் செயலால் கோபங் கொண்ட கௌசிகன், திரிசங்குவை அந்தரத்தில் நிறுத்தி, 'அவ்விடத்தைச் சூழத் தேவருலகங்களையும், தேவர்களையும், மற்றைச் சராசரப் பொருள்களையும் வேறாகப் படைத்து, அங்கேயே மற்றொரு சுவர்க்கமாக்கி விடுவேன்' என்று அகங்காரத்துடன் தொடங்கினான் என்க.

சிறப்புக் கருதிச் சூரிய சந்திரர்களைத் தனியே குறித்ததனால், கோள் என்றது அவை யொழிந்த மற்றக் கிரகங்களை. நாள்-நாண்மீன்

கள். இவையெல்லாம் புதிய படைப்பாயினும், அவ்வவற்றிற்கு உரிய ஒளியிற் சிறிதுங் குறைவின்றி அவை விளங்க, அவற்றின் கதி மட்டும் கிழக்கு மேற்குக்கு மாருய்த் தெற்கு வடக்காக அமைக என்ருன்.

முதலா: தொகுத்தல் விகாரம்; சேண் முழுது: முற்றும்மை தொக்கது. தாணு-ஸ்திரம்-நிலையியல். ஊர்வ-இடம் பெயர்வன; இயங்கியற் பொருள்.

கௌசிகன் படைப்பு: 318-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. பேணலாது: வானோர்: முதலமற்றுச்; முதலமற்றச்.
2. அமைப்பனென்னச்; அமைப்பனென்னுச்; சேண்முத லுலாவுகின்ற: செங்கதிர்: கோணுட்டிங்கள்.
3. கெடாத; கொடாது: வடக்கவாய்; வடக்கதா: வருகவென்று; வருவமற்றைத்; வருகமற்றத்.
4. தாணுவோடூர்வ; ஊர்வவெல்லாம்; ஊர்வசெல்லச்; ஊர்வமற்றும்; சமைக்குவலென்னும்; சமைக்குவனென்னும்; சமைக்குவமென்னும். (110)

672. நறைத்தரு வுடைய கோனு
நான்முகக் கடவு டானும்
கறைத்தரு களனு மற்றைக்
கடவுளர் யாருந் தொக்குப்
பொறுத்தருண் முனிவ நின்னைப்
புகல்புகுந் தவனைக் காத்தல்
அறத்திற னென்றுந் தாரா
கணத்தவ னமர வென்ருர்.

(கௌசிகன் அனைத்தையும் வேறு படைப்பேன் என்று தொடங்கியபோது), நறை தரு உடைய கோனும்-நறுமண முள்ள கற்பகம் முதலிய தருக்களையுடையதேவேந்திரனும், நால்முகம்கடவுள்தானும்-பிரமதேவனும், கறை தரு களனும்-விடம் தங்கிய கழுத்தையுடைய உருத்திரனும், மற்றை கடவுளர் யாரும்-மற்றத் தேவர்களுள் அனைவரும், தொக்கு-(கௌசிகன் எதிரே வந்து) கூடி, 'முனிவ-முனிவனே; பொறுத்தருள்-(தேவர்களின் செயலைப்) பொறுத்துக்கொள்வாயாக! நின்னை புகல் புகுந்தவனை காத்தல்-உன்னைச் சரணமாக அடைந்தவனைக் காப்பாற்றுதல், அறம் திறன்-தருமத்தின் பாற் பட்டதாம்; (ஆதலால்), அவன் என்றும் தாராகணத்து அமர-அத்திரிசங்கு எக்காலத்தும் நட்சத்திரக் கூட்டத்திலே சேர்ந்திருக்கட்டும்;' என்ருர்-என்று சொன்னர்கள்.

சினங்கொண்ட கௌசிகன் செயலைக் கண்ட தேவர்கள் அவனெதிரில் வந்து கூடி, 'சரண மடைந்தவனைக் காத்தல் என்ற முறையில் நீ செய்தது நியாயமே; ஆதலால், அத்திரிசங்கு தாராகணத்தி

னிடையே சேர்ந்து என்றும் அமர்ந்திருப்பானுக' எனக் கூறிக் கௌசி கனைச் சமாதானம் செய்தனர் என்க.

கடவுள் தானும்: தான்-அசை. கறை தரு எனற்பாலது எதுகை நோக்கிக் 'கறைத்தரு' என்றாயிற்று.

(பி - ம்.) 1. உடைய கோவும்.

2. கறைத்திருக் களனும்; கறைதரு களனும்: மற்றக் கடவுளர்; மற்றை விண்ணவர்; கறைத்தரு களனமான் மற்றைக் கடவுளர் பிறருந்.

3. முனிவனுங்கனைப்: புகல்புகுந்தவனைப் போற்றும்: புகல் புகுந்தவனைக் காத்த: புகல்புரிந்தவனைக் காத்த.

4. அறத்திற னன்று; அறத்திறனென்று; அறத்துறை யென்றுந்; அறத் திறனுகும்: கணத்தொடு மமைக வன்னுன்; அடைக வன்னுன்; அமைய வன்னுன்; அமைகவென்ன; அமைக வென்றூர். (117)

673. அரசமா தவனீ யாதி
யைந்துநா டென்பால் வந்துன்
புரைவிளக் கிடுக வென்னுக்
கடவுளர் போய பின்னர்
நிரைதவன் விரைவி னேகி
நெடுங்கடற் கரசன் வைகும்
உரவிட மதனை நண்ணி
யுறுதவ முஞற்றுங் காலை,

கடவுளர்-தேவர்கள், (மேலும் கௌசிகனை நோக்கி), 'நீ அரச மாதவன் ஆதி-நீ இராச விருடியாகக்கடவாய்; ஐந்து நாள்-(நட்சத் திரங்கள் இருபத்தேழனுள்) ஐந்து நட்சத்திரங்கள், தென்பால் வந்து-(வடதிசையினின்றும்) தெற்கே வந்தமர்ந்து, உன் புரை விளக்கிடுக-உன் பெருமையை விளக்கிக் கொண்டிருக்கட்டும்; என்னு-என்று கூறி; போய பின்னர்-(தம் தம் இருப்பிடம்) போன பிறகு, நிரை தவன்-வரிசையான (திக்குத் தோறும் செய்து வரும்) தவத்தையுடைய கௌசிகன், விரைவின் ஏகி-(அத்தென்றிசையினின்றும்) விரைந்து போய்; நெடு கடல் கு அரசன் வைகும்-பெரிய கடல்களுக்கு அரசனுன வருணன் தங்குகின்ற, உரம் இடம் அதனை நண்ணி-வலிய இடமாகிய மேற்குத் திசையை அடைந்து, உறு தவம் உஞற்றும் காலை-(முன்னிலும்) மிக்க தவத்தைச் செய்துவரும்போது,

இப்பாட்டுக் குளகம், இது 677-ஆம் பாடலில் 'பாதகமலமதுச்சி சேர்த்தான்' என்பதனேடு தொடர்ந்து முடிவுறும்.

கிழக்கிலும் தெற்கிலும் தன் தவத்திற்கு இடையூறு நேர்ந்தமையின், கௌசிகன், அடுத்தபடியாக மேற்குத் திசையை அடைந்தான். இவ்வாறு திசை தோறும் வரிசையாகச் சென்றமர்ந்து தவஞ் செய்தலின் அவனை 'நிரைதவன்' என்றூர். அவன் சினம் தணிந்து சமாதான

மடையும் பொருட்டு, 'இதுவரை அரசனாகிய நீ, அரச மாதவன் (ராஜரிஷி) ஆகுக' என்றும், படைப்புக் காலந்தொட்டு வடக்கேயுள்ள நட்சத்திரங்களுள் ஐந்து உன் படைப்புத் திறனை விளக்கும் வகையில் தெற்கே வந்திடுக என்றும் தேவர்கள் அருள் செய்தனர். அவ்வைந்து நட்சத்திரங்களாவன: அநுஷம், கேட்டை, மூலம், பூராடம், உத்த ராடம் என்பனவாம்.

தேவர்களால் தள்ளப்பட்டுக் கீழே பூமியை நோக்கி விழும் திரிசங்குவைத் தடுத்து அந்தரத்திலே நிறுத்திய கௌசிகன், திரிசங்கு நின்றவிடத்திலேயே அவன் பொருட்டுச்சுவர்க்கம் ஒன்றைப்புதிதாக உண்டாக்கக் கருதி, சப்த ரிஷிகளை வேறாக முதலில் தென்றிசையிலே படைத்திட்டுப் பின்னர்ப் புதிய இந்திரனொருவனையும் படைக்க நினைத்த போது, திரிசங்குவே இந்திரனாக விருக்கட்டுமென்று தீர் மானித்து, இந்திரனுக்குப் பரிவாரமான தேவர்களைப் படைப்பேன் என்று தொடங்க, அப்போது பிரமன் முதலிய கடவுளர் தோன்றிக் கௌசிகனை யின்சொற்களால் சினந் தணிவித்து, 'குருசாபத்தால் நீசனானவன் அவ்வுடம்புடனே சுவர்க்க மடைதல் நியாயமில்லை யன்றோ' என வினவ, 'இந்த வுடலுடனே அவனைச் சுவர்க்க மேற்றுவ தாக நான் வாக்களித்து விட்டமையின், இப்போதுள்ள விடத்தையே சுவர்க்கமாகக் கொண்டு, அவன் நிலையாக அங்கே இருக்குமாறும், நான் படைத்த நட்சத்திரங்களும் நிலைத்திருக்குமாறும் அருள் புரிக' என அவன் வேண்டக் கடவுளரும் இசைந்தனரென்று முதனூலிற் கூறப்பெற்றுள்ளது.

(பி - ம்.) 1. அரைச மாதவநீ யாகி: ஐந்து நாட்டென்பால் வந்து; வைத்துன்.
2. விளக்கிடுதலென்னக்; என்று: போனபின்னை; போய பின்றை.
3. நிறைதவன்: விரைவினெய்தி: கடற்கிறைவன்: வைகல்,
4. உரவிடை: உரனிடை; உறைவிட மதனை; உறைவிடந் தன்னை; உரகுட திசையை; உறுகுட திசையை: உயற்றுங் காலை; இயற்றுங் காலை; முயலுங் காலை; முற்றுங் காலை. (118)

### அம்பரீஷன் செய்திகள்

674. குதைவரி சிலைவாட் டானைக்
கோமக னம்ப ரீடன்
சுதைதரு மொழியான் வையத்
துயிர்க்குயி ராய தோன்றல்
வதைபுரி புருட மேதம்
வகுப்பவோர் மைந்தற் கொள்வான்
சிதைவில கனகந் தேர்கொண்
டடவிக டுருவிச் சென்றான்.

குதை வரி சிலை-குதையோடு, கட்டமைந்த விற்களையும், வாள்-வாட்களையும் (கொண்ட), தானை-சேனைகளையுடையவனும், சுதை

தரு மொழியான்-அமுதம் போல் (இனிய) சொற்களையுடையவனும், வையத்து உயிர்க்கு உயிர் ஆய-உலகத்தில் உள்ள உயிர்த் தொகுதி களுக்கெல்லாம் தான் உயிராகிய, தோன்றல்-பெருமை மிக்கவனு மான, கோமகன் அம்பரீடன்-அரசனாகிய அம்பரீஷனென்பவன், புருட வதை புரி மேதம் வகுப்ப-நரபலி கொடுத்துச் செய்யப்படும் (புருஷ மேதம் என்னும்) யாகத்தைச் செய்யும் பொருட்டு, ஓர் மைந்தன் கொள்வான்-ஓர் இளைஞனை (விலைக்கு) வாங்கக் கருதி, தேர்-தன் தேரில், கனகம் சிதைவு இல கொண்டு-பொன்னைக் குறைவின்றி எடுத் துக் கொண்டு, அடவிகள்-பல காடுகளிலும், துருவி சென்றான்-(அத்த கைய இளைஞனைத்) தேடிச் செல்வானானான்.

குதை-அம்பை வைத்து எய்தற்குரியதாய் வில் நாணில் உள்ள முடிச்சு.

அயோத்தியில் இருந்து அரசாண்ட அம்பரீஷன், உயிர்களி டத்து மிக்க கருணையும் பிற சிறந்த குணங்களும் உடையவனாயினும், யாகத்தில் செய்யப்படும் உயிர்க் கொலை குற்றமாகாதென்ற விதியி னால், பலியின் பொருட்டு ஓர் இளைஞனை நாடிச் சென்றான். ஒரு யாகம் செய்யும்போது, அதற்கென்று கருதி வைத்த விலங்கு (யாக பசு) காணாமற் போயின், ஒரு நரனைப் பலியிட்டேனும் அந்த யாகத்தை முடித்தல் வேண்டும் என்பது விதி. அம்பரீஷன் அவ்வாறு முதலில் அமைத்த யாக பசுவை இந்திரன் கவர்ந்து ஒளித்துவிட்டமையின், அதனைப் பெற முடியாதவனாகி, யாக பூர்த்தியின் பொருட்டு ஒரு நரனைத் தேடிச் சென்றான் என்பர்.

மன்னுயிரைத் தன்னுயிராகக் கருதிக் காத்தல் அரசன் கடனா கும்; 719; புறநா. 186; மணி. 7: 11-12; சூளா. நகரப். 16; பெருங். 2. 11: 17-8. பார்க்க.

(பி - ம்.) 1. குதைவரிச்; குதைவரு: சிலையாட்டானைக்.
2. சுதைவரு: மொழியன்; மொழியின்.
3. புருடயாகம்: வகுப்பதோர்: வகுப்பரோ மைந்தர்; வகுப்பவோர் மகவு.
4. சிதைவிலன்; சிதைவிலக்: சிதைவிலாக்; கனகத் தேர்கொண்டு; கனகங் கொண்டங்கு: அடவிகளுருவிச்; அடவிகடோறுஞ்: செல்வான். (119)

675. நற்றவ ரிசிகன் வைகும்
நனைவரும் பழுவ நண்ணிக்
கொற்றவன் வினவ லோடு
மிசைந்தனர் குமரர் தம்முள்
பெற்றவ ளிளவ லெற்கே
யென்றனள் பிதாமு னென்றான்
மற்றைய மைந்த னக்கு
மன்னவன் றன்னை நோக்கி,

கொற்றவன்-(காடுகளில் தேடிச் சென்ற) அம்பரீஷ மன்னன்' நல் தவம் ரிசிகன் வைகும்-நல்ல தவத்தையுடைய ரிசிகன் என்னும் முனிவன் தங்கியிருந்த, நனை வரும் பழுவம் நண்ணி-பூவரும்புகள் மிக்கதொரு சோலையை யடைந்து, (ரிசிக முனிவனைக் கண்டு), வினவலோடும்-(தான் வந்த செய்தியைக் கூறி, மகனொருவனை விலைக்குத் தரும்படி) கேட்டலும், குமரர்-ரிசிகன் புதல்வரான மூவரும், தம்முள் இசைந்தனர்-தமக்குள் (மனமொன்றி அரசன் விருப்பத்துக்கு) உடன்பட்டனர்; (ஆனல்), பெற்றவள்-தாயாகிய கௌசிகை, இளவல்-இளையமகன், எற்கே என்றனள்-எனக்கே யுரியவன்; (அவனைத் தர இசையேன்) என்றாள்; பிதா-தந்தையாகிய ரிசிகன், 'முன்' என்றான்-'முன்னவன் (மூத்த மகன்) எனக்குரியவன்' என்றான்; மற்றைய மைந்தன்-(இடைப்பட்ட) மற்றொரு மகனான **சுனச்சேபன்** என்பவன், நக்கு-(பெற்றோரின் மனப்பான்மை குறித்துச்) சிரித்து, மன்னவன் தன்னை நோக்கி-அம்பரீஷ மன்னவனைப் பார்த்து,—.

இஃது அடுத்த கவியுடன் தொடரும். முன் என்பது ஆகு பெயராய் முன்னவனைக் குறித்தது.

ரிசிக முனிவன், பிருகு முனிவன் புதல்வனும், கௌசிகனுக்குத் தமக்கையான கௌசிகையின் கணவனுமாவன்; (423-25 பார்க்க). இவன், பிருகு துங்கம் என்னும் மலைச்சாரலில் மனைவியுடனும் மூவர் புதல்வருடனும் இனிது வாழ்ந்து வந்தான். அம்பரீஷன் தன் கருத்து நிறைவேறும் பொருட்டு மிகப்பல விடங்களிற் சென்று தேடியும், ஓர் இளைஞன் கிடைக்காமையால் மிக வருந்தி, இறுதியில் ரிசிக முனிவனை படைந்து தன் காரியத்தைக் கூறி, யாகம் நிறைவேற அருள்புரிய வேண்டுமென்று இரந்து வேண்டி, அவன் புதல்வர் மூவருள் நடுவிலவனான சுனச்சேபனைப் பெற்றுச் சென்றான். மூத்தவனைக் கொடுக்கத் தந்தையும் இளையவனைக் கொடுக்கத் தாயும் இசைந்திலராதலின், மற்றொருவனான நடுப் புதல்வன், தன்னைக் கொடுக்கப் பெற்றோர் இசைந்தமை அவர்கள்சொல்லாமலே அமையும் என்று கருதித்தானே உடம்பட்டு. அரசனுடன் சென்றான். இளைய மைந்தன் பெயர்'சுநகன்' என்பது. கௌசிகையின் மக்களிவர்களாதலின், கௌசிக முனிவன் இவர்களுக்குத் தாய்மாமனாதல் வேண்டும்.

அன்பரீஷன் தன் புரோகிதருடைய மொழிப்படி, நர பசுவாக ஒருவனைக் கொள்ளக் கருதித் தேடி மிகவும் அலைந்து மனச்சோர்வுற்று, இறுதியில் ரிசிக முனிவனையடைந்தான். அம்முனிவனைக் கண்ட மாத்திரத்திலே மன்னனுக்குச் சோர்வு நீங்கி மகிழ்ச்சியுண்டாயிற்று; அதனால், தன் காரியம் நிறைவேறக் கூடுமென்ற நம்பிக்கையும் ஊக்கமுங் கொண்டு, முனிவனிடத்திலே தன் குறையைக் கூறி, யாகம் நிறைவேற எவ்வாறாயினும் அருள் புரிய வேண்டுமென்று இரந்து வேண்டி, மகனுக்கு விலையாக நூறாயிரம் பசுக்களைக் கொடுத்து அவ

ஜனப் பெற்றுச் சென்றுனென்பது வான்மீகத்திற் கண்டது. மூத்தவஜன யும் கடைசிப் புதல்வஜனயும் முறையே தந்தையும் தாயும் தர மறுத் தமை அங்கும் கூறப்பெற்றுளது. இஃது உலக வியற்கை யென்று கௌசிகை கூறியதாகவும் அங்கே காணப்படுகின்றது.

'மூத்த மைந்தஜனப் பிதா விரும்பலும், இஜளய மைந்தஜனத் தாய் விரும்பலும் வழக்கு' (தக்க. 295-உரை); 'மூத்தமக னிடத் தார்வ மீன்றெடுத்த பிதாவினுக்கு முதிரும்' விநாயக புராணம். கட வுள். 6.)

(பி - ம்.) 1. ருசிகன்: நஜனவரு பழுவம்; நஜன தரு பழுவம்; நன்பழுவத்தை.
2. இசைந்தனன்; இயைந்தனன்; இயைந்தனர்.
3. பெற்றவ ளிளவ லென்றுள் பிதா மகன் முன்னே னென்ன.
4. மற்றையோர் மைந்தன்; மற்றையிம் மைந்தன். (120)

இவ்விடத்து ஓர் அதிகப் பாடல்:—

நின்றன னரச னேன்று னீயெஜனக் கொண்டு போகை
நன்றென மொழிந்து நின்று னல்கிய தாயை நோக்கி
யின்றெஜனக் கொடுத்தியோவென் றிறைஞ்சினன் கசிந்து நின்றான்
தன்றுஜண மார்பிற் சேர்த்துத் தழுவலு மவஜன நோக்கி.

676. கொடுத்தருள் வெறுக்கை வேண்டிற்
றெற்கமாம் விழுமங் குன்ற
எடுத்தெஜன வளர்த்த தாதைக்
கென்றவற் றெழுது வேந்தன்
தடுப்பருந் தேரி லேறித்
தடையிலர் படர்த லோடும்
சுடர்க்கதிர்க் கடவுள் வானத்
துச்சியஞ் சூழல் புக்கான்.

(சுனச்சேபன் அம்பரீஷஜனப் பார்த்து), 'எஜன எடுத்து வளர்த்த தாதைக்கு-என்ஜனப் பெற்றெடுத்து ஆளாக்கிய தந்தைக்கு, ஒற்கம் ஆம் விழுமம் குன்ற-வறுமையாகிய துன்பம் கெடும்படி, வேண் டிற்று வெறுக்கை கொடுத்தருள் என்று-வேண்டிய பொருள் கொடுத் தருள்வாயக' என்று கூறி, அவன் தொழுது-அந்தத் தந்தையை வணங்கி விட்டு, வேந்தன்- அம்பரீஷனது, தடுப்பு அரும் தேரில் ஏறி- தடுத்தலரிய (விரைவையுடைய) தேரில் ஏறிக் கொள்ள, (இருவரு மாக), தடை இலர்-யாதொரு தடையு மில்லாதவர்களாய், படர்த லோடும்-செல்லும்போது, சுடர் கதிர் கடவுள்-ஒளிமிக்க கிரணங்கஜள யுடைய சூரியன், வானத்து-ஆசாயத்தில், உச்சி சூழல் புக்கான்-நடு விடத்தை அடைந்தான். (உச்சிப் பொழுதாயிற்று என்றவாறு.)

உச்சி அம் சூழல்: அம்:சாரியை.

சுனச்சேபன், தன் பெற்றோர் கருத்தை முற்றுவித்தல் தன் கடமையென்றும், தன்னை விற்றாயினும் தந்தை பொருள் பெறச் செய்தல் தந்தைக்குத்தான் செய்யுங் கைம்மாறாகுமென்றுங் கருதினான் என்க.

(பி - ம்.) 1. நிதியம் வேண்டிற்று; கொணர்ந்து வேண்டிற்று; வெறுக்கைவேண்டிக்; கொள்கமா; கொள்கநீர்; குறைவரு; குறைவறு; விழுப்பத் தோடும்; விருப்பத்தோடும்; நிதியங் குன்றா; ஒற்கமா விழுக்கங் குன்ற.
2. வளர்த்தி ரென்றங் கவர்தமைத் தொழுது; வளர்த்த தாதைக் கென்றவ னியம்ப; தாதைக் கென்றன னீந்து; தாதைக் கெனவவர்த் தொழுது; தாதைக் கெனவவன் செப்ப வீந்து.
3. அடுப்பருந் தேரினேற்றித்; தேரிலேறித்; தேரிலேற்றித்; தடையிலர் படரவல்லைச்; தடையிலான் படரவல்லைச்; தாண்டுமாத்தூண்டிச் செல்ல; தான் விரைந்தேகுங் காலை; தான் விரைந் தரசர் கோமான் தடையிலான் வழியிற் செல்ல; தாவினன் கடவவெய்ய; தேரினேற்றிக் கடவினன் கடவ வல்லைச்.
4. உச்சியின் சூழல். (121)

677. அவ்வயி னிழிந்து வேந்த
னருங்கடன் முறையி னாற்றச்
செவ்விய குரிசி றானுஞ்
சென்றன னியமஞ் செய்வான்
அவ்விய மவித்த சிந்தை
முனிவனை யாண்டுக் காணாக்
கவ்வையி னோடும் பாத
கமலம துச்சி சேர்த்தான்.

அவ்வயின்-(உச்சி வேளையான) அப்போது, வேந்தன்-அம்பரீஷன், இழிந்து-(தேரினின்றும்) இறங்கி, அரு கடன் முறையின் ஆற்ற-(செய்ய வேண்டிய) அரிய நாட்கடன்களை முறையாகச்செய்ய, செவ்விய குரிசில் தானும்-செப்பமுள்ள உத்தமனான சுனச்சேபனும், நியமம் செய்வான் சென்றனன்- (தானும்) அக்கடன்களைச் செய்யச் சென்றான்; ஆண்டு-அவ்வாறு சென்ற விடத்தில், அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை-பொறாமை முதலிய தீக்குணங்களையடக்கிய கௌசிக முனிவனை, காணா-கண்டு, கவ்வையினோடும்-துயரத்துடனே, பாத கமலம் அது-(முனிவனுடைய) திருவடிகளை, உச்சி சேர்த்தான்-தன் சிரசிலே சூட்டிக்கொண்டான். (நமஸ்கரித்தான்).

கமலமது: சாதியொருமை. அவ்வியம் என்றது, அதனோடு தொடர்புடைய பிற தீக் குணங்களையும் குறிக்கும்.

அம்பரீஷனும் சுனச்சேபனும் அயோத்தியை நோக்கித் தேரில் செல்லும்போது, ஓரிடத்தில் உச்சி வேளையாகவே, அவ்விடத்தில் அப்போது செய்ய வேண்டிய நாட் கடன்களைச் செய்யும் பொருட்டு இருவரும் தேரினின்றும் இறங்கித் தனித் தனியே சென்றனர். அது

கௌசிக முனிவன் இருந்து தவஞ்செய்த விடமாதலால், சுனச்சேபன் தற்செயலாகத் தன் மாமனாகிய கௌசிகனைக் கண்டு, மிக்க துயரத்துடன் நமஸ்கரித்தான் என்க.

அவ்விய மவித்த சிந்தை முனிவன்: 543.

(பி - ம்.) 1. அவ்வயி னிருந்து; அருட்கடன்; முறைகளாற்றிச்.
2. செவ்விய குருசில்; செவ்வியங் குமரன்.
3. அவ்விய மவிந்த; ஆண்டுகாணு.
4. பாதக்கமலமது; பாத கமலத்தே: பாராக்கைம்மலர்; உச்சிச் சேர்த்தான்; உச்சி வைத்தான்; கடிது வீழ்ந்தான். (122)

678. விறப்பொடு வணக்கஞ் செய்த
விடலையை யினிது நோக்கிச்
சிறப்புடை முனிவ னென்னை
தெருமரல் செப்பு கென்ன
அறப்பொரு ளுணர்ந்த மேலோ
யன்னையு மத்தன் ருனும்
உறப்பொருள் கொண்டு வேந்தற்
குதவின ரென்னை யென்ருன்.

விறப்பொடு-(உயிரிழத்தலாகிய) அச்சத்துடனே, வணக்கம் செய்த-தன்னை (சரணடைந்து) வணங்கிய,விடலையை-சிறுவனாகிய சுனச்சேபனை, சிறப்பு உடை(ய) முனிவன்-தவப் பெருமையுடைய கௌசிகமுனிவன், இனிது நோக்கி-குளிரப் பார்த்து, 'தெருமரல் என்னை-உன் மனக்கலக்கத்துக்குக் காரணமென்ன? செப்புக என்ன-சொல்வாயாக' என்றுகூற, (சுனச்சேபன்), 'அறம் பொருள் உணர்ந்த மேலோய்-தரும நுணுக்கங்களை அறிந்த மேன்மையுடையவரே! அன்னையும் அத்தன் தானும்-என் தாயும் தந்தையும், உற பொருள் கொண்டு-மிகுதியாகச் செல்வத்தைப் பெற்றுக்கொண்டு, வேந்தற்கு-அம்பரீஷ மன்னனுக்கு, என்னை உதவினர்-என்னைக் கொடுத்து விட்டனர்;' என்ருன்—.

விறப்பு-அச்சம்; 'விறப்பே வெருஉப் பொருட்டு மாகும்' (தொல். உரி. சூ. 51). சிறப்புடை முனிவன், செப்புகென்ன: தொகுத்தல் விகாரம்.

(பி - ம்.) 1. வெறுப்பொடு; இறப்பொடு; இறப்பிலா: இளவலே: நோக்காச்.
2. சிறப்பொடு; சிறப்புடன்: முனியும்: என்னே தெருமரல்; என்னைத் தெருமரல்; என்னோ தெருமரல்.
3. உணர்ந்தோ யென்றன்; அன்னைநும் முன்னை யென்னே; அன்னையா நும்முனுள் மற்று; அன்னையா நும்முன்னேள் மற்று; அன்னையாள் நும்முனேள்கை: அன்னையா நும்முனளின்று; அன்னைய ரத்தன்ருனும்; அன்னையர் தானு மீன்றேன்; அம்மையு மப்பன்ருனும்.
4. உதவினர்; உதவினள்: உதவி வேண்டி; உவகை வேண்டி; உவகை யோடும்: என்ருனுற்றேன். (123)

679. மைத்துன னோடு முன்னோள் வழங்கிய மாற்றங் கேளாத்
தத்துற லொழிநீ யானே தடுப்பெனின் னுயிரை யென்னாப்
புத்திரர் தம்மை நோக்கிப் போகவேந் தோடு மென்ன
அத்தகு முனிவன் கூற வவர்மறுத் தகறல் காணா,

அ தகு முனிவன்-பெருந்தகுதியுடைய அக்கௌசிக முனிவன், முன்னோள்-தன் தமக்கையும், மைத்துனனோடு-அவள் கணவனும், வழங்கிய-(தம் மகனை விலைக்குக்) கொடுத்து விட்டதாகிய, மாற்றம்-(அந்த) வார்த்தையை, கேளா-(சுனச்சேபன் வாயிலாகக்) கேட்டு, (அவனை நோக்கி), நீ தத்து உறல் ஒழி-நீ மனக்கவலையை விட்டிடு; யானே நின் உயிரை தடுப்பென்-நானே உனதுயிரைப் போகாதபடி தடுத்துக் காப்பேன்;' என்னா-என்று சொல்லி(த் தேற்றி), புத்திரர் தம்மை நோக்கி-தன் புதல்வர்களைப் பார்த்து, 'வேந்தோடும் போக என்ன கூற-(உங்களில் ஒருவன்) இவ்வரசனோடு போகக் கடவன்' என்று கூற, அவர்-அப்புதல்வர்கள், மறுத்து-(தந்தையின் சொல்லை) மறுத்து, அகறல் காணா-(அங்கு நின்றும்) போய்விட்டதைக் கண்டு,

இதுவும் அடுத்த கவியும் குளகம். முன்னோள்-தனக்கு முன்னவள்: தமக்கை. மைத்துனன்-தமக்கை கணவன்; ரிசீகன். யானே என்றதில் ஏகாரம் பிரிநிலை.

கௌசிகன் புதல்வருள் வசிட்ட முனிவன் சாபத்துக்குத் தப்பிப் பிழைத்தவர் நால்வர்; அவருள் ஒருவனை அம்பரீஷனோடு செல்லும்படி முனிவன் பணித்தனன் என்க. பிழைத்தவர் நால்வரென்பதனை 681-ஆம் கவியால் அறிக.

(பி - ம்.) 1. முன்னாள்.
2. ஒழிதி யானே: தடுப்பனுன்: தடுப்பலுன்; தடுப்பனின்; உயிரை யென்று; உயிரையென்னப்.
3. போகவிம் மன்னோடென்ன; போதிர்நீர் வேந்தோடென்ன; போமின் வேந் தோடு மென்ன; வேந்தொடும் போகவென்ன; வேந்தொடும் போமி னென்னா; என்னு; என்றான்.
4. அத்தக; அத்தகை: அகல்கை காணா; அகலல்காணா; அகல்வதானார். (124)

680. எழுங்கதி ரவனு நாணச் சிவந்தன னிருக ணெஞ்சம்
புழுங்கினன் வடவை தீய மயிர்ப்புறம் பொறியிற் றுள்ள
அழுங்கலில் சிந்தை யானீ ரடவிக டோறுஞ் சென்றே
ஒழுங்கறு புளின ராகி யுறுதுய ருறுக வென்றான்.

(தன் சொல்லைப் புதல்வர் மறுத்தது கண்ட கௌசிகன்), எழும் கதிரவனும் நாண-உதய சூரியனும் வெட்கும்படி, இரு கண் சிவந்தனன்-இரண்டு கண்களும் (கோபத்தால்) சிவப்பேறப் பெற்று, நெஞ்சம் புழுங்கினன்-மனம் வெதும்பி, வடவை தீய-வடவைத் தீயும்

தீய்ந்து போகும்படி, மயிர்புறம் பொறியின் துள்ள-மயிர்க் கால்கள் தீப் பொறிகளால் மிக, (அப்புதல்வர்களைக் குறித்து), 'அழுங்கல் இல் சிந்தையால்-(உங்களுக்குள்ள) இரக்கமற்ற மனத்தினல், நீர்-நீங்கள், ஒழுங்கு அறு புளினர் ஆகி-நேர்மையில்லாத வேடர்களாகி, அடவிகள் தோறும் சென்று-காடு காடாகப் போய், உறு துயர் உறுக-மிக்க துன்பத்தை யடைவீர்களாக;' என்முன்-என்று சபித்தான்.

தன் சொல்லைத் தட்டியதும், நல்ல காரியத்தின் பொருட்டு மனமிரங்காமையுமாகிய குற்றங்களால், மக்களிடத்தே மிக்க சினங் கொண்டு அவர்களைச் சபித்தனன் முனிவன்; இதனல், தன் மக்கள் என்ற பட்சபாதமற்ற அவனது தன்மை புலனுகின்றது.

கதிரவன் தோற்றம், உதய காலத்திலேதான் செந்நிறம் மிக்குக் காணப்படுமாதலால்'எழுங்கதிரவனும் நாணக் கண் சிவந்தனன்' என்ருர். உம்மை: உயர்வு சிறப்பு. வடவைதீய: உயர்வு சிறப்பும்மை தொக்கது.

'தந்தை சொல்லை மீறிய நீங்கள், வசிட்டன் புதல்வர் போல முஷ்டிக சாதியினராகி, நாயூனைத் தின்றுகொண்டு, ஆயிரம் ஆண்டுகள் புவியில் உழல்வீர்களாக' என்று சபித்ததாக முதனூல் கூறும்.

(பி - ம்.) 1. சிவந்தன விருகண்.
2. புழுங்கின; புழுங்கிய: வடவைத் தீயின்; படவைத் தீயின்: மயிர்புறம்: பொடியிற்றுள்ள.
3. அழுங்கலில் சிந்தையீர் நீர்; அழுங்கிய சிந்தையானீர்; சிந்தையர்நீர்.
4. ஒழுங்குறு; புளிஞ ராகி; புளிந ராகி. (125)

681. மாமுனி வெகுளி தன்ஞன் மடிகலா மைந்தர் நால்வர்
தாமுறு சவர ராகச் சபித்தெதிர் சலித்த சிந்தை
ஏமுற லொழிக வின்னே பெறுகென விரண்டு விஞ்சை
கோமரு கனுக்கு நல்கிப் பின்னருங் குறிக்க லுற்ருன்.

மாமுனி வெகுளி தன்ஞல்-சிறப்புடைய வசிட்ட முனிவனது கோபத்தால், மடிகலா-இறவாத, மைந்தர் நால்வர் தாம்-(தன்) புத்திரர் நால்வரும், உறு சவரர் ஆக சபித்து-இழிவுடைய வேடராகும்படி சபித்துவிட்டு, எதிர்-எதிரிலிருந்த, சலித்த சிந்தை கோ மருகனுக்கு-கலங்கிய மனத்தையுடைய பெருந்தன்மை மிக்க மருமகனுகிய சுனச்சேபனுக்கு, 'ஏம் உறல் ஒழிக-(நீ) துன்பமடைதலை விட்டிடுக; இரண்டு விஞ்சை இன்னே பெறுக என-(நான் உபதேசிக்கும்) இரண்டு மந்திரங்களை இப்போதே பெற்றுக் கொள்க' என்று கூறி, நல்கி-அம் மந்திரங்களை உபதேசித்து, பின்னரும் குறிக்கல் உற்ருன்-மேலும் சொல்லலானுன்:

வசிட்ட முனிவன் கோபத்தால் கௌசிகன் புதல்வர் மடிந்தமை முன்னே 655-ஆம்பாடலிற்கண்டது. நால்வரும் என்ற உம்மை, விகாரத்தால் தொக்கது. சவரர்: சபர என்னும் வடசொல்லின்

திரிபு. ஏமம் என்பது கடை குறைந்து 'ஏம்' என நின்றது. 'தளர் வொடேமுறுவர்' (1239) என்ற விடத்தும் காண்க.

மந்திரங்களுள் ஒன்று இந்திரனையும் மற்றொன்று உபேந்திரனை யும் குறித்தன; இந்திரன் சுனச்சேபனதுயிரைக் காத்தற்கும், உபேந் திரன் யாகத்தைக் காத்து முற்றுவித்தற்கும் உரியவர்.

(பி - ம்) 1. வெகுளிதன்னில்: மடிகிலா; மடிகலார்.
2. தாமுதிர்: சபரராகச்; சவரராகிச் சலித்திடுந் துயர மிக்கே; சவர ராளுர் சலித்தெதிர் திகைத்த சிந்தை.
3. ஒழிய வின்னே; ஒழிக வின்றே: பெறுக வென்றிரண்டு.
4. கோமரு மகற்கு; கோமகன் றனக்கு: குணிக்க லுற்ருன்; கூறலுற்ருன்.
(123)

682. அரசனோ டேகி யூபத்
தணையுங்கான் மறையை யோதின்
விரசுவர் விண்ணு ளோரும்
விரிஞ்சன்மால் விடைவ லானும்
உரைசெறி வேள்வி முற்று
முனதுயிர்க் கீறுண் டாகா
பிரசமென் ருரா யென்னப்
பழிச்சொடும் பெயர்ந்து போனான்.

(கௌசிகன் தன் மருமகனை நோக்கி), 'பிரசம் மென்தாராய்- தேன் பொருந்திய மெல்லிய பூ மாலை யணிந்தவனே! அரசனோடு ஏகி- (நீ) இவ்வரசனுடன் போய், யூபத்து அணையுங்கால்-(உன்னை) யூபத் தில் பிணைக்கும்போது, மறையை ஓதின்-இம்மந்திரங்களை ஓதுவாயா யின், விரிஞ்சன், மால், விடைவலானும்-பிரம, விட்டுணு, ருத்திரர் களும், விண் உளோரும்-மற்றத் தேவர்களும்,விரசுவர்-(யாகத்திற்கு) வந்து சேருவார்கள்; உரை செறி வேள்வி முற்றும்-பெருமை மிக்க அந்த யாகமும் (இனிது) நிறைவெய்தும்; உனது உயிர்க்கு ஈறு உண் டாகா(து)-உன்னுயிருக்கும் முடிவுண்டாகாது;' என்ன-என்று கூற, (சுனச்சேபன்), பழிச்சொடும்-(தன் மாமனைத்) துதித்தலுடனே, பெயர்ந்து போனான்-அவ்விடத்தினின்றும் நீங்கிப் போனான்.

யூபம்-யாக பசுவை (பலியின் பொருட்டு)ப் பிணைக்கும் தறி; 'யூபஸ்தம்பம்' எனப்படும். அம்பரீஷன் சுனச்சேபனைச் சந்தனம் புஷ் பம் முதலியவைகளால் அலங்கரித்து அழைத்துச் சென்றனனாதலின், 'பிரசமென்தாராய்' என்று விளித்தான். கௌசிகன் கட்டளைப் படியே சுனச்சேபன் செய்தபோது, தேவரும் மூவரும் யாகத்தில் வந்து கூடி னமை அடுத்த கவியால் அறியலாகும்.

பழிச்சு: முதனிலைத் தொழிற்பெயர். உண்டாகா = உண்டா காது; இறுதி குறைந்தது.

(பி - ம்.) 1. அரைசனே டெய்தி: உப்பத்து: அணைக்குபு மறையை; அணைகுபு மறையை; அணைதியிம் மறையை; ஆய்தி; ஆய; ஓதில்; ஓத.
2. விரசுவார்; விரைசுவர்: விரிஞ்சனும் விடைவலோனும்; விடைவல் லானும்.
3. உரைநெறி: முரசெறி: வேள்வி முற்றி: உன்னுயிர்க்கு.
4. பிரசமென்றுரோய்; பிரசமன்றுரோய்; பழிச் சொடுபேர்ந்து: பரி சொடும் பெயர்ந்து. (127)

683. மறைமுனி யுரைத்த வண்ண
மகத்துறை மைந்த னுயச்
சிறையுறு கலுழ னன்னஞ்
சேமுதற் பிறவு மூரும்
இறைவர்தொக் கமரர் சூழ
விளவறன் னுயிரும் வேந்தன்
முறைதரு மகமுங் காத்தார்
வடதிசை முனியுஞ் சென்றான்.

மைந்தன்-சுனச்சேபன், மகம் துறை-யாகசாலையில், (யூபத்தில் பிணைக்கப்பட்டபோது), முனி உரைத்த வண்ணம்-கௌசிக முனிவன் கூறியபடியே, மறை ஆய-மந்திரங்களை (மனத்திலே) செபிக்க, (அப் போது), சிறை உறு கலுழன்-சிறகு வளமுடைய கருடனும், அன்னம்-அன்னமும், சே-இடபமும், முதல்-முதலான, பிறவும்-வேறுபல வாக னங்களையும், ஊரும்-ஏறிச் செலுத்துகின்ற, இறைவர்-(திருமாலும், பிரமனும், உருத்திரனும் முதலான) தலைமைத் தேவர்கள், அமரர் சூழ-தேவர்கள் பலரும் (தம்மைச்) சூழ்ந்து வர, தொக்கு-(யாகசாலை யிலே வந்து) கூடி, இளவல் தன் உயிரும்-இளைஞனாகிய சுனச்சேபனு டைய உயிரையும், வேந்தன்-அம்பரீஷ மன்னன், முறை தரு மக மும்-(வேத) விதிப்படி செய்கின்ற யாகத்தையும், காத்தார்-(அழி யாதபடி) காத்தனர்; முனியும்-கௌசிக முனிவனும், வடதிசை சென்றான்-(தானிருந்த மேற்குத்திசையினின்றும்) வடதிசையில் (தவ மியற்றக் கருதிப்) போனான்.

பிறவும் ஊரும் இறைவர்: வெள்ளானை, ஆட்டுக்கிடா, எரு மைக்கடா முதலிய வாகனங்களையுடைய இந்திரன், அக்கினி, யமன் முதலியோரும் பிறரும். மேற்றிசையிலும் தன் தவத்துக் கிடை யூறுண்டாயினமையின் முனிவன் முயற்சியைக் கைவிடாமல் வட திசையை அடைந்தான்.

(பி - ம்.) 1. மனத்துற மைந்தன்; மகத்தினில் மைந்தன்; மகத்திறை மைந்தன்.
2. சிறையுறை: சேயிபம்: 3. இறைவரோ டமரர்.
4. முறையுறு மகமுங்: காத்தான்: வடாதிசை: முனியும் போனான். (128)

684. வடாதிசை முனியு நண்ணி
மலர்க்கர நாசி வைத்தாங்
கிடாவுபிங் கலைதா னைய
விதயத்தூ டெழுத்தொன் றெண்ணி
விடாதுபல் பருவ நிற்ப
மூலமா முகடு விண்டு
தடாதிருட் படல மூடச்
சலித்ததெத் தலமுந் தாவி.

முனியும் வடதிசை நண்ணி-கௌசிக முனிவனும் வடக்குத் திக்கையடைந்து, ஆங்கு-அவ்விடத்தே, மலர் கரம் நாசி வைத்து-தாமரை மலர்போன்ற மெல்லிய கை விரல்களை மூக்கிலே பொருத்தி, இடாவு, பிங்கலை தாம் னைய-இடையும் பிங்கலையுமாகிய நாடிகள் அடங்க; இதயத்து ஊடு எழுத்து ஒன்று எண்ணி-மனத்திலே ஏகாட்சரமாகிய் ஓங்காரத்தையே தியானித்து, விடாது பல் பருவம் நிற்ப-இடைவிடாது பல வருடங்கள் (சலிப்பின்றி ஒரு நிலையிலே) நிற்க, மூலம்-மூலக்கனலால், மா முகடு விண்டு-சிறந்த உச்சி பிளப்புண்டு, இருள் படலம் தடாது தாவி மூட-இருள் போன்ற புகைத் தொகுதி, தடையின்றி எங்கும் பரந்து மூடுதலால், எ தலமும் சலித்தது-எல்லா வுலகங்களும் நிலைகுலையலாயின. எத்தலமும் சலித்தது: பன்மை ஒருமை மயக்கம்

வடாதிசை: வடதிசை யென்பது ஓசை நயம் நோக்கி நீண்டதென்றேனும், வடாது திசை யெனற் பாலது இறுதி குறைந்த தென்றேனும் கொள்ளலாம். இடா, பிங்கலா என்ற வடசொற்கள் முறையே இடை, பிங்கலை யெனப் பெரும்பாலும் தமிழில் வழங்கும். இங்கே இடா என்றது இறுதியில் உகரச் சாரியை பெற்று இடாவு என்றாயிற்று. னைதல்-அடங்குதல். பருவம்-வருடம்; 498, 524.

(பி - ம்.) 1. வடதிசை: முனிவ னண்ணி; அதனை நண்ணி; வைத் தங்கு.
2. இடாது; பிங்கலையு னைய; பிங்கலையானைய; பிங்கலையதைய; பிங்கலையா னைய; பிங்கலை தானைய; இடாவுரு கலையன் றன்னை; இதயத்தோடு.
3. விடாதுயர்; விடாது நீள்; பருவ நிற்க; நிலமா முகடு.
4. படலைமுடிச்: சலித்ததெத்திசையும்; சலித்ததெத்திறமும்; தாவா. (129)

(வேறு)

685. எயிலெ ரித்தவன் யானையு ரித்துமெய்
பயிலு றத்தனி போர்த்தநன் பண்பெனப்
புயல்வி ரித்தெழுந் தாலெனப் பூதலம்
குபிலு றுத்திக் கொழும்புகை விம்மவே,

எயில் எரித்தவன்-திரிபுரங்களை யெரித்த சிவபெருமான், யானை உரித்து-யானையின் தோலையுரித்து, மெய் பயிலுற-தன்னுடம்போடு பொருந்த, தனி - (வேறொருவருக் கில்லாத) தனித்த வகையில், போர்த்த-போர்த்துக் கொண்ட, நல் பண்பு என-நல்ல தன்மை போல

வும், புயல்-மேகங்கள், விரித்து எழுந்தால் என-(எங்கும்) எழுந்து பரவியது போலவும், கொழு புகை-(கௌசிகனது மூலக்கனலிலுண் டான) மிக்க புகையானது, பூதலம் குயில் உறுத்தி-பூமியைத் தனக் குள்ளே அடக்கிக்கொண்டு, விம்ம-மேலிட, ஏகாரம், ஈற்றசை.

இது குளகப் பாட்டு.

எயில், திரிபுரங்களுக்கு ஆகுபெயர்; 'எயில் மூன்று', 'மூவெ யில்' எனப் பலவிடங்களிலும் இது பயின்று வழங்கும். விரித்து: வலித் தல் விகாரம்; 'எழுந்து விரிந்தாலென' என்று மாற்றிக் கூட்டுக. குயி லுறுத்தல்-பதித்தல்; இங்கே தன்னுளடக்கினமை குறித்தது.

முன் கவியில் இருட் படலம் மூடிற்று என்றதனை விரித்து, உவமைகளுடன் இங்கே கூறுகின்றார். மேல் இரண்டு கவிகளில், பரந்து மூடிய புகையிருட் படலத்தால் நேர்ந்தவற்றைக் கூறுவார்.

(பி - ம்.) 1. யானை யுரித்த நாள்; ஆனையுரித்துமெய்; மும்மத யானையின்.
2. பயிலுறுத்துரி: பயில்வுறுத்துரி; பயிலுறத்திணி; பயிலுரித்துகில். போர்த்தன; போர்த்தவன்; போர்த்தன்ன; போர்த்திடும்: பண்பு போல். 3. எழுந்தா லென்னப்.
4. குயிலுறுத்திக்; குயில்வுறுத்திக்: கொடும்புகை: கொள்ளவே; மூடவே.
(130)

686. தமந்தி ரண்டுல கியாவையுந் தாவுற
நிமிர்ந்த வெங்கதிர்க் கற்றையு நீங்குறக்
கமந்த மாதிரக் காவலர் கண்ணொடும்
சுமந்த நாகமுங் கண்சும் புளித்தவே.

தமம் திரண்டு-(புகையாலாகிய) இருள் ஒருங்கு கூடி, உலகு யாவையும் தாவுற-எல்லா வுலகங்களிலும் பரவியதனால், நிமிர்ந்த வெம் கதிர் கற்றையும்-நிறைந்த சூரிய கிரணத் தொகுதியும், நீங் குற-மறைய, கமந்த-(பொறுப்பு) நிறைந்த, மாதிரம் காவலர் கண் ணொடும்-திக்குப் பாலகர் கண்களுடனே, சுமந்த-(பூமியைத்) தாங்கு கின்ற, நாகம் கண்ணும்-திக்கு யானைகளின் கண்களும், சும்புளித்த- மூடலாயின.

தமம்=நமஸ்: வடசொல். கமந்த-கமம் என்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்த பெயரெச்சம். கமம்-நிறைவு; 'கம நிறைந் திய லும்' (தொல். உரி. 59.). நாகம்-எட்டுத் திக்கு யானைகள்; இவை கீழுலகத்திலிருந்துகொண்டு பூமியைத் தாங்குமென்பர். நாகக் கண் ணும் எனக் கூட்டுக. சும்புளித்தல்-கூசுதல், மூடுதல்; இது சிம்புளித் தல் எனவும் வழங்கும்: 'சிம்மாந்து சிம்புளித்து' (தே. 1617); 'சிம் புளித் தடித்தும்'(பெருங். 4. 12: 240.); 'கண் சிம்புளியா'(பெருங். 4. 14: 47): 'விரிந்த குடைநாட் கோள், கண்டஞ்சிச் சிம்புளித்தார் கண்' (தொல். பொருள். சூ. 140-ந. உரை. மேற். 'பகலெறிப்பது')

திக்குப்பாலகர் மேலுலகத்திலிருப்போர்; திக்கு யானைகள் கீழு லகத்துள்ளன; இவ்விரண்டையுங் கூறவே, புகை கீழுலக முட்பட எங்கும் பரவிய தென்க.

(பி - ம்.) 1. யாவையுந் தன்னுற; யாவையுந் தாமுற.
2. நிமிர்ந்து வெங்கனற்: நீங்குரு: நீங்கின; நீங்கிடக்.
3. கமந்து; கமர்ந்து; கமழ்ந்து; சுமழ்ந்த; கமைந்த; கமைந்து; கவர்ந்து; மாதிரங்: கண்ணொடு; தன்னொடும்.
4. சுமந்த யானையும்: கண்சும் பிளித்தவே; கண்சும் பிளிக்கவே; கண்சும் பிளிப்பவே; கண்கள் சும்புளித்தவே. (131)

687. திரிவ நிற்ப செகதலத் தியாவையும்
வெருவ லுற்றன வெங்கதிர் மீண்டன
கருவி யுற்ற ககனமெ லாம்புகை
உருவி யுற்றிட வும்பர்து ளங்கினர்.

கருவி உற்ற-(உலகம் நிலைபெறுதற்குக் காரணமான) மேகங் கள் பொருந்திய, ககனம் எலாம்-வானிடம் முழுதும், புகை உருவி உற்றிட-(முற் கூறிய) புகையானது ஊடுருவிப் பரவியதனால், செக தலத்து-பூமியிலே, திரிவ, நிற்ப யாவையும்-சர அசரப் பொருள்களா கிய எல்லாம், வெருவல் உற்றன-அஞ்சுதலை யடைந்தன; வெம் கதிர் மீண்டன-வெப்பமுடைய சூரிய கிரணங்களும் (புகையை ஊடுருவ மாட்டாமல்) திரும்பின; (இக்காரணங்களால்), உம்பர் துளங்கினர்- தேவர்களும் நடுங்கினர்கள்.

உம்பரும் என்ற உம்மை தொக்கது.

(பி - ம்.) 1. செகத்தினில் யாவையும்.
2. வெருவ லுற்றென: வெங்கதி மீண்டெனக்.
3. கருவி யற்ற: ககனமெல்லாம்: புகைந்து. 4. உருவி முற்றிட. (132)

தேவர்கள் கௌசிகன்முன் தோன்றி வரமளித்தல்

688. புண்ட ரீகனும் புட்டரு பாகனும்
குண்டை யூர்தி குலிசியு மற்றுள
அண்டர் தாமும்வந் தவ்வயி னெய்திவே
றெண்ட போதனன் றன்னை யெதிர்ந்தனர்.

புண்டரீகனும்-தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், புள் தருபாகனும்-கருடவாகனனாகிய திருமாலும், குண்டை ஊர்தி-இடப வாகனமுடைய சிவபெருமானும், குலிசியும்-வச்சிராயுதமுடைய இந் திரனும், மற்று உள அண்டர் தாமும்-மற்றும் உள்ள தேவர்களும், அவயின் வந்து எய்தி-(கௌசிகன் இருந்த) அவ்விடத்துக்கு வந்து சேர்ந்து, வேறு எண் தபோதனன் தன்னை-(மற்ற முனிவர்களினும்) வேறாக மதிக்கத்தக்க தவச் செல்வனாகிய கௌசிகனை, எதிர்ந்தனர்- சந்தித்தனர்.

புள் என்றது இங்கே பறவைகளுக் கரசனுன கருடனைக் குறித் தது. குண்டை ஊர்தி-காளையாகிய வாகனம்; இஃது அன்மொழித் தொகையாகி, அவ்வாகன முடைய சிவபெருமானைக் குறித்தது. குலி சம்-வச்சிராயுதம்; அதனையுடையவன் குலிசி. கௌசிகன், மன்னனு யிருந்து, தவத்தால் உயர்ந்து பெரும் பேறு பெற்றதனுல், ஏனைத் தவ சிகளினும் சிறப்பாக மதிக்கத்தக்க பெருமையுடயவன்.

(பி - ம்.) 1. புட்டிருப் பாகனும்; புட்டரும் பாகனும். 2. குலிசனும்.
3. தாமுமுவந்துவந்து; தாமு முவந்தவை; யாரும்வந் தவ்வயின்; எய்தியே; எய்திவந்து; எய்திவென்று; அவ்வயினுற்றுறும்.
4. தபோதனர் தம்மை; எதிர்த்தனர்; ஒண்ட வன்றனைக் கண்டுவந் தேத்தினர். (133)

689. பாதி மாமதி சூடியும் பைந்துழாய்ச்
சோதி யானுமத் தூய்மல ராளியும்
வேத பாரகர் வேறிலர் நின்னலால்
மாத போதன வென்ன வழங்கினர்.

மா-பெருமை பொருந்திய, பாதி மதி சூடியும்-பிறைச் சந்திர னைத் தரித்த சிவபெருமானும், பசுமை துழாய் சோதியானும்-பசுமை யான துளசிமாலையணிந்த ஒளி வடிவான திருமாலும், அ தூய்மலர் ஆளியும்-அத்திருமாலின் தூய திருவுந்தித் தாமரையிலுள்ள பிரம னும், (கௌசிகனை நோக்கி), மா தபோதன-பெருந்தவச் செல்வனே! வேத பாரகர்-வேதம் கரைகண்ட வித்தகர், நின் அல்லால் வேறு இலர் என்ன-உன்னையன்றி வேறெவருமிலர் என்று, வழங்கினர்-உப சார வார்த்தை கூறினர்கள்.

வேத பாரகர் வேறிலர் என்றதனுல், பிரம விருடியாயினமை குறிக்கப் பெற்றது.

இவ்விடத்து முதனூலிற் காண்பது வருமாறு:—

சுனச்சேபனைப் பாதுகாத் தனுப்பிய பின் கௌசிகன், மேற்குத் திசையிலேயேயிருந்து மீண்டும் தவஞ் செய்துவருங்கால், அங்கு வந்த மேனகையைக் கண்டு மனங் கலங்கி அவளுடன் பத்து வருட காலம் இன்பமாகக் கழித்த பின், தன் பிழையை யுணர்ந்து, தவம் கேடுற் றமையின் அங்கிருந்து வடதிசையில் சென்று இமயமலைச் சாரலிற் கௌசிகி நதிக்கரையடைந்து கடுந்தவம் புரிய, பிரமன் பிரத்தியட்ச மாகி,உன் தவத்துக்கு உவந்தோம்; நீ மகரிஷியாயினை என்றனன். அத னுல் திருப்தியடையாமல் கௌசிகன், 'நான் பிரம்ம ரிஷியாக வேண் டும்; அவ்வரந் தருக' எனப் பிரமனை வேண்ட, பிரமன், 'நீ இன்னும் ஜிதேந்திரியனுகவில்லை யாதலால் உன் கருத்து இப்போது நிறைவுறுது' எனலும், மீண்டுந் தவஞ் செய்யலானுன். அப்போது இந்திரன், கௌசிகனது தவத்தைக் குலைக்குமாறு அரம்பையை ஏவ, அவள் வந்

துற்றனள். அவளைக் கண்டதும் கௌசிகன் கடுஞ்சினங் கொண்டு 'நீ கல்லாகிப் பதினாயிர வருடங்கள் கிடப்பாயாக' என அவளைச் சபித்து விட்டு, 'இங்கும் என் நிலை யிவ்வாறாயிற்றே' என்று வருந்தி, இனிக் கோபத்திற்குச் சிறிதும் இடங்கொடேன் என்று உறுதி பூண்டு, மீண் டும் கீழ்த்திசையை யடைந்து, ஓராயிரமாண்டுகள் காற்றையன்றி வேறெதுவும் புசியாமல் மிகக் கடுந்தவம் புரிந்து, இறுதியில் பாரணை செய்யக் கருதி ஒரு நாள் அதற்குச் சித்தமாயிருக்கையில், இந்திரன் ஓரந்தணனாகி வந்து அவ்வன்னத்தைத் தனக்கிடுமாறு யாசிக்க, கௌசிகன் சினங் கொள்ளாமலும் யாதொன்றுங் கூறாமலும் அந்தண னுக்கு அன்னத்தை யளித்துவிட்டு, மீண்டுங் கடுந்தவஞ் செய்யலா னான். அப்போது முற் கூறியவாறு அவன் கபாலந் திறந்து புகையுண் டாகி யெங்கும் பெருந்துன்பம் விளைக்கவே, தேவர்கள் கூடிப் பிரம தேவனையடைந்து, 'இனிக் கௌசிகன் கருத்தை நிறைவேற்றாவிடின் உலகமே அழிந்துவிடும்; ஆதலால் அவனை யிப்போதே மகிழ்விக்க வேண்டுமென்று கூறி வேண்ட, பிரமனும் கௌசிகன் முன் தோன்றி 'நீ பிரம்மரிஷி யாகிவிட்டனை; தவத்தை நிறுத்துக' என, கௌசிகன், 'தேவா! நின்னுரை மெய்யாயின், அந்தணருக்குரிய ஓதுவித்தல், வேட் பித்தல் ஆகியவையும் எனக்குறுதல் வேண்டும்; வசிட்டனே வந்து என் தகுதியை அங்கீகரிக்க வேண்டும்' என, பிரம தேவனும் அவ் வாறே செய்வித்தபின் கௌசிகன் மகிழ்ந்து சென்றனன் என்பதாம்.

(பி - ம்.) 2. சோதியோனுமத்: சோதியென்னுமத்: தூமலர்.
3. வேத பாலகர்: வேறிலை: நீயலால்: நீயல்லால்.
4. மாதபோதனன்: என்று வழங்கினர். (134)

இதன்பின் சில பிரதிகளில் உள்ள மிகைப்பாடல் :

என்று கூறி யிமையவர் தங்கண்முன்
வன்ற போத வசிட்டன்வந் தென்னையே
நின்ற வந்தண னேயென நேர்ந்தனன்
வென்றி வெந்திறற் றேவர் வியப்புற.

690. அன்ன வாசகங் கேட்டுணா ரந்தணன்
சென்னி தாழ்த்திரு செங்கர முங்குவித்
துன்னு நல்வினை யுற்றதென் றோங்கினான்
துன்னு தேவர்தஞ் சூழலிற் போயினார்,

அன்ன வாசகம் கேட்டு உணர் அந்தணன்-(தேவர்கள் கூறிய) அவ்வார்த்தைகளைக் கேட்டுணர்ந்த, அந்தணத் தன்மை பெற்ற கௌசிகன், சென்னி தாழ்த்து -(அத்தேவர்கள் முன்னே) தலை வணங்கி, இரு செம் கரமும் குவித்து - செவ்விய இரு கைகளையுங் கூப் பிக்கொண்டு, உன்னும் நல்வினை உற்றது என்று-நான் எண்ணிய நற் செயல் கைகூடிற்றென்று சொல்லி, ஓங்கினான் - மகிழ்ச்சி மிக்கான்; துன்னுதேவர்-அங்குக் கூடிய தேவர்களும், தம் சூழலில் போயினார்- அவரவர் இருப்பிடங்களை யடைந்தனர்.

பிரம்மரிஷி யாகுந் தன்மை பெற்றுவிட்டமையின், கௌசிகனை 'அந்தணன்' என்றார்.

(பி - ம்.) 1. கேட்டுணர்ந் தந்தணன்; கேட்டுவந்தந்தணன்; கேட்டன னந்தணன்.
2. சென்னி தாழ்ந்திரு: சென்னி சேர்த்திரு: செங்கமலங் குவித்து; செங்கர முன்குவித்து; செங்கை மலர்குவித்து.
3. உன்னு நம்வினை: அற்றதென்று; உற்றதொன்று; ஏற்றதென்று; இற்றதென்று.
4. துன்னுந் தேவர்தஞ் சூழலுட் போயினர். (135)

691. ஈது முன்ன நிகழ்ந்த திவன்றுணை
மாத வத்துயர் மாண்புடை யாரிலை
நீதி வித்தகன் றன்னரு ணேர்ந்தனிர்
யாது மக்கரி தென்றன னீறிலான்.

முன்னம் நிகழ்ந்தது ஈது-முன்னே நடந்த செய்தி இதுவாகும்; இவன் துணை-இம்முனிவனுக் கொப்பாக, மாதவத்து உயர் மாண்பு உடையார்-மிக்க தவத்தாலாகிய உயர்ந்த பெருமையுடையவர், இலை-(வேறெவரும்) இல்லை; நீதி வித்தகன்-நியமமும் மெய்யறிவு முடைய இப்பெரியோனது, அருள் நேர்ந்தனிர்-அருளை (நீங்கள்) பெற்றுள்ளீர்கள்; (ஆதலால்), உமக்கு அரிது யாது-உங்களுக்கு அருமையான காரியம் யாதுளது? (ஒன்று மில்லை); என்றனன்-என்று கூறி முடித்தான், ஈறு இலான்-(தவத்திலும் நற்குணங்களிலும் ஓர்) எல்லையற்றவனான சதாநந்தன்.

வித்தகன்றன்: தன், சாரியை.

சக்கரவர்த்தி குமரருக்குக் கௌசிகனுடைய அதிசயமான வரலாற்றை விரிவாகக் கூறிவந்த சதாநந்த முனிவன், 'முன்னே நடந்தது இவ்வாறு' என்று அதனை முடித்து, 'இத்துணைப் பெருமையுடைய இம்முனிவனருள் பெற்றுள்ள உங்களுக்கரியதென்று ஒன்றும் இல்லை யென அவர்களையும் பாராட்டிக் கூறினன் என்றவாறு.

இச்செய்யுளின் அமைதி, முன்னே 644-ஆம் செய்யுட் பொருளை அநுவதித்தது போல் உள்ளது. அங்கும் சதாநந்த முனிவனை 'ஈறிலா வன்றபோதனன்' என்றது காண்க.

(பி - ம்.) 1. முன்னர்; நிகழ்ந்த விவன்றுணை.
2. மாதவத்தினின்; மாதவத்துடை; இல்லை.
3. நீதி வித்தக; நீதியுற்றவன்; தன்னொடு நேர்ந்தனை; நிற்கருள் நேர்ந்தனை; நேர்ந்தவிர்; நேர்ந்தநீர்.
4. யாதுறற்கரிது; யாதுநிற்கரிது. (136)

### சதாநந்த முனிவன் விடைகொண்டேகுதல்

692. என்று கோதமன் காதலன் கூறிட
வென்றி வீரர் வியப்பொ டுவந்தெழா
ஒன்று மாதவன் றடொழு தோங்கிய
பின்றை யேத்திப் பெயர்ந்தனன் றன்னிடம்.

என்று-என்றிவ்வாறு, கோதமன் காதலன்-கௌதம முனி புத்திரனாகிய சதாநந்த முனிவன், கூறிட-(கௌசிகன் வரலாற்றைக்) கூறி முடிக்க, (அதனைக் கேட்ட), வென்றி வீரர்-வெற்றியுடைய வீரர்களாகிய இராம லக்குமணர்கள், வியப்பொடு உவந்து - அதிசயத்தோடு மகிழ்ச்சியுற்று, எழா-(இருக்கைவிட்டு) எழுந்து, ஒன்றும் மாதவன்-பொருந்திய பெருந்தவமுடைய அச்சதாநந்தனுடைய, தாள் தொழுது ஓங்கிய பின்றை-திருவடிகளை வணங்கி யெழுந்த பின்பு, (அம்முனிவன்), ஏத்தி-(அக்குமரரை) ஆசீர்வதித்து, தன் இடம் பெயர்ந்தனன்-தனதிருப்பிடத்துக்குச் சென்றான்.

கௌசிக முனிவனும் குமரர்களும் தங்கியிருந்த விடுதியிலே சதாநந்தர் வந்து குமரர்களுக்குக் கூறியதாக இங்குள்ள இவ்வரலாறு; சனக மன்னனது சபையிலேயே கூறப்பட்டதாகவும், அம்மன்னனும் இதனைக் கேட்டு மகிழ்ந்தனனென்றும் வான்மீகத்தில் காணப்படுகின்றது.

(பி - ம்.) 1. கோதமன் மைந்த னியம்பலும்.
2. வென்றி வீரன் வியப்பொடும் வந்திடாத்; வீரன் விருப்ப மிகுதியால்; வீரர் வியப்பொடுவந்திடத்; வியப்பொடு வந்தியா: வியப்பொடுங் கேட்டுவந்து.
3. துன்று மாதவன்; துன்று மாதவற்; தொன்று மாதவன்; மாதவர் தாடொழக் கோசிகன்; தாளிணை சூடிய: தாளிணைசூடின; அன்று மாதவனைத் தொழுதன்பினால்.
4. பின்றையேத்தப்; பின்றையெய்திப்; பின்றையோதிப்; பின்றையம் முனி; பின்றையும் முனி: பேர்ந்தனன்: தம்மிடம்: நின்ற காலைச் சதானந்த னீங்கினான். (137)

சில பிரதிகளில் இதனோடு கோசிகப் படலம் முடிவுற, மேலே 17 கவிகள் 'கைக்கிளைப் படலம்' என்ற தலைப்பின்கீழ்க் காணப்படுகின்றன.

### இராமபிரான் சீதையை நினைந்திரங்கல்

693. முனியுந் தம்பியும் போய்முறை யாற்றமக்
கினிய பள்ளிக ளெய்திய பின்னிருட்
கனியும் போல்பவன் கங்குலுந் திங்களும்
தனியுந் தானுமத் தையலு மாயினான்.

முனியும் தம்பியும் போய்-கௌசிக முனிவனும் இலக்குமணனும் (எழுந்து) போய், முறையால்-முறைப்படி, தமக்கு இனிய பள்ளிகள் எய்தியபின் - தத்தமக்கு இனிதான படுக்கை

யிடத்தை யடைந்த பின்பு, இருள் கனி போல்பவன்-இருளின் கனிவு (கனிந்த இருள்) போன்ற நிறமுடைய இராமபிரான், கங்குலும்-அவ்விரவும், திங்களும்-(அப்போது தோன்றிய) சந்திரனும், தனியும்-(உடனிருந்த இருவருமில்லாத) தனிமையும், தானும்—, அ தையலும் ஆயினன்-(தன் மனத்திலுறையும்) அந்தப் பெண்ணாகிய சீதையின் நினைவுமாக ஆனான்.

இருட் கனி-இருளின் கனிவு; செறிவு. கனி: முதனிலைத் தொழிற் பெயர். இவ்வாறன்றி, 'இருளாகிய பழம்' என்றலுமாம். கனியும் என்பதில் உம்மை இசைநிறை.

இருள், இராமபிரானது திருமேனி நிறத்தை எல்லாரும் நினைக்கும்படி உள்ளதென்று பிராட்டி கூறுவதாக முன்னே 622-ஆம் கவியிற் கூறியதுங் காண்க.

முனியும் தம்பியும் இனிய பள்ளிகள் எய்தினர் என்றதனால், இராமபிரானுக்குப் பள்ளி இன்னாததாயிற்று என்பது குறித்ததாம். தனிமை ஒருவாறு பிராட்டியை நினைந்திரங்குவதற்கு உதவினும், அவ்விரக்கமும், கங்குலும், திங்களும் சேர்ந்து துன்ப மிகுதியையே விளைவித்தன. பிராட்டியின் நினைவால், அவ்வுருவெளித் தோற்றமும் உண்டாதலின், 'தானும் அத்தையலு மாயினன்' என்றார். தானும் தையலு மாயினன்: ஒப்பு: 'தானுஞ் சிந்தையின், மங்கையு மவ்வழி யன்று வைகினான்' (கிட்கிந்தா. 768).

சபையிலிருந்து கௌசிக முனிவன் வரலாற்றைக் கேட்டு மகிழ்ந்த சனக மன்னன், முனிவனைப் பலவாறு புகழ்ந்து, சூரியாத்த மன வேளையாயினமையின் மாலைக் கடனை முடிக்க முனிவனிடம் விடைபெற்றுச் சென்றதாக முதனூலில் உள்ளது; எனவே, இது, இரவு வந்து இவர்கள் பள்ளிகளெய்தினர் என்றதற் கேற்புடைய தாகின்றது.

(பி - ம்.) 1. தம்பியும் போய் மறையாற்: தம்பியு மொய்மறையாற்; தம்பியு மொய்ம் முறையாற்.
2. பள்ளியுள்; பள்ளியின்: எய்தினர்: பின்னருட்.
3. கனியும் போல்வன. (138)

694. விண்ணி னீங்கிய மின்னுரு விம்முறை
பெண்ணி னன்னலம் பெற்றதுண் டேகொலாம்
எண்ணி னீதல தெண்ணறி யேனிரு
கண்ணி னுள்ளுங் கருத்தினுங் காண்பெனால்.

விண்ணின் நீங்கிய மின்-மேகத்தினின்றும் நீங்கியதொரு மின்னற் கொடியானது, இ முறை-இவ்வாறாக, இன் நல் நலம் பெண் உரு-இனிய நல்ல அழகுடைய பெண்ணின் வடிவத்தை, பெற்றது உண்டே ஆம்-பெற்று வந்துள்ளதே யாகும்; எண்ணின்-(நான்

ஒன்றை) நினைப்பதாயின், ஈது அலது எண்ண அறியேன்-இதுவல்லாத வேறொன்றை நினைக்க முடியாதவனாகின்றேன்; (இவ்வடிவத்தை), இரு கண்ணின் உள்ளும்-இரண்டு புறக் கண்களுள்ளேயும், கருத்தினும்-மனத்தினுள்ளும், (அகக்கண்ணுள்ளும்), காண்பென்-(எப்போதும்) காண்கின்றேன்.

சொல், ஆல்; அசை. காண்பென்: காலவழுவமைதி.

எப்போதும் பிராட்டியை யன்றிப் பிறவற்றை யெண்ணவும் இயலாதபடி இராமபிரான் மனத்தில் அவள் பதிந்து கிடத்தல் கூறப்பட்டது.

முன்பு கன்னிமாடத்திலே பிராட்டி நின்றமை கூறியவிடத்து, 'மின்னரசென்னும்படி நின்றாள்'(580) என்றும், அதனையடுத்து இராமபிரானை, 'அன்னவள், மின்னின் மின்னிய மேனிகண்டானெனச், சொன்ன வண்ணல்' (637) என்றும் ஆசிரியர் கூறிப் போந்ததற்கேற்ப, இங்கும் மின்னலைத் தொடர்புபடுத்திக் கூறினமை காண்க.

(பி - ம்.) 1. நீங்கியோர்: இயங்கிய; விண்ணுரு: விம்முறப்; இன்முறை.
2. பெண்ணி னண்ணிய; உண்டேகொலோ: என்றேகொலோ.
3. எண்ணினஃதலது: எண்ணினன்னலத்து; எண்ணிலஃதல்லது; எண்ணிலீதலது: ஒன்றறியேனிரு; என்றறியேனிரு; எண்ணிலீதலதே யறியேனென.
4. கருத்துளும்; கருத்துள்ளும்: காண்பனால்; காண்பரேல். (139)

695. வள்ளற் சேக்கைக் கரியவன் வைகுமவ்
வெள்ளப் பாற்கடல் போன்மிளிர் கண்ணினாள்
அள்ளற் பூமக ளாகுங்கொ லோவென
துள்ளத் தாமரை யுள்ளுறை கின்றதால்.

வள்ளல் சேக்கை-வள்ளல் தன்மையுடைய (ஆதிசேடனாகிய) படுக்கையையுடைய, கரியவன்-கருநிறத் திருமால், வைகும்-துயிலுகின்ற, அ வெள்ளம் பால்கடல்போல்-அந்த வெள்ளமான திருப்பாற்கடலைப்போல, மிளிர்-விளங்குகின்ற, கண்ணினாள்-கண்களையுடைய அந்நங்கை, எனது உள்ளம் தாமரை உள் உறைகின்றதால்-என்னுடைய மனமாகிய தாமரை மலரிலே வந்து தங்கி யிருப்பதனால், அள்ளல் பூமகள் ஆகுங்கொல் ஓ-பங்கய மலரில் (எப்போதும்) வாழும் திருமகளே யாவளோ!

ஆதிசேடன் திருமாலுக்கு, 'சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம்,நின்றால் மரவடியாம் நீள்கடலுள்-என்றும்,புணையாம் மணி விளக்காம் பூம்பட்டாம் புல்கும், அணையாம் திருமாற் கரவு' (முதல் திருவந்தாதி. 53) என்றபடி, தன்னையே பலவாறு உதவுதலின், வள்ளல் சேக்கை என்றார். கரியவன்: கிருஷ்ணன் என்ற வடசொல்லின் பொருளுடையது. திருமால் துயிலும் பாற்கடலைப் பிராட்டியின்

கண்களுக்கு உவமை கூறியதன் பொருத்தம்: பாற்கடல் கண்ணின் வெள்விழி; பாம்பணை கருவிழி; திருமால் கருவிழியிலுள்ள பாவை எனக் காண்க. திருமாலின் திருமேனி நிறத்தாலே பாம்பணையும் கரியதாகத் தோற்றுவதாம். அள்ளல்-சேறு; அள்ளல்பூ=பங்கஜம்; தாமரை மலர். உள்ளத் தாமரை-இதய கமலம். எப்போதும் தாமரை மலரில் இருப்பவளாதலால், இங்கும் என் மனத்தாமரை மலரில் வந்து தங்குகின்ருள் என்றபடி. விடமும் அமுதும் தோன்றிய பாற்கடலைக் கண்களுக்குவமித்தது, நோய் செய்தலும் அந்நோய்க்கு மருந்தாதலும் உடைமையினுலும் பொருந்துவதாம். ஒப்பு: சீவக. 167-ந. உரை.

(பி - ம்.) 1. வள்ளச் சேக்கைக்; வள்ளற் செங்கைக்; வள்ளற் செங்கட்: வைகுறும்; வைகிய. 2. வெள்ளைப் பாற்கடல்.
3. ஆகக்கொலோ; ஆகிக்கொலோ; ஆகுங்கொலாம்.
4. தாமரையின்; உறைகின்றதே; உறநின்றதே. (140)

696. அருளி லாளெனி னும்மனத் தாசையால்
வெருளு நோய்விடக் கண்ணின் விழுங்கலால்
தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வாயவே.

அருள் இலாள் எனினும்-(அவள்) என்மாட்டுக் கருணை யில்லாதவளாயினும், மனத்து ஆசையால்-என் மனத்திலே (அவள் தூண்டிவிட்ட) ஆசையினுல் (உண்டான), வெருளும் நோய் விட-அஞ்சுதற்குரிய காம நோய் திரும்படி, கண்ணின் விழுங்கலால்-(என்) கண்களாலே (அவளை நான்) விழுங்கி யுட்கொண்டமையினுல், தெருள் இலா உலகில்-தெளிவில்லாத இவ்வுலகத்திலே, சென்று நின்று வாழ் பொருள் எலாம்-சர அசரங்களான எல்லாப் பொருள்களும், (என் கண்களுக்கு), அவள் பொன் உரு ஆய-அவளுடைய பொன் மயமான வடிவமாகவே ஆகிவிட்டன.

இதனுல், 'நோக்குவவெல்லாம் அவையே போறல்' என்ற அவத்தை நிலை கூறப்பட்டது.

தனக்கு அவளிடத்தே ஆசையையும் அதனுலாகிய நோயையுந் தந்துவிட்டு, அவைதீர வந்து தன்னைத் தழுவாமையால் 'அருளிலாள்' என்ருன். தனது மனங் கலங்கிய நிலையை உலகின் மேலேற்றித் 'தெருளிலாவுலகு' என்ருன். அன்றி, அஞ்ஞானம் நிறைந்த வுலகமென்றலுமாம். 'வெருளு நோய்......விழுங்கலால்' என்பதற்கு, 'அஞ்சத்தக்க காமநோயைத் தரும் விடம்போன்ற கண்களால் அவள் என்னை விழுங்கிவிட்டதனுல்' என வுரைப்பாருமுளர். எல்லாம் அவள் பொன்னுருவாய: பிராட்டியின் திருமேனி உருக்கிய பொன்னின் நிறமுடைய தென்பர்.

உலகிற் சென்று நின்று வாழ் பொருளெலாம்: ஒப்பு: 'உலகினிற் சென்று நின்றுவாழ் உயிரெலாம்' (178); ஈற்றடி: ஒப்பு: 'காடுஞ் செடியு மவளாகத் தோன்றுமென் கண்களுக்கே' (அசதிக் கோவை).

(பி - ம்.) 1. அருளிலார்.
2. வெருளி நோயவட்; வெருளி நோய் கெடக்; வெருளினோய் கெடக்; கண்ணில் அழுங்கலால்; கண்ணில் விளங்கலால்; கண்ணின் விழுங்க லாத், 3. தெருளுலா.
4. உருவெலாம் அவர்; உருவாயதே; உருவானதே; உருவானவே; நிறமானதே; நிறமானவே. (141)

697. பூணு லாவிய பொற்கல சங்களென்
ஏணி லாகத் தெழுதல வென்னினும்
வாணி லாமுறு வற்கனி வாய்மதி
காண லாவதொர் காலமுண் டாங்கொலோ.

பூண் உலாவிய-(மணி மாலை முதலிய) ஆபரணங்கள் அசையப் பெற்ற, பொன் கலசங்கள்-(அவளுடைய) பொற்குடம் போன்ற கொங்கைகள், என் ஏண் இல் ஆகத்து-எனது பெருமையில்லாத மார் பிலே, எழுதல என்னினும்-அழுந்தப் பதிதல் இல்லையாயினும், வாள் நிலாம் முறுவல்-ஒளி பொருந்திய புன்சிரிப்புடன் கூடிய, கனி வாய்-கொவ்வைப் பழம்போலும் (சிவந்த)வாயையுடைய, மதி-(அவள் முக மாகிய) சந்திரனை, காணல் ஆவது ஓர் காலம்-(மீண்டும்) காணத் தக்கதொரு நற்காலமேனும், உண்டு ஆம் கொல் ஓ-உண்டாகுமோ!

கொல்; ஐயப் பொருளது.

ஆசை மிகுதியால், பிராட்டியின் உருவெளித் தோற்றத்தைக் கண்டு, அதனைத் தழுவப்புக்கு, அது கைக்ககப்படாமையினால் உண் மையுணர்ந்து,அவளைத் தழுவும்பேறு கிட்டாதாயினும் மீண்டுமொரு முறை அவளைக் காணும் வாய்ப்பேனுங் கிட்டுமோ! என ஏங்குலுற் றான் இராமபிரான்.

'முந்தி யென்னுயிரையம் முறுவ லுண்டதே' (612) எனப் பிராட்டி இராமபிரானது புன்முறுவல் கண்டு அனுபவித்துக் கூறிய தாக முன்னே கூறியது போல, இங்கே இராமபிரானது கூற்றாகப் பிராட்டியின் முறுவலழகைச் சிறப்பிக்கின்றார். எனவே, இவ்விரு வரும் முதலில் ஒருவரையொருவர் நோக்கி, மாறிப்புக்கு இதய மெய் தின நாளில், இருவரிடத்தும் முறுவல் தோன்ற, இருவரும் அதனை நுகர்ந்தின்புற்றனரென்பது பெறப்படும்.

(பி - ம்.) 1. பூணிலாவிய; கலசங்களெண்.
2. எழுதலது; எழுதில; அழுந்தில; அழுத்தில: ஆயினும்.
3. வாயொளி: வாண்மதி.
4. காணலாகுமொர் காலமுண்டாகுமோ. (142)

சில பிரதிகளில் இங்கே காணப்படும் ஒரு பாடல் வருமாறு:—

காதலா லொருத்தியை நினைப்பக் கண்டுயில்
மாதரா ளவன்றிற மறுப்பக் கங்குல்மான்
ஏதிலான் றமியனென் றேக லேனெனு
ஆதலா லிருந்தன ளளிய ளென்செய்வாள்.

(பி - ம்.) 1. கண்டுபின்.
4. இருந்தனளழிந்த நெஞ்சினள்; இருந்தனளளிய ளென்செய்வாள்.

இப்பாடல் மற்றுஞ் சில பிரதிகளில் 'ஆகுநல்வழி' (701) என்பதன் பின்னே யும், வேறு சிலவற்றில் 'விசுகின்ற' (703) என்பதன் பின்னும் காணப்படுகிறது.

698. வண்ண மேகலைத் தேரொன்று வாணெடுங்
கண்ணி ரண்டு கதிர்முலை தாமிரண்
டுண்ண வந்த நகையுமென் றென்றுண்டால்
எண்ணுங் கூற்றினுக் கித்தனை வேண்டுமோ.

எண்ணும்-(எனதுயிரைக் கவர) நினைக்கின்ற, கூற்றினுக்கு-யமன் வடிவாகிய அந்நங்கைக்கு, (அது செய்தற் பொருட்டு), வண்ணம் மேகலை தேர் ஒன்று-அழகிய மேகலாபரண மணிந்த தேர்த்தட்டுப் போன்ற அல்குல் ஒன்றும், வாள் நெடு கண் இரண்டு-வாள் போலும் நீண்ட கண்கள் இரண்டும், கதி முலை இரண்டு-பருத்த தனங்கள் இரண்டும், (இவ்வளவுக்கும் மேலாக), உண்ண வந்த-(எனதுயிரைத் தப்பாது) பருக வந்த, நகை என்ற ஒன்று (உம்) உண்டு-குறுநகை என்ற ஒரு கருவியும் இருக்கின்றது; இத்தனை வேண்டுமோ-இவ்வளவும் வேண்டுமோ!

தேர்: உவமவாகுபெயர். தாம்: பன்மைப் பொருளது. நகையுமென்றென்று என்ற விடத்து உம்மையைப் பிரித்து ஒன்றென் பதனோடு கூட்டுக. என்றென்று: தொகுத்தல். எண்ணும்-'யாவரும் நினைத்தற்குரிய' என்றலுமாம்.

இங்குக் கூறியவற்றுள் ஒவ்வொன்றே உயிர்கவரப் போது மானதாகும் என்றபடி. நகைக்குறிப்பை மீண்டும் குறித்தலின், பெருமானது மனங்கவர்ந்தவற்றுட் சிறந்தது அதுவென்பது போதரும். பிராட்டியும் இதனையே சிறப்பித்துக் கூறினமை முன்னே கண்டோம்.

பெண்ணைக் கூற்றெனல்: 'பெண்ணோ அவளல்லள் பெண் வடிவு கொண்டிருந்து, மண்ணோர்களையெல்லா மாய்க்க வருங் கூற்றே' (உத்தர. 8. 177); 'நல்லார், உறுப்பெலாங் கொண்டியற்றி யான்கொல் வெறுப்பினால், வேண்டுருவங் கொண்டதோர் கூற்றங் கொல்' (கலி. 56: 7-9.); 'பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந் தேன், பெண்டகையாற் பேரமர்க் கட்டு' (குறள். 1083); 'பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்றம்...பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்

டென்', 'வேண்டுருவங் கொண்டு வேறோர், கொலைவே னெடுங்கட் கொடுங் கூற்றம் வாழ்வது' (சிலப். 5: 219-23; 7: 10.); 'கோமக ளுருவமாய்க் கூற்றம் போந்தது' (சீவக. 2451.).

(பி - ம்.) 1. வாளெடுங்; வாளுெடுங்; வாடுவ. 2. கதிர்முலை; தாளிரண்டு.
3. உண்ணிவந்த; உண்ணிவர்ந்த: நகையுமொன் றுண்டரோ; நகையு மொன்றுலென்றால்; நகையுமுண்டாமெனில்; நகையுமுண்டாமென் றால்; நகையென்று மொன்றுண்டால்; நகையொன்றுண்டாமெனின்; நகையென்ப தொன்றுண்டால்; நகையெனு மொன்றுண்டேல்.
4. கூற்றெனக்கு; கூற்றுவற்கு: இத்துணை: வேணுமோ. (143)

699. கன்னல் வார்சிலை கால்வளைத் தேமதன்
பொன்னை முன்னிய பூங்கணை மாரியால்
என்னை யெய்து தொலைக்குமென் றாலினி
வன்மை யென்னுமி தாரிடை வைகுமோ.

மதன்-மன்மதனுனவன், கன்னல் வார் 'சிலை-(தனது) கரும் பாகிய நீண்ட வில்லை, கால் வளைத்து-காலூன்றி (முழுதும்)வளைத்து, பொன்னை முன்னிய-பொன் போன்ற அந்நங்கையை (இடைவிடாது) நினைக்கும்படி, பூ கணை மாரியால்-மலரம்பு மழையினுல், என்னை எய்து தொலைக்கும் என்றால்-(யாவர்க்கும் வலி தொலையாத) என்னை எய்து (என் மன வலிமையையும்) அழிப்பானென்றால், இனி-இப்போது, வன்மை என்னும் இது-(ஆடவர்க்குச் சிறந்த) மன வலிமையென்று சொல்லப்படும் இத்தன்மை, ஆர் இடை வைகுமோ-யாரிடத்திலே தங்கி நிற்குமோ! வளைத்தே: ஏகாரம், இசைநிறை.

வில்லை நாணேற்றும்போது அதன் ஒரு முனையைக் கீழூன்றிக் காலால் அழுத்திக் கொண்டு, மற்றொரு தலையைக் கையாற் பிடித்து இழுத்து வளைத்து நாணேற்றுதல் முறையாதலின், 'கால் வளைத்து' என்றார். மாரி, மிகுதி குறித்தது. முன்னிய - முன்னிட்டுக் கொண்டு எனினும் ஆம்: மென்மையுடைய கரும்புவில், சுரும்பு நாண், அரும்புக் கணைகளைக் கொண்டே மன்மதன் இதனைச் செய்கின்றானே! யென்று தனதெளிமை குறித்தவாறும்.

ஈற்றடி,ஒப்பு: 'ஆண்மை என்னும தாரிடை வைகுமே' (395).

(பி - ம்.) 1. கன்னலின்கருப் புச்சிலை யான்விசைப்; கன்ன முங்கருப் புச்சிலை யானவில்.
2. பொன்னின் மின்னிய: பொன்னை மன்னிய; பொன்னை முன்னியிப்: பூங்கணை மாரிபோல்; பூங்கணை வாளியால்.
3. துளைக்கு மென்றாலெளி; தொலைக்கு மென்றாலினை
4. வன்மை யென்னுமது; வன்மை யெய்துமிது: ஆர்கணின் வைகுமே; ஆர்வசத்தாகுமே; ஆர்கண்ணதாகுமே: ஆரிடை வைகுமே. (144)

700. கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடல்
பள்ள வெள்ள மெனப்பட ருந்நிலா
உள்ள முள்ளுற் றுயிரைத் துருவுமால்
வெள்ளை வண்ண விடமுமுண் டாங்கொலோ.

கொள்ளை கொள்ள - எனதுயிரைக் கவரும் பொருட்டு, கொதித்து எழு-கோபித்து எழுகின்ற, பால்கடல் பள்ளம் வெள்ளம் என படரும்-பாற்கடலின் ஆழமான நீர்ப்பெருக்கைப்போல(எங்கும்) பரவியுள்ள, நிலா-நிலவொளியானது, உள்ளம் உள்ளுற்று-என் மனத்தினுள்ளே புகுந்து, உயிரை துருவும்-எனதுயிரை (விடம்போல) அரிக்கின்றது; (ஆதலின்), வெள்ளை வண்ணம் விடமும்-வெள்ளை நிறமுடையதொரு விடமும், உண்டு கொல் ஓ-(உலகத்தில்) இருக்கின்றதோ?

ஆல், அசை. ஆம், இசைநிறை. கொல்,ஐயப்பொருளது.

கொதித்தெழு நிலா, படரும் நிலா என இயைக்க. பாற்கடலில் தோன்றிய விடம் கருநிறமுடைய தென்பர்; நிலவோ வெண்ணிறமுடையது; அமுதம் எனப்படுவது; ஆயினும் விடம்போல என்னை வருத்துகின்றது; எனவே, வெள்ளை நிறமுள்ள விடமும் உலகத்தில் இருக்கின்றதோ ! எனக் கூறித் தன் வருத்தமிகுதி புலப்படுத்தியவாறு.

'கொள்ளை கொள்ளக் கொதித்தெழு' என்பதனைப் பாற்கடலுக்கு விசேடணமாக்கிக் கூறுதலுமுண்டு. மூன்றாமடியில் 'உள்ள வுள்ள வுயிரை' என்ற பாடங்கொண்டு அதற்குப் பலவாறு பொருள் கூறுவாருமுளர்.

நிலாவுக்குப் பாற்கடல்: சுந்தர. 150.

(பி - ம்.) 1. குதித்தெழு.
2. வெள்ளம்மெனப்; வெள்ளமி தென்னப்: படருந்நில; படர்நிலா; படர்பானிலா ; படர்வெண்ணிலா.
3. உள்ளவுள்ள; உள்ளமுள்ள; உள்ளவுள்ளுற்: உயிரைத் துருவிட; உயிரைத் துருவலால்; உயிரைத் துருவிடும்; உயிரைத் தொடருமால்.
4. விடமுண்டாகுமோ; உண்டேகொலோ. (145)

701. ஆகு நல்வழி யல்வழி யென்மனம்
ஏகு மோவிது வெய்திய காரணம்
பாகு சேர்மொழிப் பைந்தொடி கன்னியே
ஆகும் வேறிதற் கையுற வில்லையே.

ஆகும் நல்வழி அல் வழி-ஆக்கம் தரும் நல்லநெறி யல்லாத (தீய) நெறியிலே, என் மனம் ஏகுமோ-என் மனம் செல்லுமோ ! (செல்லாது); (அதனால்), இது எய்திய காரணம்-(அவளிடத்து என் மனம் காதல் கொண்டதாகிய) இச்செயல் நேர்ந்ததன் காரணம்,

பாகு சேர் மொழி-தேன்பாகு போன்ற இனிய சொற்களையுடைய; பசுமை தொடி-பசும்பொன் வளையல்களணிந்த அவள், கன்னியே ஆகும்-(மணமாகாத அரச) கன்னிகையாகவே இருத்தல் வேண்டும்; இதற்கு வேறு ஐயுறவு இல்லை-இதில் வேறுவகையாக ஐயங்கொள்ளுதற்கில்லை. ஏகாரம்: ஈற்றசை.

இச்செய்யுள் மேலே 'ததையு மலர்த்தாரண்ணல்'(704) என்றதனோடு தொடரும். இடையிலுள்ளவை இடைப் பிறவரல்.

இராமபிரான், தன் மனம் தகாத வழியிலே செல்லா தென்பதில் உறுதியுடைமையால், இப்போது தன் மனத்திற் காதலுண்டானதும் தவறான விடத்திற் சென்றதன்று என்று உறுதி பூண்டான். மகாகவி காளிதாசன் சாகுந்தல நாடகத்திலே, 'சான்றோர், ஐயப்பாட்டிற்குரிய விடங்களில், தம் அந்தக் கரணத்தின் போக்கையே ஆதாரமாகக் கொள்வர்' (அங்கம்-1. சுலோகம்-20) என்று கூறியுள்ளமை இங்கே கருதுதற்குரியது. கிட்கிந்தா. 783-உரைக் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. ஏகு நல்வழி: அல்லதின் கென்மனம்.
2. ஆகுமே; ஏகுமே: அதற்காகிய: அது வெய்திய; அது வேயதன்; இதற்காகிய; இதற் கெய்திய; இதுவேயிதன்; இதுவே யதன்.
3. பாகுபோல்; பாகுமென்.
4. ஆகும் வேறதற்கு; ஆகுமாமதற்கு; ஆகுமாலதற்கு; ஆகுமே யிதற்கு; ஆகும்மாலிதற்கு; ஆகும்மேயதற்கு; ஆகுமாசைக்கோர். (146)

### நிலாப்பாடு

702. கழிந்த கங்கு லரசன் கதிர்க்குடை
விழுந்த தென்னவு மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதற் கோதறு சுட்டிபோய்
அழிந்த தென்னவு மாழ்ந்தது திங்களே.

கழிந்த-(அதுவரை அரசு வீற்றிருந்து) காலஞ்சென்ற, கங்குல் அரசன்-இரவென்னும் அரசனது, கதிர் குடை விழுந்தது என்னவும்-ஒளி பொருந்திய வெண்கொற்றக் குடை விழுந்தது போலவும், மேல் திசையாள்-மேற்குத் திசையாகிய பெண்ணரசியினது, சுடர் கொழுந்து சேர்-நல்லொளியுடைய, கோது அறு நுதல் சுட்டி-குற்றமற்ற நெற்றிச் சுட்டியானது, போய் அழிந்தது எனவும்-கெட்டொழிந்தது போலவும், திங்கள்-சந்திர மண்டலம், ஆழ்ந்தது-மேல் கடலுள் மூழ்கியது. ஏ-ஈற்றசை.

இரவை அரசனாகவும், மேற்குத் திசையை அவ்வரசன் தேவியாகிய பெண்ணாகவும், சந்திர மண்டலத்தை இரவரசனது குடை, அரசியின் நெற்றிச் சுட்டி எனவும் உருவகித்து, சந்திராஸ்தமனம் அரசன் குடை விழுந்து அவனழிவையும், அரசியின் நெற்றிச் சுட்டி

தொலைந்து அவள் மங்கலமிழந்தமையையும் குறிப்பதெனத் தற்குறிப் பேற்றமாகக் கூறுகின்றார். அடுத்த பாடலுள் திசைகளனைத்தையும் சந்திரன் தேவிமாராகக் கூறுவர். சந்திராஸ்தமனத்தை வேறுவகை யாகக் கூறுவதும் காண்க; 1106.

மேற்றிசையைப் பெண்ணாக உருவகித்தமை: 'பால்வாய்ப் பிறைப்பிள்ளை யொக்கலைக் கொண்டு பகலிழந்த, மேல்பாற் றிசைப் பெண் புலம்புறு மாலை' (நம்மாழ்வார் திருவிருத்தம். 35).

(பி - ம்.) 1. கழிந்து கங்குல்.
2. விழுந்ததாமென: மேற்றிசையான்; மேற்றிசைவாள்.
3. சுட்டியோ. (147)

708. வீசு கின்ற நிலாச்சுடர் வீழ்ந்ததால்
ஈச னாமதி யேகலுஞ் சோகத்தால்
பூசு மென்கல வைப்புனை சாந்தினை
ஆசை மாத ரழித்தன ரென்னவே.

ஈசன் ஆம் மதி ஏகலும்-(தங்கள்)நாயகனாகிய சந்திரன் கழிந்து போன வளவிலே, ஆசை மாதர்-(அச்சந்திரனுடைய) அன்புக் குரிய மனைவிமாராகிய திசைப் பெண்கள், சோகத்தால்-(கண வனை யிழந்த) வருத்தத்தினாலே, புனை பூசும்-அலங்காரமாகத் தம் மேனியிலே பூசப்பெற்ற, மென்கலவை சாந்தினை-மென்மையான சந்தனக் கலவையை, அழித்தனர் என்ன-அழித்துவிட்டனர் என்னும் படி, வீசுகின்ற நிலா சுடர் வீழ்ந்தது-(எங்கும்) பரந்திருந்த நில வொளி மறைந்தது. வீழ்ந்ததால்: ஆல், அசை.

சந்திரமண்டலம் மறைந்தவளவிலே அதனொளியும்மறைந்தது; அம்மறைவை, சந்திரனுடைய ஆசை மனைவிமாரான திசைப் பெண் களின் மேனியிற் பூசிய கலவைச் சந்தனத்தை அவர்கள் கணவனை யிழந்த வருத்தத்தால் அழித்தது போலுமெனத் தற்குறிப்பேற்ற வுருவகமாகக் கூறினார். ஆசை-திக்கு, அன்பு என்ற இருபொருள் பட அமைந்திருக்கும் நயம் ஓர்க.

(பி - ம்.) 1. வீசிநின்ற; நிலாக்கதிர்; வீழ்ந்ததால்; வீழ்தலும்.
2. ஈசனார்மதி; ஈசனாம்மதி; ஈசனும்பதி; ஈசனுண்மதி: ஏகலுஞ் சேர்ந்த தால். 3. பூசு வெண்கலவைப்; வெங்கலவை.
4. அழிந்தவர்; என்பவே. (148)

### கதிரவன் தோன்றுதல்

(வேறு)

704. ததையுமலர்த் தாரண்ண லிவ்வண்ண
மயலுழந்து தளரும் வேலை
சிதையுமனத் திடருடையச் செங்கமல
முகமலரச் செய்ய வெய்யோன்
புதையிருளி னெதிர்கின்ற புகர்முகயா
னையினுரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி யெனுங்கடவு ணுதல்கிழித்த
விழிபோல வுதயஞ் செய்தான்.

ததையும் மலர் தார் அண்ணல்-நெருங்கிய பூக்களால் தொடுத்த மாலையை யணிந்த புருஷோத்தமனான இராமபிரான், இ வண்ணம்-மேற்கூறியவாறு, மயல் உழந்து-விரகத்தால் வருந்தி, தளரும் வேலை-அயர்கின்றபோது, செய்ய வெய்யோன்-செந்நிற முடைய வெப்பமான கிரணங்களையுடைய சூரியன், சிதையும் மனத்து இடர் உடைய-(இராமபிரானது) நிலைகுலைந்த மனத்திலுள்ள துன்பம் நீங்கவும், செங்கமலம் முகம் மலர-(இயற்கையில்) செந் தாமரைப் பூப்போன்ற தன்னுடைய முகம் மலரவும், புதை இருளின் எதிர்கின்ற -(எல்லாவற்றையும்) மூடும் இருளென்ற பெயரோடு எதிர்த்து வந்த, புகர் முகம் யானையின் உரிவை போர்வை போர்த்த-புள்ளிகளையுடைய யானையின் தோலாகிய போர்வையைப் போர்த்துக் கொண்ட, உதயகிரி எனும் கடவுள்-உதயகிரி என்று சொல்லப் படுகிற உருத்திரனது, நுதல் கிழித்த விழிபோல-நெற்றியினின்றும் புறப்பட்ட தீக்கண்ணைப்போல, உதயம் செய்தான்-உதித்தான்.

உதயகிரியை உருத்திரமூர்த்தியாகவும், காரிருளை அவ்வுருத்திர மூர்த்தி உரித்துப் போர்த்த யானைத் தோலாகவும், உதயசூரியனை உருத்திரனின் நெற்றிக் கண்ணாகவும் உருவகித்தார். விரகவேதனை யுறுவோர், பொழுது புலர்ந்தால் அவ்வேதனையை மறந்து வேறு செயல்களில் ஈடுபடுவராதலால், 'சிதையும் மனத்து இடர் உடைய, முகம் மலர' என்றார். உடைதல்-சிதறிப்போதல். சூரியோதயத்தால் தாமரைகள் மலர்வதை மேலே கூறுவாராதலால், இங்கே இராமபிரா னது முகமென்று கூறப்பட்டது. முகத்திலே சிவந்த புள்ளிகளைப்பெற் றிருப்பது சிறந்த யானைகளுக்குரிய இலக்கணமாதலால் 'புகர்முக யானை' யென்றார். புள்ளிகளாக இங்கே நட்சத்திரங்களைக் குறிக் கலாம்.

(பி - ம்.) 1. அவ்வண்ணம்; துயருழந்து; துயருழன்று: தளருமேல்வை; தளரு மெல்லை; தளரும் வேலைச்.
2. இடருடைய செங்கமலம்: முகையவிழச்.
3. இருளி னெழுகின்ற; எதிர்நின்ற; இடைநின்ற; வெளிநின்ற.
4. நுதல் கிழிந்த; நுதற்கிழித்த; நுதல்விழித்த; விழியேபோல். (149)

705. விசையாடற் பசும்புரவிக் குரமிதிப்ப
வுதயகிரி விரிந்த தூளி
பசையாக மறையவர்கைம் மலர்நறையு
நிறைபுனலும் பரந்து பாய
அசையாத நெடுவரையின் முகடுதொறு
மிளங்கதிர்சென் றணைந்து வெய்யோன்
திசையாளு மதகரியைச் சிந்தூர
மப்பியபோற் றிகழு மாதோ.

விசை ஆடல்-வேகத்தையும் வெற்றியையுமுடைய, பசுமை புரவி-(சூரியனது தேரிலே பூட்டிய) பச்சைக் குதிரைகளின், குரம் மிதிப்ப-கால்குளம்புகள் மிதித்தலால், உதயகிரி விரிந்த தூளி-உதய பருவதத்திலேபரந்த செந்தூளிகள்,பசை ஆக-நனையும்படி,மறையவர்-அந்தணர்களுடைய, கை மலர் நறையும்-கைகளிற் பொருந்திய பூக்களின் தேனும், நிறை புனலும்-(அவர்கள் கையில்)நிறைந்த (அருக்கிய) நீரும், பரந்து பாய-எங்கும் ஓடிப் பரவ, அசையாத நெடுவரையின் முகடு தொறும்-அசைவில்லாத பெரிய அவ்வுதயகிரியின் சிகரங்களிலெல்லாம் இளகதிர் சென்று அணைந்து-(சூரியனுடைய)இளங்கிரணங்கள் போய்ப் படிதலால், வெய்யோன்-சூரியன், திசை ஆளும் மதம் கரியை-(தன் கிழக்குத்) திசையைக் காக்கும் மதயானைக்கு, சிந்தூரம் அப்பிய(து) போல்-சிந்தூரத்தைக் குழைத்து அப்பியது போல, திகழும்-விளங்கும். மாது, ஓ: அசை. பரந்து பாய என்பதனைப் பாய்ந்து பரவ என விகுதி பிரித்துக் கூட்டுக.

அந்தணர்கள் சந்தியா காலங்களில் மந்திரங்களுடனே கொடுக்கும் அருக்கிய நீர் வச்சிராயுதம் போலச் சென்று, அந்திக் காலத்தில் சூரியனைச் சூழ்ந்துகொண்டு அவனது செலவுக்குத் தடை செய்யும் 'மந்தேகர்' என்ற அசுரர்களை அழிக்குமென்பது வேத நூற்றுணிபு. அருக்கியங் கொடுக்கும்போது அந்தணர், தம் கையிற் கொண்ட மலருடனே நீரைக் கொடுத்தலின், மலர்களிலுள்ள தேனும் நீரோடு கலந்து பாய என்றார். உதயகிரியிலே சூரியனுடைய தேர்க் குதிரைகளின் கால் மிதிப்பால் எழுந்த செந்தூளி, அந்தணர் அருக்கிய நீரால் பசைகொண்டு குழம்பாகிச் சிகரங்களிற் படிய, சிந்தூரக் குழம்பு போன்ற அதனைச் சூரியன் தன் கிரணக்கையால் கிழ்த்திசை யானையின் முகத்தில் அப்பியது போலுமெனத் தற்குறிப்பேற்றஞ் செய்தார்.

சூரியன் தேர்க்குதிரைகள் ஏழென்பதும், அவை பச்சை நிறமுடையன வென்பதும்: 338. யானையின் முகத்தில் சிந்தூரம் பூசுதல்: 'சிந்தூரத் திலகநுதற் சிந்துரத்தின் மருப்பொசித்த செங்கண் மாலே' (வி-பா. கிருட்டினன்றூது).

(பி - ம்.) 1. மிசையாடற்: குளமிதிப்ப; கால்மிதிப்ப: மீதிற்றூளி; மீதராக.
2. மறையவர்கைந் நறைமலரும்; மறையவர்கை நறுமலரும்; மறையவர்கை விரைமலரும்; மறையவர்கை நிறைபுனலும்; நறும்புனலும்: பரிந்து பாய.
3. இசையாத நடுவரையின்: முகடு தொடும்: நெடுங்கதிர் சென்று: அணைந்த; அணவவேய்ந்த; அடைந்து வேகத்; அடைந்து வேயத்.
4. மதகரிகள்; மதகிரிகள்; மதக்கரிகள்; மதகரிமேற்: அப்பினபோல்; பரப்பியபோல்: சிவந்த மாதோ; திகழ்ந்த மாதோ. (150)

706 பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற்
பொருள்வயினிற் பிரிந்து போன
வண்டுதொடர் நறுந்தெரிய லுயிரனைய
கொழுநர்வர மணித்தே ரோடுங்
கண்டுமனங் களிசிறப்ப வொளிசிறந்து
மெலிவகலுங் கற்பி னார்போல்
புண்டரிக முகமலர வகமலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்.

பண்டு-(தலைவிமாரைப் பிரிதற்கு) முன்னே, வரும் குறி பகர்ந்து-(தாம் மீண்டு வரும்) காலவரையை (த் தலைவிமாருக்குக்) கூறி, பாசறையின்-போர்மீதும், பொருள் வயினின்-பொருளீட்டு தற்கும், பிரிந்து போன—, வண்டு தொடர் நறு தெரியல்-வண்டுகள் (விடாது) மொய்க்கின்ற நல்ல மணமுடைய பூமாலையணிந்த, உயிர் அனைய கொழுநர்-உயிர் போன்ற கணவன்மார், மணிதேரோடும்வர-மணிகள் கட்டப்பெற்ற அழகிய தேரிலேறி (மீண்டு)வர, கண்டு-அதனைப் பார்த்து, மனம் களி சிறப்ப-மனமகிழ்ச்சி மிக, ஒளி சிறந்து-(கணவரைப் பிரிந்ததனால் இழந்திருந்த தம் உடலின்)ஒளிமேம்பட்டு, மெலிவு அகலும்-மனத்தளர்ச்சியும் நீங்கப்பெற்ற, கற்பினார் போல்-கற்புடைய மகளிரைப் போல, பூ பொய்கை எல்லாம்—பூக்கள் நிறைந்த தடாகங்களெல்லாம், புண்டரிகம் முகம் மலர-தாமரைப் பூக்களாகிய முகங்கள் மலர்ச்சிபெற, அகம் மலர்ந்து-உள்ளிடமும் அழகுபெற்று, பொலிந்தன-விளங்கின.

பாசறை, போர்மேற்சென்றோர் படைகளுடன் தங்குமிடம்; எனவே, பாசறையிற் பிரிதல் என்றது வினைவயிற் பிரிதலாகும். வினை வயினும் பொருள் வயினும் பிரிந்த தம் கணவன்மார், குறித்த காலத்திலே திரும்பி வந்தபோது கண்டு மகிழும் கற்புடை மகளிர் போல, முன்னாள் தம் கணவனான கதிரவன் மறைதலும் பிரிவாற்றாது வாடிக் குவிந்த வனச மலர்கள், மறுநாள் அக்கதிரவன் மீண்டும் வரக்கண்டு களித்து மலர்ந்தன என மகளிரை உவமையாக்கிக் கூறுகின்றார்.

உயிரனைய கொழுநர் ஒப்பு: 'ஆடவருயிரெனவருகு போயினார்' (829). 'பொருடரப் போயினர்ப் பிரிந்த பொய்யுடற், குருடரு தேர்

மிசை யுயிர்கொண் டுய்த்தலான்', 'விழைவுறு பொருள்தரப் பிரிந்த வேந்தர்வந், துழையுற வுயிருற வுயிர்க்கு மாதரின்' (கிட்கிந்தா. 453, 456); 'இன்னுயி ரன்ன பிரிவருங் காதலர்' (நற். 227); மனையுறை மகளிர்க் காடவருயிர்' (குறுந். 135).

(பி - ம்.) 1. பாசறையும் பொருள் வயினும் பரிந்துபோன; பரிந்துபோந்து; பிரிந்து போந்து.
2. வண்டுபடர்; வண்டுபடு; நறுந்தொங்கல்; கொழுநன்மா மணித் தேரோடு.
3. களி சிறந்து; முகமலர்ந்து; மெலிவகற்றும்.
4. முகமலர நகைமலர்ந்து. (151)

707. எண்ணரிய மறையினொடு கின்னரர்க
ளிசைபாட வுலக மேத்த
விண்ணவரு முனிவரரும் வேதியருங்
கரங்குவிப்ப வேலை யென்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கி
னடம்புரிவா ளிரவி யென்னும்
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்க ளெல்லாம்.

எண் அரிய மறையினொடு-அளவிட்டு மதித்தற்கரிய வேதங் களுடனே, கின்னரர்கள்-கின்னரர் என்ற தேவ சாதியாரும், இசை பாட-கானம் பண்ணவும், உலகம் ஏத்த-உயர்ந்தோரெல்லாம் துதிக் கவும், விண்ணவரும்-தேவர்களும், முனிவரரும்-சிறந்த முனிவர்களும், வேதியரும்-வேதமோதும் அந்தணர்களும், கரம் குவிப்ப-கை கூப்பி வணங்கவும், வேலை என்னும்-கடலென்று சொல்லப்படுகிற, மண் ணும் அணி முழவு அதிர-மார்ச்சனை பொருந்திய அழகிய மத்தளம் ஒலிக்கவும், வான் அரங்கில் நடம் புரி-ஆகாயமாகிய நடனசாலையிலே நர்த்தனஞ் செய்கிற, வாள் இரவி ஆன-ஒளிமிக்க சூரியனென்கிற, கண்ணுதல் வானவன்-நெற்றிக் கண்ணுடைய உருத்திரமூர்த்தியினது, கனகம் சடை விரிந்தால் என-பொன்னிறமான சடை (அவிழ்ந்து) விரிந்தது போல, கதிர்கள் எல்லாம்-(சூரியனுடைய) கிரணங்களெல் லாம், விரிந்த-எங்கும் பரவின.

கதிரவனை, நடனமாடும் சிவபெருமானாக உருவகித்து, நடன மாடுங்கால் பெருமானது செஞ்சடை விரியும் தோற்றத்தைக் கதிரவ னொளிக் கிரணங்கள் பரவுதலுக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றார். இயற்கை யில் கதிரவனொளி பரவுதலைச் சிவபெருமான் சடை விரிந்ததுபோலு மென்றது, தன்மைத் தற்குறிப்பேற்றவணி யாகும். சூரியன் நடனஞ் செய்வதாகக் கூறுதல், அவன் கிரணங்கள் அசைதல்போலக் காணப் படும் தோற்றங் கருதிப் போலும். 'மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கிற், பாயிரு ளென்னும் படாம் வாங்கிச் — சேய் நின்,

மறைந்தாரணம் பாட ஆடிப்போய் வெய்யோன், மறைந்தான் குட பால் வரை' (நள. 98) என்பது ஈண்டு ஒப்பிடத்தகும். ஈற்றடி: ஒப்பு. 'ஞாயிறு சூழ்ந்தெரிகின்ற வெங்கதி ரொத்தது செஞ்சடை' (பொன் வண்ணத். 26).

(பி - ம்.) 1. மறைகளொடும்.
2. முனிவர்களும்; மாதவரும்: கரங்கூப்ப; கைகூப்ப; வேலையென்ன.
3. மன்னுமணி; எண்ணுமணி; நண்ணுமணி: மண்ணுமுழ வதிர விசும்பரங்கினிடை; முழவதிர விசும்பரங்கின்: நடம்புரிவான்; நடம்புரியும்; நடமாடும்: இரவியான; இரவியென்பான்.
4 சடை விரித்தால்; சடை விரித்தான்; சடை விதிர்த்தான்; சடை விதிர்ந்தது: என விரித்த; என விரித்தான். (152)

### இராமபிரான் துயிலெழல்

708. கொல்லாழி நீத்தங்கோர் குனிவயிரச்
சிலைதடக்கைக் கொண்ட கொண்டல்
எல்லாழித் தேரிரவி யிளங்கரத்தா
லடிவருடி யனந்த றீர்ப்ப
அல்லாழிக் கரைகண்டா னாயிரமா
மணிவிளக்க மழலுஞ் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி
நெடுங்கடலுட் டுயில்கின் றானே.

தட கை-(முழந்தாள் வரை) நீண்ட (தன்) கையிலே, கொல் ஆழி நீத்து-(தீயோரை) அழிக்கும் சக்கராயுதத்தை நீக்கி, அங்கு-அவ்விடத்தில், ஓர் குனி வயிரம் சிலை கொண்ட - வளைந்ததும் உறுதியுடையதுமானதொரு (கோதண்டம் என்ற) வில்லைத் தாங்கிக் கொண்ட, கொண்டல்-மேகம் போன்றவனும், ஆயிரம் ஆம்-ஆயிர மெண்ணிக்கையுடைய, மணிவிளக்கம்-இரத்தின தீபங்கள், அழலும் பிரகாசிக்கின்ற, சேக்கை-(ஆதிசேடனாகிய) படுக்கையமைந்த, தொல் ஆழி துயிலாதே-பழமையான திருப்பாற்கடலிலே யோகநித்திரை செய்யாது (விட்டு), துயர் ஆழி நெடு கடலுள்-(இங்கே பிராட்டியைச் சேராமையால் உண்டான) வருத்தமாகிற ஆழ்ந்த பெரிய கடலிலே, துயில்கின்றான்-(ஆழ்ந்து) மயங்கிக் கிடப்பவனுமான இராமபிரான், எல் ஆழி தேர் இரவி - ஒளிபொருந்திய ஒற்றைச் சக்கரத் தேரையுடைய சூரியன், இளம் கரத்தால் அடிவருடி-(வெப்பங் குறைந்த) இளங் கிரணங்களால் (தன்) பாதங்களைத் தடவிக் கொடுத்து, அனந்தல் தீர்ப்ப-(தன்) மயக்கத்தைத் தீர்க்க, அல் ஆழி கரை கண்டான்-இரவென்னும் கடலின் கரையைக் காண்பவனானான்.

கொண்டல்: உவம வாகுபெயர்.

இராமபிரான் விரகதாபத்தினால் இரவிலே பெரும்பாலும் உறக்கங் கொள்ளாது வருந்தி, வைகறைப் போதிலே சற்றுக் கண்ண

யர, சூரியோதயமாகி இளவெயில் தன் மேனியிற் பட்டமாத்திரத்திலே துயிலுணர்ந்தமை இதனாற் பெறப்படும். இதனைக் கதிரவன் அடிவருடித் துயிலுணர்த்தினதாக உபசரித்தார். சூரியன், தன் குலச்சிரேட்டனான இராமபிரான் உரிய காலத்திலே துயிலுணர்ந்து நாட்கடன்களைச் செய்யவும், மேலே நிகழவிருக்கும் நல்ல காரியங்களிலே ஈடுபடவும் வேண்டிப் பிரானைத் துயிலுணர்த்தினானென்க. பெருமையுடையோரைத் துயிலுணர்த்த வேண்டின், அவரடி தொட்டு உணர்த்துதல் மரபு; கூனி கைகேயியைத் துயிலெழுப்பக் கருதிய போது அவளடியைத் தொட்டெழுப்பினாள் என்பர்; அயோத். 142. ஆதிமூர்த்தி அநந்த சயனத்திலே அறிதுயி லமர்பவன், அதனைவிட்டு, இங்கே தான் கொண்ட கோலத்திற்கேற்பத் துயருழந்தான். விரக வேதனை யுறுவோர்க்கு இராப்பொழுது மிக நீளுவதாகத் தோன்றுமாதலால், 'அல்லாழி' என்றார். கொண்டல் ஆழி நீத்துச் சிலை கைக்கொண்டது என்றது ஒரு நயம்.

இரவைக் கடல் என்றல்: ஒப்பு: 'கங்குல் வெள்ளங் கடலினும் பெரிதே'(குறுந்.387); 'நிறை புணையா யாமநெடுங்கடல் நீந்துவேன்'; 'இருண் மாலை வெள்ளத்துள்' (பு-வெ. 298, 328). ஆயிரமா மணி விளக்க மழலுஞ் சேக்கை: ஒப்பு: 'பாம்பின், ஆயிர மணிவிளக் கழலுஞ்சேக்கை' (மார்க்கண்டேயனார் காஞ்சி); 'மின்னவிர்சுடர்மணி யாயிரம் விரித்த, கவைநா வருந்தலைக் காண்பின் சேக்கை' (பரி. 13).

(பி - ம்.) 1. நீத்தாங்கோர்: சிலைத்தடக்கை. 2. செல்லாழித் தேரிரவி.
3. வல்லாழிக்கரை: ஆயிரவாய் மணி விளக்கம்; ஆயிரவா யணிவிளக்கம்; அவிருஞ்சேக்கைத்.
4. தொல்லாழி யிடையரவிற் றுயிலாதே துயர்க்கடலில்; தொல்லாழி யிடையெனனத் துயராழித் தடங்கடலுள்: துயராழிப் பெருங்கடலிற்; சுடராழிச் சுடர்க்கட்வுள்: துயராழிக் கடலிடையே; துயராழியிடைக் கிடந்து: துயிலுகின்றான்: வானவர்தந் துயர்க் கடலைத் துறப்பிப்பானே. (153)

709. ஊழிபெயர்ந் தெனக்கங்கு லொருவண்ணம்
புடைபெயர வுறக்க நீத்த
சூழியா னையினெழுந்து தொன்னியமத்
துறைமுடித்துச் சுருதி யன்ன
வாழிமா தவற்பணிந்து மனக்கினிய
தம்பியொடும் வம்பின் மாலை
தாழுமா மணிமௌலித் தார்ச்சனகன்
பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

ஊழி பெயர்ந்தது என-ஒரு யுகமே கழிந்தாற்போல, கங்குல்-அவ்விராப் பொழுது, ஒருவண்ணம் புடை பெயர-ஒருவாறு கழிய, (அப்போது இராமபிரான்), உறக்கம் நீத்த சூழி யானையின்-உறங்கு

தல்விட்டு எழுந்த முகபடா மணிந்த யானைபோல, எழுந்து-(கம்பீர மாகப்) படுக்கையைவிட்டு எழுந்து, தொல் நியமம் துறை முடித்து-பழமையாகத் (தங்கள் குலத்துக்கும், அக்காலத்திற்கும்) உரிய நாட் கடன்களைச் செய்து முடித்து, சுருதி அன்ன மா தவன் பணிந்து-வேதமே போன்ற பெருந்தவசியான கௌசிகனை வணங்கி, (அவனோ டும்), மனக்கு இனிய தம்பியொடும்-தன் மனத்துக்கினியந்த தம்பி யான இலக்குமணனோடும், (சென்று), வம்பு இன் மாலை தாழும் மாமணிமௌலி-மணமுள்ள இனியபூமாலைகள் தொங்குகின்ற சிறந்த இரத்தினங்கள் பதித்த கிரீடத்தையும், தார்-(மார்பிலே) பூமாலை யையும் அணிந்த, சனகன்-சனக மகாராசனது, பெரு வேள்வி சாலை சார்ந்தான்-பெரிய யாகசாலையை அடைந்தான்.

எழுவாய் வருவித்து உரைக்கப் பெற்றது. வாழி: அசை. பெயர்ந்தென; தொகுத்தல்.

இராமபிரான், இரவிலே உறக்கம் பற்றுது வருந்திச் சோர்ந் திருப்பினும், பொழுது புலர்ந்தவுடனே, தன் சோர்வைப் புலப்படுத் தாமலும், அதனை மறந்தும், கம்பீரமாக எழுந்தமை குறிக்க, 'யானை போல் எழுந்து' என்றார். சூழி, யானைக்குரிய விசேடணம். மாலை தாழும் என்பதனை வேள்விச்சாலையோடியைத்து உரைத்தலுமாம்.

ஊழி பெயர்ந்தெனக் கங்குல் புடைபெயர: ஒப்பு: 'ஊழி பலவோ ரிரவாயிற்றோ வென்னும்' (நள. 115). 'சுருதியன்ன மாத வன்': 243-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. ஊழி பேர்ந்தெனக்: புடைபெயரப் புறக்கணீங்கிச்.
2. யானையி லெழுந்து: தொன்னியமக் குறை முடித்துச்; தொன்னியமத் தொழில் முடித்துச்; துறைமுற்றிச்; துனிமுற்றிச்.
3. வாழு மாதவற்; மனத்தினிய; வரம்பின்மாலை; வன்டின் மாலைத்.
4. தார்முநெடு; தாழுமாநெடுமௌலி; மணிமௌலித் தாரரசன்: வாசமலர்த் தார்ச்சனகன்; மணிமௌலிச் சனகனுறை; பெரும் வேள்விச்; கனல் வேள்விச்; நல்வேள்விச்; சாலை சார்ந்தார். (154)

மிதிலைக் காட்சிப் படலம் முற்றும்

சில பிரதிகளில் 'கோசிகப் படலம்' என்பதும், வேறு சிலவற்றில் 'கைக்கிளைப் படலம்' என்பதும் இதனோடு முடிவுற, மேலே 'வரலாற்றுப் படலம்', 'குலமுறைப் படலம்', முதன்முறை 'கிளத்துபடலம்' 'வரலாற்று முதன்முறை 'கிளத்து படலம்', 'சூரிய குலப் படலம்' எனப் பலவேறுபட்ட தலைப்புடன் அடுத்த படலம் தொடங்கு கின்றது. முந்திய பதிப்பு அச்சுப் பிரதிகளுள் இப்படலம் 'ஆதித்தன் குல முதல்வன்' (712) என்ற பாடலுடன் தொடங்குகின்றது.

# 11. குலமுறை கிளத்து படலம்

குலமுறை கிளத்து படலம்: குலமுறையைக் கிளத்திய படலம் என விரியும். இது, இராமபிரானுடைய வமிச பரம்பரையைப் பற்றிக் கௌசிக முனிவன் சனக மகாராசனுக்கு எடுத்துக் கூறிய வரலாற்றைக் கூறுவதாகும். இப்படலத்தின் பெயர் பலவாறுகச் சுவடிகளில் குறிக்கப்படுதல் சென்ற படலத்தி னிறுதியில் கூறப் பெற்றது.

சனகன் சபாமண்டபம் அடைதல்

710. முடிச்சனகர் பெருமானு முறையாலே
பெருவேள்வி முற்றிச் சுற்றும்
இடிக்குரலின் முரசியம்ப விந்திரனிற்
சந்திரன்றேய் கோயி லெய்தி
எடுத்தமணி மண்டபத்து ளெண்டவத்தோன்
முனிவரொடு மிருந்தான் பைந்தார்
வடித்தகுனி வரிசிலைக்கை மைந்தனுந்தம்
பியுமருங்கி னிருப்ப மாதோ.

முடி சனகர் பெருமானும்-முடியணிந்த, சனக குலத்தவர் தலைவனான சனக மன்னனும், முறையாலே-வேதவிதிப்படி, பெருவேள்வி முற்றி-(தான் மேற்கொண்ட) சிறந்த வேள்வியை முடித்துக் கொண்டு, சுற்றும்-நாற்புறமும், இடி குரலின் முரசு இயம்ப-இடி போன்ற அதிரொலியுடைய பேரிகைகள் முழங்க, இந்திரனின்-தேவேந்திரனைப் போல, சந்திரன் தோய் கோயில் எய்தி-சந்திரன் வந்து தவழ்தற்கிடமான தனதரண்மனையை அடைந்து, எடுத்த மணி மண்டபத்துள்-எடுப்பாக அமைந்த, மணிகளால் அலங்கரிக்கப் பெற்ற சபாமண்டபத்திலே, எண் தவத்தோன்-(அனைவரும்) மதிக்கும் அருந்தவமுடைய கௌசிக முனிவனும், பசுமை தார்-பசிய பூமாலை சூடிய, வடித்த-நன்கு அமைக்கப்பெற்ற, குனி வரி சிலை கை-வளைதலுறும், கட்டமைந்த வில்லேந்திய கையையுடைய, மைந்தனும்-வீரனான இராமபிரானும், தம்பியும்-இளைய பெருமாளான இலக்குமணனும், மருங்கின் இருப்ப-தன்னருகில் இருக்க, முனிவரொடும்-(வேள்விக்கு வந்த பிற) முனிவர்களும் சூழ, இருந்தான்-வீற்றிருந்தான்.

மாது, ஓ, அசை.

இராம லக்குமணர், கௌசிக முனிவனுடன், சனக மன்னனது வேள்விச்சாலே சேர்ந்தமை முந்திய பாடலிற் கூறினர். இங்கே அம் மூவரும் தன்னருகில் இருக்க, வீற்றிருந்தான் சனகன் என்றதனுல், புதிதாக வந்த அவர்களைத் தனியே அவர்கள் பெருமைக்கேற்றவாறு அவன் சிறப்பாக உபசரித்துச் சபாமண்டபத்திலே தன் பக்கலில் அமரச் செய்தமை பெறப்படும். இவ்வாறு உய்த்துணர வைத்து, மேலே இராம லக்குமணரைப்பற்றிக் கௌசிக முனிவனிடம் சனகன் கேட்டறிதல் கூறுதற்குத் தோற்றுவாய் செய்துகொண்டார்.

(பி - ம்.) 1. முடிச்சனகர் கோமானும்: மறைவேள்வி: முற்றமுற்றும்: முற்றுவித்தாங்கு; முற்றுவித்திட்டு: முற்றுவித்தே; முடித்தபின்னர்; முடித்துப் பின்னும்: முறையாக மறைநியம முடித்த பின்னர்.
2. அடிக்குரலின்: முரசதிர: இந்திரன்போற்: கோயிலெய்த; கோயிலெய்திப்.
3. அடுத்தமணி; படுத்தமணி: மண்டபத்தின்: எண்டவத்தின்; எண்டவத்தொன்: முனிவரொடு மிருந்தார்.
4. வடித்தவரி; வடித்தவரிக்; வடித்தகுனிச்; குனிசிலேக்கை: சிலேத்தடக்கை: வள்ளலுந் தம்பியும்: மருங்கிலிருப்ப; மருங்கிருப்ப; மருங்கிருக்க. (1

சனகன் வினவலும் கௌசிகன் கூறலும்

711. இருந்தகுலக் குமரர்தமை யிருகண்ணுன்
முகந்தழகு பருக நோக்கி
அருந்தவனே யடிவணங்கி யாரிவரை
யுரைத்திடுமி னடிக ளென்ன
விருந்தினர்க ணின்னுடைய வேள்விகா
ணியவந்தார் வில்லுங் காண்பார்
பெருந்தகைமைத் தயரதன்றன் புதல்வரென
வவர்தகைமை பேச லுற்றுன்.

(ஓலக்கத்தில் வீற்றிருந்தசனகன்),இருந்த-தன்னருகில் அமர்ந்திருந்த, குலம் குமரர் தமை-உயர்குலத் துதித்த குமரர்களாகிய இராம லக்குமணரை, இரு கண்ணுல் (உம்)-தன்னிரு கண்களாலும், அழகு முகந்து பருக நோக்கி-அவர்களழகை அள்ளிப் பருகுவது போலப் பார்த்து, (பின்பு), அரு தவனே அடி வணங்கி-அரிய தவத்தை யுடைய கௌசிக முனிவனே அடி பணிந்து, 'அடிகள் - பெரியீர்! இவர் யார்-இக்குமரர்கள் யாவர்? உரைத்திடுமின்-(இவர்களைப் பற்றித் தெளிவாக) உரைப்பீராக' என்ன-என்று கேட்க, (கௌசிக முனிவன் அரசனே நோக்கி), 'விருந்தினர்கள்-புதியவர்களாகிய இக்குமாரர்கள், பெருதகைமை தயரதன் தன் புதல்வர்-மிக்க பெருந்தன்மைகள் பொருந்திய தசரத சக்கரவர்த்தியின் குமாரர்கள்; நின்னுடைய வேள்வி காணிய வந்தார்-உன்னுடைய யாகத்தைக்

காணும் பொருட்டு (இங்கு) வந்தனர்; வில்லும் காண்பார்-(நீ சீதையின் பொருட்டுப் பணயமாக வைத்துள்ள) வில்லையும் (ஒருகை) பார்ப்பார்கள்;' என-என்று கூறி, அவர் தகைமை-அக்குமரருடைய பெருமைகளை, பேசல் உற்றான்-எடுத்துச் சொல்லலானான்.

இருகண்ணால் என்றவிடத்து முற்றும்மை தொக்கது. இவரை: ஐ. சாரியை. அடிகள்: அண்மை விளி. காணிய: செய்யிய வென்னும் வாய்பாட்டெச்சம். வில்லும் : உம்மை இறந்தது தழுவியது.

அழகு பருக நோக்கல்-அழகிலே ஈடுபட்டு ஆழ்ந்து நோக்குதல். ஆடவர் பெண்மையை அவாவும் தோளினனான இராமபிரானுடைய அழகிலே மனத்தைப் பறிகொடுத்தும், உடனுள்ள தம்பியிடத்தும் பலவொற்றுமைகளைக் கண்டும் சனகன் அவர்களை ஆழ்ந்து நெடிது நோக்கினான் என்க. 'வில்லும் காண்பார்' என்றது, 'இவர்கள் தோற்றத்தால் மிக இளையராயினும், அரிதாகவுள்ள உனது வில்லையும் எடுத்துக் கையாளும் ஆற்றலுடையர் என்று குறிப்பித்தபடி, இத்தொடரின் அரிய நயம் அறிந்து இன்புறற்பாலது.

வேள்விச்சாலையைச் சென்றடைந்த கௌசிகன் முதலிய மூவரையும் சனக மன்னன் நன்கு உபசரித்து, தன் புரோகிதராகிய சதாநந்தர் கௌசிகன் பெருமைகளையெல்லாம் எடுத்துக்கூறக் கேட்டறிந்த பின், கௌசிகனால் இராம லக்குமணரைப் பற்றியும் அறிந்தான்; அதன்பின், கௌசிகன், சீதையின் பொருட்டுப் பந்தயமாக வைக்கப்பட்டுள்ள வில்லை அக்குமாரர்கள் காணவிரும்புவதாகச் சனகனிடம் கூற, சனகன் அவ்வில்லின் ஆற்றலையும் பெருமைகளையும் விரிவாகக் கூறி, அதனை அரண்மனையினின்றும் தருவித்தான். இராமன் அவ்வில்லையெடுத்து வளைத்து நாணேற்றினால் அவனுக்குச் சீதையை மணஞ்செய்து கொடுத்து விடுவேன் என்றும் கூறினான். எட்டுச் சக்கரங்களுடைய வலியதோர் இரும்புப் பேழையில் இருந்த அவ்வில்லைப் பேழையுடன் வலிமைமிக்க ஐயாயிரம் ஆட்கள் கூடி இழுத்து வந்தனர். இராமபிரான், கௌசிக முனிவன் கட்டளையையும் சனக மன்னன் இசைவையும் பெற்று, அப்பெட்டியைத் திறந்து வில்லை இலகுவாகவே யெடுத்து வளைத்து நாணேற்றிக் காதுவரையில் நாணை யிழுக்க, அவ்வில் இடிபோன்ற பேரொலியுடன் முறிந்தது. அது கண்டு மிகவும் வியப்புற்ற சனகன், இராமனைக் கொண்டாடித் தன் மொழிப்படி சீதையை மணஞ் செய்விக்கக் கருதித் தசரதனுக்கு இச்செய்தியைத் தெரிவித்து அவனை அழைத்துவரத் தன் மந்திரிகளை அனுப்பினான்; தசரத சக்கரவர்த்தி செய்தியறிந்து பரிவாரங்களுடனும், வசிட்டமுனிவன் முதலியவர்களோடும் புறப்பட்டு மிதிலை வந்து சேர, சனகன் அவர்களை முறைப்படி வரவேற்று உபசரித்தனன். பின்பு எல்லோரும் கலந்து மகிழ்ந்து சீதா பிராட்டியின் திருமணத்தைப் பற்றி நிச்சயித்து நாட்குறித்தனர். திருமணமும் வேள்விச்

சாலையிலேயே நடைபெற்றது. அத்திருமண நிகழ்ச்சிக்கு முன்னே வசிட்ட முனிவன் தசரதனுடைய வேண்டுகோளின்படி சூரிய வமிச பரம்பரையைப் பற்றிச் சனகனுக்கு எடுத்துச் சொன்னான் என்று வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. இருகண்ணும்; இருகண்ணின்; இருவழியும்; முகத்தழகு; முகத்தழகும்; பருகல் நோக்கி; பருகி நோக்கி; பெருக நோக்கி.

2. அடிதொழுது; யாரையிவர்; யாரிவர்கள்; யாரிவரென்று; உரைத்திடுநீ; உரைத்திடுதி; அறியவென்ன; யாரிவரே யுரைத்திடுமினறிய வென்ன. 3. உன்னுடைய வேள்வி.

4. பெருந்தன்மைத்; சிறுவரென; மைந்தரென; அவர்தன்மை; அவர் பெருமை; இவர்தன்மை; இவர்தகைமை; இவர்பெருமை; சிறுவ ரென்ருங் கவர்தன்மை. (2)

### மனு, பிருது.

(வேறு)

712. ஆதித்தன் குலமுதல்வன் மனுவினையா ரறியாதார்
பேதித்த வுயிரனைத்தும் பெரும்பசியால் வருந்தாமல்
சோதித்தன் வரிசிலையா னிலமடந்தை முலைசுரப்பச்
சாதித்த பெருந்தகையு மிவர்குலத்தோர் தராபதிகாண்.

'ஆதித்தன் குலம் முதல்வன்-சூரிய குலத்து முதற்புதல்வனான, மனுவினை அறியாதார் யார்-மனுச் சக்கரவர்த்தியைப்பற்றி அறியாதவர் (உலகத்தில்) யார் உளர்? (ஒருவருமில்லை); பேதித்த-பலவகைப் பட்ட, உயிர் அனைத்தும்-உலகத்திலுள்ள ஜீவராசிகளெல்லாம், பெரு பசியால் வருந்தாமல்-மிக்க பசித் துன்பத்தால் வருந்தாதபடி, தன் சோதி வரி சிலையால்-தனது ஒளிமிக்க கட்டமைந்த வில்லின் திறமையால், நிலம் மடந்தை-பூமிதேவியானவள், முலை சுரப்ப-(பசுவடிவங் கொண்டு தன்னுள் அடக்கி வைத்திருந்த ஓஷதிகள் முதலிய எல்லாவற்றையும்) தன் மடியிலிருந்து பாலாகச் சுரந்து அளிக்கும்படி, சாதித்த-(பெருமுயற்சி கொண்டு) செய்து முடித்த, பெரு தகையும்-பெருந்தன்மை மிக்கவனான பிருது வென்னும் அரசனும், இவர் குலத்து ஓர் தராபதி-இவர்களுடைய குலமுன்னோர்களில் ஓர் அரசன் என்பதை, காண்-அறிவாயாக.

இக்கவி முதல் இப்படலம் முடியவுள்ள 29 கவிகளாலும் வைவஸ்வத மனு முதல் இராமபிரான் இறுதியாகவுள்ள சூரிய வமிசத்தரசர்களைப் பற்றிக் கௌசிக முனிவன் சனகமகாராசனுக்கு எடுத்துரைத்தல் கூறப்படுதலின், இவை ஒரு தொடர்; கௌசிக முனிவனை எழுவாயாகக் கொண்டு, இறுதிப் பாடலில் 'உரைத்தான்' என்பதனோடு முடிவுறும்.

இங்கே முதலிற் குறிக்கப்பெற்றவன் 'வைவஸ்வத மனு' என்பவன். ஆதியில் படைப்புத் தொழிலைத் தொடங்கிய பிரமதேவன்,

தன் மனத்தால் ஒன்பதின்மரை முதலில் தோற்றுவித்தான்; இவர்கள் படைப்புத் தொழிலில் பிரமனுக்குதவியாய் அமைந்து, 'உபப்பிரமர்' என்றும், 'பிரஜாபதிகள்' என்றும் வழங்கப்பெற்றனர். இவர்கள் ஆணும் பெண்ணுமாகிய இருவேறினங்கள் பலவற்றைத் தோற்றுவித்தனர். இவருள், தட்சப் பிரஜாபதியின் புதல்வியான 'அதிதி' என்பவள் மரீசிப் பிரஜாபதியின் புதல்வனான காசிபமுனிவன் மனைவிமார் பலருள் ஒருத்தியாயினள்; இவளிடம் 'விவஸ்வான்' என்ற பெயருள்ள சூரியனும், மற்றைத் தேவர்கள் மிகப்பலரும் தோன்றினர். அதிதியின் முதற் புதல்வனான சூரியனுக்கு 'ஆதித்தியன்' என்றும், மற்றைத் தேவர்களுக்கு 'ஆதிதேயர்' என்றும் பெயர்கள் வழங்கலாயின. விவஸ்வானென்ற சூரியன் புதல்வன் மனு; இவன் 'வைவஸ்வத மனு' எனப்படுவான். இவனே இராமபிரானது வமிசத்துக்கு முதல்வன். மனுக்கள் பதினால்வர் எனவும், இவ் வைவஸ்வத மனு அவருள் ஏழாமவனெனவும் கூறுவர். இவனுடைய அந்தரமே (காலக்கூறு) இப்போது நடக்கின்றது; 'வைவஸ்வத மன்வந்தரே' எனப் பயில வழங்குதல் காணலாம். இவன் நீதி முதல்வனாகப் பிரசித்தி பெற்றவனாதலால், 'மனுவினை யார் அறியாதார்' என்றார்.

அடுத்தபடி கூறிய 'பெருந்தகை' ஆகிய பிருது என்பவன், ஆதி மனுவான சுவாயம்புவ மனுவின் வழித்தோன்றலெனப் புராணங்கள் கூறும். இவனை வைவஸ்வத மனுவின் வழித்தோன்றலாகக் கம்பநாடர் கூறுவது, முதல் இராசேந்திர சோழன் காலத்தில் எழுந்த திருவாலங்காட்டுச் செப்பேடுகளிற் கண்ட வரலாற்றுக் குறிப்புடன் ஒத்திருக்கின்றது. இவன் செய்தி இவ்விருவகையாக வழங்கியது கற்ப பேதத்தாற் போலும்; அஃதெவ்வாறாயினுமாகுக. இவனுக்கு முந்திய 'வேனன்' என்ற அரசன் ஆட்சியில் கொடுங்கோன்மையால் பூமிதேவி மிகவும் துன்புற்று வருந்திச் செடி கொடி முதலிய ஓஷதிகள் எல்லாவற்றையும் தனக்குள் அடக்கிக்கொண்டுவிட, உயிர்களெல்லாம் பசியால் மிக்க துன்பமுறலாயின. நல்லோர் நல்லுரைகளைச் சிறிதும் கொள்ளாத கொடியனான வேனனை முனிவர்கள் கூடி மாய்த்து, பிரமனருளால் இப்பிருதுவைத் தோற்றுவித்து அரசனாக்கினர். இவன் தோன்றும்போது, 'அஜகவம்' என்றதொரு வில்லும், சிறந்த பாணங்களும், கவசமும் தெய்விகமாக ஆகாயத்திலிருந்து விழுந்து இவனுக்குரியன வாயின. இவன் நற்குண நற்செயல்கள் மிக்கவனாய் ஆட்சி தொடங்கியபோது, மக்களெல்லாம் திரண்டு வந்து தம் பசித்துன்பத்தை இவனிடம் எடுத்துக்கூறி, அதனைப்போக்குமாறு வேண்டினர். உடனே இவன் பூமி தேவியின் மேற் சினம்மிக்குத் தன் வில்லுடன் அவளை யெதிர்க்கலானான். பூமிதேவி இவனுக்கஞ்சி ஒரு பசுவின் உருக் கொண்டு ஓடவே, இவன் விடாது தொடர்ந்தனன்.

இறுதியில் அவள் இவனுக்கடங்கி, இவனிடம் வந்து, ஓஷதிகளெல்லாம் பால் வடிவமாகத் தன்னிடம் அடங்கியுள்ளன வென்று கூறிப் பாலைச் சுரந்து வெளிப்படுத்தினள். இவன், அப்பாலானது எங்கும் பரவுதற்குத் தடையாகவிருந்த மலைகளைத் தன் வில்லாலேயே அப்புறப்படுத்திப் பால் நன்கு பரவி ஓஷதிகள் உண்டாக வகை செய்ததனால் உயிர்கள் இன்புற்றன. இவனாலே சீர்திருத்தப் பெற்ற தொடர்பு பற்றிப் பூமிக்குப் 'பிருதுவி' என்ற பெயர் உண்டாயிற்று என்பது வரலாறு. இது பற்றியே இவனை, 'தன் வரிசிலையால் நில மடந்தை முலை சுரப்பச் சாதித்த பெருந்தகை' என்றார்.

கௌசிகன் கூற்றாகவுள்ள இக் குல வரலாற்றுள், மனு முதலாகத் தசரதன் ஈறாகப் பதினெழுவர் குறிக்கப்பெறுகின்றனர். இவருட் சிலர் பெயராலன்றிச் செயலாலே குறிக்கப்பெறுகின்றனர். இவர்களையெல்லாம் பற்றிச் சுருங்கச் கூறியும், இறுதியில் இராமபிரான் முதலியோர் தோற்றம், பெருமைகள் ஆகியவற்றைப் பதினேழு பாடல்களால் விரித்துக் கூறியும் முடிக்கின்றார்.

இராமபிரான் மனுவின் மரபினன் என்பது : அயோத். *103, 163*; ஆரணிய. *1121*. பிருதுவின் செய்தி : 'அடல்படைத் தவனியைப் பெருவளந் தருகவென்றருளினானும்' (யுத்த. *94.*); 'தொல்லார் கலிவலையந் தோள்வலைய முன்றிருந்த, வில்லா னடுவுள்ள வெற்பெடுத்தோன்' (குலோத்-உலா. *16.*)

இப்பாட்டின் முதலில் உள்ள 'ஆதித்தன்' என்பது ஒரு சோழ வரசனைக் குறிப்பதெனவும், அவன் கம்பர் காலத்தவனாதலால் அவனை நினைவுகூர்தற் கிவ்வாறு கூறியுள்ளாரெனவும் கூறுவர் ஒருசாரார்; இதனை மறுப்பர் ஒரு சாரார்.

(பி - ம்.) 1. குலமுதல; குலமைந்தன்.
2. உயிரனையாய்; உயிரெல்லாம்: உலகனைத்தும்.
3. சோதித்த; வருசிலையால்.
4. இவர்குலத்துத் தராபதி; இவர்குலத் தராபதி; இவன் குலத்தோர் தராபதி. (3)

### இட்சுவாகு

713. பிணியரங்க வினையகலப் பெருங்காலந் தவம்பேணி
மணியரங்க நெடுமுடியாய் மலரயனை வழிபட்டுப்
பணியரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாங்காண
அணியரங்கந் தந்தானை யறியாதா ரறியாதார்.

மணி அரங்கு அம் நெடு முடியாய்-நவமணிகள் பதிக்கப்பெற்ற அழகிய பெரிய கிரீடமணிந்த சனக மகாராசனே!, பிணி அரங்க-நோய்கள் கெடவும், வினை அகல-அந்நோய்களுக்குக் காரணமான ஊழ்வினைகள் நீங்கவும், மலர் அயனை வழிபட்டு-திருவுந்தித் தாமரை

யிலே தோன்றிய பிரமதேவனைப் பூசித்து, பெரு காலம் தவம் பேணி-நெடுங்காலம் தவம் செய்து, பணி அரங்கம் பெரு பாயல்-ஆதிசேடனாகிய இடமகன்ற பெரிய படுக்கையையுடைய, பரம் சுடரை-ஒளிகட்கெல்லாம் மேலான ஒளியாகிய நாராயணனை, யாம் காண-நம்போல்வாருங் கண்டு தரிசிக்கும்படி, அணி அரங்கம் தந்தானை-அழகிய அரங்க விமானத்துடனே இவ்வுலகத்திற் சேர்ப்பித்தவனான இட்சுவாகுவைப் பற்றி, அறியாதார்-கேட்டறியாதவர், அறியாதார்-அறிவில்லாதவர்களே.

இதிற்கூறப்படுமவன் இட்சுவாகு; இவன் தன்பெயராலே குலம் வழங்கும் சிறப்புப் பெற்றவன். இவன் பிரமனைக் குறித்து நெடுநாள் தவம் செய்து, பிரமனிடத்து வரத்தோடு அவன் பூசித்துவந்த அரங்க நாதனையும் அவ்விமானத்துடனே பெற்றுப் பூமிக்கு வந்து அயோத்தியில் பிரதிட்டை செய்தான். அதுமுதல் அக்கடவுள் சூரிய குலத்தவர்க்குத் தொழுகுலமாக விளங்கிவர, இராமபிரான் முடி சூடியபின் அப்பெருமானை விபீடணாழ்வானுக் களித்தருளினான். விபீடணன் அம்மூர்த்தியுடனே இலங்கை செல்லுங்கால், இடையே அம்மூர்த்தி திருவரங்கத்திலே தாபிதமாயினான் என்பது வரலாறு.

அரங்குதல் என்பது அழிதல், பதிதல் என்ற பொருள்களில் வருதல், 792-ஆம் கவியிலும் காண்க

(பி - ம்.) 1. பிணியரங்கு; பிணியரங்கும்: வினைதுணியப்; வினைதுணிப்பப்: தவம் பண்ணி.
2. மணியரங்கு; நெடுமுடியான்: மலரயனே: வழிப்பட்டுப்; வழிபட்ட; வழிப்பட்ட; வழிபடமுன்.
3. பணியரங்கு; பணியரங்கும்; பணியரங்கம்; பணியரங்க நெடும்பாயற்; பரஞ்சுடருக் கரங்கான; பாரளந்தோன் கண்வளர.
4. அணியரங்கு: தந்தானும்; வகுத்தோனும்: இவர் குலத்தோராண்டகை காண்; ஆண்டகைதான். (4)

கருத்தன்

714. தான்றனக்கு வெலற்கரிய
தானவரைத் தலைதுமித்தென்
வான்றருகிற் றிகொலெனக்
குறையிரப்ப வரங்கொடுத்தாங்
கேன்றெடுத்த சிலையினனா
யிகல்புரிந்த விவர்குலத்தோர்
தோன்றலைப்பண் டிந்திரனே
கொல்லேறாச் சுமந்தான்காண்.

தான்-இந்திரன், தனக்கு வெலற்கு அரிய தானவரை-தன்னால் வெல்லுதற்கரிய அசுரர்களைக் குறித்து, 'தலை துமித்து-(வலிமை மிக்க அவர்களுடைய) தலைகளைத் துணித்து, (கொன்று), என் வான் தரு

கிற்றி கொல் என-எனது சுவர்க்கநாட்டை மீட்டுத் தரவல்லாயோ என்று, குறை இரப்ப-தன் குறையைக் கூறி வேண்டி நிற்க, வரம் கொடுத்து- (அவ்விந்திரனுக்கு அவன் வேண்டியபடி) வரத்தைக் கொடுத்து, ஆங்கு ஏன்று-அப்போதே அச்செயலை (அசுரரை அழித்தலை) மேற்கொண்டு, எடுத்த சிலையினனாய்-கையிற் பிடித்த வில்லையுடையவனாகி, (சென்று), இகல் புரிந்த-அசுரரோடு பொருது வெற்றி கொண்ட, இவர்குலத்து ஓர்தோன்றலை-இக்குமரரின் குலத்து முன்னோனாகிய ஓர் அரசனை, பண்டு-அக்காலத்தே, இந்திரனே—, கொல் ஏறு ஆ(கி)-ஆற்றல் மிக்க இடபமாகி, சுமந்தான்-தாங்கினான். காண்: முன்னிலை யசை.

இதிற் கூறப்பெற்றவன், **ககுத்ஸ்தன்** என்ற காரணப் பெயர் பெற்ற 'புரஞ்சயன்' என்பவன். இட்சுவாகுவின் புதல்வனான சசாதன் என்பவன் மகன். இவன் காலத்திலே தேவர்க்கும் அசுரர்க்கும் போர் மூள, இந்திரன் போருக்கு ஆற்றானாகித் தேவர்களுடனே திருமாலிடத்தே சரண்புக, அப்பெருமான், 'யாம் பூமியிலே புரஞ்சயனென்னும் அரசனாக வந்து, அவன் மூலமாக உமக்கு வெற்றிதேடித் தருவோம்; அவனைத் துணைக்கொள்க' எனப் பணித்தலும், அவ்வாறே தேவர்கள் புரஞ்சயனை யணுகித் தம் குறை கூறி வேண்டிய போது, அவன் இந்திரனே தனக்கு வாகனமாகி நின்றால் அவ்வாகனத்தின் மேலேறிப் போர் செய்து அசுரரை யழிப்பதாகக் கூற, இந்திரன் விடை யுருக்கொண்டு அவனைத் தாங்கி நின்றான். புரஞ்சயன் அவ்வெருதின் முசுப்பின் மேலமர்ந்து அசுரரோடு பொருது வென்றான். இதனால் இவனுக்கு 'இந்திர வாகனன்' என்றும் 'ககுத்ஸ்தன்' என்றும் காரணப் பெயர்கள் உண்டாயின.

ககுத் - முசுப்பு; ஸ்தன்-இடமாகக் கொண்டவன்; எருதின் முசுப்பில் வீற்றிருந்தவன். இவன் வமிசப் பெயரால் இராமபிரான் 'காகுத்ஸ்தன்' என வழங்கப் பெறுவான். தமிழில் இப்பெயர்கள் முறையே, ககுத்தன், காகுத்தன் என வழங்கும்.

இந்திரனை வாகனமாகக் கொண்டமை: 'மிடல் படைத்தொருவனா யமரர்கோன் விடையதா வெரிநின் மேலாய், உடல் படைத்தவுணரா யினரெலா மடியவா ளுருவினானும்' (யுத்த.94); 'இக்குவாகுவின் மகன் புதல்வனை வரவோன், இகலுவோனிக லுரஞ்செய்து புரந்தரனெனுஞ், சக்குவாயிர முடைக்களிறு வாகனமெனத், தானிருந்துபொரு தானவரை வென்ற சயமும்' (கலிங்கத். இராச. 11); 'பேராப் பெரும்பகை தீரப் பிறவேந்தர், ஊராக் குலிச விடையூர்ந்தோன்' (குலோத். உலா. 3); 'வந்திரந்த வானவர்க்குத் தானவர்தம் போர்மாய, இந்திரனை யேறுக்கி யேறினோன்' (இராசராசனுலா. 10).

(பி - ம்.) 1. தானவனைத்: தலைதுமித்து; தலைதுமித்தோன்: தலைதுணித்து.
2. வான்றரக்கிற்றிகொ லென்று; வான்றரக் கொற்றிகொலெனக்; வான்

றருக்கிற் றிகொலென்று; வான்றருக்கிற் றிகொலெனக்; வான்றருக் கிற்றீயென்னக்; வான்றனக்கின் றீயென்று; வான்றனக்கின் றீதியென; வானவர்தந் தவமியற்றிக்; வரங் கொடுத்தற்கு. வரங் கொடுத்திட்டு; வரங் கொடுத்தாற்கு; வரங் கொடுத்தான்.

3. சிலையினுல்; சிலையினுன்: இகல்புரந்தது: இகல்புரிந்தான்: இகல்புனைந் தது: இயல்புரிந்தது: இகல்புரிந்தோன்.

4. இந்திரன்றன்; இந்திரன் காண்: இந்திரனும்: விடையேருய்ச்; சுமந் தானும்: சுமந்தானே. (5)

## கடல் கடைந்து அமுதம் கொடுத்தவன்

715. அரசவவன் பின்னுேரை யென்னுலு மளப்பரிதால்
உரைகுறுக நிமிர்கீர்த்தி யிவர்குலத்தோ ருெருவன்காண்
நரைதிரைமூப் பிவையெய்தி யிந்திரனு நந்தாமல்
குரைகடலை நெடுவரையாற் கடைந்தமுதங் கொடுத்தானும்.

'அரச-மகாராசனே! அவன் பின்னுேரை-அக்ககுத்தனுக்குப் பின்னே வந்த அரசர் பலருடைய பெருமைகளை, என்னுலும் அளப்பு அரிது-என்னுலும் அளவிட்டுக் கூறுதல் இயலாதாகும்; (அவருள்ளே), இந்திரனும்-தேவேந்திரனும் (மற்றத் தேவர்களும்), நரை-(மானி டரைப்போல) மயிர் வெளுத்தலும், திரை-தோல் சுருங்கலும், மூப்பு-(இவற்றைக் கொண்ட) கிழத்தன்மையும்; இவை எய்தி-(ஆகிய) இவற்றை யடைந்து, நந்தாமல்-மரணமடையாமல், குரை கடலை-ஒலிக்கின்ற பாற்கடலை, நெடு வரையால் கடைந்து-பெரிய மந்தர மலையாலே கடைந்து, அமுதம் கொடுத்தானும்-அமுதத்தை யெடுத் துக் கொடுத்தவனும், உரை குறுக நிமிர் கீர்த்தி-சொற்களும் குறைவு பட மிகப் பரந்த புகழுடைய, இவர்-இக்குமாரர்களுடைய, குலத் தோன் ஒருவன் காண்-குலத்து முன்னுேன் ஒருவன் என்றறிக.

என்னுலும்: உம்மை உயர்வு சிறப்பு; முக்காலமும் உணரும் பேருணர்வுடையவனுன என்னுலும் என்றபடி. இந்திரனும் என்றதில் உம்மை, பிறதேவர்களையும் தழுவுதலால் எச்சவும்மை.

இதிற் கூறப்பெற்ற அரசன் பெயர் புலப்படவில்லை. வாலி யென்ற வானரராசன் பாற்கடல் கடைந்து அமுத மளித்தானென வழங்குவது போன்றதொரு செய்தி இவனைப்பற்றியும் வழங்கி வந்தது போலும். இவ்விடத்து 'நிமி' என்ற பெயர் சில ஏடுகளிற் குறிக்கப் பெற்றுளது. ஆசிரியர் தசரதசக்கரவர்த்தியை 'நிமித்திரு மரபுளான்' (270) எனக் குறித்துள்ளமையால் இப்பெயருடைய மன்னனுெருவன் இவர்கள் மரபில் இருந்தமை பெறப்படும். கலிங்கத்துப் பரணி இராச பாரம்பரியத்திலும் 'கடல் கலக்கவெழு மின்னமுது தன்னை யொருவன், கடவுள் வானவர்களுண்ணவருள் செய்த கதையும்'(13) என இச்செய்தி குறிக்கப்படுகின்றது. 'தோளிணையால், கோழியிற் சோழ குலத்தொருவன் முன் கடைந்த, ஆழியிற் கொண்ட வரம்

பையரும்' என்பது இராசராச சோழனுலா. (71-2); 'பிருதுலாட்சன்' என்ற சூரியகுலத்தரசன்,தேவர் வேண்டுகோளின்படி கடல் கடைந்து அமுதளித்தவன் எனத் திருவாலங்காட்டுச் செப்பேடு ஒன்று கூறு கின்றது. இவை ஆராய்தற்குரியன.

உரை குறுக நிமிர் கீர்த்தி: ஒப்பு: 'மொழியைக்கடக்கும் பெரும் புகழான்' (இராமாநுச அந்தாதி. 7).

(பி - ம்.) 1. அரசனவன்; அரைசனவன்; அரசரவன்; அரசவன்றன்.
2. உரைகுறுகி; இவர் குலத்தோர்; உயர்குலத்தோன்.
3. முப்பவை மாற்றி; மூப்பவை யெய்தி; மூப்பிவையேகு; என்றிவையின்றி: என்றிவை நீக்கி; என்றிவை மாற்றி; என்றிவை யெய்தி; என்பது மின்றி: நந்தாமை; நந்தாமைக்; நனுகாமல்; வருந்தாமல்.
4. கடைந்தமுது; குடைந்தமிழ்து; குடைந்தமுதம்; கொடுத்தானே. (0)

மாந்தாதா

716. கருதரிய பெருங்குணத்தோ ரிவர்பின்பு கணக்கிறந்தோர்
திரிபுவன முழுதாண்டு சுடர்நேமி செலநின்றோர்
பொருதுறைசேர் வேலினாய் புலிப்போத்தும் புல்வாயும்
ஒருதுறையி னீருண்ண வுலகாண்டோ னொருவனுளன்.

'பொருது உறை சேர் வேலினாய்-(பகைவரைப்) பொருது (வென்று, பின்பு) உறையினுள்ளே புகும் வேற்படையையுடைய அரசே! கருத அரிய பெரு குணத்தோர் இவர் பின்பு-நினைத்தற்கும் அரிய பெருந்தன்மைக் குணங்கள் நிரம்பியவர்களான இவர்களுக்குப் பின்னே, திரிபுவனம் முழுதும் ஆண்டு-(சக்கரவர்த்திகளாகி) மூவுல கங்களையும் பொது நீக்கி ஆண்டு, சுடர் நேமி செல நின்றோர்-ஒளி பொருந்திய (தமது) ஆஞ்ஞாசக்கரம் எங்கும் செல்லும்படி விளங்கிய வர்கள், கணக்கு இறந்தோர்-அளவற்றோராவர்; (அவருள்ளே), புலி போத்தும் புல்வாயும்-(பிறவியிலே பகைமையுடைய) ஆண்புலி களும் மான்களும், ஒரு துறையில் நீர் உண்ண-ஒரே நீர்த்துறையிலே (நெருங்கி நின்று) நீர்பருகும்படி, உலகு ஆண்டோன் ஒருவன் உளன்-உலகத்தை (அமைதியுற) ஆண்ட அரசனொருவன் இருக்கின்றான்.

'போத்து' என்பது விலங்கு பறவை இனங்களில் சிலவற்றின் ஆண்பாலைக் குறிக்கும் சொல். கருதரிய: தொகுத்தல்; கருது அரிய எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

இதில் குறிக்கப்பெற்றவன் 'மாந்தாதா' என்பவன்; இவன் மிக்க நீதிமான்; 'மனு, மாந்தாதா முதலியோர்' என இவன் பெயரை மனுவோடு சேர்த்து வழங்குவர். ஜன்ம வைரிகளான புலியும் மானும் தம் பகையை மறந்து கூடிநின்று நீருண்ணும்படி ஆண்டான் என்ப தனால் இவன் சிறப்பு விளங்கும். வலியார் மெலியாரை வருத்தாதபடி ஆண்டானென்பது கருத்து. இவனைப் பிற நூல்கள் குறிப்பிடுவன:- 'ஒரு துறைப் புனல் சினப்புலியு மானு முடனே, யுண்ண வைத்தவுர

வோன்' (கலிங்கத். இராச. 12); 'பைந்தடத், தாடு துறையி லடு புலியும் புல்வாயுங், கூடநீ ரூட்டிய கொற்றவனும்' (விக்கிரம. உலா. 5); 'பழக்கத்தாற், போந்த புலியுடனே புல்வா யொருதுறைநீர், மாந்த வுலகாண்ட மன்னர்பிரான்' (குலோத். உலா. 7); 'வாவியிற், புக்கதுறையிற்பகைப்புலியும் புல்வாயு, மொக்க வொருகாலத் தூட்டி னேன்' (இராசராசனுலா. 5).

பொருதுறைசேர் வேலினுய்: ஒப்பு: 'சினவினர் குலமறப் பொருது தன்வேல், நெய்யுரைத் துறையிலிட் டறம்வளர்த் தொரு வனுய் நெறியி னின்றான்' (யுத்த. 95).

(பி - ம்.) 1. கருதலரும்; கருதவரும்: பெருங்குணத்தோன்: பெருங்குணத்தார்: புகழ் குணத்தான், புகழ் குணத்தோர்: இவர் முதலோர்; இவன் முதலோர்: அவர் பின்பு; அவன் பின்பு: கணக்கிறந்தார்.
2. செலநின்றோர்; செலநின்றோன்; செலநின்று.
3. பொருதிறல் சேர்; பொருதடரும்; வேலினனுய்ப்; செவ்வேலோய்.
4. உலகாண்டா னொருவன் காண்; உலகாண்டோ னுளனொருவன். (7)

முசுகுந்தன்

717. மறைமன்னு மணிமுடியு மாரமும்வா ளொடுமின்னப்
பொறைமன்னு வானவருந் தானவரும் பொருமொருநாள்
விறன்மன்னர் தொழுகழலா யிவர்குலத்தோன் விற்பிடித்த
அறமென்ன வொருதனியே யமைந்தமரர் பதிகாத்தான்.

'மறை மன்னும்-(சிற்ப) நூல் முறைப்படி அமைந்த, மணி முடியும்-இரத்தின கிரீடங்களும், ஆரமும்-(இரத்தின) மாலைகளும், வாளொடு மின்ன-மிக்க ஒளியோடு விளங்க, பொறை மன்னு வான வரும்-பொறுமை மிக்க தேவர்களும், தானவரும்-(பொறுமையற்ற) அசுரர்களும், பொரும் ஒருநாள்-போர் செய்த ஒரு காலத்தில், விறல் மன்னர் தொழு கழலாய்-வலிமைமிக்க அரசர் பலரும் அடிவணங்கும் பெருமையுடையவனே! இவர் குலத்தோன்-இக்குமரர் குலத்து முன் னேன் ஒருவன், வில் பிடித்த அறம் என்ன-வில்லை யேந்திய தரும தேவதைபோல, ஒரு தனியே அமைந்து-தான் ஒருவனுகவே (தேவர் களுக்குத்துணையாக) இருந்து, அமரர் பதி காத்தான்-அமராவதி யைப் பாதுகாத்தளித்தான்.

'பொறை மன்னு வானவர்' என வானவரை விசேடித்தமை யின், இவர்களுக்கு எப்போதும் எதிரிகளாகிய தானவர் பொறை யற்றவர் என்பது பெறப்படும். தேவர்க்கும் அசுரர்க்கும் இடையே நிகழ்ந்த போர்களுள், சூரிய குலத்தரசர் பலர் அவ்வப்போது தேவர்க்குத் துணையானமை வரலாற்றினுட் காணலாம். 'முந்தைப் போர்கெழு தேவர்க்காக வசுரரைப் பொருது வென்றோர்' (அயோத். 279). இக்கவியிற் குறித்தவனுகிய முசுகுந்த சக்கரவர்த்தியும் அவர்

களுள் ஒருவனாவான். இவன் காலத்து நிகழ்ந்த தேவாசுர யுத்தத்தில், தேவர்களுடைய வேண்டுகோளால் இவன் விண்ணுலகஞ் சென்று அசுரரோடு பொருது அவர்களை ஓட்டி, இந்திரனுக்குத் துணையாக நெடுங்காலம் அமராவதியிலேயே தங்கியிருந்து அதனைப் பாதுகாத்து, அசுரர் பயம் ஒழித்துத் தன்னுடு மீண்டானென்பர். நியாயமுள்ள தேவர்கள் பக்கலில் தான் தனியே இருந்து அவர்கள் நாட்டைப் பாதுகாத்தளித்தமையின் 'விற்பிடித்த அறமென்ன ஒரு தனியே அமைந்தமரர் பதிகாத்தான்' என்றார். இது செய்தவன் திலீபன் என்பாரு முளர். 'அரமகளிர் சோர்குழை காத் தும்பர், எயில் காத்த நேமி யிறையோன்' (குலோத். உலா. 4) என்பதும், 'அரமகளிர் குழைச் சோர்பு காத்து அமராபதி எயில் காத்த நேமிப் படையையுடைய இறையோன்; இவன் முசுகுந்த சக்கரவர்த்தி என்ற அதன் பழைய வுரையும் இங்கே அறிதற்பாலன. 'பொருதுறைத்தலை புகுந்து முசுகுந்த னிமையோர், புரமடங்கலு மரண் செய்து புரந்த புகழும்' (கலிங். இராசபாரம். 12); 'மிக்க வேகத்தினையுடைய அசுரர், கூட்டமாக வந்து நெருங்கி, இந்திரனது நகரைக் காத்த புலி போன்ற வலியையுடைய முசுகுந்தனுக்குத் தோற்று' (சிலப். 6: 7-9-அடியார்க். உரை); 'போகபுரி புரந்த பூபதியும்' (விக். உலா. 6) என்றதன் குறிப்புரையும் காண்க.

(பி - ம்.) 1. நறை மன்னு மலர்முடியும்; வாளோடு மின்னிப்; வாளோடு நக்க; வாளொடு நந்தப். நாளொடு மின்னப்.
2. மன்னும் வானவரும்; மன்னுந்தானவரும் வானவரும: பொருத நாள்.
3. தொழுங்கழலாய்; தொழுகழலான்: இவர் குலத்தோர்; விற்பிடித்து; விற்பிடித்தன்று; விற்பிடித்தே; விற்பிடித்தல்.
4. திரிந்தமராபதி; திருந்தமராபதி; அமைந்தமராபதி; எதிர்ந்தமரர்பதி: காத்தோன். (8)

## சிபி

718. இன்னுயிர்க்கு மின்னுயிரா யிருநிலமுன் காத்தளித்த
பொன்னுயிர்க்குங் கழலவரை யாம்போலும் புகழ்கிற்பாம்
மின்னுயிர்க்கு நெடுவேலா யிவர்குலத்தோன் மென்புறவின்
மன்னுயிர்க்குத் தன்னுயிரை மாறாக வழங்கினனால்.

'மின் உயிர்க்கும்-மின்னலைப் போல் ஒளி விடுகின்ற, நெடு வேலாய்-நீண்ட வேலையேந்திய அரசே! இன் உயிர்க்கும் இன் உயிராய்-(உலகத்திலுள்ள ஒவ்வொரு)இனிய பிராணிக்கும்(தாம்)இனிய உயிராக இருந்து, இரு நிலம்-பெரிய இப்பூமியை, முன்காத்து அளித்த-முன்னளிலே பாதுகாத்து ஆண்ட, பொன் உயிர்க்கும் கழல் அவரை-பொன்னொளி வீசும் வீரக்கழலையுடைய(இவர்குலத்து)அரசர்களை, யாம் புகழ்கிற்பாம் போலும் -(ஒருவரும் விடாதபடி) நாம் புகழ்ந்து கூறவல்லோமோ! (இல்லை); இவர் குலத்தோன்—

இவர்கள் குலத்து முன்னோரில் ஒருவன், மென் புறவின் மன் உயிர்க்கு மாறாக-மென்மையான புறாவின் நிலைபெற்ற உயிருக் கீடாக, தன் உயிரை வழங்கினன்-தனதுயிரையே கொடுத்தான்! ஆல்-அசை. 'போலும்' என்ற ஒப்பில் போலி, எதிர்மறைப் பொருள் தந்தது.

இதில் கூறப்பெற்றவன் சிபிச் சக்கரவர்த்தி; இவன் வரலாறு பிரசித்தமானது; 'புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந் தகை' (244) என முன்னும் வந்துள்ளமை காண்க.

'அரசே, இச்சூரியகுலத்தரசர் ஒவ்வொருவரும் நீதி தவறாமல் மன்னுயிரைத் தம்முயிரெனக் கொண்டு ஆண்டவராதலின், தனித் தனியே ஒவ்வொருவரையும் பற்றி எடுத்துக் கூறுதல் இயலாது; அங் கங்கே மிகச்சிறப்புற்ற சிலரை மட்டும் எடுத்துக் கூறுவேன்' என்பான் 'கழலவரை யாம் போலும் புகழ்கிற்பாம்!' என்றான்.

'இன்னுயிர்க்கு மின்னுயிராய்.......கழலவர்': 178 - குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. இன்னுயிராம்; இன்னுயிரா: இருநிலங்காத்தாரென்றும்; இருநிலங் காத்தவரென்று; இருநிலங்காத்தாரென்னும்; இருநிலமுங்காத் தளித்த; இருநிலங்காத்தருளுடைய.
2. கழலரசர் புகழை யெவன் புகலுதும்யாம்.
3. நெடுவேலோய்; மேற் புறவின்; மேற் பறவை; மென்பறவை.
4. மன்னுயிர்க்குந்: மாறாது: வழங்கினான். (9)

சகர புத்திரர்

719. இடரோட்ட வினநெடிய வரையுருட்டி யிவ்வுலகம்
திடரோட்ட மெனக்கிடந்த வகைதிறம்பத் தெவ்வேந்தர்
உடலோட்ட நெடுவேலா யிவர்குலத்தோ ருவரிநீர்க்
கடலோட்டா ரெனின்வேறோர் கட்டுரையும் வேண்டுமோ.

தெவ் வேந்தர் உடல் தோட்ட-பகையரசர்களுடைய உடம்பு களைத் தொளைத்த, நெடு வேலாய்-நீண்ட வேலையுடைய சனக ராசனே! இவர் குலத்தோர்-இக்குமரர்களுடைய குலத்து முன்னோ ரான ஒரு கூட்டத்தார், இடறு ஓட்ட-(சகரன் செய்யத் தொடங்கிய அசுவமேதத்துக்கு நேர்ந்த) தடையை நீக்கும் பொருட்டு, இ உலகம்-இந்தப் பூமியானது, திடல் தோட்டம்என கிடந்தவகை திறம்ப-பெரு மேடும் பள்ளமுமாகக் கிடந்த வகை மாறும்படி, இனம் நெடிய வரை உருட்டி-பல பெரிய மலைகளை உடைத்துத் தள்ளி, உவரி நீர் கடல் தோட்டார்-உப்பு நீரையுடைய கீழ்கடலைத் தோண்டினார்கள்; எனின்-என்றால், வேறு ஓர் கட்டுரையும் வேண்டுமோ-(இவர்கள் குலப் பெருமைக்கு) வேறோர் சான்றும் வேண்டுமோ?

இதிற் கூறப்பெற்றவர் சகரபுத்திரர்கள்.

இடறு, முதனிலைத் தொழிற் பெயர். இடறுதல்-தடைப்படுதல். தோட்டம்-தோண்டப்பட்ட இடம்; தொர்டு-பகுதி; முதல் நீண்டது. உடல் தோட்ட: தோட்ட என்பது 'தொள்' என்ற பகுதியடிப்யாகப் பிறந்த பெயரெச்சம்; பகுதி முதல் நீண்டது; தோட்ட நுங்கிற் றொளையுறு மூக்கினை' (ஆரணிய. *369*); 'கேள்வியால் தோட்கப்படாத செவி' (குறள். *418*) என்பவற்றிற்போல. கடல் தோட்டார்: தொடு-பகுதி; முதல் நீண்டது. கீழ்கடல், சகரரால் தோண்டப்பட்டதாதலின் 'தொடுகடல்' எனப்படும்; 'குண அது கரைபொரு தொடுகடற் குணக்கும்' (புறநா. 6) என்பதும் அதன் உரையும் காண்க.

மலைகளால் மிகவும் மேடும், அவற்றின் அடிவாரமும் பிறவுமாகிய இடங்களால் மிகவும் பள்ளமுமாகக் கிடந்த நிலப்பரப்பை 'திடல் தோட்டம் எனக் கிடந்த வகை' என்றார். சகரர் அவற்றை நேர் செய்தும், கீழே பாதலம் வரையில் தோண்டியும் சென்றதனால் கீழ் கடல் உண்டாயிற்றென்பர்; சகரரால் தோண்டப்பட்டது 'சாகரம்' எனப் பெயர் பெற்றது. இக்கடல் தோண்டிய செய்தி, முன்னே அகலிகைப் படலத்துட் கூறியது காண்க.

(பி - ம்.) 1. இடறோட்டம்; இடறோட்டி; இடரோட்டி; எனநெடிய; எனைநெடிய: இவ்வுலகை; இவ்வுலகின்; எவ்வுலகின்.
2. திடரோட்டம்; இடரோட்டும் எனக்கிடந்ததென விரிதார்த்; எனக் கிடக்கும் வகையிரங்கித்; கிடந்த வகைக்கிரங்கித்; கிடந்ததென விரிந்த; கிடந்த தேன்விரிதார்த்; என நிறுவித் தெவ்வேந்தர் சிரத்தினொடும்.
3. உடறோட்டும்; குடரோடு; குடறோட்ட: வேலோய்: இவர் குலத் தோன்; அவர் குலத்தோர்.
4. எனில்வேறோர்; எனின்வேறு; எனவேறோர்: வேணாமோ. (10)

### பகீரதன்

720. தூ நின்ற சுடர்வேலா
யனந்தனுக்குஞ் சொலற்கரிதேல்
யானின்று புகழ்ந்துரைத்தற்
கெளிதோவே டவிழ்கொன்றைப்
பூநின்ற மவுலியையும்
புக்களைந்த புனற்கங்கை
வானின்று கொணர்ந்தானு
மிவர்குலத்தோர் மன்னவன்காண்.

'தூ நின்ற-வலிமை நிலைபெற்ற, சுடர் வேலாய்-ஒளிவீசும் வேலையுடைய அரசே! (இவர் குலப் பெருமை), அனந்தனுக்கும்-ஆதிசேடனாலும், சொலற்கு அரிதேல்-(முழுதும் எடுத்துச்) சொல்லுதற் கியலாதெனின், யான்-(ஒரு நாவுடைய) நான், இன்று-இன்று

ஒருநாளில், புகழ்ந்து உரைத்தற்கு-புகழ்ந்து எடுத்துச்சொல்லுதற்கு, எளிதோ-எளிதாகுமோ? (ஆகாது); ஏடு அவிழ் கொன்றை பூ நின்ற மவுலியையும்-இதழ்கள் விரிந்த கொன்றைப் பூவைச் சூடிய (சிவபெருமானது) சடை முடியிடத்தும், புக்கு அளைந்த புனல் கங்கை-புகுந்து அளவளாவிய தூய நீராகிய ஆகாய கங்கையை, வான் நின்று-ஆகாயத்தினின்றும், கொணர்ந்தானும்-(தன் பெரு முயற்சியால் பூமிக்குக்) கொண்டு வந்தவனும், இவர் குலத்து ஓர் மன்னவன்-இவர்களுடைய குலத்து முன்னேனை ஓர் அரசனே யாவான். காண்: அசை.

இப்பாடல் பகீரத சக்கரவர்த்தியைக் கூறுவது. இவன் கங்கை யைக் கொணர்ந்த வரலாறு பிரசித்தமானது; அது முன்னே கூறப் பட்டது. மிகக் கடுமையான முயற்சியை, 'பகீரதப் பிரயத்தனம்' என இன்றும் வழங்குதல் காணலாம்.

தூ நின்ற-பகைவர் உடல் தசை பொருந்திய என்றலும் ஆம். அனந்தன்-அழிவற்றவன்; ஆயிர முகமும் இரண்டாயிரம் நாவும் படைத்தவன்; நெடுங்கால முன்னிருந்தே பலர் செய்திகளை அறிந் திருப்பவன்; அவனாலும் ஆகாது என்றது உயர்வு நவிற்சி. அவனா லும் ஆகாதெனின், ஒரு முகமும் ஒருநாவும் படைத்த தன்னால் ஆகா தென்பது சொல்ல வேண்டுவதில்லை. அனந்தனுக்கும், மவுலியையும் என்பவற்றில் உம்மை உயர்வு சிறப்பு.

(பி - ம்) 1. வேலோய்: அநந்தனே சொல்லானேல்; அனந்தனுக்குஞ் சொல்லரி தேல்; அந்தணனுஞ் சொலற்கரிய: அன்னதனைச் சொல்லினல்.
2. புகழ்ந்தேத்தற்கு; புகுந்துரைத்தற்கு: எளிதே: ஏடவிழ்ந்த.
3. பூநின்ற சடைமௌலி மேற்பொலியும்; மவுலியையும் புக்களைந்து; புக்கணைந்த; புக்களந்த; கங்கையினை.
4. வானின்றும்: கொணர்ந்தோனும்: மன்னன்காண். (11)

## நூறு வேள்வி செய்தவன்

721. கயற்கடல்சூ ழுலகெல்லாங்
கைநெல்லிக் கனியாக்கி
இயற்கைநெறி முறையாலே
யிந்திரற்கு மிடரியற்ற
முயற்கறையின் மதிக்குடையா
யிவர்குலத்தோன் முன்னொருவன்
செயற்கரிய பெருவேள்வி
யொருநூறுஞ் செய்தமைத்தான்.

'முயல் கறை இல் மதி குடையாய்-முயல் வடிவமான களங்க மில்லாத பூர்ண சந்திரன் போன்ற வெண்கொற்றக் குடையையுடை யவனே! முன்-முன்னாளில், இவர் குலத்தோன் ஒருவன்-இக்குமரர்

குலத்தவனான ஓர் அரசன், கயல் கடல் சூழ் உலகு எல்லாம்-மீன்கள் நிறைந்த கடல் சூழ்ந்த இப்பூவுலக முழுவதும், கை நெல்லி கனி ஆக்கி-உள்ளங்கை நெல்லிக்கனிபோலத் தன் வசப்படுத்தி, இந்திரற்கும் இடர் இயற்ற-(தன் செயலால்) இந்திரனுக்கும் துன்பமுண்டாக்கும் வகையில், செயற்கு அரிய பெரு வேள்வி ஒரு நூறும்-(பிறரொருவர்) செய்தற்கு அரிதாகிய பெரிய வேள்வி (அசுவமேதம்) ஒரு நூற்றையும், இயற்கை நெறி முறையாலே-இயற்கையான வேதவிதி முறையின்படி, செய்து அமைத்தான்-செய்து முடித்தான்.

இதிற் கூறப்பெற்றவன் இன்னான் என்று துணிந்து கூற முடியவில்லை. 'நகுஷன்' என்பார் சிலர்; அவன் சந்திர குலத்தவனாகக் கருதப்படுகின்றான்; சூரிய குலத்திலும் நகுஷனென்ற பெயருடையானொருவன் இருந்தனனென்பர் சிலர்; இவ்வாறு வேள்வி செய்தவன் 'சுதாசன்' என்பர் ஒருசாரர்.

பூமியில், நூறு அசுவமேதம் குறையின்றிச் செய்து முடித்தவர் யாவராயினும் அவர் இந்திர பதவி எய்துதற்குரியவராதலின், அத்தகையோரால் இந்திரன் தன் பதவி யிழக்க நேரும்; எனவே, அவன், அசுவமேதம் எங்கு நிகழினும், அது முற்றுப்பெறாத வகையில் அதற்கிடையூறு விளைப்பான். அதனால் அவ்வேள்வி செயற்கரியதொன்றாகும். அத்தகையது நூறு செய்து முடித்தல் எவராலும் இயலாததாகலின், 'செயற்கரிய பெருவேள்வி ஒரு நூறும் செய்தமைத்தான்' என முற்றும்மை கொடுத்துக் கூறினர்; அதுவும், குறையொன்றுமின்றிச் செய்து முடித்தமை தோன்ற 'இயற்கை நெறி முறையாலே' என்றார்.

மீனின் சாதி விசேடப் பெயராகிய 'கயல்' என்பது இங்கே பொதுப்பட நின்றது. சந்திர மண்டலத்திலுள்ள கருநிறப் பகுதியை முயலென்றும் மானென்றும் பிறவாறுங் கூறுதல் கவிமரபாதலின், 'முயற் கறை' என்றார். அரசரது கொற்றக் குடை வெண்ணிறமும் வட்ட வடிவமும் உடைமையின் 'மதிக்குடை' என்பர்; இங்கே அதனைக் கறை இல் மதிக்குடை எனச் சிறப்பு வகையாற் கூறினர்.

இந்திரற்கும்: உம்மை உயர்வு சிறப்பு.

கைநெல்லிக்கனி: 'கையுறு நெல்லியங் கனியிற் காண்டி' (சுந்தர. 513); முயற்கறை: சீவக. 254; நாலடி. 176.

(பி - ம்.) 1. கனியாக; கனியாகி. 2. இடரியற்றி.
3. மதிக்குடையான்: மதிக்கலையாய்; மதியுடையாய்: இவர் குலத்தோர்; முன் பொருவன். 4. அரிவேள்வி: ஒருநூறு. (12)

பிறர் சிலர்

722. சந்திரனை வென்றானு முருத்திரனைச் சாய்த்தானும்
துந்துவெனுந் தானவனைச் சுடுசரத்தாற் றுணித்தானும்
வந்தகுலத் திடைவந்த ரகுவென்பான் வரிசிலையால்
இந்திரனை வென்றுதிசை யிருநான்குஞ் செருவென்றான்.

சந்திரனை வென்றானும்-சந்திரனைப் போரில் வென்ற ஒருவனும், உருத்திரனை சாய்த்தானும்-உருத்திர மூர்த்தியைத் தோற்பித்தவனும், துந்துஎனும் தானவனை-துந்து என்ற அசுரனை, சுடு சரத்தால்-(பகைவரை) எரிக்கவல்ல (தன்) அம்புகளால், துணித்தானும்-துண்டித்து அழித்தவனும், வந்த குலத்திடை-தோன்றி விளங்கியஇக்குலத்திலே, வந்த-(பின்பு) தோன்றிய, ரகு என்பான்-ரகு என்னும் அரசன், வரி சிலையால்-கட்டமைந்த (தனது) வில்லாலே, இந்திரனை வென்று-(கீழ்த்திசைக் காவலனான) இந்திரனை வென்று, திசை இருநான்கும்-(மற்றத் திசைகளோடு கிழக்கும் உட்பட) எட்டுத் திக்குக்களிலும், செரு வென்றான்-போரில் வெற்றி கொண்டான்.

இக்கவியுட் கூறப்படுவோர் நால்வர். சந்திரனை வென்றான், திலீபன்; தேவ குருவான பிருகஸ்பதியின் மனைவி காரணமாக, சந்திரன் பக்கலில் சேர்ந்து அவனுக்குதவிய அசுரருக்கும், தேவருக்கும் போர் மூண்டபோது, அசுரருக்காற்றாது தேவர்கள் தோற்றோடினர்; பின்பு பிருகஸ்பதியின் வேண்டுகோளால் திலீபன் சென்று பொருது அசுரரைக் கொன்று, சந்திரனையும் வெற்றிகொண்டு, 'சந்திரஜித்', 'சந்திரஜேதா' எனக் காரணப்பெயர் பெற்றான். உருத்திரனைச்சாய்த்தான், பகீரதன்; இவன்அசுவமேதம் செய்யக்கருதி அதற்குரியகுதிரையைப் பூமிவலம்வர விடுப்ப, அதனை அறுமுகன் கவர்ந்து சென்றான்; அஃதறிந்த பகீரதன் அதனை மீட்கச் சென்றபோது, தன்னையெதிர்த்த உருத்திரனை வென்றானதலின் 'உருத்திரனைச் சாய்த்தான்' எனப்பட்டான். இச்செய்திகள் கந்தபுராணம் சனற்குமார சங்கிதையில் உள்ளன வென்பது கவித்தலம் துரைசாமி மூப்பனார் செய்த கம்பராமாயண அருங்கவி விளக்கத்திற் கண்டதாகும்.

உதங்க மகரிஷிக்குப் பகைவனாய், உலகத்தாருக்கும் துன்பமிழைத்து வந்த 'துந்து' என்னும் அசுரனை, சூரிய வமிசத்திற் பிறந்த குவலயாசுவ னென்பவன், தன் புதல்வர் இருபத்தோராயிரவருடன் சென்று பொருது, கொன்று, துந்துமாரன் என்ற காரணப் பெயர் பெற்றான். ரகு மகாராசன், திக்கு விசயம் செய்து இந்திரனுட்பட எட்டுத் திசைக் காவலரையும் வென்றான். திருவாலங்காட்டுச் செப்பேட்டில், உருத்திரன் என்ற வலிமிக்க பகையரசனை வென்றவன் 'சத்திய விரதன்' என்ற சூரிய குல வேந்தன் என்றும், துந்து என்னும் அசுரனைக் கொன்றவன் துந்துமார னென்பான் என்றும் காணப்படு

கின்றன. சந்திரனை வென்றவன் 'சந்திரஜித்' என்பவன் என்றும் அதிற் காணப்படுகின்றது.

கங்கையைக் கொணர்ந்தவனென்று முன்னே பகீரதனைச்சுட்டியிருக்கவும், மீண்டும் 'உருத்திரனைச் சாய்த்தான்' என இங்கும் சுட்டியது, அவ்வருஞ் செயல் கருதிப் போலும். அன்றி, இது செய்தவன் வேறொருவனோ வென்பதும் ஆராய்தற்குரியது.

ரகு என்பது, வடசொல் திரிபின்றி வந்தது. ரகு மகாராசன் பெயரால் சூரிய வமிசம், 'ரகு குலம்' என வழங்கப்படுதலும், இராமபிரானுக்கு ராகவன் என்ற பெயர் வழங்குவதும், காளிதாச மகாகவி 'ரகு வம்சம்' என்றே தன் காவியத்திற்குப் பெயர் தந்திருப்பதும், ரகுவின் பெருமைக்குரிய சான்றுகளாகும்.

சுடுசரம்: *406*; ஆரணிய. *440, 441, 511*-காண்க.

(பி - ம்.) 1. சந்திரனே யென்றானும்: உருத்திரரைச்: சதமகனைச்; சதுமுகனைச்: சார்ந்தானும்.
2. துந்துமியாம்; துந்துபியாம்: துரந்தானும்.
3. வந்தகுலத் திடைவேந்தன்; அந்தமிலாக் குலத்திடை வந்து; ரகுவென்பான் சிலைவலியால்; ரகுவென்னும் வரிசிலையான்: அந்தமிலாக்குலத்திடை வந்தவதரித்த ரகுவென்பான்; அவதரித்,தாகுவ னென்பான்.
4. வென்றுசிலை: இருநாலும்: செலநின்றான்; செலுத்தினன். *(13)*

அயன்

723. வில்லென்னு நெடுவரையால் வேந்தென்னுங் கடல்கலக்கி
எல்லென்னு மணிமுறுவ லிந்துமதி யெனுந்திருவை
அல்லென்னு மணிநிறத்த வரியென்ன வயனென்பான்
மல்லென்னுந் திரள்புயத்துக் கணியென்ன வைத்தானே.

'அயன் என்பான்-அஜன் என்ற (இவர் குலத்து) அரசன், வில் என்னும் நெடு வரையால்-(தன் கை) வில் என்கிற பெரிய (மந்தர) மலையாலே, வேந்து என்னும் கடல் கலக்கி-அரசர்கள் என்கிற பாற்கடலைக்கலக்கி (கடைந்து), (அதனாலே கிடைத்த), எல் என்னும் மணி முறுவல்-ஒளிமயமான முத்துக்கள் போன்ற பல்வரிசையுடைய, இந்துமதி எனும் திருவை-இந்துமதி என்ற பெயருடைய இலக்குமிபோன்றவளை, அல் என்னும் அணி நிறத்த அரி என்ன-இருள் போலும் அழகிய (கரு) நிறத்தையுடைய திருமால் போல, மல் என்னும் திரள் புயத்துக்கு அணி என்ன-மற்போர் எங்கே கிட்டும் என்கின்ற திரண்ட (தன்) புயங்களுக்கு அழகாக, வைத்தான்-வைத்துக்கொண்டான். ஏ: ஈற்றசை.

இதிற் கூறப்பெற்றவன் அஜ மகாராஜன்; தசரத சக்கரவர்த்தியின் தந்தை; இவன் இந்துமதி என்பவளைச் சுயம்வரத்திலே தன் புய வலியால் பெற்றான். சுயம்வர காலத்தில் இந்துமதி இவனையே

விரும்பி மாலை சூட்டினுளாக, மற்ற அரசர்கள் பொறுமையாற் போருக்கெழுந்தனர்; அவர்களை யெல்லாம் இவன் எளிதில் வென்று, இந்துமதியைத் தனக்குரியவளாக்கி மணந்தான். அதனுல், ஏனை அரசர் கூட்டத்தைப் பாற்கடலாகவும், அஜன் கை வில்லை மந்தர மலையாகவும், இந்துமதியை இலக்குமியாகவும் உருவகித்து, திருமால் பாற்கடலைக் கடைந்த காலத்து, அதினின்றும் வந்த இலக்குமியைத் தான் பெற்றுத் தன் மார்பிலே வைத்துக்கொண்டதுபோல, இவனும் இந்துமதியைப் பெற்றுப் புயங்களுக்கணியாக வைத்துக்கொண்டான் என்றுர். இந்துமதி மிகச்சிறந்த எழிலும்நற்குணங்களுமுடையவளாத லால் அவளை இலக்குமி யாக்கியும், அரசர்கள் திருமாலின் அம்சமென் பராதலால் அஜனைத் திருமாலாக்கியும் கூறினர். இவன் பெயராகிய அயனென்பது பிரமன் என்ற பொருளுடையதாதலால், 'அரியென்ன அயனும் வைத்தான்' என ஒருநயந் தோன்றவும் கூறியுள்ளார். இந்து மதியின் சுயம்வரத்தைப் பற்றி இரகுவமிச காவியம் பரக்கக் கூறும்.

மற்போர், வேறு ஆயுதமின்றிப் புயங்களாலேயே செய்தற் குரியதாகலின், 'மல்லென்னுந் திரள் புயம்' என்று அஜமகாராசனது புயவலிமையைச் சிறப்பித்தார்; 'போரென்ன வீங்கும் பொருப் பன்ன திண்டோள்' என்றுற்போல, 'மல்லென்னும்' என்பதற்கு, 'மற் போரின் வடிவமான' என்றுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 3. திருநிறத்த: கருநிறத்த: அரியன்ன வரனென்பான்.
4. மல்லொன்று; மல்லொன்றும்; மல்லென்னத்: திணிபுயத்துக்கணியாக: வைத்தானும்; வைத்தனன்காண்; வைத்தான்காண்; வகுத்தானே. (14)

## தயரத குமாரர் சிறப்பு

724. அயன்புதல்வன் றயரதனை யறியாதா ரில்லையவன்
பயந்தகுலக் குமரரிவர் தமையுள்ள பரிசெல்லாம்
நயந்துரைத்துக் கரையேற ளுன்முகற்கு மரிதாம்பல்
இயந்துவைத்த கடைத்தலையா யானறிந்த படிகேளாய்.

'பல் இயம் துவைத்த - பலவகையான வாத்தியங்கள் (எப் போதும்) முழங்குதற்கிடமான, கடை தலையாய்-தலைவாயிலையுடைய சனகராசனே! அயன் புதல்வன் தயரதனை-(முற்கூறிய) அஜ மகா ராஜன் புத்திரனுன தசரத மன்னனனைப் பற்றி, அறியாதார் இல்லை- அறியாதவர் (இப்போது) எவருமில்லை; அவன் பயந்த-அத்தசரதன் பெற்றெடுத்த, குலம் குமரர் இவர் தமை-சிறந்த புதல்வர்களாகிய இவர்களைப் பற்றி, உள்ள பரிசு எல்லாம்-இவர்களுக்குள்ள சிறப்புக் களெல்லாவற்றையும், நயந்து உரைத்து-(முழுதும்) விரும்பி எடுத் துச் சொல்லி, கரை ஏறல்-முடிவு காணுதல், நான்முகற்கும் அரிது ஆம்-நான்கு முகங்களையுடைய பிரமதேவனுக்கும் அரிதாகும்; (அவ்

வாறுயினும்), யான் அறிந்தபடி-நான் கண்டறிந்தவளவில்,(ஒருவாறு கூற), கேளாய்-நீ கேட்பாயாக; (என்று மேலே கூறுகின்றான்).

இதில் தசரதனையும் இராமலக்குமணரையும் சுட்டிக் கூறி, அடுத்த கவி முதல் இப்படலம் முடிவுவரை உள்ள 16 கவிகளால் இராமபிரான் முதலியோரின் பிறப்பு வளர்ப்பு, இராமபிரானுடைய பெருமைகள் ஆகியவற்றைக் கூறுகிறான்.

தசரத சக்கரவர்த்தி, நிகழ்காலத்தவனாதலால் அவன் பெருமைகளைத் தான் கூறாமலே யாவரும் அறிவர் என்பது பற்றித் 'தயரதனை அறியாதா ரில்லை' என்றான். இராமபிரான் முதலியோரின் சிறப்பு மிகுதிபற்றி 'நான்முகற்கும் உரைத்துக் கரையேறலரிது' என உயர்த்துக் கூறினான்.

'கடைத்தலை': சொல் முன்பின்னாகத் தொக்கது; 'முரசெய்து கடைத்தலையான்' (324).

(பி - ம்.) 1. தசரதனை; தெசரதனை.
2. தம்மையுள்ள; தமக்குள்ள; படியெல்லாம்.
3. உரைக்கக்; உரைத்தல்: கரையேற; கரையேற்ற; கரையேற்றல்: அரிதரசர்: அரிதாகும்: அரிதாமால்; அறிவரிதால்.
4. இயைந்துரைத்த: யானுரைத்தபடி கேளாய்; அறிந்தபடி கேட்பாயே; அறிந்தபடி கேளென்னே. (15)

இங்கே ஒரு மிகைப்பாடல் சில பிரதிகளில்:—

அந்தரத்தி லுருள்சேர வடுசவிவந் துறுமளவில்
சிந்தைமகிழ் தசரதனுஞ் சென்றவன்மேற் சரங்கள்தொடுத்
திந்தவழி போகரிதென் றியைந்தவனை யென்நாளும்
உந்துமென வுலகுதனக் குறுதுயர்தீர்த் திடுமுரவோன்.

### இராமபிரான் முதலியோர் பிறப்பு

725. துனியின்றி யுயிர்களிப்பச் சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப் பகைவென்று படிகாப்போன்
தனுவன்றித் துணையில்லான் றருமத்தின் கவசத்தான்
மனுவென்ற நீதியான் மகவின்றி வருந்துவான்.

தருமத்தின் கவசத்தான்-தருமத்தையே தனக்கு அரணாகக் கொண்டவனும், மனு வென்ற நீதியான்-(நீதி நூல் செய்த) மனுவினும் மேம்பட்ட நீதியை உடையவனும் (ஆகிய தசரதன்), தனு அன்றி துணை இல்லான்-(தன் கை) வில்லை யன்றி வேறு துணை வேண்டாதவனாய், சுடர் ஆழி படை வெய்யோன்-கிரணங்களாகிய சக்கராயுதத்தையுடைய சூரியன், பனி வென்றபடி என்ன-பனியை (எளிதாக) அழிக்குந் தன்மைபோல, பகை வென்று-பகை யரசர்களை வெற்றிகொண்டு, உயிர் துனி இன்றி களிப்ப-(தனது ஆட்சியில்) உயிர்களெல்லாம் (சிறிதும்) துன்பமின்றி மகிழ்ந்து வாழும் வண்ணம்,

படி காப்போன்-உலகத்தைப் பாதுகாப்பவன், மக இன்றி வருந்துவான்-புத்திரப்பேறு இல்லாமல் வருந்துபவனுகி,

இதுவும் அடுத்த பாட்டும் குளகம்; அடுத்த பாட்டின் இறுதியில் உள்ள 'கருதினன்' என்பதனேடு முடியும்.

பலவகையில் நிறைவும் சிறப்பும் உடைய தசரதனுக்கும், புத்திரப் பேறில்லாத குறை ஒன்று இருந்தது என்றபடி.

தருமம் சிறிதும் தவருதவன் என்பார் 'தருமத்தின் கவசத்தான்' என்ருர். தருமத்திற்குக் கவசம் போன்றவன் எனலுமாம். மனு என்ற நீதியான் எனப் பிரித்து, மனுவே என்னத்தக்க நீதியுடையவன் எனப் பொருள் கொள்ளலும் பொருந்தும். சூரிய உதயத்தால், எங்கும் நிறைந்துள்ள பனி முழுதும் தானே இருந்தவிடந் தெரியாது போவதுபோல, தசரதனது எழுச்சியால் பகைவர் பலராயினும் தாமே ஒடுங்குவர் என்பது தோன்ற, அதனை உவமையாக்கினுர். அத்தகைய வெற்றிச் சிறப்பை மிகுவித்தற்குத் 'தனுவன்றித் துணையில்லான்' என்ருர். போர் நிகழ்ச்சியாலும் குடிகள் துன்பமுறல் கூடுமாதலால், அஃதின்றியே, பகை என்பதொன்றின்றியே, உலகாண்டான் எனச் சிறப்பித்தவாறும். அரசியற் படலம் 1, 2-ஆம் பாடல்களும், அயோத். 1135-ஆம் பாடலும், 'மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலைத், தானதனுக் கிடையூறு தன்னல்தன் பரிசனத்தால்; ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்தம்மால், ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனே' என்ற பெரிய புராணச் செய்யுளும் ஈண்டு நோக்கற்பாலன.

'சுடராழிப்படை வெய்யோன்' என்பதற்கு, ஒளி பொருந்திய சக்கராயுதம் போன்ற சூரியன் எனவும் உரை கூறுவர். 'ஆழிப்படை என்பதற்கு, 'ஆஞ்ஞா சக்கரத்தால்' என்றுரைத்தாருமுளர்.

(பி - ம்.) 1. துனியின்ருய்; துனிவின்றி; பனியின்றி: உயிர்செல்லச்: படர்வெய்யோன்; தேர்வெய்யோன்.
2. பகைவென்ற; பகையேன்று: படிகாத்தான்; படிகாத்தோன்; படைகாப்போன்; பகைகாத்தான்.
3. தனுவின்றித்; தனுவென்றித்; தனுவொன்றித்: துணையிலான்; கவசத்தன். 4. மனுவென்னும்: வருந்தினன்; வருந்துநாள். (16)

726. சிலைக்கோட்டு நுதற்குதலைச் செங்கனிவாய்க் கருநெடுங்கண்
விலைக்கோட்டும் பேரல்குன் மின்னுடங்கு மிடையாரை
முலைக்கோட்டு விலங்கென்று தொடர்ந்தணுகி முன்வந்த
கலைக்கோட்டுப் பெயர்முனியாற் றுயர்நீங்கக் கருதினன்.

(புத்திரப் பேறில்லாத குறையால் வருந்திய தசரத மன்னன்), சிலை கோடு நுதல்-வில்லைப்போல வளைதலுடைய நெற்றியையும், செம் கனி வாய்-சிவந்த கொவ்வைப்பழம் போன்ற அதரங்களையும்,

கரு நெடு கண்-கரிய நீண்ட கண்களையும், விலைக்கு ஓட்டும் பேர் அல்குல்-விலைப் பொருளுக்காகக் கொடுக்கும் பெரிய அல்குலையும், மின் நுடங்கும் இடையாரை-மின்னற் கொடிபோலத் துவளுகின்ற இடையையும் உடைய வேசையரை, முலை கோடு விலங்கு என்று-முலைகளாகிற கொம்புகளையுடைய விலங்குகள் என்று கருதி, தொடர்ந்து அணுகி-அவர்களைப் பின்றொடர்ந்து கிட்டி, முன்வந்த-உரோமபத மன்னன் முன்னே வந்து சேர்ந்த, கலை கோடு பெயர் முனியால்-மான் கொம்பினாலே பெயர்பெற்ற (கலைக்கோட்டு) முனிவனாலே, துயர் நீங்க கருதினான்-தன் குறையினின்றும் நீங்க நினைத்தான்.

செங்கனி வாய் × கருநெடுங்கண்: முரண்தொடை.

கலைக்கோட்டு முனியையும் அவனருளாலே தசரத மன்னன் புத்திரப் பேறெய்தினமையையும் குறித்த செய்திகள் திருவவதாரப் படலத்துள் விரிவாகக் கூறப்பெற்றன.

(பி - ம்.) 1. கடுநெடுங்கண். 2. விலைக்கோட்டுப்.
3. விலங்கென்றங் குடனணுகி முன்னின்ற.
4. திருமுனியால்; நீக்கக் கருதினான்; நீங்குங்கருத்தினான். (17)

727. தார்காத்த நறுங்குஞ்சித் தனயர்களென் றவமின்மை
வார்காத்த வனமுலையார் மணிவயிறு வாய்த்திலரால்
நீர்காத்த கடல்புடைசூழ் நிலங்காத்தே னென்னிற்பின்
பார்காத்தற் குரியாரைப் பணிநீயென் றடிபணிந்தான்.

(கலைக்கோட்டு முனிவனாலே தன் குறைதீர்க்கக் கருதிய தசரத மன்னன், அம்முனிவனையணுகி), 'தார்காத்த நறு குஞ்சி-பூமாலை சூட்டிய மணமுள்ள மயிர் முடியையுடைய, தனயர்கள் என் தவம் இன்மை-புதல்வரைப் பெறுதல் என்ற தவம் எனக் கின்மையால், வார்காத்த வனம் முலையார்-கச்சினால் காக்கப்பட்ட அழகிய தனங்களையுடைய (என்) மனைவிமார், மணி வயிறு வாய்த்திலர்-(இதுகாறும்) அழகிய கருப்பந் தரித்திலர்; நீர் காத்த-நீர் நிறைந்த, கடல் புடை சூழ் நிலம்-கடலானது எங்கும் சூழ்ந்துள்ள இப்பூமியை, காத்தேன்-(நெடுங்காலமாகக்) காத்து வந்துள்ளேன்; என்னின் பின்-எனக்குப் பின்னே, பார் காத்தற்கு உரியாரை-இப்பூமியைப் பாதுகாத்தற்குரியவரான நன்மக்களை, நீ பணி என்று-(உண்டாக) தேவரீர் அருள் செய்வீராக' என்று வேண்டி, அடி பணிந்தான்-(முனிவனுடைய) திருவடிகளிலே வணங்கினான்.

வயிறு வாய்த்தல்-கருப்பங் கொள்ளுதல் அல்லது கருப்பத்தில் தோன்றுதல்; 'மன்னுபுகழ்க் கௌசலைதன் மணிவயிறு வாய்த்தவனே' (பெருமாள் திருமொழி. 8: 1); 'மிதிலைச் செல்வி உலகுய்யத் திருவயிறு வாய்த்த மக்கள்': (ஷை 10: 8); 'பார்காத்தற்குரியாரைப் பணி நீ':

'பாரளிக்கு மைந்தரை, நலப்புகழ் பெறவினி நல்கவேண்டுமால்' (261).

(பி - ம்.) 1. தநயர்களின் றவமின்மை; தநயர்களென் றகவின்மை: தயரதன்றுன் றகைமைந்தர்.
2. மணிவயிற்று; மணிவயிற்றில்; அணிவயிற்றில்; வயிற்றகத்து வந்தில ரால்; வந்திலர்காண்: வந்திலார்.
3. கடல்காத்த நிலம்; நின்றபின். 4. பணியீரென்று. (18)

728. அவ்வுரைகேட் டம்முனியு மருள்சுரந்த வுவகையனாய்
இவ்வுலக மன்றிமற் றெவ்வுலகு மினிதளிக்கும்
செவ்வியிளஞ் சிறுவர்களைத் தருகின்றே னினித்தேவர்
வவ்விநுகர் பெருவேள்விக் குரியவெலாம் வருகென்றான்.

அ உரை கேட்டு-(தசரதன்கூறிய) அந்த வார்த்தையைக்கேட்டு, அ முனியும்-அக்கலைக்கோட்டு முனிவனும், அருள் சுரந்த உவகையன் ஆய்-அருள்மிக்க மகிழ்ச்சியுடையவனாகி, (தசரதனை நோக்கி), இ உலகம் அன்றி-இவ்வுலகம் மட்டுமல்லாமல், மற்று எ உலகும்-பிற எல்லாவுலகங்களையும், இனிது அளிக்கும்-இனிமையாகப் பாதுகாக்கவல்ல, செவ்வி இளம் சிறுவர்களை-தகுதி வாய்ந்த புதல்வர்களை, தருகின்றேன்-(உண்டாக) அருள் செய்கின்றேன்; (அதன் பொருட்டு), தேவர் வவ்வி நுகர் பெருவேள்விக்கு-தேவர்கள் அவிபெற்று உண்ணுதற்குரிய பெரிய வேள்வியொன்று செய்வதற்கு, உரிய எலாம்-உரிய எல்லாப் பொருள்களும், இனி வருக-இப்போதே வரட்டும்; என்றான்-என்றருளிச்செய்தான்.

வருகென்றான் : தொகுத்தல்.

கலைக்கோட்டு முனிவன் தசரதன் வேண்டுகோளை மகிழ்வுடன் ஏற்று, 'அதன் பொருட்டுப் 'புத்திரகாமேட்டி' என்னும் வேள்வி செய்தல் வேண்டும்; அதற்குரிய எல்லாவற்றையும் சித்தஞ் செய்க' என்றருளினான் என்க.

(பி - ம்.) 1. அருண் முனியும்: உவகையினால்; உவகையினான்.
2. இவ்வுலகும்: அன்றியுமற் றேழுலகும்; அன்றியே யெவ்வுலகும்; இன்றியே யேழுலகும்; இன்றியீ ரேழுலகும்: இனிக்காக்கும்; காத் தளிக்கும்; காத்தருளும்.
3. செவ்வியருங் குருசிலரைத்; செவ்வையிளங் குருசிலரைத்; குரிசிலரைத்.
4. உரியவெல்லாம்; உரியதெலாம்: வருகவென்றான்; வருவியென்றான்: வரியென்றான்; அமைக்கவென்றான். (19)

729. காதலரைத் தருவேள்விக் குரியவெலாம் கடிதமைப்ப
மாதவரிற் பெரியோனு மற்றதனை முற்றுவித்தான்
சோதிமணிப் பொற்கலத்திற் சுதையனைய வெண்சோறோர்
பூதகணத் தரசேந்தி யனனின்றும் போந்ததால்.

(முனிவன் கட்டளைப்படியே சக்கரவர்த்தி), காதலரை தரு வேள்விக்கு உரிய எலாம்-புதல்வர்களைக் கொடுக்கும் வேள்விக்குரிய எல்லாப் பொருள்களையும் இடத்தையும், கடிது அமைப்ப-விரைவிலே தருவித்து அமைக்க, மற்று-அதன்பின், மா தவரில் பெரியோனும்-சிறந்த தவசிகளில் பெரியவனான கலைக்கோட்டு முனிவனும், அதனை முற்றுவித்தான்-அவ்வேள்வியை(முறைப்படி) செய்துமுடிப்பித்தான்; (அப்போது), ஓர் பூத கணத்து அரசு-பூதகணங்களிலே தலைமையுடையதொரு சிறந்த பூதமானது, சோதி மணி பொன் கலத்தில்-ஒளிமிக்க மணிகள் பதித்த பொன்னாலாகிய பாத்திரமொன்றில், சுதை அனைய-தேவாமிருதம் போன்ற, வெண் சோறு-வெள்ளிய உணவை, (பாயசத்தை), ஏந்தி-எடுத்துக்கொண்டு, அனல் நின்றும்-வேள்வித் தீயினின்றும், போந்தது-வெளிவந்தது. ஆல்-அசை.

பூதம் சுதையுடன் வந்தமை: 266-பார்க்க.

(பி - ம்.) 1. தரும் வேள்விக்கு; உரியவெல்லாம்; உரியதெலாம்; கடிதமைத்தான்.
2. பெரியானும்: மகத்தினையும்; மாமகத்தை.
3. சோதிநிறப் பரிகலத்துச்; பொற்கலத்துச்: சுதையன்ன; சுதையென்ன: வெண்சோறு: வண்சோறு.
4. அனனின்று; அதினின்றும்; அநினின்று; கனனின்று; புறப்பட்ட; புறப்பட்டான் (20)

730. பொன்னின்மணிப் பரிகலத்திற் பொலிகின்ற வின்னமுதைப்
பன்னுமறைப் பொருடேர்ந்த பெரியோன்றன் பணியினால்
தன்னனைய நிறைகுணத்துத் தயரதனு முறையாலே
நன்னுதலார் மூவருக்கு நாலுகூ றிட்டளித்தான்.

தன் அனைய-தனக்குத் தானே நிகரான, நிறை குணத்து-பெருந்தன்மைக் குணங்களையுடைய, தயரதனும்—, பன்னும்-ஓதுதற்குரிய, மறை பொருள் தேர்ந்த-வேதங்களின் பொருள்களை நன்குணர்ந்த, பெரியோன் தன் பணியினால்-பெருமைமிக்க கலைக்கோட்டு முனிவனுடைய கட்டளைப்படி, பொன் இன் மணி பரிகலத்தில்-பொன்னாலாகி இனிய மணிகள் பதித்த பாத்திரத்திலே, பொலிகின்ற-சிறப்புற விளங்குகின்ற, இன் அமுதை-இனிய அவ்வுணவை, முறையாலே-முறைப்படி, நல் நுதலார் மூவருக்கும்-அழகிய நெற்றியையுடைய தேவிமார் மூவருக்கும், நாலு கூறு இட்டு அளித்தான்-நான்கு பங்காக்கிக் கொடுத்தான்.

தன் அனைய-பிறர் ஒருவரை ஒப்புக் கூறுதற்கரிய. முறையாலே என்றது, கோசலை, கைகேயி, சுமித்திரை என்ற வரிசையிலே என்றபடி. அம்மூவருக்கும் முறையே முதலில் பங்கிட்டுக் கொடுத்தபின், பிதிர்ந்து எஞ்சி நின்றதைச் சுமித்திரைக்கு மீண்டும் அளித்ததாகத் திருவவதாரப் படலத்துட் கூறினமை காண்க. அதனாலேயே 'நாலு கூறு' என்றார் போலும்.

(பி - ம்.) 1. பொன்னிணனி; பரிகலத்துப்; பொற்கலத்துப்: பொற்கலத்திற்; புறப்பட்ட.
2. பொருளுணர்ந்த; பொருடெரிந்த; மறையோன்றன்: பொருளறிந்து பற்றறுத்த முனிபணியால்.
3 தன்வினைய; தன்னைநேர்: நிறைகுணத்த; நிறைகுணத்திற்; தசரதனும்; தசரதன்: வரன்முறையால்; தகைமுறையால்; தன்முறையால்; தனக்குரிய. 4. மூவர்க்கும்; நான்கு கூறு: இட்டீந்தான். (21)

731. விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையாலும்
அருங்கடையின் மறையறைந்த வறஞ்செய்த வறத்தாலும்
இருங்கடகக் கரதலத்தில் வெழுதரிய திருமேனிக்
கருங்கடலைச் செங்கனிவாய்க் கவுசலையென் பாள்பயந்தாள்.

விரிந்திடு-(உலகத்திலே) பரவியிருந்த, தீவினை-கொடியபாவங்கள், செய்த-(தாம்) செய்த, வெவ்விய தீவினையாலும்-மிகக் கொடிய பாவத்தாலும், அரு-அருமையான, கடை இல்-முடிவில்லாத, மறை அறைந்த-வேதங்கள் சொல்லிய, அறம் செய்த அறத்தாலும்-தருமங்கள்(தாம்) செய்த நல்வினையாலும், இரு கடகம் கரதலத்து-பெரிய தோள்வளைகளையணிந்த கைகளையும், எழுத அரிய திருமேனி-(ஓவியத்திலும்) எழுதுதற்கு அரிய திருமேனியையும் உடைய, இ கரு கடலை-கருநீலக்கடல் வண்ணனை இவ்விராமனை, கவுசலை என்பாள்-(தசரதன் தேவிமாருள்ளே மூத்தவளான) கௌசலை என்பவள், பயந்தாள்-பெற்றாள்.

இராமபிரான், தீயோரையும் அவராலாகும் தீவினைகளையும் அழித்து, நல்லோரையும் நல்லறத்தையும் காத்தற்கே அவதரித்தமையால், இவ்வாறு கூறினர். நெல் செய்யப் புல் தேயுமாப்போலே, நல்லறத்தை வளர்த்தால் மறம் தானே கெடும். தீவினை, தான் அழிவடையும் வண்ணம் தானே தீவினை செய்துகொண்டது; அறம், தான் பெருகும் வண்ணம் தானே அறஞ் செய்தது, என்றது கவி நயம். ஒப்பு: தவஞ்செயத் தவஞ்செய்த தவமென்' (ஆரணிய. 237.); 'தவஞ் செய்த தவமாந் தையல்'(சுந்தர. 1275.).'எழுதரிய திருமேனி; 559-குறிப்புப் பார்க்க. 'தீட்டருமேனி மைந்தன்' (அயோத். 1037 ) என்று பரதனையுங் கூறுவர்.

(பி - ம்.) 1. விரிந்தடு தீவினை; விரிந்தடுந் தீவினை; விரிந்தகொடுவினைபெயர; அகல; மெய்ம்மைசெய்நல்வினையாலும்; மேன்மைசெய்நல்வினையாலும்.
2. அருங் குடையின்: மறைதெரிந்த; மறையறிந்த: அருள்பெருகு மறத்தாலும்; அருள்பெருகு தவத்தாலும்.
3. கரதலத்தில்; கரதலத்தால்: கரதலத்த; தராதலத்தில்.
4. கௌசலையென்பாள்; கவுசலையென்பவள்; கவுசலையென்றாள்; கவுசலை முன் பயந்தனளே; கவுசலைமுன் பயந்தெடுத்தாள். (22)

732. தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலு மெழிலாலு மிவ்விருந்த
வள்ளலையே யனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்.

தள்ள அரிய-(அறிவுடையோரால்)விலக்குதற்கு அருமையான, பெரு நீதி-சிறந்த நீதிகளாகிற, தனி ஆறு-ஒப்பற்ற ஆறுகள், புக-(தன்னிடம்) வந்து சேர்தலினால், மண்டும்-நிறைந்திருக்கின்ற, பள்ளம் எனும் தகையானை-ஆழ்ந்த கடல் என்று சொல்லத் தக்க பெருமை வாய்ந்தவனும், எள்ள அரிய-(எவரும்)இகழ முடியாத,குணத்தாலும்-நற்குணங்களாலும், எழிலாலும்-அழகினாலும், இவ் இருந்த-இதோ இங்கு வீற்றிருக்கின்ற, வள்ளலையே அனையானை-வள்ளலாகிய இராமனையே நிகர்த்தவனுமான, பரதன் எனும் பெயரானை-பரதன் என்ற பெயருடைய குமாரனை, கேகயர் கோன் மகள்-கேகய மன்னனுடைய மகளான கைகேயி, பயந்தாள்-பெற்றெடுத்தாள்.

'நீதிகள் என்கிற ஆறுகள் போய்ச் சேர்தலால் நிறைந்து விளங்கும் கடல்' என்றதனால் பரதனுடைய பெருமை நன்கு புலனாகும்; அவன் திருமேனி யமைப்பிலும் இராமபிரானையே நிகர்த்தவன். பரதனுடைய குணச்சிறப்பை, 'மும்மையின், நிறைகுணத்தவன் நின்னினு நல்லனோர், குறைவிலன்' (அயோத். 302) எனக் கௌசலையின் வாக்காலும், 'ஆயிரமிராமர் நின்கேழாவரோ தெரியினம்மா' எனக் குகன் கூற்றாகவும் கூறுதல் காண்க. வாலி இராமபிரானை நோக்கி 'நீ பரதன் முன்தோன்றினையே' (கிட்கிந்தா. 305) எனக் கூறியதாகவுள்ள விடத்திலும் பரதனது நீதி வன்மைச் சிறப்பு விளங்கும். 'நம்பியு மென் னாயகனை யொக்கின்றான்' (அயோத். 1033) எனவரும் குகன் கூற்றால், பரதன், தோற்றத்தாலும் இராமபிரானை யொத்தவன் என்பது புலனாம். இவ்விருந்த; ஒப்பு. 'இந்நின்றகுரிசில்', 'இந்நின்றாள்'(அயோத். 1068, 1072.); 'இந்நின்றவள்' (சீவக. 1327.).

(பி - ம்) 1. பெருவேள்வித் தனியாறும்.
2. பள்ளமென்னும்: பரதனென்னும் பெரியோனை.
3. இவணிருந்த; இங்கிருந்த; ஈங்கிருந்த.
4. வள்ளலையே நிகர்வானைக்: கைகயர் கோன்மகள்; கைகயர் கோமகள்.

(23)

733. அருவலிய திறலினரா யறங்கெடுக்கு மடலரக்கர்
வெருவருதிண் டிறலாரை வில்லேந்தி வருமேருப்
பருவரையு நெடுவெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள்
இருவரையு மிவ்விருவர்க் கிளையாளு மீன்றெடுத்தாள்.

அரு-(பிறரால் வெல்லுதற்கு) அரிய, வலிய திறலினராய்-மிக்க வலிமையுடையவர்களாய், அறம் கெடுக்கும் - தருமங்களை அழிக்கின்ற, அடல் அரக்கர்-(அறத்தின்) பகைவரான அரக்கர்கள்,

வெருவரு-அஞ்சுதற்குக் காரணமான, திண் திறலாரை-மிக்க வலிமை பெற்றவர்களும், வில் ஏந்தி வரும்-கையில் வில்லைத் தாங்கி நடந்து வருகிற, மேரு பரு வரையும்-(பொன் மயமான) பெரிய மேரு மலையையும், நெடு வெள்ளி பருப்பதமும்-(அவ்வாறே வில்லேந்தி வருகிற) பெரிய வெள்ளி மயமான கைலாய மலையையும், போல்வார்கள்-ஒத்தவர்களுமான, இருவரையும்-இலக்குமணன், சத்துருக்கனன் என்ற இரண்டு குமாரர்களையும். இ இருவர்க்கு இளையாளும்-முன் கூறிய (கௌசலை, கைகேயி என்ற) இருவர்க்கும் இளையவளான சுமித்திரையும். ஈன்று எடுத்தாள்-பெற்றெடுத்தாள்.

முன்னே திருவவதாரப் படலத்துள்ளும் சுமித்திரையை மூன்றுவதாகவே கம்பர் கூறியுள்ளமை காண்க.

இலக்குமணனும், சத்துருக்கனனும் முறையே பொன்னிறமும், வெண்ணிறமும் படைத்தவர்களாதலாலும், சிறந்த வில் வீரர்களாதலாலும், 'வில்லேந்தி வரும் மேருவரையும் வெள்ளிப் பருப்பதமும் போல்வார்கள் இருவர்' என்றார். 'வில்லேந்தி வரும் மலைகள்': இல் பொருளுவமை, 'விற்கை வடவரை பாங்கு நிற்ப' (யுத்த. 435.) என்பர் பின்னும். இலக்குமணன் பொன்னிற முடைமை: 311-குறிப்புப் பார்க்க. சத்துருக்கனன் நிறம் வெண்மை: 300-பார்க்க.

(பி - ம்.) 1. அறங்கடந்த: விறலரக்கர்; வல்லரக்கர்; வலியவரை.
2. திறலார்கள்; திறலினரை; வில்லேந்து மெனிற் செம்பொன்; வில்லெடுக்கு மெழிற் செம்பொன்; வில்லேந்து மணிச்செம்பொன்; வில்லேந்தி வரின்மேருப்.
3. பனிவரையுந் தனிவெள்ளிப்; அருவரையு நெடுவெள்ளிப்: பருப்பதமு மனையார்கள்.
4. இருவரையு மவ்விருவர்க்கு; இருவரையு மிருவர்க்கங்கு; இருவரையு மற்றிருவர்க்கு. (24)

734. கலையாயும் பேருணர்விற் கலைமகட்குந் தலைவராய்ச்
சிலையாயுந் தனுவேதந் தெவ்வரைப்போற் பணிசெய்யக்
கலையாழிக் கதிர்த்திங்க ளுதயத்திற் கலித்தோங்கும்
அலையாழி யெனவளர்ந்தார் மறைநான்கு மனையார்கள்.

மறை நான்கும் அனையார்கள்-நான்கு வேதங்களையும் நிகர்த்த அக்குமரர் நால்வரும், கலை ஆயும் பேர் உணர்வில்-நூற்பொருள்களை நுணுகி ஆராயும் சிறந்த அறிவுத்திறத்தில், கலைமகட்கும் தலைவர் ஆய்-சரசுவதிக்கும் மேற்பட்டவர்களாய், சிலை ஆயும் தனுவேதம்-வில்வித்தையை ஆராய்ந்து கற்றற்குரிய தனுர்வேதமானது, தெவ்வரை போல்-(போரில் தோற்ற) பகைவரைப் போல, பணி செய்ய-தமக்குக் குற்றேவல் செய்யும்படி, கலை ஆழி கதிர் திங்கள் உதயத்தின்-(நிறைந்த) கலைகளோடு வட்டவடிவமும் ஒளியும் பொருந்திய சந்திரனது உதயத்தால், கலித்து ஓங்கும் அலை ஆழி என-பேரொலி செய்து

எழுகின்ற அலைகளையுடைய கடல் போல, வளர்ந்தார்-(குணம், அழகு, வடிவம், திறமை ஆகியவெல்லாம் மேலிட) வளர்ந்தார்கள்.

கலைமகட்கும்: உம்மை உயர்வு சிறப்பு.

'தனு வேதம் தெவ்வரைப்போற் பணி செய்ய' என்றது விற் பயிற்சித்திறனைச் சிறிதும் வருத்தமின்றி எளிதிற் பெற்றனர் என்பதாம். கௌசிக முனிவன் இராமபிரானுக்குப் படைக்கல முதலியவற்றை மந்திரங்களுடன் அளித்தபோது, அவை இராமபிரானிடம், 'வீரநீ விதியின் எம்மை ஏவின செய்து நிற்றும்'(414) எனக்கூறியதாகவுள்ளதும், கௌசிக முனிவன் கூற்றாக மேலே வரும் 739-ஆம் பாட்டும் இங்கே ஒப்பு நோக்கத்தகும். திங்களுதயத்திற் கலித்தோங்கும் ஆழி என்றது, ஆசிரியன் முன்னே மேன்மேலும் அறிவொளி மிக்கு விளங்கினமை குறிக்கும். சந்திரோதயத்தால் கடல் கொந்தளித்தல்: 870; 'தண்ணென் கதிர் வரவாற் பொங்குங் கடல்' (நன்னெறி. 18).

மறை நான்கு மனையார்: ஒப்பு: 'நால்வரும், பொருவிலுன் மறையெனு நடையினர்' (1133); 'புவிக்கெலாம் வேத மேயன, இராமன்' (அயோத். 146.)

(பி - ம்.) 1. தலையாய பொருளுணர்வில்; தலையான பேருணர்வில். கலைமகட்குத்; தலமகட்கும்; தரைமகட்குத்.
2. சிலையான: தனுவேந்தர்; தனிவேந்தர்; தேர்வேந்தன்; தேர்வேதம்: தெவ்வரைப் போய்ப்; தேவரைப் போற்; தேவர்களும்.
3. தனித்திங்கள்: உதயத்துக் கலந்தோங்கும்.
4. மறை நான்கு வல்லார்கள்; நான்கும் வல்லார்கள். (25)

735. திறையோடு மரசிறைஞ்சுஞ்
செறிகழற்காற் றயரதனும்
பொறையோடுந் தொடர்மனத்தான்
புதல்வரெனும் பெயரேகாண்
உறையோடு நெடுவேலா
யுபநயன விதிமுடித்து
மறையோடு வித்திவரை
வளர்த்தானும் வசிட்டன்காண்.

'உறை ஓடும் நெடு வேலாய்-(போர் இல்லாமையால்) உறைக்குள்ளே கிடக்கும் பெரிய வேலையுடைய ஜனக மகாராஜனே! (இக்குமரர்கள்), அரசு-பல அரசர்கள், திறையோடும் இறைஞ்சும்-தம்தம் கப்பங்களுடனே வந்து வணங்குதற்கு இடமான, செறி கழல் கால்-வீரக்கழலணிந்த கால்களையுடைய, தசரதன் ஆம்-தசரதனாகிய, பொறையோடும் தொடர் மனத்தான்-பொறுமைக் குணம் பொருந்திய மனமுடையவனுக்கு, புதல்வர் எனும் பெயரே-புத்திரர் என்ற பெயர் மாத்திரமே; உபநயனம் விதி முடித்து-(இவர்களுக்கு) உபநய

னச் சடங்கு செய்வித்து, மறை ஓடுவித்து-வேதத்தை (அங்கங்களுடனே) எளிதில் பயிற்றுவித்து, இவரை வளர்த்தானும்-இவர்களை (மெய்யுணர்வினராக) வளர்த்தவனும்,வசிட்டன்-வசிட்டமுனிவனே.

'காண்' இரண்டும் அசை.

தசரத சக்கரவர்த்தி இவர்களைப் பெற்ற தந்தை என்ற அளவேயன்றி, கலைகளிலும் வேதத்திலும் தேர்ச்சியுற்றுச் சிறந்த பேருணர்வினராக இவர்களை ஆக்கிய ஞானபிதா வசிட்ட முனிவனே என்றதனால், வசிட்ட முனிவருடைய பராமரிப்பிலே இவர்கள் வளர்ந்து அறிவிலும் ஒழுக்கத்திலும் மேம்பட்டவராயின பெருஞ் சிறப்புக் கூறப்பட்டது. முன்கவியில், 'தனுவேதம் பணிசெய்தது' என்றது போல, வேதமும் இவர்களுக்கு மிக எளிதில் கைவந்தது என்பதுபட 'மறை ஓடுவித்து' என்றார்.

(பி - ம்.) 1. தசரதனும்; தசரதனுர்; தசரதன்றன்.
2. பொறையோடு நெடுமனத்தான்; புகல்வரெனும் பெயரெய்தி; புதல்வர்க்குப் பெயர் மொழிந்தே. 3. நெடுவேலோய்.
3. மறையோதுவித்திவரை; மறையோதிவித்தவரை; மறையோடுவித்தவரை; மறையோதித் தீவளரா: வளர்த்தவனே. (26)

### இராமபிரானது ஆற்றல்

736. ஈங்கிவரா லென்வேள்விக் கிடையூறு கடிதியற்றும்
தீங்குடைய கொடியோரைக்கொல்விக்குஞ்சிந்தையனுய்ப்
பூங்கழலா யுடன்கொண்டு வனம்புக்கேன் புகாமுன்னம்
தாங்கரிய பேராற்றற் றுடகையே தலைப்பட்டாள்.

'பூ கழலாய்-அழகிய வீரக்கழலையணிந்தவனே! என் வேள்விக்கு-நான் செய்த யாகத்துக்கு, இடையூறு கடிது இயற்றும் தீங்கு உடைய-பல இடையூறுகளை விரைவில் செய்யும் கொடுஞ் செயல்களையுடைய, கொடியோரை-துஷ்டர்களான அரக்கரை, ஈங்கு இவரால் கொல்விக்கும் சிந்தையன் ஆய்-இங்குள்ள இக்குமரரால் அழிப்பிக்கும் கருத்துடையவனுக, உடன் கொண்டு-(தசரதனிடம் அநுமதி பெற்று இவர்களை) என்னுடன் அழைத்துக்கொண்டுவந்து, வனம் புக்கேன்-நான் இருந்த தவவனத்தினுள் நுழைந்தேன்; புகாமுன்னம்-(அவ்வாறு) நுழைந்தவளவிலே, தாங்க அரிய பேர் ஆற்றல்-(ஒருவராலும்) தாங்குதற்கரிய மிக்க வலிமையுடைய, தாடகையே-தாடகை யென்னும் அரக்கியே, தலைப்பட்டாள்-(இவர்களைமுதலில்) எதிர்த்துவரலானுள்.

தாடகையே என்பதில் ஏகாரம், பிரிநிலையாய்த் தாடகையின் பேராற்றலைச் சுட்டியது. இவ்விளங் குமரர்கள் கன்னிப் போரிலேயே, தன்பெயர் கேட்டவளவிலே பிறர் அஞ்சி நடுங்கத்தக்க கொடியவளான தாடகையைத் 'தலைப்பட நேர்ந்தது என்று அவர்களுடைய இளமைக்கு இரங்கியும் ஆற்றலை வியந்தும் கூறியவாறு. அடுத்தகவி

யால், இராமபிரான் தாடகையை மிக எளிதிற் கொன்றமை கூறப்படும்.

(பி - ம்.) 1. இடையூருக் கடிதியற்றும்.
2. தீங்குடைய அரக்கர்தமைக்; அரக்கர்தம்மைக்.
3. பூங்கமலார்க் கொண்டுபோய்; பூங்கமலார் தமைக்கொடுபோய்; பூங் கமலார்க்கொடுவோயவ்.
4. தாங்கரிய பேர்பெற்ற; தாங்கரிய போராடல்; தாங்கரிய போராற்றித்: தாடகையும்; தாடகையாள். (27)

737. அலையுருவக் கடலுருவத் தாண்டகைதன் னீண்டுயர்ந்த
நிலையுருவப் புயவலியை நீயுருவ நோக்கையா
உலையுருவக் கனலுமிழ்கட் டாடகைதன் னுரமுருவி
மலையுருவி மரமுருவி மண்ணுருவிற் றொருவாளி.

'ஐயா-அரசே! அலை உருவு அ கடல் உருவத்து-அலைகள் ஊடுருவுகின்ற அந்தக் கடல்போலும் நிறங்கொண்ட திருமேனியையுடைய, ஆண்தகைதன் - ஆண்மைத் தகுதி மிக்க இவ்விராமனது, நீண்டு உய்ர்ந்த நிலை உருவம் புயம் வலியை-(முழங்கால் வரை) நீண்டதாய் (மலைபோல்) உயர்ந்த, நிலையான அழகுடைய தோள்களின் வலிமையை, நீ உருவ நோக்கு-நீ நன்கு ஆராய்ந்து பார்; ஒரு வாளி-இவன் தொடுத்த ஒரே அம்பு, உலை உருவம் கனல் உமிழ் கண்-உலைக் களத்திலுள்ள மிக்க செந்நிறம் பொருந்திய தீயை உமிழ்வது போன்ற கண்களையுடைய,தாடகை தன் உரம் உருவி-தாடகையின் மார்பைத் துளைத்து ஊடுருவிச் சென்று, மலை உருவி, (அடுத்து அதன் விசைக்கு எதிர்ப்பட்ட) மலையையும் உருவிக்கொண்டு போய், மரம் உருவி-(அதன்பின் எதிர்ப்பட்ட) மரத்தையும் உருவிக்கொண்டு அப்பாற் போய், மண் உருவிற்று-(இறுதியாக, எதிர்ப்படும் பொருள் இன்மையால்) தரையிலே பாய்ந்தது.

அக்கடல் என்றதில் 'அ' உலகறி சுட்டு.

ஆண்டில் இளையவனான இவ்விராமனை, இளையனென்று மதிக்காதே; இவன் எய்த ஓர்அம்பின் ஆற்றல் இத்தகையதாயின், இதினின்றும் அவனுடைய பேராற்றலை உய்த்துணர்க என்பதாம். 'நீஉருவ நோக்கு'என்பதற்கு, புயங்களை, உன்கண்களின் பார்வை நன்குபதியும்படி நோக்குக என்றலும் ஆம். ஓரம்பு பலவற்றை ஊடுருவுமாறு எய்யும் வில்லாற்றலை, 'வல்வில்' என்பர்; 'வல்வி லிராமனிடம்' (பெரியதிரு. 5. 1: 4.) கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய ஓரி என்பவன், 'வல்வில் ஓரி' எனப்படுவான்; இவனது இத்தகைய வில்லாற்றலை, புறநா. 152-ஆம் பாட்டிற் காண்க. இராமபிரானது போராற்றலைத் தாடகை வதைப் படலத்துள்ளும் வேள்விப் படலத்துள்ளும் பரக்கக் காணலாம்.

(பி - ம்.) 1. ஆண்டகைத வீண்டுயர்ந்த; ஆண்டகைத னளப்பரிய; ஆண்டகைதன் னகன்றுயர்ந்த.
2. புயவலியால்; புயநலிய; நிலையுருவ நோக்கைய; நீயுருவ நோக்காயே; நெடுஞ்சிலையைக் கால்வளைப்ப. 3. உரனுருவி.
4. மரனுருவி; வானுருவி; மண்ணுருவி; திசையுருவி; வானுருவிற்று; மறித்தோடிற்று; ஓர்வாளி. (28)

738. செக்கர்நிறத் தெரிகுஞ்சிச் சிரக்குவைகள் பொருப்பென்ன
உக்கனவோ முடிவில்லை யோரம்பி ணெடுமரக்கி
மக்களிலங் கொருவன்போய் வான்புக்கான் மற்றொருவன்
புக்கவிட மறிந்திலேன் போந்தனனென் வினைமுடித்தே.

'(இராமன் மேலும் அரக்கரோடு செய்த போரிலே), செக்கர் நிறத்து-சிவந்த நிறமுடையதாய், எரி குஞ்சி-தீயெரிவது போன்ற தலைமயிரையுடைய, சிரம் குவைகள்-(அரக்கருடைய) தலைக்குவியல் கள், பொருப்பு என்ன-மலைச் சிகரங்கள் போல, உக்கனவோ-(அறுந்து) சிதறினவைகளுக்கோ' முடிவு இல்லை-ஓர் எல்லையில்லை; அங்கு-அப் போர்க்களத்திலே, அரக்கி மக்களில் ஒருவன்-அத்தாடகையின் புதல் வரில் ஒருவனாகிய சுவாகு, ஓர் அம்பிணெடும்-ஓர்அம்பினாலே, போய்-உயிர் நீங்கப்பெற்று, வான் புக்கான்-சுவர்க்க மடைந்தான்; மற்றையவன்-மற்றொருவனாகிய மாரீசன், புக்க இடம் அறிந்திலேன்-போனவிடத்தினை யான் அறிந்திலேன்; (இவ்வாறு அரக்கர் தொல்லை தீர்ந்தபின்), என்வினை முடித்து-(நான்தொடங்கிய) யாக காரியத்தை முற்றுவித்து, போந்தனென்-(இவர்களோடும்.) இங்கு வந்தேன்.

இராமபிரான் அரக்கரோடு புரிந்த போர்த்திறத்தை முன்னே 462—65 பாடல்களிற் காண்க.

(பி - ம்.) 2. உக்கனவோர்: ஓரம்பி னரக்கிபெறும்.
3. மக்களிலாங்கு; மக்களினங்கு.
4. புக்கதிசை: அறிந்திலன்; அறிகிலேன்; உணர்ந்திலேன்: போந்தே னென்; போந்தனனென்; வினைமுடித்தேன். (29)

739. ஆய்ந்தோர்க்கு முணர்வரிய வயற்கேயு மறிவரிய
காய்ந்தேவி னுலகனைத்துங் கடலோடு மலையோடும்
தீய்ந்தேறச் சுடுகிற்கும் படைக்கலங்கள் செய்தவத்தால்
ஈந்தேனு மனமுட்க விவற்கேவல் செய்குநவால்.

'ஆய்ந்தோர்க்கும்- (போர்க்கலையை முற்றும்) ஆராய்ந்துணர்ந் தவர்களுக்கும், உணர்வு அரிய-(அவற்றின் தன்மையை நன்கு) உணர இயலாதனவும், அயற்கும் அறிவு அரிய- பிரமனுக்கும் அறிய முடியா தனவும், காய்ந்து ஏவின்-கோபித்து (அவற்றை) ஏவினால், உலகு அனைத்தும்- எல்லாவுலகங்களையும், கடலோடும் மலையோடும்-(அவற்றிலுள்ள) கடல் மலை முதலிய எல்லாவற்றோடும், தீய்ந்து

ஏற-முற்றிலும் தீய்ந்து போகும்படி, சுடுகிற்கும்-எரித் தழிக்கவல்லன வுமான, படைகலங்கள்-(நான் அரிதிற் பெற்றிருந்த) பலதிவ்வியஅஸ் திர சஸ்திரங்கள், செய்தவத்தால்-(நான்) செய்த தவப்பேற்றினுலே, ஈந்தேனும்-(இவ்விராமனுக்கு) உபதேசித்த நானுங் கூட, மனம் உட்க - (கண்டு) மனம் வெட்கும்படி, இவற்கு - இவ்விராமனுக்கு, ஏவல் செய்குந-குற்றேவல் செய்கின்றன. ஆல்: அசை.

படைக்கலங்கள் இராமபிரானுக்கு ஏவல் செய்தல்: 735-குறிப் புப் பார்க்க.கௌசிகமுனிவன், தான் மிகமுயன்று அரிதிற்பெற்றதெய் வப் படைக்கலங்களை இராமபிரானுக்கு அளிக்க நேர்ந்தது தன் தவப் பயனுகும்என்கின்ருன். இராமபிரானுடைய ஆற்றலை அவன் இவ்வாறு விரிவாக எடுத்துக் கூறியது, முன்னே 'இக் குமரர் நின்னுடைய வேள்வி காணிய வந்தார்; வில்லுங் காண்பார்' (711) என முனிவன் கூறியபோது, சனகமகாராசனுக்கு, 'இராமன் சிவன் வில்லையெடுத்து வளைத்தல் கூடுமோ' என எழுந்த ஐயம் ஒருவாறு நீங்கக் காரண மாகும்.

(பி - ம்.) 1. ஆய்ந்தேற வுணரைய; உணரையா; ஆய்ந்தோர்க்கும் உணர்வரி தாய்; ஆய்ந்தோர்க்கும் அறிந்தேத்தல்; அயற்கேயு மறிவரிதாய்; அயற்கேயு மறியாத; அயற்கேயு மறிவரிதால்; அயற்கேயு முணர்வரி தாய்; அயற்கேயு மறிவரிதாக்.
2. காய்ந்தேவில்; காய்ந்தேயிவ்; காய்ந்தேவ; காய்ந்தேயிங்கு.
3. தீந்தேறச்; தேய்ந்தேறச்; படைக்கலன்கள்.
4. ஈய்ந்தேனும்; ஈய்ந்தேனென்; ஈய்ந்தேயான்; ஈய்ந்தேன்யான்; ஈந் தேனுன்; ஈந்தேனென்; ஈய்ந்தேற்கு; மனமுட்காது; மனமுவக்க; மன முவப்ப; இவர்க்கேவல்; செய்குனவால்; செய்குமால்; செய்யுமால்; செய்தனவால். (30)

740. கோதமன்றன் பன்னிக்கு
முன்னையுருக் கொடுத்ததிவன்
போதுவென்ற தெனப்பொலிந்த
பொலங்கழற்காற் பொடிகண்டாய்
காதலென்ற னுயிர்மேலு
மிக்கரியோன் பாலுண்டால்
ஈதிவன்றன் வரலாறும்
புயவலியு மெனவுரைத்தான்.

'கோதமன் தன் பன்னிக்கு-கௌதம முனிவன் பத்தினியான அகலிகைக்கு, முன்னை உரு கொடுத்தது-(சாபத்தால் அடைந்திருந்த கல்லுருவம் நீங்க), பழைய நல்லுருவத்தைக் கொடுத்தது, இவன்- இவ்விராமனுடைய, போது வென்றது என பொலிந்த-தாமரைப் பூவையும் தன் அழகால் வென்றது என்னும்படி விளங்குகின்றதும், பொலம் கழல்-பொன்னுலான வீரக்கழலை அணிந்ததுமான, கால்- பாதத்தின், பொடி கண்டாய்-தூளியாகு மென்பதனை நினைவு கூர்வா

யாக; (எனக்கு), என்தன் உயிர் மேலும்-என்னுடைய உயிரினும் மேலாக, இ கரியோன் பால்-கரிய திருமேனியுடைய இவனிடத்தே, காதல் உண்டு-அன்பு நிறைந்துளது; இவன் தன் வரலாறும்-இவனு டைய சரித்திரமும், புயம் வலியும்-தோளாற்றலும், ஈது-மேற் சொல்லிய வாறுகும்;' என உரைத்தான்-என்று கூறி முடித்தான். ஆல்-அசை 'பன்னி: பத்நி என்ற வடசொல்லின் திரிபு.

இதற்குமுன் இராமபிரானுடைய புயவலியையும் வில்லாற்றலை யும் வியந்துகூறி,இங்கே அப்பிரானது தெய்வத் தன்மையையும் புலப் படுத்தினுன் கௌசிக முனிவன். முக்காலமும் உணர்ந்த கௌதம முனிவன் இராமபிரானது அவதார நிகழ்ச்சியை முன்னுணர்ந்தே அப்பெருமானது திருவடி தீண்டலால் அகலிகைக்குச் சாபந் தீரு மென்று விதித்திருந்தமையும், அவ்வாறே அது நிகழ்ந்தமையும் கருதி, அத்தெய்வத் தன்மையைச் சனக மகாராசனுக்குக் குறிப்பித்து, என் னுயிரினும் மேலாக இக்கார்வண்ணனிடத்தே, எனக்கு அன்பு (பக்தி) உண்டு என்றுன். எனவே, இவ்விராமனை எளிய சிறுவன் என் றெண்ணுதே; இவன் அவதார மூர்த்தி எனப் புலப்படுத்தியவாறும். உன் ஐயத்துக் கிடமான வில்லை வளைத்தல் இவனுக்கு ஒருபொருளன்று என்பதையும் குறிபித்தவாறுகும்.

காதல் என்பது முதிர்ந்த பக்தியைக் குறிக்கும்; 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி' (திருஞான. தே.); காதலால் நெஞ்ச மன்பு கலந்திலேன் (திருமாலை. 26) என்பன காண்க.

(பி - ம்.) 1. பத்தினிக்கு; கொடுத்ததிவண்.
2. போது நின்றது; போது வென்ற தெனவுரைத்த; பொலன் கழற்கால்.
3. காதலன்றன்: உயிர்போலும்: அக்கரியோன்.
4. புலவலியும்; எனவலித்தான்; எனவிசைத்தான்; என்றிசைத்தான்; என்றுரைத்தான். (31)

இப்பாட்டு முழுதும் சில பிரதிகளிற் காணப்படுமாறு:—

கோதமன்றன் மனைக்கிழத்திக் குரைத்தகொடுஞ் சாபமெனும்
ஓதருங்கல் லுருத்தவிர்த்து முன்னையுருக் கொடுத்ததிவன்
பாதமிசைத் துவண்டெழுந்த பசும்பொடிமற் றதுகண்டாய்
ஈதிவன்ற னருள்வடிவும் வரலாறு மெனவுரைத்தான்.

குலமுறை கிளத்து படலம் முற்றும்.



# 12. கார்முகப் படலம்

கார்முகப் படலம்: கார்முகத்தைப் பற்றிக் கூறும் படலம்என விரியும். இராமபிரான் சிவதனுசை எடுத்து வளைத்து நாணேற்றுதலும் அது முறிதலும் பிறவும் இப்படலத்துள் விரிவாகக் கூறப்படும். கார்முகம்-வில்.

### சனகன் கூறுதல்

741. மாற்றம்யா துரைப்பது மாய விற்குநான்
தோற்றவா வெனமனந் துளங்கு கின்றதால்
நோற்றன ணங்கையு நொய்தி னையன்வில்
ஏற்றுமே லிடர்க்கட லேற்று மென்றனன்.

(கௌசிக முனிவன் கூறியவற்றைக் கேட்ட சனக மன்னன், முனிவனை நோக்கி), 'மாற்றம் யாது உரைப்பது-(நீவிர் கூறியவற்றிற்கு விடையாக, நான்) சொல்லத் தக்கது யாது உளது? மாயம் வில்கு-மாயத்தன்மையுள்ள அப்பெரிய வில்லுக்கு, நான் தோற்ற வா(று)! என-நான் தோற்றவனானேனே யென்று, மனம் துளங்குகின்றது-என் மனம் சஞ்சலமடைகின்றது; ஐயன் - இவ் ஆண்டகையான், வில் நொய்தின் ஏற்றுமேல்-அவ்வில்லை எளிதில் நாணேற்றக் கூடுமானால், இடர் கடல் ஏற்றும்-(என்னை) இத்துன்பக் கடலினின்றும் கரையேற்றுவதாகும்; நங்கையும் நோற்றனள்-சீதையும் தவப்பயன் பெற்றவளாவாள்;' என்றனன்—.

முன்னே அரசர் பலர் சீதாபிராட்டியை மணக்கக்கருதி வந்து சனக மகாராசனிடம் கேட்டபோது, அவன், அச்சிவதனுசைக் கன்னியாசுற்கமாக வைத்து, 'அதனை வளைத்து, நாணேற்றுவோர்க்கே சீதை உரியவள்' என்று உறுதியாகக் கூறிவிட்டமையின், ஒருவரும் அதனைச் செய்ய ஆற்றாராக, சீதையின் திருமணமும் இதுவரை தடைப்பட்டு நின்றது; அதனால், சனக மகாராசன், அவ்வில்லை 'மாயவில்' என்றும், அதற்குத் தான் தோற்று அதனால் கவலையுற்றிருந்தானெனவும் கூறி, இப்போது கௌசிக முனிவன் வார்த்தைகளாலும், தோற்றப் பொலிவாலும் இராமபிரான் திறத்து ஒருவாறு நம்பிக்கையுடையவனாகி,'ஐயன் வில் ஏற்றுமேல் நானும் இடர்க்கடல் கடப்பேன்; நங்கையும் தான் நோற்ற பயன் பெற்றவளாவாள்' என்றான். இராமபிரான் அவதார மூர்த்தி யென்பதனைக் கௌசிக முனிவன் புலப்படுத்தியதும், சீதாபிராட்டியைத் திருமகளெனவே

பெரியோர் கருதிக் கூறி வந்ததும் இயைபுடையதாகலின், 'ஐயன் நங்கையை அடைதலுங் கூடும்; அது பொருத்தமுடையதுமாகும்;' எனச் சனகன் மனந்தேறினன் என்க. 'கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர் கூடினாற் பேச வேண்டுமோ!' எனக் கம்ப நாடர் முன்னமே (593) கூறியிருத்தல் ஈண்டு நோக்கத்தக்கது.

கடல் ஏற்றல்-கடலினின்றும் (கரை) ஏற்றல்: ஒப்பு: இவ் விடைக் கங்கையாற்றின் ஏற்றிணையாயின் எம்மை, வெவ்விடர்க் கடனின் றேற்றி வேந்தன்பால் விடுத்தது' (அயோத். 1047).

(பா-ம.) 1. மாற்றமே துரைப்பது; மற்றம்யா முரைப்பதென்; மாற்றம்யா னுரைப்பதென்; மாற்ற மற்றுரைப்பதென்: விற்குயான்; விற்குநாம்.
2. தோற்றவாறென; தோற்றனனென: துளங்குகின்றனன்.
3. நோற்றவள் நங்கையும்; நோற்றிலள் நங்கையும்; நோற்றிலா வணங் கையும்: நொய்தில். 4. ஏறு மென்றனன். (1)

## வில்லைக் கொணருமாறு சனகன் கட்டளையிடல்

742. என்றன னேன்றுதன் னெதிர்நின் றுரையக்
குன்றுறழ் வரிசிலை கொணர்மி னீண்டென
நன்றென வணங்கினர் நால்வ ரோடினர்
பொன்றிணி கார்முகச் சாலை புக்கனர்.

என்றனன்-(முன் கவியிற் கூறியவாறு) சொல்லிய சனக மகா ராசன், ஏன்று-(வில்லை அங்குத் தருவிக்க) மனங்கொண்டு, தன் எதிர் நின்றுரை-தன் எதிரே நின்ற பணியாளர் சிலரை(நோக்கி),'அ-அந்த, குன்று உறழ் வரி சிலை-மலை போன்ற, கட்டமைந்த வில்லை, ஈண்டு கொணர்மின் என-இங்கே கொண்டு வாருங்கள்' என்று கட்டளை யிட, நால்வர்-(அப்பணியாளருள்) நான்கு பேர், நன்று என-நல்லது என்று சொல்லி, வணங்கினர்-அரசனை வணங்கினவர்களாய், ஓடினர்-ஓடிப்போய், பொன் திணி-பொன் கட்டு அமைந்த, கார்முகம் சாலை புக்கனர்-வில் வைக்கப்பட்டிருந்த விடத்தை அடைந்தனர்.

'என்றனன்' என்றது, முன்பாட்டை அநுவதித்தது. இதுவரை வில்லுக்குத் தோற்று மனம் சலித்திருந்த சனகன், இராமபிரான் திறத்து நம்பிக்கையுடையவனாகி, 'வில்லுங் காண்பார்' எனக் கௌசிக முனிவன் கூறிய குறிப்பிற்கேற்ப அல்வில்லைத் தருவிக்க மனங்கொண்டமையை 'ஏன்று' என்றார். எதிர் நின்றார்-அரசன் கட்டளையை அவ்வப்போது ஏற்றுச் செய்வித்தற்கு உரியவர்கள். 'நன்று' என்றது, மேலோர் கட்டளையை யேற்றதற்கறிகுறியாகக் கூறும் பணிமொழி. சிவதனுசு, தனியே தக்கதோர் இடத்தில் வைத்துப் பாதுகாக்கப்பட்டு வந்ததனால் அவ்விடத்தைக் 'கார்முகச்சாலை' என்றார்; அக்கார்முகச் சாலையில் காவலரும் ஏவலரும் பலர் இருந்த னர் என்க.

(பி - ம்.) 1. ஏன்றதன்; ஏன்றுதான்; என்றலும்; என்றுதன்: எதிர்நின்றூர்தமைக்.
2. குன்றுள: கொணரும்: ஈண்டெனு.
3. வணங்கினுர்; வணங்கியே: ஓடினுர். 4. பொன்றணி. (2)

743. புக்கன ரவர்களைப் பொருந்த நோக்கியிம்
முக்கணன் வில்லினை மொய்ம்பி னாற்றலோ
டிக்கணத் தளித்திரென் றெம்மை யாளுடை
மிக்குறு சனகனும் விளம்பி னுனென்றூர்.

புக்கனர்-(கார்முகச்சாலையை) அடைந்த அந்நால்வரும், அவர்களை-அங்கே யிருந்தவர்களை, பொருந்த நோக்கி-(அரசன் கட்டளையுடன் தாம் வந்துள்ளமையை) உணர்த்தும் வகையிலே பார்த்து, 'எம்மை ஆள் உடை(ய)-நம்மை ஆளுதலுடைய, மிக்கு உறு சனகன்-மேன்மை பொருந்திய சனக மகாராசன், இ முக்கணன் வில்லினை-இந்தச் சிவதனுசை, மொய்ம்பின் ஆற்றலோடு-மிக்க வலிமையோடும் திறமையுடனும், இ கணத்து-இப்போதே, அளித்திர் என்று-(தான் இருக்குமிடத்துக் கொணர்ந்து) தருக' என்று, விளம்பினுன்-கட்டளை கூறினுன்,' என்றூர்—.

வில், எளிதில் இடம் பெயர்த்து எடுத்துச் செல்லவியலாததாகலின், எவ்வகையிலும் இப்போதே அது அரசனிருக்குமிடம் போதல் வேண்டுமென்பார், 'மொய்ம்பின் ஆற்றலோடு இக்கணத்து அளித்திர்' என்றனர்-. அது கொண்டுபோகப்பட்ட வகையை மேலே கூறுதல் காண்க. சனகனும்; உம்மை இசைநிறை.

குறிப்பு: இச்செய்யுள், இப்போதுள்ள அச்சுப்பிரதிகள் பலவற்றில் இல்லை; சிலவற்றில் அதிகப்பாடலாகக் காட்டப்பெற்றுள்ளது. ஆயினும், ஆழ்வார் திருநகரிப் பிரதிகளிலும் ஸ்ரீஐயரவர்கள் கைப்பிரதியிலும் இது காணப்படுவதாலும், தொடர்புக்குப் பொருத்தமுடையதாக இருத்தலாலும் இங்கே பதிப்பிக்கலாயிற்று. இது சில பிரதிகளில் அடுத்த பாடலின் பின்னும் இதன் வடிவம் வேறு வகையாகவும் காணப்படுகிறது. அது வருமாறு:

புக்கனர் சனகர்கோன் பொருவி னீர்டாம்
ஒக்கவே வில்லினை யுரத்த டுத்தெடுத்
திக்கணத் தெய்துவி ரென்ற னன்னென
மிக்கபே ரவ்வுரை விளம்பி னுரரோ.

(பி - ம்.) 4. மிக்க காவலர்க்கிவை; மிக்க வர்க்கவ்வுரை. (3)

## வில் அரசவைக்கு வந்த வகை

744. உறுவலி யானையை யொத்த மேனியர்
செறிமயிர்க் கல்லெனத் திரண்ட தோளினர்
அறுபதி னுயிர ரளவி லாற்றலர்
தறிமடுத் திடையிடை தண்டிற் றூங்கினர்.

உறு வலி-மிக்க வலிமை பொருந்திய, யானையை ஒத்த மேனியர்-யானையைப் போன்ற உறுதியான உடம்பினையுடையவர்களும், செறி மயிர்-அடர்ந்த மயிர்களுடனே, கல் என திரண்ட-கருங்கல்லைப் போலத் திரட்சியுடைய, தோளினர்-கைகளையுடையவர்களும், அளவு இல் ஆற்றலர்-எல்லையில்லாத திறமையுள்ளவர்களுமான, அறுபதினாயிரர்-அறுபதினாயிரம் ஆட்கள், இடை இடை தறி மடுத்து-(வில்லின்) நடுவிடங்களிலே வலிய தண்டுகளைப் பிணைத்து, தண்டின்-அத் தண்டுகளால், தாங்கினர்-(தம் தோள்களைக் கொடுத்து அவ்வில்லைச்) சுமந்து வந்தார்கள்.

அரசன் கட்டளையை அறிந்தவுடன், அச்சிவதனுசை எடுத்துச் செல்லுதற்கு ஏற்றவாறு உறுதியான தறிகளை அதிற் பொருத்திக் கட்டி, அறுபதினாயிரம் ஆட்கள் அதனைச் சுமந்து வந்தனர் என்க.

எட்டுச் சக்கரமுடைய உறுதியான இரும்புப் பேழையில் வைத்திருந்த இவ்வில்லை, மிக்கவலிமையுடைய ஐயாயிரம் ஆட்கள் இழுத்து வந்தனரென முதனூலி லுள்ளமை முன்னமே காட்டப்பெற்றது; அதற்கேற்ப, 'அறுபதினாயிரர்' என்பதனை இரண்டாக அறுக்கப்பட்ட பதினாயிரவர்; அதாவது ஐயாயிரவர் எனக்கொண்டு கூறலுமாம். அறுபதினாயிரம் என்பது தசரத சக்கரவர்த்திக்குப் பலவகையில் பொருத்திக் கூறப்படுவதனால், அவ்வகையில் இதனையும் கம்பநாடர் கொண்டார் போலும்.

உறுவலி அயோத். 587.

(பி - ம்.) 1. யானையி னொத்த: அனைவரு மொத்தகாட்சியர்; அனையவ ருருமுக் காட்சியர். 2. செறிவயிர்க்: தோளினர்.
3. அறுபதினாயிர மழிவிலாற்றலார்.
4. இடையிடைத்; தாங்கினர். (4)

2, 3-ஆம் அடிகள் சில பிரதிகளில் முன்பின்னாக மாறியுள்ளன; சில பிரதிகளில் இப்பாட்டு இல்லை.

745. நெடுநில மகண்முது காற்ற நின்றுயர்
தடநிமிர் வடவரை தானு நாணுற
இடமிலை யுலகென வந்த தெங்கணும்
கடல்புரை திருநக ரிரைத்துக் காணவே.

நெடு நிலம் மகள்-பெரிய பூமிதேவியானவள், முதுகு ஆற்ற-தன் முதுகு நோவைச் சிறிது ஆற்றிக்கொள்ளவும், நின்று உயர்-நிலை பெற்று ஓங்கியுள்ள, தடம் நிமிர்-பெருமை மிக்க, வடவரை தானும்-(சிவபெருமானுக்கு வில்லாயமைந்த) மேருமலையுங்கூட, நாண் உற-(அவ்வில்லின் தோற்றத்தைக் கண்டு) வெட்கமடையவும், கடல்புரை திருநகர்-கடல்போலப் பரந்த செல்வம் மிக்க மிதிலை நகரத்திலுள்ளவர்கள், எங்கணும்-எல்லாப் பக்கங்களிலும் (வந்து சூழ்ந்து),

இரைத்து-பேரிரைச்சலிட்டு, காண-அதனைக் காணவும், உலகு இடம் இலை என-உலகத்தில் இதற்கு இடம் பற்றாதென்னும் படியும், வந்தது-(சுமக்கப்பட்டு) வந்தது. ஏ: ஈற்றசை.

இதுவரை அவ்வில் ஒரே இடத்தில் வைக்கப்பட்டிருந்ததனால் அதன் பாரம் தாங்கவொண்ணாமல் வருந்திய நிலமகள், இப்போது அது இடம்விட்டுப் பெயர்ந்ததனால் சிறிது ஆற்றிக்கொள்ள இடமாயிற்றென்றார். பெரும் பாரம் சுமக்க வல்லது முதுகாதலின், 'நில மகள் முதுகு ஆற்ற' என்றார். வில்லின் பெருமையை மிகுத்துக் காட்ட, 'உலகில் இடமில்லை' என்றார்.

முதுகு ஆற்றல்: 65; அயோத். 1109, வில் சனகன் முன் கொணர்ந்து வைக்கப்பட்ட விடத்தில், 'நில முதுகுளுக்கிக் கீழுற' (751) என்பர் பின்னும். பரப்பாலும் செல்வமிகுதியாலும் கடல் போன்ற தென்பார், 'கடல்புரை திருநகர்' என்று முதலிற் கூறி, ஆரவாரத்தாலும் அது கடலை யொத்தது என்னும்படி 'இரைத்துக் காண' என்றார். ஒப்பு: 'முந்நீர் ஒல்கிளர்ந் துவாவுற் றென்ன வொண்ணகர் கிளர்ந்தது' (778).

(5)

### கண்டோர் கூறுதல்

746. சங்கொடு சக்கரந் தரித்த செங்கையச்
சிங்கவே றல்லனே லிதனைத் தீண்டுவான்
எங்குள னொருவனின் றேற்றி னிச்சிலை
மங்கைதன் றிருமணம் வாழு மாலென்பார்.

'சங்கொடு சக்கரம் தரித்த-பாஞ்சசன்னிய மென்ற சங்கையும் சுதரிசன மென்ற சக்கரத்தையும் தாங்கிய, செம் கை-செவ்விய திருக் கரங்களையுடைய, அ-அந்த, சிங்கம் ஏறு அல்லனேல்-ஆண் சிங்கம் போன்ற திருமாலையன்றி, இதனை தீண்டுவான்-இவ்வில்லைத் தொடும் ஆற்றலேனுமுடையவனொருவன், எங்கு உளன் - (இவ்வுலகத்தில்) எங்கேயுள்ளான்? ஒருவன் நின்று-ஒப்பற்றவனான அத்திருமாலே (வந்து) நின்று, இ சிலை ஏற்றின்-இவ்வில்லை நாணேற்றினால், மங்கை தன் திருமணம்-நம் சீதையின் திருமணம், வாழும்-சிறப்படையும்'; என்பார்-என்று கூறுவார் (சிலர்). ஆல்: அசைநிலை.

இது முதல் ஐந்து பாடல்களால் அவ்வில்லைக் கண்ணுற்றோர் அதனைக் குறித்துப் பலவாறு பேசியவற்றைக் கூறுகின்றார்.

இது சிவதனுசாதலால், இதனை யெடுத்து வளைத்தல் அச்சிவனுக்கோ அல்லது திருமாலுக்கோ அன்றிப் பிறருக்கு இயலாது. திருமகள் போன்ற நம் சீதையை மணந்துகொள்ள அத்திருமாலே முன் வந்து இவ்வில்லை வளைத்துவிடின் திருமணம் இனிது நிறைவேறும்;

அது நிகழுமோ !' என ஆராமை மீதூரக் கூறுவார் சிலர் என்க. இது இராமபிரானைக் குறித்ததாகவுங் கொள்ளலாம்; 'சங்கு சக்கரக் குறியுள தடக்கையிற் றுளில்' (கிட்கிந்தா.152) என வருதல் காண்க. 'சங்கொடு....சிங்கவேறு': நரசிங்காவதார மெடுத்த திருமால் என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. செங்கைய; தானைய; கையுடைச்.
2. சிங்கவேறல்லனே: நீண்டுவார்; நீண்டுவோன்; துங்கமா லன்றிமற்றதனைத் தூண்டுவன்.
3. எங்குளர்: ஒருவனேன்றேற்றின்; ஒருவனே யேற்றவேண்டுமே.
4. திருமனம்: வாழ்ந்ததாலென்பார்; வாழத்தானென்பார்; வாழுமேயென்பார்; வாழுமாலென்றார். (6)

747. கைதவந் தனுவெனல் கனகக் குன்றென்பார்
செய்ததத் திசைமுகன் றீண்டி யன்றுதன்
மொய்தவப் பெருமையின் முயற்சி யாலென்பார்
எய்தவன் யாவனோ வேற்றிப் பண்டென்பார்.

'தனு எனல்-(இதனை) வில் என்று சொல்லுதல், கைதவம்-வஞ்சகமாகும்; (மற்று என்ன வெனில்), கனகம் குன்று-பொன் மயமான மேருமலையே (இது)' என்பார்-என்று கூறுவார் (ஒரு சிலர்); 'அ திசைமுகன்-(எல்லாவற்றையும் படைக்கும்) அப்பிரமதேவன், செய்தது-இதனைப் படைத்தது, தீண்டி அன்று-கையினால் தொட்டன்று; தன்-தனது, மொய் தவம் பெருமையின் முயற்சியால்-நிறைந்த தவமகிமையின் செயலாலே யாகும்;' என்பார்-என்று கூறுவார் (சிலர்); 'பண்டு-முன்காலத்தில், ஏற்றி-இதனை வளைத்து நாணேற்றி, எய்தவன் யாவனோ-அம்பெய்தவன் எவனோ!' என்பார்-என்று கூறுவார் (சிலர்).

(பி - ம்.) 1. தனுவென்றல்; தனுவெனில்; தனுவல; தனுவென்பார்.
2. செய்தவத்; செய்தவன்; தீண்டியன்றுதான்; திண்டி நின்றுதன்: திண்மையல்லதன்.
3. மொய்தவம்: பெருமைதன்: முயற்சியால் வளைத்து.
4. எய்தவர் யார்கொலோ; எய்தவர் யாவர்கொல்; செய்தவன் யாவனோ. (7)

சில பிரதிகளில் இதன் ஈற்றடி, இரண்டாமடியாக உள்ளது.

748. திண்ணெடு மேருவைத் திரட்டிற் றேவென்பார்
அண்ணல்வா ளரவினுக் கரச னோவென்பார்
வண்ணவான் கடல்பண்டு கடைந்த மத்தென்பார்
விண்ணிடு நெடியவில் வீழ்ந்த தோவென்பார்.

(சிலர்), 'திண்நெடு மேருவை திரட்டிற்றோ-வலிய பெரிய மேருமலையையே திரட்டி இவ்வாறு செய்யப்பட்டதோ;' என்பார்-, (சிலர்) 'அண்ணல் வாள் அரவினுக்கு அரசனோ-பெருமையும் ஒளியும் பொருந்

திய நாகங்களுக் கரசஞன ஆதிசேடனேயோ! என்பார்—; (சிலர்) 'பண்டு-முன்னே, வண்ணம் வான் கடல் கடைந்த மத்து-(அழகிய) வெண்ணிற முடைய பெரிய பாற்கடலேக் கடைந்த மத்தாகிய மந்தர மலேயே இது, என்பார்—; (சிலர்) 'விண் இடு நெடிய வில்-ஆகாயத்தி லுண்டாகும் பெரிய இந்திர வில்லானது, வீழ்ந்ததோ-பூமியில் விழுந் திருப்பதோ!' என்பார்—.

வில்லுக்குப் பாம்பு உவமை கூறப்படுதல்: 'அரவுறழ் அஞ்சிலே' (குறிஞ்சி. 158.);'விடு பொறி யரவென விளங்கு வெஞ்சிலே,' 'அரவின் ருேற்றமே போலுஞ் சிலேகளும்' (சீவக. 1850, 2158)

(பி - ம்.) 1. திண்ணெனும்: திருத்திற்ருே: திருத்திற்ரும்: என்பர்.
2. அண்ணல்வான்; அண்ணல்லாழ்; அரசனும். 3. மத்தென்பர்.
4. விண்ணிடும்; விண்ணிடை: நெடுவரை: வீழ்ந்ததாம்: விழுந்ததோ. (8)

749. என்னிது கொணர்கவென் றியம்பி ளுனென்பார்
மன்னவ ருளர்கொலோ மதிகெட் டாரென்பார்
முன்னேயூழ் வினையினுன் முடிக்க லாமென்பார்
கன்னியு மிச்சிலே காணு மோவென்பார்.

'இது கொணர்க என்று இயம்பினுன்-(இப்போது) இந்த வில்லேக் கொண்டுவருக வென்று அரசன் சொல்லியுள்ளான்; என்-(இதற்குக் காரணம்) என்னவோ!' என்பார்—;'மதிகெட்டார்-(திருமணத்துக்கு இதனேப் பணயமாக வைத்த நம் அரசனேப் போல) மதிகெட்டவர் களான, மன்னவர் உளரோ-அரசர் (வேறு எவரேனும்) உள்ளாரோ;' என்பார்-; 'முன்னே ஊழ் வினையினுல்-முன்செய்த நல் வினையின் பயனுல் முடிக்கல் ஆம்-(எவரேனும்) இதனேச் செய்து முடித்தலுங் கூடும்' என்பார்—; இ சிலே-இந்த வில்லே, கன்னியும் காணுமோ-கன்னி யாகிய சீதையும் கண்டிருப்பாளோ?' என்பார்—. கொல், அசை.

'இந்த வில்லேப் பணயமாக வைத்த நம் அரசனேப் போல மதி கெட்டவர் ஒருவரும் இருக்க முடியாது; அஃதொரு புறமிருக்க, இப்போது இந்த வில்லேச் சபைக்குக் கொண்டுவரச் செய்துள்ளதன் காரணம் என்னவோ? ஒருவேளே, சீதையின் நல்லூழினுலும், தம்முடைய நல்லூழினுலும் இந்தச் செயற்கருஞ் செயலே எவரேனும் செய்து முடித்தலுங் கூடும்; அதுவுங்கிடக்க; இந்த வில்லே நம் சீதை முன்னே கண்டிருப்பினும் அல்லது இனிக் காணினும் அவள் மனநிலே என்ன பாடுபடும்!' எனப் பலவிதமாகப் பேசலாயினர் என்க. இனி, 'இப்போது இவ்வில்லேக் கொண்டுவரச் செய்ததன் காரணம் என்ன வோ' என்றவர்கள், 'இதனே வளேக்க முற்பட்டு மதிகெட்ட அரசர் எவரேனும் இப்போது வந்துளரோ' என்றதாகவும் கூறலாம். கன்னி யும் இச்சிலே காணுமோ! என்பதற்கு, 'சீதையும் இவ்வில்லே எவரேனும் வளேப்பதைக் காண்பாளோ' என்றதாகக் கூறுதலு மொன்று.

(பி - ம்.) 1. கொணர்கென: இயம்புவான். 2. மன்னருள்: மதிகெட்டோர்
3. முன்னையவ்; முன்னையின்; முன்னைய விதியினால்: முடிக்கிலாம்; முடக்கலாம்; முடக்கலார்; முறிக்கலாம்; முடிந்ததோ.
4. காணுமே. (9)

750. இச்சிலை யுதைத்தகோற் கிலக்கம் யாதென்பார்
நச்சிலை நங்கைமே னாட்டும் வேந்தென்பார்
நிச்சய மெடுக்குங்கொ னேமி யானென்பார்
சிற்சிலர் விதிசெய்த தீமை யாமென்பார்.

'இ சிலை உதைத்த கோல் கு-இந்த வில்லினின்றும் எய்யப்படும் அம்புக்கு, இலக்கம் யாது-குறியாக அமையத்தக்கது யாது உளது! என்பார்—; 'வேந்து-நம் அரசன், ந சிலை-(இத்துணைப்) பெருமை வாய்ந்த இவ்வில்லை, நங்கைமேல் நாட்டும்-சீதையின் திறத்தில் (பணயமாக) வைக்கின்றானே; என்பார்—; நேமியான்-சக்கரப்படையுடைய திருமாலும், நிச்சயம் எடுக்கும் கொல்-நிச்சயமாக இதனை எடுத்து வளைப்பானோ!' என்பார்-; சிற்சிலர்-மற்றும் சிலர், விதி செய்த தீமை ஆம்-இவ்வில்லைச் சுற்கமாக வைக்கநேர்ந்தது ஊழ்வினை செய்த சதியே ஆகும்; என்பார்—.

நப்பின்னை, நச்செள்ளை என்பவற்றிற்போல, ந என்பது பெருமை குறிக்கும் இடைச் சொல்.

இரண்டாமடிக்கு, 'இவ்வில்லைப் பணயமாக வைத்த அரசனுக்குத் தன் பெண்ணின் மேல் ஆசையில்லை' (நச்சு இலை) எனப் பொருள் கூறுவாருமுளர். நேமியான் என்றது, இங்கும் இராமபிரானைக்குறித்ததாகக் கொள்ளலும் ஆம்.

உதைத்தல்-உந்திச் செலுத்துதல். கோல்-அம்பு: கிட்கிந்தா. 288; சுந்தர. 173; குறுந். 335; சீவக. 2186, 2255, 2319.

(பி - ம்.) 1. உகுத்தகோல்; உகைத்தகோற்கு; உதைத்தவற்கு; இலக்கியாது.
2. நச்சிலன்; நற்சிலை: நங்கைமே னாட்டு வேந்து; நங்கைமேனாட்டு வந்து; நங்கைமேனாடும் வேந்து; மங்கைமேனாட்டும் வேந்து.
4. இதுசெயல்; இதுசெய்த; இவள்செய்த; தீமைதான்; தீமைகாண். (10)

### வில் அரசவை சேர்ந்தது

751. மொய்த்தன ரின்னண மொழிய மன்னன்முன்
உய்த்தனர் நிலமுது குளுக்கிக் கீழுற
வைத்தனர் வாங்குநர் யாவ ரோவெனக்
கைத்தலம் விதிர்த்தனர் கண்ட வேந்தரே.

மொய்த்தனர்-நெருங்கிக் கூடிய நகர மக்கள், இன்னணம் மொழிய-இங்ஙனம் (பலவாறு) பேசிக்கொள்ள, (அவ்வில்லைச் சுமந்து சென்றவர்கள்), மன்னன் முன் உய்த்தனர்-சனக மன்னன் முன்னே

அதனைச் சேர்ப்பித்தவராய், நிலம் முதுகு உளுக்கி கீழ் உற-தரையின் மேலிடம் நெளிந்து தாழும்படி, வைத்தனர்-கீழே வைத்தார்கள்; கண்ட வேந்தர்-அதைக் கண்ட (அங்கே கூடியிருந்த) அரசர்கள், வாங்குநர் யாவரோ! என-(இதுவரை ஒருவராலும் வளைக்கப்படாத இதனை இப்போது) வளைக்கப் போகிறவர் யாரோ' என்று கூறி, கை தலம் விதிர்த்தனர்-கையை உதறினார்கள்.

கீழுற=கிழிபட-பிளக்க என்றலுமாம்.

இரண்டாமடியில், வில்லின் வன்மையை இறுதியாகக் கூறி முடித்தார். வில் கொணர்ந்து வைக்கப்பட்டவுடன், அங்குக் கூடியிருந்த அரசர்கள், 'இதுவரையில் இல்லாத புதுமையாக இப்போது மட்டும் இதனை வளைக்கும் ஆற்றலுடையவர் யார் வந்துவிட்டனர்? இவ் வில்லை எதன்பொருட்டுச் சனகன் இப்போது இங்கே கொணர்வித்தான்? இது பயனற்ற செய்கையே! என்ற கருத்துப்படப் பேசி, அதற்கேற்பக் கையையும் உதறினர் என்க.

இவ்வில் 'திரியம்பகம்' எனப்படுவது; கம்பநாடர் இதனைத் 'தியம்பகம்' என அமைத்துள்ளமை காண்க; கிட்கிந்தா.84. உளுக்குதல்-நெளிதல்; நடுங்குதல் என்ற பொருளு முடையது; 'விண்முதுகுளுக்கவும்'(அயோத். 1109);'உயிர்சுமந் துளுக்கியதும்பர்'(ஆரணிய. 448); 'நெஞ்சுளுக்கினனென' (ஆரணிய. 25); 'நிலமுதுகுளுக்கு நீ' (பாகவத, 544).

(பி - ம்.) 1. மொய்த்தவர்; மொய்த்தன.
2. உய்த்தவர்; நிலமுதுகுளுக்கக்; நிலமகளுளுக்கிக்; கீழுக.
3. வாங்கினர்; வாங்கினர்: யாவரே வளைப்பரோவெனக்.
4. விரித்தனர். (11)

சதாநந்தர் வில்லின் வரலாற்றைக் கூறல்

752. போதக மனையவன் பொலிவு நோக்கியவ்
வேதனை தருகின்ற வில்லை நோக்கித்தன்
மாதினை நோக்குவான் மனத்தை நோக்கிய
கோதமன் காதலன் கூறன் மேயினான்.

போதகம் அனையவன்-யானைக் கன்று போன்றவனான இராமபிரானது, பொலிவு நோக்கி-தோற்றப் பொலிவைப் பார்த்து, வேதனை தருகின்ற அ வில்லை நோக்கி-(சீதையின் திருமணத்துக்குத் தடையாகி) அனைவர்க்கும் மன வருத்தந் தந்து நிற்கும் அந்த வில்லையும் பார்த்து, தன் மாதினை நோக்குவான்-தன் மகளுடைய நிலையையும் (மனத்தால்) காணுகின்ற சனக மன்னனுடைய, மனத்தை நோக்கிய-மன நிலையைக் குறிப்பாலறிந்த, கோதமன் காதலன்-கௌதம முனிவன் புதல்வனான சதாநந்த முனிவன், கூறல் மேயினான் (பின் வருமாறு) சொல்லுதலுற்றான்.

இராமபிரானுடைய திறமையைக் கௌசிக முனிவன் வாயிலாகக் கேட்டறிந்தும், காண்போர் மனங்கவரும் கம்பீரமான தோற்றத்தையும் அழகையும் நேரிற் கண்டும், சீதைக் கேற்ற மணாளன் அப்பிரானே யென மனத்துட் கொண்ட சனகன், கன்னியா சுல்கமான வில் தன்கருத்தை உடனே முடிக்கத் தடையாகவுள்ளதை யெண்ணி, மன வேதனையுடன் அவ்வில்லையும் இராமபிரானையும் மாறி மாறிப் பார்த்தான்; அவ்வேளையில் தன் மகள் சீதையின் நிலையையும் நினைத்துப் பார்த்தான்; இவற்றைக் குறிப்பாலுணர்ந்த சதாநந்த முனிவன், அவ்வில்லின் வரலாற்றையெடுத்துக்கூறி, அதனை வளைத்தல் இராமபிரானால் ஆவதே யெனக் கூறலுற்றான் என்க. எப்போதுமே இயற்கையாக அன்றலர்ந்த தாமரைபோல் விளங்கும் இராமபிரானது திருமுக மண்டலம், அவ்வில்லைக் கண்டதும் மேலும் பொலிவு பெற்று விளங்கியது; அதனை உற்று நோக்கிய சதாநந்த முனிவன் கூறலானான் எனவுங் கூறுவர். போதகம்-பத்து வயதுள்ள யானைக் கன்று. வில்லின் வரலாற்றைச் சனகனே கூறியதாக வான்மீகத்தில் உள்ளது.

(பி - ம்.) 1. போதக மனையவர்; பொலிவை; பொலிய: நோக்கியிவ்; நோக்கிய.
2. தரும்பெரு வில்லை; வேதனைத் தலமென வில்லை நோக்குவான்.
3. மாதினை நோக்கித்தன்; மனத்தை நோக்கியே; மனத்தை நோக்குறுக்.
4. கூறநோக்கினான். (12)

753. இமையவில் வாங்கிய வீசன் பங்குறை
உமையினை யிகழ்ந்தன னென்ன வோங்கிய
கமையறு சினத்தனிக் கார்மு கங்கொளாச்
சமையுறு தக்கனார் வேள்வி சாரவே.

இதுமுதல் மூன்று கவிகள் ஒரு தொடர்.

இமையம் வில் வாங்கிய-மேருவை வில்லாக வளைத்துக் கொண்ட, ஈசன்-சிவபெருமான், பங்கு உறை-தன் ஒரு பாகத்தில் வாழ்கின்ற, உமையினை-உமாதேவியை, இகழ்ந்தனன்என்ன-(தக்கன்) அலட்சியஞ் செய்தன னென்று, ஓங்கிய-மேலிட்ட, கமை அறு சினத்தன் - பொறுமையற்ற கோபமுடையவனாகி, இ தனி கார்முகம் கொளா-ஒப்பற்ற இவ்வில்லைக் கைக்கொண்டு, சமை உறு-(இவர்கள் திறத்து) மனம் புழுங்குதலுடைய, தக்கனார்-தட்சப் பிரசாபதியின், வேள்வி-யாகசாலையை, சார-அடைய. ஏகாரம்: ஈற்றசை.

இது அடுத்த கவியுடன் தொடரும். சமையுறு-அழிதலுற்ற எனலுமாம்; தக்க. சங்காரக் கதை. 825.

இமையம்: போலி. இமயம், மேரு, மந்தரம் இவற்றை வேறுபாடின்றி வழங்குதல் தமிழ் நூல் மரபு. 'செவ்விடைப்பாகன் றிரிபுரஞ் செற்றுழிக், கல்லுயர் சென்னி யிமையவி ஞாணகி'(பரி. திரட்டு

1: 76-7), இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்' (கலி. 38); 'இமயநட் டரவு சுற்றி, அத்தலை யலற முந்நீர் கடைந்தவர்' (சீவக. 963); 'ஐந்தலை யுத்தி யரவுநாணுக, மந்தர வில்லி னந்தணன்விட்ட' (பெருங். 1. 43: 119-20); 'மேருக் குன்றத் தூறுநீர்ச் சரவணத்து' (மணி. 18: 92) என்பன காண்க. திரியம்பகம் என்னும் இவ்வில் தக்க சங்கார காலத்தில் சிவபிரான் கைக்கொண்ட தென்பர்.

(பி - ம்.) 1. பாங்குறை; அங்குறை.
2. இகழ்ந்தன ரென்ன; இகழ்ந்தவாறென்ன.
3. கமையுறு: சினத்தினிற்; சினத்தினக்; சினத்தவன்.
4. சமைவுறு; சமைவுறத்; சமையுறத்; சமைவறத்; தக்கனல்.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. (13)

754. உக்கன பல்லொடு கரங்க ளோடினர்
புக்கனர் வானவர் புகாத சூழல்கள்
தக்கனல் வேள்வியிற் றழலு மாறின
முக்கணெண் டோளவன் முனிவு மாறினன்.

தக்கன் நல் வேள்வியில்-தட்சப்பிரசாபதி செய்த அந்தச் சிறந்த யாகத்திலே, (வானவர்)-(அதற்கு உதவியா யிருந்த)தேவர் களிற் சிலருடைய, பல்லொடு கரங்கள் சிந்தின - பற்கள் உடை பட்டும் கைகள் அறுப்புண்டும் வீழ்ந்தன; வானவர்-(எஞ்சிய) தேவர் களெல்லோரும், ஓடினர்-அஞ்சி ஓடி, புகாத சூழல்கள் புக்கனர்-(அது வரை) தாம் முன்பு போயிராத விடங்களிலெல்லாம் புகுந்து பதுங் கினர்; தழலும் மாறின-யாகாக்கினிகளும் சிதைப்புண்டன; (இவ் வாறான பின்பு), முக்கண் எண் தோள் அவன்-மூன்று கண்களையும் எட்டுத்திருக்கரங்களையுமுடைய சிவபெருமானும், முனிவு மாறினன்-தன் கோபம் மாறப்பெற்றான்.

தழலும் ஆறின எனப் பிரித்து அக்கினிகளும் அவிந்தன என்று உரைத்தலுமாம். வானவர் என்பதனை இடைநிலைத் திவகமாகக் கொள்க.

தக்கனிடம் சினங்கொண்ட சிவபெருமான், தக்கன் செய்த வேள்வியை யழிக்குமாறு வீரபத்திரரை யேவ, அவர் போய் வேள் விக் குதவியாயிருந்த தேவர்களைச் சின்னபின்னமாக்கி, வேள்வியை யும் அழித்திட்ட பின், பெருமான் சதி தேவியின் வேண்டுகோளாற் சினமாறி, அவளோடும், இடபாரூடராகி வந்து, வேள்வியில் இறந்த தேவர்கள் முதலியோரைப் பிழைப்பித்து அருள் செய்தனர் என்பர். பல் உடைந்து சிந்தியது 'பகன்' என்னும் சூரியனுக்கு. கரங்கள் வீழ்ந் தன என்றவிடத்து உபலக்ஷணத்தால் பிற உறுப்புக்களையும் கொள்க. தக்கயாக அழிவின் விரிவைக் கந்த புராணம், தக்கயாகப்பரணி முதலிய நூல்களிற் காணலாம். ஆகவனீயம், காருகபத்தியம், தக்கி

ணுக்கினி என அக்கினி மூவகைப்படுதலாலும், அவற்றிற்கேற்ப வேள்விக் குண்டங்களும் பலவாதலாலும் தழலு மாறின எனப் பன்மையாற் கூறினர்.

(பி - ம்.) 1. உக்கனர்: பல்லொடும்: கதிர்கள்: ஓடினர்; ஓடின; ஓடிப்போய்ப்: வீழ்ந்தன; வீழ்ந்தனர்.
3. தக்கனன்; அக்கனல்: வேள்வியின்: தழலுமாறினன்; தழலுமாய்ந்தன.
4. முனிவு மாற்றினன். (14)

வில் சனகன் குலத்து முன்னோன்பால் சேர்ந்தமை

755. தாளுடை வரிசிலை சம்பு வும்பர்தம்
நாளுடை மையினவர் நடுக்க நோக்கியிக்
கோளுடை விடையனான் குலத்துட் டோன்றிய
வாளுடை யுழவனோர் மன்னன் பால்வைத்தான்.

உம்பர்-தேவர்கள், தம் நாள் உடைமையின்-தம் வாழ்நாளை இன்னும் உடையரா யிருந்தமையால், அவர் நடுக்கம் நோக்கி-அவர்கள் (வில்லைக் கண்டு) நடுங்குதலைப் பார்த்து, சம்பு-சிவபெருமான், தாள் உடை வரி சிலை-(தன் கையில் இருந்த) தண்டின் சிறப்புடைய, கட்டமைந்த அவ்வில்லை, இ-இந்த, கோள் உடை விடை அன்னான் குலத்துள்-வலிமிக்க ஏறு போன்ற சனக மன்னனுடைய குலத்திலே, தோன்றிய-முன்னிருந்த, வாள் உடை உழவன்-வாளால் (பகைவர் உடலை) உழுதலைக் கொண்டவனான, ஓர் மன்னன் பால்-ஓர் அரசனிடத்தில், வைத்தான்-சேர்ப்பித்தான்.

அன்னான் என்பதுஅனான் எனக் குறைந்தது.

சிவபெருமான் சினம் மாறிய பின்னும், அவ்வில் பெருமான் கையில் இருப்பின் தமக்கு மேலும் அழிவு நேருமோவென்று ஐயுற்று அஞ்சித்தேவர்கள்நடுங்குவதுகண்டு,அவ்வில்லைச் சனகன்குலத்து முன்னோன் ஒருவனிடம் சேர்ப்பித்தானென்று அவ்வில் வந்தவரலாறு கூறியவாறும். வில்லைச் சிவபெருமான் தேவர்களிடமே கொடுத்துவிட, அவர்கள் அதனைச் சனகன் குலத்து முன்னோனான தேவராதன் என்பவனிடம் சேர்ப்பித்தனர் என்பது வான்மீகம் 66-ஆம் ஸர்க்கத்திற் காண்பது. 75-ஆம் ஸர்க்கத்தில், பரசுராமன் கூற்றாக இவ்வில்லைப் பற்றி வருவது: 'விசுவகர்மாவினால் மிகவும் முயற்சியுடன் இரண்டு விற்கள் நிருமிக்கப்பட்டன; அவற்றுள் ஒன்று சிவன் திரிபுரசங்காரம் செய்தபோது பயன்படுத்தப் பெற்றது; மற்றொன்று திருமால் கையிற் சேர்ந்தது. பின்பு சிவ விஷ்ணுக்களுக்கிடையே யார் வலிமிக்கவரென்ற போட்டி வந்து, அவ்விருவரும் பொருதபோது, விஷ்ணுவின் ஹுங்காரத்தாலேயே இவ்வில் பழுதுற்றது; அதன்பின் அது சிவனால் தேவராதனுக்குக் கொடுக்கப்பெற்றது' என்பதாம். இவை ஒன்றுக்கொன்று முரண்படுதல் ஆய்தற்குரியது. பரசுராமன்

கூற்ருகிய இவ்விடத்தில், கம்பர், இவ்வில்லை, 'நெற்றியிற் கண்ணன் தேவர்கோன் கையில் நீட்டினன் என்பர்; (1369).

அரசரையும் வீரரையும் 'வில்லுழவர்', 'வாளுழவர்' என்பர் நூலோர். 'வாளுழவன்' (அயோத். 61); 'வரிசிலை யுழவன்' (ஆரணிய. 111); 'வாளேருழவ' (புறநா. 368.); 'வில்லேருழவர்' (குறள். 882); தசரதனை 'ஆழியுழவன்' எனவுங் கூறுவர் கம்பநாடர்; ஆரணிய. 170 காண்க.

(பி - ம்.) 1. தாளொடும் வரிசிலைச்: உம்பர்தாம்; உம்பர்தன்.
2. நாளுடைமையில்; நடுங்க: நோக்கியக்; நோக்கிய; நோக்கியே.
3. விடையினுன். (15)

சீதையின் வரலாறு

756 கார்முக வலியையான் கழறல் வேண்டுமோ
வார்சடை யரனிகர் வரத நீயலால்
யாருள ரறிபவ ரிவற்குத் தோன்றிய
தேர்முக வல்குலாள் செவ்வி கேளெனு,

கார்முகம் வலியை - இவ்வில்லின் வலிமையைப்பற்றி, யான் கழறல் வேண்டுமோ-நான் (உமக்குச்) சொல்லவும் வேண்டுமோ? வார் சடை அரன் நிகர் வரத-நீண்ட சடையையுடைய சிவபெருமானைப் போன்ற முனிவர! நீ அலால்-உம்மை யன்றி, அறிபவர் யார் உளர்-(இதன் பெருமையை உள்ளவாறு) அறியத்தக்கவர் வேறு யாவர் உளர்? (அதுநிற்க); இவன் கு தோன்றிய-இச்சனக மகாராசனுக்கு மகளாக அவதரித்த, தேர்முகம் அல்குலாள் செவ்வி-தேர்த் தட்டுப் போலும் நிதம்ப முடைய சீதையின் வரலாற்றை, கேள்-சொல்கின்றேன், கேட்பீராக; எனு-என்று,

இந்த 'எனு' என்பது,மேலே 765-ஆம் கவியினிறுதியில் வரும் 'என்ருன்' என்பதனுடன் முடிவுறும்.

'வில் வந்த வகையைச் சொன்னேன்; இதன் வலிமையை இப்போது நேரே பார்த்ததனுலும், சிறந்த ஞானியாதலாலும் நீரே அறிவீர்; இதுநிற்க; இப்போது திருமணத்துக்கு உரியவளாகிய சீதையின் வரலாற்றைக் கூறுவேன்; கேட்பீராக' என்று சதானந்த முனிவன் கூறலானுன். கௌசிக முனிவன் வரங்கொடுக்கும் ஆற்றலுடையவன்; இப்போது சீதாபிராட்டிக் கேற்ற நாயகனுதற்குரிய இராமபிரானைக் கொணர்ந்து தந்தவன்; ஆதலால் 'வரத' என்ருன்; மேலும் அவன் பெருமை புலப்பட 'அரன் நிகர் வரத' என்ருன்.

(பி - ம்) 1. வலிமையான் கழற வேண்டுமோ.
2. சடையிவனிகர்; சடையனை நிகர்; வரதனீயலாது.
3. ஆருளர்; ஆருளார்; இதற்குத்; அதற்குத்.
4. சேதி கேளென்ருன்; கேளென. (16)

(வேறு)

757. 'இரும்பனைய கருநெடுங்கோட் டிணையேற்றின் பணையேற்ற
பெரும்பியலிற் பளிக்குநுகம் பிணைத்ததனே டிணைத்தீர்க்கும்
வரம்பின்மணிப் பொற்கலப்பை வயிரத்தின் கொழுமடுத்திட்
டுரம்பொருவி னிலம்வேள்விக் கலகில்பல சாலுழுதேம்.

'வேள்விக்கு-யாகம் செய்வதன் பொருட்டு, இரும்பு அனைய கரு நெடு கோடு-இரும்பை யொத்த வலிமையும் நீட்சியும் பொருந்திய கொம்புகளையுடைய, இணை ஏற்றின்-இரண்டெருதுகளின், பணை ஏற்ற பெரு பியலில்-பருமை தங்கிய பெரிய பிடரியிலே, பளிங்கு நுகம் பிணைத்து-பளிங்காலாகிய நுகத்தடியைப் பூட்டி, அதனேடு இணைத்து ஈர்க்கும்-அந்நுகத்தடியோடு பொருத்தி யிழுக்கப்படுகிற, வரம்பு இல் மணி பொன் கலப்பை-அளவில்லாத மணிகள் பதித்த பொன் கலப்பையிலே, வயிரத்தின் கொழு மடுத்திட்டு-வைரத்தால் ஆன கொழுவைப் பொருத்தி, உரம் பொரு இல் நிலம்-வன்மையில் ஒப்பில்லாத பூமியை, அலகு இல் பல சால் உழுதேம்-அளவற்ற பல சால்களாக (நாங்கள்) உழுதோம்.

வேள்விச்சாலை அமைப்பதற்கு, நிலத்தை நன்கு உழுது தூய்மைப்படுத்த வேண்டுமென்பது விதியாகலின், பலமுறை சால்கள் ஓட்டி உழுதார்கள் என்க. கலப்பையின் செய்தி கவியின் உயர்வு நவிற்சியாகும். நிலத்துக்கு வன்மையாவது, எதனையுந் தாங்கும் பொறுமை. ஏறு-எருமைக்கடா வென்றுங் கூறுவர். ஏவுதற் கருத்தாவாகிய அரசனையும் உளப்படுத்தி 'உழுதேம்' எனப் பன்மையாற் கூறினர். பியல்-பிடரி.

(பி - ம்.) 1. கருந்திரள் கோட்டு; இனையேற்றின்; இமிலேற்றின்: பணையேற்றைப்.
2. பெரும்பிடரிற்; பெரும்பிடரிப்: பிணிக்குநுகம்; பிணைத்தநுகம்: பணைத்தநுகம்; பிணித்ததனேடு: அணைத்திர்க்கும்.
3. பொன்னிலத்தின்; பொன்னலத்தின்: வயிரத்தின்: கொழுமடுப்பட் கொழுமடுத்தே; கொழுமடுத்திவ்; கொழுமடுத்துத்.
4. அரும்பொருவில்; அரும்பெரிய; உரம்பெரிய: தரம்பொருவில்: நிலமகளை; அலகிழந்த; உரையிறந்த: சாலுழுதோம்; உழுதோமால். (17)

758. 'உழுகின்ற கொழுமுகத்தி னுதிக்கின்ற கதிரினெளி
பொழிகின்ற புவிமடந்தை யுருவெளிப்பட் டெனப்புணரி
எழுகின்ற தெள்ளமுதோ டெழுந்தவளு மிழிந்தொதுங்கித்
தொழுகின்ற நன்னலத்துப் பெண்ணரசி தோன்றினள்.

'உழுகின்ற கொழு முகத்தின்-(அவ்வாறு நிலத்தை) உழுது வந்த கொழுவின் முனையில், உதிக்கின்ற கதிரின் ஒளி பொழிகின்ற-உதய சூரியனது (ஒளி போன்ற) பேரொளியை வீசுகின்ற, புவி மடந்தை உரு-பூமிதேயின் வடிவழகு, வெளிப்பட்டது என-வெளிப்

பட்டாற்போல, புணரி எழுகின்ற-திருப்பாற் கடலினின்றும் எழுந்த, தெள் அமுதோடு எழுந்தவளும்-தெளிந்த தேவாமிர்தத்துடனே தோன்றியவளாகிய திருமகளும். இழிந்து-(அழகு குணம் முதலியவற்றிலே) தாழ்வடைந்து, ஒதுங்கி தொழுகின்ற-(பணிவு தோன்ற) ஒரு புறம் ஒதுங்கி வணங்கத்தக்க, நல் நலத்து-பேரழகுடன் அருங்குணங்களுமுடைய, பெண் அரசி-பெண்கள் நாயகமாகிய எங்கள் சீதை, தோன்றினுள்-அவதரித்தாள்.

கொழு முகத்தில் பெண்ணரசி தோன்றினுள்,' புவி மடந்தை உரு வெளிப்பட்டதெனப் பெண்ணரசி தோன்றினுள் என இயைக்க. வெளிப்பட்டென: தொகுத்தல். அமுதோடெழுந்தவளும்: உம்மை, உயர்வு சிறப்பு. பிராட்டிக்குரிய சீதை என்ற பெயர்க் காரணமும் புலப்படுத்தியவாறும். சீதை-உழவுச்சால்.

இங்குப் பிராட்டியின் அவதார இரகசியம் உவமை முகத்தால் கூறப்பெற்றது காண்க.

பிராட்டியின் அவதாரச்செய்தி ஒப்பு: ஆரணிய. 631; 'மட்படி செய்த தவத்தின் வந்த, சுட்படிகோதை' (ஆரணிய. 1063); 'அமிழ் தின்வந்த தேவி' (கிட்கிந்தா. 307); நன்னலம்: ஆரணிய. 836.

(பி - ம்.) 1. கொழுமுகத்தில்: கதிரொளிபோல்; கதிரிலொளி.
2. திருவெளிப்பட்டெனப்.
3. எழுகின்ற தின்னமுதோடு; தெள்ளமிர்தோடு: இழிந்தொதுங்கத்; இழிந்தோங்கித்; அழிந்தோங்கத்; உடனெதுங்கித்.
4 நன்னிலத்துப்; தன்னலத்தும்; பெண்ணரசு. (18)

759. 'குணங்களையென் கூறுவது
கொம்பினைச்சேர்ந் தவையுய்யப்
பிணங்குவன வழகிவளைத்
தவஞ்செய்து பெற்றதுகாண்
கணங்குழையா ளெழுந்ததற்பின்
கதிர்வானிற் கங்கையெனும்
அணங்கிழியப் பொலிவிழந்த
வாறுரைத்தார் வேறுற்றார்.

'குணங்களை-(அப்பெண்ணரசியின்) குண விசேடங்களை, என் கூறுவது-என்னவென்று எடுத்துச் சொல்வது! (முற்றிலுங் கூற என்னுல் ஆகாது); அவை-அக்குணங்கள், கொம்பினை சேர்ந்து-பூங்கொம்பு போன்ற அவளையடைந்து, உய்ய-(தாம்) நல்வாழ்வுபெற, பிணங்குவன-(நான் முன்னே, நான் முன்னே யென்று) ஒன்றுக்கொன்று பூசலிடுவனவாகும்; அழகு-(நல்ல) அழகானது, தவம் செய்து-தவத்தைச் செய்ததனுல், இவளை பெற்றது-இச்சீதையைத் தனக்கு இருப்பிடமாக அடைந்தது; கணம் குழையாள்-திரண்ட குண்டலங்களை

யணிந்த இவள், எழுந்ததன் பின்-(உலகத்தில்) வெளிப்பட்டு வந்த பின்பு, வேறு உற்ருர்-மற்றை (உயர்ந்த) மங்கையர் எல்லோரும், கதிர் வானில்-சூரியன் சஞ்சரிக்கும் ஆகாயத்தினின்றும், கங்கை எனும் அணங்கு இழிய-கங்கை என்று சொல்லப்படும் தெய்வநதி (பூமிக்கு) வந்ததனல், பொலிவு இழந்த-(தங்கள்) பெருமை யெல்லாம் இழந்துபோன, ஆறு ஒத்தார்-(மற்ற) ஆறுகளைப் போலானர்கள்.

நற்குணங்களும், தாம் சாரும் இடத்தின் விசேடத்தினல் பின்னும் மேன்மை 'பெறுமாதலால், அவ்வாறு மேன்மை பெறத்தக்கவிடமாக இவளை வந்தடைந்தன என்க. எனவே, பிராட்டி, தோன்றும்போதே சிறந்த குணங்களுடன் தோன்றியவ ளென்பதாயிற்று. பின் இரண்டடிகளால், பிராட்டியின் சிறப்பை உவமையோடு விளக்குகின்ருர். உலகத்திற் பெண்கள் தாம் நல்லழகுடையரா யிருக்கத் தவம் செய்வர்; பிராட்டியின் திறத்து இதற்கு மாருக, அழகு இவளை அடையத் தவம் செய்து வந்தடைந்தது என அழகுச் சிறப்பையும் புலப்படுத்தினர். இவற்ருல், பேரழகும் நற்குணங்களும் ஒருங்கே வாய்க்கப் பெற்றவள் பிராட்டி யென்பதாயிற்று. உலகத்தில் இவ்வாறமைதல் மிக அரிது என்பதும் பெறப்பட்டது. குணங்கள் கொம்பினைச் சேர்ந்து உய்யப் பிணங்குவன: 'குணங்களாகிய கொடிகள் தமக்குக் கொழுகொம்பாகப் பிராட்டியைக் கொள்ளப் போட்டியிட்டன' என்றலு மொன்று. அழகு தவம் செய்து பெற்றது 589-குறிப்புக் காண்க.

(பி - ம்.) 1. கூறுவதக்: செப்புவது: கொம்பினைச் சார்ந்து: அவையுய்ப்பப்: அவருய்யப்.
2. அழகவளைத்: அழகுவளைத்: பெற்றனகாண்
3. கணங்குழலாள்: தோன்றியபின்.
4. பொலிவிழிந்த: வேறுள்ளார்: வேறுளார். (19)

760. 'சித்திரமிங் கிதுவொப்ப தெங்குண்டு செய்வினையால்
வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப
அத்திருவை யமரர்குல மாதரித்த தெனவறிஞ
இத்திருவை நிலவேந்த ரெல்லாரு மாதரித்தார்.

'அறிஞ - எல்லாமறிந்தோய்! செய் வினையால்-(தாங்கள்) செய்யும் செயலால், (காட்ட வேண்டிய), வித்தகமும்-(வில்) திறமையும், விதி வசமும்-(சீதையை அடைதலாகிய) ஊழ்வினைப் பயனும், வேறு வேறே புறம் கிடப்ப-(ஒன்றுக்கொன்று பொருந்தாதவாறு) வேறு வேருக அமைந்திருக்க, (அதனையுணராத), நிலம் வேந்தர் எல்லாரும்-இப்பூமியிலுள்ள அரசர்களெல்லாம், அமரர் குலம் அ திருவை ஆதரித்தது என-தேவகணத்தார் பலரும் (பாற்கடலில் தோன்றிய) அத்திருமகளை (அவரவர் அடைய) விரும்பியதுபோல, இ திருவை ஆதரித்தார் - இச்சீதையாகிய திருமகளை (அவரவர்

அடைய) விரும்பினர்கள்; இது ஒப்பது சித்திரம்-இதைப் போன்ற தொரு விசித்திரமான செய்தி, இங்கு எங்கு உண்டு-இவ்வுலகத்திலே வேறெங்கே உண்டு!

திருமாலுக்கெனத் தோன்றிய அத்திருமகளைத் தேவர்கள் பலரும் தாம்தாம் அடைய விரும்பிப் பயனற்றவாறுபோல, திருமாலின் அமிசமான இவ்விராமனுக்கெனத் தோன்றிய பிராட்டியைப் பிற அரசர் பலரும் தாம்தாம் அடைய விரும்பி வந்து முயன்று பயனற்றவராயினர் என்க. இத்தகைய செய்திகள் விசித்திர மானவை என உலகியல் கூறியவாறு. சிவதனுசை வளைத்தவருக்கே சீதை உரியவள் என வைத்ததனால், அவ்வருஞ் செயலைச் செய்து முடித்துச் சீதையைப் பெறுதற்குரிய திறமையும் நல்லூழும் ஒருங்கே அமைந்தவர் ஒருவரும் இலராயினர். இவ்வாறமைதல் அரிதாதலின், வித்தகமும் விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப' என்றார்.

'சித்திரமிங்கிது வொப்ப தெங்குண்டு' என்றது பிராட்டியைக் குறித்ததாகவும் கொள்ளலாம் ஓவியத்தும் எழுதவொண்ணாச் சிறப்புடையவள் பிராட்டி என்றபடி. இராமபிரானும், 'ஓவியத்தெழுத வொண்ணா உருவத்தோன்' என்பதும் இங்கு நினைத்தற்குரியது.

வித்தகம்: 'வித்தக வில்லினான்' (சுந்தர. 448); 'பிறர்களுக் கரிய வித்தகன்' (திருவாய். 1. 3: 1).

(பி-ம்.) 1. இது வொப்பத் தேக்குண்டு; இதுவென்னந் தேக்குண்டு; இவையொப்ப தெங்குண்டு; செய்வினையர்; சேயிழையாள்.
2. வித்தகமாம்; விதிவகையும்; வெவ்வேறு; அவைவேறே; புறங்கிடந்த; தான்கிடப்ப.
3. அத்திருவே; அமரர்குழாம்; அமரர்குலத்து; ஆதரித்தார்; ஆதரித்தால்; எனவறிஞர்; எனவஞ்சி; எனத்துலங்க.
4. எல்லோரும்; காதலித்தார். (20)

மன்னர்கள் மணம்பேச வருதல்

761. 'கலித்தானைக் கடலோடுங் கைத்தானக் களிற்றரசர்
ஒலித்தாளி யெனவந்து மணமொழிந்தார்க் கெதிருருத்த
புலித்தானைக் களிற்றுரிவைப் போர்வையான் போர்வில்லை
வலித்தானே மங்கைதிரு மணத்தானென் றியாம்வலித்தேம்.

'கை தானம் களிறு அரசர் - துதிக்கையையும் மதத்தையும் உடைய யானைகளையுடைய (பல) அரசர்கள், கலி தானை கடலோடும்-ஒலிமிக்க சேனாசமுத்திரத்துடனே, ஒலித்து-ஆரவாரித்து, ஆளி என வந்து-சிங்கங்கள் போல (எம்மிடம்) வந்து, மணம் மொழிந்தார்க்கு-திருமணம் பேசியவர்களுக்கு, எதிர்-மறுமொழியாக, உருத்த புலி தானை-கோபித்து வந்த புலியின் தோலாகிய ஆடையையும், களிறு உரிவை போர்வையான்-(அவ்வாறே வந்த) யானையின் தோலாகிய

போர்வையையுமுடைய சிவபிரானது, போர் வில்லை-போருக்குதவிய (இவ்) வில்லை, வலித்தானே-(தனது ஆற்றலால்) வளைத்தவனே, மங்கை திருமணத்தான் என்று-இச்சீதையை மணத்தற்குரியவன் என்று, யாம் வலித்தேம்-நாங்கள் உறுதியாகக் கூறினேம்.

யாம் வலித்தேம்: அரசன் சார்பாகக் கூறியது. வலித்தல்-(முதலது) வல்லமையைக் காட்டுதல்; ஆரணிய. 761.

(பி - ம்.) 1. கலித்தானைக் களிற்றேடும்: கைத்தானைக்.
2. ஒலித்தாழி: ஒலித்தானைக் கடல்புடைசூழ்: மணமுரைத்தார்க்கு; மகன்மொழிந்தார்க்கு; எதிருடு; எதிருடுப்ப.
3. களிற்றுருவைப்: கரியுரிவைப்: போர்வையரன்: வார்சிலையை: வரிசிலையை; வரிவில்லை.
4. வலித்தானே: மணத்தானென்று: யாம்வலித்தாம்; யாம்வலித்தோம்; யாம்வரித்தேம். (21)

## மணம்பேச வந்த மன்னர்கள் செயல்

762. 'வல்வில்லுக் காற்றூர்கண் மாரவேள் வளைகரும்பின்
மெல்வில்லுங் காற்றூராய்த் தாமெம்மை விளிகுற்றூர்
கல்வில்லோ டுலகளித்த கனங்குழையைக் காதலித்துச்
சொல்வில்லா லுலகளிப்பாய் போர்செய்யத் தொடங்கினர்.

'சொல் வில்லால் உலகு அளிப்பாய்-சொல்லாகிய வில்லினலே உலகத்தைக் காக்கும் ஆற்றலுடையோய்! வல் வில்லுக்கு ஆற்றூர் கள்-வலிய சிவதனுசை வளைத்தற்கு ஆற்றுதவர்களாகிய (மணம்பேச வந்த) அரசர்கள், கல் வில்லோடு உலகு அளித்த-மலைபோன்ற இவ் வில்லுடனே (பணயமாகப் பொருத்தி) உலகத்தாருக்கு அறிவிக்கப் பட்ட, கனம் குழையை காதலித்து-கனத்த குண்டலங்களையணிந்த சீதைபால் மிகவும் காதல் கொண்டதனல், மார வேள் வளை மெல் கரும்பின் வில்லுக்கு(ம்) ஆற்றூர் ஆய்-மன்மதன் வளைத்து எய்த மெல்லிய கரும்பு வில்லின் தாக்குதலையும் தாங்கமாட்டாதவராகி, தாம் எம்மை விளிகுற்றூர்-அவர்களாகவே எங்களை (ப்போருக்கு) அழைத்து, போர் செய்ய தொடங்கினர்-எங்களோடு போர் செய்யத் தொடங்கினர்கள்.

பிராட்டியை விரும்பி மணம்பேச வந்த மன்னர் பலரும், வில் பணயமாகவுள்ளதென்றது தெரிந்ததும், அதனைத் தருவித்து, எடுத்து வளைக்க முயன்றபோது, அதனை யெடுக்கவும் ஆற்றூராய், மானமும் காதலும் தூண்ட, மிக்க சினங்கொண்டு, அறை கூவிப் போர்செய்யத் தொடங்கினர் என்க.

விளிகுற்றூர்: கு,சாரியை கனங்குழை, அன்மொழித் தொகை.

கௌசிக முனிவன், தன் சொல்லால் ஆக்கலும் அழித்தலும் வல்லவனுதலின், நன்மைக்கு ஆக்கமளித்தும் தீமையை அழித்தும்

உலகத்தைக் காப்பவனுகின்றுன்; ஆனது பற்றிச் 'சொல் வில்லால் உலகளிப்பாய்' என விளிக்கப்பட்டான். 'கல்வில்லோடு' என்பதனைப் போர் செய்யத் தொடங்கினுர் என்பதனுடன் கூட்டிப் பொருளுரைப் பாருமுளர்.

சொல்வில்: ஒப்பு: 'சொல்லேருழவர்' குறள். 882.

(பி - ம்.) 1. வளைகருப்பின்; வளைகருப்பு; வங்கருப்பு; வன்கரும்பின்; வான்கருப்பு; நன்கருப்பு.

2. ஆற்ருர்கள்: தாமென்மை; தாமேன்மை; தாமெய்ம்மை; தாமுமனம்: விளியுற்ருர்; விளிவுற்ருர்; வெருள்வுற்ருர்; வெருள்வுற்றுக்.

3. கல்வில்லோ டுலகீந்த; உலகீன்ற; உடன்வந்த; உடன்கலந்த: கனங் குழையைக்; கனங்குழையைத் தருகென்று; தருகவென்று.

4. சொல்வில்லா லுட்களிப்பார், சொல்வில்லால் தொலைந்தரசர்: உயிர் நீப்பார் தொடங்கினுர். (22)

763. 'இம்மன்னன் பெருஞ்சேனை யீவதனை மேற்கொண்ட
செம்மன்னர் புகழ்வேட்ட பொருளேபோற் றேய்ந்ததால்
பொம்மென்ன வண்டலம்பும் புரிகுழலைக் காதலித்த
அம்மன்னர் சேனைதம தாசைபோ லாயினவால்.

(போர் நிகழ்ந்த போது), 'இ மன்னன் பெருசேனை-இச்சனக மகாராசனது பேரளவுள்ள படைத்திரள், ஈவதனை மேற்கொண்ட- (மருது) கொடுத்தலை மேற்கொண்டவரும், புகழ் வேட்ட-(அதனு லாகிய) புகழை விரும்பினவருமான, செம்மை மன்னர் பொருளே போல்-நடுநிலைதவருத அரசருடைய செல்வம்(குறைவது) போல, தேய்ந்தது-மிகக் குறைந்த தாயிற்று; வண்டு-வண்டுகள் (மொய்த்து), 'பொம்' என்ன-'பொம்' என்று, அலம்பும்-ஒலித்தற் கிடமான, புரி குழலை-முறுக்கிய கூந்தலையுடைய சீதையை, காதலித்த அ மன்னர் சேனை-(அடைய) ஆசை கொண்ட அவ்வரசர்களுடைய படைகள், தமது ஆசை போல் ஆயின-அவர்களுடைய ஆசை (மிகப் பெருகுவது) போலப் பெருகலாயின. ஆல், அசை. சேனை, பால் பகாவஃறிணை.

போர் செய்ய வந்த அரசர் பலராதலின், அவர்கள் படைகளும் துணைப்படைகளுமாக அவை அளவில் பெருகலாயின. சனகனுடைய சேனையும் பேரளவினதாயினும், அதனினும். மிகப்பெருகிய எதிர்ப் படைகளுக் காற்ருது சேதமடைந்து குறையலாயின. இங்கே ஆசிரி யர் கூறும் உவமைகள் ஓர்ந்து இன்புறுதற்குரியன. 'ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது, ஊதிய மில்லை யுயிர்க்கு' என்றபடி ஈகையை மேற்கொண்டோர் செல்வம், அந்த நற்செயலாலே அளவிற் குறையு மாயினும், அவர்கள் தம்கொள்கையினின்றும் குறைபடாமல் உறுதி யோடு நிற்பர்; புகழாகிய நற்பயனையும் பெறுவர். அதுபோலச் சனக னும், தன்படை குறைந்ததாயினும், நாட்டிய குறிக்கோளினின்றும்

வழுவாது நின்றான்; பின்பு அதில் வெற்றியும் பெற்றான். ஒன்றில் ஆசை கொண்டோர்க்கு அவ்வாசை மேன்மேலும் பெருகினும், கருதியபயன் கைகூடுதல் ஒருதலையன்று; அதுபோல, எதிர்த்த மன்னர்கள் தம்படை மிகப் பெருகலால், வெற்றியடைந்தது போல முதலில் எண்ணினாலும், இறுதியில் தோல்வியேயுற்றனர்' என்பவற்றைப் பொருத்திநோக்குக.

ஈகையாளன் பொருள் அழிதல்: ஒப்பு: 'நல்லிசை வேட்ட நயனுடை நெஞ்சிற், கடப்பாட்டாள னுடைப் பொருள் போலத், தங்குதற் குரியதன்று, (குறுந். *143: 4—6.*).

(பி - ம்.) 1. இம்மன்னர்; எம்மன்னர்; எம்மன்னன்: ஈவுதனை: மேற்கொள்ளச்; மேற்கொள்ளார்.

2. செம்மன்னன்: புகழ்பெற்ற; புகழ்வாய்ப்பச்; புகழ்வாய்ப்பத்; புகழன்றித்: சிறந்தவால்; தேய்ந்தற்றார்; தேய்ந்தற்றால்; தேய்ந்தற்ற; போயிற்றால்; செம்மன்னர் பொருளேபோற் புகழேயாய்ச் சிறந்ததால்; செகம்புகழச் சிறந்தனவாய்ப்.

3. வண்டலம்பு; வண்டரற்று; வண்டரற்றும்; வண்டறையும்; வண்டிமிரும்; வண்டியம்பு; கசதலித்து.

4. அம்மன்னர் பெருஞ்சேனை: ஆயிற்றால்! ஆயிற்றே. (23)

764. 'மற்காக்கு மணிப்புயத்து மன்னனிவன் மழவிடையோன்
விற்காக்கும் வாளமரின் மெலிகின்றா னெனவிரங்கி
எற்காக்கு முடிவிண்ணோர் படையீந்தா ரெனவேந்தர்
அற்காக்கை கூகையைக்கண் டஞ்சினவா மெனவகன்றார்.

'மல் காக்கும் மணி புயத்து மன்னன் இவன்-வலிமையை (எப்போதும் தன்னிடத்தே) பெற்றுள்ள அழகிய தோள்களையுடைய இச்சனக மன்னன், மழவிடையோன் வில் காக்கும் வாள் அமரின்-இளங்காளை வாகனத்தையுடைய சிவபிரானது வில்லின் பெருமையைக் காத்தற் பொருட்டு நிகழும் இக்கொடிய போரினால், மெலிகின்றான் என-(படையிழந்து) தளர்கின்றானேயென்று, இரங்கி-(அவனிடத்து) இரக்கங் கொண்டு, எல் காக்கும் முடி விண்ணோர்-மிக்க ஒளி பொருந்திய கிரீடங்களையுடைய தேவர்கள், படை ஈந்தார் என-(உதவிக்குப்) படைகளைக் கொடுத்தனராக, வேந்தர்-(அதனையறிந்த எதிரிகளான) அரசர்கள், காக்கை அல் கூகையை கண்டு அஞ்சின ஆம் என-காக்கைக் கூட்டங்கள் இரவிலே கோட்டானைக் கண்டு அஞ்சியோடுவன போல, அகன்றார்-(போர்முனையினின்றும்) நீங்கிப்போயினர்.

சிவதனுசே இப்போர் தோன்றுதற்குக் காரணமாதலால், 'விற்காக்கும் வாளமர்' என்றார். இராமபிரான் வந்து வில்லை முறித்துப் பிராட்டியை மணத்தலாகிய தேவகாரியம் நிகழவிருத்தலின், இப்போரிலே சனகமகாராசனுக்குத் தேவர்கள் உதவினர் என்க. மாற்றரசர்கள் ஓரியாண்டளவும் மிதிலையை முற்றுகை செய்து கடும் போர் புரிந்ததனால், தன் படைகள் குறைதலும் மக்கள் துயர

முறுதலுங் கண்டு வருந்திய சகன மன்னன், தன் தவப்பெருமையால் தேவர்களை மகிழ்விக்க, அவர்கள் மகிழ்ச்சியடைந்து படைகளை உதவி ஊக்குவித்தனராக, அப்படைகளால் தாக்குண்டு மாற்றார் நிலைகுலைந்தோடினர் என முதனூல் கூறும்.

கூகைகள் பறவையினத்திலே மிகக்குறைவானவை; காக்கைக் கூட்டங்கள் எவ்வளவிருப்பினும், அவற்றிற்கு இரவிலே கண் பார்வை குறைவாதலின், அப்போது நல்ல பார்வையுடைய கூகைகளால் எளிதில் அழிவுறும். அதுபோல, சனகனுடைய சிறுபடையால் பெரும் படைகள் மிகக்கொண்ட மாற்றரசரும் நிலைகெட்டனர் என்க. கோட்டான்களுக்குப் பகலில் கண் தெரியாததனால் அவைகளைக் காக்கைகள் பகலில் எளிதாக அழிக்கும்; 'பகல்வெல்லுங் கூகையைக் காக்கை' (குறள். 481); சீவக. 1927-ம் காண்க.

(பி - ம்.) 1. திரள்புயத்து மன்னிவனை.
2. விற்காக்க வாளமருள்; விற்காத்த வரமருளே: எனவிளங்கி.
3. படையீந்தான்: எனவந்தார்; எனவிரங்கி. 4. எனவகன்றான் (24)

765. 'அன்றுமுத லின்றளவு மாருமிந்தச் சிலைமருங்குச்
சென்றுமிலர் போயொளித்த தேர்வேந்தர் திரிந்துமிலர்
என்றுமினி மணமில்லை யென்றிருந்தே மிவனேற்றின்
நன்றுமலர்க் குழற்சீதை நலம்பழுதா காதென்றான்.

'அன்று முதல் இன்று அளவும்—, ஆரும்-(வேறு) எவரும், இந்த சிலை மருங்கும் சென்றிலர்-இந்த வில் இருந்த பக்கங்கூடச் சென்றவர் இல்லை; போய் ஒளித்த தேர் வேந்தர்-(கூகையைக் கண்ட காக்கைகள் போல) ஓடி ஒளித்த, தேரையுடைய அரசருள் ஒருவரும், திரிந்தும் இலர்-இங்கே மீண்டும் வந்தாருமில்லை; (இவற்றால்), 'இனி மணம் என்றும் இல்லை' என்று இருந்தேம்-(சீதைக்குத்) திருமணம் இனி என்றுமே நிகழாது என்று கருதிக் கவலையுற்றிருந்தோம்; இவன் ஏற்றின்-(இப்போது) இவ்விராமன் அவ்வில்லைநாணேற்றினால், நன்று-நல்லதாகும்; மலர் குழல் சீதை நலம் பழுது ஆகாது-பூக்கள் சூடிய கூந்தலையுடைய சீதையின் இளமையழகும் வீணாகாது; என்றான்-என்று கூறிமுடித்தான்-(சதாநந்தன்.).

சென்று மிலர் என்றவிடத்து உம்மையைப் பிரித்து முன்னே கூட்டி யுரைக்கப்பட்டது.

வில்லின் வலிமையை நேரே கண்டறிந்தவர்களும் இங்கு மீண்டும் வரவில்லை; காணாத பிறரும், கேட்டறிந்ததனால் இவ்வில் காரணமாக இங்கு வரவில்லை. எனவே, 'சீதையின் திருமணம் (இவ் வில்லின் தடையால்) நிகழாமலே நின்றுவிடுமோ' என நாங்கள் கவலையுற்றிருந்தோம்; இப்போது அதனை நீக்கும் வகையில் இவ்விராமன் வந்துள்ளான் என்று சதானந்தன் கூறிமுடித்தான் என்க. முன்னே

'ஐயன் வில்லேற்றுமேல் இடர்க்கடலேற்றும்; நங்கையும் நோற்றனள்' எனச் சனகன் கூறியதும் காண்க.

திரிதல்-திரும்புதல்:'மகனைத் திரிவா னென்றாள்'(அயோத். 349).

(பி - ம்.) 1. யாவருமிச் சிலையருகு, சிலமருங்கிற். 2. போயொளித்தார்; போயொழிந்த; போரொழிந்த; தெவ்வேந்தர்: திரிந்துமிலார்; வந்துமிலர். 3. மணமுமிலை; என்றிருந்தோம்: இவனேற்றில்; அவனேற்றில். 4. பழுதாகா வென்றான். (25)

கௌசிகன் குறிப்பும் இராமபிரான் செயலும்

766. நினைந்துமுனி பகர்ந்தவெலா நெறியுன்னி யறிவனுந்தன்
புனைந்தசடை முடிதுளக்கிப் போரேற்றின் முகம்பார்த்தான்
வனைந்தனைய திருமேனி வள்ளலுமம் மாதவத்தோன்
நினைந்ததனை நினைந்தந்த நெடுஞ்சிலையை நோக்கினான்.

முனி நினைந்து பகர்ந்த எல்லாம்-சதாநந்த முனிவன் (நன்கு) ஆலோசித்துச்சொன்ன எல்லாவற்றையும்,அறிவனும்-பேரறிவுடைய கௌசிக முனிவனும், நெறி உன்னி-முறையாகக் கவனித்து, தன் புனைந்த சடை முடி துளக்கி-தனது அழகு செய்கின்ற சடையை யுடைய தலையை அசைத்து, போர் ஏற்றின் முகம் பார்த்தான்-போரில் வல்ல இடபம் போன்ற இராமபிரானது திருமுகத்தை (குறிப்போடு) நோக்கினான்; வனைந்த அனைய திருமேனி வள்ளலும்-(சித்திரத்தில்) எழுதியது போன்ற திருமேனியையுடைய (கருணை) வள்ளலாகிய இராமபிரானும், மா தவத்தோன் நினைந்ததனை நினைந்து-மிக்க தவமுடைய கௌசிக முனிவன் கருதிய குறிப்பையே தானுங் கருதி, அந்த நெடு சிலையை நோக்கினான்-அந்தப் பெரிய வில்லை (பொருள் நிரம்பிய குறிப்புடன்) பார்த்தான்.

சதாநந்த முனிவன் சமயோசிதமாக அவ்வில்லின் வரவாறும், சீதையின் வரலாறும் எடுத்துக்கூறி, 'இராமபிரான் வில்லைக் கையாளுதற்குரியவனே' யென்பதையும் குறிப்பிக்க, முன்னமே 'வில்லுங் காண்பார்' எனத் தெரிவித்திருந்த விசுவாமித்திர முனிவன், அதற்குரிய தருணம் வந்தமையை இராமபிரானுக்குத் தன் பார்வையாலே அறிவித்தான் குறிப்பிற் குறிப்புணரும் ஆற்றலமைந்த ஐயனும், அவ்வாறே யாகுகவென உணர்த்தும் வகையில், வில்லை நோக்கினான்; பார்வையாலேயே அவ்வில்லை எடுத்தாள்வ தெங்ஙனமென்பதைத் தன் மனத்துள்ளே நிச்சயித்துக்கொண்டான். இவ்விடத்துக் கம்பநாடர் கையாளும் முறை அனைவரையும் இன்புறுத்துவதாகும். இராம பக்தியே தம் உயிர்நாடியாகக்கொண்ட தியாகையரும், இக்கருத்தை இவ்வகைவாகவே அமைத்துள்ள 'அலகலல்லலாடககனி' என்ற கீர்த்தனம் கருதுந்தோறும் இன்பக் கடலுள் ஆழ்த்துவதாகும். 'இராமா! நீ முனிவனது கண்ணேக்கக் குறிப்பையுணர்ந்து, சுருண்ட முன் மயிர் காற்றிலே சிறிதலைய, அநாயசமாகச் சிவதனுசை யெடுத்து வளைத்து

முறித்தபோது அவ்வரச முனிவன் எவ்வாறு மனமகிழ்ந்தனனோ!" என்கிறார் அவர்.

'போரேறு' என இலக்குவனையுங் குறித்துள்ளார் ஆசிரியர்; யுத்த. 1716. வனைந்தனைய திருமேனி வள்ளல்: ஒப்பு: 'வனைந்ததா மன்னமேனியினன்' (யுத்த. 217); 732-குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. நினைந்தமுனி; நினைந்தமொழி; பகர்நததெலாம்: நெறியுள்ளி; நெடி துன்னி; அறிந்தவனும்; அருந்தவனும்.
2. போரேற்றை; போர்வேந்தன். 3. வள்ளலுமா தவத்தோனுள்.
4. நினைந்தவெலாம்; நினைந்ததெல்லாம்; நினைந்துணர்ந்து: நினைத்தநினை வறிந்தந்த. (20)

### இராமபிரான் வில்லை யெடுக்க எழுதல்

(வேறு)

767. பொழிந்தநெய் யாகுதி வாய்வழி பொங்கி
எழுந்த கொழுங்கன லென்ன வெழுந்தான்
அழிந்தது வில்லென விண்ணவ ரார்த்தார்
மொழிந்தன ராசிகள் முப்பகை வென்றார்.

(வில்லை நோக்கிய இரகுவீரன்), ஆகுதி நெய் பொழிந்த வாய் வழி-பூர்ணுகுதியாக நெய்யைச்சொரிந்த விடத்தினின்றும், பொங்கி எழுந்த-(மேல் நோக்கிக்) கொழுந்துவிட்டு எழுந்த, கொழு கனல் என்ன-வளமான (வேள்வித்) தீயைப்போல, எழுந்தான்-(தானிருந்த ஆதனத்தினின்றும்)எழுந்தான்; (அப்போது), விண்ணவர்-தேவர்கள், வில் அழிந்தது என-'இவ்வில் தன்வலி அற்றது' என்று சொல்லி, ஆர்த்தார்-மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள்; முப்பகை வென்றார்-(காமம், வெகுளி, மயக்கம் என்னும்) மூன்று உட்பகைகளையும் வென்ற முனிவர்கள், ஆசிகள் மொழிந்தனர்-(வீரனுக்கு) வாழ்த் துரைகள் கூறினர்கள்.

ஆதனத்தில் வீற்றிருந்தவாறே வில்லை நோக்கிய வீரராமன், அதனை யெடுத்து வளைக்கும் பொருட்டு, அதனிடம் போகக் கருதி எழுந்தான். தேவரும் முனிவரும் தங்கள் காரியம் நிறைவேறுதற்கு இது காரணமாகுமாதலின், மிக்க மகிழ்வுற்று ஆரவாரம் செய்தும் வாழ்த்தியும் இராமபிரானை ஊக்குவித்தனர் என்க. வேள்வித் தீ நற் பயனளிக்கவல்லதாதலின் அதனை இங்கேயுவமித்தார். விசுவாமித்திர முனிவனது நோக்கம் நெய்யாகுதியாகவும், இராமபிரான் கனலா கவும் கொள்க. இங்கு இவ்வாறு உவமித்த ஆசிரியர், வில்லை நோக்கி இராமபிரான் நடந்ததனை மேலே கூறுமிடத்து (773) உள்ள அழகை யும் நோக்குக.

காமம் முதலிய உட்பகை ஆறையும் மூன்றனுள் அடக்கிக் கூறுவர்; 'காமம் வெகுளி மயக்க மிவை மூன்றன், நாமங் கெடக்

கெடும் நோய்' (குறள். 360) என்பது காண்க. 'கள்வரிற் கரந்துறை காம மாதியாம், உள்ளுறு பகைவர்' (அயோத். 20).

(பி - ம்.) 1. நெய்யாவுதி; நெயாகுதி; வாய்வழி பொங்க.
2. கொழுஞ்சுடரென்ன. 3. உம்பர்களார்த்தார்; வானவ ரார்த்தார்.
4. வென்றோர். (27)

இராமபிரானைக் கண்ட மங்கையர் செய்தி

768. தூய தவங்க டொடங்கிய தொல்லோன்
ஏயவன் வல்வி லிறுப்பதன் முன்னம்
சேயிழை மங்கையர் சிந்தைதொ றெய்யா
ஆயிரம் வல்வி லனங்க னிறுத்தான்.

தூய தவங்கள் தொடங்கிய-பரிசுத்தமான தவங்களைப் பல முறை தொடங்கிச் செய்த, தொல்லோன் ஏயவன்-பழமையுடைய விசுவாமித்திர முனிவனால் ஏவப்பட்ட இராமபிரான், வல் வில் இறுப்பதன் முன்னம்-வலிய சிவதனுசை (எடுத்து வளைத்து) முறிக்கு முன்பே, அனங்கன்-மன்மதனானவன், செம்மை இழை மங்கையர் சிந்தை தொறு(ம்) - செவ்விய அணிகளைப் பூண்ட பல பெண்களின் மனத்திலெல்லாம், எய்யா-(மலரம்புகளைத் தொடுத்து) எய்ததனால், ஆயிரம் வல்வில் இறுத்தான்-மிகப் பல (கரும்பு) விற்களை முறிக்க லானான்.

இராமபிரான் எழுந்து நின்றவுடன், அவனது தோற்றப் பொலிவு கண்ட பெண்கள் பலர், காதலுற்றுப் பலவாறு கூறலாயினர். இரகு வீரன் சிவதனுசை யெடுத்து நாணேற்றக் கருதி வளைக்கும்போதே அது முறிந்துபட்டமை மேலே கூறுவார், இங்கே 'வல்வில் இறுப்பதன் முன்னம்' என்றார். மன்மதனது மெல்லிய கரும்பு வில்லை 'வல்வில்' என்றது வஞ்சப் புகழ்ச்சி. ஆயிரம் என்றது பன்மை குறித்து நின்றது. எய்யா: 'செய்யா' என்னும் வாய்பாட்டெச்சம்.

(பி - ம்.) 1. தொல்லோர். 2. ஏயென: அவ்வில்: எடுப்பதன் முன்னே.
3. சேயிதழ்; சேயிள: சிந்தைதொறெய்வான்.
4. வில்லையனங்கன்; வில்லனனங்கன்; வில்லுமனங்கன். (28)

மகளிர் பலவாறு கூறுதல்

769. காணு நெடுஞ்சிலை கால்வலி தென்பார்
நாணுடை நங்கை நலங்கிளர் செங்கேழ்ப்
பாணி யிவன்படர் செங்கை படாதேல்
வாணுதல் மங்கையும் வாழ்வில ளென்பார்.

காணும் நெடு சிலை-(இதோ) நாம் பார்க்கும் இப்பெரிய வில்லானது, கால் வலிது-தண்டின் வலிமைமிகவுடையது; என்பார்-என்று

கூறுவர் (சிலபெண்கள்); நாண் உடை நங்கை-நாணமே அணிகலமாக வுடைய நம் சீதையினது, நலம் கிளர் செம்கேழ் பாணி-அழகு மிக்க செவ்விய நிறம் பொருந்திய கைகள், இவன் படர் செம்கை படாதேல்-இக்குமரனுடைய செம்மை பரந்த கையினாலே பற்றப்படாவிடில், (இவன் அவளைப் பாணிக் கிரகணம் செய்யாவிடில்), வாள் நுதல் மங்கையும்-அழகிய நெற்றியை யுடைய சீதையும், வாழ்வு இலள்-நல் வாழ்வு பெறாதவளாவாள்; என்பார்—.

இது முதல் நான்கு பாடல்களால் மகளிர் தமக்குட் பலவாறு பேசியவற்றைக் கூறுகின்றார். 'மங்கையும் வாழ்விலள்' என்ற உம்மையினால், 'இக்குமரனும் அவளைக் கைப்பற்றாவிடின் நற்பேறுடையவனாகான்' என்பதும் தொனிக்கும். நம் சீதைக் கேற்ற சிறப்புடைய தலைவன் இவனாதலால், இவ்வில்லை இவன் வளைத்துச் சீதையைக் கைப்பற்றாவிடின், இருவரும்பாக்கிய மற்றவரே யாவர் என்பது கருத்து.

'கால்' என்பது வில்லின் அடிப்பாகம் என்றும், குதை என்றும் கூறுவர். இது 'தாள்' எனவும் படும். 'தாளுடை வரிசிலை' (755) 'வன்றாட்சிலை' (ஆரணிய. 989).

(பி - ம்.) 1 காண்வரி தென்பார்.
3. பாணியினன் படர்பாணி; படானேல்; புகாதேல்; புகாளேல்.
4. நங்கையும்; சீதையும்; வாழ்கிலள்; வாழ்கலள்; வாழலள். (29)

770. கரங்கள் குவித்திரு கண்கள் பனிப்ப
இருங்களி றிச்சிலை யேற்றில னாயின்
நரந்த நறைக்குழ னங்கையு நாமும்
முருங்கெரி யுட்புக மூழ்குது மென்பார்.

(சிலமாதர்), இரு கண்கள் பனிப்ப-தம் இருகண்களிலும் நீர் பெருக, கரங்கள் குவித்து-(தம் இட்ட தெய்வத்தைக்கருதிக்)கைகளைக் கூப்பிக்கொண்டு, 'இரு களிறு-பெருமை பொருந்திய ஆண் யானை போன்ற இக்குமரன், இ சிலை ஏற்றிலன் ஆயின்-இவ்வில்லை நாணேற்றாவிடின், நரந்தம் நறை குழல் நங்கையும்நாமும்-கத்தூரி மணங்கமழும் கூந்தலையுடைய சானகியோடு நாமும்,முருங்குஎரி உள்புக-(எவற்றையும்) அழிக்கும் நெருப்பினுள் (நம் உடம்பு) மறையும்படி, மூழ்குதும்-குளித்துவிடுவோம்' என்பார்—.

'சிலமாதர்' என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. இவ்வாறு கூறிய மாதர்கள், பிராட்டியோடு நெருங்கிய தொடர்புடையவர்களெனலாம். அவர்கள், இக்குமரன் வில்லை வளைத்து நாணேற்றாவிடின், நம் சீதை கன்னியாகவே யிருந்து வறிதே மூத்துக் கழிதலினும் இப்போதே தீக்குளித்தல் நன்றாம்; அவ்வாறாயின் நாமும் அவளோடு தீயில் மூழ்கி யிறப்போம்' எனத் தம் ஆராமை தோன்றக் கூறினர்

என்க. இங்ஙனம் சூளுறவு போலக் கூறிய இவர்களுக்கு, ஐயன் வில் லேற்றுதல் கூடும் என்ற நம்பிக்கை யிருந்ததெனவே கொள்ளலாம்.

நரந்தம்-நாரத்தம் பூ வென்றலும் ஆம்; (குறுந். 52). 'கண்கள் பனிப்ப' என்பதனைப் பின்னே கூட்டி, 'எம் கண்கள் இன்பக் கண்ணீர் பொழியும் வண்ணம் இவன் சிலை ஏற்றுனுகில்' என உரைப்பாருமுளர். 'கண்கள் களிப்ப' என்ற பிரதிபேத முண்மையும் நோக்கற்பாலது.

(பி - ம்.) 1. குவிந்திரு: கண்கள் பணிப்ப; கண்கள் களிப்ப.
2. அச்சிலை: ஏற்றலன்; ஆகில். 3. நரந்தை நறுங்குழல்.
4. ஒருங்கெரியிற்புக: மூழ்குவம். (30)

771. 'வள்ளன் மணத்தை மகிழ்ந்தன னென்றல்
கொள்ளென முன்பு கொடுப்பதை யல்லால்
வெள்ள மணைத்தவன் வில்லை யெடுத்திப்
பிள்ளைமு னிட்டது பேதைமை யென்பார்.

(சில மகளிர்), 'வள்ளல்-கொடையாளியாகிய நம் அரசன், மணத்தை மகிழ்ந்தனன் என்றல்-சீதையின் விவாகம் நடந்தேறுவதை விரும்பினனுனல், (இக்குமரனைக் கண்டவளவிலே), கொள் என-இவளை ஏற்றுக்கொள் என்று, முன்பு-முன்னுகவே, கொடுப்பதை அல்லால்-(கன்னிகாதானம் செய்து) கொடுப்பதையன்றி, வெள்ளம் அணைத்தவன் வில்லை எடுத்து-கங்கை நீர்ப் பெருக்கை (த்தன் சடைமுடியிலே) அடக்கிக் கொண்ட சிவபெருமானது வில்லையெடுத்து, இ பிள்ளை முன் இட்டது-(இதனை வளைப்பாயாக என்று) இச்சிறுவன் முன் வைத்தது, பேதைமை-அறிவீனமே; என்பார்—.

இவ்வாறு கூறியவர்கள் முதிய மகளிரா யிருத்தல் வேண்டும். 'சீதைக்கு எவ்வகையிலும் தகுதியுடைய இக்குமரனைக் கண்டவுடனே மகிழ்ச்சியுடன் சீதையைக் கன்னிகாதானம் செய்து கொடுப்பதை விட்டு, இதுவரையும் அவள் திருமணத்துக்குத் தடையாகவுள்ள இக்கொடிய வில்லை இவ்விளங் குமரனிடத்தும் வைத்து, அதனை வளைக்குமாறு கூறும் நம் அரசனுக்கு, உண்மையாகச் சீதையின் திருமணம் நிறைவேறுவதில் ஊக்கமில்லைப் போலும்: அல்லது அவனதறியாமை இதற்குக் காரணமாக வேண்டும்' என்று தம் ஆராமை மீதூரக் கூறினர் அம்மகளிர் என்க.

'வள்ளல்' என்பது இராமபிரானைக் குறிப்பதாகக் கொண்டு, அவன் சீதையை மணக்க விரும்புவானுயின் எனக் கூறுதலுமொன்று. மூன்ருமடியில் 'வெள்ளை மனத்தவன்' எனப் பாடங்கொண்டு அது சனகனைக் குறிக்குமென்பாருமுண்டு.

'வெள்ள மணைத்தவன் வில்': ஒப்பு: வெள்ளத்தின் சடிலத் தான்றன் வெஞ்சிலை' (1198).

(பி - ம்.) 1. வள்ளல் மனத்தின்; வள்ளலு மிவ்வில்: மகிழ்ந்தனம்.
2. கொள்ளென முந்து.
3. வெள்ளை மனத்தவன்; மனத்தவர்; மனத்திவன்; மனத்தினர்:எடுத்துப்; அழைத்திப். (31)

772. 'ஞான முனிக்கொரு நாணிலை யென்பார்
கோனிவ னிற்கொடி யோரிலை யென்பார்
மானவ னிச்சிலை கால்வளை யானேல்
பீன தனத்தவள் பேறில ளென்பார்.

'ஞானம் முனிக்கு-சிறந்த ஞானமுடைய இவ்விசுவாமித்திர முனிவனுக்கு, ஒரு நாண் இலை-நாணம் சிறிதும் இல்லை, என்பார்—; 'கோன் இவனில்-நம்மரசனை இச்சனகனைப் போல, கொடியோர் இலை-கொடிய மனமுடையவர்கள் (வேறெவரும்) இல்லை; என்பார்—; மானவன்-பெருமை மிக்க இந் நம்பி, இ சிலை கால் வளையானேல்-இவ் வில்லைக் காலூன்றி வளைக்காவிடின், பீனம் தனத்தவள்-பருத்த கொங்கைகளையுடைய நம் சீதை, பேறு இலள்-திருமணம் கொள்ளும் வாய்ப்பே இல்லாதவளாவள்; என்பார்—.

விசுவாமித்திர முனிவனே இக்குமரர்களை இங்கழைத்து வந்து இவ்வில்லை வளைத்தலிலும் அவர்களை யேவினவன் என்பது தெரிந்த போது, சிலபெண்கள், 'பெரிய ஞானி யெனப்படும் இம் முனிவனுக்கு உலகஞானம் இல்லையே!என்றகுறிப் போடு கூறலாயினர். 'அதுகேட்ட மற்றுஞ் சில மகளிர், 'அம்முனிவனைக் குறைகூறி யென்செய்வது; நம் அரசன் சிறிதும் இரக்கமின்றி இவ்வில்லை வளைத்தலுக்கு இவ்விளங் குமரனை இலக்காக்குகின்றானே! என்றனர்; மற்றும் சிலர், இச்செயலில் இக்குமரன் வெற்றி பெறாவிடின், நம் சீதை திருமணங் கொள்ளும் வாய்ப்பேயின்றி வறிது மூத்துக் கழிவளோ? என இரங்கலாயினர் என்க. பீனம்–பருமை; பீனதனத்தவள் என்றது பிராட்டியின் பருவச் சிறப்பைக் குறித்தவாறு.

மானவன்-மனு குலத்தவன் என்றலுமாம்; 'மானவன் மலர்க் கழலில் வைத்துமிலெ னென்றால்' (சுந்தர. 692).

(பி - ம்.) 1. முனிக்கிது: பேரிலையென்பார்.
2. கோனவனில்; இவரில்: கொடியோரிலை; கொடியோர்நிலை: என்பர்.
4. தனத்திவள்; மனத்திவள்: பேறிலி; பேறிலை; பேசிலாள். (32)

இராமபிரான் வில்லை நோக்கிச் செல்லல்

773. தோகைய ரின்னன சொல்லிட நல்லோர்
ஓகை விளம்பிட வும்ப ருவப்ப
மாக மடங்கலு மால்விடை யும்பொன்
நாகமு நாகமு நாண நடந்தான்.

தோகையர் இன்னன சொல்லிட-மயில் போலும் சாயலை யுடைய மகளிர் இவை போன்ற பலவற்றைச் சொல்லிக்கொண்டி ருக்க, (எழுந்து நின்ற இராமபிரான்), நல்லோர் ஓகை விளம்பிட-சாதுக்களாகிய முனிவர் முதலியோர் மகிழ்ச்சியால் ஆசி மொழிகள் சொல்லவும், உம்பர் உவப்ப-தேவர்கள் மகிழ்ச்சியடை யவும், மாகம் மடங்கலும்-மிக்க சிறப்புடைய சிங்கமும், மால் விடை யும்-பெருமை பொருந்திய இடபமும், பொன் நாகமும்-பொன் மலை யாகிய மேருவும், நாகமும்-யானையும், நாண-(தன் நடையும் தோற்ற முங்கண்டு) நாணமடையும்படி, நடந்தான்-(வில்லினருகே) நடந்து சென்றான்.

எழுவாய் அதிகாரத்தால் வருவிக்கப்பெற்றது.

முன்னே 767-ஆம் பாடலில், இராமபிரான் எழுந்து நின்ற தோற்றத்தைச் சிறப்பித்த ஆசிரியர், இங்கே அப்பிரானது நடையழ கைச் சிறப்பிக்கின்றார். பிரான் எழுந்தவுடனேயே, 'வில் அழிந்தது' எனத் தேவர்கள் மகிழ்ந்தனர்; முனிவர் ஆசி மொழிந்தனர் என்றார்; அதனை மீண்டும் இங்கு வலியுறுத்துகின்றார். மாகம் என்பது 'ஆகாயம்' என்ற பொருளுடையது; இங்கே சிறப்பின் மிகுதி குறித்து நின்றது. சிங்கமும் மேருமலையும் தோற்றப் பொலிவுக்கும், இடபமும் யானையும் நடையழகுக்கும் முறையே உவமை. நாகம் இரண்டில் முன்னது மலை, பின்னது யானை.

காளை, சிங்கம், யானை இவற்றின் நடை வீரர் நடைக்கு உவமை: ஆரணிய. 96, 224, 426; கிட்கிந்தா. 227; சுந்தர. 160, 348, 547.

(பி - ம்.) 2. ஓகை யுவந்திட; உம்பருகப்ப; உம்பர் விரும்ப.
3. மாகவிடங்கலும்; மால்விடையும் போல்; மால்விடையும் போர்; மால்வரையும் பொன். (33)

### வில்லெடுத்த விசித்திரம்

774. ஆடக மால்வரை யன்னது தன்னைத்
தேடரு மாமணி சீதையெ னும்பொற்
சூடக வால்வளை சூட்டிட நீட்டும்
ஏடவிழ் மாலையி தென்னவெ டுத்தான்.

(வில்லைக் கிட்டிய இராமபிரான்), மால் ஆடகம் வரை அன் னது தன்னை-பெருமை பொருந்திய பொன் (மேரு) மலை போன்ற தாகிய அவ்வில்லை, பொன் சூடகம்-பொன்னாலாகிய சூடகம் என்ற கையணியையும், வால் வளை-வெண்மையான சங்கு வளையல்களையும் அணிந்த, சீதை எனும்-சீதை என்று பெயர் சொல்லப்படுகிற, தேட அரு மா மணி-தேடுதற்கு அரிய சிறந்த (கன்னியா) ரத்தினத்துக்கு, சூட்டிட-சூட்டும்படி, நீட்டும்-(எடுத்து) நீட்டுகிற, ஏடு அவிழ் மாலை

இது-இதழ்கள் விரிந்த (மலர்) மாலை இதுவாகும்; என்ன-என்று சொல்வதுபோல, எடுத்தான்-(ஒருகையால் எளிதாக) எடுத்தான்.

இங்கும் எழுவாய் வருவிக்கப்பெற்றது.

'சிவபெருமான் வில்லாகக் கொண்ட மேருமலையே இது' என்று சொல்லத் தக்கதென்பார், 'ஆடக மால்வரை யன்னது தன்னை' என்றார். (வரை அன்னது-மலையாகிய அது.) பிராட்டியின் அருமை தோன்ற, 'தேடரு மாமணி' என்றார். சூடகம்-கடகமெனவும் கூறுவர். பின்னே நிகழப் போகும் பிராட்டியின் திருமணத்தில், மணமகன் அவளுக்குச் சூட்ட வேண்டிய மாலையை எடுப்பதுபோல வில்லை எடுத்தான் என்றது, அவ்வில்லே திருமணத்துக்குக் காரணமாதலால், அதனை வளைத்துத் தான் மணமகனாகி மாலை சூட்டுவது திண்ணம் என்பதனை முன்னே குறிப்பிப்பான் போல இலகுவாக எடுத்தான் என்றபடி.

இராமபிரான், சிலையை நோக்கினன் (766), எழுந்தான் (767) நடந்தான் (773) எடுத்தான் (774) எனத் தொடர்புபடுத்தி, 'எடுத்தது கண்டனர், இற்றது கேட்டார்' (775) என முடிக்கும் அழகு நோக்கி யின்புறற்பாலது.

(பி - ம்.) 1. ஆடக மாமலை. 2. தேடரு மாமணிச்; தேடக மாமணி.
3. சூட்டிய; சூடிய. 4. மாலையதென்ன. (34)

775. தடுத்திமை யாம லிருந்தவர் தாளின்
மடுத்தது நாணுதி வைத்தது நோக்கார்
கடுப்பினில் யாரு மறிந்திலர் கையால்
எடுத்தது கண்டன ரிற்றது கேட்டார்.

கையால் எடுத்தது கண்டனர்-(இராமபிரான் அவ்வில்லை), ஒரு கையால் (அலட்சியமாக) எடுத்த அதிசயத்தைக் கண்டவர்களாய், (மேலும் நிகழும் அதிசயத்தைக் காணும் பொருட்டு), தடுத்து-(கண் இமைத்தலைத்) தடுத்துக்கொண்டு, இமையாமல் இருந்தவர்-இமை கொட்டாமல் இருந்த சபையோர்களுள்ளே, தாளின் மடுத்ததும்-(பிரான் அதன் ஒருமுனையைத்) திருவடிக்கீழ்ப் படுத்து ஊன்றியதையும், நாண் நுதி வைத்ததும்-நாணை மற்றொரு முனையில் பூட்டியதையும், கடுப்பினில்-(செயலின்) விரைவினால், யாரும் நோக்கார்-ஒருவரும் காணாராயினர்; அறிந்திலர்-மனத்தாலும் (இன்னது நிகழுமென்று) கருதியிலர்; இற்றது கேட்டார்-அவ்வில் முறிந்ததனால் உண்டான ஓசையை மட்டும் கேட்டார்கள்.

இதுவரை யாரும் அதனை அணுகித் தொடுவதற்கும் அஞ்சத் தக்கதாயிருந்த அவ்வில்லை, இராமபிரான் அலட்சியமாக ஒருகையால் எடுத்ததைக் கண்டவர்கள், அதிசயித்து, மேல் நிகழ்வதையும் நோக்கக் கருதி மிகவும் ஜாக்கிரதையாக இமை கொட்டாமல் பார்த்துக்

கொண்டிருந்தும், செயல் நிகழ்ச்சியின் விரைவினால் எதனையும் காணா வியலாதவராயினர்; வில் முறிந்ததனால் உண்டான ஓசையை மட்டும் கேட்டார்கள் என்க. இவ்வாறு கூறுமுகத்தால், இராமபிரானது பேராற்றலை வியக்கும் நயத்தை நோக்குக. இற்றது என்றதனால், அவ் வில்லில் நாண்பூட்டுதற்கு அதனை வளைக்கும்போதே அது தானே முறிந்து பட்டதென்க. இராமபிரானது திருவடி பட்டமாத்திரத்தில் அது தானே வளைந்துகொடுத்ததென்பர் பெரியோர். 'ஒன்றைக் கண்டனர்; ஒன்றைக் கேட்டார்' என்ற அழகும் அறிந்தின்புறற் பாலது. ஒப்பு: யுத்த. 1231-நோக்குக.

'கல்லை யேற்றலும் கவணினைச் சுழற்றலு மக்கல்
வல்லை யோட்டலும் ஒருவருங் கண்டிலர் இடிப்பும்
செல்லை யொத்தன சிலைநுதற் பாய்தலு மன்னான்
எல்லை பாய்ந்திரு ளிரிந்தென வீழ்தலுங் கண்டார்'

என்ற தேம்பாவணிச் செய்யுளும் (வளன் சனித்த படலம். 29) ஈண்டு ஒப்பு நோக்கத்தக்கது.

(பி - ம்.) 1. தடுத்திடையாமல்; எடுத்திமையாமல். 2. வைத்தலும்.
3. கடுப்பினிலாரும்; கடுப்பெனில் யாரும்; கடுப்பினை யாரும்: உணர்ந்திலர்; கையான்; கையில்; கைவில்.
4. எடுப்பது: கண்டவர்; கண்டார்; கண்டிலர். (35)

### வில் முறிந்த ஓசையால் நிகழ்ந்தவை

(வேறு)

776. ஆரிடைப் புகுது நாமென் றமரர்கள் கமலத் தோன்றன்
பேருடை யண்ட கோளம் பிளந்ததென் றேங்கி நைந்தார்
பாரிடை யுற்ற தன்மை பகர்வதென் பாரைத் தாங்கி
வேரெனக் கிடந்த நாக மிடியென வெருவிற் றன்றே.

(வில் முறிந்ததனா லுண்டான பேரொலி கேட்டு), அமரர்கள்-(மேலுலகத்தில்உள்ள)தேவர்களும், 'கமலத்தோன்தன்பேர்உடை(ய) அண்டகோளம் பிளந்தது-பிரமன் பேரால் வழங்குவதாகிய இப்பிரமாண்டமே பிளந்து போயிற்றுப்போலும்! (அதனால்), நாம் ஆர் இடை புகுதும் என்று-நாம் (இப்போது) யாரிடத்திலே அடைக்கலம் புகுவோம்' என்றெண்ணி, ஏங்கி-ஏக்கங் கொண்டு, நைந்தார்-மனம் வருந்தினார்கள்; பாரை தாங்கி-இப்பூமியை (அடியிலேயிருந்து) தாங்கிக்கொண்டு, வேர்என கிடந்த-(பூமியின்) வேர் என்று சொல்லும்படி உள்ள, நாகம்-ஆதிசேடனும், இடி என-இடி தன்மேலே தாக்குவதாகக்கருதி, வெருவிற்று-அச்சமடைந்தது; (அவ்வாறாயின்), பார் இடை உற்ற தன்மை-இப்பூவுலகத்தில் நிகழ்ந்த செய்தியை, பகர்வது என்-என்னவென்று சொல்லுவது!

மேலுலகங்களில் உள்ள தேவர்களும், கீழுலகத்தில் உள்ள ஆதிசேடனுமே அஞ்சிக் கலங்கினுர்களென்ருல், இடைப்பட்டதும் நிகழ்ச்சிக்கிடமானதுமாகிய இப்பூமியிலுள்ளோர் செய்தியைச் சொல்லவும் வேண்டுமோ! என்றதனுல் மூவுலகத்தோர்க்கும் அச்சம் விளைத்தது அவ்வோசை என்றபடி-வேர் போன்ற தோற்றமும், அடியிலிருந்து தாங்குதலும் உடைமையின். 'வேரெனக் கிடந்த நாகம்' என்ருர். இடியோசைக்கு நாகம் மிகவும் அஞ்சுதலே, நூல்களில் அங்கங்கே காணலாம். மேலே, மகிழ்ச்சியை அறிவிக்கும் செயல்கள் எங்கும் நிகழ்ந்தமை கூறுதலின், இங்கே இதனை உயர்வுநவிற்சியாகக் கூறினுர் எனக் கொள்க.

வில் முறிந்த ஓசைபற்றிப் பின்னும் 'மூரிவில், இற்றபேரொலி கொலன் றிடித்த தீண்டென்ருன்' (812); 'சிலையை நீயிறுத்தவோசை செவியுறச் சீறி வந்தேன்' (1372); 'புரங்கள் வேவத் தனிச்சரந் துரந்த மேரு, என்றுணைக் கணவ னுற்றற் குரனிலா திற்று வீழ்ந்த, அன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலே போலு மம்மா' (சுந்தர. 451); 'ஈசன் வில்லிறு மொலியு மென்ன......இருபது செவியினூடும் நுழைந்ததவ் வெழுந்த வோசை' (சுந்தர. 751.) என இவ்வாசிரியர் பேசுதல் காண்க.

(பி - ம்.) 1. கமலத்தோன்றல்.
2. பிளந்ததாமென்று; பிளந்தவாமென்று; பிளந்ததாமென்ன.
3. பாரைத்தாங்கும்.
4. வேரெனவுற்ற; வேரிடைக் கிடந்த; வேரிடையுற்ற. (30)

மகிழ்ச்சிச் செயல்கள்

777. பூமழை சொரிந்தார் விண்ணேர்
பொன்மழை பொழிந்த மேகம்
பாமமா கடல்க ளெல்லாம்
பன்மணி தூவி யார்த்த
கோமுனிக் கணங்க ளெல்லாங்
கூறின வாசி கொற்ற
நாமவேற் சனக னின்றெ
னல்வினை பயந்த தென்ருன்.

விண்ணேர் பூ மழை சொரிந்தார்—; மேகம் பொன் மழை பொழிந்த—; பாமம் மாகடல்கள் எல்லாம்-பரந்த,சிறப்புடைய கடல்கள் எல்லாம்; பல மணி தூவி-(தம்மிடம் உள்ள) பலவகை இரத்தினங்களை அள்ளி வீசி, ஆர்த்த-பேராரவாரம் செய்தன; கோ முனி கணங்கள் எல்லாம்-தலைமையுடைய இருடியர் கூட்டங்க ளெல்லாம், ஆசி கூறின-(இராமபிரானுக்கு) ஆசிமொழிகளைக் கூறின; கொற்றம்-வெற்றியையும், நாமம்-(பகைவர்க்கு) அச்சந்தருந் தன்மையையும்

உடைய, வேல்-வேற்படை தாங்கிய, சனகன்-சனக மன்னன், இன்று என் நல்வினை பயந்தது- நான் செய்த புண்ணியம் இன்றே தன் பயனை அளித்தது; என்றான்—.

கடல் 'இரத்தினாகரம்' எனப்படுதலின், 'பன்மணி தூவி ஆர்த்த' என்றார். சனகன், தன் அச்சமும் ஐயமும் நீங்கப்பெற்றமையின் 'இன்று என் நல்வினை பயந்தது' என்றான்.

பாமமா கடல்கள்: ஒப்பு: 'நீள்புறப் பாமமா கடல்': (175). பாமம்-பரப்பு; ஒளியும் ஆம்; ஆழமென்று கூறுவாருமுளர்.

(பி - ம்.) 1. பூமழை பொழிந்தார்: சொரிந்த மேகம்.
2. பாமமாக்கடல்கள்: பாமமார்கடல்கள்; பாமரு: ஆர்க்க.
3. முனிக்குழாங்கள்; முனியினங்கள்: கூறினர்.
4. சனகனின்றே; சனகனென்றன்; சனகனோதன்; சனகன் பாவை; சனகற் கின்றே: பயந்ததென்னா; பயந்ததென்பார்; பயந்ததென்னார். (37)

## நகர மக்களின் மகிழ்ச்சி

778. மாலையு மிழையுஞ் சாந்துஞ் சுண்ணமும் வாச நெய்யும்
வேலைவெண்முத்தும் பொன்னுங் காசுநுண் டுகிலும்வீசப்
பால்வளை வயிர்க ளார்ப்பப் பல்லியந் துவைப்ப முந்நீர்
ஒல்கிளர்ந் துவாவுற் றென்ன வொண்ணகர்கிளர்ந் ததன்றே.

ஒள் நகர்-ஒளி பொருந்திய அம் மிதிலை நகரமெங்கும், பால்வளை-வெண்மையான சங்குகளும், வயிர்கள்-ஊது கொம்புகளும், ஆர்ப்ப-முழங்கவும், பல் இயம்-பலவகை வாத்தியங்களும், துவைப்ப-ஒலிக்கவும், மாலையும்-பூமாலைகளையும், இழையும்-ஆபரணங்களையும், சாந்தும்-சந்தனத்தையும், சுண்ணமும்-நறுமணப் பொடியையும், வாசம் நெய்யும்-வாசனைத் தைலங்களையும்,வேலை வெண் முத்தும்-கடலினின்றும் பெறும் வெள்ளிய முத்துக்களையும், பொன்னும்-பொன்னையும், காசும்-இரத்தினங்களையும், நுண் துகிலும்-மெல்லிய ஆடைகளையும், வீச-(மகிழ்ச்சியால் ஒருவருக்கொருவர்) நிரம்பக் கொடுக்கவுமாக, உவா உற்று-முழுமதி நாள் வரப்பெற்று, முந்நீர்-கடலானது, ஒல் கிளர்ந்தது என்ன-(மிக்க) ஒலியோடு பொங்கி யெழுந்தாற்போல, கிளர்ந்தது-மகிழ்ச்சியாரவாரம் மிகுவதாயிற்று. அன்று, ஏ-அசை.

இது முதல் ஏழு பாடல்களில், மிதிலை நகர மக்கள் மகிழ்ச்சி மேலீட்டால் செய்தவற்றைக் கூறுகின்றார்.

வில் முறிபட்டதனால், எல்லோருக்கும் இனியளான பிராட்டி தன்னிகரில்லாத் தலைவனைப் பெற்றுத் திருமணங்கொள்ளுதல் திண்ணம் என்ற மகிழ்ச்சி மீதூர, நகர மாந்தரெல்லாம், தத்தம் இல்லங்களில் திருமணம் நிகழ்வது போன்ற குதூகலமுடையராயினர்; அதனால் மகிழ்ச்சியாரவாரம் எங்கும் மிகுவதாயிற்று; இதற்கு நிறைமதி நாளிலே பொங்கியெழுங் கடலை உவமித்தார். 'உவாவுற்று ஒல்

கிளர்ந்தென்ன' என மாற்றிக் கூட்டுக. கிளர்ந்தென்ன: தொகுத்தல். ஓல்=ஓலம்; கடைக்குறை; சுந்தர. 768.

வாச நெய்-மயிர்ச்சாந்து வகையுள் ஒன்று எனவும், புழுகு எனவுங் கூறுவர் ஒருசாரார்.

இங்கே நகர மக்கள் கொண்ட மகிழ்ச்சியைப் பொதுப்படக் கூறி, மேலே ஆறு கவிகளால் தனித்தனியே சிறப்பித்துக் கூறுவர்.

(பி - ம்.) 2. வேலைவெண்டுகிலும் பொன்னும்: காசுநுண்டுசும்; காசும்வெண்டுசும்: காசும் வெண்டுகிலும்; காசும் வண்டுகிலும்; வீசிப்.

3. பால்வலையமிர்தளாய; அமுதளாய; முதலவாய; வயிரயாழ்கள்: வயிரவீணை.

4. ஓல்மலந்து; ஓல்வளைந்து; ஓலம்வந்து; ஓலமோடு: உலாவுற்றென்ன; உறவுற்றென்ன: உற்றதென்ன: ஒலிநகர்: ஒலிநகர்க்; ஒளிநகர்: கிளந்ததன்றே; கிளந்தவன்றே. (38)

779. நல்லியன் மகர வீணை தேனுக நகையுந் தோடும்
வில்லிட வாளும் வீச வேல்கிடந் தனைய நாட்டத்
தெல்லியன் மதிய மன்ன முகத்திய ரெழிலி தோன்றச்
சொல்லிய பருவ நோக்குந் தோகையி னாடி னாரே.

வேல் கிடந்த அனைய நாட்டத்து-வேலைக் கிடத்திவைத்தாற் போன்ற கண்களையும், எல் இயல் மதியம் அன்ன முகத்தியர்-ஒளி விளங்கும் பூர்ண சந்திரனைப் போன்ற முகத்தையும் உடைய மங்கையர், நல் இயல் மகர வீணை தேன் உக-நல்லிலக்கண மமைந்த மகர வீணை யானது (இசைத்) தேனைப்பொழியவும், நகையும் தோடும் வில் இட-(தங்கள் அழகிய) பற்களும் காதணிகளும் பிரகாசிக்கவும், வாளும் வீச-(கண்களாகிய) வாட்படைகளும் மிளிரவும், சொல்லிய பருவம்-(மழைக்கு உரியதாகச்) சொல்லப்பட்ட கார் காலத்திலே, எழிலி தோன்ற-மேகங்கள்காணப்பட, நோக்கும் தோகையின்-அவற்றைக் கண்ட மயில்களைப் போல, ஆடினார்-(மகிழ்ந்து) கூத்தாடினார்கள். ஏ-ஈற்றசை; தோகை, ஆகு பெயர்.

'வாளும் வீச' என்பதனை 'வாள் வீச்சு' எனவே கொண்டு, ஆடினோர் 'மதங்கியர்' என்றலும் ஆம். வில், வாள், வேல் என்ற படைப் பெயர்களும் தொனிக்குமாறு அமைந்துள்ள நயம் காண்க. மயில்கள் மேகத்தைக் கண்டு மகிழ்ந்து ஆடும்; இம்மங்கையர், வில் முறிந்ததனா லான இடியோசை கேட்டு மகிழ்ந்து ஆடினர் என்க.

வீணைத் தேன்: ஒப்பு: இசைத்தேன். 885; தேனிசை; சுந்தர. 126.

(பி - ம்.) 1. நல்லியாழ்: வீணைத்தேனுக; தேனுகு; தேனுகர்; வீணைநந்தேனும்: நகையிணோடும்; நகையுந்தோடும்.

2. வில்லிடை வாளும்வீசி: வாள்கள்வீச; வாள்கள்வீசி: வாள்கள் மின்னி: வாளினோடு: வெயில்கிடந்தனைய.

3. எல்லியின்: எல்லையில்: தொல்லியல்: மதியமன்னன்; மதியமென்ன: முகத்தினர்: எழிவிதோன்ற; எழிலில்சண்டச்.
4. சொல்லியற் பருவம்: நோக்கித்: தோகையர். (39)

780. உண்ணற வருந்தி ஞரிற்
சிவந்தொளிர் கருங்கண் மாதர்
புண்ணுறு புலவி நீக்கிக்
கொழுநரைப் புல்லிக் கொண்டார்
வெண்ணிற மேக மேன்மேல்
விரிகடல் பருகு மாபோல்
மண்ணுறு வேந்தன் செல்வம்
வறியவர் முகந்து கொண்டார்.

உண் நறவு அருந்திஞரின்-(விரும்பி) உண்ணுதற்குரிய கள்ளைப் பருகினவர்போல, சிவந்து ஒளிர்-செந்நிறங்கொண்டு விளங்குகின்ற, கருமை கண் மாதர்-கரிய (மையுண்ட) கண்களையுடைய மகளிர், புண் உறு புலவி நீக்கி-(கணவர் மனம்) புண்ணுறுதற்குக் காரணமான (தம்) புலவியைக் கைவிட்டு, கொழுநரை - தம் கணவன்மாரை, புல்லிக்கொண்டார் - தழுவிக்கொண்டார்கள்; வெண் நிறம் மேகம்-(ஆகாயத்தில் உள்ள) வெள்ளை நிறமுடைய (நீரில்லாத) மேகங்கள், விரி கடல்-பரந்த கடல்நீரை, மேல்மேல் பருகுமா(று) போல்-மேலும் மேலும் (மிகுதியாகக்) குடிப்பதைப் போல, வறியவர்-வறுமையுடையோர், மண்-இப்பூமியிலே, உறு-(தாம்கொள்ளுதற்குப்) பொருந்திய, வேந்தன் செல்வம்-அரசனுடைய பொருள்களை, முகந்துகொண்டார்-(வேண்டியவாறு) அள்ளிக்கொண்டார்கள்.

காமக்கள்ளும், உண்ணுங் கள்ளும் உண்டோர் கண்கள் சிவத்தல் இயல்பு; அன்றி, மகளிரும் மதுவருந்தல் உண்டாகலின், 'அருந் திஞராதலால்' என ஏதுப் பொருளாகக்கொண்டு கூறலும் ஆம். கண்களுக்குக் கருமை, இயல்பிலேயும், மைதீட்டுதலாலும் உளதாகும். சிவப்பேறியது ஊடலினுல் என்க. சிவந்தொளிர் கருங்கண்; முரன் தொடை. புலவி நீங்குதற்குக் காரணம், வில் முறிந்த பேரோசை கேட்டதனுல் முதலில் உண்டான அச்சமும், பின்பு உண்டான உவகையும் ஆகும். நீரற்ற வெண்மேகம், பொருளற்ற வறியவர்க்கும், கடல், அரசனது பெருஞ் செல்வத்துக்கும் உவமை. மேகங்கள் மேலிருந்தவாறே கடல் நீரைத் தமக்கு வேண்டியவாறு பருகும்; வறிய மக்கள் தரையிலே தமக்குப் பொருந்தியவாறு அரசன் செல்வத்தை அள்ளிக்கொண்டனர் எனப் பொருத்திக் காண்க. வறியவர் முகந்து கொண்டார்: 290-பார்க்க.

(பி - ம்.) 1. சிவந்தொளி தருங்கண். 2. நீங்கக்; நீங்கிக்: தழுவிக்கொண்டார்.
3. விண்ணிறை; விண்ணுறு; விண்ணுறை: மேகமெல்ல; மேகமென்னவும்.
4. மண்ணிறை; மண்ணுறை: வேந்தர் செல்வம். (40)

781. வயிரியர் மதுர கீதம் மங்கைய ரமுத கீதம்
செயிரியர் மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம்
பயிர்கிளை வேயின் கீத மென்றிவை பருகி விண்ணோர்
உயிருடை யுடம்பு மெல்லா மோவிய மொப்ப நின்றார்.

வயிரியர் - இசை பாடுவோருடைய, மதுரம் கீதம்-இனிய இசைகளும், மங்கையர்-பாடல் மங்கையரின், அமுதம் கீதம்-அமுதம் போன்ற இசைகளும், செயிரியர்-பாணர்களின், மகரயாழ்-மகரவீணை கள் எழுப்புகிற, இன் தேம் பிழி தெய்வம் கீதம்-இனிய தேன் பிழிந் தாற்போன்ற தெய்வத்தன்மை வாய்ந்த இசைகளும், பயிர் கிளை வேய் இன் கீதம்-இசையொலி கிளைக்கின்ற புல்லாங்குழலின் இனிய இசைகளும், என்ற இவை-என்று சொல்லப்பட்ட இவற்றை, விண் ணோர் பருகி-தேவர்கள் (மேலிருந்தே) செவியாரக் கேட்டு, உயிர் உடை(ய) உடம்பும்-(தங்கள்) உயிருள்ள உடம்புகளும், எல் ஆம் ஓவியம் ஒப்பநின்றார்-ஒளிபொருந்திய சித்திரங்களைப்போலாக (அசை வற்று) நின்றார்கள்.

மிதிலை நகரத்தில் எழுந்த இனிய பலவகைக் கீதங்கள், தேவ ரும் கேட்டு வியக்கும் வண்ணம் மிக்க சிறப்புவாய்ந்திருந்தன என்ற வாறு. கிளைத்தல்-பலவகைப்படுதல். இசைக் கருவிகளுள்ளே யாழ் முதன்மையுடையதாகலின் 'தெய்வ கீதம்' என்றார்.

செயிரியர்: 'நல்யாழ்ச் செயிரியர்....அளந்த பாடல்' (சுந்தர. 287); மகரயாழின் தேம்பிழி தெய்வகீதம்: 'தேம்பிழி மகரயாழின்' 36).

(பி - ம்.) 1. வயிரயாழ்; வயிரியாழ்: மிதுனகீதம்; அமுதகீதம்: மங்கையர் மதுர கீதம்; மங்கையர் பாடல் முற்றச்; மங்கையர் பாடல் முந்தச்.
2. செயிரியல்; செயிரறு: நேம்பிழி தேவகீதம்.
3. பயில்கிளை; பயிரியர்: எயினர்கீதம்: பருகியுண்ணு.
4. உயிரிடை: ஓவியமென்ன; ஓவியம்போல. (41)

782. ஐயன்வில் லிறுத்த வாற்றல் காணிய வமரர் நாட்டுத்
தையலா ரிழிந்து பாரின் மகளிரைத் தழுவிக்கொண்டார்
செய்கையின் வடிவி னாடல் பாடலிற் றெளித றேற்றார்
மையரி மலர்க்க ணோக்கி யிமைத்தலு மயங்கி நின்றார்.

அமரர் நாடு தையலார்-தேவலோகத்து அரம்பை மாதர்கள், ஐயன்-இராமபிரான், வில் இறுத்த ஆற்றல்-சிவதனுசை (வளைத்து) முறித்த அரிய திறமையை, காணிய-(நேரில்) காணும் பொருட்டு, இழிந்து-(மிதிலை நகருக்கு) இறங்கி வந்து, பாரில் மகளிரை-(அங் குள்ள) மானிடப் பெண்களை, செய்கையின்-செயல்களாலும், வடி வின்-வடிவழகாலும், ஆடல் பாடலின்-ஆடல் பாடல்களாலும், (தம்மை ஒயாத்திருத்தலின்), தெளிதல் தேற்றார்-(மானிட மங்

கையரென்று) தெளிய அறியாதவர்களாய், தழுவிக்கொண்டார்-(அவர்களும் தம்மினத்தவரென்று கருதி அவர்களைத்)தழுவிக் கொண்டார்கள்; (பின்பு), மை அரி மலர் கண் நோக்கி-(அவர்களுடைய) மை தீட்டப்பெற்றுச் செவ்வரி பரந்த பூப்போலுங் கண்களினழகைப் பார்த்து, இமைத்தலும்-அவை இமை கொட்டியபோது, மயங்கி நின்றார்-பிரமித்து நின்றார்கள்.

மிதிலை நகருக்கு இறங்கிவந்த தேவமாதர்கள், அங்கிருந்த மானிட மகளிர் பலவகையிலும் தம்மைப்போன்றிருந்ததனால், அவர்களும் தம்மைப்போல வந்தவர்களென்று கருதி மகிழ்ந்து, முதலில் அவர்களைத் தழுவிக்கொண்டு, பின்பு அவர்கள் கண்ணிமைத்தலை நோக்கி,இஃதென்ன புதுமை! என்று பிரமித்து நின்றார்கள் என்றபடி. இது மயக்கவணியை அங்கமாகக்கொண்ட வீறுகோளணி.

(பி - ம்.) 1. வில்லெடுத்த: தன்மை காணிய: அமரர் நாட்டில்.
2. தழுவிநின்றார்.
3. செய்கையில்: வடிவினடிப்; வடிவிலாடற்; ஆடல்பாடல் வடிவினில்: தெரிதல்தேற்றா.
4. நெடுங்கணேக்கம்; மழைக்கணேவாது: இமைத்தலின்; இமைப்பிலர்: மயக்கந் தீர்ந்தார். (42)

மக்கள் இராமபிரான் பெருமைகளைத் தமக்குட் கூறல்

788. தயரதன் புதல்வ னென்பார் தாமரைக் கண்ண னென்பார்
புயலவன் மேனி யென்பார் பூவையும் பொருவு மென்பார்
மயலுடைத் துலக மென்பார் மானுட னல்ல னென்பார்
கயல்பொரு கடலுள் வைகுங் கடவுளே காணு மென்பார்.

(சிலர்), 'தயரதன் புதல்வன்!' என்பார்—; (சிலர்) 'தாமரை கண்ணன் என்பார்-செந்தாமரைக் கண்ணனான திருமால் போலுள்ளான்' என்பார்; (சிலர்), 'அவன் மேனி புயல் என்பார்—அக்குமரனுடைய திருமேனி மேகமே' என்று கூறுவர்; (சிலர்), 'பூவையும் பொருவும் என்பார்-(அவன்திருமேனிக்குக்)காயாம் பூவும் பொருந்துவதாகும்' என்று கூறுவர்; (சிலர்), 'மானுடன் அல்லன் என்பார்—(அவன்) மனிதனல்லன்' என்பார்கள்; (பின்னை யாவன் எனின்), 'கயல் பொரு கடலுள் வைகும் கடவுளே-கயல் மீன்கள் (ஒன்றோடொன்று) பொருதற்கு இடமான பாற்கடலிலே பள்ளிகொள்ளும் நாராயணனே' என்பார்—, 'உலகம் மயல் உடைத்து என்பார்—(இவனை மானுடன் என்று கூறும்) இவ்வுலகம் அறியாமையுடையது' என்பார்கள். காணும்: முன்னிலையசை.

'தசரத சக்கரவர்த்தியின் புதல்வன் என்றதனாலேயே இவன் ஏற்றம் மிகவுடையவன்' என்று சிலர் கூற, மற்றுஞ்சிலர், அது மட்டுமன்று; இவன் வடிவழகைப் பாருங்கள்; இவன் சாதாரண மானு

டன் என்று கூறுவது பொருந்தாது; செந்தாமரைக் கண்ணனும், திருப்பாற் கடலிலே பள்ளிகொள்பவனுமான திருமாலே இவன் என்ன, இவனை மானுடன் என்போர் அறியாதவரே எனக் கூறி முடித் தனர் சிலர். இவ்வாறு மக்களியல்பைப் படம்பிடித்துக் காட்டி யுள்ள நயம் ஓர்ந்து இன்புறுதற்குரியது. இத்தன்மையை அடுத்த கவியிலுங் காணலாம்.

(பி - ம்.) 1. புதல்வரென்பர். 2. புயலிவன்; புயல்வண: போலுமென்பார் 3. பயனுடைத்துலகம்: மானிடன்; பாரினன்; பாரினில் நல்லன்: அல்ல வென்பார். 4. கடவுளே போலும். (43)

784. நம்பியைக் காண நங்கைக் காயிர நயனம் வேண்டும்
கொம்பினைக் காணுந் தோறுங் குரிசிற்கு மன்ன தேயால்
தம்பியைக் காண்மி னென்பார் தவமுடைத்துலக மென்பார்
இம்பரிந் நகரிற் றந்த முனிவனை யிறைஞ்சு மென்பார்.

'நம்பியை காண-புருஷோத்தமனான இவனை (முழுதும்) காண் பதற்கு, நங்கைக்கு-நம் சீதைக்கு, ஆயிரம் நயனம் வேண்டும்-ஆயிரங் கண்கள் வேண்டும்; (என்பார் சிலர்); (அது மட்டுந்தானே!), 'கொம்பினை - பூங்கொம்பு போலும் நம் சானகியை, காணும் தோறும்-பார்க்கும் ஒவ்வொரு சமயத்திலும், குரிசிற்கும்-அவ்வண்ண லுக்கும், அன்னதே-அத்தன்மையே';(ஆயிரங்கண்கள் வேண்டுவதே); (என்பார் சிலர்); (இது கிடக்கட்டும்), 'தம்பியை காண்மின்-இவன் தம்பியான அக்குமரனையும் நோக்குங்கள்; (அவனும் இவனுக்குக் குறைந்தவனாகமாட்டான்); என்பார்—; 'உலகம் தவம் உடைத்து- (இவர்களைப் பெறுதற்கு) இவ்வுலகம் நல்ல தவம் செய்துள்ளது' என்பார்—; (இவ்வளவுக்கும் மேலாக), இம்பர்-இவ்வுலகத்திலே, இ நகரில் தந்த-இந்த நகரத்திலே இவர்களை அழைத்துவந்த, முனி வனை - விசுவாமித்திர முனிவனை, இறைஞ்சும் - வணங்குங்கள்; என்பார்—.

தமதரசன் மகள் திருமணத்தில் மிக்க ஆர்வமுடைய நகர மக்கள், கண்டார் மனங்கவருங் கட்டழகும், பெருங் குணங்களும் பேராற்றலும் படைத்த இராமபிரானிடத்தும் தம் மனத்தைப் பறி கொடுத்தவர்களாகி, இவ்விருவரும் திருமணங்கொண்டு இணைதற்கு எவ்வகையிலுந் தகுதியுடையவர்கள் எனக் கருதி, மகிழ்ந்து, அதனைப் பலபடியாக வெளிப்படுத்தினர் என்க. பிராட்டியின் வடிவழகு, காணுந்தோறும் புதியதாகலின் 'கொம்பினைக் காணுந்தோறும் குரி சிற்கும் அன்னதே' என்பாராயினர்.

(பி - ம்.) 1. காணு நங்கைக்கு: நயனம் வேணும்.
2. குருசிற்கும்; அன்னதேயாம்.
3. தம்பியைக் காணீர்; தம்பியைக் காணும்; தம்பியைப்பாரீர்.
4. இம்பரிற்றுதவத்; இம்பரினிவனைத்; இம்பரிவிவரைத்; இறைஞ்சி ரென்பார். (44)

## பிராட்டியின் செய்தி

785. இற்றிவ ணின்ன தாக மதியொடு மெல்லி நீங்கப்
பெற்றுயிர் பின்னுங் காணு மாசையிற் சிறிது பெற்ற
சிற்றிடைப் பெரிய கொங்கைச் சேயரிக் கரிய வாட்கட்
பொற்றொடி மடந்தைக் கப்பா லுற்றது புகல லுற்றாம்.

இவண்-இவ்விடத்தில், இற்று இன்னது ஆக-இச்செய்தி இவ்வாறிருக்க, எல்லி-இராப்பொழுதானது, மதியொடும்-சந்திரனேடுங்கூட, நீங்கப்பெற்று-கழியப்பெற்றவளாய், பின்னும் காணும் ஆசையின்-(இராமபிரானை) மற்றொருமுறை காணவேண்டுமென்னும் ஆசையால், உயிர் சிறிது பெற்ற-உயிரைச் சிறிது வைத்துக்கொண்டுள்ள, சிறு இடை-சிறிய இடையையும், பெரியகொங்கை-பருத்த தனங்களையும், சேய் அரி கரிய வாள் கண்-செவ்வரி படர்ந்து கருநிறமுடையனவாகி, வாள் போலுங் கண்களையும், பொன் தொடி-பொன்னாலாகிய வளையல்களையுமுடைய, மடந்தைக்கு-பிராட்டிக்கு, அப்பால் உற்றது-(முன்னேவிட்ட இடத்திற்கு) மேலே நிகழ்ந்த செய்தியை, புகலல் உற்றாம்-சொல்லத் தொடங்கினோம்.

பிராட்டி, இராமபிரானிடத்து உற்ற காதலாலே கடுந்துயருழந்து, உயிரிழக்கும் நிலையெய்தினளென நிறுத்தி, மேலே இதுகாறும் இராமபிரானுடைய செய்திகளைச் சொல்லிவந்த ஆசிரியர், இனிப் பிராட்டியின் செய்தியையும் கூறுவோம் என்று அதனைக் கூறத் தொடங்குகின்றார். 'என் கன்னி மாமதில், எறிந்தவக் குமரனை யின்னுங் கண்ணிற்கண், டறிந் துயிரிழக்கவு மாகுமே கொல்' (614) என முன்னே கூறியவாறு, பிராட்டி, இராமபிரானைத் தன் நாயகனாகப் பெறவியலாவிடினும், மீண்டும் ஒருமுறை அப்பிரானைக் கண்ணாரக்கண்டு அனுபவித்தாயினும் உயிரை விடுவேன் என்று கருதியிருந்தாளாதலின், அதன் பொருட்டே தன்னுயிரைத் தாங்கி நின்றாளென்றார். காமநோயுற்றார்க்கு இரவும் மதியும் இன்னல் பெரிதிழைப்பனவாதலால், அவை நீங்கப்பெற்றதனால் சிறிது ஆறுதல் பெற்றாள் பிராட்டி; அதனால் அவளுயிரும் போகாது சிறிது நிற்பதாயிற்று. இனிப் பிராட்டியின் செய்தியை மேலே பத்துக் கவிகளால் கூறுகின்றார்.

மூன்றாமடியில் தொடைமுரண் இரண்டிடத்து வந்துளது.

இராமபிரானைக் காணும் ஆசையால் பிராட்டி உயிர் தரித்தமை: ஒப்பு: 'பொறையிருந் தாற்றி யென் னுயிரும் போற்றினேன், அறையிருங் கழலவற் காணு மாசையால்' (சுந்தர. 499).

(பி-ம்.) 1. இற்றவண்; இற்றவர்; இற்றிவர்; இன்னதாக; இன்னராக; எல்லொடு மதிய நீங்கிப்; எல்லியு மதியு நீங்கப்.
2. இன்னுங் காண வாசையால்: சிறிதும் பெற்ற; சிறிதும் போற்றச்; சிறிது பெற்றச்.

3. சேயரிநெடிய; சேயரிசிதறும்; சேயரிப் பெரிய; நெடியவாட் சேயரிக் கட். 4. மயிலுக்கப்பால்: உற்றன: புகலலுற்றேன். (45)

786. ஊசலா டுயிரி னோடு முருகுபூம் பள்ளி நீங்கிப்
பாசிழை மகளிர் சூழப் போயொரு பளிக்கு மாடத்
தேசிரு மரையின் பொய்கைச் சந்திர காந்த மீன்ற
தேசுநீ ரளிக்கு மென்பூஞ் சேக்கையை யரிதிற் சேர்ந்தாள்.

(பிராட்டி), ஊசல் ஆடு உயிரினோடும்-(போவதும் வருவது மாக) ஊசலாடிக்கொண்டிருந்த உயிரோடும், உருகு பூ பள்ளி நீங்கி-(தன்னுடம்பு) உருகுவதற்குக் காரணமான மலர்ப் படுக்கையை விட்டு, பசுமை இழை மகளிர் சூழ போய்-பசும்பொன்னாபரணங்களை யணிந்த தாதியர் (தன்னைச்) சூழ்ந்துவர (அவ்விடத்தினின்றும்) போய், ஒரு பளிங்கு மாடத்து-பளிங்கா லியன்றதொரு மாளிகை யிலே, (அமைக்கப்பட்ட), ஏசு இல் தாமரை இன் பொய்கை-இகழ்த லில்லாத தாமரை படர்ந்த இனிய தடாகத்தை யடுத்து, சந்திர காந்தம் ஈன்ற-சந்திர காந்தக் கற்கள் வெளிவிட்ட, தேசு நீர் அளிக்கும் - ஒளியமைந்த (தூய) நீர் சுற்றிலும் சூழ்தற்கிடமான, மென் பூ சேக்கையை-மெல்லிய மலரமளியை, அரிதின் சேர்ந்தாள்-மிகவும் சிரமத்துடன் அடைந்தாள்.

முன்னே மிதிலைக்காட்சிப் படலத்துள், பிராட்டி, கன்னிமாடத் தின் மேனிலையிலிருந்து கார்வண்ணனைக் கண்டு, கட்புலனுக்கு அவன் மறைந்ததும் அவன் நினைவால் உற்ற நிலையை ஆசிரியர் விரித்துக் கூறிய விடத்து, 'மலர்ப்படுக்கை பிராட்டியின் மேனி படக் கருகியது; அதுவே மீண்டும் அவளுடம்பைக் காய்வதாயிற்று' எனக் கூறியுள் ளமையின், இங்கே 'உருகு பூம்பள்ளி' என்றார். அப்பள்ளியிடத்தே கிடந்தபோது தாதியர் முதலியோர் செய்த சைத்தியோபசாரங்கள் பயன் படாமையின், அங்கு நின்றும், மிக்க குளிர்ச்சி தரும் வேறோ ரிடத்துக்குப் பிராட்டியை அவர்கள் அழைத்தேகினர் என்க. அவ் வாறு சென்று சேர்ந்தவிடம், ஒரு பளிங்கு மாளிகையிலே, செயற்கை யாக அமைத்த தடாகத்தை யடுத்து, கீழே சந்திரகாந்தக் கல் தந்த குளிர்ந்த நீர் பரவும் வகையில் அமைக்கப்பெற்ற விடமாகும். அவ் விடத்திலே கிடத்திய கட்டிலின்மேல் விரித்த மலர்ப்படுக்கை யென்க. உயிர் போகாமலும் உடம்பில் நிற்க முடியாமலும் தவிக்கும் நிலையை 'ஊசலாடுதல்' என்றார்; 'ஆருயிர் நின்றூசலாட...உழந்தான் கடுந் துயரம்' (326) என்றவிடத்தும் காண்க.

(பி - ம்.) 2. பாசிழை மகளிரோடும்; பாசிழையவர்கள் சூழப்; போயிடைப் பளிக்கு மாடக். 3. காசில்; ஆசில்.
4. சீதநீர்; தேசநீர்: தெளித்த; பிலிற்றும்: சேக்கையை யருகிற்; சேக் கையதருகு; சேக்கையினரிதிற்; சேக்கை சேர்ந்தகத்துள்: சேர்ந்தார்; தேர்வார், (46)

## பிராட்டி இரங்கல்

787. பெண்ணிவ ளுற்ற வாறு பேணியே கருமை யான
வண்ணமு மிலைகளாலே காட்டலால் வாட்டந் தீர்ந்தேன்
தண்ணறுங் கமலங்காளென் றளிர்நிற முண்ட கண்ணின்
ஒண்ணிறங் காட்டி னீரென் னுயிர்தர வுலோவி னீரே.

தண் நறு கமலங்காள்-குளிர்ந்த நல்ல மணமுள்ள தாமரைக் கொடிகளே! பெண் இவள் உற்றவாறு பேணி-பேதைப் பெண்ணாகிய நான் இவ்விடத்து (இப்போது) அடைந்துள்ள நிலையை மனத்துட் கொண்டு (இரங்கி), கருமையான வண்ணம்-(அப்பிரானது) கருமை யான (திருமேனி) நிறத்தை, உம் இலைகளாலே காட்டலால்-உங்களு டைய இலைகள் மூலம் எனக்குக் காட்டுவதனால், வாட்டம் தீர்ந்தேன்-நான் மனவாட்டம் (சிறிது) தீரப்பெற்றேன்; என் தளிர் நிறம் உண்ட-மாந்தளிர் போன்ற என் மேனி நிறத்தைக் கவர்ந்து சென்ற, கண்ணின் ஒள் நிறம் காட்டினீர்-(அப்பிரானுடைய) கண்களின் அழகிய நிறத்தையும் (நும் மலர்களால்) எனக்குக் காட்டுகிறீர்கள்; (அதனாலும் சிறிது ஆறுதலடைவேன்); (இவ்வளவு உதவிய நீங்கள்), என் உயிர் தர-என் உயிருக்குயிரான அப்பெருமானை இங்கே தருவ தற்கு, உலோவினீரே-உலோபஞ் செய்கின்றீர்களே!

தடாகத்திலே தாமரை யிலைகளையும் பூக்களையுங் கண்ட பிராட்டி, இராமபிரானது திருமேனி நிறத்தையும் கண்ணின் நிறத் தையும் முறையே அவை காட்டுதலால், அவற்றை நோக்கித் தன் மனச் சோர்வு சிறிது தணிவதாகக் கூறினாள். ஆயினும், அப்பிரானே தன் உயிராதலால், அவனைத் தருவதன் மூலம் தன்னுயிர் போகாத படி காத்தலாகிய முழு உதவியையுஞ் செய்தலாகாதோ? என்று தன் ஆராமையாலே கேட்கின்றாள். உயிர் என்பது ஆகுபெயராக இராம பிரானைக் குறிப்பதோடு, பிராட்டியின் உயிரையுங் குறிப்பதாகும். உலோவுதல்-உலோபகுணம் படைத்தல்; இங்கே, ஒருபொருளின் சில பகுதியைத் தந்து ஆசைகாட்டி, முழுப்பொருளையுந் தராது விடுதல். துயருற்றோர் அஃறிணைப் பொருள்களையும் முன்னிலைப்படுத்தித் தம் நிலை கூறுதல் இயல்பு.

பிரான் திருமேனிக்குத் தாமரையிலை ஒப்பாதல்: 'அக்கமலத் திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே' (திருவாய். 9. 7: 3); 'கண் கை கால், தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதாச், சாயல் சாமத் திருமேனி தண்பா சடையாத் தாமரை நீள், வாசத் தடம்போல் வருவானே!' (திருவாய். 8. 5: 1); தக்க. 278-உரை, பரி. 13. 50-51, பரிமேல் பார்க்க. உலோவுதல்: அயோத். 194; பெரியாழ். 2. 7: 6. மு. ஒப்பு: கிட்கிந்தா. 25.

(பி - ம்.) 1. பெண்ணவள்; பெண்ணிவள்: உற்றதென்னும் பெருமையால்: அருமை யான; கருமையான்ற.

2. காட்டலின்; காட்டவும்: வாட்டந் தீர்த்த; தீர்ந்த; தீரத்.
3. தண்ணுறும்; கண்ணுறும்: கமலங்காணீர்; கமலங்காளின்; தளநிறம்; தனிநிறம்: கொண்ட: கண்ணில்; கண்ணன்; வண்ணன்.
4. உன்னிறம்: காட்டி நீரென்; காட்டினீரே; உலோவிவீரோ; உலோபினீரே; உலோபிவீரோ. (47)

(வேறு)

788. நாணுலாவு மேருவோடு நாணுலாவு பாணியும்
தூணுலாவு தோளும்வாளி யூடுலாவு தூணியும்
வாணிலாவி னூலுலாவு மாலைமார்பு மீளவும்
காணலாகு மாகிஞவி காணலாகு மேகொலாம்.

நாண் உலாவும் மேருவோடு-(அப்பெருமானுடைய தோளழகுக்கு) நாணுகின்ற மேருவைப் போன்ற வில்லினிடத்தும், நாண்-அதன் நாணினிடத்தும், உலாவு-பயில்கின்ற, பாணியும்-திருக்கைகளையும், தூண் உலாவு தோளும்-(இரும்புத்) தூண் போன்ற தோள்களையும், வாளி ஊடு உலாவு தூணியும்-அம்புகள் உள்ளே நிரம்பிய தூணீரத்தையும், வாள் நிலாவின் நூல் உலாவும்-வெண்ணிலவு போன்ற முப்புரிநூல் அசைகின்ற. மாலை மார்பும்-வெற்றி மாலையணிந்த திருமார்பையும், மீளவும் காணல் ஆகும் ஆகின்-மீண்டும் (நான் ஒரு முறை) காணுதல் கூடுமாயின், ஆவி-(அவைகளே) எனதுயிர்; காணல் ஆகுமே-அவ்வுயிரைக் காணுதல் கூடுமோ? கொல், ஆம்-அசை நிலைகள்.

இராமபிரானுடைய தோற்றப் பொலிவை வருணித்து, 'அத்தகைய பரமபுருஷனே எனதுயிர்; அவனை மீண்டுங் கண்டாலன்றி என்னுயிர் தரியாது' என்கின்ருள் பிராட்டி. மீளவுங் காணலாகுமாகின் ஆவி காணலாகுமே-மீண்டும் அத்தோற்றத்தைக் காணக்கூடுமாஞல் என் உயிரும் காணத்தக்கதே என்றுரைத்தலும் ஆம். 'உலாவு' என்பது உவமவுருபாகவும் வேறு பொருள்களிலும் வந்துள்ளது. பாணி, சாதியொருமை. இடக்கை வில் தண்டினிடத்தும், வலக்கை அதன் நாணினிடத்தும் பயிலுதலுண்மை காண்க.

அண்ணலும் அவளும் ஒருவரையொருவர் நோக்கி, இதயம் மாறிப் புக்கெய்தியபின், அண்ணல் முனிவனைத் தொடர்ந்து நடந்து சென்றபோது, பிராட்டி அவன் பின்னழகையும் நடையழகையும் கண்டு அனுபவித்தவளாதலின், இங்கே தூணியையுங் குறித்தாள். பின்னழகை வியத்தல்: திருச்சிற். 219, அதனுரை-பார்க்க. நூலுலாவு மாலை மார்பு: 'மார்பி னூலினன், அரசிளங் குமரனே யாதல் வேண்டுமால்' (610); 'விண்ணுளே யிழிந்த மேகம் மார்பினூலின் மின்னெடும், மண்ணுளே யிழிந்ததென்ன வந்து போன மைந்தனுர்' (794).

(பி - ம்) 1. நாணுலாவும் பாணியும்.
2. தூணிலாவு: வாளியோடுலாவு தூளியும்,
3. வாணிலாவு நூனிலாவும்; நாணுலாவும்; ஊடுலாவும்.
4. ஆகிலாவி: காணலாகுமேகொலோ; காணலாகுமேயரோ; காணவாகு மாகுமே; காணலாவதேகொலோ. (48)

789. விண்டலங்க லந்திலங்கு
திங்களோடு மீதுசூழ்
வண்டலம்ப லங்கறங்கு
பங்கியோடும் வார்சிலைக்
கொண்டலன்றி ரண்டுகண்ணின்
மொண்டுகொண்டெ னுவியை
உண்டதுண்டெ னெஞ்சினின்று
முண்டதென்று முண்டரோ.

'விண் தலம் கலந்து இலங்கு திங்களோடு - ஆகாயத்திலே சேர்ந்து விளங்குகின்ற சந்திரனேடும், மீது சூழ்-மேலே சூழ்ந்த, வண்டு அலம்பு-தேன் வண்டுகள் ஒலித்தற்கிடமான, அலங்கல் தங்கு பங்கி யோடும்-மாலை தங்கி அழகு செய்கின்ற மயிர்முடியோடும், வார்சிலை-நீண்ட வில்லையுந் தாங்கிய, கொண்டல்-மேகம் போன்ற அப்பெரு மான், அன்று-(நாங்கள் ஒருவரையொருவர் நோக்கிய) அந்நாளில், இரண்டு கண்ணின்-தன் இரண்டு கண்களாலும், என் ஆவியை மொண்டுகொண்டு உண்டது உண்டு-என்னுயிரை அள்ளிக்கொண்டு பருகியது உண்மையாகும்; அது-அவ்வாறு பருகிய அச்செய்தி, என் நெஞ்சின்-என் மனத்தில் (அகலாமல்), இன்றும் உண்டு-இப்போதும் உளதாகின்றது; என்றும் உண்டு-(இனியும்) எக்காலத்தும் உள தாகும். அரோ, அசை.

திங்கள் இராமபிரானது திருமுகத்தைக் குறிப்பது; 'விண்ட லங்கலந்திலங்கு' என்றது திங்களுக்குரிய இயற்கை அடைமொழி. கொண்டல், உவமவாகுபெயர்; கொண்டல் என்னுவியை உண்ட துண்டு என்க. மேகம் பருகியது என்றதற்கேற்ப ஆவியை நீராகக் கொள்க. கொண்டல், இராமபிரானது திருமேனி; திங்கள், கொண்ட லினூடே தோன்றுவது; பங்கி, கொண்டலின் சாயை; சிலை, வானவில் எனப் பொருத்திக் காண்க.

முன்னே பிராட்டி இராமபிரானைக் 'கண்வழி நுழையுமோர் கள்வன்' என்றும், 'அவன் முறுவல் என்னுயிரை யுண்டது' என்றும் கூறினுள்; 611, 612 பார்க்க.

(பி - ம்.) 1. கிடந்திலங்கு: திங்களோடும் வேரிசூழ்; வீதிசூழ்.
2. வண்டலங்கு: பங்கியோடு. 3. கொண்டலொன்று.
4. நெஞ்சி லென்றும்; நெஞ்சிலின்றும்; உண்டதொன்றும்; உண்ட துண்டது. (49)

790. பஞ்சரங்கு தீயினுவி பற்றநீடு கொற்றவில்
வெஞ்சரங்க ணெஞ்சரங்க வெய்யகாம னெய்யவே
சஞ்சலங்க லந்தபோது தையலாரை யுய்யவந்
தஞ்சலஞ்ச லென்கிலாத வாண்மையென்ன வாண்மையே.

வெய்ய காமன்-கொடிய மன்மதன், நீடு கொற்றம் வில்-பெரிய வெற்றி பொருந்திய (தன்) வில்லினிடமாக, பஞ்சு அரங்கு தியின்-பஞ்சை எரித்தழிக்கும் நெருப்பைப்போல, ஆவிபற்ற-உயிரை (வந்து) பற்றிக்கொள்ளவும், (அதனால்), நெஞ்சு அரங்க-மனம் புண்பட்டழியவும், வெம் சரங்கள்-கொடிய அம்புகளை, எய்யவே-எய்தலால், சஞ்சலம் கலந்தபோது-மனக்கலக்க முண்டாயிருக்கும்போது, தையலாரை-அத்தகைய பெண்களை, உய்ய வந்து-அவர்களுயிர் பிழைக்கும்படி (எதிரே) வந்து, அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை-அஞ்சாதீர், அஞ்சாதீர் என்று கூறித் தேற்றமாட்டாத ஆண் தன்மை, என்ன ஆண்மை?—ஏ, அசை.

காமனம்பு தீப்போல வந்து, மேலுள்ள உடம்பைப் பற்ருது உள்ளேயுள்ள உயிரைப் பற்றுகின்றது; அதனுல் உயிர் அழியும் நிலை உண்டாகின்றது; அந்நிலையிலுள்ள மகளிரைத் தலையளி செய்து காப்பது நல்ல ஆண்மகனுக்குரிய கடமையாகும்; அதனைச் செய்யாதிருப்பதுஆண்மையாகுமோ! என்கின்ருள். அரங்குதல்-அழிதல்: 714.

(பி - ம்.) 1. பற்றியோடு; பற்றிநின்று; பற்றிநீடு. கொற்றம்வாய்; கொற்றவார்; கொற்றமார்; சுற்றவே.
2. நெஞ்சனுங்க; நெஞ்சனுங்கில்; நெஞ்சிரங்க: எய்யவும்; எய்யவோர். (50)
4. என்கலாத: ஆண்மையோ.

791. இளைக்கலாத கொங்கைகாளெ ழுந்துவிம்மி யென்செய்தீர்
முளைக்கலாம திக்கொழுந்து போலும்வாண்மு கத்தினன்
வளைக்கலாத விற்கையாளி வள்ளன்மார்பி னுள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான செய்தவங்கள் செய்ம்மினே.

இளைக்க அல்லாத கொங்கைகாள்-(இளைக்கவேண்டிய இக்காலத்தும்) இளையாதிருக்கின்ற தனங்களே! விம்மி எழுந்து என் செய்தீர்-(நீவிர்) பருத்து நிமிர்ந்து நின்று என்ன (பயனுள்ள செயலைச்) செய்துள்ளீர்? முளைக்க அல்லா மதி கொழுந்து போலும்-ஆகாயத்தில் உதிக்காத பாலசந்திரன் போன்ற, வாள் முகத்தினன்-ஒளிபொருந்திய முகமுடையவனும், வளைக்க அல்லாத வில் கை ஆளி-(பிறர்) வளைத்தற்கரிய (வலிய) வில்லைக் கையிலேந்தியவனும், வள்ளல் - கொடைக்குணம் நிரம்பியவனுமான அப்பெருமானது, மார்பின் உள் உற-மார்பினுள்ளே பதியும்படி, திளைக்கல் ஆகும் ஆகில்-இடைவிடாது துய்த்தல் (நுமக்குக்) கைகூடுமாயின், ஆன-

அதற்குரிய, செய் தவங்கள்-செய்யத்தக்க (நல்ல) தவங்களை, செய்ம் மின்-இப்போது செய்யுங்கள். ஏ, ஈற்றசை.

தன்னுள்ளமும் உயிரும் கவர்ந்த கள்வனுன அப்பெருமானை அடைந்து, அவன் மார்பிலே உழுது திளைக்கப்பெருது வருந்தும் நிலையில், பருத்த தனங்களாலே பயனில்லை யாதலால், 'விம்மி என் செய்தீர்? அவனை யடைதற்குரிய கடுந்தவஞ் செய்து பயனடைய முயலுங்கள்' என்று அவற்றை நோக்கிக் கூறினுள். தவஞ் செய்வோர் உடல் தடித்திருத்தல் அரிதாகலின், 'தனங்கள் தவஞ்செய்யாது வீணே தடித்திருக்கின்றன' என்ருள்.

தவத்தைப் பெரும்பாலும் 'செய்தவம்' என்றல் மரபு; 'வேண் டிய வேண்டியாங் கெய்தலாற் **செய்தவம்**, ஈண்டு முயலப்படும்' (குறள். 265); வளைக்கலாதவில்: 'நாணுலாவுமேரு' (788) என்ருர் முன்னும்.

(பி - ம்.) 1. இளைக்கிலாத; இளைக்கலான: என்செய்வீர்; என்திறம்.
2. முகத்திஞர்; முகத்திஞள்.
3. வளைக்கலான; வளைக்கையான; விற்கைவாளி: மார்பினுள்ளினில்; மார்பினூடறத்; மார்பை யுள்ளுறத்.
4. திளைக்கலாகுமாகி னல்ல; திளைக்கலாகி லாகுமான: செய்மினே; செய் மினோ; செய்ம்மினோ. (51

792. எங்குநின்றெ ழுந்ததிந்த
விந்துவந்தெ னெஞ்சுலாய்
அங்கியன்ற னங்கனெய்த
வம்பின்வந்த சிந்தைநோய்
பொங்குகின்ற கொங்கைமேல்வி
டம்பொழிந்த தென்னினும்
கங்குல்வந்த திங்களன்ற
கங்களங்க மில்லையே.

'அனங்கன்-மன்மதன், என் நெஞ்சு உலாய்-என் மனத்தை வியாபித்துக்கொண்டு, அங்கு இயன்று-அங்கே தங்கி, எய்த— அம்பின் வந்த சிந்தை நோய்-அம்பினுலாகிய (என்) மன நோயானது, பொங்குகின்ற கொங்கை மேல்-பொங்கி வெளிப்படுதற்கிடமான தனங்களின் மீது, இந்த இந்து வந்து விடம் பொழிந்தது-இதோ என் முன் தோன்றுகிற சந்திரன் (என்னையணுகி) வந்து விடத்தைச் சொரி கின்றது; என்னினும்-அவ்வாருயினும், (இது), கங்குல் வந்த திங்கள் அன்று-நேற்றிரவில் வந்து என்னை வருத்திய சந்திரன் அன்று; (ஏனெ னில்), அகம் களங்கம் இல்லை - இதனுள்ளே களங்கம் இல்லை; எங்கு நின்று எழுந்தது-(இத்தகைய இது) எங்கிருந்து தோன்றிற்று! (இதன் தோற்றம் வியப்பே).

இராமபிரானது திருமுகத்தை உருவெளித் தோற்றமாகக் கண்ட பிராட்டி, இவ்வாறு கூறலாயினள்: 'வழக்கமாக இரவிலே தோன்றும் சந்திரன் என்னை வருத்துவது இயல்பே; ஆனால், இதோ பகலிலே என் முன் தோன்றுகிற இச்சந்திரன், அநங்கன் அம்பால் நோவுறும் என் தனங்களின்மேல் விடத்தைப் பொழிகின்றது; இத னிடத்தே களங்கம் இல்லை; இது விசித்திரமே யாகும்' என்கின்றாள். இங்கே, பிராட்டி, சூரியனைச் சந்திரனாகக் கொண்டு கூறினளென வுரைப்பாரு முளர்.

(பி - ம்.) 1. எங்கும் வந்தெழுந்ததிந்த: இந்துவந்து: நெஞ்சுலா; நெஞ்சுலாம்; நெஞ்சிலாம்.
2. அங்கியென்று: அம்பின்வந்து: அம்பின்வெந்த; அம்பினேந்த; அம்பு வந்து: சிந்தைதோய். 3. பொதிந்த தென்னிலும்.
4. திங்களின்க ணங்களங்கம்; திங்களி லகங்களங்கம் (52)

793. அடர்ந்துவந்த னங்கனெஞ்ச மூன்றுசிந்து மம்பெனும்
விடங்குடைந்த மெய்யுணின்று வெந்திடாதெ ழுந்துவெம்
கடந்துதைந்த காரியானை யன்னகாளை காலடைந்
துடன்றொடர்ந்து போனவாவி வந்தவாவெ னுள்ளமே.

'என் உள்ளமே-என் நெஞ்சே! அனங்கன் அடர்ந்து வந்து-மன்மதன் (என்னிடம்) நெருங்கி வந்து, நெஞ்சு அழன்று சிந்தும்-மனங் கொதித்துச் சொரிகின்ற, அம்பு எனும் விடம் குடைந்த-அம்புகளாகிற விடத்தால் தொளைக்கப்பட்ட, மெய் உள் நின்று வெந்திடாது-(என்) உடம்பினுள்ளே தங்கியிருந்து (தானும்) வேவாமல், எழுந்து-(அங்கு நின்றும்) வெளிப்பட்டு, வெம் கடம் துதைந்த-வெப்பமுள்ள மதநீர் மிக்க, கார் யானை அன்ன காளை-கரிய யானைபோன்ற அக்குமரனுடைய, கால் அடைந்து-திருவடிகளிலே (சரணம்) அடைந்து, உடன் தொடர்ந்து போன ஆவி-அவனுடனே பின்றொடர்ந்து சென்ற என்னுயிர், வந்தவா(று)-மீண்டு வந்தது என்ன வியப்பு!

உயிர் போகும் நிலையடைந்து தன்னினைவிழந்த பிராட்டி, உணர்வு மீண்டும் வரப்பெற்ற நிலையில், இவ்வாறு கூறினளென்க. காரியானை, தோற்றத்தையும், காளை பருவத்தையுங் குறித்து நின்றன. விடம் குடைந்த-விட வெள்ளத்தில் முழுகிய என்றலும் ஆம். பிராட்டியின் உயிரானது, விடவாதனையால் தானும் அழியாத படி பிழைத்தற்கேற்ற வழி தேடி, அக்குமரனை யடைதலே தக்கதா மென்று துணிந்துபோய் அவன் காலில் விழுந்து கெஞ்சி அவனைத் தொடர்ந்து சென்றதென்க.

கடந்துதைந்த காரியானை யன்னகாளை: ஒப்பு: 'கடந்தரு மாமதக் களிநல் யானைபோல், நடந்தது கிடந்ததென் னுள்ள நண்ணியே' (613).

(பி - ம்.) 1. அடங்கவந்தனங்கன்.
2. விடங்குடைந்து; விடங்கடைந்து: மெய்யினின்று; மெய்யுணின்ற; மெய்துணிந்து: வெந்திடைந் தழுந்தவெம்; அழுந்தவே: அழுங்கவெம்.
3. காளைதாளடைந்து; காளைகாரொடர்ந்து; காளைதாடொடர்ந்து; காளை பின்னடைந்து; காளை முன்னடைந்து.
4. உடன்றுரந்து; உடைந்துடைந்து: போனதாவி: வந்தவாறென்; வந்திடாதென்: வந்திலாதென்; உய்ந்ததாலென்: உய்ந்தவாறென்; உய்ந்தவாவென்; உடைந்துபோன வாவிவந்தவாறதன்னதுள்ளமே; உடன்றொடர்ந்து போனதா லுயர்ந்த வாறெனுள்ளமே. (53)

794. விண்ணுளேயெ ழுந்தமேக மார்பினூலின் மின்னொடும்
மண்ணுளேயி ழிந்ததென்ன வந்துபோன மைந்தனூர்
எண்ணுளேயி ருந்தபோதும் யாவரென்று தேர்கிலேன்
கண்ணுளேயி ருந்தபோது மென்கொல்காண்கி லாதவே.

'விண் உள்ளே எழுந்த மேகம்-ஆகாயத்தில் எழுந்த (நீருண்ட) மேகமானது, மார்பில் நூலின் மின்னொடு-தன் மார்பிலணிந்த பூணூலாகிய மின்னலுடனே, இ மண் உள்ளே இழிந்தது என்ன-இப்பூமியிலே இறங்கிவந்த தென்னும்படி, வந்து போன-என்னெதிரில் வந்து (உடனே) மறைந்துபோன, மைந்தனூர்-பராக்கிரமம் பொருந்திய அப்பிரானூர், எண் உள்ளே இருந்தபோதும்-(எப்போதும்) என் எண்ணத்திலே (நீங்காமல்) இருந்தபோதிலும், யாவர் என்று தேர்கிலேன்-அவர் யார் என்று அறிய முடியாதவளாகின்றேன்; கண் உள்ளே இருந்தபோதும்-(அவர்) என் கண்ணுக்குள்ளேயும் (நீங்காது) நிலைத்திருந்தாலும், காண்கிலாதவே-(கண்கள்) அவரைக் காண மாட்டாதனவே யாகின்றன; என் கொல்-இஃதென்ன மாயமோ!

'அன்று நான் கன்னிமாடத்திலிருந்து கண்ட முதற் காட்சியிலேயே அப்பெருமானூர் என் கண்வழி யுள்ளே புகுந்து என் மனத்தில் இடங்கொண்டிருந்தும், அவர் யாரென்று இதுகாறும் அறிந்திலேனே' என்று கூறி வருந்துகின்றாள் பிராட்டி. முன்னமே 'கண்வழி நுழையுமோர் கள்வனேகொலாம்' (611) என்றது காண்க.

(பி - ம்.) 1. எழுந்து மேகம்: மேவுகின்ற மின்னொடு.
2. மைந்தனென்; மன்னனூர்.
3. என்னுளே: இருந்தபோது; எழுந்தபோதும்; யாவனென்று; யாவ ரென்றும்: தேர்கிலென்; உணர்கிலேன்; யாவதென்ற தோர்கிலேன்.
4. எழுந்தபோதும்; காண்கிலாவதே; காண்கிலாததே; காணலாவதே; காணலாதவே; காணிலாதவே. (54)

765. பெய்கடற்பி றந்தயற்பெ றற்கொணும ருந்துபெற்
றையபொற்க லத்தொடங்கை விருட்டிருந்த வாதர்போல்
மொய்கிடக்கு மண்ணரேண்மு யங்கிடாது முன்னமே
கைகடக்க விட்டிருந்து கட்டுரைப்ப தென்கொலோ.

பெய் கடல் பிறந்து-(பல வளங்களேயும்) தருகின்ற பாற்கடலி னின்றும் தோன்றி, அயல் பெறற்கு ஒண்ணு-வேறிடத்திலே பெற முடியாத,மருந்துபெற்று-தேவாமிருதத்தைத் தம் கையிலே பெற்றும், ஐய பொன் கலத்தொடு அம்கை விட்டு இருந்த-அழகிய பொற்பாத் திரத்துடன் (அவ்வமிர்தத்தைக்) கைநழுவவிட்டு இருந்த, ஆதர் போல்-மூடர்களேப்போல,முன்னமே-முன்பு எதிர்ப்பட்ட அப்போதே, அண்ணல் மொய் கிடக்கும் தோள்-அப்பெருமானுடைய வலிமை தங்கிய தோள்களே, முயங்கிடாது-(நான்) இறுகத் தழுவிக்கொள்ளா மல், கைகடக்க விட்டு—, இருந்து - வறிதே யிருந்து, கட்டுரைப் பது என்-(இப்போது) பலவற்றைச் சொல்லுவதில் என்ன பயன்! கொல், ஓ-அசைநிலே.

கிடைத்தற்கரிய தேவாமிர்தமுள்ள பாத்திரம் கண்ணிற் பட் டால், உடனே முயன்று அதனைக் கைப்பற்றி யுண்ணுது விட்டிருக்கும் மதியீனர் செயல் போன்றதே தன் செயல் என்று தன்னைக் கடிந்து கொள்கின்ருள்.

(பி - ம்.) 1. பிறந்துபிற் பெறற்கொணு; பிறந்ததிற் பெயற்கொணு: மருந்து போல்; மருந்துபோற்று.
2. கலத்தடங்க; கலத்தினங்கை; கடத்தொடங்கை: விட்டிருந்த தன்மை போல்; விட்டிருந்தவாறுபோல்; வைத்திடாதவாதர்போல்; வைத் துணுத வாதர்போல்; வைத்திடாதவாறுபோல்.
3. மொய்கடக்கும்: முயங்கிடாத; முயங்கிடாமல்; முன்னமென்; முந்தவே. (55)

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லே, சில பிரதிகளில் கீழ்க்காணும் அதிகப் பாடல் ஒன்றுள்ளது.

என்றுசால வேவெதும்பி யின்னவின்ன வாறெலாம்
ஒன்றலாது பன்னியாவி யூசலாட வாடுவாள்
மன்றனுறு மாலேமீளி மானயானே போலமுன்
சென்றவீதி யூடுபார்வை செல்லநிற்கு மெல்லேயே,

கவிக்கூற்று

796. என்றுகொண்டு ணுந்துநைந்தி
ரங்கிவிம்மி விம்மியே
பொன்றிணிந்த கொங்கைமங்கை
யிடரின்மூழ்கு போழ்தின்வாய்க்
குன்றமன்ன சிலேமுறிந்த
கொள்கைகொண்டு குளிர்மனத்
தொன்றுமுண்கண் மதிமுகத்தொ
ருத்திசெய்த துரைசெய்வாம்.

என்று-(முற்கூறியவாறு பலபல) சொல்லி, கொண்டு-(இராம பிரானேயே) மனத்தினுள்ளிருத்தி, உள்நைந்து நைந்து இரங்கி-மனம்

மிகவும் புண்பட்டு வருந்தி, விம்மி விம்மி - அழுதழுது, பொன் திணிந்த கொங்கை மங்கை-பொன்னிறமான தேமல் செறிந்த தனங் களையுடைய அச்சீதைப்பிராட்டி, இடரில் மூழ்கு போழ்தின் வாய்-துன்பக் கடலுள் ஆழ்ந்திருந்தபோது, குன்றம் அன்ன சிலை-மலை போன்ற சிவதனுசு, முறிந்த கொள்கை கொண்டு-ஒடிந்த செய்தி யினால், குளிர் மனத்து ஒன்றும்-குளிர்ந்த மனமுடையளா யிருந்த வளும், உண் கண்-மையுண்ட கண்களையும், மதி முகத்து-சந்திரன் போன்ற முகத்தையும் உடையவளுமான, ஒருத்தி-ஒரு தோழி, செய்தது-செய்த காரியத்தை, உரைசெய்வாம்-சொல்லுவோம்.

மனத்து ஒன்றும் ஒருத்தி, மதிமுகத்து ஒருத்தி என இயைக்க. அடுக்குக்கள் மிகுதி பற்றி வந்தன.

பிராட்டியிடத்து உள்ளன்புமிக்க தோழியருள் ஒருத்தி, பிராட் டிக்குத் திருமணந் தடைப்பட்டுக் காலங்கடத்தலால் மிகவும் மனம் நொந்திருந்தவள், வில் முறிபட்ட செய்தி யறிந்தவுடன், இனிப் பிராட்டியின் திருமணம் நடந்தேறுவது திண்ணம் என்று கருதியும், வில்லை முறித்த வீரன் செய்தியை அறிந்தும், மகிழ்ச்சிமிக்கு, அதனைப் பிராட்டிக்கு அறிவித்தற் பொருட்டு ஓடோடியும் வந்தாள்; அவள் செயல்களை மேற் சில கவிகளால் அறிக: அவள் பெயர் நீலமாலை யென்பதனை அடுத்த கவியால் அறியலாம்.

(பி - ம்.) 1. என்று கொண்டணைந்து; என்று கொண்டினைந்து; என்று மாதராணி னைந் திடரின்மூழ்கு போதினிற்; என்றுமா தினைந்திடைந் திடரின் மூழ்கு போழ்தினிற்;என்று கொண்டினைந்திரங்கி விம்மிவிம்மியேமுறப்; என்று கொண்டு நைந்திரங்கி விம்மிவிம்மி யேங்குமப்; என்றுகொண்டு தைந்துதைந் திரங்கி விம்மி விம்மியே; என்றுகொண்டு ளைந்துளைந் திரங்கி விம்மிவிம்மியே.

2. குன்று போலெழுந்த கொங்கை மங்கை கொம்பை யன்னவள்; குன்று போலெழுந்த கொங்கை குலவுமங்கை யன்னவள்; குன்று போலெழுந்த கொங்கை மங்கை கோதை மாதுபால்; போதின்வாய்; பொழுதின் வாய்க்; போதினில்.

3. குன்றமென்ற; குன்றமொன்று; குன்றையொன்று; சிலைமுரிந்த: சிலை முறித்த: கொள்கைகண்டு: வென்றிவீர னிங்குவந்து; அங்குவந்து; அங்கண்வந்து; வில்லிறுத்த மேன்மையைச்; வில்லிறுத்தசெய்தியாம்.

4. ஒன்று மொண்கண் முகத்தொருத்தி சென்றுகூறு வேமெனத்; சென்று கூறு வோமெனத்; சென்றுகூறு வாமெனத்; தெரிந்து சிந்தை முந்து வாள்; தெளிந்த சிந்தை முந்துவாள். (56)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

## தோழியின் செயல்

(வேறு)

797. வடங்களுங் குழைகளும் வான வில்லிடத்
தொடர்ந்துபூங் குழல்களுந் துகிலுஞ் சோர்தர
நுடங்கிய மின்னென நொய்தி னெய்தினுள்
நெடுந்தடங் கிடந்தகண் ணீல மாலையே.

தடம் கிடந்த-விசாலம் பொருந்திய, நெடு கண்-(காதளவும்) நீண்ட கண்களையுடைய, நீலமாலை-நீலமாலை யென்னும் பெயருடைய அத்தோழி, வடங்களும்-(கழுத்தில்அணிந்த) மணிமாலைகளும், குழைகளும்-(காதிலுள்ள) குண்டலங்களும், தொடர்ந்து-இடைவிடாது, வானவில் இட-வான வில்லைப்போல (பலநிற) வொளிகளை வீசவும், பூ குழல்களும்-பூச்சூடிய கூந்தலும், துகிலும்-ஆடையும், சோர்தர-(அவிழ்ந்து) நழுவவும், நுடங்கிய மின் என-துவளுகின்ற மின்னற் கொடிபோல, நொய்தின்-விரைவில், எய்தினள்-(பிராட்டி யிருந்த இடத்தை) அடைந்தாள்.

நீலமாலை யென்பவள், வில் முறிக்கப்பட்ட செய்தியைப் பிராட்டிக்குத் தெரிவிக்கும் பொருட்டு, எல்லையற்ற உவகையோடும் விரைந்து பிராட்டி யிருந்தவிடம் சென்றடைந்தாள் என்க.

வானவில்லிடல் - பலநிற வொளிகளை வீசுதல்; இதனைத் 'திருவில்' எனவும் கூறுவர்; 'மாமகரக் குழைத்திருவில்' (சீவக.339): 'பொலங்குழை திருவில் வீச' (நைடதம். மணம். 46); 1014-குறிப்புங் காண்க. கூந்தல் 'ஐம்பால்' எனப்படுதலின், 'குழல்களும்' எனப் பன்மையாற் கூறினர் போலும்.

(பி - ம்.) 1. இழைகளும்.
2. தொடர்ந்தபூங்; தொடங்குபூங்; தொடங்குபு; குழைகளும்; கலைகளும்; குழலும்; சுழலும். (57)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

பிராட்டி வினவுதல்

798. வந்தடி வணங்கிலள் வழங்கு மோதையள்
அந்தமி லுவகைய ளாடிப் பாடினள்
சிந்தையுண் மகிழ்ச்சியும் புகுந்த செய்தியும்
சுந்தரி சொல்லெனத் தொழுது சொல்லுவாள்.

வந்து-(அந்த நீலமாலை யென்பவள்) வந்து, அடிவணங்கிலள்-(வழக்கம்போலப்) பிராட்டியின் திருவடிகளை வணங்காமல், வழங்கும் ஓதையள்-ஆரவாரமுடையவளாயும், அந்தம் இல் உவகையள்-எல்லையற்ற மகிழ்ச்சியுடையவளாயும், ஆடி பாடினள்-ஆடுதலும் பாடுதலும் செய்தாள்; (அது கண்ட பிராட்டி), 'சுந்தரி-அழகுமிக்கவளே! சிந்தை உள் மகிழ்ச்சியும்-உன் மனமகிழ்ச்சிக்குரிய செய்தியையும், புகுந்த செய்தியும்-அதற்குக் காரணமாக நிகழ்ந்த செய்தியையும், சொல் என-விளங்கச் சொல்' என்று கேட்க, தொழுது-(அவள்) பிராட்டியை வணங்கி, சொல்லுவாள்-சொல்வாளாயினள்.

அவள் சொல்லியவற்றை மேலே நான்கு கவிகளில் காண்க.

'எய்தினனனுமனும்' (சுந்தர. 1266) என்ற பாடல் இங்கே ஒப்பிடத்தகும்.

(பி - ம்.) 1. வணங்கலள்; விழுந்திலள்; அணுகிலள்: ஓகையள்; ஓசையள்; வந்தடி வணங்கலின் பணிந்திவ ளோங்கிய.
2. உவகையாள்; ஓகையள்: பாடினள்.
3. சிந்தையு மகிழ்ச்சியும்: அழகும் செய்கையும்: புகுந்த செய்கையும்,
4. தொழுது சொல்லினள். (58)

## நீலமாலை நிகழ்ந்தவை கூறல்

799. கயரத துரகமாக் கடலன் கல்வியன்
தயரத னெனும்பெயர்த் தனிச்செ னேமியான்
புயல்பொழி தடக்கையான் புதல்வன் பூங்கணை
மயறரு மதனற்கும் வடிவு மேன்மையான்.

'கயம், ரதம் துரகம்-யானை, தேர், குதிரைகளாகிய, மா கடலன்-பெருங் கடலையுடையவனும், கல்வியன்-கல்விமேம்பாடுடையவனும், புயல் பொழி தடகையான்-மேகம்போலப் (பொருளைப்) பொழிகின்ற, நீண்ட கைகளையுடையவனுமான, தயரதன் எனும் பெயர்-தசரதனென்னும் பெயரையுடைய, தனி செல் நேமியான்-பொதுவற எங்கும் தன் ஆணை செல்லும் சக்கரவர்த்தியின், புதல்வன்-புத்திரனும், பூ கணை-மலரம்புகளால், மயல் தரு-(எல்லோருக்கும்) காம மயக்கத்தைத் தருகின்ற, மதனன் கு உம்-மன்மதனைக் காட்டிலும், வடிவு மேன்மையான்-அழகில் மேம்பட்டவனும்,

இது குளகம்; அடுத்த பாட்டோடு முடியும்.

கயரததுரகமாக் கடலன்: ஒப்பு: 'கசரத துரகவாட் கடல் கொள் காவலன்' (201); தசரதன் சிறப்புக்களை அரசியற் படலத்துட் காண்க.

(பி - ம்.) 1. துரகமா; துரகமாழ்; துரகமாட்; துரகவாட்; துரங்கமாக்: கடலின்; கடல்கொள்: கல்வியான்; காவலான்; காவலன்.
2. பெயர் தனிச்சொல். 3. புயறரு தடக்கையன்,
4. மயல்விளை; மயறரும்: மதனற்கு; மதனினும்: வடிவம்; வடிவின்; மேம்பட்டான்; மெய்ம்மையான். (59)

800. மராமர மிவையென வளர்ந்த தோளினன்
அராவணை யமலனென் றயிர்க்கு மாற்றலான்
இராமனென் பதுபெய ரிளைய கோவொடும்
பராவரு முனியொடும் பதிவந் தெய்தினன்.

மராமரம் இவை என-இவை மராமரங்களோ என்னும்படி, வளர்ந்த-(திரண்டு நீண்டு) வளர்ந்துள்ள, தோளினன்-கைகளையுடையவனும். அரா அணை அமலன் என்று-பாம்பணையில் பள்ளிகொள்ளும் பரமனே இவன் என்று, அயிர்க்கும்-ஐயங்கொள்ளத்தக்க, ஆற்றலான்-வலிமையுடையவனுமான ஒரு குமரன், இளைய கோவொடும்-(தன் தம்பியான) இளவரசனுடனும், பரா(வு) வரும் முனியொடும்-

புகழ்மிக்க விசுவாமித்திர முனிவனோடும், பதி வந்து எய்தினன்-நம் மூருக்கு வந்துள்ளான்; இராமன் என்பது பெயர்-இராமன் என்பது அக்குமரன் பெயராகும்.

வில்லிறுத்தவன், இன்னன் என்பதும், அவன் சிறப்புக்களும், அவன் கௌசிக முனிவனுடனும் தம்பியுடனும் மிதிலைக்கு வந்து அரசவை யடைந்துள்ளமையும் இதுவரை கூறி, மேலே அவன் வில் லிறுத்த செய்தி கூறுகின்றாள்.

(பி - ம்.) 1. வலிய தோளினன்; வலிந்த தோளினன்; வலித்த தோளினன்; மலிந்த தோளினன்; தோளினன். 2. ஆற்றலன். 4. முனியொடிப். (60)

801. பூணியன் மொய்ம்பினன் புனித னெய்தவில்
காணிய வந்தன னென்னக் காவலன்
ஆணையி னடைந்தவில் லதனை யாண்டகை
நாணினி தேற்றின னடுங்கிற் றும்பரே.

பூண் இயல் மொய்ம்பினன்-வாகுவலயங்களணிந்த தோள்களை யுடைய அக்குமரன், புனிதன் எய்த வில்-பரிசுத்த மூர்த்தியாகிய உருத்திரன் (கைக்கொண்டு) எய்த அவ்வில்லை, காணிய வந்தனன் என்ன-காணும் பொருட்டு வந்துள்ளானென்று (விசுவாமித்திர முனி வன்) கூற, காவலன் ஆணையின்-நம் அரசர் கட்டளையால், அடைந்த வில் அதனை-(அரசவைக்கு) வந்து சேர்ந்த அவ்வில்லை, ஆண் தகை-பேராண்மையுடைய அக்குமரன், இனிது நாண் ஏற்றினன்-எளிதாக (எடுத்துவளைத்து) நாணேற்றினன்;(அப்போது),உம்பரே நடுங்கிற்று-தேவலோகமே நடுங்கலாயிற்று.

'வில் காணிய வந்தனன் என்ன': 'வேள்வி காணியவந்தார், வில்லுங் காண்பார்' (711); 'உம்பர் நடுங்கிற்று': 776-பார்க்க.

(பி - ம்.) 1. பூணிய மொய்ம்பினன்: ஏயவில். 2. காவலான். 3. ஆணையில்; ஆணையான்; அழைத்தவில்; அழைத்தனன்; இதனை. 4. நாணினை; நாணியை; நாணியின்: ஏற்றினன்: நடுக்கிற்று. (61)

802. மாத்திரை யளவிற்றாண் மடுத்து முன்பயில்
சூத்திர மிதுவெனத் தோளின் வாங்கினன்
ஏத்தின ரிமையவ ரிழிந்த பூமழை
வேத்தவை நடுக்குற முறிந்து வீழ்ந்ததே.

'(அவ்விராமன்), மாத்திரை அளவில்-ஒருநொடிப் பொழுதில், தாள் மடுத்து-(வில்லின் ஒரு முனையைத் தன்) காலால் அழுத்திக் கொண்டு, முன் பயில் சூத்திரம் இது என-முன்னமே தனக்குப் பழக்க மான கருவி இது என்று கண்டோர் கருதும்படி, தோளின் வாங்கினன்-தன் புயவலியால் (அதனை) வளைத்தான்; (அப்போதே

வேந்து அவை நடுக்கு உற-அரசவையோர் நடுநடுங்கும்படி, முறிந்து வீழ்ந்தது-(அது) இடையிலே முறிபட்டுக் கீழே விழுந்தது; இமையவர் ஏத்தினர்-தேவர்கள் (மகிழ்ந்து அவ்வீரனைப்) புகழ்ந்தார்கள், பூ மழை இழிந்த-மலர்மாரி மிகுதியாகப் பொழிந்தது.

மிகுதி பற்றி 'இழிந்த' எனப் பன்மையாற் கூறினர். அவை, ஆகுபெயர்.

இராமபிரான் வில்லையெடுத்து நாணேற்றிய சிறப்பை 774-75 ஆம் கவிகளிற் காண்க.

(பி - ம்.) 1. அளவிற்றான்; அளவின்வில்: மடித்து; வடித்து; வளைத்து; வலித்து; முன்பியல்.
2. சூத்திரியிது: தோளில்; தொழுது: வாங்கினர்.
3. ஏத்தினரமரர்கள்; இழிந்து பூமழை; இறைஞ்சிப் பூமழை.
4. வேர்த்தவர்: நடுங்குற; வீந்ததே; வீழ்ந்தவே. (62)

## பிராட்டியின் மகிழ்ச்சி

803. கோமுனி யுடன்வரு கொண்ட லென்றபின்
தாமரைக் கண்ணினு னென்ற தன்மையால்
ஆமவ னேகொலென் றைய நீங்கினள்
வாமமே கலையிற வளர்ந்த தல்குலே.

கோ முனியுடன் வரு கொண்டல் என்ற பின்-அரச மாதவனாகிய கௌசிகனுடன் வந்த மேகம் போன்றவன் என்றதோடு, தாமரை கண்ணினன் என்ற தன்மையால்-செந்தாமரைக் கண்ணனான திருமால் போன்றவன் என்றும் (தோழி)கூறிய அதனால்,அவனே ஆம் என்று-(தான் கண்டு காதலுற்ற) அவ்வண்ணலே ஆதல் வேண்டும் என்று (பிராட்டி) கருதி, ஐயம் நீங்கினள்-(வில் இறுத்தது யாரோ என்ற தன்) ஐயம் (ஒருவாறு) நீங்கப்பெற்றாள்; (அதனால் மன மகிழ்ச்சியுறவே), அல்குல்-அவளது இடைப்புறம், வாமம் மேகலை இற-அழகிய மேகலாபரணம் அறும்படி, வளர்ந்தது-பெருத்தது.

கொல்; அசை.

வில்லை முறித்த வீரன், தன் தம்பியோடு, கௌசிக முனிவன் பின்னே இங்கு வந்தவன் என்றும், ஆற்றலால் திருமாலோ வென்று ஐயங்கொள்ளத் தக்கவன் என்றும் தோழி சொல்லியதனால் பிராட்டி, அன்றுதான் கன்னிமாடத்திருந்து கண்ட அக்கார்வண்ணனேயாதல் வேண்டும் என்று ஒருவாறு துணிவு கொண்டனள்; அதனால் மன மகிழவே, அவளுடல் பூரிக்கலாயிற்றென்க.

தாமரைக் கண்ணினன்=புண்டரீகாக்ஷன்-திருமால்.

மேகலை, மாதர்கள் இடையிலணியும் ஓர் அணி; எட்டு வடங்களால் ஆகியது; அஃதறும்படி வளர்ந்தது என்றதனால் அல்குல் ஈண்டு இடையையே குறிப்பதாகும்; 'இல்லையே நுசுப்பென்பார்

உண்டுண் டென்னவும்' என்று அடுத்த கவியுள் வருதலும் காண்க. இச்சொல் இடையைக் குறித்து வருதல், திருவாய். 5. 1: 8; பெரிய. திருமொழி. 1. 7: 8; 2. 2:3. ஆகியவற்றிலும் காண்க.

தாமரைக் கண்ணினன்; ஒப்பு: கிட்கிந்தா. 58; சுந்தர. 322, 394, 577.

(பி - ம்.) 1. உடன்வரும்: என்றுபின்; என்றுமத்; என்னலாற்.
2. கண்ணினன்; கண்ணவன்: என்னுந் தன்மையால்.
3. ஆமவனென்கொல்; ஆமவனும்; ஆமவனவன்கொல்! நீங்கிட நீங்கவே; எய்தினள்.
4. மேகலையினுள்: மேகலையினும்; மேகலையற: வளர்ந்த: பூமிசை விட்டு மண் பொலிந்த பொற்பினள். (63)

804. இல்லையே நுசுப்பென்பா ருண்டுண் டென்னவும்
மெல்லியன் முலைகளும் விம்ம விம்முவாள்
சொல்லிய குறியினத் தோன்ற லேயவன்
அல்லனே லிறப்பெனென் றகத்து ளுன்னினள்.

(பிராட்டி), நுசுப்பு இல்லையே என்பார்-இவளுக்கு இடையே இல்லை என்று முன்பு சொன்னவர்கள், உண்டு உண்டு என்னவும்- இப்போது) உள்ளது உள்ளது என்று (துணிந்து) சொல்லும்படி பெருக்கவும், மெல் இயல் முலைகளும் விம்ம-மென்மைத் தன்மை யுடைய தனங்களும் பூரிக்கவும், விம்முவாள்-மகிழ்ச்சி மிக்கவளாய், 'சொல்லிய குறியின்-இவள் சொல்லிய அடையாளங்களால், அ தோன்றலே-(நம் மனத்தில் உள்ள) அப்பெருமானே யாவன்; அவன் அல்லனேல்-(ஒருவேளை) அவனல்லாது போயின், இறப்பென் என்று- நான் இறந்துபடுவேன் என்று, அகத்துள் உன்னினள்-தன் மனத் துள்ளே நினைத்தாள்.

பிராட்டி இடையில்லாதவள்: 593; 1205; அயோத். 622; ஆரணிய். 359; கிட்கிந்தா. 28. 'அவனில்லையே லிறப்பென்' ஒப்பு: கிட்கிந்தா. 785.

(பி - ம்.) 1. இல்லையோ நுசுப்பென்பர்.
2. மெல்லிய; மெல்லியள்; விம்மி விம்முவாள்.
3. சொல்லியல்; சொல்லின: குறியினில்; குறியிலத்; முறையினால்.
4. அகத்தினுள்ளினள்; அகத்திலுன்னுவாள்; அகத்திலெண்ணினள்: அல்லனென் றகத்தினு ளரிதினுன்னினள். (64)

### சனகன் செயல்

805. ஆசையா லயர்பவ ளன்ன ளாயினள்
பாசடைக் கமலத்தோன் படைத்த வில்லிறும்
ஓசையிற் பெரியதோ ருவகை யெய்தியக்
கோசிகற் கொருமொழி சனகன் கூறுவான்.

ஆசையால் அயர்பவள்-(இராமபிரானை யடைதற்குரிய) ஆசையினால் வருந்தும் பிராட்டி, அன்னள் ஆயினள்-(மேற் சொல்லிய) அத்தன்மையுடையவளானாள்; (இவ்வாறிருக்க), சனகன்-சனகமன்னன், பசுமை அடை கமலத்தோன் படைத்த-பசிய இலைகளையுடைய தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமதேவன் (முதலில்) படைத்ததாகிய, வில் இறும் ஓசையின்-அச்சிவதனுசு முறிந்த பேரொலியினும், பெரியது ஓர் உவகை எய்தி-மிக்கதொரு மகிழ்ச்சியடைந்து, அ கோசிகற்கு-அந்தக் கௌசிக முனிவனுக்கு, ஒரு மொழி கூறுவான்-பின்வரும் ஒரு வார்த்தையைச் சொல்லலானான்.

சனகன் கூறியதும் செய்ததும் மேலிரண்டு கவிகளிற் காண்க.

'பிஞ்ஞகன் பிடித்தவப் பெருவில், இற்றவன்றினு மெறிமழு வாளவ னிழுக்கம், உற்றவன்றினும் பெரியதோ ருவகைய னானான்' (அயோத். 44.) எனத்தசரதனைக் கூறுதலுங் காண்க.

(பி - ம்.) 1. ஆசையுற்று; ஆசையின்; அயர்ப்பவள்; அயிர்ப்பவள்; இன்னளாயினள். 2. பாசறைக் கமலத்தோன்.
3. உவகையெய்திய; உவகையெய்தியே.
4. கூறுமால்; கூறினான். (65)

806. உரைசெயெம் பெருமவுன் புதல்வன் வேள்விதான்
விரைவினின் றொருபகன் முடித்தல் வேட்கையோ
முரசெறிந் ததிர்கழல் முழங்கு தானையவ்
வரசையு மிவ்வழி யழைத்தல் வேட்கையோ.

(சனகன் கௌசிக முனிவனை நோக்கி), 'எம் பெரும-எம் ஐயனே! உன் புதல்வன் வேள்வி-உம்முடைய (ஞான) புத்திரனான இராமனது திருமணத்தை, விரைவின்-விரைவாக, இன்று ஒரு பகல்-இன்றைத் தினமே, முடித்தல் வேட்கையோ-முடிப்பது (நும்) விருப்பமோ? (அல்லது), முரசு எறிந்து-மண முரசை (இந்நாடெங்கும்) அடித்துத் தெரிவித்து, அதிர் கழல்-ஒலிக்கின்ற வீரக்கழலையும், முழங்கு தானை-ஒலி மிக்க சேனாசமுத்திரத்தையுமுடைய, அ அரசையும் - அத்தசரத சக்கரவர்த்தியையும், இ வழி அழைத்தல்-(திருமணத்தின் பொருட்டு) இவ்விடத்துக்கு வரவழைத்தல், வேட்கையோ-(நும்) விருப்பமோ? உரைசெய்-(உசித மானதை) உரைத்தருள்வீராக; (என்றான்).

'முரசெறிந்து' என்பதனைச் சேனைக்கு விசேடணமாக்குதலும் ஆம்.

சனகன் பேருவகையுற்றுக் கௌசிகமுனிவனைநோக்கி, 'இராமன் திருமணத்தைத் தாமதமின்றி இன்றே முடித்து விடலாமா? அல்லது, முறைப்படி தசரத சக்கரவர்த்தியை இங்கு அழைப்பித்தும், நாடெங்கும் திருமணச் செய்தியை முரசறைந்து தெரிவித்தும் உரியவாறு

நடத்தலாமா? தங்கள் கருத்து யாது' என்று கேட்க, முனிவனும் தன் கருத்தைக் கூறுகின்றான்; அதனை அடுத்த கவியுட் காண்க. இராம பிரானுக்கு அளவில் விஞ்சைகளை யருளினமையும், அவன் திருமணம் நிகழ்தற்குக் காரணமாக மிதிலைக்கு அவனைக் கொணர்ந்தமையும் பற்றி, இராமனை, 'உன்புதல்வன்' என்றான்; விஞ்சைகளை யருளியவன் 'ஞானபிதா' ஆகின்றான்; அவன் கருத்தின்படி செய்தலே சனகன் கடமை யாதலால் இவ்வாறு கேட்டான் என்க.

(பி - ம்.) 1. பெருமறின். 2. விரைவினில்; விரைவினின்; விரைவிலின்று.
3. முரசறைந்து; முரைசெறிந்து: அதிர்குரல்: தானைய; தானையிவ்.
4. அரைசையும்; அவ்வழி; இவ்வுழி; வேட்கையே. (66)

807. மல்வலா னவ்வுரை பகர மாதவன்
ஒல்லையி லவனும்வந் துறுத னன்றென
எல்லையி லுவகையி னிசைந்த வாறெலாம்
சொல்லுகென் றோலையுந் தூதும் போக்கினான்.

மல் வல்லான்-மற்போரில் வல்ல சனக மன்னன், அ உரை பகர-அவ்வார்த்தையைச் சொல்லவும், மாதவன்-பெருந்தவசியான கௌசிக முனிவன், 'ஒல்லையில்-விரைவாக, அவனும்-அத்தசரத சக்கரவர்த்தியும், வந்து உறுதல்-(இங்கே) வந்து சேர்வது, நன்று என-நல்லதாகும் என்று கூற, (உடனே சனகன்), எல்லை இல் உவகையின்-அளவற்ற மகிழ்ச்சியோடு, 'இசைந்த ஆறு எல்லாம்-(இங்கே) நிகழ்ந்தவற்றை யெல்லாம், சொல்லுக என்று-(தசரத சக்கரவர்த்திக்குச்) சொல்வீர் களாக' என்று, தூதும்-(தக்க) தூதுவரையும், ஓலையும்-(அவர்களிடமே) திருமண வோலையையும்; போக்கினான்-(அயோத்திக்கு) அனுப்பினான்.

இசைந்தவாறு-(சக்கரவர்த்திக்குப்) பொருந்தும் வகையில் என்றலும் ஆம். தூது, அமைச்சரை யனுப்பியதாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. மல்லலான்; வல்விலான்: இவ்வுரை; இவ்வகை.
2. ஒல்லையின்: அவனுவந்து: நன்றெனா; நன்றென்றான்.
3. எல்லையின்: உவகையால்; உவகையோன்: இயைந்த வாறெலாம்.
4. சொல்லுமென்று: தாது: போக்கினார். (67)

கார்முகப் படலம் முற்றும்.



# 13. எழுச்சிப் படலம்

எழுச்சிப் படலம்: இது, எழுச்சியைப் பற்றிக் கூறும் படலம் என விரியும். இராமபிரானது திருமணச் செய்தியைத் தூதுவரால் அறிந்த தசரதசக்கரவர்த்தி, பேருவகையுற்றுத் தன்படைகளும் பரிசனமும் புடைசூழ மிதிலைக்குப் புறப்பட்டுச் செல்லுதலை விரிவாகக் கூறுவது இது.

இப்படலத்தின் அமைப்பு, பிரதிகளில் வேறுபடக் காண்கின்றது, வருமாறு: சிலவற்றில் 'வாம்பரி' என்ற 815-ஆம் பாடலின் பின் இப்படலம் தொடங்குகின்றது. சிலவற்றில் மிகைப் பாடல்களாகக் காட்டப்பெற்றவற்றுள் ஒன்றான 'சிறந்த வேள்வி' என்பதிலிருந்து தொடங்குகின்றது; வேறு சிலவற்றில் 'இலைமுகப் படத்தவன்' (811) என்பதிலிருந்து தொடங்குகின்றது. சில பிரதிகளில் இப்படல முடிவு 'துகிலிடை மடந்தையர்' (வரைக்காட்சி. 27) என்ற பாடல்வரை செல்லுகின்றது.

### தூதுவர் அயோத்தி சேர்ந்து அரண்மனை வாயிலை யடைதல்

808. கடுகிய தூதருங் காலிற் காலிற்சென்
றிடிகுரன் முரசதி ரயோத்தி யெய்தினர்
அடியிணை தொழவிட மின்றி மன்னவர்
முடியொடு முடிபொரு வாயின் முன்னினர்.

கடுகிய தூதரும்-(சனகன் கட்டளையால்) விரைந்த தூதுவர்கள், காலின்-உரிய வாகனத்திலே, காலின் சென்று-காற்றைப்போலக் கடுவிசையோடு போய், இடி குரல் முரசு அதிர்-இடியொலிபோலப் பேரிகைகள் முழங்குகின்ற, அயோத்தி எய்தினர்-அயோத்தி நகரத்தையடைந்தவர்களாய், மன்னவர்-பல அரசர்கள், அடியிணை தொழ-(சக்கரவர்த்தியின்) பாதங்களை வணங்கும் பொருட்டு, இடம் இன்றி-(நெருக்கத்தினாலே) இடம் இல்லாமையால், முடியொடு முடி பொரு-(ஒருவர்) மகுடத்தோடு (மற்றொருவர்) மகுடம் மோதுதற்கு இடமான, வாயில்-அரண்மனை வாயிலிலே, முன்னினர்-சென்று சேர்ந்தார்கள்.

இடிக்குரல் எனற்பாலது எதுகை நோக்கி யியல்பாயிற்று.

'காலில் செல்லுதல்' என்பது கால்நடையாகவோ, தரையிலே செல்லும் வண்டி முதலிய வாகனங்களிலோ செல்லுதலைக்

குறிக்கும். தூதுவர் மூன்று நாட் பயணஞ் சென்று, நாலாநாள் அயோத்தியடைந்தன ரென்று வான்மீகம் கூறும்.

மன்னவர் அடியிணைதொழ முந்துதல்: 'முன்வந்த மன்னர் முடி வணங்குஞ் சேவடியான்' (பு-வெ. 214); 'இடிக்குரன் முரசு' (புறநா. 17; சிலப். 26: 194; பெருங். 1. 58: 178).

(பி - ம்.) 1. கடியதோர் தூதரும் காலின் முந்திச் சென்று; கடிய தூதரும் காலின் முந்தச் சென்று. 2. அடிகுரல்.
3. தொழுமிடம்: அன்றி; மன்னர்தம்; மன்னர்கள்.
4. முடிபொரும் வாசல். (1)

### தூதுவர் சக்கரவர்த்தியைக் கண்டு கூறுதல்

809. முகந்தனர் திருவருண் முறையி னெய்தினார்
திகழ்ந்தொளிர் கழலிணை தொழுது செல்வனைப்
புகழ்ந்தன ரரசநின் புதல்வர் போயபின்
நிகழ்ந்ததை யிதுவென நெடிது கூறினார்.

(வாயிலையடைந்த தூதுவர்), திரு அருள் முகந்தனர்-சக்கரவர்த்தியின் அருள்மிக்க அநுமதியைப் பெற்றவர்களாய், முறையின் (அரசர் முன் செல்லவேண்டிய) முறைப்படி, எய்தினார்-அவன் திருமுன்சேர்ந்து, திகழ்ந்து ஒளிர் கழல் இணை தொழுது-மிகவிளங்குகின்ற வீரக் கழலை யணிந்த அவன் பாதங்களை வணங்கி யெழுந்து, செல்வனை-எல்லாச் செல்வமும் நிரம்பிய அத்தசரதனை, புகழ்ந்தனர்-(மெய்க் கீர்த்திகள் சொல்லிப்) புகழ்ந்து,'அரச-அரசே! நின் புதல்வர் போயபின்-நும் குமாரர்கள் (இங்கிருந்து முனிவனோடு) போன பின்பு, நிகழ்ந்தது இது என-நடந்த செய்தி இதுவாகும்' என்று, நெடிது கூறினார்-(எல்லாவற்றையும்) விரிவாகச் சொல்லினர். நிகழ்ந்ததை; ஐ: சாரியை.

சென்ற தூதுவர், அரசர் முன் சொல்லுதல் வல்லாராதலின், தாம் அறிந்த எல்லாவற்றையும் அழகுற எடுத்துக் கூறினரென்க. செவ்வி யறிந்து சொல்லுதல் வல்லாரையே தூதனுப்புதல் மரபு. அரசனைக் காணச் செல்வோர், அவனனுமதி பெற்றபின்பே உட்சென்று காணுதல் முறையாகும்; சனகனனுப்பிய தூதரென்றறிந்ததும் அரசன் காட்டிய அன்பு மிகுதிபற்றித் 'திருவருள் முகந்தனர்' என்றார். இராம லக்குமணர் விசுவாமித்திர முனிவனுடன் அயோத்தியினின்றும் போனபின் நிகழ்ந்த தாடகை வதம், முனிவன் வேள்வி காத்தமை, முனிவனிடம் மந்திரங்களும் அஸ்திர சஸ்திரங்களும் பெற்றமை, அகலிகையின் சாப விமோசனம், மிதிலை சென்றபின் அங்கே நிகழ்ந்தவை ஆகிய எல்லாம் விரிவாகக் கூறி, தாம் திருமண வோலை கொணர்ந்தமையும் கூறினர் என்க.

(பி - ம்.) 1. முகந்தரு திருவருள்: எய்தினர்; முன்னினர்; முன்னினார்.
2. கழலிணைத்; கழலினைத். 3. அரசரின்: புதல்வன்: போனபின்.
4. நிகழ்ந்ததிங்கிது; நிகழ்ந்ததுவிது: நிகழ்ந்ததையிதுவெனு; நிகழ்ந்தன விவையென: கூறினர்; கூறினன். (2)

## தூதுவர் தந்த ஓலையை வாசிப்பித்தல்

810. கூறிய தூதருங் கொணர்ந்த வோலையை
ஈறில்வண் புகழினு யிதுவ தென்றனர்
வேறொரு புலமகன் விரும்பி வாங்கினுன்
மாறதிர் கழலினுன் வாசி யென்றனன்.

கூறிய தூதர்-(மேற் சுட்டியவாறு) விரித்துக் கூறிய தூதுவர், கொணர்ந்த ஓலையை-தாம் கொண்டுவந்த திருமண வோலையை (க்காட்டி), 'ஈறு இல் வண் புகழினுய்-அளவற்ற வளமையான புகழை யுடைய சக்கரவர்த்தியே, இது அது என்றனர்-இதுவே எங்களரசர் கொடுத்த திருமண வோலையாகும்' என்று கூறினர்; வேறு ஒரு புலம் மகன்-வேருன (அதற்கென் றமர்த்தப்பெற்ற) ஓர் அறிஞன், விரும்பி வாங்கினுன்-விருப்பத்தோடு (அதனைத்) தூதரிடமிருந்து வாங்கினுன்; மாறு அதிர் கழலினுன்-மாறிமாறி ஒலிக்கும் வீரக்கழல்களை யணிந்த சக்கரவர்த்தி, 'வாசி' என்றனன்-'அதனை வாசிப்பாயாக' எனக் கட்டளையிட்டான்.

தூதரும்: உம், இசைநிறை.

எல்லாவற்றையும் விரிவாகக் கூறி முடித்த தூதுவர், தம் அரசன் கொடுத்த திருமணப் பத்திரிகையை யெடுத்து நீட்ட, அதனை வாசித்தற்குரிய ஓர் அறிஞன் தூதுவரிடமிருந்து வாங்கிக்கொண்டானுக, அரசன் அதனை வாசிக்குமாறு பணித்தான். அரசவையில், பிறரிடமிருந்து வரும் ஓலை முதலியவற்றை வாசித்துத் தெரிவிக்கும் பொருட்டு அமர்த்தப்பெற்ற ஒருவர் இருத்தல் மரபு; அரசர் தாமே அவற்றை வாசித்தல் மரபன்று. வி-பா. சூதுபோர். 63-பார்க்க.

(பி - ம்.) 2. ஈறில்வெண்; என்றலும். 3. வேறொரு குலமகன்.
4. மாறெதிர் கழலினன். (3)

இதன்பின் பல பிரதிகளில் பின்வரும் ஐந்து பாடல்கள் காணப்படுகின்றன:

(1) ஓது நீதியின் கோசிக மாமுனி யோலை
தாது சேர்தொடைத் தயரதன் காண்கதற் பிரிந்து
போது கானிடைத் தாடகை பொருப்பெனப் புகுந்து
வாது செய்துநின் றிராகவன் வாளியான் மாண்டாள்.

(பி - ம்.) 2. காண்கநிற் பிரிந்து.
3: தாடகை பொருப்பினிற்; பொருக்கெனப்; பொங்கி.
4. வாது செய்தவள்; செய்தனள்: பகழியால் மடிந்தாள்.

(2) சிறந்த வேள்வியொன் றமைத்தன னதுதனைச் சிதைக்க
இறந்த தாடகை புதல்வரா மிருவர்வந் தெய்தி
அறங்கொ ணெஞ்சின னிராகவன் வாளியா லாவி
குறைந்து போயின னொருவன்மற் றவன்கடற் குளித்தான்.

(பி - ம்.) 1. அமைத்தனம்: அறந்தனைச்; அதனையும்: சிதைப்பான்.
2. புதல்வர்களிருவர்; மைந்தராமிருவர்; வந்தெதிர்ந்தார்.
3. அறங்கொள் சிந்தனை; அறங்கொ ணெஞ்சினின்; அறங்கொள்ராகவன்; வாளியா லாவியங் கொருவன்; மறங்கொண்மாலவன் வாளியா லொருவன்றனுவி; மறங்கொள் வெஞ்சிலை யிராகவன் வாளியா லொருவன்; அம்பினு லொருவன்.
4. குறைந்து மாண்டனன்: ஒருவன் போய்க் குரைகடற் குதித்தான்.

(3) கூட மேவுபோ ரரக்கரை யிளையவன் கொன்றான்
நீடு வேள்வியுங் குறைபடா வகைநின்று நிரப்பிக்
கேடில் காற்றுகள் கதுவலிற் கிளர்ந்தவப் பெருமைப்
பாடற் கோதமன் பன்னிசா பத்தையு மகற்றி,

(பி - ம்.) 2. வகையது நிரப்பிப்.
3. பாடல் மாமதிக் கவுதமன் பன்னிசா பத்தை; பாடல் மாமறைக் கௌதமன் பன்னிதன் சாபம்.
4. ஆடன் மாமலர்ச் சோலையி லிராகவ னகற்றி; பாடனுன்மறைக் கோதமன் பன்னிசா பத்தையு மாற்றி,

(4) பொருவின் மாமதின் மிதிலையிற் புகுந்துபோ ரிராமன்
மருவு வார்சிலை முறித்தலிற் சனகன்றன் மகளைத்
தருவன் யானென விசைந்தனன் முனிங்கு விரைவின்
வருக வென்பதாம் வாசகங் கேட்டுள மகிழ்ந்தான்.

(பி - ம்.) 1. பொருவு மாமதிள்; பொருவிலாமதில் மிதிலையுட்.
2. சிலை வளைத்தலிற்; முறித்தபின்; முறித்தனன்: சனகன் மாமகளைத்.
3. தருவதாமதற்கு; தருவதாயதற்கு: இயைந்தனன்.
4. வருகெனுவெழும்; வருவதிங்கெனும்: மகிழ்ந்து.

(5) பன்னு மாமறை வசிட்டனும் பராவரு முனிக்கும்
அன்னை மார்க்குந்தன் மைந்தர்க்குஞ் சோபன மறிவித்
தின்ன வாசக வோலையங் கிட்டதூ தருக்குச்
சொன்ன மாயிர கோடியுந் தூசுடன் சொரிந்தான்.

(பி - ம்.) 1. பன்னுநான்மறை: வதிட்டனும்: பராயின.
2. தன்னமைச்சர்க்குஞ்.
3. அன்ன வாசக வோலையிங்கிட்ட தூதர்க்குச்.
4. சொன்ன வாயிரங் கோடியுந் தூசொடு கொடுத்தான்.

## சக்கரவர்த்தியின் மகிழ்ச்சி

811. இலைமுகப் படத்தவ னெழுதிக் காட்டிய
தலைமகன் சிலைத்தொழில் செவியிற் சார்தலும்
நிலைமுக வலயங்க ணிமிர்ந்து நீங்கிட
மலையென வளர்ந்தன வயிரத் தோள்களே.

இலை முகம் படத்து-ஓலையினிடமாகிய படத்திலே, அவன்-அச்சனக மன்னன், எழுதி காட்டிய-எழுதியறிவித்திருந்த, தலைமகன் சிலை தொழில்-(தன்) மூத்த மகனான இராமனது வில்லாற்றல் பற்றிய செய்திகள், செவியில் சார்தலும்-(தன்) காதில் விழுந்தவுடன், வயிரம் தோள்கள்-வைரம்போல் உறுதியுடைய தன் புயங்கள், நிலைமுகம் வலயங்கள்-(தம்மில்) அணியப்பெற்ற தோள்வளைகள், நிமிர்ந்து நீங்கிட-பற்றுவாய் விட்டுக் கழலும்படி, மலை என வளர்ந்தன-மலை போலப் பூரித்தன. ஏ, ஈற்றசை.

இலை - பனையோலை; அதனைச் சித்திரப் படமெழுதுதற்குரிய தாக்கி, அதில் அடங்கிய செய்திகளைச் சித்திரமென்றார். தலைமகன் என்றது புருஷசிரேஷ்டன் என்ற பொருள் படுதலும் கருதத்தக்கது.

இராமபிரானுடைய வீரச் செயல்களும், அகலிகை சாபம் தீர்த்த தெய்விக நிகழ்ச்சியும்,சிவதனுசு முறிபட்ட அதிசயமும் சக்கர வர்த்தியின் செவிகளில் சேர்ந்தவுடன் அளவற்ற மகிழ்ச்சியால் அவனுடம்பு பூரிக்கலாயிற்று. அதனைமிகைப்படுத்தி,'வயலங்கள் நிமிர்ந்து நீங்கிடத் தோள்கள் மலையென வளர்ந்தன' என்றார்.

(பி - ம்.) 1. படத்தவர்; படாத்தவன்; படாத்தவண். 3. நிமிர்ந்து நீங்கின; வீங்கின. 4. மலையென வுயர்ந்தன. (4)

சில ஏடுகளில் எழுச்சிப் படலம் இதுமுதல் தொடங்குகின்றது.

812. வெற்றிவேன் மன்னவன் றக்கன் வேள்வியில்
கற்றைவார் சடைமுடிக் கணிச்சி வானவன்
முற்றவே ழுலகையும் வென்ற மூரிவில்
இற்றபே ரொலிகொலன் றிடித்த தீங்கென்றான்.

வெற்றிவேல் மன்னவன்-வெற்றிக்குரியவேலைத்தாங்கிய தசரத மன்னன், (மகிழ்ச்சிமேலீட்டால்), 'அன்று ஈங்கு இடித்தது-அன்றொரு நாள் இங்கே இடியோசைபோலக் கேட்டது, தக்கன் வேள்வியில்-தட்சன் செய்த யாகத்திலே, கற்றை வார் சடை முடி-திரட்சியும் நீட்சியும் பொருந்திய சடை முடியையும், கணிச்சி-மழுப்படையையும் உடைய, வானவன்-உருத்திரமூர்த்தி, ஏழ் உலகையும் முற்ற வென்ற-எல்லாவுலகங்களையும் முழுதும் வெல்லுதற்குக் காரணமாயிருந்த, மூரி வில்-வலிமைமிக்க (அவனுடைய) வில்லானது, இற்ற பேர் ஒலி கொல்-(இராமனால்)முறிபட்ட அப்பேரொலியே போலும்' என்றான்.

சிவதனுசு முறிந்த வோசையினுல் தேவர்களும் நடுங்கினரென முன்னர்க் கூறியதனுல், அவ்வோசை மிக நெடுந் தொலைக்குக் கேட்டதென்பதாயிற்று; ஆகவே, அஃது அயோத்தியிலும் கேட்டதாக, அனைவரும் 'யாதோ!' என்று ஐயமுற்றிருக்க, இப்போது தசரத மன்னன் அதனைப் பொருத்திக் கூறினுனென்க.

தக்கன் வேள்விச் செய்தி: 753-54.

(பி - ம்.) 1. மன்னன்முன்: சனகன் வேள்வியில்.
3. முற்றவேயுலகெலாம் முனிந்த.
4. ஒலிகொலாம்; ஒலிகொலோ: இங்கென்முன். (5)

சக்கரவர்த்தி தூதுவருக்கு வரிசைகள் வழங்கல்

813. என்றுரைத் தெதிரெதி ரிடைவி டாதுநேர்
துன்றிய கனைகழற் றூதர் கொள்கெனப்
பொன்றிணி கலன்களுந் தூசும் போக்கினுன்
குன்றென வுயரிய குவவுத் தோளினுன்.

குன்று என உயரிய-மலைபோலுயர்ந்த, குவவு தோளினுன்-திரண்ட தோள்களையுடைய தசரத சக்கரவர்த்தி, என்று உரைத்து-என்று(மேற்கூறியவாறு)சொல்லி, (பின்பு),பொன்திணி கலன்களும்-பொன்னுலாகிய ஆபரணங்களும், தூசும்-(சிறந்த) ஆடைகளும், எதிர் எதிர்-(ஒன்றுக்கொன்று) முன்முன்னுக, இடைவிடாது-தொடர்ந்து, நேர் துன்றிய-(தன் கட்டளையினுல்) தன்னெதிரே வந்து குவிந்தவைகளை, கனை கழல் தூதர் கொள்க என-ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த தூதர்கள் பெறக்கடவர் என்று சொல்லி, போக்கினுன்-கொடுப்பித்தான்.

முன்னமே, திரண்டுருண்டு மலைபோலுந் திண்மையுடைய தோள்கள், உவகை மேலீட்டால் மேலும் உயர்வுற்றன; அந்நிலையில் மன்னன், மிதிலையிலிருந்து வந்த தூதர்களுக்கு வரிசைகளை வரையின்றி வழங்குவித்தான் என்க. பேரரசர், தம்மிற்முழ்ந்தவர்க்குரிய பரிசில்களைத் தாமே வழங்காது பிறரைக்கொண்டு கொடுப்பித்தல் மரபு. போக்குதல், மிகுதி பற்றியது. பொன் திணி என்பதனைத் தூசோடுங் கூட்டியுரைத்தலும் ஆம்.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

(பி - ம்.) 2. துன்றியகாதலிற்: கொள்கெனப்.
4. குன்றினு முயரிய; குலவுத் தோளினுன்; கொற்றத் தோளினுன்: (6)

பயணங் குறித்து முரசறையுமாறு பணித்தல்

814. வானவன் குலத்தெமர் வரத்தி னுல்வரும்
வேனில்வே ளிருந்தவம் மிதிலை நோக்கிநம்
சேனையு மரசருஞ் செல்க முந்தெனு
ஆனைமே லணிமுர சறைகென் றேவினுன்.

(தசரத மன்னன்),'வானவன் குலத்து எமர் வரத்தினுல் வரும்-சூரிய குலத்து எம் முன்னோர்களின் புண்ணியப் பயனுலே உதித்த, வேனில் வேள் இருந்த-வசந்தகால மன்மதனையொத்த இராமன் தங்கியுள்ள, அ மிதிலே நோக்கி-அந்த மிதிலே நகரத்தைக் குறித்து, நம் சேனையும் அரசரும்-நம்முடைய படைகளும், அரசர்களும், முந்து செல்க எனு-முன்னே செல்லக்கடவர் என்று, ஆனைமேல் அணி முரசு அறைக என்று-யானைமீதேற்றி அலங்கரிக்கப்பெற்ற (மங்கல) முரசை அறைவிக்க' என்று, ஏவினுன்-கட்டளேயிட்டான்.

வானவன், சூரியனுக்குச் சிறப்பு வகையால் வந்த காரணப் பெயர். நல்லனவற்றைத் தம் முன்னோர் செய்த புண்ணியப் பயனுகக் கொள்ளுதல் பெரியோரியல்பாதலின், இராமபிரானைப் பற்றி அவ் வாறு கூறினுன் மன்னன். அவன் தன் பெருமைக்கேற்றவாறு சேனே முதலியவற்றை முன்னே செல்லச் செய்தானென்க.

மன்னன், தன் சபையிலுள்ள வசிட்ட முனிவர் முதலிய பெரி யோர்களுக்கும், மந்திரிமார்களுக்கும் ஜனகனுடன் சம்பந்தம் செய்து கொள்வதைப் பற்றிக் கூறி, அவர்கள் உடன்பாட்டையும் பெற்றுக் கொண்டதாக வான்மீகம் கூறும்.

(பி - ம்.) 1. வானவர் செய்தநற் றவத்தினுல்வரும்; வானவன் குலத்துமா தவத்தி னுல்வரும்; வானவன் குலத்தவர் தவத்தினுல்வரும்; வானவன் குலத் தென்மா தவத்தினுல்வரும்.
2. வேனல்வேள்: இருந்தவம் மிதுலே: நோக்கிநன்; நோக்கித்தன்; நோக் கித்தம். 3. சேனையு மாதரும்: முந்தென; முன்னௌ,
4. ஆனேமேல் மணமுரசு; ஆனேயின் மணிமுரசு: அறைகென்றேவினுன்; அறைகவென்றனன்; அறைவித்தானரோ. (7)

### வள்ளுவன் முரசறைதல்

815. வாம்பரி வரூதினிக் கடலின் வள்ளுவன்
தேம்பொழி துழாய்முடிச் செங்கண் மாலவன்
ஆம்பரி சுலகெலா மளந்து கொண்டநாள்
சாம்புவன் றிரிந்தெனத் திரிந்து சாற்றினுன்.

தேம் பொழி துழாய் முடி-தேனைச் சொரியுந் திருத்துழாய் மாலேசூடிய முடியையுடைய, செம்கண் மால் அவன்-புண்டரீகாட்ச னுன அத்திருமால், ஆம் பரிசு-உரிய வகையில், உலகு எலாம் அளந்து கொண்ட நாள்-எல்லாவுலகங்களேயும் (தன் ஈரடியால்) அளந்து தன தாக்கிக் கொண்ட அந்த நாளில், சாம்புவன் திரிந்தது என-(அதனே யெங்கும் தெரிவித்தற்குச்) சாம்பவான் சுற்றித் திரிந்ததுபோல, வள்ளுவன்-முரசறைவோன், வாம் பரி வரூதினி கடலின் - தாவும் குதிரைகளேயுடைய (தசரதனது) சேனைக் கடலினிடத்தே, திரிந்து-(அங்குமிங்குமாகச்) சுற்றி, சாற்றினுன்-(மன்னன் ஆணையை) முர சறைந்து தெரிவித்தான்.

சாம்பவான் செய்தியை இங்கு உவமித்தது, தசரதன் சேனைப் பெருக்கைச் சிறப்பித்தவாறும். 'வேதமனைத்துந் தேர்தர வெட்டா வொருமெய்யன், பூதல முற்று மோரடிவைத்துப் பொலிபோழ்தின், மாதிர மெட்டுஞ் சூழ்பறை வைத்தே வரமேரு, மோத விளைத்தே தாளுலைவுற்றேன் விறன்மொய்ம்பீர்' (கிட்கிந்தா. 982.) எனச் சாம்பவான் கூற்றாக இச்செய்தி கூறப்படுதல் காண்க.

(பி - ம்.) 1. வருதிரைக்; தருதிரைக்; வாம்பரித் திரைக்கடனிலத்து வள்ளுவன்.
2. தேம்பிழி; தேம்பொலி: செம்பொன் வானவன்; செங்கண்மாயவன்.
3. தாம்பரித் துலகெலாம். 4. சாம்பவன். (8)

சில பிரதிகளில் இப்பாடலுடன் கார்முகப் படலம் முடிவுறுகின்றது.

## முரசொலி கேட்டோர் மகிழ்ச்சி

816. சாற்றிய முரசொலி செவியிற் சாருமுன்
கோற்றொடி மகளிருங் கோல மைந்தரும்
வேற்றரு குமரரும் வென்றி வேந்தரும்
காற்றெறி கடலெனக் களிப்பி னோங்கினர்.

சாற்றிய முரசு ஒலி-(வள்ளுவன்) அறைந்த பேரிகையின் ஓசை, செவியில் சாரும் முன்-தம் காதுகளில் விழுந்தவுடனே, கோல் தொடி மகளிரும்-திரண்ட வளையல்களணிந்த பெண்களும், கோலம் மைந்தரும்-அழகிய ஆடவர்களும், வேல் தரு குமரரும்-வேல் எறிதலில் வல்ல காளையரும், வென்றி வேந்தரும்-வெற்றியையுடைய சிற்றரசர்களும், காற்று எறி கடல் என-காற்றினால் மோதப்பட்ட கடல்போல, களிப்பின் ஓங்கினர்-மகிழ்ச்சி மேலிட்டார்கள்.

சாரும் முன் என்றது விரைவு குறித்த வழுவமைதி. குமரர்-காலாட் படைவீரர்; மைந்தர்-படையைச் சார்ந்த ஆடவர்; மகளிர்-அவர்களுடைய மனைவிமாரும் பிறரும்; பொதுவாக நகர மக்களில் ஆடவரும் பெண்டிரும் எனலும் ஆம். இராமபிரானது திருமண நிகழ்ச்சி பற்றி மகிழாதார் இல்லையாதலால் இவ்வாறு கூறினர்.

(பி - ம்.) 1. சார்தலும். 2. கோளின் மைந்தரும்; மாந்தரும்.
3. வேற்றரும் வருதினி வெள்ள வேந்தரும்; வேற்றருந் திறற்படை வெள்ள வேந்தரும்; வேற்றரும் வீரரும். (9)

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை; இந்நிலையத்தின் முந்திய பாலகாண்டப் பதிப்பில் இது மிகைப் பாடலாகக் காட்டப்பட்டுள்ளது; எனினும், தொடர்புக்குப் பொருத்தமுடையதாய்ப் பல பிரதிகளிலுங் காணப்படுவதால் இதனை இங்கு மூலத்திலேயே சேர்க்கலாயிற்று.

சில பிரதிகளில் இதன்பின் 'கார்முகப் படலம் முற்றும்' என்று காணப்படுகின்றது.

## சேனையின் எழுச்சி

817. விடைபொரு நடையினுன் சேனை வெள்ளமோர்
இடையிலை யுலகினி லென்ன வீண்டியக்
கடையுக முடிவினி லெவையுங் காற்படப்
புடைபெயர் கடலென வெழுந்து போயதே.

விடை பொரு நடையினுன்-காளை போன்ற(பெருமித) நடையையுடைய தசரத மன்னனது, சேனை வெள்ளம்-பெரும்படைக் கூட்டமானது, உலகினில் ஓர் இடை இலை என்ன-உலகத்திலே இனிச் சிறிதும் இடமில்லை யென்னும்படி, ஈண்டி-(வந்து) கூடி, கடையுகம் அ முடிவினில்-ஊழியின் இறுதியாகிய அந்த முடிவுக்காலத்தில், எவையும்-(சர அசரமாகிய) எல்லாப் பொருள்களும், கால் பட-தன்னடிப் பட்டு அழியுமாறு, புடை பெயர் கடல் என-புடை பெயர்ந்து(பொங்கி) வருகின்ற பெரும்புறக் கடல் போல, எழுந்து போயது-(அயோத்தியினின்றும்) புறப்பட்டுச் செல்லலாயிற்று. ஏ, ஈற்றசை.

படையின் மிகுதியையும், அவை மகிழ்ச்சியாற் பொங்கியெழுந்ததையும் இவ்வாறு உயர்த்திக் கூறினுர்.

(பி - ம்.) 2. இடமிலை; உலகினின்; உலகென; ஈண்டிய.
3. முடிவினின்; கால்பட. 4. பெயர்ந்து போயதே. (10)

## தேரும் யானையும்

818. சில்லிட முலகெனச் செறிந்த தேர்கடாம்
புல்லிடு சுடரெனப் பொலிந்த வேந்தரால்
எல்லிடு கதிர்மணி யெறிக்கு மோடையால்
வில்லிடு முகிலெனப் பொலிந்த வேழமே.

உலகு சில் இடம் என செறிந்த தேர்கள் தாம்-உலகம் சிறிதிடமேயுடையது என்று சொல்லும்படி நெருங்கிய தேர்க்கூட்டம், வேந்தரால்-(அவற்றில் அமர்ந்திருந்த) அரசர்களால், புல்லிடு சுடர் என-சூரியனைத் தம்மிடத்தே பெற்றிருப்பனபோல, பொலிந்த-(சிறந்து) விளங்கின; வேழம்-யானைகள், எல் இடு கதிர் மணி எறிக்கும் ஓடையால்-சூரியன்போல ஒளியுடைய இரத்தினங்கள் பிரகாசிக்கும் நெற்றிப்பட்டங்களால், வில் இடும் முகில் என பொலிந்த-வானவில்லினெளியை வீசும் மேகங்கள் போல விளங்கின.

சூரியனுடைய தேர்போல விளங்கும் தேர்களாலும், வானவில்லோடு கூடிய மேகம்போன்ற யானைகளாலும், பூமியே ஆகாயமாக விளங்கிற்று எனச் சிறப்பிக்கின்ருர்.

'எல்லிடு கதிர்மணி...........வேழமே': ஒப்பு: கிட்கிந்தா: 441.

(பி - ம்.) 1. தேர்களும்; தேர்களிற்; தேர்களுர்.
2. புல்லிடுஞ்; புல்லிய; பொலிந்து; வேந்தராய்; வேந்தர்கள்.
3. சுடர்மணி; திரண்மணி. (11)

## குடைகளும் கொடிகளும்

819. கால்விரிந் தொளிர்குடை கணக்கி லோதிமம்
பால்சிறை விரித்துவிண் பறப்ப போன்றன
மேல்விரிந் தெழுகொடிப் படலம் விண்ணெலாம்
தோலுரிந் துகுவன போன்று தோன்றுமே.

கால் விரிந்து ஒளிர் குடை-காம்புகளுடன் விரிந்து வெள்ளொளி பரப்பும் குடைகள், கணக்கு இல் ஓதிமம்-கணக்கில்லாத அன்னப் பறவைகளானவை, பால் சிறை விரித்து-பால் போன்ற தம் சிறகுகளை விரித்துக்கொண்டு, விண் பறப்ப போன்றன-ஆகாயத்திலே பறப்பன போன்று காணப்பட்டன; மேல் விரிந்து எழு கொடி படலம்-மேலே உயர்ந்து பரந்துள்ள கொடிகளின் கூட்டம், விண் எலாம்-ஆகாய முழுதும், தோல் உரிந்து உகுவன போன்று-தோல் உரிந்து சிந்துவது போல, தோன்றும்-காணப்படும். ஏகாரம், ஈற்றசை.

குடைகளின் மிகுதியையும் கொடிகளின் மிகுதியையும் தற்குறிப் பேற்ற மாகக் கூறுகின்றார்.

மேல் எழுந்து விரி கொடி என மாற்றிப் பொருள் கொள்க. பாற்சிறை எனற்பாலது எதுகை நோக்கி இயல்பாயிற்று.

(பி - ம்.) 1. கானிமிர்ந்து; எழுகுடை; உயர்குடை.
2. பால்விரிந்ததுவெனப்; பால்விரிந்தனவெனப்; பால்விரித்தனவெனப்; பால்விரிந்தனையன; பரந்த போன்றன.
3. மேல் விரிந்தொளிர்; மேனிரைந்தன; மேனிமிர்ந்தெழு; மேனிரைத் தெழு; படலை மேனிவான்.
4. தோலிரிந்தனவெனப்; தோலுரித்தனவெனப்; தோலுரித்தனையன; தோலுரிந் துதிர்வன; தோலுரிந்தனவெனப்; பொலிந்து தோன்று மால். (12)

820. நுடங்கிய துகிற்கொடி நூழைக் கைம்மலைக்
கடங்கலுழ் சேனையைக் கடலி தாமென
இடம்பட வெங்கணு மெழுந்த வெண்முகில்
தடம்புனல் பருகிடத் தாழ்வ போன்றவே.

நுடங்கிய-(யானைச் சேனையின் மீது பிடிக்கப்பட்டு) அசைந் தாடிய, துகில்கொடி-(வெண்ணிறமான) சீலைக்கொடிகள், இடம் பட-விசாலமாக, எங்கணும் எழுந்த-ஆகாயமெங்கும் பரவி யெழுந்த, வெள் முகில்-வெண்மேகங்கள், கடம் கலுழ்-மதநீர் ஒழுகுகின்ற, நூழை கைமலை சேனையை-துளைபொருந்திய துதிக்கையையுடைய மலை போன்ற யானைப் படைத்தொகுதியை, இதுகடல் ஆம் என-இதுகட

வாகும் என்று கருதி, தட புனல் பருகிட-மிக்க நீரைப் பருகுதற்கு, தாழ்வ போன்ற-(அப்படைக்கடலைக் குறித்துக்) கீழிறங்குவன போன் றிருந்தன.

கருநிறமுடைய யானைகள், மிக்க அளவினவாய், மதநீரையு மொழுக்குதலின், அவ்யானைக் கூட்டம் கருங்கடல் போலத் தோற்ற மளிக்க, அதனைக் கடலென்று கருதி வெண் மேகங்கள் நீருண்ண வருவன போன்றிருந்தன, கொடிச்சீலைப் பரப்பின் தோற்றம் என்றது தன்மைத் தற்குறிப்பேற்றவணி. கைம்மலை, அன்மொழித் தொகை.

(பி - ம்.) 1. நுழைக்கை மாமலை. 3. எழுந்து வெண்முகில்; விண்முகில்.
4. தடங்கடல் போன்றதே; போன்றன. (13)

### பீலிக்குடைகளும் பேரிகைகளும்

821. இழையிடை யிளவெயி லெறிக்கு மவ்வெயில்
தழையிடை நிழல்கெடத் தவழு மத்தழை
மழையிடை யெழில்கெட மலரு மம்மழை
குழைவுற முழங்கிடுங் குழாங்கொள் பேரியே.

இழை இடை இளவெயில் எறிக்கும்-(படையிலுள்ளார் பூண்ட) அணிகலன்களினின்றும் இளவெயில் போன்ற ஒளிவீசும்; அ வெயில்-அவ்விளவெயிலானது, தழை இடை நிழல் கெட-மயிற்பீலிக் குடைக ளினின்றும் பரவும் நிழல் கெடும்படி, தவழும்-எங்கும் பரவும்; அ தழை - அப் பீலிக்குடைகள், மழை இடை எழில் கெட-கருமேகக் கூட்டத்தினிட முள்ள அழகு கெடும்படி, மலரும்-பரந்து தோன்றும்; குழாம் கொள் பேரி-கூட்டமான பேரிகைகள், அ மழை குழைவு உற-அம் மேகங்கள் நாணும்படி, முழங்கிடும்-பேரொலி யெழுப்பும்.

பீலிக்குடை, சேனையின் விருதுகளுள் ஒன்று. மயில்தோகையா லான பீலிக்குடைகள், நீல நிறத்தோடு வேறு சிலநிறங்களுந் தோற்று வித்தலின், வானவில்லிடும் மேகங்களினழகையும் விஞ்சின; ஆபர ணங்களின் ஒளி அவற்றிடையே வீசுதலால் அவை மேலும் அழகு தந் தன. இங்கே நிழல் கெட வெயில் தவழும் என்றது ஒரு நயம். இயற் கையான மேகங்களி னழகை இப்பீலிக்குடைப் பரப்புத் தோற்கச் செய்ய, அம்மேகங்களின் இடியோசையைப் பேரிகைகள் தோற்பித் தன என்றிவ்வாறு ஒன்றையொன்று விஞ்சுவதாகக் கூறியது ஏகாவளி யென்னும் அணியாகும்.

தழை: 'கொடி தழை' (ஆரணிய 409); 'விழிக்குந்தழைப் பீலி' (தே. சுந்தர. அறத்துறை); 'தழைகளுந் தொங்கலுந் ததும்பி' (திவ். பெரியாழ். 3. 4. 1.); 'தழையுலாங்கையர்' (திருவிளை. 23: 1.)

(பி - ம்) 1. இழையிடை; இழையுடை; இழைவிட; எறிப்ப; வெவ்வெயில்.
2. தழையிட; தழையிடு; தழையுடை; தவழ்வ; தழுவும்.
3. மழையிட; மழையுடை; நிழல்கெட; இடர்கெட; மலர்வ.
4. குழைவுறம்; குழையுற முழங்குறும். (14)

### மகளிர் ஊரும் பரிகளும் பிடிகளும்

822. மன்மணிப் புரவிகண் மகளி ரூர்வன
அன்னமுந் தியதிரை யாறு போன்றன
பொன்னணி புணர்முலைப் புரிமென் கூந்தலார்
மின்னென மடப்பிடி மேகம் போன்றவே.

மகளிர் ஊர்வன-பெண்கள் ஏறிச் செலுத்துவனவாகிய, மன் மணி புரவிகள்-பொருந்திய கிண்கிணிகளையணிந்த குதிரைகள், அன்னம் உந்திய திரை-அன்னப்பறவைகளைத் தாங்கி அசையும் அலைகளையுடைய, ஆறு போன்றன—; பொன் அணி புணர் முலை-பொன்னுபரணங்களையணிந்த நெருங்கிய தனங்களையும், புரி மெல் கூந்தலார்-பின்னப்பட்ட மெல்லிய கூந்தலையுமுடைய பெண்கள், (யானைகள் மீதமர்ந்து செல்வோர்), மின் என-மின்னற் கொடிகள்போலத்தோன்ற, மட பிடி மேகம் போன்ற-(அவர்களைச் சுமந்து செல்லும்) இளமையான பெண்யானைகள் மேகங்களைப் போலத் தோன்றின. பொன்னணி-பொன்னிறமான தேமல் பரந்த என்றலும் ஆம்.

குதிரைகளின் மேல் உள்ள பெண்கள்-அன்னங்கள்; குதிரைகளின் கிண்கிணியோசை-அன்னங்களின் குரலோசை; குதிரைகள் மிகப்பலவாய் ஒன்றன்பின் ஒன்று தொடர்ந்து செல்லுங்காட்சி-ஆற்றொழுக்கு. (மற்றொருவகை): யானைகளின் மீதமர்ந்து செல்லும் மகளிர்-மின்னற் கொடிகள்; அவர்களைத் தாங்கிச் செல்லும் பெண் யானைகள்—மேகக் கூட்டம். மகளிர் பெண்யானைகளின் மீது செல்லுதலே மரபு. இதுவும் தற்குறிப்பேற்றவணி.

(பி - ம்.) 1. மன்னணிப்; மன்னணி; மன்னெடும்; மன்னிய.
2. உந்தியநிரை; போல்வன.
3. பொன்னணிப்; பொன்மணிப்: கூந்தலாள்.
4. போன்றதே; போன்றன. (15)

### சேனைகள் சென்ற வழியின் தோற்றம்

823. இணையடுத் திடையிடை நெருக்க வேழையர்
துணைமுலைக் குங்குமச் சுவடு மாடவர்
மணிவரைப் புயங்களிற் சாந்து மாகிமெல்
அணையெனப் பொலிந்ததக் கடல்செ லாறரோ.

அ கடல் செல் ஆறு-அந்தச் சேனைக்கடல் சென்ற வழி, இடை இடை-இடங்கள் தோறும், (சனத்திரளின்மிகுதியால்),இணை அடுத்து-(ஒருவரோ டொருவர்) இணைதல் பொருந்தி, நெருங்கி-நெருங்கி உராய்தலால், ஏழையர்-மகளிரின், துணை முலை-இரண்டு தனங்களிலும் அப்பப் பெற்ற, குங்குமம் சுவடும்-குங்குமக் குழம்பு (உலர்ந்து உதிர்தலால் ஆகிய) அடையாளமும், ஆடவர்-ஆண்மக்களின், மணி வரை புயங்களில் சாந்தும் ஆகி-அழகிய மலைபோலுந் தோள்களில்

பூசப்பெற்ற சந்தனக் கலவை உதிர்தலால் ஆன அடையாளமுமாய், (இவைகள் கலந்து தரையில் படிதலால்), அணை என பொலிந்தது-பஞ்சணை விரித்தாற் போலக் காணப் பட்டது. அரோ, அசை.

உலர்ந்த குங்குமக் குழம்பும் சந்தனக் கலவையும் ஒருவரோ டொருவர் உராய்தலால் உதிர்ந்து தரையில் படிய, அவ்வாறு படிந்த விடங்கள் மெத்தென்று, பஞ்சணை விரித்தாற் போன்றிருந்தன என்று கற்பிக்கின்றார். கடல்செல் ஆறு என்பதில் தொனிக்கும் நயம் காண்க.

(பி - ம்.) 1. இணையெடுத்து; இணையுடுத்து; எடுத்திடை; நெருக்கி; நெருக்கும்.
3. இணைவரைப்; புயத்துமென்; சாந்துமாழ்கிமெல்; சாந்துமற்றுமெல்; சாந்துமற்றும்போய்; சாந்துமாகின்மெல்.
4. கடல்செல்லாறரோ; கடற்செலாறரோ; கடல்செலாறெல்லாம். (16)

824. முத்தினுன் முழுநிலா வெறிக்கு மொய்ம்மணிப்
பத்தியா லிளவெயில் பரப்பும் பாகினும்
தித்தியா நின்றசொற் சிவந்த வாய்ச்சியர்
உத்தரா சங்கமிட் டொளிக்குங் கூற்றமே.

பாகினும்-சர்க்கரைப் பாகினும் மேலாக, தித்தியாநின்ற சொல்-இனிக்கின்ற சொற்களைப் பேசுகிற,சிவந்த வாய்ச்சியர்-(கொவ்வைப் பழம் போலச்) சிவந்த வாயையுடைய மகளிர், உத்தராசங்கம் இட்டு-தங்கள் மேலாடைகளைஇட்டு,ஒளிக்கும்-மறைத்து வைக்கின்ற, கூற்றம் -(ஆடவர்க்கு) யமனைப் போன்ற தனங்கள், முத்தினுல்-(மேலே யணிந்த) முத்து மாலைகளால்; முழுநிலா எறிக்கும்-நல்ல நிலவொளியை வீசும்; மொய் மணி பத்தியால்-(இரத்தினுபரணங்களில் பதித்த) நெருங்கிய மணிகளின் வரிசையால், இளவெயில் பரப்பும்-(வெம்மையில்லாத) வெயிலொளியையும் வீசும்.

முத்து மாலைகளால், குளிர்ந்த நிலவொளி போன்ற வெள்ளொளியும், மாணிக்கங்களால் இளவெயில் போன்ற செவ்வொளியும் ஒருங்கே வெளிப்படுகின்றன. நிலவும் வெயிலும் ஒருங்கே யெறிக்கு மென்றது ஒரு நயம். தனங்கள் ஆடவர்க்கு மரண வேதனை போன்ற துன்பந் தருதலால் 'கூற்றம்' என்றார்.

உத்தராசங்கம்: வடசொல். தனங்களைக் கூற்றமெனல்: சீவக. 637, 2457; தனங்களாகிற கூற்றத்தை உத்தராசங்கமிட்டு மறைத்தல்: சீவக. 2457. தித்தியாநின்ற சொற் சிவந்த வாய்ச்சியர்: ஒப்பு: 'தித்தியாநின்ற செங்கனி வாய்ச்சியர்' கிட்கிந்தா. 573.

(பி - ம்.) 1. முழுநில வெறிப்ப; முழுநிலா விரிக்கும்.
2. பரப்பப்; பாகிலும்; பாங்கினும்: பண்புடன்; பரப்புமாகிலும்.
3. செவந்த.
4. உத்தராசங்கம்விட்டு; உத்திராசங்கமிட்டு; உத்தரீகத்தினில்; உத்தரீகத்தினுல்; உத்தரீகங்கமிட்டு; உத்தரீகச்சங்க மொளிருந்தோற்றமே; ஒளிக்குங் கூற்றையே. (17)

### ஆடவர் செல்லும் காட்சி

825. வில்லினர் வாளினர் வெறித்த குஞ்சியர்
கல்லினைப் பழித்துயர் கனகத் தோளினர்
வல்லியின் மருங்குலார் மருங்கு மாப்பிடி
புல்லிய களிறென மைந்தர் போயினர்.

வெறித்த குஞ்சியர்-(மலர்மாலை சூடுதலால்) மணம் பொருந்திய மயிர்முடி யுடையவரும், கல்லினை பழித்து உயர்-மலையையும் (தமக்கீடாகாதென்று) தாழ்வுபடுத்தி மேம்பட்ட, கனகம் தோளினர்-பொன் போன்ற புயங்களையுடையவருமான, மைந்தர்-வலிமை மிக்க ஆடவர்கள், வில்லினர்-வில்லைத் தாங்கியவரும், வாளினர்-வாளைத்தாங்கியவருமாகி, மா பிடி புல்லிய களிறு என-சிறந்த பெண் யானையை அணைத்துச் செல்லும் ஆண் யானைபோல, வல்லியின் மருங்குலார் மருங்கு-கொடிபோலும் இடையினையுடைய பெண்களின் பக்கத்திலே, போயினர்—.

குஞ்சி-ஆண்களின் தலைமயிர். மகளிர் தொகுதிக்குக் காவலாக ஆடவர் சென்றனரென்க. ஆடவர் தத்தமக்குரிய மனைவிமாரைத் தழுவிச் சென்றன ரெனவுங் கூறுவர். வெறித்த-நெருங்கிய என்பாருமுளர்.

(பி - ம்.) 1. வேர்த்த குஞ்சியர்; வேய்ந்த குஞ்சியர்.
2. கல்லினை யழித்துயர்: கனத்த; கவின்கொள்; கலவைத்.
3. வல்லிய; வல்லியம்; வல்லியாம்; மருங்குலர்; மருங்கினர்.
4. மாந்தர் போயினர். (18)

### மங்கையர் செல்லும் சிவிகைகள்

826. மன்றலம் புதுமலர் மழையிற் சூழ்ந்தெனத்
துன்றிருங் கூந்தலார் முகங்க டோன்றலால்
ஒன்றல பலமதி யூரு மானம்போல்
சென்றன தரளவான் சிவிகை யீட்டமே.

தரளம் வான் சிவிகை ஈட்டம்-சிறந்த முத்துப்பல்லக்குக்களின் கூட்டம், (அவற்றில் அமர்ந்துள்ள), மன்றல் அம் புதுமலர் மழையில் சூழ்ந்தது என-மணம் பொருந்திய அழகிய புதிய பூக்கள் மேகத்திலே படிந்துமூடியதுபோல,துன்று-(மலர்கள்)செறிந்துள்ள,இருகூந்தலார்-கரிய கூந்தலையுடைய மகளிரின், முகங்கள் தோன்றலால்-முகங்கள் மட்டும் (வெளியே) தெரிவதனால், ஒன்று அல பல மதி ஊரும்-ஒன்றல்லாத, மிகப்பலவான பூர்ண சந்திர விம்பங்கள் ஏறிச் செல்கின்ற, மானம்போல்-விமானங்கள்போல, சென்றன—.

இங்குக் குறிக்கப்பெற்றவர் அரச மங்கையர் போலும். அம் மங்கையர் திரையிட்ட சிவிகைகளில் அமர்ந்து, திரைகளை நீக்கிக்

கொண்டு தம் முகம் மட்டும் வெளியே தெரியுமாறு பார்த்தலின் 'முகங்கள் தோன்றலால்' என்றூர்.

'மலர் மழையிற் சூழ்ந்தென' என்றதும், 'மதி ஊரும் மானம் போல்' என்றதும் இல்பொருளுவமை. சூழ்ந்தென: தொகுத்தல் விகாரம். மானம்; முதற்குறை.

(பி - ம்.) 1. மழையுஞ் சூழ்ந்தென. 2. துன்றிய கோதையர்.
3. ஒன்றலா முழுமதி; ஒன்றிய பன்மதி: ஊரும் வானம்போல்; ஊர் விமானம்போல்; உருவவானம்போல்; ஒளிர்விமானம்போல்; ஒளிர மானம்போல்.
4. சென்றனவாலவர்; தரனவொண்; தரளவெண்; தரளவண்; தான வான்; கானவான். (19)

## யானைகள்

827. மொய்திரைக் கடலென முழங்கி மூக்குடைக்
கைகளிற் றிசைநிலைக் களிற்றை யாய்வன
மையலுற் றிழிமத மழைய ருமையால்
தொய்யலைக் கடந்தில சூழி யானையே.

இழி மதம் மழை-(தம்முடம்பினின்றும்) வழிகின்ற மதநீர்ப் பெருக்கு, இடை அருமையால்-இடைவிடாது பெருகுதலால், (உண்டான) தொய்யலைகடந்தில-சேற்றைக் கடக்கமாட்டாதனவாகிய, சூழி யானை-முகபடா மணிந்த ஆண் யானைகள், மையல் உற்று-மத மயக்கங்கொண்டு, மொய் திரை கடல் என முழங்கி-நெருங்கிய அலைகளையுடைய கடல்போலப் பிளிறிக்கொண்டு, மூக்கு உடை(ய) கைகளின்-மூக்கின்தன்மையும் பொருந்திய துதிக்கைகளால், திசை நிலைகளிற்றை ஆய்வன-எட்டுத் திக்குக்களிலும் நிலைபெற்ற திக்கு யானைகளைத் துழாவித் தேடுவன வாயின.

மதநீர்ப் பெருக்கால் உண்டாகிய சேற்றின் மிகுதியைக் கடக்க மாட்டாத யானைகள், வறிதே யிராமல், 'பிளிறுதலோடு துதிக்கையை நீட்டி, எதிர்த்துப் பொருதற்குத் திசை யானைகளைத் தேடுகின்றன' என உயர்வுநவிற்சியாகக் கூறுகின்றூர். யானைகளுக்குத் துதிக்கையே கையாகவும் மூக்காகவும் உதவுதலின் 'மூக்குடைக்கை' என்றூர்.

மூக்குடைக்கை: 'நெடுமூக்கிற்கைக்கரி' (ஆனைக்காப்.கடவுள்). யானை திசைநிலைக் களிற்றை ஆய்வன: ஒப்பு: விக்கிரம. உலா.60-62

(பி - ம்.) 1. முழங்கு மூக்குடைக்.
2. திசைநிலைகளிற்றை; திருநிலைகளிற்றை.
3. மையலூற்றிழி, மையலிலிரு; மையலிற்றரு; மையினிற் சொரி.
4. தொய்யிலைக்கடந்தில; தொய்யலிற் கடந்தில: தொய்யலைக்கடந்தில்ல. (20)

### குதிரைகள்

828. சூருடை நிலையெனத் தோய்ந்துந் தோய்கிலா
வாருடை வனமுலை மகளிர் சிந்தைபோல்
தாரொடுஞ் சதியொடுந் தாவு மாயினும்
பாரிடை மிதித்தில பரியின் பந்தியே.

பரியின் பந்தி-குதிரை வரிசைகள், தாரொடும்-கிண்கிணி மாலையோசையோடும், சதியொடும்-(தாள வொத்துக்கேற்ப) அடி வைத்தலோடும், தோய்ந்தும் தோய்கிலா-(ஆடவரை உடம்பாலே) சேர்ந்தும் (மனத்தால்) சேராத, வார் உடை வனம் முலை மகளிர்-கச்சணிந்த அழகிய தனங்களையுடைய விலைமாதருடைய, சிந்தை போல்-(ஒரு நிலைகொள்ளாத) மனம்போல, தாவும் ஆயினும்-தாவிச் சென்றாலும், சூர் உடை நிலை என-பேய்களின் தன்மைபோல, பார் இடை மிதித்தில-தரையிலே கால்படாதனவாயின.

பரியின் பந்தி, தாரொடும் சதியொடும், மகளிர் சிந்தைபோல் தாவுமாயினும், சூருடை நிலை எனப் பாரிடை மிதித்தில எனக் கூட்டுக. விலை மாதர் மனம் ஒருவரிடத்தே நிலைகொள்ளாமல், (பொருள் கருதிப்) பலரிடம் தாவிக்கொண்டிருத்தல் இயல்பாதலின், அதனைக் குதிரைகள் சிறிதும் நிலைகொள்ளாமல் தாவுதலுக்கு உவமையாக்கினார். அடிவைப்பின் விரைவினால் கால்கள் தரையிற் படுதல் புலப் படாமையின், 'சூருடை நிலையென' என்றார். சூர்-அச்சந்தருந் தெய்வம்; பேய். பேய்களின் உருவம் கட்புலனாகாதவாறுபோல, விரைவினால் குதிரைகளினுருவமும் புலப்படாதனவாயின எனக் கொள்ளுதலும் ஒன்று. இவ்வாறன்றி, குதிரைகளின் செலவிற்கு, சூருடை நிலை, மகளிர் சிந்தை ஆகிய இரண்டையும் உவமையாக்கியும், சூர்-தெய்வம் எனப் பொதுவகையாகவும் கூறுவாருளர்.

(பி - ம்.) 1. தோய்ந்து தோய்கலா; தோயலா; தோய்விலா. 2. வாரிடை.
3. கதியொடும்: தழுவும்: ஆகிலும்; ஆகினும்.
4. மிதிக்கில; மதிக்கில: பரியின் வெள்ளமே. (21)

### ஊடல்கொண்ட மகளிர்

829. ஊடிய மனத்தின ருருத நோக்கினர்
நீடிய வுயிர்ப்பினர் நெரிந்த நெற்றியர்
தோடவிழ் கோதையுந் துறந்த கூந்தலர்
ஆடவ ருயிரென வருகு போயினர்.

ஊடிய மனத்தினர்-ஊடல் கொண்ட மனமுடையவரான (சில) மாதர், உருத நோக்கினர்-(தம் கணவன்மார் மீது) பொருந்தாத பார்வையுடையவரும், நீடிய உயிர்ப்பினர்-பெருமூச்செறிபவர்களும், நெரிந்த நெற்றியர்-(கோபத்தால்) சுருங்கிய நெற்றியுடையவரும், தோடு அவிழ் கோதையும் துறந்த கூந்தலர்-இதழ்கள் விரிந்த

பூமாலையையும் நீத்த(பூச்சூடாத) கூந்தலுடையவருமாகி, ஆடவர் உயிர் என-(முன் செல்லும்) ஆடவருடைய உயிர் (தொடர்ந்து செல்வது)போல, அருகு போயினுர்-அவ்வாடவரின் அருகே செல்வா ராயினர்.

தம் கணவன்மாரிடம் ஊடல்கொண்ட மாதரும், இராம பிரான் திருமணச்செய்தி கேட்டவுடன் தம் கணவரைத் தொடர்ந்து செல்லலாயினர் என்க. முதன் மூன்றடிகளில் ஊடிய மகளிரின் இயல்பான நிலை கூறினுர். ஊடற்காலத்தே, தலையிற் சூடிய பூவையும் எடுத்தெறிந்த மகளிர், அந்நினைவின்றியே கணவரைத் தொடர்ந்து சென்றனரென்க. இல்வாழ் மாதருக்கு இன்றியமையாத பூவையும் துறந்தவர் என்றதனுல் உம்மை உயர்வு சிறப்பு. இனி, 'ஆடவர் உயிரென' என்பதற்கு, 'ஆடவரே தம்முயிர் என்று கருதி' எனவுரைத்தலுமாம். 'மனையுறை மகளிர்க் காடவ ருயிரென' (குறுந். 135).

(பி - ம்.) 1. உறுத்த நோக்கினர்: உறுத்து நோக்கினர்.
2. நெறித்த; நெறிந்த; நெரித்த: நெளித்த.
3. தோடவிழ் கோதையர்; தோடவிழ் தொடையலும்; மாலையும்; மாமலர்; தோய்ந்த கூந்தலார். (22)

யானைகள் செல்லுதல்

830. மாறெனத் தடங்களைப் பொருது மாமரம்
ஊறுபட் டிடவிடை யொடித்துச் சாய்த்துராய்
ஆறெனச் சென்றன வருவி பாய்கவுள்
தாறெனக் கனலுகு தறுகண் யானையே.

அருவி பாய் கவுள்-மதநீர் அருவிபோலப் பாயும் கன்னத்தை யுடையனவாய், தாறு என-அங்குசம் என்ற அளவிலே, கனல் உகு-(கண்களில்) தீப்பொறி சிந்துகின்ற, தறுகண்-அஞ்சாமையுடைய, யானை-பல யானைகள், மாறு என-தமக்குப் பகையாக (தடையாக) உள்ளன வென்று, தடங்களை-(வழியில் உள்ள) கரைகளை, பொருது-இடித்துத் தள்ளியும், மா மரம்-பெரிய மரங்கள், ஊறுபட்டிட-நாசமாகும் வண்ணம், இடை ஒடித்து சாய்த்து உராய்-(அவற்றை) நடுவிலே முறித்தும், வேரோடு சாய்த்தும், அவற்றிலே உராய்ந்து கொண்டும், ஆறு என-ஆறுகளைப்போல, சென்றன—.

கரைகளை இடித்தலும், மரங்களை முறித்து, சாய்த்து, உராய்ந்து, செல்லுதலும், ஆற்றிற்கும் யானைக்கும் பொதுவான செயல்கள். தடம்-மலைப் பக்கமும் ஆம். தாறு-இருப்புமுள்; ஆகு பெயராக்கி அம்முள் பொருத்தப்பெற்ற குத்துக்கோல் என்றலும் ஆம். யானைகள், தம்மீது அங்குசம், குத்துக்கோல் முதலிய ஆயுதங்கள் தாக்குதலைப் பொரு என்றபடி.

(பி - ம்.) 1. பொருத; பொருந்து.
2. ஊறுபட்டிடையிடை யொடியச்; ஒழியச்; ஓடிச்; சாய்த்துயர்.
3. ஆறெனச் செல்வன; சென்றவை.
4. சேறெனக்; கனலுமிழ்; கனலுறும்; கனன்றன; தறுகட் குன்றமே; சிறுகண் வேழமே. (23)

## சேனைப் பெருக்கு

831. உழுந்திட விடமிலை யுலக மெங்கணும்
அழுந்தலி லுயிர்க்கெலாங் கொழுகொம் பானவன்
எழுந்தில னெழுந்திடைப் படருஞ் சேனையின்
கொழுந்துபோய்க் கொடிமதின் மிதிலை கூடிற்றே.

உலகம் எங்கணும்-தன் ஆளுகைக்குட்பட்ட இடம் முழுதிலும், உயிர்க்கு எலாம்-(உள்ள) சீவராசிகளுக்கெல்லாம், அழுந்தல் இல் கொழுகொம்பு ஆனவன்-(அவை துன்பத்துள்) அழுந்துதல் இல்லாமைக்குக் காரணமான கொழுகொம்பாயிருந்த தசரத சக்கரவர்த்தி, எழுந்திலன்-(இன்னும் தன்னிருப்பிடம் விட்டுப்) புறப்பட்டிலன்; (ஆனால்), எழுந்து-(அவன் கட்டளையின்படி முன்னே) புறப்பட்டு, இடை படரும் சேனையின் கொழுந்து-(அயோத்திக்கும் மிதிலைக்கும்) இடையே சென்றுகொண்டிருந்த சேனையின் முன்னணி, போய்—, கொடிமதில் மிதிலை கூடிற்று-கொடிகள் நாட்டப்பெற்ற மதில்கள் சூழ்ந்த மிதிலை நகரத்தை எட்டிவிட்டது; உழுந்து இட இடம் இலை-(அச்சேனையின் இடையிலே) ஓர் உழுந்தை இடுவதற்கும் இடமில்லை.

சக்கரவர்த்தி, தன் சேனைகள் முழுதும் முன்னே செல்லப் பணித்து, தான் கடைசியிற் செல்லக்கருதியவன், தான் புறப்படுந் தருணம் வருதற்கு முன்னேயே, சேனையின் முன்னணி மிதிலையை எட்டிவிட்டது என்றது, சேனை மிகுதியை உயர்வு நவிற்சியாகக் கூறியவாறு. 'உழுந்திட இடமிலை' என்றது சேனையின் நெருக்கத்தைக் குறித்தது. கூட்ட மிகுதியைக் குறித்தற்கு, 'எள்ளுப் போட்டால் எள் விழாது' என்பது உலக வழக்கு. சேனையின் கொழுந்து என்ற தற்கேற்பப் படருஞ் சேனை என்றார். 'உழுந்துருள் பொழுதில் இது நிகழ்ந்தது' என விரைவு குறிக்குமிடத்தும் உழுந்து கூறப்படும்; கிட்கிந்தா. 291; சுந்தர. 52, 1032. சேனையின் கொழுந்து: 'இராக்கதத்தானைக், கொழுந்து முந்துவந் துற்றது' (யுத்த. 3614).

(பி - ம்.) 1. உழுந்திடும்; உழுந்துகும்.
2. அழுந்திய; அழுந்தலின்; அழுந்துமின்; அழுங்கலில்: அருட்கொம்பு; கொள்கொம்பு: ஆயினன்.
3. எழுந்தனன்: எழுந்திடப்; எழுந்திடை; எழுந்துமேற்.
4. நெடுமதில்; நெடுமதிள். (24)

### மகளிரைத் தாங்கிச் செல்லும் பண்டிகள்

832. கண்டவர் மனங்கள்கை கோப்பக் காதலின்
வண்டிமிர் கோதையர் வதன ராசியால்
பண்டிகழ் பண்டிகள் பரிசிற் செல்வன
புண்டரீ கத்தடம் போவ போன்றவே.

கண்டவர் மனங்கள்-தம்மைக் கண்ட ஆடவரின் மனங்கள், காதலின் கைகோப்ப-ஆசையோடு (தம்பால்) கவியும்படி, (வண்டிகளில் அமர்ந்துள்ள), வண்டு இமிர் கோதையர்-வண்டுகள் ஒலிக்கும் கூந்தலேயுடைய பெண்களின், வதன ராசியால்-முகக்கூட்டத்தினல், பரிசின் செல்வன-தனித் தன்மையுடன் செல்வனவாகிய, பண் திகழ் பண்டிகள்-(அவர்களேறிச்செல்லும்) வேலைப்பாடமைந்த வண்டிகள், புண்டரீகம் தடம் போவ போன்ற-(சிறிய) தாமரைத் தடாகங்கள் (புடை பெயர்ந்து) செல்வன போன்றன. ஏ-அசை.

பரிசின்-சிற்ருேடம்போல என்றும் ஆம்.

வண்டிகள் தாமரை பூத்த தடாகமாகவும், அவற்றிலுள்ள மகளிரின் முகங்கள் தாமரைப் பூக்களாகவும் உருவகிக்கப்பட்டன. வண்டிகள் அசையாது செல்லும் அழகிய தோற்றத்தை, தடாகங்கள் புடைபெயர்ந்து செல்வதாகக் கூறினர். கைகோத்தல்-கலத்தல்; ஒருவழக்கு. வதனராசி: வடசொற்ருெடர்.

(பி - ம்.) 1. மனங்கள் கண்; மனங்களி: கொடுப்பக் காதலின்; கொடுப்பவேரிய; வேரிய.
2. வண்டமர்; வண்டலர்: வதன ராசியர்; ராசிகள்; ராசியில்.
3. பண்டிகள் பண்டிகள்; பண்டிலம்பாண்டிலம்; பண்டியிற் பண்டியிற்; பண்டியபண்டிகழ்; பண்டிகள் பண்டியம்; பண்டிகள் பரியினிற்: பரிப்பிற் செல்வன; பரியிற் செல்வன; பரிவிற் செல்வன.
4. பொலிவபோன்றதே; பூத்தபோன்றவே. (25)

### ஒருமாதின் கடைக்கண் பார்வை

833. பாண்டிலின் வையத்தோர் பாவை தன்னெடும்
ஈண்டிய வன்பின னேகு வானிடை
காண்டலு நோக்கிய கடைக்க ணஞ்சனம்
ஆண்டகைக் கினியதோ ரமுத மாயதே.

பாண்டில் இன் வையத்து-எருதுகள் பூட்டப்பெற்ற இனியதொரு வண்டியிலே, ஓர் பாவை தன்னெடும்-சித்திரப் பாவைபோல்வாளொரு காதலியுடனே, ஈண்டிய அன்பினன்-(அவளிடத்துச்) செறிந்த அன்புடையவனுக, ஏகுவான்-செல்கின்ற ஓர் இளைஞன், இடை காண்டலும்-இடையே (அவளை அன்போடு) நோக்கியபோது, நோக்கிய-(எதிர் நோக்காக, அவள்) பார்த்த, கடை கண் அஞ்சனம்-கடைக்கண் பார்வையில் கசிந்த கரிய மையானது, ஆண் தகைக்கு-

ஆண்மையிற் சிறந்த அவ்விளைஞனுக்கு, இனியது ஓர் அமுதம் ஆயது-இனிய ஒப்பற்ற தேவாமுதம் போல் இருந்தது.

வண்டியில் தன் காதலியை அமர்த்தித் தானே வண்டியைச் செலுத்தும் ஓர் இளைஞன், இடையிடையே அவளைத் திரும்பி நோக்க, அவளும் காதற்குறிப்போடு இன்பக்கண்ணீர் பெருக அவனை எதிர் நோக்கினளாக, அதுகண்ட அவன்மனம் மகிழ்ச்சியிற் சிறந்தது என்க. கண்ணீரால் மை கரைந்து கன்னத்தில் வழிந்து ஓர் அழகு தருதலின், அஃது அவனுக்கு இன்பத்தை மிகுவிப்பதாயிற்று என்பார், 'அஞ்சனம் அமுதமாயது' என்றார். அமுதம் வெண்ணிறமுடையது; கருநிற முடைய பொருள்கள் அமுதம் எனப்படுவதில்லை; இங்கே கருநிற முடைய அஞ்சனம் அமுதமாயிற்று என்றது ஒருநயம். பாவை-ஆகு பெயர்.

முதலடியில், பாண்டிலின் 'வைத்ததோர்' என்ற பாடங் கொண்டு, இப்பாட்டுக்கு வேறு வகையிற் பொருள் கூறுவர்.

பாண்டிலின் வையத்து: 'காண்டகு வனப்பிற் காலியற் செலவிற், பாண்டில் வையம் பண்ணி' (பெருங்: 3. 64-5.)

(பி - ம்.) 1. பாண்டியின்; பாண்டிய; பாண்டியில்; பாண்டிலில்; வைத்தநோர்; வைத்வோர்; வைததொரு.
2. அன்பினைன்; அஙபினல்; அன்பினொடு; வனப்பினொடு; ஏதுவானிடைக்; ஏகுவாரிடை; கொழுநனை நோக்குவாளிடைக்.
3. நோக்கியக் கடைக்கண். 4. அமுதும்; ஆனதே; ஆயிற்றே. (26)

### காதலியைப் பிரிந்து சென்ற ஒருவன் தன்மை

834. பிள்ளைமா னோக்கியைப் பிரிந்து போகின்றான்
அள்ளனீர் மருதவைப் பதனி னன்னமாம்
புள்ளுமென் றாமரைப் பூவு நோக்கினான்
உள்ளமுந் தானுநின் றூச லாடினான்.

பிள்ளை மான் நோக்கியை-இளமான் போலும் பார்வையை யுடைய (தன்) மனைவியை, பிரிந்து போகின்றான்-(உடன்வர இயலாமையால் அவளைவிட்டுப்) பிரிந்து தனியே செல்லும் ஓராடவன், அள்ளல் நீர் மருதம் வைப்பு அதனில்-(வழியிடையேயுள்ள) சேறும் நீரும் நிறைந்த மருத நிலப் பகுதியில், அன்னம் ஆம் புள்ளும்-அன்னப் பறவைகளையும், மெல் தாமரை பூவும்-மென்மையான தாமரைப் பூக்களையும், நோக்கினான்-பார்த்தவனாய், (தன்மனைவி நினைவு வரவே), உள்ளமும் தானும் நின்று-தன் மனமும் தானுமாக(ச்செலவொழிந்து) நின்று, ஊசல் ஆடினான்-சஞ்சலப் படலானான்.

மனைவியை விட்டுத் தனியே சென்ற ஒருவன், வழியிலே அன்னப்பறவைகளையும் தாமரைப் பூக்களையும் கண்டபோது, தன் மனைவி

யின் நடையழகும் பாதங்களினழகும் நினைவிற்குவர, அவளும் தன்னுடன் வரவும் தான் அவ்வழகுகளைக்கண்டு மகிழவும் வாய்ப்பில்லையே யென்று மனங்கலங்கினன் என்க. அன்னங்கள் நடையழகையும் தாமரைப் பூக்கள் அடிகளின் அழகையும் நினைவூட்டின. தாமரைப் பூக்கள் முகமென்றலுமாம். உடன் வந்த மனைவி நெருக்க மிகுதியால் பிரிந்து செல்ல நேர்ந்ததென்றலும் ஆம். பெண்களும் நடந்து செல்லுதலுண்டென்பது: 840-பார்க்க.

(பி - ம்.) 1. பேர்கின்றான்.
2. அள்ளலில்: அள்ளன்மீன்; நள்ளிநீர்: அதனுள்; அன்னத்தின்.
3. புள்ளுமத்; புள்ளுமாத்: பூவின்; போதும்: நோக்கியே; நோக்கிநின்று.
4. தானுமே; தாமுமே: ஆடுவான்; ஆடினர். (27)

## சேனையின் தோற்றம்

(வேறு)

835. அங்கண் ஞாலத் தரசர் மிடைந்தவர்
பொங்கு வெண்குடை சாமரை போர்த்தலால்
கங்கை யாறு கடுத்தது காரெனச்
சங்கு பேரி முழங்கிய தானையே.

சங்கு-சங்குகளும், பேரி-முரசங்களும், கார் என முழங்கிய தானை-மேக கர்ச்சனை போலப் பேரொலி செய்த அப்பெரும் படையிலே, அம் கண் ஞாலத்து அரசர் மிடைந்து-அழகிய இடமகன்ற பூமியை ஆளும் பல அரசர்களும் (வந்து)கூட, அவர்-அவ்வரசர்களுடைய, பொங்கு வெண்குடை-(அழகு) மிகும் வெள்ளைக் குடைகளும், சாமரை-வெண்சாமரங்களும், போர்த்தலால்-(மேலே பரவிக்) கவிதலால், கங்கை ஆறு கடுத்தது-(அச்சேனை) கங்கையாற்றையொத்திருந்தது.

பெருஞ்சேனைத்திரளிலே வெண் குடைகளும், வெண்சாமரங்களும் மேலே நுரைபோலத் தோற்றமளிக்க, சேனைப்பரப்பு நீர்ப்பரப்பாக, அது கங்கையாறு போன்றிருந்தது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார்.

சங்கு, பேரி-சங்கும் பேரியும். சேனையில் சங்கும் பேரிகையும் முழங்குதல்: அயோத். 811. பேரிகை முழங்குதலை முன்னுங்கூறினர்: 821.

(பி - ம்.) 1. அரசுமிடைதலாற்; மிடைந்தவா; மிடைந்தயல்: மு; திங்கள் வெண் குடையான்கடற் சேனையுள்.
2. வெண்குடைச் சாமரை; முந்தலால். 3. கடுத்ததென்,
4. சங்கம்பேரி; சங்கபேரி: முழங்கின; தழங்கின; முழக்கிய: தாரையே; யானையே. (28)

836. அமர ரஞ்சொ லணங்கனை யாருயிர்
கவருங் கூர்நுதிக் கண்ணெனுங் காலவேல்
குமரர் நெஞ்சு குளிப்ப வழங்கலால்
சமர பூமியு மொத்தது தானையே

அம் சொல்-அழகிய சொற்களைப் பேசுகின்ற, அமரர் அணங்கு அனையார்-தேவமகளிர் போன்ற மங்கையர், உயிர் கவரும்-(நோக்கப் பட்டவருடைய) உயிரைக் கொள்ளவல்ல, கண் எனும்-(தங்கள்)கண் களாகிற, கூர் நுதி காலன் வேல்-கூரிய முனையையுடைய யமனது வேல் போன்ற வேலை, குமரர் நெஞ்சு குளிப்ப-இளைஞர்களுடைய மார்பிலே அழுந்துமாறு, வழங்கலால்-செலுத்துதலால், தானை-அப் படைத் தொகுதியானது, சமரம் பூமியும் ஒத்தது-போர்க்களத்தை யும் ஒத்திருந்தது.

முன்னே, 'கங்கையாறு போன்றது' என்றுகூறி, இங்கே 'சமர பூமியும் ஒத்தது' என்றதனால், உம்மை இறந்தது தழுவிய எச்சம்.

போர்க்களத்தில் நிகழும் செயலாகிய 'வேல்பாய்ச்சுதல்' இங் கும் நிகழ்தலின் 'சமரபூமி' என்றார். காலவேல்-முடிவுக் காலத்தைத் தரும் வேல் என்றலும் ஆம். 'கண்ணெனுங் காலவேல்' (அயோத். 271); 'காலவேலான்' (326).

(பி - ம்.) 1. அமிர்தவஞ்சொல்; அமுதவஞ்சொல்; அமிர்தவின்சொல்; அமரரஞ்சும்; அணங்கனையார்; அணங்கனையாரயிற்
2. கவருங்கூரயில்; கமருங்கூர்நுதிக்; கமரில்கூர்நுதிக்; கமரிலாநுதிக்.
3. நெஞ்சங்; நெஞ்சுட்; குளிக்க; களிப்ப; அழுங்கலால்; அழுந்தலால்; விழுங்கலால். 4. சமர பூமியை. (29)

### சேனையின் செறிவு

837. தோண்மி டைந்தன தூண மிடைந்தென
வாண்மி டைந்தன வான்மின் மிடைந்தெனத்
தாண்மி டைந்தன தம்மின் மிடைந்தென
ஆண்மி டைந்தன வாளி மிடைந்தென.

(சேனையில்), ஆளி மிடைந்த என-சிங்கங்கள் கூடினாற்போல, ஆள் மிடைந்தன-காலாட் படைகள் மிக நெருங்கின; தம்மில் மிடைந் தென-(படைவீரர்) தமக்குள்ளே மிகநெருங்குதலால், தாள் மிடைந் தன-அவர்களுடைய கால்கள் (ஒன்றோடொன்று) மிக நெருங்கின; தூணம் மிடைந்த என-தூண்கள நெருங்கினாற்போல, தோள் மிடைந் தன-(அவர்களுடைய) தோள்கள் (ஒன்டொன்று) செறிந்தன; வான் மின் மிடைந்த என-மேகத்தின் மின்னல்கள் ஒன்றுகூடினாற்போல, வாள் மிடைந்தன-(வீரர்களின்) வாட்படைகள் நெருங்கின.

1, 2, 4-ஆம் அடிகளில் வரும் 'மிடைந்தென'-தொகுத்தல் விகாரம். மூன்றாமடியில் உள்ள 'மிடைந்தென'-செய்தென என்னும்

வாய்பாட்டு வினையெச்சம் தூணம்: அம்-சாரியை. ஆள் என்பது காலாட் படைகளைக் குறித்தலின், 'மிடைந்தன' என அஃறிணைப் பன்மை முடிபேற்றது. நான்கடிகளுள்ளும் 'மிடைந்தன' என்பதும் மிடைந்தென என்பதும் திரும்பத் திரும்ப வருதல் சொற்பொருட்பின் வரு நிலையணி.

(பி - ம்) 1. தூணி: தூளி: மிடைந்தன.
2. வெண்மிடைந்திட; மிடைந்தென; மின்னின் மயங்கிடத்; மின்னு வயங்கிட.
3. த மிமிடைந்தென; தம்மின் மிடைந்திட; தம்மின் மயங்கிட: ஆண் மிடைந்தன வ டவர் போதலால்.
4. வாண்மிடைந்தன வாளிமிடைந்தன; மிடைந்தவே. (30)

## சில காளையரின் செய்திகள்

838. வார்கு லாமுலை வைத்தகண் வாங்கிடப்
பேர்கி லாது பிறங்கு முகத்தினன்
நேர்கி லானெறி யந்தரிற் சென்றொரு
மூரி மாமத யானையை முட்டினன்.

வார் குலா(வு)ம் முலை-(ஒருத்தியின்) கச்சணிந்து விளங்கும் தனங்களிலே, வைத்த கண்-பதித்த கண்பார்வையை, வாங்கிட பேர்கிலாது-மீட்டுக்கொள்ள வியலாமல், பிறங்கும்-(மகிழ்ச்சியால்) விளங்குகின்ற, முகத்தினன்-முகத்தையுடைய (படைவீரர்களுள்) ஓரிளைஞன், நெறி தேர்கிலான்-(தான் செல்லும்) வழியை அறியாதவனாய், அந்தரின் சென்று-குருடர்போலப் போய், ஒரு மூரி மா மதம் யானையை முட்டினன்-வலிய பெரிய மதயானை யொன்றின் மீது முட்டிக் கொண்டான்.

இதுமுதல் ஆறு கவிகளில் தனித்தனியே ஒவ்வோரிளைஞன் செயல் கூறுகின்றார்.

கண்ணும் அதன்வழியே மனமும் வேறிடத்து ஒன்றியிருக்கும் போது, எதிரிலுள்ளதும் புலப்படாதது இயற்கை; அதனால் அவ்விளைஞன் எதிரிலுள்ள யானையையும் காணாது போய் அதன் மீது முட்டிக் கொண்டான் என்க.

அந்தர்: அயோத்: 1088;

வைத்தகண் வாங்காது பார்த்தல்: ஒருவழக்கு. கண்-ஆகு பெயர். அந்தர்-வடசொல். யானையை: உருபு மயக்கம்.

(பி - ம்.) 1. முலைத் தைத்தகண்: வாங்கிடாப்.
2 பர்க ...: பர்கிலாத.
3. தேர்கிலாநெறி; தே கலாநெறி; தேர்கலானெறி.
4. மூரியானையி... முகத்தினை முட்டினன். (31)

839. சுழிகொள் பாய்பரி துள்ளவோர் தோகையாள்
வழுவி வீழ்தலுற் றாளையோர் வள்ளறான்
எழுவி னீள்புயத் தாலெடுத் தேந்தியே
தழுவி நின்றதல் லாற்றரை மேல்வையான்.

சுழி கொள் - (நல்லிலக்கணமாகிய) சுழிகளைக் கொண்ட, பாய்பரி-பாய்ந்து செல்லும் (ஒரு) குதிரை, துள்ள-துள்ளியதனால், ஓர் தோகையாள்-(அக்குதிரையின் மீதிருந்த) மயில் போலும் சாயலுடைய மங்கையொருத்தி, வழுவி வீழ்தல் உற்றாளை-(அச்சத்தால் குதிரையினின்றும்) தவறிக் கீழேவிழுகின்றவளை, ஓர் வள்ளல்-உதார குணமுடைய ஒருவன், தான்-தானாகவே, எழுவின் நீள் புயத்தால் ஏந்தி எடுத்து-(தன்னுடைய) இரும்புத் தூண் போன்ற நீண்ட கைகளால் தாங்கித் தூக்கிக்கொண்டு, தழுவி நின்றது அல்லால்-(அவளைத்) தழுவியபடியே நின்றானல்லது, தரைமேல் வையான்-தரையில் (அவளை) விடவில்லை.

கீழே விழுகின்றவளுக்கு உதவியதோடன்றி, அவளைத் தழுவி நிற்றலும் அவ்விளைஞனுக்கு இன்பந் தருதலின், அவ்வாறே சிறிது பொழுது நின்றானென்க. தக்க தருணத்தில் உதயவியவனை 'வள்ளல்' என்றார். மகளிர் குதிரை மீது செல்லல் முன்னுங் கூறப்பட்டது: (822.) குதிரைகளுக்கும் எருதுகளுக்கும் உடம்பில் உள்ள சில சுழி அமைப்புக்கள் நல்லனவும் தீயனவும் ஆமென்று விலங்கு நூல் கூறும்; அவற்றை விலைக்குக் கொள்வோர் சுழிகளைக் கவனித்தே கொள்வர்.

(பி - ம்.) 1. வாய்பரி; துள்ளவொர்; தாவவோர்: இன்சொலாள்; சோர்குழல்; அஞ்சொலாள்.
3. வழுவி வீழலுற்றாளை; வழுவி வீழவுற்றாளை; எழுவி வீழ்தலுற்றாளை; வள்ளற்றான; வள்ளல்வந்து; மைந்தன்றான்; மைந்தன் வந்து; காளை வந்து. 3. புயத்தானெடுத்து; கரத்தாலெடுத்து; ஏந்தினன்.
4. நின்றொழியான்; நின்றொழிந்தான்; நின்றொழிவான்; தரைதான்வையான்; தரைத்தான்வையான்; தரைவைக்கலான. (32)

840. துணைத்த தாமரை நோவத் தொடர்ந்திடை
கணைக்க ருங்கணி னாளையோர் காளைதான்
பணைத்த வெம்முலைப் பாய்மத யானையை
அணைக்க நங்கைக் ககலிட மில்லென்றான்.

துணைத்த தாமரை நோவ-இணையான தாமரை மலர்போன்ற பாதங்கள் வருந்த, தொடர்ந்து இடை-(தன்னைத்) தொடர்ந்து நடந்து வருந்துகின்ற, கணை கரு கண்ணினாளை-அம்புபோல் (கூரிய) கருமையான கண்களையுடைய ஒருத்தியை, ஓர் காளை-(முன் செல்லும்)ஓர் இளைஞன், நங்கைக்கு-இவளுக்கு, பணைத்த வெம் முலை-பருத்த, விருப்பந் தருகின்ற தனங்களாகிற, பாய் மதம் யானையை-

வாய்பாட்டு வினையெச்சம் தூணம்: அம்-சாரியை. ஆள் என்பது காலாட் படைகளைக் குறித்தலின், 'மிடைந்தன' என அஃறிணைப் பன்மை முடிபேற்றது. நான்கடிகளுள்ளும் 'மிடைந்தன' என்பதும் மிடைந்தென என்பதும் திரும்பத் திரும்ப வருதல் சொற்பொருட்பின் வரு நிலையணி.

(பி - ம்) 1. தூணி; தூளி; மிடைந்தன.
2. வெண்மிடைந்திட; மிடைந்தென; மின்னின் மயங்கிடத்; மின்னு வயஙகிட.
3. த மிமிடைந்தென; தம்மின் மிடைந்திட; தம்மின் மயங்கிட: ஆண் மிடைந்தன வ டவர் போதலால்.
4. வாண்மிடை ந்தன வாளிமிடை ந்தன; மிடைந்தவே. (30)

சில காளையரின் செய்திகள்

838. வார்கு லாமுலை வைத்தகண் வாங்கிடப்
பேர்கி லாது பிறங்கு முகத்தினன்
நேர்கி லானெறி யந்தரிற் சென்றொரு
மூரி மாமத யானையை முட்டினன்.

வார் குலா(வு)ம் முலை-(ஒருத்தியின்) கச்சணிந்து விளங்கும் தனங்களிலே, வைத்த கண்-பதித்த கண்பார்வையை, வாங்கிட பேர்கிலாது-மீட்டுக்கொள்ள வியலாமல், பிறங்கும்-(மகிழ்ச்சியால்) விளங்குகின்ற, முகத்தினன்-முகத்தையுடைய (படைவீரர்களுள்) ஒரிளைஞன், நெறி தேர்கிலான்-(தான் செல்லும்) வழியை அறியாதவனாய், அந்தரின் சென்று-குருடர்போலப் போய், ஒரு மூரி மா மதம் யானையை முட்டினன்-வலிய பெரிய மதயானை யொன்றின் மீது முட்டிக் கொண்டான்.

இதுமுதல் ஆறு கவிகளில் தனித்தனியே ஒவ்வோரிளைஞன் செயல் கூறுகின்றார்.

கண்ணும் அதன்வழியே மனமும் வேறிடத்து ஒன்றியிருக்கும் போது, எதிரிலுள்ளதும் புலப்படாதது இயற்கை; அதனால் அவ்விளைஞன் எதிரிலுள்ள யானையையும் காணாது போய் அதன் மீது முட்டிக் கொண்டான் என்க.

அந்தர்: அயோத்: 1088;

வைத்தகண் வாங்காது பார்த்தல்: ஒருவழக்கு. கண்-ஆகு பெயர். அந்தர்-வடசொல். யானையை: உருபு மயக்கம்.

(பி - ம்.) 1. முலைத் தைத்தகண்: வாங்கிடாப்.
2 பர்க ாது; பர்கிலா த.
3. தேர்கிலா நெறி; தே 'கலா நெறி; தேர்கலானெறி.
4. மூரியானையி முகத்தினை முட்டினன். (31)

839. சுழிகொள் பாய்பரி துள்ளவோர் தோகையாள்
வழுவி வீழ்தலுற் றாளையோர் வள்ளறான்
எழுவி னீள்புயத் தாலெடுத் தேந்தியே
தழுவி நின்றதல் லாற்றரை மேல்வையான்.

சுழி கொள் - (நல்லிலக்கணமாகிய) சுழிகளைக் கொண்ட, பாய்பரி-பாய்ந்து செல்லும் (ஒரு) குதிரை, துள்ள-துள்ளியதனால், ஓர் தோகையாள்-(அக்குதிரையின் மீதிருந்த) மயில் போலும் சாயலுடைய மங்கையொருத்தி, வழுவி வீழ்தல் உற்றாளை-(அச்சத்தால் குதிரையினின்றும்) தவறிக் கீழேவிழுகின்றவளை, ஓர் வள்ளல்-உதார குணமுடைய ஒருவன், தான்-தானாகவே, எழுவின் நீள் புயத்தால் ஏந்தி எடுத்து-(தன்னுடைய) இரும்புத் தூண்போன்ற நீண்ட கைகளால் தாங்கித் தூக்கிக்கொண்டு, தழுவி நின்றது அல்லால்-(அவளைத்) தழுவியபடியே நின்றானல்லது, தரைமேல் வையான்-தரையில் (அவளை) விடவில்லை.

கீழே விழுகின்றவளுக்கு உதவியதோடன்றி, அவளைத் தழுவி நிற்றலும் அவ்விளைஞனுக்கு இன்பந் தருதலின், அவ்வாறே சிறிது பொழுது நின்றானென்க. தக்க தருணத்தில் உதயவியவனை 'வள்ளல்' என்றார். மகளிர் குதிரை மீது செல்லல் முன்னுங் கூறப்பட்டது: (822.) குதிரைகளுக்கும் எருதுகளுக்கும் உடம்பில் உள்ள சில சுழி அமைப்புக்கள் நல்லனவும் தீயனவும் ஆமென்று விலங்கு நூல் கூறும்; அவற்றை விலைக்குக் கொள்வோர் சுழிகளைக் கவனித்தே கொள்வர்.

(பி - ம்.) 1. வாய்பரி; துள்ளவொர்; தாவவோர்: இன்சொலாள்; சோர்குழல்; அஞ்சொலாள்.
3. வழுவி வீழலுற்றாளை; வழுவி வீழவுற்றாளை; எழுவி வீழ்தலுற்றாளை; வள்ளற்றாளை; வள்ளல்வந்து: மைந்தன்றான்; மைந்தன் வந்து; காளை வந்து. 3. புயத்தானெடுத்து; கரத்தாலெடுத்து: ஏந்தினான்.
4. நின்றொழியான்; நின்றொழிந்தான்; நின்றொழிவான்: தரைதான்வையான்; தரைத்தான்வையான்; தரைவைக்கலான. (32)

840. துணைத்த தாமரை நோவத் தொடர்ந்திடை
கணைக்க ருங்கணி னாளையோர் காளைதான்
பணைத்த வெம்முலைப் பாய்மத யானையை
அணைக்க நங்கைக் ககலிட மில்லென்றான்.

துணைத்த தாமரை நோவ-இணையான தாமரை மலர்போன்ற பாதங்கள் வருந்த, தொடர்ந்து இடை-(தன்னைத்) தொடர்ந்து நடந்து வருந்துகின்ற, கணை கரு கண்ணினாளை-அம்புபோல் (கூரிய) கருமையான கண்களையுடைய ஒருத்தியை, ஓர் காளை-(முன் செல்லும்)ஓர் இளைஞன், நங்கைக்கு-இவளுக்கு, பணைத்த வெம் முலை-பருத்த, விருப்பந் தருகின்ற தனங்களாகிற, பாய் மதம் யானையை-

(ஆடவர் மேல்) பாயும் மத யானைகளை, அணைக்க-அடக்குதற்கு, அகல் இடம் இல்-மார்பிலே இடம் இல்லை, என்றான்—தான்: அசை.

தனங்கள் மதயானைபோல மதர்த்து நிற்றலின், அவற்றைச் சுமந்து நடப்பது இவளுக்கு மிக்க வருத்தந் தருகின்றது என்றது குறிப்பு. தனங்களைக் கட்டி யணைக்கத் தன் கைகளுக்குப் போதிய இடமில்லை யென அவ்விளைஞன் கூறினா னென்றலுமாம்.

தாமரை: ஆகுபெயர். அகல்: அகலம் என்பதன் கடைக் குறை; அகலம்-மார்பு. வெம்மை-விருப்பம்; கொடுமையும் ஆம்.

(பி - ம்.) 1. துணர்த்த; தொடர்ந்தடர்; தொடர்ந்தடை; தொடர்ந்துறும்; தொடர்ந்தயில்; தொடர்ந்தயர்.
2. கணைக்கடுங் கண்ணினாளை; கனைக்கிடுங் கணினாளை.
3. மென்முலைப்.
4. அணைதத; அணைத்து; மங்கைக்கு; அடலிடம். (33)

841. சுழியுங் குஞ்சி மிசைச்சுரும் பார்த்திடப்
பொழியு மாமத யானையிற் போகின்றான்
கழிய கூரிய வென்றொரு காரிகை
விழியை நோக்கித்தன் வேலையு நோக்கினான்.

சுழியும் குஞ்சி மிசை - சுருண்டுள்ள (தன்) தலைமயிரினிடத்தே, சுரும்பு ஆர்த்திட-வண்டுகள் (கூடி) ஆரவாரம் செய்ய, மா மதம் பொழியும் யானையின்-மிக்க மதநீரைச் சொரிகின்ற ஆண்யானை போல, போகின்றான்-(கம்பீரமாக) நடக்கின்ற ஓர் இளைஞன், ஒரு காரிகை விழியை நோக்கி-(அருகே செல்லும்) ஓர் அழகியின் கண்களைப் பார்த்து, கழிய கூரிய என்று-(இவை) மிகவும் கூர்மையுடையன என்று சொல்லி, தன் வேலையும் நோக்கினான்-தன் கையிலுள்ள வேற்படையையும் பார்த்தான்.

ஒரு பெண்ணின் கண்களைப் பார்த்து, அவற்றின் கூர்மையை வியந்த ஆடவன், தன் கையிலுள்ள வேலின் கூர்மையை அதனோடு ஒப்பு நோக்கினான் என்க. வேற்படை, எறியப்பட்டோர் உடம்பைத் துளைத்து வருத்துமே யன்றிக் கண்கள்போல உயிரைக் குடைந்து வருத்துதலின்மையின், வேலினுங் கண்கள் கூர்மையில் மேம்பட்டன வென்பது கருத்து.

விழிவேலொடு கைவேலை ஒப்பு நோக்குதல்: 'செங்கை வேல் பைம்புனத்துப், பண்ணுலா மழலைப் பசுங்கிளவி யெயினர்பொற் பாவைவிழி வேலொடொப்புப், பார்க்குந்தொறும்' (முத்துக்குமார. சப்பாணி. 3). குஞ்சி-ஆண் மயிர்.

(பி - ம்.) 2. பொழியு முப்மத: ஆனையிற் போகுவான்.
4. வில்லையு நோக்கினன். (34)

842. தரங்க வார்குழற் றாமரைச் சீறடிக்
கருங்கண் வாளுடை யாளையோர் காளைதான்
நெருங்கு பூண்முலை நீள்வளைத் தோளினீர்
மருங்கு லெங்கு மறந்துவந் தீரென்றான்.

தரங்கம் வார் குழல்-சிற்றலைபோல நெரிதலுடைய நீண்ட கூந்தலையும், தாமரை சிறு அடி-தாமரை மலர் போன்ற சிறிய பாதங்களையும், வாள் கரு கண்-வாள் போலுங் கரிய கண்களையும், உடையாளை-உடையவளாகிய ஒரு மங்கையை (நோக்கி), ஓர் காளை-ஓரிளங் குமரன், நெருங்கு பூண் முலை-(இடைவெளியின்றி) நெருங்கிய, அணிகள் பூண்ட தனங்களையும், நீள் வளை தோளின் நீர்-வளையலணிந்த நீண்ட கைகளையுமுடைய நீவிர், மருங்குல் எங்கு மறந்து வந்தீர்-(நும்) இடையை மறந்து எங்கே விட்டு வந்தீர்? என்றான்—.

தன் கண்ணெதிர்ப்பட்ட மங்கை யொருத்தியோடு உரையாடக் கருதிய இளைஞனொருவன், அதற்கு வாய்ப்பாக அம்மங்கையினது இடையின் நுண்மையை வியந்து கூறுதலை மேற்கொண்டான். தனங்களும் தோள்களும் நன்கு புலப்படுவனவாகலின் அவற்றைச் சுட்டிக் கூறி, இடை புலனாகாமையின், 'அதனை எங்கேயோ வைத்து மறந்து வந்தீர் போலும்' எனச் சமத்காரமாகக் கூறினானென்றார்.

மருங்கு லெங்கு மறந்தீர்: ஒப்பு: 'கரும்போதகங்கலை மேய்வதென்றேகடி தோட்டுதற்கு,வரும்போதுகொண்டு வரமறந்தீர்கொல் மருங்கினையே' (குலோத். கோவை. 90); 'இடையெங்கு வைத்து மறந்துவந்தீரஃ தியம்புமினே' (சீகாழிக்கோவை. 108).

(பி - ம்.) 1. தரங்கு; வார்புனல்; வார்சூழைத்; சீரடிக்.
2. வாளனையாளை; வாள்சுழலவாளை; வார்குழலாளை.
3 நேர்வளைத்; நேர்வழித; தோள்னிர்; தோளிஆய். தோளிநீ:தோளிநின்.
4. மருங்கு லெங்ஙன்: மறந்ததுதன்; மறைந்ததுதான்: மறந்ததுநீர்; மறைத்ததுநீர்; மறந்து வைத்திர்; மறந்ததுநீ. (35)

843. கூற்றம் போலுங் கொலைக்கண்ணி னாலன்றி
மாற்றம் பேசுகி லாளையோர் மைந்தன்றான்
ஆற்று நீரிடை யங்கைக ளாலெடுத்
தேற்று வாருமை யாவர்கொ லோவென்றான்.

கூற்றம் போலும்-யமனைப் போன்ற, கொலை கண்ணினால் அன்றி-கொல்லுந் தொழிலையுடைய கண்சாடையினா லன்றி, மாற்றம் பேசுகிலாளை-(வாய் திறந்து) வார்த்தை பேசாத ஒருத்தியை, (நோக்கி), ஓர் மைந்தன்-ஓர் ஆடவன், ஆற்று நீர் இடை-(வழியிலேயுள்ள) ஆற்று வெள்ளத்தில், உமை அம் கைகளால் எடுத்து-உம்மைத் தம்அழகிய கைகளாலே(தொட்டு) எடுத்து, ஏற்றுவார் யாரோ-கரை

யேற்றுபவர் யாரோ! என்றான்-என்று வினவினான். தான், கொல், அசைநிலைகள்.

பார்வைக்கு அகப்பட்ட ஆடவரைக் கொல்லுதல்போல வருத்துதலின், 'கூற்றம் போலுங் கொலைக் கண்' என்றார். 'பண்டறியேன் கூற்றென்பதனை யினியறிந்தேன், பெண்டகையாற் பேரமர்க் கட்டு', 'கூற்றமோ கண்ணோ' (குறள். 1083, 1085). இப்போது வாய் திறந்து பேசாவிடினும், வழியிலுள்ள ஆற்றைக் கடக்க வேண்டிய தருணத்தில் உதவிக்கு,ஆடவரை நாடிப் பேசியே தீரவேணு மன்றோ? ஆடவரோடு பேசுதலே கூடாதெனின்,அவர்கள் தீண்டுதல் கூடுமோ? என்ற கருத்துப்படக் கூறினான்.பெண்கள் தம் கண்சாடையினாலேயே பேசும் (தம் கருத்தைத் தெரிவிக்கும்) ஆற்றலுடையவர்கள். 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள், என்ன பயனு மில' (குறள். 1100); 'சொல்லுமாடுப கண்ணினானே' (தொல். களவு. 23. ந-மேற்.); கண்ணாற் பேசுதல், அரசர், அமைச்சராகியோர்க்கும், தலைமையுடையார் பிறர்க்கும் உரியதாகும்; 'கண்ணிற் சொலிச்செவியி னோக்கும் இறைமாட்சி' (நீதிநெறி. 28); 'நோக்கினாற் சுமந்திரன் நுவலலுற்றதை' (அயோத். 948). ஏற்றுதல்-கரை சேர்த்தல்; 'இவ்விடைக் கங்கை யாற்றி னேற்றினையாயி னெம்மை, வெவ்விடர்க் கடனின் றேற்றி வேந்தன்பால் விடுத்தது' (அயோத். 1047).

(பி - ம்.) 1. சொலைக்கணினாலன்றி; கொலைக்கணினனன்றி; கொடுங்கண்ணினாலன்றி; கொலைக்கணினாலொரு. 2. ஓர் வள்ளரான். 3. ஆற்றினீரிடை; ஆறு நீரிடை; அங்கையினால். 4. ஏற்றுவார்நமை யாவர்கொ லாமென்றான். (36)

## ஒட்டகங்கள்

844. தள்ளரும் பரந் தாங்கிய வொட்டகம்
தெள்ளு தேங்குழை யாவையுந் தின்கில
உள்ள மென்னத்தம் வாயு முலர்ந்தன.
கள்ளுண் மாந்தரிற் கைப்பன தேடியே.

தள்ள அரும்-இறக்குதற்கு அரிய, பரம் தாங்கிய-பெருஞ் சுமைகளை யேற்றிச் சென்ற, ஒட்டகம்-ஒட்டகங்கள், தெள்ளு தேம் குழை யாவையும் தின்கில-நல்ல இனிய தளிர்கள் எவற்றையும் தின்னாதனவாய். கைப்பன தேடி-கசப்புள்ள வேம்பு முதலியவற்றைத் தேடி, கள் உண் மாந்தரின்-கட் குடியர்போல, தம் உள்ளம் என்ன-தம் நெஞ்சு (உலர்தல்) போலவே, வாயும் உலர்ந்தன-வாயும் (பசையற்று) உலர்ந்தன வாயின.

ஒட்டகங்கள், பிற விலங்குகளினும் அதிகமான பாரத்தைச் சுமக்கவல்லனவாதலின் 'தள்ளரும் பரந்தாங்கிய' என்றார்; ஒட்டகங்

களுக்கு வேப்பிலையில் விருப்பம் அதிகம். கட்குடியர், பால் முதலிய நல்ல பொருள்கள் இருப்பினும், அவற்றைவிட்டுக் கள்ளையே பெரிதும் விரும்பி அதைத் தேடி நெஞ்சும் வாயும் உலர நெடிது அலைவர்; அதனல் அவர்கள் செயலை ஒட்டகங்களின் செயலுக்கு ஒப்புக் கூறினர். 'நறுவிய, வாயினவேனும் உமிழ்ந்து கடுத்தின்னும், தீயவிலங்கு' (நீதிநெறி. 80).

படைத்தொகுதியில் ஒட்டகங்கள் இருத்தல்: யுத்த. 488.

(பி - ம்.) 1. தள்ளரும் பொறை.
2. தெள்ளு தேன் கருப்பு; எள்ளருங் கரும்பு: தெள்ளுந் தீங்கனி; தெள்ளுந் தீங்குழை; தெள்ளுந் தேங்குழை; தெள்ளருங்குழை; தெள்ளு தெண்கரும்பு; தெள்ளுதீங் கருப்பு; தெள்ளுதண்குழை; தெள்ளு தேங்கழை; தின்கிலா.
3. தன் வாயும், தன்னுவும்; தம்வாயு முலந்தன; தம்வாயு முலர்ந்தவால்.
4. கள்ளுண் மாதரிற். (37)

### காவடி சுமக்கும் பப்பரர்

845. அரத்த நோக்கின ரற்றிரண் மேனியர்
பரித்த காவினர் பப்பர ரேகினர்
திருத்து கூடத்தைத் திண்கணை யத்தொடும்
எருத்தின் மால்களி றேந்திய தென்னவே.

அரத்தம் நோக்கினர்-சிவந்த கண்களுடையவர்களும், அல் திரள் மேனியர்-இருள் திரண்டாற் போன்ற (கரிய) உடல் உடையவர்களுமான, பப்பரர்-பப்பர சாதியினர், மால்களிறு-மதங்கொண்ட ஆண் யானையானது, திருத்து கூடத்தை-(தன்னைக் கட்டி வைத்துத்) திருத்துதற்கிடமான சாலையை, திண் கணையத்தொடும்-(தன்னைத் திருத்துதற்குரிய) உறுதியான கணைய மரத்தோடு (பெயர்த்து), எருத்தின் ஏந்தியது என்ன-(தன்) பிடரியிலே சுமந்து சென்றதுபோல, பரித்த காவினர்-(தோளிலே) சுமந்த காவடியையுடையவர்களாய், ஏகினர்-போனர்கள்.

பப்பரர்-பப்பர தேசத்தினர்; இவர்கள் மிக்க வலிமையும் உடற்கட்டும் உடையவர்கள்; நம்நாட்டு அரசர்களால் பலபணிகளில் அமர்த்திக்கொள்ளப்பெற்றவர். (654-குறிப்புப் பார்க்க). இங்கே அவர்கள், பல பண்டங்களைக் காவடிகளில் சுமந்து சென்றனரென்க. இவ்வாறு இவர்கள் சென்றமைக்கு, யானை தான் கட்டப்பட்டுள்ள கூடத்தையே அடியோடு பெயர்த்து, அதன் குறுக்கே இடப்பட்ட கணைய மரத்தைத் தன் பிடரியிலே யிட்டுத் தூக்கிச் செல்லுதலை உவமை கூறினர். பிடரியிலே படிந்த கணையமரம் காவடித்தண்டு போலிருக்க, கீழே தொங்கிய கூடம் தண்டிலே தொங்கும் சுமைபோலிருந்த தென்க. கூடம்-யானைச்சாலை. கணையம்-யானை கட்டுமிறிச்

செல்லாதபடி தடுத்தற்குரிய மரம். திருத்து கூடம்-நன்கு அமைக்கப்பட்ட சாலை என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. அற்றிகழ்.

2. பருத்த காலினர்; பரத்த காலினர்; போயினர்; எய்தினர்.

3. கூடத்திற்றிண்; கூட்டத்திற்றிண்; சணையத்திணை; கணையத்தொடு

4. எருத்திலேந்திய மால்களிறு; ஏந்திய மாகளிறு; மாகளிறேந்தியது; மால்களிறெய்தியது; யாக்களிறேந்தியது. (38)

## பிடியின்மேற் செல்லும் பெண்கள்

846. பித்த யானை பிணங்கிப் பிடியிற்கை
வைத்த மேலிருந் தஞ்சிய மங்கையர்
எய்த்தி டுக்கணுற் ருர்புதைத் தார்க்கிரு
கைத்த லங்களிற் கண்ணடங் காமையே.

பித்த யானை-மதவெறி கொண்ட ஆண்யானையொன்று, பிணங்கி-(பாகனொடு) மாறுபட்டு, பிடியில் கை வைத்த(து)-(தன் அருகிலே சென்றவொரு) பெண் யானையின்மேல் தன் துதிக்கையை நீட்டிற்று; (அதுகண்டு), மேல் இருந்து அஞ்சிய மங்கையர்-அப்பெண் யானையின்மீது அமர்ந்திருந்து அச்சமடைந்த சில மகளிர், கண் புதைத்தார்க்கு-தம் கண்களைக் கையால் பொத்திக்கொண்டவர்களுக்கு, இரு கைத்தலங்களில் அடங்காமை-இரண்டு கைகளிலும் (கண்கள்) அடங்காமையால், எய்த்து-மனம் புலர்ந்து, இடுக்கண் உற்ருர்-துன்பம் மிக அடைந்தனர்.

அச்சந் தருமவற்றைக் கண்டு அஞ்சினோர், தம் கண்களை மூடிக்கொள்ளுதல் இயல்பு; இங்கே ஆண் யானையின் செயலைக் கண்டு தமக்கு ஊறு நேருமோவென அஞ்சிய மகளிர், தம் கைகளாலே கண்களைப் பொத்திக்கொள்ள, அக்குடங்கைகளுள் கண்கள் அடங்காமையால் பார்வை தெரிதலும், அச்சம் தெளியாது துன்பமுற்றனர் என்க. இவ்வாறு அம்மகளிருடைய கண்களின் விரிவைக் கூறினர். 'ஒரோ குடங்கைப், பெரியன கெண்டைக் குலமிவையோவந்து பேர்கின்றவே' (திவ். திருவிருத். 11.) அச்சத்தால் கண் புதைத்தல்: 942, 995-பார்க்க.

(பி - ம்.) 1. பிணங்கப்: பிடியின்கை; பிடிக்கரம்.

2. வைத்த போதருந்து; வைத்த போதங்கிருந்திடு மங்கையர்; மங்கையாள்; மங்கைமார்.

3. எய்த்திடுக்கமுற்ருர்; எத்திடுக்கணுற்ருர்; எய்த்திடுக்கணுற்ருள்; புதைத்தாரிரு; புதைத்தற்கிரு; புதைத்தாரிடு; புதைத்தாளிரு; இசைத்தாரு.

4. கைத்தடங்களிற் கண்ணடங்காமலே; கண்ணடங்காமையால். (39)

### சிறு பிடிமேற் செல்லும் சிந்தர்

847. வாம மேகலை யாரிடை வாலதி
பூமி தோய்பிடிச் சிந்தரும் போயினர்
காமர் தாமரை நாண்மலர்க் கானத்துள்
ஆமை மேல்வருந் தேரையி னுங்கரோ.

வாமம் மேகலையார் இடை-அழகியமேகலாபரணங்கள் பூண்ட மகளிரிடையே, வாலதி பூமி தோய் பிடி-வால் தரையிலே படத்தக்க (சிறிய) பெண்யானைகளின்மேல், காமர் தாமரை நாள்மலர் கானத்து உள்-அழகிய தாமரையின் புதிய பூக்கூட்டத்துள்ளே, ஆமை மேல் வரும் தேரையின்-ஆமைகளின்மே லேறிக்கொண்டு வரும் தவளைகள் போல, சிந்தரும்-குறியவடிவமுள்ள சிந்தர்களும், போயினர்-போனர் கள். ஆங்கு, அரோ-அசைநிலைகள்.

குறளர், சிந்தர் என்போர் மிகக் குறுகிய வடிவமுடையவர்க ளாய், அரண்மனைகளிலே அந்தப்புர ஏவலாளராக அமர்த்தப் பெறு வோர்; இவர்களை, குறள், சிந்து என அஃறிணை வாய்பாட்டாலும் வழங்குவர். இவர்கள் ஏறிச் செல்லும்பொருட்டுச் சிறிய பெண்யானை களும் அரண்மனைகளில் இருக்கும். பெரிய யானைகள் மீதும் குதிரைகள் மீதும் செல்லும் மகளிரின் முகங்கள் தாமரைமலர்க் கூட்டம்; அக் கூட்டத்திடையே சிந்தர் ஏறிச் செல்லும் சிறு பிடிகள் ஆமைகள்; சிந்தர் தேரைகள் என ஒப்பு நோக்கிக்கொள்க. வால் தரையிலே படும்படி நீண்டிருத்தல் யானைகளுக்கு நல்லிலக்கண மென்பர். குறள ரும் சிந்தரும் முறையே இரண்டடியும் மூன்றடியும் உயர முடை யோர் என்ப. குறளும் சிந்தும்: 'தேரை நடப்பன போற்குறள் சிந்தி னோ, டோரு நடந்தன வொண்டொடி முன்னமே' (சீவக 631); 'தேரையாய்க் குறளுஞ் சிந்து மிதந்தன' (சூளா. சுயம். 124.)

(பி - ம்.) 1. வானுதி. 2. சித்தரும்; சித்தர்.
3. தாமரைத்தட நாண்மலா, காண்மலர்க்.
4. ஆமை மேல்வரு தேரையிலையரோ; தேரையதாயரோ; தேரைய தாமரோ; தேரையினரையோ; தேரையினுமரோ; தேரையினரரோ; தேரையிலையதே; தேரையிலையினா. (40)

### ஒரு குதிரையின் செயல்

848. இம்பர் நாட்டின் றரமல்ல ளீங்கிவள்
உம்பர் கோமகற் கென்கின்ற தொக்குமால்
கம்ப மாவரக் கால்கள் வளைத்தொரு
கொம்ப னாளைக்கொண் டோடுங் குதிரையே.

ஒரு கொம்பு அ(ன்)னாளை கொண்டு-பூங்கொம்பு போல்வாள் ஓரழகியைத் தன்மேல் தாங்கி, கால்கள் வளைத்து-கால்களை வளைத்துக் கொண்டு, கம்பம் மா வர ஓடும் குதிரை-யானை தன்னைத் தொடர்ந்து

வர(மிக்கவிரைவுடன்) ஓடும் ஒரு குதிரையானது, ஈங்கு இவள்-இங்கே என் மீதுள்ள இம்மங்கை, இம்பர் நாட்டின் தரம் அல்லள்-இம்மண்ணுலக வாழ்க்கைக்கு உரியவள் அல்லள்; உம்பர் கோமகற்கு-தேவர்கள் தலைவனாகிய இந்திரனுக்கு (உரியவள்); என்கின்றது ஒக்கும்-என்று சொல்வதை யொக்கும். ஏ-ஈற்றசை. ஓடும் குதிரை, என்கின்ற தொக்கும் எனக் கூட்டுக.

கம்ப மா-தறியில் கட்டப்படும் விலங்கு=யானை. மா என்ற விலங்குப் பொதுப்பெயர், கம்பம் என்னும் அடைமொழியால் பொதுமை நீங்கி யானையைக் குறிப்பதாயிற்று. குதிரையானது மிகவிரைந்தோடுதல், தரையிலின்றி அந்தரத்தே செல்வது போன்றிருத்தலின், 'என் மீதுள்ள மங்கையை இந்திரனுக்கு உரியவளாக்குவேன் என்று கருதி மேலெழுந்து செல்வது போன்றது' எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். குதிரைகளின் விரைவை, 'பாரிடை மிதித்தில பரியின் பந்தியே' (828) என முன்னே கூறியதும் காண்க.

(பி - ம்.) 1 நாட்டிற்றரமல்ல: ஈங்கவள், ஈங்குவள்.
2. உம்பர் நாட்டிறைக்கு.
3. கம்பமாய் வரக்; கம்பமாநெடுங்; கம்பமாவிரு; கம்பமாமிரு; காலவனைத் தொரு.
4. கொம்பன்னாளைக்; கொம்பனரைக்; கொண்டேகுங்; கொண்டோங்கும்.

(41)

### மகிழ்ச்சிமிக்க மகளிர் செயல்

849. சந்த வார்குழல் சோர்ந்தவை தாங்கலார்
சிந்து மேகலை சிந்தையுஞ் செய்கிலார்
எந்தை வில்லிறுத் தானெனு மின்சொலை
மைந்தர் பேச மனங்களித் தோடுவார்.

எந்தை-எங்கள் தந்தையாம் இராமபிரான், வில் இறுத்தான் எனும் இன்சொல்லை-(சீதைக்குப் பணயமான) வில்லை முறித்தான் என்ற இனிய செய்தியை, மைந்தர் பேச-ஆடவர்கள் சொல்ல, (அதனைக்கேட்ட சில மகளிர்), மனம் களித்து-மனம் மிக மகிழ்ந்து, சோர்ந்தவை-அவிழ்ந்து தொங்குவனவாகிய, சந்தம் வார்குழல்-அழகிய நீண்ட (தம்) கூந்தலை, தாங்கலார்-எடுத்து முடியாதவர்களாயும், சிந்தும் மேகலை, (அறுந்து) சிந்துகிற மேகலாபரணக் கோவைகளை, சிந்தையும் செய்கிலார்-சிறிதும் பொருட்படுத்தாதவர்களாயும், ஓடுவார்-விரைந்து செல்லலானார்கள்.

குழல் சோர்தலையும், மேகலையறுந்து சிந்துதலையும் பொருட்படுத்தாது சென்றனரென்றதனால், சென்றவர் மகளிர் என்பது பெறப்படுதலின், 'மகளிர்' என்ற எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. இராமபிரானது திருமணத்தைக் காணுதலில் உள்ள பேரார்வம், அவர்களை அவ்வாறு செய்வித்ததென்க.

(பி - ம்) 1. சோர்பவை; சோர்ந்தது; சோர்வது; சாய்பவை; தாங்கிலார்; தாங்கலர்; தாங்கலாச். 2. செய்கலார்; செய்கிலர்; செய்கிலர்.
3. இன்சொலால்; ஏய்பலால்.
4. மைந்தர் பேசிட; மைந்தர்பேர; மனங்களித்தேகுவார்; மனங்களித்தாடுவார்; மங்கையரேகுவார். (42)

### அந்தணர் செல்லுதல்

850. குடையர் குண்டிகை தூக்கினர் குந்திய
நடையர் நாசி புதைத்தகை நாற்றலர்
கடக ளிற்றையுங் காரிகை யாரையும்
அடைய வஞ்சிய வந்தணர் முந்தினர்.

கடம் களிற்றையும்-மதயானைகளையும், காரிகையாரையும்-மகளிரையும், அடைய அஞ்சிய அந்தணர்-நெருங்க அஞ்சியவர்களான அந்தணர் பலர், குடையர்-குடையையுடையவர்களாயும், குண்டிகை தூக்கினர்-கமண்டலம் ஏந்தியவர்களாயும், குந்திய நடையர்-(குதிகால் தரையில் படாமல்) உந்திச் செல்லும் நடையையுடையவர்களாயும்,நாசி புதைத்த கை-மூக்கின் தொழிலைத் தடைசெய்யும் வலக்கையை, நாற்றலர்-கீழே தொங்கவிடாதவர்களாயும், முந்தினர்-(கூட்டத்தில் கலவாமல்) சென்றார்கள்.

வெளியே செல்லுங்கால் கையில் குடையிருத்தல் வேண்டுமென்பது அந்தணர்க்குரிய விதியாகும். நீருள்ள கமண்டலமும் அவ்வாறெடுத்துச் செல்லுதற்குரியது. வலக்கை பிராணயாமத்திற்கு உரியதாதலாலும், தீ தங்கப்பெற்ற தாதலாலும், எப்போதும் தூய்மையுடையதா யிருத்தல் வேண்டும்; அக்கையை இடைக்குக் கீழே தொங்கவிடுதல் தூய்மைக்குக்குறை வென்பராதலால் 'நாசி புதைத்த கை நாற்றலர்' என்றார். அன்றி, கூட்டத்தினின்று எழுந்து வரும் நறுமணம் தம்மனத்தைக் கவராதவாறு மூக்கைப் பாதுகாத்துச் சென்றனரென்றலுமாம். யானைகளை நெருங்குதலால் தம் உயிருக்கும், மகளிரை நெருங்குதலால் உயிரினுஞ் சிறந்த தம் ஒழுக்கத்திற்கும் ஊறு விளைதல் கூடுமென்று அஞ்சினரென்க. அடைய-முற்றிலும் என்றும் ஆம் தம் அடிவைப்பால் தரையில் உள்ள சிற்றுயிர்களுக்கு ஊறுவிளைதலும், அசுசியானவை காலிற் படுதலும் நேராதவாறு, கருத்துடன், முன்னங்கால்களைத் தரையிலூன்றி அதிர் நடையின்றிச் செல்லுதல் அந்தணரியல்பு; இதனைக் 'குந்திய நடையர்' என்றார். இவற்றால், அந்தணரது ஒழுக்கங் காத்தற் சிறப்புக் கூறப்பட்டது. 'பார்ப்பாராயிற் குந்தி மிதித்துக் குறுநடை கொண்டு வந்து தோன்றலும' (தொல். மெய்ப். 12-பேர்); 'பூப்பொதியவிழ்ந்தன நடையன் பூதலம், தீப்பொதிந் தாமென மிதிக்குஞ் செய்கையான்' (ஆரணிய. 828). இராமபிரானது திருமணத்தைக் காணுதலில் அவர்களும் ஊக்கமுடன் சென்றனராதலின் 'முந்தினர்' என்றார்.

(பி - ம்) 1. குண்டிகைத் தூங்கினர்; குண்டிகை தாங்கினர்: தாங்கிறர் தூக்கிய.
2. நாற்றிலர்; நாவலர்.
4. அடையவந்தன ரந்தணர்; அடையவஞ்சின ரந்தணர் வந்தவர். (43)

## சில நங்கைமார் செயல்

851. நாறு பூங்குழ னங்கையர் கண்ணினீர்
ஊற நேர்வந் துருவு வெளிப்பட
மாறு கொண்டனை வந்தனை யாகில்வந்
தேறு தேரெனக் கைக ளிறைஞ்சுவார்.

நாறு பூ குழல்-மணக்கின்ற பூச்சூடிய கூந்தலையுடைய, நங்கையர்-(தேரிலே செல்லுகின்ற சில) பெண்கள், கண் இன் நீர் ஊற, தங்கள் கண்களிலே இன்ப நீர்சுரக்கும் வண்ணம், உருவு-இராமபிரானது திருவுருவம், நேர் வந்து வெளிப்பட-கண்ணெதிரே வந்து தோன்ற, (அதனைக்கண்டு), மாறு கொண்டனை வந்தனை ஆகில்-(இப்போது எம்மை) எதிர்கொண்டு (காட்சிதர) வந்தாயாகில், வந்து தேர் ஏறு-(எம்மை அணுகி) வந்து (எம்மோடு) தேரில் ஏறிக்கொள்வாயாக, என-என்றுகூறி, கைகள் இறைஞ்சுவார்-(தம்) கைகள்கூப்பி அஞ்சலி வந்து செய்வாராயினர்.

இங்குக் கூறிய மங்கையர் 'வந்து தேர் ஏறு' என்றமையின், அவர்கள் தேரிலே செல்லத்தக்க பெருமையுடையவராதல் வேண்டும்; 'நங்கையர்' என்ற சொல்லும் அதற்குப் பொருந்தியதாகும். இராமபிரானிடத்து மிக்க ஈடுபாடுடைய அந்நங்கைமாருக்கு அந்நினைவு மிகுதியாலே நம்பியின் உருவெளித் தோற்றம் தம் கண்ணெதிரில் தோன்ற, அதனைக் கண்ட அவர்கள் இன்பக் கண்ணீர் பெருக்கி, ஆராமையோடு, 'ஐயனே! எங்களன்புக்கிரங்கி இப்போது நீயே எம்மெதிரில் வந்தாயோ!' அவ்வாறுயின் இத்தேரிலே எங்கள் பக்கலில் அமர்ந்தருளுக என வேண்டினரென்க.

இச்செய்யுளுக்கு, மங்கையர் சிலர், தம்மோடு பிணக்குற்றுச் சென்ற தம் கணவன்மாரான ஆடவருடைய உருவெளித் தோற்றத்தைக் கண்டு இவ்வாறு கூறியதாக உரை செய்தனர் பிறர். அதற்கேற்ப அவர்கள் செய்யுளின் இறுதியில் 'கைகளிழிச்சுவார்' என்ற பாடங்கொண்டு, மங்கையர் அவ்வாடவரைத் தேரேறித் தம்பக்கலில் வருமாறு தம் கைகளைத் தாழ்த்திக் குறிப்பித்தனர் எனக் கூறினர்.

(பி - ம்.) 1. நாறும்: நங்கைதன்; நங்கையொர்; கண்கணீர்; கண்ணினின்று; கண்களில; கண்ணினில்; கண்ணினிது; கண்களித்து.
2. ஊறுநேர்வந்து; ஊறநீர்வந்து; ஊரவேர்வந்து: உருவும்.
3. கொண்டயல்; கொண்டனை; வந்தனையாமெனில்; வந்தனையாகில்வென்று. 4. இழிச்சுவார். (44)

பலவகை ஒலியின் மிகுதி

852. குரைத்த தேருங் களிறுங் குதிரையும்
நிரைத்த வார்முர சுந்நிறைந் தெங்கணும்
இரைத்த பேரொலி யாலிடை யாவரும்
உரைத்து ணர்ந்தில ரூமரி னேகினர்

குரைத்த தேரும்-அதிரொலி செய்த தேர்களும், களிறும்-யானைகளும், குதிரையும்-குதிரைகளும், நிரைத்த வார்முரசும்-வரிசையான, வாரினால் கட்டப்பட்ட பேரிகைகளும், எங்கணும் நிறைந்து-எங்கும் மிகுதலால், இரைத்த பேர் ஒலியால்-(உண்டாகிய)பேரோசையினால், இடை-அவ்விடத்து, யாவரும்-எல்லோரும், உரைத்து உணர்ந்திலர்-(ஒருவர்க்கொருவர்) உரையாடித் தெரிந்துகொள்ள இயலாதவராய், ஊமரின் ஏகினர்-ஊமைகள் போல வாய்பேசாது சென்றனர்.

பலவகைப் பேரொலிகளால், ஒருவர் சொல்வது ஒருவருக்குக் கேளாமையின், உவகையினால் ஏதேனும் சொல்லக் கருதுவோரும், தாம் சொல்லிப் பயனில்லையேயென்று கருதி யாதும் பேசாமலிருக்க, ஊமைகள் போல அனைவரும் சென்றனர் என்க. இதனால் அங்கிருந்த திரளின் மிகுதி குறிக்கப்பெற்றது.

(பி - ம்.) 2. நிரைந்த; வார்முரசுந் நெளிந்து; வார்முரசுந் நிமிர்ந்து; வான்முரசுந் நிமிர்ந்து; வார்முரசுந் நிரைந்து; வார்முரசுந் நிரந்து; வார்முரசுந் நெளித்து; வார்முரசுந் நிரைத்து; வார்முரசுந் நிவந்து.
3. பேரொலியின்னிடை; பேரொலியாயிடை; பேரொலியின்னிசை.
4. உரைத்துணர்த்திலர்; உம்பரினேகினர்; உம்பரினேக்கினர். (45)

853. நுட்சி லம்பி வலந்தன நுண்டுகில்
கட்சி லம்பு கருங்குழ லார்குழு
உட்சி லம்பு சிலம்பவொ துங்கலால்
புட்சி லம்பிடு பொய்கையும் போன்றதே.

நுண் சிலம்பி வலந்த அன-சிறிய சிலந்திப் பூச்சி பின்னிய நூற்கூடுபோன்ற, நுண் துகில்-மெல்லிய ஆடையையும், கள் சிலம்பு கருகுழலார்-வண்டுகள் (சூழ்ந்து) ஒலிக்கின்ற கரிய கூந்தலையுமுடைய பெண்களின், குழு-கூட்டமானது, சிலம்பு உள் சிலம்ப ஒதுங்கலால்-(பெண்கள் காலில் அணிந்துள்ள) சிலம்புகளின் உள்ளிடுபரல் ஒலிக்க அசைந்து நடத்தலால், புள் சிலம்பிடு-அன்னப்பறவைகள் ஒலிக்கின்ற, பொய்கை போன்றது-தடாகத்தை ஒத்திருந்தது. ஏ-அசை.

பெண்கள் உடுத்திருந்த மெல்லிய ஆடையின் தோற்றம் நீர்ப்பரப்பாக, அவர்கள் தலையிற் சூடிய பூக்களில் வண்டுகள் மொய்த்தல் நீர்ப்பரப்பின் மீது காணப்படும் பூக்களும் வண்டுகளுமாக, அவர்கள் சிலம்பின் ஒலி பறவைக் குரலொலியாக, குழு பொய்கை போன்றது என்க.

துண் சிலம்பி எனற்பாலது எதுகை நோக்கி வலித்தல் பெற்றது. வலந்தன: தொகுத்தல் விகாரம். பொய்கையும்: உம்மை இசைநிறை.

சிலம்பி வலந்தன நுண்டுகில்: (பெரும்பாண். 235-6; பதிற். 39: 13; அகநா. 111: 5; சீவக. 340; தக்க. 54). கள்-வண்டு: திருச்சிற். 295. புள்-இங்கே அன்னப் பறவை; பறவைப் பொதுவும் ஆம். சிலம்பொலிக்கு அன்னத்தின் குரலோசை: 158-உரை பார்க்க.

(பி - ம்.) 1. அலர்ந்தன; வனைந்தன; புனைந்தன; வளைந்தன.
2. சட்சிலம்புங்; கருங்குழலார்கழல்; கருங்குழன் மங்கையர்; கருங்குழன் மங்கைபார்.
3. சிலம்பியாதுங்கலால்; புலம்பவொதுங்கலால்; சிலம்பொடொதுங்கலாம். 4. சிலம்பிடும், சிலம்புமொார்; சிலம்பிய; போன்றவே. (43)

## ஆடவர் கண்களின் செயல்

854, தெண்டி ரைப்பர வைத்திரு வன்னவர்
நுண்டி ரைப்புரை நோக்கிய நோக்கினைக்
கண்டி ரைப்பன வாடவர் கண்களி
வண்டி ரைப்பன வானை மதங்களே.

தெண் திரை-தெளிந்த அலைகளையுடைய, பரவை-திருப்பாற்கடலிலே தோன்றிய, திரு அன்னவர்-இலக்குமி போன்றவர்களாகிய மங்கையர், நுண் திரைபுரைநோக்கிய நோக்கினை-(தம்மைமறைத்துக் கொண்ட) மெல்லிய திரையிலுள்ள தொளைகளின் வழியே பார்த்த (அவர்களுடைய) கண்களை, ஆடவர் கண் கண்டு-ஆண் மக்களுடைய கண்கள் பார்த்து, இரைப்பன-மோகிப்பனவாயின; ஆனை மதங்கள்-யானைகளிடத்து உண்டாகும் மதநீர்ப் பெருக்கிலே, களி வண்டு இரைப்பன-களிக்கும் வண்டுகள் ஆரவாரித்தன.

உயர்குல மங்கையர் வெளியே செல்லும்போது தம்மை முழுதும் துணியால் மூடி மறைத்துச் செல்வர்; பார்வை தெரியும் பொருட்டு முகத்தை மூடிய துணியிலே கண்களுக்கு நேராக இரு தொளைகள் இருக்கும்; அத்தொளைகளைக் கூர்ந்து நோக்கின் அம்மங்கையரின் கண்கள் புலப்படும்; அவ்வாறு நோக்கிய ஆடவர் மகிழ்ச்சி மிக்கனரென்க. அன்றி, சிவிகையிற் செல்லும் மகளிர் அச்சிவிகையில் இடப்பட்ட திரையில் உள்ள தொளையின் வழியே வெளியே நோக்க, அப்போது அக்கண்களை ஆடவர் கண்கள் கண்டு மகிழ்ந்தன வென்றலும் ஆம்.

இரைத்தல்-மோகித்தல், தக்க. 129-உரை. யானையின் மத நீரை வண்டுகள் விரும்பி யுண்ணும்; அதனால், மதயானை யுள்ள விடத்து வண்டுகள் சூழ்தல் இயல்பு; 'வரி வண்டார்க்கும் வாய்புகு

கடாஅத்து...வயக்களிற் றெருத்தல்' (அகநா. 78:3-4); 'தன் மதந் திவண்ட வண்டு' (சீவக. 2313).

(பி - ம்.) 1. தெண்டிரைக்கடன் மேற்றிரு வன்னவர்.
2. நோக்கியர் நோக்கினைக். 3. கண்களில்; கண்களே; கண்களின்.
4. யானை மதங்களே.

இச்செய்யுள் சில பிரதிகளில் இல்லை. (47)

மாதர் சிலம்பொலியும் வாசிகள் கனைப்பொலியும்

855. உழைக லித்தன வென்ன வுயிர்த்துணை
நுழைக லிக்கருங் கண்ணியர் நூபுரம்
இழைக லித்தன வின்னிய மாவெழு
மழைக லித்தென வாசிக லித்தவே.

உழை கலித்தன என்ன-மான்கள் செருக்கியெழுந்தன என்னும் படியான (நோற்றத்துடன்), உயிர் துணை நுழை-(ஆடவரின்) உயிரளவும் சென்று ஊடுருவத்தக்க, கலி கரு கண்ணியர்-வலிமையுடைய கரிய கண்களையுடைய மகளிரின், நூபுரம் இழை-சிலம்பாகிய ஆபரணங்கள், இன் இயம் ஆ(க) கலித்தன-இனிய வாத்தியங்களாக ஒலித்தன; வாசி-குதிரைகள், எழு மழை கலித்த என-ஏழு மேகங்களும் (கூடி) முழங்கினாற்போல, கலித்த-கனைத்தன.

பெண்களின் சிலம்போசை மென்மையுடையதாகலின் அதனை இனிய வாத்திய வோசையாகவும்,குதிரைகளின் கனைப்பு ஒலி வன்மையுடையதாகலின் அதனை மேக கர்ச்சனைக் கொப்பாகவுங் கூறினர்.

(பி - ம்.) 1. என்ன துயிர்த்துணை; அன்னவுயிர்த்துணை.
2. நுழைகலித்தருங்; நுழைகலைத்தருங்; கழைகலிக்கருங்.
3. இழைகலித்தென; இன்னியமாயெழு; இன்னியமாயெழும்.
4. மழைகலித்தன; மழைகலிக்கவே; வாசிகலித்ததே; வாசிகலித்தன. (48)

ஆடவர் மகளிருள்ளே சிலர் செயல்

856. மண்க ளிப்ப நடப்பவர் வாண்முக
உண்க ளிக்கம லங்களி னுள்ளுறை
திண்க ளிச்சிறு தும்பியெ னச்சிலர்
கண்க ளிப்பன காமன் களிக்கவே.

மண் களிப்ப நடப்பவர்-பூமி தேவி மகிழும்படி (மெல்லடி வைத்து) நடக்கும் (சில) பெண்களின், வாள் முகம்-ஒளி பொருந்திய முகங்களாகிற, உண் களி கமலங்களின் உள்-(மது) உண்ட களிப்பைக் காட்டும் தாமரைகளிலே, உறை-தங்கியுள்ள, திண் களி சிறு தும்பி என-மிக்க களிப்பையுடைய சிறு வண்டுகளாகிய கண்கள் (ஆடவரை நோக்கி மகிழ்தல்) போலவே, சிலர் கண்-(ஆடவர்) சிலருடைய

கண்களும், காமன் களிக்க-மன்மதன் (தனக்குப் போர் வாய்த்ததென்று) மகிழும்படி, களிப்பன-(மாதர் முக கமலங்களைக் கண்டு) களித்து மகிழ்வன வாயின.

'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள், என்ன பயனுமில' என்றபடி, சில மகளிரும் சில ஆடவரும் தமக்குள்ளே ஒருவரையொருவர் நோக்கிக் கண்களாற் பேசி மகிழ்ந்தனரென்றவாறு. மாதர் முகங்களைத் தாமரை மலர்களாகவும்,அம் முகங்களில் உள்ள கண்களை, மலரில் தங்கும் வண்டுகளாகவும் உருவகித்தார். தும்பி-வண்டுகளில் ஒரு சாதி. தும்பி என என்றவிடத்துத் தும்பிகள் களித்தனவென என்று இடம் நோக்கி வருவித் துரைக்கப்பட்டது. ஆடவரும் மகளிருங் கலந்த பெருங்கூட்டத்துள்ளே இத்தகைய நிகழ்ச்சிகள் இடம் பெறுதல் இயல்பாதலின் இங்ஙனம் கூறினர். இனி, இச்செய்யுளை, 'மண்களிப்ப நடப்பவர் சிலர் கண், வாள்முக உண்களிக் கமலங்களின் உள் உறை தும்பி என, காமன் களிக்கக் களிப்பன' எனக் கூட்டி மகளிர் செயலாகவே கொண்டு பொருளுரைத்தலும் ஆம். வேறு வகையாக உரைப்பாரும் உளர். மண் களிப்ப-இத்தகைய மாதர் பாதங்கள் தன்மேல் படுவதைச் சிறப்பாக எண்ணிப் பூமி மகிழ என்றலும் ஒன்று.

(பி - ம்.) 1. மண்களிக்க; மண்கடப்ப; நடப்பவோர்; நடப்பவோர்; நடப்பன; வாண்முகம்; வாண்முகத்து; வாணுதல்.
2. ஒண்களிக் கமலங்களில்.
3. திண்களிச்செறி; திண்களிர்சில: எனச்சிறு; எனச்சில.
4. களித்தன; களித்தனர்.

(49)

### சுண்ணமும் தூளியும் செறிதல்

857. எண்ணு மாத்திர மும்மரி தாமிடை
வண்ண மார்த்த துவர்க்கனி வாய்ச்சியர்
திண்ண மார்த்தொளிர் செவ்விள நீரிழி
சுண்ண மார்த்தன தூளியு மார்த்தவே.

எண்ணும் மாத்திரமும் அரிது ஆம்-(மனத்தால், உளது என) நினைக்குமளவுக்கும் அரியதான, இடை-(துண்ணிய) இடையையும், வண்ணம் ஆர்த்த துவர்கனி-அழகுமிக்க செந்நிறமுடைய கொவ்வைக் கனி போன்ற, வாய்ச்சியர்-வாயையும் உடைய பெண்களின், திண்ணம் ஆர்த்து ஒளிர் செவ்விளநீர் இழி-(கச்சினால்) இறுகக் கட்டப்பட்டு விளங்குகிற, செவ்விளநீர் போன்ற கொங்கைகளினின்றும் உதிர்ந்த, சுண்ணம்-சுண்ணப் பொடிகள், ஆர்த்தன-(எங்கும்) நிறைந்தன; தூளியும்-புழுதியும், ஆர்த்த-நிறைந்தன. ஏ, ஈற்றசை.

செவ்விளநீர்-அடையடுத்த உவமவாகுபெயர். சுண்ணம்-நறுமணப்பொடி; அது மிகுதி பற்றிப் பன்மையாற்கூறப்பட்டது. உயர்வு

நவிற்சியாக இதனை முதலிற்கூறி, அடுத்தபடி தூளியைக் கூறினர். தூளியும்: உம்மை இறந்தது தழுவியது. சேனையால் எழுந்த தூளியின் மிகுதியைப் பின்னே (859) வேறே கூறுதலின், இங்கே தூளியும் (சுண்ணப் பொடியினிடையே கலந்து) எழுந்தது என இலேசாகக் கூறினர்.

(பி - ம்.) 1. எண்ணமாத்திரமும்; எண்ணுமாத்திரையும்; அரிதாயிடை.
2. வண்ணமாத்த; வண்ணமாத்துவர் வாய்க்கனி.
3. திண்ணமாத்தொளிர்; திண்ணமார்த்தன; நீரழி; நீரின்மேல்.
4. சுண்ணமாத்தன; ஆத்தவே; ஆர்ப்பவே; ஆர்த்தன. (50)

சில பிரதிகளில் இச்செய்யுள் 'உழைகலித்தன' (855) என்பதன் முன்னே உள்ளது.

### வழிச் சென்ற சனத்திரளின் பெருக்கம்

858. சித்தி ரத்தடந் தேர்மைந்தர் மங்கையர்
உய்த்து ரைப்ப நினைப்ப வுலப்பிலர்
இத்தி றத்தின ரெத்தனை யோபலர்
மொய்த்தி ரைத்து வழிக்கொண்டு முன்னினர்.

சித்திரம் தட தேர்-அழகிய பெரிய தேர்களிலே (சென்ற), மைந்தர் மங்கையர்-ஆடவரும் மகளிரும், உய்த்து உரைப்ப-(இவ்வளவினரென்று) ஊகித்துச் சொல்லவும், நினைப்ப-நினைக்கவும், உலப்பு இலர் - அளவில்லாதவராயிருந்தனர்; இ திறத்தினர் - இத்தகைய (தேரிற்செல்லும்) பெருமையுடையவரும், எத்தனையோபலர்-(வேறு) மிகப் பலவகையினரும், மொய்த்து-நெருங்கி, இரைத்து-(மகிழ்ச்சியோடு) பேசி ஆரவாரித்து, வழி கொண்டு-(மிதிலைக்குச் செல்லும்) வழியைப் பற்றி, முன்னினர்-விரைந்து சென்றனர்.

இராமபிரானது திருமணத்தைக் கண்டு களித்தலில், உயர்ந்தோர், இடைப்பட்டோர், தாழ்ந்தோர் என்ற வேறுபாடின்றி, அனைவரும் ஊக்கங் கொண்டு சென்றனர் என்றவாறு. திருமணச் செய்தி பரவியவுடன், அயோத்தி நகரத்தார் மட்டுமன்றி, அயலிடங்களிலுள்ளாரும் மிகப்பலராகத் திரண்டு வந்து மிதிலையை நோக்கிச் சென்றிருத்தல் கூடுமாதலால் 'எத்தனையோ பலர்' என்ருர்.

(பி - ம்.) 1. சித்திரத்தடந் தோண்மைந்தர்; சித்திரப்புயத் தேர்மைந்தர்; சித்திரத் தடந்தோளர்; சித்திரப்புய மைந்தர்; தெரிவையர்; சேடியர்.
2. உய்த்துரைக்க; உற்றுரைக்க; உய்த்துரைத்து; உய்த்துரைப்பின்; நிரப்ப; நிரம்ப; நிரைப்ப; உணர்ப்பிலர்; உரைக்கிலர்; உரைக்கலர்; உரைத்திலார்; உலப்பிலார்.
3. இத்திறத்தனர்; அத்திறத்தினர்; எத்திறத்தினர்; எத்தனையோபிறர்; எத்தனையோர்பிறர்; எத்தனையோர்பலர்; எத்தனையோரிடை.
4. மொய்த்திரைத்த; வழிக்கொடு; முந்தினர். (51)

## எழுந்த தூளியின் ஏற்றம்

(வேறு)

859. குசையுறு பரியுந் தேரும் வீரருங் குழுமி யெங்கும்
விசையொடு கடுகப் பொங்கி வீங்கிய தூளி விம்மிப்
பசையுறு துளியின் றாரைப் பசுந்தொளை யடைத்த மேகம்
திசைதொறு நின்ற யானை மதத்தொளை செம்மிற் றன்றே.

குசை உறு பரியும்-கடிவாளம் பூண்ட குதிரைகளும், தேரும்-தேர்களும், வீரரும்-படை வீரர்களும், எங்கும் குழுமி-எங்கும் கூடி, விசையொடு கடுக-மிக விரைந்து செல்லுதலால், பொங்கி வீங்கிய தூளி-மேலெழுந்து பரந்த புழுதிப்படலம், விம்மி-செறியப்பெற்று, மேகம்-(ஆகாயத்திலுள்ள) மேகங்கள், பசை உறு-ஈரம் பொருந்திய, துளியின் தாரை-நீர்த்துளிகளின் கூட்டமாகிய மழைத்தாரைகள் (வருதற்குரிய), பசுமை தொளை-ஈரமுள்ள தொளைகள், அடைத்த-அடைபட்டன; திசை தொறும் நின்ற யானை-ஒவ்வொரு திக்கிலும் நிலைபெற்ற திக்கு யானைகளின், மதம் தொளை-மதநீர் வெளிப்படும் தொளைகளையும், செம்மிற்று-(புழுதி) நிறைந்து தூர்த்தது. அன்று ஏ-அசைகள்.

தூளி இவ்வுலக முழுதும் வெற்றிடமின்றிப் பரந்து, மேலேயும் மேகமண்டலம் வரை சென்றது என்றது உயர்வு நவிற்சி.

மு. ஒப்பு: *1115*; கிட்கிந்தா. *714*; வி-பா. பதினாறும் போர். 73.

(பி - ம்.) 1. குசையுறும்; குழுமி யோங்கும்,
2. விசையுறு கடுப்பிற்; விசைகொடு முடுகப்; விசெயொடு முடுகிப்; விசையொடு கடுப்ப வோங்கி: விளங்கிய: தூளி விம்மப்; தூளி வெள்ளம்.
3. பசையறு: பசுந்துளி; பசுந்துளை; அடைந்த; படைத்த.
4. திசையுற: மதத்துளை: செறிந்ததன்றே; செறித்ததன்றே: செறிந்த வன்றே; செறித்தவன்றே. (52)

## யானைமதப் பெருக்கு

860. கேடகத் தடக்கை யாலே கிளரொளி வாளும் பற்றிச்
சூடகத் தளிர்க்கை மற்றைச் சுடர்மணித் தடக்கை பற்றி
ஆடகத் தோடை யானை யழிமதத் திழுக்க லாற்றில்
பாடகக் காலி னாரைப் பயப்பயக் கொண்டு போனார்.

(படைவீரர் பலர்), கேடகம் தட கையாலே-கேடகத்தை யேந்திய பெரிய (இடக்)கையினாலேயே, கிளர் ஒளி வாளும் பற்றி-விளங்குகின்ற ஒளியுடைய வாளையும் பிடித்துக்கொண்டு, சுடர் மணி மற்றை தட கை-ஒளிவீசும் கடகமணிந்த மற்றொன்றாகிய பெரிய (வலக்)கையினால், சூடகம் தளிர் கை பற்றி-(தம் மனைவிமாருடைய)

வளையணிந்த தளிர் போன்ற கையைப் பிடித்து, ஆடகத்து ஓடை யானை அழி மதத்து-பொன்னாலாகிய நெற்றிப்பட்ட மணிந்த யானை களிடமிருந்து பெருகும் மதநீரால், இழுக்கல் ஆற்றில்-வழுக்குதலு டைய வழியிலே, பாடகம் காலினாரை-பாடகமணிந்த கால்களை யுடைய அம்மனைவிமாரை, பய பய-மெல்ல மெல்ல, கொண்டு போனார்-நடத்திக்கொண்டு போனார்கள்.

யானைத் திரளின் மிகுதியால், அவை சொரியும் மதநீரும் மிகுதி யாகி, வழியெல்லாம் சேருகவே, அதனில் நடக்க அஞ்சிய மகளிரை, வீரர்கள் கைப்பிடித்து மெல்ல நடத்திச் சென்றார்களென்றவாறு. மத நீரால் தரை இயல்பிலே சேருவதோடு, மேலெழுந்த தூளியும் படித லால் வண்டலிட்டு வழுக்கல் மிக்கதாயிற்று; அதனால் மகளிர் அங்கே நடக்க அஞ்சினர் எனலாம்.

போர் வீரர்கள், இடது கையில் கேடகமும் வலது கையில் வாளும் பிடித்துப் போர்புரிதல் மரபு; எனவே, அவ்விரண்டும் அவ்வக் கையில் இருக்கும்; இங்கே அவர்கள், தம் மனைவிமார் கையைப்பற்றி நடத்திச் செல்லும் பொருட்டு, வலக்கையிலிருந்த வாளையும் இடக் கைக்கு மாற்றிக்கொண்டார்களென்க. 'வீரர்' என்ற எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. பாடகம்-மாதர் காலணிவகை; பாடாம் என்பது உலக வழக்கு. பயப்பய=பையப்பைய.

*அழிதல்-பெருகுதல்; சீவக. 1193. பயப்பய:* ஆரணிய. 144, 642.

(பி - ம்.) 1. *தடக்கையோடு; பற்றச்.*
2. *சூடகத் தடக்கை பற்றச்; தளிர்க்கைமற்றோர்; சுடரொளித் தடக்கை; துணைத்தடக்கையால்; பற்ற.*
3. *இழிமதத்து; மும்மதத்து; அணிமதத்து; இழுக்கல் யாற்றிற்; இழுக லாற்றிற்; ஒழுகலாற்றிற்.*
4. *கமலத்தாரைப்; பையவே; பைப்பயக்; பைப்பையக்; கொண்டு போவார்; பையக்கொண்டேகுவாரும்.* (53)

### சில மகளிர் செயல்

861. செய்களின் மடுவி னன்னீர்ச் சிறைகளி னிறையப் பூத்த
நெய்தலுங் குமுதப் பூவு நெகிழ்ந்தசெங் கமலப் போதும்
கைகளு முகமும் வாயுங் கண்களுங் காட்டக் கண்டு
கொய்திவை தருக வென்று கொழுநரைத் தொழுகின் றாரால்.

செய்களில்-(வழியில் உள்ள) வயல்களிலும், மடுவில்-மடுக்க ளிலும், நல் நீர் சிறைகளில்-நல்ல நீர் நிறைந்த குளங்களிலும், நிறைய பூத்த—, நெய்தலும்-கரு நெய்தல் பூவும், குமுதம் பூவும்-செவ்வல்லிப் பூவும், நெகிழ்ந்த செங்கமலம் போதும்-வாய் விண்ட செந்தாமரைப் பூவும் (ஆகிய இவைகள்), கைகளும்-(மங்கையரின்)

கையழகையும், முகமும்-முகத்தழகையும், கண்களும்-கண்களினழகையும், காட்ட-தோற்றுவிக்க, கண்டு-(அவற்றைப்) பார்த்து, இவை கொய்து தருக என்று-இப்பூக்களைப் பறித்துத் தருக எனக் கூறி, கொழுநரை-(தத்தம்) கணவன்மாரை, தொழுகின்றார்-வணங்குவாராயினர் (சில மங்கையர்). ஆல்-அசை.

நீர்ச்சிறை - நீரைச் சிறைப்படுத்திய இடம்; குளங்கள்.

கொழுநரைத் தொழுகின்றார் என்றமையின் மகளிர் என்பது பெறப்பட்டது. தம் கணவன்மாரைத் தொடர்ந்தும் கைப்பற்றியும் சென்ற மங்கையர் சிலர், வழியிலுள்ள நீர்நிலைகளில் தங்கள் அவயவங்களை ஒத்த பூக்கள் மலர்ந்திருக்கக் கண்டு,அவற்றைத் தம் கையில் வைத்து அழகு பார்த்தற் பொருட்டு அவைகளைப் பறித்துத் தருமாறு தம் கணவன்மாரை வேண்டினர் என்க. செந்தாமரைப் பூக்கள் கைகளுக்கும் முகத்துக்கும், செவ்வல்லிப் பூக்கள் வாய்க்கும், நெய்தல் மலர்கள் கண்களுக்கும் முறையே ஒப்பு என எதிர் நிரல் நிரையாகக் கொள்க.

(பி - ம்.) 1. மடுவி லன்ன நீர்ச்சிறை; நடுவினன்னீர்ச் சிறைகளும்.
2. நெய்தலுங் கமலப்போதும்; கமலப்பூவும்; நிறைந்தசெங்; குமுதப் போதும், குமுதப்பூவும்.
3. முகமுங் கண்ணும் வாய்களும்.
4. கொய்தவை; தருதிரென்று; தருதியென்று; தொழுகின்றாரும். (54)

862. பந்தியம் புரவி நின்றும் பாரிடை யிழிந்தோர் வாசக்
குந்தள பாரஞ் சோரக் குலமணிக் கலன்கள் சிந்தச்
சந்தநுண் டுகிலுஞ் சோரத் தளிர்க்கையா லணைத்துச் சார
வந்தது வேழ மென்ன மயிலென விரியல் போவார்.

பந்தி அம் புரவி நின்றும்-வரிசையாகச்சென்ற அழகிய குதிரைகளின் மீதிருந்து, பார் இடை இழிந்தோர்-(கீழே) தரையில் இறங்கிய (சில)மாதர், வேழம் சார வந்தது என்ன-யானை (தம்மை)அணுகி வருகின்றதென்று(அறிந்து), (அச்சத்தால்), வாசம் குந்தள பாரம் சோர-மணம் பொருந்திய கூந்தற்சுமை அவிழ்ந்து தொங்கவும், குலம் மணி கலன்கள் சிந்த-சிறந்த இரத்தினுபரணங்கள் (கீழே விழுந்து) சிதறவும், சந்தம் நுண் துகிலும் சோர-அழகிய நுண்ணிய அரையாடையும் (அவிழ்ந்து) தளரவும், தளிர் கையால் அணைத்து-(ஆடையை) தளிர் போன்ற தம் கைகளால் இடுக்கிக்கொண்டு, மயில் என-மயில்கள்போல, இயரில் போவார்-தடுமாறி ஓடலாயினர்.

இழிந்தோர் இரியல் போவார் எனக் கூட்டுக. இழிந்தோர்: வினையாலணையும் பெயர்.

குதிரைகள் மீது சென்ற மாதர் சிலர், ஆறுதலாகச் சற்றுக் கீழிறங்கி வரக் கருதிக் குதிரைகளினின்றும் இறங்கியபோது, மத

யானை அண்மையில் வருகின்றதெனக் கண்டோர் கூறக் கேட்டு, நிலை தடுமாறி ஓடலாயினரென்க. அவ்வாறு ஓடினவர்கள், தம் அணி கலன்கள் கீழே சிந்திப்போவதையும் பொருட்படுத்தாமல், உயிரினுஞ் சிறந்த மானத்தைக் காத்துக்கொள்ளுதற் பொருட்டு, அவிழ்ந்து விழும் ஆடையைக் கைகளால் இடுக்கிக்கொண்டு ஓடினர். ஆடை அவிழ்ந்தால் நம் நினைவின்றியே கைகள் உதவுதல் இயல்பு; 'உடுக்கை யிழந்தவன் கைபோல' (குறள். 788).

(பி - ம்.) 1. பந்தியாம் புரவிநின்று; இழிந்து; இழிந்தும்: பாரக்; பாகக்.
2. கொந்தள பாரஞ்; குலன்மணிக் கலன்கள்; குலமணிக் கலைகள்; குலை மணிக்கலைகள்; கோலமா மணிகள்.
3. துகிலும் வீழத்; கலைகள் சோரத்; துகிலும் வீசத்; அணையச்சார.
4. வேழமென்று: மயிலென்ன: போனர். (55)

பகலும் இரவும் ஒருங்கு தோன்றல்

863. குடையொடு பிச்சந் தொங்கற்
குழாங்களுங் கொடியின் காடும்
இடையிடை மயங்கி யெங்கும்
வெளிகரந் திருளைச் செய்யப்
படைகளு முடியும் பூணும்
படர்வெயில் பரப்பிச் செல்ல
இடையொரு கணத்தி னுள்ளே
யிரவுண்டு பகலு முண்டே.

குடையொடு-குடைகளும், பிச்சம்-மயிற் பீலிக் குடைகளும், தொங்கல் குழாங்களும்-பீலித் தொங்கல் கூட்டமும், கொடியின் காடும்-கொடிகளின் தொகுதியும், இடை இடை மயங்கி-ஒன்றோ டொன்று கலந்து, எங்கும் வெளி கரந்து-எங்கும் இடைவெளி யின்றி மறைத்து, இருளை செய்ய-இருளை உண்டாக்க, படைகளும்-வாள், வேல் முதலிய படைக்கலங்களும், முடியும்-இரத்தின கிரீடங்களும், பூணும்-மற்ற ஆபரணங்களும் (கூடி), படர் வெயில் பரப்பி செல்ல-விரிந்த வெயிலைப் பரப்பிக்கொண்டு போக, இடை-(சேனை செல்லும்) இடங்களில், ஒருகணத்தின் உள்ளே-ஒருகணப் பொழுதிலே, (ஒரே காலத்திலே) இரவு உண்டு, பகலும் உண்டு-இரவும் பகலும் ஒருங்கே உண்டாயின. ஏ-அசை; வியப்பைக் குறித்ததுமாம்.

தொங்கல், விருதுப் பொருள்களுள் ஒன்று; மயில் தோகை யால் செய்யப்படுவது- குடை முதலியன மிக நெருங்கியிருத்தலால், வெயில் வர இடைவெளி யின்றிச் செறிந்த சோலைபோல இருளாகின்றது. ஆபரணங்களும் ஆயுதங்களும் ஒளிவீசுதலால் அவ்விருளிடையே ஒளியுமுண்டாகிறது. எனவே இரவும் பகலும் ஒரே சமயத்தில் காணப்படுகின்றன என்றார். கொடிகளின் மிகுதிபற்றிக் 'காடு' என்றார்.

ஒப்பு: 'தொங்கலுங் குடையுந்தோகைப் பிச்சமுஞ் சுடரை யோட்ட' (885); 'தொங்கல்வெண் குடைதொகைப் பிச்சமுட்பட விராய், எங்கும்விண் புதைதரப் பகன்மறைந் திருள்செய' (1112).

(பி - ம்.) 1. குடையொடு களிறுந்: குடையொடுங களிறுந்: குடையொடு கவரித்; குழாங்களின்.

2. மிடைதலின் மயங்கி யெங்கும்; மிடை தர மயங்கி யெங்கும்; மிடைதரு மயக்கத்தெங்கும்; மிடைதரு பக்கத்தெங்கும்; மிடைதலில் வயங்கித் தொங்கும்; வயங்கத்தோன்றும்; மயங்கத்தோன்றும்; மயங்கவெங் கும்; மயக்குற்றெங்கும்; வெளிமறைந்து; வெளிக்கரத்து; வெயில் கரந்து.

3. பகல்வெயில் பரப்பிச் செல்ல; படர்வெயில் பரப்பச் செல்ல; பட வெயில் பரப்பிச் செல்ல; ஆரமும் பகலைச்செய்ய. (50)

மகளிருக்கு வழிவிட்டு ஆடவர் விலகிச் செல்லல்

864. முருக்கிதழ் முத்த மூரன் முறுவலார் முகங்க ளென்னும்
திருக்கிளர் கமலப் போதிற் றீட்டின கிடந்த கூர்வாள்
நெருக்கிடை யறுக்கு நீவிர் நீங்குமி னீங்கு மென்றென்
றருக்கனி லொளிரு மேனி யாடவ ரகலப் போவார்.

அருக்கனில் ஒளிரும் மேனி-சூரியனைப் போலப் பிரகாசிக்கும் உடம்பினையுடைய, ஆடவர்—, முருக்கு இதழ்-முண் முருக்கம் பூப் போன்ற உதடுகளையும், முத்தம் மூரல்-முத்துப் போன்ற பல் வரிசை யையும், முறுவலார்-புன்சிரிப்பையு முடைய மகளிருடைய, முகங்கள் என்னும் - முகங்களென்று சொல்லப்படுகின்ற, திரு கிளர் கமலம் போதில்-அழகு விளங்குகின்ற தாமரைப் பூக்களிலே, தீட்டிய கிடந்த-(நன்கு) தீட்டப்பட்டனவாகி யிருக்கின்ற, கூர் வாள்-கூரிய வாட் படைகள் (கண்கள்), நெருக்கு இடை அறுக்கும்-(நம்முடைய) நெருக் கத்தை ஊடறுத்துச் செல்லும்; (ஆதலால்), நீவிர் நீங்குமின் நீங்கும்- நீங்கள் (அவர்களுக்கு வழிவிட்டு) விலகுங்கள் விலகுங்கள், என்று என்று-என்று (ஒருவர்க்கொருவர்) சொல்லிக்கொண்டு, அகல போவார்-விலகிச் செல்வார்கள்.

மகளிருக்கு ஆடவர் வழிவிட்டுச் செல்ல வேண்டும் என்பது பொது விதியாகலின், மகளிர் கூட்டமாக வருதலை நோக்கி ஆடவர் அவ்வாறு விலகிச் சென்றமையைச் சாதுரியமாகக் கற்பித்துக் கூறு வாராய். 'நாமாக வழிவிட்டுச் செல்லாவிடின், மகளிர் தம் கண்களா கிய வாள்களால் நம் நெருக்கத்தை ஊடறுத்து வழி செய்துகொண்டு செல்வார்களாதலால், நாமே முந்திக் கொள்வோம்' என்று கருதி ஆடவர் விலகிச் சென்றனர் என்றார்.

தீட்டின-வினையாலணையும் பெயர். 'நீங்குமின் நீங்கும்' என்ற ஏவற் பன்மை முற்றின் அடுக்கு, விரைவு அல்லது அச்சப் பொருள்

குறித்தது, 'என்று என்று' என்னும் அடுக்கு, ஒரு பொருள் பலகால் நிகழ்வதைக் குறிக்கும்.

மகளிர் கண்களின் செயல்: ஒப்பு: 'வாளரந் துடைத்த வைவே லிரண்டுடன் மலைந்தவேபோல், ஆள்வழக் கொழிய நீண்ட வணி மலர்த் தடங்கண்' (சீவக. 461.).

(பி - ம்.) 1. முத்தமன்ன; முறுவலர். 2. தீட்டிய கிடந்து.
3. நெருக்கினில்: அறுக்கு நீங்கள்; அறுக்கு நீர்கள்; அறுக்கு மிங்கண்; ஒறுக்கு நீங்கள்; அறுக்கு நங்கண்; அணங்கை நீங்கும்; நீங்குமென் றெண்ணி; இயலிடை நீங்கும்.
4. அகலப் போனார்; அரிதிற் போனார். (57)

நடத்தல் அரிதென மகளிர் நிற்றல்

865. நீந்தரு நெறியி னுற்ற நெருக்கினாற் சுருக்குண் டற்றுக்
காந்தின மணியு முத்துஞ் சிந்தின கலாபஞ் சூழ்ந்த
பாந்தளி னல்கு லார்தம் பரிபுரம் புலம்பு பாதப்
பூந்தளி ருறைப்ப மாழ்கிப் போக்கரி தென்ன நிற்பார்.

நெறியின் உற்ற-வழியில் உண்டான, நீந்த அரு நெருக்கினால்-கடந்து செல்லுதற்கரிய சன நெருக்கத்தினால், சுருக்குண்டு அற்று-(கழுத்தணிகள்) சுருக்கேறி அறுந்து போதலால், காந்து-ஒளி வீசுகின்ற, இனம்-கூட்டமான, மணியும் முத்தும்-இரத்தினங்களும் முத்துக்களும், சிந்தின-(கீழே) சிதறியவை, கலாபம் சூழ்ந்த-(பதினாறு கோவையுள்ள இடையணியாகிய) கலாபம் கட்டப்பெற்ற, பாந்தளின் அல்குலார் தம்-பாம்புப் படம் போலும் நிதம்ப முடைய மகளிரின், பரிபுரம் புலம்பு-சிலம்புகள் ஒலிக்கின்ற, பாதம் பூ தளிர்-பாதங்களாகிய மெல்லிய தளிர்களிலே, உறைப்ப-உறுத்தலால், (அவர்கள்), மாழ்கி-தடுமாறி, போக்கு அரிது என்ன-(மேலே நடந்து) போவது இயலாதது என்று, நிற்பார்—.

அற்றுச் சிந்தினவை உறைப்ப, அல்குலார் போக்கரிதென்ன நிற்பார் எனக் கூட்டுக. மணியும் முத்தும் சிந்தின என்றதனால், அவை மகளிரின் அணிகலன்களில் இருந்தவை என்பதுபெறப்பட்டது. பாதப் பூந்தளிர்-தளிர்போன்ற பாதம். பாதங்கள் வருந்துதலுக்கு இரங்கிப் பரிபுரங்கள் புலம்பின என்ற குறிப்பும் ஓர்தற் குரியது.

நீந்தரு - தொகுத்தல்; சிந்தின-வினையாலணையும் பெயர். பாந்தள்-ஆகுபெயர்.

(பி - ம்.) 1. நெறியிலுற்ற; நெறியிற்றந்த; நெறியிற்றத்தம்; நெருக்குண்டற்றுக்; சுருக்குண்டாற்றக்; சுருக்குண்டற்ற.
2. காந்திய; காந்துநன்; சிதறின.
3. புலம்பப் பைம்பொன்; புலம்பும் பைம்பொன்; அலம்பு பைம்பொன்.
4. இறைப்பமாழ்கிப்: போகரிது. (58)

### வண்டிகளில் பூட்டிய காளைகளின் செயல்

866. கொற்றநல் லியங்க ளெங்குங் கொண்டலிற் றுவைப்பப் [பண்டிப்
பெற்றவே றன்னப் புள்ளிற் பேதையர் வெருவி நீங்க
முற்றுறு பரங்க ளெல்லா முறைமுறை பாசத் தோடும்
பற்றற வீசி யேகி யோகியிற் பரிவு தீர்ந்த.

கொற்றம்-வெற்றி பொருந்திய, நல் இயங்கள்-நல்ல (பல) வாத்தியங்கள், எங்கும்-எல்லாப் பக்கங்களிலும் கொண்டலின் துவைப்ப-மேக முழக்கம்போல முழங்குதலால், பண்டி பெற்ற ஏறு-(பாரம் ஏற்றிய) வண்டிகளில் பூட்டபட்ட (சில) காளைகள், (வெருண்டு) முற்று உறு-நிறைய ஏற்றப்பட்ட, பரங்கள் எல்லாம்-பண்டப் பொதிகளெல்லாம், முறைமுறை-வரிசைவரிசையாக, பாசத் தோடும்-(அவை) கட்டப்பட்ட கயிறுகளுடனே, பற்று அற வீசி-அறுந்து சிதறிப்போம்படி தள்ளிவிட்டு, பேதையர்-(பக்கத்திலுள்ள) பெண்கள், வெருவி-அஞ்சி, அன்னம் புள்ளின்-அன்னப் பறவைகளைப் போல, நீங்க-(வழியினின்றும்) விலகியோடும்படி, ஏகி-(கட்டறுத்துக் கொண்டு) ஓடி, யோகியின்-யோகிகளைப்போல, பரிவு தீர்ந்த-வருத் தந்தீர்ந்தன.

இயங்கள்துவைப்ப, ஏறு, பரங்களெல்லாம் வீசி, பேதையர் வெருவி நீங்க ஏகி, பரிவு தீர்ந்த எனக் கூட்டி முடிக்க.

வாத்திய கோஷத்தால் வெருண்ட வண்டிக் காளைகள், கட்ட றுத்துக் கொண்டு, வண்டியிலேற்றிய சுமைகளும் அவிழ்ந்து சிதறும் படி தள்ளிவிட்டுக் கூட்டத்தினின்றும் வெளியே ஓடி, சுமையிழுக்கும் வருத்தமும் தீர்ந்து, வெருட்சியும் அடங்கின என்க. பாசமும், பற்றும் அற்றுப் பரிவு தீர்தல் யோகிக்கும் காளைக்கும் பொது; யோகிக்கு; பாசம்-உலகத் தொடர்பாகிய கட்டு; பற்று-அத் தொடர்புக்குக் காரணமான அகப்பற்று, புறப்பற்றுக்கள்; பரிவு தீர்தல்-பாசமும் பற்றும் அற்றதனுல் உலக இன்னல்கள் நீங்கி நன்னிலையடைதல்; 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பர். காளைக்கு: பாசம்-வண்டியிற் பூட்டிய கயிறு; பற்று-கட்டுண்டிருத் தல்; பரிவு தீர்தல்-சுமை யிழுத்தலினின்றும் விடுபடல்.

ஏறும் புள்ளும் பால்பகா வஃறிணை. காளை ஒவ்வொன்றும் யோகியைப் போலாயினமையின் 'யோகியின்' என ஒருமையாற் கூறினர். தீர்ந்த: அஃறிணைப் பன்மை வினைமுற்று. பெண்களுக்கு அன்னத்தை உவமை கூறுதல் மரபு. 871-பார்க்க. சீதாபிராட் டியை 'அன்னம்' என்று பலவிடத்தும் கம்பர்நாடர் கூறுதல் காணலாம்.

(பி - ம்.) 1. பல்லியங்கள்; மங்கலங்கள்; ஓங்கும்; துவைப்ப மண்டிப்.
2. பெற்றமற்றன்னப்;பெற்றவென்றன்னப்; பெற்றவேறென்னப்; வெருவி நீங்கி; செவ்விநீங்க; தங்களோடு.
3. பாரமெல்லாம்; பரிகளெல்லாம்; மரங்களெல்லாம்; பாசத்தோடு; பரிசத்தோடும்; பந்தத்தோடும்.
4. வீசிச்செல்லும்; வீக்கிச்செல்லும்; பரிவுதீர்ந்தே; பரிவு தீர்ந்தார்; பிரிவுதீர்த்தார். (59)

## சில யானைகளின் செயல்

867. காற்செறி வேகப் பாகர் கார்முக வுண்டை பாரா
வார்ச்செறி கொங்கை யன்ன கும்பமு மருப்புங் காணப்
பாற்செறி கடலுட் டோன்றும் பணைக்கைமால் யானை யென்ன
நீர்ச்சிறை பற்றி யேறு நின்றகுன் றனைய வேழம்.

குன்று அனைய வேழம்-மலை போன்ற பெரிய (சில) யானைகள், நீர் சிறை பற்றி-(வழியிலே) நீர் நிலையைக் கண்டு (அதிலிறங்கி), பாகர்-தம்முடைய பாகர்கள் (வீசுகிற), கால் செறி வேகம்-காற்றை யொத்த விசையுடைய, கார்முகம் உண்டை-வில்லுண்டைகளை, பாரா-பொருட்படுத்தாமல், வார் செறி கொங்கை அன்ன-கச்சினுள் அடங்கிய (மாதரின்) தனங்களைப் போன்ற, கும்பமும்-மத்தகமும், மருப்பும்-கொம்புகளும், காண-வெளியே தெரியுமாறு, பால் செறி கடலுள் தோன்றும்-பாற்கடலினின்றும் எழுந்து வருகிற, பணை கை மால் யானை என்ன-பருத்த துதிக்கையையுடைய பெருமை பொருந்திய ஐராவத மென்னும் யானையைப் போல, ஏறு-கரையேறாமல், நின்ற-(நீர்நிலையிலேயே துளைந்துகொண்டு) நின்றன.

யானைகளுக்கு நீரிலே துளைவதில் விருப்பம் அதிகமாதலால், சில யானைகள், வழியிலே நீர்நிலையைக் கண்டவுடன், தம் பாகரையும் கை கடந்து சென்று நீரில் இறங்கித் துளையலாயின; பாகர்கள் கரைக்கு வந்து, வில்லில் வைத்து எய்யும் களிமண்ணுருண்டைகளால் யானைகளை அடித்துக் கரையேறச் செய்ய முயல, அவ்வுருண்டை யடிகளையும் பொருட்படுத்தாமல் யானைகள் குளத்திலே துளைந்துகொண்டிருந்தன. நீர்நிலை பாற்கடல் போலிருக்க, யானை ஒவ்வொன்றும் ஐராவதம் போலிருந்தது என்க.

பால் செறி கடல்-பால் நிறைந்த கடல்=பாற்கடல். நின்ற: அஃறிணைப் பன்மை முற்று. பாரா, ஏறு: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். நீர்ச்சிறை: 861-பார்க்க.

(பி - ம்.) 1. கார்ச்செறி; கார்செறி; வேழப் பாகர்; கார்முக வுண்டை பாரார்; கார்முகவுண்டை பற்ற.
2. வார்ச்சிறைக்; வார்ப்பொறைக்; வார்செறி; கொங்கை வென்று; கும்பமன்ன; குங்கும மருப்புக்காணப்; கொம்பகவு மருப்புங்காணக்.

3. பார்ச்செறி கடலில்; பார்ச்செறி கடலுள்; பார்செறி கடலில்; பணைக் கைமால்.

4. நீர்சிறை பற்றி நீங்கா; நீர்சிறை யெற்றியெங்கும்: குன்றன்ன. (60)

## பாணரும் விறலியரும்

868. அறலியற் கூந்தல் வாட்க ணமுதுகு குதலைச் செவ்வாய்
விறலிய ரோடு நல்யாழ்ச் செயிரியர் புரவி மேலார்
நறைசெவிப் பெய்வா ரென்ன நைவள முழுதும் பாடி
முறைமுறை நணுகப் போனர் கின்னரமிதுன மொப்பார்.

சின்னரம் மிதுனம் ஒப்பார்-இரட்டைக் கின்னரம் போன்றவராகிய, அறல் இயல் கூந்தல்-கருமணலை யொத்த (நெறித்த) கூந்தலையும், வாள் கண்-வாள் போலுங் கண்களையும், அமுது உகு-அமுதம் சொட்டுகிற, குதலை-இன் சொற்களைப் பேசும், செவ் வாய்-சிவந்த வாயையுமுடைய, விறலியரோடு-பாடினிகளுடனே, நல் யாழ் செயிரியர்-சிறந்த யாழ்ப் பாணரும், புரவி மேலார்-குதிரைகள் மீது ஏறியவர்களாய், நறை செவி பெய்வார் என்ன-(கேட்போர்) காதுகளிலே தேனைச் சொரிவார்போல, நை வளம் முழுதும்-பாலைப் பண் வகைகளை யெல்லாம், முறை முறை பாடி-முறையாகப் பாடிக் கொண்டு, நணுக போனர்-நெருங்கிச் சென்றார்கள்.

பாணரும் விறலியரும், வழிநடை வருத்தம் தெரியாமலிருத்தற் பொருட்டு, இனிய கீதங்களைப் பாடிக் கேட்பிப்பவராகிக் குதிரைகளின் மீது சென்றார்கள் என்க. கின்னர மிதுனம்-தேவசாதியுள் ஒருவகை. மானுடவுடம்பும் குதிரை முகமும் உடையவர் என்பர். இவர்கள், இசை வல்லுநராய் எப்போதும் ஆணும் பெண்ணும் இணைந்தே இயங்கும் தன்மையுடையோராதலின், 'மிதுனம்' (இரட்டை) என்றே வழங்கப் பெறுவர். கின்னரம்-இசையறியும் பறவை வகை யென்றலு முண்டு. விறல்-உள்ளக் குறிப்பைப் புலப்படுத்த உடம்பில் தோன்றும் மெய்ப்பாடு; விறல் தோன்ற ஆடல் பாடலில் வல்லோர் விறலியர். இசையின் இனிமைக்குத் தேனை உவமித்தார். முறை முறை-(பாணரும் விறலியரும்) முறையாக மாறி மாறி என்றலும் பொருந்தும். நைவளம், மிக்க இனிமையுடைய பாலைப் பண்வகை; இதனை 'நட்டபாடை' எனவுங் கூறுவர்; சீவக. 2435-உரை; பரி. 18: 15-21 உரை.

செயிரியர்: 781; சுந்தர. 287. நைவளம்; 1227; சிறுபாண். 36; குறிஞ்சி. 146. கின்னர மிதுனம்: 935; அயோத். 758. கின்னரம்: 928; பெரும்பாண். 494; சீவக. 660; தக்க. 114, 151, 610.

(பி - ம்.) 1. அறலியல்: கண்வாள்; குமுதச் செவ்வாய்.

2. விறலியர் நாடு: செவிலியர்: புரவிமேலோர்.

3. செவி பெய்வதென்ன; செவி பெய்ததென்ன; செவிப் பெய்தவென்ன; செவி பெயர்வதென்ன; செவியணையமாந்தி; நைவளவமுதப் பாடல்; நனைவளர் மேகப்பாடல்; நனைவன மோகப்பாடல்; நல்வன முழுதும் பாட; நைவள நவிற்று பாடல்.
4. நுங்கிப் போந்தார்; நுங்கப் போனார்; பகர்ந்து போனார்; நணுகிப் போனார்; மூங்கிப்போனார்; கின்னரர்மிதுனம். (61)

### மதங் கொண்ட யானையின் செயல்

869. அருவிபெய் வரையிற் பொங்கி யங்குச நிமிர வெங்கும்
இரியலிற் சனங்கள் சிந்த விளங்களிச் சிறுகண் யானை
வரிசிறைத் தும்பி யீட்டம் வார்மதந் தோய்ந்து மாதர்
சுரிகுழற் படிய வேறும் பிடியையுந் தொடர்ந்து செல்வ.

இளம் களி சிறு கண் யானை-இளமையும் மதக்களிப்பும் சிறிய கண்களுமுடையதொரு யானை, (மதச் செருக்கினால்), அங்குசம் நிமிர-(தன்னை அடக்குதற்குரிய) அங்குசமும் வளைவு நிமிர்ந்து பயனற்ற தாகும்படி, அருவி பெய் வரையின்-அருவி பொழிகின்ற மலைபோல, பொங்கி-வெகுண்டெழுந்து, சனங்கள்-கூட்டமான மக்கள், இரியலின் எங்கும் சிந்த-நிலை கெட்டு எப்பக்கமும் சிதறும்படியும், வரி சிறை தும்பி ஈட்டம்-கோடுகள் பொருந்திய சிறகுகளையுடைய வண்டுகளின் கூட்டம், வார் மதம் தோய்ந்து-வடிகின்ற (தன்னுடைய) மதநீரில் படிந்து (அதனை உண்டு), (பின்பு), மாதர் சுரி குழல் படிய-(முன்னே பெண் யானை மீதுள்ள) பெண்களின் சுருண்ட கூந்தலில் (சென்று) படியும் வண்ணமும், ஏறும் பிடியை-பெண்கள் ஏறியுள்ள பெண் யானையை, தொடர்ந்தும் செல்வ(து)-பின் தொடர்ந்தும் செல்வதாயிற்று.

யானை, அங்குசம் நிமிரப் பொங்கி, சனங்கள் சிந்த, தும்பியீட்டம் தோய்ந்து சுரிகுழல் படியப் பிடியைத் தொடர்ந்து செல்வ(து) எனக் கூட்டி முடிக்க. மதவெறி மிக்க யானையானது, பாகனையும், அங்குசத்ததயும் பொருட்படுத்தாமல் விரைந்தெழுந்து ஓடி, முன்னே மகளிரை யேற்றிச் செல்லும் பெண் யானையைத் தொடரலாயிற்று; அதனைக் கண்ட மக்கள் அச்சத்தால் தடுமாறிச் சிதறினர்; யானையின் மதநீரில் படிந்து அதனையுண்ட வண்டுகள், முன்னே பிடியின் மீது செல்லும் மகளிரிடமிருந்து வரும் நறுமணத்தை யோர்ந்து, அதற்கிடமான அப்பெண்களின் கூந்தலில் சென்று படிந்து தேன் நுகரலாயின என்றவாறு.

நறுமணத்தை ஓர்ந்து, அஃதுள்ளவிடம் சென்றடைதலும், யானையின் மதநீரை விரும்பி யுண்ணுதலும் வண்டுகளின் இயல்பு. எனவே, யானையின் மதநீரை நுகர்ந்துகொண்டிருந்த வண்டுகள், மாதர் கூந்தலினின்றும் வந்த நறுமணத்தை யோர்ந்து, பூந்தேனை நுகருமாறு, அவர்களுடைய கூந்தலிற் சென்று படிந்தன என்க.

'வரிச்சிறை' எனற்பாலது எதுகை நயம்பற்றி 'வரிசிறை' என வந்தது. 'செல்வது' என்றதன் ஈறு குறைந்தது.

யானை, அங்குசம் நிமிர ஓடுதல்: 595; 894. அருவி சொரியும் மலை, மதநீர் சொரியும் பெரிய யானைக்குத் தோற்றத்தால் உவமை.

(பி - ம்) 1. அருவிபாய், நிமிரவாங்கும்.
2. இரிதரச் சினங்கள் சிந்தும்; விளங்குதீச் செங்கண் யானை; விளங்கழற் றறுகண் யானை; சிறுகணியானை.
3. விரிசிறைத்தும்பி வேறோர் வீழ்மதம்; மற்றோர் வார்மதம்; வேறும் வார்மதம்; தோய்ந்த. (62)

## சக்கரவர்த்தியின் பட்டத்தரசிகள் முதலியோரின் எழுச்சி

870, நிறைமதித் தோற்றங் கண்ட நீனெடுங் கடலி தென்ன
அறைபறை துவைப்பத் தேரு மானையு மாடன் மாவும்
கறைகெழு வேற்க ணாரு மைந்தருங் கவினி யொல்லை
நெறியிடைப் படர வேந்த னேயமங் கையரெ ழுந்தார்.

நிறைமதி தோற்றம் கண்ட-பூர்ண சந்திரனது உதயத்தைப் பார்த்த, நீல் நெடு கடல் இது என்ன-நீல நிறமுடைய பெரிய கடல் இதுவாகும் என்று சொல்லும்படி, அறை பறை துவைப்ப-அடிக்கப் படுகிற (பேரிகை முதலிய) தோற்கருவிகள் பேரொலி செய்ய, தேரும் ஆனையும்-தேர்ப் படையும் யானைப் படையும், ஆடல் மாவும்-வெற்றி பொருந்திய குதிரைப் படையும், கறை கெழு-குருதிக் கறைபடிந்த, வேல் கண்ணாரும்-வேலாயுதம் போன்ற கண்களையுடைய மகளிரும், மைந்தரும்-ஆடவரும், கவினி-அழகுபெறக் கூடி, நெறி இடை ஒல்லை படர-வழியிலே விரைவாக (முன்னே) செல்ல, வேந்தன் நேயம் மங்கையர்-தசரதனுடைய அன்புக்குரிய பட்டத்துத் தேவியர், எழுந் தார்-தமது பயணத்தைத் தொடங்கினர்.

நால்வகைப் படைகளும், ஆடவரும், மகளிருங் கலந்த பெருந் திரள் முன்னே செல்ல, பட்டத்தரசியர் பின்னே சென்றனர் என்க.

வாத்தியங்களின் முழக்கத்தாலும், மக்களின் இரைச்சலாலும், தேர், யானை, குதிரைகள் செல்வதாலும் உண்டாகும் பேரொலி யோடு பெரும் பரப்பும் உடைமையின், அம்மக்கள் தொகுதிக்குப் பூர்ண சந்திரனைக் கண்டு ஆரவாரத்தோடு பொங்கியெழுங் கடலை உவமை கூறினர். கடல் இது என்ன, பறை துவைப்ப, கவினி, படர எனக் கூட்டுக. தோற்கருவிகளைக் கூறியது உப லட்சணத்தால் தொளைக்கருவி முதலிய பிறவற்றிற்கும் பொருந்தும். நீல்-நீலம்; கடைக்குறை. கறை, வேலுக்கு அடைமொழி.

அறை பறை: 1094; குறள். 1076.

(பி - ம்.) 1. நீணெடுங் கடலிற்றுகி. 2. தேரும் யானையும்.
3. கறைபொழி; விறல்செழு; கவினிறெனல்லே; கவினவொல்லே; விரவி யொல்லே. 4. நேயமங்கையரெழுந்தார். (63)
இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

### கைகேயி செல்லல்

871. பொய்கையங் கமலக் கானிற்
பொலிவதோ ரன்ன மென்னக்
கைகயர் வேந்தன் பாவை
கணிகைய ரணியி னீட்டம்
ஐயிரு நூறு சூழ
வாய்மணிச் சிவிகை தன்மேல்
தெய்வமங் கையரு நாணத்
தேனிசை முரலப் போனாள்.

கைகயர் வேந்தன் பாவை-கேகய நாட்டரசன் மகளான கைகேயி, கணிகையர் அணியின் ஈட்டம்-(ஏவற் பெண்களான) கணிகைமாரின் வரிசையான கூட்டம், ஐ இருநூறு சூழ-ஓராயிரம் எண்கொண்டதாகித் தன்னைச் சூழ்ந்துவர, ஆய் மணி-தேர்ந்தெடுத்த இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற, சிவிகை தன்மேல்-பல்லக்கில் (அமர்ந்து), பொய்கை அம் கமலம் கானில் பொலிவது-குளத்திலே பூத்த அழகிய தாமரைக் காட்டினிடையே விளங்குவதான, ஓர் அன்னம் என்ன-ஒப்பற்ற அன்னப் பறவை போல, தெய்வ மங்கையரும் நாண-(தன் பொலிவும் பெருமையுங் கண்டு) தேவ மாதரும் வெட்கப்படவும், தேன் இசை முரல-தேன் வண்டுகள் கூடி இன்னிசையாக ஒலிக்கவும், போனாள்—.

பல்லக்கைச் சூழ்ந்த மகளிரின் முகங்கள் தாமரைப் பூக்களின் கூட்டமாகவும், அக்கூட்டத்தினிடையே இருந்த கைகேயி அழகியதோர் அன்னமாகவுங் கொள்க. ஒப்பு. 'வாங்குவளைக் கையார் வதன மதி பூத்த, பூங்குவளைக் காட்டிடையே போயினான்' (நள. சுயம். 19). கைகேயி, தசரத சக்கரவர்த்தியின் பேரன்புக் குரியவளும் இராமபிரானிடத்துப் பேரன்பு கொண்டவளும் ஆதலால் அவளை முன்னே கூறினார்.

அன்னமென்ன: 866. குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. பொய்கையிற் கமலக்கானிற்; பொய்கையாங் குமுதக்கானிற்.
2. கணிகைய ரீட்டம் பொங்கி; ஈட்டம் பொங்க; சிவிகையீட்டம்.
3. ஐயிரு நூறுஞ் சூழ்ந்த; ஐயிருநூறு பேர்சூழ்; வயமணிச் சிவிகைமீதில்; சிவிகையின் மேல். 4. முரலச் சென்றாள்; முரலப்போனார். (64)

### சுமித்திரை செல்லல்

872. விரிமணித் தார்கள் பூண்ட வேசரி வெரிநிற் றேன்றும்
அரிமலர்த் தடங்க ணல்லா ராயிரத் திரட்டி சூழக்
குருமணிச் சிவிகை தன்மேற் கொண்டலின் மின்னிதென்ன
இருவரைப் பயந்த நங்கை யாழிசை முரலப் போனாள்.

விரி-(ஒளி) பரந்த, மணி தார்கள் பூண்ட-மணிகள் பதித்த கிண்கிணி மாலைகளைப் பூண்ட, வேசரி வெரிநில்-கோவேறு கழுதைகளின் முதுகிலே, தோன்றும்-(ஏறி) விளங்குகின்ற, அரி-செவ்வரி பரந்த, மலர்-குவளை மலர் போன்ற, தட கண்-விசாலமான கண்களையுடைய, ஆயிரத்து இரட்டி நல்லார்—இரண்டாயிரம் மகளிர், சூழ-சூழ்ந்துவர, இருவரை பயந்த நங்கை-இலக்குமணன், சத்துருக்கனன் என்ற இருவரையும் பெற்றெடுத்த சுமித்திராதேவி, குரு-(நல்ல) நிறம் பொருந்திய, மணி-நீல மணிகள் பதித்த, சிவிகை மேல்-பல்லக்கிலே, கொண்டலின் மின் இது என்ன-மேகத்தினிடையே தோன்றும் மின்னற் கோடியே இவ்வடிவம் என்று (கண்டோர்) கூறும்படி, யாழ் இசை முரல-(பக்கங்களிலே) வீணையின் இன்னிசை ஒலிக்க, (அதனை நுகர்ந்தவாறே), போனாள்—. தன்: சாரியை.

முன் பாட்டில் கைகேயியையும், இப்பாட்டில் சுமித்திராதேவியையும், அடுத்த பாட்டில் கௌசல்யா தேவியையும் முறையே கூறுகின்றார். அவர்களை வருணிக்கும் முறை அவரவர் பெருமைக் கேற்ப ஒன்றையொன்று விஞ்சுகின்றது. இங்கே சுமித்திரைக்குக் 'கொண்டலின் மின்னிதென்ன' என்று உவமை கூறினமையின், அவள் அமர்ந்திருந்த சிவிகை நீலமணிகளால் அழகு செய்யப் பெற்றதென்க.

(பி - ம்.) 1. விரிமலர்த்; வேழத்தின் வெரிநிற்; வெங்கரி வெரிநிற்; வெல்கரி வெரிநிற்; மென்பிடி வெரிநிற்; வெம்பரி மிசையிற்; வெல்பரி வெரிநிற்; வேசரி விரவித், 2. அரிமணித்; அருமணித்; வரிமலர்த்.
3. சிவிகைமேல் வெண்; சிவிகைமீதில்; மின்னதென்ன.
4. மங்கை: ஏழிசை. (65)

இதுமுதல் நான்கு பாடல்களின் வரிசை, பிரதிகளில் பலவாறு மாறியுள்ளது

### கோசலை செல்லல்

873. வெள்ளெயிற் றிலவச் செவ்வாய்
  முகத்தைவெண் மதிய மென்று
கொள்ளையிற் றிரள்வான் மீன்கள்
  குழுமிய வனைய வூர்தித்
தெள்ளரிப் பாண்டிற் பாணிச்
  செயிரிய ரிசைத்தேன் சிந்த
வள்ளலைப் பயந்த நங்கை
  வானவர் வணங்கப் போனாள்.

வெள் எயிறு-வெண்மையான பற்களையும், இலவம் செவ்வாய்-முள்ளிலவம் பூவிதழ் போலச் சிவந்த வாயையுமுடைய, முகத்தை-(தனது) முக மண்டலத்தை, மதியம் என்று-நிறைமதி யென்று கருதி, கொள்ளையில் திரள்-மிகுதியாகத் திரண்ட, வான்மீன்கள்-நட்சத்திரங்கள், குழுமிய அனைய-(அதனருகில் வந்து) கூடினாற்போலும்

தோற்றமுடைய, ஊர்தி-(பலநிற மணிகளால் அலங்கரித்த விமான மாகிய) வானத்திலே, வள்ளலை பயந்த நங்கை-வள்ளலாகிய இராம பிரானைப் பெற்ற பெருமையிற் சிறந்த கௌசல்யா தேவி, தெள்-தெளிவான, அரி-மென்மையுடைய, பாண்டில்பாணி-தாளத்தோடு பாடப்படும் இசைப்பாடலில் வல்ல, செயிரியர்-பாணர்கள், இசை தேன் சிந்த-(வீணையாலும் கண்டத்தாலும் வெளிப்படும்) இசையாகிய தேனைச் சொரியவும், வானவர் வணங்க-தேவர்களும் (தன்னை) வணங்கவும், போனாள்—.

கௌசலையின் முகம் சந்திரமண்டலம் போல விளங்க, அதனைக் கண்ட நட்சத்திரக் கூட்டங்கள் அங்கேவந்து கூடி அம்மண்டலத்தைச் சூழ்ந்துகொண்டாற்போன்ற தோற்றமுடைய ஊர்தி எனத்தற்குறிப் பேற்றமாகக் கூறினார். நட்சத்திரங்கள் கூடினாற் போன்ற தோற்ற முடையதென்றதனால், மிக்க ஒளியுடைய பலமணிகள் இழைக்கப் பெற்றதென்பதாம்; ஊர்தி எனப் பொதுப்படக் கூறினும் இடம் நோக்கி விமானம் என்றுரைக்கப்பட்டது. இராமபிரானைப் புதல் வனாகப் பெற்ற சிறப்புடைமை பற்றிக் கோசலை தேவரும் வணங் கும் தகுதியுடையாள்; 'சுற்றத்தார் தேவரொடுந் தொழநின்ற கோ சலையை' (அயோத். 1067) என்பர் பின்னும். சுமித்திரை, கோசலை என்ற இருவரையும் 'நங்கை' என்னும் சிறப்புப் பெயரால் குறித்த லும் நோக்கத்தக்கது. தெள்ளரிப் பாண்டில்-தேர்ந்த, குதிரைகள் பூட்டிய தேர் எனலும் ஆம்.

(பி - ம்.) 1. வெள்ளெயி றிலவச்; மதிய மென்னக்; மதியி தென்னக்; மதியி தென்னக்.
2. சுற்று மீன்கள்; சுற்றி மீன்கள்; சுற்ற மீன்கள்; திரளு மீன்கள்; குழு மியதென்னவாகித்.
3. தென்ளரி பாண்டி பாணிச்; தெள்ளரிப் பர்ண்டிப் பாணிச்; தெள்ளிய பாண்டிற் பாணிச்; தெள்ளியற் பாண்டிற் பாணிச்; தெள்ளரிற் பாண் டிற் பாணிச்; பாண்டி பாணிற்: பாண்டிற் பாணிற்: பாணிப் பாண்டிற்.
4. பயந்த மங்கை; வாழ்த்தப் போனாள். (66)

இப்பாடலின் முதன் மூன்றடிகள் சில பிரதிகளில் கீழ்வருமாறு காணப்படு கின்றன.

எள்ளுதற் கரிய தெய்வ மடந்தைய ரேழைஞ் ஞூறு
கொள்ளையிற் கணிகை மாதர் குழாங்கள்சூழ்ந் தேக வேகும்
தள்ளுதற் கரிய செம்பொற் றேரின்மேற் றரும மன்ன

(பி - ம்.) 3. செம்பொற் குன்றின்மேல்.

பல பொருள்கள் ஏந்தி மங்கையர் செல்லுதல்

874. செங்கையின் மஞ்ஞை யன்னஞ் சிறுகிளி பூவை பாவை
சங்குறை கழித்த வன்ன சாமரை முதல தாங்கி
இங்கல தெண்ணுங் காண்மற் றெழுதிரை வளாகத் தெங்கும்
மங்கைய ரில்லை யென்ன மடந்தையர் மருங்கு போனார்.

எண்ணுங்கால்-ஆராயுமிடத்து, எழு திரை வளாகத்து-ஏழு கடல்கள் சூழ்ந்த இவ்வுலகத்திலே, இங்கு அலது-இவ் வயோத்தியில் அல்லாமல், மற்று எங்கும்-வேறெவ்விடத்திலும், மங்கையர் இல்லை என்ன-பெண்களே இல்லை என்று (கண்டோர்) கூறும்படி, மடந்தையர்-(மிகப் பெருந்திரளான) பெண்கள், செம் கையில்-தம்முடைய சிவந்த கைகளிலே, மஞ்ஞை-மயில்களும், அன்னம்-அன்னப் பறவைகளும், சிறு கிளி-சிறிய கிளிகளும், பூவை-நாகணவாய்ப் புள்ளும், பாவை-பதுமைகளும், சங்கு உறை கழித்த அன்ன-சங்குகளை அப்பொழுதே உறையினின்றும் எடுத்தாற் போன்ற, சாமரை முதல-வெண் சாமரங்களும் முதலான பல பொருள்களை, தாங்கி-ஏந்திக் கொண்டு, மருங்கு போனார்-(அரசியர் செல்லும் வாகனங்களின்) பக்கங்களிலே போனார்கள்.

மடந்தையர், வளாகத்து இங்கலது எங்கும் மங்கையர் இல்லை என்ன, தாங்கி, மருங்கு போனார் என்று கூட்டி முடிக்க. மருங்கு-கோசலை சென்ற வாகனத்தின் பக்கலில் எனவும் ஆம். பச்சையல்லாத வேறு நிறமுடைய சிலவகைக் கிளிகள் உருவிற் பெரியனவும் சிறந்த அழகில்லாதனவு மாதலின்,இங்கே 'சிறுகிளி' என்றது பச்சைக் கிளிகளையே எனலாம். உடன்சென்ற பெண்களின் மிகுதியை உயர்வு நவிற்சியாகக் கூறினர். எழு திரை வளாகம்-கடல் சூழ்ந்த ஏழு தீவுகளாகவுள்ள பூமி யென்றலுமாம். திரை: கடலுக்கு ஆகுபெயர். உயர்ந்த சாதிச் சங்கைப் பட்டினாலான உறையினுள் பொதிந்து வைத்தல் மரபு. தலைவிரியாத வெண்சாமரம் தோற்றத்தில் சங்கையொத்தது என்க.

(பி - ம்.) 1. செங்கையால்; செங்கயல்: சிறுகிளிப்பூவை; சிறுகுயில் பூவை.
2. சங்கிறை; கழித்ததன்ன; கழிந்தவன்ன.
3. இங்கல தெண்ணுங் காலிவ்; இங்கலவென்னுங்காலிவ்; இங்கிலதென் னுங்காலிவ்; இங்கிலதெண்ணுங்காலிவ்: இங்கிலதென்னுங்கான்மற்று: இங்கலதென்னுங்கான்மற்று; இங்கிலதெனுங்கான் மற்றவ்: இங்கிதென் னெண்ணுங்கான் மற்று: ஏழ்திரை வளாகந் தன்னில்; வளாகத்துள்ளும்: வளாகத் தெல்லை.
4. இல்லையென்னும்; இல்லமென்ன: மாதர்கள்: பலரும் போனார்; மருங்கும் போனார்; சூழப் போனார். (67)

## கஞ்சுகிகள் காத்துப் போதல்

875. காரண மின்றி யேயுங் கனலெழ விழிக்குங் கண்ணார்
வீரவேத் திரத்தார் தாழ்ந்து விரிந்தகஞ் சுகத்து மெய்யார்
தாரணி புரவி மேலார் தலத்துளார் கதித்த சொல்லார்
ஆரணங் களைய மாத ரடிமுறை காத்துப் போனார்.

காரணம் இன்றியேயும்-ஒரு காரணமும் இல்லாமலேயும், கனல் எழ விழிக்கும்-தீப்பொறி சிதற விழித்துப் பார்க்கிற, கண் ணா

கண்களையுடையவர்களும், வீரம் வேத்திரத்தார்-(தம்முடைய) வீரத்துக்கறிகுறியான பிரம்பைக் கையில் பிடித்தவர்களும், தாழ்ந்து விரிந்த-(பாதம் வரையில்) தாழ்ந்து பரந்துள்ள, கஞ்சுகத்து மெய்யார்-சட்டை யணிந்த உடம்பினையுடையவர்களும், கத்தித சொல்லார்-கோபமிக்க வார்த்தையுடையவர்களுமான (கஞ்சுகிகள் பலர்), தார் அணி புரவி மேலார்-கிங்கிணி மாலையணிந்த குதிரைகளின் மீது செல்பவரும், தலத்து உள்ளார்-தரையில் நடப்பவருமாக, முறை-முறையே, ஆர் அணங்கு அனைய மாதர் அடி-அரிய தெய்வ மகளிர் போன்ற அரசியரின் அடிகளை, காத்து போனார்-காவல் செய்து கொண்டு போனார்கள்.

கஞ்சுகிகள்-சட்டையிட்டு, கையில் பிரம்பு தாங்கிக் காவல் புரிந்து செல்லும் மெய்காப்பாளர். இவர்கள், மங்கையர் பக்கலில் அயலார் அணுகா வண்ணம் பாதுகாத்துச் செல்வோராதலின், தங்கள் பார்வையாலும் அதட்டின பேச்சாலும் கடுமையைப் புலப்படுத்திக்கொண்டிருப்பர். இவர்களுள்ளேயும், தகுதிக்கேற்பச் சிலர் குதிரை மீது செல்வாரும், சிலர் தரையில் நடந்து செல்வாருமாயிருப்பர். இவர்களை 'அலிகள்' என்பாரு முளர். இங்ஙனமன்றி, மாதர்களே யிவ்வாறு காத்துச் சென்றன ரெனவுங் கூறுவர். அரசியரின் பெருமை தோன்ற 'அடி காத்துப் போனார்' என்றார்.

கஞ்சுகிகள்: 'கச்சுப்பிணி யுறுத்துக் கண்டகம் பூண்ட, அச்சுறு நோக்கி னறுபது கழிந்த, காஞ்சுகிமாக்கள் சேர்ந்து புடைகாப்ப' (பெருங். *3. 5: 108-10*).

(பி - ம்.) 1. கனலென விழித்த கண்ணர்; விழிக்குங் கண்ணர்,
2. வீரர்வேத்திரத்தர்; வீரர்வேத்திரத்தின் கையர்; வீரவேத்திரத்தின் கையர்; வீரர்வேத்திரத்தார்; வீரவேத்திரத்தர்; வீரவெந்திரத்தர்; கேள்வி விருத்தர்கஞ்சுகத்து; விருத்தர் கஞ்சுகத்தர்; விரிந்த கஞ்சுகத்தர்; விரித்த கஞ்சுகத்து; விசித்த கஞ்சுகத்து; விருதர் கஞ்சுகத்து: மெய்யர்.
3. தாரணிப் புரவிமேலோர்: தலத்துளோர்; சலத்துளோர்: சலித்த; தடித்த; சலத்த; கலிக்கும்; சலிக்கும்: சொல்லர்; சொல்லின்.
4. அடியுறை: காத்துச் சென்றார்; காக்கப் போனார்; வணங்கிப் போனார் (68)

## அந்தப்புர ஏவலர் செல்லுதல்

876. கூனொடு குறளுஞ் சிந்துஞ் சிலதியர் குழாமுங் கொண்ட
பானிறப் புரவி யன்னப் புள்ளெனப் பாரிற் செல்லத்
தேனொடு ஞிமிறும் வண்டுந் தும்பியும் பந்தர் செய்யப்
பூநிறை கூந்தன் மாதர் புடைமடப் பிடியிற் போனார்.

கூனொடு குறளும் சிந்தும்-கூனர்களும் குறளர்களும் சிந்தர்களும்,சிலதியர் குழாமும்-கூட்டமான ஏவல் மகளிரும்(ஆகியோரை),

கொண்ட-ஏற்றிச்செல்லுகிற, பால்நிறம் புரவி-பால்போலும் வெண்ணிறமுடைய குதிரைகள், அன்னப்புள் என-அன்னப் பறவைகளைப் போல, பாரில் செல்ல-தரையிலே (மெல்ல) நடந்துவர, தேனெடு-தேனீக்களும், ஞிமிறும்-ஞிமிறென்னும் வண்டுகளும், வண்டும்-பிற வகை வண்டுகளும், தும்பியும்-தும்பியென்ற வண்டுகளும், பந்தர் செய்ய-மேலே பந்தலிட்டதுபோல மொய்த்துவரும்படி, பூ நிறை கூந்தல் மாதர்-(சூடிய) பூக்கள் நிறைந்த கூந்தலையுடைய பெண்கள் பலர், புடை-பக்கங்களிலே, மட பிடியில் போனார்-இளைய பெண் யானைகளின் மீது சென்றார்கள். பிடியின்-பிடிகளைப்போல என்றலும் பொருந்தும். சிலதியர்-தோழிமாருமாம்.

ஞிமிறு: இது மிஞிறு என்றும் கூறப்படும். தேன், ஞிமிறு வண்டு, தும்பி என்பன வண்டின் சாதிகள்: *(921, 1190, 1210;சீவக. 892, 3033, 3034)*. கூனொடு...குழாமும்: ஒப்பு. 'சிந்தொடு குறளுங் கூனுஞ் சிலதியர் குழாமுந் தெற்றி' *(1216)*. குறளுஞ் சிந்தும்: 847-குறிப்புப் பார்க்க. புரவிக்கு அன்னப்புள் உவமையாதல்: 'செங்காலன்னத்துச் சேவலன்ன, குரூஉமயிர்ப் புரவி' (மதுரைக். 386-7); 'நிரைபறை யன்னத் தன்ன விரைபரிப், புல்லுளைக் கலிமா', 'வயங்கு சிறை யன்னத்து நிறைபறை கடுப்ப, நான்குடன் பூண்ட கானவில் புரவி' (அகநா. *234: 3-4, 334: 10-11*).

(பி - ம்.) 2. புரவியென்னப்; புள்ளெல்லாம்; பரிவிற்செல்லத்.
3. மிஞிறும்; தும்பியுந் தொடர்ந்து செல்லப்; பரந்து செல்லப்; பரந்த செல்லப்; தொடரச் செல்லப்.
4. பூநிறக்; பூநிறைக்; நீனிறக்; புடைபிடி நடையிற்; புடைநடை பிடியிற்; புடைநடைப் பிடிபிற்; புடைமிடை பிடியிற்; புடைபுடை யிடையிற்; புடைவர விடையிற்: புடைபயில் பெடையிற்; நிறைந்து சூழ் பிடியிற்.

(69)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

உரிமை மகளிர் அறுபதினாயிரவர் செல்லுதல்

877. துப்பினின் மணியிற் பொன்னிற் சுடர்மர கதத்தின் முத்தின்
ஒப்பற வமைத்த வைய மோவியம் போல வேறி
முப்பதிற் றிரட்டி கொண்ட வாயிர முகிழ்மென் கொங்கைச்
செப்பருந் திருவி னல்லார் தெரிவையர் சூழப் போனார்.

முகிழ் மென் கொங்கை-தாமரை மொட்டுப் போலும் மென்மையான தனங்களையுடையாராய், செப்ப அரு-சொல்லுதற்கரிய, திருவின் நல்லார்-இலக்குமியினும் (அழகில்)சிறந்தவர்களாகிய, முப்பதிற்று இரட்டி கொண்ட ஆயிரம் தெரிவையர்-அறுபதினாயிரம் என்ற எண்கொண்ட மகளிர், துப்பினின்-பவளத்தாலும், மணியின்-மாணிக்கத்தாலும், பொன்னின்-பொன்னாலும், சுடர் மகரதத்தின்-ஒளிவிடுகின்ற மரகதத்தாலும், முத்தின்-முத்துக்களாலும், ஒப்பு

அற அமைத்த வையம்-(தமக்கு) ஒப்புமை இல்லையாகும்படி செய்யப் பெற்ற மூடு வண்டிகளில், ஓவியம்போல ஏறி-சித்திரப் பதுமைகள் போல அமர்ந்து, சூழ-(பட்டத்தரசியரைச்) சுற்றிலும், போனுர்—.

'அறுபதினுயிரம்' என எண்ணும், 'தெரிவையர்' எனப் பருவமும் ஊர்தியின் சிறப்பும் குறித்தமையால், இங்குக் கூறப்பட்டவர்,சக்கரவர்த்தி அவ்வப்போது மணந்துகொண்ட மகளிர் எனலாம்; இங்ஙனமன்றிப் பொதுவாக மகளிர் என்பாருமுளர். வையம்-தேரும் ஆம். 'அறுபதினுயிரம் என்பது சக்கரவர்த்தியின் தொடர்புடைய பலவற்றிற்குப் பொருந்துவதாகு மென்பர். 'நல்லார்' என்பதனை எழுவாயாக்கி உரைத்தலும் ஆம்.

துப்பினின்......வையம்: ஒப்பு. கிட்கிந்தா. 671.

(பி - ம்.) 1. முத்தில்.
2. ஒப்பறவமைந்த வையம்; வகுத்த வையத்து; அமைத்த தேரின்; ஒப்பறவமைத்த பைம்பூ ணோவியம் புகழவேறி; ஓவியமொப்பவேறி; ஓவியர் வகுத்த வேற்றி.
3. முப்பதினிரட்டி; ஆயிரர்; முகிண்மென்.
4. உருவினல்லார்: தேர்மிசைச் சூழச்சென்ருர்; தேர்மிசை சூழப்போனுர்; சிலதியர் சூழப்போனுர். (70)

### வசிட்ட முனிவர் செல்லுதல்

878. செவிவயி னமுதக் கேள்வி தெவிட்டினுர் தேவர் நாவின்
அவிகையி னளிக்கு நீரா ராயிரத் திரட்டி சூழக்
கவிகையி னீழற் கற்பி னருந்ததி கணவன் வெள்ளைச்
சிவிகையி னன்ன மூருந் திசைமுக னென்னச் சென்ருன்.

செவி வயின்-காதுகளிலே, அமுதம் கேள்வி-அமுதம் போன்ற வேதத்தை, தெவிட்டினுர்-(கேட்டுக் கேட்டு) நிறையப் பெற்றவரும், தேவர் நாவின் அவி-தேவர்கள் தம் நாவினுல் நுகர்தற்குரிய அவியுணவை, கையின்-தம் கையாலே, அளிக்கும் நீரார்-(வேள்வித் தீயினிடமாக) அளிக்கும் தகுதியுடையவருமான (அந்தணர்), ஆயிரத்து இரட்டி சூழ-இரண்டாயிரவர் (தன்னைச்) சூழ்ந்துவர, கற்பின் அருந்ததி கணவன்-கற்பினுல் மேம்பட்ட அருந்ததியின் கணவரானவசிட்ட முனிவர், அன்னம் ஊரும் திசை முகன் என்ன-அன்ன வாகனத்தில் ஏறிச்செல்லும் பிரமன் என்னும்படி, வெள்ளை சிவிகையின்-வெண்மையான (முத்துப்) பல்லக்கில், கவிகையின் நீழல்-வெண்குடையின் நிழலிலே (அமர்ந்து), சென்ருன்-போனுர்.

வெண் சிவிகைக்கு அன்னமும், அச்சிவிகையில் ஏறிச் செல்லும் வசிட்ட முனிவருக்கு அன்னவாகனத்திற் செல்லும் பிரமனும் ஒப்புமை. வசிட்ட முனிவர், தம் தகுதியாலும், பிரமபுத்திரராதலாலும் பிரமனுக்கிணையாகக் கூறப்படுவர். கேள்வி: ச்ருதி என்ற வட

சொல்லின் பொருளுடையது; எழுதுதலின்றிக் கேட்கப்படுவது என்பதாம்.

வசிட்டருக்குப் பிரமன் ஒப்புமை: 'அயனையே நிகர் தூயமா முனிவரன்' (181); அவர் பிரமன் புத்திரரென்பது: 'கமலமென் பொகுட்டு மேவிய வரசரோருகன் மகன்' (185).

(பி - ம்.) 1. செவிவயினமிர்த; செவிவயினமிர்தக்; செவியினதமுத; தெவிட்டினர்; நாவிற்கு.
2. அவிவயின்; அவியனன்று; அவிநயத்து; வயின்வயின்; அளிக்குநல்லார்; ஆயிரகோடி; ஐயிருகோடி.
3. கணவன் முத்தின்; கணவன் முத்துச்.
4. என்னப் போனன்; என்னப்போனர். (71)

## பரத சத்துருக்கனர் செல்லுதல்

879. பொருகளி றிவுளி பொற்றேர் பொலங்கழற் குமரர் முந்நீர்
அருவரை சூழ்ந்த தென்ன வருகுமுன் பின்னுஞ் செல்லத்
திருவளர் மார்பர் தெய்வச் சிலையினர் தேரர் வீரர்
இருவரு முனிபின் போன விருவரு மென்னப் போனர்.

பொரு களிறு-போர் செய்யும் யானைகளும், இவுளி-குதிரைகளும், பொன் தேர்-அழகிய தேர்களும், பொலம் கழல் குமரர்-பொன்னாலாகிய வீரக்கழலை யணிந்த காலாட்படை வீரர்களும், (ஆகியநால் வகைப் படைகளும்),முந்நீர்-கடலானது, அரு வரை சூழ்ந்ததுஎன்ன-(கடத்தற்கு) அரிய மலையைச் சூழ்ந்து கொண்டதுபோல, அருகு-பக்கங்களிலும், முன்(உம்) பின்னும்-முன்னேயும் பின்னேயும், செல்ல-சூழ்ந்துவர, திருவளர் மார்பர்-இலக்குமி தங்கப்பெற்ற மார்பை யுடையவர்களும், தெய்வம் சிலையினர்-தெய்வத் தன்மை பொருந்திய வில்லையுடையவர்களும், வீரர்-மிக்க வீரமுடையவருமாகிய, இருவரும்-பரதன், சத்துருக்கனன் என்ற இருவரும்; முனி பின் போன இருவரும் என்ன-கௌசிக முனிவனைத் தொடர்ந்து சென்ற (இராம லக்குமண ரென்னும்) இருவரும்போல, தேரர் போனர்-தேரூர்ந்து சென்றார்கள்.

பரத சத்துருக்கனர் ஏறிச் சென்ற தேர் மலை போலிருக்க, அதனைச் சூழச் சென்ற பெரும்படைத் தொகுதி கடல் போலிருந்தது என்பார், 'முந்நீர் வரை சூழ்ந்ததென்ன' என்றார். படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தன்மையுமுடையது முந்நீர்; பண்புத் தொகையன்மொழி.

பரத சத்துருக்கனர், தோற்றத்தாலும் பண்புகளாலும் முறையே இராம லக்குமணர்களை யொத்தவராதலின் 'முனி பின் போன இருவருமென்ன' என்று உவமித்தார். பரத சத்துருக்கனரைக் கண்ட குகன் கூற்றாக 'நம்பியுமென் னாயகனை யொக்கின்றான் அயல்

நின்றுன், தம்பியையுமொக்கின்றுன்' (அயோத். 1033) என மேலே கூறுதலும் நோக்கத்தக்கது. சக்கரவர்த்தி குமாரர்களாய் எல்லாச் சிறப்பும் உடைமையின் 'திருவளர்மார்பர்....வீரர்' என விசேடித்துக் கூறினர். தேரர் வீரர்-அதிரதர்களாகிய வீரர் எனலுமாம். முனி பின் போன இருவரும் திருமணங்கொள்ளுதற் குரியராயினமை இப் போது செல்லும் இவர்களுக்கும் பொருந்துதலின், அதனைக் குறிப் பித்தவாறும் ஆம்.

(பி - ம்) 1. பொருகரி யிவுளிப்பொற்றேரப்; பொற்றேள்; பொற்பூண்: பொலன் கழல்; குமரர் பொற்றேள்; குமரர் பொற்பூண்; குமரர் முன்னீர்; தேரர் முந்நீர்.
2. அருவரைச் சார்ந்ததென்ன; சார்ந்தவென்ன: அருகுபின் முன்னுஞ் செல்லத்; அருகுபின் முன்புசூழத்; அருகுபின் முன்பு செல்லத்; அருகு முன்பின்பு செல்ல.
3. மார்வர்: தெய்வத் தேரினர்; செல்வத்தேரினர்; செம்பொற்றேரினர்; சிலையர்வீரர்; சிலையவீரர்; சிலைக்கை வீரர்; சிலையின் வீரர்.
4. முனிபின் சென்ற; என்னச் சென்ருர். (72)

### சக்கரவர்த்தி புறப்படுதல்

880. நித்திய நியம முற்றி நேமியான் பாதஞ் சென்னி
வைத்தபின் மறைவல் லோர்க்கு வரம்பறு மணியும் பொன்னும்
பத்தியா னிரையும் பாரும் பரிவொடு நல்கிப் போனுன்
முத்தணி வயிரப் பூணுன் மங்கல முகிழ்த்த நன்னுள்.

முத்து-நன் முத்துக்களாலும், அணிவயிரம்-அழகிய வயிரத்தா லும் இயன்ற, பூணுன்-பல அணிகலன்களைப் பூண்ட தசரத சக்கர வர்த்தி, மங்கலம் முகிழ்த்தம் நல் நாள்-மங்களகரமான முகூர்த்தம் அமைந்த நல்ல நாளிலே, நித்திய நியமம் முற்றி-(தன்னுடைய) நித் திய அனுட்டானம் முதலியவற்றை முடித்துக்கொண்டு, நேமியான் பாதம்-(தனது நித்திய பூசைக்குரிய குலதெய்வமான) அரங்கநாதன் திருவடிகளை, சென்னி வைத்தபின்-சிரசிலே சூட்டிக்கொண்ட பின்பு, மறை வல்லோர்க்கு-வேதம் வல்ல அந்தணர்களுக்கு, வரம்பு அறு மணியும்-அளவற்ற இரத்தினங்களையும், பொன்னும்-பொன்னையும், பத்தி ஆன் நிரையும்-வரிசை வரிசையான பசுக் கூட்டங்களையும், பாரும்-பூமியையும், பரிவொடும் நல்கி-உவப்புடன் (தானமாகக்) கொடுத்துவிட்டு, போனுன்-(மிதிலையைக் குறித்துப் புறப்பட்டுச்) செல்லலானுன்.

நேமியான்-சக்கராயுதமுடைய திருமால்; இட்சுவாகு மன்ன னுக்குப் பிரமனுல் அளிக்கப்பட்டு, பின்பு அக்குலத்தவர் போற்றி வரும் அரங்கநாதமூர்த்தி. பாதம் சென்னி வைத்தல்-சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தல். திருமணம் முதலிய மங்கலங் குறித்து அரசர் புறப்படுங்கால் யாத்திராதானமாக அந்தணர்க்கு, கோதானம், பூமி

தானம், சொர்ண தானம் முதலியன செய்தல் மரபு. ஏனையோரும் அப்போது தம்மால் இயன்றவளவு தானஞ் செய்தல் முறையாகும். முத்தும் வைரமுமாகிய வெள்ளணிகளும் மங்கலத்தைக் குறிப்பன. முகிழ்த்தம்-முகூர்த்தம்; இரண்டு நாழிகை அல்லது மூன்றேமுக்கால் நாழிகை கொண்ட கால அளவு.

(பி - ம்.) 1 நித்த நன்னியமம்.
2. மறைவலோர்க்கு; மறைவலோர்க்கும்: வரப்பறு.
3. பத்தியாய் நிரையும்; ஒத்தவானிரையும்; பரிவுடனல்கிப், நீரொடு நல்கிப்; நீரொடு நல்கப்; நீரொடும் வழங்கிப்; நீருடனுதவியப்பால்.
4. வயிரத் தோளான்; முழவுத் தோளான்; முகுர்த்த நன்னாள்; மூர்த்த நன்னாள், முகுத்த நன்னாள்; முகுழ்த்த நன்னாள்; முகூர்த்த நன்னாள்; முகிழ்த்த மன்னாள்; மொழிந்த வந்நாள்; மொழிந்த நாளில்; முகுத்தந்தன்னில்; முகிழ்த்தந்தன்னில். (73)

881. இருபிறப் பாள ரெண்ணா யிரர்மணிக் கலச மேந்தி
அருமறை வருக்க மோதி யறுகுநீர் தெளித்து வாழ்த்த
வரன்முறை வந்தார் கோடி மங்கையர் மழலைச் செவ்வாய்ப்
பருமணிக் கலாபத் தார்பல் லாண்டிசை பரவிப் போனார்.

(சக்கரவர்த்தி புறப்படும்போது), எண்ணாயிரர் இரு பிறப்பாளர்-எண்ணாயிரம் அந்தணர்கள், மணிகலசம் ஏந்தி-(தம் கைகளில்) மணிகள் பதிந்த நிறை குடங்களைத் தாங்கி, அரு மறை வருக்கம் ஓதி-அரிய வேதமந்திரங்களைச் சொல்லி, அறுகு நீர் தெளித்து-மந்திரித்த நீரை அறுகம்புல்லால் எடுத்து (ச்சக்கிரவர்த்தியின்மீது) தெளித்து, வாழ்த்த-ஆசீர்வாதம் செய்ய, வரல் முறை வந்தார்-(அரசருக்குப் பல்லாண்டு பாடுதற்குரிய) பரம்பரையில் வந்தவர்களான, மழலை செவ்வாய்-இனிய சொற்களைப் பேசும் சிவந்த வாயையும், பருமணி-பருத்த இரத்தினங்களால் இயன்ற, கலாபத்தார்-கலாபமென்னும் (இடை) அணிகளையுமுடைய, கோடி மங்கையர்-எண்ணிறந்த மங்கல மடந்தையர், பல்லாண்டு இசை-மங்கல வாழ்த்துப் பாடல்களால், பரவி போனார்-புகழ்ந்து வாழ்ந்திக்கொண்டு சென்றார்கள்.

அந்தணர்கள், வேதமந்திரங்களால் அபிமந்திரிக்கப்பட்ட நீர் நிறைந்த கலசங்களை (பூர்ண கும்பங்களைக்) கையில் ஏந்தி, அறுகம் புல்லால் கலசங்களிலிருந்து நீரையெடுத்துப் புரோட்சித்து ஆசீர்வதிக்கவும், பெருந்திரளான மங்கல மகளிர் (சுமங்கலிகள்) பல்லாண்டு பாடி வாழ்த்தவும் சக்கரவர்த்தி மிக்கவைபவத்தோடு புறப்பட்டான் என்க.

இருபிறப்பாளர்: உபநயனத்துக்கு முன் ஒரு பிறப்பும் அதற்குப்பின் ஒரு பிறப்புமாக இரண்டு பிறப்புக்களையுடையோர். கோடி-மிகுதி குறித்து நின்றது. கலாபம்-பதினாறு கோவையுடைய இடையணி.

மங்கையர் பல்லாண்டு பாடுதல்: 237-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. என்னுயிர மணிக் கன்னவேந்தி.

2. அங்கைநீர் தெளிந்து; வாழ்த்தி; அறுகுநீரளித்து வாழ்த்த; அறுகு நீரளித்துச் சூழ; அறுகு நீரளித்துச் சூழ்வான்; அருளநீரளித்தங் கேல்வான்; அருளி நீரளித்தங்கேவான்.

3. வருமுறை வந்துகூடி: மங்கல மழலைச் செவ்வாய்ப்; மங்கையர் மழலைச் சொல்லார்; மங்கையர் மதலைச் செவ்வாய்ப்.

4. கலாப மார்ப்பப் பலாண்டிசை; கலாபத்தாரும் பலாண்டிசை; கலாபத்தார்தம்பலாண்டிசை; கலாபமாதர்பலாண்டிசை; பரவப்போனுன்; பாடப் போனுன்; பாடிப்போனுர்; பாடப்போனுர்.

(74)

### மண்டலாதிபர் கூட்டம்

882. கண்டில னென்னை யென்பார் கண்டன னென்னை யென்பார்
குண்டலம் வீழ்ந்த தென்பார் குறுகரி தினிச்சென் றென்பார்
உண்டுகொ லெழுச்சி யென்பா ரொலித்தது சங்க மென்பார்
மண்டல வேந்தர் வந்து நெருங்கினர் மருங்கு மாதோ.

மண்டல வேந்தர்-(சக்கரவர்த்தியைக் காணும் பொருட்டு வந்து காத்திருந்த) பல மண்டலாதிபர்கள், மருங்கு வந்து நெருங்கினர்-பக்கத்திலே வந்து கூடினவர்களாய், (சக்கரவர்த்தியின் புறப்பாடு குறிக்கும் சங்கநாதத்தைக் கேட்டு),'சங்கம் ஒலித்தது என்பார்-சங்கு முழங்குகின்றதே' என்றனர் (சிலர்); 'எழுச்சி உண்டு கொல் என்பார்-'(அவ்வாறுயின்) பெருமானுக்கு எங்கேனும் பயணம் உண்டோ' என்றனர் (சிலர்); (ஆவலோடு முந்திச் சென்ற சிலர் தனித்தனியே),'என்னை கண்டிலன் என்பார்-பெருமான் பார்வை என் மீது விழவில்லை' என்றனர்; (மற்றும் சிலர் தனித் தனியே), 'என்னை கண்டனன் என்பார்-பெருமான் என்னைக் கடைக்கணித்தான்' என்றனர்; 'குண்டலம் வீழ்ந்தது என்பார்-(நெருக்கத்தினுல் மற்றும் சிலர்) காதுக் குண்டலம் கழன்று விழுந்துவிட்டதே' என்றனர்; இனி குறுகு அரிது என்பார்-(இனிப் பெருமானிடம் அணுகுதல் இயலாது' என்றனர் பலர்.

சக்கரவர்த்தியைக் காணும் பொருட்டு வந்து காத்திருந்த மண்டலாதிபதிகள் பலர், புறப்பாடு குறித்த சங்கு முழக்கத்தைக் கேட்டு, 'பெருமான் எங்கேயோ புறப்படுகின்ருர் போலும்; எதிரே சென்று காண்போம்' என்று கருதி ஒருவரையொருவர் முந்திக் கொண்டு நெருக்கிச் சென்றும், அணுக முடியாமையால் மேற்குறித்த வண்ணம் பலவாறு பேசிக்கொண்டு நின்றனர் என்க. இவ்வாறு செவ்வி அருமை கூறிச் சக்கரவர்த்தியின் பெருமையைச் சிறப்பித்தார்.

அரசர்கள் வெளியே புறப்பட்டுச் செல்லும் போது சங்கும் பேரிகையும் மற்றும் பல வாத்தியங்களும் முழங்குதல் மரபு. முன்னே சேனைகளினிடையே சங்கும் பேரிகையும் முழங்கினமை குறித்தது (835) காண்க.

(பி - ம்.) 1. கண்டனனென்னை யென்பார் கண்டிலனென்னை.
2. விழுந்ததென்பார்; அவிர்ந்ததென்பார்; குறுகினரினிச்.
3. உண்டுகொலார்வம்.
4. நெருங்கினர் மயங்கி; நெருக்கினர் மயங்கி; நெருங்கினர் மயங்க: மயங்கினர் திரிந்து; நெருங்கினர் மயங்கவென்பார். (75

### சக்கரவர்த்தி சென்ற சிறப்பு

883. பொற்றொடி மகளி ரூரும் பொலங்கொடார்ப் புரவி வெள்ளம்
சுற்றுபு கமலம் பூத்த தொடுகடற் றிரையிற் செல்லக்
கொற்றவேன் மன்னர் செங்கைப் பங்கயக் குழாங்கள் கூம்ப
மற்றொரு கதிரோ னென்ன மணிநெடுந் தேரிற் போனான்.

(சக்கரவர்த்தி), பொன் தொடி மகளிர் ஊரும்-பொன் வளையல்களணிந்த பெண்கள் ஏறிச் செல்லும், பொலம் கொள் தார் புரவி வெள்ளம்-பொன் வேலைப்பாடு கொண்ட கிங்கிணி மாலைகளையணிந்த குதிரைகளின் பெருங் கூட்டமானது, சுற்றுபு-(பக்கங்களில்) சூழ்ந்து கொண்டு, கமலம் பூத்த-(மிகப்பலவாகிய) தாமரைகள் பூக்கப் பெற்ற, தொடுகடல் திரையின் செல்ல-(சகரரால்) தோண்டப்பட்ட கீழ்கடலின் அலைகளைப் போலச் செல்லவும், கொற்றம் வேல் மன்னர்-வெற்றி பொருந்திய வேலையேந்திய (பல) அரசர்களுடைய, செம்கை-சிவந்த கைகளாகிய, பங்கயம் குழாங்கள்-தாமரைப்பூவின் கூட்டங்கள், கூம்ப-குவியவும், மற்று ஒரு கதிரோன் என்ன-வேறொரு சூரியன் என்னும்படி, மணி நெடு தேரில் - இரத்தினங்கள் பதித்த பெரிய தேரிலே, போனான்—.

கமலம் பூத்த தொடுகடல், இல்பொருளுவமை. தொடுகடல்-தோண்டப்பட்ட கடல்; சகரர் தோண்டிய கீழ் கடல். வெண் குதிரைகள் கடலலைகள்; குதிரைகளின் மீதுள்ள மகளிரின் அவயவங்கள் தாமரை மலர்கள்; இவை மகிழ்ச்சியால் மலர்ந்து காணப்பட்டன. அரசர்கள் கைகூப்பி அஞ்சலி செய்தமையை அவர்களுடைய கைத்தாமரை மலர்கள் குவிந்தன என்றார். பெருமையாலும் ஒளியாலும் தசரதனுக்குக் கதிரோனை உவமை கூறினார். இக்கதிரோன், இயற்கைக்கு மாறாகச் சில தாமரை மலர்களைக் குவியச் செய்துகொண்டு தரைமீது தேரிற் செல்வதனால் 'மற்றொரு கதிரோன்' என்றார்.

(பி - ம்.) 1. பொற்கொடி மகளிராரும்: பொலன் கொடேர்ப்; பொலன்கொடேர்; பொலன்கொடி. 2. சுற்றுறு; சுற்றவும்; சுற்றவே; திரையின்செல்லக். 3. செங்கை பங்கயக்: கூப்ப. (76)

884. ஆர்த்தது விசும்பை முட்டி மீண்டகன் றிசைக ளெங்கும்
போர்த்ததங் கொருவர் தம்மை யொருவர்கட் புலங்கொ
ளாமைத்
தீர்த்தது செறிந்த தோடித் திரைநெடுங் கடலை யெல்லாம்
தூர்த்தது சகர ரோடும் பகைத்தெனத் தூளி வெள்ளம்.

தூளி வெள்ளம்-(அப்போது படைகள் முதலியவற்றால் எழுந்த) புழுதியின் மிகுதியானது, ஆர்த்தது - (எங்கும் பரந்து) நிறைந்ததாகி, விசும்பை முட்டி மீண்டு-ஆகாயத்தை முட்டி, (மேலே செல்ல இடமின்றித்) திரும்பி, அகல் திசைகள் எங்கும் போர்த்தது-விசாலமான திக்குக்கள் முழுதும் சென்று மூடிக்கொண்டது; அங்கு-அவ்விடத்தில், ஒருவர் தம்மை ஒருவர் கண் புலம் கொளாமை-ஒருவரையொருவர் பார்க்கமுடியாதபடி, தீர்த்தது-செய்து முடித்தது; (அதனுடன் நில்லாமல்), செறிந்தது ஓடி-அடர்ந்து மேலும் ஓடிப்போய், சகரரோடும் பகைத்(த)து என-சகரபுத்திரரோடு பகைகொண்டாற் போல, திரை நெடு கடலை எல்லாம் தூர்த்தது-அலைகளையுடைய பெரிய (கீழ்) கடல் முழுவதையும் தூர்த்துவிட்டது.

தூளியின் மிகுதியை உயர்வு நவிற்சியாகவும், அங்ஙனம் கூறுமிடத்துக் கடலைத் தூர்த்தமைக்குக் காரணங் கற்பித்து ஏதுத்தற்குறிப்பேற்றமாகவும் கூறினர். சகரபுத்திரர்கள், தரையாயிருந்த விடத்தைத் தோண்டிப் பள்ளமாக்கி நீர்நிறையச் செய்தமையின், அவர்களோடு பகைகொண்டு, மீண்டும் அவ்விடத்தை நாம் தூர்த்துத் தரையாக்கிவிடுவோமென்று கருதித் தூளியானது அடர்ந்து சென்று கடலைத் தூர்த்தது என்றபடி.

தூர்த்தென: தொகுத்தல். வெள்ளம் மிகுதி குறித்தது.

(பி - ம்.) 1. ஆர்த்தன; அகன்பெருந்திசை களெல்லாம்; அண்டங்கள் திசைகளெல்லாம்.
2. போர்த்தது தூளியார்த்தங் கொருவர்கட்; பொலங் கொள்ளாமைச்; புலன்கொளாமை; புலங்கொள்ளாமைத்; பொலங்கொடாமை; புலங் கொளாமைச். 3. சேர்த்தது; சேர்ந்த தேர்கள்; கடல்களெல்லாம்.
4. சகரரோடு; பகையெனத்; பகைத்தன. (77)

885. சங்கமும் பணையுங் கொம்புந்
தாளமுங் காளத் தோடு
மங்கல பேரி செய்த
பேரொலி மழையை யோட்டத்
தொங்கலுங் குடையுந் தோகைப்
பிச்சமுஞ் சுடரை யோட்டத்
திங்கள்வெண் குடைகண் டோடத்
தேவரு மருளச் சென்றான்.

சங்கமும்-சங்குகளும், பணையும் - வேய்ங்குழலும், கொம்பும்-ஊது கொம்புகளும், காளத்தோடு-சின்னங்களும், தாளமும்-கஞ்ச தாளமும், மங்கல பேரி-மங்கல முரசும், செய்த பேர் ஒலி-(சேர்ந்து) உண்டாக்கிய பெருமுழக்கம், மழையை ஓட்ட-மேக முழக்கத்தை யும் தோற்கச் செய்யவும், தொங்கலும் - பீலித் தொங்கல்களும், குடையும் - பட்டுக்குடைகளும், தோகை பிச்சமும் - மயிற் பீலிக் குடைகளும், சுடரை ஓட்ட-வெயிலை மறைக்கவும், வெண்குடை கண்டு-(அங்கே பிடிக்கப்பட்ட)வெள்ளைக் குடைகளைக்கண்டு, திங்கள்-சந்திரன், ஓட-தோற்ருேடவும், தேவரும் மருள-தேவர்களும் (தன் வைபவங்களைக்கண்டு)மருட்சி கொள்ளுமாறு, சென்ருன்—. எழுவாய் வருவிக்க.

பணை-மூங்கில்; இங்கே வேய்ங்குழலைக் குறித்தது. மழை-ஆகு பெயராகி இடியோசையைக் குறித்தது. பயணம் பகலிலும் இரவி லும் நிகழ்ந்தமையின், 'திங்கள் வெண்குடை கண்டு ஓட' என்ருர். குடைகள் சந்திரன் தமக்கு ஒப்பாகானென்று பழித்து ஓட்டுவதன் முன்னமே தானுகவே சந்திரன் ஓடிவிட்டானெனச் சமத்காரமாகக் கூறினர். தொங்கலுங்.........சுடரையோட்ட: ஒப்பு. 'குடையொடு பிச்சந் தொங்கற் குழாங்களுங் கொடியின் காடும், இடையிடை மயங்கி யெங்கும் வெளிகரந் திருளைச்செய்ய' (863).

(பி - ம்.) 1. காளத்தோடும். 2. மங்கலப்பேரி; மங்கலம்பேரி.
3. தொங்கலுங் கொடியும்; தொங்கலுந் தொடையும்; தோகைபிச்சமும்: வெயிலையோட்டத். 4. தெவ்வரு மருளச்; சென்ருர். (78)

886. மந்திர கீத வோதை வலம்புரி முழங்கு மோதை
அந்தண ராசி யோதை யார்த்தெழு முரசி னேதை
கந்தடு களிற்றி னேதை கடிகையர் கவியி னேதை
இந்திர திருவன் செல்ல வெழுந்தன திசைக ளெல்லாம்.

இந்திர திருவன்-இந்திரனுக்கொப்பான செல்வம் படைத்த தசரத சக்கரவர்த்தி, செல்ல-போகாநிற்க, (அப்போது), மந்திரம் கீதம் ஓதை-வேத மந்திரங்களாகிற இசையின் ஓசையும், வலம்புரி முழங்கும் ஓதை-வலம்புரிச் சங்குகள் முழங்குவதனுலான ஓசையும், அந்தணர் ஆசி ஓதை-அந்தணர்கள் (மந்திரங்களால்) ஆசீர்வதிக்கும் (இனிய) ஓசையும், ஆர்த்து எழு முரசின் ஓதை-மிகவும் ஆரவார முடைய முரசவாத்தியங்களின் பேரொலியும், கந்து அடு களிற்றின் ஓதை-கட்டுத்தறியை முறிக்கும் ஆண் யானைகளின் பிளிறல் ஓசையும், கடிகையர் - நாழிகைக்கணக்கருடைய, கவியின் ஓதை-(அரசனுக்கு நாழிகையை அறிவிக்கும் பொருட்டுப்பாடும்)பாட்டின் ஓசையுமாகிய எல்லாம், திசைகள் எல்லாம் எழுந்தன - திக்குக்களெல்லாம் (எதி ரொலி தோன்ற)மிக்கு எழுந்தன.

மந்திர கீதம்-சாமவேத கானம் எனலாம். கடிகையர்-'அரச னுக்குச் சென்ற நாழிகைக்குக் கவி சொல்லுவார்' சிலப். 5:49-அடி யார்க்கு நல்லார் உரை. தசரதனுக்கு இந்திரனை உவமித்தல்: *218, 1185, 1194, 1278.*

(பி - ம்.) 1. மந்திர கீதவோசை; முழக்குமோசை, முழக்கவோசை.
2. ஆசியோசை; அதிர்ந்தெழு முரசினோதை; ஆர்த்திடு முரசினோசை.
3. கந்துகொல்; கந்துகொள்; கந்துகக்: களிற்றினோசை; கவிதையோதை; கவியினோசை.
4. திருவின் செல்வம்; திருவிற்செல்ல; திசைகளெங்கும்; ஓதையெல்லாம்; ஓசையெல்லாம். (79)

887. நோக்கிய திசைக டோறுந் தன்னையே நோக்கிச் செல்லும்
வீக்கிய கழற்கான் மன்னர் விரிந்தகைம் மலர்கள் கூப்பத்
தாக்கிய களிறுந் தேரும் புரவியும் படைஞர் தாளும்
ஆக்கிய தூளி விண்ணு மண்ணுல காக்கப் போனான்.

நோக்கிய திசைகள் தோறும்-(தசரதன் தான் திரும்பிப்) பார்த்த பக்கங்களிலெல்லாம், தன்னையே நோக்கி செல்லும்-தன் னையே (கடைக்கணிப்பின் பொருட்டுப்) பார்த்துப் பார்த்துச் செல் லுகின்ற, வீக்கிய கழல் கால் மன்னர்-இறுகக் கட்டிய வீரக் கழல் அணிந்த கால்களையுடைய அரசர் பலர், விரிந்த கை மலர்கள் கூப்ப-(ஏந்துதலால்) விரிந்திருந்த தம் கைகளாகிற தாமரை மலர்களைக் குவித்து அஞ்சலி செய்யவும்,தாக்கிய-ஒன்றோடொன்று மோதுகின்ற, களிறும்-யானைகளும், தேரும்-தேர்களும், புரவியும்-குதிரைகளும், படைஞர் தாளும்-படை வீரர்களுடைய கால்களும், ஆக்கிய தூளி-உண்டாக்கிய புழுதியானது, விண்ணும் மண் உலகு ஆக்க-ஆகாயத் தையும் பூமி போல (ப்புழுதி நிறைந்ததாக)ச் செய்யவும், போனான்.

சக்கரவர்த்தி, இராமபிரான் திருமணங் குறித்துச் செல்லுதலை அறிந்த அரசர் பலர், உடன் செல்வாராய், அவரவர் மீது எப்பொழு தேனும் சக்கரவர்த்தியின் கடைக்கண் நோக்கம் படாதா என்று எதிர்பார்த்து அடிக்கடி சக்கரவர்த்தியையே நோக்கியவாறு அஞ்சலி செய்துகொண்டு சென்றனரென்க. இது முன்னிரண்டடிகளிற் கூறப் பட்டது; 882 பார்க்க. பின்னிரண்டடிகளில், படைகளின் நெருக்கத் தால் எழுந்த தூளியின் மிகுதியை உயர்த்திக் கூறினார்; முன்னே 859, 884 ஆம் கவிகளிலும் காண்க.

(பி - ம்.) 1. திசைகளெல்லாம்; நோக்கிச் செல்ல.
2. கழற்கால் வேந்தர்; விரித்த கைம்மலர்கள் கூம்பத்; விரித்த கை மலர்கள். 3. படைஞர் தாமும்.
4. ஆக்கிய தூளின் விண்ணும் மண்ணுலகாகப்; ஆக்கிய வளர்ந்த தூளி விண்ணுலகாக்கப். (80)

888 வீரருங் களிறுந் தேரும் புரவியு மிடைந்த சேனை
பேர்விட மில்லை மற்றோ ருலகில்லை பெயர்வ தாக
நீருடை யாடை யாளு நெளித்தனண் முதுகை யென்றால்
பார்பொறை நீக்கி னானென் றுரைத்ததெப் பரிசு மன்னோ.

வீரரும் - காலாட் படை வீரர்களும், களிறும்-யானைகளும், தேரும்-தேர்களும், புரவியும்-குதிரைகளும், மிடைந்த சேனை-மிக நெருங்கிய அப்படைத் தொகுதி, பேர்வு இடம் இல்லை-புடை பெயர்ந்து (நடந்து) செல்வதற்கு (இவ்வுலகில்) இடம் சிறிதும் இல்லை; பெயர்வது ஆக-அத்தொகுதி(இடம் மாறி) பெயர்ந்து செல்லத் தக்க இடமுடையதாக, மற்று ஓர் உலகு இல்லை-வேறொரு உலகமும் இல்லை; நீர் உடை ஆடையாளும்-கடல் நீராகிய ஆடையையுடைய பூமி தேவியும், முதுகை நெளித்தனள் என்றால்-(இப்படைத் தொகுதி யின் பாரம் தாங்க முடியாமையால்) தன் முதுகை நெளித்துக் கொடுத்தாளானால், பார் பொறை நீக்கினான் என்று உரைத்தது- (தசரதன்) பூமியின் பாரத்தை நீக்கிப் பாதுகாத்தான் என்று பலரும் (புகழ்ந்து) சொன்னது, எ பரிசு-எவ்வாறு (பொருந்துவதாகும்)? மன், ஓ: அசைகள்.

'தசரத சக்கரவர்த்தி பூமிக்குப் பாரந் தீரும் வண்ணம் முறை செய்து காப்பவன் என்று பலரும் அவனைப் புகழ்கின்றனர்; ஆனால், இப்போது இவன் படைகளின் பாரத்தையே பூமி தாங்கமுடியவில்லை யென்றால், அப்புகழ்ச்சி யெவ்வாறு பொருந்துவதாகும்' என்று பழிப் பது போலப் புகழ்கின்றார்.

பார்பொறை நீக்கினா னென்றல்: 54. நிலமகள் முதுகை நெளித்தல்: 751.

(பி - ம்.) 1. புரவியு மிடைந்து செல்லப்.
2. பேரிட மில்லை; பேர்விடமின்றி; உலகில்லைப் பெயர்க்க லாகா; உல கில்லைப் பெயர்க்கலாவ; உலகிலைப் பெயர்க்கலாவ;இடமில்லைபெயர்க் கலாவ; திசையில்லை பெயர்வதாக.
3. நீருடையாளும் பூமி.
4. பார் பொறை யாற்றினானென்று; பார்முறை நோக்கினானென்று; உரைத்தது பழுது; உறைத்தலும் பரிது; உரைப்ப தெப்பரிசு; உரைத் தது பரிசு; உரைத்தது பரித்து. (81)

சந்திர சைலச் சாரலில் தங்குதல்

889. இன்னண மேகி மன்னன் யோசனை யிரண்டு சென்றான்
பொன்மலை போலு மிந்து சயிலத்தின் சாரல் புக்கான்
மன்மதக் களிறு மாதர் கொங்கையு மார னம்பும்
தென்வரைச் சாந்து நாறச் சேனையு மிறுத்த தன்றே.

மன்னன்-தசரத சக்கரவர்த்தி, இன்னணம் ஏகி-இவ்வாறு (பெருஞ் சிறப்புடன்) சென்று, யோசனை இரண்டு சென்றான்-இரண்டு யோசனை தூரம் கடந்தவனாய், பொன் மலை போலும்-பொன்மயமான

பேருமலைபோன்ற, இந்து சயிலத்தின் சாரல் புக்கான்-சந்திரசைல மென்னும் மலையின் அடிவாரத்தை அடைந்தான்; (அப்போது), மன் மதன் களிறும் (நாற)-மன்மதனுடைய யானை எனப்படும் இருளும் தோன்றுதலால், மாதர் கொங்கையும்-பெண்களின் தனங்களும், மாரன் அம்பும்-மன்மத பாணங்களாகிய மலர்களும், தென் வரை சாந்தும்-தெற்கிலுள்ள பொதியமலைச் சந்தனமும், நாற-மணம் வீச, சேனையும் இறுத்தது-சேனையும் அங்கே தங்கலாயிற்று.அன்று ஏ-அசை.

நாறுதல்-தோன்றுதல், மணத்தல். மன்மதனுக்கு யானை இருள் என்பர் நூலோர்; ஆதலின், 'மன்மதக் களிறு' என்றார். 'நாற' என் றதனைக் களிற்றோடுங்கூட்டியுரைக்கப்பட்டது; இங்கே இது,'தோன்று தலால்' எனக் காரணப்பொருளுடையது. பின் மூன்றிடத்தும் உட னிகழ்ச்சிப் பொருளுடையது.

மாதர் கொங்கை நாறுதல், அவர்கள் தனங்களில் அப்பியுள்ள கலவைச் சாந்தின் மணம் வீசுதல்;மாரன் அம்பாகிய மலர்கள்,பெண் கள் கூந்தலிற் சூடினவும் மலையினிடத்துள்ளனவும்;தென்வரைச்சாந்து நாறுதல்,பொதியமலைச் சந்தனத்தின் மணம் தென்றலால்வீசப்படுதல்

இங்ஙனமன்றி, மன்மதக்களிறு-மாதர் கூந்தலைக்குறித்ததெனக் கொண்டு, 'கூந்தலும் தனங்களும் முறையே மலர்களும் சந்தனமு மாகியவற்றின் மணத்தை வீச' என உரைப்பாருமுளர். 'வன்மதக் களிறு' என்ற பாடங்கொண்டு, 'வலிய மதயானைகளின் மதநீர் நாற என உரைப்பாரும் உளர்.

தசரதன், மிதிலையை விரைவில் அடையக் கருதிப் பயணத்தை விரைவாக நடத்தி நான்கு நாட்கள் சென்று ஐந்தாநாள் மிதிலையை அடைந்ததாக வான்மீகம் கூற, கம்பநாடர், காவியச் சுவையை மிகுவித்தற் பொருட்டு இங்கே முன்னும் பின்னும் பலவற்றை விரித் துக்கொண்டு கூறுகின்றார். இப்பாலகாண்டத்துட் பெரும்பகுதி கம்பநாடருடைய கற்பனையூற்றிற் சுரந்த இனிய அமுதவொழுக் காகும். அதனுள்ளும், இவ்வெழுச்சிப் படல முதல் உண்டாட்டுப் படலம் முடியவுள்ள பகுதி முழுதும் இவருடைய கற்பனையின் அருஞ் சித்திரமே. வான்மீகத்துள் சந்திர சைலமென்ற இம்மலைப் பெயர்கூட வந்திலது. எனவே, இப்பெயரும் இவருடைய கற்பனையே எனலாம்.

(பி - ம்.) 1. எய்தி அன்னான்; எய்தி மன்னி; ஏகியன்னான்; ஓசனை.
2. பொன்வரை; போலுமிந்துச்; போலுமிந்தூன்; போன்ற சந்திர; சார்புபுக்கான்; சாலைபுக்கான்.
3. வன்மதக்; வன்மனக்; கொங்கையுங்காவிபூத்த; கொங்கையுமாவி பூவும்; கொங்கையு மாவின்பூவும்.
4. சாந்து நாறுஞ்; சந்து நாறச்; சேனைசென்றிறுத்ததன்றே; சென்றி றுத்தமாதோ; சேனையுஞ் சென்றதன்றே; சேனைசென்றிறுத்தவன்றே.

எழுச்சிப் படலம் முற்றும்.

## 14. வரைக் காட்சிப் படலம்

வரைக் காட்சிப் படலம்: வரையினது காட்சி முதலியவற்றைக் கூறும் படலம் என விரியும்.

தசரத சக்கரவர்த்தி பெருஞ் சிறப்புக்களுடன் மிதிலைக்குச் செல்லும்போது, இடைவழியிலே யிருந்த சந்திரசைலச் சாரலையடையுந் தருணத்தில் சூரியாஸ்தமனமாகி, இருள் பரவத் தொடங்கவே, அனைவரும் அங்கே தங்கினராக, அப்போது அம்மலையிடத்து நிகழ்ந்தவற்றை இப்படலத்துள்ளும் மேலே மூன்று படலங்களிலும் பலபட விரித்துரைக்கின்றார் ஆசிரியர்.

இப்படலத்துள்ள பாடல்கள் 77. இவற்றுள் முதல் முப்பது பாடல்கள் வரை **சந்திரசைலப் படலம்** என்றும் மேலே **வரைக் காட்சிப் படலம்** என்றும் சில பிரதிகளில் காணப்படுகின்றன. முழுதும் சந்திரசயிலப் படலம் என்று சிலபிரதிகளிலும், வரைக்காட்சிப் படலம் என்று சில பிரதிகளிலும் பெயர் காணப்படுகிறது. அச்சுப் பதிப்புக்கள் பெரும்பாலானவற்றில் வரைக்காட்சிப் படலம் என்றேயிருத்தலாலும், எல்லாம் வரையிடத்துக் கண்ட காட்சிகளைப்பற்றிய செய்திகளேயாதலாலும், 'வரைக் காட்சிப் படலம்' என்ற தலைப்பே இங்குக் கொள்ளப்பட்டது. 'வரை காண் படலம்' எனவும் சிலபிரதிகளில் உள்ளது.

### சந்திர சைலத்தின் தோற்றம்

890. அலகி லாமத யானையு மவற்றொடு மிடைந்த
திலக வாணுதற் பிடிகளுங் குருளையுஞ் செறிந்த
உலவை நீள்வனத் தூதமே யொத்தன யூதத்
தலைவ னேயெனப் பொலிந்தது சந்திர சயிலம்.

அலகு இலா-அளவற்ற, மதம் யானையும் - மதங்கொண்ட (ஆண்) யானைகளும், அவற்றொடு மிடைந்த-அவைகளோடு கலந்திருந்த, திலகம் வாள் நுதல் பிடிகளும்-சிந்தூரந் திலகமிட்ட அழகிய நெற்றியையுடைய பெண் யானைகளும், குருளையும்-யானைக் கன்றுகளுமாக, செறிந்த-(அங்கே) நெருங்கிக் கூடியிருந்த யானைகள், உலவை நீள் வனத்து-மரங்களடர்ந்த பெரிய காட்டில் உள்ள, ஊதம் ஒத்தன-காட்டு யானைக் கூட்டம் போன்றிருந்தன; சந்திர சயிலம்-அச்சந்திர சைலமானது, யூதத் தலைவன் என பொலிந்தது-அக்கூட்டத் தலைவனான யானையரசு என்னும்படி விளங்கிற்று.

ஏகாரம் இரண்டும் இசைநிறை; தேற்றமும் ஆம்.

சக்கரவர்த்தியோடு சென்ற படையைச் சார்ந்தனவும் பிறவுமாகிய அளவற்ற யானைகள் (கட்டப்பட்டும் பிறவகையிலும்) திரண்டு நின்ற காட்சி, காட்டு யானைகளின் கூட்டமாகிய யூதம் போன்றிருக்க, அம்மலை அக்கூட்டத் தலைவனான யானையரசு போன்றிருந்தது என்க. காட்டு யானைகள் இடம்விட்டு இடம் பெயர்ந்து செல்லும்போது, கூட்டத் தலைவனாகச் சிறந்ததோர் ஆண் யானையை முன்னிட்டுக் கொண்டு, பெண் யானைகளும், கன்றுகளும், வயது முதிர்ந்தனவும் இடையிலே வரவும், திறல் மிக்க ஆண் யானைகள் முன்னும் பின்னும் காத்து வரவும் தம்மை அணிவகுத்துக்கொண்டு செல்லும் என்பர். இங்கே மலையை 'யூதத்தலைவன்' என்றதனால், யானைகள் பக்கமலைகளான குன்றுகள்போலச் சிறந்தன என்ற பொருளும் குறிப்பிக்கப் பட்டது.

யூதம் என்னும் வடசொல் ஊதம் என மருவி நின்றது. யூதம்-அணிவகுத்துச் செல்லும் யானைக்கூட்டம்; தலைமை யானை 'யூதபதி' எனப்படும்.

முந்திய அச்சுப் பிரதிகளில் இப்பாடல் இப்படலத்தின் 7-ஆம் பாடலாகவுள்ளது; இஃது அவ்விடத்து இருத்தல் பற்றி ஸ்ரீஐயரவர்களுடைய ஐயக் குறிப்பொன்று காணப்படுதலாலும், சிறந்ததோர் ஏட்டுப்பிரதியில் இஃது இவ்விடத்தில் உள்ளமையாலும், இவ்வாறிருத்தல் பொருத்தமுடைய்தேயெனக் கருதி இங்கே வைக்கப்பட்டது.

(பி - ம்.) 1. அலகில் யானைகள்; அலகிலானைகள்; அனேகமு மவற்றிடை மிடைந்த.
2. குருளையும் பிடிகளும்: செறிய.
3. உலவுநீர்; வனத்தூகமே; வனத்தூதையே: ஒத்தவவ் வூதத்; ஒத்த தவ் வூதத்; ஒத்ததவ் வூகத்; ஒத்ததவ்வுலகத்; ஒத்தனவூ ..த்; ஒத்தன யூகத்.
4. தலைவனேயொத்துப் பொலிந்ததச். (1)

யானைகள்

891. கோவை யார்வட கொழுங்குவ டொடிதர நிவந்த
ஆவி வேட்டன வரிசிலை யனங்கன்மேற் கொண்ட
பூவை வாய்ச்சியர் முலைசிலர் புயத்தொடும் பூட்டத்
தேவ தாரத்துஞ் சந்தினும் பூட்டின சினமா.

பூவை வாய்ச்சியர்-மைனாவின் சொற்கள் போன்ற (இனிய) சொற்களைக் கொண்ட வாயையுடைய (சில) பெண்களின், கோவை ஆர்-(முத்தாலும் மணியாலும் இயன்ற) மாலைகள் பூண்டனவும், வட கொழு குவடு ஒடிதர நிவந்த-வடக்கிலுள்ளதான வளமிக்க மேரு மலையும் நாணும்படி நிமிர்ந்தனவும்; ஆவி வேட்டன - (காதலரின்) உயிரை(க் கொள்ளைகொள்ள) விரும்பியனவும், வரி சிலை அனங்கன்

மேல்கொண்ட-கட்டமைந்த வில்லையுடைய மன்மதனுல் (ஆடவரின் காமவேட்கையைத் தூண்டுதற்குக் கருவியாக) மேற்கொள்ளப் பட்டனவுமான, முலை-தனங்கள், சிலர் புயத்தொடும் பூட்ட-(காதல ராகிய ஆடவர்) சிலருடைய புயங்களிலே பொருந்த, சினம் மா-கோபமுடைய யானைகள், தேவதாரத்தும்-தேவதாரமரங்களிலும், சந்தினும்-சந்தன மரங்களிலும், பூட்டின-கட்டப்பட்டன.

யானைகளின் மீதிருந்த மகளிரை அவரவருடைய கணவன்மார் கீழே இறக்கும்போது, அம்மகளிரின் தனங்கள் அவ்வாடவரின் புயங் களிலே பதிதலை 'முலை சிலர் புயத்தொடும் பூட்ட' என்ருர். முன் னிரண்டடிகள் பெண்களின் கொங்கைக்கும் யானைக்கும் சிலேடை; யானைக்குக் கூறுங்கால்: கோவை ஆர்-ஆகாயத்தையளாவிய, வடம் கொழு குவடு ஓடி தர-ஆலமரத்தின் கொழுவிய கிளைகள் முறியும்படி, நிவந்த-உயர்ந்தோங்கியனவும், ஆவி வேட்டன-(நீர் வேட்கையால்) நீர்நிலையை விரும்பியனவும், (வரிசிலை) அனங்கன் மேற்கொண்ட-மன் மதனைப் போன்ற வீரனைத்(தனித்தனி)தம்மேலேற்றிக் கொண்டனவு மான, சினமா என்க.

ஆவிவேட்டன-நறும் புகையை விரும்பின; அனங்கன் வரிசிலை மேற்கொண்ட-மன்மதனது வில்லாகிய கரும்பைத் தொய்யிலாக எழுதப்பெற்றன எனவுரைத்தலும் ஆம். மாதர் தம் தனங்களிலே எழுதிய தொய்யிற் கோலம் புலர்தற் பொருட்டுப் புகையூட்டுவர். யானைகள் மரங்களிற் பூட்டப்பட்டனபோல, கொங்கைகள் புயங் களிற் பூட்டப்பட்டன என்ற உவமைக் குறிப்புங் காணத்தக்கது. யானைகள், தேவதாரம் சந்தனம் முதலிய உயர்ந்த சாதி மரங்களிற் கட்டப்பட்டன எனவே, அம்மலையின் வளச்சிறப்புங் குறித்தவாரு யிற்று.

பூவை, ஆகுபெயர். பூட்டின-பூட்டப்பட்டன; செயப்பாட்டு வினைப்பொருளது.

முதற் பாடலில், இவர்கள் தங்கிய மலைப் பிரதேசத்தின் பொதுத் தோற்றத்தைக் கூறி, இதுமுதல் மேலே தனித்தனியே பல நிகழ்ச்சிகளைக் கூறுகின்ருர்.

(பி - ம்.) 1. கோவையார்வடக்; கோவைவார்வடக்: கோவைவார்வரக்; கோவை வாருடைக்: கொடுங்குவடு; கொழுங்கவடு: ஓடிந்தற; ஓடிந்திற; ஓடிந் திட; ஓசிதர: நிவர்ந்த; நிமிர்ந்த.
2. வேட்டென: வெய்யன்மேற். 3. பூவைவாச்சியர் : முலைசில.
4. தேவதாரத்துச்; தேவர்தாரத்தும்: சந்தொடும்: பூட்டினர்; பூட்டிய: சிலமா; சிலதேர். (2)

892. நேரொ டுங்கலில் பகையினை நீதியால் வெல்லும்
சோர்வி டம்பெரு வுணர்வினன் சூழ்ச்சியே போலக்
காரொ டுந்தொடர் கவட்டெழின் மராமரக் குவட்டை
வேரொ டுங்கொடு கிரியென நடந்ததோர் வேழம்.

ஓர் வேழம்-ஒரு (வலிய)யானையானது,நேர் ஒடுங்கல் இல் பகையினை-(தனக்கு) நேராக அடங்குதலில்லாத பகைவனை, நீதியால் வெல்லும்-அரச நீதியாகிய உபாயத்தாலே வெல்லுதற்குரிய,சோர்வு இடம் பெறு உணர்வினன்-தவறுதலுக்கு இடமில்லாத (கூர்த்த) அறிவுடைய ஒருவனது, சூழ்ச்சியே போல-உபாயத்தைப்போல, (சூழ்ச்சியுடையதாய்), காரொடும் தொடர் கவடு-மேகமண்டலத்தை யளாவிய கிளைகளையுடைய, எழில்-அழகான, மராமரம் குவட்டை-(தான் கட்டப்பட்டிருந்த) மராமரத்தினது அடியை, வேரொடும் கொடு-வேரோடு பறித்து இழுத்துக்கொண்டு, கிரி என நடந்தது-(ஒரு) மலை போல நடந்துசென்றது.

ஒரு மராமரத்தோடு கட்டுண்டிருந்த யானையொன்று, அக்கட்டினின்றும் தன்னை விடுவித்துக்கொள்ளக் கருதி முயன்று, கட்டையறுத்துக்கொண்டு போக வியலாமையால், அம்மரத்தையே அடியோடு பறித்துச் சென்றது; இச்செயலுக்கு, தவறாத சூழ்ச்சித் திறனுடைய அரசனொருவனது செயலை உவமித்தார். தன்னால் நேருக்கு நேர் பொருது வெல்ல முடியாத பகையை உபாயத்தால் வெல்லுதலும் அரச நீதியேயாம்; அச்சூழ்ச்சித் திறன் பாராட்டுதற்குரியது மாகும். அதுபோல, யானை தன்னிச்சையின்படி போவதற்குத் தடையாயிருந்த (பகையான) மராமரத்தை வேரோடு பறித்திழுத்துத்தன் கொள்கையில் வெற்றி கண்டதென்க. இனி, பகைவரால் அகப்படுத்தப்பட்ட அரசனொருவன், தன் உபாயத்தால் அதினின்றும் விடுபட்டுச் செல்லுதலை உவமித்தலும் இங்கே பொருந்துவதாகும்; புறநா. 17-பார்க்க. மராமரத்தையே பெயர்த்து இழுத்துச் செல்லும் திறனுடைய யானைக்கு மலையை உவமை கூறினர்.

இது முதல், தனித்தனி யானையின் செயலைக் கூறும் பாடல்கள் நான்கில் உள்ள உவமை, கருத்தாழம் முதலிய நயங்கள் ஓர்ந்து இன்புறுதற்குரியன.

(பி - ம்.) 1. நேரொடுங்கலிற் பகையினன்.
2. சோர்விடம்பெறுது; சோர்விடம்படா; சோர்விடம்பொரு; சூழ்ச்சியரேபோல்.
3. வாரொடுந்தொடர்; பாரொடுந்தொடர்: கவட்டொடு; கவட்டுயர்; மாமரக்குவட்டை; மராமரத் தொகையை; மராமரக்குவையை; மரக்குவடடைய. 4. கொடுங்கிரியென: திரிந்ததோர். (3)

893. திரண்ட தாணெடுஞ் செறிபணை மருதிடை யொடியப்
புரண்டு பின்வரு முரலொடு போகுமால் போல
உருண்டு காரெடர் பிறகிடு தறியொடு மொருங்கே
இரண்டு மாமர மிடையிற நடந்ததோர் யானை.

திரண்ட தாள்-திரண்ட அடி மரத்தையும், நெடு செறி பணை-நீண்ட நெருங்கிய கிளைகளையுமுடைய, மருது இடை-இரண்டு மருத

மரங்களுக்கிடையே, ஓடிய-அவை ஒருங்கே முறிந்து சாயும்படி, பின் புரண்டு வரும் உரலொடு-(தன்னோடு பிணைக்கப்பட்டதனால்) தன் பின்னே உருண்டு வருகிற உரலோடே, போகும் மால் போல-(முன்னொரு காலத்தில்) சென்றருளிய கண்ணபிரானைப்போல, ஓர் யானை-ஒரு யானையானது, உருண்டு கால் தொடர் பிறகிடு தறியொடும்-உருண்டுகொண்டு (தன்) காலைத் தொடர்ந்து பின்னே வருகிற கட்டுத் தறியுடனே கூட, இரண்டு மா மரம் ஒருங்கே இற-இரண்டு பெரிய மரங்கள் ஒருசேர முறிந்து விழும்படி, இடை நடந்தது-அம் மரங்களின் நடுவே போயிற்று.

யானை, தன்னைக் கட்டியிருந்த கட்டுத் தறியைப் பெயர்த்து இழுத்துக்கொண்டு விரைந்து போகும்போது, எதிர்ப்பட்ட இரண்டு பெரிய மரங்களுக்கிடையே, அவை முறிந்து விழும்படி போனமைக்கு, கண்ணபிரான், தன்னைக் கட்டியிருந்த உரலோடு தவழ்ந்து இரட்டையான மருத மரங்களுக்கிடையே அவை முறிந்து விழும்படி சென்றமையை உவமை கூறினர். கண்ணபிரான் மருதொசித்த வரலாறு பிரசித்தமானது.

(பி - ம்.) 1. திரண்ட தாளொடுஞ் செறிமருதிடையினிலோடிப்; செறிமகுதிடையினி லொடியப்.
2. புரண்டு பின்வர; புரண்டுலாவர; புரண்டுலாவரும்: உரலொடு போனவன்போல; உரலொடும போயவன்போல; உரலொடு போகுவான் போல; உரலொடு நடுவு போனவன்போல்.
3. உருண்டு கற்றொடர்: பிறங்கிடு; தடியொடும்.
4. இடையற; ஓரியானை. (4)

894. கதங்கொள் சீற்றத்தை யாற்றுவா னினியன கழறிப்
பதங்கொள் பாகனு மந்திரி யொத்தனன் பன்னூல்
விதங்க ளாவன யாவையு மெல்லென விளம்பும்
இதங்கள் கொள்கிலா விறைவனை யொத்ததோர் யானை.

ஓர் யானை-மற்றொரு யானையானது, பலவிதங்கள் ஆவன நூல் யாவையும் - பலவகையான (அரச) நீதி நூல்களை யெல்லாம் (கொண்டு), மெல்லென விளம்பும்-பக்குவமாக (மந்திரி) எடுத்துச் சொல்லுகிற, இதங்கள் - நன்மைகளை, கொள்கிலா - ஏற்றுக்கொள்ளாத, (தன் மனப்படியே செல்லுகிற), இறைவனை ஒத்தது-அரசனைப் போன்றதாயிற்று; கதம் கொள் சீற்றத்தை-(அடங்காது) ஓடுதற்குக் காரணமான (அதன்) கோபத்தை, ஆற்றுவான் - தணிக்கும் பொருட்டு, இனியன கழறி - இனிமையான நல்லவார்த்தைகளை (குறிப்பு மொழிகளை)ச் சொல்லி, பதம் கொள்-(அதனை) வசப்படுத்த முயலுகின்ற, பாகனும்—, மந்திரி ஒத்தான்-(கருத்திலாத அரசனை நல்வழிப்படுத்த முயலும்) நன்மந்திரி போலிருந்தான்.

ஒரு யானை மதவெறியால் பாகனுக்கடங்காது சினத்துடன் தன் மனங்கொண்டபடி ஓட, மெல்ல மெல்லப் பக்குவமான நய மொழிகளால் அதனை வசப்படுத்த முயன்றான் பாகன்; இதற்கு, நீதி நோக்காது தன் மனப்படி செல்லும் அரசனையும், இத மொழிகளால் அவனைத் திருத்த முயலும் நன் மந்திரியையும் உவமை கூறினார்.

பாகன் யானையை இனியன கழறி வசப்படுத்தல்: 'மதக்களிறு வலியாக், கதந்தலை யழியக் கந்தொ டார்த்துச், சாமகீத வோசை யிற் றணிக்கும், நூலறி பாகரொடு' (பெருங். 1. 44: 61-4); மத யானையை அரசருக்கு உவமித்தலும் உண்டு: சீவக. 200-உரை. அமைச்சர் கடமை: நீதிநெறி. 45.

(பி - ம்.) 1. கதங்கள்; மாற்றுவான்.
3. விதங்களாலவன்; விதங்களாலவர்; வீதங்களால்வர: மெல்லென மெல்லென: செப்பும்.
4. மன்னனை யொத்ததோ ரியானை; மன்னனே யொத்ததோர் யானை.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை. (5)

895. மாறு காண்கில தாய்நின்று மழையென முழங்கும்
தாறு பாய்கரி வனகரி தண்டத்தைத் தடவிப்
பாறு பின்செலக் காலெனச் செல்வது பண்டோர்
ஆறு போகிய வாறுபோ மாறுபோன் றதுவே.

மாறு காண்கிலதாய் நின்று-(தனக்குப்) பகையான ஒன்றைக் காணாததாய் (வறிதே) நிற்றலால், மழை என முழங்கும்-இடிபோலப் பிளிறுகின்ற, தாறு பாய் கரி-(பாகன் குத்திய) இருப்புமுள் பாயப் பெற்ற மத யானை யொன்று, வனம் கரி தண்டத்தை தடவி-காட்டு யானை சென்ற வழியை (மோப்பத்தால்) அறிந்து, (அவ்வழியிலே), பாறு பின் செல-பருந்துகள் தன்னைப் பின்றொடர்ந்து வர, கால் என செல்வது-காற்றைப்போல விரைந்து போவது, பண்டு ஓர் ஆறு போகிய ஆறு-முன்னே ஒரு பேராறு சென்ற வழியிலே, போம்-(தானும்) போகின்ற, ஆறு போன்றது-மற்றோர் ஆற்றைப் போன்றிருந்தது. ஏ, அசை.

போர் செய்து பழகிய, சேனையைச் சார்ந்த யானை யொன்று, தினவு கொண்டு, தனக்கெதிராக நிற்பதொன்றையும் அவ்விடத்துக் காணாமையால், இடி முழக்கம்போலப் பிளிற, பாகன் அதனைத் தாற்றுக்கோலாற் குத்தி அடக்க முயலவே, மேலும் வெறிகொண்டு, அடங்காமல், வேற்றியானை சென்ற வழியை மதம் நாறும் மோப்பத்தால் உணர்ந்து, அவ்வழியே போய் அவ்யானையோடு பொரக் கருதி விரைந்து ஓடலாயிற்று; அவ்வாறு அது சென்றதை, ஒரு காட்டாறு சென்ற வழியிலே மற்றொரு சிற்றாறு செல்வது போன்றதென்றார். வேற்று யானையின் மத நாற்றங் கண்டால், யானைகள் மதவெறி

கொள்ளுதல் இயல்பென்பர். தண்டம்-யானை செல்லும் வழி. இச்சேனை யானை, செல்லும்போது இடையிலே அகப்பட்டவற்றைக் கொன்றுகொண்டே செல்வதனாலும், அதன் மத நாற்றத்தாலும் பருந்துகள் பின் தொடர்ந்தன வென்க.

காலெனச் செல்வது: ஒப்பு. முருகு. 82; அதன் குறிப்புங் காண்க.

(பி - ம்.) 1. மாறுகாணுமதாய்; மாறுகாணுவதாய்: முழங்கு.
2. தாறு காய்கரி; தாறு பாய்கிரி: வனகரி வண்டத்தை; வனகரித் தண்டத்தைத்; வனகிரி தடத்தினைத்; வனகரி தடத்தை முன்; வனகரி தடத்தையே: தழுவிப். 3. காலெனச் செல்வன.
4. போன்றனவே; போன்றுளதே; சென்றதுவே. (6)

896. பாத்த யானையின் பதங்களிற் படுமத நாறக்
காத்த வங்குச நிமிர்ந்திடக் கால்பிடித் தோடிப்
பூத்த வேழிலைப் பாலையைப் பொடிப்பொடி யாகக்
காத்தி ரங்களாற் றலத்தொடுந் தேய்த்ததோர் களிறு.

பாத்த-(அணியணியாகப்) பகுக்கப்பெற்ற, யானையின் பதங்களில் படும்-யானைப் பந்தியினின்றும் உண்டாகிற, மதம் நாற-மத நாற்றம் போன்றதொரு மணம் வீச, (அதனை நுகர்ந்த), ஓர் களிறு-ஒரு மத யானை, காத்த அங்குசம் நிமிர்த்திட-(பாகன்) தன்னை அடக்கும் அங்குசத்தின் வளைவும் நிமிர்ந்து போகும்படி (மீறிக்கொண்டு), கால் பிடித்து ஓடி-(மணம் வந்த) திசையைப் பற்றிக்கொண்டு ஓடி, (அங்கே கண்ட), பூத்த ஏழிலைப் பாலையை - நிறையப் பூத்திருந்த ஏழிலைப் பாலை மரத்தை, (கீழே சாய்த்து), பொடி பொடி ஆக-சிறு சிறு துகளாகும்படி, காத்திரங்களால்-தன் முன்னங் கால்களால், நலத்தொடும் தேய்த்தது-தரையோடு தரையாகத்தேய்த்துவிட்டது.

ஏழிலைப் பாலை-நிரையாக அடுக்கிய ஏழு இலைகளை (ஒரே காம்பில்) உடையதொரு பாலை மர வகை; இதனை வடமொழியில் 'ஸப்த பர்ணீ' என்பர். இதன் பூவின் மணம், யானையின் மத நாற்றம் போன்றிருக்குமாதலால், அதனை நுகர்ந்த யானை, அந்த மணம் வந்த வழியே ஓடி, எதிரே தோன்றிய அம்மரத்தைப் பகை யானையென்று (மத மயக்கத்தால்) கருதி அதனை முறித்துச் சாய்த்துக் காலால் தேய்த்துச் சிதைத்ததென்க.

ஏழிலைப்பாலை: பரி. 21. 13-உரை பார்க்க. இதன் பூவைப் போல, வேங்கைப்பூவும் யானை மதம் போன்ற மணமுடையதென்பர்; 'கரிமதம் வேங்கை நாறுவ' (151). யானையின் மதநீர் மணங்கமழ்தல்: 'கமழ்கடாஅத் தளறுபட்ட நறுஞ் சென்னிய' (மதுரைக். 44-5); 'கமழ் கடாத்து......மழகளிறு' (புறநா. 22); 'புணர்மருப் பியானையின் புயல்கொண் மும்மதம், மணமகள் கதுப்பென நாறும்' (சீவக.

*1621)*; 'பூநாறு கடாஅஞ் செருக்கி' (மணி. *19: 22*); 'குருதிபடி முடைநாற்ற மாறுமாற்றுற், பொழிமதநீர் விரையேற்றி' (காஞ்சிப். கடவுள். *5*); காத்திரம்-கால்; யுத்த. *814*; சீவக. *806*.

(பி - ம்.) 1. பார்த்த யானையின்; யானையிற்; ஆனையின்: பதங்களின்; கதங்களிற்.
3. பூத்த வேழிலைம்; பூத்த வேழிலம்: பொடிப்பொடியாக்கிக்; பொடி பொடியாக்கிக்.
4. காற்றலங்களால்; காற்றலங்களிற்: துவைத்ததக்களிறு. (7)

### தேர்கள்

897. தெருண்ட மேலவர் சிறியவர்ச் சேரினு மவர்தம்
மருண்ட புன்மையை மாற்றுவ ரெனுமிது வழக்கே
உருண்ட வாய்தொறும் பொன்னுரு ளுரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையுந் தந்நிற மாக்கிய விரதம்.

தெருண்ட-தெளிந்த அறிவையுடைய, மேலவர்-பெரியோர்கள், சிறியவர் சேரினும்-(ஒருகால்) கீழோரைச் சேர்ந்தாலும், அவர்தம் மருண்ட புன்மையை-அக்கீழோருடைய மருட்சியுடைய (தெளிவில்லாத) இழிதன்மையை, மாற்றுவர் எனும் இது-போக்கிவிடுவர் என்று (உலகத்தார்) கூறும் இவ்வார்த்தை, வழக்கே-முறையானதே; (இதனை மெய்ப்பிப்பதுபோல), இரதம்-(அங்கிருந்த) தேர்கள், பொன் உருள் உருண்ட வாய்தொறும்-(தம்முடைய) பொன்னுருளைகள் உருண்டோடிய விடங்களிலெல்லாம், உரைத்து உரைத்து ஓடி-(பொன்னைக்கல்லிலே) தேய்த்துக்கொண்டே போய், இருண்ட கல்லையும்-கருநிறமுடைய பாறைகளையும், தம் நிறம் ஆக்கிய-தம்முடைய பொன்னிறமாகச் செய்தன.

முதலில் பெரியோரியல்பாகிய பொதுப் பொருளைக் கூறி, அதனைத் தேர்களின் செயலாகிய சிறப்புப்பொருளால் மெய்ப்பித்தலின் இது வேற்றுப்பொருள்வைப்பணியாகும். ஒப்பு. பெரிய. அமர்நீதி. *35*. 'சேரினும்' என்றவிடத்து உம்மை எதிர்மறை; கல்லையும் என்றவிடத்து உம்மை இழிவுசிறப்பு. இரதம்: பால்பகா வஃறிணைப் பெயர்.

(பி - ம்.) 1. மேலவர்ச் சிறியவர்; மேலவர் சிறியவர்.
2. மருண்ட தன்மையை; மருண்ட சிந்தையை; மாற்றுவா ரென்பது; மாற்றுவரென்பதும்; மாற்றுவரெனுமது; வழக்கோ.
3. உரைத்துரைத்தோட; உரைத்துரையோடி.
4. தன்னிறம்: பொன்னிறம்; ஆக்கின; ஆக்கியது. (8)

### காட்டு மயில்களின் செயல்

898. கொவ்வை நோக்கிய வாய்களை யிந்திர கோபம்
கவ்வி நோக்கின வென்றுகொல் காட்டின மயில்கள்
நவ்வி நோக்கியர் நலங்கொண்மே கலைபொலஞ் சாயற்
செவ்வி நோக்கிய வருவன போல்வன திரிந்த.

காடு இனம் மயில்கள்-அம்மலைக் காட்டிலுள்ள கூட்டமான மயில்கள், நவ்வி நோக்கியர்-மான்போலும் (மருண்ட) பார்வையுடைய மகளிரின், கொவ்வை நோக்கிய வாய்களை-கோவைப் பழம் போலும் சிவந்த வாய்களை (ப்பார்த்து), இந்திரகோபம் கவ்வி நோக்கின - இந்திரகோபப் பூச்சிகள் (அவ்வாய்களைப்) பற்றிக்கொண்டு (தமக்குப் புகலிடம்) பார்த்துக்கொண்டிருக்கின்றன, என்று சொல்- என்று கருதிப்போலும், நலம்கொள் மேகலை- (அம் மகளிரின்) அழகுடைய மேகலாபரணங்களையும், பொலம் சாயல் செவ்வி-பொன் போன்ற சாயலின் அழகையும், நோக்கிய வருவன போல்வன- பார்க்க வருவனபோலத் தோற்றும்படி, திரிந்த-(அம்மகளிரெதிரில் அங்குமிங்கும்) திரிவனவாயின.

இந்திரகோபம்-மழைக்காலத்தில் காணப்படும் செந்நிறமுள்ள ஒருவகைப் பூச்சி; 'தம்பலப்பூச்சி' என வழங்கும். இவை பெண்களின் அதரத்துக்கு உவமையாகக் கூறப்படுவன; இவற்றை மயில்கள் பிடித்துத் தின்னும். தமக்கு இரையாகத்தக்க இப்பூச்சிகள் போய்ப் பெண்களின் வாய்களைப் பற்றிக்கொண்டு அவற்றின் அழகைப் பார்ப்பதுபோலக் காட்டி, அங்கே புகலிடங்கொண்டதனால், தமக்கு இரையாகக் கொள்ள வாய்ப்பில்லையே யென்று கருதித் திரிகின்ற மயில்கள், வெளிக்கு, அம்மகளிரின் அழகில் ஈடுபட்டுப் பார்ப்பனபோலத் தம்மைக் காட்டிக் கொண்டன என்ற கற்பனையின் நயம் ஓர்க. மகளிரின் அழகை வியந்து நோக்கும் மயில்கள், அவர்க ளணிந்த மேகலாபரணத்தின் தோற்றம் தம் தோகையிலுள்ள கண்கள் போலவும், இறகிலுள்ள புள்ளிகள் போலவும் காணப்படுதலின் அவற்றையும் நோக்கலாயின வென்க. இந்திரகோபம்: கிட்கிந்தா. 490; வி-பா. வசந்த. 5.

(பி - ம்.) 1. நோக்கியர்; நோக்கின: வாய்ச்சியர் வாய்தனை. (7)
2. கவ்வை நீக்கின; நவ்வி நோக்கினம்; என்று கோள்: காட்டியல்; காட்டிள.
3. நவ்வி நோக்கிய; மேகலைப்பொலம்; மேகலைப்பொலன்; மேகலையொலிச்; மேகலையொலி; மேகலைபொலி.
4. செவ்வி நோக்கின: நோக்கியே: வருவன போவன; திரிவனபோல்வன; போல்வதே; தெரிந்த; தெரிந்தே. (8)

மகளிரின் செய்திகள்

899. உய்க்கும் வாசிக ளிழிந்திள வன்னத்தி னொதுங்கி
மெய்க்க லாபமுங் குழைகளு மிழைகளும் விளங்கத்
தொக்க மென்மர நிழல்படத் துவன்றிய சூழல்
புக்க மங்கையர் பூத்தகொம் பாமெனப் பொலிந்தார்.

உய்க்கும் வாசிகள் இழிந்து-தாம் ஏறிவந்த குதிரைகளினின்றும் இறங்கி, இள அன்னத்தின் ஒதுங்கி-இளமையான அன்னப்

பறவைகளைப்போல (அழகாக) நடந்து, மெய்-தம் உடம்பிலுள்ள, கலாபமும்—, குழைகளும்-குண்டலங்களும், இழைகளும்-பிற அணி கலன்களும், விளங்க-பிரகாசிக்க, தொக்க மெல் மரம்-கூட்டமான இள மரங்கள், நிழல்பட துவன்றிய சூழல்-(நல்ல) நிழலுண்டாகும் படி நெருங்கிய இடத்திலே, புக்க-போய்ச் சேர்ந்த, மங்கையர்-இளம் பெண்கள், பூத்த கொம்பு ஆம் என-பலநிறப் பூக்களைப் பூத்த இளம் கொம்புகள்போல, பொலிந்தார்-விளங்கினார்கள்.

முத்தாலும், மணிகளாலும், பொன்னாலும் இயன்ற பல ஆபரணங்கள் பூக்களைப் போலிருக்க, அவற்றையணிந்திருந்த மங்கையர் பூங்கொம்புகள்போல் விளங்கினார்கள். இம்மங்கையர் தங்கிய விடம் இளமரங்கள் செறிந்ததாதலால், அம்மரங்களின் அடிப்பக்கத்திலே கிளைந்துப் பூத்துக் குலுங்கும் பூங்கொம்புகள்போல இவர்கள் விளங்கினர் எனப் பொருத்தம் காண்க.

(பி - ம்.) 1. இழிந்தன ரன்னத்தின்; இழிந்துவந் திளவனத் தோங்கி.
2 கலாவமும், குழைகளும்வதனமும்; இழைகளுங் குழைகளும்: இலங்க: விளக்கத். 3 மென்மலர் நிழற்படத் துவன்றிய; நன்மரச்சோலையின் நிழற்பொலி. (10)

900. தளங்கொ டாமரை யெனத்தளி ரடியினு முகத்தும்
வளங்கொண் மாலைவண் டலமர வழிவருந் தினராய்
விளங்கு தம்முருப் பளிங்கிடை வெளிப்பட வேறோர்
துளங்கு பாறையிற் றோழிய ரயிர்த்திடத் துயின்றார்.

(மென்மரம் துவன்றிய சூழல்புக்க மங்கையர்), வழி வருந்தினராய்-நீண்ட வழிப்பயணத்தால் அயர்ந்தவர்களாய், தளிர் அடியினும்-தளிர் போன்ற (தம்முடைய) பாதங்களிலும், முகத்தும்-முகங்களிலும், தளம் கொள் தாமரை என-(அவை, வளமான) இதழ்களையுடைய தாமரை மலர்கள் என்று கருதி, வளம் கொள்-செழிப்புடைய, மாலை வண்டு அலமர-வரிசையான வண்டுகள் சுழலவும், விளங்கு தம் உரு-(ஒளியோடு) விளங்குகின்ற தம்முடைய வடிவம், பளிங்கு இடை வெளிப்பட-(தாம் படுத்துள்ள) பளிங்குப் பாறையிலே பிரதிபலிக்கவும், வேறு ஓர்-வேறொரு, துளங்கு பாறையில்-(தம் வடிவம் பிரதிபிம்பமாக) விளங்குகின்ற பாறையிலே, தோழியர் அயிர்த்திட-தோழிமார்கள் (கண்டு) ஐயங்கொள்ளவும், துயின்றார்-தூங்கினார்கள்.

வளம் கொள்-பூவின் வளமான தேனைக்கொள்கிற என்றலுமாம்.

பெண்கள், வழிவந்த அயர்ச்சியினால், அங்குள்ள பளிங்குப் பாறைகளிலே படுத்து உறங்க, அவர்களுடைய பாதங்களையும் முகங்களையும் தாமரை மலர்களென்று கருதி வண்டுகள் வட்டமிட்டன; அவர்கள் வடிவம் எதிரிலுள்ள மற்றொரு பளிங்குப் பாறையிலே பிரதி

பலிக்க, அவர்களுடைய தோழிமார் அவ்வடிவங்களைக் கண்டு தம்முடைய தலைவியர் அங்கே படுத்துறங்குவதாக எண்ணி மயங்கினர் என மயக்கவணி அமையக் கூறுகிருர்.

தளம்-இதழ்; வடசொல்.

(பி - ம்.) 2. அலம்வர; வழிவருந்தினர்கள்.
3. பளிக்கிடை வெளிப்பட விரும்பி.
4. தோழியராமெனத்; தோழியர் துயிற்றிடத்; தோழியர் தம்மொடும் துயின்று. (11)

901. பிடிபுக் காயிடை மின்னெடும் பிறங்கிய மேகம்
படிபுக் காலெனப் படிதரப் பரிபுரம் புலம்பத்
துடிபுக் காயிடைத் திருமக டாமரை துறந்து
குடிபுக் காளெனக் குடில்புக்கார் கொடியிடை மடவார்.

மின்னெடும் பிறங்கிய மேகம்-மின்னலோடு விளங்கிய மேகங்கள், படி புக்கால் என-பூமிக்கு வந்தாற்போல, பிடி-(மகளிரைத் தாங்கி வந்த) பெண் யானைகள், ஆயிடை புக்கு-அம்மலைச் சாரலிடத்திலே வந்து, படிதர-(மகளிரை இறக்கும் பொருட்டுத்) தரையிலே படிய, கொடி இடை மடவார்-கொடிபோலும் (துவளுகின்ற)இடையையுடைய பெண்கள், (யானைகளிலிருந்து இறங்கி), பரிபுரம் புலம்ப-தம் காற் சிலம்புகள் ஒலிக்க (நடந்து), துடி புக்கு ஆய் இடை திருமகள்-உடுக்கை வந்து (தன் ஒப்புமையை) ஆராய்தற்குரிய இடையையுடைய இலக்குமிதேவி, தாமரை துறந்து - (தனதிருப்பிடமான) செந்தாமரை மலரை விட்டு, குடி புக்காள் என-(இங்கு வந்து) குடி புகுந்தாள் என்னும்படி, குடில் புக்கார் (தமக்கென அமைக்கப்பட்ட) விடுதிகளிலே புகுந்தார்கள்.

மின்னற்கொடி போலவும் இலக்குமிதேவி போலவும் ஒளியும் அழகும் வாய்ந்தவராய், யானைமீதேறி வந்த பெண்கள், அவ்யானைகளினின்றும் இறங்கித் தமக்கென அமைக்கப்பெற்ற கூடாரங்களிலே புகுந்து தங்கலாயினர்; அவர்களை யேற்றிவந்த யானைகள் அவர்களை இறக்கும் பொருட்டுத் தரையிலே தாழ்ந்து படுத்தன. மின்னெடும் பிறங்கிய மேகம்; மின்னல்-பெண்கள், மேகம்-யானைகள். மேகம் படி புக்காலென: இல்பொருளுவமை.

(பி - ம்.) 1. பிடிபுக்காவிடை; பிடிப்புக்காயிடை; இடிபுக்காயிடை; பிறந்தன மேகம்; இரங்கிய மேகம்.
2. படிபுக்காலெனும்; படியுற்ருலெனப்; நூபுரம் அலம்பத்.
3. துடிபுக்காவிடைத்.
4. குடிபுக்காலென்னப் புக்கனர்; குடிபுக்காரெனக் குடில்புக்கார்; குடிபுக்கார் கொடியன்ன மடவார்; கொண்டிநன் மடவார். (12)

குதிரைப் பந்தி

(வேறு)

902. உண்ணமுத ருத்தியிளை யோர்நகர் கொணர்ந்த
துண்ணெனு முழக்கின துருக்கர்தர வந்த
மண்மகடன் மார்பினணி வன்னசர மென்னப்
பண்ணுறு வயப்புரவி பந்தியி னிரைத்தார்.

துருக்கர் தர வந்த-(அயல் நாட்டவரான) துருக்கர் கொணர்ந்து தருதலால் வந்தனவும், இளையோர்-(அதற்குரிய) ஏவலராலே, உண் அமுது அருத்தி-அவைகள் உண்ணுதற்குரிய நல்லுணவை யூட்டிப் பாதுகாக்கப்பெற்று, நகர் கொணர்ந்த-நகரத்தினின்றும் (இங்கே) கொணரப் பெற்றனவும், துண் எனும் முழக்கின-(கேட்டோர்) திடுக்கிடத்தக்க கனைப்பொலி யுடையனவுமான, பண் உறு-அலங்கரிக்கப் பெற்ற, வயம் புரவி-வெற்றியுடைய குதிரைகளை, மண் மகள் தன்-பூமிதேவியின், மார்பின் அணி-மார்பிலே அணிவித்த, வன்னம் சரம் என்ன-பல நிறங்களமைந்த மணி மாலைகளென்னும்படி, பந்தியின்-(அவை) கட்டுதற்குரிய விடங்களிலே, நிரைத்தார் - வரிசையாகக் கட்டினர்கள்.

பலநிறக் குதிரைகளை வரிசையாகக் கட்டின தோற்றம், பூமி தேவியின் மார்பி லணிந்த நவரத்தின மாலைகள் போன்றிருந்தன என்க. துருக்கர்-அரபு நாட்டவர்; சோனகர் எனப்படுவோர். அந் நாட்டுக் குதிரைகள் சிறந்தவை யென்பது பிரசித்தமானது. 'துருக்கர்' என்னும் சொல், கலிங்கத்துப் பரணியிலும் காணப்படுகின்றது; (தா. 332); தமிழ் நூல் வழக்கில் இச்சொல் எப்போது வந்ததென்பது ஆராய்தற்குரியது.

(பி - ம்.) 1. உண்ணமுத வுந்தியன வொண்ணகர்; உண்ணமுத முந்தியன யோனகர்; உண்ணமுத முந்தியெனை யோநகர்; உண்ணமுத மூட்டியெனை யோர்நகர் உறைந்த; உண்ணமிழ்தருத்தி யிளையோர்கொணர வந்த; உண்ணமுதமூட்டியிளையோர் நிரைகொணர்ந்து; கொணர்ந்தார்.
2. துண்ணென முழங்கின; துண்ணென முழக்கின; துண்ணெனு முழக்கினர். 3. மண்மகடம்; மார்பிலணி; வன்னசரமன்ன.
4. பண்ணமை; பண்ணியல்; பண்ணுறும்; பண்ணமர்; வயப்பரிகள்; வரிப்பரிகள்; பந்திகணிரைத்தார். (13)

பலவகை ஏற்பாடுகள்

903. நீர்திரை நிரைத்ததென நீடிரை நிரைத்தார்
ஆர்கலி நிரைத்தவென வாவண நிரைத்தார்
கார்நிரை யெனக்கரிகள் காவிடை நிரைத்தார்
மாருத நிரைத்ததென வாசிக ணிரைத்தார்.

நீர் திரை நிரைத்தது என-நீரலைகளை வரிசையாக அமைத்தாற்போல, நீள் திரை நிரைத்தார்-நீண்ட திரைச் சீலைகளைக் (குடில்

களைச் சூழக் கட்டினுர்கள்; ஆர்கலி நிரைத்த என-கடல்களை வரிசைப் படுத்தி வைத்தாற்போல. ஆவணம் நிரைத்தார்-கடைகளை வரிசை யாக அமைத்தார்கள்; கார் நிரை என - மேகவரிசைகள்போல, கரிகள்-யானைகளை, கா இடை நிரைத்தார் - சோலைகளிலே வரிசை யாகக் கட்டினுர்கள்; மாருதம் நிரைத்தது என-காற்றை வரிசையாக நிறுத்தினுற்போல. வாசிகள் நிரைத்தார்-குதிரைகளை வரிசையிற் கட்டினுர்கள்.

திரைச் சீலைகளைப் பெண்கள் தங்கும் குடில்களைச் சுற்றிலும் வளைத்துக் கட்டியும், படைகளைச் சார்ந்தவரும் பிறரும் தத்தமக்கு வேண்டிய பொருள்களை விலைக்குக் கொள்ளும்பொருட்டுப் பல கடைகளை அமைத்தும், யானைகளையும் குதிரைகளையும் தக்க விடங் களில் வரிசை வரிசையாகக் கட்டியும் அங்கே தங்குதற்குரிய ஏற்பாடு களைச் செய்தனர் என்க.

திரைச்சீலைகளுக்கு நீரலைகள் உவமை: 'தெண்டிரை யெழினி காட்ட' (36). கடைகளும், அவற்றிலுள்ள பல பண்டங்களும் அள விறந்தன; கடல்படு பொருள்களெல்லாம் அங்கே கிடைப்பன; ஆதலால் 'ஆர்கலி நிரைத்தவென' என்ருர். யானைகளுக்கு உருவத் தால் மேகங்களும், குதிரைகளுக்கு விரைவினுல் காற்றும் உவமை. 'மலய மாதவ னுண்ட மணிக்குவை, குலவு வார்கட னேர்சொலிற் குற்றமே, அலகில் பல்வளஞ் சேர்த்திய வாவணம், உலக முண்ட ருண் மால்வயி றெுக்குமே' (நைடத. நகரப். 30) என்பதும், 'காலியக் கன்ன கதழ்பரி' (மதுரைக். 440) என்பதும் அதன் அடிக் குறிப்பும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலன. யானைக்கு மேகம்: 88.

நீர்த்திரை எனற்பாலது ஓசையின்பம் நோக்கி நீர்திரை என இயல்பாயிற்று.

(பி - ம்.) 1. நீர்நிரை; நீர்நுரை; நிரைத்தவென; நிரைத்தலென; நீடிசை நிரைத் தார். 2. ஆர்கலி நிரைத்ததென.
3. கார்நிரையெனக் களிறு; பிடிகள்; காலிடை நிரைத்தார்; காரணி நிரைத்ததெனவேகரி நிரைத்தார்.
4. மாருதி நிரைத்தவென வாசியு நிரைத்தார்; வாசியினிரைத்தார். (14)

904. நடிக்குமயி லென்னவரு நவ்விவிழி யாரும்
வடிக்குமயில் வீரரு மயங்கினர் திரிந்தார்
இடிக்குமுர சக்குரலி னெங்குமுரல் சங்கின்
கொடிக்களி னுணர்ந்தரசர் கோநக ரடைந்தார்.

நடிக்கும் மயில் என்ன வரும்-ஆடுந்தன்மையுடைய மயில்க ளென்னும்படி வருகின்ற, நவ்வி விழியாரும்-மானின் பார்வை போன்ற பார்வையுடைய மகளிரும், வடிக்கும் அயில் வீரரும்-வடித் துக் கூராக்கப்படும் வேற்படை யேந்திய வீரர்களும், மயங்கினர்

திரிந்தார்-தம்முட் கலந்தவர்களாகி (த்தத்தமக்குரிய விடங்களைத் தேடி) அங்குமிங்குமாக அலைந்தனர்; அரசர்-(சக்கரவர்த்தியைக் காண விரும்பிய) அரசர் பலர், எங்கும் இடிக்கும்-அவ்விடமெங்கும் இடியோசைபோலக் கேட்கின்ற, முரசம் குரலின்-மங்கல பேரிகைகளின் ஓசையாலும். முரல் சங்கின்-முழங்குகின்ற சங்கநாதத்தாலும், கொடிக்களின்-(அடையாளமான) கொடிகளாலும், கோ நகர் உணர்ந்து-சக்கரவர்த்தியின் இருப்பிடத்தை யறிந்து, அடைந்தார்-(அங்கே போய்ச்) சேர்ந்தனர்.

ஒரு பக்கம், படை வீரர்களும், அவர்களுடைய மங்கையரும் அவரவர் தங்குதற்கென அமைக்கப்பட்ட கூடாரங்களைத் தேடி அங்குமிங்குமாக அலைந்துகொண்டிருக்க, சக்கரவர்த்தியைக் காண விரும்பிய அரசர் பலர், முரசு, சங்கு, கொடி ஆகிய அடையாளங்களால் அரச மாளிகையைக் கண்டறிந்து அங்கே சென்று சேர்ந்தனர் என்க. கூடாரங்களின் அமைப்பையும் மேம்பாட்டையுங் கண்டு அனைவரும் மயங்கினர் என்றலும் ஒன்று.

நகர்-மாளிகை. கொடிக்களின்; விரித்தல் விகாரம்.

(பி - ம்.) 1. நடிக்குமயி லன்னவரு நவ்வியனையாரும்.
2. வடிக்கும்வய வீரரும்.
3. முரசின் குரலின்: ஏங்கு முரல் சங்கின்; ஏங்கிமுரல் சங்கின்: இடிக்கு முரசக்குர லெழும்ப விரதத்தின்.
4. கொடிக்களி லுணர்ந்தரசர்; கொடிக்களி றிழிந்தரசர்; கொடிக்களி றினத்தரசர்; கொடித்தவி சிழந்தரசர்: கோநக ரணைந்தார்; கோநக ரளந்தார்; கோமனை புகுந்தார்; கூடமவை புக்கார். (15).

905. மிதிக்கநிமிர் தூளியின் விளக்கமறு மெய்யைச்
சுதைக்கணுரை யைப்பொருவு தூசுகொடு தூய்தா
உதிர்த்தலி னிளங்குமர ரோவியரி னோவம்
புதுக்கின ரெனத்தருண மங்கையர் பொலிந்தார்.

இளங்குமரர்-இளைஞரான ஆடவர் பலர், மிதிக்க நிமிர் தூளியின்-(யானை, குதிரை, தேர் முதலியன) செல்லுதலால் எழுந்த புழுதியினாலே, விளக்கம் அறு-ஒளி மழுங்கிய, மெய்யை-(தம் காதலியரின் உடம்புகளை, சுதை கண் நுரையை பொருவு தூசு கொடு-பாலின் நுரைபோன்ற (வெள்ளிய) ஆடையினால், தூய்து ஆ(க)-சுத்தமாக, உதிர்த்தலின்-துடைத்துவிட்டதனால், தருணம் மங்கையர்-அவ்விளம் பெண்கள், ஓவியர் இன் ஓவம் புதுக்கினர் என-சித்திரகாரர்-(மாசடைந்த) இனிய சித்திரத்தை (மாசு நீக்கி)ப் புதுப்பித்தனர் என்னும்படி, பொலிந்தார்-(ஒளியுடன்) விளங்கினார்கள்.

ஆடைக்குப் பால்நுரை: 'தீம்பா னுரைபோற் றிகழ்வெண் பட்டுடுத்து' (சீவக. 3046).

(பி - ம்.) 1. மதிக்கநிமிர்: மதிக்குநிமிர்: விளக்கமற மெய்யைச்; மறைந்தமணி மெய்யைச்; மிடைந்தமணி மெய்யைச்.
2. தூசினெடு தூய்தாய்; தூசுகொடு தூசை; தூசுகோடு தூசை
3. உதிர்த்தனர்; உதிர்த்தயில்; ஓவியரி லோவம்; ஓவியரின்னேவம்.
4. புதுக்கினவெனத்; புதுக்கியவெனத். (10)

## அரசர்கள் படமாடம் புகுதல்

906. தாளுயர் தடக்கிரி யிழிந்துதரை சாரும்
கோளரி யெனக்கரிகள் கொற்றவ ரிழிந்தார்
பாளைவிரி யொத்துலவு சாமரை படப்போய்
வாளெழ நிரைத்தபட மாடமவை புக்கார்.

கொற்றவர்-(யானைமீதேறி வந்த) அரசர்கள், தாள் உயர் தட கிரி இழிந்து-தாழ்வரை உயரப்பெற்ற பெரிய மலையினின்றும் இறங்கி, தரை சாரும் கோளரி என-தரையைச் சேரும் சிங்கம்போல, கரிகள் இழிந்தார்-யானைகளினின்றும் இறங்கினவராய், பாளைவிரி ஒத்து-தலை விரிந்த பாளையைப் போல, உலவு-(இரு பக்கங்களிலும்) அசைகிற, சாமரை பட-வெண்சாமரங்கள் வீச, போய்—, வாள் எழ நிரைத்த-ஒளி வீசும்படி வரிசையாக (அவரவர்க்கென) அமைக்கப்பெற்ற, படம் மாடம் அவை-கூடாரங்களிலே, புக்கார்-புகுந்து தங்கினார்கள்.

யானைக்கு மலையையும் அரசர்க்குச் சிங்கத்தையும் உவமித்தார்; அரசர் படமாடத்துட் புகுந்தமைக்குச் சிங்கம் தன் குகையுள் நுழைதலை ஒப்புமையாக்கிக் கூறுவிடினும், அங்ஙனங் கொள்ளுதல் ஏற்புடைத்தாகும்; 913-ஆம் பாடல் பார்க்க. படம்-துணி; படமாடம்-படத்தாலாகிய மாடம்,

(பி - ம்.) 1. தடங்கிரி; தடக்கரி; தரைசேரும்
2. கரிகொள்; களிறு; களிகொள்,
3. விரியொத்துதவு; விரியொத்திலகு; விரியைப் பொருவு.
4. வாளெழு நிரைத்தபட; வாளெழு நிரைத்த நெடு; வாளெழினிரைத் தபட: மாடமவர். (17)

907. தூசினெடு வெண்பட முடைக்குடில்க டோறும்
வாசமலர் மங்கையர் முகங்கண்மழை வானின்
மாசின்மதி யின்கதிர் வழங்குநிழ லெங்கும்
வீசுதிரை வெண்புனல் விழுங்கியது போலும்.

நெடு வெள் தூசின் - நீண்ட வெண்மையான துணிகளாலியன்ற, படம் உடை(ய)-விருதுக்கொடிகள் கட்டப்பெற்ற, குடில்கள் தோறும்-கூடாரந்தோறும், (காணப்படும்), வாசம் மலர் மங்கையர் முகங்கள்-மணமுள்ள பூக்களைச் சூடிய பெண்களின் முகங்கள், மழை வானின்-மேகங்கள் உலவும் ஆகாயத்தில் உள்ள, மாசு இல்-குற்றமில்லாத, மதியின்-சந்திரனுடைய, கதிர் வழங்கும் நிழல்-ஒளி

வீசுகின்ற பிரதிபிம்பங்களை, எங்கும்-அவ்விடமெங்கும், திரை வீசு வெண் புனல்-அலை வீசுகின்ற வெள்ளிய (கடல்) நீர், விழுங்கியது போலும்-கவர்ந்து கொண்டாற்போன்றன.

கடலின் அலைபோன்ற வெண்ணிறச் சீலைகளால் இயன்ற பட மாடங்களினுள்ளே தங்கிய பெண்களின் அழகிய முகங்கள், கடல் நீரினுள்ளே பிரதிபலிக்கும் சந்திர விம்பங்கள் போன்றிருந்தன என்பது கருத்து.

(பி - ம்.) 1. தூசு தொடு; தூசுநெடு; தூசினெடு; வண்படமுடைக் குடிகடோறும்.
2. வாசநகை: வாசநல; வாசநறை: வாசநறு; முகங்கண்மறை; முகங்கணசை; முகங்கண் முகில்; முகம்பொலிய: வானிற்.
3. காசின்மதியின்: வழங்குநிழல்; வயங்கு நிழல்; காணு.
4. திரையொண்புனல்; திரையுந்தியன; திரை விழுங்கியன; விழுங்கினது; விளங்கியது; விளங்கியன. (18)

## ஒரு யானையின் தோற்றம்

908. மண்ணுற விழுந்துநெடு வானுற வெழுந்து
கண்ணுதல் பொருந்தவரு கண்ணனின் வருங்கார்
உண்ணிற நறும்பொடியை வீசியொரு பாகம்
வெண்ணிற நறும்பொடிபு னைந்தமத வேழம்.

மண் உற விழுந்து-தரையிலே விழுந்து (புரண்டு), நெடு வான் உற எழுந்து-உயர்ந்த ஆகாயமளாவ நிமிர்ந்தெழுந்து, கார் உண்-(தனது) கரு நிறத்தை மறைத்த, நிறம் நறு பொடியை-வெண்ணிறமுடைய மணமுள்ள புழுதியை, (ஒரு பாகம்) வீசி-(தன்னுடம்பின்) ஒரு பக்கத்தில் மட்டும் (துதிக்கையால்) துடைத்துப் போக்கிவிட்டு, ஒரு பாகம்-மற்றொரு பக்கத்தில், வெள் நிறம் நறு பொடி புனைந்த-வெண்ணிறமான மணமுடைய புழுதி படிந்திருக்கப்பெற்ற, மதம் வேழம்-(ஒரு) மதயானை, கண்ணுதல் பொருந்த வரு-(தன் திருமேனியின் ஒரு பாகத்திலே) நெற்றிக்கண்ணுடைய சிவபெருமானது வடிவம் பொருந்தியிருக்க வருகின்ற, கண்ணனின் வரும் - திருமாலைப் போல (நடந்து)வரும்.

வேழம் கண்ணனின் வரும் என முடிவு கொள்க. 'ஒரு பாகம்' என்பதனை முன்னுங் கூட்டுக.

யானையும் குதிரையும், தம் உடம்பின் வலிதீர மண்ணில் விழுந்து புரண்டெழுதல் இயல்பு; அவ்வாறு தரையில் விழுந்ததனால் வெண்ணிறப்புழுதி தன் உடம்பிலே படியப்பெற்ற ஒருயானை, எழுந்த பின், உடம்பின் ஒரு பக்கத்தைத் துதிக்கையால் துடைத்துப் புழுதியைப் போக்கிக்கொண்டு, மற்றொரு பக்கம் படிந்த புழுதியுடனே நடந்துவர, ஒரு புறம் அதன் இயல்பான கருநிறமும், மற்றொரு புறம் வெண்ணிறமும் அதனுடம்பில் காணப்பட்டதனால், கருநிறமுடைய

திருமால் தன் ஒருபுறத்தே வெண்ணீறணிந்த சிவபெருமானது கூறு தோன்ற வருவதுபோலிருந்ததென்றார். கண்ணன் என்றது திருமாலை; 'சடைமுடியன் தனியொருகூ றமர்ந்துறையும் உடம்புடையான்' (திருவாய். 4.8: 10); 'வலத்தனன் திரிபுர மெரித்தவன்' (ஷை 1.3:9) என்பன காண்க. திருமால் இவ்வாறிருத்தல் கற்பாந்தரத்தில் என்பர். சங்கரநாராயண மூர்த்தம் என்றலும் ஆம். மண், மணமாகிய தன்மாத்திரை யுடையதாகலின் 'நறும்பொடி' என்றார். இக்கற்பனை நயம் ஆசிரியரது திருமால் பக்தியைத் தெளியக் காட்டுதல் காண்க.

(பி - ம்.) 1. மண்ணுறவெழுந்து; மண்ணுறவிழிந்து; வானுறவெழுந்தே; வானுற வயங்கும்; வானுற முழங்கும் வானுற முயங்கும்.
2. பொருந்தவரும்; பொருந்தவிரு; கண்ணினில்; கண்ணனில்.
3. உண்ணிறை; உண்ணுற; நறும்பொடியும்
4. வெண்ணிற விரும்பொடியணைந்த; வெண்ணிற நறும்பொடியு மேவும். (19)

குதிரைகள்

909. தீயவரொ டொன்றிய திறத்தரு நலத்தோர்
ஆயவரை யந்நிலை யறிந்தனர் துறந்தாங்
கேயவரு நுண்பொடி படிந்துட னெழுந்தே
பாய்பரி விரைந்துதறி நின்றன பரந்தே.

தீயவரொடு ஒன்றிய-தீக்குணமுடையவரோடு (ஒரு காரணத்தால்) நட்புக்கொண்ட, அரு திறத்து நலத்தோர்-அரிய திறமையுடைய நல்லவர்கள், ஆயவரை-அத்தீயவரை, அ நிலை-(தாம் பழகிய) அச்சிறுகாலவளவிலேயே, அறிந்தனர் - (அவரியல்பை) அறிந்தவர்களாய், துறந்த ஆங்கு-(அவர்கள்) தொடர்பை விட்டுவிடுதல்போல, பாய்பரி - பாய்ந்து செல்லும் குதிரைகள், ஏய வரு நுண்பொடி படிந்து-(தம்முடம்பிலே) படியத்தக்க நுண்ணிய புழுதியிலே விழுந்து (புரண்டு), உடன் எழுந்து-உடனே எழுந்து, விரைந்து உதறி-(படிந்த புழுதியை முற்றிலும்) விரைவாக உதறி நீக்கிவிட்டு, பரந்து நின்றன-பரவலாக நின்றன.

உடம்பின் வலி தீரப் புழுதியிலே விழுந்து புரண்டெழுந்த குதிரைகள், தம்முடம்பில் படிந்த புழுதியை முற்றிலும் உதறி நீக்கிவிட்டமைக்கு, சிறியவர் தொடர்பை ஒரு காரணத்தால் சிறிது கைக்கொண்டு மீண்டும் விரைவில் அத்தொடர்பை நீக்கிவிடும் பெரியோரியல்பை உவமையாக்கினர்.

துறந்தாங்கு : தொகுத்தல் விகாரம்: ஆங்கு: உவமவுருபு.

(பி - ம்) 1. தீயவரையொன்றிய; திறத்திரு; திறத்தொடு; திறத்தொரு; திருந்தரு; நலத்தார்; நலத்தர்; வலத்தோர்.
2. உண்ணிலை: அறிந்தவர் துறந்தார்.
3. படிந்துடவெழுந்தொண்; படிந்துடனெழுந்து.
4. விரிந்துதறி; எழுந்துதறி; நின்றன பரந்து; பரந்த. (20)

910. மும்மைபுரி வன்கயிறு கொய்யுநெறி முன்னித்
தம்மையு முணர்ந்துதரை கண்டுவிரை கின்ற
அம்மையினொ டிம்மையை யறிந்துநெறி செல்லும்
செம்மையவ ரென்னநனி சென்றன துரங்கம்.

அம்மையினொடு இம்மையை-மறுமையையும் இம்மையையும், அறிந்து-(தம் தெளிந்த உணர்வால்) அறிந்து, நெறி செல்லும்-(மறுமையில் மேனிலையடைதற்குரிய) சன்மார்க்கத்திலே போகின்ற, செம்மையவர் என்ன-செம்மையையுடைய ஞானியரைப் போல, துரங்கம்-(சில) குதிரைகள், தரை கண்டு-(எதிரே பரந்த) வெளியிடத்தைக் கண்டு, விரைகின்ற-(அங்கே போதற்கு) விரைவுடையனவாகி, தம்மையும் உணர்ந்து-(கட்டுண்டிருக்கும்) தம் நிலையையும் அறிந்து, மும்மைபுரி வன் வயிறு-(தம்மைக் கட்டியுள்ள) முப்புரியாலான வலிய கயிற்றை, கொய்யும் நெறி முன்னி-அறுத்துக்கொண்டு செல்லும் வழியை நாடி, (அறுத்தெறிந்து), நனி சென்றன-நன்றாக (த்தம் விருப்பம்போல)ச் செல்வனவாயின.

பந்தியிலே கட்டப்பட்டிருந்த சில குதிரைகள், கட்டினின்றும் தம்மை விடுவித்துக்கொண்டு வெளியே தம் மனம்போலச் செல்ல விரும்பி, தம்மைக் கட்டிய வலிய கயிற்றை அறுத்துத் தம்மை விடுவித்துக்கொண்டு சென்றமைக்கு, மறுமையிலே வீடு பேறடையக் கருதும் ஞானியர், இம்மையிலே தம்மைப் பிணிக்கும் பாசங்களினின்று விடுபட்டுச் செல்லுதற்குரிய நன்னெறியை நாடி யுணர்ந்து, அவ்வழியே தம் அறிவைச் செலுத்துதலை உவமையாக்கிக் கூறும் அழகு நோக்கத்தக்கதாகும். துரங்கம், விரைகின்ற, நெறி முன்னி, செம்மையவ ரென்ன நனி சென்றன எனக் கூட்டி முடிக்க. துரங்கம்: பால்பகா வஃறிணைப் பெயர்.

முன்னிரண்டடிகள் சிலேடை வகையால் ஞானியர்க்கும் பொருந்துவனவாம். எவ்வாறெனில்: அம்மையும் இம்மையும் அறிந்தவர்களாய், மும்மை புரி வன் கயிறு-மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை யென்னும் மூன்று பகுதியாகவுள்ள வலிய தொடர்பை, கொய்யும் நெறி முன்னி-அறுத்தெறியும் சன்மார்க்கத்திலே முற்பட்டு, தம்மையும் உணர்ந்து - தமது ஆன்ம சொரூபத்தையும் உணர்ந்து, தரை கண்டு-முத்தி நிலத்தின் தன்மையையும் கண்டறிந்து, விரைகின்ற நெறி செல்லும்-அம்முத்தியடைதற்குரிய விரைவான வழியிலே செல்லுகின்ற, செம்மையினர் என்க. மும்மை புரி-ஆணவம், மாயை, கன்மம் எனும் மூன்றாகவுள்ள எனினும் ஆம்.

(பி - ம்.) 1. மும்மை நெறிவன்கயிறு: மும்மை புரிவன்புரிய; புரிவன்னமத; புரிவண்ணமத; புரிவண்மையுடை; புரிவன்களிறு; புரிவன்புரவி; புரிவன்மை செறி: கொய்து செயன் மொய்ம்பால்; கொய்யநெறி முன்னித்; கொய்துநெறி முன்னித்; மொய்கயிறு காயத்; மொய்கயிறு

போகத்; மொய்களிறு முன்னத்; மொய்கயிறு கொய்யத்; மொய்கயிறு கொய்தே. 2. கண்டுவிரிகின்ற.
3. இம்மையுமறிந்து; நெறிசொல்லும்; நெறிமுன்னிச்.
4. என்றுநனி; என்ன நெறி! சென்றன திரிந்த; சென்றன செறிந்த; சென்றது துரங்கம். (21)

## கழங்காடும் பெண்கள்

911. விழுந்தபனி யன்னதிரை வீசுபுரை தோறும்
கழங்குபயின் மங்கையர்க ருங்கண்மிளிர் கின்ற
தழங்குவளை சிந்துதர ளம்பயி றரங்கத்
தெழுந்திடை பிறழ்ந்தொளிர்கொ ழுங்கயல்க ளென்ன.

விழுந்த-(மேலிருந்து) சொரிந்த, பனி அன்ன-மூடு பனியைப் போன்ற, திரை-திரைச்சீலைகள், வீசு-(காற்றினால் மோதப்பட்டு) அசைகின்ற, புரை தோறும்-குடிலிடத்திலெல்லாம், கழங்கு பயில் மங்கையர்-கழற்சிக்காயாடும் பெண்களின், கரு கண்-கரிய கண்கள், தழங்கு வளை சிந்து-ஒலிக்கின்ற சங்குகள் (ஈன்று) உகுத்த, தரளம் பயில் தரங்கத்து இடை-முத்துக்கள் சிதறுகின்ற அலைகளின் நடுவே, எழுந்து பிறழ்ந்து ஒளிர்-(துள்ளி) எழுந்து புரண்டு பிரகாசிக்கின்ற, கொழு கயல்கள் என்ன-மதர்த்த கயல்மீன்கள் போல, மிளிர்கின்ற-ஒளிவீசுவன ஆயின.

புரை-வீடுபோன்ற இருப்பிடம்; மலைநாட்டு வழக்கு. இங்கே படமாடக் குடில்களைக் குறிக்கும். புரைகளிலே தொங்கவிடப்படும் மெல்லியஅழகுத்திரைகளுக்கு மூடுபனியும், அத்திரைகளின் அசைவுக்கு நீரலைகளின் அசைவும், திரைகளினூடே காணப்படும் (மகளிர் ஆடும்) கழற்சிக்காய்களுக்குச் சங்கீன்ற முத்துக்களும், மகளிர் கண்கள் பிறழ்தலுக்குக் கயல்மீன்கள் பிறழ்தலும் உவமையாகக் கொள்க. உவமைகளின் பொருத்தமும் ஓர்ந்து இன்புறுதற்கு உரியன.

(பி -ம்.) 1. பனியன்ன; முகிலன்ன; வீசுமுழை தோறும்.
3. தழங்குதிரை சிந்திய சலம்பெறு; தழங்குதளி சிந்திய கனம்பயில்; தழங்குகழி கிந்திய தரம்பயில்; கழிசிந்தையர் தரம்பயில்; கரம்பயில்; கழிசிந்திய தனம்பயில்; சுணம்பயில்; தளிசிந்திய தரம்; திரை சிந்திய தரம்; களிசிந்திய தரம்; கழிசிந்தின சலம்; துளிசிந்தியசலம்; நுரை சிந்திய சலம்பெறு; களிசிந்தைய ரனம்பயில். (22)
4. பரந்தொளிர்.

## மலையாறுகள்

912. வெள்ளநெடு வாரியற வீசியுள வேனும்
கிள்ளவெழு கின்றபுனல் கேளிரின் விரும்பித்
தெள்ளுபுன லாறுசிறி தேயுதவு கின்ற
உள்ளது மருதுதவு வள்ளலையு மொத்த.

தெள்ளுபுனல் ஆறு-(சந்திரசயிலத்தில் உள்ள) தெளிந்த நீரை யுடைய ஆறுகள், வெள்ளம் நெடு வாரி-(தம்முடைய) பெருக்காகிய மிக்க நீரை, அற-(முழுதும்) வற்றிப்போகும்படி, வீசி உளவேனும்-யாவர்க்கும் (மிகுதியாக) முன்னே கொடுத்துள்ளன வாயினும், (நீர் வற்றியுள்ள இப்போது), கிள்ள எழுகின்ற புனல்-தோண்டுவதனுல் சுரந்துவருகிற(ஊற்று)நீரை, கேளிரின்-உறவினரைப்போல,விரும்பி-மிகவும் விருப்பத்துடன், சிறிதே உதவுகின்ற-சிறிதளவாவது (இல்லை யென்னுமல்) தருகின்றன, (இவ்வாறு உதவும்அவை), உள்ளது மருது உதவு-(தம்மிடம்) உள்ளதை (யாசிப்பவர்க்கு) இல்லையென்னுமல் தருகின்ற, வள்ளலை ஒத்த-பெருவள்ளல்கள் போல இருந்தன.

ஆறுகள் நீர்ப்பெருக்கு மிகுதியாயிருந்த காலத்து யாவரும் தமக்கு வேண்டியவாறு கொள்ளும் வண்ணம் நீரை உதவி, நீர் முற்றி லும் வற்றிப்போன காலத்தும், ஊற்றுக்கள் மூலம் சிறிது சிறிதாக உதவுகின்ற தன்மைக்கு, செல்வமிகுதியுள்ள காலத்து யாவர்க்கும் வரையாது வழங்கியும், அஃதற்ற காலத்தும் இல்லையென்னுது இயன்ற அளவு கொடுத்தும் உதவுகின்ற வள்ளல்களின் இயல்பு உவமை. இடையே 'கேளிரின்' என மற்ருேர் உவமையையும் தந்துள்ளார்.

வள்ளலையும் என்பதில் உம்மை, இசை நிறை.

ஒப்பு: 'அற்றக் கடைத்து மகல்யா றகழ்ந்தக்கால். தெற்றெனத் தெண்ணீர்படும்'(நாலடி. 150); 'ஆறு பெருக்கில்லா தருந்திடர்தான் பட்டாலும், ஊறலமையாதோ வுலகாற்ற' (தமிழ்நா. 17); 'ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுமவ்வா, றூற்றுப் பெருக்கால் உலகூட்டும்' (நல்வழி).

(பி - ம்.) 1. வெள்ளைநெடு: வாரியுற; வாரியறல்; வாரிமிக: வீசியிலவேனும்; வீசலிலதேனும்; வீசியிலதேனும். 2. கேளிரை விரும்பித்.
3. புனல்யாறு; புனலூறல்: உதவுகின்றது.
4. பருந்துதவு: வள்ளல்களையொத்தே. (23)

வீரர்கள் படமாடம் புகுதல்

913. துன்றிநெறி பங்கிகடு ளங்கவழ லோடும்
மின்றிரிவ வென்னமணி யாரமிளிர் மார்பர்
மன்றன்மண நாறுபட மாடநுழை கின்ருர்
குன்றின்முழை தோறுநுழை கோளரியை யொத்தார்.

துன்றி நெறி பங்கிகள்-அடர்ந்து நெறித்த தலைமயிர்கள், துளங்க-(காற்றில்) அசைய, அழலோடும்-தீயுடனே, மின் திரிவ என்ன-மின்னல்கள் அலைகின்றனவென்னும்படி, மணிஆரம்-இரத்தின மாலைகள்,மிளிர்-பிரகாசிக்கின்ற, மார்பர்-மார்பையுடையவர்களாய், மன்றல் மணம் நாறு-புதுமணம் வீசுகின்ற, படம் மாடம்-கூடாரங்

களிலே, நுழைகின்ருர்-புகுகின்ற வீரர்கள், குன்றின்-மலைகளின், முழை தோறும்-குகைதோறும், நுழை-புகுகின்ற, கோள் அரியை ஒத்தார்-கொல்லுந் தன்மையுள்ள சிங்கத்தை யொத்திருந்தனர்.

சிங்கத்தையொத்த வீரர்கள், சிங்கம் தன் பிடரி மயிரைச் சிலிர்த்துக்கொண்டு தன் குகைக்குள் புகுவதுபோலத் தம்தம் கூடாரங்களுள் புகுந்தனர் என்க. வீரர்களின் தலைமயிர் அலைதல் சிங்கத்தின் பிடரிமயிர் சிலிர்த்தல் போன்றதெனலாம். படமாடக்குடில்கள்: 901, 907-பார்க்க.

(பி - ம்.) 1. துன்றுநெறி பங்கியர்; துளங்கியழலோடும்; துளக்கியெழுதோளார்; துளக்கி யெழிலோடும்; தொடர்ந்து செறிதோளார்; துரந்தொளி செய் தோளார்; துரந்துசெறி தோளார்; துளங்கி யெழலோடும்; துளங்கி யெழிலோடும்; துளங்கவெழி லோடும்; செறிந்தொளிர் செய் தோளார்; பரந்தொளிசெப் தோளார்.
2. மின்றிரிவ தென்ன; மின்றிரியுமென்ன; மிளிர்மெய்யார்.
3. மன்றமண நாறுபடர்; நாறுநெடு: மாடமவை புக்கார்.
4. கோளரிகளொத்தார்; கோளரியொடொப்பார். (24)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

### நீர்நிலைகளில் யானைகள்

914. நெருங்கயி லெயிற்றிணைய செம்மயிரி னெற்றிப்
பொருங்குலிக மப்பியன போர்மணிக ளார்ப்ப
பெருங்களி றலைப்புனல் கலக்குவன பெட்டுக்
கருங்கடல் கலக்குமது கைடவரை யொத்த.

நெருங்கு - ஒன்றேடொன்று கிட்டிய, அயில்-கூர்மையான, எயிறு இணைய - இரண்டு தந்தங்களையுடையனவும், செம்மயிரின் நெற்றி-செம்மயிர் அடர்ந்த நெற்றியிலே, பொரும் குலிகம் அப்பியன-பொருந்திய சாதிலிங்கம் பூசப்பெற்றனவும், போர் மணிகள் ஆர்ப்ப-(ஒன்றேடொன்று) மாறிமாறி ஒலிதரும் மணிகள் ஒலிக்கப்பெற்றனவுமான, பெரு களிறு-பெரியயானைகள், அலை புனல் கலக்குவன-அலையையுடைய நீரைக் கலக்குவன, கரு கடல்-பெரிய (பிரளயக்) கடலை, பெட்டு-விரும்பி, கலக்கும்-(ஒருகால்) கலக்கத் தொடங்கிய, மது கைடவரை ஒத்த-மது, கைடபன் என்ற அசுரர்களை ஒத்திருந்தன.

பரந்த நீர்நிலைகளுக்குக் கடலையும், பெரிய உருவமுடைய யானைகளுக்கு அசுரர்களையும் உவமையாகக் கொள்க. மணிகள் மாறி மாறியொலிப்பது போர் செய்வது போலிருத்தலின் 'போர் மணி' என்ருர்.

மது, கைடபன் என்ற இருவரும் திருமாலிடத்திருந்து தோன்றி மிக்க வலிபடைத்த அசுரர்கள். இவர்கள் ஒரு பிரளய காலத்தை யடுத்துப் பிரமனிடத்திருந்த வேதங்களைக் கவர்ந்து கொண்டு அக்

கடல் வழியே பாதலத்திற் சென்று இருந்தனர். வேதங்களைப் பறி கொடுத்த பிரமன் திருமாலிடம்சென்று முறையிட, திருமால், குதிரை முகமுடைய உருவங்கொண்டு, அக்கடலெங்கும் பரந்து ஒலிக்கும் வண்ணம் வேதகீதத்தைப் பாடியருள, அதன் இனிமையால் கவரப் பட்ட மது கைடபர் வேதங்களை ஒரு புறத்து வைத்துவிட்டு அக்கீத வோசை வந்தவழியே சென்றனராக, அத்தருணம் பெருமான் வேதங் களைமீட்டுப் பிரமனிடம் சேர்ப்பித்தனன். கீதம் வந்தவழியே சென்ற அசுரர் அங்கே ஒருவரையுங் காணாமல், மீண்டு வந்து பார்த்தபோது, வேதங்கள் தாம் வைத்தவிடத்திற் காணப்படாமையால், அவற்றைக் கவர்ந்தவர் யாவரென்று கடலைக்கலக்கித் தேடிவந்து, பள்ளிகொண்ட பரந்தாமனைக் கண்டு, வேதங்களைக் கவர்ந்தவன் இவனே யென்று கருதிப் பெருமானைப் போருக்கு வருமாறு அறைகூவினர். பெருமான் அவர்களோடு நயமாகப் பேசி, 'உங்களுக்கு வேண்டும் வரம் கேளுங் கள்; தருவோம்' என, அவர்கள் செருக்கால், 'நீ வரம் கேள்; நாங்கள் தவறாமல் தருவோம்' என, பெருமான் 'நீவிர் என்னால் கொல்லப்பட வேண்டும்' என்று வரங்கேட்டுச் சக்கரத்தால் அவர்களைச் சங்கரித் தனன் என்பது வரலாறு.

(பி - ம்.) 1. நெருங்கியயில் பெற்றனைய; நெருங்கியியல் எயிற்றிணைய; நெருங்கயி லெயிற்றனைய; நெருங்கியவி லெயிற்றிணைய; எயிற்றநெறி: செம் மயிர; செம்மைநெரி; செம்மை யயிர்; செம்மை மயிர்.
2. பொருங்குலிசம்; பொருங்குலியம்; அப்பியென: போர்மணிகளார்ப்பப்; போர்மணியதாரப்; பொன்மணியதாரப்; பொன்மணியதார்ப்ப; போர்மணியதார்ப்ப; போர்மணிய தாரார்.
3. பொருங்களிறு; அணைப்புனல்; கலக்குறுவ; பெட்கும்; பீடார்.
4. சுயிடவரை யொத்தே. (25)

915. ஒக்கமிசை யுய்ப்பவ ருரைத்தகுறி கொள்ளா
பக்கமின மொத்தய லலைக்கநனி பாரா
மைக்களி மதத்தவரை மாதர்கலை யல்குல்
புக்கவரை யொத்தன புனற்சிறைக ளேரு.

களி மதத்த மை வரை-மயக்கமுள்ள மதத்தையுடைய கரிய மலை போன்ற (சில) யானைகள், ஒக்க-தகுதியாக, மிசை உய்ப்பவர்-மேலிருந்து செலுத்தும் பாகர்கள், உரைத்த குறி-தமக்குக் கூறும் குறிப்பு மொழிகளை, கொள்ளா-ஏற்றுக்கொள்ளாமலும், பக்கம்-இரு பக்கங்களிலும், இனம்-தம் இனமான வேறு யானைகள், ஒத்து-அப் பாகரைப் போன்று, அயல் அலைக்க-வெளிவரும்படி வருத்த, நனி பாரா-(அதனையும்) பொருட்படுத்தாமலும். மாதர்-பெண்களின், கலை அல்குல் புக்கவரை ஒத்தன-மேகலையணிந்த அல்குலின் மோகத் திலே விழுந்த காமுகரான ஆடவரைப் போன்றனவாகி, புனல் சிறை கள் ஏரு-நீர்நிலைகளினின்றும் கரையேருதனவாயின.

காமுகரின் செயல் மதயானையின் செயலுக்குஒப்பிடப்பெற்றது. மதக்களிப்பால் மீறிச் செல்லும் யானையை,வேறு அடக்கமான யானை யாலே திருத்துதலும் உண்டாதலின், 'பக்கம் இனம் அயல் அலைக்க' என்றார்.

இனி, முன்னிரண்டடிகள் காமுகருக்கும் பொருந்துமாறு: தகுதியாக மேல் நெறிக்குச் செலுத்தவல்ல பெரியோர் சொல்லும் நல்லுரைகளைக் கொள்ளாமலும், பக்கத்தில் உள்ள இனத்தாரும் அயலாரும் கூடி இடித்துரைக்க, அதனையும் பொருட்படுத்தமாலும், மாதர் கலையல்குல் புக்கவர்என்க. யானைகளின் இச்செயல்: 867-பார்க்க.

(பி - ம்.) 1. ஒக்க நெறி; ஒக்க மிகை; ஒக்கு மிசை: உய்த்தவர்; உற்றவர்: உரைத்த நெறி; உரைத்த மொழி; உரைத்தவுரை; கொள்ளாப்; கேளாப்; கேளா.
2. பக்கமின மொய்த்தயல்; பக்கமின மொய்க்கயல்; பக்கவின மொத்தயல்; அலைப்ப நனிபாராக்; அலைக்கநனி பார.
3. மைக்கரிமதத்த விலை; கைக்கரி மதத்த விலை; கைக்கரி மதத்தவரை; கைக்கழி மதத்தவிலை; அக்களி மதத்தவரை; மைக்கர மதத்தவரை; மைக்களிறு மத்தவிலை; மைக்கரிகண்மத்த விலை; மைக்கரி மதத்து வகை: அகலல்குல்.
4. ஒத்தது; ஒத்தவன்; புனற் சிறைகொள் வேழம்; புனச்சிறைகள் எங்கும். (20)

### பாடிநகர்

916. துகிலிடை மடந்தையரொ டாடவர் துவன்றிப்
பகலிடைய வட்டிலின் மடுத்தெரி பரப்பும்
அகிலிடு கொழும்புகை யழுங்கலின் முழங்கா
முகில்படு நெடுங்கடலை யொத்துளதம் மூதூர்.

துகில் இடை மடந்தையரொடு-மெல்லிய ஆடை யுடுத்த இடையையுடைய மகளிருடனே, ஆடவர்-ஆண்மக்களும், துவன்றி-நெருங்கப்பெற்று, பகல் இடைய-பகலும் தோற்கும்படி, அட்டில்-மடைப்பள்ளிகளிலே, மடுத்து-(மிகுதியாகக்) கொணர்ந்திட்டு, எரி பரப்பும்-தீமூட்டிப் பரப்புகின்ற, அகில் இடு கொழு புகை அழுங்கலின்-அகிற் கட்டைகளினின்றும் உண்டாகும் வளவிய புகையானது செறிவதனுல், அ மூதூர்-அவர்கள் தங்கிய அப்பாடிநகர், முழங்கா முகில் படு-இடிக்காத மேகங்கள் சூழ்ந்த, நெடு கடலை ஒத்து உளது-பெருங்கடலை ஒத்திருந்தது.

சக்கரவர்த்தி தன் பரிவாரங்களுடன் தங்கிய அப்பாடிநகர் மிகப் பரந்த அளவினதாதலின், கடலை உவமித்துக் கூறினர். அங்கே உண்டாகிப் பரவிய அகிற்புகைக் கூட்டத்தை 'முழங்கா முகில்' என்றார். மடைப்பள்ளியிலே தீமூட்டுதற்கும் அகிற்கட்டைகளைப்

பயன்படுத்தினரென்றதனல், அம்மலைப் பிரதேசத்தின் வளம் புலப் படுவதாகும். இனி, வட்டிலின் எனப் பிரித்து, 'வட்டில் போன்ற தூபமுட்டிகளில்' என்றுரைத்தலும் ஆம். அவ்விடத்தை 'மூதூர்' என்றது, பழமையாகப் பழகிய விடத்துள்ள அமைப்புக்களெல்லாம் அது பெற்றிருந்தமையின் என்க.

(பி - ம்.) 1. துகிலுடை: ஆடவர்கள் துன்றிப்.
2. மடுத்தெரி பரக்க; தொடுத்தெரி பரக்கும்.
3. அகிலொடு; அழுங்கலின் வழுங்கா; அழுங்கனல் வழங்கா; விளங்கலின் முழங்கா; வழங்கலின் முழங்கா; வழங்கலினவாய.
4. முகில்படி; முகிலிடு; முகிலுடை: ஒந்துளதிம் மூதூர்; ஒத்துளதம் முந்நீர்; ஒத்துளது முன்னீர். (27)

இச்செய்யுளுடன் 'சந்திரசயிலப் படலம் முற்றும்' என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது. 'எழுச்சிப் படலம் முற்றும்' எனவும் சில பிரதிகளில் உளது.

(வேறு)

917. கமருறு பொருப்பின் வாழும் விஞ்சையர் காண வந்தார்
தமரையு மறியார்நின்று திகைப்புறு தகைமை சான்ற
குமரரு மங்கை மாருங் குழுமலால் வழுவி விண்ணின்
றமரர்நா டிழிந்த தென்னப் பொலிந்ததவ் வனீக வெள்ளம்.

கமர் உறு-வெடிப்புக்கள் உள்ள, பொருப்பின் வாழும்-மலை களிலே வாழ்கின்ற, விஞ்சையர்-வித்தியாதரர்கள், காண வந்தார்-அவ்விடத்தைக் காணும்படி வந்தவர்கள், தமரையும் அறியார்-தம் மினத்தவரையும் (அங்குள்ளாரையும்) வேறுபாடு கண்டறியமாட்டா தவராய், நின்று—, திகைப்பு உறு தகைமை சான்ற-திகைப்படை தற்குக் காரணமான அழகுச் சிறப்பு மிக்க, குமரரும்-இளைஞரும்; மங்கைமாரும்-இளமங்கையரும், குழுமலால்-(அங்கே) கூடியிருத் தலால், அவ் அனீக வெள்ளம்-அச்சேனை சமுத்திரமானது, அமரர் நாடு-தேவருலகம், விண் நின்று-ஆகாயத்திலிருந்து, வழுவி-தவறி, இழிந்தது என்ன-(அங்கே) இறங்கியுள்ளது என்னும்படி, பொலிந் தது-(சிறந்து) விளங்கியது.

வித்தியாதரர் என்போர், மக்கள் இயக்கம் இல்லாத மலைப் பகுதிகளிலே வசிக்கும் ஒரு தேவ சாதியார் என்பர். பெரும்பாலும் அன்பொத்த ஆணும் பெண்ணுமான இவ்விருவராய்க் கூடி இயங்கு தல் இவர்களியல்பு. இத்தகைய அவர்களிற் சிலர், மக்களியக்கம் முன்னே இல்லாத அவ்விடத்தில் இப்போது உள்ள வேறுபாட்டைக் கண்டு, அங்கு வந்து நோக்க, அங்கே தம்மினத்தவரைப் போலவே கூடியிருந்த குமரரும் மங்கைமாருமாகியவர்களுடைய பேரழகு, அவர் களைத் திகைக்கச் செய்தது. தசரத சக்கரவர்த்தியின் சேனையைச்

சார்ந்தவரும் பிறரும் தங்கியிருந்த அவ்விடம், இத்துணைச் சிறப்புடைய தென்றது உயர்வு நவிற்சி.

(பி - ம்.) 1. கமரறு: பொருப்பின் வந்த.
2. அறியார் நின்றும்; அறியா நின்று; திகைப்புறும்; திகைக்கவும்; திகைத்தனர்: தன்மையானர்; தகைமை சான்றோ; தகையரானர்.
3. நங்கைமாரும்; அணங்கனரும் குழுவலால்; விண்ணில்.
4. நாட்டிழிந்த தென்னப் பொலிந்தன; அனிக வெள்ளம். (28)

## மகளிர் மகிழ்வொடு திரிதல்

918. வெயினிறங் குறையச்சோதி மின்னிழல் பரப்ப முன்னாள்
துயிலறு செவ்வி யோருந் துனியுறு முனிவி னோரும்
குயிலொடு மினிது பேசிச் சிலம்பொடு மினிது கூவி
மயிலினந் திரிவ வென்னத் திரிந்தனர் மகளி ரெல்லாம்.

முன் நாள் துயில் அறு செவ்வியோரும்-முன் நாள் இரவிலே (தம் கணவரொடு கூடி இன்பம் நுகர்தலால்) உறக்கமற்றதனால் ஆகிய (ஒருவகை) அழகினையுடையவரும், துனி உறு முனிவினோரும்-ஊடலால் வந்த சினம் மாறுதவர்களுமான, மகளிர் எல்லாம்-பெண்கள் எல்லாரும், வெயில் நிறம் குறைய - உதயசூரியனொளியும் தாழும்படி, சோதி-தம் உடம்பின் ஒளியும் அணிகலன்களின் ஒளியும் (கூடி), மின் நிழல் பரப்ப-மின்னல் போன்ற பேரொளியைப் பரப்பும் வண்ணம், குயிலொடும் இனிது பேசி-(தம் குரலினிமைக்கு ஒத்த குரலுடைய) குயில்களுடனே அழகாகப் பேசிக்கொண்டும், சிலம்பொடும் இனிது கூவி-மலையோடும் (எதிரொலியுண்டாகுமாறு) இனிமையாகக் கூவியும், மயில் இனம் திரிவ என்ன-மயிற் கூட்டம் (அங்கங்கே) திரிவனபோல, திரிந்தனர்—.

சக்கரவர்த்தியும் பரிவாரங்களும் சந்திரசைலத் தாழ்வரையை அடைந்தது மாலைக்காலமென்பதும், அவர்கள் இராப்பொழுது அங்கே தங்கினரென்பதும் முன்னர்ப் பெறப்பட்டன. இப்பாடலுள் 'முன்னாள் துயிலறு செவ்வியோர்' எனவும், 'வெயினிறங் குறையச் சோதி மின்னிழல் பரப்பத் திரிந்தனர்' எனவும் கூறியவற்றால், மறுநாள் சூரியோதயமாயினமை பெறப்படும். அந்நாளில் அம்மலைக் காட்சிகளை ஆடவரும் மகளிரும் கண்டு களித்தமை மேலே கூறப்படும். மனத்துள் இன்ப வுணர்ச்சி யில்லாதவரும் அம்மலையின் இனிய காட்சிகளால் தம் சின முதலியன மறந்து இன்ப மெய்துவ ரென்பார், 'துனியுறு முனிவினோரும்......திரிந்தனர்' என்றார். துனி-புலவி நீட்டம். வரை யெதிர் கூவுதல் குறிஞ்சிநில மகளிரின் இன்பப் பொழுதுபோக்குக் குரியது.

(பி - ம்.) 1. வெயிலிறை; வெயினிறை; வெயிலிடை: மின்னிழற்; மெய்ந்நிழல்; மென்னிழல்; பரப்பா; ஆர்ப்ப: முன்னம்; முன்னும்; முன்னர்த்; முன்னித்.

2. துயிலுணர்; துயிலுறு; செவ்வியாரும்; சென்னியாரும்; செவ்வி யோர்டும்: துனியறு; துனிவுறு: முனிவினேரும்; முனிவினேடும்.
3. இனியபேசிச்; இருந்துபேசிச்; இனிது கூறிச்; இனிது கூவிச்; கிளி யொடு மழலை கொஞ்சி; சிலம்பொடு நெடிது கூவி; சிலம்பொடு நின்றுகூறி; சிலம்பொடு மினிதுகூறி.
4. மயிலனம்: திரிவதென்னத்; வருவவென்னத்; வருவ தென்னத்; தெரிவ தென்னத்; திரிவபோலத்; மகளீரெல்லாம். (29)

## வீரர் மகிழ்வொடு திரிதல்

919. தாளிடைக் கழல்க ளார்ப்பத் தாரிடை யளிக ளார்ப்ப
வாள்புடை யிலங்கச் செங்கேழ் மணியணி வலயமின்னத்
தோளென வுயர்ந்த குன்றின் சூழல்க ளினிது நோக்கி
வாளரி திரிவ வென்னத் திரிந்தனர் மைந்த ரெல்லாம்.

மைந்தர் எல்லாம்-வீர குமரர்கள் எல்லாரும், தாள் இடை-தங்கள் கால்களிலே, கழல்கள் ஆர்ப்ப- வீரக்கழல் ஒலிக்கவும், தார் இடை-(தாம் அணிந்த) பூமாலைகளிலே, அளிகள் ஆர்ப்ப-வண்டுகள் (சூழ்ந்து) ஒலிக்கவும், வாள் புடை இலங்க-வாளாயுதம் (இடையின்) ஒரு புறத்திலே விளங்கவும், செம் கேழ் மணி அணி-நல்ல நிறம் அமைந்த மணிகள் (பதித்து) அழகு செய்யப்பெற்ற, வலயம் மின்ன-தோள்வளைகள் பிரகாசிக்கவும், தோள் என உயர்ந்த-(தங்கள்)தோள் களைப்போல (ச்சிகரங்கள்) உயர்ந்துள்ள, குன்றின் சூழல்கள்-அம் மலையின் (பல்வேறு) இடங்களை, இனிது நோக்கி-இன்பமாகப் பார்த் துக்கொண்டு, வாள் அரி திரிவ என்ன-ஒளிபொருந்திய சிங்கங்கள் (கம்பீரமாகத்) திரிவனபோல, திரிந்தனர்—.

இவ்விரு கவிகளிலும், முறையே மகளிரும், மைந்தரும் இனிது திரிந்தனர் என்றமையின், அங்கிருந்தாரனைவரும், கவலை முதலிய துன்ப வுணர்ச்சி சிறிதுமின்றி, இராமபிரானது திருமணங் காணும் மகிழ்ச்சியால் இன்பம் மேலிட்டவராயிருந்தனர் என்பது பெறப்படும்.

மைந்தர்களுடைய வீரத்தைச் சிறப்பிப்பாராய், 'தோளென வுயர்ந்த குன்று' என எதிர்நிலை யுவமையாகக் கூறினர்.

(பி - ம்.) 1. தாளிணை; தாளிணைக்: அரிகளார்ப்ப.
2. இலங்கச் செங்கை: வரையணி வலையம்: மின்னும்.
3. குன்றிற் சூழல்கள்; சூழ்வழி; நோக்கின்.
4. திரிவதென்னத்; திரிந்த வென்னத்; திரிந்ததென்னத்; மைந்தரா னேர். (30)

## கவிக் கூற்று

920. சுற்றிய கடல்க ளெல்லாஞ் சுடர்மணிக் கனகக் குன்றைப்
பற்றிய வளைந்த வென்னப் பரந்துவந் திறுத்த சேனைக்
கொற்றவர் தேவி மார்கண் மைந்தர்கள் கொம்ப ரூர்வந்
துற்றவர் காண லுற்ற வரைநிலை யுரைத்து மன்னோ.

சுற்றிய கடல்கள் எல்லாம்-பூமியைச் சூழ்ந்துள்ள எல்லாக் கடல்களும் (ஒருங்கே),சுடர் மணி-ஒளி வீசும் இரத்தினங்களையுடைய, கனகம் குன்றை-பொன் மயமான மேரு மலையை, பற்றிய-கவர்ந்து கொள்ளும் பொருட்டு, வளைந்த என்ன-(அதனை) வளைத்துக்கொண் டன போல, பரந்து வந்து-மிகப் பரவின அளவிலே வந்து, இறுத்த சேனை-(அச்சந்திரசைலத் தாழ்வரையிலே) தங்கின சேனையில் உள்ள, கொற்றவர் அரசர்களும், தேவிமார்கள்-(அவ்வரசருடைய) தேவி மார்களும், மைந்தர்கள்-(படைவீரரும் பிறருமான) ஆடவர்களும், கொம்பு அன்னார்-பூங்கொம்பு போன்ற பெண்களுமாக, வந்து உற்ற வர்-அங்கு வந்திருந்த அனைவரும், காணல் உற்ற - காணுதற்குப் பொருந்திய, வரை நிலை-அம்மலையின் தன்மைகளை, மன் உரைத்தும்-மிகவும் எடுத்துச் சொல்லுவாம். ஓ: அசை.

சேனைகள் வந்து தங்கியதனை அனுவாதமாகக் கூறி, மேலே 'அவரெல்லாரும் அம்மலையிடத்துக் கண்ட காட்சிகளைக் கூறுவோம்' என்று தொடங்குகின்றார். இதுவே, 'வரைக்காட்சிப் படலம்' என வொன்று பிரித்துக் கூறுதற்கு ஆதாரம் என்பர்.

சந்திரசைலத்தை மேருமலையாகவும், அதனைச் சூழ வந்து தங் கிய பெரும்படைத்திரளைக் கடல்களெல்லாம் ஒருங்கே திரண்டு வந்து மேருமலையை வளைத்துக் கொண்டனவாகவும் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார்.

(பி - ம்.) 2. பற்றியே வளைந்த தென்னப்; பற்றின வளைந்த வென்னப்; படர்ந்து வந்து.
3. கொற்றவன்: மைந்தர் பூங்கொம்பனார்வந்து; கொம்பனா ருவந்து முன் வந்து.
4. உற்றவர் காணலுற்றவ்; உற்றது காணவந்த: மலைநிலை; உயர்நிலை: உரைத்து மன்றே; உரைக்கலுற்றாம்; உணர்த்து மன்றே. (31)

### சந்திரசைல வருணனை

921. பம்புதேன் மிஞிறு தும்பி பரந்திசை பாடி யாட
உம்பர்வா னகத்து நின்ற வொளிதரு தருவி னோங்கும்
கொம்புகள் பனைக்கை நீட்டிக் குழையொடு மொடித்துக் கோட்டுத்
தும்பிக ளுயிரே யன்ன துணைமடப் பிடிக்கு நல்கும்.

கோடு தும்பிகள்-தந்தங்களையுடைய ஆண் யானைகள், பம்பு-மிகுதியான, தேன், மிஞிறு, தும்பி-தேன் முதலிய வண்டினங்கள், பரந்து-எங்கும் பரவி, இசை பாடி-கீதம்போல ரீங்காரம் செய்து கொண்டு, ஆட-வட்டமிட, உம்பர் வான் அகத்து நின்ற-மேலிடத்த தாகிய வானுலகையளாவி நின்ற, ஒளி தரு தருவின்-(தளிர்களாலும் பூக்களாலும்) ஒளி செய்கின்ற மரங்களின், ஓங்கும் கொம்புகள்-

உயர்ந்த கிளைகளை, பனை கை நீட்டி-பனைபோன்ற (தம்) துதிக்கையை நீட்டி, குழையொடும் ஒடித்து-தளிர்களோடு ஒடித்து, உயிரே அன்ன-தம் உயிரையே போன்ற, துணை-துணையான, மடம் பிடிக்கு-இளமையுடைய பெண் யானைகளுக்கு, நல்கும்-கொடுக்கும்.

இது முதல் 14 பாடல்களால் மலையை வருணிக்கின்றார். இம் முதற்கவியால் அம்மலையின் உயர்ச்சியும், அதிலுள்ள மரங்களின் வளமும் சிறப்பிக்கப்பட்டன. தேன், மிஞிறு, தும்பி என்பன வண்டின் வகைகள்; 876-குறிப்புப் பார்க்க. மிஞிறு-ஞிமிறு எனவும் வழங்கும். வரி ஞிமிறிமிர்ந்தார்ப்ப விருந்தும்பியியைபூத' (கலி. 127). தரு-கற்பகம் முதலிய தெய்வதருக்கள் என்றலும் ஆம். ஆண் யானைகள் தம் துணையான பெண் யானைகளிடம் மிக்க அன்புடையனவாய் அவற்றிற்குரிய உணவைத் தம் துதிக்கையாற் கொடுத்து உண்பித்தல் இயல்பு: 'பிடியூட்டிப் பின்னுண்ணுங்களிறு' (கலி. 11); குறுந்.37-ஆம் பாட்டுக் குறிப்பும் பார்க்க. 'பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்·றிருகண் இளமூங்கில் வாங்கி—அருகிருந்த, தேன்கலந்து நீட்டுந் திருவேங்கடங்கண்டீர்' (பூதத்தார் அந்தாதி. 75). 'சந்தனப் பூம் பைந்தழையைச் செந்தேனிற் றோய்த்தியானை, மந்த மடப்பிடியின் வாய்க்கொடுப்ப-வந்ததன், கண்களிக்கத் தான்களிக்கும் ஈங்கோயே' (ஈங்கோய்மலை யெழுபது. 38.)

(பி - ம்.) 1. தேன்ஞிமிறு; தேன்ஞிமிறும்; தெனிமிறு; சுரும்பிசைபாடி; வண்டிசை பாடி; ஆடும்.
2. வானகத்தினின்ற; வானகத்திலுள்ள; வானத்து நின்ற; ஒளிவளர்தருவின்; ஒளிர்தருதருவின்; ஒளிர்தளிர்த்தருவின்; ஒளிர்வருதருவின்; ஒளிர்வளர்தருவின்; ஒளிர்தருவதனை யொக்கும்; ஒளிதளிர்த் தருவினோடும்.
3. கொம்பினிற் பணைக்கை; ஒடித்த கோட்டுத்; எடுத்துக்கோட்டுத்; இடித்துக்சோட்டுத்; கொணர்ந்து கோட்டுத்; ஒடித்துக்கொண்டு; ஒடித்து நீட்டித்.
4. உயிரையன்ன; மதப்பிடிக்கு. (32)

922. பண்மலர் பவளச் செவ்வாய்ப் பனிமலர்க் குவளை யன்ன
கண்மலர் கொடிச்சி மார்க்குக் கணித்தொழில் புரியும் வேங்கை
உண்மலர் வெறுத்த தும்பி புதியதே னுதவு நாகத்
தண்மல ரென்று வானத் தாரகைத் தாவு மன்றே.

பண் மலர்-இசை போலும் இனிய சொற்கள் தோற்றுகின்ற, பவளம் செவ் வாய்-பவளம் போன்ற சிவந்த வாயினையுடைய, பனி குவளை மலர் அன்ன-குளிர்ந்த கருங்குவளைப் பூப்போன்ற, கண்மலர்-கண்கள் விரியப்பெற்ற, கொடிச்சி மார்க்கு-குறிஞ்சி நில மகளிருக்கு, கணி தொழில் புரியும்-சோதிடத் தொழில் செய்கிற, வேங்கை-வேங்கை மரத்தின்,உண் மலர் வெறுத்த தும்பி-தேன் உண்ணப்பட்ட பூக்களை வெறுத்து நீங்கிய வண்டுகள், வானம் தாரகை-ஆகாயத்தி

லுள்ள நட்சத்திரங்களை, புதிய தேன் உதவும்-புதியதான தேனைக் கொடுக்கத்தக்க, நாகம் தண் மலர் என்று-சுரபுன்னையின் குளிர்ந்த பூக்கள் என்று கருதி, தாவும்-(அவற்றினிடத்தே) தாவிச் செல்லும். அன்று, ஏ-அசைகள்.

செவ்வாயினையுடைய கொடிச்சிமார், கண்கள் மலர்கின்ற கொடிச்சிமார் என இயைக்க. கணி-சோதிடன்; வேங்கை மரத்தைக் 'கணி' என்பது இலக்கியங்களுட் பயின்று வரும். குறிஞ்சி நிலத்துக் குரியதான வேங்கைமரம் நன்னாளில் பூத்தலும், அந்நாளில் அந்நிலத்து மகளிர் மணம் புரிதலும், அது பூத்தபோது தினைப்புனங் கொய்யத் தொடங்குதலும் வழக்காதலால், 'இன்ன நாளில் இது செய்க' என நாட்பார்த்துக் கூறும் சோதிடரை யொப்பது வேங்கைமரம். 'பன்னாளும் நின்ற விடத்துங் கணிவேங்கை, நன்னாளே நாடி மலர்தலால்' (பழ. 120.); 'வேங்கை தினைப்புனங் கொய்கவென்று, தாதிடங் கொண்டு பொன் வீசித்தன் கள்வாய் சொரிய நின்று, சோதிடங் கொண்டு(திருச்சிற். 138.); 'கணிவாய் வேங்கையும்' (பெருங். 2.20: 59.) என்பதும் அதன் அடிக்குறிப்பும் நோக்குக.

(பி - ம்.) 1. பண்வளர்; செவ்வாய் பனிமலர்; மணிமலர்க்.
3. ஒண்மலர்: வெறித்ததும்பி; வெறுத்துத் தும்பி: புதிய தேனுகந்து; உவந்து; உவந்த.
4. வானிற்றாரகை; வாராத்தாரகை; தாரகைத்தாழும்;தாரகை தழுவும்.
(33)

923. மீனெனும் பிடிக ளோடும் விளங்குவெண் மதிநல் வேழம்
கூனல்வான் கோடு நீட்டிக் குத்திடக் குமுறிப் பாயும்
தேனுகு மடையை மாற்றிச் செந்தினைக் குறவர் முந்தி
வானநீ ராறு பாய்ச்சி யைவனம் வளர்ப்பர் மாதோ.

மீன் எனும் பிடிகளோடும்-விண் மீன்கள் எனப்படும் பெண் யானைகளுடனே, விளங்கு-(அழகாக) விளங்குகின்ற, வெள் மதி நல் வேழம்-வெள்ளிய சந்திரனாகிய சிறந்த யானையானது, கூனல் வான் கோடு நீட்டி-வளைந்த வெள்ளிய பிறைக்கொம்புகளை நீட்டி, குத்திட-(தேனிறாலைக்) குத்தியதனால், குமுறி பாயும்-(இறாலினின்றும்) அதிரொலி கொண்டு பாய்கிற, தேன் உகு மடையை-தேன் ஓடுகிற பாய் மடையை, செம் தினை குறவர்-செவ்விய தினைக் கொல்லைகளையுடைய மலைக்குறவர்கள்,மாற்றி-தினைப்பயிருக்குப் போகாதபடி மாறி, முந்தி-முன்னாக, வான ஆறுநீர் பாய்ச்சி-தேவகங்கையின் நீரை(கொணர்ந்து) அவ்வழியே பாய்ச்சி, ஐவனம் வளர்ப்பர்-மலைநெற் பயிரை வளர்ப்பார்கள். மாது, ஓ-அசைகள்.

குறிஞ்சி நில மக்களுக்குத் தினை சிறந்ததாகலின் 'தினைக்குறவர்' என்றார். தினை புன்செய்ப் பயிராதலின், மிக்க நீரின்றியும் விளையத்

தக்கது; எனவே நீர் மிகுதியும் வேண்டப்படும் ஐவனப் பயிருக்காகும் படி முன்னதாக ஆகாய கங்கை நீரைக் கால் வழியே கொணர்ந்து, தேனோடு கலந்து பாயச் செய்தனர் என்க. விண்மீன்களையும் மதியையும் முறையே பிடிகளாகவும் களிறாகவும் உருவகித்தார். கோடு என்றது பிறையின் இரு நுனிப் பகுதிகளை; கோடு குத்திடத் தேன் பாயும் என்றதனால், குத்தியது தேனிறாலை யென்பது பெறப்படும். பிறைக் கோடு தேனிறாலைக் குத்துதலும், குறவர் ஆகாய கங்கை நீரைப் பயிருக்குப் பாய்ச்சுதலுங் கூறினமையின் அம்மலையின் உயர்ச்சி பெறப்பட்டது.

களிறு, பலபிடிகள் சூழ நின்று விளங்குதல்: 1018. 'ஐவனம்' மலைகளில் விளையத்தக்க ஒருவகை வெண்ணெல்: 'ஐவன வெண்ணெல்' (கலி. 43: 4.) மடைமாறுதல்: திருவரங்கத்து மாலை. 108.

(பி - ம்.) 1. மீனொடும் பிடிகளோடும்: பிடிகளோடு: விளங்கும் வெண்; விளங்குந் தண்; விளங்கு நன்; விளங்குமம்; விளங்கிய: களிநல் வேழம்.
2. சூமிறிப்பாயும்; குமிழி பாய்ந்த.
3. செந்தலைக் குறவர்: முந்து; கூடி.
4. வான நீராற்றிற்; ஆனநீராறு; விளைப்ப; விளைப்பரன்றே. (34)

924. குப்புறற் கருமை யாலக் குலவரைச் சாரல் வைகி
ஒப்புறத் துலங்கு கின்ற வுடுபதி யாடி யின்கண்
இப்புறத் தேயுங் காண்பார் குறத்திய ரியைந்த கோலம்
அப்புறத் தேயுங் காண்பா ரரம்பைய ரழகு மாதோ.

குப்புறற்கு அருமையால்-கடந்து செல்லுதற்கு அருமை யாதலால், அ குலம் வரை சாரல் வைகி-அச்சிறந்த மலையின் தாழ்வரையிலேயே தங்கி,ஒப்புஉற துலங்குகின்ற-(இருபுறமும்) ஒருதன்மையாக (பிரதிபிம்பம் காணும்படி) விளங்குகின்ற, உடுபதி-சந்திரனாகிய, ஆடியின் கண்-கண்ணாடியிலே, இ புறத்தேயும்-(இவ்வுலகைச் சார்ந்த) இந்தப் பக்கத்திலேயும், குறத்தியர்-மலைவாழ் மகளிர், இயைந்த கோலம் காண்பார்-தம் மனத்துக்கியையப் புனைந்த தங்கள் அழகைக் காண்பார்கள்; அ புறத்தேயும்-(வானுலகைச் சார்ந்த) மறுபுறத்திலேயும், அரம்பையர்-தெய்வமாதர், அழகு காண்பார்-தம் அழகைப் பார்ப்பார்கள்.

உடு பதி-நட்சத்திரங்களுக்குத் தலைவன் என்னும் பொருளுடைய வடசொற்றொடர். சந்திர மண்டலம் கண்ணாடிபோல விளங்குதலின், உடுபதியாகிய ஆடி என்றார்; பொதுவாக ஒருபுறமே பிரதிபிம்பத்தைக் காணத்தக்க பிற கண்ணாடிகளைப் போலன்றி இருபுறமுங் காணத்தக்கது இது என்பார், (இருபுறமும்) 'ஒப்புறத்துலங்குகின்ற' என்றும், இரு புறத்தும் ஒரே சமயத்தில் இருவேறு வகையினர் அதனிற் காண்பார்கள் என்றும் கூறினார்; வேற்றுமையை அங்கமாக

வுடைய தற்குறிப்பேற்றம்; உயர்வு நவிற்சியும் இயைந்துள்ளது. 'சந்திரன் அம்மலையைக் கடந்து செல்ல மாட்டாமையால் அங்கேயே ஒருபுறம் தங்கிவிட்டான்' என்றது உயர்வு நவிற்சி. ஆசிரியர், தாம் கற்பித்துக்கொண்ட 'சந்திரசைலம்' என்னும் பெயருக்கேற்ப இங்குக் கூறியுள்ள நயமும் ஓர் தற்பாலது.

சந்திரனைக் கண்ணுடியெனல் 'அந்நலா ரியல்புற வணியக், கற்றை வெண்மதி சாளரத் தாடியிற் காட்டும்' (நைடத. நகரப். 3)

(பி - ம்.) 1. அருமையானக்; அருமையான; அருமையாகும்; அரியதாய: சாரல் நல்கி.
2. ஒப்பறத்: துளங்குகின்ற; துலங்குஞ் சோதி.
3. காண்பர்: இசைந்த; அப்புறத்தேயுங் காண்பாரரம்பைய ரசைந்த கோலம்.
4. காண்பர்: அழகு மன்னே; இப்புறத்தேயுங் காண்பார் குறத்திய ரிசைந்த கோலம். (35)

925. உதியுறு துருத்தி யூது முலையுறு தீயும் வாயின்
அதிவிட நீரு நெய்யு முண்கிலா தாவி யுண்ணும்
கொதிநுனை வேற்கண் மாதர் குறத்தியர் நுதலி னேடு
மதியினை வாங்கி யொப்புக் காண்குவர் குறவர் மாதோ.

உதி உறு-(காற்று) உதித்தல் செய்கிற,(உண்டாகிற), துருத்தி ஊதும்-துருத்தியால் ஊதப்படுகிற, உலை உறு தீயும்-(கொல்லனது) உலைக்களத்தில் உள்ள தீயும், வாயின்-அலகின் நுனியிலே, அதிவிடம் நீரும்-மிக்க விடமுள்ள நச்சு நீரும், நெய்யும்—, உண்கிலாது-தோயப் பெருமலே, ஆவி உண்ணும்-(ஆடவரின்) உயிரைக் கவரவல்ல, கொதி நுனை வேல் கண்-கொதிக்கும் முனை பொருந்திய வேல் போன்ற கண் களையுடைய, மாதர் குறத்தியர்-அழகிய குறமகளிரின், நுதலினேடு-நெற்றியுடனே, மதியினை வாங்கி-(அங்கே தங்கும்) பிறைச் சந்திரனை எடுத்து வைத்து, குறவர்-அம்மலைக் குறவர்கள், ஒப்பு காண்குவர்-(இரண்டிற்கும் உள்ள) ஒப்புமையை நோக்குவார்கள். மாது, ஓ: அசைகள்.

வேலைக் கொல்லன் உலையிற் காய்ச்சி வடித்தலும், ஏவப்பட்டார் உயிரை எளிதில் கவரும் பொருட்டு நஞ்சூட்டுதலும், துருப்பிடியாதிருத்தற்கு நெய் பூசுதலும் உளவாம்; ஆனல், இவை ஒன்றும் இல்லாமலே ஆடவர் உயிரைக் கவர வல்லன மாதர் கண்கள் என்கின்றார். கொதித்தல், கொடுமையைக் குறிக்கும். மாதர் குறத்தியர்-மாதராகிய குறத்தியர் என்றலும் ஆம். மதி-இங்கே பெண்களின் நெற்றிக்கு உவமை கூறப்படும் பிறையைக் குறிக்கும்.

மதியினை வாங்கி ஒப்புப் பார்த்தல்: 'எழுநிலை மாடமேலா லெழுவெனப் பொலியுந் தோளார், முழுமதியினைக்கை வாங்கி முயங்

குவார் வதனமாய, செழுமதியொடுசேர்த் தொப்புப் பார்க்குங்கால்' (அம்பர்ப். 192).

(பி - ம்.) 1. தீயின் வாயின்; தீயின் வாயில்; தீயும் வாயில்; வாயினன்னீர்.
2. அதில்விட; அதிர்விட; அதின்விடு; அதிலிடு; அதினிடை; உண்கலாது; உண்கிலது; உணர்கிலாது; உணர்ந்திலாது; நெய்யுந் தோய்ந்தபின்.
3. கொதிதுணை; கொதிநுதி; கொதிநுழை; கொதிபெறு வைவேலுண் கட் குறத்தியர் குணமொடாங்கு; குளமொடாங்.
4. மதியினை நோக்கி யொப்புக் காண்டுவரமரர்; மன்னோ. (36)

926. பேணுதற் கரிய சீயக் குருளையும் பிடிக ளீன்ற
காணுதற் கினிய வேழக் கன்றொடு களிக்கு முன்றில்
கோணுதற் குரிய திங்கட் குழவியுங் குறவர் தங்கள்
வாணுதற் கொடிச்சி மார்த மகவொடு தவழு மன்றே.

குறவர் தங்கள் முன்றில்-(அம்மலையில் வாழும்) குறவர்களின் வீட்டு முன்னிடங்களிலே, பேணுதற்கு அரிய-விரும்பி வளர்த்தற்கு அருமையான, சீயம் குருளையும்-சிங்கக் குட்டிகளும், பிடிகள் ஈன்ற-பெண் யானைகள் ஈன்ற, காணுதற்கு இனிய - பார்ப்பதற்கு இனிமையான, வேழம் கன்றொடு-யானைக் கன்றுகளுடனே, களிக்கும்-(விளையாடி) மகிழாநிற்கும்; வாள் நுதல் கொடிச்சிமார் தம் மகவொடு-ஒளி பொருந்திய நெற்றியையுடைய குறமகளிரின் குழந்தைகளுடனே, கோண் நுதற்கு உரிய-(அம்மகளிரின்) வளைந்த நெற்றிக்கு உவமையாதற்குரிய, திங்கள் குழவியும்-பிறைச் சந்திரனும், தவழும்-தவழ்ந்து விளையாடும். அன்று, ஏ-அசை.

ஒன்றற்கொன்று பிறவியிலேயே பகையான சிங்கக்குட்டிகளும் யானைக் கன்றுகளும் கலந்து விளையாடு மென்றது, அம்மலையின் சூழலைச் சிறப்பித்தவாறும். சந்திரன் அம்மலையைக் கடந்துசெல்ல மாட்டாமல் அங்கே தங்கினமையும்,குறவர் சந்திரனைப் பிடித்தெடுத்துக் குறத்தியர் நெற்றியோடு ஒப்புமை காண்டலும் முன்னே கூறினமையின், அச்சந்திரன் அவர்கள் குழந்தைகளுடன் தவழ்தலும் இயல்வதாம்.

பிறையைத் திங்கட் குழவி யெனல்: 'குழவித் திங்க ளிமையவ ரேத்த' (சிலப். 2: 38).

(பி - ம்.) 1. பேணுதற்குரிய;சீயக்குருளையம்; மேகக்குருளையும்; கோலக்குருளையம்; மேகக்குருளையம்.
2. காணுதற்கரிய; காணுதற்குரிய; கன்றொடும்களிக்கும்.
3. கோணுதற்கரிய; கோணுதற்கினிய.
4. கொடிச்சி மாதர்; கொடிச்சி மார்கள்; மகவொடும்; தவழுமாதோ; தவழுமன்னோ; தழுவுமன்றே. (37)

927. அஞ்சனக் கிரியி னன்ன வழிகவுள் யானை கொன்ற
வெஞ்சினத் தரியின் றிண்காற் சுவட்டொடு விஞ்சை வேந்தர்
குஞ்சியந் தலத்து நீலக் குலமணித் தலத்து மாதர்
பஞ்சியங் கமலம் பூத்த பசுஞ்சுவ டுடைத்து மன்னோ.

(அம்மலையானது), குலம் நீல மணி தலத்தும்-சிறந்த நீல மணிகள் பதித்தாற் போன்ற (தன்) தரையிடத்தும், விஞ்சை வேந்தர்-(அதில் வாழும்) வித்தியாதரர்களின், அம் குஞ்சி தலத்தும்-அழகிய மயிர் முடியினிடத்தும், (முறையே), அஞ்சனம் கிரி அன்ன-மை மலை போன்றதாகிய, அழிகவுள்-மதநீர் ஒழுகும் கதுப்பினையுடைய, யானை கொன்ற-(பெரிய) யானையைக் கொன்ற, வெம் சினத்து-கடுங் கோப முள்ள, அரியின்-சிங்கத்தின், திண் கால் சுவட்டொடு-திண்ணிய அடிச்சுவட்டையும், மாதர்-அவ்வித்தியாதர மகளிரின், பஞ்சி அம் கமலம் பூத்த-செம்பஞ்சுக் குழம்பு ஊட்டிய அழகிய பாத கமலங்கள் படுதலால் உண்டாகிய, பசுமை சுவடு-ஈரமான அடையாளத்தையும், உடைத்து-உடையதாயிருந்தது. மன், ஓ-அசை.

யானையொடு பொருது அதனைக் கொன்றதனால் குருதிக் கறை படிந்த சிங்கத்தின் அடிச்சுவடுகள் தரும் அச்சக் குறிப்பையும், வித்தியாதரர்களின் மயிர்முடியிலே காணப்படும் மாதர் பாதச் சுவடுகள் தரும் இன்பக்குறிப்பையும் அம்மலை உடையதாயிருந்த தென்றவாறு. மகளிரது ஊடலைத் தீர்க்கும் பொருட்டு அவரடிகளில் முடிபட ஆடவர் வணங்குதலின், அம்மகளிரின் செம்பஞ்சு ஊட்டிய அடிச் சுவடு ஆடவர் முடியிற் காணப்பட்டதென்க.

'கிரியின் அன்ன' என்றதில் 'இன்' சாரியை.

(பி - ம்.) 1. அஞ்சனச் சைலமன்ன: அழிகவுளானை; வென்ற; பொன்ற.
2. வெஞ்சினக் கரியிற்; சுவட்டொடும்; கவட்டொடு.
3. குஞ்சியந்தலத்து மைந்தர்: தலத்து நீத்த; தலத்து நீழற்; தலத்தி னீலக்; குலமணிப் புயத்து; குலமணியிடத்து.
4. பஞ்சியுங்: பதஞ்சுவடு: உடைத்து மாதோ. (38)

928. செங்கய லனையநாட்டஞ் செவிபுகா முறுவ றோன்று
பொங்கிருங் கூந்தல் சோரா புருவங்க ணெரியா பூவின்
அங்கையு மிடறுங் கூட்டி நரம்புளர்ந் தமுத மூறும்
மங்கையர் பாடல் கேட்டுக் கின்னர மயங்கு மாதோ.

செம் கயல் அனைய நாட்டம்-அழகிய கயல் மீனையொத்த கண் பார்வை, செவி புகா-காதளவும் செல்லாமலும், (கண் விழிகள் சலிக்காமலும்), முறுவல் தோன்று-பற்கள் வெளியே தெரியாமலும், பொங்கு இரு கூந்தல்-செழித்துக் கறுத்த கூந்தல்முடி, சோரா-அவிழாமலும், புருவங்கள் நெரியா-புருவங்கள் வளைந்து மேலேறாமலும், பூவின் அம் கையும்-தாமரைபோன்ற அழகியகைகளின் தொழிலும்,

மிடறும்-கண்டப் பாடலும், கூட்டி-ஒன்ருகப் பொருந்தச் செய்து, நரம்பு உளர்ந்து-(யாழின்) நரம்புகளைத் தடவி (இசைத்தலால்), அமுதம் ஊறும்-தேவாமிர்தம்போலச் சுரக்கின்ற, மங்கையர் பாடல் கேட்டு-(அம்மலை வாழ்) மங்கையரின் இசைப் பாடல்களைக் கேட்டு, கின்னரம்-அங்குள்ள கின்னரங்களும், மயங்கும்-(அதனினிமையில் மூழ்கித்) தம்மை மறந்திருக்கும். மாது, ஓ-அசை.

அங்குள்ள மங்கையர், பாடுங்கால் குற்றம் எனப்படும் அங்க சேட்டைகள் இன்றியும், யாழ் நரம்பினெலியும் அவர்கள் குரலோசையும் வேற்றுமை தெரியாதவாறும், இசையின் நயம் அறியவல்ல கின்னரங்கள் அவ்விசை கேட்டு மயங்கும்படியும் மிகச் சிறப்பாகப் பாடினுர்கள் என்றபடி. கின்னரம்: 868-குறிப்புப் பார்க்க.

ஒப்பு: 'கருங்கொடிப் புருவமேரு கயனெடுங் கண்ணு மாடா, அருங்கடி மிடறும் விம்மா தணி மணி யெயிறுந்தோன்ரு, இருங்கடற் பவளச் செவ்வாய் திறந்திவள் பாடினுளோ, நரம்பொடு வீணைநாவி னவின்றதோ வென்று நைந்தார்' (சீவக. 658); 'கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா, பண்ணளவும் வாய்தோன்ரு பற் றெரியா-எண்ணிலிவை, கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்த ருவர், உள்ளாளப் பாடலுணர்' (இசை மரபு) என்பதும் ஈண்டு நோக்கத்தக்கது. அங்கையு மிடறுங் கூட்டி......பாடல்: 'கருங்கோட்டுச் சீறியாழ், நரம்பு மீதிறவா துடன்புணர்ந் தொன்றிக், கடவ தறிந்த வின்குரல் விறலியர்' (மலைபடு. 534-6).

(பி - ம்.) 1. செவியுரு: செவியுற, செவிபுக; சிவப்புற: தோன்ருப்: தோன்றப்.
2. பொங்கிருட் கூந்தல் சோரப்; நெரியப்; நெறியாப்.
3. மிடறுங்கூடி; மீட்டுப்பூட்டி; நரம்பளைந்தமுதம்; நரம்பளந்தமுதம்; நைவள மமுதம். 4. கின்னரர் மயங்க. (30)

929. கள்ளவிழ் கோதை மாதர் காதொடு முறவு செய்யும்
கொள்ளைவாட் கண்ணி ஞர்தங் குங்குமக் குழம்புதங்கும்
தெள்ளிய பளிக்குப்பாறைத் தெளிசுனை மணியிற் செய்த
வள்ளமு நறவு மென்ன வரம்பில பொலிவ மன்னே.

காதொடும் உறவு செய்யும்-காதளவும் நீண்ட, கொள்ளை-(ஆடவருயிரைக்) கொள்ளை கொள்ள வல்ல, வாள் கண்ணினுர்-வாள் போலுங் கண்களையுடையவர்களான, கள் அவிழ் கோதை மாதர் தம்-(பூவின்) தேன் சிந்துதற்கு இடமான கூந்தலையுடைய பெண்களின், குங்குமம் குழம்பு தங்கும்-(மேனியில் பூசிய) குங்குமக் கலவை (கரைந்து) தங்கப்பெற்ற, தெள்ளிய பளிங்கு பாறை தெளி சுனை-தெளிவான பளிங்குப் பாறைகளிலே அமைந்த தெளிந்த நீருள்ள சுனைகள், வரம்பு இல-எண்ணற்றனவாக, வள்ளமும்-(கள்நிரம்பிய) கிண்

ணங்களும், நறவும் என்ன-(அவற்றில் உள்ள) கள்ளும் போல, பொலிவ-(அம்மலையிடத்தே) விளங்குவன. மன், ஓ-அசை.

பெண்கள் குளிக்கும்போது அவர்கள் உடம்பில் பூசிய குங்குமக் கலவை கரைந்து கலத்தலால் சுனைநீர் செந்நிறங் கொள்ள, அதன் சாயையால், கரையாக அமைந்த பளிங்குப் பாறைகளும் செந்நிறங் கொண்டு, செம்மணிகளாலியன்ற கிண்ணங்கள் போன்றன; நீர் அக் கிண்ணங்களில் ஊற்றி வைத்த மதுவைப் போன்றிருநதது; இத்தகைய தோற்றமுடைய சுனைகள் அளவற்றனவாய் அம்மலையி லிருந்தன என்க. தற்குறிப்பேற்றவணி.

(பி - ம்.) 1. காதொடு முரவு செய்யும்; காதொடுங் கமுமவிம்மும்.
2. வான்கனைணிஞர்தம்; குங்குமக்குப்பை; தங்கத்; தங்கித்; தாங்கும்; தேங்கும்; கொள்ளும்.
3. பளிங்குப்பாறை தெளிதர; தெளிசுதை; மணியிற் றேய்த்த; அமுதிற் செய்த
4. பொலியு மன்னே; பொலிவமாதோ. (40)

930. ஆடவ ராவி சோர வஞ்சன வாரி சோர
ஊடலிற் சிவந்த நாட்டத் தும்பர்த மரம்பை மாதர்
தோடலர் கோதை நின்றுந் துறந்தமந் தார மாலை
வாடல நறவ ருத வயின்வயின் வயங்கு மாதோ.

உம்பர்தம் - தேவர்களுக்குரிய, அரம்பை மாதர்-அரம்பை முதலிய தெய்வப் பெண்கள், ஆடவர் ஆவி சோர-(தம் காதலரான) ஆடவரின் உயிர் தவிக்கும்படி, ஊடலின்-ஊடல் கொள்ளுதலால், சிவந்த நாட்டத்து-சிவப்பேறிய (தம்) கண்களிலே, அஞ்சனம் வாரி சோர-மை கரைந்த கண்ணீர் பெருக, (சினத்துடன்), கோதை நின்று துறந்த-கூந்தலினின்றும் எடுத்து வீசிய, தோடு அவிழ் மந்தார மாலை-இதழ்கள்விரிந்த மந்தார மலர் மாலைகள், வாடல-வாடாதனவாயும், நறவு அருத-தேன் நீங்கப் பெருதனவாயும், வயின் வயின்-அங்கங்கே, வயங்கும்-விளங்காநிற்கும். மாது, ஓ: அசைகள்.

என்றும் வாடாது புதிய தோற்றத்துடனும், தேன் நீங்கப் பெருமலும் இருத்தல் தெய்வ தருக்களின் பூக்களுக்குரிய இயல்பாம். அத்தகைய மலர் மாலைகள் அம்மலையிடத்து அங்கங்கே கிடந்து விளங்கும் என்றதனல், அம்மலை, தேவர்களும் விரும்பி வந்து தங்கி இன்பம் நுகர்தற்கு இடமான தென்றபடி.

(பி - ம்.) 1. அஞ்சனவாவி; அஞ்சனவருவி; அஞ்சனவோதி.
2. உம்பர் நாட்டரம்பை மாதர்: உம்பர் மாட்டரம்பை மாதர்; அரம்பைய ருள்ளஞ் சோர.
3. தோடவிழ்: கோதைநின்று; கூந்தல்நின்றும்; குஞ்சிநின்றும்; குழலினின்றும்; தோகை நின்றும்: துறந்து; துரந்த.

4. வாடலநறவஹுது: வாடலினறவரூத: வாடலினறவரூது; வாடனற் பரூதுதேங்கி; மயங்கும்; இலங்கும்; மருங்கு. (41)

இந்பாடல் சில பிரதிகளில் இல்லே; சில பிரதிகளில் அடுத்ததான 'மாந்தளி ரனேய' என்பதன்பின் காணப்படுகின்றது.

931. மாந்தளி ரனேய மேனிக் குறத்தியர் மாலே சூட்டிக்
கூந்தலங் கமுகின் பாளே குழலினே டொப்புக் காண்பார்
ஏந்திழை யரம்பை மாத ரெழின்மணிக் கடகம் வாங்கிக்
காந்தளம் போதிற் பெய்து கைகளோ டொப்புக் காண்பார்.

(அச்சந்திரசைலத்திலே), மா தளிர் அனேய மேனி குறத்தியர்-மாந்தளிர் போலும் உடம்பின் சாயலேயுடைய குறப் பெண்கள், கூந்தல் கமுகின் பாளே-கூந்தற் கமுகின் (விரிந்த) பாளேயிலே, மாலே சூட்டி-பூமாலேயைச் சூட்டி, குழலினேடு ஒப்பு காண்பார்-(அப்பாளே யின் அழகைத்) தம் கூந்தலின் அழகோடு ஒப்பிட்டுப் பார்ப்பர்; ஏந்து இழை அரம்பை மாதர்-(சிறந்த) ஆபரணங்கள் தரித்த தெய்வ மகளிர், எழில் மணி கடகம் வாங்கி-(தம்கையிலணிந்த) அழகிய இரத்தின கடகங்களேக் கழற்றி, காந்தள் அம் போதில் பெய்து-செங் காந்தட் பூக்களில் பூட்டி, கைகளோடு ஒப்பு காண்பார்-தம் கை களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பர்.

கூந்தற் கமுகு, 'கூந்தற்பனே' போலக் கமுகின் சாதிவிசேடம்; இதன் விரிந்த பாளேயைப் பெண்களின் கூந்தலுக்கு உவமை கூறுவர்; அதனுல், குறமகளிர், அப்பாளேக்குப் பூமாலே சூட்டி, அதனழகைத் தம் கூந்தலோடு ஒப்பிட்டுப் பார்ப்பர். குறிஞ்சி நிலந்துக் குரியதான செங்காந்தளின் பூ, மகளிரின் கைக்கு உவமை கூறப்படுவது; அது தேவருலகத்தில் இன்மையால், இங்கு வந்த தேவமாதர் அப்பூவுக்கு மணிக் கடகம் பூட்டி, அதனழகைத் தம்கைகளோடு ஒப்பிட்டுக் காண் பர். இதுவும் அம்மலேயின் சிறப்புக் கூறியவாறும். அம்மலேக் குறத் தியரும் 'மாந்தளிரனேயமேனி' யுடையவரென்றது, மலேயின் சிறப்பை மிகுவித்ததாம்.

(பி - ம்.) 2. கூந்தலின் கமுகம்பாளேக்; கமமும்பாரக்; ஒப்பக் காண்பர்.
3. அமரர் மாதர்; எரிமணிக்; எதிர்மணிக்.
4. காந்தளம் பொதியிற்; சேர்த்துக்; கையினேடு. (42)

932. சரம்பயில் சாப மன்ன புருவங்க டம்மி லாட
நரம்பினே டினிது பாடி நாடக மயிலொ டாடும்
அரம்பையர் வெறுத்து நீத்த வவிர்மணிக் கோவை யாரம்
மரம்பயில் கடுவன் பூண மந்திகண் டுவக்கு மாதோ.

நரம்பினேடு இனிது பாடி-யாழ் நரம்புடனே (பொருந்த) இனிமையாகப் பாடி, மயிலொடு நாடகம் ஆடும்-(அங்குள்ள) மயில்

களோடொப்ப நடனமும் ஆடுகிற, அரம்பையர்-தெய்வ மாதர், (தம் காதலரிடத்து உண்டான பிணக்கால்) சரம் பயில் சாபம் அன்ன புருவங்கள்-அம்பு பொருந்திய வில்லைப் போன்ற (தம்) புருவங்கள், தம்மில் ஆட-(சினத்தின் குறியாகத்) தம்முள் ஒத்துத் துடிக்க, வெறுத்து நீத்த-வெறுப்புக்கொண்டு கழற்றி யெறிந்த, அவிர் மணி கோவை-ஒளிமிகும் இரத்தின மாலைகளையும், ஆரம்-முத்து வடங்களை யும்,மரம் பயில் கடுவன்-மரங்களிலே பழகித் திரியும் ஆண் குரங்குகள் (கண்டெடுத்து), பூண-தமக்குப் பூட்ட, மந்தி-(அவற்றை அணியப் பெற்ற) பெண் குரங்குகள், கண்டு-அவ்வணிகலன்களைக் கண்டு, உவக் கும்-மகிழும். மாது, ஓ-அசை. பூண: பிறவினைப் பொருளில் வந்தது.

அம்மலையிடத்தே தேவசாதியார் வந்து பழகுதல் முன்னும் பலவாறு கூறப்பட்டது, அவ்வகையில் இங்கும் தேவமகளிர் ஆடலும் பாடலுங் கூறினவர், குரங்குகளின் செயலையும் அழகுறக் கூறினார். ஏனை விலங்குகளினும் மிக்க அறிவுடையதாகலின், அணிகலன்களை யெடுத்த ஆண்குரங்கு பெண்குரங்குக்கு அவற்றைப் பூட்டிற்றென்க. ஆண்குரங்கே அவற்றை அணிந்துகொண்ட தென்றலும் ஆம். கடுவன்-குரங்கின் ஆண்; மந்தி-பெண். புருவங்கள் துடித்தல் சினக் குறிப்பு. சரம்: கண்; சாபம்: புருவம்.

(பி - ம்.) 1. சாபமென்னப்; தம்மினுட; தம்மினூடா; தம்மிலாடா; தம்மினோட; தம்மிலோட; புருவங்கண்டம்மினுட; புருவங்கடம்மினோடு; புருவங்க ணொளியத் தம்மின்.
2. நரம்பினொடினிது; நரம்பினி னினிது; மயிலோடாடி.
3. நீத்தவயிர்மணிக்.
4. வரமபில கடுவன்பூண; பூண்டு; உவப்ப. (43)

933. சாந்துயர் தடங்க டோறுந் தாதுரா கத்துச் சார்ந்த
கூந்தலம் பிடிக ளெல்லாங் குங்கும மணிந்த போலும்
காந்தின மணியின் சோதிக் கதிரொடுங் கலந்து மூசச்
சேந்துவா னகமெப் போதுஞ் செக்கரை யொக்கு மன்றே.

சாந்து உயர்-சந்தன மரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள, தடங்கள் தோறும்-அம் மலைப் பக்கங்களிலெல்லாம் (உள்ள), தாதுராகத்து சார்ந்த-காவிக்கற்களின் செந்நிறம் படியப்பெற்ற, கூந்தல் அம் பிடி கள் எல்லாம்-புறமயிரையுடைய அழகிய பெண்யானைகள் எல்லாம், குங்குமம் அணிந்த போலும்-குங்குமக் குழம்பு பூசப்பெற்றவை போலக் காணப்படும்; காந்து இனம் மணியின்-ஒளி வீசுகின்ற கூட்ட மான பதுமராகக் கற்களின், சோதி கதிரொடும் கலந்து-மிக்க செவ் வொளியுடனே (காவிக்கல்லின் துகள்) கலக்கப்பெற்று, மூச-(ஆகா யத்திலே) நிறையப்படிதலால், வான் அகம் சேந்து-ஆகாய இடமெங் கும் செந்நிறமுடையதாகி, எப்போதும் செக்கரை ஒக்கும்-எந்நேர மும் செவ்வானம்போலத் தோற்றும். அன்று, ஏ: அசைகள்.]

அம்மலையிடத்தே காவிக் கற்களும் பதுமராகக் கற்களும் அங்கங்கே உள்ளனவாக, காவிக் கல்லின் புழுதி படிந்த யானைகள் செந்நிறங்கொண்டு, குங்குமக் குழம்பு அப்பினவைபோலத் தோன்றுவனவாகும்; பதுமராகக் கற்களின் செவ்வொளி ஆகாயமளாவ வீசிக்கொண்டிருக்க, அவ்வொளியிடையே காவிக்கல் புழுதியுங்கலந்து போய் ஆகாயத்திலே பரவுதலால் ஆகாயம் எப்போதும் செவ்வானம் போலத் தோன்றும் என்றவாறு. மாலைக்காலத்திலே மட்டும் தோன்றும் செவ்வானம் அங்கே எப்போதுங் காணப்பட்டது என்றது **பிறிதின்குணம்பெறல் அணி.**

தாதுராகம்: வடமொழிச் சந்தி பெற்றது. தாது-காவிக்கல்; ராகம்-செந்நிறம்.

(பி - ம்.) 1. சாந்துசாய்; தாதுராகத்திற்; சாதருபத்துச்; சாய்ந்த.
2. குங்கும மணிந்ததென்னக்.
3. காந்திய மணியின் சோதி; கதிரொடு; வீசச்.
4. சேர்ந்து; சேர்ந்த; ஒக்குமாதோ; ஒத்ததன்றே. (44)

934. நிலமகட் கணிக ளென்ன நிறைகதிர் முத்தஞ் சிந்தி
மலைமகள் கொழுநன் சென்னி வந்துவீழ் கங்கைபோன்ற
அலகில்பொன் னலம்பி யாரஞ் சார்ந்துவீ ழருவி மாலை
உலகளந் தவன்றன் மார்பி னுத்தரீ யத்தை யொத்த.

(அச்சந்திரசைலத்திலே), அலகு இல் பொன் அலம்பி-அளவற்ற பொன்னைக் கொழித்துக்கொண்டு, ஆரம் சார்ந்து-முத்துக்களும் சேரப்பெற்று, வீழ் அருவி மாலை-(உச்சியிலிருந்து) விழுகின்ற அருவியின் வரிசைகள், நிலம் மகட்கு அணிகள் என்ன-பூமிதேவிக்கு ஆபரணங்களாகத் தக்கவையென்று, நிறை கதிர் முத்தம் சிந்தி-மிக்க ஒளிபொருந்திய முத்துக்களைச்சிதறிக்கொண்டு, மலைமகள் கொழுநன் சென்னி வந்து வீழ்-பார்வதியின் நாயகனான சிவபெருமானது சடைமுடியினின்றும் (கீழ்நோக்கி) வந்து விழுகின்ற, கங்கை போன்ற-(பல பிரிவான) கங்கையைப் போன்றிருந்தன; உலகு அளந்தவன் தன் மார்பின்-மூவுலகங்களையும் அளந்த திரிவிக்கிரம மூர்த்தியின் மார்பிலே தரித்த, உத்தரீயத்தை ஒத்த-மேலாடையையும் (அவை) ஒத்திருந்தன.

ஒருவகையில் சிவபெருமானையும் ஒருவகையில் திருமாலையும் அம்மலைக்கு ஒப்பிட்டு, மலையுச்சியிலிருந்து விழும் அருவிகள் சிவபெருமான் சடை முடியினின்று விழும் கங்கையையும் திருமாலின் மார்பில் தரித்த உத்தரியத்தையும் ஒத்திருந்தன என்கின்றார். உச்சியிலிருந்து கீழ் நோக்கி அவை விழுதல் சிவபெருமான் திருமுடியினின்றும் கங்கை விழுதலையும், அவை மலையிலே படிந்து ஓடி வருதல் திருமால் தன் மார்பிலே உத்தரியம் தரித்திருத்தலையும் முறையே ஒக்கும் என்க.

அருவிகள் முத்துக்களை வாரிக்கொண்டு வருதலை, பூமிதேவிக்கு அவை அணிகளாகுமெனக்கருதிக் கொணர்ந்து தந்தனவாகக் குறிக்கின்றார். தற்குறிப்பேற்றமும் உவமையும் கலந்து வந்தன. உத்தரீயத்தை என்றவிடத்தில் உம்மை தொக்கது.

மலையருவி திருமாலின் உத்தரியம் போன்றதெனல்: 'மீயோங்கு செம்பொன் முடியாயிர மின்னிமைப்ப, ஓயாவரு வித்திர ளுத்தரி யத்தை யொப்ப......மாயோன் மகரக்கட னின்றெழு மாண்பதாகி' (**சுந்தர. *41***); **சுந்தர. *411***-ம் பார்க்க.

(பி - ம்.) 1. நிலமகட் கணியதென்ன: நிரைகதிர் முந்துச்சித்தி; சிந்த; வீழ.
2. வந்திழி கங்கைமான; கங்கைபோன்றும்.
3. அலம்பியோடிச்; அலம்பியார்க்கும்; அலம்பியார்ந்து; அலம்பியார்ப்பச்; சாந்துசேர்; சேர்ந்துவீழ்; சேந்துவீழ்; சார்ந்துசோர்; சேர்ந்துசோர்; சேர்ந்துசேர்; சார்ந்து சோர்; அலம்பியோடி யாரஞ்சேர்.
4. அளந்தருள்வோன் மார்பில்; மார்பத்து; உத்தரீகத்தை; உத்தரீ கத்தை. (45)

அங்கே தங்கியவர்கள் கண்டனவும் செய்தனவும்

935. கோடுலா நாகப் பூவோ டிலவங்க மலருங் கூட்டிச்
சூடுவார் களிவண் டோச்சித் தூநறுந் தேறல் கொள்வார்
கேடிலா மகர யாழிற் கின்னர மிதுனம் பாடும்
பாடலா லூட னீங்கும் பரிமுக மாதர்க் கண்டார்.

கோடு உலாம்-கொம்புகளிலே பூத்துள்ள, நாகம் பூவோடு-சுரபுன்னை மலருடனே, இலவங்கம் மலரும் - இலவங்கப் பூவையும், கூட்டி-சேர்த்துத் தொடுத்து, சூடுவார்-சூடிக் கொள்பவர்களும், களி வண்டு ஓச்சி-களிப்புடைய வண்டுகளை (மலர்களிலின்றும்) ஓட்டி விட்டு, தூ நறு தேறல் கொள்வார்-தூய நல்ல தேனைத் தாம் உட்கொள்பவர்களுமான சில பெண்கள், கேடு இலா-குற்றமில்லாத, மகர யாழின்-மகரவீணையின் இசையைப் போல, கின்னர மிதுனம் பாடும் பாடலால்-கின்னர மிதுனங்கள் பாடுகிற (இனிய) பாடலால், ஊடல் நீங்கும்-(தாம்கொண்ட) ஊடல் நீங்கப்பெறுகிற, பரிமுகம் மாதர்-குதிரை முகமுடைய (தேவசாதிப்) பெண்களை, கண்டார்—.

கின்னர மிதுனம் - இசையறியும் பறவை யிரட்டையையும், இசையில்வல்ல 'கின்னரர்' எனப்படும் தேவசாதியாரின் இரட்டையும் என்ற இரண்டையும் குறிக்கலாம். இக் கின்னரர் என்போர், குதிரை முகமும் மானுட வுடலுங் கொண்டவர்; (868-குறிப்புப் பார்க்க). சக்கரவர்த்தியின் பரிவாரங்களைச் சார்ந்தவர்களாய், அம் மலையிலேயுள்ள அழகிய பூக்களைக் கொய்து சூடியும், மலர்களிலிருந்து தேனை எடுத்து உட்கொண்டும் இன்பமாகப் பொழுதுபோக்கிய பெண்கள், கின்னரசாதி மகளிரின் ஊடலையும் ஊடல் நீக்கத்தையும் கண்டனர் என்க. மகளிராதலின் இக்காட்சியிலே அவர்கள் நாட்டம் சென்

றது போலும். இங்கே குறித்த 'பூச்சூடல்', 'தேறல் கொள்ளல்' என்ற இரண்டும் மேல்வரும் 'பூக்கொய் படலம்', 'உண்டாட்டுப் படலம்' என்பவற்றிற்குத் தோற்றுவாய் என்பர்.

(பி - ம்.) 1. நாகப்போதோடு; இலவங்கவலரும்; இலவங்கப்பூவும்; இலவங்கப் போதும்.
2. வண்டோட்டித் தூய்நறும்; தேறலுண்பார்; தேறல்துய்ப்பார்.
3. யாழின் கின்னர.
4. பரிமுகமாக்கள்; பரிபுரமாதர்: பாடலாலூடனீங்கிப் பனிமலரமளி சேர்வார். (40)

936. பெருங்களி றேயு மைந்தர்
பேரெழி லாகத் தோடும்
பொருந்துணைக் கொங்கை யன்ன
பொருவில்கோங் கரும்பின் மாடே
மருங்கெனக் குழையுங் கொம்பின்
மடப்பெடை வண்டுந் தங்கள்
கருங்குழற் களிக்கும் வண்டும்
கடிமணம் புணர்தல் கண்டார்.

பெரு களிறு ஏயும் மைந்தர்-பெரிய ஆண் யானையைப்போன்ற வீர இளைஞருடைய, பேர் எழில் ஆகத்தோடும்-மிக்க அழகு பொருந்திய மார்புடனே, பொரும்-போர் செய்யவல்ல, துணை கொங்கை அன்ன-இரட்டையான (தங்கள்) தனங்களையொத்த, பொரு இல்-(வேறு) உவமை இல்லாத, கோங்கு அரும்பின் மாடு-கோங்க மலரரும்புகளிலே, மருங்கு என குழையும் கொம்பின்-(தங்கள்) இடைபோல ஒசியும் பூங்கொம்புகளில் தங்கும் இயல்புள்ள, மட பெடை வண்டும்-இளமையான பெண் வண்டுகளும், தங்கள் கரு குழல் களிக்கும் வண்டும்-தங்களுடைய கரிய கூந்தலிலே(மொய்த்துக்)களிப்புறும் (ஆண்) வண்டுகளும், (கூடி), கடி கணம் புணர்தல் - இன்பமான மணங்கொள்ளுதலை, கண்டார்-(சிலர்) கண்டார்கள்.

வீர மைந்தர், ஆண் யானை போன்ற தோற்றமும் அஞ்சாமையும் உடையவராயினும், மாதருடைய கொங்கைப் போருக்கு மடங்குவர் என்பது தோன்ற மங்கையரின் கொங்கைகளை மிகுத்துக் கூறினர். மகளிர் கொங்கைக்கு உவமை கூறப்படும் கோங்கரும்புகளுக்குக் கொங்கையை எதிர்நிலை யுவமையாக்கி, வேறு உவமையில்லாத என்றும் சிறப்பித்தார். 'மருங்கெனக் குழையுங் கொம்பு' என்றதும் எதிர்நிலையுவமையாம். முன்னே 'பெடை வண்டு' என்றமையின், பின்னே 'வண்டு' என வாளாகூறியது ஆண் வண்டுகளை யென்பது பெறப்படும். மகளிரும் மைந்தருமாகிய இருபாலாரும் மகிழ்ச்சி மிக்க மனத்தோடு அங்கே பலவிடங்களிற் சென்று பல காட்சிகளைக் காண்கின்றனராதலின், இன்பக் குறிப்புள்ளவையெல்லாம் அவர்கள் கண்களிற்படுவன

வாயின என்க. மேலே 938-941 பாடல்களில் வருவனவும் காண்க. இராமபிரானது திருமணத்துக்கு முன்னே இத்தகைய இன்ப நிகழ்ச்சிகளைச் சாதுரியமாகக் குறிப்பிக்கின்றார்.

கொங்கைக்குக் கோங்கரும்பு: முருகு. 34-5 அடிக்குறிப்புப் பார்க்க. 'பொன்னீன்ற, கோங்கரும் பன்ன முலையாய்'(நாலடி. 400); 'பொன்னிறக் கோங்கின் பொங்குமுகிழ்ப் பென்ன,முன்ன ரீன்ற முலை முதல்' (பெருங். 1. 41: 64-5.).

(பி - ம்.) 1. பெருங்களிப்புற்ற; பெருங்களியுற்ற; பெருங்களிறனைய; ஆகத்தோடு.
2. கொங்கையென்னப் பொலிந்த.
3. குழைக்குங் கொம்பின்; வண்டுதங்கள்.
4. களிக்கும் வண்டு: புணரக்கண்டார்; புணரக்காண்பார்; புணருமாதோ. (47)

937. படிகத்தின் றலமென் றெண்ணிப் படர்சுனை முடுகிப் புக்க
சுடிகைப்பூங் கமல மன்ன சுடர்மணி முகத்தி னார்தம்
வடகத்தோ டுடுத்த தூசு மாசினீர் நனைப்ப நோக்கிக்
கடகக்கை யெறிந்து தம்மிற் கருங்கழல் வீரர் நக்கார்.

படர் சுனை-பரந்த நீர்ச்சுனையை, படிகத்தின் தலம் என்று எண்ணி-பளிங்குக் கற்கள் படுத்த தரையென்று (தவறாகக்) கருதி, முடுகி புக்க-விரைவாக(ச்சுனையில்) இறங்கிய, சுடிகை-சுட்டியணிந்த, பூ கமலம் அன்ன-(புதிய) தாமரை மலர் போன்ற, சுடர் மணி முகத்தினார் தம்-ஒளிர்கின்ற அழகிய முகத்தையுடைய பெண்களின், வடகத்தோடு,உடுத்த தூசும்-மேலாடையோடு அரையில் உடுத்த ஆடையையும், மாசு இல் நீர் நனைப்ப-களங்கமில்லாத அச் சுனைநீர் நனைத்துவிட, நோக்கி - அதனைக்கண்டு, கரு கழல் வீரர் - பெருமைக்குரிய வீரக்கழலையணிந்த இளைஞர், கடகம் கை எறிந்து - தோள்வளையணிந்த(தம்)கைகளைக் கொட்டி, தம்மில் நக்கார்-தமக்குள்ளே நகையாடினர்.

சுனையில் உள்ள தெளிந்த தூய நீருக்கும், படிகக் கற்கள் படுத்த தரைக்கும் வேறுபாடறிய மாட்டாதவராய்ப் பெண்கள் நீரில் இறங்கியதனால், அவர்கள் ஆடை நனைந்திட்டதைக்கண்ட ஆடவர் கை கொட்டி நகையாடினர் என்க. இதனால் அம்மலைச் சுனைகளின் சிறப்புக் கூறியவாறாயிற்று.

பளிங்கும் நீரும் தெளிந்துணரப் படாமை: 113-குறிப்புப் பார்க்க. பாகவத. 10. சிசுபாலனைக் கொன்றவத்தியாயம். 118.

(பி - ம்.) 1. படிகத்தைப் புனலென்றெண்ணிப்; உன்னிப்; சுனைமுடுகப்புக்க; சுனை மூழ்கப்புக்க; கனைபதனிற்புக்க; சுனையதனின்வீழ்ந்த: சுனைமூழ்கிப் புக்கார். 2. சுடர்மதி முகத்தினார்.
3. வடகத்தொடுடுத்த; வடகத்தே படுத்த; வடகத்தொடுத்தர்கம்;உடுத்த தூசை: மாசில; மாசிலார்; நனையவீசும்; நனைவனவாகக்கண்டு; மற்றதினனையக் கண்டு: நனைவரவாசுக் கண்டு; நனைவன அனையர் கண்டு.

4. கடக்கை மறித்துத் தம்மிற்; கடகக்கை மறிக்க நோக்கிக்; கடகத்தை யெறிந்து தம்மிற்; கடுங்கழல்; கனகழல்; கண்சுளி; வேந்தர்நக்கார்; கருங்குழல் விழ நக்கார். (48)

இப்பாடல் மேலே 941-க்குப்பின் இருத்தல் இன்னும் பொருத்தமுடையதாகும்.

938. பூவணை பலவுங் கண்டார் பொன்னரி மாலை கண்டார்
மேவருங் கோப மன்ன வெள்ளிலைத் தம்பல் கண்டார்
ஆவியி னினிய கொண்கர்ப் பிரிந்தறி வழிந்த விஞ்சைப்
பாவையர் வைகத் தீய்ந்த பல்லவ சயனங் கண்டார்.

(மலைக்காட்சிகளை நோக்கிச் சென்றோர்), பூ அணை பலவும் கண்டார்-மலர்ப்படுக்கைகள் பலவற்றைக் கண்டனர்; பொன்னரி மாலை கண்டார்-(அம்மலர்ப்படுக்கைகளின் பக்கலிலே மகளிர் நீத்த) பொன்னரி மாலைகளைக் கண்டனர்; மேவரும் கோபம் அன்ன-விருப்பமுண்டாகிற இந்திர கோபத்தைப் போன்ற, வெள் இலை தம்பல் கண்டார்-வெற்றிலைத் தம்பலத்தைக் கண்டனர்; ஆவியின் இனிய-தம் உயிரினும் இனியவரான, கொண்கர் பிரிந்து-கணவன்மாரைப் பிரிதலால், அறிவு அழிந்த-மதிமயங்கிய, விஞ்சை பாவையர்வைக-வித்தியாதர மகளிர் தங்கியதனால், தீய்ந்த-(அவர்கள் உடம்பின் வெப்பம் தாங்காமல்) தீய்ந்துபோன, பல்லவ சயனம் கண்டார்-தளிர்ப்படுக்கைகளையும் கண்டனர்.

கோபம்-இந்திர கோபப்பூச்சி. ஆடவரும் மகளிரும் மென்று துப்பிய வெற்றிலைத் தம்பலம் அங்கங்கே கிடப்பது, இந்திர கோபப் பூச்சிகள் மொய்த்திருத்தல் போன்ற தோற்றமுடையது. பொன்னரி மாலை-மகளிர் கழுத்தணி வகையுள் ஒன்று; 1058-குறிப்புப் பார்க்க. அவர்கள் புலவியினாலோ அல்லது கலவியின் பொருட்டோ கழற்றிப் போகட்டவை கீழே கிடந்தன.

தம்பலத்துக்கு இந்திர கோபம்: கிட்கிந்தா. 460. பல்லவ சயனம்: அயோத். 769.

(பி - ம்.) 1. பூவணம் பலவும்; பொன்னணி மாலை.
2. மேவிருங்; மேவியங்; தம்பர் கண்டார்.
3. ஆவியினனைய; கொண்கர் பிறிந்து; கொண்கற் பிறித்து; அறிவிழந்த; சிந்தைப்.
4. வைகித் தீய்ந்த; படுக்கத் தீய்ந்த; பல்லவச் சயனம். (49)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

939. பானலங் கண்க ளாடப் பவளவாய் முறுவ லாடப்
பீனவெம் முலையி னிட்ட பெருவிலை யார மாடத்
தேன்முரன் றளகத் தாடத் திருமணிக் குழைக ளாட
வானவர் மகளி ராடும் வாசநா றூசல் கண்டார்.

பானல் அம் கண்கள் ஆட-கருங்குவளை மலர்போன்ற கண்கள் பிறழவும், பவளம் வாய் முறுவல் ஆட-பவளம் போன்ற (தம்)

வாயிலே புன் சிரிப்புத் தோன்றவும், பீனம் வெம் முலையின் இட்ட-பருத்தனவும் விரும்பத்தக்கனவுமான தனங்களிலே அணிந்துள்ள, பெருவிலை ஆரம் ஆட-மிக்க விலைமதிப்புடைய முத்துமாலைகள் அசையவும், அளகத்து-(தம்) கூந்தலிலே, தேன் முரன்று ஆட-தேன்வண்டுகள் ஒலித்துக்கொண்டு வட்டமிடவும், திரு மணி குழைகள் ஆட-(காதுகளிலே) அழகிய மணிகள் இழைத்த குண்டலங்கள் (தொங்கி) அசையவும், வானவர் மகளிர் ஆடும்-தெய்வ மாதர் (அமர்ந்து) ஆடுகிற, வாசம் நாறு ஊசல் கண்டார்-பரிமளம் வீசும் ஊஞ்சல்களையும் கண்டார்கள்.

தெய்வ மகளிர், தெய்வ தருக்களின் பூக்களைத் தாமும் சூடி: ஊஞ்சலின் வடங்களிலும் சுற்றியிருந்தலின் 'வாசம் நாறூசல்' என்றார்.

மகளிர் ஊஞ்சலாடுங்கால் உண்டாகும் இயற்கைத் தோற்றத்தை அழகுற எடுத்துக் கூறுகிறார்; தன்மை நவிற்சியணி. 'ஆட' என்னுஞ் சொல் மீண்டும் மீண்டும் வந்தது சொற்பின் வருநிலையணி.

(பி - ம்.) 1. கண்கள்காட்டப்; பனுவல்வாய்: முறுவல்காட்டப்; முறுவல்தோன்றப்.
2. முலையிலிட்ட.
3. தேனரன்றளகத் தோடும்; தேனறவளகத் தோடும்.
4. வானர மகளிர்; மகளீர்: வாமநாறு. (50)

940. சுந்தர வதன மாதர் துவரிதழ்ப் பவள வாயும்
அந்தமில் சுரும்புந் தேனு மிஞிறுமுண் டல்குல் விற்கும்
பைந்தொடி மகளிர் கைத்தோர் பசையில்லை யென்ன விட்ட
மைந்தரி னீத்த தீந்தேன் வள்ளங்கள் பலவுங் கண்டார்.

அல்குல் விற்கும்-தம் அல்குலை விலைக்கு விற்கிற, பசுமை தொடி மகளிர்-பசிய பொன்வளையல்க ளணிந்த வேசையர், ஓர் பசை இல்லை என்ன-(முன்பு பொருள் நிறையக் கொடுத்த ஆடவரிடத்தே) மேலே பொருட்பசை யில்லையென்று அறிந்து, கைத்து விட்ட - வெறுத்துக் கைவிட்ட, மைந்தரின்-இளைஞரைப்போல, சுந்தர வதனம் மாதர்-அழகிய முகத்தையுடைய பெண்களின், துவர் இதழ் பவளம் வாயும்-சிவந்த உதடுகளையுடைய பவளம்போன்ற வாயும், அந்தம் இல் சுரும்பும் தேனும் மிஞிறும்-அளவற்ற சுரும்பு முதலிய வண்டினங்களும், உண்டு நீத்த-பசையறப் பருகி வறிதே கைவிட்ட. தீம் தேன் வள்ளங்கள் பலவும்-இனிய மதுக் கிண்ணங்கள் பலவற்றையும், கண்டார்—.

இன்பக் களிப்பில் திளைக்கும் மாதர், மதுவை அழகிய கிண்ணங்களிலே ஊற்றிச் சுவைத்துப் பருகியபின், கிண்ணங்களை அலட்சியமாகப் போகட்டுவிட, அவற்றில் வண்டுகள் மொய்த்துப் பசையறப் பருகிவிடுதலின், கிண்ணங்கள் கேட்பாரற்றுக் கிடந்தன. இத்த

மைய கிண்ணங்களுக்கு, கையிலுள்ள பொருள் முழுதும் பறித்துக் கொண்டு, பசையில்லை யென்றறிந்தவுடன் வேசையரால் கைவிடப் படும் ஆடவரை உவமித்துள்ள அழகும் 'பசை' என்ற சொல்லின் நயமும் உன்னற்பாலன. கைத்து-கையிடத்ததான என்றலுமாம்.

சுரும்பு முதலியன வண்டின் சாதிகள்: 876, 921-குறிப்புக்கள் பார்க்க. துவரிதழ்ப் பவளவாய்: ஒப்பு: 'துவரிதழ்ப் பவளவாயும்' (திருமாலை. 20). பரத்தையர், பொருளற்ற ஆடவரைக் கைவிடுதல்: 'பேணிய கணிகையும் பிறர்நலங் காட்டிக், காண மிலியெனக் 'கையுதிர்க் கோடலும்'(மணி. 16: 9-10; ஷை 18: 15-22ம் பார்க்க.

(பி - ம்.) 1. வானமாதர். 2. ஞிமிறும்; ஆசைவிற்கும்.
3. பந்தடிமகளிர்; கைக்கோர்; பசையில; என்னநீத்த; என்னவீய்ந்த;
4. மைந்தரி னினிய; மைந்தரு மியைந்த; வாளங்கள் பலவும். (51)

941. அற்பக லாக்குஞ் சோதிப் பளிக்கறை யமளிப் பாங்கர்
மற்பக மலர்ந்த திண்டோள் வானவர் மணந்த கோல
விற்பகை நுதலி னார்தங் கலவியின் வெறுத்து நீத்த
கற்பக மீன்ற மாலை கலனெடுங் கிடப்பக் கண்டார்.

அல் பகல் ஆக்கும் சோதி - இரவையும் பகலாக்கத் தக்க பேரொளியுடைய, பளிங்கு அறை-பளிங்காலியன்ற அறையினுள்ளே (அமைந்த), அமளி பாங்கர்-படுக்கையின் பக்கலிலே, மல் பக-மல்லரும் (கண்டவளவிலே) அஞ்சியோடும்படி, மலர்ந்த திண் தோள்-அகன்ற திண்ணிய தோள்களையுடைய,வானவர் மணந்த-தேவர்களைக் கூடின, வில் பகை நுதலினர்-(உவமையில்) வில்லோடு மாறுகொள்ளும் (அழகிய) நெற்றியையுடைய தெய்வ மகளிர், தம் கலவியின்-தம் புணர்ச்சிக் காலத்தே, வெறுத்து நீத்த-(இடையூறுருகுமென) வெறுத்துக் கழற்றிப் போகட்ட, கற்பகம் ஈன்ற மாலை-கற்பக தருக்கள் தந்த பூமாலைகள், கலனொடும்-(அவ்வாறு கழற்றியிடப்பட்ட) அணிகலன்களுடனே, கிடப்ப-விழுந்து கிடக்க, கண்டார்—.

அம்மலை தேவசாதியாரின் தொடர்புடைய தென்பதனை இதனாலுங் கூறினர். பளிக்கறை-பளிங்குப் பாறையுமாம். மல் பக-மல் தொழில் பிறரிடத்து இல்லாது போகும்படி என்றலுமாம்.

மற்பக மலர்ந்த திண்டோள்: ஒப்பு: 'மற்பகம் மலர்ந்தகன்ற மார்பின்மேல்' (சீவக. 2424). பளிக்கறை: அயோத். 757; ஆரணிய. 290, 1066.

(பி - ம்.) 1. அற்பகலாகும்.
2. மற்பக வலர்ந்த; மற்பகம் வார்ந்த: வாளவர்; மண்ணவர்: மலர்ந்த.
3. விற்பகர்; விற்பகல்: நுதலார் தங்கள்; கலவ்யில்; புலவியில்: கலங்கி நீத்த. 4. கலனொடு; கலமொடு; கலையொடும்: கிடக்கக். (52)

942. கையென மலர வேண்டி யரும்பிய காந்த ணோக்கிப்
பையர விதுவென் றஞ்சிப் படைக்கண்கள் புதைக்கின் றாரும்
நெய்திரள் வயிரப் பாறை நிழலிடைத் தோன்றும் போதைக்
கொய்திவை தருதி ரென்று கொழுநரைத் தொழுகின் றாரும்.

கை என மலர வேண்டி-(மகளிரின்) கைபோல(த்தாம்) மலர விரும்பி, அரும்பிய காந்தள் நோக்கி-அரும்பாகி யிருந்த காந்தளை (காந்தள் அரும்பை)ப் பார்த்து, இது பை அரவு என்று அஞ்சி-இது படத்தையுடைய பாம்பாகும் எனக் கருதி அச்சங்கொண்டு, படை கண்கள் புதைக்கின்றாரும்-வேற்படை போன்ற (தம்) கண்களைப் பொத்திக்கொள்பவர்களும், நெய் திரள்-வெண்ணெய்போலத் திரண்டுள்ள, வயிரம் பாறை நிழல் இடை-வைரப் பாறைகளின் ஒளியிலே, தோன்றும் போதை -(பிரதிபிம்பமாகக்) காணப்படும் பூக்களை (க்கண்டு), இவை கொய்து தருதிர் என்று-இப்பூக்களைப் பறித்துத் தாருங்கள் என்று சொல்லி, கொழுநரை தொழுகின்றாரும்-தம் கணவன்மாரை வணங்கி வேண்டுபவரும் (ஆயினர் மாதர்).

இதுவும், அடுத்ததுமாகிய இரண்டு பாடல்களில் சில மாதரின் செயல்களைக் குறிக்கின்றார்.

காந்தளின்பூ மகளிர் கைக்கு உவமை கூறப்படுவது; அது, 'அவர்கள் கைபோல மலர வேண்டி அரும்பிற்று' என்றது கவி சாதுரியம். காந்தட்போது படம் விரித்த பாம்பின் தலைபோன்ற தோற்றமுடையதாதலின், அதனைக் கண்டு மகளிர் அஞ்சினரென்க. வயிரப் பாறையின் ஒளியிலே பிரதிபிம்பமாகத்தோன்றிய மலர்களை உண்மையான மலரென்று கருதின ரென்றதற் கேற்ப, வயிரப் பாறையைச் சுனை நீரெனக் கருதினரென்று கொள்ளுதல்தகும். முன்னே சுனையைப் படிகப் பாறையென மயங்கினமை (937) கூறினர்.

காந்தள் மலர் பாம்பு போலத் தோற்றுதல்: 'வாளெயிற் றரவம் போல வான்றலை தோன்ற வார்ந்த, தாளுடைக் கோடல்' (கிட்கிந்தா. 458); 'அரவுபைத்தாவித்தன்ன வங்காந்த ளவிழ்ந் தலர்ந்தன' (சீவக. 1651); மற்றும் குறுந். 185; கலி. 45; திணைமொழி. 29; திணைமாலை. 107, 119, 150; கார்நாற். 11. என்ற இடங்களும் காண்க. பெண்கள் அச்சத்தாற் கண் புதைத்தல்: 846; 'காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள், தாமரைக்கண் புதைத் தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலான்' (கலி. 39: 1-2); ஈற்றடி. மு. ஒப்பு: 861.

(பி - ம்.) 1. இபம்பிய காந்தள். 2. பையரவிவையென்று; பையரவேயென்று; புதைக்கின்றேநம்; புடைக்கின்றாரும்; பதைக்கின்றாநம்.
3. நெய்தவழ்; நெய்திகழ்; நெய்கிளர்: நிழலிடை தோன்றும்; நிழல்படத் தோன்றும்: நிலவிடைத் தோன்றும்; நிழலிடத் தொன்றும் போதே.
4. கொய்திது; கொய்தவை; கொய்துநீர்; தருதிரென்னக்; தருவீரென்று; தருகவென்று.

943. பின்னங்க ளுகிரிற் செய்து
பிண்டியந் தளிர்கைக் கொண்ட
சின்னங்கண் முலையி னப்பித்
தேமலர் கொய்கின் ருரும்
வன்னங்கள் பலவுந் தோன்ற
மணியொளிர் மயிலி னல்லார்
அன்னங்கள் புகுந்த வென்ன
வகன்சுனை குடைகின் ருரும்.

வன்னங்கள் பலவும் தோன்ற-பல நிறங்கள் வெளிப்படும் வண்ணம், மணி ஒளிர்-அணிகலன்களின் இரத்தினங்கள் ஒளி வீசுகின்ற, மயிலின் நல்லார்-மயில் போலும் சாயலையுடைய மகளிர், பிண்டி அம் தளிர்-அசோகின் அழகிய தளிர்களை, உகிரின் பின்னங்கள் செய்து - நகத்தினுல் சிறு துண்டுகளாகக் கிள்ளி, கை கொண்ட-கைநிறையக் கொண்ட, சின்னங்கள்-அத்துண்டுகளை, முலையின் அப்பி-(தங்கள்) தனங்களிலே பொருத்திக்கொண்டு, தேம் மலர் கொய்கின்ருரும்-தேன் பொருந்திய பூக்களைப் பறிக்கின்றவர்களும், அன்னங்கள் புகுந்த என்ன-அன்னப் பறவைகள் (வேற்று நிலத்தினின்றும் அங்கு) வந்து சேர்ந்துள்ளன என்னும்படி, அகன்சுனை-விரிந்த சுனைகளில் (இறங்கி), குடைகின்ருரும்-நீராடுபவர்களும் (ஆயினர்).

இப்பாடலில் வரும் 'மயிலின் நல்லார்' என்பதனையே முந்திய பாடலுக்கும் எழுவாயாகக் கொள்க. இரண்டு பாடல்களிலும் முடிக்குஞ்சொல் இன்றி அவாய் நிலையாக நிறுத்தினமை, இத்தகைய பல செயல்கள் அங்கே நிகழ்ந்தமை தோற்றுதற் கென்க. பிண்டி அம் தளிர் உகிரின் சின்னங்கள் பின்னங்கள் செய்து, கைக்கொண்ட, முலையின் அப்பி எனக் கூட்டுதலும் ஒன்று.

தளிர்களைக் கிள்ளித் தனங்களில் அலங்காரமாக அப்பிக் கொள்ளுதல் பழங்கால மகளிர் வழக்கம் என்பதனைப் பின் வருபவற்ருலும் உணர்க: 'பொறிப்பூம் புன்கின் எழிற்றகை ஒண் முறி, சுணங்கணி வனமுலை அணங்குகொளத் திமிரி' (நற். 9); 'கொழுமடற் குமரி வாழைத் துகிற்சுருள்கொண்டு தோன்றச், செழுமலர்க் காம வல்லி செருக்கயல் சிற்ப மாகக், கழுமணிச் செம்பொ ஞழிக் கைவிர லுகிரிற் கிள்ளி, விழுமுலைச் சூட்டி நின்ருர் விண்ணவர் மகளி ரொத்தார்' (சீவக. 2716); 'சித்திரமாகச் செந்தளிர் வாங்கிப், பத்திரச் சேதம் பற்பல கிள்ளியும்' (பெருங். 2. 14: 30-31).

(பி - ம்.) 1. உகிரிற்செய்த; தளிர்கைக்கொண்டே; தளிர்க்கைக்கொண்ட; தளிரிற் கொண்ட. 2. முலையிலப்பித்; முலைமேலப்பித்.
3. மணியொளி; மணிவட; வரையினல்லார்; முலையினல்லார்; வலையி னில்லா; குயிலினில்லாது; மலையினில்லா; வரையினில்லா.
4. புகுந்ததென்ன; குடைவதென்ன. (54)

## மலையின் சிறப்புக்கள்

(வேறு)

944. ஈனு மாழை யிளந்தளி ரேயொளி
ஈனு மாழை யிளந்தளி ரேயிடை
மானும் வேழமு நாகமு மாதர்தோள்
மானும் வேழமு நாகமு மாடெலாம்.

மாடு எலாம்—அம்மலைப் பக்கமெல்லாம், மாழை இளம் தளிரே-மாமரத்தின் இளங் கொழுந்துகளே, ஒளி ஈனும்-பிரகாசிக்கும்; (மூற்றும்), மானும்-மான்களும், வேழமும்-யானைகளும், நாகமும்—குரங்குகளும், மாதர் தோள் மானும்-பெண்களின் தோள்களையொத்த, வேழமும்-மூங்கிலும், நாகமும்-சுரபுன்னையும் (எங்கும் காணப்படுவன); இடை-நடுவிடங்களில் (காணப்படுவன), ஈனும்-(அம்மலை) தருகின்ற, மாழை இளம் தளிரே-பொன்னின் மெல்லிய தகடுகளே. வேண்டுமிடத்து முடிபு வருவித்து உரைக்கப்பட்டது.

இதனுல் அம்மலையிடத்துள்ள தாவரங்கள், விலங்கினங்கள் சிலவற்றைக் கூறி, அது பொன் தாதுகளையும் தன்னிடத்து உடையதெனச் செல்வச் சிறப்பும் கூறுகின்ருர். மெல்லிய சிறு தகடுகளாகப் படிந்துள்ள பொன் தாதுகளைத் 'தளிர்' என்ருர். மாழை-மாமரம், பொன்; வேழம்-யானை, மூங்கில்; நாகம்-குரங்கு, (பாம்பும் ஆம்), சுரபுன்னை. 'மாதர் தோள் மானும் வேழம்' என்றது எதிர்நிலையுவமை.

இப்பாடலுக்குப் பொருள் பிறவகையாகவும் கூறுப.

இது முதல் ஒன்பது பாடல்கள் மடக்கு என்னும் சொல்லணி கொண்டன; சிசுபாலவதம் முதலிய சில வடமொழிக் காவியங்களிலும் வரைக்காட்சி கூறுமிடத்து இத்தகைய அமைப்புடைய சுலோகங்கள் உள்ளனவென்பர்.

(பி - ம்.) 1. ஈனும்வாழை: தளிரேயுடன்; தளிரேயுடல்; தளிரேயிடை.
2. ஈனும்வாழை; தனிரேயொளி; தளிரேயுடல்; தளிரேயுடன்; தளிரேயடி; தளிரேயுமால். 4. நாகமுமானுமே. (55)

945. புகலும் வாளரிக் கண்ணியர் பொற்புயம்
புகலும் வாளரிக் கண்ணியர் பூண்முலை
அகிலு மாரமு மாரவங் கோங்குமே
அகிலு மாரமு மாரவங் கோங்குமே.

புகலும்-(சிறப்பித்துச்) சொல்கிற, வாள் அரிக்கு அண்ணியர்-கொடிய சிங்கத்துக்கு ஒப்பான வீரர்களின், பொன் புயம்-அழகிய தோள்கள், வாள் அரி கண்ணியர்-வாள் போலும் செவ்வரி பரந்த கண்களையுடைய மங்கையரின், பூண் முலை - ஆபரணங்களை யணிந்த தனங்களை, புகலும்-விரும்பித் தழுவும்; (அவ்வாறு தழுவுதலால்),

அகிலும்-(தனங்களில் பூசிய) அகிற்குழம்பும், ஆரமும்-சந்தனக் குழம்பும், அங்கு ஆர-அப்புயங்களிடத்துப்பொருந்தி, ஓங்கும்-மணம்மிகும்; அகிலும்-அகில் மரங்களும், ஆரமும்-சந்தன மரங்களும், மாரவம் குங்கும மரங்களும், கோங்கும்-கோங்க மரங்களும், மே-(அம்மலையிடத்து) மேம்படுவன.

அம்மலையிலே, 'மைந்தர் மகளிரைத் தழுவுதலால், மகளிர் மார்பில் திமிர்ந்த களபக்குழம்பு மைந்தர் புயங்களிலே படிந்து(செயற்கையாக) மணம்வீசும்; அகில் முதலிய மணம் மிகுந்த மரங்கள் இயற்கையாகவே அம்மலையில் வளர்ந்து மேம்பட்டிருக்கும்' என இருவகைச் சிறப்புக்கள் கூறினர். தேவரும் வந்து தங்கி இன்பம் நுகர்தற்கு இடமானது அம்மலையென்பது முன்னே கூறப்பட்டது.

முதலடியிலும் வாள் அரி கண்ணியர் எனப் பிரித்து, ஒளி பொருந்திய வண்டுகள் மொய்க்கப்பெற்ற முடிமாலையுடைய வீரர் என உரைத்தலும் ஆம். 'பூண் முலை பொற்புயத்துப் புகலும்' எனக் கூட்டியுரைத்தலும் ஒன்று.

மூன்றும் அடியில் ஏகாரம், அசை; ஈற்றடியில் மாரவம் என்பது 'மரவம்' என்பதன் நீட்டல் விகாரம்; ஈற்றில், மேவும் எனற்பாலது 'மே'என நின்றது. ஈற்றடிக்குப் பொருள் பிறவாறும் உரைப்பர்.

(பி - ம்) 1. கண்ணியல் தோளிணை; கண்ணியர் பூண்முலை; கண்ணியர் போதிணை.
2. கண்ணியர் பூமுலை; கண்ணியர் தோளிணை.
3. ஆரவெங்கோங்குமாடு, ஆரவெங்கோங்குமே; ஆரவெங்கோங்குமால்: புகலும் வாளரிக் கண்ணியர் பூண்முலை.
4. ஆரமு மாரவெங் கோங்கமே; ஆரமு மாரமு மோங்குமே. (56)

946. துன்ன ரம்பை நெருங்கிய தொல்வரை
துன்ன ரம்பைய ரூருவிற் றோன்றுமால்
கின்ன ரம்பயில் கீதங்க ளென்னவாங்
கின்ன ரம்பயில் கின்றன ரேழைமார்.

தொல் வரை-பழமையான அம்மலையிலே, நெருங்கிய-நெருங்கி வளர்ந்துள்ளனவாகிய, துன் அரம்பை-(இலைகள்) அடர்ந்த வாழை மரங்கள், துன்-(அங்கு) வருகின்ற, அரம்பையர் ஊருவில் தோன்றும்-தேவமாதரின் தொடைகள்போலக் காணப்படும்; ஏழைமார்-மகளிர் பலரும், ஆங்கு-அங்கே, கின்னரம் பயில் கீதங்கள் என்ன-கின்னர மிதுனங்கள் பாடுகிற இன்னிசையென்னும்படி (அமைந்த),இன்நரம்பு அயில்கின்றனர்-இனிய யாழிசையைச் செவிமடுக்கின்றனர்.

ஆல்: அசை. நரம்பு; யாழிசைக்கு ஆகுபெயர். அயிலுதல்-உண்ணுதல்; இங்கே செவியால் நுகர்தலைக் குறிக்கும். வாழைகளைக் கூறியுள்ள முறை எதிர்நிலையுவமை.

அம்மலையிலே வந்து தங்கிய தெய்வ மகளிர் கின்னரமிதுனங் களின் இசைபோல இனிய யாழிசை பயில, அதனைச் சக்கரவர்த்தியின் பாடியைச் சார்ந்த மகளிர் கேட்டு இன்புற்றனர் என்க. 'கின்னரம் பயில் கீதங்கள் என்ன' என்பதற்கு, 'கின்னரங்களின் இசையை நுகர்ந் தது போலவே' என்று உரைத்தலும் ஆம்; அதாவது, கின்னரங்களின் இசை, யாழிசை என்ற இரண்டையும் நுகர்ந்தனர் என்றபடி.

கின்னரம் பயில் கீதங்கள்: 868-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. நிரம்பிய சூழ்வரை; சூழ்வரைத்.
3. கீதங்களென்னலாம்; என்னவாம்; என்னவே; என்னலாய்; அன்ன வாம். 4. ஏழையர்; ஏழையார். (57)

947. திமிர மாவுடற் குங்குமச் சேதகம்
திமிர மாவொடுஞ் சந்தொடுந் தேய்க்குமால்
அமர மாதரை யொத்தொளி ரஞ்சொலார்
அமர மாதரை யொத்ததவ் வானமே.

திமிரம் மா உடல்-இருள்போலும் (கரிய) நிறமுடைய காட்டுப் பன்றிகளின் உடம்பிலே, குங்குமம் சேதகம் திமிர-(மகளிர் தம் உடம் பினின்றும் வழித்தெறிந்த) குங்குமக் குழம்பு நிறைதலால், (அப்பன்றி கள்), மாவொடும்-மாமரத்திலும், சந்தொடும்-சந்தன மரத்திலும், தேய்க்கும்-(குங்குமக் குழம்பு போகும்படி, தம் உடம்பைத்)தேய்த்துக் கொள்ளும்; அமரமாதரை ஒத்து ஒளிர்-தேவமாதரைப்போல ஒளி யோடு விளங்குகின்ற, அம் சொல்லார்-அழகிய சொற்களைப் பேசும் மானுட மகளிர், அமர-அங்கு அமர்ந்திருத்தலால், மா தரை-சிறந்த அம்மலையின் பகுதி, அ வானமே ஒத்தது-அத்தேவருலகத்தையே ஒத் திருந்தது. ஆல்: அசை.

அம்மலையிலே ஆடவரோடு கூடி இன்பம் நுகர்ந்த மகளிர், தம் ஊடற்காலத்து நீத்த குங்குமச் சேற்றிலே புரண்ட பன்றிகள் தம் உடம்பிலே மிகுதியாகப் படிந்த அக்குங்குமச் சேறு போகும்படி மரங் களிலே உராய்ந்து போக்கிக் கொள்கின்றன; அம்மலை தேவருலகமள வும்உயர்ந்திருக்க, அதனுச்சியில் தேவமாதரும் மானுட மங்கையரும் வேற்றுமையறிய முடியாதபடி கலந்திருந்தனர் என்றவாறும்.

அவ்வானம்: அகரச்சுட்டுச் சிறப்புக் குறித்தது.

(பி - ம்.) 1. திமிரமாவடி; குங்குமஞ் சேதகம்; குங்குமச் சேறகம்; திமிரமாவடிச் சந்தனச் சேறகத். 2. திமிர மாவொடு.
3. அமரர் மாதரை: ஒத்தெழில்: அஞ்சொலால்.
4. அமரர் மாதரை; ஒத்ததவானமே; ஒத்ததுவானமே; ஒத்தனவானமே. (58)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

948. பேர வாவொடு மாசுணம் பேரவேய்
பேர வாவொடு மாசுணம் பேருமால்
ஆர வாரத்தி னோடு மருவியே
ஆர வாரத்தி னோடு மருவியே.

பேர் அவாவொடு-(இரையினிடத்து) மிக்க ஆசையோடு, மாசுணம்-பெரிய மலைப்பாம்பு, பேர-(இடம்விட்டு) நகர்வதனால், வேய் பேர-மூங்கில்(வேரற்று)விழ,(அதுகண்டு அஞ்சிய),ஆவொடு-காட்டுப் பசுவுடனே, மா சுணம் பேரும்-மிக்கபுழுதியும் கிளம்பும்;அருவி-அருவிகள், ஆர ஆரத்தினோடு மருவி-நிறைய முத்துக்களோடு பொருந்தி, ஆரவாரத்தின் ஓடும்-பெருமுழக்கத்துடன் ஓடாநிற்கும்.

இரண்டாம் அடியில் 'ஆல்', 3,4-ஆம் அடிகளில் 'ஏ'-அசைகள். சுணம்=சுண்ணம்; இடைக்குறை.

மூங்கில் புதருக்குள் படுத்து உறங்கிய மலைப்பாம்பு பெரும் பசியோடு விரைந்து இடம்விட்டுப் பெயர, அதனால் மூங்கில்கள் வேரற்றுப் பெயர்ந்து வீழ்ந்தன; அதைக்கண்டு அஞ்சிய காட்டுப் பசுக்கள் விரைந்து ஓடவே,புழுதி கிளம்புவதாயிற்று; இவை தாழ்வரையிடத்து நிகழ்வன. அருவிகள் மேலிருந்து வருவன.

(பி - ம்.) 1. மாசுணம் பேரவே. 2. மாசுணம் பேரவே: பேருமே.
3. அருவிபோய். (59)

945-48 எண்ணுள்ள நான்கு பாடல்கள் பல பிரதிகளில் 'திமிரமாவொடு', 'பேரவாவொடு', புகலும்வாளரிக்', 'துன்னரம்பை' என்ற வரிசையில் உள்ளன.

949. ஊறு மாகட மாவுற வூங்கெலாம்
ஊறு மாகட மாமத மோங்குமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே
ஆறு சேர்வன மாவரை யாடுமே.

ஊங்கு எலாம்-அம்மலையிடங்களிலெல்லாம், மா கடமா ஊறு உற-பெரிய காட்டுப் பசுக்களுக்கும் (எளிதில் செல்லவியலாமல்) துன்பமுறும்படி, மா கடம் மா-பெரிய யானைகளின், ஊறும் மதம்-(மேன்மேலும்) சுரக்கின்ற மதநீர், ஓங்கும்-பெருகி (ஆறுபோல) ஓடாநிற்கும்; ஆறு சேர்வன-அவ்வழியில் உள்ளனவாகிய, மா-மாமரங்களும், வரை-மூங்கில்களும், ஆடும்-(நிலையற்று விழுமாறு) ஆட்டங்கொள்ளும்; மா-(சில) வன விலங்குகளும், வரை ஆடும்-மலையாடுகளும், ஆறு சேர்வன-அம்மதநீராற்றிலே (நீருண்ணக்கருதி) வந்து சேர்வனவாகும். ஏகாரங்கள், அசைநிலை. உம்மைகள் தொக்கன.

மா அரை ஆடும் எனப் பிரித்து, மாவின் அடி மரங்கள் ஆட்டங்கொள்ளும் என்றலுமாம்.

யானைகளின் மதநீர்ப் பெருக்கை மிகுத்துக்கூறி, அதனால் நிகழ்வன இன்னின்ன என்று தொடர்புபடுத்தலின் இது தொடர்புயர்வு நவிற்சியணியாகும்.

கடமா (கடம்+ஆ)-காட்டுப்பசு; (கடம்+மா)-மத யானை. 'கடமா தொலைச்சிய கானுறை வேங்கை' (நாலடி. 300).

(பி-ம்.) 1. கடமாவுற லூங்கெலாம்; கடமாவுட லூங்கெலாம்; கடமாவுட னூங்கெலாம்; கடமுறு மருங்கெலாம்; கடமுடு மருங்கெலாம்; கடமாவுறைந் தங்கெலாம்; கடமாமத வோங்கலில்.
2. மாமத மோடுமே; மாமத முறுமே.
3. யாறுசேர்வன மால்வரை.
4. யாறுசேர்வன மால்வரை; மாமரை. (60)

950. கல்லி யங்கு கருங்குற மங்கையர்
கல்லி யங்ககழ் காமர் கிழங்கெடா
வல்லி யங்க ணெருங்கு மருங்கெலாம்
வல்லி யங்க ணெருங்கி மயங்குமே.

கல் இயங்கு-அம்மலையிலே வாழ்கிற, கரு குற மங்கையர்-கரிய குறப் பெண்கள், அங்கு கல்லி அகழ் காமர் கிழங்கு-அங்கே தோண்டி எடுத்தற்குரிய நல்ல கிழங்கு வகைகளை, எடா-(அச்சமின்றி) எடுத்தற் பொருட்டு, வல்லியங்கள் நெருங்கும் மருங்கு எலாம்-புலிகள் மிக்கு இயங்கும் இடங்களிலெல்லாம், வல் இயங்கள்-வலிய தொண்டகப் பறை முதலிய தோற்கருவிகள், நெருங்கி மயங்கும்-நெருக்கமாகக் கலந்து ஒலிக்கும். ஏ-ஈற்றசை.

பின் இரண்டடிகளுக்கு வேறு வகையாகவும் பொருள் கூறப் படும்.

மலை வாழ் மகளிர், அங்கு விளையும் பலவகைக் கிழங்குகளைத் தோண்டிஎடுப்பர்; அவ்வாறு எடுக்கும் பருவத்தில், புலி முதலிய கொடியவிலங்குகளால் தீங்கு நேராதபடி அவற்றைக்கடிதற்கு வலிய ஓசையுடைய பறைகளை ஆடவர் முழக்குவர்.

'எடா' என்பது, 'எடுக்க' என்ற 'செய'வென் எச்சப்பொருளில் வந்தது; இதனை ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சமாகக் கொண்டு அதற்கேற்றவாறு பொருள் கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. கருங்குழல்; கணங்குழை; கனங்குழை.
2. கல்லியங்கமர்; கிழங்கெடார்; கழங்கெடார்; கிடங்கெடார்.
3. வல்லியங்க ணெருங்க; வல்லியங்க நெருங்கு.
4. நெருங்கு மறுகுமே. (61)

951. கோளி பங்கய மூழ்கக் குளிர்கயம்
கோளி பங்கய மூழ்கக் குலைந்தவால்
ஆளி பொங்கு மரம்பைய ரோதியே
ஆளி பொங்கு மரம்பைய ரோதியே.

குளிர் கயம்-குளிர்ந்த நீர்நிலையில், கோள் இபம்-வலிய யானைகளும், கயம்-யானைக்கன்றுகளும், மூழ்க-(திளைந்து) குளிப்பதனால்,

கோளி-(நீரருகேயுள்ள) ஆலமரமும், பங்கயம்-(நீரிலுள்ள) தாமரையும், ஊழ்க குலைந்த-பதனழியச் சிதைந்தன; ஆளி பொங்கும்-சிங்கங்கள் சீறியெழுகிற, மரம் பையர் ஓதி-மரங்கள் நிறைந்த பக்கங்களையுடைய அம்மலையில் (உள்ள), அரம்பையர் ஓதி-தேவமாதரின் கூந்தலிலே, ஆளி பொங்கும்-வண்டுகள் களித்துச் சுழலும்.

ஊழ்க: ஊழ் என்னும் முதல்நிலை குகரச் சாரியை பெற்றது; 'மூழ்க' எனப் பிரித்து 'முழுதும்' எனப் பொருளுரைத்தலும் ஆம். 'பக்கம்' என்ற பொருளுடைய 'பயல்' என்பது முதலும் ஈறும் போலி பெற்றுப் 'பையர்' என்றாயிற்று. ஓதி: முன்னது மலை; பின்னது கூந்தல். ஈற்றடியில் 'ஆளி' அளி என்பதன் நீட்டல் விகாரம். ஆல், ஏ-அசை நிலைகள்.

(பி - ம்.) 1. குளிர்கயக்; குளிர்புனற்; குழிகயம்.
2. கோளில் பங்கயமுழ்கிக்; கோளிபங்கயமெங்கும்; கோளி பங்கயமெல்லாம்; குலைந்ததால்; குலைந்தன.
3. யாளி; பொங்க; ஓங்கும்; அருவரை யூடிழிந்து; அலங்கலி னீடழிந்து; அலங்கலி னீடளி, அலங்கலி னீடணி; மயங்கலி னீடழி; அரம்பையரோதியேய். 4. யாளியோங்கு மரம்பைய ரோதையே. (62)

952. ஆக மாலய மாகவு ளாள்பொலி
வாக மாலய னின்றென லாகுமால்
மேக மாலை மிடைந்தன மேலெலாம்
மேக மாலை மிடைந்தன கீழெலாம்.

மேல் எலாம்-(அம்மலையின்) மேலிடமெல்லாம், மேகம் மாலை மிடைந்தன-மேகங்களின் வரிசைகள் நெருங்கியிருந்தன; கீழ் எலாம்-கீழிடமெல்லாம், மே கம் மாலை மிடைந்தன-மேலான சுவர்க்கத்துப் பூமாலைகள் நெருங்கிக் கிடந்தன; (இக்காட்சி), ஆகம் ஆலயமாக உளாள்-மார்பை யிடமாகக்கொண்ட இலக்குமிதேவி, பொலிவு ஆக-விளங்கித் தோன்ற, மால் அயல் நின்றது எனல் ஆகும்-திருமால் அயலே நின்ற தோற்றமுடையது எனத்தகும்.

மேற்பகுதியில் கருநிற மேகங்கள் படிய ஓங்கி நின்ற அம்மலை நெடுமால் நிமிர்ந்து நின்றது போன்ற தோற்றமுடையதாக, இடைப் பகுதியில் தேவமாதர் சூடிக் களைந்த வாடாத பூமாலைகள் தொகுதியாகக் கிடந்த தோற்றம், திருமாலின் பக்கலில் இலக்குமிதேவி தங்கியிருந்தாற் போன்றதென்றபடி. கம்-சுவர்க்கலோகம்.

நின்றெனல்: தொகுத்தல் விகாரம். ஆல், அசை.

(பி - ம்.) 1. ஆலயம்; உள்ளாள்; உளார்; உளான்.
2. மாலென லாகியது; மாலென நின்றன; மாலெனவாகிய; மாலைய நின்றன; மாலையநின்றெனல்; மாலையநின்றென; மாலயனின்றது; அம்மலை; போலுமால்.
3. மிடைநதது; மிடைந்ததென்; மேலெல்லாம்; கீழெலாம்.
4. கிடந்தது; மிடைந்தது. (63)

953. பொங்கு தேனுகர் பூமிஞி றுமென
எங்கு மாதரு மைந்தரு மீண்டியத்
துங்க மால்வரைச் சூழல்கள் யாவையும்
தங்கி நீங்கலர் தாமினி தாடினர்.

பூ பொங்கு தேன் நுகர்-பூக்களில் பெருகுகின்ற தேனை உண்ணும், மிஞிறு ஆம் என-வண்டுகளைப்போல, மாதரும் மைந்தரும்-(சேனையைச் சார்ந்த) மகளிரும் ஆடவரும், எங்கும் ஈண்டி-எங்கும் நிறைந்து, அ துங்கம் மால்வரை-உயர்வும் பெருமையுமுடைய அம்மலையின், சூழல்கள் யாவையும் தங்கி-(வளமான) இடங்களிலெல்லாம் அமர்ந்து, நீங்கலர்-(அங்கு நின்றும்) பிரியமாட்டாதவராய், இனிது ஆடினர்-இனிமையாக விளையாடிக் களித்தனர்.

அம்மலையின் வளங்கள் அனைவரையும் கவர்ந்து, அங்கு நின்றும் பிரிய மனமில்லாதவராகும்படி செய்ததனால், அனைவரும் அற்றைப் பொழுது முழுதும் அங்கேயே தம்மனத்துக்கிசைந்த விடங்களில் தங்கிப் பலவாறு விளையாடிக் களித்தனரென்க. அடுத்த பாடலில், அனைவரும்சுவர்க்க இன்பம் பெற்றவர்போல மகிழ்ந்து அம்மலையினின்றும் கீழிறங்குவதையே நினையாதவராயினர் என்பர். இவ்வாறு அவர்கள் அங்கே தங்கினமைக்குப் பூக்களில் மொய்க்கும் வண்டுகளின் செயலை ஒப்பிட்டார்.

(பி - ம்.) 1. தேனிமிர்; பூஞிமிருமென.
2. பொங்கு மாதரை: மைந்தரு மீண்டிய; மைந்தரு மீண்டினர்.
3. மால்வரை; சூழ்வனம்; சூழ்வளம்.
4. தங்க; அங்கு: நீங்கிவர்: ஆடுவார். (64)

954. இறக்க மென்பதை யெண்ணல ரன்னது
பிறக்க லன்னதொர் பீழைய தாதலின்
துறக்க மெய்திய தூயவ ரேயென
மறக்ப கிற்றில ரன்னதன் மாண்பெலாம்.

(அங்கே தங்கிய ஆடவரும் மகளிரும்), துறக்கம் எய்திய தூயவரே என-சுவர்க்க பதவியை அடைந்த நல்லோரையே ஒப்ப, அன்ன தன் மாண்பு எலாம் - அம்மலையின் சிறப்புக்களை யெல்லாம், மறக்ககிற்றிலர்-மறக்க இயலாதவராய், இறக்கம் என்பதை-(மலையினின்றும் கீழே) இறங்குவதென்பதை, எண்ணலர்-நினையாதவராயினர்; (ஏனெனில்), அன்னது-இறங்குதல் என்பது, பிறக்கல் அன்னது ஓர் பீழையது ஆதலின்-(உலகத்திலே) பிறத்தலைப் போன்றதொரு துன்பமுடையதாதலால்.

சுவர்க்க பதவிபெற்ற மேலோர், அவ்வின்பத்தை யன்றிப் பிறவற்றை மனத்தாலும் எண்ணார்; அதுபோல, அம்மலையிலே தங்கியிருத்தல் சுவர்க்க பதவி போன்ற இன்பந்தருவதாகலின், அவ்வின்

பத்தை நுகர்ந்தவர். மீண்டும் கீழே யிறங்கிவர எண்ணாராயினர் என்க. உயர்ந்தோர், இவ்வுலகிலே துன்பங்களுக்கிடமான பிறப்பை விரும்பாரன்றோ ?

(பி - ம்.) 1. இறக்கல்; இறக்க; இறக்கும்; என்பகை; எண்ணிலர்; எண்ணுங்கால்.
2. பிறக்கும்; பிறக்க; என்பதோர்; என்பது; அன்னதோர்; அன்னது; பூழையதாதலில்; பீழைபயத்தலில்.
4. மறக்குகிற்றிலர்; மறக்ககிற்கிலர்; அன்னதின் மாண்பரோ. (65)

## அந்தி மாலை

(வேறு)

955. மஞ்சார்மலை வாரண மொத்தது வானி லோடும்
வெஞ்சாயை யுடைக்கதி ரங்கதன் மீது பாயும்
பஞ்சானன மொத்தது மற்றது பாய வேறும்
செஞ்சோரி யெனப்பொலி வுற்றது செக்கர் வானம்.

மஞ்சு ஆர் மலை-மேகம் தங்கப்பெற்ற அத்தமயகிரியானது, வாரணம் ஒத்தது-யானையைப் போன்றிருந்தது; வானில் ஓடும்-ஆகாயத்திலே விரைந்து செல்லுகிற, வெம் சாயை உடை(ய) கதிர்-வெப்பமுள்ள கிரணங்களையுடைய சூரியன், அங்கு-அவ்விடத்தே, அதன் மீது பாயும்-அவ்யானையின் மேல் பாய்கிற, பஞ்சானனம் ஒத்தது-சிங்கத்தை யொத்திருந்தது; அது பாய-அச்சிங்கம் (யானை மேல்) பாய்ந்ததனால், ஏறும்-மிக்குப் பரந்த, செம் சோரி என-சிவந்த குருதிபோல, செக்கர் வானம் பொலிவுற்றது-(அந்திக் காலத்துச்) செவ்வானம் விளங்கியது. மற்று, அசை.

அத்தமயகிரியை யானையாகவும், அம்மலையை நெருங்கும் அத்தமன சூரியனை அவ்யானை மேற் பாயும் சிங்கமாகவும், செவ் வானத்தைச் சிங்கம் பாய்ந்து தாக்கிய யானையின் உடம்பினின்றும் வெளிப்பட்டுப் பரவிய குருதியாகவும் வைத்துத் தன்மைத்தற்குறிப் பேற்றமாகக் கூறுகிறார். 'மலை' எனப் பொதுப்படக் கூறினும், 'செக்கர் வானம்' என்ற குறிப்பால் 'அஸ்தமயகிரி' எனப்பட்டது; 959-பார்க்க. அடுத்த பாடலில் சந்திரசைலத்தின் தோற்றமும் கூறுகின்றார். பஞ்சாநநம்-'பரந்த முகமுடையது' எனப் பொருள்படும் வடசொல்.

கதிரவனைச் சிங்கமாகவும், நரசிங்கமாகவும் கூறினமை; முறையே 959, 967-பார்க்க. குருதி செக்கர்வானத்துக்கு உவமை: 409-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. மஞ்சார்வரை; வானிளேடும்; வாளிளேடும்.
2. அஞ்சாயையுடைக்; செஞ்சாயையுடைக்; செஞ்சாயலுடைக்; அங்கதின் .
3. ஒத்தது பாயிருள்; ஒத்துள தங்கது; பாயலூறும்; பாயவேறு; பாய வேகும். 4. எனப்பொலியுற்றது; என்னப்பொலிவுற்றது. (66)

## செக்கரால் சந்திர சைலத்தின் தோற்றம்

956. திணியார்சினை மாமரம் யாவையுஞ் செக்கர் பாயத்
தணியாத நறுந்தளி ரீன்றன போன்று தாழ
அணியாரொளி வந்து நிரம்பலி னங்க மெங்கும்
மணியா லியன்ற மலையொத்ததம் மையில் குன்றம்.

திணி ஆர் சினை - செறிவு மிக்க கிளைகளையுடைய, மா மரம் யாவையும்-பெரிய மரங்களெல்லாம், செக்கர் பாய-செவ்வானத்தின் ஒளி (தம்மேல்) வீசப்பெற்றதனுல், தணியாத-குறைவில்லாத, நறு தளிர்-நல்ல தளிர்களை, ஈன்றன போன்று-(புதிதாகத்) தளிர்த்தவை போல, தாழ-தழைந்திருக்க, அணி ஆர் ஒளி-அழகு பொருந்திய அவ்வொளியானது, அங்கம் எங்கும் வந்து நிரம்பலின்-(அம்மலையின்) உடலிட முழுதும் வந்து (பரவி) நிரம்பியதனுல், அ-அந்த, மை இல் குன்றம்-குற்றமற்ற சந்திரசைலம், மணியால் இயன்ற மலை ஒத்தது-மாணிக்கக் கற்களாலாகிய மலைபோன்றிருந்தது.

திணி-வலிமையும் ஆம்; மா மரம்-மாமரங்களும் ஆம்.

செவ்வானத்தின் ஒளி நேரே பாய்தலாலும், அவ்வொளி பாயப் பெற்ற தழைகளின் தோற்றத்தாலும், அச்சந்திர சைலமானது 'மாணிக்கமலை' யென்னும்படி யிருந்தது என்ருர். மலைக்குரிய 'அளக்கலாகா அளவும் பொருளும்' முதலிய சிறப்புக்களெல்லாம் உடைமையால், 'மையில் குன்றம்' என்ருர். இயற்கையாகக் கருநிறம் எங்கும் இல்லாதது என்ற பொருளும் பெறப்படும்.

(பி - ம்.) 1. திணிவார் சினை.
2. தணியாது; நறுந்துளிர்; தந்தனபோன்ற தாழா; ஈன்றனபோன்ற தாழ்வ.
3. அணியாவொளி; நிரம்பலில்; நிரம்பின; அங்கமிங்கும்; அங்குமிங்கும்; அங்குமெங்கும்.
4. இயன்றம்மலை; ஒத்ததவ்; ஒத்தது; போன்றது; போன்றதம்: மாசில் குன்றம்; ஆசில் குன்றம். (67)

957. கண்ணுக்கினி தாகி விளங்கிய காட்சி யாலும்
எண்ணற்கரி தாகி யிலங்குசி ரங்க ளாலும்
வண்ணக் கொழுஞ்சந் தனச்சேதக மார்ப ணிந்த
அண்ணற் கரியான் றனையொத்ததவ் வாசில் குன்றம்.

அவ் ஆசு இல் குன்றம்-குற்றமில்லாத அந்த மலையானது, கண்ணுக்கு இனிது ஆகி விளங்கிய-கண் பார்வைக்கு இனிமையாக விளங்கின, காட்சியாலும்-தோற்றப் பொலிவாலும், எண்ணற்கு அரிது ஆகி-எண்ணுவதற்கு இயலாததாய், இலங்கு-(ஆயிரக்கணக்காக) விளங்குகின்ற, சிரங்களாலும்-சிகரங்களினுலும், வண்ணம்-(நல்ல) நிறம் பொருந்திய, கொழு சந்தனம் சேதகம்-வளமான சந்தனக்

குழம்பை, மார்பு அணிந்த-(தன்) திருமார்பிலே தரித்த, அண்ணல் கரியான் தனை ஒத்தது-பெருமை மிக்க கரிய திருமேனியனான திருமாலை ஒத்திருந்தது.

திருமாலின் விசுவரூபம், ஆயிரந் திருமுடிகளோடும், சந்தனமும் மணி முதலியனவும் அழகு செய்யப் பெற்ற மார்புடைய நெடிய திருமேனி யோடும் விளங்குதல் போல, சந்திரசைலமும் அளவற்ற சிகரங்களோடு, சந்தன மரங்களும் பலவகை மணிகளும் பிறவும் அழகு செய்யப் பெற்ற (மார்பு போன்ற) நடுவிடத்தையுடையதாய் ஓங்கி நின்றது என்றபடி. திருமாலை இம்மலைக்குவமையாக முன்னும் பலவிடங்களிற் கூறியுள்ளமை காண்க.

'பெய்துளவத் தாரார் முடியாயிரம்' (சடகோபரந்தாதி) என்பதனால், திருமால் ஆயிரம் முடியுடைமை அறியப்படும். மலைக்குத் திருமாலை யொப்புக் கூறல்: 'உருவுடைக் குன்றங்கள் காணி னுலகளந்தானென்றுள்ளும்' (திருவாய்: 448.).

(பி - ம்.) 1. கண்ணிற்கு; இனிதாக. 2. அரிதாக: விளங்கு; சரங்களானும்.
3. வண்ணற் கொழும்; சந்தனஞ் சேர்ந்தது; சந்தனஞ் சேர்த்தது; சந்தனச்சேறது; மார்பணிந்து; மார்வணிந்த.
4. அண்ணற் கரியானையும; கரியோன்றனை; வண்ணக்கரியோன்றனை; வண்ணக் கரியான்றனை: ஒத்ததம் மாசில்; ஒத்தது மாசில். (68)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

958. ஊனும்முயி ரும்மனை யாரொரு வர்க்கொருவர்
தேனும்மிஞி றுஞ்சிறு தும்பியும் பம்பி யார்ப்ப
யானை யினமும் பிடியும்மிக லாளி யேறும்
மானுங் கலையு மெனமால்வரை வந்தி ழிந்தார்.

ஒருவர்க்கு ஒருவர்-(தம்முள்) ஒருவருக்கொருவர், ஊனும் உயிரும் அனையார்-உடலும் உயிரும்போல் ஒன்றினவர்களான ஆடவரும் மகளிரும், தேனும் மிஞிறும் சிறு தும்பியும் பம்பி ஆர்ப்ப-(அவர்களிடமுள்ள நறுமணத்தால் கவரப்பட்ட)தேன் வண்டு முதலிய வண்டினங்கள் நெருங்கி ஆரவாரிக்க, யானை இனமும் பிடியும்-ஆண் யானைகளும் பெண் யானைகளும், இகல் ஆளி, ஏறும்-வலிமையுள்ள பெண் சிங்கங்களும் அவற்றின் ஆண்களும்,மானும் கலையும்-பெண்மான்களும் ஆண் மான்களும், என-போல, மால்வரை இழிந்து வந்தார்-பெரிய அம்மலையினின்றும் (கீழே) இறங்கி வந்தார்கள்.

மலையின்மேலே பலவிடங்களிலும்சென்று பலவாறு இனிதாகப் பகற்பொழுதைக் கழித்த சேனையைச் சார்ந்த ஆடவரும் மகளிரும், இரவு நெருங்கினமையால், மேலிருந்து கீழேயிறங்கித் தம்தம் இருப்பிடம் சேரலாயினர் என்றவாறு. அவர்கள் இணையிணையாக இருந்தமைக்கு ஆணும் பெண்ணுமான யானை, சிங்கம், மான் இனங்களை

உவமித்தார். நடை, தோற்றம் முதலியவற்றால் இவை ஆடவர்க்கும் மகளிர்க்கும் உவமை கூறப்படுதலை அங்கங்கே காணலாம்.

பிடி, கலை என்ற பெண்பாற் சொற்களால், யானை, மான் என்ற பொதுச் சொற்களுக்கு முறையே ஆண், பெண் பால்கள் குறித்து உரைக்கப்பெற்றன; ஆளி, ஏறு என்பவற்றிற்கும் அவ்வாறே கொள்க. ஆளி என்றவிடத்து உம்மை தொக்கது. ஓசையின்பங் கருதி நான் கிடங்களில் மகர வொற்று மிக்கது.

வண்டினங்கள் : 876-குறிப்புப் பார்க்க. சிறு தும்பி: 857.

(பி - ம்.) 1. ஊனுமுயிரு மனையார்.
2. தேனும் ஞிமிறும்: தேனு ஞிமிறும்: செறி தும்பியும்.
3. ஆனையினமும்: பிடியும்மிகல் யாளி; பிடியுமிகலாளி.
4. மானும் மயிலும்; மானுமயிலும். (69)

இப்பாடலும் சில பிரதிகளில் இல்லை.

## இருள் பரத்தல்

959. கால்வானகத் தேருடை வெய்யவன் காய்க டுங்கண்
கோல்மாய்கதிர்ப் புல்லுளைக் கொல்சினக் கோள ரிம்மா
மேல்பான் மலையிற் படவீங்கிருள் வேறி ருந்த
மால்யானை யீட்ட மெனவந்து பரந்த தன்றே.

கால்-(ஒற்றைச்)சக்கரத்தையுடைய, வானகம் தேர் உடை(ய)-ஆகாயத்தில் செல்லும் தேரையுடைய, வெய்யவன்-சூரியனாகிற, காய் கடு கண்-எரிக்கவல்ல கடுமையான கண்ணையும், கோல்மாய் கதிர் புல்உளை-(எய்யப்படும்) அம்பு மறைந்துவிடத்தக்க கிரணங்களாகிய புறமயிரையும், கொல் சினம்-கொல்லத்தக்க கோபத்தையும் உடைய, கோள் அரிமா-ஒளி பொருந்திய சிங்கமானது, மேல்பால் மலையில்பட-அத்தமய கிரியிலே (புக்கு) மறைதலால், வீங்கு இருள்-மிக்க இருளானது, வேறு இருந்த-(சிங்கத்துக்கு அஞ்சி)வேறிடத்தில் பதுங்கியிருந்த, மால் யானை ஈட்டம் என-பெரிய யானைக் கூட்டம்போல, வந்து பரந்தது-(அவ்விடத்தே) வந்து பரவிற்று. அன்றே : ஈற்றசை.

முன் இரண்டடிகள் சிலேடை வகையால் சிங்கத்துக்கும் பொருந்தும்; அது வருமாறு:— கால் வால் நகத்து ஏர் உடை-காலிலே வெள்ளிய நகத்தின் அழகுடைய, வெய்ய வன் காய் கடு கண்-மிக்க கொடுமையும் பார்வையின் வன்மையுமுள்ள கண்களையும், கோல்மாய் கதிர் புல் உளை-அம்பு புக்கு மறையத்தக்க (அடர்ந்த) ஒளி பொருந்திய பிடரிமயிரையும், கொல் சினம் கோளரி மா என்க. காலிலும் நகத்திலும் அழகுடைய என்றலும் ஆம்.

சிங்கத்துக்கு அஞ்சி (அதன் கண்ணிற்படாத) வேறிடத்தில் பதுங்கியிருந்த யானைக் கூட்டம், அச்சிங்கம் வேற்றிடஞ் சென்றது

தெரிந்து, அஃதிருந்தவிடத்தில் வந்து புகுந்ததுபோல, என உவமையும், சூரியனையும் இருளையும் முறையே சிங்கமாகவும் யானையாகவுங் கொண்ட உருவகமும் சிலேடையை அங்கமாகக் கொண்டு இக்கவியுள் விரவி வந்தன. கோளரிம்மா: விரித்தல்.

சூரியனைச் சிங்கமெனல் : 955.

(பி - ம்.) 1. வானகத்தேரொடு; வாகனத்தேருடை: வெம்மையன்; வெம்மையிற்.
2. கோல்பாய் கதிர்ப்; கோல்வாய்கதிர்ப்; கோல்காய்கதிர்ப்; புல்லுறக்; புல்லுரைக்; கோளரிமா.
3. மலையிற்புக; வேறிரிந்த; வேறியைந்த; வேறிசைந்த.
4. மாலியானை; பரந்தமாதோ. (70)

ஒருபிரதியில் இப்பாடலுடன் வரைக்காட்சிப் படலம் முற்றுப்பெற்று, அடுத்தான 'மந்தாரமுந்து' என்பதுமுதல் 'மலர்கொய் படலம்' என்று தொடங்குகின்றது.

### விளக்கேற்றல்

960. மந்தார முந்து மகரந்த மணங்கு லாவும்
அந்தா ரரசர்க் கரசன்ற னனீக வெள்ளம்
நந்தா தொலிக்கு நரலைப்பெரு வேலை யெல்லாம்
செந்தா மரைபூத் தெனத்தீப மெடுத்த வன்றே.

மந்தாரம் உந்து-மந்தார மலர்கள் வெளிப்படுத்துகிற, மகரந்தம் மணம் குலாவும்-பூந்தாதின் மணம் வீசுகின்ற, அம் தார்-அழகிய மாலையணிந்த,அரசர்க்கு அரசன் தன்-சக்கரவர்த்தியான தசரதனது, அனீகம் வெள்ளம்-சேனைப் பெருக்காகிய, நந்தாது ஒலிக்கும்-குறையாமல் ஒலிக்கின்ற, நரலை பெரு வேலை எல்லாம்-பெருமுழக்கத்தையுடைய கடலிடம் முழுதும், செந்தாமரை பூத்த என-செந்தாமரைப் பூக்கள் பூத்தாற்போல, தீபம் எடுத்த-(எங்கும்) விளக்குக்கள் ஏற்றப் பெற்றன. அன்றே: அசை. மகரந்தம்-தேனும் ஆம்.

தசரத சக்கரவர்த்தி, சம்பராசுரனைத் தொலைத்துத் தேவேந்திரனுக்கு அரசு நிலையிட்ட காலத்தில், தேவருலகம் சென்று இந்திரனோடு ஒராசனத்தில் அமர்ந்திருந்த சிறப்புடைமையின், மந்தாரம் என்ற தெய்வதருவின் மலர்மாலை அவன் சூடியதாகச் சிறப்பித்தார்.

பூத்தென: தொகுத்தல் விகாரம். கடலில் தாமரை பூத்தல்: இல்பொருளுவமை. தாமரையை விளக்கெனல்: 36. 'மந்தார முந்து மகரந்த மணந்தவாடை' (சுந்தர. 75) என, இத்தொடர் பின்னும் இவர் வாக்கில் அமைந்துள்ளது காண்க.

(பி - ம்.) 1. மந்தாரமுந்தும்; மந்தாரமுந்த; மந்தாரமுற்ற; மணந்துலாவும்; மணங்குலாவ: 2. ஐந்தாரரசர்க்கு; அந்தாரகலத்து: அனிகவெள்ளம்.
3. நந்தாவொலிக்கும்; நரலைப்பொரு; வேலைநாப்பண். (71)

பல பிரதிகளில் இப்பாடலுடன் வரைக்காட்சிப் படலம் முற்றுப் பெற்று, அடுத்தபாடல் முதல் 'உண்டாட்டுப் படலம்' தொடங்குகின்றது; சில பிரதிகளில்,

'மலர்கொய் படலம்' என்று தொடங்குகின்றது. 'உண்டாட்டுப் படலம்' என்று தொடங்கும் பிரதிகளுள் ஒன்றில் 'பூக்கொய் படலம்', 'நீர்விளையாட்டுப் படலம்' என்ற தலைப்புக்களின்றி உண்டாட்டுப் படலத்தின் தொடர்ச்சியாகவே எழுதப்பெற்றுள்ளது.

## மதியின் தோற்றம்

961. தண்ணக் கடலிற் றளிசிந்து தரங்க நீங்கி
விண்ணிற் சுடர்வெண் மதிவந்தது மீன்கள் சூழ
வண்ணக் கதிர்வெண் ணிலவீன்றிரள் வாலு கத்தோ
டொண்ணித் திலமீன் றொளிர்வால்வளை யூர்வதொத்தே.

வெள் மதி-வெண்மையான முழுநிலா, தண்ணம் கடலில்-குளிர்ந்த கடலிலே, தளி சிந்து தரங்கம் நீங்கி-திவலைகளைச் சிதறும் அலைகளினின்றும் விடுபட்டு, வண்ணம் கதிர் வெள் நிலவு ஈன்-அழகிய வெண்மையான நிலவொளி போன்ற ஒளியைத் தருகிற, திரள் வாலுகத்தோடு-திரளான வெண்மணலினூடே, ஒளிர் வால் வளை-ஒளி வீசும் வெண்சங்கானது, ஒள் நித்திலம் ஈன்று-ஒளிமிக்க முத்துக்களைக் கருவுயிர்த்துக்கொண்டே, ஊர்வது ஒத்து-ஊர்ந்து செல்வது போல, விண்ணில்-ஆகாயத்திலே, சுடர் மீன்கள் சூழ-பிரகாசிக்கிற நட்சத்திரங்கள் (தன்னைச்) சூழ, வந்தது-(உதயமாகி) வந்தது.

சந்திரன் கீழ்கடலில் உதிப்பதாகக் கூறுதல் மரபாதலின், இங்கே, கடலலைகளினின்றும் விடுபட்டு மேலெழுந்து வந்ததாகக் கூறினார். அவ்வாறு எழுந்து, ஆகாயத்திலே நட்சத்திரங்கள் தன்னைச் சூழச் சந்திரன் வரும் தோற்றத்துக்கு, வெண்மணற் பரப்பிலே, சூல் கொண்ட பெரிய சங்கு ஒன்று நன் முத்துக்களை யீன்றுகொண்டே ஊர்ந்து செல்லுதலை உவமித்தார். சந்திரன்=சங்கு; ஆகாயம்= வெண்மணற் பரப்பு; நட்சத்திரங்கள்=சங்கு ஈன்ற நன் முத்துக்கள் எனக் காண்க. கடலில் உள்ள சங்குகள், அலைகளால் உந்தப்பட்டுக் கரைசேரு மாதலால், முதலடியின் பொருள் சங்குக்கும் பொருந்துவதாகும். வாலுகத்தோடு ஊர்வது: 'வழியோடு போவது' என்பது போன்ற வழக்கு.

(பி - ம்.) 1. தண்ணற் கடலிற்றளிர்; கடலிற்றுளி; கடலிற்றரை; கடலின்றலை; தரங்கநீங்கு; தரங்கநீக்கி.
2. விண்ணிற்றெடர்: வந்தது வெண்மதி.
3. நிலவின்றிரள்; நிலவீன்றென; நிலவீன்றன; நிலவீன்றது; வாலுகத்தாடு; வாலுகக் கோட்டு.
4. நித்திலமென்றொளிர்; ஊர்வதொத்த. (72)

### சேனைக் கடலில் மிகப்பல மதியங்கள்

962. மீனாறு வேலை யொருவெண்மதி யீனும் வேலை
நோனா ததனை நுவலற்கருங் கோடி வெள்ளம்
வானா டியரிற் பொலிமாதர் முகங்க ளென்னும்
ஆனா மதியங் கண்மலர்ந்த தனீக வேலை.

மீன் நாறு வேலை-மீனின் புலால் நாற்றம் வீசும் கடலானது, ஒரு வெள் மதி ஈனும் வேலை-வெண்ணிறமுள்ள ஒரு சந்திரனைப் பெற்றபோது, அதனை நோனாது-அதைக் கண்டு பொறுமல், அனீகம் வேலை-(சக்கரவர்த்தியின்) சேனைக் கடலானது, வான் நாடியரில் பொலி-தேவமாதரைப்போல விளங்குகிற, நுவலற்கு அரு கோடி வெள்ளம் மாதர்-(அளவிட்டுச்) சொல்லுதற்கு அரிய கோடிக்கணக் கான (தன்னிடமுள்ள) மகளிரின், முகங்கள் என்னும்-முகங்களாகிற, ஆனா மதியங்கள்-(என்றும் கலைகள்) குறைதலில்லாத சந்திரர்களை, மலர்ந்தது-தோற்றுவித்தது.

முடைக்கடலினின்றும்,தேயும் ஒருமதி யெழுந்தது கண்ட படைக் கடல், 'என்னுடைய ஆற்றலைக் காண்' என்று சொல்லி, தன்னிட முள்ள அளவிடற்கரிய எண்கள்கொண்ட பெண்களின் முகங்களாகிற தேயாத மதிகளைத் தோற்றுவித்தது; எனவே, அம் முடைக் கடலி னும் இப் படைக் கடல் மிகச் சிறந்தது என்கிற கற்பனையின் உயர் வைக் காண்க. முகமதிகளுக்கு 'ஆனா' என்ற அடைமொழியால், முன்னது தேய்வது என்பது பெறப்பட்டது.

'கோடிவெள்ளம்' என்றது எண்மிகுதி குறித்து நின்றது. கருத்து ஒப்பு: ஆரணிய. 631. வேலை: சொற்பின் வருநிலையணியாக வந்தது.

(பி - ம்.) 1. மீனாறும் வேலை. 2. நோனாவதனை; நோனாததானை; நுவறற்கரும். 4. மானார்; அலர்ந்தது; அலர்ந்த; பயந்தது: அனிகவெள்ளம். (78)

### ஆடல் நிகழிடங்கள்

963. மண்ணும் முழவின் னொலிமங்கையர் பாட லோதை
பண்ணுந் நரம்பிற் பயில்வாரிசை பாணி யோதை
கண்ணும் முடைவே யிசைகண்ணுள ராட ரோறும்
விண்ணும் மருளும் படிவிம்மி யெழுந்த வன்றே.

கண்ணுளர் ஆடல் தோறும்-கூத்தரின் ஆடல் நிகழுமிடந் தோறும், மண் முழவு இன் ஒலி-மார்ச்சனை யமைந்த மத்தளத்தின் இனிய ஓசையும், மங்கையர் பாடல் ஓதை-மகளிர் பாடும் இசைப் பாடல்களின் ஓசையும், பண்ணும் நரம்பில் பயில்வார் இசை-(சுருதி லயத்துக்கேற்ப) வீக்கி அமைக்கப்படும் யாழ் முதலிய நரம்புக் கருவி களில் வாசிப்பவர்களுடைய பாடலோசையும், பாணி ஓதை-தாள

வோசையும், கண் உடை வேய் இசை-தொளேகள் அமைந்த புல்லாங் குழலொலியும் (ஆகிய எல்லாம்), விண்ணும் மருளும்படி-தேவரும் (கேட்டு) மயங்கும்படி, விம்மி எழுந்த-மிக்கெழுந்தன. அன்றே-அசை,

அந்தப் பாடிநகரில் இராப்பொழுதிலே ஆடல்,பாடல் முதலிய இனிய நிகழ்ச்சிகள் அங்கங்கே நிகழ்ந்தன என்றவாறு.

நரம்பு பண்ணுதல்-முறுக்காணியால் (பிரடை) நரம்புகளே இறுக்கியும் தளர்த்தியும் சுருதி அமைத்தல்.

மண்ணும், கண்ணும் என்ற விடங்களில் 'உம்மை' இசைநிறை. நரம்பு, ஆடல், விண் என்பன ஆகுபெயர்கள். 'விண்ணும்' என்றதில் 'உம்மை' உயர்வு சிறப்பு. நான்கடிகளிலும் மகரவொற்று விரித்தல். ஒலி, ஓதை, இசை என்ற ஒரு பொருட் சொற்கள் மீண்டும் மீண்டும் வந்தது பொருட்பின் வருநிலேயணி.

(பி - ம்.) 1. மண்ணுமுழவினெலி; மண்ணுமுழவின்னெலி; பாடலோசை; ஆடலோதை.
2. பண்ணுந்நரம்பின்; பண்ணுநரம்பிற்; பயில்யாழிசை; பயிலாவிசை; பயில்பாவியற்; பயில்வாரிசைப்; பகையாவியற்; பகையாவிகற்; வகையாலியற்; பாணியோசை.
3. வேயிசைக்; ஏழிசைக்; கண்ணுமுடைவேயிசை; கண்ணியர்; கன்னியர்; ஆடலோசை; ஆடலோதை; ஆடலோடும்.
4. விண்ணுமருளும்படி விம்மியெழுந்த தன்றே. (74)

## மாதரின் இரவுக் கோலம்

964. மணியின்னணி நீக்கி வயங்கொளி முத்தம் வாங்கி
அணியும்முலே யாரகி லாவி புலர்த்து நல்லார்
தணியு மதுமல் லிகைத்தாமம் வெறுத்து வாசந்
திணியு மிதழ்ப்பித் திகைக்கத்திகை சேர்த்து வாரும்.

மணியின் அணி நீக்கி-இரத்தினுபரணங்களே (மார்பினின்றும்) அகற்றி, வயங்கு ஒளி முத்தம் வாங்கி-விளங்குகின்ற ஒளியுடைய முத்துமாலேகளேயும் நீக்கி, அணியும் முலே-(தொய்யிலெழுதி) அழகு செய்யப்பெற்ற(தம்)தனங்களே, ஆர் அகில் ஆவி புலர்த்தும்-நிறைந்த அகிற்புகையால் உலர்த்துகிற, நல்லார்-பெண்கள், தணியும் மது-தேன் குறைந்த, (புதுமை மாறிய), மல்லிகை தாமம் வெறுத்து-மல்லிகை மாலேயையும் அகற்றி, வாசம் திணியும் இதழ்-மணம் மிகுந்த (புதிய) இதழ்களேயுடைய, பித்திகை கத்திகை-கருமுகை மாலேயை, சேர்த்துவாரும்-(மார்பில்) அணிபவரும் (ஆயினர்).

மாதர் கொண்ட பிறவகைக் கோலமெல்லாம் அடங்க, 'சேர்த்துவாரும்' என அவாய்நிலேயாக நிறுத்தினர்.

பெண்கள் இரவில், தம் மார்பில் அணிந்த அணிகலன்களேயும், பகலில் அணிந்து வாடிய மலர்மாலேகளேயும் நீக்கி, தனங்களிலே

சந்தனக் குழம்பு அப்பியும் தொய்யிலெழுதியும் அழகு செய்து, அகிற் புகையால் அவற்றை உலர்த்தி, புதிய மலர்மாலையையும் சூடினர் என்க. இவற்றோடு, இரவிற்கென மிகமெல்லிய துகிலுடுத்தலும் மகளிர் இயல்பு.

தணியும் மது-குறைந்த தேனையுடைய; புதுமை மாறிய; வாடிய. கத்திகை-மாலை விசேடம்.

மகளிர் இரவிற்கோர் கோலங்கொள்ளுதல்: 'இரவிற்கோர் கோலங்கொடியிடையார் தாங்கொள்ள' (சிலப்.9: 3-4).

(பி - ம்.) 1. மணியின்னொளி; மணியினொளி.
2. அணியுமுலை; அணியம்முலை: புலர்த்த நல்லார்; உலர்த்து நல்லார்.
3. தணியுபமது: வாசத்.
4. திணியும்மிதழ்; தணியும்மிதழ்ப்; திணியும்மிதழ்க்; திணியும்மிதழ்ச்; செண்பகப் பித்திகை; செண்பகம் பித்திகை; கத்திகை; கத்திகை பித்திகை; பட்டிகைப் பித்திகை; பட்டிகைப் பத்திகை; பித்திகைப் பத்திகைச்; பித்திகைப் பட்டிகை; பெட்டிடை பித்திகை. (75)

பலவகையொலிகள்

965. புதுக்கொண்ட வேழம் பிணிப்போர்புனை பாட லோதை
மதுக்கொண்ட மாந்தர் மடவாரின் மிழற்று மோதை
பொதுப்பெண்டி ரல்குற் புனைமேகலைப் பூச லோதை
கதக்கொண்ட யானை களியாற்களிக் கின்ற வோதை.

புது கொண்ட வேழம்-புதிதாகப் பிடித்த யானையை, பிணிப்போர்-வசப்படுத்திக் கட்டுபவர். புனை-கற்பித்துப் பாடுகிற, பாடல் ஓதை-(இனிய)பாட்டின் ஓசையும், மதுகொண்ட மாந்தர்-கட்குடித்த ஆடவர், மடவாரின்-மகளிரிடத்தில், மிழற்றும் ஓதை-(காமக் குறிப் போடு) குழறிப்பேசுகிற பேச்சின் ஓசையும், பொது பெண்டிர்-வேசையர், அல்குல் புனை-(தம்) இடையில் அணிந்த, மேகலை-இடையணிகளின்; பூசல் ஓதை-சலசலப்பொலியும், கதம் கொண்ட யானை-மத வெறி கொண்ட யானைகள், களியால்-மதக்களிப்பால், களிக்கின்ற ஓதை-செருக்கி வீரிடுகின்ற ஓசையும் (அப்பாடி நகரிலே எழுந்தன).

முடிவு வருவித்து உரைக்கப்பட்டது. முடிக்குஞ்சொல்லின்றி அவாய் நிலையாக நிறுத்தினமையின், இவை போன்ற பிற ஒலிகளும் அங்கெழுந்தன எனக் கொள்ளல் தகும். கதக் கொண்ட: வலித்தல் விகாரம்.

புதிதாகப் பிடித்த யானையை வசப்படுத்த, யானைகளின் குறிப்புமொழி அறிந்த அனுபவமுள்ள பாகர்கள், அம்மொழிகளை இசைப்பாட்டாகப் புனைந்து பாடுவராதலின் 'புனைபாடல்' என்றார். யானை இசைக்கு வசப்படு மென்பதை, 'பிடியொடு போந்த பெருங் களிற் றொருத்தலை, வீரிய விளையர் வாரியுள் வளைஇ,.........கதந்தலை

யழியக் கந்தொ டார்த்துச், சாமகீத வோசையிற் றணிக்கும், நூலறி பாகரொடு' (பெருங். 1. 44; 59—64) என்பதனுலும், அதன் அடிக் குறிப்பாலும், 'காழ்வரை நில்லாக் கடுங்களிற் ஜெருத்தல், யாழ் வரைத் தங்கியாங்கு' (கலி.2: 26—7) என்பதனுலும் அறியலாம்.

(பி - ம்.) 1. பிணிப்பார்; பிணைப்போர்; புனைப்பாடல்; புனையாடல்; ஓசை.
2. மாதர்: மடவார்கள்; ஓசை. 3. பொதுப்பெண்டிர்; ஓசை.
4. கதுக்கொண்ட; யானைகளியாக்; வேழங்களியாற்; ஓசை. (76)

அங்கிருந்தார்க்குக் கங்குல் கழிந்த வகை

966. உண்ணுவமு தன்ன கலைப்பொரு ளுள்ள துண்டும்
பெண்ணாரமு தம்மனை யார்மனத் தூடல் பேர்த்தும்
பண்ணான பாடல் செவிமாந்திப் பயன்கொ ளாடல்
கண்ணா னனிதுய்க் கவுங்கங்குல் கழிந்த தன்றே.

(அப்பாடி நகரில் இருந்தவர்க்கு), உண்ணு அமுது அன்ன-வாயால் உண்ணப்படாத தேவாமிருதம் போன்ற, கலை பொருள் உள்ளது-காமக்கலையின் பொருளாகவுள்ள நுகர்ச்சி வகையை, உண்டும்-நுகர்ந்தும், பெண் ஆர் அமுதம் அனையார்-பெண்களுள் அரிய அமிர்தம் போன்றவரான (தம்) மனைவி மாரின், மனத்து ஊடல் பேர்த்தும்-மனத்தில் உண்டான புலவியை நீக்கியும், பண் ஆன பாடல்-இசையோடமைந்த (இனிய) பாடல்களை, செவி மாந்தி-காதாரப் பருகியும், பயன் கொள் ஆடல்-(அப்பாடல்களின்) பயனான பொருளுணர்ச்சியைக்கொண்ட ஆடலை, கண்ணால் நனி துய்க்கவும்-கண்களால் நன்கு அநுபவித்தும், அன்று கங்குல் கழிந்தது-அன்றை இராப்பொழுது கழிந்தது. ஏ, ஈற்றசை.

ஐம்புலன்களாலும் நுகரத்தக்க இன்ப நுகர்ச்சிகளால் அங்குள்ளார்க்கு அன்றை இராப்பொழுது கழிந்தது என்க. முன் இரண்டடிகளிற் கூறியவை ஆடவர்க்கும், பின்னிரண்டடிகளிற் கூறியவை இருபாலார்க்கும் உரியனவாகக் கொள்க. கலை-இடம் நோக்கிக் காமக்கலையெனப்பட்டது; பிற கலைகளும் ஆம். பாடற் பயன் கொள் ஆடல்-பாடலின் பொருளுக்கேற்ற அபிநயங்களுடன் கூடிய நடன நாடகம். பயன்கொள்-கண் பெற்றதற்குரிய பயனைக்கொண்ட என்றலும் ஆம்.

'மாந்தி' என்றவிடத்து உம்மை தொக்கது.

(பி - ம்.) 1. தலைப்பொருள்: உள்ளதுண்டு; உள்ளத்துண்டும்.
2. அமுதமனையார்; பேர்த்துப்.
3. பண்ணார்ந்த: பாடற்செவி: மாந்தியப்; மாந்தியும். (77)

வரைக்காட்சிப் படலம் முற்றும்.

# 15. பூக்கொய் படலம் *

பூக்கொய் படலம்: பூக்களைக் கொய்தல் பற்றிக் கூறும் படலம் என விரியும்.

முன் படலத்தின் இறுதியிற் கூறியவாறு இராப் பொழுது கழிந்தபின், மறுநாட் காலையில் அனைவரும் சந்திரசைலத்தை அடுத்துள்ள சோணையாற்றங்கரையை அடைந்து, அங்கிருந்த பூஞ்சோலைகளில் புகுந்து பூக்களைக் கொய்தும், பிறவகையாலும் விளையாடிய செயல்கள் இப்படலத்துள் விரிவாகக் கூறப்படும்.

### சூரியோதயம்

967. மீனுடை யெயிற்றுக் கங்குற் கனகனை வெகுண்டு வெய்ய
கானுடைக் கதிர்க ளென்னு மாயிரங் கரங்க ளோச்சித்
தானுடை யுதய மென்னுந் தமனியத் தறியி னின்று
மானுட மடங்க லென்னத் தோன்றினன் வயங்குவெய்யோன்.

வயங்கு வெய்யோன்-(ஒளியோடு) விளங்கும் சூரியன், மீன் எயிறு உடை(ய)-நட்சத்திரங்களாகிற பற்களையுடைய, கங்குல் கனகனை வெகுண்டு-இரவாகிய இரணியனைக் கோபித்து, (அழிக்கும் பொருட்டு), கான் உடை(ய)-அடர்ச்சியுள்ள, வெய்ய-வெப்பமான, கதிர்கள் என்னும்-கிரணங்கள் என்று சொல்லப்படுகிற, ஆயிரம் கரங்கள் ஓச்சி-ஆயிரம் கைகளை (வெளியே) நீட்டிக்கொண்டு, தான் உடை(ய)-தான் தோன்றுதற்கு இடமாகக் கொண்ட, உதயம் என்னும்-உதயகிரி எனப்படும், தமனியம் தறியின் நின்று-பொற்றூணிலிருந்து, மானுட மடங்கல் என்ன-நரசிங்கமூர்த்தி யென்னும் படி, தோன்றினன்-வெளிப்பட்டான்.

இரணியன் பொன்னிறமுடையவனுயினும், பொதுவாகஅசுரர் கருநிறமுடையவராகக் கூறப்படுதல் பற்றி, கருநிறமுடைய இரவை இரணியனுக வைத்து, இரணியனை அழிக்கப் பொற்றூணிலிருந்து வெளிப்பட்ட நரசிங்கமூர்த்திபோலச் சூரியன் இரவாகிய இரணியனை அழிக்கும் பொருட்டு உதயகிரியாகிய தூணினின்றும் வெளிப்பட்டான் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறினர். உருவகம், உவமை, தற்குறிப்பேற்றம் என்ற மூன்று அணிகளும் இப்பாடலுள் விரவி

---

* 'மலர்கொய் படலம்' எனவும் சில சுவடிகளில் பெயர் காணப்படுகிறது.

வந்துள்ளன. இரவை அரக்கனுகக் கூறியதற்கேற்ப, நட்சத்திரங் களைக் கோரப் பற்களாகக் கூறினுர். கான்-காடு; இங்கே அடர்ச்சி குறித்தது. சீவக. 2901.

(பி - ம்.) 2. கானுடை நகங்களென்னும்; நகங்கள் தங்கும்; கானுடைக் கதிர்க டங்கும்; கானுடைக் கரங்ளென்னும்; ஆயிரங் கதிர்கள்.
3. தறியுணின்று.
4. மானிட மடங்கல்: தோன்றினுன்: வயங்கும் வெய்யோன். (1)

அனைவரும் சோணையாற்றங்கரை யடைதல்

968. முறையெலா முடித்த பின்னர்
மன்னனு மூரித் தேர்மேல்
இறையெலாம் வணங்கப் போனு
னெழுந்துடன் சேனை வெள்ளம்
குறையெலாஞ் சோலை யாகிக்
குழியெலாங் கழுநீ ராகித்
துறையெலாங் கமல மான
சோணையா றடைந்த தன்றே.

முறை எலாம் முடித்த பின்னர்-அன்றைக் காலைக் கடன்களை யெல்லாம் முடித்துக்கொண்ட பின், மன்னனும்-தசரத சக்கரவர்த்தி யும், மூரி தேர் மேல்-பெரிய தேரில் ஏறி, இறை எலாம் வணங்க-அரசரெல்லாரும் தன்னை வணங்கும்படி, போனுன்-அங்கு நின்றும் புறப்பட்டான்; சேனை வெள்ளம்-கடல் போன்ற சேனையும், உடன் எழுந்து-சக்கரவர்த்தியுடனே புறப்பட்டு, குறை எலாம் சோலை ஆகி-ஆற்றிடைக் குறையான இடங்களெல்லாம் சோலையாகவும், குழி எலாம் கழுநீர் ஆகி-பள்ளமான இடங்களெல்லாம் செங்கழுநீர் உள்ளனவாகவும், துறை எலாம் கமலம் ஆன-நீர்த்துறைகளெல்லாம் தாமரையுடையனவாகவும் இருந்த, சோணை ஆறு அடைந்தது-சோணையாற்றங்கரையைஅடைந்தது. அன்றே: அசை.

மன்னனும், பரிவாரங்களான அனைவரும், சந்திரசைலச் சாரலி னின்றும் புறப்பட்டுச் சென்று சோணையாற்றங்கரையை அடைந் தனர் என்க. பின்னிரண்டடிகளில் சோணையாற்றின் வளம் சிறப் பிக்கப்பட்டது. இந்த ஆறு, பாடலிபுரத்தருகே கங்கையோடு கலப்பது.

குறை-ஆற்றிடைக் குறை. இறை: சாதியொருமை.

'குழியெலாங் கழுநீராகி': ஒப்பு. 'குழியெலாங் கழுநீர்க் கொள்ளை' (34).

(பி - ம்.) 1. முடித்தபின்னை; முடித்தபின்றை; முடித்துமன்னர்; மன்னனு முடிவல் லோரில். 2. எழுந்தது சேனை.
4. கமலம்பூத்த: சோனையாறு. (2)

969. அடைந்தவ ணிறுத்த பின்ன ரருக்கனு மும்பர் சார
மடந்தையர் குழாங்க ளோடு மன்னரு மைந்தர் தாமும்
குடைந்துவண் டுறையு மென்பூக் கொய்துநீ ராட மைதீர்
தடங்களு மடுவுஞ் சூழ்ந்த தண்ணறுஞ் சோலை சார்ந்தார்.

அடைந்து-(சோணை நதிக்கரையை)அடைந்து, அவண் இறுத்த பின்னர்-(அனைவரும்) அங்கே தங்கிய பின்பு, அருக்கனும் உம்பர் சார-சூரியனும் வானின் உச்சியை அடைய, மன்னரும்-அரசர்களும், மைந்தர் தாமும்-(அரசகுமாரரும் சேனை வீரருமான) இளஞரும், மடந்தையர்குழாங்களோடு-மகளிர்கூட்டத்துடனே, வண்டுகுடைந்து உறையும்-வண்டுகள் கிண்டிக்கொண்டு தங்குதற்கு இடமான, மென் பூ கொய்து-மெல்லிய பூக்களைப் பறித்து, நீர் ஆட-நீராடுதலுஞ் செய்யுமாறு, மைதீர்-குற்றமற்ற, தடங்களும்-தடாகங்களும், மடுவும்-மடுக்களும், சூழ்ந்த-சுற்றிலும் அமையப்பெற்ற, தண் நறு சோலை-குளிர்ச்சியும் மணமும் பொருந்திய சோலைகளை, சார்ந்தார்-அடைந்தனர்.

அனைவரும் சோணையாற்றங்கரையை அடைந்தபின், உச்சிப் பொழுதானமையின், வெப்பந்தீரக் குளிர்ச்சியான சோலையிடங்களை நாடிச் சென்றனராக, அவ்விடங்கள் சுற்றிலும் நல்ல நீர்நிலைகளை யுடையனவாய், நீர்விளையாடுதற்கும், பூக்கொய்து சூடுதற்கும் ஏற்றனவாயிருந்தன வென்றவாறு. 'பூக்கொய்து நீராட' என்றது, 'பூக்கொய்தல்', 'நீர்விளையாட்டு' என்ற இரண்டு படலச் செய்திகளுக்குத் தோற்றுவாயாகும்.

தடம்-அகன்ற நீர்நிலை; மடு-ஆழமான சிறிய நீர்நிலை; ஆற்றில் உண்டாவது. 'மைதீர்' என்ற அடைமொழி இரண்டிற்கும் பொருந்துவதாகும்; இவ்வாறு விசேடித்தது, மகளிரும் இறங்கி நீராடுதற் கேற்றவாறு அமைந்தவை என்ற குறிப்பு.

(பி - ம்.) 1. அடைந்தவனிறுத்த பின்றை; அடைந்தனனிறுத்த பின்றை; இறுத்த பின்னை; இருந்த பின்னர்: உம்பர்ச் சார; உம்பர்ச் சேர்ந்தான்.
2. குழாங்கடோறும்: மன்னரு மற்றையோரும்; மைந்தரு மன்னர்தாமும்.
3. வண்டுறையுந் தண்பூக்; வண்டிமிரு மென்பூக்: கொய்தினிதாடி; கொய்தினிதாட; நன்னீர்த்; கைதீர்த். 4. சோலை புக்கார். (3)

970. திண்சிலை புருவ மாகச் சேயரிக் கருங்க ணம்பால்
புண்சில செய்வ ரென்று போவன போன்ற மஞ்ஞை.
பண்சிலம் பணிவா யார்ப்ப நாணிஞற் பறந்த கிள்ளை
ஒண்சிலம் பரற்ற மாத ரொதுங்குதோ ரொதுங்கு மன்னம்.

(மகளிர் சோலையுட் புகுந்தபோது),மஞ்ஞை-(அங்கிருந்த) மயில்கள், புருவம் திண்சிலை ஆக-(மாதர், தங்களுடைய)புருவத்தை வலிய வில்லாகக்கொண்டு, சேய் அரி கரு கண் அம்பால்-செவ்வரி பரந்த

கரிய கண்களாகிற அம்புகளால், புண் சில செய்வர் என்று-(நமக்குச்) சில புண்களை யுண்டாக்குவ ரென்று (அஞ்சி), போவன போன்ற- விலகிச் செல்வனபோலக் காணப்பட்டன; பண் சிலம்பு-இசைபோல (இனிமையாக) ஒலிக்கின்ற, அணி வாய்-அழகிய வாயினுல், ஆர்ப்ப-(மாதர்) பேச, கிள்ளை-(அப்பேச்சைக் கேட்ட) கிளிகள், நாணினுல்-வெட்கத்தினுல், பறந்த-பறந்து போயின; மாதர்—, ஒண் சிலம்பு அரற்ற-ஒளி பொருந்திய கால் சிலம்புகள் ஒலிக்க, ஒதுங்கு தோறு(ம்)-(மெல்ல) நடக்குந்தோறும், அன்னம்-(அந்நடையைக் கண்ட) அன்னப் பறவைகள்; ஒதுங்கும்-அவர்களைப்போலத் தாமும் நடந்து பார்க்கும். அவர்களைவிட்டு விலகிச் செல்லும் என்றலும் ஆம்.

மயில், கிளி, அன்னம் ஆகிய மூன்றும் முறையே மாதரின் சாயல், சொல், நடை ஆகியவற்றுக்குத் தோற்று விலகிச் சென்றன என்பது கூறியவாறு. சிலம்பின் ஒலி அன்னத்தின் குரல் போன்ற தாகலின், அன்னங்கள் அவ்வொலி கேட்டுத் தம் இனம் எனக் கருதி அவர்களை அணுகி வந்து தொடர்ந்து நடக்கலாயின என உரைத்தலும் ஆம். ஆர்த்தல்-ஒலித்தல்; இங்கே பேசுதலைக் குறித்தது.

மயிலை அம்பெய்து கொல்வதுண்டாதலின் 'கருங்கணம்பால் புண் செய்வர்' என அவை அஞ்சின என்றுர். 'ஏவுறு மஞ்ஞையி னடுங்கி' (முல்லைப். 84); 'ஏவுறு மஞ்ஞையின் இனைந்தடி வருந்த' (மணி. 7: 127). அன்னக் குரலுக்குச் சிலம்பொலி: 158-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. கண்களம்பாய்ப்; கருங்கணம்பாப்.
2. புண்சிலர் செய்வாரென்று: போவது போன்ற.
3. பண்சிலம்பளிகள்; பண்சிலம்பணிகள்; பண்சிலம்படிகள்; பறந்த போன்ற; பறந்துபோன.
4. ஒண்சிலம் பார்ப்ப; ஒதுங்குந்தோறு; ஒதுங்கத்தோற்று: ஒதுங்கு கின்றுர். (4)

971. செம்பொன்செய் சுருளுந் தெய்வக் குழைகளுஞ் சேர்ந்து [மின்னப்
பம்புதே னலம்ப வொல்கிப் பண்ணையி னூட னேக்கிக்
கொம்பொடுங் கொடிய னுரைக் குறிப்பறிந் துணர்த ரேற்றுர்
வம்பவி ழலங்கன் மார்பின் மைந்தரு மயங்கி நின்றுர்.

செம் பொன் செய்-நல்ல பொன்னுற் செய்யப்பட்ட, சுருளும்-ஓலையென்னும் காதணிகளும், தெய்வம் குழைகளும்-தெய்வத்தன்மை வாய்ந்த குண்டலங்களும், சேர்ந்து மின்ன-கூடி ஒளி வீசவும், பம்பு தேன் அலம்ப-நெருங்கிய வண்டுகள் ஒலிக்கவும், ஒல்கி-அசைந்து, பண்ணையின்-கூட்டமாக, ஆடல் நோக்கி-(மகளிர்) விளையாடுதலைக் கண்டு, வம்பு அவிழ்-மணம் வீசுகிற, அலங்கல் மார்பின்-பூமாலை யணிந்த மார்பினையுடைய, மைந்தரும்-குமரரும், கொம்பொடும்-

பூங்கொம்புகளுடனே, கொடி அன்னாரை-பூங்கொடி போன்றவ ராகிய தம்மனைவிமாரை, குறிப்பு அறிந்து உணர்தல் தேற்றார்-அடை யாளங் கண்டறிய இயலாதவராய், மயங்கி நின்றார்-பிரமித்து நின்றார்கள்.

சோலையிலே பூஞ்செடிகளுள்ள விடத்து மகளிர் கூட்டமாக நின்று விளையாடிக்கொண்டிருக்கக் கண்ட ஆடவர்கள், பெண்களுக் கும் பூங்கொம்புகளுக்கும் எளிதில் வேறுபாடு கண்டறியமாட்டாத வராகி மயங்கி நின்றனர் என்க. முன் இரண்டடிகள் சிலேடையாகப் பூங்கொம்புகளுக்கும் பொருந்துவனவாம்; பூங்கொம்புகளுக்கு: சுருள்-பிரியாத கொழுந்தின் சுருள்; குழை-தளிர்; செம்பொன் செய் நல்ல பொன்போலத் தோற்றுகிற; வண்டுகள் மொய்த்தலும் கூட்ட மாக அசைந்தாடுதலும் பொர்து. 'தெய்வக் குழை' என விசேடித் தது, தேவமாதர் அணிவன போன்ற சிறந்த குண்டலங்கள் என்றும், தேவ தருக்களின் தளிர் போன்ற தளிர் என்றும் குறிப்பித்தவாறும். பகுத்துணர வல்ல ஆடவரும் மயங்கி நின்றனர் என்றதனால், உம்மை உயர்வு சிறப்பு.

(பி - ம்.) 2. அலம்ப வோங்கிப்: ஆடநோக்கிக்.
3. கொம்பொடு; கொம்புசேர்; கொடியன்னாரைக்; கொடியினாரைக்: குறித்தறிந்து; குறியறிந்து; குறிப்புணர்ந்தறிதல் தேற்றா.
4. அலங்கன் மாலை. (5)

972. பாசிழைப் பரவை யல்குற் பண்டருங் கிளவித் தண்டேன்
மூசிய கூந்தன் மாதர் மொய்த்தபே ரமலைக் கேட்டுக்
கூசின வல்ல பேச நாணின குயில்க ளெல்லாம்
வாசகம் வல்லார் முன்னின் றியாவர்வாய் திறக்க வல்லார்.

பசுமை இழை-பசும் பொன்னாலும் மணியாலு மியன்ற அணி கள் பூண்ட, பரவை அல்குல்-பரந்த நிதம்பமும், பண் தரும் கிளவி-இசையின் இனிமை பொருந்திய சொற்களும், தண் தேன் மூசிய கூந்தல்-(சூடிய பூக்களின்) குளிர்ந்த தேன் பிலிற்றும் கூந்தலும் உடைய, மாதர்-பெண்கள், மொய்த்த-(அங்கு வந்து) திரண்டதனா லான,பேர் அமலை கேட்டு-பேரிரைச்சலைக் கேட்டு,குயில்கள் எல்லாம்-(அங்கே தங்கி வாழ்ந்த) குயில்கள் எல்லாம், கூசின அல்ல-அச்சங் கொண்டனவல்ல; பேச நாணின-வாய் திறந்து கூவ நாணங்கொண் டன; வாசகம் வல்லார் முன் நின்று-நன்கு பேசவல்லவர் முன்னே நின்று, வாய்திறக்க வல்லார்-(தாமும்) வாய் திறந்து பேச வல்லமை யுடையவர், யாவர்-யார் இருக்கிறார்கள் ?

அச்சோலையில் இருந்த குயில்கள், தம்மியல்பிலே கூவாது வாயடங்கியிருந்தன; அதற்குக் காரணம், அங்கு வந்து நிறைந்த பெண்களின் குரலினிமைக்குத் தம் குரல் ஒவ்வாது என்று கருதி

நாணங்கொண்டமை என்கிறர்; ஏதுத்தற்குறிப்பேற்றம். இச்சிறப்புப் பொருளை, 'பேச்சில் வல்லவர் முன்னே தாமும் பேசத் தொடங்குவது யாவர்க்கும் இயலாது' என்ற பொதுப் பொருளாலே சாதித்தமையால், வேற்றுப்பொருள்வைப்பணி.

கிளவித்தண்டேன்-சொற்களாகிற குளிர்த்த தேனையும், மூசிய கூந்தல்-அடர்ந்த கூந்தலையுமுடைய எனக் கூட்டியுரைத்தலும் ஆம். 'யாவர்' என்ற வினு 'ஒருவருமில்லை' என்ற எதிர்மறைப் பொருள் தந்தது.

குயிலின் செய்தி: ஒப்பு: கிட்கிந்தா. *109*, *477*; 'எழுத்தறியார் கல்விப் பெருக்க மனைத்தும், எழுத்தறிவார்க் காணின் இலையாம்' (நன்னெறி).

(பி - ம்.) 1. பாசிழை பரவையல்குல் பண்டருகிளவி தண்டேன்: கிளவிச்செந்தேன்: கிளவிதிண்டேன். 2. மூசின.
3. கூசியவன்னம்: பேசா; குயில்களென்றால்; குயில்களென்ன; கூசிய வல்ல நாணின் குயில்களே போல வெல்லாம்.
4. வாசகமுடையார் முன்னர் யாவரே வகுக்க வல்லார். (6)

## மகளிர் பூக்கொய்தல்

978. நஞ்சினுங் கொடிய நாட்ட மமுதென நயந்து நோக்கிச்
செஞ்செவே கமலக் கையாற் றீண்டலு நீண்ட கொம்பும்
தஞ்சிலம் படியின் மென்பூச் சொரிந்திடை தாழ்ந்த வென்றல்
வஞ்சிபோன் மருங்கு லார்மாட் டியாவரே வளைகி லாதார்.

(பெண்கள்), நஞ்சினும் கொடிய நாட்டம்-(ஆடவரை வருத்துதலில்) விடத்தினும் கொடுமையுடைய (தங்கள்) கண்களால், அமுது என-(அப்போது கண்டவர்) அமுதம் என்று சொல்லும் வண்ணம், நயந்து நோக்கி-(கொடுமையின்றி) விரும்பிப் பார்த்து, கமலம் கையால்-தாமரைப் பூப்போன்ற (தம்) கைகளால், செஞ்செவே தீண்டலும்-(கொம்புகளை) எளிதாகப் பற்றியவுடனே, நீண்ட கொம்பும்-நீண்டு உயர்ந்த பூங்கொம்புகளும், தம் சிலம்பு அடியில்-அவர்களுடைய சிலம்பணிந்த பாதங்களிலே, மென் பூ சொரிந்து-மெல்லிய மலர்களை (நிறைய) உதிர்த்து, இடை தாழ்ந்த என்றல்-அவ்வடிகளிலே வணங்கின எனில், வஞ்சி போல் மருங்குலார் மாட்டு-கொடி போலும் இடையையுடைய மகளிரிடத்தே, வளைகிலாதார் யாவர்-பணியாதவர் எவருளர்? (ஒருவருமில்லை).

செஞ்செவே-நன்றாக, செவ்வையாக எனவுமாம்.

பெண்கள் தம் கண்களாலேயே பிறரை வருத்தலும் நயத்தலும் செய்ய வல்லவராதலின் 'நஞ்சினுங் கொடிய நாட்டம் அமுதென நயந்து நோக்கி' என்றார்; 'இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு, நோய்நோக்கொன் றந்நோய் மருந்து' (குறள். *1091*.)என்

பது காண்க. பெண்களின் நயந்த பார்வையும் கையின் பரிசமும் ஓரறிவுயிரான பூங்கொம்பையும் வணங்கச் செய்தன வெனில், ஆறறி வினரான ஆடவர் வணங்குதல் சொல்ல வேண்டுவதில்லை யன்றோ? அதனையே, 'யாவரே வளைகிலாதார்' என்ற எதிர்மறை வினவாற் பெறவைத்தார். பூங்கொம்புகள் மகளிரைத் தெய்வம் போலக் கொண்டு அவர் திருவடிகளை அருச்சித்து வணங்கின என்ற பொருள் பட நயமாகக் கூறினர்.

பெண்களின் கண்களில் நஞ்சும் அமுதும் உண்டெனல்: 'நஞ்சினோ டமுதங் கூட்டி நாட்டங்க ளான வென்ன' (1208); கிட்கிந்தா. 32-ம் காண்க. செஞ்செவே: 346, 1149, 1208; யுத்த. 543. மரக்கொம்பு களின் செயல்: 'நித்தில முலையினார்த நெடுங்கணா னோக்கப்பெற்றும், கைத்தலந் தீண்டப் பெற்றுங் கனிந்தன மலர்ந்த காண்க, வைத்தலர் கொய்யத் தாழ்ந்த மரமுயி ரில்லை யென்பார், பித்தல ராயிற் பேய்கள்' (சீவக. 1907); 'பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே, பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு-மேவியவர், பொன்னடியிற் றாழ்ந்தனவே' (நள. 171.)

(பி - ம்.) 1. நஞ்சிலும்; நஞ்செனும்: அமுதினும்; அமுதெழ; அமிர்தினும்; அமிர்தென. 2. நீண்ட கொம்பர்; நீண்ட கொம்பு. 3. மென்பூச் சொரிந்துடன்; சொரிந்தடி; சொரிந்திடத்: மென்பூக்குவித் திடை: தாழ்ந்த தென்றால்; தாழ்வ வென்றால்; தளர்ந்த வென்றால். 4. வஞ்சியம்; வஞ்சியாம்: யாவரோ: வணங்கலாதார்; வணங்கி லாதார்; வளைகலாதார்; வளைந்திடாதார். (7)

974. அம்புயத் தணங்கி னன்ன ரம்மலர்க் கைக டீண்ட
வம்பவி ழலங்கற் பங்கி வாளரி மருளுங் கோளார்
தம்புய வரைகள் வந்து தாழ்வன தளிர்த்த மென்பூங்
கொம்புக டாழு மென்றல் கூறலாந் தகைமைத் தொன்றோ.

அம்புயத்து அணங்கு அன்னார்-தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமிதேவி போன்ற மகளிரின், அம்மலர் கைகள் தீண்ட-அழகிய பூப்போலும் (மெல்லிய) கைகள் தீண்டுவதனால், வம்பு அவிழ் அலங்கல் பங்கி-மணம் விரியும் பூமாலை சூடிய மயிர் முடியையும், வாள் அரி மருளும் கோளார் தம்-கொடிய சிங்கமும் (கண்டு) கலங்கத்தக்க வலிமையுமுடைய ஆடவர்களின், புயம் வரைகள்-தோள்களாகிய மலைகளே, வந்து தாழ்வன-(எளிமையாக) வந்து தாழ்வனவாகும்; (அவ்வாறாயின்), தளிர்த்த மென் பூ கொம்புகள்-தளிர்த்து மெல்லிய பூக்களைக்கொண்ட கொம்புகள், தாழும் என்றல்-(மகளிர் கைபடுவத னால்) தாழ்கின்றன என்பது, கூறல் ஆம் தகைமைத்து ஒன்றோ-எடுத் துச் சொல்லுந்தன்மையுடைய ஒரு பொருளாகுமோ ?—(ஆகாது).

முன் கவியுட் கூறிய பொருளையே முறை மாற்றி இங்கே கூறி யுள்ள நயம் அறிந்தின்புறுதற்குரியதாகும். மகளிரின் மென்மைக்குக்

கல்லும் கனியும் என்ற பொருள்பட, 'புயவரைகள் வந்து தாழ்வன' என்றார். உயிரும் உணர்வும் அற்ற கல்லே குழையுமென்றால் உயிர்ப் பொருளின் குழைவு கூறாமலே அமையும்.

அணங்கின் அன்னார்: இன், சாரியை; 'கோளார்' என்றதில் கோள்-தன்மை எனப் பொருள் கொண்டு, 'சிங்கத்துக்குரிய வீரம், அஞ்சாமை, தோற்றம் முதலிய எல்லாத் தன்மைகளு முடையவர் என உரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. அணங்கினெல்லார்: அம்மலர்க் கைகணிட்ட; கைகனிண்ட; மலர்க்கர நீட்ட வாங்கே.
2. வம்பியலலங்கற்: வாளரி மருங்கு கேள்வர்.
3. தாழ்ந்தவ: தாழ்ந்தது; தாழுமேல்: தாழ்ந்த மென்பூக்.
4. தாழுமென்றால்; தாழ்ந்தவென்றல்; தாழ்ந்தவென்றால்; தாழ்ந்த வென்றங்கு; தாழ்ந்ததென்றாங்கு; தாழ்ந்ததென்னல்; தாழ்ந்த வென்னில்: கூறின தருமைத்தன்றோ, அவர்நிலைகூறலாமோ அதனிலை கூறற்பாற்றோ; கூறலாந் தகைமைத் தன்றே; கூறலாந் தகைம தொன்றோ. (8)

975. நதியினுங் குளத்தும் பூவா நளினங்கள் குவளை யோடு
மதிநுதல் வல்லி பூப்ப நோக்கிய மழலைத் தும்பி
அதிசய மெய்திப் புக்கு வீழ்ந்தன வலைக்கப் போகா
புதியன கண்ட போது விடுவரோ புதுமை பார்ப்பார்.

மதி நுதல் வல்லி-பிறைச்சந்திரன் போன்ற நெற்றியையுடைய (மகளிராகிய) பூங்கொடிகள், நதியினும்-ஆறுகளிலும், குளத்தும்-குளங்களிலும், பூவா - மலராத, நளினங்கள் - தாமரைப் பூக்களை, குவளையோடு பூப்ப-(தம்முட் கொண்ட) குவளை மலருடனே பூத்து நிற்க, நோக்கிய-(அக்காட்சியைக்) கண்ட, மழலை தும்பி-இன்னொலி செய்யும் வண்டுகள், அதிசயம் எய்தி-ஆச்சரியமடைந்து, புக்கு வீழ்ந்தன-(அவற்றிலே) போய் மொய்த்தனவாகி, அலைக்க-(மகளிர் கைகளால்) ஓட்டவும், போகா-(அங்குநின்றும்) போகாவாயின; புதுமை பார்ப்பார்-(எப்போதும்) புதுமையை நாடுபவர்கள், புதியன கண்ட போது-புதிய பொருள்களைக் கண்டபோது, விடுவரோ-(அவற்றை) விடுவார்களோ? (விடார்).

நளினங்கள் - மகளிரின் முகங்களையும், குவளை-கண்களையும் குறிப்பன; நீர்ப்பூவாகிய இவை ஒன்றினுள் மற்றொன்றாக நிலத்தே கொடியினிடத்து மலர்ந்தமை அதிசயமாகும்; அக்கொடியும், சாதாரணமான கொடிகள் போலன்றி, 'மதிநுதல்கொண்ட' கொடியாதல் மேலும் அதிசயத்திற்கிடமானது. எனவே, வண்டுகள் அங்கு வந்து மொய்த்துக் கொண்டு, ஓட்டவும் போகாவாயின. வண்டுகளின் இயல்பு புதிய புதிய பூக்களை நாடிச் செல்லுதலாகும். இச்சிறப்புப் பொருளை 'புதியன கண்டபோது விடுவரோ புதுமை பார்ப்பார்'

என்ற பொதுப்பொருளாலே சமர்த்தித்தமை வேற்றுப்பொருள்வைப் பணி யாகும். விடுவரோ: ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

நளினங்கள் குவளையோடு பூத்தல்: 'முண்டகத்தின் மேலே முழு நீலம் பூத்ததனைக், கண்டதுண்டு' (தனிப்.). மழலைத்தும்பி: 'மழலை வண்டினம் நல்லியாழ் செய்ய' (மணி. 4:2.). மொய்த்த வண்டுகள் அலைக்கப் போகாமை: 'ஒருத்தி, கணங்கொண் டவைமூசக் கையாற்றுள் பூண்ட, மணங்கமழ் கோதை பரிபுகொண் டோச்சி, வணங்குகாழ் வங்கம் புகும்' (கலி. 92: 45-7.) 'கோல நாண்மலர் கொய்பவ ளங்கையில், ஒலிடுஞ்சுரும் போச்சவும் போகில, மாலுழந்து மறிந்து விழுவன' (நைடத. போதுகொய் படலம். 14).

(பி - ம்.) 1. நளினங்கட் குவளையோடு. 2. மதிமுக வவ்வி; மாலைத்தும்பி. 3. அகலப்போகா. 4. கண்டபோழ்து; கண்டபோதும். (9)

976\. உலந்தரு வயிரத் திண்டோ ளொழுகிவா ரொளிகொண் மேனி
மலர்ந்தபூந் தொடையன் மாலை மைந்தர்பான் மயிலி னன்னார்
கலந்தவர் போல வொல்கி யொசிந்தன சிலகை வாராப்
புலந்தவர் போல நின்று வளைகில பூத்த கொம்பர்.

உலம் தரு வயிரம் திண் தோள்-திரண்ட கல்லின் தன்மையோடு வயிரத்தின் உறுதியும்கொண்ட தோள்களையும், ஒழுகி-ஒழுங்குபட்டு, (நிமிர்ந்து), வார் ஒளி கொள்-மிக்க ஒளியையும் கொண்ட, மேனி-உடம்பையும், மலர்ந்த பூ தொடையல் மாலை-மலர்ந்த பூக்களால் தொடுக்கப்பெற்ற மாலையையும் உடைய, மைந்தர்பால்-இளைஞரிடத்தே, கலந்தவர் மயில் அன்னார் போல-கூடினவராகிய மயில் போலும் சாயலுடைய மகளிரைப்போல, பூத்த கொம்பர் சில-பூங்கொம்புகளிற் சில, ஒல்கி ஒசிந்தன-துவண்டு வளைந்தன; சில-மற்றும் சில கொம்புகள், கைவாரா புலந்தவர்போல-(ஊடலுணர்த்தலுக்கு) வசப்படாமல் புலந்து நின்ற மகளிர்போல, நின்று-மிறைத்துநின்று, வளைகில-(மகளிர் கைப்பிடிக்கு) வளையாதனவாயின.

பூத்த கொம்பர் சில, மைந்தர்பால் கலந்தவர்போல ஒசிந்தன; சில, கை வாராப் புலந்தவர்போல நின்று வளைகில எனக்கூட்டி முடிபு கொள்க. 'கைவாரா' என்பதற்கு (மகளிர்) கைக்கு அகப்படாமல் என்றுரைத்தலும் ஆம். மகளிர் இயல்பையே பூங்கொம்புகளுக்கு ஒப்புக் கூறியுள்ள நயம் இன்பந் தருவதாகும்.

ஒழுகி-ஒழுங்குபட்டு என்னும் பொருளதாதலை 'மால்வரை யொழுகிய வாழை' (சிறுபாண். 21.) என்றவிடத்துக் காண்க.

(பி - ம்.) 1. உலந்தரும்: வயிரத் தோண்மேல்: ஒழுகுவாள்; ஒழுகும்வார்: ஒளிக் கொள்மேனி; நறையின்மல்கும்; உலந்தரு வயிரத்தோண்மீ தொழுகுவார் நறைகண் மல்கி.

2. மலர்ந்தபூத் தொகையின்; மலர்ந்ததேன் றொடையல்.
3. கலந்தனபோல வொல்கி யுலந்தன: சிலகை வாரப்; சிலகை வாரா; சிலவைவாராப்; சிலக்கை வாராப்; சுனைகளாரப்.
4. புலர்ந்தவர்போல நின்ற: உளசில; வளைகிலா; வளைந்தன: பூந்த கொம்பு. (10)

977. பூவெலாங் கொய்து கொள்ளப்
பொலிவில துவள நோக்கி
யாவதாங் கணவர் கண்ணுக்
கழகில விவையென் றெண்ணிக்
கோவையும் வடமு நாணுங்
குழைகளுங் குழையப் பூட்டிப்
பாவையர் பணிமென் கொம்பை
நோக்கினர் பரிந்து நின்றார்.

பூ எலாம் கொய்து கொள்ள-பூக்களையெல்லாம் (பலர்) பறித்துக் கொண்டதனால், பொலிவு இல துவள-(பூங்கொம்புகள்) அழகில்லாதன வாகித் துவள, நோக்கி-அதனைக் கண்டு, பாவையர்-பதுமை போல்வாரான (சில) பெண்கள், 'அழகு இல இவை-அழகில் லாத இக்கொம்புகள், கணவர் க்ண்ணுக்குயாவது ஆம்-(நம்) கணவன் மார் பார்வைக்கு எவ்வாறாகும்?' என்று எண்ணி—, கோவையும்-(தம் முடைய) மணிமாலைகளையும், வடமும்-முத்து வடங்களையும்,நாணும்-பொன் நாணையும், குழைகளும்-காதணிகளையும், குழைய பூட்டி-(பாரத்தினால்) வளையும்படி (அவைகளுக்குப்) பூட்டி, பணி மென் கொம்பை-(அவ்வாறு) வளைந்த மெல்லிய கொம்புகளை, பரிந்து நோக்கினர் நின்றார்-(செயற்கையான அப்புதிய அழகினால்) விரும்பிப் பார்த்தவண்ணம் நின்றனர்.

பூக்களெல்லாம் பறிக்கப்பட்டு முன்னிருந்த அழகிழந்து துவண்ட பூங்கொம்புகளைப் பார்த்த சில பெண்கள், தம்முடைய கணவன்மார் அவற்றை அந்நிலையில் காணுதல் தகாதென்று கருதி, தம் அணிகலன்களைக் கழற்றி அக்கொம்புகளுக்குப் பூட்டி, அச் செயற்கையழகில் ஒருபுதுமை தொன்றுதலால் அதனை விருப்பத்துடன் பார்த்து மகிழ்ந்து நின்றனர் என்க.

கோவை-பலவடங்கள் கொண்டது; வடம்-ஒற்றை வடத்தால் ஆனது. நாண்-பொன்னாலாகிய கொடி.

(பி - ம்.) 1. பூவெல்லாம் பறித்துக்கொள்ளப்: துவளல் நோக்கி.
2. யாவையாம்; யாவர்தாம்; யாவர்தம்: அழகில; அழகல: இவை யென்றுன்னிக்; அவையென்றுன்னிக்.
3. கோவைவார் வடமும் பூணும் பணிகளும்.
4. பாவைமார்: நோக்கினர் பரிந்து நிற்பார்; பனிமென் கொங்கைப் பரிந்தவர் நோக்கி நின்றார். (11)

### பல நிகழ்ச்சிகள்

(வேறு)

978. துறும்போ தினிற்றேன் றுவைத்துண்டுழ
றும்பி யீட்டம்
நறுங்கோதை யோடு நளிர்சின்னமு
நீத்த நல்லார்
வெறுங்கூந்தன் மொய்க்கின் றனவேண்டல
வேண்டு போதும்
உறும்போக மெல்லா நலனுள்வழி
யுண்ப ரன்றே.

துறும் போதினில் தேன்-அடர்ந்த பேரரும்புகளில் உள்ள தேனை, துவைத்து உண்டு உழல்-(அரும்புகளை) மிதித்து மலர்த்திக் குடித்துத் திரிகின்ற, தும்பி ஈட்டம்-வண்டுக் கூட்டம், நல்லார்-பெண்களின், நறு கோதையோடு-மணமுள்ள பூ மாலையையும், நளிர் சின்னமும்-குளிர்ந்த விடு பூக்களையும், நீத்த-களையப் பெற்ற, வெறும் கூந்தல் மொய்க்கின்றன-வெறுமையான கூந்தலிலே (வந்து) மொய்த்துக் கொண்டன வாகி, வேண்டு போதும் வேண்டல-(அவை) எப்போதும் விரும்புகிற (பிற) பூக்களையும் விரும்பாதனவாயின; நலன் உள்வழி-நல்ல பயனுள்ள விடத்தில், உறும் போகம் எல்லாம்-அடையத்தக்க எல்லா இன்பங்களையும், உண்பர் அன்றே-(அறிவுடையோர் பெற்று) அநுபவிப்பரன்றோ ?

பயனுள்ள நல்ல இடத்தைக் கண்டால், அங்கே பெறத்தக்க நன்மைகளை விடாது பெற்று நுகர்தல் அறிவுடையோர் செயலாகும்; அவ்வாறே, வண்டுகள், மகளிரின் கூந்தலில் இயற்கை மணங் கண்டதனல், அங்கே போய் மொய்த்துக் கொண்டு அந்நறு மணத்தை நுகர்வன வாயின என்க. பூக்களெல்லாம் கொய்யப்பெற்றபின், அங்கே சுற்றித் திரிந்த வண்டுகள், அங்கிருந்த மகளிரின் கூந்தலில் புதுமையான நறுமணங் கமழ்தல் கண்டு, தம் இயல்பின்படி அங்கே மொய்த்துக்கொண்டன. இதுவும் வேற்றுப்பொருள்வைப்பணி. புதியன கண்டபோது விடுவரோ புதுமை பார்ப்பார் (975) என்றார் முன்னும்.

கோதை-கட்டின மாலை; சின்னம்-விடுபூ; உதிரியான பூ; **1011, 1210; அயோத். 628, 711; சீவக. 2251.** பூக்களை, விடுபூ, தொடைப் பூ, கட்டுப் பூ என மூவகையாக்கிச் சூடுவர்: **சிலப். 5: 14-** அடியார்க்கு.

(பி - ம்.) 1. துறும்போதினறுந்தேன் சுவைத்துண்டுழல்; துறும்போ துறுதேன் சுவைத்துண்டுழல்; துறும்போ திவரத் தேன்றுவைத் துண்டுழல்; தும்பி யெல்லாம்.

2. நளின சின்னமும்; நளினச் சின்னமும்; நனி சின்னமும்: சின்னமு வீத்த; சின்னமுன் வீத்த; சின்ன முனிந்த.

3. மொய்க்கின்றல: வேண்டலர்; வேண்டில; வேண்டின; வேண்டினர்; வேண்டுழி; வேண்டுவ: வேண்டும் போகம்.
4. உறும்போதும்: எலாம்: உறும்போது மேலோர்; நலனுண்வழி. (12)

979. மெய்ப்போதி னங்கைக் கணியன்னவள் வெண்ப ளிங்கில்
பொய்ப்போது தாங்கிப் பொலிகின்றதன் மேனி நோக்கி
இப்பாவை யெங்கோற் குயிரன்னவ ளென்ன வுன்னிக்
கைப்போதி னேடு நெடுங்கண்பனி சோர நின்ருள்.

மெய்-(தன்) மேனியழகினுல், போதில் நங்கைக்கு அணி அன்ன வள்-தாமரையில் தங்கும் திருமகளுக்கு ஆபரணம் போன்ற ஒருத்தி, வெண் பளிங்கில்-(அங்குள்ளதொரு) வெண்மையான பளிங்குக் கல்லிலே, போது தாங்கி பொலிகின்ற தன் பொய் மேனி நோக்கி-(கையில்) மலரை ஏந்தி அழகாக விளங்குகின்ற தனது (நிழலான) பொய்யுருவத்தைக் கண்டு, (உண்மையாக வேறொருத்தி அங்கிருப்ப தாக்கருதி),இ பாவை-சித்திரப்பாவை போல்வாளாகிய இப்பெண், எம்கோன்கு-நம் தலைவனுக்கு, உயிர் அன்னவள் என்ன உன்னி-உயிர் போன்றவளாவாள் என்று நினைத்து, கை போதினேடு - கையில் கொண்ட மலர்களுடனே, நெடு கண் பனி சோர-(தன்னுடைய) நீண்ட கண்களினின்றும் நீர் வடிய, நின்ருள்—.

கொய்த மலரைக் கையில் ஏந்தி நின்ற பேரழகி யொருத்தி, எதிரே ஒரு பளிங்குக் கல்லில் தோன்றிய தனது நிழலுருவத்தைக் கண்டு, உண்மையாகவே வேறொரு பெண் மறுபுறம் நிற்பதாகக் கருதி, 'பேரழகுள்ள இவளை என் தலைவன் கண்டால் என்னைப் புறக் கணித்தலுங் கூடும்' என்ற எண்ணங் கொண்டு வருந்திக் கண்ணீர் வடித்தாள் என்றவாறு. வேறு வகையாகவும் கருத்துக் கூறுவர். யார்க்கும், தம்அழகு தமக்குத் தெரியாதது இயல்பே; அதனுலேயே அம்மங்கை அவ்வாறு கருதினள் என்க. அவளழகைச் சிறப்பித்தற்கு, 'போதில் நங்கைக் கணியன்னவள்' என்ருர். இதனுட் கூறும் பெண்க ளியல்பாகிய புலவி நுணுக்கம் ஓர்க.

'பூவெனப் படுவது பொறி வாழ் பூவே' என்பராதலின், 'மெய்ப்போதில் நங்கைக்கு' என்று கூட்டி, மெய்ப்போது-தாமரை மலர் என வுரைத்தலும் ஆம். தாமரையின் பெருமையை நோக்கு மிடத்து ஏனைய 'பொய்ப்போது' ஆதலும் பொருந்தும்; எனவே 'பொய்ப்போது தாங்கி' என இயைத்தலும் பொருந்தும். சோர்தலைப் போதிற்குங் கூட்டியுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. மெய்ப்போது: மங்கைக் கிணையொப்பவள்; நங்கைக் கிணையொப்ப வள்; மங்கைக் கணியாபவள்; இணையன்னவள்: மென்பளிங்கில்; மெய்பளிங்கில். 3. எங்கோக்கு! உயிரின்னவள்.
4. பனிகார நின்ருள்; கால நின்ருள்; கண்கள்பனி சிந்தநின்ருள். (13)

980. கோளுண்ட திங்கண் முகத்தாளொரு கொம்பர் மன்னன்
தோளுண்ட மாலை யொருதோகையைச் சூட்ட நோக்கித்
தாளுண்ட கச்சிற் றகையுண்டன தனங்கண் மீது
வாளுண்ட கண்ணீர் மழையுண்டென வார நின்றாள்.

கோள் உண்ட திங்கள் முகத்தாள்-மேகம் கவியப்பெற்ற முழு மதி போலும் முகமுடையவளான, ஒரு கொம்பர் - பூங்கொம்பு போன்ற ஒருமங்கை, மன்னன் தோள் உண்ட மாலை-(தன்) காதலன் தோள்களில் அணிந்த மாலையை, ஒரு தோகையை சூட்ட-(தனக் குரிய) மயில்போல்வாள் வேறொருத்திக்குச் சூட்ட, நோக்கி-அதனைக் கண்டு, தாள் உண்ட கச்சின் தகையுண்டன-முடிச்சுடைய கச்சினால் கட்டுண்டனவாகிய, தனங்கள் மீது-(தன்) முலைகளின் மேல், வாள் உண்ட கண் நீர் மழை உண்டு என வார-வாள் போலுங் கண்களி னின்று மழைபோல நீர் பெருக, நின்றாள்-(வருந்தி) நின்றாள்.

ஓர் ஆடவன், தன் மனைவிமார் இருவருள் ஒருத்திக்குத் தான் அணிந்திருந்த மாலையைக் கழற்றிச் சூட்டியது கண்ட மற்றொருத்தி, அவன் செய்கை குறித்து வருந்தி நின்றனள் என்பது கருத்து. 'கொம் பொர் மன்னன்' என்ற பாடங்கொண்டு, வேறுவகையிலும் கருந்துக் கூறுவர்.

மயிர்ப் பரப்பை மேகமாகவும், முகத்தை மேகங் கவிந்த மதி யாகவும் கொள்க. கோள்-மேகம்; 'மின்னொடூர், கோளொடு குளிர் மதி வந்து வீழ்ந்தென' *(சீவக. 320)*; 'கோளுண்ட' என்பதற்குப் பாம்பினால் கொள்ளப்பட்ட என்றுரைத்தலும் பொருந்தும்.பின்னின கூந்தலுக்குப் பாம்பை ஒப்புக் கூறுவர்; 'அணிமுக மதியேய்ப்ப அம் மதியை நனியேய்க்கும், மணி முக மாமழைநின் பின்னொப்பப் பின் னின்கண், விரிநுண்ணூல் சுற்றிய ஈரிதழலரி, அரவுக்கண் அணியுறழ் ஆரல்மீன் தகையொப்ப,அரும்படர் கண்டாரைச் செய்தாங்கியலும், விரிந்தொலி கூந்தால்' *(கலி. 64: 1-6)* என்பதனுள் இவ்விருவகை யும் வந்தமை காண்க. சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையால், முறுக்குநெடு மூரிக் குழலும்-குறிக்கின், கரும்பாம்பு வெண் மதியைக் கைக்கொண்ட காட்சி' (நள. 182); 'பின்னும் வேணிவார் குழலெனுங் கரியபே ரரவம்' (பிரபு. மாயை பூசை. 7).

(பி - ம்.) 1. கொம்பொர் மன்னன்; கொம்பு மன்னன்.
2. ஒரு தோகையிற், ஒரு கோதையைச்: சூட்டல்.
3. கச்சாற்றகையுண்ட; கச்சிற்றடையுண்ட: தனத்தின் மீது; முலைக்கண் மீது; முலைக்கணவி.
4. கண்ணின் மழையுண்டன: மாற்றி நின்றாள்.

981. மயில்போல் வருவாண் மனங்காணிய காதன் மன்னன்
செயிர்தீர் மலர்க்காவினோர் மாதவிச் சூழல் சேரப்
பயில்வா ளிறைபண்டு பிரிந்தறி யாள்ப தைத்தாள்
உயிர்நாடி யொல்கும் முடல்போலல மந்து ழன்றாள்.

மயில்போல் வருவாள்-மயிலைப்போல (த்தன்னை நாடி) வரும் காதலியின், மனம் காணிய-மன நிலையைக் கண்டறியும் பொருட்டு, காதல் மன்னன்-அவளன்புக்குரிய தலைவன்,செயிர் தீர் மலர் காவின்-குற்றமற்ற அப்பூஞ்சோலையிலுள்ள, ஓர் மாதவி குழல் சேர-ஒருகுருக்கத்திப் பந்தலில் மறைந்திருக்க, பயில்வாள்-எப்போதும் உடனிருந்தே பழகியவளும், பண்டு-இதற்கு முன், இறை பிரிந்து அறியாள்-சிறிதும் (தலைவனைப்) பிரிந்தறியாதவளுமான அம் மங்கை, பதைத்தாள்-(தலைவனைக் காணாமல்) துடித்தவளாய், உயிர் நாடி ஒல்கும் உடல்போல்-(தன்னைவிட்டுப் பிரிந்த) உயிரைத் தேடி நிலை தளரும் உடலைப்போல, அலமந்து உழன்றாள்-மனம் சுழன்று தடுமாறினாள்.

இறை, இரட்டுற மொழிதலாகத் தலைவனையுங் குறிக்கும்.

தலைவனை உயிராகக் கருதி, அவனைவிட்டுப் பிரிந்தறியாத ஒரு மங்கையைச் சோதிக்கும் பொருட்டு விளையாட்டாக அவள் கண்ணிற்படாமல் தலைவன் மறைந்திருக்க, அப்போது அவள் தவித்த நிலைக்கு இல்பொருளுவமையாக உயிரை நாடி ஒல்கும் உடலைக் குறித்தார். இவ் உவமை விசேடத்தால் அவர்கள் அன்பின் உயர்நிலை புலப்படுவதாகும்.

மாதவி-குருக்கத்திக் கொடி, வசந்தமல்லிகைக் கொடி. குருக்கத்தி மரம் என்பாரும் உளர்.

காணிய: செய்திய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

(பி - ம்.) 1. வந்த மன்னன். 2, காவினோர்: காவிலொர்.
3. பயில்வானிறை; பிரிந்தறியான்: பதைத்தான்; பகைத்தாள்.
4. உடல்போலலம்வந்து: உடல்போலு முவந்து; உடல்போ லலமுற்று உடம்பென்னப் புலந்து: உழன்றான்; உழந்தாள்; அலம்வந்து நின்றாள். (15)

982. செம்மாந்த தெங்கி னிளநீரையொர் செம்ம னோக்கி
அம்மாவிவை மங்கையர் கொங்கைக ளாகு மென்ன
எம்மாதர் கொங்கைக் கிவையொப்பன வென்றொ ரேழை
விம்மா வெதும்பா வெயராமுகம் வெய்து யிர்த்தாள்.

ஓர் செம்மல்-ஓர் ஆடவன், செம்மாந்த தெங்கின் இளநீரை நோக்கி-ஓங்கி வளர்ந்திருந்த தென்னையில்(அழகான) இள நீர்களைப் பார்த்து, இவை மங்கையர் கொங்கைகள் ஆகும் என்ன-இவ்விள

நீர்கள் மகளிரின் தனங்களை யொக்கும் என்று கூற, ஓர் ஏழை-(அவன் காதலியான) ஒரு மங்கை, எ மாதர் கொங்கைக்கு இவை ஒப்பன என்று-எந்த மகளிரின் தனங்களுக்கு இவை ஒப்பாவன என்று சொல்லி, வெதும்பா-மனம் புழுங்கி, விம்மா-விம்மி அழுது, முகம் வெயரா-முகம் வெயர்த்து, வெய்து உயிர்த்தாள்-வெப்பமாக மூச் செறியலானாள். அம்மா! வியப்பிடைச் சொல்.

கணவன் பொதுவாக உவமை கூறியதனைக் கேட்ட அவன் மனைவி, அவன் வேறு சில மாதர் தொடர்புடையவன் என்று கருதிப் புலந்தாள் என்பது கருத்து. இதிலுள்ள புலவி நுணுக்கமும் ஓர்தற்பாலது. 'யாரினுங் காதல மென்றேனா வூடினாள், யாரினும் யாரினு மென்று' (குறள். 1314) என்பதும் ஈண்டு ஒப்பிடத்தகும். செம்மல்: ஆண்பாற் சிறப்புப் பெயர். ஏழை-பேதைமை; ஆகுபெயர்.

(பி - ம்.) 1. செம்மார்ந்த: தெங்கின்னிளநீரையோர்.
2. அம்மாவிது; கொங்கையினையது; கொங்கையினைய: என்றான்.
3. இதுவொப்பென; இணையொப்பன: என்றோரேழை.
4. விம்மாவிதும்பா: வெயராமிக; வியராமிக; வியராமுகம்; வியராமனம்; வெயராமனம்.

பல பிரதிகளில் இப்பாடல் அடுத்ததாகிய 'மைதாழ் கருங்கண்' என்பதன் பின் உள்ளது. (16)

983. மைதாழ் கருங்கண்கள் சிவப்புற வந்தொர் மாது
நெய்தாவு வேலா னெடுநெஞ்சு புலந்து நின்றாள்
எய்தாது நின்ற மலர்நோக்கி யெனக்கி தீண்டுக்
கொய்தீதி யென்றோர் குயிலைக்கரங் கூப்பு கின்றாள்.

நெய் தாவு வேலானெடு-நெய் பூசப்பெற்ற வேலையுடைய தலைவனிடத்து, நெஞ்சு புலந்து நின்றாள் ஓர் மாது-மனத்தில் ஊடல் கொண்டிருந்தவளான ஒரு பெண், மை தாழ் கரு கண்கள்-(தன்னுடைய) மைதீட்டப்பெற்ற கரிய கண்கள், சிவப்பு உற-செந்நிறம் மிக, வந்து-(தலைவனெதிரில்) வந்து, எய்தாது நின்ற மலர் நோக்கி-(தன் கைக்கு) எட்டாது நின்ற ஒரு பூவைக் கண்டு, ஓர் குயிலை-அங்கிருந்த ஒருகுயிலை (நோக்கி), எனக்கு இது ஈண்டு கொய்து ஈதி என்று-எனக்கு இப்பூவை இப்போதே பறித்துத் தருவாயாக என்று சொல்லி, கரம் கூப்புகின்றாள்-கைகூப்பி வேண்டலானாள்.

தன் தலைவனிடத்து ஊடல் கொண்டு தனித்திருந்த ஒரு பெண், ஊடல் தணிந்து தலைவனிருக்குமிடம் வந்து, அங்கே தன் கைக்கெட்டாத பூவைப் பறித்துத் தருமாறு தலைவனை நேரே கேளாமல், குயிலை நோக்கிக் கூறுவதுபோலக் கூறினாள்; தலைவன் அதனைக் கொய்து தருதல் வேண்டு மென்பது அவள் குறிப்பு.

(பி - ம்.) 1. மைதாழ்தரும் கண்கள்; செவப்புற; வந்து தோன்ற: வந்து தோன்ற.
2. நெய்தாவும்; வேலோனெடு நெஞ்சு புலர்ந்து.
3. எய்தாமல்: நின்றம்மலர்; எனக்கி நீண்டக்; எனக்கீ நீண்டக்; எற்கி நீண்டா; என்கைகள் நீண்டக்; எனங்கை நீண்டா; எனக்கீ நீண்டுக்.
4. என்றெர்; என்றே: கூப்பிநின்றுள்; கூப்புவாளும். (17)

984. போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலங்கொ டிண்டோள்
மாரன் னனையான் மலர்கொய்திருந் தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள் கண்பு தைப்ப
ஆரென்ன லோடு மனலென்ன வயிர்த்து யிர்த்தாள்.

ஓர் கார் அன்ன கூந்தல், குயில் அன்னவள்-மேகத்தை ஒத்த கூந்தலையும் குயில்போலுங் குரலையும் உடைய ஒருத்தி, வந்து-(மெல்ல) வந்து, போர் என்ன-போர் நேர்ந்துளது என்றவளவிலே, வீங்கும்-பூரிக்கின்ற, பொருப்பு அன்ன-மலை போன்ற, பொலம்கொள் திண் தோள்-அழகிய திண்ணிய தோள்களையுடைய, மாரன் அனையான்-மன்மதனை யொத்த தன் கணவன், மலர் கொய்திருந்தானை-பூப்பறித்துக்கொண்டிருந்தவனை, கண் புதைப்ப-(அவனறியாதபடி அவன்) கண்களைப் பொத்த, ஆர் என்னலோடும்-(அவன்) யார் என்று கேட்ட மாத்திரத்தில், அயிர்த்து-(அவனிடம்)ஐயங்கொண்டு, அனல் என்ன உயிர்த்தாள்-தீயைப்போலப் பெருமூச் செறிந்தாள்.

மங்கை ஒருத்தி, பூக் கொய்துகொண்டிருந்த தன் கணவன் அறியாதபடி பின்னுக வந்து தன் கைகளால் அவன் கண்களைப் பொத்தினுளாக, அவன், கண்களைப் பொத்தியது யார் என்று பொது வாகக் கேட்டலும், தன்னையன்றி அவன் கண்களைப் பொத்தி விளையாடுதற்கு உரிமையுடைய மகளிர் பிறரும் அவனுக்குண்டு போலும் என ஐயங்கொண்டு, புலந்து வெப்பமாகப் பெருமூச்செறிந்தாள் என்றதில் உள்ள புலவி நுணுக்கம் ஓர்க.

தலைவி தலைவன் கண்களைப் புதைத்தல்: ஐங்குறு. 293-பார்க்க. போர் என்ற மாத்திரத்தில் வீரர் பூரித்தல்: 'கிட்டிய தமரெனக் கிளருந் தோளினன்' (அயோத். 1012); 'வீங்கு தோளன் மலைதலை மேயினன்' (ஆரணிய. 379); 'எழிற்றேள் அமர்வேண்டி யிரைத்து வீங்குவ' (ஷை 435); 'செருவேட்டுயர் வன்புய வோங்கல் உம்பர், எல்லைக்குமப்பால் இவர்கின்ற விரண்டினேடும்; (கிட்கிந்தா. 263); 'உண்டுபோரென நவிலின் அச்சொல், தேனினுங் களிப்புச் செய்யுஞ் சிந்தையர்' (சுந்தர. 754.;) 'சுகம்பல் போரலால் வேறிலன்' (யுத்த. 490); 'மண்டமர் நசையொடு' (முல்லைப். 67) என்பதும் அதன் அடிக் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. பே ரென்ன வீங்கு: பொருப்பென்ன: உலங்கொள்; வலங்கொள்.
2. மாரனனையாள்: வந்தோர்; வந்து.
3. காரென்ன: கூந்தன் மயிலன்னவள்; கண் புதைக்க.
4. யாரென்னவோடும்: உயிர்த்தயிர்த்தாள்; வெதும்புகின்றாள்; வெதும்பிநின்றாள். (1௪)

985. ஊற்றூர் நறைநாண் மலர்மாத ரொருங்கு வாசச்
சேற்றுல் விளையாத செந்தாமரைக் கைக ணீட்டி
ஏற்றூர்க் குதவா னிடையேந்தின னின்றெ ழிந்தான்
மாற்று னுதவா னெடுவச்சையன் போலொர் மன்னன்.

ஓர் மன்னன்-ஓர் அரசன், ஊற்று ஆர் நறை நாள் மலர்-(தான் பறித்த) ஊற்றுகப் பெருகும் தேனையுடைய புதிய மலர்களை, மாதர்-(தன் மனைவிமாரான) இருமாதர்கள், ஒருங்கு-ஒருங்கே (ஒரே சமயத்தில்), வாசம்-மணம் பொருந்திய, சேற்றுல் விளையாத செந்தாமரை கைகள் நீட்டி-சேற்றில் விளையாத செந்தாமரை மலர்போன்ற (தம்) கைகளை நீட்டி, ஏற்றூர்க்கு-(விரும்பிக்) கேட்டவர்களுக்கு, உதவான்-கொடாதவனாய், (ஏற்றூர்க்கு)-(தன்னிடம் வந்து) இரந்தவர்க்கு, மாற்றான்-இல்லையென்று மறுக்காமலும், உதவான்-கொடாமலும் (உள்ள), நெடு வச்சையன் போல்-பெரும் உலோபியைப்போல, இடை-(மனைவிமார் இருவர்க்கும்) இடையே, ஏந்தினன்-தன்கையிலே தாங்கினவனாய், நின்றொழிந்தான்-நின்றுவிட்டான்.

ஏற்றூர்க்கு என்பது பின்னும் கூட்டி உரைக்கப்பட்டது.

தன் கையில் உள்ள பூக்களைத் தன் மனைவிமார் இருவரில் ஒருத்திக்குக் கொடுத்தாலும், இருவருக்கும் பகிர்ந்து கொடுத்தாலும் அவர்கள் புலத்தற்கு இடமுண்டாதலால், அவன் ஒருவருக்கும் கொடாதொழிந்தான். 'நீயே எனக்குச் சிறந்தவள்' என அவ்விருவரையும் தனித்தனியே தலைவன் பாராட்டிக் கூறுதலுண்மையின், எவ்வகையிலும் அவர்கள் புலத்தற்கு இடமுண்டென்க. 988-ஆம் பாடல் பார்க்க. இவ்வாறு இருவர்க்கும் கொடாமல் நின்ற அவன் தன்மைக்கு,ஏற்றூர்க்குக் கொடாமலும் இல்லையென்று மறுக்காமலும் அவர்களைக் காக்கவைக்கும் உலோபியின் செயலை ஒப்புக் கூறினர். 'மாதர் ஏற்றூர்க்கு' எனப் பன்மையாகக் கூறினமையின், இருவர் எனப்பட்டது. ஒரு தலைவனுக்குத் தேவிமார் இருவர் கூறப்படுதல் அடுத்த செய்யுளுள்ளும், 1067-இலும் காண்க. மாதர் கைகளைச் 'சேற்றில் விளையாத செந்தாமரை' என விசேடித்துக் கூறினர்.

மாற்றல்-மறுத்தல்: 'ஏற்றகை மாற்றாமை' (நாலடி. 98.). வச்சையன்: 1055; ஆரணிய. 678, 680, 929.

(பி - ம்.) 1. ஊற்று நறை; ஒருங்கு வாராச். 2. கைகணீட்ட.
3. ஏற்றூரை நோக்கானிடை; நோக்கான்விடை; நோக்கிவிடை; நோக்கியிடை.

4, உதவான் கடுவச்சையன்; கடுவச்சையர்; உதவானெடுவிஞ்சையர்: விஞ்சையன்; உதவானடுவச்சையர்; போன்றோர் மன்னன். (19)

986. தைக்கின்ற வேனேக் கினடன் னுயி ரன்ன மன்னன்
மைக்கொண்ட கண்ணு ளெதிர்மாற்றவள் பேர்வி ளம்ப
மெய்க்கொண்ட மானந் தலைக்கொண்டிட வெதும்பி மென்பூக்
கைக்கொண்டு மோந்தா ளுயிர்ப்புண்டு கரிந்த தன்றே.

தைக்கின்ற வேல் நோக்கினள்-பாயும் வேல்போன்ற கண்களை யுடையாளொரு மங்கை, தன் உயிர் அன்ன மன்னன்-தன் உயிருக் கொப்பான தலைவன், எதிர்-தன்னெதிரே, மாற்றவள் பேர் விளம்ப-மாற்றாளது பெயரைச் சொல்லியழைக்க, (அதுகேட்டு), மைகொண்ட கண்ணாள்-மை தீட்டப்பெற்ற கண்களையுடைய அம்மங்கை, மெய் கொண்ட மானம் தலை கொண்டிட-உண்டான தன்மானம் மேலிட, வெதும்பி-மனம் புழுங்கி, மென்பூ கை கொண்டு-மெல்லியதொரு பூவைக் கையிலெடுத்து, மோந்தாள்-மோந்துபார்த்தாள்;(உடனே), உயிர்ப்பு உண்டு-(அவளுடைய) மூச்சுக்காற்றுப்பட்டதனால், கரிந்தது-(அம்மலர்) கருகிப்போயிற்று. அன்றே : அசை.

தன் தலைவனைத் தன்னுயிராகக் கொண்டொழுகும் பெண்ணொருத்தி, தலைவன் சோர்வினால், தன் மாற்றாள் பெயரைச் சொல்லித் தன்னையழைக்கக்கேட்டு, தன்னினும் அம்மாற்றாளிடம் அவன் அன்புமிக்கவனானான் எனக்கருதி, மானம் மேலிட, தலைவனை நிமிர்ந்து நோக்க மனமின்றிக் குனிந்தவாறே ஒரு பூவை எடுத்து மோந்து கொண்டு நின்றாள்; அவள் மோந்த பூ, அவள் உயிர்ப்பின் வெம்மை யால் கருகிப்போயிற்று என்று மகளிரின் இயல்பை அழகுற எடுத்துக் காட்டும் நயம் ஓர்தற்பாலது.

உயிர்ப்பின் வெம்மையால் மலர் நலங்கெடுதல்: 'பிணையல், மோயின ளுயிர்த்த காலை மாமலர், மணியுரு விழந்த அணியழி தோற் றம்' (அகநா. 5: 23-5).

(பி - ம்.) 1. தன்னுயிரான மன்னன்: வேலான்றனை நோக்கினடன்னுமன்ன.
2. கண்ணாளவள்; கண்ணாளவன்; கண்ணாளொரு; கண்ணாள்வர.
3. நாணந் தலைக்கொண்டு; தலைகொண்டிட: விம்மி மென்பூக்.
4. போந்தாள்: கரிந்தவன்றே; கரந்ததன்றே. (20)

987. திண்டோ ளரசன் னொருவன்குலத் தேவி மார்தம்
ஒண்டா மரைவாள் முகத்துண்மிளி ரொண்க ணெல்லாம்
கண்டா தரிக்கத் திரிவான்மதங் கவ்வி யுண்ண
வண்டா தரிக்கத் திரிமாமத யானை யொத்தான்.

குலம் தேவிமார் தம்-உயர்குலத்தவரான (தன்) தேவிமார் பலருடைய, ஒள் தாமரை வாள் முகத்துள் மிளிர்-அழகிய தாமரை மலர்

போன்ற ஒளி பொருந்திய முகத்திலே விளங்குகின்ற, ஒண் கண் எல் லாம்-ஒளிகொண்ட கண்கள் எல்லாம், கண்டு ஆதரிக்க-(தன் கட்டழகைக்) கண்டு விரும்பி நோக்குமாறு, திரிவான்-உலாவுகின்றவனை, திண் தோள் அரசன் ஒருவன்-வலிய தோள்களையுடைய ஓர் அரசன், மதம் கவ்வி உண்ண-(தன்) மதநீரை வாய்க்கொண்டு உண்ணும் பொருட்டு, வண்டு ஆதரிக்க-வண்டுகள் விரும்பித் தன்னைச் சூழ்ந்து வர, திரி - அலைகின்ற, மா மதயானை ஒத்தான் - பெரிய மதயானை போன்றிருந்தான்.

அரசனுக்கு மதயானையும், அவனை விரும்பி நோக்கும் மாதர் கண்களுக்கு வண்டுகளும் உவமை.

(பி - ம்.) 1. திண்டோ ரரசன் குலத்தேமொழித் தேவிமார்தம்; தேவிமார்கள்; தேவிமாரை; தேவியர்கள்.
2. முகத்தொப்பகல்: உண்கணல்லார்; உண்கணெல்லாம்;கண்கடம்மால்.
3. கண்டாதரிப்பத்: கவ்வியுண்ட; கௌவியுண்ணும்.
4. ஆதரிக்கின்றதொர் மாமதவானை; மாமதயானை. (21)

988. சந்திக் கலாவெண் மதிவாணுத லாட னக்கும்
வந்திக்க லாகு மடவாட்கும் வகுத்து நல்கி
நிந்திக்க லாகா வுருவத்தின னிற்க மென்பூச்
சிந்திக் கலாப மயிலிற்கண் சிவந்து போனார்.

சந்தி-சந்தியா காலத்திலே தோன்றுகிற, கலா வெண் மதி-(நிறையாத) கலைகளையுடைய வெள்ளிய பிறைச் சந்திரன் போன்ற, வாள் நுதலாள் தனக்கும்—ஒளி பொருந்திய நெற்றியுடைய ஒரு மனைவிக்கும், வந்திக்கல் ஆகும் மடவாட்கும்-உயர்ந்தோர் தொழுதற்குரிய (கற்பிற் சிறந்த) மற்றொரு மனைவிக்கும், நிந்திக்கல் ஆகா உருவத்தினன்-பழித்தற் கிடமில்லாத (இலக்கணம் அமைந்த) வடிவமுள்ள ஒரு தலைவன், மென் பூ-தன்கையிலிருந்த மெல்லிய பூக்களை, வகுத்து நல்கி-(சமமாகப்) பகிர்ந்து கொடுத்து, நிற்க-மகிழ்வுடன் நிற்க, (மனைவிமார் இருவரும்), கண்சிவந்து-(சினத்தினால்) கண்கள் சிவக்க, சிந்தி-(தலைவன் தந்த பூக்களைக் கீழே) சிதறிவிட்டு, கலாபம் மயிலின் - தோகையையுடைய மயிலைப் போல, போனார் - (தலைவனெதிரே நிற்கவும் மனமின்றி) அப்பால் போயினர்.

சிறந்த வடிவழகுடைய தலைவனொருவன், தன் மனைவியர் இருவர்க்குத் தன்கையிலிருந்த பூக்களைச் சமமாகப் பங்கிட்டுக் கொடுத்து மகிழ்ச்சியுடன் நிற்க, அவ்விருவரும் சினங்கொண்டு பூக்களைச் சிதறிப் போயினர் என்க. 'தலைவனுக்குத் தன்னிடமே அன்பு மிகுதி' எனத் தனித்தனி நினைந்திருந்த மங்கைமார் இருவர்க்கும்,இப்போது அவன் செய்கை சின மூட்டியது. இப்பாடல் 985-ஆம் பாடலின் விளக்கம் போல் அமைந்துள்ளமை காண்க.

மங்கைமார் இருவரில் ஒருத்தியை அழகிற் சிறந்தவளாகவும் மற்றொருத்தியைக் கற்பிற் சிறந்தவளாகவுங் குறிக்கின்றார். நுதலுக்கு உவமை கூறினமையின், மதி-பிறை யெனப்பட்டது. இவ்வாறு விசேடிக்கப்பட்டவள் அழகி யென்க. மற்றொருத்தி 'வந்திக்கலாகும் மடவாள்'என்றதனால் 'உயர்ந்தோர் ஏத்தும் உரைசால் பத்தினி'யென்க; 'வடமீன் தொழுதேத்த வயங்கிய கற்பினாள்' (கலி. 2: 21). மங்கைமார் இருவரையும் முறையே காமக் கிழத்தியும் கற்புடை மனைவியு மெனக் கூறுவாரு முளர்.

(பி - ம்.) 1. சந்திக்கலர்வெண்; சந்திக்கலாகா.

2. வந்திக்கலா வாட்கண்ணினார்க்கு வகுத்து நல்கி; வந்திக்கலாகுஞ் சுடர் வாட் கண்ணினாட்கு நல்கி; வந்திக்கலாவாட் கணினாட்கும் வகுத்து நல்கி; வந்திக்கலாகா வடிவாட் கணினாட்கும் நல்கி; வந்திக்கலாகுமவ் வாட்கண்ணி னாட்கும் வகுத்து நல்கி: வந்திக்கலாகும் சுடர்வாட் கணி னாட்கு நல்கி.

3. நிந்திக்கலாத: உருவத்தின விற்ப; உருவத்தின வின்ற போழ்தும்; உருவத்தின விற்பப் போது.

4. சிந்திக்கலாவ; சிந்திப்புதுப்பூ: மயிற்கண்கள்; அயிற்கண்கள்: சிவந்து போனாள். (22)

(வேறு)

989. வந்தெங் குந்தம் மன்னுயி ரேயோ பிறிதொன்றோ
கந்தந் தங்குஞ் சோர்குழல் காணார் கலைபேணார்
அந்தந் தோறும் மற்றுகு முத்தம் மவைபாரார்
சிந்துஞ் சந்தத் தேமலர் நாடித் திரிகின்றார்.

(மகளிர்), கந்தம் தங்கும்-இயற்கை மணம் பொருந்திய, சோர் குழல்-அவிழ்ந்து அலையும் கூந்தலையும்; காணார்-பாராதவர்களாகியும், கலை பேணார்-(அரையில் நழுவும்) ஆடையையும் பொருட்படுத்தாமலும், அந்தம் தோறும்-பூட்டுவாய்களில், அற்று உகும்-அறுந்து சிந்துகிற, முத்தம் அவை பாரார்-முத்து வடங்களையும் கவனியாமலும், தேம் சிந்தும் சந்தம் மலர் நாடி-தேன் துளிக்கும் அழகிய பூக்களைத் தேடிக்கொண்டு, எங்கும் வந்து-(சோலையின்) எல்லா விடங்களிலும் சென்று, திரிகின்றார்-அலைகின்றனர்; (அவர்களுக்கு), தம் மன் உயிரேயோ! (மலர்கள்), தம்முடைய நிலைபெற்ற உயிரேயாகுமோ? (அல்லது), பிறிது ஒன்றோ-(அவ்வுயிர் போலச் சிறந்த) வேறொரு பொருளோ! (அறிகிலேம்).

இப்பாடலுள், மகளிருக்குப் பூவினிடத்துள்ள ஆசையின் மிகுதியை அழகுறப் புனைகின்றார். சோலையில் ஓரிடமும் விடாமல் பூக்களைத் தேடி அலைகின்றார்களே! அப்பூக்கள் அவர்களுக்கு உயிர் போலச் சிறந்தனவோ! என வியப்புறக் கூறுகின்றார்.

பூக்களைத் தேடித்திரிதல் ஒருபெண்ணின் செயலாகக் கொள்ளுதற் கேற்றவாறும் பாட பேதங்கள் இக்கவிக்குக் காணப்படு கின்றன.

(பி - ம்.) 1. வந்தெங்குந்தன்; வந்தங்குந்தன்; வந்தோங்குந்தம்; பிறிதேயோ.
2. கந்தந் துன்னுஞ்; கந்தந் துன்றுஞ்; கந்தந் துஞ்சுஞ்; குழல் காணுள்; குழல் பேணுள்; கலை பேணுள்; கலைகாணுள்; கலை காணுர்; கலுழ்கின்ருள். 3. முத்தமவை யாராள்; காணுர்; பாராச்.
4. தேமலர் தேடித்; திரிவாளும்; திரிவாரும்; திரிகின்ருள். (23)

990. யாழொக் குஞ்சொற் பொன்னனை யாளோ ரிகன்மன்னன்
தாழத் தாழா டாழ்ந்த மனத்தா டளர்கின்ருள்
ஆழத் துள்ளுங் கள்ள நினைப்பா ளவனின்ற
சூழற் கேதன் கிள்ளையை யேவித் தொடர்வாளும்,

யாழ் ஒக்கும் சொல்-யாழிசை போலும் இனிய சொல்லை யுடைய, பொன் அனையாள்-இலக்குமிபோல்பவளான ஒருபெண், ஓர் இகல் மன்னன்-ஒப்பற்ற வலிமையுடைய (தன்தலைவனுன) ஓர் அரசன், தாழ-(ஊடல் கொண்டிருந்த தன்னை) வணங்கி வேண்ட, தாழாள்-(அப்போது ஊடல்)தணியாதவளாய், தாழ்ந்த மனத்தாள்-(தலைவன் தன்னைவிட்டு நீங்கிச் சென்றதனுல்) தணிந்து இரங்கின மன முடையவளாகி, தளர்கின்ருள்-(தன்செயல் குறித்து) வருந்து கின்றவள், ஆழத்து உள்ளும் கள்ளம் நினைப்பாள்-மனத்தின் ஆழத் திலே நினைக்கும் கபடமான எண்ணத்தோடு, அவன் நின்ற சூழல்கு-தலைவன் சென்று தங்கிய இடத்துக்கு, தன் கிள்ளையை ஏவி-தன் வளர்ப்பாகிய கிளிப்பிள்ளையை முன்னதாகச் செல்ல விட்டு, தொடர்வாளும்-அதனைத் தொடர்ந்து செல்பவளும்.

இது முதல் பதினெரு கவிகளால், அச்சோலையில் தங்கியிருந்த ஆடவரும் மகளிருமான இருபாலாருடைய செய்திகள் சிலவற்றைத் தனித்தனியாகவும் தொகுதியாகவும் கூறுகின்ருர். அவற்றுள் இக்கவி யிலுள்ளது, ஒரு மாதின் தனிச்செயலாகும். இப்பதினெரு பாட்டும் முடிக்குஞ் சொல் இன்றியே அமைந்துள்ளன.

முதலில் தலைவனுடைய வேண்டுகோளுக்கு இணங்காதவள் பின்பு அவன் தன்னை நீங்கிச் சென்றதனுல், அவன் வேறு மாதரைப் பற்றுதலுங் கூடும் என்ற ஐயமும் அச்சமுங் கொண்டவளாய்த் தன் செயலுக்கு வருந்தித் தலைவனைச் சென்றடையக் கருதினள்; ஆயினும் தானே வலியச் சென்றுசேர நாணி, தன் கிளியைப் பறக்கவிட்டு அதனைத் தேடுவாள்போலத் தொடர்ந்து தலைவனிருக்குமிடம் செல்லலானுள்; தலைவனிடத்து ஐயமும், தன்னை எளிமையாக்கிக் கொள்ளாது மறைக்கும் சூழ்ச்சியும் கொண்டதனுல், 'ஆழத்து உள்ளும் கள்ள நினைப்பாள்' என்ருர்.

(பி - ம்) 1. பொன்னனையாளோ டியன்மன்னன்; இகன் மன்னர்.
2. தாழத் தாழத். 3. நினைப்பால்; நினைப்பள்; நினைவாள்; மனத் தால்; மனத்தாள்: அவனிற்கும்; அவணின்ற.
4. ஏவத்: தொடர்வானும்; தொடர்வாரும்; தொடர்கின்ளுள். (24)

991. அந்தா ராகத் தைங்கணை நூரு யிரமாகச்
சிந்தா நின்ற சிந்தையி னுன்செய் குவதோரான்
மந்தா ரங்கொண் டீகுதி யோமா தவியென்ளுேர்
சந்தார் கொங்கைத் தாழ்குழ லாள்பாற் றளர்வானும்,

அம் தார் ஆகத்து-அழகிய மாலையணிந்த (தன்)மார்பிலே, ஐங் கணை-(மன்மதனுடைய) பஞ்ச பாணங்கள், நூறு ஆயிரம் ஆக-மிகப் பலவாக, சிந்தாநின்ற-பாயப்பெற்ற, சிந்தையினுன்-(காமவேட்கை விஞ்சிய) மனமுடைய ஓர் ஆடவன், செய்குவது ஓரான்-(தான்) செய் வது இன்னதென்று அறியாதவனுய், (அருகிலிருந்த மாதவிக் கொடியை நோக்கி), மாதவி-மாதவியே, மந்தாரம் கொண்டு ஈகு தியோ-(எனக்கு) மந்தார மலரைக் கொணர்ந்து தருவாயோ? என்று-என்று கூறியவாறு, ஓர் சந்து ஆர் கொங்கை தாழ்குழலாள் பால்-சந் தனம் அப்பிய தனங்களையும் நீண்ட கூந்தலையும் உடையாளொரு மங் கையினிடத்து(க் கொண்ட காதலால்), தளர்வானும் - நிலைதடுமாறு கின்றவனும்,

செய்குவது, ஈகுதியோ: இரண்டிலும் 'கு' சாரியை.

பஞ்சபாணங்களும் அளவின்றிப் பாயப்பெற்றவன் என்றதனுல், அவற்றின் செயல்களான மோகம் முதலிய அவத்தைகளுக்குள்ளான வன் தலைவன் என்பதாயிற்று. மாதவிப் பந்தர் காதலர் கூடிக் களித் தற்கேற்றவிடமாதலின், தன் மனங் கொண்ட காதலியை அங்கே கூடி மகிழக் கருதிய அத்தலைவன், காம மயக்கத்தால், 'மந்தாரமென் னும் தெய்வ மலரை நீ கொணர்ந்து தருவாயோ' என மாதவிக் கொடியைக் கேட்கின்ருன்; இதனுள், மந்தார மலர்போல எனக்கு இனியவளும் இப்போது ஊடலால் அரியவளுமான இவளை யான் கூடப்பெறுவேனே என்ற குறிப்புத் தொனிக்கின்றது.

(பி - ம்.) 2. சிந்தையினுற் செய்குவ தோரார்; செய்குவதோராள்; செய்கையினுன் செய்குவ தோரான்: செய்கையினுற் செய்குவதோரான்.
3. கொண்டீர்குதியோ; கொண்டீகுவரோ; கொண்டீகுவிரோ; கொண் டீகுவையோ; கொன் டேகுதியோ: மாதவியென்னச்.
4. கொங்கைத் தார்குழலார்; கொங்கை நன்னுதலாள்; தன்னுதலார்; தொங்கற் ருழ்குழலாள்; தளர்வாரும்; தளர்கின்ருன். (25)

992. நாடிக் கொண்டாள் குற்ற நயந்தாண் முனிவாருள்
ஊடிக் காட்டக் காணு நலத்தா ளுடனில்லான்
தேடித் தேடிச் சேர்த்த செழும்பூ நறுமாலை
சூடிச் சூடிக் கண்ணடி நோக்கித் துவள்வாளும்,

ஊடி-(கணவனிடத்து)ஊடல்கொண்டு, காட்ட-(அவன்) ஊட லுணர்த்த, காணும் நலத்தாள்-(அதனைக்) காணும் ஆசை கொண்ட ஒருத்தி, குற்றம்-(கணவன்மீது) குற்றத்தை, நயந்தாள் நாடி கொண் டாள்-விரும்பித் தேடிக் கற்பித்துக் கொண்டவளாய், முனிவு ஆறாள்-(கணவன் நயந்து வேண்டவும்) கோபம் ஆறாதவளாக, (அதனால்), உடன் நில்லான்-தன்னுடன் நில்லாது பிரிந்து சென்ற கணவன், தேடி தேடி சேர்த்த-(தனக்கென்று) பலவிடங்களிலே தேடித் தொகுத்த, செழும்பூ-செழித்த பூக்களாலாகிய, நறு மாலை-மணமுள்ள மாலையை, சூடி சூடி கண்ணடி நோக்கி-பலபடியாக மாற்றிச் சூடி (அவ்வழகைக்) கண்ணாடியிலே பார்த்து, துவள்வாளும்-(கணவன் வாராமையால்) வாடுகின்றவளும்,

தான் ஊடல்கொண்டு, தன் கணவன் அவ்வூடலுணர்த்து தலால் வரும் இன்பத்தைக் காண விரும்பிய ஒருத்தி, கணவன் மீது வேண்டுமென்றே குற்றத்தைக் கற்பித்துக்கொண்டு புலந்து, அவன் தீர்க்கவும் தீராது நீட்டித்தாளாக, அவன் மனஞ்சலித்து அவளை விட்டுப் பிரிந்து செல்லவே, பின்பு மனம் மாறிய அவள், தனக்கென்று கணவன் தேடித்தேடிச் சேர்த்த நல்ல பூக்களைக்கொண்டு பலவகை மாலை புனைந்து, பலபடியாகத் தன்னை ஒப்பனை செய்துகொண்டு, கண் ணாடியிலே பார்த்துப் பார்த்து, அதனைக் கண்டு மகிழக் கணவன் வாராமையால் வாடுவாளாயினள். கணவன் மனமுவக்க, எவ்வகை யில் தன்னை அலங்கரித்துக் கொள்ளலாமென்று நினைந்து நினைந்து செய்துகொண்டமையின் 'சூடிச்சூடி' என அடுக்கிக் கூறினர்; தேடித் தேடி என்ற அடுக்கும், அவனுக்கு அவளிடத்துள்ள அன்புமிகுதியைப் புலப்படுத்துவதாகும். இப்பாடலின் கருத்தொப்புமை, 990-இல் காண்க.

கண்ணடி-கண்ணாடி; கண்ணாடியில் அழகுபார்த்தல்: பரி. 12: 20-21.

(பி - ம்.) 1. குற்ற நயந்தான்: முனிவாற்றாள்; முனிவானள்; முனிவூற்றாள்.
2. ஊடிக் காணக் காட்டு நலத்தாள்; ஊடிக் காணக் காணு நலத்தாள்; நலத்தால்; தலத்தான்: உடனில்லாள்.
3. தேடித் தேடிக் கொய்த; செய்த; சேர்ந்த; தரும்பூச் செழுமாலை; நறும்பூஞ் செம்மாலை.
4. சூடிச் சூடிக் கண்படி; தன்னடி: துவள்வாரும்; துவள்கின்றாள். (20)

993. மறலிக் கூணா டுங்கதிர் வேலா னிடையேவந்
துறவிக் கோலம் பெற்றில தென்றா லுடல்வாழ்விப்
பிறவிக் கேலா தென்செய்வ திப்பே ரணியென்னா
விறலிக் கீவா ளொத்திழை யெல்லாம் விடுவாளும்,

(ஒரு பெண்), இ கோலம்-(இப்போது நான் செய்துகொண் டுள்ள) இவ்வொப்பனை, மறலிக்கு ஊண் நாடும் கதிர் வேலான்-

எமனுக்கு உணவு தேடித்தரும் (ஆற்றலுடைய) ஒளிமிக்க வேலை யுடைய என் தலைவன், இடையே வந்து உற பெற்றிலது என்றால்- (இப்போதே) என்னிடம் வந்து கூடும் பேறுபெறாவிடின், இ பிறவிக்கு இப்பிறப்பில், உடல் வாழ்வு - இவ்வுடலோடு (இனி) வாழ்வது, ஏலாது- பொருந்தாது; இ பேர் அணி-இச் சிறந்த கோலம், செய்வது என் - (இப்போது எனக்குச்) செய்யும் நன்மை யென்ன? (ஒன்று மில்லை); என்னு-என்று சொல்லி, விறலிக்கு ஈவாள் ஒத்து-(அணிகளை) விறலிக்குக் கொடுத்துவிடுவாள் போல, இழை எல்லாம் - (தான் அணிந்திருந்த) அணிகலன்களை யெல்லாம், விடுவாளும்-கழற்றிவிடு பவளும்,

தன் கணவன் கண்டு மகிழ்ந்து தன்னைக் கூடவேண்டும் என்று கருதி மிகச் சிறப்பாகத் தன்னை அலங்கரித்துக்கொண்டு, ஆவலோடு அவனை யெதிர்நோக்கி யிருந்த மங்கை யொருத்தி, அவன் அப்போது வரப்பெறாமையினால் மனமுடைந்து, இனி இந்த அலங்காரத்தாலும் அதனைக் கொண்டுள்ள இவ்வுடம்பாலும் பயனில்லை யென்று சொல்லி, அணிகளைக் கழற்றி விறலிக்குக் கொடுத்துவிட்டு உயிரையும் விடத் துணிந்தவள் போன்றிருந்தாள் என்றவாறு. கற்புடைய மகளிர் ஒப்பனை கொள்ளுதல் தம் கணவன்மார் பொருட்டேயாகும் என்ற உயர்ந்த கருத்து இதிற் புலப்படுதல் காண்க.

தலைவி, அணிகலன்களைக் கழற்றித் தன் சேடியான விறலியிடத் திற் கொடுத்தாளாக, அச்செயல் தலைவி அவற்றை வெறுத்து அப் பரிசு பெறுதற்குரிய விறலிக்கே அவற்றைக் கொடுத்துவிட்டதாகு மெனக் கவி புனைந்துரைக்கின்றார் போலும். விறலியர் பொன்னிழை களைப் பரிசாகப் பெறுதல் மரபு. 'விடுவாள்' என்பதற்கு விறலியைத் தன் கணவனிடம் தூது விடுவாளாயினள் என உரைத்தாரும் உளர்.

(பி - ம்.) 1. ஊனும் வெங்கதிர்; ஊனுடுந்திறல்; ஊட்டும் வன்கதிர்: வானான்: உடனே வந்து.
2. பெற்றிலெனென்றால்: பெற்றிலமென்றால்; என்றான்; என்றாள்; பெற் றிலனுய்யேன்: உடன் வாழ்விப்; உடல் வாழ்வு.
3. பிறவிக் கொல்லேன்; பிறவிக் கொல்லான்: அணியென்ன; அணி யென்றோர்.
4. விறலிக் கிடுவாள்: ஏந்திழை: விடுவாரும்; விடுகின்றாள். (27)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

994. தன்னைக் கண்டான் மென்னடை கண்டா டமர்போலத்
துன்னக் கண்டா டோழமை யென்று டுணையென்றாள்
உன்னைக் கண்டா ரெள்ளுவர் பொல்லா துடுநீயென்
றன்னக் கன்னிக் காடை யளிப்பா னமைவாளும்,

தன்னை கண்டாள்-ஒரு பெண்ணன்னத்தைக் கண்ட ஒரு மங்கை, மெல் நடை கண்டாள்-(அதன்) மென்மையான நடையழ

கைக் கண்டும், தமர் போல துன்ன கண்டாள்-உறவினர்போல (அது தன்னிடம்) நெருங்கி வரக்கண்டும், தோழமை என்றாள்-அது தன்னோடு தோழமைகொள்ள வருகின்றது என்று கருதி, துணை என்றாள்-(அதனை) நீ எனக்குத் தோழியாவாய் என்று அன்போடு சொல்லி, உன்னை கண்டார் எள்ளுவர்-(ஆடையின்றி யிருக்கும்) உன்னைப் பார்த்தோர் உன்னை இகழ்வர்;பொல்லாது-(இவ்வாறிருப்பது) குற்றமாகும்; (ஆதலால்), நீ உடு என்று-நீ இவ்வாடையை உடுத்துக்கொள் என்று, அன்னம் கன்னிக்கு-இளமையான அவ்வன்னப் பெடைக்கு, ஆடை அளிப்பான் அமைவாளும் - ஓர் ஆடையைக் கொடுக்க முன்வருபவளும்,

அன்னப் பறவை யொன்று, அச்சமின்றித் தன்னிடம் நெருங்கி வரக் கண்ட நங்கை யொருத்தி, அதன் தோற்றத்திலும் நடையழகிலும் மனமொன்றி, 'நீ எனக்கு உயிர்த்தோழி' என்று அதனைப் பார்த்துச் சொல்லி, 'என் தோழியாகிய நீ ஆடையின்றி யிருத்தல் தகாது' என்று அதற்கு நல்லதோர் ஆடையை எடுத்துக் கொடுப்பாளாயினள் என்க. இஃது அன்பினால் நிகழ்ந்த செயலாகும்.

தன் என்ற சுட்டுப் பெயர் அன்னத்தைக் குறித்தது; சுட்டுப் பெயர் முன்னும் இயற்பெயர் பின்னுமாக வருதல் செய்யுளில் வழுவாகாமையின், அச்சுட்டுப் பெயரை முன்வைத்தார். அன்னக் கன்னி-கன்னி யன்னம் என மாறுக,

தோழமை:'தோழமை யென்றவர் சொல்லிய சொல்'(அயோத். *1018*);

(பி - ம்.) 1. தன்னைக் கண்டார் மென்னடை கண்டார்; மென்னடை காணத்; தமரேபோல்; தமர்போலே.
2. துன்னக் கண்டார்; துன்னிக் கொண்டாள்; துன்னிச் சென்றாள்; தோழமை கண்டாள்; கண்டார்; போன்றாள்: துணையென்றார்; துணை கண்டாள்; துணை கண்டார்.
3. உன்னைக் கண்டால்: எள்குவர்; வெள்குவர்: பொல்லார்.
4. அளிப்பாளமைவாளும்; அளிப்ப அமைவாளும்; அளிப்பானமைவாரும். (28)

அச்சுப் பிரதிகள் பலவற்றிலும் இச் செய்யுள் 'வம்பிற் பொங்கும்' (996) என்பதன் பின் உள்ளது.

995. பாகொக் குஞ்சொன் னுண்கலை யாடன் படரல்குல்
ஆகக் கண்டோ ராடர வாமென் றயனண்ணும்
தோகைக் கஞ்சிக் கொம்பி னொதுங்கித் துணரீன்ற
சாகைத் தங்கைக் கண்கள் புதைத்தே தளர்வாளும்,

பாகு ஒக்கும் சொல்-சர்க்கரைப் பாகுபோலும் இனிய சொல்லையுடைய, நுண் கலையாள் தன்-மிக மெல்லிய ஆடையுடுத்த நங்கை யொருத்தியின், படர் அல்குல்-பரந்த அரையிடத்தை, ஆக

கண்டு-நேராகப் பார்த்து, ஓர் ஆடு அரவு ஆம் என்று-(இது) படம் விரித்தாடும் ஒரு பாம்பென்று கருதி, அயல் நண்ணும்-அருகில் வருகின்ற, தோகைக்கு அஞ்சி-மயிலுக்குப் பயந்து, கொம்பின் ஒதுங்கி-ஒரு பூங்கொம்பின் மறைவிலே பதுங்கி, துணர் ஈன்ற சாகைத்து அங்கை-பூங்கொத்து விரிந்த கிளை போன்ற (தன்) குடங்கையாலே, கண்கள் புதைத்து-கண்களைப் பொத்திக்கொண்டு, தளர்வாளும்-தளர்ச்சியுறுபவளும்,

ஒரு மங்கை, தான் உடுத்திருந்த மெல்லிய ஆடையால் தனது அங்கம் வெளியே தோற்றுதலை ஒரு மயில் கண்டு,பாம்பென்று கருதிப் பற்றுதற்கு நெருங்கி வரவே, அம்மங்கை, மயிலினிடத்து அச்சமும், தன் அங்கங்கள் வெளித் தோற்றுதற்கு நாணமும் கொண்டவளாய், இரண்டினாலும் மனந் தளர்வுற்றாள் என்க. நாணத்தினாலேயே, தன்னைப் பிறர் காணாதவாறு பூஞ்செடி மறைவிலே போய்த் தன்னை முற்றிலும் மறைத்துக்கொண்டாள் எனலாம்.

துணரீன்ற சாகைத் தங்கை: விரல்களும் அணிகலன்களும் பூக்களாகவும், முன் கை அவற்றைத் தாங்கிய கிளையாகவும் கொள்க. பெண்கள் அச்சத்தால் கண் புதைத்தல்: 846-குறிப்புப் பார்க்க.

(மி - ம்.) 1. சொற் பைந்தொடியாள்; பைந்தொடியார்.
2. ஆகக் கண்டோள்; ஆகக் கொண்டோர்; ஆடரவம்மென்று; ஆடரவே யென்று. 3. துடரீன்ற.
4. சாகைத் தன்கைக்; சாகத் தங்கைக்; சாகத்திற்கைக்; கண்கள் புதைத்துத்; புதைப்பத்; தளர்வாரும். (29)

996. வம்பிற் பொங்குங் கொங்கை சுமக்கும் வலியின்றிக்
கம்பிக் கின்ற நுண்ணிடை நோவக் கசிவாளும்
பைம்பொற் கிண்ணம் மெல்விர லுங்கிப் பயில்கின்ற
கொம்பிற் கிள்ளைப் பிள்ளை யொளிக்கக் குழைவாளும்,

வம்பில் பொங்கும்-கச்சினின்றும் மீறி யெழுகின்ற, கொங்கை-தனங்களின் பாரத்தை, சுமக்கும் வலி இன்றி-தாங்கும் ஆற்றல் இல்லாமல், கம்பிக்கின்ற-நடுங்குகிற, நுண் இடை நோவ-மெல்லிய இடை நோதலால், கசிவாளும்-வருந்துகின்றவளும், கிள்ளை பிள்ளை-(தான் வளர்க்கும்) கிளிப்பிள்ளையானது, பயில்கின்ற கொம்பில் ஒளிக்க-நெருங்கிய பூங்கொம்புகளிடையே மறைந்துகொண்டதனால், (அதனைத் தேடிக்கொண்டு), பசுமை பொன் கிண்ணம்-(அக் கிளிக்கு உணவு வைத்து ஊட்டுதற்குரிய) பசும் பொன்னாலியன்ற கிண்ணத்தை, மெல் விரல் தாங்கி-(தன்னுடைய) மெல்லிய கைவிரல்களால் தாங்கி யெடுத்துக்கொண்டு,குழைவாளும்-குழைந்து அதனைக் கூவுகின்றவளும்,

இப்பாடலுள்,வேறு சிறப்பின்றி, இடை நோவ வருந்துபவளும், தன் கிளிக்காக வருந்துபவளும் என இருவரைக் கூறினார். பெண்கள்

கிளிகளை ஊட்டி வளர்த்தல்: 'மாதர், அருகூட்டும் பைங்கிளியும்' (நள. 21); 'என்னை ரின்னுயிர் மென்கிளிக்கு' எனச் சீதைப் பிராட்டியின் கூற்றாக (சுந்தர. 684) வருதலும் நோக்குக.

(பி - ம்.) 1. வம்பிற் கோங்கும். 2. கம்பிக்குந்தம்; கம்பிக்குந்தள்; நுண்ணிடைநோக்கிக்: கலிவாரும்; கனிவாரும்; கனிவாளும்.
3. மென்விரல் தாங்கிப் பயில்வாரும்; பயில்வாளும்.
4. கொம்பிற் பிள்ளைக் கிள்ளை: ஓதுங்கக்: குழைவாரும். (30)

997. பொன்னே தேனே பூமக ளேகா ணெனையென்னாத்
தன்னே ரில்லா னங்கொரு கொய்பூந் தழைமூழ்க
இன்னே யென்னைக் காணுதி நீயென் றிகலித்தன்
நன்னீ லக்கண் கையின் மறைத்தே நகுவாளும்,

தன் நேர் இல்லான்-தனக்கு நிகர் (ஒருவர்) இல்லாத தலைவன் ஒருவன், (தன் காதலியை நோக்கி), பொன்னே - பொன்போல் அருமையானவளே, தேனே - தேன்போல் இனிமையானவளே, பூமகளே-இலக்குமி போன்றவளே, எனை காண் என்னா-என்னைக் கண்டுபிடி என்று சொல்லி, அங்கு ஒரு கொய் பூ தழை மூழ்க-அங்கே கொய்தற்குரிய அழகிய தழைகள் அடர்ந்த ஓரிடத்தில் மறைந்து கொள்ள, (அக்காதலி), இகலி-அவனோடு மாறுபட்டு, இன்னே-இப்போதே, (நான் உன்னைக் கண்டுபிடிப்பதன் முன்னமே), நீ என்னை காணுதி என்று-நீ என்னைக் கண்டுபிடிப்பாயாக என்று சொல்லி, தன் நல் நீலம் கண்-தன்னுடைய நல்ல நீலோற்பலம் போன்ற கண்களை, கையின் மறைத்து-தன் கையாலே பொத்திக்கொண்டு, நகுவாளும்-(விளையாட்டாகச்) சிரிப்பவளும்,

அச்சோலையில் நிகழ்ந்த பலவகை விளையாட்டுக்களுள், ஒளிந்து விளையாடும் ஒன்றினை இங்கே கூறுகின்றார். ஒளிந்துகொள்ளும் தன்னைக் கண்டுபிடிக்குமாறு தலைவனொருவன் தன் காதலிக்குக் கூற, அவள், அவனுக்கெதிராகக் குழந்தைபோல, 'நீ என்னைக் கண்டுபிடி' என்று சொல்லி, எங்கும் போய் மறையாமல், நின்ற விடத்திலேயே தன் கண்களைக் கையால் பொத்திக்கொண்டு சிரித்தாள் என்று அம் மங்கையின் பேதைமைக் குணத்தை அழகுபடக் குறிக்கின்றார்.

(பி - ம்.) 1. எனையென்னத்.
2. தன்னேரில்லாள்; இல்வார்: ஆங்கொரு; கொய்யற்றழை மூழ்கி.
3. இன்னே யின்னே காணுதியோவென்று.
4. கையின் மறைத்து நகுவாரும். (31)

998. வில்லிற் கோதை நாணுற மிக்கோ னிகலங்கம்
புல்லிக் கொண்ட தாமரை மென்பூ மலர்தாங்கி
அல்லிற் கோதை மாதர் முகமா மரவிந்தச்
செல்வக் கானிற் செங்கதி ரென்னத் திரிவானும்,

மிக்கோன்-(யாவரினும்) மேம்பட்ட தலைவனொருவன், வில்லில் நாண் கோதை உற-தன் வில்லினது நாணி (இடக் கையில் அணிந்த) தோற் கவசத்திலே பொருந்த, இகல் அங்கம்-வலியதாகிய வலக் கையிலே, புல்லிக்கொண்ட-அழகுறப் பொருந்திய, தாமரை மென் பூ மலர் தாங்கி-தாமரையினது மெல்லிய அழகிய மலரைப் பிடித்துக்கொண்டு, அல்லின் கோதை-இருள் போன்ற கூந்தலையுடைய, மாதர்-பெண்களின், முகம் ஆம்-முகங்களாகிய, செல்வம் அரவிந்தம் கானில்-வளமான தாமரைக் காட்டினிடையே, செம் கதிர் என்ன-சிவந்த கிரணங்களையுடைய சூரியனைப்போல, திரிவானும்-உலாவருகின்றபவனும்,

வீரத்தாலும் அழகாலும் மேம்பட்ட ஆடவனொருவன், மன்மதனைப்போலத் தன் இடதுகையில் நாணேற்றிய வில்லையும், வலது கையில் வளமான தாமரைப் பூவொன்றையும் கொண்டு, தன் பெருமிதமும் காதற்குறிப்புந் தோன்ற, மாதர் பலர் கூடியிருந்த பக்கத்திலே மெல்ல நடப்பானுனன் என்றவாறு. அவனதழகையும் தோற்றப்பொலிவையும் கண்ட மாதர் பலருடைய முகங்கள் மலர்ந்தன என்பார், மாதர் முகங்களைத் தாமரை மலராகவும், அவற்றை மலர்விக்கும் கதிரவனென அவ்வாண்மகனையும் கூறினர். தாமரை மலர் தாங்குதல் காதற் குறிப்பை உணர்த்துவதென்பர். சூரியன் கையில் தாமரை மலர் உண்டென்பதும் வழக்கு; (சூரிய ஸகஸ்ரநாமம். 768, 913-ஆம் நாமங்கள் பார்க்க). அதற்கேற்ப இங்கும் 'புல்லிக்கொண்ட தாமரை மலர்' என்றார். கோதை-வில்லின் நாண் ஊறு செய்யாதபடி இடது முன்கையில் அணியும் தோற்கவசம். அங்கம் என்பது பொதுவாக உடலுறுப்பைக் குறிப்பதாயினும், இடம் நோக்கிக் கையெனப் பட்டது.

(பி - ம்.) 1. வில்லிற்கோல நாணுறு மிக்கோர்: இகவாகம்; இலவங்கம்.
2. புல்லிற் கொண்டார்; புல்லிக் கொண்டாள்: மலர்தாங்க; மலர் தாங்கும்.
3. அல்லிக் கோதையார்முக மென்னும்; அல்லிக் கொம்பர் மாதர் முகம் போல்; வல்லிக் கொப்ப மாதர் முகம்போல்; மாதர் முகப்பேர்.
4. செல்வக் கானச்: திரிவாரும். (32)

999. சோலைத் தும்பி மென்குழ லூதத் தொடைமேவும்
கோலைக் கொண்ட மன்மத வாயன் குறியுய்ப்ப
நீலத் துண்கண் மங்கையர் சூழ நிரையாவின்
மாலைப் போதின் மால்விடை யென்ன வருவாரும்,

மாலை போதில்-(அன்று) மாலைக் காலத்திலே, சோலை தும்பி-அச்சோலையிலிருந்த வண்டுகள், மென் குழல் ஊத-மெல்லிய குழலொலியைச் செய்ய, தொடை மேவும் கோலை கொண்ட-(வில்லிலே) தொடுத்தலுக்குரிய அம்புகளைக் கைக்கொண்ட, மன்மதன் ஆயன்-

மன்மதனாகிய இடையன், குறி உய்ப்ப-(அவரவர்க்கு உரிய) இடங்களிலே சேரும்படி செய்ததனால், நீலம் உண் கண் மங்கையர்-கருங்குவளை போன்ற மையுண்ட கண்களையுடைய பெண்கள், நிரை ஆவின் சூழ-கூட்டமான பசுக்களைப் போலத் தம்மைச் சூழ்ந்துவர, (அவர்கள் நடுவிலே), மால் விடை என்ன-பெருமை பொருந்திய இடபங்களைப் போல, வருவாரும்-வருகின்ற ஆடவரும்,

பசு நிரைகள் அவற்றிற்குரியகாளைகளுடன்கூட,மேய்ச்சல் நிலத்தினின்றும் ஊருக்குத் திரும்பும்படி, மாலைக் காலத்தில் நிரை மேய்க்கும் இடையர்கள் குழலூதி அவற்றை ஒருங்கு சேர்த்து, பூமாலை சூட்டிய தம் கைக்கோலால் அவற்றை உரியவிடங்களுக்குச் செலுத்துவர்; இங்கே மன்மதனை இடையனாகவும் மங்கையரைப் பசுக்களாகவும் வைத்து, அவ்விடையன், வண்டுகள் தனக்குத் துணையாகக் குழலூத, அம்புக் கோலால் மங்கையராகிய பசுக்களை அவர்களிடையேயுள்ள காளைகள் போன்ற ஆடவருடன் தம்தம் இருப்பிடங்கள் சென்று சேரச் செய்தான் என்கின்றார்.

மன்மதனுக்குச் சொல்லும்போது, தொடை மேவும் கோல்-(வில்லிலே) தொடுத்தற்குரிய அம்புகள்; இடையனுக்குச் சொல்லும் போது, பூமாலை சூட்டிய கைக்கோல்; அந்திப் பொழுதாயினமையின், பூக்கொய்தும் அங்கங்கே சென்று விளையாடியும் அதுவரை பொழுது போக்கிய ஆடவரும் மகளிரும், தம்தம் இருப்பிடம் சேர்ந்து இரவுப் பொழுதில் இன்பம் நுகர்தற்கிடமாகும்படி மன்மதன் செய்தான் என்க. குறி உய்த்தல் - குறியாக (அம்புகளைச்) செலுத்துதல் என்றும் ஆம். இப்பாட்டுள் உருவகமும் உவமையும் கலந்து வந்தன.

குழலோசைக்கு வண்டுகளின் ஒலி: 'குழல்போல், இரங்கிசை மிஞிறொடு தும்பி' (கலி. *33: 22-3*); 'குழலிசை தும்பி கொளுத்திக் காட்ட' (மணி. *4:1*). இடையர் கையில் கோலிருத்தல்: பெரும்பாண். *170*; முல்லை. *15*; நெடுநல். *3*; அகநா. *274: 8*. பசு மந்தையில் காளை: 'ஏறுடை இனநிரை' (நெடுநல். *4* ) என்பதும் அதன் அடிக் குறிப்பும் பார்க்க. குழலோசையால் பசுக்களைத் திரட்டல்: கண்ணன் இளமையிற் செய்ததும், ஆனாய நாயனார் செயலும் காண்க. 'ஆக் குவித்தார் குழலா லரங்கேசர்' (திருவரங்கத்தந்தாதி. *29.*)

(பி - ம்.) 1. மென்குழலாகத்; மென் குழலூதித்: தொடைமேயும்; தொடையெய்யும்; தொடையேவும்; தொடைசோர: மென்குழலாகத்திடைசோரும்.
2. மன்மதனையன்: குறியுய்ப்பான்.
3. நீலத்தொண்கண்: சூழனிரையாவின்; சூழனிறையாவின்; சூழநின்றாவின். 4. மாவிடைபோல. (33)

அச்சுப் பிரதிகளுட் பெரும்பாலும் இப்பாடலும் அடுத்ததும் முறைமாறி காணப்படுகின்றன.

1000. செய்யிற் கொள்ளுந் தெள்ளமு தச்செஞ் சிலையொன்றும்
கையிற் பெய்யிற் காமனு நாணுங் கவினுர்தம்
மையற் பேதை மாதர் மிழற்றும் மழலைச்சொல்
தெய்வப் பாடற் சொற்கலை வேண்டித் திரிவாரும்,

செய்யில் கொள்ளும்-வயல்களிலிருந்து வெட்டிக்கொள்ளப்படுகிற, தெள் அமுதம் செம் சிலை ஒன்றும்-தெளிந்த அமுதம் போன்ற சாறுடைய கரும்பாகிய செவ்விய வில்லை மட்டும், கையில் பெய்யின்-கையிலே கொடுத்திட்டால், காமனும் நாணும் கவினர்-மன்மதனும் நாணுதற்குக் காரணமான அழகுடைய ஆடவர் சிலர், தம் மையல் பேதை மாதர்-தம்முடைய காமமயக்கத்துக்கிடமாகிய, பேதைமைக் குணமுள்ள மங்கையர், மிழற்றும்-இனியவாகப் பேசுகிற, மழலை சொல்-மழலை மொழிகளாகிற, சொல்-புகழ்மிக்க, தெய்வம் பாடல் கலை-வேதநூலை, வேண்டி-கேட்கவிரும்பி, திரிவாரும்-அலைகிறவரும்,

அங்கிருந்த ஆடவர்களின் அழகைச் சிறப்பித்தற்கு, கையிலே கரும்புவில் இல்லாத மன்மதனைப் போன்றவர்கள் என்றும், கரும்பு வில் மட்டும் இருக்குமானுல், மன்மதனையும் அழகில் வெல்லத்தக்கவர்கள் என்றும் கூறினுர். அத்தகைய ஆடவர்கள், தம் காதலுக்கிடமான மகளிரின் பேச்சுக்களை வேதவாக்காகக் கொண்டு விரும்பிக் கேட்கின்றனர் என்ருர். மாதர்கள் கொஞ்சிப் பேசுதலால் மழலைச் சொல் என்ருர்; மழலைச் சொல், குழலினும் யாழினும் இனியது என்பது வள்ளுவர் வாய்மொழியன்ருே? வேதம் இசைவடிவினதாகலின் ‘தெய்வப்பாடல்’ எனப்பட்டது. இங்கே ஆடவர் கேட்கவிரும்பியது மாதர் பேசும் குறிப்புமொழிகளை என்ருரும் உளர்.

‘யாழொக்குஞ்சொல்(990) என்பதுமுதல் இதுவரை,முடிக்குஞ் சொல் இன்றி அவாய்நிலையாக உள்ள பதினெரு பாடல்களையும் ஒருங்கே ‘ஆயினர் அங்கிருந்தோர்’ எனச் சொல் வருவித்துக் கொடுத்து முடித்துக் கொள்க. இவைபோன்ற செயல்கள் இன்னும் உள என்பதுணர்த்துதற்கு அவாய் நிலையாகக் கூறினுர் என்க.

(பி - ம்.) 1. செய்யிற் கொய்யும்; செய்யிற் கொண்ட; செய்யிற் பெய்யும்: தெள்ளமுதைச்செஞ்; செங்குமுதச் செஞ்; செங்குவளைச் செஞ்; சிலையொன்று; சிலைபொன்றும்; சிலையென்றும்.

2. கையிற் பெய்யுங்; கையிற் கொய்யுங்; கையிற் கொள்ளுங்; கையிற் கொள்ளிற்; கவினரும்.

3. மெய்யிற்பேதை; மையிற் கோதை.

4 பாடல் சொற்கலை யென்னத் தெரிவாரும்; பாடல் தேர்குந ராகித் திரிவாரும்; பாடல் தேர்தலை வேண்டித் திரிவாரும்; பாடற் சொற்கலை யேத்தித் திரிவாரும். (84)

(வேறு)

1001. ஊக்க முள்ளத் துடைய முனிவரால்
காக்க லாவது காமன்கை வில்லெனும்
வாக்கு மாத்திர மல்லது வல்லியிற்
பூக்கொய் வாள்புரு வக்கடை போதுமே.

உள்ளத்து-மனத்தில், ஊக்கம் உடைய முனிவரால்-(புலன்களை அடக்கித் தவஞ் செய்வதில்) வலிமையுடைய முனிவர்களால், காமன் கை வில்-மன்மதன் கையிலுள்ள வில்லின் தொழில், காக்கல் ஆவது என்னும்-(தம்மை அணுகாதபடி), காத்துக்கொள்ளுதல் ஆகும் என்கிற, வாக்கு மாத்திரம் அல்லது-வார்த்தை மட்டும் (உலகத்தில் உள்ளதே) அல்லாமல், (செயலில் அஃது இல்லை); வல்லியின்-கொடி போல, பூ கொய்வாள்-பூக்களைப் பறிக்கும் ஒரு மங்கையின், புருவம் கடை (ஏ)-புருவத்தின் கடைப்பகுதி ஒன்றே, போதும்-முனிவரையும் மனவலி யழிக்கப் போதுமானதாகும்.

பிரிநிலை ஏகாரம் பிரித்துக் கூட்டி உரைக்கப்பெற்றது.

காமம் முதலிய உட்பகைகள் ஆறையும் கடிந்து மனவுறுதி யோடு தவம் முயலும் முனிவரையும் மயக்கி உறுதியைக் குலைக்க வல்லது பெண்களின் கண்பார்வை; அவ்வாறாயின், இல்வாழ்வார் முதலியோர் நிலைபற்றிச் சொல்ல வேண்டுவதில்லை யன்றோ? எனவே, 'முன்னே ஆடவரையும் மகளிரையும் பற்றிக் கூறியவை குற்றமாகா' என்ற கருத்துப்பட இங்கே இதனைக் கூறி, மேலும் சில கூறுகின்றார்.

வில் என்பது ஆகுபெயராய் வில்லின் தொழிலைக் குறித்தது. பெண்கள் காமன் படை யெனப்படுதலும், அவர்கள் புருவம் வில் லெனப் படுதலும் ஈண்டுக் கருதற்பாலன.

(பி - ம்.) 1. முனிவரர். 3. மாத்திரம் வல்லது; மாத்திரத்தல்லது.
4. பூக் கொய்வார்; பூக்கொள்வார்; பூக்கொப்பாள்: புருவக்கொடி; புருவச்சிலை: போலுமே! பூக்கொய்வார்தம் புருவவிற் போலுமே. (35)

1002. நாறு பூங்குழ னன்னுதல் புன்னைமேல்
ஏறி னான்மனத் தும்பர்சென் றேறினாள்
ஊறு ஞானத் துயர்ந்தவ ராயினும்
வீறு சேர்முலை மாதரை வெல்வரோ.

நாறு பூ குழல் நல் நுதல்-மணம் வீசும் கூந்தலையும் அழகிய நெற்றியையும் உடையாளொரு மங்கை, புன்னைமேல் ஏறினான்-(பூக் கொய்யும் பொருட்டுப்) புன்னை மரத்தின்மேலேறிய அவள் காதல னது, மனத்து உம்பர் சென்று ஏறினாள்-மனத்திலே போய் ஏறிக் கொண்டாள்! (இஃதொரு வியப்போ!); ஊறும் ஞானத்து உயர்ந் தவர் ஆயினும்-மேன்மேல் வளர்கின்ற ஞானத்தினால் மேம்பட்டவ ராயினும், வீறு சேர் முலை மாதரை-இறுமாந்தெழும் கொங்கைகளை

நாள் முறி-நாட்பட்ட தளிர் என்றலும்ஆம். தேவராலும் என உம்மையைப்பிரித்துக் கூட்டுக.

(பி - ம்.) 1. இருந்தானொரு.
2. வளையவும்மரியான்; வளையவுமரிதாய வனப்பினள்; வளையவும் மரியாடன் வனப்பினை; வனப்பினால்; நினையவும்மரியா னறிவின்றலே; வளையவும் மரிதால் வனப்பின்றலே; வளையவும் மறியா வனப்பின்றலே.
3. நினையு நோக்கமும்; நிலை வுமாத்திரை; நீங்கலன்; நீக்கிலன்; கைகளாம்.
4. நனையு நாண்மல ருங்கொய்து நல்கினாள். (37)

1004. வண்டு வாழ்குழ லாண்முக நோக்கியோர்
தண்டு சேர்புயத் தான்றடு மாறினான்
உண்டு கோபமென் றுள்ளத் துணர்ந்தவள்
தொண்டை வாயிற் றுடிப்பொன்று சொல்லவே.

ஓர் தண்டு சேர் புயத்தான்-(பெரிய) தண்டுகள் போன்ற புயங்களையுடையவனான ஓர்ஆடவன், வண்டு வாழ் குழலாள் முகம் நோக்கி-வண்டுகள் தங்கப்பெற்ற கூந்தலையுடைய (தன்) காதலியின் முகத்தைப் பார்த்து, உள்ளத்து-அவள் மனத்திலே, கோபம் உண்டு என்று-ஏதோ கோபம் உள்ளதென்று, அவள் தொண்டை வாயில் துடிப்பு ஒன்று சொல்ல-கொவ்வைக்கனி போன்ற அவள்வாயில் உண்டான (உதடுகளின்) துடிப்பு ஒரு குறிப்பைத் தெரிவிக்க, உணர்ந்து-அதனை யறிந்து; தடுமாறினான்-(அதனைத் தீர்க்கும் வகை அறியாது) தடுமாறலானான்.

தன் காதலியின் எதிரே காதற் குறிப்போடு வந்து நின்ற ஆடவனொருவன், அவளிடத்து ஊடற் குறிப்பைக் கண்டு, அவள் உதடுகளின் துடிப்பால் சினம் மிக்குள்ளாள் என்பதனை யுணர்ந்து, அதன் காரணமும் அதனைத் தீர்க்கும் வகையும் அறியாது தடுமாறினான் என்க. ஆடவர் பலரும் தம்தம் காதலியர்க்குப் பூக்கள் கொய்து கொடுத்தும், அவற்றைப் புனைந்து சூட்டியும் இன்பம் நுகர்ந்திருக்க, இவன் அங்ஙனம் எதுவும் செய்யாமல், வெறுங்கையனாய்த் தன் முன் வந்து நின்றமையின், அவள் சினங்கொண்டாள் என்றும், அவன் தானணிந்த மாலையை வேறொருத்திக்குச் சூட்டிவிட்டு வெறுந் தோளனாய் வந்தானெனக் கருதி அவள் சினங்கொண்டாளென்றும் அவள் சினத்துக்குக் காரணங் கூறி, 'தண்டுபோற் புயத்தான்' என்ற குறிப்பு இதற்குப் பொருந்துவதாகும் என்பர். தண்டு-தண்டாயுதம்.

ஆடவர் தோளுக்குத் தண்டு: *1014*; திருச்சிற். *302*. உதடுகள் துடித்தல் கோபக்குறி: திருச்சிற். *366*; 'தொண்டைக் கனிவாய் துடிப்ப' நள. *188*.

(பி - ம்.) 1. வாழ்குழலாண் மனம். வாழ்குழல் வாண்முகம்; சேர்குழல் வாண்முகம்; மாமுகம்; வார்குழல் வாண்முகம்; வார்குழலாண்முகம்; வார்குழலார்

யுடைய மங்கையரை, வெல்வரோ - வெல்வார்களோ? (வெல்ல மாட்டார்).

இதுமுதல் மூன்று கவிகளால் ஆடவர் செயல்கள் கூறுகின்றார். தன் காதலியின் பொருட்டு மலர் கொய்யப் புன்னை மரத்தின் மேலேறிய ஓராடவன், அவள் நினைவாகவே யிருந்தான் என்பதனை 'அவன் மனத்தில் அவள் சென்று ஏறிக்கொண்டாள்' எனச் சுவைபடக் கூறுகின்றார். அவளுக்காகவே மலர் கொய்ய அவன் மரத்தின் மேல் ஏறினான்; அவன் மனத்தில் அவள் ஏறிக்கொண்டாள் என்றதனால், வென்றவள் அவளே. பெண்ணாசையை வெல்லுதல் உயர்ந்த ஞானியர்க்கும் இயல்வதன்று என்று பிற் கூறிய பொதுப்பொருள், முற் கூறிய சிறப்புப் பொருளைச் சமர்த்தித்தது. முந்திய கவியில் யோகியராகிய முனிவரைக் கூறியதுபோல, இக்கவியுள் ஞானியரையும் கூறினார். இவற்றால் காமத்தை வெல்லுதல் எத்தகைய உயர்வுடையோர்க்கும் அரிதென்பது கூறப்பட்டது.

(பி - ம்.) 1. நாறும் பூங்குழல்: நன்னுதற் புன்னைமேல்.
2. ஏறினாள்; ஏறினார்: சென்றேறினான்: சென்றேத்தினாள்; சென்றெய்தினாள்.
3. ஊறி ஞானத்து; ஊறில் ஞானத்து; ஈறில் ஞானத்து; ஈறில் ஞாலத்து: உயர்ந்தவ ரென்னினும்; உணர்ந்தவராயினும்.
4. மாதரை வெல்லுமே. (36)

1003. சினையின் மேலிருந் தானுருத் தேவரால்
வனைய வும்மரி யாள்வனப் பின்றலை
நினைவு நோக்கமு நீக்கலன் கைகளால்
நனையு நாண்முறி யுங்கொய்து நல்கினான்.

சினையின் மேல் இருந்தான்-(பூக் கொய்தற்கு) மரக்கிளையின் மேலேறியிருந்த ஓராண்மகன், உரு-(தன்)வடிவத்தை, தேவரால்(உம்) வனைய அரியாள்-தேவராலும் எழுதுதற்கு அரியவளான தன் காதலியின், வனப்பின் தலை-அழகிலே(சென்ற), நினைவும் நோக்கமும் நீக்கலன்- எண்ணத்தையும் பார்வையையும் நீக்கமாட்டாதவனாகி, கைகளால்- (பூக்கொய்தற்கு நீட்டிய தன்) கைகளால், நனையும்-அரும்புகளையும், நாள் முறியும்-புதிய தளிர்களையும், கொய்து நல்கினான்-பறித்து அவளுக்கு கொடுப்பானானான்.

தன் காதலிக்குப் பூக்கள் கொய்து தர மரத்தின்மேல் ஏறியவன், கீழே நின்ற காதலியையே கண்ணால் நோக்கியும் மனத்தால் நினைத்தும் தன்னை மறந்து, பூக்களை விட்டிட்டு, அவளுக்கு வேண்டாத சிற்றரும்புகளையும் தளிர்களையும் பறித்து அவளிடங் கொடுப்பவனானான் என்க. இப்பாடலின் கருத்து, முந்திய பாடலின் அநுவாதமாக அமைந்திருத்தல் காண்க. நனை-மலர்தற்குரியதல்லாத அரும்பு.

முகம்; வாழ்குழல் வாளுனே: நோக்குமோர்; வாடிடத்; வாழ்குழலாளே வணங்கியே. 2. தண்டுபோற் புயத்தோன்.
3. உண்டு கோபமும்: உளத் துணர்ந்தவள்; உள்ளத் துணர்ந்தனன்; உள்ளத் துணர்ந்தவன்;உள்ளத் துரந்தவள்;உன்னத் துணர்த்துவாள்.
4. வாயின்றுடிப்பொன்று; வாயிற் றுடிப்பென்று; சொல்லலும்; சொல்லுமே. (38)

1005. ஏயுந் தன்மைய ரிவ்வகை யாரெலாம்
தூய வொண்மலர்ச் சோலைத் துறுமலர்
வேயுஞ் செய்கை வெறுத்தனர் வெண்டிரை
பாயுந் தீம்புனற் பண்ணைசென் றெய்தினர்.

ஏயும் தன்மையர்-முற்கூறிய (பூக்கொய்து சூடுதல் முதலிய) பலவற்றில் ஒன்றியிருந்தவரான, இ வகையார் எல்லாம்-ஆடவரும் மகளிருமாகிய எல்லோரும், தூய ஒள் மலர் சோலை-பரிசுத்தமான ஒளி பொருந்திய அப்பூஞ்சோலையிலே, துறும் மலர் வேயும் செய்கை வெறுத்தனர்-அடர்ந்த பூக்களைக் கொய்து சூடும் செயலை வெறுத்தவராய், வெண் திரை பாயும்-வெள்ளிய அலைகள் (கரையிலே) பாய்கிற, தீம் புனல் பண்ணை-இனிய நீரில் விளையாடுதலை (விரும்பி), சென்று எய்தினர்-போய் (நீருள்ள விடங்களை) அடைந்தனர்.

இதுவரை பூக்களைக் கொய்து சூடியும் சூட்டியும், ஊடியும் கூடியும் பலவாறு விளையாடின மகளிரும் ஆடவரும், அவ்வகையில் நெடும்பொழுது கழிந்தமையின் அதனை வெறுத்து, நீர்விளையாட்டை விரும்பி, நீருள்ள விடங்களை நாடிச் சென்றடைந்தனர் என்றவாறு. இதனால், அடுத்து வருவதாகிய நீர்விளையாட்டுப் படலத்திற்குத் தோற்றுவாய் செய்துகொண்டனர் ஆசிரியர். ஏதேனுமொன்றில் நெடும்பொழுது சென்றால், அதில் வெறுப்பு உண்டாதலும், புதிய வேறொன்றினை நாடுதலும் மனத்தின் இயல்பு; இவ்வியல்பிற் கேற்ப, பூக் கொய்தல் முதலியவற்றை வெறுத்து நீர் விளையாட்டை விரும்பினர் என்க.

துறு மலர்: 978; புனற் பண்ணை: 1007.

(பி - ம்.) 2. தூய தண்மலர்ச்; தூயதண்ணிழற்; தூய தண்சிலைச்; தூய தண்பனிச்; தூய தண்புனற்: சோலை துறுமலர்; சோலை நறுமலர்; சோலையின் றாய் மலர். 3. வேயுங் கண்மை; வெண்டிரைப். (39)
4. பாய் நறும்புனற்.

பூக்கொய் படலம் முற்றும்.

# 16. நீர்விளையாட்டுப் படலம்

நீர் விளையாட்டுப் படலம்: நீரில் விளையாடினமைபற்றிக் கூறும் படலம் என இதன் பொருள் விரியும். பூக்கொய்து மகிழ்ந்த ஆடவரும் மகளிரும் அதனைவிட்டு நீர்நிலைகளை நாடிச் சென்று நீராடியும் நீரில் விளையாடியும் மகிழ்ந்த செய்தியைப் பலபடப் புனைந்து, காவியச் சுவைக்கேற்றவாறு கம்பநாடர் கூறும் அழகு நுகர்ந்து இன்புறுதற்கு உரியதாகும். 'புனல் விளையாட்டுப் படலம்' எனவும் சில பிரதிகளில் இதன் பெயர் காணப்படுகின்றது.

1006. புனைமலர்த் தடங்கணோக்கிப் பூசல்வண் டார்த்துப் பொங்க
வினையறு துறக்க நாட்டு விண்ணவர் கணமு நாண
அனகரு மணங்க னாரு மம்மலர்ச் சோலை நின்றும்
வனகரி பிடிக ளோடும் வருவன போல வந்தார்.

வினை அறு துறக்கம் நாடு விண்ணவர் கணமும்-(அடைவோர்) தீவினைகள் அறுதற்கிடமான சுவர்க்க லோகத்திலுள்ள தேவர் கணங்களும், நாண-(இவர்கள் அழகைக் கண்டு) வெட்கமுறும்படி, அனகரும்-குற்றமற்ற ஆடவரும், அணங்கு அன்னாரும்-தெய்வ மாதரையொத்த மகளிரும், அ மலர் சோலை நின்றும்-(அவர்கள் தங்கியிருந்த) அப்பூஞ்சோலையினின்றும், வனம் கரி-காட்டிலுள்ள ஆண்யானைகள், பிடிகளோடும் வருவனபோல-பல பெண்யானைகளுடனே வருவனவற்றைப்போல, பூசல் வண்டு ஆர்த்து பொங்க-ஒலிக்கும் இயல்புள்ள வண்டுகள் மேலும் ஆரவாரித்து மிக்கு எழ, புனை மலர் தடங்கள் நோக்கி வந்தார்-அழகு செய்யும் மலர்கள் நிறைந்த நீர்நிலைகளை நோக்கி வரலாயினர்.

முந்திய படலத்தின் இறுதியில் கூறியதை இங்கே அநுவதித்துக் கொண்டார்.

வினையற்றோர் சென்று எய்துதற்குரிய நாடு என்பதனை 'வினையறு நாடு' என்றார்; இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் ஏற்றிக் கூறப்பட்டது. சுவர்க்கலோகத்தவரும் நாண என்றதற்கேற்ப ஆடவரை 'அனகர்' என்றும், மகளிரை 'அணங்கன்னார்' என்றும் சிறப்பித்தார்.

அனகர்: 1063-பார்க்க.

(பி - ம்.) 1. ஆர்த்துப் பொங்கி.
2. விளையாறும்: கண்ணும் நாண; கண்டு நாண: குழாமுள் வெள்க.
3. அனகனு மணங்களுரும்; அனையருமணங்கன்னுரும்; நனைமலர்க்குழலார் மைந்தர்: அணிமலர்ச்; நறுமலர்ச்; சோலை நின்று.
4. பிடிகளோடு: பிடிகள்சூழ: வருவதுபோல வந்தார்; வருவன வென்ன வந்தார்; வருவபோல் வந்தாரன்றே. (1)

சில பிரதிகளில் இப்பாடலுடன் பூக்கொய் படலம் முற்றுப்பெறுகின்றது.

1007. அங்கவர் பண்ணை நன்னீ ராடுவா னமைந்த தோற்றம்
கங்கைவார் சடையோ னன்ன மாமுனி கனல மேனாள்
மங்கைமார் கூட்டத்தோடும் வானவர்க் கிறைவன் செல்வம்
பொங்குபாற் கடலுட்போகுந் தோற்றமே போன்ற தன்றே.

அங்கு அவர் - அவ்விடம் (நீர்நிலையை) வந்தடைந்த அவர்கள், பண்ணை நல் நீர் ஆடுவான் அமைந்த தோற்றம்-விளையாட்டுடன் நல்ல நீரில் மூழ்குதற்குப் பொருந்திய காட்சியானது, மேல் நாள்-முன்னாளிலே, கங்கை வார் சடையோன் அன்ன மா முனி-கங்கை நீர் தங்கிய நீண்ட சடையுடைய உருத்திரமூர்த்தி போன்ற, பெரு முனிவனான துருவாசன், கனல-கோபித்துச் சபித்ததனால், வானவர்க்கு இறைவன் செல்வம்-தேவேந்திரனுடைய செல்வங்கள், மங்கைமார் கூட்டத்தோடும்-அரம்பையர் முதலிய தேவமாதர் கூட்டத்துடனே, பொங்கு பால் கடலுள்-(பல வளங்களும்) மிகப்பெற்ற திருப்பாற் கடலினுள்ளே,போகும் தோற்றமே போன்றது-போயடைந்த காட்சியையே ஒத்திருந்தது. அன்றே: அசை.

மிகச்சிறந்த அணிகலன்களைப் பூண்டு, தேவமாதருக்கு ஒப்பான பேரழகும் படைத்த மகளிர், நீரினுட் புகுந்து மூழ்கி விளையாடுந் தோற்றத்துக்கு, துருவாச முனிவன் சாபத்தால் இந்திரனுடைய சிறப்புக்கும் இன்பத்துக்கும் காரணமான செல்வங்களும் தேவமாதரும் பாற்கடலுள் மூழ்கியதை ஒப்புக் கூறினர். இந்நீராட்டில் ஆடவரும் உளரேனும், சிறப்பாக மகளிருக்கே இவ்வொப்புமை பொருந்துவதாம். அதற்கு, பண்ணை-மகளிர் கூட்டம் எனப்பொருள் கொள்ளல் ஏற்புடைத்தாகும். மகளிர், தேவமாதர்; அவர்கள் பூண்ட அணிகள் செல்வம் எனக் கொள்க.

துருவாச முனிவன் சாப விளைவு: 488-பார்க்க.

(பி - ம்.) 1. ஆடுவா ரமைந்த; ஆடுமா றமைந்த.
2. கங்கைத்தாழ்; கங்கை வாழ்; கங்கை நீர்ச்: மாமுனி கனல, மாமுனி முனிவின்.
3. மங்கைய ரீட்டத்தோடும்: வானவரரசன்.
4. பொங்குபாற் கடலிற் செல்லும்: பொங்குமா கடலுட் போகும்; கடலிற் சேன்றும்: போலுமென்றே. (2)

1008. மையவாங் குவளை யெல்லா மாதர்கண் மலர்கள் பூத்த
கையவா முருவத் தார்தங் கண்மலர் குவளை பூத்த
செய்யதா மரைகளெல்லாந் தெரிவையர் முகங்கள் பூத்த
தையலார் முகங்க ளெல்லாந் தாமரை பூத்த வன்றே.

மைய ஆம் குவளை எல்லாம்-கருநிறமுடைய நீல மலர்களெல்லாம், மாதர் கண் மலர்கள் பூத்த-அம்மகளிரின் கண் மலர்களை யொப்பப் பூத்தன; கை அவாம்-(சாமுத்திரிக நூலின்) முறைப்படி அமைந்த, உருவத்தார் தம்-வடிவமுடைய அம்மகளிரின், கண் மலர்-மலர் போன்ற கண்கள், குவளை பூத்த-அந்நீல மலர்கள்போல விளங்கின; செய்ய தாமரைகள் எல்லாம்-செந்தாமரைப் பூக்களெல்லாம், தெரிவையர் முகங்கள் பூத்த-அம்மாதரின் முகங்கள்போலப் பூத்தன, தையலார் முகங்கள் எல்லாம்-அம்மங்கையரின் முகங்களெல்லாம், தாமரை பூத்த-செந்தாமரை மலர்கள்போல விளங்கின. அன்று, ஏ-அசைகள்.

கை அவாம்-ஒழுக்கமுள்ள என்றும், கைய ஆம் எனப் பிரித்து, ஒப்பனை செய்யப்பெற்ற எனவும் பொருள் கூறலும் பொருந்தும்.

நீர்நிலையில் இயற்கையாகப் பூத்திருந்த குவளை தாமரை யாகிய இவற்றோடு, அங்கு நீராடப் புகுந்த மங்கையரின் கண்களும் முகங்களும் சேர, அவற்றிடையே வேற்றுமை காண முடியாதவாறு மலர்களின் தோற்றம் மிகுதியாயிற் றென்பது கருத்து.

உபமான உபமேயங்களாகவுள்ள பொருள்களையே ஒன்றற் கொன்று உபமான உபமேயங்களாக மாற்றிக் கூறும் இவ்வணி 'புகழ் பொருளுவமை' என்றும் 'இதர விதரம்' என்றும் கூறப்படும். அவாம்= அவாவும்; ஈற்றுயிர்மெய் கெட்டது.

(பி - ம்.) 1. மையவார்; மைவரும்: மாதர்கள் மலர்க்கண்.
2. கையவாம் புயத்தார் தங்கள்; கையவாம் புயவத்தார்தம்; கையவார் புருவத்தார்தம்; கையவாம் புருவத்தார்தம்: பையரவல்குலார்தங் கண்மலர் பானல் பூத்த.
4. தையலார் முகங்கள் செய்ய; தையலர் முகங்களெல்லாம்: பூத்த தன்றே. (3)

மாதரின் புனல் விளையாட்டு

1009. வண்டுணக் கமழுஞ் சுண்ணம் வாசநெய் நானத் தோடும்
கொண்டெதிர் வீசு வாருங் கோதைகொண் டோச்சு வாரும்
தொண்டைவாய்ப் பெய்த தூநீர் கொழுநர்மேற் றூகின்றாரும்
புண்டரீ கக்கை கூட்டிப் புனன்முகந் திறைக்கின் றாரும்.

வண்டு உண-வண்டுகள் வந்து கவ்வி யுண்ணும்படி, கமழும்-நறுமணம் வீசுகிற, சுண்ணம்-வாசனைப் பொடியையும், வாசம் நெய்-

வாசனைத் தைலத்தையும், நானத்தோடும் - கஸ்தூரியையும், கொண்டு-கையில் எடுத்து, எதிர் வீசுவாரும்-(ஒருவருக்கொருவர்) எதிராக வீசுபவர்களும், கோதை கொண்டு ஓச்சுவாரும்-பூமாலையைக் கொண்டு வீசுகிறவர்களும், தொண்டை வாய் பெய்த தூ நீர்-கொவ்வைக்கனி போன்ற (தம்) வாயினுட் கொண்ட பரிசுத்தமான நீரை, கொழுநர் மேல் தூகின்ருரும்-தம் கணவர் மேலே உமிழ்கின்றவர்களும், புண்டரீகம் கை கூட்டி-தாமரை மலர்போன்ற (தம்) கைகளை இணைத்து, புனல் முகந்து இறைக்கின்ருரும்-நீரை அள்ளி இறைக்கின்றவர்களும்,

இதுமுதல் எட்டுப் பாடல்களால் புனல் விளையாட்டுப் புனைந்து கூறப்படுகிறது. இவ்வெட்டுப் பாடல்களும் முடிக்குஞ்சொல் இன்றி அவாய் நிலையாக வுள்ளன; இவற்றைத் தொகுத்து முடித்துக் கொள்க. தூகின்ருர்-தூவுகின்ருர்.

நீர்விளையாட்டில் சுண்ணம் முதலியவற்றையும் மாலையையும் ஒருவர்க்கொருவர் வீசிக்கொள்ளல்: 'சுண்ணமுஞ் சாந்தும் வீழத் தொழுதன ரிரந்து நிற்பார், ஒண்மலர் மாலை யோச்ச வொசிந்துகண் பிறழ வொல்கி, வெண்ணெயிற் குழைந்து நிற்பார்' (சீவக. 2659); கோதைகொண்டோச்சல்: பரி. 9; 39-40, 12: 68; கலி. 67: 6; 128: 18-9; பெருங். 1. 42: 186; சீவக. 2291. நீர்விளையாட்டின் செய்திகளை, பரி.12-ஆம்பாட்டிலும்,பெருங். 1. 42; 184-97 அடிகளிலும் பரக்கக் காணலாம். வண்டுகள் சுண்ணத்தை உண்ணல்: சீவக. 894; பெருங். 1. 42: 72-3 பார்க்க.

(பி - ம்.) 1. வாசநீர் நானத்தோடு.
3. பெய்து தூநீர்; பெய்த தூய்நீர்; பெய்த நன்னீர்: மேற்றூர்க்கின்ருரும்; மேற்றுரக்கின்ருரும்; மேற்றூவுவாரும்.
4. புண்டரீகக் கையாலே; புண்டரீகக் கையாலப்; புண்டரீகக்கை தன்னுல்; புண்டரீகக்கை கூப்பிப்; புண்டரீகக்கை நீட்டிப்; புனன் முகத்து; எறிகின்ருரும்; எறிகுவாரும்; ஓச்சுவாரும். (4)

சில பிரதிகளில் இப்பாடலின் 3, 4-ஆம் அடிகள் முறைமாறிக் காணப்படுகின்றன. அச்சுப் பிரதிகள் பலவற்றில் இப்பாடல் 'தாளையேய் 1010' என்ற பாடலின் பின் உள்ளது.

1010. தாளையேய் கமலத் தாளின் மார்புறத் தழுவு வாரும்
தோளையே பற்றி வெற்றித் திருவெனத் தோன்று வாரும்
பாளைவீ விரிந்த தென்னப் பரந்தநீ ருந்து வாரும்
வாளைமீ னுகள வஞ்சி மைந்தரைத் தழுவு வாரும்,

தாளை ஏய் கமலத்தாளின்-தண்டுடன் கூடிய தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமிபோல, மார்பு உற தழுவுவாரும்-(தம் காதலரின்) மார்பை அழுந்தத் தழுவுபவரும், தோளையே பற்றி-(ஆடவருடைய) தோள்களைப் பற்றிக்கொண்டு, வெற்றி திரு என-வெற்றிக்

குரிய வீரலக்குமிபோல, தோன்றுவாரும்-காணப்படுவோரும்; பாளை வீ விரிந்தது என்ன-கமுகம் பாளையினின்றும் பூக்கள் விரிந்ததுபோல, பரந்தநீர்-பரவிய நீரை, உந்துவாரும்-(கைகளால்) எற்றுபவர்களும், வாளைமீன் உகள-வாளைமீன் புரள்வதனுல், அஞ்சி-அதற்குப் பயந்து, மைந்தரை தழுவுவாரும்-கணவன்மாரைத் தழுவிக்கொள்பவரும்,

கமலத்தாள் என்றும், வெற்றித் திரு என்றும் கூறினமையாலும், பின்னே மைந்தரைத்தழுவுவாரும் என்றமையாலும், இவை மகளிர் செயல் என்பது பெறப்பட்டது; எனவே மார்பு, தோள் ஆகியவை தம் காதலருடையன என்பதும் பெற்ரும். பெண்கள் திருமகள் போலவும் செயமகள் போலவும் சிறப்புற விளங்கினர் என்றதற்கேற்ப, ஆடவரும், திருமால் போலவும், வீரத்தில் மேம்பட்டும் விளங்கினர் எனக் கொள்க. வெற்றிக்குரியது தோளாதலின் 'தோளையே பற்றி' என்ருர். கையால் எற்றப்படும் நீர் மேலெழுந்து பரந்துவிழும் தோற்றம் பாளையிலிருந்து பூவின் தொகுதி விரிந்து சாய்தல் போலக் காணப்படுவதாகும். மகளிர் இயல்பிலே அச்சம் மிக்கவராதலின், பெரிய வாளைமீன் தம் அருகில் புரள்வது கண்டு அஞ்சினர் என்க.

தாளை ஏய்-தம்முடைய பாதத்தையொத்த, கமலம்தாளின்-தாமரைப் பூவின் தண்டுகளிலே, மார்பு உற-தம் மார்பு பொருந்த, தழுவுவாரும் என உரை கூறுவாரும் உளர்.

நீரைக் கையால் எற்றுதல்: 1016-பார்க்க.

(பி - ம்.) 1. தாளையே. 2. பற்றி யேற்றித் திருவுறத்.
3. பாளைவி பரந்ததென்னப்; பாளையே விரிந்ததென்னப்: பரந்து நீர்; பந்துநீர்; அருந்துவாரும்; படிகுவாரும்.
4. வாளையேயுகள. (5)

1011. மின்னொத்த விடையி னூரும்
விடமொத்த விழியி னூரும்
சின்னத்தி னளக பந்தி
திருமுகம் மறைப்ப நீக்கி
அன்னத்தை வருக வென்னோ
டாடவென் றழைக்கின் ருரும்
பொன்னொத்த முலையின் வந்து
பூவொத்த வுளைகின் ருரும்.

மின் ஒத்த இடையினூரும்-மின்னல்போலும் இடையுடையவரும், விடம் ஒத்த விழியினூரும்-நஞ்சு போன்ற கண்களுடையவருமான மகளிர், சின்னத்தின் அளகம் பந்தி-விடுபூவணிந்த (தம்) முன் மயிர்த் தொகுதியானது, திருமுகம் மறைப்ப-(நீரில் மூழ்கியெழுந்த போது தம்முடைய) அழகிய முகத்தை மறைக்க, நீக்கி-அதனை

விலக்கிக்கொண்டு, அன்னத்தை-(பக்கத்திலே காணப்பட்ட) அன்னப் பறவையை, என்னேடு ஆட வருக என்று-என்னேடு விளையாடவா என்று சொல்லி, அழைக்கின்ருரும்-(தனித்தனியே) அழைப்பவரும், பொன் ஒத்த முலையின்-(தேமல் படர்ந்து) பொன்போல விளங்குகிற தனத்தின்மேல், பூ வந்து ஒத்த-நீர்ப் பூவொன்று வந்து தோய, உளை கின்ருரும்-(அது பொருது) வருந்துகிறவர்களும்,

பூ ஒத்த-பூவானது ஒற்ற. ஏனைய மூன்றிடங்களில் வந்துள்ள 'ஒத்த'-உவமவுருபு சொற்பின் வருநிலையணி. பூவின் ஒற்றுதலையும் பொருவாயின என நகில்களின் மென்மை கூறினர்.

சின்னம்-விடுபூ 978.

(பி - ம்.) 1. வேலொத்த விழியினரும்; வேயொத்த தோளினரும்; வெளியொத்த மருங்குலாரும்.
2. அளகப்பந்தி: செவிமுகம்: மறைப்ப நோக்கி; மறைப்பு நீக்கி.
3. வருதி யென்னேடு; வருதி ரெம்மோடு.
4. பொன்னுற்ற; பூவொத்தப் புனைகின்ருரும்; பூவொற்ற வுளைகின் ருரும்; பூவொத்த வுளைக்கின்ருரும். (6)

1012. பண்ணுள பவளந் தொண்டை
பங்கயம் பூத்த தன்ன
வண்ணவாய்க் குவளை யுண்கண்
மருங்கிலாக் கரும்பி னன்ஞர்
உண்ணிறை கயலை நோக்கி
யோடுநீர்த் தடங்கட் கெல்லாம்
கண்ணுள வாங்கொ லென்று
கணவரை வினவு வாரும்,

பண் உள-இசையின் இனிமையுள்ளதும், பவளம், தொண்டை, பூத்தது பங்கயம் அன்ன-பவளத்தையும், கொவ்வைக் கனியையும், மலர்ந்த தாமரையையும் போன்ற, வண்ணம் வாய்-செந்நிறமுடைய அழகிய வாயையும், குவளை உண்கண்-கருங்குவளை போன்ற, மைதீட் டப்பெற்ற கண்களையும் உடைய, மருங்கு இலா-இடை இல்லாத, (நுண்ணிய இடையையுடைய), கரும்பின் அன்ஞர்-(கணவன் மார்க் குக்) கரும்புபோல இனியரான (சில) மங்கையர், உள் நிறை கயலை நோக்கி-தடாகத்தினுள்ளே நிறைந்திருந்த கயல் மீன்களைக் கண்டு, ஓடும் நீர் தடங்கட்கு எல்லாம்-(கரைமீது வழிந்து)ஓடும் நீரையுடைய தடாகங்களுக்கெல்லாம், கண் உள ஆம் கொல் என்று-பல கண்கள் உள்ளனவோ என்று, கணவரை வினவுவாரும்-தம் கணவன்மாரைக் கேட்பவரும்,

பேசும் சொற்களே இனியவாயிருத்தலும், இசை பாடுதலும் உடைமையின் 'பண்ணுள' என மகளிர் வாயினைச் சிறப்பித்து, அதன்

நிறத்தின் அழகுக்கு மூன்று உவமைகளுங் கூறினர். இடையின் நுண்மைபற்றி 'மருங்கிலா' என்றார்; இடை உண்டென்று வெளிப் படத் தெரியாதது என்றபடி. கரும்பின் அன்னார்; சீவக. 2453. நச். உரை. பார்க்க. 'ஓடு நீர்த்தடம்' என்றது நீர் நிறைந்து, நிற்க இட மின்றி வழிந்தோடும் தன்மையுடைய குளங்கள் என அவற்றின் வளம் குறித்ததாகும்; அன்றி. 'ஓடும் நீர்' என நீரின் இயற்கைபற்றி வந்த அடைமொழியெனக் கொள்ளலும் ஆம். கயல் மீன்கள் மகளிர் கண் களுக்கு ஒப்புமை கூறப்படுவனவாதலால், அவற்றைக் குளங்களின் கண் என்றனர் போலும்.

மருங்கிலாக் கரும்பினன்னார்: 'மருங்கிலா நங்கையும்' 593.

(பி - ம்.) 1. பண்ணுளர்; பண்ணுள்ளார்; பண்ணுறழ்; பண்ணுறு; பவளத் தொண்டை: பூத்த வன்ன; பூத்த தென்ன.
2. வண்ணவாய் குவளை வாட்கண்; வண்ண நாட் குவளைக் கண்கள்; வண்ணவாட் குவளை யொண்கண்: மருங்கிலார்; மருங்குலார்; மருங் கினர். 3. தடங்களெல்லாம். (7)

1013. தேனகு நறவ மாலைச் செறிகுழற் றெய்வ மன்னாள்
தானுடைக் கோல மேனி தடத்திடைத் தோன்ற நோக்கி
நானக நகுகின் றாளிந் நன்னுதல் தோழி யாமென்
றூனமில் முலையி னார முளங்குளிர்ந் துதவு வாளும்,

தேன் நகு நறவம் மாலை-தேனோடு விளங்கும் மணம் பொருந் திய பூமாலை சூடிய, செறி குழல்-அடர்ந்த கூந்தலையுடைய, தெய்வம் அன்னாள்-தெய்வ மங்கை போன்ற ஒரு பெண், தான் உடை(ய) கோலம் மேனி-தனது அழகிய வடிவத்தின் நிழல், தடத்து இடை தோன்ற-தடாகத்தின் நீரிலேகாணப்பட, நோக்கி-அதனைப்பார்த்து, இ நல் நுதல்-இந்த அழகிய நெற்றியுடையவள்,நான் நக நகுகின்றாள்-நான் சிரிக்கும்போது தானும் சிரிக்கிறாள்; (ஆதலால்), தோழி ஆம் என்று-என் தோழியாவாள் என்று சொல்லி, ஊனம் இல் முலையின் ஆரம்-குற்றமற்ற (தன்) தனங்களின்மே லணிந்திருந்த முத்து மாலையை (எடுத்து), உளம் குளிர்ந்து-மனங்குளிர, உதவுவாளும்-(அந்நிழல் வடிவத்துக்குக்) கொடுப்பவளும்,

மனமகிழ்ச்சியால் முக நகைகொண்டு நீரிடை நின்ற மங்கை யொருத்தி, நீரிலே தோன்றிய தன் நிழலை அங்குள்ள மற்றொரு மங்கையெனக் கருதி, நான் நகைக்கும்போது அவளும் நகைக்கின்றா ளாதலால், அவள் என் மனத்துக்கியைந்த தோழியாவாள் எனக் கூறித் தன் முத்துமாலையைக் கழற்றி அந்நிழலுருவுக்கு அளிப்பா ளானாள் என்க.

நன்னுதல் : பண்புத்தொகை யன்மொழி.

(பி - ம்.) 1. தேனுகு நறவமாலை செறி; தேனுறு நறவமாலைச்: தெய்வ மன்னர்.
2. தானுடைக் கனக; தானிடைக்கமல; தடத்திடை தோன்றல்.
3. நானக நகுமென்றுலிந்; யானக நகுகின்றுளிந்; நானக நகுகின்றுளென் நன்னுதற்றேழி.
4. விலையினுரம்; விலையிலாரம்; முலையிலாரம்: உளங்களித்து: உதவு வாரும். (8)

1014. குண்டலந் திருவில் வீசக் குலமணி யார மின்ன
விண்டொடு வரையின் வைகு மென்மயிற் கணங்கள்போலும்
வண்டுளர் கோதை மாதர் மைந்தர்தம் வயிரத் தின்டோள்
தண்டுகள் தழுவு மாசை யாற்கரை சார்கின் றுரும்,

வண்டு உளர் கோதை மாதர்-வண்டுகள் சுழலுதற்கிடமான கூந்தலையுடைய பெண்கள் சிலர், மைந்தர் தம்-(கரையிலிருந்த) தம் கணவருடைய, வயிரம் திண் தோள் தண்டுகள்-வயிரம் பொருந்திய திண்ணிய தண்டாயுதம் போன்ற தோள்களை, தழுவும் ஆசையால்-தழுவிக்கொள்ளும் விருப்பத்தினுல், விண் தொடு வரையின் வைகும்-ஆகாயமளாவிய மலையிலே தங்குகிற, மெல்மயில் கணங்கள் போலும்-மென்மையான மயிற்கூட்டங்களைப் போன்று, குண்டலம் திருவில் வீச-(தம் காதில் உள்ள)குண்டலங்கள் சிறந்த ஒளியை வீசவும், குலம் மணி ஆரம் மின்ன-சிறந்த இரத்தின மாலைகள் பளபளக்கவும், கரை சார்கின்றுரும்-(நீரினின்றும்) கரையேறுபவரும்,

நெடும்போது நீர் விளையாடிக் களித்த மாதர் சிலர், தமக்கு முன்னே கரை சேர்ந்திருந்த தம் கணவன்மாரைச் சென்றடைதற் பொருட்டுக் கரையேறி வந்தனரென்க. மயில் குறிஞ்சி நிலத்துக்கு உரியதாகலின் 'வரையின் வைகும் மயிற் கணங்கள்' என்றுர். அயலில் உள்ளது சந்திரசைலமாதலாலும், இம்மாதர் அங்கே தங்கியிருந்து வந்தவராதலாலும் இவ்வுவமை நயம் ஓர்தற்குரியது.

திருவில்-இந்திரவில் என்றலும் ஆம்; 'திருவிலிட்டுத் திகழ்தரு மேனியள்' மணி. 6: 10-ம் அதன் அடிக்குறிப்பும் பார்க்க. குண்டலந் திருவில் வீச: ஒப்பு. 'குண்டலமொருபுடை குலாவி வில்லிட' (சீவக. 1009.); தோளுக்குத்தண்டு உவமை: 1004.

(பி - ம்.) 1. குண்டலத்திருவில்; குண்டலந்திருவின்.
2. விண்டொடர் மலையின்: கணங்கள்போல.
3. வண்டுளை; வண்டுழல்; வண்டுறை; வண்டுகொள்; வண்டு சூழ்; மைந் தர்கள் வயிரத்.
4. தழுவுமாசை புனற்கரை: தழுவுமாசைப் புனற்கரைச்: சார்குவாரும்; சார்கிலாரும். (9)

1015. அங்கிடை யுற்ற குற்றம் யாவதென் றறித றேற்றும்
செங்கய லனைய நாட்டஞ் சிவப்புறச் சீறிப் போன
மங்கையோர் கமலச்சூழன் மறைந்தனண் மறையமைந்தன்
பங்கய முகமென் றேரா தையுற்றுப் பார்க்கின் றுனும்,

அங்கு-அவ்விடத்து, இடை-விளையாட்டினிடையே, உற்ற குற்றம்-நேர்ந்ததொரு குற்றம், யாவது என்று அறிதல் தேற்றும்-இன்னது என்று தெளிவாக அறியோம்; செம் கயல் அனைய நாட்டம் சிவப்பு உற-செவ்விய கயல் மீன் போன்ற கண்கள் மிகவும் சிவப்பேற, சீறி போன-(தன் தலைவனிடத்தே) கோபங் கொண்டு விலகிச்சென்ற, மங்கை-ஒரு பெண், கமலம் சூழல் மறைந்தனள்-தாமரை மலர்கள் நிறைந்த ஓரிடத்தில் (அவற்றிடையே) மறைந்து கொண்டனள்; மறைய-(அவ்வாறு அவள்) மறையவே, மைந்தன்-அவள் கணவன், பங்கயம் முகம் என்று ஓராது-இது தாமரை, இது (தலைவியின்) முகம் என்று தெளிவுற அறியமாட்டாமல், ஐயுற்று-ஐயங்கொண்டு, பார்க்கின்றானும்-தேடிப் பார்ப்பவனும்,

நீர்விளையாட்டினிடையே, பிறரால் காரணம் இன்னது என்று அறியமுடியாத வகையில் கணவனிடங் குற்றங் கண்டு கோபங் கொண்ட மங்கையொருத்தி, கதுமென அவனைவிட்டு விலகிச்சென்று பல தாமரைப் பூக்கள் நிறைந்தவோரிடத்திலே அவற்றினிடையே மறைந்துகொண்டாளாக, அவள் கணவன் தாமரை மலருக்கும் தன் மனைவியின் முகத்துக்கும் வேற்றுமை காணமாட்டாதவனாய் உழன்றான் என்றவாறு. இடை-காதலரிடையே என்றலும் ஆம்.

'கரும்பு போன்மொழியாளொரு காரிகை வதனம், சுரும்புசூழ் கமலங்களுட் கமலமாய்த் தோன்ற, விரும்பு காதலனையுற்று மெலிந்தனன்' (திருவிளை. தருமிக்கு. 54) என்பது ஈண்டு ஒப்பிடத்தகும்.

(பி - ம்.) 1. உற்ற தன்மை: யாதென: தேற்றூ; தேற்றூச்: தேற்றூன்; தோற்றூ.
3. மறைந்தனன்மறைந்த மன்னன்; மறைந்த மைந்தர்; மறைந்தனண் மறையமாதர்.
4. ஓரானையுற்றுப்; ஓராவுற்றுறப்; உற்றூரையுற்றுப்; பார்க்கின்றூரும்; பார்க்கின்றூனல். (10)

1016. பொற்றொடி தளிர்க்கைச் சங்கம்
வண்டொடு புலம்பி யார்ப்ப
எற்றிநீர் குடையுந் தோறு
மேந்துபே ரல்கு னின்றும்
கற்றைமே கலைக ணீங்கிச்
சீறடி கௌவக் காலிற்
சுற்றிய நாக மென்று
துணுக்கத்தாற் றுவள்கின் றூரும்,

(சில மங்கையர்), தளிர்கை-தளிர் போன்ற (தம்) கைகளில், சங்கம்-சங்கு வளையல்களும், பொன் தொடி-பொன் வளையல்களும், வண்டொடு-பிறவகை வளையல்களும், புலம்பி ஆர்ப்ப-மிக்கு ஒலி செய்ய, நீர் எற்றி குடையும் தோறும்-நீரைக் கைகளால் உந்தி மூழ்

குந்தோறும், ஏந்து பேர் அல்குல் நின்றும்-உயர்ந்த பெரிய நிதம்பங்களினின்றும், கற்றை மேகலைகள் நீங்கி-பலகோவைத் தொகுதியான இடையணிகள் கழன்று, சிறு அடி கௌவ-(தங்கள்) சிற்றடிகளைச் சூழ்ந்துகொள்ள, (அதனை), காலில் சுற்றிய நாகம் என்று-காலிலே சுற்றிய பாம்பென்று கருதி, துணுக்கத்தால் துவள்கின்றாரும்-நடுக்கத்தால் தளர்பவரும்,

'வண்டுணக்கமழும்' (1009) என்பது முதல் இதுகாறும் உள்ள எட்டுப் பாடல்களிலும் 'வீசுவாரும்' என்பது முதலியனவாக வந்த 'உம்' ஈற்றுச் சொற்களைக் கூட்டி, 'ஆயினர்' என முடிபு வருவித்து முடித்துக்கொள்க.

'வண்டொடு' என்பதற்கு 'கூந்தலில் மொய்க்க வரும் வண்டுகளுடன்' என வுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. பொற்றொடித் தளிர்க்கை.......வண்டொடும்.
2. ஏற்றுநீர்: எழுந்து பேரல்குனின்று.
3. அற்றமே கலைகள்: சிறடிக் கதுவக் காலைச்.
4. சுற்றிய தரவமென்னத் துணுக்குற்றுத் துடிக்கின்றாரும்; துடைக்கின்றாரும். (11)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

1017. குடைந்துநீ ராடு மாதர் குழாம்புடை சூழ வாழித்
தடம்புயம்பொலியவாண்டோர்தார்கெழு வேந்தனின்றான்
கடைந்தநா ளமுதி னோடுங் கடலிடை வந்து தோன்றும்
மடந்தையர் சூழ நின்ற மந்தர மலையை யொத்தான்.

நீர் குடைந்து ஆடும் மாதர் குழாம்-நீரிலே துளைந்து விளையாடுகிற பெண்களின் கூட்டம், புடை சூழ-பக்கங்களிலே (தன்னைச்) சூழ்ந்திருக்க, ஆழி தட புயம் பொலிய-தோள்வளை யணிந்த பெரிய தோள்கள் (அழகுற) விளங்க, ஆண்டு நின்றான்-அவர்களிடையே நின்றவனான, தார் கெழு ஓர்வேந்தன்-மாலையணிந்த ஓர்அரசன், கடல் இடை-பாற்கடலிலே, கடைந்த நாள்-(அமுதம் பெற அதனைக்) கடைந்த காலத்தில், அமுதினோடும்வந்து தோன்றும்-அமுதத்துடனே மேலெழுந்து காணப்பெற்ற, மடந்தையர் சூழ-(அரம்பை முதலிய) தேவமாதர்கள் சூழ, நின்ற-(நடுவிலே) ஓங்கி நின்ற, மந்தர மலையை ஒத்தான்-மந்தர பர்வதத்தைப் போன்றிருந்தான்,

தடாகம் பாற்கடலாகவும், அதனில் நீராடிய மங்கையர் தெய்வ மாதராகவும், அவர்களிடையே கம்பீரமாக நின்ற அரசன் மந்தரமலையாகவும் கொள்க. துருவாச முனிவன் சாபத்தால் பாற்கடலிலே புகுந்து மறைந்த தெய்வ மாதர், அக்கடல் கடையப்பட்ட போது மீண்டும் மேலெழுந்து தோன்றினரென்ற வரலாறு சுட்டப்

பெற்றது. நீர்விளையாட்டின் தொடக்கத்தில், மகளிர் நீரினுட் புகுந்தமைக்குத் துருவாச முனிவன் சாபத்தால் இந்திரனுடைய உரிமை மகளிர் பாற்கடலுள் புகுந்தமையை உவமை கூறினவர், இங்கே இவ்வாறு கூறியதன் நயம் குறிப்பிடத் தக்கதாகும்.

ஆழி-வட்டமான பொருள், இங்கே தோள்வளையைக் குறித்தது; ஆழித்தடம்புயம்-ஆஞ்ஞா சக்கரத்தைச் செலுத்தும் கை யெனலுமாம்.

குடைந்து நீராடுதல்: சுந்தர. 659; திருவெம்பாவை. 11.

(பி - ம்.) 1. குடைந்து நின்றாடும்; சூழவார்த்த.
2. தடம்புயப் பெரிய; வலிய: ஆங்கோர்; அங்கோர்.
3. அமிழ்திரைேடும்; அமிழ்திரைேடு; அமிர்திரைேடும்.
4. மடந்தைமார் சூழநின்ற: மந்தரம்போல மாதோ; மந்தரம் போலு மாதோ; மந்தரமலையும் போன்றான்; மந்தரமலையுமொத்தான். (12)

1018. தொடியுலாங் கமலச் செங்கைத் தூநகைத் துவர்த்த [செவ்வாய்க்
கொடியுலா மருங்கு னல்லார் குழாத்தொரு குரிசி னின்றான்
கடியுலாங் கமல வேலிக் கண்ணகன் கான யாற்றுப்
பிடியெலாஞ் சூழ நின்ற பெய்மத யானை யொத்தான்.

தொடி உலாம்-வளைகள் அணிந்த, கமலம் செம் கை-தாமரை மலர் போன்ற செம்மையான கைகளையும், தூநகை-தூய புன்முறுவல் பொருந்திய, துவர்த்த செவ்வாய்-பவளம் போன்ற சிவந்த வாயையும், கொடி உலாம் மருங்குல்-கொடிபோலத் துவளும் இடையையும் உடைய, நல்லார் குழாத்து-மகளிர் கூட்டத்திடையே, நின்றான் ஒரு குரிசில்-நின்றவனான ஒப்பற்ற தலைவனொருவன், கடி உலாம் கமலம் வேலி-நறுமணம் பொருந்திய தாமரைக் கொடிகளை வேலியாகவுடைய, கண் அகல்-இடமகன்ற, கானயாறு-காட்டாற்றிலே, பிடி எலாம் சூழ நின்ற-பல பெண் யானைகள் (தன்னைச்) சூழ்ந்திருக்க (அவற்றிடையே பெருமிதத்தோடு) நின்ற, பெய் மதம் யானை ஒத்தான்-மதம் பொழியும் ஆண் யானையைப் போன்றிருந்தான்.

பல மகளிர் தன்னைச் சூழ நின்ற ஓராடவனது தோற்றத்தை, முன் கவியில் ஒருவகையாகக் கூறியவர், இங்கு வேறொரு வகையில் அதனைக் கூறுகின்றார். கானயாற்றிலே நின்ற யானை போன்றான் என்றதனால், இங்கே குறித்தது ஒரு காட்டாறு அல்லது அதனில் உள்ள மடு எனக் கொள்ளல் தகும்.

துவர்த்த-பவளத்தின் தன்மையைக்கொண்ட. உலாம்-உலாவும்; ஈற்றுயிர்மெய்கெட்டு நின்றது.

(பி - ம்.) 1. கமலம் பூத்த: தூநகை; தூய்நகைத்: துவர்ந்த: அரத்தச்.
2. கொடியுலா மருங்குலார்தம்; மருங்கு நல்லார்; துடியுலா மருங்கி னல்லார்: குழாத்தொடு; குழாத்தொடும்: கொண்டனின்றான்; தோன்ற னின்றான். 3. கானியாற்றுப். (13)

1019. கானமா மயில்க ளெல்லாங் களிகெடக் களிக்குஞ் சாயல்
சோனைவார் குழலி னார்தங் குழாத்தொரு தோன்றனின்றான்
வானயா றதனை நண்ணி வயின்வயின் வயங்கித்தோன்றும்
மீனெலாஞ் சூழ நின்ற விரிகதிர்த் திங்க ளொத்தான்.

கானம் மா மயில்கள் எல்லாம்-காட்டில் வாழும் சிறந்த மயில்களெல்லாம், களி கெட-தருக்கு ஒழியுமாறு, களிக்கும்-செருக்குதற்குக் காரணமான, சாயல்-அழகினையும், சோனை வார் குழலினார்-காளமேகம் போன்ற நீண்ட கூந்தலையுமுடைய மகளிரின், குழாத்து-கூட்டத்தினிடையே, நின்றான் ஒரு தோன்றல்-நின்றவனான ஓர் அரசன், வயின் வயின்-(ஆகாயத்திலே) பலவிடங்களிலும், வயங்கி தோன்றும்-விளங்கத் தோன்றுகிற, மீன் எலாம் சூழ-நட்சத்திரங்களெல்லாம் (தன்னைச்) சூழ்ந்திருக்க, வானம் யாறு அதனை நண்ணி நின்ற-ஆகாய கங்கையை அணுகி (அதில்) நின்றுகொண்டிருந்த, விரி கதிர் திங்கள் ஒத்தான்-பரந்த கிரணங்களையுடைய சந்திரனைப் போன்றிருந்தான்.

முன்னிரண்டு பாடல்கள்போல, இப்பாடலிலும் ஓராண்மகனை மற்றொரு வகையாற் சிறப்பிக்கின்ற ஆசிரியர், மகளிரை நட்சத்திரங்களாகவும் அவர்களிடையே நின்றவனைச் சந்திரனாகவும் கூறுகின்றார். மயிலினும் சாயல் மேம்பாடும், நட்சத்திரங்கள் போன்ற மேனியொளியும் உடையவரென்று மகளிரை உயர்த்துக் கூறி, நட்சத்திரங்கள் என்றதற்கேற்பச் 'சந்திரன்' என்று அரசனையும் குறிக்கின்றார். மகளிர் பலவிடங்களினின்றும் வந்த பலவகையினராதலின், 'வயின் வயின் விளங்கித் தோன்றும் மீனெலாம் சூழ' என்றது பொருத்தமுடையதாகும்.

சோனை-விடாமழை; இங்கே அதற்குக் காரணமான மேகத்திற்காயிற்று; 'சோனைவார்குழ லரக்கியர்' (சுந்தர. 121) என்பதும் காண்க.

'மீனெலாஞ்சூழ நின்ற விரிகதிர்த் திங்கள்' ஒப்பு: 'பன்மீனடுவட் பான்மதிபோல,இன்னகை யாயமொடிருந்தோற் குறுகி' (சிறுபாண். 219-20); 'வயின்வயின் வயங்கித் தோன்றும்': 'வாடல நறவருந்து வயின்வயின் வயங்கு மாதோ' 930.

(பி - ம்.) 1. கானமா மயில்களேபோற் கவின்பெறக்காணுஞ்.
2. குழாத்தொடு; குழாத்தொடுந்; குழாத்திலோர்.
3. வானவாறதனை: வயங்கத்; வைகித்; விளங்கித். (14)

1020. மேவலாந் தகைமைத் தல்லால்
வேழவிற் றடக்கை வீரற்
கேவெலாங் காட்டு கின்ற
விணைநெடுங் கண்ணொ ரேழை
பாவைமார் பரந்த கோலப்
பண்ணையிற் பொலிவாள் வண்ணப்
பூவெலா மலர்ந்த பொய்கைத்
தாமரை பொலிவ தொத்தாள்.

மேவல் ஆம் தகைமைத்து அல்லால்-(யாவரும்) விரும்புதற்குரியதன்மை யுடைமையல்லாமலும், வேழம் வில் தடக்கை வீரற்கு-கரும்புவில் தாங்கிய பெரிய கைகளையுடைய வீரனான மாரனுக்குரிய, ஏ எல்லாம் காட்டுகின்ற-ஐந்தம்புகளின் தன்மைகளையும் ஒருங்கே (தாமே)காட்டவல்ல, இணை நெடு கண் ஓர்ஏழை-ஒன்றற்கொன்று ஒப்பாகியபெரிய கண்களையுடையாளொரு பெண்ணானவள், பாவைமார் பரந்த-மகளிர் பலர் பரந்துநின்ற, கோலம் பண்ணையில்-அழகிய கூட்டத்திலே, பொலிவாள்-(மேம்பட்டு) விளங்குபவளாய், வண்ணம் பூ எல்லாம் மலர்ந்த பொய்கை-அழகிய நீர்ப்பூக்களெல்லாம் மலர்ந்துள்ளதொரு தடாகத்திலே, தாமரை பொலிவது ஒத்தாள்-(உயர்ந்த) தாமரை மலரொன்று சிறப்புற விளங்குவதையொத்திருந்தாள்.

இதுமுதல் மூன்று பாடல்களால், பெண்களுள் மேம்பட்டு விளங்கிய மூவரைச் சிறப்பிக்கின்றார். இங்கே மகளிர் கூட்டத்தைப் பலவகை நீர்ப்பூக்கள் மலர்ந்த பொய்கையாகவும், அதனிடையே தனிச்சிறப்போடு விளங்கிய ஒரு பெண்ணை அவ்வாறு விளங்கும் ஒரு தாமரைப் பூவாகவும் வைத்துக் கூறியுள்ளார். 'நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணவு நீக்கும் அசோகு-வனத்திலுறு,முல்லை கிடைகாட்டும் மாதே முழுநீலம், கொல்லும் மதன் அம்பின் குணம்' என்பதனால், மன்மதனுடைய ஐந்துமலரம்புகளும் அவற்றின் செயல்களும் பெறப்படும்; இச்செயல்களை யெல்லாம் அவள் கண்களே செய்யவல்லன எனக் கண்களைச் சிறப்பித்தார். மன்மதனை வீரன் என்றது, தான் உருவிலியாகவும், வலிமையற்ற கரும்பையும் மலர்களையுங்கொண்டே எத்தகைய வீரரையும் காமவசப்பட்டுக் கலங்கச் செய்யும் திறமையாலும், உருவுடையவனா யிருந்தபோது ஈசனையே கலக்குறுத்தி நெற்றிக் கண்ணைத் திறக்கச் செய்ததனாலும் என்க. அப்பெண்ணின் கண்கள் தமக்குத் தாமே இணையன்றிப் பிறிதோர் உவமை கூறுதற்கில்லாத பெருமை யுடையவை என்பார். 'இணை நெடுங்கண் என்றார். இவ்வாறே பிராட்டியின் கண்களைக் கூறுவதும் (சுந்தர. 335) காண்க.

தகைமைத்து: பன்மையில் ஒருமை வந்த வழுவமைதி. கண்: சாதியொருமை.

பொய்கைத் தாமரை பொலிவதொத்தாள்: ஒப்பு. 'குளனணி தாமரைக் கொழுமலர் நாப்பண், ஒருதனி யோங்கிய திருமலர் போன்று' (மணி. 15: 75-6).

(ப - ம்.) 1. மேவலார் தகைமைத்தல்லா; தகைமைத்தம்மா; தகைமைத்தாய: வேள்வியிற்றடக்கை வீரத்து; வேள்விறற் றடக்கை வீரற்கு.
2. ஏவலாங் காட்டுகின்ற வினைநெடுங்: கண்ணுரேமழை; கண்ணேரேமழை.
3. பயந்தகோலப்; பயின்றகோலப் : பண்ணையுட் பொலிவாள் பண்ணைப்.
4. பூவெலா மார்ந்த பொய்கை தாமரை; பொய்கைத் தாமரைப்; பொலிவ போன்ருள்; பொலிந்த தொத்தாள். (15)

1021. மிடலுடைக் கொடிய வேலே யென்னவாண் மிளிர்வ [வென்னச்
சுடர்முகத் துலவு கண்ணு டோகையர் சூழ நின்ருள்
மடலுடைப் போது காட்டும் வளர்கொடி பலவுஞ் சூழக்
கடலிடைத் தோன்று மென்பூங் கற்பகவல்லி யொத்தாள்.

மிடல் உடை(ய)-வலிமையுடைய,கொடியவேலே என்ன-கொடுமையான வேல்களே (இவை) என்னுமாறும், மிளிர்வ வாள் என்ன-பிறழும் வாட்படைகள் என்னுமாறும், சுடர் முகத்து உலவு கண்ணுள்-ஒளிவீசும் முகத்திலே பிறழ்கின்ற கண்களையுடைய ஒரு தலைவி, தோகையர் சூழ நின்ருள்-மயில்போலும் சாயலுடைய தோழிமார் பலர்(தன்னைச்)சூழும்படி விளங்கி நின்றவள், மடல் உடை(ய)போது காட்டும்-(வளமான) இதழ்களையுடைய பல பூக்களை உண்டாக்குகின்ற, வளர்கொடி பலவும் சூழ-வளருந்தன்மையுள்ள பல கொடிகள் தன்னைச் சூழ்ந்திருக்குமாறு, கடல் இடை தோன்றும்-திருப்பாற்கடலிலே உண்டான, மென்பூ-மெல்லிய பூக்களையுடைய, கற்பக வல்லி ஒத்தாள்-(கற்பக தருவிலே படர்வதாகிய) காமவல்லி போன்றிருந்தாள்.

இங்கே, தலைவியைச் சூழ நின்ற பல பெண்களைப் பலவகைக் கொடிகளாகவும், தலைவியைக் காமவல்லியாகவும் உருவகித்துள்ளார். காமவல்லி பாற்கடலிலே தோன்றியது; அது தேவருலகத்துக் கற்பக தருவிலே படர்தற்குரியதாகலின் 'கற்பகவல்லி' எனவுங் கூறப்படும். பல கொடிகள் தன்னைச் சூழத் தோன்றிய கற்பகவல்லி யென்றது இல்பொருளுவமை. கண்களுக்கு வேல், வாள் ஆகிய இரண்டினையும் உவமை கூறினமையின், ஆடவர் நெஞ்சிற் சென்று பாயும் தன்மையில் வேலாகவும், மிளிர்ந்து பிறழுந் தன்மையில் வாளாகவுங் கொள்க.

(பி - ம்.) 1. கொடிய வேலோ: கொடியவேலின்: என்னலாய்; மின்னலாய்; மின்னின; மீனமோ: மிளிர்வவன்ன; மிளிர்வதென்னச்,
2. முகத்துலாவு; முகத்துலாவும்: கண்ணுர்: நின்ருர்.
3. பலவுஞ் சூழ்ந்த.
4. மென்பூக் கற்பகத் தருவையொத்தாள்; ஒத்தான். (10)

1022. தேரிடைக் கொண்ட வல்கு
றெங்கிடைக் கொண்ட கொங்கை
ஆரிடைச் சென்றுங் கொள்ள
வொண்கிலா வழகு கொண்டாள்
வாரிடைத் தனமீ தாட
மூழ்கினுள் வதன மைதீர்
நீரிடைத் தோன்றுந் திங்க
ணிழலெனப் பொலிந்த தன்றே.

தேர் இடை கொண்ட அல்குல்-தேர்த்தட்டினிடமிருந்து (வடிவழகு) பெற்றுக்கொண்ட நிதம்பங்களையும், தெங்கு இடை கொண்ட கொங்கை-தெங்கின் இளநீரிடமிருந்து (வடிவழகும் திரட்சியும்) பெற்றுக்கொண்ட தனங்களையும் (உடையவளாய்), ஆர் இடை சென்றும்-வேறு எவரிடத்திலே சென்ருலும், கொள்ள ஒண்கிலா-கண்டுகொள்ள வியலாத, அழகு கொண்டாள்-அழகைப் பெற்றுள்ள ஒருத்தி, வார் இடை தனம்-கச்சினுட்பட்ட (தன்) கொங்கைகள், மீதாட-வெளித்தோன்ற, மூழ்கினுள்-நீரில் மூழ்கினவளுடைய, வதனம்-முகமானது, நீர் இடை தோன்றும்-நீரினுள்ளே காணப்படுகிற, மைதீர் திங்கள் நிழல் என-களங்கமற்ற சந்திரமண்டலத்தின் மாற்றுரு (பிரதிபிம்பம்) என்னும்படி, பொலிந்தது-விளங்கிற்று. அன்று, ஏ: அசை.

சில உறுப்புக்களுக்கு உவமை கூறலாமாயினும், அழகுக்கு இணை வேறில்லாத தனிச்சிறப்புடையவள் இங்குக் கூறிய மங்கை என்பது கருத்து. மகளிர் முகத்தைக் களங்கமில்லாத மதியெனல் கவிமரபாதலின், மைதீர் திங்கள் எனக்கூட்டியுரைக்கப்பெற்றது; மைதீர் என்பதனை நீருக்கே அடையாக்கிக்கூறுதலும் ஆம். 'தேரிடை கொண்ட... தெங்கிடை கொண்ட' என்ற பாடம் இன்னும் பொருட் சிறப்புடையதாகும்.

அல்குலுக்குத் தேர்த்தட்டு: கிட்கிந்தா. *756*; சீவக. *173*. 'தெங்கிடைக் கொண்ட கொங்கை' ஒப்பு. *982* 'மின் வயின் மருங்குல் கொண்டாள் வேய்வயின் மென்றேள் கொண்டாள்' (ஆரணிய. *620*) என்பது, முதலடியோடு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. தேரிடை கொண்ட; தேருடைக் கொண்ட: தெங்கிடை கொண்ட; தெங்குடைக் கொண்ட.

2. சென்றுந் தேடற்கனுகுரு; சென்றுங்கொள்ளவொன்றிலா: அழகுங் கொண்டாள்; அழகு கொண்டார்.
3. வாருடைத் தனமீதாட: வாருடைத்தெனமீதாட; வார்குழல் தேன் மீதாட: முழுகினள்; முழுகினுள்; முழ்கினர்: வதனம்வாரி. (17)

நீர் தன் நிலைகடந்து பரவுதல்

(வேறு)

1023. மலைக டந்த புயங்கண் மடந்தைமார்
கலைக டந்தக லல்குல் கடம்படு
முலைக டந்தமின் முந்தி நெருங்கலால்
நிலைக டந்து பரந்தது நீத்தமே.

மலை கடந்த புயங்கள்-(வலிமையாலும் தோற்றத்தாலும்)மலையையும்வென்ற (ஆடவருடைய) தோள்களும், மடந்தையர்-பெண்களின்,கலை கடந்து அகல் அல்குல்-ஆடையை மீறிப் பரந்து நிற்கும் நிதம்பங்களும், கடம் படு முலைகள்-குடம்போன்ற தனங்களும், தம் தம்மில்-தமக்குள்ளே, முந்தி-ஒன்றுக்கொன்று முந்திக்கொண்டு, நெருங்கலால்-நெருங்கியதனுல், நீத்தம்-நீர்நிலைகளில் உள்ள நீர், நிலை கடந்து பரந்தது-தன் நிலையைக் கடந்து பரவிச் செல்வதாயிற்று.

மக்கள் திரளாக இறங்கி நீராடுதலாலேயே நிலைகடக்கத் தக்க நீரானது, அதற்கு, மேலும் துணை செய்யத்தக்க இங்குக் கூறிய உடலுறுப்புக்களால் பின்னும் மிகுவதாயிற்றென்க. திரட்சியுடையன வாய்த் தோற்றதில் மிக்குக் காண்பனவாகலின் இவ்வுறுப்புக்களை யெடுத்துக் கூறினுர். மலை கடந்த என்றதனுலும், மகளிருடையன தனியே கூறுதலாலும் புயங்கள் ஆடவருடையன என்பட்டது. மலைகள் தந்த எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஆம். நீத்தம்-வெள்ளம்; இங்கே நீர் என்ற அளவில் நின்றது. இவ்வுறுப்புக்களின் பரிசத்தால் ஆடவர்க்கும் மகளிர்க்கும் இன்ப வெள்ளம் நிலை கடந்ததென்ற குறிப்பும் இங்கே உள்ளமை காண்க். கடம்-குடம்; வடசொல்.

(பி - ம்.) 1. மலைகிடந்த: புயங்கொள்: மடந்தையர்.
2. கலைகடந்தன; கலைகிடந்தகல்; அலைகடந்தகல்: அல்குல்கடாம்படா: அல்குற் கடம்படு: அல்குல்கடாம்பணை.
3. தந்தம்மின்: நெருக்கலால்; நெருங்கலான்.
4. பரந்தன; படர்ந்தது. (18)

பொய்கை மகளிர்க்குக் கொழுநர் போன்றமை

1024. செய்ய வாய்வெளுப் பக்கண் சிவப்புற
மெய்ய ராக மழியத் துகினெகத்
தொய்யின் மாமுலை மங்கையர் தோய்தலால்
பொய்கை காதற் கொழுநரைப் போன்றதே.

தொய்யில் மா முலை மங்கையர்-தொய்யில் எழுதப்பெற்ற பெரிய தனங்களையுடைய பெண்கள், செய்ய வாய் வெளுப்ப-(இயல்பிலே) சிவப்பான (தம்) வாய்கள் வெளுப்படையவும், கண் சிவப்பு உற-கண்கள் செந்நிறமடையவும், மெய் அராகம் அழிய-உடம்பிலே பூசிய கலவைப் பூச்சு அழியவும், துகில் நெக - ஆடை தளரவும், தோய்தலால்-(நீரில்) மூழ்குதலால், பொய்கை-அத்தடாகமானது, காதல் கொழுநரை போன்றது-அவர்களன்புக்குரிய கணவன்மாரை (இவ்வகையில்) ஒத்திருந்தது.

தோய்தல்-மூழ்குதல்,கூடுதல் என்ற இருபொருள்பட நின்றது. மங்கையர் தம் கணவன்மாரைக் கூடுங்காலத்தும் வாய்வெளுத்தல் முதலியன நிகழ்தலின் பொய்கை கொழுநரைப் போன்றது என்றார். மெய்யராகம்-அங்கராகம் என்னும் வடசொல்லின் பொருள் கொண்டது. அங்கராகம்-சந்தனம், திருச்சிற். *194*. தொய்யில்-செம்பஞ்சுக் குழம்பு முதலியவற்றால் எழுதும் வரிக்கோலம்;*1175*;'உதுக்காண் நம் தொய்யில் பொறித்தவழி' (கலி. *144*); இப்பாடலோடு ஒப்பு நோக்கத்தக்கன: *1062*; திருச்சிற். *70*.

(பி - ம்.) 1. விளர்ப்பக்கண்: செய்ய வாயவெண் பற்கள் சிவந்துற.
2. நெய்யராக மழியத்; துய்ய காமம் விளையத்; வெய்யகாமம் விளையத்: துகி னெகிழ்த்து; துகினெகிழ்ந்து.
3. தொய்யன் மாமுலை: தோயலால்.
4. கொழுநரும்; கொழுநனும்: போன்றதால்; போன்றவே. (19)

### பொய்கையில் சேர்க்கையாலான சிறப்பு

1025. ஆன தூயவ ரோடுட னாடினார்
ஞான நீரவ ராகுவர் நன்றரோ
தேனு நாவியுந் தேக்ககி லாவியும்
மீனு நாறின வேறினி வேண்டுமோ.

ஆன தூயவரோடு-தூய அறிவுடைய ஞானியரோடு, உடன் ஆடினார்-உடனிருந்து பழகிய (அறிவிற் குறைந்த) மக்களும், நன்று ஞான நீரவர் ஆகுவர்-மிகவும் அறிவு நிரம்பிய தன்மையுடையவராவர்; (இவ்வுண்மைக்கியைய), மீனும்-(பொய்கையில்உள்ள) மீன்களுங்கூட, தேனும்-தேனின் மணமும், நாவியும்-கத்தூரி மணமும், தேக்கு அகில் ஆவியும்-(மகளிர் கூந்தலில்) நிறைத்த அகிற் புகையின் மணமும், நாறின-மணப்பனவாயின; இனி-இதனினும் மேலாக,வேறு வேண்டுமோ-வேறு எடுத்துக்காட்டு வேண்டுமோ? (வேண்டா என்றபடி). அரோ: அசை.

மகளிரும் ஆடவரும் நீராடிய பொய்கையிலிருந்த புலால் நாற்றமுடைய மீன்களும், அவர்களிடமிருந்த நறுமணப் பொருள்களின் சேர்க்கையால் நறுமணம் கமழ்வனவாயின என்ற சிறப்புப்

பொருளை, பேரறிவுந் தூய்மையுமுடைய பெரியாரோடு பழகிய சிறியாரும் நல்லறிவு பெறுவர் என்ற பொதுப் பொருளாலே துணிதலால், இது வேற்றுப்பொருள்வைப்பணியாம்.

ஆடுதல்: இங்கே பழகுதல். அகில் ஆவி-அகிற்புகை. தேக்ககிலாவி: வினைத்தொகை; இவ்வாறன்றி, தேக்கு, அகில் ஆகியவற்றின் புகையெனப் பொருள் கோடலுமொன்று. மீனும்: உம்மை இழிவு சிறப்பு.

மு. ஒப்பிடுக. *897: 1202*; நாலடி. *139*.

(பி - ம்.) 1. தூயவரோர்டினி தாடினால்; தூயவரோவினி தாடினால்; தூய்புனலாடிய மாதரார்.
2. ஆன நீரவர்; ஆகுதனன்றரோ; ஆகுக நன்றரோ; ஏனையாரென எண்ணுவ வெங்ஙனம்; எண்ணுவதெங்ஙனம். 3. தேனினாவியும்.
4. மீனினுறின.

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை. (20)

1026. மிக்க வேந்தர்தம் மெய்யழி சாந்தொடும்
புக்க மங்கையர் குங்குமம் போர்த்தலால்
ஒக்க நீல முகிற்றலை யோடிய
செக்கர் வானக மொத்ததத் தீம்புனல்.

*மிக்க வேந்தர்தம்*-(நீர் விளையாடிய) பெருமை மிக்க அரசர் முதலியோருடைய, *மெய்அழி சாந்தொடும்*-உடம்பினின்றும் அழிந்து கரைந்த செஞ்சந்தனக் குழம்போடு, *புக்க*-(அவ்வாறு அழிந்து) சேர்ந்த, *மங்கையர் குங்குமம்*-பெண்களின் (உடம்பிலே பூசிய) குங்குமச் சேறும், *ஒக்க போர்த்தலால்*-(நீர்ப்பரப்பினை) ஒருங்கே மூடிக் கொண்டதனால், *அ தீம் புனல்*-அந்த இனிய நீர்ப்பரப்பானது, *நீலம் முகில் தலை ஓடிய*-கருமேகத்தின் மீது பரவிய, *செக்கர் வானகம் ஒத்தது*-செவ்வானத்தைப் போன்றிருந்தது.

தெளிந்து கருநிறமாகத் தோன்றும் நீர்ப்பரப்பு, மேகத்திரளைப் போன்றிருக்க, அதன்மீது செந்நிறமுடைய சந்தனக் குழம்பும் குங்குமச் சேறும் படிந்த தோற்றம், மேகத்தின் மீது பரவிய செவ்வானம் போன்றிருந்தது என்றவாறு; தற்குறிப்பேற்ற உவமையணி. புக்க என்பதனை வேந்தர், மங்கையர் என்றவற்றோடு கூட்டி, நீர்விளையாடப் புகுந்த வேந்தரும் மங்கையருமாகியோருடைய என்றுரைப்பினும் பொருந்தும்.

(பி - ம்.) 1. மெய்யணி; மெய்வழி; மெய்வழிச்.
2. குங்குமம் போர்த்ததால்: போதலால்; பூத்தலால்.
3. முகிற்றலை ஓடின; முகிற்குல மொட்டிய: துகிற்றலையோடிய.
4. வானமுமொத்தது; வானகம் போன்றது; மேகமுமொத்தது. (21)

### மகளிரின் இயற்கைத் தோற்றம்

1027. காக துண்ட நறுங்கல வைக்களி
ஆக முண்ட தடங்கலு நீங்கலால்
பாக டர்ந்த பனிமொழி வாய்ச்சியர்
வேக டஞ்செய் மணியென மின்னினர்.

ஆகம் உண்டது-உடம்பிலே பூசப்பெற்றதான, காகதுண்டம்-அகில் தேய்வை (கலந்த), நறு கலவை களி-மணம்மிக்க கலவைச் சந்தனச் சேறு, அடங்கலும் நீங்கலால்-(நீர்விளையாட்டினால்) முற்றிலும் அழிந்து போனதனால், பாகு அடர்ந்த-பாகின் இனிமை செறிந்த, பனி மொழி வாய்ச்சியர்-குளிர்ந்த சொற்களைப் பேசும் வாயுடைய மகளிரெல்லாம், வேகடம் செய் மணி என-சாணைபிடித்த இரத்தினங்கள் போல, மின்னினர்-ஒளியுடன் விளங்கினர்கள்.

இதனால், மகளிரின் இயற்கையான மேனியொளி சிறப்பிக்கப் பெற்றது.

காகதுண்டம்-அகில்; வடசொல்; 'ஏந்தெழிற் காகதுண்டம்' (சூளா. சீய. 105); வேகடஞ்செய் மணி: மணியினை வேகடம் வகுக்கு மாறுபோல் (அயோத். 127); மகளிர்க்கு மணி: சீவக. 623.

(பி - ம்.) 1. கலவைக்கனி. 2. நீங்கவிற்.
3. பாகடைந்த; பாகடர்த்த: பனிக்கனி.
4. மணியென விம்மினர்; மணியின் விளங்கினர். (22)

### ஒரு மெல்லியலாள் சினங்கொண்டமை

1028. பாய ரித்திற லான்பசுஞ் சாந்தினால்
தூய பொற்புயத் துப்பொதி தூக்குறி
மீய ரித்து விளக்கவொர் மெல்லியல்
சேய ரிக்கருங் கண்கள் சிவந்தவே.

பாய் அரி திறலான்-பாயுஞ் சிங்கம் போன்ற வலிமையுடைய தன் தலைவனுடைய, தூய பொன் புயத்து-தூய பொன்னணிகள் பூண்ட தோள்களிலே, பசுமை சாந்தினால் பொதி தூ குறி-ஈரமான சந்தனக் குழம்பினாலே (தான்) எழுதி நிறைத்த தூய்மையான வரிக்கோலத்தை, மீ அரித்து விளக்க-(நீரானது) மேலே பட்டு அரித்துக் கழுவிவிட, ஓர் மெல் இயல்-(அதனைக் கண்ட அவன் காதலியான) ஒரு மங்கையின், சேய் அரி கரு கண்கள்-செவ்வரி பரந்த கரிய கண்கள், சிவந்த-(சினத்தினால்) சிவப்பேறின.

ஒரு மங்கை, மிக்க அன்புடனே தன் தலைவன் தோள்களில் சந்தனக் குழம்பால் எழுதிய வரிக்கோலத்தை, அவன் பாதுகாத்துக் கொள்ளாமல் அழிய விட்டதனால், அம்மங்கை சினங்கொண்டாள் என்றவாறு. தலைவன் வேறொருத்தியைக் கூடியதனால் அக்கோலம்

அழிவுற்றதெனக் கருதி அவள் ஊடிச் சினந்தனள் எனவுங் கூறுவர். 'குறி' என்றது 'வரிக்கோலத்தை. பசுமை, ஈரம் உணர்த்தியது.

மெல்லியல்: அன்மொழித் தொகை. ஏ-ஈற்றசை. ஈற்றடியில் முரண்தொடை காண்க.

(பி - ம்.) 1. பசுஞ்சாந்தினில்; பகிர்சாந்திறைல்.
2. புயத்திற்பொலி: தூய்க்குறி; தூய்க்குறீஇ.
3. மீவரித்து; விளர்க்கவொர்; வெளுக்கவொர்; வெளுப்பவொர்; விளங்க வொர். 4. கடைக்கண்கள்; சிவந்ததே. (23)

### பொய்கை நீர் சூடுகொள்ளல்

1029. கதம்ப நாள்விரை கள்ளவிழ் தாதொடும்
ததும்பு பூந்திரைத் தண்புனல் சுட்டதால்
நிதம்ப பாரத்தொர் நேரிழை காமத்தால்
வெதும்பு வாளுடல் வெப்பம் வெதுப்பவே.

காமத்தால் வெதும்புவாள்-காமத்தீயினுல் கொதிப்புக்கொண்டவளான, நிதம்பம் பாரத்து ஓர் நேர் இழை-நிதம்பச் சுமையைத் தாங்கும் ஒரு பெண்ணினது, உடல் வெப்பம் வெதுப்ப-உடம்பின் கொதிப்பானது சுடுவித்தலால், கதம்பம்-நறுமணப் பொடியும், நாள் விரை-புதிய கலவைச் சாந்தும், கள்-பூந்தேனும், அவிழ் தாதொடும்-(பூக்களினின்றும்) சிந்தும் மகரந்தமும், ததும்பு-நிரம்பிய, பூ திரை-அழகிய அலைகளையுடைய, தண் புனல்-குளிர்ந்த பொய்கை நீர், சுட்டது-சூடேறியதாயிற்று.

ஆல்: வியப்பு உணர்த்தும் இடைச்சொல்.

காம விகாரத்தால் வெதும்புபவளின் உடற்கொதிப்பால், அவர்கள் நீராடிய பொய்கையின் நீர் சூடேறியதென்றது மிகுத்துக் கூறியவாறு. மு. ஒப்பு. நீத்த நீரி னெடியவன் மூழ்கலும், தீத்தகாமத் தெறுகதிர்த் தீயினுல், காய்த்தி ரும்பைக் கருமகக் கம்மியன், தோய்த்த தண்புன லொத்ததத் தோயமே' (கிட்கிந்தா. 37.)

(பி - ம்.) 1. கதம்பெய் நாள்விரைக்; தாதொடு; தாரொடும்.
2. பூத்திரைத்: சாற்றலால். 3. நிதம்பராகத்தொர்.
4. வெப்பம் வெதும்பவே. (24)

### ஓர் ஆடவன் செயல்

1030. தைய லாளையொர் தாரணி தோளினுன்
நெய்கொ ளோதியி னீர்முகந் தெற்றினுன்
செய்ய தாமரைச் செல்வியைத் தீம்புனல்
கையி னுட்டுங் களிற்றர சென்னவே.

செய்ய தாமரை செல்வியை-செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளை, கையின்-தன் துதிக்கையினாலே, தீம்புனல் ஆட்டும்-இனிய நீரை (மொண்டு) நீராட்டுகின்ற, களிறு அரசு என்ன-அரசுவாவைப்போல, ஓர் தார் அணி தோளினன்-பூமாலையணிந்த தோள்களையுடைய ஒரு தலைமகன், தையலாளை-(தன் அன்புக்குரிய) ஒரு பெண்ணை, நெய் கொள் ஓதியின்-புழுகு நெய் பூசப்பெற்ற அவள் கூந்தலிலே, நீர் முகந்து எற்றினன்-(தன் கைகளால்) நீரை அள்ளி வீசினன்.

திருமகளை நீராட்டும் யானையரசு போல, ஓர் ஆடவன், அழகிய மங்கையொருத்தியின் தலையிலே நீரை மொண்டு சொரிந்தான் என்றவாறு. ஆடவனுக்கு அரசுவாவையும் மங்கைக்குத் திருமகளையும் உவமித்தார்; அவன் கைகளுக்கு யானையின் துதிக்கை உவமையென்பதும் பெறப்படும். நீரை அவன் சிவிறியால் (நீர் வீசுங் கருவி) வீசினன் என்றலும் ஆம்.

திருமகளை நீராட்டுதல்: 'வரிநுத லெழில்வேழம் பூநீர் மேற் சொரிதரப், புரிநெகிழ் தாமரை மலரங்கண் வீறெய்தித், திருநயந் திருந்தன்ன' (கலி. 44; 5-7.); இரண்டானை பக்கத்தே நின்று நீரைச் சொரிய, நடுவே தாமரைப் பூவிலே யிருந்த திருமகள்' (சீவக. 2595-ந.)

(பி - ம்.) 1. தையலாரை; தாரணித் தேரினன்.
2. நெய்கொளாலியின்; நெய்கொளாலிய: நீர்முகந் தேற்றினன்; நீர் முகத் தெற்றினன்; நீர்முகந் தூற்றினன்.
3. தெய்வதாமரைச்: தேம்புனல்; தண்புனல்.
4. கையினருங். (25)

### தாமரைமலர்மே லிருந்த அன்னங்கள்

1031. சுளியு மென்னடை தோற்க நடந்தவர்
ஒளிகொள் சீறடி யொத்தன வாமென
விளிவு தோன்ற மிதிப்பன போன்றன
நளின மேறிய நாகிள வன்னமே.

நளினம் ஏறிய-தாமரை மலர்மீது ஏறியமர்ந்திருந்த, நாகு இள அன்னம்-மிக்க இளமையுடைய அன்னப்பறவைகள், சுளியும்-(மகளிரோடு) மாறுபட்டு (நாம்) நடக்கிற, மெல் நடை தோற்க-மெல்லிய நடையும் தோற்றுப்போகும்படி, நடந்தவர்-(மிக அழகாக) நடந்த அம்மகளிருடைய, ஒளி கொள் சிறு அடி ஒத்தன ஆம் என-ஒளிபொருந்திய சிற்றடிகளை (இம்மலர்கள்) ஒத்திருக்கின்றன என்று கருதி, விளிவு தோன்ற-(தம்முடைய) சினம் தோன்றும்படி, மிதிப்பன போன்றன-(அம்மலர்களைத் தம் காலால்) மிதிப்பன போலக் காணப் பட்டன.

அன்னப் பறவைகள், தமதழகிய நடையினும் மேலாக நடக்கின்ற மகளிரிடத்தே பொருமை கொண்டு, அவர்களுக்குத் தீங்கிழைப்பதாயின் அது தம்மால் இயலாதாகலின், அவர்களுடைய சிற்றடியை யொத்த தாமரை மலர்களிடத்தே தம் சினத்தைக் காட்டி, அவைகளைக் காலால் மிதிப்பன போலக் காணப்பட்டன எனப் புனைகின்ருர். தமக்குப் பகையாயினுர் தம்மினும் மிக வலியராய் அவர் மாட்டுத் தாம் செய்யக் கடவதொன்றில்லாதபோது, அவரைச் சார்ந்தோரிடத்துத் தம் சினத்தைக் காட்டித் தீங்கிழைத்தல் உலகவியற்கையாதலின், அன்னங்கள் அவ்வகையிலே அம்மகளிரின் அடியழகைக் கொண்ட தாமரை மலர்களை மிதித்துச் சிதைப்பன போன்றன என்ருர்.

நாகிள: ஒரு பொருட் பன்மொழி.

(பி - ம்.) 1. களியவென்னடை: தொக்க.
2. அளிகொள்: ஒத்ததுவாமென; ஒப்பனவாமென: ஒப்பிவையாமென.
3. விளைவுதோன்ற: போன்றுள; ஏய்ந்தன.
4. நளினமேறின; நளினமேற்றன. (26)

ஆடவர் சிந்தையழிதல்

1032. எரிந்த சிந்தைய ரெத்தனை யென்கெனே
அரிந்த கூருகி ராலழி சாந்துபோய்த்
தெரிந்த கொங்கைகள் செவ்விய நூல்புடை
வரிந்த பொற்கல சங்களை மானவே.

கொங்கைகள்-(சிலபெண்களின்) தனங்கள்,அழி சாந்துபோய்-(நீரினுல்) அழிந்த சந்தனப் பூச்சு முழுதும் நீங்கப்பெற்று, அரிந்த கூர் உகிரால்-(அழகாகச்) சிவப்பெற்ற கூரிய நகக்குறிகளோடு, செவ்விய நூல் புடை வரிந்த-அழகான நூலிழைகள் மேலே சுற்றிய, பொன் கலசங்களை மான-சுவர்ண கும்பங்களைப்போல, தெரிந்த-வெளியே தோன்றின; (அவற்றைக் கண்டு), எரிந்த சிந்தையர்-(காமத்தால்) மனம் வெதும்பிய ஆடவர்கள், எத்தனை என்கென்-எத்தனை பேரென்று கணக்கிட்டுச் சொல்லுவேன்!

ஒ-இரக்கக் குறிப்புணர்த்தியது. ஏ:ஈற்றசை. 'உகிரால்' என்றவிடத்து, ஆலுருபு ஒடுவுருபின் பொருளில் வந்தது; உகிர்-ஆகுபெயர்.

நீர்விளையாட்டினுல், மேலே அப்பிய சந்தனம் நீங்கி ஆடவர் செய்த நகக் குறிகளோடு அழகாக வெளிப்பட்டுத் தோன்றிய (சில மகளிரின்) தனங்கள் பார்வையிற் பட்டபோது, காம விகாரங் கொண்ட ஆடவர் சிலர், அதனுல் நெஞ்சழிவாராயினர் என்றவாறு. தனங்களை வருணித்துள்ள முறை தற்குறிப்பேற்றமாகும்.

சிந்தையர்: இடம் நோக்கி ஆடவரைக் குறித்தது. அரிந்த கூர் உகிர்-மிகவும் நீளமில்லாமலும் முழுதும் மழுங்காமலும் அளவோடு அழகாகச் சீவிய கூரிய நகம். நகக்குறி: யுத்த. 2302-பார்க்க.

(பி - ம்.) 1. எரிந்த சிந்தைகள்.
2. விரிந்த: கூருகிரால்வழி; சாந்தினால்: அரிந்தராவழி சாந்துமனுதி போய்த். 3. செவ்வியை நூலிடை.
4. வரிந்தவங் கலசங்களை; வண்கலசங்களை; பூண்கலசங்களை; மானுமே; மாணவே. (27)

### வேட்கையைக் குறிப்பா லுணர்த்தல்

1033. தாழ நின்ற தகைமலர்க் கையினால்
ஆழி மன்னொரு வன்னுரைத் தானது
வீழி யின்கனி வாயொரு மெல்லியல்
தோழி கண்ணிற் கடைக்கணிற் சொல்லினாள்.

ஆழி மன் ஒருவன்-ஆஞ்ஞாசக்கரத்தையுடைய அரசன் ஒருவன், தாழ நின்ற-(முழங்காலளவும்) தாழும்படி நீண்டிருந்த, தகை மலர் கையினால்-பெருமை பொருந்திய தாமரை மலர்போன்ற (தன்) கைச்சாடையினால், உரைத்தான்-(தன்வேட்கையை ஒருமங்கைக்குக்) குறிப்பித்தான்; அது-அதனை, (அதற்குத் தன் இசைவினை), வீழி இன் கனி வாய் - விழுதியின் இனிய கனி போன்ற வாயுடையவளான, ஒரு மெல்லியல்-ஒரு மங்கை. தோழி கண்ணில்-தன் தோழியின் கண்களுக்கு, கடைகண்ணில் சொல்லினாள்-தன் கடைக்கண் சாடையினால் தெரிவித்தாள்.

நீர்விளையாட்டினிடையே, ஓராடவனும் அவனால் விரும்பப் பெற்ற மங்கை யொருத்தியும் தம் கருத்தை ஒருவர்க்கொருவர் குறிப்பாலே தெரிவித்துக்கொண்டன ரெனக. ஆடவன், குறித்த ஒரு மங்கையைக் கூடவிரும்பி, அவளுக்குத் தன் விருப்பத்தைக் கைச்சாடையினால் தெரிவித்தானாக, அது கண்டு, நாணம் முதலிய மங்கையர்க்குரிய பண்புகள் நிறைந்த அம்மங்கை, தான் நேரே அவனுக்கு உணர்த்தாமல், தன் தோழிவாயிலாகத் தன் இசைவும், கூடுதற்குரிய இடமும், காலமுமாகியவற்றைத் தெரிவித்தாள் என்பது கருத்து. கண்ணாலே பேசும் ஆற்றல் மகளிர்க்குச் சிறந்ததாகலின், ஆடவனது கைக் குறிப்புக்கு உரிய விடையைக் காதலி தன் கடைக்கண்ணால் தோழிக்குணர்த்தி, அவளால் ஆடவனுக்கு உணர்த்துவித்தாள். 'காதன்மை கண்ணுளே யடக்கிக் கண்ணெனுந், தூதினாற் றுணி பொரு ளுணர்த்தி' (சீவக. 1485).

வீழி-ஒருவகை மருந்துச் செடி; இது 'விழுதி' யென்றும் கூறப்படும்; இதன்பழத்தை மகளிர் வாய்க்கு உவமை கூறுவர் கவிஞர்.

கிட்கிந்தா. 30-பார்க்க. மெல்லியல்-மென்மையான சாயலுடைய வள்; பண்புத்தொகை யன்மொழி.

'கையினுன் ஆழிமன் ஞெருவற் குரைத்தான்' என்ற பாடம் இன்னும் பொருள் சிறப்பதாகும்; அதாவது, கையுடையவனுன மன்னன், தன் கருத்தைப் பாங்க ஞெருவனுக்குச் சொல்லி, அவனுலே அம்மங்கைக்கறிவித்தான் என்பதாம்.

(பி - ம்.) 1. ததைமலர்க்; தடமலர்க்: கையினன்; கைகளால்: காழிநின்ற தம் மெய்நிலைக் கண்ணினல்; தாழநின்ற தன் கைநிலை மெய்யினல்; தாழ நின்றதன் மெய்ந்நிழல் கண்ணுற.
2. ஊழிமன் ஞெருவற்கு: உரைத்தாஞெரு.
3. வீழிமென்கவி: வாயிதழ்.
4. கடைக்கண்ணிற்; கடைக்கண்ணுஞ். (28)

நீரில் முழுகுந் தாமரை மலர்கள்

1034. தள்ளி யோடி யலைதடு மாறலால்
தெள்ளு நீரிடை மூழ்குசெந் தாமரை
புள்ளி மானனை யார்முகம் போல்கிலா
துள்ள நாணி யொளிப்பன போன்றவே.

அலை தள்ளி ஓடி-அலைகளால் தள்ளிக்கொண்டுபோகப்பெற்று, தடுமாறலால்-நிலைதடுமாறியதனுல், தெள்ளும் நீர் இடை-தெளிந்த (அப்பொய்கை) நீரினுள்ளே, மூழ்கு-(தலை சாய்ந்து) முழுகுகின்ற, செந்தாமரை-செந்தாமரைப் பூக்கள், புள்ளி மான் அனையார்-புள்ளி மான் போன்ற (நீர்விளையாடும்) மகளிரின், முகம் போல்கிலாது-முகத்துக்குத் தாம் ஒப்பாகாமையால், உள்ளம் நாணி-மனத்தில் நாணங்கொண்டு, ஒளிப்பன போன்றன-(மகளிர் கண்ணிற்படாது) மறைந்து கொள்வனபோலத் தோற்றின.

மிகப் பலர் திரண்டு விளையாடியதனுல் நீரில் அலைகள் மிகுந்து தாமரைப் பூக்களை நிலைகுலையச் செய்ய, அவை தலை சாய்ந்து நீரினுள் முழுகும் தன்மையை, 'மகளிரின் முகப்பொலிவுக்குத்தாம் ஒவ்வாமை பற்றி நாணி நீரினுள் மறைந்தன' எனக் காரணங் கற்பித்துக் கூறலால் இது ஏதுத்தற்குறிப்பேற்றவணியாகும்.

புள்ளி மான்கள் அழகு மிக்கன வாதலின் மகளிர்க்கு உவமை கூறப்படுவதை உலக வழக்கினுள்ளுங் காணலாம்.

(பி - ம்.) 1. ஓடி யலை தடுமாற்றலால்; ஓடித் தலைதடுமாறலால்.
2. தெள்ளு நீரின் முழுகு; தெள்ளி நீரின் முழுகுஞ்.
3. மான்விழியார்.
4. உள்ளினுணி; உள்ளநாடி: போன்றதே; போலுமே. (29)

### நீர்விளையாடினோர் கரையேறிப் புனைந்துகொள்ளல்

1035. இனைய வெய்த விரும்புன லாடிய
வனைக ருங்கழன் மைந்தரு மாதரும்
அனைய நீர்வறி தாகவந் தேறியே
புனைந றுந்துகில் பூணொடுந் தாங்கினார்.

இனைய எய்த-(மேற்கூறிய) இத்தன்மையன பலவும் நிகழுமாறு, இரு புனல் ஆடிய-பெரிய நீர்நிலைகளிலே விளையாடின, வனை கரு கழல் மைந்தரும்-(காலிலே) பூண்ட பெருமையுடைய வீரக்கழலையுடைய ஆடவரும், மாதரும்-மகளிரும், அனைய நீர் வறிது ஆக-அந்த நீர்நிலைகள் வெறிச்சிட, வந்து ஏறி-(நீரினின்றும்) வந்து கரையேறி, புனை நறு துகில்-(தம்மை)அலங்கரித்தற்குரிய நல்ல ஆடைகளை, பூணொடும்-அணிகலன்களுடனே, தாங்கினார்-அணிந்து கொண்டனர்.

நெடுநேரம் நீர்விளையாட்டு நிகழ்த்திய அனைவரும், கரையேறி நல்ல ஆடையணிகளாலே தம்மை அலங்கரித்துக் கொண்டனர் என்க. புனை, நறு என்ற அடைமொழிகளைப் பூணுக்கும் ஒட்டுக. தாங்கினார் என்றது, இயல்பிலே நல்லழகுடையவராயினும் உலகவியல்பையொட்டித் தம்மை அலங்கரித்துக் கொண்டனரென்ற குறிப்பு. இனி, 'நறுந் துகில்' என்பதற்கு, 'வாசனைப் புகையூட்டிய ஆடை' எனப் பொருள் கூறி அதற்கேற்றவாறு மேற்கோள் காட்டினாரும் உளர்; ஆடைக்கு நறும் புகையூட்டுதல்: மதுரைக். 554; பெருங். 1. 54:9-10; சீவக. 71-பார்க்க.

(பி - ம்.) 1. இனையவெய்தி; இனையதெய்த; அரும்புனல்.
2. வனையருங்கழல்; வனைவருங்கழல்: வனையிருங்குழன் மாதருமைந்தரும்.
3. இனையநீர்; வந்தேறினார்: வந்தெய்தினார்.
4. புனையொடுந்துகில்; பூணொடு; பூவொடும். (30)

### நீர்நிலையின் வறிய தோற்றம்

1036. மேவி னார்பிரிந் தாரந்த வீங்குநீர்
தாவு தண்மதி தன்னொடுந் தாரகை
ஓவு வானமு முண்ணிறை தாமரைப்
பூவெ லாங்குடி போனதும் போன்றதே.

மேவினார் பிரிந்தார்-(நீர்நிலையைச்) சேர்ந்திருந்த அனைவரும் அதனை விட்டுச் சென்றார்கள்; (அதனால்), அந்த வீங்கு நீர்-அந்தப் பெரிய நீர் நிலையானது, தாவு தண் மதி தன்னொடும்-தவழ்ந்து செல்லுங் குளிர்ந்த சந்திரனோடு, தாரகை-விண் மீன்களும், ஓவு-அற்றுப் போன, வானமும்-ஆகாயத்தையும், உள் நிறை-தன்னுள் நிறைந்திருந்த, தாமரைப் பூ எல்லாம்-தாமரைப் பூக்கள் முழுதும், குடிபோனதும்-பெயர்ந்து போகப் பெற்றதையும், போன்றது-ஒத்திருந்தது.

நீர்விளையாட்டின் பொருட்டு வந்து திரண்டிருந்த ஆடவரும் மகளிரும் கரையேறிச் சென்றுவிட்டதனுல், நீர்நிலை வறிதாயிற்று என்று முன் கவியிற் குறிப்பித்ததை, இங்கே விரித்து உவமை முகத்தால் விளக்குகின்ருர். ஆடவர் மதிபோலவும், மகளிர் தாரகை போலவும், மகளிரின் முகங்கள் தாமரை போலவும் விளங்க, இவற்ருல் மிக்க அழகு பெற்றிருந்த நீர்நிலை, இப்போது அவர்கள் நீங்கியதனுல். வெறும் வானமும், பூக்களில்லாத பொய்கையும்போல வறிதாயிற்று என்ருர். 'மீனெலாஞ் சூழ நின்ற விரிகதிர்த் திங்களொத்தான்' (1019) என, மகளிர் சூழ நின்ற ஒரு தலைவனைக் கூறியதோடு, மகளிர் ஆயத்திடையே நின்ற வொரு தலைவியை 'வண்ணப் பூவெலாம் மலர்ந்த பொய்கைத் தாமரை பொலிவ தொத்தாள்' (1020) எனவுங் கூறியிருத்தலால், இங்கே அவையனைத்தும் நீங்கப்பெற்று நீர் நிலை வறிதாயிற்றெனத் தொடர்பு படுத்தியவாருகும்.

தாரகை-வடசொற்றிரிபு. குடிபோதல்-நீங்குதல்: 'ஆவி குடி போன அவ்வடிவும்' (சிலப். 20. இறுதி வெண்பா); 'குடியுங் குலமுங் குடிபோகியவா' (கந்தரனு. 19). ஒப்பிடுக: கிட்கிந்தா. 592.

(பி - ம்.) 1. பிரிந்தார்க் கந்த; பிரிந்தாரிந்த.
2. தாவில் நாண்மதி; நாண்மணி; நன்மதி; மாமதி.
3. ஓவும் வானமும்; ஓவில் வானகம்; ஒண்மலர்த்தாமரைப்.
4. குடிப்போனதும்; குடிபோனது; குடிபோனவும்; குடிபோவன; போன்றவே; போலுமே. (31)

ஒரு பிரதியில், நீர்விளையாட்டுப் படலம் இதனேடு முடிவுற, அடுத்ததான 'மானினேக்கியர்' என்ற பாடலோடு உண்டாட்டுப் படலம் தொடங்குகின்றது.

### சூரியாத்தமனம்

1037. மானி னேக்கியர் மைந்தரொ டாடிய
ஆன நீர்விளை யாடலை நோக்கினன்
தானு மன்னது காதலித் தானென
மீன வேலையை வெய்யவ னெய்தினன்.

மானின் நோக்கியர்-மான் போன்ற பார்வையுடைய மகளிர், மைந்தரொடு ஆடிய-ஆடவருடனே கூடி விளையாடிய, ஆன நீர்விளை யாடலை-சிறப்புடையதான நீர்விளையாட்டை, நோக்கினன் வெய்யவன்-பார்த்தவனை சூரியன், தானும் அன்னது காதலித்தான் என-தானும் அந்நீர்விளையாட்டை விரும்பினவன்போல, மீனம் வேலையை எய்தினன்-மீன்கள் மிக்குள்ள மேல்கடலை அடைந்தான். (மறைந்தான் என்றபடி).

இயல்பிலே நிகழ்ந்த சூரியாத்தமனத்துக்கு ஒரு காரணம் கற்பித்துப் புனைந்து கூறினமையின் ஏதுத்தற்குறிபபேற்றம். நீர்விளை யாட்டு முடிவுற்றதும் பொழுதுபட்டது என்பது கூறப்பெற்றது.

(பி - ம்.) 1. மான; மானை: நோக்கியொர்; நோக்கியோர்.
2. நான நீர்விளையாட்டினை. 3. காதலித்தானென.
4. மீன வேலையில். (32)

சில பிரதிகளில் இச்செய்யுளுடன் இப்படலம் முடிவுறுகின்றது.

சந்திரோதயம்

1038. ஆற்ற லின்மையி னுலழிந் தேயுமவ்
வேற்று மன்னவர் மேல்வரும் வேந்தர்போல்
ஏற்று மாதர் முகங்களொ டெங்கணுந்
தோற்ற சந்திரன் மீளவுந் தோற்றினன்.

ஆற்றல் இன்மையினல்-(தம்முடைய பகையரசை எதிர்த்து நின்று போர் செய்யும்) வலிமை தமக்கு இல்லாமையால், அழிந்தேயும்-(முன்பு) தோற்றுப் போயுங்கூட, அவ் வேற்று மன்னவர் மேல்-(தாம் தோல்வியுற்ற) அப்பகையரசர் மேலே, வரும்-(மீண்டும்) எதிர்த்து வருகிற, வேந்தர்போல்-(சில) அரசரைப்போல, எங்கணும்-எல்லாவிடங்களிலும், மாதர் முகங்களொடு ஏற்று-மகளிரின் முகங்களுடனே எதிர்த்து நின்று, தோற்ற சந்திரன்-(முன்பு) தோற்றுப் போன சந்திரனனவன், மீளவும் தோற்றினன்-திரும்பவும் வந்து உதித்தான்.

சந்திரன் மறைந்ததை, மகளிர் முகங்களுக்கு முன்னே வீறு கொண்டு நிற்கமாட்டாது தோற்று மறைந்தான் எனவும், அவன் மீண்டும் உதயமானதை, 'ஆசை வெட்கமறியாது' என்றபடி தன் தோல்வியை நினையாமல் மீண்டும் மகளிர் முகங்களை யெதிர்த்து நிற்க வந்தான் எனவும் கற்பித்து, இச்செயலுக்கு, தோல்வியுற்ற அரசர் மீளவும் அத்தோற்பித்த அரசரை யெதிர்த்து வருதலை ஒப்புக் கூறினர். இவ்வொப்புமையின் நயம் ஓர்க.

(பி - ம்.) 1. அழிந்தேயுந்தம்; அழிந்தேகியும்; அழிந்தேகியே.
2. மன்னர்தம் மேல்வரு.
3. எற்ற மாதர்; முகங்கள் கண்டெங்கணும்; முகத்துக்கிணைபெறத்; முகத்துக்கிணையெனத்; முகங்களொ டிணைபெறத்.
4. மீளவுந் தோன்றினன். (33)

நீர்விளையாட்டுப் படலம் முற்றும்.

# 17. உண்டாட்டுப் படலம்

உண்டாட்டுப் படலம்: கள்ளுண்டு களித்து இன்புறுதலேக் கூறும் படலம் என விரியும்.

இப்படலமும், காவியச் சுவைக்கேற்பக் கம்பநாடர் தாமே கற்பித்துக் கொண்டதாகும், பூக்கொய்தும், நீர்விளையாடியும் பகற் பொழுதைக் கழித்த ஆடவரும் மகளிரும், அந்திமாலையிலே தம்மை ஆடையணிகளால் நன்கு அலங்கரித்துக்கொண்டும், கள்ளுண்டும், இராப்பொழுதிலே களிமயக்கத்தோடு பலவகையாகப் போகம் நுகர்ந்தும் களித்துக் கழித்தமை இப்படலத்துட் பலபடப் புனைந்து கூறப்படும். இவற்றினிடையே அரிய நீதிகள் சிலவும் பெறவைத் துள்ளமை காண்பார்க்கு அங்கங்கே புலப்படும். ஆட்டு: இங்கே அநுபவித்தல்.

### நிலவின் வருணனை

(வேறு)

1039. வெண்ணிற நறவுபாய் வெள்ள மென்னவும்
பண்ணிறஞ் செறிந்திடை பரந்த தென்னவும்
உண்ணிறை காமமிக் கொழுகிற் றென்னவும்
தண்ணிறை நெடுநிலாத் தழைத்த தெங்குமே.

தண் நிறை நெடு நிலா-குளிர்ச்சி நிறைந்த பெரிய நிலவொளி யானது, வெள்நிறம் நறவு பாய் வெள்ளம் என்னவும்-வெள்ளைநிற மான கள் பெருகிப் பாயும் வெள்ளம் என்னும்படியும், பண்-இசையானது, நிறம் செறிந்து-(ஓர்) உருவங்கொண்டு, இடை-பல விடங்களிலும், பரந்தது என்னவும்-பரவியுள்ளது என்னும்படியும், உள் நிறை காமம்-அனைவருள்ளத்தும் நிறைந்துள்ள காமவேட்கை, மிக்கு ஒழுகிற்று என்னவும்-நிரம்பி வழிந்தது என்னும்படியும், எங்கும் தழைத்தது-எல்லாவிடங்களிலும் பரவியது.

இதுமுதல் நான்கு பாடல்கள் நிலவின் வருவணனை கூறுவன.

கள்ளும், இசையும் காமவின்பத்தை மிகுவித்தலின், கூடி நுகர் வார்க்கு இன்பந்தரும் நிலவை அவற்றின் வடிவாக்கியும், அக்காம வின்பமே பெருகிப் பரவியது போன்றதெனவுங் கூறினர். அறுபத் தேழு பாடல்கள் கொண்ட இப்படலமுழுவதிலும் இன்பக் களியாட்

டமே கூறப்பெறுதலின், அதற்குத் தோற்றுவாயாக இங்கே இவ்வாறு கூறி வைத்தார் போலும். 'உண்டாட்டு' என்றதற்கேற்பக் கள்ளை முதற்கண் வைத்துக் கூறியுள்ளார்.

நிலாவை நறவு எனல்: 1050, 1057-பார்க்க.

(பி - ம்.) 1. நறநிறை; நருநிறை; நறை நிறை; நறை நிலா; நறுநறு; வெண்ணிறத் தாணிறை.
2. பண்ணிறை; செறிந்திடப்; செறிந்தபால்; சிறந்திடை; இசையது; பண்ணிறம் பொலிந்தபால்.
3. காம மிற்றெழுகிற்று; காம மீதொழுகிற்று. 4. தண்ணிற. (1)

1040. கலந்தவர்க் கினியதோர் கள்ளு மாய்ப்பிரிந்
துலந்தவர்க் குயிர்சுடு விடமு மாயுடன்
புலந்தவர்க் குதவிசெய் புதிய தூதுமாய்
மலர்ந்தது நெடுநிலா மதனன் வேண்டவே.

நெடுநிலா-மிக்க நிலவொளியானது, கலந்தவர்க்கு இனியது ஓர் கள்ளும் ஆய்-காதலாராய்க் கூடினவர்க்கு இன்பந் தருவதொரு கள்ளைப் போலாகியும், பிரிந்து உலந்தவர்க்கு-(ஒருவரை யொருவர் விட்டுப்) பிரிந்ததனால் வாடிய காதலர்க்கு, உயிர் சுடு விடமும் ஆய்-அவர்களுயிரை வருத்தும் நஞ்சு போலாகியும், உடன் புலந்தவர்க்கு-கணவருடன் புலவி கொண்டு ஊடிய மகளிர்க்கு, உதவி செய்-(அவர்கள் கணவரைக் கூடுதற்கு) உதவி செய்கிற, புதிய தூதும் ஆய்-புதுமையான தூது போலாகியும், மதனன் வேண்ட-மன்மதன் விரும்புமாறு, மலர்ந்தது-(பரந்து) விளங்கியது.

முன்கவியில் நிலவைக் கள்ளென்றமைக்கு இங்கே காரணங் கூறுகின்றார். நிலா, கலந்தவர்க்கு இன்பமும், பிரிந்தவர்க்குத் துன்பமும் செய்தலைக் கூறுதல், கவிஞர்கள் வாக்கிலே பயின்று வருதலைக் காணலாம். புலனெறி வழக்கிலே, புலந்தார்க்குத் தூதாகக் கொண்டு கூறப்படும் பொருள்களின் வேறாக இங்கே நிலவைத் தூதென்றலின், அது 'புதிய தூது' ஆயிற்று. மன்மதனுக்குக் குடையும், அவன் வெற்றிக்கு உறுதுணையு மாகலின், நிலவின் வரவை அவன் விரும்பினன் என்க.

நிலவை விடம் எனல்: 700; ஆரணிய. 688; நைடத சந்திரோ. 14-பார்க்க.

(பி - ம்.) 1. கள்ளுமாய்
2. உலர்ந்தவர்க்கு: உயிர்சுடும்; உயிர்தொடர்: விடமுமேயுடன்.
3. புலர்ந்தவர்க்குதவிய; புலந்தவர்க்குறவுசெய்.
4. மலர்ந்தது தண்ணிலா (2

1041. ஆறெலாங் கங்கையே யாய வாழிதாம்
கூறுபாற் கடலையே யொத்த குன்றெலாம்
ஈறிலான் கயிலையே யேய்ந்த வென்னினி
வேறியாம் புகல்வது நிலவின் வீக்கமே.

ஆறு எலாம்-(யமுனை முதலிய நிறவேறுபாடுள்ள) ஆறுகள் எல்லாம், கங்கையே ஆய-(வெண்ணிறமுள்ள) கங்கையைப்போலவே ஆயின; ஆழி தாம்-கருங்கடல்கள், கூறு-(சிறப்பித்துச்) சொல்லப்படுகிற, பால் கடலையே ஒத்த-திருப்பாற்கடல் போலவே ஆயின; குன்று எலாம்-மலைகள் எல்லாம், ஈறு இலான்-இறுதியில்லாத சிவபெருமானது, கயிலையே ஏய்ந்த-(வெள்ளிமயமான) கயிலை மலையையே போன்றனவாயின; (அவ்வாறாயின்), நிலவின் வீக்கம்-அந்நிலவொளியின் மிகுதி பற்றி, யாம் இனி வேறு புகல்வது என்-நாம் இன்னும் வேறு சொல்வதற்கு யாதுளது ?

வெண்ணிறமல்லாத வேறு நிறங்களுடைய ஆறு, கடல், மலை ஆகிய எல்லாம் நிலவொளியால் வெண்ணிறமுடையனவாயின; இதற்கு மேலும் சொல்லுவதற்கு என்னவிருக்கிறது ? என்று நிலவொளியைச் சிறப்பித்தார். சிவபெருமான் திருமுடியில் அமரும் சிறப்புடைய சந்திரனது ஒளியால் எல்லாப் பொருள்களும், அச்சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் தொடர்புடைய கடவுட்டன்மை வாய்ந்த கங்கை, கயிலை, பாற்கடல் ஆகியவற்றை ஒத்தனவாயின என்பது கருத்து. சிவபெருமான், ஊழிக்காலத்தும் தான் அழியாது நின்று படைப்பினுட்பட்ட பொருள்களையெல்லாம் அழிக்கும் சங்கார மூர்த்தியாகலின் 'ஈறிலான்' என்றார்.

ஏகாரம் மூன்றும் பிரிநிலை; 'வீக்கமே' என்றதில் ஏகாரம் ஈற்றசை; வியப்புப் பொருளதென்றலுமாம்.

நிலவுக்குப் பால்: சுந்தர. 151, 741.

(பி - ம்.) 1. ஆறெல்லாம்: கங்கையே போன்ற: கங்கைபோலான: ஆழிதான்: ஆழிகள். 2. ஊறுபாற் கடலினை.
3. கயிலையை யியைந்த; கயிலையோடிசைந்த.
4. வேறுநாம்; வேறுநான்; வேறுதாம்; புகல்வதென். (3)

1042 எள்ளருந் திசைகளும் யாரும் யாவையும்
கொள்ளைவெண் ணிலவினாற் கோலங் கோடலால்
வள்ளுறை வயிரவாண் மகர கேதனன்
வெள்ளணி யொத்தது வேலை ஞாலமே.

எள் அரு திசைகளும்-இகழ்ச்சியில்லாத திக்குக்கள் எல்லாமும், யாரும்-(அங்கங்குள்ள) மானிடர் யாவரும், யாவையும்-அஃறிணைப் பொருள்கள் எல்லாமும், கொள்ளை வெண் நிலவினால்-மிகுதியான வெண்ணிலாவினாலே, கோலம் கோடலால்-(வெண்ணிறமாகி) அழகு

கொண்டதனுல், வேலே ஞாலம்-கடல் சூழ்ந்த பூவுலக முழுதும், வள் உறை வயிரம் வாள்-கூர்மை தங்கிய, உறுதியான வாட்படை தாங்கிய,மகரம் கேதனன்-சுருமீன் கொடியை உடைய மன்மதனது, வெள் அணி ஒத்தது-வெள்ளுடையணிந்த படை வகுப்பை யொத்திருந்தது.

நிலவொளி பரவிய அவ் இராப்பொழுதில், அனைவரும் மன்மதனுடைய ஆணைக்குட்பட்டிருந்தன ரென்பது கருத்து. மன்மதன் போருக்குரிய காலம் இரவாதலால், வெள்ளுடைகொண்ட தன்படைகளுடனே அவன் போருக்குப் புறப்படுதல் போலக் காட்சியளித்தது உலகம் என்ருர். வெள்ளணி-(மன்மதனது) பிறந்த நாளொப்பனை யென்றலும் ஆம்; இப்பொருட்கு, மன்மதன் தோன்றினமை குறித்து உலகம் வெள்ளணி யணிந்து விழாக்கொண்டது என்பது கருத்தாகக் கொள்க. வெள்ளணி நாள்-பிறந்தநாள்: பு-வெ. 212.

மகர கேதனன்-வடசொற்ருெடர்; மகரம்-சுருமீன்; கேதனம்-கொடி; கேதனன்-கொடியுடையவன். மன்மதனது வாள் தாழை மடல் என்பர்; அதனை வயிரவாள் என்றது, தான் உருவிலியாகியும் அனைவரையும் தன் வழிப்படுத்தும் அவனது ஆற்றல்பற்றி யென்க.

(பி - ம்.) 1. திசைகளோடியாரும்; பலதிசை தோறும்.
2. கொள்ளைகொ ணிலவினுல்; கோலங்கொண்டலால்; கொண்டதால்; கொண்டவால்; கொள்வதால்; கண்டவால்.
4. ஒத்ததவ் வேலை. (4)

### பெண்களின் செய்திகள்

1043. தயங்குதா ரகைபுரை தரள நீழலும்
இயங்குகார் மிடைந்தகா வெழினிச் சூழலும்
கயங்கள்போன் ருெளிர்பளிங் கடுத்த கானமும்
வயங்குபூம் பந்தரு மகளி ரெய்தினர்.

மகளிர்-பெண்கள், தயங்கு தாரகை புரை-விளங்கும் விண்மீன்களை யொத்த, தரளம் நீழலும்-முத்துப் பந்தர் நிழலையும், இயங்கு கார் மிடைந்த கா-(ஆகாயத்திலே) சஞ்சரிக்கிற மேகங்கள் (வந்து) தங்கப் பெற்ற சோலையிலேயுள்ள, எழினி சூழலும்-திரை சூழ்ந்தது போன்ற மறைவிடங்களையும், கயங்கள் போன்று ஒளிர்-ஆழ்ந்த நீர் நிலைகள் போல விளங்குகின்ற, பளிங்கு அடுத்த கானமும்-பளிங்குப் பாறைகள் அமைந்த பூஞ்சோலைகளையும், வயங்கு பூ பந்தரும்-அழகாக விளங்குகிற பூம் பந்தல் அமைந்த விடங்களையும், எய்தினர்-(சென்று) அடைந்தனர்.

இங்குக் கூறிய பலவகையான இடங்களில் மகளிர் சென்று சேர்ந்தனர் என்க. ஆடவர் பலவகை யின்பம் நுகர்தற்குக் காரணமானவர் மகளிராதலின், அவர்கள், போகம் நுகர்தற்பொருட்டு அதற்

கேற்ற பலவிடங்களை நாடி அடைந்தமை முதலிற் கூறி, மேலே அவர்கள் மதுவுண்ணல் முதலியவற்றை முறையே கூறுகின்றார். தரளம்-ஆகுபெயராய் முத்துப் பந்தரைக் குறித்தது; இது செயற்கையானது. பிறவிடங்கள் இயற்கையில் அமைந்தவை. எழினிச் சூழல்-திரை கட்டியது போன்ற இடம்; கயம்-ஆழ்ந்த குளம்; இதன் நீர் மிகத் தெளிவாகிப் பளிங்கு போலத் தோற்றும்; பளிங்கும் நீர் போலத் தோற்றும்; 'படிகத்தின் றலமென் றெண்ணிப் படர்சுனை முடுகப் புக்க' (937); 113-குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. தரளச் சிற்றிலும்; தரளப் பந்தரும்.
2. இயங்குதார் மிடைந்தகா ரெழினிச்; இயங்குகான் மிடைந்ததா ரெழினிச்; மிடைந்தகாலெழிலிச்; மிடைந்தொளிரெழினிச்; மிடைந்த தாளெழினிச்; மிடைந்தபல்லெழினிச்.
3. ஒளிப்பன கரிந்த தானமும்
4. மயங்குபூம் பந்தரும்; இயங்குபூம் பந்தரின், வயங்குபூ மைந்தரும். (5)

1044. பூக்கம ழோதியர் போது போக்கிய
சேக்கையின் விளைசெருச் செருக்குஞ் சிந்தையர்
ஆக்கிய வமுதென வம்பொன் வள்ளத்து
வாக்கிய பசுநறு மாந்தன் மேயினர்.

பூ கமழ் ஓதியர்-பூவின் நறுமணம் கமழும் கூந்தலையுடைய மகளிர், போது போக்கிய சேக்கையின்-பூக்களை மிகுதியாகப் பரப்பிய படுக்கையினிடத்தே, விளை-உண்டாகிற, செரு-(கலவிப்) போராலே, செருக்கும் சிந்தையர் - களிக்கவேண்டுமென்ற மனமுடையவராய், ஆக்கிய அமுது என-(புதிதாக) உண்டாக்கிப தேவாமிர்தம் போல, அம்பொன் வள்ளத்து வாக்கிய-அழகிய பொன் கிண்ணங்களில் ஊற்றிய, பசு நறு-புதிய மதுவை, மாந்தல் மேயினர்-பருகலாயினர்.

ஓதியர் நறு மாந்தல் மேயினர் என முடிபு கொள்க. மேலே நிகழவிருக்கும் காமக் கேளிக்கைகளுக்குக் காரணமான ஊக்கமும் ஆற்றலுந் தருவது மதுவாகலின், மகளிர் முதலில் அதனைப் பருகலாயினர். போக்குதல் மிகுதியாகப் பரப்புதல்; பொங்கிய என்ற பாடமும் இங்குப் பொருந்துவதாகும்.

சேக்கையின் விளைசெரு: 1096, 1099; வி-பா. சிறப்புப்பாயிரம். 7-பார்க்க. கள்ளுக்கு அமிழ்தம். நைடத. அன்னத்தைத். 13.

(பி -ம்.) 1. ஓதியார்: போது பொங்கிய; போது போக்கிடச்.
2. சேக்கையின்பச்செருச்; சேக்கையினன்பொடு, சேக்கையின்னகச்செருச்; சேக்கையின்பந்நருச்; சேக்கையின்ஞெளியால்; சேக்கையில் விழமிசைச்: சிந்தையார். 3. அமிழ்தெனப் பைம்பொன்.
4. பசுநறை; மாந்தர். (6)

1045. மீனுடை விசும்பினர் விஞ்சை நாட்டவர்
ஊனுடை யுடம்பின ருருவ மொப்பிலார்
மானுடை நோக்கினர் வாயின் மாந்தினர்
தேனுடை மலரிடைத் தேன்பெய் தென்னவே.

மீன் உடை விசும்பினர்-விண்மீன்களையுடைய வானுலகத்து மகளிரும், விஞ்சை நாட்டவர்-வித்தியாதரருலக மகளிருங்கூட, உருவம் ஒப்பு இலார்-தம் வடிவழகுக்கு ஒப்பாகாத சிறப்புடையவரும், மான் உடை நோக்கினர்-மான்கள் தோற்றுப்போகத்தக்க(மருண்ட) பார்வையுடையவரும்,ஊன் உடை உடம்பினர்-மாமிசபிண்டமாகிய உடம்பையுடையவருமான அம்மகளிர், தேன் உடை மலர் இடை-தேனையுடைய பூக்களில், தேன் பெய்தது என்ன-(மேலும்) தேனை ஊற்றினாற் போல, வாயின் மாந்தினர்-(தங்கள்) பூப்போன்ற வாயினால் (மதுவைப்) பருகினர்.

அங்கிருந்த மகளிர், ஊனுடம்புடைய மானுடரே யாயினும், பிறப்பால் உயர்ந்த தேவசாதி மகளிரும் தம் வடிவழகுக்கு ஈடில்லாத சிறப்புடையோர் என அவர்களை உயர்த்துக் கூறினார். மானுடர் உடம்பு வெயர்வை யுண்டாதல், வேடை யுண்டாதல், கால் நிலந் தோய்தல், கண் இமைத்தல் ஆகியவற்றையுடையது; தேவருடம்பு இவை யில்லாதது. எனவே, தேவர் பிறப்பாலுயர்ந்த வராவர். மகளிர் வாய்க்கு ஆம்பல் மலர் உவமை கூறப்படும்; வாயில், வாலெயி றூறிய நீராகிய தேனையும் அவர்கள் பெற்றிருக்கின்றனர்; அத்தகைய வாயினால் அவர்கள் மதுவை மாந்தினர்; அதனால், 'தேனுடை மலரிடைத் தேன் பெய்தென்ன, வாயின் மாந்தினர்' என்றார். விசுபின் ஆர்-ஆகாயத்தின்கண் உள்ள, விஞ்சை நாட்டவர் என்றலும் ஆம். தேவசாதியினருள்ளும் வித்தியாதரர் அழகிலும் இன்பத்திலும் மேம்பட்டோர் என்பர். தேன் உடை-தேன் கட்ட விழ்ந்து சிந்துகிற என்றலுமாம்.

(பி - ம்.) 1. மீனுறு: விசும்பிடை; விசும்புடை; விசும்பினர்: மீனுடைவானுடை; மீனுடை வானிடை; மீனுடை வானகம்; மீனுடை விஞ்சைநாட்டவருமெல்லியர்.
2. ஊனுறும்: உடம்பினர்; உடம்பினோர்; உடம்பிலார்; ஒப்பிலர்.
3. மானுறு: நோக்கினர்; விரும்பி மாந்தினர்.
4. தேனுறு: மலரிடை; மலருடைத்; மலர்மிசைத். (7)

1046. உக்கபால் புரைநரு வுண்ட வள்ளமும்
கைக்கவி னொளிபடச் சிவந்து காட்டத்தன்
மைக்கணுஞ் சிவந்தவோர் மடந்தை வாய்வழிப்
புக்கதே னமுதமாய்ப் புகுந்த போதினே.

ஓர் மடந்தை-ஒரு பெண்ணின், கை கவின் ஒளி பட-கையினது அழகிய செவ்வொளி படுதலால், உக்க, பால் புரை நரு-(பளிங்குக்

கிண்ணத்தில்) ஊற்றிய பால்போன்ற (வெண்மையான) மதுவும், உண்ட வள்ளமும்-அம் மதுவைக் கொண்ட கிண்ணமும், சிவந்து காட்ட-செந்நிறமாகத் தோன்ற, வாய் வழி புக்க தேன் - (அவள்) வாயினுட் சென்ற மதுவானது, அமுதம் ஆய்-(நிறத்தாலும் சுவை யாலும்) அமிர்தம் போலாகி, புகுந்த போதின்-(உடம்பினுள்ளே) புகுந்து பரவியபோது, தன்-அவளுடைய, மை கண்ணும்-மையுண்ட கண்களும், சிவந்த-சிவப்பேறின.

ஒருபெண் பளிங்கினலான மதுக்கிண்ணத்தைக்கைக்கொண்ட போது, அவள் கையின் செவ்வொளியாலே, கிண்ணமும் அதிலுள்ள வெண்ணிற மதுவும் சிவந்து காட்டின; மதுவை அமுதம்போலச் சுவைத்து அவள் பருகியபோது, மது, தன் இயல்பான வெண்ணிறத்து டன் வாய் வழியே உள்ளே சென்றது; ஆனல், அவள் கண்கள் சிவந்து விட்டன என்றவாறு. பெண்ணின் கையொளியால் கிண்ணத்தின் உள்ளிருந்த கள்ளும் சிவந்தது; உள்ளே சென்ற வெண்ணிறக்கள்ளால் வெளியே அவள் கண்கள் சிவந்து காட்டின என முரண்படக் கூறிய தில் உள்ள நயம் ஓர்ந்து இன்புறத்தக்கது. கள்ளுண்டார் கண்கள் சிவத்தல் இயல்பு.

'நருவும்' என உம்மை விரிக்க. மைக்கண் X சிவந்த என முரண்தொடை காண்க.

நறவுக்கு அமுதம்: 'ஆக்கிய வமுதென அம்பொன் வள்ளத்து, வாக்கிய பசுநறு' (1044); கையின் செவ்வொளியால் வெண்பொருள் சிவந்து காட்டல்: 'பளிக்கு நாய் சிவப்பத் தொட்டு' (573).

(பி - ம்.) 1. நறையுண்ட; நறையுண்ண: உள்ளமும்.
2. கைக்கொள்வா ளொளி; கைக்கொளின் ஹெனி; கைக்கிளரொளி; கைத்தளி ரொளி; கைக்குள்வா ரொளி படச்; ஒளிகெடச்; எழில் படச்; சிவந்து காட்டலால்.
3. சிவந்ததோர்: வாய்மொழி; வாய்வழி.
4. அமிர்தமாய்ப் பொலிந்த; அமுதவாய்த் திரிந்த; அமுதமாய்த் திரிந்த; அமிர்தமாய்ப் பொழிந்த; போன்றவே; போன்றதே; போலுமே. (8)

1047. தாமமு நானமுந் ததைந்த தண்ணகில்
தூமமுண் குழலிய ருண்ட தூநறை
ஓமவெங் குழியுகு நெய்யி னுள்ளுறை
காமவெங் கனலினைக் கனற்றிக் காட்டிற்றே.

தாமமும்-மலர்மாலையும், நானமும்-புழுகுநெய்யும், ததைந்த-நிறைந்த, தண்-குளிர்ச்சியுடைய, அகில் தூமம் உண்-அகிற் புகை யூட்டப்பெற்ற, குழலியர்-கூந்தலையுடைய மகளிர், உண்ட-பருகிய, தூ நறை-நல்ல மதுவானது, வெம் ஓமம் குழி உகும் நெய்யின்-(தீயி னுல்) வெப்பமுள்ள ஓமகுண்டத்திலே சொரிந்த, நெய்யைப்

போல, உள் உறை-உள்ளே தங்கிய, காமம் வெம் கனலினே-காம மாகிய கொடிய தீயை, கனற்றி காட்டிற்று - மூட்டி யெழுப்பி (வெளியே) காட்டிற்று.

கள், காமத்தை மிகுவிக்கும் குணமுடையதாகலின், அதனை யுண்ட மகளிரிடத்து அது தன் குணத்தைக் காட்டிற்று. ஓமம் செய்யும் நெய்யினுல் தீ மூள்வதுபோல, உள்ளே ஊற்றிய கள்ளால் காமத் தீ மூண்டெழுந்தது.

தகைந்த குழலியர், தண் குழலியர், அகில் தூமம் உண் குழலியர் எனத் தனித்தனி கூட்டுக. தூ-வெண்மையான, (அல்லது) தன் குணத்திலே சிறந்த.

ஓமத்தீ நெய்யால் மூண்டெழுதல்: 'பொழிந்தநெய் யாவுதி வாய்வழி பொங்கி, யெழுந்த கொழுங்கனல்' (767).

(பி - ம்.) 1. தகைந்த. 2. தூமமென்: தூய்நறை
3. குழியுறு: குழிபுகு; ஓமவொண்கனலுகு: நெய்யில் உள்ளூறு; நெய்யின் உள்ளூறும்.
4. கனலிடை கனற்றிக்; கனலெனக் கனற்றிக்; கனலெனக் கண்ணிற். (9)

(வேறு)

1048. விடனெக்கு நெடியநோக்கி னமுதொக்கு மின்சொ லார்தம்
மடனெக்கு மடனு முண்டோ வாணுத லொருத்தி காணுச்
சடனெக்கு நிழலைப் பொன்செய் தண்ணறுந் தேறல் வள்ளத்
துடனெக்க வுவந்து நீயு முண்ணுதி தோழி யென்ருள்.

வாள் நுதல் ஒருத்தி-ஒளிபொருந்திய நெற்றியையுடைய ஒரு பெண், பொன்செய்-பொன்னுலாகிய, தண் நறு தேறல் வள்ளத்து-குளிர்ந்த மணமுள்ள மது நிரம்பிய கிண்ணத்திலே, சடன் ஒக்கும் நிழலை காணு-(தன்) உடம்பின் ஒருபடித்தான நிழலைக் கண்டு, (அந் நிழலுருவைத் தன் தோழியெனக் கருதி), தோழி-என் தோழியே, நீயும் உடன் ஒக்க உவந்து உண்ணுதி-நீயும் என்னுடனே ஒன்ருக மகிழ்ந்து (இம்மதுவை) உண்பாயாக, என்ருள்—. விடன் ஒக்கும்-விடம் போன்ற, நெடிய நோக்கின்-நீண்ட கண்களையும், அமுது ஒக்கும் இன்சொல்லார் தம்-அமுதம் பொன்ற இனிய சொல்லையுமுடைய மகளிரின், மடன் ஒக்கும்-அறியாமயைப் போன்ற, மடனும்-(மற்ருேர்) அறியாமையும், உண்டோ - (உலகத்தில்) உண்டோ. (இல்லை என்றபடி).

ஒரு பெண், தன்கையிலிருந்த மதுக்கிண்ணத்தினுள்ளே தன் நிழலையே பார்த்து, தன் தோழியொருத்தி அங்கிருப்பதாக மயங்கி, 'நீயும் என்னேடு ஒன்ருக இம்மதுவை மகிழ்ந்து பருகுவாயாக' என் கின்ருள்; இதைப்போன்ற மடமை வேறு எங்கே காணக்கூடும்?

'பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே' என்பது உண்மையே; என்கின்றார்.

பெண்களின் கண்கள்(ஆடவரை)வருத்துவனவாதலால் விடம் போன்றவை; சொற்கள் இனிமையால் அமுதம் போன்று அவ்விடத்தின் தன்மையை மாற்றுவன.

விடன், மடன், சடன் என்றவற்றுள் னகரம் போலி. சடன்= சடம்; உடம்பு. நோக்கு-கண்: ஆகுபெயர்.

விடனெக்கும் நெடிய நோக்கு: 'நஞ்சினுங் கொடிய நாட்டம்' (973); 'விடநுங்கிய கண்ணுடையாரிவர்' (ஆரணிய. 697); தன் நிழலைப்பிறர் உருவெனமயங்குதல், 'தமனிய வள்ளத்துத் தன்னிழல் நோக்கிப், பிறண்முக மிதுவெனப் பெண்மையின் மயங்கி' (பெருங். 1. 40: 162-3.)

(பி - ம்.) 1. விடநோக்கின் கொடிய வேற்கண், விடநோக்கின் கொடிய நோக்கும்; விடநோக்கும் நெடிய நோக்கும்: அமிழ்தொக்கும்; அமுதொத்த: இன்சொலார்க்கு; மென்சொலார்தம்.

2. உடனெக்கும் உடலுமுண்டே; மடனுமுண்டே: காணுத்; காணத்; காணச்; தான்றன்.

3. தடனெக்கும்; சடமொக்கும்; நிழலைப்பொங்கும்; நிழலும்பொன்செய்; நிழல் செய்கின்ற; நிழலைக்கண்டே: தண்ணுறுந்தேறல் வெள்ளத்து.

4. உடனெக்கும்: உகந்து; உகந்த: உடனெக்கநுகர; நுகர்தல்; நுகர்ந்த; நுகர்தி;வந்தாய் நீயும்;கரந்த நீயே; களவினீயே. (10)

1049. அச்சநுண் மருங்கு லாளோ ரணங்கனு ளளக பந்தி
நச்சுவேற் கருங்கட் செவ்வாய் நகைமுகநறவுட்டோன்றப்
பிச்சிநீ யென்செய் தாயிப் பெருநற விருக்க வாளா
எச்சிலை நுகர்தி யோவென் றெயிற்றரும் பிலங்க நக்காள்.

அச்சம் நுண் மருங்குலாள்-(கண்டோர் இது ஒடிந்து விடுமோ என்று) அச்சங்கொள்ளக் காரணமான நுண்ணிய இடையுடையவளான, ஓர் அணங்கு அன்னுள்-தெய்வப்பெண் போன்ற ஒருத்தியினது, அளகம் பந்தி-கூந்தலின் செறிவையும், நச்சு வேல் கரு கண்-நஞ்சு ஊட்டப்பட்ட வேற்படை போன்ற கரிய கண்களையும், செவ்வாய்-சிவந்த வாயையும் கொண்ட, நகை முகம்-ஒளி விளங்கும் முகமானது, நறவு உள் தோன்ற-(தான் பருகும்) கள்ளினுள்ளே (நிழலாகக்) காணப்பட, (அதனைத் தன் தோழியின் முகமெனக்கருதி), பிச்சி-பைத்தியக்காரி! நீ என் செய்தாய்-நீ என்ன காரியம் செய்தாய்? இ பெரு நறவு இருக்க-(இதோ சாடியில் உள்ள) இப் பெருங்கள் இருக்க, (அதனைவிட்டு), வாளா-வீணே, எச்சிலை நுகர்தியோ என்று-(என்) எச்சிலை உண்பாயோ என்று சொல்லி, எயிறு அரும்பு இலங்க-

(தன் பற்களாகிய) முல்லை யரும்புகள் வெளித்தோன்ற, நக்காள்-நகைத்தாள்.

இதுவும் முன் பாடல் போன்றது. தன் முகத்தின் நிழலையே மதுக் கிண்ணத்தினுட் கண்ட ஒருத்தி, மற்றொரு பெண்ணும் தன்னைப்போல அக்கிண்ணத்திலுள்ள கள்ளைப் பருகுவதாகக் கருதி, வீணே எச்சிலைப் பருகுவாயோ பைத்தியக்காரி என்றாள்.

பெரு நறவு-பெரிய அளவினையுடைய கள்; வேண்டும்போது வேண்டிய அளவு எடுத்துக்கொள்ளுதற் பொருட்டுச் சாடியில் நிரப்பி வைக்கப்படுவது. 'பெரியகட் பெறினே, யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணுமன்னே' (புறநா. 235).

(பி - ம்.) 1. அச்சுதுண்; மருங்குளாளோர்: அணங்கன்னாள்; அணங்கினாள்: அளகப்பந்தி.
2. நச்சவேல்; செவ்வாய்த்தாமரை; செவ்வாய் நளிர் முகம்; நளிமுகம்: மதுவுட்டோன்ற; அதனுட்டோன்ற; நறையுட்டோன்ற, நடுவுட்டோன்ற.
3. இப்பெருநறு; இப்பெருநறை; அப்பெரு நறவு; இருப்பவாளா; இருக்கவள்ளத்து. (11)

1050. புறமெலா நகைசெய் தேசப்
பொருவரு மேனி வேறோர்
மறமுலாங் கொலைவேற் கண்ணாள்
மணியின்வள் ளத்து வெள்ளை
நிறநிலாக் கதிர்கள் பாய
நிறைந்தது போன்று தோன்ற
நறவிலா ததனை வாயின்
வைத்தன ணாணுட் கொண்டாள்.

பொரு அரு மேனி-(தனக்கு) ஈடில்லாத வடிவழகும், வேறு ஓர் மறம் உலாம்-வேறொரு வகையானகொடுமை பொருந்திய, கொலை வேல் கண்ணாள்-கொலைத் தொழிலுடைய வேல் போன்ற கண்களுமுடைய ஒருத்தி, மணியின் வள்ளத்து-(தன் கையில் இருந்ததான, வெறும்) பளிங்குக் கிண்ணத்தில், வெள்ளை நிற நிலா கதிர்கள் பாய-வெள்ளை நிறமுள்ள (பால் போன்ற) நிலவொளி வீசியதனால், நிறைந்தது போன்று தோன்ற-(கள்) நிறைந்திருந்தது போலத் (தனக்குத்) தோன்ற, (அவள்), புறம் எலாம் நகை செய்து ஏச-அயலில் உள்ளாரெல்லாம் நகைத்துப் பரிகசிக்கும்படி, நறவு இலாததனை-கள் இல்லாத வெறுங் கிண்ணத்தை, வாயின் வைத்தனள்-(பருகுதற்கு) வாயில் வைத்தவளாய், நாண் உள் கொண்டாள் - (தனதறியாமைக்கு) நாணங்கொண்டாள்.

மேனியும், வேற்கண்ணும் உடையாள், நறவிலாததனைவாயின் வைத்தனள், நாண் உட்கொண்டாள் என முடிக்க. அவள் கையில் இருந்தது இயல்பிலே வெண்ணிறமுடைய பளிங்குக் கிண்ணமாக, அதில் நிலவொளியும் பாய்ந்ததனால், வெண்ணிறமுள்ள கள் நிறைந்ததுபோல மயக்கத்தால் அவளுக்குத் தோற்றியது; அதனால் அவள், வெறுங் கிண்ணத்தை வாயில் வைத்துப் பருகத் தொடங்கவே, வாயில் கள் சுவைக்கப் படாமையாலும், அயலில் இருந்த தோழி முதலியோர் பரிகசித்ததனாலும் நாணமடைந்தாள். வேல், பிறர் உடம்பிலே சென்று தாக்கி வருத்துவது; கண் அங்ஙனமன்றித்தான் இடம்பெயராமலே ஆடவர் நெஞ்சிற்பாய்ந்து வருத்துதல் உடைமையின் 'வேரோர் மறம்' எனப்பட்டது. வேரோர் வேற்கண்ணாள் என இயைத்து, முன்னர்க் கூறிய இருவரல்லாத மற்றொருத்தி என்றலும் ஆம்.

நிலவொளி நறவு போன்றமை: 1039, 1057. ஒப்பிடுக: 'திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப், பைங்கிள்ளை பாலென்று வாய்மடுக்கும்' (தண்டி. சூ. 55. மேற்).

(பி - ம்.) 1. நகைய செய்யப்: மேனி வேறாய்; மேனி வென்றோர்; மேனி போர் செய்: புறமெலாந் திகழுஞ்சோதிப் பொன்னெளிர் மேனிவேரோர்.
2. மணியின வள்ளத்துள்ளே; ஒருத்தி வள்ளத்து வெள்ளை.
3. நிற நிலாக் கற்றை; நிறை நிலாக் கதிர்கள்: நிறைந்தன போன்று.
4. நறவெனவதனை; நறவெனுவதனை: நறையிலாததனை; நறையெனவதனை வாயில்: நாணுக்கொண்டாள்: நாணுங்கொண்டாள். (12)

1051. யாழ்க்குமின் குழற்கு மின்ப மளித்தன விவையா மென்னக்
கேட்குமென் மழலைச் சொல்லோர் கிஞ்சுகங் கிடந்தவாயாள்
தாட்கருங் குவளை தோய்ந்த தண்ணறைச் சாடி யுட்டன்
வாட்கணி னிழலைக் கண்டாள் வண்டென வோச்சுகின்றாள்.

யாழ்க்கும்-வீணைக்கும், இன் குழற்கும்-இனிய புல்லாங் குழலுக்கும், இன்பம் அளித்தன-ஓசையினிமையைத் தந்தவை, இவை ஆம் என-இச்சொற்களாகு மென்று சொல்லும்படி, கேட்கும்-ஒலிக்கின்ற, மெல் மழலை சொல்-மென்மையான இனிய சொற்களைக் கொண்ட, ஓர் கிஞ்சுகம் கிடந்த வாயாள்-முருக்கம் பூப்போலும் வாயுடையாளொருபெண், தாள் கரு குவளை தோய்ந்த-தண்டினையுடைய கருங்குவளை மலர் இடப்பெற்ற, தண் நறை சாடியுள்-குளிர்ந்த கள் வைத்துள்ள சாடியினுள்ளே, தன் வாள் கண்ணின் நிழலை கண்டாள்-தன்னுடைய வாள் போன்ற கண்களின் நிழலைக் கண்டு, வண்டு என (அதனை) வண்டு என்று கருதி, ஓச்சுகின்றாள்-ஓட்டலானாள்.

தெளிந்த கள் உள்ள சாடியில் பார்த்தபோது தன் அழகிய கண்களின் பிரதிபிம்பம் தோன்றியதனைக் கள்ளில் மொய்க்கும் வண்

டென மயங்கிக் கருதினள் அம்மங்கை. அவள் சொல்லினிமையை, 'யாழுக்கும் குழலுக்கும் இனிமை தந்தவை இவையென்று கருதத் தக்கன' என மிகுத்துக் கூறினர். 'குழலினிது யாழினி தென்ப தம் மக்கள், மழலைச்சொற் கேளா தவர்' (குறள். 66) என்பது ஈண்டு ஒப்பிடத்தகும். கட்சாடியினுள் குவளை, தாமரை முதலிய பூக்களை யிட்டு வைத்தல் உண்டென்பர்.

(பி - ம்.) 1. மென் குழற்கும்; மென் குயிற்கும்; இன் குயிற்கும்; இன்பமருளின.
2. கேட்குமின் மழலைச்: நன் மழலைச்; மென் குதலைச்; நன் குதலைச்; மா மதலைச்: சொல்லாள்; செய்யா கிஞ்சுகங் கடிந்த.
3. குவளை தோயத்; தோயும்; தோற்கத்; வேய்ந்த; தண்ணறச்: தண்ண ருச்; தண்ணறுஞ்.
4. வாட் கண்ணின்; நிழலை நோக்கி; ஒப்புகின்ருள். (13)

1052. களித்தகண் மதர்ப்ப வாங்கோர் கனங்குழை கள்ளி னுள்ளே
வெளிப்படு கின்ற காட்சி வெண்மதி நிழலை நோக்கி
அளித்தனெ னபயம் வானத் தரவினை யஞ்சி நீவந்
தொளித்தனை நடுங்க லென்ருங் கினியன வுணர்த்து கின்ருள்.

ஆங்கு-அவ்விடத்து, ஓர் கனம் குழை-பொன்குண்டலங்க ளணிந்த ஒருபெண், களித்த கண்-(இயல்பாகவே) களிப்புடைய(தன்) கண்கள், மதர்ப்ப-(கள்ளினுல் மேலும்) செருக்க, கள்ளின் உள்ளே வெளிப்படுகின்ற காட்சி-(சாடிக்) கள்ளினுள்ளே காணப்படுகிற தோற்றமாகிய, வெண் மதி நிழலை நோக்கி-வெள்ளிய சந்திரனது பிரதிபிம்பத்தைக் கண்டு, (அதனை நோக்கி), நீ வானத்து அரவினை அஞ்சி-நீ ஆகாயத்தில் உலாவும்(இராகுவென்ற) பாம்புக்குப் பயந்து, வந்து ஒளித்தனை-(இங்கே)வந்து (இந்நறைச் சாடியினுள்) ஒளித்திருக் கின்ருய்போலும்; அபயம் அளித்தனென்-(உனக்கு நான்) அபயம் தந்தேன்; நடுங்கல்-(நீ வீணே) நடுங்காதே, என்ற ஆங்கு-என்ருற் போன்ற, இனியன-இன்சொற்களால், உணர்த்துகின்ருள்-அறிவுறுத் துவாளானுள்.

கனம்-பொன்; கனங்குழை: அன்மொழித் தொகை.

சாடியில் உள்ள கள்ளிலே சந்திரனது பிரதிபிம்பம் தோன்றக் கண்டு, உண்மையான சந்திரனே அங்கு வந்து ஒளித்திருப்பதாகக் கருதி, அவனுக்குச் சில இன்மொழி புகன்ருள் அந்நங்கை யென்க. இனியன கூறுகின்ருள் என்னுது, 'உணர்த்துகின்ருள்' என்ற சொல் லாற்றலால், அம்மங்கை, 'ஏ மதியே! காதலரைப் பிரிந்து துயருறும் எம்மினத்தவர்க்கு மேலுந் துயரைப் பெருக்கி நீ தீமை செய்வாயாயி னும், இப்போது நீ அஞ்சி வந்து இங்கே சரண் புகுந்ததனல், உன் தீமையை மறந்து உனக்கு அபயமளிக்கின்றேன்; அஞ்சி நடுங்காதே.

இன்னுசெய்தார்க்கும் இனிய செய்தலே பண்புடைமையாம்; பிறரை நலியும் ஆற்றலுடையார், அந் நலியப்பட்டாரிடத்தே தாம் சரண் புகும் நிலையும் நேர்தலுண்டு என்பதனை உணர்வாயாக' என்ற கருத்துப்படச் சந்திரனை அறிவுறுத்தினுள் என்பது பெறப்படும் என்பர்.

(பி - ம்.) 1. களித்தன: கரப்ப: அங்கோர்: கணங்குழை; கனங்குழல்: கள்ளினுள்ளால்; கண்ணினுள்ளே; கள்ளின்வள்ளம்.
3. அளித்தனன்: அரவினுக்கஞ்சி வந்திங்கு; வந்திங்கு.
4. ஒளித்தன வாங்கொல்: என்றங்கு; என்றிங்கு; இனையன: உரைத்து நின்ருள்; உரைக்கலுற்ருள்; விளம்பலுற்ருள்: ஒளித்தனை நடுங்கா தூங்கே யுறைந்திடென் றுணர்த்துகின்ருள். (14)

1053. கண்மணி வள்ளத்துள்ளே களிக்குந்தன் முகத்தை நோக்கி
விண்மதி மதுவினுசை வீழ்ந்ததென் றொருத்தி யுன்னி
உண்மகிழ் துணைவ னேடு மூடுநாள் வெம்மை நீங்கித்
தண்மதி யாதி யாகிற் றருவெனிந் நறவை யென்ருள்.

ஒருத்தி-ஒருபெண், கள் மணி வள்ளத்து உள்ளே-கள்வைக்கப் பெற்ற பளிங்குக் கிண்ணத்தினுள்ளே, களிக்கும் தன் முகத்தை நோக்கி-(கள்ளுண்டு) மகிழ்ந்துள்ள தனது முகத்தின் நிழலைக்கண்டு, விண் மதி-ஆகாயத்திலுள்ள சந்திரன், மதுவின் ஆசை-கள்ளினிடத் துண்டான ஆசையால், வீழ்ந்தது என்று உன்னி-இங்கு வந்து கிடக் கின்றதென நினைந்து, (அதனை நோக்கி), உள் மகிழ் துணைவனேடும் ஊடும் நாள்-மனமகிழும் கணவனுடன் நான் ஊடல் கொள்ளும் நாளில், வெம்மை நீங்கி-(உனது) வெப்பத் தன்மையைவிட்டு, தண் மதி ஆதி ஆகில்-குளிர்ந்த சந்திரனுயிருப்பாயாகில், இ நறவை தரு வென் என்ருள்-இம்மதுவை உனக்குத் தருவேன்; (இதனைப் பருக விடுவேன்) என்று சொன்னுள்.

மதுக்கிண்ணத்தினுள்ளே தன் முகத்தின் பிரதிபிம்பத்தைக் கண்டே, சந்திரன் அங்குவந்து வீழ்ந்து கிடப்பதாக மயங்கிக் கருதிச் சந்திரனேடு பேசலானுள் இங்கே கூறிய மங்கை. கணவரோடு ஊடித் தனித்திருக்கும்போது மகளிர் நிலவினெளியால் வருந்துவர் என்ப வாதலால், 'நான் ஊடும்போது எனக்கு வெம்மை செய்யாது நீ உன் னியல்பாகிய தண்மையுடனிருப்பதாக உறுதி கூறின் நீ இம்மதுவை யுண்ண அநுமதி தருவேன்' என்கின்ருள்.

கள்ளினுள் தோன்றும் தன் முகநிழலைச் சந்திரனெனக் கருது தல் : ஒப்பு: சீவக. 2677.

பி - ம்.) 2. வண்மதி: நறவினுசை விழைந்ததென்று; வீழ்ந்ததென்று; உள்ளி.
3. மகிழ் துணைவரோடும்; கணவரோடும்: கணவனேடும்: ஊடினுள் ஊடினுல்: எம்மை நோக்கித்.

4. தண்மதியாகில் யானும்; ஆதிநானும்: தருவனிந்நறவை; தருவெனின் னறவை.

பெரும்பாலும் அச்சுப் பதிப்புக்களில் இப்பாடல் 'அழிகின்ற', 'மின்னென' 1057, 58 என்ற இரண்டு பாடல்களின் பின்னே உள்ளது. (15)

1054. எள்ளொத்த கோல மூக்கி
னேந்திழை யொருத்தி பூங்கை
தள்ளத்தண் ணறவை யெல்லாந்
தவிசிடை யுகுத்துந் தேருள்
உள்ளத்தின் மயக்கந் தன்ன
லுப்புறத் துண்டென் றுன்னி
வள்ளத்தை மறித்து வாங்கி
மணிநிற விதழின் வைத்தாள்.

என் ஒத்த கோலம் மூக்கின்-எள்ளுப் பூவைப் போன்ற அழகிய மூக்கையும், ஏந்து இழை-பூண்ட அணிகலன்களையும் உடையவளான, ஒருத்தி—, பூ கை தள்ள-பூப்போலும் (தன்) கை நடுக்கத்தால், தண் நறவை எல்லாம்-(கிண்ணத்தில் இருந்த)குளிர்ந்த கள் முழுவதையும், தவிசு இடை உகுத்தும்-(தான் இருந்த) ஆசனத்திலே கொட்டி விடவும், உள்ளத்தில் மயக்கம் தன்னல்-மனத்தி லுண்டாகியிருந்த மயக்கத்தினலே, தேருள்-(கள் கொட்டிவிட்டதை) அறியாதவளாய், உ புறத்து உண்டு என்று உன்னி-(கிண்ணத்தின்) மறுபுறத்தில் (மது) உள்ளதாகக் கருதி, வள்ளத்தை மறித்து வாங்கி-கிண்ணத்தைத் தலை கீழாகப் பிடித்து, மணி நிறம் இதழின் வைத்தாள்-(கள்ளைப் பருகும் படி) செம்மணி போலும் நிறமுடைய (தன்) உதட்டில் வைத்துக் கொண்டாள்.

உள்ளே சென்ற கள்ளானது மயக்கத்தையும் கை நடுக்கத்தை யும் உண்டாக்கியதனல், கிண்ணத்தில் எஞ்சிய கள்ளைக் கவிழ்த்து விட்டு, வெறுங் கிண்ணத்தின் பின்புறத்திலே கள் இருப்பதாகக் கருதிக் கிண்ணத்தைத் தலைகீழாகப் பிடித்து வாயில் வைத்துப் பருக லானள் என்றபடி.

எள்: ஆகுபெயர்; மணி-பவளம் எனலும் ஆம். உப்புறம்-பின்புறம்: 'ஊழையும் உப்பக்கங் காண்பர்' (குறள். 620).

(பி - ம்.) 1. ஒருத்தி முன்கை.
2. தன்னறவை: உகுத்துந் தேற்ருள்; உகுத்துத்தேருள்.
3. உட்புறத்து; அப்புறத்து: உண்டென்றெண்ணி; உண்டென்றுள்ளி.
4. மறித்து நோக்கி; மறித்தும் வாங்கி; மீண்டும் வாங்கி; மணியித ழுதனின். (16)

1055. வான்றனைப் பிரித லாற்ரு வண்டினம் வச்சை மாக்கள்
ஏன்றமா நிதியம் வேட்ட விரவல ரென்ன வார்ப்பத்
தேன்றரு கமலச் செவ்வாய் திறந்துதே னுகர நாணி
ஊன்றிய கழுநீர் நாளத் தாளினு லொருத்தி யுண்டாள்.

வான் தனை பிரிதல் ஆற்ரு வண்டு இனம் - (வெற்றிடமாகிய) ஆகாயத்திலே சுழலுதலை விடுதலாற்ருத 'வண்டுக் கூட்டம், வச்சை மாக்கள் ஏன்ற-உலோபிகள் பெற்றுள்ள, மா நிதியம் வேட்ட-பெரும் பொருளை (இரந்து) பெற விரும்பிய, இரவலர் என்ன-இரவலரைப் போல, ஆர்ப்ப-ஆரவாரித்துக்கொண்டிருக்க, ஒருத்தி-ஒரு மங்கை, தேன் தரு கமலம் செவ்வாய் திறந்து-தேன் சிந்தும் தாமரை மலர் போன்ற (தன்) அழகிய வாயைத் திறந்து, தேன் நுகர நாணி-கள்ளைப் பருகக் கூசி, ஊன்றிய-கட் சாடியினுள் நாட்டப்பெற்ற, கழுநீர் நாளம் தாளினுல்-செங்கழுநீரின் உள்துளையுள்ள தண்டினுல், உண் டாள்-(கள்ளை உறிஞ்சிப்) பருகினுள்.

வண்டினம் ஆர்ப்ப, ஒருத்தி, வாய் திறந்து தேன் நுகர நாணி, தாளினுல் உண்டாள் எனக் கூட்டி முடிக்க.

கள்ளைப் பருகக் கருதிய ஒருத்தி, தன்னைச் சுற்றிலும் வண்டுக் கூட்டம் ஆரவாரித்துச் சுழன்றுகொண்டிருந்ததனுல்: தான் வாய் திறந்து கள்ளைப் பருகின் அவ்வண்டுகள் தன் வாயினுட் புகுதலுங் கூடுமென்று அஞ்சி, கள்ளைக் கிண்ணத்தில் ஊற்ருமலே, சாடியில் கழுநீர்த் தண்டை ஊன்றி அதன் வழியே உறிஞ்சிப் பருகினுள் என்க. இவள் பருகும் கள்ளில் வண்டுகள் மொய்த்தற்கும் இடமின்மையால், 'உலோபிகளிடத்துப் பொருள் பெறக் கருதும் இரவலர்போல' என உவமை கூறினர். 'வான்றனைப் பிரிதலாற்ரு' என்றது, வெற்றிடத்திலே எப்போதும் சுற்றித்திரியும் வண்டுகளின் இயல்பைக் கூறிய வாரும். நாணுதல் இங்கே கூசுதலைக் குறிக்கும்.

வச்சை மாக்கள்; 985-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. வான்றலைப்; வான்றுணைப்; மான்றன; மான்றனைப்: பிரிதலாற்ருள்; பிரிகிலாத; பிரியலாற்ரு: வான்றுணையிரியலாற்ரு: வண்டின மகிழ்ந்து தம்மில்; வண்டினை வரிசை மாக்கள்; வண்டினம் வசைசெய் மாக்கள்; வஞ்ச மாக்கள்; வைத்த மாக்கள்.

2. ஏன்றவர் நிதியம்; ஏன்றமா நிதியை; ஆன்றமா நிதியை; ஏன்றவானிதியம்; நெதியம்; நெதியை: ஆர்த்த; ஆன.

3. தேன்றகு: இறந்தன னுகர; இறந்ததை நுகர; இறந்தது நுகர: நாணின்.

4. கழிநீர்த்தாளின் நாளத்தால்; கமலநாளத் தாளினுல்; கழிநீர்த்தான நாளத்தால்; தாளிவன்ன நாளத்தால். (17)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

1056. புள்ளுறை கமல வாவிப் பொருகயல் வெருவி யோட
வள்ளுறை கழித்த வாள்போல் வசியுற வயங்கு கண்ணுள்
கள்ளுறை மலர்மென் கூந்தற் களியிள மஞ்ஞை யன்னாள்
உள்ளுறை யன்ப னுண்ணா னெனநற வுண்ண லெண்ணாள்.

புள் உறை-நீர்ப்பறவைகள் வாழ்கின்ற, கமலம் வாவி - தாமரையையுடைய குளங்களிலுள்ள, பொரு கயல்-(ஒன்றோடொன்று) மோதுகின்ற கயல்மீன்கள், வெருவி ஓட-(கண்ணுக்குத் தோற்று) அஞ்சியோடும்படி, வள் உறை கழித்த வாள்போல்-செறித்த உறையினின்றும் உருவப்பெற்ற வாளைப்போல, வசி உற வயங்கு-கூர்மையாக விளங்குகிற, கண்ணாள்-கண்களை உடையவளும், கள் உறை மலர்மென் கூந்தல்-தேன்தங்கும் பூச்சூடிய மெல்லிய கூந்தலையுடைய, களி இளமஞ்ஞை அன்னாள்-களிக்கும் இளமையான மயில் போன்றவளுமான ஒரு பெண், உள் உறை அன்பன்-தன் மனத்தினுள் (எப்போதும்) தங்குதலுடைய கணவன், உண்ணான் என-(கள்) உண்ணுதல் இலன் என்றதனால், நறவு உண்ணல் எண்ணாள்-(தானும்) கள்ளுண்ணுதலை நினையாதவளானாள்.

இங்குக் கூறிய மங்கை, கணவன் வழிச் செல்லுதலில் மாறாதவளாதலால், தன் கணவன் கள்ளுண்ணும் பழக்கமில்லாதவனென்பது கொண்டு, தானும் கள்ளுண்ணுதலை விரும்பவில்லையென்க. புள் உறைதலும் கமலம் உடைமையும் வாவிக்கு விசேடணம். வள் உறை-தோலுறையும் ஆம். வள்ளுறை: 1042.

(பி - ம்.) 1. உள்ளுறை கழிந்த; வாட்போல் வாளின்; வரியுற: வரியுறை; வசியற; வசியுறு; வசையற; வழங்கு; விலங்கும்: விலங்கு; கண்ணாற்.
3. நறுமென்; நறைமென்; நெறிமென்; நெரிமென்: களிபயில்; களியின மயிலேயன்னாள்.
4. இன்பன்; கணவன்; எனநறை; இன்னறவு; எனவுன்னி நறவையுண்ணாள்; என்றுன்னி நறவை யுண்ணாள். (18)

1057. அழிகின்ற வறிவி னாலோ பேதைமை யாலோ வாற்றுச்
சுழியொன்றி நின்றதென்னுமுந்தியா ளொருத்தி செந்தேன்
பொழிகின்ற பூவின் வேய்ந்த பந்தரைப் புரைத்துக் கீழ்வந்
திழிகின்ற கொழுநி லாவை நறவென வள்ளத் தேற்றாள்.

ஆறு சுழி-ஆற்றில் உண்டாகும் நீர்ச்சுழியானது, ஒன்றி நின்றது என்னும்-(இவளிடம் வந்து)தங்கி நிற்கின்றதென்னும்படியான, உந்தியாள் ஒருத்தி-(அழகிய) உந்தியையுடைய ஒருபெண், அழிகின்ற அறிவினாலோ-(கள்ளுண்டதனால்) மயங்கிய அறிவினாலோ, (அல்லது), பேதைமையாலோ-(இயல்பான) அறியாமையாலோ, பொழிகின்ற பூவின் வேய்ந்த-(மரங்கள்) சிந்துகிற பூக்களால்மூடப்பட்ட, பந்தரை-(கொடிகளாலான) பந்தலை, புரைத்து-துளைத்துக்கொண்டு, கீழ்வந்து இழிகின்ற-கீழே (தரைக்கு) வந்து சேர்கின்ற, கொழு நிலாவை-வள

மான நிலவொளியை, நறவு என-கள் என்று கருதி, வள்ளத்து ஏற்ருள்-கிண்ணத்தில் ஏந்திஞள்.

ஒருத்தி,அழிகின்ற அறிவிஞலோ,பேதைமையாலோ, நிலாவை நறவென வள்ளத்து ஏற்ருள் என்க. ஓகாரங்கள் ஐயப்பொருள் தருவன; எண்ணுப் பொருளன எனக் கொண்டும் கூறுவர்.

நிலவொளியைக் கள்ளென மயங்கல் : 1050.

(பி - ம்.) 1. அழிகின்ற சிந்தையாலோ: ஆற்றிற்.
2. சுழியொன்ற நின்றதன்ன; சுழியொன்று நின்றதன்ன; சுழி நின்ற தன்னவுந்தித்: தோகையா ளொருத்தி; தோகையங் கொருத்தி; சுழியொன்றி நின்றதன்ன வுந்தியாள் தூய செந்தேன்; சோர்தேன்.
3. பூவினேய்ந்த; பூவில் வேய்ந்த; மலரின் வேய்ந்த; பந்தரின் புறத்துக்: பந்தரைப் புரைந்து; பந்தரைக் கிழித்துக்: பந்தரிற் பொழிந்து: தாழ்வந்து.
4. இழைகின்ற நிலவை நான்ற; உள்ளத் தொத்தாள்; உள்ளந் தேற்ருள். (19)

1058 மின்னென நுடங்கு கின்ற மருங்குலா ளொருத்தி வெள்ளை
இன்னமு தனைய தீஞ்சொ லிடைதடு மாறி யேய்ந்த
வன்னமே கலையை நீக்கி மலர்த்தொடை யல்குல் சூழ்ந்தாள்
பொன்னரி மாலை கொண்டு புரிகுழல் புனைய லுற்ருள்.

மின் என நுடங்குகின்ற மருங்குலாள் ஒருத்தி-மின்னற் கொடி போலத் துவளுகின்ற இடையை உடைய ஒரு பெண், வெள்ளை-வெள்ளையான, இன் அமுது அனைய தீம் சொல்-இனிய தேவாமிர்தம் போன்ற (தன்) இனிய சொற்கள், இடை தடுமாறி-பேசுகையில் தடு மாற்றங் கொண்டதோடு,அல்குல் ஏய்ந்த வன்னம் மேகலையை நீக்கி-இடையிலே பொருந்திய பலநிறமுடைய மேகலாபரணத்தைக் களைந்து, மலர் தொடை சூழ்ந்தாள்-பூமாலையை (இடையிலே) சுற்றிஞள்; பொன்னரி மாலை கொண்டு-பொன்னரி மாலையைக் கையிற் கொண்டு, புரி குழல்-முறுக்கிக் கட்டிய கூந்தலை, புனையல் உற்ருள்-அலங்கரிக்கலாஞள்.

கள்ளுண்ட மயக்கத்தால், ஒரு பெண், பேச்சுக் குழறியதோடு, செயலிலும் தடுமாற்றங் கொண்டவளாய், அணிதற்குரியவற்றை மாறுபட அணிந்தாள் என்க. வெள்ளைத் தீஞ்சொல், இன்னமுதனைய தீஞ்சொல் எனக் கூட்டுக. கள்ளின் வேகம், பிறர் அறியத்தகாத மறையான பொருளையும் வெளிப்படப் பேசச் செய்யுமாதலால் 'வெள்ளைச் சொல்' எனப்பட்டது. 'சொல் விளம்பி' என்ற காரணப் பெயரும் கள்ளுக்கு உண்டு; களித்த நிலையால், குழறிப் பேசும் பேச்சும் கேட்போருக்கு இன்பம் தருவதாகலின், 'தீஞ்சொல்' ஆயிற்று.

வன்னம்-பலநிறம். அல்குல் இங்கே இடையைக் குறித்தது. பொன்னரிமாலை - மகளிர் கழுத்தணி வகையுள் ஒன்று; பொன்ஞு

வியன்ற மலர்கள் கோத்த மாலை யென்பர்; 938-பார்க்க. 'சுடர் மணித் தோளிற் றேன்றும், பொன்னரிமாலை நீல வரையின்வீ ழருவி பொற்ப...நடந்து வந்தான்' (யுத்த. 1572) என இராவணனைக்குறித்துக் கம்பநாடரே கூறுதலின், இம்மாலை, ஆடவரும் அணிதற்குரியது போலும். பெருங்கதை யுள்ளும், சீவக சிந்தாமணி யுள்ளும் இது மகளிர் தலையி லணிவதாகக் கூறுப்படுகின்றது; பெருங். 1- 40: 39-40, 349-50; 1. 41: 90; 2. 19: 75-6; சீவக, 349-ந, 2538-ந, 2663-பார்க்க.

(பி - ம்.) 1. ஒருத்தி வெள்ளத்து; வெள்ள; மெள்ள; மெல்ல.
2. இன்னமிழ்தனைய: தன்சொல்; நன்சொல்; இன்சொல்; இன்னமுதனைய சொல்லாள்; இடைத்தடுமாறி; உரைதடுமாறி; இடைதடுமாறி யென்ன; என்னே; வேய்ந்த; நெஞ்சம் : உரைதடுமாறு நீராள்.
3. மேகலையை நோக்கி: மடற்றேடை மருங்கிற் சூழ்ந்தாள்.
4. பொன்னணியாடை; பொன்னணிக் கலையே. (20)

(வேறு)

1059. கூற்றுறழ் நயனங்கள் சிவப்பக் கூனுதல்
ஏற்றிவா ளெயிறுக ளதுக்கி யின்றளிர்
மாற்றருங் கரதல மறிக்கு மாதொரு
சீற்றமா மவிநயந் தெரிக்கின் றாரினே.

ஒரு மாது-ஒருபெண், சீற்றம் ஆம் அவிநயம் தெரிக்கின்றாரின்-சினத்துக்குரிய அபிநயத்தைக் காட்டுபவர்கள் போல, கூற்று உறழ் நயனங்கள் சிவப்ப-யமனைப் போன்ற (தன்) கண்கள் சிவக்க, கூன் நுதல் ஏற்றி-வளைந்த புருவங்களை (நெற்றியில்) ஏற்றி, வாள் எயிறுகள் அதுக்கி-ஒளி பொருந்திய பற்களைக் கடித்து, இன் தளிர் மாற்று அரு கரதலம்-இனிய தளிரை(த்தன் அழகினால்) தோற்பிக்கும் (தன்) அரிய கைகளை, மறிக்கும்-(எதனையோ தடுப்பவள்போல) அசைப்பாள். மேல் கீழாகத் திருப்பிப் புடைப்பாள் என்றலுமாம்.

கள்ளுண்டவருள் சிலருக்குக் காரணமின்றியே சினமும் அதற்கேற்ற குறிகளும் தோன்றுவனவாம்; அத்தகைய நிலையிலிருந்த இம்மங்கை, வெகுண்டோரவிநயம் பிடித்துக் காட்டுபவர்போலக் காணப்பட்டாள் என்க. 'வெகுண்டோ னவிநயம் விளம்புங்காலை, மடித்த வாயு மலர்ந்த மார்பும், துடித்த புருவமும் சுட்டிய விரலும், கன்றிய வுள்ளமொடு கைபுடைத்திடுதலும், அன்ன நோக்கமொ டாய்ந்தனர் கொளலே' (சிலப். 3: 12-25. அடியார்க். உரை. மேற்.) கண்கள் ஆடவரை மரண வேதனைக்குள்ளாக்குவதனல் 'கூற்றுறழ் நயனங்கள்' எனப்பட்டன. குறள். 1083, 1085-பார்க்க. 'ஆற்றலுறு கொலையி லாரெனக் கொப்பென்று, கூற்றுவநீ வீண்செருக்குக்கொள்கின்றய்-சாற்றுவல்கேள்...ஒண்டொடியினீள்விழியுமுண்டு. (விசாகப். அணியிலக்கணம். மேற்). நுதல்-புருவம். (பிங்).

(பி - ம்.) 1. கூற்றுள நயனங்கள் சேப்பக் கூர்நுதல்.
2. ஏற்றுவாள்: ஏற்றின னெயிறுக வதுக்கியின்றளிர்; எயிறுகளெறிப்பக் கண்களால்.
3. மாற்றுலங் கரதலம்; மாற்றவெங்குருதிவேல்: விழிக்கு மாதர்மேல்: மறித்து மாதொரு; மறிக்குமாலொரு; மறிக்குமாறொரு.
4. சிற்றயா மபிநயம்; சிற்றமாம்படியினள்; தெரிக்கின்றுளரோ; தெளிக்கின்றுளரோ. (21)

1060. துடித்தவான் றுவரிதழ்த் தொண்டை தூநிலாக்
கடித்தவா லெயிறுக ளதுக்கிக் கண்களாம்
வடித்தவெங் குருதிவேல் விழிக்கு மாதர்மெய்
பொடித்தவேர் புறத்துகு நறவம் போன்றதே

துடித்த-துடித்துக்கொண்டிருந்த, வான் துவர் இதழ்-மிக்க சிவப்புடைய உதடுகளாகிற, தொண்டை-கொவ்வைக் கனியை, தூ நிலா கடித்த-வெள்ளிய நிலாவைக் காய்ந்த, வால் எயிறுகள் அதுக்கி-ஒளிமிக்க பற்களால் கடித்துக்கொண்டு, கண்கள் ஆம்-கண்களாகிற, வடித்த வெம் குருதி வேல்-கூர்மையாக்கப்பட்ட கொடிய இரத்தந் தோய்ந்த வேல்களாலே, விழிக்கும் மாதர்-உறுத்து விழிக்கும் ஒரு பெண்ணின், மெய் பொடித்த வேர்-உடம்பில் உண்டான வேர்வை, புறத்து உகு நறவம் போன்றது-(கசிந்து) வெளியே சிந்தும் கள்ளைப் போன்றிருந்தது.

ஒரு பெண்ணிடம், கோபக் குறிகளோடு, உடம்பிலே வேர்வையுந் தோன்றினமை கூறி, வேர்வை வெளிப்பட்டமை, உள்ளேசென்ற கள் புறத்தே பொசிந்ததுபோலக் காணப்பட்ட தென்றார். உதடுகள் துடித்தலும், பற்களால் உதட்டைக் கடித்தலும், கண்கள் சிவந்து உறுத்து விழித்தலும், உடல் வெயர்த்தலும் சினத்தின் குறிகள்; இவை, கட் குடித்தோரிடத்தும் உண்டாவனவாம். கண்களாம் வேலால் விழிக்கும் என்றது, வேல்போலக் கொடிய கண்களால் விழிக்கும் என்றபடி. நிலாவைக் கோபித்த என்றது, ஒளியால் நிலாவையும் வென்ற என்றவாறு. கடித்த=கடிந்த; வலித்தல் விகாரம்.

கோபக் குறிகள்: 'தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர் நுதன்மேல், வெண்டரள மென்ன வியர்வரும்பக் - கெண்டைக், கடைசிவப்ப நின்றாள்' (நள. 188).

(பி - ம்.) 1. துடித்தவாய்த்: தொண்டைத்தூய்நிலாக்.
2. கடுத்தவாலெயிறுகள்; கடித்தவாளரவெயிறு; கடித்தவாளிளவெயிறு; கடித்தவாயாலெயிறு; கடித்தவாலெயிறுகள் எறிப்பக்: கண்களால்.
3. வடித்த செங்குருதிவேல்; வடித்தரு மாதர்மேற்; வடிக்கு மாதர்மேற்.
4. பொடித்ததேர்; பொடித்ததோர்; பொடித்தது; புறத்துறு; தரளம் போன்றதே; நாணம் போன்றதே; நானம் போன்றவே. (22)

இப்பாடல் ஒரு சுவடியில் இல்லை.

1061. கனித்திர ளிதழ்பொதி செம்மை கண்புக
நினைப்பதொன் றுரைப்பதொன் றுமொர் நேரிழை
தனித்தட மரைமலர் முகத்துச் சாபமும்
குனித்தது பனித்தது குழவித் திங்களே.

ஓர் நேர் இழை-செவ்விய அணிகலன்கள் பூண்ட ஒரு பெண்ணின், கனி திரள் இதழ் பொதி செம்மை-கொவ்வைக் கனிபோலும் திரண்ட உதடுகளிலே நிரம்பியுள்ளசெந்நிறம்,கண்புக-(அவளுடைய) கண்களிலும் சென்று சேர, தனி தடம் மரை மலர் முகத்து-ஒப்பற்ற பெரிய தாமரை மலர் போன்ற முகத்தில்உள்ள, சாபமும் குனித்தது-(புருவமாகிய) வில்லும் வளைந்தது; குழவி திங்கள் பனித்தது-பிறைச் சந்திரன் போன்ற நெற்றியும் வேர்வை யரும்பிற்று; நினைப்பது ஒன்று உரைப்பது ஒன்று ஆம்-(அவள் மனத்தில்) நினைப்பது ஒன்றும் (வாயால்) சொல்வது வேறொன்றுமாயினள்.

முன்னர்க் கூறிய கண் சிவத்தல் முதலியவற்றோடு, பேச்சில் தடுமாற்றமும் உடையளாயினள் இம்மங்கையென்க. இதழ்: சாதி யொருமை. மரை: முதற்குறை;சாபம், திங்கள்:உருவகம். சாபம்சாதி யொருமையாய் அதற்கேற்ற ஒருமை வினைகொண்டது. குனித்தது= குனிந்தது; வலித்தல். திங்கள் என்றவிடத்து உம்மை தொக்கது.

(பி - ம்.) 1. இதழ்பொழி; இதழ்ப்பொழி; இலவிதழ்ச்.
2. உரைப்பதொன்றுயோர் நேரிழை.
3. தனிச்சுடர் தாமரை; தனிச்சுடர்த் தாமரை; தனித்தடத் தாமரை; தனித்தடந் தாமரை; முகத்திற் சாபமும்; முகத்த சாபங்கள்.
4. குனித்ததும் பனித்தது; குனித்தெனப் பனித்தது; குனித்தன பனித்தன

இப்பாடலும் ஒரு பிரதியில் இல்லை. (23)

1062. இலவிதழ் துவர்விட வெயிறு தேனுக
முலைமிசைக் கச்சொடு கலையு மூட்டற
அலைகுழல் சரிதர வசதி யாடலால்
கலவிசெய் கொழுநருங் கள்ளு மொத்தவே.

(கள்ளுண்ட பெண்களுக்கு), இலவு இதழ்-இலவம் பூப்போன்ற (சிவந்த) உதடுகள், துவர் விட-செந்நிறத்தை யிழக்க, எயிறு தேன் உக-பற்களிலே தேன் போன்ற நீர் ஊறி வெளிப்பட, முலை மிசை கச்சொடு-தனங்களில் (இறுக்கிய) கச்சுடனே, கலையும்-(இடையிலுள்ள) ஆடையும், மூட்டு அற-முடிச்சவிழ்ந்து நெகிழ, அலை குழல் சரிதர-(காற்றில்)அலையும் கூந்தல் குலைய, அசதி ஆடலால்-(உடலும்) தளர்ச்சியடைதலால், கலவி செய் கொழுநரும்-(அம்மகளிரைப்)புணரும் கணவன்மாரும், கள்ளும்—, ஒத்த-ஒருதன்மைய ஆயின.

இங்குக் கூறியவை, மகளிர் கணவரொடு புணரும்போதும், கள்ளுண்டபோதும் நிகழ்வனவாதலின், கணவரும் கள்ளும் ஒத்த

வாயின. உண்டாட்டுக் கூறப்படுதலால் கள்ளுக்குச் சிறப்புக் கொடுத்து, அதனொடு கூடிய உயர்திணைச் சொல்லாகிய 'கொழுநர்' என்பதற்கும் அஃறிணை முடிபு கொடுத்தார். திணைவழுவமைதி. ஆள்+தல்=ஆடல். அசதியாடல்-பரிகசித்தல் எனவும் உரைப்பர்.

நீர்விளையாட்டுப் படலத்துள், கணவருக்கும் பொய்கைக்கும் ஒப்புமை கூறினர்; (1024); இங்கே கள்ளோடு கணவருக்கு ஒப்புமை கூறினர். மு. ஒப்பு. திருவிளை. நாடு. 31.

(பி - ம்.) 1. இலவிதழ்த்துவர்; இலவிதட்டுவர்: எயிறுந்: எயிற்றுத்: தேனவாம்; தேன்வர: எயிறு தோன்றிட.
2. முலைமிசை; முலைமுகக்; கச்சொடும்.
3. அலைகுழல் சோர்தர; அலைகுழற் சரிதர; அலர்குழல் சரிதர; அலர்குழற் சரிதர; அசதியாட்டலால்; அதரியாடலால்.
4. கலவிசேர் கொழுநரும்; கொழுநனும்: ஒத்ததே. (24)

1063. கனைகழற் காமனாற் கலக்க முற்றதை
அனகனுக் கறிவியென் றறியப் போக்குமோர்
இனமணிக் கலையினா டோழி நீயுமென்
மனமெனத் தாழ்தியோ வருதி யோவென்றாள்.

கனை கழல்-ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த, காமனால்-மன்மதனாலே, கலக்கம் உற்றதை-(நான்) கலக்கமடைந்திருத்தலை, அனகனுக்கு அறிவி என்று-குற்றமற்ற என் தலைவனுக்கு அறிவிப்பாயாக என்று சொல்லி, அறிய-(தன்னிலையைக் கணவன்) அறியும் பொருட்டு, போக்கும்-(தோழியைத் தூதாக) அனுப்புகின்ற, ஓர் இனம் மணி கலையினாள்-பலவகை மணிகளாலான மேகலையை யணிந்த ஒருபெண், (அத்தோழியை நோக்கி), தோழி-தோழியே, நீயும்—, என் மனம் என-என் மனத்தைப் போலவே, தாழ்தியோ-(அங்கேயே) தங்கிவிடுவாயோ, (அல்லது), வருதியோ-(செய்தியை அறிவித்தவுடன்) திரும்பி வருவாயோ? என்றாள்—.

கள்ளுண்டதனால் காமம் தலைக்கேறிய ஒரு பெண், அப்போது தன் கணவன் தன்னைக் கூடுதற்கு அருகில் இல்லாமையால் வருந்தி, தன் நிலையைத் தன் கணவனுக்கு அறிவிக்குமாறு தோழியைத் தூதனுப்பலானாள்; அப்போது அவள், ஆராமையால், கணவனுக்குச் செய்தி யறிவித்தவுடன் அங்கே தாமதியாது திரும்பி வந்து, கணவன் உணர்ந்தமையை எனக்குத் தெரிவி' என்ற கருத்துப்படத்தோழியை நோக்கி, 'நீயும் என் மனமெனத் தாழ்தியோ; வருதியோ' என்றாள். தலைவியின் மனம் தலைவனையே நாடி நின்றதனால் அந்நிலையைத் தோழிக்கு வாய்விட்டுக் கூறி அவளை விரைந்து சென்றுவரத் தூண்டினாள் என்க.

அனகன்: 'அனகரு மணங்கனாரும்' (1006).

(பி - ம்.) 1. கனைகழற் கள்ளினுல்; கனைகடற் கள்வனுல்: கலகமுற்றதை,
2. அறையப்; அறைந்து; அறிவு! போகுமோர்; போகிய.
3. கலையினள்; கலையினேள். 4. தாழ்த்தியோ. (25)

1064. மானமர் நோக்கியோர் மங்கை வேந்தன்பால்
ஆனதன் பாங்கிய ராயி னுரெலாம்
போனவர் போனவர் தொடரப் போக்கினுள்
தானுமங் கவர்பினே தமிய ளேகினுள்.

மான் அமர் நோக்கி ஓர் மங்கை-மானையொத்த (மருண்ட) பார்வையுடையவளான ஒருபெண், வேந்தன் பால்-(தன்) தலைவனிடத்தே, ஆன-(தனக்கு) இசைந்த, தன் பாங்கியர் ஆயினுர் எல்லாம்-தன் தோழிமாரான எல்லாரையும், போனவர் போனவர் தொடர-முன் போனவரும் பின்போனவரும் (ஒருவரையொருவர்) தொடரும்படி, போக்கினுள்-(தூதாக) அனுப்பி, அங்கு அவர் பின்னே-அவ்வாறு சென்ற அவர்கள் பின்னே, தானும் தமியள் ஏகினுள்-(கடைசியில்) தானும் தனியாகச் செல்லலானுள்.

தோழிமார் பலரை உடையவளாயிருந்த ஒரு தலைவி, அவரனைவரையும் ஒருவர்பின் ஒருவராகத் தன் தலைவனிடம் தூதுபோக்கி, அவருள் ஒருவரும் விரையில் திரும்பிவராததனுல், தாழ்த்தல் தாங்காமல், தானே தலைவனுள்ளவிடத்தை நாடிச் செல்லலானுள் என்றவாறு. இஃது அவள் மனநிலையைத் தெளியக் காட்டுகிறது.

(பி - ம்.) 1. மாமானேனக்கியோர்; மான்விழி யொருத்தியோர்: மதுகை வேந்தன் பால். 2. பாங்கிமா ராயினேரெலாம்.
3. போனவர்ப் போனவர் தொடர்ந்து; போனவர் போனவர்த் தொடரப்; போனவர்ப் போனவர் தொடரப்.
4. அவர்கள்பின்: எய்தினுள்; ஏகின்ருள், (23)

பல பிரதிகளில் இதனையடுத்து 'விரைசெய் பூஞ்' என்ற பாடல் உளது.

1065. மன்றனு றொருசிறை யிருந்தோர் வாணுதல்
தன்றுணைக் கிள்ளையைத் தழீஇயென் னுவியை
இன்றுபோய்க் கொணர்கிலை யென்செய் வாயெனக்
கன்றிலோ டொத்தியென் றழுது சீறினுள்.

ஓர் வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றியுடையாளொரு மங்கை, மன்றல் நாறு ஒரு சிறை இருந்து-மணம் வீசுகின்ற ஓரிடத்தில் இருந்து, தன் துணை கிள்ளையை தழீஇ-தனக்குத் துணையான (தான் வளர்த்த) கிளியைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு, (அதனை நோக்கி), இன்று போய் என் ஆவியை கொணர்கிலை - நீ இன்று(வலியத் தூதாகச்)சென்று, என் உயிரனைய தலைவனை (இங்கே) அழைத்து வந்தாயில்லை; என் செய்வாய்-வேறு என்ன உதவி நீ எனக்

குச் செய்யப்போகிறாய்? எனக்கு அன்றிலோடு ஒத்தி-(இப்போது நீ) எனக்கு அன்றிற் பறவைபோலிருக்கின்றாய், என்று—, அழுது-அழுது கொண்டே, சீறினாள்-(அக்கிளியைக்) கோபித்தாள்.

தான் வளர்த்த கிளி தன்பக்கத்தில் இருந்து தலைவன் பேரைப் பலகால் சொல்லிக்கொண்டிருக்க, ஓரிடத்தில் தனியே அமர்ந்து தலைவனை நினைந்து வருந்திய ஒருத்தி, அக்கிளியை நோக்கி, 'நீ இப்போது சென்று என் உயிர்த் தலைவனை இங்கு அழைத்துவராமல், இங்கிருந்தபடியே அவன் பெயரைச் சொல்லிக் கூவி என்னை மேலும் வருத்துகின்றாய்; என்ன உதவியை நீ எனக்குச் செய்யப்போகிறாய்? ஒன்றுமில்லை என்றுகூறி அதனைக் கடிந்துகொண்டாள்.

அன்றிலின் குரல் கணவரைப் பிரிந்த மகளிருக்குத் துன்பந்தருவதாகும். இங்கே, கிளி, பழக்கத்தால் அம்மங்கையின் கணவன் பேரைத் திரும்பத்திரும்பச் சொல்லுதல் அவளுக்கு மேலும் துயர் விளைத்தலால் 'நீ எனக்கு அன்றிலோடொத்தி' என்றாள். அன்றிலைப் பற்றிய செய்திகளை 623-ஆம் பாட்டின் குறிப்பிற் காண்க. கிளி கொழுநன் பேர் சொல்லுதல் அடுத்த பாடலுட் காண்க.

(பி - ம்.) 1. மன்றலார் தரு சிறை யிருந்த.
2. தழீஇயெ னுவியை; தழீயென் னுவியை.
3. என் செய்வாயென; என்செய்தா யெனக்கு; என்னில் நீயுமவ்; ஆயின் நீ யெனக்கு.
4. அன்றிலொடொத்தி யென்று; ஒருத்தி யென்று; ஏகி யென்று: அழுதுகன்றினாள்; அழுத ரற்றினாள்; அழுது சொல்லினாள். (27)

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை,

1066. விரைசெய்பூஞ் சேக்கையாந் தெப்ப மீமிசைக்
கரைசெயா வாசையங் கடலு ளாளொரு
பிரைசமென் குதலையாள் கொழுநன் பேரெலாம்
உரைசெயுங் கிள்ளையை யுவந்து புல்லினாள்.

கரை செயா ஆசை கடல்-அளவிட முடியாத ஆசையாகிற கடலிலே, விரைசெய்-நறுமணம் தருகிற, சேக்கை ஆம் தெப்பம் மீமிசை-பூம்படுக்கையாகிய தெப்பத்தின்மேல், உளாள்-உள்ளவளான, ஒரு பிரைசம் மென் குதலையாள்-தேன்போலும், மென்மையான குதலைச் சொல்லுடைய ஒருத்தி, கொழுநன் பேர் எலாம் உரைசெயும் கிள்ளையை-(தன்) கணவனுக்குரிய பேர்களையெல்லாம் (கற்றபடி) சொல்லுகிற (தன்) கிளியை, உவந்து புல்லினாள்-மகிழ்ந்து தழுவிக் கொண்டாள்.

கணவன்பேரைக் கிளி சொல்லக் கேட்டல், பொதுவாக மகளிர்க்கு மகிழ்ச்சி தருவதாகும்; அதன் பொருட்டே, அவர்கள் வளர்க்கும் கிளிகளுக்கு அப்பெயர்களைத் தோழிகளாலே கற்பிப்பர். பிரிவு

நீட்டிக்கும்பொழுது சிலர்க்கு அதுவே துன்பத்தை மிகுவித்தலுங் கூடும். இவ்விருவகையினையும், முறையே இச்செய்யுளிலும் முந்திய செய்யுளிலுங் காண்க ஆசையைக் கடல் என்றதற்கேற்ப, படுக்கையைத் தெப்பம் என்றார். ஆசைக் கடலில் இருந்தாள் என்றது, கணவனைக் கண்டு கூடும் ஆசை மேலிட்டிருந்தாள் என்றபடி. ''கொழுநன் பேர் எல்லாம்' என்றது, அவனது இயற்பெயரோடு, பலவகையாலும் அவன் பெற்ற சிறப்புப் பெயர்களையும் குறிக்கும்.

பிரைசம் என் குதலையாள் எனவும் பிரித்துக்கூறலாம். பிரைசம்: அகர-ஐகாரப் போலி. ஆசையங்கடல்: அம்-சாரியை.

கிளி கொழுநன் பேர் சொல்லுதல்: 'மண்டமர் கடந்தவேல் நளன்வந்தானெனத், தொண்டைவாய் மடந்தையர் நாளுஞ் சொல்வன, பண்டரு மொழிக்கிளி பயின்று கூறலும், கண்டதோவிஃதெனக் காளை யெண்ணினன்' (நைடத. நளன்றூது. 68.)

(பி - ம்.) 1. விரை செறி; சேர்க்கையி னடுத்து; சேக்கையி னடுக்கம்; சேக்கையின் றெப்பம்; சேக்கையந் தெப்பம்; சேக்கையும் வெதும்ப.
2. ஆசை யாங்கடல்; ஆசை வெங்கடல்.
3. குதலையால்: பேர்விடாது.
4. உகந்துபுல்வினள்; உயிர்த்துச் சீறினள்; அயிர்த்துச் சீறினள்; உவந்து புல்கினள்; உவந்து கூறினள்; உவந்து நோக்கினள். (28)

1067. வளைபயின் முன்கையோர் மயில னாட்குத்தன்
இளையவள் பெயரினைக் கொழுந னீதலும்
முளையெயி றிலங்கிட முறுவல் வந்தது
களகள வுதிர்ந்தன கயற்க ணாலியே.

வளை பயில் முன்கை-வளையல்கள் அணிந்த முன்கைகளையுடைய, ஓர் மயில் அன்னாட்கு-மயில்போலும் சாயலாள் ஒருத்திக்கு, கொழுநன்-அவள் கணவன், தன் இளையவள் பெயரினை ஈதலும்-அவளுடைய இளையாளின் பெயரையிட்டு அழைக்கவே, முளை எயிறு இலங்கிட-முளைபோன்ற பற்கள் வெளியே தெரியும்படி, முறுவல் வந்தது-நகை தோன்றிற்று; கயல் கண்-கயல்மீன் போன்ற (அவள்) கண்களினின்றும், ஆலி களகள உதிர்ந்தன-நீர்த்துளிகள் களகளவென்று சிந்தின.

ஓர் ஆடவன், தன் மனைவியர் இருவருள் மூத்தவளுக்கு, சோர்வினால் இளையவள் பெயரையிட்டு அழைக்க, அது கேட்ட அவள், சினமும் வருத்தமுங் கொண்டு வெளிப்பட நகைத்துக் கண்ணீரும் சிந்தினாள் என்பதாம். 'இளையவள் பெயரை யீதலும்' என்றதனால் அவ்வாறு அழைக்கப்பெற்றவள் மூத்தவள் என்பது பெறப்பட்டது. கணவன் தவறுதலாக இளையாள் பெயரைச் சொல்லி யழைக்கவும், 'அவளிடம் அவனுக்குள்ள அன்புமிகுதியை அவன் கரந்து வந்துளான்;

இப்போது அது தானே வெளிப்பட்டது' என்று கருதிச் சினமும் துயரமும் ஒருங்கே கொண்டனள் மூத்தாள். வெளிப்பட நகைத்தது சினக்குறிப்பு.

களகள: இரட்டைக் கிளவியாகிய குறிப்பிடைச் சொல்.

(பி - ம்.) 1. மயிலனுடனக்கு; மயிலினுடனக்கு; மயிலன்னுட்குத்தன்.
2. பேரினைக் கணவன் ஈய்தலும்.
3. எயிறலங்கிட: முறுவல் பூத்தது.
4. களகள வுதிர்ந்தது. (29)

1068. செற்றமுற் றேகவோர் செம்மல் வெம்மையால்
பற்றலு மல்குலிற் பரந்த மேகலை
அற்றுகு முத்தின்முன் பவனி சேர்ந்தன
பொற்றொடி யொருத்திகண் பொழிந்த முத்தமே.

பொன் தொடி ஒருத்தி-பொன் வளையல்களணிந்த ஒரு பெண், செற்றம் உற்று ஏக-(ஊடலாலே தன் கணவனிடம்) கோபங்கொண்டு (அவனைவிட்டுச்) செல்ல முயல, ஓர் செம்மல்-ஒப்பற்ற தலைமகனான (அவள்) கணவன், வெம்மையால்-(அவளூடலைத் தீர்க்கும்) விருப்பத்தாலே, அல்குலில் பரந்த மேகலை பற்றலும்-அவளிடையில் பரவலாக அணிந்திருந்த மேகலாபரணத்தைப் பிடித்தவளவில், அற்று உகு முத்தின் முன்பு-(அம்மேகலை)அறுந்து சிந்திய முத்துக்களுக்கு முன்னே, கண் பொழிந்த முத்தம்-அவள் கண்கள் சொரிந்த நீர்த்துளிகளாகிய முத்துக்கள், அவனி சேர்ந்தன-தரையிலே சேர்ந்தன.

ஒரு மங்கை, தன் கணவனிடத்துக் குற்றங் கண்டு சினங்கொண்டு அவனை விட்டு விலகிச்செல்ல முயன்றபோது, அவளைத் தடுத்து நிறுத்தி அவளூடலைத் தீர்க்குங் கருத்துடன் அவன் அவள் மேகலையைப் பற்ற, அஃதறுந்து முத்துக்கள் சிதறி விழலாயின; அவள் ஊடல்தீராமல் குற்றத்தையே நினைந்து கண்ணீருகுத்தாள் என்றபடி. அறுந்த மேகலையின் முத்துக்கள் தரையிற் சேருமுன்பே அவள் கண்ணீர்த் துளிகளாகிய முத்துக்கள் தரையிற்சேர்ந்தன என்றதில் உள்ள நயம் ஓர்க. இது மிகை உயர்வுநவிற்சியணி. வெம்மை-விருப்பம். அல்குல்: இங்கே இடை.

(பி - ம்.) 1. செற்றமுன் புரிந்ததோர்; செற்றன ளேகவோர்; செற்றவ ளேகலும்; செற்றமென் புரிந்ததோர்; செம்மை வெம்மையால்.
3. அற்றுகு முத்தினம்; அற்றன முகத்தின் முன்; முகத்து முன்பு; மணியின் முன்பு; மனியினம்; அபினி சேந்தன.
4. கண் பொருத; கண் பொருத. (30)

1069. தோடவிழ் கூந்தலா ளொருத்தி தோன்றலோ
டூடுகெ னோவுயி ருருகு நோய்கெடக்
கூடுகெ னோவவன் குணங்கள் வீணையில்
பாடுகெ னோவெனப் பலவும் பன்னினாள்.

தோடு அவிழ் கூந்தலாள் ஒருத்தி-பூவிதழ்கள் விரியப்பெற்ற கூந்தலையுடைய ஒரு பெண், (கணவன் தன்னைக் கூடுதற்கு வந்தால்), தோன்றலோடு-கணவனோடு, ஊடுகென் ஓ-ஊடுவேனா, (அல்லது), உயிர் உருகும் நோய் கெட-என் உயிர் உருகுதற்குக் காரணமான (காம) நோய் தீரும்படி, கூடுகென் ஓ-(அவனைக்) கூடுவேனோ, (அல்லது), அவன் குணங்கள்-அவனுடைய நல்லியல்புகளை, வீணையில் பாடுகென் ஓ-வீணையில் அமைத்துப் பாடுவேனா, (யாது செய்யக்கடவேன் !) என-என்று, பலவும் பன்னினாள்-பலவற்றை ஆராயலானாள். பன்னினாள்-சொன்னாள் என்றலும் ஆம்.

இம் மங்கை பலவாறு ஆலோசித்தாள் என்றதனால், தன் கணவன் பக்கலில் இல்லாத, தனித்த நிலையில் இருந்தாள் என்பது பெறப்படும். எனவே, அவன் வந்தால் அவனிடம் தான் நடந்து கொள்ளும் வகை யாது எனச் சிந்திக்கலானாள் என்க. 'ஊடுதல் காமத் திற்கின்பம் அதற்கின்பம், கூடி முயங்கப்பெறின்' என்றபடி, முதலில் அவள் ஊடுதலை நினைத்தாள் போலும்.

(பி - ம்.) 1. தோழனோடு.
2. ஊடுகெனா; ஊடுவதென்: உயிருருகி; உயிருருக்கு; வரின் உருகு.
3. கூடுகெனா; வீணையால்.
4. பாடுகெனா; பாடுவெனோ. பலவு முன்னினாள்; பலவு மெண்ணினாள்.

(31)

1070. மாடகம் பற்றிய மகர வீணைதன்
தோடவிழ் மலர்க்கரஞ் சிவப்பத் தொட்டனள்
பாடின ளொருத்திதன் பாங்கு ளார்களோ
டூடின துரைசெயா ளுள்ளத் துள்ளதே.

ஒருத்தி-ஒரு பெண், ஊடினது-தான் கணவனோடு ஊடல் கொண்டதை, தன் பாங்கு உளார்களோடு உரைசெயாள்-தனக்குப் பாங்கான தோழிமார்களோடு சொல்லாதவளாய், மாடகம் பற்றிய மகரவீணை-முறுக்காணியை உடைய மகர வீணையை, தன்-தன்னுடைய, தோடு அவிழ் மலர் கரம் சிவப்ப-இதழ்கள் விரிந்த தாமரை மலர் போன்ற கைகள் சிவக்கும்படி, தொட்டனள்-கைக்கொண்டு, உள்ளத்து உள்ளது - (தன்) மனத்தில் உள்ள ஊடற் குறிப்பை, பாடினாள்-(பாட்டாகப்) பாடினாள். ஏகாரம், ஈற்றசை.

ஒருத்தி, உரை செயாள், தொட்டனள், பாடினள் எனக்கூட்டி முடிக்க. உரைசெயாள், தொட்டனள்: முற்றெச்சம்.

தன் ஊடலின் காரணத்தைப் பாங்கியரிடம் நேரே கூற நாணி, குறிப்பால் அவர்களுக் குணர்த்தின், குறிப்புணரவல்ல அவர்கள் அதனை யுணர்ந்து தலைவனைக் கூட்டுவித்தற்கு உரியன செய்வர் என்ற கருத்துடன் பாடினாள் என்க. அன்றி, தலைவனது குற்றத்தைத் தோழிமார் அறியின், தன்னிடத்துள்ள பேரன்பால் அவர்கள் தலைவனைப் பழித்தலுங் கூடும்; அது தகாது என்று கருதிக் கூறுளா யினாள் என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. மாடகம் பற்றினள்; பற்றினாள்; வீணையில்.
2. சிவக்கத்.
3. பாங்கினர்களோடு; பாங்கிமார்களோடு.
4. ஊடின ளுரைசெயாள்; ஊடின துரைசெயாது; ஓடின ளுரைசெய்தாள்; உள்ளத் துள்ளவே. (32)

1071. குழைத்தமென் கொம்பனா ளொருத்தி கூடலை
இழைத்தன ளதுவவ ளிழைத்த போதெலாம்
பிழைத்தலு மனங்கவேள் பிழைப்பி லம்பொடும்
உழைத்தன ளுயிர்த்தன ளுயிருண் டென்னவே.

குழைத்த-தளிர்த்த, மென் கொம்பு அன்னாள் ஒருத்தி-மெல்லிய பூங்கொம்பு போன்றவளான ஒரு பெண், கூடலை இழைத்தனள்-(தன் கணவன் வரவு குறித்துக்) கூடற் சுழியை(ப் பலமுறை) இட்டாள்; அது-அக்கூடற் சுழியானது, அவள் இழைத்த போதெல்லாம்—, பிழைத்தலும்-(கூடாது) பிழைபடவே, அனங்கவேள்-மன்மதனுடைய, பிழைப்பு இல் அம்பொடும்-(குறி) தவறுதல் இல்லாத அம்புகளால், உழைத்தனள்-மிக்க வேதனையுற்றவளாய், உயிர் உண்டு என்ன-(கண்டோர்) உயிர் உள்ளது என்று உணரும்படி, உயிர்த்தனள்-மூச்செறிந்துகொண்டிருந்தாள்.

'அவளுயிர் பிரிந்ததோ' என்று அயலில் உள்ளார் ஐயங்கொள்ளவும், உயிர்ப்பு ஓடுதலால் 'உயிர் உள்ளது' என மனந் தேறவும் ஆன நிலை யெய்தினாள் என்றவாறு, அம்பொடும்-அம்பினால்.

கணவன் அயலில் இல்லாது தனித்திருந்த ஒரு மங்கை, 'அவன் வந்து தன்னைக் கூடுவானோ' என்பதனைக் கூடலிழைத்துக் காணக் கருதி இழைத்துப் பார்க்க, பலமுறையும் அது கூடாது போகவே, மிகவும் கவலையுற்று அழிந்து உயிர் போகும் நிலை யெய்தினாள் என்க. 'கூடல் பிழைத்ததாயினும் மன்மதனம்பு பிழைத்தலில்லை' என முரண் தொடையோடும் பொருந்திய நயம் காண்க. கூடலிழைத்தலாவது: கணவனைப் பிரிந்த மகளிர், மீண்டுங் கணவனை விரைவிற் கூடுதல் உண்டோ இல்லையோ என அறிதற் பொருட்டு, மணலைப் பரப்பி, அதிலே, கண்களை மூடிக்கொண்டு விரலால் சுழியிட்டு, சுழியின் இரு தலையும் ஒன்றினால் கூட்டம் உண்டென்றும், ஒன்றாவிடின் இல்லை

யென்றும் உணர்தல்; இதனை 'ஆழியிழைத்தல்' என்றுங் கூறுவர். 'மின்னகு மணிவிரற்றேய வீழ்கணீர், துன்னரும் பெருஞ்சுழி யழிப்பச் சோர்வினேடு, இன்னகை நுளைச்சியர் இழைக்கும் ஆழிசால், புன்னை யம் பொதும்பர்' (யுத்த. 333); 'மருகற் பெருமான்வரிற், கூடுநீ யென்று கூடலிழைக்குமே' (தே திருஞான); 'மணற்குன்றி னீத்த கன்ருர் வருகென், ருழிதிருத்திச் சுழிக்கணக்கோதி' (திருச்சிற்.186); நாய்ச்சியார் திருமொழியில் நாலாந்திருமொழி முழுதும், 'கூடற்பெரு மானைக் கூடலார் கோமானைக், கூடப் பெறுவேனேற் கூடென்று-கூடல் இழைப்பாள்' (முத்தொள்); செருவேலான், பொன்ருங் கணி யகலம் புல்லப் பொருந்துமேற், குன்ருது கூடுகெனக் கூறிமுத்த வார் மணன்மேல், அன்ருங் கணியிழையாள் ஆழியிழைத்தாளே' (சீவக. 1037) என்பனவும் காண்க.

(பி - ம்.) 1. கொம்பன்னுள்.
2. இழைத்தன ளவ்வவள்; அவளவள்: அவளது; அவளவை; அவளஃது; அஃதவள்; அவ்விடத்து; இட்ட போதெலாம்.
3. பெருங்கை யம்பொடு; பெய்தவம்பினுல்.
4. உயிருண் டில்லென. (33)

1072. பந்தணி விரலினு ளொருத்தி பையுளால்
சுந்தர ஞெருவன்பாற் றூது போக்கினுள்
வந்தன னெனக்கடை யடைத்து மாற்றினுள்
சிந்தனை தெரிந்திலஞ் சிவந்த நாட்டமே.

பந்து அணி விரலினுள் ஒருத்தி-பந்தை அழகு செய்யும் விரல் களையுடையவளான ஒரு பெண், பையுளால்-பிரிவுத் துயரத்தால், சுந்தரன் ஒருவன்பால்-கட்டழகனுன தன் காதலஞெருவனிடம், தூது போக்கினுள்-(தோழியைத்) தூதாக அனுப்பினுள்; வந்தனன் எவ-அவன்வந்தானுக, கடை அடைத்து-வாயிலை அடைத்து, மாற்றினுள்-(உள்ளே வராதபடி) தடுத்தாள்; நாட்டம் சிவந்த-(அவள்) கண் கள் சிவந்தன; சிந்தனை தெரிந்திலம்-(அவள்) எண்ணம் (இன்னதென) அறிந்திலேம்.

பிரிவுத் துயர் பொருது தூதனுப்பியவள், அவன் வந்தவுடன் வாயிலை அடைத்துத் தடுத்தாள் எனில், அவனுக வராமல் தூதனுப் பும் வரை தாழ்த்தமையின், அவன் தன்னிடத்துக் கனிந்த காத லுடையானல்லன் எனக் கருதி ஊடியவாறும். 'சிந்தனை தெரிந்திலம்' என்றது 'உய்த்துணர வைத்தல்'.

பந்து அணி விரல்: இவள் கைப்பிடித்தலால் பந்து ஒரு தனி அழகுபெறக் காரணமான அழகிய விரல். பந்துபோலத் திரண்ட நுனியுடைய விரல் என்பாரும் உளர். பெண்கள் பந்தாடும் வழக்கம் பழமையானது; பெருங்கதையுள் 'பந்தடி கண்டது' என்ற ஒரு

பிரிவு தனியே மகளிர் பந்தாட்ட வகைகளை விரித்துக் கூறுகின்றது. சில தலங்களில் அம்பிகையின் பெயர் 'கந்துகக் கிரீடாம்பிகை', 'பந்தார் விரலி' என வழங்குதலும் காணலாம். 'பந்தார் விரலி' (திருப்பாவை. 18).

(ப - ம்.) 1. பைந்தளிர் மேனியாள்; பையுளாள்.
3, வந்தன ளெனக் கதவடைத்து.
4. தெரிந்தில; தெரிகில; தெரிகிலம்; தெரிக்கிலள்; தெரிந்தன. (34)

1073. உய்த்தபூம் பள்ளியி னூட னீங்குவான்
சித்தமுண் டொருத்தித னன்பன் றேர்கிலான்
பொய்த்ததோர் மூரியா னிமிர்ந்து போக்குவாள்
எத்தனை யிறந்தன கடிகை யீண்டென்றாள்.

உய்த்த பூ பள்ளியின்-(தோழிமார்) அமைத்த பூம்படுக்கையிலே (கிடந்து), ஊடல் நீங்குவான் சித்தம் உண்ட-ஊடல் நீங்கிக் கணவனைக் கூட மனங்கொண்ட, ஒருத்தி தன் அன்பன்-ஒரு பெண்ணின் காதலன், தேர்கிலான்-(அவள் கருத்தை) அறிந்திலன்; (அதனால் அவள்), போக்குவாள் - (கணவனுக்கு) உணர்த்துபவளாய், பொய்த்தது ஓர் மூரியால் நிமிர்ந்து-பொய்யான ஒரு சோம்பல் முரிப்பாகக் கைகால்களை நீட்டி, ஈண்டு-இப்போது, எத்தனை கடிகை இறந்தன-எத்தனை நாழிகைகள் சென்றன? என்றாள்—.

ஊடலோடு படுக்கையிலே கிடந்தவள், அது நீங்கிக் கணவனைக் கூடும் கருத்துடையவளானாள்; அதனை அவள் கணவன் அறியாமல் அவளைத் தீண்டினால் சீறுவாள் என்று அஞ்சி வாளாவிருந்தான்; எனவே. அவள் தன் குறிப்பை அவனுக்கு உணர்த்தும் வகையில் உறக்கத்தினின்றும் அப்போதே எழுபவள் போலச் சோம்பல் முரித்துக்கொண்டு, எத்தனை நாழிகையாயின? என்றாள். இதனால், அவன் மெய்தீண்டவும், பேசவும், தன் நோக்கம் நிறைவேறவும் இடமுண்டாகுமன்றோ?

உண்டொருத்தி=உண்ட ஒருத்தி; தொகுத்தல். போக்குதல்-உணர்த்துதல்; சீவக. 889-உரை. மூரி நிமிர்தல்-சோம்பல் முரித்தல்; 'முணங்கு நிமிர்தல்' எனவுங் கூறப்படும்; புறநா. 52: 2; 78; 2; 'சீரிய சிங்கம்......மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு' (திருப்பாவை. 23).

(பி - ம்.) 1. ஒத்தபூம்; பள்ளியில்; பள்ளியுள்; பள்ளிநின்று. நீங்குவாள்; நீக்குவாள்; நீங்கிடச்.
2. ஒருத்திக்க தன்பன்; ஒருத்திக்கி தன்பன்; ஒருத்தி தன்னன்பன்; தேர்இலன்; தேர்கலான்.
3. மூரியின்; போக்கினள்.
4. எத்தனை சென்றன கடிகை யின்றென்றாள். (35)

## ஆடவர் செய்திகள்

1074. விதைத்தமென் காதலின் வித்து மெய்ந்நிறை
முதைப்புன நனைத்திட முளைத்த வேயெனப்
பதைத்தன ளொருவன்மே லொருத்தி பஞ்சடி
உதைத்தலும் பொடித்தன வுரோம ராசியே.

ஒருத்தி-ஒரு மங்கை, பதைத்தனள்-(ஊடலால் மனம்)பதைத்தவளாகி, ஒருவன் மேல்-(தன் அன்பனான) ஓராடவன்மேல், பஞ்சு அடி உதைத்தலும்-செம்பஞ் சூட்டிய (தன்) காலால் உதைத்தவுடனே, (அவ் உதை படலால் உண்டான இன்பமென்னும் நீரானது), மெய்-அவனுடம்பாகிய, நிறை முதை புனம்-செய்நேர்த்திமிக்க பழங் கொல்லையை, நனைத்திட-நன்கு ஈரமாக்கிவிடுதலால், . விதைத்த-(அங்கு முன்னமே) விதைத்திருந்த, மென் காதலின்வித்து-நுட்பமான காதல் பயிரின் விதைகள், முளைத்த என-முளைத்திட்டன என்னும்படி, உரோமராசி-மயிர்க்கூட்டங்கள், பொடித்தன-சிலிர்த்தன.

இதுமுதல் மூன்று கவிகளால் ஆடவர் செய்திகள் கூறுகின்றார்.

ஊடல்மிக்க ஒரு மங்கையின் காலால் உதையுண்ட அவள் காதலனுக்கு, அவ்வுதை மிக்க இன்பம் பயந்ததனால், அவன் உடம்பு மயிர்க்கூச் செறிந்தது என்பதனை, அவனுடம்பு பண்படுத்திய கொல்லையாகவும், காதல் அதில் விதைத்த விதையாகவும், அவள் உதைத்ததனாலான இன்பம் அவ்விதை முளைத்தற்கேற்ற நீராகவும் வைத்து, காதல் வித்து முளைத்தது என்னும்படி மயிர் சிலிர்த்தது எனப் புனைந்து கூறுகின்றார். முதைப்புனம்-பண்படுத்திய பழங்கொல்லை; புன்செய்க் கொல்லைகளை எருவிட்டு உழுது புழுதியாக்கிப் பண்படுத்தி அதன்மேல் விதையை விதைத்த பின்பே நீர் பாய்ச்சுவர்; அந்த ஈரத்தால் விதைகள் முளைக்கும். இம்முறையை நுட்பமாக அமைத்துள்ளார். முதைப்புனம் : குறுந். 155 : 1.

ஏகாரம் இரண்டினுள் முன்னது இசை நிறை; பின்னது ஈற்றசை.

(பி - ம்.) 1. காதலி வித்த; வித்தும்; விதத்து; வியந்து; வியர்த்து: மெய்நிறை; மெய்ஞ்ஞிறை; வெஞ்சிறை; நெய் நிறை.
2. இதைப் புனல்; இதைபுனம்; இதைப்புனே; இதில்புனல்; முதைப்புனல்; நனைந்திட; நனைத்தவின்; நாட்கிடை; முளைத்ததே யெனப்; முளைப் பதே யெனப்; குழைத்ததோ வெனப்.
3. பதைத்தவன்; ஒருத்திமேல்; ஒருத்தன்மேல்; மேனிமேல்.
4. பொடித்தது; முளைத்தன: ரோம ராசியே. (30)

1075. ஏய்ந்தபே ரெழிலினு னொருவ னெய்தினன்
வேய்ந்தபோ லெங்கணு மனங்கன் வெங்கணை
பாய்ந்தபூம் பள்ளியிற் படுத்த பல்லவம்
தீய்ந்தவா நோக்கினன் றளிர்க்குஞ் சிந்தையான்.

ஏய்ந்த பேர் எழிலினன் ஒருவன்-அமைந்த பேரழகையுடைய ஓர் ஆண்மகன், எய்தினன்-(தன் காதலியை) அணுகினவன், எங் கணும்-(மேற்பரப்பு) முழுவதும், அனங்கன் வெம் கணை-மன்மத னுடைய விரும்பத்தக்க அம்புகளாகிய மலர்கள், வேய்ந்தபோல்-மூடியனபோல, பாய்ந்த-பரந்திருந்த, பூபள்ளியில்-பூப்படுக்கையிலே, படுத்த-பரப்பிய, பல்லவம்-தளிர்கள், தீய்ந்தவா(று) நோக்கினன்-கருகியிருத்தலைக் கண்டு, தளிர்க்கும் சிந்தையான்-மகிழும் மன முடையவனானன்.

கணவன், தன் பிரிவால் வருந்தும் மனைவியின் காமம் கைமிக்க நிலையைக் கண்டு வியந்து, தான் அவளைக் கூடுதற்குத் தடையொன்று மில்லை யென்றுணர்ந்து மகிழ்ந்தான் என்க. தலைவிக்கு உண்டாகிய காம வெப்பத்தைத் தணிக்கும் பொருட்டுத் தோழிமார் பூம்பள்ளி யின்மீது குளிர்ந்த தளிர்களைப் பரப்பி அதன்மேல் அவளைக் கிடத் தவும், அவளுடலின் வெப்பந் தணியாமல், அவ்வெப்பத்தாலே பசுந் தளிர்களும் கருகின என்று அவள் நிலையை மிகுத்துக் கூறினர். அந் நிலை, கணவனுக்குத் துணை செய்வதாயிற்று, ஒருவர் துயர் மற்றொரு வருக்கு மகிழ்ச்சி தருவதாகிய உலக வியற்கையும் இங்கே குறிப்பாகத் தோற்றுதல் காண்க.

எய்தினவன், நோக்கியவனுயத் தளிர்க்கும் சிந்தையானுயினன் என முடிக்க. தீய்ந்தவா: தொகுத்தல். நோக்கினன்: முற்றெச்சம். காமத்தீயால் பல்லவம் கருகுதல்: 605.

(பி - ம்.) 1. ஒய்ந்தபே ரொலியினன்.
2. மேய்ந்தபோலெங்கணு மனங்கன் வெஞ்சரம்;வேய்ந்தபோ லெங்கணுங் கண்டு வெங்கணை.
3. பாய்ந்து பூம்; பாய்ந்தெழும்; பாய்ந்தொரு;படுத் தொருத்தியைத்.
4. தியந்தன ; தீய்ந்தது; திந்தவா; நோக்கினன்; கண்டனன்; திகைக்கும்; தளிக்கும்; கண்டு கண்டுருகும்; சிந்தையால்; தோய்ந்தனன் களித்த னன் றெல்லை நூலினே. (37)

இச்செய்யுள் சிலபிரதிகளில் இல்லை; பலபிரதிகளில் இதுவும் அடுத்த கவியும் முன்பின்னுக மாறியுள்ளன.

1076. பொலிந்தவாண் முகத்தினன் பொங்கித் தன்னையும்
மலிந்தபே ருவகையன் மாற்று வேந்தரை
நலிந்தவா ளுழவனோர் நங்கை கொங்கைபோய்
மெலிந்தவா நோக்கித்தன் புயங்கள் வீங்கினன்.

மாற்று வேந்தரை நலிந்த - பகையரசரை வருத்திய, வாள் உழவன்-வாள் வீரனாகிய ஒருவன், ஓர் நங்கை கொங்கை-(தன்காதலியாகிய) ஒருத்தியின் தனங்கள், போய் மெலிந்த ஆறு நோக்கி-மிக மெலிந்திருந்தலைக் கண்டு, பொங்கி-கிளர்ந்து, தன்னையும் மலிந்த பேர் உவகையன்-தன்னையும் விஞ்சிய மிக்க மகிழ்ச்சியுடையவனும், பொலிந்த வாள் முகத்தினன்-(அம்மகிழ்ச்சியால்) விளங்கிய ஒளி பொருந்திய முகமுடையவனுமாகி, தன் புயங்கள் வீங்கினான்-தன் தோள்கள் பூரிக்கப்பெற்றான்.

தன் பிரிவு ஆற்றாது மனைவி மிக்க மெலிவடைந்திருத்தல் கண்டு, அப்போதே அவளைக் கூடுதற்குரிய வாய்ப்பை உணர்ந்து, மகிழ்ச்சியால் பூரித்தான் கணவன் என்க. இதுவும் முந்திய கவி போன்றது. தன்னையும் மலிந்த-தன்னையும் மீறி நிறைந்த. போய் மெலிதல்-மிகவும் மெலிதல்; போய்-இயல்பு கெட்டு எனவுமாம். மெலிந்தவா: ஈறு தொகுத்தல்.

வாளுழவன்: 755-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. வான் முகத்தினன்; வாண் முகத்தினள்; தன்னிலும்; தன்னினும்.
2. வலிந்த பேருவகையான்; உவகையின்: மாற்று வேந்தனை; மற்றும் வேந்தரை.
3. கொங்கை போல்; கொங்கையை.
4. மெலிந்திடப் பொருதனன் விடியுந் தோறுமே. (38)

1077. ஊட்டிய சாந்துவெந் துலரும் வெம்மையான்
நாட்டினை யளித்திநீ யென்று நல்லவர்
ஆட்டுநீர்க் கலசமே யென்ன லாயவோர்
வாட்டொழின் மைந்தற்கோர் மங்கை கொங்கையே.

ஊட்டிய சாந்து-(புயங்களிலும் மார்பிலும்) பூசிய சந்தனம் வெந்து உலரும் வெம்மையான்-சூடேறி உலர்தற்குக் காரணமான (காம) வெப்பங்கொண்டவனாகிய, ஓர் வாள் தொழில் மைந்தற்கு-வாட் போரில் வல்ல வீரன் ஒருவனுக்கு, ஓர் மங்கை கொங்கை-(அவன் காதலியான) ஒரு பெண்ணின் தனங்கள், நாட்டினை அளித்தி நீ என்று-'நாட்டை நீ நன்கு காக்கக் கடவை' என்று சொல்லி, நல்லவர்-சான்றோர்கள், ஆட்டும்-அபிஷேகம் செய்தற்கு வைத்த, நீர் கலசம் என்னல் ஆய-(மந்திரித்த) நீருள்ள பொன்குடங்கள் என்னும் படியாயின.

காதலியைப் பிரிந்திருந்து, அவளைக் கூடும் வேட்கையால் காம வெப்பம் மிக்க ஒரு வீரனுக்கு, அக்காதலியின் தனங்கள் அவ்வெப்பந் தணித்துக் குளிர்வித்தன என்பது கருத்து. இதனைத் தற்குறிப்பேற்றமாகப் புனைந்து கூறினர். 'காவி விழியார் கனதனமும்....வெம்மை தனில், இன்பமரும் சீதளமாமே' (நீதி வெண்பா).

கொங்கை: சாதியொருமை.

(பி - ம்.) 1. சாந்தம் வெந்து; சாந்தமும் உருகும்: வெம்மையாம்; வெம்மையின்; வெம்மையள்; வெம்மைபோய்; வெம்மைய; தன்மையின்.
2. நாட்டினன்; என்ற நல்லவர்; என்ன நல்லவர்.
3. ஆட்டு பொற்கலசமே; எண்ணல்: ஆனவோர்; ஆனதோர்; ஆயதோர்; ஆனபோர்.
4. மன்னற்கோர்; மன்னற்கோ மகளிர் கொங்கையே. (39)

## மகளிர் செய்திகள்

1078. பயிருறு கிண்கிணி பரந்த மேகலை
வயிரவான் பூணவை வாங்கி நீக்கினாள்
உயிருறு தலைவன்பாற் போக வுன்னினாள்
செயிருறு திங்களைத் தீய நோக்கினாள்.

உயிர் உறு தலைவன் பால்-(தன்) உயிருக்கு ஒப்பான தலைவனிடம், போக உன்னினாள்-(தானே) போக நினைத்த ஒருத்தி, பயிர் உறு கிண்கிணி-ஒலிக்கும் கிண்கிணி என்ற காலணியையும், பரந்த மேகலை-(இடையிலே) பரக்க அணிந்த மேகலையையும், வயிரம் வான் பூண் அவை-வைரத்தால் இயன்ற சிறந்த அணிகலன்களான பிறவற்றையும், வாங்கி நீக்கினாள்-கழற்றி நீக்கினவளாய், செயிர் உறு திங்களை-குற்றம் மிக்க சந்திரனை, தீய நோக்கினாள்-கருகிப் போகுமாறு (சினத்துடன்) பார்த்தாள்.

காமம் மிக்க ஒருத்தி, காதலன் தன்னை நாடி வருங்காறும் பொறுக்கமாட்டாதவளாய்த் தானே பிறர் அறியாமல் அவனிருக்குமிடம் சென்றடையக் கருதி, அதற்குத் தடையாகத்தக்க அணிகலன்களைக் கழற்றிவிட்டுப் போகத் தொடங்கும்போது, நிலா வொளி தன் செயலுக்குத் தடையாகுமே யென்ற நினைவு வர, சந்திரனைக் கடுஞ்சினத்துடன் நோக்கினாள் என்க.

கிண்கிணி-பாதச் சதங்கை; இது நடக்கும்போது ஒலிக்கும். மேகலையும் பிற அணிகலன்களும் கணவனை அணையுங்கால் இடையூறுவன; எனவே இவற்றை யெல்லாம் நீக்கினாள். சந்திரன், முன்னே தனக்குக் காமநோயைத் தூண்டி மிகுவித்ததனால், ஆற்றாளாகிக் காதலனிடம் பிறர் அறியாமல் தான்செல்ல முயலுகையில், அதற்கும் இடையூறாக ஒளி வீசுவதனால், சினம் மிக்குத் தீய நோக்கினாள்.

காதலன் பால், பிறர் அறியாமல் செல்லுதல்: 'பூஞ்சிலம்பார்ப் பறக்,கரந்து தம்முயிர்க் காதலர் பாற்செல்வார்' (நைடத.நகரப். 29).

(பி - ம்.) 1. பயிலுறு: பயிலுறை; கிங்கிணி.
2. வயிரவெண்; வயிரவொண்; வயிரமென்: பூணணி; பூணெலாம்; பூண்களை; பூணினாள்: நீங்கினாள்; நோக்கினாள்.
3. கணவன்பால்; கேள்வனில்; உன்னுவாள்.
4. செயிரறு: தீயின் நோக்குவாள். (40)

1079. ஏலுமிவ் வன்மையை யென்னென் றுன்னுதும்
ஆலைமென் கரும்பனை னொருவற் காங்கொரு
சோலைமென் குயிலனாள் சுற்றி வீக்கிய
மாலையை நிமிர்ந்தில வயிரத் தோள்களே.

ஆலை மென் கரும்பு அன்னான் ஒருவற்கு-ஆலையில் அகப்படும் மென்மையான கரும்பு போன்ற தலைவன் ஒருவனுக்கு, (அமைந்த), வயிரம் தோள்கள்-வச்சிரம் போன்ற (உறுதிமிக்க) கைகள், ஆங்கு-அவ்விடத்து, ஒரு சோலை மென் குயில் அன்னாள்-சோலையில் தங்கும் குயில் போலும் இனிய குரலுடைய காதலி ஒருத்தி, சுற்றி வீக்கிய மாலையை-சுற்றிக் கட்டின பூமாலையை, நிமிர்ந்தில-மீறுதன வாயின; ஏலும் இ வன்மையை-(அம்மாலைக்குப்) பொருந்திய இந்த வலிமையை, என் என்று உன்னுதும்-என்னவென்று எண்ணுவாம்!

காதலி, ஊடிய காலத்துத் தலைவன் கைகளைப் பூமாலையால் கட்ட, அவன் அக்கட்டை மீறுமல் பணிந்திருந்தான் என்பது கருத்து. அவன் அவ்வாறு இருந்தமைக்குக் காரணம், அவள்பால் உள்ள அன்பும் காதலும் ஆம். இதனை, மலர்மாலைக்குள்ள வன்மையை என்னவென்பது! என வியப்பதுபோலக் கூறுகிறார்; மாலையை நிமிர மாட்டாத தோள்களின் வன்மையை என்னென்பது! என இகழ்ச்சிக் குறிப்புத் தோன்றக் கூறினரென்றலும் ஆம்.

ஆலைக்கரும்பு-ஆலையில் அகப்படுதற்குரிய கரும்பு; இதனைத் தலைவனுக்கு உவமித்தது, அக்கரும்புபோலத் தலைவியிடத்து அகப்படுவோன் என்ற குறிப்பு; ஆலையில் அகப்பட்ட கரும்புபோலக் காதல் நோயால் உடல் மெலிந்தவன் என்றலும் பொருந்தும். 'கரும்பிலா ஒருவன்' என்ற பாடங்கொண்டு, கையில் கரும்புவில் இல்லாத மன்மதன் போன்றவனெனவும் கூறுவர்.

'ஆலை நீள் கரும் பன்னவன் தாலோ' (திவ். பெருமாள். 7: 1) என்பதும், 'எல்லியம்போ தினிதிருத்தல் இருந்ததோர் இடவகையில், மல்லிகைமா மாலைகொண்டங் கார்த்ததுமோ ரடையாளம்' (திவ். பெரியாழ்வார். 3. 10: 2) என்பதும், கங்குல்பாற் புகுந்த கள்வனிவ னெனக் கதுப்பிற் சூழ்ந்த, தொங்கலான் முன்கை யாத்து' சீவக. 1988) என்பதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. ஏலுமிவ் விளமையை; ஏலுமிவ் வண்மையை; எண்ணுதும்.
2. ஆலைமென் கரும்பிலா; ஆலைமென் கரும்பனாள்; ஆலைமென் கரும்பனார்; ஆலைமென் கரும்பிலார்; மாலைமென் கரும்பனன் வாச முசு தோள்; கரும்பிலாவாசம் வீசுதோள்.
3. குயிலினாள்; குழலினாள்; கிளியனாள்; கரும்பினாள்; கரும்பனாள்: சுற்று வீக்கிய.
4. மாலையை நிமிர்த்தில; அறுத்தில; மாலையின் நிமிர்ந்தில. (41)

1080. சோர்குழ லொருத்திதன் வருத்தஞ் சொல்லுவான்
மாரனை நோக்கியோர் மாதை நோக்கினுள்
காரிகை யவளிவள் கருத்தை நோக்கியோர்
வேரியந் தெரியலான் வீடு நோக்கினுள்.

சோர் குழல் ஒருத்தி-சோர்ந்த கூந்தலையுடைய ஒரு தலைவி, தன் வருத்தம்-தன் பிரிவாற்ருமையை, சொல்லுவான்-(குறிப்பாலே) தெரிவிக்கும் பொருட்டு, மாரனை நோக்கி-(ஓவியத்தில் எழுதிய) மன்மதனை (ஊன்றி) நோக்கி, ஓர்மாதை நோக்கினுள்-தன் தோழியாகிய ஒருத்தியைப் பார்த்தாள்; காரிகை அவள்-அத்தோழி, இவள் கருத்தை நோக்கி-தலைவியின் கருத்தை (க்குறிப்பினுல்) அறிந்து, ஓர் வேரி அம் தெரியலான்-மணம்மிக்க அழகிய பூமாலையணிந்த ஒப்பற்ற தலைவனது, வீடு நோக்கினுள்-இருப்பிடம் நோக்கிச் செல்லலானுள்.

தலைவி தன்வருத்தத்தைக் குறிப்பாலே தோழிக்குத்தெரிவிக்க, குறிப்பறியும் ஆற்றலுடைய தோழி அதனை அறிந்து, தலைவியின் துயர்தீரத் தலைவனை அழைத்து வருவேனென்ற குறிப்போடு அவனிருக்குமிடம் சென்ருள் என்கின்றது இப்பாட்டு. வீடு-இருப்பிடம். சோர் குழல்-அவிழ்ந்து தொங்கிய கூந்தல்; இது வருத்தமிகுதியைப் புலப்படுத்தும். மகளிர், மன்மதனையும் இரதியையும் சித்திரத்தில் எழுதி வைத்திருத்தலுண்டென்பர். அவ்வாறமைந்த மாரனையே தலைவி நோக்கினள் என்க; அதன் குறிப்பு, அவனுல் தான் வருத்தப் படுதலை உணர்த்துவது. 'மாதை நோக்கினுள்' என்றதற்கு, மன்மதனுடன் அயலில் உள்ள ரதியையும் மாறிமாறிப் பார்த்தாள் எனவும், அக்குறிப்பறிந்த தோழி தானகவே தலைவனை அழைத்துவரச்சென்றனளெனவும் கருத்துக் கொள்ளலாம். காரிகை அவள்-அழகுடையவளான அத்தோழி.

குறிப்பிற் குறிப்புணர்தல்: 'அருந்தவனும், புனைந்த சடை முடி துளக்கிப் போரேற்றின் முகம் பார்த்தான்; வனைந்தனைய திருமேனி வள்ளலுமம் மாதவத்தோன், நினைந்ததனை நினைந்தந்த நெடுஞ் சிலையை நோக்கினுன்' (766) என்பதிற் காண்க.

(பி - ம்.) 1. சொல்லுவாள்; சொல்லலள்.
2. மாரனை நோக்கினுள்; நோக்கியே; மாதை நோக்குவாள்; மதியை நோக்கினுள்; மான்றல் நோக்கினுள்.
3. காரிகை யிவளவள்; காரிகையவளவள்; காரிகையாளவள்: கருத்தை புன்னியோர்.
4. வேரியந் தொடையலான்; தொடையிவான்; தாரினுன்; நோக்கினுன்.

இப்பாடல் சிலபிரதிகளில் 'தொகுதரு' (1082) என்பதன்பின் உள்ளது. (42)

1081. சினங்கெழு வேற்கையோர் செம்மல் பாலொரு
கனங்குழை மயிலனுள் கடிது போயினுள்
மனங்குழை நறவமோ மாலை தான்கொலோ
அனங்கனே யார்கொலோ வழைத்த தூதரோ.

சினம் கெழு வேல் கை-கோபம் பொருந்திய வேலைத் தாங்கிய கையையுடைய, ஓர் செம்மல் பால்-ஒரு தலைவனிடத்து, ஒரு கனம் குழை மயில் அன்னுள்-பொற்குண்டலங்களையணிந்த மயில்போலும் சாயலுடையாளொருத்தி, கடிது போயினுள்-(தானே) விரைந்து செல்லலானுள்; அழைத்த தூது-(அவ்வாறு செல்லும்படி) அவளை அழைத்த தூது, மனம் குழை நறவமோ-(உண்டார்) மனத்தைக் குழையச் செய்யும் கள்ளோ? மாலை தான் கொல்லோ-மாலைக் காலந் தானே? அனங்கனே-(உருவிலியாகிய) மன்மதனே? யார் கொலோ-வேறு யாரோ? (அறிகிலேம்). அரோ: அசை.

தலைவன் தன்னை நாடி வருங்காறும் பொறுக்காமலும், இருவரிடையே வெளிப்படையான தூதொன்றும் இன்றியும், தலைவி தானே தலைவனிடம் விரைந்து சென்றது ஏனே? என்ற ஐயத்தைத் தோற்றுவித்து,அதற்கு விடையாக, இங்கே குறித்தவற்றுள் ஏதேனுமொன்ரே, எல்லாமோ தூதாகியிருத்தல் கூடும் என்கின்ருர். கள் காமத்தை மிகுவிப்பது; இராப்பொழுது காமத்திற்குத் துணையாகிக் காதலர் கூடுதற்கேற்ற மறைவிடமும் தருவது; அனங்கன் செய்தியோ சொல்ல வேண்டுவதில்லை. எனவே, இவற்றை எடுத்துக் கூறி, இறுதியில் 'யாரோ' என்ற ஐயவினுவை மேலும் இட்டுவைத்தார். இவற்ருல், காமத்தின் ஆற்றலை வியந்தவாருும்.

(பி - ம்.) 1. சினங்கெழும்; சினங்கெழுவு: வாட்கையோர்; வேட்கையோா; வேற்கையான்; விற்கையோர்; அபிற்கையோர்; செம்மலாலொரு; செம்மலா ஞெரு; செம்மல் போலொரு.
2. பொனங்குழை; புனங்குழை; கனங்குழல்; மயிலினுள்: கடிந்து போயினுள்; தூது போக்கினுள்.
3. மனங்குறை நறவினும்; வினுவினும்: மனங்குறை கூறுமுன் மாலை தாங்கொலோ.
4. ஆர் கொலோ; தூததே; தூதரே. (43)

1082. தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்தோர்
வகிர்மதி நெற்றியண் மழைக்க ணூலிவந்
துகுதலு முற்றதென் னென்று கொற்றவன்
நகுதலு நக்கன ணுணு நீக்கினுள்.

தொகுதரு காதல்கு தோற்ற-நிறைந்த காதலுக்குத் தான் தோற்றதனுலுண்டான, சீற்றத்து-சினத்தையுடைய, ஓர் வகிர்மதி நெற்றியள்-பிறைச் சந்திரன் போன்ற நெற்றியுடைய ஒருத்தியின், மழை கண்-குளிர்ந்த கண்களினின்றும், ஆலி வந்து உகுதலும்-நீர்த்

துளி வந்து சிந்த, கொற்றவன்—அவள் கணவன், உற்றது என் என்று நகுதலும்-உனக்கு நேர்ந்தது யாது என்றுகூறி நகைக்கவே, நக்கனள்-அவளும் நகைத்தவளாய், நாணும் நீக்கினள் - நாணத்தையும் விட்டாள்.

கணவன் அருகில் இல்லாதபோது ஊடலால் சினங்கொண்டவள், அவன் வந்தவுடனே அச்சினம் மாறி, பிரிவுத் துயரின் நினைவும் காதலும் மேலிடக் கண்ணீர் சிந்தினள். அதுகண்ட கணவன், 'நான் அருகில் இருக்கும்போது நீ அழுதற்கு யாது நேர்ந்தது' என்று கூறிச் சிரிக்க, அவளும் உடன் நகைத்து, அவனோடு கூடுதற்கேற்றவாறு நாணத்தையும் விட்டாள். கணவன் தன்னைத் தனியே விட்டுத் துயருறச் செய்ததனால் சினங்கொண்டவள், அவனைக் கண்டவுடன் காமம் தலைக்கொள்ளக் கோபத்தை விட்டுவிட்டதனால், 'காதற்குத் தோற்ற சீற்றத்தாள்' என்றார். அவள் சீற்றத்தை எளிதில் மாற்றி விட்டமையின், கணவனைக் 'கொற்றவன்' (வெற்றி கொண்டவன்) என்றார்.

வகிர்மதி=பிளந்தமதி=பாதிச்சந்திரன். காதல் சீற்றத்தை வெல்லுதல் : 1099; சுந்தர. 470.

(பி - ம்) 1. கலவிக்குத் தோற்ற சீற்றத்தால்.
2. வகிர்நுதி நெற்றியோள்; மழைக்கண்ணுலி; மழைக்கணுலி வெந்து.
3. உற்றதெனென்று; உற்றவனன்று; உகுத்தலுங் கொற்றவ னுற்றதென்னென்று.
4. நகுதலு நந்கனன்; நக்கவள்; நோக்கினள்; நோக்கினள்; நாண நீங்கினள். (44)

1083. பொய்த்தலை மருங்குலா ளொருத்தி புல்லிய
கைத்தல நீக்கினள் கருத்தை நோக்கினள்
சித்திரம் போன்றவச் செயலொர் தோன்றற்குச்
சத்திர மார்பிடைத் தைத்த தொத்ததே

பொய்த்து-(தோற்றுதல்) இல்லையாகி, அலை-வருந்துகின்ற, மருங்குலாள்-இடையுடையவளான, ஒருத்தி—, புல்லிய-(தன்னைத்) தழுவியிருந்த, கை தலம் நீக்கினள்-(கணவனது) கையை எடுத்து விட்டு, கருத்தை நோக்கினள்-(அவன்) மனநிலையை ஆராயலானாள்; சித்திரம் போன்ற அ செயல்-விசித்திரமான அச்செய்கை, ஓர் தோன்றல் கு-ஒப்பற்ற தலைவனான (அவள்) கணவனுக்கு, மார்பு இடை-மார்பிலே, சத்திரம் தைத்தது ஒத்தது-வேல் பாய்ந்தது போன்றிருந்தது.

தலைவனுடைய மனநிலையைச் சோதிக்குமாறு தலைவி, இறுகத் தழுவி யிருந்த அவன் கையை நெகிழ்த்து எடுத்துவிட, காரணமறியாத தலைவன் துணுக்குற்றான் என்க. 'புல்லிய கைத்தலம்' என்று

பொதுவாகக் கூறினுரேனும், கணவனது கையெனக் கொள்ளுதல் சிறப்பாகும். மனமொன்றிக் கூடித் தழுவி யிருந்தபோது, தன் கவவுக்கையை அவள் நீக்கக் காரணம் இல்லையாதலால், அச்செயல் அவனுக்கு விசித்திரமாகத் தோன்றியது; அதனுல், தன்னையறியாமலே தான் செய்த குற்றம் ஏதேனும் உண்டோ என்ற ஐயமும் அச்சமும் கொண்டான் என்னலாம். மதுவுண்ட மயக்கத்தால் கையை நீக்கினள் என்பாரும் உளர்; அதற்கேற்ப அவர்கள் கொண்ட பாடம் 'கருத்தின் நீக்கலள்' என்பது.

சத்திரம்: வடசொற்றிரிபு; ஆயுதப் பொதுப்பெயர்.

(பி - ம்.) 1. பொய்த்தல மருங்கினுள்.

2. கைத்தலை நீத்தவள்; நீத்தவன்; நீத்தனள்; நீங்கிலள்! கருத்தி னீக்கலன்; கருத்து நீக்கிலள்; கருத்தை நீக்கிலாள்; கருணை நீக்கலள்; நீக்கலாள்; நீங்கிலள்; நோக்கினள்; நோக்கிலள்.

3. போன்றதச் செயலோர்; போன்றவச் சிலைக்கை மன்னற்குச்.

4. ஒத்தவே. (45)

1084. மெல்லிய லொருத்திதான் விரும்புஞ் சேடியைப்
புல்லிய கையினள் போதி தூதெனச்
சொல்லுதற் கிசைந்துபின் ஞுணிச் சொல்லலள்
எல்லையில் பொழுதெலா மிருந்து விம்மினுள்.

மெல் இயல் ஒருத்தி-மென்மைத் தன்மையுடைய ஒருமங்கை, தான்விரும்பும் சேடியை-தன்விருப்பத்துக்குஇடமான ஒருதோழியை, புல்லிய கையினள்-தழுவிய கையை உடையவளாய், தூது போதி என சொல்லுதற்கு இசைந்து-நீ (தலைவனிடம்) தூது போவாயாக என்று சொல்ல முற்பட்டு, பின் நாணி-பின்பு (அவ்வாறு சொல்ல) நாணங்கொண்டு, சொல்லலள்-(கடைசிவரை அதனைச்) சொல்லாதவளாய், எல்லை இல் பொழுது எல்லாம் இருந்து-முடிவில்லாத இராப் பொழுது முழுதும் (வாளா)இருந்து, விம்மினுள்-துயரமிக்கவளானுள்.

ஒருபெண், தன் காதலன் வாராமையினுல், தன் அன்புக்குரிய தோழி ஒருத்தியைத் தூதனுப்பக் கருதி 'நீ போய் வா' என்று அவளிடம் சொல்ல முற்படுவதும், வெட்கத்தால் அதனைச் சொல்லாமல் நிறுத்திக்கொள்வதுமாக இரா முழுதும் வருத்தத்துடன் போக்கினுள் என்க. நாணம் மிக்க இயல்புடையவளாதலால், தன் மனத்துக்கிசைந்த பாங்கியினிடத்தும் அதனைவிட்டுக் கூருமல் மனத்துள்ளேயே துயரை அடக்கிப் பொருமினுள். துயரமிக்கவர்க்குப் பொழுது மிகவும் நீட்டிப்பதாகவே தோற்றுமாதலால், 'எல்லையில் பொழுது' என்ருர்.

‘ஊழி பலவோர் இரவாயிற்றே வென்னும்’ (நள. 106), என்பதும் காண்க. குலமகளிர், தம் காமத் துன்பத்தைத் தாமே கூற நாணு வர் என்பது: ‘தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப, தாமெனலாவதன்றே லருங்குல மகளிர்க் கம்மா’ (ஆரணிய. 264); ‘கன்னிய ருற்றநோய் கண்ணனுர்க்குமஃ, தின்னதென் றுரையலர் நாணின்’ (சீவக. 1028); தெரிவையர்க்குளங் கூசுமாசைநோய் கூறு கிற்பது’ (வி-பா. வேத்திர. 5).

(பி - ம்.) 1. விரும்பு சேடியை.
3. சொல்லுவானுறு முறநாணும். (46)

1085. ஊறுபே ரன்பினு ளொருத்தி தன்னுயிர்
மாறிலாக் காதலன் செய்கை மற்றொரு
நாறுபூங் கோதைபா னவில நாணுவாள்
வேறுவே றுறச்சில மொழிவி ளம்பினாள்.

ஊறு பேர் அன்பினுள் ஒருத்தி-(காதலனிடத்து) மேன்மேலும் சுரக்கும் பேரன்புடைய ஒருபெண், தன் உயிர்-தனது உயிர் போன்ற, மாறு இலா-(தன்னோடு என்றும்) மாறுபடுதல் இல்லாத, காதலன் செய்கை-அக் காதலனது, (பிழைபட்ட) செய்கையை, மற்று ஒரு நாறு பூ கோதை பால்-வேறொரு, மணம் வீசும் பூச்சூடிய கூந்தலை யுடையவளிடத்து, (தோழியிடம்), நவில நாணுவாள்-சொல்ல வெட்கங்கொண்டவளாய், வேறு வேறு உற - (ஒன்றுக்கொன்று) பொருந்தாத வகையில், சில மொழி விளம்பினாள்-சில வார்த்தை களைச் சொன்னாள்.

தலைவியும் தன் உயிர்க் காதலனிடத்து மாறாது சுரக்கும் அன்பு டையவள்; அவனும் அவள் கருத்துக்கு மாறுபாடு சிறிதும் இல் லாத ஒருமைப்பாடுடையவன். அங்ஙனமிருந்தும், இப்போது அவள் துயருறச் செய்த அவன் செயல்பற்றி ஆராமையால் தோழியிடம் சொல்ல வந்தவள், அது தகாதென்று கருதித் தொடர்பில்லாமல் ஏதோ சில வார்த்தைகளைச் சொன்னாள் என்றவாறு. கருத்து ஒற்று மையில் இதனை முன் கவியுடன் ஒப்பிடுக. தலைவனது குற்றத்தைத் தலைவி பிறரிடங் கூறாமை: ‘தேங்கமழ் விறல்வெற்ப, தன்னெவ்வங் கூறினும் நீ செய்த அருளின்மை, என்னையு மறைத்தா ளென்தோழி’ (கலி. 44: 7-9).

(பி - ம்.) 1. அன்பின ளொருத்தி யாங்கொரு; அங்கொரு.
2. காதலான் செய்கை; காதலன் செயலை; காதலன் செலவை; காதலன் செவ்விமாறொரு; வேறிலாக்காதலன்விளைவைவேறொரு.
3. கோதையைச்சொல்ல; சொல்லல்; கோதையிற் சொல்ல; நண்ணுவாள்.
4. வேறுவே றுளசில; வேறுறச் சிற்சில; மொழி விளம்புவாள். (47)

1086, உருத்தெரி தன்மைய துயிரு மொன்றுதம்
அருத்தியு மத்துணை யாய நீரினர்
ஒருத்தியு மொருவனு முடலு மொன்றெனப்
பொருத்தின ரிவரெனப் புல்லி னரரோ.

உரு தெரி தன்மையது-(இரண்டு) உருவமாகத் தோற்றும் தன்மையுடையதான, உயிரும்-(இருவருடைய) உயிரும், ஒன்று-ஒன்றே (ஆக), தம் அருத்தியும்-அவ்விருவருடைய ஆசையும், (மனமொத்த அன்பும்), அ துணை ஆய-அவ்வளவினதான, (ஒன்றேயான), நீரினர் - தன்மையுடையவர்களாகிய, ஒருத்தியும் ஒருவனும்-ஒரு தலைவியும் தலைவனும், இவர் உடலும் ஒன்று என பொருத்தினர்-இவர்கள் உடம்பும் ஒன்றேயென்னும்படி பொருத்திக்கொண்டனர், என-என்று (கண்டோர்) கூறுமாறு, புல்லினர்-(ஒருவரையொருவர்) இறுகத் தழுவினர். அரோ: அசை.

காதலர் ஈருடற்கு ஒருயிராதல்: 'காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர், ஆகத்து ளோருயிர் கண்டனம் யாம்' (திருச்சிற். 71); 'ஒருயி ராக வுணர்க வுடன்கலந்தார்க், கிருயி ரென்ப ரிடைதெரியார்' (பு-வெ. 262); 'காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும், ஆவிபோல் ஆடையுமொன் றானதே' (நள. 252); 'ஒருயி ரிரண்டு மெய்யா யுருகுவார்' (வி-பா. சம்பவ.91). காதலர் உடம்பு ஒன்றாகக் கலத்தல்: நஞ்சுற்ற காமம் நனி நாகரிற் றுய்த்தவாறும்' (சீவக. 11) என்பதும், அதற்கு நச்சினார்க்கினியர் கூறிய விசேட வுரையும் காண்க. 'ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி, இருவ ரெனுந்தோற்ற மின்றிப்-பொருவெங், கனற் கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார், புனற்கே புனல்கலந்தாற் போன்று' (நள. 164); 'ஈருடலை ஒருடம்பா இசைவிப்ப தென்னம்பே' (பாசவதைப்).

(பி - ம்.) 1. உருத்தெரி தன்மையும்; கருத்தொரு தன்மைய; தருக்கொரு தன்மைய; உயிரு மொன்று தாம்; உயிரு மொன்று காண்; உயிரு மொன்றதாம்; துயரு மொன்றுதம்.
2. அருத்தியு மித்துணை: ஆய நீரினள்; நீரினன்; நீர்மையான்; நீர்மையால்; நீர்மையாள்; தன்மையால்.
3. ஒருத்தியு மொருத்தனும்; ஒருத்தனு மொருத்தியும்: உடம்பு மொன்றெனப்; உடலு மொன்றிடைப்.
4. பொருத்துவராமெனப்; பொருத்தின ரன்புறப்; புல்லினனரோ: பொருத்தினர் விடிதொறும் பூசலின்கணே. (48)

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை.

1087. வெதிர்பொரு தோளினு ளொருத்தி வேந்தன்வந்
தெதிர்தலுந் தன்மன மெழுந்து முன்செலக்
கதுமெனக் கையுற வணங்கி னுளது
புதுமையா தலினவற் கச்சம் பூத்ததே.

வெதிர் பொரு தோளினுள் ஒருத்தி-பசிய மூங்கிலை யொத்த தோள்களையுடைய ஒரு பெண், வேந்தன் வந்து எதிர்தலும்-தன் கணவன் வந்து எதிர்ப்பட்டவளவில், தன்மனம் முன் எழுந்து செல்ல-தன்னுடைய மனம் முன்னதாக எழுந்து (அவனிடம்) செல்ல, கதும் என-விரைவாக, கை உற வணங்கினுள்-கைகுவித்து (அவனை) வணங்கினுள்; அது புதுமை ஆதலின்-அச்செயல் (அவளிடத்தில்) புதியது ஆதலால், அவற்கு-அவனுக்கு, அச்சம்பூத்தது-அச்சம் உண்டாயிற்று.

தன்னைக் கண்டவுடன் காதலி முன்பு ஒருநாளும் இல்லாத வகையில் கைகுவித்து வணங்கியதனுல், அதன் காரணம் அறியாமல், தலைவன், அவள் சினங்கொண்டாளோ, அன்றித் தன்னுல் இயலாதவொன்றைக் கேட்பாளோ! யாதோ என அஞ்சினுன் என்க. அவள் வணங்கினமை மதுவுண்ட மயக்கத்தால் என்பர். அவன் வெளிக்கு எவ்வாறு தோற்றினளாயினும், 'அவள் மனம் தலைவனிடத்தே விரைந்து சென்றது' என அவளது அன்பு மிகுதி குறிக்கப்பெற்றது.

(பி - ம்.) 1. வெதிர் புரை; வெதிர்நகு.
2. எதிர்தலு மன்பினுல்; அன்பினேடு: எதிர்ந்து: முன்செல; முன்செலாக்.
3. மதிமுகங் கதுமென; கதிர் முகங் கதுமென: வணங்கினுள்; வணக்கினுள்; வாங்கினுள்: அவள்; அவன்.
4. புதுமையா லதுவவற்கு; புதுமையதா லவற்கு; புதுமைய தாயினும்; புதுமைய தாதலின்; புதுமைய தாதலால்; புதுமையோ விதுவென; பூத்தவே. (49)

1088. துனிவரு நலத்தொடுஞ் சோர்கின் ருளொரு
குனிவரு நுதலிக்குக் கொழுந னின்றியே
தனிவருந் தோழியுந் தாயு மொத்தன
இனியபூந் தென்றலு மிரவு மென்பவே.

கொழுநன் இன்றி-கணவன் (தன் பக்கலில்) இல்லாமல், துனி வரு நலத்தொடும்-ஊடலால்வந்த அழகுடனே, சோர்கின்ருள்-வாடுகின்றவளான, ஒரு குனி வரு நுதலிக்கு-வளைந்த நெற்றியுடையாளொருத்திக்கு, இனிய பூ தென்றலும் இரவும் என்ப-இனிமையான பூக்களின் மணத்துடன் வீசும் தென்றற் காற்றும் இராப்பொழுதும் எனப்படுவன (இரண்டும்), (முறையே), தனி வரும் தோழியும்-(கொழுநனிடம் தூது சென்று திரும்பித்) தனியே வரும் பாங்கியையும், தாயும்-தாயையும், ஒத்தன-ஒத்திருந்தன.

ஏகாரம்: முன்னது, இசைநிறை; பின்னது, ஈற்றசை.

கொழுநன் தன்னுடன் இருந்தபோது, புலவி மிக்க தலைவி அவனைப் போகவிட்டு, பின்பு காதல் கைமிக்குத் தோழியை அவனிடம் தூதனுப்ப, அவன் இணங்கி வராமையினுல், தோழி மட்டும் தனியே திரும்பி வந்தாளாக, அவளைக் கண்டு தலைவி மேலும் கலங்கலானுள்; தாய் உடனிருந்து இடித்துக் கூறித் தேற்ற முயலுதலும்

தலைவிக்குத் துன்பம் மிகக் காரணமாயிற்று. தோழியும் தாயும் தலைவியின் நலனை நாடி நல்லன செய்பவராயினும், அவர்கள் செயல் அப்போது அவளுக்குப் பொருந்தாதாயிற்று; எனவே, தென்றலும் இரவும் அவர்களை யொத்தன என்றார். இவை, காதலர் கூடியுள்ள போது இன்பமும், பிரிந்தபோது துன்பமும் தருவன வாதலால் உவமை கூறியதன் பொருத்தம் ஓர்ந்து இன்புறுதற்குரியது. தோழி, போதல் வருதல் உடைமையின், உலவும் தென்றலை யொத்தாள்; தாய் இடம் பெயராது உடனிருத்தலின் இரவை யொத்தாள் எனக் கொள்க.

(பி - ம்.) 1. துனி தரு; துனிவளர்; நலத்தொடு.

2. குனிசிலை: நுதலிதன்; அன்றியே.

3. தனிவரு: தோழியுந் தாயை யொத்தனள்; தோழியுந் தாயு மொத்தனர்; தோழியுந் தானு மொத்தனள்; தோழியுந்தானு மொன்றியே.

4. இனியபூந் தேறலும்; இனிவரு தென்றலும்; அரியபூந் தென்றலும்; அனைய பூந்தென்றலும்; இனிதொரு பள்ளியின்; இனியபூம் பள்ளியின்; இனிதொரு மயர்வு பெற்று: இரவு மென்னவே; இரவு மொத்ததே; அரவு மொத்ததே; அரவு மொத்தவே; இயைந்திட்டானரோ. (50)

1089. ஆக்கிய காதலா ளொருத்தி யந்தியில்
தாக்கிய தெய்வமுண் டென்னுந் தன்மையள்
நோக்கின ணின்றன ணுவல லோர்கிலள்
போக்கின தூதினோ டுணர்வும் போக்கினாள்.

ஆக்கிய காதலாள் ஒருத்தி-(கணவனிடத்தே) பெருக்கிய காதலையுடையவளான ஒரு பெண், போக்கின தூதினோடு-தான் (கணவனிடத்து) அனுப்பிய தூதுடனே, உணர்வும் போக்கினாள்-(தன்) உணர்வையும் போக்கிவிட்டாள்; (உணர்விழந்தனள்); (ஆதலால்), அந்தியில்-மாலைக் காலத்தே, தாக்கிய தெய்வம் உண்டு என்னும் தன்மையள்-தெய்வம் (அவளைத்) தீண்டிய துண்டு என்று (கண்டோர்) சொல்லத்தக்க தன்மையை உடையவளாய், நோக்கினள் நின்றனள்-(கண் இமையாமல் வெளியைப்) பார்த்துக் கொண்டு நின்றாள்; நுவலல் ஓர்கிலள்-(தன் நிலையைச்) சொல்லுதலை அறியாதவளானாள்.

காமம் தலைக்கொளக் காதலனிடத்துத் தோழியைத் தூதாக அனுப்பியவள், தன் வயமிழந்து, செயலற்று, கண்கள் நிலைக்குத்திட்ட பார்வையுடன் பேய்க்கோட் பட்டவள்போல நின்றாள் என்க. தாக்கிய-பிடித்த, தீண்டி வருத்திய; தாக்கணங்கு-காம நோயை மிகுவித்து வருத்துந் தெய்வம். ஆக்கிய-கணவன் தன் குணம், செயல், அழகு, வீரம் முதலியவற்றால் மிகுவித்த எனவுங் கூறுவர். நுவலல்-பிறர் சொல்லுதலை எனவும் ஆம்.

(பி - ம்.) 1. காதலள்; காதலால்: அந்தியுள்; ஆசையில்.

2. தன்மையாள்; தன்மையால்; தன்மையான்.

3. நோக்கி நின்றனளது; நோக்கினன் நின்றனன்; நோக்கினன் நின்றவர்; நுவன்ற தோர்கிலள்; ஓர்கிலாள்; நுவன்று கேள்வனில்; நுவன்ற கேட்கிலள்; கேட்கிலாள்.

4. போக்கிய தூதொடும்: உணர்வு; உள்ளம்: போக்கினள். (51)

1090. மறப்பிலள் கொழுநனை வரவு நோக்குவாள்
பிறப்பினொ டிறப்பெனப் பெயருஞ் சிந்தையாள்
துறப்பரு முகிலிடைத் தோன்று மின்னெனப்
புறப்படும் புகுமொரு பூத்த கொம்பனாள்.

ஒரு பூத்த கொம்பு அன்னாள்-மலர்கள் பூத்துக் குலுங்கும் பூங்கொம்பு போன்ற ஒருத்தி, கொழுநனை மறப்பு இலள்-தன் கணவன் நினைவைச் சிறிதும் மறவாதவளாய், வரவு நோக்குவாள்-அவன் வரவை (க்கணந்தோறும்) எதிர்நோக்கி யிருப்பவள், பிறப்பினொடு இறப்பு என-(மாறி மாறி வரும்) பிறப்பும் இறப்பும்போல, பெயரும் சிந்தையாள்-(உவகையும் துயரமும்) மாறிமாறி வரும் மனமுடையவளாய், துறப்பு அரு முகில் இடை தோன்றும் மின் என-(தான் விட்டு) நீங்க முடியாத மேகத்திலே தோன்றி மறையும் மின்னலைப் போல, புறப்படும்-(தான் இருந்த படமாடத்தினின்றும்) வெளிவருவாள்; புகும்-மீண்டும் உள்ளே புகுவாள்.

தன் கணவன் வரவை எதிர்நோக்கிக் கூடாரத்தினுள்ளே காத்திருந்த ஒருத்தி, கணவன் இப்போது வருதல் கூடும் என உவகையோடு வெளியேவந்து பார்ப்பதும், அவன் வாராமையால் துயரோடு மீண்டும் உட்புகுவதுமாக இருந்தாள். கூடாரம் மேகமாகவும், அவள் மின்னற் கொடியாகவும், மேகத்திலே மின்னல் தோன்றி மறைவது போன்றது அவள் செயல் எனவும் பொருத்திக்கொள்க. மின்னல் மேகத்தைவிட்டுப் பிரிந்திராததுபோல அவளும் அப்பட மாடத்தை விட்டு நீங்கிச் சென்றாளில்லை. மின்னலுக்கும் மேகத்துக்கும் உள்ள தொடர்பு பற்றித் 'துறப்பரு முகில்' என்றார். துறப்பரு-'உலகம் விடுதற்கரிய' என்றலும் ஆம். அவள் மனத்தே தோன்றிய இன்ப துன்பங்களுக்கு முறையே பிறப்பும் இறப்பும் உவமை கூறியுள்ள நயம் காண்க. 'வருவார் கொழுநரெனத்திறந்தும் வாரார் கொழுநரென வடைத்தும், திருகுங் குடுமி விடிவளவுந் தேயுங் கபாடம்' (கலிங். கடை. 49) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. மறப்பில நோக்கினள்.

2. பிறமும்; பேரும்: சிந்தையால்.

3. துறப்பரு முலகிடைத்.

4. புறப்படும் புகும்படைப் புரையினின்றரோ; புகப்பகப்புரையுனின்றதோர் பூத்த கொம்பினள். (52)

1091. எழுதருங் கொங்கைமே லனங்க னெய்தவம்
புழுதவெம் புண்களில் வளைக்கை யொற்றினள்
அழுதனள் சிரித்தன ளற்றஞ் சொல்லலள்
தொழுதன ளொருத்தியைத் தூது வேண்டியே.

(ஒருத்தி), எழுத அரு கொங்கை மேல்-எழுதுதற்கு அரிய (அழகுடைய, தன்) தனங்களிலே, அனங்கன் எய்த அம்பு உழுத வெம் புண்களில்-மன்மதன் எய்த மலரம்புகள் தைத்தலால் உண்டான கொடிய புண்களில், வளை கை ஒற்றினள்-வளையல்களணிந்த தன் கைகளை (மெல்ல) ஒற்றியவளாய், அழுதனள்—; சிரித்தனள்—; அற்றம் சொல்லலள்-தன் சோர்வை (வாய்விட்டு)ச் சொல்லாதவளாய், ஒருத்தியை-(தன் பாங்கி) ஒருத்தியை, தூது வேண்டி-(கணவனிடம்) தூது செல்ல வேண்டி, தொழுதனள்-கைகூப்பித் தொழுதாள்.

எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. மதுவுண்ட மயக்கத்தாலும், நாணத்தாலும், தன் குறையை வாய்விட்டுக் கூறுமலே தூது செல்ல வேண்டுமென்ற குறிப்போடு தோழியை வணங்கினாள். தான் ஏவியதை உடனே செய்தற்குரிய தோழியை, ஏவாமலே குறிப்பாக வணங்கியது, ஆற்றாமைத் துயர்மிகுதியால் என்க. புண் நோவுள்ளவிடத்துக் கைகளைச் சூடுபிறக்கத் தேய்த்து ஒற்றுதல் மரபு. அழுதலும் சிரித்தலுமாகிய மாறுபட்ட செயல்கள், தன் நிலை காரணமாகத் தோன்றின.

எழுத அருங் கொங்கைகள்: 'தீட்டரு மேனி மைந்தன்' (அயோத். 1370). என்பதுபோல; எழு தரும்-விம்மி எழுகின்ற என்றுமாம்.

(பி - ம்.) 1. எழுதரு கொங்கை மேல்: எய்யவும்.
2. உழுதரும் புண்களின்: அழலை மாற்றினள்; அவள்கையொற்றினள்.
3. அற்றஞ் சொல்லினள்; சொல்லினள்; சொல்லிலள்.
4. தூது வேண்டுவாள்; வேண்டினள். (53)

1092. ஆர்த்தியு முற்றது மறிஞர்க் கற்றந்தன்
வார்த்தையி னுணர்த்துதல் வறிதன் றேவென
வேர்த்தனள் வெதும்பினண் மெலிந்து சாய்ந்தனள்
பார்த்தன ளொருத்திதன் பாங்கி னளையே.

ஒருத்தி—, உற்றதும்-(தனக்கு) நேர்ந்துள்ள துன்பத்தையும்-ஆர்த்தியும்-(அதனாலாகிய) மன வேதனையையும், அறிஞர்க்கு-(கண்கூடாக) அறிந்துள்ளோருக்கு, அற்றம்-(தன்) குறையை, தன் வார்த்தையின் உணர்த்துதல்-தன் சொற்களாலே (வெளியிட்டுச்) சொல்லுதல், வறிது அன்றே என-வீணேயன்றே என்று கருதி, வெதும்பினள்-மனம் புழுங்கினாள்; வேர்த்தனள்-உடல் வியர்த்தாள்: மெலிந்து சாய்ந்தனள்-மிகவும் சோர்ந்து (படுக்கையிலே) சாய்ந்தாள்; தன்

பாங்கினுளை-தன் பக்கத்தில் இருந்த தோழியை, பார்த்தனள்-(குறிப் போடு) பார்த்தாள். ஏ-ஈற்றசை.

தலைவன் வாராமையால் தான் படும் வேதனையை உடனிருந்து பார்த்த தோழி, தான் ஏவாமலே சென்று தலைவனை அழைத்து வரக் கடவளாகவும், அது செய்யாமல் வாளாவிருந்தமையின், 'நீயே சென்று தலைவனை அழைத்து வரலாகாதா ? இனியாகிலும் தாழ்க் காமல் அதனைச் செய்' என்ற குறிப்போடு அவளைப் பார்த்தனள் தலைவி என்க. முந்திய பாடலோடு இதனிடைக் கருத்தொற்றுமை காண்க. ஒப்பு: 'முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி, யுற்ற துணர் வார்ப் பெறின்' (குறள். 708). பாங்கினுள்—கருத்தொத்தவள் என்ற லுமாம்.

(பி - ம்.) 1. ஆர்த்தியுற் றயர்குவது; அற்றந்தான்.
2. வார்த்தையில்; உணர்த்துவ தரிதன்றேவென; உணர்த்துதற் கரி தன்றே மனம்; உணர்த்துதல் மாசன்றே மனம்; மாசன்றே வென; வறிதன்றேவென; வறிநென்றேமனம்; வறிதெனுமனம்.
3. மெலிந்து சோர்ந்தனள்; தேய்ந்தனள்.
4. பாங்கனுளையே; மாகனுளையே. (54)

1093. தனங்களி னிளையவர் தம்மின் மும்மடி
கனங்களி யிடையிடை களிக்குங் கள்வனாய்
மனங்களி னுழைந்தவர் மாந்து தேறலை
அனங்கனு மருந்தின னாதல் வேண்டுமால்.

அனங்கனும்-மன்மதனும், தனங்களின் இளையவர் தம்மின்-தனங்களின் சிறப்பையுடைய இளம் பெண்களினும், மும்மடி கனம் களி-மூன்று மடங்கு மிகுதியான களிப்பை, இடை இடை களிக்கும்-அவ்வவ் விடத்திலே (யிருந்து) களிக்கின்றான்; (ஆதலால்), கள்வன் ஆய்-திருடனாகி, மனங்களில் நுழைந்து-(மகளிர் அனைவர்) மனங்களி லும் புகுந்து, அவர் மாந்து தேறலை-அவர்கள் குடித்த கள் தெளிவை, அருந்தினன் ஆதல் வேண்டும்-(தானும்) குடித்தானாதல் வேண்டும்.

ஆல்: அசை.

கள்ளுண்டு களித்துக் காமம் தலையெடுத்து நிற்குமிடத்தில், மன்மதனுடைய ஆட்சி பெரிதாதலால், இப்படலத்துள் இளமங்கை யரைப் பற்றிய செய்திகள் கூறப்படும் இடங்களிலெல்லாம் மன்மத னும் இருந்து தன் வெற்றி குறித்து மகிழ்கின்றமை பெறப்படும்; அம் மகிழ்ச்சி மேலும் சிறக்க, அவன் அம் மங்கையர் மனத்துளெல்லாம் புகுந்து, அவர்கள் உட்கொண்ட கள்ளைத் தானும் பகிர்ந்து உண்ட னன் போலும் எனக் கற்பனை செய்கின்றார். மதுவின் மயக்கத்தாலும் காம வெறியாலும் மகளிர், தம் கச்சும் மேலாடையும் நீங்க, நகில் கள் வெளித் தோன்றுதலையும் ஓராதிருந்தனர் என்ற கருத்துப்பட, 'தனங்களினிளையவர்' என்றார். இடைஇடை(காமாவத்தைகொண்ட

மகளிர் உள்ள) இடந்தோறும்; அவையாவன, இப்படலத்து 5-ஆம் பாடலிற் கூறப்பெற்ற இடங்கள் போன்றவை.

(பி - ம்.) 1. இனைந்தவர்; அனையவர்: தன்னின்: மும்மடிக்.
2. கனங்கனம்; கனங்கனல்; கனங்களின்; மனங்களின்: உடையிடைக்; மடையிடை; மிடையினுள்: கள்வனு; கள்வர்முன்.
3. நுழைதலால்; நுழைதர: வடித்ததேறலே; அருந்தத் தென்றலே.
4. அருந்தினுனுக; நுகர்ந்தனனுதல்: வேண்டுமே; வேண்டுமோ. (55)

(வேறு)

1094. நறைகம ழலங்கன் மாலே நளிநறுங் குஞ்சி மைந்தர்
துறையறி கலவிச் செவ்வித் தோகையர் தூசு வீசி
நிறையக லல்குல் புல்குங் கலன்கழித் தகல நீத்தார்
அறைபறை யனைய நீரா ரருமறைக் காவ ரோதான்.

நறை கமழ்-மணம் வீசுகிற, அலங்கல் மாலே-அசையும் மாலேகளே யணிந்த, நளி நறு குஞ்சி-அடர்ந்த நல்ல மயிர் முடியுடைய, மைந்தர்-இளேஞர்கள், துறை அறி கலவி செவ்வி-(மதனநூலின்)கரண வகைகள் அறிந்து செய்யும் கலவிக்கு ஏற்ற பக்குவம் அடைந்த, தோகையர்-மகளிரின், தூசு வீசி-ஆடைகளே (அவிழ்த்து) நீக்கி, நிறை அகல் அல்குல் புல்கும் கலன்-பூரித்து அகன்ற அல்குலேச் சார்ந்துள்ள அரைச் சதங்கை முதலிய ஆபரணங்களேயும், கழித்து-கழற்றி, அகல நீத்தார்-அப்பால் எறிந்தனர்; அறை பறை அனைய நீரார்-அடிக்கப் படும் பறைபோன்ற தன்மையுடையவர்கள், அருமறைக்கு ஆவரோ-அரியஇரகசியச் செய்திகளுக்கு உரியராவார்களோ? தான்: அசை.

இதுமுதல் பத்துப் பாடல்களால் ஆடவர் மகளிரிடையே நிகழ்ந்த கூடலும் ஊடலும் போன்றவை கூறப்படும்.

இளேஞர், மகளிரிரைப் புணரும் பொருட்டு, அதற்கிடையூருக உள்ளனவற்றை அவர்களிடமிருந்து நீக்கினர். சதங்கை முதலிய இடையணிகள் ஒலி செய்து இவர்கள் மறையைப் பிறர் அறியச் செய்யக் கூடுமாதலால், அவற்றை நீக்கினமையை ‘அறைபறை யன்ன நீரார் அருமறைக் காவரோ’ என்ற பொதுப்பொருளால் சமர்த்தித்தார். வேற்றுப்பொருள்வைப்பணி. இத்தொடர் ‘அறைபறை யன்னர் கயவர்’ (குறள் 1076) என்பதனை நினைப்பூட்டுகின்றது.

(பி - ம்.) 1. அலங்கல்சேரும்; அலங்கல்வேய்ந்த: நளிர்நறுங்; நனிநறுங்; நறுங் கருங்: மாந்தர்.
2. தூசுவீசு; தூதுவீசும்.
3. அல்குற் புல்லும்; கலே கழித்து; கலே பழித்து; கலே யொழித்து; கலே நெகிழ்த்து: மேகலே யொழித்து நீத்தார்; ஈர்த்து நீத்தார்: கலே பொழிந்தனைய நீரார்.
4. அறைமறை யறையும் நீரான்; அறைபறை யன்ன நீரார்: அருமறைக் காகாரென்ன; அருமறைக் கவர்வரொத்தார்; அருமறைக் கள்வ ரொத்தான். (56)

1095. பொன்னருங் கலனுந் தூசும் புறத்துள துறத்தல் போக
நன்னுத லொருத்தி தன்பா லகத்துள நாணு நீத்தாள்
உன்னருந் துறவு பூண்ட வுரனுடை யொருவ னேபோல்
தன்னையுந் துறக்குந் தன்மை காமத்தே தங்கிற் றன்றே.

நல் நுதல் ஒருத்தி-அழகிய நெற்றியுடைய ஒரு மங்கை, (கலவியின் பொருட்டு), பொன்அரு கலனும்-பொன்னலியன்ற அரிய அணிகலன்களும், தூசும்-ஆடையும் (ஆன), புறத்து உள-(உடம்பின்) புறத்தே உள்ளனவற்றை, துறத்தல் போக-நீக்குதல் கிடக்கட்டும்; தன்பால்-தன்னிடத்து, அகத்து உள-உள்ளேயிருக்கிற, நாணும் நீத்தாள்-(உயிரினும் சிறந்த) நாணத்தையும் விட்டிட்டாள்; உன் அரு துறவு பூண்ட-(பொதுவாக யாவரும்) நினைத்தற்கும் அரிய துறவை மேற்கொண்ட, உரன் உடை ஒருவன் போல்-மனவலியுடைய ஒருவனைப் போல, தன்னையும் துறக்கும் தன்மை-'தான்' என்பதனையும் விடத்தக்க தன்மை, காமத்து தங்கிற்று அன்றே-காமத்தினிடத்து உள்ளதன்றோ! (இது வியப்பே).

'தான்' என்ற அகப்பற்று விடுதலே உண்மைத் துறவாகும்; அது அனைவர்க்கும் இயல்வதொன்றன்று; அதனாலேதான் 'உன்னருந் துறவு பூண்ட வுரனுடை யொருவனே போல்' என்றார். மகளிர்க்கு உயிரினுஞ் சிறந்தது நாணம்; அதனையுந் துறப்பிக்கும் ஆற்றல் காமத்துக்குள்ளமையின் இது வியத்தற் குரியதே என்றார். நாணும் என்றதில் உம்மை உயர்வு சிறப்பு. புறப்பற்றாகிய ஆடை அணிகலன்களை நீத்தலோடு, அகப்பற்றாகிய நாணையும் நீத்தல் கலவிக் காலத்து மகளிர்க்கு இன்றியமையாததாகலின், இந்நிலையில் உண்மைத் துறவியை ஒப்புக் கூறினர். ஒருவனேபோல்: ஏகாரம், இசை நிறை.

(பி - ம்.) 1. கலையின்றூசும்; கலையுந்தூசும்: துறத்தல்வம்பே: வம்போ; வன்போ; வெறுத்தல் வம்போ; வெறுத்தல் போக்கி.
3. உன்னகம்: துறவும் பூண்ட: உரவுடை; உணர்வுடை; வரனுடை.
4. காமத்தும்; காமத்தோ: தயங்குமன்றே. (57)

1096. பொருவரு மதனன் போல்வா னொருவனும் பூவின் மேலத்
திருவினுக் குவமை சால்வா ளொருத்தியுஞ் சேக்கைப்போரில்
ஒருவருக் கொருவர் தோலா ரொத்தன ருயிரு மொன்றே
இருவர்தமுணர்வு மொன்றேயென்றபோ தியாவர்வெல்வார்.

பொருவு அரு-(தனக்கு) உவமை வேறு கூறுதற்கு அரிய, மதனன் போல்வான் ஒருவனும்-மன்மதனுக்கு ஒப்பாகத்தக்க ஓர் ஆடவனும், பூவின்மேல்-தாமரைப் பூவில் வீற்றிருக்கும், அ திருவினுக்கு உவமை சால்வாள் ஒருத்தியும்-அவ்விலக்குமிக்கு ஒப்புக் கூறுதற் கேற்றவளான ஒரு மங்கையும், சேக்கை போரில்-படுக்கையிடத்து (நிகழ்தற்குரிய) கலவிப் போரிலே, ஒருவருக்கு ஒருவர் தோலார் ஒத்தனர்-

ஒருவருக்கொருவர் தோல்வியில்லாமல் ஒத்திருந்தனர்; இருவர்தம்-அவ்விருவருடைய, உயிரும் ஒன்றே—; உணர்வும் ஒன்றே—;(வேறுவேறில்லை); என்றபோது—, வெல்வார் யாவர்-(அவர்களுக்குள்ளே) வெற்றிகொள்வார் யாவர்?

அத்திரு: உலகறி சுட்டு.

எவரேனும் இருவர் செய்யும் போரில், இருவரும் வெல்லுதல் அல்லது தோற்றல் இயற்கையன்று; இங்குக் கூறியவர் உருவத்தால் இருவரெனத் தோற்றினும் உயிராலும் உணர்வாலும் ஒன்றுபட்டவராதலால் ஒருவரே யாவர், ஆகவே, வென்றார் யார் தோற்றார் யார் எனக் கூறுதற்கு இடமில்லை என நயம்படப் புனைகின்றார். கலவியைப் 'போர்' என்னல் கவிமரபு; 'சேக்கையின் வினைசெரு' (1044) என முன்னுங் கூறினமை காண்க; 1099-ம் பார்க்க. இருவர் தம் உயிரும் உணர்வும் ஒன்றே: ஒப்பு. 1086.

(பி - ம்.) 1. பொருவறு: முகுந்தன் போல்வாள்: பூவின் மேலைத்; பூவின் மேலாத்.
2. உவமை சொல்லாள்; ஆவாள்; ஆனாள்; அன்னாள்; ஒப்பாள்: செங்கைப்போரில்.
3. தோலா தொத்தனர்; ஒல்கா ரொத்தனர்.
4. இருவர துணர்வும்; இருவர்தங்குணமும்: ஒன்றேல்; ஒன்றால்;என்றால்; யாவரே வெல்ல வல்லார். (58)

1097. கொள்ளைப்போர் வாட்க ணாளங்
கொருத்தியோர் குமர னன்னான்
வள்ளத்தா ரகலந் தன்னை
மலர்க்கையான் மறைப்ப நோக்கி
உள்ளத்தா ருயிர னாண்மே
லுதைபடு மென்று நீர்நுங்
கள்ளத்தாற் புதைத்தீ ரென்னா
முன்னையிற் கனன்று மிக்காள்.

அங்கு-அவ்விடத்தில், கொள்ளை போர் வாள் கண்ணாள் ஒருத்தி-(உயிரைக்) கொள்ளை கொள்ளும் போரில் பயிலும் வாட்படை போன்ற கண்களையுடைய ஒருத்தி, ஓர் குமரன் அன்னான்-ஒப்பற்ற முருகனைப் போன்றவனான (தன்) காதலன், வள்ளம்-வளம் பொருந்திய, தார் அகலம் தன்னை-மாலையணிந்த (தனது) மார்பை, மலர் கையால் மறைப்ப-(அவள் சினங்கொண்டு உதைக்க வந்த போது) தாமரை மலர்போலும் தன் கையால் பொத்திக் கொள்ள, நோக்கி - அதனைக் கண்டு, உள்ளத்து ஆர்-(உம்) நெஞ்சில் (எப்போதும்) உள்ள, உயிர் அன்னாள் மேல்-உயிருக்கொப்பான மற்றொருத்தியின்மேல், உதை படும் என்று-என் உதை படக்கூடுமென்று கருதி, நும் கள்ளத்தால்-உமது வஞ்ச நினைப்பினாலே, நீர் புதைத்தீர்-

நீர் (உமது மார்பை) மூடிக்கொண்டீர்; என்ன-என்று சொல்லி, முன்னையின் கனன்று மிக்காள்-முன்னிலும் மிகுதியாகக் கோபங் கொண்டாள்.

தலைவன் புறவொழுக்க முடையானென்று ஐயுற்றுப் புலந்து சீறியவள், அவனைக் காலால் உதைக்கப் புகுங்கால், அனிச்சப் பூவி னும் மெல்லிய அவள் பாதம் தன் வலிய மார்பிலே படும்போது வருந் துமே என்று கருதி அவன் தன் மார்பைக் கையாலே பொத்திக் கொள்ள, அவள் அதற்கு வேறு வகையாகக் காரணங் கற்பித்துக் கொண்டு மேலும் சினம் மிக்காள் என்க. இதில் அமைந்துள்ள புலவி நுணுக்கம் ஓர்க.

வளத்தார் என்றது வள்ளத்தார் என விரித்தல் பெற்றது கனன்று மிக்காள்-மிக்குக் கனன்றாள்.

தலைவி ஊடலால் தலைவனை உதைத்தல்: 1074. 'சிலைமலி வாணுதலெங்கைய தாக மெனச்செழும்பூண், மலைமலி மார்பின் உதைப்பத்தந் தான்றலை மன்னர் தில்லை, உலைமலி வேற்படை யூர னிற் கள்வரில் லென்ன வுன்னிக், கலைமலி காரிகை கண்முத்த மாலை கலுழ்ந்தனவே' (திருச்சிற். 397) என்பதனை இங்கு ஒப்பிடுக.

(பி - ம்.) 1. வாட் கண்ணாளங்.
2. வள்ளற்றுரகலம்; வள்ளத்தார் கமலம்; புதைப்ப நோக்கி.
3. உள்ளத்தா னுயிரன்னுண்மேல்: நீறின்; நீயுங்.
4. புதைத்தி யென்னு; புதைத்தி ரென்னு; புதைத்தா யென்னு; கனன்று நக்காள்; கனற்றிக்கொண்டாள். (59)

1098. பாலுள பவளச்செவ்வாய்ப் பணைமுலை நிகர்த்த மென்றோள்
வேலுள நோக்கி னாளோர் மெல்லியல் வேலை யன்ன
மாலுள சிந்தை யானோர் மழையுள தடக்கை யாற்கு
மேலுள வரம்பை மாத ரென்பதோர் விருப்பை யீந்தாள்.

பால் உள-பாலின் சுவை பொருந்திய, பவளம் செம்மை வாய்-பவளம் போன்ற சிவந்த வாயையும், பணை முலை-பருத்த தனங்களை யும், நிகர்த்த மென் தோள்-(ஒன்றோடொன்று) நிகரான மென்மை அமைந்த தோள்களையும், வேல் உள நோக்கினாள்-வேலின் தொழில் கொண்ட கண்களையும் உடையவளான, ஓர் மெல் இயல்-மெல்லிய சாயலாள் ஒருந்தி, (தன்னிடத்தே), வேலை அன்ன மால் உள சிந்தை யான்-கடல்போலும் காதலுண்ட மனமுடையவனான, ஓர் மழை உள தடகையான்கு-மேகம் போலும் கொடையமைந்த கையுடைய (தன் காதலனான) ஒருவனுக்கு, மேல் உள-சுவர்க்க லோகத்தில் உள்ள, அரம்பைமாதர் என்பது ஓர் விருப்பை-தெய்வ மகளே(அவள்) என்று கருதுதற்குரிய ஒப்பற்ற விருப்பத்தை, ஈந்தாள்-(தன் அழகு முதலிய நலன்களால்) அளித்தாள்.

ஒரு மெல்லியலாள், தன்பால் அளவிறந்த காதலையுடைய தன் காதலனுக்கு, 'தெய்வ மகளே இவள்' என்று கருதி மேலும் அவன் அன்பு செய்யத்தக்கவளாய்ச் சிறந்திருந்தாள் என்க. தலைவனுடைய காதல் மிகுதியை 'வேலையன்ன மால்' எனக் குறிப்பித்தார். 'காதல் தானுங் கடலினும் பெரிதே' (நற். 166: 10.); 'கடலன்ன காமம்' (குறள். 1137). அரம்பை மர்தர், மெய்யுறு புணர்ச்சியின்றிக் கண்ணுல் நோக்கியே இன்பம் நுகர்தற்குரியவர்; (சீவக. 352-ந.) என்பவாகலின், இங்கே இவளும் அத்தகையவளானுள் போலும். பாலுள செவ்வாய், பவளச் செவ்வாய் எனத் தனித்தனி இயைக்க. வாய் பால் உளதாவது, பால் போலும் இன் சொல்லும், வாலெயி றூறிய நீரும் உடையதாதல்.

'உள' என்பது ஒரே பொருளில் பலமுறை வந்தது சொற்பொருட் பின்வரு நிலை. அணியாகும்.

(பி - ம்.) 1. பாலுளர்: பணைமுலை நிகர்த்த வேய்த்தோள்; பல்வளைப் பணைத்த வேய்த்தோள்; பால்வளை பணைத்த மென்றோள்; பயில்வளை பணைத்த மென்றோள்.
2. வேலுளர்; வேலையென்ன; வேலை யென்று.
3. மாலுளர்; மாலுளாம்: சிந்தையாங்கோர்: சிந்தைக்கோல: மழையுளர்; மழைவளர்; மழையுறழ்.
4. மேலுளர்; மேலுளார்: மாதிங்கென்பதோர்: விருப்ப மீந்தாள்; விருப்பங் கொண்டாள். (60)

(வேறு)

1099. புனத்துறை மயிலனாள் கொழுநன் பொய்யுரை
நினைத்தனள் சீறுவா ளொருத்தி நீடிய
சினத்தினைக் காதலன் சேக்கைப் போரிடை
மனத்துறை காதலே வாகை கொண்டதே.

கொழுநன்-தன் கணவனது, பொய் உரை நினைத்தனள் சீறுவாள்-பொய் வார்த்தையை நினைத்துச் சீற்றங்கொண்டவளான, புனத்து உறை மயில் அன்னாள் ஒருத்தி-மலைக்கொல்லைகளில் வாழும் மயில் போன்ற ஒருத்தியின், நீடிய சினத்தினை-நெடுங்கோபத்தை, காதலன் சேக்கை போர் இடை-கொழுநனுடன் செய்தற்குரிய கலவிப் போரிலே (பதிந்த), மனத்து உறை காதலே-(அவள்) மனத்திலே செறிந்த காதலே, வாகை கொண்டது-வென்றுவிட்டது. ஏ-ஈற்றசை.

கணவன் புறவொழுக்கமுடையவனாய் அதனை மறைத்துத் தன்னிடம் பொய்ம்மொழிகள் கூறியதனால் மிக்க சினங்கொண்டு, அவன்வரின் அவனோடுரையாடலுங் கூடலுங் கூடாவெனக் கருதியிருந்தவளுக்கு,காமமும் இடையிடையே தோன்றிச் சினத்துடன்போராடவே

இறுதியில் காமமே வென்றது; அதாவது, அவள் சினம்மாறிக் கண வனைக் கூடும் விருப்புடையளானாள் என்றபடி. வாகை-வெற்றி.

சேக்கைப் போர்: 1044-குறிப்புப் பார்க்க. சினத்தைக் காதல் வெல்லுதல்: 1082-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. புனத்துள; புனத்துளாம்; மயிலன்னாள்; மயிலினாள்.
2. நினைத்துளம்; நினைத்தநுட்: ஒருத்தி நீட்டிய; உருத்து நீடிய.
3. சினத்தொடுங் காதல்கள்; சினத்தொடுமங்கவன்; சினத்தொடு காத லன்: செய்தபோரிடை.
4 வாதை கொண்டதே. (61)

1100. கொலையுரு வமைந்தெனக் கொடிய நாட்டத்தோர்
கலையுரு வல்குலாள் கணவற் புல்குவாள்
சிலையுரு வழிதரச் சிறந்த மார்பிற்றன்
முலையுரு வினவென முதுகை நோக்கினாள்.

கொலை உரு அமைந்தது என-கொலைத் தொழில் உருக்கொண் டதுபோலக் காண்கிற, கொடிய நாட்டத்து-கொடுமையான கண் களோடு, ஓர் கலை உருவு அல்குலாள்-ஆடையை ஊடுருவித் தோன் றும் அல்குலும் உடைய ஒருத்தி, கணவன் புல்குவாள்-(தன்) கண வனை இறுகத் தழுவியவள், சிலை உரு அழிதர சிறந்த மார்பில்-மலை யின் அழகு கெடும்படி மேம்பட்ட(அவனுடைய)மார்பிலே, தன் முலை உருவின என-தன்னுடைய நகில்கள் (பாய்ந்து) ஊடுருவினவோ என்று, முதுகை நோக்கினாள்-அவன் முதுகுப்புறத்தைப் பார்த்தாள்.

ஈருடலும் ஒன்றுரும்படி இறுகத் தழுவினமையின், யானைக் கொம்புபோலக் கூர்மையும் திண்மையுமுடைய தன் கொங்கைகள் கணவன் மார்பிடை அழுந்தி ஊடுருவி முதுகுப்புறத்தில் வந்திருக் குமோ வென ஐயுற்று நோக்கினாள் என்க.

அமைந்தென: தொகுத்தல் விகாரம்.

ஒப்பு நோக்குக: 'துப்புறச் சிவந்த வாயாள் தூயபஞ் சணை யின் மீதில், ஒப்புறக் கணவ னோடே யோர்லீலை செய்யும் போது, கற்பகஞ் சேர்ந்த மார்பிற் கனதன மிரண்டுந் தைத்தே, அப்புற முருவிற் றென்றே யங்கையாற் றடவிப் பார்த்தாள்' (விவேக சிந்தாமணி).

(பி - ம்.) 1. அமைந்தன; அமைத்தன; அமர்ந்தெனக்.
2. புல்லுவாள்; புல்வினாள்.
3. செறிந்த மார்பில்; செறித்த மார்பில்
4. உருவியவென: முதுகில் நோக்கினாள்; முதுகை நோக்குவாள். (62)

1101. குங்கும முதிர்ந்தன கோதை சோர்ந்தன
சங்கின முரன்றன கலையுஞ் சாறின
பொங்கின சிலம்புகள் பூச லிட்டன
மங்கைய ரிளநல மைந்த ருண்ணவே.

மங்கையர்-இளம் பெண்களின், இள நலம்-இளமையின் புதிய இன்பத்தை, மைந்தர் உண்ண-காளையர் நுகரும்போது, குங்குமம் உதிர்ந்தன-(மகளிர் மார்பில் தொய்யில் எழுதிய) குங்குமங்கள் (உலர்தலால்) உதிர்ந்தன; கோதை சோர்ந்தன-(அவர்கள்) கூந்தல் அவிழ்ந்தன; சங்கு இனம் முரன்றன-(கைகளில் அணிந்த) சங்கு வளையல்கள் ஒலித்தன; கலையும் சாறின-ஆடைகளும் நழுவின; சிலம்புகள்-பாதச் சிலம்புகள், பொங்கின பூசல் இட்டன-மிக்கு ஒலி செய்தன. ஏ: ஈற்றசை.

மங்கையர் பலராதலின், எல்லாம் பன்மையாற் கூறினர். கலவிக் காலத்து மங்கையர்பால் இயல்பாக நிகழ்வனவற்றை அழகுறத் தொகுத்துக் கூறினமையின், தன்மை நவிற்சியணியும், கூட்டவணியும் அமைந்தது இச்செய்யுள்.

(பி - ம்.) 1. குங்குமந் திமிர்ந்தன; திமிர்ந்தெனக்: கோதை சோர்ந்தென. 2. சங்கின மார்த்தன: கலையுஞ் சாய்ந்தன; சாற்றின; துகிலுஞ் சாய்ந்தன. 3. பொங்கிய சிலம்பொலி; சிலம்பணி; சிலைமணி. 4. மைந்தரெண்ணவே. (63)

1102. துனியுறு புலவியைக் காதற் சூழ்சுடர்
பனியெனத் துடைத்தலும் பதைக்குஞ் சிந்தையால்
புனையிழை யொருமயில் பொய்யு றங்குவாள்
கனவெனு நலத்தினுற் கணவற் புல்லினுள்.

புனை இழை ஒரு மயில்-அலங்கரிக்கும் ஆபரணங்களை அணிந்த, மயில் போலும் சாயலுடைய ஒருத்தியின், துனிஉறு புலவியை-(கணவனுக்கு) வருத்தம் செய்கிற ஊடலை, காதல்-காமமாகிற, சூழ் சுடர்-மொய்த்த கிரணங்களையுடைய சூரியன், பனி என-(தன் முன்பட்ட) பனியை (ச்சூரியன்)அழிப்பதுபோல, துடைத்தலும்-அழித்துவிடவே, பதைக்கும் சிந்தையால்-(கணவனை அணையத்) துடிக்கும் மனத்துடனே, பொய் உறங்குவாள்-பொய்யாக உறங்குபவள்,கனவுஎனும் நலத்தினுல்-தான் கனவு கண்டாள் என்னும் உபாயத்தாலே, கணவன் புல்லினுள்-கணவனை (வலிந்து) தழுவிக்கொண்டாள்.

இம் மங்கை புலவியில் நீட்டித்ததனுல், கணவன் அது தீர்க்கும் முயற்சியின்றி வாளா இருந்துவிடவே, அவள் காதல் கைம்மிகுதலால் ஊடல் தீரப்பெற்றுக் கணவனை அணையுங் கருத்தோடு துடித்தும், தானே வலியப் போய் அணைதற்கு நாணிச் சிறிது பொய்யுறக்கங் கொண்டிருந்து, அச்சந்தருங் கனவு கண்டதாகக்காட்டிக் கணவனைத்

தழுவினுள் என்க. கனவு என்பது அவள் தழுவுதற்கு உதவினமையின், 'கனவெனும் நலம்' என்முர். காதல் புலவியை வென்று போக்கிற்று என்பார், காதலாகிய சூரியன் புலவியாகிய பனியைப் போக்கினுன்என உருவகித்தார். காதலைச் சூரியனுக உருவகித்ததற்கேற்பப் புலவியைப் பனியென்க; ஏகதேச வுருவகம். இவ்வா றன்றிக் காதலானது புலவியை, சூரியன் பனியைப் போக்குதல்போலப் போக்கிற்று என்றலும் ஆம். அதற்கு, காதல் சூழ் சுடர் என்ற பாடம் கொள்க. சூழ் சுடர்: வினைத்தொகை அன்மொழி.

'காதலின் வெற்றி' (1099); 'கலவியின் வேட்கை தூண்டக் கனவினில் வெருவினுள்போல், முலைமுக டழுந்த வேந்தன் முழவுத் தோள் புல்லினுளே' (நைடத மணம். 43) என்பது ஈற்றடியுடன் ஒப்பிடத்தகும்.

(பி - ம்.) 1. துனிதரு: காதல் சூழ்சுடர்; சூழ்சுடர்ப்: சூழ்ந்தடர்; சூர்சுடர்.
2. பனியெனத் துரத்தலும்; துறத்தலும்; தூர்த்தலும்: பதைக்குஞ் சிந்தையாள்; பதைத்த சிந்தையாள்; பணித்த சிந்தையாள்; சிந்தையான்.
3. புனைகுழலொருமுறை; புனைகுழல் பொருமயில் போலுறங்குவாள்.
4. கனவெனுஞ் சலத்தினுல்; கள்வற் புல்கினுள்; கணவற் புல்லுவாள்.
இப்பாடல் ஒரு சுவடியில் இல்லை. (64)

1103. வட்டவாண் முகத்தொரு மயிலு மன்னனும்
கிட்டிய போதுடல் கிடைக்கப் புல்லினர்
விட்டிலர் கங்குலின் விடிவு கண்டிலர்
ஒட்டிய வுடல்பிரிப் புணர்கி லாமையால்.

வட்டம்-வட்டமான, வாள் முகத்து-ஒளி பொருந்திய முகத்தையுடைய, ஒரு மயிலும்-மயில் போன்ற ஒரு மங்கையும், மன்னனும்-ஓராடவனும், கிட்டியபோது-(தமக்குள் கூடும் தருணம்) வாய்த்தபோது, உடல்-இருவர் உடம்பும், கிடைக்க-(ஒன்முக) இயையும்படி, புல்லினர்-(இறுகத்) தழுவிக்கொண்டனர்; ஒட்டிய உடல்-(அவ்வாறு) இயைந்த உடம்புகளை, பிரிப்பு உணர்கிலாமையால்-பிரிக்கும் வகையை (இருவரும்) உணராமையால், விட்டிலர்-(தழுவுதலை) விட்டாரிலர்; கங்குலின் விடிவு கண்டிலர்-இரவு விடிந்ததையும் அறியாராயினர்.

இங்குக் கூறிய காதலர் இருவரும், பல நாட்கள் கூட்டம் நிகழாது பிரிந்திருந்தவராதலால், நல்ல வாய்ப்புக் கிட்டின இப்போது, பொழுது புலர்ந்ததையும் அறியாதவர்களாய்த் தழுவிக் கிடந்தனர் என்க. அடுத்த பாடலில், இராப்பொழுது கழிந்தமை கூறுகின்றவர், அதற்குச் சூசகமாக இங்கே இவ்வாறு கூறி வைத்தார் போலும்.

(பி - ம்.) 1. வட்டவான் முகத்தரு.
2. உடல் கிடக்கப்; உடல் சிக்கப்; புல்லினுள்; உடன் கிடந்து புல்லினர்.
3. விடிவுங் கண்டிலார்.
4. உடல்பிரிப் பொண்கிலாமையால்: உடல் பிரிந்துணர்கிலாமையால்; உடல்பிரி வுணர்கிலாமையால்; உடற்பிரிவுணர்கிலாமையால்; உடல் பிறிதுணர்கிலாமையால். (65)

1104. அருங்களி மால்களி றனைய வீரர்க்கும்
கருங்குழன் மகளிர்க்குங் கலவிப் பூசலால்
நெருங்கிய வனமுலை சுமக்க நேர்கலா
மருங்கெனத் தேய்ந்ததம் மாலைக் கங்குலே.

அரு களி-(தணித்தற்கு) அரிய களிப்பையுடைய, மால் களிறு அனைய-மத மயக்கமுள்ள யானைபோன்ற, வீரர்க்கும்-வீரர்களுக்கும், கரு குழல் மகளிர்க்கும்-கரிய கூந்தலையுடைய பெண்களுக்கும் (இடையே நிகழ்ந்த), கலவி பூசலால்-கலவிப் போரிலேயே, அ மாலை கங்குல்-(அதற்கேற்ற) தருணமாகிய அவ்விராப்பொழுது, நெருங்கிய வனம் முலை-(ஒன்றோடொன்று) நெருங்கிய அழகிய தனங்களை, சுமக்க நேர்கலா-சுமக்க மாட்டாத, மருங்கு என-(மகளிரின்) இடையைப் போல, தேய்ந்தது-(சிறிதுசிறிதாகத்) தேய்ந்து இல்லாதாயிற்று.

இப்படலத்துள் இதுவரை கூறிவந்த பலவகையான வேட்கைப் பெருக்க நிகழ்ச்சிகளுக்கு இடமாயிருந்த அவ்விராப்பொழுது முழுதும், அந்நிகழ்ச்சிகளிலேயே கழிந்தது என்றவாறு. இதுவரை உண்டாட்டு நிகழ்ச்சிகளைப் பலபட விரித்துக் கூறிமுடித்து, மேலே மறுநாள் கதிரவன் உதயமும், பிறவும் தொடர்ந்து கூறுகின்றார். அவை அடுத்த படலத்துட் காணப்படும். சக்கரவர்த்தியைச் சார்ந்து வந்த பலதிறப்பட்ட ஆடவரும் மகளிரும் இன்பக் களியாட்டத்திற் கழித்த ஓர் இரவைப் பற்றியே கூறுதலின், 'அம்மாலைக் கங்குல்' எனச்சுட்டிக் கூறினர். இங்குக் கூறியுள்ள உவமையின் அழகும் ஓர்தற்பாலது. மாலை-சமயம்; 'வரமுனி வஞ்சமென் றுணர்ந்த மாலைவாய்' (230) என்றவிடத்திற்போல. மாலைக் கங்குல் என்பதற்கு, மாலையோடு தொடர்ந்த இரவு என்றும், மாலை எனப்படுவதாகிய இரவு என்றும் கூறினர் பிறர்.

(பி - ம்.) 1. மாகளிறு; ஆர்களிறு. 2. கலவிப் பூசலின்.
3. நெருங்கிய முலைகளுஞ்; முலைதனைச்; நேர்கிலா; நேரலா; நோக்கிலா.
4. மருங்குல்போல் தேய்ந்தது. (66)

சந்திரன் மறைதலும் சூரியன் தோன்றலும்

1105. கடையுற நன்னெறி காண்கி லாதவர்க்
கிடையுறு திருவென விந்து நந்தினன்
படர்திரைக் கருங்கடற் பரமன் மார்பிடைச்
சுடர்மணிக் கரசென இரவி தோன்றினன்.

நல் நெறி-(நல்லன வான) புண்ணியங்களை, கடை உற-முடிவு போக, காண்கிலாதவர்க்கு-செய்யாதவர்களுக்கு, இடை உறு-இடையே வந்து சேருகிற, திரு என - செல்வம் (அழிதல்) போல, இந்து நந்தினன்-சந்திரன் மறைந்தான்; பரமன் மார்பு இடை-(யாவர்க்கும்) மேலான திருமாலின் மார்பிலே, சுடர்-(எப்போதும்) பிரகாசிக்கிற, மணிக்கு அரசு என-மணிகளிற் சிறந்த கௌத்துபம் போல, இரவி-சூரியன், படர் திரை-பரந்த அலைகளையுடைய, கரு கடல்-கரிய கடலினிடத்தே, தோன்றினன்-உதித்தான்.

புண்ணியத்திலே மனம் ஊன்றி அதனை வாழ்நாள் முழுதும் செய்யாது அரைகுறையாகச் செய்தவர்களுக்கு, அதன் பயனாகிய செல்வமும் இடையேவந்து விரைவில் கெடுதலை, சந்திரன் மறைவுக்கு ஒப்புமை கூறினர். சந்திரன் தனக்கு இயல்பிலே ஒளியின்றி, கதிரவனிடமிருந்து பெறும் ஒளியும் என்றும் ஒருபடித்தாயில்லாமல் மிக்கும் குறைந்தும் முழுதும் கெட்டும் காணப்படுதலின், இங்குக் கூறிய உவமையின் நயம் ஓர்தற்பாலது. இரவி தோன்றுதலுக்குக் கூறிய உவமையில், பரமன்-கருங்கடல்; அவன் மார்பில் ஒளிரும் மணிக்கரசு-இரவி என்க. இதன் நயமும் ஓர்க.

ஒப்பு: 'வாளிரவி பொன்னகலந் தங்கு கவுத்துவம்போல்...... அங்க ணுலகளந்தாற் காம்' (தண்டி. சூ. 41-மேற்.); 'திருமருகன் ஆகத்தே தோய்ந்த, கனமணி வாங்கிக் கடல்கொடுப்ப தென்னத், தினமணி வந்துதயஞ் செய்ய' (திருவாரூருலா. 37-8).

(பி - ம்.) 1. கடையுறு நெடுநெறி: காண்கிலாதவற்கு.
2. இடையுறுந்திரு; இடையறுதிரு; இந்து நத்திடப்; வீய்ந்து நந்திடப்; வியந்து நோக்கிடப்; இந்து நீங்கினன்.
3. படர்திரைப் பாற்கடற்; படர்திரைப் பெருங்கடற்; படர்திசைக் கருங்கடற்: மார்பினிற்.
4. சுடர்மணியாமென; சுடர்விடு மணியென. (67)

உண்டாட்டுப் படலம் முற்றும்.



# 18. எதிர்கொள் படலம் *

எதிர்கொள் படலம்: எதிர்கொண்டமையைக் கூறும் படலம் என விரியும். பரிவாரங்களுடன் மிக்க வைபவமாக வந்த தசரத சக்கரவர்த்தியைச் சனகமகாராசன் பெருஞ் சிறப்புடன் எதிர் கொண்டு அழைத்துச் சென்ற செய்தியைக் கூறுவது இது.

சனகனோடு இராம லக்குமணரும் தம் தந்தையைக் காண ஆவலுடன் வருதல் இதிற் கூறப்படும். சக்கரவர்த்தி அயோத்தியி னின்றும் பரிவாரங்களுடன் புறப்பட்டு நான்கு நாட்கள் பயணம் செய்து, ஐந்தாம் நாள் மிதிலையை அணுகும்போது, சனகமகாராசன் எதிர்கொண்டழைத்துச் சென்றான் என்ற செய்தியை முதனூல் சுருக் கமாகக் கூறுகின்றது. இராமலக்குமணரும் இதில் கலந்து வந்ததாக அங்கே கூறப்படவில்லை. எழுச்சிப் படலம் முதல் இப்படல முடிவு வரை உள்ள விரிவெல்லாம் கம்பநாடருடைய கற்பனைக் களஞ்சியமே. இப்படலத்துள்ளும் இன்பமூட்டுங் காவியச் சுவை செறிந்திருத்தல் காணலாம்.

சக்கரவர்த்தி தன் பரிவாரங்களுடன்
கங்கைக் கரையை அடைதல்

1106. அடாநெறி யடைதல் செல்லா வருமறை யறைந்த நீதி
விடாநெறிப் புலமைச் செங்கோல் வெண்குடை வேந்தர் [வேந்தன்
படாமுக மலையிற் றோன்றிப் பருவமுற் றருவி நல்கும்
கடாநிறை யாறு பாயுங் கடலொடுங் கங்கை சேர்ந்தான்.

அடா நெறி அடைதல் செல்லா-(தருமத்திற்குப்) பொருந் தாத நெறியிலே செல்லாத, அருமறை அறைந்த நீதி விடா நெறி- அரிய வேதங்கள் சொல்லிய நீதிகளைக் கைவிடாத ஒழுக்கத்தையும், புலமை-பல கலைப் புலமையையும், செங்கோல்-செங்கோ லாட்சியை யும், வெண்குடை-வெண்கொற்றக் குடையையும் உடைய, வேந்தர் வேந்தன்-அரசர்க்கரசனான தசரதன், படாம்முகம் மலையில் தோன்றி- முகபடாமணிந்த யானைகளாகிற மலையிலே உண்டாகி, பருவம் உற்ற

---

* இப்படலத்தின் பெயர், 'எதிர்கோட் படலம்', 'எதிரெழுச்சிப் படலம்', 'எதிரெழும் படலம்', 'மகட்காட்சிப் படலம்' எனப் பலவாறு பிரதிகளில் காணப் படுகின்றது.

அருவி நல்கும்-(ஆருதற்குரிய) தன்மை வாய்ந்த அருவியாக வருகின்ற, கடாம் நிறை ஆறு பாயும்-மதநீர் நிறைந்த ஆறுகள் (வந்து) பாய்தற்கிடமான, கடலொடும்-சேனைக் கடலோடு, கங்கை சேர்ந்தான்-கங்கையாற்றை அடைந்தான்.

தசரத மன்னன், சந்திரசைலத்தை யடுத்த பகுதியிலே தங்கியிருந்த விடத்தினின்றும் புறப்பட்டுப் படைக்கடல் புடைசூழச் சென்று கங்கை யாற்றங்கரையை அடைந்தான் என்றவாறு. படையின் பரப்பைக் கடலாகவும், படையில் உள்ள யானைகளின் மதநீரொழுக்கை அக்கடலில் வந்து பாயும் ஆறுகளாகவும் உருவகித்தார். ஆறு என்றதற்கேற்ப யானைகளை மலையாக உருவகித்தார். ஆறுகள் தன்னிடத்தே வந்து கலத்தற்கிடமான கடல், மற்றோர் ஆற்றை அடைந்தது என்றதில் உள்ள நயம் காண்க.

அடா நெறி அடைதல் செல்லா வேந்தன், நீதி விடா நெறி முதலியவற்றையுடைய வேந்தன் எனத் தனித்தனியே இயைக்க. மலையிலே தோன்றி, நீர்மிகுதற்கேற்ற கார்ப்பருவம் பெற்ற அருவி என மலைக்கும் பொருத்திக் காண்க. பருவமுற்றருவி: தொகுத்தல் விகாரம்.

(பி - ம்.) 1. அறைதல் செய்யா; அறிதல் செய்யா; அறைதல் சேரா: அமைந்த நீதி; நிறைந்த நீதி.
2. நெறி முறைமைச்; நிறை புலமைச்; நிறை மும்மைச்.
3. மலையிற் றேன்றும்; முகிலிற் றேன்றும்; மலையினின்றும்; மலையிற் றேன்றப்: பருவமொத் தருவி பல்கும்; அருவி மல்கும்; அருவிப் பில்கும்; அருவி பாயக்: படாமுகப் பணைக்கை நால்வாய்ப் பாகடுஞ் சீற்றத் துப்பிற்.
4. கடாநறையாறு; கடாநிரையாறு; கடாநெறியாறு. (1)

1107. கப்புடை நாவி னுக ருலகமுங் கண்ணிற் றேன்றத்
துப்புடை மணலிற் ருகிக் கங்கைநீர் சுருங்கிக் காட்ட
அப்புடை யனிக வேலை யகன்புனன் முகந்து மாந்த
உப்புடைக் கடலுந் தெண்ணீ ருண்ணசை யுற்ற தன்றே.

கங்கை-கங்கை நதியானது, கப்பு உடை(ய) நாவின் நாகர் உலகமும் கண்ணில் தோன்ற-பிளவுண்ட நாக்கையுடைய நாகரின் உலகமான பாதாளமும் (காண்போர்) கண்ணுக்குத் தெரியுமாறு, நீர் சுருங்கி-நீர் வற்றி, துப்பு உடை(ய) மணலிற்று ஆகி காட்ட-தூய மணலுடையதாய்த் தோன்றும்படி, அ புடை அனிகம் வேலை-அவ்விடத்து வந்த (தசரதனுடைய) சேனை சமுத்திரம், அகன் புனல் முகந்து மாந்த-(கங்கையின்) மிக்க நீரை அள்ளிக் குடித்துவிட்டதனுல், உப்பு உடை(ய) கடலும்-உப்பு நீரைக்கொண்ட கடலுங்கூட, அன்று-அப்போது, தெள் நீர் உண் நசை உற்றது-தெளிந்த (நல்ல) நீரை உண்ணும் ஆசையை உடையதாயிற்று. ஏ-அசை.

சக்கரவர்த்தியுடன் வந்த மிகப்பெரும் படையில்உள்ள யானை, குதிரை முதலியனவும், ஆட்களும், மகளிரும் வழிவந்த வருத்தத்தால் மிக்க நீர்வேட்கையுற்று, அது தீரக் கங்கை நீரை அள்ளிப் பருகவே, அக்கங்கையின் நீர் முழுவதும் வற்றி மணல் தெரியும்படி ஆகிவிட்டது. அதுவரை கங்கை மிக்க நீர்ப்பெருக்குடன் ஓடிக் கடலில் கலந்து வந்ததனால் அந்நீரைச் சுவைத்துப் பருகி வந்த கடல், இப்போது அது கிடைக்கப்பெறாமல் வருந்தி, இனி அதனை எப்போது பெறுவோம் என்று ஆசையுற்று ஏங்கிற்று என்க. கடல் உப்பு நீரைப் பேரளவில் உடையதாயினும், அது பருகுதற்கு ஆகாமையின், நல்ல நீரை அவாவிற்று. 'நாகருலகமும் தோன்ற' என்றது கங்கையின் ஆழ மிகுதியைக் காட்டும். கிட்கிந்தா காண்டத்துள், பம்பைப் பொய்கையைக் கூறுமிடத்து 'எற்படர் நாகர்த மிருக்கை யீதெனக், கிற்பதோர் காட்சியது' (6) என்றது காண்க. அத்தகைய கங்கையே வற்றும்படி யாயிற்றென்றது சேனையின் மிகுதியைக் காட்டுகிறது. இச்சேனைக் கடல் பருகிவிட்டதனால், எப்போதும் பருகும் கடலுக்கு இந்நீர் இலதாயிற்று.

பாம்புகளின் நாக்கு இரு பிளவாக உள்ளது: 'கவைநா அருந் தலைக் காண்பின் சேக்கை' பரி. 13: 28.

(பி - ம்.) 1. கைப்புடை நாவின்; கப்புடைப் பணத்தின்: கண்ணிற்காணத்.
2. மணலிற் ருக்கிக்; மணலிற்றுங்கிக்; சுருங்கிக் காட்டி; சுருக்கிக்காட்ட; சுருங்கித் தோன்ற.
3. அநீகவேலை; அனீகவேலை: அகழ்புனல்.
4. தண்ணீர்: உண்ணசை யற்றதன்றே; உலந்ததன்றே. (2)

சக்கரவர்த்தி பரிவாரங்களுடன் மிதிலையை அணுகுதல்

1108. ஆண்டுநின் றெழுந்து போகி யகன்பணை மிதிலை யென்னும்
ஈண்டுநீர் நகரின் பாங்க ரிருநிலக் கிழவ னெய்தத்
தாண்டுமாப் புரவித் தானைத் தண்ணளிச் சனக னென்னும்
தூண்டரு வயிரத் தோளான் செய்தது சொல்ல லுற்றும்.

இரு நிலம் கிழவன்-பெரிய இப்புவனம் முழுதுமுடைய தசரத மன்னன், ஆண்டு நின்று எழுந்து போகி-(பரிவாரங்களுடன்) அங்கு நின்றும் புறப்பட்டுச் சென்று, அகன் பணை-பரந்த மருத நிலஞ் சூழ்ந்த, மிதிலை என்னும்-மிதிலை என்று சொல்லப்படுகிற, ஈண்டு நீர் நகரின் பாங்கர் எய்த-மிக்க நீர்வளமுள்ள நகரின் பக்கத்தே சேர, (அப்போது), தாண்டு மா புரவி தானை-தாவிச் செல்லும் பெரிய குதிரைப் படையையும், தண் அளி-குளிர்ந்த அருளையும் உடைய, சனகன் என்னும்-சனகன் என்று பேர் சொல்லப்படுகிற, தூண் தரு வயிரம் தோளான்-இரும்புத் தூணை யொத்த வயிரம் பொருந்திய தோள்களையுடையவன், செய்த்து-(சக்கரவர்த்தியை எதிர்கொள்ளுதற்குச்) செய்தவற்றை, சொல்லல் உற்றும்-சொல்லலானோம்.

சக்கரவர்த்தி பரிவாரங்களுடன் கங்கைக் கரையினின்றும் போய் மிதிலை நகரை யணுகினுன் என்று கூறிய ஆசிரியர், அவர்கள் கங்கையைக் கடந்தவகை கூருதுவிட்டது, நீர் வற்றிய கங்கையை அவர்கள் எளிதிற் கடந்து சென்றன ரென்பது தோன்றப் போலும். சனகனுக்குப் படையோடு தண்ணளியையும் ஒருங்கே கூறினமை அவன் வீரமும் அருளும் சிறப்பித்தவாறும்.

(பி - ம்.) 1. எழுந்து பொங்கி; இழிந்து போகி: அகன்புனல்: மிதிலை வேந்தன்.
2. ஈண்டுநீர்! நளினப் பாங்கர்; நாடு தன்னை.
3. தாண்டுமா புரவித்: தாண்டு வெம்புரவித்: தண்ணருட்.
4. தூண்டரும்; தூண்டகு. (3)

சனகன் சக்கரவர்த்தியை எதிர்கொள்ள எழுதல்

1109. வந்தன னரச னென்ன மனத்தெழு முவகை பொங்கக்
கந்தடு களிறுந் தேருங் கலினமாக் கடலுஞ் சூழச்
சந்திர னிரவி தன்னைச் சார்வதோர் தன்மை தோன்ற
இந்திர திருவன் றன்னை யெதிர்கொள்வா னெழுந்துவந்தான்.

அரசன் வந்தனன் என்ன-சக்கரவர்த்தி (நகரின் அருகில்) வந்துளான் என்று (ஒற்றர்) சொல்ல, (கேட்ட சனக மன்னன்), மனத்து எழும் உவகை பொங்க-மனத்தில் உண்டான மகிழ்ச்சி மேலிட, கந்து அடு களிறும்-கட்டுத் தறியை முறிக்கும் ஆண் யானை களும், தேரும்-தேர்களும், கலினம் மா கடலும்-கடிவாளம் பூண்ட குதிரைப் படைக்கடலும், சூழ-தன்னைச் சூழ்ந்துவர, சந்திரன்-சந்திர னனவன், இரவி தன்னை-சூரியனிடத்தே, சார்வது ஓர் தன்மை தோன்ற-(சென்று) சேர்வது போன்ற ஒரு தன்மை காணப்பட, இந்திர திருவன் தன்னை-இந்திரனுக்கொப்பான செல்வமுடைய அந்தச் சக்கரவர்த்தியை, எதிர்கொள்வான்-எதிர்கொண்டு அழைத் துச் செல்லும் பொருட்டு, எழுந்து வந்தான்-புறப்பட்டு வந்தான்.

சனக மன்னன், சக்கரவர்த்தியின் வருகையை ஆவலோடு எதிர்பார்த்திருந்தவனுதலால், அவன் வந்தானென்ற செய்தி கேட்ட லும், மிக்க உவகைகொண்டு, பெருஞ் சிறப்புடன் அவனை வரவேற் கும் பொருட்டு நால்வகைப் படைகளும் புடைசூழப் புறப்பட்டு வந்தான் என்க. தேர், யானை, குதிரை ஆகியவற்றைக் கூறவே, உப லட்சணத்தால் காலாட் படையுங் கொள்ளப்படும். குதிரைகளின் மிகுதி பற்றிக் கடல் என்ருர்; குதிரைகள் ஒன்றன் பின் ஒன்ருகக் கடலலைபோல வருதலாலும் அது பொருந்தும். கலினமாக் கடல் என் பதனை உம்மைத்தொகையாகக் கொண்டு, கலினமாவும், கடலும் (கடல்போன்ற காலாட்படையும்) எனவுரைத்தலும் ஆம்.

தசரதனைச் சூரியனுகவும் சனகனைச் சந்திரனுகவும் கூறியது அவர்களிடையேயுள்ள உயர்வு தாழ்வு பற்றியது. அன்றியும்,

தசரதன் சூரிய குலத்தவன்; சனகன் சந்திர குலத்தவன்; எனவே அவ்விரு குலத் தலைவரும் ஒருவரை யொருவர் சந்தித்தன ரென்ற குறிப்பும் அதில் அடங்கும். 'வந்தனன் அரசன்' என்ற விடத்து, 'அரசன்' என்பது, சனகனாகிய அரசனுக்கும் அரசன் என்ற குறிப்பும் உடையது. சனகன் சந்திர குலத்தவ னென்பது : *1190.*

கந்தடு களிறு: 'கந்து முனிந் துயிர்க்கும் யானை' (புறநா. *178*): 'கந்து சுளியுங் கடாக்களிற்றின்' (நள. *374*). 'இந்திர திருவன்' 'இந்திர திருவனைக் காண்குதும்' (சிலப். *26: 94*); 'இந்திர திருவற்கு' (சீவக. *1264*).

(பி - ம்.) 1. மனத்தெழுந் துவகை பொங்கிச்; உவகை யோங்கக்; உவகை யோங்கிச்; உவகையோடும்.
2. கந்தடர் களிறு; கந்தரக் களிறு: கவனமாக்.
3. உவகை தோன்ற; உவமை யென்ன.
4. இந்திர தருவன்: இந்திரை திருவன்; எதிர்ந்து வந்தான்; எழுந்து சென்றான்; இந்திரனிவந்தவானினெதிர் கொள்வான்போல வந்தான்.
(4)

1110. கங்கைநீர் நாடன் சேனை மற்றுள கடல்க ளெல்லாம்
சங்கின மார்ப்ப வந்து சார்வன போலச் சாரப்
பங்கயத் திருவைத் தந்த பாற்கட லெதிர்வ தேபோல்
மங்கையைப்பயந்தமன்னன் சேனைவந்தெதிர்ந்த தன்றே.

கங்கை நீர் நாடன் சேனை-கங்கை நீர் பாயும் நாட்டையுடைய தசரதன் படைகள், மற்று உள கடல்கள் எல்லாம்-(பாற்கடல் அல்லாத) வேறு உள்ள கடல்களெல்லாம், சங்கு இனம் ஆர்ப்ப-சங்குக் கூட்டம் முழங்க, வந்து சார்வனபோல-(ஓரிடத்திலே) வந்து சேர்தல் போல, சார-வந்துகொண்டிருக்க, பங்கயம் திருவை தந்த பால்கடல்-செந்தாமரையில் வீற்றிருக்கும் இலக்குமியைப் பெற்றெடுத்த திருப் பாற்கடலானது, எதிர்வதுபோல்-எதிர்கொள்வதுபோல, மங்கையை பயந்த மன்னன் சேனை-(திருமங்கையாகிய) சீதாபிராட்டியைப் பெற்ற சனக மன்னனது சேனை, வந்து எதிர்ந்தது-வந்து எதிர்ப் பட்டது. அன்று, ஏ: அசை.

தசரதன் படைகளின் மிகுதிபற்றி, 'பாற்கடலல்லாத எல்லாக் கடல்களும் ஒருங்கே திரண்டு வருவனபோல' என்றார். மிதிலைச் சேனைக்குப் பாற்கடலை உவமித்தவர், 'பங்கயத் திருவைத் தந்த' என்று விசேடித்து, அத்திருமகளே இங்குச் சீதாபிராட்டியாக வந் துளாள் என்பது தோன்ற 'மங்கையைப் பயந்த மன்னன் சேனை' என்றார். சங்கினம் ஆர்த்தல், சேனைக் கடலுக்கும் பிற கடல்களுக்கும் பொது. கோசல நாட்டுக்குரியது சரயுநதியே யாயினும், அந்நாட் டெல்லை கங்கை வரையிற் பரந்துளதாகலின் 'கங்கை நீர் நாடன்' என்று தசரதனைக் கூறினார்; பிறவிடங்களிலும் இவ்வாறு கூறியுள்

ளார்; 'கங்கைக்கிறைவன்' (அயோத். 411) என இலக்குவனைக் கூறுதலும் காண்க. இராமபிரானைத் திருமாலாகக்கொண்டு கூறுதல் போலச் சீதாபிராட்டியையும் திருமகளாகக் கொண்டு பலவிடத்துங் கூறுவர் கம்பர்.

(பி - ம்.) 2. போலச் சார்ந்தார்.
3. பங்கயத் தணங்கைத்; பங்கயத் தவளைத்; பங்கயத் தமிர்தைத்: பாற் கடல் வருவதேபோல்; எதிர்ப்பதேபோல்.
4. பயந்த வேந்தன் வளர்நகர்; வேந்தன் மாநகர்; மன்னன் வளநகர். (5)

(வேறு)

1111. இலைகுலா வயிலினு னனிகமே ழெனவுலாய்
நிலைகுலா மகரநீர் நெடியமா கடலெலாம்
அலகின்மா களிறுதேர் புரவியா ளெனவிராய்
உலகெலா நிமிர்வதே பொருவுமோ ருவமையே.

இலை குலாவு அயிலினன் அனிகம்-இலையின் வடிவுடைய வேலை யேந்திய சனக மன்னன் படை, ஏழு என உலாய்-ஏழாவது கடல் என்னும்படி வந்து சேர்ந்ததனால், (அவ்வாறு கூடிய சேனையின் முழுப் பரப்புக்கு), நிலை குலாம் மகரம்-நிலைத்தல் பொருந்திய சுறுமீன்களை யுடைய, நீர் நெடிய-நீர்மிக்க, மா கடல் எல்லாம்-பெரிய கடல்கள் எல்லாம், (ஏழு கடல்களும்), அலகு இல்-அளவில்லாத, மாகளிறு (என) பெரிய யானைகளாகவும், தேர் (என)-தேர்களாகவும், புரவி (என)-குதிரைகளாகவும், ஆள் என-காலாட்களாகவும் (வடிவு கொண்டு), விராய்-கலந்தெழுந்து, உலகு எலாம் நிமிர்வதே - உலகமெங்கும் பரந்து வருதலே, பொருவும் ஓர் உவமை-பொருத்தமுள்ள ஓர் உவமையாகும்.

சக்கரவர்த்தியின் சேனைகளை ஆறு கடல்களின் திரட்சி எனவும் சனக மன்னன் சேனையைப் யாற்கடல் எனவுங் கூறி, இவையெல்லா மாக, ஏழுகடல்களும் சதுரங்க சேனைகளாகிப் பரவியது போன்றிருந்தன என்கிறுர். மகரம் (சுறுமீன்) கடலில் அன்றி வேறிடங்களில் வாழாதது; கடலுக்கு 'மகராலயம்' என்ற பெயரும் உண்டு; ஆதலால் 'மகர நீர்நெடிய மாகடல்' என்றுர்.

(பி - ம்.) 1. இலைகுலா மயிலினன்; இலைகுலா வேலினன்; எனவுலாம்.
3. மால்களிறு: புரவியாளேவிராய்; புரவியோரளவிலா.
4. நிமிர்வதோர்; நிமிரவே; நிமிர்வவோ பொருவ பேருவமையே; பொரு வுபே ருவமையே. (6)

1112. தொங்கல்வெண் குடைதொகைப் பிச்சமுட் படவிராய்
எங்கும்விண் புதைதரப் பகன்மறைந் திருளெழப்
பங்கயஞ் செய்யவும் வெளியவும் பலபடத்
தங்குதா மரையுடைக் கானமே சாலுமே.

தொங்கல்-மாலை யணிந்த, வெண்குடை - வெண்கொற்றக் குடைகளும், தொகை பிச்சம் உட்பட-கூட்டமான பீலிக்குடைகளும், ஆலவட்டம், சாமரை முதலிய அரச சின்னங்களும் ஆகிய பலவும், விராய்-கலந்து, எங்கும் விண் புதைதர-அப்பக்கமெங்கும் ஆகாயத்தை மறைத்தலால், பகல் மறைந்து-வெயிலொளி மறைந்து, இருள் எழ-இருள் உண்டாக, (அந்தச் சேனையின் பரப்பிடம்), செய்யவும் வெளியவும் பங்கயம்-செந்நிறத்தனவும், வெண்ணிறத்தனவுமான தாமரைகள், பலபட தங்கு-மிகப் பலவாகத் தங்கிய, தாமரை உடை கானம் சாலும்-தாமரைக்காடு போன்றதாகும்.

தாமரைக் காடு என்றது மிகுதிபற்றி; வெண் சாமரமும், வெள்ளைக் குடைகளும், அவற்றில் கட்டித் தொங்கவிடப்பட்ட செந்நிறக் குஞ்சங்களும், ஆலவட்டங்களும் முறையே வெண்டாமரை செந்தாமரை மலர்களாகவும், மயிற்பீலியாலாகிய பிச்சம் முதலியன தாமரை யிலைகளாகவும் அமைய, அவ்விடம் தாமரைக் காடாயிற் றென்க.

வெண் குடைகளுக்கு மாலைசூட்டுதல் மரபாதலால், தொங்கல்-மாலையென உரைக்கப்பட்டது; குடையின் விளிம்பில் தொங்கவிடப்படும் பட்டுக் குஞ்சங்களும் ஆம்; மயிற் பீலி யென்றும் பிறவாறும் உரைப்பாருமுளர். சாலும்-ஒக்கும். ஏகாரம், முன்னது இசை நிறை; பின்னது ஈற்றசை.

தாமரையுடைக் கானம்: 'தாமரைக்காடு பூத்து' (192); முன்னிரண்டடிகளோடு, 'குடையொடு பிச்சந்தொங்கற் குழாங்களுங் கொடியின் காடும், இடையிடைமயங்கி யெங்கும் வெயில்கரந்திருளைச் செய்ய' (862); 'பல்பெரும் பதாகைப் பத்தி மீமிசைத் தொடுத்த பந்தர், செல்லவெங் கதிரொண்கற்றை முற்றவுந்தெரியா வண்ணம்' (யுத்த. 2346) என்பவற்றை ஒப்பிடுக.

(பி - ம்.) 1. தொங்கலும் வெண்குடை தொகையமும் படவிராய்; தொங்கலும் வெண்குடைப் பிச்சமும் படவிராய்; தொங்கல்வெண்குடைதுவர்க் கவிகையுட் படவிராய்.
2. பகன் மறைத் திருளெழப்: பகன் மறைந்தனவெனப்; பகன்மறைந் திருள்செயப்; பகன் மறைந்தனவிராய்ப்; பகன் மறைந்திருள்செய்வ.
3. வெளியவும் பகல்படப்; பகல்படக்; பகல்படத்.
4. பொங்குதாமரையுடைக்; கங்குல் தாமரையுடைக்; தங்குதாமரை யுடைத்தானமே போலுமே. (7)

1113. கொடியுளா ளோதனிக் குடையுளா ளோகுலப்
படியுளா ளோகடற் படையுளா ளோபகர்
மடியிலா வரசினுன் மார்புளா ளோவளர்
முடியுளா ளோதெரிந் துணர்கிலா முளரியாள்.

தெரிந்து உணர்கிலா-(உள்ள இடத்தை) ஆராய்ந்துணர முடியாத, முளரியாள்-வெற்றித் திருமகள், பகர் மடி இலா அரசி

ஞன்-(அரசுக்கு இழுக்கெனப் பெரியோர்) சொல்லுகிற, சோம்பல் இல்லாத அரசனுகிய தசரதனுடைய, மார்பு உளாளோ-மார்பில் தங்கி யிருக்கின்ருளோ, வளர் முடி உளாளோ-பெருமை மிக்க முடியில் வீற்றிருக்கிருளோ, கொடி உளாளோ-(அவனது) வெற்றிக் கொடியில் இருக்கின்ருளோ, தனி குடை உளாளோ-ஒப்பற்ற வெண் கொற்றக் குடையில் இருக்கின்ருளோ ! கடல் படை உளாளோ-(அவனுடைய சிறந்த) கடல் போன்ற படைத் தொகுதியில் இருக்கின்ருளோ, குலம் படி உளாளோ-அவன் வமிச பரம்பரையிலேயே (அணைவரிடத்தும்) அமர்ந்திருக்கின்ருளோ ! (என்ன வென்று சொல்வது !).

சக்கரவர்த்தியின் ஆட்சி மேன்மையையும், வெற்றிச் சிறப்பையும் பலபடியாகக் குறிப்பிக்கின்ருர். வெற்றித்திரு வீற்றிருக்கும் இடம் இதுவோ அதுவோ என ஒவ்வொன்ருகக் கூறினும், இவ்விடங்கள் எல்லாவற்றிலும் அவள் உள்ளாள் என்பதே கருத்து. அரசனையும் அரச சின்னங்களையும் தனித் தனியே கூறியும் அமையாது, அவர்கள் குலத்துக்கே வெற்றியென்பது தனியுரிமையுடைய தென்பார் 'குலப்படியுளாளோ' என்ருர். குலப்படி-'அக்குலத்தவர் ஆளும் நாடு' எனவும், (தசரதன் இப்போது வந்துள்ள) சிறந்த இடம் எனவுங் கூறலும் ஆம். சக்கரவர்த்தி எங்கே சென்ருலும் அங்கே வெற்றித் திருமகள் அவனுடனிருப்பாள் என்றபடி. சனக மன்னனுக்கும் இவை பொருந்தும்; திருமகளாகிய பிராட்டி உள்ளவிடமும் இது; எல்லாம் அடங்கக் கூறியுள்ள திறம் ஓர்ந்து இன்புறற்குரியது. 'தெரிந்துணர்கிலாம்' என முற்ருக்கி யுரைத்தலும் ஆம்.

மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான், தாஅயதெல்லாம் ஒருங்கு' (குறள். 610); 'மடியிலான், தாளுளாள் தாமரையினுள்' (குறள். 617) என்பன ஈண்டு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. கொடியுளாளொருதனிக்; குடியுளாளோ தனிக்: குடையுளாளோ வொரு; கொடியுளாளோ குலப்.
2. படியுளாளோ பகர்; பிடியுளாளோ கடற்; படையுளாளோ வகன்; படையுளாளோ புகர்; புடையுளாளோ பகர்.
3. மடிவிலா: அரசினர்: அரசியன் மரபுளாளோ; அரசனன் மார்புளாளோ; அரசர்தம் மார்புளாளோ; அரசினன் மார்புளாளோவழா; அரசன் மார்பினிலுளாளோ வளர்; முரசினன் மார்புளாளோவளர்.
4. தெரிந்துணர்கிலாள்; தெரிந்துணர்கலா; தெரிந்துணர்கிலோம். (8)

பலவகை ஒலிகள்

1114. வார்முகங் கெழுவுகொங் கையர்கருங் குழலின்வண்
டேர்முழங் கரவமே ழிசைமுழங் கரவமே
தேர்முழங் கரவம்வெண் டிரைமுழங் கரவமே
கார்முழங் கரவம்வெங் கரிமுழங் கரவமே.

(அவ்விடத்தில்), வார் முகம் கெழுவு கொங்கையர்-கச்சினி டத்து நிறைந்துள்ள தனங்களையுடைய மகளிரின், கரு குழலின் வண்டு-கரிய கூந்தலில் மொய்க்கும் வண்டுகள், ஏர் முழங்கு அரவம்-அழகாக ஒலிக்கும் இனிய ஒலி, ஏழ் இசை முழங்கு அரவமே-(இசைக் கருவிகளில்) ஏழு சுரங்களையுடைய இசை முழங்கும் முழக்கமே யாகும்; தேர் முழங்கு அரவம்-தேர்களின் பேரொலி, வெண் திரை முழங்கு அரவமே-வெள்ளிய அலைகளையுடைய கடலின் பேரொலியே யாகும்; வெம் கரி முழங்கு அரவம்-கொடிய யானைகள் பிளிறும் ஒலி, கார் முழங்கு அரவமே-மேகங்கள் முழங்கும் இடியோசையே யாகும்.

மகளிரின் தொகை மிகுதியால், அவர்கள் கூந்தலில் மொய்க் கும் வண்டுகள் செய்யும் ஒலி, பலவகை யிசைக் கருவிகளின் ஓசையை யும் விஞ்சியது என்பது கருத்து தேரொலியும், யானைகள் பிளிறும் ஒலியும் முறையே கடலொலியும் இடி முழக்கமும் போன்றன என்ற தனுல், அவற்றின் தொகை மிகுதியும் பெறப்படும்.

'கரிமுழங்கரவமே' என்றதில் உள்ள ஏகாரம் பிரித்துக் கூட்டப் பட்டது. திரை: ஆகுபெயர். கெழுவுதல் - பொருந்துதலுமாம். வெம்மை-கொடுமை; மதயானைகளின் உடம்பு வெப்பமுடையதா யிருக்குமாதலின், வெப்பமும் ஆம்.

(பி - ம்.) 1. முகங்கெழுமு: குழலில் வண்டு; குழலுள் வண்டு.
3. அரவமேதிசை; அரவமெண்டிசை; அரவமேழ்திரை; அரவமெண்டிரை.
4. அரவமேகரி. (9)

சில பிரதிகளில் மூன்று, நான்காம் அடிகள் முறை மாறியுள்ளன.

### துகளின் மிகுதி

1115. சூழுமா கடல்களுந் திடர்படத் துகடவழ்ந்
தேழுபா ரகமுமுற் றுளதெனற் கெளிதரோ
ஆழியா னுலகளந் தன்றுதாள் சென்றவப்
பூழையூ டேபொடித் தப்புறம் போர்த்ததே

துகள்-(அங்கே எழுந்த) புழுதி, சூழும்-உலகத்தைச் சூழ்ந் துள்ள, மா கடல்களும் திடர் பட-பெரிய கடல்களும் (தூர்ந்து) மேடாகும்படி, தவழ்ந்து-பரவி, ஏழு பார் அகமும் உற்று உளது எனல் கு-ஏழு தீவுகளாகவுள்ள இப்பூவுலகம் முழுதும் சென்று சேர்ந் துள்ளது என்று சொல்வதற்கு, எளிது-எளிதேயாகும்; (ஏனெனில்), ஆழியான்-சக்கராயுதமேந்திய திருமால், உலகு அளந்த அன்று-(திரி விக்கிரமனுகி) மூவுலங்களையும் (தன்ஈரடியால்) அளந்த அந்தநாளில், தாள் சென்ற-(அவனது) ஒரு திருவடி (அண்டத்தைத் துளைத்துக் கொண்டு) சென்றதனுலான, பூழை ஊடே-அத்தொளையின் வழியே

பொடித்து-(மேலே) போய், அ புறம் போர்த்தது-(அண்ட முகட்டுக்கு) அப்பாலுள்ள விடங்களிலும் சூழ்ந்தது. ஏ-ஈற்றசை.

அங்கே எழுந்த தூளிப் படலம், அண்டமுகட்டுக்கப்பாலும் சென்று சூழ்ந்த தென்றால், இங்குள்ள கடல்களிலும் இவ்வுலக முழுவதிலும் சென்று பரவிற்று என்பதைச் சொல்லவும் வேண்டுமோ? அது தானே பெறப்படுதலின், மிக எளிதே யாகும் என்க. தூளியின் மிகுதியை உயர்வு நவிற்சியாகக் கூறுகின்றார்.

அளந்தன்று: தொகுத்தல்; அரோ: அசை. முன்னே எழுச்சிப்படலத்துட் கூறிய தூளியின் வருணனையும் (858, 882) நோக்குக.

(பி - ம்.) 1. தாழுமா கடல்களுந்: திடல்படத்; துகள்படத்; துகள் பரந்து ; துகளெழுந்து; துகள் வளர்ந்து.
2. எனற்கரிதரோ. 3. அன்றுதான்,
4. பூழையோடே; பூழியூடே: படிந்தப்புறம்: போயதே; போனதே. (10)

## இருளும் ஒளியும்

1116. மன்னெடுங் குடைமிடைந் தடையவான் மறைதரத்
துன்னிடுந் நிழல்வழங் கிருடுரப் பரிதரோ
பொன்னெடும் பூணிடும் புனைமணிக் குலமெலாம்
மின்னிடும் வில்லிடும் வெயிலிடுந் நிலவொடே.

பொன் நெடு பூண் - (அச்சேனையிலுள்ளார் அணிந்துள்ள) பொன்னாலாகிய சிறந்த அணிகலன்களும், இடும்-(அவர்கள்) அணிந்துள்ள,புனை மணி குலம்-அழகு செய்யும்இரத்தினாபரணங்களுமாகிய, எலாம்-எல்லாம் (ஒருங்கே), மின் இடும்-(சில) மின்னல் போன்ற ஒளியை வீசும்; வில் இடும்-(சில) இந்திர வில்லைப் போலும் ஒளியை வீசும்; (மற்றும் பல), நிலவொடு-நிலவொளியையும், வெயில்-வெயிலொளியையும், இடும்-வீசும்; (இவ்வாறு பலவகை யொளிகளும் நிரம்பினும்), மன் நெடு குடை மிடைந்து-மிகுதியான பெரிய (பலவகைக்) குடைகள் நெருங்கி, வான் அடைய மறைதர-ஆகாய முழுதும் மறைத்தலால், துன்னிடும் நிழல் வழங்கும்-(அங்கே) செறிந்த நிழலால் உண்டான, இருள்-இருட்டை, துரப்பு அரிது-போக்குதல் அரிதாகும்.

அணிகலன்கள் பலவகைப்பட்டனவாதலால் அவை தரும் ஒளிகளும் பலவகைப்படுமென்பார், மின்னிடும், வில்லிடும், வெயிலும் நிலவும் இடும் என வேறு வேறு கூறினார். இத்தனை ஒளியிருப்பினும், குடைகளின் நெருக்கத்தால் வெயில் மறைந்து உண்டான இருளைப் போக்குதல் அரிது எனக் குடைகளின் மிகுதியைக் குறிப்பித்தார். இச்செய்யுளில் பாட வேறுபாடுகளும் அவற்றிற்கேற்ப உரை வேறுபாடும் பலவாக வுள்ளன.

நகரவொற்று இரண்டிடங்களில் விரித்தல்; அரோ: அசை; ஏகாரம், ஈற்றசை.

'குடையொடு யிச்சந் தொங்கற் குழாங்களுங் கொடியின் காடும், இடையிடை மயங்கி யெங்கும் வெளிகரந் திருளைச் செய்யப், படைகளு முடியும் பூணு மாரமும் பகலைச் செய்ய, இடையொரு கணத்தினுள்ளே யிரவுண்டு பகலுமுண்டே' (862) என்பதனை இங்கே ஒப்பிடுக.

(பி - ம்.) 1. அடையவான் மிடைதரத்; அடையவானக மறைந்து; அடையவான் மறைதலால்; அனையவான் மறைதரத்.
2. துன்னெடு: நிழலெனும்; துன்னிடும் புயல் வழங்கு: இருடுரப் பெளி தரோ; எளிதடோ; துன்னிடுந் துன்னிழல் துரப்பவு மரிதரோ.
3. பொன்னிடும் புவியிடும்; பூவிடும்; பூணிடு: பொன்னெடு முடிமுதற்: புனைமணிக்கலனெலாம்; குலமெலாம்; புரைமணிக் குலமெலாம்.
4. மின்னிடும் வெயிலிடும் வில்லிடும்; மின்னெடும் வெயிலிடு வில்லிடும்; மின்னிடும் வெயிலிடு மயிலிடும்; வாளிடும் வெயிலிடும்: நிலவுமோ நிழலொடே. (11)

### சனகன் வந்த வழியின் நிலை

1117 தாவின்மன் னவர்பிரான் வரமுரட் சனகனும்
ஏவருஞ் சிலையினு னெதிர்வரு நெறியெலாம்
தூவுதண் சுண்ணமுங் கனகநுண் டூளியும்
பூவின்மென் றாதுகும் பொடியுமே பொடியெலாம்.

தா இல் மன்னவர் பிரான் வர-குற்றமில்லாத, அரசர்க்கரசனான தசரதன் (இவ்வாறு)வருகையில், முரண்-வலிமை பொருந்திய, சனகன் ஆம்-சனக மகாராசனாகிய, ஏ வரும் சிலையினான்-அம்புகள் (மிகுதியாக) வருதற்குரிய வில்லையுடையவன், எதிர் வரும் நெறி எல்லாம்-எதிர்கொள்ள வரும் வழி நெடுகிலும், பொடி எல்லாம்-(உண்டாகிய) தூளிகள் எல்லாம், தூவு தண் சுண்ணமும்-(மங்களகரமாக) அள்ளி வீசுகிற குளிர்ந்த நறுமணப் பொடியும், கனகம் நுண் தூளியும்-நுட்பமான பொன்னின்பொடியும்,(பொற்சுண்ணமும்), பூவின் மென்தாது உகும் பொடியுமே-(ஆடவரும் மகளிரும் அணிந்துள்ள) பூக்களின் மெல்லிய மகரந்தம் சிந்துதலால் உண்டாகும் தூளியுமே யாகும்.

சக்கரவர்த்தி வருமிடங்களில் சேனையின் புடைபெயர்ச்சியால் எழும் புழுதியே மிகப்பெரிதாயிருக்க, சக்கரவர்த்தியை எதிர்கொள்ள வரும் சனகன் வந்த வழி முழுதும் மகிழ்ச்சியால் அனைவரும் தூவிய நறுமணச் சுண்ணமும், பொற் சுண்ணமும், பூக்களின் மகரந்தமுமே புழுதியாய் நிறைந்தன என்க. இதனால், மேலே நிகழவிருக்கும் திருமணத்திலே மிதிலை மக்களுக்கு உள்ள மகிழ்ச்சி மிகுதியும், அந்

நகரத்தின் செல்வச் சிறப்பும் கூறியவாறும். அடுத்த கவியுள்ளும் இவ்வாறே காண்க.

தா இல்-செருக்கு, சினம், சிறுமை, இவறன்மை, மாண்பிறந்த மானம் ஆகிய குற்றங்கள் இல்லாத; தாவின் எனக்கொண்டு,வலிமை யுடைய எனப் பொருளுரைத்தலும் ஆம்; 'தாவே வலியும் வருத்தமு மாகும்' என்பது தொல்காப்பியம், (தொல். சொல். 344); சனக மன்னன், மாற்றாரின்றியே மாநிலமாளும் மாண்பு மிக்கவனாதலால், ஏ அரும் சிலையினன்-அம்புகள் எய்தலில்லாத வில்லையுடையவன்; அதாவது, வில் அரசுக்கு அங்கமாக வுள்ளதேயன்றி, அதனைப் பயன் படுத்தும் அவசியம் நேராதவன் எனவுரைத்தலுமாம். சுண்ணத்திற் குத் தண்மையாவது மணத்தின் இனிமை.

(பி - ம்.) 1. வரமுடிச் சனகனும்; வரவருட் சனகனும். 2. மேவருஞ்.
3. தூவுநுண்: கனகமுண்டுளியும்; கனக துண்டுகளுமப்; கனக நுண் டுகளுடன்; கனக நுண்டொகுதியும்.
4. பூவினுண்டாதுகும்: பொடியுமே படியெலாம்; பொடியுமே புவி யெலாம். (12)

1118. நறுவிரைத் தேனுநா வியுநறுங் குங்குமத்
தெறியகிற் றேய்வையும் மான்மதத் தெக்கரும்
வெறியுடைக் கலவையும் விரவுசெஞ் சாந்தமும்
செறிமதக் கலுழிபாய் சேறுமே சேறெலாம்.

(சனகன் எதிர்கொள்ள வந்த வழியில்), சேறு எலாம்-சேறான தெல்லாம், நறு விரை தேனும்-நல்ல மணமுள்ள பூந்தேனும், நாவி யும்-புழுகும், நறு குங்குமத்து-மணமுள்ள குங்குமப் பூவுடன் கூடிய, எறி அகில் தேய்வையும் - துண்டிக்கப்பட்ட அகிற்கட்டையைத் தேய்த்த விழுதும். மான் மதத்து எக்கரும்-கத்தூரிக் குழம்பின் வண் டலும், விரவு வெறி உடை(ய) கலவையும்-பல வாசனைப் பொருள் கலந்த நறுமணமுள்ள பூச்சுக் குழம்பும், செம் சாந்தமும்-செஞ்சந் தனக் குழம்பும், (ஆகியவற்றாலுண்டான சேறும்), செறி மதம் கலுழி பாய் சேறுமே-மிக்க மதநீர் பாய்தலாலுண்டான சேறுமே (ஆகும்).

முந்திய பாடலுள், சனகன் வந்த வழியில் உண்டான புழுதி கள் இவையெனச் சிலவற்றைக் கூறியதுபோல, இங்கே, அவ்வழியில் உண்டான சேறுகள் இவையெனப் புனைந்து கூறுகின்றார். யானை மத மும் மணமுடையதாகலின், பிற நறுமணப் பொருள்களுடன் அதனை வும் சேர்த்துக் கூறினார். மதநீர் பாய்ந்து வழி சேறுதல்: 826, 859-பார்க்க. தேன், ஆடவரும் மகளிரும் அணிந்த பூமாலை முதலியவற்றி னின்றும் சிந்துவது; நாவி முதல் செஞ்சாந்தம் ஈறாக வுள்ளவை அவர் கள் உடம்பிற் பூசிக்கொள்வன; மகிழ்ச்சி மிகுதியால் அவற்றை யெல்லாம் அள்ளிச் சிந்தினர் என்றேனும், உடம்பினின்றும் அவையே சிந்தின என்றேனும் கொள்க.

(பி - ம்.) 1. தேனு நானமும்; தேவிளுவியும்; குங்குமச்; குங்குமஞ்.
2. செறியகிற்; செறிவயிற்; மான்மதத் தேக்கரும்; தேக்கமும்; தேக்கமே; திரள்களும்.
3. விரவு செஞ்சந்தமும்; விரவு சேர்வுற மிகும்; விரவு சேறுறமிகு; விரவு சேறுற மிகச்.
4. செறிமதக்களிறுபாய்; செறிமிகக் கலுழி பாய்; சேறுமேயாறெலாம்; சேறுமே தெருவெலாம். (13)

1119. மன்றலங் கோதையார் மணியினும் பொன்னினும்
சென்றுவந் துலவுமச் சிதைவிலா நிழலுநேர்
வென்றதிண் கொடியொடும் நெடுவிதா னமும்விராய்
நின்றவெண் குடைகளின் நிழலுமே நிழலெலாம்.

மன்றல் அம் கோதையார்-நறுமணம் வாய்ந்த அழகிய கூந்தலையுடைய அரசமகளிரின், மணியினும்-இரத்தினுபரணங்களின்றும், பொன்னினும்-பொன்னணிகளினின்றும், (உண்டாகி), சென்று வந்து உலவும்-விட்டுவிட்டுப் பிரகாசிக்கிற, அ-அந்த, சிதைவு இலா-கெடுதலில்லாத, (தொடர்புவிடாத), நிழலும் - சாயையும், நேர்-(அதனேடு) பொருந்திய, வென்ற திண் கொடியொடும்-வெற்றிக் கறிகுறியான வலிய கொடிகளுடனும், நெடுவிதானமும்-உயர்ந்த மேற்கட்டிகளுடனும், விராய்-கலந்து, நின்ற-(ஓங்கி) நின்ற, வெண்குடைகளின் நிழலுமே-வெண் கொற்றக் குடைகளின் நிழலுமே, நிழல் எலாம்-அங்கிருந்த நிழலெல்லாம்.

மகளிரின் விலையேறிய அணிகலன்கள் வீசும் குளிர்ந்த அழகிய சாயையும், வெண் கொற்றக் குடை, கொடி. விதானம் இவற்ருலுண்டாகும் நிழலும் கலந்து அச்சேனையின் பரப்பு முழுதும் குளிர்ச்சியும் அழகும் தந்தன என்றவாறு.இவை மூன்று பாடல்களாலும் முறையே பொடி, சேறு, நிழல் என அச்சேனையின் சிறப்பை எடுத்துக் கூறினர்.

மன்றல் அம் கோதையார்-மணம் பொருந்திய அழகிய பூமாலையணிந்த ஆடவர்கள் எனவும், மணியினும் பொன்னினும்-மணிகளாலும் பொன்னுலுமியன்ற வாகனங்களிலே, சென்று வந்து உலவும்-அங்கு மிங்கும் உலாவி வருகிற எனவும் உரைப்பாருமுளர். மற்றும் பாடமும் உரையும் வேறுபடவுங் கூறுவர்.

பொன், மணி என்பன ஆகுபெயர்கள்.

(பி - ம்.) 1. கோதையர்; கோதைமார்.
2. உலவுமத்திசையெலாம்; திசைகுலாம்; நிழலினேர்; நிழலேநேர்; நிழலதே; நிழலதேர்; நிழலரோ.
3. வென்றிதிண்; கொடியொடு; நிழல்விதானமும்.
4. நின்றதண்; கொடிகளின்; நிழல்களே நிழலெலாம்; நிழலுமே னிழலெலாம். (14)

நகரத்தின் செல்வச் சிறப்பும் கூறியவாரும். அடுத்த கவியுள்ளும் இவ்வாறே காண்க.

தா இல்-செருக்கு, சினம், சிறுமை, இவறன்மை, மாண்பிறந்த மானம் ஆகிய குற்றங்கள் இல்லாத; தாவின் எனக்கொண்டு,வலிமை யுடைய எனப் பொருளுரைத்தலும் ஆம்; 'தாவே வலியும் வருத்தமு மாகும்' என்பது தொல்காப்பியம், (தொல் சொல். 344); சனக மன்னன், மாற்ருரின்றியே மாநிலமாளும் மாண்பு மிக்கவனுதலால், ஏ அரும் சிலையினுன்-அம்புகள் எய்தலில்லாத வில்லையுடையவன்; அதாவது, வில் அரசுக்கு அங்கமாக வுள்ளதேயன்றி, அதனைப் பயன் படுத்தும் அவசியம் நேராதவன் எனவுரைத்தலுமாம். சுண்ணத்திற் குத் தண்மையாவது மணத்தின் இனிமை.

(பி - ம்.) 1. வரமுடிச் சனகனும்; வரவருட் சனகனும். 2. மேவருஞ்.
3. தாவுநுண்: கனகமுண்டுளியும்; கனக துண்டுகளுமப்; கனக நுண் டுகளுடன்; கனக நுண்டொகுதியும்.
4. பூவினுண்டாதுகும்: பொடியுமே படியெலாம்; பொடியுமே புவி யெலாம். (12)

1118. நறுவிரைத் தேனுநா வியுநறுங் குங்குமத்
தெறியகிற் றேய்வையும் மான்மதத் தெக்கரும்
வெறியுடைக் கலவையும் விரவுசெஞ் சாந்தமும்
செறிமதக் கலுழிபாய் சேறுமே சேறெலாம்.

(சனகன் எதிர்கொள்ள வந்த வழியில்), சேறு எலாம்-சேருன தெல்லாம், நறு விரை தேனும்-நல்ல மணமுள்ள பூந்தேனும், நாவி யும்-புழுகும், நறு குங்குமத்து-மணமுள்ள குங்குமப் பூவுடன் கூடிய, எறி அகில் தேய்வையும் - துண்டிக்கப்பட்ட அகிற்கட்டையைத் தேய்த்த விழுதும். மான் மதத்து எக்கரும்-கத்தூரிக் குழம்பின் வண் டலும், விரவு வெறி உடை(ய) கலவையும்-பல வாசனைப் பொருள் கலந்த நறுமணமுள்ள பூச்சுக் குழம்பும், செம் சாந்தமும்-செஞ்சந் தனக் குழம்பும், (ஆகியவற்ருலுண்டான சேறும்), செறி மதம் கலுழி பாய் சேறுமே-மிக்க மதநீர் பாய்தலாலுண்டான சேறுமே (ஆகும்).

முந்திய பாடலுள், சனகன் வந்த வழியில் உண்டான புழுதி கள் இவையெனச் சிலவற்றைக் கூறியதுபோல, இங்கே, அவ்வழியில் உண்டான சேறுகள் இவையெனப் புனைந்து கூறுகின்ருர். யானை மத மும் மணமுடையதாகலின், பிற நறுமணப் பொருள்களுடன் அதனை வும் சேர்த்துக் கூறினுர். மதநீர் பாய்ந்து வழி சேருதல்: 826, 859- பார்க்க. தேன், ஆடவரும் மகளிரும் அணிந்த பூமாலை முதலியவற்றி னின்றும் சிந்துவது; நாவி முதல் செஞ்சாந்தம் ஈருக வுள்ளவை அவர் கள் உடம்பிற் பூசிக்கொள்வன; மகிழ்ச்சி மிகுதியால் அவற்றை யெல்லாம் அள்ளிச் சிந்தினர் என்றேனும், உடம்பினின்றும் அவையே சிந்தின என்றேனும் கொள்க.

(பி - ம்.) 1. தேனு நானமும்; தேனிளுவியும்; குங்குமச்; குங்குமஞ்.
2. செறியகிற்; செறிவயிற்; மான்மதத் தேக்கரும்; தேக்கமும்; தேக்கமே; திரள்களும்.
3. விரவு செஞ்சந்தமும்; விரவு சேர்வுற மிகும்; விரவு சேறுறமிகு; விரவு சேறுற மிகச்.
4. செறிமதக்களிறுபாய்; செறிமிகக் கலுழி பாய்; சேறுமேயாறெலாம்; சேறுமே தெருவெலாம். (13)

1119. மன்றலங் கோதையார் மணியினும் பொன்னினும்
சென்றுவந் துலவுமச் சிதைவிலா நிழலுநேர்
வென்றதிண் கொடியொடும் நெடுவிதா னமும்விராய்
நின்றவெண் குடைகளின் நிழலுமே நிழலெலாம்.

மன்றல் அம் கோதையார்-நறுமணம் வாய்ந்த அழகிய கூந்தலையுடைய அரசமகளிரின், மணியினும்-இரத்தினுபரணங்களின்றும், பொன்னினும்-பொன்னணிகளினின்றும், (உண்டாகி), சென்று வந்து உலவும்-விட்டுவிட்டுப் பிரகாசிக்கிற, அ-அந்த, சிதைவு இலா-கெடுதலில்லாத, (தொடர்புவிடாத), நிழலும் - சாயையும், நேர்-(அதனேடு) பொருந்திய, வென்ற திண் கொடியொடும்-வெற்றிக் கறிகுறியான வலிய கொடிகளுடனும், நெடுவிதானமும்-உயர்ந்த மேற்கட்டிகளுடனும், விராய்-கலந்து, நின்ற-(ஓங்கி) நின்ற, வெண்குடைகளின் நிழலுமே-வெண் கொற்றக் குடைகளின் நிழலுமே, நிழல் எலாம்-அங்கிருந்த நிழலெல்லாம்.

மகளிரின் விலையேறிய அணிகலன்கள் வீசும் குளிர்ந்த அழகிய சாயையும், வெண் கொற்றக் குடை, கொடி. விதானம் இவற்ருலுண்டாகும் நிழலும் கலந்து அச்சேனையின் பரப்பு முழுதும் குளிர்ச்சியும் அழகும் தந்தன என்றவாறு. இவை மூன்று பாடல்களாலும் முறையே பொடி, சேறு, நிழல் என அச்சேனையின் சிறப்பை எடுத்துக் கூறினர்.

மன்றல் அம் கோதையார்-மணம் பொருந்திய அழகிய பூமாலையணிந்த ஆடவர்கள் எனவும், மணியினும் பொன்னினும்-மணிகளாலும் பொன்னுலுமியன்ற வாகனங்களிலே, சென்று வந்து உலவும்-அங்கு மிங்கும் உலாவி வருகிற எனவும் உரைப்பாருமுளர். மற்றும் பாடமும் உரையும் வேறுபடவுங் கூறுவர்.

பொன், மணி என்பன ஆகுபெயர்கள்.

(பி - ம்.) 1. கோதையர்; கோதைமார்.
2. உலவுமத்திசையெலாம்; திசைகுலாம்; நிழலினேர்; நிழலே?நர்; நிழலதே; நிழலதேர்; நிழலரோ.
3. வென்றிதிண்; கொடியொடு; நிழல்விதானமும்.
4. நின்றதண்; கொடிகளின்; நிழல்களே நிழலெலாம்; நிழலுமே விழலெலாம். (14)

## இருவர் சேனையும் சந்தித்தல்

1120. மாறிலா மதுகையான் வருபெருந் தானைமேல்
ஊறுபே ருவகையா னனிகம்வந் துற்றபோ
தீறிலோ தையினுலா மெறிதிரைப் பரவைவாய்
ஆறுபாய் கின்றதோ ரமலைபோ லானதே.

மாறு இலா மதுகையான்-ஒப்பில்லாத வலிமையுடைய தசரதனது, வரு பெரு தானை மேல்-மேன்மேலும் செறிந்துவரும் சேனையை நோக்கி, ஊறு பேர் உவகையான் அனிகம்-(இடைவிடாது) சுரக்கும் பெரு மகிழ்ச்சியுடைய சனக மன்னன் சேனையானது, வந்து உற்ற போது-(எதிரில்) வந்து சேர்ந்தபோது, ஈறு இல் ஓதையின்-முடிவில்லாத ஓசையுடன், உலாம்-வீசுகிற, எறி திரை-மோதும் அலைகளையுடைய, பரவை வாய்-கடலினிடத்து, ஆறு பாய்கின்றது ஓர் அமலை போல் ஆனது-ஆறு வந்து கலத்தலால் உண்டாகும் ஓர் ஒலி போலாயிற்று. ஏ-அசை.

தசரதன் சேனை, பரப்பாலும் ஒலியாலும் கடல் போன்றது; அதனெதிரில் அவ்விருவகையிலும் குறைவுடைய சனகன் சேனை வந்து சேர்ந்தமை, ஓர் ஆறு வந்து கடலில் கலப்பதுபோன்ற தன்மையோடு காணப்பட்டது என, அவற்றின் பெருமை சிறுமை நோக்கி உவமித்துக் கூறுகின்றார். தசரதனைக் காண்பதில் சனகனுக்குள்ள மகிழ்ச்சி மிகுதியைப் புலப்படுத்த, 'ஊறு பேருவகையான்' என்றார். மாறு இலா மதுகை-(போர்முகத்தில்) விலகுதலில்லாத வலிமை யென்றலுமாம். மாறு-ஒப்பு: சீவக. 261; பகையும் ஆம்.

(பி - ம்.) 1. மாறிலான் மதுகைவான்; மாறிலா மதுகையின்; வருபொருந்தானை; மகிழ்பெருந்தானை.
3. ஈறிலோதையினெடும்; ஈறிலோதையினெறி; ஈறிலோகையினுலாம்; ஈறிலாவோதையின்: பரவைமேல்.
4. ஆயதே. (15)

## சனகன் தேரில் தனியே வருதல்

1121. கந்தையே பொருகரிச் சனகனுங் காதலே
உந்தவோ தரியதோர் பெருமையோ டுலகுளோர்
தந்தையே யனையவத் தகவினன் முன்புதன்
சிந்தையே பொருநெடுந் தேரின்வந் தெய்தினன்.

கந்தையே பொரு கரி-(தாம் கட்டப்பட்டுள்ள) கட்டுத்தறியையே தாக்கி முறிக்கிற யானைப் படைகளையுடைய, சனகனும்—, காதல் உந்த-(தசரதனைக் காண வேண்டுமென்ற) ஆசை தன்னைச் செலுத்த, ஓத அரியது ஓர் பெருமையோடு-சொல்லுதற்கரியவொரு பெருமையுடன், உலகு உளோர்-உலகத்தில் உள்ள அனைவர்க்கும், தந்தையே அனைய அ தகவினன் முன்பு-தந்தையே போன்ற அத்தகுதி

யுடைய தசரதன் முன்னே, தன் சிந்தையே பொரு-தன் மனத்தையே ஒத்த (விரைவுடைய), நெடு தேரின்-பெரியதொரு தேரில், வந்து எய்தினன்-வந்து சேர்ந்தான்.

சனகன், மிக்க ஆவலோடும் மகிழ்ச்சியோடும் தேரை விரைவாகச் செலுத்திக்கொண்டு தசரதனிடம் வந்து சேர்ந்தான் என்றவாறு. இராமபிரானை மருமகனாகவும் சக்கரவர்த்தியைச் சம்பந்தியாகவும் பெற்றதில், சனகன் அளவிறந்த பெருமையடைந்தான். 'சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே' என்றபடி, குடிகளைத் தீநெறிச் செல்லாதபடி காத்து நன்னெறியில் செலுத்தியும், அவர்களுக்கு வேண்டிய நன்மைகளைத் தவறாது செய்தும் அனைவருடைய அன்புக்கும் உரியவனாதலால், தசரதனை, 'உலகுளோர் தந்தையேயனையவத் தகவினன்' என்றார்; மூவுலகு மீன்றானை முன்னீன்ற இராமபிரானைப் பெற்ற தந்தையாதலாலும் அது பொருந்தும். இராமபிரான் திருவாக்கிலே வைத்து 'நானிலத்தார் தந்தாய்' (அயோத். 1135) என்பர் மேலும். தேரின் விரைவு குறித்துத் 'தன் சிந்தையே பொரு நெடுந்தேர்' என்றார். விரைவு மிகுதியைக் குறித்தற்கு, 'வாயு வேகம், மனோ வேகம்' என உலகில் வழங்குதலுங் காண்க.

(பி - ம்.) 1. காதலோடு; காதலோர்; காலமுன்.
2. உந்தவோ தரியதோர் தன்மையோடு; தன்மையால்; உந்தவோ தரிய பேருவகையான்; உவகையோடு; உந்தவோதரியபோ ரனிகமோடு; உலகுளார்; உலகின்மா.
3. தந்தையே யென்னுமத்.
4. பொருவருந்; பொருவுமத்; போனெடுந்; அனையவத்; தேரில்வந்து; தேரினைந்து; தேர்தெரிந்தேறினன். (10)

சக்கரவர்த்தி சனகனைத் தன் தேரில் ஏற்றிக்கொள்ளல்.

1122. எய்தலுந் திருநெடுந் தேரிழிந் தினியதன்
மொய்கொடிண் சேனைபின் னிற்கமுன் சேறலும்
கையின்வந் தேறெனக் கடிதின்வந் தேறினன்
ஐயனும் முகமலர்ந் தகமுறத் தழுவினன்.

எய்தலும்-(சனகன் தசரதனை) அணுகியவுடன், திரு நெடு தேர் இழிந்து-(தான் ஏறியிருந்த) அழகிய பெரிய தேரினின்றும் இறங்கி, தன்-தன்னுடைய, இனிய மொய்கொள் திண் சேனை-அழகிய மொய்த்தலைக் கொண்ட (நெருக்கமான) வலிய சேனைத் தொகுதி, பின் நிற்க-பின்னே நிற்க, முன் சேறலும்-(தான் மட்டும்) முன்னே நடந்து செல்லுதலும், (அதனைக் கண்டு), ஐயனும்-சக்கரவர்த்தியும், முகம் மலர்ந்து-முகமலர்ச்சி கொண்டு, கையின்-தன் கையினால், வந்து ஏறு என-வந்து (இந்தத் தேரில்) ஏறிக்கொள்க என்று குறிப்பிக்க, கடிதின் வந்து ஏறினன்-(சனகனும்) விரைவாக வந்து (சக்கரவர்த்தியின் தேரில்) ஏறிக்கொண்டான்; (அவ்வாறு

ஏறினவனை), அகம் உற தழுவினன்-(சக்கரவர்த்தி, தன்) மார்போடு பொருந்த நன்கு தழுவிக்கொண்டான்.

'ஆகம்' என்பது குறுக்கல் விகாரம் பெற்றது; அகமுற-மனத்தோடு என்றலுமாம். கையின்-பக்கத்தில் என்றலுமாம்.

சக்கரவர்த்தியின் சமீபத்தில் வந்தவுடன் சனகன் தன் தேரை விட்டிறங்கி, சேனையைப் பின்னே நிறுத்திவிட்டுத் தான் நடந்துவர, அதனைக் கண்ட சக்கரவர்த்தி முகமலர்ந்து, தன் தேரில் வந்து ஏறிக் கொள்ளும்படி குறிப்பிக்க, அவ்வாறே வந்து ஏறினவனை அன்போடு மார்புற அணைத்துக்கொண்டான் எள உலகியல் முறையை அழகுறக் காட்டியிருத்தல் காண்க. பெரியோர் தம் அன்பிற்குரியவரைத் தழுவிக்கொள்ளுதல் மரபு, *239*, *1128*, *1129*; அயோத். *61*, *1035*; யுத்த. *1371*-பார்க்க. பெரியோர்பால், சேனையின்றித் தனித்துச்செல்லுதல் முறை: அயோத். *658*; 'பொற்புடைப் புனிதன் கோயிற் புறத்தினி லனீக நிற்பச், சற்பவெம் பதாகை வேந்தன் நடையறத் தனிச் சென் றெய்தி' (வி-பா. வாசுதேவனைப். *9*).

(பி - ம்.) 1. எய்தவத் திருநெடுந்; எய்தவந்திருநெடுந்; எய்திவந்திருநெடுந்: இணையதன்.
2. மொய்கொள்வெஞ்; மொய்பெருஞ்: முன்சென்றலும்.
3. கையில்: கடிதுவந் தேறினன்; கடிதுசென் றேறினன்; கடிதின்வந்தெய் தினன்.
4. ஐயனும்மனமுவந்து; மனமுகந்து: அகனுறத்; அழகுறத்; அன்புறத். (17)

இருவரும் அளவளாவிச் செல்லுதல்

1123. தழுவிநின் றவனிருங் கிளையையுந் தமரையும்
வழுவில்சிந் தனையினன் வரிசையின் னளவளாய்
எழுகமுந் துறவெனு வினிதுகந் தெய்தினன்
உழுவைமுந் தரியனு னெவரினும் முயரினன்.

உழுவை முந்து அரி அன்னான்-(ஏனையரசர்களாகிய) புலிகளின் முன்னே சிங்கம் போன்றவனும், எவரினும் உயரினன்-யாவரினும் (எல்லாவகையாலும்) மேம்பட்டவனுமான தசரதன், தழுவி நின்றவன்-தன்னால் தழுவப்பட்டு நின்ற சனகனுடைய, இரு கிளையையும்-பெரிய சுற்றத்தாரையும், தமரையும்-நட்பினர் முதலியோரையும் (குறித்து), வரிசையின்-முறையாக, வழு இல் சிந்தனையினன்-களங்கமற்ற மனத்துடன், அளவளாய்-சேமம் விசாரித்து, (பின்பு), முந்து உற எழுக எனு-மேலே செல்வோமாக என்று சொல்லி, (அவனொடும் புறப்பட்டு) இனிது உகந்து எய்தினன்-இனிதாக விரும்பி (நகரினுள்) செல்லலானான்.

இனி, வழுவில் சிந்தனையினன், சனகன் எனக்கொண்டு எழுவாயாக்கி, அவன், தழுவி நின்றவனான தசரதனுடைய கிளையையுந்

தமரையும் பற்றி அளவளாவி, முந்துற எழுக என, அரியனுனும் உயரினுனுமாகிய தசரதன் இனிது வந்தெய்தினுன் எனக் கோடலும் ஒன்று. உழுவை முந்து அரி அனுன் என்பதற்கு, தன்னை எதிர்கொள்ள வந்த புலிபோன்ற சனகன் முன்னே, சிங்கம் போன்றவனுன தசரதன் என உரைப்பாரு முளர்.

(பி - ம்.) 1. நின்றவனருங் கிளையையும்; நின்றனைவருங் கிளையையும்.
2. சிந்தனையினுல்; சிந்தனையினுர்; சிந்தையினுன் வரிசைநின்று.
3. முந்துறவென; முந்துகவெனு: இனிதுவந்து; இனிதின்வந்து; ஏவினன் சனகனை; ஏகினன் கிளையொடும்; இனிதுவந்தேவினுன்; இனிதுவந் தேகினுன்; இனிது வந்தருளினுன்.
4. முந்தரியினுல்; முந்தயரினுன்; முந்துயரியான்; முந்தியதெனு; உழுவல் முந்துவரியான்; உரிமையான். (18)

### தந்தையை எதிர்கொளத் தநயர் வருகை

1124. இன்னவா றிருவரும் மினியவா றேகவத்
துன்னுமா நகரினின் றெதிர்வரத் துன்னினுன்
தன்னையே யனையவன் றழலையே யனையவன்
பொன்னின்வார் சிலையிறப் புய்நிமிர்த் தருளினுன்.

இன்னவாறு-இந்தவிதமாக, இருவரும்-(சனகனும் சக்கரவர்த் தியுமாகிய) இரண்டு பேரும், இனியவாறு ஏக-இன்பமாக (மிதிலை புக)ச் சென்றுகொண்டிருக்க, தன்னையே அனையவன்-தனக்குத்தானே நிகரானவனும், தழலையே அனையவன் பொன்னின் வார்சிலை இற-செந்தீ வண்ணனுன உருத்திர மூர்த்தியின், பொன் மயமான வலிய பெரிய வில் முறியும்படி, புயம் நிமிர்த்தருளினுன்-தன் கையை நீட்டியவனுமான இராமபிரான், துன்னும்-பல வளங்களும் நிறைந்த, மா நகரின் நின்று-பெரிய அம் மிதிலா நகரத்தினின்றும், எதிர்வர துன்னினுன்-(தந்தையை) எதிர்கொள்ளுதற்கு வரலானுன்.

சக்கரவர்த்தி, இராமபிரானைத் தன்னுயிராகக் கொண்டவனுதலால், அத்தகைய தந்தையைக் காணும் ஆவலோடு எதிர்கொண்டு வரலானுன் இராமபிரான் என்க. தன்னையே யனைவன் என்பதனைத் தழலையே யனையவனுக்கு அடைமொழி யாக்கலு மொன்று. இனிய ஆறு ஏக-(நகருக்குச் செல்லும்) இனிய வழியிலே செல்ல எனவுமாம். சிவபெருமான் கை வில் மேரு மலையென்பராத லின், 'பொன்னின்வார் சிலை' என்ருர். அவர் திருமேனி தழல் நிற முடைய தென்பது நூல்களுள்ளே பயின்று வருதல் காணலாம். 'தழற் புரை சுடர்க் கடவுள்' (ஆரணிய. 258) என்பதுங் காண்க. சிலை இறப் புயம் நிமிர்த்தலாவது, நாணேற்றிய வில் தண்டு வளைந்து முறியுமளவுக்கு அதனைப் பிடித்த இடக்கையை நிமிர்த்து நீட்டுதல். தன்னையே யனையவன். ஒப்பு: 'தன்னெப்பா ரில்லப்பன்' (திருவாய். 6. 3: 9); 'மற்ருருந் தன்னெப்பா ரில்லாதானை' (திருநாவுக்கரசர்.

கோயில்-பெரிய திருத்தாண்டகம்). ஈற்றடிக்கு ஒப்பு: 1128, 1130 காண்க.

(பி - ம்.) 1. இனையவாரேகவும்; இனியவாறேகவந்து; எய்த வந்து; எய்தவத்.
2. துன்னுமால்; துன்னுவான்; உன்னுவான்: நகரிநின்று; நகரிவந்து; எதிர்கொளத்; துன்னினர்.
3. அனையவத். 4. நிமிர்ந்தருளினன். (19)

சிலபிரதிகளில் இப்பாடலும் அடுத்ததும் முன்பின்னாக மாறியுள்ளன.

1125. தம்பியுந் தானுமத் தானைமன் னவனகர்ப்
பம்புதிண் புரவியும் படைஞரும் புடைவரச்
செம்பொனின் பசுமணித் தேரின்வந் தெய்தினான்
உம்பரும் மிம்பரும் முரகருந் தொழவுளான்.

உம்பரும்-தேவர்களும், இம்பரும்-இவ்வுலகத்தவரும், உரகரும்-(கீழுலகத்தவர்களான)நாகரும் (ஆகிய மூவுலகத்தவரும்),தொழ உளான்-தன்னைத் தொழுதற்குரியவாறு (திருமாலின் அவதாரமாக) உள்ள இராமபிரான், தம்பியும் தானும்-(தன்னை எப்போதும் பிரியாத) தம்பியாகிய இலக்குவனும் தானுமாக, அ தானை மன்னவன் நகர்-சேனைச் சிறப்புடைய அந்தச் சனக மன்னனுடைய நகரத்தினின்றும், பம்பு திண் புரவியும்-நிறைந்த வலிய குதிரைகளும், படைஞரும்-காலாட் படையினரும், புடை வர-தன்னைச் சூழ்ந்துவர, செம் பொன்னின் பசு மணி தேரின் வந்து - நல்ல பொன்னாலியன்று, குளிர்ந்த ஒளியுடைய மணிகள் பதித்த தேரில் ஏறிவந்து, எய்தினான்-(தந்தை யிருக்குமிடத்தை) அணுகினான்.

இராமபிரான், தந்தையை எதிர்கொண்டு காணுங் கருத்துடைமை யறிந்த சனகன், அதற்கேற்றவாறு பெரும் படைத் தொகுதியை உடன்வரப் பணித்து, உரியன செய்தானாக, அப்படை உடன்வர, இணைபிரியாத தம்பியான இலக்குவனுடன் இராமபிரான் அழகிய தேரில் ஏறி வந்து தந்தையிருக்குமிடத்தை யணுகினான் என்க, சனகன் சேனை சக்கரவர்த்தியின் சேனைக்கிடான அளவுடையதன்றெனினும், தகுதியிற் குறைந்த தில்லை யென்பார், 'தானை மன்னவன்' எனச் சனகனை விசேடித்தார்; இக்கருத்தை அடுத்த பாடலுள்ளுங் காண்க.

'தம்பியுந்தானும்......வந்தெய்தினான்': தலைமை பற்றி வந்த வழுவமைதி. செம்பொனின் × பசுமணி: முரண்தொடை. உம்பர், இம்பர் என்பன ஆகுபெயர்.

(பி - ம்.) 1. தானைமன்னவனகம்; மன்னவனெதிர்; மன்வளநகர்ப்; மன்னவருநக.
3. செம்பொனின்திருமணித்; மாமணித்; செம்பொனுன்.
4. உம்பரும் மனிதரும்; முனிவரும்; நிருபரும். (20)

1126. யானையோ பிடிகளோ விரதமோ விவுளியோ
ஆனபே ருறையிலா நிறைவையா ரறிகுவார்
தானையேர் சனகனே வலினெடுந் தாதைமுன்
போனபே ரிருவர்தம் புடைவரும் படையினே.

நெடு தாதை முன்போன-பெருமை மிக்க தந்தையின் முன்னே (எதிர்கொள்ளச்) சென்ற, பேர் இருவர் தம் புடை-(உருவாலும், திருவாலும், வீரத்தாலும்) உயர்வு பெற்ற இராம இலக்குவரைச் சூழ, தானை ஏர் சனகன் ஏவலின் வரும் படையின்-சேனையின் தோற்றம் மிக்க சனக மன்னன் கட்டளையால் வந்த படைத் திரளிலே, யானையோ-ஆண் யானைகளோ, பிடிகளோ - பெண் யானைகளோ, இரதமோ-தேர்களோ, இவுளியோ-குதிரைகளோ, (இவற்றுள் ஒவ்வொன்றும்), ஆன-அடையாளமான, பேர் உறை இலா-பெரிய உறையிட்டும் அளத்தற்கரிய, நிறைவை-மிகுதியை, யார் அறிகுவார்-அளவிட்டறியவல்லவர் யாவர்! (ஒருவருமில்லை).

சனகன் கட்டளையால், இராம லக்குவருடன் வந்த சேனை, அளவிட்டுரைத்தற்கரியது என்பது கருத்து. உறை என்பது, பொருள்களை அளக்குங்கால், நூறு, ஆயிரம் முதலிய பேரெண்ணைக் குறித்தற்கு அடையாளமாக வைக்கப்படும் குறியீடு; 'உறை யிடவும் போதார் கணக்கு வரம்புண்டோ' (சுந்தர. 605) என்றது காண்க. நெல் அளத்தலில் 'உறை'யிடும் வழக்காறுண்மையை, 'நெல்லின், அம்பண அளவை விரிந்துறை போகிய', 'மென் செந்நெல்லின், அம்பண அளவை உறை குவித்தாங்கு' (பதிற். 66: 7-8, 71; 4-5) என்றவிடங்களிற் காணலாம். இஃது உலக வழக்கில் இன்றும் உளது. பிடிகள் எனத் தனியே கூறினமையின், யானை என்றது ஆண் யானைகளைக் குறிக்கும்.

(பி - ம்.) 1. ஆனையோ: இவுளியோ விரதமோ; யானையோவிரதமோ விவுளியோ பிடிகளோ,
2. ஆனபோர்: உறையுளா நிறைவை; உறையிலா நிறையை; உரையிலா நிறைவை: உலகினின்றவையை.
3. தானைவேள்: நெடுந்தானைமுன்; தந்தைமுன்.
4. போனபோருழவர்தம்; பேரிவர்கடம்; வாளுழவர்தம்: படையரோ; படைகளே. (21)

### இராமபிரான் தந்தையை அணுகுதல்

1127. காவியுங் குவளையுங் கடிகொள்கா யாவுமொத்
தோவியஞ் சுவைகெடப் பொலிவதோ ருருவொடே
தேவருந் தொழுகழற் சிறுவன்முன் பிரிவதோர்
ஆவிவந் தென்னவந் தரசன்மா டணுகினன்.

காவியும்-நீலோற்பல மலரையும், குவளையும்-கருங்குவளை மலரையும், கடி கொள்-(நிறத்தின்) சிறப்பைக்கொண்ட, காயாவும்-

காயாம் பூவையும், ஒத்து-(நிறத்தால்) ஒத்ததாகி, ஓவியம்-(எழுதிய) சித்திரமும், சுவை கெட-(தனது அழகின் முன்) அழகு கெடும்படி, பொலிவது-சிறந்து விளங்குவதான, ஓர் உருவொடே-ஒப்பற்ற வடி வழகுடனே, தேவரும் தொழு கழல்-தேவர்களும் வணங்குதற்குரிய திருவடிகளையுடையவனான, சிறுவன் - சக்கரவர்த்தித் திருமகன் (இராமபிரான்), முன் பிரிவது ஓர் ஆவி-(தசரத னுடம்பினின்றும் முன்னே பிரிந்து சென்ற ஒருயிர், வந்(த)து என்ன-மீண்டும் வந்தாற் போல, வந்து—, அரசன் மாடு அணுகினான்-(தந்தையாகிய) சக்கர வர்த்தியிடம் கிட்டினான்.

காவி, குவளை, காயா என மூன்றுவமை கூறியது சிறப்புப்பற்றி. பலமுறை அழித்துத் திருத்திச் செப்பமுற அமைக்கப்பெற்ற செயற் கையழகுடைய சித்திரமும், இராமபிரானது இயற்கையழகுக் கீடாகா தென்பார், 'ஓவியம் சுவைகெட' என்றார். எனவே, 'ஓவியத்தெழுத வொண்ணா வுருவத்தான்' என்பது பெறப்பட்டது. சுவை கெடுத லாவது மனத்தைக் கவருந் தன்மை யிழத்தல். தந்தையைப் பிரிந்த பின் சிறிது வாடியிருந்த திருமேனி, இப்போது மீண்டும் தந்தையைக் காண நேர்ந்ததனாலும், திருமண இன்பங் கருதியும் முன்னினும் மிக்க பொலிவுபெற்ற தென்க. இராமபிரானது தெய்வத் தன் மையை ஆசிரியர் அங்கங்கே கூறிச் செல்லுதல் பலவிடத்துங் காண லாம். கையடைப் படலத்துக் கௌசிக முனிவன் இராமபிரானைத் தன்னுடன் அனுப்புமாறு கேட்டவிடத்து 'உயிரிரக்குங் கொடுங் கூற்றின்' எனவும், பின்னர்க் குமரர் முனிவனோடு சென்றவிடத்து, 'மன்னனின்னுயிர் வழிக்கொண்டாலென' எனவும்' இராமபிரானைத் தசரதனது உயிராகக் கூறியவர், அந்நினைவுடன், இங்கே பிரிந்த உயிர் மீண்டும் வந்தாற்போல வந்தான்' என்ற நயம் காண்க.

(பி - ம்.) 2. சவிகெடப்; சுடர்கெடப்: பொருவதோர்.
3. தொழுதெழும்: திருவன்முன்: பிரியுமோர்; போனதோர்.
4. என்வதன்வரசன்மாடாயினான். (22)

### தந்தையும் தநயரும்

1128. அனிகம்வந் தடிதொழக் கடிதுசென் றரசர்கோன்
இனியபைங் கழல்பணிந் தெழுதலுந் தழுவினான்
மனுவெனுந் தகையன்மார் பிடைமறைந் தனமலைத்
தனிநெடுஞ் சிலையிறத் தவழ்தடங் கிரிகளே.

(இராமபிரான்), அனிகம் வந்து அடி தொழ-(சக்கரவர்த்தி யின்) சேனை வந்து தன்னடிகளை வணங்க, கடிது சென்று-விரைந்து போய், அரசர்கோன் - சக்கரவர்த்தியின், இனிய பசுமை கழல் பணிந்து எழுதலும்-(காண்பதற்கு) இனிய பசும் பொன்னாலியன்ற வீரக்கழ லணிந்த பாதங்களை வணங்கி யெழுந்தவுடன், தழுவினான்-

(சக்கரவர்ந்தி தன்னுயிர்க் குமாரனை) மார்போடணைத்துக்கொண்டான்; (அப்போது), மனு எனும் தகையன்-(நீதியில்) ஆதிமனுவே என்று சொல்லுந் தகுதியுடைய சக்கரவர்த்தியின், மார்பு இடை-மார்பிலே, மலை தனி நெடு சிலை இற-மலைபோன்ற ஒப்பற்ற பெரிய சிவதனுசு முறியும்படி, தவழ்-(அதனோடு) விளையாடிய, தட கிரிகள்-பெரிய மலைபோன்ற (இராமபிரானுடைய) புயங்கள், மறைந்தன-அடங்கிக் கிடந்ததன.

குமாரனை ஆராமை மீதூரத் தழுவினன் தந்தை; அவன் மார்பில் இராமபிரானுடைய மலைபோன்ற புயங்களே மறைந்து கிடந்தன எனின், அம்மார்பின் அகலம் ஓர்தற்பாலது. மலையிறத் தவழ்ந்த மலைகள் என்றது ஒரு நயம்; விளையாட்டாகவே வில்லை முறித்தான் என்றபடி. சக்கரவர்த்தி அறத்தின் வடிவானவன் எனப் பலவிடத்தும் கம்பநாடர் அவனைச் சிறப்பிப்பர்; அவ்வாறே இங்கும் 'மனுவெனுந் தகையன்' என்றார். இராமபிரானைக் காண்பதில், தசரதனுடைய சேனைகளுக்கும் மிகுந்த மகிழ்ச்சி யென்பதை 'அனிகம் வந்தடிதொழ' என்பதனால் தெரிவித்தார். மேலே 1135-ஆம் பாடலில் இதனைக் காணலாம். பெரியோர் தம் அன்புக்குரியவரைத் தழுவுதல்: 1122-குறிப்புப் பார்க்க. 'சிலையிறத் தவழ் தடங்கிரிகள்' 1121, 1130 பார்க்க.

(பி - ம்) 1. கடிதின்வந்து; கடிதுவந்து.
2. கழல்பணிந் தெழுந்திறைஞ் சிடலுமுன்; எழுந்திறைஞ் சிடுதலும், கழலின்மேனெடிதிறைஞ்சிடலுமுன்.
3. மறைந்தன மழைத்; மறைந்தனன் மழைத்; மறைந்தனன்மலைத்.
4. தனுநெடுஞ்; தனுவெனுங்; சிலையினில்; கிரியிறத்; தவழ்தடங்கையினன்; தவடடக்கையினன். (23)

இப்பாடலையடுத்து, 'காதலோ' (1135) என்ற பாடல் சில பிரதிகளில்.

1129. இளையபைங் குரிசில்வந் தடிபணிந் தெழுதலும்
தளவருந் தொடையன்மார் புறமிகத் தழுவினன்
களவருந் துயரறக் ககனமெண் டிசையெலாம்
விளைதரும் புகழினு னெவரினும் மிகுதியான்.

களவு அரும்-(பிறர்) போக்குதற்கரிய, துயர்-(சம்பராசுரனால் நேர்ந்த) துன்பங்கள், அற-(தன்னாலே) நீங்கப்பெற்றதனால், ககனம்-விண்ணுலகத்திலும், எண் திசை எல்லாம்-எட்டுத் திக்குக்கள் முழுதிலும், விளைதரும்-உண்டாகிப் பரவியுள்ள, புகழினன்-புகழையுடையவனும், எவரினும் மிகுதியான்-(எவ்வகையிலும்) எல்லாரினும் மேம்பட்டவனுமான சக்கரவர்த்தி, இளைய பைங்குரிசில் வந்து-பசும் பொன்னிறமுடைய இளைய பெருமாள் (இலக்குவன்) அணுகி வந்து, அடிபணிந்து எழுதலும்-தன் பாதங்களில் வணங்கி யெழுந்தவுடனே, தளை வரும் தொடையல் மார்பு உற-கட்டுதல் அமைந்த பூமாலை

யணிந்த தன் மார்போடு பொருந்த, மிக தழுவினன்-நன்கு தழுவிக் கொண்டான்.

இராமபிரானை யடுத்து, இளைய பெருமாளும் வந்து தந்தையை நமஸ்கரித்து எழுந்து நிற்க, அவனையும் அவ்வாறே அன்போடு மார் புறத் தழுவிக்கொண்டான் சக்கரவர்த்தி என்றவாறு. சம்பராசுரனைப் பலவுலகங்களிலும் துரத்திச் சென்று வென்று தொலைத்ததனல், தசர தன் புகழ் எங்கும் பரவலாயிற்று; ஆதலால், 'ககனமெண்டிசை யெலாம் விளைதரும் புகழ்' என்றார். 323-பார்க்க. களை வரும் துயர் அற-உயிர்களாகிற பயிர்களுக்குக் களையாக வரும் துன்பங்கள் நீங்க எனவுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 2. தனையருந்: தொடையவன் மார்புறத்: மார்பினில்; மார்பவற்றமுவி னன்.
4. எவரிலும் மூவரியான்; மேன்மையான். (24)

இதுவும் அடுத்த பாடலும் சில பிரதிகளில் இல்லை. இதனையடுத்து. 'காதலோ' (1135) என்ற பாடல் சிலபிரதிகளில்.

### இராமபிரான் தாயரைத் தொழுதல்

1130. கற்றைவார் சடையினன் கைக்கொளுந் தனுவிறக்
கொற்றநீள் புயநிமிர்த் தருளுமக் குரிசிருன்
பெற்றதா யரையுமப் பெற்றியிற் றெழுதெழுந்
துற்றபோ தவர்மனத் துவகையா ருரைசெய்வார்.

கற்றை வார் சடையினன் கை கொள்ளும் தனு இற-தொகுதி யான நீண்ட சடையையுடைய சிவபெருமான் கையிற் பிடித்த அப் பெருவில் முறியும்படி, கொற்றம் நீள்புயம் நிமிர்த்தருளும்-வெற்றி தங்கிய (தன்) நீண்ட கைகளை நீட்டியருளிய, அ குரிசில்-அவ்விராம பிரான், பெற்ற தாயரையும்-பெற்ற தாய்மார் மூவரையும், அ பெற்றியின்-(தந்தையைத் தொழுத) அம்முறைப்படியே, தொழுது எழுந்து உற்றபோது-வணங்கி யெழுந்து அவரருகிற் சேர்ந்தபோது, அவர் மனத்து உவகை-அத்தாய்மாரின் மனத்தில் உண்டான மகிழ்ச் சியை, உரை செய்வார் யார்-எடுத்துச் சொல்லத்தக்கவர் யாவ ருளார்?

இராமபிரான், தன்னைப் பெற்ற கௌசல்யாதேவியைப் போலவே மற்ற இருவரையுங் கருதி, அவர்கள்பால் அன்பு செலுத் தியதோடு தந்தைக்குச் செய்ததுபோலவே அவர்களுக்கும் வணக்கஞ் செய்தான் என்பதுபட, 'பெற்றதாயரையும் அப்பெற்றியிற்றெழுது' என்றார். தாய்மாரும் இராமபிரானிடத்து வேறுபாடில்லாத அன் புடையராதலின், அப்பிரானது வில் முறித்த வெற்றி கேட்டு, ஈன்ற பொழுதினும் பெரிதுவந்தவராயினர் என்பதுபட, 'அவர் மனத்து உவகை யார் உரைசெய்வார்' என்றார். 'கற்றைவார் சடையினன்...

குரிசில்':'தழலையே யனையவன் பொன்னின் வார்சிலையிறப் புயநிமிர்த் தருளினன்' (1124); 1128-ம் பார்க்க.

(பி - ம்.) 1. சடையினன்: கைகொளும்; கைக்கொண்மா; கையின்மா.
2. புயநிமிர்ந்: குரிசில்பின்; குரிசிலான்.
3. அப்பெற்றியான்.
4. உவகையென் னுரைசெய்வோம்; உவகையொன் றுரைசெய்வாம். (25)

பரதன் இராமபிரானை வணங்குதல்

131. உன்னுபே ரன்புமிக் கொழுகியொத் தொண்கணீர்
பன்னுதா ரைகடரத் தொழுதெழும் பரதனைப்
பொன்னின்மார் புறவணைத் துயிருறப் புல்லினன்
தன்னையத் தாதைமுன் றழுவின லென்னவே.

உன்னு பேர் அன்பு-(இராமபிரானை இடைவிடாது) நினைக்கும் பேரன்பானது, மிக்கு ஒழுகி(யது) ஒத்து-(உள்ளே அடங்காது) மேலிட்டுப் பெருகியதுபோல, ஒண் கண்-(தன்) ஒளி பொருந்திய கண்கள், நீர் பன்னு தாரைகள் தர-நீர் நிறைந்த தாரைகளைப் பொழிய, தொழுது எழும்-(தன் பாதங்களில்) வணங்கி யெழுந்த, பரதனை—, பொன்னின் மார்பு உற அணைத்து-பொன்போன்ற (தன்) மார்போடு பொருந்த அணைத்துக்கொண்டு, அ தாதை-அந்தச்சிறப்பு மிக்க தந்தை, தன்னை முன் தழுவினல் என்னவே-தன்னை முன்னே (தான் வணங்கி யெழுந்தபோது) தழுவிக்கொண்டாற்போலவே, உயிர் உற-உயிரோடு பொருந்த, புல்லினன்-(இறுகத்) தழுவிக் கொண்டான். இராமபிரான் என்ற எழுவாய் வருவித்துக் கொள்க.

'தமையன் தந்தைக் கொப்பாவான்' என்பவாதலின், பரதன் இராமபிரானிடத்துத் தந்தையைப் போன்ற அன்பும் மரியாதையும் உடையவன்; இராமபிரானும் பரதனிடத்து அளவிறந்த அன்புடையவன்; எனவே இவ்விருவர் இயல்பையும் நன்கு புலப்படுத்தியுள்ளார். அன்புமிகுதியின் அறிகுறி இன்பக்கண்ணீர் வடித்தல்; இதனைப் பரதனிடத்துக் காட்டினர். 'ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும்' (குறள். 71). இராமபிரான் பரதனைத் தழுவிக்கொண்டமைக்குத் தந்தையின் செயலையே உவமை காட்டியதோடு, 'உயிருறப் புல்லினன்' என ஒருபடி உயர்த்துங் கூறினமை காண்க. 'பொன் இன் மார்பு' எனப் பிரித்து, பொன்னணிகள் பூண்ட இனிய மார்பு என்றேனும், இலக்கு மிக்கு இனிய மார்பு என்றேனும், பொன் இல் மார்பு எனப் பிரித்து, இலக்குமியின் இருப்பிடமான மார்பு என்றேனும் பொருள் உரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. ஒத்நுண்கணீர்; உற்றுண்கணீர்.
2. மன்னு தாரையினெடும்; தாரையின் விழத்; தாரைகள்விடத்; பன்னு தாமரைக்கழல்; தாமரையடித்.
3. உயிரெனப் புல்லினன்.
4. தன்னையே தாதை; தழுவினு னென்னவே; தழுவிய தொப்பவே (20)

## இலக்குவ, சத்துருக்கர் முறையே பரதனையும் இராமபிரானையும் வணங்கல்

1182. கரியவன் பின்புசென் றவனருங் காதலின்
பெரியவன் றம்பியென் றேவருந் துதிசெய்தார்ப்
பொருவருங் குமரர்தம் புனைநறுங் குஞ்சியால்
இருவர்பைங் கழலும்வந் திருவரும் வருடினர்.

கரியவன் பின்பு சென்றவன்-கரியதிருமேனியுடைய இராமபிரானை (எப்போதும்) பின்பற்றித் தொடர்ந்து செல்லுந் தன்மையுடையவன் (என்றும்), அரும் காதலின் பெரியவன் தம்பி என்று-(அவ்விராமபிரானிடத்து) அரிய அன்பினல் (பக்தியினல்) மேம்பட்ட பரதனுக்குத் தம்பி யென்றும், ஏவரும் துதி செய்-எல்லோரும் கொண்டாடுகிற, தார்-பூமாலை யணிந்த, பொரு அரு குமரர் இருவரும்-தமக்கு ஒப்பார் இல்லாத சிறப்புடைய இளைஞரான இலக்குவனும் சத்துருக்கனும், வந்து-அணுகி வந்து, இருவர் பைங்கழலும்-(முறையே பரதன், இராமபிரான் என்ற) இருவருடைய திருவடிகளையும், தம்-தம்முடைய, புனை நறு குஞ்சியால்-அலங்கரிக்கப்பெற்ற மணம் பொருந்திய மயிர் முடியுடைய தலையினலே, வருடினர்-தடவினர்கள்.

இலக்குமணனும் சத்துருக்கனனும் முறையே பரதனையும் இராமபிரானையும், அவர்கள் திருவடிகளிலே தம் முடி படும் வண்ணம் வணங்கினர்கள் என்பது கருத்து. இலக்குமணன் பகவத் கைங்கரியத்திலும், சத்துருக்கனன் பாகவத கைங்கரியத்திலும் தமக்கு ஈடில்லாதவர் என்ற புகழைப் பெற்றவர்கள்; இராம லக்குமணர், பரதசத்ருக்கனர் என இணைத்து வழங்கப் பெறுவோர்; இவ் இணைந்த தன்மையை இளமையிலிருந்தே பெற்றவர்கள்; ஆதலின், கரியவன் பின்பு சென்றவன் என்றும். அருங் காதலிற் பெரியவன் என்றும் இலக்குமணனையும் பரதனையும் முறையே குறித்து, அப்பெரியவன் தம்பி எனச் சத்துருக்கனனைக் குறித்தார். 307, 308-பார்க்க.

கழலைக் குஞ்சியால் வருடல்-அடியில் முடிபட வணங்குதல்; கழல்: ஆகுபெயர்.

(பி - ம்.) 1. சென்றவன் வருங்; சென்றவனிருங்; நின்றவனருங்.
2. தம்பியென்றினையதோர் பெருமையப்; அனையதோர் பெருமையால்; பெருமையில்.

3. குமரராம்; குமரரும்: புணர்நறுங்; புகைநறுங்: குஞ்சியார்.
4. கழலினும்; கழலின்வந்து: இருவரும் இருவர்பைங் கழல்களும் வருடினர்; கழலினுஞ் சூடினர். (27)

## கோவும் குமரரும்

1133. கோல்வருஞ் செம்மையுங் குடைவருந் தண்மையும்
சால்வருஞ் செல்வமென் றுணர்பெருந் தாதைபோல்
மேல்வருந் தகைமையான் மிகவிளங் கினர்கடாம்
நால்வரும் பொருவினுன் மறையெனுந் நடையினர்.

தாம் நால்வரும்-தாங்கள் நாலு பேரும், பொரு இல் நால் மறை எனும் நடையினர்-ஒப்பில்லாத நான்கு வேதங்களே எனத் தக்க ஒழுக்கச் சிறப்புடையவர்களான சக்கரவர்த்தி திருக்குமாரர்கள், கோல் வரும் செம்மையும்-செங்கோல் முறையால் வரும் நீதியும், குடை வரும் தண்மையும் - (குடிகளுக்கு நிழல் செய்யும்) கொற்றக் குடையால் வரும் தண்ணளியுமே, சால் வரும் செல்வம் என்று உணர்-சிறப்புமிக்க (அரசுக்குரிய) செல்வங்கள் எனக் கருதுகிற, பெரு தாதைபோல்-பெருமையுடைய தந்தையைப் போலவே, மேல்வரும் தகைமையால்-மேன்மைக்குரிய தகுதியுடன், மிக விளங்கினர்கள்-மிகவும் பிரகாசித்தார்கள்.

குமரர் நால்வரும், தந்தைக்கேற்ற புதல்வரே இவர்கள் என அனைவரும் கொண்டாடத் தக்கவகையில், ஒழுக்கமும், நீதிமுறையும், தண்ணளியும் சிறக்கப்பெற்று விளங்கினர் என்பது கருத்து. பொருட்செல்வத்தினும் மேலான செல்வம், நீதியும் தண்ணளியுமே எனக் கருதும் சால்பு சக்கரவர்த்தியினுடையது; இதனைப் புதல்வரும் பெற்றிருந்தனர் என்றார். இனி, சால் என்றது உழவர் படைச்சால் எனக் கொண்டு, அதற்கேற்ப, 'கோல்வருஞ் செம்மையுங் குடைவருந் தண்மையும் சாலால்வரும் செல்வமேயெனக் கருதும் தாதை' என உரைப்பாருமுளர். 'கோலின் செம்மையுங் குடையின் றண்மையும்' (சிலப். 15:3.) 'நின்விண்பொரு வியன்குடை, வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய, குடிமறைப்பதுவே' (புறநா. 35: 19-21.). குமரர் நால்வர்க்கும் நான்கு வேதங்கள் உவமை : 303-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. குடிவருந் தன்மையும்.
2. சால்பெருஞ்: உணர்தருந்; உணர்வருந்: உணர்வுறுந்; தாதைதன்; தாதைமுன்.
3. பால்வருந்: தன்மையான்; தன்மையார்; தன்மையால்; தகைமையார்; தகைமைசால்: பரிதியின்.
4. நால்வரும் பொருவினர்; நவிலுநான்; நாலுமா; மறையெனுந்தகையினர். (28)

1134. சான்றெனத் தகையசெங் கோலினு னுயிர்கடாம்
ஈன்றநற் றுயெனக் கருதுபே ரருளினுன்
ஆன்றவிச் செல்வமத் தனையுமொய்த் தருகுறத்
தோன்றலைக் கொண்டுமுற் செல்கெனச் சொல்லினுன்.

சான்று என தகைய-(யாவர்க்கும்) எடுத்துக்காட்டு என்று சொல்லத்தக்க, செங்கோலினுன்-செங்கோல் ஆட்சியை உடையவனும், உயிர்கள் தாம்-(தன் ஆட்சிக்கு உட்பட்ட) உயிர்கள் எல்லாம், ஈன்ற நல்தாய் என கருது-(தத்தமக்குப்) பெற்ற தாய் என்று கருதத் தக்க,பேர் அருளினுன்-பெருங்கருணையுடையவனுமான சக்கரவர்த்தி, ஆன்ற இச்செல்வம் அத்தனையும்-மேலான (படை, குடை, கொடி ஏவலர், ஏவல் மகளிர் முதலிய) இந்தச் சிறப்புக்களெல்லாம், மொய்த்து-நெருங்கி, அருகு உற-தன்னருகில் வந்துசேர, (அவற்றை நோக்கி) தோன்றலை கொண்டு-இராமனைத் தலைவனுகக் கொண்டு, முன் செல்க-முன்னே செல்லக்கடவீர், என சொல்லினுன்-என்று கட்டளையிட்டான்.

பகை, நட்பு, நொதுமல் என்ற வேறுபாடின்றி நீதிசெலுத்துதலில் வல்லவனுதலால்,'சான்றெனத்தகைய செங்கோலினுன்' என்ருர். உயிர்களெல்லாம் தம் தாயெனக் கருதத்தக்கவன்: 'தாயொக்கு மன்பில்' (173) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க. தந்தையின் அருகில் இராமபிரானைக் கண்டவுடன், சக்கரவர்த்தியுடன் வந்த பரிவாரங்கள் முழுதும் அன்பு மிகுதியால் திரண்டுவந்து மொய்த்துக் கொள்ளவே, சக்கரவர்த்தி அவர்களை நோக்கி, இராமபிரானை முன்னிட்டுக்கொண்டு முன்னே நகருக்குச் செல்லுமாறு பணித்தான் என்க. 'அத்தனையும் மொய்த்து அருகுற' என்றதனுல் சேனையின் அன்பு புலப்படும். இதன் விளக்கம் அடுத்த கவியுட் காண்க.

(பி - ம்.) 1. சான்றெனுந்தகைய: செங்கோலினுல்: சொல்கோலினுன்,
3. ஆன்றவச் செல்வமித்தனையும்; எத்தனையும்; உய்த்தன னுகந்து; அத்தனையுமொத்; அத்தனையும் வந்து: அருகுறும்; அணுகுறத்.
4. தோன்றலைத் தோன்றமுற்; தோன்றமுன்; செல்கெனுச்; போகெனச்; தோன்றமுற் செல்கெனத் தாதையுஞ். (29)

சேனைகளின் மகிழ்ச்சி

1135. காதலோ வறிகிலங் கரிகளைப் பொருவினர்
தீதிலா வுவகையுஞ் சிறிதரோ பெரிதரோ
கோதைசூழ் குஞ்சியக் குமரன்வந் தெய்தலும்
தாதையோ டொத்ததத் தானையின் றன்மையே.

கரிகளை பொருவினர்-ஆண் யானைகளைப் போன்ற அப்படை வீரர்களுக்கு, காதலோ அறிகிலம் - (இராமபிரானிடத்துள்ள) அன்போ (இவ்வளவென்று)நாம் அறிய வல்லோமல்லேம்; தீது இலா

உவகையும்-(அவர்களுடைய) களங்கம் இல்லாத (தூய அன்பினுலாகிய) மகிழ்ச்சியும், சிறிதோ-சிறியதோ? (அன்று); பெரிது-மிகப் பெரியதாகும்;கோதை சூழ் குஞ்சி-பூமாலை சுற்றிய மயிர்முடியுடைய, அ குமரன்-அவ்விராமபிரான், வந்து எய்தலும்-(தமக்குத் தலைமையாக) வந்து சேர்ந்தவளவிலே, அ தானையின் தன்மை-அந்தச்சேனையின் மகிழ்ச்சிப் பண்பு, தாதையோடு ஒத்தது-தந்தையாகிய சக்கரவர்த்தியைப்போலவே யிருந்தது.

'இராமபிரானைக் கண்டவுடனே சக்கரவர்த்தி அடைந்த மகிழ்ச்சியையே அப்பரிவாரத்தின் மகிழ்ச்சிக்கு ஒப்புமை கூறலாம்; வேறில்லை' என அவர்களது அன்பின் இயல்பைப் பாராட்டுகின்ருர். 'செல்வமத்தனையும் மொய்த்தருகுற' என முன் கவியுட் கூறினமையும் காண்க. தாதையோடொத்தது-தாதையைத் தமக்குத் தலைமையாகப் பெற்றிருந்ததன்மையையே ஒத்தது என்றலும்ஆம். 'கரிகளைப் பொருவினர்' என்றது குமரர் நால்வரையும் குறிப்பதாகக் கொண்டு அதற்கேற்பப் பொருள் கூறுவாரும் உளர். அப்பொருளுக்குக் குமரர் வந்தெய்தலும் என்ற பாடம் சிறக்கும்.

சிறிதரோ என்பதில் அர், சாரியை; ஓகாரம் எதிர்மறை; பெரிதரோ என்பதில் 'அரோ' அசை.

(பி - ம்.) 1. அறிகிலென். 2. நிதலா: பிறிதரோ.
3. குஞ்சியங்குமரன்; குமரர்.
4. தாதையாதொத்தது: தானையார்; தானையோர்; தகைமையே. (30)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை; சிலபிரதிகளில் 'இளைய பைங்குரிசில்' (1129) என்பதனையடுத்து இது காணப்படுகிறது.

### இராமபிரான் தேரேறிச் செல்லுதல்

1136. தொழுதிரண் டருகுமன் புடையதம் பியர்தொடர்ந்
தழிவில்சிந் தையினெடு மாடன்மா மிசைவரத்
தழுவுசங் குடனெடும் பணைதழங் கிடவெழுந்
தெழுதருந் தகையதோர் தேரின்மே லேகினன்.

(இராமபிரான்), இரண்டு அருகும்-(தன்) இரண்டு பக்கங்களிலும், அன்பு உடைய தம்பியர்-தன்னிடம் பேரன்புகொண்ட தம்பிமார்கள், அழிவு இல் சிந்தையினெடும்-(அவ்வன்பு) மாருத மனத்துடன், ஆடல்மா மிசை-வெற்றியுடைய குதிரைகளின் மேல் (ஏறி), தொழுது தொடர்ந்து வர-தன்னைத் தொழுதவாறு தொடர்ந்து வர, தழுவு சங்குடன்-(மங்கலத்துக்குப்) பொருந்திய சங்குகளுடன், நெடு பணை தழங்கிட-பெரிய முரசுகளும் முழங்க, எழுந்து-புறப்பட்டு, எழுத அரு தகையது ஓர் தேரின்மேல்-(அமைப்பை) எழுதுதற்கரிய தன்மையுடையதொரு சிறந்த தேரில் (ஏறி), ஏகினன்-(நகரினுள்) செல்லலானுன்.

எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. எழுதரும்: தொகுத்தல் விகாரம்; எழுதருந்தகையது-விரைந்து செல்லுந்தன்மையுடையது என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. அன்புடையர். 2. சிந்தையினுவந்து, உகந்து; சிந்தனையொடும்.
3. சங்கொடுமெழும்; சங்கொடுநெடும; சங்குடைநெடும்: பணைமுழங்கிட: உவந்து; உடன்.
4. தேரின்மீதேறினன்; தேரின்மேலெய்தினன். (31)

1137. பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார் பண்ணையின்
மஞ்சுசூழ் நெடியமா ளிகையினின் றிடைவிராய்
நஞ்சுசூழ் விழிகள்பூ மழையின்மேல் விழநடந்
திஞ்சிசூழ் மிதிலைமா வீதிசென் றெய்தினன்.

(தேரில் சென்ற இராமபிரான்), பஞ்சி சூழ் மெல் அடி-செம்பஞ்சு ஊட்டப்பெற்ற மென்மையான பாதங்களையுடைய, பாவைமார் பண்ணை-மகளிர் கூட்டங்கள், இன் மஞ்சு சூழ்-இனிய மேகங்கள் சூழ்ந்த, நெடிய மாளிகையின் நின்று-உயர்ந்த மாளிகைகளினின்றும், இடை விராய்-(அவற்றின்) வாயிலிடங்களிலே(வந்து) பொருந்தவும், நஞ்சு சூழ் விழிகள்-(அம்மகளிரின்) நஞ்சு ஊட்டியது போன்ற கண் பார்வைகள், பூமழையின்-பூமாரியுடன், மேல் விழ-தன்மேல் விழவும், நடந்து-சென்று, இஞ்சி சூழ் மிதிலை-(சிறந்த) மதில்கள் சூழ்ந்த மிதிலை நகரின், மாவீதி-பெரிய (இராச) வீதியில், சென்று எய்தினன்-போய்ச் சேர்ந்தான்.

இராமபிரான் வருகையை அறிந்த மிதிலை நகரத்துப் பெண்கள், தம்தம் வீட்டினுள்ளிருந்து வெளியே வந்து வாயிலில் அப்பெருமானைக் காணுதற்கேற்ற விடங்களில் அங்கங்கே கூட்டமாக நின்று காணலாயினர் என்றவாறு. இடை-ஏற்றவிடங்களில். விராய்-விராவ; எச்சத் திரிபு. மகளிர் கண்கள் ஆடவர்க்கு வருத்தஞ் செய்வனவாதலின் 'நஞ்சுசூழ் விழிகள்' என்றார். விழிகள்-விழிப்பார்வைகள்; ஆகுபெயர். மழையின்-மழையோடு; வேற்றுமை மயக்கம். பூமழை, அம்மகளிரே தூவினவென்றேனும், பொதுவாக யாவரும் தூவினவென்றேனும்,தேவர்கள் தூவினவென்றேனும் கொள்ளலாம். எய்தினன் என்ற பயனிலைக்குரிய எழுவாய் இங்கும் வருவித்துரைக்கப்பட்டது. பாவைமார் என்பதனை எழுவாயாக்கி, பண்ணையின்-கூட்டமாக என்றலுமாம்.

பஞ்சிசூழ் மெல்லடிப் பாவைமார்: ஒப்பு. 'பஞ்சிமென்றளிரடிப் பாவை' (அயோத். 21).

(பி - ம்.) 1. பஞ்சுசூழ் மலரடிப்: பண்ணைசூழ்.
2. மஞ்சுதோய்; மஞ்சுபூண்: மாளிகையின் வந்து: மாளிகையினின் அடிவிராய், 3. மேல் வழிநடந்து.
4. விதிவந்தெய்தினர். (32)

1138. சூடகந் துயல்வரக் கோதைசோர் தரமலர்ப்
பாடகம் பரதநூல் பகரவெங் கடகரிக்
கோடரங் கிடவெழுங் குவிதடங் கொங்கையார்
ஆடரங் கல்லவே யணியரங் கயலெலாம்.

அணி அரங்கு அயல் எலாம்-அழகிய மாளிகைகளின் முன்பக்க மெல்லாம் (கூடின), வெம் கடம் கரி கோடு அரங்கிட-கொடிய மத யானையின் கொம்பு (தந்தம்) செருக்கழியும்படி, எழும்-நிமிர்ந்தெழு கிற, குவி-திரண்ட, தட கொங்கையார்-பெரிய தனங்களையுடைய மகளிரின், சூடகம் துயல்வர-கை வளையல்கள் அசைந்து ஒலிக்கவும், கோதை சோர் தர-(கூந்தலில் சூடிய) மாலை தொங்கவும், மலர் பாடகம் பரதநூல் பகர-(அவர்கள்) பாதமாகிய தாமரை மலரில் அணிந்த பாதசரம், நாட்டிய நூலிற் கூறிய தாளச் சதியொலியைத் தரவும் (ஆக இருந்தன); ஆடு அரங்கு அல்லவே-(அவை) மகளிர் ஆடும் நாடக அரங்குகள் அல்லவே!

நகர வீதிகளில் உள்ள மாளிகைகளின் வாயிற் புறமெல்லாம், மகளிரின் இயக்கத்தால், அவை நாடக அரங்குகளோ என ஐயுறும் படி யிருந்தன என்பது கருத்து; இதில் உள்ள நயம் ஓர்ந்து இன்புறற் பாலது. அரங்கு, பின்னது மாளிகை என்னும் பொருளில் வந்தது. மலர், பாதத்துக்கு ஆயினமையின், உவமவாகுபெயர்.

சூடகம்-கைவளை; 'சூடகமே தோள்வளையே' (திருப்பாவை.) பாடகம்-மகளிர் காலணி வகை: 'பாடகத் தாமரைச் சீறடி பணிந்து' (மணி. 25: 85.); பாடகத்தைப் பற்றி நச்சினார்க்கினியர் கூறுவது:— 'மகளிர் காலிற் பாடகம், ஒரு கம்பியாய்ப் பலமுடக்காலே போக்கும் வரவு முண்டானாற் போலத் தோன்றிக் காலை விடாதே கிடந்தாற் போல' (சீவக. 510-உரை)

(பி - ம்.) 3. கோடகங்கெட; கோடொருங்கட; கோடொடுங்கிட; கோடொதுங் கிட; குவிதரங்; குங்குமக்; கொங்கையர்.
4. அல்லவேல்; அல்லவேள்; அல்லநேர்; அவையெலாம்; அவணெவாம். (33)

1139. பேதைமார் முதல்கடைப் பேரிளம் பெண்கடாம்
ஏதியார் மாரவே ளெய்யவந் தெய்தினர்
ஆதிவா னவர்பிரா னணுகலா லணிகொள்கார்
ஓதியார் வீதிவா யுற்றவா றுரைசெய்வாம்.

ஆதி-(யாவர்க்கும்) முதலாகிய, வானவர் பிரான்-தேவ தேவன், (இராமபிரான்), அணுகலால்-(வீதியில்) வருவதனால், ஏதி ஆர் மாரவேள் எய்ய-(காதலூட்டும்)ஆயுதங்கள் நிறைந்த மன்மதன் (தன் அம்புகளை) எய்ய, பேதை மார் முதல்-பேதைப் பருவத்தினர் முதல், பேரிளம் பெண்கள் கடை-பேரிளம் பெண்கள் இறுதியாக,

(உள்ள மகளிர் எல்லோரும்), வந்து எய்தினர்-(வீதியில்) வந்து சேர்ந்தனர்; அணி கொள்-அழகினைக் கொண்ட, கார் ஓதியார்-கரிய கூந்தலையுடைய அப்பெண்கள், வீதிவாய்-வீதியிலே, உற்ற ஆறு-அடைந்த நிலையை, உரைசெய்வாம் - சொல்லுவோம். கார்-மேகமும் ஆம். ஏதி-ஆயுதப்பொது. தாம்-அசை

இராமபிரானைக் காணுதற்கு எல்லாப் பருவத்து மகளிரும் வீதியில் வந்து சேர்ந்தனர் என்றபடி. சிறந்த தலைமகனொருவன் வீதியில் வாகனம் மேற்கொண்டு உலாவருகையில், பேதை முதல் பேரிளம் பெண் இறுதியாகவுள்ள ஏழு பருவத்து மகளிரும் அத் தலைமகனைக் கண்டு, தத்தம் பருவ நிலைக்கேற்பக் காமுற்றனர் என்பதனை விவரித்துப் பாடும் 'உலா' என்ற பிரபந்தம் ஒன்று உண்டு; கம்பநாடர், காவியச் சுவை கருதி, அப்பொருளமைதியுடையதாக 'உலாவியற் படலம்' என்ற வொன்றை வகுத்துக்கொண்டு, இராமபிரான் பவனியை விரித்துக் கூறுகின்றார். இதுவும் இவரது கற்பனையே. இதற்குத் தோற்றுவாயாக இங்கே இவ்வாறு கூறிக்கொண்டார். மகளிர்க்குரிய ஏழு பருவங்களாவன: பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண் என்பன. 'இந்த இப் பிறவிக் கிருமாதரைச், சிந்தையாலும் தொடேன்' என்ற ஏகபத்தினி விரதமுடைய இராமபிரான் பால் இவ்வாறு பல மங்கையர் காதலுற்றன ரென்றல் குற்றமாகாதோ எனின், ஆகாது. எவ்வாறெனின், இஃது அவனிச்சையால் ஆனதன்று; ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினனாகிய அப்பெருமான் பால் மனம் ஈடுபடாதார் இல்லை; அவ்வாறு ஈடுபடுதல் காதலாலன்று; தம்மையும் அறியாது எழும் அன்பினாலேயே யாம்; எனவே, குற்றமாகாதென்க. பேரறிவினர் கொள்கையின்படி, பரமான்மாவின் முன் சீவான்மாக்கள் எல்லாம் பெண்களே யென்பதும் இங்கே கருதத்தக்கது. மேலும் ஒருவர்பால் ஒருவர் மனம் கவரப்படுதல் காமத்தால் மட்டுமன்று; சீதாபிராட்டியை முதலிற் கண்ட சூர்ப்பணகையின் கூற்றாக, 'கண் பிற பொருளிற் செல்லா கருத்தெனின் அஃதே கண்ட, பெண் பிறந்தேனுக் கென்றால் என்படும் பிறருக்கென்றாள்' (ஆரணிய. 278) என வருவதையும் காண்க.

(பி - ம்) 1. பேதையர்; பேதையார்; பேதையே: முதலினோர்.
2. ஏதியான்; ஏதிலாம்; ஏதிலார்; ஏதிவாழ்; மீதெலாம்: மாரவேளேவ வந்து; எய்தவந்து.
3. அணிதலால்: அணிகொள்தேர்; அணிகொள்தார்; அணிகொள்தார்.
4. ஓதியர்; உற்றதியாம்; உற்றயாம்; உற்றதை. (34)

எதிர்கொள் படலம் முற்றும்.

# 19. உலாவியற் படலம்

உலாவியற் படலம்: உலாவந்ததன் இயல் பற்றிக் கூறும் படலம் என விரியும். இராமபிரான் தேரூர்ந்து மிதிலை நகரின் வீதிகள் வழியே, மாதர்கள் பலரும் பலவகை நிலையெய்துமாறு சென்று சனகனது அரண்மனையை அடைதலும், சக்கரவர்த்தியும் அவண் வந்தெய்துதலும், சனகன் அனைவரையும் உபசரித்தலுமாகிய செய்திகள் இப்படலத்துட் கூறப்படும். இராமபிரான் உலாவந்த செய்தி வான்மீகத்துள் இல்லை. இப்படலப் பெயர், 'உலாவரு படலம்' என்றும், 'உலாவியருள் படலம்' என்றும், 'உலாவு படலம்' என்றும் பிரதிகளில் வேறுபடக் காணப்படுகின்றது.

### மாதர்கள் செய்தி

1140. மானினம் வருவ போன்று மயிலினந் திரிவ போன்றும்
மீனின மிளிர்வ போன்று மின்னின மிடைவ போன்றும்
தேனினஞ் சிலம்பி யார்ப்பச் சிலம்பினம் புலம்ப வெங்கும்
பூநனை கோதை மாதர் பொம்மெனப் புகுந்து மொய்த்தார்.

பூ நனை கோதை மாதர்-பூவால் நனைந்த (ஈரங்கொண்ட) கூந்தலையுடைய பெண்கள், தேன் இனம் சிலம்பி ஆர்ப்ப-வண்டுக் கூட்டங்கள் ஆரவாரஞ் செய்யவும், சிலம்பு இனம் புலம்ப-(காலில் அணிந்த) சிலம்புகள் ஒலிக்கவும், மான் இனம் வருவ போன்றும்-மான் கூட்டங்கள் (துள்ளி ஓடி) வருவன போலச் சிலரும், மயில் இனம் திரிவ போன்றும்-மயிற் கூட்டம் (அங்குமிங்குமாகத்) திரிவனபோலச் சிலரும், மீன் இனம் மிளிர்வ போன்றும்-விண்மீன் கூட்டம் பிரகாசித்தல் போலச் சிலரும், மின் இனம் மிடைவ போன்றும்-மின்னற் கூட்டம் நெருங்குதல் போலச் சிலருமாக, பொம் என புகுந்து-விரைவாக வந்து, எங்கும் மொய்த்தார்-எங்கும் நெருங்கினார்கள்.

சிலம்பி ஆர்ப்ப: ஒரு பொருட் பன்மொழி.

மானும் மயிலும் மீனும் மின்னும் வெவ்வேறு வகையில் மகளிர்க்கு ஒப்புமை கூறப்படுதல் நூல்களுட் பலவிடத்துங் காணலாம். 'மயில் கண்டன்ன மடநடை மகளிர்' (முருகு. 205); 'மீதுலாய வெண்டாரகை நாப்பணிற், சீதவெண்கதிர்த் திங்கள்கண்டாலென, மாதர் நோக்கின் மடந்தையர் நாப்பணிற், காதல் கூர்தமயந்

தியைக் கண்டதே' (நைடத. அன்னத்தைத். 41); 1019-ஆம் பாட்டும் குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 2. மீனினஞ் செறிந்த வானின்; மீனினமிளிரவ் வானின்; மீனின மிளிருங் கண்ணார்; மீனென மிளிருங்கண்ணார்; மின்னின மிளிர்வ; மின்னினம் விழுவ; வீழ்வ: போன்று.
3. தேனினம் புலம்பி; பம்பி: ஏங்க: நூபுரம் சிலம்பி ஏங்கப்; புலம்பி ஏங்கப்; சிலம்பினஞ் சிலம்பி யோங்கப்; சிலம்பினஞ் சிலம்பவேகும.
4. பூநிமிர்: கூந்தல்: போந்து மொய்த்தார்; புகுந்து போனார். (1)

1141. விரிந்துவீழ் கூந்தல் பாரார் மேகலை யற்ற நோக்கார்
சரிந்தபூந் துகில்க டாங்கா ரிடைதடு மாறத் தாழார்
நெருங்கினர் நெருங்கிப் புக்கு நீங்குமி னீங்கு மென்றென்
றருங்கல மனைய மாதர் தேனுக ரளியின் மொய்த்தார்.

அரு கலம் அனைய மாதர்-(அந்நகரத்துக்கு) அருமையான அணிகலன்களைப் போன்ற பெண்கள், (பரபரப்பினால்), விரிந்து வீழ் கூந்தல் பாரார் - அவிழ்ந்து விழும் (தங்கள்) கூந்தலைப் பாராமலும், மேகலை அற்ற நோக்கார் - மேகலாபரணங்கள் அறுந்தனவற்றைப் பொருட்படுத்தாமலும், சரிந்த - இடையி னின்றும் நழுவிய, பூ துகில்கள் தாங்கார் - பூம்பட்டாடைகளைத் தாங்கிப் பிடித்துக்கொள்ளாமலும், இடை தடுமாற - (மெல்லிய) இடை வருந்தவும், தாழார்-(அதன் பொருட்டுத்) தாமதிக்காமலும், நெருங்கினர் - மிகவும் நெருங்கியவர்களாய், நீங்குமின் நீங்கும் என்று என்று-(வழிவிட்டு) விலகுங்கள் விலகுங்கள் என்று (ஒருவர்க் கொருவர்) சொல்லிக்கொண்டு, நெருங்கி புக்கு-(இராமபிரான் செல்லும் தேரை) அணுகிப் போய், தேன் நுகர் அளியின்-(பூவில்) தேனை உண்ணுதற்குக் கூடும் வண்டுகளைப்போல, மொய்த்தார்-(சுற்றிலும்) மொய்த்துக்கொண்டனர்.

இராமபிரானைக் காண எழுந்த ஆவலால், பெண்கள் மிக்க பரபரப்புடையவர்களாய், கூந்தல், ஆடை முதலியவற்றின் நிலைகுலை வையும் பொருட்படுத்தாமல், ஒருவர்க்கொருவர் முந்திச் சென்று தேரினை யணுகினர் என்க. 'தேன் நுகர் அளியின்' என்ற உவமையும் அவர்களுடைய ஆவல் மிகுதியைப் புலப்படுத்தும். இடை தடுமாற- (நெருக்கத்தால்) இடையே கால்கள் தடுமாற என்றலும் ஆம்.

'நீங்குமின் நீங்கும், என்றென்று' என வந்த அடுக்குக்கள் விரைவு பற்றியன.

தேனுக ரளியின் மொய்த்தார்; ஒப்பு நோக்குக: 'அண்ண லாண்டிருந்தானழ கருநற வென்னக், கண்ணு முள்ளமும் வண்டெ னக் களிப்புறக் கண்டான்' அயோத். 52.

(பி - ம்.) 1. விரிந்தவிழ். 2. பூங்கலைகள்; இடைதடுமாற்றந்.
3. நெருங்குநர் நெருங்கப்: நீங்குமினீங்குமின் னென்று; நீங்குமினீங்கு மென்றே; நீங்குமே நீங்குமென்றென்று.
4. அருங்கலை யல்குல்: அரியின்; ஈயின். (2)

1142. பள்ளத்துப் பாயு நன்னீ ரனையவர் பானல் பூத்த
வெள்ளத்துப் பெரிய கண்ணார் மென்சிலம் பலம்பமென்பூத்
தள்ளத்தம் மிடைக ணோவத் தமைவலித் தவன்பாற் [செல்லும்
உள்ளத்தைப் பிடித்து நாமென் றோடுகின் றாரு மொத்தார்.

மென் சிலம்பு அலம்ப-இனிய சிலம்புகள் (காலில்) ஒலிக்கவும், மென் பூ தள்ள-மென்மையான தாமரைப் பூப்போன்ற பாதங்கள் தள்ளாடவும், தம் இடைகள் நோவ-தம்முடைய (நுண்ணிய) இடைகள் வருந்தவும், பள்ளத்து பாயும் நல் நீர் அனையவர்-பள்ளமான இடத்திலே (விரைந்து) பாயும் நல்ல நீர்போல (இராமபிரானிடத்து) விரைந்தவர்களான, பானல் பூத்த-கருங்குவளை போல மலர்ந்தனவும், வெள்ளத்து பெரிய-கடல்போலப் பெரியனவுமான, கண்ணார்-கண்களையுடைய மகளிர், தமை வலித்து-தம்மை (வலிந்து)இழுத்துக் கொண்டு, அவன்பால் செல்லும் உள்ளத்தை-அந்த ரகு வீரனிடத்துச் செல்லும் (தங்கள்) மனத்தை, பிடித்தும் நாம் என்று-நாம் பிடித்து நிறுத்துவோ மென்று கருதி, ஓடுகின்றாரும் ஒத்தார்-(மனத்தைப் பிடிக்க) ஓடுகின்றவர்கள் போலுங் காணப்பட்டனர்.

பெண்கள், தம்முடைய மனம் வலிந்து இழுத்துச் சென்றதனால், தம்மையு மறியாமல் அம் மனோ வேகத்துடன் இராமபிரானுள்ள விடம் செல்வாராயினர் என்பது கருத்து. அவ்வாறு சென்றமைக்கு, பள்ளத்திற் சென்றுபாயும் நீரின் இயல்பை ஒப்புக் கூறினார். நன்னீரனையவர் என்றதனால், அம்மாதர் தூய மனமுடையவர்களே யென்பது குறிப்பிக்கப்பெற்றது. இராமபிரானைக் கண்ணாரக்காணும் ஆவலால் மலர்ந்த அவர்களுடைய கண்களை, 'பானல் பூத்த கண்' என்றார். அவர்கள் விரைந்த தன்மையை உள்ளத்தைப் பிடித்தும் நாம் என் றோடினர் போலும்' எனக் கற்பித்துக் கூறினார்.

பானல் பூத்த கண்ணார், வெள்ளத்துப் பெரிய கண்ணார் என இயைக்க. வெள்ளம்-கடல்.

(பி - ம்.) 1. பரவு நன்னீர்.
2. வெள்ளத்திற்; வெள்ளத்தும்: அலம்பு மென்பூத்; அலம்பு செங்கேழ்; அலம்பச் செங்கேழ்; அலம்பிச் செம்பூத்; அலம்பு மென்கால்; அலம்பத் தேம்பி.
3. வலித்தவன்மேல்; வலிந்தவன்பால்; இகழ்ந்தவன்பால்; வலித்தப்பால்.

4. பிடித்துமென்ன; என்ன; என்றுங்கு: ஒடுங்குகின்றாரும்; ஒடுங்குகின்ற வரும். (4)

இப்பாடல் சிலபிரதிகளிம் இல்லை; சில பிரதிதளில் இதுவும் அடுத்ததும் முன் பின்னக மாறியுள்ளன.

1143. கண்ணினுற் காதலென் னும் பொருளையே காண்கின்றேமிப்
பெண்ணினீர் மையினு லெய்தும் பயனின்று பெறுது
மென்பார்
மண்ணினீ ருலர்ந்து வான மழையற வறந்த காலத்
துண் ணுநீர் கண்டு வீழு முழைக்குலம் பலவு மொத்தார்.

(மகளிர் ஒருவர்க்கொருவர்), கண்ணினுல்-நம் கண்களால் காதல் என்னும் பொருளையே காண்கின்றேம்-காதல் என்பது ஓர் வடிவு கொண்டதையே இங்கே பார்க்கிறேம்; இ பெண்ணின் நீர்மை யினுல்-பெண்களாகப் பிறந்துள்ள இத்தன்மையினுல், எய்தும் பயன்-அடைதற்குரிய (நல்ல) பயனை, இன்று பெறுதும்-இன்று (நாமெல் லாம்) பெறுவோம், என்பார்-என்று பேசிக்கொள்பவர்களாய், மண் ணில் நீர் உலர்ந்து-பூமியில் (எங்கும்) நீர்வற்றி, வானம் மழை அற-வானத்தினின்று பெய்யும் மழையும் அற்றுப்போக, வறந்த காலத்து-(எங்கும்) வறண்டு போன காலத்தில், உண்ணும் நீர் கண்டு-(ஏதோ ஓரிடத்தில்) குடிக்கத்தக்க (நல்ல) நீரைக்கண்டு, வீழும்-(அதன்பால்) விரும்பிச் செல்லுகின்ற, உழை குலம் பலவும் ஒத்தார்-பல மான் கூட்டங்கள் போலவும் ஆனுர்கள்.

முன் பாடலில், பள்ளத்துப்பாயும் நன்னீரை ஒப்புக் கூறியவர், இங்கே, நெடுநாள் நீரையே காணுது வேட்கையால் வாடி, பின் ஓரி டத்தில் அரிதாக அதனைக் கண்டு அதனிடத்து ஆவலோடு விரையும் மான் கூட்டங்களை ஒப்பாக்கினுர். இங்கே, 'வீழும்' என்ற சொல்லாற் றல் உற்று நோக்கத்தக்கது. உம்மை, இறந்தது தழுவியது.

பெண்மையின் பயன், நல்ல அழகனுன ஆடவனை அடைதல்; தனை நாம் இன்று பெறுவோம் என்று பேசிக்கொண்டனர். கருத்து ப்புமை: ஆரணிய. 267-காண்க.

(பி - ம்.) 1. பொருளையோ: கான்கின்றுமிப்; காண்கின்றேரும்.
2. பெண்ணு நீர்மையினுல்; எய்து பயனின்றும்.
3. மண்ணு நீர்: உலந்து; வறந்த: வானும்: இறந்த. (4)

1144. அரத்தமுண் டனைய மேனி யகலிகைக் களித்த தாளும்
விரைக்கருங் குழலிக் காக வில்லிற நிமிர்ந்து வீங்கும்
வரைத்தடந் தோளுங் காண மறுகினில் வீழு மாதர்
இரைத்துவந் தமிழ்தின் மொய்க்கு மீயினமென்ன லனுர்.

அரத்தம் உண்ட அனைய மேனி - செந்நிறம் ஊட்டினுற் போன்ற (மிகச் சிவந்த) உடம்பினையுடைய, அகலிகைக்கு அளித்த-

அகலிகைக்கு (ச்சாபந்திர) அருள் செய்த, தாளும்-திருவடிகளையும், விரை-நறுமணம் பொருந்திய, கரு குழலிக்கு ஆக-கரிய கூந்தலையுடைய சீதாபிராட்டியின் திருமணம் நிறைவேறும் பொருட்டு, வில் இற-சிவதனுசு முறியும்படி, நிமிர்ந்து வீங்கும்-நிமிர்ந்து பூரித்த,வரை தட தோளும்-மலை போன்ற பெரிய புயங்களையும், காண-காணும் பொருட்டு, மறுகினில் வீழும் மாதர்-வீதியில் மேன்மேலும் வந்து குவிந்த மகளிர், இரைத்து வந்து-ஆரவாரித்துக்கொண்டு வந்து, அமிழ்தில் மொய்க்கும் ஈ இனம் என்னல் ஆனார்-அமிர்தத்தில் மொய்க்கும் ஈக் கூட்டங்கள் என்னும்படி ஆனார்கள்.

இராமபிரானை அமிர்தமாகவும், அவரைக் காண வந்து மொய்த்த மகளிரை அமிர்தத்தில் மொய்த்த ஈக்களாகவும் உருவகித்தார். இனிப்புள்ள பொருள்களில் ஈக்கள் மொய்த்தல் இயல்பு; தேனுக ரளியின் மொய்த்தார் (1141) என்றார் முன்னும்; அவ்வாறே இராமபிரானையணுகினர் மகளிர் என்றபடி. ஈக்கள் மொய்க்கப்பட்ட பொருள் தூய்மை கெடும்; ஆனால், தேவாமிர்தத்தில் ஈக்கள் மொய்த்தாலும் அதன் தூய்மை கெடுதல் இல்லை; அதுபோல, இராமபிரானெதிரில் எத்தனை பெண்கள் வந்து கூடினும், அப்பெருமான் மனம் மாறுதல் இல்லையென உவமையின் நயம் காண்க. மகளிர் இராமபிரானது திருமேனி நலனைப் புகழ்ந்தவாறே வந்தனராதலின், இரைத்து வந்து மொய்த்த ஈயினம் போலாயினர் என்றார். இராமபிரான் திருமேனியில் அங்கம் எதுவும் சிறப்பிற் குறையாததேயெனினும், தாளும் தோளும் தனிச் சிறப்பைப்பெற்றன; தாள்கள் கல்லைப் பெண்ணாக்கிப் பழம் பெருமையைப் புதுப்பித்து அளித்தன; தோள்கள், பிராட்டிக்குத் திருமணம் ஆகாமலே நின்றுவிடுமோ என்ற ஐயத்தை நீக்கி அனைவர்க்கும் மகிழ்ச்சியளித்தன; ஆதலால், அவற்றைக் காண மாதர் வீழ்ந்தனர் எனச் சிறப்பு வகையாற் கூறினர்.

(பி - ம்.) 1. அகலியைக் களித்த; அகலிகை களித்த.
2. விரைத்தருங்; விரைக்குழற் சனகிக்காக,
3. தோளுங்காணு: மறுகினின்; மறுகினர்: விழ்ந்து; விழுந்து; வீங்கு.
4. இரைந்து வந்து: அமிழ்தம்; அமிர்தை: எனவுமானர்; எனலுமானர்; பலவு மொத்தார். (5)

கவிக் கூற்று: கண்ணன் என்ற பெயர்க் காரணம்

1145. வீதிவாய்ச் செல்கின் றான்போல் விழித்திமை யாது நின்ற
மாதரார் கண்க ளூடே வாவுமான் றேரிற் போனான்
யாதினுமுயர்ந்தோர் தன்னையாவர்க்குங்கண்ண னென்றே
ஓதிய பெயர்க்குத் தானே புறுபொரு ளுணர்த்தி விட்டான்.

வீதிவாய் செல்கின்றான்போல்-(மிதிலை நகரத்து) வீதியிலே போகிறவன்போல, விழித்து-கண்களைத் திறந்து பார்த்துக்கொண்டு, இமையாது நின்ற-இமை கொட்டாமலே நின்ற, மாதரார் கண்கள்

ஊடே-பெண்களின் கண்கள் வழியே, வாவும் மான் தேரில் போனான்-தாவிச் செல்லும் குதிரை பூட்டிய தேரிலே போன இராமபிரான், யாதினும் உயர்ந்தோர்-எவ்வகையிலும் உயர்ந்த பெரியோர்கள், யாவர்க்கும் கண்ணன் என்று-எல்லோருக்கும் (அவன்) கண்ணன் என்று, தன்னை ஓதிய பெயர்க்கு-தன்னைக் குறித்துச் சொல்லிய (அந்தப்) பெயருக்கு, உறு பொருள்-பொருந்திய பொருளை, தானே உணர்த்திவிட்டான்-தானே (இப்போது) தெரிவித்துவிட்டான்.

திருமாலாகிய தனக்குள்ள 'கண்ணன்' என்ற பெயரின் பொருத்தத்தை, இப்போது அப்பெண்கள் அனைவர் கண்களிலும் நிலவிய வகையால் தானே உலகுக்கு உணர்த்திவிட்டான் எனச் சமத்காரமாகக் கூறுகின்றார். இராமபிரானது இணையில்லாத பேரழகைப் பெண்கள் விழித்தகண் இமையாது பார்த்தனர் என்க.

மாதரார் கண்களூடே...போனான்; ஒப்பு: 'கண்வழி நுழையுமோர் கள்வனேகொலாம்' *(611)*: இராமபிரானைக் கண்ணன் எனல்: *1197*; அயோத். *661, 994, 1125, 1129*; ஆரணிய. *254*; கிட்கிந்தா. *399*.

(பி - ம்.) 1. வீதிசெல்கின்றான்போல: விழித்திமையாமல்.
2. கண்ணினூடே: வாவுமாத்தேரில்; வயங்குமான் றேரில்: செல்வான்: போவான்.
3. யாரினும்; ஏதினும்; நீதியால்: உயர்ந்தோன்; உயர்ந்த; உணர்ந்தோர்: கண்ணனே யென்று.
4. பெயர்க்குந்தானே; பேர்க்குந்; பொருட்குத்; உட்பொருள்; ஓதுநால் வேதத்துண்மைக் குறுபொருள்; உரைத்து விட்டான். (6)

1146. எண்கடந் தலகி லாதின் றேகுறு மிவன்றே ரென்று
பெண்கடந் தம்மி னொந்து பேதுறு கின்ற வேலை
மண்கடந் தமரர் வைகும் வான்கடந் தானைத் தான்றன்
கண்கட வாமற் காத்த காரிகை பெரிய ளேகாண்.

இன்று-இன்றைக்கு, இவன் தேர்-இவ்விராமன் செல்லும் தேரானது, எண் கடந்து-நினைவையுங் கடந்து, அலகு இலாது-(விரைவுக்கு ஓர்) எல்லையில்லாமல், ஏகுறும் என்று-ஓடுகின்றதே யென்று. பெண்கள்-(கூடின) பெண்கள் எல்லோரும், தம் தம்மில்-தமக்குள்ளே (எண்ணி), நொந்து-மனம் வருந்தி, பேது உறுகின்ற வேலை-கலக்கமடையும்போது, மண் கடந்து-(திரிவிக்கிரமனாகி) இவ்வுலகத்தை அளந்து, அமரர் வைகும் வான் கடந்தானை-தேவர்கள் தங்கும்விண்ணுலகத்தையும்(அளந்து)கடந்த(திருமாலின்அம்சமான) இராமபிரானை, தான்-தான் ஒருத்தி மட்டும், தன் கண் கடவாமல்-தன் கண்ணைவிட்டு நீங்காதபடி, காத்த-தடுத்து நிறுத்திக்கொண்ட, காரிகை-அழகிற் சிறந்த அப்பிராட்டி, பெரியளே-யாவரினும் மேம்பட்டவளே! காண், அசை.

இதுவும் கவிக்கூற்று. தேர் விரைந்து செல்வதனுல், தங்கள் ஆசை தீர இராமபிரானை முழுதுங் கண்டனுபவிப்பதற்கில்லையே யென்று பெண்கள் வருந்தினர்: பிராட்டியோ, அன்று கன்னிமாடத்தி லிருந்து எம்பெருமானை முதலில் கண்ட காட்சியிலேயே, கண் வழி நுழைந்த அக்கள்வனை, (மீறிச் செல்லாதவாறு) தன்னுள் அடக்கிக் கொண்டாள்; ஆதலால், அவள் யாரினும் 'பெரியளே' என்கிருர். பிராட்டி உருவெளித் தோற்றத்தில் இராமபிரானைக் கண்டவாறே யிருக்கின்ருள் என்றபடி. இனி, இதனை இம்மகளிர் கூட்டத்தினருள் ஒருத்தியின் செயலென்று கொண்டு கூறலும் ஆம்.

பேதுறல்: ஆரணிய. 952; குறுந். 199: 3.

(பி - ம்.) 1. அலகிலா தென்று; ஏகிலா யென்று; அகல்கிலா னென்று; அகல்கில தென்று; எய்திலா தின்று; ஏகிலும்; ஏதினும்: இன்பத்தையீதி யென்று; இன்பத்தை யெனக்கீ யென்றே.
2. பெண்கடோந்தம்மின்: நின்று; பேதுறுகின்றகாலே; போதின்.
4. கண்கடவாது; கடவாமைக்: பெரிய ளென்பார்; பெரிய ளென்ருர்; வலியளே காண். (7)

1147. பயிரொன்று கலையுஞ் சங்கும் பழிப்பரு நலனும் பண்பும்
செயிரின்றி யலர்ந்த பொற்புஞ் சிந்தையு முணர்வுந் தேசும்
வயிரஞ்செய் பூணு நாணு மடனுந்த னிறையு மற்றும்
உயிரொன்று மொழிய வெல்லா முகுத்தொரு தெரிவை
நின்ருள்.

ஒரு தெரிவை-ஒரு பெண், தன் உயிர் ஒன்றும் ஒழிய-தன் உயிர் ஒன்றைத் தவிர, நிறையும்-மன அடக்கத்தையும், மடனும்-மடப்பத் தையும், நாணும்-வெட்கத்தையும், பயிர் ஒன்று கலையும் ஒலித்தல் பொருந்திய (புதிய) ஆடையையும், சங்கும்-கை வளையல்களையும், பழிப்பு அரு நலனும்-பழிப்பில்லாத நற்செயல்களையும், பண்பும்-இயற்கைக் குணத்தையும், செயிர் இன்றி அலர்ந்த பொற்பும்-குற்ற மின்றி விளங்கிய அழகையும், சிந்தையும்-மனத்தையும், உணர்வும்-நல்லறிவையும், தேசும்-உடம்பின் ஒளியையும், வயிரம் செய் பூணும்-வைரத்தால் இயன்ற அணிகலன்களையும், மற்றும் எல்லாம்-மற்றும் (பெண்மைக்குரிய அச்சம் முதலிய) எல்லாவற்றையும், உகுத்து-சிந்தி விட்டு, நின்ருள்-(செயலற்று) நின்ருள்.

இராமபிரானை அடையும் கருத்தோடு வந்தவள், கட்புலனுக்கு எட்டாது அப்பிரான் மறைந்துவிடவே, தன் உடைமையான பொருள்களையும், பெண்மைக்குரிய குணங்களையும் இழந்து, ஒன்றை யும் உணராதவளாய்ச் செயலற்று நின்ருள் என்க. 599-ஒப்பு நோக்குக.

பயிர்-ஒலி. இது புதிய ஆடைக்கும் வளையலுக்கும் பொருந்தும். பயிர்-பயிர்ப்பு என்னும் குணமும், கலை-மேகலையுமாம். தன் வச மின்றியே இழந்தமையை 'உகுத்து' என்றது இலக்கணை.

(பி - ம்.) 1. பயிரொன்றும்; நலனும் பைம்பூண். 2. மலர்ந்த; வளர்ந்த.
3. நாணு மடமும்; மற்ற மடனும்: தன்னிறைவு மற்றும்; தன்னிறைவு முற்றும். (8)

1148. குழையுரு மிளிருங் கெண்டை கொண்டலி னாலி சிந்தத்
தழையுருக் கரும்பின் சாபத் தனங்கவேள் சரங்கள் பாய்ந்த
இழையுருப் புண்ண றாத விளமுலை யொருத்தி சோர்ந்து
மழையுரு மின்னி னன்ன மருங்குல்போ னுடங்கி நின்றாள்.

தழை உறு கரும்பு சாபத்து-தழையில்லாத கரும்பாகிய வில்லையுடைய, அனங்கவேள்-மன்மதனுடைய, சரங்கள் பாய்ந்த-பாணங்கள் பாய்ந்ததனால் உண்டான, புண் அறாத-புண்கள் நீங்கப்பெறாத, இழை உறு இள முலை ஒருத்தி-நூலிழையும் இடையே நுழைய முடியாத (நெருங்கிய) இளமையான தனங்களையுடைய ஒரு பெண், குழை உறு மிளிரும்-காதணிகளிலே பொருந்திப் பிறழ்ந்து பிரகாசிக்கிற, கெண்டை-கெண்டை மீன் போன்ற (தன்) கண்கள், கொண்டலின்-மேகத்தைப்போல, ஆலி சிந்த - நீர்த்துளிகளைப் பெருக்க, சோர்ந்து-மிகவும் சோர்வுற்று, மழை உறு மின் அன்ன-மேகத்தில் பொருந்தாத (வேறு வகையில் உண்டான) மின்னலைப் போன்ற, மருங்குல்போல்-தன் (நுண்ணிய) இடையைப்போல, நுடங்கி நின்றாள்-(உடம்பு முழுதும்) துவண்டு நின்றாள்.

இராமபிரானிடத்துக் கொண்ட காதல் பயன்படா தொழிந்தமையின், மிகவும் வருந்திச்சோர்ந்து நின்ற ஒருபெண்ணின் நிலையை இடைபோல நுடங்கி நின்றாள் என்றார். இடை, தன் நுண்மையால் எப்போதும் துவள்வது; இப்போது அவள் மனநிலையால் உடம்பு முழுதும் அவ் இடைபோலத் துவண்டது எனச் சோர்வு மிகுதியைப் புலப்படுத்தியவாறு.

உறு: செய்யா வென்னும் வாய்பாட்டெச்சம். கெண்டை: உவமவாகுபெயர். கரும்பின் சாபம், மின்னின் அன்ன என்றவற்றில் இன்-சாரியை; மழையுறு மின்: இல்பொருளுவமை. வில்லாகக் கொள்ளும் கரும்பு, தழை நீக்கப்பெற்றதாகலின் 'தழையுறுக்கரும்பு' என்றார். இழையுறு என்பதனைப் புண்ணுக்கு அடையாக்கி, நூலிழையும் புகுதற்கியலாத (வெற்றிட மில்லாத) புண் என்றலும் ஆம்.

மருங்குல்போல் நுடங்கல்: 'நூலுறு மருங்குல்போ னுடங்குவாள்' (596).

(பி - ம்.) 1. குழையுற; குழையுறு; குழையுறு: மிளுங்கெண்டைக்: சிந்தித்.
2. தழையுறுக்; தழையுறு: பாய.

3. இமையரும்; புண்ணூறுத: ஒருத்தி மேல்வான்.

4. மழையரு: மின்னி னின்றாள்; மின்னினன்னுள்: மருங்குபோல்; மயங்கி மெய்; டங்குகின்றுள்; கலங்கி நின்றுள். (9

1149. பஞ்சிவர் விரலி ஞர்தம் படைநெடுங் கண்க ளெல்லாம்
செஞ்செவே யையன் மெய்யிற் கருமையைச் சேர்ந்த வோதாம்
மஞ்சன மேனி யான்றன் மணிநிற மாத ரார்தம்
அஞ்சன நோக்கம் போர்க்க விருண்டதோ வறிகி லேமால்.

பஞ்சு இவர்-செம்பஞ்சு ஊட்டப்பெற்ற, விரலினர் தம்-விரல்களையுடைய பெண்களின், படை நெடு கண்கள் எல்லாம்-வேற்படையும் வாட் படையும் போன்ற பெரிய கண்கள் எல்லாம், செஞ்செவே-நன்றாக, ஐயன் மெய்யில் கருமையை சேர்ந்தவோ-தலைவனான இராமபிரானது திருமேனியிலுள்ள கருநிறத்தைப்பெற்றனவோ!(அல்லது), மஞ்சு அ(ன்)ன மேனியான் தன்-மேகம் போலுந் திருமேனியுடைய அப்பிரானது, மணி நிறம்-அழகிய அந்த நிறம், மாதரார் தம்-அப் பெண்களுடைய, அஞ்சன நோக்கம்-கரிய கண்களின் பார்வை, போர்க்க-(பிரானுடைய திருமேனியிலே)பரவுதலால். இருண்டதோ-(அவ்வாறு) கருமை மிக்கதாயிற்றோ! அறிகிலேம்-(இன்னதென்று யாம் (தெளிய) அறியமாட்டோம்.

பெண்களெல்லோரும் இராமபிரானைக் கண்ணிமையாமல் ஆழ்ந்து நோக்கி நின்றமையால், அப்பிரானுடைய திருமேனியின் நிறம் பிரதிபலித்துக் கண்கள் கருநிறம் பெற்றனவோ! அல்லது, அவ்வாறு பார்த்து நின்ற பார்வையால், அப்பெண்களுடைய கண்களின் கருநிறம் ஐயன் மேனியில் பாய்ந்து பரவிக் கருமையை மிகுவித்ததோ அறியோம் என ஐயுறவுபோலக் கற்பனை செய்து, பெண்களின் நிலையை அழகுற விளக்குகின்றார். இராமபிரானுடைய திருமேனி யழகு அப்பெண்களை முற்றிலுங் கவர்ந்த தென்பது கருத்து. சேர்ந்தவோதாம்: தாம், அசை.

ஒப்பிடுக: 'மழையென மதர்த்த கண்கள், அஞ்சன நிறமோ அண்ணல் வண்ணமோ அறிதல் தேற்றும்' (1208).

(பி - ம்.) 1. பஞ்சணி: கணெகளெல்லாம்,

2. செஞ்செவ்வை: மெய்யின் கருமையைச்: சேர்ந்த வொத்த; சேர்ந்த வோதான்; சிறந்தவோதாம்.

3. அஞ்சன மேனியான்றனணி நிறம்; மணி நிழல்.

4. மஞ்சன நோக்கம்: பார்க்க; போக்க; பாய: அறிகிலோமால்; அறிந்திலேமால்; அறிகிலோமே. (10

1150. மாந்தளிர் மேனி யாளோர் வாணுதன் மதன னெங்கும்
பூந்துணர் வாளி மாரி பொழிகின்ற பூசனோக்கி
வேந்தர்கோ னாணை நோக்கான் வீரன்வி லாண்மை பாரான்
ஏந்திழையாரை யெய்வான் யாவனோவொருவ னென்றாள்.

மா தளிர் மேனியாள்-மாந்தளிர் போன்ற (சிவந்த) மேனியுடையவளான, ஓர் வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றியுடையவளொருத்தி, மதனன்-மன்மதன், எங்கும்-அம்மகளிர் கூட்டமுள்ளவிடமெல்லாம், பூ துணர் வாளி மாரி பொழிகின்ற - (தன்னுடைய) பூங்கொத்துக்களாலான அம்பு மழையைப்பொழிகிற, பூசல் நோக்கி-போர்த்திறனைப் பார்த்து, வேந்தர்கோன் ஆணைநோக்கான்-அரசர்க்கரசனான நம் சனக மகாராசனுடைய ஆணையின் சிறப்பைப் பாராதவனும், வீரன்-இராமபிரானுடைய, வில் ஆண்மை பாரான்-வில்திறமையையும் பாராதவனும், ஏந்து இழையாரை-ஆபரணங்களணிந்த (களங்கமற்ற) மகளிர் மீது, எய்வான் ஒருவன்-அம்புகளை எய்கின்ற ஒருவன், யாவனோ எத்தகையவனோ?, என்றாள்—.

தரும நெறி சிறிதும் தவறாத செங்கோலுடைய சனக மன்னனும், அவனுக்கு மருகனாதற்குரிமை பூணச் சிவன் வில்லையே சிதற வடித்த வீரம் மிக்க இராமனும் இருக்கும்போது, அபலைகளான பெண்கள் மீது அம்பெய்து போர்தொடுப்பவன் எத்தகைய இழிதகவுடையவன்! என மன்மதனைப் பழிப்பாள்போலத் தங்கள் நிலையைப் புலப்படுத்தினாள் அப்பெண் என்க. ஏந்திழை யாரை எய்வான் யாவனோ ஒருவன்-மகளிர்மீது அம்பெய்பவன் எவனோவொரு வீணன் எனவுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. மாந்துளிரனையமேனி வாணுதலொருத்தி மாரன்: மதனனோங்கும்; மாரனோங்கும். 2. பூந்துணை. 3. ஆணைக்கஞ்சான். 4. யாவனே. (11)

1151. விற்றங்கு புருவ நெற்றி
வெயர்வரப் பசலை விம்மிச்
சுற்றெங்கு மெறிப்ப வுள்ளஞ்
சோரவோர் தோகை நின்றாள்
கொற்றஞ்செய் கொலைவே லென்னக்
கூற்றெனக் கொடிய கண்ணாள்
மற்றொன்றுங் காண்கி லாதாள்
தமியனோ வள்ள லென்றாள்.

கொற்றம் செய்-வெற்றியைத் தருகிற, கொலை வேல் என்ன-கொலைத்தொழிலையுடைய வேல் போலவும், கூற்று என-யமனைப் போலவும், கொடிய கண்ணாள்-கொடுமை தங்கிய கண்களையுடையவளான, ஓர் தோகை-மயில் போலும் சாயலுடையாளொருத்தி,

வில் தங்கு புருவம் நெற்றி-வில்லின் தன்மையுடையனவாய் வளைந்து ஏறிய புருவங்கள் பொருந்திய நெற்றியிலே, வெயர் வர-வேர்வை அரும்பவும், பசலை விம்மி-பசலை நிறம் (உடம்பு முழுதும்) மிகுந்து, சுற்று எங்கும் எறிப்ப-சுற்றிலும் தன் அழகைத் தோற்றுவிக்கவும்; உள்ளம் சோர-மனம் சோர்ந்து, நின்றாள்-நின்றவள், மற்று ஒன்றும் காண்கிலாதாள்-(இராமபிரானையன்றி) வேறொன்றையும் (தன் கண்ணில்) காணாதவளாய், வள்ளல் தமியனோ!-வள்ளலாகிய இராமன் தனியே உள்ளானோ! என்றாள்—.

இம்மங்கையின் கருத்தில் இராமபிரானையன்றி வேறெதுவும் இடம் பெறவில்லையாதலால், இவள் கண்கள் பார்த்தவிடமெல்லாம் அப்பிரானையே கண்டன; அதனால், வள்ளலாகிய இவன் என்போன்றார்க்கு அருள் செய்யக் கருதித் தனித்து வந்துள்ளானோ என்றாள். அவ்வருளின் தன்மையைக் கருதியே 'வள்ளல்' என்றாள். இனி, தமியனோ! என்பதற்கு, பெருஞ்சிறப்புடைய இவன் இப்படித் தனித்து வருகின்றானே யென இரங்கிக் கூறியதாகவும் பொருள் கொள்ளலாம்; இப்பொருளில், ஓகாரம் இரக்கக் குறிப்புணர்த்துவதாகும்.

புருவம் நெற்றியில் ஏறலும், நெற்றியில் வேர்வையரும்புதலும் வருத்த மிகுதியைப் புலப்படுத்துவன; விற்றங்கு என்பதனை நெற்றிக்கு அடையாக்கலும் ஆம். பசலை: தம் மனங்கொண்ட காதலனைத் தழுவப் பெறாதபோது மகளிர்க்கு உடம்பில் உண்டாகும் நிறவேறுபாடு; இதனை 'மாமை' எனவுங் கூறுவர்; இஃதோர் அழகு தரும் என்பர்.

பி - ம்.) 1. விற்றங்கும்; வேர்வரப்; வேர்படப்; பயலைவிம்மச்; மின்னச்; மெய்யில்.
2. தெறிப்ப; வெறிப்ப; கோதை நின்றாள்.
3. வேலன்ன கூர்நுதிக்; வேலென்னக் கூர்நுதிக்; கூற்றென்னக்; கூற்றன்ன; கொடிய கண்ணால்; கொலைக்கணாலே.
4. காணகில்லாள்; தனியனோ; மதியனோ. (12)

பல பிரதிகளில் இதுவும் அடுத்த பாடலும் முன்பின்னாக மாறிக் காணகின்றன.

1152. தொன்னயந் தொடர்ந்த காமச்
சுவையையோ ருருவ மாக்கி
இன்னயந் தெரிய வல்லா
னெழுதிய தென்ன நின்றாள்
பொன்னயம் பொருவு நீராள்
புனைந்தன வெல்லாம் போகத்
தன்னையுந் தாங்க லாதா
டுகிலொன்றுந் தாங்கிக் கொண்டாள்.

இன் நயம் தெரிய வல்லான்-(கண்ணுக்கு) இனிமையின் மேம்பாட்டை அறியவல்ல ஓவியக்காரன், தொல் நயம் தொடர்ந்த காமம் சுவையை-(புலவர்கள் புனைந்து கூறும்) பழமையான சிறப்புடைய காமச்சுவையை, (சிருங்கார ரசத்தை), ஓர் உருவம் ஆக்கி எழுதியது என்ன நின்ருள்-(தன் கற்பனையால்) ஒரு வடிவமாக்கி எழுதி வைத்ததென்னும்படி நின்ற, பொன் நயம் பொருவும் நீராள்-பொன்னின் மேன்மை பொருந்திய தன்மையினளான ஒருத்தி, புனைந்தன எல்லாம் போக-(தான்) அணிந்திருந்தவையெல்லாம் (உடம்பினின்றும்) நீங்கிப்போக, தன்னையும் தாங்கலாதாள்-(சோர்வினுல்) தன் உடம்பையுங்கூடத் தரிக்கவியலாதவளாயினும், துகில் ஒன்றும் தாங்கிக்கொண்டாள்-(மானத்தால்) மெல்லிய ஆடையை மட்டும் தாங்கிக்கொண்டாள்.

தன்னையும் தாங்கலாதாள் என்றது, காம மிகுதியைப் புலப்படுத்தியவாறும். காமச்சுவையின் சிறப்பை, 'சுவை பலவென்று கூறுவார் கூறுக; யாம் கூறுவது இன்பச்சுவை யொன்றனையுமே' என்ற போசராசன் கூற்ருல் உணரலாம். பொன்-இலக்குமி என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. சொன்னலங் கடந்த; கிடந்த.
2. இன்னலம்: வல்லார்; நல்லார்: எழுதிய வெனவும் பூமேல்.
3. பொன்னையும்; பொன்னலம்: எல்லாம் போக்கித்.
4. தன்னலம்: தாங்கலாற்ருள்; தாங்கிலாதாள்; தாங்கலாகாள்: துகிலொன்று; உயிரொன்று; உயிரொன்றும்: தாங்கி நின்ருள். (13)

1153. மைக்கருங் கூந்தற் செவ்வாய் வாணுத லொருத்தியுள்ளம்
நெக்கன ளுருகு கின்ரு ணெஞ்சிடை வஞ்சன் வந்து
புக்கனன்போகாவண்ணங்கண்ணெனும்புலங்கொள்வாயில்
சிக்கென வடைத்தேன் ரேழி சேருது மமளி யென்ருள்.

மை கரு கூந்தல்-மைபோலக் கறுத்த கூந்தலையும், செவ்வாய்-சிவந்த வாயையும், வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றியையுமுடைய, ஒருத்தி-ஒரு பெண், உள்ளம் நெக்கனள் உருகுகின்ருள்-(இராமபிரானையே நினைத்து) மனம் நெகிழ்ந்து உருகுகின்றவள், (தன் தோழியை நோக்கி), தோழி-தோழியே, வஞ்சன்-வஞ்சகனுன அவ்விராமன், வந்து-(கண் வழியே) என்னிடம் வந்து, நெஞ்சு இடை புக்கனன்-(என்) மனத்தினுள் புகுந்திருக்கின்ருன்; போகா வண்ணம்-(அவன் அங்கிருந்து) போய்விடாதபடி, கண் எனும்-கண்ணுகிற, புலம் கொள் வாயில்-(அவன் வருதற்கு) இடங்கொண்ட வாயிலை, சிக்கென அடைத்தேன்-இறுக மூடிவிட்டேன்; (ஆதலால்), அமளி சேருதும்-யாம் படுக்கையைஅடைவேம்; என்ருள்-என்று சொன்னுள்.

இப்பெண்ணின் கூற்று, தன்னுேடு வேறுபாடு சிறிதும் இல்லாத உயிர்த் தோழியிடம் கூறியதாகும். அவ்விராமன், வந்து கண் வழியே

என் மனத்தினுட் புகுந்துளான்; அவன், நாணம், நிறை முதலியவற்றைக் கவர்ந்து சென்றுவிடும் கள்வன்; ஆதலால், உள்ளே புகுந்தவன் மீண்டும் வெளியே சென்றுவிடாதவாறு அவன் நுழைதற்கிடமான கண்களை இறுக மூடி வழியை அடைத்துவிட்டேன்; அவனோடு அமளியிற் சேர்ந்து இன்புறுவேன் என உள்ளதை ஒளியாது கூறினள். கள்வனொருவன் அகப்பட்டால் அவனைப் பிடித்துத் தண்டித்தல் உலக இயற்கை; இங்குக் கூறிய கள்வன் அவ்வாறு தண்டனைக்குரியவன் அல்லன்; கூடி யின்புறுதற்குரியவன் என நயம்படக் கூறுகின்றார்.

நெகுதல்-நெகிழ்தல்: *1166*; நெக்கனள்: முற்றெச்சம். 'கண் வழி நுழையுமோர் கள்வன்' (*611*). சிக்கென இறுக, உறுதியாக; 'சிக்கெனப் பிடித்தேன்' (திருவா. பிடித்தபத்து).

(பி - ம்.) 2. நெக்கென; நெக்கவுள்; உருகி நின்றாள்.
3. ஏகாவண்ணம்: கண்ணொடு: பிலங்கொள்; புலன்கொள்; பொலன் கொள்: வாயும்.
4. அடைத்துத்; அடைத்தும். (*14*)

1154. தாக்கணங் கனைய மேனி தைத்தவேள் சரங்கள் பாராள்
வீக்கிய கலையுந் தூசும் வேறுவே றான தோராள்
ஆக்கிய பாவை யன்னா ளொருத்தியாண் டமலன் மேனி
நோக்குகின் றாரை யெல்லா மெரியெழ நோக்கிநின்றாள்.

ஆண்டு-அங்கே, ஆக்கிய பாவை அன்னாள் ஒருத்தி-(வல்லவன் ஒருவன் நன்கு நினைத்துப்) படைத்த பாவை போன்ற (அழகுடைய) ஒரு பெண், தாக்கு அணங்கு அனைய மேனி தைத்த-தீண்டி வருத்தும் மோகினித் தெய்வம் போன்ற (தன்) உடம்பிலே பாய்ந்த, வேள் சரங்கள்-மன்மதனுடைய அம்புகளையும், பாராள்-பொருட்படுத்தாமலும், வீக்கிய-(அரையில்) கட்டின, தூசும்-ஆடையும், கலையும்-மேகலையும், வேறு வேறு ஆனது ஓராள்-நெகிழ்ந்து ஒன்றொடொன்று தொடர்பற்று வீழ்ந்ததையும் உணராமலும், அமலன் மேனி நோக்குகின்றாரை எல்லாம்-குற்றமற்ற இராமபிரானது திருமேனி யழகை உற்று நோக்குகின்றவர்களை யெல்லாம், எரி எழ நோக்கி நின்றாள்-கண்ணில் தீ எழும்படி (சினந்து) பார்த்தவாறு நின்றாள்.

இங்குக் கூறப்பட்டவள், மோகம் மேலிட்டு, இராமபிரானைப் பார்த்தற்குரியவள் தானொருத்தியே; பிறர் உரியரல்லர் என்ற எண்ணமுடையவளாய், அதனால் வந்த பொறாமை காரணமாகப் பிறரை எரி எழ நோக்கினள் என்றவாறு; இதனால் இராமபிரான் திறத்து அவள் கொண்ட மோகத்தின் மிகுதி புலனாகும். 'ஆக்கிய பாவை யன்னாள்', 'தாக்கணங்கனைய மேனியுடையாள்' என அவளழகைச் சிறப்பித்தார். பலரும் பார்த்தலால், இராமபிரான் திருமேனிக்குக் கண்ணெச்சிற் படுமே யெனக் கவன்று இவள் சினங்கொண்டாள் எனவுங் கூறுவர்.

தாக்கணங்கு: குறள். 1082; 'எல்லாரிடத்திலும் சென்று சேரும் திரு' என்பர் நச்சிஞர்க்கினியர்; சீவக. 871, 1473-உரை.

(பி - ம்.) 1. அனையள்; அனையாள்: மேனித்: தைத்த வெம்; தையல்வெம்; தையல் வேள். 2. வீக்கிய கலனுந்.
4 நோக்குறுவாரை; நோக்கி நின்ருரை: கனலெழ; கனலென; தழலெழ; நோக்குகின்ருள். (15)

1155. களிப்பன மதர்ப்ப நீண்டு கதுப்பினை யளப்ப கள்ளம்
ஒளிப்பன வெளிப்பட் டோடப் பார்ப்பன சிவப்பு ளூற
வெளுப்பன கறுப்ப வான வேற்கணு ளொருத்தி யுள்ளம்
குளிர்ப்பொடு காண வந்தாள் கொதிப்பொடு கோயில்புக்காள்.

களிப்பன-(இயற்கையில்) களிப்புள்ளனவும், மதர்ப்ப-செழிப்புள்ளனவும், நீண்டு-(காதுவரை) நீண்டு, கதுப்பினை அளப்ப-மயிர்முடியை ஆராய்வனவும், கள்ளம் ஒளிப்பன-(ஆடவர் மனம் கவரும்) கள்ளத்தன்மையை (உள்ளே) மறைத்து வைத்துள்ளனவும், வெளிப்பட்டு-(சில சமயம் அந்தக் கள்ளம்) வெளிப்பட்டு, ஓட பார்ப்பன-(ஆடவர் மார்பில்) ஊடுருவும்படி பார்ப்பனவும், சிவப்பு உள் ஊற-(செவ்வரியினுலான) சிவந்த நிறம் உள்ளே பொருந்த, வெளுப்பன-(சில பகுதி) வெண்ணிறமுடையனவும், கறுப்ப ஆன-(சில பகுதி) கறுத்திருப்பனவும் ஆன, வேல் கண்ணுள் ஒருத்தி-(வடிவத்தாலும் செயலாலும்) வேல் போன்ற கண்களையுடைய ஒரு பெண், உள்ளம் குளிர்ப்பொடு-மனத்தில் மகிழ்ச்சியோடு, காண வந்தாள்-(இராமபிரானைக்) காணவந்தவள், கொதிப்பொடு-(தன் கருத்துக் கைகூடாமையால் உண்டான) காம வெப்பத்துடன், கோயில் புக்காள்-(தன்) மாளிகையினுள்ளே சென்ருள்.

இராமபிரானைக் கண்டு தழுவும் ஆவலுடன் மனத்தில் குளிர்ந்த தன்மை (மகிழ்ச்சி) உள்ளவளாய் வந்தவள், தன் ஆசை பயனற்றதனுல், அதற்கு மாருன வருத்தமும் சாமவெப்பமும் மேலிட்டுத் திரும்பிச் சென்ருள் என்க. -வரும்போது குளிர்ப்பு; போகும்போது கொதிப்பு' என்ற நயம் காண்க. காமத்தீ, 'நீங்கிற் றெறூஉம், குறுகுங்காற் றண்ணென்னும்' (குறள். 1104). கோயில் என்பது இங்கே மாளிகை என்ற பொருளில் நின்றது.

(பி - ம்.) 1. நீண்ட: களிப்பினை யொளிப்ப.
2. பழிப்பட்டோடிப்: சிவப்புள்ளூற; சிவப்புள்ளூறி.
3. வெளிர்ப்பன; விளர்ப்பன: கறுப்பவாய: வேற்கண்ணார்: உள்ளக்.
4. குளிர்ப்பொடுங்; களிப்பொடு: வெதுப்பொடுங் ... காதிப் பொடுங் கோயில். 16)

1156. கருங்குழற் பாரம் வார்கொள் கனமுலை கலைசூ ழல்குல்
நெருங்கின மறைப்ப வாண்டோர் நீக்கிடம் பெருது விம்மும்
பெருந்தடங் கண்ணி காணும் பேரெழி லாசை தூண்ட
மருங்குலின் வெளிக ளூடே வள்ளலை நோக்கு கின்ருள்.

கருகுழல் பாரம்-(தனக்குமுன் நிற்பவர்களுடைய)கரியகூந்தல் தொகுதியும் (அளக பாரமும்), வார் கொள்-கச்சணிந்த, கனம் முலை-பருத்த தனங்களும், கலைசூழ்-ஆடையுடுத்த, அல்குல்-நிதம்பங்களும், நெருங்கின மறைப்ப-நெருங்கியவைகளாய் (முன்னே பார்க்கவிய லாதபடி) மறைத்ததனுல், ஆண்டு-(தான் நின்ற) அவ்விடத்தில், ஓர் நீக்கு இடம் பெருது-வெளியிடம் சிறிதும் காணுமல், விம்மும்-துன் புற்ற, பெருதட கண்ணி-மிகப்பெரிய கண்களையுடைய ஒருத்தி, பேர் எழில் காணும் ஆசை தூண்ட-(இராமபிரானது இணையில்லாத) பேரழகைக் காணவேண்டுமென்ற ஆசை தூண்ட, வள்ளலை-அருள் வள்ளலாகிய இராமபிரானை, மருங்குலின் வெளியின் ஊடே-(அம் மகளிரின் நுணுகிய) இடைகளுக்கிடையே இருந்த வெளியின் வழி யாக, நோக்குகின்ருள்-பார்ப்பவளானுள்.

இதிற் கூறிய பெண்மணிக்கு, இராமபிரானைக் காண்பதில் இருந்த பேராவலை நுட்பமாகத் தெரிவிக்கும் அழகு காண்க. கலை-மேகலை யெனவுங் கூறுவர்.

(பி - ம்.) 1. குழற்பாரம் வார்தோய்: குழற்கற்றை சோர; சோர்ந்து: கன முலைக்; தன மலை.
2. நெருங்கினர் மறைப்: நீங்கிடப் பொருது; விம்ம; விம்மி; நீண்ட.
3. கண்ணில் : தானும்.
4. மருங்கிலள்: வெளிகளுடி; வெளியினூடே; வெளிகண்டுடே: மகிழ்ந் தனள் நோக்கி நின்ருள்; நோக்கியே மகிழ்ந்து நின்ருள். (17)

1157. வரிந்தவா ளனங்கன் வாளி மனங்கழன் றனவு மாதர்
எரிந்தபூ ணினமுங் கொங்கை வெயர்த்தபோ திழிந்த [சாந்தும்
சரிந்தமே கலையு முத்துஞ் சங்கமுந் தாழ்ந்த கூந்தல்
விரிந்தபூந் தொடையு மன்றி வெள்ளிடை யரிதவ் வீதி.

அவ் வீதி-அம்மிதிலை நகரத்து வீதிகளிலே, (இராமபிரான் தேரில் வந்தபோது), வரிந்த வாள்-(இடையிலே) கட்டின வாளை யுடைய, அனங்கன் வாளி-மன்மதனுடைய பாணங்கள், (மாதர்) மனம் கழன்றனவும்-பெண்களின் நெஞ்சில் (பாய்ந்து) ஊடுருவிச் சென்று விழுந்தவையும், மாதர்-அப்பெண்களின், எரிந்த-தீப்போல் ஒளி தருகிற, பூண் இனமும்-பல அணி வகைகளும், கொங்கை வெயர்த்தபோது-(அவர்களுடைய)தனங்களில் வெயர்வையுண்டான போது, இழிந்த சாந்தும்-(கரைந்து) வழிந்த சந்தனக் குழம்பும்,

சரிந்த மேகலையும்-(இடையினின்று) நழுவி விழுந்த மேகலாபரணங்களும், முத்தும்-முத்து மாலைகளும், சங்கமும்-சங்கு வளையல்களும், தாழ்ந்த கூந்தல்-நீண்டு தொங்குகிற கூந்தலினிடத்து, விரிந்த-விரிவாகச் சூடியிருந்த, பூதொடையும் அன்றி-பூமாலைகளுமே யல்லாமல், வெள் இடை அரிது-(ஒன்றும் இல்லாத) வெற்றிடமே யில்லை.

மகளிர் இராமபிரானைக் காணுதற்கு விரைந்து ஓடிவருவதனாலும், வந்தபின் காணவியலாமலும், கண்டாலும் தம் ஆவல்தீரத் தழுவ வியலாமலும் மனம் சோர்ந்து, உடல் வியர்த்து இளைத்ததாலும், அணிகலன்களும், பூவும், சந்தனக் குழம்பும் அவர்களுடம்பினின்றும் சிந்தித் தரையில் எங்கும் பரந்து கிடக்கவே, வெற்றிடம் சிறிதும் இல்லையாயிற் றென்க. அனங்கன் அம்பு கழன்றனவும் என்றதனால், அம்மகளிருள்ளே காம வசப்படாதார் இல்லை என்பதாயிற்று. இவற்றால் அனைவர் மனமும் எளிதிற் கவரும் இராமபிரானது பேரழகின் சிறப்புப் பெறப்பட்டது.

(பி - ம்.) 1. வரிந்ததோள்; தாள்; தார்; வில்; வருந்தவாள்: அனங்கவாளி: மனங் கழன்றகவும்; கழன்றுகவும்: கழன்றளவும்; கனன்றனவும்; மனங்களின் றடவ; அனங்கனம்பங் கழன்றனவுளவும்.
2. எரிந்தபூ ணணிபூம்; பூணிளமென்; விரிந்த பூணினமும்; பூணிளமென்; இரிந்த பூணினமும்: வேர்த்த போதழிந்த சாந்து.
4. தொடையுமின்றி: வெளியிடை: அரிதிவ்வீதி; அரிதுவீதி. (18)

1158. தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண் டாரு மஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினை முடியக்கண்டார்
ஊழ்கொண்ட சமயத் தன்ன னுருவுகண்டாரை யொத்தார்.

வாள்கொண்ட கண்ணார்-வாள்போலும் கண்களையுடைய அம்மகளிருள், தோள் கண்டார்-(இராமபிரானுடைய) தோள்களை (முதலில்) பார்த்தவர்கள், தோளே கண்டார்-(அவற்றினின்றும் தம் கண்களை மாற்றவியலாமல்) அவற்றையே கண்டு நின்றார்கள்; தொடுகழல்-கட்டிய வீரக்கழலையுடைய, கமலம் அன்ன-தாமரை மலர் போன்ற, தாள் கண்டார்-பாதங்களை (முந்திக்) கண்டவர்கள், தாளே கண்டார்-அவற்றையே பார்த்து நின்றனர்; தட கை கண்டாரும்-நீண்ட கையை-(முந்திக்)கண்டவர்களும், அஃதே-அஃதொன்றையே பார்த்து நின்றனர்; (இங்ஙனமாக), வடிவினை-(அப்பிரானுடைய) வடிவழகை, முடிய கண்டார் யார்-முழுதுங் கண்டவர் யாவர் உளர்?(ஒருவருமில்லை); (இத்தகைய நிலையெய்திய அவர்கள்), ஊழ்கொண்ட சமயத்து-(தம்தம் கொள்கையில்) முதிர்வு கொண்ட சமயந்தோறும், அன்னான் உருவு-அப்பரம் பொருளின் வடிவத்தை, கண்டாரை ஒத்தார்-(அவ்வம்முறையில்) கண்டவர்களை ஒத்திருந்தனர்.

பலவேறு மதத்தினரும் பலவேறு வகையாகக்கொண்டு போற்றும் தெய்வங்கள் எல்லாம், ஒன்ருன பரம்பொருளின் அம்சங்களேயெனினும், அவ்வம் மதத்தினர் அவ்வத் தெய்வத்தைத் தனிப்பட்டதாகவே கொண்டு, அதனையன்றி வேறு தெய்வம் இல்லையென்பர், அவ்வாறே, இராமபிரானுடைய அங்கம் ஒவ்வொன்றையும் தனித்தனியே கண்டவர்கள் கண்ணும் கருத்தும் அதிலேயே பதியப்பெற்று, அதனிற் சிறந்தது வேருேர் அங்கம் இல்லையென்று சொல்லுமாறு இருந்ததென்க. எவ்வளவு விரிப்பினும் இடந்தரவல்ல இவ்வொப்புமையின் நயம் ஆழ்ந்து நோக்குதற்குரியது. சர்வாங்க சுந்தரனுன இராமபிரானுடைய அங்கங்களுள், வில்லை முறித்த தோளையும், கையையும், அகலிகைக்களித்த தாளையும் எடுத்துக் கூறினுர். இவை இம்மாதரின் நெஞ்சில் முன்னிற்பனவாதல் பற்றிப் போலும்; 1144 பார்க்க. 'ஊழ்கொண்ட சமயத்து' என்பதற்கு, (ஒன்றற்கொன்று) 'மாறுபாடு கொண்ட பல சமயங்களுள்' என்றும், தனித்தனியே ஒவ்வொரு முறையைக் கொண்ட பல சமயங்களுள் எனவும், 'விசுவரூபங்கொண்ட சமயத்தில்' என்றும் பலவாறு பொருள் கூறுவர். பரம்பொருளின் தன்மை: 'தொல்லையி னென்றே யாகித் துறைதொறும் பிரிந்த சூழ்ச்சிப், பல்பெருஞ் சமயஞ் சொல்லும் பொருளும்போல்' (32); 'வணங்குந் துறைகள் பலபல வாக்கி மதிவிகற்பாற், பிணங்குஞ் சமயம் பலபல வாக்கி யவையவைதோ, றணங்கும் பலபல வாக்கிநின் மூர்த்தி பரப்பிவைத்தாய்' (நம்மாழ்வார். திருவிருத்தம்.) 'சமய கோடிகளெலாம் தந்தெய்வ மெந்தெய்வமென், றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது' (தாயுமானவர்.) தோள்கண்டார் தோளே கண்டார்: ஒப்பு: தோன்றறன் சுடர்மணித் தோளி னுட்டங்கள், ஊன்றின பறிக்கவோ ருற்றம் பெற்றிலாள்? (ஆரணிய. 246.)

வாள்கொண்ட என்பதில் கொண்ட, உவமவுருபு; வாளின் தன்மையைக் கொண்ட என்றுமாம்.

(பா - ம்.) 3. வாள்கண்ட; ஆரே: அடியினை,
4. ஊழ்கண்ட: அன்னுர்; அன்னேர்: உருவுகொண்டாரை: ஒத்தான்.(10)

(வேறு)

1159 தையல் சிற்றிடை யாளொரு தாழ்குழல்
உய்ய மற்றவ ளுள்ளத் தொடுங்கினுன்
வைய முற்றும் வயிற்றி னடக்கிய
ஐய னிற்பெரி யாரினி யாவரே.

தாழ் குழல்-நீண்ட கூந்தலையும், சிறு இடையாள்-சிறிய இடையையும் உடையவளான, ஒரு தையல்-ஒரு பெண், உய்ய-(உயிர்) பிழைக்கும்படி, அவள் உள்ளத்து ஒடுங்கினுன்-(பெருமான்) அவள்

மனத்தில் அடங்கிவிட்டான்; வையம் முற்றும்-உலகம் முழுவதையும், வயிற்றின் அடக்கிய-தன் வயிற்றுக்குள் அடக்கிக்கொண்ட, ஐயனின்-எம்பெருமானினும், பெரியார்-பெரியவர்கள், இனி யாவர்-வேறு யார் உளர் ? (எவருமில்லை). ஒடுங்கினன் ஐயன் என இயைப்பினும் அமையும்.

ஒரு பெண், பிறர் சிலரைப் போலன்றி, இராமபிரான் வடிவைத் தன் மனத்தினுள்ளே பாவித்து அகக் கண்ணால் நோக்கியே மனந்தேறினள் என்பது கருத்து. இராமபிரான் 'நாராயணன்' என்ற தமது கொள்கையை இங்கும் கம்பநாடர் காட்டுகின்றார். உலக முழுவதையும் தனக்குள் அடக்கித் தான் ஒன்றில் அடங்காதவனாலும், தன் இச்சையால் அன்பருள்ளத்து அடங்குவான் என்ற தன்மை இதனால் கூறப்பெற்றது; 'ஒருபக லுலகெலா முதரத்துட் பொதிந், தருமறைக் குணர்வரு மவனை...திருவுறப் பயந்தனள் திறங்கொள் கோசலை' (283) என்பதும் ஈண்டு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. தார்குழல். 2. மற்றவன்: ஒடுங்கினள்.
3. வயிற்றில்; வயிற்றுள்.
4. பெரியோர்: இனியாவரோ; உளரியாவரே; உளராவரோ. (20)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

1160. அலம்பு பாரக் குழலியொ ராயிழை
சிலம்பு மேகலை யுஞ்சிலம் பத்தனி
நலம்பெய் கொம்பி னடந்துவந் தெய்தினள்
புலம்பு சேடியர் கைமிசைப் போயினள்.

அலம்பு-அலைகிற, பாரம்-சுமையான, குழலி-கூந்தலையுடையவளாகிய, ஓர் ஆய் இழை-ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களை யணிந்த ஒருத்தி, சிலம்பும்-காலில் அணிந்த சிலம்புகளும், மேகலையும்-இடையணியான மேகலையும், சிலம்ப-ஒலிக்க, தனி-தனியே (தான் மட்டும்), நலம் பெய் கொம்பின்-அழகு மிக்க பூம்கொம்பு (அசைவது) போல, நடந்து வந்து எய்தினள்-(இராமபிரானைக் காணும் பொருட்டு) நடந்துவந்து சேர்ந்தவள், (அப்பிரானைக் கண்டதும் காதல் மீதூரத் தன்வசமிழந்தவளாகி),புலம்பு-(அவள் நிலைகுறித்து) வருந்திய, சேடியர் கை மிசை போயினள்-தோழிமார்களின் கைத்தாங்கலிலே(திரும்பிப்) போனாள்.

இராமபிரானைக் காணவரும்போது மகிழ்ச்சியால் அளகபாரம் அசையக் குதித்தோடி வந்தவள், கண்ட மாத்திரத்தில் அப்பெருமான் அவள் பார்வையினின்றும் அகன்றுவிடவே, விரகம் மிக்குப் பரவசமாகி மயங்கி, நிற்கவும் ஆற்றாதவளாயினமையின், தோழிமார் அவளைக் கைத்தாங்கலாக நடத்தியோ, தூக்கியோ சென்று மனையிற் சேர்த்தனர் என்றவாறு. சேடியர் புலம்புதல், தம் தலைவியின் நிலை

குறித்தேனும், தாம் இராமபிரானைக் காண முடியவில்லையே என்ற காரணத்தாலேனும் ஆகலாம். 'குளிர்ப்பொடு காண வந்தாள் கொதிப்பொடு கோயில் புக்காள்' (1155) என்பது ஈண்டு ஒப்பிடத் தகும். அலம்பு பாரம்-வண்டுகள் ஒலிக்கும் பூவின் சுமை என்றலும் ஆம்.

(பா - ம்.) 1. அலம்பு வார்குழல் சோரவொர்; வார்குழலாளங்கொர்; வார்ந்த குழலியோர்; வாசக் குழலியொர்; அராகக் குழலியோர்.
2. மேகலையும் மொலிசெய்திட; மேகலை பேரொளி செய்திட; பேரொலி மேகலை செய்திட. 4. கைம்மிசை. (21)

1161. அருப்பு மென்முலை யாளங்கொ ராயிழை
இருப்பு நெஞ்சினை யேனுமொ ரேழைக்காப்
பொருப்பு வில்லைப் பொடிசெய்த புண்ணியா
கருப்பு வில்லிறுத் தாட்கொண்டு காவென்றாள்.

அங்கு-அவ்விடத்து, அரும்பு மென் முலையாள் ஓர் ஆய் இழை-கோங்கரும்பு போலும் மென்மையான தனங்களையுடைய, ஆராய்ந் தெடுத்த அணிகலன்கள் பூண்ட ஒருபெண், (இராமபிரானைநோக்கி), ஓர் ஏழைக்கா(க)-ஒரு பெண்ணுக்காக, பொருப்பு வில்லை பொடி செய்த-மலை போன்ற வில்லை முறித்துத் தூளாக்கின, புண்ணியா-புண்ணிய மூர்த்தியே! இரும்பு நெஞ்சினையேனும்-(நீ எங்கள்பக்கல்) இரும்பு போன்ற(வலிய) நெஞ்சுடையவனானாலும்,(சற்றுமனமிரங்கி), கரும்பு வில் இறுத்து-(என்னைத் துன்புறுத்தும் மன்மதனுடைய) கரும்பு வில்லை முறித்து, (அவனைச் செயலற்றவனாக்கி), ஆள் கொண்டு கா-என்னை ஆண்டு கொண்டு (உயிரிழவாமல்) காப்பாற்று வாயாக! என்றாள்—.

இப்பெண், இராமபிரான் தனக்கு அருளாமையின், 'இரும்பு நெஞ்சுடையவன்' என்றாள்; ஆனாலும், முன்னே ஒரு பெண்ணுக்காக மிகவும் கடினமான சிவதனுசையே முறித்தவனுக்கு, இப்போது மன்மதனுடைய (மிகவும் அற்பமான) கரும்புவில்லை முறித்துத் தனக்கு உதவுவது ஒரு பொருளன்றாதலால், அவ்வாறு செய்தருள்க என வேண்டுகின்றாள். நீ புண்ணிய மூர்த்தியாதலால் ஏழை மகளிர் துன்பம் துடைப்பது உன் கடமை யென்கிறாள்.

பொருப்பு வில்-(மேரு) மலையாகிய வில் எனினும் ஆம். அரும்பு, இரும்பு, கரும்பு என்ற மென்றொடர்க்குற்றுகரவீற்று மொழிகள் புணர்ச்சி விதியால் வலித்தல் பெற்றன.

(பா - ம்.) 1 அரும்பு: மென்முலை யாங்கணோர்; மென்முலை யாரங்கொர்.
2. இரும்பு: நெஞ்சினையேயுமோர்; நெஞ்சினை யெனினுமோர்; நெஞ்சின ராயுமோர்: ஏழைக்காய்ப்.
3. புண்ணிய; புண்ணியர்: நீயினிக்.
4. வில்லிறக் கற்றில ரோவென்றாள். (22)

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

1162· மைத வழ்ந்த கருங்கணொர் வாணுதல்
செய்த வன்றனித் தேர்மிசைச் சேறல்விட்
டெய்த வந்தெதிர் நின்றமை தானிது
கைத வங்கொல் கனவுகொ லோவென்றாள்.

மை தவழ்ந்த-மைதீட்டப்பெற்ற, கருகண்-கருமையான கண்களையுடைய, ஓர் வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றியையுடைய ஒரு மங்கை, செய் தவன்-செய்து முடித்த தவத்தையுடைய இவ்விராமன், தனி தேர்மிசை சேறல்விட்டு-ஒப்பற்ற தேரிலே செல்லுதலைக் கைவிட்டு, எய்த வந்து-(என்னை) அணுகவந்து, எதிர் நின்றமை இது-என்னெதிரில் நிற்கும் இச்செயல், கைதவம் கொல்-மாயையோ! (அல்லது), கனவு ஓ!-கனவுதானோ! என்றாள்—.

இப்பெண், இராமபிரானைப் பற்றிய நினைவு முதிர்ச்சியால், அப்பிரான் தன் எதிர்வந்து நிற்பதுபோன்ற உருவெளித் தோற்றங் கண்டு, இது மாயையோ! அன்றிக் கனவோ என வியப்பும் ஐயமும் கொண்டு கூறினாள் என்க.

பிறர்க்கில்லாத பேரழகும் பேராற்றலும் முதலான சிறப்புக்களைப் பெறுதற்கு இவன் முன்பிறப்பில் தவம் செய்திருக்கவேண்டும் எனக்கருதிச் 'செய்தவன்' என்றாள். சீதையைப் பெறுதற்குத் தவஞ் செய்தவன் என்றும், என்னையிவ்வாறு மயக்கஞ் செய்தவன் என்றும் உரைத்தலும் பொருந்தும். செய்த தவத்தையுடையவன்=தவஞ் செய்தவன்; இது வடமொழிநடை. தான்: அசை. கனவுகொலோ என்றதில் 'கொல்' என்பதும் அசை. சேறல்; முதனிலை திரிந்து விகுதி பெற்ற தொழிற்பெயர்.

(பி - ம்.) 2. செய்தவந்தனித்; செய்யவன்றனித்; தேர்மிசை செல்லல்விட்.
3. வந்தெதிர் நின்றுமெய்தானிது; வந்து நின்றுலு மெய்தானிது; வந்தெதிர் நின்றமையாவிது; வந்து நிலறமையாவிது.
4. கனவுகொலாமென்றாள்; கனிவு கொலாமென்றார். (28)

1163. மாதொ ருத்தி மனத்தினை யல்லதோர்
தூது பெற்றில ளின்னுயிர் சோர்கின்றாள்
போத ரிக்கட் பொலங்குழைப் பூண்முலைச்
சீதை யெத்தவஞ் செய்தன ளோவென்றாள்.

மாது ஒருத்தி-ஒரு பெண், மனத்தினை அல்லது-(தன்) மனத்தையன்றி, ஓர் தூது பெற்றிலள்-(இராமபிரானிடம் அனுப்ப) வேறொரு தூதையும் பெறாதவளாய், இன் உயிர் சோர்கின்றாள்-தன் இனிய உயிர் நீங்குமளவு மெலிகின்றவள், போது அரி கண்-பூப் போலும் செவ்வரி படர்ந்த கண்களையும், பொலம் குழை-பொன்னாலியன்ற குண்டலங்களையும், பூண்முலை-அணிகலன்கள் பொருந்திய தனங்களையுமுடைய, சீதை-சீதையானவள், எ தவம் செய்தனளோ—

(இவனை நாயகனாகப் பெறுதற்கு) எத்தகைய தவம் செய்தாளோ! என்றாள்—.

அனைவர்க்கும் அரியவனான இந்த நம்பியைத் தலைவனாகப்பெறுதல் எளிதன்று; முன்செய்த தவப்பயனாகவே சீதை இப்பேறு பெற்றாள் என்று தன் எளிமை தோன்றக் கூறினாள் இம்மங்கையென்க. சீதா பிராட்டியைத் தனக்குரியவளாகப்பெற, இராமபிரான் தவஞ் செய்திருத்தல் வேண்டுமென முன்கவியில் 'செய்தவன்' என்பதனால் குறிப்பித்தார்; இங்கே பிராட்டியும் அப்பிரானைப் பெறுதற்குத் தவஞ் செய்தவளாதல் வேண்டும் என இருவரது அருமையும் புலப்படுத்தினார். இராமபிரானது பேரழகை யெப்போதும் காணவும், இன்சொற்களைக் கேட்கவும், தனங்களாரத் தழுவவும் பேறு பெற்றாள் சீதை என்ற குறிப்புத் தோன்ற, 'போதரிக்கட் பொலங்குழைப் பூண்முலைச் சீதை' எனச் சிறப்பித்தார் போலும்.

மனத்தைத் தூதனுப்புதல்: ஆரிருக்கிலுமென் நெஞ்சமல்லதொரு வஞ்சமற்றதுணையில்லென,ஆதரத்தினொடு தூதுவிட்டபிழை' (திருவரங்கக். 24).

(பி - ம்.) 1. மனத்துணையல்லது. 2. இன்றுயிர்.
3. போதரித்த: பொலன்குழைப். (24)

1164. பழுதி லாததொர் பாவையன் னாள்பதைத்
தழுது வெய்துயிர்த் தன்புடைத் தோழியைத்
தொழுது சோர்ந்தயர் வாளிந்தத் தோன்றலை
எழுத லாகுங்கொன் மன்மத னாலென்றாள்.

பழுது இலாதது ஓர் பாவை அன்னாள்-குற்றமில்லாத சித்திரப் பாவை போன்றவளான ஒருத்தி, (விஞ்சிய காதலால்), பதைத்து-மனந்துடித்து,அழுது—,வெய்து உயிர்த்து-வெம்மையாக மூச்சுவிட்டு, சோர்ந்து-(உடம்பு) சோர்வுற்று, அயர்வாள்-வருந்துகின்றவள்,அன்பு உடை(ய) தோழியை தொழுது-தன்னிடத்து மெய்யன்புள்ள உயிர்த் தோழியை வணங்கி, (அவளிடம்), இந்த தோன்றலை-இந்தப் புருஷோத்தமனை, மன்மதனால்-மன்மதனாலும், எழுதல் ஆகும் கொல்-(சித்திரத்தில்) எழுதுதல் கூடுமோ! என்றாள்—.

இந்நங்கை, இராமபிரானது திருமேனி அழகில் ஈடுபட்டு, இத்திருமேனி எவராலும் எழுதவொண்ணாதது என வியக்கின்றாள். தன்னை வணங்குதற்குரிய தோழியை இவள் வணங்கினமை ஆராமை மீதூர்தலால் என்க.

எழுதலாகுங்கொல் மன்மதனால் : 559-விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. பழுதிலாவொரு; பழுதிலாதொரு; பழுதிலாளொரு; பாவைபனுள்.
2. அமுதுயிர்த்துத்தன். 3. அயர்வாளொரு.
4. எழுதி லாகுங்கொல்; எழுதலாங்கொலோ; எழுதலாங்கொலம். (25)

1165. வண்ண வாயொரு வாணுதல் மானிடர்க்
கெண்ணுங் காலிவ் விலக்கண மெய்திட
ஒண்ணு மோவொன் றுணர்த்துகின் றேனிவன்
கண்ண னேயிது கண்டிடும் பின்னென்றாள்.

வண்ணம் வாய்-அழகிய வாயினையும், ஓர் வாள் நுதல்-ஒளி பொருந்திய நெற்றியையும் உடைய ஒரு பெண், (தன் அயலில் இருந்தவர்களைப் பார்த்து), எண்ணுங்கால்-ஆலோசிக்குமிடத்து, மானிடர்க்கு-மானிடரில் எவருக்கேனும், இவ் இலக்கணம்-இவ்விராமனிடத்துள்ள (தெய்விகமான) இலக்கணங்கள், எய்திட ஒண்ணுமோ-அமைந்திடக் கூடுமோ! (கூடாது); ஒன்று உணர்த்துகின்றேன்-நான் ஒன்று (உங்களுக்குத்) தெரிவிக்கின்றேன்; இவன் கண்ணனே-இவன், எல்லார்க்கும் கண்ணனான (அந்த) நாராயணனே; இது பின் கண்டிடும்-இவ்வுண்மையைப் பின்னே நீங்கள் காணுங்கள்; என்றாள் —.

பிற மாதர் எல்லோரினும் வேறுபட்டு, உயர்ந்த கருத்தமைந்த சொற்கள் இவள் வாயினின்று வந்தமையால், 'வண்ண வாய் ஒரு வாணுதல்' என இவள் வாயைச் சிறப்பித்தார்.

கண்ணன்: 1145-விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. வண்ண வார்குழல்; வண்ணவார்முலை; வண்ணவாள்பொரு; மாணிடற்கு; மானுடற்கு. 2 அவ்விலசகணம்; எய்திடல்.
3. ஒவ்வணுமோவிது; ஒண்ணுமோ வென்று; உணர்த்துவனிங்கிவன்; உணர்ந்துயிர்த் தோழிமீர்.
4. கண்ணனேயிவன்! கண்ணனுமிது; கண்டிரும்பின்; கண்டறிமின். (26)

1166. கனக நூபுரங் கைவளை யோடுக
மனநெ கும்படி வாடியொர் வாணுதல்
அனக னிந்நக ரெய்திய தாதியிற்
சனகன் செய்த தவப்பய னாமென்றாள்.

ஓர் வாள் நுதல்-ஒளியமைந்த நெற்றியுடைய ஒருத்தி, கனகம் நூபுரம்-(காலணியான) பொன் சிலம்புகளும், கை வளையோடு-கையிலணிந்த வளைகளும், உக-கழன்று சிந்த, மனம் நெகும்படி வாடி-(கண்டோர்) மனம் நெகிழும்படி மிகவும் துவண்டு, அனகன்-குற்றமற்றவனான இவ்விராமன், இ நகர் எய்தியது-இந்த நகரத்துக்கு வந்தது, சனகன் ஆதியில் செய்த தவம் பயன் ஆம்-நம் சனக மகாராசன் முன்னே செய்த தவத்தின் பயனாகும்; என்றாள்—.

சக்கரவர்த்திக் குமாரர்கள் மிதிலைக்கு முதலில் வந்தது சனகன் செய்த வேள்வியைக் காணுதல் என்ற வியாஜமேயாதலால், சனகன்

செய்த தவப்பயனுல் அநகன் அந்நகர் எய்தினன் என்றது பொருத்தமே யாகும். அநகன்; வடசொல்.

(பி - ம்.) 1. கைவளை யோடுதம்.
2. மவனெகும்படி; அகநெகும்படி; அனகனேகும்படியொரு.
3. ஆதலிச்; ஆதவின்; ஆதலால்; காதலில்.
4. சனகர் செய்த; சனக ரெய்து; சனகனேயத்: தவப்பயனுலென்ருள்; தவப்பயனே வென்ருள். (27)

1167. நனிவ ருந்தி நலங்குடி போயிடப்
பனிவ ருங்கணெர் பாசிழை யல்குலாள்
முனிவ ருங்குல மன்னரு மொய்ப்பறத்
தனிவ ருங்கொல் கனவின் றலையென்ருள்.

நலம் குடிபோயிட-(தன்) அழகு கெட்டுப்போகும்படி, நனி வருந்தி-(விரகத்தால்) மிகவும் வருத்தமுற்று, பனி வரும் கண்-நீர் வடியும் கண்களையும், ஓர் பசுமை இழை அல்குலாள்-பசும் பொன் அணிகள் பூண்ட அரைப்பக்கத்தையுமுடைய ஒருபெண், முனிவரும்-பல முனிவர்களும், குலம் மன்னரும்-கூட்டமான அரசர்களும், மொய்ப்பு அற-(தன்னைச் சுற்றி) நெருங்குதலின்றி, தனி-(தான் மட்டும்) தனியாக, கனவின் தலை-கனவிலாயிலும், வரும் கொல்-(இவ்விராமன்) வருதல் கூடுமோ ! என்ருள்—.

இப்புருஷோத்தமனைத் தனியே சந்தித்தால், சண்ணர அவன் அழகைப் பருகுதலும்; ஒருகால் தழுவுதலும் கைகூடலாம்; இவனே தனிமையுமின்றிப் பலர் சூழத் தேரில் விரைந்து செல்லுதலுமுடையான்; கனவிலாயினும் இவன் தனியே வருதல் கூடுமோ ! அதுவுங் கூடாது போலும்; எனக் கவலுகின்ருள் இப்பெண்மணி என்கிருர்.

குடிபோதல்-இடம்விட்டு நீங்கிப் போதல்; 1036-பார்க்க.

(பி - ம்.) 1. குடிபோய்விடப். 3. மொய்ப்புறத்; மொய்ம்பறத். (28)

1168. புனங்கொள் கார்மயில் போலுமொர் பொற்றொடி
மனங்கொள் காதன் மறைத்தலை யெண்ணினுள்
அனங்க னன்ன தறிந்தன னற்றந்தான்
மனங்கள் போல முகமு மறைக்குமோ ?

புனம் கொள்-மலைக் கொல்லைகளை இடமாகக்கொண்ட, கார் மயில் போலும்-மேகத்தைக் கண்ட மயில் போன்ற களிப்புடைய, ஓர் பொன் தொடி-பொன் வளையல்களணிந்த ஒரு மங்கை, மனம் கொள் காதல்-தன் மனத்தில் (இராமபிரான் மீது) கொண்ட ஆசையை, மறைத்தலை எண்ணினுள்-(வெளிப்படாது) மறைக்கக் கருதினுள்; (ஆயினும்), அனங்கன் அன்னது அறிந்தனன்-மன்மதன்

அதனை அறிந்துகொண்டான்; அற்றம்-இரகசியத்தை, மனங்கள் போல-மனம் (மறைப்பதைப்)போல, முகமும் மறைக்குமோ - முக மும் (வெளிப்படுத்தாமல்) மறைக்குமோ ? (மறைக்காது). தான் ஆசை.

இவள், நாணத்தால் தன் காதலை மறைக்கக் கருதினும், அது கூடாதாயிற்று; மன்மதனே மேன்மேலும் தன் கைவரிசையைக் காட்டுகின்றான்; அதனை முகம் காட்டிவிட்டது. முகத்தின் தன்மை, தன் தோற்றத்தால் மனத்திலுள்ளதை வெளிப்படுத்துதல்: 'உள்ளத் தினுள்ளதை யுரையின் முந்துற, மெள்ளத்தம் முகங்களே விளம்பும்' (யுத்த. 394); 'அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங், கடுத் தது காட்டும்முகம்','முகத்தின் முதுக்குறைந்ததுண்டோ வுவப்பினுங், காயினுந் தான்முந்துறும்' (குறள். 706, 707); 'முன்னம், முகம் போல முன்னுரைப்பதில்' (நான்மணி).

(பி - ம்) 1. போலியொர்; போலிய: போலுயர்; போல்வதோர்: பொற்கொடி வாணுதல். 2. மனங்கள் காதல்: மறத்தலே: ஏயினள்.
3. அவங்கவேளது: அறிந்திலன்; அறிகிலள்: அற்றத்தான்.
4. மறைக்குமே; மறையுமோ: மறையுமே. (29)

1169. இணைநெ டுங்கணொ ரேந்திழை யேந்துபூ
அணைய ணைந்திடி யுண்டவ ராவெனப்
புணர்ந லங்கிளர் கொங்கை புழுங்கிட
உணர்வ ழுங்க வுயிர்த்தன ளாவியே.

இணை-ஒன்றுக்கொன்று இணையான, நெடு கண்-நீண்ட கண் களையுடைய, ஓர் ஏந்து இழை-பல அணிகலன்கள் பூண்ட ஒரு பெண், ஏந்து பூ அணை அணைந்து-பூக்கள் பரப்பிய படுக்கையில் போய்ப் படுத்து, புணர்-ஒன்றோடொன்று நெருங்கிய, நலம் கிளர்-அழகுமிக்க, கொங்கை புழுங்கிட-தனங்கள் புழுங்கி வெயர்க்கவும், உணர்வு அழுங்க-அறிவு சோரவும், இடி உண்ட அரா என-இடியோசைகேட்ட பாம்பைப்போல, ஆவி உயிர்த்தனள்-பெருமூச்செறிந்தாள்.

இடியோசை பாம்பை மிகவும் நடுங்கி நிலைகுலையச் செய்யும்; அது போன்ற நிலையை இப்பெண்மணி அடைந்தாள். இராமபிரான் கண் பார்வைக்கும் எட்டாது சென்றுவிட்டமை அவள் இந்நிலை அடையக் காரணமாயிற்று. பாம்பு இடியோசைக்கு அஞ்சுதல் நூல் களுட் பயின்று வருவதாகும்; 'பையரா, இடியுறத் துவளுவதென்னு மின்னலன்' (அயோத். 560); 'கோளரா,இடிக்கிடைந்த தெனப்புரண் டேங்கினாள்' (ஆரணிய. 809); 'நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்குங், கடுவிசையுருமின் கழறுகுரல்' (குறுந். 158: 1-2); 'விரிநிற நாகம் விடருள தேனும், உருமின் கடுஞ்சினம் சேணின்று முட்கும்' (நாலடி. 164); 'இடியேறுண்ட நாகம்போல' (பெருங். 2. 10: 112)

'அருமை மாமணி நாக மழுங்கவோர், உருமு வீழ்ந்தென' (சீவக. 242).

(பி - ம்.) 1. நெடுங்கணோ ரிந்து முகத்திபூ; ஆயிழையேந்துபூ; நெடுங்கணி னிந்து முகத்திபூ.
2. அடைந் திடிகேட்ட; படிந் திடியுண்ட; புகுந்திடியுண்ட.
3. புணை நலம்.
4. அழுங்கி; அழிந்திட்டு; உருத்தனள்; உகுத்தனள்; ஆசையால். (30)

1170. ஆம்ப லொத்தமு தூறுசெவ் வாய்ச்சியர்
தாம்ப தைத்துயி ருட்டடு மாறுவார்
தேம்பு சிற்றிடைச் சீதையைப் போற்சிறி
தேம்ப லுற்றில ரெங்ஙன முய்வரோ.

ஆம்பல் ஒத்து-செவ்வல்லி மலரைப்போன்றதாய், அமுது ஊறு-இதழமுதம் சுரக்கின்ற, செவ் வாய்ச்சியர்-சிவந்த வாயினை யுடைய அப்பெண்கள், பதைத்து-உடல் துடித்து, உள் உயிர் தடுமாறுவார்-உள்ளிருக்கும் உயிரும் (போவதும் வருவதுமாக) நிலைதடுமாறலுற்றவர்கள், தேம்பு-(உடலின் பாரத்தால்) வருந்துகிற, சிறு இடை-நுணுகிய இடையை உடைய, சீதையை போல்-சீதாபிராட்டி (பெற்ற மகிழ்ச்சி) போல, சிறிது ஏம்பல் உற்றிலர்-சிறிதளவு மகிழ்ச்சியும் அடைந்தாரில்லை; எங்ஙனம் உய்வரோ-(இவர்கள்) எவ்வாறு பிழைத்திருப்பார்களோ! (பிழைத்தல் அரிதேயாகும்.) தாம்: அசை.

மிதிலை நகரத்துப் பெண்கள், தங்கள் அரசகுமாரியான சீதாபிராட்டி, இராமபிரானை மணாளனாகப் பெறுதலால் அடையும் மகிழ்ச்சி குறித்துத் தாமும் முதலில் மகிழ்ந்தனர்; ஆனால், இப்போது அவர்களில் ஒவ்வொருவரும் இராமபிரானை அடைய ஆவல்கொண்டு, அது கைகூடப் பெறாமையினால் பெருந்துயருற்றுத் தடுமாறுகின்றனர்; மகிழ்ச்சிக்கு இடம் சிறிதும் இல்லை; இவர்கள் உயிர் பிழைத்தலே அரிது போலும் என இரங்கிக் கூறுகின்றார் ஆசிரியர்.

(பி - ம்.) 1. ஆம்பலுற்று; ஆம்பல்போன்று. 2. உயிரிற்றடு மாறினர்.
3. சீதையைக் காணப்போது.
4. ஏம்பல் பெற்றிலர்; உற்றவர்; பெற்றிலம்; எங்ஙன முய்வரே; உய்குவார்; எங்ஙன் முயங்குவார். (31)

1171. வேர்த்து மேனி தளர்ந்துயிர் விம்மலோ
டார்த்தி யுற்ற மடந்தைய ராரையும்
தீர்த்த னித்தனை சிந்தையிற் செங்கணிற்
பார்த்தி லானுட் பரிவில னேயென்றாள்.

மேனி வேர்த்து-(தன் காரணமாக) உடம்பு வேர்த்து, உயிர் தளர்ந்து-உயிர் சோர்வுற்று, விம்மலோடு-ஏக்கத்துடன், ஆர்த்தி உற்ற-துயரம் மிக்க, மடந்தையர் ஆரையும்-(இங்குள்ள)பெண்களின்

எவரையும், தீர்த்தன்-பரிசுத்தனான இவ்விராமன், செம் கண்ணில்-தன் அழகிய கண்ணாலும், சிந்தையின்-மனத்தாலும், இத்தனை-ஒரு சிறிதளவுகூட, பார்த்திலான்-(இரங்கிப்) பார்க்கின்றானில்லை; உள்-(தன்) மனத்தில், பரிவு இலனோ-இரக்கம் என்பதே இல்லாதவனோ அவன், என்றாள்-என்று கூறினாள் ஒருத்தி.

'தன் பால் காதலுற்று வருந்தும் பெண்டிர் துயர்தீர்த்தல் ஆண்மகனுக்குரிய கடமையாயிருக்க, துயருறும் நம்மைக் கண்ணெடுத்தும் பாராத இவன் இரக்கமற்ற வன்னெஞ்சன்' என்று குறை கூறுகின்றாள் இப்பெண். இவ்வாறு ஒரு பெண்ணின் வாய்மொழியாகக் கூறுமுகத்தால், 'இந்த இப்பிறவிக்கிருமாதரைச் சிந்தையாலுந் தொடேன்' என்ற இராமபிரானுடைய மனவுறுதியைப் புலப்படுத்துகின்றார் ஆசிரியர். அதற்கேற்பத் 'தீர்த்தன்' என்ற சொல்லை அமைத்துள்ளார். எத்தனை மகளிர் சூழ்ந்து நெருங்கினும் தன் சித்தம் சிறிதும் கலங்காதவன் என்பது பெறப்பட்டது. மனத்திற்பார்த்தலாவது நினைத்தல்.

(பா'ம்.) 1. தளர்ந்தவள். 2. மடந்தையர் யாரையும்; மடந்தையொராயிழை
3. தீர்த்தனித்தனிச்; தீர்த்தனியாரையும்; தீர்த்தனெட்டனே; எட்டுணை; சிந்தையிற்; செங்கண்ணிற்.
4. பார்த்திலன்: பரிவிலனும்; பரிவிலவோ; பரிவிலனென்: என்றார்; என்பாள். (32)

1172. வையம் பற்றிய மங்கைய ரெண்ணிலார்
ஐயன் பொற்புக் களவிலை யாதலால்
எய்யும் பொற்சிலை மாரனு மென்செய்வான்
கையம் பற்றுடை வாளினுங் கைவைத்தான்.

வையம் பற்றிய மங்கையர்-(இராமபிரான் செல்லும்)தேரைக் குறிக்கொண்ட பெண்கள், எண் இலார்-அளவற்றவராவர்; ஐயன்-இராமபிரானுடைய, பொற்புக்கு-அழகுக்கும், அளவு இலை-ஓர் எல்லையில்லை; ஆதலால்—, எய்யும்-(அப்பெண்கள் மீது மலரம்புகளை) எய்கிற, பொன் சிலை-அழகிய (கரும்பு) வில்லையுடைய, மாரனும்-மன்மதனும், என் செய்வான்-(இடைவிடாமல் எய்வதற்கு) என்ன செய்வான்! கை அம்பு அற்று-கையிலிருந்த மலரம்புகளெல்லாம் தீர்ந்துபோக, உடைவாளினும் கைவைத்தான்-தனது உடைவாளான தாழம்பூவிலும் கைவைக்கத் தொடங்கினான்.

இராமபிரானை அடையக் கருதிக் காதலால் துன்புறும் மகளிரோ அளவற்றவர்; அவர்களெல்லோர் மீதும் விடாமல் எய்தற்குப் போதிய மலரம்புகள் இல்லாமலும், கை சளைத்தும், மன்மதன் வாளால் எறியத் தொடங்கினான் எனச் சாதுரியமாகக் கூறுகின்றார். வில் தொழிலால் முடியாததைக் கிட்ட வந்து வாள் தொழிலால்

முடித்தல் வீரர் இயல்பு; இம்முறையை மன்மதனும் கைக்கொள்ள லானுன் என்க. மன்மதனுக்கு, தாமரை, அசோகு, மா, மல்லிகை, நீலோற்பலம் ஆகிய ஐந்து பூக்கள் அம்பும், தாழம்பூ உடைவாளும் ஆகுமென்பர்.

வையம் என்பது ஆகுபெயராய் நகரத்தைக் குறித்ததெனக் கொண்டு, மிதிலை நகரத்தி லிருந்த மகளிர் எண்ணற்றவர்கள் என வுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. எண்ணிலர். 2. ஐயனன்புக்கு: அமைவிலை.
3. மாரனிங்கு; மன்மதன்; என்செய்வன்; என் செய்தான்.
4. வாளிலும். (83)

1173. நான வார்குழ ணரிய ரோடலால்
வேனல் வேளொடு மேலுறை வார்களோ
டான பூச லறிந்தில மம்புபோய்
வான நாடியர் மார்பினுந் தைத்தவே.

நானம் வார் குழல் நாரியரோடு அல்லால்-கத்தூரிச் சாந்து பூசிய நீண்ட கூந்தலையுடைய (மண்ணுலகத்துப்) பெண்களோடு மட்டு மன்றி, வேனல் வேளொடு-வசந்தகாலத்துக்குரியவனுகிய மன் மதனுக்கு, மேல் உறைவார்களோடு - மேலுலகத்தில் வசிக்கும் பெண்களோடு, ஆன - உண்டான, பூசல் - போரின் தன்மையை, அறிந்திலம்-(திட்டமாக) அறிந்திலோம்; அம்பு போய்-(அவனுடைய) அம்புகள் போய், வானம் நாடியர் மார்பினும்-தேவருலகத்துப் பெண் கள் மார்பிலும், தைத்த-பாய்ந்தன.

இராமபிரான் காரணமாக மன்மதன் தொடங்கிய போர், இவ் வுலகம் மட்டு மன்றி வானுலகத்தும் சென்றது என்றதனுல், தெய்வ மகளிரும் அங்கிருந்தபடியே இராமபிரானைக் கண்டு காதல் கொண் டனர் என்பதாயிற்று. இதனுல், அப்பிரானது திருமேனியின் பொலிவை மேலும் சிறப்பிக்கின்ருர்.

மார்பினும் என்றதில் உம்மை இறந்தது தழுவியதோடு உயர்வு சிறப்பும் ஆம். வேளொடு: வேற்றுமை மயக்கம்.

(பி - ம்.) 1. நாரியராடலால். 2 வேனில் வேளுயர்; வேனிலாரொடு.
4. மார்பிலும்: தைத்ததே. (84)

1174. மருண்ம யங்கு மடந்தையர் மாட்டொரு
பொருண யந்திலன் போகின்ற தேயிவன்
கருணை யென்பது கண்டறி யான்பெரும்
பருணி தன்கொல் படுகொலை யானென்ருள்.

இவன்-இந்த இராமன், மருள் மயங்கும் மடந்தையர் மாட்டு-(தன்னிடம் கொண்ட) மோகத்தால் மயங்கும் பெண்களிடம், ஒரு

பொருள் நயந்திலன்-யாதொரு பொருளையும் விரும்பாதவனாய், போகின்றதே-(இவ்வாறு அலட்சியமாகப்) போவது தகுதியாகுமோ? கருணை என்பது கண்டு அறியான் (கொல்)-கருணை என்ற குணத்தைப் (பிறரிடமேனும்) பார்த்தே அறியாதவனோ! (அல்லது), பருணிதன் கொல்-முதிர்ந்த தத்துவ ஞானியோ? (அல்லன்); படுகொலையான் – கொடுங்கொலைத் தன்மையுடையவனே; என்றாள்- என்று கொடுமை கூறினாள், ஒருபெண்.

எழுவாய் வருவிக்கப்பட்டது. 'கொல்' என்பது முன்னும் கூட்டி உரைக்கப்பட்டது.

பெண்கள் தங்கள் திரிகரணங்களாலும் இவன் வசப்பட்டுத் தவிக்கும்போது, அவர்களைச் சற்றும் பொருட்படுத்தாமல் செல்லும் இவன், பெண்களையே விரும்பாத பெரிய ஞானியோ எனில்,சீதையை மணக்க விரும்பி அதற்குரியன செய்து அவளை நாடிச் செல்வதனால், அத்தகைய ஞானியல்லன்; கடுநெஞ்சுடைய கொலைகாரனே என்கிறாள் இவள். பெண்களை வருத்துதல் பெரும் பாவமாதலின் 'படுகொலையான்' என்றாள்.

பருணிதன்: 660-விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. மருணயந்த.
4. பரிணதன்கொல்; பருணநன்கொல்: கொலையானென்றார்; கொலையானென்பார்; கொலைகாணென்றார்; கொலைகாணென்றாள்; கொலைதயனென்றார். (35)

1175. தொய்யில் வெய்ய முலைத்துணை யாலுற
லைநயு நொய்ய மருங்குலோர் நங்கைதன்
கையு மெய்யு முணர்ந்திலள் கண்டவர்
உய்யு முய்யு மெனத்தளர்ந் தோய்வுற்றாள்.

தொய்யில்-தொய்யில் எழுதப்பெற்ற, வெய்ய-வெப்பமுள்ள, முலை துணையால்-இரண்டு தனங்களால், (தனங்களின் பாரத்தால்), உற நையும்-மிகவும் வருந்துகின்ற, நொய்ய மருங்குல்-நுணுகிய இடையையுடைய, ஓர் நங்கை-ஒருபெண், தன் கையும்-தன் கை வளையல்கள் கழன்றதையும், மெய்யும்-உடல் அடைந்த நிலையையும், உணர்ந்திலள்-(சிறிதும்) உணராதவளாய், கண்டவர்-(அவளைப்) பார்த்தவர்கள், 'உய்யும் உய்யும்' என - பிழைப்பாள் பிழைப்பாள் என்று (ஒருவர்க்கொருவர்) சொல்லிக்கொள்ளும்படி, தளர்ந்து-மிகவும் தளர்ச்சியடைந்து, ஓய்வு உற்றாள்-செயலற்றவளானாள்.

விரகவேதனையால், இவள் பிழைப்பாளோ மாட்டாளோ என்று கண்டவர் ஐயுறவும், பிழைப்பாள் என்று சிலர் தேறுதல் சொல்லவுமான அவல நிலையடைந்தாள் ஒரு பெண் என்றவாறு.

தொய்யில்-மகளிர் தோள்களிலும் தனங்களிலும் சந்தனம் அல்லது குங்குமக் குழம்பால் கொடிபோல எழுதப்படும் அலங்காரம், செய்ய-விரும்பத்தக்க; கை-ஒழுக்கம்; அதாவது அப்போது தான் நடந்துகொள்ள வேண்டிய முறை என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. தொய்யல்; முலைத் துடிபோலிட; துடிபோலிடை.
2. நைய நொய்தின்: வருந்தின: வருந்தியோர்; கருங்குழல்: நங்கை தான் 3. அறிந்திலள்; அறிந்திலர்; உணர்ந்தில; கண்டவள்.
4. உய்யு முய்யா ளெனத்: ஒய்கின்ருள்; ஒய்கின்ருர். (36)

1176. பூக வூசல் புரிபவர் போலொரு
பாகு போன்மொழி யாண்மலர்ப் பாதங்கள்
சேகு சேர்தரச் சேவகன் றேரின்பின்
ஏகு மீளுமி தென்செய்த வாறரோ.

ஒரு பாகுபோல் மொழியாள்-வெல்லப்பாகுபோல் இனிய பேச்சுடைய ஒரு பெண், பூகம் ஊசல் புரிபவர்போல்-பாக்கு மரத்தில் பூட்டிய ஊஞ்சலில் ஆடுபவர்போல, மலர் பாதங்கள் சேகு சேர்தர-தாமரைப்பூப்போலும் (தன்) பாதங்கள் காய்ப்பேற,சேவகன்தேரின் பின்-ரகுவீரனுன இராமன் தேரின் பின்னே, ஏகும்-(பலகால்) செல்வாள்; மீளும்-(அவ்வாறே) திரும்பி வருவாள்; இது செய்த ஆறு என்-இவ்வாறு (அவள்) செய்தது என்னவோ! அரோ: அசை.

ஊஞ்சலில் இருந்து ஆடுவோர் முன்னும் பின்னுமாகப் போய் வருதலின், இவள் செயலுக்கு அதனை ஒப்புக் கூறினுர். மனம் ஒரு நிலைப்படாத தன்மையையும் ஊசலாடுதல் என்றல் மரபு. இவள் இராமபிரானை நெருங்கி அடைந்துவிடலாம் என எழும் ஆவலால் தூண்டப்பட்டுப் போவதும், இடையே தோன்றும் நாணமும், பிறர் பழிப்பரே யென்ற அச்சமும் காரணமாகத் திரும்புவதுமாய்ப் பல முறை செய்துகொண்டிருந்தமையின், 'பாதங்கள் சேகு சேர்தர' என்ருர். இவள் செய்கை பிறர் நகைத்தற்குரியதே யென்பார், 'இது என் செய்தவாறு' எனப் பழிப்புத் தோன்றக் கூறினுர். தோப்புக்களில் பாக்கு மரங்களிலே பெரும்பாலும் ஊஞ்சல் கட்டப்படுதலின் 'பூக ஊசல்' என்ருர்.

(பி - ம்.) 1. புரிபவள்; பயில்பவர்.
2. பாகின் மென்மொழி; பாகு மென்மொழி; நன்மொழி; தன்மலர்ப்; பனிமலர்ப்; மென்மலர்ப்: பாவைதான்.
3. சேகுதோய்தரச்; சோர்தரச்; சேகதாகச்செய்: தேரின்முன்; தேரினேடு
4. மீளுமீது; மீளுமின்: என்செய்தவாகொலோ; என்சொலுமாறரோ. (37)

1177. பெருத்த காதலிற் பேதுறு மாதரில்
ஒருத்தி மற்றங் கொருத்தியை நோக்கியென்
கருத்து மவ்வழிக் கண்டதுண் டோவென்ருள்
அருத்தி யுற்றபி ணுணமுண் டாகுமோ.

பெருத்த காதலின்-(இராமபிரானிடத்துக் கொண்ட) மிக்க ஆசையால், பேதுறும் மாதரில் ஒருத்தி-மதிமயக்கமுற்றிருந்த பெண்களுள்ளே ஒருத்தி, அங்கு-அவ்விடத்து, மற்று ஒருத்தியை நோக்கி-(இராமபிரானைக் கண்ணுற் கண்டு திரும்பிவந்த) மற்ருெரு பெண்ணைப் பார்த்து, என் கருத்தும்-என் மனத்தையும், அவ்வழி-அவ்விடத்தில் (தேரினருகில்), கண்டது உண்டோ-நீ பார்த்ததுண்டோ ? என்ருள்-என்று வினவினுள்; அருத்தி உற்றபின்-(ஒரு பொருளினிடத்து) ஆசை உண்டான பிறகு, நாணம் உண்டு ஆகுமோ-நாணம் அங்கே இருப்பதுண்டோ ?

ஒரு பொருளினிடத்து மிக்க ஆசைகொண்டவர்கள், அது கிடைக்குமா-கிடைக்காதா ? என்பதையும், அதுபற்றிக் கேட்கத் தக்கார்-தகாதார் இன்னுர் என்பதையும் ஆலோசிக்காமலும், கேட்பது பிறர் நகைப்பதற்கிடமாகுமேயென்று பாராமலும் சொல்லிலும் செயலிலும் நாணத்தைக் கைவிடுவர். அவ்வகையில் இவள் 'என் மனத்தை அங்கே கண்டதுண்டோ' என்று மற்ருெருத்தியைக் கேட்டாள் என்க. 'ஆசை வெட்கமறியாது' என்பது பழமொழி; இதன் கருத்தான பொதுப் பொருளை, இப்பெண்ணின் செய்கையான சிறப்புப் பொருளால் சமர்த்தித்தலின் இது வேற்றுப் பொருள் வைப்பணியாகும்.

(பி - ம்.) 1. பெய்துறு: பெய்வுறு: பேருமம் மாதரின்; பேதுறு மாதலால்.
2. நோக்கித்தன். 3. அவ்வழி: இவ்வழி.
4. நாணு முண்டாகுமோ: நாணு முண்டாங்கொலோ. (38)

1178. நங்கை யங்கொரு பொன்னயந் தாருயத்
தங்க ளின்னுயி ருங்கொடுத் தார்தமர்
எங்க ளின்னுயி ரெங்களுக் கீகிலா
வெங்க ணெங்ஙன் விளைந்த திவற்கென்ருள்.

அங்கு ஒரு பொன் நங்கை-அவ்விடத்து, இலக்குமி போன்றவளாகிய பெண்ணொருத்தி, தமர்-இவ்விராமன் குலத்து முன்னோர், நயந்தார் உ(ய்)ய-தம்மை விரும்பி வந்தடைந்தவர் பிழைக்குமாறு, தங்கள் இன் உயிரும் கொடுத்தார்-தங்களுடைய இனிய உயிரைக் கொடுத்தும் காத்தார்கள்; (அவ்வாருக), எங்கள் இன் உயிர்-(பெண்களாகிய) எங்களுக்குரிய இனிய உயிரையே, எங்களுக்கு ஈகிலா(த)-எங்களுக்குக் கொடுக்காத, வெம்கண்-கொடுந்தன்மை, இவற்கு-இவ்விராமனுக்கு, எங்ஙன் விளைந்தது - எவ்வாறு உண்டாயிற்று ? என்ருள்—.

சிபிச்சக்கரவத்தி, ஒருபுருவுக்காகத் தன்னுயிரையே கொடுத்த செய்தியை யுட்கொண்டு, 'இராமன் குலத்து முன்னோர், தம் உயிரைக் கொடுத்தேனும், தம்மையடைந்தவரைக் காத்தனர்; இவனோ,

நம்முயிரையே நம்மிடத்தினின்றும் பறித்துக்கொள்வான் போலும்; இத்தகைய கொடுந்தன்மை இவனுக்கு எங்கிருந்து வந்தது?' என்கின்றாள்.

இன்னுயிரும் என்றதில் உம்மை உயர்வு சிறப்பு.

(பி - ம்.) 1. நயந்தா ருய்யத்; நயந்தோருயத்: நயந்தா ளுய்யத்; அடைந்தா ருய்யத்; பெண்ணயந்தா ளுய்யத். 2. கொடுத்தாரொமர்.
3. எங்களுண்ணுயிர்: ஈகலா: ஈகிலார்.
4. எங்கண்; எங்கன்; எங்கு: இவர்க்கு. (39)

1179. நாமத் தாலழி வாளொரு நன்னுதல்
சேமத் தார்வில் லிறுத்தது தேருங்கால்
தூமத் தார்குழற் றூமொழித் தோகைபால்
காமத் தாலன்று கல்வியி னாலென்றாள்.

நாமத்தால் அழிவாள்-(இராமபிரானது) திருநாமத்தைச் சொல்லிக்கொண்டே மனம் தடுமாறுகின்றவளான, ஒரு நல் நுதல்-அழகிய நெற்றியுடைய ஒருபெண், சேமத்து ஆர் வில்-(நம்அரசனது) பாதுகாப்பிலே பொருந்திய வில்லை, இறுத்தது-(இவ்விராமன் முறித்த செய்கையை, தேரும் கால்-ஆலோசிக்குமிடத்து, (அது), தூமத்து ஆர் குழல்-(அகில்) புகை யூட்டப்பெற்ற கூந்தலையும், தூ மொழி-தூய பேச்சுக்களையும் உடைய, தோகைபால்-மயில் போன்ற (நம்) சீதையிடத்து, காமத்தால் அன்று-ஆசையினால் அன்று; கல்வியினால்-(தன்) தனுர்வேதத் திறமையைக் காட்டும் நோக்கத்தாலே யாம்; என்றாள்—.

'இவ்வளவு பெண்களில் ஒருத்தியையேனும் கண்ணெடுத்தும் பாராமல் பராமுகமாகச் செல்லும் இவனுக்குப் பெண்ணாசை என்பதே இல்லை; இவன் வில்லை முறித்ததுகூட, தன் வில் திறமையைக் காட்டுதற்கே யன்றி, சீதையிடத்து ஆசைகொண்டு அவளை மணக்க வேண்டுமென்ற கருத்தோடன்று போலும்' என்கின்றாள்.

தூமத்து: அத்துச் சாரியை.

(பி - ம்.) 1. நாமத்தாள்: அறிவாளொரு; அழியாளொரு.
2. சேமத்தால் வில்; சேமத்தான் வில்; சேமத்தாம் வில்: தேறுங்கால்; சேருங்கால்.
3. தூமத் தாழ்குழல்: தூமொழிக் கோதைபால்: தூய்மொழித் தோகைபால்: தோகையார். 4. கல்வியினு லென்றார். (40)

1180. ஆர முந்துகி லுங்கல னியாவையும்
சோர வின்னுயிர் சோரவொர் சோர்குழல்
கோர வில்லிமுன் னேயெனைக் கொல்கின்றான்
மார வேளின் வலியவர் யாரென்றாள்.

ஓர் சோர் குழல்-அவிழ்ந்து குலையும் கூந்தலையுடைய ஒருத்தி, ஆரமும்-(தான் அணிந்த)முத்து, மணி மாலைகளும், துகிலும்-ஆடையும், கலன் யாவையும்-(பிற) அணிகலன்கள் எல்லாமும், சோர-(உடம்பினின்றும்) நழுவ, இன் உயிர் சோர-இனிய உயிரும் நழுவ, (கூட்டத்தில் நின்று), கோர வில்லி முன்னே-அச்சந்தரும் வில்லையுடைய இவனெதிரிலே, எனை கொல்கின்றான்-என்னைத் தன் அம்புகளால் வருத்துகின்றவனான, மாரவேளின்-மன்மதனைப்போல, வலியவர் யார்-வலிமையுள்ளவர் வேறு யாருளர்! என்றாள்—

பெண்களிடத்து ஆசையே யில்லாத வன்னெஞ்சனுக்கெதிரில் ஆசையைத் தூண்டி என்னை வருத்தும் மன்மதனைப்போல, வலியவர் யாருளர் என்கின்றாள். பயனில்லாத விடத்திலே தன் திறமையைக் காட்டுகின்றவன் என்ற இகழ்ச்சிக் குறிப்பு. 'கோர வில்லி' என்றது நயமில்லாதவன் என்ற குறிப்பு. மாரவேள்-மரண வேதனையைத் தரும் மன்மதன். மாரகம்-கொல்லுதல்.

(பி - ம்.) 1. கலனவவும்; கலையாயவும்; கலையாய்வனா.
2. சோருமொர் சோர்குழல்
3. முலையெனைக்; முன்னே யென்னைக்; முன்னே யெமைக்; முனென்றனைக்: கொல்கின்ற.
4. வேளில்; வலியவர் யாவரே; வலியவர்யாவரோ: வலியவராவரோ; வலியவராரென்றாள்; வலியரியா ரென்றாள். (41)

1181. மாத ரின்னண மெய்த்திட வள்ளல்போய்க்
கோதில் சிந்தை வசிட்டனுங் கோசிக
வேத பாரனு மேவிய மண்டபம்
ஏதின் மன்னர் குழாத்தொடு மெய்தினன்.

மாதர் - (காண வந்து கூடிய) பெண்கள், இன்னணம்-இவ்வாறாக. (முன்னே சொல்லியபடி பலவகையில்), எய்த்திட-(தன்னைக் குறித்து) வருந்த, வள்ளல்-வண்மைக் குணமுள்ள இராமபிரான், ஏதில் மன்னர் குழாத்தொடும்-(தன்னைச் சூழ்ந்து வந்த) அயல்நாட்டு அரசர் பலரோடும், போய்-தேரில் சென்று, கோது இல் சிந்தை வசிட்டனும்-குற்றமற்ற (தூய) மனமுடைய வசிட்டமுனிவனும், கோசிகன் வேதபாரனும்-வேதம் கரை கண்ட கௌசிக முனிவனும், மேவிய-அமர்ந்திருந்த, மண்டபம்- (திருமணத்துக்குரிய) மண்டபத்தை, எய்தினன்-அடைந்தான்.

மாதர் எய்த்திட, வள்ளல், மன்னர் குழாத்தொடும் போய் மண்டபம் எய்தினன் என முடிக்க.

(பி - ம்.) 1. இன்னன; இவ்வணம்: எய்திட; மொய்த்திட. 3. வேதபாரகன்.
4. ஏதி மன்னர்; ஏதின் மாதர்: குழாத்திடை: எய்தினர்; ஏறினன்; ஏதினர்; மேவினன். (42)

1182. திருவி னாயகன் மின்றிரிந் தாலெனத்
துருவின் மாமணி யாரந் துயல்வரப்
பருவ மேகம் படிவது போற்படிந்
திருவர் தாளு முறையி னிறைஞ்சினான்.

திருவின் நாயகன்-இலக்குமியின் கேள்வனான இராமபிரான், துரு இல் மா மணி ஆரம்-(மார்பில் அணிந்த) குற்றமில்லாத சிறந்த இரத்தினங்களால் ஆன மாலைகள், மின் திரிந்தால் என-மின்னல் அசைந்து உலாவினாற்போல, துயல் வர-(ஒளிவிட்டு) அசைய, பருவ மேகம்-கார்காலத்து மேகம், படிவது போல்-(தரையில்) தாழ்ந்து படிவதுபோல, படிந்து-(அட்டாங்கமாகக்) கீழே விழுந்து, இருவர் தாளும்-(வசிட்டன் கௌசிகன் என்ற) இருவருடைய பாதங்களையும், முறையின் இறைஞ்சினான்-முறைப்படி நமஸ்கரித்தான்.

மண்டபம் வந்து சேர்ந்தவுடன் இராமபிரான், முதலில் குல குருவாகிய வசிட்டரையும், அடுத்து அஸ்திர சஸ்திர வித்தைகளை யளித்த விசுவாமித்திரரையும் வணங்கினான் என்க. முறையின் என்றது இம்முறையைக் குறிக்கும். முந்தின கவியில் இவர்களைக் குறித்தவிடத்தும் இம்முறை காண்க.

துருவு இன் மாமணி எனப்பிரித்து, தேர்ந்தெடுத்த இனிய சிறந்த மணிகளாலான என்றலும் ஆம். பருவமேகம்-கருமேகம்; இராமபிரான் திருமேனிக்கு உவமை. திருவின் நாயகன்: இராம பிரானைக் கம்பர் குறிக்கும் முறைப்படி குறித்ததாகும்; 'திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென' (331) என்பதும் அதன் விசேடக்குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. மின்றிரிந்தா லென்னத்: மன்றிருந்தா லெனத்.
2. துருவு; துருசில்: ஆரத். 3. படிந்ததுபோல்.
4. இறைஞ்சினர். (43)

1183. இறைஞ்ச வன்னவ ரேத்தின ரேவவோர்
நிறைஞ்ச பூந்தவி சேறி நிழல்கள்போல்
புறஞ்செய் தம்பிய ருட்பொலிந் தானரோ
அறஞ்செய் காவற் கயோத்தியுட் டோன்றினான்.

அறம் செய் காவல் கு-(உலகத்தில்) தருமத்தைப் பாதுகாத்தற் பொருட்டு, அயோத்தி உள் தோன்றினான்-அயோத்திநகரிலே வந்து அவதரித்த இராமபிரான், இறைஞ்ச-(முன் சொல்லியபடி) இருவரையும் வணங்க, அன்னவர்-அவர்கள் இருவரும், ஏத்தினர்-ஆசீர் வதித்தவர்களாய், ஏவ-கட்டளையிட, ஓர் நிறைஞ்ச பூ தவிசு ஏறி-அலங்கரித்தல் மிக்க, அழகியதோர் ஆதனத்தில் அமர்ந்து, நிழல்கள் போல்-(தன்னுடைய) நிழலைப்போல, புறம்செய்-(தொடர்ந்திருந்து)

காவல் புரிகின்ற, தம்பியர் உள்-தம்பிமாரின் நடுவிலே, பொலிந் தான்-சிறந்து விளங்கினான்.

சாஷ்டாங்க நமஸ்காரம் செய்த இராமபிரானை முனிவர் இரு வரும் எடுத்து ஆசிர்வதித்து, அழகியதோர் ஆதனத்தைச் சுட்டி அதில் அமரும்படி பணிக்க, அவ்வாறே அதில் தம்பிமார் மூவரும் பக் கங்களில் அமர்ந்திருக்க வீற்றிருந்தான் என்க. தம்பிமாருள் ஒவ் வொருவரும் நிழல்போல இராமபிரானைத் தொடர்ந்து வருதலின் 'நிழல்கள் போல்' எனப் பன்மையாற் கூறினார். இறுதியடியால் இராமபிரானது அவதார நோக்கத்தைக் குறிப்பித்தார். அறங்காவ லுக்கே அவதரித்த திருவின் நாயகனானலும், தான் கொண்ட மானிட வடிவுக்கேற்பப் பெரியோரைப் பணிதலும் அவர் சொற் படி நடத்தலுமாகிய கடமையைத் தவறாது செய்தமையை இவ் விரண்டு பாட்டாலும் கூறினார்,

நிறைஞ்ச=நிறைந்த; போலி. புறஞ் செய்தல்-புறத்தே ஏவற் றொழில் செய்தல் என்றலும் ஆம். அறம் செய்-அறத்துக்குச் செய்கிற.

நிழல் போலத் தொடர்தல்: 335-பார்க்க. ஈற்றடி-ஒப்பு: மூவர்க்குந் தலைவராய மூர்த்தியார் அறத்தை முற்றுங், காவற்குப் புகுந்து நின்றார் காகுத்த வேடங் காட்டி' (யுத்த. 1354.)

(பி - ம்.) 1. இறைஞ்சி: மன்னவர்: எய்தினர்: ஏவலும்.
2. நிறைந்த; நிறஞ்செய். 3. தம்பியரோடும் பொலிந்தனன்.
4. காவற்கயோத்தியில்; காவலயோத்தியில்; காவலயோத்தியுள். (44)

1184. ஆன மாமணி மண்டப மன்னது
தானை மன்னன் றமரொடுஞ் சார்ந்தனன்
மீனெ லாந்தன பின்வர வெண்மதி
வானி லாவுற வந்தது மானவே.

வெண் மதி-வெண்மையான சந்திரன், மீன் எலாம் தன பின் வர-நட்சத்திரங்களெல்லாம் தன் பின்னே வர, வான் நிலா உற வந்தது மான-ஆகாயம் விளங்கும்படி (தோன்றி) வந்தது போல, தானை மன்னன்-சேனைப்பெருக்கையுடைய தசரத மன்னன், தம ரொடும்-தம்மவரான அரசர் முதலிய பலருடனும், ஆன-முன் கூறிய தான, மா மணி மண்டபம் அன்னது-சிறந்த மணிகளால் அலங் கரிக்கப்பெற்ற அம்மண்டபத்தில், சார்ந்தனன்-(வந்து) சேர்ந்தான்.

முன் கூறியவாறு இராமபிரான் முதலியோர் வீற்றிருந்த அம் மண்டபத்தில், தசரத மன்னன் தன்னைச் சார்ந்த அரசர் பலருடனும் வந்து சேர்ந்தான் என்றவாறு.

மாமணி மண்டபம் அன்னது-திருமாமணி மண்டபம் போன்ற தாகிய அம்மண்டபத்தில் என்றலும் ஆம். திருமாமணி மண்டபம்

என்பது திருவைகுந்தத்திலே எம்பெருமான் கொலுவீற்றிருந்தருளும் மண்டபத்தின் பெயர். தசரத மன்னனுக்குச் சந்திரனும், மன்னனைப் பின்தொடர்ந்து வந்த மற்ற அரசர் முதலியோர்க்கு விண்மீனும், மண்டபத்துக்கு வானமும் உவமைகளாகக் கொள்க. 'வெண்மதி வான் நிலாவுற வந்ததுமான' என்றதனால், தசரத மன்னனுடைய வருகையால் அம்மண்டபமும் பொலிவுற்றதென்க.

தன : அகரம் சாரியை.

மீனெலாம் வர வெண்மதி வருதல் : 'பன்மீ னடுவட் பான்மதி போல, இருந்தோன்' (சிறுபாண். 219-20); 'பன்மீனடுவுட்டிங்கள் போலவும், பூத்த சுற்றமொடு பொலிந்தினிது விளங்கி' (மதுரைக். 769-70); 'பன்மீ னுப்பட் டிங்கள் போலப், பூத்த சுற்றமொடு பொலிந்து தோன்றலை' (பதிற். 90: 17-8.); 'பன்மீ னுப்பட் டிங்கள் போலவும்' (புறநா. 63); 'பூண்மின்னு மார்பன் பொலிந்தாங்கிருந் தான் விசும்பிற், கோண்மின்னு மீன்சூழ் குளிர்மாமதித் தோற்ற மொத்தே' (சீவக. 882).

(பி - ம்.) 1. அன்னதில்.
2. தான மன்னன் றமரொடு; மன்னர் தமரொடும்; மன்னவனும் வந்து; வேந்தன் றமரொடும்; சேர்ந்தனன்.
3. மீனெலாம்வரப்; மீனெலாமதின்; அதன்: பின்வரு; பின்வரும்; மீனெ லாம்வர மின்னொளி; மின்னொளிர்; விண்வரும்; விண்ணினில்; விண் ணொளிர்; மாமதி; மாமணி.
4. வானுலாவுற: மானுமே; போலுமே; போலவே; போன்றதே. (45)

1185. வந்து மாதவர் பாதம் வணங்கிமேல்
சிந்து தேமலர் மாரி சிறந்திட
அந்த ணாளர்க ளாசியொ டாசனம்
இந்தி ரன்முக காணுற வேறினான்.

வந்து-(தசரத சக்கரவர்த்தி (அம்மண்டபத்தினுள்) வந்து, மாதவர் பாதம் வணங்கி-பெருந்தவசியரான வசிட்டர், விசுவாமித் திரர் முதலியோருடைய பாதங்களில் நமஸ்கரித்து, மேல் சிந்து-தன் மேல் (பலரும்)தூவுகிற, தேம் மலர் மாரி-தேன் பொருந்திய பூமழை, சிறந்திட-மிக, அந்தணாளர்கள் ஆசியொடு-வேதியர் கூறும் ஆசீர் வாதங்களுடன், இந்திரன் முகம் நாணுற-இந்திரனும் (கண்டு) முகங் கவிழும்படி, ஆசனம் ஏறினான்-(தனக்கென்று அமைக்கப்பெற்ற சிறந்த) ஆசனத்தில் வீற்றிருந்தான்.

தசரத சக்கரவர்த்தி மிக்க வைபவத்துடன் திருமண மண்ட பத்தினுள் வந்தபோது, அனைவரும் மகிழ்ந்து பூக்களை மழைபோலச் சொரிந்தனர்; வேதியர் வேதமந்திரங்களால் ஆசி கூறினர்; சக்கர

வர்த்தி இவ்வாறு வந்து தனக்குரிய ஆசனத்தில் அமர்ந்தபோது, அவன் பெருமிதத் தோற்றம் கண்டு இந்திரனும் நாணும்படியிருந்தது என்க.

சக்கரவர்த்தியை இந்திரனாகவும், இந்திரனோடு ஒப்பிட்டும் பல விடத்துங் கூறுவர் கம்பர்; *317, 886, 1278*-பார்க்க.

(பி - ம்.) 2. பூமலர்: மாரியிற் சிந்திட; ஆசி சிறந்திட; ஆசி சொரிந்திட.
3. அந்தணாளர்கொடு: ஆசனத்து.
4. இந்திரன் முதல்; இந்திராதியர். (46)

### மண்டபத்து வந்து கூடிய மன்னர்கள்

1186. கங்கர் கொங்கர் கலிங்கர் தெலுங்கர்கள்
சிங்க ளாதிபர் சேரலர் தென்னவர்
அங்க ராசர் குலிங்க ரவந்திகர்
வங்கர் மாளவர் சோளர் மராடரே.

கங்கர்-கங்க தேசத்தரசரும், கொங்கர்-கொங்க தேசத்தரசரும், கலிங்கர்-கலிங்க தேசத்தரசரும், தெலுங்கர்கள்-தெலுங்கு நாட்டரசரும், சிங்கள அதிபர்-சிங்களத்தரசரும், சேரலர்-சேர அரசரும், தென்னவர்-பாண்டியரும், அங்க ராசர்-அங்க நாட்டரசரும், குலிங்கர்-குலிங்க நாட்டவரும், அவந்திகர்-அவந்தி நாட்டவரும், வங்கர்-வங்க தேசத்தவரும், மாளவர்-மாளவ தேசத்தவரும், சோளர்-சோள தேசத்தாரும், மராடர்-மராட தேசத்தவரும், ஏ, ஈற்றசை.

இது முதல் மூன்று பாடல்களால், மண மண்டபத்தில் வந்து கூடிய பற்பல நாட்டு மன்னரையுங் கூறுகின்றார். இவை மூன்றும், 'துன்னினர்' (1188) என்ற ஒரு முடிபு கொள்ளும். மன்னர்களைப் பெரும்பாலும் விசேடணமின்றிக் கூறுகின்றார்.

(பி - ம்.) 1. வங்கர் கொங்கர்; கலிங்கர் குலிங்கர்கள்.
2. சிங்களாதியர்; சிங்கராதியர்: கோசலர் தென்னவர்; தென்னவர் கன்னடர்.
3. அங்கர் சீனர்; அங்கநாடர்; அங்கர்தென்னர்; வங்கர்சீனர்: குலிந்தரவந்தியர்; குலிங்கர்களவந்திகர்; கவுடரவந்திகர்; கலிங்கரவந்திகர்; கலிந்தரவந்திகர்; தெலுங்கரவந்திகர்; புலிங்கரவந்திகர்.
4. அங்கர் மாளுவர்: சோழர்; சோழ; சோனர்; மராடரும்; விராடரே. (47)

1187. மான மாகதர் மச்சர் மிலேச்சர்கள்
ஏனை வீர விலாடர் விதர்ப்பர்கள்
சீனர் சேகுணர் சிந்தியர் சோமகர்
சோன கேசர் துருக்கர் குருக்களே.

மானம்-பெருமை தங்கிய, மாகதர்-மகத தேசத்தவரும், மச்சர்-மச்ச தேசத்தவரும், மிலேச்சர்கள்-மிலேச்சர்களும், ஏனை-மற்றும், வீர இலாடர்-வீரம் மிக்க இலாட தேசத்தவரும், விதர்ப்பர்கள்-விதர்ப்ப தேசத்தவரும், சீனர்-சீனரும், சேகுணர்-சேகுணரும். சிந்தியர்-சிந்து நாட்டவரும், சோமகர்-சோமகரும், சோனக ஈசர்-சோனக நாட்டதிபரும், துருக்கர்-துருக்கரும், குருக்கள்-குரு நாட்டவரும்; ஏ, ஈற்றசை.

இதுவும் அடுத்த பாட்டில் உள்ள 'துன்னினர்' என்பதனோடேயே முடியும்.

சோமகர்-பாஞ்சால தேசத்தவர் என்பர். குருக்கள்-குரு நாட்டவர். அத்தினபுரத்தைத் தலைநகராகக் கொண்டது குருநாடு. துருக்கர்: 902-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. மானமாசகர்; மான வைதர்ப்பர்; மச்ச; மாச்சர்; மைச்சர்; மிலேச்சரோடு; மிலேச்சர்கள்.

2. ஆனவீரர்; மானவீரர்: விலாடர்; இராடர்; அரட்டர்; இரட்டர்; குச்சர ராச்சையர்: விராடர்கள்: விலாடர்கள்; மராடர்கள்; மராட்டர்கள்; கராடர்கள்; சாவகர்.

3. சேனர் செங்குனர்; சினதெங்கணர்; செங்குனர்: செங்கணர்; சேகுனர்; சிந்துகர்: சிங்குனர்; வெங்குணர்; செஞ்சகர்: சிஞ்சையர்; சிஞ்சியர்; சிந்தினர்; சிந்துகர்; தெலுங்கர்: சேமகர்; சேயகர்; சேகரர்; சேரர்கள்; விசாலையர்; தெறுஞ்சினச்.

4. சோனர் சேகர்; சோனர்கொல்லர்; சோனர் கேசர்; சோனர்சோமர்; கோனர்கோளர்; கோனர் சோழர்; குருக்கரும்; குருக்கரே; துளுவரே. (48)

சிலபிரதிகளில் இப்பாடல் இல்லை.

1188. ஏதி யாதவ ரேழ்திறற் கொங்கணர்
சேதி ராசர்க ளுட்படச் சேண்விளங்
காதி வானங் கவித்த வவனிவாழ்
சோதி நீண்முடி மன்னருந் துன்னினர்.

ஏதி யாதவர்-ஆயுதங்களில் வல்ல யாதவர்களும், ஏழ் திறல் கொங்கணர்-ஏழு பிரிவாக உள்ள, வலிமை மிக்க கொங்கண தேசத்தவரும், சேதிராசர்கள் உள்பட-சேதி நாட்டரசர்களும் சேர, சேண் விளங்கு-நெடுந்தூரம் விளங்குகின்ற, ஆதி-(ஐம்பூதங்களில்) முதன்மையான, வானம் கவித்த-ஆகாயம் (மேலே) கவிந்துள்ள, அவனி வாழ்-இவ்வுலகத்தில் வாழ்கிற, சோதி நீள் முடி மன்னரும்-ஒளிமிக்க வழி வழி வந்த முடி தாங்கிய (பற்பல) அரசர்களும், துன்னினர்-வந்து கூடினர்கள்.

'துன்னினர்' என்பது, 1186-88 ஆகிய மூன்று பாட்டுக்கும் உரிய முடிபாகும்.

பாண்டிய நாடு ஐந்து பிரிவாகவும், கலிங்க நாடு ஏழு பிரிவாக வும் ஒவ்வொரு காலத்தில் இருந்து முறையே ஐந்து அரசராலும் ஏழு அரசராலும் ஆளப்பட்ட செய்திகள் நூல்களால் அறியக் கிடக்கின் றன; 'மீனவர் ஐவர்' எனவும், 'ஏழ் கலிங்கர்' எனவும் கலிங்கத்துப் பரணி கூறும். இவைபோல, கொங்கணமும் ஒருகாலத்தில் ஏழு பிரிவுடையதாக இருந்தது போலும். 'கொங்கணமேழும் நீங்கி' (கிட்கிந்தா. 898) என்பர் பின்னும். வானங் கவித்த அவனி: 'வான் கவிந்த, வையக மெல்லாம்' (நாலடி. 80).

(பி - ம்.) 1. ஏதியாதிப ரேழ்வகைக்; ஏதியாதவ ரேழ்வகைக்; ஏதியாதவரேமுதற்; ஏதியாதவரேழவர்.

2. சேதிராசரும்; சேதிபாரகர்; சேதுராசர்; சேதிராசர் தெலுங்கர் கருநடர்; தெலுங்கர்களுட்பட; திசாதிபரே முதல்.

3. கவித்தங்கு; கவிந்த; கவித்த.

4. நீள்குடை: மன்னருந் தோன்றினர். (49)

## வெண்சாமரை

1189. தீங்க ரும்பினுந் தித்திக்கு மின்சொலார்
தாங்கு சாமரை மாடு தயங்குவ
ஓங்கி யோங்கி வளர்ந்துயர் கீர்த்தியின்
பூங்கொ ழுந்து பொலிவன போன்றவே.

தீம் கரும்பினும் தித்திக்கும் இன் சொல்லார்-இனிமை மிக்க கரும்பினும் மேலாகத் தித்திக்கிற இனிய சொற்களையுடைய பெண் கள், தாங்கு-ஏந்தியுள்ள, சாமரை-வெண் சாமரங்கள், மாடு தயங் குவ-இருபுறங்களிலும் (அழகாக) விளங்குவன, ஓங்கி ஓங்கி வளர்ந்து- நாளுக்கு நாள் மேலோங்கி வளர்ந்து, உயர்-(மிகவும்) உயர்ந்துள்ள; கீர்த்தியின் பூ கொழுந்து-(சக்கரவர்த்திக்குரிய) கீர்த்தியின் அழகிய (வெண்மையான) கொழுந்துகள், பொலிவன போன்ற-(யாவருங் காண) விளங்குவன போன்றிருந்தன.

சக்கரவர்த்தியின் இருபுறத்தும் பெண்கள் நின்று வெண்சாம ரம் வீசினமை இதனால் கூறப்பட்டது.

புகழ் வெண்ணிறமுடைய தென்பர்; வெண் சாமரையின் நுனிப்பாகங்கள் செடியிலிருந்து கொழுந்துவிட்டது போன்ற தோற் றமுடையனவாதலால், 'கீர்த்தியின் கொழுந்து பொலிவன போன்ற' என்றார். ஓங்கி யோங்கி என்ற அடுக்கின் மேலும் வளர்ந்து உயர் என்றது சக்கரவர்த்தியின் புகழ்ச் சிறப்பை விளக்குவதாகும்.

கீர்த்தியின் கொழுந்து: கொழுந்தோடிப் படர் கீர்த்தி' (238)

(பி - ம்.) 1. திங்கரும்பினில்: மென்சொலார்.
2. தாங்குஞ்சாமரையோடு: தயங்குற; தயங்கிட.
3. சீர்த்தியின்.
4. பொடிப்பன; படர்வன; போன்றதே; போலவே. (50)

மங்கையர் பல்லாண்டு

1190. சுழலும் வண்டு மிஞிறுஞ் சுரும்புஞ்சூழ்ந்
துழலுந் தும்பியும் பம்பற லோதியர்
குழலி னேடுறக் கூறுபல் லாண்டொலி
மழலை யாழிசை யோடு மலிந்தவே.

சுழலும்-வட்டமிடுகிற, வண்டும், மிஞிறும், சுரும்பும்-இம் மூவகை வண்டினங்களும், சூழ்ந்து உழலும்-(நறுமணத்தினுல் இடைவிடாது) சுற்றித் திரியும், தும்பியும்-கருவண்டுகளும், பம்பு-நெருங்கியுள்ள, அறல் ஓதியர்-கருமணல் போன்ற கூந்தலையுடைய பெண்கள், குழலினேடு உற-குழலிசையோடு பொருந்த, கூறு-பாடுகிற, பல்லாண்டு ஒலி-பல்லாண்டுப் பாடல்களின் (இனிய) ஓசை, மழலை யாழ் இசையோடும்-இனிய வீணை யிசையுடன் கூடி, மலிந்த-(மண்டபமெங்கும்) நிறைந்தன.

குழல், யாழ் முதலிய இன்னிசைக் கருவிகள் ஒலிக்க, பெண்களின் பல்லாண்டு வாழ்த்தொலி நிறைய, மண்டபமெங்கும் மகிழ்ச்சி ததும்பிய தென்றபடி.

வண்டின் சாதிகள்: 876-விசேடக் குறிப்புப் பார்க்க. பெண்கள் பல்லாண்டு பாடுதல் 237-விசேடக் குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. ஞிமிறும்; சுரும்பு சூழ்ந்து; மிஞிறுஞ்சூழ்ந்து.
2. பம்புறலோதியார்: பம்பலர்; அம்மலர்; ஓதியைங்; உழலும் வாசமது மலரோதியார்.
3. குழலினூமுறக்; குழலினூறுறக்; குழலினேசையிற்: கோதில் பல்லாண்டிசை.
4. யாழிசை யோட; மலிந்ததே; மலர்ந்ததே; மலேந்தவே. (51)

வெண்கொற்றக் குடை

1191. வெங்க ணானையன் ஞன்றனி வெண்குடை
திங்க டங்கள் குலக்கொடி சீதையாம்
மங்கை மாமணங் காணிய வந்தருள்
பொங்கி யோங்கித் தழைப்பது போன்றதே.

வெம்கண்-(சினத்தால்) சிவந்த கண்களையுடைய, ஆனை அன்னன்-ஆண் யானை போன்ற தசரத சக்கரவர்த்தியின், தனி வெண் குடை-ஒப்பற்ற வெண்கொற்றக் குடையானது, திங்கள்-சந்திரன், தங்கள் குலம் கொடி—தங்கள் குலத்தின் படர்கொடியான, சீதை

ஆம் மங்கை-சிதை என்கிற பெண்ணின், மா மணம்-சிறந்த திருமணத்தை, காணிய வந்து-காணும்பொருட்டு (அங்கு) வந்து, அருள் பொங்கி ஓங்கி-(அங்குள்ளோரிடமெல்லாம்) கருணைமிகப் பொங்கி, தழைப்பது போன்றது-குளிர்ச்சியைப் பரப்புவது போலக் காணப் பட்டது.

சக்கரவர்த்தியின் வெண்கொற்றக்குடை நிழற்றுதலைச் சந்திரன் சிதை திருமணங் காண நேரில் வந்து குளிர்ச்சி தருவது போன்றுளதென்றது தற்குறிப்பேற்றம்.

சீதாபிராட்டி சந்திரகுலமென்பது : 1109, 1216. 'பிராட்டியின் பேரெழில் காணச் சூரியன் வந்தது போன்றது விதானம்' என மேலே (1219) கூறுவதும் நோக்கத்தக்கது.

(பி - ம்.) 1. வெங்கை: ஆனையினுன்றனி; யானையினுன்றவி; யானையனுன்றனி; யானையன்னுன்றனி; வெண்குடைத்.
2. திங்களன்ன: குலக்கொடிச் சிதையாள்.
3. மங்கையாண்மணங்: மங்கை தன்மணங்: வந்தன.
4. பொங்கிப் பொங்கித்; பொங்கித் தோன்றித்: பொங்கு போதில்: வொங்கு சோதி; பொங்க வோங்கித்; தழைப்பன; தழைத்தன: போன்றவே. (52)

சக்கரவர்த்தியின் சேனைப் பெருக்கம்

1192. ஊடு பேர்வி டமின்றியொன் றும்வகை
நீடு மாகடற் றானைநெ ருங்கலால்
ஆடன் மாகளி யானைச் சனகர்கோன்
நாடெ லாமொரு நன்னக ராயதே.

ஊடு-நடுவிலே, பேர்வு இடம் இன்றி-அடிபெயர்த்து வைத்துப் போதற்கு இடமில்லாமல், நீடு மா கடல் தானை-கடல் போலப்பரந்த மிகப்பெரிய (தசரதனுடைய) சேனையானது, ஒன்று ஆம் வகை-ஒரே தன்மையாக, நெருங்கலால்-மிக நெருங்கியிருந்ததனுல், ஆடல்மா-வெற்றியமைந்த குதிரைப்படைகளையும், களி யானை-மதக்களிப்புள்ள யானைப் படைகளையுமுடைய, சனகர்கோன்-சனகராசனுடைய, நாடு எலாம்-நாடு முழுதும், ஒரு நல்நகர் ஆயது-ஒரே நல்ல நகரம் போலாயிற்று.

சக்கரவர்த்தியின் சேனைப்பரப்பு, சனகனுடைய விதேக நாடு முழுதும், சிறிதும் இடைவெளியின்றிப் பரந்திருந்ததென அதன் மிகுதி கூற வந்தவர், 'பரந்த நாடு முழுதும் ஒரு நகரம் போலச் சுருங்கிக் காட்டிற்று' என நயம்படக் கூறுகின்ருர்.

நாடெலாமொரு நன்னகராயது': ஒப்பு: 175-ம், அதன் விசேடக்குறிப்பும் பார்க்க.

(பி - ம்.) 1. பேர்விடமன்றி: ஒன்ருகவே; ஒன்ருகிய; ஒன்ருரியன்.
2. நீடுமாக்கடற்சேனை நெருக்கலால்.
3. மாமதயானைச்; மாமதவானைச்; மாக்களியானைச்: சனகர்தம்; சனகன்றன்.
4. ஆனதே; போன்றதே. (53)

சனக மன்னன் உபசரித்த முறை

1193. ஒழிந்த தென்னினி யொண்ணுத ருதைதன்
பொழிந்த காத ருெடரப் பொருளெலாம்
அழிந்து வந்துகொண் டாடலி னன்புதான்
இழிந்து ளார்க்கு மிராமற்கு மொத்ததே.

ஒள் நுதல் தாதை-ஒளி பொருந்திய நெற்றியுடைய சீதாபிராட்டியின் தந்தையான சனக மன்னன், தன் பொழிந்த காதல் தொடர-தனது மேலிட்டுப் பொங்கிய ஆசை (இடையீடின்றிப்) பெருக, பொருள் எல்லாம் அழிந்து-தன் செல்வம்முழுதும் சொரிந்து, உவந்து-மகிழ்ந்து, கொண்டாடலின்-(வந்தவர்களை) உபசரிக்கும் முறையில், அன்பு-அவனுடைய அன்பு, இழிந்து உளார்க்கும்-தாழ்ந்த நிலையில் உள்ளவரிடத்தும், இராமன் கு உம்-(மணமகனுன) இராமனிடத்தும், ஒத்தது-ஒரு படித்தாயிருந்தது; இனி-இதன் மேலும், ஒழிந்தது என்-சொல்லுதற்கு என்னவுள்ளது ?

சனக மகாராசன், இராமபிரானை மருமகனுகப் பெற்ற பெரு மகிழ்ச்சியால், திருமணத்திற்கு வந்தோரனைவரையும் உர்யவுதாழ்வு கருதாது, மிகச் சிறப்பாக உபசரித்தான் என்றவாறு. இனி, பின் இரண்டடிகளுக்கு, சனகன் யாவரையும் வேறுபாடின்றி உபசரித்த வகையால், இராமபிரான் முதல் ஏவலர் இறுதியாகவுள்ள அனைவர்க்கும் அவனிடத்து ஒரேவகையாக அன்புதோன்றிற்று என்றலும் ஆம்

அழிந்து-சொரிந்து; 'அழியு மது மாலையார்' (சீவக. 2575-ந). 'அழிய' என்ற செயவெனெச்சத் திரிபாகக்கொண்டு கூறலும் பொருந்தும்.

(பி - ம்.) 1. ஒழிந்த வென்னினி; ஒண்ணுதற்ருதைதன்; ஒண்ணுதற்ருதை தான்.
2. காத ருெடர்ந்த; காதற்ருெடரப்; காதறுரப்பப்.
3. உவந்தினிதாடலின்; ஆடலின்: செய்து கொண்டாடலின்; செய்கை கொண்டடினர்; சிந்தைகொண்டாடலின்; கொண்டுடனுடலின்; மன்றல் கொண்டாடலின்: அன்புதாம்.
4. இழந்துளார்க்கும். (54)

உலாவியற் படலம் முற்றும்



## 20. கோலங்காண் படலம்

கோலங்காண் படலம்: கோலங்காணுதலை (அழகு செய்தலை)க் கூறும் படலம் என விரியும். பிராட்டியை அழைத்து வருமாறு வசிட்ட முனிவர் கூற, மங்கையர் பலர் கூடிப் பிராட்டியை நன்கு அலங்கரித்து மண்டபத்திற் கொண்டுவருதலும், சக்கரவர்த்தி முதலியோர் பிராட்டியின் பேரெழில் முதலியன கண்டு பெரிதும் மகிழ்ந்து பாராட்டியபின், திருமணம் மறுநாள் என நிச்சயம் செய்துகொண்டு அனைவரும் அம்மண்டபம் விட்டு நீங்கி அவரவரிருப்பிடமடைதலும் அப்போது சூரியன் அத்தமித்தலுமாகிய செய்திகள் இப்படலத்துட் கூறப்படுவன.

பிராட்டியைத் தருவிக்கும்படி வசிட்ட முனிவர் கூறல்

1194. தேவியர் மருங்கு சூழ
விந்திர னிருக்கை சேர்ந்த
ஓவிய முயிர்பெற் றென்ன
வுவந்தவை யிருந்த காலைத்
தாவில்வெண் கவிகைச் செங்கோற்
சனகனை யினிது நோக்கி
மாவிய னோக்கி னாளைக்
கொணர்கென வசிட்டன் சொன்னான்.

இந்திரன் இருக்கை சேர்ந்த-இந்திரன் கொலுவீற்றிருக்கும் சுதன்மை யென்னும் மண்டபத்திலே அமைக்கப்பெற்ற, ஓவியம்-சித்திரப்பதுமைகள், உயிர் பெற்ற என்ன-உயிர்பெற்று (அங்கு) வந்துள்ளன என்னும்படி, உவந்த அவை-அனைவரும் மகிழ்தற்குரிய அம்மண்டபத்தில், தேவியர் மருங்கு சூழ-தன் தேவிமார்கள் பக்கத்திலே சூழ்ந்திருக்க, இருந்த காலை-(சக்கரவர்த்தி)வீற்றிருந்தபோது, வசிட்டன்-வசிட்ட முனிவன்,தா இல்-குற்றமில்லாத, வெண் கவிகை-வெண்கொற்றக் குடையையும், செங்கோல்-செங்கோலையும் உடைய, சனகனை-சனக மகாராசனை, இனிது நோக்கி-இனிதாகப் பார்த்து, மா இயல் நோக்கினாளை-திருமகள் போன்ற அழகும் குணங்களுமுடைய சீதையை, கொணர்க என சொன்னான்-இங்கே வருவிக்க என்று சொன்னான்.

திருமண நிச்சயத்தை முறைப்படி செய்தற் பொருட்டுச் சீதையை மண்டபத்திற்குத் தருவிக்குமாறு வசிட்டமுனிவர் கூறினார்.

ஓவியம் உயிர்பெற்றென்ன என்பதனைத் தேவியர்க்கு விசேடணமாக்கலும் பொருந்தும். மா இயல் நோக்கினள்-மாவடுவின் பிளப்புப் போன்ற கண்களையுடையவள்; மான்போன்ற பார்வையுடையவள்; மா வியன் நோக்கினள்-மிகப்பெரிய கண்களுடையவள் எனப் பலவாறு பொருள் கூறலாம். தா-குற்றம்; கிட்கிந்தா. *343*. நோக்கு-அழகு: 'நோயிகந்து நோக்கு விளங்க' (மதுரைக். *13*).

(பி - ம்.) 1. தேவியர் யாருஞ்சூழ; தேவர்கள் மருங்குசூழ: இருக்கை செய்த: இருக்கையேய்ந்த; இருக்குஞ் செவ்வி.
2. பெற்றன்ன: உவந்தாசு; உவந்தனன்; உவந்தனர்; உவந்தினிது: இருக்குங்காலைத்; வேலை.
4. மாவிய னேக்கினளைக், (1)

சனகன் கட்டளை

1195. உரைசெயத் தொழுத கைய
னுவந்தவுள் ளத்தன் பெண்ணுக்
கரைசியைத் தருதி ரீண்டென்
றாயிழை யவரை யேவக்
கரைசெயற் கரிய காதல்
கடாவிடக் கடிது சென்றார்
பிரைசமொத் தினிய சொல்லார்
பேதைதா தியரிற் சொன்னார்.

உரைசெய-வசிட்ட முனிவன் (மேற்கண்டவாறு) கூறலும், (சனக மன்னன்), தொழுத கையன்-(முனிவனை) அஞ்சலி செய்த கையுடனும், உவந்த உள்ளத்தன்-மகிழ்ச்சி மிக்க மனத்துடனும், ஆய் இழையவரை-ஆராய்ந்தெடுத்த ஆபரணங்களையணிந்த (சில) பெண்களைநோக்கி, பெண்ணுக்கு அரைசியை-பெண்களுக்கு அரசியான சீதையை, ஈண்டு தருதிர் என்று ஏவ-இங்கே அழைத்து வாருங்கள் என்று கட்டளையிட, பிரைசம் ஒத்து இனிய சொல்லார்-தேன் போன்று இனிய சொற்களையுடைய அப்பெண்கள், கரைசெயற்கு அரிய காதல் கடாவிட-அளவிடவியலாத ஆசை (தம்மைத்) தூண்ட, கடிது சென்றார்-விரைந்து சென்று, பேதை தாதியரில் சொன்னார்-பிராட்டியின் செவிலித் தாயரிடத்து (அரசன் கட்டளையைச்) சொன்னார்கள்.

வசிட்டர் சொல்லைச் சனகன் முறைப்படி பணிவுடன் ஏற்றமை தோன்றத் 'தொழுத கையன்' என்றார். கடாவுதல்-செலுத்துதல். பேதை என்றது இங்கே 'பெண்' என்ற அளவில் நின்றது. தாதியரில்-தாதியரிடத்து. அரைசி, பிரைசம்: அகர ஐகாரப் போலி.

கரைசெயற்கரிய காதல் : *315*-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. உரைசெய்யத்; கையன்னுவந்த.
2. அரசியைத் தருதி யீண்டென்று: தருகவென்றோர்; ஆயிழையாளை தருதி ரீண்டென் றருமிழையவரை.
3. கரை செயலரிய: கடிதுசென்றப்.
4. பிரசபொத் நிவிய சொல்லாள்: தாதியர்க்குச் சொன்னுள்; தாதியரிற் சொல்லுள். (2)

பிராட்டியை அலங்கரிக்கத் தொடங்குதல்

1196. அமிழிமைத் துணைகள் கண்ணுக்
கணியென வமைக்கு மாபோல்
உமிழ்சுடர்க் கலன்க ணங்கை
யுருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச் சுவைசெய் தென்ன
வழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞால
மேழைமை யுடைத்து மாதோ.

அமிழ்-(பார்த்தற்குரிய விழிகளை) மூடிமறைக்கிற,துணை இமைகள்-இரண்டு இமைகளை, கண்ணுக்கு அணி என-கண்ணுக்கு அழகு தருவனவென்று, அமைக்கும் ஆ(று) போல்-(படைப்பில்) அமைத் திருத்தல் போல, உமிழ் சுடர் கலன்கள்-ஒளிவிடும் பல அணிகலன் கள், நங்கை உருவினை-பிராட்டியின் (இயற்கையான) வடிவழகை, மறைப்பது ஓரார்-மறைப்பதை உணராதவர்களாய், (தாதியர்), அமிழ்தினை சுவை செய்(த)து என்ன-தேவாமிர்தத்துக்கு மேலும் சுவையூட்டும் (பயனற்ற) முயற்சிபோல, அழகினுக்கு அழகு செய்தார்-அழகே வடிவுகொண்ட பிராட்டிக்கு (அணிகலன்களால்) அழகு செய்யலானார்கள்; இமிழ்திரை பரவை ஞாலம்-ஒலிக்கும் அலைகளையுடைய கடல் சூழ்ந்த இவ்வுலகம், ஏழைமை உடைத்து-அறியாமையுடையது. மாது, ஓ: அசைகள்.

ஞாலம்: ஆகுபெயர்; ஞாலம் என்றதற்கேற்ப 'உடைத்து' என அஃறிணையொருமை முடிபுகொண்டது. அமிர்தத்துக்குச் செயற்கையாகச் சுவையூட்டுவதென்பது அறியாமையே; அதுபோலப் பிராட்டிக்கு அணிகலன்களால் அழகு செய்தலும் அறியாமையேயாகும். 'பூணுக் கழகளிக்கும் பொற்றொடி' எனத் தமயந்தியைச் சிறப்பித்தார் புகழேந்தியார்.

கலன்கள் நங்கையுருவினை மறைத்தல் : ஒப்பு: ஆரணிய. 243; 'கோலங்கொள்ளும், ஆடகப்பைம்பூ ணருவிலை யழிப்பச், செய்யாக் கோலமொடு வந்தீர்க்கு' (சிலப். 16: 9-11); 'சித்திரித் தியற்றிய, அணிகல மணிவோ ரணியிலோரே; மறுப்பருங் காட்சி யிவள்போன் மாண்டதம், உறுப்பேயணிகலமாகவுடையோர், பொறுத்தல் மற்றுச்

சில பொருந்தாது' (பெருங். 4. 17: 76-80.); 'ஆனபே ரணிகட் கெல்லா மணியென வணிந்த செல்வி' (பாகவத. 1847). 'அழகினுக் கழகு செய்தல்: ஒப்பு: இப்பாவை தோன்றலால், அழகெனு மவையுமோரழகு பெற்றவே' (589.); 'இமிழ்திரைப் பரவைஞாலம்' அயோத். 254.

(பி - ம்.) 1. தமிழிமைத் துணைகள்; தமிழிமைத்தணைய: அணியொத்தே வைகுமா போல்; அழகினைத்தகைக்குமாபோல்; அணியினைத்தகைக்கு மாபோல்; அணியெனத் தயங்குமாபோல்; காக்குமாபோல்; வைக்குமாபோல்; தழைக்கு மாபோல்.
2. கலங்கள்: எழிலினை: மறைப்பத் தேரார்.
3. சுவை செய்தன்ன.
4. அமிழ்திரைப்; உமிழ்திரைப்; இமிழ்சுடர்ப்: ஞாலத்தேழைமை யுடைத்து மன்னோ, (3)

கூந்தலில் மாலை சூட்டுதல்

1197. கண்ணன்றன் னிறந்த னுள்ளக்
கருத்தினை நிறைத்து மீதிட்
டுண்ணின்றுங் கொடிக ளோடி
யுலகெங்கும் பரந்த தன்ன
வண்ணஞ்செய் கூந்தற் பார
வலயத்து மழையிற் றோன்றும்
விண்ணின்ற மதியின் மென்பூஞ்
சிகழிகைக் கோதை வேய்ந்தார்.

கண்ணன் தன் நிறம்-இராமபிரானுடைய (திருமேனி) நிறம், தன் உள்ளம் கருத்தினை நிறைத்து-பிராட்டியின் மனக்கருத்து முழுவதையும் நிரப்பி, உள் நின்றும் மீது இட்டு-(இடம் போதாமல்) உள்ளத்தினின்றும் வெளிப்பட்டு, கொடிகள் ஓடி-(மெல்லிய) கொடிகளாக ஓடி, உலகு எங்கும் பரந்தது அன்ன-உலக முழுவதும் பரவினாற் போன்ற, வண்ணம் செய்-நிறமும் அழகும் கொண்ட, கூந்தல் பாரம் வலயத்து-அளக பாரத்தின் பின்னல் சுற்றிலே, மழையில் தோன்றும்-மேகத்தினிடத்தில் தோன்றுகிற, விள் நின்ற மதியின்-(கிரணங்கள்) விரிய நின்ற சந்திரனைப்போலக் (காணுமாறு), மென் பூ சிகழிகை கோதை-மெல்லிய பூக்களாலாகிய சிகழிகை யென்னும் தலைமாலையை, வேய்ந்தார்-(சில பெண்கள்) சூட்டினார்கள்.

இது முதல் பதினொரு பாடல்களால் பிராட்டியின் கேசாதி பாத அலங்காரத்தைக் கூறுகின்றார்.

பிராட்டி இராமபிரானது திருமேனியைப்பற்றி இடைவிடாது நினைக்கும் நினைவு மிகுதியினால், அத்திருமேனி நிறம், அவள் மனத்தளவு மட்டுமன்றிப் பெண்களின் கூந்தல் வடிவமாக வெளியே

எங்கும் பரவி, அவள் கண்ணுக்கு விருந்தளிக்கின்றது; அவ்வகையில் அவள் கூந்தல் மேலுஞ் சிறந்து காணப்படுகின்றதென்க. அளக பாரம், மேகம்; அதனிடத்தே சூட்டிய பூமாலை, மேகத்தில் தோன்றும் சந்திரன்.

கண்ணன்: 'யாவர்க்குங் கண்ணனென்றே, ஓதிய பெயர்க்குத் தானே யுறுபொரு ளுணர்த்திவிட்டான் (1145) என்பதும் அதன் விசேடக் குறிப்பும் பார்க்க. சிகழிகை: 1265, 1287.

பி - ம்.) 1. கண்ணின்ற: நிறந்தான்: நிறத்தின்: நிறைந்து மீட்டும்: கண்ணன் றன்னிறவித்தொன்றைக் கருத்தினிற் புதைக்க மங்கை.
2. உண்ணின்று; உண்ணின்ற: உண்ணன்றுங்கோடிக்கோடி: படர்ந்த தென்ன; பரந்தவென்ன; உண்ணின்றுங் கொடிகளாகி யுதித்தெங்கும் படர்தற்கொத்த.
3. பாரமலையத்து: மழையுட்டோன்றும்
4. மென்பூச் சிகழிகைச்; மேலுஞ் சிகழிகை; சிகழிகை கோதை. (4)

சுட்டியும் பிற தலைக்கோலமும் அணிதல்

1198. விதியது வகையால் வான மீனினம் பிறையை வந்து
கதுவுறு கின்ற தென்னக் கொழுந்தொளி கஞலத் தூக்கி
மதியினை நக்க மேக மருங்குநா வளைப்ப தென்னப்
பொதியிரு ளளக பந்தி பூட்டிய பூட்டி விட்டார்.

விதி அது வகையால்-(கூடுதற்குரிய) ஊழின் முறையால், வானம் மீன் இனம் வந்து-ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்கள் (சில) கூடி வந்து, பிறையை கதுவுறுகின்றது என்ன-பிறைச் சந்திரனைப் பற்றுதல் போலக் காணும்படி, கொழுந்து-சுட்டி என்னும் அணியை, ஒளி கஞல-ஒளி சிறக்க, தூக்கி-(நெற்றியிலே) தொங்கவிட்டு, மேகம்-மேகமானது, மதியினை நக்க-சந்திரனை நக்கும் பொருட்டு, மருங்கு-அதன் மேற்புறத்தில், நாவளைப்பது என்ன-நாக்கை (நீட்டி) வளைப்பதுபோல (த்தோற்றும் வண்ணம்), இருள் பொதி-இருள் மிக்க, அளகம் பந்தி-முன் மயிர்ப் பத்தியிலே, பூட்டிய-பூட்டுவதற்குரியவற்றையும், பூட்டிவிட்டார்-அணிவித்தார்கள்.

ஆபரணங்கள் அணிவித்தலை 'நகை பூட்டுதல்' என்றல் மரபு. கொழுந்து என்றது ஆகுபெயராய்ச் சுட்டியைக் குறித்தது. சுட்டி, மணிகளாலும் முத்தாலும் இயன்றதாதலின், அதனை 'விண் மீன் கூட்டம்' என்றார். நெற்றி-பிறை; விண்மீன்கள் கூட்டமாக வந்து பிறையைப் பற்றுதல் என்றது இல்பொருள்; அடுத்து, மேகம் நா நீட்டி வளைத்து மதியினை நக்க வருதல் என்பதும் அது. மேகம்=கூந்தல்; அக்கூந்தலைச் சுற்றி நெற்றியிலும் பக்கங்களிலும் வரும்படி அணியப் படுவது பட்டம் என்னும் தலைக்கோலம்; இதனை மேகத்தின் நா என்றார். முகமாகிய சந்திரனுக்கு மேற்பாகத்தில் இஃது அணியப்

படுதலின் மேகம் தாவை நீட்டி மதியினை நக்க வருதல் போன்றது என்றார்.

பி - ம்.) 1. வகையால் வானின்; வகையவான; மீனுறப்பிறையை;மீதுறுபிறையை; மின்னினம் பிறையின்; மீனிளம் பிறையே; மீனினம் பிறையின்மீது.
2. கதுவிடுகின்றது; கதுவுறக்கனன்றது; கதிருறுகின்றது: கொழுந் தொளிர்; கொழுந்தணி; கொழுந்தளிர்; கனலொளி; கனுலொளி; கதிரணி; கதிர்மணி: கஞ்சந்தூக்கி; கனுலத்தூக்கு; கதுவத் தூக்கி.
3. மதியினைத்தந்த; மதியினை வளைந்த; மதியிளங் கதிர்கள்; இதமதி நக்கமேகம்: மருங்குநா வளைப்பவென்னப்; மருங்கு நாளுறைப்ப வென்னப்; மருங்குற வளைப்பதென்னப்; மருங்கினைவளைப்பதேபோல்.
4. அளகப்பந்தி; அளகபத்திப்; பூட்டியப்: பூட்டுவ; பூமுடிப்; பூட்டுவிட் டார்; பூட்டுமிட்டார். (5)

குழைகள் அணிவித்தல்

1199. வெள்ளத்தின் சடிலத் தான்றன்
வெஞ்சிலை யிறுத்த வீரன்
தள்ளத்தன் னுவி சோரத்
தனிப்பெரும் பெண்மை தன்னை
அள்ளிக்கொண் டகன்ற காளை
யல்லன்கொ லாங்கொ லென்பாள்
உள்ளத்தி னூச லாடுங்
குழைநிழ லுமிழ விட்டார்.

வெள்ளத்தின் சடிலத்தான் தன்-(கங்கை) நீர்ப்பெருக்கை யடக்கியுள்ள சடையையுடைய சிவபெருமானது, வெம் சிலை-(கண் டோர்) அஞ்சத்தக்கவில்லை, இறுத்த வீரன்-(எளிதில்) முறித்தவீரன், தன் ஆவி தள்ள-தன் உயிர் தள்ளர்டவும், சோர-(தான் மிகவும்) சோர்வடையவும், தனி பெரு பெண்மை தன்னை-ஒப்பற்ற பெருமை யுடைய (தனது) பெண்மையை (நிறையை), அள்ளிக்கொண்டு அகன்ற-(சில நாட்கள் முன்னே) கவர்ந்துகொண்டு போய்விட்ட, காளை அல்லன் கொல்-(அந்த) வீர இளைஞன் அல்லனோ! ஆம் கொல்- அவனேயோ! என்பாள்-என்று ஐயங்கொண்டவளான பிராட்டியின், உள்ளத்தின் - மனத்தைப்போல, ஊசல் ஆடும்-(காதில்) தொங்கி அசைகிற, குழை-குண்டலங்களை, நிழல் உமி-ழஒளி, வீசும்படி, இட் டார்-(காதுகளில்) அணிந்தார்கள்.

கன்னிமாடத்தருகில் இராமபிரானைக் கண்ட பிராட்டி, அப் போதே தன் பெண்மைக்குரிய நிறை முதலிய எல்லாவற்றையும் பறி கொடுத்துச்சோர்ந்திருந்தமை அங்குக்கூறப்பட்டது; (594-5). அதன் பின், கன்யாசுல்கமாக இருந்த வில்லை ஒரு வீரன் முறித்தானென் பதைக் கேள்வியுற்ற பிராட்டி, அவ்வீரன் தன் மனங்கவர்ந்த கள்

வனே அல்லனே என ஐயுற்று அது தெளியாமல் மனம் சஞ்சலமடைந்திருந்தமையின், அம்மன நிலையை, அசைந்தாடுந்தன்மையுள்ள குழைகளுக்கு உவமையாக்கினார். ஊசலாடுதல்-அசைந்தாடுதல் என்ற அளவில் நின்றது. வில் முறித்த வீரனைப் பற்றித் தோழி சொன்ன அடையாளங்களால், அஃதிராமபிரானே யாதல் வேண்டுமெனப் பிராட்டி தன் மனத்துள் ஒருவாறு துணிவுகொண்டாளாயினும் (804), அத்துணிவு நிலைபெறும்படி தெளிவடையாமையை வைத்தே அவள் மன நிலையைக் கூறியுள்ளார்.

வெள்ளத்தின் சடிலத்தான்றன் வெஞ்சிலை: ஒப்பு. 'வெள்ள மனைத்தவன் வில்' (771).

(பி - ம்.) 1. வெள்ளத்தின்சூடத்தான்றன்; வெள்ளித்திண் சடிலத்தான்றன்; வெஞ்சிலை யறுத்த; வியனருள் பெற்ற.
2. தள்ளத்தானுவி; தள்ளத்தன்னறிவு: நேராத்; நோக்கித்.
3. ஆங்கொலென்ன; என்னு; என்னும்.
4. உள்ளத்தில்: ஊசலாடக்; குழையொளியுமிழ. (6)

கழுத்தணிகள்

1200. கோனணி சங்கம் வந்து குடியிருந் தனைய கண்டத்
தீனமில் கலன்க டம்மி லியைவன வணிதல் செய்தார்
மானணி நோக்கி னார்தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம்
தானணி யென்ற போது தனக்கணி யாது மாதோ.

கோன் அணி சங்கம் - (யாவர்க்கும்) தலைவனான திருமால் கையில் அழகு செய்யும் பாஞ்சசன்னியமென்ற சங்கு, வந்து-(பிராட்டியைத் தேடி) வந்து, குடியிருந்த அனைய-(அவளிடம்) தங்கியிருந்தாற்போன்ற (அழகுடைய), கண்டத்து-கழுத்திலே, ஈனம் இல் கலன்கள் தம்மில்-தாழ்வில்லாத அணிகலன்கள் பலவற்றுள்ளும், இயைவன-பொருந்துவனவற்றை, அணிதல் செய்தார்-அணிவித்தார்கள்; மான் அணி நோக்கினார் தம்-மான்போலும் அழகிய பார்வையுடைய பெண்களின், மங்கலம் கழுத்துக்கு எல்லாம்-மாங்கலிய சூத்திரம் அணியும் கழுத்துக்களுக்கெல்லாம், தான் அணி என்றபோது-தானே அணிகலமாகவுள்ளபோது, தனக்கு அணி யாது-தனக்கு அழகு செய்யும் அணிகலம் வேறு யாது உளது? (இல்லை என்றபடி).

மாங்கலியம் அணிவித்தலைத் திருப்பூட்டுதல் என்பர்; பிராட்டி திருமகளே யாதலின், பெண்களின் மங்கலவணியாகத் தானே விளங்குபவள் என்றார். மாங்கலியமே பிற அணிமலன்கள் அணிதற்குக் காரணமாவது; சிறந்த அழகைத் தருவது. எனவே, பிறருக்கெல்லாம் மாங்கலியங் காத்து அழகையும் தரும் அவளுக்கு வேறு அணிகலன்கள் வேண்டாவாயினும், தோழிமார் ஆசையால் மிகப்பொருத்தமான சிலவற்றை அணிவித்தனர் என்கிறார். பெண்களின் கழுத்

துக்குச் சங்கை உவமை கூறுவர்; இங்கே பிராட்டியின் கழுத்துக்குப் பெருமான் கையிலுள்ள பாஞ்சசன்னியம் உவமை யென்னுமல், அதுவே இவள் கழுத்தாக வந்து தங்கியிருந்தது போன்றதென்றார். கோன்-பிராட்டிக்குத் தலைவனுதற்குரியவன் என்றலுமாம்.

(பி - ம்.) 1. கோனணிச். 2. தம்மின்; தன்னின்; தன்னில்; இசைவன; இயல்வன. 4. ஆனபோது; ஆன தென்றால். (7)

## முத்து மாலை அணிதல்

1201. கோணிலா வான மீன்க ளியைவன கோத்த தென்கோ
வாணிலா வயங்கு செவ்வி வளர்பிறை வகிர்ந்த தென்கோ
நாணிலா நகையி னின்றோர் நளிர்நிலாத் தவழ்ந்த தென்கோ
பூணிலா முலைமே லார முத்தையான் புகல்வ தென்னே.

பூண் நிலா(வு)ம் முலை மேல்-(பல) அணிகலன்கள் விளங்கும் தனங்களின் மேல் (அணியப்பெற்ற), ஆரம் முத்தை-முத்துமாலையை, வானம் மீன்கள்-ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களுள், கோண் இலா இயைவன-(ஒன்றுக்கொன்று) மாறுபாடில்லாமல் (ஒத்த அளவாலும் ஒளியாலும்) பொருந்துவனவற்றை, கோத்தது என்கோ-(மாலை யாகக்) கோத்தது என்று சொல்வேனே! வாள் நிலா வயங்கு-மிக்க ஒளியோடு விளங்குகிற, செவ்வி-அழகுடைய, வளர்பிறை-வளர் பிறைச் சந்திரனை, வகிர்ந்தது என்கோ-(இரு பகுதியாகப்) பிரித்து வைத்தது என்பேனே! நாண் நிலா(வு)ம் நகையின் நின்று-நாணத் தோடு பொருந்திய (பிராட்டியின்) புன்சிரிப்பி னின்றும், ஓர் நளிர் நிலா தவழ்ந்தது என்கோ! ஒரு குளிர்ந்த ஒளி (மார்பில்) தவழ்ந்தது என்று சொல்வேனே! யான் என் புகல்வது - நான் என்னவென்று சொல்வது! ஓ, அசை.

பிராட்டியின் மார்பில் அணிவித்த முத்துமாலையின் சிறப்பைத் தன்னல் முடியச் சொல்லுதல் இயலாதென்பது கருத்து. ஒரு பொருளை இவ்வாறு பலவகையாகச் சிறப்பித்தல் **பலபடப்புனைவணி** ஆகும். விண் மீன்கள் அளவாலும் ஒளியாலும் வேறுபடுவன வாதலின், அவ்வேறுபாடின்றிப் பொருந்தத்தக்கவற்றைப் பொறுக் கிக் கோத்ததென்றார். ஆர முத்து-முத்தாரம்; சொல் முன்பின்னுகத் தொக்கது.

கோண்-மாறுபாடு; சீவக. 28.

(பி - ம்.) 1. வான்மீனங்கள்: இயைந்தன; இசைவன: கோத்தவென்கோ; குவிந்த வென்கோ; கோத்த தென்ன.
2. வயங்கும்; வளர்ந்த; நிமிர்ந்த: வளர்மதி: வதிந்த தென்ள; பதித்த தென்கோ.

3. நாணிலா நகையி னின்ற; நகையுணின்ற; நகையினின்ற; நகையு மின்ற நாணுலா நகையி னின்ற நளிநிலாத் தவழ்ந்த வெங்கோ; நன்விலாத் திகழ்வதென்னப்.

4. பூணிலா முலையினார; பூணுலா முலைமே லார; முலை பெய்யார; முலையினார; முலையினார் தம்; முத்தம் யாம் புகல்வ தென்னோ; முத்தணி புகழ்வ தென்னோ; முத்தணி புனைதல் செய்தார்; முலையார் முத்தை யாம் பெயர் புகல்வ தென்னோ. (8)

1202. மொய்கொள்சீ றடியைச் சேர்ந்த
முளரிக்குஞ் செம்மை யீந்த
தையலா ளமிழ்த மேனித்
தயங்கொளி தழுவிக் கொள்ள
வெய்யபூண் முலையிற் சேர்ந்த
வெண்முத்தஞ் சிவந்த வென்றால்
செய்யவர்ச் சேர்ந்து ளாருஞ்
செய்யராய்த் திகழ்வ ரன்றே.

மொய் கொள்-பெருமையைக்கொண்ட, சிறு அடியை சேர்ந்த முளரிக்கும்-(தன்) சிற்றடியைச் சார்ந்த தாமரைப் பூவிற்கும், செம்மை ஈந்த-(தன்)செந்நிறத்தைத் தந்த, தையலாள்-(திருமகளின் அம்சமான) அச்சீதையினுடைய, அமிழ்தம் மேனி-அமிழ்தம்போன்ற திருமேனியின், தயங்கு ஒளி தழுவிக்கொள்ள-விளங்குகின்ற செவ்வொளி பொருந்துதலால், வெய்ய-விரும்பத்தக்க, பூண்-ஆபரணங்களணிந்த, முலையில் சேர்ந்த-(அவளுடைய) தனங்களில் படிந்த, வெண்முத்தம்-(மாலையின்) வெண்முத்துக்களும், சிவந்த என்றால்-செந்நிறமடைந்தன எனில், செய்யவர்-(அறிவு ஒழுக்கம் பண்பு முதலியவற்றால்) செம்மையுடையவர்களை, சேர்ந்து உள்ளாரும்-சேர்ந்து பழகுதலுடையவர்களும், செய்யர் ஆய்-செம்மையுடையவர்களாய், திகழ்வர் அன்றே-விளங்குவார்கள் அல்லவா ?

பிராட்டி திருமகளின் அம்சம் என்பதைக் கம்பர் பலவிடத்தும் கூறிச் செல்வர்; அவ்வாறே இங்கும் 'முளரிக்கும் செம்மையீந்த தையலாள்' என்றார். 'தாமரைப் பூவில் தன் திருவடிகள் பட அமர்ந்திருத்தலால், அத்திருவடிகளின் அழகிய செவ்வொளியைத்தாமரைப் பூவும் பெற்றது' என அத்திருவடிகளுக்கு ஏற்றங்கூறினர்; அவ்வாறே முத்துக்களின் தன்மையைக் கூறுமுகத்தால், திருமேனியின் ஏற்றங் கூறினர். தாமரை, முத்து ஆகிய இரண்டும் சார்ந்ததன் வண்ணமாதலைக் கூறி, உயர்ந்தோரைச் சார்தலால் உயர்வில்லாரும் உயர்வடைவர் என்ற பொதுப் பொருளைச் சமர்த்தித்தார். செய்யர் என்பது சிலேடையாகக் குணம், நிறம் இரண்டிற்கும் பொருந்த வைத்துள்ள நயம் ஓர்தற்பாலது. திருப்பாற் கடலினின்றும் அமிழ்தோடு உடன் தோன்றியதனால், அமிழ்த மேனி—அமிழ்தமயமான திருமேனி யென்றலும் ஆம். அடிகள் சிறுத்திருத்தல் பெண்களுக்குச் சிறப்பாகும்.

(பி - ம்.) 1. சிரடியைச்: முளரிக்குச்.
2. அமிழ்தமேனி, பவளமேனி: தழுவிச்சார.
3. வெய்யமென்; வெய்யவெம்: செய்ய பூண்: சேர்த்த; பெய்த: முத்தும்; முத்தச்: சிவந்த தென்றல்; சிவந்த வெய்யில்
4. செய்யரைச்; செய்யவர்; செய்யவாய்ச்: சேர்ந்துள்ளாரும்: சேய ராய்த். (9)

### தோளணிகள்

1208. கொமையுற வீங்குகின்ற குலிகச்செப் பனைய கொங்கைச்
சுமையுற நுடங்குகின்ற நுசுப்பினாள் பூண்பெய் தோளுக்
கிமையுற விமைக்குஞ் செங்கே ழினமணி முத்தி னோடும்
அமையிடை யமைவ துண்டா மாகினொப் பாகு மன்றே.

கொமை உற-திரட்சி மிக, வீங்குகின்ற-பூரித்தெழுகின்ற, குலிகம் செப்பு அனைய-இங்குலிகச் சிமிழ் போன்ற, கொங்கை-தனங்களின், சுமை உற-பாரம் உறைத்தலால், நுடங்குகின்ற-மிகவும் துவள்கிற, நுசுப்பினாள்-இடையை உடைய பிராட்டியின், பூண் பெய் தோளுக்கு-பல அணிகள் பூட்டப்பெற்ற தோள்களுக்கு, இமை உற-(கண்டோர் கண்கள் கூசுதலால் திறக்க வொண்ணாது) மூடிக் கொள்ளும்படி, இமைக்கும்-பிரகாசிக்கிற, செம் கேழ் இனம் மணி-செந்நிறம் பொருந்திய பதுமராக மணிகள், முத்தினோடும்-முத்துக் களுடனே, அமை இடை-(ஓர் இளம்) மூங்கிலில், அமைவது உண்டு ஆம் ஆகின்-பொருந்தி யிருப்பதுண்டானால், ஒப்பு ஆகும்-(அதுவே) ஒப்பாகும். (மற்றெதுவும் ஒப்பாகாது.) அன்று, ஏ-,அசை.

கொம்மை, கொமை என நின்றது.

கணுவில்லாத பசிய மூங்கிலைப் பெண்களின் தோளுக்கு உவமை கூறுவர்; ஆனால், மூங்கிலில் முத்தாலும் மணியாலும் இயன்ற அணி கலங்கள் பொருந்தி யிருத்தல் இல்லை; அவ்வாறு அணிகள் பொருந்தின மூங்கில் உண்டேல் அதுவே பிராட்டியின் தோள்களுக்கு ஒப்பாகும் என்கிறார்; எனவே, பிராட்டியின் தோள்களுக்கு ஒப்புக் கூறுதற்குரிய பொருள்கள் உலகத்தில் இல்லை என்பதாயிற்று. குலிகம் இங்குலிகம்; சாதிலிங்கம் எனவும் கூறப்படும். இது செந்நிறம் மிக்க தொரு பொருள்.

(பி - ம்.) 1. குமையுற: குமைவுற: விளங்குகின்ற: கொங்கை.
2. சுமையுடன்; சமையுற: நுணங்குகின்ற: பூண் செய்தோளுக்கு; துணை மென்றோளுக்கு.
3. இமையற; இமைவுற; இயைவுற: அமையுற: செங்கோள்; செங்கே ழின்மணி.
4. அமையுற வமைவது; அமையிட மமைவது: உண்டாமாகில்; உண்டே யாகில்: ஒப்பாயதன்றே. (10)

## கைகளில் கடகமணிதல்

1204. தளையவிழ் கோதையோதிச் சானகி தளிர்க்கை யென்னும்
முளரிக ளிராமன்செங்கை முறைமையிற் றீண்ட நோற்ற
அளியன கங்குற் போதுங் குவியல வாகு மென்றுங்
கிளவெயில் சுற்றி யன்ன வெரிமணிக் கடக மிட்டார்.

தளை அவிழ்-(அரும்புகள்) முறுக்கு அவிழ்தற்கு இடமான, கோதை ஓதி-பூமாலை சூடிய கூந்தலையுடைய, சானகி-சீதா பிராட்டியின், தளிர் கை என்னும்-தளிர்போலும் சாயலுடைய கைகளாகிற, முளரிகள்-செந்தாமரை மலர்கள், இராமன் செம் கை-இராமபிரானுடைய செம்மையான கைகளால், முறைமையின்-வேதவிதிப்படி, தீண்ட-பற்றப்படுதற்கு, நோற்ற-தவஞ் செய்துள்ளன; கங்குல் போதும்-இராக்காலத்திலும், குவியல ஆகும்-(மற்றத் தாமரை மலர்கள் போலக்) குவிதல் இல்லாதனவாகும்; (ஆதலால்), அளியன என்று-(அவை) காத்தற்கு உரியன என்று கருதி, ஆங்கு-அக்கைகளில், இளவெயில் சுற்றிய(து) அன்ன-இளவெயில் சூழ்ந்து கொண்டாற் போன்ற, எரி மணி கடகம்-செவ்வொளியுடைய இரத்தின கங்கணங்களை, இட்டார் - அணிவித்தனர்.

பிராட்டியின் கைகளைத் தாமரை மலர் என்றதற்கேற்ப, இராமபிரானைச் சூரியனாகவும், கைகளைக் கிரணங்களாகவும் கொள்ளுதல் தகும். அக்கிரணங்கள், பிராட்டியின் கைத்தாமரைகள் எப்போதுங் குவிதலாகிய குறைவுறுவண்ணம் காத்தற்கு, வெப்பமின்றிக் கைகளில்(இரட்சையாய்)அமைந்தனவென்னும்படியிருந்தன கங்கணங்கள் என்றவாறு. கடகம் என்பது ஆடவரும் கையில் அணிதற்குரியது; 'கங்கைக் கிறைவன் கடகக்கை புடைத்து நக்கான்;' (அயோத். 412); 'கடக மின்னத்தங் கைம்மறித்து', 'கடகவண்கை வெஞ்சிலைகொண்டு' (சீவக. 1809, 2318.) என வந்தன காண்க.

(பி - ம்.) 1. கோவையோதிச்.
2. முளரிகொள்: தீண்ட நோற்றிவ்; தீண்டற் கொத்த; தீண்டப்பெற்ற.
3. அளியின; அளவிய; அளவின: குவியலதாகும்; குவிவிலவாகும்; என்றங்கு.
4. எரிமணிக் கனகம்; இனமணிக் கடகம்; இணைமணிக் கடகம்: சேர்ந்தார்; வேய்ந்தார். (11)

## தொய்யி லெழுதுதல்.

1205. சில்லிய லோதி கொங்கைத் திரண்மணிக் கனகச் செப்பில்
வல்லியு மனங்கன் வில்லு மான்மதச் சாந்திற் றீட்டிப்
பல்லிய னெறியிற் பார்க்கும் பரம்பொரு ளென்ன யார்க்கும்
இல்லையுண் டென்ன நின்ற விடையினுக்கிடுக்கண் செய்தார்.

சில் இயல் ஓதி-சிலவாகிய பகுப்புக்களையுடைய கூந்தலையுடைய பிராட்டியின், கொங்கை-தனங்களாகிய, மணி-நீலமணியொன்று

பதிக்கப்பெற்ற, திரள்-திரண்ட, கனகம் செப்பில்-பொற்செப்பின் மேல், வல்லியும்-கற்பகவல்லியுருவும், அனங்கன் வில்லும்-மன்மதனுடைய வில்லாகிய கரும்பின் உருவும், மான்மதம் சாந்தில் தீட்டி-கத்தூரி கலந்த சந்தனக்குழம்பினுல்எழுதி, பல் இயல் நெறியின்-பலவாகவுள்ள சமயங்களால், பார்க்கும்-ஆராயப்படுகிற,பரம்பொருள்என்ன-பரம்பொருளைப்போல,யார்க்கும்-யாவருக்கும், இல்லை உண்டு என்ன-இல்லையென்றும் உண்டு என்றும்(மாறுபட்டுச்) சொல்லும்படி, நின்ற-(கட்புலனுகாமல்) இருந்த, இடையினுக்கு-(அவளுடைய) இடைக்கு, இடுக்கண் செய்தார்-துன்பத்தைச் செய்தார்கள்.

சில்லியல் ஓதி: அன்மொழித் தொகை; பிராட்டியைக் குறித்தது. ஓதியின் செப்பில் தீட்டி, இடையினுக்கு இடுக்கண் செய்தார் எனக் கூட்டி முடிக்க.

முன்னமே தனங்களின் பாரந்தாங்காது நுடங்குஞ் சிற்றிடைக்கு மேலுந் துன்பமுண்டாகுமாறு, தனங்களில் தொய்யில் எழுதுதலாலாகிய பாரத்தைச் சேர்த்தார்கள் என்றவாறு; இதனுல் இடையின் நுண்மையைக் குறித்தார். அந்நுண்மைக்குக் காட்டியுள்ள உவமையின் நயம்: பரம்பொருள் கட்புலனுகாமையின் இல்லையென்பார் சிலர்; கட்புலனுகும் உலகமும் உலகத்துப் பொருள்களும் உண்மையால் இவற்றிற்கு மூலமான ஒன்று உண்டு என அநுமானத்தால் பரம்பொருளின் உண்மை கூறுவார் பலர். இவ்வாறே, இடையும், கட்புலனுகாமையின் அஃதில்லையென்றும், உடம்பில் மேலும் கீழும் உள்ள உறுப்புக்களை இணைத்துத் தாங்கி நிற்றலின் அஃதுண்டு என்றும் கூறும்படி உள்ளது எனப் பொருத்திக் காண்க. இன்னும் இராமபிரான் கூற்ருக, 'இட்டிடை யிருக்குந்தன்மை......கட்டுரைத்துவமை காட்டக் கட்பொறி கதுவா கையில், தொட்டவெற் குணரலாமற் றுண்டெனுஞ் சொல்லுமில்லை' (கிட்கிந்தா 757) என இவர் கூறும் அழகும் ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது. 'கண்கொளா நுடங்கிடையை உண்டெனத் தமர்மதிப்பார் நோக்கினுர் பிறரெல்லாம், உண்டில்லை யெனவைய மல்லதொன் றுணர்வரிதே' (சீவக. 172); 'அஞ்சன மெழுதலாற்ரு தம்மவோ வென்று நையும், வஞ்சிநுண்ணிடை' (நைடத. சுயம். 165) என்பனவும், 'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு, நல்ல படாஅ பறை' (1115) என்ற குறளின் கருத்தும், 804 விசேடக்குறிப்பும் காண்க.

சில்லிய லோதி: முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை எனச் சில பகுப்புக்களாகக் கூந்தல் அலங்கரிக்கப்படுதலின், இவ்வாறு கூறப்பட்டது; 'ஐம்பால்' என்ற பெயரும் நோக்குக. இனி இதற்கு, மென்மைத்தன்மை பொருந்திய கூந்தல் என்றும், குளிர்ச்சி பொருந்திய கூந்தல் என்றும் கூறலும் ஆம். 'அஞ்சிலோதி':

குறிஞ்சி. 180; சிலப். 25: 75; மணி. 8:12; 23:24; 'சில்லிருங் கூந்தல்'. பெருங். 1. 56: 46; 5. 8: 107.

(பி - ம்.) 1. கனகச் செப்பின்; களபச் செப்பில்; குலிகச் செப்பை.
2. அலங்க லில்லும்: சாந்நுந் தீட்டிப்.
3. நெறியாற் பார்க்கும்; முறையிற் பார்க்கும்; புல்லிய னெறியிற் பார்க்கும்; புல்லிய னெறியிலாமல்; என்ன வார்க்கும்; என்ன யாகும்; எனவே யாரும்.
4. இடையினுக் கனுக்கஞ்; இடையினுக் கிடுக்கஞ்; இட்டிடைக்கிடுக்கண். (12)

## இடையணிகள்

1206. நிறஞ்செய்கோ சிகநுண் டூசு நீவிநீ வாத வல்குற்
புறஞ்செய்மே கலையு மாரத் தாரகைச் சுமையும் பூட்டித்
திறஞ்செய்கா சீன்ற சோதி பேதைசே யொளியிற் றீர்ந்த
கறங்குபு திரிய யாருங் கண்வழுக் குற்று நின்றார்.

நிறம் செய்-நல்ல நிறம் அமைந்த, நுண் கோசிகம் தூசு நீவி நீவாத-மிகமெல்லிய பட்டாடையின் கொய்சகம் நீங்காத, அல்குல் புறம் செய்-இடையினை அலங்கரிக்கின்ற, மேகலையும்-மேகலாபரணத்தையும், ஆரம்-முத்துக்களாலான, தாரகை சுமையும்-தாரகைச் சுமையென்னும் ஆபரணத்தையும், பூட்டி-அணிவித்து, திறம் செய்-பலவகைப்பட்ட, காசு-(அவ்வணிகலன்களின்) மணிகள், ஈன்ற-வெளி விட்ட, சோதி-(பலநிற)ஒளிகள், பேதை சேய் ஒளியின் தீர்ந்த-இளம் பெண்ணாகிய பிராட்டியது திருமேனியின் சிவந்த ஒளியோடு மாறு கொண்டனவாகி, கறங்குபு திரிய-(பக்கங்களில்) சுற்றி உலாவுதலால், யாரும்-(பக்கலில் இருந்த) யாவரும், கண் வழுக்கு உற்று நின்றார்-கண்ணொளி மழுங்கப்பெற்று நின்றார்கள்.

தாரகைச் சுமையென்பது முத்துவடங்களாலாகிய இடையணியென்பர். இது, முத்துக்களுக்குத் தாரகைகளை உவமித்து அமைத்த பெயர் போலும். முடி முதல் இடைவரை செய்த அலங்காரங்களை இதுகாறுங் கூறினார்; 'நிறஞ்செய் கோசிக நுண்தூசு நீவாத இடை' என்றதனால், சிறந்த பளபளப்பான பட்டாடை அணிவித்தமையுங் கூறப்பட்டது. அணிகலன்களும் ஆடையுமாகிய இவற்றின் ஒளியோடு பிராட்டியின் திருமேனி யொளியுங் கூடி, அலங்கரித்தவருட்பட அயலில் நின்று காண்போர் அனைவர் கண்களும் கூசும்படி யாயிற்று எனக் கோலத்தைச் சிறப்பிக்கின்றார்.

கோசிகம்-பட்டு; சுந்தர. 1205; பெருங். 1. 42: 205; சீவக. 1650.

(பி - ம்.) 1. நீலியவாசவல்குல்.
2. மேகலேயுந்தாழத்; மேகலேயின் பாரம்; பாரத்; மேகலேயுந் தாழ்த் தார்; காரகைச் சும்மை பூட்டித்; பூட்டத்; போலகச் சும்மை பூட் டித்; பொற்கச்சு மமையப் பூட்டித்.
3. காசினியிற் சோதி; காரின் சோதி; சோதிப்; பேதைசே யொளிகள் சுற்றிச்; பேதை சேயொளியிற்றீரக்; திர்ந்து; சேர்ந்து; சேந்து; சேர்த்திக்.
4. திரியத் தாமும்; திரிய மாதர்; திரியு மாதர்; கண் விளக்குற்று; விளக்கற்று; கனி விளக்குற்று. (13)

1207. ஐயவா யனிச்சப் போதி னதிகமு நொய்ய வாடல்
பையர வல்கு லாடன் பஞ்சின்றிப் பழுத்த பாதச்
செய்யபூங் கமல மன்னச் சேர்த்திய சிலம்பு சால
நொய்யவே நொய்ய வென்றே பலபட நுவல்வ தம்மா.

ஆடல்-(விரிந்து) ஆடுதலுடைய, அரவு பை அல்குலாள் தன்-பாம்பின் படம்போலும் அல்குலேயுடைய சீதாபிராட்டியின். ஐய ஆய்-அழகுடையனவாகி, அனிச்சம் போதின்-அனிச்சப்பூவினும், அதிகமும் நொய்ய-மிகவும் மென்மையுடையனவுமான, பஞ்சு இன்றி பழுத்த-செம்பஞ்சூட்டுதலின்றியே செந்நிறமுடைய, பாதம்-பாதங்களாகிற, செய்ய பூ கமலம் மன்ன-செந்தாமரைப் பூக்களிலே பொருந்த, சேர்த்திய-(தோழிமார்) பூட்டின. சிலம்பு-சிலம்புகள், பலபட நுவல்வது-மிகவும் ஒலி செய்வது, சால நொய்யவே நொய்ய(வே) என்றே-(அப்பாதங்கள்) மிக மெல்லியனவே, மெல்லியனவே என்று தானே! அம்மா-இது வியப்பே!

பிராட்டியைக் கோலஞ் செய்த முறையில், பாதங்களிலே பூட்டின சிலம்புகள் பலவாறு ஒலிப்பது, 'அப்பாதங்கள் மிகவும் மென்மையுடையன' என்பதை மீண்டும் மீண்டும் எடுத்துச் சொல்வது போலும் எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார். செம்பஞ்சூட்டுதலால் வரும் செயற்கைச் சிவப்பினும் இயற்கையான செந்நிறமே சிறந்த தென்பார், 'பஞ்சின்றிப் பழுத்தபாதம்' என்றார். பாதங்கள் அனிச்சப் பூவினும் நொய்ய என்றதனால், அனிச்சப்பூவின் மென்மைத் தன்மை புலனாகும். 'அனிச்சமும் அன்னத்தின் றூவியும் மாதர், அடிக்கு நெருஞ்சிப்பழம்' (குறள். 1120) என்பது ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. ஐயவா மனிச்சப்; ஐயவானனிச்சப்; போதில்; அதிகமாம்; அதிகத்தின்; அகவிதழ்; அணிதிகழ்; அழகுக்கேற்ற.
2. பஞ்சன்றிப்; பஞ்சுறப்; பஞ்சினிற்; பஞ்செனப்; பூத்த பாதம்.
3. கமல மின்னச்; கமல மென்னச்; கமல மென்னிற்; சிலம்புஞ்சால.
4. நொய்யவேநொய்யது, நொய்யனநொய்ய; நொய்யவோ நொய்மை; நொய்யவோ நோன்மை; அன்றே; அன்றே; என்றே; என்னப்; பலநடை; பற்பல; நுவல்வதாமால்; நுவறலம்மா. (14)

## கண்களுக்கு மையிடல்

1208. நஞ்சினே டமுதங் கூட்டி நாட்டங்க ளான வென்னச்
செஞ்செவே நீண்டு மீண்டு சேயரி சிதறித் தீய
வஞ்சமுங் களவு மின்றி மழையென மதர்த்த கண்கள்
அஞ்சன நிறமோ வண்ணல் வண்ணமோ வறித றேற்ரும்.

நஞ்சினேடு அமுதம் கூட்டி-நஞ்சையும் அமுதத்தையும் இணைத்து, நாட்டங்கள் ஆன என்ன-கண்களாகச் செய்யப்பெற்றுள் ளன என்னும்படி (தோன்றி), செஞ்செவே-நேராக, நீண்டு-(காதளவும்) போய், மீண்டு-(மேலே போக இடமின்மையால்) திரும்பி, சேய் அரி சிதறி-(நல்விலக்கணமான) செவ்வரிகள் பரந்து, தீய வஞ்சமும்-கொடிய வஞ்சனையும், களவும்-கள்ளத்தனமும், இன்றி-இல்லாமல், மழை என-மேகம் போல (க்குளிர்ந்து), மதர்த்த-செழித்த, கண்கள்-கண்களில் உள்ள கருமை, அஞ்சனம் நிறமோ-(அப்போது தீட்டப் பெற்ற) மையினால் ஆன நிறமோ!(அல்லது), அண்ணல் வண்ணமோ-இராமபிரானுடைய (திருமேனி) நிறமோ! அறிதல் தேற்ரும்-தெளிய அறிந்திலேம்.

நஞ்சும், அமுதும் பாற்கடலில் தோன்றியன; அவற்ருேடு அங்கே தோன்றிய திருமகளே, இங்கே சீதாபிராட்டியாக வந்துள்ள மையின், அந்த நஞ்சும் அமுதும் அவளுடன் அவள் கண்களில் வந்து பொருந்தின போலும்; கண்ணிற் கருவிழியை நஞ்செனவும் வெள்விழியை அமுதமெனவும் (நிறத்தால்) கொள்ளலாம். ‘அழிழ்தினின் விளர்த்துள் நஞ்சினிற் கருகி...கண்ணிணை’ (நைடத. அன்னத்தைத். 13); பிராட்டியின் கண்கள் இராமபிரானையன்றி மற்றெவரையும் நோக்குதல் பொதுநோக்கே யல்லாது காதற் குறிப் புடைய சிறப்பு நோக்கன்ருதலின், வஞ்சமும் களவும் இல்லாதன. இராமபிரானைக் கன்னிமாடத்திலிருந்து முதற்கண் கண்டது முதல் அவள் மனம் எப்போதும் அப்பிரானையே நினைத்தலாலும், இடை யிடையே உருவெளித் தோற்றத்தால் அப்பிரானைக் காணுதலாலும், அத்திருமேனியின் கருநிறம் அவள் கண்களிற் படிந்தது போலும் என்ற குறிப்போடு ‘அண்ணல் வண்ணமோ’ என்ருர். கண்களுக்கு மையிட்டதை விதந்து கூருமலே ‘அஞ்சன நிறமோ’ என்றதனுற் குறிப்பித்துள்ளார். ‘பஞ்சிவர் விரலினர்தம் படைநெடுங் கண்க ளெல்லாம், செஞ்செவே ஐயன் மெய்யிற் கருமையைச் சேர்ந்தவோ, (1149),‘அவர்தம் நீலநிறத்தையெல்லாரும் நினைக்க வதுவாய்நிரம்பி யதோ’ (622) என்பன இங்கே ஒப்பு நோக்கத்தகும். பெண்களின் கண்களைப் பொதுவாக நஞ்சுபோலக் கொடியன வென்றும்; நஞ்சும் அமுதும்போலக் கொடுமையும் இனிமையும் ஒருங்கே அமைந்தன வெனவுங் கூறுதல் கவிமரபு; ‘நஞ்சினுங் கொடிய நாட்ட மமுதென நயந்து நோக்கி’(973); ‘இருநோக்கிவளுண்க ணுள்ளதொருநோக்கு,

நோய்நோக்கொன் றந்நோய் மருந்து' (குறள். 1091); 'பிணியும் அதற்கு மருந்தும் பிறழப் பிறழமின்னும்......பெருந்தோளி படைக் கண்களே' (திருக்கோவை. 5); 'நஞ்சுமமிர்தமுமே போல் குணத்த பொருகயற்கண்' (சீவக. 167.) என்பன காண்க. செஞ்செவே: 973-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. நஞ்சிடை யமிழ்தங்கூடி; ஊட்டி.
2. செஞ்சவே: நீண்டு மீண்ட; நீண்டு நீண்டு; சேயரி சிதறத்; சிந்தத்; சிந்தித்.
3. களவு மன்றி; களவு மொன்றி; மதத்த; மறத்த; மதர்க்கும்.
4. நிறமே வண்ணல்; அறிகிலேமால்; அறிகிலோமால். (15)

நெற்றித் திலகமிடல்

1209. மொய்வளர் குவளை பூத்த முளரியின் முளைத்த மூந்நாள்
மெய்வளர் மதியி னுப்பண் மீனுண்டே லனைய தேய்ப்ப
வையக மடந்தை மார்க்கு நாகர்கோ தையர்க்கும் வானத்
தெய்வமங் கையர்க்கு மேலாந் திலகத்தைத் திலகஞ்
[சேர்த்தார்.

மொய் வளர்-(இதழ்கள்) அடர்ந்து வளர்ந்துள்ள, குவளை பூத்த-(இரு) குவளை மலர்கள் தன்னிடத்தே பூக்கப்பெற்ற, முளரியின்-தாமரைப்பூவிலே, முளைத்த-உதித்த, மூன்று நாள் மெய் வளர் மதியின் நாப்பண்-(நாள் தோறும் ஒரு கலையாக) மூன்று நாட்கள் தன் உடல் கலை வளரப்பெற்ற பிறையின் நடுவிலே, மீன் உண்டேல்-விண்மீனென்று பொருந்தியிருக்குமாயின், அனையது ஏய்ப்ப-அத்தன்மையை ஒப்ப, வையகம் மடந்தை மார்க்கும்-இவ்வுலகத்து(மானிட) மகளிர்க்கும், நாகர் கோதையர்க்கும்-(கீழுலகத்து) நாகர் பெண்களுக்கும், வானம்-மேலுலகத்திலுள்ள, தெய்வமங்கையர்க்கும்-தெய்வப் பெண்களுக்கும், மேல் ஆம் திலகத்தை-மேலான திலகம் போன்ற பிராட்டிக்கு, திலகம் சேர்த்தார்-(நெற்றியில்) திலகம் இட்டனர்.

திலகத்தை: வேற்றுமை மயக்கம்.

மூவுலகத்தும் உள்ள மகளிர்க்கெல்லாம் திலகமாக விளங்கும் பிராட்டிக்குத் திலகம் இட்டனர் என்றது, 'அமிழ்தினைச் சுவை செய் தென்ன அழகினுக் கழகு செய்தார்' (1196) என்பது போன்றது. மொய்-பெருமை; வண்டு என்றலுமாம். மூந்நாள் மெய்வளர் மதி-மூன்றும் பிறைச்சந்திரன்; இது நெற்றிக்கு உவமை. 'மொய்வளர்...... மீனுண்டேல்' என்றது இல்பொருள்; ஆதலால், உண்டேல் அனைய தேய்ப்ப என்றார். குவளை கண்களையும், முளரி திருமுகமண்டலத்தை யும், மீன் நெற்றித் திலகத்தையும் குறிப்பன.

மேலாந் திலகத்தை: 'மடந்தை மார்க்கொரு திலகமே' (அயோத். 773).

(பி - ம்.) 1. மொய்வளை; மோய்யவார்; குமுதம் பூத்த: முளைத்து முன்னுள்.
2. மீனுண்டே; மீதுண்டேல்: மீதுண்டே; மீனுளதனைய தொப்ப; அன்ன தேய்ப்ப; அன்ன தேய்க்கும்.
3. நாகர்கோ மகட்கும் வானத்; நாகர்தோகையர்க்கும் வானத்; நாகர் தங் கோதை வானத்: மாநகர் கோதையார்க்கும்.
4. மங்கையர்க்கு மெல்லாம்; மேலார்: திலதத்தைத் திலதம்; செய் தார். (10)

## பூக்களும் பொற்பொடியும் அணிதல்

1210. சின்னப்பூச் செருகு மென்பூச் சேகரப் போது கோதில்
கன்னப்பூக் கஞல மீது கற்பகக் கொழுந்தி யாவும்
மின்னப்பூஞ் சுரும்பும் வண்டு மிஞிறுந் தும்பிகளும் பம்பப்
புன்னைப்பூந் தாது மானும் பொற்பொடி யப்பி விட்டார்.

சின்னம் பூ-விடுபூக்களும், செருகும் மென் பூ-(தலையிலே) செருகத்தக்க மெல்லிய பூக்களும், சேகரம் போது-உச்சியில அணிவிக்கும் பூக்களும், கோது இல்-குற்றமில்லாத ,கன்னம்பூ-காதுகளில் வைக்கும் பூக்களும், கஞல-(உரிய இடங்களில்) விளங்க (அணிந்து),மீது-மேலே, கற்பகம் கொழுந்து யாவும் மின்ன-கற்பகத்தின் கொழுந்து போன்ற பலவகை இளந்தளிர்கள் (உரியவிடங்களில்) பிரகாசிக்கும்படி, (அலங்காரமாகப் பொருத்தி), சுரும்பும், வண்டும், மிஞிறும், தும்பிகளும் பம்ப-சுரும்பு முதலிய நால்வகை வண்டினங்களும் மொய்க்க, புன்னை பூ தாது மானும்-புன்னைப்பூவின் மகரந்தம் போன்ற, பொன்பொடி-பொற்சுண்ணத்தை, அப்பிவிட்டார்-(அழகாக) அப்பிவிட்டார்கள்.

இதிற் கூறப்பட்டவை தலையிலும், காதுகளிலும், மேனியிலும் அணிவிக்கும் தனிப்பூக்களும் தளிர்களும் ஆகும்: இவ்வலங்காரங் களெல்லாம் ஆனபின், இறுதியில் பொற்சுண்ணத்தை அப்புவர்; அதனோடு கோலங்காணுதல் முடிவதனால், 'அப்பி விட்டார்' என முடித்தார். சின்னப்பூ-விடுபூக்கள்; இவை 'சின்னம்' எனவுங் கூறப் படும்; 978-குறிப்புப் பார்க்க. சேகரப்போது - பொன்னாலியன்ற உச்சிப்பூ எனவும், கன்னப்பூவும் பொன்னாலியன்றதெனவும் கூறுவர் சிலர். தளிர்களை அப்புதல்: 943-குறிப்புப் பார்க்க. புன்னைப்பூவின் மகரந்தம் நிறத்தால் பொற்சுண்ணத்துக்கு உவமை. பொடி அப்பு தல்: 'விரிமலர், வேங்கைநுண்டாதப்பி: (முருகு. 35-6).

(பி - ம்.) 1. செருகி; செருக்கு: சொருகு: செருந்தி மென்பூஞ்: சேகரப்போது கோதிக்; சேகரப்பூவுங்கோதில்; செக்கர்ப்பூம் போது கோதில்; போது காதிற்; போதுசேர்த்தார்; சிகரப் போதுங்காதிற்; சிகரப்போதுந் தேசார்.
2. கன்னப்பூக் கமலமீது; கன்னப்பூங் கஞ்சமீது; கன்னப்பூண் கஞலமீது: கொழுந்துமான; கொழுந்தும் யாவும்.
3. மின்னப்பூச்சுரும்பும்: தும்பிகளும் பம்பும்; ஆர்ப்பப்: ஆர்க்கும்; வேட்கும்.

4. பூத்தாது: பொற்பொடி யாடிவிட்டார்; ஆட்டிவிட்டார். (17)

சில பிரதிகளில் இப்பாடல் இல்லை.

1211. நெய்வளர் விளக்க மாட்டி நீரொடு பூவுந் தூவித்
தெய்வமும் பராவி வேத பாரகர்க் கீந்து செம்பொன்
ஐயவி யறுகு சேர்த்தி யாய்நிற வயினி சுற்றிக்
கைவளர் மயில னாளை வலஞ்செய்து காப்பு மிட்டார்.

நெய் வளர் விளக்கம் மாட்டி-நெய்யால் எரியும் விளக்கை ஏற்றி, நீரொடு பூவும் தூவி-நல்ல நீரும் பூவுஞ்சேர்த்து (ப்பலியாக) முன்னே சிந்தி, தெய்வமும் பராவி-(தங்கள்) வழிபடுகடவுளையும் தொழுது, வேத பாரகர்க்கு-வேதங்கரைகண்ட பெரியோர்க்கு, செம்பொன் ஈந்து-நல்ல சொர்ணதானம் செய்து, ஐயவி அறுகு சேர்த்தி-வெண் சிறு கடுகையும் அறுகம் புல்லையும் (இரட்சையாகச் சிரசிலே) சேர்த்து, ஆய் நிறம் அயினி சுற்றி-அழகிய செந்நிறச் சோறு கலந்த நீராகிய ஆலத்தி சுற்றி, கைவளர் மயில் அன்னாளை-தங்கள் கையிலெடுத்து வளர்த்த மயில் போன்றவளான பிராட்டியை, வலம் செய்து-வலமாக வந்து, காப்பும் இட்டார்-(ஆலத்தி நீரால் நெற்றியில்) காப்பாகப் பொட்டும் இட்டார்கள்.

செவிலித்தாயர், பிராட்டிக்குத்திருஷ்டிதோஷம் (கண்ணேறு) கழித்தலும், இரட்சையும் (காப்பிடல்) ஆகியவற்றைச் செய்தனர் என்றவாறு. நெய்விளக்கேற்றிப் பலிதூவித் தெய்வந் தொழுதல், திருமணம் இடையூறின்றி நன்கு நடைபெறற் பொருட்டாகும். வேதபாரகர்க்குத் தானம் ஈதல், திருமணம் முதலிய மங்கல காரியங்களுக்கு முன்னே செய்தல் மரபு. வெண் சிறு கடுகும் அறுகும் தலையிற் சேர்த்தலும், ஆலத்தி நீரால் நெற்றியிற் பொட்டிடுதலும் இரட்சையின் பொருட்டாகும். ஆலத்தி சுற்றுதல் கண்ணேறு கழித்தற் பொருட்டு. இவையெல்லாம் செய்தோர் செவிலித்தாயர் என்பது 'கைவளர் மயிலன்னாளை' என்றதனாற் பெறப்படும். இட்டார் என்ற பயனிலைக் கேற்ப இவ்வெழுவாய் வருவிக்க.

விளக்கம் ஆட்டி எனப் பிரித்து விளக்கைச் சுற்றி எனவும், ஐயவி நுதலிற் சேர்த்தி என்ற பாடங்கொண்டு வெண் சிறு கடுகுப் பொடியை நெற்றியில் இட்டு எனவும், காப்பு மிட்டார் என்பதற்குப் பிறவகையான இரட்சைகளும் செய்தார் எனவும் பொருள் கூறுவர். 'வேதபாரர்க்கு' என்ற பாடத்துக்கு 'வேதத்தை வகிப்பவர்க்கு' எனப் பொருள் கொள்க.

ஐயவியும் அறுகும் சேர்த்தல்: (குமார ஸம்பவம்: 7; 7 ); 'பூதியணிந்தாங் கயினி நீர் சுழற்றித் தெய்வம் பராய்ப் போற்றி' (நைடத. அன்னத்தைத். 129,)

(பி - ம்.) 1. விளக்கு மாட்டி; நீரோடும் பூவுந்.
2. தெய்வநம்பரவி: வேதபாரர்க்குச் செம்பொனீந்து; பாரார்க்குஞ் செம்பொலஸ்கி.
3. ஐயவி நுதலிற் சேர்த்தி: நுதலிற் சார்த்தி: அருகிற் சேர்த்தி; அறுகிற் சேர்த்தி; அகலிற் சேர்த்தி; ஆயநீரயினி; பாளிறவயினி; வாணிற வயினிகுட்டிக்; ஊட்டிக்; காட்டிக்; பூட்டிக்.
4. கைவளை; மைவரை: மயிலனுட்கு; மயிலினளை. (18)

பிராட்டியின் அழகு கண்டு மகளிரும் மயங்குதல்

1212. கஞ்சத்துக் களிக்கு மின்றேன் கவர்ந்துணும் வண்டு போல
அஞ்சொற் கள்கிள்ளைக் கெல்லா மருளுவா ளழகை மாந்தித்
தஞ்சொற்கள் குழறித் தத்தந் தகைதடு மாறி நின்றார்
மஞ்சர்க்கு மாத ரார்க்கு மனமென்ப தொன்றே யன்றே.

கிள்ளைக்கு எல்லாம்-(இனிதாகப் பேசும்) கிளிகளுக்கெல்லாம், அம் சொற்கள் அருளுவாள் அழகை-அழகிய (இனிய) சொற்களைக் கற்பிக்க வல்ல பிராட்டியின் (கண்கொள்ளாத) அழகை, (மகளிரெல்லாரும்), கஞ்சத்து-தாமரைப் பூவிலே, களிக்கும் இன் தேன் கவர்ந்து உணும்-களித்தற்குக் காரணமான இனிய தேனைக் கொள்ளைகொண்டு பருகுகிற, வண்டுபோல-வண்டுகளைப்போல, மாந்தி-(தம்கண்ணாரப்) பருகி, (அப்போதுண்டான மயக்கத்தால்), தம் சொற்கள் குழறி-தாங்கள் பேசும் வார்த்தைகள் குளற, தம் தம் தகை தடுமாறி-அவரவர் பெண்மைக்குரிய பண்புகள் தடுமாறப்பெற்று, நின்றார்-வியந்து நின்றார்கள்; மஞ்சர்க்கும்-ஆடவர்க்கும், மாதரார்க்கும்-பெண்களுக்கும், மனம் என்பது-மனம் என்னும் கரணம், ஒன்றே அன்றே-(அழகை நுகர்தலில்) ஒரு படித்தேயன்றே ?

மஞ்சர் = மைந்தர்: போலி.

பிராட்டியை அலங்கரித்த வண்ண மகளிரும் அடங்க, உடனிருந்த மகளிர் எல்லோரும், இயற்கையோடு செயற்கையுங் கூடின அவ்விணையிலாத அழகில் ஈடுபட்டு மயங்குவாராயினர் என்க. இராமபிரானுடைய அழகு மிகுதியை 'ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினன்' என்பது முதலிய பலவகையில் அங்கங்கே சிறப்பிக்கும் கம்பநாடர், பிராட்டியின் அழகையும் அதற்குக் குறையாதபடி பலவகையில் சிறப்பிப்பதை அங்கங்கே காணலாம். ஆரணிய காண்டத்தில் சூர்ப்பணகையின் கூற்றாக வரும் 'கண்பிற பொருளிற் செல்லா கருத்தெனின் அஃதே கண்ட, பெண்பிறந் தேனுக் கென்றால் என்படும் பிறருக்கு' (ஆரணிய. 278) என்பதும், 'அழகெனுமவையுமோ ரழகு பெற்றவே' (589); 'அழகிவளைத் தவஞ்செய்து பெற்றதுகாண்' (759) என்பனவும் பிறவும் காண்க. 588-விசேடக் குறிப்பும் பார்க்க. சொல்லினிமைக்குக் கிளியை உவமை கூறுதல் மரபு; 'வாயிடைமழலையின் சொற் கிளியினுங் குழறி' (ஆரணிய. 791) என இவரே

பிராட்டியைப் பற்றிக் கூறியுள்ளமை நோக்குக; இங்கே எதிர்நிலையாக 'அஞ்சொற்கள் கிள்ளைக்கெல்லாம் அருளுவாள்' என்றார். 'எழுவு தண்டமிழ் யாழினு மினியசொற் கிளியே' (அயோத். 774) என்பதும் நோக்கத் தகும். இன்னும் பிராட்டியைப் பற்றிய பல சிறப்புக்களை ஆரணிய காண்டத்துட் சூர்ப்பணகையின் கூற்றாக வருமிடங்களிற் காணலாம். பிராட்டியின் அழகைப் பெண்கள் நுகர்ந்தமைக்குக் கூறியுள்ள உவமையின் நயமும், மஞ்சர்க்கும் மாதரார்க்கும் மனமென்பதொன்றே யன்றோ என்ற பொதுப்பொருளை நுட்பமாக அமைத்துள்ள அழகும் ஓர்ந்து இன்புறுதற்குரியன.

(பி - ம்.) 1. கஞ்சத்தில் களிக்குமென்றேன்; செந்தேன்; தண்டேன்; கவர்ந்துண்ணும்; உண்ட. 2. அஞ்சொற்கொள்; அருளினள்.
3. தந்தம்; தகைதடுமாறுகின்றார்; கைதடுமாறுகின்றார்; நிறைதடுமாறி; நிலை தடுமாறி. 4. மைந்தர்க்கும் மடந்தைமார்க்கும். (19)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

1213. இழைகுலா முலையி னாளை
யிடையுவா மதியி னேக்கி
மழைகுலா மோதி நல்லார்
களிமயக் குற்று நின்றார்
உழைகுலா நயனத் தார்மாட்
டொன்றொன்றே விரும்பற் கொத்த
தழகெலா மொருங்கே கண்டால்
யாவரே யாற்ற வல்லார்.

மழை குலாம் ஓதி-மேகம்போலக் கருமை பொருந்தி விளங்கும் கூந்தலையுடைய, நல்லார்-நல்ல அழகுடைய பெண்களெல்லாம், இடை-தம்மிடையே, இழை குலாம் முலையினாளை-(தாம் அணிவித்த) அணிகலன்கள் சிறப்புறுதற்குக் காரணமான தனங்களையுடைய பிராட்டியை, உவா மதியின் நோக்கி-பூர்ணிமைச் சந்திரனைக் கண்டதுபோலப் பார்த்து, களி மயக்கு உற்று நின்றார்-மகிழ்ச்சியும் அதனாலான மயக்கமுங் கொண்டு (பிரமித்து) நின்றார்கள்; உழை குலாம் நயனத்தார் மாட்டு-மானின் (மருண்ட) தன்மை யமைந்த கண்களையுடைய பெண்களிடத்தில், (பொதுவாக), ஒன்று ஒன்றே-ஏதேனும் ஒவ்வொரு உறுப்பின் சிறப்பே, விரும்பற்கு ஒத்தது-(பிறர் கண்டு) விருப்பங் கொள்ளுதற்கு உரியதாகும்; (அங்ஙனமாக), அழகு எலாம்-எல்லா அங்கங்களி னழகையும், ஒருங்கே கண்டால்-ஓரிடத்தில், ஒரே காலத்தில் கண்டால், ஆற்ற வல்லார் யாவரே-(மனம் தடுமாறாமல்) தாங்கவல்லவர் யாவருளர்? (இல்லை யென்றவாறு).

பிராட்டியின் அழகுச் சிறப்பு. எத்தகையவரையும் மயங்க வைக்கும் என்றவாறு, 1222-பார்க்க. ஒன்றொன்றே யென்பதற்கு, குணம், செயல், வடிவு, நடை, சாயல், வண்ணம் என்றவற்றுள் ஏதே

னும் ஒன்றே யெனவுங் கூறுவர். 'பெண்க ளானுர்க்குள் நல்ல வுறுப் பெலாம் பெருக்கியீட்டி, யெண்களா லளவா மானக் குணந் தொகுத் தியற்றினுளே' (யுத்த. 1571); 'தெரிவை மார்க்கொரு கட்டளை யெனச்செய்த திருவே' (அயோத். 778); 'நல்லார், உறுப் பெலாங் கொண்டியற்றி யான்கொல்' (கலி. 56: 7-8) என்பனவுங் காண்க. 588-89 விசேடக் குறிப்புக்களுங் காண்க.

(பி - ம்.) 1. இடையுமா மதியை நோக்கி; இடையுவாமதியை நோக்கி.
2. மழைகுலாவோதி; மழைகுலாமுலகம்: மழைகுலாவுலகமெல்லா மதி மயக்குற்றதன்றே; மதிமயக்குற்றதென்ன.
3. உழையுளாம்: ஒன்றன்றே; ஒன்றென: விரும்புகின்றது; விரும்புகின்ற; விரும்பி நின்ற.
4. ஒருங்கு கொண்டால்: கொண்டாள் அழகுக்கு; கொண்ட அழகிக்கு; மயங்கி நின்றார். (20)

1214. சங்கங்கை யுடைமை யாலுந் தாமரைக் கண்ண தாலும்
எங்கெங்கும் பரந்து பல்வே றுள்ளத்து மெழுதிற் றென்ன
அங்கங்கே தோன்ற லாலு மருந்ததி யனைய கற்பின்
நங்கையு நம்பி யொத்தா ளுமினிப் புகல்வ தென்னோ.

சங்கு அம் கை உடைமையாலும்-(பாஞ்ச சன்னியமென்னும்) சங்கை அழகிய கையிலே கொண்டிருத்தலாலும், (சங்கு வளையல்களை அழகிய கைகளில் அணிந்திருத்தலாலும்),கண் அது தாமரை ஆலும்-செந்தாமரை போன்ற கண்களைப் பெற்றிருத்தலாலும், (தாமரைக் கண்ணது ஆலும்-தங்குமிடம் தாமரையில் இருத்தலாலும்), எங்கு எங்கும் பரந்து-எல்லாவிடங்களிலும் வியாபித்து நின்று, பல்வேறு உள்ளத்தும்-மிகப் பலருடைய மனத்திலும், எழுதிற்று என்ன-(வடிவம்) எழுதிவைத்தாற்போல, அங்கு அங்கே தோன்றலாலும்-அவ்வவ் விடத்திலே காணப்படுதலாலும், (அழகின் சிறப்பு எங்கெங்கும் பரவி எல்லாருடைய மனத்திலும் தன் வடிவம் எழுதி வைத்தாற்போலக் காணப்படுதலாலும்), அருந்ததி அனைய கற்பின்-அருந்ததிக்கொப் பான கற்பையுடைய, நங்கையும்-பெண்கள் நாயகமான பிராட்டியும்; நம்பி ஒத்தாள்-ஆடவர் தலைவனான இராமபிரானைப் போன்றவளா னாள்;நாம் இனி புகல்வது என்னோ-இதனினும் வேறாக(ப்பிராட்டிக்கு) நாம் உவமை கூறத்தக்கது யாதுளது ? (இல்லை).

இக்கவி, சிலேடை பற்றி வந்த உவமையணி கொண்டது. பிராட்டிக்கு ஒப்பாரும் மிக்காரும் பெண்களுள் இல்லையாதலால், இராமபிரானையே ஒப்பிட்டு எவ்வகையிலும் அப்பிரானுக்கேற்றவள் பிராட்டியென்பதனைச் சிலேடைவகையால் பொருத்திக் கூறுகின்றார். கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர் கூடும் கூட்டத்தை நினைவுறுத்துகின்றார். அங்ஙனமாயின், 'அருந்ததி யனைய கற்பின்' என உவமை கூறலாமோவெனின், மானிடப்பெண்ணாகி

வந்துள்ளமைக்கேற்பக் கற்பின் உறுதியைக் காட்டுதற்குக் கூறினு ரென்க. அன்றியும், தன் மணுளனுகும் பெருமானுக்குக் குலகுருவின் பத்தினியாய்ச் சிறந்து விளங்குபவளுமாவாள் அருந்ததி.

சங்கம் + கை எனவும் பிரிக்கலாம்.

(பி - ம்.) 1. தாமரைக்கோயிலாலும்; கண்ணிஞலும்; கண்களாலும்; கைகளாலும்.
2. பரந்து வெவ்வேறு; பரந்தபல்வேறு; உள்ளத்தின் அழுந்திற்றென்ன; இயங்கி மீள.
3. தோன்றலானும்; தோன்ருநின்ற; தோன்றுகின்ற.
4. புகல்வதென்னே. (21)

1215. பரந்தமே கலையுங் கோத்த
பாதசா லகமு நாகச்
சிரஞ்செய்நூ புரமும் வண்டுஞ்
சிலம்பொடு சிலம்பி யார்ப்பப்
புரந்தரன் றனக்குற் ருளை
யரம்பையர் புடைசூழ்ந் தென்ன
வரம்பறு மழலைத் தீஞ்சொன்
மடந்தையர் தொடர்ந்து சூழ்ந்தார்.

வரம்பு அறு-அளவற்ற, தீம் மழலை சொல் மடந்தையர்-இனிய மழலைச் சொற்களைப் பேசும் பெண்கள், பரந்த மேகலையும்-(இடையிலே) பரவலாகஅணிந்த மேகலாபரணங்களும், கோத்த-(அழகாகக்) கோக்கப்பட்ட, பாதசாலகமும் - பாதசாலமென்னும் காலணியும், நாகம் சிரம்செய்-பாம்பின் தலைபோல (முகப்பு)அமைந்த, நூபுரமும்-நூபுரம் என்னும் காலணியும், சிலம்பொடு-பாதச்சிலம்பும், வண்டும்-கைவளைகளும், சிலம்பி ஆர்ப்ப-மிக்குஒலிக்க, தொடர்ந்து-(திரளாகத்) தொடர்ந்து வந்து, புரந்தரன் தனக்கு உற்ருளை-இந்திரனுக்கு உரிய தேவியான இந்திராணியை, அரம்பையர் புடை குழ்ந்தது என்ன-தெய்வமாதர் பக்கங்களில் சூழ்ந்து வருதல்போல, சூழ்ந்தார்-சூழ்ந்து கொண்டனர். வண்டு-வண்டுகளும் ஆம்.

பிராட்டியை மண்டபத்திற்கு அழைத்துச்செல்லும் பொருட்டு தெய்வமாதருக்கொப்பான சிறப்புடைய மிகப்பல மாதர், பரிவாரங் களாகச் சூழ்ந்தனர் என்க. செல்வச் சிறப்பினுல் இந்திராணியை ஒப்புக்கூறி, அதற்கேற்ப 'அரம்பையர் புடைசூழ்ந்தென்ன' என்ருர். பாதசாலம், நூபுரம், சிலம்பு என்பன ஒன்றென்பார் சிலர்; கம்பர் கூற்றின்படி இவை வேறு வேருனவையென்று தெரிகின்றது; 'நூபுரம்புலம் பிடச் சிலம்பு நொந்தழ' (யுத்த. 3869) என்பதுங் காண்க. நூபுரம்-தண்டையெனபர். சிலம்பி ஆர்ப்ப: ஒருபொருட் பன்மொழி. பாதசாலகம்: சுந்தர. 210.

(பி - ம்.) 1. நாதச். 2. சிலம்பொடும் புலம்பியாடப்.
3. புரந்தரன் கோற்கீழானோர்; கோசகிழாளை; கோற்கீழ் வானாட்டு; வானத்து; சசியை வானாட்டு; புடைசூழ்ந்தன்ன; புகுந்ததென்ன.
4. வரபபெறு; சும்மைத் தீஞ்சொல்; தீஞ்சொற் கிள்ளை; மடந்தையர் சூழ்ந்து நின்றார்; சூழ நின்றாள்; தொடர்ந்து வந்தார். (22)

1216. சிந்தொடு குறளுங் கூனுஞ் சிலதியர் குழாமுந் தெற்றி
வந்தடி வணங்கிச் சுற்ற மணியணி விதான நீழல்
இந்துவின் கொழுந்து விண்மீ னினத்தொடும் வருவ தென்ன
நந்தலில் விளக்க மன்ன நங்கையு நடக்க லுற்றாள்.

சிந்தொடு-சிந்தர்களும், குறளும் - குறளர்களும், கூனும்-கூனர்களும், சிலதியர் குழாமும்-சேடிமார் கூட்டமும், தெற்றி வந்து-மிக நெருங்கி வந்து, அடி வணங்கி-தன் பாதங்களில் வணக்கம் செய்து, சுற்ற-சூழ்ந்துவர, மணி அணி-இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட, விதானம் நீழல்-மேற்கட்டியின் நிழலிலே, இந்துவின் கொழுந்து-இளஞ்சந்திரன், விண்மீன் இனத்தொடும்-நட்சத்திரங்களின் கூட்டத்தோடு, வருவது என்ன-வருவதுபோல, நந்தல் இல்-(ஒளி) கெடுதல் இல்லாத, விளக்கம் அன்ன-விளக்கைப்போன்ற, நங்கையும்-பெண்களிற் சிறந்த பிராட்டியும், நடக்கல் உற்றாள் - (மண்டபத்தைக் குறித்து) நடக்கலானாள்.

பிற பெண்களின் கூட்டமேயன்றிச் சிந்தர், குறளர், கூனர் முதலான அந்தப்புரத்துப் பரிவாரங்களும் பணிப்பெண்களும் வந்து சூழப் பிராட்டி விதான நிழலில் மண்டபத்தைக் குறித்துச் செல்லலானாள் என்க. விதானத்தின் சிறப்பை 1219-இல் காண்க. குறளர்-மிகக்குறுகிய வடிவமுடையவர்; இரண்டடி உயரமுள்ளவர் என்பர். சிந்தர் அவரினும் சிறிது உயர்ந்தவர்; மூன்றடி உயரமுள்ளவரென்பர். சொல்லால் அஃறிணையான சிந்து, குறள், கூன் என்பன ஆகு பெயராகி உயர்திணைப் பொருள்களைக் குறிப்பன. பிராட்டிக்கு இளஞ்சந்திரனும், அவளைச் சூழ வந்த பரிவாரங்களுக்கு விண்மீனும் உவமை. பிராட்டி சந்திரவமிசத்தவளாதலின் 'இந்துவின் கொழுந்து' என்றார். சாதாரண விளக்குக்கள் போல எண்ணெய், திரி முதலியன இல்லாமலும், தூண்டப்பெறாமலும் இயற்கையாகவே சிறந்த தேககாந்தியுடையவளாதலின், 'நந்தலில் விளக்கமன்ன நங்கை' என்றார். நந்தலில் விளக்கு-தூண்டா விளக்கு என்றலுமாம். 'நந்தா விளக்கே நாமிசைப்பாவாய்' (மணி. 14: 18).

சிந்தொடு.... சிலதியர் குழாமும்: 876-குறிப்புப் பார்க்க. பிராட்டி சந்திர வமிசத்தவளென்பது: 1191. இந்துவின் கொழுந்து ......வருவதென்ன: ஒப்பு: 'பற்பன்னூறுயிரவர் கண்ணுங் கவரும் ஒண்ணுதல் மகளிர் தற்சூழத், தாரகை நடுவண் தண்மதிபோலச் செல்வாள்' (இறை. 2-உரை).

(பி - ம்.) 1. செற்றி; செற்ற; சுற்றி.
2. வணங்கிச் சுற்றி; வணங்கிப் போற்ற.
3. இந்துவந்திழிந்து; மீன்கள்; மீனின்: இனத்தொடு: வருவதேபோல்; மலர்வதென்ன. 4. விளக்கமென்ன; விளக்கமுற்ற. (23)

(வேறு)

1217. வல்லியை யுயிர்த்தநில மங்கையிவள் பாதம்
மெல்லிய வுறைக்குமென வஞ்சிவெளி யெங்கும்
பல்லவ மலர்த்தொகை பரப்பின ளெனத்தன்
நல்லணி மணிச்சுடர் தவழ்ந்திட நடந்தாள்.

வல்லியை - (பிராட்டியாகிய) பூங்கொடியை, உயிர்த்த-தோற்றுவித்த, நில மங்கை-பூமிதேவியானவள், இவள் பாதம்-இச்சீதையின் பாதங்கள், மெல்லிய-மென்மையானவை;உறைக்கும் என-(நடந்தால் தரை) உறுத்தும் என்று, அஞ்சி-பயந்து, வெளி எங்கும்-(இவள் நடந்து செல்லுதற்குரிய) வெளியிடமெங்கும், பல்லவம்-தளிர்களையும், மலர் தொகை-மிக்க பூக்களையும், பரப்பினள் என-பரப்பி வைத்துள்ளாள் என்னும்படி, தன் நல் அணி மணி சுடர்-தன்னுடைய நல்ல அணிகலன்களில் உள்ள நவமணிகளின் ஒளி, தவழ்ந்திட-தரையில் பரவ, நடந்தாள்-(பிராட்டி) மெல்ல நடக்கலானாள்.

இது முதல் ஐந்து பாடல்களால் பிராட்டி மெல்ல நடந்து போய் மண்டபம் அடைந்தமையை வர்ணிக்கிறார்; அவற்றில் எழுவாய் வருவித்துக்கொள்க.

பிராட்டி நடந்து செல்லும்போது, அவளுடைய அணிகலன்களில்உள்ள பலநிற மணிகளின் சாயை தரையில் விழுந்த தோற்றம், அவள் கால்கள் தரையில் படும்போது உறுத்துமே யென்று பூமிதேவி அஞ்சி, மலர்களையும் தளிர்களையும் மெத்தெனப் பரப்பி வைத்தாற் போன்றுளது எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார். நிலத்தை உழும்போது பூமிக்குள் அகப்பட்ட பெட்டியினின்றும் கிடைத்தவள் பிராட்டி என்ற வரலாற்றிற் கியைய, 'வல்லியை யுயிர்த்த நில மங்கை' என்றார். உயிர்த்தல்-தோற்றுவித்தல்; உண்டாக்குதல்; 'பொன்னுயிர்த் தொளிரும் பூணாய்' (கிட்கிந்தா. 377); நிலமங்கை தோற்றுவித்தாள் என்றதற்கேற்ப 'வல்லி' என்றார்.

(பி - ம்.) 1. உயிர்த்து. 2. மெல்லியது.
3. பல்லவமெனத்தொகை; பல்லவமலர்ச்சுடர்: பரப்பினளெனத்தான்; பரப்பிவதெனத்தன்; பரப்பினவெனத்தன்.
4. நல்லடி மலர்ச்சுடர்; தழைந்திட. (24)

இதன்பின் சில பிரதிகளில் காணப்படும் பாடல் ஒன்று:—

பொன்னின்மணி கிண்கிணி சிலம்பொடு புலம்ப
மின்னனைய மேகலைகள் மெல்லென மிழற்றச்
சின்னமலர் கொண்டுசில தோகையர்கள் சூழ
அன்னமென வல்லவென வாமென நடந்தாள்.

1218. தொழுந்தகைய மென்னடை தொலைந்துகளி யன்னம்
எழுந்திடை விழுந்தயர்வ தென்னவய லெங்கும்
கொழுந்துடைய சாமரை குலாவவொர் கலாவம்
வழங்குநிழல் மின்னவரு மஞ்ஞையென வந்தாள்.

களி அன்னம்-களிப்புடைய அன்னப் பறவைகள், (தன்னிடம் நடை கற்க வந்து), தொழும் தகைய-யாவரும் (அதிசயித்து) வணங்குதற்குரிய,மெல் நடை தொலைந்து-மிருதுவான நடைக்குத் தோற்று, எழுந்து-(நில்லாது ஓடிவிடக் கருதி) எழுந்தும், இடை-அவ்விடத்திலேயே, விழுந்து-(தடுமாறி) விழுந்தும், அயர்வது என்ன-வருந்துதல் போல, அயல் எங்கும் - பக்கங்களிலெல்லாம், கொழுந்து உடைய-கொழுந்தின் தன்மை (மென்மை) பொருந்திய, சாமரை குலாவ-சாமரைகள் வீசலுற, கலாவம் வழங்கும் நிழல் மின்ன வரும்-(தன்) தோகை வெளிவிடும் சாயை மின்னும்படி நடந்து வருகிற, ஓர் மஞ்ஞை என-ஒரு மயில்போல, வந்தாள்-நடந்து வந்தாள்.

பிராட்டியை மயிலோடொப்பிட்டுப் பலவிடத்தும் கூறுவர் கம்பர்; அவ்வாறே இங்கும் 'கலாவம் வழங்கும் நிழல் மின்னவரும் மஞ்ஞையென' என்றார். கலாபம் ஓர் இடையணிக்கும் பெயராதலின் பிராட்டிக்கு ஏற்றவாறு இயைத்துக் கூறலாம். சாமரங்கள் மேலே தூக்கியும் கீழே கவிழ்த்தும் வீசப்படுதலை, அன்னங்கள் பிராட்டியின் நடைக்குத் தோற்று எழுந்தும் விழுந்தும் தடுமாறுதலுக்கு ஒப்பிட்டமை தற்குறிப்பேற்றம். கொழுந்து-ஒளியெனலும் ஆம்.

(பி - ம்.) 2. விழுந்திடை யெழுந்தயர்வ; எழுந்திடை விழுந்தயர்வ; கிடந்தயர்வது. 3. கலாபம்.
4. வழங்க நிழல்; வழங்கி நிழல்; வழங்க நிலம்; வழங்கி நிலம்; வழங்கு நிலம்; மன்னவரும்; மன்னிவரும். (25)

1219. மண்முத லனைத்துலகின் மங்கையர்க ளெல்லாம்
கண்மணி யெனத்தகைய கன்னியெழில் காண
அண்ணன்மர பிற்சுட ரருத்தியொடு தானவ்
விண்ணிழிவ தொப்பதொர் விதானநிழல் வந்தாள்.

மண் முதல்-இப்பூமி முதலான, அனைத்து உலகில்-எல்லா உலகங்களிலும் உள்ள, மங்கையர்கள் எல்லாம்-பெண்கள் எல்லாரும், கண் மணி என தகைய-(தம் தம்) கண்ணிற் கருமணியென்று போற்றத்தக்க, கன்னி-கன்னியாகிய சீதாபிராட்டியின், எழில் காண-(நிகரற்ற) பேரழகைத் தான் நேரே காணும்பொருட்டு, அண்ணல் மரபில் சுடர்-ஆண்களிற் சிறந்த இராமபிரானுடைய வமிசத்தில் முதல்வனான சூரியன், அருத்தியொடு-ஆவலோடு, அவ்விண் இழிவது ஒப்பது-அவ் ஆகாயத்தி னின்றும் இறங்கி வருவதை யொப்பதான, ஓர் விதானம் நிழல்-(ஒளிமிக்க) ஒரு மேற்கட்டியின் நிழலிலே, வந்தாள்-நடந்து வந்தாள். தான்: அசை.

பிராட்டியை முன்னர் 'வையக மடந்தை மார்க்கும் நாகர் கோதையர்க்கும் வானத் தெய்வ மங்கையர்க்கும் மேலாம் திலகம்' (1209) என்றதுபோல இங்கும், 'அனைத்துலகில் மங்கையர்களெல் லாம் கண்மணி யெனத்தகைய கன்னி' என்றார். முன்னர் 'மணியணி விதானம்' (1216) என்றதனை விளக்குவதுபோல இங்கே, அவ்விதா னம் சூரியனே நேரில் ஆகாயத்தி னின்றும் இறங்கி வந்தது போன்ற தென அதன் ஒளியைச் சிறப்பித்ததுடன், சூரியன் வருதற்கு ஒரு காரணத்தையுங் கற்பித்தார். சீதையாம் மங்கை மாமணம் காணத் திங்கள் வந்ததாக முன்னர்க் கூறினமையும் (1191) இங்கு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. மண்ணுலக னைத்துலகின்; மங்கையருள்; மங்கையுளர்.
2. கண்ணொளி, கண்ணிழல்: காணு.
3. மரபிற்றொடர்; மரபிற்றிகழ்; வண்ண மரபிற்றிகழ்; வண்ணமரபிற் சுடர்: அருந்ததியெனத்தான்; அருந்ததிதொடாத்தன்; தொடர்ந்தே: அருத்தி தொடரத்தான்: அருத்தி புரியத்தன்.
4. விண்ணழிவ தொத்ததொர்: நிழல் புக்கான். (20)

கம்ப ராமாயணப் பழைய வசனத்துள் இப்பகுதி 'இந்தச் சீதையினுடைய அழகைப் பார்க்கிற நிமித்தம் ஆகாயத்தில் பிரகாசிக்கிற அருந்ததி அநேக நக்ஷத் திரங்களுடனே கூட வந்திருக்கிறது போலப் போட்டிருக்கிற முத்துப் பந்தலின் நிழலில் வந்து சேர்ந்தாள்' என்று காணப்படுகிறது. மூலருமடியிற் காணப்படும் 'அருந்ததியென' என்ற பாடம் இதற்குத் துணை செய்வது போலும்.

1220. கற்றைவிரி பொற்சுடர் பயிற்றுறு கலாபம்
சுற்றுமணி புக்கவிழை மிக்கிடை துவன்றி
விற்றவழ வாண்மிளிர மெய்யணிகண் மின்னச்
சிற்றிடை நுடங்கவொளிர் சீறடி பெயர்த்தாள்.

கற்றை விரி-தொகுதியாகப் பரவுகிற, பொன் சுடர் பயிற்று உறு-பொன்னின் ஒளி அடர்ந்த, கலாபம்-கலாபம் என்னும் இடை யணியும், சுற்றும்-(இடையைச்) சுற்றி அணியப்படுகிற, மணி புக்க இழை-மணிகள் பதித்த (பிற) அணிகலன்களும், மிக்கு-மிகுதியாக, இடை துவன்றி-தம்மிடையே நெருங்கி, வில் தவழ-வில்லைப் போன்ற (வளைந்த) ஒளி வீசவும், வாள் மிளிர-வாள் போலும் ஒளியும் (ஒரு புறம்) வீசவும், மெய்-தன் உடம்பும், அணிகள்-(உடம்பில் அணிந்த) பல ஆபரணங்களும், மின்ன-மின்னல் போலப் பிரகாசிக்கவும், சிறு இடை நுடங்க-மிகச்சிறிதான இடை துவள, ஒளிர் சிறு அடி பெயர்த் தாள்-செவ்வொளி வீசும் தன் சிறிய பாதங்களைப் பெயர்த்து வைத்து நடந்தாள்.

பிராட்டி நடந்து செல்வதை வர்ணிக்கும் இதில், அரசகுமாரி யான அவளுக்குப் பாதுகாப்பாக வில்லும் வாளும் உடன் வந்தன என்ற குறிப்புத் தோன்றும்படி சொற்கிடக்கை அழகுற அமைந்திருத் தல் காண்க.

விற்றவழ வாண்மிளிர: ஒப்பு: 'இழைதொடர் வில்லும்வாளும் இருளொடு மலைய' (சுந்தர. 211).

(பி - ம்.) 1. பொற்கடை மயிர்த்துறு கலாபம்; பொற்பிடை பயிற்றுறு கலாபம்.
2. சுற்றிமணி; சுற்றமணி: புக்கு நிரை; புக்கு நிறை; உக்கவிழை; உற்ற விழை: மொய்த்திடை துவன்ற; மிக்கிழை துவன்ற; மிக்கது துவன்ற.
3. வாணிமிர; வாளொளிர: மெய்யொளிகள்; மென்பணிகள்.
4. நுடங்கவொளி; நுடங்கவிரு; நுடங்கவொரு. (27)

1221. பொன்னினொளி பூவின்வெறி சாந்துபொதி சீதம்
மின்னினிழ லன்னவடன் மேனியது மான
அன்னமு மரம்பையரு மாரமிழ்து நாண
மன்னவை யிருந்தமணி மண்டப மணைந்தாள்.

பொன்னின் ஒளி-பொன்னின் ஒளியும், பூவின் வெறி-பூவின் மணமும், சாந்து பொதி சீதம்-சந்தனத்தில் உள்ள தண்மையும், மின்னின் நிழல்-மின்னலின் சாயையும், அன்னவள் தன் மேனி-அப் பிராட்டியின் திருமேனியிற் பொருந்திய, அது-அவ்வத் தன்மையை, மான-ஒத்திருக்க, அன்னமும்-(நடையால்) அன்னப்பறவைகளும், அரம்பையரும்-(அழகால்) அரம்பை மாதரும், ஆர் அமிழ்தும்-(சொல்லின் இனிமையால்) அரிய தேவாமிர்தமும், நாண-வெட்கும் படி, (சென்று), மன் அவை இருந்த-அரசர் சபை கூடியிருந்த, மணி மண்டபம் அணைந்தாள் - இரத்தின கசிதமான மண்டபத்தை அடைந்தாள்.

'நங்கையும் நடக்கலுற்றாள்' (1216)என்று தொடங்கி, அவள் வந்த சிறப்பை இடையே நான்கு பாடல்களால் வருணித்து, இங்கே 'மண்டபம் அடைந்தாள்' என முடித்தார்.

பொன்னின் ஒளி பிராட்டியின் தேக காந்தியையும், பூவின் மணம் அவள் திருமேனியில் இயற்கையாகப் பொருந்திய நறுமணத் தையும், சந்தனத்தின் தண்மை அவளுடலின் தண்மையையும், மின்னல் சாயை அவள் மேனியின் சாயலையும் முறையே ஒத்திருந்தன என்க. உத்தம மங்கையரின் உடம்பில் செண்பகப்பூவின் மணம் இயற்கையாகவே பொருந்தி யிருக்குமென்ப. 81-குறிப்புப் பார்க்க. மான-இலச்சை கொள்ள என்றலும் ஆம். மான-லச்சிப்ப; தக்க. 34-உரை.

'பொன்னினொளி பூவின் வெறி': ஒப்பு: 'பொன்னின்சோதி பூவினுற்றம்' (578).

(பி - ம்.) 1. மின்ன வெறி; சாந்து பொழி; சந்து பொழி; சந்து பொதி.
2. மின்னி னெழில்; மின்னினொளி நன்மணியின்; மேனியொளிமான; மேனியொளி வீச.
3. ஆர்கவிபு நாண. 4. அடைந்தாள். (28)

பிராட்டியைக் கண்ட அனைவரும் திகைத்தல்

1222. சமைத்தவரை யின்மைமறை தானுமென லாமச்
சுமைத்திரண் முலைத்தெரிவை தூய்வடிவு கண்டோர்
அமைத்திரள்கொ டோளியரு மாடவரு மெல்லாம்
இமைத்தில ருயிர்த்திலர்கள் சித்திர மெனத்தாம்.

சமைத்தவரை இன்மை-(தன்னைப்) படைத்தார் எவரும் இல்லாமையால், தானும் மறை எனல் ஆம்-தானும் (அத்தகைய) வேதமே யென்று சொல்லத்தக்க, சுமை-பாரமான, திரள் முலை-திரண்ட தனங்களையுடைய, தெரிவை-பிராட்டியினது, தூய் வடிவு கண்டார்-தூய திருமேனியைப் பார்த்தவர்களான, அமை திரள் கொள் தோளியரும்-மூங்கிலின் திரட்சியைக் கொண்ட (அழகிய) தோள்களையுடைய பெண்களும், ஆடவரும்-ஆண்களும் (ஆகிய), எல்லாம்-எல்லாரும், (வியப்பினால்), சித்திரம் என-(அந்த மண்டபத்தில் எழுதிய) சித்திரங்களைப்போல, இமைத்திலர்-கண்களை இமையாதவர்களும், உயிர்த்து இலர்கள்-மூச்சுவிடாதவர்களும் (ஆயினர்). தாம்: அசை.

சபா மண்டபத்தினுள்ளே பிராட்டி வந்தவுடன், அவளைக் கண்ட அனைவரும், வியப்பினால் திகைத்துச் செயலற்றவராயினர் என்க.

அவள் உலகுக்கெல்லாம் தாயாதலின், அவள் வடிவு கண்டோர் ஆடவராயினும் வியப்பில் ஆழ்தலன்றிக் காதலுணர்ச்சி தோன்றப் பெறார் என்பதுபட, 'தூய்வடிவு' என்றார். மகளிரும் அத்தெய்விக வடிவழகில் மயங்கினராதலின், இருபாலாரும் சித்திர மொத்தன ரென்றார்; 1213-குறிப்புப் பார்க்க. வேதம் 'அபௌருஷேயம் - 'ஒருவரால் ஆக்கப்படாதது' - என்பர். பிராட்டியும் (பிற மகளிர்போலப்) பிரமன் படைப்பினுட்படாமல், தன் இச்சையால் தானே அயோநிஜையாய் வந்து சனகன் மனை சேர்ந்தவளாதலின் வேதத்தை உவமித்தார். சமைத்தவரை: ஐ, சாரியை.

(பி - ம்.) 1. எனலாயச். 2 கண்டார்.
3. திரள்கடோளியரும்; திரள்கொ டோழியரும்.
4. உயிர்த்தனர்கள்: உயிர்த்திலர்பல்; விழித்திலர்கள்: ஓவியமெனத் தாம்; எனத்தான். (29)

பிராட்டியைக் கண்ட இராமபிரான் நிலைமை

1223. அன்னவளை யல்லளென வாமென வயிர்ப்பான்
கன்னியமிழ் தத்தையெதிர் கண்டகடல் வண்ணன்
உன்னுயிர் நிலைப்பதொ ருத்தியொ டுழைந்தாண்
டின்னமு தெழக்களிகொ ளிந்திரனை யொத்தான்.

கன்னி அமிழ்தத்தை-(மண்டபத்தினுள் வந்த) அமிர்தமயமான அக்கன்னியை, (பிராட்டியை), எதிர்கண்ட-நேரே பார்த்த,

கடல் வண்ணன்-கடல் போலும் நீல மேனியனான இராமபிரான், அன்னவனே-அவளே, (இவ்வாறு காணு முன்), அல்லள் என-(தான் முன்னே கன்னிமாடத்தில் கண்டு காதல் கொண்டவள்) அல்லளோ என்றும், ஆம் என-அவள்தானோ வென்றும், அயிர்ப்பான்-ஐயங் கொண்டிருந்தவன், (கண்டபின்), உன்(னு) உயிர்-(உயர்வாகக்) கருதப்படுகிற உயிர், நிலைப்பது ஓர் அருத்தியொடு-(நெடுநாள்) நிலைத்தலான ஓர் ஆசையுடன், உழைத்து-(அமிர்தத்தை அடையும் பொருட்டு) மிக வருந்தி (ப்பாற்கடலைக் கடைந்து), ஆண்டு-அப்பாற் கடலில், அமுது எழ-தேவாமிர்தம் எழுந்தவுடன், களிகொள்-மிக்க மகிழ்ச்சியுற்ற, இந்திரனை ஒத்தான்-தேவேந்திரனைப் போலானான்.

இராமபிரான், தான் வில்லை முறித்ததனால் தன் நாயகியாதற் குரிய சீதையென்பவள், முன்னே தான் கன்னிமாடத்தில் கண்ட போது தன் மனங்கவர்ந்த அவள்தானோ? அன்றி வேறு யாரோ? என்ற ஐயத்தால் மனங்கலங்கியிருந்து, இப்போது நேரே கண்ட வுடன் தெளிந்து பெருமகிழ்வுற்றான் என்றவாறு. இதற்கு, இறப் பின்றி நெடுங்காலம் இருக்கச் செய்யும் அமிர்தத்தைப் பெறும் பொருட்டு மிக வருந்தி உழைத்துப் பாற்கடலைக் கடைந்து மனஞ் சலித்த இந்திரன், அவ்வமிர்தம் எழுந்தது கண்டவுடன் அடைந்த மகிழ்ச்சியை ஒப்புக் கூறினார். தேவர்களுக்குத் தலைமையும் அசுரரை அழிக்கும் முயற்சியும் உடைமையால் இராமபிரானுக்கு இந்திரனை யும், பாற்கடலினின்றும் தோன்றி, யாவராலும் விரும்பப்படும் திருமகளாதலின் பிராட்டிக்கு அமுதத்தையும் ஒப்புக் கூறினார். கன்னியமிழ்தம்-கன்னியர் தொகுதியான பாற்கடலினின்றும் கடைந் தெடுத்த அமிழ்தம் என்றலுமாம். தேவேந்திரன் கடலமுதம் பெற்றான்; இவ்விந்திரன் கன்னியமுதம் பெற்றான்.

பிராட்டி தன் திருமணத்துக்குக் காரணமான வில்லை முறித்த வன் முன்னே (கன்னிமாடத்தினருகில்) தன் மனங் கவர்ந்த அவனோ அன்றி வேறு யாரோ என்ற ஐயங்கொண்டிருந்தமையை முன்னே கூறி, இங்கே இராமபிரான் செய்தியையும் அதற்கேற்பக் கூறுகின்றார். மேலே, பிராட்டியைத் தேடும் பொருட்டு அனுப்பப்பெற்ற அனும னிடம், பல அடையாளங்களைக் கூறிய இராமபிரான், 'வான் மின்னி ளங்கொடியின் வந்தாளையன், றூழியா னரசவைக் கண்டதும் அறை குவாய்' (கிட்கிந்தா. 786) என இந்நிகழ்ச்சியையுங் கூறியதாக அமைத்துள்ளது காணத்தக்கது. முதலில் ஓரிடத்துக் கூறிய ஒரு பொருளை மறவாது மனத்துள்வைத்து, இடம் நேரும் போதெல்லாம் அதனைப் பொருத்திக் காட்டும் கம்பரது தனி ஆற்றல் வியத்தற் குரியது. இதனை இக்காவியத்துட் பலவிடத்துங் காணலாம்.

(பி - ம்.) 1. அல்லவென; அன்னளென. 2. கன்னிதன் முகத்தையெதிர். 3. இன்னுயிர்; தன்னுயிர்: அலைப்பதொர்: அருத்திகொடு; நிலைப்ப தொருதன்மையின்; உளைத்தாண்டு; உறுத்தாண்டு; இழைத்தாண்டு; உழைத்தான். 4. இன்னமிழ்தெனக்; இந்திரனும். (30)

1224. நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமுது பில்குற்
றறத்தின் விளை வொத்துமுக டுந்தியரு குய்க்கும்
நிறத்துவ ரிதழ்க்குயி னினைப்பினிடை யல்லால்
புறத்துமுள ளோவென மனத்தொடு புகன்றான்.

நறத்து உறை-தேனினிடத்தே தங்கிய, முதிர்ச்சி உறு நல் அமுது-சுவை முதிர்ச்சியுற்று விளைந்த நல்ல அமிர்தத்தை, பில்கு உற்று-சிந்திக்கொண்டு, அறத்தின் விளைவு ஒத்து-(முன் செய்த) புண்ணியப்பயன் போன்று, முகடு உந்தி அருகு உய்க்கும்-உச்சியி னின்றும் கொணர்ந்து அருகே சேர்க்கப்பெற்ற, நிறம்-நல்ல செந் நிறம் பொருந்திய, துவர் இதழ்-பவளம் போலும் வாயினையும், குயில்-குயில் போலும் இனிய குரலையுமுடைய இவள், நினைப்பின் இடை அல்லால்-என் நெஞ்சினுள் இருத்தலை யன்றி, புறத்தும் உளளோ-வெளியேயும் இருக்கின்றாளோ ! என-என்று, மனத்தொடு புகன்றான்-தன் மனத்துடனே சொல்லிக்கொண்டான் (இராம பிரான்).

பிராட்டியை இங்கே கண்டு மகிழ்ந்த இராமபிரான், 'இத் துணைக் காலமாக என் நெஞ்சினுள் இருக்கும் இவள் வெளியேயும் உருக்கொண்டு வந்துவிட்டாளோ !' என வியந்ததாகக் கூறுதலின், கன்னிமாடத்தே முதற்கண் கண்ட காட்சி முதலாக அப்பிரான் எப்போதும் அவள் நினைவாகவே யிருந்தமை பெறப்படும்; எல்லா வகையாலும் ஒத்த தலைவன் தலைவியர் கூட்டம் அறத்தின் விளைவேயென் பராகலின், 'அறத்தின் விளைவொத்து' என்றார். 'சொற்பா லமுதிவள் யான்சுவை யென்னத் துணிந்திங்ஙனே, நற்பால் வினைத் தெய்வம் தந்தின்று' (திருக். 8) என்பதும் ஈண்டு ஒப்பிடத்தகும். முகடு-உச்சி; இங்கே கன்னிமாடத்தின் மேலிடத்தைக் குறிக்கும். 'முகடுந்தி அருகுய்க்கும்' என்றதில், 'கைக்கெட்டாத ஒருபொருள் தானே வந்து கிட்டியது' என்ற குறிப்புத் தோற்றுதல் காணலாம். நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமுது-தேனொடு கலந்த அமிர்தம்; அமுது-பாலும் ஆம்; இது பிராட்டியின் சொல்லினிமையைக் குறிப்பது; அவள் திருமேனி யெழிலுக்கும் பொருந்தும். 'அன்றம் மாடத் தும்பரளிக் கும் அமுதன்னாள்' (582) என்றார் முன்னும். குயில், ஆகுபெயர்; குயில் என்றதற்கேற்ப 'உச்சியிலிருந்து கீழே வந்து' என்றார். 'மனத் தொடு புகன்றான்' என்றதில், 'நெஞ்சொடு கிளத்தல்' என்னும் அகப் பொருட்டுறைக் குறிப்புத் தோற்றுதல் காண்க.

நறத்து: நற என்பது அத்துச்சாரியை பெற்று நின்றது.

நறத்துறை முதிர்ச்சியுறு நல்லமுது: ஒப்பு: 'தேனிற்பாலென' (சீவக. 1761); 'ஆன்முலைப் பிறந்த வானிற வமிர்தம், மலைப்பெய் நெய்யொடு தலைப்பெய் தாங்கு' (பெருங். 2. 8: 11-2); 'பாலொடு தேன்கலந்தற்றே') குறள். 1121).

(பி - ம்.) 1. நறத்திறம்; நறைத்திறம்: முதிர்ச்சியுற; முயற்சியுற: நல்லமிழ்து: பில்கும்: மல்குற்று.
2. ஒத்து நலமுந்தமுதுகுக்கும்; முகமுந்தமுதுகுக்கும்; அமுதமேந்தியருகாகும்; முகடுந்தி யருகாகும்; முகடுந்திய முதூறும்: விளைவொத்தருள் கடுந்துயர் விளைத்த. 3. நிறைத்துவர்; நிலைக்கணிடை.
4. உளதோவென; உளவோவென: மனத்திடை. (31)

சில பிரதிகளில் இதனையடுத்து 'நைவள நவிற்றுமொழி', 'மாதவரை முற்கொள' என்ற பாடல்களும் அவற்றின்பின் 'எங்கள் செய்தவத்தினில்' என்பதுமாக வரிசை காணப்படுகின்றது.

## வசிட்ட முனிவன் மகிழ்ச்சி

1225. எங்கள்செய் தவத்தினி லிராமனென வந்தோன்
சங்கினெடு சக்கர முடைத்தனி முதற்பேர்
அங்கணர சாதலினவ் வல்லிமலர் புல்லும்
மங்கையிவ ளாமென வசிட்டன்மகிழ் வுற்றான்.

வசிட்டன்-வசிட்ட முனிவன், (பிராட்டியைக் கண்டு), எங்கள் செய்தவத்தினில்-என் போன்றவர்கள் செய்த தவத்தினால், இராமன் என வந்தோன்-இராமனாக அவதரித்த மூர்த்தி, சங்கினெடு சக்கரம் உடை(ய)-சங்கும் சக்கரமுமாகிய படைகளை யேந்திய, தனி முதல்-ஒப்பற்ற முதல்வனான, பேர் அம் கண் அரசு ஆதலின்-பெரிய அழகிய கண்களையுடைய உலகுக்கெல்லாம் இறைவனான திருமாலேயாதலின், இவள்-இச்சிதை, அல்லி மலர் புல்லும் அ மங்கை ஆம் என-தாமரை மலரில் வீற்றிருக்கும் அத்திருமகளேயாவள் என்று கருதி, மகிழ்வு உற்றான்-(மனத்துள்) மகிழ்ச்சி மிக்கான்.

வசிட்ட முனிவர் முக்காலமும் உணரவல்லவராய், இராமபிரானது திருஅவதார வுண்மையையும் உணர்ந்தவராதலால், 'முனிவர் துயர் துடைக்கும் பொருட்டுச் சக்கரவர்த்தி திருக்குமாரனாகி வந்தவன் அப்பரந்தாமனே; அதற்கேற்ப அவன் தேவியாதற்குரியவளாகத் தோன்றியவளும் அத்திருமகளே' என்று தனக்குட் கருதி மகிழ்ந்தனர் என்க. இடம் வாய்க்கும் போதெல்லாம் இராமபிரானும் சீதா பிராட்டியுமாகிய இருவருடைய தெய்வத் தன்மையையும் நினைவு கூர்ந்து போற்றும் கம்பநாடர், இங்கும் வசிட்ட முனிவரது உட்கோளாக அதனைக்கூறி மகிழ்கின்றார். பிராட்டியின் மேன்மையை இங்கே அடுத்தடுத்து 1226-29 பாடல்களிலும் புலப்படுத்துதல்

காணலாம். இராமவதாரம், தேவர், முனிவர் ஆகியோர்க்கு அரக்கரால் உண்டான துயர்தீர்த்து உய்வித்தற் பொருட்டே நிகழ்ந்ததாகலின் 'எங்கள் செய்தவத்தினி விராமனென வந்தோன்' என வசிட்ட முனிவர் கருதினரெனக் குறிப்பித்தார். இதன் விரிவை அகத்தியப் படலத்துட் காண்க. 'தனிமுதல்' என்பதன் விளக்கம் 'உலகம் யாவையும்' என்ற முதற் பாடலிலேயே காணலாம். அல்லி-தாமரை: 'அல்லிசே ரணங்கிற் கணங்கன்னவள்', 'அல்லியுட் பாவை யன்னாள்' (சீவக. *162, 1505*); 'அல்லி மாதர் புல்க' (பெரியதிரு. *1. 7: 9*). கண்-கண்ணோட்டமும் ஆம். பிராட்டி திருமகள் எனல்: *557, 697*; அயோத். *749*; யுத்த. *1619*. இருவரையும் இணைத்துக் கூறல்: *594*; *1317*; அயோத். *519*; சுந்தர. *395*.

(பி - ம்.) 1. தவத்தினில்; வந்தான்; வந்த. 2. சக்கர முதற்றனி.
3. அரசாதலினிவ்; அரசாதலிலவ்; புல்கும். (32)

### சக்கரவர்த்தியின் மகிழ்ச்சி

1226. துன்றுபுரி கோதையெழில் கண்டுலகு சூழ்வந்
தொன்றுபுரி கோலொடு தனித்திகிரி யுய்ப்பான்
என்றுமுல கேழுமர செய்தியுள னேனும்
இன்றுதிரு வெய்திய தெனக்கென நினைத்தான்.

உலகு சூழ்வந்து-உலகம் முழுதும் சுற்றிவந்து, ஒன்று புரி கோலொடு - (நட்பு, பகை, நொதுமல் என்னும் வேறுபாடின்றி) ஒருதன்மையாக்கும் செங்கோலுடனே, தனி திகிரி உய்ப்பான்-(பொது நீங்கிய) ஆஞ்ஞா சக்கரத்தை (உலக முழுதும்) செலுத்துபவனான தசரத சக்கரவர்த்தி, துன்று புரி கோதை-அடர்ந்த நெறித்த கூந்தலையுடைய சீதா பிராட்டியின், எழில் கண்டு - (சாமுத்திரிகாலட்சண முழுதும் அமைந்த) பேரழகினைக் கண்டு, உலகு ஏழும்-ஏழுலகங்களையும், என்றும்-எப்போதும் (நெடுங்காலமாக), அரசு எய்தி உளனேனும்-அரசாளுதலை நான் பெற்றிருப்பினும், எனக்கு திரு எய்தியது இன்று என-எனக்கு நிறை செல்வம் வந்தடைந்தது இன்றேயாம் என்று, நினைத்தான்-தன் மனத்தினுள் எண்ணி மகிழ்ந்தான்.

பிராட்டியின் வியக்கத்தக்க பேரெழில் கண்ட தசரத மன்னன் செல்வத்துக்குரியளான திருமகளே தனக்கு அருள் செய்ய இம்மணுட்டுப் பெண்ணான சீதையின் வடிவமாக வந்துள்ளாள் எனக் கருதிப் பெருமகிழ்ச்சியுற்றான் என்றவாறு. இதிலும் பிராட்டியின் தெய்வத் தன்மையைக் குறிப்பாகக் கூறுகின்றார் ஆசிரியர். உலகு ஏழு-ஏழு தீவுகளாகவுள்ள உலகம்.

(பி - ம்.) 2. திகிரி யொப்பான். 3. எய்தியுளனேலும்; எய்திடினுமன்னும்.
4. எய்தியதிதென்னவயம்; எய்தியது வென்னவயம்; எய்தியநிதையமிலை; எய்தியது வென்றவமது; எய்தியது மெய்த்தவமிது; என்றான்: எமக்கென நினைத்தான். (33)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

### அவையினர் செயல்

1227. நைவள நவிற்றுமொழி நண்ணவர லோடும்
வையநுகர் கொற்றவனு மாதவரு மல்லார்
கைகடலை புக்கன கருத்துளவை யெல்லாம்
தெய்வமென வுற்றவுடல் சிந்தைவச மன்றே.

நைவளம் நவிற்றும் மொழி-நைவளம் என்னும் பண்ணைப் போல இனிமையாகப் பேசும் சொற்களையுடைய பிராட்டி, நண்ண வரலோடும்-(தம்மை) அணுக வந்தவுடனே, (அச்சபையில் இருந்த வர்களுக்குள்ளே), வையம் நுகர் கொற்றவனும்-உலக முழுதும் இன்புறுதற்குக் காரணமான சிறப்புடைய இராமபிரானும், மாதவரும் அல்லார்-வசிட்டனும், கோசிகனும் முதலான பெரிய தவச் சிரேட்டரும் அல்லாத மற்றவர்களுடைய, கைகள்—, தலை புக்கன-(தம்மை யறியாமலே) தலைமேற் சென்று குவிந்தன; (ஏனெனில்). கருத்து உள் அவை எல்லாம்-அவர்களுடைய சித்தம் முதலான உட்கருவிகள் (அந்தக் கரணங்கள்) எல்லாம், தெய்வம் என உற்றன-(பிராட்டியைத்) தெய்வமென்று கருதின; உடல் சிந்தை வசம் அன்றே-(சடமான) உடம்பு (அதனை இயக்கும்) மனத்தின் வசப் பட்டதேயன்றே !

சபையில் இருந்த பலர்க்கும், பிராட்டி தம் அருகில் நடந்து வரும்போது, அவள் தெய்வமே என்ற ஓர் உணர்ச்சி தம்மையறியா மலே உண்டாக, அதனால் அவர்களுடைய கைகளும் தாமே தலைமேற் சென்று குவியலாயின எனப் பிராட்டியின் பெருமையை உயர்த்து கின்றார் இங்கே. இராமன் என்ற பெயர் 'ரமிக்கச் செய்பவன்' என்ற பொருளுடைமையாலும், உலகம் துன்பம் நீங்கி இன்பமுறச் செய்பவன் அப்பிரானுதலாலும் 'வைய நுகர் கொற்றவன்' என்றார். இத்தொடருக்கு, உலகத்தை யெல்லாம் ஒரு காலத்தில் உண்ட திருமாலின் அம்சமான இராமன் என்றும், உலக முழுதும் ஆளும் சக்கரவர்த்தி யான தசரதன் என்றும் பொருள் கூறினர் பிறர். இன்னும் வையம் என்பதனை விதேகநாடு எனக்கொண்டு, அதனை யாளும் சனகமகா ராசன் எனவும் கூறலாம். எவ்வாறாயினும் இவ்விடம் சற்று இடர்ப் பாடுடையதே. அல்லார் என்பதற்கு, இவர்களல்லாத வருட் பெரும் பாலார் எனக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். பிராட்டியைக் கண்டவுடன் பலர் கைகள் தலைபுக்கன என்ற சிறப்புப் பொருளை 'உடல் சிந்தைவச மன்றே' என்ற பொதுப் பொருளாலே சமர்த் தித்தார்.

நைவளம்-நட்டபாடை யென்னும் பண் என்பர். 868-குறிப் புப் பார்க்க.

(பி - ம்.) 2. மையதுவல் கொற்றவரும்: மாதவரு மல்லால்; மாதவனு மல்லார்; மாதவரு மெல்லாம்.
3. கைகடலை புக்கது; கைதலை குவித்தனர்: கருத்துளது மேலாம்; கருத்துளது வெல்லாம்; கருத்துளது மெல்லாம்; கருத்துளக மெல்லாம்.
4. தெய்வமென வுட்டெளிதல் சிந்தைவரு மென்றாள். (34)

## பிராட்டியின் செயல்

1228. மாதவரை முற்கொள வணங்கிநெடு மன்னன்
பாதமல ரைத்தொழுது கண்கள்பனி பாயும்
தாதையரு கிட்டதவி சிற்றனி யிருந்தாள்
போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்.

போதினை வெறுத்து-(தனக்குஇயல்பாகவுள்ள இருப்பிடமான) செந்தாமரைப்பூவை வெறுத்து நீங்கி, அரசர் பொன்மனைபுகுந்தாள்-அரசரது அழகிய அரண்மனையிலே வந்து சேர்ந்த (திருமகளான) பிராட்டி, மா தவரை-(சபையில்இருந்த) வசிட்டன் முதலான பெருந் தவசியரை, முன்கொள வணங்கி-(முறைப்படி)முன்னாக நமஸ்கரித்து, (அதன்பின்),நெடுமன்னன் பா தமலரை தொழுது-சக்கரவர்த்தியான தசரதனுடைய மலர் போன்ற பாதங்களை வணங்கி, கண்கள் பனி பாயும் - கண்களினின்றும் இன்பக்கண்ணீர் பெருக அமர்ந்திருந்த, தாதை அருகு இட்ட தவிசில்-(தன்) தந்தையான சனகமகாராசன் பக்கத்தில் (தனக்கென்று)இடப்பெற்ற ஆசனத்தில்,தனி இருந்தாள்-சிறப்பாக வீற்றிருந்தாள்.

பெரிய பிராட்டி, தன் தலைவன் செய்கைக் கேற்பத் தானும் மானிட மகளாகி வந்துள்ளமையால், அம்முறையில், தான் வணங்குதற்குரியவர்களை வணங்கினள் என்க. பரந்தாமன் பாற்கடற் பள்ளி நீங்கிப் பார்மன்னன் புதல்வனாக வந்து தோன்றிய வளவிலே, பெரியபிராட்டியும் தன் போதினை வெறுத்து நீங்கி அரண்மனை வந்து புகுந்திட்டாள். இராமபிரானுக்குக் கௌசல்யாதேவியின் திருவயிறு பெரிதும் உகப்பானதுபோலப் பிராட்டிக்கும் சனகனது அரண்மனை உகப் பாயிற்று; ஆதலின் அதனைப் பொன்மனை என்றார். இங்குச் சீதையாக வந்துள்ள இந்நிலைக்கேற்ப, அவையில் வசிட்டர், கோசிகர் சதாநந்தர் போன்ற முனிவரை முதலிலும், அடுத்து முறைப்படி தசரத மன்னனையும் வணங்கினள். பிராட்டியின் மேன்மை பற்றிய 1226-ஆம் பாட்டின் விசேடக் குறிப்பும் காண்க.

'போதினை....புகுந்தாள்': ஒப்பு. 'தூயமலர்ப்பங்கயப் போதைத் துறந்தெம் மனையிற் புகுந்திருவே' (நைடத. அன்னத்தைத். 126).

(பி - ம்.) 1. மாதவனை: முன்கொள; முற்செல: முடிமன்னன்.
2. மலர்கைத் தொழுது; பனிசோரும்.
3. தவிசிற்கடிது: தவிசின்னினிது. 4 அரசு பொன்னகர். (35)

## கௌசிக முனிவன் உட்கோள்

1229. அச்சிலை யுணர்ந்தமுத லந்தண னினைந்தான்
பச்சிலையை யொத்தபடி வத்தடலி ராமன்
நச்சிலை யயிற்கண்மலர் நங்கையிவ ளென்றால்
இச்சிலை கிடக்கமலை யேழையுமி றானே.

அ சிலை உணர்ந்த-(பிராட்டி திருமேனியின்) அத்தெய்விகப் பேரொளியை (நேரிற் கண்டு) அறிந்த, முதல் அந்தணன்-தலைமை யுடைய கௌசிக முனிவன், நச்சு-(யாவரும்) விரும்பத்தக்க, இலை அயில் கண்-இலை வடிவான வேல் போன்ற கண்களையுடைய, மலர் நங்கை இவள் என்றால்-தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளே இவளானால், பச்சிலையை ஒத்த படிவத்து-(தமாலம் எனப்படும்) பச்சிலையைப் போன்ற திருமேனியுடைய, அடல் இராமன்-வலிமை மிக்க இராமன், (இவள் பொருட்டாக), இ சிலை கிடக்க-(இவன் முறித்த) இந்த மலைவில் ஒன்று கிடக்கட்டும், மலை ஏழையும்-இன்னும் ஏழு மலைகளையும் (வேண்டுமாயினும்), இறானே-முறிக்கமாட்டானோ! (என்று), நினைந்தான்-தன் மனத்துள் எண்ணினான்.

என்று என ஒரு சொல் வருவிக்க, 'மலை ஏழையும்' என்றது, அஷ்டகுல பர்வதங்களுள் ஒன்றே சிவதனுசாதலால், அதுபோக, எஞ்சிய ஏழையும் குறித்ததெனலாம்.

பிராட்டியின் சிறப்புக்களை நேரே கண்டறிந்த கௌசிக முனிவன், 'இவளை மனைவியாகப்பெறும் பேறு வாய்த்தவன், அதன் பொருட்டுப் பணயமாக எத்தகைய அருஞ் செயலையும் செய்து முடித்தல் கூடும்' எனக் கருதி வியந்தான் என்க. முதலில் அரசனாயிருந்து, மிகப்பல இடையூறுகளை வென்று 'பிரம விருஷி' என்னும் முதன்மை பெற்றமையின் கௌசிக முனிவனை 'முதலந்தணன்' என்றார். அச்சிலை உணர்ந்த-(முன்பு இராமபிரான் முறித்த) அவ்வில்லின் சிறப்புக்களை யுணர்ந்த என்றலும் ஆம். நச்சிலை=நஞ்சு+இலை எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும். கிடக்க-கிடக்கட்டும்; ஒரு பொருளன்று என்பதாம்; 'இச்சேனை கிடக்கிடு' (அயோத். 1023); சிலை-ஒளி: 'சிலையிலங்கு மணிமாடத்து' (திவ். பெரியதிரு. 3. 9: 4).

(பி - ம்.) 1. அச்செவ நினைத்த, நினைந்த; இருந்த; அந்தண னிருந்தான்: நினைத்தான்: உணர்ந்தான்; அச்சிலை யுணர்ந்தனன வந்தணன் வியந்தான்.
2. பச்சைமலை; பச்சை முகில்: வடிவத்து.
3. நச்சுடை; நச்சடை: வடிக்கண் மலர்: வடிக்கண் மட; வடித்தமலர்; நச்சிலை யயிற்கண்மட.
4. கிடக்க வரை; இருக்கவரை; இருக்க மலை. (36)

### பிராட்டி தன் ஐயம் நீங்குதல்

1230. எய்யவில் வளைத்தது மிறுத்தது முரைத்தும்
மெய்விளை யிடத்துமுத லையம்விட லுற்ருள்
ஐயனை யகத்துவடி வேயல புறத்தும்
கைவளை திருத்துபு கடைக்கணி னுணர்ந்தாள்.

(பிராட்டி), எய்ய-அம்பெய்யும்படி, வில் வளைத்ததும்-(இளைஞ னை வீரனெருவன் பணயமான) பெருவில்லை (எடுத்து) வளைத்த தையும், இறுத்ததும்-(அவ்வாறு வளைக்கும் போதே) அதனை முறித்து விட்டதையும், உரைத்தும்-(சிலர் தனக்குச்) சொல்லியிருப்பினும், முதல் ஐயம்-முன்னே தனக்கிருந்த ஐயத்தை, மெய்விளைவு இடத்து-உண்மை நேரே விளங்கும் இப்போது, விடல் உற்ருள்-விடுபவளாய், ஐயனை-இராமபிரானை, அகத்து வடிவே அல(து)-தன் மனத்தினுள் எப்போதும் தங்கியிருக்கும் அத்திரு வடிவிலே காணுதலோடு, புறத் தும்-வெளியேயும், கை வளை திருத்துபு-கைவளையல்களை நேர்செய்து கொண்டு, (நேர் செய்யும் வியாஜமாக), கடை கண்ணின்-தன் கடைக்கண்ணல், உணர்ந்தாள்-நன்கு கண்டறிந்தாள்.

முனிவனேடு வந்த ரகுவீரனைக் கன்னிமாடத்தின் மேலிருந்து தான் கண்டது முதல், இடைவிடாமல் அவன் நினைவாகவேயுள்ள பிராட்டிக்கு, அவன் திருவுருவம் மனத்தில் நன்கு பதிந்துவிட்டமை யின், அதனை இதுகாறும் அகக்கண்ணுற் கண்டுவந்தவள், இப்போது புறக்கண்ணுலும் நேரே காண்பாளாயினள்; அவ்வாறு காணுதற்கு, நேரே நிமிர்ந்து பார்த்தல் நாணுடை நங்கையர்க்கியல்பன்ருதலின், கைவளைகளைத் திருத்திக் கொள்ளும் வியாஜமாகக் கடைக்கண்ணுலே பார்த்து மகிழ்ந்தனள். 'முதல் ஐயம்' என்றது, 'வில் முறித்த வீரன் தான் முன்பு கண்டு காதல் கொண்ட அவனேயோ அன்றி வேருே' என்பது;(1199-பார்க்க).பிராட்டியை நேரேஇச்சபையில் காணுமுன் இராமபிரானுக்கும் இத்தகைய ஐயம் நிகழ்ந்தமையை முன்னே (1223) கூறினுர். எனவே, இவ்விருவரும் ஒருவரை யொருவர் நேரே கண்ட பின்னரே தத்தம் மனத்திலிருந்த ஐயம் நீங்கப்பெற்று மகிழ்ந் தனர் என்க. 'கைவளை திருத்துபு கடைக்கணின் உணர்ந்தாள்' என்ற அழகு சிந்திந்து மகிழ்தற்பாலது.

(பி - ம்.) 1. எய்வளவில்; எய்வளைவில்: ஏற்றதும்: இற்றதும்; உணர்ந்தும்; உணர்ந் தாள்.
2. மெய்வினை முடித்து; விளைவிடத்து; உய்விளையிடத்தும்: உளவையம்; உலையையம்: அறலுற்ருள்.
3. அகத்துள் வடிவேயல; அகத்தினிலுணர்ந்தயல்.
4. திருத்தினள்; கடைக்கணில்.

## பிராட்டி மகிழ்ச்சியால் பூரித்தல்

1231. கருங்கடை நெடுங்கணொளி யாறுநிறை கண்ணப்
பெருங்கடலின் மண்டவுயிர் பெற்றினி துயிர்க்கும்
அருங்கல னணங்கரசி யாரமிழ் தனைத்தும்
ஒருங்குட னருந்தினரை யொத்துட றடித்தாள்.

கருநெடு கடைகண் ஒளி ஆறு-(தனது) கரிய நெடிய கடைக் கண் பார்வையாகிய நதி, நிறை-(பேரழகாகிய வெள்ளம்) நிறைந்த, கண்ணன் பெரு கடலில்-(யாவர்க்கும்) கண்ணனுன இராமபிரானென்னும் பெரிய கடலிலே, மண்ட-விரைந்து பாய்ந்ததனுல், உயிர் பெற்று-(முன்பு ஊசலாடிய) உயிர் நிலைக்கப்பெற்று, இனிது உயிர்க்கும்-(மகிழ்ச்சியால்) இனிதாக மூச்சுவிட்ட, அரு கலன்-கற்பின் அருங்கலமும், அணங்கு அரசி-பெண்ணரசியுமான பிராட்டி, ஆர் அமிழ்து அனைத்தும்-(பாற்கடலி னின்றும் பெற்ற) அரிய அமிழ்தம் முழுவதையும், ஒருங்கு உடன்-ஒன்ருக, (தாம்ஒருவராகவே), அருந்தினரை ஒத்து-உண்டுவிட்டவரைப்போல, உடல் தடித்தாள்-உடம்பு பூரித்தாள்.

சிறிதளவு உண்டாலும், உண்டவர்க்கு வலிமையும் நீண்ட ஆயுளும் தரவல்லதாய், மிகப்பலர் உண்ணத்தக்க பேரளவுள்ள அரிய அமிழ்தத்தை, ஒருவரே உண்டால் அவ்வாறு உண்டவர் அடையும் மகிழ்ச்சியினும் மிக்க மகிழ்ச்சியுடையவளானுள் பிராட்டி என்கிருர். உடல் தடித்தாள் என்றது, உடம்பு பூரித்ததுடன் புதியதொரு வலிமையும் பெற்ருள் என்றவாறு. தேவர்கள் மிகவும் வருந்திப் பாற் கடலைக் கடைந்து அமுதம் பெற்றது போலன்றி. எளிதாகக் கண்பார் வையாலேயே இராமபிரானுகிய கடலினின்றும் தன் மனமும் உடலும் வலிமை பெறுமாறு அமிழ்தம் பெற்ருள் என்ற நயம் ஓர் தற்பாலது, 'உடல் சிந்தைவச மன்றே' (1227) என்ற தத்துவத் தின்படி, முன்னே துன்புற்று மெலிவுற்ற பிராட்டிக்கு இராமபிரானைக் கண்டதனுலுண்டான இன்பம் மீண்டும் அவள் உடல் வலியுறுதற்குக் காரணமாயிற்று. பிராட்டியை நேரே கண்டு, தன் மனத்திலிருந்த ஐயம் நீங்கப்பெற்ற ஐயன் அடைந்த மகிழ்ச்சிக்கு, 'இன்னமிழ்தெழக் களிகொள் இந்திரனை யொத்தான்' எனக் காட்டியுள்ள ஒப்புமையும் ஈண்டு நோக்கத்தக்கது.

(பி - ம்.) 1. கருங்கடல் நெடுங்கணிணை: நிறைகண்ணுள்; நிறைகின்ருள்; திறை கண்ணப்.
2. மண்டியுயிர்; மண்டமுது.
3. அருங்கல மனங்கசரம்; மருங்குலவணங்கசரம்: அற்றனவிழைத்துக்; அற்றவ பிழைத்துத்.
4. சருங்கலிடை; தருங்கலிடை: பெற்றனனை; பெற்றவனை; பெற்றனரை; பெற்றவரை: தருங்கடைய வேற்றவரை: தளிர்த்தாள்; தழைத்தாள்.

(38)

1232. கணங்குழை கருத்திலுறை கள்வனென லானன்
வணங்குவி லிறுத்தவ னெனத்துயர் மறந்தாள்
அணங்குறு மவிஞ்சைகெட விஞ்சையி னகம்பா
டுணர்ந்தறிவு முற்றுபய னுற்றவரை யொத்தாள்.

கணம் குழை-திரண்ட காதணிகளையணிந்த பிராட்டி, கருத்தில் உறை கள்வன் எனல் ஆனன்-(தன்)மனத்திலே வந்து தங்கிய கள்வன் என்று சொல்லுதற்குப் பொருந்திய அத்தலைமகனே, வணங்கு வில் இறுத்தவன் என-(தனக்குளளிதில்)வணங்கிய வில்லைமுறித்தவன் என்று (உணர்ந்து), துயர் மறந்தாள்-(தன் மனத்தில் ஐயத்தால் இருந்த) துயரத்தை (முற்றும்) மறந்தவளாய், அணங்கு உறும்-பிறவித் துன்பம் உறுதற்குக் காரணமான, அவிஞ்சை கெட-அஞ்ஞானம் நீங்க, விஞ்சையின்-(அப்போது உண்டாகும்) மெய்யுணர்வினல், அகம்பாடு உணர்ந்து—தம்முள்ளே உள்ள பரம்பொருளை அறிந்து, அறிவு முற்று பயன் உற்றவரை ஒத்தாள்-அம்மெய்யுணர்வு முதிர்வதனல் ஆகும் பயனன முத்தியின்பம் பெற்றவரைப்போல் ஆனள்.

அவிஞ்சை-அவித்யா; அஞ்ஞானம். விஞ்சை-வித்யா; மெய்யுணர்வு. அகம்பாடு-உள்ளிருப்பது. இறைவனை இடைவிடாது தியானித்து அவன் அருளால் அஞ்ஞானம் நீங்கி மெய்யுணர்வு கைவரப் பெற்றோர், அம் மெய்யுணர்வால் பரம்பொருளின் தன்மையை மனத்தில் நன்குணர்ந்து, அதனல் மீண்டும் பிறவாத முத்தியின்பம் பெறுதற்குரியவராவர். அவ்வாறே, இராமபிரானை இடைவிடாமல் எண்ணியிருந்த பிராட்டிக்கு. இடையே தோன்றிய ஐயமாகிற அஞ்ஞானத்தாலே உளதாகிய துன்பம், இப்போது அப்பிரானை நேரே கண்டதனல் நீங்கப்பெற்றுப் பேரின்பமுற்ருள் என்கின்ருர். இவ்வொப்புமையின் ஆழ்ந்த கருத்துச் சிந்தித்தற்குரியது.

இராமபிரானைப்பற்றி, 'கண்வழி நுழையுமோர் கள்வன்' (611) எனப் பிராட்டியின் உட்கோளாக முன்னே கூறியிருத்தற்கேற்ப, இங்கே 'கணங்குழை கருத்திலுறை கள்வனெனலானன்' என்ருர். 'நெருக்கியுட் புகுந்தரு நிறையும் பெண்மையும், உருக்கியென் னுயிரொடு முண்டு போனவன்' (609), 'என் கன்னி மாமதில் எறிந்தவக் குமரன்' (614) என்பனவும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 1. கருத்தின்: எனலாமவ்.
3. அவிச்சை; அணங்குமவன்விஞ்சை; இணங்குறுமவிஞ்சை; அகப்பாடு.
4. பெற்றபயன்: ஒத்தான். (39)

சக்கரவர்த்தி, திருமணநாள் குறித்து வினவுதல்

1233 கொல்லுயர் களிற்றரசர் கோமகனவ் வேலை
கல்விகரை யுற்றமுனி கௌசிகனை மேலோய்
வல்லிபொரு சிற்றிடை மடந்தைமண நாளாம்
எல்லையி னலத்தபக லென்றுரைசெ யென்ருன்.

அவ்வேலே-அப்போது, கொல் உயர் களிறு அரசர் கோமகன்-கொல்லுந் தொழில் மிக்க யானைச் சேனையையுடைய அரசர்க் கரசனான தசரதன், கல்வி கரை உற்ற முனி-கல்வியின் கரைகண்ட முனிவனான, கௌசிகனே-விசுவாமித்திரனை (நோக்கி), மேலோய்-மேன்மைத் தகுதியுடையவரே!, வல்லி பொரு-கொடியை யொத்த, சிறு இடை-நுணுகிய இடையையுடைய, மடந்தை-சீதையினது, மணம் நாள் ஆம்-திருமண நாளாகிற, எல்லை இல் நலத்த பகல்-அளவற்ற நன்மைகளையுடைய நாள், என்று-என்றைக்கு?, உரை செய்க-உரைத் தருளுவீராக, என்றான்—.

கொல்: முதனிலைத் தொழிற்பெயர்.

சீதா பிராட்டி மண்டபத்தில் வந்து அமர்ந்து, அனைவருடைய வியப்பும் ஒருவாறு அடங்கியபின், சக்கரவர்த்தி, மேலே நிகழ வேண்டுவனவற்றில் மனஞ்செலுத்தி, முதற்கண் கௌசிகனை நோக்கி, 'மண முகூர்த்த நாள் என்று' என வினவினன் என்க. சீதா-ராமர் திருமணம் அனைவர்க்கும் மகிழ்ச்சி தருவதோடு, மேலே நல்லார் வாழவும் அல்லார் தாழவும் காரணமாகி உலகுக்கே பெருநலம் பயப்பதுமாதலால், அத்திருமண நாளை 'எல்லையில் நலத்த பகல்' எனச் சக்கரவர்த்தியின் வாக்காகவே பெய்துவைத்தார் கம்பநாடர்.

சக்கரவர்த்தி முதலில் வந்து சேர்ந்தபோது அவனை எதிர் கொண்டு உபசரித்த சனகமன்னன், மண நிச்சயச் சடங்கை மறுநாள் வைத்துக் கொள்வோமென்று சொல்லி விடைபெற்றுச் சென்று, தன் தம்பியான யுதாசித்தையும் வரவழைத்தபின், மறுநாளில் அச்சடங்குக்குரிய ஏற்பாடுகளைச் செய்தான். அப்போது சக்கரவர்த்தி, புரோகிதர் முதலியோர் புடைசூழ வந்து அமர்ந்திருக்க, வசிட்ட முனிவர் சக்கரவர்த்தியின் குலமுறைப் பெருமைகளை எடுத்துக்கூறி, 'இத்தகைய குலத்திற் பிறந்த குமரருக்கு நின் புதல்வியரைக் கொடுத்தல் தகும்' என்றாராக, பின்பு சனகன் தன் குல முறையைத் தானே சொல்லித் தன் புதல்வியரை இராம, இலக்குமணருக்குக் கொடுப்பதாக உடன்பட்டான். அப்போது விசுவாமித்திர முனிவன் 'உம்முடைய தம்பியின் புதல்வியரைப் பரத, சத்துருக்கனருக்குக் கொடுத்தல் வேண்டு'மென்று கூற, சனகன் அதற்கும் இணங்கி, 'நாளைக்கு அடுத்த நாளான பங்குனி உத்தர நாளில் நால்வருக்கும் திருமணம் நடக்கட்டும் என்றான்' என்று வான்மீகம் கூறுகின்றது. பிராட்டியைக் கோலம் புனைந்து சபைக்குத் தருவித்ததாக அதிற் கூறப்படவில்லை. திருமண நிச்சயம் நிகழ்ந்தது பங்குனி யுத்தர நாளுக்கு இரண்டுநாள் முன்னதான மகநாளில் என்பதும் முதனூலாலறியப்படும்.

(பி - ம்.) 1. கொல்வியல்; சொல்லுயர்: கோமகனிருந்தான்: கோமகளிருந்தாள்'
2. கரையற்ற முனி; கரையற்றமுணர்: கோசிகனே: மேலோர்.
3. வல்லியொரு: மணமாநாள்.
4. எல்லைநலமுற்ற பகல்: எல்லையின் வகுத்த பகல்: என்றுசெயவென்றுன். (40)

1234. வாளையுக ளக்கயல்கள் வாவிபடி மேதி
மூளைமுது கைக்கதுவ மூரிய வரான்மீன்
பாளைவிரி யக்குதிகொள் பண்ணைவள நாடா
நாளையென வுற்றபக னற்றவ னுரைத்தான்.

'வாவி-குளங்களில்,வாளை உகள-வாளை மீன் துள்ள,படி மேதி-(நீரில்) விழுந்து கிடக்கும் எருமையின், மூளை, முதுகை-மூளையையும் முதுகையும், கயல்கள் கதுவ-கயல் மீன்கள் கௌவ, மூரிய வரால் மீன்-வலிமையுள்ள வரால் மீன்கள், பாளை விரிய குதிகொள்-(கமுகு, தெங்கு ஆகியவற்றின்) பாளைகள் பிளந்து மலரும்படி மேலெழுந்து பாய்வதற்கிடமான, பண்ணை வளம் நாடா-மருத நில வளம் மிக்க (கோசல) நாட்டுத் தலைவனே! உற்ற பகல் - (திருமணத்துக்குப்) பொருந்திய நாள், நாளை என-நாளை ஆகும் என்று, நல்தவன் உரைத்தான்-நல்ல தவத்தையுடைய கௌசிக முனிவன் கூறினன்.

வாளை, மீனினத்தில் பெரியது; வரால் நடுத்தரமானது; கயல் அல்லது கெண்டை எனப்படுவன சிறியவை. வாளை உகளுதல் கயல்கள் துள்ளிப் பாய்ந்து எருமைகளைப் பற்றிக்கொள்ளக் காரணமாகின்றது. வரால் மீன்கள் தென்னையளவு உயரம் எழுந்து பாயத் தக்க வலிமையுள்ளன. இவையெல்லாம் நீர்வள மிகுதியைக் காட்டுவன. 'வராலேற மேதி கலக்கலைநீர் நாடன்' (நள. 209). தசரதன் வினவியதற்கு விடையாக, 'திருமணநாள் நாளை' எனக் கௌசிக முனிவன் கூறினன். உற்ற பகல் நற்றவன்-'சூரியனுக் கொப்பான நல்ல தவசி' எனலும் ஆம்.

(பி - ம்.) 1. கயல்கொள்: வாவிபதிமேதி; வாவியதில்மேதி; வாவமுதுமேதி; வாவுமதின்மேதி.
2. முதுகைக்கிழிய; கவர; கதுவு; முதுகிற்கிழிய; துதையக்கிழிய: மூசிய வரால் மீன்.
3. பாளைசிதறக்: வளநாட; வளர்நாடா-
4. நாளையென வுற்றமுறை; உற்ற பொருள்; முற்ற மணம்; நாளைமண முற்றதென. (41

1235. சொற்றபொழு தத்தரசர் கைதொழு வெழுந்தான்
ஒற்றைவயி ரச்சுரிகொள் சங்கினொலி பொங்கப்
பொற்றட முடிப்புது வெயிற்பொழி தரப்போய்
நற்றவரனுச் சையொடு நன்மனை யடைந்தான்.

சொற்ற பொழுதத்து-(மேற்கூறியவாறு கௌசிக முனிவன்) கூறியபோது, எழுந்தான்-(சக்கரவர்த்தி, தன் இருக்கைவிட்டு)

எழுந்து, அரசர் கை தொழ-(மற்றப்பல) அரசர்கள் அஞ்சலி செய்து வணங்கவும், ஒற்றை-நிகரற்ற, வயிரம்-வயிரப் பூணணிந்த, சுரி கொள்-(வலம்) சுழித்தலைக்கொண்ட, சங்கின் ஒலி பொங்க-வெற்றிச் சங்க நாதம் முழங்கவும், பொன் தட முடி-(தனது) பொன்னாலாகிய பெரிய கிரீடத்தின், புது வெயில் பொழிதர-இளஞ் சூரிய கிரணம் போன்ற ஒளி வீசவும், நல் தவர் அனுச்சையொடு போய்-(வசிட்டன் முதலிய) நல்ல தவசியரின் அனுமதியோடு சென்று, நல் மனை அடைந்தான் - (தனக்கென்று அமைக்கப்பெற்ற) நல்ல மாளிகையை அடைந்தான்.

எழுவாய் வருவித்துக்கொள்ளப்பட்டது. வயிரம் - முதிர்ச்சி எனவும், புது வெயில்-(பிறவற்றிற்கில்லாத) புதுவகையான ஒளி எனவும் கொள்ளுதலும் ஆம். இராமபிரானைப் பெற்றெடுத்த சக்கரவர்த்தியின் பெருமைக்கேற்றவாறு சிறப்பாக அமைக்கப்பட்டதாகலின் 'நன்மனை' என்றார். அநுச்சை: அநுஜ்ஞா என்ற வடசொல்லின் திரிபு.

'ஒற்றை...பொங்க': ஒப்பு நோக்குக: 'ஒற்றை வலம்புரி யூதவதன் பின்பு, மற்றையலகில் வளைகலிப்ப' (குலோத். உலா. 84).

(பி - ம்.) 1. பொழுதே யரசர்: கைதொழு தெழத்தன்: எழுத்தான்.
2. சங்கின் முழங்கப். 3. பொற்றொடி முடிப்: பொலிதரப்.
4. அனுச்சை கொடு; நற்றவரி னிச்சைகொடு; நற்றவர திச்சைகொடு; நற்றவ ரனிக்கையொடு; நற்றபனனுச்சி தொடு: நன்னகர்: புகுந்தான்; புகுந்தாள்; அடைந்தாள்; அடைந்தார். (42)

### அனைவரும் சபாமண்டபம் விட்டகலுதல்

1236. அன்னமரி திற்பிரிய வண்ணலு மகன்றோர்
பொன்னினெடு மாடமனை புக்கனன் மணிப்பூண்
மன்னவர் பிரிந்தனர்கண் மாதவர்கள் போனார்
மின்னுசுட ராதவனு மேருவின் மறைந்தான்.

அன்னம்-பெண்ணன்னம் போன்ற சீதாபிராட்டி, அரிதின் பிரிய-(இராமபிரான் பார்வையினின்றும் பிரிய மனமின்றி) அரிதாக அவ்விடம்விட்டுச் செல்லவும்,அண்ணலும்-இராமபிரானும்,அகன்று-(அவ்வாறே அரிதாக அவ்விடத்தினின்றும்) நீங்கி, ஓர் ஒப்பற்ற, பொன்னின் நெடுமாடம்-பொன் மயமான பெரிய மேன்மாடத்தையுடைய, மனை-(தான் தங்குதற்குரிய) மாளிகையில், புக்கனன்-போய்ச் சேர்ந்தான்; மணிப்பூண் மன்னவர் - (வந்திருந்த மற்ற) இரத்தினாபரணங்களையணிந்த அரசர்களும், பிரிந்தனர்கள்-பிரிந்து அவரவர் இருப்பிடம் சென்றார்கள்; மாதவர்கள் போனார்-பெரு முனிவர்களும்

(தத்தமக்கு உரிய இடங்களில்) சென்றார்கள்; மின்னு சுடர் ஆத வனும்-விளங்கும் ஒளியுடைய சூரியனும், மேருவில் மறைந்தான்-மேரு மலைக்கு அப்பாற் சென்று மறைந்தான் (அஸ்தமித்தான்).

சபா மண்டபத்தில் கூடியிருந்தவர் அனைவரும் எழுந்து தத் தமக்குரிய இடங்களுக்குச் சென்றனர்; அது மாலைக் காலமாதலால், சூரியனும் அஸ்தமித்தான். இராமபிரான் சென்று சேர்ந்தது முன்பே கௌசிக முனிவனோடு தானும் தங்குதற்கென்று சனகன் அமைத்த மாளிகை யெனலாம். இராமபிரான் சென்றபோது தம்பிமாரும் உடன் சென்றன ரென்பதும் பெறப்படும் 'தன் குலத் தோன்றல் களான தசரதன் முதலியோர் தத்தமக்குரியவிடம் சென்றபோது, குல முதல்வனான சூரியன் தானும் தனக்குரிய வோரிடம் சேர்ந்தான்' என்று சூரியாஸ்தமனத்தைச் சமத்காரமாகக்கூறினார். சூரிய சந்திரர் கள் மேருவை வலம் வருவதாகக் கூறுதல் கவிமரபு; இங்கே 'மேரு வின் மறைந்தான்' என்றதனால், 'மேரு' என்றது அஸ்தமயகிரி என்பதைக் குறித்ததெனலாம்!

(பி - ம்.) 1. அண்ணலு மகன்றே; அண்ணலரிதிற் பிரியவன்னமு மகன்றோர்.
2. பொன்னின் மணி; பொன்னினொளி; பொன்னெடு நன்; மாடவரை; மாடமது; மாடவுறை.
3. வானவர்கள் போனார். 4. சுடர் நாயகனும். (48)

கோலங்காண் படலம் முற்றும்.



## 21. கடிமணப் படலம் *

கடிமணப் படலம்: சிறந்த மணச் செய்திகளைக் கூறும் படலம் என விரியும். சீதா-ராமர் திருமணத்துடன், தம்பிமார் மூவர்க்கும் திருமணம் நிகழ்ந்தமையை விரித்துக் கூறுவது இப்படலம்.

சனகமன்னனது உபசரிப்பினால்
அனைவரும் பெருமகிழ்ச்சி கொள்ளல்

1237. இடம்படு புகழ்ச்சனகர் கோனினிது பேணக்
கடம்படு களிற்றரச ராதியிடை கண்டோர்
திடம்படு திறத்தசிறு கம்மியர்கள் காறும்
உடம்பொடு துறக்கநக ருற்றவரை யொத்தார்.

இடம் படு புகழ்-மிகவிரிந்த புகழையுடைய, சனகர் கோன்-சனக மகாராசன், இனிது பேண-(வந்தவர் அனைவரையும்) இனிதாக (உண்டி முதலியவற்றால்) உபசரித்ததனால், கடம்படு களிறு-மதம் பொழியும் யானைகளையுடைய, அரசர் ஆதி-அரசர்கள் முதலாக, இடை கண்டோர்-இடைப்பட்ட நிலையில் உள்ள அமைச்சர் முதலாயினோரும், திடம்படு திறத்த-உடல் வலிமையோடு திறமையும் உடைய, சிறு கம்மியர்கள் காறும்-சிறிய தொழில் செய்வோர் இறுதியாகவுள்ள அனைவரும், உடம்பொடு துறக்க நகர் உற்றவரை ஒத்தார்-இந்த உடம்புடனே சுவர்க்கலோகத்தை அடைந்தவர்களைப் போலானார்கள்.

சனக மகாராசன், திருமணத்தின் பொருட்டு வந்தோர் அனைவரையும் உயர்வு தாழ்வு கருதாது உண்டி முதலியவற்றில் ஒரு குறையுமின்றி நன்கு உபசரித்ததனால் அனைவரும் பெருமகிழ் வெய்தினர் என்க. அவர்கள் மகிழ்ச்சிக்கு உடம்போடு துறக்க மெய்தினவர்களின் இன்ப உணர்வை உவமித்தார். இவ்வாறே பின்னும், 'உறையும் விண்ணக முடலொடு மெய்தினரொத்தார்'; 'துறக்கந்தான், பறந்து வந்து படிந்தது பல்சனம், பிறந்து வேறோ ருலகுபெற்றாரென, மறந்துவைகினர் முன்னர்த்தம் வாழ்வெலாம்'(அயோத். 77, 1082); மெய்யினோடெருந் துறக்கமுற் றாரென வியந்தார்' (யுத்த. 4047) என வருவன காண்க. 'தவஞ்செய் மாக்கள் தம்முடம் பிடாஅது, அதன் பயமெய்திய அளவைமான' (பொருந. 91-2) என்பதும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும். சனகன் உபசரித்த சிறப்பு: 1193-ம் பார்க்க.

இடம்படு-விரிந்த: 'இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும்' (நாலடி. 116).

---

* இப்படலப் பெயர் 'திருமணப் படலம்' என்றும் சில சுவடிகளில் உள்ளது.

(பி - ம்.) 1. இடன்படு. 2. அரசனுதி; அரைசராதி.
3. தடம்படு: புயத்தர்; புயத்த: சிறுதம்பியர்கள் காறும்: தாமும்! கம்மியர்கள் தாமும். 4. உடம்படு; உற்றனரை. (1)

பிராட்டியின் நிலை

1238. தேடரு நலத்தபுன லாசைதெற லுற்ருர்
மாடொர்தட முற்றதனை யெய்தும்வழி காணு
தீடழி வுறத்தளர்வொ டேமுறுவ ரன்றே
ஆடக வளைக்குயிலு மந்நிலைய ளானுள்.

தேடு-தாம் தேடி அலைகிற, அரு நலத்த புனல் ஆசை-அரிய நல்ல நீரின் வேட்கையால், தெறல் உற்ருர்-வருந்தலுற்றவர்கள், மாடு-ஒருபுறத்தில். ஓர் தடம் உற்று-ஒரு குளத்தைக் கண்டும், அதனை எய்தும் வழி காணுது-அதனைச் சென்றடைதற்குரிய வழியைக் காண முடியாது (போனுல்), ஈடு அழிவு உற-(தம்) வலிமை முழுதுங் கெட, தளர்வொடு-மிக்க தளர்ச்சியோடு, ஏம்உறுவர் அன்றே-கலக்க மடைவரன்ருே ? ஆடகம் வளை குயிலும்-பொன் வளையல்களை யணிந்த குயில் போலுங் குரலுடைய சானகிப் பிராட்டியும், அ நிலை யள் ஆனுள்-அத்தகைய நிலையுடையவளானுள்.

மிக்க நீர் வேட்கையால் நல்ல நீரைத் தேடி அலைந்தவர்கள், ஓரிடத்தில் ஒரு நீர்நிலையைக் கண்டும், அது, சுற்றிலும் முட்புதர் முதலியவற்ருல் சூழப்பட்டு, உள்ளே சென்றடைதற்குரிய வழியின்றி யிருக்குமானுல் அப்போது அவர்கள் அடையத்தக்க பரிதாப நிலையை எல்லா நலன்களும் பொருந்தப்பெற்று, தான் அடைந்து அனுபவிக்க ஆவலோடு எதிர்நோக்கியிருந்த இராமபிரானை அண்மையில் நேரே காணப்பெற்றும், தன் வேட்கை தீர அப்போதே கூடுதற்கிடமில்லா மையால் தவிக்கும் பிராட்டியின் நிலைக்கு ஒப்பிட்டுள்ள நயம் ஓர் தற்பாலது. மேலே ஒன்பது பாடல்களால் பிராட்டியின் விரக வேதனை கூறுகின்ருர்.

ஏம்—ஏமம் - மனக்கலக்கம். 681-பார்க்க. ஈடு-வலிமை: ஆரணிய. 707; கிட்கிந்தா. 495.

(பி - ம்.) 1. தெறவெய்தார்.
2. மாடொர்புனல் பெற்றதனை: எய்துவழி: எய்தும் வகைகாணுர்; மாடொர்புனல் பெற்றும தருந்தரியமாபோல்.
3. தளர்வரே முறுவர்; தமரொடே முறுவர்: அன்ருே: ஈடழிவுளத்தளர் வொடையனுமிருந்தான்.
4. வளைக்கைமயில்; மடக்குயிலும்; வடக்குயிலும்: அந்நிலையதானுன்; அன்ன நிலையானுள். (2)

இதனையடுத்துச் சிலபிரதிகளில் உள்ளதொரு பாடல் :—

எரிகால்சுடரே கலெழுந்த நிலா
வருமீ ரமுமா மயில்சானகிதன்
திருமேன்யின் மீதுசினந்து சுடத்
தரியாதுள நொந்து தணிந்துறைவாள்.

(வேறு)

இரவொடு கூறல்

1239. உரவேதுமி லாருயி ரீர்துமெனுக்
கரவேபுரி வாருள ரோகதிரோன்
வரவேயெனே யாளுடை யான்வருமே
இரவேகொடி யாய்விடி யாயெனுமால்.

'உரவு ஏதும் இலார்-வலிமை சிறிதும் இல்லாத(அபலைகளான) பெண்களின், உயிர்ஈர்தும் எனு-உயிரை அறுப்போம் என்று கங்கணங் கட்டிக்கொண்டு, கரவே புரிவார்-வஞ்சனையையே செய்பவர்கள், உளரோ-(உலகத்தில்) இருக்கின்றார்களோ! (இல்லை); இரவே-இராப்பொழுதே! கொடியாய்-(நீ மாத்திரம் அத்தகைய) கொடுந் தன்மையுடையாய்: கதிரோன் வரவே-(நாளை) சூரியன் உதித்த வளவிலே, எனை ஆள் உடையான்-என்னை ஆட்கொண்ட பிரான், வருமே-(என்னை ஆதரிக்க) வந்துவிடுவானே; விடியாய்-(நீ அதற்குத் தடையாக) இன்னும் விடியாமலிருக்கின்றாய்! (ஈதென்ன கொடுமை!) எனும்-என்பாள். ஆல்-அசை.

காமம் காழ்க்கொண்டவர்களுக்கு இரவில் விரக வேதனை மிகுதலும், அதனால் இராப்பொழுது மிகவும் நீட்டித்தல் போலத் தோன்றுதலும் இயல்பு. 'ஊழிபெயர்ந்தெனக் கங்குலொருவண்ணம் புடைபெயர்' (709); 'இருளாமிதுதா னெனையூழிகொலாம்' (1245) என்றவை காண்க. கன்னிமாடத்திலிருந்து இராமபிரானைக் கண்டு காமுற்றது முதல், நாள்தோறும் இரவிலே கடுந்துயரெய்திப் பகலிலே சிறிது ஆற்றியிருந்த பிராட்டிக்கு, 'நாளை வதுவை மணம் நடப்பது உறுதி' என்றநிலை வந்துள்ள இப்போது, இராப்போது முன்னிலும் கொடியதாகிறது. பொழுது விடிந்தால் என்னையாட்கொண்ட பிரான் என் கைப் பிடிக்க விரைந்து வந்துவிடுவான்; அதற்குத் தடையாக நீ இன்னும் விடியாமல் இருக்கின்றாயே!' என இரவைக் கடிந்து கூறுகின்றாள். 'பெண்ணென்றால் பேயும் இரங்கும் என்பர்; நீ இரக்கம் சிறிதும் இன்றி என்னை ஈர்கின்றாயே' என இரங்குகின்றாள். விடியாய்-'விரைவில் விடிவாயாக' எனவும் ஆம்.

இரவே கொடியாய் விடியாய்: 'செல்லா இரவே (சுந்தர.492) 'காமக் கன்லெரிகொளீ இயாமம், தீர்வது போலாதாகித் திசைதிரிந் தீர்வதுபோல விருளொடு நிற்ப' (பெருங். 1. 33: 203-5).

(பி - ம்.) 1. உரவேதுமிலாது; உரவேதுமிலா; உரமேதுமிலார்: உயிரிதுமெனுக்; உயிரிதுமெனுர்; உயிரிர்துமெனக்; உயிரிருமெனுக்.
3. உடையான் வரவே. (3)

நெஞ்சொடு கூறல்

1240. கருநாயிறு போல்பவர் காலொடுபோய்
வருநாளய லேவரு வாய்மனனே
பெருநாளுட னேபிரி யாதுழல்வாய்
ஒருநாடரி யாதொழி வாருளரோ.

'மனனே-என் மனமே; கருநாயிறு போல்பவர் காலொடு போய்-கரிய திருமேனி கொண்ட கதிரவனையொப்பவரான என் தலைவருடைய திருவடிகளைத் தொடர்ந்து (அவருடனே) போய், வரும் நாள்-அவர் திரும்பி வரும் நாளில், அயலே வருவாய்-அவரருகிலே தொடர்ந்து வருகின்றாய்; பெருநாள்-(நாளை முதல்) நெடுங்காலம், உடனே-(அவரைக் கூடப்பெற்ற) என்னுடனேயே, பிரியாது உழல்வாய்-விட்டு நீங்காமல் இயங்குவாய்;(அவ்வாறாக) ஒருநாள் தரியாது ஒழிவார்-ஒருநாளைக்குப் பொறுக்காமல் விட்டு நீங்குபவர், உளரோ-(உன்னைப்போல் வேறு) யாரேனும் உள்ளனரோ!'

பிராட்டியும் பிரானும் முதற்கண் ஒருவரையொருவர் கண்டு காதலுற்றபின், முனியோடு வந்த பிரான் பிராட்டியின் பார்வைக்கு மறைதலுற்றபோது, அவள் மனமும் பிரானைத் தொடர்ந்து சென்றது. (594-பார்க்க). இப்போது சபாமண்டபத்திற்கு அவர் வரும் போது அதுவும் உடன் வந்து, அவரைக் கண்ணுற்ற பிராட்டியை மீண்டும் அடைந்தது; மண்டபத்தினின்றும் பிரிதலுற்றபோது மீண்டும் பிரானுடனேயே சென்றுவிட்டது. மறுநாள் மணம் முடிந்த பின் எப்போதும் அது பிராட்டியைப் பிரியாதிருத்தற்குரியதேயாகலின், இன்னொரு நாளைக்கும் அஃது அவளிடமேயிருந்திருக்கலாம்; அவ்வளவு கூடப் பொறுக்காமல் அது சென்றுவிட்டதேயென வருந்துகின்றாள் பிராட்டி என்கின்றார். இது பிராட்டியின் மனநிலையைக் காட்டும் கவிசமத்காரமாகும்.

கருநாயிறு-இல்பொருளுவமை; 'அஞ்சன ஞாயிறன்னவையனை' (அயோத். 676); 'கருநாயிறெனக் கண்டான்' (ஆரணிய. 97.) 'மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்'; 'நடந்தது கிடந்ததென்னுள்ளம் நண்ணியே' (611, 613) என முன்னே கூறியவற்றால், பிராட்டிக்கு இராமபிரான் திருவடிகளிலே ஈடுபாடுண்மை புலனாகும்; எனவே, தன் மனம் அவர் காலொடு தொடர்ந்து சென்றதாகக் கூறினாள்; காலொடு-(அவர் சென்ற) வழியோடு எனலுமாம். இதனால், பிராட்டி அப்பிரானது அடியுறை (பாதசேவிகை) என்பதும் பெறப்படும்.

(பி - ம்.) 1. நாயறு: ஞாயிறு: கால்கொடு போய்.
2. வருநாளதிலே; வருவாய் மனநின்.
3. ஒருநாளுடனே; பெருமானுடனே: பிரியா தொழிவாய்.
4. ஒருநாடிரியாது: ஒருநாளறியாது. (4)

## அன்றிலொடு கூறல்

1241. கனையேழ்கடல் போல்கரு நாழிகைதான்
வினையேன்வினை யால்விடி யாவிடினீ
தனியேபற வாய்தக வேதுமிலாய்
பனைமேலுறை வாய்பழி பூணுதியோ.

'பனைமேல் உறைவாய்-பனை மரத்தில் தங்கும் அன்றிலே!, நீ தனியே பறவாய்-நீ (எப்போதும் துணையைப் பிரிந்து) தனித்துப் பறத்தல் இல்லை; கனை ஏழ் கடல்போல்-ஒலிக்கின்ற ஏழு கடல்களைப் போல்கின்ற (மிக விரிந்துள்ள), கரு நாழிகை-இராப்போது, வினையேன் வினையால்-பாவியாகிய எனது தீவினையால், விடியாவிடின்-விடியாமலே யிருந்துவிடின், (இத்தகைய இரவில்), தகவு ஏதும் இலாய்-நேர்மை சிறிதும் இன்றி, (வீணே கூவுதலால்), பழி பூணுதியோ-(என்னுயிரைப் போக்கும்) பழியை அடைவாயோ! (அஃது உனக்குத் தகாது.) தான், அசை.

'அன்றிலே! நீ எப்போதும் துணையைப் பிரிந்து தனித்திருத்தல் இல்லை; அப்பிரிவுத் துன்பத்தை நீ நன்றாக அறிவாய்; அவ்வாறாகவும், இப்போது நீ ஏன் வீணே கூவுகின்றாய்? என்னுயிர் பிரியுமாயின், அதற்கு நீ காரணமானாய் என்ற வீண் பழியை அடைதலன்றி உனக்கு நன்மை ஏதும் இல்லையே; அப்பழியை நீ கொள்வாயோ!' என்கிறாள்.

அன்றில் பனைமரத்தில் வாழ்வதென்பதும், அதன் குரல் விரக தாபமுற்றவர்க்கு மிக்க துன்பந் தருவதென்பதும் கவி மரபு. இங்கே 'பனைமேலுறைவாய்' என்ற தொடரே அன்றிலைக் குறிக்கின்றது. அன்றிலின் செய்திகளை 623.விசேடக் குறிப்பிற் காண்க.

'நாழிகை' என்பது இங்கே பொழுது குறித்து நின்றது; கரு நாழிகை-கருநிறமுள்ள=இராப் பொழுது: 'கரிய நாழிகை பாதியில்' (சுந்தர. 252.); 'கரும்பொழு தகலுமுன்னே கொல்வதே கருமமென் றான்' (வி. பா. கிருட்டினன். 171). இரவுக்குக் கடல் உவமை; நிறமும் பரப்பும் பற்றி வந்தது. 'அல்லாழிக் கரை கண்டான்' (708) என்பதும் அதன் குறிப்பும் காண்க.

(பி - ம்.) 1. நனியேழ்: நாழிகைதாம்.
2. வினையேன்; வினையா; வினையாய்: விடியாதிடநீ.
3. தனியே யுறைவாய்; தனியோ பறவாய்; தனியோர் புரவாய்: தகை யேதுமிலாய்; தகைவேதுமிலாய்; தகவோதுயிலாய்; தயவேதுமிலாய்: ஓர்தயாவிலையோ. 4. பழிகாணுதியோ. (5)

நிலவொடு கூறல்

1242. அயில்வேலனல் கால்வன வாநிழலாய்
வெயிலேயென நீவிரி வாய்நிலவே
செயிரேதுமி லாருட றேய்வுறுவார்
உயிர்கோளுறு வாருள ரோவுரையாய்.

'அனல் கால்வன ஆம்-நெருப்பைக் கக்குவனவான, அயில்வேல் நிழலாய்-கூரிய வேல்போன்ற கிரணங்களையுடையையான, நிலவே-சந்திரனே! நீ—, வெயிலே என விரிவாய்-(கடுவெப்பமுள்ள) வெயிலாகவே விரிந்திருக்கின்றாய்; (அதனால் என்னைச் சுடுகின்றாய்): செயிர் ஏதும் இலார்-ஒரு குற்றமும் இல்லாதவராய், உடல் தேய்வு உறுவார் உயிர்-(துன்பத்தால் நாளுக்கு நாள்) உடம்பு தேய்தலுறும் என் போன்றாருடைய உயிரை, கோள்உறுவார்-கொள்ளுதலைப் பொருந்துவோர் (கொள்ள முயல்வோர்), உளரோ-(உன்னையன்றி வேறு எவரேனும்) உள்ளனரோ? உரையாய்-நீ சொல்வாயாக.'

உன் திறத்து ஒரு குற்றமும் செய்யாத என்னை இவ்வாறு வருத்துதல் உனக்குத் தக்கதன்று என்பது கருத்து.

முன்னிரண்டடிகளுக்கு, 'நிலவே, நீ, நிழல் ஆய்-தண்ணொளி என்ற பெயருடையதாய், அயில்வேல், அனல் கால்வன ஆம்-கூரிய வேலும் தீயும் வெளிப்படுத்துவனவான, வெயிலே என விரிவாய்-வெவ்வொளியாகவே பரந்துள்ளாய் என்றுரைத்தலும் ஆம். இனி, உடல் தேய்வுறுவார்-தாமே நாளுக்குநாள் உடல் தேயுந் தன்மையுடையவர்கள், தம்மைப் போன்றவரிடத்து இரங்காமல் அவர்களுயிரைக் கொள்ள முயல்வாருண்டோ என்றலும் ஒன்று. இது, தேய்பிறையில் சந்திரன் நாளுக்குநாள் தேய்தலைக் குறிக்கும்.

சந்திரோபாலம்பனம் காவியச் சுவைக்குரியதாகலின், அங்கங்கே அதனைக் கூறுகின்றார் ஆசிரியர்; 631-32 ஆம் பாடல்கள் பார்க்க.

(பி-ம்.) 1. அயில்வேலன: கால்வனவாண்மதியா; கால்வன வாணிலவாய்; வாணிழலாய்; வானிலவாய்: வாணிலவால்; வாணிழலால்; காலகல்வாணிலவாய்; காலவன் போலவரும்.
2. வெயிலேயெனவே; வெயிலேயெனீநீ: விரியாய்; விரைவாய்.
3. செயலேதுமிலார்: தேயுறுவார்: தேய்வுறுவாள்; தேய்வுறுவாய்.
4. உயிரேகொளுவார். (6)

தென்றலொடு கூறல்

1243. மன்றற்குளிர் வாசம்வ யங்கனல்வாய்
மின்றெத்து நிலாநகை வீழ்மலயக்
குன்றிற்குல மாமுழை யிற்குடிவாழ்
தென்றற்புலி யேயிரை தேடுதியோ.

'மன்றல்-(தலைவரொடு) கூடியிருந்து மகிழ்தற்குரிய, குளிர் வாசம்-குளிர்ந்த நறுமணமாகிற, வயங்கு அனல்-விளங்குகின்ற அனல் வீசுகிற, வாய்-வாயையும், மின்தொத்து நிலா நகை-ஒளித் தொகுதியான நிலாவாகிய பல்லையும் கொண்டு, வீழ்-(யாவரும்) விரும்பத்தக்க, மலயம் குலம் குன்றில்-மலயம் என்னும் சிறந்த மலையில் (உள்ள),மா முழையில்-பெரிய குகையிலே, குடிவாழ்-குடியிருத்தலுடைய, தென்றல் புலியே-தென்றலாகிய புலியே! இரை தேடுதியோ-(எனதுயிரை) இரையாகத் தேடுகின்றனையோ!'

விரகவேதனையுறுவார்க்குத் தென்றலும் வெறுத்தற்குரியதாகலின், அதனைப் புலியாக உருவகித்து, அதற்கேற்ப அனல் வீசும் வாயும், ஒளி வீசும் பற்களும், வாழுமிடமான குகையும் கூறினார். தென்றல் மலயமலையிலிருந்து வருவதாகலின், அம்மலையிலுள்ள குகையென்றாள். அம்மலையிலுள்ள சந்தனம் முதலிய நறுமணப் பொருள்களில் படிந்து வருதலால் தென்றல் மணங்கமழ்வதாகின்றது. தென்றலும் அதன் மணமும் மன்றலில் ஒன்றியவர்க்கு மகிழ்ச்சியும், பிரிந்தவர்க்கு வேதனை மிகுத்தலும் செய்வன. மன்றல்-கலவி; சீவக. 2171. தென்றலின் கொடுமை: 617-619; தென்றலை வெறுத்தல்: தென்றல் வந்தெதிர்ந்தபோது சீறுவானுமாயினான்' (ஆரணிய. 647.) 'மன்றல் வாய் மல்லிகை யெயிறு வண்டினம், கன்றிய நிறத்தது நறவின் கண்ணது, குன்றின்வாய் முழையினிற்குலாய கொட்பது, தென்றலென்றொரு புலியுயிர்த்துச் சென்றதால்' (யுத்த. 466) என்பது இங்கே ஒப்பிடத்தகும்.

(பி - ம்.) 1. வாச வயங்கனல்; வாச மயங்கனல்; வாசம் வருங்கனல்.
2. மின்றொக்க; மின்றொத்த; நின்றொக்க; மின்னொக்க; நிலாவினும் வீழ்மலயக்; நிலாவுமிழ் வீழ்மலயக்; நிலாவுமிழும் மலயக்; நிலாவுக நீள் மலையக்; நிலாமணி வீழ்மலயக்.
4. உயிர் தேடுதியே. (7)

உருவெளித் தோற்றங்கண்டு கூறல்

1244. தெருவேதிரி வாரொரு சேவகனார்
இருபோதும் விடாரிது வென்னைகொலாம்
கருமாமுகில் போல்பவர் கன்னியர்பால்
வருவாருள ரோகுல மன்னவரே.

'கருமா முகில் போல்பவர்-கரிய அழகிய காளமேகம் போன்றவராய், தெருவே திரிவார்-தெருவிலே உலாவருகின்றவரான, ஒரு சேவகனார்-ஒப்பற்ற வீரர் ஒருவர், இரு போதும் விடார்-பகல் இரவு என்னும் இரண்டு போதிலும் என்னை விடாது தொடர்கின்றார்; இது என்னை ஆம்-இதுவென்ன முறையாகும்? குல மன்னவர்-உயர்குடிப் பிறந்த அரசராயுள்ளோர், கன்னியர்பால் வருவார் உளரோ-(மணமாகாத) கன்னிப் பெண்களிடத்து நெருங்கி வருபவர் எவரேனும் உளரோ?' கொல், அசை. ஏ: அசை.

இடைவிடாது இராமபிரானையே எண்ணியிருத்தலால், உரு வெளித் தோற்றத்தில் அவனைக் கண்டு இங்ஙனம் கூறலானாள் என்க. அரச கன்னியர், காவல் மிக்க கன்னிமாடத்து இருத்தலும் அவர்கள் எங்கிருப்பினும் அங்கே ஆடவர் அணுகுதல் கூடாதென்பதும் முறை; 'அரசராயுள்ளோர் இம்முறை தவறார். அங்ஙனமாக, இவ்வரச குமாரர், முன்னே என்னையறியாமலே என் நெஞ்சு புகுந்து என்நிறை முதலிய வற்றைக்கவர்ந்து சென்றதோடு, இப்போதும் அடிக்கடி என்முன்வந்து நிற்கின்றார்; இஃதென்ன நியாயம்?' என்கின்றாள். தெருவே திரிவார்: முன்னே கௌசிக முனிவனுடன் வீதியிலே வந்தமையும், பின்னர்த் தேரேறிப் பல மங்கையருங் காணப் பவனி வந்தமையுங் குறித்த தெனலாம். கன்னியரிடத்து ஆடவர் அணுகுதல் கூடாதென் பது: 'சிவிகை, பல்வளை யாயத்துப் பைந்தொடி யேறலும்....முனிவரா யினும் மூத்தோராயினும், எனையீர் பிறரும் எதிர்வரப் பெறீரென... ஆறுகடி முரசம் அதிர்வரக் கொட்டி' (பெருங். 1. 38: 255-69); 'காவல் கடந்தெங்கள் கன்னிமாடம் புகுந்தாய், யாவனோ' (நள. 84).

(பி - ம்.) 1. தெருவே வருவார். 2. என்ன கொலாம். (8)

### இரவை வெறுத்தல்

1245. தெருளாவினை தீயவர் சேரலர்தோள்
அருளாநெறி யோடும வாவதுவோ
கருளார்கட லோகரை காணரிதால்
இருளாமிது தானெனை யூழிகொலாம்.

'தெருளா-மனத் தெளிவில்லாத, வினை தீயவர்-கொடுந்தொழி லாளரான அத்தலைவர், தோள் சேரலர்-வந்து என் தோள்களைத் தழுவுவாரல்லர்; அவா அதுவோ-எனதாசையோ, அருளா நெறி ஓடும்-அவர் அருள் செய்யாத அவ்வழியிலேயே செல்கின்றது; இருள் ஆம் இது-இரவாகிய இது, கருள் ஆர் கடலோ-கருநிறம் மிக்க கடல் தானோ? கரை காண அரிது-(கடந்து) கரைகாண அரிதாயுள்ளது; எனை ஊழி ஆம் கொல்-(இந்நிலை) எத்தனை ஊழி காலம் நீட்டிக் குமோ!' ஆல், தான், அசைகள்.

காணரிது: தொகுத்தல்.

தன்நெஞ்சும் நிறையும் முதலாயினவற்றைக்கவர்ந்து தன்னைப் பித்தேற்றியும், தன் நிலை அறிந்து அருளாதிருத்தலின், 'தெருளா வினை தீயவர்' என்றாள். அவர் அங்ஙனமாயினும், தன் ஆசை அவரை நாடுதலை விட்டிலது; அவரை விரைந்து அடைதற்கு, இரவு பெருங் கடல்போல இடையூறுயுள்ளது; இது தீர்வது எக்காலமோ? என இரங்குகின்றாள்.

இருள், இரவுக்கு ஆகுபெயர்; கரு நிறத்தாலும் பரப்பாலும் இரவுக்குக் கடல் உவமை. இனி, ஆசைக்குக் கடலை உவமை கூறி, இரவு இன்னும் எத்தனை ஊழி நீட்டிக்குமோ எனக் கூறுதலும் ஆம். 1239-பார்க்க. 'ஊழி பலவோ ரிரவாயிற் றேவென்னும்' (நள. 102) தெருளாவினை தீயவர் சேரலர்-தீவினையுடையோர் அடைதற்குரியரல்லாதவராகியவர் (இராமபிரான்) என்றலும் ஆம்; இப்பொருட்கு தோள் அருளா நெறி-அவர் தோள்களைத் தழுவுதற்குத் தராத போதும் என்க.

(பி - ம்.) 1. வினைதீயவர் சேரலர்கொல்; சேரலர் தொன்று; செல்லலுறும்; சேயவர் தோள்; சேர் நரகோ; வினையாரவர் செய்குறுமம்; போற்றுறுமம்.

2 மருளாநெறி: அருளானெறி: ஓடுமவாவதுவோர்; அருளாநிறையேவரவோவதுவெற்கு: நெறியே வரவோவதுவெற்கு; நெறியோடுறவாவதுவோநெறியோடு மவாவுவதோ; நெறியோவடிவாவதுவோ.

3. கருள்வார்; கருவார்: கடலோர் கரைகாண்பரிதால்: காணரிதாம்; காணரிதாய்.

4. இருளானதுதான்; இருளாவதுதான்; இருளாமிதுதாம்; எனவூழிகொலோ. (9)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

1246. பண்ணோவொழி யாபக லோபுகுதா
எண்ணோதவி ராவிர வோவிடியா
துண்ணோவொழி யாவுயி ரோவகலா
கண்ணோதுயி லாவிது வோகடனே.

'பண்ணோ ஒழியா-பலவகை யிசைகளோ அடங்குவனவல்ல; பகலோ புகுதாது-பகற்பொழுதோ (விரைவில்) வருவதாயில்லை; எண்ணோ தவிரா-(என் மனத்து) எண்ணங்களோ விடுவனவல்ல; இரவோ விடியாது-இராப்பொழுதோ விடிவதாயில்லை; உள்நோ ஒழியா-மனத்துன்பங்கள் நீங்குவனவல்ல; உயிரோ அகலா-பிராணன்களோ போகவில்லை; கண்ணோ துயிலா-கண்களோ உறக்கங்கொள்ள மாட்டா; கடன் இதுவோ-என் கடமை (இங்ஙனம் பலவாறு துன்புறும்) இதுதானோ! ஏ: அசை.

மறுநாள் பிராட்டியின் திருமணம் நிகழப் போவதறிந்த நகரமாந்தரின் களிப்பு மிகுதியால் எங்கும் இசையுங் கூத்துமாயிருத்தலின், இசை காதிற்படுவது ஒய்தலில்லை, இசையும் காமத்தைத் தூண்டுவனவற்றுள் ஒன்று. இரவு விடியாதிருத்தலே பிராட்டியின் பலவகைத் துன்பங்களுக்குக் காரணமாதலின், இப்பாடலும் இரவை வெறுத்தல் குறித்ததேயாகும். 'பஞ்சப்பிராணன்' என்பவாகலின், உயிரோ அகலா எனப் பன்மையாற் கூறினர், அகலாது என்றது ஈறு தொக்கதெனினும் ஆம். கண்-சாதியொருமை.

(பி - ம்.) 1. புகலோ புகுதா.
2. விடியா. 3. உண்ணோ வழியா: உயிரோ தவிரா; உதவா.
4. கண்ணே; இவையோ கடனே. (10)

கடலொடு கூறி யிரங்குதல்

1247. இடையேவளை சோரவெ ழுந்துவிழுந்
தடலேய்மத னன்சர மஞ்சினையோ
உடலோய்வுற நாளுமு றங்கலையால்
கடலேயுரை நீயுமொர் கன்னிகொலாம்.

'கடலே-சமுத்திரமே! இடையே-உன்னிடமிருந்து, வளைசோர-வளைகள் (சங்குகள்) சிந்த, எழுந்து-மேலெழுந்தும், விழுந்து-மீண்டும் கீழே விழுந்தும், உடல் ஒய்வு உற-உடம்பு அயர்ச்சியுற, நாளும்-நாள் முழுதும் (இரவு பகலாக) உறங்கலை-உறங்குகின்றாயல்லை; (அவ்வாறு தற்கு) நீயும் ஓர் கன்னி ஆம் கொல்-நீயும் என்னைப் போல (மணம் பெறாது வருந்தும்) ஒரு கன்னிப் பெண்ணோ? அடல் ஏய்-கொல்லுந் தன்மைபொருந்திய, மதனன் சரம் அஞ்சினையோ-மன்மதனுடைய அம்புகளுக்கு அஞ்சுகின்றாயோ? உரை-சொல்வாயாக.' ஆல்: அசை.

கடலின் தன்மையைத் தன்னோடு ஒப்பிட்டுக் கூறுகின்றாள் பிராட்டி. தான் வேதனையால் உடல் இளைத்து, கைவளைகள் சோர, ஒரு நிலை கொள்ளாது, உறக்கமின்றி படுத்தும் எழுந்தும் புலம்பியும் பலவாறு தவித்தல் போலக் கடலும் ஒரு நிலை கொள்ளாது (அலைகளால்) எழுந்தும் விழுந்தும் வளைகள் (சங்குகள்) சிந்த, உறங்காமல் இரைந்து கொண்டேயிருக்கின்றதே யென்கிறாள். 'காமுற்ற கையறவோ டெல்லே யிராப்பகல், நீ முற்றக் கண்டுயிலாய் நெஞ்சுருகி யேங்குதியால், தீ முற்றத் தென்னிலங்கை யூட்டினான்றாள் நயந்த, யாமுற்ற துற்றாயோ வாழி கனைகடலே' (திவ். திருவாய். 2. 1: 3.).'போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி, நாவாய் குழற நடுக்குறு வாய்......ஆர்கலியே மாதை, யிரவகற்றி வந்தாய் கொலின்று' (நள. கலிநீங்கு) என்பன ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

(பி - ம்.) 2. அடலே; அடலேர்; அடல்சேர்; அடல்வேல்: மதனென் கணையஞ்சினை போல். 3. உடலோய்வுறுநாளு முறங்கிலையால். (11)

கவிக் கூற்று

1248. எனவின்னன பன்னியி ருந்துளைவாள்
துனியுன்னிம னத்தொடு சோர்வுறுகால்
மனைதன்னின்வ யங்குறு வைகிருள்வாய்
அனகன்னினை கின்றன யாமமறைவாம்.

என-என்று. இன்னன பன்னி-இவை போன்றவற்றைப் பலகால் சொல்லிக்கொண்டு, இருந்து-(உறங்காமல்) இருந்து, உளை

வாள்-வருந்துபவளாய், துனி உன்னி-(தன்) துன்ப நிலையையே நினைத்து, மனத்தொடு-(அந்நினைவு விடாத) மனத்துடனே, சோர்வு உறு கால்-(பிராட்டி) மிகச் சோர்ந்திருந்த அந்நேரத்தில், மனை தன்னின்-(தான் தங்கியிருந்த) மாளிகையிலே, வயங்குறு-நிறைந்து விளங்குகின்ற, வைகு இருள்வாய்-நிலைத்த இருளிலே, அனகன்-குற்றமற்றவனான இராமபிரான், நினைக்கின்றன-தன் மனத்தில் எண்ணிக் கூறுமவற்றை, யாம் அறைவாம்-நாம் சொல்லுவோம்.

பிராட்டியின் விரகவேதனையை இதுகாறும் கூறிவந்த ஆசிரியர் மேலே இராமபிரானது நிலையைக் கூறுவாரானார். அனகன் இனைகின்றன எனப் பிரித்துக் கூறலும் ஆம்.

(பி - ம்.) 1. இனவின்னன இன்னல் பகர்ந்து; உறைவாள்; உழல்வாள்: அழிவாள்; இனைவாள்; நைவாள்; இளையா.
2. துனியுன்னு; துனிமுன்னி; நலங்கொடு; அலங்கொடு: மனங்கொடு; சோர்வுறு நாள்; சோர்வுறு வாள்; சோருறுநாள்.
3. மனைதன்னில்; வயங்குறும்; மயங்குறும்; மயங்குறு; வயங்கிருள்; மயங்கினள்; நலங்கொடு; வைகுறுவாய்; வைகலின்வாய்; வைகுறு போது.
4. நினைகின்றது; நினைகின்றதும்: நினைகின்றதை. (12)

1249. முன்கண்டு முடிப்பரு வேட்கையினால்
என்கண்டுணை கொண்டித யத்தெழுதிப்
பின்கண்டுமொர் பெண்கரை கண்டிலெனால்
மின்கண்டவ ரெங்கறி வார்வினையே.

'முன் கண்டு-முன்னொருநாள் (இவளைக் கன்னி மாடத்திலே) கண்டு, முடிப்பு அரு வேட்கையினால்-அளவில்லாத ஆசையோடு, என் கண் துணைகொண்டு-என் இரண்டு கண்களாகிற எழுதுகோலால், இதயத்து எழுதி-என் மனத்தினுள் (இவள் வடிவை ஒருவாறு) எழுதிப் பதியவைத்து, பின் கண்டும்-மீண்டும் (இன்று நேரில்) கண்டும், ஓர் பெண் கரை கண்டிலென் நான்-(இவளது) ஒப்பற்ற பெண்ணழகாகிய கடலின் கரையைக் காணாதவனானேன் நான்; மின் கண்டவர்-மின்னலை (அருகிலே நேரில்) கண்டவர்கள், வினை எங்கு அறிவார்-(திகைத்து நிற்றலன்றி வேறு) செய்தற்குரிய செயலை எங்ஙனம் அறிவர்? அவ்வாறே ஆனேன் நானும்).' ஏ: அசை.

இது முதல் ஆறு பாடல்களால் இராமபிரானது நிலை கூறுகின்றார்.

மின்னலை அருகிலே கண்டால், அவ்வொளியால் கண் கூசுதலுற்றுத் திகைப்படைதலன்றி, வேறொன்றுஞ் செய்தல் இயலாது; பிராட்டி மின்னற் கொடியாகவே யிருத்தலின், அவளை அருகிலே கண்டவர்க்கும் அவள் வடிவழகை முற்றுங் கண்டறிதல் இயலாது

என்றவாறு, 'சதகோடி, மின் சேவிக்க மின்னர செனும்படி நின்ருள்' (580), 'அன்னவள் மின்னின் மின்னிய மேனிகண்டான்' (637), 'மின்னின் நிழல் அன்னவள்தன் மேனி' (1221) எனப் பிராட்டியின் மேனியைக் குறித்து முன்னே கூறியுள்ளதற்கேற்ப, இங்கும்மின்னலைக் குறித்தார். 'கரைகண்டிலென்' என்றதனல் அழகாகிய கடல் என்பப்பட்டது.

(பி - ம்.) 1. முடிப்பரும்.
2. கண்டுணேயோடு; கண்டுணே கண்டு; வன்கண்டுணே கண்டு; என் கண்டனிலென். 3. பின்கண்டதொர்; கண்டிலனல்; கண்டிலமால்;
4. மின்கண்டறிவாருளரோ; அழிவாருளரோ; இவரெங் கறிவார்; விளேவே; விதியே; விழைவே. (13)

மதியொடு கூறி மறுகல்

1250. திருவேயனே யர்ண்முக மேதெரியின்
கருவேகனி யேவிளே காமவிதைக்
கெருவேமதி யேயிது வென்செய்தவா
ஒருவேனெடு நீயுற வாகலேயோ.

'மதியே-சந்திரனே! தெரியின்-(உன் தன்மையை) ஆராயுமிடத்து, விளே காமம் விதைக்கு-(இன்பத்தை) விளேவிக்கும் காமத்தின் விதைக்கு, எருவே-(அது வளர்தற்குதவியாகும்)எருவும், கருவே-அதன் முளேயும், கனியே-அது முதிர்ந்து பழுக்கும் கனியும் (ஆவாய்); திருவே அனேயாள் முகமே-இலக்குமியே போன்ற அச் சீதையின் முகமண்டலமே (போலவும் நீ இருக்கின்ருய்; அங்ஙனமாகவும்), இது செய்த ஆ (று) என்-(என்னேத் துன்புறுத்தலாகிய) இதனேச் செய்வதேனே? ஒருவேனெடு-(அவளேக் கூடப்பெருது) தனித்து வருந்தும் என்னேடு, நீ உறவு ஆகலேயோ-நீ உறவாக மாட்டாயோ!'

கூடுவார்க்கு இன்பம் மிகுவிக்கக் காரணமான சந்திரனே! தனியான என்னே நீ இவ்வாறு வருத்துதல் தகாது என்று கூறியவாரும். வருத்துந் தொழிலே வெளிப்படையாகக் கூருது 'இது' எனக் குறிப்பித்தான். கருவே, கனியே, எருவே இவற்றில் ஏகாரங்கள் எண்ணுப் பொருளன; முகமே-ஏகாரம் தேற்றம். செய்தவா: ஈறு தொகுத்தல்.

(பி - ம்.) 1. முகமேஉயிரின்; உயிர்தீர்; திருவின். 2. களியே; கனவே; தனியே.
3. இவையென் செய்தவா; இது செய்தனவா; இதுவென் செயலோ; இதுவென் சொலவா; இதுவென்னேகொலோ.
4. ஒருவென்னெடு; ஆகிலேயே; ஆகிலேயோ. (14)

## இரவை வெறுத்தல்

1251. கழியாவுயிர் வவ்விய காரிகைதன்
விழிபோல விளைந்தது வீகிலதால்
அழிபோரிறை வன்பட வஞ்சியவன்
பழிபோல வளர்ந்தது பாயிருளே.

'பாய் இருள்-எங்கும் பரந்துள்ள இருளானது, கழியா உயிர்-(உடம்பைவிட்டு) நீங்காத என்னுயிரை, வவ்விய-கவர்ந்து கொண்ட காரிகை தன் விழிபோல-கட்டழகியான சீதையின் கண்கள்போல, விளைந்தது-வந்துள்ளது; வீகிலது-(அது) போவதாயில்லை; அழி போர்-(பலரும்) அழிதற்குக் காரணமான போரில், இறைவன் பட-(தன்னைப் பலவகையாலும் காத்த) தன் அரசன் அழியுமாறு, அஞ்சியவன்-தன்னுயிருக்குப் பயந்த (ஓடிய) ஒரு சேனைத் தலைவனுடைய, பழிபோல-(நீங்காத) பழியைப்போல, வளர்ந்தது-மிகுந்துள்ளது. ஆல், ஏ: அசை.'

பிரிந்து வருந்துவார்க்கு இரவு நீட்டித்தல்போலத் தோற்றுதல் பிராட்டியின் செய்திகளுட் கூறப்பட்டது; ஐயனும் அவ்வாறே இரவின் நீட்டங் குறித்து இரங்குதல் இங்கே கூறப்படுகின்றது. தன் உயிரைக் காரிகையின் விழிகள் கவர்ந்ததுபோல, இரவும் செய்கின்றது என வருத்த மிகுதி கூறப்பட்டது. தன் இறைவனைப் போரில் மாயும்படி விட்டுத் தன்னுயிர் காக்க அஞ்சியோடுமவனுக்கு வரும் பழியை அழியா இருளுக்கு உவமை கூறியுள்ள நயம் ஓர்தற்பாலது.

ஆல்: இரக்கக் குறிப்பு; ஏகாரம் ஈற்றசை.

(பி - ம்.) 1. கழிபோயர் வுந்திய: கழிபோயுயிருந்திய: அழியா வுயிருந்திய: கழியாவுயிர் வைகிய.
2. வீகலதால்; வீயலதால்; வீகிலவால்.
3. அழிபேர்; அஞ்சினவன்; அஞ்சியதன். (15)

## நெஞ்சொடு கிளத்தல்

1252. நினையாயொரு கானெடி தோநெறிதான்
வினவாதவர் பால்விடை கொண்டிலையோ
புனமானனை யாரொடு போயினவென்
மனனேயெனை நீயு மறந்தனையோ.

'புனம் மான் அனையாரொடு போயின-வனத்தில் திரியும் மான் போன்ற அக்கன்னிப் பெண்ணுடன் தொடர்ந்துபோன, என் மனனே-என்னுடைய மனமே!, ஒருகால் நினையாய்-(அவ்வாறு போன நீ) மீண்டும் ஒருமுறையேனும் (என்னை) நினைக்கின்றாயில்லை; நெறி தான் நெடிதோ-நீபோன வழி (திரும்பி வருதற்கரிதாக) மிக நீண்டதோ? வினவாதவர் பால்-உன்னை யார் என்றும் கேளாத

அவளிடத்து, விடை கொண்டிலையோ-உத்தரமாக, ஒரு மொழியும் நீ இன்னும் பெறவில்லையோ ? (அல்லது), எனை நீயும் மறந்தனையோ- என்னை (அவள்போல) நீயும் மறந்தே விட்டாயோ !'

'என் மனமே ! என்னை நீ விட்டுப் பிரிதற்கு உரியை அல்லை; அவ்வாறுவும், என்னைவிட்டு அவளோடு போய் அவளைச் சுற்றித் திரிகின்றாய்; அவளோ உன்னை யாரென்று கேட்டு ஒரு வார்த்தையும் உரைக்கவில்லை போலும்; அத்தகையவளிடத்தே நீ தங்குதலால் பயனென்ன ? உடனே மீண்டு வருதலன்றோ முறை? என்னை மறந்தே விட்டாயோ?' என்கின்றான் பெருமான். பிராட்டிபால் பறிகொடுத்த தன் மனத்தை மீட்டல் அரிதாகிறது என்பது கருத்து. பிராட்டி தன் நெஞ்சொடு கூறியதும் (1240) ஈண்டு ஒப்பிடத்தகும். 'வினவாதவர்' எனப் பிராடியை இங்கே உயர்த்துக் கூறியதுபோல மேலே இரண்டு பாடல்களிலும் வருதல் காண்க.

நீயும் என்றதில் உம்மை, இறந்தது தழுவியதும் உயர்வு சிறப்பும் ஆகும்.

(பி - ம்.) 1. நினையாது. 2, கொண்டிலையே: கொண்டனையே.
3. புனைமான்அனையாளொடு.
4. மனமே; மறந்தனையே; மறைந்தனையோ. (10)

### பிராட்டியின் கண்களை வியத்தல்

1253. தன்னோக்கெரி காறகை வாளரவின்
பன்னோக்கிய தென்பது பண்டுகொலாம்
என்னோக்கினு நெஞ்சினு மென்றுமுளார்
மென்னோக்கின தேகடு வல்விடமே.

'கடு வல்விடம்-கொடிய வலிய நஞ்சு, தன் நோக்கு எரி கால் தகை-தன் கண்களினின்றும் தீயுமிழும் தன்மையுடைய, வாள் அரவின்-கொடிய பாம்பினது, பல் நோக்கியது என்பது-பல்லில் உள்ளது என்று சொல்வது, பண்டு ஆம்-முன்னே உண்மையாகும்; (இன்று அந்த நஞ்சு), என் நோக்கினும்-என் கண்களிலும், நெஞ்சினும்-மனத்திலும், என்றும் உளார்-எப்போதும் நிலைத்துள்ள அம் மாதரசியின், மெல் நோக்கினதே-மெல்லிய (கடைக்கண்) பார்வையிலுள்ளதேயாகும்.

கொல்: அசை, நோக்கினதே: ஏகாரம் தேற்றம்- விடமே: ஏகாரம் ஈற்றசை.

'மேல் நோக்கு' என்றது, தன்னைக் குறித்து நோக்கிய சிறப்பு நோக்கை. அது தன்னை விடம்போல வருத்துகின்றதென்கின்றான். என் நோக்கின் உளார் என்றது பிராட்டியினது உருவெளித் தோற்றத்தைக் குறித்தது. நெஞ்சின் உள்ளமை, எப்போதும் அவள் நினைவாகவேயிருத்தல்.

'விடம், பாம்பின் பல்லில் இல்லை; இவள் கண்ணிலேயுள்ளது' என்றது ஒழித்துக்காட்டணி.

(பி - ம்.) 2. பன்னோக்கினது; நோக்கின; நோக்கிய: பண்டுகொலோ; பண்பு கொலாம். 3. முன்னோக்கினும்; என்றுமுளாள்.
4. மன்னோக்கினதே; மின்னோக்கினதே; மென்னோக்கினவே; தன்னோக்கினதே: கடுவெல்விடமே; கடுவெவ்விடமே; கரவல்விடமே; கொடு வெவ்விடமே; தழல்வெவ்விடமே. (17)

1254. வல்லார்புனை மாளிகை வார்பொழிலோ
டெல்லாமுள வாயினு மென்மனமோ
கல்லோடுறழ் நெஞ்சுறு கன்னியராம்
மெல்லோதியர் தாம்விளை யாடிடமே.

'வல்லார் புனை-கைத்திறன் மிக்கவர் அழகுற அமைத்த, மாளிகை-மாளிகையும், வார் பொழிலோடு-பெரிய பூந்தோட்டங்களும் (முதலான), எல்லாம்-மற்றும் பலவும், உள ஆயினும்-விளையாடு தற்கு) இருப்பினும், கல்லோடு உறழ் நெஞ்சு உறு-கல்லையொத்த (வலிய) மனமுடைய, கன்னியர் ஆம்-கன்னியாகிய, மெல் ஓதியர்-மெல்லிய கூந்தலையுடைய அந்நங்கை, தாம் விளையாடு இடம்-தான் (இப்போது விரும்பி) விளையாடும் இடமாகக் கொண்டது, என் மனமோ-என் மனத்தையோ !'

தன் நினைவில் பிராட்டி எப்போதும் இருத்தல் பற்றி, 'என் மனம் அவளுக்கு விளையாடுமிடமாயிற்றே' என்றான். உருவெளியாகவும் மனக்கண்ணின் முன்னும் அவள் வடிவைத் தோற்றுவித்தலையன்றி, அவள் நேரே வந்து கூடித் தன் துயர் போக்காமையினால், 'கல்லோடுறழ் நெஞ்சுறு கன்னியர்' என்றான். விளையாடுதல்-விளையாட்டாக ஏமாற்றுதல் என்ற குறிப்பும் தருவதாகும்.

(பி - ம்.) 1. வல்லோர்; வல்லோன்: புனை மாளிகையோ; வனை மாளிகைவார் வனை மாளிகைவாழ்; கல்லார் மலர்சூழ் கழிவார்; களிவார்.
2. உளவாகிலும்; உளவாகினும்: மனமே.
3. கல்லோவெனு நெஞ்சொடு; நெஞ்சோரு; கல்லாமெனு நெஞ்சொடு! கன்னிகை தாம்; கன்னியர் பால்; சொல்லா ரழகின் சுவையோடினி தாம்.
4. மெல்வோதியர்பால்; எல்லோதியர்தாம்; செல்லோதியர்தாம்: விளையாடிடமோ: விளையாட்டிடமே.

ஒரு பிரதியில் இதன்பின், கீழ்க்காணும் ஒரு பாடலும், அதனிறுதியில் 'கோலங்காண் படலம் முற்றும்' என்ற தொடரும் காணப்படுகின்றன:

என்றையன் மனத்தொடு மெண்ணினன்மற்
றன்றங்கவை நிற்க வருட்சனகன்
முன்றந்த தவத்துறு மொய்குழலாள்
துன்றும்மண முற்றது சொல்லிடுவாம்.

இப்பிரதியில் அடுத்த பாடலின் முன்னிரண்டடிகள், 'வானவர் பெருமானும் வரியளி மலர்வாசத் தேனுகர் குழலாளுந் திருமண முறநாளை' என்று காணப் படுகின்றன. (18)

சனகன் நகரில் மணமுரசறைவித்தல்

(வேறு)

1255. வானவர் பெருமானும் மனனினைவி னனாகத்
தேனமர் குழலாடன் றிருமண வினைநாளை
பூநகு மணிவாசம் புனைநக ரணிவீரென்
றானையின் மிசையாணர் ரணிமுர சறைகென்றான்.

வானவர் பெருமானும் - (தேவர் தலைவனான திருமாலின் அமிச மான) இராமபிரானும், மனன் இனைவு இனன் ஆக-மனம் வருந்துதல் இத்தன்மையனாயிருக்க, (சனக மன்னன்), தேன் அமர் குழலாள் தன்-வண்டுகள் விரும்புகின்ற கூந்தலையுடைய சீதையின், 'திருமணம் வினை நாளை-திருமணச் சடங்கு நாளையாகும்; (ஆதலால்), பூ-பூக் களாலும், நகு மணி-ஒளி விளங்கும் மணிகளாலும், வாசம்-சீலைகளா லும், புனை நகர்-அழகிய நம் நகரத்தை, அணிவீர் என்று-(நன்கு) அலங்கரிப்பீராக' என்று, யாணர் அணி முரசு-அழகுற அலங் கரித்த மண முரசை, யானையின் மிசை-யானையின் மேல் (ஏற்றி), அறைக என்றான்-அறைந்து தெரிவியுங்களென்று கட்டளையிட்டான்.

'சனகன்' என்ற எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. இனன்-இன்னன்: விகாரம். இனைவினன், நினைவினன் எனப் பிரித்துக் கூறலுமாம்.

உரவேதுமிலார் (1239) என்றது முதல் ஒன்பது பாடல்களால் பிராட்டியின் நிலையை முன்னும் அதனையடுத்து இதுகாறும் இராம பிரானது நிலையையுமே கூறிவந்தாராதலின்,'வானவர் பெருமானும்' என இறந்தது தழுவிய எச்சவும்மை கொடுத்துக் கூறினார். எனவே, இவ்விருவர் செய்தியும் இவ்வாறாக, மேலே திருமணத்துக்குரிய நிகழ்ச் சிகளைக் கூறத் தொடங்கி, திருமணச் செய்தியை நகருக்கறிவித்தலை முதற்கண் கூறுகின்றார். முரசறைதற்குரிய 'வள்ளுவர்' என்போர் நன்கு அலங்கரித்த முரசை யானையின் மேலேற்றி அதனை அடித்துத் தெரிவித்தல் மரபு.

பிராட்டியின் கூந்தலில் தெய்விகமான இயற்கை மணமும் பூ முதலியவற்றாலாகிய செயற்கை மணமும், பூக்களில் தேனும் உண் மையின், அவற்றை விரும்பி வண்டுகள் எப்போதும் மொய்க்கு மென்க. வாசம்-சீலை: வடசொல். நறுமணப் பொருள்கள் என்றலும் ஆம். புனை நகர்-இயற்கையாகவே அழகுடைய நகரம்.

(பி - ம்.) 1. மானவர்: மனநினைவினன்: மண நினைவினன்: மணவிழைவினன்.
2. தேனகு; தேநகு; தேனவிழ்; தேனிமிர்: குழலாரும்: திருமணமினி நாளை; திருமணமென நாளைப்; வினை நாளைப்,
3. பூநிறை யணிகோலப்; மலர் வாசப்: பொன்னகர்: அணிவாரென்று.
4. மிசையானையணி முரசு; மிசையான மணிமுரசு; மணமுரசு; மிசையே வைத்ததிர் முரசு: அறையென்றான்; அறைவித்தான். (19)

## நகர மாந்தர் நிலை

1256. முரசறை தலுமான முதியரு மிளையோரும்
விரைசெறி குழலாரும் விரவினர் விரைகின்றார்
உரைசெறி கிளையோடு முவகையி னுயர்கின்றார்
கரைதெரி வரிதாகு மிரவொரு கரைகண்டார்.

முரசு அறைதலும்-(வள்ளுவர்) முரசறைந்து தெரிவித்தவுடனே,மானம் முதியரும்-பெருமையுடைய வயோதிகரும்,இளையோரும்-இளைஞரும், விரை செறி குழலாரும்-நறுமணம் பொருந்திய கூந்தலையுடைய மகளிரும், விரவினர்-தம்முட் கலந்து கூடி, விரைகின்றார்-நகரை அலங்கரித்தற்கு விரைகின்றவரும், உரை செறி கிளையோடும்-(திருமணத்தைப்பற்றிய) உரையாடல் மிக்க சுற்றத்தாருடனே, உவகையின் உயர்கின்றார்-மகிழ்ச்சியில் மேம்பட்டவருமாகி, கரை தெரிவு அரிது ஆகும் இரவு-கரை காண முடியாததான (கடல் போன்ற) இரவுக்கு, ஒரு கரை கண்டார்-ஒரு முடிவைக் கண்டனர்.

சீதா ராமர்களின் திருமண விழாக் காணுதலில் நகர மக்கள் அனைவர்க்கும் ஓர் ஆர்வமும் மகிழ்ச்சியும் மிக்கிருத்தலின், அந்நாளை ஆவலோடு எதிர்நோக்கி யிருந்த அவர்களுக்கும் மணமக்களைப் போலவே முந்தின நாளிரவு எளிதிற் கழியாதாய் நீட்டிப்பதாகத் தோற்றியது என்பதுபட, 'கரை தெரிவரிதாகு மிரவொரு கரைகண்டார்' என்றார்.

(பி - ம்) 1. அறைதலு மங்காம்; அறைதலு நகர: இளையாரும்.
2. விரைவினர்; விரைவினின்; வினவினர்.
3. களியோடும்: உயர்வாரும்; உயர்வாரெண்; உயர்வாரோர்.
4. கரை செயல்; கரை செய; கரை செறிவு: அரிதாக: எனவொருகரை கண்டார். (20)

## சூரியோதயம்

1257. அஞ்சன வொளியானு மலர்மிசை யுறைவாளும்
எஞ்சலின் மணநாளைப் புணர்குவ ரெனலோடும்
செஞ்சுட ரிருள்கீறித் தினகர னொருதேர்மேல்
மஞ்சனை யணிகோலங் காணிய வெனவந்தான்.

அஞ்சனம் ஒளியானும்-மைவண்ணனான இராமபிரானும், அலர் மிசை உறைவாளும்-அலர்மேல் மங்கையான சீதாபிராட்டியும், நாளை-, எஞ்சல் இல் மணம் புணர்குவர் எனலோடும்-குறைவில்லாத

(சிறப்புமிக்க) திருமணம் புரிந்து கொள்வரென அறிந்தவுடனே, தினகரன்-சூரியன், செம்சுடர்-சிவந்த கிரணங்களாகிற கைகளால்; இருள் கீறி-இருளென்னும் திரையைக் கிழித்துக்கொண்டு, ஒரு தேர் மேல்-(தனது) ஒப்பற்ற ஓராழித் தேரின் மேல் (ஏறி), மஞ்சனை-தன் குலக்குமரனை (இராமபிரானை), அணி கோலம் காணிய என-அலங் கரித்த திருமணக்கோலத்தோடு காணும் பொருட்டு, வந்தான்- உதயமானான்.

சூரியன் உதயமாகி வந்ததை, சீதா ராமர் விவாகம் காணும் பொருட்டு வந்ததாகக் கூறினமை தற்குறிப்பேற்றவணி. தினகரன்- பகல் செய்வோன்.

(பி - ம்.) 1. மஞ்சன; மஞ்சென: அமர்வாளும்; அமைவாளும்.
2. புரிகுவரெனவெண்ணி. 3. இருள்சீறித்; ஒளிகீறித்.
4. மஞ்சன மணிகோலம்; மணிக்கோலம்: காணிய வகை; கண்டன வென. (21)

இதன் பின் சில பிரதிகளுள் கீழ்வரும் பாடல் ஒன்று காணப்படுகிறது:—

கதிரவ னெழலோடுங் கடிநக ரிடமெங்கும்
மதிமுக மடவாரு மைந்தரு முதியோரும்
விதிபுரி செயல்போலு மேலுல கினுமில்லாப்
புதுமையி னுறுகோலம் புனைதலை முயல்வுற்றார்.

நகரை அணிசெய்தலும் பிறமகிழ்ச்சிச் செயல்களும்

1258. தோரண நடுவாருந் தூணுறை யிடுவாரும்
பூரண குடமெங்கும் புனைதுகில் புனைவாரும்
காரணி நெடுமாடங் கதிர்மணி யணிவாரும்
ஆரண மறைவாணர்க் கமுதினி தடுவாரும்.

(மிதிலை நகர மக்கள்), தோரணம் நடுவாரும்-தோரணக் கம்பங்களை (உரிய விடங்களில்) நாட்டுபவர்களும், தூண் உறை இடு வாரும்-தூண்களுக்குப்(பட்டினாலான) உறைகளையிடுபவர்களும். எங் கும்-எவ்விடத்தும், பூரணகுடம்-பூரணகும்பங்களாலும், புனை துகில்- சித்திரச் சீலைகளாலும், புனைவாரும்-அழகு செய்பவர்களும், கார் அணிநெடு மாடம்-மேகங்கள் தங்கும் உயரிய மாளிகைகளை, கதிர் மணி அணிவாரும்-ஒளிமிக்க மணிகளால் அலங்கரிப்பவர்களும், ஆரணம் மறைவாணர்க்கு-பல சாகைகளைக்கொண்ட வேதநெறி யில் வாழும் அந்தணர்க்கு (இடுதற் பொருட்டு), இனிது அமுது அடு வாரும்-இனிதாக உணவைச் சமைப்பவர்களும்,

இதுமுதல் பதினாறு பாடல்களில் முடிக்குஞ் சொல் இன்றியே அவாய் நிலையாக மக்களின் மகிழ்ச்சிச் செயல்களை விரித்துக்கூறுகின் றார். 'ஆயினர்' என முடிக்குஞ்சொல் அங்கங்கே தந்து முடித்துக் கொள்க.

தோரணம்: 156-விசேடக்குறிப்புப் பார்க்க. தோரணம் நடுதலும் பூரண குடம் வைத்தலும்: 'பூரண பொற்குடம் வைத்துப் புறமெங்கும், தோரணம் நாட்டக்கனுக் கண்டேன்' (திவ். நாச்சியார். 6: 1.

(பி - ம்.) 1. உறை பொதிவாரும்.
2. புனை துகில் பொதிவாரும்; புனைவன புனைவாரும்; பொலிதர நிரைவாரும்; வனைவாரும். 3. மாடக்கதிர்மணி.
4. நெடுவாணர்க்கு: இன்னமு தமைவாரும்; அருள் வாரும். (22)

1259. அன்னமெ னடையாரு மழவிடை யனையாரும்
கன்னிந னகர்வாழை கமுகொடு நடுவாரும்
பன்னரு நிரைமுத்தம் பரியன தெரிவாரும்
பொன்னணி யணிவாரும் மணியணி புனைவாரும்.

கன்னி நல் நகர்-அழிவில்லாத நலங்கள் பொருந்திய அந்நகரத்திலே, அன்னம் மெல் நடையாரும்-அன்னம்போலும் மெல்லிய நடையுடைய மாதரும், மழவிடை அனையாரும்-இளங்காளைகள் போன்ற இளைஞரும், வாழை-வாழை மரங்களை, கமுகொடு-பாக்கு மரங்களுடனே, நடுவாரும்-(கொணர்ந்து உரிய விடங்களிலே) நாட்டுபவர்களும், பன்ன அரு-(விலைமதித்துச்) சொல்லுதற்கரிய, நிரை முத்தம்-வரிசையான முத்து வடங்களிலே, பரியன தெரிவாரும்-பருமனுள்ளவற்றை (அணிதற்குத்) தேர்ந்தெடுப்பவர்களும், பொன் அணி அணிவாரும்-பொன்னாலாகிய அணிகலன்களால் தம்மை அலங்கரித்துக் கொள்பவர்களும், மணி அணி புனைவாரும்-இரத்தினாபரணங்களையணிந்து கொள்பவர்களும்,

வாழை, கமுகு நாட்டுதல்-ஆடவர் செயல். பருமனுள்ள முத்துவடங்களைத் தேர்ந்தெடுத்தல், தாம் அணிதற்கும், மாளிகைகளை அலங்கரித்தற்குமாம். முத்தம்: ஆகுபெயர்.

(பி - ம்.) 2. கமுகுகள்.
3. நிறை முத்தம்; விரை முத்தம்: பரிவினர்: இன்னிசை முரல்வாரும்; தெரிவாரும்: இளமுலை யவரோடும்.
4. புனைதுகில் புனைவாரும்: புனையணி புனைவாரும்; புனைமணி யணிவாரும். (23)

1260. சந்தன மகினறுஞ் சாந்தொடு தெருவெங்கும்
சிந்தினர் திரிவாருஞ் செழுமலர் சொரிவாரும்
இந்திர தனுநாணு மெரிமணி நிரைமாடத்
தந்தமில் விலையாரக் கோவைக ளணிவாரும்.

நாறும்-நறுமணம் வீசுகிற, சந்தனம்-சந்தனக் குழம்பையும், அகில் சாந்தொடு-அகில் கட்டைத்தேய்வைக் குழம்பையும், தெரு எங்கும்-தெருக்களிலெல்லாம், சிந்தினர் திரிவாரும் - தெளித்துக்

கொண்டு செல்பவர்களும், செழுமலர்-வளமான (புதிய) பூக்களை, சொரிவாரும்-(கொண்டு வந்து அங்கங்கே) நிறைவிப்பவரும், இந்திர தனு நாணும்-(பல நிறங்களையுடைய) வானவில்லும் வெட்கத்தக்க, எரி மணி-ஒளிமிக்க (பலநிற) மணிகள் பதித்த, நிரை மாடத்து-வரிசையான மேன்மாடங்களில், அந்தம் இல் விலை-அளவற்ற விலைமதிப்புடைய, ஆரம் கோவைகள் அணிவாரும்-முத்துமாலைகளை அழகுறத் தொங்கவிடுபவர்களும்,

மணிகளின் கூட்டம் வானவில்லின் தன்மை காட்டல்: 'பல்லாயிர மாமணி பாடமுறும், தொல்லாரணி கால்சுடரின்றொகை தான், எல்லாமுடனுயெழலாலொருதன், வில்லாலொளிர்மேகமென' (ஆரணிய. 84.) இந்திரவில்: சுந்தர. 726; யுத்த. 438.

(பி - ம்.) 1. மண நாறும்; மலர் நாறும்: சந்தொடு விரையெங்கும்.
2. சிந்தின தெரிவாரும்: தேமலர் புனைவாரும்; தெரிவாரும்.
3. தனுநாண; தனுமானும்; திருநாண: எழில்மணி; நிறை மாடத்து; நிரை மாதர்; அணி மாலை: ஏழின மணிமாடத்து.
4. விலையாரம்; கோவை கொடு; கோவை கொண்டு: வினையாரத் தணி கலனணிவாரும். (24)

1261. தளங்கிளர் மணிகாலத் தவழ்சுட ருமிழ்தீபம்
இளங்குளிர் முளையார்நற் பாலிகை யினமெங்கும்
விளிம்புபொன் னொளிநாற வெயிலொடு நிலவீனும்
பளிங்குடை யுயர்திண்ணைப் பத்தியின் வைப்பாரும்.

எங்கும்-(நகரின்) எல்லாவிடங்களிலும், தளம் கிளர்-(மாளிகைகளின்) மேல் தளங்களில் மிக்குள்ள, மணி கால-இரத்தினங்கள் ஒளி வீசிக்கொண்டிருக்க, விளிம்பு-ஓரங்களில் (அமைந்துள்ள), பொன் ஒளி நாற-பொன் வேலைப்பாட்டின் ஒளி வீசுதலால், வெயிலொடு-வெயில் போன்ற ஒளியையும், பளிங்கு உடை நிலவு-(தளவரிசையான) படிகக் கற்களின் நிலவொளியையும், ஈனும்-வெளிவிடுகின்ற, உயர் திண்ணை-உயர்ந்த திண்ணைகளிலே, தவழ் சுடர் உமிழ் தீபம்-பரந்த ஒளியைத் தரும் விளக்குகளையும், இளம் குளிர் முளை ஆர்-இளமையான குளிர்ந்த விதை முளைகள் நிறைந்த, நல் பாலிகை இனம்-நல்ல பாலிகை வகைகளையும், பத்தியின் வைப்பாரும்-வரிசையாக வைப்பவர்களும்,

விளக்கேற்றி வைத்தலும் முளைப் பாலிகைகளை வைத்தலும் மங்கலக் குறிகள். பாலிகைகள் உலோகங்களாலும் பிறவற்றாலும் பலவகையாக அமைக்கப்படுதலின், 'பாலிகையினம்' என்றார், 'பொலம் பாலிகைகளும், பாவை விளக்கும் பலவுடன் பரப்புமின்' (மணி. 1: 44-5) என்பதை யீண்டு ஒப்பு நோக்குக.

(பி - ம்.) 1. மணிசாலத்தழை: உமிழ் தீபத்து: இமிழ் தீபம்.
2. இளந்தளிர்; விளங்கொளி முளையாநற்; முளையான்ற: முளையா ணர்ப்; முலையார்நற்
3. விளம்பு; விளங்கு: பொன்வகை நாற; பொன்விரை நாற; விரை நாறும்; பொன்விரை நாற.
4. பளிங்கிடையுயர்: பத்தியி னமைப்பாரும்; பந்தியில்; பந்தியின். (25)

1262. மந்தர மணிமாட முன்றிலின் வயினெங்கும்
அந்தமி லொளிமுத்தி னகனிரை யொளிவீச
அந்தர நெடுவான மீனலர் குவதென்னப்
பந்தரி னிழல்வீசிப் படர்வெயில் கடிவாரும்.

மந்தரம் மணி மாடம்-மந்தர மலைபோல் உயர்ந்த அழகிய மாளிகைகளின், முன்றிலின் வயின் எங்கும்-முன்னிடங்களிலெல்லாம், அந்தரம்-மேலிடத்துள்ளதான, நெடுவானம்-விரிந்த வானத்தில், மீன் அலர்குவது என்ன-விண் மீன்கள் பூத்தாற்போல, அந்தம் இல் ஒளி-அளவற்ற காந்தியுள்ள, முத்தின் அகல் நிரை-முத்து வடங்களின் பரந்த வரிசைகள், ஒளிவீச-பிரகாசிக்கும்படி (அமைக்கப் பட்ட), பந்தர் இன் நிழல் வீசி-பந்தலின் இனிய நிழலைப் பரப்பி, படர் வெயில் கடிவாரும்-(எங்கும்) பரவியுள்ள வெயிலின் வெம்மையைப் போக்குபவர்களும்,

விண் மீன்கள் பூத்த வானம்போல விளங்கும்படி அமைத்த பந்தல் என்றதனால், பந்தல்கள் மிக உயர்ந்தனவாய், உள்ளிடத்தே பசுமையான சிலைகளாலும் குளிர்ந்த முத்துக்களாலும் அலங்கரிக்கப் பெற்றவை யென்பது பெறப்படும். திருமணம் நிகழும் பங்குனி யுத்தர நாள் கடுவெயிலுடையதாகலின், அவ்வெப்பந் தணிய, வீதி களெங்கும் அலங்காரப் பந்தல்கள் அமைத்தனர் என்க.

(பி - ம்.) 1. மந்தர முயர்மாட முன்றினில்.
2. அந்தமி லொளிர்; நந்தலி லொளிர்: முத்தினருநிரை; நகுநிரை: ஒளி நாறி; நாற: நாறும்; நாற்றி: நந்தலி லொளி முத்தினகுசுடர்பொலி வாகி; முத்தின கைநிரை யொளிவீச.
3. இந்திரனெடுவானம் ஈவலர்குவ தென்னப்; ஈனலருவ தென்ன; அந்தர மிசைவிண் மீனலர்குவ தென நீளும்; அந்தர நெடுவான்மீனலர்குவ தென்னப்பூம்; அந்தர நெடுவானம் மீனலர்குல தெனலாய்; இந்திர னெடுவான மிந்நல மிலதென்னப்.
4. பந்தலின்: பந்தியின் வகைசெய்தே.

ஒரு பிரதியில் இப்பாடலின் 2, 3-ஆம் அடிகள் மாறியுள்ளன. (26)

1263. வயிரமி ழொளியினு மரகத மணிவேதிச்
செயிரற வொளிர்தீபஞ் சிலதியர் கொணர்வாரும்
வெயில்விர வியபொன்னின் மிடைகொடி மதிதோயும்
எயிலினி னடுவாரு மெரியகி லிடுவாரும்.

வயிரம்-(சுற்றிலும் பதித்த) வைரக்கற்கள், மின் ஒளி ஈனும்-மின்னல்போலும் ஒளியை வீசுகிற, மரகதம் மணி வேதி-மரகதமென்னும் பச்சை மணிகள் பதித்த மேடைகளில், சிலதியர்-பணிப்பெண்கள், செயிர் அற ஒளிர்-குற்றமற விளங்குகின்ற, தீபம் கொணர்வாரும்-விளக்குகளைக் கொணர்ந்து வைப்பவர்களும், வெயில் விரவிய பொன்னின்-ஒளிமிக்க பொன்னாலியன்ற (காம்புகளையுடைய), மிடை கொடி-நெருக்கமான கொடிகளை, மதி தோயும் எயிலினில்-சந்திரன் வந்து படியத்தக்க (உயரமான) மதிலின்மேல், நடுவாரும்-நாட்டுபவர்களும், அகில் எரி இடுவாரும்-அகில் துண்டங்களை நெருப்பிலிட்டுப் புகைப்பவர்களும்,

பெரும்பாலும் அலங்கரித்தல் பற்றிய செய்திகளை யிதுகாறுங் கூறிவந்து, மேலே பலவகை நிகழ்ச்சிகளைக் கூறுகின்றார்.

(பி - ம்.) 1. வயிரமின்னொளி வீசும்: மரகத மொளிர்; மரதக மணி.
2. செயிரறு மொளி: சிலதிகள்.
3. வெயில்பரவிய: வெயில்விரிமிளிர்: மிடைகுடை; மதிதோய; மதிதேய சசிதோயும்.
4. எயில்வயினணிவாரும்; வயின்வயினணிவாரும; வயின்வயின் வருவாரும்; வயின்வயினிடுவாரும்: அகிலெரி; அகில்புகை; அகில்மிக மகிழ்மிகவிடுவாரும்; அகிலொடு மிகுவாரும்.

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை: சிலபிரதிகளில் இது 'கலவைகள்' (1265) என்பதன்பின் உள்ளது. (27)

1264. பண்டியி னிறைவாசப் பனிமலர் கொணர்வாரும்
தண்டலை யிலையோடுங் கனிபல தருவாரும்
குண்டல மொளிவீசக் குரவைகள் புரிவாரும்
உண்டைகொண் மதவேழத் தோடைக ளணிவாரும்.

பண்டியில்-வண்டிகளில், நிறைவாசம் பனி மலர் கொணர்வாரும்-நிறைந்த மணமுள்ள குளிர்ந்த பூக்களைக் கொண்டுவருபவர்களும், தண்டலை-தோட்டங்களினின்றும், இலையோடும்-வாழையிலை வெற்றிலை முதலியவற்றையும், கனி பல-பலவகைப் பழங்களையும், தருவாரும்-கொணர்பவர்களும், குண்டலம் ஒளி வீச-(தம் காதில் அணிந்த) குண்டலங்கள் பிரகாசிக்க, குரவைகள் புரிவாரும்-(பெண்கள் கூடிக்) குரவை ஆடுபவர்களும், உண்டை கொள்-சோற்றுருண்டையை உட்கொள்ளுகின்ற, மதம் வேழத்து-மதயானைகளுக்கு, ஓடைகள் அணிவாரும்-நெற்றிப்பட்டங்களை அணிவிப்பவர்களும்,

விருந்துபசரித்தலின் பொருட்டு வாழையிலை, வெற்றிலை, பழங்கள், பூக்கள் ஆகியவற்றைக் கொண்டுவந்து சேர்க்கின்றனர் பலர். குரவை-பெண்கள் கூடிக் கைகோத்து நின்று ஆடும் கூத்து. இதைப் பற்றிய விவரங்களைச் சிலப்பதிகாரம் ஆய்ச்சியர் குரவையுட் காண்க. 66-குறிப்பும் பார்க்க.

வண்டிகளில் மலர் கொண்டு வருதல்: 'மணநிலே மலர் பெய்து மறுகும் பண்டியும்' (சீவக. 61.)

(பி - ம்.) 1. பண்டியின் வருவாரும்; பண்டியின்மிசை பெய்தே; பணிமலர் கொய் வாரும்.
2. தண்டலேயிலேயாணர்க்; தண்டலேதளிரோடும்; தண்டியவிலேதாது; கண்டியவிலேயோடு; கனிமலர்; தளிர்வகை; கொணர்வாரும்.
3. வெயில்வீசக்; எதிர்வீசக்; எரிவீசக்; குரகதம் பிணவாரும்,
4. உண்டையின்மத; உண்டையினனி உண்டையமத; ஒண்டிறன்மத; ஓடைகள் புனேவாரும்; வேழந் தொடைகளினணிவாரும்.

ஒருபிரதியில் இப்பாடல் இல்லே. (28)

1265. கலவைகள் புனேவாருங் கலேநல தெரிவாரும்
மலர்குழன் மலேவாரும் மதிமுக மணியாடித்
திலதமு னிடுவாருஞ் சிகழிகை யணிவாரும்
இலவிதழ் பொலிகோல மெழில்பெற விடுவாரும்.

கலவைகள் புனேவாரும்-சந்தனக் கலவை முதலியன பூசிக் கொள்பவரும், கலே நல்ல தெரிவாரும்-நல்ல ஆடைகளேத் தேர்ந் தெடுத்து உடுப்போரும், மலர் குழல் மலேவாரும்- கூந்தலிலே பூவைச் சூடுகின்றவரும், அணி ஆடி முன்-அழகிய கண்ணுடியின்முன்(நின்று), மதி முகம்-பூர்ண சந்திரன் போன்ற தம் முகத்தில், திலதம் இடு வாரும்-நெற்றிப் பொட்டை யிட்டுக்கொள்பவரும், சிகழிகை அணி வாரும்-மயிர் முடியைப் (பலவகையாக) அழகு செய்வோரும், இலவு இதழ்-இலவம் பூப்போன்ற உதடுகளில், எழில்பெற-(அவை மேலும்) அழகு பெறும்படி, பொலி கோலம் இடுவாரும்-அழகிய செந்நிறக் கோலம் பூசுவோரும்,

திலதம்-திலகம். சிகழிகை-தலேயில் அணியும் ஒருவகை மாலே யும்ஆம்; 1197, 1287. இதழுக்குச் செந்நிற மூட்டுதல்: 'அணிகிளர் பவளவாயும், செம்மலர் நுதலு நாவுந் திருந்தொளி யுகிரொடங் கேழ், விம்மிதப்பட்டு வீழ அலத்தக மெழுதிவிட்டாள்' (சீவக. 2446) தொல். செய். 80-ந. உரையும் பார்க்க. ஈற்றடிக்கு, 'இலவிதழ்போல விளங்கும் செம்பஞ்சுக் குழம்புக் கோலத்தை யிடுதற்குரிய அங்கங் களில் இடுவோரும்' எனவுரைத்தலும் ஆம்.

(பி - ம்.) 1. கலநல; கலனல; கலனவை; கலனிரை; கலேநலம்.
2. குழல்மிலேவாரும்; அணிவாரும்; புனேவாரும்; மதிமுகமதிலாடித்; மணியணிமுடியாடித்.
3. திலகமுன்; திலதமது; திலதமும்; திலகமுனணிவோரும்; சிகழிகை தெரிவாரும்; தெரிகோலம்; புனேவாரும்.
4. பொறிகோலம்; பொழிகோலம்; பொறிகோலம்; எயிறுற; பொலி கோலத் தெழில்பெற.

இப்பாடல் சில பிரதிகளில் இல்லே. (29)

1266. தப்பின மணிகாசுஞ் சங்கமு மயிலன்னார்
ஒப்பனை புரிபோது மூடலி னுகுபோதும்
துப்புறழ் நிறைவாசச் சுண்ணமு முதிர்தாதும்
குப்பைக ளெனவாரிக் கொண்டயல் களைவாரும்.

மயில் அன்னார்-மயில் போலுஞ் சாயலையுடைய மகளிர், ஒப்பனை புரிபோதும்-(தம்மை) அலங்கரித்துக்கொள்ளும்போதும், ஊடலின் உகு போதும்-கணவரிடத்து ஊடலால் (அணிகளையும் பூமாலைகளையும்) களைந்தெறியும் போதும், தப்பின-தவறிச் சிந்தின, மணி-இரத்தினங்களையும், காசும்-பொற்காசுகளையும், சங்கமும்-(கழற்றிப் போகட்ட) சங்கு வளையல்களையும், துப்பு உறழ்-பவளம் போன்ற (சிவந்த), நிறை வாசம் சுண்ணமும்-மிக்க மணம் பொருந்திய கந்தப் பொடியையும், உதிர்தாதும்-உதிர்ந்த பூந்தாதையும், குப்பைகள் என-குப்பைகளைப்போல,வாரிகொண்டு அயல் களைவாரும்-(குவித்து) வாரிக்கொண்டு போய் வெளியே கொட்டிவிடுவோரும்,

கொட்டுவோர் பணிப் பெண்கள். சிந்தின பொன்னையும் மணியையும்பிற உயர்ந்த பொருள்களையும் குப்பைபோலக்கருதிக் களைந்துவிடுவர் என்றதனால், அவற்றைப் பொருட்படுத்தி எடுத்து வைக்கும் வறுமைக் குணமுள்ளோர் அந்நகரத்தில் இல்லையெனச் செல்வச் சிறப்பைக் கூறியவாறும். குப்பைகள் இவைகளாயின், அவர்கள் விரும்பிப் போற்றத்தக்க சிறந்த பொருள்கள் எத்தகைய மதிப்புடையனவோ என்பதை ஊகித்துக்கொள்க. போது-பூவென்பாருமுளர்.

உயர்ந்த பொருள்களையும் குப்பையெனக் களைதல்: பெருங். 2. 2: 92-102 பார்க்க.

(பி - ம்.) 1. மணிகாலும்; மணிசாந்தும்.
2. புரிபோதத்து; புரிபோழ்தின்; புரிகோலத்து; புரிபோகத்து: உகுமுத்தும்; உகுபொன்லும்.
3. துப்புறழ் நிரைவாசச்; நிறவாசச்; இளவாசச்; இதழ்வாசச்; மிருவாசச்; துப்புறுமலர்வாசச்: உதிர்தோறும்; உதிர்முத்தும்.
4. கொண்டனர்; கொண்டன; கொண்டவர்: அகல்வாரும். (30)

1267. மன்னவர் வருவாரும் மறையவர் நிறைவாரும்
இன்னிசை மணியாழி னிசைமது நுகர்வாரும்
சென்னியர் திரிவாரும் விறலியர் செறிவாரும்
கன்னலின் மணவேலைக் கடிகைக டெரிவாரும்.

மன்னவர் வருவாரும் - அரசர் பலர் (திருமணங்காணும் பொருட்டு) வருவோரும், மறையவர் நிறைவாரும்-வேதியர்கள் (வந்து) நிறைவோரும், இன்இசை-மிடற்றுப் பாடலும், குழல் முதலிய கருவிகளின் இசையும், மணியாழின் இசை-அழகிய வீணையிசையுமான, மது நுகர்வாரும்-தேனைச் செவியால் பருகுவோரும்,

சென்னியர் திரிவாரும்-பாணர்கள் திரிவோரும், விறலியர் செறிவாரும்-பாண்மகளிர் கூடுவோரும், கன்னலின்-நாழிகை வட்டிலால், மணம் வேலை கடிகைகள் தெரிவாரும்-திருமண முகூர்த்த காலத்தை ஆராய்வோரும்.

சென்னியர்-பாணர்; பெரும்பாண். 103-ந. பார்க்க. கன்னல்-நாழிகையை அளந்தறியும் கருவி; இதன் தன்மையை, 'புனல் உற்றுருவு செப்பின்........கன்னலை வல்லால்' (கிட்கிந்தா. 504.) என்பதனுல் அறியலாம். இது 'நீர்க்கன்னல்' எனவும் வழங்கும்; முல்லைப். 58; அகநா. 43: 6; மணி. 7: 64-5-காண்க.

(பி - ம்.) 1. மறையவர் வருவாரும்.
2. இள்வியம்; இன்னகை: நிறையாழின்: இசையது.
3. சென்னியர் செறிவாரும்: வருவாரும்: சிலதியர்திரிவாரும்; தெரிவாரும். 4. மணவோலைக்; மணவெல்லைக்.

சிலபிரதிகளில் 3, 4—ஆம் அடிகள் மாறியுள்ளன. (31)

1268. கணிகையர் தொகுவாருங் கலைபல பயில்வாரும்
பணிபணி யெனலோடும் பலவிரு நிலமன்னர்
அணிநெடு முடியொன்ருென் றறைதலி னுகுமம்பொன்
மணிமலை யெனமன்ன வாயிலின் மிடைவாரும்.

கணிகையர் தொகுவாரும்-நாடகக் கணிகையர் பலர் கூடுவோரும், கலை பல பயில்வாரும்-(கூடித்தமக்குரிய) கலைகள் பலவற்றை நிகழ்த்துவோரும். பல இருநில மன்னர்-பெருநில மன்னரான பல அரசர்கள், பணி பணியெனலோடும்-(எமக்குரிய) 'பணியைக் கட்டளையிடுக' என்று கூறிக்கொண்டு, அணி நெடு முடி-தாம் அணிந்துள்ள பெரிய கிரீடங்கள், ஒன்று ஒன்று அறைதலின்-ஒன்றோடொன்று தாக்குதலால், உகும்-(அவற்றினின்றும்) சிந்துகிற, அம் பொன் மணி-அழகிய பொன்னும் மணிகளும், மலை என மன்ன-மலை போல மிக்குக் குவிய, வாயிலில் மிடைவாரும்-அரண்மனை வாயிலில் (வந்து) நெருங்குவோரும்,

கணிகையர், அரசவையிலும் அரங்குகளிலும் வேத்தியல் நாடகம் நிகழ்த்துதற்குரியவர்கள். இவர்கள் அறுபத்து நான்கு கலைத்திறம் படைத்தவராதலின் தமக்குரிய கலை பல பயில்வாராயினர். 'பண்ணுங் கிளையும் பழித்த தீஞ்சொல், எண்ணெண் கலையோர்' (சிலப். 14: 169-7) என்பர் இளங்கோவடிகள். சீதா-ராமர் திருமணத்தின் ஏற்றத்தாலும், இராமபிரான் சக்கரவர்த்தி திருக்குமாரனுதலாலும், அரசர் பலர் திருமணத்திலே தாம் தாம் பங்கு கொண்டு செய்தற்கேற்ற பணிகளை அறிந்து செய்தற் பொருட்டுப் 'பணி பணி' என ஒருவரின் ஒருவர் முந்துவாராயினர். அவ்வாறு

அவர்கள் நெருங்கும்போது அவர்களுடைய கிரீடங்கள் ஒன்றோடொன்றுமோத, அவற்றினின்றும் மணியும் பொன்னும் சிதறி அவை மலைபோலக் குவிகின்றன என்க. இவ்வாறு கூறியவதனால், வந்த அரசர்களின் மிகுதி பெறப்படும். ஈற்றடியில் 'மணி மலைதொக மன்னன் வாயலின் மிடைவாரும்' என்ற பாடங்கொண்டு, 'பொன்னும் மணியும் மலைபோலத் திரளச் சனகமன்னன் அரண்மனை வாயிலில், அல்லது சக்கரவர்த்தி தங்கிய மாளிகை வாயிலில் அரசர் நெருங்கினர் எனப் பொருள்கூறி, இப்பொருளுக்கேற்ப, 'பணி பணி எனலோடும்' என்பதற்கு, 'நீங்கள் உள்ளே வருமாறு அரசன் இட்ட கட்டளையுளது' என வாயில் காவலர் அறிவித்தலும்' என உரை கூறினர் பிறர். இனி இரண்டாமடி 'பணியணியின முத்தம் பலவித நிலமன்னர்' எனப் பாடங்கொண்டு அதற்கேற்ப உரை கூறினாரும் உளர்.

(பி - ம்.) 1. கணிகைகள்; கணிதர்கள்: கலைபல தெரிவாரும்.
2. பணிமணி; பணியணி; மணியணி: எனமுத்தின்; இனமுத்தம்; நிறை முத்தின்: பலவிதநில; பலபலவித; பல்விருநில; பலவிதமுதல்.
3. அணிமணிமுடி; அறைதலு முதிர்பொன்னின்; உகுபொன்னின்; அறைதலினுகு பொன்னின்.
4. மணியலை தொகமன்னன்; தொகுமன்னன்; தொகுமுன்றில்; தொக வாயின்; தொகுவாயின்; மறையவர் மிடைவாரும் (32)

1269. கேடகம் வெயில்வீசக் கிளரயி னிலவீனக்
கோடுயர் நெடுவிஞ்சைக் குஞ்சர மதுபோல
ஆடவர் திரிவாரு மரிவையர் களிகூரும்
நாடக நவில்வாரும் நகையுயிர் கவர்வாரும்.

ஆடவர்-ஆண்கள் சிலர், கேடகம்-(இடக்கையிற் பிடித்த) கேடகம், வெயில் வீச-வெயில் போன்ற ஒளியெறிக்கவும், கிளர் அயில்-(வலக்கையில்) விளங்குகின்ற வாளாயுதம், நிலவு ஈன-நிலாப் போன்ற ஒளியை வீசவும், கோடு உயர்-கொம்புகள் (தந்தங்கள்) உயர்ந்த, நெடு விஞ்சை-மிக்க போர்த்தொழில் பயிற்சியுடைய குஞ்சரம் அதுபோல-யானையைப்போல, (கம்பீரமாக), திரிவாரும்-, (வீதிகளிலே) திரிகின்றவர்களும், அரிவையர்-நாடக மகளிர், களி கூரும்-(கண்டோர்) களிப்பு மிகுதற்குக் காரணமான, நாடகம் நவில் வாரும்-கூத்தினை ஆடுவோரும், நகை-(தம்முடைய) புன்சிரிப்பால், உயிர் கவர்வாரும்-ஆடவர்களின் உயிரைக் கொள்ளைக் கொள் வோரும்.

அயில் என்பது ஆயுதப் பொதுப் பெயராயினும், இங்கே கேடகம் கூறப்படுதலின் அதற்கேற்ப 'வாள்' எனப்பட்டது. வேலும் ஆம். இவ்வாறு கத்தியுங் கேடகமுங் கொண்டு ஆடவர் திரிதலைக் கூறியது, திருவிழாக்காலங்களில் நடைபெறும் சேரிப்போரைக்

குறித்ததெனலாம். விளையாட்டுப் போராகிய இது, பழங்காலத்து நகரங்களில் நிகழ்ந்துவந்ததென்பதை, 'மறங்கொள் சேரிமாறுபொரு செருவில், மாறுதுற்ற வடுப்படு நெற்றிச், சுரும்பார் கண்ணிப் பெரும்புகல் மறவர்' (594-6) என்ற மதுரைக்காஞ்சி அடிகளாலும், 'கூர்தரு வேல்வல்லார் கொற்றங்கொள் சேரிதனில், கார்தரு சோலைக் கபாலீச்சரமமர்ந்தான்' (தே. திருஞான.) என்பதனாலும் அறியலாம். மகளிர் ஆடும் கூத்தும் இதனொடு பொருத்திக் கூறியிருத்தலால், இவை பொழுதுபோக்குக்குரிய இன்ப நிகழ்ச்சிகளாம். விஞ்சை-வித்தை; இங்கே போர்த் தொழிலைக் குறித்தது.

(பி - ம்.) 1. கிளர்பயில்.
2. குஞ்சரமதன் மீதே; குஞ்சரம்வரலேபோல்; குஞ்சரமனையார்போல்.
3. ஆடவர் வருவாரும்: வனிதையர்களிகூர.
4. நகையுயிர் சோர்வாரும்; நல்லழுதடுவாரும். (33)

1270. கதிர்மணி யொளிகாலக் கவர்பொரு டெரியாவா
றெதிரெதிர் சுடர் விம்முற் றெழுதலி னிளையோரும்
மதுவிரி குழலாரு மதிலுடை நெடுமாடம்
அதுவிது வெனவோரா ரலமர லுறுவாரும்.

கதிர் மணி ஒளி கால-(மாளிகைகளிலும் பிறவிடங்களிலும் அலங்கரிக்கப்பட்டுள்ள) காந்தி மிக்க இரத்தினங்களின் ஒளி வீசுதலால், கவர் பொருள் தெரியா ஆறு-கண்கள் கவர்தற்குரிய (கட்புலனாகத்தக்க) பொருள்கள் நன்கு தெரியாதபடி, எதிர் எதிர் சுடர் விம்முற்று எழுதலின்-(வீதியின் இருபுறமும்) ஒன்றற்கொன்று எதிரொளியாகச் சோதிமிக்கு எழுவதனால், இளையோரும் (வீதிகளில் செல்லும்) இளைஞரும், மது விரி குழலாரும்-(சூடியுள்ள பூக்களின்) தேன் மிகும் கூந்தலையுடைய பெண்களும், மதில் உடை(ய) நெடு மாடம்-(தாம் புகக் கருதும்) மதிலோடு கூடிய பெரிய மாளிகை, அது இது என ஒரார்-அதுவோ இதுவோ என்று (ஐயமற)அறியாதவராய் அலமரல் உறுவாரும்-மனக் கலக்கமடைபவரும்,

வீதிகளில் இருபுறமும் உள்ள மாளிகைகளில், இயற்கையாகவும் புதிய அலங்காரத்தாலும் அமைந்த மணிகளின் பேரொளி எங்கும் பரவிக் காண்போர் கண்களைக் கூசச் செய்தலால், அவரவர் தாம் புகக் கருதும் மாளிகையை அடையாளந் தெரிந்து புக முடியாமல் கலக்க முற்றனரென்க. இந்நிலை யடைந்தோர் வெளியிடங்களிலிருந்து திருமண விழாக் காணவந்தோர் எனலாம். அடுத்த பாடலையும் நோக்குக.

(பி - ம்.) 1. ஒளிகாலும்: கவர்பொருள் தெரிவாரும்; கனபொருள் தெரியாவாறு; கடி நகர் பொலிவான் மற்று; பொலிமாடத்து.
2. எதிரெதிர் தரமின்னுற்று; எதிரெதிர் சுடர்மின்னுற்று; எழின் மின்னுற்று; எதிர்சுடர் தரமின்னுற்று; எதிர்சுடரது மின்னுற்று; விம் முற்று: எழுதலும்; எஞ்சலின்: இமையோரும்.
3. மதிலுடை நெடுவானம்; நெடுநாகம்; நகர்நாகம்; மதியிடை நெடு மாடம்; அழகுடை நெடுமாடம்.
4. எனவோரார்; எனவோராது: அலமரலுறுகின்றார்; ஐயுறவருவாரும்.

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை. (34)

1271. தேர்மிசை வருவாருஞ் சிவிகையில் வருவாரும்
ஊர்தியில் வருவாரு மொளிமணி நிரையோடைக்
கார்மிசை வருவாருங் கரிணியில் வருவாரும்
பார்மிசை வருவாரும் பண்டியில் வருவாரும்.

(திருமண விழாக் காணும் பொருட்டாக), தேர் மிசை வருவாரும்-(தம் தகுதிக்கேற்பத்) தேரில் ஏறி வருபவர்களும், சிவிகையில் வருவாரும்-பல்லக்கில் வருபவரும், ஊர்தியில் வருவாரும்-(குதிரை, ஒட்டகம் முதலிய பிற) வாகனங்களில் வருபவரும், ஒளி மணி நிரை ஓடை-மிக்க ஒளியுடைய மணி வரிசைகள் பதித்த நெற்றிப்பட்ட மணிந்த, கார் மிசை வருவாரும்-மேகம் போன்ற ஆண் யானைகளின் மேல் வருவோரும், கரிணியில் வருவாரும்-பெண் யானைகளின் மேல் வருவோரும், பார்மிசை வருவாரும்-தரையில் (நடந்து) வருவோரும், பண்டியில் வருவாரும்-வண்டிகளில் வருவோரும்,

தேர், பல்லக்கு, யானை, வண்டி என வேறு பிரித்துக் கூறினமையின், 'ஊர்தி' என்றது இவையல்லாத பிற வாகனங்களைக் குறிக்கும். கார், உவமவாகுபெயராய் யானையைக் குறித்தது. 'கரிணி': வடசொல்; பெண் யானையின் பெயர்: இதனால், முன் கூறியது ஆண் யானை யென்க.

(பி - ம்.) 1. சிவிகையின்.
2. ஊர்தியின்: ஒளிர்மணியணியோடைக்.
3. கருணியில்; கருணியின்; கற்சியில்.
4. பண்டியின்; பரிமிசை.

இப்பாடலும் சிலபிரதிகளில் இல்லை. (35)

1272. முத்தணி யணிவாரும் மணியணி முனிவாரும்
பத்தியி னவிர்செம்பொற் பல்கலன் மகிழ்வாரும்
தொத்துறு தொழின்மாலை சுரிகுழ லணிவாரும்
சித்திர நிரைதோயுஞ் செந்துகில் புனைவாரும்.

முத்து அணி அணிவாரும்-முத்துக்களாலான பல அணிகலன்களை அணிந்துகொள்பவரும், மணி அணி முனிவாரும்-(முன்பு அணிந்திருந்த) இரத்தினாபரணங்களை வெறுத்துக் களைபவரும், பத்தியின்-

வரிசையாக, அவிர் செம்பொன் பல கலன்-ஒளிவிடும் நல்ல பொன்னு லியன்ற பல அணிகலன்களை, மகிழ் வாரும்-மகிழ்ச்சியோடு அணிப வரும், சுரி குழல்-கடை சுருண்ட கூந்தலில், தொத்து உறு தொழில் மாலை அணிவாரும்-பூங்கொத்துக்களால் சிறந்த வேலைப்பாடமைந்த மாலைகளைச் சூடுபவரும், சித்திரம்நிரை தோயும்-சித்திர வரிசைகள் அமைந்த,செம்துகில் புனைவாரும்-செம்பட்டாடைகளை உடுப்பவரும்,

பெண்கள் பலர் தம் தம் மனத்துக்கியைந்தவாறு செய்து கொண்ட பலவகை அலங்காரங்கள் இதனால் கூறப்பட்டன. சித்திர வேலைப்பாடமைந்த ஆடைகளை இக்காலத்தும் காண்கின்றோம். 'சித்திர நுண்டுகில் சேர்ந்த வல்குல்' (பெருங். 2.5: 109); 'சித்திரப் படத்துட்புக்குச் செழுங்கோட்டின் மலர்புனைந்து, மைத்தடங்கண் மணமகளின் கோலம்போல் வனப்பெய்தி' (சிலப். 7. 1-2).

(பி - ம்.) 1. முழுமணி யணிவாரும்; முழுமணி புனைவாரும்; முத்தணிவடமாலை முலைமிசை முயல்வாரும்.
2 பத்தியினிமிர்; பத்தியினணி; பத்தியினிறை; பத்தியின்விரி; பலகலன் மிலைவாரும்: அணிவாரும்.
3. தொத்துற; கொத்துறு: சுற்றுறு: தேன்மாலை; தொடைமாலை; கமழ்மாலை; தொடைவாசச்: தூய்குழல்; சூழ்குழல்; சுருள்குழல்: தூசுகள் புனைவாரும்.
4. சித்திர நிரைதெய்வச்; சித்திரநிறந்தோயும்; சித்திரமனையார்பால் தேமலர் கொணர்வாகும். (36)

பல பிரதிகளில் 3, 4-ஆம் அடிகள் முன்பின்னாக மாறியுள்ளன.

1273. விடநிகர் விழியாரு மமுதெனு மொழியாரும்
கிடைபுரை யிதழாருங் கிளர்நகை யொளியாரும்
தடமுலை பெரியாருந் தனியிடை சிறியாரும்
பெடையன நடையாரும் பிடியென வருவாரும்.

விடம் நிகர் விழியாரும்-நஞ்சு போன்ற கண்களையுடைய வரும், அமுது எனும் மொழியாரும்-அமுத மென்னத்தக்க இனிய சொல்லுடையவரும், கிடை புரை இதழாரும்-சிவந்த நெட்டி போலும் அதரங்களுடையவரும், கிளர் நகை ஒளியாரும்-விளங்கு கின்ற புன்முறுவலொளி பொருந்தியவரும், தட முலை பெரியாரும்-அடி பரந்த தனங்கள் பருத்தவரும், தனி இடை சிறியாரும்-ஒப் பற்ற இடை சிறுத்தவரும், பெடை அனம் நடையாரும்-அன்னப் பெடை போலும் மென்னடையுடையவரும், பிடி என வருவாரும்-பெண் யானைகளெனும்படி அசைந்து நடந்து வருபவரும்.

ஆயினர், நகர மக்கள் என முடிபு வருவித்துக்கொள்க. 1258 முதல் இதுவரை உள்ள பதினாறு பாடலுக்கும் ஒன்றிய முடிபு

இதுவே. விடம் × அமுது எனவும், செவ்வொளி × வெள்ளொளி எனவும், பெருமை × சிறுமை எனவும், முறையே முதன் மூன்றடிகளில் முரண் அமைந்துள்ளமை காண்க. அனம்-அன்னம்: இடைக்குறை.

(பி - ம்.) 1. அமுதன; அமுதென; அமுதுறு.
2. கிடைபுணர்: கிளர்நகை வெளியாரும்; இனியாரும்; கிளர்முலை நகையாரும்; கிளை நகை வெளியாரும்.
3. முலைப்பெரியாரும்.
4. பிடியெனவருவாரும் பெடையன நடையாரும்; பிடியன நடையாரும் பெடையென வருவாரும். (37)

## திருமண நாளின் மேன்மை

1274 உண்ணிறைநிமிர் செல்வத் துளவியல் பதைநாடிக்
கண்ணுற லரிதென்னிற் கழறுத லெளிதாமோ
எண்ணுறு சுடர்வானத் திந்திரன் முடிசூடும்
மண்ணுறு திருநாளே யொத்தத மணநாளே.

உள் நிறை நிமிர் செல்வத்து-(அப்போது) அந்நகரத்தினுள்ளே நிறைந்திருந்த மேன்மையான வைபவத்தின், உள இயல்பு அதை-உண்மையான தன்மையை, நாடி சண்ணுறல் அரிது என்னில்-(முழுதும்) ஆராய்ந்து நோக்குதலே அருமையென்றால், கழறுதல் எளிது ஆமோ-(அதை) எடுத்துச் சொல்லுதல் எளியதாகுமோ? (ஆகாது; சுருங்கச் சொல்வதாயின்), அ மணம் நாள்-அந்தத் திருமண நாளானது, எண் உறு-மதிப்புமிக்க, சுடர் வானத்து-ஒளி பொருந்திய சுவர்க்கலோகத்திலே, இந்திரன் முடிசூடும்-தேவேந்திரன் முடிசூட்டிக்கொள்ளுதற்குரிய, மண்ணுறு திருநாளே ஒத்தது-அபிடேகத் திருநாளே போன்றிருந்தது.

அந்தத் திருமண நாளில் அம் மிதிலா நகரத்தினுள் இருந்த பெருஞ் சிறப்புக்கு உவமை கூறுவதாயின், தேவேந்திரன், பட்டாபிஷேகம் செய்துகொள்ளும் நாளில் சுவர்க்கலோகத்தில் உளதாகும் பெருஞ் சிறப்பையன்றிப் பிறிதொன்று கூறுதற்கில்லை யென்றவாறு. மண்ணுறல்-அபிடேகஞ் செய்தல்; அலங்கரித்தலும் ஆம்.

(பி - ம்.) 1. உண்ணிறை நிமிர் செல்வமொருதுறை செலவென்றும்: கண்ணிறைநிகா செல்வமொருமுறை; சொலவென்றும்; சொலவொன்றும்.
2. சண்ணுறலரிதென்றும்; அரிதொன்றும்; அரிதெங்கும்; அரிதென்னக்; கருதுதலரிதம்மா; கருதுறலாதம்மா; கருதுதற்கரிதம்மா.
3. எண்ணுமச்; எண்ணிடைச்; இந்திரர் முடிசூட:
4. ஒத்தது மணநாளே. (38)

## திருமண மண்டபத்துக்குத் தசரதன் வருகை

(வேறு)

1275. கரைதெரி வரியது கனகம் வேய்ந்தது
வரையென வுயர்ந்தது மணியிற் செய்தது
நிரைவளை மணவினை நிரப்பு மண்டபம்
அரைசர்த மரசனு மணுகன் மேயினான்.

கரைதெரிவு அரியது-(பரப்பின்) எல்லை காணமுடியாததும், வரை என உயர்ந்தது-மலைபோல் உயர்ந்ததும், கனகம் வேய்ந்தது-(மேலே) பொன் தகட்டால் மூடப்பெற்றதும், மணியின் செய்தது-(உள்ளே) இரத்தினங்களால் வேலைப்பாடு அமைந்ததுமான, நிரை வளை மணவினை நிரப்பும் மண்டபம்-வரிசையான வளையல்கள் அணிந்த சீதாபிராட்டியின் திருமணச் சடங்கை முற்றுவித்தற்குரிய மண்டபத்தை, அரைசர் தம் அரசனும்-அரசர்க்கரசனான தசரதனும், அணுகல் மேயினான்-அடைதற்கு அமைந்தான்.

பரப்பின் எல்லை காண முடியாததென்று மண்டபத்தின் அகல நீளத்தையும், மலைபோலுயர்ந்ததென்று அதன் உயரத்தையும், மேலே பொன் வேய்ந்து உள்ளே மணிகள் பதிக்கப்பெற்றதென்று அதன் செல்வச் சிறப்பையுங் குறித்தார். மணவினை நிரப்பும்-மண வினைக்குரிய பொருள்களெல்லாம் நிரப்பி அழகு செய்யப்பெற்ற என்றலும் ஆம். நிரைவளை: அன்மொழித் தொகை.

(பி - ம்) 1. கனகமேய்ந்தது; கவரிவேய்ந்தது.
3. நிரைவள மணவினை; நிரைசெலவெனமணி: நிரப்புமண்டபத்து; நிரம்புமண்டபத்து; நிரம்புமண்டபம்.
4. அணுகமேயினான்; அவையின்மேயினான், (39)

1276 வெண்குடை யிளநிலா விரிக்க மின்னெனக்
கண்குடை மணியிள வெயிலுங் கான்றிடப்
பண்குடை வண்டினம் பாட வாடன்மா
மண்குடை தூளிவிண் மறைப்ப வேகினான்.

(சக்கரவர்த்தி), வெண்குடை-வெள்ளைக்குடைகள், இள நிலா விரிக்க-மெல்லிய நிலவொளியைப் பரப்பவும், மின் என-மின்னலைப் போல, கண் குடை-(ஒளியால்) காண்போர் கண்களைக் குடையத் தக்க, மணி-(கிரீடத்திலும் அணிகலன்களிலும் உள்ள) பல இரத்தினங்கள், இள வெயிலும் கான்றிட-இளவெயிலொளியையும் வீசவும், குடை வண்டு இனம்-(பூக்களைக்)குடையும் வண்டுக் கூட்டங்கள், பண்பாட-இசை பாடவும், ஆடல் மாமண் குடை தூளி-குதிரைகள் (தம் குளம்புகளால்) மண்ணைக் கிளறி எழுப்பும் புழுதி, விண் மறைப்ப-ஆகாயத்தை மறைக்கவும், ஏகினான்-(தன் மாளிகையினின்றும் எழுந்து) சென்றான்.

நிலவும் வெயிலும் ஒருங்கே எழுந்தனவென ஒரு நயம்படக் கூறினர். வெயிலும்: உம்மை இறந்தது தழுவியது. முதலடியல்லாத மற்ற மூன்றடிகளிலும் 'குடை' என்பது வினைத்தொகை. ஆடல் மா-குதிரைக்குக் காரணப் பெயர்.

(பி - ம்.) 1. விரிப்ப; விரித்த; விரிந்த. 2. மணியினம்; இனமணி
3. படரவாடன்மா; பாடியாடமா; பாடியாடிட; பாடியாடின.
4 தூளியின்; தூளிவரன்: மறைக்கவேகினர். (10)

1277. மங்கல முரசின மழையி னார்த்தன
சங்கின முழங்கின தாரை பேரிகை
பொங்கின மறையவர் புகலு நான்மறை
கங்குலி னொலிக்குமா கடலும் போன்றதே.

மங்கலம் முரசு இனம்-(திருமண நிகழ்ச்சி குறிக்கும்) மங்கல முரசங்கள், மழையின் ஆர்த்தன-மேக கர்ச்சனைபோல முழங்கின; சங்கு இனம் முழங்கின-சங்க வாத்தியங்கள் ஒலித்தன; தாரை-ஊது குழல்களும், பேரிகை-பேரிகைகளும், பொங்கின-மிக்கு ஒலித்தன; மறையவர் புகலும்-வேதியர்கள் சொல்லுகிற, நால்மறை (உம்)-நால்வகை வேதமந்திரங்களின் ஒலியும், கங்குலின் ஒலிக்கும்-இராக் காலத்தில் பேரிரைச்சலிடுகிற, மா கடல் போன்றது-பெருங்கடலைப் போலிருந்தது. ஏ, ஈற்றசை.

கடலும் என்பதில் உள்ள உம்மையைப் பிரித்து மறையென்ப தனோடு கூட்டுக.

இவை தசரத மன்னன் போகும்போது நிகழ்ந்த சம்பிரமங்கள். முரசு மூன்றென்பர்; அவை, மங்கல முரசு, கொடை முரசு, வீர முரசு என்பன; பிறவகையாகவும் கூறுவதுண்டு. பேரிகை, முரசின் ஒருவகை. அரசர்களின் எழுச்சியில் சங்கும் முரசும் முழங்குதல் பெரும்பாலும் இணைத்துக் கூறப்படும்; *835, 1136, 1330*-பார்க்க.

(பி - ம்.) 1. மங்கலபேரிகை:
2. சங்குகள்முரன்றன: தாரைபொரேனப்; பொம்மெனப்; பொம்மின.
4. கங்குலில் ஒலிக்குமக்; ஆர்க்குமா; போன்றவே; ஒத்ததே: ஒத்தவே. (41)

1278. பரந்ததேர் களிறுபாய் புரவி பண்ணையில்
தரந்தர நடந்தன தானை வேந்தனை
நிரந்தரந் தொழுதெழு நேமி மன்னவர்
புரந்தரன் புடைவரு மமரர் போன்றனர்.

பரந்த தேர்-பரவலான தேர்களும், களிறு-யானைகளும், பாய் புரவி-பாய்ந்து செல்லும் குதிரைகளும், பண்ணையில்-கூட்டங்கூட்டமாக, தரம் தரம் நடந்தன-வரிசை வரிசையாகச் சென்றன; தானை வேந்தனை-சேனைப் பெருக்குடைய தசரத மன்னனை, நிரந்தரம்

தொழுது எழும்-எப்போதும் வணங்கி மேம்படுகிற, நேமி மன்னவர்-ஆஞ்ஞா சக்கரத்தையுடைய (பல) அரசர்கள், புரந்தரன் புடை வரும்-தேவேந்திரன் பக்கத்திலே (சூழ்ந்து) வருகிற, அமரர் போன்றனர்-தேவர்களைப்போலச் சூழ்ந்து வந்தனர்.

இந்திரனைச் சூழ்ந்து வரும் தேவர்களைப்போல் அரசர் இருந்தனர் என்றதனால், சக்கரவர்த்தி இந்திரன் போலிருந்தான் என்பது பெறப்படும். தசரதனுக்கு இந்திரனைப் பலவிடத்தும் ஒப்புக் கூறுவர் ஆசிரியர்; 317-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. களிறுமா; களிறுமாப். 2. நடந்தது. 3. நேமியானவர். 4. புரந்தரனுடன்வரும். (42)

### அனைவரும் மண்டபத்தில் அமர்தல்

1279 அனையவன் மண்டப மணுகி யம்பொனின்
புனைமணி யாதனம் பொலியத் தோன்றினன்
முனைவரு மன்னரு முறையி னேறினர்
சனகனுந் தன்கிளை தழுவ வேறினன்.

அனையவன்-அத்தன்மையனாக வந்த சக்கரவர்த்தி, மண்டபம் அணுகி-திருமண மண்டபத்தையடைந்து, அம் பொன்னின் மணி புனை ஆதனம்-அழகிய பொன்னாலியன்று மணிகள் பதிக்கப்பெற்ற உயர்ந்ததோர் இருக்கையில், பொலிய-அது சிறப்புறும் வண்ணம், தோன்றினன்-வீற்றிருந்தான்; முனைவரும்-முனிவர் முதலியோரும், மன்னரும்-அரசர்களும்,முறையின் ஏறினர்-(தத்தமக்குரிய) வரிசைப் படி (தக்க ஆதனங்களில்) அமர்ந்தனர்; (இறுதியில்) சனகனும்-சனக மகாராசனும், தன் கிளை தழுவ-தன் சுற்றம் சூழ்ந்திருக்க, ஏறினன்-தனக்குரியதோர் ஆதனத்தில் அமர்ந்தான்.

தசரதன் சக்கரவர்த்தியும் சம்பந்தியுமாதலால் அதற்கேற்பவும், ஏனையோர் அவரவர் தகுதிக்கேற்பவும் அமர்தற்குரிய வகையில்அமைத்திருந்த ஆதனங்களில் முறையே அனைவரையும் உபசரித்து அமரச் செய்து, சனகன் தனக்குரிய ஆதனத்தில் அமர்ந்தான் என்றவாறு.

(பி - ம்.) 1. அம்பொனால். 2. ஆசனம்: தோன்றினன். 3. முனிவரும்: அரசரும்; இறைவரும்; அமரரும்; முறையினேகினர்; எய்தினர். 4. தழுவத்தோன்றினன். (43)

### மண்டபத்தின் தோற்றம்

1280. மன்னரு முனிவரு மற்று ளோர்களும்
அன்னமென் னடையணங் கனைய மாதரும்
துன்னினர் துவன்றலிற் சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை யொத்ததப் பொருவில் கூடமே.

மன்னரும்-அரசர்களும், முனிவரும்-முனிவர்களும், மற்று உளோர்களும்-வேறு அங்குள்ள ஆடவர்களும், அன்னம் மெல் நடை-அன்னம் போலும் மெல்லிய நடையையுடைய, அணங்கு அனைய மாதரும்-திருமகளைப்போன்ற பெண்களும், துன்னினர் துவன்றலின்-நெருங்கி நிறைந்திருத்தலால், அ பொரு இல் கூடம்-(வேறு) உவமையில்லாத அந்த மண்டபம், சுடர்கள் சூழ்வரும்-கோள்களும் நாண் மீன்களுமாகிய ஒளிமண்டலங்கள் குழுமியுள்ள, பொன்மலை ஒத்தது-மேரு மலையைப் போன்றிருந்தது. ஏ: ஈற்றசை.

மன்னர் முதலியோர் சுடர்களும், மண்டபம் மேருவுமாகக் கொள்க. மண்டபத்துக்கு மேருவைப் பின்னும் ஒப்புக் கூறுவர்; *1314*-பார்க்க. இங்கே மணம் புணர்வோர் திருமாலும் திருமகளுமேயாதலால் நாளுங் கோளும் முதலிய தெய்வ கணங்கள் அங்குவந்து கூடின வென்ற குறிப்பும் காண்க.

(பி - ம்.) 1. முனிவரும் வானுளோர்களும். 3. துவன்றினர்; துன்னலாற்.
4. பொன்வரையொத்தது. (44)

1281. புயலுள மின்னுள பொருவின் மீனுள
இயன்மணி யினமுள சுடரி ரண்டுள
மயன்முதற் றிருத்திய மணிசெய் மண்டபம்
அயன்முதற் றிருத்திய வண்ட மொத்ததே.

மயன்-மயன் என்னும் தெய்வத்தச்சன், முதல் திருத்திய-முன்னுளில் செப்பமுற அமைத்த, மணி செய் மண்டபம்-நவமணிகளும் இழைத்த அந்த மண்டபத்தில், புயல் உள-மேகங்கள் உள்ளன; மின் உள-மின்னல்கள் உள்ளன;பொரு வில் மீன் உள-தமக்குத்தாமே ஒப்பான ஒளியுடைய நாண் மீன்கள் உள்ளன; இயல் மணி இனம் உள-நல்லொளி பொருந்திய பலவகை மணிகள் (தாரகைகள்) உள்ளன; சுடர் இரண்டு(ம்) உள-சூரிய சந்திரர்களாகிய இரு பெருஞ் சுடர்களும் உள்ளன; (ஆதலால் அம்மண்டபம்), அயன் முதல் திருத்திய அண்டம் ஒத்தது-பிரமன் ஆதிகாலத்தில் அழகுறப் படைத்த அண்டகோளத்தையே ஒத்திருந்தது. ஏகாரம், ஈற்றசை.

பிரமன் படைப்பினுட்பட்ட அண்டகோளத்தில் உள்ள சிறந்தனவெல்லாம் அம்மண்டபத்திலும் அமைந்திருந்தமையின் மண்டபம் 'அண்டம் ஒத்தது' என்றார். புயல், மின், மீன் என்பன அங்கிருந்த மகளிரின் கூந்தல், மேனி, கண்கள் என முறையே கொள்ளலாம். சுடர் இரண்டு-சூரிய குலத்தோன்றலான தசரதனையும் சந்திர வமிசத்தவனான சனகனையும் குறித்தது; *1109*-பார்க்க. மணி யினம் அங்கே குழுமியிருந்த அனைவருடைய அணிகலன்களிலும், மண்டபத்திலும் உள்ளவை; இவை நாண் மீன்களல்லாத நட்சத்திரக் கூட்டமெனலாம். இவ்வாறன்றி, அம்மண்டபம் வானினும் உயர்ந்திருந்

தமையின் இயற்கையான புயல் முதலிய எல்லாம் அதன் உள்ளும் புறமும் பொருந்தியிருந்தன வென்றலும் ஆம். புயல்-மேகம் போலும் கொடைத் தன்மையுடைய அரசரைக் குறித்த தென்பாருமுளர். பொரு இல் மீன் எனப்பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

(பி - ம்.) 1. புயலுள மீனுள; அதனுள: பொருவின் மின்னுள; மீதுள:
2. சுடருமீன்றுள: சுடருமீண்டுள; ஈன்றன; சுடர்களீண்டுள; சுடர் கண்மூன்றுள.
3. மயலறத்திருத்திய: மணிகொண்மண்டபம்; வசையின்மண்டபம்' இவையுளவாதலால்; இயல்புளதாதலால்; ஈது நான்முக.
4. அண்டம் போன்றதே. (45)

1282. எண்டவ முனிவரு மிறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற் ருதலால்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்
துண்டவன் மணியணி யுதரம் போன்றதே.

எண் தவம் முனிவரும்-சிறப்பாக மதிக்கப்படும் தவத்தையுடைய முனிவரும், இறைவர் யாவரும்-திக்குப் பாலகர் முதலான தேவர்கள் தலைவர் உட்பட்ட அரசர் அனைவரும், அண்டரும்-தேவர்களும், பிறரும்-மற்றுமுள்ள எல்லோரும்,புக்கு அடங்கிற்று ஆதலால்-தன்னுள் வந்து அடங்குதற்கிடமாக இருந்ததனால், மண்டபம்-அந்த மண்டபமானது, வையமும் வானும் வாய்மடுத்து உண்டவன்-(பிரளய காலத்தில்) இவ்வுலகையும் வானுலகையும் தன் வாயிலிட்டு உண்ட திருமாலின், மணி அணி உதரம் போன்றது-நீலமணியொத்த திருவயிறு போலவும் இருந்தது. ஏகாரம், ஈற்றசை. 'உதரமும்' என எச்சவும்மை வருவித்துரைக்கப்பட்டது.

எம்பெருமான், பிரளய காலத்தில் எல்லாவுலகங்களையும் உண்டு தன் திருவயிற்றினுட் பொதிந்து கொண்டு, பாலனாய் ஆலிலை மேல் அறிதுயிலமர்ந்தருளுவனென்பராதலின் இங்கே அதனை உவமித்தார். உலக காரணமான ஐம்பூதங்களும் அடங்க, அவற்றுள் முதலும் ஈறுமாகிய வையம்வான் என்ற இரண்டையும் இங்கே கூறினார் எனலாம். 'தொடங்கியுந் தொடக்கந் தொட்டுத்துகளற வளர்ந்துமீள மடங்கியுஞ் செல்லுகின்ற மன்னுயிருலகமெல்லாம் முடங்கியசார்ங்கச் செங்கை முகுந்தன்வாய்ப்புகுந்த காலத்தடங்கிய வுதரம் போன்ற தந்தமாநகரியம்மா' (வி பா. திரௌபதி மாலையிட்ட. 19) என்பதனை ஈண்டு ஒப்பிடுக.

(பி - ம்.) 1. எண்டரு; மனிதர்யாவரும்; அமரர் யாவரும்; அரசர் யாவரும்.
2. மிக்கடங்கிற்று; ஆதலின்: ஆகிலம்
3. மண்டபம்; அண்டமும் வையமும்.
4. தன்மணி; திருமணி; உதர மொத்ததே; உதரம் போலுமே; போலுமால். (46)

இப்பாடல் சிலபிரதிகளில் இல்லை.

### கவிக்கூற்று

1283. தராதல முதலுல கனைத்துந் தள்ளுற
விராவின குவிந்தன விளம்ப வேண்டுமோ
அராவணை துறந்துபோந் தயோத்தி மேவிய
இராகவன் செய்தியை யியம்பு வாமரோ.

தராதலம் முதல்-இப்பூவுலகம் முதலாக, உலகு அனைத்தும்-எல்லாவுலகங்களிலுமுள்ள உயிர்கள் முழுதும், தள்ளுற-(இத் திருமண வேள்வி காணும் ஆவல் தம்மை) உந்த, விராவின குவிந்தன-கலந்து திரண்டுவந்து அங்கே கூடின (என்றால்), விளம்பவேண்டுமோ-(அக்கூட்டத்தின் மிகுதியைச்) சொல்லவும் வேண்டுமோ? (அது நிற்க); அரா அணை துறந்து போந்து-ஆதிசேடனாகிய சயனத்தைவிட்டு நீங்கி வந்து, அயோத்தி மேவிய-அயோத்தியை அடைந்துள்ள, இராகவன் செய்தியை-இராமபிரானுடைய செயல்களை. இயம்புவாம்-(இனிச்) சொல்லுவோம். அரோ: அசை.

'அராவணை......இராகவன்': அயோத். *1169*; ஆரணிய. *31*-பார்க்க.

(பி - ம்.) 1. முழுதுலகு; முத்தலம்: தாவற; தன்னுழை.
2. குவிந்தது; குவிந்துழி; குவிந்துள; மிகுந்துள.
3. அராவணைத்துறந்துபோய்; துறந்து வந்து: துறந்துயர்; பாழ்படா நண்ணிய; எய்திய.
4. சேதியை: செய்கையை; செய்ததை: விளம்புவாமரோ. (47)

### இராமபிரான் மங்கல நீராடல்

1284. சங்கினந் தவழ்கட லேழிற் றந்தவும்
சிங்கலி லருமறை தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே முதலவுங் கலந்த நீரினால்
மங்கல மஞ்சன மரபி னாடியே,

சிங்கல் இல்-(பெருமையிற்) குறைதலில்லாத, அரு மறை தெரிந்த-அரிய வேதங்களில் கூறப்பெற்ற, தீர்த்தங்கள்-புண்ணிய தீர்த்தங்களான, கங்கை முதலவும்-கங்கை முதலாகவுள்ள பல நதிகளின் நீரும், சங்கு இனம் தவழ்-சங்குக் கூட்டம் ஊர்ந்து செல்லுகிற, கடல் ஏழில் தந்தவும்-ஏழு கடல்களினின்றும் கொணர்ந்த நீரும், கலந்த நீரினால்-கலந்து நறுமணம் ஊட்டிய நீரால், மங்கலம் மஞ்சனம்-மங்களகரமான திருமஞ்சனத்தை, மரபின் ஆடி-முறைப்படி ஆடி,

ஏகாரம் இரண்டனுள் முன்னது இசைநிறை; பின்னது ஈற்றசை. இராமபிரான் என்ற எழுவாய் வருவித்துக் கொள்க.

விவாகத்துக்குமுன் முதலில் செய்யவேண்டுவது மங்கல ஸ்நான மாதலால் இராமபிரான் அதனை முடித்துக்கொண்டமையை முதலிற் கூறினர். இதுவும் அடுத்த கவியும் ஒரு தொடர்; அடுத்த கவியில் வரும் வணங்கினன் என்பதனோடு முடிவுறும். சிங்கல்-குறைதல்: தொழிற்பெயர். ஆரணிய. 99; கிட்கிந்தா. 759; யுத்த. 383, 1270; சிலப். பதிகம். 47.

(பி - ம்.) 1. சங்குகள்; சங்கொடு; ஏழிற்றந்தன; எழிலிற்றந்தவும்.
2. சிங்கலினன்மறை; சிங்கலிலெழுமறை: சிறந்த; புகன்ற; செப்பும் தீர்த்தமும்:
3. கங்கையின் முதலவும்; கங்கையேமுதலிய; முதலின; கந்த நீரினல் கலந்த தீர்த்தங்கள்; கடவுட்டீர்த்தமும்.
4. மரபினுட்டினர்; மரபினுடினன்; மரபிலாடியே. (48)

இதன்பின்சில பிரதிகளில் உள்ள ஒருபாடல் வருமாறு:—

என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருவினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே.

அச்சுப் புத்தகங்கள் சிலவற்றில் இப்பாடல் இவ்விடத்தும், வேறு சிலவற்றில் 'இனிப்பரந்து' (1302) என்பதன் பின்னும் உள்ளது.

கன்னியரை நல்கலுங் கடவுளைத் தொழுதலும்

1285 கோதறு தவத்துத்தங் குலத்து ளோர்தொழும்
ஆதியஞ் சோதியை யடிவ ணங்கினன்
காதியல் கயல்விழிக் கன்னி மார்களை
வேதியர்க் கருமறை விதியி னல்கியே.

(நீராடியபின் இராமபிரான்), காது இயல் கயல் விழி-காதளவுஞ்செல்லும் கயல்மீன்போன்ற கண்களையுடைய, கன்னிமார்களை-கன்னிப்பெண்களை, வேதியர்க்கு-வேதமோதிய பிரமசாரிகளுக்கு, அருமறை விதியின் நல்கி-அரிய வேத நூல்முறைப்படி (தானமாகக்) கொடுத்துவிட்டு, கோது அறு தவத்து-குற்றமற்ற தவத்தினையுடைய, தம்குலத்து உளோர்-தம் குலத்தில்வந்த முன்னோர்கள், தொழும்-வழி வழியாக வணங்கிவருகிற, ஆதி அம்சோதியை-முதற் பெருஞ்சோதியான அரங்கநாதனுடைய, அடி வணங்கினன் - திருவடிகளைத் தொழுதான்.

அரசர்கள் திருமணத்திற்குமுன் செய்யும் சடங்குகளுள், கன்னிகாதானமும் சிறந்ததாகலின், இராமபிரானும் வேதவிதிப்படி அதனைச் செய்து, தன் குலதெய்வமான அரங்கநாதனையும் வணங்குதலும் செய்தான் என்க. இந்த மூர்த்தி, இட்சுவாகுவால் முதலில் பிரமதேவனிடமிருந்து பெற்று அயோத்திக்குக் கொண்டுவரப் பெற்று அவன் முதல் அம்மரபினர் அனைவராலும் வழிவழியாக வணங்கப் பெறுவதாகலின் 'ஆதியஞ்சோதி' என்றார். 713-பார்க்க.

தசரத சக்கரவர்த்தி மிதிலைக்குப் புறப்படும்போது அரங்கநாதனைத் தொழுதமை அங்கே (880) கூறியிருத்தலுங் காண்க. சச்கரவர்த்தி, நித்திய பூஜைக்குரிய இந்த மூர்த்தியைத் தன்னுடன் மிதிலைக்குக் கொணர்ந்திருத்தல் கூடும்.

(பி - ம்.) 1. தவத்துத்தன்; தவத்துநம்: தவத்தநம்.
2. ஆதியஞ் சுடரினை; ஆதியங்கடவுளை; ஆதியம் பரமனை; ஆதியை யரங்கனை: அடிவணங்கியே.
3. காதியங்கயில்விழிக்: காதிகல் கயல்விழிக். (49)

## கலவைச் சாந்து பூசல்

1286. அழிவரு தவத்தினோ டறத்தை யாக்குவான்
ஒழிவருங் கருணையோ ருருவு கொண்டென
எழுதரு வடிவுகொண் டிருண்ட மேகத்தைத்
தழுவிய நிலவெனக் கலவை சாத்தியே.

அழிவரு-அழிந்து வருகிற, தவத்தினோடு அறத்தை-தவத்தையும் தருமத்தையும், ஆக்குவான்-(மீண்டும்) உளவாக்கும் பொருட்டு, ஒழிவு அருகருணை ஓர் உருவுகொண்டது என-நீங்குதலில்லாத கருணை ஒரு உருவம் கொண்டு வந்தாற்போல, எழுத அரு வடிவு கொண்டு-(ஓவியத்தும்) எழுதுதற்கு அருமையான வடிவத்தைக்கொண்டு, இருண்ட மேகத்தை தழுவிய-கறுத்ததொரு மேகத்தைத் தழுவிக் கொண்ட, நிலவு என-நிலாவைப்போலத் தோன்றுமாறு, கலவை சாத்தி-வெண்சந்தனக் கலவையைத் தரித்துக்கொண்டு,

அறத்தை ஆக்குவான் உருவு கொண்டென, இருண்ட மேகத்தை என இயக்க.

இராமபிரான் திருமேனி, கருணையே உருக்கொண்டு வந்த இருண்ட மேகம் போன்றது; அத்திருமேனியிற் பூசிய சந்தனக் கலவை மேகத்தைத் தழுவிய நிலாப்போன்றிருந்தது என்க.

(பி - ம்.) 1. அழிவரும்; அழிவறு. 2. ஒழிவரு; ஒழிவறும்: கொண்டன.
3. எழுதரும்; உருவுகொண்டிருந்த; வடிவுகொண்டெழுந்த.
4. நிலவெனச் சலவை சாத்தினன். (50)

## முடியை அலங்கரித்தல்

1287. மங்கல முழுநிலா மலர்ந்த திங்களைப்
பொங்கிருங் கருங்கடல் பூத்ததா மெனச்
செங்கிடைச் சிகழிகைச் செம்பொன் மாலையும்
தொங்கலுந் துயல்வரச் சுழியஞ் சூடியே.

பொங்கு இரு கரு கடல்-பொங்கியெழும் பெரிய கரிய கடலானது, மங்கலம்-மங்களகரமான, முழு நிலா மலர்ந்த திங்களை-கலைகள்

முழுதும் விரிந்த சந்திர மண்டலத்தை, பூத்தது ஆம் என-(தன்னிடத்தே) தோற்றுவித்த தென்னும்படி (தலையைச் சூழ அணிந்த) செம் கிடை சிகழிகை-செம்மையான நெட்டியாலியன்ற தலைமாலையிலே, செம் பொன் மாலையும்-நல்ல பொன்னாலான மாலையும், தொங்கலும்-பூமாலையும், துயல்வர-தொங்கி அசையும்படி, சுழியம் சூடி-சுழியமென்னும் தலையணியைத் தரித்து,

இராமபிரானுடைய தலைமயிர்ப் பரப்பைக் கடலாகவும்,அதில் அணிந்த சிகழிகையைக் கடலில் தோன்றும் முழு மதியாகவும் உருவகித்தார். சிகழிகை-தலையைச் சூழ அணியும் மாலை; நெட்டியாலும் பூவாலும் ஆக்கப்படுவது. சுழியம்-மணிகளால் இயன்று, உச்சிக் கொண்டையான மயிர் முடியில் அணியப்படும் தலையணி வகை; அச்சுழியத்திலே பொருத்திய பொன் மாலையும் பூமாலையும் முன் நெற்றியிலே சிகழிகையின் மீது தொங்கி யசைந்தன என்க. திங்கள், சுழியத்தைக் குறித்ததெனலும் ஆம். திருமணம் நிகழும் பங்குனி யுத்தர நாள் முழுமதி நாளாதலின், அன்றிரவே தோன்றத்தக்க முழுமதியைத் தம் கற்பனையால் முன்னேயே தோற்றுவித்தார் ஆசிரியர்.

சிகழிகைக் கோதை: 1197-பார்க்க.

(பி - ம்.) 1. நிலாவலர்ந்த; நிலாவளர்ந்த; வளரத்.
2. பொங்கரும்; பொங்கிய: கருங்கடற்.
3. செங்கடைச் சிகழியிற்; மாலையில்; மோலியைத்; மௌலியில்; மௌலியும். 4 சுழியச் சூட்டியே; சூடினன். (51)

### காதணிகள்

1288. ஏதமி லிருகுழை யிரவு நன்பகல்
காதல்கண் டுணர்ந்தன கதிருந் திங்களும்
சீதைதன் கருத்தினைச் செவியி னுள்ளுறத்
தூதுசென் றுரைப்பன போன்று தோன்றவே.

இரவு நன் பகல்-இராக்காலத்தும் நல்ல பகற்காலத்தும், சீதை தன் காதல்-சீதா பிராட்டியின் காதல் நோய் நிலையை, கண்டு உணர்ந்தன - கண்டறிந்தவையான, கதிரும் திங்களும்-சூரியனும் சந்திரனும், தூது சென்று-(இராமபிரானிடம்) தூதாகச் சென்று, கருத்தினை - (பிராட்டியின்) கருத்தை, செவியின் உள் உற-காதினுள்ளே, உரைப்பன போன்று-(இரகசியமாகச்)சொல்லுவனபோல, ஏதம் இல் இரு குழை தோன்ற-குற்றமற்ற இரண்டு மணிக் குண்டலங்கள் (காதுகளிலே) தோற்றமளிக்க,

இதனால், குண்டலங்கள் அணிந்தமை கூறப்பட்டது. காதுகளில் அணிந்த மிக்க ஒளிபொருந்திய மணிக்குண்டலங்கள், சூரியனும் சந்திரனும் பிராட்டியின் நிலையை நன்குணர்ந்து

இராமபிரானிடம் தூதாகச் சென்று பிராட்டியின் உள்ளக் கருத்தைக் காதோடு இரகசியமாகத் தெரிவிப்பன போன்றிருந்தன எனத் தற்குறிப்பேற்றமாகக் கூறுகின்றார். சூரிய சந்திரர்கள் தம் குலத்துதித்த இவ்விருவரிடமும் பரிவுகொண்டு இவ்வாறு செய்தனர் போலும். குண்டலங்களின் ஒளிச் சிறப்புப் பற்றி இரு சுடரையும் உவமித்தார். பிராட்டி சந்திர குலமென்பது 'திங்கள் தங்கள் குலக் கொடி சீதையாம் மங்கை, மாமணங் காணியவந்து' (1191) என்றதனால் அறியப்படும்.

(பி - ம்.) 1. இருங்குழை: நண்பகல். 2. உணர்ந்தெனக். 3. செவியில்.
4. தூதுவந்து; உரைப்பனவென்று: தோன்றுமே. (52)

வீரபட்டமும் திலகமும்

1289. கார்விடக் கறையுடைக் கணிச்சி வானவன்
வார்சடைப் புடையினோர் மதிமி லைச்சத்தான்
சூர்சுடர்க் குலமெலாஞ் சூடி னானென
வீரபட் டத்தொடு திலக மின்னவே.

கார் விடம் கறை உடை(ய) - கரியவிடத்தின் கருமையை (க்கண்டத்திலே) உடைய, கணிச்சி வானவன்-மழு வேந்திய தேவனான சிவபிரான், வார் சடை புடையின் (தனது) நீண்ட சடை முடியின் மீது, ஓர் மதி மிலைச்ச-ஒரு கலைச்சந்திரனை (ஒரு பக்கத்தில்) அணிந்திருக்க, (அதற்குமாறாக) சூர் சுடர் குலம் எல்லாம் தான் சூடினான் என-தெய்வத் தன்மையுள்ள ஒளி மண்டலங்களின் கூட்டத்தை யெல்லாம் தான் அணிந்து கொண்டானென்னும்படி, வீர பட்டத்தொடு திலகம்-வீர பட்டமும் திலகமும், மின்ன-(நெற்றியிலே) பிரகாசிக்க,

வீர பட்டம்: பொன்னாலியன்று மணிகள் பதித்ததாய்,வெற்றி வீரர் நெற்றியில் அணியும் ஓர் ஆபரணம்; இது வீர பட்டிகை யெனவும் வழங்கும். திலகம்: இங்கே நெற்றிப் பொட்டன்று; வீர பட்டத்தின் நடுவே அணியும் கல்லிழைத்த சுட்டி; பட்டமும் சுட்டியும் ஒன்றோடொன்று இணைந்து நெற்றியை அழகுசெய்யும். நெற்றிப் பட்டமும் சுட்டியும் மகளிர்க்கும் அணிதலுண்டாதலின், ஆடவர் அணிவது வீரபட்டம் எனப்படும். இவ்வணிகள் மணிகளிழைக்கப் பெற்று மிக்க ஒளியுடையனவாதலால் ஒளி மண்டலங்களை யெல்லாம் ஒருங்கே அணிந்தாற் போலும் என்றார். கண்டம் கறுத்த பெருமான் கோள்களுள் ஒன்றான சந்திரனுடைய ஒருகலையையே சடை முடியில் (நன்கு விளங்காதவாறு) அணிந்திருக்க, அதற்கு மாறாகத் திருமேனி முழுதுங் கரியபிரான் ஒளிமண்டலங்களை யெல்லாம் ஒருங்கே நெற்றியில் விளங்க அணிந்து முன்னவனினும் ஒளி மேம்பட விளங்கினான் என்றவாறு.

வீரபட்டமும் சுட்டியும்: 'கரிநுதலோடையிற் பிறங்கும் வீர பட்டத்தில்' (ஆரணிய. 520); 'வீரபட்டத் தொகை தயங்க' (யுத்த. 3593); 'சுட்டிசேர் வாளார் நுதற்பட்டம் மன்னுவித்து' (ஆதியுலா. 17); 'நித்திலஞ்செய் பட்டமு நெற்றித் திலதமும், ஒத்திலங்க' (பெருந். 426).

(பி - ம்.) 1. விடக்களமுடைக்; களனுடைக்
2. புடையிலோர்; மதிமிலேச்சித்தான்; மிலேச்சினன்; மதியஞ்சூடத்தான்; மதிவைத்தானெனச்.
3. சூர்குடிக்குலமெலாம்; சூர்சுடர்ச் சூழலில் துளவு சூடினன்; தும்பை சூடினன்; சூர்சுடர் மிலேச்சினனென்னச் சூட்டினன்.
4. வீரபட்டத்தொடும் திலதம். (58)

## முத்தாரம்

1290. சக்கரத் தயல்வருஞ் சங்க மாமென
மிக்கொளிர் கழுத்தணி தரள வெண்கொடி
மொய்க்கருங் குழலினாள் முறுவ லுள்ளுறப்
புக்கன நிறைந்துமேற் பொடிப்ப போன்றவே.

சக்கரத்து அயல் வரும் சங்கம் ஆம் என-(திருமாலின்) சக்கரப் படையினருகே அமைந்த சங்கு என்னும்படி, மிக்கு ஒளிர்-(அழகு) மிக்கு விளங்குகின்ற, கழுத்து அணி-(இராமபிரானது) கழுத்தில் அணிந்த, வெண் தரளம் கொடி-வெண்முத்து மாலைகள், மொய் கரு குழலினாள் முறுவல்-செறிவோடு கறுத்த கூந்தலையுடைய சீதா பிராட்டியின் புன்முறுவல், உள் உற புக்கன-(பெருமானது) திருவுள்ளத்தில் மிக்குப் பதிந்தவை, நிறைந்து-அவ்விட முழுதும் நிரம்பி, மேல் பொடிப்ப போன்ற-(உள்ளே இடமில்லாமையால்) மேலே வெளிப்பட்டுத் தோன்றுவன போன்றன.

சக்கரம் இராமபிரானது திருமுக மண்டலத்துக்கும் சங்கம் கழுத்துக்கும் உவமை. கொடி-ஒழுங்கு; இங்கே மாலையைக் குறித்தது. கழுத்தில் அணிந்து மார்பிலே புரண்ட முத்துமாலைகள், பெருமானது இதயத்திலே புக்குப் பதிந்த பிராட்டியின் முறுவலான, முத்துக்கள் உள்முழுதும் நிரம்பி அங்கே இடமில்லாமல் மார்பிலே வெளிப்பட்டுத் தோன்றுவன போன்றன எனப் புனைகின்றார்; தற்குறிப்பேற்றம். வெண்தரளக் கொடிகள், முறுவல் பொடிப்ப போன்றன என்றியைக்க.

'வாணிலாமுறுவற் கனிவாய்மதி, காணலாவதோர் காலமுண்டாங்கொலோ' (697)எனவும், 'உண்ணவந்த நகையுமென்றென் றுண்டால்' (698) எனவும், பிராட்டியின் முறுவற் குறிப்பைப் பெருமான் உணர்ந்து மனத்துட் கொண்டமை முன்னே கூறினமையால், இங்கே அம்முறுவல் மனத்தினின்றும் வெளிப்பட்டுத்தோன்றுவதாகக் கூறினர் போலும்.

(பி - ம்) 1. அயல்வரு சங்குமாமென.
2. மிக்கொளிர் கழுத்தினில்; மிக்கணி கழுத்தணி; முத்தணி: மென்கொடி
3. மொய்க்குமென் குழலினள்.
4. புக்கது: நிறைந்துமெய்; நிறைத்துமெய்; பொடித்த: போன்றதே. (54)

### தோள்வளை

1291. பந்திசெய் வயிரங்கள் பொறியிற் பாடுற
அந்தமில் சுடர்மணி யழலிற் றோன்றலால்
சுந்தரத் தோளணி வலயந் தொல்லைநாள்
மந்தரஞ் சுற்றிய வரவை மானுமே.

பந்தி செய் வயிரங்கள்-வரிசையாகப் பதித்த வயிரக்கற்கள், பொறியின் பாடுஉற-(பாம்பின்) படப்புள்ளிகளைப்போல விளங்க, அந்தம் இல் சுடர் மணி-அளவற்ற ஒளியுடைய மாணிக்க மணிகள், அழலின் தோன்றலால்-தீயைப்போல ஒளி விடுதலால், சுந்தரம் தோள் அணி வலயம்-(பெருமானுடைய) அழகிய தோள்களிலே அணியப்பெற்ற வாகுவலயங்கள், தொல்லை நாள்-முன்னாளில், (பாற் கடல் கடைந்தபோது), மந்தரம் சுற்றிய-மந்தர மலையிலே (கடையுங் கயிறாகச்) சுற்றப்பட்ட, அரவை மானும்-(வாசுகியென்னும்) பாம்பைப் போன்றிருந்தன.

வாகுவலயம்-தோள்வளை; வலயம்: சாதியொருமை.

பெருமானுடைய தோள் மந்தர மலையாகவும், அதிலணிந்த வாகுவலயம் அம்மலையைச் சூழ்ந்த கடைகயிறாகவும் கொள்க. ஒப்பு. 'சுந்தரத்தடந் தோள்வளை மாசுணஞ் சுற்றிய தொழில் காட்ட, மந்தரத்தையுங் கடுத்தது மற்றவன் மணியணி வயிரத்தோள்' யுத்த. 1548.

(பி - ம்) 1. பந்தஞ்செய்; புந்திசெய்: படியிற் பாடுக.
2. சுடரொளி; சுடர்முடி: அழலைத்; அழலத்.
3. தோளிணை. 4. அரவமானவே; அரவுமானுமே. (55)

### கைகளில் முத்துவடம்

1292. கோவையின் பெருவட முத்தங் கோர்த்தன
காவல்செய் தடக்கையி னடுவட் காந்துவ
மூவகை யுலகிற்கு முதல்வ னாமென
ஏவரும் பெருங்குறி யிட்ட போன்றவே.

காவல் செய்-எல்லாவுலகங்களையும் காத்தருளுகின்ற, தட கையின் நடுவண்-பெரிய கைகளின் நடுவிடத்திலே,(அணியப்பெற்று), காந்துவ - பிரகாசிக்கின்றவையான, முத்தம் கோத்தன-முத்துக் களால் கோக்கப்பட்ட, கோவை இன் பெரு வடம்-ஒழுங்கான இனிய பெரிய வடங்கள், மூவகை உலகிற்கும் முதல்வன் ஆம் என-மேல் நடு

கீழ் ஆகிய மூன்று வகை உலகங்களுக்கும் ஆதியானவன் இவனே என்று, ஏவரும் பெரு குறி இட்ட போன்ற-உயர்ச்சியமைந்த பெரிய அடையாளம் இட்டு வைத்தாற் போன்றிருந்தன. ஏ-ஈற்றசை.

அடுத்த பாடலுள், முன் கையில் அணியப்படும் கடகத்தைக் கூறுகின்றார். முன் பாடலில் தோள்வளைகளைக் கூறி, அதனையடுத்துக் 'கையினடுவண் காந்துவன' என்று இம்முத்துவடங்களைக் குறித்தலின் இவை தோள்வளைகளுக்குக் கீழே அணியப்படுவன வென்பது பெறப் படும். இவை மூன்று வடங்களாலியன்றவையாதலின், 'மூவகையுல கிற்கும் முதல்வனுமென இட்ட பெருங்குறி போன்ற' என்றார்.

(பி - ம்.) 1. பருவடம்; வருமணி; கோத்தெனக்.
2. நடுவுட்; நடுவிற்; தடக்கையிற் கரந்து நின்றன.
3. உலக்குக்கும்: ஆமெனும்.
4. போன்றதே; போலுமே; போலவே. (50)

### முன்கையில் கடகம்

1293. மாண்டபொன் மணியணி வலயம் வந்தெதிர்
வேண்டினர்க் குதவுவான் வேண்டிக் கற்பகம்
ஈண்டுதன் கொம்பிடை யீன்றதா மெனக்
காண்டகு தடக்கையிற் கடக மின்னவே.

கற்பகம்-கற்பக விருட்சமானது, எதிர்வந்து வேண்டினர்க்கு-தன்னெதிரில் வந்து யாசித்தவர்க்கு, உதவுவான் வேண்டி-அளிக்கும் பொருட்டு, ஈண்டு தன் கொம்பிடை-(நன்கு)வளர்ந்துள்ள தன் கிளை களில், மாண்ட பொன் மணி அணிவலயம்-மாட்சிமைப்பட்ட பொன் னாலும் மணிகளாலும் அழகு செய்யப்பெற்ற கங்கணங்களை, ஈன்றது ஆம் என-உண்டாக்கி வைத்துக்கொண்டதென்னும்படி, காண் தகு தட கையில்-(யாவரும்) விரும்பி நோக்குதற்குரிய நீண்ட கைகளில், கடகம் மின்ன-கடகங்கள் (பூண்டு) விளங்க,

இராமபிரானைக் கற்பகமாகவும், அவர் கைகளைக்கற்பகத்தின் கொம்பாகவும் கொள்க. அரசர்கள் தம்மிடம் வரும் கலைஞர் முதலி யோர்க்குக் கடகம் (தோடா) பரிசளித்து சிறப்பித்தல் மரபு. கற்பக மும் தன்னை நாடிவந்தவர்க்கு வேண்டுவன உதவுவது. இங்கே இராம பிரானாகிய கற்பகம், தன்னிடம் வரும் கலைஞர் முதலியோர்க்கு அளிக்கும் பொருட்டு முன்னதாகவே கடகங்களை உண்டாக்கி வைத் துக்கொண்டது போலக் கையில் கடகம் விளங்கிற்று என்றார். ஆசிரியர் கம்பநாடர், இராமபிரானுடைய தோளழகிலே மிகவும்ஈடு பட்டு அதனைப் பலவிடத்தும் சிறப்பித்தல் இக்காவியத்துட் காண லாம். 'தோள்கண்டார் தோளே கண்டார்' (1159) என உலாவியற் படலத்துத் தோள்களை முதலிற் கூறினதுபோல, இங்கும் தோள்வளை

யணிதலை முன்னர்க்கூறி, அதனையடுத்து முறையே இடைக்கை முன்கையணிகளைக் கூறினர்.

(பி - ம்.) 1. வலயம் வேந்தெதிர்; வலய வேந்தெதிர்.
2. விரும்பிக் கற்பகம்; வேண்டில் கற்பகம். (57)

நவமணி மாலை

1294. தேனுடை மலர்மக டிளைக்கு மார்பினில்
தானிடை விளங்கிய தகையி னாரந்தான்
மீனொடு சுடர்விட விளங்கு மேகத்து
வானிடு வில்லென வயங்கிக் காட்டவே.

தேன் உடை மலர் மகள்-தேன் பெருகும் செந்தாமரை மலரில் வாழும் திருமகள், திளைக்கும் மார்பினில்-திளைப்பதற்குஇடமான திருமார்பிலே, இடை விளங்கிய-(முத்தாரங்களின்) இடையே விளங்கின, தகை இன் ஆரம்-சிறந்த இனிய நவரத்தின மாலையானது, மீன் சுடர் விட விளங்கும் மேகத்து-விண்மீன்கள் ஒளி வீச விளங்குகிற மேகத்தினிடமாக (உண்டாகிற), வான் இடு வில் என-இந்திர வில்லைப்போல, வயங்கி காட்ட-விளங்கித் தோன்ற, ஏ: ஈற்றசை.

இராமபிரான் திருமார்பு மேகமெனவும், அம்மார்பிலணிந்த முத்துக்கள் விண்மீனெனவும், நவமணி மாலை இந்திர வில்லெனவுங் கொள்க. மார்பினில் 'இடை' விளங்கிய என்றதனால் முத்தாரங்களின் இடையே எனப் பொருள் கொள்ளப்பட்டது. ஆரத்துக்கு வானவில்லை உவமித்தமையின், பல நிற மணிகள் கலந்த 'நவமணி மாலை' எனப்பட்டது.

மீன் சுடர்விட விளங்கும் மேகம் : இல்பொருளுவமை. மீனொடு: ஒடு-இசைநிறை. தான் இரண்டும் அசை.

வானிடுவில் : 'வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்' (நாலடி. 1).

(பி - ம்.) 1. தேனுகு; தேனகு; தேனுலாம்: மாலைகள்தெரிக்கும்; அலைக்கும்: மார்பினைத்; மார்பிடைத்.
2. தானுடை: விலங்கிய; விலகிய; இலகிய; வயங்கிய: தகையில்; தகைவில்; தகைவின்; ஆரந்தன்: விளங்கிய தரளமாலிகை.
3. மீனொடுஞ் சுடரொடும்: மேகத்தின்; மேகத்துள்.
4. வானிடும்; வானிடை; வானெடு; மார்பில் தோன்றவே. (58)

உத்தரீயம்

1295. நணுகவு மரியதா நடக்கு ஞானத்தர்
உணர்வென வொளிர்தரு முத்த ரீயந்தான்
கணிவருங் கருணையான் கழுத்திற் சாத்திய
மணியுமிழ் கதிரென மார்பிற் றோன்றவே.

நணுகவும் அரியது ஆச-(பிறரால்சிறிது)பெறுதற்கும் அருமையாக, நடக்கும்-(ஞானமார்க்கத்திலே) ஒழுகுகின்ற, ஞானத்தர்-தத்துவ ஞானிகளின், உணர்வு என-தூய அறிவைப்போல, ஒளிர் தரும்-(மிகவெண்மையாகப்) பிரகாசிக்கிற, உத்தரீயம்-மேலாடையானது, கணிவு அரு கருணையான்-அளவிடற்கரிய கருணையுடைய அவ்விராமபிரான், கழுத்தில் சாத்திய மணி-கழுத்தில் அணிந்துள்ள முத்தாரங்கள், உமிழ் கதிர் என-வெளிவிடும் வெள்ளொளி என்னும்படி, மார்பில் தோன்ற-திருமார்பில் விளங்க; தான், ஆசை.

இராமபிரான் கழுத்திற்பூண்ட முத்தாரங்களின் தூய வெள்ளொளி திரண்டு வீசுவது போன்றிருந்தது அவர் தரித்த வெண்பட்டு உத்தரியம் எனச் சிறப்பிக்கின்றூர். அவ்வுத்தரியத்தின் தூய்மைக்கு மெய்ஞ்ஞானிகளின் தூய அறிவை உவமித்தார். கழுத்திற் சாத்திய 'மணி' எனப் பொதுப்படக் கூறினுரேனும் இடம் நோக்கி 'முத்து' எனக் கொள்ளப்பட்டது. படிகமணிகளும் ஆம்.

(பி - ம்.) 1. நணுகவுநிமிரவும்: அரியசாய்: ஞானத்தார்: ஞானத்தான்; ஞானிதன்.
2. உணர்வினின்; உணர்வினில்; ஒளிதிகழ்: ஒளிர்தனி;
ஒளிகிளர்: உத்தரீகந்தான்.
3. தணிவரும்; கனிவரு: கருணைதன்: தணிவரு கலனெனக்.
4.* மார்பினேன்றவே. (59)

முப்புரி நூல்

1296. மேவருஞ் சுடரொளி விளங்கு மார்பினூல்
ஏவருஞ் தெரிந்தினி துணர்மி னீண்டெனத்
தேவரு முனிவருந் தெரிக்க லாமுதல்
மூவருந் தானென முடித்த தொத்ததே.

மேவ அரு சுடர் ஒளி விளங்கும் - (ஒளி மிகுதியால் யாவரும்) அணுகுதற்கு அரிய (சூரியன், சந்திரன், அக்கினி என்னும்) முச்சுடர்கள்போல ஒளியோடு விளங்குகிற, மார்பின் நூல்-மார்பில் அணிந்த முப்புரி நூலானது, தேவரும் முனிவரும் தெரிக்க அலா-தேவர்களும் முனிவர்களுங்கூட (இன்ன தன்மையர் என்று அறிந்து) உணர்த்தலாகாத, முதல் மூவரும்-முதற் கடவுளர் மூவரும், தான் என-தானே என்று, ஈண்டு-இங்கே, ஏவரும்-எல்லோரும், தெரிந்து இனிது உணர்மின் என-கண்டு நன்குணருங்களென்று சொல்லி, முடித்தது ஒத்தது-(அதற்கறிகுறியாக மூன்றையும் ஒன்ருய்) முடிந்து வைத்தது போலிருந்தது.

மார்பில் அணியும் பூணூல் மூன்று புரிகள் கொண்டதாய், மூன்றையும் சேர்த்துப் பிரம முடியால் முடியப்படுவதாகலின், அது மும் மூர்த்திகளும் ஒன்றிய பரம்பொருள் இராமபிரானே யென்பதை அனைவர்க்கும் அறிவிப்பது போன்றிருந்தது என்ருர். இராமபிரான்

இதுகாறும் பிரமசரிய நிலையிலிருந்ததால் அந்நிலைக்கேற்ப அணிந்த ஒற்றைப் பூணூலை இவ்வாறு வருணித்தார். 'முப்பரம் பொருளுக்கும் முதலை' (1305) எனப் பின்னும் இராமபிரானைக் கூறுதல்காண்க.

(பி - ம்.) 1. சுடரென: மாவருஞ் சுடரொளி வயங்கு. 2. உணருமீண்டெனுத்.
3. தெரிக்கிலா; தெரிகிலா; தெரிகலா.
4. தானென முடிந்தது; மொழிவது; தானெனும் மூர்த்தி: ஒத்தவே. (60)

### உதர பந்தனம்

1297. சுற்றுநீ டமனியச் சோதி பொங்கமேல்
ஒற்றைமா மணியுமி ழுதர பந்தனம்
மற்றுமோ ரண்டமு மயனும் வந்தெழப்
பொற்றடந் தாமரை பூத்த தொத்ததே.

சுற்றும்-சுற்றிலும், நீள் தமனியம் சோதி பொங்க-சிறந்த பொன்னின் ஒளி மிக்கெழ, மேல் ஒற்றை மாமணி-மேலிடத்திலே (முகப்பில்) பதிக்கப்பட்ட ஒற்றைப் பெரியமணி, உமிழ்-ஒளி வீசுகின்ற, உதரபந்தனம்-உதரபந்தனம் என்னும் அணியானது, மற்றும் ஓர் அண்டமும்-(முன்னுள்ள அண்டங்களல்லாத) வேறோர் அண்ட கோளமும், அயனும்-(அதனைப் படைத்த) பிரமனும், வந்து எழ-உதிக்கும்படி, பொன் தட தாமரை-பொன்னாலாகிய பெரியதொரு தாமரை மலரை, பூத்தது ஒத்தது-(எம்பெருமான் திருவுந்தி) மலர்ந்தது போன்றிருந்தது.

உதர பந்தனம்-அரையாடை நழுவாதபடி மேலே கட்டும் ஓர் அணி. அது பொன்னாலியன்று முகப்பில் மணிகள் பதிக்கப்பட்டதாயிருக்கும். அரையைச் சுற்றியுள்ள வடம் பொன்னொளி வீசும் புதியதோர் அண்டமும், முகப்புத் தாமரை மலரும், அதிற் பதித்த பெரிய மாணிக்கம் பிரமனுமாகக் கொள்க. உதரபந்தனத்தை முன்னர்க் கூறி, அதன் பின் பட்டாடை சாத்துதலைக் கூறுகின்றார்: இது சிந்தித்தற்குரியது,

(பி - ம்.) 1. சுற்றுநீ டணிமணி; சுற்றுறு நீடிய: பொங்கிமேல்; சூழமேல்.
2. உதரபெந்தனம்.
3. மற்றுமோரண்டமொ டயனும்; மற்றுமாரணமுமோ ரயனும்.
4. பூத்தபோன்றதே; பூப்பதொத்ததே; ஒத்தருவ; பூப்பது போன்றதே. (61)

### பட்டாடை சாத்துதல்

1298. மண்ணுறு சுடர்மணி வயங்கித் தோன்றிய
கண்ணுறு கருங்கட லதனைக் கைவளர்
தண்ணிறப் பாற்கட றழீஇய தாமென
வெண்ணிறப் பட்டொளி விளங்கச் சாத்தியே.

மண் உறு-கழுவுதலுற்ற, சுடர்மணி-ஒளிமிக்க இரத்தினங்களுடன், வயங்கி தோன்றிய-விளங்கிக் காணப்பெற்ற, கண் உறு கருகடல் அதனை-காட்சியமைந்த கரிய கடலை, கைவளர்-அலைகள் மிக்க, தண் நிறம்-குளிர்ந்த நிறமுடைய, பால்கடல் தழீஇயது ஆம் என-பாற்கடல் வந்து தழுவிக்கொண்ட தென்னும்படி, வெள்நிறம் பட்டு-தூய வெண்ணிறமுடைய பட்டாடையை, ஒளி விளங்க சாத்தி-அதன் ஒளி சிறந்து விளங்கும்படி (தன் அரையில்) உடுத்து,

பலவகை மணிப் பூண்களுடன் விளங்கும் இராமபிரான் திருமேனி, மணிகளைக்கொண்டு விளங்கும் கருங்கடலெனவும் அதனைச் சூழ அரையில் உடுத்த வெண்பட்டாடை பாற்கடலெனவும் கொள்க. 'கருங்கடலைப் பாற்கடல் சூழ்ந்ததுபோல' என்றது இல்பொருளுவமை. வெண்பட்டில் 'க்ஷீராப்தி' என்றொரு வகை உண்மையும் அதன் தோற்றம் நீரலைகள் போலக் காணப்படுதலும் இங்கே நினைத்தற்குரியன.

(பி - ம்.) 1. மண்ணுறுஞ்சுடர்: வயங்சத்; மயங்கித்: தோன்றின; தோற்றிய.
2. கருங்கடல் தன்னைக் கைவளை. 3. தண்ணுறு.
4. படாமொளி; பட்டெழில்; பட்டுமெய்: சாத்திமேல். (62)

### அரைக்கச்சும் உடைவாளும்

1299. சலம்வரு தரளமுந் தயங்கு நீலமும்
அலம்வரு நிழலுமி ழம்பொற் கச்சினல்
குலம்வரு கனகவான் குன்றை நின்றுடன்
வலம்வரு கதிரென வாளும் வீக்கியே.

தயங்கும் நீலமும்-விளங்குகின்ற நீலமணிகளும், சலம் வரு தரளமும்-(அவற்றோடு ஒளியால்) மாறுபடுகிற முத்துக்களும், அலம் வரு நிழல் உமிழ்-(ஒன்றுக்கொன்று) மாறுபட்ட ஒளிகளைத் தருகிற, அம்பொன் கச்சினல்-அழகிய பொன்னாலியன்ற கச்சினாலே, குலம் வரு-மேன்மை மிக்க, கனகம் வான் குன்றை-பொன்மயமான பெரிய மேரு மலையை, வலம் வரு கதிர்-வலமாகச் சூழ்ந்துவரும் சூரியன், உடன் நின்று என-(அம்மலையோடு ஓரிடத்தில்) ஒன்றி நின்றதென்னும்படி, வாளும் வீக்கி-உடைவாளையும் (திருவரையில்) கட்டி,

எம்பெருமானுடைய திருமேனி மேருவாகவும், உடைவாள் அம்மலையில் ஓரிடத்தே தங்கிய சூரியனெனவும் கொள்க. திருமேனி கரியதாயினும் பூண்டுள்ள அணிகளின் ஒளியால் பொன் மயமாக விளங்கியதென்க. எம்பெருமானுக்குரிய படைகளும் அணிகள் போல அழ்கும் அன்பர்க்கு இன்பமும் தருவன என்ற நூற்றுணிபு கருதி, உடைவாளையும் அணிபோலக் கூறினர். கச்சு அரையில் கட்டப்படுவது; உடைவாள் அதனோடு இணைந்திருப்பது; ஆதலால் கச்சினல் வாள் வீக்கி என்றார்.

வாளும்: உம்மை இறந்தது தழுவியது. அலம்வரல்-சுழலல், மாறுபடுதல், மிகுதியுமாம்.

(பி - ம்.) 1. சலம்வரும்: சலமருள்: தாங்கு.
2. அலமரு; அலமணி; வலம்வரு; நீழலுமம் பொற்காசினுல்.
3. குலம்வரும்: குலமணி நெடுவரைக் குன்றநன் றுடன்.
4. வலம்வரும். (63)

அரைப் பட்டிகையும் தொங்கலும்

1300. முகைவிரி சுடரொளி முத்தின் பத்தியால்
தொகைவிரி பட்டிகைச் சுடருஞ் சுற்றிடத்
தகையுடை வாளெனுந் தயங்கு வெய்யவன்
நகையிள வெயிலெனத் தொங்க னூற்றியே.

முகை விரி-முல்லையரும்பின் தன்மை விரிந்த, சுடர் ஒளி-மிக்க ஒளி பொருந்திய, முத்தின் பத்தியால்-முத்துவடத்தின் வரிசையால், தொகை விரி-ஒளிக் கூட்டம் மிகுகின்ற, பட்டிகை சுடரும் சுற்றிட-அரைப்பட்டிகையின் பிரகாசமும் தன்னைச் சூழ, தயங்கு-விளங்குகின்ற, தகை-அழகு மிக்க, உடைவாள் எனும்-உடைவாளாகிய, வெய்யவன்-சூரியனது, நகை இளவெயில் என-விளங்கும் இளவெயில் என்னும்படி, தொங்கல் நாற்றி-மாணிக்கச் சரங்களைத் தொங்க விட்டு,

உடைவாள் இணைந்த கச்சின் மீது அரையைச் சுற்றிக் கட்டப் படுவது அரைப்பட்டிகை; அது பல முத்துவடங்களின் வரிசை கொண்டு பட்டையாக விளங்குவது. இதன் வெள்ளொளி இளஞ் சூரியன்போல விளங்கும் உடைவாளைச் சூழ்ந்து நிற்க, அச்சூரியனது இளவெயில் வீசுவதுபோலத் தோன்றும்படி சிவந்த மாணிக்க மணிச் சரங்களைத் தொங்கவிட்டன ரென்க. உடைவாளைக் கதிரவன் என முன்னர்க் கூறியதனை அநுவதித்து, அதன் மீது படிந்து தொங்கும் மணிச்சரத்தை இளவெயில் என்றார்.

(பி - ம்.) 1. முகைவிரிச் சுடர்மணி; முகைவிரி கதிரொளி: பத்திவான்; பத்திவன்; பத்தியின். 2. தொகைவிரிப்; தொகைவரிப்; சூட்டுஞ் சுற்றிடைத். 3. தகையுடன்: தகவுடை: வாளென்த்: வானிடைத்; வானெனும்: தயங்கும். 4. நகையுடை. (64)

கிம்புரியென்னும் தொடையணி

1301. காசொடு கண்ணிழல் கஞலக் கைவினை
ஏசலில் கிம்புரி யெயிறு வெண்ணிலா
வீசலின் மகரவாய் விளங்கு வாண்முகம்
ஆசையை யொளிகளா லளந்து காட்டவே.

கைவினை ஏசல் இல் கிம்புரி-கைத்திறன் அமைந்த வேலைப் பாட்டில் குற்றம் இல்லாத கிம்புரி என்னும் தொடையணியின்,

காசொடு கண் நிழல் கனுல-மணிபதித்த கண்ணொளி விளங்க, எயிறு-(அதில் அமைந்த) பற்கள், வெள் நிலா வீசலின்-வெண்மையான நில வொளியை வீசுதலால், மகர வாய் விளங்கும்-சுரு மீனின் அங்காந்த வாய்போல விளங்குகின்ற, வாள் முகம்-ஒளிமிக்க முகப்பானது, ஒளிகளால் - (தன்னிடமிருந்து வெளிப்படும்) பலநிற ஒளிகளால், ஆசையை அளந்து காட்ட-திக்குக்களின் எல்லையை அளவிட்டுக் காட்ட,

'கிம்புரி' என்பது தொடையைச் சூழ அணியும் ஓர் ஆபரணம். இது 'குறங்கு செறி' எனவும் கூறப்படும். இதன் முகப்பு சுருமீனின் அங்காந்த வாய் போன்ற அமைப்புடையதாய்க் கண்களிலும் பற்களிலும் மணிகள் பதிக்கப்பெற்றிருத்தலின், அம்மணிகளின் ஒளி திசைகளின் எல்லையளவும் சென்று வீச என்ருர். எயிறு-சுரு மீனின் கொம்பு போலமைந்த உறுப்பும் ஆம்; இதனைச் 'சுறவுக்கோடு' என்பர். இவ்வணி, 'மகரம்' என்ற பெயருடன் மகளிர் தொடையணியாகவும், தோளணியாகவும் சீவக சிந்தாமணியில் வழங்கப்பட்டுள்ளது; சீவக. 174, 2438-பார்க்க. கிம்புரி: யுத்த. 3584.

(பி - ம்.) 1. காசொடு தண்ணிழல்; காதொடு கண்ணினைக்: கனலக்கையினை; கனுலக் கைவளை.
2. ஏசறு; ஏதமில்: எயிற்று வெண்ணிலா.
3. வீசிய மகரம்வாய் விளங்கும்: வான்முக; மாமுகம்; மின்னென.
4. ஆசைகள். (65)

## சிலம்பும் கழலும்

1802. இனிப்பரந் துலகினை யளப்ப தெங்கெனத்
தனித்தனி தடுப்பன போலுஞ் சால்பின
நுனிப்பரு நுண்வினைச் சிலம்பு நோன்கழல்
பனிப்பருந் தாமரைப் பாதம் பற்றவே.

பரந்து-பரந்த வடிவு கொண்டு, உலகினை அளப்பது-உலகங்களை யெல்லாம் (தனக்குள்ளடக்கி) அளப்பது, இனி எங்கு என-இனி எவ்வாறு இயல்வதென்று கூறி, தனிதனி-(இரண்டும்)தனித்தனியே, தடுப்பன போலும் சால்பின-(திருவடிகளைத்) தடுப்பது போன்ற தன்மையுடையனவாக, நுனிப்பு அரு நுண் வினை-கூர்ந்தறிவதற்கரிய நுட்பமான வேலைப்பாடமைந்த, சிலம்பு-சிலம்புகளும், நோன் கழல்-வலிமை பொருந்திய வீரக் கழலும், பனிப்பு அரு-வாடுதல் இல்லாத, தாமரை பாதம் பற்ற-தாமரை மலர் போன்ற திருவடிகளைச் சூழ்ந்து பற்றிக்கொள்ள,

திரிவிக்கிரமாவதாரத்திலே மிகப்பெரிய அளவினவாகி மூவுலகங்களையும் அளந்த எம்பெருமானுடைய திருவடிகள் இனியும் அவ்வாறு செய்யவியலாதவாறு சிலம்பும் கழலும் அத்திருவடிகளைப்

பூண்டுகொண்டு தடுப்பனபோலத் தோற்றுமாறு காலில் அணியப் பெற்றன எனத் தற்குறிப்பேற்றஞ் செய்கின்ருர். சிலம்பும் நோன் கழல் எனப் பிரித்து ஒலிக்கின்ற வலிய வீரக்கழல்கள் என உரைத் தலும் ஆம்.

(பி - ம்.) 1. இனிப்பகர்ந்து.
2. தனித்தனித்; சால்பினின்; சார்பின; சார்வின; சார்பில.
3. நுனிப்பருந் துணையினைச். 4. பனிப்பிரும்; பனிப்புறும். (66)

1303: இன்னன பொலிதர விமைய வர்க்கெலாம்
தன்னையே யொப்பதோர் கோலந் தாங்கினுன்
பன்னக மணிவிளக் கழலும் பாயலுள்
அன்னவர் தவத்தினு லனந்த னீங்கினுன்.

இமையவர்க்கு எலாம்-எல்லாத் தேவர்கள் பொருட்டும், அன்னவர் தவத்தினுல்-அத்தேவர்கள் செய்த தவப்பயனுக, மணி விளக்கு அழலும்-(தன்னிடமுள்ள) இரத்தினங்களாகிற தீபங்கள் ஒளிவிடுகின்ற, பன்னகம் பாயலுள்-ஆதிசேடனுகிய படுக்கையிலே, அனந்தல் நீங்கினுன்-அறிதுயிலமர்தலைவிட்டு அயோத்தியில் வந்தவ தரித்தஇராமபிரான், இன்னன பொலிதர-முற்கூறிய பலவகை அணி களும் விளங்க, தன்னையே ஒப்பது ஓர் கோலம் தாங்கினுன்-(வேறு ஒப்புமையின்றித்) தனக்குத்தானே நிகராகிய ஒப்பற்ற கோலத்தைத் தரித்து நின்ருன்.

அணிகலன்கள் பொதுவாகத் தம்மை அணிவார்க்கு அழகு செய்வன; இராமபிரானே, தான் அவ்வணிகளை விளங்கச் செய்யும் மேன்மையுடைமையால், 'தன்னையே ஒப்பதோர் கோலம்' எனப் பட்டது, இமையவர்க்கெலாம் தன்னையே - 'தேவர்க்கெல்லாம் தலைமை பூண்ட தன்னையே' எனவுரைத்தலும் ஆம். எம்பெருமான் தேவர்கள் பொருட்டாகப் பன்னகப் பாயலுட் பள்ளி நீங்கி இராம பிராணுக அயோத்தியில் வந்தமை திருவவதாரப் படலத்துட் கூறப் பட்டது. (201-2); மற்றும் பலவிடத்தும் இதனை நினைவு கூர்வர் கம்பநாடர்.

(பி - ம்.) 1. இன்னணம் ஒளிர்தர; ஒளிதர; பொலிவுற.
2. தன்னையே யனையதோர். 3. பன்னரு: அவிரும்பாயலுள்.
4. வர்த்தினுல்; திறத்தினுல்: அனந்தர் நீக்கினுன். (67)

1304. முப்பரம் பொருளுக்கு முதலை மூலத்தை
இப்பரந் துடைத்தவ ரெய்து மின்பத்தை
அப்பனை யப்பினு ளமுதைத் தன்னையே
யொப்பனை யொப்பனை யுரைக்க வொண்ணுமோ.

முப்பரம் பொருளுக்கும் முதலை-பரம்பொருள் எனப்படும் பிரமன், விட்டுணு, உருத்திரன் என்ற மூவர்க்கும் முதல்வனுனவனும்,

மூலத்தை-எல்லாவுலகங்களுக்கும் மூலகாரணமானவனும், இபரம் துடைத்தவர்-இவ்வுலகப் பற்றுக்களாகிற சுமையை அற நீக்கிய ஞானியர், எய்தும்-சென்றடைதற்குரிய, இன்பத்தை-பேரின்பமய மானவனும், அப்பனை-எவ்வுயிர்க்கும் தந்தையானவனும், அப்பினுள் அமுதை-பாற்கடலுள் தோன்றிய தேவாமிர்தத்தைப் போன்ற வனும், தன்னையே ஒப்பனை-தனக்குத்தானே ஒப்பவனுமான இராம பிரானுக்கு அமைந்த, ஒப்பனை-அலங்காரத்தின் மேன்மையை, உரைக்க ஒண்ணுமோ-(இத்தகையதென்று முழுதும்) கூற நம்மால் ஆகுமோ ?

அப்பு-நீர்; இங்கே பாற்கடலைக் குறித்தது. ஒப்பனை: முன்னது, ஒப்பவனை; பின்னது, கோலம். இராமபிரான் தனக்குத்தானே செய்துகொண்ட கோலத்தின் சிறப்பை வருணித்துக் கூறுதல் யாவர்க்கும் ஆகாது என்றபடி; அலங்காரப் பிரியன் விஷ்ணு என்பர். எம்பெருமான் பாற்கடலிலேயே உறைபவனுதலால், 'அப்பினுள் அமுதம்' என்ருர். முப்பரம் பொருளுக்கு முதல்வன்: *313*; **சுந்தர. *1122*.**

(பி - ம்.) 1. பொருளிற்குள்; பொருளுக்குள்; பொருளிற்கு.
2. இப்பவம்; துடைத்தபேர்; துடைப்பவர்.
3. அப்பினில்; அமுதந் தன்னையே; அமிர்தந் தன்னையே; அமிர்தைத் தன்னையே.
4. ஒப்பனைக் கொப்பனை; ஒப்பனையொப்பன; உணர்த்தவொண்ணுமோ; உரைக்க வேண்டுமோ. (68)

### தானம் வழங்கித் தேரேறுதல்

1305. பல்பதி னுயிரம் பசுவும் பைம்பொனும்
எல்லையி னிலனெடு மணிகள் யாவையும்
நல்லவர்க் குதவின னவிலு நான்மறைச்
செல்வர்கள் வாழ்த்துறத் தேர்வந் தேறினன்.

(இராமபிரான்), பல்பதினுயிரம் பசுவும்-பலபதினுயிரக்கணக் கான பசுக்களையும், பைம்பொனும்-பசிய (மாற்றுயர்ந்த) பொன்னை யும், எல்லை இல் நிலனெடும்-அளவற்ற பூமியையும், மணிகள் யாவை யும்-நவரத்தினங்களையும், நல்லவர்க்கு-(தகுதியுடைய) நல்லவர் களுக்கு, உதவினன்-தானமாகக் கொடுத்து, நவிலும்-சிறப்பித்துச் சொல்லப்படுகிற, நால்மறை செல்வர்கள்-நான்கு வேதங்களென்ற செல்வத்தையுடைய அந்தணர்கள், வாழ்த்துற-(தன்னை) வேதமந்தி ரங்களால் ஆசீர்வதிக்க, வந்து தேர் ஏறினன்-(வெளியே) வந்து தேரில் ஏறினன்.

மண மகன், தன் திருமணங் குறித்துப் புறப்படும்போது, பல தானங்கள் செய்தல் வேண்டுமென்பது விதி; இதனை 'யாத்திரா

தானம்' என்பர். நிலனொடும் அணிகள் எனவும் பிரித்துரைக்கலாம். நவிலும்-ஓதப்படுகிற என்றலும் ஆம். எல்லை இல் என்பதனை மணிகளோடும் இயைக்க. உதவினன், முற்றெச்சம். எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது.

(பி - ம்.) 2. நிலமொடு; அவனியும்: மணியும்.
3. நல்லவர்க் கோக்கியே; ஓக்கினன்; ஆக்கியே; ஆக்கினன்; ஈந்துபோய்; ஈந்துபின்: நவையில்; நலங்கொள்.
4. வல்லவர்: வழுத்துறத்; வழுத்திடத்; முந்துறத்: தேரொன்று: எய்தினன். (69)

தேரின் சிறப்பு

1306. பொற்றிர ளச்சது வெள்ளிச் சில்லிபுக்
குற்றது வயிரத்தி னுற்ற தட்டது
சுற்றுறு நவமணி சுடருந் தோற்றத்த
தொற்றையா ழிக்கதிர்த் தேரொ டொத்ததே.

(இராமபிரான் ஏறிய தேர்) பொன் திரள் அச்சது-பொன்னாலாகித் திரண்ட அச்சையுடையதும், வெள்ளி சில்லி புக்கு உற்றது-வெள்ளியாலான உருளைகள் பொருந்தப் பெற்றதும், வயிரத்தின் உற்ற தட்டது-வயிரத்தாலான தட்டையுடையதும், சுற்று உறும்-சுற்றிலும் பொருந்திய, நவமணி சுடரும் தோற்றத்தது-நவரத்தினங்கள் பிரகாசிக்கும் காட்சியுடையதுமாகி, ஒற்றை ஆழி-ஒற்றைச் சக்கரத்தையுடைய, கதிர்தேரொடு ஒத்தது-சூரியனுடைய இரதத்தைப் போன்று விளங்கியது.

தேரானது மிக்க விரைவும் சோதியுமுடையதாய், நாராயணன் (இராமபிரான்) அமர்தற்கிடமாயுமிருத்தலால் கதிர்த் தேரை உவமித்தார். உறு நவமணி-'மிகுதியான நவமணிகள்' எனவுமாம்.

(பி - ம்.) 1. அச்சுருள்; அச்சொடு. 2. வுற்றத்தட்டது: இட்ட கட்டது.
3. சுற்றுவ; சுற்றுள: நவமணிச்: தோற்றத்தால்; தோற்றத்தாய்.
4. ஆழியந்தடந்; ஆழித்தனித்: தேரின்; ஒத்தது; ஒப்பது; ஒப்பதே; ஒப்பவே. (70)

1307. நூல்வருந் தகையன நுனிக்கு நோன்மைய
சால்பெருஞ் செவ்விய தரும மாதிய
நாலையு மனையன புரவி நான்கொரு
பாலமை புணர்ந்தன பக்கம் பூண்டவே.

நூல் வரும் தகையன-குதிரை நூல் (அசுவசாத்திரம்) கூறும் உத்தம இலக்கணங்களெல்லாம் அமையப்பெற்றனவும், நுனிக்கும் நோன்மைய-(சாரதியின் குறிப்பைக்) கூர்ந்துணரும் ஆற்றலுடையனவும், சால் பெரு செவ்விய-நிரம்பிய பேரழகையுடையனவும், தருமம் ஆதிய நாலையும் அனையன-தருமம் முதலான பேறுகள்

(புருஷார்த்தங்கள்) நான்கையும் ஒப்பனவும், நான்கு ஒரு பாலமை புணர்ந்தன-நான்கும் (வடிவம், நிறம், தோற்றம் முதலியவற்ருல்) ஒத்த தன்மையுடையனவுமான, புரவி-(நான்கு) குதிரைகள், பக்கம் பூண்ட-அத்தேரினிடத்தே பூட்டப்பெற்றிருந்தன.

அடைந்தோரை உயர்த்தும் அறம் முதலிய நான்கும் போலத் தம்மை மேற்கொண்டவரை முறையாக உரிய இலக்கிற் சேர்க்கும் உயர்வுடையன புரவிகள் என்பார், 'தருமமாதிய நாலையுமனையன' என்ருர். நான்கு என்றவிடத்து முற்றும்மை விகாரத்தால் தொக்கது. ஒரு பாலமை-ஒப்பற்ற பாலின் தன்மை (வெண்மை) எனவுமாம். பக்கம், இடப்பொருள் குறித்து நின்றது. 'இறகு' எனப் பொருள் கொண்டு தெய்வக் குதிரைகளையொப்பச் சிறகும் உடையன என்றலுமாம். ஈற்றடியில் 'பாலமை யுணர்ந்தவன்' என்றும் பாலையும்புணர்ந்தன' என்றும் பாடங்கள் கொண்டு அவற்றிற்கேற்பப் பொருளுரைத்தனர் பிறர். வன்மை-வல்லமையென்ருதல் போலப் பான்மையெனற்பாலது, 'பாலமை' என இடையே அகரம் பெற்று வந்தது.

அரசர்கள் நான்கு குதிரைகள் பூட்டிய தேரிற் செல்லுதல் மரபு; 'பால்புரை புரவி நால்குடன் பூட்டி' (பொருந. 165) என்றது காண்க.

(பி - ம்.) 1. நூல்தருந் தன்மைய: நுணங்கும்.
2. செவ்விதன்; செல்வன; செலவின: ஆதியா; ஆகிய; மாமறை.
3. அனையவப்.
4. பாலையும்; பான்மையும்: உணர்ந்தவன்; உணர்ந்தன; புணர்ந்தவன்: உடையன: பான்மையை உணர்ந்தவப்; பூண்டதே; பூண்டது; பூணவே. (71)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

### தேரிற் சென்ற சிறப்பு

1308. அனையதோர் தேரினி லருண னின்றெனப்
பனிவரு மலர்க்கணப் பரதன் கோல்கொளக்
குனிசிலைத் தம்பிய ரிருவ ருங்குழைந்
தினியபொற் கவரிகா லியக்க வேகினன்.

அனையது ஓர்தேரினில்-(முற்கூறிய) அத்தன்மையதான ஒப்பற்ற தேரிலே, அருணன் நின்று என-(சூரியன் தேரில்) அருணன் சாரதியாக நிற்றல்போல, பனி வரு மலர் கண் அ பரதன்-இன்பக்கண்ணீர் பெருகும் மலர்ந்த கண்களையுடைய அந்தப் பரதன், கோல் கொள-குதிரைச் சம்மட்டியைக் கைக்கொண்டு சாரதியாயிருந்து செலுத்தவும், குனி சிலை தம்பியர் இருவரும்-வளையும் வில்லைத் தாங்கிய தம்பிமாராகிய இலக்குவன், சத்துருக்கனன் என்ற இருவரும், குழைந்து-மனங்கசிந்து, இனிய பொன் கவரி-கண்ணுக்கினிய பொற்காம்பை

யுடைய வெண் சாமரத்தால், கால் இயக்க-காற்றுண்டாக வீசவும், ஏகினுன்-இனிதாகச் சென்ருன்-(இராமபிரான்).

முன்னே, தேரைச் சூரியன் தேர் போன்றதென்றதற்கேற்ப, இங்கே அதன் சாரதியாகிய அருணன் போலப் பரதன் இருந்தான் என்ருர்.

தம்பியர் இருவரும் சவரி வீசல்: யுத்த. 4281.

(பி - ம்.) 1. அனையதே ரதன்மிசை; அனையதோர் தேர்மிசை; ஐயனின்றனன்; ஏறினுன்; ஏறியே.
2. மலர்க்கணன்; மலர்க்கணிர்ப்; மலர்விழிப்; மலர்ந்தகட்.
3. தம்பியின் கூடவேனையன்; தம்பியர்கூட வெய்திநின்று; கூடவேறியே; கூடவேழையர் குறுகிப்பின்னர் நின்று.
4. இனிதின்வெண்; இனையபொன்; காலசைப்ப. (72)

1309. அமைவரு மேனியா னழகி னுயதோ
கமையுறு மனத்தினுற் கருத வந்ததோ
சமைவுற வறிந்திலந் தக்க தாகுக
இமையவ ராயினு ரிங்கு ளாருமே.

அமைவு அரு மேனியான்-பிறருக்கு அமைதல் அரிய திருமேனியுடைய இராமபிரானது, அழகின்-இணையற்ற அழகினுல், ஆயதோ-(அந்நிலைமை) உண்டான்தோ! (அல்லது), கமை உறு மனத்தினுல்-பொறுமை மிக்க தம் மனத்தினுலே கருத-(அவ்வழகின் சிறப்பை) ஆழ்ந்து சிந்தித்தலால், வந்ததோ-நேர்ந்ததோ! சமைவு உற அறிந்திலம்-(இரண்டில் ஒன்றை) உள்ளவாறு தெரிந்தோமில்லை; தக்கது ஆகுக-பொருந்தியது எதுவாயினும் ஆகுக; இங்கு உளாரும்-(இராமபிரானைத் தரிசித்த) இவ்வுலகமாந்தரும், இமையவர் ஆயினர்-இமையா நாட்டமுடைய தேவர்கள் போலாயினர்.

வியக்கத்தக்கதொரு பொருளைக் கண்டபோதும், ஒரு பொருளைக்குறித்து ஆழ்ந்து சிந்திக்கும்போதும் கண்ணிமையாதிருத்தல் மாந்தர் இயல்பு. இங்கே திருமணக் கோலத்தில் இராமபிரானது பேரழகைக் கண்ட வியப்பினுலோ, அவ்வழகின் சிறப்பைக் குறித்து ஆழ்ந்து சிந்தித்ததனுலோ அனைவரும் கண்ணிமையாது பார்த்து நின்றனர் என்றவாறு. கமையுறு மனத்தினுற் கருதல்-'பொறுமையோடு தியானித்தல்' என்ற குறிப்பும் தருதலால் இராமபிரானது தெய்வத்தன்மை கண்டோரனைவரையும் தியானத்தில் ஆழ்த்தியது என்றலும் பொருந்தும். இமையவர்-இமையில் விசேடத்தன்மை பெற்றவர்-தேவர்கள்;அத்தன்மை இங்கே மானிடருக்கும் பொருந்துவதாயிற்று.

கமை: 'க்ஷமா' என்ற வடசொல்லின் திரிபு.

(பி - ம்.) 1. மேனியன்: ஆயதோர்.
2. கமைவரு: மனத்தினர்: கவரவந்ததோ; கருத்துவந்ததோ.
3. சமைவுநல்; சமைவுற; அறிந்திலன்; அறிகிலன்; அறிகிலம்: தக்கதியா தென; தக்கதாமென: தவத்தினயதோ; தத்தநாட்டங்கள்; தந்த நாட்டங்கள்; தக்கநாடுக.
4. இமையிலராயினர்; ஆகினர்; இங்குளோருமே; இங்குளாரெலாம். (73)

## தேவர்களின் மகிழ்ச்சி

1310. வரம்பறு முலகினை வலிந்து மாய்வின்றித்
திரம்பயி லரக்கர்தம் வருக்கந் தேய்வினி
நிரம்பிய தெனக்கொடு நிறைந்த தேவர்கள்
அரம்பையர் குழாத்தொடு மாடன் மேயினர்.

அரம்பையர் குழாத்தொடும் நிறைந்த தேவர்கள்-தெய்வமாதர் கூட்டத்துடன் (விண்ணிலே) கூடிநிரம்பின தேவர்கள், வரம்பு அறும் உலகினை வலிந்து-(இது காறும்) எல்லையற்ற உலகங்களையெல்லாம் வலியத் துன்புறுத்தி, மாய்வு இன்றி-(தமக்கு) அழிவில்லாமல், திரம் பயில் - நிலைத்தல் பெற்ற, அரக்கர் தம் வருக்கம் தேய்வு-அரக்கர் இனம் அழிவது,இனி நிரம்பியது என கொடு-இனிக் கைகூடியதென்று தம் மனத்துட்கொண்டு, ஆடல் மேயினர்-ஆனந்தக் கூத்தாடு வாராயினர்.

சீதா விவாகம் இராவணாதியர் அழிவுக்கு முக்கிய காரணமாதலின், அதனையுணர்ந்த தேவர்கள், இனித் தாம் நலம் பெறுவதுறுதியென்று மனத்துள் துணிந்து மகிழ்ச்சியால் கூத்தாடினர் என்க.

திரம் = ஸ்திரம்—நிலைத்தல். நிரம்பியது: தெளிவு பற்றிவந்த கால மயக்கம்.

(பி - ம்.) 1. வரம்பெறும்: உலகினில்; உலகெலாம்; வலித்துத்; வளர்ந்து: தேய்வின்றித்; தேய்வின்றிச்.
2. சிரம்பயில்; சரம்பயில்: அரக்கர்தாம்; அரக்கராம்; அரக்கர்கள்: வருத்தம்: தேய்வுறல்; தேய்வுற; தேய்வின்று; தேய்ந்துக; தேய்வர் நாமினி. 3. நிரம்புவ மெனக்களி: நின்ற: தேவரும்.
4. தாமுமாடினர். (74)

## நகர மகளிர் செயல்

1311. சொரிந்தனர் பூமழை சுண்ணந் தூவினர்
விரிந்தொளிர் காசுபொன் றூசு வீசினர்
பரிந்தன ரழகினைப் பருகினர் கொலாம்
தெரிந்திலந் திருநகர் மகளிர் செய்கையே.

திரு நகர் மகளிர்-அச்செல்வ நகரத்துப் பெண்கள், பூ மழை சொரிந்தனர்-(இராமபிரான் சென்ற தேரின்மீது) பூக்களை மழை

போலப் பொழிந்தனர்; சுண்ணம் தூவினர்-நறுமணப் பொடியை எங்கும் தூவினர்; விரிந்து ஒளிர்-பரந்து ஒளி வீசுகின்ற, காசு-மணிகளையும், பொன்-பொன்னையும், தூசு-ஆடைகளையும், வீசினர்-வாரி வழங்கினர்; செய்கை தெரிந்திலம் - இச்செயல்களைச் செய்தல் ஏனென்றறிந்ததோமில்லை; அழகினை-இராமபிரானது திருமேனியழகை, பரிந்தனர்-மிக விரும்பியவராய், பருகினர் ஆம் கொல்-அள்ளிக் குடித்தனர் போலும்!

இராமபிரானது தெய்விகப் பேரழகு, அம்மிதிலா நகரத்து மகளிரையெல்லாம் இத்தகைய பெருமகிழ்வூட்டிய தென்க.

வீசுதல்-வரையாது கொடுத்தல்; 'வேண்டினர் வேட்கையின் மேற்பட வீசி; நீண்டகையாய்' (435); 'உரைசானன்கலம் வரைவில் வீசி' (பதிற். 54: 8.) அழகினைப் பருகுதல்: 712. கருத்தொப்புமை : அயோத். 283.

(பி - ம்.) 1. சொரிந்தன; மலர்மழை: தூவினர்; தூவின.
2. விரிந்தெழு; விரிந்தன; காசும்பொன்: காசொடு: தூசும்.
3. அழகனைப்; அமுதினைப்: பருகினர் ெ ாலோ; பருகினர்க்கெலாம்.
4. தெரிந்திலர்: தெரிந்தில: தன்னகர்; அந்நகர்: (75)

1312. வள்ளலை நோக்கிய மகளிர் மேனியின்
எள்ளரும் பூணெலா மிரிய நிற்கின்றார்
உள்ளன யாவையு முதவிப் பூண்டவும்
கொள்ளையிற் கொள்கெனக் கொடுக்கின் றாரினே.

உள்ளன யாவையம் உதவி-தம்மிடம் உள்ள பொருள்கள் முழுதும் (தாமாகவே வறியவர்க்குக்) கொடுத்து, பூண்டவும்-தாம் பூண்ட அணிகலன்களையும், கொள்ளையின் கொள்க என-கொள்ளை போல (வேண்டுவோர்) கொள்ளக்கடவர் என்று சொல்லி, கொடுக்கின்றாரின்-கொடுக்கும் உதார குணமுள்ளவரைப்போல, வள்ளலை நோக்கிய மகளிர்-வள்ளலாகிய இராமபிரானைப்பார்த்த பெண்களெல்லாம், மேனியின்-தம் உடம்பிலுள்ள,எள்ள அரு பூண் எல்லாம்-இகழ்தற்கரிய அணிகலன்கள் எல்லாம், இரிய-(தாமே) கழன்றுவிழ, நிற்கின்றார்-(செயலற்று) நிற்பாராயினர்.

முன்னே மகிழ்ச்சியால் காசு, பொன், தூசு முதலியவற்றை வாரிவழங்கிய பெண்கள், இப்போது இராமபிரானுடைய பேரழகில் ஈடுபட்டு விரகம் மிக்கு உடல் இளைக்கப்பெற்றதனால், அணிகலன்கள் தாமே கழன்று விழ, அவற்றையும் பொருட்படுத்தாமல் அவசமாகி நின்றனர். இச்செயல்களுக்குப் பெருவள்ளல்களின் செயலை ஒப்பிட்டார். வள்ளலை நோக்கியதனால் மகளிர், அவ்வள்ளற்றன்மை தம்மிடத்தும் கைவரப் பெற்றனர் போலும்.

கொள்ளையில்-மிகுதியாக என்றலுமாம்.

(பி - ம்.) 1. நோக்கியே; நோக்கின: மேனியில்
2. நள்ளரும்; பூணினர்; பூணினம்.
3. உள்ளவை வறியவர்க்குதவிப்; உதவப்; பூண்டதும்; பூணவும்; பூணையும்.
4. கொள்ளெனக் கொள்ளெவக்; கொள்ளெனக் கொள்ளையிற்; காதலாற்; கைத்தலம்; கொடுக்கின்றாரொத்தார்; கொடுக்கின்றாரரோ. (76)

## திருமண மண்டபம் அடைதல்

1313. எஞ்சலி லுலகத் துள்ள வெறிபடை யரச வெள்ளம்
குஞ்சரக் குழாத்திற் சுற்றக் கொற்றவ னிருந்த கூடம்
வெஞ்சினத் தனுவ லானு மேருமால் வரையிற் சேரும்
செஞ்சுடர்க் கடவு ளென்னத் தேரின்மேற் சென்று
சேர்ந்தான்.

எஞ்சல் இல்-குறைவில்லாத, உலகத்து உள்ள-நிலவுலகத்தில் உள்ள, எறி படை அரச வெள்ளம்-(வேல் முதலிய) எறி படைகளைத் தாங்கிய அரசர் கூட்டம், குஞ்சரம் குழாத்தின்-யானைக் கூட்டம் போல, சுற்ற-தன்னைச் சூழ்ந்திருக்க, கொற்றவன் இருந்த-தசரத சக்கரவர்த்தி வீற்றிருந்த, கூடம்-மண மண்டபத்தை, வெம் சினம்-(பகைவர்மீது) கொடுஞ்சினமுடைய, தனுவல்லானும்-வில்லில் வல்ல இராமபிரானும், மேரு மால் வரையில் சேரும் - மேருவென்னும் பெரிய மலையிடத்தே சென்று சேர்கின்ற, செம் சுடர் கடவுள் என்ன-சிவந்த கிரணங்களையுடைய சூரியனைப்போல, தேரின்மேல் சென்று சேர்ந்தான்-(முற்கூறியவாறமைந்த) தேரின் மேல் ஏறிச் சென்றடைந்தான்.

இராமபிரான் ஏறியிருந்த தேரைக் கதிர்த் தேரோடு ஒப்பிட்டும் *(1306)*, சாரதியான பரதனை அருணனோடொப்பிட்டும் *(1308)* முன்னர்க் கூறியதற்கேற்ப, இங்கே இராமபிரானைச் 'செஞ்சுடர்க் கடவுளென்ன' என்றார். மண மண்டபத்துக்கு மேருவை ஒப்புக் கூறியுள்ளமையும் 1280-ல் காண்க

(பி - ம்.) 1. எஞ்சலின்; அரசர் வெள்ளம்.
2. குழாத்துச் சுற்றக்; குழுவிற்றெக்க; கோனவன்.
3. தனுவல்லானும்; மேருமா மலையைச் சூழ்ந்த; மேருமால் வரையை மேவும். 4. தேரிடைச்; தேரிடை; தேரினிற். (77)

1314. இரதமாண் டிழிந்த பின்ன ரிருமருங் கிரண்டு கையும்
பரதனு மிளைய கோவும் பரிந்தன ரேந்தப் பைந்தார்
வரதனு மெய்தி மைதீர் மாதவர்த் தொழுது நீதி
விரதமெய்த் தாதை பாதம் வணங்கிமா டிருந்த வேலை

பைந்தார் வரதனும்-பசிய பூமாலையணிந்த வள்ளலான இராமபிரானும், ஆண்டு-அம்மண்டபத்தின் முன், இரதம் இழிந்த

பின்னர்-தேரினின்றும் இறங்கியபின், இரு மருங்கு-இரண்டு பக்கங்களிலும், இரண்டு கையும்-இரண்டு கைகளையும், பரதனும் இளைய கோவும் பரிந்தனர் ஏந்த-பரத நம்பியும் அவனிளங்கோவான இலக்குவனும் அன்புகொண்டு தாங்க, (கைலாகு கொடுத்துவர), எய்தி-(மண்டபத்தின் உள்ளிடத்தை) அடைந்து, மைதீர்-குற்றமற்ற மாதவர் தொழுது-பெருந் தவத்தினரான வசிட்டன், கோசிகன், சதாநந்தன் முதலினோரை நமஸ்கரித்து, நீதி விரதம் மெய் தாதை-நீதியையே விரதமாகக் கொண்ட சத்திய சீலனான தந்தையின், பாதம் வணங்கி-திருவடிகளைத் தொழுது, மாடு இருந்த வேலை-(தந்தையின்) பக்கத்தே அமர்ந்த போது,

பேரரசர் செல்லும்போது இரு பக்கங்களிலும் இருவர் 'கைலாகு' கொடுத்தல் மரபாதலின், 'பரதனும் இளையகோவும் இரண்டு கையும் ஏந்த' என்றார். வரதன்-வரங்களை அளிப்பவன். பெரியோருடைய ஆசியும் அநுமதியும் பெற்ற பின்னரே மணத்தவிசேற வேண்டுதலின், முதலில் தந்தையின் பக்கலில் அமர்ந்தான் இராமபிரான் நீதியும் மெய்ம்மையும் தவறாத சக்கரவர்த்தியின் தன்மையை அரசியற் படலத்துட் காண்க.

(பி - ம்.) 1. இரதமாடு; இழிந்த பின்னையிருவரும். 2. ஏந்தப் பைம்பூண்.
3. மாதவர்ப் பணிந்து; மாதவற்றொழு துமைதீர்.
4. வரதமெய்த்; வணங்கியாண்டிருந்த வெல்லை. (78)

### பிராட்டி மணமண்டபத்துள் வருதல்

1315. சிலையுடைக் கயல்வாட் டிங்க
ளேந்தியோர் செம்பொற் கொம்பர்
முலையிடை முகிழ்ப்பத் தேரின்
மீமிசை முளைத்த தன்னாள்
அலைகடற் பிறந்து பின்னை
யவனியிற் தோன்றி மீள
மலையிடை யுதிக்கின் றாள்போன்
மண்டப மதனில் வந்தாள்.

ஓர் செம் பொன் கொம்பர்-சிவந்த பொன்மயமானதொரு பூங்கொம்பு, சிலை உடை(ய) கயல்-இரண்டு விற்களைத் தம் மேலே கொண்ட இரண்டு கயல் மீன்களையுடைய, வாள் திங்கள்-ஒளிமிக்க பூர்ண சந்திரனை, ஏந்தி-தாங்கிக்கொண்டு, முலை இடை முகிழ்ப்ப-முல்லையரும்புகள் தன்னிடத்தே அரும்ப, தேரின் மீமிசை முளைத்தது அன்னாள்-தேரின் மேல் முளைத்து வந்தது போன்ற தோற்றமுடைய பிராட்டி, அலைகடல் பிறந்து-அலைகள் அலைகின்ற திருப்பாற் கடலில் (திருமகளாக)முன்னே பிறந்து; பின்னை அவனியில் தோன்றி-பின்னே (சீதையாகப்) பூமியில் அவதரித்து, மீள மலை இடை உதிக்கின்றாள்

போல்-மீண்டும் (மேரு) மலையினிடத்தே உதித்து வருகின்றவள் போல, மண்டபம் அதனில் வந்தாள்-அம்மண்டபத்திலே வந்து சேர்ந்தாள்.

பிராட்டிக்கு உவமை கூறுதற்குரிய பொருள்கள் இல்லாமையால், இல்பொருளுவமையாகக் கற்பித்துக் கூறினர். முன்னே கடலிலும் தரையிலும் தோன்றிய பிராட்டி, தன்னிச்சையால் மூன்றுவதாக மலையிலும் தோன்றலானுள் என ஒருநயம் தோற்றுவித்தார். எம்பெருமான் பன்னகப் பாயலுள் நீங்கிப் பாரிலே வந்தமைக்கேற்ப பெரிய பிராட்டியார் திருவவதரித்தமையை இங்கே பொருத்திக் கூறியுள்ள நயமும் ஓர்தற்பாலது. மண்டபம் மேருமலையாக முன்னேமே கூறப்பட்டது.

சிலை, புருவங்கள்; கயல், கண்கள்; திங்கள், முகம்; கொம்பர், திருமேனி.

முல்லையெனற்பாலது எதுகை நயம் நோக்கி இடைக்குறையாகி நின்றது; முலையென்றே கொண்டு கூறுவாரும் உளர். புருவம் முதலியவற்றை உவமப் பொருள்களாற் கூறியவர் முலையை நேரே கூறினர் என்றலும், பூங்கொம்பரிடை முலை முகிழ்த்ததென்றலும் பொருந்தாவென்க

(பி - ம்.) 1. சிலையிடைக்; சிலையுடன்: சிலையொடு: கயல்வாடிங்கள்; கயல்வெண்டிங்கள்; கலைவாட்டிங்கள்: ஏந்தியே: கொம்பு.

2. முலைபுடை: முகிழ்க்கத்; தேர்மேல் முன்றிசை; மின்மிசை; மின்னென்று; மின்னிடை: முலைத்தாலன்ன; முளைத்தாளன்னுள்; முன்னுள்.

3. பிறந்த பின்னர்; தோன்றிப் பின்னர்; பிறந்து பின்றை: அவனியிற் பிறந்து. 4. மலையிடைப் புகுகின்றுள்போல்: அதனின். (79)

### வானவர் மகிழ்ச்சி

(வேறு)

1316. நன்றிவா னவ்ரெலா மிருந்த நம்பியைத்
துன்றிருங் கருங்கட றுவைப்பத் தோன்றிய
மன்றலங் கோதையாண் மாலை சூட்டிய
அன்றினு மின்றுடைத் தழகென் ருரரோ.

நன்றி வானவர் எலாம்-(இராமபிரான் பக்கல்) நன்றியறிதலுடைய தேவர்களனைவரும், இருந்த நம்பியை-அங்கே வீற்றிருந்த நம்பியான இராமபிரானைக் குறித்து, 'துன்று இரு கருகடல்-நிறைந்த மிகப்பெரியதான பாற்கடலை, துவைப்ப-வருந்திக் கடைந்ததனல், தோன்றிய - அங்கே பிறந்த, மன்றல் அம் கோதையாள்-மணம் பொருந்திய அழகிய கூந்தலையுடையவளான திருமகள், மாலை சூட்டிய அன்றினும்-(திருமாலுக்கு) மணமாலைசூட்டிய அந்நாளினும், இன்று-(அத்திருமகளாகிய சானகிப் பிராட்டி அத்திருமாலாகிய

இராமபிரானுக்கு மணமாலை சூட்டவிருக்கும்) இந்த நாள், அழகு உடைத்து என்றார்-மிக்க அழகுடையதா யிருக்கின்றது' என்றனர். அரோ, அசை.

ஆதியில் திருமகள் திருமாலுக்கு மாலையிட்டது, மிக்க முயற்சியும், விடமும் போரும் இடையிடுதலும் உடையதாய் நிகழ்ந்தது; இன்றோ அத்தகைய துன்பம் ஏதுமின்றி அவர்கள் திருமணம் இனிது நிகழவிருத்தலால் அன்றினும் இன்று அழகுடையதாயிற்று.

நன்றி: பெருமான் தம் குறை தீர்த்தற்குத் தோன்றினமையாலானது; பிணி, மூப்பு, இறப்பின்மை முதலிய நலன்களையுடைய என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. இருந்து நம்பியைத்.
2. கருங்கடற்றுவைப்பத்; கனைகடறுவைப்பத்: தோன்றியிம்.
3. கோதையார்; கோதைமுன்: வதுவை சூட்டிய; சூடிய.
4. அன்றிலு மின்றழகுடைத்தென்றாரரோ. (80)

### திருமணச் சிறப்பு

1317. ஒலிகட லுலகினி லும்பர் நாகரில்
பொலிவது மற்றிவள் பொற்பென்றாலிவள்
மலிதரு மணம்படு திருவை வாயினால்
மெலிதரு முணர்வினே னென்வி ளம்புகேன்.

ஒலி கடல் உலகினில்-ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இப்பூவுலகத்திலும், உம்பர் (இல்) - தேவருலகத்திலும், நாகரில் - நாகருலகத்திலும், பொலிவது இவள் பொற்பு என்றால்-மேம்பட்டு விளங்குவது இச்சானகிப் பிராட்டியின் அழகு என்றால், இவள் மணம் படு-இவள் திருமணத்திலே நிகழத்தக்க, மலிதரு திருவை-மிக்க வைபவத்தை,மெலிதரும் உணர்வினேன்-சிற்றறிவினனாகிய நான்,வாயினால் என் விளம்புகேன்-என் வாயினால் என்னவென்று எடுத்துக் கூறுவேன்! மற்று அசை,

மூவுலகிலும் பெண்களின் அழகுக்கு உவமை கூறுவோர் திருமகளையன்றி வேறு கூறார்; அத்திருமகளே இவளாதலின், இவள் திருமண வைபவத்தைப் பற்றிச் சிற்றறிவினனாகிய யான் யாது கூற வல்லேன் என்கின்றார். 'எப்பெண்பாலுங் கொண்டுவமிப் போர் உவமிக்கும், அப்பெண்டானே யாயின போதிங் கயன்மற்றோர், ஒப்பெங்கே கொண்டெவ்வகை நாடியுரை செய்கேன்' (579) என்றதும் ஈண்டு ஒப்பு நோக்கற் பாலது. திருவுக்குந் திருவாகிய செல்வனுடன் அத்திருவே கூடுங்கூட்டமாதலால், இத்திருமண வைபவத்தை, மானுடர் வாயினாற் கூறுதல் எளிதாகுமோ?

(பி - ம்.) 1. உலகினும். 2. மற்றவள்: என்றாலினி; என்றானனி.
3. மலிதர: மணம்படும்; மணப்படும்; வளம்படு.
4. மெலிவரும்: உணர்வினன்; உணர்வினென் விளம்புகேளரோ. (81)

1318. இந்திரன் சசியொடு மெய்தி ஞனிளம்
சந்திர மௌலிதன் றைய லாளொடும்
வந்தனன் மலரயன் வாக்கி ஞளுடன்
அந்தரம் புகுந்தன னழகு காணவே.

அழகு காண-இம் மணமக்களின் அழகையும் இத்திருமணத்தின் சிறப்பையும் காணவேண்டி, அந்தரம்-ஆகாயத்திலே, இந்திரன் சசியொடும் எய்தினன்-இந்திரன் இந்திராணியோடும் வந்து சேர்ந்தான்; இளம் சந்திர மௌலி-பிறைசூடிய சடைமுடிப் பெருமானும், தன் தையலாளொடும் வந்தனன்-தன் தேவியுடன் வந்தான்; மலர் அயன்-தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், வாக்கினளுடன்-தன் வாக்கில் உள்ள வாணியுடனே, புகுந்தனன்-வந்து புகுந்தான்.

முப் பரம்பொருளுக்குள் முதல்வன் திருமணம் காண, அம் முதல்வனல்லாத ஏனை யிருவரும், இந்திரனும் வந்தனர் என்றார். இவர்கள் வரவு கூறவே, ஏனைத் தேவர்களின் வரவு கூறாமலே அமையும். இந்திரனும் சந்திரமௌலியும் மிக்க பரிவாரங்களுடன் வருவோராதலின், அவர்கள் குழாத்தினிடையே மலரயனும் வந்து கலந்து கொண்டான் என்பதுபட 'அந்தரம் புகுந்தனன்' என்பதனை இயைத்துக் கூறலும் ஆம்; 'புகுந்தனன்' என்ற சொற்கிடக்கையும் இதற்கேற்ப அமைந்துளது. அந்தரம் புகுந்தனன்-இடையே நுழைந்தான்.

(பி - ம்.) 1. எய்தினனியற்; எய்தினனிகற்.
2. மௌலியும்; மௌலியான்: தையலாளுயன்; தையலாளொடு; பாகத்தாளொடும். 3. மலரவன்: வாக்கினளொடும்; வரத்தினளுடன்.
4. புகுந்தனர்; சூழ்ந்தனர்; சூழ்ந்தனன். (82)

## ஓமச் சடங்கு

1319. நீந்தருங் கடலென நிறைந்த வேதியர்
தோய்ந்தநூன் மார்பினர் சுற்றத் தொன்னெறி
வாய்ந்தநல் வேள்விக்கு வசிட்டன் மையற
ஏய்ந்தன கலப்பையோ டினிதி னெய்தினன்.

நீந்த அரு கடல் என நிறைந்த-நீந்திக் கடத்தற்கரிய கடல் போல நிறைந்த, வேதியர்-வேதங்களில் வல்லவரும், தோய்ந்த நூல் மார்பினர்-முப்புரிநூலணிந்தவருமான அந்தணர் அளவிறந்தோர், சுற்ற-தன்னைச் சூழ்ந்துவர, வசிட்டன்-வசிட்ட மாமுனிவன், தொல் நெறி வாய்ந்த-பழமையான வேதவிதிப்படி அமைந்த, நல்வேள்விக்கு-நல்ல திருமணச் சடங்கிற்கு, மை அற ஏய்ந்தன கலப்பையோடு-குற்றமறப் பொருந்திய உபகரணங்களுடன், இனிதின் எய்தினன்-மகிழ்வோடு அங்குவந்து சேர்ந்தான்.

திருமணச் சடங்கு நிகழுங்கால் வேதியர் பலர் உடனிருத்தல் இன்றியமையாதது. இங்கே அதனை முன்னின்று நடத்தி வைத்தற்குரியவர் வசிட்ட முனிவராதலின், அவர் அதற்குரிய உபகரணங்களுடன், வேதியர் பலர் சூழவந்து சடங்கு நிகழ்த்துதற்குரிய விடம் சேர்ந்தார் என்றபடி. இத்திருமணம் வேதநெறி வழுவாததும், உலகிற்குப் பெரு நன்மை பயப்பதுமாதலால், 'தொன்னெறி வாய்ந்த நல்வேள்வி' என்றூர்.

(பி - ம்.) 3. வசிட்டன் மெய்யுற; வாய்மையால்.

4. ஏய்ந்த நற்றருப்பையோடு; ஆய்ந்த நற்றருப்பையோடு; தருப்பை கொண்டு; கலப்பைகொண்டு; இனிதின்மேயினுன்; அங்கணெய்தினுன்.

(83)

1320. தண்டிலம் விரித்தனன் தருப்பை சார்த்தினன்
மண்டலம் விதிமுறை வகுத்து வெண்மலர்
கொண்டனல் சொரிந்தெரி குழும மூட்டினன்
பண்டுள மறைநெறி பரவிச் செய்தனன்.

(வசிட்டன்), தண்டிலம் விரித்தனன்-வெண் மணலைக் கீழே சதுரமாகப் பரப்பி, தருப்பை சார்த்தினன்-(நாற்புறமும் உரியவிடங்களில்) தருப்பையை வைத்து, மண்டலம்-(அக்கினி வைத்தற்குரிய) வட்டமான இடத்தை, விதிமுறை வகுத்து-விதிப்படி அமைத்து, வெள் மலர் கொண்டு-(மங்கலத்துக்குரிய) வெண்மையான பூக்களையும் உரியவிடங்களில் வைத்து, அனல் சொரிந்து-(மண்டலத்திலே) தணலையிட்டு, எரி குழும மூட்டினன்-தீ குவிந்தெரியும்படி வள்ர்த்து, பண்டு உள மறை நெறி பரவி-பழமையாகவுள்ள வேதமந்திரங்களை முறைப்படி சொல்லி, செய்தனன்-(ஓமச் சடங்கைக்) செய்தான்.

'வசிட்டன்' என்ற எழுவாய் வருவிக்கப்பட்டது. விரித்தனன் சார்த்தினன். மூட்டினன் என்பன முற்றெச்சம்.

தண்டிலம் 'ஸ்த்தண்டிலம்' என்ற வடசொல்லின் திரிபு; 'தண்டிலமாவது அக்கினியைப் பிரதிஷ்டிக்கிறவிடத்தே சதுரமாகப் பரப்புகின்ற மணல்' (சீவக. 2463-ந. உரை). திருமணச் சடங்குக்குரிய அக்கினியுள்ள விடத்தைச் சூழ மலரிடுதலும் மரபு. 'தருமணற்றருப்பை யார்ந்த சமிதையிம் மூன்றினுனும், விரிமல ரணிந்தகோல வேதிகை யியற்றி' (சீவக. 2463) என்பது முதலியன ஈண்டு நோக்கத்தக்கும். தீக்கடை கோல்கொண்டு உண்டாக்கிய தணலை உரிய விடத்திலே சேர்த்து, மந்திரத்துடன் நெய் சொரிந்து தீயை வளர்ப்பராதலின்,'அனல் சொரிந்து எரிகுழும மூட்டினன்' எனப்பட்டது. இங்குக் கூறியது, விவாகத்தின் முன்னே மணமகன் நன்மையின் பொருட்டுச் செய்யப்படும் 'ஹோமம்' என்பர். இதனையடுத்து, 'மன்றலின்

வந்து மணத்தவிசேறி மணமக்கள் எய்தியிருந்தனர்' என்பது இதற்குப் பொருத்தமாகவுள்ளமை காண்க.

(பி - ம்.) 1. தண்டுலம்: விரித்துநற்: சாத்தினன்; சாத்தியே.
2. மண்டல விதிமுறை: மென்மலர்: வெண்மணல்: வகுத்த நெய்பல.
3. கொண்டவை; கொண்டவி; கொண்டழல்; கொண்டுநெய்; மொண்டவை: சொரிந்தெதிர்: சொரிந்தெரிக் குழுவும்: முட்டினர்; முட்டினுன்: முட்டியப்; கூட்டினன்.
4. பண்டுடை; பண்டுறு; பண்டையின்; பண்டைய: பண்டையம்; மறைவிதி; முறைநெறி: பரவச்; பரிவிற். (84)

1321. மன்றலின் வந்து மணத்தவி சேறி
வென்றி நெடுந்தகை வீரனு மார்வத்
தின்றுணை யன்னமு மெய்தி யிருந்தார்
ஒன்றிய போகமும் யோகமு மொத்தார்.

வென்றி-வெற்றியையும், நெடுதகை-பெருந்தன்மைக் குணங்களையுமுடைய, வீரனும்-இராமபிரானும், ஆர்வத்து-(அப்பெருமானிடம்) மிக்க அன்புடைய, இன் துணை-இனிய வாழ்க்கைத் துணையாதற்குரிய, அன்னமும்-அன்னம்போல்வாளாகிய பிராட்டியும், மன்றலின் வந்து-மணவறையிலே வந்து, மணம் தவிசு ஏறி-(திருமணத்துக்குரிய) ஆதனத்தில் ஏறி, எய்தி இருந்தார்-(ஒருவருக்கொருவர்) நெருங்கி அமர்ந்தனர்; (அப்போது அவர்கள் முறையே) ஒன்றிய-அடைதற்குப் பொருந்திய, போகமும்-பேரின்பத்தையும், யோகமும்-(அவ்வின்பத்தையடைதற்குரிய) யோக நெறியையும், ஒத்தார்-ஒத்திருந்தனர்.

மன்றல், ஆகுபெயராய்த் திருமணம் நிகழுமிடத்தைக் குறித்தது.

எம்பெருமான், இறுதியாக யாவரும் சென்றடைதற்குரியவனுதலின் அவனைப் பேரின்ப நிலையாகவும், அந்நிலையடைதற்கு உறுதுணை (புருஷகாரம்) பிராட்டியாதலின் அவளை யோக நெறியாகவும் உவமித்துக் கூறினர். வீரனும் 'மார்வத்து' என்று பிரித்து, 'எம்பெருமான் திருமார்பிலே தங்கும்' எனப் பொருளுரைத்தலும் பொருந்தும். பிராட்டியை 'அன்னம்' எனல் 637-குறிப்புப் பார்க்க. அன்னம் துணையன்பு மிக்கது; 'ஆதரம் பெருகுகின்ற அன்பினுலன்னமொத்தும்' (சீவக. 189) என்பதும் அதன் உரையும் பார்க்க, மன்றலின் வந்து-மணத்தின் பொருட்டு (உரியவிடத்துக்கு) வந்து என்றலும் ஆம்.

(பி - ம்.) 1. மணித்தவிசு; மலர்த்தவிசு. 2. மார்பத். 8)

**சீதாபிராட்டியைச் சனகன் தாரைவார்த்தளித்தல்**

**1822. கோமகன் முன்சன கன்குளிர் நன்னீர்**
**பூமக ளும்பொரு ளும்மென நீயென்**
**மாமக டன்னெடு மன்னுதி யென்னுத்**
**தாமரை யன்ன தடக்கையி னீந்தான்.**

சனகன்-சனக மன்னன், கோமகன் முன்-சக்கரவர்த்தி குமாரனை இராமபிரானுக்கெதிரில் வந்து, 'பூ மகளும் பொருளும் என-தாமரைப் பூவில் தங்கும் திருமகளும், முதற் பொருளாகிய திருமாலும்போல, நீ என் மாமகள் தன்னெடு மன்னுதி-நீ என் சிறந்த புதல்வியான இச்சீதையோடு ஒன்றி வாழ்வாயாக', என்னு-என்று கூறி, தாமரை அன்ன-செந்தாமரை மலர் போன்ற, தட கையின்-(இராமபிரானுடைய) பெரிய கையிலே, குளிர் நல் நீர்-குளிர்ந்த புண்ணிய நீரை, ஈந்தான்-வார்த்தான்.

கோ-பேரரசு; சக்கரவர்த்தி; 'கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர்' என்றது காண்க. திருமணச் சடங்கில் முதற்படி தாரை வார்த்தல்; அதாவது கன்னிகாதானம். அதனையடுத்துப் பாணிக்கிரகணம், ஓமம் முதலியன முறையே நிகழும். மனமொன்றிய சிறந்த இல்வாழ்க்கைக்கு, 'இலக்குமியும் நாராயணனும் போல, பார்வதியும் பரமேசுவரனும் போல' எனத் தேவ தம்பதிகளை உவமை கூறுதல் மரபு. அவ்வகையில் இங்கே கூறிய உவமை, உண்மைப் பொருளுடையதாகவே அமைந்தது காண்க. மா மகள்-திரு அனைய மகள், மூத்த மகள் என்றுமாம். குளிர் நல் நீர்-மனங்குளிர்தற்குக் காரணமான உத்தம தானத்திற்குரிய நல்ல நீர்:

ஒப்பு நோக்குக: 'பொன்னின்றாமரைப் பூவையு மாலும்போன், மன்னர் கோனெடும் வாழ்கென வாழ்த்தினுன்' (நைடத. மணம் புரி. 22).

(பி-ம்.) 1. கோமகனைச். 2. நாமகளும்: நீநல். 3. என்னத். (86)

1323. அந்தண ராசி யருங்கல மின்னுர்
தந்தப லாண்டிசை தார்முடி மன்னர்
வந்தனை மாதவர் வாழ்த்தொலி போல
முந்தின சங்க முழங்கின மாதோ.

(கன்னிகாதானம் நிகழ்ந்தபோது), அந்தணர் ஆசி-அந்தணர் கூறிய ஆசி மொழிகளும், அரு கலம் மின்னுர் தந்த-அரிதாகிய திருமங்கலியம் பூண்ட பெண்கள் (சுமங்கலிகள்) பாடிய, பல்லாண்டு இசை-பல்லாண்டுப்பாடலும், தார் முடி மன்னர்-மாலையணிந்த முடி சூடிய அரசர்களுடைய, வந்தனை-(மகிழ்ச்சியோடு கூடிய) பணி

மொழிகளும், மாதவர் வாழ்த்து ஒலி-பெருந் தவசிகளுடைய வாழ்த்திஞலான ஓசையும்,போல-மிக்கெழுந்தது போலவே, முந்தின சங்கம் முழங்கின-மங்கலத்துக்குச் சிறந்தனவான சங்க வாத்தியங்களும் முழங்கின. மாதோ: ஈற்றசை.

இங்குக் கூறியவை, அனைவருடைய பெருமகிழ்ச்சியையும் குறிப்பன. மங்கல நிகழ்ச்சியில் சங்கம் முழங்குதல் மரபு. சக்கரவர்த்தி மிதிலைக்கு எழுந்தமை கூறியவிடத்தும் அதுபோன்ற பிறவிடங்களிலும், சங்கும் பேரியும் முழங்கினமை கூறப்படுதல் காணலாம். வந்திருந்த அரசரனைவரும் சக்கரவர்த்திக்குத் தாழ்ந்தவர்களேயாதலின், 'முடிமன்னர் வந்தனை' யென்ருர். வந்தனை-பணிவு காட்டும் மொழி: ஆகுபெயர்.

மங்கையர் பல்லாண்டு பாடுதல்: 237-குறிப்புப் பார்க்க.

(பி - ம்.) 1. அருங்கலமாதர்: அருங்கலன் மின்னுர்; அருங்கலமன்னுர்.
2. பல்லாண்டிசை; பல்லாண்டொலி.
3. வந்தணை: வானவர்; மாகதர்: நாவலர்; வாழ்த்தொலியோடு; வாழ்த்தொலிபொங்கி; வழங்கிய கார்போல்.
4. முந்திய: சங்கு; பேரி: முழங்கிய; முழங்கொலி. (87)

1324. வானவர் பூமழை மன்னவர் பொற்பூ
ஏனையர் தூவு மிலங்கொளி முத்தம்
தானகு நாண்மல ரென்றிவை தம்மால்
மீனகு வானின் விளங்கிய திப்பார்.

வானவர் பூமழை-தேவர்கள் பொழிந்த கற்பகமலர் மாரியும், மன்னவர் பொன்பூ-அரசர்கள் சொரிந்த பொன் மலர்களும், ஏனையர் தூவும்-மற்றையோர் தூவின, இலங்கு ஒளி முத்தம்-விளங்குகின்ற ஒளியுடைய முத்துக்களும், தான் நகு நாள் மலர்-தானுக மலர்ந்த புதிய பூக்களும், என்ற இவை தம்மால்-என்ற இவற்ருல், இ பார்-இந்நிலவுலகமானது, மீன் நகு வானின் விளங்கியது-விண்மீன்கள் விளங்குதற்கிடமான வானம்போல விளங்குவதாயிற்று.

ஏனையர் தூவும் என்பதனை நாண்மலரோடுங் கூட்டுக. என்றிவை: தொகுத்தல் விகாரம்.

(பி - ம்.) 1. மன்னவர் பொற்பூ. 2. ஏனைய: இலங்கொளிர்.
3. தானகை; தானுகு: மாமலர்: தன்ருல்.
4. மீனுகு: விளங்கின இப்பால். (88)

### பாணிக்கிரகணம்

1325. வெய்ய கனற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை யாவுதி யாவையு நேர்ந்தான்
தைய றளிர்க்கை தடக்கை பிடித்தான்.

அந்நாள்-அக்காலையில், வீரனும்-இராமபிரானும், வெய்ய கனல் தலை - விரும்பத்தக்க வேள்வித் தீயினிடத்து, நெய் அமை ஆவுதி யாவையும்-நெய்யால் செய்தற்குரிய ஆகுதிகள் எல்லாற்றையும், மை அறு மந்திரம் முற்றும் வழங்கா-குறைவற்ற மந்திரங்கள் முழுவதையும் சொல்லி, நேர்ந்தான்-மனம் பொருந்திச் செய்து, தையல் தளிர் கை-சீதாபிராட்டியின் தளிர் போன்ற திருக்கரத்தை, தட கை பிடித்தான்-தனது பெரிய கையால் பற்றினன்.

விவாகத்தில் முக்கியமான பாணிக்கிரகணம் (கைப்பிடித்தல்) நிகழ்ந்தமை இதனாற் கூறப்பெற்றது.

(பி - ம்.) 1. வீரனுமுன்னு. 2. மும்மை வழங்கி; வழங்க.
3. நெய்யவை; ஆகுதி: நேர்ந்தே; நேராத்; நேரத்.
4. தையல் தளிர்த்த; தளிர்க்கத்; தையலொடண்ணல் தளிர்க்கை. (௯)

### தீயை வலம்வருதல்

1326. இடம்படு தோளவ னோடியை வேள்வி
தொடங்கிய வெங்கனல் சூழ்வரு போதின்
மடம்படு சிந்தையள் மாறு பிறப்பின்
உடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்.

மடம்படு சிந்தையள்-பெண்மைக் குணமாகிய மடம் பொருந்திய மனத்தையுடைய பிராட்டியானவள், இயை வேள்வி தொடங்கி-அப்போது செயதற்குரிய மணச் சடங்கைத் தொடங்கி, இடம்படு தோளவனோடு-பரந்த தோள்களையுடைய இராமபிரானோடு, அ வெம் கனல் சூழ்வரு போதின்-விரும்பத்தகும் அந்த ஓமத்தீயை வலம்வரும் போது, மாறு பிறப்பின் உடம்பு-வேறுபட எடுக்கும் பிறவிக்கேற்ற ஒருடம்பானது. உயிரை தொடர்கின்றதை ஒத்தாள்-தனக்கமைந்த ஒருயிரை ஒன்றித் தொடர்வது போன்றிருந்தாள்.

சுருங்கட்ற் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப் பிரிந்தவர் இருவரும் மீண்டும் கூடி ஒன்றினமை இதனாற் பெறவைத்தார். பிராட்டி, உடம்பு; பெருமான் உயிர் எனக் கொள்க உயிர், தனக்கமைந்த உடலை நாடிச் சென்று பொருந்துதல் இயற்கையாயிருக்க, இங்கே அதற்கு மாறாகக் கூறியது இத்தெய்வக் கூட்டத்தின் சிறப்புப்பற்றிப் போலும். மடமாவது,'கொளுத்தக் கொண்டுகொண்டது விடாமை'; அதாவது, கணவன் கற்பித்தபடி ஒழுகும் குணம். இக்குண விசேடத்தால் பிராட்டியை உடம்பாகக்கொண்டு கூறினரெனலாம்; உயிர் ஆட்டி வைத்தபடி ஆடுவது உடம்பு.

மணமக்கள் தீயை வலம்வருதல்: சிலப். *1: 51-3;* சீவக. *835, 2468;* சூளா. சுயம். *278;* வி-பா. திரௌபதி மாலையிட்ட. *94;* நைடதம். மணம். *20.*

(பி - ம்.) 1. இசை வேள்வி: இயவேள்வி. 2. பொங்கனல்: சூழ்வருபோழ்தின்.
3. மைந்தையன்: மைந்தையின்: பிறப்பில்.
4 தொடர்கின்றமை: ஒத்தான். (90)

1327. வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம்பொரி செய்வன செய்பொருண் முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பி னருந்ததி கண்டார்.

தீயை வலம் கொடு வந்து வணங்கினர்-(இருவரும்), ஓமாக்கினியை வலமாக வந்து வணங்கி, (மேலே), பொலம் பொரி செய்வன-அழகிய பொரியால் செய்யப்படும் ஓமத்தையும், செய் பொருள்-மற்றும் செய்தற்குரிய காரியங்களையும், முற்றி-முடித்து, (பின்பு), இலங்கு ஒளி அம்மி மிதித்து-ஒளியோடு விளங்குகின்ற அம்மிக்கல்லை (மணமகள்) மிதித்தலாகிய சடங்கையும் செய்து, எதிர் நின்ற-எதிரே விளங்கிய, கலங்கல் இல் கற்பின்-கலங்குதலில்லாத (திண்ணிய) கற்பையுடைய, அருந்ததி கண்டார்-அருந்ததி நட்சத்திரத்தையும் கண்டார்கள்.

பொரியால் செய்யப்படும் 'லாஜஹோமம்' என்பதும், அம்மி மிதித்தல், அருந்ததி காணல் என்பனவும் நிகழ்ந்தமை இங்கே கூறப்பட்டன. இவை, இப்போதுள்ள வழக்கத்தில் மணமகன் மணமகளுக்கு மங்கல நாண் பூட்டியபின் நிகழ்வன. மங்கல நாணைப் பலவிடத்தும் சிறப்பித்துக் கூறும் ஆசிரியர், அதனை அணிவிக்கும் செய்தியை இங்கே கூறுதுவிட்டமை ஆராய்தற்குரியது. அம்மி மிதித்தல் மணமகள் பாதத்தை மணமகன் பிடித்துக் கல்லின்மீது வைத்துமிதிப்பித்தல். இது, கற்பில் கலங்காமல் ஊன்றிக் கல்லைப்போலத் திண்மையுடனிருந்தல் வேண்டுமென்பதைக் குறிப்பித்தற்கென்பர். கணவன் காட்ட, மனைவி அருந்ததி நட்சத்திரத்தைக் காணுதலும் இக்கற்பு நிலை குறித்ததேயாகும். கற்பு நிலை தவறிக் கல்லான ஒருத்தியை நினைப்பித்து, அவ்வாறின்றி, அருந்ததி போலத் திண்மையுடன் இருத்தல் வேண்டுமென்பதைக் குறிப்பன இவ்விரண்டும் எனவும் கூறுவர். அருந்ததி வசிட்ட முனிவரின் பத்தினி; அவ்விருவரும் நட்சத்திரங்களாக விளங்குகின்றனரெனவும், அருந்ததி நட்சத்திரம் மிக நுண்ணிதாய்க் காணுதற்கரியதெனவுங் கூறுவர்; அதிலும் பகலிலே காணுதல் இயலாததேயாயினும், பாவனையாக அதனைச் செய்விக்கின்றனர். இங்கே கம்பநாடர் வாக்கில் 'எதிர்நின்ற....அருந்ததி' என்றிருத்தலால், வசிட்டரோடு அருந்ததி தேவியும் நேரே அங்கிருந்தனளாகக் கொள்ளலும் ஆம்.

இங்கே கூறியவற்றுள் அருந்ததி காணல் ஒழிந்த ஏனைய சடங்குகள் கோதையார் வாக்கில் பயின்றுள்ளன; நாச்சியார் திருமொழியுள், 'வாரணமாயிரம்' என்னும் அருந்திருமொழி காண்க. இந்த

மணச் சடங்குகளுள் எதுவும் வான்மீகத்திற் கூறப்படவில்லை. 'சனக மன்னனுடைய வேள்விச் சாலையிலேயே இராமபிரான் முதலிய நால்வரும் முறையே சீதை, ஊர்மிளை, மாண்டவி, சுருத கீர்த்தி என்ற நால்வரையும் பாணிக்கிரகணம் செய்து, முறைப்படி மந்திரங்களோடு விவாகம் செய்துகொண்டனர்' எனச்சுருக்கமாகச் கூறப்பட்டுள்ளது.

(பி - ம்.) 1. வணங்கினர் வல்லே.
2. புலம்பொரி: பொலம்புரி நூலவர்; பொலம்பொரி சிந்தினர்: செய்கைகள்; செய்தொழில்; புரிதொழில்.
3. எதிர்நின்றாள்; எதிர்நின்று; எதிர்கின்ற: மிதித்தனர் நின்று; மிதித்தொளிர்கின்ற. 4. அருந்துதி கண்டாள். (91)

1328. மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றிய மாதவர் தாண்முறை சூடிக்
கொற்றவ னைக்கழல் கும்பிட லோடும்
பொற்றொடிக் கைக்கொடு பொன்மனை புக்கான்.

(மணமக்கள்இருவரும்), செய்வன மற்று உள-செய்தற்குரியனவாக மற்றும் உள்ள சடங்குகளை யெல்லாம், செய்து-செய்து முடித்து மகிழ்ந்தார்-மகிழ்ச்சியுடையவராய், முற்றிய மாதவர் தாள்-செய்து முடித்த பெருந்தவத்தினரான வசிட்டன் முதலிய முனிவர்களின் திருவடிகளை, முறை சூடி-வரிசைப்படி தலையில்சூடி (சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து), கொற்றவனை-சக்கரவர்த்தியையும், கழல் கும்பிடலோடும்-அடி பணிந்தபின், (இராமபிரான்), பொன் தொடி கை கொடு-பொன் வளையல்களணிந்த பிராட்டியைக் கைப்பிடித்துக் கொண்டு, பொன் மனை புக்கான்-அழகிய தன் மாளிகையினுள் சென்று புகுந்தான்.

திருமணச் சடங்குகள் முடிந்தபின், மணமகன் மணமகளுடன் தன்னிருப்பிடஞ் சேர்ந்து, அங்கே சில சடங்குகள் நிகழ்த்தல் நூன் மரபாதலின், அம்முறைப்படி, இராமபிரான் பிராட்டியைக் கைப் பிடித்து அழைத்துக்கொண்டு சென்று தன் விடுதியான மாளிகையில் பிரவேசித்தான் என்றவாறு.

(பி - ம்.) 1. செய்முறை செய்து. 2. தசுண்மலர்; கான்முறை: சூட்டிக்.
4. பொற்றொடியைக் கொடு; நன்மனை; தம்மனை: புக்கார். (92)

பலவகை மகிழ்ச்சி யாரவாரம்

1329. ஆர்த்தன பேரிக ளார்த்தன சங்கம்
ஆர்த்தன நான்மறை யார்த்தனர் வானோர்
ஆர்த்தன பல்கலை யார்த்தன பல்லாண்
டார்த்தன வண்டின மார்த்தன வண்டம்.

(திருமணச் சடங்குகள் யாவும் நிகழ்ந்தேறியவுடன்), பேரிகள் ஆர்த்தன-மங்கல முரசங்கள் எங்கும் அதிர்ந்தன; சங்கம் ஆர்த்தன-

சங்குகள் முழங்கின; நால்மறை ஆர்த்தன-நான்கு வேதகோஷமும் நிரம்பின; வானோர் ஆர்த்தனர்-தேவர்கள் (மகிழ்ச்சியால்)ஆரவாரித்தனர்; பல்கலே ஆர்த்தன-பலகலேகளும் ஆரவாரித்தன; பல்லாண்டு ஆர்த்தன-பல்லாண்டிசையும் ஒலித்தன; வண்டு இனம் ஆர்த்தன-வண்டுக் கூட்டங்கள் ஒலித்தன; அண்டம் ஆர்த்தன-எல்லா அண்டங்களும் மகிழ்ச்சியாரவாரஞ் செய்தன.

சங்கும் பேரியும் மங்கலங்குறித்து முழங்குதல் முன்னமே கூறப்பெற்றுள்ளது; *1136, 1277*-பார்க்க. இத்திருமணத்தின் மேன்மை குறித்து எல்லா வகையான மகிழ்ச்சியாரவாரங்களும் மூவுலகத்தும் நிகழ்ந்தன வென்றார்.

(பி - ம்.) 1. பேரிகை; பேரியம். 3. ஆர்த்தன பல்கலன்.
4. ஆர்த்தென வண்டினம்: ஆர்த்தன வேலே. (93)

### இராமபிரான் தாய்மாரை வணங்கல்

1330. கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம்
தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கி
ஆயத னன்னே யடித்துணே சூடித்
தூய சுமித்திரை தாடொழ லோடும்.

(இராமபிரான்), கேகயன் மா மகள்-கேகய ராசனுடைய பெருமகளான கைகேயியின், கேழ் கிளர் பாதம்-ஒளிமிக்க பாதங்களே, தாயினும் அன்பொடு-பெற்ற தாயினிடத்துள்ள அன்பினும் மிக்க அன்புடனே, தாழ்ந்து வணங்கி-தரையில் படிந்து நமஸ்கரித்து, (பின்பு), ஆய-மிக்க அன்புடையவளான, தன் அன்னே துணே அடி சூடி-தன்னேப்பெற்ற தாயான கௌசல்யாதேவியின் இரண்டு பாதங்களேயும் சிரசிலே சூடி, (நமஸ்கரித்து), (அடுத்ததாக), தூய-தூய்மையான மனமுடைய, சுமித்திரை தாள் தொழலோடும்-சுமித்திரா தேவியின் பாதங்களேயும் பணிந்தவளவிலே,

இதுவும் அடுத்த கவியும் ஒருதொடர். இக்கவியில் எழுவாய் வருவித்துரைக்கப்பெற்றது.

கைகேயி இராமபிரானிடத்தும், கௌசல்யை பரதனிடத்தும், தம் புதல்வரினும் மிக்க அன்புடையவரென்று மேலே அயோத்தியா காண்டத்துட் கூறுவர் ஆசிரியர். அவ்வாறே இராமபிரானும் கைகேயி னிடத்துப் பேரன்பு பூண்டிருந்தமை புலப்படும். மேலும் தன் தந்தைக்கும் மிக உகந்தவள் கைகேயி; ஆதலால் அவளே முதலில் வணங்கினன் இராமபிரான் என்க. சுமித்திரை, தன் மகன் இலக்குமணன் இராம கைங்கரியத்தில் ஈடுபடுதலேயே குறிக்கோளாகக் கொண்டவளாதலால், 'தூய சுமித்திரை' எனப்பட்டாள்.

கைகேயி இராமபிரானிடத்துப் பேரன்பு பூண்டிருந்தமை: 'இராமனைப் பயந்தவெற் கிடருண்டோ வென்ருள்', 'தாய் கையில் வளர்ந்திலன் வளர்த்தது தவத்தால், கேகயன் மடந்தை' (அயோத். 146, 284); 'இராமபிரான் கைகேயிபால் கொண்ட அன்பின் தன்மை: (சுந்தர. 684).

(பி - ம்.) 1. கேழிரு பாதம்; கேழவிர் பாதம். 2. வணங்கா.
3. ஆயவனன்னை: சூடாத்; சூட்டித்; நண்ணித். (94)

பிராட்டி மாமியரை வணங்கல்

1331. அன்னமு மன்னவ ரம்பொன் மலர்த்தாள்
சென்னி புனைந்தனள் சிந்தை மகிழ்ந்தார்
கன்னி யருந்ததி காரிகை காண
நன்மக னுக்கிவ ணல்லணி யென்ருர்.

அன்னமும்-அன்னம் போன்ற சீதாபிராட்டியும், அன்னவர்-அம் மூவருடைய, அம் பொன் மலர் தாள்-அழகிய பொலிவு மிக்க தாமரை மலர் போன்ற பாதங்களை, சென்னி புனைந்தனள்-தலையிலே சூடிக்கொண்டாள்; (வணங்கினுள்); சிந்தை மகிழ்ந்தார்-(அவர்களும்) மனம்மிக மகிழ்ந்தவர்களாய், 'கன்னி அருந்ததி-அழிவில்லாத கற்புடைய அருந்ததி போன்றவளாகிய இவளுடைய, காரிகை காண-பேரழகையும் பார்க்குமிடத்து,இவள்—, நல் மகனுக்கு-எல்லா நலன்களும் நிறைந்த நம் மகனுன இராமனுக்கு, நல் அணி-சிறந்த அணிகலமாவாள்' என்ருர்—.

ஒப்புயர்வற்ற பேரழகு படைத்த இராமபிரானும் விரும்பி அணியத்தக்க கௌஸ்துப மணி போன்றவள் பிராட்டி; மணாளனுக் கேற்ற மணாட்டி'; நன் மகனுக்கேற்ற நன் மகள்.

(பி - ம்.) 2. புனைந்தவர் சிந்தையுவந்தார்.
3. அருந்துதி: காணு; காணம்; நாணு.
4. மகனுக்கொரு: என்ருள். (95)

மாமியரின் மகிழ்ச்சியுரை

1332. சங்கவ ளைக்குயி லைத்தழி நின்ருர்
அங்கண னுக்குரி யாருள ராவார்
பெண்க ளினிப்பிற ராருள ரென்ருர்
கண்கள் களிப்ப மனங்கள் களிப்பார்.

(மாமியர் மூவரும்), சங்கம் வளை குயிலை-சூட்டமான வளையல்களையணிந்த, குயில் போலுங் குரலினிமையுடைய சீதாதேவியை, தழி நின்ருர்-(தனித் தனியே), தழுவியவர்களாய், 'அம் கணனுக்கு—கண்ணழகும் அருளும் நிறைந்த நம் இராமனுக்கு, உரியார் உளர்

ஆவார் பெண்கள்-மனைவியாதற்குரியவராய் உள்ள பெண்கள், இனி பிறர் ஆர் உளர்-இவளினும் மேலாக வேறு யாவர் இருக்கின்றனர்' என்றார்-என்று கூறி, கண்கள் களிப்ப-(அத்தேவியைக் காணுதலால்) தம் கண்கள் களி கூர, மனங்கள் களிப்பார்-(அவளை மருகியாகப் பெற்றமை குறித்துத்) தம் மனங்களும் மிக மகிழ்வாராயினர்.

சங்கம்-சங்கும் ஆம். தழி-தழுவி' 'தமிழ்தழிய சாயலவர்' (சீவக. 2026).

(பி - ம்.) 1. சங்குவளைக் குயிலைத் தழீஇ யன்னார். 2. உயிராருளராவார்.
3. எங்குளர் பெண்களினிப்பிற ரென்னாக்.
4. களிக்க மனம்புளகிப்பார். (96)

ஒரு பிரதியில், 1332-ஆம் பாட்டின் முதலிரண்டடிகளை அவ்வாறே கொண்டு, பின் இரண்டடிகள், 'இங்கெவர் பெண்களி னித்திருவென்றோர், பொங்கெழில் கண்டு மனம்புளகிப்பார்' எனவும், அப்பாட்டின் பின் இரண்டடிகளை அவ்வாறே கொண்டு முன் இரண்டடிகள் 'மங்கள் மிழற்றுறுந் தேனிசைபாடி, உண்களழிக்க விளைந்ததை யொப்ப' எனவும் இரண்டு பாடல்கள் காணப்படுகின்றன.

## பரிசுப் பொருள்கள்

1333. எண்ணில கோடிபொ னெல்லையில் கோடி
வண்ண வருங்கல் மங்கையர் வெள்ளம்
கண்ணக னாடுயர் காசொடு தூசும்
பெண்ணி னணங்கனை யாள்பெறு கென்றார்.

'எண் இல கோடி பொன்-எண்ணற்ற கோடிக்கணக்கான பொன் காசுகளையும், எல்லை இல் கோடி-அளவில்லாத கோடிக்கணக்கான, வண்ணம் அரு கலம்-பல வண்ணங்களான அரிய அணிகலன்களையும், மங்கையர் வெள்ளம்-(தாதியரான) மகளிர் கூட்டத்தையும், கண் அகல் நாடு-பரந்த நாட்டையும், உயர் காசொடு-உயர்ந்த இரத்தினங்களையும், (உயர்) தூசும்-உயர்ந்த ஆடைகளையும், பெண்ணின் அணங்கு அனையாள்-பெண்களுக்குத் தெய்வம் போன்ற இச் சீதை, பெறுக என்றார்-பரிசாகப் பெறுவாளாக' என்று (மாமியர்) கூறினர்.

பெரியோர், தம்மை வந்து வணங்கும் மணமக்களுக்குப் பரிசளித்தல் மரபாதலின், அம்முறைப்படி, இங்கே இவர்கள் தம் தகுதிக்கும் மருகியின் சிறப்புக்கும் ஏற்றவாறு பெரும் பரிசுகளை வழங்கினரென்க.

'உயர்' என்பதனைத் தூசொடும் ஒட்டுக. எழுவாய் வருவிக்க.

(பி - ம்.) 1. எண்ணவில்; எண்ணமில். 2. அருங்கலன்; அருங்கலை; அருங்குல.
3. நாடொடு காசுயர் தூசு
4. பெண்ணில்; அணங்கனையாய்; அணங்கினையாள்: பெறவிந்தார்; பெறுகின்றாள். (97)

1334. நூற்கட லன்னவர் சொற்கட னேக்கி
மாற்கடல் பொங்கு மனத்தவ ளோடும்
காற்கடல் போற்கரு ணைக்கடல் பண்டைப்
பாற்கட லொப்பதொர் பள்ளி யணைந்தான்.

கருணை கடல்-கருணை சமுத்திரமான இராமபிரான், நூல் கடல் அன்னவர் சொல்-சாத்திரங்களின் கடல் போன்ற பெரியோர்கள் சொல்லிய (விதித்த), கடன் நோக்கி-சடங்கு முறைப்படி, இயற்றி மால் கடல் பொங்கும் மனத்தவளோடும் - காதல் கடல்போலப் பொங்கும் மனமுடைய பிராட்டியுடனே, கால் கடல் போல்-காற்ருல் உந்தப்பட்டுப் பொங்குங்கடல் போல, (களிப்பு மிக்கவனுகி), பண்டை பால்கடல் ஒப்பது ஓர் பள்ளி-(தனது) பழைய திருப்பாற் கடல் போல வெண்ணிறமுடையதொரு திருப்பள்ளியிடத்திலே, அணைந் தான்-சேர்ந்தான்.

திருமணச் சடங்கு நிகழும் நான்கு நாட்களில், முதல்நாட் சடங்குகள் முடிந்தபின், நான்கு நாளும் மணமகன் தன் மனைவியுடன் கூடியிருத்தல் வேண்டுமென்பது நூன்மரபாதலின், அம்முறைப்படி இராமபிரான் இருந்தமையைக் குறிப்பது இது என்ப. இது 'ஸமா வேசநம்'எனப்படும். ஐந்தாநாள் வைகறையிலே செய்யப்படும்'சேஷ ஹோமம்' என்ற சடங்குடன் திருமணவினை முடிவுறும். 'ஓரிற்கூடிய உடன்புணர் கங்குல்'(86)என அகநானூற்றுள்ளும், சீவக சிந்தாமணி யுள்ளும் புதுமணக் காதலர் கூட்டம் நிகழ்தல் கூறப்படுதலின், இத் தமிழ் மரபுபற்றி ஆசிரியர் கூறினுரென்றலும் ஆம். காற்கடல்-கருங் கடல் என்பாருமுளர்.

பள்ளியின் வெண்ணிறம்பற்றி அதற்குப் பாற்கடலை உவமித்து இராமபிரானுக்கு அதன் பழைய உரிமையையுங் குறிப்பித்தார். இராமபிரானது கருணைத்திறம்: 'நெடுங்கருணைக் கெல்லா நிலையமே' (ஆரணிய. 100); 'அருளினுழியான்' (கிட்கிந்தா. 261); 'கருணையி னிலய மன்னுன்' (யுத்த. 914.) பள்ளிக்குப் பாற்கடல் உவமை: ஆரணிய. 715.

(பி - ம்.) 1. மேற்கடனேக்கி; போர்க்கடனேக்கி; நோக்க. 2. மாற்கடலன்ன 4. பாற்கடலன்னதொர்; போல்வதொர்: பாயல்: அணைந்தார்; அணைந் தாள்: அடைந்தான். (98)

மணவினை முற்றுதல்

1335. பங்குனி யுத்தர மான பகற்போ
தங்க விருக்கினி லாயிர நாமச்
சிங்க மணத்தொழில் செய்த திறத்தால்
மங்கல வங்கி வசிட்டன் வகுத்தான்.

வசிட்டன்-வசிட்ட மாமுனிவன், பங்குனி உத்தரம் ஆன பகல் போது-பங்குனி மாதத்து உத்தர நட்சத்திரம் கூடிய நன்னாளிலே, அங்கம் இருக்கினில்-அங்கங்களோடு கூடிய வேதங்களிலே (சொல்லப் பெற்ற), ஆயிரம் நாமம்-ஆயிரம் திருநாமங்களையுடைய, சிங்கம் போன்ற (திருமாலான) இராமபிரானது, மணம் தொழில்-திருமணச் சடங்கை, செய்த திறத்தால்-(முதலில்) செய்த முறைக்கேற்ப, மங்கலம் அங்கி-அத்திருமணத்திற்குரிய தீயிற் செய்யும் சடங்குகளை, வகுத்தான்-(மற்றநாட்களிலும்) செய்து முடித்தான்.

விவாகமானது முதல் நான்கு நாட்கள் மணமகன் 'ஔபாஸனம்' எனப்படும் தீச்சடங்கைச் செய்துவர, இறுதியில் 'சேஷஹோமம்' எனப்படும் சடங்குடன் மணவினை முடிவுறும். இங்கே அம்முறைப்படி வசிட்ட பகவான் சடங்குகளைச் செய்வித்தும் செய்தும் முடித் தமையை இக்கவி கூறுகின்றது. இராமபிரான் முதலிய நால்வருடைய திருமணமும் பங்குனி யுத்தர நாளிலே நடந்தமையை வான் மீகமும் கூறுகின்றது.

'ஆயிரநாமச் சிங்கம்' : சங்கொடு சக்கரந் தரித்த செங்கையச், சிங்கவேறு' (746) என்றார் முன்னும்.

(பி - ம்.) 1. உத்திர மன்ன பகற்போழ்து.
2. அங்கணிருக்கினில்; அங்கவருக்கனில்; அங்கவிதத்தினில்; அங்க முதத்தினை.
3. சிங்க மனத்தொழில்: செய்த திறத்தான்; செய்தனனாக; செய்தபி விளையோர். 4. வதிட்டன்: வளர்த்தான். (99)

### பரதன் முதலிய மூவர் திருமணம்

1336. வள்ள றனக்கிளை யோர்க டமக்கும்
எள்ளலில் கொற்றவன் யான்பி னளித்த
அள்ளன் மலர்த்திரு வன்னவர் தம்மைக்
கொள்ளு மெனத்தம ரோடு குறித்தான்.

எள்ளல் இல் கொற்றவன்-இகழ்ச்சியில்லாத வெற்றியுடைய சனக மன்னன், வள்ளல் தனக்கு இளையோர்கள் தமக்கும்-வள்ளலான இராம பிரானுக்கு இளையவரான மூவருக்கும், 'யான், பின் அளித்த-நானும் என் பின்னவன் (தம்பி) ஆன குசத்துவசனும் பெற்ற, அள்ளல் மலர் திரு அன்னவர் தம்மை-சேற்றில் முளைக்கும் செந்தாமரையில் வீற் றிருக்கும் இலக்குமிபோன்ற மூன்று பெண்களையும், கொள்ளும் என- (மனைவியராக) ஏற்றுக்கொள்ளுங்க'ளென்று, தமரோடு குறித்தான்- உரிய சம்பந்திகளுடன் மணம் பேசினான்.

சீதாதேவியைத் திருமகளாகப் பெற்றபின்பு, சனகமன்ன னுக்கு ஊர்மிளை என்னும் மகள் பிறந்தாள். சனகனுக்குத் தம்பியான குசத்துவசன் பெண்கள் மாண்டவி, சுருதகீர்த்தி என்போர். இம்

மூவரையும், வள்ளற்பிரான் தம்பியர் மூவர்க்கும் உரியவராக ஏற்றுக் கொள்ளும் வண்ணம் சனகமன்னன் குறித்தான் என்றவாறு. சிவதனுசை முறித்துச் சீதையை மணத்தற்குரியவனாகி, யாவர்க்கும் பெருமகிழ்வளித்தமை இங்கே இராமபிரானுக்குரிய வள்ளல் தன்மை.

யான், பின்: உம்மைத்தொகை; யானும் பின்னவனும் என விரியும். பின், ஆகுபெயர். 'பங்கஜம்' (சேற்றில் பிறப்பது) என்னும் வடசொல்லின் பொருள் கொண்டது 'அள்ளல் மலர்' என்பது.

பி - ம்.) 1. வள்ளல் தமக்கு: இளையோர்கள் தமக்கே.
2. எள்கலில்: தம்பியளித்த: எள்ளலில் தந்தையொடெம்பி யளித்த.
3. தள்ளின் மலர்த்; வள்ளமலர்த்.
4. தமரோடு குறித்தார்; கொள்கவெனத்தமர் கோவொடுரைத்தான்; கொள்ளென நற்றவர் கொவொடுரைத்தார்; கொள்ளுகெனத்தமர் கோவொடுரைத்தார். (106)

இப்பாடல் சில பிரதிகளில் இல்லை.

1337. கொய்ந்நிறை தாரன் குசத்துவ சப்பேர்
நெய்ந்நிறை வேலவன் மங்கையர் நேர்ந்தார்
மைந்நிறை கண்ணினர் வானுறு நீரார்
மெய்ந்நிறை மூவரை மூவரும் வேட்டார்.

கொய் நிறை தாரன்-கொய்து தொடுத்த பூக்கள் நிறைந்த மாலை சூடிய சனகமன்னனும், குசத்துவசன் பேர்-குசத்துவசனென்ற பெயருடைய, நெய் நிறை வேலவன்-நெய் மிகப் பூசப்பெற்ற வேலை யுடையவனும் ஆன இவ்விருவருடைய, மங்கையர்-பெண்கள், நேர்ந் தார்-(முன்னே குறித்தபடி) திருமணத்திற்குப் பொருந்தியவரானார் கள்; (நிச்சயிக்கப்பெற்றனர்); மை நிறை கண்ணினர்-மைதீட்டப் பெற்று (அழகு) நிறைந்த கண்களையுடையவர்களும், வான் உறு நீரார்-தேவருலகத்து இருத்தற்குரிய தன்மையுடையவர்களுமாய், மெய் நிறை-பருவம் நிறைந்து விளங்கிய, மூவரை-அம்மூன்று மங்கை யரை, மூவரும்-(இராமபிரானுடைய தம்பிமாரான) மூவரும், வேட் டார்-வதுவை செய்துகொண்டனர்.

முன் கவியில் சனகன் குறித்த பெண்கள் மூவரும் இராமபிரா னுடைய தம்பியர் மூவர்க்கும் மனைவியராதற்கு நிச்சயிக்கப்பெற, அம்மூவருள் ஊர்மிளையை இலக்குமணனும், மாண்டவியைப் பரத னும், சுருதகீர்த்தியைச் சத்துருக்கனனும் முறையே மணந்து கொண் டனர் என்க. கொய்ந்நிறை தாரன் என்பதைக் குசத்துவசனுக்கே அடைமொழியாக்கிக் கூறுவாருமுளர். 'வானுறு நீரார்' என்றது மங்கையரின் சிறப்புக் குறித்தவாறு. அவர்களை மணந்து கொள் வோரும் தெய்வாமிசம் உடையவராதலின், அதற்கேற்றவர் அம்

மங்கையரும் என்ற குறிப்பும் தோற்றுதல் காண்க. வானுறு நீரார்-மேன்மைக் குணமுடையோர் என்றலுமாம். 'மெய்' என்றது ஆகு பெயராய்ப் பருவச் சிறப்பைக் குறித்தது,

நெய்ந்நிறை வேல்: 'நெய்ஞ்ஞின்ற நெடுவேலின்' (அயோத். 702): 'நெய்ந்நிலைய வேலரசன்' (ஆரணிய. 594).

ஸீதா-ராம விவாகம் நிச்சயமானவுடனே, சனகன் மகளாகிய ஊர்மிளையை இலக்குமணனுக்குக் கன்னிகாதானம் செய்யும்படி வசிட்ட முனிவர்கூற, அதனைச் சனகன் மகிழ்சசியுடன் ஏற்று அதற் கியைந்தனன். அதன்பின், விசுவாமித்திர முனிவர் 'உன் தம்பியான குசத்துவசன் பெண்கள் இருவரும் பரத, சத்துருக்கனருக்கு உரியவ ராகட்டும்' எனப் பிரேரேபிக்க, வசிஷ்ட முனிவரும் சனகன் முதலி யோரும் மகிழ்ச்சியோடு அதனை அங்கீகரித்தனர். அவ்வாறான பின்பு, பங்குனி உத்தர நாளில் சக்கரவர்த்தி குமாரர் நால்வருக்கும் ஒருங்கே திருமணம் நிகழ்ந்தது என வான்மீகம் கூறுகின்றது.

(பி - ம்,) 1. கொய்நிறை; கொய்மலர்: தார்க் குசத்துவசப்பேர்.
2. நெய்நிறை; நெய்நிற: மங்கையை நேர்ந்தான்.
3. மைநிறை: கண்ணியர்; கன்னியர்; வானுறை: நீரர்; நீரோர்: கண்ணினர் மூவரைமாறு.
4. மெய்நிறை: மொய்நிறை: மூவரும் வேட்கையின் வேட்டார்; தம்பியர் மூவரும் வேட்டார்; (101)

## தசரதன் பொருள் வழங்கல்

1338. வேட்டவர் வேட்டபின் வேந்தனு மேனாள்
கூட்டிய சீர்த்தி கொடுத்தில னல்லால்
ஈட்டிய மெய்ப்பொரு ளுள்ளன வெல்லாம்
வேட்டவர் வேட்கையின் மேற்பட வீந்தான்.

அவர்-அவர்கள், (மணமக்கள்), வேட்டு-(ஒருவரையொருவர்) விரும்பி, வேட்டபின்-மணம் புரிந்தபின், வேந்தனும்-சக்கரவர்த்தி யும், மேல் நாள்-நெடுங்காலமாக, கூட்டிய-(தான்) சேர்த்துக்குவித்த சீர்த்தி-உயர் புகழினை (மட்டும்), கொடுத்திலன் அல்லால்-கொடுக்க வில்லையேயன்றி, ஈட்டிய-தான்(அதுவரை) சேர்த்த, மெய் பொருள்-உண்மைப் பொருள்களாக, உள்ளன எல்லாம்-தன்னிடமிருந்த (பொன், மணி முதலிய) எல்லாப் பொருள்களையும், வேட்டவர்-(பெற) விரும்பியவர்களுடைய, வேட்கையின் மேல்பட-விருப்பத் திற்கும் மேலாக, ஈந்தான்-அள்ளிக் கொடுத்தான்.

மணவினை முடிவுற்றபின் 'பூரி' வழங்குதல்போல ஈத்துவக்கும் இன்பம்அறிந்த சக்கரவர்த்தியும் அளவற்ற மகிழ்ச்சியுடன் அளவற்ற பொருள்களை வேண்டுவார்க்கு வாரி வழங்கினான். வேட்கையின் மேற்பட ஈதல்-பெறுவோர் 'போதும் போதும்' என்று தாமே கூறும் படி கொடுத்தல். மெய்ப் பொருள் என்றது அறநெறியே ஈட்டிய பொருளென்பதாம். சீர்த்தி, கொடுத்தற்கு ஏலாததாகலின், அஃதொ

ழியக் கொடுத்தற்கேற்றவனவாக உள்ளவை யெல்லாம் கொடுத்து, அக்கீர்த்தியை மேலும் மிகுவித்துக்கொண்டான் என்க. வேந்தன்–சனகன் எனக்கொண்டு கூறுதலும் உண்டு. 'மேனுள்' என்பதனைப் பொருளோடுங் கூட்டிக்கொள்க.

ஈற்றடி ஒப்பு: 'வேண்டினர் வேட்கையின் மேற்படவீசி, நீண்ட கையாய்' *(435)*.

(பி - ம்.) 1. வேட்டனர் வேட்டனர் வேட்டபின் மேனுள். 2. கீர்த்தி.
3. ஈட்டுறு: உள்ளவை; யாவுள; மெய்ப்பொருளாயுளது.
4. வேட்டவர் வேட்டவை; வேட்டனர் வேட்டனர்; வேட்டன வேட்டன; வேண்டளவு; வேண்டுவ; வேண்டின; வேண்டிட: ஈந்தார். *(102)*

1339. ஈந்தள வில்லதொ ரின்ப நுகர்ந்தே
ஆய்ந்துணர் கேள்வி யருந்தவ ரோடும்
வேந்தொடு மந்நகர் வைகினன் மெள்ளத்
தேய்ந்தன நாள்சில செய்த துரைப்பாம்.

(தசரதன்), ஈந்து-(மேற்கூறியவாறு பெருங்கொடையைக்) கொடுத்தபின், ஆய்ந்து உணர் கேள்வி-ஆராய்ந்துணர்ந்த நூற்கேள்வியையுடைய, அரு தவரோடும்-அரிய தவமுனிவர் பலரோடும், வேந்தொடும்-சனக மன்னனுடனும் (அளவளாவி), அளவு இல்லது-அளவற்றதும், ஓர்-ஒப்பற்றதுமான, இன்பம் நுகர்ந்து-பேரின்பத்தை அனுபவித்துக்கொண்டு, அ நகர் வைகினன்-அம்மிதிலே நகரிலே தங்கியிருந்தான்; நாள் சில மெள்ள தேய்ந்தன-(இவ்வாறாக) சில நாட்கள் மெள்ளச் சென்றன; செய்தது-அதன்பின் நிகழ்ந்த செய்தியை, உரைப்பாம்-மேலே சொல்லுவோம்.

நுகர்ந்தே: ஏகாரம் இசைநிறை.

ஜனகமகாராஜன் சிறந்த தத்துவ ஞானியும் தருமங்கள் தவறாதவனுமானபடியால், அத்தகைய ஞானியரும் தவசியருமான பல பெரியோருடன் எப்போதும் கூடி அளவளாவி மகிழ்தல் அவனியல்பு. அத்தகைய கூட்டத்திலே கலந்து மகிழ்ந்திருத்தல் மேன்மைக் குணங்களையுடைய தசரத சக்கரவர்த்திக்கும் பேரின்பமளிப்பதாயிற்று. அதனால், நாட்கள் கழிந்ததையறியாமலே அவ்வின்பத்தில் அவன் திளைத்திருந்தான் என்க. இச்சிறப்புப் பற்றி, 'நாள் சிலமெள்ளத் தேய்ந்தன' என்றார்.

(பி - ம்.) 1. அளவல்லதொர்: இன்ப நுகர்ந்தான்; நுகர்ந்தார்
2. ஆய்ந்துளர்; ஆய்ந்தன, ஆய்ந்கனர்: அருந்தவனோடும்.
3. வேந்தனும்; வாய்ந்தொளிர்: பொன்னகர்; மன்னகர்; வைகினர் பின்னைத்: வைகினன் வைகத்; வைகிலபின்னைத்: ஆமென வைகத்: வைகியபின் யாங்கு.
4. தேய்ந்தது; தேய்ந்துள; நாள்பல: ஏய்ந்தவர் மீள்வயினுற்ற திசைப்பாம். *(103)*

கடிமணப் படலம் முற்றும்.

# 22. பரசுராமப் படலம்

பரசுராமப் படலம்: பரசுராமனைப் பற்றிக் கூறும் படலம் என விரியும். தசரத சக்கரவர்த்தியும் குமாரர் முதலியோரும் பரிவாரங் களுடன் மிதிலையினின்றும் அயோத்திக்குப் புறப்பட்டு செல்லுகை யில், பரசுராமன் எதிர்ப்பட்டு, இராமபிரானைப் போருக்கு வருமாறு அறைகூவலும், இராமபிரான் அதற்கிணங்கிப் போரெதிர்ந்து, பரசு ராமனைத் தோற்பித்து, அவனது தவவலிமையைத் தன் அம்புக் கிலக்காக்கி, அவனது வில்லையும் கைக்கொண்டு பெருந்துயருற்ற யர்ந்த தந்தையைத் தேற்றி மகிழ்விக்க, மேலே அனைவரும் சென்று அயோத்தி சேர்தலும், பின்பு சக்கரவர்த்தி பரத சத்துருக்கனரைக் கேகய நாட்டுக்கனுப்புதலுமாகிய செய்திகள் இப்படலத்துட் கூறப் படும். இப்படலத்தின் பெயர் 'சிலைக்கோட் படலம்' என்று சிலபிரதி களில் காணப்படுகின்றது; 'மீட்சிப் படலம்' எனவும் சில பிரதிகளில் உளது.

### கோசிக முனிவன் இமயஞ் செல்லல்

1340. தானாகிய தகைமைப்பொருள் சனகன்குயி லுடனே
நானாவித இருபோகமு நுகர்கின்றவந் நாள்வாய்
ஆனாமறை நெறிமாதவ முனிகோசிக னருளிப்
போனான்வட திசைவாயுயர் பொன்மால்வரை புக்கான்.

தான் ஆகிய-தனக்குத்தானே ஒப்பாகிய, தகைமை பொருள்- மேன்மையுடைய முதற் பொருளின் அவதாரமான இராமபிரான், சனகன் குயிலுடனே-சனக மன்னன் பெற்ற, குயில் போலுங் குர லுடைய சீதாபிராட்டியுடனே கூடி, நானாவிதம்-பலவிதமான, இரு போகமும்-இருவகைப் போகங்களையும், நுகர்கின்ற அ நாள் வாய்- அநுபவித்திருக்கின்ற அந்நாட்களில், (ஒருநாள்), மாதவ முனி கோசிகன்-மிக்க தவத்தையுடைய கோசிக முனிவன், ஆனா மறை நெறி அருளி-அழிதலில்லாத வேத நெறிகளை (இராமபிரானுக்கு) உபதேசித்து அருள் செய்து, போனான்-அங்கு நின்றும் போய், வட திசை வாய்-வடக்குத் திக்கிலேயுள்ள, உயர்-மிகவுயர்ந்த, பொன் மால்வரை புக்கான் - பொன்மயமான பெரிய இமயமலையை அடைந்தான், போனான்: முற்றெச்சம்.

தசரத சக்கரவர்த்தி, மிதிலையில் சில நாள் தங்கி, சனக மன்ன னுடனும் முனிவர் முதலிய பெரியோர் பலருடனும் அளவளாவி

மகிழ்ந்திருக்கையில், இராமபிரானும், பிராட்டியுடனே இன்பமாகத் தங்கியிருக்க, அப்போது கோசிக முனிவன் உடனிருந்து இராம பிரானுக்கு வேதங்களிலே கூறப்படும் பல நீதிகளையும் முறையாக உபதேசித்து, பின்பு அனைவரையும் ஆசீர்வதித்துவிட்டுப் புறப்பட்டுச் சென்று, தன் தவத்திற்குரிய இமயமலைச் சாரலையடைந்தான் என்க.

கம்பநாடர், இராமபிரானது அவதார மேன்மையை அங் கங்கே கூறிவரும் முறைப்படி இங்கே 'தானுகிய தகைமைப்பொருள்' எனச் சிறப்பித்தார். 'தான் ஆகிய-தன்னிச்சையால் தானே அவ தரித்த' என்றலும் ஆம். கோசிக முனிவன் இராமபிரானுக்குப் பல வகையிலும் உறுதி பயத்தல் கருதியே வந்தமையின், முன் அளித்த விச்சை முதலிய சிறப்புக்களோடு இப்போது வேத நெறிகளையும் உபதேசித்தருளி ஆசீர்வதித்துப் போனுன் என்க. பொன் மால்வரை-மேரு எனவுங் கூறுவர், மேருவும் இமயமும் வேறுபாடின்றிப் பல விடத்தும் புலவர்களாற் கூறப்படுதலாலும், கோசிக முனிவன் இமயஞ் சேர்ந்ததாகவே வான்மீகமும கூறுதலாலும் இங்கே இமயம் எனப்பட்டது. 'மறை நெறி' என்பதனைக் கோசிகனுக்கு விசேடண மாக்குதலும் பொருந்தும். இருவகைப் போகம்-அசன, சயன சுகங்கள்.

நானுவிதம், 53, 163-குறிப்புக்கள் பார்க்க.

(பி - ம்.) 1. தானுவதொர் வகையேநனி சனகன்றரு தயலும்; தருதையலும், தனதயலும்; தானுயதொர் வகை செய்தனன் சனகன் றிரு நகரில்.
2. நானுவிதவரு; நானுவிதம்வரு; நானுவிதமுறு; நுகர்கின்றதொர் நாள்; நுகர்கின்றனநாள்; உறுகின்றவந்நாள்; உறுகின்றன நாள்; நவபோகமு நாள்வாய்.
3. நிறைமாதவன்; நெறியாசிகள்; கோசிகனருளப்; கௌசிகனருளிப்; அருளிற்; கோசிகனகலப்; அகலாப்.
4. திசைவானுயர்: பொன் மாநகர்புகவே. (1)

### சக்கரவர்த்தி புறப்படுதல்

1341. அப்போதினின் முடிமன்னவ னணிமாநகர் செலவே
இப்போதுந மனிகந்துணை யெழுகென்றினி திசையாக்
கைப்போதக நிகர்காவலர் குழுவந்தடி கதுவ
ஒப்போதரு தேர்மீதினி லினிதேறின னுரவோன்.

*அப்போதினில்*-அப்போது, (கோசிகன் சென்றபிறகு ஒருநாள்), உரவோன்-எல்லா வலிமையுமுடையவனுன, முடி மன்னவன்-சக்கர வர்த்தி, 'அணி மாநகர் செல-அழகிய பெரிய நம்அயோத்தி நகருக்குச் செல்லும் பொருட்டு, இப்போது—, நம் அனிகம்-நம் சேனைகளும், துணை-உடன் வந்த பிறரும், எழுக என்று-புறப்படுக' என்று, இனிது இசையா-இனிதாகச் சொல்லி, கை போதகம் நிகர்-துதிக்கையை யுடைய யானை போன்ற, காவலர் குழு வந்து-பல அரசர் கூட்டம்

(தன்னிடம்) வந்து, அடி கதுவ-தன் பாதங்களைப் பற்றி வணங்க ஒப்பு ஓத அரு தேர் மீதினில்-ஒப்பாகவேறொன்று சொல்லுதற்கரிய தொரு தேரின்மேல், இனிது ஏறினன்-மகிழ்ச்சியோடு ஏறினான்.

எழுகென்று, ஓதரு: தொகுத்தல்.

(பி - ம்.) 1. நனி மாநகர். 2. இப்போதினிலனிகந்தனை: இனிதுரையாக்.
3. நிமிர்காவலர் சூழ்வந்தடி தழுவ.
4. ஒப்போதொரு: ரதமீதினில். (2)

1342. தன்மக்களு மருமக்களு நனிதன்கழ றழுவ
மன்மக்களு மயன்மக்களும் வயின்மொய்த்திட மிதிலைத்
தொன்மக்கட மனமுக்குயிர் பிரிவென்பதொர் துயரின்
வன்மக்கடல் புகவுய்ப்பதொர் வழிபுக்கன னுரவோன்.

உரவோன்-அறிவாற்றல் மிக்க சக்கரவர்த்தி, தன் மக்களும்-தன் புதல்வர்களும், மருமக்களும்-மருகியரும், நனி தன் கழல் தழுவ-நன்கு தன் திருவடிகளை வணங்கித் தொடர்ந்து வரவும், மன் மக்களும்-அரச குமாரர்களும், அயல் மக்களும்-அவரல்லாத பிறரும், வயின் மொய்த்திட-பக்கங்களிலே வந்து நெருங்கவும், மிதிலை தொல் மக்கள்-மிதிலை நகரத்தில் பழமையாக வாழும் குடிமக்கள், தம் மனம் உக்கு-தங்கள் மனம் உடைந்து, உயிர் பிரிவு என்பது ஓர்-(தம் தம்) உயிர் நீங்குகின்றதெனத்தக்கதொரு, துயரின் வன்மம் கடல்புக-வருத்தமாகிய வலிய கடலிலே மூழ்கவும், உய்ப்பது ஓர் வழி-தன தூருக்குச் செலுத்தும் ஒரு வழியிலே, புக்கனன்-செல்லலானான்.

உடன் செல்வோரும் வழியனுப்புவோருமாகிய பலரும் நெருங் கிச் சூழவும் தம்முடைய பிரிவால் மிதிலை நகரத்து மக்கள் மிகப் பெருந்துயர் உறவும், சக்கரவர்த்தி தன் பரிவாரங்கள் சூழப் பயண மானான். இராமபிரானிடத்து அனைவர்க்கும் உண்டான பேரன் பினால் அவனையும், அருங்குணக் கடலாகிய சக்கரவர்த்தியையும் தமது பேரன்பிற்கிடமான சீதாபிராட்டியையும் பிரிதலில் மிதிலை மக்கள் தம் உயிர் உடம்பைவிட்டு நீங்குவது போன்ற பெருந்துயர முற்றனரென்க.

மருமக்கள்: 'மருமகள்' என்பதன் பன்மை. வன்மம்-வலிமை; 'வயிர மார்பின் உருமொத்த கரஞ்சென்றுற்ற, வன்மத்தைக்கண்டும்' (யுத்த. 1888)

(பி - ம்.) 1. நன்மக்களும்: தனிதன் கழல்தழுவும்.
2. மன்மக்களும் வயின்மொய்த்திட; அயல்மொய்த்திட; மனமொய்த் திட: மதில்சூழ்தரு: மதில்சூழ்வரு.
3. தொன்மக்களும்: மனமிக்குயிர்; மனமிக்குயர்; மயன்மிக்குயர்; மன முக்கயல்: துயரான்.
4. வன்மைக் கடலிடையிற்பட வழிசென்றனன்: மறவோன்: அறவோன்; உறவோன். (3)

### வழிச்சென்ற வகை

1343. முன்னேநெடு முடிமன்னவன் முறையிற்செல மிதிலை
நன்மாநக ருறைவார்மன நனிபின்செல நடுவே
தன்னேர்புரை தருதம்பியர் தழுவிச்செல மழைவாய்
மின்னேயெனு மிடையாளொடு மினிதேகினன் வீரன்.

(வழிச் செல்லுங்கால்), நெடு முடி மன்னவன்-சக்கரவர்த்தி முறையின்-முறைப்படி, முன்னே செல-(தன் தலைமைக்கேற்ப) முதலிற் செல்லவும், மிதிலை நல் மாநகர் உறைவார் மனம்-மிதிலையாகிய நல்ல பெரிய நகரத்தில் வாழும் மக்களின் மனங்கள், நனிபின் செல-தன்னைப் பெரிதும் பின் தொடர்ந்து வரவும், வீரன்-இரகு வீரனான இராமபிரான், நடுவே-நடுவில், தன் நேர் புரைதரு தம்பியர் தழுவி செல-தனக்கு நிகரான மனமொத்த தம்பிமார் மூவரும் தன்னை யணுகி வர, மழை வாய் மின்னே எனும் இடையாளொடும்-மேகத்திலுள்ள மின்னற் கொடியே எனத்தக்க (நுண்ணிய) இடையினை யுடைய சீதாதேவியுடனே, இனிது ஏகினன்-மகிழ்வாகச் சென்றான்.

முன் கவியில், மிதிலை மக்கள் இராமபிரான் முதலியோரது பிரிவுத் துயரால் வருந்தினமை கூறிய ஆசிரியர், அதனை அநுவாதம் செய்து, 'நகருறைவார் மனம்நனி பின்செல' என்றார். தன் ஏர் புரை எனப்பிரித்துக் கூறலுமாம். இக்கவிகளின் ஓசையின்பம் ஓர்தற் குரியது.

மின்னேயெனு மிடையாள்: ஆரணிய. 285; கிட்கிந்தா. 210 விவாகம் ஆனவுடனேயே தசரதன் முதலியோர் விடைபெற்று ஊருக்குச் சென்றதாக வான்மீகம் கூறுகின்றது.

(பி - ம்.) 2. உறைவோர் மனமவை.
3. தன்னேபுரை; தன்னேருறை: நிகர்தம்பியர்: தழுவச்செல: மழை வாழ்; மழைவான்; மழையின்; மழையுள்.
4. மின்னேபுரை; மின்னேர்புரை: ஏகினனுரவோன்; உறவோன். (4)

### இருவகை நிமித்தங்கள் எதிர்ப்படல்

1344. ஏகும்மள வையின்வந்தன வலமும்மயி லிடமும்
காகம்முத லியமுந்திய தடைசெய்வன கண்டான்
நாகம்மன னிடையிங்குள திடையூறென நடவான்
மாகம் மணியணிதேரொடு நின்றானெறி வந்தான்.

ஏகும் அளவையின்-(மேற்கூறியவாறு அனைவரும்) செல்லும் போது, மயில் வலமும் வந்தன-மயில்கள் இடமிருந்து வலமாகவும (நல்ல நிமித்தமாக முதலில்) வந்தன; (அடுத்து), காகம் முதலிய-காக்கை முதலிய சில, (தீ நிமித்தமாக), இடமும் முந்திய-வலமிருந்து இடமாகவும் முற்பட்டுச் சென்றனவாகி, தடைசெய்வன-(பயணத

துக்குத்) தடை செய்வனவற்றை, கண்டான்-கண்டவனாகி, நாகம் அன்னன்-மலைபோல் உறுதியுடையவனும், நெறி வந்தான்-மேலோர் செல்லும் நன்னெறியிலே செல்பவனுமான சக்கரவர்த்தி, இங்கு-இப்போது, இடை-வழியிடையே, இடையூறு உளது என-ஏதோ இடையூறு நேரவிருக்கின்றதென்று கருதி, நடவான்-மேலே செல்லாமல், மாகம் அணி-ஆகாயமளாவிய (உயரமான), அணி தேரொடும்-அழகிய தன் தேருடனே, நின்றான்-நின்றுவிட்டான்.

சக்கரவர்த்தி, மலைபோலச் சலியாத மனவுறுதியுடையவனாலும், மேலோர் சென்ற நெறியிலே செல்லுந்தன்மையுமுடையவனாதலால், நிமித்தங்களால் நன்மை தீமைகள் நேருமென்பதில் நம்பிக்கையுடையவனாகித் தீ நிமித்தங்கண்டவளவில் மேலே செல்லாமல் நின்றுவிட்டான் என்பதுபட, 'நாகம்மனன், நெறி வந்தான், நடவான், நின்றான்' என்றார். நாகம் அனன்-யானை போன்றவன் என்றலுமாம்; 'அன்னன்' என்றது 'அனன்' எனத்தொக்கது. நாகம் மனன் எனப்பிரித்துப் பொருள் கூறலும் பொருந்தும்; அதற்கு, மனன்-மனமுடையவன், மன்னன் என இருவகையாகவுங் கொள்ளலாம்.

நிமித்தங்கள் பார்த்தல் முன்னோர் மரபு. வலியன், கருடன், காடை, கழுகு, ஆந்தை, உடும்பு, கீரி, குரங்கு இவை வலமிருந்து இடமாதல் நன்று; நாரை, விச்சுளி, காக்கை, செம்போத்து, கிளி, கொக்கு, மயில், கோழி, ஓணன், புள்ளிமான், புனுகுபூனை, புலி, நரி, இவை இடமிருந்து வலமாதல் நன்று; இவை மாறி நிகழ்தல் சகுனத் தடையாகும் என்பர். இங்கே, முதலில் மயில் வலமானதென்றது நன்மை குறித்தது. பின்பு காகம் முதலிய இடமாயினவென்றது தீமை குறித்தது 'அடியிடு முன்னையர்க் கடுத்தவா கெட்டேன், கொடியிடமாப் போந்த குறை' (மதுரைக் கலமபகம். 55) என்றதும் அதன் குறிப்புங் காண்க.

(பி - ம்.) 1. வந்தெதிர்: வலமும் மயலிடமும்; வலமும்மிட மயிலும்.
2. முந்தின; பல்பறை: தடைசெய்தன; செய்வது; செய்வரக்கண்டே.
3. நாகம்மன னிடையிங்குள; இடையுங்குளது; நாகம்மனையவ னீங்குளது; நாகம்மன நடையானுளது; நாகம்மவ னிவியிங்குளது; ஆகும்மன னிடையிங்குளது: இடையூறது; இடையூறுள; ஆகும் மிவணிடையூறவை யாவோவென நினையா; அறியா; அறியான்; அறிவான்.
4. மாகம்பணி யணி: மாகம்மள வணி: நின்றானெதிர்; நின்றான் வழி; சென்றான். (5)

மன்னவன் நிமித்திகனை வினவுதல்

1345. நின்றேநெறி யறிவானொரு நினைவாளனை யழையா
நன்றேபழு துளதோநய முரைநீநடு வென்னக்
குன்றேபுரை தோளானெதிர் புள்ளின்குறி கொள்வான்
இன்றேவரு மிடையூறது நன்றாய்விடு மென்றான்.

நின்று-(மன்னவன் முற்கூறியவாறு) நின்று, நெறி அறிவான்-(நிமித்தங்களின்) முறைகளையறிந்தவனுன, ஒரு நினைவாளனை-ஆராய்ச்சியாளனெருவனை, அழையா-அழைப்பித்து, 'நன்றோ பழுது உளதோ-(இந்நிமித்தங்களால் ஆவது) நன்மையோ, அன்றித்தீமை யுளதோ? நயம்-அப்பயனை, நீ நடு உரை என்ன-'நீ நடுநிலைமை யோடு கூறுக' எனக்கட்டளையிட, குன்றே புரை தோளான் எதிர்-மலையையே நிகர்த்த புயங்களையுடைய சக்கரவர்த்திக்கு விடையாக, புள்ளின் குறி கொள்வான்-புள் நிமித்தங்களை ஆராய்ந்து கூறவல்ல அந்த நிமித்திகன், 'இன்றே இடையூறுவரும்-இப்போதே ஓர் இடையூறுண்டாகும்; அது நன்று ஆய்விடும்-(முடிவில்) அது நல்லதாகிவிடும்' என்றான்-என்று கூறினுன்.

நிமித்தங்களின் பயனை அறிய விரும்பிய சக்கரவர்த்தி, நிமித்திகன் ஒருவனை அழைப்பித்துக் கேட்க, அவன் ஆராய்ந்து இப்போது முதலில் ஓர் இடையூறுவரும்; அஃது எளிதின் நீங்கி நன்மையாக முடியும் என்று பயனைக் கூறினுன். நன்மையோ அன்றித் தீமையோ, எதுவாயினும் அதனை உள்ளபடி அஞ்சாது கூறவேண்டுமென்பது குறித்து, 'நயம் நடு உரை' எனக்கேட்டனன் சக்கரவர்த்தி. நயம்-பயன்; (திவா.) நினைவாளன்-ஓர்ந்துணர்பவன்.

மேலே பரசுராமனுல் நேரவிருக்கும் துன்பமும், அஃது இராம பிரானுல் நீங்கி நன்மையாதலும் இங்கே குறிப்பால் உணர்த்தப் பெற்றன. முதலில் இடையூறு வந்து, பின் அது நன்ருதலை, 'இன்னு வின்பம்' என்பர்; (பெருங். 1. 47: 14.)

இவ்விடத்து முதனூல் கூறுவது: 'பறவைகள் அச்சமுறும்படி கூவுகின்றன; விலங்குகள் மட்டும் வலமாகச் செல்கின்றன; இவற்றின் பயன்யாதோ' என்று மன்னன் கவலையுற்றுக் கூற, 'பறவைகள் அவ்வாறு கூவுவதால் ஓர் அச்சம் நிகழும்; விலங்குகள் வலமாகச் செல்வதால் அவ்வச்சம் நீங்கிவிடும்' என வசிட்டமுனிவரே நிமித்தங்களின் நன்மை தீமைகளை உரைத்தார் என்பது.

(பி - ம்.) 1. நின்ருனெறியறிவாஞெருு; நின்றே குறியறிவாஞெரு நெறியாளனை.
2. நடுவுரை நீ நயம்; நலனுரை நீயென நடுவே; நடுவண்; நவிலக்.
3. குன்றோர்புரை தோளானெடு: குறியறிவான்; குறிதேர்வான்.
4. இடையூறிது: இடையூறுடன்: நன்ருயிடும்; நன்ருய்வரும்; நலனுய் வரும். (6)

பரசுராமன் வருகை

1346. என்னும்மள வையின்வானக மிருணின்றது வெளியாய்
மின்னும்படி புடைவீசிய சடையான்மழு வுடையான்
பொன்னின் மலைவருகின்றது போல்வர்னனல் கால்வான்
உன்னுஞ்சுழல் விழியானுரு மதிர்கின்றதொ ருரையான்.

என்னும் அளவையின்-என்று நிமித்திகன் சொல்லுமளவில், வானகம் நின்றது இருள்-ஆகாயத்தில் இருந்த இருள், வெளி ஆய்-மின்னும்படி-(நீங்கி) வெளியாகி மிகவும் ஒளி செய்யும்படி, புடை வீசிய-பக்கங்களிலே (ஒளியைப்)பரப்பிய, சடையான்-செஞ்சடையை உடையவனும், மழு உடையான் - 'மழு' எனப்படும் கைக் கோடாலியை உடையவனும், பொன்னின் மலை வருகின்றது போல் வான்-பொன்மயமான மேருமலை நடந்துவருவது போன்ற தோற்ற முடையவனும், அனல் கால்வான் உன்னும்-தீயை உமிழ எழுகின்ற, சுழல் விழியான்-சுழலுங் கண்களையுடையவனும், உரும் அதிர்கின்றது ஓர் உரையான்-இடிபோல முழங்கும் சொல்லையுடையவனும்,

இதுமுதல் ஒன்பது பாடல்கள் ஒரு தொடர்; பரசுராமன் தோற்றமும், அவன் வருகையால் நிகழ்வனவும் கூறும். இதில் முதற் கண் உள்ள 'என்னும்மளவையின்' என்பது, 1354-ஆம் கவியில் உள்ள 'மழுவாளவன் வந்தான்' என்ற தொடரோடு இயையும்.

என்னும் மளவையின் : விரித்தல் விகாரம்.

(பி - ம்.) 1. அளவினில்: வானமும்: இருள்கீறிட; கீறிய: ஒளியாய்; ஒளியால்; ஒளியா; வெளியா.
2 மன்னும்படி: சடையன் மழுவுடையன்; சடையானடல் மழுவான்; மிடல் மழுவான்; மழுவான் விரிசடையான். 3. அழல் கால்வான்.
4. உன்னுந்தழல்; உன்னுஞ்சுடர்; உன்னும் மனல்: மொழியான். (7)

1347. கம்பித்தலை யெறிநீருறு கலமொத்துல குலையத்
தம்பித்துயர் திசையானைக டளரக்கடல் சலியா
வெம்பித்திரி தரவானவர் வெருவுற்றிரி தரவோர்
செம்பொற்சிலை தெறியாவயின் முகவாளிக டெரிவான்.

அலை எறி நீர் உறும் கலம்ஒத்து-அலைமோதுகின்ற கடல் நீரில் அகப்பட்ட மரக்கலத்தைப்போல, உலகு கம்பித்து உலைய-உலகமும் அதிலுள்ள பொருள்களும் நடுங்கி நிலைகுலையவும், உயர்திசை யானை கள்-மேலான எட்டுத் திக்கு யானைகளும், தம்பித்து தளர-அசை வற்றுத் தளர்ச்சியடையவும், கடல்-எல்லாக் கடல்களும், சலியா வெம்பி திரிதர-கொந்தளித்து, வெப்பங்கொண்டு நிலைபெயரவும், வானவர்-தேவர்களும், வெருவுற்று இரிதர–அச்சங்கொண்டு ஓடவும், ஓர் செம் பொன் சிலை தெறியா ஒப்பற்ற பொன் மயமான (தன்) வில்லை நாணேற்றித் தெறித்து - அயில் முகம் வாளிகள் தெரிவான்-கூரிய வாயினையுடைய அம்புகளை எய்தற்குத் தேர்ந்தெடுப்பவனும்,

பரசுராமன், போருக்கு ஆயத்தமாகத் தன் வில்லை வளைத்து நாணேற்றி அதைத்தெறித்த ஓசையால் நிகழ்ந்தவை முதல் மூன்றடி களில் கூறப்பெற்றன. அவ்வில்லும், சிவதனுசுக்கொப்பான சிறப் புடையதாதலின், 'ஓர் செம்பொற் சிலை' எனப்பட்டது.

திரிதர-திரிய; தரு-துணைவினைப் பகுதி.

கம்பித்து......உலகுலைய: ஒப்பு. 'கம்பமுற் றுலைந்த வேலைக் கலமெனக் கலங்கிற் றண்டம்' (யுத்த. 2039).

(பி - ம்.) 1. உலகலையத்.
2. தம்பித்துறு; கம்பித்துயர்: தண்டக்கடல்; சண்டக்கடல்.
3. திரிதரு; திகைதிரி; திசைதிரி. 4. சிலை தரியா; குனியா. (8)

1348. விண்கீழுற வென்றோபடி மேல்பாலுற வென்றோ
எண்கீறிய வுயிர்யாவையும் யமன்வாயிட வென்றோ
புண்கீறிய குருதிப்புனல் பொழிகின்றது புரையக்
கண்கீறிய கனலான் முனி வியாதென்றயல் கருத.

'புண் கீறிய-புண் வாய் திறத்தலால், குருதி புனல் பொழி கின்றது புரைய-உதிர நீர் ஊற்றுவதுபோல, கண் கீறிய கனலான் முனிவு-கண்களினின்றும் வெளிப்படும் தீயினையுடைய இவனது சினம், விண் கீழ் உற என்றோ-மேலுலகம் கீழே (பூமியில்) வந்திட வேண்டுமென்றோ?, (அல்லது), படி மேல் பால் உற என்றோ-பூமி மேலே (விண்ணை) அடைய வேண்டுமென்றோ?, (அல்லது), எண் கீறிய உயிர் யாவையும்-(எல்லாவுலகங்களிலும் உள்ள) கணக்கிறந்த உயிர்களை யெல்லாம், யமன் வாய் இட என்றோ-யமன் வாயிலே சேர்த்து விடுதற்கோ!, யாது-இஃதென்னவோ? (இந்தக் கோபத் திற்குக் காரணம் யாதோ),' என்று—, அயல் கருத-பக்கத்திலுள் ளார் நினைக்கவும்,

மண்ணுலகையும் விண்ணுலகையும் கூறியதனால், பாதலமும் கொள்ளலாகும். எனவே, 'எல்லாவுலகங்களும் தம் நிலை தடுமாறிக் குலையச் செய்யும் இவனுடைய கோபம்' என்று, கண்டோர் அஞ்சி வியக்கத்தக்கதாயிருந்தது அவன் நிலை யென்க.

(பி - ம்.) 1. விண்கிளுற; கீழ்விழ; ஒன்றோ: படிமேல் கீழுற: ஒன்றோ.
2. எண்கூறிய: எமன்வாயிட; நமன்வாயிட.
3. பொழிகின்றன; பொழிகின்றனன்: புலரக்.
4. கண் சீறிய அனலான்: முனிவே தென்றயல்; முனிவியாதென்றிது: கருதேம்; கருதா; கருத்தே. (9)

1349. போரின்மிசை யெழுகின்றதோர் மழுவின்சிகை புகையத்
தேரின்மிசை மலைசூழ்வரு கதிருந்திசை திரிய
நீரின்மிசை வடவைக்கன னெடுவானுற முடுகிப்
பாரின்மிசை வருகின்றதொர் படிவெஞ்சுடர் படர,

போரின் மிசை எழுகின்றது-போரிலே தலை நிமிர்ந்தெழுகிற, ஓர் மழுவின் சிகை புகைய-ஒப்பற்ற (தனது) மழுப்படையின் தலை புகையவும், தேரின் மிசை-ஒற்றையாழித் தேரிலே, மலை சூழ்வரு-

மேரு மலையை ஒரு தன்மையாகச் சுற்றி வருகிற, கதிரும்-சூரியனும், திசை திரிய-(அஞ்சித்) தன் கதி தடுமாறிச் செல்லவும், நீரின் மிசை வடவை கனல்-கடல் நீரிலேயுள்ள வடவைத் தீயானது, நெடுவான் உற-(தன்னிடம் விட்டு) நெடிய ஆகாயத்தையடையுமாறு, முடுகி-விரைந்து, பாரின்மிசை வருகின்றது ஓர்படி-பூமியின் மேலே (நடந்து) வரும் ஒரு தன்மைபோல, வெம்சுடர் படர-(தனது உடலின்) வெம்மையான ஒளி பரவவும்,

மழுவின் சிகை புகைய: உடையானது கோபத்தீ உடைமையின் மேல் ஏற்றிக் கூறப்பட்டது. வடவைக் கனல்: 202-குறிப்புக் காண்க.

(பி - ம்) 1. எழுகின்றதொர் முனிவின்றிசை; முனிவன்சிகை; மழுவெஞ்சிகை: புகையத். 2. மழைசூழ்வரு: நிலைதிரிய; திசையிரிய; பிரிய. 3. நீருண்ணிமிர் வடவெங்கனல்: நேர்வானுற: முடுகப்: முந்திப். 4. போரின்மிசை: படிவஞ்சுடர்; பரிவெஞ்சுடர்: பொழிய. (10)

1350. பாழிப்புய முயர்திக்கிடை யடையப்புடை படரச்
சூழிச்சடை முடிவிண்டொட வயல்வெண்மதி தொத்த
ஆழிப்புன லெரிகானில மாகாயமு மழியும்
ஊழிக்கடை முடிவிற்றிரி யுமைகேள்வனை யொப்ப,

பாழி புயம்-வலிய தோள்கள், உயர் திக்கு இடை அடைய-உயர்ந்த திக்குக்களை எட்டும்படி, புடை படர-பக்கங்களிலே வீசவும், சடை முடி சூழி-சடா மகுடத்தின் உச்சியில் அமைந்த மயிர் முடி, விண் தொட-ஆகாயத்தை அளாவவும், அயல்-அதன் ஒருபுறத்தே, வெண்மதி தொத்த-வெள்ளிய சந்திரன் தொத்திக்கொள்ளவும், ஆழி புனல்-கடல் வடிவாகவுள்ள நீரும், எரி-தீயும், கால்-காற்றும், நிலம்-மண்ணும், ஆகாயமும்-ஆகாயமும் (ஆகிய ஐம்பெரும் பூதங்களும்), அழியும்-அழிதற்குரிய, ஊழி கடை முடிவில்-ஊழியிறுதிக் காலத்தில், திரி-சுழன்று நடம்புரிகிற, உமை கேள்வனை ஒப்ப-உமையாள் கேள்வனான உருத்திரமூர்த்தியைப் போலத் தோற்றவும்,

சூழி-உச்சி; உச்சியிலுள்ள மயிர் முடியைக் குறித்தது, சூழியம்-உச்சிக் கொண்டை.

பரசுராமன், கைகளை வீசி ஆர்ப்பரித்து மிக்க கடுமையுடன் வரும் தோற்றத்துக்கு யுகாந்த காலத்திலே கோர தாண்டவம் செய்யும் உருத்திரமூர்த்தியின் தோற்றத்தைஉவமித்து, அதற்கேற்ப பரசுராமனது சடைமுடி ஆகாயத்தை அளாவுதலும், அதிலே சந்திரன் தொத்துதலும், கைகள் திக்கு முழுதும் பரவுதலுமாகிய செயல்களையும் பொருத்திக் கூறுகின்றார். பரசுராமனது கொடுமையை முன் கவியிலும் காண்க. ஐம்பூதங்களின் முறைவைப்பைப் பிறழ வைத்தது செய்யுள் நயம் கருதியது. ஐம்பெரும் பூதங்களும்

தம் நிலைகெட்டு விஞ்சி எல்லாம் அழிதற்குக் காரணமான பிரளய காலத்திலே உருத்திரமூர்த்தி கோர தாண்டவம் புரிதல் நூல்களுட் கூறப்படும். இதனைப் 'பவுரிக் கூத்து' (சுழன்றாடுதல்) என்பர். 'திண்டோள் விட்டெரியாட லுகந்தாய் நீயே' (தே. திருநாவுக்.); 'பாற்றிருமேனிக் களவீச னுடும் பவுரிகொண்டே' (திருக்கருவைக் கலித்துறையந்தாதி.) என்பன காண்க. பாழிப்புயம்: 'பாழிய பணைத் தோள்வீர' (சுந்தர. 561).

(பி - ம்.) 1. திக்கினை; திக்கடை: புடைபடருஞ்.
2. அகல்வெண்மதி; தோற்ற.
3. ஆழிப்பெரும் புனலே முதல்; ஆழிப்பொரு புனலே முதல்; புவிதான் முதல்; புயலேமுதல்: புவிகாலனல்! ஆகாசமும்: அழிய.
4. முடிவிற்றனி; உருவிற்றனி: ஒத்தான்; ஒப்பான். (11)

1351. அயிர்துற்றிய கடன்மாநில மடையத்தனி படரும்
செயிர்சுற்றிய படையானடன் மறமன்னவர் திலகன்
உயிருற்றதோர் மரமாமென வோராயிர முயர்தோள்
வயிரப்பணை துணியத்தொடு வடிவாய்மழு வுடையான்.

அயிர் துற்றிய-நுண் மணல் நிறைந்த, கடல் மாநிலம் அடைய கடல் சூழ்ந்த பெரிய இவ்வுலகு முழுதும், தனி படரும்-(தனக்கு) ஒப்பின்றிப் பரந்து செல்லத்தக்க, செயிர் சுற்றிய படையான்-சினம் மிக்க சேனையை உடையவனும், அடல் மறம் மன்னவர் திலகன்- வலிமையும் வீரமும் உடைய அரசர்க்கெல்லாம் திலகம் போலச் சிறந்து விளங்குபவனுமான கார்த்தவீரியார்ச்சுனன், உயிர் உற்றது ஓர் மரம் ஆம் என-உயிருடையதொரு மரம்போலாகி நிற்கும்படி, ஓர் ஆயிரம் உயர்தோள் வயிரம் பணை-(அவ்வருச்சுனனுடைய) ஓராயிரம் எண்கொண்ட சிறந்த கைகளாகிற வயிரம் பாய்ந்த கிளைகள், துணிய-வெட்டுண்ணுமாறு, தொடு-வீசிய, வடிவாய் மழு உடையான்- கூரிய வாயையுடைய மழுப்படையையுடையவனும்,

கார்த்தவீரியார்ச்சுனன், சந்திர வமிசத்தைச் சார்ந்தவன்; ஆயிரம் கைகளும், மிக்க பராக்கிரமமும், நற்குணங்களும் வாய்ந்து, மிகப்பெரும் படையையும் உடையவனாய், அவன் காலத்து அரசர்கட்கெல்லாம் மேலாகிச் சிறந்து விளங்கினவன். தன் புய வலியால் இராவணனையே கட்டிச் சிறைப்படுத்தினவன். அத்தகைய இவன், ஒருகால் பரசுராமனுக்குத் தந்தையாகிய சமதக்கினி முனிவன்பால் காமதேனுவைக் கவர்ந்து பிழைபட்டமையால், பரசுராமன் மிக்க சினங்கொண்டு சென்று அவனை எதிர்த்து தன் கையிலுள்ள பரசுவினாலேயே அவனுடைய ஆயிரங்கைகளையும் தலையையும் அறுத்து வீழ்த்தி, அவனுடைய சேனைகளையும் அழித்துவிட்டான் என்பது வரலாறு. கார்த்த வீரியனின் சிறப்புத் தோன்ற, 'மறமன்னவர் திலகன்' என்றார். கவியில் அவன் பெயர் கூறாவிடினும் 'ஓராயிர

முயர்தோள்' என்ற விசேடணத்தால் அவனைக் குறிப்பித்தார். அவனை ஆயிரங் கிளைகளுடைய ஒரு மரமாகவும் அவன் கைகளைக் கிளைகளாகவும் உருவகித்தார். இத்தகைய சிறப்புக்கள் மிக்க கார்த்தவீரியார்ச்சுனனை, துணையொருவருமின்றித் தனியே எதிர்த்துத் தொலைத்தமையால், பரசுராமனது நிகரற்ற ஆற்றல் புலப்படுவதாகும்.

மழு-பரசு; கைக்கோடாலி. 'படையான்' என்பதனைப் பரசுராமனுக்கு விசேடணமாக்கிக் கூறுவாருமுளர்.

(பி - ம்.) 1. அயிர் சுற்றிய: தனிபடரச்; தனிப்படரும். 2. செயிர் செற்றிய; துற்றிய; பற்றிய; படையாருடன்: மறுமன்னவர் திலதன். 3. உயிர் பெற்றதொர்; குற்றதொர்: உளதோள். 4. வயிரக்கிரி: துணியத்தெறும்: வடிவாண்மழுவுடையோன்; வடிவாயுடை மழுவான். (12)

1352. நிருபர்க்கொரு பழிபற்றிட நிலமன்னவர் குலமும்
கருவற்றிட மழுவாள்கொடு களைகட்டுயிர் கவரா
இருபத்தொரு படிகாலிமிழ் கடலொத்தலை யெறியும்
குருதிப்புன லதனிற்புக முழுகித்தனி குடைவான்.

நிருபர்க்கு-அரசர்களுக்கு, (க்ஷத்திரியர்களுக்கு), ஒரு பழி பற்றிட-ஒரு பழிப்பு (இழிவு) உண்டாகும்படி, நிலம் மன்னவர் குலமும் - உலகத்திலுள்ள அரசர் குலம் முழுதும், கரு அற்றிட-வேரோடு அழியும் வகையில், மழு வாள் கொடு-தன் கையிலுள்ள மழுப்படையால், இருபத்தொரு கால் படி உயிர் கவரா-இருபத்தொரு முறை பரம்பரையாக அவர்களுயிரைக் கவர்ந்து, களைகட்டு-(அரசர் குலத்துக்) களையை நீக்கி, இமிழ் கடல் ஒத்து அலை எறியும்-ஒலிக்கின்ற கடல்போல அலைமோதுகின்ற, குருதி புனல் அதனில்-(அவ்வரசர்களுடம்பினின்றும் வந்த) இரத்த வெள்ளத்தில், புக முழுகி-தன்னுடம்பு முழுதும் அமிழும்படி முழுகி, தனி குடைவான்-தான் தனியே (பிறரொருவர் செய்யாத முறையில்) நீராடியவனும்,

பரசுராமன் க்ஷத்திரிய குலத்தையே நாசம்செய்தமை இதனால் கூறப்படுகின்றது. பரசுராமன் கார்த்தவீரியார்ச்சுனனைக் கொன்றதனால், அவன் புதல்வர்கள் மிக்க சினங்கொண்டு, பழிக்குப்பழி வாங்கும் பொருட்டுப் பரசுராமன் இல்லாத சமயம் பார்த்துச் சென்று, அவன் தந்தையாகிய சமதக்கினி முனிவரைக் கொன்றுவிட, அவர் பத்தினி ரேணுகாதேவி, தன் கணவனையிழந்த துக்கத்தால் இருபத்தொருமுறை மார்பில் அடித்துக்கொண்டு அழுது புலம்பவே, இதனையறிந்த பரசுராமன், ஆவேசங்கொண்டு, 'க்ஷத்திரிய குலத்தையே நாசஞ் செய்வே'னென்று எழுந்து இருபத்தொருமுறை அவர்களைக் கொன்றழித்து, அவர்களுடைய இரத்தத்தைத் தேக்கி அதில் முழுகித் தன் தந்தைக்குரிய நீர்க்கடன்கள் செய்தானென்பது வரலாறு.

1372-பார்க்க. அரசர் பலர் அந்தணனொருவனால் அழிக்கப்பட்டமை அரசர் குலத்துக்குப் பழி. அன்றி, பழியென்பது குற்றமற்ற சமதக்கினி முனிவரைக் கொன்றமை யென்றும் கூறுவர். கார்த்தவீரியன் சமதக்கினி முனிவரிடமிருந்து காமதேனுவைக் கவர்ந்ததும், அவன் மக்கள் அம்முனிவரைக் கொன்றதும் செருக்கினால் நேர்ந்த பழிக்குரிய செயல்களாதலால், 'நிருபர்க்கொரு பழிபற்றிட' என்றது அவர்கள் செயலைக் குறித்ததெனலாம். கார்த்தவீரியனே சமதக்கினியைக் கொன்றானெனக் கூறுதலுமுண்டு. அறநெறி தவறிய இச்செயல்களால் அரசர் குலத்துக்கே இழுக்கு நேர்தலின், அது தீரக் 'களைகட்டு' என்றார்.

படிகால்-தலைமுறை யென்றலுமாம். 'ஏழேழ் படிகால் எமை யாண்ட பெம்மான்' (தேவாரம்); கால்-காற்று எனலும் ஆம். பரசுராமன் இருபத்தொருமுறை அரசரை அழித்து, அவர்களுடைய குருதியில் முழுகினமை: 'மழுவினான்முன் மன்னரை மூவெழு, பொழுது நூறிப் புலவுறு புண்ணினீர், முழுகினான்' (சுந்தர. 536); பரசுவை 'மழுவாள்' எனல்: 'மழுவாளவன்' (1355); 'மழுவாணெடியோன்' (மணி. 22: 25); 'மழுவாளான் மன்னர் மருங்கறுத்தான்' (தொல். பொருள். சூ. 68-ந. மேற்,).

(பி - ம்.) 2. உயிர்கவர; கவர்வான்; களைவான்.
3. எழுகடலொத்து; உமிழ்கடலொத்து: அலைபெருகும்.
4. குருதிக்குரை புனலிற்; குரைகடலிற்: முழுகத்: தனியெழுவான். (13)

1353. கமையொப்பதொர் தவமுஞ்சுடு கனலொப்பதொர் சினமும்
சமையப்பெரி துடையானெறி தள்ளூற்றெதிர் தளரும்
அமையத்துயர் பறவைக்கினி தாரும்வகை சீருச்
சிமையக்கிரி யுருவத்தனி வடிவாளிக டெரிவான்,

கமை ஒப்பது ஓர் தவமும்-பொறுமையே உருவமாதற்குரிய ஒப்பற்ற தவமும், சுடு கனல் ஒப்பது ஓர் சினமும்-(அத்தவத்துக்கு மாறாக) எரிக்கும் தீப்போன்ற பெருஞ்சினமும், சமைய-தன்னிடத்தே ஒருங்கு பொருந்த, பெரிது உடையான்-அவற்றைப் பேரளவில் உடையவனும், உயர் பறவைக்கு-(பறவைகளுள்) உயர்ந்த அன்னப் பறவைகளுக்கு, எதிர் நெறி தள்ளூற்று-எதிரே (செல்ல வேண்டிய) வழி தடைப்படுதலால், தளரும் அமையத்து-அவைகள் சோர்வுற்ற போது, ஆறு இனிது ஆம் வகை-(அவைகளுக்கு) வழி இனிதாகும் வண்ணம், சீரு-சீற்றங்கொண்டு, சிமையம் கிரிஉருவ-(அவைகளுக்குத் தடையாயிருந்த) உயர்ந்த சிகரங்களையுடைய கிரவுஞ்ச மலையை ஊடுருவித் தொளைக்கும்படி, தனி வடி வாளிகள்-நிகரற்ற கூரிய அம்புகளை, தெரிவான்-தெரிந்தெடுத்துத் தொடுத்தவனும்,

பரசுராமனும் முருகக் கடவுளும் சிவபெருமானிடத்தே விற் பயிற்சி முதலியன பெற்று அவற்றில் தேர்ந்தனர். அவர்களுடைய ஆற்றலைச் சோதிக்கும் பொருட்டுச் சிவபெருமான், எதிரேயிருந்த கிரவுஞ்ச மலையை அவர்களுக்குக் காட்டி, இம்மலை தொளைபடும்படி நீங்கள் அம்பு செலுத்தல் வேண்டும் எனக் கட்டளையிட, முதலில் முருகக் கடவுள் அவ்வகையில் முயன்று தோல்வியுற, பரசுராமன் மிக்க சீற்றத்தோடு அம்புகளைச் செலுத்தி அம்மலையைத் தொளைத் திட்டான். பின்பு முருகன் தன் வேலால் அதனை யிருகூறாகப் பிளந் தான்; என்பர். மற்றும், அம்மலையின் தென்புறத்தே பல விடங்களில் வாழ்ந்துவந்த அன்னப் பறவைகள், தாம் இருத்தற் கிடமான தாமரைப் பூக்கள் அவிந்து கேடுறும் பனிக்காலத்தில், இமயமலைச் சாரலிலே தமக்கு இதமான மானசசரசில் சென்று தங்க வெண்ணிப் போக முயலும்போது, மிகவுயர்ந்த கிரவுஞ்சமலை யைக் கடந்து செல்லவியலாமல் தடைப்பட்டுச் சோர்வடைந்திருந் தன. அம்மலை தொளைபட்டுச் சிதைவுற்றதனால் அவைகளுக்கு வழி யுண்டாகி, அவை தம் விருப்பப்படி செல்லலாயின என்பது வரலாறு. இதனால், பரசுராமனது பேராற்றல் புலப்படுவதாம். தவத்துக்கு இன்றியமையாது வேண்டப்படுவது மிக்க பொறுமையாதலால், 'கமையொப்பதொர் தவம்' என்றும், இதற்குமாறான சினமிகுதி பரசுராமனிடத்து இருந்தும், அவன் தவ ஆற்றலுங் குன்றாது சிறந் திருந்த தனிப் பெருமையுடையவனென்பது பட, 'தவமும் சினமும் சமையப் பெரிதுடையான்' என்றும் கூறினர். 'நனி மாதவமுடை யாய்' (1360) எனத் தசரதன் கூற்றாகப் பின்னும் கூறுதல் காண்க.

'கிரவுஞ்சம்' என்பது ஒரு பறவையின் பெயராதலால், கிரவுஞ் சகிரி தமிழில் 'குருகு பெயர்க்குன்றம்' என வழங்கப்பெறும்; முருகன் 'குருகுபெயர்க் குன்றம் கொன்றோன்' எனப்படுவான்; (மணி. 5: 13; சிலப். 24: 'சரவண'; ஷி. 'ஆய்வளை' காண்க).

(பி - ம்.) 1. சுடு கனலொப்பன; கடுவிடமொப்பதொர்; கடுமுனியொப்பதொர்.
2. உடையானெதிர்; உடையானிடை; உடையானடை: தளர்வுற்றிடை; தளருற்றிடர்; அடையாதிடை: தவிரும்; தள்ளும்.
3. இனிதாறுமவை வீரர்.
4. இமைக்கிரி; வாளிகளெய்தான்; வாள்கொடெய்தான்; எய்வான். (14)

இதன்பின் ஒரு பிரதியிற் காணப்படும் ஒரு பாடல்:

கயிலைக்கிரி தனைமுடிய வன்றிற்கிரி கந்தன்
அயிலைப்புக விடர்விட்டது போலேழ்வழி யாகச்
சயிலத்துளை படவெய்தனை வயிறெற்றிய வதனால்
முயலுற்றவர் திருபக்குல மூவேழ்முறை முடித்தான்.

### பரசுராமன் வருகை கண்டு தசரதன் வருந்துதல்

1354. சையம்புக நிமிரக்கட றழுவும்படி சமைவான்
மையின்னுயர் மலைநூறிய மழுவாளவன் வந்தான்
ஐயன்றனை யரிதிற்றரு மரசன்னது கண்டான்
வெய்யன்வர நிபமென்னைகொ லெனவெய்துறு மெல்லை,

சையம் புக-மலையும் தன்னுள் அடங்கும்படி, நிமிர் அ கடல்-கொந்தளிக்கும் அந்தக் கடலும், தழுவும்படி சமைவான்-தன தாணையை ஏற்குமாறு செய்தவனும், மையின் உயர்மலை நூறிய-மேக மண்டலத்தை அளாவிய (முற்கூறிய) கிரவுஞ்ச மலையின் செருக்கை யொழித்தவனுமான, மழு வாள் அவன்-மழுப்படையை உடைய அப்பரசுராமன், வந்தான்-(தசரதன் முதலியோர்க்கு எதிரில்) வந்து கொண்டிருந்தான்; ஐயன் தனை-(யாவர்க்கும்) தலைவனான இராம பிரானை, அரிதில் தரும் அரசு-அரிதாகப் பெற்றெடுத்த சக்கரவர்த்தி, அன்னது கண்டான்-(அவ்வாறு பெருஞ்சினத்துடன் அவன்) வருவ தனைக் கண்டு, 'வெய்யன்-கொடியவனான இவன், வர-இப்போது இங்கே வருதற்கு, நிபம் என்னை கொல் என-காரணம் யாதோ, வென்று, வெய்துறும் எல்லை-மனம் வருந்தும்போது,

இஃது, அடுத்த பாடலோடு தொடர்ந்து, அதன் மூன்றுமடி யில் வரும் 'சென்றான்' என்பதனோடு முடியும், சையம் கடல் என்ற விடங்களில் உயர்வு சிறப்பும்மை தொக்கது.

திருமாலின் அம்சாவதாரமாய், பிருகு முனிவர் வமிசத்தில் தோன்றி, 'இராமன்' என்ற பெயருடனிருந்த பெரியோன், சிவபெரு மானைக் குறித்துக் கடுந்தவம் செய்து, அவரருளால் சிரஞ்சீவியாதல் முதலிய வரங்களையும் பரசுப் படையையும் பெற்று, அது முதல் பரசுராமன் எனச் சிறப்பாக வழங்கப்பெற்றமையின், அச்சிறப்புத் தோன்ற அம்மழுவைப் பலவிடத்தும் எடுத்துக்கூறுவர் ஆசிரியர் 1346-ஆம் பாடல் முதல் இதுகாறும் ஐந்திடங்களில் மழுவைக் கூறி யிருத்தல் காண்க.

அரசர்களையெல்லாம் வென்று கொன்றொழித்துப் பூமி முழுதும் தன தாக்கிக் கொண்ட பரசுராமன், இறுதியில் சினம் அடங்கி, தன் வசமிருந்த பூமி முழுவதையும் காசிப முனிவருக்குத் தானம் செய்து விட்டு, அதன்பின் அவ்வெல்லையுள் தான் இருத்தல் தகாதென்று கருதி, சையமலையின் மீதேறி நின்று தன் கைக் கோடாலியைக் கட லுள் வீசியெறிந்து, அது சென்று விழுந்த இடம்வரையில் கடல் ஒதுங்கித் தரை காட்ட, அங்கே சென்றிருந்து தவமியற்றலானான் என்றும், அந்நிலப்பகுதி பரசுராமக்ஷேத்ரம் என்ற பெயரால் வழங்கு மெனவும் கூறுவர். இவ்வரலாற்றினையுட் கொண்டது, 'சையம்புக நிமிரக்கடல் தழுவும்படி சமைவான்' என்பது; இதற்கு வேறு வகை

யாகவும பொருள் கூறுவர். கிரவுஞ்ச மலையைப் பற்றிய செய்தியை அனுவதித்து இங்கும் கூறியுள்ளார். சினமடங்கித் தவம் செய்து வருவதாகக் கருதப்பெற்ற பரசுராமன் இங்கே கடுஞ்சினத்துடன் இப்போது வருவது குறித்துச் சக்கரவர்த்தி ஐயுற்று மன்வருத்தங் கொண்டிருக்கையில், எதிர் வந்த அவன், நேரே இராமபிரான் ஏறி வரும் தேர் முன்னே சென்றுன் என்பது அடுத்த கவியாற்பெறப்படும்.

(பி - ம்.) 1. சையம்புகை; சையம்புடை: திமிரக்கடல்.
2. மையின்றுயர்; மையின்னுயிர்: மழுவானவன்.
3. அரிதிற்பெறும்; அருகிற்றரும்: அருள்மன்னவனும் மன்னன.
4. வெய்யன் வருநிலைவென்னைகொ லெனவேதுறும்: ஏதுவை; எல்வை; வேலை; அளவில். (15)

## பரசுராமன் இராமபிரானெதிரே செல்லல்

1355. பொங்கும்படை யிரியக்கிளர் புருவங்கடை நெரிய
வெங்கண்பொறி சிதறக்கடி துருமேறென விடையாச்
சிங்கம்மென வுயர்தேர்வரு குமரன்னெதிர் சென்றுன்
அங்கண்ணழ கனுமிங்கிவ ஞரோவெனு மளவில்.

பொங்கும் படை இரிய-(சக்கரவர்த்தியின்) மிகப்பெரிய சேனையும் (தன்தோற்றத்தைக்கண்டு)அஞ்சவும், கிளர் புருவம்-மேலெழுந்த புருவங்கள், கடைநெரிய - கடைப்பாகம் (சினத்தின் அறிகுறியாக) நெரியப்பெறவும், வெம் கண் பொறி சிதற-கொடிய கண்கள் தீப்பொறிகளைச்சிந்தவும், உரும் ஏறுஎன-பேரிடிபோல, கடிது விடையா-கடுமையாக விடைத்து, உயர்தேர்-உயர்ந்த தேரின்மேல், சிங்கம் என வரு-ஆண் சிங்கம்போல (அமர்ந்து) வருகிற, குமரன் எதிர் சென்றுன்-சக்கரவர்த்தி குமாரனுன இராமபிரானெதிரே போனுன்; அங்கண்-அப்போது, அழகனும்-பேரழகனுன இராமபிரானும், 'இங்கு இவன்-இவ்வாறு வரும் இவன், ஆரோ! எனும் அளவில்-யாரோ!' என்று மனத்தில் எண்ணியவளவில்,

இஃது அடுத்த கவியுடன் தொடரும். விடைத்தல்: ஆரணிய. 464, 742.

(பி - ம்.) 1. புருவக்கடை.
2. எங்கும் பொடி சிதறக்; சிதறிக்: கடையுருமேறென விடியாச்: வெடியாச்; விசையாச். 3. உருதேர்வரு.
4. அரசவனும்மிவன்; அரசவனும்மவன்; அரசன்மைந்தனும் (16)

1356. அரைசன்னவ னிடைவந்தினி தாராதனை புரிவான்
விரைசெய்முடி படிமேலுற வடிமீதினில் விழவும்
கரைசென்றில னனையானெடு முடிவின்கனல் கால்வான்
முரைசின்குரல் படவீரன தெதிர்நின்றிவை மொழிவான்.

அரைசு-சக்கரவர்த்தி, அன்னவனிடை வந்து-அப்பரசுராம னிடம் வந்து, இனிது ஆராதனை புரிவான்-நன்கு உபசாரங்கள் செய் பவனாகி, விரை செய்முடி-மணம் பொருந்திய (தன்) தலை, படிமேல் உற-பூமியில் படும்வண்ணம், அடிமீதினில் விழவும்-பாதங்களில் விழுந்து வணங்கவும், அனையான்-அப்பரசுராமன், கரை சென்றிலன்-(தன் சினத்தின்) கரை காணாமல், நெடு முடிவின் கனல் கால்வான்-ஊழியிறுதி போலத் தீ யுமிழ்ந்து கொண்டு, வீரனது எதிர் நின்று-இரகுவீரன் முன்னே போய்நின்று, முரைசின் குரல்பட-முரசம்போல் அதிருங் குரலில், இவை மொழிவான்-(பின்வரும்) இவற்றைச் சொல்லலானான்.

*(1355)* ஆரோவெனுமளவில் *(1356)* எதிர் நின்று இவை மொழிவான் எனக் கூட்டி முடிக்க. அவன் மொழிந்தவை அடுத்த கவியுட் காண்க. கரை செல்லாமை-முடிவு காணாமை.

பரசுராமனது கடுஞ்சினங்கண்டு கவலையுற்ற சக்கரவர்த்தி, அப்பரசுராமனை உபசாரங்களால் மகிழ்வித்துச் சினந்தணிவிக்கக் கருதி அவனிடம் சென்று சாஷ்டாங்கமாக அவனைப் பணிந்ததையும் பொருட்படுத்தாமல், அவன் நேரே இராமபிரானெதிரில் சென்று நின்று தன் வருகையின் காரணத்தைக் கூறலானான் என்க.

அரைசு, முரைசு: அகரஐகாரப் போலி.

முரைசின் குரல்பட........மொழிவான்: ஒப்பு: 'இடியுமிழ் முரச நாண வின்னண மியம்பி னானே'; *(சீவக. 2900.)*

(பி - ம்.) 1. அரசன் னிவனிடையே புகுந்து.
2. விரைசேர்முடி படிமேலவ னடிமேலுற: அடியின்மிசை: விழலும்.
3. கரைசேறிலன்: அனையானெடு: முனிவின்கனல்.
4. அடல்வீரனதெதிர் சென்றிவை; சென்றுரை: மொழியும். (17)

### பரசுராமன் கூற்று

1357. இற்றோடிய சிலையின்றிற மறிவேனினி யானுன்
பொற்றோள்வலி நிலைசோதனை புரிவானசை யுடையேன்
செற்றோடிய திரடோளுறு தினவுஞ்சிறி துடையேன்
மற்றோர்பொரு ளிலையிங்கிதென் வரவென்றன னுரவோன்.

உரவோன்-வலிமிக்க பரசுராமன், (இராமபிரானை நோக்கி), 'இற்று ஓடிய சிலையின் திறம்-(உன் கையால்) ஒடிந்துபோன அவ்வில் லின் தன்மையை, (அது முன்னமே பழுதுபட்டதென்பதை), யான் அறிவென்-நான் அறிவேன்; (அது கிடக்க); இனி-இப்போது, உன் பொன் தோள்-உன்னுடைய அழகிய புயங்களின், வலி நிலை-வலிமை யின் நிலையை, சோதனை புரிவான் நசை உடையேன்-பரிசோதித்து அறியும் விருப்பமுடையேன்; செற்று ஓடிய-(அரசர் பலரை) வென்று

நிமிர்ந்த, திரள்தோள் உறு தினவும்-திரண்ட என் புயங்களில் (போர் விருப்பால்) உண்டாகிற தினவும், சிறிது உடையேன்-சிறிது பெற் றிருக்கின்றேன்; இங்கு என் வரவு இது-இங்கே (இப்போது) என் வருகைக்குக் காரணம் இதுவே; மற்று ஓர் பொருள் இலை-வேறொரு செய்தியுமில்லை'; என்றனன்—.

'இராமா! இப்போது நான் உன்னோடு போர்செய்தல் குறித்தே இங்கு வந்துள்ளேன்; அதனால் உன் திறமையை உண்மையாக நான் காணலாகும்; மிதிலையில் நீ முறித்த வில் முன்னே ஊனமானது; அதனை முறித்தது பெரிய வீரச்செயலென்று கருதாதே' எனப் பரசு ராமன் இராமபிரானை நோக்கிக் கூறினான் என்க. மேலே 1364-ஆம் பாடலில் தொடங்கி அவ்வில்லின் வரலாற்றைப் பரசுராமன் கூறுதல் காண்க.

போர்பெறாமல் தோள் தினவுறுதல்: 'மொய்பெறுத் தினவுறு முழவுத் தோளினான்' (180),

(பி - ம்.) 1. அறிவென்னினி; அறிவன்னினி: யானும்.
2. சிலைசோதனை: புரிவானிலை; புரிவானினைவு: உடையவ்; உரையேன்.
3. திண்டோளுறு: கிறிதுடையன்.
4. இலதிங்கிதென்; இலதிங்கென; இலையீதென; இலனீங்கிதென்: மறவோன்; அறவோன். (18)

### சக்கரவர்த்தி பரசுராமனை வேண்டல்

1358. அவனன்னது பகரும்மள வையின்மன்னவ னயர்வான்
புவனம்முழு வதும்வென்றொரு முனிவற்கருள் புரிவாய்
சிவனும்மய னரியும்மலர் சிறுமானிடர் பொருளோ
இவனும்மென துயிரும்முன தபயம்மினி யென்றான்.

அவன்-அப்பரசுராமன், அன்னது பகரும் அளவையின்-(முன் சொன்ன) அதனை இராமபிரானிடம் சொல்லிக்கொண்டிருந்தபோது, மன்னவன்-(அதனைக்கேட்ட) சக்கரவர்த்தி, அயர்வான்-மிக வருந்திய வனாகி, (பரசுராமனை நோக்கி), 'புவனம் முழுவதும் வென்று-(அரசர் களையெல்லாம் தொலைத்து) இப்பூமண்டலம் முழுவதும் வெற்றி கொண்டு, ஒரு முனிவற்கு அருள் புரிவாய்-(பின்பு அதனை) ஒரு முனி வனுக்கு (காசிபனுக்கு) தானமாகக் கொடுத்துவிட்ட பெருமை யுடையவனே! சிவனும்-சிவபெருமானும், அயன் அரியும்-பிரம விட் டுணுக்களும், அலர்-(உன் திறமைக்கு) ஒரு பொருளாக மாட்டார் கள்; (அங்ஙனமாக), சிறு மானிடர் பொருளோ-(எம்மைப்போன்ற) அற்பமானுடர் உனக்கு ஒரு பொருளாவரோ! (ஆகார்); இனி-இப் போது, இவனும் - சிறுவனாகிய இவ்விராமனும், எனது உயிரும்-என்னுடைய பிராணனும், உனது அபயம்-உனது அடைக்கலம்' என்றான்—.

'பொருள்' என்பதனை 'அலர்' என்பதன் முன்னுங் கூட்டுக.

சக்கரவர்த்தி, பரசுராமனுடைய வீரவார்த்தைகளால் மிகவும் கவலையுற்று, 'திரிமூர்த்திகளுங்கூட ஈடாகாத ஆற்றலுடைய நீர், எம்மைப்போன்ற அற்பமானுடரை ஒரு பொருளாகக் கருதிப் போருக்கழைத்தல் உமது பெருமைக்குப் பொருந்துவதாகாது. நாங்களும் உம்மோடு போர்தொடுக்கும் ஆற்றலிலோம். உம்மைச் சரணமடைகிறோம்' எனப் பரசுராமனை நோக்கிக் கூறி அவனைத் தணிவிக்க முயன்றான் என்க. தசரதனுக்கு இராமபிரான் உயிர் ஆதலின், 'அவனுக்குத் தீங்கு நேர்ந்தால் தன்னுயிரும் போய்விடும்' என்ற கருத்துடன், 'இவனும் எனதுயிரும் உனதபயம்' என்றான். 302; அயோத். 226, 594-பார்க்க. சிறு மானிடர்: கிட்கிந்தா. 49; சுந்தர. 476.

(பி - ம்.) 1. மன்னவனறைவான்.
2. முழுதையும் வென்றரு; வென்றுயர்: புரிவோய்; புரிந்தாய்.
3. சிவனும் மரியயனுமேல; அயனும் மலர்; சிவனும்மல அரியும்மல; மானிடன்; மானுடர். 4. அபயம்மிவை. (19)

1359. விளிவார்விளி வதுதீவினை விழைவாருழை யன்றோ
களியாலிவ னயர்கின்றவு முளவோகன லுமிழும்
ஒளிவாய்மழு வுடையாய்பொர வுரியாரிடை யல்லால்
எளியாரிடை வலியார்வலி யென்னாகுவ தென்றான்.

'கனல் உமிழும்-நெருப்பைக் கக்குகின்ற, ஒளிவாய் மழு உடையாய்-மிக்க ஒளியுடைய மழுவாயுதத்தை உடையவரே! விளிவார் விளிவது-கோபிப்பவர் அக்கோபத்தைக் காட்டுவது, தீவினை விழைவார் உழை அன்றோ-தீய செயல்களை விரும்பிச் செய்பவரிடமன்றோ? இவன்-சிறுவனாகிய இவ்விராமன், களியால்-(கல்வி, செல்வம், வலிமை முதலியன காரணமாக வரும்) செருக்கினால், அயர்கின்றவும் உளவோ-(உமக்குரிய மரியாதையில்) மறந்து தவறின செயல்கள் எவையேனும் உண்டோ? வலியார் வலி-வலிமிக்கவருடைய வலிமை, பொர உரியார் இடை அல்லால்-(தாம்) பொருதற்குத் தகுதியுடைய வலியோரிடத்தன்றி, எளியார் இடை-வலிமையற்ற எளியவரிடத்து, என் ஆகுவது-என்ன பயனைத் தரும்?' என்றான்—.

'போர் செய்யக்கருதுவோர் எப்போதும் தமக்கீடான வலிமை முதலியன உடையவரிடத்தே செல்வர்; வலிமையற்றவர் அவ்வலியாரோடு பொரும் ஆற்றலின்மையால் எதிரேற்று நில்லார்; ஆதலின் அவர்மேல் வலியார் செல்லார். திரிமூர்த்திகளையும் விஞ்சிய ஆற்றலுடைய நீர் இச்சிறுவனை ஒரு பொருளாக மதித்துப்போர் செய்யக் கருதுதல்தகாது. மேலும், இவன் உம்மிடத்து ஒரு சிறிதும் பிழைபட்டவனுமல்லன்; தீயவற்றை விரும்பிச் செய்பவனுமல்லன்; நும்

போன்றவர் கொல்லுதற்குரியோர் தீவினையாளரே; ஆதலால் இவனிடத்துக்கொண்ட சினம் தணிதல் வேண்டும்' என்று தசரதன் கூறினன்.

முதலடிக்கு, 'இறப்பவர்கள் இறப்பது தீவினையாளரா லன்றோ' எனவும், 'பிறரால் இறத்தற்குரியவராகி இறத்தல் தீச் செயல் செய்வாருக்கன்றோ பொருந்தும்' எனவும் பொருள் கொள்ள லாம். இவற்றிற்கு முறையே, 'நீர் தீவினையாளருமல்லீர்'; இராமன் தீச்செயல் செய்பவனுமல்லன்;' என்பன கருத்தாகக் கொள்க.

(பி - ம்.) 1. அழிவது: தீயன: விழைவாருயிர்: அன்றே; இன்றோ.
2. களியாவிவன்; களியாலிவண்; களியானிவன்: அயர்கின்றதும்; அயர் கின்றன; உயர்கின்றவும்: உளவே.
3. ஒளிவான்; உரியாருழை: உரியார்களை; உரியார்களொடு.
4. எளியாருழை; எளியார்களை; வலியார்வலிந்து: வலியார்நலிவு வலியார்பொரில்: என்னுகுவதென்னோ; என்னுகுவதென்னு. (2௰)

1360. நனிமாதவ முடையாயிது பிடிநீயென நல்கும்
தனிநாயக மூலகேழையு முடையாயிது தவிராய்
பனிவார்கடல் புடைசூழ்படி நரபாலரை யருளா
முனிவாறினை முனிகின்றது முறையோவென மொழிவான்.

'நனி மாதவம் உடையாய்-மிகப் பெருந்தவத்தையுடையீர்! இது பிடி நீ என-இதனை நீர் பெறுக என்று சொல்லி, உலகு ஏழையும் நல்கும்-(காசிப முனிவருக்கு) ஏழுலகங்களையும் தானமாக அளித்த, தனி நாயகம் உடையாய்-ஒப்பற்ற தலைமையுடையீர்! இது தவிராய்-இவ்வெகுளியைக் கைவிடுக; பனிவார் கடல் புடை சூழ் படி-குளிர்ச்சி யுடைய பெரிய கடல் நாற்புறமும் சூழ்ந்துள்ள பூமியில்உள்ள, நரபா லரை அருளா-அரசர்களிடம் அருள் கொண்டு, முனிவு ஆறினை-(தானத்தின் பின்) சினம் தணிந்தீர்; (அத்தகைய நீர்), முனிகின்றது முறையோ என-(இவனைக்)கோபித்தல் முறையாகுமோ' என-என்று கூறி, மொழிவான்-மேலும் சொல்லுவான்.

'காசிப முனிவருக்கு ஏழுலகையும் தானமாக அளித்தபின், அரசர்களிடமிருந்த சினந்தணிந்து தவம் மேற்கொண்ட நீர், இப் போது இவனை வெகுளுவது முறையன்று; ஆதலால் இவனிடங் கொண்ட சீற்றத்தை விடுவீராக' என்று கூறி வேண்டினன் தசரதன்.

'நனி மாதவமுடையாய்' என்பதனை, பரசுராமன் காசிப முனி வரை நோக்கிக் கூறியதெனவும் கொள்ளலாம். 'இது தவிராய்' என்றது, 'இராமனது புயவலிமையைப் பரிசோதிக்க விரும்பும் உம் முடைய விருப்பத்தைக் கைவிடுக' எனக் கூறியதும் ஆம்.

(பி - ம்.) 1. நனி மாதவ வடிவாயிது: பிடிநீயென நயந்தே; பணிநீயென நல்காத்! விடுநீயென நல்காய்.
2. தனிநாயக: உலகேனழியு மளித்தாயிது: தவிர்வாய்.
3. பனியார்: பனிவாழ்; அருளான்; அருளால்; அருளி.
4. முனிகின்றனை முறையோவிது மொழியாய்: முறையோவினி; முறையோவிது: மொழியா. (21)

இப்பாடல் ஒரு பிரதியில் இல்லை.

1361. புறனின்றவ ரிகழும்படி நடுவின்றலை புணராத்
திறனின்றுயர் வலியென்னதொ ரறனின்றகு செயலோ
அறனின்றத னிலைநின்றுயர் புகழொன்றுவ தன்றோ
மறனென்பது மறவோயிது பழியென்பது மதியாய்.

(மேலும் அவன்), 'மறவோய்-வீரபராக்கிரமமுடையீர்! 'புறன் நின்றவர் இகழும்படி-பக்கங்களில் உள்ளவர் பழிக்கும் வண்ணம், நடுவின் தலைபுணரா திறன் நின்று-நடுநிலையிலே பொருந்தாத வகையில் நின்று, உயர் வலி என்-அதனால் மேம்படுகிற வலிமை என்ன பயனுடையது? அது-அவ்வாறு வலிமையைச் செலுத்துவது, ஓர் அறனின் தகு செயலோ-அறத்தொடு பொருந்திய தக்கதொரு செயலாகுமோ? மறன் என்பது-(உண்மையான) வீரம் என்பது, அறன் நின்ற தன்நிலைநின்று-(நிலைபெற்றதான)தருமத்தின் வழியிலேநின்று, உயர் புகழ் ஒன்றுவது அன்றோ-(அதனால் வரும்) உயர்ந்த புகழைப் பெறுவதன்றோ? இது-இப்போது நீர் செய்யப்புகுவது, பழி என்பது மதியாய்-பழிக்கிடமான தென்பதைக் கருதுக.

'நடுவுநிலை தவறாது நீதியோடு நின்று பிறரிடம் வலிமையைக் காட்டிப் புகழ்பெறுவதே உண்மையான வீரத்துக்குரிய செயலாகும். அங்ஙனமின்றி, ஒரு குற்றமும் இல்லாமல், நும்மைச் சரண்புகும் எம்மிடம் நும் வலிமையைக் காட்ட நினைப்பது, சிறந்த தவமும் வீரமும் ஒருங்கே அமைந்த உமது பெருமைக்குப் பொருந்துவதாகாது; அது பழியையே தரும்; சரண் புகுவோர் நேரே பகைவராயினும் அவரை ஆதரித்தலே உண்மையான வீரத்துக்கும் அறத்துக்கும் பொருந்திய செயலாகும். நீர் செய்ய நினைப்பது இதற்கு மாறானது என்பதைக் கருதுவீராக' என்று எடுத்துக் கூறினான்.

'வலி என்னது' என்றும் பிரிக்கலாம். புறன், திறன், அறன், மறன்: இறுதி மகர-னகரப்போலி.

(பி - ம்.) 1. புறநின்றவர்: பொறைநின்றவர்; நடுவின் நிலைபுணர்வற்று; புணராப்.
2. திறனின்றயர்; திறனின்றதொர்; அறனின்றுயர்: வலியென்பதொர்; வலியென்பது: அறனின்றரு; அறிவின்றரு; அறிவின்றகு; நடுவின்றரு; நடுவின்றகு: செயலேல்.
3. அறனின்றதின்; அறனின்றலை: நிலைநின்றவை; நிறைநின்றுயர்; மறனின்றுயர்: புகழொன்றியதன்றோ.

4. மறமென்பது: மறவேலிது; மறமோவிது; மறமோவினி: வலியென்பது; வலியோவிது: லலியென்பதோர்; பிணியென்பது; பணியென்பது; மறையென்பது: வலியோ; மதியோய்; பணியாய். (22)

1362. சலத்தோடியை விலனென்மக னனையானுயிர் தபுமேல்
உலத்தோடெதிர் தோளாயென துறவோடுயி ருகுவேன்
நிலத்தோடுய ரகல்வானுற நெடியாயுன தடியேன்
குலத்தோடற முடியேலிது குறைகொண்டனெ னென்றான்.

'உலத்தோடு எதிர் தோளாய்-திரண்ட கற்றூணோடு மாறு கொள்ளும் புயங்களையுடையீர்! நிலத்தோடு-இப்பூமியுடனே, உயர் அகல் வான் உற-உயர்ந்து பரந்த ஆகாயத்தும் பொருந்த, நெடியாய்-நீண்ட புகழுடையீர்! என் மகன்-என் மகனான இவ்விராமன், சலத்தோடு இயைவு இலன்-(நும்மிடம்) பகையோடு பொருந்தியவனல்லன்; அனையான் உயிர் தபுமேல்-அவனுயிர் நீங்குமாயின், எனது உறவோடு-(தந்தையென்ற) எனது உறவு முறையுடனே, உயிர் உருவேன்-உயிரையும் (நான்) இழந்தவனாவேன்; (ஆதலால்) உனது அடியேன்-நுமது அடியவனான நான், குலத்தோடு அற முடியேல்—குலத்தோடு அற்றுப்போகும் வண்ணம் (அவனுயிரை) முடித்திடாதீர்; இது குறை கொண்டனென்-இதனை (நும்மிடம்) இரந்து வேண்டுகின்றேன்;' என்றான்—.

'இராமனே எனதுயிராதலால், அவனிறந்தால் என்னுயிரும் நில்லாது தானே நீங்கும்; இவற்றால் உறவினர் பலரும் உயிரிழக்க நேரும்; எனவே என் குலமே கேடுறும்; இத்தகைய குல நாசமாகிற பெருங் கேட்டுக்குக் காரணமாதல் நுமது பெருமைக்கழகிதன்று; அதனால், இராமனிடங் கொண்ட கோபத்தைவிட்டு, எம் குலத்தைக் காத்தருளும்படி நும்மை யிரக்கின்றேன்; இராமன் நும்மிடம் பகைகொண்டு நுமக்குத் தீமை செய்தவனுமல்லன்; எவ்வகையிலும் நுமது சினத்திற்கிடமானவனுமல்லன்; அருள் செய்க' என்று கூறி வேண்டினான் தசரதன். சலத்தோடு இயைவு இலன் - உமது கோபத்திற்குப் பாத்திரமாதற்குரியவனல்லன் என்றலுமாம். இச்செய்யுளுக்கு வேறு வகையிலும் பொருள் கூறுவர்.

இராமபிரான் தசரதனது உயிர்: 1358-ஆம் பாட்டின் குறிப்பு நோக்குக.

(பி - ம்.) 1. இயல்பிலன்; இகலிலன்: இனியானுயிர்; அவனுருயிர்: தருமேல்; தவறின்: தருவாய்.

2. உலத்தோடியை; உயர், உறழ்: உறவோருயிர்: உகுவன்; உகுமால்; அகல்வான்; அகல்வேன்; அகலா.

3. நிலத்தோடுயர் கதிர்வானுற; கதிர்வானுறு; கதிவானுற; கதிவானுறும்: நிலத்தோடிய கலிவானுற: நெடியோய்; வடிவோய்.

4. குறைகொண்டனன்; கொண்டனை; கொண்டருள். (23)

1363. என்றுவடி விழுவானையு மிகழாவெரி விழியாப்
பொன்னார்சிலை யுரவோனெதிர் புகுவானிலை யுணராத்
தன்னாலொரு செயலின்மையை நினையாவுயிர் தளரா
மின்னாலயர் வுறுவாளர வெனவெந்துய ருற்றான்.

என்று-என்று (முற்கூறியவாறு) சொல்லி, அடி விழுவானையும்-தன் பாதங்களில் விழுந்த தன்னையும், இகழா-அலட்சியம் செய்து, எரி விழியா-தீயெழ விழித்து, பொன் ஆர் சிலை உரவோன் எதிர் புகுவான் நிலை-அழகிய அரிய வில் வன்மையுடைய இராமபிரானெதிரே செல்லும் பரசுராமனது மனநிலையை, உணரா-(தசரதன்) கண்டறிந்து, தன்னால் ஒரு செயல் இன்மையை நினையா-(பரசுராமனைத் தணிவித்தற்கு) இனித் தன்னால் ஆவது ஒரு செயலும் இல்லையென்பதை நினைந்து, உயிர் தளரா-உயிர் சோர்ந்து, மின்னால் அயர்வு உறும் வாள் அரவு என-(இடியொடு கூடிய) மின்னலால் அஞ்சிச் சோரும், ஒளியுடைய நாகம்போல, வெம்துயர் உற்றான் - கொடுந் துன்பமடைந்தான்.

அபயம் புகுந்தவரை ஆதரித்தல் கடன் என்ற அறநெறிக்கு மாறாக, தன் அடிபணிந்து இரந்த தசரதனைச் சிறிதும் பொருட்படுத்தாமலும், சினந் தணியாமலும் பரசுராமன் இராமபிரானெதிரே அணுகிச் சென்றமையின், தசரதன் மேலே என்னாகுமோ வென்று மிகவும் அஞ்சிக் கலக்கமுற்றான். யாவரையும் வணங்காத சக்கரவர்த்தி தன் அடிகளில் விழுந்து வணங்கவும், அதனையும் மதியாது சென்றான் என்றமையின், 'அடிவிழுவானையும்' என்றதில் உம்மை உயர்வு சிறப்பு. 'சிலை உரவோன்' என்றது இராமபிரானது வில் திறமை கூறியவாறும்; 'வல்வில்லிராமன்' என வழங்குதலும் காண்க. இராமபிரான் கை வில், வலிமையோடு அழகும் மிக்கதாகலின் 'பொன்னார் சிலை' எனப்பட்டது. அரவு மின்னுக்கு வெருவுதல்: 'நின்னிடை மின்னென வெருவிப், படங்கொள் நாகங்கள் முழைபுகப் பதைப்பன பாராய்' (அயோத். 752). அச்சமிகுதிக்கு இவ்வுவமை கூறுதல் கவிஞர் மரபு.

(பி - ம்.) 1. மிகவேயெரி விழியால்.
2. பொன்னார் கலையணிவான்; கலையுடையான்; நிலையுணரத்.
3. உயிரழியா.
4. வெந்துறலுற்றான்; வெய்துறலுற்றான்; வெய்துறும் வேலை. (24)

### பரசுராமன் கூற்று

1364. மானம்மணி முடிமன்னவன் மதிசோரவு மதியான்
தானந்நிலை யழிவானுறு வினையுண்டது தவிரான்
ஆனம்முடை யுமையண்ணலை யந்நாளுறு சிலைதான்
ஊனம்முள ததன்மெய்ந்நெறி கேளென்றுரை புரிவான்.

(பரசுராமன்), மானம் அணி முடிமன்னவன்-மானத்தையே அணிகலமாகக்கொண்ட சக்கரவர்த்தி, மதி சோரவும் மதியான்-அறிவிழக்கவும் (மூர்ச்சிக்கவும்) அதனையும் பொருட்படுத்தாமலும், தான் அ நிலை அழிவான் உறு-தான் (தன்னுடைய) அந்த உயர்நிலை கெடுதற்குக் காரணமாகப் பொருந்திய, வினை உண்டது - ஊழ்வினை (தன்னைச்) சூழ்ந்துகொண்டதை, தவிரான்-விலக்க வகையற்றவனுகவும் (ஆகி), (இராமபிரானைநோக்கி), 'ஆனம் உடை-இடக்கையென்னும்வாத்தியத்தையுடைய, உமை அண்ணலை-உமையாள்கேள்வனை சிவபெருமானிடம், அ நாள் உறு சிலை-அந்நாளில் இருந்த (திரியம்பகம் என்னும்) அவ்வில்லானது, ஊனம் உளது-பழுதுடையது; அதன் மெய்நெறி கேள் என்று-அதன் உண்மையான வரலாற்றைக் கேட்பாயாக' என்று, உரை புரிவான்-சொல்லலானுன்.

'ஆனம்': 'ஆனகம்' என்னும் வடசொற்சிதைவு. விடையைக் குறிக்கும் 'ஆன்' என்னும் சொல் அம்சாரியை பெற்று நின்றதெனலுமாம். பரசுராமன் தன்னிலையிற் ருழ்வுற்றது மேலே 1374–78 ஆம் பாடல்களிற் காண்க.

(பி - ம்) 1. மானப்முடை; மானம்முள: மதிசோர்வுறல்; நிலைசோரவும்.
2. தானல்னிலை: தானின்னிலை: உறுவானுறு; உறுவானது; அழிவானெரு: நிலையுண்டது: தவிரா.
3. ஆவம் முறைபையினண்ணலை; ஆனப்முறையுமையண்ணலின்; ஆனம் முறுமுமையண்ணலை; தானந் நிலைமையி னண்ணலை: அந்நாளிறு; மேனளிறு; அன்றுளிறு.
4. அதன்பேனிலை: அதன் மெய்ந்நிலை; அதன்ருெவ்விலை: அதனின்விலை; எனுமந்நிலை: கேளியெனவுரைப்பான்; கேளென்றுரை புகல்வான்; உரைசெய்தான். (25)

இரண்டு விற்களின் வரலாறு

1365. ஒருகால்வரு கதிராமென வொளிகால்வன வுலையா
வருகார்தவழ் வடமேருவின் வலிசால்வன மனனுல்
அருகாவினை புரிவானுள னவனுலமை வனவாம்
இருகார்முக முளயாவையு மேலாதன மேனுள்.

'ஒருகால் வரு கதிர் ஆம் என-ஒற்றைச்சக்கரத்தேரில் உலகைச் சூழ்ந்து வருகிற கதிரவனைப்போல, ஒளி கால்வன-ஒளி வீசுவனவும், வருகார் தவழ் வடமேருவின்-மிக்க மேகங்கள் உலவுதற்கிடமான, வடக்கின் கண் உள்ள மேரு மலையைப்போல, உலையா வலி சால்வன-கெடாத வலிமை மிக்கனவும், யாவையும் ஏலாதன-(பிற விற்கள்) எவையும் தமக்கு நிகராதற் கிலாதனவும், மனனுல்-மனத்தினுலேயே, அருகா வினை புரிவான் உளன் அவனுல்-குறை சிறிதும் இல்லாத நிருமித்தற்றெழிலைச் செய்பவனுகவுள்ள விசுவகருமனென்னுமவனுல்,

அமைவன ஆம்-படைத்தலுற்றனவுமான, இரு கார்முகம்-இரண்டு விற்கள், மேல் நாள் உள-முன்னாளில் உளவாயின.

'சிவன் வில் ஊனமுள்ளது' என்ற பரசுராமன், அதனையும், அதனோடொத்த வலிமையுடையதாய் ஊனமற்றதான மற்றொரு வில்லையும் பற்றிய செய்திகளைக் கூறலானான்.

கால்-தேருருளை; ஆகுபெயராகித் தேரைக் குறித்தது. வில் இரண்டையும் நிருமித்தவன் 'மயன்' என்பாரும் உளர்; விசுவகர்மா என்றே வான்மீகம் கூறுகின்றது.

'வடமேருவின் வலி சால்வன': ஆரணிய. 745 பார்க்க.

(பி - ம்.) 2. வலிசால்வன வையம்; உலகில்; மன்னு; மன்னோ; மேனாள்.
3. அருளாவினை புரிவானுள அயனாலமைவனவாம்; அயனால்வருவனவாம்; மயனாலமைவனவாம்; அமைவன தாம்.
4. யாவையுமேலாவன: வையம்: அவையாம்; என்றான். (26)

இப்பாடல் ஒரு சுவடியில் இல்லை.

(வேறு)

1366. ஒன்றினை யுமையாள் கேள்வ
னுகந்தனன் மற்றை யொன்றை
நின்றுல களந்த நேமி
நெடியவ னெறியிற் கொண்டான்
என்றிது வுணர்ந்த விண்ணோ
ரிரண்டினும் வன்மை யெய்தும்
வென்றிய தியாவ தென்று
விரிஞ்சனை வினவ வந்நாள்,

'ஒன்றினை-(முற்கூறிய வில் இரண்டனுள்) ஒன்றை, உமையாள் கேள்வன் உகந்தனன்-உமாதேவியின் நாயகனான உருத்திரமூர்த்தி விரும்பியெடுத்துக்கொண்டனன்; மற்றை ஒன்றை-மற்றொரு வில்லை, நின்று உலகு அளந்த-(திரிவிக்கிரமனாகி) ஓங்கி நின்று உலகங்களை யெல்லாம் (தன் ஈரடியால்) அளந்துகொண்ட, நேமி நெடியவன்-சக்கரந் தாங்கிய பெரியோனான திருமால், நெறியின் கொண்டான்-முறையாகத் (தனக்கு) எடுத்துக்கொண்டான்; என்ற இது உணர்ந்த விண்ணோர்-என்ற இச்செய்தியையறிந்த தேவர்கள், இரண்டினும்-இவ்விரண்டு விற்களுள்ளும், வன்மை எய்தும் வென்றியது யாவது என்று-வலிமையால் அடையத்தகும் வெற்றியையுடையது எது என்று, விரிஞ்சனை வினவ-பிரமதேவனைக் கேட்க; அந்நாள்-அந்த நாளில்,

இதுவும் அடுத்த பாடலும் குளகம்; அடுத்த பாடலின் இறுதியில் உள்ள 'மூட்டி விட்டான்' என்பதனோடு முடியும். என்றிது : தொகுத்தல்.

வில் இரண்டனுள் வலியது எது என்று கேட்கு முகத்தால், அவற்றைக் கைக்கொண்டார் இருவருடைய ஆற்றலேயும் சோதித்தறியத் தேவர்கள் விரும்பினரென்பதும், அஃதுணர்ந்த பிரமன், அவற்றை வியாஜமாகக் கொண்டு அவ்விருவரிடையே போர்மூளச் செய்தனனென்பதும் அடுத்த பாடலால் தெரியவரும். வான்மீகத்துள்ளும் இவ்வாறே இச்செய்தி கூறப்படுகின்றது.

(பி - ம்.) 1. உவந்தனன் மற்றையொன்று.

2. அளந்தபாத நெடியமால்: முறையிற் கொண்டான்; அங்கை கொண்டான்.

3. என்றிஃது; என்றது; என்றதை; என்றிவை: உணர்த்தவானோர்; என்றலும் விண்ணோரீண்டி: இரண்டிலும்; இரண்டினில்: வலிதுயாது; வலிமை சாலும்.

4. வென்றிய தியாதோவென்ன; வென்றியயாவவென்ன; வென்றிவெஞ்சிலேயாதென்று: வினவவன்னுன்; அன்னர். (27)

1367. சீரிது தேவர் தங்கள்
சிந்தனை யென்ப துன்னி
வேரியங் கமலத் தோனு
மியைவதோர் விநயந் தன்னுல்
யாரினு முயர்ந்த மூலத்
தொருவரா மிருவர் தம்மை
மூரிவெஞ் சிலேமே லிட்டு
மொய்யமர் மூட்டி விட்டான்.

'வேரி அம் கமலத்தோனும்-(தேவர்களால் வினவப்பெற்ற) நறுமணமுடைய அழகிய தாமரையில் வீற்றிருக்கும் பிரமதேவனும், தேவர் தங்கள் சிந்தனை சீரிது என்பது உன்னி-தேவர்களுடைய எண்ணம் சிறந்ததேயென்பதைக் கருதி, இயைவது ஓர் விநயம் தன்னுல்-(அவ்விடத்துக்குப்) பொருந்தியதொரு சூழ்ச்சியினுல், யாரினும் உயர்ந்த-யாவரினும் மேம்பட்ட, மூலத்து ஒருவர் ஆம் இருவர் தம்மை-காரணத்தால் ஒருவராகிக் (காரியத்தால்) இருவேறு வடிவு கொண்டுள்ள அவ்விருவரையும், மூரி வெம் சிலே மேல் இட்டு-வலிய கொடிய விற்களின் காரணமாக, மொய் அமர் மூட்டி விட்டான்-வலிய போர் புரியுமாறு தூண்டிவிட்டான்.

வில்லே வியாஜமாகக் கொண்டு, பிரமன் தந்திரமாகச் சிவ விஷ்ணுக்களிடையே போரை மூட்டிவிட்டான் என்க. திருமாலும் சிவபெருமானும் முறையே காத்தல், அழித்தலாகிய தொழில் வேறுபாடு கருதி இருவேறு வடிவங்கொண்டுள்ளனரே யன்றி, 'மூலப் பொருள்' என்ற முறையில் அவ்விருவரும் ஒருவரே என்பதனை ஆன்றோர் வாக்குக்களால் உணரலாகும். பொய்கையார், பூதத்தார்

அந்தாதிகளிலும் பிறவிடங்களிலும் இவ்வுண்மையைக் காண்க. 'மூவரும் ஒருவனும் மூர்த்தி' என்றார் கம்பநாடரும்.

(பி - ம்.) 2. இசைவதோர், விளைவதோர்; மிக்கதோர்; விழைவுதன்னால்: இயைவு தன்னால்.
3. ஆரினும்: மூலத்தொருவனும்; மூலத்தேவராம்; மூலத்தொருவர் தம் பெருமையுன்னி. 4. மெய்யமர்; முட்டிவிட்டான். (28)

1368. இருவரு மிரண்டு வில்லு மேற்றின ருலக மேழும்
வெருவர திசைகள் பேர வெங்கனல் பொங்க மேன்மேல்
செருமலை கின்ற போது திரிபுர மெரித்த தேவன்
வரிசிலை யிற்ற தாக மற்றவன் முனிந்து மன்னோ.

'இருவரும்-திருமாலும் உருத்திரமூர்த்தியும், இரண்டு வில்லும் ஏற்றினர்-அவ்விரண்டு விற்களையும் (தனித்தனியே) நாணேற்றியவராய், உலகம் ஏழும் வெருவர-ஏழுலகத்தாரும் அஞ்சி நடுங்கவும், திசைகள் பேர-திக்குகள் நிலைபெயரவும், வெம் கனல் மேல்மேல் பொங்க-(அவர்களுடைய) கடிய சினத்தீ மேன்மேலும் மிகவும், செரு மலைகின்றபோது-(விடாது) போர் செய்யும்போது, திரிபுரம் எரித்த தேவன் வரிசிலை-முப்புரங்களை எரித்தழித்த உருத்திர மூர்த்தியின் கட்டமைந்த வில், இற்றது ஆக-முறிந்ததாக, மற்று-அதன்மேல், அவன் மன் முனிந்து-அவ்வுருத்திரன் மிக்க சினமுண்டு, ஓ : ஈற்றசை.

இதுவும் அடுத்த பாட்டும் குளகம் 'முனிந்து' என்பது 'மீட்டும் போர் தொடங்கும் வேலை' என வரும் அடுத்த பாடலின் முதற்பகுதியோடு தொடரும்.

விஷ்ணுவின் ஹுங்காரத்தாலேயே சிவன் கை வில் பழுதுற்றதென வான்மீகம் கூறுகின்றது.

(பி - ம்.) 1. வில்லோடு: ஏந்தினர்: ஏந்தினார்: எதிர்த்தனர்; எதிர்ந்தனர்: உலகமெங்கும்; உலகமெல்லாம். 2. பொங்க மென்மேல்.
3. போழ்தில்; போதில்: செஞ்சடைக் கடவுள் கையின்.
4. இற்றதாகி; தாழ்ந்ததாக; தளர்ந்ததாக; மூரிபோக: மற்றவர். (29)

1369. மீட்டும்போர் தொடங்கும் வேலை
விண்ணவர் விலக்க வல்வில்
நீட்டினன் றேவர் கோன்கை
நெற்றியிற் கண்ணன் வீரம்
காட்டிய கரிய மாலுங்
கார்முக மதனைப் பாரில்
ஈட்டிய தவத்தின் மிக்க
விரிசிகற் கீந்து போனான்.

'மீட்டும் போர் தொடங்கும் வேலை-(சிவபிரான் முனிவுற்றதனால்)மீண்டும் போர்செய்யத் தொடங்கியபோது,விண்ணவர் விலக்க-தேவர்கள்(மேலே போர் நடக்கவொட்டாது இடையில்நின்று) விலக்கிவிட, நெற்றியில் கண்ணன்-நெற்றிக் கண்ணையுடைய உருத்திரன், வல்வில்-(தன் கையிலிருந்த) வலிய வில்லை, தேவர் கோன் கை நீட்டினன்-தேவேந்திரன் கையிற் கொடுத்தான்; வீரம் காட்டிய கரிய மாலும் - வெற்றி வீரங்காட்டி நின்ற கரிய திருமேனியுடைய திருமாலும், கார்முகம் அதனை-(தன் கையிலிருந்த) அவ்வில்லை, பாரில்-பூவுலகத்திலே, ஈட்டிய தவத்தில் மிக்க-(முயன்று) சேர்த்த தவத்தினால் மேம்பட்ட, இரிசிகற்கு ஈந்து போனான்-இரிசிக முனிவனுக்குக் கொடுத்துச் சென்றான்.

இரிசிகன்: 'ரிசீக' என்ற வடசொல்லின் திரிபு.

உருத்திரன் கையிலிருந்தவில் தேவேந்திரனிடத்தும், திருமால் கையிலிருந்த வில் இரிசிக முனிவனிடத்தும் முறையே சேர்ந்தன என்பது இதனால் கூறப்பெற்றது. உருத்திரன் வில் பற்றிய செய்தியைக் கீழே 756-ஆம் பாட்டின் விசேடக்குறிப்பில் விரிவாகக் காண்க. இரிசிகன் பரசுராமனுடைய பாட்டன்; சமதக்கினிக்குத் தந்தை. இதனை அடுத்த கவியிற் காண்க.

(பி - ம்.) 1. தொடங்கும் எல்லை; ஏல்வை. 2. கண்ணன் வெற்றி.
3. கரியமாயன்: மாலுந்தன் கைக்கார் முகந்தன்னைப்பாரின்.
4. இருடிகன் கையினீந்தான்; இருடிகட்கீந்து போனான். (30)

1370. இரிசிக னெந்தைக் கீய வெந்தையு மெனக்குத் தந்த
வரிசிலை யிதுநீ நொய்தின் வாங்குதி யாயின் மன்ன
குரிசில்க ணின்னோ டொப்பா ரில்லையான் குறித்த போரும்
புரிகிலெ னின்னோ டின்னம் புகல்வது கேட்டி யென்றான்.

'இரிசிகன் எந்தைக்கு ஈய - (திருமாலிடமிருந்து தமக்குக் கிடைத்த வில்லை) இரிசிகமுனிவர் என் தந்தைக்குக் கொடுத்தாராக, எந்தையும்-என் தந்தையாகிய சமதக்கினி முனிவரும், எனக்கு தந்த வரிசிலை (இது-முறையாக) எனக்குக் கொடுத்த கட்டமைந்த வில் இது வாகும்; மன்ன-அரசே! நீ நொய்தின் வாங்குதி ஆயின்-நீ இவ்வில்லை எளிதில் வளைப்பாயானால், நின்னோடு ஒப்பார் குரிசில்கள் இல்லை-உன்னோடொத்த பெருமையுடையார் ஒருவருமில்லை; (அவ்வாறான பின்), நின்னோடு யான் குறித்த போரும் புரிகிலென்-உன்னோடு நான் செய்ய விரும்புவதாகக் குறித்த போரையும் செய்யமாட்டேன்; இன்னம் புகல்வது கேட்டி - மேலும் நான் சொல்வதைக் கேட்பாயாக;' என்றான்—.

என் பாட்டனாரிடமிருந்து என் தந்தைக்கும், தந்தையிடமிருந்து எனக்கும் வழிவழியாக வந்தது இவ்வில்; இது சிவன் கை

வில்லைப்போலச் சிதிலமாகாமல் மிக்க வலிமையுடையது; இதனை நீ வளைத்தல் வேண்டும் என்றான் பரசுராமன்.

(பி - ம்.) 1. இருடிகன்; இருடிகள்: எந்தைச்சீந்நான்.
2. இதனை நொய்தின்; அதனினெய்தின்; இ னைவல்லை; இதுவல்லாயேல்; வாங்குதியாகில்; வாங்கினையாகில்: மன்னு: மைந்த.
3. குருசில்கள்; குருசிலர்; குருசிலே; குரிசிலே: நின்னையொப்பார்; நின்னைப்போல்வார்; உன்னைப்போல்வார்: இல்லையாம்.
4. புரிகிலன்; புரிகுவன்; புரிகுவை: இன்னும் புகல்வதும்: கேட்டி போலாம்; கேட்டிமன்னோ. (31)

1371: ஊனவில் லிறுத்த மொய்ம்பை நோக்குவ தூக்க மன்றால்
மானவ மற்றுங் கேளாய் மன்னுயிர்க் கிதமே செய்யும்
ஈனமி லெந்தை சீற்ற நீக்கின னவனை முன்னோர்
தானவ னனைய மன்னன் கொல்லயான் சலித்து மேனாள்.

'ஊனம் வில் இறுத்த மொய்ம்பை நோக்குவது-பழுதுற்ற அந்தச் சிவதனுசை முறித்த உனது வலிமையைப் பெரிதாக மதிப்பது,ஊக்கம் அன்று-சிறப்புடையதாகாது; மானவ-மனுகுலத்தவனே! மற்றும் கேளாய்-மேலும் (நான் சொல்வதைக்) கேட்பாயாக; மன் உயிர்க்கு -(உலகத்தில்) நிலைத்த உயிர்களுக்கெல்லாம், இதமே செய்யும்-நன்மையையே செய்யுந்தன்மையுடைய, ஈனம் இல்-குற்ற மொன்றும் இல்லாத, எந்தை-என் தந்தையார், சீற்றம் நீக்கினன்-(எவரிடத்தும்) சினங்கொள்ளுதலை விட்டிருந்தவர்; அவனை -அத்த கையவரை, முன்-முன்னொருகால், தானவன் அனைய ஓர் மன்னன்-அசுரனைப் போன்ற (கொடுந்தன்மையுடைய) ஓரரசன், கொல்ல-கொன்றுவிட்டதனால், யான் சலித்து-நான் மிக்க சினங்கொண்டு, மேல் நாள்-(அதுமுதல்) நெடுநாளாக, ஆல்-அசை.

இது அடுத்த கவியுடன் தொடர்ந்து, அதில் வரும் 'களைகட்டு' என்பதனோடு இயையும். சிவதனுசு பழுதுற்றதென்பது முன்னே 1768-ல் காண்க.

பரசுராமன், க்ஷத்திரியர்களிடத்துத்தான் பகை கொண்டதன் காரணத்தையும், அதனால் மேலே தான் செய்தவற்றையும், முடிவில் அப்போதுள்ள தன் நிலையையும் இராமபிரானிடம் கூறுவானானன். இதுமுதல் மூன்று பாடல்களில் இச்செய்திகளைக் காண்க. பரசுராம னுடைய தந்தையாகிய சமதக்கினி முனிவரிடம் அவர் தந்தையால் கொடுக்கப்பெற்ற பெருவில் இருந்ததோடு, தாமும் பேராற்றல் பெற்றிருந்தும், க்ஷத்திரியர்களைப்போலக் கோபமும் வீரமுங் காட்டா மல் அவர் சாந்தம் நிரம்பியவராய்த் தவ நெறியிலேயே இருந்தார். குற்றமற்ற அவரை ஓர்அரசன், உரிய காரணமின்றிக் கொன்றுவிட்ட தனால், பரசுராமன் கடுங்கோபங்கொண்டு, க்ஷத்திரிய குலத்தையே நாசமாக்கத் தொடங்கினன். சமதக்கினியைக் கொன்றவன் கார்த்த

வீரியார்ச்சுனன் என்றும், அவன் மக்களுள் ஒருவனென்றும் இருவகை யாகக் கூறுவர். முன்னே 1352-ஆம் பாட்டின் விசேடக் குறிப்பைப் பார்க்க. சலம்-கோபம்; சலித்து-கோபங்கொண்டு.

(பி - ம்.) 1. ஊனவிலிறுத்த மொய்ம்மை: நோக்குமது: நோக்குமீது: ஊக்கமென் ருல்; ஊற்றமன்ருல்.
2. கேளாய் வழிப்பகையுடையேனும்பால்; உடையநின்பால்.
3. நீக்கினுனென்ன முன்னோர்: நீக்குதற்கெம்மோயாவி.
4. சலித்துமன்னே; தனித்துமன்னே: தானறச் செயிர்த்துப் பின்னுந் தந்தை சொல் தாங்கிமேனுள். (32)

1372. மூவெழு முறைமை பாரின் முடியுடை வேந்தை யெல்லாம்
வேவெழு மழுவின் வாயால் வேரறக் களைகட் டன்னர்
தூவெழு குருதி வெள்ளத் துறையிடை முழுகி யெந்தைக்
காவன கடன்க ணேர்ந்தே னருஞ்சின மடக்கி நின்றேன்.

'மூ எழு முறைமை-இருபத்தொருமுறை, பாரில் முடிஉடை(ய) வேந்தை எல்லாம்-இவ்வுலகத்தில் முடியுடையவர்களான அரசர் குலத்தையெல்லாம், வேவு எழு மழுவின் வாயால்-வேதலுற்றுப் பொங்குகின்ற (என்) மழுப்படையின் (கூரிய) வாயினுல், வேர் அற-களை கட்டு-வேரோடு அற்றுப் போகுமாறு களை யெடுத்து, அன்னர்-அவ்வாறழிந்தவர்களுடைய, தூ எழு-தசையினின்றும் வெளிப்பட்ட, குருதி வெள்ளம் துறை இடை முழுகி-இரத்த வெள்ளம் நிறைந்த துறையிலே முழுகி நீராடி, எந்தைக்கு ஆவன கடன்கள் நேர்ந்தேன்-என் தந்தைக்குச் செய்தற்குரிய நீர்க்கடன்களைச் செய்தேன்; அரு சினம் அடக்கி நின்றேன்-(அதன்பின் எனது) அரியசினத்தை அடக்கிக் கொண்டு (அரசர்களைக் கொல்லாது) நின்றேன்.

இப்பாடலிற் காணும் செய்திக்கு, முன்னே 1352-ஆம் பாடலை யும் அதன் குறிப்பையும் பார்க்க.

(பி - ம்.) 2. மேவெழு: களைகட்டநந்நாள்; களைந்திட்டநந்நாள்; கட்டறன்னுற் வேர்க்களை கட்டன்றன்னர். 3. முறையினெந்தைக்.
4. அடக்கிப் போந்தேன். நேர்ந்தேயருஞ்சின மடக்கி நின்றேன்; அடங்கி நின்றேன்: முடித்து நின்றேன். (33

1373. உலகெலா முனிவற் கீந்தே
னுறுபகை யொடுக்கிப்போந்தேன்
அலகின்மா தவங்கள் செய்தே
யருவரை யிருந்தே னுண்டச்
சிலையைநீ யிறுத்த வோசை
செவியுறச் சீறி வந்தேன்
மலைகுவென் வல்லை யாகில்
வாங்கிடிச் சிலையை யென்ருன்.

(பரசுராமன் மேலுங் கூறுவானாகி), 'உலகு எலாம்-(நான் வென்று கொண்ட) இவ்வுலக முழுவதையும், முனிவற்கு ஈந்தேன்-காசிப முனிவனுக்குத் (தானமாக) அளித்திட்டேன்; (அதன்பின்), உறுபகை ஒடுக்கி போந்தேன்-மிக்க உட்பகைகளை அடக்கிவந்து, அலகு இல் மாதவங்கள் செய்து-அளவற்ற பெருந்தவஞ் செய்து கொண்டு, அரு வரை இருந்தேன்-அரிதாகிய மகேந்திர மலையிலே தங்கியிருந்தேன்; ஆண்டு-அங்கே, அ சிலையை நீ இறுத்த ஓசை-அந்தச் சிவதனுசை நீ முறித்ததனாலான பேரோசை, செவி உற-என் காதுகளில் விழவே, சீறி வந்தேன்-சினங்கொண்டு (எழுந்து உன்னிடம்) வந்தேன்; வல்லை ஆகில்-நீ வல்லமையுடையையானால், இ சிலையை வாங்கிடு-இந்த விஷ்ணுதனுசை வளைத்திடு; (அதனால் உன் வலிமையை அறிந்தபின்), மலைகுவென்-நான் உன்னோடு போர் செய்வேன்;' என்றான்-என்று கூறி முடித்தான்.

செய்தே: ஏகாரம், அசை. போந்தேன்: முற்றெச்சம்.

பரசுராமன், அரசர் பலரை அழித்துத் தான் கைக்கொண்ட பூமி முழுவதையும் காசிப முனிவருக்குத் தானஞ்செய்தபின், அவ் வெல்லைக்குள்ளே தானிருத்தல் தகாதெனக் கருதிக் கடலில் இருந்த மகேந்திர மலையிலே போய்த் தங்கித் தவஞ் செய்திருந்தானென்பராதலால், அரு வரை-'மகேந்திர மலை'யென்று குறிக்கப்பெற்றது. புறப்பகையை அவன் முன்னமே வென்று தீர்த்தானாதலால், உறு பகை-அகப்பகை யெனப்பட்டது. அவ்வாறு அவன் அகப்பகையொடுக்கி அருந்தவஞ் செய்து கொண்டிருப்பினும், இராமபிரான் வில்லை முறித்தமையை யறிந்தவுடன், அவ்வில், தனக்கு வில்லாசிரியரான சிவபெருமானுடையதாதலால், சினந்தலைதூக்கச் சீறியெழுந்து வந்தானென்க. 'நீ இந்த விஷ்ணுதேவன் வில்லை வளைப்பாயாகில், அதனால் உன் வலிமையை அறிந்துகொண்டு உன்னோடு நான் த்வந்த யுத்தம் செய்வேன்' எனப் பரசுராமன் இராமபிராமனிடம் கூறியதாக வான்மீகம் கூறுகின்றது.

பரசுராமன், பூமி முழுவதும் காசிப முனிவருக்குத் தானஞ் செய்ததும், சினந்தணிந்திருந்ததும் : **1358, 1360**-பார்க்க.

(பி - ம்.) 1. அடக்கிப் போனேன்; ஒடுக்கிப்பாரின்.
2. செய்தோரருவரை; செய்தென்னருவரை; செய்தென்றெருவரை; ஆண்டைச். 3. செவிபுகச் சீறிப்போந்தேன்.
4. மலைகுவன் வல்லையாயின்: நல்லையாயின்: ஆகின்: வாங்கிடித்தனுவை; வாங்குதிதனுவை; வாங்குதிசிலையை; வாங்குதிவில்லை. (31)

## இராமபிரான் செயல்

1374. என்றன னென்ன நின்ற
விராமனு முறுவ லெய்தி
நன்றொளிர் முகத்த னாகி
நாரணன் வலியி னாண்ட
வென்றிவிற் றருக வென்னக்
கொடுத்தனன் வீரன் கொண்டான்
துன்றிருஞ் சடையோ னஞ்சத்
தோளுற வாங்கிச் சொல்லும்.

என்றனன்-என்று (முற்குறித்தவாறு பரசுராமன்) கூறிமுடித் தான்; என்ன-(அவன் அவ்வாறு) கூற, நின்ற இராமனும்-(அவற்றை முழுதுங் கேட்டு எதிரில்) நின்ற இராமபிரானும், முறுவல் எய்தி-புன்முறுவல் கொண்டு, நன்று ஒளிர் முகத்தன் ஆகி-பெரி தும் ஒளி கிளரும் முகமுடையவனாகி, (பரசுராமனை நோக்கி), 'நாரணன் வலியின் ஆண்ட வென்றி வில்-நாராயணன் வலிமையோடு கையாண்ட வெற்றிக்குரிய அவ்வில்லை, தருக என்ன-(இங்கே) தரு வீராக' என்று சொல்ல, கொடுத்தனன்-(பரசுராமன் அதனைக்) கொடுத்தான்; வீரன்-இரகு வீரனான இராமபிரான், கொண்டான்-(அதனை எளிதில்) வாங்கிக்கொண்டு, துன்று இருசடையோன் அஞ்ச-அடர்ந்த பெரிய சடையையுடைய அப்பரசுராமனும் அஞ்சும் வண் ணம், தோள் உற வாங்கி-(நாணேற்றித்) தோள்வரை இழுத்து வளைத்துக்கொண்டு, சொல்லும்-(அவனை நோக்கிச்) சொல்லலானான்.

இராமபிரான் சொன்னவற்றை அடுத்த பாடலுட் காண்க.

கொண்டான்: முற்றெச்சம். சொல்லும். செய்யுமென் முற்று.

இராமபிரான் முகத்தில் முறுவலும் ஒளியும் பூத்தமை, அவ் வில் தனக்கு அரியதன்று என்பதனைக் குறிப்பித்தவாறும். 'வீரன் கொண்டான்' என்றதும் அதனை வலியுறுத்துவதாகும்.

(பி - ம்.) 1. என்னலோடும்; எதிர்முன்னின்ற: எய்தநின்ற; எள்ளிநின்ற: முறுவல் செய்து. 2 நின்றொளிர் முகத்தனாக நெடியமால் வலியினான்ற.
3. விற்றருதி: வீரன்கொண்டத்; இமைபபின் முன்னம்.
4. சிலையோனஞ்சத்: தொழுதுறவணங்கிச். (35)

## இராமபிரான் கூறுதல்

1375. பூதலத் தரசை யெல்லாம் பொன்றுவித் தனையென் றாலும்
வேதவித் தாய மேலோன் மைந்தனீ விரதம் பூண்டாய்
ஆதலிற் கொல்ல லாகா தம்பிது பிழைப்ப தன்றால்
யாதிதற் கிலக்க மாவ தியம்புதி விரைவி னென்றான்.

(வில்லை எளிதின் வளைத்த இராமபிரான், அதில் ஓர் அம்பை யும் தொடுத்துக்கொண்டு, பரசுராமனை நோக்கி), 'பூதலத்து அரசை யெல்லாம்-இப்பூமியிலுள்ள அரசர்களையெல்லாம், பொன்றுவித்தனை என்றாலும்-(நீ) அழித்துள்ளாயெனினும், வேதவித்து ஆயமேலோன் மைந்தன் நீ-வேதங்களையெல்லாம் ஓதியுணர்ந்த பெரியோனான சமதக்கினியின் மகன் நீ; விரதம் பூண்டாய்-(நீயும்) தவவொழுக்கம் மேற்கொண்டுள்ளாய்; ஆதலின்-கொல்லல் ஆகாது-உன்னைக் கொல் லுதல் தகாது; (ஆனால்)அம்பு இது-(நான் தொடுத்துள்ள) இவ்வம்பு, பிழைப்பது அன்று-தவறுவதாகாது; (ஆதலால்), இதற்கு இலக்கம் ஆவது யாது-இவ்வம்புக்கு இலக்காதற்குரியது எது? விரைவின் இயம்புதி-விரைவில் (அதனைச்) சொல்லுக;' என்றான்—.

'நீ அந்தணர்க்குரிய முறைதப்பி, அரசர் பலரையும் கொன்றொழித்தமையால், அப்பழிக்குப் பழியாக நான் உன்னைக் கொல்லுதல் தகும்; ஆயினும், உன் தந்தையின் பெருமையையும், நீயும் தவ வேடத்தோடிருத்தலையும் கருதி உன்னைக் கொல்லாது விடுகின்றேன். எனினும், என் அம்புக்கு இலக்கின்றி அது பழுதுறுதல் இல்லையாதலால், அதற்கிலக்காகத் தக்கதொன்றை நீ விரைவில் இயம்புக' என இராமபிரான் பரசுராமனுக்குக் கூறினன். 'வேதவித்து' என்ற பெருமைக்கு நீ உரியை யல்லை என்ற கருத்துப்பட, 'வேத வித்தாய மேலோன் மைந்தன் நீ' என்றான்.

(பி - ம்.) 1. பொன்றுவித்தனை நீயென்றால்.
2. மைந்தநீ: விரதங்கொண்டாய். 3. ஆதலிற் கோறலாகா.
4. யாரிதற்கு: இலக்கதாவது; இலக்கின்றின்னே; இலக்கென்றின்னே. (36)

### பரசுராமன் இராமபிரானைப் புகழ்தல்

(வேறு)

1376. நீதியாய் முனிந்திடே னீயிங் கியாவர்க்கும்
ஆதியா யறிந்தனெ னலங்க னேமியாய்
வேதியா விறுவதே யன்றி வெண்மதிப்
பாதியான் பிடித்தவில் பற்றப் போதுமோ!

('இயம்புதி விரைவின்' என்ற இராமபிரானை நோக்கிப் பரசுராமன்), 'நீதியாய்-நீதி வடிவானவனே! முனிந்திடேல்-(என் மீது) சினங் கொள்ளாதே; நீ இங்கு யாவர்க்கும் ஆதியாய்-நீ இவ்வுலகங்களிலுள்ள எவர்க்கும் முதன்மையானவனாக, அறிந்தனென்-(இப்போது உன்னை) அறிந்துகொண்டேன்; அலங்கல் நேமியாய்-ஒளி வீசும் சக்கரப்படையையுடைய திருமாலின் அமிசமானவனே! வேதியா-வேத முதல்வனே! வெண்மதி பாதியான் பிடித்த வில்-வெள்ளிய அரைச் சந்திரனை அணிந்த சிவபிரான் கைக்கொண்டிருந்த அவ்வில், இறுவதே அன்றி-(உனதாற்றலுக்கிடாகாமல்) முறிவதைத் தவிர

பற்ற போதுமோ-நீ கையாளுதற்குத் தக்க வலியுடையதாகுமோ? (ஆகாது).

இதுவும் அடுத்தகவியும், பரசுராமன் இராமபிரானை உணர்ந்து புகழ்ந்தமை கூறும்; 'மின்னுடை நேமியானுதல் மெய்ம்மையால்' என அடுத்த கவியுள்ளும் வருதல் காண்க. வேதியா-பேதித்து; கூறு கூறுகி என்றலும் ஆம்.

இராமபிரானை 'ஆதியாய்,வேதியா' என்றமை; ஒப்பு: 'ஆதியா யுனையடைந்தானரசருக் கொண்டமைந்தவேதியா' (யுத்த. 1560).

(பி - ம்.) 1. முனைந்திடல்; நினைந்திடில்: நீயங்கியாவர்க்கும்; நினைந்தியாவர்க்கும்.
2. ஆதியான்: அறிந்தனன்; அறிந்திலன்: அலகினைமியாய்; அலங்கு மேனியாய்; இலங்கன் மேனியாய்.
3. ஓதியா; ஓதியாய்; ஓதினல்: உறுவதை; உறுவதே: ஒன்மதிப்; உன்னெரு: ஏதியாவிறுவதேயன்றியுன்னெரு.
4. பாற்றம்; பாற்றப்; பாரம்: பாகம்: போதுமே. (37)

1377. பொன்னுடை வனைகழற் பொலங்கொ டாளினுய்
மின்னுடை நேமியா னுதன் மெய்ம்மையால்
என்னுடைத் துலகினி யிடுக்கண் யான்றந்த
உன்னுடை வில்லுமுன் னுரத்துக் கீடன்றால்.

'பொன் உடை-பீதாம்பரத்தையும்,வனை கழல்-சித்திர வேலைப் பாடமைந்தவீரக்கழலையணிந்த,பொலம்கொள்-அழகினைக்கொண்ட, தாளினுய்-திருவடிகளையும் உடையவனே! மின் உடை(ய) நேமியான் ஆதல் மெய்ம்மையால்-(நீ) ஒளிமிக்க ஆழிப்படையுடைய பெருமானு தல் உண்மையாகலின், உலகு இனி என் இடுக்கண் உடைத்து-உலகம் இனி என்ன துன்பமுடையதாகும்! யான் தந்த-நான் (இப்போது உன்னிடம்) தந்த, உன்னுடை(ய) வில்லும்-(நாராயணனுன) உனது அந்தப் பழைய வில்லுங்கூட, உன் உரத்துக்கு ஈடு அன்று-(இப் போது) உனது வலிமைக்கு ஈடாகாது. ஆல்-அசை.

காத்தற்றொழிலையுடைய திருமாலாகிய நீ, அல்லாரை அழித்து நல்லாரைக் காக்கவே இங்கு அவதரித்துள்ளாயாதலால், உலகம் இனி எவ்வகைத் துன்பமும் நீங்கி யின்பமுறும்; 'இப்போ துள்ள உன்னுடைய ஆற்றலுக்கு, உன் பழைய வலியவில்லே ஈடாகா தெனின், சிவனுடைய பழுதுற்ற வில் ஈடாகாது முறிந்ததுவியப்போ!' எனப் புகழ்ந்துரைத்தான் பரசுராமன். இராமபிரானது பேராற் றலைப் புகழ்ந்ததோடு, அடைந்தாரைக் காக்கும் அவன் திருவடிகளை யும் சிறப்பித்தான். பொன்னுடைய வனைகழல்-பொன்னலியன்ற வீரக்கழல் என்றலுமாம்.

(பி - ம்.) 1 பொன்னுடைக் கணைகழல்; வரிகழல்: பொலன்கொள்; புனைகொள்; தோளினுப்; தாரினுப்; தேரினுப்.
2. மின்னுடைத் திகிரியால்; நேமியாய்: ஆதல்மெய்ம்மையே.
3. என்னுளது; என்னிவியுலகினில்.
4. உன்னுடைத் தனுவுமுன்; வில்லுன்றன்: ஈடென்முன்; ஈண்டென்முன். (38)

அம்புக்கிலக்கமாவது ஈதெனல்

1378. எய்தவம் பிடைபழு தெய்தி டாமலென்
செய்தவம் யாவையுஞ் சிதைக்க வேயெனக்
கையவ ணெகிழ்த்தலுங் கணையுஞ் சென்றவன்
மையறு தவமெலாம் வாரி மீண்டதே.

(பின்னும் கூறலுற்ற பரசுராமன்), எய்த அம்பு-நீ இப்போது தொடுக்கும் அம்பு, இடை பழுது எய்திடாமல்-இடையே (தன் தன்மைக்குக்) குறைவு நேராதவண்ணம், என் செய்தவம் யாவையும் சிதைக்க என-முயன்று செய்த என் தவப்பயன் முழுதுங் கவர்ந்து கொள்வதாக என்று சொல்ல, அவண்-அவ்விடத்து, கைநெகிழ்த் தலும்-(அம்பைப் பிடித்த) கைப்பற்றைச் சிறிது (இராமபிரான்) தளர்த்திய வளவில், கணையும் சென்று-(விடுபட்ட அந்த) அம்பும் (வில்லினின்றும்) போய், அவன்-அப்பரசுராமனுடைய, மை அறு தவம் எலாம் வாரி-குற்றமற்ற தவப்பயனையெல்லாம் கவர்ந்து கொண்டு, மீண்டது - மீண்டு (இராமபிரானது அம்புப்புட்டிலை) அடைந்தது. ஏகாரங்கள், அசை.

பரசுராமன், இராமபிரானைப் பலவாறு புகழ்ந்தபின், அப்பிரானது வினவுக்கு விடையாக, 'உனதம்பு, தன் தன்மையில் தாழாத படி என் தவப்பயன் முழுதும் தனக்கிலக்காக்கிக்கொள்ளட்டும்' என்று சொல்ல, இராமபிரான் அம்பைப் பிடித்திருந்த கையைச் சிறிது தளர்த்தி அம்பை விடுவிக்கவே, அது சென்று பரசுராம னுடைய தவப்பயன் முழுதுங் கவர்ந்துகொண்டு மீண்டதென்க. இராம பாணத்தின் தனிச் சிறப்பு, அருவப் பொருள்களையும் தனக்கு இலக்காகக் கொள்ளுதலும், மீண்டு வந்து அப்பிரானை அடைதலும் ஆம்.

இராமபிரான் பரசுராமனை நோக்கி, 'நீ அந்தணனுதலாலும், விசுவாமித்திர முனிவர் பொருட்டும் உன்னிடம் மதிப்பு வைத்து உனதுயிரைப் போக்கத் தயங்குகின்றேன்; ஆயினும், எனதம்பு பய னின்றி மீளாது; ஆதலால் கடு நடையுடைய உன்கால்களின் வலிமை யையேனும், அல்லது உன் தவவலியால் நீ தேடிப்பெற்றுள்ள நல்லு லகப்பேற்றையேனும் என் அம்புக்கு இலக்காக்குக' என, பரசுராமன் 'நான் மீண்டும் விரைந்து சென்று மகேந்திர மலையை அடைய வேண்

டும்; ஆதலால், என் நடையைக் கெடுக்காமல், என் தவப்பயனாகிய நல்லுலகப் பேற்றையே உனதம்புக்கிலக்காக்கிக் கொள்க' என்று வேண்ட, இராமபிரான் அவ்வாறே செய்ததாக முதனூல் கூறுகின்றது.

இராம பாணத்தின் இயல்பு: 'கடுங்கணை காலவாலி, வெய்ய மார்பகத்துட் டங்கா துருவிமேக் குயர மீப்போய்த், துய்யநீர்க் கடலுட்டோய்ந்து தூய்மலரமரர் சூட்ட, ஐயன்வென் விடாதகொற்றத் தாவம்வந் தடைந்ததன்றே' (கிட்கிந்தா. 381); 'பாற்கடலிற் றூய் நீராடித்......கார்க்குன்ற மனையான்றன் கடுங்கணைப் புட்டிலினடுவட் கரந்ததம்மா' (யுத்த. 3838). பரசுராம கர்வபங்கம்: 'படைமாண ரசைப் பலகால் மழுவா ளதனு லெறிவான், மிடைமாண் வலிதானனையான் வில்லா லடுமா வல்லாய்' (அயோத். 354); 'மழுவினான் முன் மன்னரை மூவெழு, பொழுது நூறிப் புலவுறு புண்ணினீர், முழுகினான்றவ மொய்ம்பொடு மூரிவில், தழுவு மேன்மை நினைந்துயிர் சாம்புவாள்' (சுந்தர. 356).

(பி - ம்.) 1. எய்தவம் பிடைவழு வெய்திடாமலென்: எய்தவுன்படையது வெய்துருமலென்.
2. செய்தவ மதனையும்: சிதைக்கவேயெனா; சிதைக்கவேவெனாக்; சிதைக்க வெய்யென்றான்; சிதைக்கவேயென்றான்; சிதைக்கபோயென்றான்; செறுத்தியாமென்றான்; சிதைத்தியாலென்றான்.
3. கையினை; கையது; கைதனை: நெகிழ்தலும்; நெகிழ்த்தனன்.
4. மெய்யுறு: வாரியுண்டதே; கொண்டு மீண்டதே. (39)

### பரசுராமன் இராமபிரானை வாழ்த்தி வணங்கி விடை கொள்ளல்

1379. எண்ணிய பொருளெலா மினிது முற்றுக
மண்ணிய மணிநிற வண்ண வண்டுழாய்க்
கண்ணிய யாவர்க்குங் களைக ணாகிய
புண்ணிய விடையெனத் தொழுது போயினான்.

(தவ வலியிழந்த பரசுராமன் இராமபிரானை நோக்கி), மண்ணிய மணி நிற வண்ண-தூய்மை செய்த நீலமணிபோலும் திருமேனி நிறமும் அழகும் உடையவனே!, வண் துழாய் கண்ணிய-வளப்பமான திருத்துழாய் மாலை சூடுபவனே!, யாவர்க்கும் களைகண் ஆகிய புண்ணிய-எவ்வுலகத்தவர்க்கும் பற்றுக்கோடாகிய புண்ணியமூர்த்தியே!, எண்ணிய பொருள் எலாம்-நீ கருதிய பொருள்கள் எல்லாம், இனிது முற்றுக-(கருதியவாறே) இனிது கைகூடுக; விடை-யான் விடைபெறுகின்றேன், என-என்று கூறி, தொழுது-(இராமபிரானை) வணங்கி, போனான்-மீண்டு போனான்.

இராமபிரானுடைய அவதார விசேடத்தை இங்கும் நினைவுறுத்தல் காண்க. பரசுராமன், திருமாலின் அமிசம்; அவன் கையி

லிருந்ததும் திருமாலின் வில்; ஆதலால்', இவற்றை மீண்டும் திருமாலாகிய இராமபிரானிடம் சேர்ப்பித்தற் பொருட்டே பரசுராமன் இப்போது வந்ததாகக் கூறுவர் பெரியோர்.

(பி - ம்.) 1. இனிதின் முற்றுக. 2. மணிநிற வண்ணன்.
3. கண்ணியா; கண்ணியன்; கண்ணனுகிய; கண்ணதாகிய.
4. விடையெனுத். (40)

### இராமபிரான் தந்தையைத் தேற்றுதல்

1380. அழிந்தவன் போயபி னமல ஊயுணர்வு
ஒழிந்துதன் னுயிருலைந் துருகு தந்தையைப்
பொழிந்தபே ரன்பினுற் றெழுது முன்புபுக்
கிழிந்தவான் றுயர்க்கடற் கரையி னேற்றினுன்.

அவன் அழிந்து போயபின்-அப்பரசுராமன் (தன் செருக்கும், தவமும்) அழியப்பெற்று மீண்டுபோன பின்பு, அமலன்-அழுக்கற்ற (நின்மலனுன) இராமபிரான், தன் ஐஉணர்வு ஒழிந்து-தன்னுடைய ஐம்புல வுணர்ச்சியும் அற்று, உயிர் உலைந்து-உயிரும் நிலை குலைந்து உருகு-உருகுகின்ற, தந்தையை-தந்தையாகிய சக்கரவர்த்தியை, பொழிந்த பேர் அன்பினுல்-பொங்கி ஊற்றுகிற பேரன்போடு, முன்பு புக்கு-அவன் முன்னேபோய், தொழுது-அடிவணங்கி, இழிந்த-அவன் இறங்கியிருந்த, வான் துயர் கடலின் கரை ஏற்றினுன்-பெருந்துயரக் கடலினின்றும் கரையேற்றினுன்.

அன்பினுல்: உருபு மயக்கம்; 'கரையின்' என்றதில் உள்ள இன் உருபு பிரித்துக் 'கடல்' என்பதனேடு கூட்டப்பெற்றது. அழிந்தவன் என ஒரு சொல்லாகக்கொண்டு கூறலும் ஆம்.

தசரதன் எவ்வளவு தாழ்ந்து வேண்டியும் அதனைப் பொருட் படுத்தாமல் பரசுராமன், இராமபிரானை யணுகிச் செல்லவே, 'அவனுல் இராமனுக்குத் தீங்கு நேருவது திண்ணம்' என்ற அச்சங் கொண்டு தந்தை மூர்ச்சையுற்றிருந்தமையறிந்து, இராமபிரான் விரைந்து சென்று தந்தையை அன்போடு வணங்கி, உபசாரங்களால் மூர்ச்சை தெளிவித்து, நிகழ்ந்தவை கூறித் தேற்றி மகிழ்வித்தான் என்க. தசரதன் எய்திய துயரம் மிகப் பெரிதாதலின் அதனைக் கடலாக உருவகித்தார்.

ஐயுணர்வு-ஐம்புலனுணர்வு; குறள். 354.

(பி - ம்.) 1. போனபின்; அமலனும்முணர்வு; அமலனையுறல்; அமலனையுறவு.
2. ஒழிந்தனன்; ஒழிந்தயர்ந்து; உயிர்தொலைந்து; தொலைத்து; உருகும் தாதையைப்; ஒழிந்துதன் உயிருகு தந்தை யுன்னியே.
3. பொழிந்ததோர்; மொழிந்தபேர்; அன்பினுன்; உவகையால்; தழுவிப் பொங்கிப்புக்கு; தொழுது முந்துபுக்கு; தொழுது மன்புக்க; தொழுது புக்கனன்.

4. இழிந்தவன்; கழிந்தவான்; துயர்ப்பெருங் கரையின்; கரையில்; துயர்க்கடற் கரைநின்று; ஏறினன். (41)

## தசரதன் மகிழ்ச்சி

1381. வெளிப்படு முணர்வினன் விழும நீங்கிடத்
தளிர்ப்புறு மதகரித் தானை யானிடைக்
குளிப்புறுந் துயர்க்கடற் கோடு கண்டவன்
களிப்பெனுங் கரையிலாக் கடலு ளாழ்ந்தனன்.

வெளிப்படும் உணர்வினன்-(இராமபிரான் தேற்றுதலால், அழுந்திய நிலையினின்றும்) வெளிப்பட்ட புலனுணர்வுடையனாகி, விழுமம் நீங்கிட-(தான் அடைந்திருந்த) பெருந்துயரம் நீங்கப்பெற்று, தளிர்ப்பு உறும்-(மனம்) தழைதலுற்ற, மதம் கரிதானையான்-மத யானைப் படைகளையுடைய தசரதன், இடை குளிப்பு உறும்-இடையே (தான்) மூழ்கியிருந்த, துயர் கடல் கோடு கண்டவன்-துயரக்கடலின் கரையைக் கண்டவன், களிப்பு எனும்-பெருமகிழ்ச்சியாகிற, கரை இலா கடலுள்-கரையற்ற பெருங்கடலினுள்ளே, ஆழ்ந்தனன்-முழுகி விட்டான்.

பேரச்சத்தால் நிலைகலங்கி மூர்ச்சையுற்றிருந்த தசரதன், இராமபிரானது வெற்றி நிலைகண்டு தெளிந்து பெருமகிழ் வெய்தினன் என்க. இடையே அவன் மூழ்கியிருந்த துயரக்கடல் கரைகண்டு ஏறத் தக்கதாயிருந்தது; இப்போது அவன் மூழ்கிய களிப்புக்கடல் கரை காண முடியாததாயிற்று; என்றது, மகிழ்ச்சி மிகுதி குறித்தவாறு. துயரத்தைக் கடல் என்றதுபோல, மகிழ்ச்சியையும் கடல் என்றார், ஒரு கடலினின்றும் கரையேறினவன், மீண்டும் மற்றொரு கடலில் விழுந்துவிட்டான் என்ற நயம் காண்க.

(பா - ம்.) 1. வெளிப்படும் உவகையன்; விழுமநீங்கியே, விம்மல்நீங்கிய; நீங்கினன்
2. தளிர்ப்பிவன்; களிப்புறு; தானையானிடர்க்; தானையானிடம்; துளிப்புறு நயனங்கள் நனிதிறந்திடாக்.
3. குளிப்பரும்; குளிர்ப்பரும்; குளிக்கரும்; கோடுகொண்டவன்; கண்டபின்.
4. களிப்பரும்; களிப்பெரும்; கடலுளார்ந்தனன்; கடலுட்டாழ்ந்தனன். (42)

1382. பரிவறு சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கியோர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவிநின் றுச்சி மோந்துதன்
அருவியங் கண்ணெனுங் கலச மாட்டினன்.

(தசரதன்), பரிவு அறு சிந்தை-இரக்கமற்ற மனமுடைய, அ பரசுராமன் கை-அந்தப் பரசுராமன் கையில் இருந்த, வரிசிலைவாங்கி-கட்டமைந்த வில்லை வாங்கிக்கொண்டு, ஓர் வசையை நல்கிய-ஒரு

பெரிய பழியை அவனுக்குக் கொடுத்த, ஒருவனை-தன் நிகரில்லாத இராமபிரானை, தழுவி நின்று-(மகிழ்ச்சியோடு) தழவிக்கொண்டு, உச்சிமோந்து-(அன்பினுல் அவனை) உச்சிமோந்து, தன்-தன்னுடைய, அருவி கண் எனும் கலசம்-அருவிபோல இன்பக் கண்ணீர் பெருக்கும் கண்களாகிற கலசங்களால், ஆட்டினுன்-நீராட்டினுன். அம்,சாரியை.

தசரதன், பெருமகிழ்ச்சியால் இன்பக் கண்ணீர் பெருக்கிய வாறே இராமபிரானைத் தழுவி உச்சி மோந்தான் என்க. உச்சி மோத்தல், பெற்ருேர் தம் மக்களிடம் காட்டும் அன்புக்குரிய செயல். சிலை வாங்கி-வில்லை வளைத்து என்றலும் ஆம். 'ஒன்றை வாங்கிக் கொண்டு ஒன்றைக் கொடுத்தான்' என்றது 'பரிவர்த்தனுலங்காரம்'; மாற்று நிலையணி.

தசரதன் அன்பாலும் மகிழ்ச்சியாலும் இராமபிரானைத் தழுவுதல்; *1128;* அயோத். *62, 73.* பரசுராமனைப் பரிபவப் படுத்திய செயலை மகிழ்ச்சியில் நினைத்தலும் சொல்லலும்: 'எறிமழுவாளவனி முக்கம், உற்றவன்றினும் பெரியதோருவகையனுனன்', 'பூண்டபோர் மழுவுடையவ னெடும்புகழ் குறுக, நீண்ட தோளினுய்' (அயோத். *44, 63*); கண்ணீர்க் கலசமாட்டல்: 'ஆங்குயர் மழைக்கணீரால் ஆயிரங் கலச மாட்டி' (திருவடி. *78*).

(பி - ம்.) 1. பரிவுறு: சிந்தையன்; சிந்தனைப்: பரசிராமன் கை.
2. வசையு நல்கிய; வாகை நீக்கிய. 3. உச்சிமோந்தனன்.
4. அருவியங் கண்ணிணைக்; அரியதன் கண்ணெனுங்: ஆடினுன். *(43)*

### தசரதன் மகிழ்ச்சி மேலீட்டால் கூறுதல்

1383. பொய்ம்மையில் சிறுமையிற் புரிந்த வாண்டொழில்
மும்மையி னுலகினுன் முடிக்க லாவதோ
மெய்ம்மையிச் சிறுவனே வினைசெய் தோர்களுக்
கிம்மையு மறுமையு மீயு மென்றனன்.

பொய்ம்மை இல் சிறுமையில்-வஞ்சனையறியாத இச்சிறுபிராயத்திலேயே, புரிந்த ஆண் தொழில்-இவன் செய்துள்ள ஆண்மைச் செயல்கள், மும்மையின் உலகினுல்-மூன்றுலகத்தவராலும், முடிக்கல் ஆவதோ-செய்து முடிக்கலாகுமோ!, மெய்ம்மை - உண்மையாதெனில், இ சிறுவனே-இவ்விளைஞனை இராமனே, வினை செய்தோர்களுக்கு-நல்வினை செய்த நல்லோர்க்கு, (அவ்வினைக்கேற்றவாறு), இம்மையும் மறுமையும்-சிறந்த இம்மை மறுமைப் பயன்களை, ஈயும்-கொடுக்கவல்ல முதல்வனுவான்; என்றனன்-என்று பாராட்டினுன்.

'இராமன் பதினுறும் நிரம்பாத இவ்விளம் பிராயத்திலே செய்துள்ள தாடகைவதம்,அரக்கரை வெல்லல் சிவதனுசையிறுத்தல் இப்பரசுராமனை வலியழித்தல் ஆகிய வீரச் செயல்களும், அகலிகை

செய்தியும் மானிடரால் செய்யத்தக்கனவல்ல; ஆதலால், இவன் அந்த முதல்வனான நாராயணனே யாம்' என்று சக்கரவர்த்தி பாராட்டினான் என்றவாறு. இங்கும் இராமபிரானது அவதார வுண்மை குறிக்கப்பெறுதல் காணலாம். 'பொய்ம்மையில் சிறுமை' யென்றது, பிராயச் சிறுமை குறித்தவாறும். 'வினை'யென்றது இரு வினைகளையுங் குறிக்குமாயினும், தீவினைக்கேற்ற தீயபயனைத் தருதற் குரியார் பிறர் உளராகலின், இங்கே நல்வினை யெனப்பெற்றது. இராமபிரான் தீயோரை அழித்தல், 'கொலையிற் கொடியாரை வேந் தொறுத்தல்' ஆகும்.

உலகு, ஆகுபெயர். 'உலகினுல்' என்றவிடத்து முற்றும்மை தொக்கது.

(பி - ம்.) 1. பொலிந்த வாண்டொழில்.
2. உலகெலாம் முடிக்கற்பாலதோ; முடிக்கலாவதே.
3. மெய்ம்மையில்; வெம்மையில்: உறுவதே; வினைசெய்தாருக்கும்; வினை செய்தியாவர்க்கும்; விண்செய்தாருக்கும். (41)

தேவர்கள் மகிழ்ச்சியும் இராமபிரான் செயலும்

1384. பூமழை பொழிந்தனர் புகுந்த தேவர்கள்
வாமவேல் வருணனை மான வெஞ்சிலை
சேமியென் றளித்தனன் சேனை யார்த்தெழ
நாமநீ ரயோத்திமா நகர நண்ணினான்.

புகுந்த தேவர்கள்-(அச்சமயம்) ஆகாயத்திலே கூடிய தேவர் கள், பூமழை பொழிந்தனர்-(மகிழ்ச்சியால்) கற்பகப்பூமாரிபொழிந் தனர்; (அப்போது இராமபிரான்), வாமம் வேல் வருணனை-அழகிய வேற்படையையுடைய வருணனை (விளித்து), மானம் வெம்சிலை சேமி என்று-பெருமை மிக்க இக்கொடிய வில்லைச் சேமித்து வைப்பா யாகவென்று, அளித்தனன்-(வில்லை அவனிடம்) கொடுத்துவிட்டு, சேனை ஆர்த்து எழ-சேனைகள் (மகிழ்ச்சியால்) பேராரவாரஞ்செய்ய, (புறப்பட்டுச் சென்று), நாமம் நீர்-அச்சந்தரும் அகழிநீர் சூழ்ந்த, அயோத்தி மாநகரம் நண்ணினான்-அயோத்தி மாநகரத்தை அடைந் தான்.

நாமம்-அச்சம்; பெருமையும் ஆம். அளித்தனன்: முற்றெச் சம்; முற்றாகவே கொள்ளலும் ஆம்.

பரசுராமன் இராமபிரானிடம் வந்தபோதே, அங்கு நிகழ்வத னைக் காணும் பொருட்டுத் தேவர்கள் ஆகாயத்திலே வந்து கூடி, இராமபிரானது வெற்றி கண்டு பெருமகிழ்வெய்தி அவன் மேற் பூமாரி பொழிந்தனர். அப்போது இராமபிரான், தேவர் கூட்டத் துள் இருந்த வருணனை யழைத்து, 'இவ்வில்லைப் பத்திரமாகப் பாது

காத்து வைத்து, வேண்டியபோது தருக' என்று கூறி வில்லை அவனிடங் கொடுத்தனன்.

இவ்வில், மேலே நிகழவிருக்கும் அரக்கர் வதைக்குப்பெரிதும் உதவுதல் குறித்தே இராமபிரான் இவ்வாறு செய்தனன் போலும். ஆரணிய காண்டத்துள், கரனோடு செய்த போரில், இராமபிரான் கையிலிருந்த வில் இற்றதாக, அப்போது வருணன் குறிப்பறிந்து இவ்வில்லைக் கொணர்ந்து இராமபிரானிடம் கொடுத்தனன் என்று காணப்படுகிறது; ஆரணிய. 532-பார்க்க. அகத்தியப் படலத்துள் அகத்திய முனிவர் இராமபிரானுக்குப் படைக்கலங்கள் அளித்த செய்தி கூறுமிடத்து, 'இவ்வில்லிது, இவண்மேனுள் முழு முதல்வன் வைத்துளது; மூவுலகும் யானும் வழிபட விருப்பது' என்று கூறி ஒரு வில்லும் அம்புகளும் கொடுத்ததாகக் காண்கிறோம்: (ஆரணிய. 172) இங்கே (முழு முதல்வன்) என்றது திருமாலைக் குறித்ததெனவும் சிவபிரானைக் குறித்ததெனவும் இருவகையாகக் கூறுவர்; இஃது ஆராயத் தக்கது.

பரசுராமனிடமிருந்து பெற்ற வில்லை இராமபிரான் வருணனிடம் கொடுத்தமை வான்மீகத்திலும் உளது, அவ்வாறு வில்லைக் கொடுத்தபின், தந்தையைத் தேற்றி, 'இனி நாம் அயோத்தி செல்லுதற்கு யாதொரு தடையும் இல்லை; ஆதலால், இப்போதே புறப்படும் வண்ணம் நம் சேனைகளுக்குக் கட்டளையிடுக' என்று விண்ணப்பிக்க, தசரதன் கட்டளையின் மேல் அனைவரும் புறப்பட்டுச் சென்று அயோத்தி நகரடைந்தனர் என அங்கே காணப்படுகிறது. இராமபிரான், தந்தையிடம் வைத்துள்ள மதிப்பின் பெருமை இதனாலும் அறியலாகும்.

(பி - ம்.) 1. சொரிந்தனர் புகுந்து தேவரும்; பொழிதரப் புகுந்த தேவருள்.
2. நாமவேல்; மானவேல்: வருணன்கை: நாதன்; வரதன்.
3. சேமியென்றுதவித்தன்; உதவினன்; தேவரார்த்தெழ.
4. அயோத்திமாநகரை; பூமலிபொழில்புடை யயோத்தி புக்கனன். (45)

இதன்பின், 'பாலகாண்டம் முற்றிற்று' என ஒரு சுவடியில் காணப்படுகிறது.

### தசரதன் பரதனைக் கேகயநாட்டுக்கு அனுப்புதல்

1385. நண்ணின ரின்பத்து வைகு நாளிடை
மண்ணுறு முரசினம் வயங்கு தானையான்
அண்ணலப் பரதனை நோக்கி யாண்டகை
எண்ணருந் தகையதோர் பொருளி யம்புவான்.

நண்ணினர்-(அயோத்தியை) அடைந்தவர்கள், இன்பத்து வைகும் நாள் இடை-இன்பத்தோடு தங்கியிருக்கும் நாளில், (ஒரு நாள்), ஆண் தகை-ஆண்மை மிக்கவனும், மண் உறு-மார்ச்சனை அமைந்த, முரசு இனம் வயங்கு-மும்முரசும் (ஒலித்து) விளங்குதற்

கிடமான, தானையான்-சேனைச் சிறப்பையுடையவனுமான தசரதன், அண்ணல் அ பரதனை நோக்கி-பெருமை பொருந்திய அந்தப் பரதனைப் பார்த்து, எண்ண அருதகையது ஓர் பொருள்-அவன் நினைத்தற்கரிதாகிய தன்மையுடையதொரு செய்தியை, இயம்புவான்-சொல்லலுற்றான்.

சொல்லியது அடுத்த கவியுட் கூறப்படும்.

'அ பரதன்' என்றதில் அகரச்சுட்டு, இராமபிரானிடத்து அளவு கடந்த அன்புடையவன் என்பதனைக் குறிக்கும். அத்தகைய அவனைக் கேகய நாட்டுக்குப் போகும் வண்ணம் தந்தை பணித்தல் மேலே கூறப்படுகின்றது. இராமபிரானைப் பிரிந்துபோதல் பரதன் மனத்துக்குப் பொருந்தாததாகும்; எனவே, அதனை 'எண்ணருந்தகையதோர் பொருள்' என்றார். வெற்றி, கொடை, மங்கலம் ஆகிய மூன்றுக்கும் உரிய முரசங்கள் பலவாதலின், 'முரசினம்' என்றார்.

'மண்ணுறு முரசினம்': அயோத். 4, 157.

(பி - ம்.) 1. நண்ணரும் இன்பத்துள்.
2. முரசிடை; முரசுடை; முரசொலி: தானையவ்; தானைய; தானைசூழ்.
3. அண்ணலைப் பரதனை; அண்ணலும் பரதனை: நோக்கியாண்டகைக்கு.
4. பொருளியம்பினன். (40)

1386. ஆணையி னினதுமூ தாதை யையநிற்
காணிய விழைவதோர் கருத்த னாதலால்
கேணியில் வளைமுரல் கேக யம்புகப்
பூணியன் மார்பநீ போதி யென்றனன்.

(பரதனுக்குச் சொல்லலுற்ற தசரதன்) ஐய - என் ஐயனே, ஆணையின்-ஆக்கினையையுடைய, நினது மூதாதை-உன் பாட்டனுன கேகய மன்னன், நின் காணிய விழைவது ஓர் கருத்தன் ஆதலால்-உன்னைக் காணவிரும்பும் ஒரு கருத்துடையவனுயிருத்தலால், பூண் இயல் மார்ப-அணிகலன்கள் பொருந்திய மார்பையுடையவனே, நீ—, கேணியில் வளை முரல்-குளங்களில் சங்குகள் ஒலித்தற்கிடமான, கேகயம் புக போதி-கேகய நாட்டிற்குப் போகப் புறப்படுவாயாக; என்றனன்-என்று கட்டளையிட்டான்.

இயம்புவான் (1385) போதியென்றனன் (1386) எனக் கூட்டி முடிக்க. மூதாதை என்றது கைகேயியின் தந்தையைக் குறித்தது. சக்கரவர்த்தி பரதனை 'ஐய' என்றது அன்பினுல் ஆயது. பரதனுடைய மாமனுன யுதாஜித், தன் தந்தையின் விருப்பப்படி பரதனை அழைத்துச் செல்லும்பொருட்டு, சீதா-ராம விவாகத்துக்கு முந்தியே அயோத்திக்கு வந்து, அங்கே அனைவரும் மிதிலைக்குச் சென்றிருத்தலையறிந்து தானும் மிதிலைக்குப்போய், விவாகம் முடிந்தபின் அனைவரு

டனும் அயோத்தி வந்து, அங்கே தசரதன் அநுமதியைப் பெற்றுப் பரதனைத் தன்னூருக்கு அழைத்துச் சென்றதாக வான்மீகம் கூறும். (ஸர்க்கம். 73).

(பி - ம்.) 1. ஆணை நின்றன் முதுதாதை; ஆணையான் நின்முதுதாதை; ஆணையர் வினது மூதாதை: அன்பினால்.
2. காணிய விரைவதோர். 3. வளைநரல்.
4. பூணொளிர்; பூணொளி: மார்பவீ; மார்பினய்; மொய்ம்பினய்: போக வென்றனன். (47

### பரதன் கேகயநாடு செல்லுதல்

1387. ஏவலு மிறைஞ்சிப்போ யிராமன் சேவடிப்
பூவினைச் சென்னியிற் புனைந்து போயினான்
ஆவியங் கவனல தில்லை யாதலான்
ஓவலி லுயிர்பிரிந் துடல்சென் றென்னவே.

ஏவலும்-(தந்தை) ஏவியவுடன், இறைஞ்சி - (தந்தையை முதலில்) வணங்கி, போய் - (இராமபிரானிருந்தவிடம்) சென்று, இராமன் சே அடி பூவினை-இராமனுடைய சிவந்த திருவடித் தாமரை மலர்களை, சென்னியில் புனைந்து - தலையிலே சூடி, (திருவடிகளில் வணங்கி) ஆவி-தனக்கு உயிர், அங்கு அவன் அலது இல்லை ஆதலான்- அவ்விடத்துள்ள அவ்விராமபிரானையன்றி (வேறு) இல்லையாதலால், ஓவல் இல் உயிர் பிரிந்து-பிரிதலில்லாத உயிரைவிட்டுப் பிரிந்து, உடல் சென்றது என்ன-உடல் தனியே செல்வதுபோல, போயினான்-புறப் பட்டுச் சென்றான்.

'பரதன்' என்ற எழுவாய் வருவிக்க. ஏகாரம், ஈற்றசை. சென்றென்ன: தொகுத்தல்.

பரதன், தந்தையின் கட்டளையை மறுக்கவியலாமையால் அதற்குடம்பட்டுத் தந்தையை வணங்கி விடைபெற்றுக்கொண்டு போய், இராமபிரானையும் வணங்கி, அவனைவிட்டுப் பிரிதலில் மன மின்றி மிக்க வருத்தத்துடனே சென்றான்; ஆதலால், 'உயிர்பிரிந் துடல் சென்றென்ன' என இல்பொருளுவமையாற் கூறினார். பரத னுக்கு, 'எல்லாம் இராமனே' என்பதை, 'எந்தையும் யாயுமெம் பிரானு மெம்முனும், அந்தமில் பெருங்குணத் திராம னாதலால், வந்தனையவன்கழல் வைத்த போதலால், சிந்தைவெங் கொடுந்துயர் தீர்கலாது' (அயோத். 860) என்ற பரதன் கூற்றால் அறியலாம்.

பி - ம்.) 1. ஏவலின். 3. ஆதலால்.
4. ஓவலின்; ஏவலில்: உடல்பிரிந்துயிர். (48)

1388. உளைவிரி புரவித்தே ருதாசித் தென்றெனும்
வளைமுரல் சேனையான் மருங்கு போதப்போய்
இளையவன் றன்னொடு மேழு நாளிடை
நளிர்புனற் கேகய நாடு நண்ணினன்.

(பரதன்), உதாசித்து என்று எனும்-'யுதாஜித்' என்றுயாவ ராலும் மதிக்கப்படுகிற, வளை முரல் சேனையான்-சங்குகள் ஒலிக்கும் சேனைகளையுடையவனான (தன்) மாமன், மருங்கு போத-உடன்வர, இளையவன் தன்னொடும்-இளையவனான சத்துருக்கனுடனே, உளை விரி புரவி தேர்-பிடரி மயிர் பரந்த குதிரைகள் பூட்டப்பெற்ற தேரில் ஏறி, ஏழுநாள் இடை-ஏழு நாட்களில், நளிர் புனல் கேகய நாடு நண்ணினன்-குளிர்ந்த நீர்வளமுடைய கேகயநாட்டைஅடைந்தான்.

உதாசித்து—யுதாஜித்; பரதனுடைய மாமனான இவன், பரதனை அழைத்துச் செல்லுதற்பொருட்டு வந்திருந்தமை இதனாலும் புலனாகின்றது. இவன் உடன்வர, பரதன் தன் இளையவனோடும் சென்றான் என்றதனால், சத்துருக்கனனும் உடன் சென்றமை பெறப் படும். சத்துருக்கனன் தன்னை அழைப்பாரும் அனுப்புவாரும் இன்றித் தானாகவே பரதனுடன் புறப்பட்டான் என்றதனால், இராம பிரானிடத்து இலக்குமணனைப் போலவே பரதனிடத்து இவன் ஈடு பட்டவன் என்பதும் பெறப்படும்; இலக்குமணனுக்கு, இராமனுள்ள விடம் அயோத்தி, அதேபோலச் சத்துருக்கனனுக்கும் பரதனுள்ள விடமே பெரிது. இவர்கள் இளமைப் பருவ முதலே இவ்வாறிணைந் திருந்தமை, 'பரதனு மிளவலு மொருநொடி பகிராது, இரதமு மிவுளியு மிவரினு மறைநூல், உரைதரு பொழுதினு மொழிகில ரெனையாள், வரதனு மிளவலு மெனமருவினரே' (308) என்பதனால் அறிக.

(பி - ம்.) 1. உளைவயப்; உளைவரு: புரவித்தார்: உதாசித்தென்றெனும்; உதாசித் தென்னுமோர்: உதயசித்தெனும்: மு: உளைவருபுரவியுமோடை யானையும்.
2. தானையான்: போகப்போய்; போகப்போந்து: சேனையுமருங்கு செல்லப்போய், 3. ஏழு நாளையில்.
4. நளிபுனல். கேகயனாடு; கேகயநகரம்; கேகயநகரி; கைகயநாடு: நண்ணினர். (49)

கவிக் கூற்று

1389. ஆனவன் போனபி னரசர் கோமகன்
ஊனமில் பேரர சுய்க்கு நாளிடை
வானவர் செய்தமா தவமுண் டாதலான்
மேனிகழ் பொருளினை விளம்பு வாமரோ.

ஆனவன்-அவ்வாறாகிய அப்பரதன், போனபின்-(கேகய நாட் டுக்குப்) போனபின்பு,அரசர் கோமகன்-சக்கரவர்த்தியான தசரதன்

ஊனம் இல்-குறையொன்றும் இல்லாத, பேர் அரசு உயக்கும் நாள் இடை-பெரிய தனது ஆட்சியைச் செலுத்தி வருங்கால், வானவர் செய்த - தேவர்கள் (முன்னமே) செய்துள்ள, மா தவம் உண்டு ஆதலான்-பெருந்தவம் உளதாதலால், (அதன் பயனாக), மேல் நிகழ் பொருளினை-மேலே நிகழ்தற்குள்ள செய்திகளை, விளம்புவாம்-சொல்லுவோம். அரோ, அசை.

மேலே நிகழ்வன அயோத்தியா காண்டத்துள்ளவை; அதற்குத் தோற்றுவாயாக இங்கே இவ்வாறு கூறிக்கொண்டார். தேவர்கள் செய்த தவப்பயனாக, இராவணன் வதை முதலியன செய்து, அவர்களைக் காக்கும் பொருட்டு அவதரித்த இராமபிரான், தான் மேற்கொண்டவற்றை முற்றுவித்தற்கு முதற்படியாக நிகழ்வது, பிராட்டியோடும் இளவலோடும் அப்பெருமான் வனம் புகுதல் அதனைக் கூறுவது அயோத்தியா காண்டம். ஆதலால், 'வானவர் செய்த மாதவமுண்டாதலால் மேல் நிகழ் பொருள்' என அதனைக் குறிப்பித்தார்.

(பி - ம்) 1. ஆனபர்; ஆனபேரன்பினன்.
2. பேரரசுவக்கும்; பேரரசியக்கும்; பாரரசியக்கும்; பாரரசுய்க்கும்: நாளினில்.
3. தவமுண்டாதலில்; தவமுண்டாமென; தவமுமுன்னவே; தவத்திலைவண்.
4. மேனனி நிகழ்ந்தன; நிகழ்ந்தது; விளைந்தது; மேனிகழ் பொருளினி; பொருளது; பொருடனை; மேனிகழ்ந்ததுதனை. (50)

பரசுராமப் படலம் முற்றும்.

## பாலகாண்டம் முற்றும்.



# பாட்டு முதற்குறிப்பகராதி

[எண் - பாட்டின் தொடரெண்]

## இ



## ஈ



## உ

ஞ



த

---

# அரும்பதமுதலியவற்றின் அகராதி

[ எண் : பாட்டின் எண் ]

ஆ



இ

ம

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 59 | 17 | நெய்யில் | நெய்யின் |
| 59 | 19 | சேரற்றில் | சோற்றின் |
| 80 | 25 | முகலினை | முகிலினை |
| 256 | 1 | மயமா | மயமானது |
| 266 | 26 | 734 | 733 |
| 274 | 18 | ,, | ,, |
| 280 | 10 | 672 | 671 |
| 346 | 12 | சொல்-அசை | கொல்-அசை |
| 364 | 25 | 740 | 739 |
| 540 | 36 | 698 | 697 |
| 592 | 15 | உரைசெய்தன் | உரைசெய்தேன் |
| 607 | 36 | குபிலுறுத்திக் | குயிலுறுத்திக் |
| 914 | 32 | ஓமவெங் | ஓமவெங் |
| 1075 | 10 | சதரதன் | தசரதன் |
| 1133 | 27 | தோன்றி | ரேன்றி |
| 1134 | 11 | ளேமே | ணமே |
| 1143 | 14 | பொற்றேடிக் | பொற்றேடி |
| 1151 | 1 | கேற்றவன் | கேற்றன |
| 1155 | 5 | மிடையளொரு | மிடையாளொடு |
| 1157 | 26 | கூறுவதால் | கூவுவதால் |
| 1172 | 14 | உயிர்உரு | உயிர்உகு |
| 1177 | 8 | வெருவரதிசை | வெருவரத்திசை |
| 1184 | 8 | ணரசருக் | ணரசருருக் |

1148-ஆம் பக்கம் 4-ஆம் வரியில் திருநாமங்களையுடைய என்பதன் பின், சிங்சம்–என்பதனைச் சேர்த்துப் படித்துக் கொள்க.

878, 879-ஆம் பக்கங்களில உள்ளவற்றை முறையே 879, 878-ல் உள்ளனவாக மாற்றிப் படித்துக் கொள்க.